உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## தாயுமான சுவாமிகள்

# திருப்பாடற்றிரட்டு

இதற்கு

மாம்பலம் ஸ்ரீராமகிருஷ்ண மிஷின்

ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

T. C. பார்த்தசாரதி அய்யங்கார்

எழுதிய

**விருத்தியுரையும்**




அ. இரங்கசாமி முதலியார் அ[illegible]ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

சென்னை

1940

விலை]  [ரூபா [illegible]

அ. இரங்கசாமி முதலியார் ஸன்ஸ்
பூமகள்விலாசம் பிரஸ்,
நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி, சென்னை.

# முகவுரை

"நஹிநாநா ஸ்வரூபம்ஸா தேகவஸ்து கதாசந
தஸ்மாதகண்ட ஏஸ்வாமி யங்மதந்யந்ந கிஞ்சந
த்ருஸ்யதே ஸ்ரூயதே யத்வ த்பருஹ்மணோ ந்யந்ந தத்பவேத்
நித்யஸுத்த விமுக்தைக மகண்டா நந்த மத்வயம்
ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் யத்பரம் ப்ருஹ்மாஹ மேவதத்
ஆநந்த ரூபோஹ மகண்டபோதஃ பராத்பரோஹம் கனசித் ப்ரகாசஃ
மேகாயதா வ்யோம நஸ்ப்ருஸந்தி ஸம்ஸார துக்காநி நமாம்ஸ்ப்ருஸந்தி
ஸர்வம் ஸுகம்வித்தி ஸுதுஃகநாமாத் ஸர்வம்ச ஸத்ரூப மஸத்வநாஸாத்
சித்ரூபமேவ ப்ரதிபாநயுக்தம் தஸ்மாதண்டம் மமரூபமேதத்."

என்கிற வராஹோபநிஷத்திற் கூறியவண்ணம் ஒரு வஸ்து எக்காலத்தும் பலவஸ்து ஆகமாட்டாது. அகண்டமாய் எங்ஙனும் இடைவிடாததாய் இருக்கின்ற அதனைத்தவிர வேறே யாதொன்றுமில்லை. ஏதேது காணப்படுகின்றனவோ, ஏதேது கேட்கப்படுகின்றனவோ, அவையெல்லாம் பிரம்மத்தை விட்டு வேறாக விருக்கவில்லை. நித்தியமாயும் சுத்தமாயும் விமுக்தமாயும் ஏகமாயும் அகண்டானந்தமாயும் அத்துவயமாயும் சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயும் உள்ளதான பரப்பிரம்மம் எதுவோ அதுவே நானாக விருக்கின்றேன். நான் ஆனந்தரூபன், அகண்ட ஞானமுள்ளவன். சர்வ சிரேஷ்டன், பிரகாசவான், சித்கனன், ஆகாயத்தை மேகம் எவ்வண்ணந் தொடுகிறதில்லையோ அவ்வண்ணமே எவ்வண்ணத்தானும் சம்ஸார துக்கம் என்னைத் தொடமாட்டாது. துக்க நாசத்தினால் சகலமும் சுகமென்றும், அசத் நசிப்பதினால் சகலமும் சத்ரூபமென்றும் அறிதல்வேண்டும். உன்னுங்கால், சித்ரூபம்தான் தோற்றப்பட்ட பிரபஞ்சத்தோடு கூடியதானபடியால், தன்னுருவமானது அகண்டாகாரமாய் நித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாய்ப் பொலியும் சிவபெருமான்,

> "ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று
> நன்றன்று தீதன்று நானன்று—நின்ற
> நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று
> தலையன் றடியன்று தான்."

என்று சொன்னவண்ணம் எல்லாமாய் அன்றுமாய்ப் பிரமாணுதிகளுக்கும் வாக்கு மனாதிகளுக்கும் அப்பாற்பட்டு அருவம் உருவம் அருவுருவம் என்று முக்கூற்றுருவமுடைத்தாய் அநாதி முத்த சித்துருவாய் நிற்கு மிறைவனது திருவருட்கடலிலே திளைத்த தாயுமானசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்கள் மேற்குறித்த மூவகைய கூற்றிலக்கணங்களையும் தம்முட் கொண்டும், பொம்மையிலாச் சிவஞான தபோதனர்களான திருஞான

சம்பந்தமூர்த்தி நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர், மாணிக்கவாசக சுவாமிகள் ஆகிய சைவ சித்தாந்தக் குரவர்கள் நால்வரையும், மெய்கண்டதேவநாயனர், திருவெண்காட்டடிகள் முதலிய சாமுசித்தராவார் களையும் பலவகையாகப் போற்றியும், அன்றி, வேதாகமங்களின் சாரங்களையெல்லாம் ஒருங்குதிரட்டிய திராவிட வேதங்களான தேவார திருவாசக சொற்களையும், சித்தாந்த நிர்த்தாரண சாத்திரங்களான மெய்கண்ட சாஸ்திரங்கள் பதினன்கின்கண் வந்துள்ள வாக்கியங்களையும் ஆங்காங்கு அமைத்தும், சுவேதாச்சுவதரம் முதலிய சைவோபநிடதங்கள் எல்லாம் சுத்தாத்துவித சித்தாந்தப்பொருளையே சாதிப்பனவென்பனவென் பதைத் தகுமிடங்களில் வாக்கியங்களினுல் இனிது விளக்கியும், வேதமும் சிவாகமமும் வேறென்று கூறிப் பிணங்குவோர் பிணக்கைத் தக்க சாற்றுகள் காட்டி மாற்றியும், சிவாகம வாக்கியங்களைத் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் இடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொண்டு, அதனையே மெய்ப்பொருளென்று காட்டி வஞ்சிக்கும் சமயவாத சைவர் கொள்கையை வேரொடு களைந்தும், எல்லா மதங்களின் சொரூபங்களையுந் தன்னுள் அடக்கிக்காட்டுவதும், புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னுஞ் சமயக்கொள்கைகளை அளவைகளான் மறுத்துச் சுத்தாத்துவித சித்தாந்தத்தைத் தாபித்தும், கற்போர்க்கு உண்ணவுண்ணத் தெவிட்டாத தெள்ளமுதம்போன்றதும், பத்திரசமும் முத்திரசமும் பழுத்தொழுகும் பான்மையதும், சைவசமயிகட்கேயன்றி மற்றைச் சமயிகட்கும் கிடைத்தற்கரிய பெரிய சிந்தாமணி போன்றதும், நானிலத்தார் வாயினிலிருந்து நடிப்பதும், நாவலரும் பாவலரும் பாடகர்களும் பன்னிப்பன்னிப் பாடிப் பரவுவதும், வேதாந்த ரத்நாகரமான வித்திருப்பாடல்களுக்கு இலக்கண விலக்கிய திறவுகோல் விளக்கமும், வேதாந்த சித்தாந்த நுண்பொருட்டுலக்கமும் விரிந்ததொரு தெள்ளிய விருத்தியுரை வரைந்தால், அதனை இவ்வுலகம் அகமிகமகிழ்ந்து ஆனந்தங்கொள்ளுமென நினைத்தேன்.

அஃது எளிதாவதன்றேயென்று என் மனங்கலங்கித் தியங்கினேன். இடையே இன்னோரன்ன பிறமகத்துவங்கள் வாய்ந்துள்ள இத்திவ்ய பாடலுக்குச் சுத்தாத்துவித சைவ சித்தாந்தத் துண்மைப்பொருளைக் குருமுகமாகக் கேட்டவரே, பொருள் விரித்தற்கு உரிமையுடையவரேயன்றி, மற்றோர்க்குக் கைவருவதன்றேயெனச் சில்லாண்டுகள் சிந்தனையிற் செல்லவும், பின்னர் பசுவர்க்கத்துட்பட்ட சிறியேன் அமயம் நேரும்தோறும் அநுபவமுடையாரை அணுகி, அவர்கள் திருவாய்மலர்ந்தவற்றைக் குறித்துவைத்துப் பொன்போலக் காத்துவந்து, பின்பு என் சிற்றறிவிற் கெட்டியவாறு இலக்கண விலக்கிய வரையறையுடனும் வேதாந்த சித்தாந்தக் குறிப்புடனும் ஓர் விருத்தியுரை வரைந்து வைப்பென வைத்திருந்தேன்.

இவ்வளவு பரிசிரமத்துடன் வரைந்த உரையினுக்கு வெளிப்பாடு என்றை வாய்க்குமோவென்று நினைத்திருந்த என்மனஞ் சாந்தியடைய திருவாளர், ஸ்ரீமான் அமரம்பேடு. இரங்கசாமி முதலியாரவர்கள் மூத்த



குமாரரும், சைவநூல்களையும் வைணவநூல்களையும் வருவாயை நோக்காமல் அச்சு வாகனத்தேற்றி அகங்களிக்கும் ஸ்ரீமான், முத்துவடிவேல் முதலியார் என்பவர் என்னை அணுகி இதனை உபகரிப்பின் தான் அச்சிட்டு வெளிப்படுத்துவதாகப் பரிந்து கேட்டனர். அக்கால் என்மனம் அளவுகடந்த ஆனந்தத்தில் அமிழ்ந்தமையால், அக்கணமே அவர்மாட்டு அளித்துக் களித்தேன்.

ஆயின், அவர் இவ்வுரையினைச் சின்னாள் சிதலருவாய்ப்படும்படி வைத்திருக்கவும், அதன் வெளிவரவைக் குறித்து நான் பல்கால் வற்புறுத்தியும் காலந் தாழ்க்கையில், அவரது இளைய சகோதரரின் புதல்வனை ஸ்ரீமான், சிவப்பிரகாச முதலியார் என்பவர் இவ்வுரை வெளிவரவேண்டிய காரியத்தில் பாராட்டிய ஊக்கம் ஒருக்காலும் மறக்கற்பாலனவல்ல.

இவ்வுரை வெளிவருகையில் என்னுடனிருந்து இலைமறை காய் மறைபோல் மறைந்துகிடக்கும் அச்சுப்பிழைகளையும் ஒருவாறு களைந்து உபகரித்த பூமகள்விலாச அச்சுக்கூடத்தார் செய்தநன்றி எக்காலுங் கொண்டாடற் பாலனவாம். இவ்வுரையில் கண்ட சந்தேகங்களையெல்லாம் அப்பொழுதைக் கப்பொழுது தெளிவுண்டாக்கிய மேலோர்களின் பரோபகாரம் என் மனத்தைவிட்டகலா.

சைவசமயிக ளெல்லாருக்கும் பயன்படும்படி தொடங்கிய இவ்வரிய பெரிய நற்கருமத்திற்குச் சிலர் செய்த பேரிடையூறுக ளெல்லாவற்றையும் நீக்கி இதனை நிறைவேறும்படி செய்தருளிய எல்லாம்வல்ல இறைவனது திருவடிகளை மனம் வாக்குக் காயங்களாற் சிந்தித்து வந்திக்கிறேன்.

மாம்பலம்
1-8-40

இங்ஙனம்:
T. C. பார்த்தசாரதி அய்யங்கார்.

## நூலினுட்பிரிவு



# தாயுமான சுவாமிகள்

## சரித்திரம்

கடல் சூழ்ந்த விக்கிலவலயத்திற்கு ஓர் திலதம்போன்ற புண்ணிய பூமியாம் இப் பரதகண்டத்துச் சிறப்புற்றுத் திகழுஞ் சோழமண்டலத்திலே, நீர்வளமும் நிலவளமும் ஓங்கித் தன் இயற்கை அழகாற்கண்டவர் கண்ணையும் கருத்தையும் கவராமல் விடாததும், பொன்னுடரும் போற்றுவதான திருமறைக்காடென்னுந் திருப்பதியில், உயர்வேளாண் வருணம் விளங்க கேடிலியப்பிள்ளை என்னுஞ் சைவசிகாமணி வந்து தோன்றினர்.

அவ்வேளாண் குடியுள், அவர்கள் அடிநாள் முதல் ஆற்றிவந்த அறங்கள் அனைத்தும் திரண்டு ஒரு வடிவெடுத்துவந்ததோ வென்று சொல்லும் வண்ணம் கேடிலியப்பிள்ளை வாய்மையும் தூய்மையும் நேர்மையும் சீர்மையும் வளர வளர்ந்து மாண்புறுகலைகள் பலவற்றையுங் கசடறக்கற்று, சிவபக்தி அடியார்பக்தி முதலியவைகளிற் றிகழ்ந்து விளங்கினர். தமக்கென வாழாத் தன்மையாளராகிய அவரது தூய உள்ள நிலைகண்ட மாந்தர்கள், அவரை வடமொழி தென்மொழிகளினுஞ் சிறப்புற்றதான இறைவன் பணி நடாத்தும் கோயில் தர்மகர்த்தத் துறையில் அமர்த்தினர். அவரும் கற்றதனாலாய பயன் என்? எனத்தருவி ஆராய்ந்து, இறைவன் திருவடியை இடையறாது உள்ளத்தால் நினைந்து உரையாற் புகழ்ந்து உடலால் வழிபடுதலே பயன் எனப் பூண்டு, அம்முடிவின் பயனாகத் தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் ஆண்டவனுக்கும் அவன் அடியார்களுக்கும் அர்ப்பணஞ் செய்து வந்தார்.

அக்காலத்திலே **விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர்,** நந்தமிழ் மூவேந்தர்க்குப் பின்னே செந்தமிழ் வளர்த்த செல்வச்சேதுபதிகள் மரபிற்றோன்றி, நுண்ணறிவு பெருங்கொடை முதலாகிய நற்குண நற்செயல்களால் அம் மரபிற்கோர் திலகம்போல விளங்கினர். இவர் பலகலை யறிவானும் நிலவுபுகழ் விளைத்து, கேட்டார் பிணிக்கும் பெரிய இனிய சொல்வன்மையுடையராய், இம்மை நோக்காது மறுமையே நோக்கும் மாண்புடையராய், அஞ்ஞாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் இயல்பாய் உள்ளவராய், அறிஞர்க்கெல்லாம் அருந்துணையாய்த் திரிசிரபுரத்தை ஆண்டுவந்தனர். அவர், இக்கேடிலியப்பிள்ளையின் கணக்கறி புலமையும், தெய்வவழிபாடு சிறப்பும், தத்துவவுணர்ச்சியும், பணிதற்பெருமையும் பல்லோர்வாய்க் கேட்டு, இத்தகையாளரை ஏற்பது நலமெனக்கருதி, அவரை வருவித்துத் தன்னிடத்தில் ஒரு பெரிய தொழிலில் நியமித்துக்கொண்டார்.

பிள்ளையவர்களும் காட்சிக் கெளியராய்க் கடுஞ்சொல்லே இல்லாதவ
ராய்த் தன்னரையன் புகழும் வண்ணம் அறிஞரும் பாசு நற்குணத்தடனே
இறைப்பணி எழிலுற நடாத்தி வருவாராயினர்.

இத்தகை வேளாண் மரபிற்கு ஓர் திலகம்போல் விளங்கிப் பல்கலை
யறிவாற்றலங்கும் **கேடிலியப்பபிள்ளைக்கு**, திருமகள் விழைய மழகும், கலை
மகள் புனைய மறிவும், மலைமகளருளு மறமு மமைந்த,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

யென்னும் ஆன்றோர் கூற்றுக்கிலக்கியமாய் அருந்ததியும் வணங்குங்
கற்புடையவளாய் இருபெருங் குலமும் விளங்கவந்த கெஜவல்லியம்மையாரை
மனைவியாகக்கொண்டு பல்லுயிரோம்பற் கருமத்தில் தலையாய் விளங்கி
வருகையில், அவ்வம்மையார் திருவயிற்றில் சிவசிதம்பரம் என்னும் ஓர்
ஆண்குழவி தோன்றி அருமையாய் வளர்ந்து வந்தது.

நிற்க, அவ்வேதாரணியத்தில் விமலனடி விழைவுற்று வசித்து வரும்
அவரது தமையனார் மகப்பேறில்லாமல் மனம் வருந்துவதைக் குறிப்பாலறிந்த
கேடிலியப்பிள்ளையவர்கள், தான் அருமையாய் வளர்த்து வரும் சிவசிதம்
பரம் என்னும் முதன்மகனைத் தன் மூத்தோனுக்குத் தத்துப்புதல்வனாகக்
கொடுத்து உள்ளம் மகிழ விருந்தனர்.

இங்ஙனஞ் சிக்காட் செல்லவும், கேடிலியப்பிள்ளை தான் செல்லும்
நன்னெறிக்குத் துணையாய்த் தனக்கொரு புதல்வன் வேண்டு மென்னும்
விழைவுகொண்டு திரிசிராமலையின்கண் எழுந்தருளியிருக்கும் தாயுமானே
சுரரை நாடோறும் இல்லக்கிழத்தியாரோடு சென்று பணிந்தும், ஆருகதப்
பௌத்தமதப் பொய்ம்மை மிக்கு வைதிக சைவ மெய்ம்மை விளக்கம் போற்றல்
பெரிதுங் குன்றுதல் காரணமாகப் புடைபட மிகவுங் கவன்று அப்பா
சமயங்களை நிராகரித்து நீருக்கவல்ல புனைமணிபூண் காதலனொருவனை என்று
காண்போமென்று நனிதவங்கிடந்தும், புண்ணிய தீர்த்தம் பொருந்தியாடியும்,
தரைமெழுகி யுண்டு தவம் பல புரிந்தும், புழுதிபடக்கிடந்த போகந் துறந்தும்,
அருநோன்பு செய்தும், வானவரை வழிபட்டும், தானமது பல செய்தும்,
அறவரை யடைந்து நெறிமுறை பணிந்தும், கவலைகளறத் தினம் சிவகதை
கேட்டும், காணிலத்தருத கடவுளை வணங்கிச் செய்தற் கருந்தவத்தினைச்
செய்து வருவாராயினர்.

அங்ஙனம் நிகழுங்காலையில் சிவபெருமானது பெருங்கருணைத் திருவரு
ளினால் பிள்ளையவர்களின் கருத்து முடிவெய்துமாறு வேண்டிப் பரவுங்
காதலியாம் **கெஜவல்லியம்மையார்** மணிவயிற்றில் உருத்தெரிவரும் பெரும்
பேறலகுப்புமா றுளதாயிற்று. கேடிலியப்பிள்ளை அஃதுணர்ந்தாராய்த்
தாயுமானேசுவரைப் போற்றி ஈரைந்து திங்களினும் நலஞ்சிறப்பக் கேளி
ரோடும் நலம்பல செய்தனர். அவர் அங்ஙனம் பேரின்பந் திளர்வுற்றுச்
செல்லுநாளில், அருக்கன் முதலிய கோள்களனைத்தும் உச்சங்களில் வலியுட



னிற்க, பேணிய நல்லோரையெழ, திருக்கிளரு மாதிரை நாட்டிசை விளங்க,
வேறு சமயத்தாரது ஆண்மை வேருடன்மாள, சைவமுதல் வைதிகமுந்
தழைத்தோங்க, தொண்டர் மனங்களிக்க, தூய அத்துவிதநெறி யெண்
டிசையுந் தனிநடப்ப, உலகேழுங் குளிர்தூங்க, அண்டர்குல மதிசயிப்ப,
செந்தமிழியற்றிய வின்றவமோங்க, தென்றிசை மற்றெல்லாத் திசைகளின்
பெருமையனைத்தையும் வென்று மேம்பட, நிலையான செந்தமிழ் வழக்கு
மற்றயல் வழக்குகளின் வேதாந்தத்துறையை வெல்ல, இசையெல்லாம்
உண்மையறிவு ஆனந்தங்கட்கிடனாய் 'ஓங்கு நிலைபெருக, நிகழ்கால வெதிர்
கால நவைநீங்க, தாயுமானேசுவரப்பெருமான் அருட்டிறம் இன்புறவோங்க,
அவம் பெருக்கும் புல்லறிவினுடைய அமண் முதலாய பரசமயப்பவம்
பெருக்கும் புறநெறிகள் பாழடைய, நல்லூழிதோறும் தவம்பெருகற்கிடனாய
வேதாரணியத்திலே தாயுமானவர் அவதரித்தார். இங்ஙனம் தாயுமானவர்
அவதரித்த இடம் திருமறைக்காடாயினும், அம்மகவுக்காகப் பல்பெருந்தவம்
செய்து வந்தவிடம் **திரிசிரபுரத்தில்** கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும்
தாயுமானேசுரர் திருவடியே யாதலின், அக்குழந்தைக்குத் தாயுமானவன்
என்றே நாமகரணஞ் செய்தனர். அது கேட்ட அந்நகரத்திலுள்ள அறி
வறிந்த முதியோர் யாவரும் 'சிவபுண்ணிய மெல்லாந் திரண்டு ஒரு வடிவ
மாயிற்றோ? சிவஞானம் யாம் பெறவேண்டி யிவ்வாறு வந்ததோ? திருச்
சிற்றம்பலத்தின்கண் திருநடனம் புரிகின்ற சிற்சபாநாதரது திருவருள்
இங்ஙனம் தடுத்தாளக் குழந்தைவடிவாய் வந்ததோ?' என்று அதிசயித்து
நின்றார்கள். அப்பாற் பத்துநாளும் எண்ணெய் விழா முதலிய சிறப்புச்
செய்து, பதினொன்றாநாள் நீராடி மகவாகிய மணிக்கு நீராட்டிப் பொட்
டிட்டுத் தொட்டிலிற் கிடத்தித் தெய்வக் காப்புச் செய்தனர். பின்னர்
தாயுமானவரைத் தாயார் திருமடித் தலத்தும் தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர் தொட்டிலிலும் தூங்குமலர்ச் சயனத்தும் தாலாட்டு நலம்பல
பாராட்டி மகிழ்வெய்தினர். தாயுமானவரும் சுக்கிலபக்ஷத்து மதிபோல
நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார்.

அப்பால், தாயுமானவருக்கு உரிய பருவம் வந்தமையால் வித்தியா
ரம்பம் செய்வித்தனர். தாயுமானவரும், சிறிது பயின்ற பின்னர், வேளாண்
வாழ்க்கையும் தாளாண்மையும் உடைய பெருஞ் சிறப்பின் நல்லாசிரியர்
ஒருவரைச் சார்ந்து, மடிதடுமாற்றம் மானம் பொச்சாப்பு முதலியன இல்லா
மையும், ஆசிரியர்பாற் சென்று வழிபடுதலும், ஆசிரியர் குறிப்பறிந்தொழுகு
தலும், ஆசிரியரிடத்தில் கேட்டவற்றை நினைத்தலும், பழம்பாடம்
போற்றலும், பிறர்பால் வினவுதலும், பிறர் வினவியவற்றிற்கு விடை கூறலும்,
அறியார்க்கு அறிவுறுத்திப் பயன் விளைத்தலும், செய்ந்நன்றி யறிதலும்,
தீச்சார்பின்மையும் முதலியவாக மாணவர்க்கு வேண்டும் குணங்களெல்லாம்
உடையராய், தென்மொழி வடமொழி இலக்கண இலக்கியத்துறை
யெல்லாம் சென்று, கற்று வல்லவராயினர். அப்புறம், வேதம் சிவாகமம்,
உபநிடதம் ஸ்மிருதி புராணங்களையும் செவ்வனே ஆராய்ந்தனர். இவைக

ளல்லாமல், தேவாரம் முதலிய பன்னிரண்டு திருமுறைகளையும், மெய்கண்ட சாத்திரங்களையும் தக்காருழைசென்று முறைவழுவாவண்ணம் பாராயணஞ் செய்தனர்.

இது நிகழ்கையில், அவருடைய தந்தையாகிய கேடிலியப்பிள்ளை தன் மகனார் ஞானம் மூன்றுவகையும் தாங்கும் ஆற்றலுடையனவா யிருத்தலை யுணர்ந்து, ஐம்புலப் பகைவென்று அந்தமி லின்பத்தழிவில் நாட்டை அடைய விழைந்து, அரனடிபோதத் தியானத்திலமர்ந்து இரண்டறக் கலந்தனர்.

அக்காலத்தில், வரையா வள்ளன்மையால் வையகமுழுதும் தன் புகழ் பரக்க விருந்த அவ்வரசன், தாயுமானவர் பதினான்கு பிராயத்தவராக விருக்கையிலும், அவரது அருங்குணங்களையும், பெருஞ் செயல்களையும், அவரது பேரருட் பெருக்கினையும் பிறரால் அறிந்து, அவ்வறிவுடையாரைக் காண்பதல்லவோ பாக்கியமென நினைத்து,

"மனந்தூய்மை செய்வினைத் தூய்மை இரண்டும்
இனந்தூய்மை பற்றுக் கோடாக வரும்"

என்பர் பெரியோர். தாயுமானவர் தூய்மையே ஒருருவெடுத்தாலனையர்; அன்னவரை எப்பொழுது இனமாகப் பெறவேன்? தூய்மையுறுவேன்? என்றெண்ணியவரசன், அவர்பால் அன்புமீதூரப்பெற்றவனானான். உடனே அரசனாகிய விஜயரகுநாத சொக்கலிங்க நாயகரின் பலாத்காரத்தின்மேல், தன் தந்தையார் வகித்து வந்த உத்தியோகத்தையே தானும் வகித்து அம்மன்னன் மனம் மகிழும்வண்ணம் சம்பிரதிகாரியத்தை இயற்றி வந்தனர்.

அப்போது, அரசகாரியத்தை உன்னிய தாயுமானவர் ஒருநாள் தன் னில்லம்விட்டு அரசன் அரண்மனையுட்புக்கார். ஆண்டு பூமியில் பரப்பியிருந்த மணலின்மேல் அவர் தன் அடிச்சுவடுபதிய உள்ளேபுக்கு மீண்டனர். சிறிது நேரம் தாழ்த்தவுடன் அரசனும் பிரதானியும் அந்நெறியே போந்து, அம்மணலின்மேல் பதிந்து விளங்கும் பதுமரேகையினைக் கண்டு, இதென்ன அற்புதம்! இவ்வழிப் போந்தவர் யாவர்? இவ்வளவு துல்யமான பதுமரேகை யோடு விளங்கும் உத்தமபுருஷன் யாவனோ? என்று வினவ, ஆங்கு நின்றவர், வாய்பொத்தி, அண்ணலே! நம் சம்பிரதியாரே வந்தவரெனச் சாற்றினர்.

அச்சுவட்டினில் ஐயுறவெய்திய மன்னன், அதன் உண்மையை ஆராய் வான் விழைந்து மீண்டும் தாயுமானவரைத் தன்னிடம் வருவித்து ஏதோ வினவி விடுத்துச் சுவடுகளை ஒப்புநோக்கி ஐயம் நீங்கி அகமகிழ்வுடையனாய், பிரதானியாரே! இந்தப் பாக்கிய புருஷரின் பேற்றை என்ன வென்று சொல்லுவது? இத்துணைய பதுமரேகை என்போதும் அரசர்களுக்கல்லவோ அமை[illegible] தண்டெனக் கேள்விப்பட் டிருக்கிறேன்; என, பிரதானியார், அரசரேறே! இதென்ன சாமானியமான வரசர்களுக்கு அமைவதெனச் சொல்லிவிட்டீரே! அங்ஙனம் சொல்லுவதில் பொருளில்லை. சக்கரவர்த்தி



களாயினோர்களுக்கே அஃது அமைவதாகும். இதுவுமல்லாமல் நம் சம்பிரதியாரின் பேரழகு ஆடவர் மனத்தையும் பிளக்கும் தன்மையுடையவாய் அமைந்தும், அதனின் சதமடங்கு குணமும் ஒருங்கே பொலிகின்றதை என்னவென்று சொல்லுவது? இவரது உருவம் ஆண் தன்மையுந் தெய்வச் சிறப்புங்கொண்டு விளங்குவதைக் காணில், இவரது பிறப்பால் ஏதோ ஒரு பெரிய பெருமையை இவ்வுலகம் அடையப் போகின்றது. அதிற் சிறிதும் ஐயங்கொள்ளுதல் வேண்டுவதில்லை. அன்றி, ஒருகால் அவர் இன்னுஞ் சின்னாளில் இவ்வுலகமுற்றுந் தன் ஆணையுள் அடங்கி நடக்கும் ஆற்றலை யுடையவராக வருதலுங் கூடும். நான் பற்பலவர் காற்சுவட்டையுங் கண்டிருக்கின்றேன். இன்று கண்ட இவரது சுவட்டையொத்த வேறொன் றையுங் கண்டிலேன். அவரது கரங்கள் கணைக்கால் பரியந்தம் நீண்டு தொங்குவதைக் கண்டிலிரோ? இதுவல்லவா சாமுத்திரிகா லக்ஷணங்கள் நிரம்பப் பெற்ற உத்தம புருஷலக்ஷணம்.

அருட்கடலாகிய அரையன் அவரிடத்து மிக்க அன்புகொண்டு அச்சமுடையனானான். அவருக்கு ஊழ்வினைப்பயன் ஊட்டுங்காலம் அணுகியது. அதனை யொழிக்க வல்லவர் யாவர்? இருவினையொப்பு நேருங்காலமாதலின் இவற்கு உண்மைத்தத்துவம் உணர்தலே நலமென்னும் உறுதி தோன்றிற்று. லௌகிகத்தில் அமர்ந்திருந்தனரேனும் அவர் கருத்து,

"வாக்குங் கருத்து மயங்குஞ் சமயங்கள்
ஆக்கிய நூலினு மில்." என்று கண்டு,

"நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே
எல்லையில் லாத சிவம்."

என்று அருளியபடி ஏவ்வகை நூல்களைப் பயிலினும் அதனைக் காணற்கு ழி இவை யல்லவென்று விட்டு,

"நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூற் போதம் பராபரமே."

"சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்க
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே."

என்ற உண்மை வாக்கியங்கள் போதித்தவளவில் நின்று கருவி நூல்கள் ஞானங்கள் இவைகளின் சிறுமைகளை யுணர்ந்து,

"கற்றதுங்கேட் டதுந்தானே யேதுக் காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ."

என்றபடி யொழுகாமல், பாற்கடலுட் பிறந்தும் மீன்கள் அப் பாலை விரும் பாது வேறெவற்றையோ விரும்பினாற்போலத் தாயுமானவர் அரசனிடத்தில் பற்பல பட்டங்களுடன் பரிசுபெற விழைந்தவரும் பாவலர் நாவலருடனே இவர் உண்மைப்பொருளாராய்ச்சி வாதஞ்செய்ய, அன்னோர் தக்க விடையளிக்காது தியங்குகையில், அவரை 'உண்மை காணுதிர்' என்று சொல்லி

விடுப்பர். அரசனும் அறிவாற்றல் மிக்க பெரியராய தாயுமானவரது தேண்மையினும் பெறுதற்கரிய பேறு பிறிதின்றெனக்கருதி தனிவியந்து பேரன்புடையனாயினன். நீர்வேட்கையுற்றவன் அதனைப் போக்கிக்கொள்ள வேறொன்றையும் நாடாது தண்ணீரையே தேடி யோடுவதையொப்பத் தாயுமானவரும் தம் சந்தேக விபரீதங்களைப் போக்கவல்ல ஞானாசிரியர் யாண்டு கிடைக்கவல்லன்? எவண் புலனாவன்? எத்தினத்துக் காண்பன்? என்று ஏக்கமுற்று, வான்நோக்கும் பைங்கூழென நோக்கியிருந்தனர்.

அவ்வண்ணம் அமர்ந்திருக்குங்கால், ஆன்மகோடிகள் உய்யுமாறு வேதாகமப்பொருளைத் திருமந்திரமாலையாற் காட்டியருளிய திருவருண் ஞானப் பெருஞ்செல்வப் பிழம்பாகிய திருமூலநாயனார் வமிசத்திலே வந்து உதயமாகித் திருக்கைலாய பரம்பரைச் சந்தானமாகிய மெய்கண்டதேவ நாயனார் வழிக்குரவரிடத்து ஞானோபதேசம்பெற்ற சிவராஜயோக மெய்ஞ் ஞான நிஷ்டைகொண்ட **மௌனகுருசுவாமிகள்** திரிசிராமலைப் பரமநாதனை வணங்குவான் ஆங்குற்றனர். அப்போது நந்தந்தையுமான தாயுமானார் வழக்கப்படி நித்தியகடன்களை முடித்துக்கொண்டு மலைக்கோயிலினுட்புக்குச் சிவதரிசனம் செய்விக்கப்பெற்றுத் தக்ஷிணாமூர்த்தியின் சந்நிதியிலேவந்து, ஆண்டு நிஷ்டையி லமர்ந்திருக்கும் மௌனகுருநாதனைக் கண்டு, அப் பெரியாரின் அருட்டிருநோக்கால் தன் வயமிழந்து, காந்தங்கண்ட ஊசி போன்று தம்மனம் அவர்மாட் டிழுக்கப்பட்டாராய் அடியுற வணங்கி, எம்பெருமானே! தேவரீரது திருக்கரத்தினில் இலங்குவது என்ன கோசமோ? அதனைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமெனப் பிரார்த்தித்தார்.

குருமூர்த்தியார் யாதொன்றும் விடைபகராமல் மௌனமாக இரியல் ஏகலுற்றனர். தாயுமானார் பின்னரும் பல்கால் வினவியபடி அவர்பின்னே விடாமற்சென்றனர். குருக்களோ அரைக்கணநேரமும் ஓரிடத்தில் நிலைத்து நில்லாவாறு வீதிகள்தோறுஞ் சென்றும்நின்றும் திரிந்து, அப்புறம் எங்கும் பேரிருள் கவ்விச் சூழ்ந்தவளவிலே தாயுமானவர் திருக்கோயிலினுட்புகுந்து ஆண்டு பதுமாசனத்தமர்ந்து சிறிது ஆலோசித்து, 'பிள்ளாய்! இது சிவ ஞானசித்தி' என்றனர். அதுகேட்ட தாயுமானாருக்கு அளவுகடந்த ஆனந்த முண்டாகியது. தன்னைமறந்து தலைவன் கருணையை நினைந்து, என்னை இறைவன் திறம். அந்நாளிலே குருந்தமரத்தடியிலே திருவாதவூரடிகட்கு ஞானபோதத்தால் ஏதம் ஒழித்துச் சாதங்காட்டித் திருப்பாதம் அளித்து ஆண்டருளிய பரமபதி இந்நாளில் எளியனுமென்னையும் அங்ஙனம் ஞான சித்தியால் மோனபத்தி யளித்தாட்கொள நினைந்து இத்திருக்கோலத்தோடு ஈண்டு எழுந்தருளினனோவென்று பலவாறு துதித்து, கருணைக்கடலே! காருண்ணிய வுருவே! சிவம் யாது? ஞானம் என்பதென்னை? சித்தி எது? என்று முறையே வினவ, குருமூர்த்தியார் தாயுமானவரை நோக்கி, நீ நமது கருணைக்குப் பாத்திரமாகிவிட்டனை. இனிச் செம்பைப் பொன்னாக்குவது போல் நின்னைத் தூய்மையுடையவனாக்கி எண்வகைய சித்திகளையும் உனக்கு அறிவுறுத்திப் பதிவிளக்கம் அருளிச்செய்கின்றோம். இனி



நின்னில் என்னிலொரு பேதமில்லை யென்றறிவையாக. ஆயின் ஒன்று உணர்த்துவேன்; இவ்வியன்தருமாஞாலத்தில் எண்வகைச் சித்திகளும் ஒருங்கே கைவரப்பெறினும், உன்னுங்கால் அவைகள் ஞானசாதகனது பாததூளிக்குச் சமானமாகமாட்டாது. அன்ப! நீ என்னிடம் சிவாநுபவ ஞான போதநிலைப்பேற்றை அடைந்துய்வையாக. அதுவே நிலையான மெய்ப் பொருளாவது. அந்த விருத்தாந்தத்தையே விளங்கப் படிப்படியாக வெடுத்துப் புகட்டுதலுடையது இக்கோசம். இதன் சிறப்பை,

> "வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
> ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
> நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டார்
> செய்ததமிழ் நூலின் றிறம்."

என்று போற்றி, அகண்டாகார நித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாகிய சிவபெருமான் தாம் "ஆரண மாகமங்க ளருளினு ளுருவுகொண்டு" அருளிச் செய்தானென்பர். அன்றி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக் கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமிகள் என்னுஞ் சைவசமயாசாரியர்கள் நால்வரும் சிவபிரான் திருவருளினாலே தமிழ்நாடு உய்தற்பொருட்டுத் திருவவதாரஞ் செய்தருளி அவ்வேதாகமங்களின் சாரத்தை ஒருங்குதிரட்டித் தேவார திருவாசகங்களாகிய திராவிடவேதங்க ளாக அருளிச்செய்தனர். இதனைச் சிவபிரானே ஆன்மாக்களின் அறி வாற்றல் ஆயுள் முதலியவற்றிற்கு ஏற்பக் காலந்தோறும் முப்பொருளியல்பு கூறும் நூல்களை விரித்துந் தொகுத்தும் இங்ஙனம் விளம்பியதென்க.

வேதம் ஆகமம் முதலிய எல்லாநூல்களும் பஞ்சாக்கரத்தால் உணர்த் தப்படும் பதி பசு பாசம் என்னுந் திரிபதார்த்த இலக்கணங்களையே கூறப் புகுந்தன என்பது தெற்றென விளங்கும். அவையெல்லாம் முப்பொருளின் தடத்த சொரூபங்களாகிய பொதுவியல்பு சிறப்பியல்புகளைத் தனித்தனியும் சரிதவாயிலாகவும் கூறுவனவாக; இச்சிவஞானபோதம் அவ்விரண்டியல்பு களையும் ஒருங்குவைத்து நேரே கூறுதலான் அவ்வெல்லா நூல்களுக்குஞ் சிரத்தானமாய்ச் சிறந்துவிளங்கும் அரும்பெரும் திவ்விய மகத்துவ நூலாம். கண்ணுவர் கருக்கர் முதலிய பண்ணவர்கணங்கட்கு வேதப்பொருளை அறி வுறுத்தற்பொருட்டுத் தக்ஷிணாமூர்த்தி தமது அருமைத்திருக்கரத்திற் றரிக்கப்பெற்றதும் இச்சிவஞானபோதமே.

திருக்கைலாசபதியாகிய சிவபெருமான், மாணிக்கவாசகசுவாமிகளை ஆட்கொண்டருளித் தீக்கைப் பேறளித்துத் திருவடிஞானம் வாயிலாகச் சிவமாந்தன்மைப் பெரும்பேறு எய்துவிக்கத் திருவுள்ளங்கொண்டு, மாநடச் சட்டைசாத்தி எழுந்தருளிவந்து, திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின் கீழ் அமர்ந்தருளியிருந்த வப்போது, அவர் திருக்கரத்திற் றாங்கப்பெற்றதும் இச்சிவஞானபோதமேயாம். இதுபற்றியே,

> "நின்றசிவ மொன்றதனைத் தேர்தன்ஞான
> நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதலாம்."

எனவும் வினாவிற்கேற்ப விடையும் பகர்ந்தனர். இச்சிவஞானபோதம் என்பது காரணத்தாற்போந்த பெயரென்றறிக.

> "உயர்ஞான மிரண்டாமாறு மலமகல வகலாத மன்னுபோதத்
> திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
> சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே."

என்றதனால் இது பரஞானம் அபரஞானம் என்றிரண்டுஞ் சிவஞானம் எனப்படும். அவற்றுள், பரஞானத்தைப் போதிப்பது எல்லா ஆகமங்கட்கும் பொதுவாகலின், ஈண்டுச் சிவஞானம் என்றது அவ்வபரஞானமாகிய சிவ ஞானமேயாம். போதம் என்றது அவற்றின் நிச்சயப்பொருள் இது என உணர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்துவது சிவஞானபோதமென் றறிவையாக என்று விளக்கினர். மீண்டும், சிவானந்தச்செல்வ! இந்நூலை முதனூலாகக்கொண்டு விளங்கும் சைவ சித்தாந்த சாத்திரங்களான திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவ ஞானசித்தியார், இருபாவிருபஃது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னுமவற்றோடு இதுவுமொன்றாய்ப் பதினான்காய்ச் சிறந்தொளிர்வதென முறையே ஒவ் வொன்றினையும் உபதேசித்தருளினர். அன்றி, ஞானாஞ்ஞானவிலக்கணம், பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாதவிலக்கணம், அத்துவிதவிலக்கணங்க ளாகியவற்றைப் போதிக்குங்கால், தேவார திருவாசக திருப்புகழ்களி லிருந்தும் பொருந்துவனவான உதாரணங்களை எடுத்துக்காட்டினரென்ப.

இவற்றையெல்லாம் அறிந்தபின்னரன்றோ தாயுமானசுவாமிகளும் தாம் அருளிச்செய்த அறிஞுரைக்கண்ணியினில், 'இருநிலனாய்' என்று எடுத்து மன்பதைப் பக்கத்தவரைத் தன்வயமாக்கிக்கொண்டருளினர். இவ்வண்ணம் கேட்டருளிய வுபதேசமுகத்தானே அவர் வைதிக சைவ சுத்தாத்துவித சைவசித்தாந்தமே உண்மையான நிலையினை யுடைத்தான தென்றும், சிவபெருமானே எல்லாம்வல்ல பரமபதியாவானென்றும், அச் சிவத்துடன் இரண்டறக் கலத்தலே அத்துவித முத்தியென்றும் செவ்வனே உணர்ந்து அப்பால் உலகின்கண் உற்றெழும் ஆசைப்பிசாசை அறவே களைந்து துறந்து முமுக்ஷுத்துவம் எய்தினர்.

இப்பால், மௌனதேசிகர் தாயுமானவ! நீ இங்கு இன்னும் சிந்நாள் உத்தியோகத்தொழிலை உயர்பெற நடத்திக்கொண்டுவந்து, இல்லறத்தில் இன்புற்றிருந்து புத்திரப்பேற்றைப் புனிதமாய் ஈன்று நிற்பாய். அதன் மேல் யாம் நேரில்வந்து நிட்டைகூடும் உபாயத்தை நேர்மைபட வளித் தாட்கொள்ளுவோம் என்றனர். அவ்வுரை பகர்ந்து எழுந்த குருவின் பிரிவினுக்கு ஆற்றாது வருந்துகின்ற தாயுமானவரை மீண்டும் மௌனகுரு நாதர் கடாக்ஷித்து, நீ சிறிதுங் கவலைகொள்ளல் வேண்டுவதில்லை. நான் உபதேசித்த நெறிப்படியே ஒழுகிச் சும்மா இருப்பையானால், சிந்நாட்



கழிந்தவளவையின் நான் உன்னை உறுதியாய்வந்து சந்திக்கநேரும். இதிற் சிறிதும் ஐயங்கொளல் வேண்டுவதன்று எனத் திருவாய்மலர்ந்தேகினர்.

தாயுமானவர் அன்றுமுதலாகத் தன்மனத்தில் அவரது திருவுருவ மும், அவர் இறுதியாகத் திருவாய்மலர்ந்த 'சும்மா இரு' என்னுஞ் சொற் றொடரும் பசுமரத்தாணிபோல உள்ளத்தில் உறுதிபெற்றுவிட்டன. அப்பால் தாயுமானவர் அதுவே பரமதாரகமந்திரமாகக்கொண்டு சிந்தித்து வந்தித்து அவ்வழியே நடந்துவருபவராயினர். சிந்தனை சிந்தையில் ஊற ஊற அவருக்கு அரசவுத்தியோகத்தில் அருவருப்பு அதிகரித்து அதனிடத்து மறதியும் உண்டாயிற்று.

அவரது நிலையினை நன்குணர்ந்த விஜயரகுநாத சொக்கலிங்க நாயகர் என்னும் மன்னவன், அவரிடத்தே அன்பும் அச்சமும் அதிகரிக்க, 'சுவாமி! தேவரீரின் பெருமையினைச் செவ்வனே அறியாவண்ணம் இத்துணை நாள் வரை இவ்வரசாங்கத் தொழிலில் மனதைச் சிக்கவைத்து வாட்டலாயினேன். இவ்வபராதத்தை மன்னித்தருள வேண்டுகின்றேன். இனித் தேவரீர் பணி களை யானே செய்வன் என மனமகிழ்ந்து நடந்து வந்தான். இவ்வண்ணம் சிந்நாள் ஒழுகிய வரசன், தானும் ஆன்மஞானம் அடையும் அவாவுடையனாய் அதி தீவிர பக்குவமுடையவனாய்த் தாயுமானவரின்மாட்டு வைத்த பக்தியின் மேலீட்டினால் அரசதொழிலில் வெறுப்படைந்து சித்தாந்த ஞானசிஷ்ட னாய்ப் பலநாளிருந்து, அடைதற்கருமையான சிவபதப்பேற்றைச் சிறக்க வெய்தினான்.

தமிழ் நாட்டிலுள்ள சான்றோர் மயங்கவும், கற்புடைய மீனாட்சி யம்மையார் இரங்கவும், அரசர்பெருமகனுக்கு அருமகவின்மையால் அவனது சமய கைங்கரியங்களை யெல்லாம் அவ்வம்மையாரே செய்து அரசாங்க காரியத்தில் புகலாயினள். பின்னர் தாயுமானவரின் உருவப்பொலிவைப் பல்காலும் கண்டவளாதலின், அச்சான்றோரின்மேல் சாயாதமோகமுற்றுத் தாகவேட்கையுடையவளாய், அவரைத் தன்னிடம் வருவித்து அவருக்குத் தக்கதொரு ஆதனமளித்துத் தனது எண்ணத்தை அவரிடந் தெரிவிக்க, அவர் தன்னிரு கரத்தையும் செவியில் வைத்து, சிவ, சிவ என்று சொல்லிப் பல்லாற்றானும் அவளுக்கு நல்ல புத்தி யுண்டாகும்வண்ணம் தருமோபதேசஞ் செய்து, இனி அரைக்கணமும் ஆண்டிருத்தல் துன்பத்திற் கிடமாகுமெனக் கருதி வெளிப்போந்து இராமநாதபுரத்திற்கு எழுந்தருளி ஆண்டு சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியை யில் ஞானம் என்பவற்றையெல்லாம் அநுஷ்டித்து வந்து கிரியாபாத சோபானமுற்றார்.

அரசன் மனைவியார் அவர்மேல் ஆசை மீதூர்ந்து தன் உடல், பொருள், ஆவி மூன்றுந் தமதே என்று வேண்டிய விடயத்தைப் பிறா லுணர்ந்த அவரது தமையனாகிய சிவசிதம்பரம் பிள்ளையவர்களும், அவர் சிறியதாயார் புத்திரராகிய அருளையப்பிள்ளையும் அவண் போந்து,

தாயுமானவ! நம்மரபு முடிவுறுதபடி கடிமணஞ் செய்துகொள்ள வேண்டுமென வேண்டிக்கொண்டனர்.

தாயுமானவருக்குச் சம்ஸாரபந்தத்திற் சிக்குண்டு வருந்த மனமிலையேனும், தன் முன்னோன் வார்த்தையினையும், தம்மருட்குருவின் ஆணையினையும் மறுத்து விலக்க வழியில்லாதவராய் ஒருவாறு இசைவாராயினர். அவாது உள்ளநிலை கண்டபின் சிவசிதம்பரம் பிள்ளையும் அருளையப்பிள்ளையும் தாயுமானவரை அழைத்துக்கொண்டு திருமறைக்காட்டிற்கு வந்து சேர்ந்தனர்.

சேர்ந்த பின்னர் சிவசிதம்பரம் பிள்ளை தாயுமானவருக்குக் கடிமணம் செய்யுங் காரியத்தின் பேரிலேயே கண்ணுங்கருத்துமாய் நின்று, தம் மரபிற்கு இழுக்கு நேராதவண்ணம் ஒழுக்கத்தாலும் செல்வத்தாலும் சிறப்புற்ற குடியிலே வந்து தோன்றி நற்குண நற்செய்கையுடைய நங்கையாளான **மட்டுவார்குழலம்மையாரை** நல்லோரையில் உற்றாரும் மற்றாரும் உடனிருந்து மகிழ்வுற வேதவிதி தழுவாதபடி திருமணம் நடத்தினர். பின்பு தாயுமானவர் மனைவியாரோடு இல்வாழ்க்கையைச் செவ்விதாக நடத்தி வந்தனர். நடத்தினரேனும் அவாது நிலை தாமரையிலையினீர் போலவே இருந்தது. அதுகாலை மங்கையர்க்கரசியாம் மட்டுவார்குழலம்மையார் ஓராண்மகவை யீன்று வைத்துச் சிவபதமடைந்தனர். தாயுமானவர் மனைவியாருக்குச் செய்வேண்டிய சாமக்கிரியைகளை யெல்லாம் குறைவில்லாமற் செய்துவித்து, தன் இளையமகனுக்குக் **கனகசபாபதி** என்று திருநாமம் வைத்து அன்புடன் வளர்த்து, உரிய பருவத்தே கல்வி பல பயிற்றுவித்து வந்தனர்.

அப்பால், தாயுமானார் கிரியாபாத நான்கையும் குறைவில்லாமல் முடித்து, யோகபாத சோபான முற்றார். முன்பு தாயுமானவருடன் வந்தாட்கொள்ளுவதாகச் சொல்லிப் பிரிந்த குருசுவாமிகள் வேதாரண்ணியத்தை யடைந்து, ஆண்டு அதிதீவிர பக்குவத்துடன் இருக்கும் தாயுமானவருக்கு **ஞானவுத்திரி** யென்னுந் தீட்சை செய்து யோகநிஷ்டைகளின் இயல்புகளை உபதேசம் புரிந்து, இனித் துறவுமார்க்கத்தைக் கடைப்பிடிப்பாய் எனக் கட்டளையிட்டேகினர். ஆசிரியர் சுட்டிக்காட்டிய வண்ணந் தாயுமானவரும் ஞானார்த்த உண்மையை மனத்திலே உறுதியாகப் பதித்துச் சித்தையைப் புறம்பே செல்லவொண்ணாமற் றடுத்து அவயவங்கள் அசையா வண்ணம் நிறுத்தி, பிராணவாயுவை அஜபாமந்திரத்தால் பிணித்துச் சுழுமுனைநாடியின் வழியே செலுத்தி இருநேத்திரங்களும் புருவத்தில் நாடிய முறையே ஆன்மநிலப அந்தர்முக நாட்டத்தில் மனத்தை ஒருவகை நிறுத்தி தியானசமாதியிலிருந்து நிஷ்டைசெய்து சிவயோகங்கூடி ஒலிகள் தோன்றி ஆன்மாவின்கண் அழுந்தி, அவ்வமயம் அகண்ட பரிபூரணாகார சிற்சுகோதய சிவபரம்பொருளின் சாந்நித்தியம் உண்டாகித் தன்னைக் ... செயலற்றுச் சிவத்துடன் இரண்டறக்கலந்து இரண்டொன்றும்



பாக்கியத்தைக் காணலாகுமென ஆசிரியன் புகன்றபடியே ஒழுகும் கருத்தினராய், அன்றுமுதல் துறவினைக் கைக்கொண்டு கௌபீனதாரியாய்ப் புறம் போந்து மௌனகுருவின் திருவாக்குப்படி இடையறா நிஷ்டையுடையராய்ப் பற்பல திவ்யதேசங்களிலுஞ் சென்று, ஆங்காங்கு கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களை யெல்லாம் வணங்கி, ஆங்குள்ளார் வேண்டுகோட்கிரங்கி மாரி வரண்டகாலத்தும் மாரி பொழிவித்து உலகம் நன்னிலை யடையும்படி யருளினர். அச்செய்தியை அறிந்த மக்கள் அனைவரும் தாயுமானவரைத் தெய்வமெனப் போற்றி அச்சம் பெரிதுமுடையவர்களாகி, அவர் திருத்தொண்டில் தலைநின்று தொழில்புரிந்து காலத்தை மிகுதியும் போக்கி வந்தார்கள்.

அப்பால், தாயுமானவர் கூட்டத்திருந்து வாழ்நாட்கழிக்க மனமில்லாதவராய்த் தனியிடம் நாடித் தேடி நிஷ்டையில் அமர்ந்துறைய எண்ணமுடையவராகி **இராமநாதனையும் மலைவளர்காதலியம்மையாரையும்** பணிந்து விடைகொண்டு, இராமநாதபுரத்தைச் சார்ந்த **இலக்ஷ்மிநகரத்தின்** கண்ணமைந்துள்ளதொரு கானாவிய வனத்தின் இடையிலே பரமானந்த நிஷ்டையில் அமர்ந்து, நிலவுலகத்துள்ள மக்கள் தன்வழி கண்டுணர்ந்து கடைத்தேறும் நன்மனத்துதித்த அநுபவசாரங்களை யெல்லாம் ஒருங்கே திரட்டி அதியற்புத திருப்பாடல்களாகப் பொழிந்தனர்.

இவ்விதம் அமுதப்பிரவாகம் மடைதிறந்து பெருக்கெடுத்து வெளிப்போந்த இன்கவித் தெளிவை யெல்லாம் அல்லும் பகலும் அகலாது உடனிருந்து வந்த மாணவராகிய அருளையரென்பவர் இதனை எழுதினரென்ப. பிறகு, தன்மாட்டன்பு கொண்டொழுகும் அருளையர் அரிய வாழ்க்கையுறத் தத்துவோபதேசம் செய்து விடுத்து, இராமநாதபுரஞ் சார்ந்து அவண் சிவத்தோடு இரண்டறக் கலத்தலாகிய அத்துவித முத்தியை அடைவான் விழைந்து சமாதி கூடினர். இங்ஙனம் சுவாமிகள் இரண்டறக்கலந்த காலம் **சாலிவாகனசகம் 1581** எனக் கூறுகிற்பர்.

அப்புறம் தன் ஆரியன் பிரிவினுக்காற்றாத அருளையர் அகவற்பாவினாலே உள்ளன்புமேலிடத் துதித்து, கனகசபை பிள்ளையவர்களுக்கு முறைபிசகாதபடி ஞானோபதேசம் செய்து மனமகிழ்ந்து துறவுமார்க்கத்தைப் பின்பற்றினரென்ப.

---

## இவ்வுரையுள் மேற்கோளாக எடுத்து ஆளப்பட்டுள்ள நூல்கள்

1 தைத்திரியவுபநிஷத்து
2 கடவல்லியுபநிஷத்து
3 பத்மபுராணச்சிவகீதை
4 பிரமகைவர்த்த புராணம்
5 சிவ்ஞானசித்தியார்
6 சிவஞானபோதம்
7 திருமந்திரம்
8 திருக்களிற்றுப்படியார்
9 நமச்சிவாயமாலை
10 பட்டினத்தார் பாடல்
11 திருவிளையாடற் புராணம்
12 திருவாசகம்
13 விஷ்ணுபுராணம்
14 யோகதத்துவ உபநிஷத்து
15 பிருகுவல்லியுபநிஷத்து
16 கடோபநிஷத்து
17 அப்பர் தேவாரம்
18 திருஞானசம்பந்தர் தேவாரம்
19 திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்
20 தனிப்பாடல்
21 நன்னூல்
22 சித்தாந்த தனிச்செய்யுட் சிந்தாமணி
23 ஆத்மபோதம்
24 மஹோபநிஷத்து
25 சுபாலோபநிஷத்து
26 கூர்மபுராணம்
27 திருக்குறள்
28 காஞ்சிபுராணம்
29 கந்தபுராணம்
30 கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி
31 இராமலிங்கசுவாமி பாடல்
32 வாட்போக்கிக் கலம்பகம்
33 கைவல்லியோபநிஷத்து
34 வராகோபநிஷத்து
35 ஸ்ரீசங்கராசாரியர் வாக்கியம்
36 பிரமகீதை
37 பசுபதிபாச விளக்கம்
38 உறையூர் புராணம்
39 ஆனந்தவல்லியுபநிஷத்து
40 ஔவைபாடல்
41 திருவுந்தியார்
42 மாண்டூக்யோபநிஷத்து
43 நாராயணயுபநிஷத்து
44 அடயோகதீபிகை
45 ஞானசாரம்
46 திருப்பெருந்துறைப் புராணம்
47 திருவாதவூரர் புராணம்
48 தொல்காப்பியம்
49 புறப்பொருளுரை
50 நாலடியார்
51 சூதசங்கிதை
52 மணிமேகலை
53 மனுஸ்மிருதி
54 திருவாய்மொழி
55 சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம்
56 சசிவண்ணபோதம்
57 சிவதருமோத்திரம்
58 சீவகசிந்தாமணி
59 தண்டியலங்காரம்
60 ஞானவாசிஷ்டம்
61 ஜாபாலோபநிஷத்து
62 அற்புதத்திருவந்தாதி
63 பெரியபுராணம்
64 சிவபுராணம்
65 வள்ளலார் சாஸ்திரம்
66 யஜுர்வேத போதாயன சாகை
67 இலிங்க புராணம்
68 ஒழிவிலொடுக்கம்
69 வேதாந்த சூளாமணி
70 பிரபோத சந்திரோதயம்
71 திருவிடைமருதூர் மும்மணிக்கோவை
72 திருவிருத்தம்
73 திருவிசைப்பா
74 சித்தாந்தரத்நாகரம்
75 மூதுரை
76 பகவத்கீதை
77 திருக்கூவ புராணம்
78 போகசங்கற்ப வெண்பா
79 அதர்வசிரசு
80 பாகவதம்
81 பெருந்தேவனார் பாரதம்
82 பிரமோத்தர காண்டம்
83 சிலப்பதிகாரம்
84 குண்டலகேசி
85 திருவருணைக் கலம்பகம்
86 கம்பராமாயணம்
87 தொண்டரடிப்பொடியாழ்வார்
88 சிவப்பிரகாசம்
89 அடயோக தீபிகை
90 திருவருட்பயன்
91 உண்மைவிளக்கம்
92 சேதுபுராணம்
93 செவ்வந்திப்புராணம்
94 புறப்பொருள் வெண்பாமாலை
95 பிரபுலிங்கலீலை
96 சூளாமணி
97 காசிரகசியம்
98 சோமேசர் முதுமொழிவெண்பா
99 மேருமந்தர புராணம்
100 சிவஞானதீபம்
101 நீதிநெறி விளக்கம்
102 புறநானூறு
103 திருவடிமாலை
104 திருப்புகழ்
105 நான்மணிக்கடிகை
106 நன்னெறி
107 அறநெறிச்சாரம்
108 வில்லிபாரதம்
109 திருக்கோவையார்
110 திருவள்ளுவமாலை
111 அஷ்டப்பிரபந்தம்
112 நீதிவெண்பா
113 கோவிற்புராணம்
114 கந்தரலங்காரம்
115 புறச்சமயநெறி
116 கந்தரனுபூதி
117 இறையனாரகப்பொருள்
118 நுண்பொருள் நூறு
119 அதிசயபுராணம்
120 ஞானசாகர வெண்பா
121 குசேலோபாக்கியானம்
122 குற்றாலபுராணம்
123 சீகாளத்திப்புராணம்
124 குளத்தூர்பதிற்றுப்பத்தந்தாதி
125 பத்திரகிரியார் பாடல்
126 சிவநெறி வெண்பா
127 சிவானந்த வெண்பா
128 கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி
129 உபதேசகாண்டம்
130 விருத்தாசல புராணம்
131 சிவபோகசாரம்
132 திரிகடுகம்
133 அரிச்சந்திர புராணம்
134 தனிக்கவி சிந்தாமணி
135 திருக்கருவையந்தாதி
136 சித்தாந்த சிந்தாமணி
137 சௌந்தரிய லகரி
138 நல்வழி வெண்பா
139 திரிசிராமலைக்கோவை
140 நளவெண்பா
141 தொல்காப்பிய சூத்திரவிருத்தி
142 நாலாயிரப் பிரபந்தம்
143 சித்தாந்த சாகரம்
144 அத்துவிதவுண்மை
145 தத்துவக்கட்டளை
146 பரமார்த்ததீபம்
147 வாமனதீபிகை
148 கைலைபாதி காளத்திபாதி யந்தாதி
149 ஒருபாஒருபஃது
150 இரத்தினச் சுருக்கம்
151 திருவம்மானை
152 துகளறுபோதம்
153 வண்டுவிடுதூது
154 பிரகதாரணியம்
155 தேவிகாலோத்திரம்
156 திருவுந்தியார்
157 அமுதசாரம்
158 சிஷ்டானுபூதி
159 சித்தாந்ததரிசனம்
160 தத்துவப்பிரகாசம்
161 திருநெறிவிளக்கம்
162 இளசையந்தாதி
163 சங்கற்பநிராகரணம்
164 பட்டினப்பாலை
165 சிவானுபூதிவிளக்கம்
166 மெய்ஞ்ஞானவிளக்கம்
167 இருபாவிருபஃது
168 பண்டார மும்மணிக்கோவை
169 வாமநபுராணம்
170 திருப்பாட்டு

## தாயுமான சுவாமிகள் பாடல்

இது, தாயுமான சுவாமிகளுடைய பாடல் என விரியும்; ஆறும் வேற்றுமைத்தொகை; இங்குத் தொக்கு நின்ற ஆறனுருபு செய்யுட் கிழமைப் பொருளில் வந்தது. அன்றி, தாயுமானவராகிய சுவாமி என விரிந்து, இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகவுங் கொள்ளுவதற் கிடனாகும். சுவாமிகள்+பாடல்=சுவாமிகள் பாடல் என்றது, பாடப்பட்ட செய்யுளுக்குத் தொழிலாகுபெயர். இத்தொடரில் உயர்திணைப் பெயரீற்று ளகரம் வலிவர இயல்பாயிற்று; [நன்-உயிர்-9] தாயுமானவர் என்றவிடத்து வந்துள்ள உம்மை, இறந்தது தழுவிய எச்சம்.

திரிசிராமலைக் கடவுளின் அருளால் தோன்றிய ஒரு மகானுக்குத் தாயுமானவர் என்ற அப்பெயரே குறியாக இடப்பட்டு வழங்கலாயினது ஆகுபெயரில் அடங்கும். பரிசுத்தகரமென்ற காரணத்தால் கடவுளின் பெயரையும், அடியார்களின் பெயரையும் மக்கட்கு இட்டு வழங்குதல் தொன்று தொட்டுவந்த மரபெனக் கொள்க. சுவாமி என்கிற மொழி வடமொழிச்சொல்; இது, பிராகிருத பாஷையில் ஸாமி என விகாரப் பட்டுத் தமிழில், சாமி எனச் சொல்லப்படும். சாமி என்றது, வாஸ்ஸல்ய வாசகமுமாம்.

தாயுமானவர் சுவாமி பாடல் என்பதற்கு, தாயுமானவர் உலகத்திற் குத் தாயுந் தந்தையுமாகிக் காத்தலைப்போலவே, அவனருளாலவதரித்த இவரது பாடலும் தன்னைப் படிப்பார்க்குத் தாய்செய்யுங் காரியத்தையும் தந்தைசெய்யுங் காரியத்தையுஞ் செய்து வாழ்விக்கும் வன்மை யுடைத்தெனப் பொருள் விரிப்பர்.

---

திருச்சிற்றம்பலம்

# தாயுமான சுவாமிகள் பாடல்

(மூலமும்-விருத்தியுரையும்)

### திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்

ஆசிரியவிருத்தம்

அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமாய்
  ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
  அகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
  தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது சமயகோ டிகளெலாந்
  தந்தெய்வம் எந்தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது
  எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமாய்
  என்றைக்கு முள்ளதெதுமேல்
கங்குல்பக லறநின்ற எல்லையுள தெது அது
  கருத்திற் கிசைந்ததுவே
கண்டன வெலாமோன வுருவெளிய தாகவுங்
  கருதிஅஞ் சலிசெய்குவாம்.

(பதவுரை) அங்கு-அங்கு இருக்கின்றது, இங்கு-இங்கு இருக்கின்றது, எனாதபடி-என்று வரையறுத்துக் கூறமுடியாத விதமாக, எங்கும் - எல்லா இடங்களிலும், பிரகாசம் ஆய்-(நின்று நிலைத்து ஒளிரும்) ஒளியாகி, ஆனந்த-பேரின்ப, பூர்த்தி ஆகி-நிறைவு ஆகி, அருளொடு - திருவருட் சத்தியுடன், நிறைந்தது - கலந்து பிரிவின்றி நிறைந்து ஒளிரும் பொருள், எது-யாது? தன் - தன்னுடைய, அருள் - திருவருளாகிய, வெளிக்குளே - சிதாகாசத்தினிடத்தே, அகில-அநேகமாகிய, அண்டகோடி-மிக்குள கோடிக்கணக்கான அண்டங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், தங்கும்படிக்கு - நிலைத்து நிற்கும் வண்ணம், இச்சை-(அருளினாலே) விருப்பத்தை, வைத்து-வைத்து, உயிர்க்கு-

உயிர்க்குள்ளும், உயிராய்-உயிராகி, தழைத்தது-பரவிச் செழித்து உள்ள பொருள், எது-யாது? மனம்-மனத்திலும், வாக்கினில்-வாக்கிலும், தட்டாமல்-(இத்தன்மைத்து என்று) அவ் இரண்டனுக்கும் (எண்ணவும் சொல்லவும் ஒண்ணுதபடி) எய்தாது, நின்றது-நின்றுள்ளதாகிய பொருள், எது-யாது? சமயகோடிகள்-கோடிக்கணக்காகிய (வேறுவேருகிய) பல்வகைச் சமயங்கள், எல்லாம்-எல்லாமும், தம்தெய்வம்-தம்முடையதெய்வம் (என்றும்), எம் தெய்வம்-எம்முடைய தெய்வம், என்று-என்றும், எங்கும்-எல்லா இடங்களிலும், தொடர்ந்து-(விடாமலேபற்றித்) தொடர்ந்து, எதிர்வழக்கு-ஒவ்வொரு சமயமும்) ஒன்றற்கு ஒன்று எதிர்த்து நின்று (வாதம்), இடவும்-புரியவும், நின்றது-(அவ்வச்சமயங்கட்கெல்லாம்) அவ்வச்சமயக்கடவுளாகி விளங்கி யொளிர்கின்றது, எது-யாது? எங்கணும்-(இவ்வண்ணம்) எல்லா இடங்களிலும், பெருவழக்காய்-(அறுதியிட்டு உறுதிசெய்ய முடியாவண்ணம்) பெரிய வழக்காகி, யாதினும்-எல்லாத்தொழிலிலும், வல்ல-வல்லதாகிய, ஒரு-ஒப்பற்ற, சித்து-அறிவுப்பிழம்பு, ஆகி-ஆகி, இன்பம்-(பெரிய) இன்ப வடிவம், ஆய்-ஆகி, என்றைக்கும்-முக்காலத்தும், உள்ளது-(ஒருகாலத்துத் தோன்றுதலும் ஒருகாலத்து அழிதலும் இன்றி இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலங்களிலும் உள்ளதாகிய) நித்தியமாய் உள்ள பொருள், எது-யாது? மேல்-மேலே, கங்குல்-இரவும், பகல்-பகலும், அற-அற்று, நின்ற-நின்ற, எல்லை-இடத்தில், உளது-(அழிவின்றி நித்தியமாய்) உள்ள பொருள், எது-யாது? அது-அந்தப்பொருளே, கருத்திற்கு-எல்லாருடைய கருத்திற்கும், இசைந்தது-ஒப்பமுடிந்த தன்மைத்தாகும்; அதுவே-(ஆதலினால்) அதனையே, கண்டன-காணப்பெற்ற, எலாம் (ஆகவும்)-எல்லாப் பொருள்கள் ஆகவும், மோன-மௌன, உரு-வடிவமான, வெளியது-வெளிப்பாடாகிய அகண்டம், ஆகவும்-ஆகவும், கருதி-மனதிடத்தே சிந்தித்து, அஞ்சலி-கைகுவித்து வணங்கும் வணக்கத்தை, செய்குவாம்-(யாம் எப்பொழுதும்) செய்வோம் என்றவாறு.

**(விருத்தியுரை)** இது முதல் மூன்ருவது பாடல் வரையில் திருவருள் விலாசப் பரசிவ வணக்கம் என்க. சுவாமிகள் முதற்கண்ணே திருவருள் விலாசம் எனத்தொடங்கி, பரசிவ வணக்கம் என்பானேன்? என்னில், தான் எடுத்துக்கொண்ட இத்தாய்மையான தோத்திர சாத்திரநூல் ஒரு வகையான இடையூறுமின்றி இனிது முடியவேண்டிமை கருதியும், அத் திருவருள் சேர்க்கையானே இறைவன் பஞ்சகிருத்தியாதிகளைப் பான்மையாய் இயற்றி, ஆன்மகோடிகள் தத்தம் வினைகளுக்கேற்ப பலாதிகளை அவ்வான்ம வர்க்கத்திற்குப் புசிக்கச் செய்தவிப்பிக்கின்ருனெனவும், இச்சொற்ருெடரே மங்கலமொழிக ளெல்லாவற்றினும் சிறந்த மங்கல மொழியாமெனவும், ஆன்ருேரின் மரபினைப் பின் பற்றியே இவ்வண்ணம் தொடங்கிய தெனவுமாம். ஈண்டு திருவருள் என்றது, ஞானநிட்கள பராசத்தியின் வடிவை. அதாவது ஞானப்பேற்றிற்கு முதற்காரணமாயும் வாக்கு மனங்கட்கெட்டாததாயும், கருவிகாணங்களில்லாததாயும் விளங்கும்



சத்தி. அஞ்ஞான நிட்களமான பராசத்தியே விலாசத் தன்மையுடன் பரசிவ மென்னும் இன்பவுருவான நிட்கள சிவத்துடன் பொலிந்து விளங்குவதாம். பரசிவ மென்றது - இன்பமயமான நிட்கள வடிவுகொண்ட சிவத்தை; அது உருவொடு தொழில் பெயர் ஒன்றுமின்றிப் பரவிய பொருள் என்க. திருவருள் விலாசப் பரசிவம் என்றது - பராசத்தியின் ஆக்கியா விசேஷத்தைக் குறிக்குந் திருவிளையாடலையுடைய நிட்கள சிவத்தினை எனவும் பொருள்.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் முதுமொழிக் கிணங்க, ஈண்டு அன்னையாயும் அப்பனுயும் நின்று பொலிவது ஞான நிட்கள பராசத்தியும், பரசிவமென்னும் நிட்கள சிவமுமேயாகலின், அவ்விரண்டின் வணக்கங்கூற வெழுந்த ஆசிரியர் வேதாகமமுறை வழுவா வண்ணம், அவ்வேத ஆகமாதிகளினது முடிவினுக்கு மேலாய் அந்தராத்ம மெய்ப்பொருளாய் ஆன்மவர்க்கத்தினற்கெல்லாம் உண்மை ஞானத்தைக் கொளுத்த வெழுந்த சிவசத்தி உருவுடையராய் அன்னையும் பிதாவுமாகி நிற்பவைகொண்டு இவ்வணக்கங் கூறியது. இத்துணைய வணக்கமே வேதாதிகளின் நெறிநின்ற வணக்கமாம்; இதனை, "மாத்ரு தேவோபவ" "பித்ரு தேவோபவ" என்ற **உபநிஷத்**தினிடத்து மறிக. இவ்விதம் கூறிய தன் காரணமென்னை யென்னில், சிவசத்திமாத்திரச் சொருபராயவரே உயிர்க்கு மாதாவும் பிதாவும் ஆவர்; உயிரும் நித்தியம் அவரும் நித்தியம் என்பதும் அவரை மறந்து தொழாதவர்கள் பிறவித்துன்பத்திலே பட்டு உழலாநிற்ப ரென்பதும், ஆகையால் இவரைத் தொழுவதே உறுதியென்பதும் விளங்கவுரைத்தமையாம். இறைவன் தன்னுடைய தடதத்தில் மாதா பிதாவாய் விளங்குதல் எத்தன்மைத்தோ அஃதேபோல், சத்தியாய் சிவமாய் நின்று பொலிகின்ருர் என்பதே வேதங்களிலும் ஆகமங்களிலும் வரையறுத்துச் சொல்லி யுள்ளனவாம். இதனை,

> "தஸ்மாத் ஸஹதயா ஶக்தயா ஹ்ருதிபஶ்யம் தியேஶிவம் |
> தேஷாம் ஶாஶ்வதிகீ ஶாம்திர் கேதரேஷா மிதிஶ்ருதிஃ ||"

எனக் **கடவல்லியுபநிஷத்**திலும்,

> "அஹோமம ஸமாயோகாத் ஶக்திஸோ த்ரிகுணத்மிகா
> அதிஷ்டாநேது மய்யேவ பஜதே விஶ்வரூபதாம்
> ஶாக்தௌ ரஜதவ த்ராஜ்ஜௌ புஜங்கோ யத்வதேவது"

எனப் **பத்மபுராண**ஞ் சிவகீதையிலும்,

> "தத்ப்ராஹ்ம ஶக்திஃ ப்ரக்ருதி ஸர்வஜீவ ஸ்வரூபிணீ
> யஸ்த ச்சக்தி மத்ப்ரஹ்ம சேதம் ப்ரக்ருதி லக்ஷணம்"

எனப் **பிரமவைவர்த்தபுராண**ம் பிரம்மகண்டம் அத்தியாயம் 28-லும்,

> "உலகெலா மாகிவேரு யுடனுமா யொளியா யோங்கி
> அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையா னமர்ந்துசெல்லத்

தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய்த லின்றித்தானே
நிலவுசீ ரமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்"

எனச் **சிவஞான சித்தியிலும்,**

"அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே"

எனச் **சிவஞான போதத்திலும்,**

"சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவஞ்சத்தியு மாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்தி தானென்றுஞ் சமைந்துரு வாகுமே"

எனத் **திருமந்திரத்தும்,**

"பொன்னிறங் கட்டியினும் பூணினு நின்றாற்போ
லந்நிற மண்ணாலு மம்பிகையுஞ்—செந்நிறத்த
ளந்நிறத்த னாயிருப்ப னெங்கள் சிவபதியு
மந்நிறத்த னாயிருப்ப னாங்கு"

எனத் **திருக்களிற்றுப்படியாரிலும்,**

"சத்தியுஞ் சிவமுமாகித் தாணுவாய் சகத்துக்கெல்லாம்
முத்தியு மளிக்கவல்ல முதல்வனே நமச்சிவாயா"

என **நமச்சிவாய மாலையிலும்,**

"தாயாகித் தந்தையாய்த் தமர்கிளைஞர் சுற்றமெல்லாம்
நீயாகி நின்ற நிலையறியேன் பூரணமே"

எனப் **பட்டினத்தார்** கூறியதும் ஈண்டறிக. அன்றி, நிஷ்கள சிவத்தின் இலக்கணத்தை வற்புறுத்தவேண்டி, அச்சிவம் பிரபஞ்ச காரியத்திற்குத் தனக்கோர் உபாதான காரணமாய் நின்ற சுத்தமாயை அசுத்தமாயை சுத்தாசுத்தமாயை என்னும் இவற்றிற்கும் அப்பாற்பட்ட நிலையாதலின் அச்சிறப்புத் தோன்றவுமே, பரசிவ வணக்கம் கூறியதுமாகப் பொருள் கூறலாம். இவ்வாறு பரசிவ வணக்கத்தை,

"அல்லையீதல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லினாற் றுதித்திளைக்கு மிச்சுந்தரன்"

எனத் **திருவிளையாடற் புராணத்தும்,**

"வேதங்களையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே"

என **மணிவாசகர்** கூற்றானு மறிக.

இத் 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்' என்னுஞ் சொற்றொடர் நான்கு சொற்கள் மூன்று சந்திகளால் ஆகியது. இது பன்மொழியுந் தொக்க அன்மொழித்தொகையாய்ப் பரசிவத்தை வணங்கும் வணக்க



மாகிய செய்யுள்களைக் குறித்தது. ஈண்டு இறைவனை வணங்கும் வணக்கத்தினையே, 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்' என்னும் பெயரிட்டன ரென்க. இச் சொற்றொடரின் பதப்பொருளென்னை யெனில், சிறந்த கருணை விளக்கத்தையுடைய (நல்ல பெரிய) உயர்ந்த மங்கலப்பொருளை வணங்கும் வணக்கம் என்பதாம்.

இனி, 'திருவருள்' என்பது, திரு+அருள் என்கிற இருசொல் ஒரு சந்தி. 'திரு' என்னும் பால்பகா அஃறிணைச்சொல் அருளுக்கு விசேடணமாய் வந்த அடைமொழியாம். திரு என்னும் பலபொருள் குறிக்கும் இச்சொல், 'ஸ்ரீ' என்னும் வடமொழியின் திரிபென்பாரு முண்டு. அஃது ஈண்டு கண்டோரால் விரும்பப்படும் தன்மையைக் குறித்து நின்றது. இது இவ்வாறு பொருள் தருதலை, "திருவளர் தாமரை" என்னும் **திருக்கோவை**யாரின் முதற் செய்யுளுக்குப் பேராசிரியர் உரைத்த உரையிடத்தே கண்டறிக.

'அருள் விலாசம்' இது பண்புத்தொகை; அருளாகிய விலாசம் என விரியும். இனி, அருளினது விலாசம் என விரித்துப் பொருள் கொள்ளின் ஆறும் வேற்றுமைத் தொகையாகும். 'விலாசப் பரசிவம்' இது, இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்க தொகை. விலாசத்தையுடைய பரசிவம் என விரியும். பரசிவம்—இது, இருபெயரொட்டுப் பண்புத் தொகை; பரமாகிய சிவம் என விரியும்; இதன் பொருள், மேலாகிய மங்கலத்தைக் கொடுப்பது; அதாவது - பேரின்ப வாழ்க்கையினைத் தருவது. பரம் - மேலான; சிவம் - மங்கலத்தைக் கொடுப்பது. சிவவணக்கம் - இது, இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகையாம். சிவத்தை வணங்கும் வணக்கமென விரியும். இச் சொற்றொடரில், 'திரு' என்பது முதல், 'வணக்கம்' என்பதீறாக வந்து எல்லாச் சொற்களும் தொடர்ந்து திருவருள் விலாசப் பரசிவத்தை வணங்கும் வணக்கமாகிய பாக்களை ஈண்டு குறித்தது. இவ்வாறு விரித்துக் கூறினமையினாலே சிவபெருமானுக்கு நிட்கள வுருவமும், சகள வடிவமும், சகளநிட்கள வடிவமும், இவையல்லாமல் அதீத வடிவமும் இறைவனுக்கு உளதெனற் பாலனவாம். இதனை,

"உருமேனி தரித்துக் கொண்ட தென்றலு முருவிறந்த
அருமேனி யதுவுங் கண்டோம் அருவுரு வானபோது
திருமேனி உபயம் பெற்றோஞ் செப்பிய மூன்றுநந்தங்
கருமேனி கழிக்க கருணையின் வடிவு காணே"

என வரூஉஞ் **சிவஞான சித்தியார்** திருவிருத்தத்தானுணர்க. இவற்றுள் அருவ விலக்கணம் முதல் மூன்று பாடலில் வருவதனைத் தெரிந்துணர்க. இதனால் பாவஸ்துவில் சத்தி வாஸ்தவத்தில் அபேதமாயும், கற்பிதத்தில் பேதமாயிருக்கும். ஆனால், சத்தியினைக் குணமென வறியாதார் பொருளெனக் கூறுவர். சத்தி சத்தனைத்தவிர வுண்டென்பதற்கு யாதொரு உதாரணமும் இன்மையினாலும், "ஏகமே வாத்விதியம் பிரமம்" என்று

சுருதி கூறுவதாலும் அது கூடாது. பரவஸ்து தனது சத்தி விசிரிம்பித்த விடத்துச் சிவேசுவரவுலகாய் விளங்குகின்றது. விளங்கினும், அவை பரவஸ்துவிற்கு வேறுபட்டனவல்ல; அதன் கண் பொற்பணிபோன் றிருக்கின்றன. அச்சத்தியோ, சூரியகிரணம் அச்சூரியனை விட்டிராததுபோல் அப்பரவஸ்துவில் இருக்கின்றது.

"ஏதத் ஸர்வமிதம் விச்வம் ஜகதேத சராசரம்
பரப்ரஹ்ம ஸ்வரூபஸ்ய விஷ்ணோ ச்சக்தி ஸமந்விதம்"

என்னும் **விஷ்ணுபுராணத்தும்**, சராசரங்களடங்கிய பிரபஞ்சமானது பரப்பிரம்ம சுவரூபமாகிற விஷ்ணுவினுடைய சத்தியோடு 'கூடியிருக்கின்றது என்கிறவற்றைக் கொண்டே, 'திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்' என்று பொருள் பொதிவாக்கியங்களை வைத்தோதினர்.

சகல பூதங்களிலும் மறைந்தும் சர்வவியாபியாகவும் சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் தொழில்களுக்கு இறைவனாகவும் சர்வபூதங்களிலும் உறைந்து கொண்டும் கேவலம் சாக்ஷியாகவும் சேதனஸ்வரூபியாகவும் குணங்களற்றும் தொழிலற்றும் பலவற்றிலும் தனியாய் வசிப்பவனாகவும், எல்லா வான்மகோடிகளும் இறைவன் தானாகவே எங்கும் நிறைந்து நிற்கின்ற வடிவமுடையவனாக விளங்குகின்றவனாதலின், 'அங்கிங்கெனாதபடி' என்றார். இதனை,

"நிஷ்களம் நிர்மலம் சாந்தம் ஸர்வாதீதம் நிராமயம்
ததேவ ஜீவரூபேண புண்யபாப பலோர்வ்ருதம்"

என **யோகதத்துவ உபநிஷத்திலும்**,

"யதோவா இமாநிபூதாநி ஜாயந்தே
யேநஜாதாநி ஜீவந்தி யத்ப்ரய ந்த்யந்தி பி ஸம்விசந்தி
தத்வி ஜிஜ்ஞா ஸஸ்வ தத் ப்ரஹ்மேதி"

எனப் **பிருகுவல்லியிலும்**,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்"

எனச் **சிவஞான போதத்தும்**,

"பூதங்க ளாந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்க டொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே" எனவும்,

"தீதியாய் நிலனாகி நெருப்பாய் நீராய்
நிறைகாலா யிவையிற்றி னியம மாகிப்
பாதியா யொன்றாகி யிரண்டாய் மூன்றாய்ப்
பரமாணு வாய்ப்பழுத்த பண்க ளாகிச்



சோதியா யிருளாகிச் சுவைக ளாகிச்
சுவைகலந்த வப்பாலாய் வீடாய் வீட்டின்
ஆதியாய் அந்தமாய் நின்றான் றன்னை
யாரூரிற் கண்டடியே னயர்த்த வாறே" எனவும்,

"தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே யுடலுயிர் தத்துவமாய் நிற்கும்
தானே கடன்மலை யாதியுமாய் நிற்கும்
தானே யுலகிற் றலைவனு மாமே"

எனவும் **திருமந்திரத்திற்** கூறியவண்ணமும்,

"ஏகோவசீ ஸர்வ பூதாந்த ராத்மா
ஏகம் பீஜம் பஹுதாயः கரோதி"

என்றும் **கடோபநிஷத்திற்** கூறியதற்கிணங்க.

இறைவன், அதி சூட்சுமமாகிய ஆலம் விதையிலிருந்து அநேக கொம்புகள் கிளைகள் பூவுகள் பிஞ்சுகள் காய்கள் கனிகள் இலைகள் முதலியவைகளோடுங் கூடிப் பெரிய விருக்ஷம் உண்டாகியபோதிலும், அந்த வித்திலிருந்த சத்தானது விருக்ஷமுழுமையும் வியாபித்திருந்தாற் போன்று சர்வ சராசரப் பிரபஞ்சமுழுமையும் ஆத்மசொரூபமாகி வியாபித்துள்ளமையினையே ஈண்டு விரித்தார். இத்துணைய பொருளைச் சுட்டிக்கூறுவது பொருந்துமோ வெனில் எவ்வாற்றானும் பொருந்தா. அப்பொருளையே கூறவெழுந்த அடிகள், அங்கு, இங்கு, எங்கு என்பனவாகிய சொற்களை அடுக்கி இறைவன் நிலையினைத் தெளியவைத்தமை. சிற்றறிவுடையோர் கடவுள் அங்குளன், இங்குளன், எங்குமுளன் எனக் கூறுவதெல்லாம் அவன் நிலையறியாமல் உரைத்தலேயாம். எங்கும் வியாப்பிய மானதொரு பரம்பொருளை இடவாயிலாகவும் காலவாயிலாகவும் சேய்மை அண்மை வாயிலாகவும் கூறுவதெங்ஙனம்? இது பற்றியே அகரச்சுட்டாகவும் இகரச்சுட்டாகவும் கூறியவர் தாமே மீண்டும் எங்கும் எனவும் கூறினர். இவ்வண்ணங் கூறியதன்காரணம் பேரறிவு, காலம், தேசம், கற்பனை, கருதுதல் முதலியவை கடந்து ஒளிர்வோனாகிய கடவுளை அங்கு இருக்கின்றான், இங்கு இருக்கின்றான், உங்கு இருக்கின்றான் என்று கூறுதலின்றி, அங்கும் இருக்கின்றான், இங்கும் இருக்கின்றான், உங்கும் இருக்கின்றான், எங்கும் இருக்கின்றான் என்று ஸர்வ வ்யாபகத்துவங் கூறியபடி.

மேலே சொல்லியபடி உருவம் உள்ளவனை அல்லவா அங்கு இங்கு இருக்கின்றான் எனச் சொல்லத்தகுவது? அங்ஙனமிருக்க உருவமில்லாதவனை இருக்கின்றான் என்பது பொருந்துவதோ வெனில், அங்கு இருக்கின்றான் என்றால் அங்குமில்லை உங்குமில்லை என எண்ணவேண்டி வரும். இங்கு இருக்கின்றான் என்றால் அங்கில்லை உங்கில்லை என எண்ணவேண்டி வரும். இவ்வித விபரீதத்தைப் போக்கவே, "அங்கு இங்கு எனாதபடி" என்று கூறினர். இனம் பற்றி உங்கும் சேர்த்துக் கூறப்பட்டது. அங்கு-

என்பதில் அகரச்சுட்டு சேய்மையையும், இங்கு - என்பதில் இகரச்சுட்டு அண்மையையும் சுட்டி நின்றது. இதனுனே சேய்மைக்கண் உளதாகிய 'அண்டாண்ட பிரமாண்டங்கள்' என்றும், 'இங்கு' என்பதற்கு அண்மைக் கண்ணதாகிய பூமி பாதாளங்கள் என்றும் பொருள் கொள்ளலும் ஒன்று.

மற்றும், மேலே எடுத்துக்காட்டிய சுட்டுக்கள், அம்மையையும் இம்மையையும் குறித்தலுமாகும், இனம் பற்றிவந்த 'உங்கு' உம்மையைக் குறிக்குமென்க. இவ்வாறு வருவதனை இரட்டுறமொழிதல் என்பர் இலக்கணநூலார். 'உங்கு' என்பது உயரத்தையும், நடு இடத்தையும், பின்பக்கத்தையும் குறிக்கும்; மேலும் இடைவெளியையுங் குறிக்கும். 'எங்கும்' என்று கூறியது அங்கு இங்கு உங்கு முதலியவற்றாற் குறிக்கும் இடங்களையும், இவைகளாற் குறிக்கப்பட்டும் வேறு இடங்கள் எஞ்சி நிற்குமேல் அவைகளையுங் குறிக்கவேயாம். இவ்விதம் சொன்னமையால் இறைவனின் விபுத்வங் கூறியதாயிற்று. இதனை,

"எங்குமவன் திருவடியே எங்குமவன் திருமுகமே
எங்குமவன் விலோசனமே எங்குமவன் குழைச்செவியே
எங்குமவன் செய்வாயே எங்குங்கையே பதமும்
எங்குமெனிற் சிவபெருமான் ஏற்றநா னென்றுரைக்கேன்"

என்பதனுலறிக.

'எனதபடி' இது-என்னுதபடி என்றதன் தொகுத்தல் விகாரம். இவ்வண்ணம் அங்கு இங்கு என்னுதபடி நிறைந்த ஈசன் அழற்பிழம்பு வடிவமாயும், முச்சுடர் முதலிய உலகத்து ஒளிகளின் அந்தராத்மாவாயும், சுயம்பிரகாசமாய் ஞானத்தைக் குணமாகவுடையவனும், புறவிருள் ஒழிக்கும் சுடர் வடிவானவனும், அகவிருள் ஒழிக்கின்றவனுகவும் இருந்து ஆன்மவர்க்கங்களின் இச்சாஞானக் கிரியாதிகளை இடை நின்று மறைக்கும் பேரந்தகாரத்தைப் போக்குகின்ற திறத்தினுலும், 'பிரகாசமாய்' என்ருர். இதனை,

"சோதியாய்ச் சுடர்விளக்காய் ... ... ...
... ... ... அதிகை வீரட்டனுரே"

என்ற **அப்பர் தேவாரத்திலும்,**

"ஒளியாய்க் கதிர்மதியா யுள்ளிருளா யக்கினியாய்
வெளியாகி நின்ற வியனறியேன் பூரணமே"

என்ற **பட்டினத்துப் பிள்ளையார்** பாடலிலும்,

"சோதியே சுடரே சூழொளி விளக்கே" எனத் **திருவாசகத்திலும்,**

"ஆதியு மாயர னுயுட லுண்ணின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தாருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையும்
நீதியு மாய்நித்த மாகிநின் ருனே"

என **திருமந்திரத்திலும்,**



"ஒளியாம் பரமும் உளதாம் பரமு
மளியார் சிவகாமி யாகும்" என்வும்,

"ஆதியாய நான்முகனு மாலு மறிவரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லுவ தென்றிறமே"

எனத் **திருஞானசம்பந்தரும்,**

"அரியானை யந்தணர்தஞ் ... ... ...
... ... ... ... பிறவாகாளே"

என **நாவுக்கரசரும்,**

"உருகுதலைச்சென்று உள்ளத்து மம்பலத்து மொளியே"

எனச் **சிவஞான சித்தியா**ரில் கூறியவாற்றுனு மறிக.

முக்காலத்துக்கும் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாக யிருப்பது ஆநந்தமெனப்படும்; அத்துணைய ஆநந்தத்தையே ஈண்டு குறித்தது. குளிர்ச்சி நெகிழ்ச்சி வெண்மை வடிவம் என்றுரைப்பதினுலும், பிரகாச உஷ்ண லோகித வடிவம் அக்கினியென்று உரைப்பதினுலும் ஜலமும் அக்கினியும் மும்மூன்று பொருள்களாகாமல் எங்ஙனம் ஒவ்வொரு பொருளாகவே இருக்கின்றனவோ அங்ஙனமே சச்சிதானந்த வடிவம் பிரமமென்று உரைப்பதினுலே பிரமம் மூன்று கூறுடைய பொருளாகாது ஒரே பொருளாய் ஆனந்தமயமாக நிற்கிறதென்க. உன்னிநோக்கில் சத்தே சித்தாக இருக்கிறது, சத்துக்குச் சித்து வேறுபட்ட தென்ருல் அப்போது அஃது அசத்தாகும், சித்து பரிக்கோடுபோன்று அசத்தாமாயின் அஃது எங்ஙனம் சாக்ஷியாம். ஆதலால் சத்தே சித்தாகும். எங்ஙனம் சத்தே சித்தாயிருக்கின்றதோ அங்ஙனமே சித்தே சத்தாக விருக்கின்றது. சித்திற்குச் சத்து வேருயின் அப்போதது சடமாம். சடத்திற்குக் கயிற்றரவுபோன்று இருப்பின் ஆகலின் சித்தே சத்தாகும். சத்தும் சித்துமே ஈண்டு கூறிய ஆனந்தமெனக் கொள்க. ஆனந்தம் சத்திற்கும் சித்திற்கும் வேருயின் அப்போது அஃது அசத்துச் சடமாகும். அசத்துச் சடங்களாற் சுகானுபவ முண்டாகாமையின் சத்தும் சித்துமே ஆனந்தமாயிற்று. இவ்விதம் சச்சிதானந்த பின்னமாகாமல் இருத்தலின் இறைவன் சச்சிதானந்த வடிவமென்பது இனிது விளங்கும். எஞ்ஞான்றும் நிவிர்த்தியின்மை பற்றிச் சத்தென்றும், சடத்துக்கு வேருய்ப் பிரகாசவடிவமாயிருத்தல் பற்றிச் சித் என்றும், துக்கத்திற்குவேருய் முக்கிய பிரீதிக்கு விஷயமாயிருத்தலின் இறைவனை ஆனந்த மென்றுஞ் சொன்னதாம். இங்ஙனம் சேர்க்கையுற்ற அவனது உருவமனைத்தும் ஆனந்த மயமாகவே அவனை உற்றடைவார்க்கும் நோக்குவார்க்கும் ஆனந்தமே பயத்தலின் அங்ஙனங் கூறியதுமாம். 'ஆனந்த பூர்த்தியாகி' என்றது, ஆனந்தம்-இன்பம், பூர்த்தி-நிறைவு. இறைவன் ஆன்மகோடிகளுக்கு இன்பத்தைப் பயத்தலின், ஆனந்தமயன் எனவும் பொருள் விளங்கும். சங்கரன் என்னும் சப்தமுள்ள திரு

நாமமும், பிறர்க்கு ஆனந்தத்தைச் செய்பவன் என்னும் பொருள் தந்து நிற்பதைச் சுருதிகளினாலே அறிக.

இவ்வானந்தத்தையே நம்மனோர் இருவகையாகப் பிரித்துக்கொண்டு சிற்றின்ப மெனவும் பேரின்ப மெனவும் பெயரிட்டு வழங்கலாயினர். அவ்விரண்டனுள் சிற்றின்ப மென்பது மலத்தால் மறைப்புண்டு கிடக்கும் பெத்தான்மாக்கள் அனைத்தும் அநுபவிக்கும் இன்பங்களெல்லாம் சிற்றின்பமே யாகும். ஏனெனில், இது துக்கமயமாகவும் தோன்றி மறையும் இயல்பினையும் உடையதானது. இது பற்றியே ஞானிகளினால் நிசேதமென்று அருவருத்துத் தள்ளப்பட்டது. இதனை, "நெடுங்காம முற்பயக்கும், சின்னீர வின்பத்தின் பிற்பயக்கும் பீழை பெரிது" என்றார்.

ஆனால், பேரின்பமே இத்தகைத் தன்று. அஃது, பல்லூழிகாலம் பயின்று பரனை வழிப்பட்ட நல்லூழினாலே ஞானமுதிர்வு கைவரப்பெற்றுக் கடவுளைத் தியானஞ்செய்து நின்றார்க்கு அவ்வழித்தோன்றுவதாகிய இன்பமே பேரின்பமாகும். இப்பேரின்பபேறே முத்தான்மாக்களுக்கு எய்தும். முத் தன்மையாவது - ஆன்மாவின் தோற்றமற்றுச் சிவத்தோற்றமாம் நிலையில் நிற்றல். இம் முத்தான்மாக்களும் தியானம் ஒழிந்த காலத்தில் இவ்வின்பம் அன்னவர்க்கும் மறைவுறும். இத்துணைய பேரின்பமுடைய கடவுளை வழிபடார்க்கே தோன்றுதல் ஒரு தலையாம் என்க. ஆதலினாலே இப்பேரின்பம் கடவுளினிடத்தே உண்டாகின்றன வென்பது திண்ணம் இதனை உன்னிக் கருதுவார்க்குக் கடவுள் இன்ப வடிவினனென்பதில் ஆசங்கை யுண்டாகாது. உண்டாகாமையின் இறைவன் ஆனந்தஸ்வரூபி யென்பது உறுதியாயிற்று. இதனை,

"மூவாரு மறியொணா முதலாய வானந்த மூர்த்தியான்"

எனத் **திருவாசகத்**தும்,

"கேட்கவா நந்தங் கிளக்கவா நந்தமுன்
ஆட்பட்டா லென்றென்று மானந்தம்—வேட்கையொடு
கண்டாற்பே ரானந்தங் காணாயென் னெஞ்சேநஞ்
சுண்டா னந்த உரு"

எனத் **தனிப்பாடலினும்**,

"அட்டாங்க யோகமு மாதாரமாறு மவத்தை யைந்தும்
விட்டேறிப்போன வெளிதனி லேவியப் பொன்று கண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூர லுண்டு மகிழ்ந்திருக்க
எட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே"

எனவும் கூறியது காண்க. இதனால், ஆன்மா பெத்த நிலையில் ஆணவத்தால் விழுங்கப் பெறுவதுபோல முத்த நிலையில் சிவத்தால் விழுங்கப் பெற்ற தென்பதேயாம். இந்த வபிப்பிராயத்தையே மீண்டும் இவ்வாசிரியரே, "ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத், தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ" என்றதுவுமாம்.



இத்துணைய வானந்தம் குறைவுடையதன்று: எவ்வமையத்தும், ஒரு படித்தான நிறைவுடைத் தென்பார், 'ஆனந்த பூர்த்தியாகி' என்றார். அது ஒரு இடத்துக் குறைந்தும், ஒரு இடத்து நிறைந்தும், ஒரு காலத்துக் குறைந்தும், ஒரு காலத்து நிறைந்தும் இருப்பதன்று; எக்காலத்தும் எவ்வமயத்தும் எவ்விடத்தும் ஒரே படித்தாய்க் குறைவு சிறிதும் இல்லாததாய் நிறைவே யுடைத்தாக இருப்பதும் நித்தியமானது மென்பதை விளக்கவன்றோ இவ்வாசிரியரும், 'ஆனந்த பூர்த்தியாகி' என்றார். இந்நூலிலேயே வரும் பாக்களில், 'பரிபூரணானந்தமே' என்றும், 'அகண்டபரி பூரணானந்தம்' எனவுங் கூறுதல் அறிக.

தாயுமானவர் கடவுள், 'அங்கு இங்கு எனாதபடி எங்கும்' உள்ளவனென்பதை உறுதிப்படுத்திக் கூறியமையால் கடவுள் என்னும் சத்துப் பொருள் விளக்கினாராயிற்று. கடவுள் எங்கும் பிரகாசமா யுள்ளவனென்பதால் கடவுள் சித்துப் பொருளெனக் கூறினாராயிற்று. இவ்விரண்டின் சேர்க்கையே ஆனந்தமாய தென்பார். 'ஆனந்த பூர்த்தி' என்றும் கூறினாராயிற்று. ஆனந்த + பூர்த்தி = ஆனந்த பூர்த்தி, இது வடசொற்புணர்ச்சியாதலின் இயல்பாயிற்று. நன்னூல்,

"இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு மரூஉவும் பொருந்திய வாற்றிற்கு
இயையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே" என்பது விதி.

'அருளொடு நிறைந்தது எது' என்றதில், 'அருள்' என்பது தொடர்பு பற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண் மேலுஞ் செல்வதாகிய கருணையைக் குறிப்பது. இவ்வருளே இறைவனிடத்துள்ள அபின்னசத்தி, இவ்வபின்ன சத்தியினையே அருட்சத்தி யென்பர். இவ்வருட்சத்தியினிடத்து இச்சா சத்தி ஞானசத்தி கிரியாசத்திகள் தோன்றுகின்றன. இச்சத்திகள் மல சம்பந்தப்பட்டுள்ள ஆன்மாக்களுக்கு அருள் செய்கின்றன. இதனை,

"மருளுந் தெருளும் மறக்கும அவன்கண்
அருளை மறவாதே உந்தீபற
அதுவே யிங்குள்ளதென் றுந்தீபற" என்றதனா லறிதலாகும்.

நிறைவு-நீரினால் பூரிதமான கடம்போன்று பஞ்சகோசங்கள் பூர்வ பூர்வம், உத்தரோத்தரங்களால் பூரிக்கப்பட்டுச் சீவனாலும் பூரிக்கப்பட்டிருக்கின்றன. அக்கோசங்களாற் பூரிக்கப்பட்டுள்ள பஞ்ச பூதங்களாற் பூரிக்கப்பட்டிருப்பது சகம்; அச்சகத் தெவ்விடத்தும் வியாபித்துள்ள மாயா விசிஷ்டனும் தன்னால் வியாபிக்கப்பட்டுத் தான் பிரிதொன்றால் வியாபிக்கப் படாதிருத்தலின் இறைவனை, 'நிறைவு' யென்றார்.

இறைவனது திருமேனி அனைத்தும் அருண்மேனியாய்ப் பொலிகின்றவன் என்பதனை,

"உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற்றோன்றுங்
கருமமுமருள ; ரன்றன் கரசரணாதி சாங்கம்

தருமருளுபாங்க மெல்லாந் தானரு டனக்கொன் றின்றி
"யருளுரு வுயிருக்கென்றே யாக்குவ னமலன்றானே"

எனச் **சிவஞான சித்தியாரி**லும்,

"அருளல்ல தில்லை யரனவ னன்றி
யருளில்லை யாதலி னோருயிர்க்குந்
தருகின்ற போதிருகைத் தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே"

"அருளே சகளமு மாய பவுதிக
மருளே சராசர மாய வமலமே
யிருளே வெளியே யெனுமெங்கு மீச
னருளே சகளத்த னன்றியின் றாமே"

என்ற **திருமந்திரத்**தும்,

"ஆரா அமுதே அருளே போற்றி" எனவும்,

"அருளா ரமுதப் பெருக்கே"

எனவும் ஆன்றோர் கூறியுள்ள வாக்கியாதிகளினாலு மறிக.

'அருளொடு' என்றதன் கண் வந்துள்ள 'ஒடு' என்னும் மூன்றனுருபு ஒற்றுமைப்பொருளில் வந்தது. இதனையே உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த தெனவுஞ் சொல்லுவர். 'எது' என்றது, வினா. 'தன்னருள் வெளிக்குளே' என்றதில், அருள்வெளி என்றது பரவெளியை. ஈண்டு, இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி முதலிய அஷ்டாங்கயோகமும், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை ஆகிய மூலாதாரம் ஆறும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் ஆகிய ஐந்தவஸ்தைய்யும் கடந்து சென்றால் சுத்தவெளி தோன்றும்; அதனையே திருவருள் வெளி யெனவும் படும். இவ் வருள்வெளியையே சிதாகாசம் யென்றும், சிதம்பரமென்றுங் கூறுவர். பரவெளியிலிருந்து அண்டவெளி தோன்றும், அண்ட வெளியி லிருந்து மனவெளி தோன்றும். இவ் வெளிகள் தோன்றிய முறையே ஒடுங்கும். ஆதலின், பரவெளியினின்றும் எல்லாவெளிகளும் தோன்றும், இதனைப் பாழெனவுங் கூறுப அவ்வெளியிலே சந்திரகலை அமுததாரை சொரியும். அதனை உண்ணும் ஆன்மா மீட்டும் மாயை வயப்படாது பேரானந்தமாய் விளங்கும். இஃது அநுபவத்தால் அறிதற்பாலது.

"உண்ணீ ரமுதமுறு மூறலைத் திறந்
தெண்ணீ ரிணையடித் தாமரைக்கே செலத்
தெண்ணீர்ச் சமாதி யமர்ந்து நிராகலக்
கண்ணாற் றேடே சென்றுகால் வழிமாறுமே"

"அமுதப் புலன் வருமாற்றங் கரைமேல்
குமிழக் கந்தற் சுடரைந்தையுங் கூட்டிச்



சமையத்தண் டோட்டித் தரிக்க வல்லார்க்கு
நமனில்லை நற்கலை நாளில்லை தானே"

எனத் **திருமந்திரத்**துக் கூறியது காண்க.

ஈண்டு 'தன் அருள்வெளி' என்றது இறைவனின் சந்நிதானத்தை. இறைவன் சந்நிதானமாகிய பரவெளியை யன்றி வேறு இடமில்லை. இதனாலேயே 'அருள் வெளிக்குளே' என்றதில் ஈற்றில் தேற்றேகாரத்தை வைத்துக் கூறினர். இதனை,

"அப்பர வெளியி னின்றே அண்டநல் வெளிதான் றோன்றுந்
தெருட்டிகழ் இதனி னின்றுந் திகழ்மன வெளியுந் தோன்றும்
பொருட்படு மிவைக ளெல்லாம் போந்தவம் முறையினானே
மருட்படா தொன்றி னொன்றாய் மயக்கற வொடுங்கு மாலோ"

எனச் **சித்தாந்தத் தனிச்செய்யுட் சிந்தாமணி**யிலும் கூறிய தறிக.

உளே, இது உள்ளே என்றதன் தொகுத்தல் விகாரம். உள் - இடப் பொருள் குறித்து நின்றது. பரவஸ்து பரிபூரணமா யிருத்தலினால் அதன் கண் உலகு வேறு பொருளாயிருப்பதற்கு ஞாயமின்று; இன்மையின், பரவஸ்துவே உலகாய் விளங்குகின்றது. இத்தகைய உலகமானது ஆதித் தன் முன்னர் காரியப்படுந் தன்மையினை யொத்து இறைவனிடத்திலே எல்லாவுலகங்களும் தோன்றி விரிந்து அடங்குதலின், 'அகிலாண்டகோடி யெல்லாம் தங்கும்படிக்கு' என்றார். இதனை,

"உபாதாநே கிலாதாரே ஜகந்தி பரமேஶ்வரே
ஸர்க்க ஸ்திதி லயாந் யாந்தி புத்புதா நிவ வாரிணி"

என **ஆத்மபோதத்**திலும்,

"ஸமஸ்தம் கல்விதம் ப்ரஹ்ம ஸர்வ மாத்மே தமாததம்
அஹம்ந்ய மிதம்சாந்ய திதிப்ராந்திம் த்யஜாநக"

என **மஹோபநிஷத்**திலும்,

"ப்ரஹ்மாத்யம் ஸ்தாவராம்தம்ச பஶ்யந்தி ஜ்ஞாந சக்ஷுஷா
தமேகமேவ பஶ்யந்தி பரிமுக்ப்ரம் விபுத்விஜாঃ
யஸ்மிந்பாவாঃ ப்ரலீயந்தே லீநா ஶ்சாவ்யக்ததாம் யயுঃ
பஶ்யமதி வ்யக்ததாம் பூயோ ஜாயந்தே புத்புதாஇவ"

எனச் **சுபாலோபநிஷத்**திலும் கூறியபடியும், எல்லாவாறுகளுந் தடங்கட லிற்புக்கு வேற்றுமையற்று நிற்பவை போன்றும், அக்கடலினின்று எழு தரும் அலைநுரை திவலைகள் முதலிய அதனைவிட்டு வேற்றுமைப் படாமல் ஒன்றேயானாற்போன்றும் பிரமாதி தாவரபரியந்தம் சர்வசராசர பிரபஞ்சங்களும் பிரமத்தைவிட வேறாகாமையால் அவ்வாறு கூறினதாம். இதனையே,

"நன்றாய் ஞான கனமாகி நானு வெல்லாம் பிறப்பிடமா
யொன்றாய் வேறோர் பொருளின்றி யொளியா யொன்றே டெமிப்ப

தன்று யகில சராசரங்கட் காதா ரந்தா ளுமென்றும்
பொன்று தருவா யவிகாரப் பொருளாய்ப் புதனுப் புணர்ப்பரிதாய்"

எனக் **கூர்மபுராணம்** ஈசுவர கீதையிலும் விளங்க வைத்தார்.

அண்டம்-உலகம்; முட்டை எனவுமாம்; இவ்வுலகங்கள் முட்டையின் தன்மையினை ஒத்து நிற்றலின் அங்ஙனங் கூறிய தென்க. அகில+அண்டம்=அகிலாண்டம்; இது வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி. அகிலம் எனவும், எல்லாம் எனவும் ஒரே பொருள் குறித்து இரண்டு சொற்கள் வந்தமை கூறியது கூறல் என்னும் குற்றதுட் படாதோ எனில்; படாதென்க. அகிலம் - எல்லாம். அவ்வாறு குற்றமாகாமைக்குக் காரணம் யாதெனில், ஈண்டு அகிலம் என்கிற சொல்லானது உலகின் வகையினை உணர்த்தினமையா லென்க. அண்டங்களும் ஒன்று இரண்டு என வரையறுத்துச்சொல்ல முடியாவண்ணம் பல்வகைய அண்டங்கள் உண்டாமாதலின் எல்லாம் என்பது ஈண்டு தொகையினை உணர்த்தி நின்றது. 'எல்லாந் தங்கும் படிக்கு' என்பதில் முற்றும்மை தொக்கி நின்றது; இது உம்மைத் தொகை. அண்டம்-இறைவன் அருளை அண்டியிருப்பது என்னுங் காரணம் பற்றி வந்த பெயர்; இதில், அண்டு, பகுதி. கோடி - மிகுதிப்பொருளை உணர்த்த வந்தது. கோடி - நூறுலட்சங்கொண்ட எண்ணைக் குறிக்குஞ் சொல். ஈண்டு கோடி என்பது நூறலக்ஷத்தைக் குறித்து நின்றது என்று கூறுவதால் வரும் இழுக்கு என்னையோ வெனின், அண்டங்கள் அளவு கடந்தனவாய்ப் பல்கோடிகளாய் இருக்கின்றன வென்பாதலின், இங்கே பொருள் விரித்தமையும் குன்றக்கூறல் என்னும் குற்றத்தின்பாற் படுதலின், கோடி எனும் சொல்லிற்கு மிகுதி என்னும் பொருள் கூறுதலே சாலவும் பொருத்தமாவ தென்க. இதனுனே கருணாநிதியான இறைவன் தன் சந்நிதியில் அருளாலே கோடானுகோடி அண்டங்கள் ஆக்கிக் காத்துத் தன்னிடத்தே அடக்கிக்கொள்ளுதலை விளக்கிய தாயிற்று. இதனாலன்றே,

"எழுகடல் மணல்கள் தம்மின் எழுமடங் கெண்ணநின்ற
பழுதிலா வண்டமெல்லாம் பரவிட வாக்கிக் காத்துத்
தொழுதிடத் தன்னுள் வாங்கும் தூயவன் கருணைச்சோதி
விழுமலர்த் தாளே யன்றி விழலனேற் குறுதி யுண்டோ"

என வொரு ஆன்றோர் விளம்பியது மென்க.

'இச்சைவைத்து' என்றது, கிருபையினை வைத்து என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும்; ஏனெனில், இறைவன் விருப்பு வெறுப்பு ஆகிய இரண்டும் இல்லாதவன் ஆயிற்றே, அவன் எவ்வாறு இச்சைவைப்பன் என ஒரு வினு வெழுதல் கூடும்; அவ்வினுவிற்கு இடமில்லை; இறைவன் தனக்கென ஒன்றை விரும்பான்; தனக்காகாதென ஒன்றை வெறுக்கான்; ஆயின் கருணைக்கடலான இறைவன் ஆன்மாக்களின் மாட்டுவைத்த அருளினுலே அவ்வான்மாக்களை உய்விக்கும் பொருட்டு உண்டாக்கிக்கொண்டது இவ் இச்சை. இதனை,



"வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

என்றார் **பெருநாவலரு** மென்க. இவ் வண்ணம் இறைவன் தன் அருள் வெளிக்குளே அகிலாண்ட கோடி எல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்தலையே,

"ஒன்றதா யிச்சா ஞானக் கிரியையென் றொருமூன்றாகி
நின்றிடுஞ் சத்தி யிச்சை யுயிர்க்கரு ணேசமாகும்
நன்றெலா ஞானசத்தி யானயக் தறிவனுதன்"

எனச் **சிவஞானசித்தியாரிலும்,**

"பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத வின்ப
மாவண்ண மெய்கொண் டவன்றன் வலியணை தாங்கி
மூவண்ண றன்சந் நிதிமுத் தொழில் செய்யவாளா
மேவண்ண லன்னள் விளையாட் டின்வினையை வெல்வாம்"

எனத் **திருவிளையாடற் புராணத்**தும்,

"சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு மறைக்கோவுந் தழல்கால்சூல
மங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிற்றலைநின் றூற்றச்செய்தோர்
பங்கேந்து பெருமாட்டி விழிகளிப்ப விருமுனிவர் பணிந்துபோற்றக் [ம்"
கொங்கேந்து மணிமன்றட் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்துவாழ்வா

எனக் **காஞ்சீபுராண** நூலாரும் கூறியதைக் கண்டுணர்க.

"உயிர்க்கு உயிராய்த் தழைத்தது எது" என்றது, பிரபஞ்சம் சேதனம் அசேதனம் என இரு திறப்படும். அவற்றுள் அசேதனப் பிரபஞ்சமாவது, மாயா காரியமாய்ச் சடமாய் உருவுடைப் பொருளாய் ஒரு காலத்தே தோன்றிச் சில காலம் நின்று பின் அழிதன்மாலையாயுள்ள உலகப் பொருள்களாம். இது சடமெனவும் படும். சடமென்பது விஷயங்கள் சமீபத்திலிருந்தாலும் அவற்றால் கலங்காது தூங்குவது போன்று எப்போதும் இருத்தற் குணமுடையதேயாம்.

இனி, சேதனப் பிரபஞ்சமாவது மேலே சொல்லிய அசேதனப் பிரபஞ்சத்துடன் சேர்ந்து உலகவின்பத்தை அநுபவிப்பதாய்த் தனக்கொரு தோற்றக்கேடு இல்லாதிருந்தும், உலகினேடு தொடர்புண்டதனுல் மாறி மாறிப் பிறந்து இறந்து உழல்வதாய் உள்ள உயிர்களாம். இது உயிர், ஆன்மா எனவும் பெறும். அசேதனப் பொருள்களாகிய ஜடங்கள் யாவும் சேதனப் பொருள்களாகிய உயிர்கள் இயக்க இயங்குவனவாம். அசேதனப் பொருள் உயிர்கள் இயக்க இயங்குதலன்றித் தனக்குத்தானே இயங்குவன வல்ல; அதுபோலவே சேதனப் பொருள்களாகிய உயிர்களும் இறைவனை நோக்கச் சடமாகி, அவ்விறைவன் இயக்கினுலன்றித் தனக்குத்தானே இயங்குவன வல்லவாம். உயிர்களும் (ஆன்மாக்கள், சேதனம்) இச்சை

ஞானம் கிரியைகளை யுடையனவன்றோ எனின்; அச்சத்திகளை அநாதியே யாய் மலம் மறைத்திருக்கும்; ஆனால், மெய்ப்பொருளாகிய இறைவனின் சத்திகள் ஒன்றானும் மறைக்கப்படாமல் நிற்கும்.

இறைவன் இச்சாஞான கிரியாசத்திகளின் மூலமாகவே உயிர்களுக்கு அவையவைகளின் கன்மங்களுக்குத் தக்கபடி போகாதி இன்பங்களைக் கொடுத்து அவைகளினால் தாக்கப்படா திருப்பன். இறைவன் ஆன்மாக்களுக்கு அருள் செய்தற்பொருட்டு வைத்த கிருபையை, 'இச்சை வைத்து' என்று கூறினர். தனது ஞானசத்தியால் அவர்களது நலத்தை விரும்பி அறிதலை 'உயிர்க்கு உயிராய்' என்று விளம்பி யருளினர். தனது கிரியா சத்தியால் அவர்களுக்குத் தனுவாதி பிரபஞ்சங்களைத் தந்தருளுதலை 'தழைத்து' என்றுங் கூறியருளினர். தனுவாதி என்றது-தனுகரண புவன போகங்களை. தனு-தேகம். கரணம்-அந்தக்கரணம் புறக்கரணம். புவனம்-பூ பூதாதிப் பிரபஞ்சம். போகம்-சத்தாதி விஷயம். அன்றி, 'உயிர்க்கு உயிராய்' என்றமை, உடம்பின் குணங்களில் சம்பந்தமில்லாமலே உயிர் அவ்வுடம்பினுளிருந்து அதனைத் தொழில் செய்வித்தல் போலப் பரமான்மாவாகிய கடவுள் ஜீவான்மாவின் செயல்களில் சம்பந்தப்படாமலே அதனுள்ளிருந்து தொழில் செய்விப்பரென்னும் பொருள் கொளவே கூறியதாம். இது பற்றியே,

"உயிர்கள் யாவுநின்னரு ளிலாவழிச் செய்வி
புரிகில சிறிதும்"

எனக் **காந்தபுராணத்**துள் கூறிப்போந்தார்.

"அவனசைந்திடி னணுவசைந்திடும், அவனசையாவிடின் அணுவசைந்திடா" என்பதையொப்ப இறைவன் உயிர்க்குயிராய்த் தழைத்து அருளி இருத்தலை,

"என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யாளொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே"

எனத் **திருநாவுக்கரசரும்**,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே"

"ஊனாயுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனா யமுதமுமாய்த் ... ... கோனாகி நின்றவா
கூறுதுங்கா ணம்மானை"

எனத் **திருவாசகத்**தும்,



"நின்றுயி ராக்கு நிமல னென்னாருயி
ரென்றுயி ராக்கு மளவை யுடலுற
முன்றுயி ராக்கு முடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவு நின்றானே" எனவும்,

"உடம்புக்கு நாலு முயிராய சீவ
னொடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்
கடந்தோறு நின்ற கணக்கது காட்டி
யடங்கியே யற்றது வாரறி வாரே"

எனத் **திருமந்திரத்**தும்,

"தேவதே வன்மா தேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோ
னாவியு ளாவியானோ னந்தணாதி யென்றே
யேவரை யிசைத்த வம்மா வெல்லையின் மறைகளெல்லாம்"

எனக் **கந்தபுராணத்**தும்,

"ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிரா யுலகமனைத்துந் தானாகி
நின்றாங் கவற்றிற் பொருந்தாத நீறுபூத்த செழும்பவளக்
குன்றா யன்பரிதய மலர்க்கோயி லூறு மினிதமரும்
பொன்றாழ் சடையோன் முதல்வனென நான்காம்வேதம் புகன்றதுவே"

எனக் **கூர்மபுராணத்**தும்,

"மண்ணீர் விசும்பு கனல்கா லருக்கன் மதியாவி யென்னு முறையா
லெண்ணீர்மை கொண்ட விவையெட்டு மன்றி யுலகென்ப தில்லை யிவையே
யண்ணா வுனக்கு வடிவாகு மெண்ணி லவைதோ றுயிர்க்கு யிரதாங்
கண்ணா னதெய்வ மெவர்வேறு ளார்கள் கலசைப் பதிக் கிறைவனே"

எனக் **கலசைப்பதிற்றுப் பற்றந்தாதி**யிலும்,

"தன்பெருமைத் தானறியாத் தன்மையனே யெனது
தனித்தலைவா வென்னுயிர்க்கு ளினித்ததனிச் சுவையே"

என **இராமலிங்க சுவாமிக**ளும் கூறிய துணர்க.

இறைவன் வாக்கு மனங்கட்கு எட்டாத அகண்ட நிலையில் காணத் தாக்குதல் இல்லாமல் மேன்மை பெற்றவனும், நான்குவித கரணங்களும் விடயங்களில் தாக்குவிக்கும் ஐம்புலங்களும் ஒன்றாகத் தாய்மைபொருந்தி நின்ற ஒன்றியே கலந்தவனும், சொல்லைக்கடந்து விளங்கும் மௌன நிலையில் இருப்பவனும், முனைப்பு அழிந்து விளங்கும் மேலான நிலையிருப்பவனும், வாக்கு மனங்களுக்கு மேலாக உள்ள துரியத்தில் யான் போக என்னைச் செலுத்தும் திருவருட் குருமூர்த்தியாயும், வாக்கு மனங்கட்கு அப்பாற்பட்டு நிற்கு மனோலயனும், பார்க்கின்றதற்கு அருமையானவனும், அதிநுட்பத்திற்கும் நுட்பமானவனும், வாக்கு மனம் உருவம் இவை இல்லாதவனும், நித்திய வஸ்துவாக இருப்பவனும், போக்கு வரவு

இல்லாதவனும், வாக்கு மனங்கட்கு எட்டாத ஓரிடத்தில் வீற்றிருந்து அதனையே தனக்குரிய இடமாக்கிக் கொண்டவனாகியும், அறிவிற்கு அறிவாகி யிருப்பவனாகியும் விளங்குந் தன்மையனாகையால் ஈண்டு சுவாமிகள், 'மனவாக்கினில் தட்டாமல் நின்றது எது' என்றார். அன்றி, மனமொழி மெய்கள் தத்துவங்களின் தொடக்கத்தே யுள்ளனவாய்ச் சடமாய் உள்ளன வாகலானும், இடைவிடாது விஷயாதிகளில் மாறிமாறிச் சென்று உழல்வன ஆகலானும், இறைவன் திருவருளை எய்தினோர்க்கே அன்றி ஏனோர்க்கு மனவடக்கம் கைகூடப் பெறாதாகலானும், ஊழின் நெறியே பின்பற்றிச் செல்வதாகலானும், இறைவன் அவாங்மனச கோசரனென்றும், தத்துவங்கடந்த தனிப்பொருளென்றும் கூறப்படுதலானும், வடிவப் பொருளையே பொருளென்று மயங்கும் மனமுதியவற்றிற்கு எட்டாத பரம்பொருளென்பது எனவும் பொருளாகையாலும் அங்ஙனம் சொல்லியதாம். இங்கு இனம் நோக்கிக் காயத்தாலும் பற்றற்கமையாதது என்பதுங் கொள்ளக் கிடக்கின்றது. இறைவன் துரியாதீதப் பொருளாதலின் திரிகரணங்களுக்கும் எட்டாது தட்டாது நின்றவனென்பது இதனாற் பெறப்பட்டது. இதுபற்றியல்லவா?

"யதோவாசோ நிவர்த்தந்தே
அப்ராப்ய மனஸா ஸஹ" என உபநிஷத்திலும்,

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புனல்ல வுள்ளமதியின்
பேதங்க ளல்ல விவையன்றி நின்ற பிறிதல்லவென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்பகூடன் மறுகிற்
பாதங்க ளோவ விளையிந்த ஞதி பகர்வாரையாயு மவரே"

எனத் **திருவிளையாடற்புராணத்தும்,**

"மறையினு லயனான் மாலான் மனத்தினல் வாக்கால் மற்றுங்
குறைவிலா வளவினாலுங் கூறொணாதாகி நின்றவிறைவினர்"

எனச் **சிவஞானசித்தியாரிலும்,**

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்லனோ ருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே
கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே"

என, **அப்பருங்** கூறியதை அறிக. இறைவன் மனம் வாக்குகளுக்குத் தட்டமாட்டாமலும் எட்டாமலும் இருக்குங் காரணத்தானே 'கடவுள்' என்னுந் திருநாமத்தை எய்தியதுவுமாம். இச்சொற்கு உள்ளுதலைக் கடந்தவன்



என்பதல்லவா பொருள். வேதமுங்கூட இறைவனைக் காணாது வருந்துகின்றது. இதனை,

"இருக்காதி சதுர்வேதம் இசைப்பதுமன் பலபேதம்
ஒருக்காலு மொன்றுரைத்த தொன்றுரைக்க வறியாதே"

என **வாட்போக்கிக் கலம்பகத்தும்,**

"வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளி"

எனத் **திருவிளையாடற் புராணத்தும்,**

"வேதங்களையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே"

எனத் **திருவாசகத்துங்** கூறியதை வறிந்துணர்க.

சமயங்கள் புறப் புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என நால்வகைப்பட்டு ஒவ்வொன்றுந் தனித்தனியே ஆறுவகையாகவும், இன்னும் பல மன்னுஞ் சிறு உட்பிரிவுகளுடையன வாகவும், விரிந்து கிடக்கின்றன வாகலின், 'சமயம்' என்றதனோடு அமையாமல், 'சமயகோடிகள்' என்றார். ஈண்டு, 'கோடி' என்றது மிகுதிப்பொருள் தந்து நின்றது. இவ்வகைத்தான சமயங்களும் காட்சி அளவை ஒன்றையே பிரமாணமாகக் கொள்வனவும், அதனோடு அனுமான அளவையும் கொள்கின்றனவும், அவ்விரண்டுடன் ஆகம அளவையுங் கொள்கின்றனவுமெனப் பலதிறப்படுவனவாம். இவ்வாறு அளவு கூறுவதேனெனில், அவ்வளவையின் இயல்பு உணர்ந்தார்க்கன்றி ஏனையோர்க்கு அப்பொருளினுண்மைக் காட்டலாகாமையின், அளவையின் இயல்பினைச் சொல்லவேண்டியதாயிற்று.

மற்றும், இப்பிரமாணாதிகளின் துணைகொண்டே சமயவாதிகள், மாயையின் காரியமாகிய ஒவ்வொரு பகுதியையே நித்தியப்பொருள் என்போரும், அன்றி அநித்தியம் என்போரும், உலகத்திற்குத் தோற்றக்கேடுகள் இல்லை அது நித்தியம் என்போரும், காலமே பிரபஞ்சத்தை உண்டாக்கிக் காத்து அழிக்கும்; ஆகலின், அதுவே கடவுள் வேறு கடவுள் இல்லை என்போரும், பிரபஞ்சத்திற்குப் பரமாணுவே காரணம் மாயை அன்று என வாதிப்போரும், உலகம் தனக்கு முதற்காரணமாகிய மாயையின் ஒடுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவன் உளன் என்போரும், அவன் மாட்டு ஒடுங்குமென்றுங் கூறுதலடாது என்போரும், "யாது யாண்டொடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம்" என்னும் அவிநா பாவத்தால் மாயையின் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கு மென்போரும், அருவத்தில் உருவம் வாராது; அவிகாரத்தில் விகாரம் வாராது, ஆகையாலே, மாயையிற் பிரபஞ்சம் வாராது என்போருமாகப் பலவேறு வகைப்பட்ட கொள்கைகளையே முடிவாகக்கொண்ட சமயவாதிகளும் பலதிறப்படுகின்றன ரென்ப.

இங்ஙனம் கூறியவர்களே யல்லாமல், தமது கல்வி கேள்விகளைத் துணைக்கருவியாகக் கொண்டு புத்தியின் வன்மையால் ஆராய்ந்து அறிந்த நுண்ணுணர்வால் தெய்வம் உண்டு எனக் கொள்ளும் ஆஸ்திக மதனத்தின

ரும், பலவேறு வகைப்பட்ட கொள்கைகளையும் முடிவுகளையும் உடையவர்களாகிப் பொருள் நிலையில் மாறுபட்டாரும், தத்துவ நிலையில் வேறுபட்டாரும், தோற்ற ஒடுக்கங்களில் முரண்பட்டாரும், பெயர் நிலையிற் பேதப்பட்டாரும், ஒழுக்க வகையில் வித்தியாசப்பட்டாரும், காரணகாரிய வகையில் கலக்கமுற்றாரும், அத்துவிதப் பொருளால் ஐயமுற்றாரும், அளவாதிகளிற் பிளவுபட்டாரும், ஆகத்தமக்குள்ளே பிணங்குகின்றவர் பலராவரென்க.

இவ்வகை வெவ்வேறு திறப்பட்ட கொள்கைகளையும் பாகுபாடுகளையும் உடையவர்களேனும், கடவுள் ஒருவன் உளனென்பதும், அவன் முற்றறிவு முதலிய எல்லாச்சிறப்பு முடையனென்பதும், தோற்றக் கேடுகளற்றவனென்பதும், உலகுயிர்கட்குத் தலைவனென்பதும், வேதாகமங்களாலும் முடிவு காண்டற்கரிய பெருந்தகை யென்பதும், அவனன்றி ஓரணுவும் அசையாதென்பதும், இத்துணையவாய கொள்கைகளில் ஒரு திறத்தினராகவே இருக்கக் காண்கிறோம். இத்தன்மையோர் பெயர் முதலியவற்றானும் புராண கதாஸாரங்களானும் மாறுபட்டு எந்தெய்வம் தந்தெய்வம் என வாதம் புரிவரேனும், அவ்வாறே வாதிக்கப்படுவோன் ஒருவனே என்பதும், அப்பெருமான் அநந்தந் திருநாமங்களை உடையவனென்பதும், அவ்வீசனை எவரெவர் எவ்வெப்பெயரான் அழைத்த போதினும் அவரவர்கட்கு அவரவர் நினைத்தவாறே அவ்வவ்வுருவுடன் வெளிப்பட்டு அருள் செய்பவனும் அவ்வொருவனே யென்பதும், அதுவே வேதாகமங்களினாலே துணிந்து கூறப்பெறும் சைவசித்தாந்தச் செந்நெறி என்பது விளங்க, "சமயகோடிகளெல்லாம் தந்தெய்வ மெந்தெய்வ மென்றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது' என்று திருவாய்மலர்ந்தருளினார்.

ஒவ்வொரு சமயக் கொள்கையினரும் தம்தம் கொள்கையே சத்தியமாக வாதிப்பர், சாதிப்பர், போதிப்பர், தர்க்கிப்பர் ஆகையாலே, 'வழக்கிடவும்' என்றார். இங்ஙனம் வழக்கிடுதல் இயல்பாக வெழுந்தமையின், 'எங்கணும் பெருவழக்காய்' எனவும் பேசப்பட்டது. சோபான கிரமத்தால் அவ்வவர் தெய்வமாகி அவ்வவர்க்கு அருள்பவனும் அவ்வொருவனே என்பதையும் ஈண்டெடுத்தோதினர். எல்லாச் சமயத்தார்க்கும் அவரவர் வழிபடப்பட்ட அவ்வத்தெய்வமே வந்து பயன் கொடுக்கின்ற தன்மையினை,

> "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே
> மாதொரு பாகனார் தாம்வருவர் மற்றத் தெய்வங்கள்
> வேதனைப் படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு
> மாதலா னிவையிலாதா னறிந்தருள் செய்வ னன்றே"

எனச் **சிவஞான சித்தியாராலு** மறிக.

சமயம் என்பது ஈண்டு கொள்கையைக் குறித்தது. தம் என்னும் சொல், தாம் என்னுஞ் சொல்லே முதல்குறுகி வந்ததெனக் கொள்க. இது, "தான் தாம் நாம் முதல் குறுகும்" என்ற **நன்னூல்** விதியாற் போந்தது. தம்+தெய்வம் = தந்தெய்வம்; எம்+தெய்வம் = எந்தெய்வம்; இவற்றில் தகரத்திற்கு முன் மகரம் நகரமாயிற்று. இவ்வாறு போந்தமையினை,



> "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
> வன்மைக் கினமாத் திரிபவு மாகும்"

என்ற **நன்னூல்** பொதுவிதிபற்றி வன்மைக் கினமாகிய தென்க.

'சமயகோடிகளெல்லாம்' என்றதில் முற்றும்மை தொக்கியது. அது, சமயகோடிகளெலாமும் என விரியும். எலாம் - இது, எல்லாம் என்பதன் தொகுத்தல் விகாரம்: 'வழக்கிடல்' - விவகரித்தல்; இனி விசாரணை செய்தல்; இதனையே தத்துவவிசாரணை யென்ப. இது வாதித்தலும்; தர்க்கித்தலும் எனவும் சொல்லுவதுண்டு. வழக்கு + இடவும் = வழக்கிடவும்; நின்றது+எது = நின்றதெது. குற்றுகரங்கள் உயிர்வர நின்ற மெய்யை விட்டோட அம் மெய்கள் மேல்வந்த உயிர்கள்மேல் ஏறின. "உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும், யவ்வரி னிய்யா முற்று மற்றொரோ வழி" என்னுஞ் சூத்திர விதிப்படியும், "உடன்மேலுயிர்வந் தொன்றுவ தியல்பே" என்ற சூத்திர விதிப்படியும் வந்தனவாம்.

இவ்வியன்தரு மாஞாலத்தில் தெய்வங்கொள்கை எந்த இடத்தும், எந்தக் காலத்தும், எத்துணைய வாற்றலுடையராலும், எந்த விதத்தாலும் அவர்தங் கொள்கைகளும், உத்தேசம் இலக்கணம் சோதனை ஆகிய இவைகளாலும், இவ்வகையான பல்வகைய வாற்றானும் வாதிக்கப்பெற்றும் அநுமதிக்கப் பெற்றும், தோல்வி வெற்றிகளுண்டாய் நீங்குதல் சிறிதும் உண்டாதல் முடியாமை பற்றியும், இவ்விதவழக்குகள் மேன்மேலும் பெருகி வளர்ந்து கொண்டே வருதல்பற்றியும், 'எங்கணும் பெரு வழக்காய்' என்றார். எ+கண்ணும் = எங்கண்ணும், ஈண்டு; எங்கணும், எனத் தொகுத்தல் விகாரம் பெற்று நின்றது.

தோன்றி நின்று அழியும் இயல்புடைய எல்லா வுலகங்களிலும் கடவுள் ஒருவர் உளரெனக் கொள்ளுவாருக்கும், கடவுள் ஒருவரில்லை யென வாதம் புரிவாருக்கும், நிலைத்த பெருவழக்கிற்குக் காரணமாய் நிற்பது சிந்தனையின் முதிர்ச்சியாகிய அறிவின் தன்மை. அவ்வறிவே எல்லா நிகழ்ச்சிக்குங் காரணமாக நிற்றலானும், அதுவே சத்து சித்து ஆனந்தம் என்னும் பெரிய பொருளின் நடுப்பகுதியாக நிற்கும் ஞான இயல்பாதலானும், அஃதில்லாத வழி மற்றைய இரண்டு பகுதிகளாகிய சத்தும் ஆனந்தமும் கைவரல் இன்மையானும் உள் பொருளாயும் விளங்கிய வழியே உயிர்களிடத்து விளங்குவதாயும் இருத்தலின் கடவுட் சொரூபம்; 'சித்தே' என்பதுந் தேற்றமாதலின்: 'சித்தாகி' என்றார். இதனை,

> "த்ரிஷு தாமஸு யத் போஜ்யம் போக்தா போகஶ்ச யத்பவேத்
> தேப்யோ விலக்ஷண ஸ்ஸாக்ஷி சின்மாத்ரோஹம் ஸதாஶிவঃ"

எனக் **கைவல்லியோப நிஷத்திலும்**,

> "ஸர்வ ஸாக்ஷிண மாத்மாநம் வர்ணாஶ்ரம விவர்ஜிதம்
> ப்ரஹ்மரூப தயா பஶ்யந் ப்ரஹ்மைவ பவதிஸ்வயம்"

"த்ரிதாம ஸாக்ஷீணம் ஸத்ய ஜ்ஞாநாநந்தாதி லக்ஷணம்
த்வமஹம் ரூப்த லக்ஷ்யார்த்த மஸக்தம் ஸர்வதோஷதஃ"

என **வராகோப நிஷத்**திலும்,

"அந்தக்கரண தத்வ்ருத்தி ஸாக்ஷி சைதந்ய விக்ரஹஃ
ஆநந்தரூப ஸ்ஸத்யஸ்ஸந் கிந்நாத்மாநம் ப்ரபத்யதே"

என **ஸ்ரீசங்கராசாரியர்** வாக்கியமும்,

"சீவனன்று புரமூன்றிற் சித்தா மவனே விளையாடு
மேவுமெல்லா மெய்போல வவனால் விளைந்த லான்மெய்யத்
தேவனேசான் றதலினாற் சித்து மவனே யத்துவிதன்
யாவுந்தானா தலிலெதினுந் தனையே விரும்பு லாலின்பன்"

எனப் **பிரமகீதை**யிலும்,

"ஆக்கைக்குஞ் சாக்கிரா மேயனைத்திற்குஞ் சாக்கிராமே
போக்கொடு வரவுமில்லை புண்ணிய பாவமில்லை
வாக்கொடு மனமுமில்லை மந்திரந் தியானமில்லை
சாக்கிமாத் திரமேயென்று தெளிந்தவன் சந்நியாசி"

"சகலபூ தங்கடோறுஞ் சாக்கிரமாய் விசுத்த தேசாய்த்
தகுஞான தேகியாகித் தங்கிய பரமான்மாவை
யகமுக மாகவுள்ளும் புறமுமொன் றுயறிந்து
பகவற யாவன் பார்ப்பா னுங்கவன் முழுதும் பார்த்தான்"

எனப் **பதிபசுபாசவிளக்கத்**திலும் காண்க.

முக்காலத்திலும் பொய்யென்று நிச்சயிக்கப் படாதது எதுவோ அதனையே சத்து எனக் கொள்ளப்படுதல் வேண்டும்; முக்காலத்தும் எல்லா வற்றையும் அறிவதாயும் அறியப்பட்டவற்றால் அறியப்படாததாயு மிருப்பதுவே, 'சித்து' எனக் கொள்ளுதல் வேண்டும். முக்காலத்துக்கும் மிகுந்த பிரியத்திற்கு விஷயமாயிருப்பது 'ஆநந்த' மெனப்படும். மற்றும் இதன் விவரத்தை,

"தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை யறிந்தபின்
தன்னையே யார்ச்சிக்கத் தானிருந் தானே" என்றும்,

"அறிவு வடிவென் றறியாத வென்னை
அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
அறிவு வடிவென் றருளா லறிந்தே
அறிவு வடிவென் றறிந் தேனே"

என்றுந் **திருமந்திரத்**துள் கூறியனவுங் காண்க.

எல்லாத் தொழில்களும் சிருஷ்டி திதி சங்காதம் திரோபவம் அநுக்கிரகம் என்னுந் தொழில்களுள் அடங்குதலாலும், அவ்வைந்தொழில்



களுக்குந் தலைவன் இறைவனே ஆதலினாலும், 'யாதினும் வல்லவொரு சித்தாகி' என்றனர். இத் தொழில்களைக் கடவுள் இருப்பிடத்தில் இருந்து கொண்டே யாதொரு முயற்சியுஞ் செய்யாமல் கட்டளை இட்டருளின மாத்திரத்தில் அவ்வாக்ஞை தானே சென்று அஷ்டர்களைத் தவறாமல் அழிப்பதாயிருக்கவும், கடவுள் போரிற் சென்று நகைத்தும் நேரில் நின்று விளித்தும் அசுரர் புரத்தையும் அனங்கன் புரத்தையும் எரித்தது அக் கடவுளது திருவிளையாட்டே யன்றி வேறென்றென்க. இதுபற்றியே இங்ஙனங் கூறியதுமாம். இறைவன் பஞ்சகிருத்தியங்கட்கும் அதிபதி யென்பதை,

"தோற்றமொரு கைத்துடியிற் றிதியபயந் தருகரத்திற்
றொலைவோர் செங்கை
ஏற்றகலைக் கொழுந்தழலிற் றிரோபவமூன் றியதாளி
னெடுத்த தாளின்
மற்றரிய வருள்வயங்க விருமுனிவர் பணிந்தேத்த
மறைகள் வாழ்த்த
சாற்றரிய வம்பலத்துள் நடநவிலும் பெருமானைச்
சார்ந்து வாழ்வாம்"

என **உறையூர்ப்புராணத்**தாலு மறிக.

இறைவன் தோற்றம் அழிவு என்பன இன்றி இன்பப் பிழம்பாய் முக்காலத்தும் இருப்பவ னாதலினாலும், தன்னை அடைக்கலம் புக்கார்க்கு இன்பத்தை ஊட்டுபவன் ஆதலினாலும், காலாதீத னாதலினாலும், 'இன்ப மாய் என்றைக்கும் உள்ளது எது' என்றார். என்றைக்கும் - முக்காலத் துக்கும்: உள்ளது - என்றும் நாசரகிதமாய் இருப்பது. இறைவன் உற்பத்தி நாசமின்றி யிருத்தலினாலும், தத்துவக் கூட்டங்களைத் தத்தங் காரணங் களில் ஒடுக்கிக்கொண்டு சென்றால் காரண காரியங்களின்றி முடிவாய் நிற்றலின் கடவுளை, 'என்றைக்கும் உள்ளது' எனவுங் கூறியதாம். முத்தி நிலையிலும் அவனன்றி வேறில்லாமை காண்க. இறைவன் இன்பமய வுருவத்தின னென்பதனை,

"ஆநந்தம் பிரஹ்மணோ வித்வாந்" என **ஆனந்தவல்லியி**னும்,

"ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் ப்ரஹ்ம" என்று சொல்லியவும்,

"ஞானக் கரும்பின் றெளிவைப் பாகை
நாடற்கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச் சித்தம்
புகுந்து தித்திக்க வல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட கூத்தனை
நாத்தழும் பேற வாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர் பாடிப்
பொற்சுண்ணம் பிடித்து நாமே" எனவும்,

"அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" எனவும்,

"தானந்த மில்லான் றனையடைந்த நாயேனை
யானந்த வெள்ளத்தழுந்து வித்தான் காணேடி
யானந்த வெள்ளத்தழுந்து வித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழேலோ, எனவும்,

"அதுபழச் சுவையென வமுதென வறிதற் கரிதென
வெளிதென வமரரு மறியா
ரிதுவவன் றிருவுரு விவனவ னெனவே யெங்களை
யாண்டுகொண் டிங்கெழுந் தருளு
மதுவளரைப் பொழிற்றிரு வுத்தர கோச மங்கை யுள்ளாய்
திருப் பெருந்துறை மன்னு
வெதுவெமைப் பணிகொளு மாறது கேட்போ மெம்பெருமான்
பள்ளி யெழுந்தரு ளாயே" எனவும்,

"அம்மையே யப்பா வொப்பிலா மணியே யன்பினில்
விளைந்த வார முதே" எனவும்,

"கரும்பு தருசுவை யெனக்குக் காட்டினை"

எனவுந் **திருவாசகத்**துள் மாணிக்கவாசகாருளிய மணிவாக்காதிகளாலும்,

"தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தெங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டி னிறக்கி
எடுத்தசுவைக் கட்டியினு மினித்திடுந் தெள்ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்கு நடத்தரசே
அடிமலர்க்கென் சொல்லணியா மலங்க லணிந்தருளே" எனவும்,

"உண்ணஉண்ணத் தெவிட்டாதே தித்தித்தென் னுடம்போ
டுயிருணர்வுங் கலந்துகலந் துள்ளகத்தும் புறத்துந்
தண்ணியவண் ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே
ததும்பியென்றன் மயமெல்லாந் தன்மயமே யாக்கி
எண்ணியவென் னெண்ணமெலா மெய்தவொளி வழங்கி
இலங்குகின்ற பேரருளா மின்னமுதத் திரளே"

எனவும், சமரச சன்மார்க்க நிலைகண்டுணர்ந்த **இராமலிங்கசுவாமிகளும்** அருளியவை காண்க.

'மேல் கங்குல் பகல் அற நின்ற எல்லை உளது எது' என்றதில், மேல்-உயரிய விடமென்பது. கங்குல்-இரவு, பகல்-பகற்காலம், எல்லை-இடத்தையும், எல்லையையுங் காட்டும். இரவு பகல் என்றது, உம்மைத்தொகை; அஃது,



நன்னான்கு யாமங்களின் இருபகுதிகள் சேர்ந்த ஒரு நாள் என்க. இந்நாள்கள் கணிதசாஸ்திர முறைப்படி வாரம் பக்ஷம் மாதம் அயநம் ஆண்டு முதலியனவாய்ப் பலவாறு விரிந்து செல்லுவது. இத்துணைய காலஅளவை செத்துப் பிறக்கும் சீவர்களுக்கே அல்லாமல் எல்லாம்வல்ல இறைவனுக்கு இன்றாகலான், அவ்விறைவன் பெருமையும் அவன் காலங்கடந்த பொருளென்பதையும் போதிக்கவே, 'கங்குல் பகல் எல்லை உளது எது' என எதிர்மறை முகத்தான் வினவினர். இங்ஙனம் வினவியதன் காரணமென்னையெனில்,

"த்ரிதாம ஸாக்ஷீணம் ஸத்ய ஜ்ஞாநாநந்தாதி லக்ஷணம் |
த்வமஹம் ஶப்த லக்ஷ்யார்த்த மஸக்தம் ஸர்வதோஷதஃ ||"

என்கிற **வாராகோபநிஷத்**தால்,

இறைவன் சாக்கிர சுவப்பன சுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளுக்கும் சாக்ஷியாகவே நிற்பவன். அவனுக்கும் அம்மூன்று அவஸ்தைகளுக்கும் சம்பந்தங்கிடையா. இனி, சாக்கிர முதலிய அவஸ்தைகளையுடையார்க்கே கால அளவை உண்டே யல்லாமல் காலங்கடந்து நிற்குந் தத்துவப் பொருளுக்குக் கங்குல் பகலின்றாகலானும், உலகநிலைகடந்த யோகியர்கள் மனத்தைப் புறம்பேசெல்ல விடாமற் றடுத்து, உள்ளே செலுத்தி இடைவிடாமல் தைலதாரா விச்சின்னமாய்த் தியானிக்குங் காலை அவர்கள் இரவென்றும் பகலென்றும் எண்ணார்க ளாகலானும், அவ்வெண்ணம் அற்ற நிலையிலேயே அவன் வெளிப்படுவ னாகலானும், 'கங்கு பகல் அற நின்ற எல்லை யுளது எது' எனக் கூறினா ரென்றுமாம்.

இனி, ஒளிமயமான இறைவன் உள்ள விடத்து இருள் இல்லை ஒளிமயமே யன்றோ? இருள் ஒளியுள் மறைந்தது. இருள் இல்லாத விடத்து இரவு இல்லை. இரவு இல்லா விடத்து எல்லாம் பகலே யாதலின், 'மேல் கங்குல் பகலற நின்ற எல்லை உளது எது' என்றார். ஈண்டு, 'கங்குல் பகல் அற நின்ற எல்லை மேலுளது எது' என்று பொருத்திக் கொள்வதே சாலப் பொருத்தமாவது. 'மேல்' என்பதற்கு, இருவினையொப்பு மலபரிபாகத்திற்கு மேற்பட்ட இடமாகிய சத்திநிபாதம் என்று சொல்லுவாருமுண்டு. அன்றி, அழிதலில்லாத ஆன்மா மாயாப் பிரபஞ்சக் காரியங்களினின்றும் நீக்கி, தத்துவங்களை எல்லாம் கடந்து சத்தாகிய ஆன்மதத்துவத்தை யறிந்து, ஆன்மாவைக் காட்டிய அருளை அறிந்து நிட்டையில் நிற்கும் நிலை இரவு பகலற்ற எல்லை மேல் நிலை எனக் கூறுவாருமுண்டு. இவ்வாறல்லாமல் தத்துவங்களுடனே கூடிக் காரியப்படுவதாகிய சகலாவத்தையும் ஆன்மா தத்துவங்களொன்றையுங் கூடாதிருப்பதாகிய கேவலாவஸ்தையும் அற்றுக் கேவலசகல மிரண்டுந் தாக்காமல் பரமசுகமாகிய ஆனந்தத்தைப் பெற்றிருப்பதாகிய சுத்த நிலையில் போதஞ் சிறிதுந் தோன்றாமல் நிற்க, பல்கோடி கதிரவர் ஓரிடத்து ஒருங்கு தோன்றினாற்போல நீக்கமற நிறைந்த பேரொளியாய்ச் சடசித்துக்களின்

உள்ளும் புறம்புமாகிப் பூரண நிரவய நிட்கள சொரூபமாக எங்கெங்கும் பரந்து விளங்கும். இங்ஙனம் கேவலசகல மிரண்டுந் தாக்காமலிருக்கும் சுத்த நிலையினையே இராப்பகல் அற்ற இடமெனவுங் கூறுவர். இதனையே மறப்பு நினைப்பு அற்ற இடம் எனவுங் கூறுவர் ஒரு சாரார். நோக்கின், இரவுக்காலம் இருள் நிறைந்து பொருள்களை விளங்கக் காணமற் செய்தல் போல் அறியாமையும், மறப்பும் பொருளைக் காணத் தடையாக இருப்பதனால் அறியாமையையும் மறப்பையும் இரவுக்கு உவமை அலங்காரமாகக் கூறலும், பகற்காலம் ஒளிநிறைந்து பொருள்களை விளங்கக் காணுமாறு செய்தல் போல அறிவும் நினைப்பும் பொருளைக் காணச் செய்தலினால் அறிவையும் நினைப்பையும் பகலுக்கு உவமை அலங்காரமாகக் கூறுதல் மரபு. ஆதலின், மறப்பு நினைப்பு அற்ற இடத்திற்குமேல், அறியாமை அறிவு அற்ற இடத்திற்கு மேல் என்று பொருள் கொள்ளினும் அமையும். இந்த மறப்பு நினைப்பு அற்ற இடத்தில் இந்த அறியாமை அறிவு அற்ற இடத்தில் தற்போதங் கழன்று சிவபோதம் ஒளிரும். ஆண்டு சிவமே இருக்கும். இதனையே மௌனநிலை என்பர். இந் நிலையல்லவா சீவபோதமழிந்து, அஃதிருத்தற் கேதுவாகிய தேகவுணர்வுமழிந்து, ஆன்ம உணர்வு மழிந்து, திருவருளை அடைந்திருக்கும் நிலை. இவ்விஷயங்கள் பரம இரகசிய மாகையால் இவைகளைக் குருவாயிலாக முறைப்படி கேட்டு அறியத்தக்கது. அவ்வண்ணம் அறிந்த பின் அநுபூதியால் அனுபவிக்கத்தக்கது. இப்பேறு குருவருள் பெற்றார்களே அடைந்தனுபவிக்க வல்லதாகும். இரவுபகல் இல்லா விடத்தில் என்னைக் குறித்து காட்டினான்; அதனைக் கண்டதும் எனது குற்றத்தைப் போக்கினான். அங்கு என்னை நோக்கிய ஒருவனை யான் நோக்கிக்கொண்டிருந்தேன் என்னும் பொருளின் விளக்கத்தையே,

"மோனமென்பது ஞான வரம்பு" என **ஔவையாரும்**,

"நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்"

எனத் **திருவிளையாடலும்**,

"மருளும் தெருளும் மறக்கு மவன்கண்
அருளை மறவாதே உந்தீபற
அதுவே யிங்குள்ளதென் றுந்தீபற" எனத் **திருவுந்தியாரும்**,

"நினைப்பும் மறப்பும் அற்றவர் நெஞ்சில்"

"நினைப்பற நினைந்தேன்" என்று சான்றோர் வாக்கியங்களும்,

"தன்னிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னிற் றன்னை யறியிற் றலைப்படும்
தன்னிற் றன்னை யறிவில னாயிடில்
தன்னிற் றன்னையுஞ் சார்தற் கரியனே" என **அப்பர் சுவாமிகளும்**,

"என்னுடைய இருளை எறத் துறந்து" என்றும்,

"இருள் கடிந்தருளிய இன்ப வூர்தி" என்றும்,



"இருள்கெட அருளும் இறைவா போற்றி"

என்றும் **திருவாசகத்தார்** கூறுவனவும்,

"இராப் பகலற்ற விடத்தே யிருந்து
பராக்கற வானந்தத் தேறல் பருகா
திராப் பகலற்ற விறையடி யின்பத்
திராப்பகன் மாயை யிரண்டிடத் தேனே" எனவும்,

"இருணீக்கி யெண்ணிற் பிறவி கடத்தி
யருணீங்கா வண்ணமே யாதி யருளு
மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருணீங்கா வின்பம் புலம்பயில் தானே" எனவும்,

"இருள்சூ ழறையி லிருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாப்போன்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
யருள்சூ ழிறைவனு மம்மையு மாமே"

எனவுந் **திருமந்திரத்தில்** வருவனவற்றாலும், ஆன்மா தன்னைத்தானறிந்து தத்துவச் செயல்களற்றதும், ஆன்மா சிவானந்தத்தில் அழுந்தி நிற்கும் நிலையினைப் புகன்றதாம். இதுவே மனக்கண்ணால் நோக்குதலுமாம். அன்றி, ஞானக்கண் கொண்டு கடவுளின் நிலையறிந்து இன்பத்திலாழ்ந்திக் கிடத்தல். 'அது கருத்திற் கிசைந்தது' என்ற சொற்றொடரின்கண், 'எது அது கருத்துக் கிசைந்தது' எனப் பொருள்கோள் நிலைக்குப் பொருந்தி நிற்கும். அது என்னும் சுட்டு ஈண்டு செம்பொருளைக் குறித்தது; அதாவது இறைவனை. இப்படிக் கடாவிடைகளினால் அறிவது, வியாவகாரிகசத்து-பிரதிஞ்ஞை, பிராதிபாஸிக சத்தினும் வேறாய்த் தத்துவஞானத்தினால் பொய்யென்று நிச்சயித்தற்கு உரித்தாயிருத்தலின், எதுஎன்கிற பிராதிபாஸிக சத்தினும் வேறாய்த் தத்துவஞானத்தினால் பொய்யென்று நிச்சயித்தற்கு உரியதன்று, அது என்பது வியாவகாரிக சத்தன்று, பாரமார்த்திக சத்தாயதென்பதே பொருள். இதனால், தத்துவ ஞானத்தினால் பொய்யென்று நிச்சயித்தற்குரியது வியாவகாரிக சத்தெனவும், தத்துவ ஞானமின்றியே பொய்யென்று நிச்சயித்தற்குரியது பிராதிபாஸிக சத்தெனவும், எவ்வகையாலும் பொய்யென்று நிச்சயித்தற்குரியதாகாதது பாரமார்த்திக சத்தெனவுங் கொள்கவென்பதே கடாவிடைகளான் போந்த கருத்தென்க.

'கருத்து' என்றது, உண்மைஞானமுடையார் கருத்தை. கருதுவது-கருத்து என்பது. இசைவது - பொருந்துவது. அதாவது - அது உலகத்தார்க்கு ஒப்பமுடிந்த பொருளாகும் என்பதாம். உயர்ந்தோர் கருத்தே கொள்ள வேண்டுதலின் உலகத்தார்க்கு ஒப்பமுடிந்த பொருளது என்றும், உயர்வு பல திறத்தானும் உண்டாமெனினும், அறிவான் உண்டாகும் உயர்வே உண்மை உயர்வாதலின், உயர்ந்தோர் என்பது உண்மை ஞானத்தை

யுடையோரையே குறிக்கும். "உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டே" என்பது ஈண்டுணரத்தக்கது.

'அதுவே கண்டன எலாம்' இச்சொற்றொடரில், அது என்றதன் முன்னர், எது, எது, என்று ஆறிடத்தே வினவிய வினாக்கட்கு விடையாய் இயைந்த பொருளாயுங் கருத்திற்கு இசைந்ததாயுமுள்ள அப்பொருளைச் சுட்டி நின்றது. 'கண்டன' என்றது, தூலக்கண்ணாற் கண்ட பொருள்களை. தூலக்கண்ணே ஊன்கண், ஊனக்கண் எனவும் பேசப்படும். தூலக்கண்கண்ட பொருள்கள் எனவே வேறு கண்ணுமுண்டோ? அதனாற் காணக்கூடிய பொருள்களுமுளவோ என வினாவுமெழலாம். அவ்வினாவிற்கு விடையாக ஆம், தூலக்கண் அல்லாமல் வேறு கண்ணுமுண்டு; அதனானே காணக்கூடிய பொருள்களுமுண்டு என்பாம். அந்தக்கண் அகக்கண் அல்லது ஞானக்கண் எனப்பெறும். அதனாலே காணப்பெறும் பொருள் தன்னையுந் தலைவனையு மெனவறிக. இது, ஆன்மாக்கள் கேவல சகலப்பட்டுப் பிறந்திறந்து திரியுமவசரத்து, அவர்கட்கு இருவினை யொப்பும், சத்திநிபாதமும், குருவருளும், ஞானசாதனமும், மும்மலக் கழிவும், வாதனை நீக்கமும், ஞானப்பெருக்கமும் முறையே உண்டாகப்பெற்றுச் சுத்தநிலையிலே அவன் அருளாலே எய்தும். அவன் அருளைப் பெறுதற்குப் பல பிறவிகளிலும் செய்த புண்ணியப்பேறு வேண்டும், தவம் வேண்டும். இவ்விதஞ் செய்யுந் தவவிசேடத்தாலேயே மேன்மேலும் புண்ணியங்கள் அதிகரிக்கப்பட்டுப் பாவமொழித்து பரிசுத்தமடைந்து திருவருளைப் பெறலாவது. அவ்வண்ணம் பெற்ற திருவருட் காரணத்தானே பொருளை உணரலாம்; காணலாம். அப்பொருளைக் கண்டவர் பின், கண்டவர் வேறொன்றையுங் காணார். எல்லாம் அப்பொருளாகவே காண்பர். இக்கருத்தினை விளக்கவே சுவாமிகளும், 'அதுவே கண்டன எலாம்' என முடிவு கட்டினார். இதனை,

"ப்ரஹ்மை வாஹ மிதம் ஜகச்ச ஸகலம் சின்மாத்ர விஸ்தாரிதம்
ஸர்வம் சைத தவித்யயா த்ரிகுணயா சேஷம் மயா கல்பிதம்
இத்தம் யஸ்ய த்ருடா மதிః ஸுகதரே நித்யே பரே நிர்மலே
சண்டா லோஸ்து ஸதுத்வி ஜோஸ்து குரு ரித்யேஷா மநீஷா மம"

என **மநீஷாபஞ்சகத்திலும்,**

"த்வமேவ ஸர்வம் த்வமேவ ஸர்வம் த்வமேவ ஸர்வம்
த்வமேவ மோக்ஷ த்வமேவ மோக்ஷ ஸ்த்வமேவகில மோக்ஷஸாதநம்
நகிம்சி தஸ்தி த்வச்யதி ரிக்தம் யத்கிஞ்சித் ப்ரதீயதே
தத் ஸர்வம் பாதிதமிதி நிஸ்சிதம்"

என **நாராயண உபநிஷத்திலும்,**

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்றகேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பாலா



யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்ததனை
யிருந்தபடி யிருந்துகாட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத்
தொடக்கை வெல்லாம்" எனவும்,

"நவிலுங்கால் மேல்கீழ் நடுப்பக்க மெங்கும்
சிவமொழிய வேறில்லைதேர்" எனவுந் **திருவிளையாடலிலும்,**

"அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனை யருளினா னறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந் திருப்பையாகில்"

"பிரியாத சிவன்றானே பிரிந்து தோன்றி
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே"

எனச் **சிவஞான சித்தியாரிலும்** கூறியது காண்க.

'எலாம்' முற்றும்மை தொக்கு நின்றது. எல்லாம் - என்றது, 'எலாம்' என வந்தது தொகுத்தல் விகாரமாம்.

'மோனவுரு வெளியது ஆகவும் கருதி அஞ்சலி செய்குவாம்' என்ற முடிவுரை விண்ணப்பத்தில், மோன உருவெளி என்றது, ஆனந்த மயமானதும் ஆதாரங்களுக்கெல்லாம் ஆதாரமானதுமாகிய நிராதாரப்பொருளை, அப்பொருள் தக்ஷிணாமூர்த்தமாம். ஆகலின், இவ் வணக்கம் தக்ஷிணாமூர்த்தத்தின் வணக்க மென்றுமாம். ஈண்டு, மோன உருவெளி என்றமை பிரணவப் பொருளும் பிரணவ சொரூபியுமாகிய விநாயகப் பெருமானையுங் குறிப்பதாம். இவ்வாறு பொருள் கொண்டது, இட்டுற மொழிதல் என்னும் உத்தியாற் கொண்ட பொருளென்க. இரட்டுற மொழிதல் - இரு பொருட்படச் சொல்லுதல். யுக்தி என்பது - இதுகூடும் இது கூடாதெனத் தன் கண்ணே தோன்றுவது யுக்தியாம். இது பொருந்துமாறென்றுஞ் சொல்லப்படும். இது கூடும் என்பது, உடன்பாடு, இது கூடாதென்பது, எதிர்மறை. ஈண்டு, உடன்பாட்டைத் தருக்க நூலார் அன்வயமெனவும், எதிர்மறையை வியதிரேகமெனவுங் கூறுவர். இங்கே அன்வயமும் வியதிரேகம் என்னும் இரண்டு அங்கங்களோடு கூடியதே யுக்தியாமெனக் கொள்க. இவ்வாறு சொன்னமை கொண்டு விநாயகப்பெருமானைத் துதித்ததுமாயிற்று.

இதுவுமல்லாமல், இவ்வணக்கமே தன்னாசிரியராகிய திருமூலர் திருமரபில் வந்த மேலான குருவினை வணங்கிய வணக்கமாகக் கொள்ளுதற்கும் அமைந்திருத்தல் அறிக. எவ்வாறெனில், யோகியர்கள் மூலமந்திரத்தை மௌனாக்கரம் என்றும் மூங்கை எழுத்தென்றும் மொழிவர். இதனை,

"ஊமை எழுத்தொடு பேசு மெழுத்துறி
லாமை யகத்தினி லஞ்சு மடங்கிடு
மோமய முற்றது வுள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே"

எனத் **திருமூலர்** வாக்காலுமறிக. இறைவன் மாட்டுக்கூறிய வணக்கத்துக் குருவின் வணக்கம் கூறுவது இழுக்கன்றோ வெனில், இழுக்கன்று. ஏனெனில்,

"நமஃ ஶிவாய குரவே நாதபிந்து கலாத்மநே ।
நிரஞ்ஜநே பதம் யாதி நித்யம் யத்ர பாராயணஃ ॥"

என **அடயோக தீபிகையில்** கூறியபடியும்,

"குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே"

எனத் **திருமந்திரத்தின்படியும்,**

"தேனார் கமலத் திருமா மகள்கொழுநன்
றானே குருவாகித் தன்னருளான்—மானிடர்க்கா
விந்நிலத்தே தோன்றுதலால் யார்க்குமவன் றாளிணையை
யுன்னுவதே சால வுறும்"

என **ஞானசாரத்தின்படியும்,** பரமேசுவரனே ஆன்மாக்களின் பரிபக்குவங் கண்டு இரங்கிக் குருவாக வந்து அவர்களுக்கு உபதேசிப்பானென்பது ஆன்றோர் கொள்கையாயிருத்தலால் குருவிற்கும் பரமேசுவரனுக்கும் வேற்றுமை இன்றென்பது பெறப்படுகின்றது. பரமேசுவர சேவை பிரத்தி யட்சமாகாத பலத்திற்குக் காரணமாம். குரு சேவையோ அதிருஷ்டம் திருஷ்டமென்னும் இரண்டு பலங்களுக்குங் காரணமாம். எது தர்மா தர்மங்களின் உற்பத்திவாயிலாகப் பலத்திற்குக் காரணமா யிருக்கிறதோ? அஃது அதிஷ்ட பலத்தின் காரணமெனப்படும். எது தருமாதருமங் களின் உற்பத்தியன்றி நேரே பலத்திற்குக் காரணமாகின்றதோ? அது திருஷ்டபலத்தின் காரணமெனப்படும். பரமேசுவரசேவை தர்மத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரண சுத்தி வடிவ பலத்திற்குக் காரணமா யிருக்கிறது. ஆதலால், பரமேசுவர வணக்கம் அதிஷ்ட பலத்திற்குக் காரணமாம். குருவணக்கம் தர்மாபேக்ஷையின்றி உபதேச வடிவ பலத் திற்குக் காரணமாயிருத்தலால் திருஷ்ட பலத்திற்குக் காரணமாம். அன்றியும், அது அறத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரண சுத்தி வடிவ பலத்திற்குங் காரணமாயிருத்தலால் அதிஷ்ட பலத்திற்குங் காரண மாம். பரமசிவ வணக்கத்தால் அதிருஷ்ட பலமுங் குருவணக்கத்தால் திருஷ்ட அதிருஷ்ட பலங்களும் உண்டாவதா யிருத்தலால், பரமசிவ வணக்கங் கூறு முகத்தானே குருவணக்கம் கூறியதாகக் கொள்ளினும் இழுக்



கில்லை. சிவபெருமானே ஆசிரியத் திருக்கோலமாகி வந்து ஞானோபதேசம் புரிகின்றான் என்பதை, **திருப்பெருந்துறைப்புராணத்திலும், திருவாதவூரர் புராணத்தும்** பரக்கக் காணலாம். அதனை,

"ஆனபரஞ் சுடராமீசன் ஆன்மாக்கள் உய்யவென்றே
ஈனமிலா தவைகள் செய்பு மின்னினிய தவங்கட்கேற்ப
மானமிகு குருவே யாகி மனமகிழ வந்துதோன்றி
ஊனமிலா ஞானமூட்டி உயர் மோக்கந் தருவானன்றே"

என **ஆன்றோர்** வாக்கானுந் தெளிக.

அஞ்சலி - கைகுவித்தல்; இது, தன்னடக்கம் குறிப்பது. இறைவனைக் கைகுவித்து வணங்கவேண்டுமென்பது விதியாதலின், 'அஞ்சலி செய்குவாம்' என்றார். செய்குவாம் என்றதில், ஆம் என்னும் விகுதி தன்மைப் பன்மை யாகையால், தன்னுடன் பட்டாரையுஞ் சேர்த்துக் கூறினாரெனினும் இழுக்காகாது.

"கைகாள் கூப்பித் தொழீர், கடிமாமலர் தூவி நின்று
பைவாய் பாம்பரை யார்த்த பரமனைக் கைகாள் கூப்பித்தொழீர்"

என **அப்பரும்** அருளினர். நிற்க,

"எங்கும் பிரகாசமாய் ஆநந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்ததும்,
இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த் தழைத்ததும்,
மனவாக்கினில் தட்டாது நின்றதும்,
எங்குந் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றதும்,
யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பாய் என்றைக்கும் உள்ளதும்,
கங்குல் பகலற நின்ற எல்லை யுள்ளதும்"

ஆகிய இவ் ஆறு வகைய தன்மையதான பொருளொன்றே ஞேயத்து அழுந்தின சீவன் முத்தர்கள் கண்டன வெலாமாகும். ஆகையால், அதனை மௌனவெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம் எனப் பொருள் கோடல் செய்க.

இவ்வாறு வணக்கஞ் செய்த ஞானச் செல்வராகிய இப் பெரியார் மேலே விவகரித்துள்ள ஆறனையுமே வாய்பாடுகளாக வைத்துக்கொண்டு, "பரிபூரணானந்தம்" என்பது முதல் "சிற்சுகோதய விலாசம்" என்பது இறுதியாகப் பன்னிரு பகுதியாக அதன் வியாபகத்தையும் வியாப்தியையும் ஒவ்வொன்றிற்கு இவ்விரண்டாக ஒருவாறு குறிப்பித்து அம் மெய்ப் பொருளை எடுத்துக் காட்டித் துதித்தருளியது பாராட்டற்பாலதாம். வெளியது - என்பதில், அது, பகுதிப் பொருள் விகுதி. எது என்னும் வினைச் சொற்கள் அனைத்தும் 'அது' என்னும் சுட்டுப்பெயரைத் தொடர்ந்தன. இது, பன்னிரண்டு சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். இவ்வாசிரிய விருத்த விலக்கணத்தை யாப்பருங்கல விருத்தியினகத்தும், யாப்பருங்கலக் காரிகையினிடத்தும் ஆராய்ந்தறிக.

இங்ஙனம் வணங்கும் வணக்கத்தைப் புறப்பொருள் இலக்கணத்துள் திணை, துறை வகையால் பாகுபடுத்திக் கூறுவார். மேலே சொல்லிய வணக்கத்தில் வந்துள்ள திணை - பாடாண்திணை, துறை - கடவுள் வாழ்த்து. அல்லது, கந்தழி என்ப. "பாடன்திணை" என்பதனை,

"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங்காலை நாலிரண் டுடைத்தே" என்ற தொல்காப்பியத்தாலும்,

"பாடாண் பாட்டே வாயினிலையே
கடவுள் வாழ்த்தொடு பூவை நிலையே"
அமரர்கண் முடியு மறுவகை யாகிய ... ... கொடி நிலை கந்தழி
வள்ளி குணஞ்சால் ... ... பாங்குற வுரைப்பது பாடாண் பாட்டே'
என்ற புறப்பொருள் வெண்பாமாலைச் சூத்திரத்தானும் நன்கு அறியலாம்.
"கடவுள் வாழ்த்து" என்பதனை,

"காவல் கண்ணிய கழலோன் கைதொழு
மூவரி லொருவனை எடுத்துரைத் தன்று"
என்ற புறப்பொருளுரையா லுணர்க. 'கந்தழி' என்பது,

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'கந்தழி' என்பது, "ஒருபற்றுக் கோடின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்" எனக் கூறிய உரையாலும், "சார்பினுற் றோன்றாது தானருவா யெப் பொருட்குஞ், சார்பென நின்றெஞ்ஞான்றறி வின்பர், தகைத்தரோ வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த, தூய்மையதா மைதீர் சுடர்" என்ற உதாரணச் செய்யுளாலும் இவ் வணக்கத்தின் உட்கருத்தை நன்கு அறியலாம்.



ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்றும்
உறவனந் தம்வினையினால்
உடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோஅனந் தம்பெற்றபேர்
சீரனந் தஞ்சொர்க்க நரகமும் அனந்தநற்
றெய்வமும் அனந்தபேதந்
திகழ்கின்ற சமயமும் அனந்தமத னால்ஞான
சிற்சத்தி யாலுணர்ந்து
காரனந் தங்கோடி வருஷித்த தெனஅன்பர்
கண்ணும்விண் ணுந்தேக்கவே
கருதரிய ஆனந்த மழைபொழியும் முகிலைநங்
கடவுளைத் துரியவடிவைப்



பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
பெரியமௌ னத்தின்வைப்பைப்
பேசரும் அனந்தபத ஞானஆ னந்தமாம்
பெரியபொருளைப்பணிகுவாம்.

(ப-ரை) ஊர்-(உலகத்தில் பிறந்து வாழ்ந்த) ஊர்களும், அனந்தம்-எண்ணிறந்தன, பெற்ற-(அப்பிறவிகளிலே) உற்ற, பேர்-பெயர்களும், அனந்தம்-எண்ணிறந்தன, சுற்றும்-(அப்பிறவிகளிலே) சூழ்ந்து உள்ள, உறவு-உறவினர்களும், அனந்தம்-எண்ணிறந்தன, வினையினால் (அப்பிறவிகள்தோறும் செய்துள்ள) நல்வினை தீவினைகளினால், உடல் - எடுத்த தேகங்களோ, அனந்தம்-எண்ணிறந்தன, செய்யும் - (எடுத்த அத்தேகங்களைக் கொண்டு வாழும் நாட்களிலே) செய்கின்ற, வினை - (மேல்வரும் பிறவிகளுக்கு ஏற்றவாறு) செய்யும் கர்மங்களும், அனந்தம் - எண்ணிறந்தன, கருத்தோ - (கடல் அலைகள்போல ஓயாது மென்மேல் உண்டாகும்) எண்ணங்களும், அனந்தம்-எண்ணிறந்தன, பெற்ற - (அப்பிறப்புகளில்) அடைந்த, சீர்-சிறப்புகளும், அனந்தம் - எண்ணிறந்தன, சொர்க்கம் - (பிறவிகளில் செய்துள்ள நல்வினைகளுக்கு ஏற்ப அடைந்து அனுபவித்த) சொர்க்க பதவிகளும், நரகம் - (பிறவிகளில் செய்துள்ள தீவினைகளுக்கு ஏற்ப அடைந்து துன்புற்ற) துன்பநரகங்களும், அனந்தம்-எண்ணிறந்தன, நல்-(அவ்வப்பிறவிகளிலே கொண்டாடி வணங்கிப் பூசித்த) நல்ல, தெய்வம்-தெய்வங்களினுடைய, பேதம்-பேதங்களும், அனந்தம்-எண்ணிறந்தன, திகழ்கின்ற-(அவ்வப்பிறவிகளில் கொண்டாடி வணங்கிய தெய்வங்களுக்கு ஏற்ப) விளங்குகின்ற, சமயமும் - சமயங்களும், அனந்தம்-எண்ணிறந்தன, அதனால்-ஆனபடியினால், அனந்தம்-எண்ணிறந்த, கோடி-கோடிக்கணக்காகிய, கார் - நீர்கொண்ட மேகங்கள், வருஷித்தது - (திரண்டு வந்து மழையை) பெய்தது, என-என்று சொல்லும்படி, அன்பர்-மெய் அடியார்களுடைய, கண்ணும் - கண்களும், விண்ணும் - மனவெளியும், தேக்க-நிறம்பும்படி, கருத-எண்ணுவதற்கு, அரிய-அரிதாகிய, ஆனந்தம் - பேரின்பமயமாகிய, மழை - மழையை, பொழியும்-சொரிகின்ற, முகிலை - மேகத்தை, நம்-நமது, கடவுளை - கடவுளை, துரியம் - அவத்தைகள் எல்லாவற்றையும் கடந்து நிற்பதாகிய, வடிவை-வடிவத்தை, அனந்தம் - எண்ணிறந்த, மறை-வேதங்களும், அனந்தம் - எண்ணிறந்த, பேர் - பெயர்களை (திருநாமங்களை), பேசி - எடுத்துப்புகழ்ந்துகூறி, சொலும் - துதிக்கின்ற, பெரிய-பெரிதாகிய, மௌனத்தின் - பேச்சற்ற மௌனநிலையாகிய, வைப்பை - நிதியை, பேச-பேசுதற்கு, அரிய-அரிதாகிய, அனந்தம் - முடிவற்றதாகிய, பதம்-நிலையாகியும், ஞானம் - ஞானபூரணம் ஆகியும், ஆனந்தம் - ஆனந்தமும், ஆம்-ஆகிய, பெரிய-பெரிதாகிய, பொருளை - பரமபதியாகிய கடவுளை, ஞானம் - ஞானத்தையே திருமேனியாகக்கொண்டுள்ள, சிற்சத்தியால்-பராசத்தியாரின் திருவருளினால், உணர்ந்து - நன்றாக அறிந்து, வணங்குவாம் - வணங்குதலைச் செய்வோமாக எ-று.

(வி-ரை) திணை-இது பாடாண்டிணை. துறை-கடவுள் வாழ்த்து, கந்தழி. இதன் விளக்கங்களை முந்துநூல் கூறியாங்கு முதற்பாட்டின்கண்ணே விளக்கமாக வுரைத்தமைகொண்டு தெளிக. இச்செய்யுளும் புறமதகண்டனங்கூறிப் பரசிவ வணக்கங் கூறியதாம். இவ்வாறு சமயவாதிகளை மறுத்தவர், மேல் நிஷ்கள சிவத்தின் லக்ஷணத்தை வற்புறுத்தவேண்டி அச்சிவம் பிரபஞ்ச காரியத்திற்குத் தனக்கோர் உபாதான காரணமாய் நின்ற சுத்தமாயை அசுத்தமாயை சுத்தாசுத்தமாயை என்னும் இவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்கும் நிலையினையே இதிலும் வெளியாக்குகின்றார்.

ஆன்மாக்கள் இறைவன் திருவருட்டிறத்தினால் தனுகரணங்களைப் பெற்று உடலோடு கூடி வாழுமதற்குரிய புவனமும் தலங்களும் பற்பலவாகலின், 'ஊரனந்தம்' என்றார். ஊர்-இடம். அனந்தம்-கணக்கற்றது. சர்வ புவனங்களுள்ளுள்ளும் இடங்களைப் பாகுபாடு செய்து, அவ்வவ்விடங்களைக் குறிக்கக் குறியீடு செய்து, அவைகட்குச் சிறப்புப் பெயரிட்டு வழங்குவது வழக்கமாகலின், அம்முறைபற்றியே பொதுவாக, 'ஊர்' என்று கூறினர். அவ்வண்ணம் பொதுவாகக் கூறும் இடங்களும் பலவாதலினாலே, 'ஊர் அனந்தம்' என்றதுமாம். இதனுடன், 'தெய்வமும் அனந்த பேதம்' என்ற சொற்றொடரின் ஈற்றில் நின்ற 'பேதம்' என்னும் மொழியையுங் கருத்தோ வனந்தம் என்றதன்கண் வந்துள்ள ஒகாரத்தையுங் கூட்டி, 'ஊரோ அனந்த பேதம்' என்று பொருளுரைத்தல் வேண்டும். இவ்வாறே ஒகாரத்தையும், பேதம் என்ற மொழியையும், ஊர், பேர்; உறவு, உடல், வினை, கருத்து, பேர் சீர், சொர்க்கம், நரகம் என்றவைகளோடும் கூட்டியுரைக்கப்பெறும். இவ்விதம் வருவதனை அலங்கார நூலார் இடைநிலைத் தீபக அலங்காரமாகக் கொள்ளுவர். இத்தீபக வலங்காரம்-தொழில். குணம், சாதி, பொருள் என்னும் இவற்றின் ஒன்றைக் காட்டும் மொழி புலவனாற் புணர்க்கப்பட்ட செய்யுளின் முதல் இடை கடை என்னும் ஓரிடத்து நின்று பலவிடத்து நின்ற சொற்களோடும் அடைந்து பொருளை விளக்குவதாய்ச் செய்யுந் தன்மை யுடையது. அனந்தம், இது, ந+அந்தம் என்கிற இரண்டு வடசொற் சந்தி. இதில் நகரத்தை எதிர்மறை உபசர்க்கம் என்பர். ஈண்டு, எல்லையற்றது, கணக்கற்றது, முடிவற்றது என்பன பொருளாம். (ந - அற்றது; அந்தம் - முடிவு.)

'பெற்ற பேரானந்தம்' என்பது அண்டசம் சுவேதசம் சராயுசம் உற்பிசம் என்னும் நான்கு வழியாகத் தோன்றும் தோற்றமும், தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் ஆகிய எழுவகைய பிறப்பினுள் எண்பத்து நான்கு லட்ச யோனி பேதங்களுமுண்டு. இவ்விதம் வரையறுத்துள்ள யோனி பேதங்களுள்ளும் ஒவ்வொரு யோனி பேதங்களும் கோடானு கோடியாய்ப் பெருகிச் செல்லும். அவ் வொவ்வோர் தனுவுக்கும் அபிதானம் (பெயர்) ஒவ்வொன்றுண்டாதலின், 'பேரோ அனந்த பேதம்' என்றார். இவண் 'பெயர்' என்பது, பேர் எனவந்த இலக்கணப் போலி. இனி, 'பெற்ற பேரோ வனந்த பேதம்' என்பதற்கு



தாம் பிறந்த ஊர்கள் பெற்றபேரோ அனந்தபேதம் என உரை செய்வாரும் உண்டு. அது பொருந்தாமையை உய்த்துணர்ந்தறிக. கடலின்கண் அலைபோல ஒருவன் வினை வலியால் மாறிமாறி யெடுத்த பிறவிகள்தோறும் தந்தையர்களாய், தாய்மார்களாய், தமர்களாய், மனைவிமார்களாய், புதல்வர்களாய் வந்த உறவினர் கணக்கற்றவர்களாதலின்; 'சுற்று முறவனந்தம்' என்றார். இது பற்றியன்றோ,

"கேளாதே வந்து கிளைகளாய்த் தோன்றி"

என **நாலடியாரி**ற் கூறினர்.

அன்றி, 'சுற்று முறவோ அனந்தபேதம்' என்றதால், தம்மைச் சுற்றி நிற்கும் சுற்றத்தவருள்ளும் பலவித வேற்றுமை கொண்டவருமுண்டென்ப. 'உறவு' இது உறு என்னும் பகுதி அடியாகப்பிறந்த பெயர். இன்ப துன்பங்களுக்கும், சம்பத்து விபத்துக்களுக்கும் பொருந்திக் கூட விருந்து அனுபவிப்பவர் ஆதலின் இஃது காரணப் பெயராகி வந்தது. இனி, சூழ உறுபவராதலின் இப்பெயர் வந்ததெனலு மொன்று. உறவினர் கொட்டியும் ஆம்பலும் போலவே என்றும் சுற்றி இருப்பவர்; அன்றி, சூழ இருப்பவராதலின், 'சுற்று முறவு' என்றார். தாம் சுற்றாமல் விடினும், அவர் தாமே வந்து சுற்றும் பந்துக்களெனினுமாம், இதனை,

"சுற்றத்திற்கு அழகு சூழ இருத்தல்" எனப் பெரியாருங் கூறியருளினர்.

கிளை, உறவு, சுற்றம் என்பன ஒருபொருட் சொற்கள். இங்கே உறவு கூறவே, "ஒருமொழி யொழி தன்னினங் கொளற்குரித்தே" என்ற இலக்கணத்தால், பகை நொதுமல்களையும் கூட்டியுரைக்கலாம். எவ்வண்ணம் உறவு அனந்தமோ அதுபோலவே பகையும் நொதுமலும் அனந்த பேதம் எனவும் கொள்க. இங்ஙனம் பகையும் நொதுமலுங் கொண்டமையால், இவைகள் உயர்திணை அஃறிணை ஆய ஈரிடத்தும் செல்லுவன வாகவுமாம்.

'தம்வினையினால் உடல் அனந்தம்' என்பது, 'தம்' என்றதனால் தனுவைப்பெற்ற ஆன்மாக்களை. வினை எனப் பொதுவாகக் கூறினமையினால், ஈண்டு நல்வினை தீவினை ஆகிய இரண்டினையுங் குறிப்பதாம். பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலப் பிறப்பிற்கு நல்வினையும் தீவினையுங் காரணமாக நிற்றலின், வினையினால் எனப் பொதுப்படக் கூறிப்போந்தார். பல்வகையான உடலெடுத் துழல்வதற்கும் தாம் தாம் முன்செய்த கருமமே காரணமாகையாலே அவ்வவ் வினைவழியே உயர்வுந் தாழ்வுமாகிய பிறவிகள் உண்டாகின்றமையின், 'உடல் அனந்தம்' என்றார்.

"பல்லுயிர்க் கருமத்தின் பகுதிக் கேற்புறச்
சொல்பல யோனிக டோறுந் தோற்றமுற்
றல்லலுஞ் சுகமுமிக் கடையும் பல்லுயிர்
புல்லுமா மானிடம் போந்தவற் றுள்ளும்"

என்ற **சூதசங்கிதை**யாலும் அறிக.

உடல் எனக் கூறினதால், விலங்குகளையும் பிறவற்றையுங் கொள்க. உடல் மாயா காரியம், அஃது அறிவில்லாப் பொருள். அது தோன்றிநின் றழிவது. வினையினால் உடல்-கருமத்தால் வந்த தேகம்;

"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது"

என்பது **மணிமேகலை.** இதுபற்றியே,

"அண்டசஞ் சுவேதசங்க ளுப்பிச்சஞ் சராயுசத்தோ
டெண்டரு நாலெண்பத்து நான்குநூ றுயிரந்தா
னுண்டுபல் யோனியெல்லா மொழித்துமா னுடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக்கையா னீந்தினன் காரியங்காண்"

எனச் **சிவஞான சித்தியாரும்,**

உடலோடு கூடிய உயிர்க்குத் துன்பமே யாகுமாதலின், 'துன்பம்' என்னும் பொருளாகிய, 'உடல்' என்னும்சொல் உடம்பிற்கு ஆயிற்று. இதனை,

"ஏஷ ஸர்வாணி பூதாநி பஞ்சபிர் வ்யாப்ய மூர்த்திபிః
ஜந்ம வ்ருத்தி க்ஷயைர் நித்யம் ஸம்ஸார யதிசக்ரவத்"

என **மனுஸ்மிருதியிலும்,**

"ஊழா லுடம்புண் டுடம்பால் வினையுண்டு
தாழும் வினையாற் சகமுண்டு—காழ்கொண்ட
வித்துமுளை யுய்போல வீயா தொருகாலும்
முத்தியிலே வீயு முளை" என **ஞானவிளக்கத்திலும்,**

"எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுய
ரத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே" எனப் **பராபரக்கண்ணியிலும்,**

"மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்தடியை யடைந்துள்ளந்தேறி
ஈறிலின்பத் திருவெள்ளம் யான் மூழ்கினன்"

எனத் **திருவாய்மொழியிலும்,**

"எண்ணறிய வான்மாக்க ளிலக்கணங் கூறுங்கா
லிருண்மலத்தான் மூடரா யிருந்துபிறந் துழல்வார்"

எனப் **பதிபசுபாச விளக்கங்** கூறியதுங் காண்க.

காயம், மெய், தனு, ஊன், உடல், உடம்பு என்பன ஒருபொருட் சொற்கள். வினையே உடல் எடுத்ததற்குக் காரணம் என்பதாம். வினை யாண்டு நேர்ந்ததோவென்று ஆசங்கை கொள்வார்க்கு, கர்மம், சாக்கிர சொப்பனத்தில் ஸ்தூல சூட்சும போகப்பிரதமான கர்மம் இருக்கிறபடி யால் தான் சரீரமிருக்கிறது. சுழுத்தியில் ஸ்தூல சூட்சுமப் பிரதானமான கர்மமில்லாதபடியினால் சரீரமுமில்லை. கர்மம் உண்டானால் சரீரம் உண்டு. கர்மம் இல்லாவிட்டால் சரீரம் இல்லையென்பது திண்ணமாகையின்,



"வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தாற்
றினைப்போ தளவு நில்லாது கண்டாய்"

எனப் **பட்டினத்தடிகள்** வாக்காலுமறிக.

'பிறப்போ அனந்தம், கர்மத்தினாலே உண்டாகும் பிறவியோ இவ்வளவினை யுடைத்தென மொழிவது முடியாதாகலின் அதனை அனந்தம் எனக் கூறினர். இதுபற்றியே,

"முன்னம் பிறந்த பிறப்போ முடிவில்லை" என்றதும்,
"என்பிறப்போ எண்ணத் தொலையாது"

என்றது மென்க. இதனாலல்லவா?

"புநராபி ஜநநம் புநராபி மரணம்" எனவும்,
"மாறி மாறிப் பிறந்து செத்து" எனவும் பிறருங் கூறியதாம்.

வினையினால் - ஆல். மூன்றனுருபு, கருவிப் பொருள். வினையென்றது- பிராரப்த கன்மத்தை. 'செய்யும் வினை அனந்தம்' செய்கின்ற கன்மங்கள் இத்துணைய இவ்வளவின வென்று கணக்கிட்டுச் சொல்லுவன முடியாமை யின் அங்ஙனம் கூறினதாம்; அவ் வினைக்கேற்ப இறைவன் திருவருள் பரிபாலித்தலின் இச்சை தோன்றும்; அவ்விச்சைக் கேற்பவே தொழிலும் சம்பவிக்கும்; அத்தொழிலிற் கேற்பவே இன்பதுன்பாதிகளை உயிர்கள் அனுபவித்துழல்வ ராகையால் அங்ஙனங் கூறியதுமாம். ஈண்டு வினை யென்பது, ஓதல், ஓதுவித்தல் முதலாகிய அறு தொழில்களையும் அவற்றின் பல்வேறு வகையவான காரியங்களையும், இனி, உண்ணல், உறங்கல், ஓடுதல், ஆடுதல், நடத்தல், இருத்தல், நீட்டல், முடக்கல், வளைதல், நிமிர்தல் முதலியவாய தொழில்களையும், அதன் வகைகளையும் என உரைப்பினும் அமையும். மனமாகிய குரங்கு இறைவனிடத்தே லயித்து மௌனானந்த யோகத்தை அடையும் கணபரியந்தம் இத்தேகம் விஷய இச்சைக் கேற்பப் புலன்வழிபட்டு வினைகளைச்செய்து, அதிலேஅவஸ்தைப் பட்டு நிற்கு மாகையால் செய்யும் வினையும் அனந்தம் என்றார்.

'கருத்தோ அனந்தம்' என்றது, கருத்து - எண்ணத்தை, கருதுதற்கு இடமாகியது மனமே யாகையால், ஈண்டு கருத்தென்பது ஆகுபெயராம். காயத்தின் தொழிலாகிய செயல் அனந்தம் என்றவர், அதன் பின்னர் காயச் செயலுக்குக் காரணமாகிய கருத்தின் செயலைக் கூறத் தொடங்கினர். அதற்குக் காரணம் யாதோவெனில், ஆன்மா பூர்வகன்மத்தின் வண்ணமே இன்பதுன்பங்களை அடைய வேண்டியிருத்தலின், அவ்வின்பதுன்பங்களை எய்த இறைவன் திருவருளினாலே இச்சை எழா நிற்கும். அவ்விச்சை உதிப்பதற் கேற்பவே எண்ணங்கள் தோன்றாநிற்கும். அப்படித் தோன்றா நிற்கும் எண்ணங்களுக் கேற்பவே தொழில் நடை பெறுவனவாகும்; அத் தொழிலின் திறத்தளவாயே இன்பமோ அல்லது துன்பமோ சம்ப விக்கும். இதனாலேயே, 'கருத்தோ அனந்தம்' என்றதுவுமாம். இதனையே,

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல" எனப் **பெருநாவலரும்,**

"உண்பது நாழி யுடுப்பது நான்குமுழம்
எண்பது கோடி நினைந் தெண்ணுவன்" என **ஔவைபிராட்டியும்,**

"எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிஎண்ணி ஏழைநெஞ்சம் புண்ணாக"

என இந்நூலாரும் கூறியது காண்க.

'பெற்றபேர் சீர் அனந்தம்' என்பது, இது வரையில் நான் பெற்றிருந்த பெருமையுஞ் சிறப்பும் எல்லை இல்லாதனவாகும். ஈண்டு, பேர்-பெருமிதத்தையும் பெருமையையும் சொல்லியது. சீர் - சிறப்பை. இவ்வாறல்லாமல் பேர் சீர் எனக்கொண்டு, பெருஞ் சிறப்பெனப் பொருள் கொள்ளுதலும் அமையும். அங்ஙனம் பொருள் கொண்டால், முன்னது உம்மைத்தொகையும், பின்னது பண்புத்தொகையுமாம். அவனவன் செய்த கன்மத்திற்கேற்ப இறைவன் திருவருளால் பேருஞ்சீரும் எய்துமாதலின், பிறந்த உடம்புகடோறும் பெற்ற பேருஞ்சீரும் அளவற்றவை யென்பார் அங்ஙனம் உரைத்துப் போந்தா ரென்பதாம். 'சொர்க்க நரகமு மனந்தம்' என்பதில், சொர்க்கம் என்றது, புண்ணியஞ் செய்தோர் எய்தும் மேல் உலகத்தை. அது இந்திரன் முதலிய இறையவர் பதங்களைக் குறிக்கும். 'நரகம்' என்பது, மேலுலகமாகிய சொர்க்கத்திற்கும் நடு இடமாகிய பூமிக்கும் கீழுள்ளதும், பாவஞ்செய்தோர் அடைவதுமாகிய இரௌரவம் கும்பீபாகம் அசிசிகம் முதலிய நரகலோகங்களைக் குறிக்கும். சொர்க்கம் புண்ணியஞ் செய்தவர் எய்தித் தாம் செய்த புண்ணிய பலனை அனுபவிக்கும் இடமெனவும், நரகம் பாவஞ்செய்தோர் எய்தித் தாம் செய்த பாவத்தின் பயனாகிய துன்பத்தை அடையும் இடம் என்றதனால் பூமி மத்திய தலமாகும். இது இன்ப துன்பங்கள் இரண்டையும் அடைதற்கு இடமாக இருப்பது என்பது உய்த்துணரத் தக்கதாகும். ஒருவன் செய்த வலிய தீவினைகளானவை மறுமைக்கண் வந்து நரகத்தில் அழுத்துவதுமல்லாமல், இம்மையிலும் வருத்துமென்பது சாத்திரங்களில் விரிக்கப்பட்டுள்ளது. அதனையே சுவாமிகளும் இவண் குறித்தது. இதனை,

"குற்றொருவரைக் கூறைகொண்டு கொலைகள்சூழ்ந்த களவெலாஞ்
செற்றொருவரைச் செய்ததீமைகள் இம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன் மறவாதொழி மடநெஞ்சமே"

எனச் **சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்திலும்,**

"மிகமேவிய புண்ணிய பாவமெனும் வினையின்
பயன் வேறொரு காலமுறு—திகமே
வருமென் பதனு ளளநோ யெல்லா
மிவனைச் செறவெய் தினவே"

எனச் **சசிவர்ண போதத்திலும்,**



"அருந்துயர்க் குழியினூழ் வாராகமே பாவத்தாகும்
பொருந்திய பூதத்தாலே யிமைத்திடும் போதுதன்னுட்
புரிந்தவிண் புகுவாராகம் புண்ணியத் தாலேயாகும்
பொருந்திய பூதசாரத் தொருகணப் பொழுதுதன்னில்"

எனச் **சிவதருமோத்திரத்**தாலும் அறிக.

'சொர்க்க நரகமும் அனந்தம்' இதில் உள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. இதனையே எச்சவும்மை என்றுரும் உளர். ஊர், பேர், உறவு, உடல், வினை, கருத்து, பேர் சீர் எவ்வாறு அனந்தமோ அதுபோலச் சொர்க்க நரகமும் அனந்தம் என்று பொருள் தருதல் காண்க. கருத்தும் செயலும் அனந்தமாயினமையின் சுவர்க்க நரகமும் அனந்தமாயின. என்னை? நற்கருத்து நற்செயல்களால் அடைவது சுவர்க்கமும், தீக்கருத்து தீச்செயல்களால் அடைவது நரகமும் ஆதலின் என்க. இதனால் பாவம் பல்கிச் செல்வதை யொத்து நரகவாதனைகளின் பெருக்கத்தினையும், புண்ணியம் பல்கிச் செல்வதை யொத்து இன்பாநுபவமும் பற்பல வகையெனச் சொல்ல வந்தவர் இங்ஙனஞ் சுருக்கிக் கூறினர்.

'நற்றெய்வமு மனந்த பேதம்' என்பது, அவரவர்கள் கொள்கைக்கு ஏற்ப, அவரவர்கள் தொழும் தெய்வமும் பலவாயின என்றார். ஆராயின், ஆன்மாக்களின் பிறப்பின் தன்மைக் கேற்பவும், புண்ணிய பாவங்களுக் கேற்பவும், அவரவர்கள் பெற்ற அறிவின் தகைமைக் கேற்பவும், தெய்வங் கொள்ளுபவராகலின், 'நற்றெய்வமும் அனந்த பேதம்' என்றார். உசாவுமிடத்து தெய்வம் ஒன்றே ஆயினும் அது ஆன்மாக்கள் எவ்வெவ் விதமாகத் தம்மைச் சிந்தித்து வந்தித்து வழிபடுகிறார்களோ, அவரவர் நினைத்து வழிபடும் அந்தந்த தெய்வ வடிவாகி இறைவன் வந்து அருள் செய்கின்றமையால், 'தெய்வமும் அனந்த பேதம்' என்றார். இதுபற்றியே, கண்ணன் கீதையில் அருச்சுனனுக்கு உபதேசம் புரிகையில், எவர் என்னை எவ்வெவ்வாறு நினைத்துத் துதிக்கின்றார்களோ அவரவர் மனநிலைக் குகந்தவண்ணம் நான் வெளிப்படுகின்றேன் எனக் கூறியமை அறிக. தெய்வமும் சிவசத்தியின் சொரூபமாகலின், 'ஞான சிற்சத்தி' என்றார். சிவசத்தி ஒன்றே அவ்வவர்மாட்டு நின்று செய்யுங் காரிய வேறுபாட்டாற் சகசி முதலியவாய்ப் பல வேறுவகைப்படும். சிவசத்தி ஒன்றே யென்பதும் அதுவே அக்கினியில் உஷ்ணம்போலக் கடவுளா மாட்டு நின்று யாவற்றையும் நடாத்துவதாம். ஈண்டு ஞானசிற்சத்தி என்றமை யாதோவெனில், "தடையிலா ஞானந்தானே சத்திதன் வடிவமாகும்" என்றபடியும், "சத்திதன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்" என்கிற **பிரமாண வாக்கியங்**களினால், உயிர்கட்கு அநுக்கிரகமாத்திரங் குறித்துப் பொதுவாகையால் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானமொன்றே சிவசத்தியின் சொரூபம். அதுவே பராசத்தி யெனப்படும். அந்த ஞானம், உயிர்கட்கு மலபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச்

சிறப்புவகையால் வியாபரிக்குங்கால், ஒரு கூற்றுனே திரோதான சத்தியென நின்று இச்சா ஞான கிரியைகளும் ஞானத்தின் வேறன்மையால் காரியத்தால் அநேகமாகிய செனனி முதலிய வியாபார சத்திகளெல்லாம் முற்கூறப்பட்ட பராசத்தி ரூபமாகிய ஞானமொன்றால் உளவாவனவாம் ஆதலின் இங்ஙனஞ் சொல்லினர். இவ்வண்ண முரைத்தமையால், ஞான சிற்சத்தி சகாயத்தாலே தான் சிவத்தை அடையலா மென்பதும், அவன் அருளில்லையாயின் அது எய்தாதென்பதுந் தோன்ற ஞான சிற்சத்தியா லுணர்ந்து பணிகுவாம் என்றார். இதனால் ஞானமே கடவுளை அடைவதற் குச் சிறந்த சாதனமாவதென்பதே தேர்ந்த கருத்து.

"மாயநட்போரையு மாயா மலமெனும் மாதரையும்
வீயவிட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன்சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயுமதே நிட்டையென்றா னெழிற்கச்சி யேகம்பனே"

எனப் **பட்டினத்தடிகளும்,**

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி
யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும்
அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள்
நங்கை தலைவன் தாளே"

எனத் **தேவாரத்தும்** கூறியது வறிக.

இதனால் திருவருட் டுணையின்றிச் சிவத்தைக் கூடவொண்ணு தென்பது சித்தாந்த துணிபை உறுதிப் படுத்தியதாம். மற்றும், சிற்சத்தியே உயிர்களை அனாதியே மறைத்து நிற்கும் ஆணவமலத்தை நீக்கியருளுவான் தநுகரணங்களைத் தந்தருளி, சுருதியாதிபவற்றால் சொரூபமறைப்பையும் நீக்கி, மெய்ஞ்ஞானந் தந்தருளுவது. இதனை அருட்சத்தி என்னவும்படும். இது கொண்டே, "சிற்சத்தியாலுணர்ந்து" என்றார். ஈண்டு ஆணவமென் றது, ஆன்மாக்களுக்கு அநாதியிலேயே பந்தமாயிருக்கிற பாசம். அது பரி பாகத்திலே நீங்குஞ் சத்தியையுடையதாய், மூலமலமாய், இருளும் ஒளி யன்ன விரண்டதாய், வியாபகமாய், சிவத்தையும் ஆன்மாவையும் பாசத்தை யுந் தெரிய வொட்டாமல் நீரில் உப்புபோல ஆன்மாவை இரண்டறக் கலந்து இச்சாஞானக் கிரியைகள் முழுவதையும் மறைத்துக்கொண் டிருப்பது.

'காரனந்தங்கோடி வருடித்ததென' என்றது மழை மேகம் கணக்கற்ற கோடிகூடி ஆனந்த மழையைச் சொரிந்ததுபோல என்பதே பொருள். கார் என்றது, மழைகொண்ட மேகத்தை. கார்-கருப்பு நிறத்தை உணர்த்தும்.



ஈண்டு கருப்பு நிறத்தைக்கொண்ட மழை மேகத்தை உணர்த்தியதால் இருமடியாகு பெயர். அனந்தங்கோடி என்பது, இவ்வளவெனக் கணக் கிட்டுச்சொல்ல வியலாதபடியான சங்கியையுணர்த்தி நின்றது; அதாவது, கணக்கற்ற கோடியை. காருங் கணக்குள்ளதாக விருக்கையில் இங்ஙனம் கணக்கில வென்பது பொருந்துவதோ வென்னில், தமிழிலக்கண முறையின் படி ஒன்றுக்கு மேற்பட்டவற்றைப் பலவென்று கூறும் நியதிப்படி இவ் வாறு பொருள் கொண்டதாம். வருடித்தது-இது, வருஷித்தது என்னும் வடமொழிச் சிதைவெனக் கொள்க. வருஷித்தல்-மழைபொழிதல். இது இறைவன் அருள் பூண்டு ஊட்டும் ஆனந்தத்திற்கு உவமை ஆயிற்று. மேகம் கைம்மாறு வேண்டாமல் தன்னிலுள்ள மழையைப் பொழிவதை யொப்பவே இறைவனும் ஆன்மாக்களுக்கு அளவில்லாமல் கைம்மாறு கருதாமல் அருள்புரிகின்றானென்னும் பொருள் விளக்கமாம். ஒரு சாரார், சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம் முதலிய எழுமேகங்களே உளவா யிருப்ப அனந்தங்கோடி என்றது இல் பொருளுவமையின் பாற்படுமென்ற னர். அதுவும் பொருள்கோளுக் கியைபுடைத்தேயாம். கடவுண் மாட்டும் இவ்வுவமை சாலும்; இவ்வுவமையான் நிர்க்குண பிரமதத்துவம் பொருந் தும். இனி, சப்தமேகங்களின் இனப்பிரிவு முதலியவைகளோடு கூட்டி எண்ணப் பலகோடியாகும் எனத் தற்கோள் நிறுவுபவருமுண்டு. நுண் ணுணர்வுற்றார்க்குப் பொருள் நோக்கில் யாவும் ஒரு பொருள் முடிவின வாகவே விளங்குவதன்றி வேறின்றென வறிக.

'அன்பர் கண்ணும் விண்ணும்' இதில், அன்பரென்கின்ற சொல் மெய்யடியார்களைப் பொதுவாகவும், சிவஞானியர்களைச் சிறப்பாகவும் கூறினார். 'கண்ணும் விண்ணும்' இதில்; கண் ஞானேந்திரியங்கள் ஐந்தி லொன்று. அது அறிதற்கருவியாக வுள்ளது. சாத்துவிக அகங்காரத்திற் றோன்றியது. கண்ணிந்திரியம் ஒளிக்கருவி யாதலின், உருவத்தை அறிவதாம். இது ஆன்மாவின் ஞான சத்தியால் அதிஷ்டிக்கப்பட்டுப் பொருள்களை விசேடண விசேடிய இயல்புபற்றி அறியுமாறின்றி நிரு விகற்பமாய் அறியுங் கருவியென்று உணர்க. கண்ணும் விண்ணும் - உம் மைகள் எண்ணும்மைகள். கண் - அகக்கண், புறக்கண் என இரண் டென்பர். அகக்கண் - பண்புத்தொகை; அகமாகிய கண் என விரியும். அகம் - மனம். புறக்கண் - புறம்பாகிய கண்; அதாவது, ஊனக்கண். 'கற்றபின் கண்ணுமாகும்' என்ற **சிந்தாமணிச் செய்யுரையில் நச்சினார்க் கினியர்**; கண்போறலின் ஞானத்தைக் கண் எனப்பட்டது. கண் உதவி யின்றிக் கைகால்களின் செயல்கள் இயலாதவாறுபோல, ஞானத்தின் உதவியின்றி இறைவனைக் காணமுடியாதென்பது குறிப்பு. ஈண்டு பொது வகையான்கண் எனச் சொல்லியது, சிவஞானியர்கள் ஊனக்கண்ணாற் காணுவன வெல்லாவற்றையும் இறைவன் திருவருள் மயமாகவே கண்டு ஆனந்தமடைவ ராதலினாலே புறக்கண்ணையுங் கொண்டதாம். ஒளியுடைத் தாகிய கண்ணிந்திரியம் தன் தொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோர் உப

சாரத்தை இன்றி அமையாதவாறு என்னை? எனின், அங்ஙனமாயினுங் கண்ணிந்திரியந் தூல ஒளியாகலின், தமோகுண சாரமான இருள் என்னும் பகைப்பொருளின் சத்தியான் மடங்கலின், காண்டல் வியாபாரம் நிகழ்தற்கு அங்கி என்னும் பூதத்தின் கூறான ஞாயிற்றி னொளி விளக்கொளி முதலிய சூக்கும ஒளிகளின் உபகாரத்தை வேண்டற்பாலதாகின்றது என்றுணர்க. விண் - மன ஆகாயத்தை. மனம் ஆகாயத்தின் கூறுதல் காண்க.

'கருதரிய ஆனந்த மழை பொழியும் முகிலை' என்றது, சிவானந்தம் சிவனடியாரா லன்றிப் பிறரால் எண்ணியும் அறிய முடியாதாதலின், 'கருதரிய' என்றார். ஆனந்த மழை - சிவானந்த வெள்ளம். இது, பண்புத்தொகை. ஆனந்தமாகிய மழை என விரிந்து, அது உலகின்கண் வெம்மை மிகாமல் தண்மை மேன்மேலும் அதிகரிக்கும்படி மழைபொழிந்து வுலகமும் குளிர்ச்சி யடைவிக்குஞ் செய்கைபோல, இறைவன் ஆன்மவர்க்கங்கள் ஆணவ மலமொழிந்து இன்பம் மேன்மேலும் அதிகரிக்கச்செய்து அருண் மழை பொழிதலைச் செய்வதெனப் பொருள் விரிக்கினும் தகுதியுடைத்தேயாமென்க. பொழியும் என்ற சொல், இறைவன் தன் உண்மையடியார்களுக்குத் தானே வந்து இடைவிடாது சிவானந்தத்தை ஊட்டுதலின் அங்ஙனம் கூறினார். இது கைம்மாறு கருதாத செய்கையினைக் குறிப்பதாம். இதுவுமன்றி, 'முகிலை' என்றது, மேகந் தானாகவந்து மழை பொழிந்து பைங்கூழை வளர்விக்கச் செய்தலை யொப்ப, இறைவனும் கைம்மாறு கருதா வண்ணம் ஆன்மாக்களுக்கு அருள் புரிந்து சிவானந்தத்தைப் பொழிதலில் ஒப்பாகியது. சம்வர்த்தம் முதலாய சப்த மேகங்கள் மணி பொன் முதலியவன்றி ஆனந்த மழை பொழியாது ஆதலினாலும், இறைவனாகிய மேகம் ஆனந்த மழையைப் பொழிந்து சலியாத சித்தத்தைத் தருதலினாலும், 'கருதரிய ஆனந்தம்' எனக் கூறியதுமாம். இவ்வாறு வருவதனை, 'அற்புத உருவக வணி' என வகுத்துரைப்பர் **அணியலங்கார** நூலார். 'நம் கடவுளை' என்றது, சீவன் முத்தர்கள் எல்லோரையும் உளப்படுத்தியது. சீவன் முத்தர்கள் முன் நீங்கினவைகளை நினைத்து வாடார்கள்; எதிர்காலத்து வரும் பொருளை நினைத்து மகிழார்கள்; நிகழ் காலத்துள்ள பொருளைப் பிராரத்தமென்று அனுபவிப்பார்கள்; உஷ்ண கிரணமானது அமிர்த கிரணமாய் ஆகாயத்தினின்று விழுதாக இறங்கினாலும், மரித்த பிரேதம் சீவித்தாலும், அதிசயமாக ஒன்றையும் எண்ணார்கள்; இது நன்றென்றுந் தீதென்றுஞ் சொல்லார்கள்; அறிவின்மையான சஞ்சித கன்மத்தால் உண்டான பிராரத்த கன்மம் பலவிதமென நினைத்து மகா தவத்தைச் செய்தாலும் செய்வார்கள்; வியாபாரஞ் செய்தாலும் செய்வார்கள்; பூமிபாலனஞ் செய்தாலுஞ் செய்வார்கள்; பிச்சை வாங்கிப் புசித்தாலும் புசிப்பார்கள்; இவர்கள்,

"கடமெனு முபாதி போனாற் ககனமொன் றானாற்போல
உடலெனு முபாதி போன வுத்தாஞ் சீவன்முத்தர்



அடிமுடி நடுவுமின்றி யகம்புற மின்றி நின்ற
படிநிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்பர்"

என்பதால் அவர்களின் நிலை யறிந்து கொள்க.

கடவுள் - இது உள் விகுதி பெற்ற பெயர். இதற்கு உள்ளுதலைக் கடந்தவன் என்பது பொருளாம். இனித் தத்துவங்கள் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் எனினுமாம். ஈண்டு தத்துவங் கடந்த நிலையாவது - பூதாதி தத்துவங்கள் இருபத்து நான்கும் பிரகிருதியில் ஒடுங்கும். புருட தத்துவம் முதலியன மாயையில் ஒடுங்கும். சுத்த வித்தை முதலியன விந்துவில் ஒடுங்கும். சத்தி சிவங்களின் கூறாகிய அபரவிந்து அபர நாதங்கள் சுத்த மாயையில் ஒடுங்கும். இவை எல்லாங் கடந்து நின்றது சுத்த சிவம். ஆதலால் சுத்த சிவத்தைக், 'கடவுள்' என்றார். இதனை,

"மொய்தரு பூதமாதி யந்த மாகப்
பொய்தரு சமயமெல்லாம் புக்குநின் றிடும்புகன்று
மெய்தருஞ் சைவமாதி யிருமூன்றும் வித்தையாதி
யெய்துதத் துவங்களேயு மொன்றுமின் றெம்மிறைக்கே"

என்ற **சிவஞானசித்தியார்** கூறியது காண்க.

'துரிய வடிவை' என்பது, எல்லாவற்றையும் தன்னியல்பிலேயே உணர்த்தாது உணர்ந்து ஆன்மாக்களை அறிவிப்பதே துரிய ஞானமாகும். துரியம் என்றது மேலான ஞானத்தை. அன்றி, துரியம் என்பது, காண்பான் காட்சி காணப்படும் பொருள் என்னும் திரிபுடி நான்காம் ஐந்தாம் பூமிகளைப்போன்று பாவ வடிவமாகவும், ஆறாம் பூமியைப்போன்று அபாவ வடிவமாகவும் தோன்றாமல் தன்னாலும் பிறராலும் எழுதலில்லாத சொரூபத்தில் நிலைத்த மனத்தின் நிலை. இதுபற்றியே,

"நிறைந்த விவையாறாலும் பேதம் போக்கி
நிலைபெறுதற் சுபாவத்தே நிற்ற றானே
மறைந்தபொருள் வெளியாக்குந் துரிய மாகும்"

என்று **வாசிஷ்டங்** கூறுவதறிக.

இவ்வண்ணஞ் சொன்னமையால் இறைவன் மேலான ஞானவடிவினன் ஆதலின், 'துரிய வடிவை' என்றார். நின்மலாவத்தையில் தத்சொரூப தரிசனந் தோன்றுவதையே துரியமெனக் கொண்டதெனப் பொருள். அது அறிவு மயமாக இருத்தலாம். இத்துரியத்தையே அதிசயமாகிய சுவானுபவ மிகுந்த பூமியெனவும் புகல்வர். இதனை,

"அறிவறி கின்ற வறிவு நனவா
மறிவறி யாமை யடையக் கனவா
மறிவறி வவ்வறி யாமை சுழுத்தி
யறிவறி வாகு மான துரியமே" எனவும்,

"சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே" எனவும்,

"பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற வெங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்து நீடுஞ் சொரூப
மரிய துரியத் தணைந்து நின்றானே"

எனவுந் திருமூலர் திருவாக்குகள் அறிக.

'பேர் அனந்தம் பேசி மறை அனந்தம் சொலும்' என்றதில், பேர் என்றது, பரமன் திருநாமங்களை. மறை என்றது, வேதத்தை. இறைவன் ஒரு ஊரும், ஒரு பெயரும், ஓர் உருவும் இல்லாதானாயினும், மெய்யன்பர் அன்பீட்டால் அருமை பாராட்டி ஆனந்த வசத்தால் பல்லாயிர நாமம் கூறித் துதிப்பர். இதுகொண்டே,

"ஒருநாம மோருருவ மொன்றுமிலார்க் காயிரந்
திருநாமம் பாடித் தெள்ளேணங் கொட்டாமோ" எனவும்,

"பேராயிரம் பரவி வானோரேத்தும் பெருமானை" எனவும்,

"தெளிக்கு மறைப் பொருளே" எனவும்,

"ஆறங்க நால்வேத மாயினான் காண்" எனவும்,

"மறைக ளாயின் முன்போற்றி மலர்ப்பாதம்
பற்றி நின்ற இறைவன்"

எனவும் **மாணிக்கவாசகர்** கூறியவையறிக.

'மறை அனந்தம்' என்றது, நான்கு வேதங்களையும், அவற்றின் வகைகளையும், ஆகமம் முதலியவைகளையும், மற்றுமுள்ள பகுதிகளையுங் குறித்து நின்றது. அன்றி, இருக்கு, யசுர், சாமம், அதர்வண மென்பனவாம். இவை சுயம்புவென்றும், ஈசுவரனால் சொல்லப்பட்டவை யென்றுஞ் சொல்லப் படும். அவற்றுள் இருக்கு வேதம் இருபத்தொரு பேதம்; யசுர்வேதம் நூற்றொரு பேதம், சாமவேதம் சகஸ்ர பேதம்; அதர்வண வேதம் நவபேதமாம். அந்நான்கு வேதங்களும் விதிவாதம், அர்த்தவாதம், மந்திரவாதம், நாமதேயமென்று சகல தருமங்களையுஞ் சொல்லாநிற்கும். ஆகமம்-இறைவனாலே சொல்லப்பட்ட இருபத்தெட்டுமாம். வேதம் - அறிதற் கருவி. வேதமும் சிவாகமும் ஒன்றேயாயினும் இருபகுதிப்பட்டது, வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றியாதலாற் சிவாகமங்கள் பிரமாணமென்பது தெற்றென உணர்க. மறை-இரகசியார்த்தத்தை யுடையது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப் பெயர். இதனை, 'வேதாவை அனந்தா:' என்றதுமறிக.



'பெரிய மௌனத்தின் வைப்பை' என்றதில், இறைவன் பெரியவற்றுளெல்லாம் பெரியவனாதலினாலும் சனகாதி முனிவர்களுக்கு வேத இரகசியங்களை யெல்லாம் உபதேசித்தருளி, அவர்கள் அறிவு எல்லாவற்றையும் அறிந்துணர்ந்து அமைந்து அடங்கும் வண்ணம் கைலைக் கண்ணே கல்லால மரத்து அடியில் தட்சிணாமூர்த்தியாகிச் சின் முத்திரை காட்டி ஞான போதத்தை யுணர்த்தி மோன நிஷ்டை காட்டி யருளியதனாலும், முனிவர்களும் அதனை யுணர்ந்து அறிவு வொடுங்கிச் சிவாநந்தம் உற்றனராதலின், 'பெரிய மௌனத்தின் வைப்பை' என்றார். ஞான போதமென்பது - சிவஞான போதத்தை. இச் சிவஞானபோதங் கூறுவது, பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தங்களாம். வைப்பு - க்ஷேமநிதி, இது எய்ப்புழி உதவுமாறு வைக்கப்படுதலின் சேமநிதியை வைப்பு என்றார். இதனை,

"தானே சிவமான சத்திய ஞானானந்த
மோன நிலைசொல் காழிமுன் னோனே" என்றும்,

"மாயை மயக்கற்றறுத்துத் தற்போத மற்று
மவுனநிலை யுற்றோர்கள் பெற்ற பேறே"

என்னும் திருவாக்குகளாலும்,

"அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த வருளாளர்" எனவும்,

"ஒருகணஞ் செயலொன்றின்றி யோகுசெய்வாரி னுற்றான்"

எனவுங் கூறிய வாக்குகளாலுமறிக.

பெரிய - இது இனம் விலக்கவந்த அடைமொழி. இதனை, "அடைமொழி யினமல்லதுந் தருமாண்டுறின்" என்ற **நன்னூல்** விதியாற்காண்க. இதற்கே **தோல்காப்பியனார்**, "எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே" எனவும் விதிப்பர். இவ்வாறு வருவதனை, பெயர் உரிச்சொல் எனவுமாம். "பேசரு மனந்தபத ஞான வானந்தம்" இதில் வந்துள்ள, அனந்தபதம்; அனந்த ஞானம்; அனந்த ஆனந்தம், என ஞானானந்தத்தோடும் ஆனந்தத்தோடும் கூட்டிப் பொருள் கொள்க. இது, முதனிலைத் தீபக அலங்காரம் ஆகும். **தண்டியலங்காரத்தில்**,

"குணந் தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்
ஒருவயி னின்றும் பலவயிற் பொருடரிற்
றீவகஞ் செய்யுண் மூவிடத் தியலும்"

என்று கூறிய விதியாற் போந்தது.

இறைவனாகிய அனந்த பதத்தை, அனந்த ஞானத்தை, அனந்த ஆனந்தத்தை, மனத்தால் நினைத்தல் அருமையினும் அருமையாம்; அதனை வாயினால் எடுத்துக் கூறுதலோ அதனினும் அருமையாம். இது கொண்டே 'பேசரும்' என்னும் அடைமொழி கொடுத்தார். அனந்தபதம் - ஈறிலா நித்தமுத்தியைக் குறித்தது. இது சகல கேவலங்களினின்றும் நீங்கி,

திரு அருளைத் தரிசித்துக் காண்பான், காட்சியுமாய்த் தரிசித்த தற்சுதந் தரம் நீங்கி, தற்போதம் அகன்று சிவானுபவானந்தம் பெற்று, ஒன்றுந் தானாகாமல் ஒன்றாக நின்ற சிவத்தோடு இரண்டறக் கலந்து, போத வாசனையுமற்றும் சுகாதீதமாக நிற்கும் நிலையாம். இதனையே சிவயோகம் சிவபோகம் என்பர். அனந்த ஞானம் - முற்றுணர்வைக் குறித்து நின்றது. அனந்த ஆனந்தம் - வரம்பில் இன்பமுடைமையாகிய பரம சுகமாகும். இவை மூன்றும் இறைவன் எண் குணங்களில் மூன்றைக் கூறியதாயிற்று; கூறவே ஏனை 'தன் வயத்தனாதல் முதலியவும் கொள்ள இடந்தந்து நின்றது. இறைவன் ஞானானந்தமாம் பெரிய பொருளாய் இருக்கின்றான் என்பதனை, "அறிவாய் அறிவுள்ளறிவாய் - நெறிமேவு, காலமாய்க் காலங் கடந்த கருத்தாய் நற், சீலமாய்ச் சிற்பரமாய்ச் சின்மய மாய்ச் சாலவரு, சச்சிதா னந்தமாய்த் தன்னிக ரொன்றிலதாய், விச்சையா லெல்லாம் விரிப்பதுவாய்" என்பதனாலும் அறிக. இறைவனின் எண் குணங்களாவன:—தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்ற உணர்தல், இயல்பிலேயே பாசங்களின் நின்றும் நீங்கி இருத்தல், பேரருளுடைமை, ஈறிலா ஆற்றலுடைமை, வரம்பி லின்ப முடைமை முதலியனவாம்; முறையே இவைகள் சுதந்திரத்துவம், விசுத்த தேகத்துவம், அநாதிபோதம், ஸர்வஜ்ஞத்துவம், நிராமயான்மா, அலுப்த சத்தி, அனந்த சக்தி, திருப்தி என்பனவாய பொருளைத் தருவனவாகும்.

'பெரிய பொருளைப் பணிகுவாம்' இதில், இறைவன் ஒப்பும் உயர்வும் அற்றவனாதலின், 'பெரிய பொருளை' என்றார். மாயையே எல்லாக் காரியங் களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்குந் தன்கண் நின்று தோன்றுதற்குங் காரணமாய் நின்றது எனப்படுமாகலான், ஒன்றற்கொன்று நுண் ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப்பொருள் யாதோ அதுவே மாயை; அம் மாயா காரியமான பிரபஞ்சத் தொகுதிகள் யாவும் அணுவாகி எல்லாம் அழிந்தொழியும் இறுதியில் காரண மாயையில் ஒடுங்க, அம்மாயையும் பதிக்குத் தேகமாகிய சிற்சத்தியில் ஒடுங்க, அச் சிற்சத்தி சிவத்தினி லொடுங்க, அச்சிவமொன்றுமே எஞ்சி நின்று பெரிய வற்றுள் பெரியனவாய் நிற்கின்றமையாலே, 'பெரிய பொருளை' என்றார். "மஹதோ மஹீயாந்" என்றதும், "சிறுத்தன பெருக்கும்" என்றதும்,

"மஹத ஹம்கார ப்ருதிவ்யப் தேஜோ வாயுராகா ஶாத்ம கத்வேந
ப்ருஹத் ரூபே ணண்ட கோஶேந கர்ம ஜ்ஞாநார்த்த ரூபதயா"

என நிராலம்போபநிஷத்திலுங் கூறியது காண்க.

இவ்வாற்றால் இறைவனே பெரியவன்; இறையவனுக்குப் பெரிய பொருள் வேறொன்றில்லை; இறைவனுக்கு ஒப்பாகிய பொருளும் இல்லை. அண்டாண்ட கோடிகளும், அதனுட்பட்ட சராசரங்களுள் அடங்கும். இவ்விரண்டும் பதியினிடத்து ஐயிக்கியமாம். இறைவன் ஒருவனே தற் சுதந்தரன்; இறைவனே எல்லாவற்றிற்கும் ஆதாரப் பொருளாய் இருப்



பவன்; இறைவன் ஏனைய எதனோடும் தாக்கற்று நிற்பவன் ஆதலின், 'பெரிய பொருளை' என்றதுவுமாம். இதனை,

"பெரிய வற்று ளெல்லாம் பெரிதாயினானை" எனவும்,

"அண்டங்க ளெல்லாஞ் சிறிதாகப் பெரிதாயினானை" எனவும்,

"அண்டசராசர மனைத்தும் பசுபாசத்தே
அடங்கியிடத் தானொன்றாத் தன்னுளெல்லாம்
கொண்டுநின்று தானெதிலுந் தாக்கற்றுள்ளான்
கூறொப்பு முயவு மிலான் நித்தனாதி
விண்டுசொலுங் குணங்குறிகள் ஏதுமில்லான்
விளங்குபர மானந்தப் பெருக்காமீசன்
தொண்டுபுரி வாருள்ளே ஞானசோதித்
தூவெளியாய்த் துலங்கிடுவன் சொல்லொணாதே" எனவும்,

"எம்மான்காண் ஏழுலகு மாயினான்காண்" எனவும்,

"அண்டத் தொரு முதலை" எனவும்,

"மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கால் தன்னகத்தி லிரண்டாய்ச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலி னான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சத்தஞ்ச மன்னுருவை"

என்பவைகளினாலே நன்கறிக.

'பணிகுவாம்' என்றது, மனவாக்குக் காயங்களாற் பணிதலை. மனத்தால் பணிதலாவது-இறைவனையும் அவன் கல்யாண குணங்களையுஞ் சிந்தித்து ஆனந்த முற்றிருத்தல். இதனை,

"வானத்தா னென்பாரு மென்கமற் றும்பர்கோன்
தானத்தா னென்பாருந் தாமென்க—ஞானத்தான்
முன்நஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தானென்பன் யான்"

என்று **அற்புதத்திருவந்தாதியில்** வந்ததுதி காண்க. வாக்காற் பணிதலாவது-இறைவனைப்போற்றிப் பரவி துதித்து நிற்றல். இதனை,

"பூமேவு கற்பகநா டாளும் புரந்தரனார்
தீமை விருத்திரனைச் செற்றபழி—போமாறு
பொற்கமலந் தோய்ந்து விமானமிசை பூசிக்க
நற்கருணை செய்த நலம்போற்றி"

எனத் **திருவிளையாடல்** போற்றிக் கலிவெண்பாவாலறிக. காயத்தாற் பணித லாவது-இறைவன் எழுந்தருளி யிருக்கும் கோயிற் சென்று வலம் வருதல் கும்பிடல் தலை வணங்குதல் முதலியனவாம். இதனை,

"வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழு தெலாம்பரவி
யேசறவாற் றிருப்பதிக மெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோவில் பணிந்து அணைவார்"

எனப் **பெரிய புராணம்** சேரமான் பெருமான் புராணத்துக் கூறியுளது அறிக. இவைகளைத் திரிகரண வணக்க மென்பர். பிறந்த பிறப்பின் பயன் இறைவனை வணங்குதலே யாகும். இதனாலல்லவா, "கோளிற் பொறியிற் குணமிலவே எண் குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றார் பெரு **நாவலரும்.**

ஊரும், பேரும், உறவும், உடலும், வினையும், கருத்தும், போர்சீரும், சொர்க்க நரகமும், நற் றெய்வமும், சமயமும் ஆகிய இவைகளெல்லாம் உன்னுங்கால் கணக்கில் வேற்றுமையுள தாதலினால் இவைகளின் தோற்றக் கேடுகளைச் சிற்சத்தியினது திரு அருளால் உணர்ந்து ஆனந்த மழையைச் சொரியும் அகண்ட கல்யாணகுண முகிலாகவும், எல்லாம்வல்ல நமது கடவுளாகவும், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்றவத்தைகளையும் அறிவதாகி நான்காம் பொருளாய் இருக்குந் துரியவடிவமாகவும், பெரிய மோனவைப்பாகவும், அனந்த பதமாகவும், அனந்த ஞானமாகவும், அனந்த ஆனந்தமாகவும் உள்ளதொரு பெரிய பொருளாகிய சிவத்தை நாம் பணிகுவோம் என்பதே இப் பாடலின் தேர்ந்த கருத்தாம்.

இச் செய்யுளின் தொடக்கத்தின் கண்ணே சுருக்கிச் சொன்ன பரசிவ வணக்கத்தையே மீண்டும் விரித்துரைப்பான் வேண்டி,

"சைவத்தின் மேற்சமய மில்லையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற் றெய்வ மில்லை" எனவும்,

"சைவ சமயமே சமயம் சமயா தீதப் பழம் பொருளைக்
கைவந்திடவே மன்றுள் வெளி காட்டும் மிந்தக் கருத்தை விட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம் முத்தி தரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாரும் ஜகத்தீரே"

எனவும் கூறியன கொண்டு, ஈண்டு அனந்த பதமாகவும், அனந்த ஞானமாகவும், அனந்த ஆனந்தமாகவும், பெரிய பொருளாகவும் இருந்து அன்பர் கண்ணும் விண்ணும் நிறைந்த ஆனந்த மழை பொழிவதாகிய மேகம் பெரிய மௌன வைப்பாகிய பரசிவமே என்பது துணியப் பெறும். 2

அத்துவித வத்துவைச் சொற்பிரகா சத்தனியை
அருமறைகள் முரசறையவே
அறிவினுக் கறிவாகி ஆனந்த மயமான
ஆதியை அநாதியேக



தத்துவ சொரூபத்தை மதசம்மதம்பெறாச்
சாலம்ப ரகிதமான
சாசுவத புட்கல நிராலம்ப ஆலம்ப
சாந்தபத வ்யோமநிலையை
நித்தநிர் மலசகித நிஷ்ப்ரபஞ் சப்பொருளை
நிர்விஷய சுத்தமான
நிர்விகா ரத்தைத் தடத்தமாய் நின்றொளிர்
நிரஞ்சன நிராமயத்தைச்
சித்தமறி யாதபடி சித்தத்தில் நின்றிலகு
திவ்யதே சோமயத்தைச்
சிற்பர வெளிக்குள்வளர் தற்பரம தானபர
தேவதையை அஞ்சலிசெய்வாம்.

(ப-ரை) அத்துவித-இரண்டற்றதாகிய, வத்துவை - பொருளை, சொல்-மந்திர வடிவமாகிய, பிரகாச-பேரொளிப் பிழம்பாகிய, தனியை - ஒப்பற்ற பொருளை, அரு-அரிய, மறைகள் - வேதங்கள், முரசு அறையவே - யாவரும் உணருமாறு முழங்கிக் கூறுகிற்கவே, அறிவினுக்கு-உயிருக்கு, அறிவு-உயிர், ஆகி-ஆகி, ஆனந்தம் - பேரின்ப, மயம் - மயம், ஆன-ஆகிய, ஆதியை-மூலப் பொருளை, அநாதி-முதலும் முடிவும் இல்லாத, ஏகம்-ஒன்றாகவுள்ள, தத்துவம்-உண்மையான, சொரூபத்தை - வடிவத்தை, மதம் - எல்லா மதங்களின், சம்மதம் - ஒப்பங்களையும், பெறா - அடையாத, சாலம்பம் - பற்றுக்கோடு, ரகிதம்-அற்றது, ஆன-ஆகிய, சாசுவதம்-நித்தியமாகியதும், புட்கலம்-எங்கும் நிறைந்ததும், நிராலம்பம் - தனக்கென ஒரு ஆதாரத்தை வேண்டாததும், ஆலம்பம்-தானே அனைத்தினுக்கும் ஆதாரமாய் உள்ளதும் ஆகிய, சாந்தபதம்-சாந்தபதம் என்று சொல்லப்பெறும், வியோமம்-வெட்டவெளியாகிய, நிலையை-நிலையினை, நித்த நின்மல சகிதம்-அநாதியே மலநீக்கத்தை உடையதாகிய, நிஷ்பிரபஞ்சம்-உலகத்தைக் கடந்த, பொருளை-பொருளை, நிர்விஷய-மனம் முதலிய கரணங்களின் உணர்வைக் கடந்து விஷய நுகர்ச்சியற்ற, சுத்தம்-தூய்மை, ஆன-ஆகிய, நிர்விகாரத்தை - மாறுபாடு அடைதல் இன்றி என்றும் ஒரேதன்மைத்தாம் பொருளை, தடத்தம் - பொதுத்தன்மை, ஆய்-ஆகி, நின்று-நின்று, ஒளிர் - விளங்குகின்ற, நிரஞ்சனம் - பற்றற்றதும், நிராமயத்தை-அவத்தை யற்றதுமாகிய பொருளை, சித்தம் - மனம், அறியாதபடி-உணராதவாறு, சித்தத்தில் - மனத்தில், நின்று - இடங்கொண்டு இருந்து, இலகும்-விளங்கிக்கொண்டிருக்கின்ற, திவ்யம் - மேலான, தேசோமயத்தை-ஒளிப்பிழம்பை, சிற்பர வெளிக்குள் - ஞானப்பெருவெளியின் இடத்தே, வளர்-பூரணமாக நிறைந்துள்ள, தற்பரமது-தன்னினும் மேம்பட்டது ஒன்று இன்றித் தானே மேம்பட்டது, ஆன - ஆகிய, பரதேவதையை - மேலான தெய்வத்தை, அஞ்சலி செய்குவாம் - கைகுவித்து வணக்கஞ் செய்வோமாக எ-று.

(வி-ரை) இப்பாடலும் பாடாண்டிணை; கடவுள் வாழ்த்து என்னுந் துறை. இது-கந்தழி. அத்துவித வத்துவை-என்பது, இரண்டற்ற பொருளை என்பது பொருளாம். 'அத்துவிதம்' என்பது, ந+து விதம் எனப் பிரிந்து, இருவடமொழிசந்தியாயிற்று. ஈண்டு நகரம் அன்மைப் பொருளது. துவிதம் என்பது இரண்டாகியது என்னும் பொருளது. இது,

"நேர்ந்த மொழிப்பொருளை நீக்கவரு நகரம்
சார்ந்த துடலாயிற் றன்னுடல்போம்"

என்ற **இலக்கண** விதியின்படி, 'ந' என்றதன்கண் உள்ள மெய்கெட்டு மெய்மேல் நின்ற அகரவுயிர் மட்டுந் தனித்து நின்று, அ+துவிதம் = அத்துவிதம் என ஆயிற்று. அன்றியும்,

"அ அந் ந நி குவி வருமொழிப் பொருளை
இன்மை பிறிது மறையினு ளொன்றாக்கும்"

என்கிற விதி கொண்டு 'அத்துவிதம்' என்பதற்கு இரண்டல்லாதது, இரண்டற்கு மாறாயது என மூவகையாகவும் பொருள் கூறலாம். ஆயினும், தானே தன்னை ஒன்றெனக் கருதல் வேண்டாமையின் அவ்வாறு கருதும் பொருள் வேறு உண்டென்பது பெறப்படுதலானும், எண்ணுப் பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருள் மட்டுமே உணர்த்திப் பொதுமையின் நிற்பதன்றி ஏனைச் சொற்களின்மேல் வந்த நகரம்போல் இன்மை மறுதலைப் பொருள்களை உணர்த்துதல் வழக்கின்கண் இன்மையான் அன்மைப் பொருளே உணர்த்துமென்றலே பொருத்தம் உடையதாம். இதுவே சைவ சித்தாந்தப் பெருநெறியாளர்கள் எல்லோர்க்கும் உடன்பாடாவதாம்.

தாயுமான சுவாமிகளும், தாம் திருவாய்மலர்ந்தருளிய **தருமாபின்** வணக்கத்துள்,

"பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ" என்றும்,

"அத்துவித மென்றவ நங்கியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் துய்க்குநா ளெந்நாளோ" என்றும்,

"அத்துவிதம் பெறுப்பேனென் றறியாமல்
யானென்னும் பேரகந்தையோடு
மத்தமதி யினர்போன மனங்கிடப்ப
வின்னமின்னம் வருந்துவேனே"

என்றும், திருவாய்மலர்ந்தருளி யிருத்தல் இதன் உண்மையை வலியுறுத்தா நிற்கும். ஈண்டு தாயுமான சுவாமிகள், 'அத்துவித வத்துவை' என்றது, 'இரண்டற்ற பொருளை' என்னுங் கருத்துக்கொண்டே என்பது திண்ணமாகும். இந்நூலாசிரியர், 'சுத்தாத் விதத்தையே பின்பற்றியவர்' என்பதும், இதனுனே விளங்குவதாம். 'வஸ்து' என்னும் வடசொல் தமிழில் 'வத்து' என்றாயிற்று. இதன்கண் ஈற்றில் நின்ற ஐகாரம் இரண்டன் உருபு.



'வத்து' (வஸ்த்து) என்பதற்குப் பொருள் என்பது பொருள். ஈண்டு, 'வத்து' கடவுளை உணர்த்திற்று. என்னை? இறைவனே பொருள் என்னும் சொற்கு உரியனுதல் பற்றியென்க. இனி இச்செய்யுள் பராசத்தியின் வணக்கமாகக் கொண்டு சிவத்துடன் இரண்டற அனுதியே கலந்துள்ளதாகிய அபின்ன சத்தியை யென்பர். மணியும் ஒளியும், பூவும் வாசமும், பண்ணும் ஓசையும், பழமும் சுவையும், நீருந் தண்மையும், வன்னியுஞ் சூடும் வேறாகாததுபோலப் பரசிவத்துடனே அபேதமாகச் சத்தி கலந்திருப்பது கொண்டு, 'அத்துவிதம்' என்றார் என்பர். மற்றும் இதற்குச் சிவத்துடன் ஆன்மாக்களை அத்துவிதமாகக் கலக்கச் செய்யும் வத்துவை யெனவுங் கூறுவர்.

'அத்துவிதம்' என்னுஞ் சொல், இரண்டற்றது ஒன்றேயாம் என்பதனை,

"அஜ்ஞாநம்ச மதேர்பேதோ நாஸ்த்யங்யஸ்ய த்வயம்புநஃ
தர்மநேஷுச சர்வேஷு மதிபேதஃ ப்ரத்ருஸ்யதே"

எனச் **சிவபுராணம்** ஞானசங்கிதையிலும்,

"தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளிநிற்கிற் றன்விளங்கும்
தன்னை மறந்ததே பந்தந்தன்னை அறிந்ததே முத்தி" எனவும்,

"தன்னை மறைத்த பந்தமதைத் தள்ளிநீக்கித் தனையறியின்
தன்னை விடவோர் பொருளுமின்றித் தானேதானாய் விளங்கியிடுந்
தன்னை யறியு மவ்வளமுந் தன்னைவிடவே நிலையென்றே
தன்னை நோக்கி யொருநினைவாய்ச் சாதித்திடவே மிகவேண்டும்"

எனவும், அத்துவித வுண்மையிற் கூறுதலும்,

"அத்துவித மொன்றேயா மாங்கிரண் டின்மையெனி
லத்துவித மன்றோ வது" எனவும் **வள்ளலார்** சாத்திரத்தாலும்,

"அத்துவிதப் பொருளென் றாரணங்க ளோதுகின்ற
சச்சிதானந்த தனிப் பொருளை"

என்பதாலும், உணர்ந்து அறிதல் கூடும். இறைவன் இரண்டறக் கலந்து நிற்றலின் தன்மையினை,

"பண்ணையு மோசையும் போல பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணல்தாள்
அத்துவித மாதலருமறைக ளொன் றென்னு
தத்துவித மென்றறையு மாங்கு"

என்பதாற் செவ்வனே அறியற் பாலது.

'சொற் பிரகாசத்தனியை' என்பது, இறைவன் மந்திரரூபன் ஆகையால் இவ்வாறு கூறியதாம். கடவுள் பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதம் முதலிய மந்திரங்களும் தமக்கு உரிய வடிவமாகக் கொண்டு விளங்குவதனுல்,

"சரண மந்திர வடிவாஞ் சதாசிவ சரணம்" என்றும்,

"ருத்ரேஷு புண்யமிவ பஞ்சக மக்ஷராணும்
ஸாத்ரேஷு ஸ்ருதிருக் ருஷ்டாருத்ரை காதஸிநி ஸ்ருதள
தத்ர பஞ்சாக்ஷரீ தஸ்யஸிவ இத்யக்ஷர த்வயம்"

என **யஜுர்வேத** போதாயன சாகையிலும்,

"ஸாங்காநி வேதஸாஸ்த்ராணி ஸம்ஸ்திதாநி ஷடக்ஷரே
ததேந ஸத்ருஸா ஸ்தஸ்மாந்த்ரோந் யோஸ்தி பாகேவசித்"

எனச் **சிவபுராணத்**திலும்,

"ஏகா க்ஷராய ருத்ராய அகாரா யாத்மரூபிணே
உகா ராயாதி தேவாய வித்யா தேஹாயவை நமஃ
த்ருதீயாய மகாராய ஸிவாய பரமாத்மநே"

என **இலிங்க புராணத்**திலும், இறைவன் துதிக்கப் பெற்றான். மற்றும் இறைவனை,

"மந்திரமும் தந்திரமு மருந்துமாகி" என்றும்,

"மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவ மாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனிற் சாற்றக் கேள்நீ
முந்திய தோற்றத் தாலும் மந்திர மூலத் தாலும்
அந்தமில் சத்தி யாதிக் கிசைத்தலு மாகு மன்றே"

எனச் **சிவஞானச் சித்தியா**ரிலும் காண்க.

ஆண்டு, மந்திர வடிவுள்ளும் பஞ்சப்பிரம வடிவைச் சிறந்தெடுத்து ஓதியது, ஏனைய மந்திரங்களுக்கெல்லாம் முற்படத் தோன்றி முற்படக் கொண்ட வடிவாதல் பற்றி, 'சொற்பிரகாசத் தனியை' என்றனர். மந்திரத்தைச் சொல் என்றது ஆகுபெயர். இறைவன் சொல்லாகவும் பொருளாகவும் இருக்கின்றான் என வேதங்கள் கூறுகின்றன. இதனை,

"நமோருத் ராயச, நமஃ ஸிவத வேச" என **யஜுர்வேதத்**திலும்,

"சொல்லும் பொருளு மாயினானை"
"சொல்லானன் பொருளானன்"
"சொல்லானன் பொருளானன் கண்டாய்" எனத் **தேவாரங்க**ளிலும்,

"சொல்லும் பொருள்களும் சொல்லாதனவுமங்
கல்லவு மானனென் றுந்தீபற
யம்பிகை பாகனென் றுந்தீபற" எனத் **திருவுந்தியா**ரிலும்,

"சொல்லினுஞ் சொல்லின் முடிவிலும் வேதச் சுருதியிலும்
அல்லினு மாசற்ற வாகாயந் தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லினு மன்ப ரிடத்திலு மீசனிருப்ப தல்லால்
கல்லினுஞ் செம்பிலு மோவிருப் பானெங்கள் கண்ணுதலே"

என்று **பட்டினத்தடிகள்** கூறியது மறிக.



'அருமறைகண் முரசறையவே' என்பது வேதப்பொருள்கள் மிக இரகசியமானதாகலின், 'அருமறை' என்றார். அன்றி, இறைவனாலேயே தரப்பட்டனவாகையாலும், விதி விலக்குகளை எடுத்துப் போதித்தலாலும், அது ஆதிய நூலாகையாலும் அவ்வாறு அடைகொடுத் தோதினர். வேதம் இரகசியார்த்தத்தை உடைமையினால், 'மறை' என்றார். மறை - மறு, பகுதி, ஐ-தொழிற்பெயர் விகுதியெனவுங் கூறுவர். அருமறை-பண்புத் தொகை; அருமையாகிய வேதம்; அதாவது, பிறநூல்களில் இல்லாதவற்றைத் தன்னுட்கொண்டு பொலிவது. வேதங்கள் இறைவன் திருநாமங்களையும் அவனது குணவிபூதிகளையும் பலபடியாகச் சொல்லிச் செல்லுகின்றமையாலே, 'அருமறைகண் முரசறையவே' என்றது. கண்-ஏழனுருபு இடப்பொருள். வேதம் முழங்குகின்றன என்பதனையே, 'முரசறையவே' என்றார். முரசறையவென்பது தமிழ்ச் சொல்லாறு, என்னை? முற்காலத்தில் ஒன்றைப் பலருக்கும் தெரிவிக்கவேண்டி யிருந்தால் முரசவாத்தியங் கொண்டடித்து யாவர்க்கும் உணர்த்துவர். இவ்வழக்கில் இருந்தே பலர்க்கும் உணர்த்துதலை 'முரசறைய' 'பறையடிக்க' என்று வழங்குவாராயினர். வேதம் பலர்க்கும் உணர்த்துதலைத் திருமறைக்காட்டில் வேதங்கள் சிவபெருமானைப் பூசித்ததே தக்க சான்றாகும். இதனானன்றே,

"பரவுவா ரிமையோர்கள் பாடுவன நால்வேதம்"

என்றனர் **ஆன்றோரும்**,

'அறிவினுக்கு அறிவாகி ஆனந்த மயமான ஆதியை' என்றது, உயிர் உடலுக்கும் அந்தக்கரணங்களுக்கும் அந்நியமானது என்பதை உணர்வது அறிவு. அறிவுக்கு அறிவாய் நின்று உணர்த்துவது இறைவன். இறைவன் அறிவுமயமாக இருக்கின்றான். உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கும் அறிவு இறைவனாதலின் 'அறிவுக் கறிவு ஆனந்த மயன்' என்றனர்.

"அறிவுக் கறிவாய் கண்டமாய் நின்ற, நிறைவை" என்றும்,

"அறியாமை நீங்கி யறிவா யறிவே
யறியாம லாயிரண்டு மற்றுப்—பிறியாதார்
தன்னிழப்பின் ஞான சமாதிக்குச் சாதகரா
மந்நிலைக்கே சீவன் முத்தராம்" (ஒழிவிலொடுக்கம்)

"அறிவுதனைக் கொண்டு அறிவுதனைக் கண்டு"

"அறிவினுக் குள்ளே பேரொளியை" என்றன காண்க.

ஆன்மா இறைவனாலே அறிகிறது ஒழிந்து தானே அறிய மாட்டாது ஒருவர்க்கு அறிவிக்கவும் மாட்டாது; இறைவன் அத் தன்மையனன்று; தானறிந்தும் பிறர்க்கு அறிவித்தும் நிற்பன். அறிவு இறைவனைக் கண்டு நிற்க முடியுமே அல்லாமல், கண்டதைப் பிறர்க்குச் சொல்ல வியலாது. உடம்பும் அந்தக் கரணமும் உயிருக்குப் புறம்பு என்று அறிந்தபின் பாச உணர்வு நீங்கிப் பசுவுணர்வு உதிக்கும். அதன் பின்னர் பசுவுக்குப் புறம்

பாகப் பதியுண்டென்பதும், அப்பதியே பசுக்களுக்கு ஆதார மென்பதும் தோன்று நிற்கும்; இதுவே பதி உணர்வாகும். இப்பதி யுணர்வு தோன்றிய பின் சோகம் பாவனையினால் பதியேயாகிச் சிவானந்தத்து அழுந்தும். இதுவேஆனந்தம், இதுவேவீடு. இதுகொண்டே 'அறிவினுக்கு அறிவாகி ஆனந்தமயமான ஆதியை' என்றார். ந+ஆதி=அநாதி: தனக்கு முன் வேறொன்றில்லாதவன்; தானே எல்லாவற்றினுக்கும் முதலானவன். ஆதி அநாதி என்றமை - ஆதிமத்திய அந்தமில்லாமல் முக்காலத்தும் ஒரு படியாகவுள்ள கடவுளினது நித்தியத்தன்மையும், எல்லாப் பொருள்களின் வடிவமாக எழுந்தருளி யிருக்கின்ற இறைவனது ஜகச்சரீரகத்வமும் விளங்கவே உரைத்தது. அன்றி, இறைவனுக்கு உற்பத்தி விநாசங்கள் இல்லையாதலால் ஆதியும் அநாதியும் என்றது. முதலும் முடிவும் இல்லாத பொருளுக்கு இடையென்பதொன்று இன்றாதலால், இறைவனுக்கு நடுவும் இல்லை; எனவே, ஆதிமத்தியாந்தரகிதன் எனவுமாம். ஆனந்தமயன் - இன்பதுன்பம் என்கிற வேறுபாடு இல்லாமல் எப்பொழுதும் நிரதிசய ஆனந்தமயனாய் உள்ளவன் என்றபடி. தனக்குச் சஜாதீயமாகிய வேறு ஒருபொருள் இல்லாதிருத்தலின், 'ஏகதத்துவத்தை' என்றார். அது அத்விதீய ஏக பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை. தத்துவம்-தன்மை. தத் என்னும் பகுதி தன் எனவும், துவம் - என்னும் பண்பு விகுதி மை எனவும் நின்று, தத்துவம்-தத்துவப் பொருள்களைக் குறித்தது. தத்துவம் - உண்மைப்பொருள். இறைவன் தத்துவங்களுக்கு அதீதன் என்பது. 'ஏகதத்துவ சொரூபத்தை' என்றதால், சொரூப தத்துவலக்ஷணங்கள் அமைந்த இறைவனை எனப் பொருள். இதனை,

"சுருதியினு ளேகமே வாத்துவித மென்னுஞ்
சொற்கிடையு ளேகமெனுஞ் சொல்லதனுக் கயிக்க
மரிதினுண ரேவலெனு மிடைச்சொற்குத் தேற்ற
மத்துவித மெனுமொழிக்குத் துவிதவிலக் காகக்
கருதுபொருள் வருதலினா லிம்முறையே மாயா
கற்பனைகள் கடந்துநிர வயமாகி யென்றுந்
திரிதலில்சின் மயமாகு மொருபிரமந் தனக்குத்
தெரித்தசுவ கதமுதலா யினமூன்று மிலையே"

என்று **வேதாந்த சூலாமணி** கூறுவதும் இங்கறியத் தக்கதாம். அத்துவிதமென்பதன் பொருள் துவித மின்றிய தென்பது சிதையாத சித்தாந்தமாயிருக்கச் சிலர், "அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டுந் தம்முள் அபேதமாதற் குரிய சம்பந்த விசேடம்" என வாளாகூறி வீணே போயினர். ஈண்டு கூறியனவேயன்றி அக்ஷரம், அவ்வியயம், நிராகாரம், நிர்விகாரம், அஜாதம், நிஷ்கிரியம் முதலியவற்றானும் அறிக. ஒருவன் மனைவி முதலியோரது பார்வையால் கணவன் முதலியவாகச் சொல்லப் படுதல் போன்று இறைவன் பிரபஞ்சத்தின் விசேடணமாகிய அசத்து முதலிய பார்வையால் சத்து சித்து முதலியவாகச் சொல்லப்படுகின்றமை



யின் இறைவனின் விசேஷங்கள் தம்முள் பின்னமாகாவென்பது பெறப் பட்டவாறறிக. ஆயின், இறைவன் நிர்விசேஷ சின்மாத்திரமாயிருப்பதால் அது விசேஷண விசேஷ்ய பாவங்களுக்கு அப்பாற்பட்டதாம். இதனை,

"அத்துவிதம் வாசாம கோசர மனோதீத மசலமூலம்
தத்துவமப் பிரமேயஞ் சர்வசமஞ் சச்சிதா நந்தஞ்சாந்தம்
சுத்தமவி யத்தமவி காரமநு பவந்துரியம் சுயம்பிரகாசம்
நித்தியநிர்க் குணமனந்த நிரதிசயம் பிரமமென நின்ற தொன்றே"

எனப் **பிரபோத சந்திரோதயத்**திலும்,

"அறிபொரு ளசித்தாய் வேறா மறிவுறாப் பொருள் சத்தென்னி
னறிபவ னறியானாகி லதுவின்று பயனு மில்லை
யறிபவ னருளினாலே யநாதிய மாகக் காண்ப
னறிபொரு ளறிவாய் வேறா யறிவரு முருவாய் நிற்கும்"

எனச் **சிவஞான சித்தியார்** கூறியது மறிக.

'மதசம்மதம் பெறாச்சாலம்ப ரகிதம்' எல்லா மதங்களின் ஒப்பங்களையும் அடையாத பற்றுக்கோடு அற்றது என்பது. நிமித்த காரணனாகிய பதிமுதற் காரணமாகிய மாயையினின்றும் துணைக்காரணமாகிய தனது சத்தியாற் பிரபஞ்சத்தைத் சிருஷ்டித்தும் திதித்தும் சங்கரித்துத்தான் தாக்கற்று நிர்விகாரியா யிருப்பவனென்கிற பதியினது ஞானத்தைத் தெரிவிக்கும் வைதிக சமயமாகிய சைவசமயத்தைப் போலல்லாமலும், ஆன்மாக்க ளிலக்கத்தினால் அளவு படுத்தற் கரியராய் ஒருகாலத்திலும் அழியாதவராய் அஞ்ஞானமாகிய ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடந்து தத்தமக்குண்டான புண்ணிய பாவங்களுக்கு ஈடானதோர் உடலினைக் கடவுளின் காருண்யத்தினாலே பொருந்தி அவ னவளதுவாகிய வுடம்பெனத் தானென்னத் தோன்றாமற் பிரிவற்று நின்று அவ்வுடம்போடு கூடுகையில் எண்ணிறந்த போகங்களை முயற்சியாற் புசித்து அந்தந்தப் புசிப்பாலுண்டாகிய இதாகிதங்களினாலே மீளவும் புண்ணிய பாவங்களை ஆர்ச்சித்து அவற்றா லிருந்துவரும் பசுவினியல்பையும், அறியாமை மிகவுண்டாம்படி ஆன்மாக்கள்தோறும் சகசமாய் அனாதியாயிருக்கும் ஆணவத்தையும், அவ்வாணவமலத்தோடுங் கூடி நின்று அது பக்குவமாம் அளவும் ஆன்மாவை மறைத்து நிற்குந் திரோதானத்தையும், ஆன்மாக்களுக்குத் தனுகரண புவன போகாதிகளைக் கொடுத்து மயக்கத்தைச் செய்யும் மாயாகாரணத்தையும், ஆன்மாக்கள்தோறும் பரந்து அனுபவமாய் நிற்குங் கன்மத்தையும், அவ்வான்மாக்களின் இன்ப துன்ப விளைவுகட்கெல்லாம் இடமாயிருந்து, அவற்றின் அறிவு இச்சை, செயல்களை ஏகதேசப்படுத்தும் மாயாகாரியமான மாயேமல தன்மத்தினையும் முறையே போதித்துச் செந்நெறியினை இழக்கச் செய்வது முக்கூற்றுப் புறச்சமயங்களின் கொள்கையாதலினாலே, 'மதசம்மதம் பெறாச் சாலம்ப ரஹிதம்' என்றார். இவ்வகையாகச் சமயங்கள் ஒன்றோடொன்று பொருண் முடிவுகளைப் பொருத்தமில்லாமற் கூறினும் அவைகளெல்லாம் நிர்க்குண பிரம்மமான சிவத்தையே ஆதாரமாகக் கொண்டவையாம். இதனை,

"அன்றென்றும் ஆமென்றும் ஆறுசமயங்கள்
ஒன்றொன்றோ டொவ்வா துரைத்தாலும்—என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத்திருக்கும்
மருதனையே நோக்கி வரும்"

என்று **திருவிடைமருதூர் மும்மணிக்கோவையினும்** காண்க.

'சாலம்ப ரஹிதம்' அதாவது, ஒருவிதமான பற்றுக்கோடில்லாத பராபரமான பொருள். அன்றி, தானே யாவற்றுக்கும் பற்றுக்கோடாவதன்றித் தனக்கொரு பற்றுக்கோடும் அற்று விளங்குவது. 'சாசுவத புட்கல நிராலம்ப வாலம்ப சாந்தபத வ்யோமநிலையை' என்பவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிமித்தம்பற்றி விதிமுகமாகவும் மறைமுகமாகவும் இறைவனுக்குப் போந்த பல விசேஷணங்களாகும். சாசுவதம் - என்றைக்கும் ஒரே தன்மையாக விளங்கும் பொருள். புட்கலம் - எல்லாம் நிறைந்து பொலியும் பொருள். நிராலம்பம் - எவ்வகையான ஆதாரமில்லாமல் விளங்கும் பொருள். ஆலம்பம் - எல்லாவற்றிற்குந் தானே ஆதாரமாய் நின்றிலங்கும் பொருள். சாந்தபதம் - எல்லாம் ஒடுங்குவதற்குரிய இடமாகி நிற்பது. 'நித்த நிர்மலசகித நிஷ்ப்ரபஞ்சப் பொருளை' என்றதில், நித்தன் - உற்பத்திநாசமின்றி யிருத்தலாகிய பொருள். நின்மலம் - தான் கரும சம்பந்தமில்லாதவன் என்ற பொருளைக் கொடுப்பதோடு, தனக்குச் சரீரமாகவுள்ள பிராணி வர்க்கத்தின் கருமம் தன்னிடத்தே தொடரப் பெறாதவனென்ற கருத்தையுங் குறித்து நிற்பது. வியோமம்-வியோமநிலை.

"பாரிலங்கு புன லனல்கால் பரமாகாசம்
பருதிமதி சுருதியுமாய்ப் பரந்தார் போலும்"

"சிற்பர வியோமமாகுந் தில்லைச் சிற்றம்பலத்து ணின்று
பொற்புற நடனஞ் செய்கின்ற பூங்கழல் போற்றிபோற்றி"

என்பவைகளால் அறிக. "தானலா துலக மில்லை" என்றார்.

நிஷ்ப்ரபஞ்சம் - தான் பிரபஞ்சத்திற்குக் காரணமாய்த் தனக்கு அது காரணத்தைப் பெறாது நீங்கி நிற்பவன். 'நிர்விஷய சுத்தமான நிர்விகாரத்தை' என்றதால், அந்தக் கரணங்களின் உணர்வைக்கடந்து விஷயாதிகளின் நுகர்ச்சியில்லாமல் மிகவும் பரிசுத்தமான தன்மை யுடைத்தாய் எப்போதும் ஒரே தன்மையோடு ஷட்பாவ விகாரங்களில்லாமல் விளங்கும் பொருள். நிர்விஷயம்-மனோவாக்கு காயங்களினாலும் அறிவினாலும் அறியப்படாமையாகிய பொருள். "நேரிழையைக் கலந்திருந்தே புலன்களைந்தும் வென்றானை" என்றார். நிர்விகாரம் - ஒரே தன்மைத்தாய் மாறுபாடுகளில்லாமல் விளங்கும் பொருள். 'தடத்தமாய் நின்றொளிர் நிரஞ்சன நிராமயத்தை' என்றது, பொதுத்தன்மையாகிப் பொலிவதும் பற்றற்று அவத்தைகள் நீங்கியதுமான பொருள். அதாவது - புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னும் நான்கனுள் அகச்சமயம் ஒழித்து ஒழிந்த



முக்கூற்றுப் புறங்களில் தனித்தனி அறுவகைப்பட்ட சமயங்களினின்று கொண்டவற்றுள்ளும் பலவேறு வகைப்பட ஓர்த்துணர்கின்ற அவரவர் கொண்ட முதற்பொருளாய், அவரின் வேறாகிய பாடாணவாதம் முதலிய அகச்சமயத்தார்க்கு இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்று அவத்தையின் முறையே சத்தியு முத்தியோகமும் பிரவிருத்தியு மென்னுந் தொழில் வேறுபாடுபற்றிச் சிவன் சதாசிவன் மகேசன் என்னும் பெயருடைய அருவம் அருவுருவம் உருவமென்னுந் தடத்தக்குறியே குறியாக உடைத்தாய்ச், சித்தாந்த சைவர்களுக்கு அத்தடத்தக் குறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாய், உயிர்க்கு உயிராய், உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும் அம்மையாகியும் அப்பனாகியும், எங்கணும் எக்காலமும் செறிந்து வியாபகமாய் நிற்றலினை, 'தடத்தமாய் நின்றொளிர்' என்றார்.

நிரஞ்சனம்-அஞ்ஞன (தமஸ் அல்லது மனோவியாபார மின்றியதாய்) இருக்கின்ற இறைவன் என்பது. அஞ்ஞனம் - மை; அதாவது, குற்றம். மனோவியாபாரமின்றி-வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாமை. இதனை,

"ஏரொளியை யிருநிலனும் விசும்பும் விண்ணு
மேழுலகுங் கடந்தப்பா னின்ற பேரொளியை" என்றார்.

நிராமயம்-இயற்கை யுணர்வினனாதலே நேர்மையான பொருளேனும், ஈண்டு பிணி முதலிய நோயில்லாமலிருத்தல் எனச் சிலர் பொருள் கொண்டமை சிறவாமை அறிக. என்னை? அருவமான பொருட்கு நோயுண்டாவதென்? இன்றேல், அவஸ்தாதிரியங்கள் அற்று நிற்றலைக் கூறினும் பொருந்துவதாம்.

"பெண்ணமருஞ் சடைமுடியார் பேரொன் றில்லார்
பிறப்பிலா ரிறப்பிலார் பிணியொன் றிலார்" என்றார்.

சித்தம்-மனம். மனமானது தைசத வகங்காரத்தில் தோன்றிப் புத்தி அகங்காரங்களுக்கு முன்னே தானொரு பொருளைப்பற்றிச் சங்கற்ப விகற்பங்களைச் செய்துகொண்டு சம்சரூபமாய் விளங்குவதாதலின், 'சித்தமறியாதபடி' என்றார். இறைவன் திருவருளை அடையவேண்டுமாயின் விரிந்தமனம் முதலில் குவியவேண்டுவது இன்றியமையாமையாதலின், அத்தகைய மனம் ஒடுங்கி லயித்தவிடத்தே இறைவன் தோன்றுவது உண்மையாகையால், 'சித்தத்தில் நின்றிலகும் திவ்யம்' என்றார். இதனை,

"ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையு மில்லை யிராப்பக லில்லை
படும்பய னில்லை பற்றுவிட் டோர்க்கே"

"உள்ளத்து ளோன் கரந்தெங்கு நின்றவன்
வள்ளற் றலைவன் மலருறை மாதவன்
பொள்ளக் குரம்பைப் புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்த றியார்களே" என்ற **திருமந்திரமும்**,

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சு
புக்குநிற் கும்பொன் னார்சடைப் புண்ணியன்" என்றார் அப்பரும்,

"கரவாகும் வன்னெஞ்சர்க் கரியானைக் காவார்பால்
விரவாகும் பெருமானை விடையேறும் வித்தகனை
யரவாடச் சடைதாழ வங்கையினி லனலேந்தி
யுரவாடும் பெரும்பானை யென்மனத்தே வைத்தேனே"

என்ற **தேவாரமும்** வற்புறுத்துவது.

பூதவிருளை நீக்குவதற்குச் சூரியவொளி அத்தியாவசியமாக விருத்தல் போலச் சித்தத்தே செறிந்திருக்கும் ஆணவவிருளைப் போக்குவதற்கு இறைவன் திருவருள் வேண்டுமென்பார், 'திவ்ய தேசோமயத்தை' என்றார். அன்றி, உலகின்கண்ணுள்ள எல்லா ஒளிகளும் இறைவனது திருமேனியின் பிரகாசமயமே யாதலின், அவ்வாறு கூறினரெனினுமாம். 'சித்தத்தில் நின்றிலகு திவ்ய தேசோமயத்தை' என்பதனால், மனதில் இத்தேசோமயம் உண்டானபோதே ஆணவவிருள் ஒழிந்து, அது சம்பந்தமான மற்றைய மலங்களும் நீங்க மௌனநிலை பிறக்குமென்னுங் கருத்து கொண்டதாம். நாதவிந்து கடந்த பரமாகாசத்தையே, 'சித்பரவெளி' என்றார். 'வளர்தற் பரம்' என்றது, பரமாகாசத்திலே வளரும் பூரணமான பரமசிவனை. சித்பர வெளிக்குள் வளர்தற்பரம் - பரமாகாசத்திலே பூரணமாய் ஆனந்த முடிவு பெற்று விளங்கும் அடிமுடியுமற்ற பரவெளியாகிய சிவம் எனப்பொருள். பரதேவதை - மேலான தேவதை; அதாவது, "ஏஷ ஆகாச ஆனந்தோ நஸ்யாத்" என்று எல்லாத் தேவதைகளுக்குந் தலைமைபூண்ட பொருள் என்பதாம்.

இரண்டற்ற பொருளை, தனியை, எல்லாவற்றிற்குமாதியை, ஏகதத்துவ சொரூபத்தை, வியோமநிலையை, நிஷ்ப்ரபஞ்சப் பொருளை, நிர் விகாரத்தை, நிராமயத்தை, தேசோமயத்தை, அஞ்சலி செய்வாம் என்று முடிக்க. இங்ஙனம் சொரூபத்தினுடைய வர்ணனீய நாமங்கள் வகுத்தமை பிரபஞ்சத்தைக் குறித்து வந்ததே யல்லாமல் வேறல்ல. எப்படி யென்னில், துக்கத்தைக் குறித்து ஆனந்தமென்றும், சகுணத்தைக் குறித்து நிர்க்குணமென்றும், விஷயாநந்தத்தைக் குறித்து நிர்விஷயானந்தமென்றும், துவிதத்தைக் குறித்து அத்துவிதமென்றும், விகாரத்தைக் குறித்து நிர்விகாரமென்றும், ஆலம்பத்தைக் குறித்து நிராலம்பம் என்றும், அப்பிரகாசத்தைக் குறித்துப் பிரகாசமென்றும், அஞ்ஞானத்தைக் குறித்து நிரஞ்சனமென்றும், ஆதியந்த சகிதத்தைக் குறித்து ஆதியந்த ரகிதமென்றும், பிரபஞ்சத்தைக்குறித்து நிஷ்ப்ரபஞ்சமென்றும் இவை முதலான தற்சொரூபத்தினுடைய வர்ணனீய நாமங்கள் பிரபஞ்சத்தைக் குறித்து அத்தியாசமாய்த் தோன்றினவேயல்லாமல் சுதாவாக இந்த நாமங்கள் சசவிஷாண வந்தியா புத்திர ககனாரவிந்த மித்தியா புருஷன் போலவே காலத்திரயத்திலும் இறைவனுக்கில்லை என்று சத்தப் பிரகாணத்தில் கூறுவது இங்கே அறிதற்பாலதாம். 3

---



## பரிபூரணானந்தம்

[பாசாடவிக்குளே செல்லாதவர்க்கு அருள் பழுத்தொழுகுந் தேவதருவே! இந்நாய்க்கு பேரின்பநிஷ்டை யருள்வாய் என வேண்டுதல்]

வாசா கயிங்கரிய மன்றியொரு சாதன
மனோவாயு நிற்கும்வண்ணம்
வாலாய மாகவும் பழகியறி யேன்துறவு
மார்க்கத்தின் இச்சைபோல
நேசானு சாரியாய் விவகரிப் பேன்அந்த
நினைவையும் மறந்தபோது
நித்திரைகொள் வேன்தேகம் நீங்குமென எண்ணிலோ
நெஞ்சந் துடித்தயருவேன்
பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகுதூரமே
பேய்க்குண மறிந்திந்த நாய்க்குமொரு வழிபெரிய
பேரின்ப நிட்டைஅருள்வாய்
பாசா டவிக்குளே செல்லா தவர்க்கருள்
பழுத்தொழுகு தேவதருவே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-பார்க்கின்ற, இடம்-இடங்கள், எல்லாம்-எல்லாவற்றிலும், ஒரு நீக்கம்-கொஞ்சங்கூட (ஒழிவு, அகற்சி), அற-இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து விளங்குகின்ற, ஆனந்தமே-இன்பவடிவே! வாசா-வாக்கினாற் செய்வதாகிய, கயிங்கரியம்-தொண்டுகளில், அன்றி-அல்லாமல், மனோவாயு-மனமும் வாயுவும், நிற்கும் வண்ணம் - (ஒருவழியிலே) நின்றடங்கும்படி, ஒருசாதனம்-ஒப்பற்றதான பயிற்சியினை, வாலாயமாகவும்-(ஒவ்வொருநாளும்) வழக்கத்தாற் பழக்கமாகவும், பழகி அறியேன் - (அநுபவவாயிலாற்) பயின்றறியேன், துறவு மார்க்கத்தின் - (தூய்மையுடைய) துறவு வழியில், இச்சைபோல - பேராசை கொண்டவனைப்போல, நேசானுசாரியாய் - பிறருக்கு உபகரித்து உதவுதலாக, விவகரிப்பேன் - (விடாமற்) காரியஞ்செய்து கொண்டிருப்பேன், அந்த நினைவையும் - அவ்வகையான எண்ணத்தினையும், மறந்தபோது-(யான்) மறந்து விட்ட காலத்தில், நித்திரை கொள்வேன்-தூக்கத்தை மேற்கொள்வேன், தேகம் நீங்கும் என-எனக்குரிய தேகமானது என்னை விட்டு நீங்கிவிடும் என்று, எண்ணிலோ-எண்ணினாலோ, நெஞ்சம் - (எனது) மனம், துடித்து-உருக்கங்கொண்டு, அயருவேன்-தளருவேன், பேசாத-(வாயினாலே இத்துணைத்து எனச்) சொல்ல முடியாத, ஆனந்தம்-இன்பமயமான,

கிட்டைக்கும்-சாதகத்திற்கும், அறிவு இலா பேதைக்கும்-சிறிதேனும் ஞான மில்லாத பேதமைக் குணமுடையவனாகிய எனக்கும், வெகு தூரமே - (இத் துணை யளவுளதென்று சொல்ல முடியாத) வெகுதூரமே, (இவ்வண்ண மிருப்பதால்) பேய் குணம் அறிந்து - அடியவனாகிய எனது அறியாமைக் குணத்தைத் தெரிந்து, இந்த நாய்க்கும் - இம்மானிட தேகமெடுத்தலையும் நாயினுங் கடையனான வெனக்கும், ஒரு வழி - ஒப்பற்ற செந்நெறியாகிய, பெரிய - பெருமை பொருந்திய, நிஷ்டை - ஞானசாதகத்தை, அருள்வாய்- (நீர்) பரமகிருபையாலே கொடுத்தருளுவாய், பாச அடவிக்குளே - (தாய் தமர் மக்கள் என்கிற) ஆசையினைக் கொடுக்குங் கானகத்துள்ளே, செல்லா தவர்க்கு - புகாமற் றப்பித்துக்கொண் டுள்ளவர்களாகிய பெரியோர்களுக்கு, அருள் பழுத்து - கிருபையாகிய பழம் பழுத்து, ஒழுகும் - இனிமையான தேனைச் சொரியும், தேவதருவே - (தேவலோகத்தில் வேண்டுவார் வேண்டு வன வழங்கும்) கற்பகவிருக்ஷம் போன்று விளங்குபவனே! எ-று.

(வி-ரை) பரிபூரணானந்தம்-முக்காலத்தும் ஒரே தன்மையனவாகி அள வில் ஆனந்தத்தைக் கொடுத்திருக்குமது. பரிபூரணம்-நிறைவு. ஆனந்தம்- சந்தோஷம். இச்சொல், பரிபூரணத்துவம் என வந்து, நிறைந்த பூரணத் தன்மையையுடைய தத்துவத்தையும், பரிபூரணம் என வந்து, மிகுதியாந் தன்மையோடு எங்கும் வியாபித்து எல்லாமுந் தானாய் நிற்குந் தன்மையையும், பரிபூரணன் என வந்து, எங்கும் நிறைந்தொளிருந் தத்துவங் கடந்ததொரு பொருளையும் விளக்குதல் காண்க. ஈண்டு, பரிபூரணானந்தம் என்றது, வண்ணம் எல்லாமுந் தானாய் நிற்கும் பொருளின் தன்மை கண்டு தலை மண்டிக் கிடந்தனுபவிக்கும் பேரானந்தம். இவ்வானந்தத்தையே,

"ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை" என்றும்,

"அடிசார்ந் தவர்க்கு முடியா இன்பம் நிறையக்
கொடுப்பினுங் குறையாச் செல்வ"

என்றும் கூறினர்.

இங்கே கூறியது ஈனமுதச் சுவையன்று; இஃது,

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற் றேனுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

எனத் திருவாசகத்தும்,

"கனியினுங் கட்டிபட்ட கரும்பினும்
பனிமலர்க்குழல் பாவைநல் லாரினும்
தனிமுடி கவித்தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே"

எனத் தேவாரத்தும் அறுதியிட்டுச்சொல்லிய ஆனந்தமென்க.



பரிபூரணம் - அன்பின் நிறைவு. அலங்காரத்தின் நிறைவு, உண்மையின் நிறைவு, அடையாளத்தின் நிறைவு, உயர்ச்சியின் நிறைவு, உள்ளக் களிப்பின் நிறைவு, மிகுதியின் நிறைவு, முடிவின் நிறைவு, பெருமையின் நிறைவு, விரிவின் நிறைவு எனப் பொருள்கொள்ளுந் தன்மையனவாய் நிற்பது. பூரண + ஆனந்தம் = பூரணானந்தம்; இது, வடமொழி தீர்க்க சந்தி. "அகர ஆகாரங்களில் ஒன்றன்முன் அவற்றில் ஒன்று வந்தால், அவ்விரண்டுங் கெடஓர் ஆகாரந் தோன்றும்" என்பது விதி.

'வாசாகயிங்கரியம்" என்பது, இறைவனுக்குத் தொண்டாற்றல், மனத் தாலும், வாக்காலும், காயத்தாலும் என மூன்றுவகைப்படும். மனத்தாற் றொண்டாற்றலாவது இறைவனைச் சிந்தித்திருத்தல். வாக்காற் றொண் டாற்றலாவது, இறைவனைப் புகழ்தல் பாடல் முதலியனவாம். காயத்தாற் றொண்டாற்றல் கோயிற்குச் செல்லல் வலம் வரல், திருக்கோயிற் பணி செய்தல், கும்பிடல் முதலியனவாம். இவைகளைத் திரிகரண வணக்கம் என்பர். ஈண்டு மனம்வேறு சொல்வேறு, செயல்வேறாக நின்று வாக்கால் இறைவனைப் புகழ்வது மட்டுங் குறித்து நின்றது. மனம் ஒன்றாது வாக்குக் கொண்டு எத்தனை தானும் புகழ்ந்தாலும் பயனிலவேயாகும். அது போலியே என்பர். மனம் ஒன்றாது காயத்தால் மட்டும் செய்யும் பூசையும் அதுபோல்வதேயாம். ஆகையால் மனம் ஒன்றுபடாது வாக்கால் மட்டும் புகழ்தலால் யாதொரு பயனும் இன்றென்பர்; "வாசா கயிங்கிரியமன்றி" என்றார். இதனானன்றே **பட்டினத்தடிகளும்**,

"கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்பு மியான்
செய்கின்ற பூசை யெவ்வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே"

என்றருளிச் செய்தார். இதனைச் சேக்கிழார் தம் **பெரியபுராணத்** துள்ளே,

"ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும் திருந்துசாத் துவிதமே யாக
இந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையில் தனிப்பெருங் கடத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்"

என்பதனானும், 'ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை' என்று தமிழ்வேதம் முழங்கிய முழக்கத்தினாலும் நன்கு உணரலாம். 'கயிங் கரியம்' இது வடசொல்; தொழும்பர் செய்யும் பணி என்பது பொருள். அத்தொழும்பர் செய்யும் பணிக்கு வழக்க பழக்கமே வேண்டுதலாகலின், 'ஒருசாதன மனோவாயு நிற்கும் வண்ணம் வாலாயமாகவும் பழகி யறியேன்' என்றார்; அதுசாதன மின்றியொன்றைச் சாதித்துக் கோடலாகாதாதலின், ஒருசாதன மனோவாயு நிற்கும் வண்ணம் வாலாய மாகவும் பழகி யறியேன் என்றனர். இறைவன் பணிக்கு ஜீவக்காற்றை நிறுத்தலும், மனத்தை ஒரு

வழிப்படுத்தலும் வேண்டப் பெறுமாதலினாலும்; மனத்தையும் வாயுவையும் ஒருவழி நிறுத்த அப்பியசிக்கவேண்டும். ஆதலினாலும் அது தன்னாலே வருவதல்ல ஆதலினாலும் 'மனோவாயு நிற்கும் வண்ணம் வாலாய மாகவும் பழகி அறியேன்' என்றார். வாலாயம்-கட்டாயம். எண்பது கோடி நினைந்தெழலும் மனத்தையும் ஓயாது சென்று சென்று குறைந்து மீளுங் காற்றையும் ஒரு வழிப்படுத்தினாலொழிய மக்கள் தாம் பெறவிரும்பிய உயர்பதவியைப் பெற முடியாது. வாயுவை அடக்கி அளவாக வெளிவிட்டு உள்ளே அளவாக வாங்கவும், மனத்தைப் பந்திக்கவும் நெடுங்காலப் பழக்கம் வேண்டியிருத்தலின் "வாலாய மாகவும் பழகி யறியேன்" என்றார். இதனை,

"காலைப் பிடித்துக் கருத்தை யடக்கியே
மேலைப் புரமெரி வித்தகனை—வேலையெழு
நஞ்சுண்ட கண்டனை நாடி நினைப்பவர்க்கிங்
கஞ்சலில்லை அந்தகனுக் காம்"

என்ற பெரியார் வாக்கு இதனை உறுதிப்படுத்தும்.

இன்னும் காலைப்பிடித்துக் கருத்தை யடக்கினோர்க்கே அந்தர்முக நோக்குடையதும் ஆண்டு சிவபராஞ்சுடர் தோன்றுகிற்கும், சிவபராஞ்சுடர் தோற்றிய மாத்திரையே சிவானந்தம் உதியாநிற்கும். இது கொண்டே "மனோ வாயு நிற்கும் வண்ணம்" என்றார். மனோ வாயு நிறுத்தலை யோகாப்பியாசம் என்பர். இந்த யோகம் எட்டு வகைப்படும். அவையாவன:—1. இயமம், 2. நியமம், 3. ஆதனம், 4. பிராணாயாமம், 5. பிரத்தியாகாரம், 6. தாரணை, 7. தியானம், 8. சமாதி என்பனவாம். 'துறவு மார்க்கத்தி னிச்சை போல' என்பது, இம்மை மறுமைப் பேறுகளை வெறுத்து பொன்னை, மாதரை, பூமியை நாடாது இறைவன் திருவடிக்கண்ணே பற்றுவைத்திருப்பது துறவறமாகும். இதனானன்றே **திருவள்ளுவரும்,**

"அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக வற்ற திலர்"

எனவும்,

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"

எனவுங் கூறியதால் அறியலாம்.

'நேசானு சாரியாய் விவகரிப்பேன்' என்பது, இது சிவனடியார்களுக்கு அனுகூலம் ஆனவன்போற் பேசுவேன் என்பது பொருளாம். பேச்சுமாத்திரையில் சிவனடியார்க்கு வேண்டுபவன்போற் பேசுவேன் உண்மையில் அவ்வாறு நடந்துகொள்வேன் என்னுங் கருத்துத் தோன்ற 'நேசானுசாரியாய் விவகரிப்பேன்' என்றார்.

"நாடகத்தா லுன்னடியார் போனடித்தும் நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்



ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே"

என்ற **திருவாசகமும்** ஈண்டு நோக்கத்தக்கது.

'அந்த நினைவையு மறந்தபோது நித்திரை கொள்வேன்' என்பது 'அந்த' என்றது துறவு மார்க்கத்து இச்சைபோல நேசானுசாரியாய் விவகரிக்கும் அதனைக் காட்டிற்று.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற் கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினார்"

என்றபடி

துறவையே, முத்திப்பேறு அடைதலையே கடைப்பிடியாகக் கொண்டுழலாராயின் மறவார் தாங்கள் ஆதலின், கடைப்பிடியாக அதனைக் கொள்ளவில்லை என்பார். 'அந்த நினைவையு மறந்தபோது நித்திரை கொள்வேன்' என்றார். இதனன்றோ, 'தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்' என்றுங் கூறினார். 'தேகம் நீங்குமென வெண்ணிலோ நெஞ்சம் துடித்தயருவேன்' 'சாவாத வில்லை பிறந்த உயிரெல்லாம்' என்றபடி பிறந்த உயிர்கள் எல்லாம் சாவன ஆதலினால் "தேகம் நீங்குமென வெண்ணிலோ நெஞ்சந் துடித்தயருவேன்" என்றார். இதனை,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு"

எனவும், **பெருநாவலரும்** கூறிப்போந்தார். இன்னும்,

"செத்துக்கிடக்கும் பிணத்தினருகே இனிச்சாம் பிணங்கள்
கத்துங்கணக் கென்னகாண் கயிலாபுரிக் காளத்தியே"

எனப் **பட்டினத்தடிகளும்,**

உடலோடு கூடிய உயிரே புண்ணியங்களைச் செய்யவும், தவஞ்செய்யவும், ஞானம் அடையவும், முத்திபெறவுங் கூடுமாதலின், 'தேகம் நீங்குமென வெண்ணிலோ நெஞ்சந் துடித்தயருவேன்' என்றார். இதனானன்றோ **மணிவாசகரும்,**

"யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே"

என்றார். 'பேசாத வானந்த நிட்டைக்கு மறிவிலாப் பேதைக்கும் வெகுதூரமே' என்பது, 'சிவானந்தம்' இத்தகையது என்று அதன் சிறப்பை எடுத்துக் கூறுதல் யார்க்கும் இயலாத தொன்றாம். அச்சிவானந்தத்தை அறியவிரும்பின் அதை அனுபவித்து உணர்தலே வேண்டும்.

சிவானந்தத்திற்கு ஒப்புரைத்துக் காட்டமுடியாது. உலகத்து அனுபவிக்கும் சிற்றின்பமே சொல்லிக் காட்ட ஒண்ணாததா யிருக்கும்பொழுது பேரானந்தமாகிய சிவானந்தம் இத்தகையது இப்பெற்றியது என்று எடுத்துரைக்கும் அளவினதாமோ. இதுபற்றியே, 'பேசாத ஆனந்தம்' என்றார். இதனை, அவரவர் அனுபவித்து அறிந்தாலன்றி சொல்லிக் காட்ட முடியாது என்பதாம். இதனை, சிவானந்தம் விளக்கிக்காட்ட முடியாதென்பதை,

> "மகட்குத் தாய் மணாளனோ டாடிய
> சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே"

என்ற உவமையாற் கூறியது கொண்டுந் தெரியலாம். 'அறிவிலாப் பேதை' என்பது அறிவில்லாதவனும் பேதையுமாகிய அடியேனுக்கு என்பது பொருளாம். பேதமை என்பது மடமை, அறியாமை என்பது பொருள். இதனான் அறிவில்லாமையும் அறிவித்தாலும் அறிந்துகொள்ளுந் திறமில்லாமையும் உணர்த்தப் பெற்றது. 'பேய்க்குண மறிந்திந்த நாய்க்கு மொருவழி பெரிய பேரின்ப நிட்டை யருள்வாய்' என்பது, பேயின் இயல்பு அலைந்து திரிவது, அதுபோல மனம் அலையுந் தன்மை பெற்றிருப்பதாதலின், 'பேய்க்குணம் அறிந்து' என்றார். இனி, பேய்க்குணம் என்பது பற்றிவிடாது கொண்டிருக்கும் தன்மை, அதுபோல இருந்த சிற்றின்பங்களைப்பற்றி அதனை விடாதிருக்குந் தன்மை என்பர். இது பொருந்தாமை என்பதை பெரியார்வாய்க் கேட்டுணர்க. மன அலைவுக்கு பேயையும் குரங்கையுமே ஒப்புக்கூறுவர். பற்றிவிடாமைக்கு முதலையை ஒப்பிடுவர். நாயின் இயல்பு உண்டு கக்கியதை மீண்டும் உண்ணும் இழி தன்மை உடையது. அதுபோல உலகில் உண்டு கழித்ததை, யுடுத்திக் கழித்ததை, துய்த்துக் கழித்தமை திரும்பத் திரும்ப அவாவிநிற்றலின் 'நாய்க்கும்' என்றார். ஈண்டு 'நாய்' என்றது உவமை ஆகுபெயர். 'நாய்க்கும்' என்றதன் ஈற்று உம்மை இழிவுச் சிறப்பு உம்மை.

இங்ஙனந் தாயுமானவர் தன்னை நாயினுங் கடைப்பட்டவனாக்கிப் பேசியது, நைச்சியபாவத்தைக் காட்டுவதென்பது. எனெனில், நாயானது தானிருக்கும் வீட்டிலுள்ள குழந்தைகளோடு கூடிவிளையாடியும், வீட்டார் யாரேனும் வெளிப்போம்போது அவருடன் வாலையாட்டிக்கொண்டு அவர் செல்கிற விடமெல்லாம் சென்று திரிந்தும் தனது பேராவலையும் அன்பையும் காட்டுவதும், சிறிதளவு தின்பண்டம் பெறினும் அதை மிக்க ஆவலோடு ஓடி எடுத்துத் தின்பதும், திருடர் முதலானவர்களைக் கண்டால் அவர்கள் வீட்டை விட்டு வெகுதூரம் போமளவும் கல்லடி முதலியவைகளுக்கு அஞ்சாமல் துரத்திக் கொண்டு போதலும், தன்னுயிரை விட்டாயினும் எஜமானனையும் அவன் பொருளையும் காப்பாற்றும் பேரன்பும், எக்காரியத்தையும் நடுவிற் சோர்வடைந்து கைவிடாமற் கடைபோகச் செய்து முடித்தலும், நடுநிசியே யாயினும் ஆபத்தை அப்போதே அறிந்து குரைத்தலும் ஆகிய இக்குணங்களைப் பெற்றிருப்பதுபோல நின் விஷயத்



திலும், நின்னடியார் பக்கலிலும், நின் எதிரியாவார் திறத்திலும், நீ இப்பேயனுக்குச் செய்யும் பேருதவியினும், நின்மாட்டுள்ள பக்தியினும் எக்காலும் பின்னிடையாமல் நின் நாமத்தினையே குரைத்துக் கொண்டிருக்குங் குணமுடையவ னென்பது குறிப்பாம்.

'ஒருவழி' இது பெரிய பேரின்ப நிட்டைக்கு அடையாக வந்து நின்றது. இனி ஒருவழி என்பது ஒப்பற்றவழி என்பது பொருளாம். பேரின்ப மௌனானந்த நிட்டைக்கு ஒத்ததும் உயர்ந்ததும் இல்லையாதலின் 'ஒருவழி' என்றார். இனி, ஒருவழி என்பதற்கு பிறந்தும் இறந்தும் உழலாதபடி என்றும் ஒரேபடித்தாய்ச் சுகானந்த வாழ்வில் இருக்கும் தனிப்பெரு முத்திநிலை எனவுங் கூறலாம். 'பெரிய பேரின்ப நிட்டை' இதில் 'பெரிய பேர்' ஒருபொருட் சொற்கள். சிறப்புப் பொருந்த ஒரு பொருட்சொற்கள் வந்தன. "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா" என்பது இலக்கணம் ஆதலின் இவை சிறப்புப் பொருள்தர வந்தன.

'நிட்டை' என்பது யோகநிட்டையைக் குறிக்கும். 'நிட்டை' என்பது மனம் முதலிய அந்தக்கரணங்களை யடக்கிப் பிராணவாயுவை ஒருவழிச் செலுத்தி இறைவனைச் சிந்தித்துக்கொண்டு மௌனானந்தத்தில் இருக்கும் நிலையை. இதனை யோகநிலை என்பர். 'பாசாட விக்குளே செல்லாத வர்க்கருள் பழுத்தொழுகு தேவதருவே' என்பது, பாச+அடவி என்னும் இருவடசொல் புணர்ந்து பாசாடவி என ஆயது; இது தீர்க்கசந்தி. இது பாசமாகிய அடவி என விரியும். இது பண்புத்தொகை. எவ்வாறு அடவி அடர்ந்து இருள் சூழ்ந்து வழி தோற்றுவிக்காது மருட்சி தருகின்றதோ அவ்வாறே பெண்டு பிள்ளைகள் பண்டு பலாதிகளின்மேல்வைத்த ஆசாபாசம் முத்திநெறியைக் காண்பியாது மருட்சிதரும் ஆதலின் 'பாசாடவி' என்றார். இதனை,

"பாசவே றறுக்கும் பழம்பொரு ளன்னை" என **மணிவாசகரும்**,

> "பாசக்காட்டிற் றிருந்துழன்று பயனேயின்றி மயங்குமெனை
> நேசத்திழுத்து வாழ்வருளி நித்தங்காக்குங் குருநாதன்
> வாசத்திலத நுதலுமையின் வளரும்பங்கன் திருவடியே
> பேசக்கற்றேன் பிறப்பறுத்தேன் பேசுமின்ப வீடுற்றேன்"

என்னுந் **திருவிருத்தத்**தாலும் அறியலாம்.

பாசத்திற்பட்டுக் கிடப்போர் ஈசனை நினைப்பதற்கு நேரமின்றி ஈசனை மறந்து திரிந்துழல்வர். நினையார்க்கருள் நிமலன் ஆதலின், 'பாசாடவிக்குளே செல்லாத வர்க்கருள் பழுத்தொழுகு தேவதருவே' என்றார். 'ஒழுகு' என்றது தேன் ஒழுகுதலை உணர்த்தும் 'தேனொழுகு பூந்தருவே' என்றார் என்றது திரு அருளை என்பதாம். 'பழுத்தல்' என்றது பிறரும். 'அருள்' என்றது திரு அருளை என்பதாம். 'பழுத்தல்' என்றது முதிர்ந்து நினைதலை. இதற்கு, 'அருள் கனிந்த' என்பதுமாம். 'தேவதரு' என்றது தெய்வத்தன்மை பொருந்திய கற்பத்தரு என்பதாம். தெய்வதரு தன்மை நவிற்சி.

"கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி"

என்றார். திருவிசைப்பா வுடையாரும்,

'பாசம்' இது கட்டுவது என்னும் காரணம் பற்றி வந்தபெயர். பாசத்தாற் கட்டுண்டு கிடக்கும் வரை இறைவன் அருளைப் பெறுதலும் முத்தி எய்தலும் கூடாது. இது கொண்டன்றோ திருவள்ளுவரும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை
பற்றுக பற்று விடற்கு,, என்றார். இன்னும்,

"அற்றது பற்றெனில் உற்றது வீடு"

என்பதும், கருதி நோக்கத்தக்கது. இறைவனின் இடைவிடாதொழுகும் தைலதாரையைப்போல உயிர்களிடத்து எந்நாளிலும் எக்காலத்தும் ஓய்வின்றி அருள் சுரந்தளிக்கும் பெருந் தகைமையையும், வேதமாகிய மரத்தின் உச்சியிற் பழுத்த சாரமாகிய சைவசித்தாந்தத்தின் திரு அருள் நெறியை அநுபவித்த ஆநந்தந்தோன்ற, 'அருள் பழுத்தொழுகு தேவதருவே' என்றார்.

'தரு' இது இரவலர்க்கு அவர் வேண்டும் மணி பொன் முதலியன தருதல்பற்றித் தரு என்றார். கற்பகத்தரு, தேவலோகத்துத் தன்னிடத்து இரவலர் வேண்டுவன எல்லாவற்றையும் தன்னிடத்து உண்டாக்கித் தருதலினால் கற்பகத்தரு என்றதாம். தருவது தரு வென்பது உணரத்தக்கது. கற்பகம் இது கல்பகம் என்னும் வடசொற்கள் சிதைவு என்பர். புறக்கண்ணாகிய ஊனக்கண்ணாற் பாராது ஞானக்கண்ணாகிய அகக்கண் கொண்டு பார்ப்பவர்களாகிய ஞானிகளுக்கு எங்கும் காணப் பெறுகின்றாதலினாலும், எங்கும் நிறைந்து தோன்றுகின்றாதலினாலும், ஜோதிப் பிரகாசமாகவும் ஆனந்தமயமாக இருக்கின்றாதலினாலும், 'பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே' என்றார்.

'எங்கும்' என்றது அண்டபிண்ட சராசரங்கள் எல்லாவற்றையும் அவைகளின் அகத்தையும் புறத்தையுங் குறித்து நின்றது 'ஒருநீக்கமற' என்றது. சிறிதும் விலக்கமின்றி என்பதாம். இறைவனே நிறைந்தபொருள் ஆதலினாலும் அவன் எங்கும் ஞானிகட்கு நிறைந்து தோன்றுகின்றாதலினாலும் 'நிறைகின்ற பரிபூரணானந்தமே' என்றார். 'ஆனந்தமே' என்றதன் ஈற்று ஏகாரம் விளிப்பொருளில் வந்தது. இது எட்டன் உருபாகும். இறைவன் எங்குநிறைந்தப் பரிபூரணன் ஆனந்தமயன் என்பதனை,

"எங்கெங்கும் அகக்கண்ணாற் காண நின்றே
இன்பமய மாகியே விளங்குஞ் சோதி
தங்கருணால் உயிர்கடமைப் புரக்குங் கோமான்
தனிப் பொதுவில் நின்றாடல் ஏற்றுக் கென்பீர்



துங்கமிகு மைந்தொழிலும் நடைபெற் றோங்கத்
துயரகன்றே யுயிர்களெலா முத்தி யின்பப்
பொங்பெரு வீடெய்திச் சுகத்தின் மன்னி
புகைமுற்று வாழவெனப் புகலு வீரே"

எனவரும் விருத்தத்தாற் றிருத்தமுற அறியலாம்.

'தேவ தருவே! பரிபூரணானந்தமே! அடியேனாகிய நாய்க்கும் பேரின்ப நிட்டை யருள்வாய்' என்றது கருத்து. 'அருள்வாய்' என்றது முன்னிலை விண்ணப்ப முறையீடு. 1

[இறைவனே! மௌனானந்தத்தைப் போதிக்கவந்த காலமே அடியேனுக்குப் பரிபாககாலம் என்கின்றார்]

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயற்கொண் டிருப்பனமுதல்
தேகங்க ளத்தனையும் மோகங்கொள் பௌதிகஞ்
சென்மித்த ஆங்கிறக்கும்
விரிவாய பூதங்கள் ஒன்றோடொன் றாயழியும்
மேற்கொண்ட சேடம்அதுவே
வெறுவெளி நிராலம்ப நிறைசூன்யம் உபசாந்த
வேதவே தாந்தஞானம்
பிரியாத பேரொளி பிறக்கின்ற வருள்அருட்
பெற்றோர்கள் பெற்றபெருமை
பிறவாமை யென்றைக்கும் இறவாமை யாய்வந்து
பேசாமை யாகுமெனவே
பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக காலமலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-பார்க்கின்ற, இடம்-இடங்கள், எல்லாம்-எல்லாவற்றிலும், ஒரு நீக்கம்-கொஞ்சங்கூட நீக்கம் (ஒழிவு, அகற்சி), அற-இல்லாதபடி, நிறைகின்ற - நிறைந்து விளங்குகின்ற, பரிபூரண - மிகுந்த நிறைவாகிய, ஆனந்தமே - இன்பவடிவே, தெரிவாக - எல்லோருங் காணும்படி, ஊர்வன-தவழ்ந்து செல்பவைகளும், நடப்பன-கால்களால் நடந்து செல்பவைகளும், பறப்பன - இறக்கைகளால் பறந்து செல்வனவும், செயல் - செய்தொழிலை, கொண்டு-பெற்று, இருப்பன - விளங்கி நிற்கின்றவைகளும், முதல்-முதலாக வுள்ள, தேகங்கள்-உடம்புகளைப்பெற்ற, அத்தனையும்-எல்லாம், மோகம்-மாயா மயக்கம், கொள்-கொண்ட, பௌதிகம்-பூதசம்பந்தம் உடையதாகி, சென

மித்த-பிறந்து தோன்றிய, ஆங்கு-அத்தன்மைபோலவே, இறக்கும்-மாண்டு மறையும், (மேலும்) விரிவு-அகன்று பரவியது, ஆய-ஆகிய, பூதங்கள்-விண் முதல் மண்ணீறாகவுள்ள பஞ்ச பூதங்களும், ஒன்றோடு - ஒன்றுடனே, ஒன்றாய் - உள்பட்ட ஒன்றதாகி, அழியும் - ஒடுங்கி அடங்கா நின்றிடும், (இத்தத்துவத்தை அறிவிக்கும்பொருட்டு) மேல்கொண்ட - கூறிய இவைகளுக்கெல்லாம் மேம்பட்டிருக்கிற, சேடம் - நித்தியமாய் மிகுதியாயுள்ள, அதுவே - அந்த மெய்ப்பொருளாகிய பரம்பொருளே, வெறுவெளி - பரமஆகாயம் எனவும், நிராலம்பம்-ஆதாரம் அற்றது எனவும், நிறை - நிறைந்த, சூன்யம் - பெரும்பாழ் எனவும், உபசாந்தம் - மிகுந்த சாந்தத் தன்மையை உண்டாக்குகின்ற, வேதம்-வேதங்களாலும், வேதாந்தம்-உபநிடதங்களாலும் விரித்துக் கூறப்பெறும், ஞானம்-ஞானம் எனவும், பிரியாத-நீங்காத, பேர்-பெரிய, ஒளி-ஜோதியில், பிறக்கின்ற-உதிக்கின்ற, அருள்-திருஅருள், என-என்னவும், அருள் - அந்தத் திருஅருளை, பெற்றோர்கள் - அடைந்தவர்கள், பெற்ற-அடைந்த, பெருமை-மேன்மை எனவும், என்றைக்கும்-எக்காலத்தும், பிறவாமை-தோன்றாமையும், இறவாமை-மறையாமையும், ஆய்-ஆகி, வந்து-வந்தருளி, பேசாமை - பேச்சற்ற மௌனநிலை, ஆகும்-ஆகும், என-எனவும், எனக்கு - அடியேனுக்கு, அறிவிக்க - அறிவுறுத்தும் பொருட்டு, நீ-தேவரீர், பரிவாய் - மிகுந்த அன்புடனே, வந்தது - எழுந்தருளியதற்குக் காரணம், பரிபாக காலம்-அடியேனின் பரிபக்குவகாலம், அல்லவோ-அல்லவா? எ-று.

(வி-ரை) "தெரிவாக வூர்வன நடப்பன பறப்பன செயற்கொண்டிருப்பனமுதற் றேகங்க ளத்தனையும்" என்பது, 'தெரிவாக' இது, தெரிவு+ஆக என்னும் இருசொல் ஒருசந்தி. இதற்கு யாவருக்குங் காணும்படி, யாவருக்கும் தெரியும்படி, யாவருக்கும் புலப்படும்படி என்பது பொருளாம். இனி, இன்ப துன்பங்களைத் தெரிந்ததாக என்வும், அறிவுடனே எனவும், தெளிவுடனே எனவும் புலவர்பொருள் கூறுவர். 'ஊர்வன' என்றது குறுங் கால்களாலும் கால்களின்றி மெய்யாலும் நகர்ந்து செல்வனவாகிய பல்லி, புழு, பாம்புகளை உணர்த்தும். 'நடப்பன' என்றது நீண்ட கால்களால் நடந்து செல்லும் மனிதர் விலங்குகளைக் குறிக்கும், 'பறப்பன' என்றது சிறகுகளால் பறந்து செல்லும் பட்சிகளைக் குறிக்கும், 'செயல் கொண்டிருப்பன' என்றது தாவரங்களாகிய புல், கொடி, செடி, மரம் முதலியவற்றை. ஊர்வனமுதல் செயற்கொண்டிருப்பன வரை சொன்னவைகள் எல்லாம் ஜடங்களாதலால் தேகங்கள் அத்தனையும் என்றார். புன்மரம், செடி, கொடி முதலியவைகள் காற்றால் அசைக்கப்பெற்றும், வெயிலால் உலர்த்தப்பெற்றும், மழையால் தளிர்க்கப்பெற்றும், மக்களால் தறிக்கப்பெற்றும், துய்க்கப்பெற்றும் வருதலின் செயற்கொண்டிருப்பன என்றார். அத்தனையும் என்றதன் ஈற்றுஉம்மை முற்றும்மை.

"தோற்றநாற் பாலாத் தொடர்கருப்பை தோற்றுமெட்டை
வேர்நீர் வித் தென்றிவற்றின் மேவுபெரு விண்ணோர்

சீர்சேரு மக்கள்திறல் விலங்கோடேர் சேரும்
புட்கள்புலத் தூர்வபுன்மரங்கள் நீர்வாழ்வவிக்குழுவற் பல்லினத்துபாரும்"

எனத் தமிழ்விடுதூது கூறியபடி, இவைகள் உயிர்களாயிற்றே ஜடமென்னலாமோவெனின் பதியை நோக்க பசுவும் ஜடமெனப் பெரியோர் கூறியதனாலென்க. இனி உயிர்க்கு உறைவிடமாகிய தேகத்தைக் கூறியதென்பதுகொண்டு தெளிக. ஆன்மாவை நோக்கத் தேகம் ஜடமாம். ஆன்மாக்கள்தம் வினைக்கேற்பப் புன்முதலாகப் பிறக்கின்றன என்பதும் தேகம் வினையினால் வந்தது என்பதுங்கொண்டே 'தெரிவாக வூர்வன ... ... ... தேகங்க ளத்தனையும்' என்றார். நால்வகைத்தோற்றம் எழுவகைப் பிறப்பு உயிர்கள் வினையினால் எய்தும் என்பதை **சிவஞான சித்தியாரில்**,

"அண்டசஞ் சுவேதசங்க ளுற்பிச்சஞ் சராயுசத்தோ
டுண்டுருநா லெண்பத்து நான்னூ றுயிரத்தா
லுண்டுபல் யோனியெல்லா மொழித்துமா னிடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக் கையா னீந்தினன் காரியங்காண்"

எனக் கூறியதுகொண்டு நன்கறியலாம்.

நால்வகைத் தோற்றமாவன:—கருப்பத்து உதிப்பன. முட்டையிற் பிறப்பன, வேர்வையிற் பிறப்பன. வித்திற் பிறப்பன என்பன நால்வகைத் தோற்றங்களாம். எழுவகைப் பிறப்புக்களாவன:—தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, புன்மரம் முதலிய தாவரங்கள் என்பன கொண்டறியலாம். இவ் எழுவகைத் தோற்றங்கள் எண்பத்து நான்கு லட்சம் யோனிபேதமாகிய பிராணிகளாம். இதனை,

"ஊர்வ பதினொன்று மொன்பது மானுட
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினாலயன் படைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து" என்பதனா லறியலாம்.

தேகம் வினையால் வந்தன அவ்வினை ஒழிந்தால் தேகம் அழியும் என்பதை,

"வினைப் போகமேயொரு தேகங்கண்டாய் வினைதா னொழிந்தாற்
றினைப்போதளவு நில்லாது கண்டாய் சிவன்பாத நினை"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கானும் அறியலாம்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்ற இத்தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்ற **மணிவாசகர்** வாக்கால் வினையினால் வந்தது இத்தேகம் என்பதும் அவற்றின் பேதங்களும் செவ்விதன் விளங்கும்.

'மோகங்கொள் பௌதிகம் சென்மித்த வாங்கிறக்கும்' என்பது, உலகமும் உலகத்துள்ள உயிர் முதலாகிய சராசரங்களும் மண், நீர், நெருப்பு, காற்று, விண் என்னும் ஐம்பெரும்பூத சம்பந்தத்தாலாகியது ஆதலின் 'மோகங்கொள் பௌதிகம்' என்றார். 'பௌதிகம், என்பது பூதசம்பந்தம் உடையது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். உலக சம்பந்த முடையதை 'லௌகிகம்' எனவும், வேதசம்பந்தமுடையதை 'வைதிகம்' என்பது போன்ற வடசொற்றொடர். எப்பொருள் எங்கு தோன்றிற்றோ அங்கே மறையும்,எப்பொருள் எங்கே மறைந்ததோ அப்பொருள் அங்கே தோன்றும் ஆதலின் 'சென்மித்தவாங்கிறக்கும்' என்றார். இதனைத் 'தோற்றமுண்டேல் மரணமுண்டாந் துயரமனை வாழ்க்கை' என்ற **திருநாவுக்கரசர்** திருவாக்கான் அறியலாம். அழியும் பொருள்கள் தோன்றிய அந்த விடத்திலேயே லயமாகும் என்பதனை,

"இலயித்த தன்னி னிலயாந்த தாமலத்தா
லிலயித்த வாறுளதா வேண்டு—மிலமித்த
தத்திதியி லென்னினழி யாதவை யழிவ
தத்திதியு மாதியுமா மாங்கு"

என்ற வெண்பாவால் நன்குரைத்தார். இன்னும், 'ஒடுங்கி மலத்துளதாம் அந்தம் ஆதி' என்னும் **சிவஞானபோதச்** சூத்திரமும் இங்கு கவனிக்கற்பாலதாம்.'பூதங்க ளொன்றொடொன் றுயழியவும்' என்பது ஐந்து மாபெரும் பூதங்களில் விண்ணிலிருந்து (ஆகாயத்திலிருந்து) காற்றும், காற்றிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் தோன்றித் தோன்றிய முறையே மண் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று விண்ணிலும் ஒடுங்குதலின் 'பூதங்க ளொன்றொடொன் றுயழிவும்' என்றார். இதனை,

"மின்னுருவை விண்ணகத்தி லொன்றாய் மிக்கு
வீசுங்கா றன்னகத்தி னிரண்டாயச் செந்தீத்
தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலி னான்காய்த்
தரணிதலத் தஞ்சாகி யெஞ்சாத் தஞ்ச
மன்னுருவை வான்பவளக் கொழுந்தை முத்தை
வளரொளியை வயிரத்தை மாசொன் றில்லாப்
பொன்னுருவைப் புள்ளிருக்கும் வேளூ ரானைப்
போற்றாதே யாற்றநாள் போகி னேனே" எனவும்,

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"

எனவருந் தமிழ் மறைகளாலும் அறியலாம்.



"விண்ணிற்கால் காலீற்றீ வெந்தியி னீர்நீரில்
மண்ணிவைகள் தேற்றமுற மற்றொடுக்கம்—மண்ணீரில்
நீர்தீயாத தீகாற்றில் நீள்கால்விண் சேரிடமாம்
பார்விண் ணொடுங்கும் பறந்து"

என்ற வெண்பாவாலும் அறியலாம்.

இனி, ஐம் பூதங்களும் சத்தம் முதலாகிய தன் மாத்திரைகளிற் றோன்றுவன் ஆதலின் அம்முறையே பூதங்கள் தன்மாத்திரைகளில் ஒடுங்குமெனக் கூறினும் அமையும். இதனைச் **சிவஞானசித்தியார்** இரண்டாஞ்சாத்திர விரிவுரையிற் கண்டுகொள்க; இன்னும்,

"தன்மாத் திரையைந்திற் றோனுதிக்கு மைம்பூதம்
முன்பே யுதித்த முறையொடுங்கி—நின்றவோ
அன்பே யுருவா யரன்வெளியாம் வெட்டவெளி
இன்பே யுருவா யிரு"

என்ற பெரியார் வாக்கானும் அறிக.

'மேற்கொண்ட சேட மதுவே' என்பது,

மேற்கூறிய பூத பௌதிகங்கள் எல்லாம் மாறி மாறித் தோன்றி நிலைகெட்டலையுந்தன்மையன. அவையும் இறைவன் திரு அருள் ஆணை விசேடத்தால் நிகழ்வன. இவைகளை எல்லாங் களைந்து காணின் இவை கட்கு அப்பால் இச் சடங்களை வினைக் கயிற்றால் ஆட்டிவைக்கும் இறைவன் எஞ்சி நிற்பன். அவனே மேற்கொண்ட சேடம் ஆகும். இதுபற்றியே 'மேற் கொண்ட சேட மதுவே' என்றார். 'அதுவே' இதில் 'அது' சுட்டு ஏகாரம் தேற்றப் பொருள் தந்துநின்ற இடைச்சொல். இதனை,

"அவனே அவரே அதுவேயென் றறைய வெல்லா மாக்கிப்பின்
தவவே நடன மாட்டிட்டுத் தன்னுட் காக்குந் தனிமுதலே
பவமார் பிறப்பு மறப்புமிலா பாங்கார் சேடப் பொருளாகும்
நவமா மெந்தப் பொருளுக்கும் நவமாம் பொருளும் அதுதானே"

என்ற **சித்தா ரத்னாகரச்**செய்யுளானும் அறியலாம்.

'சேடம்' இது சேஷம் என்ற வடசொற் சிதைவு. இதற்கு மிஞ்சி நிற்பது, எஞ்சி நிற்பது என்பது பொருள். எல்லாமழிய இறைவன் ஒருவனே ஈற்றில் எஞ்சி நிற்பவன் ஆதலின் இப்பெயர் தந்தார். எல்லாம் அழிதன்மாலையன எல்லாவற்றையும் இறைவனே எச்சத் தன்னுள் வாங்கிக் கொள்ளுகின்றான். பின்னர் எஞ்சித் தனிப்பொருளாய் நிற்பவன் இறைவனாகும். இதனை,

"நூறு கோடி பிர்மர்க ணொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவ னீச னொருவனே" என்பதனாலும் அறியலாம்.

'சேடமதுவே' என்ற ஏகாரம் தேற்றேகாயம். 'வெறுவெளி நிராலம்ப நிறைசூன்ய முபசாந்த வேத வேதாந்த ஞானம்' என்பது ஊன்கண்ணுக்குப் புலப்படுவதாய பிருதிவி முதலிய பொருள்கள் எல்லாம் இறைவனுக்குத் தூலசரீரம் எனப்பெறும் என்னை?

"காயத்துக் கண்ணாற் காணுங் கணக்கிலாப் பொருள்கள் எல்லாம்
தோயத்துத் தன்மை போலத் தோய்ந்துளா னிறைவன் ஈதால்
நேயத்துக் கண்ட கண்ட நீப்புவிதீ கால்விண் முன்னா
மாயத்துச் சராச ரங்கள் மற்றவன் றன்றூல தேகம்"

என்பதனாலென்க.

ஆன்மாவே இறைவனுக்குச் சூக்குமசரீரம் ஆகும். பாசசத்தியே இறைவனுக்கு அதிசூக்குமசரீரம் ஆகும். அப்பாசசத்தியின் இயற்கை வடிவம் ஆகாயம் ஆகும். இதுகொண்டே 'சேடமதுவே வெறுவெளி' என்றார். இதனை,

"பிருதிவியே முதலான பிறங்கிடுபல் பொருளுமீசன்
கருதிடுமா தூலதேகம் கணிக்கருநல் லான்மாதானே
சுருதிசொலுஞ் சூக்குமமாம் சொல்லுமதி சூக்குமந்தான்
வருதிருநற் சத்திசத்தி வான்வடிவா வழுத்துந்தானே" என்பதனானும்,

"சிவசத்தி வடிவங்கூறிற் செவ்விழி காணுமெல்லாம்
தவசத்தி வடிவமெல்லாந் தானெனவே இருந்தவேனும்
நவசத்தி யியற்கைமேனி நவில்தரு மாகாயமாகும்
பவசத்தி வடிவமீதால் பகருமா காயமென்றே"

என்பதனாலும் அறியலாம்.

சரீரம் வேறு, சரீரி வேறு. சரீரத்துள் சரீரி சம்பந்தப்பட்டுள்ளவரை சரீரத்தையே சரீரியாகக் கூறும் முறைபற்றி 'வெறுவெளி' என்றார். ஈண்டு 'வெறுவெளி' என்றது வெட்டவெளியை. இறைவன் அண்டரண்ட சராசரங்களுக்குள் எல்லாங் கலந்துங் கலவாதும் இருந்து அவைகளுக்கு ஆதாரமாகி அவைகளை இயக்கி வந்தாலும் தானொன்றிலும் ஒன்றாது தனிப்பொருளாகித் தனக்கோர் ஆதாரவும் வேண்டாதே நிற்றலின் 'நிராலம்பம்' என்றார்.

பிரகிருதியையும், அசுத்த மாயையும், சுத்த மாயையும் பாழ் என்பர் இவை மூன்றும் முப்பாழ் எனப்பெறும். இம்மூன்று பாழ்களையும் கடந்து நின்றது எதுவோ அதுவே நிறை சூன்யம் என்று சொல்லப்பெறும். அதுவே இறைவன். இதுகொண்டே 'நிறை சூன்யம்' என்றார். இதனை,

"முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும்பாழாய்
அப்பாழுக் கப்பானின் றூடுமதைப் போற்றுமல்"

எனப் பட்டினத்தடிகளும்,



"பாழுக்கும் பாழுக்கு மப்பால் நின்ற
பாழுக்கும் பாழாகி யதற்கு மேலும்
பாழுற்றுச் சூனியமாய்ப் பின்னும் பின்னும்
பகருமொரு சூனியமாய்ப் பரவுஞ் சோதி
ஊழுற்றார் காணாத வோங்கு சோதி
உம்பரெலாந் தேடிடினுங் காணாச் சோதி
காழுற்ற வேதத்துங் காணத் தோன்றி
கருதரிய வானந்தங் காட்டிற் றன்றே"

எனப் பிறருங் கூறியதனாலும் அறியலாம்.

'கற்றறிந்தார் கண்ட அடக்கம்' என்றபடி கல்வி மனமொழி மெய்களின் அடக்கத்தைப் போதித்து ஊட்டா நிற்கின்றது. மனமொழி மெய்களின் அடக்கத்தை ஊட்டாத கல்வி கல்வியேயன்று. கல்விகளில் எல்லாஞ் சிறந்த வேதங்களும் வேதாந்தங்களும் இந்த அடக்கத்தையே தந்து விருப்பு வெறுப்பின்மையை எய்துவித்தலின் 'உபசாந்த வேத வேதாந்தம்' என்றார். வேதத்தும் வேதாந்தத்தும் விளங்கும் ஞானமே இறைவன் வடிவாதலின் 'வேதாந்த ஞானம்' என்றார். இதனாலன்றோ **தேவாரத்தும்,**

"நால்வேத மாறங்க மானான் கண்டாய்
நால்வேத மாறங்க மாகி நின்றான்"

என்றார். 'வேதப்பொருளை' மறைப்பொருளை. 'உபநிடத வடிவானை' என்பன வாதியவாகத் துதித்தனர் பெரியார்கள். இன்னும்,

"அருமறைப் பொருளே! அந்தணா! அடியனே னல்ல லெல்லாம்
வருகதிர் முன்னம் பனிபோல் மானிட வருள்செய் தாளப்
பெருமுலை யுமையாள் வாமம் பெரிதுற வருவாய் வந்தே
தருகுக வுன்றன் றுய்ய தனிமல ரிணைத்தா ளியே"

என்னுஞ் செய்யுள் நன்குணர்த்தா நிற்கும்.

இனி, இறைவன் ஞானசொரூபி ஆதலினாலும், வேதவேதாந்தத்துப் போற்றும் பொருள் பொதிந்த பொருள் எல்லாம் இறைவனையே ஆதலினாலும் 'உபசாந்த வேதவேதாந்த ஞானம்' என்றார் என்றலுமாம். 'பிரியாத பேரொளி பிறக்கின்ற வருளருட் பெற்றோர்கள் பெற்ற பெருமை' என்பது, இறைவன் எல்லாப் பொருளிலும் பிரிவு இன்றிக் கலந்திருத்தல்பற்றிப் 'பிரியாத' என்றார். இறைவன் பேரொளிப் பிழம்பாகவும், எல்லாப் பொருள்களுக்கும் ஒளிதருபவனாகவும், ஒளியுடைப் பொருள்களுக்கும் ஒளி அருள்பவனாகவும் இருத்தலின் 'பிரியாத பேரொளி' என்றார்.

இனி, பிரியாததும் பேரொளி பிறக்கின்றதுமாகிய அருள் எனக்கொண்டு எதினும் பிரிவின்றி இருப்பதும், ஒளி பிறத்தற்கு இடமாகிய அருள்மயமாய் இருப்பதுவும் எனக் கொள்ளலும் ஒன்று. இறைவன் ஜோதிப்பிரகாசனும், அருண்மயமானவனும் ஆதலின் 'பிரியாத பேரொளி

பிறக்கின்ற வருள்' என்றார் என்னல் சாலச் சிறந்ததாம். ஆணவமலத் தொடர்பால் ஞானஒளி மழுங்கி நிற்கும் உயிர்களுக்கு ஞானச்சுடர் தோன்றுதற்குக் காரணம் இறைவன் திருஅருள் ஆதலினாலும், அத் திரு அருளே இறைவன் திருமேனி ஆதலாலும் 'பேரொளி பிறக்கின்ற' அருள் எனலுமாம். இறைவன் என்றும் உயிர்களுக்கு இரங்கி அருள்புரிபவன் ஆதலின் 'அருள் அருள் பெற்றோர்கள்' என்றார். அருளின் அருள் பெற்ற சிவஞானிகள் பெற்றபெருமை இறைவன் ஆதலின் 'அருளருட் பெற்றோர்கள் பெற்ற பெருமை' என்றார். 'பிறவாமை யென்றைக்கு மிறவாமை' என்பது, இறைவனுக்கும் பிறப்பும் இறப்பும் இல்லை யாதலி னாலும், ஆதிமத்தியாந்த ரகிதனாதலினாலும் 'பிறவாமை யென்றைக்கு மிறவாமை' என்றார். இறைவன் பிறப்பிலி இறப்பிலி என்பதை,

"பேணுபெருந் தேவரெலாம் பேருலகி லேபிறந்து
காணுறவே மாண்ட கதை கேட்டோம்—தாணுசிவன்
இல்லிற் பிறந்ததுவும் எங்கி இறந்ததுவுந்
தொல்லுலகிற் கேட்டதில்லை சொல்"

என்னும் வெண்பாவாலும் நன்கறியலாம்.

'வந்து பேசாமை யாகுமெனவே பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே' என்பது, மானைக்காட்டி மான் பிடிப்பதுபோல இறைவன் ஆன்மாக்களின் பரிபக்குவ முணர்ந்து அவர்களுக்கு உய்வு அருள மானுடச்சட்டை தாங்கிக் குரு மூர்த்தமாக வந்தருள் புரிவன் ஆதலினால், "பிறவாமை யென்றைக்கு மிறவாமை யாய்வந்து பேசாமை யாகுமெனவே பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே" என்றார். இதனை, இறைவன் மான்காட்டி மான் பிடிப்பதுபோல் குரு மூர்த்தமாய் வந்தருளுவன் என்பதை,

"மான்காட்டி மான்பிடிக்கு மாண்புபோல
மதிநதிசேர் சடைப்பெருமான் சகலர்தம்மை
வான்காட்டுங் குருவடிவாய் வந்துகூடி
மலமறுத்துச் சிவாநந்த வாழ்வில் வைப்பான்"

என்பதனாலுந் தெளியலாம்.

மவுனதேசிகராக வந்து மௌனோபதேசஞ் செய்து மௌனமாக இருக்கச் செய்தார் ஆதலின் 'பேசாமை யாகும்' என்றார். இறைவன் ஆன்மாக்களுக்கு அருள்செய்ய அவர் பக்குவ முணர்ந்து கன்றை நாடி வருந் தாய்போல வந்தருள்புரிவன் ஆதலின் 'பரிவாய்' என்றார். எல்லாம் வல்ல இறைவனே குருவடிவமாக வந்தருளியதால் ஞானம் சந்தேக விபரீத முதலியன இன்றி அறியப்பெற்றது தோன்ற 'அறிவிக்க வந்ததே' என்றார். 'முன்னவனே எண்ணின் முடியாத தொன் றுளதோ' என்றபடி, இறைவன் உணர்த்த குருவாக எழுந்தருளின் உணரா திருக்கவும் போமோ. போகாது. என்பார் 'பரிபாக கால மலவோ' என்றார். பேசாமை என்றது



மௌனத்தை, மௌனானந்த யோகநிட்டையை இறைவன் உணர்த்தாமல் உயிர்கள் உணரமுடியாதாதலின் 'நீயறிவிக்கவந்ததே' என்றார். இதனை,

"சற்குரு மணியா யீசன் சாருவன் பக்கங் கண்டே
மற்றவன் னேற்ற நோக்கம் மருவிய தீக்கை எல்லாம்
உற்றவெம் பிறவி போக்கி உயர்சிவா நந்த மாக்கிக்
கற்றவர் சொல்லு மேலாங் கதியிலு மிருத்து மன்றே"

என்றதனானும் அறியலாம்.

'பரிபாக காலமலவோ' என்பது நல்வினையால் வரும் இன்பமும், தீவினையால் வரும் துன்பமும் ஆன்மாக்களுக்கு இறைவனை அடையவொட்டாது தடைபடுத்தலினால் அவைகள் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போன்றவைகளே. ஆதலினால் நல்வினைப் பயனையும் தீவினைப்பயனையும் சமமாக மதித்து இன்பதுன்பங்களில் விருப்பு வெறுப்பற்றிருக்கும் இருவினையொப்புகை வந்தவர்களுக்கே மலபரிபாகமும் சத்திநிபாதமும் உண்டாகும். ஆதலின் அந்தக் காலந்தான் திருஅருட்சொரூபியாகிய இறைவனே தேவரீர் குருவடிவமாக எழுந்தருளிவந்து மௌன மந்திரத்தை உபதேசித்தருளிய காலத்து முன் வந்தெய்திய காலம் என்பார். 'பரிபாக காலமலவோ' என்றார் என்பதும் ஒன்று.

ஆன்மாக்களைப்பற்றி நின்று ஞானத்தை உணராதபடி, ஞானப்பொருளாகிய இறைவனை உணராதபடி, முத்தி எய்தாதபடித் தடுத்து நிற்பன ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களாகும். ஆணவ மலம் ஒன்றேயுடையார் 'விஞ்ஞான கலர்' எனப் பெறுவர். இவ் விஞ்ஞானகலர்க்கு இறைவன் அவருள்ளத்தின்கண்ணேயே அருண்மயமாக நின்று அனுக்கிரகம் புரிந்துஅவர்களை உய்விப்பன். மலங்களுள் ஆணவம் கன்மம் என்னும் இரு மலங்களை உடையவர்களைப் 'பிரளயாகலர்' என்பர். இப்பிரளயாகலர்க்கு இறைவன் மான்மழுத்தாங்கி சதுர்புஜத்துடனே எழுந்தருளி வந்து அனுக்கிரகஞ் செய்து அருள்புரிவன். ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமும் பெற்றவர்களைச் 'சகலர்' என்பர். இச்சகலர்களுக்கு இறைவன் அருள் செய்ய அவர்கள் பரிபாக காலமுணர்ந்து மானைக்காட்டி, மானைப் பிடிப்பது போலவும், யானையைக் காட்டி யானையைப்பிடிப்பது போலவும் மானுடச் சட்டைதாங்கி ஆசாரியத் திருவுருவங்கொண்டு வந்தருளி பாச பந்தங்களை நீக்கி உண்மை ஞானத்தை யூட்டி முத்திப் பெரும்பதத்தில் சிவானந்தபோகந் துய்த்துய்யுமாறு நாட்டிவைப்பான். இது கொண்டே, 'பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே பரிபாக காலமலவோ' என்றார். இதனை,

"நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமல மொன்றினையும்
அன்னிலையே யுண்ணின் றறுத்தருளி—பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மம் தீர்த்தருளிப்—பூவலயந்

தன்னின்று நீங்கா சகலர்க் கவர்பேரில்
முன்னின்று மும்மலந் தீர்த்தாட் கொள்கை
யன்னவனுக் காதி குணம்"

என்ற பெரியார் வாக்காலும் அறியலாம்.

'நீ' என்றது இறைவனை. 'அலவோ' இதன் ஈற்று ஓ இடை தழுவிய வினா. 'வந்ததே' என்பதன் ஈற்று ஏகாரம் தேற்றப் பொருளது, இலக்கண விசேடங்கள். ஊர்வன, நடப்பன, பறப்பன, இருப்பன என்பவை வினையாலணையும்பெயர்கள் 'அத்தனையும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. 'ஆங்கு' இது சுட்டுப்பெயர், சுட்டெழுத்து நீண்டு சுட்டுப்பொருள் உணர்த்தி (ஆங்கு - அவ்விதம்) 'விரிவாய்' இது இறந்த காலப் பெயரெச்சம். 2

[பூமி முதலிய இடங்களிளேல்லாம் நடக்குஞ் செயல்க ளேல்லாம் இறைவனே உன்செயல் என்கின்றார்]

ஆராயும் வேளையில் பிரமாதி யானாலும்
ஐயவொரு செயலுமில்லை
அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர
ராமென இருந்தபேரும்
நேராக வொருகோபம் ஒருவேளை வர அந்த
நிறைவொன்று மில்லாமலே
நெட்டுயிர்த் துத்தட் டழிந்துளறு வார்வசன
நிர்வாக ரென்றபேரும்
பூராய மாயொன்று பேசுமிட மொன்றைப்
புலம்புவார் சிவராத்திரிப்
போதுதுயி லோமென்ற விரதியரும் அறிதுயில்
போலேயிருந்து துயில்வார்
பாராதி தனிலுள்ள செயலெலாம் முடிவிலே
பார்க்கில்நின் செயலல்லவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும் - பார்க்கின்ற, இடம் - இடங்கள், எல்லாம் - எல்லா வற்றிலும், ஒரு நீக்கம்-கொஞ்சங்கூட நீக்கம், அற-இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து விளங்குகின்ற, பரி - மிகுந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே-இன்பவடிவே! ஐய-ஐயனே! ஆராயும்-விசாரித்து அறியும், வேளையில்-காலத்தில், பிரமன்-பிரம்மதேவன், ஆதி-முதலாகிய மற்றுந்தேவர்கள், ஆனாலும்-ஆயினாலும், ஒரு செயலும் - (தேவரீரை யன்றி) தாமே தனித்து நின்று செய்யுந் தொழில் ஒன்றேனும், இல்லை - இல்லையாகும், அமைதி யொடு-



அடங்கிய மனத்துடன், பேசாத - பேச்சற்ற மௌனத்துடன் இருக்கும், பெருமை-சிறப்பினை, பெறு-பெற்ற, குணம்-சாந்த குணத்தினால், சந்திர-நிறைமதியையே ஒத்தவர், ஆம்-ஆகும், என-என்று சொல்லும்படி, நேராக-ஒழுங்கான மாதரியாக, இருந்த பேரும்-இருந்தவர்களும், ஒரு-ஒரு, வேளை-சமயம், ஒரு கோபம்-சிறிது கோபம், வர-வரவே, அ-அந்த சிறந்த, நிறைவு-நிறை குணங்கள், ஒன்றும் - ஒரு சிறிதும், இல்லாமல் - இல்லாதபடி, நெட்டுயிர்த்து-பெருமூச்சு விட்டு, தட்டு-உயர்ந்து, அழிந்து-கெட்டு, உளறுவார்-மயங்கிப் பேசுவார், வசனம்-பேச்சில், நிர்வாகர்-கெட்டிக்காரர், என்ற-என்று சொல்லப்பெற்ற, பேரும் - பெரியவர்களும், பூராயமாய்-ஆதியோடந்தமாக, ஒன்று-ஒரு விஷயத்தை, பேசும்-சொல்லும், இடம்-இடத்திலே, ஒன்றை-தாம் எடுத்த விஷயத்தை விட்டு மற்றோர் விஷயம் ஒன்றை, புலம்புவார்-பேசிப் புலம்புவர், சிவராத்திரி - சிவராத்திரிவிரத, போது-காலத்தில், துயிலோம்-நித்திரை செய்யோம், என்ற-என்று கூறிய, விரதியரும்-உறுதியான விரதத்தை உடையவர்களும், அறி துயில் - அறிவுடன் கூடிய தூக்கமாகிய யோகநித்திரை, போல-போல, இருந்து-இருந்து, துயில்வார்-தூங்குவார்கள், பார்-பூமி, ஆதிதன்னில்-முதலாகிய எல்லா இடங்களிலும், உள்ள-நடைபெறு கின்ற, செயல்-செய்கைகள், எல்லாம் - எல்லாமும், முடிவிலே - முடிவிலே (கடைசியாக), பார்க்கின்-ஆராய்ந்து பார்த்தால், நின் - இறைவனே! தேவரீ ரின், செயல்-செய்கை, அல்லவோ-அல்லவா? எ-று.

(வி-ரை) 'ஆராயும் வேளையிற் பிரமாதி யானாலும் ஐய ஒரு செயலு மில்லை' என்பது, 'ஆராயும் வேளையில்' என்றது ஞானத்துடன் ஊன்றிக் கவனித்துப் பார்க்குங் காலத்து என்பதாம். 'பிரமாதி ஆனாலும்' என்றது, படைத்தற்றொழிலைச் செய்கின்ற பிரமன் முதலான தேவர்கள் ஆனாலும் என்பதாம். ஈண்டு 'ஆனாலும்' என்றதன் ஈற்றில் நின்ற 'உம்' உயர்வுச் சிறப்பும்மை. 'பிரமாதி' என்றதனால் மால் உருத்திரர் முதலிய தேவர் களும் அடங்கிற்று. உருத்திரர் என்றது குணருத்திரரை. என்னை? படைத்தல் முதலிய 'ஐந்தொழில்களைப் பிரமன் ஆதிதேவர்கள் புரிவாராயி னும் அவர்கள் தம் சுதந்தரத்தாற் செய்யவில்லை, அவர்கள் பசுக்களே யாதலின் உண்ணின்றவைகளை ஒருவன் செய்விக்கின்றான். அவனே இறைவன். எல்லாம் அவன் செயலே. ஆதலினால், 'ஆராயும் வேளையிற் பிரமாதி ஆனாலும் ஐய ஒரு செயலு மில்லை' என்றார். இதனை,

"இரும்புசேர்ந் தெரியழற்றினு மெரியுடைத் தொழிலே
இரும்பினுக் கழற்றுவ திலையாகும் படைப்பாதி
விரும்புநான் முகனாதியோ ரிடைவிளைத் தழியுங்
அரும்பியாங்கு மீட்டொடுக்கு மவ்வா னுடைத்தொழிலே"

என்ற பெரியார் வாக்கால் நன்கறியலாம். இன்னும்,

"அவனன்றி அணுவும் அசையாது
எல்லாம் அவன் செயலே"

என்ற முதுமொழிகளும் இப்பொருளை உறுதிப்படுத்தும்.

'அமைதியொடு பேசாத பெருமைபெறு குணசந்த்ர ராமென விருந்த பேரும் நேராக' என்பது, 'அமைதியொடு' என்றது சாந்தத்துடன் என்பது பொருளாம். ஈண்டு 'ஒடு' என்றது மூன்றனுருபு, 'பேசாத பெருமைபெறு' என்றது, மௌனநிலையிலிருக்கும் பெருமையைப்பெற்ற என்பது பொருளாம். இனி, இதற்கு எடுத்துக் கூறமுடியாத அத்துணை மிகுந்த சிறப்புப்பெற்ற எனப் பொருள்கூறலும் செய்வர். இது அத்துணைச் சிறப்பின்மையை உய்த்துணர்க. அற்றது பெரியாரிடத்துக் கேட்டுத் தெளிக. 'குண சந்த்ரர்' என்பதற்குக் குணத்தால் சந்த்ரனை ஒத்தவர் என்பதாம். இனி குணத்தையுடைய சந்திரனைப் போன்றவர் எனினுமாம். சந்திரன் குணமாவது என்றுந் தன்னொளி தருதல், பாரபட்சமின்றி, பகை உறவு என்பதின்றி எவர்க்கும் நிலவு செய்தல். இதனைச் 'சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்' என்னும் வெகு வசனத்தானும் அறியலாம்.

இதுபோல 'அமைதியொடு பேசாத பெறுமைபெறு நேரான குண சந்திரர்' நட்பு, பகை, நொதுமல் என்று கருதாது எவர்க்கும் இன்பு செய்வர், தண்ணளியுடையராக இருப்பர். சாந்த குணமுடையவராக இருப்பர் என்பதாம். 'நேராக' என்பது நேராக குணசந்த்ரராமென விருந்தபேரும் என மொழிமாற்றுக்கொண்டு கூட்டிப் பொருள் கூறப் பெற்றது. 'நேர்' என்று ஒழுங்கைக் காட்டிற்று. 'பேரும்' இது பெயரும் என்பது மருவிநின்ற மரூஉ வழக்கு, 'ஒருகோப மொருவேளை வரவந்த நிறைவொன்று மில்லாமலே நெட்டுயிர்த்துத் தட்டழிந் துளறுவார்' என்பது 'உள்ளியர் தெள்ளியராயினும் ஊழ்வினை பைய நுழைந்து விடும்' என்றபடி ஊழ்வினைப்பயனால் மதிகெட்டு வருமாதலின் 'ஒருகோப மொருவேளை வர' என்றார். 'அந்த நிறைவு' என்றது 'அமைதியொடு பேசாத பெருமை பெறு நேராக குணசந்த்ரராக' இருந்த நிறைவைக் குறித்தது. அந்த என்றது பண்டறிசுட்டு. சினம் ஒருவன் உள்ளத்தில் ஓங்கி எழுந்து பரவி உள்ளமெலாம் பரவி அறிவை விழுங்கி வெப்பை எழுப்பி பழிபாவங்களைச் செய்யத் தூண்டுவது ஆதலின் கோபமிகுதியால் பெருமூச்செறிவர் நிலைதடுமாறுவர், சொல் விவேகமின்றி முன்பின் சம்பந்தமின்றி அறிவு உணர்ச்சி இன்றிப் பேசுவர். இது தோன்றவே 'நெட்டுயிர்த்துத் தட்டழிந் துளருவர்' என்றார். இது கொண்டன்றோ **ஔவைப் பிராட்டியாரும்**, 'ஆறுவது சினம்' என்றாள். இன்னும்,

"உள்ளங் கவர்ந்தெழுந் தோங்குசினங் காத்து
கொள்ளுங் குணமே குணமென்க" எனவும்,

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது" என்றும்,

"எரிநிகர் வெகுளிபொங்க மயக்கம்வந் தெய்துமெய்தத்
தெரிபவை சிதையுமுள்ளந் தெரிந்தவை சிதைந்தபோதே



யுரியதன் னுணர்வுமாயு முணர்வுமாய்ந் தொழிந்தவாறே
யரியவென் றறிஞர்பேசு மனைத்துமாய்ந் தொழியுமன்றே"

என்றும் **பகவத்கீதையில்**,

"வெகுளியே யுயிர்க்கெலாம் விளைக்குந் தீவினை
வெகுளியே குணந்தவம் விரத மாய்க்குமால்
வெகுளியே யறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்
வெகுளியிற் கொடும்பகை வேறொன் றில்லையால்"

**காஞ்சிப்புராணம்** என்றும் பெரியார் கூறியதாலும் அறியலாம்.

'நெட்டுயிர்த்து' என்றது பெருமூச்சு எறிதலை. இது சினத்தால் ரத்தங் கொதித்து வெப்பமூண்டு உண்டாகும் செயல். 'தட்டழிதல்' என்றது தன் நிலையிலிருந்துங் கெட்டழிதல். இதனை நிலைதடுமாறல் எனவுங் கூறுவர். 'உழறல்' என்றது பின்னுக்கு முன் முரண்பட மொழிதலையும், பொருளில் சொற்சொல்லலையும், பிறகுழப்பங்களையுங் குறிக்கும். 'நிறைவு' என்றது முற்கூறிய குணநிறைவுகளைக் குறித்தது. 'ஒரு கோபம்' என்றது சிறிது கோபத்தை. இனி, தாங்கவொண்ணாத ஒப்பற்ற பெருங்கோபம் எனப் பொருள் கூறுவாருமுண்டு. 'ஒருவேளை' இது ஒருபொழுது அல்லது சிறிது பொழுது எனப் பொருள்தரும்.

'வசன நிர்வாக ரென்றபேரும் பூராயமாயொன்று பேசுமிட மொன்றைப் புலம்புவர்' என்பது, 'வசன நிர்வாக ரென்றபேரும்' என்பதற்கு வாக்குச் சாமர்த்திய முடையவர்களும் என்பது பொருளாம். வாக்குச் சாமர்த்தியமாவது விதிவிலக்குகளை யறிந்து யாவர்க்கும் இனிமையாக இன்சொற்கூட்டிக் கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொற்களால் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் அழகு படப் பேசும் திறம்வாய்ந்த நாவன்மையைக் குறித்தது. 'பூராய மாய் ஒன்று பேசுமிடம்' என்றது. ஆதியோடந்தமாக ஒன்றைப் பேசுமிடத்து என்பதாம். இனி, ஆராய்ச்சி வன்மையோடு ஒன்றைப் பேசுமிடத்து எனப் பொருள் கோடலும் ஆகும். 'ஒன்றைப் புலம்புவர்' என்றது. தாம் பேச எடுத்த விஷயத்தை விட்டு அதற்கும் புறம்பாய, அல்லது அதற்கு மாறாய ஒன்றை உளறுவர் என்பதாம். 'புலம்பலாவாது' பித்துப்பிடித்தார் துயருற்றார் போல் நெறிபிறழ, பொருள் பொருத்தமின்றி குழறி வழிதலை உணர்த்தும். இது கொண்டன்றோ பெரியாரும்,

"மொழிவதறமொழி" என்றும்,

"பிழைபடச் சொல்லேல்" என்றும்,

"சொற் சோர்வு படேல்" எனவும்,

"மொழித்திறத்து முட்டறுத்தவன் கட்டறுத்து
வீடு பெறும்" என்றும்,

"யாகாவா ராயினு நாகாக்க காவாக்கல்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு"

"ஆக்கமுங் கேடுமதனல் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு"

என்றுங் கூறிவைத்தார்.

'நிர்வாகம்' என்றது வடசொல். நிர்வகித்துப்பேசல். சொல்லை நிறுத்து அளந்துபேசும் ஆற்றலை உணர்த்தும். 'சிவராத்திரிப் போது துயிலோமென்ற விரதியரு மறிதுயிர் போலவே யிருந்து துயில்வர்' என்பது; 'சிவராத்திரி' இது சிவபெருமான் ஆலகாலவிஷத்தை உண்டதினம் என்பர். தேவர்கள் முதலாய பசுக்களைக் காத்தற்பொருட்டு ஆலகால விடமுண்டு கண்டத்தடக்கிய தினமாதலின் இக்காலத்துப் பகலில் விரதம் இருந்து இரவில் துயிலெழாதிருக்கவேண்டும் என்பர் பெரியார். இவ் விரதம் அனுஷ்டித்தவர் பெறும்பலன் பெரும்பெரும் பலன்களாகும். பூவினுள் தாமரைப்பூ சிறந்ததுபோலவும், பொன்னினுள்ளே சாம்பூநதஞ் சிறந்ததுபோலவும், பசுவுள்ளே காமதேனு சிறந்ததுபோலவும், ஆனைகளுக் குள்ளே ஐராவதம் சிறந்ததுபோலவும், உத்தம விரதங்களுள்ளே இச் சிவராத்திரி விரதம் சிறந்ததென்பர். இதனை,

"பூவினுட் கஞ்சம் பொறியினிற் காண்கண்கள்
காவினுட் கற்பகநற் காவெனவே—தூவியல்சேர்
நற்சிவ ராத்திரி நாடு விரதநனி
பொற்பிற் சிறந்த புவிக்கு" என்றார் பெரியார்.

'விரதியர்' என்றது விரதத்தை உடையவர் என்பது பொருளாம். 'போது' இது பொழுது என்பதன் போலி. 'அறிதுயில்' என்றது யோக நித்திரையை 'போலே' என்றதால் பொய்யாகத் தூங்காதவர்போற் பிறர்க் குக் காட்டித் தூங்கி இருப்பர் என்பதாம். 'அறிதுயில்' என்பதை 'மறிதுயில்' எனக்கொண்டு ஆடுபோலச் சொற்பத் துயில்கொண்டு இருப்பர் எனப் பொருள் ஒதுவாரும் உண்டு. 'இருந்து துயில்வர்' என்றது உட்கார்ந்து இருந்த இருப்பிலே தூங்கலை உணர்த்தும்.

'பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க்கினின் செயலல் லவோ' என்பது, சூத்திரப்பாவை ஆட்டுவான் ஆட்டும் வழி ஆடும் இயல்பு போல உலகமும் அதன்கண் உள்ள சராசரங்களும் இறைவன் இயக்க இயங்குவன ஆதலினல் 'பாராதி தனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க் கினின் செயலல்லவோ' என்றார். இதனை, 'ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே' என்பதனல் நன்கறியலாம். 'பாராதி' என்றது பூமியும் பிற அண்டங்களும் அவற்றுள்ள சராசரங்களும் என்பதாம். 'முடிவிலே பார்க் கின்' தீர ஆராய்ந்து பார்த்தால் கடைசியாக இறைவனே இயக்குகின்றான் என்னும் உண்மை தோன்றுநிற்கும் என்பதாம். 'நின்' என்றது பரிபூரணப்



பொருளாகிய இறைவனை. 'தனில்' இது 'தன்னில்' என்றதன் தொகுத்தல் விகாரம். 'எலாம்' இது 'எல்லாம்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'அல்லவோ' என்றதன் ஈற்று ஓகாரம், வினப்பொருளில் வந்தது. 'பாராதி தனில்' என்பதில் ஈற்றில் நின்ற 'இல்' ஏழனுருபு இடப்பொருளில் வந்தது.

3

[எல்லாம் மாயாவிகாரமே; மாயையும் இல்லாமையே; தெய்வ அருளன்றி ஒன்றுமே இல்லை; அகப்பற்று புறப்பற்று அற்று இருப்பதே இன்பம்; கண்மூடி மௌனியாய் இருக்க இச்சிக்கிறேன்; பண்டைக் கர்த்தாவைக் கர்த்தா என்னேன் என்கின்றார்.]

அண்டபகி ரண்டமும் மாயா விகாரமே
அம்மாயை யில்லாமையே
யாமெனவும் அறிவுமுண் டப்பாலும் அறிகின்ற
அறிவினை யறிந்துபார்க்கின்
எண்டிசை விளக்குமொரு தெய்வஅரு ளல்லாமல்
இல்லையெனு நினைவும்உண்டிங்
கியானென தறத்துரிய நிறைவாகி நிற்பதே
இன்பமெனும் அன்பும்உண்டு
கண்டன எலாம்அல்ல என்றுகண் டனைசெய்து
கருவிகர ணங்களோயக்
கண்மூடி யொருகணமி ருக்கஎன் றூற்பாழ்த்த
கர்மங்கள் போராடுதே
பண்டையுள் கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப்
பக்ஷம்நான் இச்சிப்பனே
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

(ப-ரை) பார்க்கும்-பார்க்கின்ற, இடம்-இடங்கள், எங்கும்-எல்லாம், ஒரு-கொஞ்சமும், நீக்கம் - விலக்கம், அற - இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து விளங்குகின்ற, பரி - மிகுந்த, பூரணம் - நிறைவாகிய, ஆனந்தமே - அகப் பொருளே!, அண்ட பகிரண்டமும்-அண்டாண்ட பிரமாண்டங்கள் எல்லாம், மாயா - மாயையின், விகாரமே - காரியமேயாகும், அ-அந்த, மாயை-மாயை யானது, இல்லாமையே - (காரியப்பாட்டினல்) இல்லாமையாகத் தோன்று வதே, ஆம்-ஆகும், எனவும்-என்றும், அறிவும்-அறிவும், உண்டு-இருக்கிறது, அப்பாலும்-அதற்குமேலும், அறிகின்ற - அறியத்தக்க, அறிவினை - அறிவை, அறிந்து-உற்று உணர்ந்து, பார்க்கின் - பார்க்கும் இடத்து, எண்-எட்டாகிய, திசை-திசைகளிலும், விளங்கும் - விளங்குகின்ற, ஒரு - ஒப்பற்ற, தெய்வம்-

தெய்வத்தினுடைய, அருள் - திரு அருளே, அல்லாமல் - அல்லாது, இல்லை - (அம்மாயைதானே தொழிற் படுத்துதல்) இல்லை, எனும் - என்கின்ற, நினைவும் - எண்ணமும், உண்டு - உளதாகும், இங்கு - இவ்விடத்தே, யான்-நான் என்னும் அகப்பற்றும், எனது-என்னுடையது என்னும் புறப்பற்றும், அற - நீங்க, துரியம் - அவத்தைகளைக்கடந்த இடமாகிய துரியத்தில், நிறைவு - நிறைவு, ஆகி-ஆகி, நிற்பதே - நின்றிருப்பதே, இன்பம் - ஆனந்தம், எனும் - என்று சொல்லப்படும், அன்பும் - அன்பும், உண்டு - உளதாகும், கண்டன - காணப்படுகின்றவைகளாகிய, எலாம்-எல்லாப் பொருள்களும், அல்ல-(மெய்ப் பொருள்கள்) அல்ல, என்று-என்று, கண்டனை-மறப்பை, செய்து-செய்து, கருவி - ஐம்பொறிகளாகிய கருவிகளும், கரணம் - மனம் முதலாய அந்தக் கரணங்களும் ஆகிய எல்லாம், ஓய-செயல் அற்று இருக்க, ஒரு-ஒரு, கணம் - கடிணப்பொழுது, கண்-கண்களை, மூடி - மூடிக்கொண்டு, இருக்க என்றால், அந்தர்முகம் நோக்கியே இருப்போம் என்றாலோ, பாழ்த்த-பாழாகிய, கன்மங்கள் - கர்மங்கள், போராடுதே - போராட்டத்தைச் செய்கின்றனவே, பண்டை - பூர்வத்திலேயே, உள - அமைந்து உள்ள, கர்மமே-கன்மங்களே, கர்த்தா-கர்த்தா, எனும்-என்கின்ற, பெயர்-பெயரினது, பக்ஷம்-கொள்கையை, நான்-அடியேன், இச்சிப்பனோ-விரும்புவேனோ! விரும்பமாட்டேன் எ-று.

(வி-ரை) 'அண்டம்' என்பது உலகைக் குறிக்கும். ஈண்டு துருவ சக்கரத்திற்கு உட்பட்ட உலகைக் குறித்தது, 'பகிரண்டம்' என்பது மேல் அண்டம், வெளி அண்டம் எனப்பொருளாம். ஈண்டு - துருவசக்கரத்திற்கு வெளிப்பட்டுள்ள அண்டத்தைக் குறித்தது. 'அண்டபகிரண்டமும்' என்றதன்கண் உள்ள உம்மை முற்றும்மை. மாயை+விகாரம் என்பது இரு வடசொற்களின் சந்தி. 'மாயை' சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என மாயை மூன்று திறப்படும். இதில் சுத்தமாயை என்பது மல கன்மங்களோடு விரவாது சுத்த காரியப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக இருப்பது. 'அசுத்த மாயை' என்பது சுத்தமாயையின் கீழாயடங்கி மல கன்மங்களோடு விரவி சுத்தாசுத்தகாரியப் பிரபஞ்சத்திற்கு முதற்காரண மாக இருப்பது, 'பிரகிருதி மாயை' என்பது அசுத்தமாயையின் தூல பரிணமமாய் அசுத்தகாரியப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக இருப்பது. இம்மாயையின் விவரங்களை கட்டளைகளிலும் சித்தாந்த நூற்களிலும் பரக்கக்கண்டு தெளிக.

ஈண்டு 'மாயா விகாரமே' என்றதிற் குறித்த 'மாயை' அசுத்த மாயையை. வானுற வோங்கி வளர்ந்து தழைத்துத் தளிர்த்துக் கப்புங் கவருங் கிளைகளுமாகச் செழித்து அரும்பு, மலர், காய், கனிதரும் மரம் ஆதிகட்குச் சூக்குமமாகிய வித்து காரணமாக இருப்பதுபோல நிலம், நீர் முதலியவாகப் பல வேறுபாட்டுடன் இப் பிரபஞ்சமாகிய உருவுடைப் பொருள்கள் அனைத்தும் தோன்றுதற்கு முதற்காரணமாகவுள்ளது மாயை, இதுகொண்டே நம் தாயுமானப் பெரியார் 'அண்டபகிரண்டமும் மாயா விகாரமே' என்றார். இதனை,



"மாயையி னின்று தோற்றும் மன்னிய உருவ மெல்லாம்"

என்னும் ஆன்றோர் வாக்கானும் அறியலாம்.

'அம்மாயை இல்லாமையே ஆம்' எனவும் 'அறிவு உண்டு' என்பது, 'அம்மாயை இல்லாமையே' என்றது மாயை இல்லாத பொருள்; அதாவது சூனியப் பொருள் என்னும் பொருளை ஈண்டு உணர்த்த இல்லை. பின் என்னெனின், காரியமாகிய உருவுடைய பொருள் போலாது அருவப் பொருளாக உளதெனக் கொள்ளக்கிடக்கின்றது. காரணகாரிய ரூபமாக இருப்பது மாயை இங்கு 'இல்லாமை' என்றது காரியப்பாடு பற்றி என்க. இனி மாயை சூனியப்பொருளே, இல்லாதபொருளே ஆகும் எனக் கொண்டால் "இல்லது வாராது உள்ளது போகாது" என்னும் நியாயத்திற்கு விருத்தமாதல் காண்க. மாயை சூனியமாயின் உலகிற்கு முதற்காரண மாக இருக்க முடியாது. இதுகொண்டே 'அண்டபகிரண்டமு மாயா விகாரமே' என முதலிற்கூறிப் பின்னே 'அம்மாயையே இல்லாமையே ஆம்' என்றார். இனி, 'அம்மாயை இல்லாமையே' எனவும் 'ஆம் என அறிவும் உண்டு' எனவும் பிரித்து அந்த மாயையானது என்றும் நிலையாக நிற்கும் இயல்பில்லாததே எனவும், நிலைத்து நிற்கும் இயல்பு உடையதாகும் எனவும் அறிகின்ற அறிவும் உண்டு எனவும் ஒருசாரார் பொருள் கொள்ளுகின்றனர். இதற்கு பதிபசுபாசமென்றும் முப்பொருளும் நித்தியமெனக் கோடலே வைதிக சைவசித்தாந்த முடிவு ஆதலின், 'ஆமெனவு மறிவுமுண்டு' என்றார் என்பர் 'அண்ட பகிரண்டம் மாயாவிகாரம்' என்பதை,

"உலகுதித்திடற்குக் காரணமாகி யுறைதலிற் காரணமென்று
மிலகுகாரியமா கியவுலகாகி யிருக்கவுந் தெரிதரப்படாத
வலனுறுதலினவ் வியத்தமேயென்றும் வகுப்பரம் மாயைக்குப்பெயர்க
ளிலவணிபெருமான் றன்வலியாற்கற் பித்ததிந் நிரம்பியகாலம்"

என்னும் சூதசங்கிதையாலும்,

"சுத்தமோ டசுத்தமூலப் பகுதியென் றொடர்புபெற்றுத்
தத்துவ மைந்தோரேழு தகுமிரு பத்துநான்கா
யித்தகையிற் பிரேரம்போக்கியம் போக மென்ன
முத்தகைக் காண்டமாக வுதவிடும் மாயைநிற்கும்"

என்னும் திருக்கூவப்புராண செய்யுளாலும் அறியலாம்.

'அப்பாலும் அறிகின்ற அறிவினை அறிந்து பார்க்கின் எண்டிசை விளக்குமொரு தெய்வஅருள் அல்லாமல் இல்லையெனும் நினைவும் உண்டு' என்பது, மாயை நித்தியமேயாயினும் சடப்பொருள் என்று கண்டு, அது தானே காரியப்படாது, காரியப்படுத்துதற்கு ஒரு முதல்வன் வேண்டும் என இறைவன் அருளால் துணிந்தவர்க்கே தெய்வத் திருஅருள் ஒன்று இன்றி ஒன்றும் அமையாது என்பதும் யாவையும் அவனன்றி இல்லை என்பதும் விளங்கும். ஆதலினால் 'அப்பாலு ... ... ... ... அருள் அல்லாமல் இல்லை' என்றார். இதனை,

"அளப்பருங் கருணையாலே ஆருயிர் தமக்கெல்லாமும்
வளப்பகற் றநுவேகரண மருவிய புவனபோகம்
உளப்பெரு மாயைதன்னால் உறவுறக் கொடுப்பன்ஈசன்
கொளப்பெறு மிதற்கவ்வீசன் கூரரு ளேதுவாகும்" எனவும்,

"அணுமுத லண்டமீறு அமைசரா சரங்களெல்லாம்
எணுமுறை வினையினாலே விளங்கிட வாட்டிவைக்கும்
கணுவுடைக் கரும்பேயன்ன கண்ணுதற் கடவுளாமால்
நுணிகிட வறியினெல்லாம் நுவலவன் செய்கைதானே"

என்பதனாலும் அறியலாம்,

'அப்பாலும் அறிகின்ற அறிவு' என்பதற்கு மேலும் மேலும் ஆராய்ந்து அறியுந்தன்மை உடையதாகிய அறிவு என்பது பொருளாம். 'அப்பாலும் அறிகின்ற அறிவு' என்றது இறைவனை. என்னை? இறையன் அறிவு மயன் ஆதலினாலென்க. இதனானன்றே **திருமூலநும்**,

"அறிவு வடிவென் றறியாத வென்னை
யறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
யறிவு வடிவென் றருளா லறிந்தே
யறிவு வடிவென் றறிந்திருந் தேனே" என்றார்.

இனி, அப்பாலு மறிகின்ற அறிவினை அறிந்து என்பதற்கு அறிவினை என்பதை வேற்றுமை மயக்கமாகக்கொண்டு அறிவால் என மூன்றன்பொருளாகக்கொண்டு பொருள் கூறுவாருமுண்டு. 'தெய்வ அருள் அல்லாமல் இல்லை' இதில் இரண்டு எதிர்மறைகள் வந்து ஒரு உடன்பாட்டுப் பொருள் தந்தது தெய்வ அருள் ஆகவே விளங்கும் என்பது பொருளாம். எட்டு+திசை=எண்டிசை, இது,

"எட்ட னுடம்பு ணவ்வாகு மென்ப" என்பது **இலக்கணம்**.

'எண்டிசை விளங்கு மொருதெய்வ அருள்' என்பதை 'விளங்கு' என்பதை 'விளக்கும்' என மாற்றிப் பொருள் உரைப்பாரும் உண்டு. அது ஆசிரியர் கருத்தாகாமை உய்த்துணர்ந்தறிக. 'இங்குயான் எனது அறத் துரிய நிறைவாகி நிற்பதே இன்பமெனும் அன்புமுண்டு' என்பது, 'இங்கு' என்பதற்கு இவ்வுலகில், இவ்விடத்து என்னவும் பொருளாம். இனி, இவ்வண்ணம் எனவும் பொருள் கூறுவர். 'யான்' என்றது தானல்லாததாகிய உடலை நான் நான் என்று கூறும் அகப்பற்றை. 'எனது' என்றது தன்னது அல்லாததாகிய பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தம் முதலியவைகளை எனது எனது என்று கூறும் புறப்பற்றை. இங்கு+யான்=இங்கியான் என ஆயது உகரம் இகரம் ஆயிற்று.

"உயிர் வரின் உக்குறள் மெய்விட்டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றேவ:றி" என்பது **இலக்கணம்**.



'துரியம்' என்றது தத்துவங்கள் அவத்தைகள் எல்லாம் கடந்து அதற்கு மேல் நிற்கும் நிலையை. இதனைச் சுத்தநிலை எனவுங் கூறும். இதுசாக்கிர முதலாக எண்ணிநின்ற நாலாம் நிலையாகும். 'நிறைவாகி' என்பது ஞானநிறைவாகி என்பது பொருளாம். இனிப் பரிபூரணத்தோடு ஒன்றிப் பரிபூரணமாக நிறைந்து நிற்பது என்பாரும் உண்டு. 'இன்பம்' என்றது சிவானந்தப் பேரின்பத்தை. இதனைச் சிவமுத்தி என்றலுமாம். 'கண்டன வெலாமல்ல வென்று கண்டனை செய்து' என்பது, கண்களாற் கண்டவைகள் எல்லாம் இறைவன் அல்ல என்று கூறுவான் 'கண்டன வெலாமல்ல வென்று கண்டனை செய்து' என்றார். 'கண்டன்' என்பதற்கு கண்களாற் கண்டவைகளையும் ஞானக் கண்ணாற் கண்ட இறைவன் அல்லாத ஏனையவற்றையும் எனப்பொருள் கோடலும் ஒன்று. இறைவன் கண்டன வெலாம் அல்ல எனின் இறைவன் சர்வந்திரியாமி, சர்வ வியாபகன் என்பதற்கு விருத்தமாகுமே எனில் அறியாது கடாயினை, இறைவன் கண்டனவெல்லா மாகியும் அவைகள் எல்லாம் அல்லவாகியும் அவைகளுக்கு அப்பாற்பட்ட பொருளாகியும் தனி அகரம் போல இறைவன் நிற்கின்றானென்ன உணர்க என்க. இதனா னன்றே பெரியாரும்.

"பூதங்களல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதிமான்
பேதங்களல்ல விவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப"

என்ற **பரஞ்சோதி முனிவர்** வாக்காலும் இதன் உண்மையை யறியலாம்.

'கண்டனை செய்து' என்றது கண்டித்து மறுத்தலை உணர்த்தும். 'கருவி கரணங்க ளோயக் கண்மூடி யொருகண மிருக்க வென்றால்' என்பது 'கருவி' என்றது ஞானேந்திரியம் கன்மேந்திரியங்களை. 'கரணம்' என்றது மனம் முதலிய அந்தக்கரணங்களை. 'ஓயா' என்றது ஒடுங்கி அடங்கி நிற்றலை. சேட்டையற்றிருத்தலை உணர்த்தும் 'கண் மூடி' என்றது கருவிகரணங்கள் சேட்டையற்றிருத்தற்குக் கண்ணை மூடிக்கொண்டு யோகசாதனத்து இருந்து மூலக்கனலை மதிமண்டலத்து எழுப்பிக் காலைப்பிடித்து நிற்கவேண்டியதாதலின் 'கண்மூடி' என்றார். இதனை யோகநூல்வல்லார்பால் நேரிற் கண்டு கேட்டு உணரத்தக்கது. இதனை,

"கண்மூடிப் பேசாது காலைப் பிடித்திழுத்து
விண்ணூறு தண்மதித்தோன் வேணளவும்—உண்டாரே
எம்மான் பரஞ்சுடரை இன்பத் தனித்தேனைச்
சும்மா அருந்துமெனச் சொல்"

என்ற **போகசங்கற்ப வெண்பா**வால் நன்கறியலாம்.

'கணம்' இது க்ஷணம் என்பதன் சிதைவு. ஒரு நொடிப் பொழுதை உணர்த்தும். 'என்றால்' இது என்று எண்ணினால் என்றும் பொருளது. 'பாழ்த்த கன்மங்கள் போராடுதே' என்பது கன்மம், இது கர்மம் என்ற வடசொற் சிதைவு. கன்மமும் அநாதி என்பது சித்தாந்தம் ஆதலின்

ஆன்மாவைப்பற்றிக் கன்மந் தொடர்ந்து தன் பயனை ஊட்டவருதலின் மௌனானந்த நிட்டைக்கு இடையூறாகப் போராடுகிறதே' என்பார். 'பார்த்த கன்மங்கள் போராடுதே' என்றார். 'போராடுதே' என்பது 'போராடுகிறதே' என்பதன் மரூஉ. இறைவன் அவர் அவர் செய்த வினைக்குத் தக்கதாக இன்பதுன்பங்களை ஊட்டுவன் இவ்வினையே கன்மம் எனப் பெறும், தீவினைப்பயன் சாருங்காலம் இவன் இன்புறக்கொண்ட காரியங் கைகூடாதழியும். இதனாலேதான் கன்மங்கள் போராடுதே என்றார். இதுபற்றியன்றே பெரியார்களும் 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' எனவும் 'தவமுந் தவமுடையார்க்காம்' எனவுங் கூறிவைத்தார்கள். 'போராட்டம்' இது சண்டை என்னும் பொருளது. அறிவுக்கும் கன்மத்திற்கும் போர் நிகழுங்காலத்து அறிவு கன்மத்தை வென்று மேல் நின்று இறைவன்றாளிற் சென்று கூடின் கன்மவாதனை இல்லையாய் ஒழியும்; இதனை,

> "கன்றம ரான்பா லன்பாற் கவர்தரு காலமேனும்
> வென்றிகொ ளம்புவீழும் வேலையா யினுமிமைப்பிற்
> சென்றுறு மமையமேனுந் திருவடி தெளிய நோக்கி
> நின்றவர் காணநின்றார் நீள்பவ நீங்கினாரே"

என்று வரும் **பாசுரத்தான்** அறிக.

'பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப் பசுநானிச் சிப்பனோ' என்பது. 'பண்டையுள கர்மம்' என்றது அநாதிகர்மத்தை. கன்மமும் நாசோற்பத்தி பண்ணிவரும் ஆதலால் இதனைப் 'பிரவாக அநாதி' என்பாரும் 'ஏக னனேக னின்றுகரும மாயை யிரண்டா விவையா ஞதியில்' எனவும் 'ஆணவமுத லன்றதுபோற் கருமமும்' எனவும் ஒப்ப ஓதுகின்றனராதலின் மூவகை வினைக்கும் (ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம்) முதற்காரணமாகிய மூலகன்மம் ஒன்று அநாதி நித்தியமாயுண்டென்பாருமென இருவகைப்பட உரைப்பார் பெரியார்.

இவ்வினை ஈட்டப்படுங்கால் மந்திரம் முதலிய அத்துவாக்களிடமாக மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களால் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர்பெற்று, பின்னர் பக்குவப்படும்வரையில் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்தைப் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து சாதி ஆயுள்போகமென்னும் மூன்றற்கு மேதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னும் மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியம் பாவமென்னும் பரியாயப் பெயர்பெற்றுப் பின்னர் பயன்படுங் காலத்து ஆதிதெய்விகம், ஆதியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலவகைப்பட்டுப் பிராரப்தமெனப் பெயர்பெறும். இவ்வாறு பாகுபாடுபெற்ற கருமங்கள்,

> "பல்லாயு ளுய்த்து விடினுங் குழக்கன்று
> வல்லதாந் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்



> பழவினையு மன்ன தகைத்ததே தற்செய்த
> கிழவனை நாடிக் கொள்ளற்கு"

என்றபடி தாமே பயனை நுகர்விக்கும் ஆற்றலுடையன ஆதலின் உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டுவிக்க இறைவன் ஒருவன் வேண்டற்பாலனல்லன் என்று கூறும் சமயவாதிகளுஞ் சிலர் உண்டாதலினால் அவர்தம் கொள்கை தமக்கு உடன்பாடன்று என்பார், 'கர்மமே கர்த்தாவெனும் பெயர்பசு நானிச்சிப்பனோ' என்றார். 'கர்த்தா' இது ஆக்குவோன் முதல்வன் என்னும் பொருளில் நின்றது. 'பசும்' இது சமயப்பசுத்தை உணர்த்திற்று. 'பசுநா னிச்சிப்பனோ' என்றதனால் அவர் பசுத்திற்கு உடன்படேன் என்பது பொருளாம். 'கர்மமே கடவுள்' கடவுள் எனத் தனிப்பட ஒன்றில்லை என்னும் 'கொள்கையைக் கொள்ளேன்' என்பது இதன் கருத்தாகும். 'பண்டை' இது 'பண்டு' என்னும் குற்றுகரம் ஐகாரம்பெற்று நின்றது. இதனை,

> "ஐயீற் றுடைக் குற்றுகரமு முளவே"

என்ற இலக்கணத்தால் அறிக.

[இறைவனே! எல்லாம் தேவரீரின் செயலே, தேவரீரையன்றி நான் என்ப தோன்றிலலை என்னும் இந்த நிலைபெற சிரத்தையும் ஞானமுந்தந்து காத்தருள்செய் என்கின்றார்]

4

> சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனுந்
> தன்மைநினை யன்றியில்லாத்
> தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
> சமரச சுபாவமிதுவே
> இந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
> இயற்கைதிரு வுளமறியுமே
> இந்நிலையி லேசற் றிருக்கஎன் றால்மடமை
> இதசத்ரு வாகவந்து
> சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
> திரும்புமோ தொடுவழக்காய்ச்
> சென்மம்வரு மோஎனவும் யோசிக்கு தேமனது
> சிரத்தையெனும் வாளும்உதவிப்
> பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
> பாதுகாத் தருள்செய்குவாய்
> பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
> பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எல்லா இடத்தும், நீக்கம்-நீங்குதல், அற - இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து நிற்கின்ற,

ஆன்மாவைப்பற்றிக் கன்மந் தொடர்ந்து தன் பயனை ஊட்டவருதலின் மௌனானந்த நிட்டைக்கு இடையூறாகப் போராடுகிறதே ' என்பார். 'பார்த்த கன்மங்கள் போராடுதே' என்றார். 'போராடுதே' என்பது 'போராடுகிறதே' என்பதன் மரூஉ. இறைவன் அவர் அவர் செய்த வினைக்குத் தக்கதாக இன்பதுன்பங்களை ஊட்டுவன் இவ்வினையே கன்மம் எனப் பெறும், தீவினைப்பயன் சாருங்காலம் இவன் இன்புறக்கொண்ட காரியங் கைகூடாதழியும். இதனாலேதான் கன்மங்கள் போராடுதே என்றார். இதுபற்றியன்றே பெரியார்களும் 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' எனவும் 'தவமுந் தவமுடையார்க்காம்' எனவுங் கூறிவைத்தார்கள். 'போராட்டம்' இது சண்டை என்னும் பொருளது. அறிவுக்கும் கன்மத்திற்கும் போர் நிகழுங்காலத்து அறிவு கன்மத்தை வென்று மேல் நின்று இறைவன்றாளிற் சென்று கூடின் கன்மவாதனை இல்லையாய் ஒழியும்; இதனை,

"கன்றும ரான்பா லன்பாற் கவர்தரு காலமேனும்
வென்றிகொ ளம்புவீழும் வேலையா யினுமிமைப்பிற்
சென்றுறு மமையமேனுந் திருவடி தெளிய நோக்கி
நின்றவர் காணநின்றார் நீள்பவ நீங்கினாரே"

என்று வரும் **பாசுரத்தான்** அறிக.

'பண்டையுள கர்மமே கர்த்தா வெனும்பெயர்ப் பக்ஷநானிச் சிப்பனோ' என்பது. 'பண்டையுள கர்மம்' என்றது அநாதிகர்மத்தை. கன்மமும் நாசோற்பத்தி பண்ணிவரும் ஆதலால் இதனைப் 'பிரவாக அநாதி' என்பாரும் 'ஏக னனேக னின்றுகரும மாயை யிரண்டா விவையா றுதியில்' எனவும் 'ஆணவமுத லன்றதுபோற் கருமமும்' எனவும் ஒப்ப ஓதுகின்றனராதலின் மூவகை வினைக்கும் (ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம்) முதற்காரணமாகிய மூலகன்மம் ஒன்று அநாதி நித்தியமாயுண்டென்பாருமென இருவகைப்பட உரைப்பார் பெரியார்.

இவ்வினை ஈட்டப்படுங்கால் மந்திரம் முதலிய அத்துவாக்களிடமாக மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணங்களால் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர்பெற்று, பின்னர் பக்குவப்படும்வரையில் சூக்கும கன்மமாய்ப் புத்தி தத்துவத்தைப் பற்றுக்கோடாக மாயையிற் கிடந்து சாதி ஆயுள்போகமென்னும் மூன்றற்கு மேதுவாய் முறையே சனகந் தாரகம் போக்கியம் என்னும் மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியம் பாவமென்னும் பரியாயப் பெயர்பெற்றுப் பின்னர் பயன்படுங் காலத்து ஆதிதெய்விகம், ஆதியான்மிகம், ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலவகைப்பட்டுப் பிராரப்தமெனப் பெயர்பெறும். இவ்வாறு பாகுபாடுபெற்ற கருமங்கள்,

"பல்லாயு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலை—தொல்லைப்



பழவினையு மன்ன தகைத்ததே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு"

என்றபடி தாமே பயனை நுகர்விக்கும் ஆற்றலுடையன ஆதலின் உயிர்கட்கு வினைப்பயனை ஊட்டுவிக்க இறைவன் ஒருவன் வேண்டற்பாலனல்லன் என்று கூறும் சமயவாதிகளுஞ் சிலர் உண்டாதலினால் அவர்தம் கொள்கை தமக்கு உடன்பாடன்று என்பார், 'கர்மமே கர்த்தாவெனும் பெயர்பக்ஷநானிச்சிப்பனோ' என்றார். 'கர்த்தா' இது ஆக்குவோன் முதல்வன் என்னும் பொருளில் நின்றது. 'பக்ஷம்' இது சமயப்பக்ஷத்தை உணர்த்திற்று. 'பக்ஷநா னிச்சிப்பனோ' என்றதனால் அவர் பக்ஷத்திற்கு உடன்படேன் என்பது பொருளாம். 'கர்மமே கடவுள்' கடவுள் எனத் தனிப்பட ஒன்றில்லை என்னும் 'கொள்கையைக் கொள்ளேன்' என்பது இதன் கருத்தாகும். 'பண்டை' இது 'பண்டு' என்னும் குற்றுகரம் ஐகாரம்பெற்று நின்றது. இதனை,

"ஐயீற் றுடைக் குற்றுகரமு முளவே"

என்ற இலக்கணத்தால் அறிக.

4

[இறைவனே! எல்லாம் தேவரீரின் செயலே, தேவரீரையன்றி நான் என்ப தோன்றிலலை என்னும் இந்த நிலைபெற சிரத்தையும் ஞானமுந்தந்து காத்தருள்செய் என்கின்றார்]

சந்ததமும் எனது செயல் நினது செயல் யானெனுந்
தன்மை நினை யன்றியில்லாத்
தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே
இந்தநிலை தெளியநான் நெக்குருகி வாடிய
இயற்கைதிரு வுளமறியுமே
இந்நிலையி லேசற் றிருக்கஎன் றால்மடமை
இதசத்ரு வாகவந்து
சிந்தைகுடி கொள்ளுதே மலமாயை கன்மந்
திரும்புமோ தொடுவழக்காய்ச்
சென்மம்வரு மோஎனவும் யோசிக்கு தேமனது
சிரத்தையெனும் வாளுமுதவிப்
பந்தமற மெய்ஞ்ஞான தீரமுந் தந்தெனைப்
பாதுகாத் தருள்செய்குவாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எல்லா இடத்தும், நீக்கம்-நீங்குதல், அற - இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து நிற்கின்ற,

பரி-மிகுந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே-பேரின்பமே! சந்ததமும்-எப்பொழுதும், எனது-அடியேனுடைய, செயல்-செய்கைகள் எல்லாம், நினது-தேவரீரது, செயல்-செய்கைகளே, யான்-நான், எனும் - என்று எண்ணும், தன்மை-தன்மை, நின்னை-தேவரீரை, அன்றி-அல்லாமல், இல்லா-இல்லாத, தன்மையால்-தன்மையினால், வேறு - அடியேன் தேவரீருக்கு வேறாகிய ஒரு பொருள், அல்லேன் - அல்ல, இதுவே - இந்த நல்ல நிலையே, வேதாந்தம்-வேதத்தின் முடிபாகிய உபநிடதமும், சித்தாந்தம் - சித்தாந்தமும் ஆகிய இரண்டினுடைய, சமரச சுபாவம் - ஒன்றுபட்டிணங்கி யிருக்கும் இயற்கை நிலையாகும், இந்த-இந்த, நிலை - (நல்ல) நிலையை, தெளிய - அறிந்து உணர, நான் - அடியேன், நெக்கு உருகி - மனம் கட்டுவிட்டு நெகிழ்ந்து இளகி, வாடிய-வாட்டமடைந்த, இயற்கை-தன்மையை, திருவுளம்-தேவரீரின் திருவுள்ளம், அறியுமே-அறிந்திருக்குமே, இ - இந்த, நிலையிலே - அடிமையான நிலையிலே, சற்று - சிறிதுநேரம், இருக்க - இருப்போம், என்றால் - என்று எண்ணினலோ, மடமை-அறியாமையானது, இதசத்துரு - நன்மை செய்வது போற் காட்டித் தீமையைச் செய்யும் வஞ்சகசத்துருவாக, ஆக-ஆக, வந்து-தோன்றி, சிந்தை - அடியேனது மனத்திலே, குடி கொள்ளுதே - நிலைத்து நிற்கின்றதே, மலம்-ஆணவமும், மாயை-மாயையும், கன்மம்-கன்மமும் என்னும் மூன்று மலங்களும், திரும்புமோ - மறுபடியும் தொடருமோ என்றும், தொடு-காரணகாரியத்தொடர்ச்சி, வழக்காய் - வழக்காய், சென்மம்-பிறப்பு, வருமோ-வந்துவிடுமோ, எனவும்-என்றும், மனது - அடியேனுடைய மனது, யோசிக்குதே-எண்ணுகிற்கின்றதே, (ஆகையினால் மும்மலங்களையும் பிறப்பையும் அறுத்து வீழ்த்தி அழிக்க) சிரத்தை-சிரத்தை என்னும், வாளும்-வாட்படையையும், உதவி-தந்தருளி, பந்தம்அற-பாசபந்தத் தொடர்பு ஒழிய, மெய்-உண்மை, ஞானம் - ஞானமாகிய, தீரம் • தீரத்தையும், தந்து-கொடுத்தருளி, எனை - அடியேனை, பாதுகாத்து - காப்பாற்றி, அருள் - திருஅருளை, செய்குவாய்-புரிந்தருள்வாயாக எ-று.

(வி-ரை) 'சந்ததமு மெனதுசெயல் நினதுசெயல்' என்பது, ஞான திரோதகமாகியும், அறியாமைக் குரைத்ததாகியும் செம்பிற் களிம்புபோல உயிரினிடத்துள்ள குற்றமாயும், அநாதிபந்தமாயும், சடமாயும், பலவாறால் அழிவெய்தும் ஆதலால் அநாதிபந்தம் பெறப்படாமையினால் ஒன்றேயாகியும், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் உயிர்ப் பாகுபாட்டிற்கு ஏதுவாய் உயிர்கள்தோறும் தனித்தனி வெவ்வேறாய் மறைத்து நின்று தம்தம் கால எல்லைகளிலே நீங்கும் தன்மையதாய்ச் சத்திகள் பல உடைத்தாயும், உயிர்கள் மூன்று அவத்தைகளும் படுதற்கு மூலகாரணமாயும், நித்தமாயும், வியாபகமாயும், வியாபகமாகிய உயிர் அணுத்தன்மையுறச் செய்தலினாலே ஆணவமென்னும் பெயருடையதாயும், பசுத்துவம், பசுநீகாரம், மிருத்யு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை முதலாகிய காரணக் குறிப்பெயர்கள் உடையதாகவும் நிற்கும் சகசமலத்தால் மறைப்புண்டு முழு மூடமாய்த் தன்னையும் தலைவனையும் உணராதபடி கிடக்கும் உயிர்களுக்கு



மாயாகாரியமாகிய தநு, கரண, புவன, போகங்களைத்தந்து அவைகளை ஆட்டுவித்து இயக்குகின்றவன் இறைவன் ஆதலினால், 'சந்ததமும் எனது செயல் நினதுசெயல்' என்றார்.

வேதாகமாதிகளினாலே அறுதியிட்டுச் சொல்லப்படும் பொருள்கள் மூன்று. அவை உலகுயிர்க்கடவுள் என்பன. அவையிற்றுள் கடவுள் உலகுயிர்களில் நீக்கமற நிறைந்து நின்று அவைகளை இயக்குவது. இறைவனை விடுத்து உலகுயிர்கள் வேறாகத் தனித்து நின்று செய்யுந் தொழிலில்லை யாகையால், 'யானென்னுந் தன்மை நின்னையன்றி யில்லாத தன்மையால் வேறலேன்' என்றார். இதனால் கடவுள் உலகுயிரோடொன்றி நின்றே எல்லாத் தொழிலையுஞ் செய்து வருகின்றமையினை விளக்கினார். இதுபற்றியே,

"அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குணங்கள்—நெறியில்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில் சகன் சூழ் கொள்பவர்க்கு" என்றதினாலும்,

"மனவாக்குக் காயமுயிர் மன்னி யசைப்பானு
மனமாதி போக மளிப்பானு—நனவாதி
கூட்டிவிடு வானுமுத்தி கூட்டிடுவானு பிறப்பி
லாட்டிவிடு வானு மரன்"

என்னும் வெண்பாவானும்,

"நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினால்
தன்னாலு மாடிச் சலித்திடுமோ வந்த தன்மையைப்போல்
உன்னாலி யானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே"

எனப் பட்டினத்தடிகளும்,

"அரன் கழலை யகன்று நிற்ப தெங்கே"

எனச் சிவஞான சித்தியாரிலும்,

"ஆட்டுவித்தா லாரொருவர் அடாதாரே அடக்கு
வித்தா லாரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தா லாலொருவர் ஓடாதாரே உருக்குவித்தா
லாரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் கூறியதும்,

"அவனன்றி யோரணுவும் அசையாது"

என்னும் பழமொழியின் கருத்துங் கருதத்தக்கது.

'வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே' என்பது, வேதாந்தம், இது வேதங்களின் முடிவாய் நின்று உண்மைப்பொருளின் தத்துவ உணர்ச்சியினை உள்ளபடி கொளுத்த வந்த உபநிஷத்துக்கள் என்று பொருள். வேத+அந்தம்=வேதாந்தம்; இது வடமொழி தீர்க்கசந்தி, வேதம் - கடவுளைப்பற்றியும், அக்கடவுளைக் குறித்துச் செய்யும் யாகங்களைக் குறித்துஞ் சொல்லும் நூலேயாம். வேதாந்தம் அவ்வாறன்றி முற்றிலும் பிரம்ம விசாரம் புரிவதே அல்லாமல் வேறு விஷயத்தைக் குறித்துப் பேசாதாகையால், 'வேதாந்தம்' என்றார்.

'சித்தாந்தம்' இது, தத்துவப்பொருளின் நிச்சயத்தைக் கூறுவது. சித்தாந்தத்தை யுணர்த்தும் நூல்கள் சிவாகமங்களின் ஞானகாண்டப் பொருளைச் சுருக்கித் தெள்ளிதின் விளக்கவந்த நூலென்ப. இதனையே, மெய்கண்ட சாத்திரமெனவும் ஒருசாரார் கூறுப. அவையன்றி, அந்த ஞானகாண்டப்பொருளைத் தமிழில் விளக்கும் நூல்கள் சைவசமய குரவர் நால்வர் அருளிச்செய்த தேவார திருவாசகங்களெனினும் இழுக்காமை அறிக. இவைகளின் பெயரை,

"உந்தி களிறே யுயர்போதஞ் சித்தியார்
பிந்தி ருபாவுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
பண்புவினா போற்றி கொடியாசமிலா நெஞ்சுவிடு
வண்மைநெறி சங்கற்ப முற்று" என்ற **வெண்பாவாலும்,**

"மாவாய்மைச் சம்பந்தர் வாக்கரசர் வன்றொண்டர் வாதவூரர்
பூவாயின் றேறலெனுந் தமிழ்மறையாந் திருக்கடைக் காப்புச்சீர்சாலும்
தேவாரந் திருப்பாட்டுத் திருவாசகமு முறையாற் செப்புகின்ற
நாவாயே நாவாயாம் பவக்கடலைக் கடந்துமுத்தி நகர்சேர்தற்கோ"

என்னுஞ் செய்யுளானும் சித்தாந்தமென்பதன் விரிவை அறிக.

'சமரசம்' என்றது, சம+ரசம் என்னும் இருவட சொற்களின் சந்தி. சமத்துவமாகிய சாரமுடையது என்பது பொருள். இது, 'சுபாவம்' இது, இயற்கை. தன்மை என்னும் பொருளது. சைவசமயமானது பல சமயங்களிலுங் கண்ட முடிவுகளைத் தனக்கு உடன்பாடாகக்கொண்டு அவ்வம் முதலுக்குப் பயனுளதெனவுங்கூறி, அவையாவும் சோபானமுறையில் தன்னுடைய முடிவினைப் பயம்பிக்கும் என நிச்சயித்துச் சொல்லுந் தன்மையால் சமரஸம் எனவுங் கூறினர்.

'இந்த நிலை தெளிய நானெனக் குருகிவாடிய இயற்கை திருவுளமறியுமே' என்பது, அறிவானும் அறிவிப்பானும் அறிவாயறிகின்றவனும், அறிகின்ற மெய்ப்பொருளும் நீயே என்று உண்மைநூல் வாயிலாகக் கற்றுணர்ந்தாலும் யாதொரு விதமான பிரயோசனமுங் கிடையாது.



அநுபவத்தினால் மனத்தெளிவுற்று நிற்பினுந் தேடப்படாத் திருவருட் செல்வத்தை யடைந்துள்ளவர்களின் சகாயமும், நினது திருவருட்பேறுமே திண்ணமாக வேண்டுவ வாதலின் இவைபற்றி உனைப்பெறயான் உடல் தளர்ந்து உள்ளங் கசிந்து உருகித் தவித்து வாடி வருந்தியநிலை யார் மனத்தும் உறைகின்ற சோதிப்பிழம்பாகிய நீ உணராதது சாலுமோ? இது ஒரு அற்புதமன்றோவெனச் சொல்ல வந்தவர், 'இந்நிலை தெளிய நான் நெக்குருகி வாடிய இயற்கை திருவுள மறியுமே' என்றார். இதனால், இறைவன் ஸர்வ வியாபகனாய் நின்று யாவற்றையும் அறியுந்திறம் விளக்கியதாம்.

'இந்நிலை' என்பது அண்மைச் சுட்டு. இது, எல்லாம் இறைவன் செயல், இறைவனன்றி ஒன்றுமில்லை என்னும் போதம் உணர்ந்து நிற்கும் நிலையை உணர்த்திற்று. 'சற்று' இது கால நுணுக்கத்தைக் காட்டி நின்றது. 'மடமை' என்றது அறியாத்தன்மை. இது பண்புப்பெயர் மை ஈறு பெற்றது. தத்துவமுணர்ந்த பெரியார்களுக்கும் பூர்வ ஜன்ம வாசனையினால் அறியாமை வந்து எய்தி மூடுமாதலினால் 'மடமை இது சத்துருவாக வந்து சிந்தைகுடி கொள்ளுதே' என்றார். 'இத சத்துரு' என்பது இதம்+சத்துரு என்னும் இருவடசொற்சந்தி. இதற்கு நன்மை செய்வதுபோற் காட்டித் தீமை செய்து அழித்து ஒழிக்கும் வஞ்சச் சத்துரு என்பது பொருளாம். 'குடி கொள்ளல்' என்றது நிலைத்து நிற்றலை உணர்த்தும். 'கொள்ளுதே' இது 'கொள்ளுகிறதே' என்பதன் மரூஉ. ஈற்று ஏகாரம் இரக்கப் பொருளில் வந்தது. சிந்திப்பதற்கு இடமாக இருத்தலின் மனத்தைச் 'சிந்தை' என்றார். 'மலம்' என்றது ஆணவமலத்தை. 'மாயை' என்றது மாயா மலத்தை. 'கன்மம்' என்றது கன்ம மலத்தை. இம்மூன்றையும் மும்மலங்களென்பர். இம்மும்மலங்களும் அறியாமை குடிகொண்ட உளத்து எய்துவன ஆதலின் 'மடமை இதசத்துரு வாகவந்து சிந்தைகுடி கொள்ளுதே' என்றதன்பின் வைத்தார். 'தொடுவழக்கு' என்றது விடாவழக்காய், விடாத் தொடர்பாய், விடாப்பயிற்சியாய் எனப் பொருள்தரும். இனிப் போர் தொடுக்கும் வழக்காய் எனவும் உரைப்பர்.

'கன்மம்' இது 'கர்மம்' என்னும் வடசொற் சிதைவு. 'யோசிக்குதே' இது யோசிக்கின்றதே என்பதன் மரூஉ. மடமை, ஆணவம், மாயை, கன்மம், பிறப்பு முதலியவற்றை அறுத்தொழிக்க சிரத்தையை வாளாக உதவவேண்டும் என்பார். 'பந்தம்' என்றது பாசபந்தத்தை. 'வாளை' தீரமில்லாதவர்க்கீந்தால் யாதொரு பயனுஞ் செய்யாது. பேடிகை ஆயுதமாய் ஒருபயனுஞ் செய்யாதொழியும், 'வயப்படை மற்றென் பயக்கும் ஆணல்லவர்க்கு' என்பது முதலாகக் கூறப்பட்ட பெரியார் வாக்குக் கிலக்கியமாய் வீழும் ஆதலினால் சிரத்தையாகிய வாள்தருந் தேவரீர் உண்மை ஞான தீரமுந் தரவேண்டும் என்பார் 'மெய்ஞ்ஞான தீரமுந் தந்து' என்றார். 'தீரம்' இது மனதிடத்தை, சலியா நிலைமையை உணர்த்தும். 'தீரமும்' என்றதன்கண் உள்ள ஈற்று உம்மை இறந்தததழீஇய எச்சஉம்மை. மனோ

டத்தையும் வெல்லும் வாளையுந் தந்திட்டாலும் கடைசிவரை நின்அருள் இலாத காலத்து வெற்றி பெற்று இன்பம் எய்தமுடியாது, கடைபோக நீ காத்து அருள்புரிய வேண்டும் என்பார். 'எனப் பாதுகாத் தருள் செய்கு வாய்' என்ருர். 'செய்குவாய்' இது 'செய்வாய்' எனற்பாலது 'கு' விரித்தல் விகாரத்தால் இடையே விரிந்து நின்றது. 5

[பற்பலராஞ் சமயவாதிகள் சொல்லும் பொருள் நிச்சயத்தைக் காணும் பொழுது மனது சஞ்சலப்படுகின்றது இதனல் பரமசுகநிட்டை எய்துமோ என்கின்ருர்]

பூதலய மாகின்ற மாயைமுத லென்பர்சிலர்
பொறிபுலன் அடங்குமிடமே
பொருளென்பர் சிலர்கரண முடிவென்பர் சிலர்குணம்
போனஇட மென்பர்சிலபேர்
நாதவடி வென்பர்சிலர் விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேயிருந்த
நாமென்பர் சிலர்உருவ மாமென்பர் சிலர்கருதி
நாடில்அரு வென்பர்சிலபேர்
பேதமற வுயிர்கெட்ட நிலயமென் றிடுவர்சிலர்
பேசில்அரு ளென்பர்சிலபேர்
பின்னும்முன் னுங்கெட்ட சூனியம தென்பர்சிலர்
பிறவுமே மொழிவர்இவையால்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலால்
பரமசுக நிட்டைபெறுமோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எவ்விடத்தும், நீக்கம்-நீங்குதல், அற-இல்லாதபடி, நிறைகின்ற - நிறைந்து நிற்கின்ற, பரிமிகுந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே-பேரின்பமே! சிலர்-சிலர், பூதம்-ஐம்பெரும் பூதங்களும், லயம் - ஒடுக்கம், ஆகின்ற - அடைகின்ற இடமாகிய, மாயை-மாயையை, முதல் - முதற்பொருள், என்பர் - என்று கூறுவார்கள், சிலர்-சிலர், பொறி-ஐம்பொறிகளால் நுகரப்படுகின்ற, புலன்-ஐம்புலன்களும், அடங்கும்-அடங்கி இருக்கும், இடமே - இடமே, பொருள் - முதற்பொருள், என்பர்-என்று கூறுவர், சிலர்-சிலர், கரணம்-அந்தக்கரணங்கள், முடிவு-போய் ஒடுங்கும் இடமே, என்பர்-என்று கூறுவர், சிலபேர்-சிலர், குணம்-முக்குணங் களும், போன-ஒடுங்கின, இடம் - இடமே, என்பர் - என்று கூறுவர், சிலர்-சிலர், நாதம் - நாதத்தின், வடிவு - ரூபமே, என்பர் - முதற்பொருள் என்பர், சிலர் - சிலர், விந்து-விந்துவின், மயம் - வடிவமே, என்பர் - முதற்பொருள்



என்பர், சிலர்-சிலர், நட்டநடுவே - நடுமத்தியிலே, இருந்த - இருக்கின்ற, நாம் - ஆன்மாக்களாகிய நாமே, என்பர் - முதற்பொருள் என்று கூறுவர், சிலர்-சிலர், உருவம் - உருவப்பொருளே, ஆம் - முதற்பொருளாகும், என்பர்-என்று கூறுவர், சிலபேர் - சிலபேர்கள், கருதி - எண்ணி, நாடில் - துணியும் இடத்தே, அரு-அருவமே, என்பர்-முதற்பொருள் என்று கூருநிற்பர், சிலர்-சிலர், பேதம்-வேறுபாடு, அற-ஒழிய, உயிர் - ஜீவபோதம், கெட்ட - ஒழிந்த, நிலயம் - இடமே, என்றிடுவர் - முதற்பொருள் என்பர், சிலபேர் - சிலர்கள், பேசில் - ஆராய்ந்துகூறின், அருள் - திருஅருளே, என்பர் - முதற்பொருள் என்று கூறுவார்கள், சிலர் - சிலர், பின்னும் - அந்தமும், முன்னும்-ஆதியும், கெட்ட-ஒழிந்த, சூன்யம் - சூனியமே, அது - அந்த முதற்பொருள், என்பர்-என்று சொல்லுவர், (இன்னுஞ் சிலபேர்) பிறவும் - மற்று மற்றுமுள்ள நிலைகளை, மொழிவர்-முதற்பொருள் என்று சொல்லா நிற்பர், இவையால் - (இவ்வாறு இவர்கள் சொல்லும்) இவைகளால், மனது-அடியேனின் மனது, பாதரசம் - பாதரசம்போல, ஆய் - ஆகி, சஞ்சலப்படும் - சஞ்சலத்தை அடையும், அலால் - இதல்லாமல், பரம-மேலான, சுக - இன்ப, நிட்டை - நிஷ்டையை, பெறுமோ-அடையுமோ! எ-று.

(வி-ரை) உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்குவ தன்றி நிமித்தகாரணன் ஒருவன் உண்டு எனக் கொண்டாலும், அவன் மாட்டு அது ஒடுங்கும் என்றல் பொருந்தாமையினல், யாது எவ்விடத்து ஒடுங்கும், அஃது அதனில் உற்பத்தியாம் என்னும் அவிநாபாவத்தால் மாயையின் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும் இதற்கோர் இறைவன் வேண்டாம். இதை விடுத்து இறைவன் ஒருவன் நிமித்த கர்த்தாவாக உண்டாவனென்னில் அப்போது பிரகிருதி மாயை எக்காரணத்தினல் வேண்டுவது; ஆகையினலே மாயையே முதற்காரணமாகுமென்பார் **நிரீசுவர வாதிகளாகிய சாங்கிய மதவாதிகள்**, அவர்களது கொள்கையினையே இங்கு, 'பூதலயமாகின்ற மாயை முதலென்பர் சிலர்' என வைத்தோதின ரென்க. இதனல் அறிந்துகொள்வது யாதெனில், உள்ளப்பிரபஞ்சமே மாயையின் ஒடுங்கி மீளத் தோன்றும். அங்ஙனமிருக்க, அதற்கொரு கடவுள் வேண்டுவ தில்லை என்பதை நிச்சயித்துக் கொள்ளவேண்டும் என்னும் சித்தாந்தமாம்.

பொருளின் உண்மையெல்லாஞ் சித்தாந்த சைவரோடு ஒப்பக் கொள்ளும் அந்தரங்க வுரிமையுடையவரேயினும், அவ்வப்பொருள்களுக்குக் கூறும் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையின் முரணுதலான் அவர் சமயத்தின் கொள்கையின்படி மெய் வாய் கண் மூக்கு செவி முதலிய பொறிகளினலே கவரப்படும் விஷயாதிகள் தன்னிற்றனே ஒடுங்கிக் கல்லைப்போற் கிடத்தலே பொருளல்லாமல் வேறென்றில்லை எனப் புகல வந்தவர் ஈண்டு, 'பொறிபுலனடங்குமிடமே பொருளென்பர் சிலர்' என்ருர்.

ஒன்றினிலிருந்து மற்றென்றிற்குப்போதல் என்னுங் கொள்கையினல், இப்**பாசுபதசமயி**யாவான், ஆன்மாவின் முன்னிலையிற் காந்தபசாசம்

போல உடல் இயங்குழி அதன்கண் நின்று கருவிகளை விஷயங்களை அநுபவிக்கும். மலம் நீங்கும்வழிக் கண்ணாடியின் முகவொளி தோற்று மாறுபோல முதல்வன் திருவருள் ஆன்மாவின் மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றும். அவ்விடத்து உப்பளத்தின் இட்டவையெல்லாம் உப்பாமாறு போல ஆன்மா சிவமேயாய், அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறிச் சிவத்தை அறியும் நிலைமைத்தே யென்பார், 'காரணமுடி வென்பர் சிலர்' என்றார். இங்ஙனம் கொள்ளு பவரைச் **சங்கிராந்தவாதசமயிகள்** என்ப. **சங்கிராந்தவாதமாவது**-ஒன்றி லிருந்து மற்றொன்றிற்குப்போதல் என்பதை வாதிக்கும் கொள்கை.

ஞானவரணீயம், தரிசனவரணீயம், வேதனீயம், மோகனீயம், ஆயு, நாமங்கோத்திரம் அந்தராயம் என்பனவாய எண்குணங்களையும், யாக்கைக்கு உறும், பசி, நீர் வேட்டல், பயம், சினம், உவகை வேண்டல், நினைப்பு, நரை, நோய், உறக்கம், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், கேதம், கையறவு முதலியவான பதினெண் குற்றங்களையும், கொட்டாவி, கெட்டை, குறுகுறுப்பு, மூச்சிடல், அலமரலொடு நட்டுவிழுதல் என்று இவ் வகையாகப் பாகுபடுத்திச் சொல்லி வருகின்றதான குணத்திரயங்களையுங் களைந்து பழம் பிறப்பினடியாக வரும் பழவினைகளை அநுபவித்தொழிந்த கணத்தானே வீட்டின்பமெய்துவதற்குத் தக்கதென **நிகண்டாவாதிக**ளென் னும் **அருகமதத்தினர்** கூறுவராதலின், 'குணம்போன விடமென்பர் சிலர்' என்றார். காரணமாகிய பரப்பிரமம் இறுதிக் காலத்தில் சத்த வடிவிற்றாய் இருக்கும். அது அவிச்சையினால் சடமும் சித்துமாய உலகங்களாய் விரியும். முடிவின்கண் சத்தமாத்திரையே உள்ளதென்று அறிவதே பேரின்பமெனக் கொள்ளுதல் வேண்டுமென்னுங் கொள்கையினைக் கொண்டவர் **சத்தப் பிரம வாதிகளா**தலின், அவர்களின் கொள்கையினையே இங்கு, 'நாதமுடிவென் பர்' என்றார். மகா மாயையிலே நாதமும், நாதத்திலே விந்துவும், அவ்விந்து விலே சாதாக்கியமும், சாதாக்கியத்திலே ஈச்சுரமும் ஈச்சுரத்திலே சுத்த வித்தையும் தோன்றும். மேற்சொன்ன விந்துவினில் சங்காரமுறைபற்றி வைகரிமுதல் வைத்தெண்ணப்படும் நாலுவாக்கும், ஐம்பத்தோரட்சரங்களும், எண்பத்தொரு பதமும், பஞ்ச கலைகளும், சத்தகோடி மகா மந்திரங்களும், மற்றும், காலமும், நியதியும், கலையும், வித்தை, அராகம் முதலியவும், குண ரூபமான மூலப்பகுதியும், அம்மூலப் பிரகிருதினின்றும் முக்குணமும் தோன்றும், அம்முக்குணங்களுந் தோன்றாமலிருப்பதே அவ்யக்தம், அவ் யக்தத்திலிருந்து சித்தம், சித்தத்தில் புத்தி, புத்தியில் அகங்காரம், அகங் காரத்தில் அகங்கார வகைகளுந் தோன்றிப் பின்னர் குணத்திரியங்கள் தோன்றுவதற்கும் ஆதிகாரணமாக நிற்பது விந்துவாகையாலே இங்கே, 'விந்துமயமென்பர் சிலர்' என்றார். இதனை,

"விந்து விளைவும் விளைவின் பயன்முற்று
மந்த வழிவு மடக்கத்தி லாக்கமு



நந்திய நாசமு நாதத்தாற் பேதமுந்
தந்துணர் வோர்க்குச் சமயமாகும் விந்துவே"

எனத் **திருமந்திரத்து**ள் விந்துவின் வியாபகஞ் சொல்லியதும்,

"விந்துவின் மாயையாகி மாயையின் அவ்வியத்தம்
வந்திடும் விந்துதன்பால் வைகரி யாதிமாயை
முந்திடும் அராகமாதி முக்குண மாதிமூலம்
தந்திடுஞ் சிவனவன்தன் சந்நிதி தன்னில்நின்றே"

எனச் **சிவஞானசித்தியாரி**லும் வந்துள்ளன அறிக.

"ஏகா கோருத் ரோநத் விதீயః" என்று அதர்வசிரசு **உபநிஷத்தில்** கூறியபடி, ஒருவனேபதி, இரண்டாவதாக ஒருவனில்லை; அதாவது பிரம மத்தைக்காட்டிலும் ஒரு பதார்த்தமில்லை என்றும், சொல்லுவதாம். நானே பிரம்மம்; என்னிலும் பிரமம் வேறில்லை; இன்பமும்தானே, தன்னைத்தானே அநுபவிக்கின்றேன்; தேகமென்றும் கருவியென்றும் காரணமென்றும், காற்றென்றும் இத்தகையதான வேறுபாடுகளுமில்லாமல், இத்துணையது இவ்வண்ணத்தது, இன்னிலையது இப்போது என்று மொழிவதற்கு ஒரு வார்த்தையில்லாமல், வானாதிபூதங்கள் அழியவும், தனக்கொரு அழிவுமில்லாமல் நின்று நானே பிரமம் என்றும் உதித்தெழும் ஞானமே இறைவனெனப் பொருள்படுத்துவர் **ஏகான்மவாதிகள்**. ஆயின், இவ் வேகான்மவாதியின் கொள்கை நான்குவகையாகச் சிவபோத ஞானத்தில் பிரித்துக் கூறப்பட்டது. ஈண்டு, நிர்மலமாகிய பரப்பிரமம் மாயாவுபாதி களிலே கட்டுப்பட்டு, இவ்வுடல் மயங்கி நிற்கின்றதே ஆன்மஸ்வரூபம். அந்த ஆன்மாவும் மாயையின் சம்பந்தம் நீங்கி அங்கியினைவிட்ட பொன்னின் தன்மையினை யடைந்து தானே தானாகி விளங்குவது; இதனையே, 'நட்ட நடுவேயிருந்து நாமென்பர் சிலர்' என்றார். இதனை,

"ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்றநீ பாசத்தோ டுளைகா—ணொன்றின்றே
லக்கரங்க ளின்றா மகரவுயி ரின்றே
லிக்கிரமத் தென்று மிருக்கு"

எனச் **சிவஞான போதத்**தில் கூறியதறிக.

இருபத்துநாலாந் தத்துவமாகிய குணத்துவத்தின்மேல் இருபத் தைந்தாம் தத்துவம் வாசுதேவனென்று ஒருவனுளன். அவனே பரம் பொருள். அவனிடத்தினின்றும், கண்ணனும் அநிருதனும், மகரத் துவஜனும், இரௌகிணேயனும் என நால்வர் உலகைப் படைத்தற் பொருட்டுத் தோன்றினர். இந்த நால்வகை வியூகங்களாற் சடமுஞ்சித்து மாகிய எல்லாவுலகங்களும் படைக்கப்பட்டிருக்கின்றனவாதலின், எல்லாம் வாசுதேவன் பரிணாமமேயாம். இதுவே, நித்தியவிபூதியாகிய பரமபதத்தின் கண்ணே ஸ்ரீபூமி நீளாதேவிஸமேதராய்ச் சங்கசக்கரகதாதாராய் நீலமேகச்

தாமளராய் நித்திய சூரிகள் சேவைசெய்ய எழுந்தருளியிருப்பவரென்று விளக்கியதால் அவ்வாசுதேவனென்பார் முதல்வரெனப் **பாஞ்சராத்திரமதமும்**, இதனைப்போலவே, அஞ்ஞானந்தகாரத்தில் மூழ்கிக்கிடக்கும் ஆன்மாவை இறைவனது கிருபையானது தானேயாய்வந்து எடுத்துச்சென்று தற்சொரூபமாக வந்த மாயவுடல் தானே அழிதலிலாத் தன்மையினையுற்று முதல்வனுடன் ஒருபடித்தாவதே முத்தி என்பர் **சிவசமவாதியர்**. இவ்விருவரது கொள்கைகளும் ஒரேபடித்தாய் நிற்றலின், 'உருவமாமென்பர் சிலர்' என்றார்.

சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம். பரமார்த்தத்திலே சத்தொன்றே மெய்ப்பொருள்; ஏனைய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினாற் காணப்படுவனவாகலிற் பொய், இங்ஙனந்தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை, பிரமம்போலச் சத்துமின்றி அநிர்வசனமாயிருக்கும். இந்த மாயைக்கு வேறாகிய பிரமரூபமே யான் என வேதாந்த ஞானத்தால் அறிவதே பிரமமென்பாராகையால், 'சுருதி நாடில் அருவென்பர் சிலபேர்' என்றார்.

எந்தப்பிரமமானது மேலே சொல்லப்பட்டதோ அந்தப் பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அவ்விதம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினாற் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒரு பொருளே. வேதாந்த ஞானத்தான் உடம்பிற்கு வேறாகிய ஆத்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமம் என்னும் கொள்கையினைக் கொண்டவர்கள் **பாற்கரியவாதிகளா**தலின், 'பேதமறவுயிர் கெட்ட நிலயமென்றிடுவர் சிலர்' என்றார். இதனை,

"உபாதாநே கிலாதாரே ஜகந்தி பரமேஸ்வரே
ஸர்கஸ்திதி லயாந்யாந்தி புத்புதா நிவவாரிணி"

என்கிற **ஆன்மபோதத்தா**லும்,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்"

எனச் **சிவஞானபோதத்தி**லும்,

"திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவது மாயவை யவைதொறும்
உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே"

எனத் **திருவாய்மொழியி**லும்,

"கரமிலாப் பசுமுதல் கரங்கள் காலிலா
மரமுத லானதா பரங்களாய் வரும்



புரமெலா நின்றுயிர் போற்றி யூட்டிடும்
பரமெலாம் பூண்டவ னொருவன் பார்க்கினே"

எனப் **பாகவதத்தி**லும் வருவனவற்றாலும் அறிக.

நிலைபெற்ற பரவெளியை மனவெளியில் பெற்று அறிவு என்னும் ஒரு நினைவோடு நிற்கும் வன்மை வாய்ந்த ஆன்மாவானது வலையிற் சிக்கிய மீனைப்போல மாயையாலும் கன்மத்தாலும் மறைக்கப்பட்டு உலகமென்னும் படுகுழியில் வீழ்ந்துகொண்டு இருக்கையில், பக்தியைச் செய்து அதன்மீது ஞானத்தைச் செலுத்தும்படிச் செய்து துன்ப வலையாகிய பாசக்கட்டை அறுத்தெறியும் வழியை ஆசாரியன் கருணையால் அடைந்து அவை ஒழிந்த வழி, பண்ணையு மோசையும் போலவும், பழமும் மதுவும் போலவும் இறைவனாகிய அருளோடு ஆன்மாவாகிய அருள் இண்டறக் கலந்திடுவதே, இறைவன் என்பர் **ஐக்கியவாதி** மதத்தினராதலின் 'பேசிலரு ளென்பர் சிலபேர்' என்றார்.

மாயா காரியமாகிய ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் மூன்றும் பாழாகி, அதன் சேர்க்கைக்குக் காரணமான ஆணவமும் பாழாகி, அதுவும் கெட்டொழிய இவைகளெல்லாவற்றையுங் கடந்தொளிரும் இறைவன்மாட்டு அன்பு செலுத்துவதையே சிலர் முதலெனக் கூறுவராதலின், 'முன்னும் பின்னுங் கெட்ட சூனியமதென்பர் சிலபேர்' என்றார். இப்படிப் பல மதத்தினர்களும் பற்பலவிதமான கொள்கைகளைக் கொண்டவர்களாகி நிற்பதால் என் மனம் எக்கொள்கையினைப் பின்பற்றி ஒழுகுவதென்ன ஒருவழிப்படாவண்ணம் கொள்ளியினிடத்து எறும்புபோலச் சலனமுறும் என்பார், 'இவையாற் பாதரசமாய் மனது சஞ்சலப்படும்' என்றார். பாதரசம் என்றது, ஒருவகைத் திராவகம்; அது விட்டவிடத்தில் தங்காமல் ஓடுந் தன்மைக்கே உவமையாக்கிச் சொன்னதாம். இங்கே சொல்லிவந்த ஒவ்வொரு மதத்தினர்களுடைய கொள்கைகளும் ஆணவமலத்தாலும், திரோதமலத்தாலும், மாயாகாரண மலத்தாலும், கன்மமலத்தாலும், மாயா காரியமாகிய மாயேயமலத்தாலும் கட்டுப்படுகின்ற பாசஞானமும், ஆன்மாக்கள் அளவுபடுத்தற்கரியதாய் ஒரு காலத்திலும் அழியாமல் அஞ்ஞானமாகிய ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடந்து, வினைக்கீடாகப் பிறவியெடுத்துக் கடவுள் காருண்ணியம் பொருந்தி அவள் அதுவாகிய உடம்பெனத் தான் என்னத் தோன்றாமற் பிரிவற்று நின்று அவ்வுடம்போடு கூடுகையில் எண்ணிறந்த போகங்களை முயற்சியால் அனுபவித்து, அவ்வனுபவத்தாலே நல்வினை தீவினை நுகர்ந்து, அவற்றால் இறந்து பிறந்து வருந்துவதாகிய பசுஞானமுமே கொண்டு விளங்குகின்றமையால், இவ்வகையைப் பின்பற்றின் உண்மை நிஷ்டை கைகூடுமோ என்பார், 'பரமசுக நிஷ்டை பெறுமோ' என்றார். நிஷ்டை - மனம் ஒருமையுற்று நிற்றல். பரமசுகம்- மேலான சுகம்; அதாவது, பேரின்பசுகம். இச்செய்யுளில் சிலர் என்பதெல்லாம் எழுவாயாகி வந்தது. அவைகட்கு, 'என்பர்' என்னும் வினைமுற்றுக்க

னெல்லாம் பயனிலையாகி நின்றன. இதில் வந்த 'ஏ' காரங்கள் தணிவுப் பொருள். 'நிஷ்டை பெறுமோ' இதன் ஈற்றில் நின்ற ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது, பெருது என்னும் பொருளது. 6

[அஞ்ஞானத்தழுந்தி அறிவு சுருங்கி உலகில் உழல்கின்றேன்
மேலான ஞானப்பொருளாகிய இறைவனை அறிந்
திலேன் என்கின்றார்]

அந்தகா ரத்தையோர் அகமாக்கி மின்போலஎன்
அறிவைச் சுருக்கினவரார்
அவ்வறிவு தானுமே பற்றினது பற்றாய்
அழுந்தவுந் தலைமீதிலே
சொந்தமா யெழுதப் படித்ததார் மெய்ஞ்ஞான
சுகநிட்டை சேராமலே
சோற்றுத் துருத்தியைச் சதமெனவும் உண்டுண்டு
தூங்கவைத் தவரார்கொலோ
தந்தைதாய் முதலான அகிலப்ர பஞ்சந்
தனைத்தந்த தெனதாசையோ
தன்னையே நோவனோ பிறரையே நோவனோ
தற்கால மதைநோவனோ
பந்தமா னதுதந்த வினையையே நோவனோ
பரமார்த்தம் ஏதுமறியேன்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எல்லா இடத்தும், நீக்கம்-நீங்குதல், அற-இல்லாதபடி, நிறைகின்ற - நிறைந்து நிற்கின்ற, பரி-மிகுந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே-பேரின்பமே! அந்தகாரத்தை-அறியாமை ஆகிய இருளை, ஓர் - ஒரு, அகம் - வீடாக, ஆக்கி-செய்து, மின்-தோன்றி மறையும் மின், போல் - போல, என்-அடியேனுடைய, அறிவை-அறிவை, சுருக்கினவர் - குறுகும்படிச் செய்வித்தவர், ஆர் - யார்? அ-அந்த, அறிவுதானும் - அறிவும், பற்றினது - தான் பிடித்ததையே, பற்றாய்-ஆதாரமாகக் கொண்டு, அழுந்தவும் - அதிலே மூழ்கிடவும், தலை - அடியேனின் தலையின், மீதிலே-மேலே, சொந்தமாய்-உரிமையுடனே, எழுத-தீட்டுதற்கு, படித்தது-கற்றுக்கொண்டது, ஆர் - யார்? மெய்-உண்மையையும், ஞானம்-அறிவையும், சுகம் - ஆனந்தத்தையும் விளைவிக்கும், நிஷ்டை - சிவயோகநிஷ்டையை, சேராமல்-அடையாமல், சோறு-சோற்றினை அடைத்துவைக்கும், துருத்தியை - துருத்திபோன்றதாகிய இந்த உடம்பை, சதம் - என்றும் உள்ளது, எனவும்-என்றும், உண்டு உண்டு - சாப்பிட்டுச் சாப்பிட்டு, தூங்க-உறங்



கும்படி, வைத்தவர்-வைத்தவர், ஆர்-யார்? தந்தை-தகப்பனும், தாய்-தாயும், முதலான-இவர்கள் முதலான, அகில-எல்லா, பிரபஞ்சந்தனை - உலகங்களையும், தந்தது - அடியேனுக்குத்தந்தது, எனது - அடியேனது, ஆசையோ-வேட்கைமிகுதியோ? (இதற்காக) தன்னையே - என்னை நான் தானே, நோவனோ - நொந்துகொள்வேனோ? பிறரையே - மற்ற அயலார்களையே, நோவனோ-நொந்துகொள்வேனோ? தற்காலம் அதை - இவைகளுக்கெல்லாம் ஆதாரமாக இருந்த இந்தக்காலத்தை, நோவனோ - நொந்துகொள்வேனோ? பந்தம்-பிறவித்தளை, ஆனது-ஆனது, தந்த-தந்த, வினையையே - வினையைத் தான், நோவனோ-நொந்துகொள்வேனோ? பரமார்த்தம் - அடியேன் அடைய வேண்டிய உயர்ந்த பொருளை, ஏது-ஒரு சிறிதும், அறியேன்-அறியாதவனாக இருக்கின்றேன் எ-று.

(வி-ரை) 'அந்தகாரத்தையோர் அகம் ஆக்கி மின்போல் என் அறிவைச் சுருக்கினவரார்' என்பது, 'அந்தகாரம்' என்றது அஞ்ஞான இருளை. அஞ்ஞானமாகிய இருள் செம்பிற் களிம்புபோல ஆன்மக்களிடத்தே அநாதியேயாக வுள்ளது என்பர் சித்தாந்திகள். இதனை,

"ஒன்றதா யநேக சத்தி யுடையதா யுடனு யாதி
யன்றதா யாமா வின்ற னறிவொடு தொழிலை யார்த்து
நின்றுபோத் திருத்து வத்தை நிகழ்த்தி செம்பினிற் களிம்பேய்ந்
தென்றுமஞ் ஞானங் காட்டு மாணவ மியைந்து நின்றே"

என்ற **சிவஞான சித்தியா**ராலும் அறியலாம்.

ஆன்மாக்களுக்கு அறியாமை நீங்கி அறிவு வெளிப்படுதல் இறைவன் அருளால் எய்தும். ஆன்மாக்களின் தவப்பயனுக்குத் தக்கபடி தோன்றும். அறியாமை மானிடத்திருந்தே அறிவு தோன்றும். அறியாமை அறிவுள் மறைவதே அறியாமையின் நீக்கம். ஒளிவர இருள் ஒளிக்குள் மறைந் தாங்கு அறிவு உதிக்க அறியாமை அதனுள் மறையும்; அறிவு மறையவே விளக்கொளி நீங்க இருள் சூழ்ந்தாற்போல் அஞ்ஞனம் தோன்றும். இது கொண்டே 'அந்தகாரத்தையோர் அகமாக்கி' என்றார். 'அகம்' என்றது வீடு, இனி இடம் என இடப்பொருள் கூறுவாரும் உண்டு.

'மின்' என்றது ஒளிக்கும், இருள் நீக்குந்தன்மைக்கும் அது நிற்குங் காலச்சுருக்கத்துக்கும் உவமை தோன்றிய அறிவு முக்குணவயத்தால் மறைதலுமுண்டாதலின் தோன்றி நின்று சிறிதுபொழுது மறையும் மின்னலை உவமையாகத்தந்தார். 'ஆர்' இது யார் என்பதன் மரூஉ. 'அவ்வறிவு தானுமே பற்றினது பற்று யழுந்தவுந் தலைமீதிலே சொந்தமா யெழுதப் படித்தார்' என்பது. 'அவ்வறிவு' இது பண்டறி சுட்டு, அதாவது, ஈண்டு அவ்வாறு மின்போற் சுருக்கிய அறிவு என்பது பொருளாம். பொருள்களை அறிவதற்கு ஆதாரமாக இருத்தலின் அறிவுக்கு அறிவு என்னும் பெயர் காரணக்குறியாக எய்தியது. படிகமானது எந்நிறப் பொருளைச் சேர்ந்தாலும் அந்நிறமாகத் தன் நிறமும் பெறல்போல

சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலே உயிருக்கு இலக்கணமாகலின் 'பற்றினது பற்றாய்' என்றார். பிரமன் உயிர்கள் உடம்பெடுக்கு ஞான்று அவைகளின் இன்பதுன்பங்களை அவைகளின் வினைக்கேற்ப இறைவன் திருஅருள் ஆணையால் அவைகளின் தலையில் எழுதுகின்றானென்பது புராணக் கொள்கையாதலின் 'தலைமீதிலே சொந்தமாய் எழுதப்படித்தார்?' என்றார். 'சொந்தமாய்' என்றது எழுதும் உரிமையுடனே என்பது பொருளாம். 'மெய்ஞ்ஞான சுகநிஷ்டை சேராமலே சோற்றுத் துருத்தியைச் சதமெனவு முண்டுண்டு தூங்கவைத்தவரார்கொலோ' என்பது. 'மெய்' என்றது உண்மையை, இதுவே சத்து; 'ஞானம்' என்றது அறிவை, இதுவே சித்து; 'சுகம்' என்றது பேரின்பத்தை, இதுவே ஆனந்தம்; ஆகவே 'மெய்ஞ்ஞான சுகநிட்டை' என்றது **சச்சிதானந்தத்தை.**

நிட்டை என்றது சச்சிதானந்தத்தை எய்துவிக்கும் சிவயோக நிட்டை கூடவே வீணே யைக் குறித்தது. பிறந்தபயன் சச்சிதானந்தநிட்டை கூடவே வீணே சோற்றுத்துருத்தியாகிய இவ்வுடலைப்பேணி உலகமாயையில் உழன்று பிறவிப்பிணியிற்பட் டல்லலுற அல்ல என்பார். 'சோற்றுத்துருத்தியைச் சதமெனவுமுண்டு தூங்கவைத்தவரார் கொலோ' என்றார். 'துருத்தி' தோற்பை. தினந்தினம் சேற்றைத் திணித்தலால் 'சோற்றுத்துருத்தி' என்றார் உடலை; நீர்மேல் எழுத்தாகும் இவ் யாக்கையைக் கல்வினும் வலிதாக்கருதினமையின் 'துருத்தியைச் சதமெனவும்' என்றார். இத் தேக நிலையற்றதென்பதை,

> "தினைத்தனையோர் பொறையிலா வுயிர்போங் கூட்டைப்
> பொருளென்று மிகவுன்னு மதியாயிந்த
> அனைத்துலகு மாளவா மென்றுபேசு
> ஆங்காரந் தவிர்நெஞ்சே அமரர்க்காக
> முனைத்துவரு மதில்மூன்றும் பொன்றவன்று
> முடுகியவெஞ் சிலைவளைத்துச் செந்தீமூழ்க
> நினைத்தபெருங் கருணையனெய்த் தானமென்று
> நினையுமா நினைந்தக்கா லுய்யலாமே"

என்ற **தேவாரப்பாவா**லும் நன்கறியலாம்.

மிகுதி பற்றி 'உண்டு' என்னுஞ் சொல் 'உண்டுண்டு' என இருமுறை அடுக்கி வந்தது. உண்டு உறங்கி நாளை வாளா போக்குகின்றமையின் 'தூங்க வைத்தவர் ஆர்?' என்றார். 'கொலோ' இதில் 'கொல்' என்பதும் 'ஓ' என்பதும் வினாப் பொருளில்வந்த இடைச்சொற்கள். 'தந்தைதாய் முதலான வகிலப்ர பஞ்சம்தனைத் தந்ததென தாசையோ' என்பது. 'தந்தைதாய் முதலான' என்றது தந்தை தாய் தமர்தாரம், மகவு சுற்றம் முதலியவைகளைக் குறித்ததாம். அவாவினால் வினையும் வினையால் தேகமும், தேகத்தால் பிரபஞ்ச உறவும் ஏற்படுகின்றமையின் 'தந்தைதாய் முதலான வகிலப்பிரபஞ்சம் தனைத் தந்ததென தாசையோ?' என்றார். இதனானன்றோ **திருவள்ளுவரும்,**



> "அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேல்
> தவாஅது மேன்மேல் வரும்" என்றார்

'தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்காலம் அதை நோவனோ' என்பது 'தன்னை' என்றது ஆன்மாவை, 'பிறர்' என்றது பாச பந்தத்திற்குக் காரணமாக இருந்த பிறரை. தன்னை நோதல் எற்றிற் கெனின் வினையைச் செய்தமைக்குப் பிறர்களை நோதல் பாசபந்தங்கட்குக் காரணமா யிருத்தல்பற்றித் தான் செய்த வினைகளும், வினையளவாக வரும் பிறப்பிறப்புக்களும் அவ்வினைப் பயன்களை நுகரும் காலமும் முறையே ஒன்றற்கொன்று காரணகாரிய சம்பந்தப்பட்டு இருத்தலினாலும் அடைய வேண்டிய பேரின்பப் பேற்றுக்கு இவைகள் தடையாக இருத்தலினாலும் 'தன்னையே நோவனோ பிறரையே நோவனோ தற்காலமதை நோவனோ' என்றார்.

'நோதல்' வருந்தி எண்ணல், வருத்தமுறல். 'பந்தமானது தந்த வினையையே நோவனோ பரமார்த்த மேது மறியேன்' என்பது, 'பந்தம்' என்றது பாசபந்தங்களை. 'வினையை' என்றது நல்வினை தீவினைகளை. 'பரமார்த்தம்' என்றது உயர்ந்த பொருளின் நிலையைக் குறித்தது. பாசபந்தத்தால் வினை நிகழலின் 'பந்தமா ரதுதந்த வினையை' என்றார். இறைவன் திருஅருளால் உணர்த்தினாலன்றி உயிர்கள் உணரமுடியாதாதலினால் 'பரமார்த்த மேது மறியேன்' என்றார். 'காண்பாரார் கண்ணுதலே காட்டாக் காலே' என்பதனால் பரமார்த்த மேது மறியேன் அறிவித்து இன்பருளுக என்ற குறிப்பால் ஏதுமறியேன் என்றார். பரம+அர்த்தம் பரமார்த்தம்; இது வடசொற்களின் புணர்ச்சி; இது தீர்க்கசந்தி. இதில் வந்த ஓகாரங்கள் எல்லாம் ஐயப்பொருளில் வந்த வினா. 'பிரபஞ்சந்தனை' இதில் 'தனை' என்றது பகுதிப்பொருள் விகுதி. இரண்டனுருபு ஒற்று நின்றது. 7

[இறைவனே! மனசமநிலை, ஞானயூகம், தேகம் அநித்திய மென்னும் உணர்ச்சி, உள்ளன்பு இவைகளைத் தேவரீரின் திருஅருள் தந்தருளியது; இன்னும் மோனத்து இடைவிடாது பற்ற அருள்செய்வாயாக என்கின்றார்]

> வாரா தெலாமொழிய வருவன வெலாமெய்த
> மனதுசாட் சியதாகவே
> மருவநிலை தந்ததும் வேதாந்த சித்தாந்த
> மரபுசம ரசமாகவே
> பூராய மாயுணர வூகமது தந்ததும்
> பொய்யுடலை நிலையன்றெனப்
> போதநெறி தந்ததுஞ் சாசுவத ஆனந்த
> போகமே வீடென்னவே

நீராள மாயுருக வுள்ளன்பு தந்ததும்
நின்னதருள் இன்னும்இன்னும்
நின்னையே துணையென்ற என்னையே காக்கவொரு
நினைவுசற் றுண்டாகிலோ
பாராதி யறியாத மோனமே யிடைவிடாப்
பற்றாக நிற்கஅருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எல்லா இடத்தும், நீக்கம்-நீங்குதல், அற - இல்லாதபடி, நிறைகின்ற-நிறைந்து நிற்கின்ற, பரி-மிகுந்த, பூரணம் - நிறைவாகிய, ஆனந்தமே-பேரின்பமே! வாராத-தன்பால் வந்து சேராத, எலாம்-எல்லாம், ஒழிய - அகன்றொழிக, வருவன-தன்பால் வந்து சேருவன, எலாம் - எல்லாம், எய்த - வந்து சேருவதாக, (என்று எண்ணி) மனது-மனமானது, சாட்சியது - நடுவுநிலையைச் சான்று, ஆக-ஆக, மருவ-ஒரே நிலையிற் பொருந்த, நிலை-தத்துவநிலையை, தந்ததும்-தந்தருளியதும், வேதாந்தம் (மரபு) - வேதாந்தத்தினுடைய மரபும், சித்தாந்தம் - சித்தாந்தத்தினுடைய, மரபு-மரபும், (ஆகிய இவை இரண்டும்) சமரசம்-சமானமானது, ஆக-ஆக, பூராயமாய்-முற்றும், உணர-தெரிய, ஊகமது-யுக்தியை, தந்ததும்-கொடுத்ததும், பொய்-நிலையற்ற, உடலை-தேகத்தை, நிலை-என்றும் உள்ளது, அன்று-அல்ல, என-என்று நிச்சயித்து உறுதியாய் அறிந்து நம்ப, போதம்-ஞானமாகிய, நெறி-ஞானநெறியை, தந்ததும்-அடியேனுக்குத் தந்தருளியதும், சாசுவதம் - இடையறாது எப்பொழுதும் நிலைத்த, ஆனந்தம்-பேரின்பமாகிய, போகமே-சிவசுகானுபவமே, வீடு-பந்தம் நீங்கிய சிவானந்தப் பேறு, என்ன-என்று, நீராளம்-நீரின் தன்மைபோல், ஆய்-ஆகி, உருக-மனது நெகிழும்படி, உள்-உள்ளத்துநிறைந்த, அன்பு-அன்பை, தந்ததும்-தந்தருளியதும், நின்னது-தேவரீரது, அருள்-திருவருளின் நோக்கமே, இன்னும் இன்னும் - மேலும் மேலும், நின்னையே - தேவரீரையே, துணை - பெருந்துணை, என்ற-என்று கொண்ட, என்னையே-அடியேனையே, காக்க-பாசத்தினின்றும் விடுவித்துக் காத்தருள, ஒரு-ஒப்பற்ற, நினைவு-கருணைத் திருவுள்ளம், சற்று-சிறிதளவாகிலும், உண்டாகிலோ-இருக்கும் ஆகில், பார்-பூமி, ஆதி-முதலாந் தத்துவங்களால், அறியாத - அறிய வொண்ணாத, மோனமே - பேச்சற்ற மௌனநிலையை, இடைவிடா - மத்தியில்விட்டு விலகாத, பற்று - பற்றுக்கோடு, ஆக - ஆகக்கொண்டு, நிற்க - நிற்கும்படி, அருள்வாய் - கிருபைசெய்தருள்வாய் எ-று.

(வி-ரை) 'வாராதெலா மொழிய வருவன வெலாமெய்த மனது சாட்சியதாகவே மருவநிலை தந்ததும்' என்பது. 'வாராதெலாம் ஒழிய' என்பது வாராதவைகள் எல்லாம் போய் ஒழிவதாக என்பதாம். 'வருவனவெலாம் எய்த' என்பது வருவன எவைகளோ அவைகள் எல்லாம் வரட்டும் 'மனது சாட்சியதாகவே' என்பது, வரும் இன்ப துன்பங்களை ஒப்ப நோக்கி இது வினைப் பயனே என்று சாட்சி பூதமாகக் கண்டிருக்க என்பதாம். 'மருவநிலை தந்ததும்' என்றது பொருந்த மனோ சமநிலை தந்தருளியதும் என்பதாம், வாழ்வுவந்தகாலை மனம் மகிழ்தலும், தாழ்வுவந்தகாலை மனம் தளர்தலும், விரும்பிய நன்மை வாராத காலத்துக் கவலையுறுதலும், எதிர் பாராத ஓர் தீமை வந்தகாலத்து உள்ளங் கவன்று மயங்கலும் உலக இயற்கையே. நன்மையுந் தீமையும், இன்புந் துன்பும் நம்மால் வருவன அல்ல. இது வினைப்பயன். 'வருகுவது தானே வரும்' என்று கருதும் மெய்யுணர்வு உடையார்க்கே சத்திநிபாதங் கைகூடும். ஆதலினால், 'வாராதெலா மொழிய வருவன வெலாமெய்த மனது சாட்சியதாகவே மருவநிலை தந்ததும்' என்றார்.

"மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்நோய் வந்துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் துறவோனே"

என்ற **பெருந்தேவனார் பாரதச்செய்யுள்** இதனை வலியுறுத்தும். இன்னும்,

"வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
யளந்தன போகம் அவரவ—ருற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்" என்ற **நாலடியார்** செய்யுளும்,

"பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம" என்ற **திருக்குறளா**லும்,

"இன்பம தடைந்த காலை யினிதென மகிழ்ச்சி யெய்தார்
துன்பம துற்ற போதுந் துண்ணெனத் துளங்கிச் சோரார்
இன்பமுந் துன்பந் தானு மிவ்வுடற் கியைந்த வென்றே
முன்புறு தொடர்பை யோர்வார் முழுவது முணர்ந்த நீரார்" எனவும்,

"ஆவது விதியெனி னனைத்து மாயிடும்
போவது விதியெனி னெவையும் போகுமாற்
றேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
வேவரு மறியொணா வீசற் கல்லதே"

எனவுங் கூறிய **கந்தபுராணச்** செய்யுளாலும்,

"அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப் படிவருமோ சலியா திரென் னேழைநெஞ்சே"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்காலும் நன்கறியலாம்.

'வேதாந்த சித்தாந்த மரபு சமரசமாகவே பூராய மாயுணர வூகமது தந்ததும்' என்றது, 'வேதாந்தம்' என்பது வேதத்தின் முடிபு என்பதாம்,

இது **உபநிடதம்**. 'சித்தாந்தம்' என்பது தருக்கஞ்செய்து நிச்சயித்து முடிவு கட்டியது என்பது பொருளாம். 'வேதாந்தம்' பொதுநூல், சித்தாந்தம் சிறப்புநூல். வேதாந்தத்து அவ்வந்நிலைக்கேற்ற தலைவர்களைக் சிறப்பித்துக் கூறி முடிவில் அவைகளை மறுத்து இறைவன் சிறப்புக் கூறும், சித்தாந்தம் ஆதியோடந்தமாக இறைவன் சிறப்பையே கூறிநிற்கும். 'மரபு' என்றது ஈண்டு முறைமையை. சமரசம்' என்றது சமத்துவமாக, சமமாக என்பது, 'பூராயம்' என்றது ஆதியோடந்தமாக, முதலிலிருந்து முடிவுவரை என்பதாம். 'ஊகம்' என்றது எதிலும் நுழைந்தறியும் நுண்ணறிவு என்பது பொருளாம். 'பொய்யுடலை நிலையன்றெனப் போதநெறி தந்ததும்' என்பது, தேகம் நிலைஅற்றது. நீர்மேல் எழுத்துக்கு நிகராயது ஆதலின் 'பொய்யுடல்' என்றார். இதனை,

"நடலைவாழ்வு கொண்டென் செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே" என்ற **தேவாரத்தாலும்**,

"மண்ணொன்று கண்டீ ரிருவினைப் பாத்திரம்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணாவலோ
லெண்ணின்ற மாந்த ரிறக்கின்ற வாறே"

என்ற **திருமந்திரச்** செய்யுளாலும்,

"படர்கிரித் தலைப்பான் மதிபோற்கரிப்
பிடர்நிழற்று கவிகையிற் பேர்ந்தவர்
கடனிலத்திற் கவிழ்ந்தன ரன்றிமற்
றுடலெடுத்தெவர் சாவை யொருவினர்"

என்ற **பிரமோத்திரகாண்டச்செய்யுளாலும்**,

"பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிவிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே கான்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் போளெனவே யொருகணமு நாடாரே"

என்ற **சிவதருமோத்தரச் செய்யுளாலும்**,

"கடுங்கா ணெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்"

என்ற **சிலப்பதிகாரச்செய்யுளாலும்**,

"பாலையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்தும்
காளையாம் பருவஞ் செத்தும் காமுறு மிளமை செத்தும்
மீளுமிவ் வயது மின்னே மேல்வரு மூப்புமாகி
நாளுநாட் சாகின்றாமால் நமக்குநா மழாத தென்னே"

என்ற **குண்டலகேசிச்செய்யுளாலும்** நன்கறியலாம்.



இறைவன் திருவருட் சகாயத்தாற் பெற்ற ஊகத்தால், அறிவால் தேகம் நிலையற்றது என்று தெரிந்ததென்பார் 'பொய்யுடலை நிலையன்றெனப் போதநெறி தந்ததும்' என்றார். 'சாசுவத வானந்த போகமே வீடென்னவே நீராளமாயுருக உள்ளன்பு தந்ததும்' என்பது, 'சாசுவதம்' என்றது நிலையுள்ளது; அழிவில்லாதது என்னும் பொருளது. 'ஆனந்தம்' என்றது சிவானந்தத்தை. 'போகம்' என்றது ஆனந்தானுபவத்தை. 'வீடு' என்றது முத்தியை. இதற்குப் பிறவித்துயரினின்றும் விடுபட்ட நிலை என்பது பொருளாம். 'நீராளமாய்' என்றது நீரின் தன்மையாய் என்னும் பொருளது. 'ஆளம்' என்றது தன்மை என்னும் பொருள்தந்து நிற்றல் காண்க. 'உள்' என்றது இடஆகுபெயர். உடம்பின் உள்ளிடமாகிய மனத்தைக் குறிக்கும். 'உள் அன்பு' என்றது மனது நிறைந்த அன்பு, மனத்து உண்டாகும் அன்பு என்பது பொருளாம். அன்பு உதித்தாலன்றி இறைவனை வழிபடல் கூடாதாதலின் 'உள்ளன்பு தந்ததும்' என்றார். இதுகொண்டே,

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்பன் பொன்னார்சடைப் புண்ணியன்"

எனத் **தேவாரம்** முழங்கியது. அன்பு முதிர முதிர அவ்அன்பே சிவமாகக் காணும் இதனை,

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாருமறி கிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே"

என்ற **திருமந்திரச் செய்யுளாலும்** அறியலாம்.

பாசிநிறைந்த நீர்க்குட்டையில் கல்லை விட்டெறிந்தால் அப்பாசி விலகுதலையும், அக்கல் சென்ற வேகத்தால் உண்டாகிய நீர் அலைவு ஓய்ந்தபின் அப்பாசி மீண்டுங் கூடுதலையும் காண்கின்றோம். இதுபோலவே இறைவன் தியானத்தால் மலகன்மங்கள் விலகி நிற்கும். அத்தியானமற்றபோது மீண்டும் தொடர்ந்து பற்றும். இதுகொண்டே மலகன்மங்கள் முழுதும் அற்று நீங்கிட இறைவன் தியானம் இடைவிடாதிருக்கவேண்டும் என்பார். 'மோனமே இடைவிடாப்பற்றாக நிற்க அருள்வாய்' என்றார். இதனை,

"ஐம்பொறியி னல்லையெனு மந்தர சிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன்—ஐம்பொறியின்
நீங்கான்நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கும் நினைந்து" என்றதாலும் அறியலாம்.

'நின்னருள் இன்னும் இன்னும் நின்னையே துணையென்ற என்னையே காக்கவொரு நினைவுசற்றுண்டாகில் என்பது, 'நின்னருள்' என்றது

இறைவன் திருஅருளை. 'இன்னும் இன்னும்' இது மிகுதிபற்றி அடுக்கி வந்த அடுக்குத்தொடர். மேலும் மேலும் என்பது பொருளாம். 'என்னையே' என்றதில் ஈற்று ஏகாரம் பிரிநிலை ஏகாரம் தேற்றமென்பாரும் உண்டு. 'சற்று' என்பது ஈண்டு சிறிது, கொஞ்சம் என்னும் பொருளது. ஆன்மாக்களைக் காத்து அருள்செய்வது இறைவன் திருஅருள் ஆதலினால் 'நின்னதருள் ... ... ... காக்கவொரு நினைவு சற்றுண் டாகில்' என்றார்.

'பாராதி அறியாத மோனமே இடைவிடாப் பற்றாக நிற்க அருள்வாய்' என்பது. 'பார் ஆதி' என்றது பூமி தத்துவமுதல் நாதத்தத்துவம் ஈறாக வுள்ள தத்துவங்களை; 'அறியாத' என்றது அத் தத்துவங்கட்கெல்லாம் அப்பாற் பட்டுக்கடந்து நிற்பதாகிய மோனம் என்பதாம். 'மோனம்' என்றது திரிகாணங்களும் தம்சேட்டையடங்கி யொடுங்கிச் சும்மா இருக்கும் நிலை. 'பற்றாக' என்றது முத்தி இன்பத்தைத் துய்த்தற்குப் பற்றுக் கோடாக என்பதாம். மனோசமநிலை தந்ததும், பூராயமாகவுணர வூகம் தந்ததும், போதநெறி தந்ததும், உள்ளன்பு தந்ததும், ஆகிய எல்லாம் திருஅருளே. இனிமேலும் மோன நிட்டையை இடைவிடாதுபற்றி நிற்க அருள் செய்தல்வேண்டும் என வேண்டுகின்றார். 'ஊகம்து' என்றதில் 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. 'எலாம்' இது 'எல்லாம்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'வாராத' 'வருவன' இவைகள் இரண்டும் வினையாலணையும் பெயர்கள். 'வாராதெலாம்' என்றதில் அகரம் தொக்கது. 'போதநெறி' இது பண்புத்தொகை. இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். ஏகாரங்கள் தேற்றப் பொருளன. 8

[இறைவனே! என்மனத்தைக் குவிவிப்பது தேவரீருக்கு அருமையோ என்கின்றார்]

ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய
 ஆலம்அமு தாகவிலையோ
அக்கடலின் மீதுவட அனல்நிற்க வில்லையோ
 அந்தரத் தகிலகோடி
தாழாமல் நிலைநிற்க வில்லையோ மேருவுந்
 தனுவாக வளையவிலையோ
சத்தமே கங்களும் வச்ரதர னாணையில்
 சஞ்சரித் திடவில்லையோ
வாழாது வாழவே இராமனடி யாற்சிலையும்
 மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டுசித் திகள்உலக
 மார்க்கத்தில் வைக்கவிலையோ



பாழான என்மனங் குவியவொரு தந்திரம்
 பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
 பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எல்லா இடத்தும், நீக்கம்-நீங்குதல், அற-இல்லாதபடி, நிறைகின்ற - நிறைந்து நிற்கின்ற, பரி-மிகுந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே-பேரின்பமே!, ஆழ்-ஆழமாக இருக்கின்ற, ஆழி - சமுத்திரமானது, கரை - செய்யப்பட்ட அணை, இன்றி-இல்லாமலே, நிற்க-இயற்கையிலேயே தன் எல்லை மீறாது நிற்க, இல்லையோ-இல்லையோ? கொடிய-(கொல்லுந் தன்மைவாய்ந்த) கொடிய, ஆலம்-ஆலகால விஷமானது, அமுது - உணவு, ஆக-ஆக, இல்லையோ-இல்லையோ? அ-அந்த, கடலின்-கடலின், மீது-மேலே, வடஅனல்-வடவாமுகாக்கினியானது, நிற்க-தணியாமல் நிற்க, இலையோ-இல்லையோ? அந்தரத்து-ஆகாயத்தினிடத்தே, அகிலகோடி-பல அண்டகோடிகள், தாழாமல்-கீழே வீழ்ந்துவிடாமல், நிலை-நிலையாக, நிற்க-நிற்க, இலையோ-இல்லையோ? மேருவும் - மகாமேரு மலையும், தனு-வில், ஆக-ஆக, வளைய-வளைய, இலையோ-இல்லையோ? சத்த-ஏழாகிய, மேகங்களும்-மேகங்களும், வச்ரதரன் - வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரனின், ஆணையின் - கட்டளைப்படி, சஞ்சரித்திட - அங்குமிங்குஞ் சென்று திரிய, இல்லையோ-இல்லையோ? வாழாது வாழவே - குற்றத்துடன் வாழாது தூய்மையுடன் வாழ, இராமன்-தசரத இராமனது, அடியால்-திருப்பாதத்தால், சிலையும் - கல்லுருவாகக் கிடந்த அகலிகையும், மடம்-அழகிய இளைய, மங்கை-பெண்ணுருவத்தை, அடைய-அடைய, இலையோ-இல்லையோ? மணி-மணியாலும், மந்திரம் - மந்திரத்தாலும், ஆதி - மற்று முள்ளவைகளாலும், வேண்டும்-விரும்பப்பெறும், சித்திகள்-சித்திகளை, உலகம்-உலகத்தினுடைய, மார்க்கத்தில்-வழியில், வைக்க-வைத்திருக்க, இல்லையோ-இல்லையோ? (ஆகையினால்) பாழ்-வீணில், ஆன-செல்வதான, என்-அடியேனின், மனம்-(பயனற்ற) மனம், குவிய - குவிய, ஒரு - ஒரு, தந்திரம் - உபாயத்தை, பண்ணுவது-செய்வது, உனக்கு-எல்லாம்வல்ல தேவரீருக்கு, அருமையோ-முடியாத காரியமோ? எ-று.

(வி-ரை) 'ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ' என்பது. 'ஆழாழி' இது ஆழமாகிய ஆழி என்னும் பொருளது. இது தன்மை நவிற்சி. கடல் ஆழமாக இருத்தலினாலேயே ஆழி என்னும் பெயர் கடலுக்கு ஆயது. 'கரை' என்றது அணையை. மக்களால் வெட்டப்பட்ட சிறு குளமும் செய்கரை உடையதாக இருக்கின்றது. சிலசமயம் அக்கரையையும் உடைத்துக்கொண்டு நீர்பெருகிச் சேதங்கள் விளைக்கின்றன. அநேகம் வீடு வாசல், தோட்டம், துறவு, வயல்களுக்கும், ஆடுமாடு பண்டபதார்த்தம் முதலியவைகளுக்கும் அழிவை உண்டாக்கி விடுகிறது. அப்படி இருக்க பரந்த ஆழ நீள அகலம் அறியப்படாத கடல், கடவுள் ஆணையால் நிற்க

வில்லையோ? ஒருவர்க்கும், எவ்வுயிர்க்கும், எப்பொருட்கும் சேதம் அழிவு உண்டாக்காது இருக்கவில்லையோ என்பார். 'ஆழாழி கரையின்றி நிற்க விலையோ' என்றார். இதனை,

"குளம்பெருகிக் கரையுடைத்தே யுயிர்கட்குப்
பொருளுக்குக் குலைவு செய்து
வளங்கொடுக்கக் கண்டமே வாரியிது
செய்ததுண்டோ மற்றுநோக்கின்
உளங்கொளவே கரைதானுங் கடற்குண்டோ
கடல்பொங்கின் உபாயமேதும்
அளந்துசெய உண்டுகொலோ இறைவனின்
அருளானை யன்றோ வன்றோ"

என்ற செய்யுளாலும் அறியலாம்.

'கொடிய ஆலம் அமுதாக இலையோ' என்பது. தேவாமிர்தம் பெறற் பொருட்டுத் தேவர்கள் ஒருபுறமும், அசுரர்கள் ஒருபுறமுமாக இருந்து திருப்பாற்கடலைக் கடையும்பொழுது மந்தரமலையாகிய மத்தில் கடை கயிறாக அமைக்கப்பட்டிருந்த வாசுகி என்னும் பாம்பு ஆற்றாது விஷத்தைக் கக்கிற்று அவ்விஷம் ஆலாலமாகத் திரண்டுவந்தது. உடனே தேவர்கள் அஞ்சி சிவபெருமானிடஞ் சரண்புக, அக்கருணையங்கடலாகிய சிவபெருமான் சரணடைந்தவரைக்காக்க அவ்விஷத்தை ஏற்று உண்டு தேவர்களை உய்வித்தார் என்பது புராணம்; இதுகொண்டே 'கொடிய ஆலம் அமுதாக இலையோ?' என்றார். இறைவன் ஆலாலமுண்டு தேவர்க்கருள் செய்ததை,

"அண்டருக்கு முனிவருக்கு மழலான கொடுவிடத்தைக்
கண்டமட்டு நுகர்ந்திடவுங் கண்டமட்டிற் கடவாதே"

என்ற **திருஅருணைக் கலம்பகச் செய்யுளா**லும்,

"கண்டவிட நித்தியத்தைக் காட்டவுநீ கங்காள
அண்டவிடம் வைத்தாய் அம்புயஞ்செய் குற்றமென்"

என்ற **வாட்போக்கிக் கலம்பகச் செய்யுளா**லும்,

"ஆலங் குடியானை யாலால முண்டானை
ஆலங் குடியானென் றார்சொன்னார்—ஆலங்
குடியானே யாயிற் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீதி லே"

என்ற **காளமேகப்புலவர்** வாக்காலும் அறிக.

'அக்கடலின்மீது வடஅனல் நிற்கவிலையோ' என்பது, 'அக்கடல்' இதில் அகரம் சுட்டிடைச்சொல் அந்தக்கடல் என்னும் பொருள்தந்து நின்றது. 'வடஅனல்' இது ஒரு பெருந்தீ. இது அருப்பகமா முனிவருடைய தொடையில் உதித்துப் பெண்குதிரை முகத்துடன் இருப்பதனால் வடவை எனப் பெயர்பெற்றது. இது வடவாமுகாக்கினி எனவும் பெயர்



பெறும். சிவபெருமான் அதனைக் கடல்பெருகிப் பொங்காது இருக்கக் கடலில் மிகும் நீரை எல்லாம் உண்ண ஆக்கினையிட்டுக் கடலின் மத்தியில் வைத்தருளினார். அதனாலேதான் கடல் கரைகடந்து வாராதிருக்கின்றது எனவும், அவ் அனலும் தணியாது கடலின் மத்தியில் தங்கி இருக்கின்றது எனவும் **பௌராணிகர்கள்** கூறுவர். 'அந்தரத்தகிலகோடி தாழாமல் நிலை நிற்க வில்லையோ' என்பது, 'அந்தரம்' என்றது ஆகாயத்தை; வெளியை. இனி ஆதாரமற்ற நிராதாரமான இடத்தே என்பாரும் உண்டு. 'அகிலம் கோடி' என்றது கோடிக்கணக்கான உலகங்கள் என்பது பொருளாம். 'கோடி' என்றது ஈண்டு மிகுதிப்பொருள் உணர்த்தி நின்றது. 'தாழாமல்' என்றது கீழே வீழ்ந்து விடாமல் என்பது பொருளாம். 'நிலை நிற்றல்' என்பது நிலையாக நிற்றல் என்பதாம். இறைவன் திருஅருளால் பல அண்டங்கள் தோன்றி அந்தரத்து நின்று இயங்கிக்கொண்டிருத்தலினால் 'அந்தரத் தகிலகோடி தாழாமல் நிலைநிற்க வில்லையோ' என்றார்.

'மேருவுந் தனுவாக வளைய விலையோ' என்பது, 'மேரு' என்றது மகாமேருமலையை. திரிபுரத்தவர்கள் செய்யுங் கொடுமைகளுக்கு ஆற்றாத தேவர் திருமாலை முன்னிட்டுக்கொண்டு சிவபெருமானிடம் முறையிட சிவபெருமான் அவர்களுக்கு அபயங் கொடுத்துப் போர்க்குரிய கருவிகள் சித்தஞ் செய்மின் எனப் பணிக்க, அத் தேவர்கள் அவ்வண்ணமே பூமியைத் தேராகவும், சூரிய சந்திரர்களைச் சக்கரங்களாகவும், பிரமன் சாரதியாகவும், மந்திரங் கடிவாளமாகவும், பிரணவம் கோலாகவும் மேருமலை வில்லாகவும், ஆதிசேடன் நாணாகவும், திருமால் பாணமாகவும், வாயு அம்பிற் கட்டிய சிறகாகவும், அக்கினி அம்பின் கூர்வாயாகவும் அமைத்துச் சிவபெருமானுக்குப் பணிவுடன் அறிவிக்க இறைவர் பூரதத்தேறிப் போருக்குப் புறப்பட்டார். அப்போழ்து தேவர்கள் எல்லாம் தம்மாலேதான் திரிபுரதகனம் ஆகிறது என ஒவ்வொருவரும் செருக்குற்றனர். இதனை அறிந்து சிவபெருமான் சிரித்தனர். அச் சிரிப்பிலிருந்து சென்ற அக்கினி திரிபுரத்தைச் சுட்டுசாம்பராக்கி அழித்தது என்பது புராணம். இதனை,

"என்செய்தீர் தில்லைவனத் தீசரே! புன்முறுவல்
முன்செய் தொழிலை முடியாமற்—கொன்செய்த
பொற்புயங்க நாணேற்றிப் பொன்மலையைத் தேவரீர்
மற்புயங்க ளேவ வளைத்து" எனவும்,

"மேருவிலா யதினுணரவா யொருவெங்கணை மாலரியாய்
விரிதலை யுலகந்தேர் யதினூறு மிருசக டிருசுடராய்
ஆரணநாலும் பரியாயம் புயனமைவுறு சாரதியா
யதினீயுற் றிகலழியா முப்புரமட்டிடு மங்நாளிற்
சீருறுமூவர்க ளழியாதுன் னடிசேரா நின்றனரால்" எனவும்,

"நானென்றால் நஞ்சிருக்கும் நற்சாபங் கற்சாபம்
பாணந்தான் மண்டின்ற பாணமே—தாணுவே

சீராரூர் மேவுஞ் சிவனேநீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர்"

என்ற **இரட்டையர், காளமேகப்புலவர்** கூடிப்பாடிய வெண்பாவாலும் அறியலாம்.

'சப்த மேகங்களும் வச்ரதர னாணையிற் சஞ்சரித்திட வில்லையோ' என்பது, சப்த மேகங்கள் என்றது:—சம்புவர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்னும் ஏழு மேகங்கள். இவைகள் முறையே சம்வர்த்தம் என்னும் மேகம் மணியைப் பொழிவது. ஆவர்த்தம் என்னும் மேகம் நீரைப் பொழிவது. புட்கலாவர்த்தம் என்னும் மேகம் பொன்னைப் பொழிவது, சங்காரித்தம் என்னும் மேகம் பூவைப்பொழிவது, துரோணம் என்னும் மேகம் மண்ணைப் பொழிவது, காளமுகி என்னும் மேகம் கல்லைப் பொழிவது, நீலவர்ணம் என்னும் மேகம் நெருப்பைப் பொழிவது என்பர். 'மேகங்களும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை, 'வச்சிரதரன்' என்றது இந்திரனை; இவன் வச்சிராயுதத்தை ஏந்தியவன் ஆகையால் இப்பெயர் வந்தது. 'சஞ்சரித்திடல்' என்பது போக்கும் வரத்துஞ் செய்தல். உலாவல், இனி பரவல் என்பாரும் உண்டு. 'வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு மடமங்கை யாகவில்லையோ' என்பது, 'வாழாது வாழ' என்றது வாழாமல் வாழும்படி என்பதாம். வாழாமல் வாழுதலாவது, குற்றமுடன் வாழாமல் தூய்மையுடன் வாழ்தல் எனவும், ஊனுடம்பு ஒழிந்தகாலத்தும் புகழுடம்பு நிலைநிற்க வாழ்தல் எனவும் பொருள் குறித்து நின்றது. 'இராமன்' என்றது ஈண்டு தசரதராமனை. 'சிலை' என்றது சாபத்தாற் கல்லாய்க்கிடந்த அகலியைக் குறித்தது. 'மடம்' என்றது வனப்பும் இளமையும் குறித்து நின்றது. 'மங்கை' என்றது பெண்; மங்கை என்பது பருவத்தைக் குறிக்கும் சொல் அதனை உடைய பெண்ணுக்காகி வந்தது ஆகுபெயர்.

'இராமனடி யாற்சிலையும் மடமங்கை ஆனகதை' வஞ்சகமாகப் புணர்ச்சி செய்யக் கருதிவந்த இந்திரனுக்கு இணங்கிய தனது மனைவியாகிய அகலிகையைக் கௌதமமுனிவர் சினந்து கல்லாகச் சபித்தகாலையில் பணிந்துவேண்ட மனதிரங்கிச் சாபவிமோசனங் கூறுங்காலை தசரத இராமன் கோசிகமுனிவருடன் இவ்வழியாக மிதிலாபுரிக்கு ஏகுங்கால் அவன் திருஅடித் தூள்பட முன்னுரு அடைவை என்று அருளிச்செய்தபடி இராமபிரான் திருஅடிபட்டுக் கல்லாயிருந்த அகலிகை சாபம் நீங்கப் பெற்றாள். என்பது புராணகதை. அதையே 'இராமனடி யாற்சிலையு மடமங்கை யாகவில்லையோ' என்றார். இதனை,

"கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனமலர்ந்த பொலன்கழற்காற் பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியு மென்றுரைத்தான்"

என்ற **இராமாயணச் செய்யுளா**லும் அறிக.



'மணிமந்த்ரம் ஆதியால் வேண்டு சித்திகள் உலக மார்க்கத்தில் வைக்க இலையோ' என்பது. 'மணி' என்றது மணியை. இனி, உருத்திராக்க மணியை என்பர். 'மந்த்ரம்' பஞ்சாக்கரம் முதலிய மந்திரங்களை. 'ஆதியால்' என்றது திருநீறு முதலிய சாதனங்களால் என்பது பொருளாம். 'வேண்டு சித்தி' என்றது. இட்ட காமியங்களைக் குறித்தது. 'உலகமார்க்கம்' என்றது உலக லௌகிக விர்த்தியை. வேதமார்க்கத்தை வைதிகவிர்த்தி என்பர்.

'பாழான என்மனங்குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கருமையோ' என்பது, 'பாழான' என்பது பயனற்ற, வீணாகிய என்பதாம். 'குவிய' என்றது பிரபஞ்ச விகாரங்களிற் பரவிச்செல்லாது அவற்றுணின்று நீங்கி இறைவன் திருவடி அன்பிலே ஈடுபட்டுக் குவிந்து கவிந்து இருத்தலை உணர்த்தும். எல்லாம்வல்ல உனக்கு அடியேனுக்கு இது செய்தல் ஒரு சிரமம் அன்று என்பார் 'பாழான என்மனங்குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கருமையோ' என்றார். இச்செய்யுளில் ஆகவில்லையோ? என்று வினவியது எட்டாகும். அவற்றுள், ஆழாழி கரையின்றி நிற்றலும், கொடிய ஆலம் அமுதானதும், கடலில் வடஅனல் நிற்பதும், அந்தரத்து அகில கோடி தாழாமல் நிற்பதும், மேருதனுவாக வளைந்ததும் இறைவன் செயல். சப்தமேகங்கள் வச்ரதரன் ஆணையிற் சஞ்சரித்தலும், இராமனடியாற் சிலையும் மடமங்கையானதும், மணிமந்திர மாதியால் வேண்டு சித்திகள் உலக மார்க்கத்தில் நடப்பதும், இறைவன் அருள்பெற்ற அடியார் செயல்களாகும். இறைவன் அருள்பெற்றார் அவன் அருள்வலியால் செயற்கரியனவாஞ் செய்வர். எனவே, போற்றலும் பேருளும் எல்லாஞ் செய்யும் எழில்வலியும் பெற்ற இறைவனே! எல்லாம்வல்ல சித்தா! அற்பத்தினும் அற்பமாகிய அடியேனின் 'பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுதல் அருமையோ' என்றார். இந்த ஓகாரம் எதிர்மறை ஓகாரம்; அருமை அல்ல என்ற பொருள்தந்து நின்றது. முன்னைய எட்டு ஓகாரங்களும் வினாப்பொருளில் வந்த ஓகாரங்கள்.



[இறைவனே! பாசக்கடலிற்குள் விழாதபடி மனதற்ற பரிசுத்த நிலையை அருள்வாயாக என்கின்றார்]

ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி-
ஆளினுங் கடல்மீதிலே
ஆணைசெல வேநினைவர் அளகேசன் நிகராக
அம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரும்
நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி
நெஞ்சுபுண் ணாவர்எல்லாம்

யோசிக்கும் வேளையிற் பசிதீர வுண்பதும்
　　உறங்குவது மாகமுடியும்
உள்ளதே போதும்நான் நான்எனக் குளறியே
　　ஒன்றைவிட் டொன்றுபற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
　　பரிசுத்த நிலையைஅருள்வாய்
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
　　பரிபூர ணானந்தமே.

(ப-ரை) பார்க்கும்-காணும், இடம்-இடங்கள், எங்கணும்-எவ்விடத்தும், நீக்கம்-நீங்குதல், அற - இல்லாதபடி, நிறைகின்ற - நிறைந்து நிற்கின்ற, பரிமிருந்த, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தமே - பேரின்பமே!, ஆசைக்கு-பேராசைக்கு, ஓர்-ஒரு, அளவு-வரம்பு, இல்லை - இல்லையாகும், (எவ்வாறென்றால்) அகிலம் - உலகங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், கட்டி - தன் கட்டளைக்கு உட்படுத்தி, ஆளினும்-அரசுபுரிந்தாலும், கடல்-கடலின், மீதிலே-மேலேயும், ஆணை-தம்முடைய கட்டளை, செலவே - செல்லவே, நினைவர்-ஆசைப்படுவர், அளகேசன் - அளகாபுரிக்கு இறைவனாகிய குபேரனுக்கு, நிகர் - ஒப்பு, ஆக-ஆகக் கூறும்படி, மிக - அதிகமாக, அம் - அழகிய, பொன் - பொற்குவியலை, வைத்த-திரட்டிவைத்த, பேரும்-மனிதர்களும், இரசவாதம்-இரச சம்பந்தத்தால் பொன் செய்யும், வித்தைக்கு - வித்தையைப் பெறும்பொருட்டு, நேசித்து-விப்பங்கொண்டு, அலைந்திடுவர்-(அதுபெற அதைக் கற்றுக்கொடுப்பாரை நாடி) பற்பல இடங்களிலுந் திரிந்தழல்வார்கள், நெடும் - நீண்ட, நாள்-காலம், இருந்தபேரும்-வாழ்ந்து இருந்தவர்களும், இன்னும்-அதற்கு மேலும், நிலையாக - நிலைத்து அழிவின்றி வாழ, காயகற்பம் - (உடம்பழியாது நிற்கச்செய்யும்) கல்பம் என்னும் மருந்தை, தேடி - அதுபெறத் தேடி, (அது கிட்டாமையாலே) நெஞ்சு-மனம், புண்-வருத்தத்தால் உண்டாய புண், ஆவர்-ஆகுவர், எல்லாம்-மேலே புகன்றவை எல்லாம், யோசிக்கும் வேளையில்-ஆராய்ந்து கவனிக்குமிடத்து, பசி-வயிற்றுப்பசி, தீர - அடங்க, உண்பதும்-புசிப்பதும், உறங்குவதும்-தூங்குவதும், ஆக-ஆகவே, முடியும்-முடிவு அடையும், (ஆதலினால்) உள்ளதே - இறைவன் தந்து உள்ளதே, போதும் - போதுமானதாகும், நான் நான் என - நானே பெரியன் நானே பெரியன் என்று, குளறி-அகங்கரித்து உளறி, ஒன்று-நன்மையாகிய ஒன்றை, விட்டு-கைவிட்டு, ஒன்று-தீமையாகிய வேறு ஒன்றை, பற்றி-(விடாது) பிடித்து, பாசம்-ஆசையாகிய, கடற்கு-கடலுக்கு, உளே - உள்ளே, வீழாமல் - வீழாதபடி, மனது-மனதும், அற்ற-தொடரமுடியாத, பரிசுத்த - மிகவுந் தூயதாகிய, நிலையை-சிவானந்த யோகநிலையை, அருள்வாய் - அடியேனுக்குக் கொடுத்தருள்வாயாக எ-று.

(வி-ரை) 'ஆசைக்கு ஓர் அளவில்லை' என்பது. வெண்கொற்றக்குடையும் நவமணிமுடியும் சிங்காதனமும் கொண்டு உலகு புரக்கும் வேந்தராயி



னும் 'உள்ளது போதும்' என்று அமைந்த மனது உடையர் ஆகாதகாலத்து, பேராசை கொண்ட காலத்து தம்மினும் மிக்க பொருளுடைவரைக் கண்ட காலத்துப் பொறாமைகொண்டு தம் செல்வத்தை இழந்துவிட்டவர் போன்ற துயரம் உறுவர். துயிலலும், அயிலலும் இன்றித் துடிப்பர். எவ்வளவு திரள் திரளாகச் செல்வம்பெறினும் போதுமென்றமையாது அதற்கு மேலும் வேண்டும் வேண்டும் என ஆசை உண்டாதலினால் 'ஆசைக்கு ஓர் அளவில்லை' என்றார். இதுபற்றியன்றோ பெரியார் 'போதுமென்ற மனமே பொன்செய் மருந்து' என்றனர். இதனை,

"கொடியும் முரசுங் கொற்றவெண் குடையும்
பிறர்கொளப் பொறாஅன் தானே கொண்டு
பொதுநீங்கு திகிரி திசைதிசை போக்கிச்
செவியிற் கண்டு கண்ணிற் கூறி
இருநிலம் புரக்கும் ஒருபெரு வேந்தன்
மிக்கோ னொருவன் வெறுக்கை நோக்குழித்
தொக்கதன் வெறுக்கை சுருங்கித் தோன்ற
இழப்புறு விழும மெய்தி யழுக்கறுத்து
மற்றது பெறுதற் குற்றன தெரீஇ
அயிற்சுவை பெறாஅன் துயிற்சுவை யுறாஅன்
மாணிழை மகளிர் தோணலங் கொளான்
சிறுகாற்று வழங்காப் பெறமூச் செறிந்து
கவலையற் றழிவதுங் காண்டும் அதாஅன்று
விறகெடுத் தார்தொறுஞ் சுமந்துவிற்றுக் கூலிகொண்டு
புற்கையு மடகு மாந்தி மக்களோடு
மனையும் பிறவு நோக்கி யயன்மனை
முயற்சியின் மகனை யிழித்தன னெள்ளி
எனக்கிணை யிலையென இளையன் மற்றொருவன்
மனக்களிப் புறீஇ மகிழ்வதூஉங் காண்டும் அதனால்
செல்வ மென்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குர வவாவெனப் படுமே
ஐயுண வடக்கிய மெய்யுணர் வல்லதை
உவாக்கடல் சிறுக உலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற் கரும்புணை யின்றே"

என்பதனால் அறிக. இதனானன்றோ திருமூலரும்,

"வாசியு மூசியும் பேசிய வகையினாற்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையு மன்பு மறுமி னறுத்தபி
னீச னிருந்த விடமெளி தாமே" என்றார்.

'அகிலமெல்லாங் கட்டி ஆளினும் கடல்மீதிலே ஆணைசெலவே நினைவர்' என்பது, 'அகிலம் எல்லாம்' இது தரைமுழுதையும் என்னும் பொருளது.

'கட்டி' என்பது கைக்கொண்டு, தன் ஆணைக்குள்ளாக்கி என்றும் பொருள் தந்து நின்றது. 'ஆயினும்' என்றது அரசாட்சிபுரியினும் என்னும் பொருளது. தரையெலாம் தன்னடிப்படுத்தோம் தண்ணீரும் தன்னடிப்பட வேண்டும் என ஆசைகொள்வர். தண்ணீர் தன்னடிப்பட விரும்பியதற்கு தசரத இராமனையும் இக்காலத்து அரசுபுரியும் மேனாட்டு அரசர்களையும் கவனித்து நோக்குக. இதுகொண்டே 'கடல் மீதிலே' 'ஆணைசெலவே நினைவர்' என்றார். 'அளகேசன் நிகராக அம்பொன்மிக வைத்தபேரும் நேசித்து இரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்' என்பது, அளகேசன், இவன் வடதிசைக்கோன், ஈசன்தோளன். அளகாபுரிக்கு அரசன். இறைவனின் நிதிச்சாலைக்குத் தலைவன். இவனுக்கு அதனாலேயே தனபதி, தனதன் என்னும் பெயர்கள் ஏற்பட்டன. குபேரன் என்பதும் இவன் பெயரே.

'அம்பொன்' இது அழகிய பொன் எனப் பொருள் தரும். இனி நவமணி பொன்முதலிய திரவியங்களையும் பொதுப்பட உணர்த்தும். 'இரசவாதவித்தை' இது இரசத்தைச் சேர்த்துச் செய்யும் வாதவித்தை ஆதலின் இரசவாதவித்தை எனப் பெயர் வந்தது. 'வாதவித்தை' என்பது தாழ்ந்த லோகங்களை உயர்ந்த லோகங்களாக்கும் வித்தை. பொன் செய்யும் வித்தை இவ் இரசவாதம் மூவ்வாசை அற்ற முனிவர்க்கன்றி மூவ்வாசையையுங் கொண்டவர்க்குச் சிந்திக்காதாகலின், இரசவாத வித்தைக் 'கலைந்திடுவர் என்றார். 'நெடுநாளிருந்தபேரும் நிலையாகவே இனுங் காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணாவர்' என்பது, 'நெடுநாள்' என்றது 'மனிதற்கு வயது நூறல்லதில்லை' என்றபடி அந்த எல்லையாகிய நூறு வயதுவரையும் இருந்தவர்களுங்கூட என்பது பொருளாம். 'நிலையாகவே' என்றது என்றும் அழிவின்றி நிலைத்து இருக்க என்பதாம். 'காயகற்பம்' என்றது உடம்பு மூப்பு, நரை, திரை, மரணம் இல்லாதபடிச் செய்யும் சித்தர் மருந்து. 'தேடி நெஞ்சு புண்ணாவர்' என்றது தேடித்தேடிக் காணாமையால் எண்ணி எண்ணி ஏங்கி வருந்துதலால் உண்டாம் மனநோயைப் புண் என்றார். இதனை,

"செஞ்சொல்லை நினைந்து நினைந்து அருகு
நெஞ்சிற் புண்ணும்"

என்ற **புலவர் வாக்கானும்** நன்குணரலாம்.

எல்லாம் யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும் உறங்குவதுமாகித் தரையெல்லாந் தன்னடிப் படுத்து ஆண்டாலும் அது போதாது தண்ணீர்க்கடன் மேல் தன் ஆணை செலவேண்டும் என்று நினைப்பதும், வடதிசைக்கோனாய் இருக்க எண்ணுவதும் ஆகியவைகள் யாவும், 'எல்லாம் யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்' என்றார். ஈண்டு 'எல்லாம்' என்றது தரையெல்லாந் தன்னடிப்படுத்து ஆண்டாலும் அது போதாது தண்ணீர்க்கடல் மேலும் தன் ஆணை செலவேண்டும் என்று நினைப்பதும், வடதிசைக்கோனாகிய குபேரன்போலச் செம்பொன் குவித்



தோர் இரசவாத வித்தைக்கு அலைவதும், நெடுநாள் நிலத்து வாழ்ந்தவர் பின்னும் அழிவின்றி வாழ்ந்திருக்கக் காயகற்பந் தேடி நெஞ்சு புண்ணாவதும், ஆகிய இவைகள் எல்லாம் என்பதாம். 'யோசிக்கும் வேளையில்' என்றது நன்றாய் ஆராய்ந்து பார்த்தால் என்பதாம். கடல்மீது ஆணைசெல நினைவது, ரசவாதவித்தைக் கலைவது, காயகற்பந் தேடுவதெல்லாம் இவ்வுலக போகமாகிய அநித்தியமும், சிறிதுமாகிய சிற்றின்பங்களை விரும்பியன்றோ பேரின்பமாகிய, சிவானந்தமாகிய, வீட்டின்பத்திற் கன்றலவே. சிற்றின்பந்தான் என்ன? அவை உண்ணல் உடுத்தல், அருந்தல், பொருந்தல், உண்ணல், உறங்கல் அன்றி வேறில்லையே என்பார். 'யோசிக்கும் வேளையில் பசிதீர உண்பதும் உறங்குவதுமாக முடியும்' என்றார். இதுகொண்டன்றோ **தொண்டரடிப்பொடியாழ்வாரும்**,

"வேதநூல் பிராயம்நூறு மனிதர்தாம் புகுவரேலும்
பாதியு முறங்கிப்போகும் நின்றதிப் பதினையாண்டு
பேதைபா லகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவிவேண்டேன் அரங்கமா நகருளானே" என்றார்.

'உள்ளதே போதும்' என்பது, இறைவன் திருவருளால் கருணைகொண்டு தந்ததேபோதும் என்பதாம். என்னை 'போதுமென்ற மனமேபொன்செய்மருந்து' என்றார். ஆதலினாலும், போதும் என்ற சாந்தி வரும்வரை ஞானோதயம் உண்டாகாதாதலினாலும் 'உள்ளதே போதும்' என்றார். 'நானெனக் குளறியே யொன்றைவிட் டொன்றுபற்றிப் பாசக்கடற்குளே வீழாமல்' என்பது, 'நானெனக்குளறி' என்றது 'நான்' என்றது அகங்கார. தத்துவத்தை, ஆணவமலத்தடிப்பை 'குளறி' இது குழறி என்பதன் மரூஉ. குறழல் என்பது உண்மைக்குமாறாக்குழறல். 'ஒன்றை விட்டொன்று பற்றுதலாவது' மெய்ஞ்ஞானத்தைவிட்டு அஞ்ஞானத்தைப் பற்றல். சத்தை விட்டு அசத்தைப் பற்றல், பரத்தைவிட்டு இகத்தைப்பற்றல், மெய் நூல்களை விட்டுப் பொய் நூல்களைப்பற்றல், வைதிக சைவசித்தாந்தச் சன்மார்க்கத்தைக் விட்டு அவமார்க்கத்தைப்பற்றல் முதலியவைகளாம் 'பாசக்கடல்' என்றது, மாயாசம்பந்தமாகிய பாசம் என்றும் கடல் என்பதாம். பாசத்தைக் 'கடல்' என்பது உருவக அணி. கடலில் வீழ்த்தவன் புணை கலம் இன்றிக் கரைஏற முடியாததுபோலப் பாசக்கடலில் வீழ்ந்தவன் இறைவன் பாதப் புணையன்றிக் கரைஏற முடியாது. ஆதலின் 'பாசக்கடற்குள் வீழாமல்' திருஅருள் புரி என்கின்றார். இது வருமுன் காக்கும் உத்தி. இதனானன்றோ **திருக்குறளிலும்**,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்" என்றனர்.

இன்னும், 'மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங் கரைசேர' என்றார் பிறரும். 'பாசக்கடல்' இது பாசமாகிய கடல் என விரிதலின் பண்புத்தொகை. 'மனத்தற்ற பரிசுத்த நிலையை அருள்வாய்' என்பது, 'பரிசுத்தநிலை' என்றது. 'சிவானந்த மோனநிட்டை நிலையை' இது சகல வாதனையுந் தீர்ந்து

ஆனந்தமயமாக நிற்கும் பேரின்பநிலை ஆதலின் 'பரிசுத்தநிலை' என்றார். இந்நிலை மனவாக்குக்கெட்டாத நிலை ஆதலின் 'மனதற்ற' என்றார்., மனமுஞ் சென்று தொடரப்பெறாத நிலை மனத்தாற் கணிக்கொணா ஆனந்தநிலை என்பதாம். 'அருள்வாய்' என்றது அடியேனுக்குத் தேவரீர் தந்தருள்வீராக என்பதாம். 'செலவே' 'என' என்பன முறையே 'செல்லவே' 'என்ன' என்பவைகளின் தொகுத்தல் விகாரங்கள். அளகா+ஈசன் = அளகேசன் இது வடமொழிப் புணர்ச்சி குணசந்தி. இதன்கண் வந்த உம்மைகள் அனைத்தும் எண் உம்மைகள். 10

---

## பொருள்வணக்கம்

[ஒப்பற்றதும் அறிவுமயமாக இருப்பதும் ஆகிய தனிப்பொருளாம் இறைவனை வணங்குவாம் என்கின்றார்]

*நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்*
*நிறைவாய் நீங்காச்*
*சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை*
*சுடராய் எல்லாம்*
*வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி*
*மனவாக் கெட்டாச்* [யைச்
*சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளி*
*சிந்தை செய்வாம்.*

(ப-ரை) நித்தியம் - அழிவற்று என்றும் உள்ளது, ஆய்-ஆகி, நின்மலம்-மாசற்றது, ஆய்-ஆகி, நிட்களம்-வடிவம் இல்லாதது, ஆய்-ஆகி, நிராமயம்-நோயற்றது, ஆய் - ஆகி, நிறைவு - எங்கும் நிறைந்த பரிபூரணம், ஆய்-ஆகி, நீங்கா - பிரிவில்லாத, சுத்தமும் - இயற்கைச் சுத்தம் உடையது, ஆய் - ஆகி, தூரமும்-அன்புநெறி யொழுகாதவர்களுக்கு வெகுதூரம் உடையதும், ஆய்-ஆகி, சமீபமும் - அன்புநெறி ஒழுகுவோர்க்கு அருகில் உள்ளதாய், துரியம்-எல்லாங் கடந்த இடத்திலே, நிறை - நிறைந்துள்ள, சுடர் - சோதிவடிவம், ஆய்-ஆகி, எல்லாம்-எல்லாவற்றையும், வைத்திருந்த-வைத்து இருக்கப்பெற்ற, தாரகம்-இருப்பிடம், ஆய்-ஆகி, ஆநந்தம் - பேரின்பத்தின், வடிவம் - வடிவம், ஆகி - ஆகி, மனம் - மனத்திற்கும், வாக்கு - மொழிக்கும், எட்டா - எட்டாத (கடந்து நின்ற) சித்து-அறிவு, உருவாய்-வடிவமாய், நின்ற-நின்றுள்ளதாகிய, ஒன்றை - ஒப்பற்ற முதற்பொருளை, சுகாரம்பம் - பேரானந்த உற்பத்தியின் ஆரம்பமாகிய, பெருவெளியை - பரம ஆகாயத்தை, சிந்தைசெய்வாம் - நாம் உள்ளத்தில் வைத்து துதிப்பாம் எ-று.

(வி-ரை) '**பொருள்வணக்கம்**' என்பது, 'பொருள்வணக்கம்' என்னும் பெயரிய இப்பதிகம் அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தங்கள் பன்



னிரண்டு கொண்டுளது. இப்பதிகம் முற்றும் பன்னிருபாடல்களிலும் பொருளாகிய இறைவன் குணங்களின் மாட்சி எடுத்தோதிப் போற்றலின் இப்பதிகத்திற்குப் 'பொருள்வணக்கம்' எனப்பெயர் ஆயிற்று. இது, பொருள்+வணக்கம் என்னும் இரண்டு செந்தமிழ் சொற்களாலாகிய ஒரு சந்தி. இது பொருளை வணங்கும் வணக்கம் என விரிதலின், இது வேற்றுமைச்சந்தி இரண்டாம் வேற்றுமைத்தொகை. 'பொருள்' இறைவன்; என்னை? பொருள் ஆக இருப்பவன் இறைவனையன்றி வேறு இல்லாமையின் கடவுள் வணக்கத்தைப் பொருள் வணக்கம் என்றார். 'வணக்கம்' இது வணங்கு என்னும் பகுதி அடியாகப்பிறந்த 'அம்' விகுதிபெற்ற தொழிற் பெயர். இறைவனே பொருள் அவனல்லாதன பொருளல்ல என்பதனை,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு" எனவும்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனவும்,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு"

என்னுந் **திருவள்ளுவர் வாக்கா**லும் அறிக.

இப்பாக்கள் பன்னிரண்டில் முதல் பத்துப்பாக்கள் காய்ச்சீர் நான்கும் மாச்சீர் இரண்டும் கொண்ட அடி நான்கு கொண்டது. மற்றவை இரண்டும் எண்சீர் விருத்தங்கள்,

'நித்தியமாய்' என்பது இறைவன் அநாதியாகவும். ஆதிமத்தியாந்த ரகிதனாகவும், தோற்றக் கேடில்லாதவனாகவும், என்றும் உள்ளவனாகவும், சத்தியப்பொருளாகவும் இருக்கின்றானாதலின் 'நித்தியமாய்' என்றார். 'நிர் மலமாய்' என்பது ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களினாலே பிணிப்பு உண்டு கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்றவத்தைகளை எய்துகின்ற ஜீவான்மாக்கள் போலன்றி இயல்பிலேயே பாசபந்தத்தின் நீங்கியவன் ஆதலின் 'நிர்மலமாய்' என்றார். 'நிட்களமாய்' என்பது இறைவன் மான், மழு, சடை, கொன்றைமாலை முதலிய அடையாளங்களுடன் கூடினவன் என நூல்களும், ஆன்றோரும் புகழ்ந்துபோற்றினும் இவைகளெல்லாம் எம் ஈசனுக்குத் தடத்த இலக்கணமே யாதலினாலும், வாக்கு மனம் கடந்த சோதிசொரூபனாக நிற்றலே சிறப்பிலக்கணமாகலானும் அழியும் தன்மையவாய உருவம் உடைய பொருள்போலன்றி அழிவில்லாததாகிய அருவத் திருமேனியையுடையன் என்பார் 'நிட்களமாய்' என்றார். இது கொண்டன்றோ **சேக்கிழார் சுவாமி**களும் இறைவன் உலகெலாம் என அடி எடுத்துக்கொடுக்க அவன் திருஅருளைப்பாடிய திருப்பாட்டில் 'நிலவு லாவிய நீர்மலிவேணியன்' என்று உரைத்து அதற்குப்பின் 'அலகில் சோதியன்' எனத் திருவாய்மலர்ந்தருளினார். 'நிராமயமாய்' என்பது, துன்பம் எல்லாம் மலத்துடன்கூடிய ஜீவான்மாக்களுக்கேயன்றி நித்தியமாய்

நிர்மலமாய், நிட்களமாய் இருக்கும் பரம்பொருளுக்கு எக்காலும், எந்நாளும் இல்லை என்பார் 'நிராமயமாய்' என்றார். 'நிறைவாய்' என்பது இறைவன் அங்கு, இங்கு, உங்கு என்று சொல்ல இடமின்றி அங்கும், இங்கும், உங்கும் எங்கும் நிறைந்து நீங்காதிருக்கின்றானாதலின் 'நிறைவாய்' என்றார். நிறைவாய் என்றது எங்குமாய் எல்லாமாய்ப் பரிபூரணமாக நிற்றலைக் குறித்ததாம்.

'நீங்காச் சுத்தமுமாய்' என்பது கேவலாவத்தையிலே மூடமாகக் கிடந்து பின் இறைவன் திருஅருளால் மாயா காரியமாகிய தனு கரண புவன போகங்களைப்பெற்று சிறிதளவு அறிவு விளங்கப்பெறும் உயிர்கள்போல அல்லாது இறைவன் இயற்கையிலே எல்லாம் அறியும் அறிவும், எவரும் உணர்த்த உணராது தானே உணரும் உணர்வும் இயற்கைச் சுத்தமும் உடையன் ஆதலினால் 'நீங்காச் சுத்தமுமாய்' என்றார். 'தூரமுமாய்' என்பது இறைவன் பசுபாச ஞானங்கட்கு எட்டாது தட்டாது கிட்டாது இருப்பவன் ஆதலினாலும், அன்பு செய்யார்க்குச் சேய்மையன் ஆதலினாலும் 'தூரமுமாய்' என்றார். 'சமீபமுமாய்' என்பது இறைவன் பதிஞானங்கண்ட ஞானிகளுக்கு உள்ளத்தே காணப்பெறுபவன் ஆதலினாலும், அன்பு செய்வார்க்கு அருள்புரிய அருகில் நிற்பவன் அவர் அகத்து அகலாது இருந்தருள்புரிவோனாதலின் 'சமீபமுமாய்' என்றார். இதனை, 'பத்திவலையிற் படுவோன்' என்றும் **மணிவாசகர் திருவாக்கா**னும் உணர்க.

"அன்பு செய்வார்க் கணியன்"

என்ற **தேவாரமுங்** கனிந்து காணத்தக்கது.

'துரியநிறை சுடராய்' என்பது, துரியம் என்பது சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி இம்மூன்றுந் தாண்டி அவைகட்கு அப்பாலாய் இருக்குந் தானம்; இது சுத்தநிலை எனப்பெறும். இந்தத் துரியநிலையில் சுடர் உருவாய் இறைவன் விளங்குகின்ற துரியாதீதப் பொருளாதலின், 'துரியநிறை சுடராய்' என்றார். உலக இருளை நீக்கும் பரிதியும், மதியும் போன்று உயிர்களின் மலஇருளை நீக்குதலினால் 'சுடராய்' என்றார். இதனானன்றே **தேவாரத்**தும்,

"எல்லாஞ் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லுங் கூற்றொன்றை யுதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றா ரிடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியனரண மெய்தாய் போற்றி
வீரட்டங் காதல் விமலா போற்றி"

எனத் **திருத்தாண்டகத்**துங் கூறினர்.



இவ்வாறு கூறியதனால் இறைவன் முற்றுணர்வு, முடிவிலாற்றல், பேரருளுடைமை மூன்றியல்புகளை உடையவன் என்பது பெறப்பட்டது. 'எல்லாம் வைத்திருந்த தாரகமாய்' என்பது, சேதனாசேதனப் பொருள்களுக்கு இடமாய் அவைகளைத் தன்னுள்ளடக்கி மீட்டும் வெளிப்படுத்துபவனாக இருத்தலின் 'எல்லாம் வைத்திருந்த தாரகமாய்' என்றார். இதனானன்றே ஒரு பெரியாரும்,

"கண்ணாற் சொல்லான் மனத்தினாற் கணிக்கு
மெல்லாந் தோன்றிடவும்
நண்ணா வெல்லா மடங்கிடவும் நாடு
நிலைய மாகிவளர்
பெண்ணா ளிடத்தே யொளிர்பரமன் பெரிய
தாளைப் பணிகுற்றார்
எண்ணா வருமாய் புவிவிண்ணில் ஏத்தும்
பெரிய ராகிடுவார்"

என்று துதித்தார்.

'ஆனந்த மயமாகி' என்பது இறைவன் ஆனந்தரூபன், ஆனந்தமயன், இன்பவடிவன், பேரானந்தப் பெருஞ்சோதி ஆதலின் 'ஆனந்த மயமாகி' என்றார். 'மனவாக்குக் கெட்டாச் சித்துருவாய்' என்பது, மனத்தால் நினைக்கப்படுபொருளும், வாக்கினாற் பேசப்படும் பொருளும் கண்ணாற் காணப்படும் பொருளும் ஆகிய சராசரம் எல்லாம் அழிவுறும் ஆதலினாலும் கண்ணாற் காணப்படாதவனும், வாக்கிற்கு எட்டாதவனும், மனத்தால் நினைக்கப்படாதவனும் இறைவன் ஆதலினாலும் அழிவுறும் பொருள்களினின்றும் வேறு பிரித்துக் காட்டுவார் 'மனவாக்குக் கெட்டாச் சித்துருவாய்' என்றார். அவாய் நிலையானே மனவாக்குக்களோடு காயமும் வருவித்து உரைக்கப் பெறும். இறைவன் அறிவு வடிவன், ஞானமயன் ஆதலினால் 'சித்து உருவை' என்றார்.

'நின்ற ஒன்றைச் சுகாரம்பப்பெருவெளியை சிந்தை செய்வாம்' என்பது, இறைவன் அழிவின்றி என்றும் ஒரேபடித்தாகத் தேயாது வளராது, சுருங்காது அகலாது நின்றிருப்பவன் ஆதலின் 'நின்ற' என்றார். இறைவன் தனிப்பொருளாதலினாலும், ஒப்பற்ற பொருளாதலினாலும், உயர் பொருளாதலினாலும் 'ஒன்றை' என்றார். இறைவன் சுகவடிவாயும், இன்பப் பிழம்பாயும், ஆன்மாக்கட்குச் சுகத்தைச் செய்பவனாகவும், சுகவாதியாகவும் இருக்கின்றானாதலினாலும் பராகாய வடிவாய் இருக்கின்றானாதலினாலும் 'சுகாரம்பப் பெருவெளியை' என்பார் இறைவன் ஆன்மாக்களால் அறிதரப் பெறாதவன் ஆயினும் அவன் திருஅருள் பெற்ற ஆன்மாக்கள் அவன் அருளாலே கண்டுய்யக் கூடுமாதலினால் அவன் அருள் கொண்டு சிந்தித்து வணங்குவோம் என்பார் 'சிந்தை செய்வாம்' என்றார்.

இச்செய்யுளில், 'நித்தியமாய்' என்றதனால் இறைவன் க்ஷணிகன் என்று கூறும் **புத்தர்** முதலாயவர் வாதமும், 'ஒன்றை' என்றதனால் இறைவன்

ஒருவன் அவன் பலர் என்னும் **அநேகேசுரவாதிகளின்** வாதமும், ஆன்மாவே முத்திநிலையில் கடவுளாகிறான் அவனிடம் கர்த்தா தன் அதிகாரத்தை வைத்திடுகின்றான், தான் பரம் அற்று இருக்கின்றான் என்னும் **பிரவாகேசுரவாதியின்** வாதமும் மறுக்கப்பட்டமையை கண்டு இன்புறுதவர் யாவர். 'ஆய்' என்னும் வினை எச்சங்கள் அனைத்தும் 'நின்ற' என்னும் பெயரெச்சத்தோடு சேர அந் 'நின்ற' என்னும் பெயரெச்சம் ஒன்று என்னும் பெயர் கொண்டு முடிந்தது. சுக+ஆரம்பம்=சுகாரம்பம். இது வடசொற்சந்தி, தீர்க்கசந்தி. 'பெருமை+வெளி' என்னும் இருசொற்களின் சந்தி, இதில் பெருமை என்னும் பண்புப்பெயர் 'ஈறுபோதல்' என்னும் விதியால் பெருவெளி என்று ஆயது. இதில், 'நாம்' என்னும் எழுவாய் தொக்குநின்றது. 'நாம்' இது உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. இச்செய்யுளில் முதலடி முற்றுமோனை. 1

[அம்மை அப்பனை சோதி சொரூபத்தை
வணங்குவாம் என்கின்றார்]

யாதுமன நினையுமந்த நினைவுக்கு நினைவாகி
யாதின் பாலும்
பேதமற நின்றுயிருக் குயிராகி அன்பருக்கே
பேரா னந்தக் [னைக்
கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறியொன் றறத்தன்
கொடுத்துக் காட்டுந்
தீதில்பரா பரமான சித்தாந்தப் பேரொளியைச்
சிந்தை செய்வாம்.

(ப-ரை) யாது-எதை, மனம்-மனம், நினையும்-நினைக்கும், அந்த-அந்த, நினைவுக்கு - எண்ணத்திற்கு, நினைவு-எண்ணுகின்ற எண்ணம், ஆகி - ஆகி, யாதின்-எந்தப் பொருள்களின், பாலும்-இடத்தும், பேதம்-வேறுபாடு, அற-இல்லாதபடி, நின்று-பொருந்தி நின்று, உயிருக்கு - ஆன்மாக்களுக்கு, 'உயிர்-உள்ளேயிருக்கும் பரமான்மா, ஆகி-ஆகி, அன்பருக்கு - அன்புநிறைந்த உள்ளத்தை உடையவர்களுக்கு, கோது - குற்றம், இல் - இல்லாத, பேர்-பெரிய, ஆனந்தம்-இன்பம் ஆகிய, அமுது-அமிர்தமானது, ஊற்று - ஊற்றுநீர்போல, அரும்பி-சுரந்து, குணம்-குணங்களும், குறி - வடிவும், ஒன்று - ஒறி சிறிதும் இல்லாதபடி, அற - ஒழிய, தன்னை - தன்னையே, கொடுத்து-தந்து, காட்டும்-தானேயாகக் காட்டும், தீது-குற்றம், இல்-இல்லாத, பரா-அம்மையும், பரம்-அப்பனும், ஆன - ஆகிய, சித்தாந்தம் - அறிவின் முடிவிடத்து விளங்கும், பேர்-பெரிய, ஒளியை - சோதியாகிய இறைவனை, சிந்தை செய்வாம் - நாம் நெஞ்சத்து நினைத்துத் துதிப்போமாக எ-று.

(வி-ரை) 'யாதுமன நினையும் அந்த நினைவுக்கு நினைவாகி' என்பது, 'யாது, இது வினாப்பெயர். இதில் 'யா' வினா. 'எதனை' என்னும் பொருளாம்.



ஒருவன் மனத்தின்வழி தன்னை நடத்தின் இருவினைக்குள்ளாக்குவதும், தன்வழி மனத்தை நடத்தின் இருவினை யொப்பாகலினும், அம்மனம் பதார்த்தங்களின் மயமாக விளங்குதன் அதற்குரிய இயல்பாகலானும், அது மருளைப்பற்றி நிற்கின் அவ்வருள் மயமாகவும், அருளைப்பற்றி நிற்கின் அவ்வருள் மயமாகவும் செல்லுந் தன்மையதாகலானும், அம்மனம் அருண் மயஞ் சார்தலை அறவே விட்டுப் பிரபஞ்ச முகத்தில் அலைந்து, அதன் விருத்தி பகிர்முகத்திற் சென்று பொருந்தி தனு கரண புவன போகங்களாகிய அசுத்த மாயாகாரியங்களில் அழுந்தி தன்னோடுற்ற மற்றைய கரணங்களையும் வன்மைபெற்று இழுத்துச் சென்று நினைக்கும் தொழிற்கு முதலாக விருத்தலின் அதன் காரியந்தோன்ற, 'யாது மனநிலையும்' என்றார். இதனால், மனத்தை அடக்குவதே மாண்பு; அது தன்னாலாவதன்று என்றமையினையும் வெளியாக்கியதாம். மனம் சடப்பொருளாகையால், 'யாது' என்றனரென்னவுமாம்.

'மனம் பற்றும், புத்தி நிச்சயிக்கும், சித்தம் சிந்திக்கும், அகங்காரம் கொண்டெழுப்பும்' என்பது கட்டளை. இறைவன் நினைவுக்கும் நினைவாய், அறிவுக்கும் அறிவாய் இருப்பவன் ஆதலின் 'யாதுமனம் நினையும் அந்த நினைவுக்கு நினைவாகி' என்றார். இதுகொண்டன்றோ பெரியார்களும், 'என்னு மென்னமுநீ' எனவும், 'மறப்பு நினைப்புநீ' எனவும் கூறிப் போந்தனர். இதனானே, மலத்தான் மறைப்புண்டு கிடக்கும் உயிர்கட்குத் தநு கரண புவன போகங்களைத் தந்து அறிவை விளங்கச் செய்கிறவனும் கண்ணின் ஒளிக்கு விளக்கு ஒளியும் ஞாயிற்றின் ஒளியும்போல அவ்வுயிர்களுக்கு உயிராய் உடனிருந்து உணர்வை ஊட்டி உணர்த்தி அவைகளின் வேறு பிரிக்கக் கூடாதவனாக நிற்கின்றான் என்பதையும் உணர்த்தினாராயிற்று. இதனை,

"சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து மனமாகி—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ளம் அவ்வேறும்
அவ்வேறும் போதுபோ லாங்கு"

என்னுஞ் **சிவஞானபோதச் செய்யுளா**லும் அறியலாம்.

'யாதின்பாலும் பேதமற நின்றுயிருக் குயிராகி' என்பது, ஆன்மாவை இன்றியமையாத கண் ஓர் உருவத்தைக்காணுங்கால் ஆன்மபோதம் கண்ணொளியெனத் தானென வேற்றுமையின்றி இடனாகநின்று கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண்கண்டதென்றும், கண்ணை அதிட்டித்து நின்ற ஆன்மா கண்டதென்றும் பிரித்து அறியப்படுமாறு இன்றி இருவகைக் காட்சியும் ஒன்றினை ஒன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே நிகழும் முறைபோல முதல்வனை இன்றி அமையாத ஆன்மா ஒரு விடயத்தை அறியும்போது அம் முதல்வனது சிற்சத்தி, ஆன்ம சிற்சத்தியெனத் தானென வேறின்றி உடனாக விரவிநிற்ப முதல்வனும் ஆன்மாவில் அவ்வாறு

விரவிநின்று அறிவித்த விடயத்தை, ஆன்மா அறிந்ததென்றும், தான் அறிந்ததென்றும் பிரித்தறியப்படுமாறு இன்றி இருவகை அறியும் ஒன்றினை ஒன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயத்துச் செல்லுமாறு செய்தவரும் இயல்பு தோன்ற 'யாதின்பாலும் பேதமற நின்றுயிருக்குயிராகி' என்றார். இதனை,

"காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பின் அரன்கழல் செலுமே"

என்ற **மெய்கண்டார் திருச்சூத்திரத்தா**லேயும் அதன் விளக்க உரையானும் நன்கு தெளியலாம். இன்னும்,

"காயமொழிக் தாற்சுத்த னாகி யான்மாக்
காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்
கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல
வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவ னித்தை
யாயுமறி வுடையனு யன்பு செய்ய
வக்நிலைமை யிங்நிலையி லடைந்த முறையாலே
மாயமெலா நீங்கியரன் மலரடிக் கீழிருப்பன்
மாறாத சிவாநுபவ மருவிக் கொண்டே"

என்னும் **சிவஞானசித்தியா**ராலும் அறியலாம்.

'அன்பருக்குப் போராநந்தக் கோதிலமு தூற்றரும்பி' என்பது. கரவில்லாத மெய் அன்புடைய அடியார் அகத்தே போராநந்தமயமாய் நின்று தன்னைக் காட்டி இன்பம் பயப்போன் ஆதலினால் 'அன்பருக்குப் போராநந்தக் கோதிலமு தூற்றரும்பி' என்றார். உலக இன்பங்கள் எல்லாக் கால அளவாலும் சுக அளவாலும் சிறியதாதலின் அதனை வேறுபிரித்துச் சிவாநந்தமாகிய முத்தியின்பத்தைக் காட்டுவான் 'போரானந்தம்' என்று பேர் என்னும் அடைமொழி கொடுத்தார். சிவாநந்த அமுது குற்றங்கலவாதது என்றும், ஏனை அமுதுகள் குற்றமுடையதென்பதுந் தோன்ற 'கோதிலமு' என்றார். என்னை ஆலகால விஷத்தையும் அமுதாக்கிய அரன்பாலிருந்து விளையும் அமுதாதலின் 'கோதில் அமுது' என்றார். அந்தச் சிவாநந்தமாகிய போராநந்தக்கோதில் அமுதம் திருவருளால் கனிந்து தானே தனக்குத் தானே சுரப்பது தொடுமணற்கேணியின் ஊற்றுப்போலச் சுரப்பது என்பது தோன்ற 'கோதிலமுது ஊற்றரும்பி' என்றார். இதனை,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தற்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்ற **திருக்குறளா**லும் அறியலாம். இதனானன்றே **மணிவாசகப் பெரி**யாரும்,



"அம்மையே யப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே"

என்றார். இறைவன் சிவஞானிகளைத் தன் வண்ணமாக்கி இன்பம் பயக்கின்றானாதலின் 'தன்னைக் கொடுத்துக் காட்டும்' என்றார். இதனானன்றே **மணிவாசக**ரும்,

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்" என்றார்.

'குணங்குறி யொன்றறத் தன்னைக் கொடுத்துக்காட்டும்' என்பது வரம்புடைப் பொருள்களுக்கேயன்றி அஃதிறந்த பெருமானுக்குக் குணங்குறிகள் இல்லையாதலின் 'குணங்குறி யொன்றற்ற' என்றார். இதனானன்றே இறைவனைப் பெரியாரும் 'கோலமிலான் குணமில்லான்' என்றும், 'குறிகுணங்களேதுமற்ற தத்துவன்' என்றும் பல இடங்களிலும் புகழ்ந்தனர். 'தீதில் பராபரமான சித்தாந்தப் பேரொளியைச் சிந்தைசெய்வாம்' என்பது, இறைவன் 'தீதிலி' ஆதலின் 'தீதில்' என்றும். இதுபற்றியன்றே **தேவாரத்**தும், 'தீங்கொன்றில்லானை' என்றார். இறைவன் அம்மையும் அப்பனுமாக இருக்கின்றானாதலின் 'பராபரமான' என்றார். இது 'பரா+பரம்' என்ற இருவடசொற் சந்தி. (பரா-அம்மை, பரம்-அப்பன்). 'சித்தாந்தம்' என்பது, யாவரானும் எக்காரணம் பற்றியும் மறுக்கமுடியாத முடிவு என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். அத்தகைய சித்தாந்தமாகிய முடிவை நன்குணர்ந்து காண்பவர்களுக்கே இறைவன் தோன்றிடுவன் ஆதல் பற்றியும் இறைவன் அஞ்ஞான இருளகற்றும் பேரொளிமயமாக விளங்குபவன் ஆதலினாலும் 'சித்தாந்தப் பேரொளியை' என்றார்.

பெருமை + ஆனந்தம் = பேரானந்தம் 'இதில் பெருமை என்னும் பண்பின் மை 'ஈறுபோதல்' என்னும் விதியாற் கெட்டு இயல்பாகப் புணர்ந்தது. ஆதி நீடல் என்ற விதியால் 'பெருமை' என்பதன் முதல் நீண்டு 'பேர்' என ஆயது. மற்றைய விகாரங்கள் 'ஈறுபோதல் இடை உகரம் இயாதல் ஆதிநீடல் அடி அகரம் ஐ ஆதல் தன் ஒற்று இரட்டல் முன்நின்ற மெய்திரிதல் இனம் மிகல் இனையவும் பண்பிற்கு ஆகும்' என்ற சூத்திரத்தே 'இனையவும்' என்றதாற் கொள்க. 2

[பெருவெளியாயும் ஐம்பூதம் பிறப்பிடமாயும் மோனம் வருமிடமாயும் பேரின்பமயமாயும் அன்பரைக் கோத்து அப்பாலுந் தெரிவரிதாயு மிருக்கின்ற பொருளைச் சிந்தித்து வந்திப்போம் என்கின்றார்]

பெருவெளியாய் ஐம்பூதம் பிறப்பிடமாய்ப் பேசாத
பெரிய மோனம்
வருமிடமாய் மனமாதிக் கெட்டாத பேரின்ப
மயமாய் ஞானக்

குருவருளாற் காட்டிடவும் அன்பரைக்கோத் தறவிழுங்
 கொண்டப் பாலுந் [கிக்
தெரிவரிதாய்க் கலந்ததெந்தப்பொருள் அந்தப்பொரு
 சிந்தை செய்வாம். [ளினையாஞ்

(ப-ரை) பெரு-பெரிய, வெளி-வானம், ஆய்-ஆகியும், ஐம்-ஐந்தாகிய, பூதம்-பூதங்கள், பிறப்பு-பிறக்கின்ற, இடம்-இடம், ஆய்-ஆகியும், பேசாத-சொல்ல முடியாத, பெரிய-பெரிய, மோனம்-மௌனநிலை, வரும்-உண்டாகும், இடம்-இடம், ஆய்-ஆகியும், மனம் - மனம், ஆதி - முதலியவைகளுக்கு, எட்டாத-சுட்டி அறிதற்கு முடியாத, பேரின்பம்-பெரிய ஆநந்த, மயம்-வடிவம், ஆய்-ஆகி, ஞான-ஞானத்தைப்போதிக்கும், குரு - ஆசாரியர், அருளால் - பெருங் கருணையினாலே, காட்டவும்-தெரிவிக்கவும், அன்பரை - அன்புடையவர்களாகிய அடியாரை, கோத்து-கலந்து, அற-அவர்களின் தற்போதமுனைப்பு முற்றும்நீங்க, விழுங்கிக்கொண்டு - உட்கொண்டு, அப்பாலும் - அதற்கு மேலும், தெரிவு-ஆராய்ந்து அறிதல், அரிதாய்-அருமையாக, கலந்தது - கூடிநிற்பது, எந்தப்பொருள்-எந்தப்பொருளோ, அந்த-அந்த, பொருளினை-பரம்பொருளை, யாம்-நாம், சிந்தை செய்வாம்-மனத்தினால் சிந்தித்து வந்தித்து வாழ்வோம் எ-று.

(வி-ரை) 'பெருவெளி ஆய்' என்பது இறைவன் பரமாகாச வடிவுடையவனாக இருக்கின்றான் ஆதலினாலும், 'வானாகி மண்ணாகிப் பூதங்கள் தானாகி வயங்கி னானை' என்றபடி ஆகாயவடிவும் இறைவன் வடிவேயாதலினாலும், பிருதுவி முதலிய நான்கு பூதங்களையும் தன்னுள் அடக்கி நிற்கும் பூத ஆகாயம்போல் இறைவன் மாயாகாரியமாகிய எல்லாப்பொருள்களையும் தன்னுள் அடக்கி வியாபகமாக நிற்கின்ற தன்மையாலும் 'பெருவெளியாய்' என்றார். இதுகொண்டன்றே **மணிவாசகரும்**, 'வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி' என்றார்.

"ஊனா யுயிரானா யுடலானா யுலகானாய்
வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளானாயுனக் காளாயினி யல்லேனென லாமே"

என்ற **சுந்தரமூர்த்தி சுவாமிகள்** வாக்கு நோக்கத் தக்கதாம்.

'ஐம்பூதப் பிறப்பிடமாய்' என்பது நிலமுதல் நாதமீறாகிய தத்துவங்களெல்லாம் இறைவனது ஆணையால் முதற்காரணமாகிய மாயையினின்றுந் தோன்றி மீண்டும் அம்மாயையிலே 'எது எங்கு தோன்றிற்றோ அது தோன்றிய அங்கே ஒடுங்கும்' என்ற பிரமாணப்படி ஒடுங்க, அம்மாயை, இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியானமையால் அவ் இறைவன்பாலே ஒடுங்கும் ஆதலினால் 'ஐம்பூதப் பிறப்பிடமாய்' என்றார். இவ்வாறு கூறியதனால் இறைவனே உலகமாகப் பரிணமிக்கின்றான் என்னும் **பரிணாமவாதிமதம்** இவ்வாசிரியர்க்கு உடல்பாடு அல்ல என்பதூஉந் தெளியலாம்.



'பேசாத பெரிய மோனம் வருமிடமாய்' என்பது, 'பேசாத' என்பது பேசாது இருத்தலாகிய என்னும் பொருள்தரும். ஆயினும் ஈண்டு சொல்லிக்காட்டரிய என்னும் பொருளில் சொல்லரிய என்று பொருள்கோடலே சாலச்சிறந்ததாகும். 'பெரிய மௌனம்' இது பெருமை வாய்ந்ததாகிய மௌனம் என்பது பொருளாம். மௌனம் என்பது. திரிகரணங்களும் தன் நிலையிற் சேட்டை ஒழிந்து சும்மா இருக்குநிலை. இதுவே சுகநிலை. இதனை,

"செயலற் றிருக்கச் சிவானந்த மாகும்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தோடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாகுமே" எனவும்,

"மனம் விரிந்து குவிந்தது மாதவ
மனம் விரிந்து குவிந்தது வாய்வு
மனம் விரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம் விரிந்ததை மாண்டது முத்தியே"

என்ற **திருமூலர்** திருவாக்கானும் நன்கு உணரலாம்.

இந்த மோனம் இறைவன் திருஅருளால் எய்தப் பெறுதலினாலும் முன்னர் சனகாதி முனிவர்க்கு கல்லாலவிருட்சத்தின் நிழலில் இருந்து யோகு காட்டி மௌனம் போதித்தாராதலினாலும் 'பேசாத பெரியமோனம் வருமிடமாய்' என்றார். 'மனமாதிக் கெட்டாத பேரின்பமயமாய்' என்பது 'மனமாதி' என்றதனால் மனம் வாக்கு காயம் என்னும் மூன்றுக்கும் எட்டாத என்பதாம். இறைவன் மனவாக்குக்கு எட்டாதவன் ஆதலினாலேயே 'அரியானை' என்றார் **பெரியாரும்**. இறைவன் பேரின்ப சொரூபி இன்பவார்த்தி ஆதலின் 'மனமாதிக் கெட்டாத பேரின்ப மயமாய்' என்றார். 'ஞானக் குருவருளாற் காட்டிடவும் அன்பரைக் கோத்தற விழுங்கிக்கொண் டப்பாலும் தெரிவரிதாய்' என்பது, இறைவனைக் குருமுகமாகவே அறிய வேண்டி இருப்பதனாலும், பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்செய்ய இறைவனே மானுடச்சட்டைசாத்திக் குருவடிவாக வருகின்றானாதலினாலும் 'ஞான குரு அருளால்' என்றார், ஞானக் குரு அல்லாத ஏனையரைக் குருவாகக் கொள்ளின் 'வீழ்வாருக்கு வீழ்வார்' துணையானதுபோலக் குருவுஞ் சீடனும் அழியவேண்டியதே இதுபற்றியன்றோ **பெரியாரும்**,

"குட்டித் திராட்காடி யாறொழுகக் கோள்குதித்துக்
கட்டிப் புதைந்த கதையாகும்—துட்டமலப்
பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதையர்க்குப்
புத்திபோற் காட்டும் பொருள்"

என்று உரைத்துவைத்தார்.

குரு அருளால் சிவஞானம் பெற்றோர் சிவானந்தப்பேற்றில் முழுகிச் சோகம்பாவனையாற் சிவமாகக்காண்பர் ஆதலினால் 'அன்பரைக் கோத்தற

விழுங்கி' என்றார். 'அன்பரை' என்றது சிவஞானம்பெற்ற சிவஞானியரை. 'கோத்து' என்றது அபேதமாக அத்துவிதமாகக் கலந்து நிற்றலை 'அற விழுங்கி' என்பதற்கு மலமற விழுங்கி, தற்போதம் அறவிழுங்கி என்பதாம் இதனானன்றே ஒரு **பெரியாரும்,**

"எற்கமலஞ் செய்யுமெழின் மாசிலா மணிதாட்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
யூரிற் குறுகினேன் ஓர்மாத்திரை யளவென்
பேரிற் குறுகினேன் பின்"

என்றதால் அறியலாம். 'ஓர் மாத்திரை யளவென்பேரிற் குறுகினேன்பின்,' என்றது என்பேர் 'சீவன்' இந்தப்பேரில் ஒரு மாத்திரை குலுகுதலாவது 'சீ' என்ற எழுத்தின் இரண்டு மாத்திரையில் ஒரு மாத்திரை குறுகி 'சி' என நிற்றல் அப்பொழுது 'சீவன்' என்ற 'சிவன்' என ஆகும் குருகடாட்சத்தால் சிவனாகி இருந்த அடியேன் சிவனானேன் என்றது பொருளாம். இனி, அற என்பதற்கு முற்றும் அடியேனை விழுங்கி எனப் பொருள் கூறலும் ஒன்று. இறைவனோடு இரண்டறக் 'கடலை' போல அத்துவிதமாகக் கலந்தபின் பேரின்ப மயத்தையன்றித் தன்னையாயினும் தலைவனையாயினும் வேறு பிரித்துக்காண முடியாதிருப்பதால் 'அப்பாலுந் தெரிவரிதாய்' என்றார்.

'கலந்தது எந்தப்பொருள் அந்தப்பொருளை யாம் சிந்தைசெய்வாம்' என்பது, 'கலந்தது எந்தப்பொருள்' என்பது வினா பெருவெளியாய், ஐம்பூதம் பிறப்பிடமாய்ப் பெரிய மோனம் வருமிடமாய், பேரின்பமயமாய். அன்பரைக்கோத்து அறவிழுங்கிக்கொண்டு அப்பாலும் தெரிவரிதாய்க் கலந்தது எது என்பதாம். அவ்வாறு கலந்தது பரம்பொருளே, இறைவனே என்பது விடை, அந்த இறைவனைச் சிந்தித்து வந்தித்து வாழ்வோம் என்கின்றார். 'ஐம்பூதம்' இது ஐந்து+பூதம் என்னும் இருசொல் ஒருசந்தி 'ஐந்தனொற்றடைவும் இனமுங்கெடும்' என்ற விதியால் ஐம்பூதம் என்றாயிற்று. 'ஆய்' என்னும் வினை எச்சங்கள் கலந்தது என்பதனோடு முடிந்தது. 'எந்தப்பொருள்,' 'அந்தப்பொருள்' என்பதில் எகரவினாவும் அகரச்சுட்டும் 'எந்த', 'அந்த' எனத் திரிந்தது. தெரிவு + அரிது = தெரிவரிது, இது 'முற்றும் ஓரோவழி' எச்சமாகும் என்ற விதியால் ஆயது. 'மோனம்' இது மௌனம் என்ற வடசொற்றிரிபு.

3

[உயிர்க்கு உயிராகவும் உறவாகவும் இருக்கும் பற்றுக்கோடற்ற பொருளை வாழ்வை ஆனந்தபாஷ்பஞ் சோரியக் கும்பிட்டு நிற்பாம் என்கின்றார்]

இகபரமும் உயிர்க்குயிரை யானெனதற் றவர்உறவை
எந்த நாளுஞ்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை



அகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
அமிர்தை நாடி [ள்
மொகுமொகென இருவிழிநீர் முத்திறைப்பக் கரமலர்க
முகிழ்த்து நிற்பாம்.

(ப-ரை) இகம்-இந்த உலகத்தும், பரம் - அந்த உலகத்தும், உயிர்க்கு-உள்ள உயிர்களுக்கு, உயிரை-உயிராக இருக்கும் தனிப்பொருளை, யான்-நான் என்னும் அகப்பற்றும், எனது-என்னுடையது என்னும் புறப்பற்றும், அற்றவர் - நீக்குபவர்களுக்கு, உறவை - உறவாக இருப்பதை, எந்த - எந்த, நாளும்-நாளும், சுகம்-ஆநந்தம், பரி - மிகவும், பூரணம் - நிறைந்தது, ஆன-ஆகிய, நிராலம்பம்-பற்றுக்கோடற்றதாகி, கோசரத்தை-விளங்கும்பொருளை, துரியம்-அவத்தைகளைக் கடந்து நிற்கும், வாழ்வை-வாழ்வை, அகம்-உள்ளம், மகிழ-களிக்க, வரும்-வருகின்ற, தேனை - தேன்போன்றவனை, முக்கனியை-வாழை, பலா, மா வாகிய முக்கனி போன்றவனை, கற்கண்டை - கற்கண்டு போன்றவனை, அமிர்தை - தேவாமிர்தம்போன்றவனை, நாடி - மனத்தால் எண்ணி, இரு - இரண்டாகிய, விழி - கண்களிலும், மொகுமொகு - மொகு மொகு, என-என்னும் ஒலியோடு, நீர்-கண்ணீராகிய, முத்து - முத்துக்களை, இறைப்ப - சொரிய, மலர் - மலர்போன்ற, கரங்கள் - கைகளை, முகிழ்த்து-குவித்து, நிற்பாம்-யாம் நின்று தொழுவோம் எ-று.

(வி-ரை) 'இகம்' என்றது இவ் உலகத்தை; 'பரம்' என்றது வானுலகத்தை. 'உயிர்க்குயிராய் உள்ளுறையுஞ் சோதிதனை' எனவும், 'உயிராயினான்' எனவும், 'உயிருநீ' எனவும் தேவாராதி திருமுறைகள் கோஷிக்கின்றமையால் 'இகபரமும் உயிர்க்குயிரை' என்றார். இன்னும் இறைவன் உயிர்க்குயிராயினன் என்றும், இதனை,

"ஈங்கிதுவென் றதுகடந்த வியல்பி னானும்
ஈறுமுத னடுவொன்று மிலாமை யானும்
ஓங்கி வளர்ஞான மயனாத லாலும்
உண்மைபிறர்க் கறிவரிய வொருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாம்
சார்வரிய தனிமுதல்வ னாகலானும்
நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்றலானும்
நிறுத்திடுவ நினைந்தொரு நிமலன்றானே"

என்னும் **சிவப்பிரகாசத்தா**லும்,

'யானெனது' என்றது அகப்பற்று புறப்பற்றுகளை. இதனை அகங்கார மமகாரங்களை என்பர். இவ்விரண்டும் அற்றவர்கள் ஞானிகளாகத் திகழ்வர் ஆதலினாலும் இறைவன் ஞானமயன் ஞானிகளுக்கு உறவானவன் ஆதலினாலும் 'யான் எனது அற்றவர் உறவை' என்றார்.

"மாயைதா னுயிர்களாகா உயிர்சடா மாயையாகா
மாயைதா னிவைதானாகா னிவைதானு மாயனாகா

எயுமா மாதியாக விறைபசு பாசமென்றே
தாயவன் கலப்பினாலே யெல்லாமாய்த் தோன்றுவான்காண்"

என்ற **சிவஞான சித்தியாரி**லும் அறியலாம்.

இறைவன் சர்வத்திற்கும் ஆதாரம் ஆனவனுகவும் தான் ஒன்றினையும் ஆதாரமாகக் கொள்ளாதவனுமாக இருத்தலின் 'நிராலம்ப கோசாத்தை' என்றார். இறைவன் அவத்தைகள் எல்லாவற்றையும் கடந்த நாலாவது தானமாகிய துரியநிலையில் இன்பமயமாக இருப்பவன் ஆதலினால் 'துரிய வாழ்வை' என்றார். உள்ளுவாருள்குந்தோறும் உள்ளத்தே அமுதமூற்றும் தன்மையன் இறைவன் ஆதலினால் 'அகமகிழ வருந்தேனை முக்கனியைக் சற்கண்டை யமிர்தைநாடி' என்றார். இதனை,

"கனியினுங் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழற்பாவை நல்லாரினும்
தனிமுடி கவித்தா சாளு மரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே"

எனவருந் **தேவாரத்**தாலும் அறியலாம்.

'அமிர்தம்' அழிவற்றது, அழிவில்லாமையைத்தருவது என்னும் பொருளது இறைவன் அழிவில்லாதவன் ஆதலின் இறைவன்றனக்குமே 'அமிர்து' எனப் பெயர் ஒன்றுண்டு. இனி அமிர்து என்பது தேவர் திருப்பாற்கடலிற் கடைந்தெடுத்த உணவையுங் குறிக்கும். 'மொகு மொகு' இது இரட்டைக்கிளவி ஒலிக்குறிப்பாக வந்தது. 'இருவிழிநீர்' என்றது ஆனந்தபாஷ்பத்தை. 'நீர் முத்து' இது நீராகிய முத்து என விரிதலின் பண்புத்தொகை. 'கா மலர்' இதுவும் காமாகிய மலர் என விரிதலின் பண்புத்தொகை. 'மலர்' காத்திற்கு உவமை. மலர் என்றது செந்தாமரையை. என்னை 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்றமையான் என்க. 'முகிழ்த்தல்' என்றது குவித்தலை. மலர் என்றதற்கு ஏற்ப முகிழ்த்து என்றார். 'இகபரம்' இது வடசொற் சந்தி உம்மைத் தொகை, இகமும் பரமும் என்பது விரி. 'ஏ' என்னும் வினு 'எந்த' எனத் திரிந்துவந்தது. 'அகம்' இது ஈண்டு மனம் என்னும் பொருளது, உள்ளிடத்தே மனம் இருத்தலின் என்க.



[சாதி குலம் எல்லாம் இன்றி எப்பொருளுக்குள்ளும் நின்று இயக்கிவைக்கும் பரம்பொருளைத் திருவருட்சகாயத்தால் சிந்தித்து வந்திப்போம் என்கின்றார்]

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி அருவுருவத்
    தன்மை நாமம்
ஏதுமின்றி எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவறநின்
    றியக்கஞ் செய்யும்



சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
    துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
    சிந்தை செய்வாம்.

(ப-ரை) சாதி-சாதியும், குலம்-குலமும், பிறப்பு-பிறப்பும், இறபபு-மரணமும், பந்தம்-பாசக்கட்டும், முத்தி-மோக்ஷமும், அரு - அருவமாந்தன்மையும், உருவம்-உருவமாகும், தன்மை-தன்மையும், நாமம்-பெயரும், (ஆகிய இவைகள்) ஏதும்-ஏதுவும், இன்றி-இல்லாமல், எ-எந்த, பொருட்கும் - பொருளுக்கும், எ-எந்த, இடத்தும் - இடத்திலும், பிரிவு - நீக்கம், அற - இல்லாதபடி, நின்று-நின்று, இயக்கம்-இயங்குதலை, செய்யும்-செய்விக்கின்ற, சோதியை-பேரொளியை, மா - பெரிய, தூ - பரிசுத்தமான, வெளியை - ஆகாயத்தை, மனது-மனத்தாமரையானது, அவிழ - மலா, நிறைவு ஆன - பரிபூரணமாக நிறைந்து உள்ள, துரியம் - துரியநிலையிலுள்ள, வாழ்வை - வாழ்வை (செல்வத்தை), தீது-தீங்கு (கெடுதல்), இல்-இல்லாத, பரம்-மேலாகிய, பொருளை-ஒப்பற்ற பொருளாகும் இறைவனை, சிந்தை செய்வாம் - மனத்தால் எண்ணி வந்திப்பாம் எ-று.

(வி-ரை) 'சாதி' என்பது பிரிவு. ஈண்டு உடற் சம்பந்தமாகப் பிரிக்கப் படும் பிரிவை உணர்த்திற்று. இதனை 'சாதி இரண்டொழிய வேறில்லை' என்ற **ஔவைபிராட்டியார் வாக்கா**னும் அறியலாம். 'குலம்' என்றது கூட்டம், இதுதான் எந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவன் என்பதை உணர்த் துவது. இதுகொண்டன்றே **திருநாவுக்கரசரும்** 'குலம் பொல்லேன்' என்றார் தம் **தேவாரத்தும்**. 'பந்தம்' என்றது மாயாமல சம்பந்தத்தை. 'முத்தி' என்றது மாயாமல சம்பந்தத்தினின்றும் விடுபட்ட நிலையை. இதுவே மோக்ஷம் எனப்படும். இதுகொண்டன்றே **பெரியாரும்** 'அற்றது பற் றெனின் உற்றது வீடு' என்றார். 'அருவம்' என்றது உருவம் இல்லாத தன்மை. 'உருவம்' என்றது வடிவுபெற்றிருக்குந் தன்மை. 'நாம்' என்றது பெயரை. இறைவன், 'தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ' என **மாணிக்கவாசகர்** கூறியபடி, தாய்தந்தை இல்லாதவன் தான் தனியன் ஆதலின் சாதி, குலம், பந்தம் இல்லாமை நன்கு அறியக்கிடக்கும். இன்னும் சாதிகுலம் முதலியன மாயைத் தொடருட்பட்டு அஞ்ஞானத்தால் மயங்கு வோர்க்கேயன்றி சுத்தாத்துவிதத்தால் பெருஞ்சோதியாகிய இறைவனுக்கு இல்லையாகும் என்பது உணரக்கிடக்கும். இறைவன், 'அருவென உருவென அருவுரு வெனமறை இறுதியு மறிவரு' தன்மையன் ஆதலின் 'அருவுருவத் தன்மை நாமம் ஏதும் இன்றி' என்றார்.

உருவப் பொருளுக்கே நாமம் உண்டு உருவமில்லாததற்குக் குணங்குறி அற்றதற்கு நாமம் இல்லை என்பது உணரத்தக்கது. இதனான்றே **மணி வாசகரும்**,

"ஒருநாம மோருருவ மொன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" என்றார்.

இறைவன் சர்வ வியாபகமாய் எல்லாவிடத்தும் எல்லாப் பொருளும் தன்னுள் வியாப்பியமாய் அடங்க அண்டத்து உள்ளும் புறம்பும் சரியாய் நிற்கின்றவன் ஆதலினாலும் சராசரப் பொருள்களுக்குள்ளே நின்று அவைகளை அவைகளின் வினைக்குத் தக்கபடி வினைக்கண் ஆட்டிவைப்போன் ஆதலினாலும், 'எப்பொழுட்கும் எவ்விடத்தும் பிரிவறநின் றியக்கஞ் செய்யும் சோதியை' என்றார். இதனை,

"தலையானை எவ்வுலகுந் தானானைத் தன்னுருவம்
யாவர்க்கும் அறியவொண்ணா நிலையானை" என்றும்,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே" என்றும்,

"சரமசரம் எல்லாமாய் அல்லவுமாய் அவ்வவற்றுட் சாரநின்று
பரமனொரு வன்றானே இயக்குவிக்கும் பரிசுணரார் பாரிலாரே
வரவொடுபோக் கற்றொளிரும் வள்ளலவன் றேய்ந்தெதிலும் வயங்கினாலும்
அரனொருவி காரமிலான் பெருநெருப்புக் கீரமுண்டோ அறைகுவீரே"

என்றும் வருவிற்றாலும் அறியலாம்.

விளக்குங் கதிரும் உயிர்களின் கட்புலனுக்கும் இருளைநீக்கி ஒளியைத் தந்து பொருளை விளக்குவதுபோல இறைவன் உயிர்களின் அஞ்ஞான இருளைநீக்கி மெய்ப்பொருளை விளக்குதலினால் சோதி எனப் பெற்றான் என்றும், சோதிப் பிழம்பாக இருப்பவன் ஆதலினால் சோதி என்றார் என்றுங் கூறல் இயையுடைத்தாகும். 'மாத்தா வெளி' என்றது பெரிய பரிசுத்தமாகிய பரமாகாயத்தை. இறைவன் பரமாகாய வடிவன் ஆதலினால் என்க. பஞ்சபூதங்களுள் ஆகாயத்தினிடத்தே ஏனைய பூதங்கள் நான்கும் ஒடுங்குவதுபோல இறைவன் மாட்டு எல்லாம் வந்தொடுங்கலினாலும், இது ஆகாயத்தினிடத்திருந்து ஏனைய பூதங்கள் எல்லாம் வெளிப்படல்போல, இறைவனிடத்திலிருந்தே எல்லாம் வெளிப்படலாலும் இறைவனை 'மாத்தா வெளி' என்றார் என்னலுமாம். இறைவனிடத்தே எல்லாம் ஒடுங்கலையும் இறைவனிடத்திருந்தே எல்லாந் தோன்றுதலையும்,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்"

என்ற **சிவஞானபோதச் சூத்திரத்தான்** நன்கறியலாம்.

சிறுமனம் பெரும்பொருளாகி இறைவன் விரிந்து குலவி உலவி நில்வி நிறைய இடந்தருதலின் 'அவிழ' என்றார். (அவிழ்தல் = மலர்தல்.)



இறைவன் தீங்கில்லான், தீமையில்லான், நன்குடையான், நன்மையன் ஆதலின் 'தீதில் பரம்பொருளை' என்றார். இதுபற்றியன்றே **திருஞானசம்பந்த சுவாமிகளும்,**

"நன்றுடையானைத் தீயதிலானை நரைவெள்ளே
றொன்றுடை யானை"

என்றார் தம் **தேவாரத்தும்.** 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி இறைவனை சிந்திக்க, வந்திக்க அவன் அருள் வேண்டலின் 'தீதில் பரம் பொருளைத் திருஅருளே நினைவாகச் சிந்தை செய்வாம்' என்றார். 'ஏதும்' இது 'ஏதவும்' என்பதன் மரூஉ. இதில் நின்ற உம்மை முற்றும்மை. 5

[இறைவனைச் சார்ந்து வாழவும் சிவாநந்தம் பெற்று வாழவும்
அருள்செய்த மௌனகுருவின் தாளை துதிப்போம்
என்கின்றார்]

இந்திரசா லங்கனவு கானலின் நீ ரெனவுலகம்
எமக்குத் தோன்றச்
சந்ததமுஞ் சிற்பரத்தா லழியாத தற்பரத்தைச்
சார்ந்து வாழ்க
புந்திமகி ழுறநாளுந் தடையறவா னந்தவெள்ளம்
பொலிக என்றே
வந்தருளுங் குருமௌனி மலர்த்தாளை அநுதினமும்
வழுத்தல் செய்வாம்.

(ப-ரை) இந்திரசாலம் - இந்திரசால வித்தைபோலவும், கனவு - கனவைப்போலவும், கானல் - கனவாகிய, நீர்-ஜலத்தை, என-ஒப்பவும், உலகம்-உலகமானது, எமக்கு - எங்களுக்கு, தோன்ற - காணுமாறு, சந்ததமும்-எக் காலத்தும், சிற்பரத்தால்-ஞானபக்ஷத்தினால், அழியாத-அழிவில்லாத நித்தியமாகிய, தற்பரத்தை - தற்பரவஸ்துவாகிய இறைவனை, சார்ந்து-அடைந்து, வாழ்க-வாழக்கடவை, புந்தி-மனம், மகிழ் - மகிழ்வு, உற-எய்த, நாளும்-நாள் தோறும், தடை-தடை, அற-இல்லாமல், ஆனந்தம்-பேரின்பம், வெள்ளம்-பெருக்கு, பொலிக-நின்று விளங்குக, என்றே-என்று, வந்து - கருணையுடன் வந்து, அருளும்-கிருபையைச்செய்கின்ற, குரு - மௌனகுருவினது, மலர்-தாமரை மலர்போன்ற, தாளை - திருஅடியை, அநுதினமும் - ஒவ்வொரு நாளும், வழுத்தல் செய்வாம்-துதிசெய்வோமாக எ-று.

(வி-ரை) ஜாலங்களிலெல்லாம் மிகவும் பெரிய ஜாலத்தை 'இந்திர ஜாலம்' என்பர். ஜாலம் என்பது இல்லாதவைகளை உள்ளனபோலக் காட்டுதல், இதிலோ உண்மையாய் இல்லாத ஒன்று தோற்றத்தில் மெய்யாய் இருப்பதுபோலக் காணும். 'கனவு' இது சாக்கிரத்திற்கு அடுத்தபடியில் இரண்டாவது நிலை. இதிலும் பொருள் உண்மைபோல் தோன்றி

நின்று பொய்யாய் முடியும். 'கானல் நீர்' இது வெயிலின் வெக்கை, நீர் போல் தோன்றுவது. தோற்ற மாத்திரையில் நீர்போலத் தோன்றினும் நீர் அல்லாததுவாக இருப்பது. இதனைப் பேய்த்தேரெனவுங் கூறுவர். ஈண்டு உலகம் நிலையுள்ள ஒன்றுபோலத் தோன்றிப் பின் மாறுபாடுற்றழிதலால் இந்திரஜாலத்தையும், கனவையும், கானல் நீரையும் உவமித்தார். 'இந்திரசா லங்கனவு கானலினீ ரெனவுலக மெமக்குத் தோன்ற' என்றது உலகின் உண்மைத் தத்துவத்தை எமக்குத் தோன்ற என்பதாம் உலகின் உண்மைத் தத்துவமானது இந்திர ஜாலத்தையும், கனவையும், கானல்நீரையும்போற் பொய்யானது என்பதாம். இதுகண்டன்றோ **பெரியாரும்**,

"அசத்தறியாய் கேணி யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னுயின்—அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றெப்பு"

என்று **சிவஞானபோதத்துச்** செப்பி வைத்தருளினர்.

'எமக்குத் தோன்ற' இது உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. ஈண்டு **மௌனதேசிக**ரின் அடியர்கள் அனைவரையுங்கூட்டி யுரைத்தார். 'சந்ததம்' இது வடசொல்; இதற்கு எக்காலத்தும் எப்பொழுதும் என்பது பொருளாம். இதனானே இடையறாது, நிரந்தரமாக, சாசுவதமாக என்பது பெறப்படும். 'சிற்பரம்' என்றது ஞானபக்ஷத்தை. ஞானபக்ஷத்தால் என்பது ஞானத்தால் என்பதாம். இறைவன்தானே தலைவனாகித் தனக்கொரு முதல்வன் இன்றி விளங்குவதனால் தற்பரன் என்றார். தற்பரன் (தன்+பரன்) இதற்குத் தானே தலைவன் என்பதாம். 'பரம்' இது உயர்வுகாட்டுஞ்சொல். பரத்தில் இருப்பவன் பரன்; இது உயர்ந்தோன் என்னும் பொருள் குறித்தமை காண்க. இறைவன் அழிவில்லாதவன் நாசரகிதன் ஆதலினால் 'அழியாத தற்பரத்தை' என்றார். இறைவன் உயர்ந்தவர்களிலும் உயர்ந்தவன் ஆதலின், பரன், பராபரன் எனப்பெயர் எய்தினன். 'பராபரன், என்பதற்கு அம்மையும் அப்பனுமாக இருப்பவன் என்று பொருள் கூறலும் ஒன்று. சார்ந்து வாழ்தலாவது இறைவனை அடைந்து அவன் வகுத்த வேதாகம நெறிபற்றி அவனொடு கலந்து வாழ்தலாம். இதுபற்றியன்றோ **பெரியார்களும்**,

"மான்மல ரவன்முன் னோர்தொன் முதலென வழுத்தற் கேற்பச்
சூன்மலர் கருணை யாலோர் தொன்முத லமர்ந்தான் மாக்கள்
கான்மல ரடங்கு முண்மை கைமலர் காட்சி யாலே
தான்மலர் தரத்தெ ரிக்குந் தம்பிரான் சரணஞ் சார்வாம்" எனவும்,

"காட்டுமலர்க் கொன்றை யானை கவின்மதியஞ் சூடி னானை
வாட்டுவினைப் பந்த மெல்லாம் வழிவழியாய் அறுப்பான் றன்னை
கோட்டுமுலை யுமையாள் பாகங் குலவியொளிர் கூறி னானை
நாட்டுதுய ரெல்லா மோட நயந்தவன்றாள் சார்ந்து வாழ்வாம்"

என்றுங் கூறிப் போந்தனர்.



இறைவன் 'உள்ளுதொறும் உள்ளுதொறும் தெவிட்டா இன்பம் உளத் தளிக்கும் பெருமானே' ஆதலினால் புத்தி மகிழுற என்றார். இவ்வுலகத்தே உயிர்கள் துய்க்கும் இன்பம் எல்லாம் அழிதன்மாலையன, சிற்றளவின, தடைபட்டழியும் இழிபின. ஆனால் இறைவன் திருவருளாய் எய்தும் சிவானந்தப் பேரின்பமே அத்தகையது அல்ல. இடையறாப் பேரின்பமாகும். இதுபற்றியே 'தடையறா வானந்தம் பொலிக வென்றே' என்றார். 'வந்தருளும்' என்றது வந்து கருணை பாலித்ததைக் குறிப்பித்ததாம். 'குருமௌனி' என்றது தனக்கு ஞானாசிரியராக வந்த 'மௌன தேசிகரை' இறைவனே பக்குவங்கண்டு குருமூர்த்தமாக மானிடச் சட்டை சாத்தி வருகின்றான் ஆதலின் கடவுள் வணக்கத்திலே தம் குருவணக்கத்தையுங் கலந்தார். இதனானே குருவையும், பொருளாகவும், பெரிய பொருளாகவும் எண்ணியுள்ளமை விளங்கும். குருவின் அருளால் திருஅருளையும், திருஅருளால் இறைவனையும் உயிர் அடையும். இறைவனே குருமூர்த்தமாக மான்காட்டி மான் பிடிப்பார்போன்று மானிடச் சட்டை சாத்தி வந்து ஞானோபதேசம் அருள்புரிந்து தன்னையும் தலைவனையுங் காட்டிச் சிவானந்தப் பெருவாழ்வில் அமர்த்துகிறான். இதுகொண்டன்றோ, 'கோனாகு வானுங் குரு' என்றார் ஒரு **பெரியார்**. இன்னும்,

"என்போல் எனக்காக இன்புதர வந்தருளி
என்னை விழுங்கி எழிலவனாய்—முன்னைப்
பெருஞ்சோதி யின்பப் பெரும்பிழம்பா நின்றான்
குருஞ்சோதி யாவந்த குரு"

என்பதனாலும் அறியலாம்.

'மலர்த்தாளை' இது உவமத்தொகை. 'என்னை' உவம உருபில தவமத்தொகை. 'ஏ' என்பது இலக்கணமாதலினால் என்க. இது 'மலர்போன்ற தாளை' என விரியும். இதில் 'போன்ற' என்னும் உவம உருபுதொக்கு நின்றது. 'மலர், என்றது ஈண்டு செந்தாமலரைக் குறித்தது. என்னை சிறப்புப்பற்றி என்க. இது பண்புவமை. 'அனுதினம்' இது ஒவ்வொரு தினமும், தினேதினே என்ற பொருளது. 'வழுத்தல்' என்றது, துதித்தல் என்னும் பொருளது. இனி துதித்து வணங்குவோம் எனலுமாம். 'இந்திர சாலங் கனவு கானல்நீர்' என்ற இதில் இந்திரசாலமுங் கனவும் கானல் நீரும் என உம்மைகள் தொக்குநின்றன. எண்ணும்மைகள் தொக்கன. 6

[சத்தும் சித்தும் ஆனந்தமுமாக விளங்கும் இறைவனை
வணங்குவோம் என்கின்றார்]

பொருளாகக் கண்டபொருளெவைக்கும்முதற் பொருளா [கிப்
போத மாகித்
தெருளாகிக் கருதும்அன்பர் மிடிதீரப் பருகவந்த
செழுந்தே னாகி

அருளானோர்க் ககம்புறமென் றுன்னாத பூரணஆ
னந்த மாகி
இருள்தீர விளங்குபொரு ளியாதந்தப் பொருளினையாம்
இறைஞ்சி நிற்பாம்.

(ப-ரை) பொருளாக-வஸ்துக்களாக, கண்ட - காணப்பட்ட, பொருள்கள் - வஸ்துக்கள், எவைக்கும் - யாவற்றிற்கும், முதன் - முதன்மையாகிய, பொருள்-வஸ்து, ஆகி-ஆகி, போதம்-அறிவு, ஆகி-ஆகி, தெருள்-அவ்அறிவினாலே தெளிவு, ஆகி-ஆகி, கருதும்-மனத்தே சிந்திக்கும், அன்பர்-மெய்அன்புடைய அடியார்கள், மிடி-வறுமை, தீர-ஒழியும்படி, பருக-நுகரும்படியாக, வந்த-வந்த, செழும் - செழுமையாகிய, தேன் - தேன், ஆகி - ஆகி, அருள்-அருள்வயம், ஆனோர்க்கு - ஆகியவர்களுக்கு, அகம்-உட்புறமென்றும், புறம்-வெளிப்புறமென்றும், உன்னாத-நினையாத, பூரணம்-நிறைவாகிய, ஆனந்தம்-பேரின்பரூபம், ஆகி-ஆகி, இருள்-அஞ்ஞான இருள், தீர-ஒழிய, விளங்கும்-பிரகாசிக்கின்ற, பொருள்-பொருள், யாது-எது, அந்த-அந்த, பொருளினை-வஸ்துவை, யாம் நாம், இறைஞ்சுவாம்-வணங்குவாம் எ-று.

(வி-ரை) அஞ்ஞானத்தாலே மறைப்புண்டுகிடக்கும் உயிர்கள் தம்கட்புலனாகும் பொருள்களை எல்லாம் கண்டு அவைகளையே பொருள், பொருள்கள் என மயங்கி நிற்கும். இறைவன் திரு அருளாலே சிறிது அவ் அஞ்ஞான இருள்நீங்க, அறிவு ஒளி ஒளிர தத்துவ ஞானோதயம் உண்டாகும். அது உண்டாகவே மண்ணாதி தத்துவங்களை நியதிகளைந்தறிந்து தன்னையும் தலைவனையும் அறிந்து தலைவனே பொருள் என்கின்ற உண்மை ஞானங் காண்பார். இதற்கு அவனருள் இன்றியமையாதது. "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே" எனவும், "காண்பாரார் கண்ணுதலே காட்டாக் கால்" எனவும், **தேவாரத்திருமுறை** முழங்குகின்றமையால் 'பொருளாகக் கண்டபொருள் எவைக்கும் முதற்பொருளாகி' என்றார். இதனானன்றே **திருவள்ளுவரும்**,

"நில்லா தவற்றை நிலையான வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை" என்றும்,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளினா மாணாப் பிறப்பு" என்றும்,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு"

என்றுங் கூறிவைத்தார்.

இறைவன் 'பொருளாகக் கண்ட பொருளெவைக்கு முதற்பொருளாகி' என்றதனால் இறைவனே சத்தாயுள்ளவன், சத்தியமானவன், நித்தியமாயினோன், மெய்யாயினோன் உண்மைப்பொருள் என்பது புலப்படா நிற்கும். இறைவன் அறிவு மயன். அறிவு வடிவன் ஞான சொரூபி



ஆகையால் 'போதமாகி' என்றார். போதம் - ஞானம். இதுபற்றியன்றே **மணிவாசகரும்**,

"அறிவ னேயமு தேயடி நாயினேன்
னறிவ னாகக்கொண் டோவெனை யாண்டது
வறிவி லாமையன் றேகண்ட தாண்டநா
ளறிவ னோவல்ல னோவரு ளீசனே"

என்னுஞ் செய்யுளில் 'அறிவனே' என்றார். இன்னும் **திருநாவுக்கரசரும்**,

"ஊனாகியுயிராகி யதனுனின்ற வுணர்வாகிப்பிற
வனைத்து நீயாய்நின்றாய்—நானேது
மறியாமே யென்னுள்வந்து நல்லனவுந்
தீயனவுங் காட்டாநின்றாய்—தேனாருங்
கொன்றையனே நின்றியூராய் திரு
வானைக் காவிலுறை சிவனே" என்றார். இன்னும்,

"உற்றிருந்த உணர்வெலா மானாய்நீயே
உற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய்நீயே
கற்றிருந்த கலைஞான மானாய்நீயே
கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்றாய்நீயே" என்றார். இன்னும்,

"அறிய விரண்டல்ல னாங்கறிவு தன்னா
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்கை
காட்டா தறிவறிந்து கண்டு"

என்னும் **சிவஞானபோத உரை**யாலும் உணரலாம்

இறைவன்சித்துணர்த்தியதாயிற்று. இறைவன் அன்பரகத்துச் சிவானந்தத் தேன்சொரியும் பெற்றியன் ஆதலின் 'கருது மன்பர் மிடிதீரப் பருகவந்த செழுந் தேனாகி' என்றார். இதனானன்றே **மணிவாசகரும்**,

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற் றேனுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போது
மனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என்றார்.

இதனால் இறைவன் ஆனந்தன் என்றதாயிற்று. 'கருது மன்பர் மிடி' என்பது சிவானந்தப்பேறுபெறாத மிடி என்க. செழுமை+தேன் = செழுந் தேன் என்றாயது. ஈறுபோதல் என்னும் விதியால் மைகெட்டது. இறைவனைச் செழுந்தேன் என்றது, சுவையாலும், நிறத்தாலும், மனத்தாலும், பயனாலும் செழுமையுடைமைபற்றி என்க. 'அருளானோர்' என்றது இறைவனின் திருவருள் கைவரப் பெற்றோரை என்பதாம். 'பூரணவானந்தம்' என்றது குறையற்ற பரிபூரண இன்பத்தை. 'இருள்' என்றது அஞ்ஞான

இருளை. 'இருள் தீர விளங்குபொருள்' என்றது சுயஞ்சோதிப்பொருளை, ஞான ஜோதிப்பொருளை, ஆனந்த ஜோதிப் பொருளை. அந்தப் பொருளே முழுமுதல்வன், பெரிய பொருள், இறைவன் என்றுணர்க. பொருள்+யாவன் = பொருளியாவன் 'தன்னொழி மெய்முன் யவ்வரினிகரந் தன்னு மென்று துணிகருமுளரே' என்ற நன்னூல் உயிரீற்றுப் புணரியல் விதியால் இடையே இகரந் தோன்றிற்று. 7

[வேதாந்தப்பொருளை, பூர்ணப்பொருளை, துரியநடுவில் இருக்கும் பெரியபொருளை வணங்குவோம் என்கின்றார்]

அருமறையின் சிரப்பொருளாய் விண்ணவர் மாமுனிவர்
    ராதி யானோர் [சித்த
தெரிவரிய பூரணமாய்க் காரணங்கற் பனைகடந்த
    செல்வ மாகிக் [போற்
கருதரிய மலரின்மணம் எள்ளிலெண்ணெய் உடலுயிர்
    கலந்தெந் நாளும்
துரியநடு வூடிருந்த பெரியபொருள் யாததனைத்
    தொழுதல் செய்வாம்.

(ப-ரை) அரும்-அருமையாகிய, மறையின் - வேதத்தின், சிரம்-உச்சியிலிருக்கும், பொருள்-பொருள், ஆய் - ஆகி, விண்ணவர் - தேவர்களும், மா-பெருமைபொருந்திய, முனிவர் - முனீஸ்வரர்களும், சித்தர் - சித்தர்களும், ஆதி-இவர் முதலான மற்றையவர்கள், ஆனோர்-ஆகியவர்களும், தெரிவு-தெரிதல், அரிய-அருமையாகிய, பூரணம் - பரிபூரணப்பொருள், ஆய்-ஆகி, காரணம் - காரணங்களையும், கற்பனை - கற்பனையையும், கடந்த - கடந்துநின்ற, செல்வம்-செல்வம் (ஐசுவரியம்), ஆகி-ஆகி, கருது-எண்ணுவது, அரிய-அருமையாகிய, மலரின்-பூவின், மணம்-வாசனையைப் (போலவும்), எள்ளில்-எள்ளிலே, எண்ணெய் - எண்ணெயைப் (போலவும்), உடல் - உடம்பிலே, உயிர் - உயிர், போல்-போலவும், கலந்து-கூடிநின்று, எ-எந்த, நாளும்-காலத்தும், துரியம்-துரியநிலையின், நடு-நடுவே, இருந்த-இருந்த, பெரிய-பெரிதாகிய, பொருள்-பொருள், யாது-எது, அதனை - அந்தப் பெரியபொருளை, தொழுதல் செய்வாம்-வணங்குவாம் எ-று.

(வி-ரை) வேதம் இறைவனால் தரப்பெற்றதாதலினாலும், இறைவன் திருஅருள் பெற்றார்க்கன்றி மற்றையோரால் பொருளறிதற்கு அரிது ஆதலினாலும் 'அருமறையின்' என்றார். வேதம் இரகசியார்த்தமுடைமையினால் 'மறை' என்னும் பெயர் பெற்றது. இனி அந்தணர் ஒழிந்து மற்றையர் பார்க்கக்கூடாதென மறுக்கப் பெற்றமையின் மறை என்றாயிற்று என்பாரும் உண்டு. வேதம் தன் முடிவிடத்தே பரிபூரணனாகிய இறைவனையே கூறுகின்றதாதலின் 'அருமறையின் சிரப்பொருளாய்' என்றார். இதனானன்றோ பெரியார்களும்,



"வேதமுடி நின்றிலங்கும் பாதம் எங்கள்
விமலனார் தன்பாதம் விளங்கக் காணே" எனவும்,

"வேதமே வேதமுடிவே வேதியா" எனவும்,

"அருமறையின் அகத்தானை" எனவும்,

"வேதம் பயில் பாடலாய்" எனவும்,

"வேதப் பொருளே விமலா வெண்ணெய்நல்லூராய்" எனவும்,

"மறைமுடி யிடை மாகுபாதா" எனவும்,

"சுத்தவே தாந்தச் சுடர்முடியி னுந்தகா
வித்தையாம் பொற்றலத்து மெய்யன்பர்—ஒத்தவுளத்
தும்மாடுந் தப்பாதன் தொல்பிறவி வேரறுக்க
வெம்மூடு நிற்கு மிறை" என்பதனாலும்,

"நண்ணியனை யென்னாகித் தன்னானை நான்மறையின்
    நற்பொருளை நளினு விண்டிங்கட்
கண்ணியனைக் கடியநடை விடையொன் றேறுங்
    காரணனை" எனவும்,

"நால்வேத மாறங்க மானாய் நீயே" எனவும்,

"ஆறங்க நால்வேத மானாய்" எனவும்,

"வேதவேதமே வேதச் சிரப்பொருளே
    வேதாந்த நாதமே"

எனப் பல பெரியார்கள் துதித்தமை காண்க.

தேவர்கள் விண்ணுலகில் வசிக்கின்றவர்கள் ஆதலின் அவர்களுக்கு 'விண்ணவர்' எனப்பெயர் ஆயிற்று. விண், மண்ணுலகவாசிகள் தம் புண்ணியப்பேற்றால் எய்தும் உலகம். புண்ணியப்பேற்றைத் துய்க்கும் இடம். இதனைச் சொர்க்கம் எனவும் புகலுவர் மாமுனிவர் இது பெருமை என்னும் பொருள் குறித்த 'மா' என்னும் ஓரெழுத்தொருமொழி அடையாக அடுத்து நின்றது. உலகப்பற்று முத்தி எய்துதற்கு இடையூறாக இருப்பதென அவ்வுலகைப்பற்றை வெறுத்துக் கோபித்து விட்டவர்கள் ஆதலின் முனிவர்களுக்கு அப்பெயர் வந்தது (முனிவு-கோபம் வெறுப்பு, முனிவன்-உலகப் பற்றை வெறுத்துவிட்டவன்) பற்று அற்றவர்களுக்கு ஒற்றை நற்றவன் பொற்பதமணுகும் ஞானம் பிறக்கும் ஆதலினால் 'மாமுனி' என்றார். சித்தர் என்றது தவமகிமையால் அட்டமா சித்திகளையும் கைவரப் பெற்றோர்கள் என்பதாம். இனி யோகானுபவத்திலிருப்பவர்கள் என்பாரும் உண்டு. தவத்தால் எல்லாப் போகமும் அனுபவிக்கும் தேவரும், உலகை வெறுத்து விட்ட தத்துவஞானம்பெற்ற மாமுனிவர்களும், சித்தெல்லாங் கைவரப் பெற்ற அவர்களுக்கும் இறைவன் காணற்கரியவன் அவன் அருள் பெற்

ருர்க்கே எளியன் என்பது தோன்ற, 'விண்ணவர் மாமுனிவர் சித்தாதி யானேர் தெரிவரிய பூரணமாய்' என்ருர். இதுபற்றியன்ருே **திருநாவுக்கரசரும்**,

"அருமறையின் அகத்தானை அணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப்பாலை" என்றனர்.

'வேதமுங் காணு வியன் பாதன்' என்பதும் ஈண்டு நுனித்து அறியத் தக்கது. இறைவன் சர்வ வியாபியாய் எங்கும் நிறைந்து இருக்கின்ருன் ஆதலினுல் 'பூரணமாய்' என்ருர். ஆதிமுதல், அந்தமுடிவு இல்லாதவன் ஆதலினுல் 'காரணங் கற்பனை கடந்த செல்வமாகி' என்ருர். ஈண்டு காரணம் என்றது, ஆதியை. 'கற்பனை', இல்லதை உள்ளதாகக் கற்பித்துக் கூறல். 'செல்வம்' இது பொருளைக் குறிக்கும் சொல். 'ஐசுவரியம்' இது வடசொல். உலகில் இன்பவாழ்வுக்குச் செல்வப்பொருள் இன்றியமையாது வேண்டப் பெறுதல்போலப் பேரின்பவாழ்வுக்கு இறைவன் வேண்டப் பெறுபவன் ஆதலின் இறைவனைச் செல்வம் என்ருர். இச்செல்வம் என்ற சொல் 'செல்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. இதற்குத் தன்னை விட்டுச் செல்வது என்பது பொருள். இதனுனன்ருே முனிவர்களும்,

"துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்" என்றனர்.

செல்வம் இல்வாழ்வினர்க்கு மாத்திரமன்று துறவறத்தினருக்கும் வேண்டத்தக்கதாகும். என்னை துறவறத்தினர் பூவுலகில் உள்ளவரை அதுவும் வேண்டியதேயாகும். இதனுனன்ருே **மணிவாசகரும்**, 'முனிவரு மன்னரு முன்னிய பொன்னுன் முடியும்' என்று எழுதிவைத்தார். **திருவள்ளுவரும்** உலகில் பொருள் இன்றி யமையாததே என்பதை,

"பொருளல்ல வரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்" என்றும்,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்றும் கூறிவைத்தார்.

இதுகொண்டே நம் **தாயுமானரும்** 'காரணங் கற்பனைகடந்த செல்வமாகி' என்ருர். பொருள்+யாது இது பொருளியாது என ஆயது.

"தன்ஞெழி மெய்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே"

என்ற **நன்னூல்** (சூ-206) விதியால் என்க.

இறைவன் உயிர்களிடத்தே எந்நாளும் அபேதமாகக் கலந்திருத்தலைத் திட்டாந்தவாயிலாக உணர்த்தவேண்டி 'கருதரிய மலரின்மணம் எள்ளி



லெண்ணெய் உடலுயிர்போற் கலந்தெந் நாளும்' என்ருர். மலரில் மணம் போலவும், எள்ளில் எண்ணெய்போலவும், உடலில் உயிர்போலவும் கலந் திருக்கின்ருன். என்பதனை,

"பூவண்ணம் பூவின் மணம்போல
மெய்ப்போத வின்பமே வண்ணல்"

என்ற **திருவிளையாடல்புராணச் செய்யுளாலும்**,

"பண்ணொலியே மெய்யுயிரே பற்றும் பழஞ்சுவையே
நண்ணுமொரு எள்ளெண்ணெயே நாடுமிவை—அண்ணிக்
கலந்த கலப்பே கருதெவற்று மீசன்
நலந்திகழ வுள்ளுறைதல் நாடு"

என்ற வெண்பாவாலும் அறியலாம்.

பூவும் மணமும், எள்ளும் எண்ணெயும் உடலுயிரும் பிரிப்பரிதாகக் கலந்து அபேதமாக இருத்தலை,

"அரும்பாலா காமுனம் பூமணஞ் சொற்பொரு ளாகமுயிர்
கரும்பாஞ் சுவையெள்ளு மெண்ணெயும் போலொத்த காதலரைப்
பெரும்பாலி னல்லன்னங் கங்கா சலத்தைப் பிரிப்பதுபோல்
சுரும்பாம் புலவர் யமனுலை செக்கெனத் தோன்றினையே"

என்ற பாலனைப் பழிச்சலென்னுந் துறையிற்பாடிய **தனிப்பாடற்** பாட்டாற் றெரியலாம்.

'எந்நாளும்' என்பதில் நாள் என்னுஞ் சொல் தினத்தைக் காட்டாது காலத்தைக் காட்டிநின்றது. 'துரியநடு' என்றது துரியநிலையின் மத்தியை. அருமை+மறை, இது அருமறை என ஆயது. "ஈறு போதல்" என்னுஞ் சூத்திரத்தால் என அறிக. சிரம்+பொருள் இது சிரப்பொருள் என ஆயது.

"மவ்வீ றொற்றழிந் துயிரீறு ஒப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்" என்ற விதியான் என்க.

தெரிவு+அரிய இது தெரிவரிய என ஆயது. "முற்றுமற் றொரோவழி" என்ற **நன்னூல்** (சூ-161) விதியால் என்க. மலரின்+மணம் இது எ+நாளும் என்க. மணம் என ஆயது.

"லளவேற் றுமையிற் றடவும் அல்வழி யவற்ருே டுறழ்வும்
வலிநி மெலிமேவி னணவும்" என்ற **நன்னூல்** (சூ-227) விதியால் என்க.

எள்ளில்+எண்ணெய் இது எள்ளிலெண்ணெய் என ஆயது. "உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே" என்ற **நன்னூல்**, (சூ-227) விதியால் எந்நாளும் என ஆயது.

"எர விஞமுச் சுட்டின் முன்னர் உயிரும் யகரமும்
எய்தின் வவ்வும் பிறவரி னவையும்"

**நன்னூல்** (சூ-163) என்ற விதிப்படி என்க.

[வெறுவெளியாய் ஆனந்தக்கடலாய் விளங்கும் இறையே தேவரீரின் அருளை நினைந்து வணங்குகின்றேன் என்கின்றார்]

விண்ணாதி பூதமெல்லாந் தன்னகத்தி லடக்கிவெறு
வெளியாய் ஞானக்
கண்ணாரக் கண்டஅன்பர் கண்ணூடே ஆனந்தக்
கடலாய் வேறொன்
றெண்ணாத படிக்கிரங்கித் தானாகச் செய்தருளும்
இறையே உன்றன்
தண்ணாருஞ் சாந்தஅருள் தனை நினைந்து கரமலர்கள்
தலைமேற் கொள்வாம்.

(ப-ரை) விண்-ஆகாயம், ஆதி - முதலாகிய, பூதம் - பூதங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், தன்-தனது, அகத்தில்-உள்ளே, அடக்கி-அடக்கி, வெறு-வெறுவிதாகிய, வெளி-வெளி, ஆய் - ஆகி, ஞானம்-ஞானமாகிய, கண்-கண் (அகக்கண்), ஆர-நிறைய, கண்ட - தரிசித்த, அன்பர் - மெய்அன்பு உடைய அடியார்கள், கண் - அந்த ஞானக்கண்ணின், ஊடே - உள்ளே, ஆனந்தம்-பேரின்பம், கடலாய் - கடலாக, வேறு - (அந்த அன்பர்கள் தானாகிய இறைவனை அன்றி) வேறு, ஒன்று - யாதொன்றையும், எண்ணாத - நினையாத, படிக்கு-விதமாக, இரங்கி - அவர்களிடத்து மனம் இரங்கி, தானாக - நீதானாகவே, செய்து-செய்து, அருளும் - அருள்கின்ற, இறையே - கடவுளே! உன் தன்-தேவரீரது, தண் - குளிர்ச்சி, ஆரும் - பொருந்திய, சாந்தம்-சாந்தரூபமாகிய, அருள்-கிருபை, தனை - தன்னை, நினைந்து - சிந்தித்து, கரம்-கைகளாகிய, மலர்-மலர்களை (கூப்பி), தலை-சிரத்தின், மேல்-மேலே, கொள்வாம்-கொண்டுவைத்து பணிவோமாக எ-று.

(வி-ரை) 'விண்ணாதி பூதம்' என்றது ஆகாயம், காற்று, தீ, நீர், மண் என்னும் ஐந்து பூதங்களை. 'தன்னகம்' என்றது இறைவனின் இடத்தை ஈண்டு 'அகம்' என்றது ஏழன்உருபு; இடப்பொருள் தந்து நின்றது. 'அடக்கல்' என்றது ஈண்டு ஒடுக்கலை. 'வெறுவெளியாய்' என்றது பராகாயத்தை. முன்னே விண் என்றது பூதாகாயத்தை. 'ஞானக்கண்' இது ஞானமாகிய கண் என விரிதலின் பண்புத்தொகை. இதனை அகக்கண் என்பர். 'ஆர' ஈண்டு நிறைய என்னும் பொருளது, என்னை 'ஆர்வே நிறைவு' என்பதனாலென்க. 'ஞானக்கண் ணாரக் கண்ட அன்பர்' என்றது ஞானிகளாகிய மெய்யடியார்களை. 'அறிவுக் கறிவாய்ச் செறியுமந்தப் பரமசிவம்' என்றபடி இறைவன் அறிவில் அறிவுமயமாய் விளங்குபவன் ஆதலின் 'கண்ணூடே யானந்தக் கடலாய்' என்றார். 'கண்ணூடே' என்றதில் 'கண்' என்றது அகக்கண்ணாகிய ஞானக்கண்ணை. இறைவன் 'சுகசொரூபி' 'இன்பமயன்' 'ஆனந்தவடிவன்' ஆதலினாலும் இறைவனாகிய ஆனந்தம், ஏனைய ஆனந்தம்போல அளவுபடுத்த முடியாதது ஆதலின் 'ஆனந்தக் கடல்' என்றார். 'கடல்' இது கட + அல் கடக்க முடியாதது என்னுங் காரணம் பற்றி வந்தபெயர்.



கடல் ஆழநீளம் அகலம் கனம் உண்ணிறை பொருள்கள் அறிய முடியாததுபோல இறைவன் ஆனந்தம் குணித்தறிய முடியாதது என்பார் 'ஆனந்தக்கடலாய்' என்றார். ஞானிகள் இறைவனையே பொருளாகக்கண்டு அவனையே சிந்தித்து இன்புறுவர். இறைவனாகிய பொருளைக் கண்டார்க்கு மற்றைய மாயாகாரியப் பொருள்கள் பொருளாகக்காணாது; அன்றியும் எல்லாம் இறைவனாகவே காண்பர் ஆதலின் 'வேறொன்றெண்ணாதபடிக்கு' என்றார். இதனை,

"ஏகனுமாகி யநேகனுமானவு னாதனு மானனென்றுந்தீபற
நம்மையே யாண்டானென்றுந் தீபற"

என்ற **திருவுந்தியாராலும்,**

இந்நூலாசிரியரே 'கண்டன வெலாமோன வுருவெளியதாகவுங் கருதி யஞ்சலி செய்குவாம்' என்றதனாலும் அறியலாம். இதுகொண்டன்றோ ஒரு பெரியார் இறைவனை 'தோற்றும் பொருணீ மற்றுநீ' என்றார். 'இரங்கி' என்றது, இறைவன் ஆன்மாக்களிடம் இரக்கம்கொண்டு என்பதாம். இரக்கம் என்பது மன இரக்கம். மன இளக்கம். இனி, 'வேறொன்றெண்ணாதபடிக்கிரங்கி' என்பதற்கு இறைவன் அவ்வுயிர்களிடத்தே கருணைக்கு மாறாகிய வேறொன்றை எண்ணாது இரங்கி எனப் பொருள்கொள்வாரும் உண்டு. 'தானாகச் செய்தருளுதலாவது' அத்துவிதக்கலப்பு அருளுதலை. கடலைபோற் கூடும் முத்தியளித்தலை என்க. சோகம் பாவனையால் இறைவனாகவே நிற்குநிலை அதாவது தன்னை மறந்து தலைவனாகக் காண்கை. இதனை,

"அவனே தானே யாகிய வந்நெறி
யேகனாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"

என்ற **சிவஞானபோதச் சூத்திரத்தால்** நன்கு அறியலாம்.

'கடவுள்' எல்லார்க்குந் தலைவன் ஆதலின் 'இறையே' என்றார். இறைவன் திருஅருள், பிறவி வெப்பு ஒழித்து மனோசாந்தந் தந்தருள்வதாதலின் 'தண்ணாரும்' என ஒரு அடைமொழியும், திருஅருள் மன அமைதி தருதலின் சாந்தம் என்னும் அடைமொழியும் அருளுக்கு வைத்தார். 'தண்ணாரு சாந்தஅருள்' இறைவன் திருஅருளை. 'அருடனை' இதில் தனை என்பது பகுதிப் பொருள்விகுதி. 'தனை' இது 'தன்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். 'கரமலர்' இது கரமாகிய மலர் என விரிதலின் பண்புத்தொகை. கையை மலராக உருவகித்ததற்கு ஏற்ப தலைமேற் கொள்வாம் என்றார். மலர் சென்னியிற் சூட்டத்தக்கதாதலின். 'கரமலர்கள் தலைமேற் கொள்வாம்' என்றது கைகுவித்துச் சிரமேல்வைத்து வணங்குவாம்

என்பதாம். அருள்+தனை=அருடனை, மலர்கள்+தலைமேல்=மலர்கடலைமேல், என்ற புணர்ச்சிகளில் வருமொழித் தகரம் டகரமாகத் திரிந்தபின் நிலைமொழி யீற்று ளகரம் கெட்டது. இதனை,

"குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடும்"

என்ற நன்னூல் (சூ-229) அறிக.

9

[அடியேனின் உள்ளத்தூடே ஆனந்தமயமாய் நிறைந்தொளிரும் இறைவனே! தேவரீரிடத்து அன்புபெருகிக் கைகுவித்து வணங்கி யுன் அருளைச் சிந்திக்கின்றேன் என்கின்றார்]

விண்ணிறைந்த வெளியாய்என் மனவெளியிற் கலந்தறி
வெளியி னூடந் [வாம்
தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த மானபெருந்
தகையே நின்பால்
உண்ணிறைந்த பேரன்பா லுள்ளுருகி மொழிகுழறி
உவகை யாகிக்
கண்ணிறைந்த புனலுகுப்பக் கரமுகிழ்ப்ப நின்னருளைக்
கருத்தில் வைப்பாம்.

(ப-ரை) விண்-பூத ஆகாயம், நிறைந்த-நிறைந்துள்ளதாகிய, வெளியாய்-பரம ஆகாயமாகி, என்-அடியேனின், மனம் - மனமாகிய, வெளியில் - இதய ஆகாயத்தில், கலந்து-சேர்ந்து, அறிவு-ஞானம், ஆம்-ஆகும், வெளியின்-ஆகாயத்தின், ஊடும்-உள்ளும், தண் - குளிர்ச்சி, நிறைந்த-மிகுந்த, பேர்-பெரிய, அமுது - அமிர்தம், ஆய் - ஆகி, சதா - இடையறாத, ஆனந்தம் - பேரின்பம், ஆன-ஆகிய, பெருந்தகையே-பெரியோனே! நின்பால்-தேவரீரிடத்து, உள்-அடியேனின் உள்ளே, நிறைந்த-மிகுந்துநிறம்பிய, பேர்-பெரிய, அன்பால்-அன்பினால், உள்-மனம், உருகி - கரைந்து, மொழி - சொற்கள், குழறி-தடுமாறி, உவகை-(மகிழ்ச்சி) ஆனந்தம், ஆகி - ஆகி, கண்-விழிகளில், நிறைந்த-நிறைந்திருக்கின்ற, புனல் - ஆநந்தநீரை, உகுப்ப - சொரிய, கரம் - கைகள், முகிழ்ப்ப-குவித்துவணங்க, நின்-தேவரீரின், அருளை-திருஅருளை, கருத்தில்-மனத்தகத்து, வைப்பாம்-சிந்தித்து வைத்திருப்பாம் எ-று.

(வி-ரை) 'விண்' என்றது பூதஆகாயம். இது ஏனைய நாலு பூதங்களும் இதனுள் அடங்குகின்றது. அந்தப் பூதாகாயம் இறைவனாகிய பர ஆகாயத்துள் ஒடுங்குகின்றது என்னும் பொருள்தர 'விண்நிறைந்த வெளியாய்' என்றார். இதுகொண்டன்றோ பெரியாரும், 'விண்ணாகி விண்ணே' என்றார். பூதவெளி அடங்கும் பரவெளி என் மனவெளியிற் கலந்தது என்பார் 'விண்ணிறைந்த வெளியாயென் மனவெளியிற் கலந்து' என்றார். அறிவது அறிவு ஆதலின் 'அறிவாம் வெளியினூடும்' என்றார். 'அறிவாம்



வெளி' என்றது ஞானாகாயத்தை. 'வெளியாயென் மனவெளியிற் கலந்தறிவாம் வெளியினூடும்' என்றது சொற்பொருட் பிரிதி நிலையணி. சொல்லும் பொருளும் பின்வந்ததனால் என்க. 'வெளியினூடும்' இதில் உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. மனவெளியிற் கலந்ததல்லாமல் அறிவாம் வெளியும் கலந்து எனப் பொருள்தந்தது.

அறிவே அறிவது. ஆராய்வது, அறிவே இன்ப துன்பங்களுக்கு ஆதாரமானது ஆதலின் 'தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்தமான பெருந்தகையே' என்றார். இதனானன்றோ பெரியார்கள் இறைவனை உணர்வே என்றும் உணர்வுக்கு உணர்வே என்றும் உணர்வுட் கலந்த இன்பமே என்றும் புகழ்ந்து துதிக்கின்றனர். இதனை,

"ஊனாகி யென்ற னுணர்வாய் உணர்வுக்கு முணர்வா யின்பந்
தானாகி நின்ற தனியே" எனவும்,

"அறிவுக் கறிவாய் ஆனந்த மாஞ்சோதி"

எனவும் வருவனவற்றால் தெளிக.

'தண்' என்றது குளிர்ச்சியை. பிறவி வெப்புத் தணிக்கவருந் தன்மை பற்றி 'தான்' என்றார். கடல் அமுது அத்துணைப் பெருமையுடையது அன்று. அதனை இறைவனாகிய அமுதின்முன் ஒப்பிட்டு நோக்குந் தரமன்று என்று கொண்டு ஏனைய அமுதினின்றும் பிரித்தற் பொருட்டே 'பேர்' என்னும் விசேடண **அடைமொழி** கொடுத்துப் பிரித்தார். 'அமுது' அழிவில்லாதது, அழிவில்லாமையைச் செய்வது என்னும் பொருளன. இறைவன் இடையறாப் பேரின்பம் பயப்பவனாகவும் பேரின்பமயமானவனாகவும் இருக்கின்றானாதலின் 'சதானந்தமான பெருந்தகையே' என்றார். இறைவன் பெரியவற்றுளெல்லாம் பெரியவன், தலைமை யுடையோன் ஆதலின் 'பெருந்தகையே' என்றார். 'உண்ணிறைந்த போன்பு' என்றது தயிலதாரைபோல் இடையறாது இறைவன் மாட்டே செல்லும் கழிபேரன்பைக் குறித்ததாம். 'ஆன்பால்' இதில் 'ஆல்' மூன்றன் உருபு. கருவிப்பொருளில் வந்தது. 'உள்ளுருகுதலாவது' மனங்குழைதல் மனம் நெக்குவிடுதல். இதனை,

"நெக்குநெக் குள்ளுருகி யுருகிநின்று
மிருந்துங் கிடந்து மெழுந்து
நக்குமழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானாவிதத்தாற் கூத்து நவிற்றிச்
செக்கர்போலுந் திருமேனி திகழ
நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்குநிற்ப தென்று கொல்லோ
வென்பொல்லா மணியைப் புணர்ந்தே"

என்ற **மணிவாசகர்** திருவாக்கானும் அறியலாம்.

'மொழி குழறல்' இது ஆனந்தமேலீட்டால் வார்த்தை தடுமாறலை உணர்த்திற்று. 'கண்ணிறைந்த புனலுகுப்ப' என்றது ஆனந்தபாஷ்பஞ் சொரிதலை. 'முகிழ்த்தல்' கைகுவித்து வணங்கல். 'நின் அருள்' என்றது திருஅருளை. 'கருத்தில் வைப்பது' என்றது மனத்தாற் கசிந்து கசிந்து உருகி எண்ணித் துதித்து மனத்தாற் றொழலாம். 10

## வேறு

[முதலை, குருவாய்வந்த சோதியை, என்னுயிர்த்துணையைக் கண்ணீர் வாரக் கரங்குவித்து வணங்குவோம் என்கின்றார்]

ஆதியந்தங் காட்டாத முதலா யெம்மை
அடிமைக்கா வளர்த்தெடுத்த அன்னை போல
நீதிபெறுங் குருவாகி மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமல மாகி
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியைஎன் னுயிர்த்துணையை நாடிக் கண்ணீர்
சொரியஇரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

(ப-ரை) ஆதி-பிறப்பும், அந்தம்-இறப்பும், காட்டா-உடையது அல்லாத, முதல் - முதற்பொருள், ஆய் - ஆகி, எம்மை - அடியோங்களை, அடிமைக்கா-தனது திருத்தொண்டுக்காக, வளர்த்து-போஷித்து, எடுத்த-எடுத்த, அன்னை-தாயை, போல-போல, நீதி-நீதியை, பெறும்-பெற்றுள்ள, குருவா-குருவாக, மனம்-மனத்துக்கும், வாக்கு - மொழிக்கும், எட்டா-எட்டாத, நிச்சயம்-சாசுவதம், ஆய்-ஆகி, சொச்சம் - களங்கரகிதம் உடைய, அது - அது, ஆய்-ஆகி, நிமலம்-மலம் அற்றது, ஆய் - ஆகி, வாதம் - தர்க்கவாதம், இடும் - இடுகின்ற (செய்கின்ற), சமயம் - சமயங்களின், நெறிக்கு - மார்க்கங்களுக்கு, அரியது-அறிய அரியது, ஆகி-ஆகி, மௌனத்தோர் - மௌனநிலையையுடைய ஞானிகள், பால்-இடத்தே, வெளியாய் - வெளிப்பட்டு, வயங்காநின்ற - விளங்கும், சோதியை-ஒளிப்பிழம்பை, என் - அடியேனின், உயிர்-உயிர்க்கு, துணையை-துணையாய் இருப்பதை, நாடி - குறித்து, கண் - கண்கள், நீர்-ஆனந்தபாஷ்பத்தை, சொரிய - உகுக்க (உதிர்க்க), இரு - இரண்டாகிய, கரம் - கைகளை, குவித்து-கூப்பி, தொழுதல் செய்வாம்-வணங்குவோம்யாம் எ-று.

(வி-ரை) இறைவன் 'பிறப் பிறப்பிலி' பிறப்பும் இறப்பும் இல்லாதவன்; 'ஆதி மத்தியாந்தரகிதன்' ஆதியும், மத்தியும், அந்தமும் இல்லாதவன்; என வேதங்கள் கோஷிக்கின்றமையின் 'ஆதியந்தங் காட்டாத முதலாய்' என்றார். இதனான்றோ **மணிவாசகரும்,**

"ஆதியு மந்தமுமில்லா வரும்பெருஞ் சோதியை
யாம் பாடக் கேட்டும்"

என்றும்,



"ஆதியந்த மாயினு யாலவாயி லண்ணலே"

என்றும், **திருஞானசம்பந்த சுவாமிகள்,** கூறியருளினர்.

'இறைவன் எல்லார்க்கும் எவற்றிற்கும் முதலாய் இருப்பதால்' 'முதலாய்' என்றார். 'எம்மை' என்றது ஆன்மாக்களை. அன்பின் மிகுதியையும் கருணையையுங் காட்ட 'அன்னை போல' என்றார். 'நீதிபெறும் குருவாகி' என்றதனால் குருவின் இலக்கணம் எல்லாம் அமைந்து என்பதாம். இதனை,

"அறியாதன வெல்லாம் மாங்காங் கறிவித்துப்
பிறியாதன வெல்லாம் பேசி—நெறியாரும்
பக்குவத்தின் மெய்ஞ்ஞானப் பாலருத்தி விக்குமொரு
சற்குருவைப் போலுமுண்டோ தாய்"

எனவும், **வள்ளலார்சாஸ்திரம்.**

"தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
றாடந்து தத்துவா தீதத்துச் சார்சிவன்
றாடந்து பாசந் தணிக்குமவன் சத்தம்"

**திருமந்திரம்** என்றதனாலும் அறியலாம்.

'குரு' என்கிற இரண்டக்ஷரங்களில், 'கு' வென்னும் அக்கரம் சுத்த நிர்க்குண சொரூபமும், 'ரு' என்னும் அக்கரம் கேவல நிராகாரமும் ஆகின்றவாதலால் சுத்த நிர்க்குண நிராகார பரப்பிரம்மத்தை இதுவென்னும்படி போதிப்பனென்பதும், குகாரம் மாயையென்றும், ருகாரம் அந்த மாயையை நாசம் செய்யும் பரப்பிரம்மமென்றும் சொல்லப்படும். இப்படிக்கு குருவென்ற பதம் மாயையாகியும் பரப்பிரம்மமாகியும் பொலிவது. குகாரமென்றால் சத்துவ ரஜோதமோ குணங்களில்லாதது எனப்படும். ருகாரமென்றால் கரசரணாதி அவயங்களற்ற நிராகார சொரூபமெனச் சொல்லப்படும். ஆதலால் குருவென்னும் பதத்துக்குச் சுத்தநிர்க்குணமாய் ரூபமற்ற நிராகாரமாயிருக்கும் பரப்பிரம்மமெனவும் பொருள்படுவது. மற்றும், 'கு' வென்றால் காடாந்தகாரமெனவும் 'ரு' என்றால் அந்த காடாந்தகார நிவிர்த்தியென்றும் பொருள்படும் ஆதலால், அஞ்ஞானாந்தகாரத்தை நீக்குபவனே குரு. அவ்வசனம் அஞ்ஞானமென்கிற பேரிருளை நீக்கி விளங்கும் ஞானசோதியைத் தந்து காக்கும் எனப் பொருளாம். இதனை,

"ஸர்வ ஶரீரஸ்த சைதந்ய ப்ரஹ்ம
ப்ரபாதோ குரு ருபாஸ்யஃ" என **நிராலம்போபநிஷத்திலும்,**

"நமஃ ஶிவாய குரவே நாத பிந்து காலத்மகே
நிரஞ்சனே பதம் யாதி நித்யம் யத்ர பாராயணஃ"

என்ற **அடயோகதீபிகையும்,**

"புகழுந் தயையாற் பரம வத்துவித புண்ணிய ஞானங் கொடுத்துத்
திகழுந் தெய்வச் சிவரூபந் தெரிவிப் பவனே குருவாவா

னிகழும் பரிசில் லாவவனே சிவனென் றுரைக்கு மெம்மறையு
மகழு மலத்த ராயின்ப மடை முயலு மமரீரே"

எனச் **சூதசங்கீதையிலுங்** கூறியபடி, குரு என்கிற பதத்தின் விளக்கப் பொருளே ஈண்டு வேண்டுவ தென்க.

மனம், வாக்கு எல்லாம் மாயையின் காரியம் ஆதலினாலும், இறைவன் மாயைக்கு எட்டாதவன் ஆதலினாலும், இறைவனே சற்குருவாக வருகின்றான் ஆதலினாலும் 'மனவாக்குக் கெட்டா' என்றார். இதனுடன் காயமும் கூட்டிக் கோடலும் ஆம். 'நிச்சயமாய்' என்றது மெய்ப்பொருளாய் அழிவில்லாது என்று முள்ளதாய என்பதாம்; இதனைச் சாசுவதமாக என்பர். 'சொச்சமதாய்' என்றது களங்க மிலதாய் என்பர். மாயா விகாரங்களாற் பந்திக்கப்படாதும் விகாரப்படாதும் எஞ்சி நிற்பது என்பதாம். 'நிமலம்' என்பது மலநீக்க முடையது என்பதாம். 'அமலம்' என்பதனை புறத்தூய்மையையும், நிமலம் அகப்பரிசுத்தத்தையும் உணர்த்தும் என்பார். 'அமலம்' 'விமலம்' 'நிமலம்' என்பன தூய்மை விளக்கவருஞ் சொற்களாம்.

சமயங்கள் பல ஆதலினாலும், அவ்வச்சமயங்கள் தம் தம் கொள்கைகளைச் சாதித்தும் பிறமதக் கொள்கைகளைப் பேதித்தும் மாறுபட்டு நிற்கும். ஆதலினால் 'வாதமிகுஞ் சமயநெறிக் கரியதாகி' என்றார். இதனானன்றே பிறண்டும் 'மாறுபடு சமயமெலாம் புகுந்து பார்க்கின்' என்றார். இவ்வாசிரியர். 'அறியதாகி' என்றது அறிதற்கரியதாகி என்பதாம். 'மௌனத்தோர்' என்றது மௌனநிட்டா யோக ஞானியரை. 'பால்' இது ஏழனுருபு; இடப்பொருள் உணர்த்திற்று. 'வெளியாய்' என்றது அவரொடு கூடி இருத்தலை என்பர்; இனி, ஞானியர்பால் வெளிப்படத்தோன்றி என்பதுமாம். 'வயங்காநின்ற' இதற்கு வயங்குகின்ற, விளங்குகின்ற என்பது பொருளாம். (வயக்கம்-விளக்கம்) இது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; 'நின்ற' இது துணைவினை. இறைவன் அஞ்ஞான இருளை அகற்றி இன்பப்பெருஞ் சுகத்தை யருள்வோன் ஆதலின் 'சோதியை' என்றார்.

இறைவன் உயிர்களுக்கு உயிராய் இருந்து அவ்வுயிர்களுக்கு இன்பூட்டுகின்றானாதலின் 'என் உயிர்த் துணையை' என்றார். இதனை,

"ஊனாகி யுயிராகி யதனுளின்ற உணர்வாகிப்
பிறவனைத்து நீயாய் நின்றாய்"

என்ற **திருநாவுக்கரசர் திருவாக்கானும்,**

"எல்லா வுயிர்க்கு முயிராருணேச ரிவரசைவின்
அல்லா தணுவு மசையாததென்ப தறிந்தனமே
வில்லாடன் மாரனிருக்கவும் யோகம் விளைந்தவந்நாள்
புல்லா திருந்தன வெல்லாவுயிருந்தம் போகத்தையே"

என்ற **அருணைக்கலம்பகச்செய்யுளா**லும்,



"துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையா யென்னெஞ்சந் துறப்பிப்பாய்நீ"

என்ற **அப்பர் தேவாரத்தா**லும் நன்கறியலாம்.

'நாடி' என்றது விரும்பிச் சிந்தித்து என்பதாம். 'நாடி' என்பதற்குத் தேடி என உரைப்பாரும் உண்டு. 'கண்ணீர்' என்றது ஆனந்தக் கண்ணீரை. 'கரங்குவித்துத் தொழுதலாவது' கைகுவித்து வணக்கஞ் செய்வோம் என்பதாம். 'ஆதியந்தம்' இது உம்மைத்தொகை, ஆதியும் அந்தமும் என விரியும். 'அடிமைக்காக' என்றதன் ஈறு கெட்டு 'அடிமைக்கா' என நின்றது. இது,

"காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர்
காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர்"

என எட்டுச்சீர்கொண்ட அடிநான்கண்வந்த எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

11

[அகர உயிர்போல் எல்லாமாய் அல்லாவாய்த் தனித்து நிற்கும்
இறைவனை சிந்தித்து வந்திப்பாம் என்கின்றார்]

அகரவுயி ரெழுத்தனைத்து மாகி வேறாய்
அமர்ந்ததென அகிலாண்டம் அனைத்து மாகிப்
பகர்வனஎல் லாமாகி அல்லதாகிப்
பரமாகிச் சொல்லரிய பான்மை யாகித்
துகளறுசங் கற்பவிகற் பங்க ளெல்லாந்
தோயாத அறிவாகிச் சுத்த மாகி
நிகரில்பசு பதியான பொருளை நாடி
நெட்டுயிர்த்துப் பேரன்பால் நினைதல் செய்வாம்.

(ப-ரை) அகரம் - அகரமாகிய, உயிர்-உயிர் எழுத்து, எழுத்து - எழுத்துக்கள், அனைத்தும்-எல்லாமும், ஆகி-ஆகி, வேறு - தான்வேறு, ஆய் - ஆகி, அமர்ந்தது-அமைந்தது, என-போல, அகில-எல்லா, அண்டம்-உலகங்களும், அனைத்தும் - அவற்றின் கண்ணே உள்ள சராசரங்கள் எல்லாமும், ஆகி - ஆகியும், பகர்வன - சொல்லப்படுபவைகளாகிய, எல்லாம் - (இன்னுமுள்ள) எல்லாப் பொருள்களும், ஆகி - ஆகியும், அல்லது - அவைகள் அல்லாதது, ஆகி - ஆகியும், பரம்-எல்லாப் பொருள்களுக்கும் மேலான உயர்ந்தபொருள், ஆகி-ஆகியும், சொல்-சொல்லுதற்கு, அரிய - அருமையானதாகிய, பான்மை ஆகி-தன்மையை உடையது ஆகியும், துகள்-குற்றம், அறு-நீங்கிய, சங்கற்பம்-சங்கற்பமும், விகற்பங்கள் - விகற்பங்களும், எல்லாம் - எல்லாவற்றிலும் எதனுள்ளும், தோயாத-படியாத, அறிவு-அறிவுமயம், ஆகி-ஆகியும், சுத்தம்-பரிசுத்தம், ஆகி - ஆகியும், நிகர்-ஒப்பு, இல் - இல்லாத, பசுபதி - உயிர்களுக்கு இறைவனாக இருக்கின்ற, பொருளை - பொருளை, நாடி - சிந்தித்து, நெட்

டுயிர்த்து - பெருமூச்செறிந்து, பேர்-பெரிய, அன்பால்-அன்பினால், நினைதல்-நினைத்தலை, செய்வாம் - செய்வோம் எ-று.

(வி-ரை) "அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு" எனத் **திருவள்ளுவரும்,**

"அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து"

எனத் **திருஅருட்பயன் நூலுடையாரும்** கூறியாங்கு இறைவன் எல்லா எழுத்தோடும் கலந்து அவை பிறத்தற்குக் காரணமாய் நின்றும் தான் வேறாகி நின்றும் இருத்தல்போல இறைவனும் எல்லா உயிர்க்கும் உயிராயிருக்கிறான் எல்லாமாய் இருக்கிறான், அவை அல்லவுமாய் இருக்கிறான் தான் தனியனாகவும் இருக்கிறான் என்பார்,

"அகரவுயி ரெழுத்தனைத்து மாகிவேறா
யமர்ந்ததென வகிலாண்ட மனைத்துமாகிப்
பகர்வன வெல்லாமாகி யல்லதாகிப் பரமாகி"

என்றார். இதுகொண்டன்றோ **உண்மை விளக்க நூலுடையாரும்,**

"அக்கரங்கட் கெல்லா மகர்வுயிர் நின்றாற்போல்
மிக்க வுயிர்க்குயிராய் மேவினோம்—எக்கண்ணு
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லாகம மோது நாடு" என்றார்.

'எழுத்தனைத்தும்' தமிழ் எழுத்துக்களேயன்றி ஏனைப்பாடை எழுத்துக்களையும் கொண்டு கூட்டிக்கொள்ளவே என்க. 'அகிலாண்டம்' இது அகில+அண்டம். என்னும் இரு வடசொற் சந்தி இது தீர்க்கசந்தி. 'பகர்வன வெல்லாமாகி' என்றதனால் காணப்படுவன மட்டுமன்றி சொல்லப்படுவனவும் ஆகி என்பது பெற்றாம். பகர்வன வெல்லாமாகி, என்றதால் எண்ணப்படுவனவும் கொள்ளக்கிடக்கும் எண்ணாது சொல் எழாதாதலினாலென்க. இறைவன் காண்பன, சொல்லுவன, எண்ணுவன ஆக இருக்கின்றான் அவை அனைத்தும் அல்லவுமாக இருக்கின்றான் இதனாலன்றோ, **பரஞ்சோதியாரும்** 'எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி' என்றார். இறைவன் உயர்ந்தோன் ஆதலினாலும், அவனினும் உயர்ந்தவன், உயர்ந்தபொருள் எதுவும் இல்லையாதலினாலும் 'பரமாகி' என்றார். 'கண்டவர் விண்டிடார்' பேசாப் பெருமையினான் என்றபடி இறைவன் இறைவன் நிறத்தன் இப்படியன், இக்குணத்தன் என எடுத்து வேதங்களாலுஞ் சொல்லரியன் ஆதலின் 'சொல்லரிய பான்மையாகி' என்றார். இதனாலன்றோ நம் **திருநாவுக்கரசரும்,**

"அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே
கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத் தனிவனிறைவ
னென்றெழுதிக் காட் டொணாதே" என்றார்.



'துகளறு சங்கற்பம்' என்றது சுத்தசங்கற்பத்தை. (துகள்-குற்றம், அறு-இல்லாத, சங்கற்பம்-மனோநிச்சயம், மனப்பொருத்தத்தினை) 'தோயாத' இது கலவாத என்னும் பொருளது. (தோய்தல், கலத்தல்) இறைவன் அறிவு வடிவன், ஞானசொரூபி ஆதலின் 'அறிவாகி' என்றார். இதனை,

"அறிவுக் கறிவா யவிகாரி யாகி
நிறைதல் பதி நிச்சயம்"

என்ற **வள்ளலார் சரித்திரத்தாலும்,**

"அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல ஞங்கறி[illegible]ற்ற
லறியு மறிவே சிவமுமாம்"

என்ற **சிவஞானபோத உரையாலும்,**

"அறிவுக் கறிவா யகண்டமாந் தத்துவனை"

எனவும் **பெரியார்** கூறியதனாலும் அறியலாம்.

இறைவன் சுத்தாத்துவிதப் பொருளாதலினாலும், வேதங்களெல்லாம் தூயன், விமலன், நிமலன், அமலன் எனப் போற்றுகின்றபடியாலும், இறைவன் எண் குணங்களுள்ளே இயற்கையிலேயே பாசபந்தங்களினின்று நீங்கிய தூய்மைக்குணம் ஒன்றாதலினாலும் 'சுத்தமாகி' என்றார். இதனானன்றோ,

"நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக் கண்ணனே" எனவும்,

"கமலநான் முகனுங் கார்முகி னிறத்துக்
கண்ணனு நண்ணுதற் கரிய
விமலனே யெமக்கு வெளிப்படா யென்ன
வியன்றழல் வெளிப்பட்ட வேந்தாய்" எனவும்,

"செழுமலர்க் குருந்த மேவியசீ ரமலனே
யடியே னுதரித்தழைத்தா லதெந்துவே யென்றருளாயே"

எனவும் திருவாய்மலர்ந்து அருளினார்.

இறைவன் ஒப்பற்றவன் ஆதலின் 'நிகரில்' என்றார். இதனை,

"ஒப்புனக் கில்லா வொருவனே யடியே
னுள்ளத்து ளொளிர்கின்ற வொளியே"

என்ற **மணிவாசகர் வாக்கானும்** அறிக.

இறைவன் பசுக்களாகிய உயிர்களுக்கெல்லாம் இறைவனாக இருத்தலின் 'பசுபதியே' என்றார். 'நெட்டுயிர்த்தல்' என்றது பெருமூச்சு விடுதலை. 'பேரன்பு' இடையறா உழுவலன்பை. 'என' இது என்ன என்பதன் தொகுத்தல் விகாரம், இது உவம உருபு.



---

## சின்மயானந்தகுரு

[தக்ஷிணமூர்த்தியே! சின்மயானந்த குருவே! சன்மார்க்கநெறி நில்லாத் துன்மார்க்கனுகிய அடியேனையும் அருள்கொடுத் தாள்வையோ? என்கின்ருர்]

அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினு லுருகிவிழி நீர்
ஆருக வாராத முத்தியின தாவேச
ஆசைக் கடற்குள்மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே எனவுமொழி
தழுதழுத் திடவணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதல் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியைஒரு சொல்லா லுணர்த்தியே
சொரூபாநு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) துங்கம் - பரிசுத்தம், மிகு - மிகுந்த, பக்குவம் - பரிபக்குவம் அடைந்துள்ள, சனகன்-சனகமுனி, முதல்-முதலாகவுள்ள, முனிவோர்கள்-முனிவர்கள், தொழுது - கைகுவித்து வணங்கிக்கொண்டு, அருகில்-சமீபத்திலே, வீற்றிருப்ப-வீற்றிருக்க, சொல்-சொல்லுதற்கு, அரிய-அருமையாகிய, நெறியை-ஞானமார்க்கத்தை, ஒரு - ஒரே, சொல்லால் - சொல்லினுலேயே, உணர்த்தி - உபதேசித்து ஞானத்தை ஊட்டி, சொரூபம் - சொரூபத்தின், அநுபூதி - அநுபவத்தை, காட்டி-காட்டி, செம் - செவ்விய, கமலம்-பதும, பீடம்-ஆசனத்தின், மேல் - மேலே, கல்-கல், ஆல்-ஆலமரத்தின், அடிக்குள்-கீழே அதன்நீழலில், வளர் - எழுந்தருளி இருக்கின்ற, சித்தாந்தம் - முடிவு செய்யப்பெற்ற, முத்தி - மோக்ஷத்தின், முதலே - முதல்வனுக இருக்கின்றவனே! சிரகிரி - திருச்சிராமலையினிடத்தே, விளங்க - ஆன்மாக்கள் முத்தியின்புற்று விளங்க, வரு - வருகின்ற, தக்ஷிணமூர்த்தியே - தென்முகநோக்கி நிற்கும் மூர்த்தத்தை உடையவனே! சின்மயம் - ஞானசொரூபமாக விளங்குகின்ற, ஆனந்தம் - ஆனந்தமயமான, குருவே - குருவே! அம்-அடியேனின் அழகிய, கை-கையை, கொடு-கொண்டு, மலர்-புஷ்பங்களை, தூவி-அர்ச்சித்து, அங்கம்-உடம்பானது, புளகிப்ப-மயிர்க்குச்செடுக்க, அன்பினுல்-அன்பினுலே,



உருகி-மனங்கரைந்து, விழி - கண்களிலே, நீர் - ஆனந்தபாஷ்பம், ஆறு-நதியைப்போல், ஆக-பிரவாகம் எடுத்தோட, ஆராத-தெவிட்டாத, முத்தியினது-முத்தியின், ஆவேசம்-ஆவேசத்தோடுகூடிய, ஆசை-ஆசையாகிய, கடற்குள்-கடலிலே, மூழ்கி-முழுகி, சங்கர-சங்கரனே! சுயம்புவே - சுயம்பு ஆனவனே! சம்புவே-சம்புவாக இருக்கின்றவனே! எனவும்-என்று துதித்து, மொழி-சொற்கள், தழுதழுத்திட-குழறும்படி, வணங்கும்-தொழும்படியான, சன்மார்க்கம்-நல்ல ஞானமார்க்கம், நெறி-ஒழுங்கு, இலா-இல்லாத, துன்மார்க்கன்-கெட்ட வழியிற் செல்லும் துட்டனுகிய, எனையும்-என்னையும், தண்-குளிர்ந்த, அருள்-தேவரீரின் திருஅருளை, கொடுத்து - செய்து, ஆள்வையோ - ஆண்டருள்வாயோ? எ-று.

(வி-ரை) 'சின்மயானந்தகுரு' எனப்பெயரிய இப்பதிகம் பதினெரு பாடல்கள் அடங்கியது. பதிகம் என்பது பத்துப் பாடல்களுக்கே ஏற்பட்ட பெயர் ஆயினும் சிறிது குறைந்தும் சிறிது மிகுந்து வருவதும் மரபாகும். இப்பதினெரு பாடல்களின் ஈற்றிலும் 'சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே சின்மயானந்த குருவே' என மகுடம் புனைந்திருப்பதனுல் இப் பதிகத்திற்கு 'சின்மயானந்தகுரு' என்பது பெயர் ஆயிற்று. 'சின்மயானந்த குரு' என்னும் இத்தொடர். சித்+மயம்+ஆனந்தம்+குரு என நாலு வடசொற்களாலாகிய ஒருதொடர். (சித்து = அறிவு, மயம் = வடிவு, ஆனந்தம் = இன்பம், குரு = ஆசாரியன்.) இதற்கு அறிவானந்த வடிவாக இருக்கின்ற குரு என்பது பொருளாம். இனி இதற்கு உண்மை அறிவு ஆனந்தமயமான குரு எனப் பொருள் கூறுவாரும் உண்டு. இவர் உண்மை என்ற சொல்லை வரும்வழி வருவித்துக் கூறினர் என்க. என்னை இறைவனே தட்சணமூர்த்தியாக அவ் நீழலில் சற்குருவாக சனகாதியர்க்கு அருளினன் ஆதலினுலும், அவ் இறைவன் உண்மை, அறிவு, ஆனந்தமுமாக இருக்கின்ருன் ஆதலினுலும் என்க. சித்து+மயம் = சின்மயம் என ஆயது. இது வடசொற் சந்தி. மயம்+ஆனந்தம் இதில் மகரவொற்று கெட்டு மய+ஆனந்தம் என நின்று பின் மயானந்தம் எனப் புணர்ந்தது. இதுவும் வடமொழிப் புணர்ச்சி, தீர்க்க சந்தி. 'சின்மயானந்தகுரு' என்பதற்கு உண்மை அறிவு ஆனந்தமாயவனும் தக்ஷிணமூர்த்தமாய் எழுந்தருளியவனும் ஆகிய சற்குருவைத் துதிக்கும் பதிகம் என்பது இதன் பொருளாகும். 'அங்கைகொடு' இதற்கு அம்+கை எனப் பிரிந்து அழகிய கையைக்கொண்டு என்ரும். சிலர் அகம்+கை = அங்கை என ஆதற்கு "அகமுனர்ச் செவிகை வரி னிடையன கெடும்" என்னும் நன்னூல் விதி இடந்தருதலின் உள்ளங்கையிலே மலர்கொண்டு எனப் பொருள் உரைக்கவருவர், 'கொடு' என்ருர். இது 'கொண்டு' என்பதன் தொகுத்தல் விகாரம். தூவுதலாவது அருச்சித்தல் என்பதாம். இது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கில் முதல் நின்ற சரியையாகும். இதனை,

"நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சேநீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்

புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்று
மலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீயென்று
மாரூரா வென்றென்றே யலறாநில்லே"

என்ற **திருநாவுக்கரசர்** திருவீக்கானும் அறிக. இன்னும்,

"உண்பதன்முன் மலர் பறித்திட் டுண்ணாராகில்"

என்ற **திருநாவுக்கரசர்** திருவாக்கும்,

"தவமே புரிந்திலன் றண்மலரிட்டு முட்டா தடியிறைஞ்சி
அவமே பிறந்த அருவினை யேனுக் கின்பருள்ளஞ்
சிவமே பெருந்திறு வெய்திற் றிலேனின் றிருவடிக்காம்
பவமே யருளு கண்டா யடியேற் கெம்பராபரனே"

என்ற **பெரியார்** வாக்கும் நோக்கத்தக்கது.

'புளகித்தல்' என்பது மயிர்க் குச்செடுத்தல். இது ஆனந்தானுபவத்தி லுண்டாகும் மெய்ப்பாடு. 'அன்பு' என்றது. இறைவன்மாட்டு வைத்த அன்பைக் குறித்தது. இது பத்தி எனவும்படும். அன்பே பத்தியாகும் என்பதனை,

"அங்கனிந்த அருளிடத்தாக் கன்பு செய்து
நங்களங் கறுப்பா நாம்" என்றதனால் அறிக.

'விழிநீர் ஆறாக' என்றது ஆனந்தபாஷ்பம் ஆறுபோற் பெருகியோட என்பதாம். இதுவும் ஆனந்தத்தால் உண்டாய மெய்ப்பாடே, 'ஆராத' என்ற பல பொருள் ஒருசொல் ஈண்டு தெவிட்டாத என்னும் பொருளது. 'முத்தி' என்றது விடுபட்டநிலை எனப் பொருள்படும். என்னை தாபத்திர யங்களினின்றும் விடுபட்டநிலை என்பதாம். 'ஆசைக்கடல்' இது பண்புத் தொகை; ஆசையாகிய கடல் என விரியும். ஆசையைக் கடல் என்றது உருவக அலங்காரம். மிகுதிபற்றியும் அளவுசெய முடியாமைபற்றியும் ஆசையைக் கடல் என உருவகித்தார். ஆசை பொல்லாதே இவர் ஆசைக் கடற்குள் புகவேண்டும் என்கின்றாரே என்னே ஈது விபரீதம் எனின், அறியாது கடாயினாய் அநித்தியப் பொருள்கள்மேல் வைக்கும் ஆசை துன்பத்திற்கு இடமாம் நித்தியப் பொருளாகிய இறைவன்பால் வைக்கும் ஆசை இன்பம் பயப்பதாகும் என்பது அறிக. இதனானன்றே **திரு வள்ளுவரும்,**

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்றனர். இது கொண்டன்றே **மணிவாசகரும்,**

"ஐயநின்ன தல்லதில்லை மற்றோர் பற்று" என்றார்.



"என்பொலா மணியையேத்தி யினிதருள் பருகமாட்டா
வன்பிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே" என்றும்,

"அன்பரா ருருகியகங் குழைவார்க் கலால்
என்பொ மணியினை யெய்த வொண்ணாதே"

என்று **திருமூலர்** கூறியதூஉங் காண்க.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி",

என **பெரியார்** அமுதமொழியும் ஈங்கு ஒப்பிடத்தக்கது.

'ஆவேச ஆசை' என்றது எல்லாம் மறந்து ஆசை வசப்பட்டு அதன் வழியே விரையும் தன்மையதாகிய ஆசை. இறைவன் இன்பு செய்கின்றா னாதலின் 'சங்கரன் எனப் பெற்றான்' சங்கரன் என்பதற்குச் சுகத்தைக் கொடுப்போன் என்பது பொருளாம். சிவாநந்தத்தையே பெறத் தேட்டங் கொண்டிருப்பதால் இன்பமயனே எனக்கு இன்பந்தருள் இன்பே என்பார் 'சங்கரா!' என விளித்தார். 'சுயம்பு' தானே முதலானவன் தனக் கோர் முதல் இல்லாதவன். எல்லார்க்கும், எல்லாவற்றிற்கும் முதலாக இருப்பவன் என்பது பொருளாம். 'சம்பு' என்பது சுகமுண்டாதற்கு, இடமாக இருப்பவன் என்பது பொருளாம். 'மொழிதழுதழுத்திட' என்றது ஆனந்தமேலீட்டால் மொழி குழறுதலைக் குறித்தது. சன்மார்க்க மாவது வைதிகசித்தாந்த மார்க்கத்தைத் தழுவி அரனை வணங்குதலே எனக்கொண்டு 'சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்கனேனையும்' என்றார் வைதிக சித்தாந்த மார்க்கந் தழுவிச் சிவனை வணங்கவே சன்மார்க்கம் என்பதனை,

"சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க ளாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரிந்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தா னாடி ஞான
ஞேயமொடு ஞாதுருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனாம் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே"

என்ற **சிவஞான சித்தியா**ரால் அறியலாம்.

இறைவன் பரம கருணாநிதியாதலின், விருப்பு வெறுப்பு இல்லாதவன் ஆதலின், எப்பொழுதும் உயிர்க்கு இன்பமே செய்யும் கருணையுடைய னாதலின் உன்னை வேண்டும் அடியேன் துன்மார்க்கனாயினும் அருள்செய்ய வேண்டுமென்றுங் குறிப்பினானே 'துன்மார்க்கனேனையும் தன்னருள் கொடுத் தாள்வையோ' என்றார். இது ஐயத்தால் எழுந்த வினா என்பர். 'அடியார் குற்றம் பாராதவன் அரன்' ஆதலின் அடியேன் குற்றம் பாராதே என்னைத் திருத்தி அடியேனை ஆட்கொண்டருளவேண்டும் என்ற கருத்தானேயே

'சன்மார்க்க னேனையுந் தன்னருள் கொடுத்தாள்வையோ,' என்றார் என்பது சாலச் சிறப்புடையதாகும். இதனை,

"மதியரவு பூண்ட நாதா மாகடலின் நஞ்சை யுண்டாய்
கதிபெறவான் ஆசை கொண்டேன் கடையனேன் பொல்லாத் தீயேன்
ததியிதுவே என்றுன்றாளைத் தமியனேன் போற்றி நின்றேன்
புதிதாமோ என்னை நீதான் பொறுத்தருளிக் கொள்ளிற் றானே"

என்றதனாலு நன்கறியலாம்.

'துங்கமிகு,' என்றது பரிசுத்த மிகுந்த என்பதாம். ஈண்டு சனகாதி முனிவர்களின் பரிசுத்தம் யாது என்னின் மலமாயையின் நீங்கி இருக்கும் பரிசுத்தமாம். இதுகொண்டே பின்னரும் 'துங்கமிகு பக்குவம்' என்று பின்னும் 'பக்குவம்' என்ற பதத்தைப் பக்குவமாகவைத்தும் ஈண்டு பக்குவம் என்றது மலபரிபாகமுற்று சத்திநிபாதமடைந்த நிலையை. 'சனகன் முதன் முனிவோர்கள்' என்றது சனகன், சனந்தனன், சனற்குமாரன், சனாதனன் என்னும் நான்கு முனிவர்களை. 'சொல்லரிய நெறியை' என்றது மோனநெறியை; ஞானநெறியை என்பாரும் உண்டு. ஒருசொல் என்றது உபதேசமொழியாகிய பிரணவத்தை. 'சொரூபாநுபூதி' என்றது தன்னுள் பேதமாகக் கலந்து விளங்கும் சிவாநந்த அனுபவநிலையை. இதனை,

"நஞ்செயலற்றிந்த நாமற்றபின்னைதன் றன்செயலுளே யென்றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற" எனவும்,

"இரும்பைக் காந்தம் வலித்தாற்போ லிசைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோ லிவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தையன லழிப்பதுபோன் மலத்தை
அறுத்தமலன் அப்பணைந்த வுப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியையொத் திருப்பனந்த முத்தியினிற் கலந்தே"

எனச் **சிவஞான சித்தியாரால்** அறிக.

'செங்கமல பீடமேல்' என்றது யோகநிட்டை ஆதனங்களிலொன்றாகிய பதுமபீட ஆதனத்தைக் குறித்தது. 'கல்லால்' இது கைலைக்கண் உள்ள ஆலவிருட்சம். இந்த விருட்சத்தின் நீழலிலேதான் சிவபெருமான் சனகாதி முனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்தருளத் தட்சிணாமூர்த்தமாக எழுந்தருளி நின்று ஞானோபதேசஞ் செய்தருளியது 'வளர்' என்றது எழுந்தருளி இருத்தலை உணர்த்திய உபசாரமுறை. 'சித்தாந்த முத்திமுதலே' என்றது சிவபெருமானே முத்திதந்தருளுந் தலைவன் என எவரும் மறுக்க முடியாதபடி காரணகாரியங்காட்டி உறுதிப்படுத்தியபடியால் 'சித்தாந்த முத்திமுதலே' என்றார். 'சிரகிரி' என்றது திருச்சிராப்பள்ளியிலே உள்ள



திரிசிரன் என்னும் அசுரன் ஆண்டமையால் இது திரிசிரன் மலை எனப் பேர்பெற்றுப் பின் திரிசிராமலை என வந்தது என்பர்.

இனி, வாயுவுக்கும், ஆதிசேடனுக்கும் தம் வல்லமைபற்றி வந்த போரில் மாமேருமலையைச் சேடன் மறைக்க வாயு அம்மலையைத் தான் வலியாற் பேர்க்க முயன்று முடியாதுபோகச் சேடன் தேவர் வேண்டுகோளால் சிறிது இடம்தர அதனால் வாயு அப்பாகம் தன் வலிகாட்டி மாமேருமேல்தாக்க அம்மேருவின் சிகரம் மூன்றும் மூன்றிடங்களில் வீழ்ந்தன. அதில் இச் சிராமலை ஒன்றாதலின், மேருவின் சிரம் இது என்பார். சிராமலை எனப் பெயராயது எனப் புராணம் கூறுவாரும் உண்டு. 'சிரகிரி விளங்க வருதலாவது' சிரகிரிக்குச் சிறப்பு எய்த என்பது பொருளாம். இனி சிரகிரிக்கண்ணே அன்பர் ஆயினர் விளங்க எழுந்தருளி வந்தன என்பதும் ஆம். இரண்டாவது பொருளே சிறப்புடையதாம்.

1

[இறைவனே! பாவியாகிய அடியேன் பேரின்பசுகம் எய்துமாறு தேவரீர் முன்னின்றருள்வது என்று என்கின்றார்]

ஆக்கையெனும் இடிகரையை மெய்யென்ற பாவிநான்
அத்துவித வாஞ்சையாதல்
அரியகொம் பில்தேனை முடவன்இச் சித்தபடி
ஆகும்அறி வவிழஇன்பந்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்க மல்லஇவை நிற்கஎன் மார்க்கங்கள்
சாராத பேறிவதாய்
வாக்குமனம் அணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) சித்தாந்தம் - முடிவு செய்யப்பெற்ற, முத்தி - மோக்ஷத்தின், முதலே-முதல்வனாக இருக்கின்றவனே!, சிரகிரி - திருச்சிராமலையினிடத்தே, விளங்க-ஆன்மாக்கள் முத்தி இன்புற்று விளங்க, வரு-வந்தருளி இருக்கின்ற, தக்ஷிணமூர்த்தியே - தென்முகநோக்கி நின்றருளும் மூர்த்தமானவனே!, சித்து-ஞானம், மயம்-வடிவம் ஆகிய, ஆனந்த - ஆனந்தமயமாகிய, குருவே-குருவே (பரமாச்சாரியனே!), ஆக்கை - சரீரம், என்னும் - என்கின்ற, இடி

இடியப்போகின்ற, கரையை - கரையை, மெய் - உண்மை, என்ற - என்று எண்ணி இருக்கின்ற, பாவி - பாவியாகிய, நான் - அடியேன், அத்துவிதம்-அத்துவிதப் பொருளின்மேல், வாஞ்சை - ஆசை, ஆதல் - ஆகுதல், அரிய-எட்டுதற்கு அரிய, கொம்பில் - கொம்பிலே உள்ள, தேனை-தேனை உண்ண, முடவன் - கைகாலில்லாத முடவன், இச்சித்த - விரும்பின, படி - விதமே, ஆகும்-ஆகும், (இவ்விதமாயின்) அறிவு-அடியேனது அறிவு, அவிழ-மாறும் படி, இன்பமது-பரமானந்தம்,. ஆக்கும்-உண்டாக்கும், வகை-வகையானது, எது-எங்கே?, இ - இந்த, நாள் - நாள்வரையிலும், சரியை - சரியையினதும், கிரியை-கிரியையினதும், யோகம்-யோகத்தினதும், சாதகம்-அப்பியாசத்தை, விடுத்தது - விட்டுவிட்டது, எல்லாம் - எல்லாம், சன்மார்க்கம் - நல்லநெறி, அல்ல-அல்லவாகும், இவை-இந்த விஷயங்கள், நிற்க-இம்மட்டே நிற்கட்டும், எ-எத்தகைய, மார்க்கங்கள்-மார்க்கங்களும், சாராத-அணுகாத, பேர்-பெரிய, அறிவது-அறிவு, ஆய்-ஆகி, வாக்கு - வாக்கும், மனம் - மனமும், அணுகாத-பொருந்தாத, பூரணம்-பரிபூணமது ஆகிய, பொருள் - வஸ்துவானது, வந்து-வந்து, வாய்க்கும்படிக்கு - கிடைக்ும்பொருட்டு, உபாயம்-உபாயத்தை, வருவித்து - உண்டாக்கி, உவட்டாத - தெவிட்டாத, பேர் - பெரிய, இன்பம் - ஆனந்தம், ஆன - ஆகிய, சுகம் - ஆனந்தம், வாரியினை-கடலை, வாய்மடுத்து - வாய்வைத்துக் குடித்து, தேக்கி - உள்ளத்துள்ளே நிறப்பி, திளைக்க - அநுபவிக்க, நீ-தேவரீர், முன் - அடியேனுக்குமுன், நிற்பது - (எழுந்தருளிவந்து பிரத்தியட்சமாக) நிற்பது, என்று - எக்காலம்? எ-று.

(வி-ரை) 'ஆக்கை' இது 'யாக்கை' என்பதன் மரூஉ. இதற்குக் கட்டப்பட்டது என்பது பொருள். (யாத்தல்-கட்டுதல்) என்னை எலும்பு மாமிசம் நரம்பு இவைகளால் கட்டப்பட்டது ஆதலின் இதற்கு இப்பெயர் வந்தது; 'எனும்' இது என்னும் என்றதன் தொகுத்தல் விகாரம். 'இடிகரை' இது வினைத்தொகை. இது முக்காலத்துக்கும் பொதுவாதலின் வினைத்தொகையாயிற்று. இதனை,

"காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை"

என்ற **நன்னூல் சூத்திரத்தானே** அறியலாம்.

இடிந்த கரை, இடிகின்ற கரை, இடியும் கரை என முக்காலத்தும் வந்தமை காண்க. இடிகரையாவது ஆற்றுக்குப் பக்கத்தே ஆற்று வெள்ளத்தால் உள்ளூடுறுவி அறுக்கப்பெற்று விழும் நிலையில் இருக்கும் கரை என்பதாம். எலும்பு, தசை, நரம்பு முதலியவைகளால் கட்டப்பட்டு ஆற்று வெள்ளத்தால் உள்ளூடுறுவி அறுக்கப்பெற்று வீழும் வீழ்ந்துகொண்டிருக்கும். வீழ்ந்த ஆற்றங்கரைபோல நித்தியமில்லாத இவ்வுடம்பை, பொய்யாகிய உடம்பை மெய் என்று எண்ணிக் கூறியதால் தன்னைப் 'பாவி' என்றார். பொய்யாகிய இவ் உடலை 'மெய்' என்றது மங்கல வழக்கு என்பர் **இலக்கண நூலார்**. அமங்கலத்தை மறைத்து மங்கலமாகக் கூறுவது மங்கல வழக்கு என்பது இலக்கண மென்றறிக. தேகம் நிலையற்றது பொய்யானது என்பதனை,



"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி னஞ்சமு துண்டவர் கைவிட்டா
லுடலினர் கிடந்தார் முனி பண்டமே" என்ற **தேவாரத்தும்**,

"வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தாலவை யோடென்று வைப்ப
ருடலுடைந் தாலிறைப் போதும் வையாரே" என்ற **திருமந்திரமும்**,

"விடம்பயி லெயிற்ற வுரியும் வீறழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலா
நடம்பயில் கூத்தரி னடிக்கு மைவர்வா
ழுடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ"

என்று **திருவிளையாடற் புராணமும்**,

"அடவிதனிற் புகுந்திடினும் அடுக்கன்முழை நுழைந்தாலும்
மிடைநிலவு சேய்மைநிலத் தெய்திடினு மெரிதரங்கக்
கடலதனின் மூழ்குறினுங் காலமது வருங்காலை
யுடலொழியு மிரப்பதனோ டொற்றுமைய தாகலினால்"

எனச் **சேதுபுராணமும்**,

"நரம்புட னெலும்புதோ லட்டபுன் குடில்
வரம்பறு பிணியெலா மடுத்த வான்கலந்
திரங்குத னரையிடர் புதைத்த சிற்றரைக்
குரம்பை யென்றறிந் திலைகொற்ற வேந்தனே"

எனச் **செவ்வந்திப் புராணமும்**,

"இப்பிறப்பை நம்பி யிருப்பரோ நெஞ்சகமே
வைப்பிருக்க வாயின் மனையிருக்கச்—சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு" எனப் **பட்டினத்தடிகளும்**,

"ஆமிளி மூப்பு மகன்ற திளமையுந்
தாமினி நோயுந் தலைவரும்—யாமினி
மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த
வையைந்து மாய்வ தறிவு"

எனப் **புறப்பொருள் வெண்பாமாலையும்**, கூறுவதுகொண்டு தெளியலாம்.

'அத்துவித வாஞ்சையாலே' என்றது இறைவன் வாஞ்சையாலே. இறைவனோ டிரண்டறக் கலக்கும் ஆசையாலே எனப் பொருள்படும். என்னை? இறைவன் அத்துவிதப் பொருளாகவும் அத்துவிதக் கலப்பு அருள்வோனாக இருத்தலினாலும் என்க.

'அத்து விதம்' இது ந+துவிதம்=அத்துவிதம் என ஆயது. ஈண்டு நகரம் அன்மைப் பொருள்தந்து நின்றது. கைகால் உள்ள ஒருவனுலேயே எட்டி எடுக்கமுடியாத தேனைக் கைகால் இல்லாத முடவன் ஒருவன் விரும்பியதை ஒத்திருக்கிறது நான் அத்துவித ஆசையாலே நின்னை இச்சித்தது என்பார் 'அரிய கொம்பிற்றேனை முடவனிச்சித்தபடி' என்றார். 'முடவன் கொம்புத்தேனுக் காசைப்பட்டதுபோல' என்பது பழமொழி. இதுகொண்டன்றே **பிரபுலிங்கலீலை நூலுடையாரும்,**

"பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன்
கைகான் முடங்கு பொறியிலிதன்
நாவா யொழுகிற் றென" என்றார்.

'அறிவலிழின்பம்' என்பது அறிவை மாற்றும் இன்பம் என்பதாம். ஜீவபோதம் நீக்கிச் சிவபோதமாகும் என்பது பொருளாம். பசு அறிவு நீங்கிப் பதியறிவாகுதல். இதனை,

"அவிழ விருக்கு மறிவுட னின்றவர்க்
கவிழுமவ் வல்லலென் றுந்தீபற—
அன்றிய விழாதென் றுந்தீபற
கருது வதன்முன் கருத்தழியப் பாயு
மொருமகள் கேள்வனென் றுந்தீபற—
உன்ன வரியனென் றுந்தீபற"

என்ற **திருவுந்தியார் செய்யுள்களால்** நன்கறியலாம்.

'சரியை' என்பது இறைவன் கோயிலுக்குச் செல்லல், கோயில் அலகிடல், மெழுக்கிடல், பூமாலை புனைதல், பாடல், கும்பிடல், துதித்தல் முதலியனவாம். இதனை,

"நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சேநீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்குமாட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்று
மலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீயென்று
மாரூரா வென்றென்றே யலறுநில்லே"

என்ற **திருநாவுக்கரசர்** திருவாக்கானும்,

"பெரும்புலர் காலைமூழ்கி பித்தர்க்குப் பத்தராகி
யரும்பொடு மலர்கள்கொண்டங் கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினு லிடவல்லார்க்கு
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர்வீ ரட்டனுரே"

என்ற **தேவாரத்தும்** நன்கறியலாம்.



'கிரியை' என்பது இறைவனை ஆசாரியன் உபதேசித்தபடி பூஜா நியம முறைப்படி பூஜித்து அர்ச்சித்து வணங்கலாம். இதனை,

"மாதினையோர் கூறுகந்தாய் மறைகொணுவா
மதிசூடி வானவர்க டங்கட்கெல்லா
நாதனே யென்றென்று பரவிநாளு
நைந்துருகி வஞ்சகமற் றன்புகூர்ந்து
வாதனையான் முப்பொழுதும் பூநீர்கொண்டு
வைகன் மறவாது வாழ்த்தியேத்திக்
காதன்மையாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் கருதறியைக் காணலாமே" எனவும்,

"சகமலா தடிமையில்லைத் தானலாற் றுணையுமில்லை
நகமெலாந் தேயக்கையா னுண்மலர் தொழுதுதூவி
முகமெலாங் கண்ணீர்மல்க முன்பணிந் தேத்துந்தொண்ட
ரகமலாற் கோயிலில்லை யையனை யாறனார்க்கே"

என்ற **தேவாரங்களாலும்,**

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
வண்ண லதுகண் டருள்புரியா நிற்கு
மெண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே"

என்ற **திருமந்திரத்தாலும்** அறியலாம்.

'யோகம்' என்பது மனத்தைத் தூயதாக்கி வாசியடக்கி மதியமுதுண்டு சிவனைச் சிந்தித்திருப்பதாம். இதனை,

"திருகு சிந்தையைத் தீர்த்துச் செம்மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
யருகு நின்றிடு மானைக்கா வண்ணலே" எனத் **தேவாரமும்,**

"அந்நெறி யிந்நெறி யென்னுதட் டாங்கத்
தன்னெறி சென்று சமாதியி லேநின்மி
னன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே" எனத் **திருமந்திரமும்,**

"இக்கிரியை முற்றியபி னியமாதி யெட்டுறுப்பி
னியல்பு வாழ்ந்து
பக்கவளி தனையடக்கி நடுநாடி யுறப்பயிற்றி
யாறு தாரந்
தொக்கபொரு ளுணர்ந்தேகி மதிவரைப்பி னமுதுண்டு
சோதி யுள்ளார்

புக்கழுந்துஞ் சகமார்க்க மோகுழப்பமோ ரெம்முருவம்
பொருந்தி வாழ்வார்"

என்ற **காஞ்சிப்புராணச் செய்யுளா**லும் நன்கறியலாம்.

இறைவன் 'சமயாதீதன்' எச்சமயத்தவராலும் அறுதியிட்டு உறுதிகூற முடியாதவன் ஆதலினாலும், வேதங்கட்கும் அரியவன் ஆதலினாலும் 'என் மார்க்கங்கள் சாராத பேரறிவதாய்' என்றார். இறைவன் ஞானசொரூபி, அறிவுவடிவன் ஆதலின் 'பேரறிவாய்' என்றார். இறைவன் மாயாகாரியமாகிய வாக்குமனங்கட்கு எட்டாதவன், வாக்குமனாதீதன் ஆதலின், 'வாக்கு மனம் அணுகாத பூரணப்பொருள்' என்றார். இறைவன் பரிபூரணன், சர்வபரிபூரணன் ஆதலின் 'பூரணப்பொருள்' என்றார். 'உபாயம்' என்றது தந்திரம். ஈண்டு ஞானதந்திரத்தைக் குறித்தது. ஆசாரியனின் ஞானோபதேசமே பூரணப்பொருளை அடையும்படிச் செய்வதாதலின், 'பூரணப் பொருள் வந்து வாய்க்கும்படிக்குபாயம் வருவித்துவட்டாத பேரின்பமான சுகவாரியினை வாய்மடுத்துத் தேக்கித்திளைக்க நீ முன்னிற்பதென்று காண்' என்றார். இறைவனே ஆன்மாக்களின் பக்குவம் அறிந்து ஞானதேசிகனாக வருகின்றானாதலின் இவ்வாறு கூறினார்.

"உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கின்படி,

உலக இன்பங்கள் எல்லாம் ஒருகால் விரும்பவும் ஒருகால் வெறுக்கவும் வரும். இப்பேரின்பமோ அவ்வாறன்று என்றுந் தெவிட்டாதது உவட்டாதது என்பார், 'உவட்டாத பேரின்பமான சுகவாரியினை' 'சுகவாரி' இது பண்புத்தொகை. இறைவனைச் சுகவாரி என்றது உருவகஅணி. 'தேக்கித் திளைக்க' என்றது உள்ளே நிறைத்துவைத்து அனுபவிக்க என்பதாம். தான் ஆர்வமிகுதிக்கேற்பத் 'தேக்கித்திளைக்க' என்றார். 'காண்' இது அசை. 'வாய் மடுத்தல்' என்றது நிறம்ப வாய்வைத்து உண்ணல் என்னும் பொருளது. 2

[மெய்யனாகிய இறைவனே! பொறாமை முதலாய தீக்குணங்கள்
பொருந்திய அடியேன் அறிவூடு இருக்க விதிஇல்லை என்றாலும்
தேவரீரின் பரிபூரணன் என்ற சொல்லுக்குப் பங்கம
வராதபடி எழுந்தருளி இரும் என்கின்றார்]

ஒளவிய மிருக்கநா னென்கின்ற ஆணவம்
அடைந்திட் டிருக்கலோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமேல்
ஆசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம்பல இருக்கஎன் னறிவூடு
மெய்யன் நீ வீற்றிருக்க



விதியில்லை என்னிலோ பூரண னெனும்பெயர்
விரிக்கிலுரை வேறுமுளதோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினால்
கட்டுண்ட வுயிர்கள்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமிநடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) கவ்வும்-பற்றுகின்ற, மலம் - மும்மலம், ஆகின்ற-ஆகிற, நாகம்-நாக, பாசத்தினால்-பாசத்தினாலே, கட்டு - கட்டு, உண்ட-உண்ட, உயிர்கள்-உயிர்கள், மூர்ச்சை-மூர்ச்சித்து இருக்கும் நிலையை, கடிது-விரைவில், அகல-நீங்க, வலிய - பிரார்த்திக்காமே தன்னிலையிலேயே கட்டாயமாக, வரும் - வந்தருளும், ஞான-ஞான, சஞ்சீவியே - சஞ்சீவியே!, கதி-முத்தி, ஆன-ஆகிய, பூமி-நிலத்தின், நடு - மத்தியின், உள்-உள்ளே, செவ்விதின் - செவ்வையாக, வளர்ந்து - வளர்ந்து, ஓங்கும் - உயர்ந்துள்ள, திவ்யம் - மேலான தெய்வீகம் பொருந்திய, குணம்-குணம்பொருந்திய, மேருவே - மலையே!, சித்தாந்த-எவரும் மறுக்க ஒண்ணாது இறுதியிட்டு உறுதியாய் முடிவுபெற்ற, முத்தி-முத்திக்கு முதலான, பொருளே-இறைவனே!, சிரகிரி-திரிசிராமலையின்கண்ணே, விளங்க - ஆன்மாக்கள் விளக்கமுற்று உய்ய, வரு - வந்து எழுந்தருளி இருக்கின்ற, தக்ஷிண மூர்த்தியே - தென்முகநோக்கத்தோடு எழுந்தருளி இருக்கின்ற இறைவனே!, சின்மயம்-ஞானசொரூபியும், ஆனந்தம்-ஆனந்தமயமும் ஆகிய, குருவே - மௌனகுருவே!, ஒளவியம் - அடியேனிடத்து பொறாமை, இருக்க-இருக்கவும், நான்-நான், என்கின்ற-என்று சொல்லுகின்ற, ஆணவம்-ஆணவமலம், அடைந்திட்டு -சேர்ந்து, இருக்க - இருக்கவும், லோபம்-லோப குணமும், அருள்-கிருபை, இன்மை - இல்லாமையும், கூட - கூட, கலந்து-சம்பந்தப்பட்டு, உள்-அறிவின் உள்ளே, இருக்க-இருக்கவும், மேல்-அதனோடு கூடி, ஆசா-ஆசையாகிய, பிசாசம்-பிசாசு, முதல்-முதல், ஆம்-ஆகிய, வெவ்விய-கொடிய, குணம் - தீக்குணங்கள், பல-அனேகம், இருக்கும் - பொருந்தி இருக்கும், என்-அடியேனின், அறிவு - அறிவின், ஊடு-உள்ளே, மெய்யன்-சத்தியனாகிய, நீ - தேவரீர், வீற்று இருக்க-எழுந்தருளி இருக்க, விதி-நியாயம், இல்லை-இல்லை, எனில் - என்று சொல்வோமாயின், பூரணன் - சர்வபரிபூரணன், எனும்-என்கின்ற, பெயர் - தேவரீரின் திருநாமத்தை, விரிக்கில்-விளக்குமிடத்து, வேறும் - வேறுபொருளாகவும், உளதோ - இருக்குமோ? இல்லையே எ-று.

(வி-ரை) 'ஒளவியம்' பொறாமை; இது பிறர் கல்வி செல்வம், இளமை, அழகு, அறிவு, ஆற்றல், உயர்வு, போகம், வாழ்வு முதலியன கண்டு தன்

மனம் சகிக்காமை. இது தீக்குணங்களுள் ஒன்று. இதனாலன்றோ **ஔவைப் பிராட்டியாரும்,**

"ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு"

என்றாள். **திருவள்ளுவரும்,**

"அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்" என்றும்,

"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்"

என்றும் திருவாய் மலர்ந்தருளியதும் கொண்டு தெளிக.

ஔவியம், பொறாமை, அழுக்காறு, சோறாமை என்பன ஒரு பொருட் சொற்கள். 'நானென்கின்ற ஆணவம்' இது நான் என்கின்ற அகப்பற்று. இது ஆணவம், அகங்காரம் எனச் சொல்லப்பெறும் இந்த; 'நான்' என்கின்ற அகங்கார தத்துவமே எனது என்கின்ற மமகாரத்திற்கும் காமக்குரோத லோப மதமாச்சரியங்களுக்கெல்லாம் ஆதாரமாக இருந்தழிப்பதனால் 'நானென்கின்ற அடைந்திட்டிருக்க' என்றார். 'லோபம்' இது பிசினாரித் தனம். ஒருவருக்கொன்றீயாமை. நான் எனது என்றதன்பின் அதன் படியாக அடுத்து வருவது லோபம். இது அருளில்லாமைக்கு மைந்தன். லோபம் கூடாது என்பது கொண்டே **பட்டினத்தடிகளும்,**

"பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்து மண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடை நடுவிற்
குறிக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே" எனவும்,

"சம்பன ராய்க் காயாமரமும் வறளாங் குளமுங் கல்லாவு மென்ன
வீயா மனிதர்கள் யேன்படைத் தாய்கச்சி யேகம்பனே" எனவும்,

"முற்றொடர் பிற்செய்த முறைமையால் வந்தசெல்வ
மிற்றைநாட் பெற்றோமென் றெண்ணுது பாழ்மனமே
யற்றவர்க்கு மீயாம லரன்பூசை யோராமற்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறந்து விட்டனையே"

எனவுங் கூறியது காண்க.

லோபம் அருளின்மையின் காரணமாக எழுவதாதலின் 'லோபம் அருளின்மைகூடக் கலந்து உள்ளிருக்க' என்றார். உயிர்களுக்கு அருள் இன்றியமையாதது. அருளாவது-தொடர்பு பற்றாது எவர்மாட்டுஞ் செல்லும் இரக்கம். இது மேலுலகஞ்சாரற்கு இன்றியமையாதது. இறைவன் திரு அருள் எய்தற்கு இருக்கற்பாலது, இதனாலன்றோ,

"அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்" எனவும்,



"அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு"

எனவும் **திருவள்ளுவநாயனார்** ஓதிவைத்தார். அருள் இன்னதென்பதை **சூளாமணிநூலுடையார்,**

"ஆருயிர் யாதொன் றிட்டுறு மாங்கதற்
கோருயிர் போல வுருகியுயக் கொள்ள
நேரினது முடியாதென் னெஞ்சகத்
தீரமுடைமை யருளி னியல்பே"

எனக் கூறிய செய்யுளாலும் அறியலாம்.

'ஆசாபிசாசம்' இது பண்புத்தொகை. ஆசையாகிய பிசாசு என்பது பற்றி நின்றுவிடாது துன்புறுத்தலினாலே என்க. ஆசையே ஒருவனைக் கெடுத்தழிப்பதனால் ஈண்டு ஆசையைக் கூறினார். ஈண்டு ஆசை என்றது லௌகிக ஆசையை, பரத்து ஆசையை அன்று என்பது அறியத்தக்கது. இதனாலன்றோ **திருமூலரும்,**

"வாசியு மூசியும் பேசி வகையினாற்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையு மன்பு மறுமி றைத்தபின்
ஈச னிருந்த விடமெளி தாமே" எனவும்,

"ஆசை யறுமின்க ளாசை யறுமின்கள்
ஈசனோ டாயினு மாசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட வானந்த மாமே"

எனவுங் கூறினர். இன்னும்,

"ஆசை யில்லார்களே யறவர் மேலவர்
ஆசை யில்லார்களே யருந் தவத்தினர்
ஆசை யில்லார்களே யருட் கலப்பினர்
ஆசை யில்லார்களே யரிய முத்தர்கள்" எனவும்,

"ஆசையுட் பட்டவ ரல்லற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரளத்திற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரளர்விற் பட்டவர்
ஆசையுட் பட்டவ ரங்கப் பட்டவர்"

எனவும் **காசி ரகசியங்** கூறியதுகொண்டுந் தெளிக. இன்னும்,

"பிறவிக் கடலிற் காதலெனும் பெருவாய் முதலை பிடித்தீர்
விறவுச் சுழியாற் சுழலுமவர் கிதய நாவா யெட்டாவாம்"

என்னும் **ஞானவாசிட்டமும்,**

"நாடுநகர் வீடுடையா டாய்தந்தை நட்புமக்கண்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை யிப்போ
விடப்பெறுவா ரேன்பிறப்பார் மேல்"

என்னும் **ஒழிவிலொடுக்கமும்**,

"கோவணமொன் றிச்சிப்பக் கூடினவே பந்தமெலாம்
தாவணஞ்சேர் மேனியாய்ச் சோமேசா—மேவி
லியல்பாகு நோன்பிற் கொன்றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து"

என்ற **சோமேசர் முதுமொழி வெண்பாவும்**,

"மோகமே திரியக் கிடை யுய்ப்பது
மோகமே நர கத்தில் விழுப்பது
மோகமே மற மாவது மற்றவு
மோகமே யற மாசற நிற்பதும்"

என **மேருமந்தாபுராணமும்**,

"இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்"

என்ற **திருக்குறளா**லும் நன்கறியலாம்.

பொறாமை, ஆணவம், லோபம், அருளின்மை, ஆசை முதலியவை அனைத்தும் தீக்குணங்கள். இவை உயிர்க்குக் கேடுசெய்து அருநரகத் தய்க்கும் ஆதலினால் 'வெவ்விய குணம்பல இருக்கும்' என்றார். இறைவன் நித்தியன் சத்தியன் ஆதலினால் 'மெய்யன்நீ' என்றார். சுத்தனும் மெய் யனும் ஆகிய இறைவனே நீ அசுத்தமும் பொய்யதுமாகிய அறிவினூடு இருக்க நியாயம் இல்லை என்பார். 'என் அறிவூடு மெய்யனீ வீற்றிருக்க விதியில்லை' என்றார். அவ்வாறு நீ என் அறிவு ஊடே இல்லாது விட்டால் எல்லாப் பொருள்களுள்ளும் எல்லா இடத்தும் எள்ளுக்குள் எண்ணெய் போற் கலந்து வியாபித்து இருக்கும் சர்வபரிபூரணன் என்னும் சொல் லுக்கு விருத்தம் வந்து சேருமே. அப்படிச் சேரும்பொழுது பரிபூரணன் என்பதற்கு வேறு பொருளல்லவோ கூறவேண்டி வரும் என்பார். 'பூரண னெனும்பெயர் விரிக்கிலுரை வேறுமுளதோ' என்றார். இதனை,

"பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணுறு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்று
தத்துவித மென்றறையு மாங்கு"

என்ற **சிவஞானபோத உரையா**லும்,



"அரசகே ளாகமஞ்சொ லனுதிமூர்த் தத்தினைமுன்
பறைவா மெங்கும்
விரகபசுக் களுக்கெல்லாம் பதியாகித் தனிமுதலாம்
விமல மாகி
யுருவருவ மருவுருவ மில்லாதா யுணர்வினுக்கோ
ருணர்வாய் நித்த
மருவுபரி பூரணமாய்ப் பராபரமா யுயிர்க்குயிராய்
வயங்கு மொன்றே"

எனத் **திருப்பெருந்துறைப் புராணமும்**,

"ஆதியு நடுவுமீறு மருவமு முருவுமாகும்
பேதமு மளவுமின்றிப் பேரறி வுருவமாகி
வேதமு முணர்வுமெட்டா விமலமாய் நிறைவதாகிச்
சாதலும் பிறப்புமற்றோர் தன்மையாம் பதியின்றன்மை"

என்ற **திருக்கூவப் புராணத்தா**லும் பரிபூரணன் என்பது விளங்கா நிற்கும்.

'மலம்' என்றது பசுக்களைப்பற்றி நிற்பது. இது ஆணவம், காமியம், மாயை என முத்திறப்படும் இதுபற்றியே மலத்தை மும்மலம் என்பர். இம் மும்மலங்களே உயிர்கள் பிறந்து இறந்து உழலுதற்குக்காரணம். இதனை,

"ஆணவநற் றிரோதாயி மாயேய மாயை
அரியவிரு வினைக்கன்ம மாமல மைந்தவற்றி
னணவமஞ் ஞானவிருள் குடிலைசிவன் முதலா
மைவருக்குந் தனுவாகி யைந்தொழிலு மியற்றும்
பூணுலவு கலாதியுடன் றனுமுதனல் வகையும்
புகல்சகலர்க் களித்துநடத் திடுமசுத்த மாயை
மாணவிரு வினைப்பயனுந் துக்கசுகங் கன்ம
மலபாக முயிர்க்குதவுந் திரோதையருள் வடிவே"

என்ற **சிவஞானதீபச் செய்யுளா**லும்,

"மும்மலம் நெல்லி னுக்கு முளையொடு தவிடு மிப்போன்
மம்மர்செய் தனுவி னுண்மை வடிவினை மறைத்து நிற்கும்
பொய்ம்மைசெய் போக பந்தம் போத்திருத் துவங்கள்பண்ணும்
இம்மலம் மூன்றி னோடு இருமல மிசைப்ப இன்னும்"

என்ற **சிவஞானசித்தியாரா**லும் நன்கறியலாம்.

இம்மலங்கள் ஆன்மாவைப்பற்றி நின்று பிறப்பு இறப்புத் துயர்களைத் தந்து வருத்துதலினால் 'கவ்வுமலம்' என்றார். மலம் ஆன்மாக்களைப் பந்தித்துத் தன்னையுந் தலைவனையும் அறியாதபடிச் செய்கின்றமையால் 'கவ்வுமலமாகின்ற நாகபாசத்தினாற் கட்டுண்ட வுயிர்கள்' என்றார். மும்மலக்

கட்டைச் சேதித்து ஆன்மாக்களுக்கு இன்பருள்வது இறைவன் திருஅருள் ஆதலினால் 'கட்டுண்ட உயிர்கள் மூர்ச்சை கடிதகல வலியவரு ஞான சஞ்சீவியே' என்றார். 'வலியவரும்' என்றதனால் இறைவன் இயல்பாகவே கருணாமூர்த்தியாய் நின்று உயிர்களைக் காத்தருளும் கிருபாசமுத்திரம் என்பதை உணர்த்தலேயாம். இறைவன் ஞானமயமாக இருத்தலினாலும், மாயாமயக்கந்தவிர்த்து முத்தி எய்தி இன்புறச் செய்வதினாலும் "ஞான சஞ்சீவியே' என்றார்.

'கதியான பூமி' என்றது மோக்ஷபூமியை. பிரிதிவியாகிய பௌதீக வுலகில் நடுவே பெரிய எல்லை காணரியதாக நிற்கும் மேருமலைபோல் முத்திநிலத்தில் மத்தியில் இறைவன் அளவிடவரிய தோற்றம் பொருளுடன் இருத்தலின், 'கதியான பூமிநடுவுள் செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்விய குணமேருவே' என்றார். 'மேரு' என்றது மகாமேருமலை என்பதைக் குறிக்காது மலையே என்னும் பொருள்தந்தது. இறைவனை மலை என்பதற்குக் காரணம்; இறைவன் மலையிடத்துள்ள உயரிய குணம் பலவும் படைத்திருத்தல்பற்றி என்க. மலையின் உயர்வுகளென்னை எனின்,

"அளக்க லாகா வளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே"

என்ற **இலக்கணத்தா**னும் அறிக.

'சஞ்சீவி' இது அற்புத மருந்து தெய்வீகமுடையது. மூர்ச்சை, காயம், மரணம் முதலியவைகளை நீக்கி சுகம், இன்பம், வாழ்வு, ஆயுள் தரவல்லது. இறைவன் துயர்போக்கி அழியா இன்பந்தருபவன் ஆதலின் ஞானசஞ்சீவியே என்றார் என்பதறிக. 'திவ்வியம்' என்றது மேலான என்பது பொருளாம். ஈண்டு தெய்வீகம் என்னும் பொருளது. 3

[தக்ஷிணாமூர்த்தியே! சின்மயானந்தகுருவே! எல்லாம் படைத்த தேவரீர் அடியேன் தேவரீரை அணுகத் தன் அருளைப் படைக்க இல்லையோ என்கின்றார்]

ஐவகை எனும்பூத மாதியை வகுத்ததனுள்
அசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும்வகுத்துச்
சைவமுதலாம் அளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னையான் அணுகவுந்
தண்ணருள் வகுக்கஇலையோ



பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) பொய்-பொய்யானது, வளரும் - வளருகின்ற, நெஞ்சினர்கள்-நெஞ்சத்தையுடைய மூடர்கள், காணாத - தரிசிக்கமுடியாத, காட்சியே-காட்சியே!, பொய்-அசத்தியம், இல்லா - இல்லாத, மெய்யர் - மெய்யர்களுடைய, அறிவில்-அறிவினிடத்தே, போதம்-ஞானம், பரிபூரண-பரிபூரண, அகண்டித-அகண்ட, ஆகாரமாய் - ரூபமாகி, போக்கு - போக்கும், வரவு-வரவும், அற்ற-இல்லாத, பொருளே-பொருளே!, தெய்வம்-தெய்வீகமுடைய, மறை-வேதங்களின், முடிவு-முடிவு, ஆன-ஆகிவிளங்கும், பிரணவம்-ஓங்கார, சொரூபியே-சொரூபனே!, சித்தாந்தம் - எவரும் மறுக்கமுடியாதபடி அறுதியிட்டு உறுதி செய்து முடித்த உண்மையின், முத்தி-மோக்ஷத்து, முதலே - முதலாக இருப்பவனே!, சிரகிரி-திரிசிராமலையில், விளங்க-போற்றும் அடியார்கள் அஞ்ஞானி நீங்கி ஞானமுற்று சிவானந்தராக விளங்க, வரு - வந்து எழுந்தருளி இருக்கின்ற, தக்ஷிணா மூர்த்தியே-தென்முகமாக நோக்கிநிற்குந் திருமுகமுடையவராக எழுந்தருளிய மூர்த்தமே!, சின்மயம் - ஞானரூபியாகிய, ஆனந்தம்-பேரின்பமயமான, குருவே-குருவே! ஐ-ஐந்து, வகை-வகைகள், எனும்-என்று சொல்லும்படியான, பூதம்- பூதங்கள், ஆதியை - முதலியவைகளை, வகுத்து-படைத்து, அதன்-அதன், உள்-உள்ளே, அசரம்-சரிக்காதவைகளும், சரம்-சரிப்பவைகளும், (என்று சொல்லப்பெறும்) பேதம் - வேறுபாடுகள், ஆன-ஆகிய, யாவையும்-எல்லாவற்றையும், வகுத்து - படைத்து, நல்-நல்ல, அறிவையும்-அறிவையும், வகுத்து - படைத்து, மறை-வேதம், ஆதி - முதலாகிய, நூலையும்-நூற்களையும், வகுத்து - படைத்து, சைவம்-சைவம், முதல்-முதல், ஆம்-ஆகிய, அளவு-கணக்கு, இல்-இல்லாத, சமயம்-சமயங்களையும், வகுத்து-படைத்து, மேல்-அதற்குமேலே, சமயம்-சமயங்களுக்கு, கடந்த-அதீதமான, மோனம்-மௌனமாகிய, சமரசம் - சமரசநிலையை, வகுத்த - உண்டாக்கிய, நீ-தேவரீர், உன்னை-தேவரீரை, நான் - அடியேன், அணுகவும்-அடையவும், தண்-குளிர்ந்த, அருள்-கிருபையை, வகுக்க-படைக்க, இலையோ-இல்லையோ? எ-று.

(வி-ரை) 'ஐவகை யெனும் பூதம்' என்றது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களை. 'ஆதி' என்றது கதிரையும், மதியையும், உடுக்களையும் மற்றுமுள்ள பிறவற்றையும் உணர்த்திற்று. 'அசரம்' என்றது

சஞ்சரிக்கமுடியாதபடி ஒரே இடத்தில் இருக்கும் புல் பூண்டு முதலியன போன்றவைகளை, 'சரம்' என்றது நடப்பன, பறப்பன, ஊர்வன போன்றவைகளை. 'யாவையும்' என்ற தன்கண்உள்ள உம்மை முற்றும்மை. ஒன்று தவிராது எல்லாவற்றையும் நீயே படைத்தாய் என்பார் 'யாவையும் வகுத்து' என்றார். இறைவன் அநாதியே மலத்தில் அழுந்திக்கிடக்கும் ஆன்மாக்களை உய்விக்கும்பொருட்டுத் தனுகரண புவனபோகங்களைத் தந்து விதிவிலக்குகளைஅறிந்து மெய்நெறி கண்டு நடக்க மறையாதி நூல்களையும் தந்தருளி இருக்கின்றான் ஆதலினால் 'நல்லறிவையும் வகுத்து மறையாதி நூலையும் வகுத்துச் சைவமுதலாமளவில் சமயமும் வகுத்து' என்றார். உயிர்கள் தம்தம் புண்ய வினைகளுக்கு எற்ப படிப்படியாக உயர்வு எய்திக்கொண்டே வந்து கடைசியில் ஞானங் கைவரப்பெற்று முத்தியடைகின்றன. இதனை,

"புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலு மாச்சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்"

என்ற **சிவஞானசித்தியாரா**லும் நன்குணரலாம்.

'மறை ஆதிநூல்' என்றது ஆகமபுராணஸ்மிருதிகளை. எல்லாச் சமயங்களிலும் சைவசமயமே சிறந்ததாதலின் 'சைவமுதலாம்' என்றார். இதனை,

"சைவத்தின் மேற்சமயம் வேறிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனுநான் மறைச்செம் பொருள்வாய்மை"

என்ற **திருவருணைக்கலம்பக** வாக்காலும் அறியலாம்.

'சமயங் கடந்த மோன சமரசம்' என்றது எல்லாச்சமயங்களுக்கு அதீதமாகி எல்லாச்சமயங்களையும் தனக்குச் சோபானமாகக்கொண்டு நிற்கும் சைவசித்தாந்த சமரசநிலையில் விளங்கும் திரிகரண மௌனானந்த யோகானுபூதிநிலையைக் குறித்ததாம். கருணாநிதியாகிய தேவரீர் ஆன்மாக்கள் பொருட்டு இவ்வளவுஞ் செய்து தேவரீரை அடியேன் அடைய தண்ணிய திருவருளை வகுக்க மறந்துவிட்டீரோ, அல்லது இன்னும் அடியேனுக்குப் பக்குவம் எய்தவில்லையோ என்பார் போன்று 'உன்னைநா னணுகவுந் தண்ணருள் வகுக்க விலையோ' என்றனர். 'தண்ணருள்' என்றது திருஅருளை. இறைவன் பொய்யாயவர்களுக்குப் பொய்யாகவும் மெய்யர்களுக்கு மெய்யாகவும் இருப்பன் ஆதலினால் 'பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே' என்றும் பொய்யிலா மெய்யறிவில் 'போதபரிபூரண வகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்ற பொருளே' என்றார். இதனை,



"பொய்யர்தம் பொய்யினை மெய்யர் மெய்யைப்
போதரிக் கண்ணினைப் பொற்றொடித்தோட்
பையரவல் குன்மடந்தை நல்லீர்
பாடிப்பொற் சுண்ண மிடித்துநாமே"

என்ற **மணிவாசகப்பெருமான் திருவாசகத்தா**லும் அறியலாம்.

'பொய்யிலா மெய்யறிவு' என்றது உண்மை ஞானத்தை உடைய அறிவு. அது பவவோறுக்குஞ் சிவஞானம்பெற்ற அறிவாகும், மெய்ஞ்ஞான அறிவின் ஊடே மெய்ஞானானந்த உருவாக இறைவன் தோன்றுவன் ஆதலினாலும், அகண்டாகாரமாக விளங்குவன் ஆதலினாலும், 'பொய்யிலா மெய்யறிவில் போத பரிபூரண வகண்டிதாகாரமாய்ப் போக்குவரவற்ற பொருளே' என்றார். 'போக்கு வரவற்ற' என்பது நித்தியமாய்ச் சத்தியமாய்ச் சாசுவதமாகத் தோன்றல். இதனை,

"பொய்யரி னுள்ளக் கண்ணே பொய்யெனக் காண நிற்பாய்
மெய்யரி னுள்ளத் துள்ளே வியன்பெரு ஞான சோதித்
துய்யநல் லின்ப ரூபச் சுந்தர னுகக் காண்பாய்
ஐயபொற் கூட லானே அறையொணு துன்றன் சீரே"

என்ற **பெரியார்** வாக்கானும் அறியலாம்.

'அகண்டிதாகாரம்' என்றது கண்டிக்கப்படாது எல்லாமாய் எங்குமாய் என்றுமாய் நிறைந்தியங்கிப் பரந்தொளிர்தலைக் குறிக்கும். 'போக்கு வரவு' என்றது ஆதிஅந்தம், பிறப்பிறப்பில்லாமை என்பதாம். இதனன்றோ **மணிவாசகரும்**,

"கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே" என்றார் சிவபெருமானை.

'தெய்வமறை' என்றது தெய்வத்தால் தரப்பெற்ற மறை, தெய்வீகம் உடையமறை என இருபொருளில் மயங்கும். வேதமுடிவு பிரணவம். அதுவே 'ஓங்காரம்' இதனை மூலமந்திரம், பிரணவம், குண்டலி, வேத முதல், ஆதிமந்திரம் எனப் போற்றியுரைப்பர். இதன்பொருள் ஞானசிரியர்பால் முறைப்படி அடுத்து விதிப்படி கேட்கவேண்டியது. 'பிரணவ சொரூபி' என்றது 'வேதமந்திர சொரூபன்' இறைவன் என்பதாம். ஐந்து+ வகை = ஐவகை. இது 'ஐந்தனுெற் றடைவது மினமுங் கெடும்' என்ற விதிப்படியாயது. 'எனும்' இது 'என்னும்' என்றதன் தொகுத்தல் விகாரம். 'அசரசரம்' இது 'சராசரம்' என்றது மொழிமாறி நின்றது. 'யாவையும்' இது யாவினு அடியாகப் பிறந்தபெயர். அகண்டித+ஆகாரம் = அகண்டிதாகாரம். இது வடமொழிப் புணர்ச்சி தீர்க்கசந்தி. 4

[இறைவனே! தேகம் நீர்க்குமிழிபோன்றது என்பதை தேவரீரின்
அருளால் அறிந்தபின் உண்டு உடுத்து இன்புறுவது நல்ல
வழியல்ல என்பதறிந்தேன்; இறப்புப் பிறப்பைக்
குறித்து அஞ்சுகின்றேன் இதற்குக் காரணம்
என்ன என்கின்றார்]

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்தினல்
ஆகின்ற ஆக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்ன நான்
அறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி என்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தஇவை
போனவழி தெரியவில்லை
எந்தநிலை பேசினும் இணங்கவிலை யல்லால்
இறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணினல் நெஞ்சது பகிரெனுந் துயிலுரு
திருவிழியும் இரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கம்இவை என்கொலோ
சித்தாந்த முத்திமுதலே
சிரிகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) சித்தாந்தம்-எவரும் மறுக்க ஒண்ணாதபடி உறுதியிட்டு அறுதி செய்து முடிவதாகிய, முத்தி-மோக்ஷத்திற்கு, முதலே-முழுமுதல்வனாக இருக்கின்றவனே!, சிரகிரி-திரிசிராமலையின்கண்ணே, விளங்க-அடியார்கள் முத்தி பெற்று இன்புற்று விளங்க, வரு-வந்து எழுந்தருளிய, தக்ஷிணமூர்த்தியே-தென்முக நோக்கிய நோக்கொடு எழுந்தருளி யிருக்கின்ற மூர்த்தத்தை யுடையவனே!, சித்து-ஞான, மயம்-வடிவத்தோடு கூடிய, ஆனந்த-ஆனந்த வுருவாகிய, குருவே - குருவே!, ஐந்து - ஐந்து, வகை - வகைகள், ஆகின்ற-ஆகிற, பூதம்-பூதங்களின், பேதத்தினல் - பேதங்களினலே, ஆகின்ற-ஆகுவதாகிய, ஆக்கை - இத்தேகமானது, நீர் - நீரின், மேல் - மேலே, அமர்கின்ற-உண்டாகின்ற, குமிழி-நீர்க்குமிழி, என - என்று, நிற்கின்றது - நிற்கின்றது, என்ன-என்றும், நான்-அடியேன், அறியாத - உணராத, காலம் - காலங்கள், எல்லாம் - எல்லாம், புந்தி - மனமானது, மகிழ் - சந்தோஷம், உற-அடைய, உண்டு - உணவைப் புசித்து, உடுத்து - உடை அணிந்து, இன்பம் - இன்பம், ஆவதே-ஆகுவதே, போந்த - கைவந்த, நெறி - நெறி, என்று - என்று, இருந்தேன் - இருந்தேன், நினது - தேவரீரின், அருள் - திருஅருள், வந்து - வந்து, பூராயமாக - ஆதியோடந்தமாக, உணர்த்த - அறிவிக்க, இவை - இவைகள்,



போன-சென்ற, வழி-வழி, தெரிய - இன்னதென்று தெரிய, இல்லை-இல்லை, எந்த-எந்த, நிலை - நிலையை, பேசினும் - சொன்னலும், இணங்க - சம்மதிக்க இல்லை-இல்லை, அல்லால் - அது அல்லாமலும், இறப்பொடு-மரணத்துடனே, பிறப்பை - பிறப்பையும், உள்ளே - மனத்தில், எண்ணினல் - நினைத்தால், நெஞ்சது - மனமானது, பகீர் - பகீர், எனும் - என்கின்றது, இரு - இரண்டு, விழியும்-கண்களும், துயில்-நித்திரை, உரு-கொள்ளாது, அங்கம்-உடலானது, இரவு-இரவும், பகல்-பகல், ஆய்-ஆக, செம் - செவந்த, தழலில் - நெருப்பில் இட்ட, மெழுகு - மெழுகு, ஆனது - ஆகியது, இவை - இத்தன்மைகள், என் கொலோ-அடியேனிடம் உண்டாதற்குக் காரணம் யாதோ? எ-று.

(வி-ரை) தேகம், மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சபூத சேர்க்கையால் உண்டாயது ஆதலின் 'ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினல் ஆகின்ற ஆக்கை' என்றார். 'ஆக்கை' எலும்பு, தசை, நரம்புகளால் கட்டப் பட்டது இத்தேகம் ஆதலினல் யாக்கை எனப்பட்டது. கட்டப்பட்டது. என்னுங் காரணக்குறிப் பெயர். இதனை,

"என்பினை நரம்பிற்பின்னிக் குடர்வழும் பிறைச்சிமெத்திப்
புன்புழுப் பொதிந்துசெந்நீர்ப் புண்ணசும் பொழுகிநாறித்
துன்பநோ.யெவற்றினுக்கு முறையுளாய்ப் புறந்தோன்மூடும்
வன்புலை யுடம்பேயாவி வருத்திடும் பிணிவேறில்லை"

என்பதனல் அறியலாம்.

"நீரிற் குமிழி இளமை நிறைசெல்வ
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரின்
எழுத்தாகும் யாக்கை"

எனக் **குமாரகுருபர சுவாமிகளும்**, இன்னும்,

"காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்ட
மந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருசிழ
னீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில் கனவிற் கண்ட காட்சி"

என இத்தேகத்தைப்பற்றி **பட்டினத்தடிகள்** கூறியது நோக்கத்தக்கதாகும்.

'தேகம்' நித்தியம், கல்லினும் வலியுடையது தேகம் அழியாது என்று எண்ணியகாலம் எல்லாம் உண்டு உடுத்து இன்பநுகர்வதே கைகண்ட இன்பமென்று எண்ணி இருந்தேன் என்பார். 'ஆக்கைநீர்மேல் அமர்கின்ற குமிழியென நிற்கின்றதென்னநா னறியாத காலமெல்லாம் புந்திமகிழுற உண்டு உடுத்து இன்பமாவதே போந்தநெறி என்றிருந்தேன்' என்றார். இதனன்றே **பட்டினத்தடிகளும்**,

"உண்டதே யுண்டு முடுத்ததே யுடுத்துமடுத்தடுத் துரைத்ததே யுரைத்துங்
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டுங் கழிந்தன கடவுளே யெல்லாம்

விண்டதா மரைமே லன்மைவீற் றிருக்கும் விழவரு வீதிவெண் காடா
அண்டரே போற்ற வம்பலத் தாடு மையனே யுய்யுமா றருளே"

என்று திருவாய் மலர்ந்தருளினார்.

இறைவனின் திருஅருட் சகாயத்தால் சிற்சத்தியால் ஞானம் கைவரப் பெற்றவர்க்கே தேகம் அநித்தியம். நித்தியப்பொருள் வேறு அதனை அடைவதே நித்தியானந்தம் என்னும் உண்மை தெரியவரும் ஆதலினால் 'நினதருள் வந்து உணர்த்த இவைபோன வழி தெரிய இல்லை" என்றார். சாதற் றுன்பமும், பிறப்புத் துன்பமும் மிகவேதனை தருவதாகலின் 'இறப்பொடு பிறப்பையுள்ளே எண்ணினா னெஞ்சது பகீரெனும்" என்றார். இதனை,

"சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈதலிய யாக் கடை"

என்ற **திருக்குறளா**லும்,

"யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்"

என்ற **மணிவாசகர்** வாக்கும் ஒப்பிட்டு நோக்கத்தக்கது.

'பகீரெனும்' இது ஒலிக்குறிப்பு, திடுக்கென உண்டாம் அச்சத்தை உணர்த்திற்று. 'இரவுபகல்' இது இரவும் பகலும்ஆக எனப் பொருள்தருதலின் உம்மைத்தொகை. 'இருவிழியும்' என்றதன்கண் உள்ள உம்மை முற்றும்மை. 'செந்தழலின்' இது இயல்பு நவிற்சி. நெருப்பு செந்நிறமாக இருத்தலின் 'செந்தழல்' என்றார். 'இன்' இது வேற்றுமை உருபு. இடப்பொருள் தந்தது. மெழுகானது+அங்கம்=மெழுகானதங்கம். 'உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்' என்னும் விதிப்படி உயிர்வர வல்லின மெய்யின்மேல் ஏறி நின்ற குற்றுகரம் ஓட அம்மெய்யில் வந்த உயிர் ஏறியது. 'செந்தழலின் மெழுகானதங்கம்' இது செந்தழலின் மேலிட்ட மெழுகுபோலானது என் அங்கம் எனப் பொருள்தரும். ஆதலின், 'செந்தழலின் மெழுகானது' என்பது உபமானம். 'என்கொலோ' இதில் கொல்லும் ஓவும் அசைகள். 'ஆக்கை' இது 'யாக்கை' என்பதன் மரூஉ. 'நெஞ்சது' இதில் ஈற்றில்நின்ற 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. 5

[தக்ஷிணாமூர்த்தியே! சின்மயானந்தகுருவே! நீயே கரு அறையில்
கிடந்த எமை வெளிப்படுத்தி உண்டு வளர்ந்துதிரிய வைத்து
ஞானமூட்டிப் பேரின்ப சுகந்தரும் உலக அன்னை
வடிவங்கொண்ட எந்தை என்கின்றார்]

காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த



பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழி தப்பில் நமனைவிட்
டிடருறஉறுக்கி இடர்தீர்த்
திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்து துயில் கொண்மின் என்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) சித்தாந்தம் - எவரானும் மறுக்க ஒண்ணாதபடி உறுதியிட்டு அறுதிசெய்துள்ள முடிவாகிய, முத்தி-மோக்ஷத்துக்கு, முதலே - முழுமுதற் பொருளாக இருப்பவனே!, சிரகிரி-திரிசிராமலையிலே, விளங்க - அடியார்கள் சிவாநந்தமுற்று விளங்கும்படி, வரு-வந்து எழுந்தருளியிருக்கின்ற, தக்ஷிணா மூர்த்தியே - தென்முகநோக்கிய திருமூர்த்தங்கொண்டுள்ள இறைவனே!, சித்து-ஞான, மயம்-வடிவோடுகூடிய, ஆனந்த-ஆனந்தரூபியாகிய, குருவே-குருவே!, (நீ) கார்-கருமை, இட்ட-கொண்ட, ஆணவம்-ஆணவமலநிறைந்த, கரு-கருப்பையாகிய, அறையில் - சிறுவீட்டிலே, அறிவு - உணர்ச்சி, அற்ற-இல்லாத, கண் - கண், இல்லா-இல்லாத, குழவியை - குழந்தையை, போல்-போல, கட்டுண்டு-பிணிபட்டு, இருந்த - இருந்த, எமை-எங்களை, வெளியில்-கருப்பையைவிட்டு வெளியில், விட்டு - வரச்செய்து, அல்லல் - துன்பமாகிய, காப்பு-காவலை, இட்டு-அமைத்து, அதற்கு - அதற்கு, இசைந்த - பொருத்தமாகிய, பேர் - பெயரை, இட்டு - வைத்து, மெய் - உண்மை, என்று-என்று, பேசும் - பேசப்படுகின்ற, பாழ் - பாழாகிய, பொய் - நிலையற்ற, உடல்-சரீரமானது, பெலக்க-வலிமைபெறும்படி, விளை-விளைகின்ற, அமுதம்-உணவை, ஊட்டி-உண்பித்து, பெரிய-பெரிதாகிய, புவனத்திடை-உலகத்தில், போக்கு-இறப்பும், வரவு-பிறப்பும், உறுகின்ற - பொருந்துகின்ற, பெரிய-பெரிதாகிய, விளையாட்டு-விளையாட்டை, அமைத்திட்டு-ஆக்கிவைத்து, ஏர்-அழகு, இட்ட-பொருந்திய, தன்-தனது, மொழி-சொல்லாகிய, சுருதி-வேதமார்க்கத்திலே, தப்பில்-தவறினால், (அப்படித்தப்பியவர்களை) நமனை-யமனை, விட்டு-அனுப்பி, இடர்-துன்பம், உற - அடையும்படியாக ஆக்கி, உறுக்கி - தண்டித்து, இடர்-பிறகு அத்துன்பத்தையும், தீர்த்து - நீக்கி, இரவு - இரவும், பகல் - பகலும், இல்லாத-இல்லாத, பேர்-பெரிய, இன்பம் - ஆனந்தம், வீட்டினில்-வீட்டிலே (முத்தியிலே), இசைந்து - பொருந்தி, துயில் - இனியாகிலும் ஆனந்த நித்திரையை, கொண்மின்-கொள்ளுங்கள், என்று-என்று, சீர்-எல்லாச்சிறப்புகளை

யும், இட்ட-அமைத்துவைத்த, உலகு - உலகத்து, அன்னை-தாய், வடிவான-ரூபமாகிய, எந்தையே-தந்தையே! எ-று.

(வி-ரை) 'ஆணவம்' இது அஞ்ஞானமயமானது ஆதலினாலும், அஞ்ஞானம் என்னும் அறியாமை இருள் ஆதலினாலும், இருள் நிறம் கருப்பாதலினாலும், இருள்பொருளை உணராதபடி செய்வதுபோல் ஆணவம் பொருளை உணராதபடி செய்வதாலும் 'காரிட்ட ஆணவம்' என்றார். கருப்பு நிறம் பொருந்திய இருண்மயமாகிய ஆணவம் என்பது இதன் பொருளாம். ஆணவமலமே பிறப்புக்குக் காரணமாகும் ஆதலினால் 'ஆணவக்கருவரையில்' என்றார். ஆணவத்தால் ஏற்பட்டதாகிய கருப்ப அறை என்க. 'அறிவற்ற கண்ணிலாக்குழவி' இது உபமானம். அறிவு என்றது ஞானக்கண் கண் என்றது புறக்கண்களை. கட்டுண்டிருந்த எமை என்றது மலத்தால் கட்டுண்டிருந்த எம்மை என்பதாம். ஆன்மாக்கள் அநாதியே மலத்தாற் கட்டுண்டு கிடத்தலால் அவற்றிற்கு உய்வருளாலே தநுகரண, புவனபோகங்களைத்தந்து கருவாக்கி உருவாக்குகின்றான் ஆதலின் 'காரிட்ட வாணவக் கருவரையி லறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்த வெமை வெளி யிட்டு' என்றார். இது ஆணவமலத்திருந்த உயிரை வெளியிட்டு என்றும் ஆணவமலம் நிறைந்த கருப்பையுட்கிடந்த எமை கருப்பையைவிட்டு வெளி யிட்டு என்றும் பொருள்தர இரட்டுற மொழிதலாகக் கிடந்த நயங்காண்க. இதுகண்டன்றே **வள்ளலார் சாத்திரந்தும்,**

"கண்ணிலாக் குழவிவெய்ய காரிருட் டறைபட் டாங்கு
திண்ணிய மலவறைக்குட் சிக்கிய சிறியேன் றன்னை
நண்ணரு ஞானக் கையானுன்முகன் முதலோ ரேங்கத்
தண்ணளி யாலெடுத்த சற்குரு நாதா போற்றி" என்றார்.

உயிர்கள் உண்மைஞானம் பெறவே வினைகளையும் அவ்வினைகளுக்குத் தக்கவாறு இன்பதுன்பங்களையும் வைத்துளானாதலின் 'அல்லலாங் காப்பிட்டு' என்றார். 'மெய் என்று பேசுபொய்' என்றது தேகத்தை. பொய்யாகிய இத்தேகத்திற்கு மங்கல வழக்காக மெய் என்று பெயர் வந்ததனால் இவ்வாறு கூறினார். உயிரும் உடலும் பெலக்க உணவு வேண்டுமாதலின் 'உடல் பெலக்க விளையமுதூட்டி' என்றார். 'உணவே உயிர்' என்பதனை 'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே' என்ற **புறநானூற்றலும்,** உணவே உடல் என்பதனை 'ஒரு கூறு மலமாகும் ஒரு கூறு உடலாகும்' என்றதனாலும் அறியலாம். இதனை இன்னும், 'அரியவுடல் அன்னமய கோசம்' என்பதனாலும் அறியலாம்.

"பெரிது பெரிது புவனம் பெரிது"

என **ஔவைப்பிராட்டி** கூறியதனாலும் இப் பூலோகம் ஞானபூமியாகையாலும் 'பெரிய புவனத்தினிடை' என்றார். 'போக்குவரவாவது' சாதலும் பிறத்தலும் ஆம். இதனானன்றே **திருவள்ளுவரும்,**



"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு" என்றார்.

ஆன்மாக்கள் விதிவிலக்குகளை உணர்ந்து உய்யும்பொருட்டு மறை ஆகமங்களைத் தன் திருஅருளால் வெளிப்படுத்தியுள்ளமையால் 'ஏரிட்டதன் சுருதி' என்றார். இறைவற்கு படைத்தல், காத்தல், ஒடுக்கல் முதலாய ஐந்தொழிலும் சிரமமான தொழிலன்று. இலேசானதே, அவை இச் சாமாத்திரையில் நடப்பன என்பது தோன்ற 'பெரிய விளையாட்டமைத்திட்டு' என்றார். விளையாட்டு சிரமமில்லாதது என்பது யாவரும் அறிந்ததே. விதிவிலகி தெய்வசிந்தனையின்றி இருப்பவர்களையே நமன் கோறல் செய்வானாதலின் 'சுருதிமொழி தப்பின் நமனைவிட் டிடருற உறக்கி' என்றார். சிவனடியார்க்கு யமபயம் இல்லை என்பதனை, **மார்க்கண்டேயர் சரித்திரத்தால்** நன்கறியலாம். இன்னும்,

"அண்டர்பணி காலகாலன் அடிமலரைத் தொழுதபேர்க்குச்
சண்டநமன் வருவானென்றுஞ் சஞ்சலமு முண்டுகொல்லோ
முண்டகத்தி லுறையுந்தேவன் முன்னியினிப் பிறப்பிப்பானென்
றெண்டரவு முடமுமுண்டோ இயற்புலவீர் கூறவீரே"

என்றதனாலும் அறியலாம்.

"இன்புநீ துன்புநீ பாவநீ புண்ணியநீ"

என்று இறைவனைப் பெரியார் தம் **தேவாரத்துத்** துதித்தலால் இறைவன் ஆன்மாக்களை உய்விக்கவே இன்பமுந் துன்பமுமாக இருக்கின்றான் ஆதலின் 'இடருற வுறக்கி' என்றும் இரவுபகல் இல்லாத பேரின்பவீட்டினி லிசைந்து துயில்கொண்மினென்று 'சீரிட்ட வுலகன்னை வடிவான' என்றார். 'முத்திநீ நரகுநீ' என்றபடி முத்தியும் நரகும் ஆவான் இறைவனே. முத்தியில் இன்பமயமாகவந்து கலப்பவன் அவ் இறைவனே ஆதலின் 'பேரின்ப வீட்டினில் இசைந்து' என்றார். இறைவனுடன் இரண்டறக் கலப்பதே முத்தி என்பதை ஈண்டு உணர்த்தியதும் ஆயிற்று.

இரவுபகல் என்பது முத்திநிலையில் இல்லை எல்லாம் சோதிப்பிரகாசமாக ஆனந்தமயமாக இருக்கும் ஆதலினால் 'இரவுபகல் இல்லாத' என்றார். 'சீரிட்ட வுலகன்னை' என்றது உலகத்துக்கெல்லாம் சிறந்த தாயான பராசத்தி வடிவந்தன்னைக் குறித்ததாகும். ஏன் எனின் இறைவன் சத்தியும் சத்தனுமாக இருக்கின்றான் ஆதலின் என்க. இதனானன்றே **பெரியார்கள்**

"சத்தியுஞ் சிவமுமாகி" எனவும்,
"சத்தியாய்ச் சிவமாய்த் தனிபர முத்தியான" எனவுங் கூறினர்.

அன்னையின் கடமை தாலாட்டித் தூங்கவைப்பதுபோல இறைவனுந் தாயாகிப் பேரின்பவீட்டினில் இசைந்து துயில்கொள்ளச் செய்கின்றான் என்னும் நயம் தோன்ற 'பேரின்ப வீட்டினில் இசைந்துதுயில் கொண்மின் என்று சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே" என்றது, ஆராயத்தக்க

தாகும். 'எமை' இது 'எம்மை' என்பதன் தொகுத்தல் விகாரம் 'கொண்மின்' இதில் 'மின்' முன்னிலை ஏவற்பன்மை விகுதி. 'கண்ணிலா' இது 'கண்ணில்லா' என்பதன் தொகுத்தல்விகாரம். 6

[இறைவனே! அஞ்ஞானமிகுந்த அடியேனை ஞானமூட்டி
சுத்தனுக்கிப் பணிகோண்ட அன்பை என் சோல்
வேன் என்கின்ருர்]

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக இருக்கநீ ஞான அனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக்கிப்
பருவமத றிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என்சொல்லுகேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்தம்
ஆதியாம் அந்தமீதும்
அத்துவித நிலையராய் என்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவி னூடுந்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணு மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) அருமை-அருமையை, பெறு - பெற்ற, புகழ்-புகழை (கீர்த்தி), பெற்ற-கொண்டுள்ள, வேத-வேதத்தின், அந்தம் - சிகையும், சித்தாந்தம்-சித்தாந்தமும் ஆகியவைகளின், ஆதியாம்-ஆதியிலும், அந்தம்-முடிவின், மீதும்-மேலும், அத்துவிதம்-அத்துவிதம், நிலையராய் - நிலையுடையராகி, என்னை-அடியேனை, ஆண்டு-ஆட்கொண்டு, உன்-தேவரீரின், அடிமை-அடிமை, ஆனவர்கள்-ஆனவர்களின், அறிவின் - அறிவின், ஊடும் - உள்ளும், திரு-அழகு, மருவு-பொருந்திய, கல்ஆல்-கல்ஆல, மாத்தின் - மாத்தினுடைய, அடி-அடிநிழலின், கீழும் - இடத்தும், வளர் - வாழ்ந்திராநின்ற, சித்தாந்தம் - எவரும் மறுக்க ஒண்ணுதபடி உறுதிசெய்து அறுதியிட்ட முடிவினதாகிய, முத்தி-மோக்ஷத்திற்கு, முதலே-முதல்வனுக இருப்பவனே!, சிரகிரி-திரிசிராமலையின் கண்ணே, விளங்க - மெய் அடியார்கள் முத்தியின்பம் பெற்று விளங்குமாறு, வரு-எழுந்தருளிவந்து வீற்றிருக்கும், தக்ஷிணுமூர்த்தியே - தென்முகந்திரும்பிய திருநோக்கமுடைய மூர்த்தத்தையுடைய கடவுளே!, சித்து-ஞான, மயம்-வடிவமாகிய, ஆனந்த-ஆனந்தமயமான, குருவே-குருவே!, கரு-கருப்பாசயத்



தின், மருவு-பொருந்தியுள்ள, குகை - குகையை, அனைய-ஒத்த, காயத்தின்-தேகத்தின், நடு-மத்தியாகிய, உள்-உள் இடத்தில், களிம்பு-களிம்பு, தோய்-படிந்த, செம்பு-செம்பை, அனைய-ஒத்த, யான் - அடியேன், காண்க-காணும்படி, இருக்க-இருக்க, நீ - தேவரீர், ஞானம் - ஞானமாகிய, அனல் - தீயை, மூட்டி-மூள்வித்து, கனிவு - இளக்கத்தை, பெற - அடையும்படி, உள் - உள்ளத்தை, உருக்கி - உருகச்செய்து, பருவம் - பக்குவகாலம், அது - அதனை, அறிந்து - உணர்ந்து, நின் - தேவரீரின், அருள் - திருஅருள், ஆன - ஆகிய, குளிகை-குளிகையை, கொடு - கொண்டு, பரிசித்து - தீண்டி, வேதிசெய்து-வேதித்து, பணி-அடியேனைப்பணி, கொண்ட - கொண்டருளிய, பட்சத்தை-தேவரீரின் பெருங்கருணையை, என்-எந்தவிதமாக, சொல்லுவேன்-புகழ்ந்து போற்றி யுரைப்பேன் எ-று.

(வி-ரை) 'கரு' என்றது கருப்பாசயத்தை. 'குகை அனைய' இதில் அனைய என்பது உவம உருபு. குகையை ஒத்த என்பது பொருளாம். 'காயம்' என்றது தேகத்தை. தேகத்தின் நடுவிடமாகிய வயிற்றில் கருப்பாசயம் குகைபோல இருத்தலின் 'கருமருவு காயத்தி னடுவுள்' என்ருர். 'காயம்' இது மங்கல வழக்காக நிலையாய் இருப்பது என்னும் பொருளால் ஏற்பட்ட காரணப்பெயர். 'மெய்' என்பதுபோல என அறிக. இதனை,

"வெங்காயஞ் சுக்கானல் வெந்தயத்தா லாவதென்ன
இங்கார் சுமந்திருப்பார் இச்சரக்கை—மங்காத
சீரகத்தைத் தந்தீரேற் றேடேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டியா ரே"

என்ற **தனிப்பாடலா**லும் அறிக.

அனுதியே ஆன்மாவை மாயைபற்றி இருத்தலினுல் 'களிம்புதோய் செம்பனைய யான்' என்ருர். இதனை,

"தண்டுலத்தைச் சில்லுமிழுந் தாம்பிரத்தைக் காளிதமும்
மண்டுதல்போ லாவி மறைக்கும்" எனவும்,

"நெல்லினுக் குமியுஞ் செம்பி னிடுகா ளிதமும் போலத்
தொல்லைதொட் டின்று காறு முயிரிடைத் தொக்கி நிற்கும்
வல்லியோர் பங்க னுசான் வடிவெடுத் தருளுங் காலம்
புல்லுறு பனிபோற் பொன்றும் போதவா தவனெ முங்கால்"

என்ற **வள்ளலார் சரித்திரத்தா**லும்,

"களிம்பறுத்தா னெங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத்தா னருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே" என்ற **திருமந்திர**மும்,

"நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்பு
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி

பலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்"

எனவும் வரும் பிரபல பிரமாணங்களால் அறியலாம்.

ஆன்மாவை அநாதியேபற்றிய மாயையாகிய களிம்பைப் போக்க அனலிற் புடம்போடல்போல ஞானவனல் மூட்டி இறைவன் உருக்கி குளிகை சேர்த்துப் பத்தரைமாற்றுத் தங்கமாக்குகிறான் என்பார். 'நீ ஞான அனல் மூட்டியே கனிவுபெற உள்ளுருக்கிப் ... ... ... பத்துமாற்றுத் தங்கமாக்கியே பணிகொண்ட பக்ஷத்தை என் சொல்லுகேன்' என்றார். 'ஞானஅனல்' என ஞானத்தை அனலாகக் கூறியது உருவகம். 'கனிவு' என்றது ஈண்டு இளக்கத்தை. 'ஞானத்தை' அனல் என்றதற்கொப்ப 'அருளை'க் 'குளிகை' என்றார். 'குளிகை' இது பொன்னாக மாற்றுதற்குச் சேர்க்கும் மருந்து. 'பரிசித்து' என்றது குளிகையொடு தொட்டமாத்திரத்தில் பொன்னும் ஆதலினால் 'பரிசித்து' என்றார். பரிசித்தல் - தொடல் பரிசவேதி - தொட்டமாத்திரத்தால் பொன்னாக்குவான். 'தரிசனவேதி' என்பவன் கண்பார்வை மாத்திரத்தால் பொன்னாக்குவோன் என்பது ஈண்டு அறிதற்பாலனவாம். தங்கங்களுள்ளே பத்துமாற்றுத் தங்கம் உயர்ந்தது ஆதலினால் 'பத்துமாற்றுத் தங்கம் ஆக்கியே' என்றார். 'பணிகொண்ட' என்றது 'அடிமையாகக் கொண்ட' என்பது பொருளாம். இனி பொன் கொண்டவர் அதனை ஆபரணமாகக் கொள்வர் ஆதலின் பத்துமாற்றுத் தங்கமாக்கி ஆபரணமாகவும் ஆக்கினை என்னும் நயம்பட 'பணிகொண்ட' என்றார் என்றலுமாம் இவ்வாறாயின் இது **இரட்டுறமொழித**லாகும். 'பக்ஷம்' என்றது ஈண்டு கருணையை. 'பக்குவம்' என்றது மலபரிபாக பக்குவத்தை. பரிசவேதி செம்பிற் களிப்பு நீக்கி தங்கம் ஆக்குவது போல இறைவன் ஆன்மாக்களை ஞானமூட்டி அருள்கின்றான் என்பதனை,

"செம்பிரதக் குளிகையினாற் களிம்பற்றுப் பொன்னாய்ச்
செம்பொனுடன் சேருமலஞ் சிதைந்தாற் சிவ
னம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்ல
னற்குளிகை போலவரா னணுகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்ப னருங்களங்க மறுக்கு
மக்குளிகை தானும்பொன் னாகா தாகு
மும்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய
னுயிர்தானுஞ் சுவானுபவ மொன்றினுக்கு முரித்தே"

என்ற **சிவஞான சித்தியார்ச் செய்யுளா**லும் அறியலாம்.

வேதாந்த சித்தாந்தங்கள் கிடைத்தற்கும், காணற்கும், தெரிதற்கும் பொருள் உணர்தற்கும் அருமையுடையதாதலின் 'அருமைபெறு' என்றார். முத்தி சத்தியமாகச் சித்திக்கச்செய்து உயிர்களை உய்விப்பதனால் பசுக்களால் புகழப்பெறுதலின் 'புகழ்பெற்ற' என்றார். இனி 'புகழ்பெற்ற' என்பதற்கு இறைவன் புகழையே பெற்றுள்ள எனலும் ஆம். 'வேதாந்தம்'



என்றது உபநிடதத்தை. வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய இவைகளின் முதலிலும் முடிவிலும் இறைவன் புகழப்படுகின்றான் ஆதலின் 'வேதாந்த சித்தாந்த மாதியா வந்தமீதும்' என்றார். ஆதி அந்தம் என்றதனால் மத்தியுங் கொள்ளக்கிடக்கும் ஆதிமத்தி அந்தம் எல்லா இடத்தும் என்க; என்னை உபநிடதமும் சித்தாந்தமும் ஆதிதொட்டு அந்தமட்டும் இறைவனையே துதித்துப் புகழ்கின்றதனால் என்க.

"போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்பொருளே யாதலினால்
வேற்றுவா சகமடியேன் விளம்புமா றறியேனால்"

என்றபடி வேதாந்தமும் சித்தாந்தமும் போற்றுவதெல்லாம் பரமபதியாகிய இறைவனையே என்பது அறியற்பாலதாம். 'அறிவுக் கறிவா யவிகாரியாகி நிறைதல் பதிநிச்சயம்' என்றபடி அறிவுக்கு அறிவாய் இருப்பன் இறைவன், இன்னும் அத்துவிதநிலை அடைந்த ஞானியர் அறிவினூடு விளக்கமுற்றிருப்பனாதலின் 'அத்துவித நிலையரா யென்னை யாண்டுன்னடிமை யானவர்க ளறிவினூடும்' என்றார். இதனானன்றோ,

"நீரிடை யுப்பும் பாரிடை யப்புந்
தாயிடைச் சூலும் தளிரிடைத் துவளும்
தீயிடை வெம்மையுஞ் செறிந்தாங் கன்ன
வறிவிடை யீச னமர்ந்தாங் குறலே" எனவும்,

"அத்து விதம்பெற ஆங்காங் கிழுப்பினு
மாருயி ரறிவா லறிதரப் படாஅ
வூனக் கண்ணுக் கொளியா தொளித்து
ஞானக் கண்ணின் வெளிப்படு நாதன்"

எனவும், வருவன கண்டு தெளிக.

'கல்லாலடி' என்றது இறைவன் தக்ஷிணாமூர்த்தியாக இருந்தருளிய கல்லால மரத்தின் நிழலைக் குறித்ததாம். 'அடியார்க்கும் அடியேன்' என்ற முறையில் 'அத்துவித நிலையரா யென்னையாண்டுன் னடிமையானவர்கள்' என்றார். 'கருமருவு' இது இரண்டாம் வேற்றுமைத்தொகை. 'கருவை மருவும்' எனவிரியும். 'மூட்டியே' இதில் ஏகாரம் பொருளின்றி அசையாக நின்றது. 'பருவமது' இதில் ஈற்றில் நின்ற 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. இதில் ஆதியாமந்தமீதும், அறிவினூடும், கல்லாலடிக்கீழும், என்றதன் ஈற்று உம்மைகள் எண் உம்மைகள். 7

[எல்லாம் அற்ற இடமே நிலையானது என்று கூறிய மௌனி இறைவன் ஆகும் என்கின்றார்]

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினொடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று

நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமேல் ஒன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

**(ப-ரை)** சித்தாந்தம் - எவரும் மறுக்கமுடியாத உறுதியிட்டு அறுதி செய்த முடிவாகிய, முத்தி - மோக்ஷத்திற்கு, முதலே - முதலாக இருப்பவனே!, சிரகிரி - திரிசிரா மலையின்கண்ணே, விளங்க - அன்புடைய மெய் அடியார்கள் ஞானமுற்று முத்தியின்பம்பெற்று விளங்க, வரு - எழுந்தருளி வந்து வீற்றிருக்கும், தக்ஷிணமூர்த்தியே - தென்முகநோக்கிய திருக்கோலத்துடனிருக்கும் தக்ஷிணமூர்த்தத்தை உடைய இறைவனே!, சித்து - ஞானமயம்-வடிவத்தோடுகூடிய, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, குருவே-குருவே!, கூடுதல் - சேருதல், உடன் - உடனே, பிரிதல் - நீங்குதல், அற்று - இன்றி, நிர்தொந்தமாய் - பந்தத்துவம் அற்றதாகி, குவிதல்-கூம்பல், உடன்-உடனே, விரிதல் - விரிதல், அற்று-இல்லாததாகி, குணம்-குணம், அற்று-இல்லாதாகி, வரவினொடு - பிறப்போடு, போக்கும் - இறத்தலும், அற்று - இல்லாதாகி, நிலை - நிலை, ஆன - ஆகிய, குறிய - அடையாளங்கள், அற்று - இல்லாதாகி, மலம் - மலமும், அற்று - இல்லாதாகி, நாடுதலும் - நினைத்தலும், அற்று-இல்லாதாகி, மேல்-மேலும், கீழ்-கீழும், நடு-நடுவும், பக்கம்-பக்கமும், என-என்று சொல்லப்படுபவைகளை, நண்ணுதலும் - அடைதலும், அற்று-இல்லாதாகி, விந்து - விந்துவும், நாதம் - நாதமும், அற்று - இல்லாதாகி, ஐ - ஐந்தாகிய, வகை - வகைகளையுடைய, பூதம் - பூதங்கள், பேதம்-விகற்பங்களும், அற்று-இல்லாததாகி, வாடுதலும்-வாட்டம்அடைதலும், அற்று-இல்லாததாகி, மேல் - மேலும், ஒன்று - ஒன்றுகுந்தன்மை, அற்று-இல்லாததாகி, இரண்டு-இரண்டாம்தன்மையும், அற்று - இல்லாததாகி, வாக்கு - வார்த்தை, அற்று-இல்லாததாகி, மனம் - மனமும், அற்று-இல்லாததாகி, மன்னும்-நிலைபெற்ற, பரிபூரணம் - மிகுந்த நிறைவாகிய, சுகம் - ஆனந்தம், வாரி-சமுத்திரம், தன்னிலே - தன்னிலே, வாய்மடுத்து-வாய்வைத்து, உண்டு-குடித்து, அவசமாய், என்வசந்தப்பிப் பரவசமாய், தேடுதலும்-தேடுவதும், அற்ற-இல்லாத, இடம்-இடமே, நிலை - உண்மைநிலையாகும், என்ற - என்று உபதேசித்தருளிய-மௌனியே - மௌன குருவாகும் எ-று.



**(வி-ரை)** இறைவன் எல்லாவற்றிலும் தோய்ந்தும் தோயாதும் விகாரமின்றி இருக்கின்றான் ஆதலின் 'கூடுதலுடன் பிரிதலற்று நிர்த்தொந்தமாய்' என்றார். இதனை,

"எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி
இருந்து காட்டி", எனவும்,
"சராசரத்துத் தோய்ந்துந் தோயாத் தனிமுதலை"

எனவும் வரும் **பெரியார்**களின் வாக்குகளைக் கொண்டுந் தெளிக.

எவற்றோடும் பற்றாது பற்றற்று நிற்கின்றானாதலின் அவைகளினால் வரும் இன்பதுன்பம் இல்லையாதல் பற்றி 'நிர்த்தொந்தமாய்' என்றார். இது கொண்டன்றோ **திருவள்ளுவரும்**,

"யாதனின் யாதனி னீங்கியா னோதல்
அதனி னதனி னிலன்" என்றும்,
"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு" என்றுங் கூறினார்.

'குவிதலுடன் விரிதல்' என்றல் தோய்தல் வளர்தல், சுருங்கல் பெருகல் முதலியவைகளாம். இறைவன் நாமரூபம் குணம் அற்றவன் ஆதலினாலும், குணாதீதன் ஆதலினாலும் 'குணம் அற்று' என்றார். இதனானன்றோ **மணிவாசகரும்**,

"பித்தனுய்த் திரிவேனை குணங்களுங் குறிகளுமிலாக்
குணக்கடல் கோமணத் தோடுங் கூடி
யனைத்துவந் தெனையாண்டு கொண் டருளிய
வற்புத மறி யேனே" என்றார்.

'வரவினொடு போக்கற்று' என்றது பிறப்பு இறப்பில்லாதவன் என்பதாம். இதனைப் 'போக்குவர வில்லாப் பூரணனை' எனவும், 'போக்குவரத் தில்லானே' எனவும் **தமிழ்வேதங்** கூறுதலுங் கண்டுதெளிக. இறைவல் ஒருநாமமில்லான் ஆதலின் 'நிலையான குறியற்று' என்றார். இனி, இறை ரூபம், அருபம், ரூபாரூபம் என்னும் மூன்று திருமேனியுடையன் ஆதலின் நிலையான குறியற்று என்றார் என்பாருமுளர். இறைவன் 'அநாதிமல முத்தன்' ஆதலின் மலமற்று. 'விந்து நாதம்' என்றது விந்து தத்துவத்தையும், நாதத்த்துவத்தையும். விந்துநாதம் அற்று என்றத னால் ,சுத்த மாயையின் நீக்கத்தையுங் குறித்ததாகும். 'பஞ்சபூத பேதம்' என்றது பூதங்களையும் அவைகளின் பேதங்களையும் உணர்த்திற்று. 'ஞாதுரு' என்றது காண்பானை. 'ஞானம்' என்றது காணுங் கருவியாகிய அறிவை. இதனானே காண்பான்மேல் காட்டி என்பது இன்றி என்றபடி. 'ஒன்றற் றிரண்டற்று' என்றது ஒன்றுமல்லாது, இரண்டு மல்லாது நிற்கும் அத்துவிதப்பொருளை உணர்த்திற்று.

'வாக்கற்று' என்றது சொல்லற்று இருத்தலை. 'மனமற்று' என்றது மனம் ஒடுங்கி நிற்கும் நிலையைக் குறித்ததாம். 'மன்பரிபூரணச் சுகவாரி'

என்றது சிவானந்தப் பேரின்பத்தை. 'அவசம்' என்றது தன்வசம் இழந்து நிற்கும் நிலையை. அதாவது பரவசமுற்று இருக்கும் நிலையை உணர்த்தும். 'தேடுதல்' என்றது தன்னையும் இறைவனையும் வேறு பிரித்துத் தேடுதலின்றிச் சோகம் பாவனையால் இறைவனே தானாகி நிற்கும் அவசரத்தைக் குறித்ததாம். 'நிலை' என்றது சத்தியநிலை, நித்தியநிலை, பேரின்பநிலை என்பதாம். 'மௌனியே' என்றது தனக்கு ஞானாசிரியனாக வந்த மௌன தேசிகரை: கல்லாலின் கீழ்நின்ற தக்ஷிணாமூர்த்தியே மௌனதேசிகனாக வந்து அருள் செய்தவன் என்பது கருத்தாம். 'கூடுதலுடன் பிரிதல்' 'குவிதலுடன் விரிதல்' என்றவைகளின் கண் உள்ள 'உடன்' என்றது மூன்றனுருபு. 'வாவினொடு போக்கு' இதில் 'ஒடு' மூன்றன் உருபு. 'நாடுதலும்' 'நண்ணுதலும்' என்ற இவற்றின்கண் உள்ள உம்மைகள் 'மலமும்' இறந்தது தழீஇய எச்சஉம்மை. ஏனைய உம்மைகள் எண்ணும்மைகள். இனி எல்லா உம்மைகளும் எண்ணும்மைகள் என்பாரும் உண்டு. 'பூதபேதம்' இது உம்மைத்தொகை; பூதமும் பேதமும் என விரியும். 8

[இறைவனே! தேவரீரின் பழ அடியார் சீராயிருக்கத் தேவரீரின் திருஅருள் வேண்டும் என்கின்றார்]

தாராத அருளெலாந் தந்தருள மௌனியாய்த்
   தாயனைய கருணைக்காட்டித்
தாளிணையென் முடிசூட்டி அறிவிற் சமாதியே
   சாசுவத சம்ப்ரதாயம்
ஓராமல் மந்திரமும் உன்னமல் முத்தி நிலை
   ஒன்றோ டிரண்டெனமல்
ஒளியெனவும் வெளியெனவும் உருவெனவும் நாதமாம்
   ஒலியெனவும் உணர்வுறாமல்
பாராது பார்ப்பதே ஏதுசா தனமற்ற
   பரமஅநு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
   பதிந்தநின் பழவடியர்தஞ்
சீரா யிருக்கநின தருள்வேண்டும் ஐயனே
   சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
   சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) ஐயனே-இறைவனே! சித்தாந்தம்-எவராலும் மறுக்க ஒண்ணாததாகிய உறுதியிட்டு அறுதிசெய்த முடிந்ததாகிய, முத்தி - மோக்ஷத்தின், முதலே - முதல்வனாக இருப்பவனே!, சிரகிரி - திரிசிராமலையின்கண்ணே, விளங்க - அன்புடைய மெய்யடியார்கள் முத்தி இன்பு உற்று விளங்க, வரு-



எழுந்தருளிவந்து வீற்றிருக்கும், தக்ஷிணாமூர்த்தியே - தென்முகநோக்கிய திருநோக்கங்கொண்ட மூர்த்தமாக எழுந்தருளிய இறைவனே!, சித்து-ஞான, மயம்-வடிவமான, ஆனந்த-இன்பமயமான, குருவே-குருவே!, தாராத - (இச் சேதனனுக்கு) தருதற்கு அரிதாகிய, அருள் - நினது பற்றற்ற திருஅருள், எலாம்-எல்லாவற்றையும், தந்து - பரமகிருபையாலே அடியேனுக்கு தந்து, அருள-அருள, மௌனியாய் - மௌனகுருவாகி வந்து, தாய் - (அன்புடைய அரிய) தாயை, அனைய-எவ்வகையிலு மொத்த, கருணை-கிருபையை, காட்டி-முன்வந்து செய்து, தாளிணை-இரண்டாகிய திருவடிகளையும், என்-மகாதுர் பலனை அடியேனின், முடி-சிரசில், சூட்டி - சூட்டிவைப்பித்து, அறிவில்-அறிவோடு கூடும், சமாதியை - (ஒருமைப்பட்ட) நிஷ்டையை, சாசுவதம்-அழிதலற்ற நிலையாகிய, சம்பிரதாயம்-முன்பின்னாகிய சம்பிரதாயம், ஓராமல்-பகுத்தறியாமலும், மந்திரமும் - மறைந்துள்ள மந்திரத்தையும், உன்னமல்-மனதில் நினையாமலும், முத்தி-மோக்ஷத்தின், நிலை-உறுதியுற்ற நிலையானது, ஒன்றோடு-ஒன்றுடனே, இரண்டு - இரண்டு, என்னமல் - என்று கூறாமலும், ஒளி-ஞான ஒளி, எனவும்-என்றும், வெளி-வெறும் வெளி, எனவும்-என்றும் உரு-உரு, எனவும்-என்றும், நாதம்-நாதஸ்வரூபம், ஆம்-ஆகிய, ஒலி-சப்தத்துவம், எனவும்-என்றும், உணர்வு-அறிவு, உறாமல்-பெறாமல், பாராமல்-காணாமல், பார்ப்பதே - காண்பதே, ஏது - எத்தகைய, சாதனம் - சாதனங்களும், அற்ற-இல்லாத, பரம-மேலான, அநுபூதி - அநுபூதி, வாய்க்கும்-கிடைக்கும், பண்பு - குணசாத்தியோபாயம், என்று - என்றும், உணர்த்தியது - தேவரீர் அறிவூட்டியதை, பாராமல்-ஆராய்ந்து பாராமல், அ-அந்த, நிலை-நிலையில், பதிந்த-தங்கிய, நின்-பரிசுத்தராகிய தேவரீரது, பழ - காலவிறுதி யறியமுடியாப் பழைய, அடியார்தம் - அடியார்களது, சீர்-சிறப்பை, ஆய் - அடைந்து, இருக்க - (உன்னடிமைப்பட்ட யான்) இருக்க, நினது - தேவரீரது, அருள்-திருஅருளின் துணை, வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) 'தாராத அருளெலாம்' என்றது இதுவரை எவருந்தராத அருள் எல்லாம் தந்தருளி எனவும், இதுவரை இறைவன் தாராத அருள் எல்லாம் தந்தருள என்றும், இதுவரை எவர்க்குந் தராத அருள் எவருந் தந்தருள என்றும் பொருள்தர நிற்றல்காண்க. ஈண்டுதாராத அருள் என்றது முத்திக்கு வித்தாம் ஞானோபதேச அருள்காண்க. 'மௌனியாய்' என்றது அவ் இறைவனே மௌனதேசிகனாக மான்காட்டி மான்பிடிக்க வந்ததுபோல மானிடச் சட்டைசாத்தி வந்தருளிய மூர்த்தத்தை. உலகில் தாயைக்காட்டினும் அன்புடையார் இல்லை ஆதலின் 'தாயனைய' என்றார். இதனாலன்றோ **மணிவாசகப் பெருமானும்,**

"தாயாய் முலையைத் தருவானே தாரார்தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ" என்றார்.

"தாயி யாகிய வின்னருள் புரிந்தவென் றலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை யுள்கிடுவேன்"

என்ற அப் **பெரியார்**வாக்கும் நோக்கத்தக்கது.

'தாளிணை யென்முடிசூட்டி' என்றது திருவடி தீட்சையை. ஞானாசிரியர் தஞ்சீடர் ஈடேறத் தம்திருவடியை அச்சீடர் சென்னிமிசை சாட்டுதல் சம்பிரதாயமாதலின் 'தாளிணை யென்முடிசூட்டி' என்றார். இதனாலன்றோ **தத்துவராய சுவாமிகளும்** திருவடிமாலையில்,

"… … … தண்ணியவென்
சென்னிமிசை வைத்தவடி சித்தர் திரிந்தவடி
முன்னையறி வெல்லா முடித்தவடி—என்னுருவு
காட்டுமடி கண்ட பொருளெல்லா மென்கண்ணில்
வாட்டி யெனையே மலர்த்துமடி"

என்றருளிச்செய்தார் தன் குரு திருவடியை. 'அறிவிற் சமாதி' என்பது ஞானநிட்டை கூடிஇருத்தலை. இதனை,

"சராசரப் பொருள்கடோறுந் தாங்கிநின் றவற்றின் றன்மை
விராவுத லின்றியொன்றாய் விமலமாய் விண்ணி னெய்தாய்ப்
பராபர வெளியாய்நீங்காப் பாசசா லங்கடந்த
நிராமய சிவந்தானாகி நிற்பது ஞானநிட்டை" எனவும்,

"மத்திம வுடலுமாகா வளர்கரணந் தானாகா
மொய்த்தவிந் தியர்தானாகா மூலவாயுவுந் தானாகா
சித்திர தீபம்போலச் சீவபாவங் கழன்று
நித்திய சிவந்தானாகி நிற்பது ஞானநிட்டை" எனவும்,

"கன்மவா தாரமாறுங் கடந்துகற் பனைகடந்து
உன்மனை கடந்துசீவ வுணர்வையுங் கடந்துமேலாய்ச்
சின்மய மாகிநின்ற சிற்பர நிலைகடந்து
நின்மல சிவந்தானாகி நிற்பது ஞானநிட்டை" எனவும்,

"மக்களு மனையுநீத்து மாதரா ராசை நீத்துச்
சொர்க்கமே லாசை நீத்துச் சுத்தனைப் பற்றொன் றின்றிக்
கற்கவேண் டியதுநீத்துக் கருதிரு வினையுநீத்து
நிர்க்குண சிவந்தானாகி நிற்பது ஞானநிட்டை" எனவும்,

"சிந்தனை புறஞ்செலாச் சிவோகம் பாவனை
சந்தத முஞற்றிடிற் சமாதி வந்துறு
மந்தநற் சமாதியா லறிவு மேவிடு
இந்தநன் னிலையிலே யிருக்கற் பாலையே"

எனவரும் **வள்ளலார்** சாத்திரப்பாக்களாலும்,

"ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பராபர
மொன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
யொன்றிநின் றுள்ளே யுணர்ந்தே னுணர்வினை
யொன்றிநின் றேபல வூழிகண் டேனே"

என்ற **திருமந்திரத்தா**லும் நன்கறியலாம். இன்னும், சமாதியின் சிறப்பை,



"சமாதிய மாதியிற்றான் சொல்லக் கேட்கிற்
சமாதிய மாதியிற் றானெட்டுஞ் சித்தி
சமாதிய மாதியிற் றங்கினோர்க் கன்றோ
சமாதிய மாதித் தலைப்படுந் தானே" எனவும்,

"விந்துவு நாதமு மேருவி லோங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடு
மந்தமி லாத வறிவி னரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே"

என்ற **திருமந்திரத்தா**லும் அறியலாம். 'சாசுவத சம்ரதாயம்' என்றது நிலையாகிய வழக்கு என்பதாம். "ஓராமல் மந்திரமும் உன்னாமல் முத்திநிலை யொன்றோ டிரண் டென்னாமல் … … … பாராது பார்ப்பதே ஏதுசா தனமற்ற பரம அனுபூதி வாய்க்கும்" என்றது சிவபோதத்தாற் பாராது சிவபோதத்தாற் காண்க என்பதாம்.

இன்னும் இதன் உள்ளுறை இரகசியங்கள் பல அவைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். மற்றும் அவைகள் ஆசிரியரை அடுத்து விதிமுறைப் படிக் கேட்கற்பாலன. 'பரமஅநுபூதி' என்றது மேலான சிவானந்தபோக அனுபூதியை. 'அந்நிலை' என்றது பண்டறிசுட்டு; அந்த முன்கூறிய சமாதி நிலை என்க. 'பழவடியார்' என்றது வழிவழித் தொண்டுடையாரைக் குறித்ததாம். 'அவனருளாலே என்றாள் வணங்கி' என்றபடி, அடியார் கூட்டத்துக் கூடி இறைவனைத் துதிக்கவும் தேவரீர் அருள்வேண்டும் என்பார், 'பழவடியர்தம் சீராயிருக்க நினதருள் வேண்டும்' என்றார். 'ஐயன்' இது உயர்ந்தோன் என்னும் பொருள் கொண்டது; அஃது இறைவனே என்னும் பொருளாம். 'அருளெலாம்' இது அருள்+எல்லாம்=அருளெல்லாம் எனப் புணர்ந்தது. "உடன்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே" என்ற விதி. 'எல்லாம்' என்பது எலாம் என ஆயது. தொகுத்தல் விகாரம். இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 9

[அடியேனின் அறிவும் அறியாமையும் நீயாயிருக்க குற்றம் ஏது, பாவம் ஏது, வினை ஏது, தேகம் ஏது, என் மயக்கத்தைத் தீர்த்தருள வேண்டும் என்கின்றார்]

போதமாய் ஆதிநடு அந்தமும் இலாததாய்ப்
புனிதமாய் அவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத இன்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாமல் அறிவினை மறைப்பதுநின்
அருள்பின்னும் அறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதுநின் அருளாகில் எளியனேற்
கறிவாவ தேதறிவிலா

ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்
 கீடான காயமேதென்
இச்சா சுதந்தரஞ் சிறிதுமிலை இகபரம்
 இரண்டினுள் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
 சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
 சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) சித்தாந்தம் - எவராலும்மறுக்க ஒண்ணாததாய் உறுதிசெய்து அறுதியிட்ட முடிவாகிய, முத்தி - மோக்ஷத்திற்கு, முதலே - முழுமுதலாக இருப்பவனே!, சிரகிரி-திரிசிராமலையின்கண்ணே, விளங்க-மெய்யடியார்கள் சிவாநந்த முத்தியுற்று விளங்க, வரு-எழுந்தருளிவந்து வீற்றிருக்கும், தக்ஷிணாமூர்த்தி-தென்முகம் திருநோக்குக்கொண்ட திருமூர்த்தங்கொண்ட தக்ஷிணாமூர்த்தியே!, சித்து - ஞான, மயம் - வடிவுகொண்ட, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, குருவே-குருவே!, போதம்-ஞானவடிவம், ஆய்-ஆகி, ஆதி-முதலும், நடு-இடையும், அந்தமும்-ஈறும், இலாததாய் - இல்லாததாய், புனிதம் - பரிசுத்தம், ஆய்-ஆகி, அவிகாரம்-விகாரம் அற்றது, ஆய் - ஆகி, போக்கு-போக்கும், வரவு-வரவும், இல்லாத-அற்ற, இன்பம் - சுகரூபம், ஆய் - ஆகி, நின்ற-நிலைபெற்று இருந்த, நின்-தேவரீரது, பூரணம் - பரிபூரண நிலைமை, புகல்-அடைக்கலம், இடம் அது-இடம், ஆ-ஆகக்கொண்டு, ஆதரவு-அதனிடத்தே அன்பு, வையாமல்-வைக்காத, அறிவினை - அடியேனின் உணர்வை, மறைப்பதும் - மூடுவதும், நின் - தேவரீரின், அருள் - திருஅருளே, பின் - பிற்பாடும், அறிவு-அறிவு, இன்மை-இல்லாமையை, தீர்த்து-நீக்கி, அறிவித்து-அடியேன் மனதில் உணர்த்தி, நிற்பதும் - நிற்பதும், நின் - தேவரீரின், அருள் - திருஅருளே, ஆகில் - இவ்வாறானால், எளியனேற்கு - எளியனாகிய அடியேனுக்கு, அறிவு-அறிவு, ஆனது-ஆனது, ஏது-ஏது?, அறிவு-அறிவு, இல்லா-இல்லாத, ஏதம்-குற்றம், வரும்-வருகின்ற, வகை-விதம், ஏது-ஏது?, வினை-வினை, ஏது-ஏது?, வினை - வினை, தனக்கு - தனக்கு, ஈடான - சரியான, காயம் - சரீரம், ஏது-ஏது?, என்-அடியேனுடைய, இச்சை-விருப்பமும், சுதந்தரம் - சுதந்தரமும், சிறிதும் - கொஞ்சமும், இலை - இல்லை, இகம் - இவ்வுலகத்தும், பரம்-மேல் உலகத்தும், இரண்டினுள் - இரண்டு இடத்தும், மலைவு - அடியேனது மயக்கம், தீர - நீங்க, தீது - குற்றம், இல் - இல்லாத, அருள் - திருஅருளை, கொண்டு-கொண்டு, இனி-இனியாகிலும், உணர்த்தி-அறிவு ஊட்டி, என்னை-அடியேனை, ஆள்வையோ-அடிமை கொள்வையோ? எ-று.

(வி-ரை) இறைவன் ஞானசொரூபி ஆதலின் 'போதமாய்' என்றார். இதனானன்றே திருமூலரும்,

"சிவமான ஞானந் தெளிய வொண்சித்தி
சிவமான ஞானந் தெளிய வொண்முத்தி



சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே" என்றார்.

"ஞானக் கரும்பின் றெளியைப் பாகை
நாடற்கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச் சுவை ஆயினானை" எனவும்,

"பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே"

எனவும், **மணிவாசகப் பெருமானும்,**

"எல்லா வுலகமு மானாய்நீயே யேகம்பமேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை யறிவாய் நீயே ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே"

எனத் **திருநாவுக்கரசரும்** கூறியவற்றாலும்,

"வேனில் வேளை விழித்திட்ட வெண்ணெய்ப் பெருமானடி
ஞானமாக நினைவார் வினையாயின நையுமே"

என்னும் **திருஞான சம்பந்தர்** வாக்காலும் இதனை அறியலாம்.

இறைவன் ஆதிமதியாந்தரகிதன், முதல் இடைமுடிவு என்பது இல்லாது என்றும் நிரந்தரனாக இருப்பவன் ஆதலின் 'ஆதிநடு அந்தமு மிலாததாய்' என்றார். இதனை,

"முந்தமுத னடுவிறுதியு மானாய் மூவரு
மறிகில ரியாவர் மற்றறிவர்" எனவும்,

"அத்தனே யண்ட ரண்ட மாய்நின்ற
வாதியே யாதுமீறில்லாச் சித்தனே" எனவும்,

"ஆதிகுண மொன்று மில்லான் அந்தமிலான் வரக்கூவாய்"

எனவரும் **மணிவாசகர்** திருவாக்கான் இதன் உண்மையைத் தெளிக.

இறைவன் இயல்பாகவே பாசபந்தங்களினின்றும் நீங்கியுள்ளவன் ஆதலின் 'புனிதமாய்' என்றார். இதுபற்றியன்றே இறைவனை அமலன், விமலன், நிமலன், சுத்தன், என வேதங்கள் போற்றி செய்கின்றன. 'அவிகாரம்' என்றது இறைவன் எல்லாப் பொருள்களிலும் தோய்ந்து இருந்தாலும் ஒரு விகாரமும் இன்றிச் சுயஞ்சோதியாய் விளங்குகின்றவன் ஆதலின் 'அவிகாரம்' என்றார். அவிகாரம் என்பது விகாரம் இல்லாதது என்பது பொருளாம். இறைவன் போக்குவரவற்ற பூரணன் ஆதலின் 'போக்குவரவு இல்லாத இன்பமாய்' என்றார். இறைவன் ஆனந்த சொரூபி ஆதலின் 'இன்பமாய்' என்றார். இறைவன் சர்வபரிபூரணன் ஆதலின் 'பூரணம்' என்றார். உயிர்களின் வினைக்குத்தக நினைப்பு மறப்புகள் இறைவன் திருஅருளான் நிகழ்கின்றன வாதலினால் 'பூரணம் புகலிடமதா ஆதரவு வையாம லறிவினை மறைப்பது நின்அருள்' என்றும் 'பின்னும் அறிவின்மை தீர்த்து அறிவித்து நிற்பது நின் அருள்' என்றார். இதனானன்றே

பெரியாரும் 'நினைப்புநீ மறப்புநீ' எனவும், 'அறிவு அறியாமை நீயே' என்றார். இதனை,

"குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்" என்றும்,

"நல்வினையுந் தீவினையு மெல்லா முன்னேயானாய்"

எனவுங் கூறினர் **திருநாவுக்கரசர்.**

வினைப்பயனால் அறிவு அறியாமை நீயாகி நிற்பதால் 'எளியேற்கு அறிவானது ஏது?' என்றும் 'அறிவிலா ஏதம் வரும்வகை ஏது?' என்றுங் கூறினார். அறிவு அறியாமையால் வினையும், வினையால் பாவபுண்ணியம், சுவர்க்க நரகம், வினைக்கீடாக யாக்கை வருதலால் 'ஏதம் வருவகை ஏது' எனவும், 'வினையேது?' எனவும், 'வினைதனக் கீடான காயம் ஏது?' எனவுங் கூறினமை காண்க. அடியேன் சுதந்தர ஹீனன். தேவரீரே சுதந்தரன். 'ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே' என்றபடி வினைக்கயிற்றால் தேவரீர் ஆட்ட அடியேன் ஆடுகின்றேன் என்பார். 'இச்சா சுதந்தரஞ் சிறிதுமில்லை' என்றார். இவ்விஷயங்கள் அடியேனுக்குப் பெருமயக்கமாக இருத்தலின் தேவரீர் நமது திருவருள்கொண்டு விளக்கவேண்டும் என்பார், 'இகபரமிரண்டினுண் மலைவுதீரத் தீதிலருள் கொண்டினி யுணர்த்தி எனையாள்வையோ' என்றார். 'இகம்' இவ்வுலகத்தை. 'பரம்' என்றது மேல் உலகத்தை. திருஅருள் உயிர்களுக்கு நன்மையை யன்றிப் பிறிதுசெய்யாதாதலின் 'தீதிலருள்' என்றார். 'ஆள்வையோ?' இதன் ஈற்று ஓகாரம் வினாப்பொருள் குறித்து நின்றது. 'இலாததாய்' இது இல்லாததாய் என்பதன் தொகுத்தல் விகாரம். 'இடமது' இதில் 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. 'புகலிடமாய்' என்பது கடை குறைந்து 'புகலிடமதா' என நின்றது. 'நினருள்' இது 'நின்னருள்' என்பதன் தொகுத்தல் விகாரம். இது சந்தம்பற்றித் தொகுத்து வந்தது. 'எனையாள்வையோ' என்றதில் 'என்னை' என்பது 'எனை' என நின்றது தொகுத்தல் விகாரம் ஆகும்.

10

[இறைவனே! ஞானத்தாலன்றி மற்றெதாலும் முத்தி கைகூடாது என்கின்றார்]

பத்திநெறி நிலைநின்றும் நவகண்ட பூமிப்
  பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
  பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றும்உதிர் சருகுபுனல் வாயுவினை
  வன்பசி தனக்கடைத்து
மௌனத் திருந்தும்உயர் மலைநுழைதனிற் புக்கு
  மன்னுதச நாடிமுற்றுஞ்



சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
  சோமவட் டத்தடைத்துஞ்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
  தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலதுகதி கூடுமோ
  சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
  சின்மயா னந்தகுருவே.

(ப-ரை) சித்தாந்தம்-எவரானும் மறுக்கமுடியாத உறுதிபாட்டு அறுதி செய்த முடிவாகிய, முத்தி - மோக்ஷத்தின், முதலே - முழுமுதலாக இருப்பவனே!, சிரகிரி-திரிசிராமலையின்கண்ணே, விளங்க-மெய் அடியார்கள் சிவானந்த முத்தியுற்று இன்பு எய்த, வரு - எழுந்தருளிவந்து வீற்றிருக்கும், தக்ஷிணா மூர்த்தியே-தென்றிசை நோக்கு உடைய திருமூர்த்தத்தையுடைய தக்ஷிணா மூர்த்தியே!, சித்து-ஞான, மயம் - வடிவத்தோடு கூடிய, ஆனந்தம்-ஆனந்தமயமாகிய, குருவே-குருவே!, பத்தி - பத்தி, நெறி - மார்க்கத்திலே, நிலை-நிலைத்து, நின்றும் - நின்றும், நவம் - ஒன்பதாகிய, கண்டம் - கண்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ள, பூமி-பூமியின், பரப்பை - பரப்பை, வலமாக பிரதக்ஷிணமாக, வந்தும்-சுற்றிவந்தும், பரவையிடை-சமுத்திரத்தில், மூழ்கியும்-ஸ்நானம் செய்தும், நதிகளிடை - ஆறுகளில், மூழ்கியும்-ஸ்நானஞ் செய்தும், பசி-பசியும், தாகம் - தாகமும், இன்றி - இல்லாமல், எழுநா - எழுநாக்குகளையுடைய அக்கினியின், மத்தி-நடு, இடை-இடத்தே, நின்றும்-நின்றும், உதிர்-உதிர்கின்ற, சருகு-உலர்ந்த இலைகளையும், புனல்-நீரையும், வாயுவினை-காற்றினையும், வன்-வலிய, பசி-பசி, தனக்கு-தனக்காக, அடைத்து-வயிற்றிலே நிரப்பி, மவுனத்து-மவுன நிலையில், இருந்தும் - இருந்தும், உயர் - உயர்ந்த, மன்னு-நிலை மலை-மலையான், நுழைதனில் - குகையிலே, புக்கு - புகுந்தும், மன்னு-நிலைபெற்ற, தசநாடி-பத்துநாடிகள், முற்றும்-முழுதையும், சுத்திசெய்தும்-சுத்தி படுத்தியும், மூலம் - மூலாதாரத்துள்ள, பிராணனொடு-பிராணவாயுவுடன், அங்கியை-அக்கினியை, சோமவட்டத்து-சந்திரமண்டலத்தே, அடைத்தும்-அடைத்தும், சொல் - எடுத்துச் சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, அமுது-அமிர்தத்தை, உண்டும்-பருகியும், அற்ப-அற்பமாகிய, உடல்-தேகம், கற்பங்கள் தோறும்-ஊழிக்காலங்கள் எல்லாம், நிலை நிற்க-நிலையாக நிற்கும்படிக்கு, வீறு-மேலாகிய, சித்தி-சித்திகளை, செய்தும்-பழகியும், ஞானம்-ஞானம் உண்டானால், அலது-அல்லாமல், கதி-மேலானதாகிய மோக்ஷகதி, கூடுமோ-சித்திக்குமோ? எ-று.

(வி-ரை) 'பத்திநெறி' என்றது இறைவன்மாட்டு அன்புடையார் செல்லும் மார்க்கம் என்பது பொருளாம். அதுவே சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்பெறும். இனி இவைகளை முறையே தாதமார்க்கம்,

புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பவைகளாம். இப்பத்தி நெறியே முத்திநெறியாகும். இப்பத்திநெறியும் ஞானங்கலவாத காலத்துப் பயனிலையாகி விடும். சரியை:—சரியையிற் சரியை, சரியையிற் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம் என நால்வகைத்தாம். இச்சரியையில் நின்றோர் சரியையில் ஞானமார்க்கம் பெற்றாலன்றிப் பயனிலவாம். கிரியை:—கிரியையிற் சரியை, கிரியையிற் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என நான்கு வகைப்படும். இக்கிரியையில் ஞானமுற்றோர்க்கே கதி கைகூடும் அஃதின்றேற் பயனின்றாம்.

யோகம்:—யோகத்திற் சரியை, யோகத்திற் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என நால்வகைப்படும். இந்த யோகத்தில் ஞானம் பெற்றவர்க்கே முத்தி சித்திக்கும் இன்றேற் பயன் சித்தியாதாம். ஞானம்:— ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நால்வகையாம். இந்நாலும் பயன் தருவதேயாயினும் ஞானத்தில் ஞானமே பெரும்பே றளிப்பதாகும். சரியையாகிய தாதமார்க்கமாவது:—இறைவன் கோயிலை பெருக்கல், மெழுகிடல், பூக்கொள் கொய்து மாலை, கண்ணி தொடுத்தல், இறைவனைப் பாடல், திருவிளக்கிடல், நந்தவனம் ஏற்படுத்தல், சிவனடியாரை வணங்குதலாம். இச்சரியையைப் பத்தியொடு ஞானத்தொடு செய்தவர் இறைவன் வசிக்கும் உலகத்தில் வசிக்கும் பதவியாகிய சாலோகபதவியை அடைவர். இதனை,

“தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன் றன்கோயி
 றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்து பூந்தார் மாலைகண்ணிப்
 புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
 செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
 மியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பார்”

என்ற **சிவஞான சித்தியாரா**லும் அறியலாம்.

கிரியையாகிய புத்திர மார்க்கமாவது:—பூ, மஞ்சனம், நிவேதனப் பொருள் கொண்டுவந்து இறைவற்கு ஆசாரியர் கற்பித்த முறைப்படி தூப தீபங்களுடன் சோடசோபசார பூசை செய்தலாம். இக்கிரியையில் நின்று ஞானமுற்றோர்கள் சாமீபபதவி பெறுவர். இதனை,

“புத்திரமார்க் கம்புகலிற் புதிய விரைப்போது
 புகையொளி மஞ்சன மமுதுமுதல் கொண்டடைந்து
சுத்திசெய் தாசனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
 சோதியையும் பாவித்தா வாசித்துச் சுத்த
பத்தியினு லர்ச்சித்துப் பரவிப் போற்றிப்
 பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி



 நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்க
 ளின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே”

என்ற **சிவஞான சித்தியாரால்** அறியலாம்.

யோகம் என்னும் சகமார்க்கமாவது:—ஐம்புலன்களை ஒடுக்கி இரண்டு வாசிகளையும் தடுத்துச் சலிப்பின்றி மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறு ஆதாரமார்க்கம் அறிந்து அக்குல அரும்பொருளுணர்ந்து அங்கிருந்து சந்திரமண்டலம் சென்று திங்களமுதுண்டு இறைவனைக் கண்டு ஆனந்தித் திருத்தலாம். இந்த யோகத்தில் ஞானமுற்றவர்கள் சிவசாரூப்பியத்தைப் பெறுவர். இதனை,

“சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
 சலிப்பற்று முச்சதிர மூலா தாரங்
களகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
 கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
 முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைக
ளுகமார்க்க வட்டாங்க யோக முற்று
 முழைத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்”

என்ற **சித்தியார்ச் செய்யுளா**ல் நன்கறியலாம்.

ஞானமார்க்கம் என்னுஞ் சன்மார்க்கமாவது:—சகல கலைசாஸ்திரங்கள் எல்லாவற்றையும் ஐயந்திரிபறக் கற்று உணர்ந்து எல்லா மார்க்கங்களுங் கீழானவாறும் பதிபசுபாசம் விளக்கி முத்திநிலையை நனகு காட்டும் வைதிக சைவசித்தாந்தத்தை உணர்ந்து அதனால் இறைவனை நாடி ஞானமுற்று சிவானந்தமுற்றுச் சிவனைப் பெறுதலே ஞானமார்க்கம்,என்னும் சன்மார்க்கமாகும். இதற்குச் சிவசாயுச்சியமே பதவியாகும். இதனை,

“சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
 சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
 பதிபசுபாசந் தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தா னுடி ஞான
 ஞேயமொடு ஞாதுருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
 பெருமையுடை யோர்சிவனைப் பெறுவார் காணே”

என்னும் **சித்தியாரா**லும் அறியலாம்.

‘பத்திநெறி நிலைநின்றும் பத்தியின்றேற் பயனில்லை’ என்பார். ‘பத்தி நெறி நிலைநின்று ... ... ... ... ... ஞானமலது கைகூடுமோ’ என்றார். ‘நவகண்டம்’ என்றது, பூமியின் பெரும் பிரிவுகளாகிய ஒன்பது பிரிவுகளைக் குறித்தது. அதனை. கீழ்விதேகம், மேவி

தேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபாதம், தென்பாதம், மத்திமகண்டம் என நவகண்டங்கள் என்பர்; இதனை இன்னும் பலவிதமாகக் கூறுவாரும் உண்டு. 'நவகண்ட பூமிப் பரப்பை வலமாகவந்தும்' என்றது பூப்பிரதட்சணஞ் செய்தும் என்றதாம். 'பரவை' சமுத்திரம்; இது பரவி இருப்பது என்னுங் காரணம்பற்றி வந்த பெயர். பரவையிடை மூழ்குதலாவது-சமுத்திர ஸ்நானஞ் செய்தலாம். 'வந்து உவர் கடலினு மூழ்குவர் காலம் ஒன்றினே' என்ற பெரியார் வாக்கு ஈண்டு கருதற்பாலதாம். சமுத்திரத்தில் முக்கிய தினங்களில் மூழ்கினல் பாவம்போய்ப் புண்ணியம் பெருகுமென்பது புராணக்கொள்கை. அக்கினிக்கு எழுநாக்குண்டாதலின் 'எழுநா' என்றே அக்கினியைக் குறித்தார்.

'எழுநாமத்தியிடை நின்று' என்றது அக்கினி நடுவில் நின்று தவஞ் செய்தலைக் குறித்ததாம். 'வன்பசி தனக்கடைத்தும்' என்பதற்கு அவாய் நிலையால் வன்பசிதனக்கு முதிர் சருகுபுனல் வாயுவினை வயிற்றிடை அடைத்தும் என 'வயிற்றிடை' என்ற சொற்கள் வருவிக்கப்பெற்றன. 'நுழை' என்றது குகை. இது நுழைதற்கு ஆதாரமாக இருத்தலின் நுழை என்றுயது காரணப்பெயராம். 'சதநாடி' என்றது பத்துநாடிகளை; அவை யாவன:—சுழுமுனை, இடகலை, பிங்கலை, காந்தாரி, அத்திசிகுவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி என்பனவாம்.

'தசநாடி முற்றும் சுத்திசெய்து' பத்து நாடிகளையும் மாசற்றதாகச் செய்து என்பதாம், இதன் விவரங்களை யோகநூல் வல்லாற்பாற் கேட்டுணரத்தக்கது ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலின் இம்மட்டே விடுத்தாம். 'சோமவட்டம்' என்றது லலாட ஸ்தானத்துள்ள புருவ மந்தித்தானத்தை. 'சொல்லரிய அமுது' என்றது மதி அமிர்தத்தை. இந்தக்காயம் அற்பமானது நீர்மேல் எழுத்துப்போன்றது ஆதலினலும், மலதேகம் ஆதலினலும், அருவருப்புடையது ஆதலினலும், மாயாகாரிய மானதாலும் 'அற்பவுடல்' என்றார். கற்பம் என்றது யுகமுடிவுகளை. 'ஞானம்' என்றது சிவஞானத்தை. ஞானமின்றி எந்தத்தவமும் பயன்பெறாது ஆதலின் ஞானம் அடியேனுக்குத் திருஅருள் புரிந்தருள வேண்டும் என வேண்டுகின்றார். இதனுனன்றே **பெரியார்**களும் ஞானமின்றி, பத்தி இன்றி எத்தவமும் பயனில்லை என்பதை,

> "காலை சென்று கலந்துநீர் மூழ்கிலென்
> வேலை தோறும் விதிவழி நிற்கிலென்
> ஆலை வேள்வி யடைந்தது வேட்கிலென்
> ஏல வீசனென் பார்க்கன்றி யில்லையே" எனவும்,

> "கான நாடு கலந்து திரியுமாயிலென்
> ஈன மின்றி யிருந்தவஞ் செய்யிலென்
> ஊனை யுண்ட லொழிந்துவா னேக்கிலென்
> ஞான னென்பவர்க் கன்றிநன் கில்லையே" என்ற **தேவாரத்தும்**,



> "வனந்தோ றலைந்து விரதங்கள் பூண்டு சடைகட்டி வாடலுறினும்
> தானஞ்சேர்ந் துயர்ந்த குலத்திற் பிறந்து சதுர்வேத மோதிவரினும்
> தினஞ் சாத்திரங்கள் பலகற்று வாதுசெய வல்லரேனு மெவனும்
> அனந்தாதி யானகலைசைச் சிவன்ற னருளைப் பெறுது விடினே" எனவும்,

> "மட்டு வார்வன மார்ப சருமம்போற்
> றெட்டு வானைச் சுருட்டவ ருண்டெனிற்
> பெட்டு ஞானம் பெறாது பேரின்பமே
> யொட்டு முத்தி யுறுநரு முண்டரோ"

என்ற **சூதசங்கீதையா**லும் நன்கறியத்தக்கது.

இந்தச் செய்யுளில் வந்த உம்மைகள் முற்றும் எண்ணும்மைகள். 'கூடுமோ' இது விடைதழுவிய வினு கூடாது என்னும் விடையைத் தழுவி நிற்றல் காண்க. 11

---

## மௌனகுருவணக்கம்

[மௌனகுருவே! என்னை ஒரு மத்தகஜம் போல வளர்த்தாய் என்கின்றார்]

ஆசைநிக ளத்தினை நிர்த்தூளி படவுதறி
ஆங்கார முளையைஎற்றி
அத்துவித மதமாகி மதம்ஆறும் ஆருக
அங்கையின் விலாழியாக்கிப்
பாசஇருள் தன்னிழ லெனச்சுளித் தார்த்துமேல்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்த கவளமாய்ப் பூரிக்க வுண்டுமுக
படாமன்ன மாயைநூறித்
தேசுபெற நீவைத்த சின்முத்தி ராங்குசச்
செங்கைக் குளேயடக்கிச்
சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்துநின்
திருவருட் பூர்த்தியான
வாசமுறு சற்சார மீதென்னை யொருஞான
மத்தகச மெனவளர்த்தாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம்-மந்திரோபதேசம் செய்யும், குருவே-ஆச்சாரியனே!, யோகம்-யோகத்தை, தந்த்ரம் - தந்தரமாக உபதேசிக்கும், குருவே-ஆச்சாரியனே!, மூலன்-திருமூலரின், மரபில்-திருமரபிலே, வரும்-வழித்தோன்றலாக

வந்த, மௌன-மௌனம் நிறைந்த, குருவே - ஆச்சாரியனே!, ஆசை - ஆசையாகிய, நிகளத்தினை-சங்கிலிவிலங்கை, நிர்த்தூளிபட-தூளாகி அழிய, உதறி-உதறி, அங்காரம்-அங்காரமாகிய, முளையை-முளையை, எற்றி-பிடுங்கி எறிந்து, அத்துவிதம்-அத்துவிதம் ஆகிய, மதம்-மதத்தை, ஆகி-மேற்கொண்டு, மதம்-மதங்களாகிய, ஆறும் - ஆறினையும், ஆறு - நதிகள், ஆக-ஆக, அம்-அழகிய, கையின் - துதிக்கையில், விலாழி - நுரை, ஆக்கி-ஆக்கி, பாசம் - பாசமாகிய, இருள்-இருட்டை, தன் - தன்னுடைய, நிழல்-நிழல் என எண்ணி, சுளித்து-கோபித்து, ஆர்த்து-ஆர்ப்பரித்து, மேல் - மேலே, பார்த்து-நோக்கி, பரந்த-பரவியுள்ள, மனதை - மனத்தை, பாரித்த - பெரிதாகிய, கவளம் - கவளம், ஆய்-ஆக, பூரிக்க - நிறைய, உண்டு - சாப்பிட்டு, முகபடாம் - முகபடத்தை, அன்ன-ஒத்ததாகிய, மாயை - மாயையை, நூறி-அழித்து, தேசு-ஒளி, பெற-பொருந்த, நீ-தேவரீர், வைத்த - அமைத்த, சின்முத்திரை - சின்முத்திரையாகிய, அங்குசம் - அங்குசத்தைத் தரித்த, செம்-செவந்த, கைக்கு-கைக்கு, உள்-உள்ளே, அடங்கி-அடங்கி, சித்து-ஞான, மயம்-வடிவமாகிய, ஆனந்தம்-பேர் ஆனந்தமாகிய, வெள்ளம் - இன்பவெள்ளத்தில், படிந்து-முழுகி, நின்-தேவரீரது, திரு-திரு, அருள்-அருள், பூர்த்தி-நிறைவு, ஆன-ஆகிய, வாசம்-வசித்தல், உறு-பொருந்திய, சற்சாரம்-நல்லகூடத்தில், என்னை-அடியேனை, ஒரு-ஒப்பற்ற, ஞானம்-ஞானமாகிய, மதம்-மதத்தையுடைய், சஜம்-யானையை என-போல, வளர்த்தாய்-வளர்த்தினை; எ-று.

(வி-ரை) ஆசையானது உயிர்களைக் கட்டுப்படுத்தி தன்வழி இழுத்து அலைத்துப் பிறப்பிற் சிக்கவிட்டு ஆட்டிவைப்பதால் ஆசையை 'நிகளம்' என்றார். இதற்குப் பாசம் என ஒருபெயர் வந்ததும் இக்காரணங்கொண்டே என்பது ஈண்டு உணரத்தக்கதாகும். இதனுனன்றே பெரியார்களும் 'ஆசக் கயிற்றிலாடும் பம்பரம்' என்றார் இவ்வுடலை. 'நிர்த்தூளி' என்றது துகள்பட்டில்லா தழிதல் என்பது பொருளாம், 'ஆணவமலமே' பிறப் பிறப்பு, இன்பதுன்ப மெல்லாவற்றிற்கும் முளையாக இருத்தலின் 'முளையை எற்றி' என்றார். ஈண்டு முளை என்றது கட்டுத்தறியை. யானைக்கு மதமுண்டாதலின் அத்துவிதத்தையே மதம் என்பார் 'அத்துவித மதமாகி' என்றார். ஏனைய புறச்சமயங்களாகிய உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டசாரியம் என்னும் ஆறினையும் ஆறு நதிகளாகக் கூறினர். யானை, குதிரை உண்ட நீர் நுரையாக வெளிப்படுதல் போல இவ் ஆறு சமயமும் உண்டு அவை நுரையாக வெளிப்படுகின்றதென்பார். 'மதமாறு மாறுக வங்கையின் விலாழியாக்கி' என்றார். பாசத்தாலுண்டாகும் அஞ்ஞானத்தை யானை தன் நிழலாக உருவகப்படுத்தினர். யானை தன் நிழலையே வேறு யானைஎன எண்ணிக் கோபிக்கும் இயல்பு உடையது; இதனை, 'தன்னிழல் கரியே என்று தனிக்கரஞ் சுருட்டி நோக்கும்' என்றதனுல் அறியலாம்.

இதுகொண்டே ஆசிரியராகிய பெரியார் பாசவிரு டன்னிழலெனச் சுழித்தார்த்து என்றார். 'மேற்பார்த்துப் பரந்தமனத்தை' என்றது ஒவ்



வொன்றுள்ளும் உள்ளே நுழைந்து பார்த்து நுண்ணிதின் ஆராயாது மேலளவாகப் பார்த்து ஒன்றினும் திறப்படாதிருக்கும் மனம் என்பதாம். 'பரந்தமனம்' ஒன்றிற் பதியாது பலவற்றிலும் பரவிக் கிடக்குமனம் என்பதாம். 'பாரித்த கவளம்' இது பெரிய கவளம் எனப் பொருள்படும். கவளம் இது யானையின் ஒரு வாய் உணவு. 'பூரிக்க வுண்டு' என்பதற்கு நிறைய உண்டு எனவும், இன்பம் பூரிக்க உண்டு எனவும் இருபொருள் தந்து நின்றமை காண்க. 'முகபடாம்' இது யானையின் முகமூடி. முகமூடி முகத்தை மறைப்பதுபோல மாயை ஆன்மாவை மறைத்துநின்று இறைவனைக் காணுதபடிச் செய்தலால் 'முகபடாமன்ன மாயைநூறி' என்றார். 'நூறுதல்' என்பதற்கு அழித்தல் என்பது பொருளாம். இறைவன் காட்டிய சின்முத்திரைக் குறியால் உண்மைத் தத்துவஞானம் பெற்று மனம் அடங்கினமையால் 'தேசுபெற நீவைத்த சின்முத்திராங்குசச் செங்கைக்குளே யடங்கி' என்றார். சின்முத்திரை என்றது பெருவிரலாகிய கட்டை விரலையும் ஆட்காட்டி விரலையும் வளைத்து வட்டாகாரமாகக் கூட்டி ஏனை நடுவிரல், மோதிரவிரல், சுண்டுவிரல் ஆகிய மூன்று விரல்களையும் நேர்பட மேல்நோக்க உள்ளங்கையை விரித்து உட்புறந் தெரியக்காட்டும் இதன் பொருள் விரிக்கிற் பெருகும். இதனை ஞானசிரியர்பால் கண்டு முறைப்படி கேட்டுணரத்தக்கது. இதன் பிண்டப் பொருளாக நிற்கும் கருத்து பதி, பசு, பாசம் என மூன்று; அநாதி-நித்தியம். பசுக்கள் பாசத்தினின்று நீங்கி இறைவனைக் கூடுவதே பேரின்ப முத்தி என்பதாம்.

இச்சின்முத்திரைக் குறியை அங்குசமாக உருவகப்படுத்தினர். என்னை அங்குசத்தால் ஆனை அடங்குவதுபோல் சின்முத்திரா ஞானத்தால் மனம் அடங்குதலின் என்க. 'அங்குசம்' இது ஆனையை அடக்கும் கருவியாம். யானைக்கு எப்பொழுதும் நீரில் விளையாட்டு விருப்பமுண்டு. அதற்கேற்ப ஞானமயானந்தப் பெருஞ்சுகத்தை வெள்ளமாகவும், அதனை அனுபவத்தால் உறலைபடிந் தாடலாகவுங் குறிப்பிப்பான். 'சின்மயா னந்தசுக வெள்ளம் படிந்து' என்றார். யானை தங்க இடம் வேண்டுமாதலின் எல்லாந் தங்கவும், எல்லாக் கிருத்தியங்களும் நடப்பதற்கும் ஆதாரமாகிய திருவருளையே யானை தங்கும் இடமாகக் குறித்து 'நின்திருஅருள் பூர்த்தியான வாசமுறு சஞ்சாரம்மீது என்னை யொருஞான மத்தகஜ மெனவளர்ந்தாய்' என்றார். இறைவன் மந்தரூபன் என வேதங்கள் கூறுதலினுலும், இறைவன் மந்தாப் பொருளா யிருப்பவன் ஆதலினுலும் 'மந்தா குருவே' என்றார். இதனை,

"மந்திரமும் மறைப்பொருளு மானுன் றன்னை"

எனப் பெரியார் எடுத்துத் துதிப்பதால் நன்கறியலாம்.

இறைவன் போகமாகவும், யோக தந்தரமாகவும், யோக நெறியாகவும் யோகநெறியில் நின்றார் அடையும் பயனுகவும் இருக்கின்றான் ஆதலினுலும், அவ் இறைவனே ஞானசிரியனுகப் பக்குவநோக்கி எழுந்தருளிவந்து அருள் செய்கின்றான் ஆதலினுலும் 'யோக தந்தா குருவே' என்றார். தாயுமான சுவாமிகளுக்கு ஞானுபதேசஞ்செய்த மௌனதேசிகர் திருமந்திரஞ் செய்த

திருமூலர் மரபில் வந்தவர் ஆதலின் 'மூலன் மரபில்வரு மௌன குருவே' என்றார். தாயுமானவர்க்கு ஞானோபதேசஞ் செய்யவந்த குரு மௌனியாக இருந்ததால் 'மௌன குரு' எனப் பெயர் பெற்றார். 'குரு' இது அஞ்ஞானமயமாகிய இருளைப்போக்கி ஞான ஒளியைச் செய்தலின் காரணக் குறியாக ஆசாரியனைக் குறித்ததாகும்.

இதுமுதல் பத்துப்பாடல்கள் ஒரு பதிகம். இப்பதிகத்து ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'மந்த்ரகுருவே யோகதந்தர குருவே மூலன் மரபில், வரு மௌனகுருவே' என மகுடம் சூட்டப்பெற்றுள்ளமையாலும், இது தனது ஆசிரியராகிய மௌனகுருவின் துதியாக தாயுமானவர் பாடியதனாலும் இப்பதிகத்திற்கு "மௌனகுருவணக்கம்" எனப் பெயர் ஆயிற்று. இப்பாடல்கள் பத்தும் பதினன்குசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தங்களாகும். 'ஆசை நிகளம்' இது ஆசையாகிய நிகளம் என விரிதலின் பண்புத்தொகை. இதுவேபோல 'ஆங்கார முளை' 'பாசவிருள்' 'சின்மயானந்த சுகவெள்ளம்' என்பனவும் பண்புத்தொகைகளாம். 'முகபடா மன்ன' இதில் 'அன்ன' என்றது உவமத்துருபு. 1

[மௌனகுருவே! என்னை மௌனமாக இருக்கச்செய்து ஞானானந்த வெள்ளத்தில் முழுகச்செய்து நான் அதுவாகச் செய்த விசித்திரம் நன்று என்கின்றார்]

ஐந்துவகை யாகின்ற பூதமுதல் நாதமும்
அடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக அறிவார்கள்
அறிவாக நின்றநிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா இருத்திமேல்
சின்மயா னந்தவெள்ளந்
தேக்கித் திளைத்துநான் அதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகாண்
எந்தைவட வாற்பரம குருவாழ்க வாழஅரு
ளியநந்தி மரபுவாழ்க
என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) எந்தை - அடியோங்களது தந்தையாகிய, வட-வடக்கேயுள்ள, ஆல்-ஆல நிழலின்கண் எழுந்தருளிய, பரம - மேலான, குரு - குருவானவர், வாழ்க-வாழ்க!, வாழ்க-வாழ்க!!, அருளிய - இறைவர் அருளிச்செய்த, நந்தி-நந்தி எம்பெருமானின், மரபு-சிஷ்யமரபுகள், வாழ்க-வாழ்க!, என்று-என்று, அடியர்-அடியார்கள், மனம்-மனமானது, மகிழ-மகிழும்படி, வேதம்-வேதத்தினுடையவும், ஆகமம்-ஆகமத்தினுடையவும், துணிபு-துணிபானது, இரண்டு-இரண்டுவகையாக, இல்லை - இருக்கவில்லை, ஒன்று-ஒன்றுதான், என்னவே-என்றருளவே, வந்த - எழுந்து வந்தருளிய, குருவே-குருவே!, வீறு-சிறந்த, சிவ-சிவ, ஞானம்-ஞானத்தின், சித்தி - சித்தியை அடைதற்கு உரிய, நெறி-வழியைக்காட்டித் தரத்தக்க, மௌனம் - மௌனயோக நிட்டையை, உபதேசம்-உபதேசித்தருளிய, குருவே-குருவே!, மந்த்ர-மந்த்ரோபதேசஞ் செய்தருளிய, குருவே-குருவே!, யோகம்-யோகமார்க்கத்தின், தந்த்ரம் - தந்தரங்களைப்போதிக்கும், குருவே - குருவே!, மூலன்-திருமூலரின், மரபில்-சிஷ்ய மரபிலே, வரு - வந்தருளிய, மௌனம் - மௌனத்தையுடைய, குருவே-குருவே!, ஐந்து-ஐந்து, வகை - வகை, ஆகின்ற-ஆகிய, பூதம் - பிருதிவிமுதலாகிய ஐந்து பூதங்கள், முதல்-முதலாக, நாதமும்-நாததத்துவங்கள் முப்பத்தாறையும், அடங்க-முற்றும், வெளியாக-பகிரங்கமாக, வெளிசெய்து-வெளிப்படுத்தி, அறியாமை-அஞ்ஞானம், அறிவு - ஞானம், ஆதி - முதலியவற்றை, பிரிவு-வேறுபாடு, ஆக-ஆக, அறிவார்கள்-அறியக்கூடியவர்கள், அறிவு-அறிவுமயம், ஆக-ஆக, நின்ற-நின்ற, நிலையில்-நிலையிலேயே, சிந்தை-மனமே, அற-முற்றும், நில்-நிற்பாயாக, என்று-என்று, சும்மா-வாளா, இருத்தி - இருக்கும்படிச்செய்து, மேல்-மேலும், சித்து-ஞானம், மயம்-வடிவம் ஆகிய, ஆனந்த-பேரின்ப, வெள்ளம்-பெருக்கில், தேக்கி - நிறைய உண்டு நிறப்பி, திளைத்து அனுபவித்து, நான்-அடியேன், அது-அது, ஆய்-ஆக, இருக்க-இருக்கும்படி, நீ-தேவரீர், செய்-செய்தருளிய, சித்திரம்-விசித்திரம், மிக-மிகவும், நன்று-நன்றாக இருக்கிறது; எ-று.

'ஐந்து வகையாகின்ற பூதம்' என்றது மண் நீர் தீ கால் விண் என்னும் பஞ்சபூதங்களை. 'ஐந்து வகையாகின்ற பூதமுதல்' என்றது மண்ணாகிய பிருதிவி தத்துவம் முதல் என்பதாம். 'நாதமும் அடங்க' என்றது நாத தத்துவம் ஈறாக என்பதாம். அதாவது பிருதிவி தத்துவமுதல் நாததத்துவம் ஈறாகவுள்ள தத்துவங்கள் முப்பத்தாறும் என்பதாம். 'வெளியாக' என்றது அடியேன் புந்திக்குப் புலனாகாது இருந்தது வெட்டவெளியாகப் பட்டப்பகல்போல் புலப்படுமாறு வெளியாக்கி என்பதாம். 'நாதமும்' என்ற தன்கண் உள்ள உம்மை உயர்வு சிறப்புஉம்மை. 'வெளி செய்து' என்பது தெளிவாக விளக்கிக்காட்டி என்பதாம். முப்பத்தாறு தத்துவங்கள் என்றது பூதங்களாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் பஞ்சபூதங்களும் சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்று ஞானேந்திரியங்கள் ஐந்தும், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் நான்கும் ஆக ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கினோடு

காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்னும் வித்தியா தத்துவங்கள் ஏழும், சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்னும் சிவதத்துவங்கள் ஐந்துஞ்சேர தத்துவங்கள் முப்பத்தாறுதல் காண்க. 'அறியாமை' என்றது அஞ்ஞானத்தை. 'அறிவு' என்றது ஞானத்தை. அறிவு என்ற ஞானம் சிவஞானம் என்பதாம் அஞ்ஞானம் இன்னதென்பதை **சேக்கிழார்** அருளிய,

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

என்றதனால் அறிந்துகொள்க.

ஞானத்தின் பாகுபாடுகளை ஞானாசிரியர்பால் முறைப்படிக் கேட்டுணர்க. இறைவன் அறிவார்தம் அறிவூடே அறிவாகி நிற்பவன் ஆதலினாலும் அவ் அறிவு வடிவனாகிய இறைவனோடு அறிவு வடிவமாகத் தானுங் கலந்து 'தாடலை' போல் நிற்பர் ஆதலின், 'அறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க ளறிவாக நின்ற நிலையில்' என்றார். அறிவாக நின்ற நிலையில் என்றது இரண்டாகக்கலந்து சாயுச்சியமாக நின்ற நிலையில் என்பதாம். இதனை,

"உன்னை யறிந்தனையோ உன்னறிவின் நீங்காத
என்னை யறிந்தனையோ" எனவும்,

"அறிவுக் கறிவாகும் அப்பன்" எனவும்,

"அறிவு தன்னால் அறிவுருவன் அறியக் காண்பான் கண்டவர்கள்
அறிவு வடிவாய் அவ்வறிவில் அளாவி நிற்பர் பேரின்பின்"

எனவும் வரும் **ஞானசிரியர்கள் திருவாக்காலுந்** தெளியலாம்.

'சிந்தையற நில்' என்றது மனம் அடங்கி நிற்றலை. 'சும்மா இருத்தி' என்றது திரிகரண மௌனமுற்றிருக்கச் செய்ததை உணர்த்துகின்றதாம். 'சின்மயானந்த வெள்ளம்' என்றது ஞானானந்தப் பெருக்கை சிவானந்தப் பெருக்கை என அறிக. 'நானது வாயிருக்க' என்றது இறைவனோடு ஐக்கிய முற்று சோகம்பாவனையால் நான் அதுவாக இருத்தலைக் குறித்ததாம்.

'சித்ரம்' என்றது பலபொருள் ஒருபெயர்த் திரிசொல் ஈண்டு அற்புதம் என்னும் பொருள் குறித்தது. 'காண்' என்பது முன்னிலை யசைச்சொல். 'எந்தை' இது எம்+தந்தை என இருசொல் ஒருசந்தி. 'எந்தை' என்பதில் தை முறைப்பெயர் விகுதி. 'எம்' என்றது அடியார் அனைவரையும் உளப்படுத்திய தன்மைப்பன்மையாம். 'வடஆல் பரமகுரு' என்றது வடவாலமரத்தின் கீழலிருந்து சனகாதி முனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்தருளிய தக்ஷிணா மூர்த்தியை. 'வாழ்க' இது வியங்கோள் வினைமுற்று.



'வேதாகமத் துணிபு' என்றது வேதத்தின் துணிபும், ஆகமத்தின் துணிபும் என்பதாம். ஆகமம் என்றது சிவாகமங்களை. 'இரண்டில்லை யொன்றென்னவே' என்றது அத்துவிதப் பொருள் என்பதை உணர்த்தி யருளவந்த என்பதாம். எல்லா ஞானத்தினும் சிவஞானமே சிறந்ததாதலினால் 'வீறு சிவஞானம்' என்றார். ஈண்டு 'வீறு' என்றது உயர்வுப் பொருள்தந்து நின்றது. சிறந்த என்பாரும் உண்டு. 'மௌனோபதேச குருவே' என்றது மௌனநிலையில் நின்று உபதேசித்த குருவே எனவும், அடியேனுக்கு மௌன நிலையை உபதேசித்த குருவே எனவும் இருபொருளில் மயங்குதலை உய்த்தறிக. 'அறிவார்கள்' என்றது வினையாலணையும் பெயர். 'செய் சித்திரம்' இது செய்த சித்திரம் என்பது தகரங்கெட்டு நின்றது. 'இல்லை' இது குறிப்பு வினைமுற்று. 2

[மௌன குருவே! மாயையை வெல்ல ஒரு தந்திரம் அடியேனுக்கு அருளிச்செய்வது எக்காலம் என்கின்றார்]

ஆதிக்க நல்கினவ ராரிந்த மாயைக்கென்
அறிவன்றி யிடமில்லையோ
அந்தரப் புட்பமுங் கானலின் நீருமோர்
அவசரத் துபயோகமோ
போதித்த நிலையையும் மயக்குதே அபயம்நான்
புக்கஅருள் தோற்றிடாமல்
பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென்
புந்திக்குள் இந்த்ரசாலஞ்
சாதிக்கு தேயிதனை வெல்லவும் உபாய நீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த
சமரசநிர் வாகநிலையும்
மாதிக்கொ டண்டப் பரப்பெலாம் அறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) சண்மதம்-ஆறுமதங்களையும், ஸ்தாபனமும்-நிலைப்படுத்தும் வகையும், வேதாந்தம்-வேதாந்தத்தையும், சித்தாந்தம்-சித்தாந்தத்தையும், சமரச-சமரசமாக, நிர்வாகம்-நிர்வகிக்கக்கூடிய, நிலையும் - அநுபூதிநிலையையும், மா-பெரிய, திக்கொடு-திக்குகளுடனே, அண்டம் - உலகங்களின், பரப்பு-பரப்புகள், எல்லாம்-எல்லாம், அறிய-அறியும்படி, வந்து - எழுந்தருளிவந்து, அருளும்-அடியேனுக்கு அனுக்ரகத்தைச்செய்த, ஞானம் - ஞானத்தைப்போதிக்கும், குருவே-ஆச்சாரியனே!, மந்த்ரம் - மந்திரத்தைப்போதிக்கும், குருவே-

ஆச்சாரியனே!, யோகம்-யோகசிட்டையின், தந்த்ரம் - தந்தரத்தைப்போதிக்கும், குருவே-ஆச்சாரியனே!, மூலன்-திருமூலமாமுனிவரின், மரபில்-சிஷ்ய வழியிலே, வரு - வழித்தோன்றலாகவரும், மௌனம் - மௌனயோகத்தைப் பூண்ட, குருவே-ஆச்சாரியனே!, இந்த - இந்த, மாயைக்கு-மாயையினுக்கு, ஆதிக்கம் - அதிகார ஏற்றத்தை, நல்கினவர்-தந்தவர், ஆர் - எவர்?, (இதற்கு) என்-அடியேனின், அறிவு-அறிவை, அன்றி - தவிர்த்து, இடம் - அது தங்குதற்கு வேறு இடம், இல்லையோ-கிடையாதோ?, ஆகாயம்-ஆகாயத்து, புஷ்பமும்-தாமரையும், கானலின்-கானலிலுள்ள, நீரும் - ஜலமும், ஓர்-ஒரு, அவசரத்து-அவசரத்துக்கு, உபயோகமோ - பிரயோசனம் ஆகுமோ?, போதித்த-தேவரீர் அடியேனுக்கு உபதேசித்த, நிலையையும் - நிலைமையினையும், மயக்குதே-மயக்கச்செய்கிறதே, நான் - அடியேன், அபயம் - அடைக்கலம், புக்க-அடைந்த, அருள்-திருஅருள், தோற்றிடாமல்-சிறிதுந்தோன்றாமல், பொய்-பொய், ஆன-ஆகிய, உலகத்தை-உலகவாழ்க்கையை, மெய்யா-உண்மையாக, நிறுத்தி-நிறுத்தி, என் - அடியேனின், புந்திக்கு - அறிவின், உள் - உள்ளே, இந்திரஜாலம்-இந்திரஜால வித்தையை, சாதிக்குதே-நிலை நிறுத்துகின்றதே, இதனை-இதை, வெய்யவும் - வெல்லவும், உபாயம்-ஒரு தந்திரம், நீ-தேவரீர், தந்து-கொடுத்து, அருள்வது-அருளிச்செய்வது, என்று-எக்காலம், புகலாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

(வி-ரை) 'இந்த மாயை' இந்த என்பது அண்மைச்சுட்டு. 'மாயை' என்றது மாயாமலத்தை. இது சுத்தமாயை, அசுத்தமாயை என இருவகைப்படும். சுத்தமாயையாவது மலகன்மங்களோடு விரவாது சுத்த காரியப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக இருப்பது. அசுத்தமாயையாவது முன் கூறிய சுத்தமாயையின் கீழாய் அடங்கி மலகன்மங்களோடு விரவி சுத்தாசுத்த காரியப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாக இருப்பது. இந்த அசுத்த மாயையின் தூலபரிணமமாய் அசுத்த காரியப் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாக இருப்பது பிரகிருதி மாயை என்பர். இதனையுங் கூட்ட மாயை மூன்று என்பர். இவைகளை முறையே விந்து, மோகினி, மான் என்பர். இதன் விரிவுகளை எல்லாம் கட்டளைகளிற் கண்டுதெளிக. இன்னும்,

"மாயையே யுடலமாகு மாயையே கரணமாகு
மாயையே புவனமாகு மாயையே போகமாகு
மாயையே பொறிகளாகு மாயையே புலன்களாகு
மாயையே யண்டபிண்டம் யாவையும் மாயையாமே"

என்னும் **வள்ளலார் சாஸ்திரம்** ஈண்டு கவனிக்கற்பாலதாம்.

இம்மாயை அறிவிற் செறிந்து நின்று அறியாமையை யுண்டாக்கி மயக்கில் பிறவிக்குக் காரணமாக இருத்தலின் 'இந்த மாயைக்கெ னறிவன்றி யிடமில்லையோ' என்றார். இதுகொண்டன்றே **வள்ளலாரும்**,



"ஆகையா விந்த மாயை அறிவினை முழுது மூடித்
தேகமே யான்மா வென்றும் சேயிழை மடவார் திங்கள்
மோகமே மோக்க மென்றும் புந்தியைத் திரிவு பண்ணுஞ்
சோகம்பா வனையா வித்தைத் தொலைப்பார்கள் ஜீவன் முத்தர்"

எனக் கூறினர்.

'அந்தரப் புஷ்பம்' என்றது ஆகாயத்தாமரையை. இது இல்லாதது ஒன்றை இருப்பதாகக் கற்பித்துக் கூறுவது. 'கானலின் நீர்' என்றது கானலின் ஓட்டம் நீர் ஓட்டம்போலக் காணும் பொய்த்தோற்றம். இல்லாத ஒன்று இருப்பதுபோலத் தோன்றும் பிராந்தி. இது பொய்த்தோற்றம். முன்னதாகிய அந்தப் புஷ்பம் இல்லாததொன்றை இருப்பதாகக் கற்பிக்கும் பொய்மை. 'கானல் நீர்' உண்மையாக இல்லாதது. மாறாய வேறு ஒன்று மற்றொன்றாகத் தோற்றமாத்திரையிற் பொய்த் தோற்றங்காட்டி அது அல்லாதாய் அழிவது. எவ்வாறு அந்தர புஷ்பமும், கானல்நீரும் முறையே அவசரத்திற்குச் சூடவும் பருகவும் முடியாதோ அதுபோல இம்மாயை இன்பத்திற்கு ஏதுவானதல்ல துன்பத்திற்கே காரணமானதாகும் என்பார். 'அந்தரப் புஷ்பமும் கானலின் நீருமோ ரவசரத் துபயோகமோ' என்றார். உவமானத்தாலேயே உபமேயங் கூறாது விளங்க வைத்தார். இது குறிப்பிற்பெற வைத்தலாம். இந்த மாயை மயக்குந் தன்மையதாகும். இதுகொண்டே இதற்கு மாயை எனப் பெயர் வந்ததென்பது அறியற்பாலதாம். இது பற்றியன்றோ சிவப்பிரகாசரும் தமது **பிரபுலிங்கலீலையில்** மாயை அம் மனைக் கண்டு மயங்கிய நிலையில்,

"மயக்கு மென்பதுபோய் மாயை மயங்கு மென்றிட விருப்ப
வியக்குநின் றேயம் யாது வீரவே ளனையா யின்பம்
பயக்குநின் பெயர்யா தெங்குப் பயின்றுறை குவைசொல் லென்று
நயக்குமென் மொழியார் கேட்ப ஞான வாரிதி யுரைக்கும்"

எனக் கூறியருளினர்.

எல்லா உயிர்க்கும் அருள் செய்வதும் அடைக்கலம் புகத்தகுந்தது இறைவன் திருஅருள் ஆதலின் 'அபய நான்புக்க அருள்' என்றார். ஈண்டு அருள் என்றது இறைவன் 'திருஅருளை' என அறிக. உலகம் மாயையின் காரியமாதலாலும், பொய்யாகிய உலகை மெய்யாகக்காட்டி மருட்டிப் பிறவித்துயருக்கு ஆளாக்குவது மாயை ஆதலினாலும் 'பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தியென் புந்திக்கு விந்த்ரஜாலம் சாதிக்குதே' என்றார். இதனானன்றோ **வள்ளலார்** சாத்திரத்தும்,

"சாயையோ லொத்த வாழ்வை மெய்யெனச் சந்தோடிக்கும்
தூயமெய்ஞ் ஞான வாழ்வைப் பொய்யெனத் தூடித்தூட்டும்
மாயவன் பிரமனீசன் யாரையு மயக்கஞ் செய்யும்
காயமே மாயையானல் யாரிதைக் கடக்க வல்லார்" எனவும்,

இறைவன் திருஅருளாலன்றி மாயையைக் கடந்து வெல்லமுடியா தாதலின் மௌனகுருவாக வந்த இறைவனை நோக்கி 'இதனை வெல்லவு முபாயநீ தந்தருள்வதென்று புகலாய்' என்றார். இதனானன்றே பெரியாரும்,

> "இம்மல மூன்றா லாவி யிருளடைந் தறிவுமாழ்கி
> மும்மைகொள் புவனந் தோறு முறைமுறை போகிமீளும்
> செம்மலங் கருணை வள்ளற் றிருவருட் டிரோதைமாறி
> மம்மர்கொள் பாம்பு மிழ்ந்த மதியென விளங்குமன்றே" என்றார்.

'சண்மதம்' என்றது அகச் சமயங்கள் ஆறனையுங் கூறியதாம். அவைக ளாவன:—வைணவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பனவற்றை. 'மாதிக்கு' என் பெருந்திசைகளை. அவை வடக்கு தெற்கு, கிழக்கு மேற்குகளாம். எனக் கோணங்கள் எல்லாம் இதனுள் அடங்குமாத லின் 'மாதிக்கு' என்றார். யாவர்க்கும் அறியவொணாதவனாகிய இறைவன் மேவான தேசிகனாக யாவரும் அறியக் கருணையொடு மானிடச் சட்டை தாங்கிவந் தனுக்கிரகஞ் செய்தானாதலின், 'சண்மத ஸ்தாபனமும் வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாக நிலையும், மாதிக்கொடண்டப் பரப்பெலா மறியவே வந்தருளு ஞானகுருவே' என்றார். இனி இதற்கு, சண்மத ஸ்தாபனத் தையும், வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாக நிலையையும், அடியேனுக்கு உணர்த்தும் பொருட்டு மாதிக்கொடு அண்டப் பரப்பெலாம் அறியவே வந்தருளு 'ஞானகுருவே' எனப்பொருள் கொள்ளுதலும் ஒன்றும். 'ஆதிக்கம்' இது வடசொல். அதிகாரம். ஏற்றம், உரிமை எனப்பொருளாம். 'நல்கினவர் ஆர்' இதில் 'ஆர்' என்னும் வினா 'யார்' என்பதன் மரூஉ. 'இல்லையோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. 'மயக்குதே' இது 'மயக்குகின்றதே' என்ற சொல்லின் மரூஉ. 'அபயம்' இது சரணாலயம், பயமின்மையைத்தரும் இடம் என்னும் பொருள்தரும் எதிர்மறைப்பெயர். 'சாதிக்குதே' இதுவும் மயக்குதே என்றதுபோல 'சாதிக்கின்றதே' என்றதன் மரூஉ. 3

[மௌனகுருவே! சிவானுபூதிபெற்று அடியேன் உய்ய ஒரு சொற் கொண்டு தடுத்தாண்ட குரு என்கின்றார்]

மின்னனைய பொய்யுடலை நிலையென்றும் மையிலகு
விழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றிஇப்
பொய்வேட மிகுதிகாட்டிப்
பொறையறிவு துறவீ தல்ஆதி நற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டுத்



தன்னிகரி லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
சமரச சிவாநுபூதி
மன்னவொரு சொற்கொண் டெனைத்தடுத் தாண்டன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம்-மந்திரோபதேசஞ் செய்யும், குருவே-குருவாக இருப் பவரும், யோகம்-யோகமார்க்கத்தின், தந்த்ரம்-தந்தரம்போதிக்கும், குருவே-குருவாக இருப்பவரும், மூலன்-திருமூலரின், மரபில் - சிஷ்யபரம்பரையில், வரு - வந்தருளிய, மௌன - மௌனானந்த வடிவத்தோடுகூடிய, குருவே-குருவே!, மின் - மின்னலை, அனைய - ஒத்த, பொய் - பொய்யாகிய, உடலை-தேகத்தை, நிலை-நிலை உள்ளது, என்றும்-என்றும், மை-மை, இலகு-தீட்டப் பெற்று விளங்கும், விழி-கண்களை, கொண்டு-கொண்டு, மையல் - காமமயக் கத்தை, பூட்டும்-உண்டாக்கும், மின்னார்கள்-பெண்களினுடைய, இன்பமே-சுகமே, மெய்-உண்மை, என்றும்-என்றும், வளர்-உயர்ந்த, மாடம்-மாளிகை களின், மேல்-மேலே உள்ள, வீடு - உப்பரிக்கைவீடே, சொர்க்கம் - சுவர்க்க லோகம், என்றும்-என்றும், பொன்னை - பொன்னை, அழியாது-அழியாமல், வளர் - வளர்கின்ற, பொருள்-பொருள், என்றும் - என்றும், போற்றி-பாது காத்து, இ-இந்த, பொய்-பொய்யாகிய, வேடம் - வேஷத்தை, மிகுதி-அதிக மாக, காட்டி - பலரும் அறியும்படிக்காட்டி, பொறை - பொறுமை, அறிவு-ஞானம், துறவு-பற்றுகளைத்துறந்து நிற்றல், ஈதல் - வறியர்க்கு அவர் வேண் டும் ஒன்றுதொடுத்தல், ஆதி - முதலாகிய, நல் - நல்ல, குணம் - குணங்கள், எல்லாம்-எல்லாவற்வையும், போக்கிலே-அதன் அதன் போக்குகளிலே போக விட்டு, தன்-தனக்கு, நிகர்-ஒப்பு, இல்-இல்லாத, லோபம் - பிசினாறித்தனம், ஆதி-முதலிய, பாழ்ம்-வீணான, பேய்-பேய்கள், பிடித்திட - பற்றிக்கொள்ள, தரணி-பூமி, மிசை - மேலே, லோகாயதன் - லோகாயதன் என்பவனுடைய, சமயம் - சமயத்தின், நடை - நடையை, சாராமல் - தழுவாமல், வேதாந்த-வேதாந்த, சித்தாந்த-சித்தாந்தங்களின், சமரச-சமரசமாகிய, சிவ-சிவத்தின், அநுபூதி-அநுபவானந்தம், மன்ன-நிலைக்குமாறு, ஒரு-ஒரு, சொல்-உபதேச மொழி, கொண்டு-கொண்டு, எனை-அடியேனை, தடுத்து-தீவழியிற்செல்லாது தடுத்து, ஆண்டு - ஆட்கொண்டருளி, அன்பின் - அன்பினாலே, வாழ்வித்த-வாழும்படிச் செய்தருளிய, ஞான - ஞானத்தைப் போதிக்கும், குருவே-குரு ஆனவரே; எ-று.

(வி - ரை) தேகம் நித்திய மில்லாதது மின்னல்போல் தோன்றி மறையும் தன்மையது என்பார் 'மின்னனைய பொய்யுடலை' என்றார், இதனை,

"மின்போ லழியும் வயிற்றுமை வடிவா யழியும் மெய்யுருவாய்
முன்போ லழியும் பிறந்தழியும் மடவா ருடனே முயங்கியதன்
பின்போ யழியும் நரைத்தழியும் பேய்போற் றிரிந்து பெயர்ந்தழியும்
பொன்போல் வளர்த்து மிவ்வுடலை நிலையா தழிந்து போய்விடுமே"

என்ற **சேவ்வந்திப் புராணச்** செய்யுளாலும்,

"கடுங்கான் நெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்"

எனச் **சிலப்பதிகாரத்துச்** செய்யுளாலும் அறியலாம்.

பெண்கள் கண்களோ ஆடவர்க்குக் காமத்தை யூட்டுவது; அதனோடு அக்கண்ணுக்கு மையிடல் வாளைக் கூர்படுத்தி நெய்தடவி வைப்பதுபோலாம். இதுகொண்டே, 'மையிலகு விழிகொண்டு மையல்பூட்டும் மின்னார்கள்' என்றார். இதனாலன்றே **ஔவைப்பிராட்டியாரும்**, 'மைவிழியார் மனை யகல்' என்றார். **அருணகிரியாரும்**, 'மையிட்டு மருட்டிகள்' என்றார். இன்னும்,

"கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்ந்தன கண்" எனவும்,

"இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து"

எனவும் **திருக்குறள்** பாக்களும் ஆராயத் தக்கதாகும்.

'மின்னார்' என்றது பெண்களை. மின்போன்ற பெண்களை 'மின்னார்' எனல் உவமைஆகுபெயர். பெண்களின் இன்பமே மோக்ஷஇன்பம் என்பதும், மேல்மாட மாழ்வே சொர்க்கவாழ்வு என்பதும் உலகாயதன் கொள்கை. இதனை,

"வாசமார் குழலி னார்கண் மணியல்குற் றடத்தே மூழ்கி
நேசமார் குமுதச் செவ்வாய் அமுதினை நிறைய வுண்டு
தேசுலா மணிமென் றோண்மேல் சேர்ந்துவீற் றிருந்தி டாத
மாசுலா மனத்தோ ரெல்லா மறுமைகொண் டறிவர் மன்னோ" எனவும்,

"மதிநிலா நுதலா ரோடு மணிநிலா முன்றி லேறி
முதிர்நிலா வெறிப்பச் செவ்வா யிளநிலா முகிழ்ப்ப மொய்த்த
கதிர்நிலா விடங்கொள் கொங்கைக் கண்கண் மார்பக மூழ்கும்
புதுநிலா விநயன் போகம் விடுவர்புன் சமயத் தோரே"

எனவும்வரும் **சிவஞானசித்தியார்ப்** பாடலால் அறிக.

'பொன்' என்றது பொன் வெள்ளி முதலிய செல்வப்பொருள் எல்லாவற்றையுங் குறிக்கும். என்னை "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பது **இலக்கணம்** ஆதலின் என்க. இதனாலன்றே **பட்டினத்தடிகளும்**,



"சொன்ன விசாரம் தொலையா விசாரம்" எனவும்,

"பொன்னை நினைந்து வெகுவாகத் தேடுவர் பூவை யன்னாள்
தன்னை நினைந்து வெகுவா யுருகுவர்" எனவும் கூறினர்.

'பொறை' என்றது பிறர் செல்வம், கல்வி, வீரம், அழகு முதலிய கண்டு அழுக்காறு உறாது மனம் மகிழ்ந்துகாணலை யுணர்த்தும். 'பொறை' என்றது சகிப்புத் தன்மையை. 'துறவு' என்றது முத்திக்கு இடையூறாக இருப்பதும், பிறவிக்குக் காரணமாக இருப்பதுமாகிய அகப்பற்று புறப்பற்றுகளை விட்டிருக்கும் தன்மை. 'ஈதல்' என்றது இல்லார்க்கு ஒன்று ஈதலாகிய கொடையைக் குறித்தது. 'லோபாதி' என்றது காமம், குரோதம் மதம், மாச்சரியம் என்னுந் தீக்குணங்களைக் குறித்து நின்றது. 'பாழ்ம்பேய்' இது பண்புத்தொகை. பாழாகிய பேய் என விரியும். வீணான பேய் என்பது பொருள்; இனி, வீரெனச் செய்கின்ற பேய் எனப் பொருளுரைப்பாரும் உண்டு. அவ்வாறு பொருள்கொண்டால் இது இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகும். 'தாணி' இது பூமிக்கு உரிய பெயர். இதற்குப் பொருள்களைத் தரித்து நிற்பது என்னும் பொருள்; இது காரணப்பெயர்.

'சிவானுபூதி' என்பது சிவானந்த அனுபூதியை. அனுபூதி என்பது இன்பநுகர்வை. 'ஒருசொல்' என்றது ஒப்பற்ற ஞானோபதேச மொழியை. 'மின்னனைய' என்பதில் 'அனைய' என்றது உவமஉருபு. இச்செய்யுளில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'எலாம்' இது 'எல்லாம்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். இச்செய்யுளுக்கு எல்லாம் விளியுருபு ஆக்கி விளித்ததாகப் பொருள் கூறுவர். அது வருமாறு:—வாழ்வித்த ஞானகுருவே! மந்தர குருவே! யோகதந்தர குருவே! மூலன் மரபில்வரு மௌனகுருவே! என விளிப்பொருளே யாக்குவர். யாம் மூலன் மரபில்வரு மௌனகுருவே வாழ்வித்த ஞானகுரு என்றும் ஏகாரம் தேற்றப்பொருள் என்றும் பொருள் கொண்டாம். இச்செய்யுள் பாடிய பெரியார் கருத்து அறியற்பால தொன்றும். 4

[மௌனகுருவே! இரண்டு ஒன்று என்கின்ற மனோ விகற்பத்தை
முற்றும் ஒழியும்படி ஜெயித்து நிற்பதே நமது மரபாகும்
என்று உபதேசித்த பரமகுரு ஆவார் என்கின்றார்]

போனகம் இருக்கின்ற சாலையிடை வேண்டுவ
புசித்தற் கிருக்குமதுபோல்
புருஷர்பெறு தர்மாதி வேதமுடன் ஆகமம்
புகலுமதி லாம்பயன்
ஞானநெறி முக்யநெறி காட்சியனு மானமுதல்
நானுவி தங்கள்தேர்ந்து

நான்நான் எனக்குழறு படைபுடை பெயர்த்திடவும்
நான்குசா தனமும்ஓர்ந்திட்
டானநெறி யாஞ்சரியை யாதிசோ பானமுற்
றனுபக்ஷ சம்புபக்ஷம்
ஆமிரு விகற்பமும் மாயாதி சேவையும்
அறிந்திரண் டொன்றென்னுமோர்
மானத விகற்பமற வென்று நிற் பதுநமது
மரபென்ற பரம்குருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம் - மந்த்ரத்தைப்போதிக்கும், குருவே - ஆச்சாரியனே! யோகம்-யோகத்தின், தந்த்ரம்-தந்த்ரங்களைப்போதிக்கும், குருவே-ஆச்சாரியனே! மூலன் - திருமூலரின், மரபில் - மரபிலே, வரு - எழுந்தருளிவந்த, மௌன - மௌனானந்தமயமாகிய, குருவே - ஆச்சாரியனே! போனகம்-சாப்பாடு, இருக்கின்ற-இருக்கின்ற, சாலையிடை-சத்திரத்தில், வேண்டுவ-உண்ணுதற்குவேண்டியவைகள், புசித்தற்கு - சாப்பிடற்கு, இருக்கும் - இருக்கின்ற, அது-அத்தன்மையை, போல்-போல, புருஷர் - புருஷர்கள், பெறு-அடையவேண்டிய, தர்மம் - தர்மம், ஆதி - முதலியவைகளும், வேதம் - வேதங்கள் உடன்-உடனே, ஆகமம் - ஆகமங்களும், புகலும் - சொல்லுகின்ற, அதனால்-அவைகளால், ஆம்-உண்டாகக்கூடிய, பயன்-பலனும், ஞானம்-ஞான, நெறி-மார்க்கம் ஆகிய, முக்யம்-முக்கியமாகிய, நெறி-மார்க்கமும், காட்சி-காட்சியும், அனுமானம் - அனுமானமும் என்கின்ற பிரமாணங்களும், முதல்-முதலாகிய, நானாவிதங்கள் - பலவிதமான வழிகளையும், தேர்ந்து - ஆராய்ந்து அறிந்து, நான்-நான், நான்-நான், என-என்று, குழறுபடை - குழறுபாட்டை, புடைபெயர்ந்திடவும்-ஒழிந்திடவும், நான்கு-நான்காகிய, சாதனமும்-சாதனங்களையும், ஓர்ந்திட்டு - அறிந்துகொண்டு, ஆன - நல்லதாகிய, நெறி - வழி, ஆம்-ஆகும், சரியை - சரியை, ஆதி - முதலாகிய, சோபானம் - படித்தரங்களை, உற்று-பெற்று, அனுபக்ஷம்-அனுபக்ஷமும், சம்புபக்ஷம் - சம்புபக்ஷமும், ஆம்-ஆகின்ற இவ்விரண்டின், இரு - இரண்டுவிதமாகிய, விகற்பமும் - வேறுபாடுகளையும், மாயை-மாயை, ஆதி-முதலியவைகளின், சேவையும்-தரிசனத்தையும், அறிந்து-தெரிந்து, இரண்டு - இரண்டு, ஒன்று - ஒன்று, என்னும்-என்கின்ற, ஓர்-ஒரு, மானதம்-மனத்தைப்பற்றிய, விகற்பம் - வித்தியாசம், அற-நீங்க, வென்று-ஜயித்து, நிற்பதே-நிற்பதே, நமது-நம்முடை, மரபு-மரபாகும், என்று-என்று உபதேசித்தருளிய, பரம-மேலாகிய, குரு-குருவாகும் எ-று. ஏகாரம் அசை.

(வி-ரை) 'போனக மிருக்கின்ற சாலை' என்றது சாப்பாட்டுச் சத்திரம் என்ற பொருளதாம். 'சாலையிடை' இதில் 'இடை' என்பது இடைச்சொல். 'இருக்குமதுபோல்' இதில் போல் என்பது உவமஉருபு. 'புருஷர் பெறு



தருமாதி' என்றது தர்மார்த்த காமமோக்ஷங்களை. இதனை, அறம், பொருள், இன்பம், வீடு என்பர் தமிழ்நூற் புலவர். 'வேதமுடன் ஆகமம்' என்றது இருக்காதி நான்கு வேதங்களையும், சிவாகமம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்களையும் குறித்ததாகும். அன்ன சத்திரத்தில் புசித்தற்கு வேண்டுவ எல்லாம் இருப்பதுபோல் வேதத்திலும் ஆகமத்திலும் ஒரு புருஷன் அடையவேண்டியதாகிய அறம், பொருள், இன்பம், வீடு எனும் நான்கையும் எடுத்தோதாநிற்கும் என உவமையொடு எடுத்து விளக்கிக் கூறினர். வேதாகமங்களில் இருந்து பெறும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கில் நான்காவதாக நின்ற வீட்டு நெறியே முக்யநெறியாகும் என்பார். அதனாலாம்பயன் ஞானநெறி முக்யநெறி என்றார். 'காட்சி' என்றது காட்சிப் பிரமாணத்தை. இது கண்கூடாகக் கண்டறிவது. 'அனுமானம்' என்றது அனுமானப்பிரமாணத்தை. அனுமானப்பிரமாணம் என்பது அனுமானித்து அறிதலை. அதாவது புகையுடைமையின் நெருப்புண்டென் றெண்ணுவது அனுமானம் ஆகும். 'நானாவிதம்' என்றது சப்தப்பிரமாணம் உவமை முதலியவைகளையாம். 'நான் நான் எனக் குழறுபடை' என்றது அகங்காரங்கொண்டு தானல்லாததனைத் தானாகவும் தனதல்லாதவற்றைத் தனதெனவும் உழறுதலைக் குறித்தது, 'புடை பெயர்ந்திடவும்' என்றது அகன்றோடலை. இதற்குத் தளாக்கிடல் எனப் பொருள் கூறுவாறுமுண்டு. 'நான்கு சாதனம்' என்றது சாதன சதுட்டயங்களை. அவையாவன:—

1. நித்யா நித்யவஸ்து விவேகம். 2. இகமுக்தார்த்த பலபோகராகம். 3. சமாதி ஷட்க சம்பத்தி, 4. முமுக்ஷுத்துவம் என்பனவாம். இவைகளில் முதலிற் கூறிய நித்தியாநித்தியவஸ்து விவேகம் என்பது, இறைவனே நித்தியன் மற்றைய மாயாகாரியப் பொருள்களெல்லாம் அநித்தியம் என்றறிதலாம். இரண்டாவதாகக் கூறிய இகமுக்த்தார்த்த பலபோகராகம் என்பது, இம்மை மறுமைப்பயன்களை இச்சியாது விட்டொழித்தல். மூன்றாவதாகக் கூறிய 'சமாதி சட்க சம்பத்தி' என்பது மனதை அடக்கலும், ஐம்பொறிகளை அடக்கலும், குருவைச் சேவைசெய்தலும், சுகதுக்கங்களைச் சகித்திருத்தலும், குருவினிடம் கேட்டபடி சிரத்தையுடன் அனுட்டித்தலும், மனதைச் சிதறவிடாது இறைவன்மாட்டுச் செலுத்தலும் முதலியவைகளாம். நான்காவது கூறிய 'முமுக்ஷுத்வம்' என்பது, மோக்ஷம் கிட்டுகிற வரையில் அதிலேயே பற்றுவைத்து அதற்கே முயன்றுகொண்டிருத்தல் என்பதாம். இந்நான்கினையும் சிறிது மாறுபடக்கூறும் நூற்களும் உள. 'ஆனநெறி' என்றது முத்திக்கான நெறி, பத்திக்கான நெறி என்பதாம். என்னை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன நான்கும் முத்தி அடைதற்கு ஏற்பட்டுள்ள நெறிகளாதலின் 'ஆனநெறி' என்றார். 'சரியை ஆதி' என்றது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நெறிகளை. இதனை இந்நூல் செய்யுள் உரையிற் காட்டியுள்ளோம் ஆங்குக் கண்டு தெளிக. 'சோபனம்' என்றது படிப்படியாக மேலுறும் வழி என்ப

தாம். சரியை முதாக்கிரியையும், கிரியை முதிரயோகமும், யோகமுதிர ஞானமும், ஞானமுதா முத்தியும் எய்துதலின் 'சோபானமுற்று' என்றார், உயிர்கள் தாமே பக்குவப்பட்டு முத்திபெறும் வழியை 'அணுபக்ஷம்' எனவும், இறைவன் பக்குவப்படுத்த உயிர்கள் பக்குவப்பட்டு முத்திபெறும் வழியை 'சம்புபக்ஷம்' எனக் கூறுவர். ஆதலின் 'அணுபக்ஷ சம்புபக்ஷம் ஆம் இரு விகற்பமும்' என்றார். 'மாயாதிசேவை' என்பது மாயையைக் காண்டல் அதாவது மாயையின் தன்மையை அறிதல். 'இரண்டொன் றென்னுமோர் மாதை விகற்பமற' என்றது அத்துவிதப்பொருளை அத்துவிதப் பொருளாகக்கண்டு என்பதாம். அதுதானு, தானதுவாக்கண்டு 'வென்று நிற்பது' என்றது மாயையின் சேட்டைகளை வென்று வெற்றிபெற்று இருப்பது என்பதாம்.

'நமது மரபு' என்றது நந்திவழி வந்தார்களாகிய சைவசித்தாந்தச் சமரசக்கொள்கை யுடையார்களின் மரபு என்பதாம். அத்துவித நிலையை உள்ளபடி காட்டினவர் மௌன தேசிகராதலின் 'பரமகுருவே' என்றார். இனி, பரமனே குருவாகவந்து அருள்செய்தலின் பரமகுரு என்றார். 'இருக்கின்ற' இது நிகழ்காலப் பெயரெச்சம். 'இருகுமது' இது இருக்கும்+அது என்ற இருசொற் சந்தி. ஈண்டு அது என்பது சுட்டுப்பொருளில் வந்தது. 'வேதமுடன்' என்பதில் 'உடன்' என்னும் மூன்றன் உருபு எண்ணும் பொருளில் நின்றது. விதங்கள்+தேர்ந்து=விதங்கடேர்ந்து 'லள வேற்றுமையிற் றடவும்' என்ற **சூத்திரத்தில்** இவ்வாறு புணர்ந்தது 'நான்கு சாதனமும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. 'விகற்பமும்' 'சேவையும்' என்பதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 5

[மௌனகுருவே! தேவரீரின்பெருமை அடியேனுற் சொல்லுந் தரம் உடையதல்ல தேவரீர் எல்லாம் வல்லவன் அடியேனையும் ஆண்டருள் என்கின்றார்]

கல்லாத அறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேதுமில்லாக்
காட்சியும் கொலைகளவு கட்காமம் மாட்சியாக்
காதலித் திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்ம்மொழியும் அல்லாது நன்மைகள்
பொருந்துகுணம் ஏதும்அறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்தம் ஏதுமில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ணம் உய்வண்ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறும்
எனக்குநின் னருள்தாரகம்



வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாளநினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம் - மந்திரத்தைப்போதித்தருளும், குருவே - குருவே!, யோகம்-யோகமார்க்கத்தின், தந்த்ரம் - தந்திரங்களைப்போதிக்கும், குருவே-குருவே!, மூலன் - திருமூலரின், மரபில் - மரபிலே, வரு - வந்தருளிய, மௌனம்-மௌனானந்தவடிவமாகிய, குருவே-குருவே!, கல்லாத-ஞானநூற்களைக்கல்லாத, அறிவும்-அறிவும், மேல்-அதற்குமேலே, கேளாத-ஞானகுருவினிடம் உபதேசமுறையாய்க் கேளாத, கேள்வியும் - கேள்விஞானமும், சிறிதும்-கொஞ்சமேனும், ஏதும் - ஏதாகிலும், கருணை-தயை, இல்லா-இல்லாத, காட்சியும்-பார்வையும், கொலை-கொலையும், களவு-திருட்டும், கள்-கள்ளுண்டலும், காமம் - பிறர்மனை நயத்தலும், (ஆகிய இத்தீக்குணங்களை) மாட்சி-பெருமை, ஆ-ஆக, காதலித்திடும் - அதனிடத்து விருப்பத்தைச் செய்கின்ற, நெஞ்சமும் - மனமும், பொல்லாத - தீய, பொய் - பொய்யாகிய, மொழியும்-வார்த்தையும், அல்லாது-அல்லாமல், நன்மைகள் - நன்மைகள், பொருந்து-பொருந்தியுள்ள, குணம் - குணங்கள், ஏதும் - ஏதனையும், அறியேன்-தெரியேன், புருஷர்-ஆண்மகன், வடிவு - வடிவம், ஆனதே-ஆகியதே, அல்லாது-அல்லாமல், கனவிலும் - கனவிலுங்கூட, புருஷார்த்தம் - புருஷார்த்தங்களை, உடையன்-உடையவன், அல்லேன்-அல்லேன், எல்லாம் - எல்லாவற்றையும், அறிந்த-அறிந்துள்ள, நீ-தேவரீர், அறியாதது-தெரியாதது, அன்று-அன்று, எனக்கு-அடியேனுக்கு, எ-எந்த, வண்ணம்-விதம், உய்-உஜ்ஜீவிக்கவேண்டிய, வண்ணமோ-விதமோ, இருளை - திருட்டை, இருள் - இருட்டு, என்றவர்க்கு-என்றவர்களுக்கு, ஒளி - பிரகாசமானது, தாரகம் - ஆதாரமாக இருக்கும், (அதுபோல) பெறும்-தேவரீரை அடைந்த, எனக்கு - அடியேனுக்கு, நின்-தேவரீரின், அருள்-திருஅருளே, தாரகம்-ஆதாரமாகும், வல்லான்-எல்லாம் வல்லவன், என்னும் - என்று சொல்லும், பெயர் - பெயரானது, உனக்கு-தேவரீருக்கு, உள்ளதே - இருக்கின்றதே, (ஆதலினால்) இந்த-இந்த, வஞ்சகனை-வஞ்சககுணமுடையவனாகிய அடியேனை, ஆள-ஆண்டருள, நினையாய்-திருவுள்ளங் கொண்டருள்வாயாக எ-று.

(வி-ரை) 'கல்லாத அறிவு' என்றது ஞானநூற்களைக் கற்றுத் தெளியாத அறிவு என்பதாம். கல்லாதார் அறிவு கலக்கமுற்றிருக்கும் முக்குற்றத் தட்பட்டு மயங்கி நிற்கும் ஆதலின் 'கல்லாத அறிவும்' என்றார். ஞான நூற்களைக் கற்றோர்க்கு அறிவு பெருகித் தெளிவுற்றிருக்கும் ஆதலின் கற்ற அறிவே வேண்டற்பாலதாம். இதனை,

"தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு" எனவும்,

"கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்" எனவும் வரும் **திருக்குறள்களா**லும்,

"கற்பக் கழிமட மஃகு மடமஃகக்
குற்றந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவ மாய நெறிபடரு மந்நெறி
யிப்பா லுலகத் திசைநிறீஇ யுப்பா
லுயர்ந்த வுலகம் புகும்" எனும் **நான்மணிக்கடிகையா**லும்,

"கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர்தா மென்று மறியாரே—வெற்றிநெடு
வேல்வேண்டும் வான்விழியாய் வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம்" எனவும்,

"பெருங் கல்வி மன்னு மறிஞர்" எனவும்,

"பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே"

எனவும் வந்த **நன்னெறி நூலா**லும் நன்கறியலாம். இதுகொண்டன்றோ **திருவோகம்** தமது திருமந்திரத்திலே தன் அமுதவாக்கால்,

"எல்லா விடத்து முளனெங்க டம்மிறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே" எனவும்,

"எல்லா வுயிர்க்கு மிறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே"

எனவும் கூறியதும் காணத்தக்கதாகும்.

இனி, 'கல்லாத அறிவு' என்பதற்குத் திருந்தாத அறிவு எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'கேளாத கேள்வி' என்றது ஞானக்கேள்வியை. கற்றுப் பெரும் அறிவினும் கற்றறிந்த பெரியார்பாற் கேட்டறிவது விசேடமாகும் ஆதலினால் 'கேளாத கேள்வியும்' என்றார். இதனானன்றோ **ஔவைப்பிராட்டியா**ரும் 'கேள்வி முயல்' என்று சூத்திரத்து வைத்தான்.

"முற்றப் பகலு முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று"

என்றபடி பதினெண் கீழ்க்கணக்கும் உன்னத்தக்கதாகும்.

"ஞானக்கேள்வி யில்லார் இருந்துபயன் இல்லை"

எனத் **திருவள்ளுவரு**ம்,

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்"

எனத் தன் **திருக்குறளிற்** கூறினதுங் காணத்தக்கதாகும்.

'கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம்' என்ற **பெரியார்** வாக்கின்படி கருணை நோக்கமே மக்கட்கு இருக்கவேண்டும். அஃதில்லா நோக்கம்



விரும்பத் தகுந்ததல்ல. இம்மை, மறுமை, முத்தி முதலிய பயன்கள் தாராதாதலின் கருணை சிறிதேதுமில்லாக் காட்சியும் என்றார். இனி இவ்வடிக்கு கருணை சிறிதுமில்லா அறிவும் எனப்பொருள் செய்துள்ளாரும் உண்டு. சிறப்பின்மை உய்த்துணர்ந்தறிக.

"நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி"

எனத் **திருவள்ளுவர்** கூறியாங்கு கொல்லாமை எல்லாத் தருமத்தினும் சிறந்தது. கொல்லுவது எல்லாப்பாவத்தினுங் கொடியது, இதுகொண்டன்றோ **திருவள்ளுவர்** பின்னும்,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" என்றார்

இதுபற்றியே நம் பெரியாரும் எல்லாத் தீய தீக்குணங்களும் இருக்கின்றன. ஒரு நல்ல குணமும் இல்லையெனக் கூறவந்தவர் தன்பாலுள்ள தீக்குணங்களைக் கூறவந்தவிடத்து 'கொலைகளவு கட்காம மாட்சியாக் காதவித்திடு நெஞ்சு' என்றார். 'களவு' இம்மையில் இகழ்ச்சியும் அரச தண்டனையும் மறுமையில் நரகும் தருதலாலும், களவு செய்வார்பால் இறை அருள் தோன்றாதாதலினாலும் கொலைக்குப்பின் களவை வைத்தார். 'கள்' அறிவு திரியச்செய்யும் ஆதலினாலும் அரன் அருள் அடையாது தடுக்கும் ஆதலினாலும் அதன்பின் கள்ளுண்டலை வைத்தார். ஈண்டு,

"உள்ளுண்மை யோரா ருணரார் பசுபாசம்
வள்ளண்மை நாத னருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணு மாந்தர் கருத்தறி யாரே"

என்ற **திருமந்திரப்** பொருள் கவனிக்கத் தக்கதாகும்.

"கொலையஞ்சார் பொய்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியொடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்"

என்று **குமரகுருபர சுவாமிகள்** கூறியபடி எல்லாப்பாவத்தையும் கூப்பிட்டழைக்கும் கொடிய பாவம் காமம் ஆதலால் எல்லாவற்றிற்கும் பின் 'காமத்தை' வைத்தார்.

இம்மை நலங்கள் எல்லாவற்றையும் கெடுப்பதும் சந்ததியை அழிப்பதும் மறுமையில் நரகத்து ஆழ்த்துவதும், தருமங்களையெல்லாம் அழிப்பதும் பொய் ஆதலினால் 'பொல்லாத பொய்மொழியும் அல்லாது நன்மைகள் பொருந்து குணம் ஏதுமறியேன்' என்றார். இதனை,

"இம்மை நலனழிக்கும் எச்சங் குறைபடுக்கும்
அம்மை யருநரகத் தாழ்விக்கு—மெய்ம்மை

யறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கு
மறந்தேயும் பொய் யுரைக்கும் வாய்" எனவும்,

" ... ... ... —வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோ டிடை மிடைந்த சொல்" எனவும்,

"பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

எனவும், பெரியார் கூறியது கண்டு பொய்மையால் வருந் தீமையையும் அதனைப் பெரியார் எவ்வளவு வெறுக்கின்றாரென்பதனையும் அறியலாம்.

'பொய்சொல்லும் வாய்க்குப் பொரியுங் கிடையா' என்ற உலக வசனமும் ஈண்டு நினைவு கூரத்தக்கதாகும். 'புருஷார்த்தம்' என்றது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கினையாம். இறைவன் 'சர்வஞ்ஞன்' ஆதலின் 'எல்லாம் அறிந்த நீ அறியாதது அன்று' என்றார். உயிர்கள் இறைவன் திருவருளாலன்றி உய்யு பெறாதாதலின் 'எவ்வண்ண முய் வண்ணமோ' என்றும், 'எனக்கு நின்னருள் தாரகம்' என்றும் கூறியருளினர். இறைவன் 'எல்லாம் வல்லன்' 'சர்வ சக்தன்' ஆதலினால் வஞ்சகனாகிய அடியேனைத் திருத்தி ஆட்கொள்வதற்குத் தேவரீருக்கு வலிமையில்லாது போகாது அடியேனை ஆண்டுகொண்டருள் என்பார். 'வல்லா னெனும்பெய ருனக்குள்ளதே யந்த வஞ்சகனையாள நினையாய்' என்றார். 'கல்லாத' 'கேளாத' 'இல்லா' இவைகள் இறந்தகாலப் பெயரெச்சங்கள். 'இல்லா' இது 'இல்லாத' என்பதன் கடைக்குறை விகாரம். 'கொலைகளவு கட்காமம்' இது கொலையும், களவும், கள்ளும், காமமும் என விரிதலின் உம்மைகள் தொக்கு நின்றன. 6

[மௌனகுருவே! தேவரீரின் பெருமை சொல்ல எளியது அல்ல என்கின்றார்]

கானகம் இலங்குபுலி பசுவொடு குலாவும்நின்
கண்காண மதயானை நீ
கைகாட்ட வுங்கையால் நெகிடிக் கெனப்பெரிய
கட்டைமிக ஏந்திவருமே
போனகம் அமைந்ததென அக்காம தேனுநின்
பொன்னடியில் நின்றுசொலுமே
புவிராசர் கவிராசர் தவராச ரென்றுனைப்
போற்றிசய போற்றிஎன்பார்
ஞானகரு ணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களும்உன்



நட்பினை விரும்புவார் சுகர்வாம தேவர்முதல்
ஞானிகளும் உனைமெச்சுவார்
வானகமும் மண்ணகமும் வந்தெதிர் வணங்கிடும்உன்
மகிமையது சொல்லஎளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம்-மந்திரத்தைப்போதிக்கும், குருவே-குருவே!, யோகம்-யோகமார்க்கத்து, தந்த்ரம் - தந்தரங்களைப்போதிக்கும், குருவே - குருவே!, மூலன்-திருமூலரின், மரபில் - சிஷ்யபரம்பரையில், வரு - எழுந்தருளிவந்த, மௌன - மௌனானந்த வடிவாயமைந்த, குருவே - குருவே!, கால்-காலில், நகம்-நகங்களோடு, இலங்கும் - விளங்குகின்ற, புலி - வேங்கைப்புலியானது, பசுவொடு-பசுவுடனே, குலாவும்-கொஞ்சிவிளையாடும், நின்-தேவரீரின், கண்-கண்கள், காண-காணும்படி, மதம்-மதம் ஒழுகப்பெற்ற, யானை-யானையானது, நீ-தேவரீர், கை-கையால், காட்டவும்-ஜாடைகாட்டவும், கையால்-துதிக்கையால், நெகிடிக்கு-நெருப்புக்குவைக்கு, என-என்று, பெரிய-பெரிய, கட்டை-கட்டைகளை, மிக-மிகவும், ஏந்தி-தாங்கி, வரும்-வருமே, காமதேனு-தெய்வலோகப் பசுவாகிய காமதேனுவானது, நின் - தேவரீரின், பொன் - அழகிய, அடியில் - திருப்பாதத்தில், நின்று - வணங்கி நின்று, போனகம் - சாப்பாடு, அமைந்தது - சித்தமாயிற்று, என - என்று, சொலுமே - சொல்லுமே, புவி-பூலோகத்துக்கு, ராஜர் - மன்னரும், கவி - பாவலர்களுக்கெல்லாம், ராஜர்-மன்னராக இருப்பவர்களும், தவம் - தவத்தைச்செய்யும் தபோதனர்களுக்கு மன்னனே, என்று-என்று, உன்னை - தேவரீரை, போற்றி - துதித்து, ஜய-ஜயவிஜயீபவஎன, போற்றி-போற்றி, என்பர்-என்று வணங்குவர், ஞானம்-ஞானத்துக்கும், கருணை - கருணைக்கும், அகரம் - பிறப்பிடம் ஆக இருக்கிற, முகம் - தேவரீரது திருமுகத்தை, கண்டபோதிலே - பார்த்தமாத்திரத்திலே, நவநாத - நவநாதாக்களாகிய, சித்தர்களும் - சித்தர்களும், உன்-தேவரீரது, நட்பினை-நேயத்தை, விரும்புவார் - விரும்புவர்கள், சுகர் - சுகர், வாமதேவர்-வாமதேவர், முதல்-முதலாகிய, ஞானிகளும்-ஞானிகளும், உனை-தேவரீரை, மெச்சுவார் - புகழ்ந்துபாராட்டுவார்கள், வானகமும் - விண்ணுலகத்தவரும், மண்ணகமும்-பூலோகத்தவரும், வந்து - எதிர்கொண்டு வந்து, எதிர்-தேவரீரின் சந்நிதியிலே நின்று, வணங்கிடும்-வணங்கும்படியான, உன்-தேவரீரின், மகிமையது-பெருமையாகிய அதனை, சொல்ல-எடுத்துக் கூறுதற்கு, எளிதோ-இலேசானதோ இல்லை எ-று.

(வி-ரை) மௌனதேசிகரின் சந்நிதி விசேடத்தால் புலியும் பசுவும் குலாவி விளையாடும் என்றார். என்னை மௌனதேசிகரின் விருப்பு வெறுப்பு, பகை உறவு அற்ற குணங்களாலும், ஞானப்பிரகாசத்தாலும் சாந்த ஒளியாலும் என்க. 'புலி' ஜீவப்பிராணிகளைக் கையால் அடித்துக் கிழிக்க நகமே அதற்கு ஆயுதமாக இருப்பதால் அதன் கொடுமையும்,

அதன் வலிமையும், அதன் இளமையுந் தோன்ற கால்+நகம்+இலங்கு+புலி என்றார். இனி இதற்கு கானகம்+இலங்கு+புலி எனப் பிரித்துக் காட்டிற் சஞ்சரிக்கும் இயல்புடைய துஷ்ட மிருகமாகிய புலி வீட்டில் வசிக்கும் பசுவொடு பகையின்றி உறவாகக் கூடிக்குலாவி விளையாடும் எனப் பொருள் கூறலும் ஒன்றாம். யானைகள் நெருப்பு எரிவது கண்டால் அஞ்சி ஓடும் இயல்பு உடையது அத்தகைய யானையும் மௌனகுருவே தேவரீர் கைகாட்டினால் தேவரீரின் ஞானவிசேடத்தால், தெய்வீகத்தால் சிறிதும் அச்சமின்றிப் பரம கருணாநிதியாகிய தேவரீரின் கட்டளைப்படி நெருப்புக்கு வயல் எரிய பெரிய பெரிய கட்டைகளைச் சுமந்துவரும் என்பார். 'மதயானை கைகாட்டவும் கையால் நெகிடிக்கெனப் பெரிய கட்டை மிக ஏந்தி வருமே' என்றார். அடங்கும் இயல்பு கெட்ட யானை, தன்வயம் கெட்டு மூர்க்கங் கொண்டு இருக்கும் யானை என்பார் 'மதயானை' என யானைக்கு 'மதம்' என்னும் அடைமொழி பெய்துவைத்தார்.

'காமதேனு' இது தெய்வலோகப்பசு. இது யார் யார் என்னக் கேட்டாலும் அவைகளைத்தரும் தெய்வீகமுடையது. இது திருப்பாற்கடலிற் றிருமகளார் பிறக்கும்பொழுது பிறந்த பொருள்களுள் இதுவும் ஒன்றாம். இது தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் வேண்டும் உணவு தருவது. 'போனகம்' இது சாப்பாடு என்னும் பொருள் குறித்த வடசொல். 'அக் காமதேனு' எனப்பதில் அகரச்சுட்டு பண்டறிசுட்டு. செல்வத்தினும், கல்வியினும் தவம் சிறந்ததாதலினால் செல்வத்தாற் சிறந்த புவிராஜரும், கல்வியாற் சிறந்த கவிராஜரும் தேவரீரைத் தவராஜர் எனப் போற்றித் துதிப்பார் என்பார். 'புவிராஜர் கவிராஜர் தவராஜ னென்றுனைப் போற்றி ஜெய போற்றி யென்பர்' என்றார். இதனாலன்றே திருவள்ளுவரும்,

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக் கொண் டற்று" என்றார். இன்னும்,

"தவமே மேலா நெறியாகுந் தவமே சிவனார் தமைக்காட்டுந்
தவமே துறக்க மடைவிக்குந் தவமே நரனைத் தேவாக்குந்
தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்க னயனு மாக்குவிக்குந்
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ வென்று சாற்றினால்"

எனக் **காஞ்சிபுராணமும்,**

"தவந்தனின் மிக்கதொன் றில்லை தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானு மில்லையாற்
தவந்தனி னரியதொன் றில்லை சாற்றிடற்
றவந்தனக் கொப்பது தவம தாகுமே"

எனக் **கந்தபுராணமுங்** கூறுவது கொண்டுந் தெளியலாம்.

'ஞான கருணாகரமுகம்' இது ஞானத்திற்கும் கருணைக்கும் பிறப்பிடமாகிய முகம் என்பதாம். 'அகத்தின் அழகு முகத்திற் றெரியும்' என்ற



பழமொழிபோல் உள்ளத்தே இருக்கும் ஞானஜோதியும் கருணைப் பெருக்கமும் திருமுகமண்டலத்தே பிரகாசித்து விளங்கும் ஆதலினால் 'ஞான கருணாகரமுகங் கண்டபோதிலே நவநாத சித்தர்களுமுன் நட்பினை விரும்புவார்' என்றார். நவநாத சித்தர்கள் என்பது சித்திற் றலைவர்களாகிய ஒன்பது சித்தர்களை. அவராவர்;—(1) சத்தியநாதர், (2) சதோகநாதர், (3) ஆதிநாதர், (4) அநாதிநாதர், (5) வகுளிநாதர், (6) மதங்கநாதர், (7) மச்சேந்திரநாதர், (8) கடேந்திரநாதர், (9) கோரக்கநாதர் என்பவர்களாம். 'சுகரும்' 'வாமதேவரும்' ஞானத்தாற் சிறந்த மெய்ஞ்ஞானிகளாதலின் 'சுகர் வாமதேவர் முதன்ஞானிகளுமுனை மெச்சுவர்' என்றார். என்னை, 'நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போற்—கற்றாரைக் கற்றாரே காமுறுவர்'' என்றார். ஆதலின் என்க. 'பெற்றவட்கே தெரியும் அந்தப் பிள்ளைப்பேற்றின் அருமை' என்றபடி ஞானமுற்றவர்க்கே ஞானிகளின் அருமை தெரியுமாதலின் சுகர் வாமதேவர் முதலிய ஞானிகள் வணங்கிடுவர் என்றார். இனி அவ் இறைவனே மௌனதேசிக வடிவமாதலின் அந்த ஞானிகள் இலேசிலே தெரிந்து வணங்கிடுவர் என்பதும் ஒன்றாம்.

"எளிதோ' இது விடைதழுவிய வினா எம்போல்வார்க்கு எளிதல்ல என்பதாம். 'மதயானை' இது இரண்டாம்வேற்றுமை உருபுப்பயனும் உடன் தொக்கதொகை; மதத்தைஉடைய யானை என விரியும். 'வருமே' ஈற்று நின்ற ஏகாரம் தேற்றப்பொருளது. 'அமைந்ததென' இது 'அமைந்ததென்ன' என்பதன் தொகுத்தல் விகாரம். 'சொலுமே' இது 'சொல்லுமே' என்றதன் தொகுத்தல் விகாரம். ஈற்றேகாரம் தேற்றம். 'தவராஜனென்றனை' இதில் 'உனை' என்பது உன்னை என்பதன் தொகுத்தல் விகாரம். 'உனை மெச்சுவார்' இதில் 'உனை' என்பதும் 'உன்னை' என்பதன் தொகுத்தலே. சித்தர்களும், ஞானிகளும் என்றதன் ஈற்று உம்மைகள் உயர்வு சிறப்பு உம்மைகள். 'வானகமும்' 'மண்ணகமும்' என்றதன் ஈற்று உம்மைகள் எண்ணும்மைகள்.

7

[மௌனகுருவே! அடியேனின் குறைதீர தேவரீரின் பொன்னடி அர்ச்சிக்க வாவென்றழைப்பது எக்காலம் என்கின்றார்]

சருகு சலபக்ஷணிக ளொருகோடி யல்லால்
சகோரபட் சிகள்போலவே
தவள நில வொழுகமிர்த தாரையுண் டழியாத
தன்மைய ரனந்தகோடி
இருவினைக ளற்றிரவு பகலென்ப தறியாத
ஏகாந்த மோனஞான
இன்பநிட் டையர்கோடி மணிமந்த்ர சித்திநிலை
எய்தினர்கள் கோடிசூழக்

குருமணி யிழைத்திட்ட சிங்கா தனத்தின்மிசை
கொலுவீற் றிருக்குநின்னைக்
கும்பிட் டனந்தமுறை தெண்டனிட் டென்மனக்
குறையெலாந் தீரும்வண்ணம்
மருமல ரெடுத்துனிரு தாளையர்ச் சிக்கவெனை
வாவென் றழைப்பதெந்நாள்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம்-மந்திரத்தைப்போதிக்கும், குருவே-குருவே!, யோகம்-யோகமார்க்கத்தின், தந்த்ரம் - தந்தரங்களைப்போதிக்கும், குருவே-குருவே!, மூலன் - திருமூலரின், மரபில் - சிஷ்யமரபில், வரு - வந்தருளிய, மௌன-மௌனானந்தத்தோடுகூடிய, குருவே - குருவே!, சருகு - காய்ந்து உலர்ந்த இலைகளையும், சலம்-நீரையும், பக்ஷணிகள்-உண்டுஜீவத்துத் தவஞ்செய்வோர்கள், ஒரு-ஒரு, கோடி - கோடிபேர்களும், அல்லால்-அவர்களல்லாமல், சகோரம்-சகோரம் என்னும், பக்ஷிகள் - பறவைகள், போலவே-ஒப்பவே, தவளம்-வெண்மைநிறம் பொருந்திய, நிலவு-சந்திரனிடத்தே, ஒழுகு - ஒழுகுகின்ற, அமிர்தம்-அமிர்தத்தின், தாரை-தாரையை, உண்டு-உண்டு, அழியாத-காயம் அழியாத, தன்மையர் - தன்மையை யுடையவர்களாகிய யோகீச்சுரர்கள், அனந்தம்-கணக்கற்ற, கோடி - கோடி, (அவர்களல்லாமல்) இரு-இரு, வினைகள்-வினைகளும், அற்று-நீங்கி, இரவு - இரவும், பகல்-பகலும், என்பது-என்பதை, அறியாத - உணராத, ஏகாந்தம் - தனிமையாயிருக்கும், மோனம்-மௌனத்தோடுகூடிய, ஞானம்-ஞானத்தை அடைந்த, இன்பம்-பேரின்பத்துய்க்கும், நிட்டையர் - நிட்டானுபூதியர், கோடி - கோடியும், மணி-மணியும், மந்த்ரம்-மந்திரமும், சித்திநிலை-சித்திநிலையை, எய்தினர்கள் - பெற்றவர்கள், கோடி-கோடியும், சூழ - சூழ்ந்துபோற்றிநிற்க, குரு-அழகிய, மணி-ரத்தினங்கள், இழைத்திட்ட - பதித்த, சிங்காதனத்தின் - சிம்மாசனத்தின், மிசை-மேலே, கொலு-கொலுவில், வீற்றிருக்கும் - சிறப்புற எழுந்தருளி இருக்கும், நின்னை-தேவரீரை, கும்பிட்டு - கைகுவித்து வணங்கி, அனந்தம் - அநேகம், முறை-தரம், தெண்டனிட்டு-நமஸ்காரஞ்செய்து என்-அடியேனின், மனம்-மனத்தின்கண் உள்ள, குறை-குறைகள், எல்லாம்-எல்லாவற்றையும், தீரும்-ஒழியும், வண்ணம் - விதம், மரு - வாசனைபொருந்திய, மலர் - புஷ்பங்களை, எடுத்து-எடுத்து, உன்-தேவரீரின், இரு-இரண்டாகிய, தாளை - திருப்பாதங்களை, அர்ச்சிக்க-அர்ச்சனைசெய்ய, எனை-அடியேனை, வா-வருவாயாக, என்று-என்று, அழைப்பது-அழைத்தருள்வது, எ-எந்த, நாள்-நாளோ; எ-று.

(வி-ரை) தவஞ்செய்வோர்கள் உணவாதிகளை ஒழித்தும் ஓரோர் சமயங்களில் சருகுகளையும் சலத்தையும் உண்டிருப்பர் ஆதலின், கணக்கற்ற தவத்தினர் கூடியிருக்கும் சிறப்புக் கூறுவார். 'சருகுசல பக்ஷணிக ளொரு



கோடி' என்றார். இது இயல்புநவிற்சி. துறவிகளாகிய தாபதர் சருகருந்துவது என்னெனின் உலகத்தை விட்டவர்கள் உலகத்தை விட்ட பொருளை உண்ணல் வேண்டும் என்னும் நியமத்தால் சருகு அருந்துவதும் கனி அருந்துவதும் என்க. சகோரப்புள் சந்திரனின் நிலாக்கதிர்களை உண்டு வாழ்கின்றவென்று கூறுவது கவிமரபு ஆதலின் 'சகோர பக்ஷிகள் போலவே' என்றார் என்க. யோகானந்த நிட்டையில் இருப்பவர்கள் மதிமண்டலத்தொழுகும் அமுதுண்டு யோகநிட்டையில் இருக்கின்றனர் ஆதலின் 'தவளநில வொழுகமிர்த தாரையுண் டழியாத தன்மையர்' என்றார். 'தவளம்' இது வடசொல்; வெண்மை என்னும் பொருள் குறித்தது. இது அமுதுக்கு இயல்பு கூறவந்த அடைமொழியாகவந்தது. 'இனிது இனிது ஏகாந்தம் இனிது' என்று **ஔவைப்பிராட்டி** கூறியாங்கு தனித்து ஞானயோகத்துத் தன்னை மறந்து சச்சிதானந்தமயமாக நிற்றவர். நல்வினை தீவினையும் சகல கேவலங்களும் இல்லையாதலினால், 'இருவினைகளற்று இரவு பகல் என்பதறியாத வேகாந்த மோனஞான இன்ப நிஷ்டையர்' என்றார். இதனாலன்றோ **பட்டினத்தடிகளும்**,

"அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற்
றிறந்தான் பெருமையை யென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே"

என்று திருவாய்மலர்ந்தருளினர்.

'சித்திநிலை' என்றது அட்டமாசித்தி நிலையை. 'குருமணி' என்றது அழகிய மணி, நிறம்வாய்ந்த மணி, மாணிக்க மணி எனப் பொருள்தர நின்றது. 'இழைத்தல்' இது கல் பதித்தலை உணர்த்துஞ்சொல். இதனை குயிற்றல் என்னலுமாம். சிங்கஞ் சுமந்ததுபோலச் செய்துள்ள ஆதனம் ஆதலின் 'சிங்காதனம்' எனப் பெயர் உண்டாயிற்று. இது அரசர்க்கும் அவரினுஞ் சிறந்தார்க்கும் உரியதாகும். இதனை அரிஆசனம் எனவுங் கூறுவர். (அரி-சிங்கம்) 'நின்னை' என்றது மௌனதேசிகரை. 'அனந்தம்' இது ந+அந்தம் என்னும் வடசொல். எல்லை அற்றது கணக்கற்றது என்னும் பொருளது. 'தண்டனிடல்' இது புவியில் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்குதலைக் களைக் குறிக்கும். 'மருமலர்' இது இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. வாசனையையுடைய மலர் என விரியும். இச்செய்யுளில் வந்த கோடி என்னுஞ் சொற்கள் எல்லாம் எண்ணைக் காட்டாது ஏராளத்தைக் காட்ட வந்தன. 'ஒழுகமிர்தம்' இது ஒழுகுகின்ற அமிர்தம், ஒழுகின அமிர்தம், ஒழுகும் அமிர்தம் என முக்காலத்திற்கும் பொதுவாக வந்ததனால் வினைத்தொகையாம். என்னை? "காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" என்றாராதலின் என்க. 'இழைத்திட்ட' இதில் இட்ட என்பது துணைவினை. 'குறை எல்லாம்' இதில் 'எல்லாம்' என்பது எலாம் என வந்தமையின் தொகுத்தல் விகாரம்.

மௌனகுருவே! அகங்காரத்துடன் விலகி நில்லாது அடியேனால் போர்செய்ய முடியுமோ தேவரீர் கருணைபுரிந்து அருளவேண்டுமே என்கின்றார்

ஆங்கார மானகுல வேடவெம் பேய்பாழ்த்த
ஆணவத் தினும்வலி துகாண்
அறிவினை மயக்கிடும் நடுவறிய வொட்டாது
யாதொன்று தொடினும்அது வாய்த்
தாங்காது மொழிபேசும் அரிகரப் பிரமாதி
தம்மொடு சமானமென் னுந்
தடையற்ற தேரிலஞ் சுருவாணி போலவே
தன்னிலசை யாது நிற்கும்
ஈங்கா ரெனக்குநிகர் என்னப்ர தாபித்
திராவணா காரமாகி
இதயவெளி யெங்கணுந் தன்னரசு நாடுசெய்
திருக்கும்இத னொடெந்நேரமும்
வாங்கா நிலாஅடிமை போராட முடியுமோ
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

**(ப-ரை)** மௌனம்-அடியேனுக்கு மௌனத்தை, உபதேசம்-உபதேசஞ் செய்தருளிய, குருவே-குருவே!, மந்த்ரம் - மந்திரத்தை உபதேசித்தருளிய, குருவே-குருவே!, யோகம்-யோகமார்க்கத்தின், தந்த்ரம் - தந்திரங்களை உப தேசித்தருளிய, குருவே - குருவே!, மூலன் - திருமூலரின், மரபில் - சிஷ்ய மரபில், வரு - வந்தருளிய, மௌனம் - மௌனானந்த வடிவாகிய, குருவே-குருவே!, ஆங்காரம் - அகங்காரம், ஆன - ஆகிய, குல - குலத்த, வேட-வேடரைப்போன்ற, வெம் - கொடிய, பேய் - பேயானது, பாழ்த்த - பாழாகிய, ஆணவத்திலும் - ஆணவப்பேயைக் காட்டிலும், வலிது - வலிமையுடையதாக இருக்கின்றது, காண்-காண், அறிவினை-அடியேனின் அறிவை, மயக்கிடும்-மயக்கிவிடும், நடு - நடுவு நிலைமையை, அறிய - அறிந்துகொள்ள, ஒட்டாது-விடாது, யாது-எது?, ஒன்று-ஒருபொருளை, தேடினும் - தேடினாலும், அது-அவ் அகங்காரமானது, ஆய் - தானேயாகி, தாங்காது - சகிக்காதபடி வந்து, மொழி-வார்த்தைகளை, பேசும் - பேசும், அரி - விஷ்ணு, அரன் - ருத்திரன், பிரம்மா - பிரமன் ஆதி முதலியவர்கள், தம் - தங்கள், ஒடு - உடன், சமானம்-நான் சமானம், என்னும்-என்று கூறுகிற்கும், தடை-தடை, அற்ற-இல்லாத, தேரில்-இரதத்தில், அம்-அழகிய, கறு-கடை, ஆணி-ஆணியை, போல்-போல, தன்னில்-தன்னிலையில், அசையாது-அசைவுபடாது, நிற்கும் - நின்றிருக்கும், ஈங்கு - இந்த உலகத்தில், எனக்கு - எனக்கு, நிகர் - சமத்துவம், ஆர் - யார்,



என்ன-என்று, பிரதாபித்து-பெருமை பேசி, இராவணாகாரம்-இராவண ரூபம் கொண்டு, இதயம்-மன, வெளி-ஆகாயம், எங்கணும்-எவ்விடத்தும், தன்னரசு-தன்னரசு, நாடு - நாடாக, செய்து - செய்துகொண்டு, இருக்கும் - இருக்கும், இதனொடு - இதன் உடனே, எ - எந்த, நேரமும் - நேரமும், வாங்கா - விலகி நிலாது-நில்லாமல், அடிமை-தேவரீரின் அடிமையாகிய அடியேன், போராட-போர்செய்ய, முடியுமோ-கூடுமோ? முடியாது எ-று

**(வி-ரை)** 'அகங்காரம்' என்றது கர்வத்தை. 'ஆணவம்' என்றது மூல மலத்தை. 'அகங்காரத்தை' வேடர் ஆக ஈண்டு உருவகப்படுத்தினார். ஈண்டு 'வேடர்' என்றது ஆறலைக்குங் கள்வரை. இதனை 'வேடலன் வேந்து மலையன்' என்ற **பெரியார்** வாக்கானும் அறிக. 'நடுவறிய வொட்டாது' என்றது சத்தியத்தை. நடுநிலையை அறிய ஒட்டாது என்பதாம். தராசில் நடுமுள் ஏற்றத்தாழ்வு காட்டியும் நடுநின்றும் காட்டுவதுபோல் நியாயத்தை, உண்மையை எடுத்துக் கூறலை நடுக்கூரல் என்றும், நியாயத்தை நடு என்றும் கூறுவர். இது உவமைஆகுபெயர். அரி, அரன், பிரமன் இம்மூவரும் முறையே காத்தல், துடைத்தல், படைத்தல் என்னும் முத்தொழிலுடையார். இவர் தவத்தால் பேறு பெற்றவர்கள். தேவர்களும் சிறந்தவர்கள். இவர்களும் தனக்குச் சமமல்ல. நாம் அவர்களினும் உயர்ந்துள்ளோம் என எண்ணச் செய்யும் என்பதுகொண்டே, 'அறிவினை மயக்கிடும் நடுவறிய வொட்டாது யாதொன்று தொடினு மதுவாய்த் தாங்காது மொழிபேசு மரிகரப் பிரமாதி தம்மொடு சமான மென்னும்' என்றார். இதனை,

"தன்னை யுயர்த்தெண்ணல் தற்கோ டெவருமிலர்
பின்னைவெலு வோமென்றே பசிக்குதல்—முன்னையறி
வெல்லா மயக்கிடுதல் ஈசனையு மெண்ணுமை
பொல்லாவாங் காரத்தின் போர்"

என்ற **வெண்பாவா**லும் அறியலாம்.

இதுகொண்டன்றோ **பெரியார்**களும் 'ஆங்காரத்தைச் சுட்டறுத்து' என்றார். 'அரி' என்றது விண்டுவை. 'அரன்' என்றது உருத்திரனை. 'பிரமாதி' என்றது பிரம்மா முதலியவர்களை. பிரம்மன் முதலியவர்களாவது பிரமன் இந்திரன் திக்குப்பாலகர் முதலிய தேவர்களை. 'தடையற்றதேரில்' என்றது ஓடுவதில் யாது தடையில்லாத தேர் என்பதாம். 'அஞ்சுறு ஆணி' இது வேலின் கடையாணியைக் குறிக்கும். 'அஞ்சுறு ஆணி' இது, அச்சுறு ஆணி என்பது, அதாவது-மெய்ப்பொருளாகிய சிவம், அது, அச்சுப்போல ஆன்மாவை மலவாசனைபற்றிப் பிறழவிடாமையின் அங்ஙனம் உருவகஞ் செய்யப்பட்டது. இதைச் 'சுள்ளாணி' என்பர். சுள்ளாணி யின்றேல் மலைபோன்ற தேரும் ஓடாது. இதனை,

"உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து"

என்ற **திருக்குறளா**லும் அறியலாம்.

இராவணன் அகங்காரத்தால் மிக்கவன் ஆதலினாலும், அவன் நிறம் கருப்பு, இருட்டுநிறம் ஆதலினாலும் கர்வத்திற்கவனை ஒப்பிடுவார் 'இராவணாகாரமாகி' என்றார். கர்வத்தை இருட்டாக உருவகப்படுத்துவது கவி மரபு ஆதலின் இராவணனைப்போலும் இருண்டது என்பார் 'இராவணாகாரமாகி' என்றார் என்னலும் ஆம். 'இதயவெளி' என்றது மன ஆகாயத்தை. ஆகாயத்தின் அம்சம் மனம் ஆதலினாலும், மனத்தினின்றும் ஆகாசம் பிறப்பதாலும் 'இதயவெளி' என்றார் என்ப. 'தன்னரசு நாடு செய்து' இது தன்னையே செலுத்தி ஆளும் 'அரசாகி' என்பதாம். 'வாங்கா நிலாது' என்றது ஈண்டு நீங்கி நில்லாது என்ற பொருளதாம். மோனமூர்த்தியாகிவந்த குரு 'சும்மா இரு' எனப் போதித்தாராதலினால் 'மௌனோபதேச குருவே' என்றார். 'பாழ்த்த' இது இறந்தகாலப் பெயரெச்சம். 'ஆணவத்தினும்' இதில் 'இன்' உருபு எல்லைப்பொருளில் வந்தது. 'வலிதுகாண்' இதில் 'காண்' முன்னிலையசை. 'மயக்கிடும்' இதில் 'இடும்' துணைவினை. 'மயக்கும்' என்பதே பொருளாம். ஒட்டாது+யாதொன்று = ஒட்டாதியாதொன்று.

"உயிர்வரி னுக்குறண் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யா முற்றுமற் றொரோவழி"

என்ற இலக்கணப்படி ஈற்று உகரத்திற்குமுன் யகரம்வர இகரமாயிற்று.

ஆர்+எனக்கு = ஆரெனக்கு; இதில் ஆர் என்பது யார் என்னும் வினைப் பெயரின் மரூஉ. 'எங்கணும்' எ + கண்ணும் = எங்கணும், 'கணும்' இது கண்ணும் என்பதன் தொகுத்தல் விகாரம். எ+நேரம் இது எந்நேரம் எனப் புணர்ந்து எந்நேரமும் எனத் தொகுத்தல் விகாரம்பெற்று நின்றது. இது சந்தநோக்கி என்க. 'வாங்கா' இது 'வாங்காது' என்பதன் கடைக் குறை விகாரம். 'முடியுமோ' இது முடியாது என்னும் பொருள் தந்து நிற்றலின் விடை தழுவிய வினா. 'ஈங்கார்' இது இங்கு+ஆர் = ஈங்கார் என ஆயது. ஈண்டு சுட்டு நீண்டு நின்றது. இது 'ஈறுபோதல்' என்ற இலக்கணத்தால் என்க. 9

மௌனகுருவே! பாழ்ஞ்சிந்தையுடைய அடியேன் முத்திமார்க்கம் உறுவது எப்படி? தேவரீரின் உபதேசமொழியை மலையிலக்கக் கோண்டுளேன் அருள்புரியவேண்டும் என்கின்றார்

பற்றுவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப்
பற்றியுழல் கிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தை பெற்றநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறி யேன் துவிதமோ
சிற்றறிவ தன்றியும் எவரேனும் ஒருமொழி
திடுக்கென் றுரைத்தபோது



சிந்தைசெவி யாகவே பறையறைய வுதரவெந்
தீநெஞ்சம் அளவளாவ
உற்றுணர உணர்வற்றுன் மத்தவெறி யினர்போல
உளறுவேன் முத்திமார்க்கம்
உணர்வதெப் படியின்ப துன்பஞ் சமானமாய்
உறுவதெப் படியாயினும்
மற்றெனக் கையநீ சொன்னவொரு வார்த்தையினை
மலையிலக் கெனநம்பினேன்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

(ப-ரை) மந்த்ரம் - அடியேனுக்கு மந்திரோபதேசஞ் செய்தருளிய, குருவே-குருவே!, யோகம் - யோகமார்க்கத்தின், தந்த்ரம் - தந்திரங்களை உபதேசித்தருளிய, குருவே-குருவே!, மூலன்-திருமூலரின், மரபில்-சிஷ்ய பரம்பரையிலே, வரு - வந்தருளிச்செய்த, மௌனம் - மௌனானந்த வடிவமாகிய, குருவே-குருவே!, பற்று - பற்றுவதற்கு உரிய இடம், வெகு - அநேக, விதம்-வகைகள், ஆகி-ஆகி, ஒன்றை-ஒருபற்றை, விட்டு-நீக்கி, ஒன்றனை - மற்றொரு பற்றினை, பற்றி-பிடித்து, உழல்-உழலுகின்ற, கிருமி-புழுவை, போல-போல, பாழ்ம்-பாழாகிய, சிந்தை-மனத்தை, பெற்ற - பெற்றுள்ள, நான் - அடியேன், வெளியாக-வெளிப்படையாக, நின்-தேவரீரின், அருள் - திருவருளின் திறத்தைப், பகர்ந்தும் - புகழ்ந்து பேசியும், அறியேன் - அறியேன், துவிதமோ-துவிதக் கொள்கையே, சிறு - சிறிய, அறிவு - அறிவு உடைமையாகும், அது-அது, அன்றியும் - அல்லாமலும், எவரேனும் - யாவர் ஆயினும், ஒரு - ஒரு, மொழி-சொல்லை, திடுக்கென்று-திடுக்கென்று, உரைத்த-சொல்லிய, போது-பொழுது, சிந்தை-மனமே, செவி-காது, ஆகவே-ஆகவே, பறை-பறை, அறையவே-அடிக்கவே, வெம்-கொடிய, உதரம்-வயிற்றின்கண் உள்ள, தீ-நெருப்பு, நெஞ்சம்-மனத்தினிடத்தே, அளவளாவ-கலக்க, உற்று-பொருந்தி, உணர-அறிய, உணர்வு-அறிவு, அற்று-இல்லாதவனாகி, உன்மத்த-பித்துக்கொண்ட, வெறியினர்-வெறிகொண்டவர்கள், போல - போல, உளறுவேன் - பின்னுக்கு முன் முரணாகத் தாறுமாறாகப் பேசுவேன், (இத்தகைய அடியேன்) முத்தி-மோக்ஷத்தின், மார்க்கம்-வழியை, உணர்வது - அறிவது, எப்படி - எந்த விதத்தால், இன்பம்-இன்பமும், துன்பம் - துன்பமும், சமானமாய் - சமத்துவமாக, உறுவது-பொருந்துவது, எப்படி-எந்த விதத்தால், ஆயினும்-ஆனாலும், ஐய-ஐயனே!, நீ - தேவரீர், எனக்கு - அடியேனுக்கு, சொன்ன - குருவாக வந்து உபதேசித்தருளிய, ஒரு-ஒப்பற்ற, வார்த்தையினை-உபதேசமொழியை, மலை-மலையை, இலக்கென-குறியாகக் கொண்டதுபோல, நம்பினேன்-நம்பியிருக்கின்றேன், அருள்புரிவாயாக எ-று.

(வி-ரை) புழு எவை எவை தன் நேர்ப்படுகிறதோ அவை அவைகள் எல்லாவற்றையும் பற்றும் இயல்புடையது. இன்னும் ஒன்றைப்பற்றி

நிற்கும்புழு அந்தப்பற்றை விடவேண்டியிருந்தால் மற்றொன்றைப் பற்றிக் கொண்டன்றிவிடாது. மனதும் அத்தகையதே. இதனானேயே இப் பெரியாரும், "பற்றிவெகு விதமாகி யொன்றைவிட் டொன்றனைப் பற்றியுழல் கிருமிபோலப் பாழ்ஞ்சிந்தை பெற்றநான்" என்றார். 'நின் அருள்' என்றது மௌனதேசிகரின் திருஅருளை. அத்துவித அறிவு துவித அறிவினும் சிறப்புடையது ஆதலினாலும் துவித அறிவு அத்துவித அறிவினுங் குறைவு உடையது ஆதலினாலும் 'துவிதமோ சிற்றறிவது' என்றார். அத்துவிதம் இரண்டல்லாமை, துவிதம் இரண்டாந் தன்மை என்பது ஈண்டறியத் தக்கதாகும். 'ஒருமொழி' என்றது தன் கருத்துக்குமாறாகிய மொழியை. இனி. 'ஒப்பற்ற ஞானமொழி' என்னும் ஆம். 'உதாவெந்தீ' என்றது உதராக்கினியை; இதனை வயிற்றெரிச்சல் என்பதுங் காண்க. 'அளவளாவ' இது கலக்க என்னும் பொருளது. 'உற்றுணர்தல்' இது கவனித்து அறிதல் ஆராய்ந்து அறிதல் என்னும் பொருளது. 'உன்மத்தம்' என்றது பயித்தியம் என்னும் பொருளது. 'முத்திமார்க்கம்' என்றது சைவசித்தாந்த மார்க்கத்தை. இதனானன்றோ **மணிவாசகரும்,**

> "முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
> பத்திநெறி யறிவித்து"

என்றார்.

'இன்பதுன்பஞ் சமானமா யுறுவதெப்படி' என்றது இருவினை ஒப்பை. இருவினை ஒப்பு மலபரிபாகம் உற்றவர்க்கே சத்திநிபாதமும் முத்தியும் கைகூடும் ஆதலினால் 'முத்திமார்க்கம் உணர்வதெப்படி யின்பதுன்பஞ் சமானமா யுறுவதெப்படி' என்றார். 'நீ சொன்னவொரு வார்த்தை' என்றது மௌனகுருவாக வந்து உபதேசித்த ஞானமொழியை. அம்மொழி 'சும்மாஇரு' என்ப தென்பர். தேவரீரின் உபதேசமொழியை உறுதிமொழியாக நம்பியுளேன் என்பார் 'நீ சொன்ன வார்த்தையினை மலையிலக்கென நம்பினேன்' என்றார். துளக்கமின்மை, சலியாமைகட்கு மலை உவமம் ஆயிற்று. 'சிற்றறிவு' இது சிறுமை+அறிவு என்பது சிற்றறிவு என ஆயது; 'சிறுமை' என்னும் பண்புப்பெயர் விகாரம்பெற்றது. இதனை, "ஈறுபோதல் இடை உகரமிய்யாதல் தன்னொற்றிரட்டல் முன்னின்ற மெய் திரிதல் இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே" என்ற **இலக்கணத்தால்** அறியலாம். 'திடுக்கென்று' இது விரைவுபற்றிவந்த ஒலிக்குறிப்பு. 'முத்திமார்க்கம்' இது முத்தியாகிய மார்க்கம், முத்திக்கு மார்க்கம், என இரு பொருளில் மயங்கி நின்றது. 'இன்பதுன்பம்' இது இன்பமும் துன்பமும் என விரிதலின் உம்மைத்தொகை. 'ஐய' இது விளியுருபு ஏற்றபெயர். அண்மை விளி. 'என' இது என்ன என்பதன் தொகுத்தல் விகாரம். நம்பினேன் இது இறந்தகாலத் தன்மைவினைமுற்று.





## கருணாகரக்கடவுள்

கருணாகரக்கடவுளே! தேவரீரைப் பகவானே! சம்பு! சிவ! சங்கர! சர்வேச! என்று அடியேன் எப்பொழுதும் நினைவேனோ என்கின்றார்

நிர்க்குண நிராமய நிரஞ்சன நிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷ்கள அசங்கசஞ் சலரகித நிர்வசன
நிர்த்தொந்த நித்தமுக்த
தற்பரவிஸ் வாதீத வ்யோமபரி பூரண
சதானந்த ஞானபகவ
சம்புசிவ சங்கர சர்வேச என்றுநான்
சர்வகா லமும்நினைவனோ
அற்புத அகோசர நிவிர்த்திபெறும் அன்பருக்
கானந்த பூர்த்தியான
அத்துவித நிச்சய சொரூபசா க்ஷாத்கார
அநுபூதி யநுகூதமுங்
கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற்
கண்ணூ டிருந்தகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) அற்புத-ஆச்சரியகரமானவனே!, அகோசர - யாவர்புத்திக்கும் எட்டாதவனே!, நிவர்த்தி - நிவர்த்தி மார்க்கத்தை, பெறும்-பெறும், அன்பருக்கு-அன்பர்களுக்கு, ஆனந்தம் - பேரின்பம், பூர்த்தி-நிறைவு, ஆன-ஆகிய, அத்துவிதம்-அத்துவிதம் நிலையாகிய, நிச்சய - உண்மையினை உடையவனே!, சொரூபம்-பரப்பிரமசொரூபத்தையும், சாக்ஷாத்காரம் - அதன் பிரத்தியக்ஷத்தையும், அனுபூதி - அதனின் அனுபவசித்தியையும், கற்பனை - பொய்மை, அற-அகல, காண - காணுமாறு, மு-மூன்று, கண்ணுடன் - கண்களுடனே, வட - வடக்கின்கண்ணுள்ள வடவாலமரத்தின், நிழற் கண் ஊடு - நிழலிலே, இருந்த-எழுந்தருளி இருந்த, குருவே-குருவே!, கருது-நினைத்தற்கு, அரிய-அரிதாகிய, சித்து-ஞான, சபையில்-சபையிலே, ஆனந்தம்-ஆனந்தமயமாகிய, நிர்த்தம்-திருநடனம், இடு-செய்கின்ற, கருணை-கருணைக்கு, அகரம்-பிறப்பிடமாக இருக்கின்ற, கடவுளே-கடவுளே!, நிர்க்குண-குணம் அற்றவனே!, நிராமய-நோயற்றவனே!, நிரஞ்சன-களங்கம் இல்லாதவனே!, நிராலம்ப-பற்றுக்கோடு ஒன்று இல்லாதவனே!, நிர்விஷய-விஷயங்களால் பற்றப்படாதவனே!, கைவல்யம்-மோக்ஷரூபம், ஆம்-ஆகிய, நிஷ்கள-கலாசூன்யனே!, அசங்க-சங்கரகிதனே!, சஞ்சலம்-துயரம், ரகித-அற்றவனே!, நிர்வசன-வாக்குக்கு எட்டா

தவனே!, நிர்தொந்த - பற்றற்றவனே!, நித்த - என்றும் உள்ள சத்தியனே!, முத்த-பாசத்தினின்றும் விடுபட்டவனே!, தற்பர - தற்பரனே!, விஸ்வாதீத-உலக முதல்வனே!, வ்யோமம்-பரமாகாசத்தினிடத்தே, பரிபூரண-நிறைவா யுள்ளவனே!, சதா - எப்பொழுதும், ஆநந்த - ஆநந்தத்தை உடையவனே!, ஞான-மெய்ஞ்ஞானத்தை உடையவனே!, பகவ-பகவானே!, சம்பு-சம்புவே!, சிவ-சிவனே!, சங்கர-சங்கரனே!, சர்வ-எல்லாவற்றிற்கும், ஈசா - ஈச்சுரனாக இருப்பவனே!, என்று - என்று சொல்லித்துதித்து, நான்-அடியேன், சர்வ-எல்லா, காலமும்-காலமும், நினைவனோ-நினைப்பேனோ? எ-று.

(வி-ரை) இப்பதிகமாகிய பத்துச்செய்யுளும், 'கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு கருணாகரக் கடவுளே' என்றதனை மகுடமாக உடைமையினால் இதற்குக் **கருணாகரக்கடவுளே** எனப் பெயர் ஆயிற்று. இறைவன் குணாதிதன் ஆதலினால் 'நிர்க்குணன்' என்றார். இதிலும் பின்வருவனவற்றிலும் 'நிர்' என்னும் அடை 'இல்லாத' என்னும் பொருளது. 'நிராமயன்' என்றது நோய் இல்லாதவனே என்னும் பொருளது. யோனிவாய்ப்பட்டுப் பிறந்தார்க்கே நோய் உண்டாதலினாலும் இறைவன் அவ்வாறு யோனியினின்றும் பிறவாதவன் ஆதலினாலும் 'நிராமய' என்றார். இதனை, "எல்லார் பிறப்பு மறிப்பும் இயற்பாவல" என்ற செய்யுளாலும் அறியலாம். இறைவன் களங்கரகிதன் ஆதலினால் 'நிரஞ்சன' என்றார். இறைவன் எல்லார்க்கும் பற்றுக்கோடாய் தான் ஒரு பற்றுக்கோடற்றவனாக இருத்தலின் 'நிராலம்ப' என்றார். இறைவனை விஷயாதிகள் பற்றாமையிலும் விஷய வாதனை அற்றவன் ஆதலினாலும் 'நிர்விஷய' என்றார். 'கைவல்யம்' என்றது உயர்ந்தது என்னும் பொருளது; அதாவது மோக்ஷமாக இருப்பவன் என்பது பொருளாம். இறைவன் இணையிலி, பிணையிலி ஆதலின் எச்சங்கத்தையும் சேராதவன் இதுபற்றியே 'அசங்க' என்றார். இதில் அகரம் எதிர்மறைப் பொருளது. இறைவன் இன்பதுன்பம் இல்லாதவன், இன்பதுன்ப அனுபவமுடையவர்க்கே சஞ்சலம் உண்டாதலின் இறைவன் அது இல்லாதவன் ஆதலின் 'சஞ்சலரகித' என்றார். இறைவன் சொல்லுக்கு எட்டாதவன் சொல்லால் தெரிக்க ஒண்ணாதவன் ஆதலினால் 'நிர்வசன' என்றார். இறைவன் இயற்கையாகவே பாசபந்தங்களில் நீங்கியவன் ஆதலின் 'நிர்த்தொந்த' என்றார். இறைவன் சத்தியப்பொருள் என்றும் உள்ளவன் ஆதலினால் 'நித்த' என்றார். இறைவன் எல்லாமலங்களாலும் பற்றப்படாதவன், மாயையினின்று விடுபட்டவன் ஆதலினால் 'முத்த' என்றார். 'முத்தன்' விடுபட்டவன் என்பது பொருளாம். இறைவன் தானே மேலானவனாய்த் தனக்கு ஒரு மேல் இல்லாதவன் ஆதலின் 'தற்பர' என்றார். இறைவன் உலகங்களுக்கெல்லாம் முதல்வன் ஆதலின் 'விஸ்வாதீத' என்றார்.

இறைவன் ஆகாசமயமாகவும் பரமாகாசத்தில் வியாபியாய் இருக்கின்றானாதலின் 'வியோமபரிபூரண' என்றார். இறைவன் ஆனந்தமயன், ஆனந்த வடிவன் ஆதலின் 'சதானந்த' என்றார். இறைவன் எப்பொழுதும் என்ஞான்றும் ஆனந்தமயமாகவே இருப்பவன் என்பது உணரத்தக்கது.



இறைவன் ஞானசொரூபி ஞானவடிவன் ஆதலினால் 'ஞான' என்றார். ஞானமே இறைவன் வடிவம் என்பது அறியத்தக்கது. ஞானமே அறிவு இதனாலன்றோ **பெரியார்களும்**, "அறிவுதனைக் கொண்டு அறிவுதனைக் கண்டறிவாகி அமர்ந்தான்" என்றனர்.

இறைவன் ஐசுவரியம், வீரியம், புகழ், திருஞானம், வைராக்கியம் ஆறும் உடையவன் ஆதலின் பகவன் எனப் பெற்றான். இதுகொண்டே,

> "அகர முதல வெழுத்தெல்லா மாதி
> பகவன் முற்றே யுலகு"

என்றார் **திருக்குறள்** பாயிரத்தும்.

இறைவன் ஆன்மாக்களுக்குச் சுகத்தைத் தருவோன் ஆதலின் 'சம்பு' எனப் பெற்றான். இனிச் சுசரூபியாக இருப்பவன் என்பதுமாம். இறைவன் உயிர்களுக்குச் சுகத்தைச் செய்பவன் ஆதலின் 'சங்கரன்' எனப் பெற்றான். இறைவன் எல்லார்க்கும் எல்லாவற்றிற்கும் ஈச்சுரன், எல்லா ஐசுவரியத்தையும் உடையன் ஆதலின் 'சர்வேசன்' எனப் பெற்றான். சர்வ-எல்லாவற்றிற்கும், ஈச்சுரன்-ஈஸ்வரனாக இருப்பவன் என்பது பொருளாம். இனி, எல்லா ஐசுவரியத்தையும் உடையன் என்பதுமாம். இறைவனை இடைவிடாது தயிலதாரைபோல் என்றும் பத்திசெய்து துதிக்க வேண்டுமாதலின் 'சர்வ காலமும் நினைவனோ' என்றார். இறைவன் புதுமைக்கும் புதுமையாய் இனி வரப்போகும் புதுமைகளுக்கெல்லாம் புதுமையாக இருக்கின்றான் ஆதலின் 'அற்புத' என்றார். இறைவன் புத்தி கோசரங்களுக்கெல்லாம் எட்டாதவன், புத்திக் கெட்டாதவன், தத்துவங்களெல்லாம் கடந்தவன் ஆதலின் 'அகோசர' என்றார். எல்லாத் தத்துவங்களையும் அறிந்து தன்னையும் அறிந்து தலைவனையும் அறிந்து நிவர்த்திமார்க்கம் பெற்றாருக்கு இன்பமயமாக விளங்குபவன் ஆதலின் 'நிவர்த்திபெறும் அன்பருக்கு ஆனந்த பூர்த்தியான அத்துவித' என்றார். இறைவன் இரண்டல்லாதவன் ஆதலின் 'அத்துவித' என்றார். அத்துவித உண்மையன் ஆதலின் அத்துவித நிச்சயன் என்றார்.

'சொரூப சாக்ஷாத்காரம்' என்றது பரப்பிரம்ம சுரூபமுடைமையை. 'அனுபூதி' என்றது அதன் பிரத்தியக்ஷத்தை. 'அனுபூதி யனுசூதமும்' என்றது பரப்பிரம சொரூபவத்தின் அனுபவசித்தியை. 'கற்பனை' என்றது பொய்யை. என்னை? இல்லாததைப் பொய்யாய்க் கட்டிப் புனைவதே கற்பனையாதலின் என்க. இதனானன்றோ **பெரியாரும்** இறைவனை 'கற்பனை கடந்த தற்பரனே' எனத் துதித்ததும் என்பதறிக. இறைவனுக்குத் திரிநேத்ர முண்டாதலினாலும் சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களுமே இறைவனுக்குக் கண்ணாகலானும் 'முக்கணுடன்' என்றார். 'வடநீழற் கண்ணா டிருந்த குருவே' என்றது தக்ஷிணாமூர்த்தத்தை. இறைவன் சனகாதி முனிவர்க்கு ஞானோபதேசஞ் செய்ய வடஆலநீழலில் தக்ஷிணாமூர்த்தமாக எழுந்தருளி இருந்தார் என்பது புராணம் ஆதலின், 'கற்பனை யறக்காண முக்கணுடன் வடநிழற் கண்ணா டிருந்த குருவே' என்றார். 'கருதரிய'

என்றது எண்ணற்கரிதாகிய என்ற பொருளதாம். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்றதனால் கருதரிய, சொல்லரிய, காணரிய என்பதூஉம் பெறப்படும்.

'சிற்சபை' இது சித்து+சபை என இருசொல் ஒருசந்தி. 'சித்து' என்பது ஞானம், சபை என்பது அம்பலம் என்பதாம். சித்து, அறிவுடைப் பொருளுமாம். சித்து+சபை=சிற்சபை எனப் புணர்ந்தது. ஞானசபை என்பது பொருளாம். இது ஞானசபையாகிய பேரம்பலத்தைக் குறித்தது. அதுவே சிதம்பரத்துள்ள பொன்னம்பலமாகும். ஞானமுனிவர்களும் தேவர்களும் உயிர்களும் கண்டு ஆனந்தமுற இறைவன் நடித்தானாதலினால் 'ஆனந்த நித்தமிடு' என்றார். இறைவன் கருணைக்கே பிறப்பிடமாக இருந்து எல்லோர்க்கும் கருணைமழை பொழிகின்றான் ஆதலின் 'கருணாகரக்கடவுளே' என்றார். கருணை-கிருபை. ஆகரம்-பிறப்பிடம். இதற்குக் கருணைக்கே பிறப்பிடமாக இருப்பவன் என்பது பொருளாம். 1

கருணாகரக்கடவுளே! அடியேனுக்கு அகண்டாநந்த சுகவாரி
தோன்றும்படிக் கிருபைபுரிந்ததை என்னென்று சொல்
லிப் புகழ்வேன் என்கின்றார் .

மண்ணாதி ஐந்தொடு புறத்திலுள கருவியும்
வாக்காதி சுரோத்ராதியும்
வளர்கின்ற சப்தாதி மனமாதி கலையாதி
மன்னுசுத் தாதியுடனே
தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவும் மௌனியாய்ச்
சொன்னவொரு சொற்கொண்டதே
தூவெளிய தாயகண் டானந்த சுகவாரி
தோற்றுமதை என்சொல்லுவேன்
பண்ணாரும் இசையினொடு பாடிப் படித்தருட்
பான்மைநெறி நின்றுதவறாப்
பக்குவ விசேஷராய் நெக்குநெக் குருகிப்
பணிந்தெழுந் திருகைகூப்பிக்
கண்ணாறு கரைபுரள நின்றஅன் பரையெலாங்
கைவிடாக் காட்சியுறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) பண்-பண் ஆனது, ஆரும் - நிறைந்த, இசையினொடு - இராகத்தோடு, பாடி-பாடியும், படித்து-படித்தும், அருள்-திருஅருளின், பான்மையின், நெறி-வழியிலே, நின்று-நின்று, தவறா-பிழையாத, பக்குவம்-பக்குவத்தை, விசேஷராய் - மிகவும் சிறப்பாக அடையப்பெற்றவர்களாய்,



நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உருகி - உருகி (இளகி), பணிந்து-வணங்கி, எழுந்து-எழுந்து, இரு-இரண்டு, கை-கைகளையும், கூப்பி-குவித்து, கண்-கண்களிலிருந்து வடியும், ஆறு - ஆனந்தபாஷ்பவெள்ளம், கரை-கரை, புரள-புரண்டோட, நின்ற - நின்றுகொண்டிருந்த, அன்பரை-அடியார்களை, எல்லாம்-எல்லாம், கைவிடா-கைவிடாத, காட்சி-சேவையை, உறவே-அடையும்படிக்கு, கருது-நினைத்தற்கு, அரிய-அருமையாகிய, சித்து-ஞான, சபையில்-சபையிலே, ஆனந்தம் - பேரின்பமயமான, நிர்த்தம் - திருநடனத்தை, இடு-செய்கின்ற, கருணை - கருணைக்கு, ஆகரம் - பிறப்பிடமாக இருக்கின்ற, கடவுளே-கடவுளே!, மண் - பிருதிவி, ஆதி-முதலிய, ஐந்தொடு-பஞ்சபூதங்களொடு, புறத்தில்-புறத்திலே, உள - உள்ள, கருவியும் - கருவிகளும், வாக்கு-வாக்கு, ஆதி-முதலாகிய (கர்மேந்திரியங்கள்) ஐந்தும், சுரோத்ரம் - சுரோத்திரம், ஆதி - முதலாகிய (ஞானேந்திரியம்) ஐந்தும், வளர்கின்ற - விருத்தி பெற்றுக்கொண்டிருக்கின்ற, சப்தம்-சப்தம், ஆதி - முதலாகிய (விஷயங்கள்) ஐந்தும், மனம்-மனம், ஆதி-முதலாகிய (அந்தக்கரணங்கள்) நான்கும், கலை-கலை, ஆதி - முதலாகிய (வித்தியாதத்துவங்கள்) நான்கும், மன்னும் - நிலைபெற்றுள்ள, சுத்தம்-சுத்ததத்துவம், ஆதி-முதலியவற்றுள், உடனே-உடனே, தொண்ணூற்றொடு-தொண்ணூறுடனே கூடிய, ஆறும் - ஆறும் ஆகிய தத்துவங்களும், மற்றும்-இன்னும், உள்ளனவும்-உள்ளவைகளும், மௌனி-மௌனகுரு, ஆய்-ஆகி, சொன்ன-எழுந்தருளிவந்து சொல்லியருளிய, ஒரு-ஒப்பற்ற, சொல்-உபதேசத் திருச்சொல்லை, கொண்டதே - உள்ளத்தே கொண்ட மாத்திரத்திலே, தூ-பரிசுத்தமான, வெளியது-ஆகாயமும், ஆய்-ஆகி, அகண்ட-இடையறாது எங்கும் பரவியுள்ள, ஆனந்தம் - பேரின்ப, சுகம் - சுகம், வாரி-சமுத்திரம், தோற்றும்-காணப்படும், அதை - அதனை, என் - என்ன என்று, சொல்லுவேன்-சொல்லுவேன் எ-று.

(வி-ரை) 'மண்ணாதியைந்து' என்றது:—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களை. 'புறத்திலுளகருவி' என்றது:—மெய், வாய், கண், மூக்கு, செவி என்பனவற்றை. 'வாக்காதி' என்றது:—வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்பவைகளை. 'சுரோத்திராதி ஐந்து' என்றது:—சுரோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்ராணம் என்பவைகளை. 'சப்தாதி' என்றது:—சப்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்பவைகளை. 'மனம் ஆதி' என்றது:—மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை. 'கலையாதி' என்றது:—காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், மாயை என்பவைகளை. 'சுத்தாதி' என்றது:—சுத்தவித்தை, ஈசுரம், சலதாக்கியம், சத்தி, சிவம். 'தொண்ணூற்றொடாறு' என்ற தத்துவ விரிவுகளை கட்டளை முதலிய நூலிற் பரக்கக் கண்டுதெளிக.

மௌனதேசிகர் வந்து உபதேசித்த அளவிலே தத்துவங்கள் எல்லாம் அகன்றோடப் பரிசுத்த பரமாக்யமாகவும் ஆனந்தமயமாகவும் சுயானுபூதியிற் றோன்றினமையால், "தொண்ணூற்றொ டாறுமற் றுள்ளனவு மௌனி யாய்ச் சொன்னவொரு சொற்கொண்டதே தூவெளியதா யகண்டானந்த

சுகவாரி தோற்றுமதை என் சொல்லுவேன்' என்றார். 'பண்' என்றது இன்னோசையை. 'இசை' என்றது இராகத்தை. 'அருட்பான்மை நெறி' என்றது இறைவன் திருஅருளினால் வெளிவந்ததாகிய சைவாகம நெறியைக் குறிக்கும். 'பக்குவ விசேஷர்' என்றது மலபரிபாகமடைந்து பக்குவ முற்ற சிறந்த ஞானிகளைக் குறித்ததாம். 'நெக்குருகி' என்றது நெக்குவிட்டு உருகுதலை உணர்த்தா நிற்கும். நெக்குவிட்டு உருகுதலாவது, கட்டுக் கழன்று இளக்கமுறுதல் என்பதாம். இது அன்பின் முதிர்ச்சியால் எய்துவதோர்தொழில். 'பணிந்து எழுந்து' என்றது தண்டாகாரமாய்ப் புவியில் விழுந்து வணங்கி எழுதலை உணர்த்தியதாம். 'இருகை கூப்பி' என்பதை அஞ்சலிசெய்து என்பர். 'கண்ணாறு' என்றது ஆநந்தபாஷ்பத்தின் வெள்ளத்தை 'கரைபுரள' என்பது அளவுகடந்து பெருக என்பதாம். 'கைவிடா' என்பது 'கைவிடாத' என்பதாம்; இது ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். 'காட்சி' என்ற ஞானநடன ஆனந்தக்காட்சியை. கருவியும், சுரோத்ராதியும் என்பதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 'சுத்தாதியுடனே' இதில் 'உடன்' என்ற உருபு எண்ணுப்பொருளில் வந்தது. 'உடனே' என்றதில், ஈற்றில் நின்ற ஏகாரம் அசையாக நின்றது.

'தொண்ணூற்றொடாறு' இது தொண்ணூற்று+ஒடு+ஆறு. எனும் சொற்களின் சந்தி. இதில் 'ஒடு' என்னும் உருபு கூட்டுப் பொருள்தந்து நின்றது. ஆறும், மற்றுள்ளனவும் என்றதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 'சொற் கொண்டதே' என்றதன்கண் நின்ற ஏகாரம் தேற்றப் பொருளது. 'தூ வெளியதாய்' இதில் வெளியது+ஆகி என்றது. 'வெளியதாய்' என நின்றது 'ஆகி' என்பது ஆய் என நிற்பது மரூஉ வழக்கு. 'அகண்டானந்தம்' இது வடசொற் சந்தி, தீர்க்கசந்தி. 'சுகவாரி' இது 'சுகமாகிய வாரி' என விரிதலின் பண்புத்தொகை. 'தோற்றுமதை' இதில், (தோற்றும்+அது+ஐ) ஈற்று 'ஐ' இரண்டன் உருபு, 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. 'என் சொல்லுவேன்' என்றதில் 'என்' என்பது வியப்புப் பொருளில்வந்த வினா இடைச்சொல். 'தவறா' இது தவறாத என்பதன் விகாரம். இதனை ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் என்பர். 'நெக்கு நெக்கு' இது மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. 2

கருணாகரக்கடவுளே! எல்லாம் உமது அடிமை எல்லாம் உமது உடைமை எல்லாம் உமது செயலே சர்வவியாபகன் நீ என்றும் அறிந்தேன் அறிந்தபடி நின்று சுகம் ஆகாததும் தேவரீரின் திருஅருளோ என உணர்த்தினை அடியேன் கதி அடையும் வகை சொல்லி அருள்க என்கின்றார்

எல்லாமுன் அடிமையே எல்லாமுன் உடைமையே
எல்லாமுன் னுடையசெயலே
எங்கணும் வியாபிநீ என்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேதமெல்லாஞ்



சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
சொல்லிறந் தவரும்விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
தொகுத்தநெறி தானுமிவையே
அல்லாம லில்லையென நன்றா அறிந்தேன்
அறிந்தபடி நின்றுசுகநான்
ஆகாத வண்ணமே இவ்வண்ண மாயினேன்
அதுவுநின தருளென்னவே
கல்லாத அறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
கதிக்குவகை யேதுபுகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) கருது - நினைத்தற்கும், அரிய - அரிதாயுள்ள, சித்து - ஞான சபையில்-சபையிலே, ஆனந்தம் - ஆனந்த, நிர்த்தம் - திருநடனம், இடு-செய்தருளும், கருணை - கருணைக்கு, ஆகரம் - பிறப்பிடமாகவுள்ள, கடவுளே-கடவுளே!, எல்லாம்-எல்லா உயிர்களும், உன்-தேவரீரின், அடிமையே-அடிமைகளே!, எல்லாம் - எல்லாப் பொருள்களும், உன்-தேவரீரின், உடைமையே-உடைமைப் பொருள்களே, எல்லாம் - எல்லாச் செயல்களும், உன்னுடைய-தேவரீரினுடைய, செயலே-செயல்களே, எங்கணும்-எவ்விடத்தும், வியாபி-வியாபித்து இருப்பவன், நீ - நீயே, என்று - என்று, சொலும் - சொல்லும், இயல்பு-இயல்பை உடையது, என்று-என்று, இருக்கு - இருக்கு, ஆதி - முதலாகிய, வேதம் - வேதங்கள், எல்லாம் - எல்லாம், சொல்லால் - சொல்லினால், முழக்கியது-வெளிப்படப் பறையடித்துக் கூறி, சொல்-பேச்சு, இறந்தவரும்-அற்றவர்களாகிய மௌன ஞானிகளும், மிக்க-மிகுந்த, உபகாரம்-உபகாரம், ஆ-ஆக எண்ணி, விண்டு-விளக்கி விவரித்து, சொன்னவையும்-சொல்லியவைகளும், இவை-இவைகளே, நல்ல-நல்ல, குரு-குருக்கள், ஆன-ஆகிய, பேரும்-பேரும், தொகுத்த-தொகுத்துக்கூறிய, நெறி-மார்க்கங்கள், தானும்-தானும், இவையே - இவைகளே, அல்லாமல் - அன்றி, இல்லை - வேறு இல்லை, என-என்று, நன்றா - தெளிவாக, அறிந்தேன் - அறிந்தேன், அறிந்த - தெரிந்த, படி-வண்ணம், நின்று-இருந்து, நான்-அடியேன், சுகம்-இன்பமயம், ஆகாத-ஆகாத, வண்ணமே-படிக்கே, இ-இந்த, வண்ணம்-விதம், ஆயினேன்-ஆயினேன், அதுவும்-அதுவும், நினது-தேவரீரது, அருள் - திருஅருள், என்ன-என்று, கல்லாத-படியாத, அறிஞனுக்கு-வறியனாகிய அடியேனுக்கு, உள்ளே-உள்ளத்திற்கு உள்ளே, உணர்த்தினை-அறிவித்தாய், கதிக்கு-மோக்ஷத்திற்கு, வகை - வழி, ஏது-யாதாகும், புகலாய்-சொல்லியருள்வாயாக எ-று.

(வி-ரை) பதியாகிய இறைவனுக்கு பசுக்களாகிய உயிர்கள் எல்லாம் தொண்டுபட்டிருத்தலினாலும், இறைவன் ஆண்டாலும் உயிர்கள் அடிமை

யாகவும் இருத்தலினாலும் 'எல்லாமுன்னடிமையே' என்றார். அண்டாண்ட கோடிகளும் அவற்றின்கண்உள்ள சராசரப்பொருள்கள் எல்லாம் இறைவன் படைப்பும் இறைவனதும் ஆகலின் 'எல்லாமுடைமையே' என்றார். 'அவனின்றி ஓரணுவும் அசையாது' என்ற பழமொழிப்படி எல்லாவற்றையும் ஆட்டிவைக்கும் சூத்ரதாரி இறைவன் ஆதலினால் 'எல்லாமுனுடைய செயலே' என்றார். இறைவன் அணுவுக்கணுவாகவும் அண்டங்களுக்கு உள்ளும் புறம்பும் எள்ளுக்குள் எண்ணெய்போலவும், பூவினுள் மணம் போலவும் கலந்து உறைபவன் ஆதலினால் 'எங்கணும் வியாபிநீ' என்றார். 'நீ' என்றது இறைவனை இது முன்னிலைச்சுட்டு. 'இருக்காதி' என்றது பண்டை நான்மறைகளாகிய இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களை. 'சொல்லான் முழக்கியது' என்று கூறியது முழக்கிச் சொல்லியது என்பதாம். முழக்கிச்சொல்லுதலாவது-ஒலமிட்டு உரைப்பது. பறையடித்துக் கூறுவது என்னும் பொருளெனவாம்.

எல்லாம் உன் அடிமை. எல்லாம் உன் உடைமை. எல்லாம் உன் செயல். இறைவனே நீ எங்கும் வியாபி என்று வேதங்கள் முழக்குவது மட்டுமல்ல இது ஞானிகள் தம் ஞானானந்த நிட்டையிலே அனுபவத்திற் கண்டதொன்று இது ஆகும் என்பார். 'மிக்கவுபகாரமாச் சொல்லிறந் தவரும்விண்டு சொன்னவையுமிவை' என்றார். 'கண்டவர் விண்டிடாரே' எப்படி விண்டார்? ஏன் விண்டார்எனின் கருணையினாலே உலகத்திற்கு உபகாரமாகச் சூக்குமமாக விண்டார் என்பது தோன்ற 'மிக்கவுபகாரமாக' எனவும், 'சொல்லிறந்தவரும் விண்டு' எனவும் கூறிவைத்தார். சொல்லிறந் தவர் என்றது மௌனானந்த நிட்டானுபூதிமான்களை. ஆத்மார்த்தமான ஞானத்தை உணர்த்தும் குரு என்பதை விளக்கும்பொருட்டு 'நல்லகுரு' என குருவுக்குமுன் 'நல்ல' என்னும் அடைமொழி தந்துவைத்தார். 'இவையே' இது பன்மை அண்மைச்சுட்டு, இதில் 'ஏ' தேற்றப்பொருளது.

'ஆகாதவண்ணம் இவ்வண்ணம் ஆயினேன்' இதில் வண்ணம் என்னுஞ் சொல் அதேபொருளுடன் மீண்டும் வந்தமையால் இது சொற்பொருட் பின்வருநிலையணியின்பாற்படும். 'அதுவும்' என்றது ஆகாதவண்ணம் இவ் வண்ணம்ஆயின் அதுவும் எனப்பொருள் கொள்ள நின்றது. 'உள்ளே உணர்த் தினை' என்றது உள்ளத்தினிடத்து உணரும்படிச்செய்தாய் என்பதாம். 'உள்ளம்' என்றது ஈண்டு மனத்தை. இது இடஆகுபெயர். உடம்பின் உள் இடத்தில் இருப்பது என்னும் பொருளதாம். இறைவன் உயிர்களுக்கு உணர் வுக்கு உணர்வாய்நின்று உணர்த்துகின்றான் ஆதலின் 'அதுவுநின தருளென் னவே கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை' என்றார். 'வறிஞன்' என் றது அறிவில் வறுமையை உணர்த்தாநின்றது. 'கதி' என்றது மோக்ஷகதியை. 'வகை' என்றது ஈண்டுவழியை. 'புகலாய்' இது சொல்லி அருள்வாயாக என்னும் பொருளது முன்னிலை ஒருமைஏவல். அடிமையே, உடைமையே, செயலே, என்பவற்றின் ஈற்று ஏகாரங்கள் தேற்றப்பொருளன. 'எங்கணும்'



இது எ+கண்ணும் என்னும் இருசொற்புணர்ச்சி. எகரம் வினா இடைச் சொல். 'கண்ணும்' என்பது கணும்எனவந்தது தொகுத்தல் விகாரம். 'முழக்கியது' இது பன்மைக்கொருமைவந்தபால் வழுவமைதி. சொல் லிறந்தவரும், நல்ல குருவானபேரும், நெறிதானும், இதன்கண்உள்ள உம் மைகள் எண்ணும்மைகள். 'இவையே' இதின் ஈற்றில்நின்ற ஏகாரம் தேற் றேகாரம். 'நன்றா' இது நன்றாக என்னும் சொல்லின் கடைக்குறை விகாரம். நினது+அருள் என்பது நினதருள் என முற்றிய லுகரத்துமுன் உயிர்வர உகரம்கெட அதுநின்ற உயிர்மேல் வந்துஉயிர் ஏறியது "முற்றுமற் றொரோவழி" என்ற விதியினாலென்றறிக. 'நினது அருள்' இது நின்னது அருள் எனற்பாலது தொகுத்தல் விகாரம் பெற்றுநின்றது. 'வறிஞன்' இதில் ஞகரம் பெயர் இடைநிலை. 'உணர்த்தினை' இது இறந்தகால முன்னிலைத் தெரிநிலை வினைமுற்று. 3

கருணாகரக்கடவுளே! நான் நீ என்ற இரண்டு பதார்த்தங்களில்லை என்பதறிந்து மனதைக்கட்ட அறியாது வாடினேன் எப்பொழுது தேவரீரின் கருணைக்கு உரியவன் ஆவேன் என்கின்றார்

பட்டப் பகற்பொழுதை இருளென்ற மருளர்தம்
பக்ஷமோ எனதுபக்ஷம்
பார்த்தவிட மெங்கணுங் கோத்தநிலை குலையாது
பரமவெளி யாகவொருசொல்
திட்டமுடன் மௌனியா யருள்செய் திருக்கவுஞ்
சேராமல் ஆராகநான்
சிறுவீடு கட்டியதின் அடுசோற்றை யுண்டுண்டு
தேக்குசிறி யார்கள்போல
நட்டனைய தாக்கற்ற கல்வியும் விவேகமும்
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே
நடுவே முளைத்தமனதைக்
கட்டஅறி யாமலே வாடினே னெப்போது
கருணைக் குரித்தாவனோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) கருத-எண்ணுதற்கு, அரிய - அருமையுடைய, சித்து - ஞான, சபையில்-சபையிலே, ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-திருநடனம், இடும்-செய் கின்ற, கருணை - கருணைக்கு, ஆகரம் - பிறப்பிடமாகிய, கடவுளே - கடவுளே!, பட்டப்பகல் - நடுப்பகல், பொழுதை - பொழுதை, இருள் - இருட்டுக்காலம், என்ற - என்று கூறிய, மருளர் - மயக்கமுடையவர்கள், தம் - தம், பக்ஷமோ- பக்ஷமோ, எனது - அடியேனது, பக்ஷம் - பக்ஷம், பார்த்த - பார்த்த, இடம்-

இடங்கள், எங்கணும்-எவ்விடத்தும், கோத்த-கலந்த, நிலை-நிலை, குலையாது-தவறாமல், பரமவெளி - பரமாகாயம், ஆக - ஆக, ஒரு - ஒரு, சொல் - சொல், மௌனி-மௌனகுரு, ஆய் - ஆகி, திட்டமுடன் - திருத்தமாக, அருள்-திரு அருளை, செய்து-செய்து, இருக்கவும்-இருக்கவும், சேராமல்-அதனை அடையாமல், நான்-அடியேன், ஆர்-யார், ஆக-ஆக எண்ணி, சிறு-சிறிதாகிய, வீடு-மணல்வீடு, கட்டி-கட்டி, அதின்-அந்த மணற் சிறுவீட்டில், அடு-சமைத்த, சோற்றை-மணற்சோற்றை, உண்டு உண்டு-பலதரம் உண்டு உண்டு களித்தது போல நடித்து, தேக்கு-ஏப்பம் விடுகின்ற, சிறியார்கள்-சிறுவர்கள், போல-போல, நட்டனையது-நடுவு நிலையுடையது, ஆ-ஆக, கற்ற-கற்று அறிந்த கல்வியும் - கல்வியையும், விவேகமும் - கேள்வி ஞானத்தையும், நல் - நல்ல நிலயம்-இருப்பிடமாக, உன்னி-நினைத்து, நான் - நான், என்றும் - என்றும், நீ-நீ, என்றும் - என்றும், இரண்டு - பதார்த்தங்கள், இல்லை - இல்லை, என்னவே-என்றே துணிந்து, நடுவே-நடுவிலே, மூளைத்த-உண்டாகிய, மனத்தை-எண்ணத்தை, கட்ட - (பொறிவழிகளிலே சென்று உழலாதபடி அடக்கிக்) கட்ட, அறியாமல்-தெரியாமல், வாடினேன்-மெலிந்தேன், எப்போது-எந்தக் காலத்தில், கருணைக்கு - தேவரீரின் கிருபைக்கு, உரித்து - பாத்திரம் ஆனவன், ஆவனோ-ஆவேனோ? எ-று.

(வி-ரை) 'பட்டப்பகல்' இது நடுப்பகல் என்னும் பொருளது. பிறவிக் குருடர்க்குப் பகல் இரவு இரண்டும் ஒன்றே. ஆதலின் பகலை இரவென்றே கூறுவர் அதுபோல ஞான சூனியத்தால் மருண்டவர்க்கு மெய் பொய்யாகவும், பொய் மெய்யாகவுந் தோன்றுமாதலின் 'பட்டப் பகற்பொழுதை யிருளென்ற மருளர்தம் பக்ஷமோ வெனதுபக்ஷம்' என்றார். 'எங்கணும்' என்றது எவ்விடத்தும் எல்லாஇடத்தும் என்னும் பொருளது. இதில் எகரம் வினா இடைச்சொல். 'கண்ணும்' என்பது கணும் என வந்தது தொகுத்தல் விகாரம். 'கணும்' இது இடப்பெயர். 'கோத்தநிலை' என்றது பின் நிற்கும், கலந்து நிற்கும் நிலைமை என்னும் பொருளது. 'குலையாது', என்றது சிதைவுறாது, அழியாது என்னும் பொருளது. 'பரமவெளி' என்றது ஞானாகாயத்தை. 'ஒரு சொல்' என்றது ஞானோபதேச மந்திரத்தை. 'திட்டம்' என்றது திருத்தமுடன் அளவாக என்னும் பொருளதாம். 'மௌனியாய்' என்றது மௌனதேசிகராகவந்து அருள் புரிந்தமையைக் கூறுகின்றார்.

'ஆராகநான்' இது 'யாராகநான்' என்பதன் மரூஉவாகும். 'சிறு வீடு' என்றது சிறுவர்கள் விளையாட்டிற்குக்கட்டும் மணல்வீட்டைக் குறிக்கும். 'அதில் அடுசோற்றை' என்றது அச்சிறுவீட்டில் அட்டதாகிய மணற் சோற்றை. 'உண்டுண்டு' இது மிகுதிக்கண் அடுக்கிவந்தது. 'தேக்கு சிறியார்' என்றது ஏப்பமிடும் இளைஞர்களைக் குறித்ததாகும். 'நட்டனையதா' இது 'நடுஅனையதா' என்னும் சொற்கள் ஏதுகைநயம்பற்றி விகாரமுற்று நின்றன. கல்வியும், விவேகமும் ஈண்டுவந்த உம்மைகள் இரண்டும் எண்ணும்மைகள். 'நானென்று நீயென்று இரண்டில்லை என்னவே'



என்றது, நான் என்ப தொன்றில்லை எல்லாம் நீயே என்னும் அகங்கார தத்துவம் அடங்கிய அனுபோக நிலையை உணர்த்திற்று. மனம் மாயையினால் உண்டாகி மயக்குவித்து நானல்லாதவற்றை நானென்றும் தனதல்லாதவற்றைத் தனதென்றும் உன்னச் செய்தலின் 'நடுவே மூளைத்த மனதை' என்றார். "மாயையென் றொருத்திதன்பான் மனமெனு மைந்தன்றோன்றி" என்ற **வில்லிபுத்தூரார்** வாக்கு ஈண்டு ஒப்பிடத்தக்கதாகும். மனம் கட்டுப் பெறின் எல்லாச் சித்தியும் முத்தியும் கைகூடுமாதலின் 'மனதைக்கட்ட வறியாமலே வாடினேன்' என்றார். இதுபற்றியன்றோ, **முனைப்பாடியாரும்**,

> "நின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
> பின்னையான் யாரைப் பெறுகிற்பே—னின்னை
> யறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டு
> துறக்கந் திறப்பதோர் தாள்"

என்று தம் **அறநெறிச்சாரத்தே** கூறிவைத்தார்.

இறைவன் திருஅருட் கருணையாலன்றி எதனையும் சாதித்துக்கொள்ள முடியாதாதலின் 'எப்போது கருணைக் குரித்தாவனோ' என்றார். மௌன தேசிகர் ஞானோபதேசஞ் செய்திருக்கவும் அந்தவழி சேராது நான் கற்ற கல்வி, பெற்ற விவேகமே நன்னிலயமாக உன்னினேன் இது மருட்சியே என்பார் 'திட்டமுடன் ... ... நன்னிலையமாக உன்னி' என்றார். 'சிறுவீடுகட்டி யதினடுசோற்றை யுண்டுண்டு தேக்கு சிறியார்கள்' என்றது உவமை. உண்டதே உண்டு, கண்டதே கண்டு, துய்த்ததே துய்த்துக் கற்ற கல்வியும் பெற்ற சிறு விவேகமும் நிலையாக எண்ணி இருத்தல் உவமேயமாம். 'என்ற மருளர்' இதில் 'என்ற' என்பது இறந்தகாலப் பெயரெச்சம். 'பக்ஷமோ' இதில் ஓகாரம் வினாப்பொருளில் வந்த இடைச்சொல். 'ஒரு சொல்' இதில் ஒரு என்பது ஒப்பற்ற என்னும் பொருள் தருதலின் இது தனிமைப்பொருள் குறித்ததாம். 'சேராமல்' இது எதிர்மறை இறந்தகால வினைமுற்று. 'அடுசோறு' இது வினைத்தொகை. 'நானென்று நீயென்று' இது 'நானென்றும் நீயென்றும்' விரிதலின் உம்மைத்தொகை. 'எப்போது' இதில் முன்னின்ற எகரஉயிர் வினாஇடைச்சொல். 'ஆவனோ' இதில் ஓகாரம் வினாப்பொருள் வந்தது 4

**கருணாகரக்கடவுளே! மெய்யருள்ளத்திருந்து மெய்யுணர்த்தியும் பொய்யருள்ளத்திருந்து பொய்யுணர்த்தியும் திருவிளையாடல் செய்வது தேவரீரேன்றால் அடியேன் என் செய்வேன் என்கின்றார்**

மெய்விடா நாவுள்ள மெய்யரு ளிருந்துநீ
மெய்யான மெய்யையெல்லாம்
மெய்யென வுணர்த்தியது மெய்யிதற் கையமிலை
மெய்யேனும் அறியாவெறும்

பொய்விடாப் பொய்யினேன் உள்ளத் திருந்துதான்
 பொய்யான பொய்யைஎல்லாம்
பொய்யெனு வண்ணமே புகலவைத் தாயெனில்
 புன்மையேன் என்செய்குவேன்
மைவிடா தெழுநீல கண்டகுரு வேவிஷ்ணு
 வடிவான ஞானகுருவே
மலர்மேவி மறையோது நான்முகக் குருவே
 மதங்கள்தொறும் நின்றகுருவே
கைவிடா தேயென்ற அன்பருக் கன்பாய்க்
 கருத்தா டுணர்த்துகுருவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
 கருணாகரக் கடவுளே.

(ப-ரை) மை-கருப்புநிறம், விடாது-விடாமல், எழும்-மேன்மேலும் வளர்கின்ற, நீலம் - நீலநிறம்பொருந்திய, கண்டம் - திருக்கண்டத்தையுடைய, குருவே - குருவே!, விஷ்ணு - விஷ்ணுவின், வடிவு - வடிவம், ஆன - ஆகிய குருவே-குருவே!, மலர் - செந்தாமரைமலர், மேவி - ஆதனமாகப் பொருந்தியிருந்து, மறை - வேதங்களை, ஓதும் - ஓதுகின்ற, நால் - நான்காகிய, முகம்-முகங்களைக்கொண்ட, குருவே-குருவே!, மதங்கள்தொறும்-எல்லா மதங்களிலும், நின்ற - அவரவர் கருதியபடி எழுந்தருளிநின்ற, குருவே - குருவே!, கைவிடாதே-அடியோங்களைக் கைவிடவேண்டாம், என்ற-என்று வேண்டிக்கொண்ட, அன்பருக்கு - அன்பர்களுக்கு, அன்பு-அன்புஉருவம், ஆய்-ஆகி, கருத்து-அவ்அன்பரின் கருத்தின், ஊடு-உள்ளே இருந்து, உணர்த்தும்-அறிவிக்கவேண்டியவைகளை அறிவிக்கும், குருவே-குருவே!, கருது-நினைத்தற்கு, அரிய - அரிதாகவுள்ள, சித்து - ஞான, சபையில் - அம்பலத்தே, ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-நடனம், இடும்-செய்கின்ற, கருணை-கருணைக்கு, ஆகரம்-பிறப்பிடமாகிய, கடவுளே-கடவுளே!, மெய் - சத்தியத்தை, விடா - விடாத, நா-நாக்கை, உள்ள-உடைய, மெய்யர்-சத்தியவான்களின், உள்-உள்ளத்தில், இருந்து-எழுந்தருளி இருந்து, நீ - தேவரீர், மெய்-சத்தியம், ஆன - ஆகிய, மெய்யை-சத்தியங்களை, எல்லாம் - எல்லாம், மெய்-சத்தியம், என - என்று, உணர்த்தியது-அறிவித்தது, மெய்-சத்தியமே, இதற்கு - இவ் உண்மைக்கு, ஐயம்-சந்தேகம், இலை-இல்லை, மெய்-சத்தியம், எதும் - எதனையும் (கொஞ்சமும்), அறியா-அறியாத, வெறும்-சுத்த, பொய்-பொய்யை, விடா-அகற்றாத, பொய்யினேன் - பொய்யை உடைய அடியேனின், உள்ளத்து - மனத்து, இருந்து-எழுந்தருளி இருந்து, தான் - தான், பொய் - பொய், ஆன-ஆகிய, பொய்யை-பொய்யை, எல்லாம்-எல்லாம், பொய்-பொய், எனு-என்றுகூறுத, வண்ணமே-விதமே, புகல-சொல்ல, வைத்தாய்-வைத்தாய், எனில்-என்றால், புன்மையேன் - அற்பனாகிய அடியேன், என் - என்ன, செய்குவேன் - செய்வேன்? எ-று.



(வி-ரை) சொற்களுக்கு நாவே காரணமாதல் பற்றி 'மெய்விடா நாவுள்ள மெய்யர்' என்றார். வாய்க்கு, நாவுக்கு மெய்யுரைத்தலே அவையிற்றின் சிறப்பாம். இது பற்றியே பெரியாரும் மெய்க்கு 'வாய்மை' எனவும் ஒரு பெயரிட்டழைத்தனர். ஔவைப் பிராட்டியாரும் "தன் னுடைநாக் கோடாமை கோடிபெறும்" என்றது ஆராயத்தக்கதன்றோ. இனி ஈண்டு இதற்கு மெய்விடா நாவும் உள்ளமும் உள்ள மெய்யர் எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'உள்ளிருந்து' இது உள்ளத்தின்கண் இருந்து என்பதாம்; இது எழன்தொகை. 'நீ' என்றது 'கருணாகரக் கடவுளே' என விளித்த இறையை 'பொய்விடாப் பொய்யினேன்' என்றது பொய்யைக் கடைபோகக்கொண்டு சாதிக்கும் புலைமைத்தன்மைகொண்ட பொய்யன் என்பதாம். 'பொய்யெனு வண்ணம்' இது 'பொய் யென்னுத வண்ணம்' என இருக்கவேண்டியது 'என்னுத' என்பதன் இடையுங் கடையுங் குறைந்து 'எனு' என நின்றது.

'வாய்மைநீ பொய்மைநீ' எனவும், "உள்ளத் துணர்விற் குணர்வாகி உணர்த்தும் பெம்மான் பெருந்துறையான்" எனவும், "உணர்த்துவித்தால் யாரொருவர் உணராதாரே" எனவும் வரும் பிரபல பிரமாணங்களால் மெய்யும் அவனாகிப் பொய்யும் அவனாகி மெய்யருக்கு மெய்யாய் நின்று மெய்யை யுணர்த்துவித்தும் பொய்யருக்குப் பொய்யாகிப் பொய்யை உணர்த்துவித்தும் வருகின்றான் என்பது உணரத்தக்கது. இதுகொண்டே நம் பெரியாரும் 'மெய்விடா ... ... ... ... புகலவைத்தா யெனில்' என்றார். 'பொய்' இது போகும் இயல்பினது நிலை நிற்காதது என்னுங் காரணங்கள் குறித்துவந்த பெயராகும். தேவர் பொருட்டு, தேவர் உய்ய, தேவர் வேண்டுகோட் கிரங்கிச் சிவபெருமான் ஆலால முண்டதனால் கண்டங் கருத்தமையால் 'மைவிடா தெழுநீல கண்டகுரு' என்றார். இதனால் சாக்ஷாத் சிவபெருமானே திருக்குருவாகும் என்பது உணர வைத்தார். குருவே விஷ்ணு வடிவென வேதங்கள் கூறலின் 'விஷ்ணு வடிவான ஞானகுருவே' என்றார். சற்குருவே உந்தியந் தாமரையோனாகிய பிரமன் எனவும் வேதங்கள் கூறலின் 'மலர்மேவி மறையோது நான் முகக் குருவே' என்றார். இதனால் குருவே திரிமூர்த்திகளும் ஆனமை பெறப்பெற்றது. 'மலர்' என்றது ஈண்டு விண்டுவின் உந்தியந் தாமரையை. அவரவர் வினையளவுக்குத் தக்கபடி இறைவன் அவரவர் சமயகுருவாக எழுந்தருளிவந்து அருள் செய்கின்றானாதலின் 'மதங்கடொறு நின்ற குருவே' என்றார்.

இறைவனைத் தவிர்த்து வேறு பற்றுக்கோடில்லை அவனே உயிர்க்கு அருள்புரியும் கருணாமூர்த்தி என்பதறிந்து அவனையே சாண்புகுந்து வேண்டி முத்தியருள் பெறுவர் ஆதலின் 'கைவிடாதே யென்ற வன்பருக் கன்பாய்க் கருத்தா டுணர்த்த குருவே' என்றார். 'விடா' இது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'நா' என்ற பெயரைத் தழுவி நின்றது. 'உள்

ளிருந்து' ஈண்டு 'உள்' என்றது மனதை. இது,இடஆகுபெயர். உள்ளிடத்திருப்பது என்னுங் காரணங்குறித்து வந்தபெயர். இருந்துதான் இதில் 'தான்' அசை. 'மெய்யான மெய்யை' என்பதும், 'மெய்யென' 'மெய்யிதற்' எனப் பன்முறை ஒரே அடியில் வந்ததும், 'பொய்யான பொய்யை யெல்லாம்' என வந்ததும் சொற்பொருட்பிறிதின் நிலையணி. 'புன்மையேன்' இது புன்மை என்னும் பண்பினடியாகப் பிறந்த தன்மையொருமைப் பெயர். 'என் செய்குவேன்' இதில் 'என்' என்பது 'என்ன' என்பதன் கடைக்குறை விகாரம். 'செய்குவேன்' இது செய்வேன் என்பதன் விரித்தல் விகாரம். இடையே 'கு' என்பது சாரியையாக விரிந்து நின்றது. 'மலர்மேவி' இது ஏழாம் வேற்றுமைத்தொகை. விரிக்கின் மலரின்கண் மேவி என விரியும். பிரமன் நான்கு திக்குக்கும் நான்கு முகங்களுடையவன். ஒவ்வோர் முகத்தாலும் ஒவ்வோர் வேதத்தை ஓதிக்கொண்டிருக்கின்றான் ஆதலின் 'மறையோது நான்முகக் குருவே' என்றார். 5

கருணாகரக்கடவுளே! உன்னை பூஜிக்க எண்ணி மலர் எடுக்க
எண்ணின் அதன் உள்ளும் தேவரீர் இருக்கின்றீர் அடி
யேன் உள்ளத்தும் இருக்கின்றீர் ஆதலால் அடியேன்
கும்பிடும் கும்பிடு அரைகும்பிடே என்கின்றார்

பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்சஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்திஅப்
பனிமல ரெடுக்கமனமும்
நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்கஎனில்
நாணும்என் உளம்நிற்றி நீ
நான்கும் பிடும்போ தரைக்கும் பிடாதலால்
நான்பூசை செய்யல்முறையோ
விண்ணேவி ணாதியாம் பூதமே நாதமே
வேதமே வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே அவித்தின்முளையே
கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே
கதிக்கான மோனவடிவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) விண்ணே-ஆகாயமே!, விண்-ஆகாயம், ஆதி-முதலாகிய, பூதமே-பூதங்களே!, நாதமே - நாதத்துவமே!, வேதமே - வேதமே!, வேதாந்தமே-



வேதங்களின் முடிவே!, மேதக்க-மேன்மையாகிய, கேள்வியே-ஞானக் கேள்வியே!, கேள்வி - அந்த ஞானக்கேள்வி, ஆம் - ஆகிய, பூமிக்குள் - பூமியில் முளைக்கின்ற, வித்தே-விதையே!, அவ்-அந்த, வித்தின்-விதையின், முளையே-முளையே!, கண்ணே - கண்ணே!, கருத்தே - மனமே!, என் - அடியேனின், எண்ணே-தருக்கமே!, எழுத்தே - இலக்கணமே!, கதிக்கு - முத்திக்கு, ஆன-ஏதுவாகிய, மோனம்-மௌன, வடிவே-ரூபமே!, கருது-நினைத்தற்கு, அரு-அரிய, சித்-ஞான, சபையில்-அம்பலத்தில், ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-திருநடனம், இடு - செய்கின்ற, கருணை - கருணைக்கு, ஆகரம் - பிறப்பிடமாக இருக்கின்ற, கடவுளே-கடவுளே!, உனக்கு-தேவரீருக்கு, ஆன-பிரீதியான, பூசை-பூசையை, பண்ணேன்-செய்யேன், ஒரு-ஒரு, வடிவிலே-வடிவத்திலே, பாவித்து - பாவனைசெய்து, இறைஞ்ச - வணங்க, ஆங்கே - அதற்காக, பார்க்கின்ற - பார்க்கின்ற, மலர்-மலர்கள் எல்லாவற்றின், ஊடும்-உள்ளும், நீயே-தேவரீரே, இருத்தி - விளங்கா நிற்கின்றீர், (ஆதலால்) அ - அந்த, பனி-குளிர்ந்த, மலர்-புஷ்பத்தை, எடுக்க - பறிக்கவும், மனம்-மனம், நண்ணேன்-விரும்பேன், அல்லாமல் - அது அல்லாமல், இரு - இரண்டு, கை - கைகளை, குவிக்க-கூப்ப, எனின்-என்றாலோ, நீ-தேவரீர், என்-அடியேனின், உள்ளம்-மனத்தில், நிற்றி-நின்றருளுகின்றாய், (ஆதலால்) நாணும் - அடியேன் மனம் நாணி நிற்கின்றது, (இவ்விதம் ஓர்மையின்றி) நான் - அடியேன், கும்பிடும் போது - நமஸ்கரிக்கும்போது, அரை - அர்த்தநமஸ்காரம் அரை, கும்பிடு-நமஸ்காரம், ஆதலால்-ஆகையால், நான்-அடியேன், பூசை-பூசை, செயல்-செய்தல், முறையோ-நியாயம் ஆகுமோ? ஆகாது; எ-று.

(வி-ரை) 'பண்ணே னுனக்கானபூசை' இதுதான் சிவாகமவிதிப்படி பூசைபண்ணுதிருக்கும் இழிவை இரங்கிக்கூறும் முகத்தால் 'உனக்கான பூசைபண்ணேன்' என்பன மொழிமாறிக் கூறினர். 'பூசை' இது 'பூஜா' என்ற வடசொற் சிதைவு. இறைவனைக் கற்பனையாக ஒருவடிவில் பாவனை செய்து பூசிக்க வேதம் கூறிற்றாதலின் 'ஒரு வடிவிலே பாவித்திறைஞ்ச' என்றார். வடிவு என்றது தெய்வ வடிவை. 'ஆங்கே' ஈண்டு அகரச்சுட்டு நீண்டு நின்றது. அதற்காக என்னும் பொருள்தந்து நின்றது. 'மலர்' இது மலர்வது, விரிவது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப்பெயர். 'நீயே' என்றது இறைவனை. ஈண்டு ஏகாரம் தேற்றப்பொருள்தந்து நின்ற இடைச்சொல். 'பனிமலர்' குளிர்ந்த மலர் என்பது பொருள். இனி இதற்குப் பனியால் மலரும் மலர் எனப்பொருள் கூறுவாரும் உண்டு. ஈண்டு பனியாலின்றி வெயிலாலும் மலர்கள் மலரும் என்பது அறியத்தக்கதொன்றாகும். இறைவன் அகம்புறம் இரண்டிடத்தும் வியாபித்து இருப்பவன் ஆதலின் 'இருகைதான் குவிக்கவெனின் நாணுமென்னுள நிற்றிநீ' என்றார்.

இறைவன் உள்ளத்திருந்து அடியேனைக் கும்பிடுவிக்கின்றவன் நீ. கும்பிடுபவன் அடியேன் ஆதலின் இச்செயலுக்குக் கர்த்தா தேவரீர். செய்பவன்

அடியேன் இதனுனே இவ்வனுக்குப் பாதிக்கே அடியேன் உரிமையுடையவன் ஆவேன் என்பார் 'நான் கும்பிடும்போ தரைக்கும்பிடாதலால் நான் பூசை செய்யன் முறையோ' என்ருர். இறைவன் அட்டமா வுருவினில் விண் முதலிய பஞ்சபூதங்கள் ஆம் ஆதலினுல் 'விண்ணே' எனவும் 'விண்ணுதி யாம் பூதமே' என்ருர். 'நாதமே' என்றது சத்தப்பிரமத்தை. வேதமும் வேதமுடிவும் இறைவன் ஆதலின் 'வேதமே வேதாந்தமே' என்ருர். "வேத மந்த்ர சொரூபனே நமோ நமோ" என்ற **பெரியார்** வாக்கும் இங்குக் காணத் தக்கதாகும். 'மேதக்க கேள்வியே' என்றது ஞானவிசாரணையாகிய ஞானக் கேள்வியை. இறைவன் ஞானவிசாரணையினிடத்து இருந்து ஞானனந்த மயமாகத் தோன்றுபவன் ஆதலின் 'கேள்வியாம் பூமிக்குள் வித்தே' என்ருர். வித்து முளையை உடையதாக இருக்கும் அன்பு நீர் பாய்ச்சப்பாய்ச்ச முளைத் தெழுந்து பேரின்பக் கனி தருவதாதலின் 'அவ்வித்தின் முளையே' என்ருர். எல்லாப் பொருளையும் காண்பதற்குக் கருவியாக இருப்பது கண் அதுபோல இறைவன் காட்டுகின்றவன் இறைவன் ஆதலின் 'கண்ணே' என்ருர். கண்டதைக் கொண்டுவைத்து இன்புறுவது கருத்து ஆதலின் இறைவனைக் கருத்தே என்ருர். கருதவைப்பவனும் அக்கருத்தனே யாதலின் 'கருத்தே' என்ருர்.

வேதங்களால் சொல்லப்பெற்ற விஷயங்களைக் கணித்தறிவதற்கு இன்றியமையாக் கருவிகளாக இருப்பது தருக்கநூலும் இலக்கணநூலும் ஆதலின் 'என் எண்ணே எழுத்தே' என்ருேதினுர். எண்ணுதற்கு ஆதார மாக இருப்பதுபற்றித் தருக்க சாத்திரத்தை எண் என்ருர். எழுத்துக் களையும் எழுத்தாலாகும் சொற்களையும், சொற்கள்தரும் பொருளையும், பொருள்தரச் சொற்களை ஒழுங்குசெய்யும் யாப்பையும், அதனை அழகுபெறச் செய்யும் அணியும் ஆகிய இலக்கணங்களையும் எழுத்து என்பது குறித்து நிற்றலின் ஆகுபெயர். இதனுனன்றே **ஔவைப்பிராட்டியாரும்**, 'எண்ணும் எழுத்துங் கண்எனத் தகும்' என்ருர். இன்னும் இதனை,

> "ஆரணங் காணென்ப ரன்ப ... ... ...
> சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே"

என்ற **திருக்கோவையார் பாயிரச்செய்யு**ளால் நன்கறியலாம்.

'கதி' என்றது முத்திக்கதியை. 'மோனம்' இது 'மௌனம்' என் பதன் மரூஉ. 'பண்ணேன்' எதிர்மறைவினைமுற்று. பாவித்து,இறைஞ்ச, இவை இரண்டும் வினைஎச்சங்கள். 'பார்க்கின்ற' பார் என்னும் பகுதியடி யாகப் பிறந்த நிகழ்காலப்பெயரெச்சம். 'இருத்தி' இது இருக்கின்ருய் என்னும் பொருளில்வந்த முன்னிலை வினைமுற்று. 'மனமும் நண்ணேன்' இது கை எழாததோடு மனமும் நண்ணவில்லை எனப் பொருள்தருதலினுல் இந்த உம்மை இறந்ததுதழுவிய எச்சஉம்மை. 'முறையோ' இதன் ஈற்று ஓகாரம் வினுவிடைச்சொல்.





கருணுகரக்கடவுளே! எப்போழுதும் எதிலே பற்றுவைக்கிருர்களோ அது அவர்களுக்குக் கைகூடும் ஞானநிஷ்டர்கள் மரணமுண் டென்பதை நினைப்பதே இல்லை மார்க்கண்டர் சுகர் இவர் கள் நித்திய சூரிகள் அல்லரோ என்கின்ருர்

சந்ததமும் வேதமொழி யாதொன்று பற்றினது
தான்வந்து முற்றுமெனலால்
சகமீ திருந்தாலும் மரணமுண் டென்பது
சதாநிஷ்டர் நினைவதில்லை
சிந்தையறி யார்க்கிது போதிப்ப தல்லவே
செப்பினும் வெகுதர்க்கமாம்
திவ்யகுண மார்க்கண்டர் சுகராதி முனிவோர்கள்
சித்தாந்த நித்யரலரோ
இந்த்ராதி தேவதைகள் பிரமாதிகடவுளர்
இருக்காதி வேதமுனிவர்
எண்ணரிய கணநாதர் நவநாத சித்தர்கள்
இரவிமதி யாதியோர்கள்
கந்தருவர் கின்னரர்கள் மற்றையர்கள் யாவருங்
கைகுவித் திடுதெய்வமே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணுகரக் கடவுளே.

(ப-ரை) இந்திரன்-இந்திரன், ஆதி-முதலாகிய, தேவதைகள்-சாமான்ய தேவர்களும், பிரமன்-பிரம்மா, ஆதி - முதலாகிய, கடவுளர் - விசேஷ தேவர் களும், இருக்கு - இருக்குவேதம், ஆதி - முதலாகிய, வேதம் - வேதங்களைக் கற்றுணர்ந்த, முனிவர் - முனிவர்களும், எண் - எண்ணுதற்கு, அரிய-அரிய, கணம்-தேவகணங்களின், நாதர்-தலைவர்களும், நவ-ஒன்பது, நாத-தலைமை பெற்ற, சித்தர்கள்-சித்தர்களும், இரவி-சூரியன், மதி - சந்திரன், ஆதியோர் கள்-முதலியவர்களும், கந்தருவர் - கந்தருவர்களும், கின்னரர்கள் - கின்னரர் களும், மற்றையர்கள்-மற்றுள்ளவர்கள், யாவரும்-எல்லோரும், கை-கையை, குவித்திடு-குவித்து வணங்கும், தெய்வமே-தெய்வமே!, கருது-எண்ணுதற்கு, அரிய-அரிதாகிய, சித்து-ஞான, சபையில்-அம்பலத்தில், ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-நடனம், இடு-செய்கின்ற, கருணை - கிருபைக்கு, ஆகரம் - பிறப்பிட மாகிய, கடவுளே - கடவுளே!. வேதமொழி - வேதவாக்கியம், சந்ததமும்-எப் போழ்தும், யாது - எது, ஒன்று - ஒன்றை, பற்றின் - பற்றுவைத்தால், அது தான் - பற்றுவைத்த அப்பொருள்தானே, வந்து - வந்து, முற்றும் - முடிவு பெறும், எனலால்-என்று கூறுதலால், சகம் - பூமியின், மீது - மேல், இருந் தாலும் - இருந்தாலும், மரணம் - சாவு, உண்டு - உண்டு, என்பது - என்பது,

சதா - எப்பொழுதும், நிஷ்டர் - ஞானநிட்டையில் இருப்பவர்கள், நினைவது - மனத்தி லெண்ணுவது, இல்லை - இல்லையாகும், ஈது - இவ்விஷயம், சிந்தை - மனத்தி னிடத்தே, அறியார்க்கு - உணராதவர்க்கு, போதிப்பது - உணர்த்தித் தெரி விப்பது, அல்ல-அல்ல, செப்பினும்-ஒருக்கால் அவர்க்குச் சொன்னாலும், வெகு மிகவும், தர்க்கமாய்-வாதுகட்கு இடமாகும், திவ்ய-மேலான தெய்வ, குணம் குணத்தையுடைய, மார்க்கண்டர்-மார்க்கண்டேயர், சுகர்-சுகப்பிரமமுனிவர், ஆதி-முதலாகிய, முனிவோர்கள் - முனிவர்களும், சித்தாந்தம் - உறுதியிட்டு அறுதி செய்யப்பெற்ற, சித்யர் - நித்தியாத்துமாக்கள், அல்லரோ - அல் லவோ? எ-று.

(வி-ரை) 'சந்ததமும்' இது வடசொல்; இடைவிடாதெப்பொழுதும் எனும் பொருளது. எதனை இடைவிடாது எப்பொழுதும், நினைக்கின் றார்களோ அதுவேஆக ஆகிவிடுகிறார்கள் என்று வேதங்கள் கூறுகிற்கின்றன என்பார் 'சந்ததமும் வேதமொழியாதென்று பற்றினது தான்வந்து முற்றுமெனலால்' என்றார். **ஞானநிட்டையில்** சதா இருக்கும் பெரியோர் கள் பூமிமேல் இருப்பினும் மரணமின்றிச் சீவன்முத்தர்கள் ஆவர்கள் ஆதலின் 'சகமீதிருந்தாலு மரணமுண் டென்பது சதாநிஷ்டர் நினைவ தில்லை' என்றார். இதனை,

"தீராத சிந்தை தன்னாற் சிவமாகி நின்று சுகர்முன்
போராத சீவன் முத்திப் பெருபேறு பெற்றா ரன்றே
நீராறு பாயும் வேணி நின்மலனி னருளொன் றுண்டேல்
போராது காயம் ஐயோ பெறற்கரிய கதியு முண்டே"

என்ற **பெரியார்** வாக்கும் இதனை வலியுறுத்தாநிற்கும்.

'சகம்' இது 'ஜகம்' என்ற வடசொற்சிதைவு. சீவன் முத்திநிலை ஞானிகளுக்கே விளங்குமன்றி ஞானமிலார்க்கு விளங்குவது அன்று. சீவன் முத்திநிலையைப்பற்றிச் சாமானியர்க்குப் போதிக்கின் வெகுவெகு தர்க்கம் செய்வர். அவர் அறிவுக்கெட்டாது. இது பித்தர் உழறலென உதறித் தள்ளுவர் என்பார் 'சிந்தை யறியார்க்கீது போதிப்ப தல்லவே செப்பினும் வெகுதர்க்கமாம்' என்றார். 'திவ்யம்' இது வடசொல், மேலான தெய்விகம் பொருந்திய என்னும் பொருளது. 'மார்க்கண்டர்' இது தத்திதாந்த நாமம், மிருகண்டரின் புதல்வர் என்னும் பொருளது. இவர்பொருட்டே சிவ பெருமான் எமனை உதைத்துக் காலகாலன் எனும் பெயர் பெற்றார். சுகர் கிளியின் வயிற்றில் வேதவியாசருக்குப் பிறந்தவர். கிளிமுகம் உடையவர். இவர் பிரமஞானி. 'முனிவோர்' இது உலகப்பற்றை வெறுத்து அகற்றி யவர்கள் என்னும் பொருள்பற்றிவந்த பெயர். 'சித்தாந்த நித்யர்' இது நித்தியர் என்று அறுதியிட்டு உறுதிசெய்யப்பெற்றோர் என்பது பொருளாம். 'சித்தாந்தம்' என்பது ஆராய்ச்சிவகையான் ஆராய்ந்து தீர்மானிக்கப் பெற்றது என்னும் பொருளது. சித்தத்தின்அந்தம் சித்தாந்தம் என்பது அது, இருளையொப்பு மலபரிபாகம் வாய்ந்த சத்திநிபாத உத்தமர்க்குச் சிறப்பாகக் கூறியுள்ள ஆகம முடிவு.



'இந்த்ராதிதேவர்' என்றது இந்திரன், குபேரன், வருணன், வாயு, அக்கினி முதலிய திக்குப்பாலகர்களையும் பிறசில தெய்வங்களையும் உணர்த்தும். 'பிரமாதி கடவுளர்' என்றது பிரமன், விண்டு, ருத்திரன் முதலிய தேவர்களை யுணர்த்தும். 'இருக்காதி' என்றது இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்குவேதங்களை. 'வேதமுனிவர்' இது வேதத்தைப் பாராயணஞ்செய்யும் முனிவர் எனப் பொருள்தரலால் இரண் டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகை. 'கணநாதர்' என்றது தேவகணத்தலைவர்களை கணேசர், நந்திதேவர், உருத்திரகணம் முதலி யோர்களை என்க. 'கந்தருவர்' ஓர்வகைத் தேவசாதியார் கந்தருவ லோகத் தவர். 'கின்னரர்' இவர்களும் ஓர்வகைத் தேவசாதியார் கந்தருவர், கின்னரர் இவர்கள் தேவலோகத்து யாழோர் கூட்டத்தைச் சேர்ந்தவர். இவர்கள் பண்ணிசைபாடிப் பரமனைத்துதித்தலே தொழிலாகப்பூண்டவர். 'கைகுவித்திடும்' என்றது கைகுவித்து வணங்கும் என்பதாம். 'அறியார்க் கீது' இதில் 'இது' என்ற சுட்டு நீண்டு ஈது என ஆயிற்று 'அல்லவே, என்றதில் ஈற்றேகாரம் தேற்றப்பொருளது. 'செப்பினும்' இதில் 'செப்பு' என்பது திசைச்சொல். தெலுங்கர்சொல். 'அலரோ' இதில் ஈற்று ஓகாரம் வினப்பொருளில்வந்தது; இது அறிவினா. இதனை ஐயவினா என் பாரும் உண்டு. 'தேவதை' இது ஆண், பெண் எனும் இருபால்களுக்கும் பொதுவாக நின்றது. 'நவநாத சித்தர்' என்றது ஒன்பது சித்தர்களை.

'இரவி' இது 'ரவி' என்ற வடசொல் தமிழில் இகர உயிர்பெற்று வந்தது. என்னை? ரகரம் தமிழில் மொழிக்குமுன் ஆகாததாதலின் என்க. 'மதி' இது மதிக்கத் தகுந்தது. அறிவையுடையது என்னும் பொருள்பற்றி வந்தபெயர். 'குவித்திடு' இதில் 'இடு' பகுதிப்பொருள்விகுதி. இல் இடு என்பதனைத் துணைவினை என்பாரும் உண்டு. அது பொருந்தாமை இலக் கணிகள்பாற் கேட்டுத் தெளிக. 7

கருணாகரக்கடவுளே! மனதை பலி கொடுத்தேன் துட்டதேவதை உபத்திரவம் இல்லை தேவரீருக்கு அன்பு அபிஷேகமாகவும் உயிர் நைவேத்தியமாகவும் பிராணன் தூபமாகவும் அறிவு தீப மாகவும் சதா பூசை செய்கின்றேன் மிக்க அருள் செய்வாயாக என்கின்றார்

துள்ளுமறி யாமனது பலிகொடுத் தேன்கர்ம
துட்டதே வதைகளில்லை
துரிய நிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பன்அன் பபிஷேகநீர்
உள்ளுறையி லென்னாவி நைவேத்தியம் ப்ராணன்
ஓங்குமதி தூபதீபம்
ஒருகால மன்றிது சதாகால பூசையா
வொப்புவித் தேன்கருணைகூர்

தெள்ளிமறை வடியிட்ட அமுதப் பிழம்பே
　　தெளிந்ததே னேசீனியே
திவ்யரச மியாவுந் திரண்டொழுகு பாகே
　　தெவிட்டாத ஆனந்தமே
கள்ளன் அறி வூடுமே மெள்ளமெள வெளியாய்க்
　　கலக்கவரு நல்லஉறவே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
　　கருணாகரக் கடவுளே.

(ப-ரை) மறை - வேதங்கள், தெள்ளி - தெளிவித்து, வடியிட்ட-வடிக்கப் பட்ட, அமுதம் - அமிர்தத்தின், பிழம்பே - தொகுதியே!, தெளிந்த - தெளி வாகிய, தேனே - தேனே!, சீனியே - சீனிச்சக்கரையே!, திவ்ய - மேலாகிய, ரசம்-சுவை ரசங்கள், யாவும் - எல்லாம், திரண்டு - ஒன்றுகூடி, ஒழுகு-ஒழுகு கின்ற, பாகே-பாகே!, தெவிட்டாத - வெறுக்கப்படாத, ஆனந்தமே - ஆனந் தமே!, கள்ளன்-கள்வனாகிய அடியேனின், அறிவு-அறிவின், ஊடும்-உள்ளும், மெள்ளமெள்ள-பையப்பைய, வெளியாய் - வெளிப்படையாகக், கலக்க-கூட, வரும்-வருகின்ற, நல்-நல்ல, உறவே - சுற்றமே!, கருத - நினைத்தற்கு, அரிய-அருமையாகிய, சித்-ஞான, சபையில் - அம்பலத்தில், ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-நடனம், இடு-செய்கின்ற, கருணை - கிருபைக்கு, ஆகரம் - பிறப்பிட மாகிய, கடவுளே - கடவுளே!, துள்ளும் - துள்ளித்திரியும், மறி - ஆடு, ஆம்-ஆகிய, மனது-மனதை, பலி-பலியாக, கொடுத்தேன்-சமர்ப்பித்தேன், (ஆகை யினால்) கர்மம்-பாபரூபமாகிய, துஷ்ட - துஷ்டத்தனமுடைய, தேவதைகள்-தெய்வங்கள், இல்லை - இல்லையாயிற்று, துரியம் - துரிய பதத்தில், நிறை-நிறைந்துள்ள, சாந்தம்-சாந்த குணமுடைய, தேவதை-தெய்வம், ஆம்-ஆகும், உனக்கே-உனக்கே, தொழும்பன் - அடியனேனின், அன்பு - அன்பே, அபி ஷேக-திருமஞ்சன, நீர் - நீராகும், உன் - அடியேனின் மனத்தில், உறையில்-தங்கியருளினால், என்-அடியேனின், ஆவி-பிராணனே, நைவேத்தியம்-தேவரீ ருக்கு நிவேதிக்கும் நைவேத்தியமாகும், பிராணன்-உயிரும், ஓங்கு-உயரும், மதி-அறிவும், தூபம் - முறையே தூபமாகவும், தீபம் - தீபமாகவும், ஒரு - ஒரு, காலம்-காலம், அன்றி-அல்லாமல், சதா-எந்த, காலம்-காலத்தும் செய்கின்ற, பூசையா-பூசையாக, ஒப்புவித்தேன் - சமர்ப்பித்தேன், (ஆதலினால்) கருணை கூர்-அடியேன்மாட்டு மிகுந்த கருணையைச் செய்தருள்வாயாக; எ-று.

(வி-ரை) 'துள்ளுமறியா மனது' இது துள்ளித்திரியும் ஆடாகிய மனதை எனப் பொருள் உரைத்தாம். ஏனெனில் துட்ட தேவதைகளுக்கு ஆட்டைப் பலிகொடுக்கும் வழக்குண்டாதலின் என்க. (மறி-ஆடு) 'துள்ளும்' என்றது விஷயாதிகளிற் றுள்ளிப்பாயும் என்பதாம். இனி இதற்கு துள்ளும்+அறியா+மனது எனப் பிரித்து விஷயாதிகளிற் றுள்ளிச் செல்லும் அறியாமையை உடைய மனது எனப்பொருள் கொள்வாரும்



உண்டு. 'பலி' என்றது கடவுளர்க்கிடும் உணவு. 'கர்ம துஷ்டதேவதை' என்பதில் 'கர்மம்' என்பது ஈண்டு பாபகர்மத்தைக் குறித்து நின்றது. 'துரியம்' இது நாலாம்நிலை சுழுத்திக்கு மேற்பட்டநிலை. 'சாந்த தேவதை' இது சாந்தகுண தேவதை, சாந்தத்தைத்தரும் தேவதைஎன இரு பொருளில் மயங்கி நின்றது. 'உனக்கு' என்றது இறைவனை (கருணாகரக் கடவுளை.) 'தொழும்பன்' என்றது வழிவழித்தொண்டு பூண்டவன் என்பது பொருளாம். 'அபிஷேக நீர்' என்றது திருமஞ்சன நீரை. ஈண்டு அன்பை நீராகக் கூறியது உருவகம். 'என் ஆவி' என்றது உயிரை. 'நைவேத்தியம்' இது நிவேதிப்பது நைவேத்தியம் என்பதாம்; நிவேதிப்பது-படைப்பது. படைப்பது படையல் என்றாற்போல என்பதறிக.

'பிராணன்' என்றது ஜீவக்காற்றை. ஜீவக்காற்று காற்றின் வடிவாதலால் தூபமாக உருவகித்தார். 'ஓங்கு அறிவு' ஒளியுடையது ஆதலின் தீபமாக உருவகித்தார். இறைவன் வேதத்தால் வடித்து உடுத்துக் கூறப்பெற்ற அழிவில்லாச் சத்தியப் பொருளாதலின் 'தெள்ளிமறை வடியிட்ட அமுதப் பிழம்பே' என்றார். 'பிழம்பு' இது திரட்சி என்னும் பொருளது. 'சீனி' என்னும் சர்க்கரை ஆதியில் சீனதேசத்திருந்து இந்தியாவிற்கு இறக்குமதி செய்யப்பட்டதாதலின் இதற்குச் சீனிச்சர்க்கரை சீனி எனப் பெயர் எற் பட்டதென்பதறிக. 'திவ்யரசம் யாவும்' என்றது சுவையுடைய பழச்சாறு கருப்பஞ்சாறு முதலிய சாறுகளைக் குறிக்கும். 'பாகு' இது சர்க்கரைப் பாகைக் குறிக்கும். இது பாகமாக வெந்து நிற்பது பக்குவமாயது என்னும் பொருளது. ஈண்டு, உலகசம்பிரதாயத்தை விளங்க வைக்கவேண்டியவர் உலகில் கண்கூடாகி இனிக்குமவைகளைக் கடவுளுக் குவமைப்படுத்திக் கூறினார். 'மெள்ள மெள' இது மிகுதிப்பொருளில் அடுக்கியது. 'மெள்ள மெள' இது மெள்ள மெள்ள என்பதன் தொகுத்தல். இறைவன் உயிர்க்கு அருளும் உறவாதலின் 'நல்ல உறவே' என்றார். 'என்னாவி' இது என் னுடைய ஆவி என விரிதலின் ஆறும்வேற்றுமைத்தொகை. 'தூபதீபம்' இது தூபமும் தீபமும் என விரிதலின் உம்மைத்தொகை, 'அன்று' இது குறிப்புவினைமுற்று. 'கள்ளனறி வூடும்' என்றது கள்ளமில்லார் அறிவூடு கலப்பதன்றி அடியேன் உள்ளத்தும் கலக்கின்றாய் என்று பொருள் தருதலின் இறந்ததுதழீஇய எச்சஉம்மை. 8

கருணாகரக்கடவுளே! தேவரீர் இடத்துப் பேரன்புடையராகி
வாழ்த்தும் அன்பருக்கு எளியை, கன்னெஞ்சுடைய
அடியேனுக்கு எளியையோ என்கின்றார்

உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள்
　　ஊற்றென வெதும்பியூற்ற
ஊசிகாந் தத்தினைக் கண்டணுகல் போலவே
　　ஒருறவும் உன்னியுன்னிப்

படபடென நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப்
பாடியா டிக்குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவனைய புன்னகை
பரப்பியார்த் தார்த்தெழுந்து
மடலவிழு மலரனைய கைவிரித் துக்கூப்பி
வானேயவ் வானிலின்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழியென வாழ்த்தியேத்துங்
கடல்மடை திறந்தனைய அன்பரன் புக்கெளியை
கன்னெஞ்ச னுக்கெளியையோ
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) கருத - எண்ணுதற்கு, அரிய - அருமையாகிய, சித்து - ஞான,
சபையில்-அம்பலத்தில், ஆனந்த - பேரின்ப, நிர்த்தம் - நடனம், இடு - செய்
கின்ற, கருணை-கிருபைக்கு, ஆகரம் - பிறப்பிடமாகிய, கடவுளே - கடவுளே!,
உடல்-தேகம், குழைய-இளகவும், என்பு - எலும்பு, எலாம் - எல்லாம், நெக்கு
நெக்குவிட்டு நெகிழ்ந்து, உருக-உருகவும், விழி-கண்களின், நீர்கள்-ஆனந்த
வெள்ள நீர்கள், ஊற்று - மணற்கேணி ஊற்று, என - என்று ஒப்புக்கூற,
வெதும்பி - கொதித்து, ஊற்ற - ஒழுகவும், ஊசி - இரும்பு ஊசியானது, காந்
தத்தை-காந்தக் கல்லினை, கண்டு-கண்டு, அணுகல் - அதனிடத்துப் போய்ச்
சேருதல், போலவே-போலவே, ஓர்-ஒப்பற்ற, உறவும்-ஆத்ம உறவாகிய தேவ
ரீரின் உறவையும், உன்னி உன்னி - நினைத்து நினைத்து, நெஞ்சம் - மனம்,
படபட-படபட, என-என, பதைத்து-துடித்து, உள்-மனம், நடுக்குற-நடுக்க
மடையவும், பாடி-பாடி, ஆடி-ஆடி, குதித்து-மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்து,
பனி - குளிர்ந்த, மதி - சந்திரனை ஒத்த, முகத்திலே - முகத்திலே, நிலவு-சந்
திரிகை, அனைய-ஒத்த, புன்னகை-புன்சிரிப்பை, பரப்பி - விரித்து, ஆர்த்து
ஆர்த்து - ஆரவாரித்து ஆரவாரித்து, எழுந்து - எழுந்து, மடல் - இதழ்கள்,
அவிழும்-விரியாநின்ற, மலர் - தாமரைமலர், அனைய - ஒத்த, கை - கைகளை,
விரித்து - விரித்து, கூப்பி - குவித்து, வானே - ஞானகாயமே!, அ - அந்த,
வானில் - வானத்தில் இருந்தும் பொழியப் பெறுகின்ற, இன்பம் - ஆனந்த,
மழையே-மழையே!, மழை-அந்த ஆனந்தமழையின், தாரை-தாரைகளா லுண்
டாகிய, வெள்ளமே - பெருக்கே, நீடு - நீண்ட, ஊழி - ஊழிக்காலம், வாழி-
வாழி, என - என்று, வாழ்த்தி-வாழ்த்தி, ஏத்தும்-பாடித்துதிக்கின்ற, கடல் -
கடல், மடை - மடை, திறந்து - திறந்துவிட்டது, அனைய - ஒத்த, அன்பர் -
அன்பின்பெருக்குடைய அடியார்களின், அன்புக்கு - அன்புக்கு, எளியை -
எளிமையாக இருக்கின்றாய், கல் - கல்லையொத்த இளகாத, நெஞ்சனுக்கு -
நெஞ்சையுடைய அடியேனுக்கு, எளியையோ - எளிமையுடையவராக
இருப்பீரோ? எ-று.



(வி-ரை) உயிரோடு கூடிய உடல் வினைக்குத்தக வருந்தவேண்டியிருக்
குங் காரணம்பற்றி வருந்து என்னும் பொருள் உள்ள 'உடல்' என்னுஞ்
சொல் இக்காயத்திற்கு ஆயிற்று. 'உடல் குழைய' என்றது தேகம் இளகி
மெதுவுபடுதலை. 'என்பு' இது 'எலும்பு' என்பதன்போலி. 'நெக்குருகுத
லாவது' கட்டுவிட்டு இளகி உருகுதல். 'விழிநீர்' என்றது ஈண்டு ஆனந்த
பாஷ்ப வெள்ளத்தை. மணற்கேணியில் ஊறிவருஞ் சலம் வெது வெதுப்
புடையதாக இருத்தல்போலக் கண்களிலிருந்து ஊறிவரும் ஆனந்தபாஷ்ப
மும் வெதுவெதுப்புடைமைபற்றி 'விழிநீர்க ளூற்றென வெதும்பியூற்ற'
என்றார். இதில் 'என்' என்றது உவமஉருபு. ஊசிகாந்தத்தைக் கண்டணு
குதல் உபமானம். 'உன்னி உன்னி' இது மிகுதிப்பொருளில் அடுக்கி
வந்தது. 'படபடென' இது அடுக்குத்தொடர் ஒலிக்குறிப்புக் காட்ட வந்தது.
'நெஞ்சம்' இதில் அம் என்றது பகுதிப்பொருள் விகுதி. 'ஈண்டு உள்'
என்றது நெஞ்சை. 'பனிமதி' என்றது சந்திரன் இயல்பிலேயே
தண்ணென இருப்பவன் ஆதலின் என்க. இதுகொண்டே சந்திரனுக்குத்
'தண்கதிர்' எனுமொரு நாமமும் வழங்குவதாயிற்று. 'நிலவு' என்றது ஈண்டு
சந்திரப் பிரகாசத்தை. 'அனைய புன்னகை' என்றதில் 'அனைய' என்றது
உவமஉருபு. 'ஆர்த்து, ஆர்த்து' இது அடுக்குத்தொடர் மிகுதிப்பொருளில்
அடுக்கிவந்தது. 'வானே' என்றது ஈண்டு ஞானகாசமாகிய பரமாகாயத்தை.
இனி இதற்குக் கருணைமேகமே எனவும் பொருள் உரைப்பர். என்னை?
இறைவன் எல்லா உயிர்களுக்கும் கருணைபாலிக்கும் தண்ணருள் பற்றியும்,
கைமாறு கருதாமையுங் குறித்து என்பர்.

அ+வான்=அவ்வான் எனப் புணர்ந்து செய்யுட் சந்தநோக்கி
'அவானில்' என தொகுத்தல் விகாரம் பெற்று நின்றது. 'இன்பமழை'
என்றது இன்பமாகிய மழையே எனின் பண்புத்தொகையாம். இன்பநீரைப்
பொழியும் மழையே எனப் பொருள்கூறின் இரண்டாம் வேற்றுமை
உருபும்பயனும் உடன்தொக்கதொகையாம். 'வாழி' இது 'வாழிய'
என்றசொல் கடைகுறைந்து நின்றது; இது வியங்கோள். "வாழிய வென்
பத னீற்றுயிர் மெய் எகலு முரித்தஃ தேகினு மியல்பே" என்பது விதி.
கடவுளை வாழ்த்துவது ஓர் உபசாரமுறை, இறைவன் குணானுபவத்தில்
ஈடுபட்ட மெய்ஞ்ஞானிகள் அவ்வனுபவம் தமக்கு நிலைத்து நிற்றற்பொருட்டு
இறைவனை வாழ்த்துவது முறையாகும் என்பர். இதனானன்றோ வைண
வரும் "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" என்று தம் திருமாலை
வாழ்த்தினர். 'எத்தும்' என்று ஈண்டு கூறியது பாவால் துதித்துப் புகழும்
என்பது பொருளாம். என்னை? பாமுகத்தால் இறைவனைத் துதித்துப்
பரவியவர்க்கு இறைவன் அருளிச்செய்துள்ளமை பெரியபுராணத்தால்
நன்கறியக் கிடத்தலினால் என்க. 'கடல்மடை' இது ஆறும் வேற்றுமைத்
தொகை. இது கடலினுடைய மடை என விரியும். இறைவன்விஷயத்தே
பத்திசெய்து இளகாத நெஞ்சாதல்பற்றிக் 'கல் நெஞ்சனுக்கு' எனத்
தனைக் கூறினர். 'எளியையோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளது.

எளியை அல்லை என்பது பொருளாம். என்றாலும் அருள்புரியவேண்டும் என்பது கருத்தாம்.

9

கருணாகரக்கடவுளே! இம்மை மறுமைகளில் சந்தானம்
கற்பகம்போல இருந்து எல்லாச் சிவாநந்தமும்
அடியேனுக்குத் தந்தருள்க என்கின்றார்

இங்கற்ற படியங்கு மெனவறியு நல்லறிஞர்
எக்காலமும் உதவுவார்
இன்சொல்தவ றார்பொய்மை யாமிழுக் குரையார்
இரங்குவார் கொலைகள்பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்திலுறை
சாட்சிநீ யிகபரத்துஞ்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தஇன் பமும்உதவுவாய்
சிங்கத்தை யொத்தெனைப் பாயவரு வினையினைச்
சேதிக்க வருசிம்புளே
சிந்தா குலத்திமிரம் அகலவரு பானுவே
தீனனேன் கரையேறவே
கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட்
ககனவட் டக்கப்பலே
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

(ப-ரை) சிங்கத்தை - சிங்கத்தை, ஒத்து-போன்று, எனை - அடியேனை, பாய-பாய, வரு-வருகின்ற, வினையினை-வினைகளை, சேதிக்க-அழித்தொடுக்க, வரு-வருகின்ற, சிம்புளே-சரபமே!, சிந்தா-மனத்தின், ஆகுலம்-துயரம்ஆகிய, திமிரம்-இருட்டு, அகல-நீங்க, வரும்-வருகின்ற, பானுவே - சூரியனே!, தீனனேன்-எளியனாகிய அடியேன், கரை - பிறவிக்கடலின்கரையை, ஏற - ஏற, கங்கு-வரம்பு, அற்ற-கடந்த, பேர்-பெரிய, ஆசை - அன்பின், வெள்ளத்தின்-வெள்ளத்தில், வளர் - சஞ்சரித்தலவும், அருள்-கருணையையுடைய, ககனம்-ஆகாய, வட்டம்-வட்டத்தில் உலாவும், கப்பலே-மரக்கலமே!, கருது-எண்ணுதற்கு, அரிய - அருமையாகிய, சித்து - ஞான, சபையில் - அம்பலத்தில், ஆனந்தம்-பேரின்ப, நிர்த்தம்-நடனம், இடு-செய்கின்ற, கருணை-கிருபைக்கு ஆகரம்-பிறப்பிடமாக இருக்கின்ற, கடவுளே-கடவுளே!, இங்கு-இப்பிறப்பில், அற்ற-அற்று நீங்கிய, படி-படியே, அங்கும்-மறுபிறப்பிலும், என-ஆம் என்று, அறியும்-அறிகின்ற, நல்-நல்ல, அறிஞர்-அறிவாளிகள், எக்காலமும்-எந்தக் காலத்தும், உதவுவார் - பிறர்க்கு உதவிபுரிவார்கள், இன் - இனிய, சொல்-சொல்லைக்கூறுதலில், தவறார்-தவறமாட்டார்கள், பொய்மை-பொய், ஆம்-



ஆகிய, இழுக்கு-வழுச்சொல்லை, உரையார்-சொல்லார், இரங்குவார்-எல்லாச் சீவன்களிடத்தும் இரக்கம்காட்டுவார்கள், கொலைகள்-உயிர்களைக்கொல்லுந் தொழிலை, பயிலார்-செய்யார், சங்கல்பம் - சங்கல்பத்தைக்கொண்ட, சித்தர்-மனத்தையுடையவர்களாகிய, அவர்-அவரது, உள்ளம்-மனத்தின், கருத்தில்-கருத்தில், உறை-வசிக்கின்ற, சாக்ஷி - பரமசாக்ஷி, நீ - தேவரீராகும், இகம்-அடியேனுக்கு இம்மையிலும், பரத்தும்-மறுமைகளிலும், சந்தானம்-சந்தானமும், கற்பகம்-கற்பகவிருக்ஷமும்போன்ற, தேவு-தெய்வம், ஆய்-ஆக, இருந்து-இருந்து, சமஸ்த - எல்லா, இன்பமும் - சிவானந்த ஆனந்த சுகத்தையும், உதவுவாய் - தந்தருளிச்செய்வாயாக; எ-று.

(வி-ரை) 'இங்கு' என்றது இவ்வுலகில், இப்பிறப்பில் என்னும் பொருளது. இதில் இகரம் சுட்டு. 'இ' என்பது அகச்சுட்டு. அண்மைச்சுட்டு 'அற்ற' என்றது முடிவாகியவிதம் என்பதாம். 'அங்கு' என்றது மறுமை, மறுபிறப்பு என்னும் பொருளது. இதில் அகரம் சுட்டு, அகச்சுட்டு, சேய்மை சுட்டுகின்றது. 'நல்லறிஞர்' என்றது நல்ல பேரறிவுடையவர் என்னும் பொருளதாம். 'எக்காலமும்' என்றது தான் மெலிந்த காலத்தும் என்பதாம். இதனை,

"ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து"

என்ற **நல்வழியால்** நன்கறியலாம்.

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று"

என்றபடி, விவேகிகள் இன்சொல்லே கூறிடுவர் ஆதலின் 'இன்சொற் றவறார்' என்றார். பொய் எல்லாப்பாவத்திற்கும் வித்தாக இருத்தலின் 'பொய்மையாம் இழுக்கு' என்றார். இதுகொண்டன்றோ **திருவள்ளுவரும்,**

"பொய்யாமை யன்ன புகழில்லை பொய்யாமை
எல்லா அறமுந் தரும்" என்றார்.

'சங்கற்பசித்தர்' என்றது இறைவனை எப்பொழுதும் மனத்து எண்ணுதலும் நல்லனவே செய்வதென மனோஉறுதி செய்துகோடலும் உடையார் என்றதாம். 'பரம்' என்றது மேல் உலகத்தை. 'சந்தானம்,' 'கற்பகத்தரு' என்பன தேவலோக பஞ்சதருக்களில் இரண்டு, இவை தம்பால்வந்து யாசித்தார்க்கு வேண்டுவன அளிக்கும் தன்மையன. இறைவன், தெய்வலோகத் தருக்கள்போலத் தேவலோகத்துக்குச் சென்று அங்கு அதனிடம் இரந்தார்க்கே தருவதுபோல் தராது எவர்க்கும் இவ்வுலகத்தும் அவ்வுலகத்து அருளும் கருணையன் என்பது தோன்ற 'இகபரத்தும் சந்தான கற்பகத் தேவா யிருந்தே' என்றார்.

'சமஸ்த வின்பமும்' என்பதற்கு இம்மை மறுமை இன்பங்களையும் முத்தி இன்பத்தையும் எனப் பொருள் கூறுவாரும் உண்டு. இது பொருந் தாமை அறிக. தாயுமானுர் தனக்கு வேண்டுவதாயின் எல்லாச் சிவாநந்த இன்பமும் எனக் கோடலே நேரியதாகும். இனி, வேண்டும் அடியார்க்கு எனப் பொதுப்படப் பொருள் கொள்ளில் இம்மை, மறுமை, முத்தி என்னும் எல்லா இன்பங்களும் எனக் கொள்ளலாம். 'சிங்கம்' ஈண்டு வினை உவமமாக நின்றது. 'சிம்புள்' இது எண்காலும் பறக்கும் இறகும்கொண்ட மிருகம்; இதைப் பட்சி என்பாரும் உண்டு. இது சிங்கத்தைக் கொல்லுவது. சிந்தை+ ஆகுலம்=சிந்தாகுலம் என ஆயது. இது வடசொற்களின் புணர்ச்சி. 'திமிரம்' என்றது இருட்டு. இது வடசொல் சிந்தா ஆகுலத்தை இருட் டாகக் கூறியது உருவகஅணி. இது புலவர் மரபும் ஆகும். இருட்டை அகற்றுவது ஒளி சூரியன் ஆதலின் மனத்துயரை அகற்றும் கடவுளை 'பானுவே' என்ருர். (பானு-சூரியன்) 'தீனன்' என்றது தனது அறிவு ஆற்றல் இல்லாமை குறிக்கவும், இறைவன் தீனரட்சகன் ஆதலினுலும், இறைவனை நோக்கித் தன்னை 'தீனன்' என்று தன் இயல்பு தோன்றக்கூறி இரந்தார்.

'கரை' என்றது பிறவிச் சமுத்திரக்கரையை. பிறவி மாறி மாறி வருதல்போலக் கடல் மாறி மாறி வருதலினுலும் கடத்தற்கரியதாதலினுலும் பிறவிக்குக் கடலை ஒப்பிடுவர். கப்பல் வெள்ளத்தில் தங்கி இருக்கும் ஆதலின் 'கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளாருட் ககனவட்டக் கப்பலே' என்ருர். 'கங்கு' என்றது கரையை. 'அருள் ககனம் வட்டக்கப்பலே' இது கிருபையையுடைய ஆகாயத்தும் உலாவும் வட்டக் கப்பலே என்பதாம். ஏனையகப்பல் நீரில் உலவும் இறைவன் நீரிலும் ஆகாயத்தும் உலாவி அன் பரைக் கரை ஏற்றுவான் என்பது தோன்ற இவ்வாறு கூறினர். 10

---

## சித்தர்கணம்

சொல்லரிய எல்லாச் சித்திலும் வல்ல சித்தர்கணமே அடியேன்
முன் எல்லோருங் காணவரும் சித்து உங்களிடம்
இல்லையோ என்கின்ருர்

திக்கொடு திகந்தமும் மனவேக மென்னவே
சென்ருேடி யாடிவருவீர்
செம்பொன்மக மேருவொடு குணமேரு என்னவே
திகழ்துருவம் அளவளாவி
உக்ரமிகு சக்ரதர னென்ன நிற் பீர்கையில்
உழுந்தமிழும் ஆசமனமா
வோரேழு கடலையும் பருகவல் லீரிந்த்ரன்
உலகும்அயி ராவதமுமே



கைக்கெளிய பந்தா எடுத்து விளையாடுவீர்
ககனவட் டத்தையெல்லாங்
கடுகிடை யிருத்தியே அஷ்டகுல வெற்பையுங்
காட்டுவீர் மேலும்மேலும்
மிக்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்திஇலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம் - வேதாந்தத்தையும், சித்தாந்தம் - சித்தாந்தத்தை யும், சமரசம்-சமரசமாகப் பாவிக்கும், நல்-நல்ல, நிலை-நிலைமையை, பெற்ற பெற்றுள்ள, வித்தகம் - ஞானம் மிகுந்த, சித்தர் - சித்தர்களின், கணமே- கூட்டமே!, திக்கொடு - திக்குகளுடனே, திகந்தமும் - அத்திக்குகளின் முடி விலும், மனம் - மனத்தின், வேகம் - கதி, என்னவே - என்று கூறும்படி, சென்று-(வேகமாய்ச்) சென்று, ஒடி - ஓடியும், ஆடி-விளையாடி, வருவீர்-வரு வீர்கள், செம்-செவந்த, பொன்-பொன்மயமாகிய, மேரு ஒடு-மகாமேருமலை யோடு, குணம்-நற்குணம் ஆகிய, மேரு-மகாமேரு, என்ன-என்று கூறும்படி, திகழ் - விளங்குகின்ற, துருவம் - துருவமண்டலத்தின், அளவு - அளவும், அளாவி - சென்று, உக்ரம் - வேகம், மிகு - மிகுந்த, சக்ரம் - சக்ராயுதத்தை, தரன்-தரித்துள்ள திரிவிக்ரமன், என்ன-என்று ஒப்புக் கூறும்படி, நிற்பீர்- நிலைத்திருப்பீர், கையில்-கையில் உள்ள, உழுந்து-உழுந்தளவு ஆக, அமிழும்- ஆழமாகிய, ஓர்-ஒப்பற்ற, ஏழு-ஏழாகிய, கடலையும்-கடல்களையும், ஆசமனம்- ஆசமனநீர், ஆ-ஆக, பருக-குடித்துவிட, வல்லீர் - வல்லவர்களே!, இந்த்ரன்- இந்திரனுடைய, உலகும்-உலகத்தையும், ஐராவதமுமே-அவ் இந்திரன் உல கத்தில் உள்ள ஐராவதத்தையுமே, கைக்கு - கைக்கு, எளிய - இலேசான தாகிய, பந்தா-பூம்பந்துபோல, எடுத்து-எடுத்து, விளையாடுவீர்-விளையாட்டுச் செய்வீர்கள், ககனம் - ஆகாயத்தின், வட்டத்தை - மண்டலத்தை, எல்லாம்- எல்லாமும், கடுகு - கடுகின், இடை - உள்ளே, இருத்தி - இருக்கச்செய்து, அஷ்டம்-எட்டாகிய, குல-குல, வெற்பையும்-மலைகளையும், காட்டுவீர்-காணச் செய்வீர்கள், மேலும் மேலும்-மென்மேலும், மிக்க-மேலானதாகிய, சித்திகள்- சித்திகள், எல்லாம்-எல்லாவற்றையும், வல்ல-செய்துகாட்டும் வல்லமையுடைய, நீர்-நீங்கள், அடிமை - அடிமையாகிய அடியேன், முன் - முன்பாக, விளங்க- விளக்கமாக, வரு - வரும்படியான, சித்து - சித்தை, இலீரோ - பெற்றிருக்க வில்லையோ; எ-று.

(வி-ரை) இதுமுதல் பத்துப் பாடல்கள் ஒருபதிகம். 'வேதாந்த சித் தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே' என்றது மகுட மாக அமைந்தது. இப்பதிகத்தின் ஒவ்வோர் பாட்டின் ஈற்றிலும் 'சித்தர் கணமே' என முடிதலின் இப்பதிகத்திற்குச் **சித்தர்கணம்** எனப்பெயர் இடப்பெற்றது. 'சித்தர்கணம்' என்பது சித்தர் கணத்தைத் துதிக்கும்

பதிகத்தைக் குறித்தலின் இது ஆகுபெயர் என்பர். 'சித்தர்' என்பது அணிமா முதலிய அட்டமாசித்திகள் வல்ல ஞானப் பெரியாரைக் குறித்த தாம். சித்தில் வல்லவர் சித்தர் என்பதறிக. இறைவனும் எல்லாம்வல்ல சித்தன் என்பதை மதுரையில் கல்லானைக்குக் கரும்பருத்திக் காட்டிய **திருவிளையாடலால்** அறியக்கிடக்கும். 'திக்கொடு' இதில் ஒடு உருபு எண்ணுப்பொருளில் வந்தது; இது மூன்றன் உருபு. 'திகந்தம்' இது திக்குகளின் முடிவு என்பது பொருளாம். திக்கு+அந்தம்=திகந்தம் என ஆயிற்று; இது வடசொற்சந்தி. வேகம் மிகுதியை சாவேகம், வாயுவேகம், மனவேகம் எனக் கூறுதல் மரபு. இம்மூன்றனுள் மனோவேகம் மிகவிரைவு உடைமையின் 'மனவேக மென்னவே' என்றார். 'ஓடிஆடி வருவீர்' என்றதில் 'ஆடி' என்றது விளையாடி என்னும் பொருளது. இது முதற் குறை விகாரச்சொல். 'வருவீர்' இது முன்னிலைப்பன்மை வினைமுற்று. 'துருவம்' என்றது துருவ நக்ஷத்திரத்தானத்தை. 'உக்ரமிகு சக்ரதான்' என்றது சக்கராயுதத்தையுடைய மகாவிஷ்ணுவை. ஈண்டு அவன் திரி விக்ரம சொரூபம் எடுத்தோது சிறப்புடைமையின் சக்ராயுதத்தையுடைய திரிவிக்ரமன்போல என்றும். திருமாலுக்குத் திருச்சக்கரமே அசுரர் ராக்ஷச சம்மாரத்திற்கு உரிய ஆயுதமாக இருத்தலின் 'உக்ரமிகு சக்கரம்' என்றார். 'கையில் உளுந்தமிழு மாசமனமா வோரேழுகடலையும் பருக வல்லீர்' என்றது மொழிகள் மாறிநின்றது. இதனை, கையில் உழுந்து (அளவாக ஆக்கி) அமிழும் ஓர் எழ்கடலையும் ஆசமனமாகப் பருகவல்லீர் எனச் சொன்மாற்றிப் பொருள் கோடல்வேண்டும். 'அளவாக ஆக்கி' என்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வருவித்துரைக்கப்பெற்றது. 'ஆசமனம்' இது சந்தியாவந்தனகாலத்து உட்கொள்ளும் நீர்த்துளிக்குப் பெயராம். 'எழ்கடல்' என்றது உவர்நீர்க்கடல், பாற்கடல், தயிர்க்கடல், நெய்க் கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், சுத்தநீர்க்கடல் என்னும் கடல்களை. இதனை,

> "பாவுமிவ் வுலகி லுப்பு பால்தயிர் நெய்யே கன்னல்
> இரதமா மதுநீ ராகும் மெழுகடல்"

என்ற **கந்தபுராணச்செய்யு**ளாலும் அறியக்கிடக்கும்.

'இந்த்ரனுலகு' என்றது பொன்னுலகாகிய அமராவதிப் பட்டணத்தை; இது வானலோகத்தில் உள்ளது. 'ஐராவதம்' இது இந்திரன் பட்டத்து யானை. இது திருப்பாற்கடலில் அமுதத்தொடு பிறந்தது. இது வெள்ளை நிறமும் நாலுகொம்பும் உடையது. 'கடுகிடை யிருத்தி' என்றது கடுகைத் துளைத்து அதனுள் அமைத்துவைத்தலை; இதனை,

> "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள்"

என்ற **திருவள்ளுவமாலை**யால் அறியலாகும்.

'அட்டகுல வெற்பு' என்றது எட்டுமலைகளை. அவையாவன:—கயிலை, இமயம், மந்தாரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரி, கந்தமாதனம்,



என்பனவாம். 'இரண்டுகுலம்' என்பது கூட்டம் என்னும் பொருளது. 'மேலும் மேலும்' இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது 'வித்தகம்' என்றது ஈண்டு ஞானத்தை உணர்த்திற்று. வித் என்னும் பகுதியினடியாகப் பிறந்தபெயர்; இது, அறிதல் என்னும் பொருள்மேல் நின்றது. 'திகந்தமும்' என்றதில் உம்மை திக்குமாத்திரம் அல்லாமல் அதன் முடிவும் எனப் பொருள் தருதலின், இவ் உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மை. 'செம்பொன்' இது செம்மை+ பொன் 'செம்பொன்' என ஆயது. 'ஈறுபோதல்' என்றவிதியால் செம்மை என்னும் பண்புப்பெயரின் ஈற்றுமெய்கெட்டது. 'குணமேரு' இது குணமாகிய மேரு, குணத்தைஉடைய மேரு என இருபொருளில் மயங்கியது; 'குண மாகிய மேரு' எனின் பண்புத்தொகை. குணத்தைஉடைய மேரு என்னின் இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகை. குணத்தை மேருவாகக் கற்பித்தது உருவகம். 'அசனமா' இதில் 'ஆ' என்றது 'ஆக' என்பதன் விகாரம். 'கடுகிடை' இதில் இடை என்றது எழன்உருபு. தாயு மானவருக்கு ஞானோபதேசஞ்செய்த மௌனதேசிகர் சிவசித்தர்கணத்து ஒருவர் ஆகிய **திருமூலர்** ஆதலின் அவர் மரபாகிய சித்தர்கணத்தையும் துதிக்கின்றார். 'இவரோ' இது 'இல்லீரோ' என்பதன் தொகுத்தல் விகாரமாகும். 1

சித்தர்கணமே! செயற்கரிய செயல்களை எல்லாஞ் செய்யவல்ல
நீங்கள் அடியேனின் மனக்கல்லை இளகவைப்பது ஒரு
பாரமான செய்கையோ என்கின்றார்

பாட்டளி துதைந்துவளர் கற்பகநல் நீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி இருபாரி சத்திலும்
பணிசெயுந் தொழிலாளர்போல்
கேட்டது கொடுத்துவர நிற்கவைப் பீர்பிச்சை
கேட்டுப் பிழைப்போரையுங்
கிரீடபதி யாக்குவீர் கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை குறுகவைப்பீர்
ஓட்டினை எடுத்தா யிரத்தெட்டு மாற்றுக
ஒளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனும் இளைப்பாற யோகதண் டத்திலே
உலகுசுமை யாகவருளால்
மீட்டிடவும் வல்லநீ ரென்மனக் கல்லையனல்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம் - வேதாந்தத்தையும், சித்தாந்தம் - சித்தாந்தத்தையும், சமரசம்-சமரசமாகப் பாவிக்கும், நல்-நல்ல, நிலை-நிலைமையை, பெற்றபெற்றுள்ள, வித்தகம் - ஞானமிகுந்த, சித்தர் - சித்தர்களின், கணமே - கூட்டமே! பாட்டு-பாட்டைப்பாடும் இயல்பினதாகிய, அளி-வண்டுகள், துதைந்து-நெருங்கி, வளர் - வளரும், கற்பகம் - கற்பக தருவினது, நல் - நல்ல, நிழலை-நிழலை, பாரின் - உலகத்தின், இடை - இடையே, வர - வந்திருக்கும்படி, அழைப்பீர்-அழைக்கமாட்டுவீர், பதுமநிதி - பதுமநிதியையும், சங்கநிதி-சங்கநிதியையும், இரு-இரண்டு, பாரிசத்திலும் - பக்கத்திலும், பணி - வேலையை, செயும்-செய்கின்ற, தொழிலாளர்-வேலைக்காரர்கள், போல்-போல, கேட்டது-கேட்ட வஸ்துக்களை, கொடுத்துவா - கொடுத்துக்கொண்டுவா, நிற்க - நின்றுகொண்டிருக்குமாறு, வைப்பீர்-வைக்கவல்லவர்கள் ஆவீர்கள், பிச்சை - பிச்சையை, கேட்டு - இரந்துகேட்டு, பிழைப்போரையும் - உண்டு ஜீவிப்போர்களையும், கிரீடம்-முடிதாங்கிய, பதி-மன்னர்ஆக, ஆக்குவீர் - ஆக்கவல்லீர் ஆவீர்கள், கற்பம் - கற்பத்தின், அந்தம் - முடிவில்வரும், வெள்ளம் - பிரவாகத்தை, ஒரு-ஒரு, கேணி-கிணற்றின், இடை-உள்ளே, குறுக-சுருங்கி அடங்க, வைப்பீர்-வைக்கவல்லவர்கள் ஆவீர்கள், ஓட்டினை - உடைந்த மண்பாண்ட ஓட்டை, எடுத்து-எடுத்து, ஆயிரத்து-ஆயிரத்து, எட்டு-எட்டு, மற்று-மாற்று, ஆக-உள்ளதாக, ஒளிவிடும்-பிரகாசிக்கும், பொன்-பொன்னாக, ஆக்குவீர்-ஆக்கவல்லவர் ஆவீர்கள், உரகனும்-ஆதிசேஷனும், இளைப்பாற-களை ஆற்றிக்கொள்ள, உலகு-உலகத்தை, யோக-யோக, தண்டததிலே - தண்டத்திலே, சுமை-சுமை, ஆக-ஆகிநிற்க, அருளால்-கிருபையினாலே, மீட்டிடவும்-மீட்கவும், வல்ல-வல்லமையை உடைய, நீர்-நீங்கள், என்-அடியேனுடைய, மனம்-மனமாகிய, கல்லை-கல்லை, அனல் - நெருப்பில் வைக்கப்பெற்ற, மெழுகு - மெழுகைப்போல, ஆக்கி-இளகும்படி ஆக்கி, வைப்பது-செய்துவைப்பது, அரிதோ-உங்களுக்கு அரிய செயலதாகுமோ? எ-று.

(வி-ரை) வண்டுகள் மது உண்டு களிகொண்டு பண்பாடும் என்பார் 'பாட்டளி துதைந்துவளர் கற்பகம்' என்பார். கற்பகத்தை யடைந்த வண்டுகளிக்குக் குறைவின்மையைக் குறைத்ததாகும். 'கற்பகம்' இது தெய்வலோகத்தரு. இது தன்பால் வந்து கேட்பார் கேட்கும் பொருள்களை எல்லாம் தன்னிடத்திருந்து கற்பத்துத் தரவல்லது, இதனாலேயே இதற்கு இப்பெயர் வந்தது. 'பார்' இது பூமியைக்குறிக்குஞ் சொல். பருமையுடையது என்னும் பொருளது. இனி, பார்வையளவில் காணப்படுவது உண்மையில் பொய்யானது என்னும் பொருளது என்பர். 'பதுமநிதி' இது தேவலோகத்துத் திரவியம். தாமரை வடிவுடையது. இதுவும் எல்லாந் தரவல்லது. இது திருப்பாற்கடலில் அமுதொடு திருமகளொடு தோன்றியது. 'சங்கநிதி' இதுவும் தேவலோகத் திரவியம்; இது சங்குபோன்ற வடிவுடையது; இது எல்லாம் தரவல்லது. திருப்பாற்கடலில் திருமகள். தேவாமிர்தம் பிறக்கும்பொழுது தோன்றியது. 'கிரீடபதி' என்றது முடிமன்னரைக் குறித்தது. 'கற்பாந்த வெள்ளம்' என்றது உகமுடிவில் தோன்றும் பிரளய



வெள்ளத்தை. 'கேணி' இது சிறுகிணறு என்னும் பொருளது; இது திசைச்சொல். ஈண்டுக் கேணி என்றது இடவாகுபெயராய், அதன்கண் உள்ள நீரை உணர்த்திற்று. 'மாற்று' இதனை மாத்து எனவும் கூறுவர். 'மாற்று' என்பது பொன்னின் உயர்வு காட்டும் ஒளி அளவு. பத்து மாற்றுக்குமேல் தங்கம் இல்லை ஆயினும் உயர்வுகாட்ட 'ஆயிரத்தெட்டு மாற்று' என்றார்.

'ஒளிவிடும்' என்றது ஒளிசெயும் என்னும் பொருளது. 'உரகம்' என்றது ஈண்டு உலகத்தைத் தாங்கும் ஆதிசேடனாகிய சர்ப்பத்தை. 'யோக தண்டம்' இது யோகிகள் தம் யோகஆதனத்திற்கு ஆதரவாக உபயோகிக்கும் தடியைக் குறிக்கும். இதனை,

"நூலே காரமுக் கோல் மணையே
ஆயுங் காலை யந்தணர்க் குரிய"

என்னுந் **தொல்காப்பியத்தா**னறிக.

தண்டம் - இது முக்குணச்செல்வத்தைக்காட்டிச் சிறப்பிக்கும் கோல். தன் மனம் இளகி உருகி அன்புகொள்ளாக் கடினமுடைமை கருதி 'மனக்கல்லை' என்றார்; இது மனமாகிய கல்லை என விரிதலின் பண்புத்தொகை. 'அனன் மெழுகாக்கி' என்றது நெருப்பிலிட்ட மெழுகு போல் என்மனம் இளகும்படி ஆக்கி என்பதாம். 'அரிதோ' இதில் ஓகாரம் வினாப்பொருளது; இது விடைதழுவிய வினா; அரிதன்று என்பது பொருளாம். 'கற்பகம்' இது 'கல்பகம்' என்ற வடசொற்றிரிபு என்பர். 'நீழல்' இது 'நிழல்' என்பதன் ஆதிநீட்டம் 'பதுமநிதி சங்கநிதி' இது உம்மைத்தொகை. பதுமநிதியும் சங்கநிதியும் என விரியும். 'செயும்' இது 'செய்யும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'போல்' இது உவமஉருபு. 'பிச்சைகேட்டுப் பிழைப்போரையும்' என்றதன் ஈற்று உம்மை இழிவுச் சிறப்புஉம்மை. 'கேணி' இது திசைச்சொல்; சிறுகுளம், அல்லது கிணறு என்னும் பொருளது. இதனை, ... ... ... சொல் என்பர். 'உரகனும்' என்றதன் ஈற்று உம்மை உயர்வு சிறப்புப்பொருளில் வந்தது. 2

சித்தர்கணமே! கற்பாந்த காலத்தும் அழிவின்றி சித்துகள் செய்யும்
உமது மகிமை அடியேனாற் கூறுதற்கு எளிமை
யுடையதோ என்கின்றார்

பாரொடுநன் னீராதி யொன்றொடொன் றுகவே
பற்றிலய மாம்போதினில்
பரவெளியின் மருவுவீர் கற்பாந்த வெள்ளம்
பரந்திடி னதற்குமீதே
நீரிலுறை வண்டாய்த் துவண்டுசிவ யோகநிலை
நிற்பீர் விகற்பமாகி

நெடியமுகி லேழும் பரந்துவரு ஷிக்கிலோ
    நிலவுமதி மண்டலமதே
ஊரென விளங்குவீர் பிரமாதி முடிவில்விடை
    ஊர்தியரு ளாலுலவுவீர்
உலகங்கள் கீழ்மேல வாகப் பெருங்காற்
    றுலாவின்நல் தாரணையினால்
மேருவென அசையாமல் நிற்கவல் லீருமது
    மேதக்க சித்திஎளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
    வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம் - வேதாந்தத்தையும், சித்தாந்தம் - சித்தாந்தத்தையும், சமரசம் - சமரசமாகப்பாவிக்கும், நல் - நல்ல, நிலை - நிலைமையினை, பெற்ற - பெற்றுள்ள, வித்தகம் - ஞானம் மிகுந்த, சித்தர் - சித்தர்களின், கணமே-கூட்டமே!, பாரொடு-பூமியோடு, நல்-நல்ல, நீர்-நீர், ஆதி-முதலியவைகளும், ஒன்றொடொன்று - ஒன்றுடன் ஒன்று, ஆகவே - ஆகுமாறு, பற்றி-தொடர்ந்து, லயம்-ஒடுக்கம், ஆம்-ஆகும், போதினில்-காலத்திலே, பரவெளியில்-பரமாகாயத்தில், மருவுவீர் - பொருந்தியிருப்பீர்கள், கற்பம்-கற்பத்தின், அந்தம் - முடிவுக்காலத்தில் தோன்றும், வெள்ளம் - பிரளய வெள்ளம், பரந்திடினும் - பரவினாலும், அதற்கு-அந்த வெள்ளத்திற்கு, மீதே-மேலே, நீரில்-ஜலத்திலே, உறை - வசிக்கின்ற, வண்டு - வண்டுபோல, ஆய்-ஆகி, சுவண்டு-சுழன்று, சிவயோக-சிவயோக, நிலை-நிலையிலே, நிற்பீர் - வீற்றிருப்பீர், விகற்பம்-வேறுபாடு, ஆகி-ஆகி, நெடிய - நீண்ட, முகில் - மேகங்கள், எழும் - எழும், பரந்து-பரவி, வருஷிக்கவோ - மழையைப் பொழிந்தாலோ, நிலவு - விளங்குகின்ற, மதிமண்டலம் - சந்திரமண்டலம், அதே - அதனையே, ஊர் - சொந்தஊர், என-என்றுகொண்டு, விளங்குவீர் - பிரகாசிப்பீர்கள், பிரமாதி - பிரமன் முதலியோர்களுடைய, முடிவில் - முடிவுக்காலத்தில், விடை - ரிஷபத்தை, ஊர்தி-வாகனமாகக்கொண்ட சிவபெருமான், அருளால்-திருஅருட் சகாயத்தால், உலாவுவீர் - சஞ்சரிப்பீர்கள், உலகங்கள் - உலகங்கள் எல்லாம், கீழ்-கீழானது, மேலது-மேலது, ஆக-ஆகும்படி, பெரும்-பெரிய, காற்று - ஊழிக்காற்று, உலாவின்-வீசினால், நல்ல - நல்ல, தாரணையினால் - தாரணை யோகத்தினால், மேரு-மகாமேருமலை, என - ஒப்ப, அசையாமல் - சலிக்காமல், நிற்க-நிற்க, வல்லீர்-வல்லமையுடையவர்களே, உமது-உம்முடைய, மேதக்க-மேம்பாடுடைய, சித்தி-சித்தியானது, எளிதோ - சொல்லிடற்கு எளியதாகுமோ? எ-று.

(வி-ரை) 'பாரொடுநன்னீராதி' என்றது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களை. தோற்றியமுறையே ஒடுங்கும் மண் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று ஆகாயத்திலும்



ஒடுங்கும் ஆதலினால் 'பாரொடு நன்னீராதி யொன்றொடொன் றாகவே பற்றி லயமாம் போதினில்' என்றார். 'பரவெளி' என்றது ஞானாகாசத்தை. 'கற்பாந்தம்' என்பது ஊழிமுடிவை. 'வெள்ளம்' என்றது ஊழிப்பிரளயத்தை. 'நெடியமுகில்' என்றது பெருமுகில் என்னும் பொருளது. 'முகில்எழ்' என்றது:—1 சம்வர்த்தம், 2 ஆவர்த்தம், 3 புட்கலாவர்த்தம், 4 காங்காரித்தம், 5 துரோணம், 6 காளமுகி, 7 நீலவர்ணம். இவை முறையே பொழிவன மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ, என்பனவாம். 'நிலவுமதி மண்டலம்' இதற்கு விளங்கும் சந்திரமண்டலம் என்பது பொருளாம். இனி இதற்கு சந்திரிகையையுடைய சந்திரமண்டலம் எனப் பொருளுரைப்பாரும் உண்டு.

"நூறு கோடி பிரமரு நங்கினார்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
மாறில் கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறிலாத னீச னொருவனே"

என்ற **தேவாரத் திருவாக்கின்படி** மால் பிரமாதி தேவர்களும் மடிவர் ஆதலின் 'பிரமாதி முடிவில்' என்றார்.

இறைவன் ஒருவனே சாதலில்லாதவன் என மேலேகாட்டிய பிரமாணம் விளக்காநிற்க சித்தர்கணம் சாவாவோ என ஒரு வினாவும் நிகழும். அவ்வாறு வினாவுவார்க்கு அச் சித்தர்கணம் ஈறிலாச் சிவபெருமான் திருஅருளால் ஈறிலாதிருப்பர் என்று கூறவே, 'விடையூர்தி யருளா லுலவுவீர்' என்றார். 'விடையூர்தி' என்றது ரிஷபவாகன சிவபெருமானை. 'உலகங்கள் கீழ்மேல வாக' என்றது கீழது மேலாகவும் மேலது கீழாகவும் புரண்டழிய என்றதாம். 'பெருங்காற்று' என்றது சண்டமாருதக்காற்றை. 'தாரணை' என்பது அட்டாங்கயோகத்தில் ஒன்றாம். இது இதயம், கண்டம், கபாலம், உந்தி, நெற்றி இவைகளில் ஒன்றிலே சிந்தையை வைத்து இருக்கும் யோகநிலை. மகாமேரு சலியாது நிற்பதுபோல் சித்தர்கணம் சண்டமாருதக்காற்றிற்கும் சலனமின்றி இருப்பர் என்பார் 'மேருவென வசையாமல் நிற்கவல்லீர்' என்றார். 'மேதக்க' இது மேலானதும் தக்கதும் என்னும் பொருளது. இது மேல்+தக்க என்ற இருசொற்சந்தி. 'ஆம் போதினில்' இதில் 'ஆம்' என்றது ஆகும் என்பதன் மரூஉ. 'கற்பாந்தம்' இது கற்பம்+அந்தம் என்னும் இரு வடசொல் தீர்க்கசந்தி. 'முகிலேழும்' என்றதில் ஈற்று உம்மை முற்றும்மை. 'சிவயோகம்' இது சிவபெருமானைச் சிந்தையிற் கூட்டி நிற்கும்நிலை. இது சகமார்க்கத்தைச் சேர்ந்தது. 'மேருவென' இதில் 'என' என்றது உவமஉருபு. 'ஒன்றொடொன்று' இது ஒன்றில் ஒன்று எனப் பொருள்தரலின் வேற்றுமைமயக்கம் மூன்றன்உருபு எழன் பொருளில் மயங்கி நின்றது. 'போதினில்' இது பொழுதினில் என்பதன் மரூஉ. 'எளிதோ' இது விடைதழுவிய வினா; எளிதல்ல என்பது பொருளாம்.

சித்தர்கணமே! இந்தத்தேசம் உள்ளபொழுதே கருணைமுதலாகிய
சிவத்தோடு கலந்து அவசமுறச் செய்வது நல்லது; அதுவரை
இத்தேகம் குலையாதிருக்க உமக்கடிமைப்பட்டு வாழ்
தலை விரும்புகின்றேன் என்கின்றார்

எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிதரிதுகாண்
இப்பிறவி தப்பினாலெப்பிறவி வாய்க்குமோ
ஏதுவருமோ அறிகிலேன்
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழுதேஅருட்
ககனவட் டத்தில்நின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவசமுறவே
பண்ணுவது நன்மைஇந் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்ததேகப்
பவுரிகுலை யாமலே கௌரிகுண் டலியாயி
பண்ணவிதன் அருளினாலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமரசமாக எண்ணும், நல் - நல்ல, நிலை - நிலைமையை, பெற்ற - அடைந்த, வித்தகம்-ஞானநிறைந்த, சித்தர் - சித்தர்களின், கணமே - கூட்டமே!, எண்-எண்ணுதற்கு, அரிய-அருமையாகிய, பிறவிதனில் - பிறப்புகளில், மானுடம்-மனுஷ, பிறவிதான் - பிறப்புத்தான், யாதினும் - எதனினும், அரிது அரிது-கிடைத்தற்கு அரியது கிடைத்தற்கு அரியது, காண-காண, இப்பிறவி-இந்த மனுஷப்பிறவி, தப்பினால்-தப்பிவிட்டால், எ - எந்த, பிறவி - பிறப்பு, வாய்க்குமோ-பொருந்துமோ, ஏது - என்ன தீமைகள், வருமோ - உண்டாகுமோ?, அறிகிலேன் - அடியேன் அறியமுடியாதவனாக இருக்கின்றேன், கண்ணகல்-இடமகன்ற, நிலத்து - பூமியில், நான் - அடியேன், உள்ள - ஜீவனோடு இருக்கின்ற, பொழுதே-காலத்திலேயே, அருள் - திருஅருளாகிய, ககன-பராகாய, வட்டத்தில் - மண்டலத்திலிருந்தும், காலூன்றி-நிலைத்து, ஆனந்தம்-இன்பம், மழை-மழையை, பொழியும்-சொரிகின்ற, முகிலொடு-மேகத்துடன், கலந்து-சேர்ந்து, மதி-அடியேன் அறிவானது, அவசம்-பரவசம், உற - அடையும்படி, பண்ணுவது - செய்வது, நன்மை - நல்லதாகும், இ - இந்த, நிலை - நிலைமை, பதியும்-கைகூடும், மட்டுமே-வரையிலுமே, பதியாய் - அடியேனுக்கு இடமாக இருந்த, தேகம்-தேகமாகிய, பவுரி - பவுரிக்கூத்து, குலையாமலே - கெடாமல்,



கவுரி - கௌரியாகிய, குண்டலி - குண்டிசத்தி, ஆயி - ஆயி (தாய்) ஆகிய, பண்ணவி - பெரிய தேவதையின், அருளினாலே - கிருபையாலே, விண்-சிதாகாசத்தில், நிலவும் - விளங்குகின்ற, மதி - சந்திரனின், அமுதம் - அமிர்தமானது, ஒழியாது-இடைவிடாதபடி, பொழிய-பெய்ய, உமது-உங்களுடைய, அடிமை - அடிமையாய் அடியேன் இருக்கும் திறத்தை, நான் - அடியேன், வேண்டுவேன்-விரும்புவேன் எ-று.

(வி-ரை) பிறவிகள் எண்பத்து நான்குலட்ச பேதமும் அதன் வகைகளுமாக மலிந்து கிடத்தலினால் 'எண்ணரிய பிறவி' என்றார். ஓரறிவு முதலா ஆறறிவீறாக உள்ள எல்லாப் பிறப்புகளினும் மனிதப் பிறப்பே சிறந்தது ஆதலினால் 'மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது' என்றார். இதனான்றோ **ஔவைப்பிராட்டி**யாரும்,

"அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானிட ராதலரிது" என்று கூறினார்

பிற்காலத்தவரும் 'மானிடராக வாவரிது' என்றமை காண்க. 'இப்பிறவி' என்றது இந்த மனிதப்பிறவி. செய்திட்டியுள்ள புண்ணியபாவங்களுக்குத் தக்கபடி பிறப்புகள் எய்தும் ஆதலினால் 'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ' என்றார். இதனான்றோ **மணிவாசக**ரும்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்" என்றருளிச் செய்தார்.

அடியேன் செய்தபாவம் அனந்தம் அறிந்தன அனந்தம் அறியாதன அனந்தம் ஆதலின் 'ஏதுவருமோ அறிகிலேன்' என்றார். 'நானுள்ள பொழுதே' என்றது இந்த மானுட தேகத்தோடு ஜீவவந்தனாக உள்ள பொழுதே என்பது பொருளாம். 'அருட்ககன வட்டம்' என்றதில் 'அருள்' என்றது திருஅருளை. 'ககனவட்டம்' என்றது ஆகாயமண்டலத்தை. ஆகாயம் என்றது ஈண்டு ஞானாகாயத்தை. 'காலூன்றி' இது 'கால்' என்னும் ஒரு சொல்லும் 'ஊன்றி' என்னும் ஒரு சொல்லும் கூடி ஒருசொல் நீர்மை பெற்று நின்றது. 'காலூன்றி' என்பதற்கு நிலைத்து என்பது பொருளாம். 'மழைபொழியும்' என்றதில் மழை என்றது சிவானந்த மழையை; சிவானந்தத்தை 'மழை' என்றது உருவகஅணி. 'முகிலொடு கலந்து' என்றது அத்துவிதநிலை யடைதல், தாடலைபோற் கூடல். 'அவசம்' இது வசம் என்பதற்கு எதிர்மறைச்சொல்; இதில் 'அ' என்பது எதிர்மறை உபசர்க்கம். 'பதி' என்ற பலபொருள் ஒருபெயர்த் திரிசொல்; ஈண்டு இடம் என்னும் பொருளது. 'பவுரி' என்பது கூத்து வகைகளில் ஒன்று. 'பண்ணவி' இது 'பண்ணவள்' என்பதன் பெண்பால்; தேவி என்பது பொருள்.

'குண்டலி' இது மூலாதாரத்தே பாம்பு வடிவமாய் மண்டலமிட்டு இருக்கும் ஒரு சத்தி. 'வேண்டுவ னுமதடிமை நான்' இதற்கு நான் உமக்கு அடிமை பூண்டிருக்கும் திறத்தை விரும்புவேன் என்பது பொருளாம். இனி, இதற்கு உமது அடிமையாகிய நான் வேண்டுவன் எனப் பிரித்துப் பொருள் கூறுவாரும் உண்டு. 'அரிய' இது பெயர் உரிச்சொல். 'பிறவி தான்' இதில் 'தான்' என்பது வலியுறுத்தற் பொருளில் வந்தது. இதனை அசை என்பாரும் உண்டு. 'அரிதரிது' இது அடுக்குத்தொடர் சிறப்புப் பொருளில் அடுக்கியது. 'அரிதரிது காண்' இதில் 'காண்' அசை. 'வாய்க்குமோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இது ஐயவினா. 'ஆனந்தமுகில்' ஆனந்தமுகில் எனப் பொருள்தரலால் பண்புத்தொகை. ஆனந்தத்தைப் பொழியும் முகில் என்னின் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை.

4

சித்தர்கணமே! உண்டு உறங்கிக்கிடத்தலைக் கண்டித்து நீங்கித்
தவநெறியில் நிற்பது அடியேன் எந்தக்காலம் அதை
அறியேனே என்கின்றார்

பொய்திகழும் உலகநடை என்சொல்கேன் என்சொல்
பொழுதுபோக் கேதென்னிலோ [கேன்
பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்
புசித்தபின் கண்ணுறங்கல்
கைதவ மலாமலிது செய்தவம தல்லவே
கண்கெட்ட பேர்க்கும்வெளியாய்க்
கண்ட திது விண்டிதைக் கண்டித்து நிற்றலெக்
காலமோ அதையறிகிலேன்
மைதிகழும் முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினெடு செம்பொன்மேரு
மால்வரையின் முதுகூடும் யோகதண் டக்கோல்
வரைந்துசய விருதுகாட்டி
மெய்திகழும் அஷ்டாங்க யோகபூ மிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) மை-கருமைநிறம், திகழும் - விளங்கும், முகில் - மேகங்களின், இனம்-கூட்டம், குடை - குடைபோல, நிழற்றிட - நிழலைச்செய்ய, அட்டமாகிய, எட்டாகிய, வரையினெடு-மலைகளுடனே, செம்-செவந்த, பொன்-பொன்மய, மேரு-மகாமேருவென்னும், மால்-பெரிய, வரையின்-மலையின், முது கூடு-புறத்தே, யோகம் - யோகாதனத்துக்கு உரிய, தண்டம் - தண்டமாகிய,



கோலை-தடியை, வரைந்து - எழுதி, ஜயம் - வெற்றிக்கு, விருது - பிருதாக, காட்டி-காட்டி, மெய் - உண்மை, திகழும்-விளங்குகின்ற, அஷ்டாங்கம்-அஷ்டாங்கங்களுடைய, யோகம் - யோக, பூமிக்குள் - பூமியிலே, வளர்-விருத்தியடைந்துவரும், வேந்தரே-அரசர்களே!, குணம் - குணத்தாலே, சாந்தரே-சாந்தமுடையவர்களே!, வேதாந்தம்-வேதாந்தத்தையும், சித்தாந்தம்-சித்தாந்தத்தையும், சமரசம்-சமரசமாக எண்ணும், நல் - நல்ல, நிலை-நிலைமையை, பெற்ற-அடைந்த, வித்தகம்-ஞானம் நிறைந்த, சித்தர்-சித்தர்களின், கணமே-கூட்டமே!, பொய்-பொய்மை, திகழும்-மிக்கு விளங்குகின்ற, உலகம்-உலகத்தின், நடை - ஒழுக்கத்தை, என் - என்னவென்று, சொல்கேன் - சொல்லுவேன், என்-என்னவென்று, சொல்கேன் - சொல்லுவேன், (என்றாலும் ஒரு சிறிது சொல்லா நிற்பன்) பொழுது - (இவ்வுலகத்தவர்) பொழுது, போக்கு-போக்குவது, ஏது-எப்படி, என்னிலோ-என்று கேட்டாலோ, பொய்-பொய்யாகிய, உடல் - இவ் உடம்பின், நிமித்தம் - (காப்பாற்றும்) பொருட்டு, புசிப்புக்கு - உணவிற்காக, அலைந்திடல் - தேடித்திரிதலே யாகும், புசித்தபின்-உணவுகிடைத்து சாப்பிட்டபின், கண்ணுறங்கல் - தூங்குதலேயாம், இது-இது, (இவ்வொழுக்கம்) கைதவம் - பொய் ஒழுக்கம், அலாமல் - அல்லாமல், செய்த-செய்யக்கூடிய, தவம்-தவம், அல்லவே-அல்லவே, கண்-கண், கெட்ட-அழிந்த, பேர்க்கும்-குருடர்க்கும், வெளியாய்-வெளிப்படையாய், இது-இவ்வொழுக்கம், கண்டது - தெரியவந்ததாகும், (ஆகையினால்) இதை - இவ்வொழுக்கத்தை, கண்டித்து-கண்டித்து, விண்டு-விட்டுவிலகி, நிற்றல்-நிற்பது, எ-எந்த, காலமோ-காலமோ, அதை - அந்த விஷயத்தை, அறிகிலேன்-உணரும்வகையற்றவனா யிருக்கின்றேன்; எ-று.

(வி-ரை) 'பொய்' இது உண்மை அல்லாதது; இது மெய்க்கு எதிராக உள்ளது. 'என்சொல்கேன் என்சொல்கேன்' இது இரங்கற்பொருளில் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'பொய்யுடல்' என்றது நீர்மேல் எழுத்துப் போல நிலையுடையது அல்லாமையின் என்க. உலகத்து எல்லோரும் படும் இராப்பாடு, பகற்பாடுகள் எல்லாம் சாப்பாட்டிற்காதலினால் 'பொய்யுடல் நிமித்தம் புசிப்புக் கலைந்திடல்' என்றார். இதனாலன்றோ **பட்டினத்தடிகளும்** தம் அருமைத் திருவாக்கால்,

"யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பது
முறங்குவது மாகமுடியும்" என்றதுவுங் காண்க.
"அன்ன விசாரம் அதுவே விசாரம்" என்றும்,
"இரைக்கே யிரவும் பகலுந் திரிந்திங் கிளைத்து" என்றும்,
"என் சிந்தை கெட்டு ... ... ...
"சாணும் வளர்க்க அடியேன் படுந்துயர் சற்றல்லவே"

என்றும் கூறியதும், **ஔவைப்பிராட்டியார்**,

"சேவித்துஞ் சென்றிரந்தும் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்

பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையா
னாழி யரிசிக்கே நாம்" என்றுங் கூறியருளினர்.

இப்பெரியாரே மற்றோரிடத்து 'கைதவம்' இது பொய் ஒழுக்கம் என்னும் பொருளது. 'கண் கெட்டபேர்' : என்றது குருடரை; ஈண்டு ஞானக்கண்ணாகிய அகக்கண்ணைக் குறிக்கும். "விண்டிதைக் கண்டித்து' இது மொழிமாறி நின்றது; கண்டித்து விண்டு என்பது பொருள்கோளாம். 'விண்டு' இது விலகி, பிரிந்து என்பது பொருளாம். நீர் கொண்டமையால் மேகம் கருத்துத் தோன்றும் ஆதலினால் 'மைதிகழு முகிலினம்' என்றார். அரசர் குடைநிழலில் இருப்பது இராஜசின்னமாதலினால் 'மைதிகழு முகிலினங் குடைநிழற்றிட' என்றார். 'அட்டவரை' என்றது கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்னும் எழு மலைகளை என்க. 'செம்பொன் மேரு' என்றது செம்பொன்மயமாகிய மகா மேருமலை என்க. 'முதுகூடு' இது முதுகு+ஊடு என்ற இருசொற்சந்தி. மலைக்குப்புறத்தே என்பதாம். 'சயவிருது' என்றது வெற்றிப்பேற்றின் அடையாளத்தை. இதை வெற்றிக்குறி அல்லது வெற்றிச்சின்னம் என்பர். அரசர் தம் வெற்றியை மலைகளில் வரைந்துவைப்பது என்னும் வழக்குடைமைபற்றி, அட்ட வரையினொடு செம்பொன் மேரு மால் வரையின் முதுகூடும் யோகதண்டக்கோல் வரைந்து என்றார். 'குணசாந்தரே' குணத்தால் சாந்தமுடையவரே என்றும் சாந்தகுணமுடையவர் என்றும் பொருள்கொள்ளுவர் புலவர். 'உலகநடை' இது உலகத்தினது நடை, லௌகிகமார்க்கம் என்பதால் இது ஆறும்வேற்றுமைத் தொகை. 'புசிப்பு' இது தொழிற்பெயர், புசிக்கப்படுவது என்னும்பொருளது. கண்+உறங்கல் = கண்ணுறங்கல்; இது இருசொற்சந்தி ஒருசொல்நீர்மைத்தாய் நின்றது. 'கண்கெட்ட பேர்க்கும்' என்பதன் ஈற்றிலுள்ள உம்மை இழிவுசிறப்பு உம்மை. 'விண்டு' இது 'விள்' என்னும் பகுதி அடியாகப் பிறந்தது. யோக எட்டுவித ஆசனத்தோடு இருப்பதாதலின், 'அட்டாங்க யோகம்" என்றார். அட்ட+அங்க+யோகம்; அட்டம் = எட்டு, அங்கம் = கூறுகளையுடைய, யோகம் = யோகம். சித்தர்கணத்தை வேந்தர் என்றதற்கேற்ப பதியும், குடையும், பிறுதுங்கூறினமையின் இது உருவகஅணியாகும். 'அலைந்திடல்' 'உறங்கல்' இவைகள் தொழிற்பெயர்கள். 'அலைந்திடல்' இடைநின்ற 'இடு' துணைவினை.

5

சித்தர்கணமே! உங்கள் சிவராஜயோகச் சிறப்பாகிய அரசாங்கப்
பெருமை அடியேனாற் சொல்ல எளிதோ என்கின்றார்

கெசதுரக முதலான சதுரங்க மனமாதி
கேள்வியி னிசைந்துநிற்பக்
கெடிகொண்ட தலமாறு மும்மண்ட லத்திலுங்
கிள்ளாக்குச் செல்லமிக்க



தெசவிதம தாய்நின்ற நாதங்க ளோலிடச்
சிங்காச னதிபர்களாய்த்
திக்குத் திகந்தமும் பூரண மதிக்குடை
திகழ்ந்திட வசந்தகாலம்
இசையமலர் மீதுறை மணம்போல ஆனந்தம்
இதயமேற் கொள்ளும்வண்ணம்
என்றைக்கு மழியாத சிவராச யோகராய்
இந்த்ராதி தேவர்களெலாம்
விசயசய சயவென்ன ஆசிசொல வேகொலு
இருக்குநும் பெருமைஎளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமரசமாகக் கருதும், நல்ல-நல்ல, நிலை-நிலைமையினை, பெற்ற-அடைந்த, வித்தகம்-ஞானமிக்க, சித்தர்-சித்தர்களின், கணமே-கூட்டமே!, கெசம்-யானை, துரகம்-குதிரை, முதலான-முதலாகிய, சதுரங்கம்-சதுரங்கங்களாகவும், மனம்-மனம், ஆதி-முதலியவைகளாகிய அந்தக்கரணங்கள் நான்கும், கேள்வியின்-வேண்டிய பணிவிடைகளைச்செய்ய, இசைந்து-சம்மதித்து, நிற்ப-நிற்கவும், கெடி-கெடியை, கொண்ட-கொண்டுள்ள, தலம்-தலங்கள், ஆறும்-ஆறு ஆதாரங்களிலும், மு-மூன்று, மண்டலத்திலும்-மண்டலங்களிலும், கிள்ளாக்கு-கட்டளை ஓலை, செல்ல-செல்லவும், மிக்க-மேலான, தெசம்-பத்து, விதம்-வகை, ஆய்-ஆகி, நின்ற-நின்ற, நாதங்கள்-நாதங்கள், ஒலிட-வும்-முழங்கிடவும், சிங்காசனம்-சிங்கம் சுமந்த ஆசனம் வீற்றிருக்கும், அதிபர்களாய்-அரசர்களாய், திக்கு-திக்குகளிலும், திகந்தமும்-திசைமுடிவுகளிலும், பூரணம்-கலைகள் பதினாறும் நிறைந்த, மதி-சந்திரனை ஒத்த, குடை-குடையானது, திகழ்ந்திட-பிரகாசிக்கவும், வசந்தம்-இளவேனில், காலம்-பருவம், இசைய-வந்துசேர, மலர்-புஷ்பங்களின், மீது-மேலே, உறை-தங்கியுள்ள, மணம்-வாசனை, போல-போல, ஆனந்தம்-பேரின்பம், இதயம்-மனத்தின், மேல்-மேலே; கொள்ளும்-குடிகொள்ளும், வண்ணம்-விதம், என்றைக்கும்-எந்தக் காலத்தும், அழியாத-கெடாத, சிவ-சிவ, ராஜ-ராஜ, யோகராய்-யோகத்தை உடையவர்களாய், இந்திர-இந்திரன், ஆதி-முதலாகிய, தேவர்கள்-தேவர்கள், எலாம்-எல்லாரும், விஜய-விஜய, ஜயஜய-ஜயஜய, என்ன-என்று, ஆசி-மங்கள ஆசீர்வாதத்தை, சொலவே-சொல்லவே, கொலு-கொலுவில், இருக்கும்-வீற்றிருக்கும், நும்-உங்களுடைய, பெருமை-பெருமையானது, எளிதோ-சொல்லுதற்கு எளியதாகுமோ? எ-று.

(வி-ரை) அரசர்களுக்குச் சதுரங்கசேனையாக இருப்பது கஜ, ரத, துரக, பதாதி என்பனவாம். இதனை கரி, பரி, தேர், காலாள் என்பது

தமிழ் அரசர்க்குக் கரியும் பரியும் தேரும் காலாளும் ஏவல் கேட்க இசைந்து நிற்பதுபோல மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும் அமைந்திருக்கின்றன என்பார் 'கெசதுரக முதலான சதுரங்க மனமாதி கேள்வியி னிசைந்துநிற்ப' என்றார். 'கெடி' இதற்கு ஊரின் தன்மை, நிலயம், இருக்கை என்பன பொருளாம். 'தலம் ஆறு' என்றது மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்ற ஆறு ஆதாரங்களை. நிற்க, 'கெடிகொண்ட தலம் ஆறும்' என்பதை அரசற்குப் பொருள் கூறுங்கால் 'கெடி' என்பது கடி என்பதின் திரிபாகக் கொண்டு அரசற்குக் காவலாகவுள்ள படி, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறு எனக் கொள்ளுவர். (கடி-காவல்) இது பல பொருள்தரும் உரிச் சொல். இதனை,

"கடியென் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சஞ் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை யார்த்தல்
வரைவே மன்றல் கரிப்பி னாகும்"

என்ற **சூத்திரத்தா**னறிக.

'மும்மண்டலம்' என்றது சந்திரமண்டலம், சூரியமண்டலம், அக்கி மண்டலங்களை. இனி அரசர்க்கு ஆக்குங்கால் பூமண்டலம், வானமண்டலம், பாதளமண்டலம் என்க. 'கிள்ளாக்கு' இது ஓலை என்னும் பொருளது. இதனை 'நறுக்கு' எனவுங் கூறுவர். இது பெரும் ஓலையிற் சிறு துண்டு எடுத்து வரையப்பெற்றதாதலின் இப்பெயர் வந்ததென்க. இவ் வோலை சுருட்டி அனுப்பப்படுதலின் 'சுருள்' எனவும், முடங்கல் எனவும் கூறப்பெறுதலும் உண்டு. 'கிள்ளாக்கு செல' என்பது ஆணைசெல்ல என்பது பொருளாம். 'தெசம்' இது 'தசம் என வடசொற்றிரிபு. 'பத்து' என்னும் பொருளது, தசவித நாதம் என்றது பத்துவகை ஒலியை அவையாவன:— 1. கிணிநாதம், 2. கிணிகிணீ நாதம், 3. கண்டாநாதம், 4. சங்கநாதம், 5. வீணாநாதம், 6. தாளநாதம், 7. முரவநாதம், 8. பேரிநாதம், 9. மிருதங்கநாதம், 10. மேகநாதம் என்பனவாம்.

'ஒலிட' இது ஒலி செய என்னும் பொருளதாம். 'ஒல்' ஒலி, இட, செய்ய. இனி 'ஒல்' என்னும் பகுதியினின்றுமே 'ஒலம்' என்னும் மொழியும் பிறந்தமை அறியத்தக்கதாகும். அரசர்கள் வீற்றிருக்கும் ஆதனம் சிங்கஞ் சுமந்திருப்பதுபோல் சித்தரிக்கப்பட்டது ஆதலின் அதற்குச் சிங்காதனம் எனப் பெயர் ஏற்பட்டது. 'அதிபர்' என்றது தலைவர், அரசர் என்னும் பொருளது. 'பூரணமதிக்குடை' என்றது பூரண அறிவின் நிழல். அரசர்க்குக் குறிக்குங்கால் சந்திரவட்டக் குடையைக் குறிக்கும். 'வசந்த காலம்' என்றது இளவேனிற் காலத்தை. 'ஆனந்தம்' என்றது சிவாநந்தத்தை. 'விஜய' இது மேலான வெற்றி என்பது பொருள். 'ஜயம்' என்பது வெற்றி. 'வி' என்பது மேன்மைப் பொருளைத்தந்தது. 'விஜய ஜயஜய'



என்பது அரசரை வாழ்த்தும் வழக்குமுறை. 'எளிதோ' என்றது சொல்லுதற்கு எளிதோ என்பதாம். சொல்லுதற்கு என்பது அவாய்நிலையால் வருவித்து உரைக்கப்பெற்றது. 'ஆசி' இது வாழ்த்துக்கூறலாம். இச் செய்யுள் சித்தர்கணத்தை ஓர் பேர் அரசர்க்கு ஒப்பச் **சிலேடை அலங்காரத்தாற்** கூறப்பெற்றிருத்தல் காண்க. நிற்ப, செல்ல, ஒலிட, திகழ்ந்திட, சொல என்பன வினைஎச்சங்கள். இருக்கும் என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிந்தன. 'மும்மண்டலம்' இது மூன்று+மண்டலம் என்ற இருசொற்சந்தி. 'மூன்றனுருப்பழிவும் வந்ததுமாகும்' என்பது விதி. 'குடை' இது குடைவாயுள்ளது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப் பெயர். 'திகந்தமும்' இதன் ஈற்று உம்மை முற்றும்மை. 'நும்' இது முன்னிலைப்பன்மை.

6

சித்தர்கணமே! பேதை என்போல் உண்டோ மனத்தை அடக்கித் திருஅருளைக் கண்டிலேன்; மௌனயோகமும் செய்தறியேன்; கற்றதுங் கேட்டதும் வீணாக்கினேன்; அற்பன் இன்னும் கேடாதபடி தரிசனந்தருள வேண்டும் என்கின்றார்

ஆணிலே பெண்ணிலே என்போல வொருபேதை
அகிலத்தின் மிசையுள்ளதோ
ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
அடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் திருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடுமூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை எழுப்பநினைவும்
பூணிலேன் இற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக நடையினேன் நாயினுங் கடையான
புன்மையேன் இன்னம்இன்னம்
வீணிலே யலையாமல் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமரசமாகக் கருதும், நல் - நல்ல, நிலை - நிலைமையினை, பெற்ற - அடைந்த, வித்தகம்-ஞானத்தை உடைய, சித்தர் - சித்தர்களின், கணமே - கூட்டமே!, ஆணிலே-ஆண்பாலார்களிலாகிலும், பெண்ணிலே-பெண்பாலார்களிலாகிலும், என்-அடியேனை, போல - போல, ஒரு - ஒரு, பேதை - அறிவு இல்லாதவன்,

அகிலத்தின்-பூமியின், மிசை-மேலே, உள்ளதோ-உண்டோ?, ஆடிய - சுழலா நின்ற, கறங்கு-காற்றாடி, போல்-போல, ஓடி-விஷயாதிகளிலே ஓடிச்சென்று வீழ்ந்து, உழல்-அதிலே சுழலுகின்ற, சிந்தையை - மனத்தை, அடக்கி - அவ்வாறு செல்லாமல் தடுத்து, திருஅருளை - இறைவன் திருஅருளை, ஒரு - ஒரு, கணமேனும்-க்ஷணப்பொழுதிலாயினும், யான் - அடியேன், காணிலேன்-கண்டிலேன், அல்லாது-அது அல்லாமல், மௌனியாய்-மௌனநிலையுடையவனாகி, கண்-கண்களை, மூடி - மூடி, ஓடும் - ஓடும் இயற்கை உடையதாகிய, மூச்சை-பிராணக்காற்றை, கட்டி - நிறுத்தி, கலா - கலைகள் பதினாறும் நிறைந்த, மதியை-சந்திரனை, முட்ட-தொடும்படி, மூல-மூல, வெம் - வெம்மையுடைய, கனலினை-அக்கினியை, எழுப்ப - எழுப்புதற்கு, நினைவும் - எண்ணமும், பூணிலேன்-கொண்டேனில்லை, இற்றை-இத்தனை, நாள்-நாள், கற்றதும்-அடியேன் கற்ற விஷயங்களையும், கேட்டதும்-கேள்விகளையும், போக்கிலே-அவைகளின் இச்சைப்படியே, போகவிட்டு-போகும்படி விட்டுவிட்டு, பொய்-பொய்யாகிய, உலகன் - உலக வாழ்வையுடையவன், ஆயினேன் - ஆகினேன், நாயினும்-நாயைக்காட்டிலும், கடையான - கடைப்பட்டுள்ள, புன்மையேன் - அற்பத் தன்மையை உடைய அடியனேன், இன்னம் இன்னம் - மேலும் மேலும், வீணிலே-பாழான உலக விஷயங்களில், அலையாமல் - நுழைந்து திரியாதபடி, மலை-மலையின், இலக்கு-குறிபோல, ஆக-ஆக, நீர் - நீங்கள், வெளிப்பட - பகிரங்கமாக, தோற்றல்-காட்சிதரத் தோன்றுதல், வேண்டும்-வேண்டும்; எ-று.

(வி-ரை) 'பேதை' இது 'அறிவிலி' என்னும் பொருளது. என்னை? தான் வந்து செய்யவேண்டியதை மறந்து உண்டு உறங்கிக் காலங்கழித்தலின் தன்னைப் பேதை என்றார். 'ஆணிலே' 'பெண்ணிலே' இவற்றின் ஈற்று ஏகாரங்கள் எண்ணேகாரங்கள். 'கறங்கு' இது காற்றாடி; இது காற்றில் சுழலும் இயல்புபற்றி 'சுழல்' என்னும் பொருள்கொண்ட, 'கறங்கு' என்னும் பெயர் காற்றாட்டிக்குப் பெயர் ஆயிற்று. 'கணம்' இது க்ஷணம் என்ற வடசொற்றிரிபு என்பர். 'யான் காணிலேன் திருவருளை' இது மொழிமாறி நின்றது இதனை யான் திருவருளைக் காணிலேன் என மொழிமாற்றிப் பொருள்கோடல்வேண்டும். 'ஓடு மூச்சை' என்றது பிராணக்காற்றை. இதனை 'வாசி' எனபாரும் உண்டு. பிராணக்காற்றே வாசி, வாசியே பிராணக்காற்று என்பது அறியத்தக்கதாகும். 'கட்டி' என்றது வாசி நிறுத்துதலை. 'அடக்குதலை கலாமதியை முட்டவே' என்றது சந்திரமண்டலஞ் சேருதலை. 'மூலவெங்கனல்' என்றது மூலாக்கினியை. மௌனமாக நிட்டைகூடி வாசிஅடக்கி மூலக்கனலை எழுப்பி மதிமண்டலமுறுதல் யோகசாதனமாதலின், 'அல்லாது மௌனியாய்க் கண்மூடி யோடுமூச்சைக் கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்கனலினை எழுப்ப நினைவுபூணேன்' என்றார். இதன் விரிவுகளை, யோகநூலிற் கண்டறிக.

'இற்றைநாள்' என்றது ஈண்டு சிற்றைநாள்வரை என்றது பொருளாம். இனி, இதற்கு இந்த நாளிற் கற்றதும் எனப் பொருள்கொள்வாரும் உண்டு. 'கற்றது' என்றது ஞானக்கல்வியை. 'கேட்டது' என்றது ஞானக்கேள்வியை.



'போக்கிலே போகவிட்டு' என்றது அவைகளை அனுபவத்திற்குக்கொணர்ந்து அனுபூதிபெறாது மறந்து என்ற பொருளதாம். 'பொய்யுலகன்' என்றது பொய்யாகிய இந்த உலகத்திற்கு உரியவன் ஆயினேன் என்பதாம். நாய் நக்கியதை மீண்டும் உண்பதுபோல வெறுத்த உலகத்தை மீண்டும் விரும்பிச் சேர்தலின் 'நாயினுங் கடையான புன்மையேன்' என்றார். 'இன்னம் இன்னம்' இது அடுக்குத்தொடர்; மேலும்மேலும் என்னும் பொருளது. 'நல்லாரைக் காண்பதுவு நன்று' எனவும், 'பெரியாரைக் காணலும் பேறளிக்கும்' எனவும் எழுந்த ஆப்தவசனப்படி சித்தர்கள் தரிசனம் முத்திசாதகம் ஆதலின், 'இன்னம் இன்னம் அலையாமல் மலையிலக்காக நீர் வெளிப்படத் தோற்றல் வேண்டும்' என்றார். 'ஆணிலே, பெண்ணிலே' இவற்றின் ஈற்று ஏகாரங்கள் எண்ணேகாரங்கள். 'அகிலத்தின்மிசை' இதில் மிசை ஏழனுருபு. 'ஒருகணமேனும்' ஈற்று உம்மை இழிவுச்சிறப்பும்மை. 'காணிலேன்' இது 'கண்டிலேன்' என்ற சொல்லின் விகாரம். இது எதுகை நயம்பற்றி விகாரமுற்றது. 'கலா' இது 'கலை' என்ற வடசொல் 'கலா' என நின்றது. 'கங்கா' என்றது 'கங்கை' என்றாயது போல என்க. 'கலை' என்றது சந்திரனின் பிரபையை. 'நினைவுபூணிலேன்' இது இரண்டாம் வேற்றுமைத்தொகை; நினைவைப் பூண்டிலேன் என்பதாம். 'பூணிலேன்' இதுவும் எதுகைநோக்கி பூண்டிலேன் என்னுஞ் சொல்விகாரமுற்றுநின்றது. 'கற்றதும் கேட்டதும்' என்றதன் உம்மைகள் எண்ணும்மைகள். 'இன்மை இன்னம்' இது மிகுதிப் பொருளில் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'அலையாமல்' இது எதிர்கால எதிர்மறை வினைஎச்சம். 7

சித்தர்கணமே! அடியேனின் தமிழ்ப்பாடல்களின் விவரத்தை உலகினர் கேட்க அதைப்பற்றி நீங்கள் புகழ்ந்துகூற அதுகொண்டு உலகத்தவர் புகழ்ந்துகூறுவது கேட்டு மகிழ்வது எந்த நாளோ என்கின்றார்

கன்னலமு தெனவுமுக் கனியெனவும் வாயூறு
கண்டெனவும் அடியெடுத்துக்
கடவுளர்கள் தந்ததல அழுதழுது பேய்போல்
கருத்திலெழு கின்றதெல்லாம்
என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியால்
ஈட்டுதமி ழென்தமிழினுக்
கின்னல்பக ராதுலகம் ஆராமை மேலிட்
டிருத்தலால் இத்தமிழையே
சொன்னவனி யாவனவன் முத்திசித் திகளெலாந்
தோய்ந்த நெறியேபடித்தீர்
சொல்லுமென அவர்நீங்கள் சொன்னஅவை யிற்சிறி
தோய்ந்தகுண சாந்தனெனவே [து

மின்னல்பெற வேசொல்ல அச்சொல்கேட் டடிமைமன
விகசிப்ப தெந்தநாளோ [ம்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

**(ப-ரை)** வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமரசமாக எண்ணும், நல்-நல்ல, நிலை - நிலையைப்பெற்ற, வித்தகம் - ஞானம் மிகுந்த, சித்தர் - சித்தர்களின், கணமே - கூட்டமே!, கன்னல் - கரும்பின், அமுது - ரசம், எனவும் - என்று சொல்லவும், மு - மூன்று, கனி - பழங்கள், எனவும்-என்று சொல்லவும், வாய்-வாயில், ஊறு-நீர் ஊறுதற்குக் காரணமாக வுள்ள, கண்டு - கற்கண்டு, எனவும் - என்று சொல்லவும், அடி - சுவையுள்ள பாக்களின் அடியானது, கடவுளர்கள்-கடவுளர்களால், தந்தது-அடி எடுத்துத் தரப்பெற்றது, அல்ல-அல்ல, பேய் - பேயை, போல - ஒப்ப, அழுது அழுது-அழுது அழுது, கருத்தில் - அடியேனின் மனதில், எழுகின்றது - உதிக்கின்றது, எல்லாம்-எல்லாம், என்னது-அடியேனுடைய, அறியாமை-மடமை, அறிவு-அறிவு, என்னும்-என்கின்ற, இரு-இரண்டு, பகுதியால்-பகுப்புகளால், ஈட்டு-சொல்லிக் கூட்டிய, தமிழ்-தமிழ்பாக்களாகும், என் - அடியேனுடைய, தமிழினுக்கு - அவ்வாறு பாடிய தமிழ்ப்பாக்களுக்கு, ஆராமை - பேரன்பு, மேலிட்டு - அதிகரித்து, இருத்தலால் - இருப்பதனால், உலகம் - இந்த உலகமானது, இன்னல்-குற்றம், பகராது - சொல்லாது, அவர் - (இதுநிற்க) இந்த உலகத்தவர், முத்தி - முத்தியும், சித்திகள் - சித்திகள், எல்லாம் - எல்லாமும் பொருந்தியுள்ள, நெறியே-மார்க்கமே, படித்தீர் - படித்தவர்களே!, இ-இந்த, தமிழையே-தமிழ்ப்பாக்களையே, சொன்னவன்-பாடியவனாகிய, அவன்-அந்த அடியான், யாவன்-எவன், சொல்லும் - சொல்லுங்கள், என - என்று கேட்க, நீங்கள் - நீங்கள், சொன்ன - அவர்கள் கேள்விக்கு உத்தரமாக சொல்லிய, அவையில்-பதில்களினால், சிறிது - கொஞ்சம், தோய்ந்த-பொருந்திய, குணசாந்தன் - சாந்தகுணத்தினன், என - என்று, மின்னல் - பிரகாசம், பெற-உண்டாக, சொல்ல-புகழ்ந்துகூற, அடிமை - அடியேன், அ - அந்த, சொல்-வார்த்தைகளைக், கேட்டு-கேட்டு, மனம்-மனம், விகசிப்பது - மகிழ்ச்சி அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** 'கன்னலமுது' இது கரும்பின் ரசத்தைக் குறித்தது. இனி இதற்குக் கன்னலும் அமுதம் என உம்மைத்தொகையாகக்கொண்டு பொருள் கூறுவாரும் உண்டு. 'கன்னலமுது' கரும்பினுடைய ரசம் எனப் பொருள் கொள்ளின் வேற்றுமைத் தொகையாம் ஆறன்தொகை. 'முக்கனி' என்றது வாழை, பலா, மா எனனும் முக்கனிகளை. 'கனி' இது கனிவு உடையது என்னும் காரணம்பற்றி வந்தபெயர். பேர் சொன்னால், கண்டால், வாயிலிட்டால் வாயில் உள்ள நாக்கு ஊறல் எடுப்பது கற்கண்டாதலின் 'வாயூறு கண்டெனவும்' என்றார். நாவூறுமேயொழிய வாயூறுமோ எனின் நாக்கு வாயின் ஒரு பகுதியாதலின் 'வாய்' என்றார் என்க. 'கண்டு' இது சக்கரைக்



கட்டியாகும் இறைவன் சேக்கிழாருக்கு 'உலகெலா முணர்ந்தோதற்கரியவன்' என்றும், 'திகடசக்கரச் செம்முக மைந்துளான்' எனக் கச்சியப்பச் சிவாசாரியார்க்கும் கடவுளர்கள் அடி எடுத்துத் தந்ததுபோல அடி எடுத்துத் தந்ததல்ல என்பார், 'கன்ன லமுதெனவு ... ... ... மடியெடுத்து கடவுளர் கடந்ததல' என்றார். 'அழுதழுது' இது மிகுதியால் அடுக்கி வந்தது. இதனாலன்றோ **மணிவாசகரும்,**

"அழுதாலுன்னைப் பெறலாமே" என்றார். இன்னும்,

"அழுகிலேன் தொழுகிலேன்"

எனப் **பெரியார்**கள் கூறியதூஉங் காண்க.

பேய்க்கோட் பட்டார்க்குப் பேயின் ஆவேசத்தால் எழும் சேட்டைபோல எழுந்த என்பார் 'பேய்போற் கருத்தி லெழுகின்ற வெல்லாம்' என்றார். அறிந்தும் அறியாதும் பாடிய பாடல்கள்' என்பார 'என்னதறி யாமையறி வென்னுமிரு பகுதியா லீட்டுதமிழ்' என்றார். 'இன்னல்' என்பது இனிமையல்லாதது என்னும் பொருளது; ஈண்டு குற்றம் என்னும் பொருள் குறித்து நின்றது. 'இன்னல் பகராது உலகம்' இதில் உலகம் என்றது அறிவான் மிக்கவர்களை; இது 'உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டே' என்றதனால் அறியக்கிடக்கும். இத்தமிழையே சொன்னவன் யாவன் 'முத்தி சித்திகளெலாம் தோய்ந்த நெறியே படித்தீர்' என்னும் இது 'முத்தி சித்திகளெலாம் தோய்ந்த நெறியே படித்தீர் இத்தமிழைச் சொன்னவன் யாவன்' என இயைத்துப் பொருள் கொள்ளப்பெற்றது. 'முத்தி' என்றது துன்பமெல்லாம் விடுபட்டுச் சிவானந்தமயமாக இருக்கும் நிலையையாம். 'சித்தி' என்றது அணிமா முதலாகிய அட்டமா சித்திகளை. 'படித்தீர்' இது முன்னிலை விளி. 'சொல்லும்' இது முன்னிலைப்பன்மை ஏவல். 'அவர்' என்றது உலகத்தவரைச் சுட்டி நின்ற சுட்டுப்பெயர். 'சொன்னவையில்' என்றது நீங்கள் உத்தரமாகச் சிறப்பித்துக் கூறிய மொழிகளால் என்பதாம். இது வினையாலணையும்பெயர். 'சொன்னவையில்' இது சொல்லிய அவைகளால் எனப் பொருள் தந்தமையினால் இல் என்னும் ஐந்தன்உருபு ஆல் என்னும் கருவிப்பொருள் தரும். மூன்றும் வேற்றுமைப் பொருளில் மயங்கிவந்த வேற்றுமைமயக்கம். 'சிறிது தோய்ந்த குணசாந்தன்' இது குணசாந்தனு சிறிது தோய்ந்தோன் என்பதன் மொழிமாற்று நிலையாம். 'மின்னல்' என்பது வெளிச்சம், பிரகாசம் என்னும் பொருளது. ஈண்டு புகழைக் காட்டியது. இது உவமைஆகுபெயர். 'அச்சொல்' என்றது அந்த புகழ்ந்துரைச் சொல்லைக்குறித்தது. 'அடிமை' என்றது அடிமையாகிய அடியேன் எனத் தன்னைக் குறித்ததாகும். 'மனம் விகசிப்பது' என்றது மனம் மலர்தலை. அதாவது மகிழ்ச்சியான் மனம் விருகோடலைக் குறித்ததாம். 'எந்நாளோ?' இது எ+நாளோ என்ற இருசொற் சந்தி. இது,

"எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்

பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுதல் நெறியே"

என்ற இலக்கணத்தாலாயது.

'முத்தி சித்தி' இது உம்மைத்தொகை. முத்தியும் சித்தியும் என விரியும். 'நெறியே' இதில் ஈற்றில் நின்ற ஏகாரம் பிரிநிலைஏகாரம். ஏனெனில் பிறநெறிகள் படிக்கவில்லை முத்திநெறியையும் சித்திநெறியையுமே படித்தவர்கள் எனப் பொருள்தரலால் என்க. 'சொல்லுமென' இதில் 'என' என்பது 'என்ன' என்றதன் தொகுத்தல் விகாரம். 'அடிமை மனம்' இது அடிமையினேனுடைய மனம் எனப் பொருள் தருதலினால் ஆறும் வேற்றுமைத்தொகை. 8

சித்தர்கணமே! சிங்கத்தின் தன்மை நம்மிடம் விளங்குதலால்
உங்களை தவராஜசிங்கம் என்பர் என்கின்றார்

பொற்பினொடு கைகாலில் வள்ளுகிர் படைத்தலால்
போந்திடை யொடுக்கமுறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே அருள்கொண்டு
பூரித்த வெண்ணீர்மையால்
எற்பட விளங்குகக னத்திலிமை யாவிழி
இசைந்துமேல் நோக்கம்உறலால்
இரவுபக லிருளான கனதந்தி படநூறி
இதயங் களித்திடுதலால்
பற்பல விதங்கொண்ட புலிகலையி னுரியது
படைத்துப்ப்ர தாபமுறலால்
பனிவெயில்கள் புகுதாமல் நெடியவான் தொடர்நெடிய
பருமர வனங்களாரும்
வெற்பினிடை யுறைதலால் தவராச சிங்கமென
மிக்கோ ருமைப்புகழ்வர்காண்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமரசமாக எண்ணும், நல்-நல்ல, நிலை-நிலையைப்பெற்ற, வித்தகம் - ஞானம் நிறைந்த, சித்தர்-சித்தர்களினுடைய, கணமே - கூட்டமே!, பொற்பினொடு-அழகுடனே, கை - கைகளிலும், கால் - கால்களிலும், வள் - கூர்மையாகிய, உகிர்-நகங்களை, படைத்தலால் - பெற்றிருத்தலாலும், இடை - இடுப்பானது, ஒடுக்கம்-சுருக்கம், போந்து - வந்து, உறலால் - இருத்தலாலும், பொலிவு-பிரகாசம், ஆன-உள்ள, வெண் - வெண்மையாகிய, நீறு - திருநீற்றை, பூசி-பூசி, அருள்-திருஅருளை, கொண்டு-பெற்று, பூரித்த-நிறம்பியுள்ள, வெண்-மதிக்



கத்தகுந்த, நீர்மையால்-தன்மையாலும், எல்-ஒளி, பட-தோன்ற, விளங்கு-விளங்குகின்ற, ககனத்தில்-ஆகாயத்தில், இமையா - இமைக்காத, விழி-கண்கள், இசைந்து-பொருந்தி, மேல்-மேலாகிய, நோக்கம் - (ஊர்த்வப்) பார்வை, உறலால்-பொருந்துதலாலும், இரவு - இரவினும், பகல் - பகலினும், இருள்-அஞ்ஞானமாகிய இருள், ஆன - ஆகிய, கனம் - பெரிய, தந்தி-யானை, பட-அழிய, நூறி-அறைந்து, இதயம்-மனம், களித்திடலால்-சந்தோஷங்கொள்ளுதலாலும், பற்பல-அநேகமாகிய, விதம்-வகைகளை, கொண்ட-கொண்டுள்ள, புலி - புலியினுடையவும், கலை - மானினுடையவும், உரியது - தோல்களை, படைத்து-ஆதனமாகவும் உடையாகவும் பெற்று, பிரதாபம்-கீர்த்தி, உறலால்-பெற்றிருப்பதாலும், பனி-பனியும், வெயில்கள்-வெயிலும், புகுதாமல்-நுழையாதபடிக்கு, வான் - ஆகாயத்தை, தொடர் - அளாவியுள்ள, நெடிய - நீண்டுயர்ந்த, பரு-பருத்த, மரம் - மரங்களைக்கொண்ட, வனம் - காடுகள், ஆரும்-நிறைந்த, வெற்பின்-மலையின், இடை-இடத்தே, உறைதலால்-வசித்திருத்தலாலும், தவம்-தவத்தினர்க்கு, ராஜ - அரசாயிருக்கும், சிங்கம்-சிம்மம், என-என்று, மிக்கோர் - மேலோர்கள், உம்மை-உங்களை, புகழ்வர் - கொண்டாடா நிற்பர்கள்; எ-று.

(ப-ரை) 'பொற்பினொடு' ஈண்டு 'பொற்பு' என்றது அழகைக்குறித்தது. 'ஒடு' என்றது மூன்றன்உருபு எண்ணுப்பொருளில் வந்தது. 'கைகாலில்' இது கையிலும்காலிலும் என விரிதலால் இது உம்மைத்தொகை. 'வள்ளே கூர்மை ஈகையுமாகும்' என்ற சூத்திரத்தால் வள்ளுகிர் என்றதற்கு கூரிய நகம் என்றும்:- சிங்கத்திற்கு நகங்கள் இருத்தல்போலத் தவத்தினரும் நகங்களையாது வளரவிட்டிருப்பதால் 'வள்ளுகிர் படைத்தலால்' என்றார். சிங்கத்திற்கு இடுப்பு ஒடுங்கி இருக்கும் அதுபோலவே தவத்தினரும் ஆகாராதிகள் இல்லாமையால் வயிறு ஒட்டி இடை சிறுத்திருக்குங் காரணம்பற்றி 'போந்திடை யொடுக்க முறலால்' என்றார். நகம் பெற்றிருத்தலும் இடை சிறுத்திருத்தலும் சிங்கத்திற்கும் தவத்தினர்க்கும் ஒப்பாகும் பின் வருவன எல்லாம் சிலேடைவகையால் ஒப்பாதல் காணத்தக்கதாகும். தவத்தினர் வெள்ளியதிருநீறுபூசி அருள் நிறைந்திருக்கின்றனர். சிங்கம் சாம்பல்நிறம் படைத்து இறுமாந்திருக்கின்றது இதுகொண்டு 'பொலிவான வெண்ணீறு பூசியே யருள்கொண்டு பூரித்த வெண் ணீர்மையால்' என்றார். ஈண்டு 'பூரித்தல்' நிறம்பியிருத்தல்; இறுமாந்திருத்தல் என்பனபொருளாம். 'வெண்ணீர்மை' இது வெள்ளையாய் இருக்குந்தன்மை. அறியாமைத்தன்மை என இருபொருள் தருவதாகும். 'எல்பட விளங்கு ககனம்' என்பதற்குப் பிரகாசம் உண்டாக விளங்கும் சிதாகாயம் எனக் கொள்ளலுமாம். தவத்தினர் கண்ணிமையாது வானத்தைப் பார்த்தவண்ணமாக இருப்பர்; சிங்கம் வானோக்கியே செல்லும். இதுகொண்டே 'எல்பட விளங்கு ககனத்தி லிமையா விழி யிசைந்துமே னோக்கமுறலால்' என்றார்.

சிங்கம் இராத்திரியிலும் பகலிலும் கரியநிறம்பொருந்திய யானையைக் கொல்லுகிறது. தவத்தினர் இரவும்பகலுமாக இருக்கும் அஞ்ஞானத்தை

அழித்தொளிர்கின்றனர் ஆதலின் 'இரவுபக விருளான கனதந்தி படநூறி இதயங் களித்திடுதலால்' என்றார். 'இரவுபகல்' இது உம்மைத்தொகை, இரவும்பகலும் என விரியும், அஞ்ஞானத்தை இருளாகக்கூறுவது கவிமரபு. 'தந்தி' இது தந்தத்தை உடையது என்னுங் காரணம்பற்றிவந்த காரணப் பெயர். சிங்கம், புலி, மான் அடித்துப்பெற்று உண்டு புகழ்பெருகியது. தவத்தினர் புலித்தோல், மான்தோல் உடையாகவும் ஆதனமாகவுங்கொண்டு கீர்த்திபெற்றிருக்கின்றனர் ஆதலின் 'பற்பல விதங்கொண்ட புலிகலையினுரியது படைத்து ப்ரதாப முறலால்' என்றார். 'உரி' இது தோலைக் குறிக்கும். உரிக்கப்படுதலின் தோலுக்கு 'உரி' என்றாயிற்று; இது காரணப் பெயர். சிங்கம் காடடர்ந்த மலையில் வசிக்கும் தவத்தினரும் காடடர்ந்த மலையில் வசிப்பர் இதுகொண்டே, 'பனிவெயில்கள் புகுதாமல் நெடியவானெருடர்நெடிய பருமன வனங்களாரும் வெற்பினிடை யுறுதலால்' என்றார். 'பனி வெயில்கள்' இது உம்மைத்தொகை. பனியும் வெயிலும் என விரியும். 'நெடியவான்' என்பதற்கு உயர்ந்த என்பதாம். இனி, பரந்த எனவும் பொருள்கூறுவர். 'நெடியவான்' என்பது பருமரவனங்களுக்கு அடைமொழி. இனி இதனை வெற்புக்கு அடைமொழியாக்குவாரும் உண்டு. பிற் கூறிய ஐந்தும் செம்மொழிச்சிலேடையாய் அமைந்தது காண்க. 'பொற்பே பொலிவு' என்றுந் தோல்காப்பியச்சூத்திரத்தால் பொற்பினொடு என்பதற்கு விளக்கமுறும் எனக் கோடலுமாம்.

'இடை' உடம்பின் மத்திமபாகத்திருப்பதால் இப் பெயர்வந்தது. இடையை 'நடு' என்பதும் இக்காரணம்பற்றியே என்க. வெண்ணீறு-இது வெண்மை+நீறு என்னும் இருசொற்சந்தி. 'வெண்மைநீறு' வெண்ணீறு என்றாயது. "ஈறுபோதல்" என்னும் விதியால் என்க. 'இமையாவிழி' இதற்கு இமைக்காதகண் என்பது பொருளாம். தவத்தினர் கண்ணிமையாதி விண்ணோர்க்குத் தவஞ்செய்வர் என்பது இதனாலறியக்கிடக்கும். 'படநூறி' என்றது அழியும்படி அறைத்து என்பதாம். நூறுதல்-அறைத்தல். 'பிரதாபம்' என்னுஞ் சொல் பெரும்புகழைக்குறிக்கும். இது வடசொல். 'வெற்பினிடை' இதில் இடை என்பது ஏழனுருபு; இடப்பொருளது. 'தவராஜசிங்கம்' இது தவராஜர்களாகிய சிங்கம் எனவும், தவராஜர்களுக்கெல்லாம் சிங்கம் என இருபொருளில் மயங்கின்றது. 'மிக்கோர்' என்றது ஈண்டு அறிவின் மிகுந்தோர்களை. "உலகென்பது உயர்ந்தோர்மாட்டே" என்றதனால் உலகம்புகழும் என்றலுமாம்.

9

சித்தர்கணமே! கற்றும் அறிவில்லாது எல்லாரையும் மருட்டித் திரியும் எனக்கு முத்திகிட்டுமோ என்கின்றார்

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றும்அறி வில்லாதஎன்
கர்மத்தை யென்சொல்கேன் மதியையென் சொல்லுகே[ன்]
கைவல்ய ஞான நீதி



நல்லோ ருரைக்கிலோ கர்மமுக் கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவன்
நாட்டினு லோபழைய ஞானமுக் கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லா னொருத்தன்வர வுந்த்ரா விடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமி ழறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையும் மருட்டிவிட வகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே.

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம்-சித்தாந்தமும், சமரசம்-சமத்துவமாக என்னும், நல்-நல்ல, நிலை - நிலையை, பெற்ற-அடைந்த, வித்தகம் - ஞானம் நிறைந்த, சித்தர் - சித்தர்களினுடைய, கணமே - கூட்டமே!, கல்லாத-படியாத, பேர்களே-மனிதர்களே, நல்லவர்கள் - நல்லவர்கள், நல்லவர்கள் - (மிகவும்) நல்லவர்கள், கற்றும்-நூற்கள் பல கற்றும், அறிவு-அறிவு, இல்லாத-இல்லாமல் இருக்கின்ற, என்-அடியேனின், கர்மத்தை-கர்மபலனை, என்-என்னவென்று, சொல்லுவேன்-கூறுகிற்பேன், மதியை-அறிவை, என்-என்ன என்று, சொல்லுகேன் - சொல்லுவேன், கைவல்யம் - உயர்வாகிய பதத்தைக் கொடுக்கத்தக்க, ஞானம் - ஞானத்தையும், நீதி-நீதியையும், நல்லோர்-உத்தமஞானிகள், உரைக்கில்-சொன்னால், கர்மம்-கர்மமே, முக்கியம்-முக்கியமானது, என்று-என்று கூறி, நாட்டுவேன்-என் கல்விச்சாமர்த்தியத்தால் என் சொல்லை நிலைபெறச் செய்வேன், ஒருவன் - மற்றும் ஒருவன், கர்மம்-கர்மமே, நாட்டினால்-முக்கியமென்று நிலை நிறுத்தினால், பழைய-முன் கூறிய, ஞானம்-ஞானமார்க்கமே, முக்கியம்-முதன்மையானது, என்று-என்று, நவிலுவேன் - சொல்லுவேன், வடமொழியிலே - ஆரியத்திலே, வல்லான்-வல்லவன், ஒருத்தன் - ஒரு புலவன், வரவும் - வந்தாலும், திராவிடத்திலே-தமிழ்மொழியிலே, வந்ததா-கைதேர்ந்தவன்போல, விவகரிப்பேன்-தர்க்கித்துப்பேசுவேன், வல்ல - வல்லமையுடைய, தமிழ் - தமிழ்மொழியைக் கற்றுணர்ந்த, அறிஞர்-புலவர்கள், வரின் - வந்தால், அங்ஙனே - வடநூற் புலவனுக்குத் தமிழ் வசனங் கூறியதுபோல, வடமொழியின்-ஆரியத்தின், வசனங்கள்-வாக்கியங்கள், சிறிது-சிலவற்றை, புகல்வேன்-சொல்லுவேன், (இந்தவிதமாக) வெல்லாமல் - வெற்றிபெறாமல், எவரையும் - எப்படிப்பட்டவர்களையும், மருட்டிடை-மயக்கிவிட, வகை-காரணமாக, வந்த-வந்த, வித்தை-இத்தகைய வித்தை, என்-என்ன பிரயோசனத்தைத் தரும், முத்தி-முத்தி இன்பத்தை, தருமோ-தருமோ? தராது; எ-று.

(வி-ரை) 'கல்லாத' இது நூற்களைக்கல்லாத என்னும் பொருளது. 'பேர்களே' இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. 'நல்லவர்கள் நல்லவர்கள்' இது அடுக்குத்தொடர்; மிகுதிபற்றி அடுக்கி வந்தது. 'கற்றும்' இது இழிவு சிறப்பும்மை. 'கர்மம்' என்றது வினைப்பயனை. 'என் சொல்கேன்' இதில் 'என்' என்பது வினு இடைச்சொல். இது இரக்கத்தால் வந்த வினு. 'சொல்லுகேன்' எனற்பாலது 'சொல்கேன்' என வந்தது தொகுத்தல் விகாரம். 'கைவல்யம்' இது கேவலமுடையது கைவல்யம் என ஆயிற்று. கைவல்யம்-உயர்வு. 'ஞானநீதி' என்றது உம்மைத்தொகை. ஞானமும் நீதியும் என விரியும். இனி ஞானமாகிய நீதி எனவும் ஆம். இவ்வாறு பொருள்கொள்ளின் பண்புத்தொகையாகும். 'நல்லோர் உரைக்கில்' என்பதால் 'நல்லோர்' என்றது ஞானிகளை. 'காட்டுவேன்' ஈண்டு காட்டுதல் என்பது சொல்லிய விஷயத்தை நிலைநிறுத்தல். 'கர்மமும்' இதில் வந்த உம்மை எண்ணும்மை; இனி இது நாண்முன் முதன்மையானது என்று கூறிய கர்மத்தை எனப் பொருள்தரலால் இறந்ததுதழீஇய எச்சஉம்மை என்பர். 'பழைய' என்றது நான் முன்கூறிய ஞானம் என்பார் 'பழைய ஞானம்' என்றார். ஆரியம் வடதிசையிற் பயின்ற மொழியாதலின் 'வடமொழி' என்றார். 'திராவிடம்' என்றது ஈண்டு தமிழ் மொழியைக் குறித்தது. 'விவகரித்தல்' என்றது வழக்கிட்டுப்பேசலை. தர்க்கித்துப் பேசலு மதுவாகும். 'வல்ல தமிழறிஞர்' இதில் 'வல்ல' என்ற சொல் அறிஞர் என்ற பெயரைத்தழுவி அவர்க்கு விசேடந்தந்து நின்றது.

'அறிஞர்' இதில் ஞகரப்பெயர் இடைநிலை. 'அங்ஙனே' இது அதே விதமாக என்னும் பொருளது. 'ஙனம்' இதுவிதம் என்பதாம் வடமொழிப் புலவர்க்குத் தமிழ்வசனங்கள் கூறி மருட்டியதுபோலத் தமிழ்ப்புலவனுக்கு வடமொழி வசனங்கள்கூறி மருட்டுவேன் என்பதாம். 'வெல்லாமல்' இது நியாயமுறையில் வெற்றிபெருமல் என்ற பொருளதாம். 'முத்திதருமோ' இது தராது என்னும் விடையைத் தழுவிநிற்றலால் விடைதழுவிய வினுவாகும். இச் செய்யுளில் கல்விகற்பது முத்திநிலை பெறவேயன்றி வித்துவசாமர்த்தியங்காட்டி எவரையும் மருட்ட அல்ல என்பது அறியக்கிடக்கின்றது. இதனை,

"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக" எனவும்,

"கற்றறிந்தார் கண்ட தடக்க மறியாதார்
பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந்துரைப்பர்" எனவும்,

"கற்பக் கழிமட மஃகு மடமஃகப்
குற்றந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவ மாய நெறிபடரு மந்நெறி
யிப்பா லுலகத் திசைநிறீஇ யுப்பா
லுயர்ந்த வுலகம் புகும்" எனவருஞ்செய்யுள்கள் உணர்த்தாநிற்கும். 10

---



## ஆனந்தமானபரம்

ஆனந்தமயமாகிய இறைவனே! கோல்லாமை என்னும் குணம்
ஒன்றுமட்டும் இருக்குமாகில் கோரம் முதலிய எல்லாத்
தீக்குணங்களும் இல்லாதொழியும் என்கின்றார்

கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன் றும் ஒன் றிலேன்பால்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்ங்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினும் அறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்தஅருளில்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வதெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலனம் இந்த்ரசா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலாய்
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானேன் இவைக்கும்ஆளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டம்-இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப் புறம்பேயுள்ள புறத்திலுள்ள பகிரண்டங்களும், அடங்க - தன்னுள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு - பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன-ஆகிய, பரமே-பரம்பொருளே!, கொல்லாமை-கொலைசெய்யாமை ஆகிய குணம், எத்தனை - எத்தனை, குணக்கேட்டை-கெட்ட குணங்களை, நீக்கும்-அகற்றும், அ-அந்த, குணம்-நற்குணம், ஒன்று-கொஞ்சமும், இலேன் - இல்லாதவனுகிய அடியேன், பால் - இடத்திலே, கோரம்-கோரமானசெய்கை, எத்தனை - எத்தனை, பக்ஷபாதம்-பக்ஷபாதங்கள், எத்தனை-எத்தனை, வன் - வலிமையாகிய, குணங்கள் - குணங்கள், எத்தனை-எத்தனை, கொடிய-கொடியதாகிய, பாழ்-அழிவைத்தருவதாகிய, கல்லாமை-கல்லாமைக்குணங்கள், எத்தனை-எத்தனை?, அகந்தை - அகங்காரகுணங்கள், எத்தனை-எத்தனை, மனம் - மனத்தினிடத்தே, கள்ளம்-திருட்டுத்தனம், எத்தனை - எத்தனை?, உள்ள - உள்ளனவாகிய, சற்காரியம் - நல்ல விஷயங்களை, சொல்லிடினும்-சொன்னலும், அறியாமை-அவைகளை அறிந்து கொள்ளாமையாகிய தீக்குணங்கள், எத்தனை-எத்தனை?, கதிக்கு - மோக்ஷத்திற்கு, என்று-

என்று, அமைத்த - அமைக்கப்பட்ட, அருளில் - அருட்குணங்களில், செல் லாமை - புகாதிருத்தலாகிய தீக்குணங்கள், எத்தனை - எத்தனை?, விருதா- வீணாகிய, கோஷ்டி-கூட்டம், என்னில்-என்றால், செல்வது - அதில் நுழை வது, எத்தனை-எத்தனை, முயற்சி - வீண்காரியங்களில் பிரயத்தனப்படற்கு, சிந்தை-எண்ணங்கள், எத்தனை-எத்தனை?, சலனம்-அழிவுறும் தன்மையால், இந்த்ரஜாலம்-இந்திரஜாலத்தை, போன்ற-ஒத்த, தேகத்தில்-இந்த உடம்பில், வாஞ்சை-விருப்பம், முதலா-முதலாகிய, அல்லாமை-தகாத குணங்கள், எத் தனை - எத்தனை, அமைத்தனை - அடியேனிடம் பொருந்தும்படி ஆக்கிவைத் தாய், உனக்கு-தேவரீருக்கு, அடிமை-அடிமை, ஆனேன் - ஆகிய அடியேன், இவைக்கும் ஆளோ - ஈண்டு சொல்லிய சோரம்முதலிய தீக்குணங்களுக்கும் நான் ஆளாக வேண்டுமோ? எ-று.

(வி-ரை) **'ஆனந்தமானபரம்'** இப் பதிகத்திற்குப் பெயராக அமைந் தது. 'கொல்லாமை' என்ற பாடல்முதல் பத்துப்பாடல்களுக்கும் 'அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி யானந்த மானபரமே' என மகுடம் அமைந்தமையால் முடிவாகிய ஆனந்தமானபரம் என்பதனை இப்பதிகத் திற்குப் பெயராகச் சூட்டினர். இதற்கு ஆனந்தமயமாகிய பரம்பொருளே என்பது பொருளாகும். எல்லாப்பாவங்களிலுங் கொலைப்பாவங் கொடியது ஆதலினாலும், இது அவ்வுலகிற்கு உரியதாகிய அருள் இல்லாதார் செய்கை ஆதலினாலும், இந்தக் கொலைப்பாவம் ஒன்று இல்லாது போமாயில் எல்லாப் பாவமும் இல்லாதேபோய் ஒழியும் ஆதலினாலும் 'கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்கும்' என்றார். இதனை,

"அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்"

என்ற **திருவள்ளுவர்** திருவாக்காலும் அறியலாம்.

'குணக்கேடு' என்றது தீக்குணங்களை. 'அக்குணம்' என்றது அந்த கொல்லாமையாகிய நற்குணத்தைச் சுட்டிநின்றது. 'ஒன்று மொன்றிலேன்' இதில் முதலில்நின்ற 'ஒன்று' என்னுஞ் சொல் சிறிதளவும் என்னும் பொருளில் வந்தது. இரண்டாவதுநின்ற 'ஒன்றிலேன்' என்பது பொருந்தப் பெற்றுள்ளேன் அல்லேன் என்ற பொருளதாம். இதில் சொல்மட்டும் மீட்டும் மீட்டும் வந்தது பொருள்வேறுபட்டு நின்றது; ஆதலின் இது சொற்பின்வருநிலையணி என்பர். 'சோரம்' இது வெறுக்கத்தகுந்தசெயல்,கொடுஞ் செயல் எனும் பொருளது. 'எத்தனை' இது வியப்பின்கண்வந்த எண்ணுப் பெயர். 'பட்சபாதம்' இது அன்பு ஒருபக்கமாக அதனை மற்றோர்பக்கமாக ஒருசார்பிற் சார்ந்திச் சொல்லல். இதனை ஓரஞ்சொல்லல், ஓரச்செயல் எனவுங் கூறுவர். 'வன்குணம்' என்றது வன்கண்மையை. 'அகந்தை' இது ஆணவதத்துவத்தின் காரியமாகிய அகங்காரத்தைக் குறிக்கும். கல்லாமையால் அறிவு விருத்தியடையாது. தக்கது தகாதது உணரும் றிவு இராது பாவச்செயலிலேயே ஈடுபட்டு மீளாநரகிற்கு ஆளாவர்



ஆதலினால் 'கொடிய பாழ்கல்லாமை' என்ன 'கொடிய' என்னுஞ் சொல்லை யும் 'பாழ்' என்னுஞ் சொல்லையும் கல்லாமைக்கு அடையாக அடுக்கவைத் தார். 'மனக்கள்ளம்' என்றதற்கு மனத்திருட்டுத்தனம் என்றும். இது மனத் தினால் நினைந்துசெய்யும் திருட்டுத்தனத்தைக் குறிக்கும். இனி வஞ்சகச் செயல்கள் என்றலுமாம். இனி மனக்குற்றம் என உரைப்பாரும் உண்டு. சற்காரியஞ்சொன்னாலும் கேட்டு அதன்படி நடத்தற்கு நற்பயன்வேண்டும் அந்த நல்வினைப்பயன் இல்லார் தானும் அறியார் சொன்னாலுங் கேளார், இதுபற்றியே 'சற்காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை' என்றார்.

'கதிக் கென்றமைத்த அருள்' என்றது திருஅருள்நெறியை. 'கதி' என்றது முத்தியை. 'விர்தா கோஷ்டி' என்றது வீணர் கூட்டத்தைக் குறித்தது. அவச்செயல்செய்து திரியும் அவிவேகிகள் கூட்டம் என்பது பொருளாம். 'கோட்டி' இது கோஷ்டி என்ற வடசொற்சிதைவு. 'சலனம்' இது சலிப்பது என்றும் காரணம்பற்றிவந்தபெயர். சலனம் என்பதற்கு அசைவு, கேடு என்பன பொருளாம்; ஈண்டு அழிவு என்னும் பொருள்தந்து நின்றது. தேகம் மெய்யல்லாது பொய்யாக இருத்தலின் 'இந்த்ர ஜாலம் போன்ற தேகத்தில்' என்றார். 'வாஞ்சைமுதலா அல்லாமை' என்றது காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரியங்களை. 'அல்லாமை' இது எதிர்மறைப்பெயர்; இதற்கு நல்லதல்லாமை என்பது பொருளாம். நல்ல தல்லாமையாவது பாபச்செயலாம். 'இவை' என்றது மேற்கூறிய சோரம், பட்சபாதம், வன்குணம், கல்லாமை, அகந்தை, மனக்கள்ளம், முதலிய தீக் குணங்களை. 'ஆளோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. இது இவைகளுக்கும் அடிமைப்பட்டிருத்தல் நீதியாகுமோ ஆகாது என்ற பொருளது.

'அண்டம்' என்றது உலகங்களை. 'பகிரண்டம்' என்றது உலகத்து அப் பாலுள்ள உலகங்களை. 'நிறைவு' என்றது பரிபூரணத்தை. 'ஆனந்தம்' என் றது பேரின்பமயத்தை. 'பரம்' என்றது பரம்பொருளை. 'கொல்லாமை' இது மையீற்றுப்பண்புப்பெயர். 'இலேன்' இது குறிப்புவினையாலணையும்பெயர். 'பால்' இது ஏழன்உருபு; இடப்பொருள் பயந்துநின்றது. 'எத்தனை' என்னுஞ் சொல் பின்னும்பின்னும் பன்முறைவந்தது சொற்பொருட் பின்வரு நிலையணி என்பர். 'மனக்கள்ளம்' இது ஆறும் வேற்றுமைத்தொகை. மனத்தி னுடையகள்ளம் என விரியும். 'அல்லாமை' இது எதிர்மறைப் பண்புப் பெயர். 'அமைத்தனை' இது முன்னிலை இறந்தகால ஒருமைவினைமுற்று. 'வன்மைகுணம்' என்றது 'வன்மை' என்பதன் ஈறு கெட்டு வன் என நின்று வருஞ் சொல்லாகிய குணம் என்பதோடு புணர்ந்து நின்றது. இது "ஈறு போதல் ... ... பண்பிற்கியல்பே' என்ற சூத்திரவிதியால் என அறிக. 'அடங்க' என்ற வினையெச்சம் 'நிறைவாகி' என்ற மற்றோர் வினை எச்சத்தைத் தழுவிநின்றது.

ஆனந்தமானபரமே! தெளிவும் மயக்கமும் எல்லாமும் அல்லவும் ஆன தேவரீரை உன்னருள்பெற்றோரே அறியக்கூடும் பிறர் அறியமுடியாது என்கின்றார்

தெருளாகி மருளாகி யுழலுமன மாய்மனஞ்
சேர்ந்துவளர் சித்தாகிஅச்
சித்தெலாஞ் சூழ்ந்தசிவ சித்தாய் விசித்ரமாய்த்
திரமாகி நானுவிதப்
பொருளாகி யப்பொருளை யறிபொறியு மாகிஐம்
புலனுமாய் ஐம்பூதமாய்ப்
புறமுமாய் அகமுமாய்த் தூரஞ் சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
இருளாகி யொளியாகி நன்மைதீ மையுமாகி
இன்றாகி நாளையாகி
என்றுமாய் ஒன்றுமாய்ப் பலவுமாய் யாவுமாய்
இவையல்ல வாயநின்னை
அருளாகி நின்றவர்க ளறிவதல் லாலொருவர்
அறிவதற் கெளிதாகுமோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டம்-இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப் புறம்பேயுள்ள பகிரண்டங்களும், அடங்க - தன்னுள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு - பரிபூரணம், ஆகி - ஆகி, ஆனந்தம் - இன்பவடிவம், ஆன-ஆகிய, பரமே-பரம்பொருளே!, தெருள்-தெளிவு, ஆகி-ஆகி, மருள்-மயக்கம், ஆகி-ஆகி, உழலும்-திரிகின்ற, மனம்-மனம், ஆகி-ஆகி, மனம்-மனம் ஆனது, சேர்ந்து-கூடி, வளர்-வளர்வதற்கு, சித்து-அறிவு, ஆகி-ஆகி, அசித்து - அசித்துக்கள் எல்லாம், சூழ்ந்த - சூழ்ந்துள்ள, சிவம் - சிவஞானம், ஆகி-ஆகி, விசித்திரம்-ஆச்சரியகரம், ஆகி-ஆகி, திரம்-உறுதியுடையது, ஆகி-ஆகி, நானு விதம் - பல வகை, பொருள் - பொருள்கள், ஆகி-ஆகி, அ-அந்த, பொருள்களை - பொருள்களை, அறிகின்ற - உணர்கின்ற, பொறியும் - ஐந்து பொறிகளும், ஆகி-ஆகி, (அவைகளுக்கு விடயங்களாகிய) ஐம்-ஐந்து, புலனும்-புலன்களும், ஆய்-ஆகி, ஐம் - ஐந்து, பூதம் - பூதங்களும், ஆய் - ஆகி, புறமும்-வெளியும், ஆய்-ஆகி, அகமும்-உள்ளும், ஆய்-ஆகி, தூரம் - தூரமும், சமீபம்-சமீபமும், ஆய்-ஆகி, போக்கொடு-செலவுடனே, வரவும்-வரத்தும், ஆகி-ஆகி, இருள்-இருட்டும், ஆகி-ஆகி, ஒளி-பிரகாசமும், ஆகி-ஆகி, நன்மை-நன்மைகளும், தீமை-தீமைகளும், ஆகி-ஆகி, இன்று-இன்றைப்பொழுது, ஆகி-ஆகி, நாளை - நாளைப்பொழுதும், ஆகி - ஆகி, என்றும் - எந்தக்காலமும், ஆகி-ஆகி, ஒன்றும் - ஒருபொருளும், ஆய்-ஆகி, பலவும் - பல பொருள்களும், ஆய்-ஆகி,



யாவும்-எல்லாமும், ஆய்-ஆகி, இவை-இவைகளெல்லாமும், அல்ல-அல்லாதனவும், ஆய - ஆகிய, உன்னை - தேவரீரை, அருள் - தேவரீரின் திருஅருளுக்கு, ஆகி - இலக்கானவர்களாகி, நின்றவர்கள்-நின்ற ஞானிகள், அறிவது-அறிந்துகொள்வது, அல்லால்-அல்லாமல், ஒருவர்-மற்றும் ஞானிகள் அல்லாதவர்கள், அறிவதற்கு - அறிந்துகொள்வதற்கு, எளிது - சுலபம் ஆனது, ஆகுமோ-கூடுமோ? கூடாது எ-று.

(வி-ரை) 'தெருள்' என்றது ஞானத்தெளிவை. 'மருள்' என்றது அஞ்ஞானத்தால் உண்டாகும் மயக்கத்தை. 'உழல் மனம்' என்றது திரிதரும் மனம். இனி கஷ்டமுறும் மனம் என்றலுமாம். 'சித்து' என்றது ஞானத்தை. 'விசித்திரம்' இது வி+சித்ரம் என்ற இருவடசொற்சந்தி; மேலான அழகு, அத்துவிதம் எனப் பொருள்தந்து நின்றது. 'வி' என்பது உயர்வுகாட்டவந்த விசேடண அடைமொழி. 'நானு' இது வடசொல். பறபல என்னும் பொருளது. 'அறிபொறி' என்றது அறிகின்ற கருவிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து உறுப்புக்களைக் குறித்தது. 'புலன்' என்றது பொறிகளால் உணரப்படும் உணர்ச்சியைப் 'புலன்' என்பர். 'ஐம்பூதம்' என்றது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்தை. மிக்க வலியும் பெரியதும் ஆதலின் பூதம் என்னும் பெயர் பூதங்கட்கு ஆயின. 'போக்கொடு வரத்துமாகி' என்றது பிறப்பு இறப்புகளை. 'இன்றாகி நாளையாகி என்றுமாய்' என்றது முக்காலங்களுந் தானாகி நிற்பவன் தற்பரன் என்பதை உணர்தற்கென்க. இறைவனே ஞானமும் அஞ்ஞானமும் ஆக இருக்கின்றான் என்பார் 'இருளாகி ஒளியாகி' என்றார். இறைவனைப் பெரியார் 'இன்மையே, தீமையே' எனத் தேவாரத் திருமுறைகளில் புகழ்ந்துள்ளமையினால் 'நன்மை தீமையுமாகி' என்றார்.

இறைவன் அகரவுயிர்போலத் தனித்தும் ஏனைய எழுத்துக்கள்போல எல்லாப் பொருளினும் எள்ளுக்குள் எண்ணெய்போல் விரவியும் இருக்கின்றானாதலின் 'ஒன்றுமாய்ப் பலவுமாய்' என்றார். "எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி" என்ற பரஞ்சோதியார் வாக்குப்போல இதை எல்லாமும் அல்லவுமாய் இருத்தலினால் "யாவுமாய் இவையல்ல வாய நின்னை" என்று கூறியருளினார். 'அருளாகி நின்றவர்கள்' என்றது இறைவன் திருஅருட் டுணைபெற்று நின்ற தவத்தினர் என்பது கொண்டாம். 'ஒருவர்' என்றது இறைவன் திருஅருட்கு இலக்காகாத மாக்கள் தம்மை என்க. 'ஆகுமோ' ஈற்று ஓகாரம் வினைப்பொருளில் வந்தது. இது ஆகாது என்னும் விடையைத்தழுவி நிற்றலினால் இது தழுவிய வினாவாகும். 'மனமாய்' இதில் 'ஆய்' என்றது ஆகி என்ற வினையெச்சத்திரிபு. இறைவன் சச்சிதானந்தப் பொருளாதலின் 'சித்தாகி' என்றார். ஈண்டு சித்து என்றது ஆன்மசித்தை. 'அச்சித்தெலாஞ் சூழ்ந்த சிவசித்து' என்றது பரஞானத்தை, ஞானானந்த மயமாகிய இறைவனை. 'நானுவிதப் பொருள்' என்றது பூதபௌதிகசம்பந்தப் பொருள்களை. 'புறமுமாய் அகமுமாய்' என்றதன்கண் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். இறைவனை அவன் அரு

னாலேயே அறிய வேண்டும். அவன் அருள் பெருதார்க்குக் காணல் அரிது என்பார் 'நின்னை அருளாகி நின்றவர்க ளறிவதல்லால் ஒருவ ரறிதற்கு எளிதாகுமோ?' என்ருர். இதனை,

"அவனருளாலே யவன்ருள் வணங்கி" எனவும்,

"அவனருளே கண்ணுகக் காணி னல்லால்
இப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத் தானிவ
னிறைவ னென்றெழுதிக் காட்டொ ளுதே" எனவும்,

"காண்பாரார் கண்ணுதலே காட்டாக் காலே"

எனவும் வரும் **பெரியார்** திருமொழிகளால் நன்கறியலாம்.

இச்செய்யுளானே இறைவன் காண்பான், காட்சி, காணப்படு பொருளாக இருக்குந் தன்மையும், அவன் அருள்பெற்ருரேயன்றி மற்றையோரால் காணற்கு அரியவன் என்பதும் உணர்த்தினுராயிற்று. இதுகொண்டன்றே **பெரியார்**களும்,

"அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவையார்க்குந்
தெரியாத தத்துவனை"

எனக் கூறினர்.

2

ஆனந்தமானபரமே! அறுசமயப் பொருளாய் விளையாடும்
தேவரீரை உணரவல்லவர் எவர் என்கின்ருர்

மாறுபடு தர்க்கந் தொடுக்கஅறி வார்சாண்
வயிற்றின் பொருட்டதாக
மண்டலமும் விண்டலமும் ஒன்ருகி மன துழல
மாலாகி நிற்கஅறிவார்
வேறுபடு வேடங்கள் கொள்ளஅறி வாரொன்றை
மெணமெணென் றகம்வேறதாம்
வித்தையறி வாரெமைப் போலவே சந்தைபோல்
மெய்ந்நூல் விரிக்கஅறிவார்
சிறுபுலி போற்சிறி மூச்சைப் பிடித்துவிழி
செக்கச் சிவக்கஅறிவார்
திரமென்று தந்தம் மதத்தையே தாமதச்
செய்கைகொடும் உளறஅறிவார்
ஆறுசம யங்கடோறும் வேறுவே ருகிவிளை
யாடுமுனை யாவரறிவார்
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.



**(ப-ரை)** அண்டமும்-இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப் புறம்பேயுள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தன்னுள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன-ஆகிய, பரமே - பரம்பொருளே!, மாறுபடு - மாறுபாட்டிடற்குக்காரணமாக உள்ள, தர்க்கம்-தர்க்கங்களை, தொடுக்க-செய்ய, அறிவார்-அறிவார்கள், சாண் - ஒருசாண் அளவு உள்ள, வயிற்றின் - வயிற்றின், பொருட்டதாக-நிமித்தமாக, மண்தலமும் - பூலோகமும், விண்தலமும்-விண்ணுலகமும், ஒன்று-ஒன்ருக, ஆகி-கொண்டு, மனது-நெஞ்சம், சுழல-சுழன்று திரிய, மால்-மயக்கம், ஆகி-ஆகி, நிற்க-நிற்க, அறிவார் - அறிவார்கள், வேறு-வித்தியாசங்கள், படு - உடைய, வேடங்கள் - வேஷங்கள், கொள்ள - பூண, அறிவர் - அறிவார்கள், ஒன்றை - ஒரு மந்திரத்தை, மெணமெண - மொண மொண, என்று-என்று நாவால் உச்சரித்துக்கொண்டு, அகம்-மனம், வேறு-வித்தியாசம், ஆம்-ஆகக்கூடிய, வித்தை-வித்தையை, அறிவார்-அறிவார்கள், எம்மை-எங்களை, போலவே-போலவே, சந்தை - சந்தையில் பலபொருள்களை விரித்துவைப்பது, போல்-போல, மெய்-உண்மையாகிய, நூல்-நூற்பொருள்களை, விரிக்க-விரித்து விளக்கிவைக்க, அறிவார் - அறிவார்கள், சிறு-கோபிக்கின்ற, புலி-புலியை, போல்-போல, சீறி-கோபித்து, மூச்சை - சுவாசத்தை, பிடித்து - பந்தனஞ்செய்துகட்டி, விழி - கண்கள், செக்கச் சிவக்க - மிகவுஞ் சிவக்க, அறிவார்-அறிவார்கள், தம் தம்-தங்கள் தங்களுடைய, மதத்தையே-மதங்களையே, திரம்-மேலானது, என்று-என்று, தாமதம் - தமோகுணத்து, செய்கை கொடும்-செய்கையை மேற்கொண்டு, உளற-உளறிட, அறிவர்-அறிவார்கள், ஆறு-ஆருகிய, சமயங்கள் - சமயங்கள், தொறும் - தொறும், வேறு வேறு-வெவ்வேறு உருபு, ஆகி-ஆகி, விளையாடும்-திருவிளையாட்டுச்செய்யும், உன்னை-தேவரீரை, யாவர்-எவரோ, அறிவார்-அறிதர வல்லவர் ஆவர்? எ-று.

**(வி-ரை)** 'மாறுபடுதர்க்கம்' என்றது குதர்க்கவாதங்களை. வயிறு ஒரு சாண் அளவு உடையதாதலின் 'சாண் வயிற்றின் பொருட்டதாக' என்ருர். இதனை,

"பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே"

என்றதனுலும் அறியலாம்.

'மண்டலம்' என்றது பூமியை. 'விண்டலம்' என்றது தேவலோகத்தை. 'உதரநிமித்தம் பொகுகிருதவேஷம்' என்ற சாமானியவசனம்போல வயிற்றுப் பெருமாள்பொருட்டுப் பல வேஷங்கள்போட்டுத்திரிவர் என்பார், 'வேறுபடு வேடங்கள் கொள்ளவறிவார்' என்ருர். 'ஒன்றை மெண மெண என்று' என்றதில் ஒன்றை என்றது ஒப்பற்ற மந்திரங்களை. 'மெண மெண' இது இரட்டைக்கிளவி, ஒலிக்குறிப்புத் தந்துநின்றது. 'அகம்' என்றது மனத்தை.

"அகம் மனம் மனையே பாவம் அகலிடம் உள்ளுமாமே" என்ற நிகண்டாலும் அறியலாம். இது உள்ளே இருப்பது என்னும் காரணம்பற்றி வந்தபெயர். 'உள்ளம்' என்ற பெயரும் இது குறித்தேவந்ததாகும். 'சந்தைபோல்' என்றது சந்தைக்கடைபோல் என்பதாம். சந்தைக்கடையில் பலருங்காணத் தம்மிடத்து உள்ள பண்டங்களைவிரித்துப் பரப்பிவைப்பதுபோல என்பதாம். இது உவமையாக வந்தது. 'மெய்ந்நூல்' என்றது உண்மைச் சித்தாந்தநூல்களை இனி மெய்கண்டார் விரித்த மெய்கண்டசாத்திரங்களை எனினும் ஆம்.

யோகாப்பியாசிகள் தம் வாசிஅடக்கி வாசியைமாற்றிச் செலுத்துங்கால் புலி சீறும் ஒலிபோல் சத்தங்கேட்பதாலும், கண் சிவத்தலாலும், 'சீறுபுலி சீறிமூச்சைப் பிடித்துவிழி செக்கச் சிவக்க வறிவார்' என்று கூறினர். இது யோகாப்பியாசிகளைக் குறித்ததாம். 'தாமதச் செய்கை' என்றது தமோ குணங்காரணமாக எழுந்த செய்கை என்பதாம். 'உளற அறிவார்' என்றதனல் பின்முன் சம்பந்தமின்றி எனவும், தருக்கநியாயங்கட்குப் பொருத்தமின்றி யுங் கூறுவர் என்பது பெறப்படும். இறைவன் எவ்வச்சமயங்கட்கும் அவ்வச் சமயக்கடவுளாகி அதற்கு மேம்பட்டுச் சமயாதீதனுக இருத்தலினல் 'ஆறு சமயங்கடோறும் வேறுவேருகி விளையாடுமுனை' என்றார். 'சாண்வயிறு' இதில் 'சாண்' என்றது நீட்டளலவைப்பெயர். 'மண்டலமும் விண்டலமும்' இதன்கண்வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'சீறுபுலி' இது வினைத்தொகை. 'செக்கச் சிவக்க' இது மிகச் சிவக்க என்னும் பொருளது. கன்னங்கருத்த, பென்னம்பெருத்த, சின்னஞ்சிறுத்த என்றதுபோன்ற அருமைப்பிரயோக வழக்கு. 'செய்கைகொடு' இதில் கொடு என்றது கொண்டு என்றதன் தொகுத்தல்விகாரம். 'சமயங்கடொறும்' இதில் 'தொறும்' என்பது இடப்பொருள் உணர்த்துஞ்சொல். 3

ஆனந்தமானபரமே! ஞானிகள் வேதமுடிவாகிய பொருளைத்
தவஞ்செய்து நாடித்தேடி யுழல அடியேன் மட்டும் உலக
வாழ்வில் விருப்புற்றுத்திரிவது நியாயமோ என்கின்றார்

காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனல் மண்டிய
கடும்பசி தனக்கடைத் துங்
கார்வரையின் முழையிற் கருங்கல்போ லசையாது
கண்மூடி நெடிதிருந் தும்
தீயினிடை வைகியுந் தோயமதில் மூழ்கியுந்
தேகங்கள் என்பெலும்பாய்த்
தெரியநின் றுஞ்சென்னி மயிர்கள்கூ டாக்குருவி
தெற்றவெயி லூடிருந் தும்
வாயுவை யடக்கியு மனதினை யடக்கியு
மௌனத்தி லேயிருந் தும்



மதிமண்ட லத்திலே கனல்செல்ல அமுதுண்டு
வனமூ டிருந் தும் அறிஞர்
ஆயுமறை முடிவான அருள்நாடி னரடிமை
அகிலத்தை நாடல்முறையோ
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும்-இந்த அண்டங்களும், பகிரண்டமும் - இந்த அண்டங்களுக்குப் புறம்பே உள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க-தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன-ஆகிய, பரமே-பரம்பொருளே!, உதிர்ந்த-மரத்தைவிட்டு உதிர்ந்துகிடக்கும், காய்-காய்களையும், இலை - இலைகளையும், கனி-பழங்களையும், சருகு-சருகுகளையும், புனல்-நீரையும், மண்டிய-மிகுந்த, கடும்-கடுமையாகிய, பசி-பசி, தனக்கு-தனக்கு, அடைத்தும் - வயிற்றிற்போட்டு நிறைத்தும், கார் - கரிய, வரையின் - மலையின், முழையில்-குகைக்குள்ளே, கரும்-பெரிய, கல்-கல்லை, போல்-போல, அசையாது-சலிக்காமல், நெடிது-நீண்ட காலம், கண்-கண்களை, மூடி-மூடிக்கொண்டு, இருந்து - இருந்தும், தீயின்-நெருப்பின், இடை-மத்தியில், வைகியும் - தங்கி இருந்தும், தோயம் அதில்-புண்யதீர்த்தங்களில், மூழ்கியும் - முழுகியும், தேகங்கள் - சரீரங்கள், என்பு-எலும்பு, எலும்பு-எலும்புகள், ஆய்-ஆக, தெரிய - தெரியும்படிக்கு, நின்றும்-தவநிலையில் நின்றும், சென்னி - தலையிலுள்ள, மயிர்கள் - மயிர்களை, கூடா-கூடாகக்கொண்டு, குருவி - குருவிகள், தெற்ற - அலைக்க, வெயிலூடு-வெயிலிலே, இருந்தும் - இருந்தும், வாயுவை - மூச்சுவிடும் காற்றை, அடக்கியும்-தடுத்தும், மனதினை - மனத்தை, அடக்கியும் - கட்டுப்படுத்தியும், மௌனத்திலே-மௌனநிலையிலே, இருந்தும் - இருந்தும், கனல் - வெப்பம், செல்ல-தணிய, மதி - சந்திரமண்டலத்திலே உள்ள, அமுது-அமிர்தத்தை, உண்டு-பானம் பண்ணியும், வனம் - காட்டின், ஊடு - உள்ளே, இருந்தும்-இருந்தும், அறிஞர்-ஞானிகள், ஆயும் - ஆராயப்பட்ட, மறை-வேதத்தின், முடிவு-முடிவாகிய, பொருள் - செம்பொருளை, தேடினர் - விருப்புற்றுத் தேடினர்கள், அடிமை - அடியேன்மட்டும், அகிலத்தை - இவ்வுலகவாழ்க்கையை, நாடல் - விரும்பிடுதல், முறையோ-நியாயம் ஆகுமோ? எ-று.

(வி-ரை) உலகத்தைவிட்டவர்கள் பசித்தால் உண்ணவேண்டுவது உலகத்தைவிட்ட பொருள்களையேயாம். இதுகொண்டே தவத்தினர் உலகத்தை விட்டவைகளாகிய மரத்தைப்பற்றியிராததாகிய தரையில் உதிர்ந்துகிடக்கும் சருகையும் கனிகளையும் உண்டு உயிர்வாழ்கின்றனர். சிறுபான்மை உலகத்தைவிடும் நிலையிலுள்ள செங்காயையும் உண்ணலும் உண்டு. ஆகையால் 'காயிலை யுதிர்ந்தகனி சருகுபுனல் மண்டிய கடும்பசி தனக்கடைத்தும்' என்றார். 'காய்' இது காய்ப்பது என்னுங் காரணம்பற்றிவந்தபெயர். இதற்குக் காயையும் இலையையும் உதிர்ந்த கனியையும் சருகுகளையும் என்று பொருள்

கூறுவர். இதனை, 'உதிர்ந்த என்ற சொல்லை மத்திபதீபஅலங்காரமாக எடுத்துக்கொண்டு உதிர்ந்த காயையும், உதிர்ந்த இலையையும், உதிர்ந்த கனியையும், உதிர்ந்த சருகையும் எனக் கொள்ளின் உலகத்தைவிட்டவர் உலகத்தைவிட்டபொருளை உண்ணவேண்டும் என்று நியாய முறைப்படி செய்கின்றவர் என்பது தெள்ளிதின் புலப்படுத்துவதாகும்.

'கார்வரை' என்றது கருத்தமலை. இனி, கார் உறையும் மலை, மேகங்கள் வந்து தங்குமாறு உயர்ந்துள்ளமலை எனவும் ஆம். இனி கார் என்பது கருண்டநிறமாகக்கொண்டு மரங்காடுகளால் இருண்டு தோன்றும் மலை என்றலும் ஒன்று. இதில் கார் என்றதைக் குகைக்கு அடையாகக்கொண்டு இருண்ட குகை என்றலும் ஆம். 'கருங்கல்' என்றது பெருங்கல் என்பதாம். இதற்குக் கரியநிறம்பொருந்திய கருங்கல் என்னலும் ஆம். 'அசையாது கண்மூடி நெடிதிருந்தும்' என்றது மௌனயோகத் தவநிட்டையில் இருத்தலை உணர்த்தும். 'தீயினிடை வைகியும்' என்றது பஞ்சாக்கினியை. 'தோயம்' என்றது, நீர் ஈண்டு புண்ணியதீர்த்தங்களை உணர்த்திற்று. 'என்பெலும்பாய்' இது அடுக்குத்தொடர். 'வாயுவை அடக்கி' என்றது யோகாதனத்து இருந்து மூச்சைமாறியும் மூச்சைஅடக்கியும் இருத்தலை உணர்த்திற்று. 'மனதினை அடக்கி' என்றது மனதைப் புறஞ்செல்லவிடாது இறைவன் சிந்தனையிலேயே இருத்துதலை. 'மௌனத்திலிருந்து' என்றது மௌன நிட்டையில் சமாதிகூடியிருத்தலை. 'மதிமண்டலம்' என்றது சந்திரமண்டலத்தை. மூலக்கனலை எழுப்பி மதிமண்டலத்தே முட்டச்செய்து அங்கு வழியும் அமுதத்தை யோகநிட்டையர் உண்டு நெடுங்காலம் இருப்பர் ஆதலின் 'மதிமண்டலத்தே கனல்செல்ல வமுதுண்டு' என்றார். 'அமுது' என்றது மதி அமுதை. 'கனல்' என்றது முத்தாபங்களை. முத்தாபங்களாவன:—ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பனவாம். 'அறிஞர்' என்றது மெய்ஞ்ஞானியர்களை. 'ஆயுமறை முடிவான அருள்' என்பது இறைவனை. 'ஆயும்மறை' என்றது ஆராயும் வேதம் என்ற பொருளதாம். 'மறை முடிவு' என்றது வேதாந்தப்பொருளை. 'அருள்' என்றது இறைவன் திருஅருளை. 'அகிலம்' என்றது இது ஆகுபெயராய்ப் பிரபஞ்சவாழ்வை உணர்த்தி நின்றது. 'முறையோ' இதில் ஈற்று ஓகாரம் வினா; இது விடை தழுவியவினா. 'முறையல்ல' என்னும் விடையை அவாவி நின்றது. இச் செய்யுளின் பொருளை நமது **பட்டினத்தடிகள்** கூறிய,

"மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கள்
தம்மைத் தாமே சாலவு மொறுப்பர்"

என்ற அகவலின் பொருளொடு ஒப்பிட்டுக்காண்க.

'காயிலை யுதிர்ந்த கனிசருகுபுனல்' இவைகளில் உம்மை தொக்கது. 'சடும்பசி' இது கடுமை+பசி என்ற இருசொற்சந்தி. இதில் கடுமை என்பதன் மை ஈறு கெட்டது. 'வரையின் முழை' இதில் 'இன்' என்றது இடப்பொருள் உணர்த்திநின்றது. 'தீயினிடை' இதில் 'இடை' இது



ஏழனுருபு. இடப்பொருளது. 'என்பு' இது எலும்பு என்பதன் விகாரம். இச் செய்யுளில்வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 4

ஆனந்தமானபரமே! சுத்தமுதல் எல்லாம் நீயன்றி இல்லையானால் அடியோங்கள் தேவரீரையன்றி யுண்டோ என்கின்றார்

சுத்தமும் அசுத்தமுந் துக்கசுக பேதமுந்
தொந்தமுடன் நிர்த்தொந்தமும்
ஸ்தூலமொடு சூக்ஷமமும் ஆசையும் நிராசையுஞ்
சொல்லுமொரு சொல்லின்முடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொ டபாவமும்
பேதமொ டபேதநிலையும்
பெருமையொடு சிறுமையும் அருமையுடன் எளிமையும்
பெண்ணினுடன் ஆணும்மற்றும்
நித்தமும் அநித்தமும் அஞ்சன நிரஞ்சனமும்
நிஷ்களமும் நிகழ்சகளமும்
நீதியும் அநீதியும் ஆதியொட நாதியும்
நிர்விஷய விஷயவடிவும்
அத்தனையும் நீயலதெள் அத்தனையும் இல்லையெனில்
யாங்களுனை யன்றியுண்டோ
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும் - இந்த அண்டங்களும், பகிரண்டமும் - இந்த அண்டங்களுக்குப் புறம்பேயுள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி - ஆகி, ஆனந்தம் - இன்பவடிவம், ஆன - ஆகிய, பரமே-பரம்பொருளே!, சுத்தமும்-சுத்தத்துடனே, அசுத்தமும்-அசுத்தங்களும், துக்கம்-துக்கத்துடனே, சுகம்-சுகமும், பேதமும் - அவற்றின் பேதங்களும், தொந்தமுடன் - சம்பந்தத்துடனே, நிர்தொந்தமும் - சம்பந்தமின்மையும், தூலமொடு-தூலத்துடனே, சூக்குமமும்-சூக்குமங்களும், ஆசையும்-அவாவும், நிராசையும் - அவா இன்மையும், சொல்லும் - வேதமும, சொல்லின் - வேதத்தின், முடிவும்-அந்தமும், பெத்தமொடு-பாசபந்தங்களுடனே, முத்தியும்-மோக்ஷங்களும், பாவமொடு-நினைப்புடனே, அபாவமும்-மறப்பும், பேதமொடு-பேதங்களுடனே, அபேதம்-அபேத, நிலையும்-நிலைகளும், பெருமையொடு-உயர்வுகளுடனே, சிறுமையும்-தாழ்வுகளும், அருமையுடன் - அருமையோடு, எளிமையும் - எளிமைகளும், பெண்ணினுடன்-பெண் தன்மையுடன், ஆணும்-ஆண் தன்மையும், மற்றும்-மேலும், நித்தமும் - நித்தியமும், அநித்தமும் - அநித்தியங்களும், அஞ்சனம் - தோஷத் துடனே, நிரஞ்சனமும் - தோஷமில்லாமையும், நிஷ்கள

மும் - கலைகளுக்கெல்லாம் மேம்பட்டதும், நிகழ் - நிகழ்கின்ற, சகளமும் - கலைகளோடெல்லாங் கூடினதும், நீதியும் - நீதியுடனே, அநீதியும் - அநீதிகளும், ஆதியொடு - ஆதியுடனே, அநாதியும் - அநாதியும், நிர்விஷயம் - ஒருவருக்கும் விஷயம் ஆகாமையுடன், விஷயவடிவும் - எல்லார்க்கும் விஷயம் ஆகும் வடிவங்களும், அத்தனையும் - மேற்கூறிய எல்லாமும், நீ - தேவரீர், அலது - அல்லாமல், என் - என்னின், அத்தனையும் - அளவும், இல்லை - தேவரீர் இல்லாத பிறிதுபொருள் இல்லை, எனின் - என்றால், யாங்கள் - அடியோங்கள், உன்னை - தேவரீரை, அன்றி - அல்லாமல், உண்டோ - வேருக உள்ளவர்களாக இருக்கின்றோமோ? எ-று.

(வி-ரை) 'சுத்தம்' இது வடசொல்; தூய்தன்மை என்பது பொருள். அது அல்லாமை 'அசுத்தம்' இதில் அகரம் எதிர்மறை உபசர்க்கம். 'துக்கம்' என்றது பிறர்பால் எய்தும் பிறவித்துயர்கள். 'சுகம்' என்றது இம்மை மறுமைச் சுகங்களை. 'தொந்தம்' இது பற்று, ஒட்டு என்னும் பொருள் தரும் வடசொல். இதற்கு எதிர்மொழி 'நிர்த்தொந்தம்' இதில் 'நிர்' என்பது எதிர்மறை உபசர்க்கம். 'தூலம்' என்றது கட்புலனுக்குத் தோன்றுவது. 'சூக்குமம்' என்பது கட்புலனுக்குத் தோன்றாதது என்னும் பொருளது. 'சொல்' என்றது வேதத்தை. இது சொற்களாலேயானது பற்றிச் சிறப்பால் வேதத்தைக் குறித்தது. இதுகொண்டே சத்தம் என்பது போலும். 'சொல்' வேதம் என்னும் பொருள்தருங்கால் ஆகுபெயராம். 'பெந்தம்' என்பது பாசங்களாற் கட்டுப்பட்டிருக்கும் நிலை. 'முத்தி' என்பது அந்தப் பாசபந்தங்களால் கட்டுப்பட்டிருக்கும் நிலைமையிலிருந்து விடுபட்ட நிலைமை. பெருமை, சிறுமை, மறுமை, எளிமை இவை நான்கும் மையீற்றுப் பண்புப்பெயர். 'நித்தம்' என்றது என்றுமுள்ளது அழிவில்லாதது என்னும் பொருளது. இதற்கு எதிர்மறை அநித்தம். 'அநித்தம்' இது நிலையற்றது என்பது பொருளாம். 'நிகழ்சகளம்' என்றது கலைகளெங்குங் கூடியது என்பதாம். இதற்கு நேர் எதிர்பதம். 'நிஷ்களம்' இது கலைகளுக்கு அப்பாற்பட்டது என்னும் பொருளது. கலை என்றது துரியம் முதலாகிய அவத்தைகள் நன்நான்காகப் பிரிக்கப்பெற்று விளங்கும்பதினாறு கலைகள் எனப்பெறும். பிரணவ மந்திரத்தின் பகுப்புகளாகிய பதினாறையும் கலை என்றுரைப்பாரும் உண்டு. தூலமுதலாகிய சரீரங்கள் நான்கும் நந்நான்காகப் பிரிக்கப்பெற்று விளங்கும் அச்சரீரங்கள் பதினாறையும், கலைகள் என்பாரும் உண்டு. இறைவன் எல்லாவற்றிற்கும் அமையும் அவைகள் எல்லாவற்றிற்கும் லயத்தானமாகவும் இருத்தலின் 'ஆதியோ டனாதியும்' என்றார். 'விஷயம்' இது பொருள் என்னும் பொருளது. ஈண்டு ஒவ்வொருவர்க்கும் பொருளாகப் புலப்படுதலை உணர்த்திற்று. 'நிர்விஷயம்' இது விஷயத்திற்கு எதிர்மறைச் சொல். இது எவருக்கும்பொருளாகப் புலப்படாமை என்ற பொருளதாம். 'எள்ளத்தனை' ஈண்டு சிறியஅளவு ஒன்றைக் குறிப்பிப்பதற்காகச் சிறுதானியமாகிய எள்ளைக் குறித்தார். 'அணுவத்தனை' 'தினையத்தனை' என்பாரும் உண்டு.



'யாங்கள்' என்றது ஆன்மாக்களை. 'உனை' என்றது இறைவனை, ஆனந்தமானபரத்தை. 'உண்டோ' இது விடைதழுவிய வினு; இல்லை என்பது இதன் பொருளாகும். சுத்த முதலாக விஷயம் ஈருகச் சொல்லப்பட்ட எல்லாம் இறைவனை அன்றி எள்ளத்தனையும் இருப்பதில்லை என்றார். ஆன்மாக்கள் மட்டும் எப்படி இறைவனையன்றி எப்படி இருக்கக்கூடும் என இச்செய்யுளாற கூறுகின்றார். இச்செய்யுளில் நிரைநிரை எதிர்மறைச் சொற்கள் வந்து அணிசெய்துள்ளன. இச்செய்யுளில் வந்த உம்மைகள் அனைத்தும் எண்ணும்மைகள். 'மற்றும்' என்றது சுட்டியவைகளுக்கு இனமாகிய மற்றயவைகளை. 'அத்தனையும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. 'எள்ளத்தனையும்' என்றதன் ஈற்றுஉம்மை இழிவுச்சிறப்பு உம்மை. 'அன்றி' இது குறிப்பு வினையெச்சம். 5

ஆனந்தமான பரமே! சிவபோகந்துய்க்கும் அடியார் கூட்டத்தைச்
சேரும்படி அடியேனை நோநின்று காப்பதே தேவரீரின்
கடமை என்கின்றார்

காராரும் ஆணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென் னுங்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காதவண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின்படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரும் அறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரியமயமே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) என்றும் - எப்போழ்தும், ஆராரும் - எத்தகையோரும், அறியாத - தெரியாத, சூது - இரகசியம், ஆன - ஆகிய, வெளியில் - சிதாகாயத்தில், வெளி - வெளிப்படையாக, ஆகின்ற - தோன்றுகின்ற, துரிய - துரியமாகிய, மயமே - வடிவே, அண்டமும் - இந்த அண்டங்களும், பகிரண்டமும் - இந்த அண்டங்களுக்குப்புறம்பாயுள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்கு உள்ளே அடங்கும் படியாக, ஒரு - ஒப்பற்ற, நிறைவு - பரிபூரணம், ஆகி - ஆகி, ஆனந்தம் - இன்பமயம், ஆன - ஆகிய, பரமே - பரம்பொருளே!, கார் - இருட்டு நிறம், ஆரும்

ஆகியுள்ள, ஆணவம் - ஆணவமாகிய, காட்டை - காட்டினை, களைந்து - அடியோடு அழித்து, அற - வெட்டவெளியாக, கண்டு-ஆக்கி, அகங்காரம்-அகங்காரம் என்று சொல்லப்படும், கல்லை - கல்லினை, பிளந்து - பிளந்து எறிந்து, நெஞ்சகம்-மனம் ஆகிய, பூமி-பூமியை, வெளி-வெளிநிலமாக, காண-காணும்படி, திருத்தி-திருத்தம்செய்து, மென்மேல்-மேலும் மேலும், பார்-பூலோகத்தோர், ஆதி - முதலியோர், அறியாத-அறியாத, மோனம் - மௌனம், ஆம்-ஆகிய, வித்தை-விதையை, பதித்து - நட்டு (வித்தி), அன்பு - அன்பை, நீர்-சலம், ஆகவே-ஆகவே, பாய்ச்சி-அந்நிலத்திலே பாயும்படியாக விட்டு, அது-அந்த மௌனவிதை, பயிர் - பயிர், ஆகும்-ஆகிற, மட்டும் - வரையிலும், மா-பெரிய, மாயை - மாயை என்னும், வன் - வலிய, பறவை-பட்சி, அணுகாத-கிட்டாத, வண்ணம் - விதமாக, நேராக - நேரிய தூயமார்க்கத்தில், நின்று-நின்று, விளை - அதிலே உண்டாகிய, போகம் - சிவபோகப்பலனை, புசித்து-உண்டு, உயர்ந்த - வளர்ந்த, நின் - தேவரீரின், அன்பர் - அடியார்களின், கூட்டம்-கூட்டத்தை, எய்த-அடியேன் சேரும்படி, நினைவின்-அடியேனின் எண்ணத்தின், படிக்கு - படிக்கு, நீ-தேவரீர், முன் - அடியேனுக்கு நேரே பிரத்தியக்ஷமாக, நின்று-நின்று, காப்பதே-காப்பாற்றுவதே, நின்-தேவரீரின், அருள்-திருஅருளின், பாரம்-பாரம் ஆகும் எ-று.

(வி-ரை) ஆணவம் அறியாமையினின்றும் எழுவது. அறியாமை இருளாக இருப்பது ஆதலின், 'காராகும் ஆணவக்காட்டை' என்றார். ஆணவம் மிகுதி பற்றியும் வேர் ஊன்றி இருத்தல்பற்றியும் 'காடு' என்றார். 'களைதல்' என்றது ஈண்டு வேருடன் அகற்றலைக் குறிக்கும். 'அறக்காணல்' என்றது வெட்ட வெளி ஆக்குதலை. கடுமை, வன்மை, உருகாமை முதலிய காரணங்களால் அகங்காரத்தைக் 'கல்' என்றார். மனமே முத்திவித்திடற்கு இடமாக இருத்தலினால் நெஞ்சை 'பூமிவெளி' என்றார். 'திருத்தி' என்றது நிலத்தைச் செப்பனிட்டுப் பண்படுத்தல்போலத் தீக்குணங்களை எல்லாம் அகற்றி வாய்மையாகிய எருவிடல் முதலியவற்றைக் குறித்ததாம் 'மென்மேல்' இது மிகுதிபற்றி அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'பாராதி' என்றது மண்ணுலகும் விண்ணுலகும் மற்றுமுள்ள உலகங்களும் என்பதாம். 'மோனமாம் வித்து' என்றது மௌனம் என்னும் விதையை என்பதாம். 'அன்பு நீர்' ஈண்டு அன்பு நீராக உருவகஞ் செய்யப்பட்டது. 'அது பயிராகுமட்டும்' என்றதில் அது என்பது மௌனவித்தைச் சுட்டியது. பயிரை அழிப்பது பெரும்பாலும் பறவைகள் ஆதலின் மாமாயை வன்பறவை என்றார். மிருகங்களைவிட்டுப் பறவையைமட்டுமே குறித்தது என்னையோஎனின், மிருகங்களை வேலி கோலிக் காத்துத் தடுக்கலாம். ஆனால் வேலி கோலித் தடுத்துவைக்கினும் ஆகாய வழியாகப் பறந்து வந்து பயிரை அழிப்பது பறவை ஆதலின் 'மாமாயை வன்பறவை' என்றார். பறவை தடைமீறி வந்து உண்ணும உறத் தோன்ற 'வன்' என்ற அடைமொழி தந்தமையும் உய்த்துணரத்தக்கது.

'நேராக நின்று' என்றது மௌன யோக நெறிக்கு இன்றியமையாத செம்மையான வழிகளிலே நின்று என்பதாம். 'விளைபோகம்' என்றது



மோனவித்தின் பலன் சிவானந்தப்பேறு ஆதலின் விளைபோகம் என்றது சிவானந்தத்தை. 'நீ முன்னின்று காப்பதே' என்றது இறைவன் தோன்றியருளிக் கடாட்சித்து அருளுவதே என்பதாம். 'ஆராரும்' என்றது அன்பர்களையன்றி எத்தகையராலும் என்பதாம். 'சூதான' என்றது ஈண்டு இரகஸ்யமான என்ற பொருளதாம். 'சூதான வெளி' என்றது சிதாகாயம் என்னும் ஞானாகாயத்தை. 'துரியமயம்' இது நான்காம் நிலை. இரவு பகலற்றது. நான்கு நிலைகளாவன:—1 சாக்கிரம், 2 சொற்பனம், 3 சுழுத்தி, 4 துரியம் என்பனவாம். 'ஆணவக்காட்டை' இது பண்புத்தொகை; ஆணவமாகிய காடு என விரியும். 'ஆகிய' என்னும் பண்பு உருபுதொக்கது பண்புத்தொகை என அறிக. 'எனும்' இது 'என்னும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'நெஞ்சகம்' இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நெஞ்சாகிய அகம் என விரியும். பொதுப்பெயருக்குஞ் சிறப்புப் பெயருக்கும் இடையே ஆகிய என்னும் உருபு தொக்கமையின் இது **இருபெயரொட்டுப் பண்புத்தொகை** என அறிக. 'நெஞ்சு' சிறப்புப்பெயர். 'அகம்' பொதுப்பெயர். 'வெளிகாணல்' என்றது மரங்கள் ஒன்றும் இன்றி வெளியாகக் காணலைக் குறிக்கும். 'அறியாத மோனம்' இது பெயரெச்சத்தொடர். 'ஆம் வித்தை' இதில் 'ஆம்' என்பது 'ஆகும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'ஆராரும்' இது யார் யாரும் என்பதன் மரூஉ.

6

ஆனந்தமானபரமே! எல்லாம் நீயாயிருக்கும் தன்மை அறிந்தும் நான் நான் எனக்குளறும் இவ்வறியாமை அநியாயம் அநியாயம் இதை எவர்பாற் சொல்லுவேன் என்கின்றார்

வானாதி பூதமாய் அகிலாண்ட கோடியாய்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகி இரவியாய் மற்றுள எலாமாகி
வான்கருணை வெள்ளமாகி
நானாகி நின்றவனை நீயாகி நின்றிடவு
நானென்ப தற்றிடாதே
நான்நான் எனக்குளறி நானாவிகாரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனால் அதிட்டவலி வெல்லஎளி தோபகல்
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொய்த்துயில்கொள் வான்தனை எழுப்பவசமோ இனிப்
போதிப்ப தெந்தநெறியை
ஆனாலும் என்கொடுமை அநியாயம் அநியாயம்
ஆர்பால் எடுத்துமொழிவேன்
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும்-இந்த அண்டங்களும், பகிரண்டமும் - இந்த அண்டங்களுக்கும் புறம்பே உள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க-தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், அன-ஆகிய, பரமே - பரம்பொருளே!, வான்-ஆகாயம், ஆதி-முதலாகிய, பூதம்-பஞ்சபூதங்கள், ஆய் - ஆகி, அகில-எல்லா, அண்டம்-அண்டங்களின், கோடி-கோடி, ஆய்-ஆகி, மலை-மலைகள், ஆய்-ஆகி, வளை-பூமியை வளைந்து சூழ்ந்திருக்கும், கடலும் - கடல்களும், ஆய் - ஆகி, மதி - சந்திரன், ஆகி-ஆகி, இரவி - சூரியன், ஆய்-ஆகி, மற்று - வேறு, உள-உள்ளனவாகிய, எலாம்-எல்லாமும், ஆய-ஆகிய, வான்-மேலான, கருணை-கருணை, வெள்ளம்-பிரவாகம், ஆகி-ஆகி, நான்-நான், ஆகி-ஆகி, நின்றவனும்-நின்றவனும், நீ-நீ, ஆகி-ஆகி, நின்றிடவும் - நிற்கச்செய்தும், நான் - நான், என்பது - என்பது, அற்றிடாதே - நீங்காமலே, நான் நான் - நான் நான், என-என்று, குளறி-குளறி, நானா-பலவகையாகிய, விகாரி-வேறுபாடுகள் உடையவன், ஆகி-ஆகி, நான்-அடியேன், அறிந்தும்-உணர்ந்தும், அறியாத-உணராத தன்மையுள்ளவன், ஆய்-ஆகி, போனால்-மனஞ்சென்றபடி எல்லாஞ்சென்றால், அதிர்ஷ்டம்-அது அடியேனுடைய அதிர்ஷ்டத்தின், வலி - வல்லமையேயாகும், வெல்ல-அதனை ஜெயிக்க, எளிதோ - இலேசானதாகுமோ, பகல்-பகற்காலம், புகும்-அஸ்தமனகிரிபுகும், முன்-முன்னாலேயே, கண்-இருகண்களையும், மூடி-மூடிக்கொண்டு, பொய்-பொய்யாகிய, துயில்-தூக்கம், கொள்வான்-கொள்ளுகின்றவன், தனை-ஒருவன் தன்னை, எழுப்பல் - அந்தத் தூக்கத்தினின்றும் எழுப்புதல், ஆமோ-ஒருவற்குச் சாத்தியம் ஆகுமோ?, இனி-இனிமேல், எந்த-எந்த, நெறியை-மார்க்கத்தை, போதிப்பது-போதிப்பது, ஆனாலும்-ஆயினும், என்-அடியேனின், கொடுமை-கொடுமையைச் சொல்லுங்கால், அநியாயம் அநியாயம்-அது அநியாயம் அநியாயம், (ஆகலால்) யார்பால்-எவரிடத்தே, எடுத்து-இந்த விஷயத்தை எடுத்து, உரைப்பேன்-சொல்லுவேன்; எ-று.

(வி-ரை) 'வானாதி பூதம்' என்றது வான், வளி, தீ, நீர், மண் என்னும் ஐம்பூதங்களை. அகில+அண்டம்=அகிலாண்டம்; இது வடசொற் புணர்ச்சி தீர்க்கசந்தி. 'கோடி' என்றது ஈண்டு எண்ணுப்பொருளைச் சுட்டாது மிகுதிப்பொருள் தந்து நின்றது. 'வளைகடல்' என்றது **தன்மை நவிற்சி**. இது பூமியை வளைந்திருக்கிற என்பதாம். 'கடல்' இது கடக்க முடியாதது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். இனி இதற்கு கள்+தல் எனப் பிரித்து தோண்டப்பெற்றது என்று கூறி சகரபுத்திரர்களின் கடல் தோண்டிய சரித்திரத்தையுங்கூற வருவர். 'மதி' எல்லாராலும் மதிக்கத் தக்கது. மதியை உடையது என்னுங் காரணங்கள் பற்றிவந்த பெயர். என்னை? முழுமுதற்கடவுளைத் தஞ்சம்புக்கு அவர் சடையில்வைக்க வீற்றிருக்குஞ் சிறப்புப் பெற்றமையால் என்க. 'இரவி' இது 'ரவி' என்னும் வடசொல் இகர உயிர் முதலிற் பெய்யப்பெற்று வந்தது. இதற்கு இருளைப் போக்குபவன் என்பது பொருளாம். 'எலாமாய' இது எல்லாம் ஆகிய என்ற இருசொற் புணர்ச்சி. 'எலாம்' இது எல்லாம் என்பதன் தொகுத்தல்



விகாரம். 'ஆய' இது ஆகிய என்பதன் மரூஉ. எலாம்+ஆய என நின்று எலாமாய என ஆயிற்று. 'கருணை வெள்ளம்' என்றது கருணைப்பெருக்கு, கருணைப்பிரவாகம் என்பதாம். 'நானாகி நின்றவனு நீயாகி நின்றிடவும்' என்றது சோகம் பாவனையால் தான் அவனாகக் கண்ட தன்மையைக் குறித்தது. முத்திநிலையில் அத்துவிதமாக இருந்த நிலையைக் குறித்த தெனினும் அமையும். அகப்பற்று அகலாமையால் நான் என்பது அகலவில்லை என்பார் "நானென்ப தற்றிடாதே நானானெனக் குளறி" என்றார். 'நானா' இது பற்பல என்னும் பொருள்குறித்த வடசொல். 'குளறி' என்றது பிதற்றுரையை. 'நானாவிகாரி' என்றது பற்பல வேறுபாடுகளை உடையவனாகி என்பதாம்.

தான் நன்றாய் அறிந்திருந்தும் அறியாதவன்போலானால், இது தன் அதிர்ஷ்டத்தின் பயனே என்பார். 'நானறிந் தறியாமை யாய்ப்போனால் அதிட்டவலி' என்றார். தூங்குகிறவனை எழுப்பலாம், பொய்த் தூக்கம் தூங்குகிறவனை எழுப்ப யாரால் ஆகும் என்பது பழமொழி. அதுபோல அறியாதவர்களுக்கு அறிவிக்கலாம். அறிந்தும் அறியாதுபோல் இருப்பவர்களுக்கு அறிவிப்பது எப்படி என்பார் 'பகற்பொழுது புகுமுன் கண்மூடிப் பொய்துயில் கொள்வான்றனை எழுப்ப வசமோ' என்றார். இது உபமானம். அதிட்டம் இது அதிர்ஷ்டம் என்னும் வடசொற் சிதைவு. 'பகற்பொழுது புகுமுன்' என்பதற்குப் பகற்காலம் இருளுள் மறைவதன்முன் என்பது பொருளாம். அதாவது இரவு வருவதற்குமுன் என்றதாம். 'கண்மூடி' என்றது இயல்பாய் இல்லாமல் பொய்யாகப் பாசாங்கிற்காக மூடி என்பதாம். 'கண்மூடி' இது கண்களை மூடி என்பதாம். இது பன்மையில் ஒருமைவந்த பால்வழுவமைதி. 'வசமோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. 'அநியாயம் அநியாயம்' இது இரக்கப் பொருளில் அடுக்கி வந்த அடுக்குத்தொடர். 'ஆர்பால்' இது 'யார்பால்' என்பதன் மரூஉ. 'கொள்வான்றனை' இது வினையாலணையும் பெயர். 7

**ஆனந்தமானபரமே! அடியேனைப் பொய் முதலாய தீக்குணங்கள் எல்லாம் உடையவனென்று தேவரீர் கைவிட்டுவிட்டால் தட்டழிந்துபோவேன் வேறுகதி இல்லை என்கின்றார்**

பொய்யினேன் புலையினேன் கொலையினேன் நின்னருள்
 புலப்பட அறிந்துநிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையேன் நன்மைபோல்
 பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
 வினையினேன் என்றென்னைநீ
விட்டுவிட நினைவையேல் தட்டழிவ தல்லாது
 வேறுகதி யேதுபுகலாய்

துய்யனே மெய்யனே உயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன் றிலாத்
துரியனே துரியமுங் காணு அதீதனே
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே அப்பனே எனும்அறிஞர் அறிவைவிட்
டகலாத கருணைவடிவே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) துய்யனே - பரிசுத்தமுடையவனே!, மெய்யனே - உண்மையானவனே!, உயிர்க்கு-உயிர்களுக்கு, உயிர்-உயிர், ஆன-ஆகிய, துணைவனே-அநுகூலனே!, இணை-ஒப்பு, ஒன்று-ஒன்று, இலா-இல்லாத, துரியனே-துரியசொரூபனே!, துரியமும்-துரியமுங்கூட, காணு-காணாத, அதீதனே-அதற்கும் அப்பாற்பட்டவனே!, சுருதி - வேதங்களின், முடி - முடியின், மீது - மேலே, இருந்த-இருந்த, ஐயனே-இறைவனே!, அப்பனே-தந்தையே!, என்னும்-என்று இவ்வாறு துதிக்கின்ற, அறிஞர் - அறிவு உடையோர்களின், அறிவை - அறிவின் இடத்தை, விட்டு - விட்டு, அகலா - நீங்காத, கருணை - கருணையின், வடிவே-வடிவமே!, பொய்யினேன்-அடியேன் பொய்மையேன், புலையினேன்-நீசத்தன்மையை யுடையேன், கொலையினேன்-கொலைசெய்யும் தொழிலுடையேன், நின்-தேவரீரின், அருள்-திருஅருளின் தன்மையை, புலப்பட-வெளிப்பட, அறிந்தும்-தெரிந்திருந்தும், நிலையா-அதில் நிலைத்திராத, புன்மையேன்-அற்பத்தன்மையையுடைய அடியேன், கல்லாத - ஞானநூற்களைக் கல்லாத, தன்மையேன் - தன்மையை உடையவன், பொருள் - பொருள், அல்லா-அல்லாத, பொருளை - பொய்ப் பொருள்களை, நன்மை - நன்மை, போல் - போல நினைத்து, நாடும் - விரும்புகின்ற, வெய்யனேன் - கொடிய குணத்தை யுடையவன், வெகுளியேன் - கோபத்தை யுடையவன், வெறியனேன் - வெறி கொண்ட குணத்தை யுடையவன், சிறியனேன் - சிறுதன்மையுடையேன், வினையினேன்-தீயவினைகளை உடையவன், என்று-என்று எண்ணி, என்னை-அடியேனை, நீ-தேவரீர், விட்டுவிட - விட்டு விடுவதற்கு, நினைவையேல்-எண்ணுவாயேயானால், தட்டழிவது - தட்டழிந்து போவது, அல்லாது - அல்லாமல், வேறு-வேறு, கதி-கதி, ஏது - என்ன இருக்கிறது? புகலாய்-தேவரீர் சொல்லி அருள்வீராக; எ-று.

(வி-ரை) "யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற"

எனவும்,

"பொய்யாமை யன்ன புகழில்லை பொய்யாமை
யெல்லா அறமுந் தரும்"

எனவும் **திருவள்ளுவர்** மொழிந்தபடி சத்தியமே சிறந்ததாகும் அசத்தியமே எல்லாத்தருமத்திற்கும் ஆதாரம் ஆதலினால் 'பொய்யினேன்' என முதற் கூறினார்.



'புலையினேன்' என்றது நீசத்தொழிலையுடையேன் என்பது இனி இதற்குப் புலால்உண்ணுந் தன்மையேன் எனப் பொருள்கூறிடுவாரும் உண்டு. 'கல்லாத தன்மையேன்' என்றதற்கு ஞானநூல்களைக்கல்லாத தன்மையேன் எனப் பொருள் உரைத்தாம். வேறு சிலர் நிருந்தாத்தன்மையேன் என உரை கூறுவாரும் உண்டு. 'நன்மைபோல்' என்றதனால் உண்மையில் நல்லதல்ல என்பதும் தீயது என்பதும் பெறப்பட்டமை காண்க. 'பொருளலாப்பொருள்' என்றதனால் பொய்ப்பொருள் என்பது போதரும். 'வெய்யனேன்' என்பதற்கு வெம்மைத்தன்மை யுடையேன் என்பது பொருளாம். அதாவது கொடுமை, கடுமையுடையவன் என்பதாம். 'வெகுளியென்' என்றது கோபி என்பதாம். இது 'வெகுள்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. 'வெறியனேன்' இது மூடவெறி என்பதாம். இதற்குப் பித்த வெறி என்பாரும் உண்டு. 'சிறியனேன்' என்றது சிறுமைத்தனங்களை யுடையேன் என்பதாம். இனித்தற்கு அறிவிற்சிறியேன் என்பர். 'வினையினேன்' என்பது ஈண்டு நல்வினை தீவினை இரண்டிற்கும் பொதுவாயினும் ஈண்டு இழிவுபற்றித் தீவினையையே குறித்தது. 'தட்டழிவது' என்பது நிலையிற்றடுமாறுதல். 'கதி' என்றது ஈண்டு பற்றுக்கோட்டை. இறைவன் அநாதியே பாசபந்தமலங்களினின்றுநீங்கிய மலரகிதன் ஆதலின் 'துய்யனே' என்றார். 'மெய்யன்' என்பது சத்தியமானவன் நித்தியமானவன் என்னும் பொருளதாம்.

இறைவன் உயிருக்கு உயிராய்நின்று உயிர்களை இயக்குவிக்கின்றவனாதலின் 'உயிர்க்குயிரான துணைவனே' என்றார். 'துரியம்' என்றது சாக்கிரம், சொற்பனம், சுழுத்தி, துரியம் என்னும் நான்கு நிலைகளில் நாலாவதுநிலை. 'அதீதன்' என்றது எல்லாங்கடந்தவன் எனவும், எல்லாம் அல்லாதவன் என்றும் பொருள்தருவது ஒன்றாகும். 'சுருதிமுடி' என்றது வேதாந்தத்தை. 'ஐயனே' என்றது இறைவனே எனப் பொருளாம். இனி இதற்கு உயர்ந்தவனே எனவும், அழகனே எனவும் பொருள் உரைப்பாரும் உண்டு. இறைவன் கருணாமூர்த்தி, கருணைமயனாதலின் 'கருணை வடிவே' என்றார். 'நிலையா' இது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'வெய்யனேன்' இதில் 'வெம்மை' பகுதி. 'இலா' இது 'இல்லாத' என்ற சொல் ஈறும் இடையும் கெட்டுநின்றது. 'எனும்' இது 'என்னும்' என்றதன் தொகுத்தல்விகாரம். 8

ஆனந்தமானபரமே! அடியேனைப்போன்ற தீக்குணமுடையவனைப் பூமியில கண்டது கேட்டது உண்டோ சொல்லியருள வேண்டும் என்கின்றார்

எத்தனை விதங்கள்தான் கற்கினுங் கேட்கினும்என்
இதயமும் ஒடுங்கவில்லை
யானெனும் அகந்தைதான் எள்ளளவு மாறவிலை
யாதினும் அபிமானம்என்

சித்தமிசை குடிகொண்ட ஈகையொ டிரக்கமென்
 சென்மத்து நானறிகிலேன்
சீலமொடு தவவிரதம் ஒருகனவி லாயினுந்
 தெரிசனஞ் செய்தும் அறியேன்
பொய்த்தமொழி யல்லால் மருந்துக்கும் மெய்ம்மொழி
 புகன்றிடேன் பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மா இருந்தருள்
 பொருந்திடாப் பேதைநானே
அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
 அவனிமிசை யுண்டோசொலாய்
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
 ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும்-இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப் புறம்பாகவுள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்கு உள்ளே அடங்கும்படியாக, ஒரு - ஒப்பற்ற, நிறைவு - பூரிபூரணம், ஆகி - ஆகி ஆனந்தம் - இன்பமயம், ஆன - ஆகிய, பரமே - பரம்பொருளே!, எத்தனை, எத்தனை, விதங்கள்-வகைகள், கற்கினும்-கற்றாலும், கேட்கினும்-கேட்டாலும், என் - அடியேனுடைய, இதயமும் - மனமும், ஒடுங்க - அடக்கமுற, இல்லை-இல்லை, யான் - யான், எனும் - என்று சொல்லும், அகந்தைதான் - அகந்தையானது, என் - என்னின், அளவும் - அளவும், மாற - மாறுபாடடைய, இலை-இல்லை, யாதினும்-எல்லாப் பொருள்களினிடத்தும், அபிமானம்-அபிமானமானது, என - அடியேனின், சித்தம் - மனத்தின், மிசை - இடத்தே, குடி-குடியாக, கொண்டது-கொண்டு வாழ்ந்திருக்கிறது, ஈகையொடு-கொடுக்குந் தன்மையோடு, இரக்கம் - எவ்வுயிர்களுக்கும் இரங்குந் தன்மையை, என்-அடியேனின், சென்மத்தும் - பிறந்த நாளிலிருந்து இன்றளவும், நான்-அடியேன், அறிகிலேன் - அறிந்தேனில்லை, சீலமொடு-பரிசுத்தத்தோடு, தவம்-தவத்தையும், விரதம்-விரதங்களையும், ஒரு-ஒரு, கனவில்-கனவில், ஆயினும்-ஆகிலும், தரிசனம் செய்தும் - கண்டும், அறியேன் - தெரியேன், பொய்த்த-பொய்யாகிய, மொழி-வார்த்தை, அல்லால்-அல்லாமல், மருந்துக்கும் - மருந்துக்காகவாகிலும், மெய்-உண்மை, மொழி-வார்த்தை, புகன்றிடேன் - சொல்லேன், பிறர் - மற்றையோர்கள், கேட்கவே - கேட்கும்படி, போதிப்பது-போதனை செய்வது, அல்லாது-அல்லாமல், சும்மா-வீணை, இருந்து-இருந்து, அருள்-தேவரீரின் திருஅருளை, பொருந்திடா - அடையாத, பேதை-மூடன், நானே - அடியேனே, அத்தனை - அடியேனைப்போன்ற அவ்வளவு, குணக்கேடர்-தீக்குணமுடையோர்கள், அவனி - பூமியின், மிசை - மேலே, கண்டதா - கண்டதாகவாகிலும், கேட்டதா - கேட்டதாகவாகிலும், உண்டோ-இருக்கிறதோ?, சொலாய்-தேவரீர் சொல்லி அருள்வீராக எ-று.



(வி-ரை) சித்திமுத்திகளுக்கு மனஅடக்கமே காரணமாதலினாலும், கற்றலும் கேட்டலும் மன அடக்கம்பெற்ற பொருட்டாதலினாலும், 'எத்தனை விதங்கள்தான் கற்கினுங் கேட்கினும்என் இதயமும் ஒடுங்கவில்லை' என்றார். இதனை, "கற்றறிந்தார் கண்டதடக்கம்" என்ற ஆன்றோர்வாக்கானும் அறிக. 'யானெனு மகந்தை' என்றது அகங்காரதத்துவதத்தை. 'யாதினும் அபிமானம்' ஈண்டு அபிமானம் என்றது பற்றை. 'இரக்கம்' என்பது கருணையின் காரியமாகிய ஜீவப்பிராணிகளிடத்து இரங்குந் தன்மையை. 'குடி கொண்டது' என்பது நிலையாய்ப் பதிந்துளது என்றது| ஈண்டு மனத்தூய்மையை. 'கனவிலாயினும்' என்றதில் உள்ளஉம்மை இழிவுசிறப்பு. 'தவ விரதம்' இது உம்மைத்தொகை தவத்தையும் விரதத்தையும் என விரியும். 'தவம்' என்றது ஐம்பொறிகளை அடக்கி நோற்றது. 'விரதம்' என்றது வேதாகமங்களிற் கூறிய நோன்பைக் குறித்தது. "நோன்பென் பதுவே கொன்றுதின்னாமை" என்ற **ஔவை** வாக்கும் ஈண்டு ஒப்பிடத்தக்கது.

'பொய்த்த மொழி' இது பெயரெச்சத்தொடர். இது பொய்மொழி என்னும் பொருளது. 'சும்மா' என்றது மௌனநிலையை. 'அருள்' என்றது திருஅருளை. 'மெய்ம்மொழி' என்றது உண்மைமொழியை; சத்தியத்தை.

"கற்றுப் பிறர்க்குரைத்துத் தாமடங்காப் பேதை"

எனப் **பெரியார்** கூறியுளதால் 'போதிப்ப தல்லாது சும்மா விருந்தருள் பொருந்திடாப் பேதைநானே' என்றார்.

'அத்தனை' என்று அவ்வளவு என்னும் பொருளது. இது அவலித்தால் எழுந்தஉரை. 'உண்டோ' இதன் ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. இது இரார் என்னுந் துணிபுபற்றி எழுந்த வினா. 'இதயமும் ஒடுங்கவில்லை' இதில் உம்மை பொறிபுலன் ஒடுங்காததுபோல் இதயமும் ஒடுங்கவில்லை என்ற பொருள்தந்து நின்றதாதலின் இது இறந்ததுதழீஇய எச்சஉம்மை. 'என்னளவு' ஈண்டு என் சிறுமை அளவுகாட்ட எடுத்துரைக்கப்பெற்றது. 'சித்தமிசை' இதில் 'மிசை' என்றது சித்தத்தினிடத்து என இடப்பொருள் தந்துநின்றது. 'ஈகையோ டிரக்கம்' என்றதில் ஒடு உருபு எண்ணுப் பொருளில்வந்தது. 'சென்மம்' இது ஜன்மம் என்ற வடசொற் சிதைவு. 'அறிகிலேன்' இதில் கில் என்னும் இடைநிலை துணிபுப்பொருள் உணர்த்தி நின்றது. 'தெரிசனம்' இது தரிசனம் என்ற வடசொற்சிதைவு. 'அறியேன்' இது இறந்தகாலத்தன்மை ஒருமை எதிர்மறை வினைமுற்று. 'மருந்துக்கும்' என்றதில் வந்த உம்மை இறந்ததுதழுவிய எச்சவும்மை. 'பொருந்திடா' எதிர்மறைப் பெயரெச்சம். 'நானே' இதில் நின்ற ஈற்று ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. 'கண்டதா,' 'கேட்டதா' இவை முறையே கடைக் குறைவிகாரங்கள். கண்டதாகக், கேட்டதாக என்னுஞ் சொற்கள் கடைகுறைந்துநின்றன. கண்டதாக் கேட்டதா இவை உம்மைத்தொகை. கண்டதாகவும் கேட்டதாகவும் என்று விரிவுறும். 'சொலாய்' இது முன்னிலை யொருமை ஏவல்வினைமுற்று.

ஆனந்தமானபரமே! தேவரீர் மௌனகுருவாக வந்தருளி உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக்கொண்டபோதே எல்லாம் பொய்யாய்ப்போய் ஒழிந்தது என்கின்றார்

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
ஏழைநீ என்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளும் மௌனியாய் வந்துகை
ஏற்றுநம தென்றஅன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையால்
மைக்கா லிருட்டனைய இருளில்லை இருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்காலம் இக்கால மென்பதிலை எல்லாம்
அதீதமய மானதன்றே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும் - இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப்புறம்பே உள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன - ஆகிய, பரமே - பரம்பொருளே!, மௌனி - மவுனகுரு, ஆய்-ஆகி, வந்து-எழுந்தருளி வந்து, எக்காலமும்-எந்தக்காலத்தும், நீ-எமது அடிமையாகிய நீ, தனக்கு-தனக்கு, என்ன-என்று, ஒரு-ஒரு, செயல்-சுதந்தரமான செய்கை, இலா - இல்லாத, ஏழை - எளியவன், என்று - என்று கூறி, இருந்திட்டு-எழுந்தருளி இருந்து, எனது-அடியேனுடைய, ஆவி-உயிரையும், உடல்-உடம்பு, பொருளும் - பொருளும், கை-கையில், ஏற்று - ஏற்றுவாங்கி, நமது-இவை நம்முடையது, என்ற - என்று கூறியருளிய, அன்றே - அந்தச் சமயத்திலேயே, பொய்-பொய்யாகி இருந்த, காலமும் - காலங்களும், தேசமும் - இடமும், பொய் - பொய்யாகிய, பொருளில் - பொருள்களிடத்தில், வாஞ்சையும் - விருப்பமும், பொய் - பொய்யாகிய, உடலை-இந்த தேகத்தை, மெய்-நிலையுள்ளது, என்னலும்-என்று கொள்ளுதலும், பொய்-பொய்யாகிய, உறவு-உறவினர்களை, பற்றலும் - கொள்ளலும், பொய் - பொய், ஆகும் - ஆகினும், பொய் - பெரிய பொய்யாகும், ஆகையால் - ஆகையினாலே, மை-மழை கால்-காலத்து, இருட்டு-இருட்டை, அனைய-ஒத்த, இருள்-அஞ்ஞானமாகிய இருள், இல்லை-இல்லையாகும், இரு-இரண்டாகிய, வினை-வினைகள், வந்து-வந்து, ஏற-சேர, வழியும்-மார்க்கமும், இல்லை - இல்லையாகும், மனம் - மனம் என்பதும், இல்லை-இல்லையாகும், அ - அந்த, மனத்து - மனத்தினுடைய, இனம், இனமும், இல்லை-இல்லையாகும், வேறும் - மற்றும், ஒரு-ஒரு, வரவு-வரவும், இல்லை-இல்லையாகும், போக்கும் - செலவும், இல்லை-இல்லையாகும், அ-அந்த, காலம்-காலம், இ-இந்த, காலம் - காலம், என்பது-என்பதும், இலை - இல்லையாகும், எல்லாம்-எல்லாமும், அதீதம் - இல்லாமை, மயம் - வடிவம், ஆனது-ஆயிற்று, அன்றே-அல்லவோ? எ-று.



(வி-ரை) 'எக்காலமும்' என்றது அநாதியே மலத்து அழுந்திக் கிடந்த அக்காலமுதல் எக்காலமும் என்பதாம். தனுகரணாதிகளைப் பெறும் அக்காலத்திற்கு முன்னிருந்து எக்காலமும் என்பதாம். ஆன்மாக்கள் எல்லாம் இறைவனுக்கு அநாதியே அடிமை. இதனை,

"என்றுநீ யன்றுநா னக்கால முதலாக ஏற்ற வடிமை" எனவும்,

"அன்றுமே முதலாக வின்வய தன்றிரேன் ஆன நண்டோ"
எனவும் வரும் **பெரியார்** திருப்பாடலின் அடிகளாலும் அறியலாம்.

இதுகொண்டே இப் **பெரியாரும்**, 'எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா வேழைநீ யென்றிருந்திட்டு' என்றார். குருவாக வந்து அருள் புரியுங்கால் சீடனின் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக் கோடல் மரபு ஆதலின் 'எனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்து கையேற்றுநம தென்பவன்றே' என்றார். 'ஈண்டு கையேற்றல்' என்றது பெறலைக் குறித்தது. 'மௌனியாய்' என்றது தாயுமானவர்க்கு மௌனகுருவாக வந்து அருள்செய்ததைக் குறித்தது. 'தேசம்' என்றது இடத்தை. 'பொய்ப் பொருள்' என்றது உலகப் பொருள்களை. 'பொய்யுடலை மெய்யென்றலும்' இது சொற்சபித்து உடம்பை மெய் என்று கூறுதலும் எனவும், பொய்யாகிய இந்த தேகத்தை உறுதியானது என எண்ணுவதும் எனப் பொருள் தந்து நின்றது. 'பொய்யுறவு' என்றது தந்தை, தாய், தமர், தாரம், மகவு, சுற்றம், நண்பு முதலியவர்களைக் குறித்தது. இதனை,

"மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந் தன்வாயின் மட்டே
இனமான சுற்ற மயான மட்டே"

என்ற **பட்டினத்தடிகளின்** திருவாக்கினாலும் அறியலாம்.

'நானெனல் பொய்யினும் பொய்' என்றது இது பெரும்பொய், முழுப் பொய் எனவும் மற்றைப் பொய்களை எல்லாம் இதனுடன் ஒத்திட்டு நோக்குங்கால் அவை மெய்யென வேண்டிவரும் என்பதாம். 'மைக்காலிருட்டு' இது மழைகாலத்து இருட்டு என்பது பொருள். 'மை' என்றது மழை மேகத்தை. 'காலுதல்' பெய்தல். மழை பெய்துகொண்டிருக்கும் இராக்காலத்து நக்ஷத்திரங்களின் ஒளியுமின் கம்மிய இருள் மயமாக இருக்குமாத

ஆனந்தமானபரமே! தேவரீர் மௌனகுருவாக வந்தருளி உடல்
பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக்கொண்டபோதே எல்
லாம் பொய்யாய்ப்போய் ஒழிந்தது என்கின்றார்

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
ஏழைநீ என்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளும் மௌனியாய் வந்துகை
ஏற்றுநம தென்றஅன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையால்
மைக்கா லிருட்டனைய இருளில்லை இருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்காலம் இக்கால மென்பதிலை எல்லாம்
அதீதமய மானதன்றோ
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும் - இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண்டங்களுக்குப்புறம்பே உள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன - ஆகிய, பரமே - பரம்பொருளே!, மௌனி - மவுனகுரு, ஆய்-ஆகி, வந்து-எழுந்தருளி வந்து, எக்காலமும்-எந்தக்காலத்தும், நீ-எமது அடிமையாகிய நீ, தனக்கு-தனக்கு, என்ன-என்று, ஒரு-ஒரு, செயல்-சுந்தரமான செய்கை, இலா - இல்லாத, ஏழை - எளியவன், என்று - என்று கூறி, இருந்திட்டு-எழுந்தருளி இருந்து, எனது-அடியேனுடைய, ஆவி-உயிரையும், உடல்-உடம்பு, பொருளும் - பொருளும், கை-கையில், ஏற்று - ஏற்றுவாங்கி, நமது-இவை நம்முடையது, என்ற - என்று கூறியருளிய, அன்றே - அந்தச் சமயத்திலேயே, பொய்-பொய்யாகி இருந்த, காலமும் - காலங்களும், தேசமும் - இடமும், பொய் - பொய்யாகிய, பொருளில் - பொருள்களிடத்தில், வாஞ்சையும் - விருப்பமும், பொய் - பொய்யாகிய, உடலை-இந்த தேகத்தை, மெய்-நிலையுள்ளது, என்னலும்-என்று கொள்ளுதலும், பொய்-பொய்யாகிய, உறவு-உறவினர்களை, பற்றலும் - கொள்ளலும், பொய் - பொய், ஆகும் - ஆகிலும், பொய் - பெரிய பொய்யாகும், ஆகையால் - ஆகையினாலே, மை-மழைமுடியும், நான்-நான், என்னல்-என்று கூறுதல், பொய்யினும் - பொய்களுள்



கால்-காலத்து, இருட்டு-இருட்டை, அனைய-ஒத்த, இருள்-அஞ்ஞானமாகிய இருள், இல்லை-இல்லையாகும், இரு-இரண்டாகிய, வினை-வினைகள், வந்து-வந்து, ஏற-சேர, வழியும்-மார்க்கமும், இல்லை - இல்லையாகும், மனம் - மனம் என்பதும், இல்லை-இல்லையாகும், அ - அந்த, மனத்து - மனத்தினுடைய, இனம், இனமும், இல்லை-இல்லையாகும், வேறும் - மற்றும், ஒரு-ஒரு, வரவு-வரவும், இல்லை-இல்லையாகும், போக்கும் - செலவும், இல்லை-இல்லையாகும், அ-அந்த, காலம்-காலம், இ-இந்த, காலம் - காலம், என்பது-என்பதும், இலை - இல்லையாகும், எல்லாம்-எல்லாமும், அதீதம் - இல்லாமை, மயம் - வடிவம், ஆனது-ஆயிற்று, அன்றோ-அல்லவோ? எ-று.

(வி-ரை) 'எக்காலமும்' என்றது அநாதியே மலத்து அழுந்திக் கிடந்த அக்காலமுதல் எக்காலமும் என்பதாம். தனுகரணாதிகளைப் பெறும் அக்காலத்திற்கு முன்னிருந்து எக்காலமும் என்பதாம். ஆன்மாக்கள் எல்லாம் இறைவனுக்கு அநாதியே அடிமை. இதனை,

"என்றுநீ யன்றுநா னக்கால முதலாக ஏற்ற வடிமை" எனவும்,

"அன்றுமே முதலாக விவ்வய தன்றிரேன் ஆன நண்டோ"

எனவும் வரும் **பெரியார்** திருப்பாடலின் அடிகளாலும் அறியலாம்.

இதுகொண்டே இப் **பெரியாரும்**, 'எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா வேழைநீ யென்றிருந்திட்டு' என்றார். குருவாக வந்து அருள் புரியுங்கால் சீடனின் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக் கோடல் மரபு ஆதலின் 'எனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்து கையேற்றுநமதென்பவன்றே' என்றார். 'ஈண்டு கையேற்றல்' என்றது பெறலைக் குறித்தது. 'மௌனியாய்' என்றது தாயுமானவர்க்கு மௌனகுருவாக வந்து அருள்செய்ததைக் குறித்தது. 'தேசம்' என்றது இடத்தை. 'பொய்ப் பொருள்' என்றது உலகப் பொருள்களை. 'பொய்யுடலை மெய்யென்றலும்' இது சொற்சபித்து உடம்பை மெய் என்று கூறுதலும் எனவும், பொய்யாகிய இந்த தேகத்தை உறுதியானது என எண்ணுவதும் எனப் பொருள்தந்து நின்றது. 'பொய்யுறவு' என்றது தந்தை, தாய், தமர், தாரம், மகவு, சுற்றம், நண்பு முதலியவர்களைக் குறித்தது. இதனை,

"மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந் தன்வாயின் மட்டே
இனமான சுற்ற மயான மட்டே"

என்ற **பட்டினத்தடிகளின்** திருவாக்கினாலும் அறியலாம்.

'நானெனல் பொய்யினும் பொய்' என்றது இது பெரும்பொய், முழுப் பொய் எனவும் மற்றைப் பொய்களை எல்லாம் இதனுடன் ஒத்திட்டு நோக்குங்கால் அவை மெய்யென வேண்டிவரும் என்பதாம். 'மைக்காலிருட்டு' இது மழைகாலத்து இருட்டு என்பது பொருள். 'மை' என்றது மழை மேகத்தை. 'காலுதல்' பெய்தல். மழை பெய்துகொண்டிருக்கும் இராக் காலத்து நக்ஷத்திரங்களின் ஒளியுமின் கம்மிய இருள் மயமாக இருக்குமாத

ஆனந்தமானபரமே! தேவரீர் மௌனகுருவாக வந்தருளி உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக்கொண்டபோதே எல் லாம் பொய்யாய்ப்போய் ஒழிந்தது என்கின்றார்

எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா
ஏழைநீ என்றிருந்திட்
டெனதாவி யுடல்பொருளும் மௌனியாய் வந்துகை
ஏற்றுநம தென்றஅன்றே
பொய்க்கால தேசமும் பொய்ப்பொருளில் வாஞ்சையும்
பொய்யுடலை மெய்யென்னலும்
பொய்யுறவு பற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும் பொய்யாகையால்
மைக்கா லிருட்டனைய இருளில்லை இருவினைகள்
வந்தேற வழியுமில்லை
மனமில்லை யம்மனத் தினமில்லை வேறுமொரு
வரவில்லை போக்குமில்லை
அக்காலம் இக்கால மென்பதிலை எல்லாம்
அதீதமய மானதன்றே
அண்டபகி ரண்டமும் அடங்கவொரு நிறைவாகி
ஆனந்த மானபரமே.

(ப-ரை) அண்டமும் - இந்த அண்டங்களும், பகிரண்டமும்-இந்த அண் டங்களுக்குப்புறம்பே உள்ளதாகிய பகிரண்டங்களும், அடங்க - தனக்குள்ளே அடங்கும்படியாக, ஒரு-ஒப்பற்ற, நிறைவு-பரிபூரணம், ஆகி-ஆகி, ஆனந்தம்-இன்பவடிவம், ஆன - ஆகிய, பரமே - பரம்பொருளே!, மௌனி - மவுனகுரு, ஆய்-ஆகி, வந்து-எழுந்தருளி வந்து, எக்காலமும்-எந்தக்காலத்தும், நீ-எமது, அடிமையாகிய நீ, தனக்கு-தனக்கு, என்ன-என்ற, ஒரு-ஒரு, செயல்-சுதந்தர மான செய்கை, இலா - இல்லாத, ஏழை - எளியவன், என்று - என்று கூறி, இருந்திட்டு-எழுந்தருளி இருந்து, எனது-அடியேனுடைய, ஆவி-உயிரையும், உடல்-உடம்பு, பொருளும் - பொருளும், கை-கையில், ஏற்று - ஏற்றுவாங்கி, நமது-இவை நம்முடையது, என்ற - என்று கூறியருளிய, அன்றே - அந்தச் சமயத்திலேயே, பொய்-பொய்யாகி இருந்த, காலமும் - காலங்களும், தேச மும் - இடமும், பொய் - பொய்யாகிய, பொருளில் - பொருள்களிடத்தில், வாஞ்சையும் - விருப்பமும், பொய் - பொய்யாகிய, உடலை-இந்த தேகத்தை, மெய்-நிலையுள்ளது, என்னலும்-என்று கொள்ளுதலும், பொய்-பொய்யாகிய, உறவு-உறவினர்களை, பற்றலும் - கொள்ளலும், பொய் - பொய், ஆகும் - ஆகி முடியும், நான்-நான், என்னல்-என்று கூறுதல், பொய்யினும் - பொய்களுள் ளும், பொய் - பெரிய பொய்யாகும், ஆகையால் - ஆகையினாலே, மை-மழை



கால்-காலத்து, இருட்டு-இருட்டை, அனைய-ஒத்த, இருள்-அஞ்ஞானமாகிய இருள்,இல்லை-இல்லையாகும், இரு-இரண்டாகிய,வினை-வினைகள், வந்து-வந்து, ஏற-சேர, வழியும்-மார்க்கமும், இல்லை - இல்லையாகும், மனம் - மனம் என்ப தும், இல்லை-இல்லையாகும், அ - அந்த, மனத்து - மனத்தினுடைய, இனம், இனமும், இல்லை-இல்லையாகும், வேறும் - மற்றும், ஒரு-ஒரு, வரவு-வரவும். இல்லை-இல்லையாகும், போக்கும் - செலவும், இல்லை-இல்லையாகும், அ-அந்த, காலம்-காலம், இ-இந்த, காலம் - காலம், என்பது-என்பதும், இலை - இல்லை யாகும், எல்லாம்-எல்லாமும், அதீதம் - இல்லாமை, மயம் - வடிவம், ஆனது-ஆயிற்று, அன்றோ-அல்லவோ? எ-று.

(வி-ரை) 'எக்காலமும்' என்றது அநாதியே மலத்து அழுந்திக் கிடந்த அக்காலமுதல் எக்காலமும் என்பதாம். தனுகரணாதிகளைப் பெறும் அக் காலத்திற்கு முன்னிருந்து எக்காலமும் என்பதாம். ஆன்மாக்கள் எல்லாம் இறைவனுக்கு அநாதியே அடிமை. இதனை,

"என்றுநீ யன்றுநா னக்கால முதலாக ஏற்ற வடிமை" எனவும்,

"அன்றுமே முதலாக வின்வய தன்றிரேன் ஆன தண்டோ"
எனவும் வரும் **பெரியார்** திருப்பாடலின் அடிகளாலும் அறியலாம்.

இதுகொண்டே இப் **பெரியாரும்**, 'எக்கால முந்தனக் கென்னவொரு செயலிலா வேழைநீ யென்றிருந்திட்டு' என்றார். குருவாக வந்து அருள் புரியுங்கால் சீடனின் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஏற்றுக் கோடல் மரபு ஆதலின் 'எனதாவி யுடல்பொருளு மௌனியாய் வந்து கையேற்றுநம தென்பவன்றே' என்றார். 'ஈண்டு கையேற்றல்' என்றது பெறலைக் குறித் தது. 'மௌனியாய்' என்றது தாயுமானவர்க்கு மௌனகுருவாக வந்து அருள்செய்ததைக் குறித்தது. 'தேசம்' என்றது இடத்தை. 'பொய்ப் பொருள்' என்றது உலகப் பொருள்களை. 'பொய்யுடலை மெய்யென்றலும்' இது சொற்சமித்து உடம்பை மெய் என்று கூறுதலும் எனவும், பொய்யாகிய இந்த தேகத்தை உறுதியானது என எண்ணுவதும் எனப் பொருள்தந்து நின்றது. 'பொய்யுறவு' என்றது தந்தை, தாய், தமர், தாரம், மகவு, சுற்றம், நண்பு முதலியவர்களைக் குறித்தது. இதனை,

"மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந் தன்வாயின் மட்டே
இனமான சுற்ற மயான மட்டே"

என்ற **பட்டினத்தடிகளின்** திருவாக்கினாலும் அறியலாம்.

'நானெனல் பொய்யினும் பொய்' என்றது இது பெரும்பொய், முழுப் பொய் எனவும் மற்றைப் பொய்களை எல்லாம் இதனுடன் ஒத்திட்டு நோக் குங்கால் அவை மெய்யென வேண்டிவரும் என்பதாம். 'மைக்காலிருட்டு' இது மழைகாலத்து இருட்டு என்பது பொருள். 'மை' என்றது மழை மேகத்தை. 'காலுதல்' பெய்தல். மழை பெய்துகொண்டிருக்கும் இராக் காலத்து நக்ஷத்திரங்களின் ஒளியுமின் கம்மிய இருள் மயமாக இருக்குமாத

வின் மழை பெய்யுங்காலத்து இருட்டைக் கூறினர். 'இருளில்லை' என்றது ஈண்டு அஞ்ஞானமாகிய இருளை. 'இருவினைகள்' என்றது நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளை. இனி, இதற்கு பெரிதாகிய நல்வினை தீவினை என்பாரும் உண்டு.

'வேறுமொரு வரவில்லை போக்குமில்லை' என்றது பிறப்பிறப்பில்லை என்பதை உணர்த்திற்று. என்னை? போக்குவரத்தில்லாப் பரிபூரணத்துப் பரிபூரணமாகக் கலத்தலினால் என்க. இறப்பு, எதிர்வு, நிகழ்வு எனும் முக்காலும் அற்றவராவார் என்பார் 'அக்கால மிக்கால மென்பதில்லை' என்றார். 'அதீதம்' என்பது இல்லாமை. யாவற்றையும் கடந்து நின்ற நிலைமை என்பது பொருளாம். 'எக்காலம்' இதில் எகரம் வினா, இது புறவினா. 'இலா' இது இல்லா என்பதன் தொகுத்தல் விகாரம். 'எனது ஆவி' இதில் அது என்றது ஆறனுருபு. உடைமைப்பொருள் தந்தது. என்+அது=என்னது. இது 'எனது' என நின்றது தொகுத்தல் விகாரம். 'பொருளும்' இதன் ஈற்று உம்மை முற்றும்மை. 'பொய்' என்னுஞ் சொல் பல்காலும் ஈண்டு வந்தது சொற்பொருட் பின்வருநிலையணி. 'மை' என்றது கருமை நிறத்தைக் குறித்துப் பின் கருமைநிறமுடைய மழை மேகத்தைக் குறித்ததால் இருமடிஆகுபெயர். 'அனைய' இது உவமஉருபு. அஞ்ஞானத்தை இருள் என்றது உருவகஅணி. 'என்பதிலை' இதில் 'இலை' என்பது இல்லை என்பதன் தொகுத்தல் விகாரம். 'அன்றோ' என்றதன் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. 10

---

## சு க வா ரி

சுகவாரியே! தேவரீரின் அருள் பெற்றார்க்கு சிவாநந்தபோகம்
இனிப்பாக இருக்கும் அடியேன் நினது அருள் பெற்றால்
சிவாநந்தப் பேரின்பம் உதயமாகும் என்கின்றார்

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திடவலியவந்
தின்பங்கொ டுத்தநினை எந்நேர நின்னன்பர்
இடையறா துருகிநாடி
உன்னிய கருத்தவிழ உரைகுளறி உடலெங்கும்
ஓய்ந்தயர்ந் தவசமாகி
உணர்வரிய பேரின்ப அநுபூதி உணர்விலே
உணர்வார்கள் உள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்தில்



கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்
கருதிநகை யாவளதுபோல்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாஞ்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணரகிதன், ஆன-ஆகிய, பரம் - மேலாகிய, தெய்வமே - தெய்வமே!, பரம் - மேலாகிய, சோதியே-சோதியே, சுகம்-பேரின்ப, வாரியே-கடலே!, இன்-இனிய, அமுது-அமிர்தமும், கனி-முப்பழங்களும், பாகு - சர்க்கரைப்பாகும், கற்கண்டு - சர்க்கரைப்பாகினால் உண்டாகிய கற்கண்டுக் கட்டியும், சீனி-சீனிச் சர்க்கரையும், தேன்-தேனும், என-என்று சொல்லும்படி, ருசித்திட - ருசிக்கும்படி, வலிய - தன்னிலே வலாத்காரமாக, வந்து-எழுந்தருளி வந்து, இன்பம்-பேரின்ப சுகம், கொடுத்த-தந்தருளிய, நின்னை-தேவரீரை, நின்-தேவரீரின், அன்பர்-அன்பர்கள், எந்நேரம்-சதாகாலமும் இடையறாதபடி, உருகி-மனம் உருகி, நாடி-விரும்பி, உன்னிய-சிந்தித்த, கருத்து-நெஞ்சம், அவிழ-இளகும்படி, உரை-சொற்கள், குளறி - தடுமாறி, உடல் - உடம்பு, எங்கும் - முழுதும், ஓய்ந்து-இளைத்து, அயர்ந்து-சோர்ந்து, அவசம்-பரவசம், ஆகி - ஆகி, உணர்வு-அறிதற்கு, அரிய-அருமையான, பேர் - பெரிய, இன்பம் - சிவானந்த, அநுபூதி உணர்விலே - அநுபவ வுணர்ச்சியிலே, உணர்வார்கள் - தேவரீரை அறிந்து அநுபவிப்பார்கள்; உள்ளபடி - இது உண்மையான விஷயமாகும், காண் - காண், கன்னிகை - கன்னிகைப்பருவமுடைய, ஒருத்தி - ஒருத்தி, சிற்றின்பம் - சிற்றின்பமானது, வேம்பு - வேப்பங்காய் போன்று, எனினும்-என்று சொல்லுவாளானாலும், பக்குவத்தில் - தன்னுடைய யவ்வன பருவ காலத்தில், கைக்கொள்வாள் - இந்தச் சிற்றின்பத்தையே பேரின்பமாக எண்ணி விரும்பிக் கைக்கொள்வாள், கணவன் - புருஷனின், அருள் - கிருபையை, பெறின்-பெற்று வாழ்வாளானால், முன்-கன்னியாயிருக்குங் காலத்திலே, சொன்ன - சொல்லிய, ஆறு - (வேம்பு என்று சொல்லிய) விதம், என்-என்ன காரணம், என-என்று கேட்க, கருதி-அவ்வாறு முன்சொன்ன அதை எண்ணி, நகையாவள் - சிரிப்பள், அது - அந்தச் செயலை, போல-போலவே, சொன்ன - தேவரீர் சொல்லியபடி, கேட்கும்-பணிந்து கேட்கும், இ-இந்த, பேதைக்கு - அறிவிலியாகிய அடியேனுக்கு, நின் - தேவரீரின், கருணை-கருணையானது, தோற்றின்-தோன்றுமேயானால், சுகம் - பேரின்பம், ஆரம்பம்-ஆரம்பித்தல், ஆம்-ஆகும்; எ-று.

(வி-ரை) இதுமுதற் பனிரண்டுபாடல்கள்கொண்ட இப்பதிகத்தின் ஈற்றில் 'சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்சோதியே சுகவாரியே' என்னும் மகுடங்கொண்டுள்ளமையாலும் இம் மகுடத்தின் ஈற்றில் 'சுகவாரியே' என்பது ஈறாகவும் நிற்றலினால் இப்பதிகத்தை 'சுகவாரியே

என்றார். 'சுகவாரி' என்பது சிவாநந்தப் பெருஞ்சமுத்திரம் என்பது பொருளாம்; முத்திஇன்பமாகிய சிவாநந்தப்பேரின்பம்.

"கரும்பைத் தேனைப் பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியை யொத்திருப் பனந்த முத்தியினிற் கலந்தே"

என்ற **சிவஞானசித்தியாரின்** திருவாக்குப்போல முத்தியின்பஞ் சுவையுடையதாக இருக்குமாதலினால் 'இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனி தேனென ருசித்திட' என்றார்.

'இன்னமுது' என்றது தேவாமிர்தத்தை. 'இன்' இது 'இனிமை' என்பதன் விகாரம். 'கனி' இது கனிவுடையது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப்பெயர். 'கனி' என்றது வாழை, பலா, மா என்னும் முக்கனிகளை. 'கற்கண்டு' என்றது சர்க்கரைக்கட்டியை. 'சீனி' இது சீனதேசத்துச்செய்யும் சர்க்கரையை. 'என' இது 'என்ன' என்பதன் தொகுத்தல்விகாரம். 'நினை' என்றது இறைவனை. இது 'நின்னை' என்பதன் தொகுத்தல்விகாரம். 'எங்ஙோமும்' இதில் எகாரம் வினாஇடைச்சொல். இது புறச்சுட்டு. 'கருத்தவிழ' என்றது மனக்குழைவை. 'உடல் எங்கும்' என்றது உடல்முழுதும் என்ற பொருளது. 'அவசம்' என்றது பரவசம் முற்றிருக்கும் நிலையை. தன்வசந்தப்பிப் பரவசமுற்று என்பதாம். இதில் அகரம் எதிர்மறை உபசர்க்கம். 'அனுபூதி' என்றது சுய அனுபவத்தை. 'உள்ளபடி காண்' இதில் 'காண்' என்பது அசை. 'கன்னிகை' என்றது பக்குவமடையாத சிறுமியைக் குறித்தது. பக்குவமாவது பூப்படாமை. பூப்பிலாப் பெண்புணர்ச்சி இன்பம் அறிதற்கு முடியாது இவளுக்குப் புணர்ச்சியாலே வெறுப்புங் கசப்புங் கஷ்டமுமேயாக இருக்கும், பூப்படைந்த பக்குவமுற்ற பெண்ணிற்கே புணர்ச்சி இன்பம் பயக்கும் என்பது அறியத்தக்கது. 'சிற்றின்பம்" இது சிறிதுகாலஅளவே அனுபவிக்கப்படும் இன்பமாதலின் சிற்றின்பம் என ஆயது.

"ஐய மருந்திவை யுண்ணென்று மாதராட் டேட்டுஞ்செல்வம்
ஐய மருந்தினைப் போதே யவரின்பம்"

என **பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்** வாக்காலும் அறிக.

'வேம்பு' இது ஆகுபெயர்முதல் வேம்பு என்றது சினைக்காயினது வேப்பங்காயைக் குறித்தது. சிலர் வேப்பங்கனி என்பர் இது பொருந்தாது; என்னை? வேப்பங்கனியிலும் சிறிது மதுரம் உண்டாதலின் என்க. 'கைக்கொள்வள்' என்பது பெறுவள் என்னும் பொருளது. 'பக்குவம்' என்றது பருவம்வந்து பூப்பற்றகாலத்தில் என்பது பொருளாம். 'கணவனருள்' என்றது புருஷனின் அன்பையும் அவன் லீலாவிநோதப் புணர்ச்சியையும் என்ற பொருளது. 'முனே' இது முன்னே என்றதன் தொகுத்தல்விகாரம். 'முன்னே சொன்னது' என்றது சிற்றின்பம் வேம்பு என்றது என்பதாம். 'நகையாவள்' என்றதில் 'நகை' என்றது முன் அறியாதிருந்ததுபற்றியும்,



பின் அறிந்ததுகொண்டும் எழுந்த நாணநகை என்க. 'நின்' என்றது இறைவனை. 'கருணை' என்றது திருவருளை. 'சுகாரம்பம்' என்றது சுகோதயத்தை, சுகானுபவத்தோற்றத்தை. 'சுத்தம்' என்றது தூய்தன்மையை; இனி சகல கேவலநிலையை என்பர். 'நிர்க்குணம்' என்றது குணாதீதநிலையை. 'பரம்' என்றது ஈண்டு உயர்வைக் குறித்தது. மிக்க 'வளி' இது மிகப்பெரியது என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். நீண்டது, பரந்தது, ஆழமாயது, அளவுகாணமுடியாதது என்னும் பொருளது. 'உன்னிய' இது இறந்தகாலப் பெயரெச்சம். அவிழ, குழறி, ஓய்ந்து, ஆகி, என்னும் வினையெச்சங்கள் உணர்வார்கள் என்னும் பலர்பால் வினைமுற்றைக்கொண்டு முடிந்தது. 1

சுகவாரியே! அடியேனின் அறியாப் பருவத்திலேயே சிவாநந்தப்பேற்றில் ஆசையைப் பெருக்கிவிட்டாய் ஒருதரமேனுங்கலந்து சிவாநந்தந்தந்திலை; தேவரீர் இரங்காவிடின் சிவாநந்தப் பேரின்பம் அடியேனுக்கு எப்படி வாய்க்கும் என்கின்றார்

அன்பின்வழி யறியாத என்னைத் தொடர்ந்தென்னை
அறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநான்
அற்றேன் அலந்தேன்என
என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டாய்
இரங்கியொரு வழியாயினும்
இன்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
எனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
தன்மையால் தனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்கும்உரையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம்-சுத்தமாகிய, நிர்க்குணன் - குணரகிதன், ஆன-ஆகிய, பரம்-மேலான, தெய்வமே - தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே - ஒளிப்பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே-கடலே!, அன்பின்-அன்பின், வழி-மார்க்கத்தை, அறியாத-உணராத, என்னை - அடியேனை, தொடர்ந்து-பின்பற்றி, என்னை-அடியேனை அடியேன், அறியாத-உணராத, பக்குவத்தே-பருவத்திலேயே, ஆசை-சிவாநந்தபோகத்து ஆசையின், பெருக்கை-மிகுதியை (வெள்

ளத்தை), பெருக்கி - பெருகும்படியாகச்செய்து, கொடுத்து - தந்து, நான்-அடியேன், அற்றேன் - கெட்டேன், அலைந்தேன் - வாடினேன், என-என்று கூறும்வண்ணம், என் - அடியேனின், புலன்-அறிவு, மயங்க-திகைக்கும்படி பித்து-பித்தை, ஏற்றி - ஏற்றி, விட்டாய் - விட்டனை, நீ - (இவ்வாறுசெய்த) தேவரீர், ஒரு-ஒரு, வழி-தரம், ஆயினும்-ஆயினும், இரங்கி - மனது இரங்கி, இன்பம்-சிவானந்த, பெருக்கு - வெள்ளம், ஆக-ஆக, வந்து - வந்து, உள்ளம்-மனம், களிக்க - மகிழும்வண்ணம், என்னை-அடியேனை, கலந்தது-கூடியது, உண்டோ-உண்டோ?, தன்-தன்னுடைய, பருவம் - பருவகாலத்தைப்பெற்ற, மலருக்கு-பூவிற்கு, மணம்-வாசனை, உண்டு - உண்டு, வண்டு-தேன்வண்டுகள், உண்டு - (தேனை உண்ண மொய்தல்) உண்டு, (ஆனால் மணமும் வண்டும்) தண்-குளிர்ச்சிபொருந்திய, முகை-அரும்பு, தனக்கும்-தனக்கும், உண்டோ-உள்தோ?, (அவைகள் உண்டாதல் இல்லை; அதுபோல) தமியனேற்கு-தய்யனாகிய அடியேனுக்கு, இ - இந்த, வண்ணம்-விதம், திருவுளம் - தேவரீரின் திருவுள்ளம், இரங்காத-இரங்கியருளாத, தன்மையால் - தன்மையினால், தனி-தனியாக, இருந்து-அடியேன் இருந்து, துன்பம்-துன்பத்தை, உறின்-அனுபவத்தால், அழியாத-எக்காலத்தும் அழிதலில்லாத, நின்-தேவரீரின், அன்பர்-அன்பர்களுக்கு உரியதாகிய, சுகம்-சிவானந்தமானது, எங்ஙனம்-எந்த விதம், வந்து-வந்து, வாய்க்கும்-கூடும்? உரையாய் - சொல்லி அருள்வாயாக; எ-று.

(வி-ரை) 'அன்பின்வழி' என்றது அன்புமார்க்கத்தை; இதனைப் பத்தி நெறி எனவுங் கூறுவர்.

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து"

என்ற **திருவாசகத்தா**லும் அறியலாம்.

'அறியாத வென்னை' என்றது அஞ்ஞானமாகிய அந்தகாரத்துள் அழுந்திக்கிடந்த அந்தக்காலத்து என்பதாம். 'என்புலன்' என்ற இடத்து புலன் அறிவை உணர்த்தி நின்றது. 'பித்தேற்றல்' பித்துப் பிடிக்க வைத்தல். 'ஒருவழி' என்றது ஒருமுறை அல்லது ஒருதடவை என்னும் பொருளது. 'இன்ப வெள்ளம்' என்றது பேரானந்தப் பெருக்கு. 'நீ' என்றது இறைவனை. 'தன் பருவம்' என்றது தனது மலரும் பருவத்தை (காலத்தை) அடைந்த பூவிற்கு என்பது பொருளாம். 'மணம்' என்றது நறுநாற்றந் தீநாற்றம் என்னும் இரண்டற்கும் பொதுவாக இருந்தாலும் ஈண்டு சிறப்புப் பற்றி நறுநாற்றத்தைக் குறித்தது. 'வண்டுண்டு' என்றது மலர்ந்த மலரில் தேன் வழியுமாதலின் அதனை மாந்திக்குடிக்க வண்டுகள் வந்தணுகுதலைக் குறித்தது. 'தண்முகை' என்றது குளிர்ந்த அரும்பை. 'தமியனேற்கு' என்றது அடிமைக்கு என்பது பொருள். ஈண்டு 'தமி' என்பது தனிமைப் பொருள் உணர்த்தி நின்றது. சிவபெருமானின் அடியவர்கள் அழிவிலர் எப்பயம் இல்லை என்றும் சிவானந்தத்தை அனுபவித்துக்கொண்டு நித்திய





சூரிகளாக இருப்பாரதலின் 'அழியாத நின்அன்பர் சுகம்' என்றார். இனி இதற்கு நின்அன்பர் அழியாத சுகம் எனக்கொண்டு கூட்டிப் பொருள் உரைத்தலும் ஒன்று. 'சுகம்' என்றது சிவானந்தப் பெருஞ்சுகத்தை. இந்தச் செய்யுளின் கருத்தை,

"யாதுமறியாச் சடம்போல அந்தோவந்தோ அஞ்ஞானத்
தீதமிருந்த விருட்டகத்துச் சேயாயிருந்த பருவத்தே
காதுவளருங் குழையானே கருத்துன்மேலாம் படிசெய்திப்
போதுவந்தே யணையாயேற் புலப்பேனலப்பேன் போக்கிலனே"

என்ற **பெரியார்** வாக்கானும் அறிக.

'பெருக்கை' இது இரண்டனுருபு ஏற்றபெயர். பெருகியுள்ளது பெருக்கு. 'பெருக்கி' இது இறந்தகால வினையெச்சம். 'பெருக்கல்' இது அதிகப்படுத்தல் என்னும் பொருளது. 'அலந்தேனென' இதில் 'என' என்பது என்ன என்பதின் தொகுத்தல் விகாரம். 'விட்டாய்' இது முன்னிலை இறந்தகால வினைமுற்று. 'எனைநீ' இதில் 'எனை' என்பது என்னை என்பதன் தொகுத்தல் விகாரம். 'கலந்ததுண்டோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. 'உண்டு' இது குறிப்பு வினைமுற்று 'உண்டோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்த இடைச்சொல். இது 'இல்லை' என்னும் விடைதழுவிய வினா. 'இவ்வணம்' இதில் 'இகரம்' சுட்டிடைச்சொல். 'வணம்' இது வண்ணம் என்பதன் தொகுத்தல் விகாரம். 'உளம்' இது 'உள்ளம்' என்பதன் தொகுத்தல். 'உறின்' இது 'செயின்' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'எங்ஙனே' இது ஙனம் என்றிரு சொல் சந்தி. எந்தவிதம் என்பது பொருள். எகரம் சுட்டு. (ஙனம்-விதம்) 'உரையாய்' இது முன்னிலையொருமை ஏவல்.



சுகவாரியே! அடியேனைச் சிவானந்தப் பேரின்பத்தில் தோயும்படி
வாழ்விப்பது தேவரீரின் கடமை; அடியேனைச் சும்மா
இருக்க அருள்வாய் என்கின்றார்

கல்லேனும் ஐயவொரு காலத்தில் உருகுமென்
கல்நெஞ்சம் உருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கிஎனை
வாழ்விப்ப துன்பரங்காண்
பொல்லாத சேயெனில் தாய்தள்ளல் நீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ

பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையே னுவனந்தோ
சொல்லால் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா இருக்கஅருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணரகிதம், ஆன - ஆகிய, பரம்-மேலாகிய, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம்-சிவானந்தப் பேரின்ப, வாரியே - சமுத்திரமே!, ஐய - ஐய, கல்லேனும் - கல்லாக இருந்தாலும், ஒரு - ஒரு, காலத்தில் - காலத்திலே, உருகும்-இளகும், என்-அடியேனுடைய, கல் - கல்போன்ற, நெஞ்சம் - மனமானது, உருக-இளக, இலையே - இல்லையே, கருணைக்கு - தேவரீரின் திருக் கருணைக்கு, இணங்காத-இசையாத, வன்மையையும்-கடினத்தன்மையையும், கற்பிக்க - உண்டாக்க, நான்முகன் - நான்முகங்களையுடைய பிரமன், ஒரு- ஒரு, கடவுளோ-கடவுளோ?, வல்லான்-வலிமையுடைய ஒருவன், வகுத்ததே- வகுத்ததே, வாய்க்கால் - வாய்க்கால், எனும் - என்று கூறும், பெரு-பெரிய, வழக்குக்கு - வழக்கினுக்கு, இழுக்கும் - குறைவும், உண்டோ - உண்டோ, வானம் - வானம் (பரம ஆகாயம்) ஆய் - ஆகி, இன்பம் - சிவானந்த இன்பம், மழையாய் - மழையாக, இறங்கி - இறங்கி, எனை - அடியேனை, வாழ்விப்பது வாழும்படிச் செய்வது, உன் - தேவரீரின், பரம் - பாரம் (கடமை), காண்- காண்பாயாக, பொல்லாத-கெட்ட, சேய் - பிள்ளை, எனில் - என்றால், தாய்- பெற்றெடுத்த தாயானவள், தள்ள - அகற்ற, நீதமோ - தருமம் ஆகுமோ? (அவ்வாறு தேவரீர் கைவிட்டு விட்டால்) புகலிடம் - அடியேன் தஞ்சம் புகக் கூடிய இடம், பிறிதும் - வேறு ஏதேனும், உண்டோ - இருக்கின்றதோ?, பொய்-பொய்யாகிய, வார்த்தை-சொற்களை, சொல்லிலோ - சொன்னாலோ திருஅருட்கு-தேவரீரின் திருஅருளினுக்கு, அயலும் - புறம்பும், ஆய் - ஆகி, புன்மையேன்-அற்பத்தன்மை யுடையவனும், ஆவன் - ஆகுவன், அந்தோ- ஐயோ! சொல்லான்-சொற்களால், முழக்கிலோ-முழக்கிக் கூறினாலோ, சுகம்- சிவானந்த சுகம், இல்லை - இல்லையாகும், மௌனியாய் - மௌனயோகம் உடையவனாக, சும்மா-சும்மா, இருக்க-இருக்க, அருள்வாய்-அருள்புரிவாயாக

(வி-ரை) ‘கல்லேனும் ஐய ஒருகாலத்தில் உருகும்’ என்றது இளகாத் தன்மையையுடைய கல்லும் ஒருகாலத்தில் உருகும் என்பதாம். அந்தக் கல்லைக்காட்டினும் என் நெஞ்சு வலிதாக இருக்கிறது. உருகவில்லை என்பார் ‘என் கல் நெஞ்சம் உருகவிலையே’ என்றார். கல் உருகல் கால விசேடத்தால் என்க.

“கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்”

என்ற மணிவாசகத்திருவாக்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கதாகும்.



இன்னும் எரிமலைகளில் கல்லுருகி அக்கினிக் குழம்பாக வருதலும் கருதத்தக்கதாகும். இதில் நின்ற உம்மை உயர்வு சிறப்பும்மை. ‘கருணை’ என்றது ஈண்டு திருஅருட்கருணையை. படைக்குங் கடவுளாகிய பிரமனுக்கு நான்கு முகங்கள் உண்டாதலின் அப்பிரமனுக்கு ‘நான்முகன்’ எனப் பெயராயிற்று. ‘கடவுளோ’ இதில் ஈற்றில்நின்ற ஓகாரம் வினைப் பொருளது. இவ்வினை வியப்பின்கண் எழுந்தவினை. ‘வல்லான் வகுத்ததே வாய்க்கால்’ என்பது பழமொழி. இன்னும் இதனை, ‘வல்லான் ஆடியதே பம்பரம்’ எனவுங் கூறுவர். ‘பெருவழக்கு’ இது பெரும்பான்மையான வழக்கு என்பதாம். ‘வழங்கு’ இது வழங்குவது என்னும் பொருளது. ‘வானம்’ என்றது ஆகாயம்; ஈண்டு பராகாயம், ஞானாகாயம் என்றும் பொருளது. ‘இழக்கு’ குறைவு, இழுக்குஉடையது இழுக்கு எனப்பெறும்; இழுக்கு-குற்றம் என்னும் பொருளதாம். ‘ஆய்’ இது ‘ஆகி’ என்பதன் மரூஉ.

‘இன்ப மழையாய்’ என்றது சிவானந்தப்பேரின்பப் பெருமழையை. ‘இறங்கி’ என்றது பெய்து என்னும் பொருளது. இனி ‘இறங்கி’ என்பதனை, ‘இரங்க’ எனக்கொண்டு இரக்கம் காட்டி எனப் பொருள்கூறுவாரும் உண்டு. ‘உன்பரம்’ இது ‘உனதுபாரம்’ என்பது பொருளாம். பாரம் இது கடமை என்றதாம். ‘காண்’ இது முன்னிலையசை. ‘சேய்’ இடுகுழந்தை, பிள்ளை என்னும் பொருளது ‘சேய்’ இது இளமைப்பெயர். ‘நீதமோ’ இதில் அம் விகுதி. ஓகாரம் வினா. நீதிஇல்லை என்னும் பொருள் குறித்து நின்றது. ‘புகலிடம்’ இது தஞ்சம் என்னும் பொருளது. இது அஞ்சினோர் சரண் புகுமிடம் என்னும் பொருளது. ‘உண்டோ’ இதில் ஈற்று ஓகாரம் வினைப்பொருளது. இல்லை என்பதாம். தான் நெஞ்சம் உருகிப் பத்தி செய்யாதிருக்கப் பத்தியுடையன் அன்புடையன் நெஞ்சொடுக்கமுடையவன் எனக் கூறல் பொய்யாகுமாதலின், ‘பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப் புன்மையே னுவன்’ என்றார். ‘அந்தோ’ இது திசைச்சொல். ஐயோ என்னும் பொருளது. இது இரக்கம் பற்றிவந்தது. பொய் படச் சொல்லை விரித்து உரைப்பதாற் பயன் இல்லையாகும் என்பார், ‘சொல்லான் முழக்கிலோ சுகமில்லை’ என்றார். ‘மௌனியாய்’ என்றது வாய்பேசாது என்பது பொருளாம். ‘சும்மா இருக்க’ என்றது திரிகரணச் சேட்டைகள் ஒடுங்கிச் சும்மாயிருத்தலை உணர்த்தும். ‘காலத்தில்’ இது காலம் என்னும் பெயர் எழனுருபு பெற்றுநின்றது. ‘கல்நெஞ்சு’ இது கல்போன்றநெஞ்சு, கல்லையொத்தநெஞ்சுஎன இருபொருளில்மயங்கிநின்றது. முன்னது உவமத்தொகை, பின்னது இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகை. கருணைக்கிணங்காதது ஒன்றுமில்லை. அப்படியிருக்க இறைவன் கருணைக்கும் இணங்காத வன்மையையுடைய அடியேனின் நெஞ்சைப் படைத்திட்டானாதலின் அவன் ஒப்பற்ற கடவுளே என்பார் ‘ஒரு கடவுளோ’ என்றார். ஈண்டு ஒரு என்பது ஒப்பற்ற, தனித்த என்னும் பொருளது. ‘வானமாய்நின்று மழையாய் இறங்கி’ என்பதில் நின்று

என்பதற்கு எதிர்மறைச்சொல்லான இறங்கி என்ற சொல் வந்தமையால் இதுமுரண்டொடை. என்னை? "முரணத்தொடுப்பது முரண்டொடையாகும்" என்பது இலக்கணம். 3

சுகவாரியே! தேகம் போய், இதை மெய் என்று நம்பி என் புத்தி செல்லாது உலகநடை வேண்டாம் என்கின்றார்

என்பெலாம் நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பஉடல்
இளகமன தழலின்மெழுகாய்
இடையறு துருகவரு மழைபோ லிரங்கியே
இருவிழிகள் நீரிறைப்ப
அன்பினல் மூர்ச்சித்த அன்பருக் கங்ஙனே
அமிர்தசஞ் சீவிபோல்வந்
தானந்த மழைபொழிவை உள்ளன்பி லாதஎனை
யார்க்காக அடிமைகொண்டாய்
புன்புலால் மயிர்தோல் நரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலில் அருவருப்புப்
பொய்யல்ல வேஇதனை மெய்யென்று நம்பிஎன்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ உலகநடை ஐயவொரு
சொற்பனத் திலும்வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணரகிதம், ஆன - ஆகிய, பரம்-மேலான, தெய்வமே - தெய்வமே!, பரம் - உயர்ந்த, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம்-பேரானந்த, வாரியே-சமுத்திரமே!, என்பு-எலும்பு, எலாம்-எல்லாம், நெக்கு-நெக்குவிட்டு, உடைய-உடையவும், ரோமம்-மயிர்கள், சிலிர்ப்ப-சிலிர்க்கவும், உடல்-உடம்பு, இளக-குழையவும், மனது-மனமானது, இடையறாது-இடைவிடாமல், அனலின்-நெருப்பில் இடப்பட்ட, மெழுகு-மெழுகை, ஆய்-போல ஆகி, உருக-உருகவும், இரு-இரண்டு, விழிகள்-கண்களும், வரும்-நீர் கொண்டுவரும், மழைபோல் - மழை மேகம்போல், இரங்கி - இரங்கி, நீர்-ஜலத்தை, இறைப்பவும் - பெய்யவும், அன்பினல் - அன்பாலே, மூர்ச்சித்த-தம்மைத் தாம் அறியாது மூர்ச்சித்த, அன்பர்க்கு-அன்பர்களுக்கு, அங்ஙனே, அந்த இடத்திலேயே, அமிர்தம்-அமிர்த, சஞ்சீவி-சஞ்சீவி மருந்தை, போல்-போல, வந்து-எழுந்தருளி வந்து, ஆனந்தம்-பேரின்ப மழையை, பொழிவை-சொரிவாய், உள்-உள்ளத்தில், அன்பு - அன்பு, இல்லாத - இல்லாத, எனை-அடியேனை, யார்க்காக - யாருக்காக, அடிமை - அடிமையாக, கொண்டாய்-கொண்டாய்?, புன்-அற்பமாகிய, புலால்-மாமிசம், மயிர்-மயிர், தோல்-தோல்,



நரம்பு-நரம்பு, என்பு - எலும்பு, (ஆகிய இவைகள்) மொய்த்திடு - கூடியுள்ள, புலை - புலால் நாற்றத்தோடு கூடிய, குடிலில் - உடம்பாகிய இக்குடிசையில், அருவருப்பு-அருவருப்பாகவே இருக்கின்றது, பொய்-இது பொய், அல்லவே-அல்ல, இதனை-இத்தகைய இவ்வுடலை, மெய் - நிலையானது, என்று - என்று எண்ணி, நம்பி - நம்பி, என் - அடியேனது, புந்தி - புத்தியானது, பாழிலே-வீணை காரியங்களிலே, செலுமோ - செல்லுமோ?, துன்பம் - (அவ்வாறு பாழிலே சென்று) துன்பம், ஆய்-ஆகி, திரியவோ-திரியவோ?, ஐய-ஐயனே!, உலக-உலக, நடை-நடக்கையை, ஒரு - ஒரு, சொப்பனத்திலும் - கனவிலும், வேண்டிலேன்-விரும்பமாட்டேன் எ-று.

(வி-ரை) 'என்பு' இது எலும்பு என்பதன் விகாரம். 'நெக்குடைய' என்றது நெக்குவிட்டு உருசியுடைய என்பதாம். 'ரோமஞ் சிலிர்ப்ப' என்றது மயிர்க்குச்செருத்தலை. 'உடல் இளக' என்பது உடல் குழைதலை. 'மெழுகாய்' இது மெழுகுபோல் என்பதாம். 'மழை' என்றது மழை மேகத்தை. அதாவது நீர்கொண்ட மேகத்தை. 'இருவிழிகள்' இது இரு விழிகளும் என்பதன் ஈற்றும்மை தொக்கது. 'நீர் இறைப்ப' என்றது ஆனந்த நீர்த்துளிகளை இறைத்தலை உணர்த்திற்று. 'அன்பினல்' இதில் 'ஆல்' மூன்றனுருபு கருவிப்பொருளில் வந்தது. 'மூர்ச்சித்தல்' என்றது தன்னை மறந்து இருத்தலை. 'அன்பர்' என்றது ஈண்டு மெய்யன்பரை. 'அங்ஙனே' என்றது அந்த இடத்தேஎன இடப்பொருள் தந்தது. அமிர்த சஞ்சீவி-இது இறந்தோரைப் பிழைப்பிக்கும் ஒருவகை மருந்துப்பூடு, இது சஞ்சீவி மலையிலுள்ளது. 'சஞ்சீவிபோல்' என்பதில் போல் என்பது உவம உருபு. 'ஆனந்தமழை' இது ஆனந்தமாகிய மழை என விரிதலின் பண் புத்தொகை. 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். யார்க்காக' இதில் 'யா' வினா. 'புன்' இது புன்மை என்னும் பண்புப் பெயர் ஈற்று மைவிகுதி கெட்டுநின்றது.

'புலான்மயிர் தோனரம் பென்பு' என்றது புலாலும் மயிரும் தோலும் நரம்பும் என்பும் என்று விரிதலின் உம்மைகள் தொக்குநின்றன. 'என்பு' இது 'எலும்பு' என்றதன் விகாரம். 'மொய்த்திடு' இதில் 'இடு' துணைவினை, 'புலை' என்றது ஈண்டு புலால் நாற்றத்தை உணர்த்திநின்றது. 'பொய்யல்லே' இதில் நின்ற ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. 'புந்தி' இது 'புத்தி' என்பதன் மெலித்தல் விகாரம். 'சொப்பனம்' இது 'சொர்ப்பனம்' என்ற வடசொற்றிரிபு. 'வேண்டிலேன்' இது 'வேண்டு' என்னும் வினையடியாகப் பிறந்த எதிர்மறை வினைமுற்று. 'கொண்டாய்' இது முன்னிலையொருமை இறந்தகால வினைமுற்று. 'செலுமோ' இது விடைதழுவிய வினா, செல்லாது என்னும் பொருளது. 'உலகநடை' என்றது லௌகிகத்தை. இச் செய்யுளின் கருத்தை,

"நித்த நித்த முன்றனக்கே நேயம் வைத்தே யுள்ளுருகிச்
சித்தந் திறம்பா வன்பருஞ் சிறக்கவின்ப மழை பொழியும்

அந்த அருணைக் கருணையனே அடியே னிந்தப் பாழுலகிற்
பித்துப் பற்றுப் போருளே பெருமா னெனற்குப் புரிந்தருளே"

என்ற **பெரியார்** வாக்கானும் அறிக.

4

**சுகவாரியே! அடியேனை ஆண்ட தேவரீர் கைவிட்டுவிட வேண்டாம்**
**சுகாதியர்களைப்போல அடியேனுக்கு இறவாத்தன்மை**
**தந்தருள வேண்டும் என்கின்றார்**

வெந்நீர் பொறுதென் உடல் காலில்முள் தைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழிஇமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர்கொல்லின்
அந்நேரம் ஐயோஎன் முகம்வாடி நிற்பதுவும்
ஐய நின் னருள் அறியுமே
ஆனாலும் மெத்தப் பயந்தவன் யான்என்னை
ஆண்ட நீ கைவிடாதே
இந்நேர மென் றிலை உடற்சுமைய தாகவும்
எடுத்தா லிறக்கஎன்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானுடம் வருத்தஅருள்
துணையென்று நம்புகின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம்-சுத்தமாகிய, நிர்க்குணம் - குணாகிதம், ஆன - ஆகிய, பரம்-மேலாகிய, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே-சமுத்திரமே! என்-அடியேனின், உடல்-தேகம், வெம்-வெப்பமாகிய, நீர்-நீர்பட, பொறு-து-தாங்காது, காலில்-காலிலே, முள்-முள்ளானது, தைக்கவும்-தைக்கவும், வெடுக்கென்று - வெடுக்கென்று, அசைத்து-அசைத்து, எடுத்தால் - பிடுங்கினால், (அது பொறுக்கமுடியாமல்) விழி - கண்களை, இமைத்து - இமைத்து, தண் - தேவரீரின்குளிர்ந்த, அருளை - திருஅருட்டுணையை, நாடுவேன் - விரும்பித் தேடி வருந்துவேன், வேறு-வேறு, ஒன்றை-ஒரு உயிரை, ஒருவர்-ஒருவர், கொல்லின்-கொன்றால், அ-அந்த, நேசம்-வேளையில், ஐயோ - அந்தோ, என் - அடியேனின், முகம்-முகமானது, வாடி - வாட்டமடைந்து, நிற்பதுவும் - அடியேன் நிற்கும் நிலைமையும், ஐய-அப்பனே!, நின்-தேவரீரின், அருள்-திருஅருள், அறியுமே-அறிந்ததன்றோ?, ஆனாலும்-ஆனாலும், மெத்த-மிகவும், பயந்தவன் - பயப்பட்டவன், (ஆகையால்) என்னை-அடியேனை, ஆண்ட-ஆட்கொண்ட, நீ-தேவரீர், கைவிடாதே-கைவிட்டுவிடாதே, உடல் - உடல், சுமை - பாரம் (விழுவதற்கு), இ-இந்த, நேரம்-காலம், என்று-என்று, இல்லை-இல்லை, அது ஆகவும் - அது அப்படி இருக்கவும், எடுத்தால் - தேகம் எடுத்தால், இறக்க - சாக, என்றே-என்றே, எங்கெங்கும்-எல்லா இடத்தும், ஒரு - ஒரு, தீர்வை - தீர்மானமும், ஆயம்-ஆயமும், உண்டு-உண்டு, ஆயினும் - ஆனாலும், இறைஞ்சு - பணிகின்ற, சுகம் - சுகம், ஆதி - முதலாகிய, தொல் - பழமையாகிய, நீர்மை - குணத்தை, ஆளர்க்கு-உடையவர்களுக்கு, மானுடம்-மனுஷதேகம், வருத்த - தந்தருளிய, அருள்-திருஅருளே, துணை-அடியேனுக்குத் துணைசெய்யும், என்று-என்று, நம்புகின்றேன்-நம்புகின்றேன் எ-று.



(வி-ரை) 'வெந்நீர்' என்றது சுடுநீரை. 'விழி இமைத்தல்' என்றது வலி பொறுக்கமாட்டாது கண்ணைமூடித் திறத்தலை உணர்த்திற்று. 'தண் ணருளை' என்றது இறைவன் திருஅருளை. 'வேறொன்றை' என்றது தன்னின் வேறாகியதாகிய ஒரு உயிரை. 'ஐயோ' என்றது இரக்கம் பற்றி வந்த இரங்கற்குறிப்பு. 'அருள்' என்றது இறைவன் திருஅருளை. 'என்னை ஆண்டநீ' என்றது இறைவனை. 'சாகாதலில்லை பிறந்த உயிரெல்லாம்' எனவும், 'எப்போதாயினுங் கூற்றுவன் வருவன்' என்றும்,

"புன்னிலுமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்று னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்று னெனப்படுத லான்"

என்றும், **பெரியார்**கள் கூறியாங்கு சாதலும், அச்சாவு எந்நேரம் வரும் என்றுந் தெரியாமையால் 'இந்நேர மென்றிலை' எனவும், 'உடற்சுமையதாக வும் எடுத்தாலிறக்கவென்றே' எனவும் கூறினார்.

உடலின் அருவருப்பும் அதன் கஷ்டமுந்தோன்ற 'உடற் சுமைய தாகவும்' என்றார். இதனானன்றோ **குமாருபா சுவாமி**களும்,

"புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிபுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு" என்று கூறினர்.

'தீர்வை ஆயம்' என்றது சொல்நயம். இது தீர்மானமாகிய இலாபம் என்றும், வரியும், சுங்கமும் எனவும் இருபொருள்படக் கூறிவைத்தார். 'இறைஞ்சு சுகர்' என்றது இறைவனை இறைஞ்சுகின்ற சுகர் எனவும், எல்லா ராலும் இறைஞ்சப்படுகின்ற சுகர் எனவும் இருபொருளில் மயங்கியது. 'சுகாதி' என்றது பிரமஞ்ஞான முடையவர்களும் நித்திய சீவர்களாக வுள்ளவர்களுமாகிய சுகர் முதலியவர்களை. 'தொன்னீர்மை யாளர்க்கு' என்றது பண்டைக்காலத்தவர்களும், சற்குணம் வாய்ந்தவர்களும் என்பது பொருளாம், இதில் 'நீர்மை' என்றது நல்ல தன்மையையும், சற்குணத்

தையுங் குறித்து நின்றது. 'மானுடம்' என்றது மனிததேகத்தைப் பெறற்கு அரிய மானிடதேகம் தந்து அவர்களுக்கு இறவாமையும் என்றும் தேகத்தோடும் உண்மையும் தந்ததுபோல அடியேனும் அத்தன்மை செய்ய வேண்டுமென்று குறிப்பிப்பார் 'இறைஞ்சு சுகாதியான தொன்னீர்மை யானர்க்கு மானுடம் வருத்த வருடுணையென்று நம்புகின்றேன்' என்றார். வெம்மை+நீர்=வெந்நீர். இதில் வெம்மை என்னும் மையீற்றுப் பண்புப் பெயர், 'ஈறுபோதல்' என்னும் விதிப்படி ஈறுகெட்டு 'வெம்' என நின்றது. 'பொறுத்' இது 'பொறு' என்னும் பகுதி அடியாகப்பிறந்த எதிர்மறைப் படர்க்கை வினைமுற்று. 'என்னுடல்' இது என்+உடல்=என்னுடல் என இருக்கவேண்டியது தொகுத்தல் விகாரத்தால் 'எனுடல்' என நின்றது. 'என்னுடைய உடல்' என விரிதலின் இது ஆறும்வேற்றுமைத்தொகை. 'காலில்' இதில் 'இல்' என்பது ஏழனுருபு, இடப்பொருளது. 'வெடுக்கென்று' இதில் 'வெடுக்' என்பது ஒலிக்குறிப்பு. 'விழி' ஈண்டு கண்ணைக் குறித்தது விழிக்கப்படுவது விழி என்பது காண்க. 'இமைத்து' என்பது கண்ணை இமையால் மூடித்திறத்தலைக் குறிக்கும.

'அங்ஙனே' இதில் முன்னின்ற அகரம் சுட்டு, 'ஙனே' என்பது இடப் பொருள்தந்து நின்றது. 'தண்' என்றது தண்மை என்னும் பண்புப்பெயர் மைவிகுதி கெட்டு தண் என நின்றது. 'கொல்லின்' என்றதில் 'இன்' உருபு காரணகாரியப்பொருளது கொன்றால் என்பதாம். இறைவன் சர்வாந்தரியாமியாய் எல்லாவுயிர்க்கும் பொருட்கும் உள்ளிருந்து அறிபவன், சாட்சி பூதமாய் நிற்பவனாதலின், 'ஐயநின் அருள் அறியுமே' என்றார். 'பயந்தவன்' இது வினையாலணையும்பெயர்;

> "தன்னொழி மெய்முன் யவ்வரி னிகரம்
> துன்னு மென்று துணிநரு முளரே"

என்ற இலக்கண விதிப்படி. பயந்தவன்+யான்=பயந்தவனியான் எனப் புணர்ந்தது. 'இங்ஙேம்' இதில் இகரம் புறச்சுட்டு. 'இலை' இது 'இல்லை' என்பதன் தொகுத்தல் விகாரம். குறிப்பு வினைமுற்று. 'என்றே' இதில் நின்ற ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. 'எங்கெங்கும்' இது அடுக்குத்தொடர். எல்லாயிடத்தும் என்னும் பொருளது. 'இறைஞ்சு சுகர்' இது வினைத்தொகை. 5

சுகவாரியே! நிராசையும் பிராணலயமும் உண்டாகும்படி
அருள் செய்வாயாக என்கின்றார்

பற்றுவன அற்றிடு நிராசையென் றொருபூமி
　　பற்றிப் பிடிக்கும்யோகப்
பாங்கிற் பிராணலயம் என் னுமொரு பூமிஇவை
　　பற்றின்மன மறும்என்னவே



கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
　　கனிவிக்க வந்தகனிபோல்
கண்டதிந் நெறியெனத் திருவுளக் கனிவினொடு
　　கனிவாய் திறந்தும்ஒன்றைப்
பெற்றவனு மல்லேன் பெறுதவனு மல்லேன்
　　பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை என்னஇரு கண்ணீ ரிறைத்துநான்
　　பேய்போ லிருக்கஉலகஞ்
சுற்றிநகை செய்யவே யுலையவிட் டாயெனில்
　　சொல்லஇனி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
　　சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம்-சுத்தமாகிய, நிர்க்குணம்-குணரகிதம், ஆன-ஆகிய, பரம்-மேலாகிய, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலான, சோதியே-ஒளிப்பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே - கடலே!, பற்றுவன - ஐம்பொறிகளால் பற்றப்படும் விஷயங்கள், அற்றிடும் - தொலையும் தன்மைக்குக் காரணமாகிய, நிராசை-ஆசையின்மை, என்று - என்று சொல்லப்பெற்றுள்ள, ஒரு - ஒரு, பூமி - பூமியுண்டு, பற்றி-தொடர்ந்து, பிடிக்கும் - பிடித்து நிறுத்தும், யோகம் - யோக சாதனமாகிய, பாங்கில்-பாங்கினால் கிட்டக்கூடிய, பிராணன் - பிராணனின் (ஜீவக்காற்றில்), லயம்-லயம், என்றும் - என்று சொல்லப்படுகின்ற, ஒரு - ஒரு, பூமி-பூமியுண்டு, இவை - இந்த இரண்டு பூமிகளையும், பற்றின் - ஆதாரவாகக் கொண்டால், மனம்-மனமானது, அறும்-ஒடுங்கி ஒழியும், என்னவே-என்றே, கற்றை - கூட்டமாகிய, அம் - அழகிய, சடை - சடையையுடைய, மௌனி-மௌனகுரு, தானே-தானாகவே, கனிந்த-கனிவுகொண்ட, கனி - பழத்தை, கனிவிக்க-மேலும் கனிவு உண்டாகச்செய்ய, வந்த-உண்டாகிய, கனிபோல்-பழத்தைப்போல, கண்டது-மானிட தேகத்தோடு கண்ணுக்கு நேராகப் பார்த்தது, இ-இந்த, நெறி-மார்க்கம், என-என்று, திருவுளம் - அழகிய மனதின், கனிவினொடு-இரக்கத்துடனே, கனி-கொவ்வைக் கனிபோன்ற, வாய்-வாயை, திறந்தும் - திறந்தாகிலும், ஒன்றை - ஒருமொழியைக்கூற, பெற்றவனும்-அடைந்தவனும், அல்லேன் - அல்லேன், பெறுதவனும் - அடையாதவனும், அல்லேன்-அல்லேன், பெருக்க - மிகவும், தவித்து - தவிப்படைந்து, உழறி-அரற்றி, பெண் - பெண்ணின், நீர்மை - குணம், என்ன - என்று ஒப்புக்கூற, இரு-இரண்டு, கண்-கண்களிலும், நிர்-கண்ணீரை, இறைத்து-வடித்து, நான்-அடியேன், பேய்-பேயை, போல்-போல, இருக்க - அலங்கோலமாக இருக்க, (இந்த துன்பத்தைக்கண்டு) உலகம்-இந்த உலகமானது, சுற்றி - அடியேனைச் சுற்றிக்கொண்டு, நகைசெய்ய - சிரிக்க, உலைய - அலையும்படி, விட்டாய்-விட்டாய், எனின்-என்றால், இனி-இனி, சொல்ல-சொல்லுவதற்கு, வாயும்-அடியேனுக்கு வாயும், உண்டோ-இருக்கின்றதோ? எ-று.

(ப்-ரை) 'பற்றுவன' என்றது பஞ்சேந்திரியங்களால் பற்றப்படுவனவாகிய உலக விடயங்களை. ஆசையின்மைதோன்றினால் இக்குணம் தோன்றப்பெற்றவனுக்கு உலகமே இல்லையாய் ஒழியுமாதலினால் அந்த நிலையே முத்திநிலை எய்துவதற்குஏற்ற நிலமாக இருத்தலினால் 'பற்றுவன வற்றிடு கிராசையென் றொருபூமி' என்றார். இதனை,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்"

என்ற **திருக்குறளா**லும் அறியலாம்.

'பற்றிப் பிடிக்கும் யோகப் பாங்கில்' என்றது பஞ்சேந்திரியங்களும் உலகவிஷயாதிகளிற் செல்லாதபடிச் செய்ய மனத்தைக் கைவசப்படுத்த வேண்டும். அம்மனத்தைக் கைவசப்படுத்த அம்மனத்திற்கு நண்பும் ஆதாரமுமாக இருப்பதாகிய பிராணவாயுவைத் தொடர்ந்துபிடித்து அடக்கி வைக்கின் மனம் தானே அடங்கிவிடு மடங்கிவிடும் என்பார் 'பற்றிப் பிடிக்கும்யோகப் பாங்கிற் பிராணலயமென்னு மொருபூமி' என்றார். மனோலயத்திற்கு நிராசையும் யோகசாதனமும் வேண்டுதலின் 'இவைபற்றின் மனம்அறு மென்னவே' என்றார். இதனை,

"ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
போரா வியற்கை தரும்"

என்ற **திருக்குறளா**லறிக.

'லயம்' என்றது அடக்கத்தை. நிராசையையும் பிராணலயத்தையும் பூமி என்றது உருவகம். 'கற்றையம் சடைமௌனி' என்றது மௌன குருவாகவந்த இறைவனை. முதிர்ந்த பழக்காயை நன்றாய்ப் பழுக்கவைக்க நன்றாப் பழுத்தபழத்தை அதனோடுபோட்டு மூடிவைப்பது வழக்கம் பெரும்பாலும் வாழைக்கனிக்கே இது செய்வர். அதுபோல போராதாமுடைய அடியேனுக்கு இறைவன் இன்னும் கனிவுஉண்டாக்க மானுடக்கோலத்தோடு மௌனகுருவாக வந்தருளினான் என்பார் 'கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி கனிவிக்கவந்த கனிபோல்' என்றார். 'கனிவினொடு கனிவாய் திறந்து" என்றதில் முதற்கனிவு மன இளக்கத்தையும் இரண்டாவது கனி இதழுக்கு உவமைகூறும் கொவ்வைக்கனியையும் குறித்து நின்றது. இச் செய்யுளில் 'கனி' என்னுஞ்சொல் பன்முறை வந்தது சொற்பிரிதிநிலையணியாம். 'ஒன்றை' என்றது ஒப்பற்றதாகிய உபதேசமொழியை. வாயாற் கூறாது மௌனமாக இருந்தாராயினும் கைக்குறியாற் காட்டியருளினராதலின், 'பெற்றவனுமல்லேன்பெறுதவனுமல்லேன்'என்றார். பெண்களுக்கு இளகிய மனம் உண்டாதலின் அவர்க்குச் சோகம் தாங்கமுடியாது கண்ணீர் சட்டெனவடிப்பாராதலின் 'பெண்ணீர்மை யென்னவிரு கண்ணீரிறைத்து' என்றார். 'பேய்போல்' என்றது பேய்க்கோட்பட்டவன்போல என்பதாம். சர்வஞ்ஞனாகிய இறைவனுக்கு எல்லாந் தானே தெரியும், ஒருவர் உணர்த்தாதே எல்லாமறிபவன் அவனுக்கு எவ்வாறு எடுத்துரைப்பேன் என்பார், 'சொல்லவினி வாயுமுண்டோ' என்றார்.





சுகவாரியே! அடியேனைக் கைவிடாது தொண்டருடன் கூட்டி
அருள வேண்டும் என்கின்றார்

அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவி லூறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் நாடி நாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வ னானலும்உனை
இடைவிட்டு நின்றதுண்டோ
என்று நீ யன்று நான் உன்னடிமை யல்லவோ
யாதேனும் அறியாவெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணாதீதமாகிய, பரம்-மேலான, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே-ஒளிப்பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே - சமுத்திரமே!, அரும் - அருமையாகிய, பொனே-பொன்னே!, மணியே - மாணிக்கமே!, என் - அடியேனின், அன்பே - அன்புமயமே!, என்-அடியேனின், அன்பு-அன்பின், ஆன - உண்டாகிய, அறிவே-அறிவே!, என்-அடியேனின், அறிவில்-அறிவினிடத்தே, ஊறும்-ஊற்றெடுத்துப்பெருகும், ஆனந்தம்-பேரின்ப, வெள்ளமே - பெருக்கே!, என்று என்று-என்று பலகால், பாடினேன் - துதித்துப் பாடினேன், ஆடினேன் - ஆனந்தக்கூத்தாடினேன், நாடி நாடி - தேடித்தேடி, விரும்பி - ஆசைப்பெருக்கால் அழுது, கூவினேன் - அழைத்தேன், உலறினேன் - (தேவரீர் தரிசனங் கிடைக்கப்பெறுமையால்) வாடி உலர்ந்தேன், அலறினேன் - வாய்விட்டு உறக்கக்கத்தினேன், மெய்-தேகம், சிலிர்த்து-மயிர்க்குச்செடுத்து, இரு-இரண்டாகிய, கரம்-கைகளை, கூப்பி-குவித்து, விண்-ஆகாயத்திலிருந்து பொழியும், மாரி-மழைத்துளிகள், என-என்று ஒப்புச் சொல்லும்படி, என்-அடியேனது, இரு - இரண்டு, கண் - கண்களினின்று, மாரி - ஆனந்தபாஷ்ப மழையைப் பொழிய, யான்-அடியேன், வேசற்று - மனம் தளர்ந்து, அயர்ந்தேன்-வாடினேன், இரும்பு-இரும்புக்கு, நேர்-ஒத்த கடினமுடைய, நெஞ்சகம் - மனத்தைப்பெற்ற, கள்வன்-திருடன், ஆனாலும்-ஆயினும், உனை-தேவரீரை, இடைவிட்டு-(மனத்து நினைத்தலிலிருந்தும்) மறந்து, நின்றது-இருந்தது, உண்டோ-

உண்டோ?, நீ - தேவரீர், என்று - எப்பொழுது இருந்தாயோ, அன்று - அப்பொழுதே, அன்று-அந்தக்காலத்தே, நான்-அடியேனும் இருந்தேன், (ஆகையால்) உன்-(அடியேன்) தேவரீருடைய, அடிமை - தொண்டன், அல்லவோ-அல்லவோ?, யாதேனும் - நற்காரியங்கள் ஒரு சிறிதாயினும், அறியா - அறியாத, வெறும்-பயனற்ற, துரும்பு-துரும்பை, ஆனேன்-ஒத்தவன், என்னினும்-என்றாலும், கைவிடுதல்-அடியேனைப் புறக்கணித்து விட்டுவிடுதல், நீதியோ-தேவரீருக்குத் தருமந்தானோ?, தொண்டரொடு - தேவரீரின் தொண்டர்களுடனே, கூட்டு-சேர்த்துக்கொள்; எ-று.

(வி-ரை) 'அரும்பொனே' இது 'அருமைப் பொன்னே' என்பதாம். 'அருமை' என்றது 'ஈறுபோதல்' என்ற விதியால் ஈற்று மைகெட்டு 'அரு' என நின்றது; வருமொழிமுதலில் பகரம்வர அதற்கினமாகிய மகரவொற்றுத் தோன்றிற்று, அருமை என்பது ஈண்டு தேடற்கும், கிடைத்தற்கும் அருமையைக் குறித்தது. 'பொனே' என்றது 'பொன்னே' என்பதன் தொகுத்தல் விகாரம். 'மணியே' என்றது ரத்தினமணியை. இது கழிவியபின் விளக்கங்காட்டுவது என்னும் பொருள்குறித்துவந்தசொல். மண்ணுதல் = கழுவுதல். 'எனன்பே' இது என் + அன்பே என்ற இருசொற்சந்தி, எனன்பே என்று புணரும். இதின் இடையே னகரவொற்று நீங்கியது தொகுத்தல் விகாரம். 'அன்பான அறிவே' என்றது அன்பினில் உதித்த அறிவே என்பதுபொருளாம். இனி இதற்கு எனது அன்புடைய அறிவே எனப் பொருளுரைப்பாரும் உண்டு. அறிந்ததன்பயன் ஆனந்தமாதலின் 'அறிவிலூறும் ஆனந்த வெள்ளமே' என்றார். ஆனந்தம் என்பது சிவானந்தத்தை. 'வெள்ளம்' என்றது ஈண்டு பெருக்கை.

'நாடி நாடி' இது தேடித்தேடி என்னும் பொருளது. இனி இதற்கு விரும்பிவிரும்பி எனவும் பொருள்கூறுவர். இது மிகுதிப்பொருளில் இரட்டித்தது. 'கூவினேன்' இது வாய்விட்டுக் கத்திக்கூப்பிடலை உணர்த்திற்று. 'கூவுதல்' இது ஈண்டு உறக்க அழைத்தலை உணர்த்திற்று. 'உலறினேன்' என்பது சோகதாபத்தால் வாடிவதங்கிக் காய்ந்தேன் என்னும் பொருளது. 'அலறினேன்' இது இவ்வளவுக்குத் தேவரீர் இரங்கி எழுந்தருளிவந்து காட்சிதந்தருளாமையால் உறக்கக்கூவி அழுதேனென்பார் 'அலறினேன்' என்றார். பின்னும்பின்னுந் தேவரீர் திருஅருளை நினைந்து உடம்பு மயிர்க்குச்செடுப்பக் கைகுவித்து ஆனந்தபாஷ்பஞ் சொரிந்தேன் களைத்தேன் என்பார். 'மெய்சிலிர்த் திருகைகூப்பி விண்மாரி யெனவெனிரு கண்மாரி பெய்யவே வேசற் றயர்ந்தேன்' என்றார். 'மெய்சிலிர்த்தல்' என்றது மயிர்க்குச்செடுத்தலை. 'இருகண்மாரி' என்றது ஆனந்தபாஷ்ப வெள்ளத்தை. இனி இதற்குத் தரிசனங்கிடையாமைபற்றி ஆற்றாமைபற்றி எழும் அழுகைநீர் என்பாரும் உண்டு; அது பொருத்தமில்லாமை கற்றோர்பாற் கேட்டறிக. 'வேசற்று' என்றது களைத்தலை. 'இரும்புநேர் நெஞ்சம்' என்றதில் இரும்பு கடித்தற்கு உவமையாக உரைக்கப்பெற்றது. 'கள்வன்' என்றது தானல்லாததைத் தானாகவும், தன்னதல்லாததைத் தன்னதாகவும்,



பொய்யை மெய்யாகவுங்கொண்டு கூத்தாடுதலால் தன்னைக் 'கள்வன்' என்றார். 'இடைவிட்டு நின்றதுண்டோ' என்றது தேவரீரை ஒரு கணமேனும் மறந்ததுண்டோ என்னும் பொருளதாம் 'இடைவிடல்' நினைப்பில் இடையேவிட்டு நிற்றல். (இடை = மத்தி). 'உண்டோ' இது எதிர்மறை வினை; இல்லை என்பது பொருளாம். இறைவனும் ஆன்மாவும் அநாதியாதலின் 'என்றுநீ அன்றுநான்' என்றார். ஆன்மா சர்வக்ஞனாதலினாலும், உணர்விக்க உணர்வோன், காட்டக்காண்போன், ஆட்ட ஆடுவோனாதலின், 'யாதேனு மறியா வெறுந்துரும்பனேன்' என்றார். 'தொண்டர்' இது அன்பாற்றொண்டு (பணி) செய்யும் அன்பரைக் குறித்தது. 'கண்டாய்' இது முன்னிலையசைச்சொல். 7

சுகவாரியே! அடியேனுக்குச் சுகாதீதத்தை அருள்செய்ய
நாள் செல்லுமோ என்கின்றார்

பாராதி அண்டங்கள் அத்தனையும் வைக்கின்ற
    பரவெளியி னுண்மைகாட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியி னில்தோய்ந்த
    பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிர்ச்சிந்தை காட்டிச்
    சதாகால நிட்டைஎனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
    தனைக்காட்ட நாள்செல்லுமோ
காரார எண்ணரும் அனந்தகோ டிகள்நின்று
    கா லூன்றி மழைபொழிதல்போல்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
    கம்மியா னந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
    தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
    சோதியே சுகவாரியே.

(ப-ரை) எண்-நினைத்தற்கு, அரிய-அரிதாகிய, அநந்தம்-எல்லையும் முடிவும் இல்லாத, கோடி-கோடிக்கணக்காகிய, கார் - மேகங்கள், ஆர-நிறைந்து, நின்று-நின்று, கால்-கால், ஊன்றி-ஊன்றிநின்று, மழை-மழையை, பொழிதல்-பெய்தல், போல் - போல, கால் - காற்று, வீசி-அடித்து, மின்னி-மின்னலைச்செய்து, படர்ந்து - பரவிச்சென்று, பரவெளி - பரம ஆகாசம், எலாம்-எங்கும், கம்மி - மறைத்து மூடிக்கொண்டு, ஆனந்தம் - சிவாநந்த, வெள்ளம்-பெருக்கை, சோராது - இடைவிடாது, பொழியவே - பெய்யும் பொருட்டு, கருணையின்-கிருபையோடு, முழங்கியே-சப்தித்து, தொண்டரை-அடியார்களை,

கூவும் - அழைக்கின்ற, முகிலே - மேகமே!, சுத்தம்-சுத்தமாகிய, நிர்க்குணம்-குணாதிதம், ஆன - ஆகிய, பரம் - மேலான, தெய்வமே - தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே-ஒளிப்பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே-சமுத்திரமே!, பார்-பூலோகம், ஆதி - முதலாகிய, அண்டங்கள் - உலகங்கள், அத்தனையும்-எல்லாவற்றையும், வைக்கின்ற - எழுதிவைத்தற்குரிய, பரவெளியின் - பரமாகாயத்தின், உண்மை-மெய்ந்நிலையை, காட்டி-தோற்றுவித்து, பற்றும்-அதனைப் பின்தொடரும், மனம் - மனமாகிய, வெளி - ஆகாயத்தை, காட்டி-தோற்றுவித்து, மனம்-மனமாகிய, வெளியில் - ஆகாயத்தினிடத்தே, தோய்ந்த-கலந்துள்ள, பாவியேன் - பாவியாகிய அடியேனது, பரிசு - தன்மையை, காட்டி-காண்பித்து, தாராளமாய் - (தட்டுத்தடையின்றித்) தாராளமாக, நிற்க-நிலைத்திருக்க, நிர்ச்சிந்தை - மனஅழிவையும், காட்டி - காண்பித்து, சதா - எந்த, காலம்-காலத்தும், நிட்டை-போகநிட்டை, என்ன-என்று, சகசம்-சகசமாகிய, நிலை-நிலையையும், காட்டினை-காட்டியருளினை, சுகம்-பரமானந்தம், அதீதம்-ஆதிதப்படுகின்றதாகிய, நிலயம் - நிலையை, காட்ட - காண்பித்தற்கு, நாள்-இன்னும் நெடுநாள், செல்லுமோ-சென்றிடுமோ? எ-று.

**(வி-ரை)** 'பாராதி அண்டங்கள்' என்றது பூலோக முதலாக உள்ள எல்லா அண்டங்களையும் அவ்வண்டங்கள் கோடிக்கணக்காக மலிந்து கிடக்கின்றன. 'பரவெளி' என்றது பரமாகாயத்தை, ஞானாகாயத்தை. 'மனவெளி' என்றது மனாகாயத்தை. 'பாவியேன் பரிசுகாட்டி' என்றது தன்னை அறியும்படிச்செய்து, தன்னை என்றது சீவன் தன்னை. 'நிர்ச்சிந்தை' என்றது, மனம் இறந்து நின்றநிலை. 'சதாகால நிட்டை' என்றது இடைவிடாது சிவானந்தயோக நிட்டையிற் பதிந்து இருக்குமநிலை. 'சகசநிலை' என்பது இறைவனோடு கூடி ஒன்றாய் அபேதமாய் நிற்குந்தன்மை, அபேத நிலை. 'சுகாதீத நிலயம்' என்றது ஆனந்தங்களுக்கெல்லாம் மேம்பட்டிருக்கும் நிலையை ஈண்டு பராகாயம் காட்டினை, மனாகாயங்காட்டினை, மனாகாயத்தே இறைவனோடு கூடியிருக்கும் ஆன்மாவின் நிலையைக்காட்டினை, மனம் சிறந்ததன்மை காட்டினை, சதா காலநிட்டை என்னும் இறைவனை மனத்துத் தன்னொடு பொருத்திக் காண்பதாகி சகசநிலை காட்டினை என்றார். இறைவனோடு தான் கலந்தும் பிரிவுறாது சிவானந்தமயமாக இருக்கும் பேரின்ப முத்திநிலை வேண்டுவார் 'சுகாதீத நிலயந்தனைக்காட்ட நாள் செல்லுமோ' என்றார். இது சுகாதீத ஆனந்த அனுபவந் தனக்கு வேண்டுமென்ப துணர்த்தியதாம். சப்தமேகங்களே இருக்க 'அநந்தகோடிகள்' என்றது அவ் எழுமேகங்களின் இனங்கள் பலவற்றையுங் கூட்டிப்போலும். இனி, கல்லையும், நெருப்பையும், மண்ணையும் பெய்யும் மேகங்களும் உளவாதலின் அவையுங் கூட்டின் அவைகளால் இன்பம் இராதாதலின் அவைகளை ஒதுக்கிநின்ற கோடிக்கணக்கான மேகங்கள் எனக் கொள்ளுதலே உசிதமுடையதாகும்.

நீர் கொண்ட மேகங்கள் என்பதை உணர்த்தவே 'கார்' என்றார். 'காலூன்றி' என்றது நிலைநின்று என்ற பொருளதாம். 'கால்வீசி' என்றது



இனிய காற்றுவீசி என்பதாம். 'மின்னி' என்றது ஞானவொளிகாட்டி என்பதாம். 'பரவெளி' என்றது பராகாயத்தை, 'கம்மி' என்றது பராகாயத்தையே மறைத்து மூடி என்றதாம். ஆனந்தவெள்ளம் என்றது சிவானந்தவெள்ளத்தை. 'கருணையின்' என்றது கருணையினால் என்ற பொருளது. 'கூவு முகில்' அழைக்கும் மேகமே. இறைவனை முகில் என்றது முகில்போலுந் தன்மை யுடைமையினால் இது உவம ஆகுபெயர். 'அத்தனையும்' என்றதன் ஈற்று உம்மை, முற்றும்மை. காட்டி என்னும் இறந்தகால வினையெச்சங்களனைத்தும் காட்டினை என்னும் முன்னிலைவினைமுற்றைக்கொண்டு முடிந்தன. 'தனைக்காட்ட' இதில் 'தன்னை' என்பது 'தனை' என நின்றது இது தொகுத்தல் விகாரம். 'செல்லுமோ' ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இவ்வினா ஐயவினா. 'அனந்தம்' இது ந+அந்தம் என்னும் இரு வடசொற்களின் புணர்ச்சி வடமொழி இலக்கணத்தால் அநந்தம் என ஆயிற்று. இதில் நகரம் எதிர்மறை உபசர்க்கம். 'படர்ந்து' என்னும் பல்பொருள்வினைத் திரிசொல் ஈண்டு பரவிச்சென்று என்னும் பொருளது. 'ஆனந்தவெள்ளம்' ஆனந்தமாகிய வெள்ளம் என விரிதலின் இது பண்புத்தொகை. சோராது, பொழிய என்னும் இவைகள் வினையெச்சங்கள் 'கூவும்' என்ற வினைமுற்றைக்கொண்டு முடிந்தது. 'முகிலே' இது விளியுருபு என்ற உவமையாகுபெயர்.

8

சுகவாரியே! தன்னிலேதானே சும்மா இருக்கவிடாதபடி மாயை யாற் சோதித்தால அடியேன் எப்படி ஆனந்தமயம் அடைவது என்கின்றார்

பேதித்த சமயமோ ஒன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்கள் திருவிகற் பத்தினால்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கும் முக்கண் இறை நேர்மையாய்க் கைக்கொண்டு
போதிப்ப தாச்சறிவிலே
போக்குவர வறஇன்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே
சாதித்த சாதனமும் யோகியர்கள் நமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தானா யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ஙனே
சோதிக்க மனமாயை தனைஏவி னாலடிமை
சுகமாவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணரகிதம், ஆன - ஆகிய, பரம்-மேலான, தெய்வமே-தெய்வமே!, பரம் - மேலாகிய, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம் - பேரின்ப, வாரியே - சமுத்திரமே!, பேதித்த - ஒன்றற்கு ஒன்று மாறுபட்டுள்ள, சமயமோ - சமய நூல்களோ, ஒன்று - ஒரு சமயநூல், சொன்னபடி - சொல்லிய விதமாக, ஒன்று - மற்றொரு சமயநூல், பேசாது- சொல்லாது, துறவாகியே - துறந்து, பேசாத - மோன நிலையிலுள்ள, பெரியோர்கள் - ஞானிகள், நிருவிகற்பத்தினால் - நிருவிகற்ப சமாதிகூடி இருத்தலினால், பேசார்கள் - பேசமாட்டார்கள், போதிக்கும் - போதித்தற்கு உரியவராகிய, முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, இறை - சிவபெருமான், பரம்-மேலாகிய, குரு - குரு, ஆய் - ஆகிவந்து, நேர்மை - ஒழுங்கு, ஆய்-ஆக, கைக்கொண்டு-அடியேனைத் தன்வயப்படுத்தி, போதிப்பது-உபதேசித்தருளுவது, அறிவில்-அறிவினிடத்தே, ஆச்சு-ஆயிற்று, போக்கு - போதலும், வரவு - வருதலும், அற-இல்லாது போகவும், இன்பம் - சிவானந்தம், நீக்கம் - விலகுதல், அற - இல்லாதபடியாகவும், எவர் - எவர்கள், வசனம் - சொல்லால், ஆ - ஆக, போதிப்பது - உபதேசித்தருள்வது, ஐயனே - கடவுளே!, சாதித்த - பழக்கத்திற்குக் கொணர்ந்த, சாதனமும் - அப்பியாசங்களும், யோகியர்கள் - யோக சாதனமுள்ளவர்கள், நமது - இந்த அப்பியாசங்கள் எல்லாம் நம்முடையது, என்று - என்று, சங்கிப்பர் - ஆட்சேபிப்பார்கள், ஆதலாலே - ஆகையினால், தன்னிலே-தன்னிலே, தான்-தானே, அயர்ந்து - சோர்ந்து, விடுவோம்-விடுவோம், என-என்று, தனி - தனியாக, இருந்திடின் - இருந்தால், அங்ஙனே-அந்த இடத்திலே, சோதிக்க - அடியேனைப் பரீட்சிக்க, மனம் - மனத்தினிடத்தே, மாயை - மாயை, எவினால் - எவிவிட்டால், அடிமை-இறைவனே தேவரீரின் அடிமையாகிய, நான் - அடியேன், சுகம் - பேரின்பமயம், ஆவது-ஆகும்விதம், எப்படி-எந்தவிதம்?, சொலாய்-தேவரீர் சொல்லி அருள்வீராக; எ-று.

(வி-ரை) சமயநூற்கள் ஒன்றற்கொன்று முரண்பட மொழிகின்றது ஆதலின், 'பேதித்த சமயமோ வொன்று சொனபடியொன்றுபேசாது' என்றார். சமயம் என்றது மார்க்கங்களை. 'துறவு' என்றது முத்திக்கு உலகப் பற்று இடைஞ்சலுள்ளதாதலின் அவைகளைவிட்டு நிற்பது துறவாம். துற = நீக்கு, உலகப்பற்றுகளனைத்தையும்விட்டு நின்றநிலை துறவுநிலையாம். 'நிருவிகற்பம்' என்றது நிருவிகற்பசமாதிநிலையை. இது இறைவனையும் தன்னையும் ஒன்றுபடக்கண்டு நிற்குநிலை. நிருவிகற்பசமாதியிலிருந்து இறைவனைக் கண்டு ஒன்றுபட்டானந்தித்துக் கொண்டிருப்பவர்கள் வாய்திறந்து பேசார்களாதலினால் 'துறவாகியே பேசாத பெரியோர்கள் நிருவிகற்பத்தினாற் பேசார்கள்' என்றார். 'முக்கணிறை' என்றது சிவபெருமானை. சிவபெருமானே ஆன்மாக்களின் பக்குவாபக்குவம் அறிந்து பரமகுருவாகவந்தும் உள்ளத்தினின்றும் உணர்த்துகின்றானாதலின் 'பரமகுருவாய்ப் போதிக்கு முக்கணிறை' என்றார். சனகாதி முனிவர்கட்கும், **மணிவாசகப்** பெருமானுக்கும்முறையே வடவால நீழலிலிருந்தும், குருந்தமரத்திலிருந்தும் ஞானமுணர்த்தியது சின்



முத்திரையாதலின் 'நேர்மையாய்க் கைக்கொண்டு போதிப்ப தாச்சறிவிலே' என்றார். ஈண்டு 'நேர்மையாய் கைக்கொண்டு' என்றதற்கு ஒழுங்காக அடியேனைத் தன் வயப்படுத்தி என்றும். 'போதிப்ப தாச்சறிவிலே' இதற்கு போதிப்பது அறிவே ஆச்சு என வினைத்துப் பொருள்கொள்க. 'போக்குவரவு' என்றது இறப்புப்பிறப்புகளை முறையே குறித்தது. 'வசனமாப் போதிப்பது' என்றது சொன்முகமாக உபதேசித்தருளுவது என்பது பொருளாம். 'சாதித்த சாதனம்' என்றது யோகசாதனத்தை. 'சாதித்தல்' என்றது அனுபவமுறப் பழகுதலை உணர்த்தும். 'சாதனம்' என்றது பழக்கத்தை. 'யோகியர்' என்றது யோகாப்பியாசிகளை. 'யோகம்' என்பது இறைவனோடு கூடும் கூட்டம் என்பது பொருளாம். 'தன்னிலே தானு யயர்ந்து விடுவோம்' என்றது உபதேசமே இன்றித் தன்னிலேதானே மனம் அடங்கி இருந்துவிடுவோம் என்பதாம். தன்னிற் றானடங்கத் தனித்திருக்கவேண்டுமாதலின், 'தனி இருந்திடின்' என்றார். இதனை,

"இனிது இனிது ஏகாந்த மினிது"

என்ற **ஔவையின்** திருவாக்குக் கருதத்தக்கதாகும்.

'மனமாயை' என்றது மனத்தை இடமாகக்கொண்டு பிறப்பதாகிய மாயை என்பது பொருளாம். 'சுகமாவது' என்றது சிவாநந்த மயமாதல், சிவாநந்தப்பேரின்பத்துள் மூழ்கிக்கிடத்தல் என்பது பொருளாம். 'பேதித்த' இது இறந்தகாலப்பெயரெச்சம். 'சமயம்' என்னும் பெயரைத் தழுவி நின்றது. 'சொனபடி' இது சொன்னபடி என்பதன் தொகுத்தல் விகாரம். 'கைக் கொண்டு' இது கை+கொண்டு என்னும் இருசொல் இயைந்துநின்று ஒரு சொன்னீர்மை பெற்றது. 'ஆச்சு' இது ஆயிற்று என்பதன் போலி. 'வசனமா' இது 'வசனமாக' என்பது ஈறுகெட்டுநின்ற விகாரநிலை. 'எவர்' இது கொல் என்னும் வினாவடியாகப் பிறந்த வினாப்பெயர். 'சொலாய்' இது முன்னிலையொருமை ஏவல்வினைமுற்று.

9

**சுகவாரியே! தேவரீர் எழுந்தருளி இருக்கும் இடம் எது அடியேற்கு இந்த இரகசியங் கூறியருள்வாயாக என்கின்றார்**

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
அனல்நடுவி லோஅமிர்த மதிநடுவி லோஅன்பர்
அகமுருகி மலர்கள் தூவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணாத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ

காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணரகிதம், ஆன-ஆகிய, பரம்-மேலாகிய, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம்-பேரின்பமாகிய, வாரியே-சமுத்திரமே!, அண்டம்-அண்டத்தின், முடி-உச்சி, தன்னிலோ - தன்னிலோ?, பகிரண்டம் - வெளியண்டம், தன்னிலோ - தன்னிலோ?, அலரி-சூரியனின், மண்டலம் - மண்டலத்தின், நடுவிலோ - மத்தியிலோ?, அனல் - அக்கினியின், நடுவிலோ - மத்தியிலோ?, அமிர்தம்-அமிர்தத்தையுடைய, மதி-சந்திரனின், நடுவிலோ - மத்தியிலோ?, அன்பர்-அடியார்கள், அகம்-உள்ளம், உருகி-இளகி, மலர்கள்-பூக்களை, தூவி-அர்ச்சித்து, தெண்டமிட - நமஸ்கரிக்க, வரும் - எழுந்தருளி வந்திருக்கும், மூர்த்தி - அருச்சனமூர்த்தி, நிலையிலோ - நிலையிலோ, திக்கு-திக்குகளிலும், திகந்தத்திலோ-அத்திக்குகளின் முடிவிலோ?, வெளியிலோ-பரவெளியிலோ?, திகழ்-விளங்குகின்ற, விந்து - விந்துவும், நாதம் - நாதம் என்பவற்றின், நிலை-நிலைகள், தன்னிலோ-தன்னிலோ?, வேதாந்தம் - வேதாந்தத்தினுடையவும், சித்தாந்தம் - சித்தாந்தத்தினுடையவும், நிலை - நிலைகள், தன்னிலோ - தன்னிலோ, கண்ட - கண்டனவாகிய, பல - பலவாகி நிற்கும், பொருளிலோ-பொருள்களிலோ, காணாத - காணப்படாததாகிய, நிலை-நிலை, என - என்று, கண்ட-கண்டறியப்பெற்ற, சூனியம்-பாழ், அதனிலோ-அதனிலோ, காலம்-காலம் எனப்படும், ஒரு - ஒரு, மூன்றிலோ - இறப்பு, எதிர்வு, நிகழ்வு ஆகிய முக்காலங்களிலோ, பிறவி-பிறவியின், நிலை-நிலை, தன்னிலோ-தன்னிலோ?, கருவி - புறக்கருவிகளும், கரணம் - அந்தக்கரணங்களும், ஓய்ந்த - ஒடுங்கிய, தொண்டர்கள் - அடியார்கள், இடத்திலோ - இடத்திலோ, நீ-தேவரீர், வீற்றிருப்பது - எழுந்தருளியிருப்பது, தொழும்பனேற்கு - தேவரீரின் அடியேனாகிய எனக்கு, உளவு-இரகசியத்தை, புகலாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

(வி-ரை) 'அண்டம்' என்றது உலகத்தை; அண்டகடாகம் என்னலுமாம். 'முடி' என்றது ஈண்டு உச்சியிடத்தை, 'பகிரண்டம்' என்றது இந்த உலகத்திற்கு வெளியேயிருக்கும் அண்டத்தை, 'அலரி' என்றது சூரியனை. தாமரைமலரை அலர்த்தும் விசேடம்பற்றிச் சூரியனுக்கு இப்பெயர் வந்தது. அலர்த்துவது 'அலரி' என்றார். இனி கிரணங்களோடு விரிந்து இருப்பது பற்ற வந்தபெயர் என்பாரும் உண்டு. 'மண்டலம்' என்றது வட்டத்தை, வட்டவடிவை. 'அனல்' என்றது நெருப்பை, சந்திரனிடத்தே அமுதம் ஊறிக்கொண்டிருக்கிறதாகக் கூறப்பெற்றிருப்பதால், 'அமிர்தமதி' என்றார். 'மூர்த்தம்' என்றது பொன்னுதி லோகங்களாலோ, கல், மரம், மண் முதலியவைகளாலோ, செய்யப்பெற்ற இறைவனின் உருவங்களுக்கு மூர்த்தங்கள் என்று கூறப்பெறும். 'திகந்தம்' இது திக்கு+அந்தம் என்னும் இரு சொற்களின் சந்தி. திக்கின் முடிவு என்பது பொருளாம். 'வெளி' என்றது ஈண்டு பராகாயத்தை. 'விந்து' என்றது விந்து தத்துவத்தை. 'நாதம்' என்றது நாததத்துவத்தை. 'கண்ட பலபொருள்' என்றது பூதபௌதிகப் பொருள்களை உணர்த்தி நின்றது. கண்ணுற் காணும்பொருள்கள் என்பது பொருளாம். 'சூனியம்' என்பது காணமுடியாத நிலையாதலின் 'காணாத நிலையெனக்கண்ட சூனியமதனிலோ' என்றார். இதிற் 'கண்ட' என்றது அறிஞராற் கண்டறியப்பட்ட என்பதாம். 'சூனியம், இது இல்லாதது என்னும் பொருளதாம். 'காலம் ஒரு மூன்று' என்றது இறப்பு, எதிர்வு, நிகழ்வு எனும் முக்காலங்களை. 'பிறவி' என்றது ஜன்மநிலையை. 'கருவி' என்றது பொறிபுலன்களை. 'கரணம்' என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரங்கள் ஆகிய அந்தக் கரணங்களை. 'கருவி கரணங்களோய்ந்த தொண்டர்கள்' என்றது திரிகரண மோனநிட்டையில் இருக்கும் ஞானிகளை உணர்த்தும். மன, மொழி, காயம் என்னும் திரிகரணங்களும் சேட்டை ஒழிந்திருக்கும் ஞானானந்த அன்பரைக் குறித்ததாம்.

'நீ' என்றது இறைவனை. 'வீற்றிருத்தல்' இது வீறுபெற இருத்தல் என்பது பொருளாம். 'தொழும்பன்' இது தொண்டுபூண்டுள்ளவன் என்பது பொருளாம். 'உளவு' இது இரகசியம் என்னும் பொருளது. இனி உள்ளது உளவு எனக் கொண்டுரைத்தலுமாம். இச்செய்யுளில் வந்த ஓகாரங்கள் எல்லாம் வினப்பொருளில் வந்தது. 'அலரி' இதில் இகரம் விகுதி. இதற்கு அலர் பகுதி. 'தெண்டம்' இது 'தண்டம்' என்பதன் மரூஉ. 'திகழ்விந்து' இது முக்காலத்திற்கும் பொதுவாக நிற்றலின் வினைத்தொகை. என்னை? "காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" என்பது இலக்கணமாதலின் என்க. 'காணாத' இது எதிர்மறைப் பெயரெச்சம் நிலை என்னும் பெயரைத் தழுவி முடிந்தது. 'புகலாய்' இது முன்னிலையொருமை ஏவல்வினை முற்று. 10

சுகவாரியே! அடியேனைச் சொந்தமாக ஆண்ட தேவரீர் அடியேனைத்
துன்பத்தில் ஆழ்த்துவது முறையோ என்கின்றார்

எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளெனவும்
என்னிதயம் எனைவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னுடைபின் மலைவறவும்
இற்றைவரை யாதுபெற்றேன்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி உள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ

சிந்தையா னதுமறிவை என்னறிவி லறிவான
தெய்வம்நீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே உடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்ட நீ அறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தல்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம் - சுத்தமாகிய, நிர்க்குணம் - குணாதிதம், ஆன - ஆகிய, பரம்-மேலாகிய, தெய்வமே-தெய்வமே!, பரம்-மேலாகிய, சோதியே - ஒளிப் பிழம்பே!, சுகம்-பேரின்ப, வாரியே - சமுத்திரமே!, கருணைக்கு - தேவரீரின் கிருபைக்கு, உரித்தாகும் - இலக்காகும், நாள்-நாள், எந்த-எந்த, நாள்-நாள், என்றும் - என்றும், என - அடியேனின், இதயம் - மனம், எனை-அடியேனை, வாட்டுதே-வாட்டுகின்றதே, எதென்று-என்னவென்று, சொல்லுவேன்-கூறு வேன், முன்னெடு-முன்னினேடு, பின்-பின்னும், மலைவு-விரோதம், அறவும்-நீங்கவும், இற்றை-இந்த, நாள் - நாளின், வரை - வரையிலும், யாது - எந்த நிலையை, பெற்றேன்-அடைந்தேன், பந்தம்-பாசபந்தம், ஆனதில்-ஆனதில், இட்ட-இடப்பெற்ற, மெழுகு - மெழுகைப்போல, ஆகி - ஆகி, உள்ளம் - மன மானது, பதைத்துப் பதைத்து - துடித்துத் துடித்து, உருகவோ - இளகி னேலோ, பரமசுகம் - மேலானசுகம், ஆவது - உதிப்பது, (அன்றி) பொறுப்பு-பொறுப்பது, அரிய-அரிதாகிய, துயரம்-துக்கம், ஆய்-ஆகி, பல காலும் - பல தரமும், மூர்ச்சிப்பதோ - மூர்ச்சித்துக்கிடப்பதோ?, (அத்தகைய பரம சுகத் திற்குக் காரணம்) சிந்தை - அடியேனின் மனம், ஆனதும் - இவ்வண்ணம் ஆனதும், அறிவை-தேவரீருக்குத் தெரியும், என் - அடியேனின், அறிவில்-அறிவினிடத்தே, அறிவு-அறிவு, ஆன-ஆகிய, தெய்வம்-தெய்வம், நீ-தேவரீர், அன்றி-அல்லாது, உளதோ-வேறு ஒன்று இருக்கின்றதோ?, தேகம்-இந்தக் காயம், நிலை - என்றும் நிலையாக இருப்பது, அல்லவே - அல்லவே, உடை-உடைந்துபோன, கப்பல்-கப்பலானது, கப்பலாய் - மீண்டும் ஒரு நல்ல கப்ப லாய், திரை - அலைகளையுடைய, ஆழி - சமுத்திரத்தின், ஊடு - மத்தியில், செலுமோ-திரும்பவும் செல்லுமோ?, சொந்தமாய்-சுதந்தரத்துடனே பாத்தி யதைகொண்டு எழுந்தருளி வந்து, ஆண்ட - ஆண்டு அருளின, நீ - தேவரீர், அறியார்கள் - ஒன்றும் அறியாதவர்கள், போலவே - போன்று, துன்பத்தில்-அடியேனைத் துக்கசாகரத்தில், ஆழ்த்தல்-அமிழ்த்துதல், முறையோ - தேவரீ ருக்கு நீதியாகுமோ? எ-று.

(வி-ரை) 'கருணை' என்றது இறைவன் திருஅருள் கருணையை. 'உரித் தாகும் நாள்' என்றது உரியவனாகும் நாள் என்றதாம். 'எதென்று' இதில் முதல்நின்ற எகாரம் வினாவிடைச்சொல். 'பந்தம்' என்றது பாசபந்தத்தை. இது சிலேடைப்பொருள்படின் தீவர்த்திப்பந்தம் என்னும் பொருளும்பட



நின்ற நயங்காண்க. 'பந்தம்' என்பது கட்டுப்படுத்துவது என்னும்பொருளில் வந்த காரணப்பெயர். பந்திப்பது பந்தம். 'மெழுகாகி' என்றது மெழுகைப்போலாகி என்பதாம். இது வினைஉவமம். மெழுகைப்போல உருகி இளகி என்பதாம். 'பதைத்துப் பதைத்து' இது மிகுதிப்பொருள் அடுக்கி வந்த அடுக்குத்தொடர். 'உள்ளம்' இது உள்ளே இருப்பது என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். என்னை? மனம் உடம்பின் உள்ளே இருத்தலினால் என்க. இனி உள்ளுதற்கு ஆதாரமான கருவியாக இருப்பது எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'பரமசுகம்' இது மேலானசுகம் என்பது பொருள். அது சிவானந்தப்பேறென்றறிக.

'சிந்தை' என்றது எண்ணத்தை. சிந்தித்துவைத்தது சிந்தை. இறைவன் அறிவுக்கு அறிவாய் விளங்குபவனாதலின், 'என் அறிவில் அறிவான தெய்வநீ' என்றார். நீர்மேல் எழுத்துப்போல் இந்த யாக்கைநிலையில்லாதாத லினால் 'தேகநிலையல்லவே' என்றார். 'உடைகப்பல்' இது ஈண்டு உடைந்த கப்பல் என இறந்தகாலப் பொருள்தந்து நின்றது. 'கப்பல்' என்றது மரக் கலத்தை. 'திரையாழி' இது அலைகளையுடைய சமுத்திரம் என்ற பொருளது. 'சொந்தமாய்' என்றது சுதந்தரம்பற்றி என்க. என்னை? ஆன்மாக்கள் எல்லாம் அரனுடைமை என்னும் சுதந்தரம், பாத்தியதைபற்றி என்க. 'முறையோ' இது முறையல்ல என்னும் பொருளதாம். 'வாட்டுதே' இது 'வாட்டுகிறதே' என்ற மரூஉநிலைவழக்கு. 'இன்றுவரை' என்றது 'இற்றைவரை' என ஆயது வலித்தல் விகாரப்பேறும். 'யாது' இது 'யா' என்னும் வினாவடியாகப் பிறந்தபெயர். 'மெழுகாகி' என்றது மெழுகைப்போல் ஆகி என விரிதலின் உவமத்தொகை. 'அன்றி' இது குறிப்புவினையெச்சம். 'உளதோ' இதில் ஓகாரம் வினாவிடைச்சொல். 'செலுமோ' முறையோ' இவையிரண்டும், செல்லாது, முறையல்ல என்ற விடைகளை முறைதழுவிய வினாக்கள். 'உடைகப்பல்கப்பலாய்' இது உடைந்தகப்பல் உடையாதகப்பலாய் எனப் பொருள்தந்து நின்றது. ஈண்டு கப்பல் என்னுஞ் சொல் இருமுறைவந்தது சொற்பொருட் பிறிதுநிலையணி. 'திரை ஆழி' இது திரையையுடைய ஆழி என விரிதலின் இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகை. 'செலுமோ' இது செல்லுமோ என்பதன் தொகுத்தல்விகாரம். 11

சுத்தநிர்க்குணமான தெய்வமே! மனந்தான் என்னை இழிவுபடுத்திக்
கூறுகின்றனவே என்னில், நீயுமா என்னிடத்தில் மனமிரங்
காமல் காலந்தாழ்த்துகின்றீர் என வேண்டுகின்றார்

எந்நாளும் உடலிலே உயிராம் உனைப்போல்
இருக்கவிலை யோமனதெனும்
யானுமென் நட்பாம் பிராணனும் எமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனோ பிரித்தான் அதைக்கேட்ட
அன்றுமுதல் இன்றுவரையும்

அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
    அடர்ந்தரசு பண்ணிஎங்கள்
முன்னாக நீஎன்ன கோட்டைகொண் டாயென்று
    மூடமன மிகவும்எச
மூண்டெரியும் அனலிட்ட மெழுகா யுளங்கருகல்
    முறைமையோ பதினாயிரஞ்
சொன்னாலும் நின்னரு ளிரங்கவிலை யேஇனிச்
    சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
    சோதியே சுகவாரியே.

(ப-ரை) சுத்தம்-சுத்தத்தன்மைவாய்ந்ததாகிய, நிர்க்குணமான-முக்குண
சம்பந்தமில்லாதவனாகிய, பரம்-மேலானவற்றுள் மேலானதான, தெய்வமே-
தெய்வமாகப் பொலிபவனே!, பரம்சோதியே - உலகிலுள்ள சோதிகளிற்
சிறந்த அழற்பிழம்பாக விளங்குபவனே!, சுகம் - எல்லையற்ற பேரானந்த,
வாரியே-கருணையங்கடலே, எநாளும்-வெகுகாலமாகிய காலத்தும், உடலிலே-
நிலையற்ற இக்காயத்தில், உயிர் ஆம் - உலவுவதற்குத் துணையாயிருக்கு முயி
ராகும், உனைப்போல் - உன்னைப்போலவே, மனம் எனும் - அந்தக்கரணத்
தலைமையுடைய மனமென்னும் நாமம் வாய்ந்த, நானும்-யானும், என் நட்பு
ஆம் - என்னை விட்டுப் பிரிதலில்லாத சினேகிதமாம், பிராணனும் - உயிரும்,
இருக்க-(அக்கூட்டினுள்ளே பொருந்தி) தங்கியிருக்க, இலையோ-ஒருமையுடன்
வாழவில்லையோ?, (அவ்விதம் நாங்களிருவரும் இருக்கையிலும்) எம்மை-எங்க
ளிருவரையும், சடமதென்று - அறிவில்லாத பொருளென்றும், உன்னை-
உன்னை, சித் என்றும் - அறிவான பொருளென்றும், அநாளில் - குணித்துச்
சொல்லமுடியாத வக்காலத்தில், எவனோ - இவனென்று பெயர் தெரியாதவ
னெவனோ, பிரித்தான் - தவிதபொருளாக்கி வைத்தான், அதை - அவ்வச
னத்தை, கேட்ட - கேள்வியுற்ற, அன்று முதல் - அக்காலமுதலாக, இன்று
வரையும்-இக்கணபரியந்தம், அநியாயமாய்-அறநெறியில்லாமல், எமை-எங்க
ளிருவரையும், அடக்கி - சுவாதந்தரியமில்லாதபடி ஒடுக்கி, குறுக்கே - (எங்க
ளுக்கு) இடையிலே வந்து, அடர்ந்து - சம்பந்தங்கொண்டு, அரசு பண்ணி-
தனியரசாட்சி செய்து, எங்கள் முன்னாக - எங்களது முன்னிலையிலேயே
நீ-ஒப்பற்றுவிளக்கும் நீ, என்ன - எவ்வகையான, கோட்டை - வலிவான கற்
கோட்டையை, கொண்டாய் - சுவாதீனஞ் செய்துகொண்டு விட்டனை,
என்று-என, மூட மனம்-அஞ்ஞானமுடையதான மனமானது, மிகவும் எச-
அதிகமாக நிந்தித்தலால், மூண்டு - மேன்மேலும் அதிகரித்து, எரியும் - எரி
கின்ற, அனல் இட்ட-நெருப்பிலே வைத்திட்டதாகிய, மெழுகு என-மெழு
கினது தன்மையினைப்போல உருகி, உள்ளம் - உள்ளுவதற்குக் கருவியாகிய
யான், கருகல்-வேறுபட்டுக் கலக்கமடைதல், முறைமையோ-நீதியாகுவதோ?,
பதினாயிரம் - அநேகதடவை, சொன்னாலும் - எனது கஷ்டத்தை யெடுத்து



விஞ்ஞாபனம் பண்ணிக்கொண்டாலும், நின் - உனது, அருள் - திருவுள்ளம்,
இரங்க-சிறிதும் இளக, இலையே-இல்லையே எ-று.

(வி-ரை) இச்செய்யுள் மனம் நிலையாமையுற்ற குடிலைத்தன்னுடன்
நண்பனாக்கிக்கொண்டு, சித்சொரூபமாய் விளங்கும் உயிருடன் பொறாமை
கொண்டு வினாக்களெழுப்பிப் பின்னர் தன்னிலை அறிந்து விண்ணப்பஞ்
செய்துகொள்ளும் விடயபரிணாமம்பெற்றது. சடமாகிய மனமானது சித்துப்
பொருளாகிய உயிரைப்பார்த்து, இவ்வசேதனமான புற்குரம்பையுள் நீ என்று
புக்குத் திருவிளையாடல்செய்யத் தொடங்கினையோ அன்றுமுதலாகவே நாங்
களும் வந்துபுக்கு, இருவருங் கலந்துறவாடி வருகின்றோம்; நாம் மூவரும் நிலை
யில்லாத இடத்தில் வசித்துறைகையில் உனக்கும் எங்களுக்கும் பேதம்
எவ்வகையிலுண்டோ? அது விளங்கவில்லை; அதனைத் தெரித்தல்வேண்டும்
என்பதற்கே 'எந்நாளு முடலிலே யுயிராமுனைப் போலிருக்க விலையோ'
என்றது. அதற்கு உயிர், நின்வார்த்தை அற்புதம். ஒளிக்கும் இருளுக்கும்
இடம் ஒன்றேயாயினும், ஒளி மேலிட்டகாலத்து இருள் குறைந்தும், இருள்
மேலிட்டகாலத்து ஒளி குறைந்தும் நிற்குமாறுபோல, அருளிற்கும் ஆவணத்
திற்கும் இடமொன்றாயிருந்தும் அருள்மேலிட்டகாலத்து ஆவணம் மேலிட்டு
அருள் மறைந்தும் நிற்குமது இயல்பாவதன்றோ; இவ்விஷயத்தை நன்கு
அறியாமனமே! நாம் மூவரும் ஒருகாலத்தே ஓரிடத்தே குடிபுக்கு
உறைவதாகவே இருப்பினும் காந்தம் இரும்பினை விகாரமின்றியே தன்
வசமாக்கிக்கொள்ளுதலையொப்ப, இறைவன் என்னை விகாரமின்றித் தன்
வசமாக்கிக்கொண்டு, என்னை அறிவுமயமாக்கியதால் நான் சித்தாயினேன்
எனப் புத்திகூற, அப்போது, மயக்கத்தின்கண் மயங்கிநிற்கும் மனமானது.
உயிரே! நீ சித்துப்பொருளாயினும், தன் சுதந்தரம் இழந்து இறைவனை
அடையாதவரையில் நீயும் சடபொருளாகிய எங்களோடு நிகரானவனேயாம்,
இப்போது எங்களைக்காட்டினும் சித்துருபத்துடன் விளங்கும் நீ அறிந்து
கொண்டமை என்னவோ? புலனாகவில்லைஎன, அதனைக்கேட்ட சித்துப்
பொருளாகிய உயிர், சொல்லற்கரிய பரம்பொருள் ஒன்று அநாதியாக
உண்டென்னும், அதனை அடைய வெகுகாலமாய்த் தொன்றுதொட்டு
நிழலைப்போலச் சேர்ந்துள்ள பாசக்கயிற்றினை நேசம்வைக்காமல் அறுத்
தெறியவேண்டியதென்றும், அவ்வாறு கட்டுண்ட தொடர்பைக் களைய
வேண்டுவனவாகிய சாதனங்கள் இத்தகையவாயினவை என்பனவற்றையும்
நான் ஆரியன்வாயிலால் அறிந்து தெரிந்துகொண்டு அவ்வழியைப் பின்
பற்றிச்செல்லவே ஊக்கமாகி நிற்கின்றேன். நீவிர் கண்டவாபற்றித் திரி
தருபவர் என, அப்போது, மனம் சித்தே உனது பிரயத்தனம் ஒருவிதமான
இடையூறுமில்லாமல் முடிவதாங்கொல் என்று வினவ, அக்கால், உயிர்
விந்தையான சிந்தையை யுடைத்தானமனமே! நம்மையும் நம்போன்ற
தத்துவக்கூட்டங்களின் சகாயத்தாலன்றோ யாம் அறிந்துணர்தல்வேண்டும்.
அவ்விஷயத்தில் நீவிர் எனக்கு வேறுபட்டவரல்லஎன, அதற்கு மனக்குரங்கு,
போதும்போதும் உன்னிலையை நீ ஆலோசித்துப்பார். நீ எங்களைக்காட்டி

னும் ஒரு காரியத்தையும் சாதித்துவிடவில்லை. உனக்குச் சுதந்தரமில்லை. ஆராயினும், உன்னினும் தாழ்ந்த தத்துவக்கூட்டங்களினைக்காண நீ மேம்பட்ட சித்து எனச் சொல்லத் தட்டில்லை.

எண்ணிறந்த ஆன்மாக்களுடைய கன்மானுகுணமாகத் தனது சமவேத சத்தியினால் மாயையைச் சோபித்துத் தனுகரணாதிகளை யுண்டாக்கி, தடத்த கர்த்தாவாய்ப் பிரபஞ்சத்துடனே பிரிவற நின்று அழிவின்ற பதியை நோக்கின் நீசடமே யன்றோ? அதுபோல் உன்னைக்காண நாங்கள் சடமாவதும், எங்களினுந் தாழ்வான தத்துவங்களை நோக்கின், நாங்கள் சித்தாக விருக்கின்றோம். இவ்வாறிருக்கையில் நம்மூவருள் வேற்றுமை என்ன விருக்கின்றது? என, சத்து, என்னமொழிந்தாய். உன்னிலையை நீ இன்னும் அறியவில்லை; எனக்கு உன் உதவி இல்லாமல் நான் பிழைத்திருத்தல் கூடும். நான் உலக வியாபாரத்தின்கண்ணேயிருந்து, எனக் கன்னியமாயுள்ள பதார்த்தங்களில் புத்தியைச் செலுத்தி, ஒவ்வொன்றினையும் சுட்டியறிகிற அறிவு உள்ளவரையில் எனக்குச் சுகோதயம் சிறிது விளையாது. இத்தகைய வியாபாரம் அனைத்தையும் அறவேவிட்டு நிர்விகற்பமாக இருக்கும் நிலை அடைவனேல் சுகோதயம் விளையும். உங்களுக்கு அது விளைதல் இல்லையே. அன்றியும் என் உதவி இல்லாது நீவிர் தனித்துவாழும் வாழ்க்கைக்கு இடமுளதோ? என, அதற்கு, மனம் ஒத்துக்கொண்டேன். எங்களைச் சடமெனத்தள்ளி நீ சத்தாக விளங்கிக் கட்டியகோட்டை என்ன? கண்ட இன்பந்தானென்ன? இருந்தால் புகல்என, நாணமடைந்த சத்து, அந்தோ! என்மனம் என்னைக் குறித்துப் பேசியன பழுதுடையவையல்ல, அஃது உரைத்தமை உண்மையேயாம். இப்படிச் சடத்தன்மையான மனம் பரிகசிக்க, ஸர்வலோக சரணியனென்று பட்டப்பெயர் வைத்திருக்கு முன்னை நான் எவ்வளவுதரம் வேண்டினும் நின்மனங் கரையவில்லை. என்பால் உமக்கு இரக்கமுண்டாகவில்லையே. நீ சுதந்திரன். நான் பரதந்திரன். நீ அருள்புரியாவிடில் நான் எவ்வாறு சுகமடைவது என்பார், 'சுகம்வருவதெப்படி சொலாய்' என்றார். எ+நாள்=எந்நாள்; அ+நாள்=அந்நாள்; இவைகள், 'எகரவினா ... ... தோன்றுதல் நெறியே' என்ற நன்னூல் விதியாற் போந்தவை. எமை-தன்மைப்பன்மை. பிரித்தான் - ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் வேறுபடுத்தினான் எனப் பொருள் விரிப்பர்; அது பொருந்தாது, சத்து, சடம் என்றதன் பிரிவினையே சுட்டுவது.



---



## எங்குநிறைகின்ற பொருள்

எங்குநிறைகின்ற பொருளே! 'அவனன்றி அணுவும் அசையாது' என்னும் ஆப்தர்வாக்கை ஆராயின் அறிய அறியாமை முதலாகச் சொல்லப்பட்டவைகள் ஏது தேவரீரையன்றி ஏதேனும் உண்டோ என்கின்றார்

அவனன்றி யோரணுவும் அசையாதெ னும்பெரிய
ஆப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில அறியாமை எதிவை
அறிந்தார்கள் அறியார்களார்
மௌனமொ டிருந்ததார் என்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவும் ஒருமாயை எங்கே இருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவ்விடம்
பொய்மெய்இதம் அகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொறு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றிமுண்டோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம் - இம்மை, பரம் - மறுமையென்னும், இரண்டினிலும் - இரண்டு இடங்களிலும், உயிரினுக்கு - உயிருக்கு, உயிர் - உயிர், ஆகி - ஆகி, எங்கும் - எந்த இடத்தும், நிறைகின்ற - நிறைந்து இருக்கின்ற, பொருளே - பொருளே!, அவன் - அந்தக் கடவுளை, அன்றி - அல்லாமல், ஓர் - ஒரு, அணுவும் - அணுவும், அசையாது - அசையாது, எனும் - என்று சொல்லும், பெரிய - பெரியோர்களாகிய, ஆப்தர் - ஆப்தர்களின், மொழி - சொல், ஒன்றுகண்டால் - ஒன்றைக்காணில், அறிவு - அறிவு, ஆவது எது - ஆவதேது?, இவை - இவைகளை, அறிந்தார் - அறிந்தவர்களும், அறியார்கள் - அறியாதவர்களும், யார் - யாவர்?, மௌனமொடு - மௌனத்தொடு, இருந்தது - இருந்தது, ஆர் - யாவர்?, என்போல் - அடியேனைப்போல், உடம்பெலாம் - உடம்பு எல்லாம், வாயாய் - வாயாகக்கொண்டு பிதற்றும் - உளறும், அவர் யார் - அவர்கள் யாவர்?, மனது - மனது, எனவும் - எனவும், ஒருமாயை - ஒருமாயை, எங்கே - எங்கே, இருந்து - இருந்து, வரும் - வரும்?, வன்மையோடு - வன்மையுடனே, இரக்கம் - இரக்கத்தன்மை, எங்கே - எங்கே?, புவனம் - உலகங்களை; படைப்பது - உண்டாக்குவதாவது, என் - யாது?,

கர்த்தவ்யம்-கர்த்தத்துவம், எ - எந்த, இடம் - இடத்திலிருந்து உண்டாவது?, பூதம்-பஞ்ச பூதங்களின், பேதம்-விகற்பங்கள், எ-எந்த, இடம் - எவ்விடத்திலிருந்து உண்டாவது?, பொய்-பொய்யும், மெய் - மெய்யும், இதம்-அனுகூலமும், அகிதம்-பிரதிகூலமும், மேல்-இன்னும், வரும் - உண்டாகிய, நன்மை-நன்மைகளும், தீமை-தீமைகளும், ஒடு - அதனுடனே, பொறை - பொறுமையும், பொருமை-பொறுக்காமையும், எ-எந்த, இடம் - இடத்திலிருந்து உண்டாவன?, எவர்-எவர்கள், சிறியர் - சிறியவர்கள்?, எவர் - எவர்கள், பெரியர்-பெரியவர்கள்?, எவர் - எவர்கள், உறவர் - உறவினர்கள்? எவர் - எவர்கள்?, பகைஞர்-பகைவர்கள்?, யாதும்-எதுவும், உனை-தேவரீரை, அன்றி-அல்லாமல், உண்டோ-வேறு ஒன்று இருக்கின்றதோ? எ-று.

(வி-ரை) 'அவன்' என்றது ஈண்டு இறைவனைச்சுட்டி நின்றது. எல்லாம் இறைவனன்றி அசையாது என்பதனால் "அவனன்றி யோரணுவும் அசையாது" என்று பெரியார் கூறினர். 'பெரிய ஆப்தர்' என்றது பெருமையையுடைய கடவுளருள் பெற்றவர் என்பது பொருளாம். ஆப்தர் என்றது கடவுளின் திருஅருளுக்கு உரியவரை. 'கண்டால்' என்றது ஆராய்ந்து அறியின் என்னும் பொருளது. 'மொழி' என்பது ஈண்டு மொழிகளால் ஆகிய வாக்கியத்தைக் குறித்துநின்றது. 'உடம்பெலாம் வாயாய் பிதற்றுமவர்' என்றது உடம்பெல்லாம் வாயாகக்கொண்டு அதிகமாகப் பேசுபவர்கள் என்பதாம் . பேசுவது ஒழுங்கற்றதும் பின்னுக்குமுன் முரணையதுமாம் என்பார் 'பிதற்றும்' என்றார். மாயை மனத்தை இடமாகக்கொண்டு பிறத்தலின் 'மனதெனு மொருமாயை' என்றார். 'வன்மை' என்றது கொடுமைத் தன்மையைக் குறித்தது. 'புவனம்' என்றது உலகங்களை. இது சாதி ஒருமை. 'கர்த்தவ்யம்' என்றது முதலாந்தன்மை. 'பூதம்' என்றது மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களை. எல்லாம் எல்லாச் செயலும் இறைவனும் இறைவன் செயலுமாதலின் 'யாது முனையன்றி யுண்டோ' என்றார். 'அணுவும்' இதன் ஈற்று உம்மை இழிவுச்சிறப்பும்மை. எனும், எலாம், எனவும், உனை என்பன முறையே என்னும், எல்லாம், என்னவும், உன்னை என்னும் சொற்களின் தொகுத்தல்விகாரங்கள். வன்மையொடு, தீமையொடு, இவ் ஒடுக்கள் எண்ணுப்பொருளில்வந்தன. 'ஆர்' என்றது 'யார்' என்பதன் போலி. 'உனையன்றி யுண்டோ' இதில் நின்ற ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இது விடைதழுவியவினா; உன்னையன்றி இல்லை என்பது பொருளாம்.

இதுமுதல் பதினொரு பாக்கள்கொண்ட பதிகம் 'இகபர மிரண்டினிலு முயிரினுக்குயிராகி யெங்குநிறைகின்ற பொருளே' என்பதனை மகுடமாக அமையப்பெற்றிருக்கின்றது. ஈற்றில் 'எங்குநிறைகின்றபொருளே' என்றிருத்தலினால் இதற்கு இப்பெயர் வந்தது. 'இகம்' இவ்வுலகம் இதில் இகரச் சுட்டு அண்மைசுட்டிநின்றது. 'பரம்' இது மேலுலகைக் குறித்தது. 'பரம்' இது மேலானது என்பது பொருள், மேலான தானத்து இருக்கும் உலகம் என்பது பொருளாம். இது சுவர்க்கம் முதலிய பதவிகளைக் குறிக்கும்.



இறைவன் உயிருக்குயிராய் இருந்து உயிருக்கு அருள்செய்கின்றானாதலின் 'உயிர்க்கு உயிராகி' என்றார். இறைவன் பரிபூரணன், சர்வவியாபி, எல்லாப் பொருளிலும் எல்லா இடத்தும் இருப்பவனாதலின் 'எங்கு நிறைகின்ற பொருளே' என்றார். 1

எங்குநிறைகின்ற பொருளே! தேவரீரைச் சமயங்கள் பலவும்
பற்பல விதமாகக் கூறுதலால் தேவரீரின் திருவிளை
யாடல் எம்போன்றவர்களால் சொல்லுந்தர
முடையது அல்ல என்கின்றார்

அன்னே யனேயெனுஞ் சிலசமயம் நின்னையே
ஐயாஐயா என்னவே
அலறிடுஞ் சிலசமயம் அல்லாது பேய்போல
அலறியே யொன்றும்இலவாய்ப்
பின்னேதும் அறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய ஒளியென்றும் வெளியென்றும் நாதாதி
பிறவுமே நிலயமென்றுந்
தன்னே ரிலாததோ ரணுவென்றும் மூவிதத்
தன்மையாங் காலமென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமயம் இவையாகி வேறதாய்ச்
சதாஞான ஆனந்தமாய்
என்னே யெனேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகலஎளிதோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இம்மை, பரம்-மறுமை எனும், இரண்டினிலும்-இரண்டு இடங்களிலும், உயிரினுக்கு-உயிருக்கு; உயிர்-உயிர், ஆகி-ஆகி, எங்கும்-எந்த இடத்தும், நிறைகின்ற-நிறைந்து இருக்கின்ற, பொருளே-பொருளே!, சில-சில, சமயம்-மார்க்கங்கள், நின்னையே-தேவரீரையே, அன்னேயனே தாயே-தாயே, எனும் - என்று துதியாகிற்கும், சில-சில, சமயம்-மார்க்கங்கள், ஐயா ஐயா - ஐயா ஐயா, என்னவே-என்றே, அலறிடும் - அலறும், அல்லாது-அவ்விதம் அன்றி, சில-வேறுசில, சமயம் - மார்க்கங்கள், பேய் - பேயை, போல-போல, அலறி-கதறி, ஒன்றும்-ஒன்றும்பயன், இலவாய்-இல்லாததாய், பின்னால் உண்டாகப்போவது, ஏது - எதனையும், அறியாமல் - தெரியாதபடி, ஒன்றை - ஒன்றை, விட்டு - விட்டு, ஒன்றை-அதற்குமாறாகிய பிரிதொன்றை, பிதற்றிடும்-உளறுகிற்கும், சில-மற்றுஞ்சில, சமயங்கள் - மார்க்கங்கள், மேல்-மேலும், பேசு - சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, ஒளி - சோதி, என்றும்-

என்றும், வெளி-ஆகாயம், என்றும்-என்றும், நாதம்-நாதத்துவம், ஆதி-முதலாகிய, பிரவமே-பிறவற்றையே, நிலையம் - நிலைகள், என்றும்-என்றும், தன்-தனக்கு, நேர்-ஒப்பு, இல்லாதது - இல்லாததாகிய, ஓர்-ஒரு, அணு - நட்பப் பொருள், என்றும்-என்றும், மூ-மூன்றாகிய, விதம்-விதங்களாகிய, தன்மை-தன்மையை, ஆம்-கொண்டுள்ள, காலம்-காலம், என்றும்-என்றும், சாற்றிடும்-கூறும், இவை-இவைகள், ஆகி-ஆகி, வேறது-இவைகளுக்கு வேறுபட்டதாகி, சதா-எக்காலத்தும், ஞானம்-ஞான, ஆனந்தம்-பேரின்பம், ஆய்-ஆகி, கருணை-திருவருட்கருணை, விளையாட்டு - திருவிளையாடல், இருந்த - இருந்த, ஆறு-வகை என்னே - என்ன ஆச்சரியம், எனே - என்ன ஆச்சரியம், எம்மனோர்-எம்போன்ற அடியார்கள், புகல - சொல்லுதற்கு, எளிதோ-இலேசானதோ, எ-று.

(வி-ரை) இறைவன் தாயேயனையன் எனக்கொண்டு அவனைத் தாயே தாயே எனச் சொல்லாநிற்கும் என்பார், 'அன்னேயனேயெனுஞ் சிலசமயம்' என்றார். என்னை? இறைவன் அருட்சத்தியோடு கூடி உயிர்களுக்கு அருள் செய்தலினாலென்க. இறைவன் முதல்வன், தந்தையே ஒப்பவன் எனக் கொண்டு ஐயா ஐயா என்று துதிப்பர் என்பார் 'ஐயாவையா வென்னவே அலறிடுஞ் சிலசமயம்' என்றார். 'சமயம்' என்றது மார்க்கங்களை. பேய்முறையின்றிக் கூறலாலும், உறக்கக் கூவுதலாலும், 'பேய்போல வலறியே யொன்றுமிலவாய்ப் பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப் பிதற்றிடுஞ் சில சமயம்' என்றார். ஈண்டு 'போல' என்றது உவம உருபு. 'அலறல்' என்றது உறக்கக் கூறலை. 'பிதற்றல்' என்றது பின்முன் சம்பந்தமின்றி நெறியின்றிப் பொருளின்றிக் கூறல் என்பது பொருளாம். 'பேசரிய வெளி' என்றது பரமஆகாயத்தை. 'ஒளி' என்றது சோதிமயத்தை. 'நாதாதி பிறவுமே' என்றது நாததத்துவ முதலாகிய தத்துவங்களை. 'தன் நேரிலாதது' என்றது தனக்கு ஒப்பு இல்லாதது என்பது பொருளாம். 'அணு' என்பது நட்பத்தை. 'மூவிதத் தன்மையாங்காலம்' என்றது இறப்பு, எதிர்வு, நிகழ்வு ஆகிய முக்காலங்களை. பலவாஞ் சமயகோடிகள் கூறுவதும் அவைகளெல்லாது அதற்கு மேம்பட்டதாகவும் சதாஞான ஆனந்தமயமாக இறைவன் இருத்தலின், 'இவையாகி வேறதாய்ச் சதாஞான வானந்தமாய்' என்றார். 'எம்மனோர்' என்றது சிற்றறிவுடையவர்களாகிய எம்போன்றவர் என்பது பொருளாம்.

'நின்னையே' என்றது இறைவனை. 'அன்னே' 'ஐயா' இவைகள் விளியுருபு ஏற்றபெயர்கள். அனே, எனே, என்பன அன்னே என்னே என்பவற்றின் தொகுத்தல் விகாரங்கள். 'சிலசமயம்' என்பது பன்முறை இச்செய்யுளிலேயே வந்தது **சொற்பொருட்பின்வருநிலையணி.** இதன்கண் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'என்னே யெனே' இது வியப்பின்கண் வந்த அடுக்குத்தொடர். 'அன்னேயனே' 'ஐயாவையா' இவை விளிப்பொருளில் அடுக்கிவந்தன. 'அம்மனோர்' இது எம்மை அன்னோர் என்பதன் தொகுத்தல் விகாரம் 'அன்னோர்' இது உவமை இடைச்சொல்லடியாகப் பிறந்த



பெயர். 'எளிதோ' இதில் ஈற்று ஓகாரம் வினப்பொருளது; எளிதல்ல என்னும் பொருளில் வந்தது. 2

எங்குநிறைகின்ற பொருளே! தேவரீரைப் பொருளாகப் பாவிக்கினும் அப்பொருளாகவே வந்து அருள் செய்தலினால்
தேவரீரை அடைந்த அடியேனுக்கு ஏதேனுங்
குறையுண்டோ என்கின்றார்

வேதமுடன் ஆகம புராணம் இதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா எடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை
உண்டுபண் ணு ஞானமாகும்
ஊகம் அனு பவவசன மூன்றுக்கும் ஒவ்வுமீ
துபயவா திகள் சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போதும்
யாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கின்
அத்துவித மார்க்கமுறலாம்
ஏதுபா வித்திடினும் அதுவாகி வந்தருள்செய்
எந்தைநீ குறையுமுண்டோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும் - இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு-உயிர்க்கு, உயிராகி-உயிராகி, எங்கும்-எவ்விடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, வேதமுடனே-வேதங்களுடனே, ஆகமம்-ஆகமமும், புராணம் - புராணமும், இதிகாசம் - இதிகாசமும், முதல் - முதலாக, வேறும் - மற்றும், உள்ள-உள்ள, கலைகள்-சாஸ்திரங்கள், எல்லாம் - எல்லாமும், மிக்காக - மிகுதியாக, அத்துவிதம் - அத்துவிதம், துவிதம் - துவிதம் என்னும், மார்க்கத்தையே-மார்க்கங்களையே, விரிவு-விரிவு, ஆ-ஆக, எடுத்து - எடுத்து, உரைக்கும் - கூறுநிற்கும், ஓது-சொல்லுதற்கு, அரிய-அருமையான, துவிதமே-துவிதஞானமே, அத்துவித-அத்துவித, ஞானத்தை-ஞானத்தை, உண்டுபண்ணும்-உண்டாக்குகின்ற, ஞானம் - ஞானம், ஆகும்-ஆகும், ஈது - இம்மொழி, ஊகம்-யுக்தி, அனுபவம்-சுயஅநுபவம், வசனம் - சுருதிவசனம், மூன்றுக்கும் - (ஆகிய) மூன்றுக்கும், ஒவ்வும் - ஒத்திருக்கும், ஈது - (அன்றியும்) இவைகள், உபய - இருதாத்து, வாதிகள்-வாதிகள், சம்மதம்-சம்மதமாகும், ஆதலின்-ஆகையால், இனி-இனி

மேல், எனக்கு-அடியேனுக்கு, சரியை-சரியை, ஆதிகள் - முதலியவைகளே, போதும் - அமையும், நான்-அடியேன், யாதொன்று - யாதொரு பொருளை, பாவிக்க-பாவிக்கவும், அது-அப்பொருளே, ஆதலால்-ஆகிவிடுதலால், உன்னை-தேவரீரை, நான்-அடியேன், என்று-என்று, பாவிக்கின் - பாவனைசெய்தால், அத்துவிதம்-அத்துவித, மார்க்கம்-மார்க்கத்தை, உறலாம்-அடையலாம், நீ-நீ, ஏது-எப்பொருளாக, பாவித்திடினும்-பாவித்தாலும், நீ அது-நீஅப்பொருளே, ஆகி-ஆகி, வந்து-எழுந்தருளிவந்து, அருள் - கிருபையை, செய்-செய்கின்ற, எந்தை-எந்தை ஆகையினால், குறையும்-தேவரீரை அடைந்த அடியேனுக்கு ஏதேனுங் குறைவும், உண்டோ-உள்ளதோ? இல்லை எ-று.

(வி-ரை) 'வேதம்' இது அறிவு என்னும் பொருளது. இறைவனால் தரப்பெற்றது; ஒலிவடிவாக இருப்பது. இவ்வேதம் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான்குவகைப்படும். 'ஆகமம்' இதுவும் இறைவனால் தரப்பெற்றதே. வேதம்-பொதுவானது: ஆகமம் சிறப்பானது. இது பாசநீக்க மடைந்து ஆன்மா பதியை அடையும் மார்க்கத்தை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் எடுத்துக்காட்டுவது. இவ் ஆகமம் காமிகம்முதல் இருபத்தெட்டதாகும். 'புராணம்' என்றது பழங்கதைகளைக் குறிக்கும். இப்புராணங்கள் 1 பிரமம், 2 பதுமம், 3 வைணவம், 4 சைவம்; 5 பாகவதம், 6 நாரதீயம், 7 மார்க்கண்டேயம், 8 ஆக்கினேயம், 9 பவிடியம், 10 பிரமகைவர்த்தம், 11 இலிங்கம், 12 வராகம், 13 காந்தம், 14 வாமனம், 15 கூர்மம், 16 மச்சம், 17 காருடம், 18 வியவியம், எனப் பதினெண்புராணங்களுள. 'இதிகாசம்' என்றது பழங்காலத்துச் சரிதத்தை. இராமாயண பாரதங்களிரண்டும் இதிகாசங்களாகும். 'வேறுமுள கலைகள்' என்றது ஸ்மிருதி முதலியவைகளை. 'அத்துவிதம்' என்றது இரண்டல்லாதது என்பதாம். 'துவிதம்' என்றது இரண்டானது என்பதாம். 'ஊகம்' இது ஊகித்து (யோசித்து) அறிவது என்னும் பொருளது. இதனை யுக்தி என்பர். 'அனுபவம்' இது தனக்குத்தானே அனுபவித்து அறிதலை உணர்த்தும் இதனைச் சுவானுபூதி என்பர். 'வசனம்' என்றது வேதவாக்கை. இது சிறப்புப்பற்றி வேதவசனத்தை யுணர்த்தியது. 'உபயவாதிகள்' என்றது அத்துவிதவாதிகள், அவைதவாதிகள் என்னும் இருபட்சத்துவாதிகளை யுணர்த்திற்று.

'சரியையாதி' என்றது சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலியவைகளை. 'யாதொன்று பாவிக்க நான் அதுவாதலால்' இது 'நான் யாதொன்று பாவிக்க அதுவாதலால்' என இயைத்துப் பொருள்கோள் கொள்க. 'எந்தைநீ குறையுமுண்டோ' இதில் அவாய்நிலையால் நீ எந்தை. தேவரீரை அடைந்த அடியேனுக்குக் குறையுமுண்டோ எனப் பொருள் கொள்ளவின் 'தேவரீரை அடைந்த அடியேனுக்கு என்னுஞ்சொற்கள் தொக்குநின்றது. 'உண்டோ' இது விடைதழுவியவினா. ஒருகுறையும் இல்லை என்பது பொருள். 'வேதமுடன்' இதில் 'உடன்' என்றது எண்ணுப் பொருளில்வந்தது. 'உள' இது 'உள்ள' என்பதன் தொகுத்தல்விகாரம். 'உண்டுபணும்' இது உண்டுபண்ணும் என்றதன் தொகுத்தல்விகாரம்.



'மூன்றுக்கும்' இதன்கண்நின்ற சுற்று உம்மை முற்றும்மை. 'யாதொன்று' இது யாவென்வினாவடியாகப் பிறந்தபெயர். 'பாவிக்கின்' இது 'செயின்' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'ஏது' இது ஏவினாவடியாகப் பிறந்த பெயர். 3

எங்குநிறைகின்ற பொருளே! மனமாயையை அடியேன் அடக்க வசமோ தேவரீரின் திருவருள் வேண்டும் என்கின்றார்

சொல்லான திற்சற்றும் வாராத பிள்ளையைத்
  தொட்டில்வைத் தாட்டிஆட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்ப மொன்றில்
  தொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை எனும்சப்த பூமியிடை
  போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைபோல் தானே
  புறம்போந்து சஞ்சரிக்குங்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடுங்
  காணாது கேட்டஎல்லாங்
கண்டதாக் காட்டியே அணுவாச் சுருக்கிடுங்
  கபடநா டகசாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை ஏழையாம்
  என்னு லடக்கவசமோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
  எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு-உயிர்க்கு, உயிராகி-உயிராகி, எங்கும்-எவ்விடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, சொல்-வாய்ச்சொல், ஆனதில் - ஆகியகண்டிப்பில், சற்றும் - கொஞ்சமும், வாராத-நல்வழிக்கு வாராத, பிள்ளையை - குழந்தையை, தொட்டிலில் - (தாயானவள் அக்குழந்தையைத்) தொட்டிலிலே, வைத்து-கிடத்தி, ஆட்டி ஆட்டி-அசைத்து அசைத்து, தொடையினை-தொடையை, கிள்ளல்-கிள்ளுதல், போல்-போல, ஒன்றில்-ஒன்றிலே, சங்கற்பம்-நினைப்பு, தொடுக்கும்-உண்டாகும், தொடுத்து-உண்டாக்கி, அழிக்கும் - அழிக்கும், பொல்லாத - கெட்ட, வாதனை-வாதனை, என்றும்-என்று சொல்லப்படும், சப்தம் - ஏழாகிய, பூமி - அஞ்ஞானபூமிகள், இடை - இடையே, போந்து-வந்து, தலை - தலை, சுற்றி-சுழற்றி, ஆடும்-ஆடும், புருஷனில் - புருஷனிடத்து, அடங்காத - அடங்கிவாழாத, பூவை - பெண், போல்-போல, தானே - தானே, புறம்-வெளியே, போந்து - வந்து, சஞ்சரிக்கும்-உலாவாநிற்கும், கல்லோடு-கல்லுடனே, இரும்புக்கும்-இரும்புக்கும், மிகவும், வன்மை-கடினத்தன்மையை, காட்டும்-காட்டும், காணாது - பாராது,

கேட்ட-செவியாற் கேட்ட, எல்லாம் - எல்லாவற்றையும், கண்டதா - கண்டதாகக், காட்டி-காண்பித்து, அணுவா-அணுவாக, சுருக்கிடும் - சுருக்கிவிடும், கபடம்-வஞ்சக, நாடக-நாடக, சாலம்-சாலங்கள், எல்லாம்-எல்லாமும்செய்ய, வல்லது-வல்லமையுடையது ஆதலால், இந்த-இந்த, மன-மன, மாயை-மாயை, ஏழை-ஏழை, ஆம் - ஆகிய, என்றால் - என்றால், அடக்க - வென்று அடக்க. வசமோ-வசமாகுமோ? ஆகாது எ-று.

(வி-ரை) 'சற்றும்' இது ஈண்டு கொஞ்சமும் என்னும் பொருளது. 'பிள்ளையைத் தொட்டிலில் வைத்து' என்பதைஈண்டு'பிள்ளையைத் தாய் தொட்டிலில்வைத்து' எனப் பொருள்கோடலின் 'தாய்' என்னுஞ் சொல் அவாய்நிலையால்வந்தது. 'ஆட்டியாட்டி' இது மிகுதிக்கண் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'சங்கற்பம்' என்றது ஈண்டு நினைப்பை. பொல்லாத என்றது தத்துவச் சேட்டையாற் கிளம்புதலின் 'பொல்லாத' என்றார். 'சத்தபூமி' என்றது, விந்துசாக்கிரம், பேர்ச்சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொற்பனம், சொற்பனம், சொற்பனசாக்கிரம், சுழுத்தி என்னும் ஏழினை. 'புருஷனி லடங்காத பூவை' என்றது கொண்ட கணவனுக்கு அடங்கிநடவாது ஏறுக்குமாறு செய்பவள் என்பதாம். இது உபமானம்; 'பூவை' இது உவமையாகு பெயராய்ப் பெண்ணைக்குறித்தது. 'கல்லோ டிரும்புக்கு மிகவன்மைக் காட்டிடும்' என்றது கல்லைக்காட்டிலும் இரும்பைக்காட்டிலும் வன்மையுடையதாக இருக்கும் என்பதாம். 'அணு' என்றது மிக நுட்பமானதை உணர்த்தும். 'கபடம்' என்றது வஞ்சகமுடையது என்பது பொருளாம். 'நாடகம்' இது நடித்துக்காட்டுதல் என்னும் பொருளது. ஈண்டு பொய்க்கூத்து எனப் பொருந்திநின்றது. 'ஜாலம்' இது பொய்யை மெய்யாகவும், மெய்யைப் பொய்யாகவுங் காட்டும் ஓர் வித்தை. 'மனமாயை' என்றது மனத்தினின்று மாயை எழும்புதலினால் மனமாயை என்றார். 'ஏழை' என்றது தன் எளிமைகாட்டி நின்றது. ஈண்டு ஞான எளிமையை உணர்த்தும்.

'சொல்லானது' என்றதில் 'ஆனது' சொல்லுருபு. 'வாராத' இது எதிர்மறைப் பெயரெச்சம். தொட்டிலில்வைத்து' இது ஏழன்தொகை; தொட்டிலில்வைத்து எனவிரியும். உடம்பைத் தொடுத்து நிற்றலினால் தொடைக்கு 'தொடை' எனப் பெயராயிற்று. இது காரணப்பெயர். "தொட்டிலையும் ஆட்டித் தொடையையுங் கிள்ளுதல்" என்பது பழமொழி. 'எனும்சத்த' இதில் 'எனும்' என்பது என்னும் என்பதன் தொகுத்தல் விகாரம். 'பூமியிடை' இதில் 'இடை' என்றது ஏழனுருபு இடப்பொருளது. 'பூவை' இது உவமைஆகுபெயர். இது பயன் உவமம். பூவைபோற் பேச்சுடையாள் என்பதாம். (பூவை-நாகணவாய்ப்புள்) 'கல்லோ டிரும்புக்கு' இதில் ஒரு எண்ணுப்பொருள் தந்துநின்றது. 'எல்லாமும் வலது' இது 'வலது' என்பது 'வல்லது' என்பதன் தொகுத்தல்விகாரம். 'ஏழையாம்' இதில் 'ஆம்' என்பது 'ஆகும்' என்பதன் தொகுத்தல்விகாரம். 'வசமோ' இதில் ஓகாரம் வினாப்பொருளது. இது விடைதழுவியவினா. ஆகாது என்பது பொருளாம்.





எங்குநிறைகின்ற பொருளே! வெளிவேடத்துக்காயினும் தேவரீருக்கு பக்தியுள்ளவன்போல் நடித்ததற்காகவேனும் இரங்கி முத்திச்சுகம் தந்தருள் என்கின்றார்

கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்வனே னானாலுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணா பரஞ்சோதி யப்பா உனக்கடிமை
யானென வு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
அகிலமுஞ் சிறிதறியுமேல்
தண்ணாரு நின்னரு ளறியாத தல்லவே
சற்றேனும் இனிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை ஈதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறொன்
றெண்ணாம லுள்ளபடி சுகமா யிருக்கவே
ஏழையேற் கருள்செய்கண்டாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும் - இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு-உயிர்க்கு, உயிராகி-உயிராகி, எங்கும்-எவ்விடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, கண்-கண்கள், ஆர-நிறைய, நீர்-நீர், மல்கி-நிரம்பி, உள்ளம்-மனம், நெக்கு-நெக்குவிட்டு, உருகாத - இளகாத, கள்வனேன் - திருடனே, ஆனாலும் - ஆனாலும், கை-கையை, குவித்து - கூப்பி, ஆடியும்-ஆடலைச்செய்தும், பாடியும்-பாடல்களைப்பாடியும், விடாமல்-நீங்காமல், கண்-கண்களில், பனி-குளிர்ச்சிபொருந்திய, தாரை-நீர் ஒழுக்கை, காட்டி-காட்டி, அண்ணா-அண்ணா!, பரஞ்சோதி-உயர்ந்த பிரகாசமே, அப்பா - அப்பனே!, உனக்கு - தேவரீருக்கு, அடிமை-அடிமை, யான் - அடியேன், மேல் - மேற்பட்டு, எழுந்த - எழுந்த, அன்பாக-அன்பை உடையவனாக, நாடகம் - நாடகத்தை, நடித்ததோ - ஆடினதோ, குறைவு - குறைவு, இல்லை - இல்லை, அகிலமும் - அதனை உலகமும், சிறிது-கொஞ்சம், அறியும்-அறியும், மேல்-மேலே, தண்-குளிர்ச்சி, ஆரும்-பொருந்திய, நின்னது-தேவரீரினுடைய, அருள்-திருஅருள், அறியாதது - தெரிந்துகொள்ளாதது, அல்லவே-அல்லவே, சற்றேனும் - கொஞ்சமேனும், இனிது-இன்புடனே, இரங்கி-இரக்கங்கொண்டு, சாசுவதம் - அழிவில்லாது என்றும் நிலைத்துள்ள, முத்தி-முத்தியின், நிலை - நிலைமை, ஈது-இது, என்று-என்று, உணர்த்தி-தெரிவித்து, சகசநிலை-சகசநிலையை, தந்து-கொடுத்து, வேறு-பிற, ஒன்று - ஒன்றையும், எண்ணாமல் - நினையாதபடி, உள்ளபடி - உண்மையாய்,

சுகமாய் - இன்பமாய், இருக்க - இருக்க, ஏழையேற்கு - எளியனாகிய அடியே
னுக்கு, அருள்செய்-அருள்புரிவாயாக எ-று.

(வி-ரை) 'கண்ணார' இது ஜாதிஒருமை. 'கண்கள்' எனற்பாலது கண்
என நின்றது. 'நீர்மல்கல்' என்றது ஆனந்தபாஷ்பம் பெருகிநிற்றலை.
'உள்ளம்' இது இடவாகுபெயர்; உள்ளே இருப்பது என்னும் பொருளது.
இனி உள்ளுதற்குக் கருவியாக இருப்பது என்பாரும் உண்டு. 'நெக்குருக'
என்றது நெக்குவிட்டு இளக என்னும் பொருளதாம். தானல்லாதவற்றைத்
தானாகவும்; தன்னது அல்லாததைத் தனதாகவும் கொள்ளுதலினாலும்,
உண்மை அன்பு பூணாமையாலும் 'கள்ளனேனானாலும்' என்றார். 'ஆடியும்'
என்றது ஆனந்தமேலீட்டாற் கூத்தாடலை. 'பாடியும்' என்றது துதிப்பாக்
களைப் பாடுதலை. 'கண்பனித்தாரை' என்றது ஆனந்தக்கண்ணீர் பெருக்கை.
'அண்ணா' இது உயர்ந்தோன் என்னும்பொருளாற் பிறந்தபெயர். பெரி
யோன் என்பது பொருளாம். 'பரஞ்சோதி' என்பது பேரருட்பெரு
வொளியை. தான் உண்மையாயின்றி வெளிவேடத்திற்காக ஆடினமையால்
'நாடக நடித்ததோ' என்றார். இறைவன் திருஅருள் என்றும் எவர்க்கும்
நன்மையே செய்வதாதலினால் 'தன்அருள்' எனத் திருவருளை விசேடித்துக்
கூறினார். 'சாசுவதம்' என்றது அழிவில்லாது நித்தியமாக இருப்பது
என்னும் பொருளது. 'முத்தி' என்றது மோக்ஷத்தை இது பிறவிவேதனைகள்
எல்லாம்விட்ட இடம் ஆதலின் 'முத்தி' என்னும் பெயர்த்தாயிற்று. 'சகச
நிலை' என்றது அத்துவிதநிலையை. 'உள்ளபடி சுகமாய்' என்றது போலியா
யின்றி உண்மையான சிவானந்தபோகந் துய்த்திருக்க என்றதாம். இறைவன்
திருஅருள்பெற அறிவு போதியதாக இல்லாமைபற்றித் தன்னை 'ஏழை'
என்றார். 'அருள்செய்' என்றது திருஅருள்செய் என்பதாம். 'கண்டாய்'
என்றது முன்னிலையசைச்சொல். 'நீர்மல்கி' இதில் மல்கி என்னும் வினை
யெச்சம் உருகாத என்ற பெயரெச்சத்தைத் தழுவிநின்றது. 'உருகாத' இது
இறந்தகால எதிர்மறைப் பெயரெச்சம். 'ஆனாலுமோ' இதில் ஓகாரம் அசை.
'ஆடியும்பாடியும்' இதில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 'அண்ணா'
'பரஞ்சோதி,' 'அப்பா,' என்பன விளியுருபுகள் ஏற்றுநின்றன. 'யான்
எனவும்' இதில் 'எனவும்' என்பது 'என்னவும்' என்பதன் தொகுத்தல்
விகாரம். 'தண்ணாரும்' இதில் 'தண்' என்பது தண்மை என்னும் பண்புப்
பெயரின்விகாரம். 'இருக்கவே' இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. 5

எங்குநிறைகின்ற பொருளே! அடியேன் தேவரீருடன் ஏகமாய்
இருக்கும்நாள் எந்தநாள் அது இந்தக்காலத்து
சித்திக்காதோ என்கின்றார்

காகமா னதுகோடி கூடிநின் றாலுமொரு
    கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமா னதுகோடி முன்னேசெய் தாலுநின்
    கருணைப்ர வாகஅருளைத்



தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ
    தமியனேற் கருள்தாகமோ
சற்றுமிலை என்பதுவும் வெளியாச்சு வினையெலாஞ்
    சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
    சேராமல் யோகமார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிட் டைக்குமென்
    சிந்தைக்கும் வெகுதூரம்நான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநாள்
    இந்நாளில் முற்றாதோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
    எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும் - இரண்டு
உலகங்களிலும், உயிரினுக்கு-உயிர்க்கு, உயிராகி-உயிராகி, எங்கும்-எவ்விடங்
களிலும், நிறைகின்ற-நிறைந்திருக்கின்ற, பொருளே-பொருளே!, காகமானது-
காக்கைகள், கோடி - கோடிக்கணக்காக, கூடி-சேர்ந்து, நின்றாலும்-நின்றிருக்
தாலும், ஒரு - ஒரு, கல்லின் - கல்எறிக்கு, முன்-முன்னாலே, எதிர்-எதிர்த்து
ஊன்றி, நிற்குமோ-நிற்குமோ?, (நிற்காது அதுபோல) முன்னே-முற்பிறப்பு
களில், கோடி-கோடிக்கணக்காக, கர்மம்-தீயவினைகள், ஆனது-ஆனவைகளை,
செய்தாலும் - செய்து இருந்தாலும், (அவைகள்) நின் - தேவரீரின், கருணை-
கிருபை, பிரவாக - வெள்ள வடிவமாகிய, அருளை - திரு அருளை, தாகமாய்-
அதிவேட்கையோடு, நாடினரை-விரும்பித் தேடியவர்களை, வாதிக்க-வருத்துவ
தற்கு, வல்லவோ-வல்லமையுடையதாகுமோ?, தமியனேற்கு-தாழ்ந்த அடியே
னுக்கு, அருள்-திருவருள்மேல், தாகம்-விருப்பம், சற்றும்-சிறிதும், இல்லை-
இல்லை, என்பதுவும்-என்பதும், வெளி - விளம்பரமாக, ஆச்சு - ஆகிவிட்டது,
வினை - வினைகள், எல்லாம் - எல்லாமும், சங்கேதமாய் - கட்டுப்பாடாக,
கூடி-சேர்ந்துகொண்டுவந்து, தேகமானதை-தேகத்தை, மிகவும் - அதிகமாக,
வாட்டுதே - வருத்தப்படுத்துகின்றதே. துன்பங்கள் - துன்பங்கள், சேராமல்-
வந்துகூடாமல், யோகம் - யோகத்தின், மார்க்கம்-நெறி, சித்தியோ - சித்தித்
தலோ, வரவில்லை - கைகூடவில்லை, சகச-சகச, நிஷ்டைக்கும்-நிட்டைக்கும்,
என் - அடியேனின், சிந்தைக்கும் - மனத்துக்கும், வெகு-நெடும், தூரம்-தூர
மாகும், நான் - அடியேன், நின்னொடு-தேவரீரொடு, ஏகமாய்-ஒன்றாய், இருக்
கும்-இருக்கும், நாள்-தினம், எந்த-எந்த, நாளோ-காலமோ?, (அது) இ-இந்த,
நாளில்-காலத்தே, முற்றாதோ-முடிவுபெறாதோ? எ-று.

(வி-ரை) 'காகமானது' இதில் ஆனது என்பது முதல்வேற்றுமைச்
சொல்லுருபு. 'கோடி' என்றது ஈண்டு எண்ணைக்காட்டாது மிகுதிப்
பொருள்காட்டி நின்றது. 'கல்லின்முன்' என்றது 'கல் எறிக்குமுன்' என்ற

பொருளதாம். அவாய் நிலையால் 'எறி' என்றசொல் வருவித்து உரைக்கப் பெற்றது. இது உபமானமாக நின்றது. 'கர்மம்' என்றது இருவினைகளுக்கும் பொதுவே என்றாலும் ஈண்டு தீவினையைக் குறித்து நின்றது. 'முன்' என்றது முற்பிறப்புகளை. 'கருணைப்பிரவாகம்' இது கருணையாகிய வெள்ளம் எனப் பொருள்தரலின் பண்புத்தொகை 'பிரவாகம்' என்பது வெள்ளப் பெருக்கு என்னும் பொருளது. 'அருள்' என்றது திருஅருளை. 'தாகமாய் நாடினரை' என்றது மிகுந்த வேட்கையோடு தேடி அடைந்தவரை என்பது பொருளாம். 'வாதித்தல்' ஈண்டு துன்புறுத்தல் என்னும் பொருளது. 'அருட்டாகம்' இது அருளினிடத்து மிகுந்துள்ள விருப்பம் என்பது பொருளாம். இது ஏழாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. 'சற்றும்' இதில் நின்ற உம்மை இழிவுசிறப்பும்மை. 'வெளியாச்சு' இது எல்லார்க்கும் வெளிப்படத் தெரிந்துபோயிற்று என்னும் பொருளது. 'ஆச்சு' இது ஆயிற்று என்பதன் போலி.

'சங்கேதம்' இதனைத் தமிழர் குழூஉக்குறி என்பர். அதாவது ஒரு கூட்டத்தார் ஒரு காரணத்தால் உண்மைப்பெயரை மறைத்து வேறு குறியிடு செய்து அதனை வழங்குவது. 'வாட்டுதே' இது வாட்டுகிறதே என்பதன் மரூஉ. யோகமார்க்கம் துன்பங்கள் வாராது தடுத்தற்கு ஒரு வழியென்பது இவரது கொள்கையாதலினால் 'துன்பங்கள் சேராமல் யோகமார்க்க சித்தியோ வரவில்லை' என்றார். 'சித்தி' என்றது கைகூடுதலை. 'சகசநிஷ்டை' என்றது இடையறாது இறைவனோடு ஒன்றுபட்டு ஆனந்தத்தழுந்தியிருக்கும் யோகநிலை. 'ஏகமாய்' என்றது அத்துவித நிலையை. 'முற்றாதோ' என்றது சித்திக்காதோ என்பதாம். ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இது ஐயவினா. 'இந்நாள்' என்றது இப்பிறப்பை. 'வாதிக்கவல்லவோ' இது விடைதழுவிய வினா. வல்லதல்ல என்னும் பொருளது. 'தமியனேன்' இது 'தமி' என்னும் பகுதியடியாகப் பிறந்தபெயர். தனித்தவன் என்ற பொருளது. 'சற்றுமிலை' இதில் 'இலை' என்பது இல்லை என்பதன் தொகுத்தல் விகாரம். 'எலாஞ் சங்கேதம்' இதில் 'எலாம்' என்பது எல்லாம் என்பதன் தொகுத்தல் விகாரம்.



**எங்குநிறைகின்ற பொருளே! அடியேனைத் தேவரீரின் திருவருளுக்கிலக்காக்கினால் யார் தடைகூறுவர், என்ன காரணத்தால் அடியேனை ஆண்டருளாதிருக்கின்றனை என்கின்றார்**

ஒருமைமன தாகியே அல்லலற நின்னருளில்
　　ஒருவன்நான் வந்திருக்கின்
உலகம் பொறாததோ மாயா விசித்ரமென
　　ஓயுமோ இடமில்லையோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
　　அலதுகிர்த் தியகர்த்தராய்



அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சிலர்
　　அடாதென்பரோ அகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
　　பேய்க்கோல மாய்விதண்டை
பேசுமோ அலதுதான் பரிபாக காலம்
　　பிறக்கவிலையோ தொல்லையாம்
இருமைசெறி சடவினை எதிர்த்துவாய் பேசுமோ
　　ஏதுளவு சிறிதுபுகலாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
　　எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு - உயிர்க்கு, உயிராகி - உயிராகி, எங்கும் - எல்லா இடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, நான்-அடியேன், ஒருவன்-ஒருவனும், அல்லல்-துன்பம், அற-ஒழிய, ஒருமை-ஒருநெறிப்பட்ட, மனது : மனதைக் கொண்டவன், ஆகி - ஆகி, நின்-தேவரீரின், அருளில் - திருஅருள் நெறியில், வந்திருக்கின்-வந்திருந்தால், (அதனை) உலகம் - உலகம், பொறாதோ - பொறுக்கமாட்டாதோ?, மாயா - மாயையின், விசித்திரம் - வேடிக்கை, என்ன - என்ன, ஓயுமோ-ஓய்ந்துபோமோ?, இடம்-(அதற்கு அடியேனையன்றி) வேறு இடம், இல்லையோ-இல்லையோ?, அருள்-தேவரீரின் திருஅருளை, உடைய - பெற்றுள்ள, அன்பர்-அன்பர்கள், சங்கை-அதைக் குறித்துத் தடை, செய்திடுவரோ - செய்வார்களோ?, அலது - அது அல்லாமற்போனால், கிர்த்தியம் - சிருட்டி, திதி, சம்மாரம் என்னும் முத்தொழிற்கும், கர்த்தராய் - முதல்வராய், அகிலம் - உலகத்தை, படைத்து-படைத்து, எம்மை - அடியோங்களை, ஆள்கின்ற - காக்கின்ற, பேர்-பேர்வழிகளாகிய, சிலர்-சிலர், அடாது-இது பொருந்தாத செய்கை, என்பரோ - என்று கூறுவார்களோ?, அகன்ற - விரிந்த, பெருமை - பெருமையை, பெறு-பெற்றுள்ள, பூரணம் - தேவரீரின் பூரணத்துவம், குறையுமோ - குறைந்து போகுமோ?, பூதங்கள் - பூதங்கள் எல்லாம், பேய் - பேயினுடைய, கோலம்-வடிவத்தை, கொண்டு-பூண்டு, விதண்டை-விதண்டாவாதத்தை, பேசுமோ-பேசுமோ?, அலதுதான் - அது எல்லாம் அல்லாமற்போனால்தான், பரிபாகம்-அடியேனுக்குப் பக்குவ, காலம் - காலம், பிறக்க - தோன்ற, இல்லையோ-இல்லையோ?, தொல்லை - பழமை, ஆம் - ஆகிய, இருமை - இரண்டாம் தன்மை, செறி-கொண்ட, சடம் - அறிவில்லாதனவாகிய, வினை - வினைகள், எதிர்த்து-எதிர்ப்பட்டு, வாய்-வாயால், பேசுமோ-வாதாடி நிற்குமோ?, உளவு-உண்மை, ஏது-என்ன?, சிறிது-சற்று, கூறாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

(வி-ரை) 'ஒருமைமனது' என்றது ஒன்றுபட்ட மனது. 'அல்லல்' இது துன்பம் என்ற பொருளது. இருளாக இருப்பது என்னும் காரணம்பற்றிய

காரணப்பெயர். (அல் = இருள்), 'நின்அருள்' என்றது இறைவனின் திரு அருளை. 'உலகம்' என்றது இடவாகுபெயராய் உலகத்து உள்ளவர்கள்மேல் நின்றது. இனி, "உலகம் என்ப உயர்ந்தோர் மாட்டே" என்ற இலக்கணத்தால் உயர்ந்தோர்கள் எனப் பொருள்கூறினும் பொருந்தும்.

'மாயாவிசித்திரம்' என்பது மாயையின் வேடிக்கை என்பது பொருளாம். கங்கை + தீர்த்தம் = கங்காதீர்த்தம் என்றாயதுபோல மாயை + விசித்திரம் = மாயாவிசித்திரம் என ஆயது. இது வடமொழிச்சந்தி என்பர். சித்திரம்-அழகு, 'வி' உபசர்க்கம் மேலான அழகு, மேலான வேடிக்கை என்பது பொருளாம். 'சங்கைசெய்தல்' என்றது ஏன் அவ்வாறு செய்கின்றாய் என்று வினவி அவ்வாறு செய்யாது இருக்கும்படித் தடுத்தலை உணர்த்தி நின்றது. 'கிர்த்திய கர்த்தர்' என்றது படைப்போனாகிய பிரமனையும், காப்போனாகிய விண்டுவையும், அழிப்போனாகிய ருத்திரனையும் உணர்த்தி நின்றது. 'பூரணம்' என்றது சர்வவியாப்பியத்தை. 'விதண்டை' என்றது தர்க்கத்துப் பிரிவுகளில் ஒருபிரிவு. 'இடமில்லையோ' இதற்கு என்னைவிட்டால் மாயைக்கு வேறு இடமில்லையோ என்பது பொருளாம். 'என்னைவிட்டால் மாயைக்குவேறு' என்னுஞ்சொற்கள் அவாய்நிலையால் வருவித்துரைக்கப் பெற்றது. 'பரிபாக காலம்' என்றது மலபரிபாககாலத்தை உணர்த்திற்று. அதாவது இருவினைஒப்பு மலபரிபாகம் எய்தியகாலமே இறைவன் திருவருள் பெறற்கு ஏற்றகாலமாதலினால் "அலதுதான் பரிபாககாலம் பிறக்கவில்லையோ' என்றார். 'இருமை' என்றது இரண்டாந்தன்மையை. 'சடவினை' என்றது சடத்தன்மையுடையதாகிய வினைஎன்பது பொருளாம்.

'பூதங்கள்' என்றது இறைவன் பூதப்படைகளை. இனி, பஞ்சபூதங்கள் என்பாருமுளர். 'உளவு' இது உள்ளது, உண்மை என்னும் பொருளது. இனி அந்தரங்கத்தை என்பாரும் உண்டு. 'ஒருமை' 'பெருமை' 'இருமை' இவைகள் மையீற்றுப் பண்புப்பெயர்கள். 'நின்னருளில்' இதின் ஈற்றில் நின்ற 'இல்' ஏழனுருபு இடப்பொருளது. 'இருக்கின்' 'இது' 'செயின்' என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். 'பொருததோ,' 'ஓயுமோ,' இடமில்லையோ,' 'சங்கைசெய்திடுவரோ,' 'அடாதென்பரோ' 'குறையுமோ,' பேசுமோ' 'பிறக்கவில்லையோ' 'எதிர்த்து வாய்பேசுமே' என்ற இவைகளின் ஈற்றில்நின்ற ஓகாரங்கள் அனைத்தும் வினாப்பொருளில்வந்தன; வினாக்கள் அனைத்தும் ஐயவினாக்கள். 'அருளுடைய நின்னன்பர்' என்றது தேவரீரின் திருஅருளைப் பெற்றவர்களாகிய அடியார் என்பது பொருளாம். நின் அன்பர் அருளுடையவராதலின் சங்கைசெய்யார் என்னுங் குறிப்புத் தோன்றவே 'அருளுடைய' என்னும் அடைமொழி பெய்துவைத்தார். 'அலது' இது 'அல்லது' என்பதன் தொகுத்தல்விகாரம். 'எம்மை' என்றது ஆன்மவர்க்கங்களை எல்லாம் உணர்த்திநின்றது. இனி அடியார்களை என்பாரும் உளர். 'அடாது' இது 'அடு' என்னும் பகுதியடியாகப்பிறந்த எதிர்மறைப்பெயரெச்சம். 'புகலாய்' இது முன்னிலை ஏவல் வினைமுற்று. 7



எங்குநிறைகின்ற பொருளே! தேவரீரின் அடியாராம் மாதவர்க்கு
ஏவல்செய்து சித்திகளைபெறலாம் ஞானமும் வாய்க்கும் ஆனால்
தேவரீரின் திருஅருள் அடியேன்பால் இல்லாமையை
இல்லாமையாக்கவேண்டும் என்கின்றார்

நில்லாது தேகமெனும் நினைவுண்டு தேகநிலை
நின்றிடவும் மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினை ஐயோ இதனை
நின்றனுட் டிக்கவென் றால்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற் றுணும்புசிப் பொவ்வாதெந் நாளும்உன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராய்இயம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெற லாஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்
கில்லாமை யொன்றினையும் இல்லாமை யாக்கவே
இப்போ திரங்குகண்டாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம் - மேலுலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, தேகம்-இந்த உடம்பு, நில்லாது-நிலைபெற்றிராது, எனும் - என்னும், நினைவு-எண்ணம், உண்டு-உண்டு, தேகம் - இத்தகைய உடம்பு, நிலை-நிலையாக, நின்றிடவும்-நிற்கவும், மௌனி - மோனகுரு, ஆகி - ஆகவந்து, நேர் - நேரான, உபாயம்-தந்திரம், ஒன்று - ஒன்றினை, அருளினை - அருள்செய்தாய், ஐயோ-ஐயோ!, இதனை - இந்த உபாயத்தை, நின்று - அந்நெறியில் நின்று, அநுட்டிக்க - அப்பியசிக்கலாம், என்றால் - என்றால், கல்லாத - படியாத, மனமோ-மனதோ, ஒடுங்கி-ஒடுக்கம்பெற்று, உபரதி-சாந்தியை, பெற-அடைய, காண விலை-பார்க்கவில்லை, ஆகையாலே-ஆகையாலே, கை-கையால், ஏற்று-இரந்து, உண்ணும்-சாப்பிடும், புசிப்பு - சாப்பாடு, ஒவ்வாது - பொருந்தாது, எ-எந்த, நாளும்-காலமும், உன்-தேவரீரின், காட்சியில்-சமுகத்தில், இருந்துகொண்டு-இருந்துகொண்டு, வல்லாளராய் - மனவன்மை உடையவர்களாகி, இயமம் - இயமம், நியமம்-நியமம், ஆதி-முதலிய யோகங்களை, மேற்கொண்ட - செய்து ஒழுகிக்கொண்டிருக்கும், மா-பெரிய, தவர்க்கு - தவத்தினர்க்கு, ஏவல்-பணிவிடையை, செய்து - செய்து, மனதின்-மனதின், படிக்கு-படிக்கு, எல்லாம்-எல்லாம், சித்தி-சித்தியை, பெறலாம் - அடையக்கூடும், ஞானம்-ஞானமும்

வாய்க்கும்-வந்துபொருந்தும், (ஆனால்) ஒரு-ஒரு, மனு-விண்ணப்பம் கேட்டுக் கொள்ளுகிறேன், எனக்கு-அடியேனுக்கு, இங்கு-இப்பொழுது, இல்லாமை-ஒன்றினையும்-ஒன்றைமட்டும், இல் தேவரீரின் திருஅருள் இல்லாமையாகிய, ஒன்றினையும்-ஒன்றைமட்டும், இல் லாமை-இல்லாததன்மை, ஆக்க - ஆக்க, இப்போது - இப்பொழுது, இரங்கு-இரங்கியருள்செய் எ-று.

(வி-ரை) தேகம் புல்நுனிமேல் நீர்த்துளிபோல் நிலை இல்லாதது ஆதலின் 'நில்லாது தேகமெனு நினைவுண்டு' என்றார். இறைவன் திருஅருள் பெற்ற பெரியார் தேகம் அழிவின்றி நித்திய சூரிகளாக இருப்பார்கள் ஆதலின், 'தேகநிலை நின்றிடவு மௌனியாகி நேரே யுபாயமொன்றருளினை' என்றார். ஐயோ இது இரங்கற் பொருளில்வந்த வியப்பிடைச்சொல்; 'கல்லாத மனம்' என்றது கல்வி அறிவில்லாத மனம் என்பதாம். 'உபாதி' என்றது உலகத்து வெறுப்புறல். 'கையேற் றுணும்புசிப்பு' என்றது பிச்சை வாங்கி உண்டலை உணர்த்தியதாம். 'இயமம்' 'நியமம்' என்பவை யோக மார்க்கத்துப் பிரிவுகளை. 'ஆதி' என்றது ஆதனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பவைகளை. 'மனு' என்றது ஈண்டு வேண்டுகை என்னும் பொருளது. 'இல்லாமை' என்றது இறைவன் திருஅருள் இல்லாமையாகிய வறுமை என்பது பொருள். 'இல்லாமையாக்க' என்றது திருவருட்பெருக்கை அருளிச்செய்தல். 'இரங்கு' என்றது இரங்கி அருள் செய்வாயாக என்பதாம். 'சண்டாய்' இது முன்னிலையசைச்சொல். எனும், இலை, உனும், எநாளும், எலாம் இவைகள் முறையே என்னும், இல்லை, உண்ணும், எந்நாளும், எல்லாம் என்பவைகளின் தொகுத்தல் விகாரங்கள். 'உண்டு' குறிப்பு வினைமுற்று. 'ஞானம் வாய்க்கும்' இது உம்மைத் தொகை விகாரத்தாற் றொக்கது. 'இல்லாமை' இது மையீற்று பண்புப் பெயர். 'கண்டாய்' இது முன்னிலை யசைச்சொல்.



எங்குநிறைகின்ற பொருளே! தேவரீரின் அடியர் முத்திச்சுகம்பெற
பல துன்பங்களை அனுபவித்து யோகம் செய்தனர் நாங்கள்
மாதர் போகத்தை விரும்பி அதில் மூழ்கிக்கிடக்கின்றோம்
எப்படி உய்வோம் என்கின்றார்

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்தும்அனல் வெயிலாதி மழையால்
வருந்தியு மூலஅனலைச்
சிரமள வெழுப்பியும் நீரினிடை மூழ்கியுந்
தேகநம தல்லவென்று
சிற்சுக அபேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினர் யாம்பாவியேம்
விரவும்அறு சுவையினொடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ எலாமுடுத்து



மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேறொரு வருத்தமின்றி
இரவுபக லேழையர்கள் சையோக மாயினேம்
எப்படி பிழைப்பதுரையாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம் - மேலுலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு - உயிர்க்கு, உயிராகி - உயிராகி, எங்கும்-எல்லா இடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, மரவுரி - மரவுரியை, உடுத்தும் - உடுத்தும், மலை-மலையில்விளையும், வனநெல்-மலைநெல்லை, கொறித்தும்-கொறித்தும், உதிர்வன-மரத்திலிருந்து உதிர்வனவாகிய, சருகு-சருகுகள், வாயில்-தமது இடத்தில், வந்தால்-வந்துவிழுந்தால், வன்பசி - தனது கொடியபசியை, தவிர்த்தும் - அவற்றையுண்டு ஆறுவித்தும், அனல்-தீ, வெயில்-வெயில், ஆதியால்-முதலியவைகளாலும், மழையால்-மழையாலும், வருந்தியும்-வருத்தப்பட்டும், மூலம்-மூலாதாரத்திலேயுள்ள, அனலை-மூலாக்கினியை, சிரம்-தலையின், அளவு-வரைக்கும், எழுப்பியும்-எழுப்பியும், நீரின்-ஜலத்தின், இடை - மத்தியில், மூழ்கியும்-படிந்தும், தேகம்-இந்தவுடல், நமது - நம்முடையது, அல்ல-அல்ல, என்று-என்று, சிற்சுகம்-ஞானசுகத்தைப் பெற, அபேக்ஷையாய் - விருப்பம் உடையவர்களாய், நின்-தேவரீரின், அன்பர்-பக்தர்கள், யோகம் - யோகத்தை, செலுத்தினர் - நடத்தினர்கள், யாம்-அடியோங்களாகிய, பாவியேம் - பாவிகள், அறு - ஆறாகிய, சுவையினொடு - ருசியுடனே, விரவும்-கலந்த, வேண்டுவ-வேண்டும் உணவுகளைப், புசித்து-உண்டு, அரையில்-இடையிலே, வேண்டுவ-வேண்டியபடி, எல்லாம்-எல்லாவகை ஆடைகளையும், உடுத்து - உடுத்து, மேடை - மேடை, மாளிகை - மாளிகை, ஆதி-முதலிய, வீட்டினிடை - வீடுகளில், வைகி - தங்கி, வேறு - பிற, ஒரு - ஒரு, வருத்தம்-துன்பம், இன்றி-இல்லாமல், இரவு-இரவும், பகல்-பகலும், ஏழையர்கள்-பெண்கள், சையோகம் - புணர்ச்சியே, ஆயினேம் - செய்தோம், எப்படி-எந்தவிதமாக, பிழைப்பது-உய்வது, உரையாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

(வி-ரை) 'மரவுரி' இது மரத்தின் நார்உரி; இது தபோதனர்கள் ஆடையாக உடுப்பது. இதனைச் 'சீரை' என்பர். 'வனநெல்' இது மலையில் விளையும் நெல். 'குறித்து' இது நெற்களை ஒவ்வொன்றாய்ப் பல்லாற்கடித்து உமியைப்போக்கி உண்ணுவது. 'சருகு' என்பது காய்ந்த இலைகள். 'வாயில் வந்தால்' இதற்கு தம்மிடத்தில் வந்தால் என்பதுபொருள். இனி இதற்குத் தம்பன்னசாலை முற்றத்துவந்தால் எனவும், தமது வாயினிடத்துவந்து விழுந்தால் எனவும் பொருள்செய்வாருமுண்டு. 'வன்பசி' இது கொடிய பசி என்பது பொருளாம். பசி கொடியது ஆகையின் 'வன்' எனும் அடைமொழி கொடுத்தார். 'மூலஅனல்' என்றது மூலாக்கினியை. 'சிரமளவு' என்றது லலாடஸ்தானத்திற்கு யோகமுறையால் எழுப்புதலை உணர்த்திற்று.

'நமது' என்றது தேகியை, அதாவது ஆன்மாவை. 'சிற்சுகம்' என்றது ஞானானந்தத்தை. 'யாம்' என்றது உளப்பாட்டுப்பன்மை. யோகுசெய்யும் அறிவும், ஆற்றலும், தவமும் இன்மையால் 'பாவியேம்' என்றனர். 'அறுசுவை' என்றது கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் அறுசுவைகளை உணர்த்திற்று. இதனை, "அறுசுவையுண்டி யமர்ந் தில்லா ளூட்ட" என்ற நாலடியாராலும் அறியலாம்.

'வேண்டுவ' என்றது தமக்கு விருப்பமுள்ள ஆகாரங்களை என்பதாம். 'அரை' இது எண்ணலளவை ஆகுபெயர் இடுப்பை உணர்த்திற்று; இது உடம்பின் பாதிப்பாகமாதலின் 'வேண்டுவ வெலாமுடுத்து' என்று தமது விருப்பப்படி பட்டு, சரிகைநூல் ஆடைகளை உணர்த்திற்று. 'மேடை மாளிகையாதி வீட்டினிடை' என்றது குடியிருப்புக்கேற்ற கட்டடவகைகளை. 'ஏழையர்' என்றது பெண்களை; என்னை? அறிவிற் சுருக்கமுடைமை பற்றி என்க. 'சையோகம்' என்பது புணர்ச்சியை. இச் செய்யுளில்வந்த உம்மைகள் அனைத்தும் எண்ணும்மைகள். 'வன்' இது வன்மை என்பதன் கடைக்குறைவிகாரம். 'நீரினிடை' இதில் இடை என்றது ஏழனுருபு. இடப்பொருள் உணர்த்திநின்றது. 'நீர்' என்றது புண்ணியதீர்த்தம் எனினுமாம். 'சிற்சுகம்' இது சித்து+சுகம் என்ற இருவடசொற்சந்தி. 'சுவையினொடு' இதில் ஒடு என்னும் மூன்றனுருபு. எண்ணுப்பொருளில்வந்தது. 'அரை' இது எண்ணலளவை ஆகுபெயர். 'எலாமுடுத்து' இது எலாமும் உடுத்து என விரிதலின் உம்மைத்தொகை விகாரத்தாற்றொக்கது. 'எலாம்' இது எல்லாம் என்பதன் தொகுத்தல்விகாரம். 'இரவுபகல்' என்றது இரவும் பகலும் என விரிதலின் உம்மைத்தொகை. 'ஆயினேம்' இது இறந்தகாலத் தன்மைப்பன்மை வினைமுற்று. 'உரையாய்' இது முன்னிலை ஏவல் வினைமுற்று.

9

எங்குநிறைகின்ற பொருளே! மாதர் சிற்றின்பம் முத்திக்கிடையூறு
போன்னாட்டினும் வந்து வருத்துதலால் சுகர் அதைத்
துறந்து நிட்டமலையேறியதை உலகத்தார்
அறியாரோ என்கின்றார்

முத்தனைய மூரலும் பவளவா யின்சொலும்
முகத்திலகு பசுமஞ்சளும்
மூர்ச்சிக்க விரகசன் னதமேற்ற இருகும்ப
முலையின்மணி மாலைநால
வைத்தெமை மயக்கிஇரு கண்வலையை வீசியே
மாயா விலாசமோக
வாரிதியி லாழ்த்திடும் பாழான சிற்றிடை
மடந்தையர்கள் சிற்றின்பமோ
புத்தமிர்த போகம் புசித்துவிழி யிமையாத
பொன்னாட்டும் வந்ததென்றால்



போராட்ட மல்லவோ பேரின்ப முத்திஇப்
பூமியி லிருந்துகாண
எத்தனை விகாதம்வரும் என்றுசுகர் சென்றநெறி
இவ்வுலகம் அறியாததோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேலுலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு - உயிர்க்கு, உயிராகி - உயிராகி, எங்கும்-எல்லா இடங்களிலும், நிறைகின்ற - நிறைந்திருக்கின்ற, பொருளே - பொருளே!, முத்து-முத்துவரிசை, அனைய-ஒத்த, மூரலும்-பல்வரிசையும், பவளம்-பவளம் போன்ற, வாய்-வாயிலிருந்துபிறக்கும், இன்-இனிய, சொலும்-சொற்களும், முகத்து - முகத்தினிடத்து, இலகும் - விளங்குகின்ற, பசும் - பசுமையாகிய, மஞ்சளும்-மஞ்சட்பூச்சும், மூர்ச்சிக்க-மூர்ச்சிக்கும்படி, விரகம்-மோகவிரக, சன்னதம் - மிகுதியை, ஏற்ற - அதிகப்படுத்த, இரு - இரண்டாகிய, கும்பம்-கும்பத்தையொத்த, முலையில்-முலையிலே, மணி-ரத்ன, மாலை-மாலைகள், நால-தொங்க, வைத்து-அமைத்து, எம்மை-அடியேங்களை, மயக்கி-மயங்கச்செய்து, இரு - இரண்டாகிய, கண் - கண்களாகிய, வலை - வலையை, வீசி-வீசி, மாயா-மாயையின், விலாசம் - விளையாட்டாகிய, மோகம் - மோக, வாரியில்-சமுத்திரத்தில், ஆழ்த்திடும்-முழுகச்செய்கின்ற, பாழ்-பாழ், ஆன-ஆகிய, சிறு-சிறிய-இடை-இடுப்பையுடைய, மடந்தையர்-மங்கைப்பெண்களின், சிற்றின்பமோ-சிற்றின்பம் என்னிலோ, புத்து - புதிய, அமிர்தம் - அமிர்தத்தை, புசித்து, அநுபவங்களின் அநுபவத்தை அநுபவித்து, விழி-கண் உண்டு, போகம்-சுகானுபவங்களின் அநுபவத்தை அநுபவித்து, விழி-கண்களை, இமையா-இமைக்காத, பொன்னாட்டு-பொன்னுலகத்தும், வந்தது-வந்தது, என்றால்-என்றால், போராட்டம்-யுத்தம், அல்லவோ-அல்லவோ?, பேரின்பம்-பெரிய இன்பத்தை உண்டாக்கும், முத்தி - மோக்ஷத்தை, இ-இந்த, பூமியில்-உலகத்தில், இருந்து-இருந்துகொண்டே, காண-காண, எத்தனை-எவ்வளவு, விகாதம்-வம்புகள், வரும்-உண்டாகும், என்று-என்று, சுகர்-சுகப்பிரமரிஷி, சென்ற-போன, நெறி-மார்க்கம், இ-இந்த, உலகம்-பூலோகம், அறியாததோ-அறியாததோ?, அறிந்ததொன்றே எ-று.

(வி-ரை) முத்து பெண்களின் பல்லுக்கு உவமானப்பொருள்களில் ஒன்றாதலால் 'முத்தனைய மூரலும்' என்றார். 'அனைய' என்றது உவம உருபு. 'மூரல்' என்றது பல்வரிசையை. 'பவளவாய்' இது உவமத்தொகை பவளம் போன்ற வாய் என விரியும் இது மெய் உவமம். 'இன்சொல்' இதில் 'இன்' என்றது இனிமை என்னும் மையீற்றுப் பண்புப்பெயர் மைகெட்டுநின்றது. 'மஞ்சள்' என்றது மஞ்சட்பூச்சை. 'சன்னதம்' என்றது ஆவேசம்; ஈண்டு மோகவெறியை உணர்த்திற்று. முலை, கண் என்பன சாதியொருமை முலைகள், கண்கள் என்பன பொருளாம். 'மணி' இது நவரத்தினங்களுக்குப் பொதுப்பெயர். ஈண்டு ரத்னமணியை உணர்த்திற்று. மண்ணப்பெற்று

விளக்கஞ்செய்தலின் மணி என்றாயிற்று. மண்ணுதல் - கழுவுதல். கண் ஆடவர்களைத் தன்வயப்படுத்துக் காட்டுதலின் 'கண்வலை' என்றார். இது பண்புத்தொகை; கண்ணாகிய வலை என விரியும். 'விலாசம்' என்பது ஈண்டு விளையாட்டைக் குறித்தது. 'வாரிதி' என்றது சமுத்திரத்தை. இது நீண்டதுபற்றி 'வாரிதி' என ஆயிற்று; காரணப்பெயர். பரந்து இருத்தலின் கடலுக்கும் 'பரவை' என ஒருபெயரும் வழங்குவது காண்க. 'சிற்றிடை' பெண்களுக்கு இடை சிறுத்து இருத்தல் உத்தம லட்சணமாதலின் 'சிற்றிடை' என்றார். இது சிறுமை+இடை என்ற இருசொற்களின் சந்தி. 'ஈறுபோதல்' என்னும் சூத்திரவிதியால் சிறுமை என்பதன் ஈற்று மைகெட்டு ஒற்று இரட்டிற்று. 'இடை' இது தேகத்தின் நடுப்பக்கத்தி லிருப்பதால் இடை, நடு எனப் பெயராயிற்று.

'மடந்தை' இது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் பெண்களின் எழுபருவத்தில் பதினைந்து வயதுமுதல் பத்தொன்பது வயதுவரையுள்ள பெண்ணைக்குறிக்கும் சொல்இங்கு ஆகுபெயராக அப்பருவமுடைய பெண்ணை உணர்த்திற்று. 'சிற்றின்பம்' இச்சுகம் 'தினப்போதே அவர் இன்பம்' என்றபடி சிறிய அளவுகாலம் அனுபவிக்கும் சுகமாதலின் சிற்றின்பம் எனப் பெயராயது. 'புத்தமுதபோகம் புசித்து விழி இமையாத' என்பது பொன்னாட்டுக்கு அடைமொழி. 'பொன்னாட்டும்' இதின் ஈற்றில் நின்ற உம்மை உயர்வுச் சிறப்பும்மை. 'போராட்டம்' என்றது தொந்தரவுதருவது கஷ்டம்தருவது என்பது பொருளாம். 'பேரின்பமுத்தி' இது பேரின்பமாகிய முத்தி என விரிதலின் பண்புப்பெயர். பேரின்பம் எல்லை இல்லாதகாலம் அனுபவிக்கப் படுதலின் பேரின்பம் என்றாயிற்று. 'முத்தி' என்றது வேதனைகள் விடுபட்ட நிலையை உணர்த்தும். 'விகாதம்' என்றது வழக்கத்தை, தொந்தரையை. 'சுகர்' இவர் கிளி வயிற்றில், கிளி முகத்தோடு பிறந்தமையால் இப்பெயர் வந்தது. (சுதம்-கிளி) இவர் பிரமஞானி. உலகத்தில் தங்கினால் மாயைபற்றிக் கொள்ளும் என ஓடோடியும் நிடதமலை ஏறி நின்றவர். 'அறியாததோ' ஈற்று ஓகாரம் வினா இடைச்சொல்; விடைதழுவிய வினா, உலகம் அறிந்ததே என்பது பொருள். 10

எங்குநிறைகின்ற பொருளே! ஆணவம் ஒடுங்கவும், மாயை தொலையவும் பேரானந்தத்தே அடியேன் நிலைக்கவும் நல்லருள்செய்த திருமூர்த்தம் எக்காலமும் வாழி என்கின்றார்

உன்னிலையும் என்னிலையும் ஒருநிலை யெனக்கிடந்
 துளறிடும் அவத்தையாகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்
 டொளிக்கின்ற இருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்கஇரு வினையினால்
 தாவுசுக துக்கவேலை



தட்டழிய முற்றுமில் லாமாயை யதனால்
 தடித்தகில பேதமான
முன்னிலை யொழிந்திட அகண்டிதா காரமாய்
 மூதறிவு மேலுதிப்ப
முன்பினொடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னாமல்
 முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க இயல்புகூ ரருள்வடிவம்
 எந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
 எங்குநிறை கின்றபொருளே.

(ப-ரை) இகம்-இவ்வுலகம், பரம்-மேல்உலகம், இரண்டினிலும்-இரண்டு உலகங்களிலும், உயிரினுக்கு - உயிர்களுக்கு, உயிராகி - உயிராகி, எங்கும் - எல்லா இடங்களிலும், நிறைகின்ற - நிறைந்து இருக்கின்ற, பொருளே - பொருளே!, உன் - தேவரீரின், நிலையும் - நிலைமையும், என் - அடியேனது, நிலையும்-நிலைமையும், ஒருநிலை-ஒரேநிலைமை, என-என்றுகொண்டு, கிடந்து-கிடந்து, உளறிடும் - உளறும், அவத்தையாகி - அவஸ்தைஆகி, உருவுதான்-தனது வடிவத்தை, காட்டாத-காண்பிக்காத, ஆணவமும்-ஆணவமும், ஒளி-பிரகாசத்தை, கண்டு-பார்த்து, ஒளிக்கின்ற - மறைகின்ற, இருள் - இருட்டு, என்ன-என்று ஒப்பக்கூற, தன்நிலை - தன்னுடையநிலைமையை, காட்டாது - காண்பிக்காமல், ஒருங்கு-ஒரேமட்டமாக, இரு - இரண்டாகிய, வினையினால்-வினைகளினால், தாவு-அலைகளோடுதாவுகின்ற, சுகம்-சுகமும், துக்கம் - துக்கமுமாகிய, வேலையினால்-சமுத்திரத்தினால், தட்டழிய - தடுமாற்றமடைந்து கெட, (அதனால்) முற்றும்இல்லா - முழுதும்இல்லாததாகிய, மாயா - மாயையினால், தடித்து - உருவம்பெற்று, அகிலம் - அநேகமாகிய பிரபஞ்சத்தின், பேதம் - வேறுபாடு, ஆன - ஆகிய, முன்னிலை-முன்னிலைச்சுட்டு, ஒழிந்திட-தொலைய, அகண்டிதாகாரமாகி-பிரிக்கப்படாத ஒரேபெருவடிவாய், மூதறிவு-பேரறிவு, மேல்-அதிகம் அதிகமாக, உதிப்ப-தோன்ற, முன்-முன், பின்-பின், ஒடு-உடன், கீழ்-கீழும், மேல்-மேலும், நடு-நடுவும், பக்கம்-பக்கமும், என்னாமல்-என்றுகூறாமல், முற்றும் - முடிவடைகின்ற, ஆனந்தம் - பேரின்பத்தின், நிறைவே-பூரணமே, என்-அடியேனின், நிலை-நிலைமை, ஆய்-ஆகி, நிற்க-அதன்கண் நிலைத்திருக்கும்படி, இயல்பு-அடியேனுக்கு நல்லதன்மையை, கூர்-அருளிச்செய்த, அருள் - திருஅருளின், வடிவம்-வடிவமானது, எ-எந்த,நாளும்-காலத்தும், வாழி-வாழ்ந்திருக்கக்கடவது, வாழி-வாழ்ந்திருக்கக்கடவது எ-று.

(வி-ரை) 'உன் நிலையும்' என்றது இறைவன் தன் நிலைமையை. 'என் நிலையும்' என்றது ஆன்மாவின் நிலைமையை. 'ஒருநிலை' என்றது ஒரே தன்மையுடைய நிலை என்பது பொருளாம். இறைவன் நிலைமையும் ஆன்மாவின் நிலைமையும் ஒன்றே என்று எண்ணுவதும் பேசுவதும் பேதமைச்செயல் ஆதலின் 'உளறிடு மவத்தையாகி' என்றார். ஆணவம் எல்லா ஆட்டங்களை

யும் ஆடும்படி மருட்டிவிட்டுத் தன்னைக்காட்டாது இருப்பதொன்றாதலின் 'உருவுதான் காட்டாத ஆணவமும்' என்றார். 'இருவினை' என்றது நல்வினை தீவினைகளை. தீவினை இரும்பு விலங்கும், நல்வினை பொன்விலங்கு போல்வதும் ஆதலின் இருவினையும் கூடாததாம். தீவினையாற் றுக்கமும், நல்வினையால் சுகமும் எய்தும் இவ் இருவினையும் பிறப்புக்குக் காரணங்களே. இவ் இருவினைகளும் மாயையால் ஏற்படுவனவே இதுகொண்டே 'ஒருங்கவிரு வினையினாற்றாவு சுகதுக்க வேலைதட்டழிய முற்றுமில்லா மாயையதனால்' என்றார். 'மாயை' என்பது விசாரணையில் இல்லாது போவதால் 'முற்றும் இல்லாமாயை' என்றார். 'தாவு' என்றது அவாய் நிலையால் அலைதாவு என அலையென்னுஞ்சொல் வருவித்துரைக்கப் பெற்றது. 'சுகதுக்கவேலை' இது சுகதுக்கங்களாகிய சமுத்திரம் என விரிதலின் பண்புத்தொகை. 'தட்டழிய' என்றது தன் நிலைகுலைந்து கெடுதலைக்குறித்து நின்றது.

முன்னிலைச்சுட்டு ஒழிந்த ஞான்றே மெய்ஞ்ஞான விளக்கம் ஆம் ஆதலினால் 'அகிலபேதமான முன்னிலை யொழிந்திட அகண்டிதாகாரமாய் மூதறிவுமேலுதிப்ப' என்றார். முன்னிலைச்சுட்டு ஒழியின் மெய்ஞ்ஞானம் உதிக்கும் இந்த மெய்ஞ்ஞானமாகிய சிவஞானம் உதித்தபோதே எங்கும் ஆனந்தமயமாகக் காணுமாதலின் 'மூதறிவு மேலுதிப்ப முன்பினொடு கீழ் மேல் நடுப்பக்க மென்னாமல் முற்றுமானந்த நிறைவே என்நிலைமையாய் நிற்க' என்றார். 'இயல்புகூர் அருள்வடிவம்' என்றது குருவடிவமாக எழுந்தருளி வந்த திருமூர்த்தத்தை உணர்த்தியதாம். அந்த திருக்குருமூர்த்தம் என்றும் மறையாது தனக்குத் தோன்றிக்கொண்டிருக்க வேண்டுமென்பார் 'இயல்பு கூர் அருள்வடிவம் எந்நாளும் வாழிவாழி' என்றார். 'வாழிவாழி' இது மகிழ்ச்சியால் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். ஆணவம் அடங்கவும், மாயை அழியவும், முன்னிலைச்சுட்டு ஒழியவும் அறிவு மேல் உதிக்கவும் எங்கும் நிறைந்த ஆனந்தமயமேயாக அடியேன் விளங்கவும் அருள்செய்த திருக்குரு மூர்த்தம் வாழிவாழி என்கின்றார். இச் செய்யுள்களில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'உளறிடும்' இதில் இடும் என்பது துணைவினை. 'ஆகி' இது இறந்தகால வினையெச்சம். 'ஒளிக்கின்ற' இது நிகழ்காலப் பெயரெச்சம். 'என்ன' இது உவம உருபு. 'என்னவே' ஈற்று ஏகாரம் தேற்றேகாரம். 'மாயை' இது மயக்குவது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். 'அகண்டிதம்' இது கண்டிக்கப்படாதது என்னும் பொருளது இது வடசொல் இதில் அகரம் எதிர்மறை உபசர்க்கம், 'ஆகாரம்' என்றது வடிவத்தை. இது வடசொல். 'முன்பினொடு' இதில் நின்ற 'ஒடு' என்னும் உருபு எண்ணுப்பொருளில் வந்தது. 'ஆனந்த நிறைவு' என்றது இன்பபரிபூரணத்தை. 'நிற்கஇயல்பு' இதில் நிற்க என்பது செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'ஒளிகண் டொளிக்கின்ற இருளென்னவே' என்பது உபமானம். 'உருவு தான் காட்டாத ஆணவமும் தன்நிலைமை காட்டாது' எனபது உபமேயம். இது **எடுத்துக்காட் டுவமையணி.**





## சச்சிதானந்தசிவம்

சச்சிதானந்த சிவமே! அடியேன் மனத்தைச் சார்ந்து பேயாய்த் திரியாதபடி நிர்விகற்ப சாசுவத நிட்டையை அடியேனுக் குத் தந்தருள்க என்கின்றார்

பாராதி ககனப் பரப்புமுண் டோவென்று
படர்வெளிய தாகிஎழுநாப்
பரிதிமதி காணாச் சுயஞ்சோதி யாய்அண்ட
பகிரண்ட உயிரெவைக்கும்
நேராக அறிவாய் அகண்டமாய் ஏகமாய்
நித்தமாய் நிர்த்தொந்தமாய்
நிர்க்குண விலாசமாய் வாக்குமனம் அணுகாத
நிர்மலா னந்தமயமாய்ப்
பேராது நிற்றிநீ சும்மா இருந்துதான்
பேரின்ப மெய்திடாமல்
பேய்மனதை யண்டியே தாயிலாப் பிள்ளைபோல்
பித்தாக வோமனதைநான்
சாராத படியறிவின் நிருவிகற் பாங்கமாஞ்
சாசுவத நிஷ்டை அருளாய்
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதாநந்தம்-உண்மை அறிவு ஆனந்தம் என்னும் மூன்றுருவும் ஒருருவாகக் கொண்ட, சிவமே - சிவமெனும் மங்களாகரப்பொருளே!, பார்-பூமி, ஆதி-முதலான, ககனம்-ஆகாயப், பரப்பும்-பரப்பும், உண்டோ - உள்ளதாக இருக்கிறதோ, என்று-என்று சந்தேகமுறும்படி, படர் - எங்கும் பரவியுள்ளதாகிய, வெளியது - பரம ஆகாசம், ஆகி - ஆகி, எழுநா - அக்கினியும், பரிதி - சூரியனும், மதி - சந்திரனும், காணா - தோற்றஞ்செயாத, சுயம்-சுயம், சோதியாய்-பிரகாசமாகி, அண்டம் - உலகத்திலும், பகிரண்டம் - பகிரண்டங்களிலுள்ள, உயிர் - உயிர்கள், எவைக்கும் - எல்லாவற்றிற்கும், நேராக-ஒழுங்காக, அறிவாய்-அறிவுமயமாய், அகண்டமாய் - கண்டிக்கப்படாத பூரண உருவாய், ஏகம்-தனிப்பொருள், ஆய்-ஆகி, நித்தம் - என்றும் உள்ளது, ஆய்-ஆகி, நிர்த்தொந்தம்-தொடர்புஇல்லாதது, ஆய்-ஆகி, நிர்க்குணம்-குணமற்ற, விலாசமாய் - திருவிளையாட்டை உடையதாகி, வாக்கு-சொல்லும், மனம்-மனமும், அணுகாத-வந்து கிட்டமுடியாத, நிர்மல-மலமற்ற, ஆனந்தம்-பேரின்பவடிவம்,

ஆய்-ஆகி, பேராது - அசையாது, நீ - தேவரீர், நிற்றி - நின்றிருக்கின்றாய், சும்மா-சும்மா மௌனமாக, இருந்து-இருந்து, பேரின்பம்-பெரிய சிவானந்த இன்பத்தை, எய்திடாமல் - அடையாமல், பேய் - பேய்த்தன்மையையுடைய, மனதை - மனத்தை, அண்டி-சார்ந்து, தாய்-தாய், இலா-இல்லாத, பிள்ளை-குழந்தையை, போல்-போல, பித்து - பித்து, ஆகவோ-ஆகிடவோ, மனதை-மனத்தை, நான் - அடியேன், சாராத - சேராத, படி - விதமாக, அறிவின்-அறிவினுடன் கூடிய, நிருவிகற்பம்-நிருவிகற்பம் என்னும், அங்கம்-உறுப்பை, ஆம்-கொண்டுள்ள, சாசுவதம் - என்றும் உள்ள அழியாத, நிஷ்டை-சகசநிட்டையை, அருளாய்-அடியேன்பெறத் தயவு புரிவாயாக எ-று.

**(வி-ரை)** இதுமுதல் பதினொருபாடல்களால் ஆகிய இப்பதிகத்தின் ஈற்றிலெல்லாம் 'சர்வபரிபூரண வகண்டதத்துவமான சச்சிதானந்த சிவமே' என்பது மகுடமாக அமைந்து ஈற்றில் 'சச்சிதானந்தசிவமே' என முடிதலின் இப்பதிகத்திற்குச் **சச்சிதானந்தசிவம்** எனப் பெயர் எய்தியது. பராகாயத்துள் பூதாகாயமும் மற்றைப்பூதங்களும் ஒடுங்குமாதலின் 'பாராதி ககனப் பரப்பு முண்டோவென்று படர் வெளியதாகி' என்றார். பார் என்றது பிருதிவியை. 'ககனம்' என்றது பூதஆகாயத்தை. 'பாராதி ககனம்' என்றதனால் மண்முதல் ககனம் ஈறாகவுள்ள ஐந்துபூதங்களையுங்கொண்டுநின்றது. மண், நீர், தீ, கால், விண் என்பனவைந்தும் பூதங்களாகும். 'எழுநா' என்றது அக்கினியை. அக்கினிக்கு எழுநாக்குள என்று புராணங் கூறுதலின் அக்கினியை 'எழுநா' என்றார். 'பரிதி' இது சூரியனைக் குறித்தது. சூரியன் பரும் தீவட்டவடிவாய் இருத்தலின் சூரியனைப் 'பரும்தீ' என வழங்கி வந்தனர்; நாளடைவில் அச்சொற்கள் இரண்டும் மருவி 'பரிதி' என வந்த தென்ப தூகித்தறியற்பாலதாம். 'சுயஞ்சோதி' என்றது தானே பிரகாசமுடையதாய்த் தான் எல்லாவற்றிற்குஞ் சோதிதருவதாய்த் தனக்கு ஒன்று பிரகாசந்தராததாய்த் விளங்கும் இறைவனை உணர்த்திற்று. 'அண்டம்' இது ஆன்மாக்கள் அண்டியிருந்து முத்திப்பேறு எய்தற்கு ஆதாரமாக இருத்தலின் அண்டம் எனப் பெயராயிற்று. இதற்கு அண்டியிருக்கப்பெறுவது என்பது பொருளாம். 'பகிரண்டம்' என்ற இப்பூலோகத்திற்குப் புறம்பேயுள்ள அண்டங்களை உணர்த்திற்று. 'அகண்டமாய்' என்றது கண்டிக்கப்படாததாய் என்னும் பொருளது. என்னை? இறைவன் பின்னமில்லாது அபின்னனாக நிற்றலின் என்க.

"தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடி"

என்ற **மணிவாசகத்** திருவாய்மொழிபோல் இறைவன் தனிப்பொருளாதலின் 'ஏகமாய்' என்றார்.

இறைவன் ஈறின்றி என்றும் உள்ளவனாதலின், 'நித்தமாய்' என்றார். இறைவன் பாசபந்தத் தொடர்பு அற்றவனாதலின் 'நிர்த்தொந்தமாய்' என்றார். இறைவன் 'குணரகிதன்' குணங்களை எல்லாம் கடந்து நிற்பவனாதலின் 'நிர்க்குண விலாசமாய்' என்றார். வைகரிசம்பந்தமான வாக்குக்



கும், மாயாசம்பந்தமான மனதுக்கும் எட்டாததாதலின் இறைவனாதலினாலும், இறைவன் களங்கமற்ற இன்பபரிபூரண வடிவினனாதலினாலும், 'வாக்குமனமணுகாத நிர்மலானந்த மயமாய்' என்றார். 'சும்மா இருந்து' என்றது திரிகரணசேட்டை அடங்கி மௌனமாக இருத்தலைக் குறிப்பதாம். 'பேரின்பம்' என்றது சிவானந்தமாகிய பேரின்பத்தைக் குறித்தது. மனம் போனவழி எல்லாம் போனால் துன்புண்டாம் இதுகொண்டே 'பேய்மனதை யண்டியே தாயிலாப்பிள்ளைபோற் பித்தாகவோ' என்றார். இதுபற்றியன்றோ **ஔவைப் பிராட்டியாரும்,**

"மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்றாள்.

'நிருவிகற்பம்' என்றது பேதமின்மை. வேறுபாடு இல்லாமை; அதாவது இறைவனும் தானும் ஒன்றாகிப் பொருந்திக்காணும் தன்மையை உணர்த்திற்று. நிருவிகற்பமே அத்துவிதநிலை. 'சாசுவதநிட்டை' என்றது சதாநிட்டையை; இடையறா நிட்டையை. இறைவன் எல்லாவற்றுள்ளும் எள்ளுக்குள் எண்ணெய்போல் விளங்கியிருத்தலின் 'சர்வபரிபூரண' என்றார். இறைவன் அறிந்த எல்லாத் தத்துவங்களாகவும் அவைகள் அல்லாது அவைகளுக்குமேற்பட்ட ஒருபொருளாகவும் இருத்தலினால் 'அகண்ட தத்துவமான' என்றார். இறைவன் உண்மைப்பொருளாகவும், அறிவுப்பிழம்பாகவும், ஆனந்தமயமாகவும் இருக்கும் மங்களப்பொருளாதலினால் 'சச்சிதானந்த சிவமே' என்றார். 'ககனப்பரப்பும்' இதன் ஈற்று உம்மை உயர்வு சிறப்பு உம்மை. 'உண்டோ' ஈற்று ஓகாரம் ஐயவினாப்பொருளில்வந்தது. 'எழுநா' இது சினையாகுபெயர். 'எவைக்கும்' என்றதின் ஈற்று உம்மைமுற்றும்மை. 'ஆய்' என்னும் வினையெச்சங்கள் அனைத்தும் 'நிற்றி' என்னும் முன்னிலை வினைமுற்றைக்கொண்டு முடிந்தன. 'தாயிலாப்பிள்ளை' என்றது உபமானம். 'போல்' இது உவமஉருபு. 'அண்டியே' இதில் ஈற்றில்நின்ற ஏகாரம் தேற்றேகாரம். 'அருளாய்' இது முன்னிலை ஏவல்வினைமுற்று. 1

சச்சிதானந்த சிவமே! பொய்யுடலைப் பொய்யென்றறிந்து ஞான மயமாய் நிற்பது எந்தநாளோ என்கின்றார்

குடக்கொடு குணக்காதி திக்கினை யுழக்கூடு
  கொள்ளல்போல் ஐந்துபூதங்
கூடுஞ் சுருங்கிலைச் சாலேகம் ஒன்பது
  குலாவுநடை மனையைநாளும்
வடக்கயிறு வெள்நரம் பாஎன்பு தசையினால்
  மதவேள் விழாநடத்தி
வைக்கின்ற கைத்தேரை வெண்ணீர்செந் நீர்கணீர்
  மலநீர்புண் நீரிறைக்கும்
விடக்குத் துருத்தியைக் கருமருந்துக் கூட்டை.
  வெட்டவெட்டத்தளிர்க்கும்

வேட்கைமரம் உறுகின்ற சுடுகாட்டை முடிவிலே
மெய்போ லிருந்துபொய்யாஞ்
சடக்கைச் சடக்கெனச் சதமென்று சின்மயந்
தானாகி நிற்பதென்றோ
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதானந்தம்-உண்மை அறிவு ஆனந்தம் என்னும் மூன்று உருவும் ஓர் உருவாகக்கொண்ட, சிவமே - சிவமென்னும் மங்களாகரப் பொருளே!, குடக்கொடு-மேற்குடனே, குணக்கு-கிழக்கு, ஆதி-முதலாகிய, திக்கினை - திக்குகளை, உழக்கூடு - உழக்கினிடத்தே, கொள்ளல் - காணுதல், போல்-போல, ஐந்து-ஐந்தாகிய, பூதம்-பூதங்கள், கூடும்-சேர்கின்ற, சுருங்கு-சிறிய, இலை-வீட்டை, சாலேகம் - சன்னல்கள், ஒன்பது - ஒன்பது, குலவும்-விளங்கும், நடை - நடக்கும் இயல்புகொண்ட, மனையை - வீட்டை, நாறும்-நாற்றமெடுக்கின்ற, வடம்கயிறு-வடக்கயிறு, வெள்-வெண்மையாகிய, நரம்பு-நரம்பு, ஆ-ஆக, என்பு-எலும்பு, தசை-மாமிசம் முதலியவைகளால், மதவேள்-மன்மதன், விழா - திருவிழாவை, நடத்தி - நடத்தி, வைக்கின்ற-வைக்கின்ற, கைதேரை - சிறுதேரை, வெள் - வெண்மையாகிய, நீர்-நீரும், செம்-செவப்பு, நீர்-நீரும், கண் - கண்களின், நீர் - நீரும், மலம் - மலமும், நீர் - நீரும், புண்-புண்ணின், நீர்-நீரும், (ஆகிய இவைகளை) இறைக்கும் - சிந்துகின்ற, விடக்கு-மாமிசத்தாலாகிய, அருத்தியை-திருத்தியை, கரு-ஜன்மம் என்னும், மருந்து-மருந்துவிளைகின்ற, கூட்டை - கூட்டினை, வெட்டவெட்ட - வெட்டவெட்ட, தளிர்க்கும்-தழைகின்ற, வேட்கை-ஆசையாகிய, மரம்-மரங்கள், உறு-அமைந்துள்ள, சுடுகாட்டை-சுடுகாட்டை, முடிவிலே-முடிவில், மெய்போல்-உண்மையைப்போல், இருந்து-இருந்து, பொய்யாம்-பொய்யாய் அழிகின்ற, சடக்கை-சரீரத்தை, சடக்கு - பொய், என - என்றும், சின்மயம்-ஞானமயமே, சதம்-உண்மை, என்று-என்று, தானாகி-தானாகி, நிற்பது-நிற்பது, என்றோ-எந்தக் காலமோ எ-று.

(வி-ரை) 'குடக்கு' என்றது மேற்குத்திக்கை. 'குணக்கு' என்றது கிழக்குத்திக்கை. 'ஆதி' என்றதனால் வடக்கும் தெற்கும் வருவித்துரைக்கலாயிற்று. 'உழக்கிலே கிழக்கு மேற்கா' என்பது பழமொழி ஆதலின் 'குடக்கொடு குணக்காதி திக்கினையுழக்கூடு கொள்ளல்போல்' என்றார். இத்தேகம் ஐம்பூத பரிணாமமாக இருத்தலினால் 'ஐம்பூதங் கூடுஞ் சுருக்கிலை' என்றார். ஐம்பூதங்களாவன:—மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பனவாம். சுருக்கிலை. சுருக்கம்+இல்+ஐ என்பது சுருக்கிலை என ஆயிற்று. 'இல்லை' என்பது 'இலை' என ஆயினது தொகுத்தல் விகாரம். சுருங்கியவீடு, அதாவது சிறுவீடு என்பது பொருளாம். தேகம் ஆன்மாவுக்கு உறை உள் ஆக வீடாக இருத்தலின் 'இல்' என்றார். இதனை,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு"

"புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு"

என்னுந் **திருக்குறட்பாக்களா**லும் நன்கறியலாம்.

ஒன்பது துளைகளை உடையது தேகமாதலினாலும், நடக்கும் தன்மை கொண்டுள்ளமையாலும் 'சாலேகமென்பது குலாவுநடை மனையை' என்றார். 'சாலேகம்' சன்னல். 'நாறும்' என்றது, புலால் நாற்றம் நாறும் என்பது பொருளாம். இனி நாறும் என்பதற்கு வெளிப்படத் தோன்றுவனவாகிய எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'வடக்கயிறு' இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடமாகிய கயிறு எனவிரியும். இதற்கும் பெருங்கயிறு எனவும் பொருள் கூறுவர். வடம் என்பதும் கயிறு என்பதும் ஒருபொருட் சொற்கள். 'ஒருபொருட் பன்மொழி சிறப்பினில்வழா' என்ற **இலக்கணத்**தால் சிறப்புப்பொருளில் வந்தது. 'என்பு' இது எலும்பு என்பதன் விகாரம்.

'மதவேள்' என்றது மன்மதனை. வேள் என்பது முருகக்கடவுளுக்கும் மன்மதனுக்கும் பெயராதலின் முருகக்கடவுளினின்றும் பிரித்து மன்மதனைச் சுட்டிக்காட்ட மதவேள் என்றார். 'வேள்' இதற்கு விருப்பம் என்பது பொருள். இம்மதன் விருப்பத்தை ஊட்டுவிக்கின்றவனாதலின் அவனுக்கு அப்பெயர் வந்தது. முருகக்கடவுள் அடியார்களால் விரும்பப்படுபவனாதலின் அம்முருகக்கடவுட்கும் அப்பெயர் வந்தது. மன்மதனினின்றும் பிரித்துக்கூற முருகக்கடவுளை 'செவ்வேள்' என்பர். என்னை? மன்மதன் நிறம் கருப்பு, முருகக்கடவுள் நிறம் சிவப்பு ஆதலினால் என்க. 'கைத்தேர்' என்பதில் ஈண்டு கை என்பது சிறுமை காட்டுகின்றது இதற்குச் சிறுதேர் என்பது பொருளாம். 'வெண்ணீர்' என்றது கோழையை. 'செந்நீர்' என்றது இரத்தத்தை. 'கண்ணீர்' என்றது கண்ணிலிருந்து வடியும் நீரை. 'மலநீர்' இது மலமும் நீரும் என உம்மைத்தொகையாகவும், மலமாகிய நீர் என பண்புத்தொகையாகவும் பொருள்தரும். 'மலநீர்' என்பது மூத்திரத்தை. 'புண்ணீர்' என்றது மாமிசத்து நீரை. 'விடக்குத்திருத்தி' என்றது மாமிசப்பை என்பதாம்; இதைத் தோற்பை என்பாரும் உண்டு. இதனை

"தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானால்"

என்னும் **நாலடியாரா**லும் அறியலாம். தேகம் வினையினால் வந்தது, வினைக்கிருப்பிடம் ஆதலின் வினையே பிறப்புக்குக்காரணம் ஆதலினாலும் இத்தேகத்தைக் 'கருமருந்துக் கூட்டை' என்றார். தேகம் ஆசைக்கிருப்பிடமாதலினாலும், ஆசை என்னும்பற்று அகற்ற அகற்ற மேலும் தளிர்ப்பது ஆதலி

னும் 'வெட்ட வெட்டத்தளிர்க்கும் வேட்கைமரம் உறும் சுடுகாட்டை' என்றார். 'அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாப்பிறப்பீனும் வித்து' என்ற திருக்குறட்பாவும் ஈண்டுகருதிக் காணத்தக்கது. இத்தேகம் மெய்போலிருந்து மங்கலவழக்கால் மெய் என்றும் பெயர்பெற்று முடிவிலே பொய்யாய் நீர்மேல் எழுத்தாய் முடிவதால் 'மெய்போலிருந்து பொய்யாம் சடக்கை' என்றார். 'சடக்கைச் சடக்கென' என்பதில் முதல்சடக்கு சரீரம் என்றும் இரண்டாவது சடக்குப் பொய் என்றும் பொருள் தந்தது ஆதலின் **சொற்பிரிதி நிலையணி**. 'சின்மயம்' இது சித்து+மயம் என்னும் இருசொற் சந்தி இதற்கு ஞானமயம் என்பது பொருளாம். 'சின்மயம் தானாகி நிற்பது' என்றது சின்மயத்தோடு இரண்டறக்கலந்து நிற்பது என்பது பொருளாம். 'வெட்டவெட்ட' இது மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. 'வேட்கை மரம்' இது வேட்கையாகிய மரம் என விரிதலின் பண்புத்தொகை. வேட்கையை மரமாக உருவகஞ்செய்தலின் **உருவக அணி**. 2

**சச்சிதானந்த சிவமே! முத்தி விருப்பே பெருமையுடையது என்கின்றார்**

பாகத்தி னாற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லைவேத
பாராய ணப்பனுவல் மூவர்செய் பனுவலது
பகரவோ இசையுமில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் றால்தேகம்
ஒவ்வா திவூண்வெறுத்தால்
உயிர்வெறுத் திடலொக்கும் அல்லாது கிரியைகள்
உபாயத்தி னாற்செய்யவோ
மோகத்தி லேசிறிதும் ஒழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தில் நிற்கஎன்றால்
முற்றாது பரிபாக சத்திக ளனேகநின்
மூதறிவி லேஎழுந்த
தாகத்தி லேவாய்க்கும் அமிர்தப் பிரவாகமே
தன்னந் தனிப்பெருமையே
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதானந்தம்-உண்மை அறிவு ஆனந்தம் என்னும் மூன்று உருவும் ஒரு உருவாகக்கொண்ட, சிவமே - சிவமென்னும் மங்களாகரப் பொருளே!, பாகத்தினால்-பாகமாக, கவிதை - பாடல்களை, பாடி-பாடி, படிக்கவோ-படிக்கிறதற்கோ, பத்தி-அடியேனுக்குப்பக்தி, நெறி-மார்க்கம், இல்லை-



இல்லை, வேதம் - தமிழ்வேதங்களாகிய, பாராயணம்-பாராயணஞ் செய்தற்கு உரியதாகிய, மூவர்-ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்திகளாகிய மூவர்கள், செய்-செய்துள்ள, பனுவலது - தேவாரமாகிய அந்நூலை, பகரவோ - பாடு தற்கோ, இசையும்-இராகமும், இல்லை-இல்லை, யோகத்திலே-யோகமார்க்கத் திலே, சிறிது - கொஞ்சம், முயல - முயற்சிக்கலாம், என்றால் - என்றாலோ, தேகம் - இந்தத்தேகம், ஒவ்வாது - சரிப்பட்டுவராது, இவ் - இந்த, ஊண்- உணவை, வெறுத்தால்-வெறுத்துவிட்டால், உயிர் - உயிரை, வெறுத்திடல்- வெறுத்து விடுவதை, ஒக்கும் - ஒத்திருக்கும், அல்லாது-அல்லாமல், கிரியை கள் - கிரியைகளை, உபாயத்தினால் - தந்தரமாக, செய்யவோ - செய்தற்கோ, மோகத்திலே-மோகத்திலே, சிறிதும் - கொஞ்சமாகிலும், ஒழிய-நீங்க, இலை- இல்லை, மெய்ஞ்ஞானம் - மெய்ஞ்ஞானத்திற்கு வரம்பாகிய, மோனத்தில் - மௌனத்தில், நிற்க-நிற்கலாம், என்றால்-என்றாலோ, முற்றாது - அது முடிவு எய்தாது, (ஏனெனில்) பரிபாகம் - (அடியேனைத் தடைசெய்தற்கென்று) பரி பக்குவப்பட்டுள்ள, சத்திகள்-சத்திகள், அநேகம் - கணக்கற்றன, நின்-தேவரீ ரின், மூதறிவிலே-பேரறிவிலே, எழுந்த-உதித்த, தாகத்திலே - முத்திதாகத் திலே, வாய்க்கும்-கிடைக்கும், அமிர்தம்-அமிர்தமயமான, பிரவாகமே-வெள் ளமே, தன்னந்தனி-ஒப்பற்ற, பெருமையே-பெருமையுடையதாகும் எ-று.

(வி-ரை) 'பாகத்தினால்' என்பது பாகமாக என்னும் பொருளதாம். பாகம் என்றது இதபாகமாக, இனிமையாக என்ற பொருளதாம். இனி, கவிகள், திராக்ஷாபாகம், கதலீபாகம், நாரிகேளபாகம், என் மூன்றுவிதப் படும். அவற்றுள் திராக்ஷாபாகமும், கதலீபாகமும் இனிமையுடையது ஆதலின் திராக்ஷாபாகமாகவும், கதலீபாகமாகவும் ஆகிய இரண்டு விதத்தினால் பாடி எனப் பொருள்விசேடித்துக் கூறலுமாம். பாகு+அத்தில் எனப்பிரித்து சர்க்கரைப்பாகின் பதத்தில்பாடி எனக்கொள்ளலுமாம். 'கவிதை' என்றது செய்யுளை. 'பாடி' என்றது புதுவதாகப்புனைதலை. 'பத்திநெறி' என்றது பத்திமார்க்கத்தை. 'வேதம்' என்றது தமிழ்வேதங்களை. 'பனுவல்' என்பது பாட்டு, நூல் என்னும் பொருளது. 'மூவர்' என்றது திருஞானசம்பந்தர், திருநாவுக்கரையர், சுந்தரமூர்த்திகள் என்னும் மூவரை யுணர்த்திற்று. என்னை இவர்களே தேவாரம் என்னும் அடங்கன்முறையாகிய தமிழ்வேதம் பாடினவர்கள் ஆதலின் என்க. 'இசை' என்பது இராகத்தை, அல்லது பண்ணை. 'யோகம்' என்றது சரியை முதலாகிய நான்குபாதங்களில் மூன்றாவ தாகநின்ற யோகத்தை. உண்டியில் ஒருபாகம் உயிர்ச் சத்தாகமாறுதலினால் 'ஊண் வெறுத்தல் உயிர் வெறுத்திடலொக்கும்' என்றார். 'கிரியைகள்' என்றது சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்குபாதங்களில் இரண்டாவது நின்றதாகிய கிரியையை. கிரியையாவது இறைவனை மந்திர விதிப்படி ஆகமமுறைப்படி பூசித்தலை உணர்த்தும். 'மோகம்' என்றது பிரபஞ்சமாயையினால் உண்டாகும் வேட்கையை. 'மெய்ஞ்ஞானம்' என்றது மெய்ஞ்ஞானமோனம்' என்றது மெய்ஞ்ஞான வரம்பாகிய சிவஞானத்தினை. மௌனநிலையை. என்னை?

"மோனமென்பது ஞானவரம்பு" என **ஔவை** கூறியதனால் என்க.

மோனத்திற்குத் தடையாக அநேக மாயாசத்திகள் தடையாக நிற்றலின் அது கைகூடாது என்பார் 'மோனத்தி நிற்கவென்றால் முற்றாது பரிபாக சத்திகளநேகம்' என்றார். "சின்மூதறிவு' என்றது இறைவன் வடிவாகிய ஞானத்தை. மூதறிவு-பேரறிவு. 'தாகம்' என்றது வேட்கையை. 'அமிர்தப் பிரவாகம்' என்றது அமுதவெள்ளத்தை. 'தனிப்பெருமை' இதில் 'தனி' என்பது ஒப்பின்மைப்பொருளில்நின்றது; 'தனி' என்றதனால் ஒப்புயர்வின்மை கூறியதாம். 'பாகத்தினால்' என்றதில் 'ஆல்' என்பது ஆக என்னும் பொருளது. 'கவிதை' இது ஐகார ஈற்றுப்பெயர் இது வடமொழி. 'கங்கா' கங்கை என ஆனதுபோல் கவிதா என்னும் வடசொல் கவிதை என ஆயது. 'பத்திநெறி' இது பண்புத்தொகை. பத்தியாகிய நெறி. இனி இதற்குப் பத்தியின்வழி என வேற்றுமைத்தொகையாகப் பொருள்செய்வாரும் உண்டு. 'மூவர்' என்றது தொகைக்குறிப்பு; பனுவல் என்றதால் தேவாரம்பாடிய மூவரைக்குறித்தது. 'இசையும்' என்பதன் ஈற்றுஉம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. ஆற்றலும் இல்லை அத்தோடு இசையும் இல்லை என்பது பொருளாம். 'ஊண்' இது காரணப்பெயர் இது உண்ணப்படுவது என்னும் காரணம்பற்றிவந்தபெயர். 'ஒழியவிலை' இதில் 'இலை' என்பது 'இல்லை' என்பதன் தொகுத்தல்விகாரம். 'முற்றாது' இது 'முற்று' என்னும் பகுதியடியாகப்பிறந்த எதிர்மறைவினைமுற்று. 'எழுந்த' இது இறந்தகாலப்பெயரெச்சம். 'வாய்க்கும்' இது எதிர்காலப்பெயரெச்சம். 'பிரவாகமே' இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. 3

சச்சிதானந்த சிவமே! மாயையை என்னால் வெல்லமுடியுமோ?
தேவரீரின் திருஅருள் பெற்றவர்களுக்கு எல்லாம் ஒளி
யுருவாக இருக்கின்ற இது அருளோ மருளே
உளவுசோல் என்கின்றார்

இமையளவு போதையொரு கற்பகா லம்பண் ணும்
இவ்வுலகம் எவ்வுலகமோ
என்றெண்ணம் வருவிக்கும் மாதர்சிற் றின்பமோ
என்னில்மக மேருவாக்கிச்
சுமையெடுமி னென்றுதான் சும்மாடு மாயெமைச்
சுமையாளு மாக்கிநாளுந்
துர்ப்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையுஞ்
சூறையிட் டிந்த்ரசாலம்
அமையவொரு கூத்துஞ் சமைந்தாடு மனமாயை
அம்மம்ம வெல்லவெளிதோ
அருள்பெற்ற பேர்க்கெலாம் ஒளிபெற்று நிற்குமீ
தருளோ அலாதுமருளோ



சமயநெறி காணாத சாக்ஷிநீ சூக்ஷ்மமாத்
தமியனேற் குளவுபுகலாய்
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

**(ப-ரை)** சர்வம் - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதானந்தம் - உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்று உருவும் ஒரு உருவாகக் கொண்டுள்ள, சிவமே - சிவமென்னும் மங்களாகாரப் பொருளே!, மனம் - மனத்தில் உதிப்பதாய, மாயை - மாயையானது, இமை-கண் இமைக்கும், அளவு - அளவினதாகிய, போதை - பொழுதை, ஒரு - ஒரு, கற்பம் - கல்ப, காலம்-காலமாக, பண்ணும்-ஆக்கும், இ-(நாம் வசிக்கும் இந்த) உலகமோ-உலகமோ, எ-எந்த, உலகமோ-உலகமோ, என்ற-என்கிற, எண்ணம்-எண்ணத்தை, வருவிக்கும் - உண்டாக்கும், மாதர் - பெண்களிடம் இருந்து பெறும், சிற்றின்பம் - சிற்றின்பத்தையோ, என்னின் - என்றால், மகமேரு-மகமேருமலைபோல் பெரிய அளவினதாக, ஆக்கி-ஆக்கி, சுமை-சுமை, எடுமின்-எடுங்கள், என்று-என்று, ஏமை-அடியோங்களை, சும்மாடும்-தலைக்குச்சும்மாடும், ஆய் - தானேயாகி, சுமை - சுமையைச் சுமக்கும், ஆளும் - ஆளுமாக, ஆக்கி-(எம்மை) ஆக்கி, நாளும்-தினந்தோறும், துர்ப்புத்தி-கெட்டபுத்தியை, பண்ணி-உண்டாக்கி, உள்ள - இருக்கின்ற, நல்-நல்ல, புத்தி-அறிவு, யாவையும்-எல்லாவற்றையும், சூறையிட்டு - கொள்ளையாடி, இந்திரஜாலம் - இந்திரஜாலம், அமைய - பொருந்த, ஒரு - ஒரு, கூத்தும் - கூத்தாட்டத்தையும், சமைந்து-பொருத்தமாகி, ஆடும்-ஆடுகின்ற, அம்மம்ம-அம்மம்ம இது என்ன ஆச்சரியம்!, (அத்தகைய இம்மாயையை) வெல்ல-ஜெயிக்க, எளிதோ-இலேசோ?, அருள்-தேவரீரின் திருக்கருணையை, பெற்றோர்க்கு - அடைந்த பெரியோர்களுக்கு, எல்லாம்-எல்லாம், ஒளிபெற்று - ஒளியை யுடையதாகி, நிற்கும் - நிற்கின்ற, ஈது-இது, அருளோ-அருள்தன்மை ஆகுமோ?, அலாது-இல்லாவிட்டால், மருளோ - புத்தியின் மயக்கமோ?, சமயம்-சமயங்களாகிய, மார்க்கம்-வழிகள், காணாத - கண்டறியக்கூடாத, சாக்ஷி - சாட்சிபூதமாகவுள்ள, நீ - தேவரீர், சூட்சுமம்-நுட்பம், ஆ-ஆக, தமியனேற்கு-தனியனாகிய அடியேனுக்கு, உளவு-தந்திரத்தை, புகலாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

**(வி-ரை)** 'இமையளவுபோது' என்றது நுண்ணிய காலஅளவைக் குறித்தது. இது கண்ணிமை கொட்டுங்காலம் என்பது. இதனை ஒரு விநாடியில், ஒரு மாத்திரைப்போதில், ஒரு நொடிப்பொழுதில் எனவுங் கூறுவர். ஒரு மாத்திரைக்காலம் எனலுமாம். என்னை? 'கண்ணிமைப்பொழுதும் கைநொடிப் பொழுதும், மாத்திரைக்களவாம்' எனவும், "இயல்பெழுமாந்தர் இமைநொடி மாத்திரை" எனவருஞ் **சூத்திரங்களா**லும் அறியலாம். 'போது' இது 'பொழுது' என்பதன் தொகுத்தல் விகாரம்; மரூஉ என்பாரும் உண்டு. 'கற்பகாலம்' என்பது யுகங்களின் முடிவுக்காலத்தைக் குறிக்கும். 'இவ்

வுலகம்' என்றது மண்ணுலகத்தை. 'மாதர்' என்றது அழகு, மதர்ப்பு, இனிமை என்னும் பொருள்களுடையன. அழகும், மதர்ப்பும், இனிப்பும் உடைய பெண்களைக்குறித்தது காரணம்பற்றி என்க. இனி மது சம்பந்தம் உடையர் மாதர் என்பர். மது என்பது தேன், இனிமை என்பது பொருளாம். 'சிற்றின்பம்' என்றது மாதர்களால் பெறும் புணர்ச்சி இன்பத்தைக் குறிக்கும். இது சிறிதளவுகாலமே அனுபவிக்கப் பெறுதலின் சிற்றின்பம் என்றாயிற்று. சிறுமை+இன்பம் என்னும் இருசொற்களும் புணர்ந்து சிற்றின்பம் என ஆயிற்று. 'மகமேரு' இது பூமியின் மத்தியிலுள்ளது; மலைகளிலெல்லாம் பெரியது. இக்கலியுகத்தில் பூமிக்குள் மறைந்துபோயது எனப் புராணங்கள் கூறும். இதுவே சிவபெருமானுக்குத் திரிபுரசம்ஹார காலத்தில் வில்லாக வளைந்தது என்பதும் புராணகதை. சிறிதைப் பெரிதாக்குவதில் பெரிதிற்கு மகாமேருமலை உபமானமாக உபயோகிக்கப் பெற்றது. 'சுமை' என்றது பாரத்தை. இது 'சும்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. சுமக்கப்படுவது சுமை. 'சும்மாடு' இது சுமை தலையில் உறுத்தாதபடி அணைவாக வைப்பது. 'துர்ப்புத்தி' இது கெட்டபுத்தி என்னும் பொருளது. இதில் 'துர்' என்பது அடைமொழி, கெட்ட என்னும் பொருளது. 'நாளும்' என்றது தினத்தைக் குறிக்காது எக்காலத்தும் என்ற பொருளில் நின்றது. 'சூறையிடல்' இது கொள்ளையிடல் என்னும் பொருளது. பண்டைக்காலத்தே கள்வர்கள் தமக்கு வேண்டுவனவற்றைக் கவர்ந்த மட்டில் நில்லாமல் எஞ்சிய பொருள்களையும் வாரி இறைத்துவிட்டுப்போவர் அதனைச் 'சூறையாடல்' என்று வழங்குவது வழக்கு. 'இந்திரஜாலம்' என்றது பெரிய ஜாலவித்தை என்று பொருள்தந்து நின்றது. 'ஜாலம்' என்பது பொய்யை மெய்போலவும், மெய்யைப் பொய்போலவும் காட்டும் வித்தை. மாயையிலிருந்தும் மனம் பிறப்பதால் மனமாயை என்றார். இதனை,

> "மாயையென் றொருத்திதன்பால் மனமெனு மைந்தன்றோன்றி
> தாயகல் லறிவன்றன்னைத் தோற்றமின் றாக்கிவைத்தான்"

என்னும் வில்லிபுத்தூராழ்வார் வாக்காலும் அறியலாம்.

'அம்மம்ம' இவை வியப்பால் அடுக்கிவந்த வியப்பிடைச்சொல். 'அருள் பெற்றோர்' என்றது இறைவன் திருஅருள் பெற்றவர்களைக் குறித்தது. 'ஒளிபெற்று நிற்றல்' என்றது புலனாக நிற்றலை, தோன்ற நின்றலை உணர்த்தியது. 'அருளோ' என்றது திருஅருட் செயலோ என்றதாம். 'மருள்' இது மயக்கம். மயக்கமாவது - பொருள் புலப்படாது நிற்றல் என்பதாம். இறைவன் சமயங்களாலெல்லாங் கண்டுவிண்டிடாதபடி சமயாதீதனாய் நிற்றலின் 'சமயநெறி காணாதசாக்ஷி' நீ என்றார். 'நீ' என்றது இறைவனை. 'சூக்ஷ்மம்' என்றது நுட்பத்தை. 'எவ்வுலகமோ' இதில் ஈற்றில் நின்ற ஓகாரம் வியப்பின்கண் வந்தவினா. 'சிற்றின்பமோ' இதில் ஈற்றில் நின்ற ஓகாரம் பிரிநிலைப்பொருளில் வந்தது. 'சும்மாடும்' இதில் நின்ற ஈற்று உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மை. 'வெல்ல வெளிதோ' ஈற்று ஓகாரம் விடைதழுவிய வினா, வெல்ல எளிதல்ல என்னும் பொருள் உணர்த்திற்று.



'ஈது' இது 'இது' என்னும் சுட்டுநீண்டு ஈது என ஆயிற்று. அருளோ, மருளோ இவைகளின் ஈற்றில் நின்ற வினா ஐயவினா. 'அலது' இது அல்லது என்றதன் தொகுத்தல் விகாரம். 'காணாத' இது எதிர்மறைபெயரெச்சம். 'புகலாய்' இது முன்னிலை ஏவல்வினைமுற்று. 4

சச்சிதானந்த சிவமே! தேவரீரின் திருவருள் அடியேனுக்குக் கிடைக்குமோ என ஏங்குகின்றேன் அநியாயமாய் நான் எமனுக்கோ ஆளாவது கற்றதும் கேட்டதும் வீணாதல் நன்றோ அடியேன் மௌனத்திருக்க நினைக்கின்றேன் இது தேவரீருக்குத் தெரியாததன்று என்கின்றார்

இனியே தெமக்குனருள் வருமோ எனக்கருதி
  ஏங்குதே நெஞ்சம்ஐயோ
இன்றைக கிருந்தாரை நாளைக் கிருப்பரென்
  றெண்ணவோ திடமில்லையே
அனியாய மாயிந்த வுடலைநான் என்றவரும்
  அந்தகற் காளாகவோ
ஆடித் திரிந்துநான் கற்றதுங் கேட்டதும்
  அவலமாய்ப் போதல்நன்றோ
கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
  கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப் புசித்துநான்
  கண்மூடி மௌனியாகித்
தனியே இருப்பதற் கெண்ணினேன் எண்ணமிது
  சாமிநீ அறியாததோ
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
  சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதானந்தம் - உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்று உருவும் ஒரு உருவாகக்கொண்ட, சிவமே - சிவம் என்னும் மங்களாகரப் பொருளே!, எமக்கு - அடியோங்களுக்கு, இனி - இனி, உன் - தேவரீரின், அருள்-திருவருள் பெறுவது, ஏது-ஏது,' வருமோ-ஒருக்கால் உண்டானாலும் உண்டாதலாமோ?, என - என்று, கருதி - எண்ணி, நெஞ்சம் - மனமானது ஏங்குதே-ஏக்கம் அடைகின்றதே, ஐயோ-ஐயோ, இன்றைக்கு-இன்றையத் தினம், இருந்தாரை - உயிருடன் இருந்தவர்களை, நாளைக்கு - நாளையதினத்திற்கு, இருப்பர்-இருப்பார்கள், என்று-என்று, எண்ணவோ-நினைக்கவோ, திடம் - திடமானது, இல்லையே - இல்லையே, அநியாயமாய் - நியாயம் இன்றி,

இந்த-இந்த, உடலை-தேகத்தைக்குறித்து, நான்-நான், என்று-என்று அகங்காரத்துடனே, வரும்-வந்துசேருகின்ற, அந்தகற்கு-எமனுக்கு, ஆளாகவோ-அடிமையாகவோ?, நான்-அடியேன், ஆடி-ஆடி, திரிந்து-அலைந்து, கற்றதும்-கற்றுக்கொண்ட கல்வியும், கேட்டதும் - கேட்ட கேள்வி ஞானமும், அவலமாய்-வீணாக, போதல் - சென்றுகழிதல், நன்றோ - நல்லதோ?, கனியேனும்-பழத்தையாகிலும், வறிய-வறிதாகிய, செம்-செவந்த, காய்-காய்களையாகிலும், உதிர்-உதிர்ந்துகிடக்கும், சருகு-சருகுகளையாகிலும், கந்தம்-கந்தம், மூலம்-கிழங்குகளையாயினும், கனல் - உதராக்கினியின், வாதை-நோய், வந்து-வந்து, எய்தின் - சேர்ந்தால், அள்ளி - வாரி, புசித்து - சாப்பிட்டு, நான்-அடியேன், கண்-கண்களை, மூடி-மூடிக்கொண்டு, மௌனியாகி-மௌனத்தையுடையவனாகி, தனியே - ஏகாந்தமாக, இருப்பதற்கு - இருப்பதற்கு, எண்ணினேன்-நினைத்தேன், இது-இந்த, எண்ணம்-அடியேனின் நினைப்பு, சாமி-கடவுளே, நீ-(எல்லாமுணர்ந்த) தேவரீர், அறியாததோ-தெரியாதது ஒன்றோ, தெரிந்ததல்லவா எ-று.

(வி-ரை) 'இனி' என்றது, இவ்வளவிற்குப்பிறகு என்னும் பொருளது. 'எமக்கு' என்றது பிற அடியார்களையும் உளப்படுத்திய உளப்பாட்டுத் தன்மைப்பன்மை. 'உன்' என்றது இறைவனை. 'அருள்' என்றது திருஅருளை. 'வருமோ' ஈற்று ஓகாரம் ஐயத்தின்மேல்வந்தவினா. 'என' இது 'என்ன' என்பதன் தொகுத்தல்விகாரம். 'ஐயோ' இது இரங்கற்பொருளில் வந்த இடைச்சொல். 'இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென் றெண்ணவோ திடமில்லையே' இவ்வடியை,

"நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு" என்ற **குறளோடும்,**

" ... ... ... —இன்னியே
நின்றான் இருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப் படுதலான்"

என்ற **நாலடியாரோடும்** ஒப்பிட்டுக் காணத்தக்கன.

'அனியாயமாய் இந்த வுடலைநா னென்றுவரும் அந்தகற்கு ஆளாகவோ' இதற்கு நியாயமின்றி இந்தத் தேகத்தைக்குறித்து நான் என்று அகங்கரித்துக்கொண்டுவரும் எமனுக்கு ஆளாகவோ என்றும். 'தேகத்தைக்குறித்து' என்றது தேகாபிமானத்தால் உண்டுடுத்துத் திரிந்து அதிலேயே காலத்தைக் கழித்து முத்திவழிதேடாது அகங்கரித்துவரும் எமனுக்கு ஆளாகவோ என்பது இதன் விளக்கமாகும். இனி, இதற்கு, நியாயமின்றி நானல்லாத தேகத்தை நானென்று அகங்கரித்துத் திரிந்துவிட்டு நாளை உயிர் கவரவரும் நமனுக்கு ஆளாகவோ எனப் பொருள்கோடலுமாம். இறைவன் சிறிது தாட்சண்யமின்றி உயிர்களைக் கவர்கின்றானாதலின் அந்தகன் எனப் பெயர் ஆயிற்று. அந்தகன் என்றது கண்ணில்லாதவன் என்பது பொருள். ஈண்டு யமனுக்கு ஆயிற்று.



'கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம்' அக்கண்ணோட்டம் இல்லாத காலத்து, கண்ணிருந்துங் கண் இல்லாதவனே ஆதலினால் எமனை அந்தகன் என்றார். கண்ணோட்டம்-தாட்சண்யம். 'கண்' என்பதற்கே தாட்சண்யம் என்னும் பொருள் உண்டென்பதும் ஈண்டு அறியத்தக்கது. இதனைக் 'கண்ணோடி' என்று தாட்சண்யமுற்று என்ற பொருளில் ஆன்றோர் வழங்கியதுங் கண்டுதெளிக. 'ஆடித்திரிந்து' என்றது தக்க போதகாசிரியனை நாடிதேடி அவனைக்கண்டு மனமிளக ஆடித்திரிந்து கற்ற கல்வி என்பதாம்; திரிந்து என்பதற்கு அலைந்து என்பது பொருளாம். உழன்று எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'கேட்டது' என்றது ஐயவிபரீத முதலிய முக்குற்றமறக் கற்றவர்கள்பால்கேட்ட ஞானக்கேள்விகள் என்பதாம். 'அவலம்' இது வீண் என்னும் பொருளது. வலிமை அற்றது என்ற காரணப் பொருளில் வந்தபெயர். அ+வலம், இதில் அகரம் எதிர்மறைப் பொருள் தந்துநின்றது. வலம்-வலிமை. 'நன்றோ' இதன்கண் நின்றவினா நன்றல்ல என்னும் பொருள் உணர்த்தி நின்றது. 'கனி' இது கனிவுடையது என்னும் பொருளது. 'வறிய' என்றது வெறுவிதாகிய என்னும் பொருளது. அதாவது சுவைஇல்லாத இனிமை இல்லாத என்றதாம். 'செங்காய்' என்றது பழுக்கப்போம் முதிர்ந்த காயைக் குறித்தது. 'உதிர்சருகு' இது வினைத்தொகை. 'கந்தமூலம்' என்றது வேர்களையும் கிழங்குகளையும் உணர்த்தியது. 'கனல்' என்றது பசிக்கனலை, அதாவது உதராக்கினியை. மௌனயோகத்து இருப்பவர்கள் தம் மனம் புறம்பே செல்லாதபடிக் கண்மூடிக்கொண்டிருப்பர் ஆதலின் 'கண்மூடி மௌனியாகி' என்றார். 'தனியே இருப்பதற்கு' என்றது ஏகாந்தத்து இருத்தலை உணர்த்திற்று. எல்லாம் உணர்த்தாது உணரக்கூடிய சர்வஞ்ஞனாகிய உனக்குத் தெரியாதோ என்பார் 'எண்ணமிது சாமிநீ அறியாததோ' என்றார். இதன்கண்நின்ற ஓகாரம் வினாப்பொருளது. இது விடைதழுவிய வினா. 'அறிந்ததே' என்பது பொருளாம். 'உன்னருள்' எனற்பாலது 'உனருள்' எனவந்தது தொகுத்தல்விகாரம். 'இருந்தாரை' இது வினையாலணையும்பெயர். படர்க்கைப்பன்மை. 5

சச்சிதானந்த சிவமே! இல்லறத்திருந்தாலும் நஷ்டமில்லை துறவறத் திருந்தாலும் லாபமில்லை மௌனநிலை பெற்றவர்களே உய்வடைவார்கள் என்கின்றார்

மத்தமத கரிமுகிற் குலமென்ன நின்றிலகு
வாயிலுடன் மதிஅகடுதோய்
மாடகூ டச்சிகர மொய்த்தசந் திரகாந்த
மணிமேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகை யார்களொடு
முத்துமுத் தாய்க்குலாவி
மேகத் திருந்துமென் யோகத்தின் நிலைநின்று
மூச்சைப் பிடித்தடைத்துக்

கைத்தல நகப்படை விரித்தபுலி சிங்கமொடு
கரடி நுழை நூழைகொண்ட
கானமலை யுச்சியிற் குகையூ டிருந்துமென்
காதலா மலகமென்னச்
சத்தமற மோன நிலை பெற்றவர்க ளுய்வர்காண்
சனகாதி துணிவிதன்றோ
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வ - எல்லாவற்றினிடத்தும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிந்த, தத்துவம் - தத்துவப்பொருள்கள், ஆன-ஆகிய, சச்சிதானந்தம் - உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்று உருவும் ஒரு உருவாகக்கொண்ட, சிவமே - சிவம் என்னும் மங்களாகரப் பொருளே!, மத்தம்-களிப்புக்கொண்ட, மதம் - மதமிருந்த, கரி - யானைகள், முகில் - மேகங்களின், குலம் - கூட்டம், என்ன - என்று ஒப்புக்கூற, நின்று-நின்று, இலகு-பிரகாசிக்கின்ற, வாயிலுடன் - முற்றத்திடமுள்ள, மதி-சந்திரனது, அகடு-நடுஇடத்தை, தோய் - படிகின்ற, மாடம்-பெருவீடுகளினுடையவும், கூடம்-சாலைகளினுடையவும், சிகரம்-சிகரங்கள், மொய்த்த-நெருங்கிய, சந்திரகாந்தம்-சந்திரகாந்தக் கல்லினாற்செய்த, மணி-நவரத்தின கசிதமாகிய, மேடை-மேடையின், உச்சி-சிகரத்தின், மீது-மேல், முத்தமிழ்-முத்தமிழின், முழக்கமுடன் - முழக்கத்துடனே, முத்தம் - முத்தையொத்த, நகையார்களொடு - பல்வரிசையையுடைய பெண்களொடு, முத்துமுத்தாய் - முத்துமுத்தாய்ப் பிரியமுற்று, குலாவி-விளையாடி, மோகத்து-மோகசுகத்தில், இருந்தும்-இருந்தும், என் - என்ன நஷ்டம்?, யோகத்தின் - யோகநிட்டையின், நிலை-நிலையிலே, நின்று - நிலைத்துநின்று, மூச்சை - பிராணவாயுவை, பிடித்து-பிடித்து, கைதலம் - கையினிடத்து, நகம் - நகமாகிய, படை - ஆயுதங்களை, விரித்து-விரித்திருக்கும், புலி-புலிகள், சிங்கம் - சிங்கங்களோடு, கரடி - கரடிகளும், நுழை - நுழையும்படியாகிய, நூழை-குகைகளை, கொண்ட - கொண்டுள்ள, கானம்-காடடர்ந்த, மலை-மலையின், உச்சியில் - உச்சியில், குகையூடு-குகைகளுக்குள்ளே, இருந்தும்-வசித்திருந்தும், என்-என்னலாபம்?, கரதலம்-கையினிடத்துள்ள, ஆமலகம் - நெல்லியங்கனியை, என்ன - ஒப்ப, சத்தம்-ஆரவாரம், அற - அடங்க, மோன - மௌன, நிலை - நிலையை, பெற்றவர்கள்-அடைந்தவர்கள், உய்வர்-உஜ்ஜீவிப்பர், சனகாதி-சனகாதி முனிவர்களுடைய, துணிபு-உறுதி, இது-இது, அன்றோ-அல்லவோ? எ-று.

(வி-ரை) 'மத்தம்' என்றது ஈண்டு மதக்களிப்பை. 'மதகரி' என்றது மதயானையை. 'கரி' இது வடசொல் கரத்தையுடையது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். 'முகிற்குலம்' இதில் குலம் என்பது கூட்டம் என்னும் பொருளது. 'வாயிலுடன்' இதில் வாயில் என்றது இல்முன்னை. அதாவது முன்னிலை. 'மதி' என்றது சந்திரனை. இது மதிப்புடையது. அறிவுடையது



என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். இனி, மது சம்பந்தமுடையது மதி என ஆயிற்று என்பாருமுளர். இது தமிழ்ச் சொல்லாதலின் அதுபொருந்தாமை கண்டு தள்ளுக. மது என்றது அமுது என்பர் அவ்வாறு பொருள் கொள்வோர். 'அகடு' இது உள்ளிடம் என்னும் பொருளது. 'சந்திரகாந்தம்' இது சந்திரனைக் கண்டகாலத்து நீரைக் கக்குவது. குளிர்ச்சியுடையது. 'முத்தமிழ்' என்றது இயல், இசை, நாடகம் என்னும் தமிழ்களை. ஈண்டு முத்தமிழ் என்றது முத்தமிழ்ப் பாடல்களை உணர்த்தினமை காண்க. 'முத்தம்' இதற்கு முத்து என்பது பொருள். இனி இதனை முத்து+அம் எனப் பிரித்து முத்தையொத்த அழகிய நகையார் எனக் கூட்டிப் பொருள் கோடலும் ஒன்று. 'முத்து முத்தாய்' இது மிகப் பிரியமாக என்னும் பொருளுணர்த்தும் சொல்வழக்கு. 'மோகம்' என்றது யோகத்திற்கு எதிர் ஆவது. காமப் பிரியம் என்பதாம். 'யோகம்' இது மோகத்திற்கு எதிராயது. மோகமற்று இறைவனோடு பாவனையாய் ஒன்றுபட்டிருத்தல். 'மூச்சு' என்றது பிராணக்காற்றை. 'மூச்சைப் பிடித்தடைத்து' என்றது வாசியை யடக்கி யோகநிட்டையிலிருந்து என்பதாம்.

'கைத்தலம்' இது இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கையாகிய தலம் என விரியும். (தலம்-இடம்) 'நகப்படை' இது நகமாகிய படை என விரிதலின் பண்புத்தொகை. புலி, சிங்கம், கரடிகளுக்கு நகமும் பல்லும் ஆயுதங்களாதலின் 'நகப்படை' என்றார். 'நூழை' என்றது நுழையும்வழி, குகை, புதர்களை உணர்த்தும். 'கானமலை' என்றது காட்டையுடையமலை என விரியும். இனி இதனை உம்மைத்தொகையாகக்கொண்டு காடும் மலையும் எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 'ஆமலகம்' இது வடசொல் நெல்லிக் கனி என்பது பொருள். நெல்லிக்கனியைக் கையில்வைத்து நோக்குங்கள் உள் உள்ள கொட்டை அவைக ளிவரை எல்லாம் தெளிவாகத் தெரியும் அதுபோலத் தெளிவாகப் புலப்படும் எதையும் 'உள்ளங்கை நெல்லிக்கனி போல்' என்று உவமையாகக் கூறுவர். 'சத்தம்' என்றது ஈண்டு ஆரவாரம், ஆர்ப்பாட்டம் முதலியவைகளை. 'சனகாதி' என்றது சனகர் முதலிய பிரம்ம ஞான முணர்ந்தவர்களை உணர்த்திற்று. 'சனகர்' இவர் முடியரசராக இருந்தும் உலகப்பற்றைத் துறந்துநின்றவர் ஆதலின் இவரை முன்வைத்துச் 'சனகாதியர் துணிவன்றோ' என்றார்.

6

சச்சிதானந்த சிவமே! நிருவிகற்பசமாதி அனுபவத்தில் நீயில்லை,
நானில்லை, சொல்லில்லை, நான் இல்லை என்பதன் பொருள்
தேவரீர் அறிவீர் தெரியாதவர்கள் அறியமுடியாது
கைவல்யநிலை ஒப்புயர்வற்றது என்கின்றார்

கைத்தலம் விளங்குமொரு நெல்லியங் கனியெனக்
கண்டவே தாகமத்தின்
காட்சிபுரு ஷார்த்தமதில் மாட்சிபெறு முத்தியது
கருதின் அனுமானமாதி

உத்திபல வாநிரு விகற்பமே லில்லையால்
 ஒன்றோ டிரண்டென்னவோ
உரையுமிலை நீயுமிலை நானுமிலை என்பதும்
 உபாயம்நீ யுண்டுநானுஞ்
சித்தம்உளன் நான்இல்லை எனும்வசனம் நீயறிவை
 தெரியார்கள் தெரியவசமோ
செப்புகே வலநீதி யொப்புவமை யல்லவே
 சின்முத்தி ராங்கமரபில்
சத்தமற எனையாண்ட குருமௌனி கையினால்
 தமியனேற் குதவுபொருளே
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
 சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சின்முத்திரை-சின்முத்திரையை, அங்கம் - அங்கமாகக்கொண்டுள்ள, மரபில் - மவுனமரபினால், சத்தம்-சொல், அற - அடங்க, எனை - அடியேனை, ஆண்ட-ஆண்டருளிய, குரு - குருவாகிய, மௌனி - மௌனதேசிகரின், கையினால் - திருக்கரங்களால், தமியனேற்கு - தமியேனுக்கு, உதவு - கொடுத்தருளப்பெற்ற, பொருளே - பொருளே!, சர்வம் - எல்லாவற்றிலும் எல்லா இடத்திலும், பரிபூரண-பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட-விரிவாகிய, தத்துவம்-தத்துவங்கள் எல்லாமும், ஆன-ஆகிய, சச்சிதானந்தம்-உண்மை, அறிவு, ஆனந்தமென்னும் மூன்றுருவும் ஒருருவமாக அமைந்த, சிவமே-சிவமென்னும் மங்களாகரப்பொருளே!, கைத்தலம் - கையினிடத்தே, விளங்கும்-விளங்குகின்ற, ஒரு-ஒரு, நெல்லி - நெல்லியின், கனி-பழம், என-என்று ஒப்புக்கூற, கண்ட-காணப்பட்ட, வேதாகமத்தின்-வேதாகமங்களின், காட்சி-பொருள், புருஷார்த்தம் - புருஷார்த்தங்களாம், அதில் - அந்தப் புருஷார்த்தங்களில், முத்திஅது - மோக்ஷமென்னப்படுவது, மாட்சி - மேன்மையை, பெறும்-அடையும், அது-அந்த மோக்ஷத்தை, கருதின்-எண்ணினால், அநுமானம்-அநுமானம், ஆதி-முதலாகிய, யுத்தி-யுக்திகள், பல-பல, ஆகும்-ஆகும், நிருவிகற்பமேல்-நிருவிகற்ப சமாதியானால், இல்லையால்-இந்த யுக்திகளில்லை ஆதலால், ஒன்றொடு-ஒன்றுடனே, இரண்டு - இரண்டு, என்னவோ-என்று கூறவோ, உரையும்-சொல்லும், இலை-இல்லை, நீயும்-நீ என்பதுங்கூட, இல்லை-இல்லை, நானும்-நான் என்பதும், இல்லை-இல்லை, என்பது-என்றுசொல்லுவதற்கும், உபாயம்-உபாயமாக, நீ-தேவரீர், உண்டு-உளவாக இருக்கிறீர், நானும் சித்தம்உளன்-அடியேனும் சித்தமாகஇருக்கின்றேன், (அவ்வாறிருக்க) நான்-நான் என்பது ஒருபொருள், இல்லை-இல்லை, எனும்-என்றுகூறும், வசனம்-சொல்லை, நீ-தேவரீர், அறிவை-அறிவீர், தெரியார்கள்-அதை அறியாதவர்கள், தெரிய-தெரிந்துகொள்ள, வசமோ-கூடியதாகுமோ?, செப்பு-வேதம் முதலியவற்றிற்கூறப்படும், கேவலம்-கைவல்யநிலையின், நீதி-ஒழுங்குக்கு, ஒப்பு-ஒப்பும், உவமை-உவமையும் கூறும்தன்மை உடையது, அல்லவே-அல்ல எ-று.



(வி-ரை) 'கைத்தலம்' இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கையாகிய தலம் எனவிரியும். 'வேதம்' என்றது சதுர்வேதங்களை. இதற்கு அறிவு என்பது பொருள். 'ஆகமம்' என்றது பதி, பசு, பாசங்களைப்பற்றி விளக்கிக் கூறுவது என்பதுபொருள். 'புருஷார்த்தம்' என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் ஒருபுருஷன் அடையக்கூடிய நாற்பொருள்களைக் குறிக்கும். இந்த நான்கில் முத்தியே மாட்சிமைபெற்றது என்பார் 'புருஷார்த்தமதின் மாட்சிபெறு முத்தியது' என்றார். 'அநுமானமாதி' என்றது அநுமானப்பிரமாணம், காட்சிப்பிரமாணம், சத்தப்பிரமாணம் முதலியவைகளை. 'உத்தி' இது யுக்தி என்னும் வடசொற்சிதைவு. 'நிரு விகற்பம்' என்றது அத்துவிதநிலையை. நிருவிகற்ப முத்திநிலையில் தாடலை போல் ஒன்றென்னவும் இரண்டென்னவுங்கூற இடமின்றி இருத்தலின் 'ஒன்றோடிரண் டென்னவோ உரையுமிலை' என்றார். அந்த நிருவிகற்ப நிலையில் நீ, நான் என்பது தோன்றாதாதலின் 'நீயுமிலை நானுமிலை' என்றார். முத்தியில் இறைவனும் உண்டு ஆன்மாவும் உண்டு ஆதலின் 'உபாயம் நீயுண்டு நானும் சித்தமுளன்' என்றார்.

'நான் இல்லை' என்ற சொல்லின்பொருளை நீ அறிவாய் தெரியாதவர்கள் தெரியமுடியாது என்பார் 'நானில்லை யெனும் வசனம் நீயறிவை தெரியார்கள் தெரியவசமோ' என்றார். 'செப்பு' என்றது வேதாகமங்களாற் சிறப்பித்துக் கூறப்படும் என்பது பொருளாம். இது திசைச்சொல். தெலுங்க நாட்டுச் சொல். 'கேவலம்' என்றது கைவல்யநிலையை. அதாவது முத்தி நிலையை. 'கேவலம்' என்பது ஒப்பும் உவமையுங் கூறமுடியாதது என்பார் 'செப்பு கேவலநீதி யொப்புவமை யல்லவே' என்றார். 'சின்முத்திரை' இது கைக்குறி. கட்டைவிரலையும் ஆட்காட்டிவிரலையும் வளைத்து வட்டவடி வாய்க்கூட்டி ஏனைய மூன்றுவிரல்களையும் நிமிரநீட்டி மேல்நோக்கக் காட்டுவது. இதன் விரிவும் பொருளும் ஆசாரியரிடம் உபதேசமுறையாய்க் கேட்டறியற்பாலது. இறைவனே குருவாகவந்து இறைவனைக் காட்டியருளினானாதலின் 'குருமௌனி கையினாற் றமியனேற்கு உதவுபொருளே' என்றார். 'சத்தமற எனையாண்ட' என்றது மௌனநிலைதந்து எனை ஆட்கொண்ட என்பது பொருளாம். 'கையினால்' என்றது சுட்டிக்காட்டும் வித்தைமூலமாகத் தந்தபொருள் என்பதாம்.



**சச்சிதானந்த சிவமே! வாயார உண்டவர் வாழ்த்துவதும் வருத்தப் பட்டோர் வைதும் வழக்கம் இது இரண்டில் எது நல்லது வாழ்த்துவதே நல்லதாகும் உலகிற்குத் தாயான நீ எனக்கு துயரங்கெட அருள்செய்வாயாக என்கின்றார்**

காயாத மரமீது கல்லேறு செல்லுமோ
 கடவுள்நீ யாங்களடியேங்
கர்மபந் தத்தினாற் சன்மபந் தப்பெறக்
 கற்பித்த துன்னதருளே

வாயார வுண்டபேர் வாழ்த்துவதும் நொந்தபேர்
வைவதுவும் எங்களுலக
வாய்பாடு நிற்கநின் வைதிக ஒழுங்குநினை
வாழ்த்தினுற் பெறுபேறுதான்
ஓயாது பெறுவரென முறையிட்ட தாற்பின்னர்
உளறுவது கருமமன்ரும்
உபயநெறிய யீதென்னின் உசிதநெறி எந்தநெறி
உலகிலே பிழைபொறுக்குந்
தாயான கருணையும் உனக்குண் டெனக்கினிச்
சஞ்சலங் கெடஅருள் செய்வாய்
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாபொருளிலும் எல்லாயிடத்தும், பரிபூரண-பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிவாகிய, தத்துவம் - தத்துவங்கள், ஆன - ஆகிய, சச்சிதானந்தம் - உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்றும் ஒருருவாய் அமைந்த, சிவமே - சிவ்மென்னும் மங்களாகரப் பொருளே!, காயாத-காய்க்காத, மரம்-மரத்தின், மீது - மேலே, கல்-கல்லின், ஏறு - ஏறுதல் (எறியப்பெறுதல்), செல்லுமோ - செல்லுதலையடையுமோ?, நீ-தேவரீர், கடவுள் - கடவுளாக இருக்கின்றீர், யாங்கள் - அடியோங்கள், அடியேம் - அடிமைகள், கர்மம்-அடியேங்களுக்கு உள்ள கர்மத்தின், பந்தத்தினுல்-கட்டினுல், சன்மம்-பிறவி, பந்தம்-கட்டை, பெற-அடைய, கற்பித்தது-கற்பித்துவைத்தது, உன்னது - தேவரீரது, அருளே - திருஅருளேயாகும், வாய்-வாய், ஆர-நிரம்ப, உண்ட-சாப்பிட்ட, பேர் - பெயர்கள், வாழ்த்துவதும்-வாழ்த்துதலைச் செய்தலும், நொந்தபேர் - வருத்தப்பட்டவர்கள், வைவதும்-திட்டுவதும், எங்கள் - அடியோங்களுடைய, உலகம் - இந்தப்பூலோகத்தின் வாய்பாடு-வழக்கம், நிற்க-இதுநிற்க, நின்-தேவரீரது, வைதிகம்-வேதசம்பந்தமாகிய, ஒழுங்கு-ஒழுக்கநூல்கள், நின்னை-தேவரீரை, வாழ்த்தினுல் - வாழ்த்துதல் செய்யும் (ஆனுல்), பெறு-அடைதற்குரிய, பேறு-முத்திப்பயனை, ஓயாது-தவருது, பெறுவர்-அடைவர், என-என்று, முறையிட்டதால்-முறையிட்டுக் கூறினதால், பின்னர் - அதற்குமேலே, உளறுவது - உழறுவது, கருமம்-நல்வினை, அன்று-அல்ல, ஆம்-ஆகும், உபயம்-அவ் இரண்டு, நெறி - மார்க்கங்களாகிய வாழ்த்துவதும் வைவதும், ஈது - இவ்விதம், ஆயின் - ஆனுல், உசிதம்-இவ்விரண்டில் நல்ல, நெறி - மார்க்கம், எந்த - எந்த, நெறி - மார்க்கம், உலகிலே - உலகத்திலே, பிழை - குற்றத்தை, பொறுக்கும் - பொறுத்தருள்கின்ற, தாயான - தாயை ஒரு, கருணை - கிருபை, உனக்கு - தேவரீருக்கு, உண்டு - உண்டு, இனி - இனிமேல், எனக்கு - அடியேனுக்கு, சஞ்சலம் - மனத்துயர், கெட - ஒழிய, அருள் - திருஅருளை, செய்வாய் - செய்வாயாக எ-று.



(வி-ரை) ‘காய்த்த மரத்தில் கல் எறிவார்கள்’ என்பது பழமொழி ஆதலின் ‘காயாத மரமீது கல்லேறு செல்லுமோ’ என்ருர். காய்த்தமரத்தில் தான் அதன்கண் உள்ள காய்பழம் கவரக் கல் எறிவார்கள். ‘நீ’ என்றது சச்சிதானந்த சிவமாகிய இறைவனை. ‘கடவுள்’ என்ற சொல்லுக்கு மனவாக்குகளுக்கு எட்டாது கடந்துநிற்பவன் என்பது பொருள். இனி, தத்துவங்கள் எல்லாவற்றையும் கடந்துநிற்பவன் என்பது பொருளாம். ‘யாங்கள்’ என்றது ஆன்மாக்களை. ‘வினைப்போகமே இத் தேகங்கண்டாய்’ எனப் **பட்டினத்தடி**கள் கூறியாங்கு பிறப்பு வினையினுல் வந்தது ஆதலின் ‘கர்மபந்தத்தினுற் சென்மபந்தம் பெற’ என்ருர். ‘உன்னதருளே’ என்றது இறைவன் திருஅருளை. ‘வாயார’ இது வாய்நிறைய வைத்து வயிறு நிரம்ப உண்டவர் அதாவது வாயார வயிரார உண்டவர் என்பதாம். (ஆர்தல்-நிறைதல்) ‘வாழ்த்துதல்’ இது வாழ்த்துச் சொல்லுதல் என்பதாம். இதனை, மங்களாசாசனம் என்பர் வைணவர். வாழ்த்துதல் என்பது அன்னமிட்டவரை வாழ்த்துதல் என்பதாம். ‘நொந்தபேர் வைது’ என்றது நோவு அடைந்தோர் நோவு செய்தவர்களை இகழ்ந்து தூஷித்தல் என்பதாம். ‘வாய்பாடு’ என்றது ஈண்டு வழக்கம் என்னும் பொருளது, முறை என்னினுமாம். ‘எங்கள் உலகம்’ என்றது பூலோகத்தை. வேதசம்பந்தமானது எல்லாம் ‘வைதிகம்’ எனப்பெறும். உலகசம்பந்தமானதை ‘லௌகிகம்’ என்பர். ‘வைதிக ஒழுங்கு’ என்றது ஈண்டு வைதிக ஒழுக்கநூல்களைக் குறித்து நின்றது.

‘பெறு பேறு’ என்றது அடையும் முத்திப்பயன் என்பதாம். ‘முறையிட்டது’ என்றது ஓலமிட்டுக் கூறிற்று என்ற பொருளதாம். ‘உழறுவது’ என்றது பொருளிலாப் புலப்பற்றை. ‘உபயநெறி’ என்றது இரண்டுவழி என்பது; அவையாவன:—வாழ்த்தலும், வைதலுமாம். கடவுளே! எனக்குச் சுகம் எய்தியபோது சகல கர்த்தனுகிய உன்னை வாழ்த்தியும் துன்பம் வந்தபோது உன்னை வைதும் இருப்பேன். நீ எல்லார் பிழையும் பொறுக்கும் கருணைக்கடவுள் ஆதலினுல் வைதபிழையைப் பொறுத்து என் சஞ்சலத்தை யகற்றி சிவானந்தபோகந் தந்தருள்வாய் என்பார், ‘உபயநெறி யீதென்னி ... ... ... சஞ்சலங்கெடவருள் செய்வாய்’ என்ருர். ‘உசிதம்’ என்றது சிறந்தது, நல்லது என்னும் பொருளது. இதற்கு எதிர்மொழி ‘அநுசிதம்’ என்பதாம். பெற்ற தாய் தன் புத்திரன்செய்யும் பிழைகள் எல்லாம் பொறுக்கும் அன்புடையவள் ஆதலின், ‘உலகிலே பிழைபொறுக்கும் தாயான கருணையுமுனக்குண்டு’ என்ருர். ‘சஞ்சலம்’ இது வடசொல் மனத்து இது மனஅசைவு என்னும் பொருள்பற்றிவந்த காரணப்பெயர். மனத்து அசைவுதருவது எதுவோ அதுவே சஞ்சலம், மனச்சலனம் எனப்பெறும். ‘அருள் செய்வாய்’ என்றது திருஅருள் செய்தலை. ‘காயாத’ இது ‘காய்க்காத’ என்பதன் மரூஉ. இறந்தகாலப்பெயரெச்சம். ‘கல்லேறு’ இது கல்லெறிதல் என்னும் பொருடருதலின் தொழிற்பெயர். ‘செல்லுமோ’ என்றதன்வினு செல்லாது என்னும் பொருள்தந்து நின்றது. ‘அடியேம்’ இது

தன்மைம்பன்மை. 'உன்னதருளே' இதில் ஏகாரம் தேற்றப்பொருள் தந்து நின்றது. 'பேறு' என்றது இலாபம் என்னும் பொருளது இது பெறப்படுவது பேறு என ஆயிற்று. இது காரணப்பெயர் 'பெறு' என்னும் வினையடியாகப்பிறந்த பெயர். 'ஈது' இதில் 'இது' என்னும் சுட்டுமுதல் நீண்டு நின்றது. 'தாயானகருணை' என்றது தாய்போன்ற கருணை என்பதாம். இனி இதற்கு இறைவன் முன்னொருகால் திரிசிரபுரத்துச் செட்டிமகளுக்குத் தாயாகி மருத்துவம் பார்த்தா ராதலினாலும், பன்றிக் குட்டிகளுக்குத் தாயாய் வந்து பால் கொடுத்தமையாலும், சர்வலோகங்களுக்குந் தாயாக இருப்பதாலும், தாயாய் இருக்கும் கருணையும் உனக்கு உண்டே என்னினுமாம். 'அருள்செய்வாய்' இது முன்னிலை ஒருமைஏவல். இதனாலன்றோ **மணிவாசகரும்**,

"தாயாய் முலையைத் தருவானே"

எனத் தம் திருவாயால் துதித்தார். 8

சச்சிதானந்த சிவமே! பிறப்புளதேல், உடலழியாவண்ணம்
என்னைக் குண்டலிசத்தியிடம் ஒப்புவித்துவிடு; நான்
சிறியனாகையால் ஆற்றவல்லேன் ஏன்கின்றார்

இன்னம் பிறப்பதற் கிடமென்னில் இவ்வுடலம்
இறவா திருப்பமூலத்
தெழுமங்கி யமிர்தொழுகு மதிமண் டலத்திலுற
என்னம்மை குண்டலினிபால்
பின்னம் பிறக்காது சேயென வளர்த்திடப்
பேயேனை நல்கவேண்டும்
பிறவாத நெறியெனக் குண்டென்னின் இம்மையே
பேசுகர்ப் பூரதீபம்
மின்னும் படிக்ககண் டாகார அன்னைபால்
வினையேனை யொப்புவித்து
வீட்டுநெறி கூட்டிடுதல் மிகவுநன் றிவையன்றி
விவகார முண்டென்னிலோ
தன்னந் தனிச்சிறியன் ஆற்றிலேன் போற்றிவளர்
சன்மார்க்க முத்திமுதலே
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) போற்றி - அடியார்கள் போற்றிசெய்தல், வளர் - மேன்மேலும் ஓங்கிக்கொண்டிருக்கும், சன்மார்க்கம் - நன்னெறியைக்கொண்ட, முத்தி-மோக்ஷத்தின், முதலே-முதல்வனே!, சர்வம் - எல்லாப்பொருளிலும் எல்லா இடத்திலும், பரிபூரண - பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட-



விரிவாகிய, தத்துவம் - தத்துவங்கள் எல்லாம், ஆன - ஆகிய, சச்சிதானந்தம்-உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்றும் ஒருருவாய் அமைந்த, சிவமே - சிவமென்னும் மங்களாகரப்பொருளே!, இன்னம் - இனிமேலும், பிறப்பதற்கு - புவியிலே பிறப்பதற்கு, இடம் - இடம், எனின் - என்றால், இ-இந்த, உடலம்-தேகம், இறவாது-சாகாது, இருப்ப-இருப்பதற்கு, மூலத்து-மூலாதாரத்திலே, எழும் - எழுகின்ற, அங்கி - அக்னியானது, அமிர்து-அமிர்தம், ஒழுகும்-ஒழுகுகின்ற, மதி-சந்திர, மண்டலத்தில் - மண்டலத்தில், உற-பொருந்தும்படி, என்-அடியேனின், அம்மை-தாயாகிய, குண்டலி - குண்டலி சத்தியினிடத்து, பின்னம்-பழுது, பிறக்காது-உண்டாகாதபடி, சேய்-குழந்தையை, என-ஒப்ப, வளர்த்திட - வளர்க்கும்படி, பேயேனை - பேயையொத்த அடியேனை, நல்க - அவ்வம்மையிடத்துக் கொடுக்க, வேண்டும்-வேண்டுவன், பிறவாத - புவியிற் பிறக்காத, நெறி - வழி, எனக்கு - அடியேனுக்கு, உண்டு-உண்டு, எனின் - என்றால், இம்மையே - இப்பிறப்பிற்றானே, பேசு - எல்லோராலும் துதித்துப் பேசப்படுகின்ற, கர்ப்பூரம் - கர்ப்பூரத்தின், தீபம் - விளக்குப்போல், மின்னும்படிக்கு - பிரகாசிக்கும்படிக்கு, அகண்டாகார - பரந்த உருவுடன் விளங்கும், அன்னைபால்-தாயினிடத்தே, வினையேனை - தீவினைகளைச் செய்துள்ள அடியேனை, ஒப்புவித்து - ஒப்பித்து, வீட்டு - முத்தியின், நெறி-மார்க்கத்தில், கூட்டிடுதல்-சேர்த்தல், மிகவும்-மிகவும், நன்று-நல்லது, இவை-இவைகள், அன்றி - அல்லாமல், விவகாரம் - வழக்குகள், உண்டு - உண்டு, என்னிலோ - என்றாலோ, தன்னந்தனி - மிகவுந் தனியனாக இருக்கின்ற, சிறியேன் - சிறியேன், ஆற்றிலேன் - பொறுக்குஞ் சக்தி உடையவன் அல்லேன் எ-று.

(வி-ரை) 'இன்னும்' என்றது கணக்கற்ற பிறப்புக்களை எல்லாம்பெற்று பின் மனுடப்பிறப்பைப்பெற்று நின் திருஅருளுக்குப் பாத்திரமாக இருக்கின்ற இந்த நிலைக்குப் பின்னும் என்னும் பொருளில்நின்றது. 'மூலத்தெழும் அங்கி' என்றது மூலாக்கினியை. (அங்கி-நெருப்பு) 'மதிமண்டலம்' என்றது லலாடத்தானத்திலே புருவமத்தியில் நிற்கும் தானத்தை. 'என்னம்மை குண்டலி' என்றது குண்டலிசத்தியை இதனை 'மனோன்மணி' என்பர் ஆன்றோர். 'பான்மை' என்றது சிதைவு, ஈண்டு கேடுண்டாகாதபடி என்னும் பொருள் குறித்தது. 'சேய்' என்றது குழந்தையை. இது இளமைப்பெயர். 'சேய் என' என்றதில் 'என' என்றது உவமஉருபு. தான் ஒரு உறுதியின்றிப் பலதையும் நாடி அலைதலினால் தன் இனப் 'பேய்' என்றார். 'பிறவாத நெறி' என்றது முத்திநெறியை. 'இம்மையே' என்றது இந்தப் பிறப்பிலேயே என்னும் பொருளது. 'கர்ப்பூர தீபம்' என்றது கர்ப்பூரமும் தீபமும் ஒன்றுபட்டு ஒரே ஜோதிமயமானாற்போல் இறைவனும் தானும் ஒன்றுபட்டு அபின்னமாக ஜோதிமயமாகி ஆனந்தமாக இருக்க வேண்டும் என்பதாம். 'கர்ப்பூரதீபம்' என்றது உவமை. 'அகண்டாகார அன்னை' என்றது உருவகம் அகண்டாகாரத்தை அன்னையாக உருவகப்படுத்தினார். 'வினையேனை' என்றது தீவினை உடையவனாகிய அடியேனை

என்பதாம். இனி வினைகளைச்செய்யும் என இருவினையும் கொள்ளினும் இழுக்காது. என்னை? இருவினைகளும் பிறப்புக்குக் காரணங்களேயாதலின் என்க. 'வீட்டுநெறி' என்றது மோக்ஷநெறியை. 'வீடு' என்றது பிறவி வேதனைகள் விடுபட்ட நிலை, இடம் என்பது பொருளாம். முத்தி என்பதும் அதுவே. இவ்விரண்டுமன்றி வேறு வழக்குகள் இருக்கின்றது என்று சொன்னால் சின்னஞ்சிறியனாகிய அடியேன் அதற்கெல்லாம் ஆற்றல் உள்ளவன் அல்ல என்பார். 'இவையன்றி விவகார முண்டென்னிலோ தன்னந் தனிச்சிறிய னாற்றிலேன் போற்றிவளர்' என்றார்.

'விவகாரம்' என்றது வழக்கை. 'ஆற்றிலேன்' என்றது தாங்கேன் என்றதாம். 'போற்றிவளர்' என்றது துன்பங்களினின்றெல்லாம் என்னைக் காப்பாற்றிச் சிவானந்தபோகந் துய்க்கும்படி வளர்ப்பாயாக என்றதாம். 'சன்மார்க்கம்' என்றது வைதிக சைவமார்க்கத்தை. 'சன்மார்க்க முத்திமுதலே' என்றது வைதிக சைவசித்தாந்தத்தாற் கூறப்படும் முத்திக்குத்தலைவனாகிய இறைவனே என்பதாம். 'முத்திமுதல்' இது முத்தி+முதல் என்னும் இருசொற்சந்தி ஒருசொன்னீர்மையாய் இறைவனைக் குறித்தது. 'இறவாது' இது 'இற' என்னும் பகுதியடியாகப்பிறந்த எதிர்மறைப் பெயரெச்சம். 'மூலத்து' என்றதில் அத்துசாரியை. 'வளர்த்திட' இதில் 'இட' என்பது துணைவினை. 'கர்ப்பூரதீபம்' இது உம்மைத்தொகை. கர்ப்பூரமும் தீபமும் போல என்பது விரிவு. 'அகண்டாகாரஅன்னை' இது பண்புத்தொகை அகண்டாகாரமாகிய அன்னை எனப் பொருள்விரிதல் காண்க. 'அன்னை பால்' இதில் 'பால்' என்றது ஏழனுருபு. இடப்பொருளது. 'வினையேனை' இது 'வினையையுடைய என்னை' என்பதன் மரூஉ. 'முத்திமுதலே' இது விளியுருபு ஏற்றபெயர்.



**சச்சிதானந்த சிவமே! எல்லாம் நீயே தேவரீரையன்றி ஒன்றில்லை அடியேனை உய்வித்தருளவேண்டும் என்கின்றார்**

வேதாவை இவ்வணம் விதித்ததே தென்னின்உன்
வினைப்பகுதி என்பன் அந்த
வினைபேச அறியாது நிற்கஇவை மனதால்
விளைந்ததால் மனதைநாடில்
போதமே நிற்கும்அப் போதத்தை நாடிலோ
போதமும் நினால்விளக்கம்
பொய்யன்று தெய்வமறை யாவுமே நீயென்று
போக்குவர வறநிகழ்த்தும்
ஆதார ஆதேயம் முழுதுநீ யாதலால்
அகிலமீ தென்னை ஆட்டி
ஆடல்கண் டவனுநீ ஆடுகின் றவனுநீ
அருளுநீ மௌனஞான



தாதாவு நீபெற்ற தாய்தந்தை தாமுநீ
தமருநீ யாவுநீகாண்
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

**(ப-ரை)** சர்வம்-எல்லாப் பொருளிலும் எல்லா இடத்திலும், பரிபூரண-பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிவாகிய, தத்துவமான-தத்துவங்கள் எல்லாமாகிய, சச்சிதானந்தம் - உண்மை அறிவு ஆனந்தம் என்னும் மூன்றும் ஒருருவாக அமைந்த, சிவமே - சிவம் எனும் மங்களாகாரப் பொருளே!, வேதாவை - பிரமனைப் பார்த்து, இ - இந்த, வண்ணம் - விதம், விதித்தது-விதித்தது, யார் - யார், என்னின் - என்று கேட்டால், உன்-உன்னுடைய, வினை-வினையின், பகுதி-கூறுபாடு, என்பன்-என்று பதில் சொல்லுவன், அந்த-அந்த, வினை-வினையோ, பேச - பேசுதற்கு, அறியாது - அறியாது, நிற்க-அது நிற்க, இவை - இவைகள், மனத்தால் - மனத்தினால், விளைந்தால் - உண்டானது ஆனதினால், மனத்தை - மனத்தை, நாடில் - நாடுமிடத்திலோ, போதமே-அறிவே, நிற்கும்-நிலைத்து நிற்கும், அ-அந்த, போதத்தை-அறிவை, நாடிலோ-நாடினாலோ, போதமும்-அவ்வறிவும், நின்னால் - தேவரீரால், விளக்கம்-விளங்கப்பெறுகின்றது, பொய்-இதுபொய், அன்று - அல்ல (சத்தியமே) தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, மறை - வேதங்கள், யாவுமே-எல்லாமுமே, நீ - தேவரீரே, என்று - என்று, போக்கு - போக்கும், வரவும்-வரவும், அற-இல்லாதபடி, நிகழ்த்தும்-கூறுநிற்கும், ஆதாரம்-ஆதாரமும், ஆதேயம் ஆதேயமும், முழுதும்-முற்றும், நீ-தேவரீரே, ஆதலால்-ஆகையால், அகிலம்-பூமியின், மீது-மேலே, என்னை-அடியேனை, ஆட்டி - ஆட்டிவைத்து, ஆடல்-அந்த ஆட்டத்தை, கண்டவனும் - பார்த்தவனும், நீ - தேவரீரே, ஆடுகின்றவனும்-ஆடுவோனும், நீ - தேவரீரே, அருளும் - திருவருளும், நீ-தேவரீரே, மௌனம் - மோனத்தையுடைய, ஞானம் - ஞானத்தைக் கொடுக்கும், தாதாவும் - வள்ளலும், நீ - தேவரீரே, பெற்ற - பெற்றெடுத்த, தாய்-தாயும், தந்தை-தந்தையும், தாமும் - தாமும், நீ - தேவரீரே, தமரும் - (மற்றுமுள்ள) சுற்றத்தார்களும், நீ-தேவரீரே, யாவும்-இன்னுமுள்ள எனக்கு நன்மையான பொருள்களும், நீ-தேவரீரே; எ-று.

**(வி-ரை)** பிரமன் வேதங்களுக்கு உரியவன் ஆதலின் பிரமன் 'வேதா' எனப் பெயர்பெற்றான். 'இவ்வண்ணம்' இது இந்தவிதம் என்னும் பொருளது. இதில் இகரம் அண்மைச்சுட்டு; எந்தவிதம் என்னில் முத்திச் சகம்பெறாது பிறவித்துன்பில் அல்லற்பட்டு என்பதாம். 'ஏது' இது என்ன காரணம் என்னும் பொருளது. 'வினைப்பகுதி' என்றது வினையின் கூறுபாடு, வினைகாரணம் என்பதாம். வினைசமம் ஆதலின் அது சித்துப் பொருள்போல் பேசவல்லதன்று இதுகொண்டே 'அந்தவினைபேசஅறியாது' என்றார். மனத்தைத்தேடிக் காணச்சென்றால் மனந்தோன்றாது மறைந்து நிற்க அறிவே புலனாகும் என்பார் 'மனதைநாடில் போதமே நிற்கும்' என்றார்.

இறைவன் அறிவுக்கு அறிவாய் இருந்து விளக்குபவன் ஆதலின், 'அப் போதத்தை நாடிலோ போதமு நின்னால்விளக்கம்' என்றார். 'பொய்யன்று' என்றது இது உண்மையே என்பதாம். 'தெய்வமறை' என்றது தெய்வத் தன்மை பொருந்திய வேதம் என்பதாம். இனி இதற்குத் தெய்வத்தின் வழியாய்த் தெய்வந்தா வந்தவேதம் என்பாரும் உண்டு. இறைவன் எல்லாமாய் அல்லதுமாய் இருப்பவன் ஆதலின் 'தெய்வமறை யாவுமே நீயென்று போக்குவா வறநிகழ்த்தும்' என்றார்.

'போக்குவாவின்றி' என்றது சதா இடைவிடாமல் என்பது பொருளாம். 'ஆதாரம்' என்றது பொருள்கள் தங்கட்கு இடமாயிருப்பவன் நீஎன்பதும் 'ஆதேயம்' என்றது இடத்துத்தங்கும் பொருளும் நீ என்பதாம். இறைவன் காண்பான், காட்சி, காணப்படுபொருளாக இருத்தலினாலும் இடமும் இடத்தியங்கும் பொருளுமாக இருத்தலினாலும் 'ஆதார வாதேய முழுதநீ' என்றும், 'அகிலமீ தென்னையாட்டி ஆடல்கண் டவனுநீ யாடுகின் றவனுநீ யருளுநீ' என்றார். 'அருளும்நீ' என்றது திருஅருட்சத்தியை. 'மௌன ஞான தாதா' என்றது மௌனகுருவாகவந்து அடியேனுக்கு மௌனநிலை தந்தருளியவனும் நீயே என்றதாம். 'தாதா' என்றது கொடைவள்ளலை. 'நீகாண்' இதில் காண் முன்னிலையசைச்சொல். 'என்பன்' இது எதிர்கால வினைமுற்று. இது என்பான் என்பது ஈற்றுக்கு அயல் எழுத்து குறுகி நின்றது. இதில் விகுதிகாலங்காட்டிற்று. 'போதமே' இதில் ஈற்றில்நின்ற ஏகாரம் தேற்றேகாரம். 'நின்னால்' என்றதில் 'ஆல்' மூன்றனுருபு. கருவிப் பொருளில் வந்தது. 'நின்னால் விளக்கம்' இது உன்னால் விளங்குவதாகும் என்னும் பொருள்தரலின் வினைதொக்குநின்றது. 'அன்று' இது குறிப்பு வினைமுற்று. 'கண்டவன்' இறந்தகால வினையாலணையும்பெயர். 'ஆடுகின்றவன்' நிகழ்கால வினையாலணையும்பெயர். இதில் வந்த உம்மைகள் எல்லாம் எண்ணும்மைகள். 10

சச்சிதானந்த சிவமே! அடியேன் எந்தவிதமான உயரிய உலக இன்பங்களை அனுபவிக்கினும் தேவரீரின் திருவருளை அடியேன் மறவாதிருக்கும்படி அருள்செய்து காத்தருள வேண்டும் என்கின்றார்

கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினுங்
குளிர்தீம் புனற்கைஅள்ளிக்
கொள்ளுகினும் அந்நீ ரிடைத்திளைத் தாடினுங்
குளிர்சந்த வாடைமடவார்
வந்துலவு கின்றதென முன்றிலிடை யுலவவே
வசதிபெறு போதும்வெள்ளை
வட்டமதி பட்டப் பகற்போல நிலவுதர
மகிழ்போதும் வேலையமுதம்



விந்தைபெற அறுசுவையில் வந்ததென அமுதுண்ணு
வேளையிலும் மாலைகந்தம் [ம்
வெள்ளிலை அடைக்காய் விரும்பிவேண் டியவண்ணம்
விளையாடி விழிதுயிலினுஞ்
சந்ததமும் நின்னருளை மறவா வரந்தந்து
தமியேனை ரக்ஷைபுரிவாய்
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதா னந்தசிவமே.

(ப-ரை) சர்வம் - எல்லாப்பொருளிலும் எல்லாயிடத்திலும், பரிபூரண- பரிபூரணமாக நிறைந்துள்ளவனே!, அகண்ட - விரிவாகிய, தத்துவம் - தத்துவங்கள் எல்லாம், ஆன - ஆகிய, சச்சிதானந்தம் - உண்மை அறிவு இன்பம் என்னும் மூன்றும் ஒருருவாக அமைந்த, சிவமே-சிவம் என்னும் மங்களாகரப் பொருளே!, கொந்து-பூங்கொத்துகள், அவிழ்-மலரப்பெற்ற, மலர் - புஷ்பங்கள் நிறைந்த, சோலை-சோலையின், நல்-நல்ல, நீழல்-நிழலில், வைகினும்-வசித்தாலும், குளிர்-குளிர்ச்சிபொருந்திய, தீம்-இனிமையாகிய, புனல்-ஜலத்தை, கை - கையினால், அள்ளி - கொண்டு, கொள்ளுகினும்-பருகினாலும், அ-அந்த, நீரிடை - ஜலத்திலே, திளைத்து - முழுகி, ஆடினும்-விளையாடினாலும், குளிர்-குளிர்ச்சிபொருந்திய, சந்தம் - சந்தனத்தின், வாடை - மணம்பொருந்திய காற்று, மடவார் - இளம்பெண்கள், வந்து - வந்து, உலவுகின்றது-உலாவுவது, என்ன-போல, முன்றிலினிடை - முற்றத்தினில், உலவ - உலவும்படி, வசதி- அனுகூலங்களை, பெறும்-அடையும், போதும்-போதும், வெள்ளை - வெண்மையாகிய, வட்டம் - வட்டவடிவமான, மதி - சந்திரன், பட்டப்பகல்-நடுப்பகலை போல-போல, நிலவு - சந்திரப்பிரகாசத்தை, தர-கொடுக்க, மகிழ்-சந்தோஷப்படும், போதும் - பொழுதும், வேலை - கடலில் தோன்றிய, அமுதம் - அமிர்தமானது, விந்தைபெற-ஆச்சரியப்படும்படி, அறு-ஆறாகிய, சுவையில்-ருசியையுடைய தின்பண்டங்களில், வந்தது - வந்தது, என்ன-என்று சொல்லும்படி, அமுது-அமிர்தம்போன்ற நல்லுணவை, உண்ணும்-சாப்பிடும், வேளையிலும்-காலத்திலும், மாலை - புஷ்பமாலைகளையும், கந்தம் - சந்தனம் புனுகு முதலிய வாசனைகளையும், வெள்ளிலை-அடை வெற்றிலை, காய்-பாக்கு ஆகிய இவைகளை, விரும்பி - விரும்பி உண்டு, வேண்டிய - விரும்பிய, வண்ணம் - விதமாக, விளையாடி-விளையாடி, விழி-கண்கள், துயிலினும்-தூங்கினாலும், சந்ததமும்-எக்காலத்தும், நின்-தேவரீரின், அருளை-திருஅருளை, மறவா-மறவாதிருக்கும்படியான, வரம் - வரத்தை, தந்து - கொடுத்து, தமியேனை - தனியேனாகிய அடியேனை, ரக்ஷைபுரிவாய்-காத்து அருள்செய்வாயாக எ-று.

(வி-ரை) 'கொந்தி' என்றது புஷ்பக்கொத்தை. ஈண்டு கொத்து என்றது கொந்து என மெலித்தல்விகாரம் பெற்றுநின்றது. 'அவிழ்' என்றது மலர்தல் என்னும் வினையை உணர்த்திற்று. 'மலர்ச்சோலை' இது மலர்களையுடைய சோலை எனப்பொருள்தரலின் இது இரண்டாம்வேற்றுமை உருபும்

பயனும் உடன்தொக்கதொகை. இனி இதற்கு விரிந்தசோலை எனப் பொருள்கூறுவாருமுளர். இது அவ்வளவு சிறந்தபொருளென்பதை உய்த்துணர்க. 'நன்நீழல்' என்றது நறுவியநீழலை நிழலுக்கு என்னநன்மை என்னின் நறுமணம்பயத்தல் குளிர்ந்திருத்தல் மனச்சோர்வு அகற்றல் தேகாரோக்கியமாக இருத்தல் முதலியனவாம். 'குளிர்தீம்புனல்' என்றது குளிர்ச்சி உடையதும் மதுரமானதுமாகிய நீர் என்க. நீருக்குச் சுவையின்றே எனின், நிலத்தின் இயல்பால் நீர்திரிந்து இன்சுவை உடையதாம் என்றறிக. 'கொள்ளுகினும்' என்றது ஈண்டு பருகுதலை உணர்த்திற்று. 'திளைத்தாடல்' என்றது முழுகிவிளையாடலை. 'குளிர்சந்தவாடை' என்றது குளிர்ந்த சந்தனமணம் வீசும் காற்று என்பது பொருளாம். வடகாற்றுக்கு 'வாடை' என்பது பெயராயினும் ஈண்டு பொதுவின்று காற்றை உணர்த்திற்று. 'மடவார்' என்றது ஈண்டு இளம்பெண்களை, மங்கைப்பருவப்பெண்களை உணர்த்தி நின்றது. என்னை? இளம்பெண்களாகிய மங்கைப் பருவப்பெண்களைக் காணலும் இன்பந்தருவதாதலின் என்க. இதனை,

> "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள" என்ற **திருக்குறட்பா**வாலும் அறிக.

'மடவார் வந்துலவு கின்றதென' என்றது உவமை. 'குளிர்சந்தவாடை' உபமேயம். 'முன்றில்' இது இலக்கணப்போலி இல்முன் என்பது இலக்கணநெறி. 'வசதி' என்றது ஈண்டு இன்பவசதியை என்பது பொருளாம். இனி இதற்கு வீட்டுவசதியைப் பெறும்போதும் என்னலுமாம். 'பட்டப்பகல்' என்றது நடுப்பகலை. 'நிலவு' என்றது சந்திரப்பிரகாசம், ஒளி என்பது பொருளாம். 'அமிர்தம்' கடலிற்பிறந்ததாதலின் 'வேலை அமுதம்' என்றார். அமுதம் என்பது அழிவில்லாதது அழிவைத்தராதது. சாவாமையைத் தருவது என்னும் காரணங்குறித்து வந்தபெயர். தேவர்கள் திருப்பாற் கடலிற் கடைந்தெடுத்த தேவாமிர்தம் ஆறுசுவைகளுடன் அறுசுவைபதார்த்தங்களாக வந்ததுபோல என்பார் 'வேலையமுதம் விந்தைபெற அறுசுவையில் வந்ததென' என்றார். இது தற்குறிப்பேற்றம். 'அமுது' என்றது ஈண்டு உணவை உணர்த்திநின்றது. 'கந்தம்' என்றது சந்தனம் முதலிய வாசனைப் பொருளை உணர்த்திற்று. 'வெள்ளிலை' என்றது வெற்றிலையை. 'அடை' என்றது இலையை. 'வெள்ளிலை அடை' என்றது ஒருசொல்நீர்மையாய் நின்று வெற்றிலையை உணர்த்திற்று. வெள்ளிலையாகிய அடை என்பதாக விரிதலின் இது பண்புத்தொகை. இனி இதற்கு வெள்ளிலை+அடைகாய் எனப் பிரித்து வெள்ளிலையும் அதற்கு அடைவு உடையதாகிய காயும் எனப் பொருள்கொள்வாரும் உண்டு. 'காய்' என்றது பூகத்தின் காயாகிய பாக்கை. 'விழிதுயிலல்' என்றது கண்மூடித் தூங்குதலை உணர்த்திற்று. 'சாந்தமும்' என்றது எப்பொழுதும் இடைவிடாமல் என்ற பொருளதாம். 'ரக்ஷைபுரிவாய்' என்றது ரக்ஷித்தலைச் செய்தருள்வாய் என்பதாம். இச்செய்யுளில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'புரிவாய்' இது முன்னிலை ஏவல்வினைமுற்று. 11

---



# தேசோமயானந்தம்

தேசோமயானந்தமே! முனிவர்களுக்கு அடிமையாகியோ நிலையில் நின்று அத்துவிதானந்த இன்பத்தை யான்பெறத் திருவருள் கிருபைசெய்ய இந்த ஜன்மத்திலேயே காணபேனோ என்கின்றார்

மருமலர்ச் சோலைநெறி நன்னீழல் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
மந்த்ரமா லிகைசொல்லும் இயமநிய மாதியாம்
மார்க்கத்தில் நின்றுகொண்டு
கருமருவு காயத்தை நிர்மலம தாகவே
கமலா சனதிசேர்த்துக்
காலைப் பிடித்தனலை அம்மைகுண் டலியடிக்
கலைமதியி னூடுதாக்கி
உருகிவரும் அமிர்தத்தை யுண்டுண் டுறங்காமல்
உணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனுச் சமரச சொரூபசுகம்
உற்றிடஎன் மனதின்வண்ணந்
திருவருள் முடிக்கஇத் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) தேடு-தேடுதற்கு, அரிய-அரிதாகிய, சத்து-உண்மை, ஆகி-ஆகி, என்-அடியேனின், சித்தம் - மனத்தின், மிசை - மேலே, குடிகொண்ட-குடிகொண்டிருக்கிற, அறிவு - அறிவுமயம், ஆன-ஆகிய, தெய்வமே - தெய்வமே!, தேசோமயம்-ஒளியுருவமாகிய, ஆனந்தமே - இன்பப் பிழம்பாகிய கடவுளே!, சோலை - சோலைகள் நெருங்கிய, மரு-வாசனை தங்கிய, மலர்-பூக்களையுடைய, மலை - மலை, ஆதி - முதலிய நெறி-இடத்து, நல்-நல்ல, நீழல்-நிழலையுடைய, இடங்களில், மன்னும்-நிலைபெற இருக்கின்ற, முனிவர்க்கு-முனிவர்களுக்கு, ஏவலாய்-அடிமையாகி, மந்திரம்-மந்திரங்கள்கொண்ட, மாலிகை - ஒழுங்கில், சொல்லும்-கூறப்படுகின்ற, இயமம் - இயமமும், நியமம் - நியமமும், ஆதியாம்-முதலியவைகளின், மார்க்கத்தில் - நெறியிலே, நின்றுகொண்டு - இருந்துகொண்டு, கரு-கர்ப்பவாசனையை, மருவு-பொருந்திய, காயத்தை-தேகத்தை, நிர்மலம்-பரிசுத்தம், ஆக - ஆகும்படி, கமலாசனம் - பத்மாசனம், ஆதி - முதலியவைகளில், சேர்த்து - அமைத்து, காலை - பிராணக்காற்றை, பிடித்து-

அடக்கி, அனலை-மூலாக்கினியை, அம்மை - தாயாகிய, குண்டலி - குண்டலி சத்தியின், அடி-திருவடியாகிய, கலைமதியின்-பூரணகலைகளையுடைய சந்திரனின், ஊடு-இடத்து, தாக்கி-மோதி, உருகிவரும்-அதினின்று உருகிவழியும், அமிர்தத்தை-அமுதை, உண்டு உண்டு - மிகவும் பருகி, உறங்காமல் - கேவல நித்திரை செய்யாது, உணர்வான-ஞானமாகிய, விழியால்-கண்களால், நாடி-பார்த்து, ஒன்றோடு - ஒன்றுடனே, இரண்டு - இரண்டு, என்னு - என்னுத, சமரசம் - ஒன்றுபட்ட, சொரூபம் - வடிவத்து, சுகம் - இன்பத்தை, உற்றிட-பெற, என்-அடியேனின், மனதின்-விருப்பத்தின், வண்ணம் - விதம்போல, திருஅருள்-திருவருளானது, முடிக்க-முடித்துக் கொடுத்தருள, இ-இந்த, தேகமொடு-தேகத்துடனே இருக்கும்பொழுதே, காண்பனோ - காணுவேனோ; எ-று.

(வி-ரை) 'மருமலர்' என்றது வாசனையையுடைய மலர் எனவிரிதலின் இது இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகை. 'சோலைநெறி' என்றது சோலையிடம். இனி இதற்குச் சோலைவழி என்பாரும் உண்டு. 'நன்நீழல்' என்றது தேகாரோக்கியமாகிய நிழல், சோகதாபநீக்கு நிழல், சுகந்தம்வீசுநிழல் என்பது பொருளாம். 'மலையாதி' என்றது மலை, குன்று, குகை, புதர், காடு முதலியவைகளை. 'முனிவர்' என்றது உலகப் பற்றை வெறுத்துவிட்டவர் என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். 'ஏவல்' என்றது பணியாளை. ஏவல்கேட்டு ஏவியதைச்செய்வோரை ஏவல் என்றது தொழில்ஆகுபெயர். 'மந்திரமாலிகை' இது யோகநெறியை உணர்த்தும் சாத்திரநூலைக் குறித்தது. 'இயமநியமம்' என்பன யோக சாதனைக்குரிய யோகக்கூறுகளை உணர்த்திற்று. 'கருமருவுகாயம்' என்றது கருப்பத்திற் பொருந்தி இருந்து பிறந்ததேகம் என்பதுபொருளாம். இனி இதற்கு கர்ப்பவாதனையை அடைந்த தேகம் என்பாரும் உளர். கருப்ப வாதனைகளாவன:—கருப்பையிற் கட்டுப்பட்டிருத்தல். அதிற் சலம் பூரிக்கப் பெறல், உதராக்கினியாற் றகிக்கப்பெறல், பிரசூதவாயுவால் முறித்துத் தள்ளப்பெறல், யோனித்துவாரத்தால் நெருக்குண்ணல் முதலியனவாம். 'நிர் மலம்' என்றது மலமற்றது என்பது பொருளாம். இது வடசொல். இதில் 'நிர்' என்பது எதிர்மறை உபசர்க்கம். 'கமலாசனம்' என்றது பதுமாசனம் என்பதாம். இது யோகிகளின் ஆதனத்தொன்று. 'முதலிய' என்றது பிற ஆதனங்களை அவைகளை எல்லாம் யோகநூலிற் காண்க.

'கால்' என்றது பிராணவாயுவை. 'அனல்' என்றது மூலாக்கினியை. 'குண்டலி' என்றது குண்டலிசக்தியை. 'கலைமதியினூடு' என்றது மதி மண்டலத்தை. இது லலாடஸ்தானத்தில் புருவமத்தி இடத்தை உணர்த்தும். 'உருகிவரும் அமிர்தத்தை' என்றது மதியமுதை. 'உண்டுண்டு' என்றது மிகுதிப்பொருளில் அடுக்கியது. மிகுதியாக உண்டு, இடையறாதுண்டு என்பதாம். 'உறங்காமல்' என்றது கேவலநித்திரை செய்யாது இருத்தலை. 'உணர்வானவிழி' என்றது ஞானக்கண்ணை 'ஒன்றோ டிரண்டெனுச் சமரச சொரூபம்' என்றது அத்துவிதநிலையை. 'மனம்' என்றது மனத்தால்



எண்ணப்படும் எண்ணத்தைக்குறித்தது இது ஆகுபெயர் என் விருப்பப்படி என்பதாம். 'இத்தேகம்' என்றது எடுத்த இந்தப் பிறவியிலே என்பதாம். 'காண்பனோ' என்றது அடைவனோ என்ற பொருளது. 'தேடரிய சத்து' என்றது வேதாதிகளால் தேடியுங் காண்பதற்கு அரிதாகிய உண்மைப் பொருள் என்பதாம். இறைவன் எல்லாருள்ளத்தையும் கோயிலாகக் கொண்டு உறைபவன் ஆதலின் 'என் சித்தமிசை குடிகொண்ட" என்றார். இறைவன் உயிர்களின் அறிவுக்கு அறிவாய் இருப்பவன் ஆதலின் ஆதலினாலும் இறைவன் ஞானசொரூபி ஆதலினாலும் 'அறிவான தெய்வமே' என்றார். இறைவன் பேரொளிப்பிழம்பாகவும் இன்பசொரூபியாகவும் இருத்தலினால் 'தேசோமயானந்தமே' என்றார். இதுமுதல் பதினொறு பாக்கள் கொண்ட இப்பதிகம் **'தேசோமயானந்தம்'** என்னும் பெயர்த்து. என்னை? ஒவ்வொருபாட்டிலும் 'தேடரிய சத்தாகியென் சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே தேசோ மயானந்தமே' எனபது மகுடமாகப் பெற்றிருத்தலினாலும், ஈற்றில் 'தேசோமயானந்தமே' என முடிவதாலும் என்க. 'நன்நீழல்' இதில் 'நீழல்' என்பது நிழல் என்பதன் ஆதி நீண்டு நின்றது இது நீட்டல்விகாரம். 'மதியினூடு' இதில் 'ஊடு' என்றது உள்ளிடத்தைக் குறித்தது. 'காண்பனோ' என்றதில் ஈற்று ஓகாரம் வினா இடைச்சொல் இது ஐயவினா. 'அம்மை குண்டலி' இது பண்புத்தொகை. அம்மையாகிய குண்டலி என விரிந்து நிற்கும். 'வரும் அமிர்தம்' என்பதில் 'வரும்' என்பது எதிர் காலப் பெயரெச்சம். 'உண்டுண்டு' இது மிகுதிபற்றிவந்த அடுக்குத் தொடர். 'உறங்காமல்' இது மல் விகுதிபெற்ற எதிர்மறைத்தொழிற்பெயர். 1

தேசோமயானந்தமே! பிறவிக்கடலில் விழுந்து துன்புறுகின்றேன்
அறிவாகிய மரக்கலத்தையும் இழந்தோன் காலர்களாகிய
திருட்டுக் கப்பற்காரர்கள் வருமுன் அடியேனைக்
கரையேற்றி அருள் என்கின்றார்

இப்பிறவி என்னுமோர் இருட்கடலில் மூழ்கிநான்
என்னுமொரு மகரவாய்ப்பட்
டிருவினை எனுந்திரையின் எற்றுண்டு புற்புதம்
எனக்கொங்கை வரிசைகாட்டுந்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத ஆசையாங் கானுறு வான்நதி
சுரந்ததென மேலும்ஆர்ப்பக்
கைப்பரிசு காரர்போல் அறிவான வங்கமுங்
கைவிட்டு மதிமயங்கிக்
கள்ளவங் கக்காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டும்எளியேன்

செப்பரிய முத்தியாங் கரைசேர வுங்கருணை
செய்வையோ சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) சத்து-உண்மை, ஆகி-ஆகி, என்-அடியேனின், சித்தம்-மனம், மிசை-இடத்து, குடிகொண்ட - குடிகொண்டிருக்கிற, அறிவான - ஞானமயமான, தெய்வமே - தெய்வமே!, தேசோமயம் - ஒளிவடிவங்கொண்ட, ஆனந்தமே இன்பரூபனே!, இ-இந்த, பிறவி-பிறப்பு, என்னும் - என்று கூறப்படும், ஒரு-ஒரு, இருள்-கரியநிறம் பொருந்திய, கடலில் - கடலுக்குள்ளே, முழுகி-முழுகி, நான்-நான், என்னும் - என்று கூறும், (அகங்காரமாகிய) ஒரு - ஒரு, மகரம்-முதலையினுடைய, வாய்-வாயில், பட்டு-அகப்பட்டு, இரு-இரண்டாகிய, வினை-வினைகள், எனும் - என்று சொல்லப்பெறும், திரையின் - அலைகளால், எற்றுண்டு - (மோதப்பெற்று) வீசி அடிக்கப்பெற்று, புற்புதம் - நீர்க்குமிழி, என-என்று ஒப்புக்கூறப்படும், கொங்கை-கொங்கைகளின், வரிசை-ஒழுங்கை, காட்டும்-காட்டும்படியான, துப்பு-பவளத்துண்டையொத்த, இதழ்-உதடுகளையுடைய, மடந்தையர்-பெண்களது, மயல்-காமமயக்கமாகிய, சண்டமாருதம்-ஊழிக்காற்றாகிய, சுழல்-சுழல்காற்று, வந்துவந்து - அடிக்கடி வந்து, அடிப்ப-மோத, சோராத-குறைவுபடாத, அசை-ஆசை, ஆம் - ஆகிய, கான் - காட்டு ஆறு-ஆறு, வான்-ஆகாய, நதி-நதியாகிய கங்கை, சுரந்தது-பெருக்கெடுத்தது, என-என்று ஒப்புக்கூற, மேலும் - மேலுக்குமேல், ஆர்ப்ப - வந்திருக்க, கைப்பரிசு-கைப்புனை, காரர் - காரர்கள், போல் - போல, அறிவான - அறிவாகிய, வங்கமும் - கப்பலையும், கைவிட்டு - கைசோரவிட்டு, மதி - அறிவு, மயங்கி-மருண்டு, கள்ளம் - கபடத்தையுடைய, வங்கம் - கப்பலையொத்த, காலர்-எமதூதர்கள், வருவர்-வருவார்கள், என்று-என்று, அஞ்சி-பயந்து, கண்-கண்களிலிருந்து, அருவி-அருவியைப்போலச் சோகக்கண்ணீரை, காட்டும்-காட்டுகின்ற, எளியேன் - ஏழையடியேன், செப்பு - சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, முத்தி-மோக்ஷம், ஆம்-ஆகும், கரை-கரையை, சேரவும்-அடையவும், கருணை-கிருபையை, செய்வையோ-செய்தருள்வாயோ? எ-று.

(வி-ரை) பிறவி என்பது அஞ்ஞான சம்பந்தத்தால் வருவதாகையாலும், கரையேறற்கு அரியது ஆகையாலும் கரிய கடலுக்கு உவமித்து, 'இப்பிறவியென்னுமோ ரிருட்கடலின் மூழ்கி' என்றார். இது உருவகஅணி. 'இருள்' என்றது கருநிறத்தை. கடலில்மூழ்கியவனை முதலை கவ்வுமாதலின், 'நான்' என்னும் அகங்காரதத்துவத்தை முதலையாக உருவகித்து 'நான் என்னும் ஒரு மகரவாய்ப்பட்டு' என்றார். 'ஒரு' என்பதற்கு ஒப்பற்ற பெரிய என்று பொருள் கூறுவர். கொண்டது விடாமைக்கு ஒப்பின்மையது என்பது அறிக. (மகரம்-முதலை) கடலுக்கு அலை உண்டு அவ் அலையே கடலில் விழுந்தாரை அலக்கழிப்பதாதலின் மீண்டும்மீண்டும் செத்துச்செத்துப் பிறக்கச்செய்யும் வினைகளை அலையாக உருவகப்படுத்தி. 'இருவினை யெனுந்திரையி னெற்றுண்டு'



என்றார். கடலில் தோன்றும் நீர்க்குமிழிக்கு மாதர் கொங்கைகளையும், கடலில் அடிக்கும் சுழற்காற்றிற்குக் காமமயக்கத்தையும்கொண்டு முலைகளைப் புற்புதமாகவும், மடந்தையர்மயலைச் சண்டமாருதச் சுழலாகவும் உருவகப் படுத்தி, 'புற்புதமெனக் கொங்கை வரிசைகாட்டுந் துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச் சுழல்வந் தடிப்ப' என்றார்.

ஆசையைக் கானாறாக உருவகித்து, 'சோராத ஆசையாங் கானாறு வானாறு சுரந்ததென மேலுமார்ப்ப' என்றார். அறிவை வங்கமாக உருவகித்தார். வங்கம்-கப்பல். 'பரிசு' என்றது சிறுதோணியை, படகை. இது வெள்ளத்தைக்கடக்க உபயோகிக்குந் தோணிபோலும் ஒருபொருள். எமனை கப்பற் கள்வராக உருவகித்தார். பிறவியைக் கடல் என்றவர் முத்தியைக் கரை என்றார். இச்செய்யுள் முற்றும் உருவகஅணி. 'துப்பு' என்றது பவளத்தை. என்னை? மடந்தையர் இதழுக்குப் பவளம் உவமப்பொருளாதலின் 'துப்பிதழ் மடவார்' என்றார். 'சண்டமாருதம்' இது பிரளயக் காற்று; பெருங்காற்று என்னும் பொருளது. 'வந்துவந்து' இது மிகுதியால் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். ஆசை அளவுபடாது மேலும்மேலும் வளருந் தன்மை உடையதாதலின் 'சோராத ஆசையாங் கானாறு' என்றார். இதனை, "வாவா வாய்மடுத்து வல்லிராய் மாய எரிதழன் மாயா திரா" என்ற செய்யுளாலும் நன்கறியலாம்.

'வானாறு' என்றது கங்காநதியை. என்னை? இது வானலோகத்திருந்து வருவதாகப் புராணங் கூறலின் என்க. 'காலர்' ஜீவப்பிராணிகளின் வாழ்நாட்காலத்தைக் கொள்ளுதலால் எமனுக்குக் காலன் என்னும் பெயர் ஏற்பட்டது. இது காரணப்பெயர். 'எளியேன்' என்றது அறிவின் எளிமை கொண்டாம். 'செய்வையோ' என்றதில் நின்ற ஈற்று ஓகாரம் ஐயவினா. 'கானாறு' இது காட்டாறு. கான்+ஆறு=கானாறு என ஆயது. மற்றைய நதிகளைவிடக் காட்டாறு விசையுடைமைபற்றிக் கானாறு என்றார். 'கைப்பரிசு' இதில் 'கை' என்பது சிறுமை குறிக்கவந்த அடைமொழி. 2

தேசோமயானந்தமே! சுற்றம், சந்தையிற் கூட்டம், செல்வவாழ்வு,
இந்திரஜாலம், தேகம் கனவு என்பதையறிந்து நான் என்னும்
அகங்காரதத்துவம் ஒழியத் திருவருள் வெள்ளத்தில்
மூழ்காது வருந்துவது ஏன் என்கின்றார்

தந்தைதாய் தமர்தாரம் மகவென்னும் இவையெலாஞ்
சந்தையிற் கூட்டம்இதிலோ
சந்தேக மில்லைமணி மாடமா ளிகைமேடை
சதுரங்க சேனையுடனே
வந்ததோர் வாழ்வுமோர் இந்த்ரசா லக்கோலம்
வஞ்சனை பொருளைமலோபம்

வைத்தமன மாங்கிருமி சேர்ந்தமல பாண்டமோ
வாஞ்சனை மி லாதகனவே
எந்தநா ளுஞ்சரி யெனத்தேர்ந் து தேர்ந்துமே
இரவுபக லில்லாவிடத்
தேகமாய் நின்றநின் அருள்வெள்ள மீதிலே
யானென்ப தறவுமூழ்கிச்
சிந்தைதான் தெளியா து சுழலும்வகை என்கொலோ
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) தேட-தேடுதற்கு, அரிய - அரிதாகிய, சத்தாகி - உண்மையாகி, என்-அடியேனின், சித்தமிசை - மனத்தினிடத்து, குடிகொண்ட - குடியாக எழுந்தருளியிருக்கும், அறிவான - ஞானமயமாகிய, தெய்வமே - தெய்வமே!, தேசோமயம்-ஒளிமயமாகிய, ஆனந்தமே - இன்பப்பிழம்பே!, தந்தை - தகப்பனும், தாய்-தாயும், தமர்-சுற்றத்தார்களும், தாரம்-மனைவியும், மகவு-குழந்தையும், எனும் - என்று சொல்லப்படுகிற, இவை-இவைகள், எலாம்-எல்லாமும், சந்தையில்-சந்தைகூடும் இடத்திலே, கூட்டம்-கூடியிருக்கும் கூட்டங்களாம், இதிலோ-இந்த விஷயத்திலோ, சந்தேகம் - சந்தேகம், இல்லை-இல்லை, மணி-இரத்தின கசிதமாகிய, மாடம்-வீடுகளும், மாளிகை-மாளிகைகள், மேடை-மேடைகள், சதுரங்கம் - நால்வகை அங்கங்களோடுகூடிய, சேனை - சேனைகளும், உடனே-ஆகிய இவைகளுடனே, வந்தது - வந்ததாகிய, ஓர்-ஒப்பற்ற, வாழ்வு-வாழ்வும், ஓர்-ஒரு, இந்திரஜாலம்-இந்திரஜால வித்தையின், கோலம்-அழகை ஒக்கும், வஞ்சனை-வஞ்சகமும், பொறாமை-பொறாமையும், லோபம்-பிசினாறித்தனமும், (ஆகிய இவைகள்) வைத்த - வைக்கப்பெற்ற, மனம்-மனம், ஆம்-ஆகிய, கிருமி-புழுக்கள், சேர்-சேர்ந்துள்ள, மலம்-மலம்பொதிந்த, பாண்டமோ - பாத்திரம் போன்றதாகிய உடலோ, வாஞ்சனை - விருப்பம், இலாத-இல்லாத, கனவே - சொர்ப்பனமே!, (ஆகையால் இந்த விஷயங்களை நன்கறிந்து) எந்த-எந்த, நாளும்-காலத்தும், சரி-சரியானது, என்று-என்று, தேர்ந்து தேர்ந்துமே - ஆராய்ந்து நன்குதெளிந்து, இரவு - இரவும், பகல்-பகலும், இல்லாத-இல்லாத, இடத்து-இடத்திலே, ஏகமாய்-ஒன்றாகி, நின்ற-நின்ற, நின் - தேவரீரின், அருள் - திருவருளாகிய, வெள்ளம் - வெள்ளத்தின், மீதின்-மேலே, யான் - நான், என்பது - என்றுகூறுந் தற்போதம், அறவும்-அறும்படிக்கு, மூழ்கி - முழுகி, சிந்தை - மனமானது, தெளியாது - தெளிவு பெறாமல், சுழலும்-அலமரும், வகை-விதம், என்கொல்-யாது? எ-று.

(வி-ரை) ‘தந்தைதாய்’ இது உம்மைத்தொகை. தந்தையும் தாயும் என விரியும். ‘தந்தை’ இது முறைப்பெயர். ‘தாய்’ என்றது சேய் தாவிச்செல்லற்கு இடமாய் இருப்பவள் என்ற பொருளில் வந்தது. இனி, தந்தையுடலில் விந்தாக இருந்த பின் தாய் கருப்பையில் செல்ல இடமாக இருந்த



தால் தாய் என்றாயிற்று என்றலுமாம். ‘தமர்’ இது தம்மவர் என்னும் பொருளது. இது ‘தம்மவர்’ என்பதன் மருவே என்பாரும் உண்டு. ‘மகவு’ இது இளமைப்பெயர் ஈண்டு பிள்ளையைக் குறித்தது. சந்தை கூடுமுன் ஒருவரும் இல்லாதிருந்து பின் ஒவ்வொருவராய் வந்துகூடித் தம்தம் பண்டமாற்று வேலை முடிந்தபின் ஒவ்வொருவராய் நழுவிவிடுதலின் வினைசம்பந்தத்தால் தாரணியில் தாய், தந்தை, தாரம், தனையன், தமர், சகோதரம் என வந்து தம் வினைமுடிந்தபின் செல்கின்றாராதலின் ‘சந்தையிற் கூட்டம்’ என்றார். இதை வலியுறுத்தவே இதிலோ ‘சந்தேகமில்லை’ என்றார்.

‘மணிமாடம்’ என்றதற்கு இரத்தினகசிதமான பெருவீடு என்றும். இனி இதற்கு அழகிய வீடு என்பதும் பொருளாம். ‘சதுரங்கம்’ என்றது கரி, பரி, தேர், காலாள் என்னும் நான்கு அங்கம் உடைமையின் சதுரங்கம் எனப் பெயராயிற்று. ‘ஜாலம்’ என்றது பொய்யை மெய்யாகவும், மெய்யைப் பொய்யாகவும் காட்டும் வித்தை ஜாலத்திலெல்லாம் பெரியஜாலத்தை இந்திரஜாலம் என்பர். தேகம் மலம்பொதிந்து கிருமிகள் நிறைந்ததாதலின், ‘கிருமி சேர்ந்தமல பாண்டமோ’ என்றார். தேகம் தோன்றி அழிவது பொய்யாயது நிலையில்லாததாதலின், ‘வாஞ்சனை யிலாத கனவு’ என்றார். ‘தேர்ந்து தேர்ந்துமே’ இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். ‘இரவுபக லில்லாத இடத்து’ என்றது சகல கேவலமில்லையை. ‘யானென்பதறவுமூழ்கி’ என்றது நான் தோன்றுவகை அத்துவிதக் கலப்படைந்து என்பதாம். ‘சுழலும்வகை’ என்றது வருந்தி அலமருதலை. ‘என் கொலோ’ இதில் கொல் ‘ஓ’ அசைகள். ‘கனவே’ இதில் ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. ‘வந்ததோர் வாழ்வும்’ இதில் உம்மை உயர்வு சிறப்பும்மை. ‘இரவுபகல்’ இது இரவும் பகலும் என விரிதலின் உம்மைத் தொகை. ‘என்’ என்றது வினு. 3

தேசோமயானந்தமே! அடியேன் ஞானம் பெறறேனுமில்லை சரியை கிரியை யோகங்களில் சென்று பேறுபெறுமல் ஏழையாகினேன் இந்த புத்தி எப்படி எனக்கு வந்தது என்கின்றார்

ஆடாமல் ஒய்ந்திட்ட பம்பரம் போல்விசை
அடங்கி மனம்வீழநேரே
அறியாமை யாகின்ற இருளகல இருளொளியும்
அல்லா திருந்தவெளிபோல்
கோடா தெனைக்கண் டெனக்குள் நிறை சாந்தவெளி
கூடிஇன் பாதீதமுங்
கூடினே னேசரியை கிரியையில் முயன்றுநெறி
கூடினே னேஅல்லன்யான்
ஈடாக வேயாறு வீட்டினில் நிரம்பியே
இலகிவளர் பிராணனென்னும்

இருநிதி யினைக்கட்டி யோகபர னாகாமல்
ஏழைக் குடும்பனாகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) தேட-தேடுதற்கு, அரிய - அரிதாகிய, சத்தாகி - உண்மையாகி, என்-அடியேனின், சித்தமிசை - மனத்தினிடத்து, குடிகொண்ட - குடியாக எழுந்தருளியிருக்கும், அறிவான - ஞானமயமாகிய, தெய்வமே - தெய்வமே!, தேசோமயம்-ஒளிமயமாகிய, ஆனந்தமே-இன்பப்பிழம்பே!, ஆடாமல்-ஆடாத படி, ஓய்ந்திட்ட-ஓய்ந்துபோன, பம்பரம்-பம்பரத்தை, போல்-போல, விசை-வேகம், அடங்கி-அடங்கி, வீழ - விழவும், நேரே - நேராக, அறியாமை-அஞ்ஞானம், ஆகின்ற - ஆகிற, இருள் - இருட்டு, அகல - தொலையவும், இருள்-இருளும், ஒளி - ஒளியுமாகிய இரண்டும், அல்லாது - அல்லாமல், இருந்த-இருந்த, வெளி-பரமாகாயம், போல்-போல, கோடாது-கோணாமல், என்னை-அடியேனை, கண்டு-பார்த்து, எனக்கு - அடியேனுக்கு, உள்-உள்ளே, நிறை-நிறைந்த, சாந்தம் - சாந்தமென்னும், வெளி - ஆகாயத்தினிடத்தே, கூடி-கலந்து, இன்பம் - சிவானந்த, அதீதமும் - அதீதத்தையும், கூடினேனே-சேர்ந்தேனே?, சரியை - சரியையிலும், கிரியை - கிரியையிலும், முயன்று-முயற்சித்துப்பயின்று, நெறி-சன்மார்க்கத்தை, கூடினேனே-சேர்ந்தேனே?, அல்லன்-அவ்வாறு அல்லாதனவாகிய, யான் - அடியேன், ஈடாக - பெருமையாக, ஆறு-ஆறாகிய, வீட்டினில்-ஆதார வீடுகளில், நிரம்பி-நிறைந்து, இலகி-பிரகாசித்து, வளர்-வளர்கின்ற, பிராணன் - பிராணவாயு, எனும்-என்கின்ற, இரு - பெரிய, நிதியினை - செல்வத்தை, கட்டி - கட்டி, யோகபரன் - யோக சிரேட்டன், ஆகாமல்-ஆகாதபடி, ஏழை - ஏழையாகிய, குடும்பன் - குடும்பஸ்தன், ஆகி-ஆகி, தேடாது - சம்பாதியாமல், அழிக்க-செலவுசெய்ய, ஒரு-ஒரு, மதி-அறிவு, வந்தது-உண்டாயது, என்-இதற்குக்காரணம் யாது? கூறியருள்வாயாக; எ-று.

(வி-ரை) 'ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம்போல்' என்றது உவமை. ஆடாமல் என்றது சுழலாமையைக் குறித்தது. 'பம்பரம்' இது ஒரு விளையாட்டுக் கருவி. அறியாமையை இருள் என்று கூறுவது கவிமரபாகலின், 'அறியாமை யாகின்ற இருள் அகல' என்றார். 'இருளொளியு மல்லாதிருந்த வெளி' என்றது பராகாயத்தை. இது சதோதயமாக இருப்பது. 'சாந்த வெளி' என்பது உபசாந்தம் என்னும் ஆகாயத்தை என்பர் ஒருசாரார். 'இன்பதீதம்' என்றது இன்பமிகுதியை. 'சரியை' இது நான்கு பாதங்களில் முதல் நிற்பது கோயில் அலகிடல், மெழுக்கிடல் முதலியனவும் கோயில் வலம்வருதல் முதலியன செய்தல். 'கிரியை' என்றது வேதாகம விதிப்படி இறைவனை அர்ச்சித்துப் பூசித்தல். 'நெறி' என்றது முத்தி



நெறியை, சன்மார்க்கநெறியை. 'ஆறுவீடு' என்றது யோகமார்க்கத்திற்குரிய மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களைக் குறித்ததாம்.

'பிராணனென்னும் இருநிதி' என்றது பிராணவாயுவை. 'கட்டி' என்றது வாசியடக்கலை. 'யோகம்' என்றது இறைவனைத் தன்னுட்கூட்டும் முயற்சி. தான் உயர்ந்ததாகிய முத்தியை விட்டு உலகச்சேற்றிற் புகுவதால் அறிவு இன்மையாம் என்பதுதோன்ற, 'யோகபர னாகாமல் ஏழைக் குடும்பனாகி' என்றார். 'தேடாதழிக்க' என்றது சிவானந்தப் பெருவாழ்வைத் தேடாது சிற்றின்பத்துட்புக்குத் தன்னை யழித்து வீணாக்கலைக் குறித்ததாம். 'என்கொலோ' இதில் கொல் என்பது ஐயப்பொருளில் வந்தது 'ஓ' அசை. 'ஆடாமை' இது மல் விகுதிபெற்ற எதிர்மறை வினையெச்சம். 'ஓய்ந்திட்ட' இதில் இட்ட என்பது துணைவினை. 'போல்' உவமவுருபு. 'அறியாமை' இது மையீற்றுப் பண்புப்பெயர். 'கோடாது' இது எதிர்மறை வினையெச்சம். 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல்விகாரம். 4

தேசோமயானந்தமே! அடியேன் வாடாது வாடும் என் மனவாட்டத்தைக்கண்டும் இரங்கியருளாத மனக்கடினத்தைத் தேவரீருக்கு வளர்த்தவா யார் என்கின்றார்

பாடாது பாடிப் படித்தளவில் சமயமும்
பஞ்சுபடு சொல்லன் இவனைப்
பார்மினோ பார்மினோ என்றுசபை கூடவும்
பரமார்த்தம் இதுஎன்னவே
ஆடாதும் ஆடிநெஞ் சுருகிநெக் காடவே
அமலமே ஏகமேஎம
ஆதியே சோதியே எங்குநிறை கடவுளே
அரசே எனக்கூவி நான்
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடா எனக்கருணை நீ
வைத்திடா வண்ணமே சங்கேத மாவிந்த
வன்மையை வளர்ப்பித்ததார்
தேடாது தேடுவோர் தேட்டற்ற தேட்டமே
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) தேடாது - தேடாமல், தேடுவோர் - தேடுவோர்களாகிய ஞானிகளுக்கு, தேட்டு-தேடுதல், அற்ற - இல்லாத, தேட்டமே - செல்வமே!, தேட-தேடுதற்கு, அரிய - அரிதாகிய, சத்தாகி - உண்மையாகி, என்-அடியேனின்,

சித்தமிசை-மனத்தினிடத்து, குடிகொண்ட-குடியாக எழுந்தருளியிருக்கும், அறிவான-ஞானமயமாகிய, தெய்வமே-தெய்வமே!, தேசோமயம் - ஒருவடிவமாகிய, ஆனந்தமே - இன்பப்பிழம்பே!, பாடாது - பாடாதவைகளை எல்லாம், பாடி-பாடி, படித்து-படித்து, அளவு - எண்ணிக்கை, இல் - இல்லாத, சமயம்-சமயங்களும், பஞ்சு-பஞ்சை, படு - ஒத்த அற்ப, சொல்லன் - சொல்லையுடையவன், இவன்-இவனும், பார்மின்-பாருங்கள், பார்மின்-பாருங்கள், என்று-என்று புகன்று, சபை-கூட்டம், கூடவும்-கூடவும், இது-இது, பரமார்த்தம்-மேன்மையான பொருள், என்னவே-என்றுகூறியே, ஆடாது - ஆடாததும், ஆடி-கூத்தாடி, நெஞ்சு-மனம், உருகி-நெக்குவிட்டு இளகி, நெக்காட-நெக்குவிட்டாட, அமலமே-பரிசுத்தமே!, ஏகமே-ஒன்றே!, எம்-அடியோங்களுடைய, ஆதியே-முதல்வனே!, சோதியே - ஒளியே!, எங்கும் - எவ்விடத்தும், நிறை-நிறைந்து பூரணமாகயிருக்கும், கடவுளே-கடவுளே!, அரசே - அரசே!, என-என்று, கூவி-அழைத்து, நான் - அடியேன், வாடாது - ஒருவரும் இதுவரை வாடாதவிதமாக, வாடும்-வாடுகின்ற, என்-அடியேனுடைய, முகம்-முகத்தின், வாட்டம் - வாட்டத்தையும், கண்டு - பார்த்து, வாடா - வாடா, என-என்று, நீ - தேவரீர், கருணை - கிருபையை, வைத்திடா - அடியேன்பால் வைக்காத, வண்ணம் - விதம், சங்கேதமா - கட்டுப்பாடாக, இந்த - இந்த, வண்மையை-கடினத்தன்மையை, வளர்ப்பித்தது-விருத்தி செய்வித்தது, ஆர்-யாவர்? எ-று.

(வி-ரை) 'பாடாது பாடிப் படித்து' என்றது இதுவரை ஒருவரும் பாடாத விதமாகப் பாடியும் அப்பாடலைக்கொண்டு துதித்தும் என்பது பொருளாம். 'பாடி' என்றது புதிதாகப் பாட்டிசைத்தலை உணர்த்திற்று. சமயங்கள் எண்ணிறந்தவாதலாலும், இவ்வாசிரியரே பல்காலும் சமயக் கோடிகள் என்றோதியுள்ளமையாலும் 'அளவில் சமயமும்' என்றார். 'பார்மினோ பார்மினோ' என்றது அடுக்குத்தொடர் இகழ்ச்சிசார்ந்த வியப்பு. உலகில் பஞ்சினும் நுண்ணியபொருள் ஒன்று இல்லையாதலினால் அற்பச்சொற்களையுடையவன் என்ற பொருளில் 'பஞ்சுபடு சொல்லன்' என்றார். பஞ்சுமிக நுண்ணியது அற்பத்திற்குக் காட்டாக எடுத்தோதப்படுவது என்பதனை,

"நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பஞ்சு"

என்ற **நீதிவெண்பா** அடிகளாலும் அறியலாம்.

'பரமார்த்தம்' இது பரம+அர்த்தம் என்ற இருவடசொற்சந்தி. மிகவும் உயர்ந்தபொருள் என்பது பொருள். இது தீர்க்கசந்தி. 'ஆடாது மாடி' என்றதும் பாடாதுபாடி என்றதைப்போலவே எவரும் ஆடாத ஆடல் விதமெல்லாம் ஆடி என்பதாம். ஈண்டு ஆடல் என்றது ஆனந்தமேலீட்டால் எழும் ஆனந்தக்கூத்தை. 'நெஞ்சுருகி நெக்காடவே' என்றது நெஞ்சு நெக்குவிட்டு இளகி உருகி ஆடுதலை உணர்த்திற்று. இறைவன் மலரகிதனாதலின் 'அமலமே' என்றும், இறைவன் ஒப்புயர்வில்லாத் தனிப்பொருளாதலின் 'ஏகமே' என்றும், ஆன்மாக்களுக்கெல்லாம் எல்லா அண்டங்களுக்கும்



முதல்வனாதலின் 'எம் ஆதியே' என்றும், இறைவன் ஒளிமயன், சோதிப்பிரகாசனாதலின் 'சோதியே' என்றும், இறைவன் எங்குமாய் எல்லாவற்றுமாய் நிறைந்து நிற்கும் பரிபூரணப் பொருளாதலின் 'எங்குநிறை கடவுளே' என்றும், எல்லாவற்றையு முடையவனாகி நிற்பதால், எல்லாம் இறைவனின் உடைமைப்பொருளாதலினால் 'அரசே' என்றும் கூவினாரென்க.

'வாடாது வாடும்' என்றதும் பாடாதுபாடி, ஆடாதுமாடி என்றது போல இதுவரை ஒருவரும் வாடாத விதமாக எல்லாம் வாடி என்பது பொருளாம். அதாவது மிகவும் வாடி என்பதாம். 'அகத்தி னழகு முகத்திற் றெரியும்' என்பதுபோல மனவாட்டம் முகவாட்டத்தால் அறியக் கிடக்குமாதலின், 'வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு' என்றார். 'சங்கேதம்' என்றது ஒரு கூட்டத்தார் யாதானும் ஒரு காரணம்பற்றி அதன் உண்மைப் பெயரை, உண்மை வடிவை மறைத்து வேறு பெயரால் வடிவத்தால் உணர்த்துவது இதனைக் குழூஉக்குறி என்பர் **தமிழ்ப்புலவர்**. 'வன்மை' என்றது ஈண்டு இரக்காத்தன்மையை. 'தேடாது தேடுவார்' என்றது முன்னையவைகளாகிய பாடாதுபாடி, ஆடாதுமாடி, வாடாதுவாடும் என்பன போல அன்றி இது வேறு பொருள்தந்து நின்றது. 'தேடாது தேடுவார்' என்றது தற்போதங்கொண்டு தேடாது திருவருட் சகாயத்தாற் றேடுவோர் என்னும் பொருளினிற் கூறப்பெற்றதாம். 'தேட்டற்ற தேட்டம்' என்றது தேடாத் திரவியம் என்றதாம். 'சமயமும்' என்றதன் உம்மை முற்றும்மை. 'முகவாட்டமும்' இதன் ஈற்று நின்ற உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. அகவாட்டத்தை மட்டுமன்று முகவாட்டத்தையுங் கண்டு என்று பொருளாம். 'வளர்ப்பித்ததார்' இதில் நின்ற 'ஆர்' என்னுஞ் சொல் 'யார்' என்பதன் போலி. 'தேட்டம்' இது தேடப்படுவது என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். 5

தேசோமயானந்தமே! தேவரீர் சிவஞானி முதலிய பல திருவேடங்க
ளுடன் வந்து பலவண்ணமாக அடியேனுக்கு ஞானோப
தேசஞ் செய்திருக்கவும் அடியேன் மூடனாகி
விடுவேனோ என்கின்றார்

பிறியாத தண்ணருட் சிவஞானி யாய்வந்து
பேசரிய வாசியாலே
பேரின்ப உண்மையை அளித்தனை என் மனதறப்
பேரம்ப லக்கடவுளாய்
அறிவா யிருந்திடும் நாதவொலி காட்டியே
அமிர்தப்ர வாகசித்தி
அருளினைய லாதுதிரு அம்பலமு மாகினை
ஆண்டனைபின் எய்திநெறியாய்க்

குறிதா னளித்தனை நன் மரவுரிகொ ளந்தணக்
    கோலமாய் அசபா நலங்
கூறினபின் மௌனியாய்ச் சும்மா இருக்கநெறி
    கூட்டினை எலாமிருக்கச்
சிறியேன் மயங்கிமிக அறிவின்மை யாவனோ
    தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
    தேசோ மயானந்தமே.

(ப-ரை) தேட-தேடுதற்கு, அரிய-அரியதாகிய, சத்தாகி - உண்மையாகி, என்-அடியேனின், சித்தமிசை - மனத்தினிடத்து, குடிகொண்ட - குடியாக எழுந்தருளியிருக்கும், அறிவான - ஞானமயமாகிய, தெய்வமே - தெய்வமே!, தேசோமயம் - ஒளி வடிவமாகிய, ஆனந்தமே - இன்பப்பிழம்பே!, பிறியாத-நீங்காத, தண்-குளிர்ந்த, அருள்-பேரருளையுடைய, சிவஞானியாய்-சிவஞானியாக, வந்து - எழுந்தருளி வந்து, பேச - சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, வாசியால் - வாசியடக்கத்தால், பேர் - பெரிய, இன்பம் - ஆனந்தத்தின், உண்மையை - உண்மையை, அளித்தனை - கொடுத்தருளினை, என் - அடியேனின், மனது-மனமானது, அற-ஒடுங்க, பேரம்பலம்-சிற்றம்பலம், கடவுளாய்-கடவுளாகி, அறிவாய்-அறிவாக, இருந்திடும்-இருக்கின்ற, நாதம்-நாதத்தின், ஒலி-ஓசையைக், காட்டி - காண்பித்து, அமிர்தம் - அமிர்தத்தின், பிரவாகம்-பெருக்கின், சித்தி - சித்தியை, அருளினை - கொடுத்தருளினை, அலாது-அது வல்லாமலும், திருஅம்பலமும் - திருச்சிற்றம்பலமும், ஆகி - ஆகி, என்னை-அடியேனை, ஆண்டனை - ஆண்டருள் செய்தாய், பின் - பிறகு, எய்தி-வந்து, நெறியாய் - முறையாக, குறிதான் - சின்முத்திரைக்குறியும், அளித்தனை-காட்டியருளினை, நல்-நல்ல, மரம்-மரத்தின், உரி-உரியை, கொள்-தரித்துக் கொள்ளும், அந்தண-வேதிய, கோலமாய் - வடிவமாய், அசபாநலம் - அஜபா மந்திரம், கூறினபின் - அடியேனுக்கு உபதேசித்தருளியபின், மௌனியாய்-மௌனியாகச், சும்மா-சும்மா, இருக்க-இருக்கும்படி, நெறி - நல்ல மார்க்கத்திலே, கூட்டினை-சேர்த்தாய், எல்லாம் - இவைகளெல்லாம், இருக்க-இருக்க, சிறியேன் - சிறியேனாகிய அடியேன், மயங்கி-மயக்கங்கொண்டு, மிக-மிகவும், அறிவின்மை-ஞானமில்லாதவன், ஆவனோ-ஆகி விடுவேனோ? எ-று.

(வி-ரை) 'சிவஞானி' என்றது தாயுமானப் பெருந்தகையார்க்கு அருள் செய்யவந்த மூர்த்தங்களுள் ஒன்று. 'பேசரிய வாசிமாலே' என்றது வாசிப் பழக்கத்தாலே வாசிப்பழக்கமாவது பிராணவாயுவை அடக்கி ஆளும் யோகப் பயிற்சியை. 'பேரின்ப உண்மை' என்றது மோக்ஷ இன்பத்தை. 'மனதற' என்றது மனம் ஒடுக்க, மனது ஒழிய, மனம் இறக்க என்ற பொருளது. 'பேரம்பலம்' என்றது திருச்சிற்றம்பலத்தை. 'பேரம்பலக்கடவுள்' என்பது நடராஜாவை. கனகசபாபதியை, பொன்னம்பலத்தானை, ஆனந்தக்கூத்தனை என்பதறிக. 'குறி' என்றது 'இலக்கை' என்பர் உரையாசிரியர்கள். ஈண்டு



குறி என்றது சின்முத்திரைக்குறியை. 'மாவுரி' என்றது மரத்தின்மேல் உள்ள பட்டையிலிருந்து உரித்து எடுக்கப்படும் நார். இதனை ஆடையாகத் தவசியர்கள் உடுத்திக்கொள்வார்கள். 'அந்தணக்கோலம்' என்றது வேதிய உருவை. 'அசபானலம்' என்றது அஜபாமந்திரத்தை என்பதாம். இது ஜெபியாது ஜெபிக்கப்படுதலின் 'அஜபம்' என்பர்; இச்செபம் வினையைச் சுட்டறுத்து விடுதலின் அக்கினி என்றுங் கூறுவர். 'மௌனியாய்' என்றது மவுனதேசிகராய் வந்தருளியதைக் குறித்ததாம். 'சும்மாய் இருக்கநெறி' என்றது மௌன நிலையை. தாயுமானவர்க்கு இறைவன் சிவஞானியாகவும், பேரம்பலக்கடவுளாயும், திருஅம்பலமாகவும், குறியளித்தும், மாவுரிதந்தும், அந்தணக்கோலமாய் அசபாநலம் கூறியும் பிறகு கடைசியாய் மௌனகுருவாகிவந்து அருள் செய்தமையை எல்லாம் முறையே எடுத்தோதினர். இதன் விவரங்களை எல்லாம் இவ்வாசிரியர் சரிதத்தால் தெளிவாக அறிந்துகொள்க. இவ்வா றெல்லாம் தேவரீர் அருள் செய்திருக்கச் சிறியேன் 'மருண்டு மூடனாவனோ' என்பார் 'சிறியேன் மயங்கிமிக அறிவின்மை யாவனோ' என்றார். 'பிறியாத' இது எதிர்மறைப் பெயரெச்சம். 'தண்ணருள்' இது தண்மை+அருள் என்ற சொற்களின் சந்தி. 'அளித்தனை' இது முன்னிலை உடன்பாட்டு இறந்தகால வினைமுற்று. 'கடவுளாய்' என்றதில் ஈற்றுநின்ற 'ஆய்' விகுதி வினையெச்ச விகுதி. இது 'ஆகி' என்பதன் மரூஉ. 'அமிர்தம்' இது காரணப்பெயர். தான் அழிவில்லாதது, தன்னை உண்டாரை அழிவில்லாது செய்யுந்தன்மை யது என்பது பொருள். 'பிரவாகம்' இது வடசொல். வெள்ளம், பெருக்கு என்னும் பொருளது. 'சித்தி' என்றது 'கைகூடுவது' என்னுங் காரணப் பொருளில் வந்தது. 'அலாது' இது அல்லாது என்பது தொகுத்தல் விகாரம். 'குறிதானளித்தனை' என்பதற்குச் சுலக்குறியும், இடபக்குறியும் தந்தருளினை என்பர் ஒருசாரார். 'உரி' இது உரிக்கப்படுங் காரணம்பற்றி வந்த ;காரணப்பெயர். 'அந்தணர்' இது வேதாந்தப்பொருளை அறிவோர் என்றது பொருள். இனி இதற்கு அழகிய குளிர்ந்ததன்மையாகிய கருணையை உடையவர்கள் என்றதுங் கூறுவர். இதனை,

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்ற திருக்குறளிலும் நோக்கத்தக்கது. 'இன்மை' இது மையீற்றுப் பண்புப் பெயர். 'ஆவனோ' இது விடைதழுவிய வினா; ஆகேன் என்பது பொருளாம். 6

தேசோமயானந்தமே! எவராலும் என் புத்தியை மயக்கமுடியாது
ஆண்டான் அடிமையென்னும் வழக்கு நீங்காது தள்ளினும்
போகேன் தேவரீரை விடமாட்டேன் என்கின்றார்

ஆரா ரெனக்கென்ன போதித்தும் என்னஎன்
    அறிவினை மயக்கவசமோ
அண்டகோ டிகளெலாங் கருப்பஅறை போலவும்
    அடுக்கடுக் காஅமைத்துப்

போமல் நின்றபர வெளியிலே மனவெளி
　　பிறங்குவத லாதொன் றினும்
பின்னுற மருவாது நன்னயத் தாலினிப்
　　பேரின்ப முத்தி நிலையுந்
தாராது தள்ளவும் போகாது லைது
　　தள்ளினும் போகேனியான்
தடையேது மில்லையாண் டவனடிமை யென் னுமிரு
　　தன்மையிலும் என்வழக்குத்
தீராது விடுவதிலை நடுவான கடவுளே
　　தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
　　தேசோ மயானந்தமே.

(ப-ரை) நடுவான - நடுவுநிலைமையாய் இருக்கும், கடவுளே-தெய்வமே!, தேட - தேடுதற்கு, அரிய - அரிதாகிய, சத்து - உண்மை, ஆகி - ஆகி, என்-அடியேனின், சித்தம்-மனத்தின், மிசை-இடத்தே, குடிகொண்ட-குடியாக எழுந்தருளியிருக்கின்ற, அறிவு - ஞானமயம், ஆன - ஆகிய, தெய்வமே-கடவனே!, தேசோமயம் - ஒளிப்பிழம்பாகிய, ஆனந்தமே - இன்பருபனே! ஆர்ஆர்-எவ்வெவர்களும், எனக்கு-அடியேனுக்கு, என்ன-எதை, போதித்தும்-போதித்தாலும், என்ன-அதனால் என்னபிரயோசனம்?, என்-அடியேனின், அறிவினை-புத்தியை, மயக்கவோ - மயக்கவாகுமோ?, அண்டம்-உலக, கோடிகள்-கோடிகள், எல்லாம்-எல்லாமும், கர்ப்ப-கருப்ப, அறை-வீடு, போலவும்-போலவும், அடுக்கு அடுக்கு - வரிசை வரிசை, ஆ - ஆக, அமைத்து - செய்து, பேருது-தன்னிலைமையில் அசையாது, நின்ற-நின்ற, பரவெளியிலே-பரமாகாயத்தில், மனம் - மனமாகிய, வெளி - ஆகாயம், பிறங்குவது - விளங்குவது, அல்லாது-அல்லாமல், ஒன்றினும்-மற்றையாதொன்றினும், பின்னம்-பின்னம், உற-பொருந்த, மருவாது-பொருந்தாது, நல்-நல்ல, நயத்தால்-நயத்தினால், இனி - இனி, பேரின்பம் - பேரின்பமாகிய, முத்தி - மோக்ஷத்தின், நிலையும்-நிலையும், தாராது - தாராமல், தள்ளவும் - தள்ளிவிடவும், போகாது-கூடாது, உன்னால் - தேவரீரின் ஏற்பாட்டால், நான்-அடியேன், அது-அதனை, தள்ளினும் - தள்ளிவிட்டாலும், யான் - அடியேன், போகேன் - போகமாட்டேன், தடை-தடை, ஏதும்-ஒருசிறிதும், இல்லை-இல்லையாகும், ஆண்டவன்-தேவரீர் ஆண்டவன், அடிமை - அடியேன் அடிமை, என்னும் - என்று கூறும், இரு - இரண்டு, தன்மையிலும்-தன்மைகளிலும், என்-அடியேனின், வழக்கு-விவகாரம், தீராது-நீங்காது, (அவ்வாறு நீங்காவிடினும்) விடுவது - அடியேன் தேவரீரை விடுவது, இல்லை-இல்லையாகும் எ-று.

(வி-ரை) 'ஆர் ஆர்' இது 'யார் யார்' என்பதன்போலி. 'வசமோ' என்றது வசமில்லை என்பதாம். 'அண்டகோடிகள்' இதில் கோடி என்பது மிகுதிப்பொருளில் வந்தது. 'அறை' இது அறுத்துச் செய்யப்பெற்றது



என்னும் பொருளது. 'போல' இது உவமஉருபு. 'அடுக்கடுக்கு' இது மிகுதிப் பொருளில் வந்த அடுக்குத்தொடர். 'போமல்' இது அசையாமல் நிலை பிறழாமல் என்ற பொருளது. 'பரவெளி' என்றது பர ஆகாயத்தை. 'மனவெளி' என்றது மனோவாகாயத்தை. 'ஆதொன்றினும்' இது யாதொன்றினும் என்பதன்போலி. 'பின்னமுற' என்றதற்கு அறியும்படிப் பொருந்தாது எனவும் பொருள் கூறுவர். பின்னம் ஆன்ம அறிவுக்குப்புலனும், அபின்னம் ஆண்மை அறிவிற்குப் புலனாகாது என்பதூஉம் அறியத்தக்கது. 'பேரின்பமுத்தி' இது பண்புத்தொகை. 'பேரின்பமாகிய முத்தி' எனவிரியும். 'தள்ளவும்' என்றது புறக்கணித்தலை உணர்த்திற்று. 'போகேன்' இது எதிர்மறை வினைமுற்று. இது தன் மனவுறுதி உணர்த்தியதாம். இறைவன் ஆண்டானும் ஆன்மாக்கள் அடிமையாகவும் இருத்தலின் 'யாண்டவனடிமை யென்னு மிருதன்மையிலு மென்வழக்கு' என்றார். இதனை,

> "சீரங்கத் தாருந் திருவானைக் காவாரும்
> போரங்க மாகப் புரிவதேன்—ஓரங்கன்
> வேண்டா மீதென்ன விவரந் தெரியாதோ
> ஆண்டானுந் தாதனு மானால்"

என்ற வெண்பாவாலும் நன்கறியலாம்.

இறைவன் என்னும் சத்தியமான நீதியுடையவனுதலின் 'நடுவான கடவுளே' என்றார். 'நடு' என்றது தராசின் முள்போல் நடுநிற்பதை உணர்த்தியது. இது உவமையாகுபெயர். 'அறிவினை' இதில் இன்சாரியை. 'வசமோ' இது வசமில்லைஎன்ற பொருளதாம். இது விடைதழுவிய வினா. 'முத்திநிலையும்' இதன் ஈற்று உம்மை இது எண்ணும்மை, இறந்ததுதழிஇய எச்சவும்மை என்பாரும் உண்டு.

7

தேசோமயானந்தமே! செய்தற்கரியவற்றை எல்லாம் செய்யலாம்
பெறுதற்கு அரியவற்றை எல்லாம் பெறலாமானால் மனத்தை
அடக்கிச் சும்மாயிருப்பதரிது என்கின்றார்

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
　　கரடிவெம் புலிவாயையுங்
கட்டலாம் ஒருசிங்கம் முதுகின்மேற் கொள்ளலாங்
　　கட்செவி எடுத்தாட்டலாம்
வெந்தழலின் இரதம்வைத் தைந்துலோ கத்தையும்
　　வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமல் உலகத்து லாவலாம்
　　விண்ணவரை ஏவல்கொளலாஞ்
சந்ததமும் இளமையோ டிருக்கலாம் மற்றொரு
　　சரீரத்தி னும்புகுதலாஞ்
சலமேல் நடக்கலாங் கனல்மே லிருக்கலாந்
　　தன்னிகரில் சித்திபெறலாய்

சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறமரிது சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) சத்தாகி-உண்மையாகி, என்-அடியேனின், சித்தமிசை-மனத்தினிடத்தே, குடிகொண்ட - குடியாக எழுந்தருளியிருக்கின்ற, அறிவு - ஞானமயம், ஆன - ஆகிய, தெய்வமே - கடவுளே!, தேசோமயம் - பேரொளிவடிவமாகிய, ஆனந்தமே - பேரின்ப சொரூபியே!, கந்து - கட்டுத்தறியை, உகம்-மதக்குறும்பால் அழிக்கும், அ-அந்த, மதம்-மதமிகுந்த, கரியை - யானையை, வசம்-நம்கைவசம், ஆ - ஆக, நடத்தல் - நடத்துவித்தல், ஆம் - ஆகும், காடி-காடியினுடையவும், வெம் - கொடிய, புலி - வேங்கைப்புலியினுடையவும், வாயையும்-வாய்களையும், கட்டலாம்-நம்மைக் கடியாதபடி கட்டிவிடுதல்கூடும், ஒரு-ஒப்பற்ற, சிங்கம்-சிங்கத்தினுடைய, முதுகின் - முதுகின், மேல்-மேலே, கொள்ளலாம்-ஏறி உட்கார்ந்துகொள்ளலாம், கட்செவி-பாம்புகளை, எடுத்து-(புதிதாகப் புற்றினின்றும்) எடுத்து, ஆட்டலாம் - படமெடுத்து ஆடும்படிச் செய்யலாம், வெம்-வெப்பம்பொருந்திய, தழலில் - நெருப்பில், இரதம்-பாதரசத்தை, வைத்து - வைத்து, (கலந்து) ஐந்து - ஐந்தாகிய, லோகத்தையும்-லோகங்களையும், வேதித்து - பரிசவேதிகை செய்து, விற்று - அதனை விலையாக்கி, உண்ணலாம் - அவைகளை விலைக்குவிற்று, உண்ணலாம்-உண்டு ஜீவிக்கலாம், வேறு - தம்மினும் வேறாகிய மற்று, ஒருவர் - ஒருவர்கள், காணாமல்-காணாதபடிக்கு. உலகத்து - உலகத்திலே, உலாவலாம் - சஞ்சரிக்கலாம், விண்ணவரை-தேவர்களையும், ஏவல்-ஏவலாளராக, கொளலாம்-கொண்டுவிடலாம், சந்ததமும்-எந்தக்காலத்திலும், இளமையோடு - கௌமாரப் பருவத்துடனே, இருக்கலாம்-இருக்கலாம், மற்று - வேறாகிய, ஒரு-ஒரு, சரீரத்தினும்-தேகத்திலும், புகுதலாம்-நுழையலாம், சலமேல் - நீரின்மேல், நடக்கலாம் - நடந்து செல்லலாம், கனல்மேல் - நெருப்பின்மேல், இருக்கலாம் - தங்கி வீற்றிருக்கலாம், தன்-தனக்கு, நிகரில்-ஒப்பில்லாத, சித்தி-மற்றெல்லாச் சித்திகளையும், பெறலாம் - அடையலாகும், (ஆனால்) சிந்தையை - மனத்தை, அடக்கி - புறம்பாகிய உலக விவகாரங்களிற் செல்லாது அடக்கி, சும்மா - மௌனமாக, இருக்கின்ற-இருக்கின்ற, திறம்-தன்மை, அரிது-அருமையாகும்; எ-று.

(வி-ரை) 'கந்துகமதக்கரியை' என்றது கட்டுத்தறியை அழிக்கும் அந்த மதக்கரி என்பது பொருளாம். உயிர்களில் பெரியது யானை ஆதலின் 'கரியை' முற்கூறினர். 'கரி' இது கரத்தையுடையது என்னுங் காரணப் பெயர். இதற்கு வேறுபொருள் கூறுவாரும் உண்டு. 'கந்துகம்' குதிரை என்னும் பொருளும் உடைமையின் குதிரையையும் யானையையும் வசமாக நடத்தலாம் என உரைப்பர். இது விசேடமின்மை உய்த்துணர்ந்தறிக. 'வசமாக நடத்தவாவது' அதன்வசமின்றித் தன் கைவசமாக்கி நடத்தலை உணர்த்தும். 'வெம்புலி' என்றது கொடிய வேங்கைப்புலியை. புலியைச் சிங்கத்திற்குமுன் வைத்ததன் காரணம் சிங்கம் தன்னிடம் தப்பிப் பிறரிடம் சென்றால் அஞ்சுகம் தன்மையது, புலி அவ்வாறு அன்று, புலிக்குத் தன்காடென்னும் பிறகாடென்னும் இல்லை என்பதே பழமொழி. புலி தன் காட்டிலும் பிறகாட்டிலும் மூர்க்க உக்கிரமாகவேயிருக்கும் சிறப்பியல்புடையது என்பதூஉம் ஆதலால் அதனை முற்கூறினா என்பதுமறிக.



காடிபுலி இரண்டும் வாயால் பிறவுயிர்களுக்குத் துன்பஞ்செய்வதால் 'வாயையும் கட்டலாம்' என்றார். இதில் வந்த உம்மை உயர்வுசிறப்பும்மை. சிங்கம் வலிமையால் கம்பீரத்தால் ஒப்புயர்வற்றதால் 'ஒருசிங்கம்' என்றார். ஈண்டு ஒரு என்றது தனிமைப்பொருள் உணர்த்திநின்றது. சிங்கத்தின் முதுகில் ஏறிச் செல்லலாம் என்றது சிஙகத்தையும் அடக்கி ஆளலாம் என்பதனை உணர்த்தியதாம். 'கட்செவி' என்றது பாம்பை, என்னை? பாம்பு கண்ணையே செவியாக உடைமைபற்றிக் 'கட்செவி' என்றார். பாம்புக்குக் காதில்லை, காதையே கண்ணாக உடையது என்பது பொருளாம். 'இரதம் வைத்து' என்றது பாதரசம் என்னும் ரசத்தை வைத்து என்பதாம். இதனாலேயே இவ்வித்தைக்கு ரசவாதவித்தை எனப் பெயர் வந்தது. 'ஐந்து லோகம் என்றது பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் என்னும் ஐந்து லோகங்களை. 'வேதி' என்றது வேதிப்பது என்பது பொருள், இவ்வேதிகள் தரிசனவேதி பரிசவேதி இருபாலர். கீழ்ப்பட்ட லோகங்களைக் கண்ணாற் கண்டமாத்திரத்தில் தங்கமாக்குவோன் தரிசனவேதி. கீழ்ப்பட்ட லோகங்களைத் தொட்டுத் தங்கமாக்குவோன் பரிசவேதியாகச்சொல்லப்படுவன். ஈண்டு பரிசவேதியை. 'வேறொருவர் காணாமல் உலகத்து உலாவலாம்' என்றதை திரௌபவசக்தி என்பர் **வடநூலார்**. 'விண்ணவரை ஏவல் கொளலாம்' என்றது மந்திரசக்தியாலும் வேள்விப்பயனாலும் புண்ணியமிகுதியால் என்க. விண்ணுலகத்தில் வசிப்பவர்களாதலின் விண்ணவர் எனத் தேவர்க்குப் பெயர் எய்தியது. 'சந்ததமும்' என்றது எக்காலத்தும் என்ற பொருளதாம். 'இளமையோடு' என்றது கௌமார பருவத்தோடு என்பதாம்; என்னை? அதுவே சுகாநுபவங்களுக்கு உரியதாதலின், இது காயகற்பத்தால் தேகம் அழியாது இளமையோடிருத்தலை உணர்த்தியது. 'மற்றொரு சரீரத்தினும் புகுதலாம்' என்றது பரகாயப்பிரவேசத்தை. இது அட்டமாசித்துக்களில் ஒன்று. 'தன்னிகரில் சித்தி' என்றது அணிமா, லகிமா முதலிய அட்டமாசித்திகளை. 'சிந்தையை அடக்கிச் சும்மாயிருத்தல்' என்றது திரிகரணம் ஒடுக்கி மவுனமாக இருத்தலை.



தேசோமயானந்தமே! முடமாகிய அடியேனுக்கு குருமூர்த்தமாக
எழுந்தருளிவந்து கையமைப்பால் ஞானததைப்போதித்த தேவரீ
ருக்கு என்ன கைம்மாறு செய்வேன் என்கின்றார்

எல்லாம் அறிந்தவரும் ஏதுமறி யாதவரும்
இல்லையெனு மிவ்வுலகமீ

ஏதுமறி யாதவ னெனப்பெயர் தரித்துமிக
    ஏழைக்குள் ஏழையாகிக்
கல்லாத அறிவிற் கடைப்பட்ட நான் அன்று
    கையினால் உண்மைஞானங்
கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
    காட்டுவேன் குற்றேவல்நான்
அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறைஎயிற்
    றாபாச வடிவமான
அந்தகா நீயொரு பகட்டாற் பகட்டுவ
    தடாதடா காசுநம்பால்
செல்லா தடாஎன்று பேசுவா யதுதந்த
    செல்வமே சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
    தேசோ மயானந்தமே.

(ப-ரை) அல்-இருள்நிறம், ஆர்ந்த - பொருந்திய, மேனியொடு - தேகத்துடன், குண்டு-குண்டுபோன்ற, கண் - கண்களையும், பிறை - பிறைச் சந்திரனைப்போன்ற, எயிறு - வளைந்த பற்களையுமுடைய, ஆபாசம் - அருவருக்கத்தக்க கோர, வடிவான - வடிவத்தோடுகூடிய, அந்தகா - யமனே!, நீ-நீ, ஒரு-ஒரு, பகட்டால் - எருமைக்கடாவால், பகட்டுவது - மயக்கி அச்சுறுத்துவது, அடாதடா-தகாதடா, காசு - உன் காசு, நம்பால் - நம்மிடத்து, செல்லாதடா - செல்லமாட்டாதடா, என்று - என்று, பேச - உறத்துக்கூற, வாய் - வாக்கு வன்மையை, தந்த-கொடுத்த, செல்வமே-அடியேனது பாக்கியமே!, சத்தாகி-உண்மையாகி, என் - அடியேனின், சித்தமிசை - மனத்தினிடத்து, குடிகொண்ட - குடியாக எழுந்தருளியிருக்கின்ற, அறிவான - ஞானமயமாகிய, தெய்வமே-கடவுளே!, தேசோமயம் - ஒளிவடிவமாகிய, ஆனந்தமே-இன்பமயமானவனே!, எல்லாம் - எல்லா விஷயங்களையும், அறிந்தவரும் - தெரிந்தவர்களும், ஏதும்-ஏதொன்றையும், அறியாதவரும்-தெரியாதவர்களும், இல்லை-இவ்வுலகத்து இல்லை, என்னும் - என்று கூறற்குரிய, இ - இந்த, உலகமீது-உலகத்தினிடத்தே, ஏதும்-யாதொன்றும், அறியாதவன்-அறியாதவன், என-என்று, பெயர்-பெயரை, தரித்து - பூண்டு, மிக - மிகவும், ஏழைக்குள்-ஏழைகளுக்குள்ளே, ஏழையாகி - ஏழையாகி, கல்லாத - கற்கவேண்டிய நூற்களைப் படியாத, அறிவில் - மூட அறிவினால், கடைப்பட்ட - கீழ்ப்பட்டிருக்கின்ற, நான் - அடியேன், அன்று - பரமகுருவாக வந்து அருள்செய்த அக்காலத்து, கையினால்-கைக்குறியால், உண்மை-மெய், ஞானம் - ஞானத்தை, கற்பித்த-போதித்த, நின் - தேவரீரது, அருளினுக்கு - திருஅருளுக்கு, குற்றேவல்-குற்றேவல் செய்தற்குரிய, நான் - அடியேன், கைம்மாறு - பிரதியுபகாரம், என்ன-எதனை, காட்டுவேன்-செய்யக்கூடியவனாவேன்; எ-று.



(வி-ரை) 'எல்லாம்' என்றது எல்லா விஷயங்களையும் என்பது பொருளாம். 'ஏதும்' என்றது ஒரு விஷயமும் என்னும் பொருளதாம். 'ஏழை' என்றது ஈண்டு அறிவின் வறுமையைக் குறித்து நின்றது. ஞானஏழை என்க. 'கல்லாத அறிவு' என்றது கல்லாது விடுத்தமையால் உண்டாகிய மூடத்தனம் என்பதாம். இதுபற்றியன்றோ **பெரியாரும்** 'கற்பக் கழிமடமஃகும்' எனவும், 'வித்தை விரும்பு' 'கல்லாமை யதுகல மில்லாமை' என்பனவாதி புகன்றுவைத்தார். 'கையினாலுண்மை ஞானம் கற்பித்த' என்றது கைக்குறி காட்டிப் போதந்ததைக் குறித்தது. கையினாற் கற்பித்தது மௌனத்திருந்து சின்முத்திரைகாட்டி ஞானோபதேசஞ் செய்ததை யுணர்த்தும். 'நின் அருள்' என்றது இறைவன் திருஅருளை. 'கைம்மாறு' என்றது பிரதிப்பிரயோஜனம், பதில் உபகாரம் என்பதாம். 'குற்றேவல்' இது குறுமை+ஏவல் என்னும் இருசொற்சந்தி. 'குறுமை' என்ற பண்புச்சொல் மைகெட்டு 'குறு' எனநின்று ஒற்று இரட்டியது. 'அல்லார்ந்தமேனி' என்றது இருட்டுப்போன்ற கருநிறம் பொருந்திய தேகம் என்பது பொருளாம். 'குண்டுகண்' இது குண்டுபோன்ற கண் என்பது பொருளாம். இனி, இதற்கு; குழிந்தகண் எனப்பொருள் கூறுவாரும் உண்டு.

'பிறையெயிறு' என்றது பிறைச்சந்திரன் போன்று வளைந்து இருக்கும் பல் என்பதாம். இதனை வக்கிரதந்தம் என்பர் **வடநூலார்**. 'ஆபாசவடிவம்' என்றது அசங்கியமாகிய பயங்கர ரூபத்தை. 'பகடு' என்றது விலங்கின் ஆணைக்குறிக்கும் பெயர். ஈண்டு எருமைக்கடாவை உணர்த்திற்று. 'பகட்டுவது' என்றது மயக்குவது என்பது ஈண்டு மயக்கி அச்சுறுத்துவது என்னும் பொருளது. 'பகட்டாற் பகட்டுவது' இது சொல்லன்றிப் பொருள் பின்வந்துறவில்லையாதலினால் இதனைச் **சொற்பிரிதி நிலைஅணி** என்பர் **அணிநூலார்**. 'காசுநம்பாற் செல்லாது' என்றது 'உன்காசு நம்மிடம் செல்லாது' என்னும் உலகவழக்குப் பிரயோகம். இக்கருத்தை,

"ஏமாவுன்னா லினியாமா வென்பாலினி யெய்துதற்கே" எனவும்,

"அந்தச் சேட்டெருமை மாட்டா
னினிவரமாட்டான் வந்தாலும் வணங்குவனே" எனவும்,

"வண்டிட்ட கூந்தலும் வாரிட்டகொங்கை வரைகளுங்கற்
கண்டிட்ட சொல்லுங் கயற்கண்ணிபாகமுங் கைதொழுதேன்
தண்டிட் டடிக்கு மறலிவந்தாற் கண்ணையிட்டுநகைத்
தண்டிட்டுவா சிறுபிள்ளா பென்றாருக் கனுப்புவனே"

எனவும் வரும் **தனிப்பாடற் செய்யுள்களா**லும் அறியலாம்.

இறைவன் எல்லாச் செல்வமும் உடையவனாதலினாலும் எல்லாச் செல்வத்திலும் சிறந்த ஞானச்செல்வமேயாகலினால் 'செல்வமே' என்றார். 'பேசவாயது தந்த' என்றது நித்திய சூரியாக்கினிநிலையை உணர்த்தியதாம் 9

தேசோமயானந்தமே! இளமாதர்கள் பின்னே அவர்மேலாசையாய்
அலைந்தவர்கள் கற்றவர்கள் கல்லாதவர்கள் என்பவர்களில் எவ
ரேனுமுண்டோ இதற்கென்செய்வேன் என் பாவத்தையும்
கொடுமையையும் எப்படிச் சொல்லுவேன் என்கின்றார்

மின்போலும் இடையொடியும் ஒடியுமென மொழிதல்
மென்சிலம் பொலிகளார்ப்ப [போல்
வீங்கிப் புடைத்துவிழு சுமையன்ன கொங்கைமட
மின்னார்கள் பின் ஆவலாய்
என்போல் அலைந்தவர்கள் கற்றார்கள் கல்லார்கள்
இருவர்களில் ஒருவருண்டோ
என்செய்கேன் அம்மம்ம என்பாவம் என்கொடுமை
ஏதென் றெடுத்துமொழிவேன்
அன்பால் வியந்துருகி அடியற்ற மரமென்ன
அடியிலே வீழ்ந்துவீழ்ந்தெம்
அடிகளே யுமதடிமை யாங்களெ னு நால்வருக்
கறமாதி பொருளுரைப்பத்
தென்பாலின் முகமாகி வடவா லிருக்கின்ற
செல்வமே சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

(ப-ரை) அன்பால் - அன்பினாலே, வியந்து - துதித்து, உருகி - மனங் கரைந்து, அடி - வேர், அற்ற - அறுபட்ட, மரம் - மரத்தை, போல் - போல, அடியிலே-பாதமலரிலே, வீழ்ந்து வீழ்ந்து - பலதரம் விழுந்து விழுந்து, எம்-அடியோங்களது, கடவுளே - தெய்வமே!, யாங்கள் - அடியோங்கள், உமது-தேவரீரது, அடிமை-அடிமைகள், என்னும் - என்றுசொல்லி பிரார்த்தித்துக் கொண்ட, நால்வருக்கு - நால்வர்களாகிய சனகாதிமுனிவர்களுக்கு, அறம்-தர்மம், ஆதி-முதலாகிய, பொருள்-பொருள்களை, உரைப்ப-உபதேசித்தருளும் பொருட்டு, தென்பாலின்-தெற்குப்பக்கத்தே, முகமாகி - முகத்தை வைத்துக் கொண்டு, வடஆல் - வடக்கேயுள்ள கல்லாலவிருக்ஷத்தின் நிழலிலே, இருக்கின்ற - எழுந்தருளியிருக்கின்ற, செல்வமே - அடியோங்களது செல்வமே!, சத்து - உண்மை, ஆகி - ஆகி, என் - அடியேனினது, சித்தமிசை - மனத்தினிடத்தே, குடிகொண்ட-குடியாக எழுந்தருளியிருக்கின்ற, அறிவான-ஞானமயமாகிய, தேசோமயம்-ஒளிரூபமாகிய, ஆனந்தமே - பேரின்பவடிவே!, மின்-மின்னலை, போலும் - ஒத்த, இடை - இடுப்பானது, ஒடியும் ஒடியும்-முறிந்து போம் முறிந்துபோம், என-என்று, மொழிதல்-சொல்லுதல், போல்-போல, மென் - மெல்லிய, சிலம்பு-சிலம்பு என்னும் காலணியின், ஒலிகள்-சப்தங்கள்,



ஆர்ப்ப-சப்திக்க, வீங்கி-படுத்து, புடைத்து-புடைப்புக்கொண்டு, விழு-சின்னாள் களிலே தளர்ந்து தொங்கிவிழும், சுமை - பெரும்பாரம், அன்ன - ஒத்த, கொங்கை-தனங்களையுடைய, மடம்-இளமைபொருந்திய, மின்னார்கள்-பெண்களின், பின் - பின்னே, ஆவலால் - அவர்கள்மேல் வைத்த ஆசையினால், என் போல் - அடியேனைப்போல், அலைந்தவர்கள் - திரிந்தவர்கள், கற்றார்கள்-கற்றவர்கள், கல்லார்கள் - கல்லாதவர்கள் என்கிற, இருவர்களில் - இருவகுப்பினர்களுக்குள்ளே, ஒருவர்-யாவராயினும் ஒருவர், உண்டோ-இருக்கின்றனரோ?, என் - இதற்கு அடியேன் என்ன, செய்வேன் - செய்யமாட்டுவேன், என்-அடியேனின், பாவம்-பாவத்தையும், என்-அடியேனின், கொடுமை-கொடுமைகளையும், ஏதென்று - அடியேன் என்னென்று, எடுத்து - எடுத்து, மொழிவேன்-சொல்லுவேன் எ-று.

(வி-ரை) 'மின்' என்றது மின்னற்கொடியை. இது இடைக்கு உவமை என்பது அறியத்தக்கது. 'இடை' இது உடம்பின் மத்தியில் இருப்பதால் இடை எனவும், நடுவும் பெயராயதென அறிக. இது காரணப்பெயர். 'ஒடியும் ஒடியும்' இது மிகுதிபற்றி அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'சிலம்பு' இது சப்திப்பது என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். இது ஒரு காலணி. 'வீங்கிப்புடைத்த' என்றது பருத்து இடங்கொண்டிருக்கின்ற என்பதாம். 'இடம்கொண்ட' என்பது மார்பின் இடமெல்லாம் பரவிக்கொண்டுள்ள என்பதாம். 'விழுசுமை' என்றது சிலநாளில் தளர்ந்து தொங்கிவிழும் சுமை என்பது பொருள். இனி இதற்குப் பெருஞ்சுமை எனப் பொருள் கூறுவர்; அப்போழ்து 'விழு' என்பது பரும் என்னும் பொருளது என்பதறிக. 'கொங்கை' இது கையாற்கொள்ளப்படுவது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப்பெயர். 'மடவார்' என்பது இளம்பெண்கள் என்பது பொருள். 'மடம்' என்னுஞ் சொல் ஈண்டு இளமைப்பருவத்தை உணர்த்திநின்றது. இளம்பருவம் என்றது மங்கைப்பருவம், மடந்தைப்பருவங்களை என்பதறிக. 'மின்னார்கள்' இது உவமைஆகுபெயர், மின்னல்போன்ற சாயலையுடைய பெண்களை உணர்த்திற்று. 'உண்டோ' என்றதில் ஓகாரம் ஐயப்பொருளில் வந்தவினா. 'அம்மம்ம' இது வியப்புப்பொருளில் வந்த உரையசைச்சொல் லடுக்கு. மரத்திற்கு வேர் ஆதாரமாகவும் அடியாகவும் இருத்தலின் 'அடியற்ற மரம்' என்பதற்கு வேரற்றமரம் என்றும். இது உவமை. 'என்ன' என்றது உவமவுருபு. 'வீழ்ந்துவீழ்ந்து' இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்த அடுக்குத் தொடர். 'அடிகள்' என்றது பெரியார் ஏவல்கொள்வோர் என்னும் பொருளது. 'அடிமை' என்றது ஏவல் செய்வோனை உணர்த்திற்று. ஈண்டு அடிகள் அடிமை என்னும் இருசொற்களும் 'அடி' என்னும் ஒரே அடியாகப் பிறந்தாலும் இரண்டிற்கும் உள்ள வேறுபாடு உணரத்தக்கதாகும். 'நால்வர்' என்றது தொகைக்குறிப்பு சனகாதிமுனிவர்கள் நால்வர்களைக் குறித்தது. 'அறமாதி' என்றது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களை. 'தென்பாலின் முகமாகி' என்றது தக்ஷிணாமூர்த்தமாக நின்றதை உணர்த்தியதாம். 'வடவால்' என்றது கல்லாலமரத்தை. இது வடக்கே இருத்

தலின் வடவால் என்றார். இனி விடம் என்பதே ஆலமரத்தை உணர்த்தா நிற்கும். 'அன்பால்' இதில் ஆல் மூன்றனுருபு கருவிப்பொருளில் வந்தது 10

**தேசோமயானந்தமே! பூலோக சுவர்க்கலோக வாழ்வுகளெல்லாம் பூலோகப்பித்தும் வெளியும் பூண்டவர், வேண்டுவதென்று அவை களை ஒழித்து அடியேனை மௌனத்தே வைத்தருளிய மௌன தேசிகனின் திருவருள் வாழி என்கின்றார்**

புத்தமிர்த போகமுங் கற்பகநன் னீழலில்
பொலிவுற இருக்குமியல்பும்
பொன்னுலகி லயிரா வதத்தேறு வரிசையும்
பூமண்ட லாதிக்கமும்
மத்தவெறி யினர்வேண்டும் மாலென்று தள்ளவும்எம்
மாலுமொரு சுட்டும்அறவே
வைக்கின்ற வைப்பாளன் மௌனதே சிகனென்ன
வந்தநின் னருள்வாழிகாண்
சுத்தபரி பூரண அகண்டமே ஏகமே
சுருதிமுடி வானபொருளே
சொல்லரிய வுயிரினிடை யங்கங்கு நின்றருள்
சுரந்துபொழி கருணைமுகிலே
சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே
தேடரிய சத்தாகிஎன்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

**(ப-ரை)** சுத்தம்-சுத்தமும், பரிபூரணம் - மிகுந்த நிறைவாயுமிருக்கின்ற, அகண்டமே - அகண்டரூபமே!, ஏகமே - தனிப்பொருளே!, சுருதி - வேதங் களின், முடிவு-முடிவாகிய, ஆன - ஆகிய, பொருளே - பொருளே!, சொல்- அளவிட்டுச் சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, உயிரினிடை - உயிர்களின் இடத்தே, அங்கு அங்கு - அவ்அவ் இடங்களில், நின்று - வியாபித்துநின்று, அருள் - திருஅருளாகிய மழையை, சுரந்து - மிகவும் சுரந்து, பொழி - பெய் கின்ற, கருணை - கருணைவடிவமாகிய, முகிலே - மேகமே!, சித்திநிலை - சித்தி நிலையும், முத்தி - முத்திநிலையும் ஆகிய பயிர்கள், விளைகின்ற - விளைகின்ற, பூமியே-நல்லநிலமே!, தேடரிய - தேடுதற்கரிதாகிய, சத்து - உண்மை, ஆகி- ஆகி, என்-அடியேனின், சித்தமிசை - மனத்தினிடத்து, குடிகொண்ட-குடி யாக எழுந்தருளியிருக்கின்ற, அறிவான - ஞானமயமாகிய, தெய்வமே - கட வுளே!, தேசோமயம்-பேரொளிரூபமாகிய, ஆனந்தமே-பேரின்பரூபப் பெரும் பொருளே!, புது-புதிதாகிய, அமிர்தம்-அமிர்தத்தை உண்ணும், போகமும்- அனுபவமும், கற்பகம்-கற்பகத்தருவின், நல்-நல்ல, நீழலில்-நிழலிலே, பொலி



வுற-விளக்கமாக, இருக்கும்-வீற்றிருக்கும், இயல்பும்-தன்மையும், பொன்னுல கில் - சுவர்க்கலோகத்திலே உள்ள, அயிராவதத்து-ஐராவதம் என்னும் யானை யின்மேல் ஏறும், வரிசையும் - பெருமையும், பூமண்டலம் - பூலோகத்தில், ஆதிக்கமும்-உயர்வும், மத்த-பூலோகமாயையாகிய பைத்தியம்கொண்ட, வெறி யினர்-வெறியுடையவர்களால், வேண்டும்-விரும்பப்படுகின்ற, மால்-ஆசையே, என்று-என்றுகண்டு, தள்ளவும் - அதனை அகற்றவும், எம்மாலும்-அடியோங்க ளாலும், ஒரு-ஒரு, சுட்டு - சுட்டுதல், அறவும் - அற்று நீங்கவும், வைக்கின்ற- அடியோங்களை மோனத்தே வைக்கின்ற, வைப்பாளன் - பெருமையினன், மௌனதேசிகன்-மௌனகுரு, என்ன-என்றுசொல்லுமாறு, வந்த-அடியேன் பால் வந்தருளிய, நின் -தேவரீரின், அருள்-திருஅருள், வாழி-வாழ்ந்திருப்ப தாக எ-று.

**(வி-ரை)** 'புத்தமிர்தபோகம்' என்றது இத்தேவாமிர்தம் தேவர்களால் புதிதாகக் கடைந்தெடுக்கப்பட்டதாதலின் 'புத்தமிர்தம்' எனவும், அதனை மிசைதல் போகமாகவுங் கூறினர். 'கற்பகம்' என்றது தேவலோகத்துக் கற்பகவிருக்ஷத்தை. இது தன்பால் இல்லாததைக் கற்பித்துத் தருதலின் இப்பெயர் வந்தது. 'பொன்னுலகம்' என்றது தேவலோகத்தை. இது பொன்மயமானதால் பொன்னுலகம் என ஆயிற்று. 'அயிராவதம்' இது இந்திரனின் பட்டத்து யானை. இது திருப்பாற்கடலிற் பிறந்தது. வெள்ளை நிறமுடையது. நாலுகொம்புகள் உடையது. 'பூமண்டலாதிக்கம்' என்றது பூமண்டல உயர்வு, இனி பூமண்டல அரசாட்சி எனினுமாம். 'மத்தவெறி' என்றது பித்தினால் உண்டாகிய வெறி, பித்தும் வெறியும் என இருபொரு ளில் மயங்கிநின்றது. 'மால்' என்றது மயக்கத்தை, 'தள்ளவுமெமால்' இது தள்ளவும்+எம்+மால் என்ற மூன்றுசொல் இருசந்தி. 'சுட்டும் அறவே வைக்கின்ற வைப்பாளன்' என்றது திருகாணமௌனத்தை எமக்கு உண் டாக்குவோன் என்பது பொருளாம். 'மௌனதேசிகன்' என்றது தனக்கு மௌன உபதேசஞ்செய்த மௌனதேசிகரை. 'வாழிகாண்' இதில் 'காண்' என்றது அசை. இறைவன் நிர்மலன், சர்வவியாபகனாதலின் 'சுத்த பரி பூரணமே' என்றார்.

இறைவன் கண்டிக்கப்படாதவனாதலினால் 'அகண்டமே' எனவும், இறைவன் ஒப்புயர்வற்ற தனிப்பொருளாதலின் 'ஏகமே' எனவும், இறைவன் வேதாந்தப் பொருளாகியவன் உபநிடதப் பொருளாக இருப்பவனாதலின் 'சுருதிமுடிவான பொருளே' என்றும் கூறினர். பின்னும் இறைவன் எல்லா உயிர்களுக்கும் உயிராக அவ்வவ் வுயிர்கள்தோறும் நின்று கைம்மாறு கருதாது அருளைச் செய்பவனாதலினால், "சொல்லரிய உயிரினிடை யங்கங்கு நின்றருள் சுரந்து பொழிகருணை முகிலே" என்றார். இறைவன் சித்தியும் முத்தியும் தருபவனாதலின், 'சித்திநிலை முத்திநிலை விளைகின்ற பூமியே' என்றார். புதுமை+அமிர்தம்=புத்தமிர்தம். புதுமை என்னும் மையீற்றுப் பண்புச்சொல் மைகெட்டு ஒற்றிரட்டிப் புணர்ந்தது. இச்செய்யுளில் வந்த உம்மைகள் அனைத்தும் எண்ணும்மைகள். 'கற்பகம்' இது 'கல்பகா' என்ற

வடசொற் சிதைவு. 'நீழல்' இது நிழல் என்ற சொல் ஆதி நீண்டு நின்ற நிலை. 'அறவே' இதில் நின்ற ஈற்றேகாரம் தேற்றப்பொருளது. 'தேசிக னென' இதில் 'என' என்பது என்ன என்பதன் தொகுத்தல் விகாரம். 'வாழி' இது 'வாழிய' என்பது ஈறுகெட்டு நின்றது. இதனை,

"வாழிய வென்பத னீற்று னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே"

என்ற **சூத்திரத்தாற்** கொள்க. அகண்டமே, ஏகமே, பொருளே, முகிலே, பூமியே, தெய்வமே, ஆனந்தமே என்பன விளியுருபு ஏற்ற பெயர்கள். 11

---

## சிற்சுகோதய விலாசம்

சிற்சுகோதய விலாசமே! பொய்ப்பொருளாகிய இந்த தேகத்தை மெய்யென்றெண்ணி அடியேன் அலையேன் என்கின்றார்

காக மோடுகழு கலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
காலி ரண்டுநவ வாசல் பெற்றுவளர்
காம வேள்நடன சாலையை
மோக ஆசைமுறி யிட்ட பெட்டியை மும்
மலமி குத்தொழுகு கேணியை
மொய்த்து வெங்கிருமி தத்து கும்பியை
முடங்க லார்கிடை சரக்கினை
மாக இந்த்ரதனு மின்னை யொத்திலக
வேதம் ஓதியகு லாலனார்
வனைய வெய்யதடி கார னானயமன்
வந்த டிக்குமொரு மட்கலத்
தேக மானபொயை மெய்யெ னக்கருதி
ஐய வையமிசை வாடவோ
தெரிவ தற்கரிய பிரமமே அமல
சிற்சு கோதய விலாசமே.

**(ப-ரை)** தெரிவதற்கு - அறிந்துகொள்ளுதற்கு, அரிய-அரிதாகிய, பிரமமே-பிரமமாக விளங்கும்பொருளே!, அமலம் - பரிசுத்தமாகிய, சித்து-ஞானமும், சுகம் - ஆனந்தமும், உதயம்-தோன்றுகிற்கும், விலாசமே - விலாசமே!, காகமோடு-காக்கைகளுடனே, கழுகு-கழுகுகளும், அலகை-பேய்களும், நாய்-நாய்களும், நரிகள்-நரிகளும், சுற்று - சுற்றித்திரிதற்கு இடமதாகிய, சோறு-



சோற்றை, இடு - இட்டுவைக்கும்படியான, துருத்தியை - தோற்பையை, இரண்டு-இரண்டு, கால்-கால்களையும், நவம் - ஒன்பது, வாசல்-வாயில்களையும், பெற்று-பெற்று, வளர்-வளருகின்ற, காமவேள் - மன்மதனுடைய, நடனம்-நிருத்த சாலையை-சாலையை, மோகம் - மோகத்துக்கும், ஆசை - ஆசைக்கும் (அடிமையென்றுஎழுதிய), முறிசீட்டை-அடிமைப்பத்திரத்தை, இட்ட-சேமித்து வைத்திட்ட, பெட்டியை-பெட்டகத்தை, மும்மலம்-மூன்றுமலங்கள், மிகுந்து-அதிகரித்து, ஒழுகு-மிகுந்து வழிந்துகொண்டிருக்கும், கேணியை-கிணற்றை, வெம்-கொடிய, கிருமி-புழுக்கள், மொய்த்து-கூடி, தத்து - கெளிந்துகொண்டிருக்கும், கும்பியை - நரகத்தை, முடங்கல் - குற்றம், ஆர்-நிறைந்த, கிடை-கட்டுக்கிடையாய்க்கிடக்கும், சரக்கினை-சரக்கை, மாகம்-ஆகாயத்தினிடத்தே காணப்பெறும், இந்திரதநு - இந்திரதநுசையும், மின்னை - மின்னலையும், ஒத்து-ஒத்ததாகி, இலக - விளங்கும்படி, வேதம் - வேதங்களை, ஓதிய - கற்ற, குலாலனார் - பிரம்மனாகிய குயவனார், வனைய - செய்ய, யமன் - யமன், ஆன-ஆகிய, வெய்ய-கொடிய, தடிகாரன் - தடி அடிக்காரன், வந்து-வந்து, அடிக்கும்-அடித்துடைக்கின்ற, ஒரு-ஒரு, மட்கலத்தை-மண்பாண்டத்தையொத்த, தேகம்-தேகம், ஆம்-ஆகிய, பொய்யை-நிலையற்றதை, மெய்யென - நிலையுள்ள பொருளென்று, கருதி - எண்ணி, ஐய - ஐயனே!, வையம்மிசை - பூமியிலே, வாடவோ-வாடிநிற்கவோ? எ-று.

**(வி-ரை)** இச்செய்யுள்முதல் பத்துச் செய்யுள்கள் 'தெரிவதற்கரிய பிரமமேயமல சிற்சுகோதய விலாசமே' என்ற அடியைத் தமக்கு மகுடமாகக் கொண்டு விளங்குகின்றது. அம்மகுடத்தின் முடிவில் அழகு செய்யும் இரத்தினமணிபோல் 'சிற்சுகோதய விலாசமே' என்று அமைந்திருப்பதால் இப்பதிகத்திற்கும் "**சிற்சுகோதய விலாசமே**" எனப் பெயராயது. இதற்கு ஞானமும் பேரின்பத் தோற்றமும்கொண்டு விளங்கும் திருவிளையாட்டே என்பது பொருள்; என்னை? இறைவன் ஞானரூபியாகையாலும், பேரின்பமயனாகையாலும், படைத்தல் முதலாய ஐந்து தொழில்களும் எம்பெருமானுக்குத் திருவிளையாட்டே யாகையாலும் இறைவனைச் 'சிற்சுகோதய விலாசமே' என்று அழைத்தனர்போலும். இத்தேகத்துள்ளே நின்று கூத்தாடுகின்ற கூத்தனாகிய உயிர் இத்தேகத்தை விட்டுப்போனால் இத்தேகம் நாய்க்கும், நரிக்கும், கழுகுக்கும், காக்கைக்கும் விருந்தாவதால் "காகமொடு கழுகலகை நாய்நரிகள் சுற்று சோறிடு துருத்தியை" என்றார். இதனை யன்றே **பட்டினத்தடிகளும்**,

"எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கெனு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கெனுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும் புன்னா யெனக்கெனு மிந்நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தே னிதனா லென்ன பேறெனக்கே"

என்று கூறினார். தேகம் தோல் தசை முதலியவற்றால் ஆக்கப்பட்டதால் 'துருத்தியை' என்றார்; துருத்தி-தோற்பை. தேகத்தை 'மீத்தோற்போர்வை'

என்றதும் ஒப்பிடத்தக்கது. தேகத்தில் ஒன்பது பெருந்துவாரங்கள் இருத்தலின் 'நவவாசல் பெற்றவளர்' என்றார்.

'காமவேள்' என்றது மன்மதனை. 'காமம்' என்பது வேள் என்பதற்கு அடைமொழி. இது இனம் விலக்கவந்த அடைமொழி. வேள் என்பது முருகக்கடவுளுக்கும் மன்மதனுக்கும் பெயராய் விளங்குவது. முருகக்கடவுளை நீக்கி மன்மதனைக் குறித்தற்காகக் 'காமவேள்' என்றார். வேள் என்பதற்கு எல்லாரும் விரும்பப்படும் அழகுடையோன் எனவும் எல்லார்க்கும் விருப்பத்தை உண்டாக்குவோன் எனப் பொருள்தரும். 'சாலை' என்றது பெருங்கூடத்தை. பெரும் மாளிகையைக் குறிக்கும். 'மோகவாசை' என்றது உம்மைத்தொகை. மோகத்துக்கும் ஆசைக்கும் என விரியும். இனி இதற்கு மோகமாகிய ஆசை எனப் பிரித்து விரித்துப் பண்புத்தொகை என்னலுமாம். 'முறி' என்பது சீட்டோலை. ஈண்டு அடிமைப்பத்திரம் எழுதிய ஓலையென அறிக. 'மும்மலம்' என்றது ஆணவமலம், காமியமலம், மாயாமலம் என்னும் மும்மலங்களை. தேகத்தில் இம்மூன்று மலங்களும் நாளுக்குநாள் ஊறிப் பெருகுவதால் என்றும் ஊற்று ஊறிப் பெருகும் இயல்புடைய 'கேணி' என்றார். 'கேணி' இது திசைச்சொல். 'கும்பியை' என்றது கும்பீபாகம் என்னு நரகத்தை. இனி, வயிற்றை என்பாருமுண்டு. வயிறறைக் குறிக்க உடலையும் குறிக்கும். என்னை? சினையாகுபெயராய் என்க. 'முடங்கலார் கிடைசரக்கினை' என்றது குற்றமுள்ள பண்டம் சீக்கிரம் விலைபடாது முடங்கிக் கிடக்கும். அதனால் இத்தேகம் பிறந்த பயனை எய்தாது கிடத்தலின் 'முடங்கலார் கிடைசரக்கினை' என்றார். 'மாக இந்திரதனு' என்றது ஆகாயத்திற்றோன்றி மறையும் இயல்புடைய வானவில்லை. இது இந்திரனின் வில் எனப்படுதலால் 'இந்திர தனு' என்றனர். மின்னும் தோன்றி உடனே அழிதலால் வானவில்லொடு வானத்து மின்னலையும் ஒப்புக்கூறினார். பிரமன் செய்த பாண்டம் இத்தேகமாதலால் 'வேத மோதிய குலாலனார் வினைய' என்றார். பிரமனால் படைக்கப்பட்ட இத்தேகம் எமனாற் சிதைக்கப்படுதலால், 'வெய்யதடி காரனான யமன்வந்தடிக்கு மட்கலத் தேகமாம் பொய்யை' என்றார். 'குலாலனார்' இதில் வந்துள்ள 'ஆர்' விகுதி உயர்வுப் பன்மை. 'பிரமம்' என்றது விகாரம் ஏதுமின்றி நிர்மலமாய்நிற்கும் கடவுளை. 1

சிற்சுகோதய விலாசமே! மாயையில் முழுகித் தேவரீரை மறந்து
கிடக்குந் தமியேன் தேவரீரைக் கலந்து ஆனந்தமயமாக
இருப்பது எந்தக்காலம் என்கினறார்

குறிக ளோடுகுண மேதுமின் றி யனல்
ஒழுக நின் றிடும் இரும்பனல்
கூட லின் றியது வாயி ருந்தபடி
கொடிய ஆணவ அறைக்குளே
அறிவ தேதும்அற அறிவி லாமைமய
மாயி ருக்குமெனை அருளினல்



அளவி லாததனு கரண மாதியை
அளித்த போதுனை அறிந்துநான்
பிறிவி லாதவண நின்றி டாதபடி
பலநி றங்கவரும் உபலமாய்ப்
பெரிய மாயையி லழுந்தி நின்னது
ப்ரசாத நல்லருள் மறந்திடுஞ்
சிறிய னேனுமுனை வந்த ணைந்துசுக
மாயி ருப்பதினி என்றுகாண்
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - அறிந்துகொள்ளுதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே-பிரமமாகவிளங்கும் பரம்பொருளே!, அமலம்-பரிசுத்தமாகிய, சித்து-ஞானமும், சுகம்-ஆனந்தமும், உதயம் - தோன்றிநிற்கும், விலாசமே - விலாசமே!, குறிகளொடு-அடையாளங்களுடனே, குணம்-குணம், ஏதும்-சிறிதும், இன்றி - இல்லாமல், அனல் - நெருப்பு, ஒழுக - சிந்த, நின்றிடும் - நிற்கின்ற, இரும்பு - இரும்பானது, அனல் - நெருப்புடனே, கூடல்-சேருதல், இன்றி-இல்லாமல், அதுவா-அவ் இரும்பாகவே, இருந்தபடி-இருந்தமாதிரி, கொடிய-கொடிதாகிய, ஆணவம்-ஆணவம் என்னும், அறைக்குள்ளே-வீட்டின் அறைக்குள்ளே, அறிவது - அறியுந்தன்மை, ஏதும் - சிறிதும், அற - அற்று, அறிவிலாமை-அறிவுயில்லாததன்மை, மயமாய்-வடிவமாய், இருக்கும்-இருக்கின்ற, எனை-அடியேனை, அருளினல்-கிருபையினலே, அளவு-எண்ணிக்கை, இலாத-இல்லாத, தநு - உடம்பு, கரணம் - கரணங்கள், ஆதியை - முதலியவைகளை, அளித்தபோது-தந்தருளியபோது, உன்னை-தேவரீரை, அறிந்து-உணர்ந்து, நான்-அடியேன், பிரிவு-பிரிவு, இலாத - இல்லாத, வணம் - விதம், நின்றிடாதபடி-நிற்காதபடி, பல-பலவாகிய, நிறம்-நிறங்களை, கவரும்-கிரகிக்கும், உபலமாய்-பளிங்குக் கல்லைப்போன்று, பெரிய - பெரிதாகிய, மாயையில்-மாயைக்கடலில், அழுந்தி-முழுகி, நின்னது-தேவரீரது, பிரசாதம்-அநுக்கிரகமாகிய, நல்-நல்ல, அருள் - கருணையை, மறந்திடும் - மறந்துவிடும், சிறியனேனும் - அற்பனாகிய அடியேனும், உன்னை - தேவரீரை, வந்து - வந்து, அணைந்து-தழுவி, சுகமாய்-இன்பமயமாக, இருப்பது - இருப்பது; இனி - இனிமேல், என்று - எந்தக் காலம்? எ-று.

(வி-ரை) நெருப்பிலே போட்டுப் பழுக்கக் காய்ச்சிய இரும்பு நெருப்புப் போலச் செவந்து நெருப்புவுரு நின்றாலும் அவ் இரும்பு நெருப்பின் தன்மையை அடைந்ததேயொழிய நெருப்பாகவில்லை. நெருப்பைவிட்டு நீங்கியபின் நெருப்பின்தன்மையும் சிறிது சிறிதாக நீங்கிப் பழய இரும்பின் தன்மையையே அடையும். அதுபோல அடியேன் ஆனவரையில் ஆணவமயமாக இருந்தேன் என்பார் 'குறிகளோடு குணமேதுமின்றி அனல் ஒழுக நின்றிடு மிரும்பு அனல் கூடலின்றி அதுவாய் இருந்தபடி கொடிய

வாணவ அறைக்குளே அறிவது ஏதுமற அறிவிலாமை மயமாயிருக்குமெனை' என்றார். 'குறி' என்றது அடையாளத்தை. 'குணம்' என்றது தன்மையை. 'ஏதும்' என்றது சிறிதளவும் என்னும் பொருளில் வந்தது. 'அனல் ஒழுக' என்றது நெருப்புப்பொறி சிந்தநிற்றலை. 'அனல் கடலின்றி' என்றது நெருப்புமயமாக இருந்ததன்றி நெருப்பாக ஆகாதவாறு என்பதாம்.

'ஆணவம்' என்னும் ஒன்றே பிறவிக்கும் எல்லாத் துன்பங்களுக்கும் காரணமாக இருத்தலின் 'கொடிய' என்னும் அடைமொழி கொடுத்தார். 'ஆணவ அறை' இது பண்புத்தொகை; ஆணவமாகிய அறைக்குள்ளே என்பது பொருள். 'அறிவேதுமற அறிவிலாமயமாக இருக்குமெனை' என்றது ஞானம் என்பது சிறிதும் இல்லாமல் அஞ்ஞானமயமாக இருந்த என்னை என்பதாம். 'அளவிலாத தநுகரணம்' என்றது எண்ணிலாப் பிறப்புத் தந்தமையால் 'அளவிலா' என்ற அடைமொழி கொடுத்தார். 'தநுகரணமாதி' என்றது தநு, கரணம், புவனம், போகம் என்பனவற்றைக் குறிக்கும். 'தநு' என்றது தேகத்தை. 'கரணம்' என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களை. பளிங்கிற்கல் தனக்கென்று ஒரு நிறம்பெறாது சார்ந்ததன் வண்ணமாய் இருத்தலால் சார்ந்ததன் வண்ணமாக இருக்கும் ஆன்மாவிற்கு ஒப்பிடுவான், 'பலநிறங்கவரு முபலமாய்' என்றார். மாயையில் அழுந்தியவர் இறைவன் திருஅருள் பெறுதல் கூடியதன்றாதலின் 'பெரிய மாயையில் அழுந்தி நின்னது பிரசாத நல்லருள் மறந்திடும்' என்றும், 'சிறியனேனுமுனை வந்தணைந்து சுகமாயிருப்பதினி யென்றுகாண்' என்றும் கூறினார். 'குறிகளோடு' இதில் ஓடு உருபு எண்ணுப்பொருளில் வந்தது. 'இன்றி' இது வினையெச்சம். 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். 'உனை' இது உன்னை என்பதன் தொகுத்தல் விகாரம். 'வணம்' இது வண்ணம் என்பதன் தொகுத்தல் விகாரம். 'காண்' இது முன்னிலையசைச்சொல். 2

சிற்சுகோதய விலாசமே! உன்னைப்பலவாறு அலறிக்கூப்பிட்டு மனம் நைந்து வருந்தும் அடியேன் கவலைதீர, அடியேன் கருத்தறிந்து தேவரீரருள்செய்ய அடியேனும் உய்வனோ என்கின்றார்

ஐந்து பூதமொரு கானல் நீரென
அடங்க வந்தபெரு வானமே
ஆதி யந்தநடு வேது மின்றியரு
ளாய்நிறைந் திலகு சோதியே
தொந்த ரூபமுடன் அரூப மாதிகுறி
குணமி றந்துவளர் வஸ்துவே
துரிய மேதுரிய உயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே





எந்த நாளுநடு வாகி நின்றொளிரும்
ஆதியே கருணை நீதியே
எந்தை யேஎன இடைந்திடைந் துருகும்
எளிய னேன்கவலை தீரவுஞ்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெறிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - அறிந்துகொள்ளுவதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே - பிரமமாக விளங்கும்பொருளே!, அமலம் - பரிசுத்தமாகிய, சித்து-ஞானமும், சுகம்-ஆனந்தமும், உதயம் - தோன்றுகிற்கும், விலாசமே - விலாசமே!, ஐந்து-ஐந்தாகிய, பூதம்-பூதங்களும், ஒரு-ஒரு, கானல் - கானலாகிய, நீர்என-ஜலத்தைப்போல, அடங்க-அடங்கும்படி, வந்த - தோன்றிய, பெரு-பெரிய, வானமே-ஆகாயமே!, ஆதி - முதல், அந்தம்-ஈறு, நடு-மத்தி, ஏதும்-ஏதுவும், இன்றி-இல்லாமல், அருளாய்-திருஅருள்மயமாக, நிறைந்து-எங்கும் நிறைந்து, விளங்கும் - விளங்குகின்ற, சோதியே - பேரொளியே, தொந்தம்-தொடர்புடைய, ரூபமுடன் - உருவத்துடனே, அரூபம் - உருவமில்லாமை, ஆதி-முதலிய, குறி-குறியும், குணம் - குணமும் ஆகிய இவைகளை, இறந்து-தாண்டிக்கடந்து, வளர்-வளர்கின்ற, வஸ்துவே-பொருளே!, துரியமே-துரிய பதமே!, துரியம் - துரியமாகிய, உயிரினுக்கு - உயிர்க்கு, உணர்வு - அறிவு, தோன்ற-உண்டாகும்படி, நின்று - நின்று, அருள் - அருளுகின்ற, சுபாவமே-சுபாவமே, எந்த-எந்த, நாளும்-காலத்தும், நடுவாகி-நடுவுநிலைமையாகி, நின்று-நின்று, ஒளிரும் - விளங்குகின்ற, ஆதியே-முதலே!, கருணை - கிருபையுடன் கூடிய, நீதியே-நீதியே, எந்தையே-அடியோங்களின் பிதாவே!, என-என்று, இடைந்து இடைந்து-மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து, உருகும் - கரைகின்ற, எளியனேன்-ஏழையேன், கவலை - கவலை, தீரவும்-நீங்கவும், சிந்தையானதை-அடியேனின் மனத்தை, அறிந்து-தெரிந்து, நீ-தேவரீர், உன் - தேவரீரின், அருள்-திருஅருளைச், செய்ய-செய்ய (அதைப்பெற்று), நானும்-அடியேனும், இனி-இனிமேல், உய்வனோ-உஜ்ஜீவிப்பனோ? எ-று.

(வி-ரை) 'ஐந்துபூதம்' என்றது மண், நீர், தீ, காற்று, விண் என்பனவற்றை. தூலபஞ்சபூதங்கள் ஐந்தும் பராகாயத்தில் ஒடுங்கி இல்லாதுபோதலின் உள்ளதுபோலத்தோன்றி இல்லாதழியும் கானல்நீரை ஒப்புக்கூறிடுவார் 'ஐந்துபூதமொரு கானனீரென வடங்கவந்த பெருவானமே' என்றார். 'பெருவானம்' என்றது பராகாயத்தை. இறைவன் ஆதிமத்தியாந்தரகிதனாதலினால் 'ஆதியந்த நடுவேதுமின்றி' என்றார். இறைவன் அருள்வடிவன், சோதிமயனாதலின் 'அருளாய் நிறைந்திலகு சோதியே' என்றார். 'தொந்தம்' என்றது ஈண்டு தொடர்பு உடைமையை. 'ரூபம்' என்றது வடிவுடை

மையை. 'அருபம்' என்றது உருவிலாமையை. ஆதி என்றது ரூபாரூபத்தை வடிவுடைமையும் வடிவில்லாமையும் ஆகிய உருவத்தை. இதனைச் சதாசிவ ரூபம் என்பர். இறைவனே பொருள் இறைவனையன்றிப் பொருள் இல்லாமையினால் 'குறிகுண மிறந்தவளர் வஸ்துவே' என்றார். 'துரியம்' என்றது சுழுத்திக்கு மேற்பட்டதாக நிற்கும் நாலாம்நிலையை. இறைவன் பாரபட்சமின்றி விருப்பு வெறுப்பின்றி நடுநிற்பவனாதலினால் 'எந்நாளு நடுவாகி நின்றொளிரும் ஆதியே' என்றார். 'கருணைநீதியே' என்றது கருணையோடு கூடிய நீதியே என்பதாம். நீதிசெலுத்தத் தண்டிப்பின் அதுவுங் கருணை கொண்டு செய்பவன் என்பது தோன்றவே 'கருணை நீதியே' என்றார். இதனாலன்றோ இறைவன்பால் அறக்கருணை மறக்கருணை இரண்டுளவென வேதங்கள் முழங்காநிற்கின்றன. புத்திரனைக் காக்கக்கடமை பிதாவுக்கு இருப்பதுபோல் உயிர்களைக் காக்குங்கடன் இறைவனுக் குண்டாதலின், 'எந்தையே' என்றார். 'இடைந்து இடைந்து' இது மிகுதிபற்றிவந்த அடுக்குத்தொடர். 'இடைதல்' என்றது உள்ளம் நெகிழ்தலை உணர்த்தும். 'எளியனேன்' என்றது அறிவின் எளிமை கருதி என்க. 'சிந்தை' என்றது ஈண்டு மனக்கருத்தைக் குறித்தது. 'நீ' என்றது இறைவனை. 'அருள்செய்ய' என்றது எளியேற்கிரங்கிப் பிறவித்துயர்நீக்கி சிவானந்தமடையச் செய்ய என்பதாம். 'உய்வனே' என்றது முத்தி சுகம்பெற்று உஜ்ஜீவிப்பனோ என்பதாம். 3

சிற்சுகோதய விலாசமே! அடியேன் தவம் செய்யவில்லை சரியை கிரியை யோகமாகிய சோபானமுறைகளை அனுட்டிக்க ஆசைப் படவில்லை; பொய்த்தொழிலையே மேலானதாகக்கொள்ளும் மயக்கமுடைய அடியேன் தேவரீரின் அடியார்களுடன் சேர்ந்துவாழ அருள்புரிக என்கின்றார்

ஐவ ரென்றபுல வேடர் கொட்டம
தடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்றுமலை யருகில் நின்றுசரு
காதி தின்றுபனி வெயிலினால்
மெய்வ ருந்துதவ மில்லைநற் சரியை
கிரியை யோகமெனும் மூன்றதாய்
மேவு கின்றசவு பான நன்னெறி
விரும்ப வில்லையுல கத்திலே
பொய்மு டங்குதொழில் யாத தற்குநல
சார தித்தொழில் நடத்திடும்
புத்தி யூகமறி வற்ற மூகமிவை
பொருளெ னக்கருதும் மருளன்யான்



தெய்வ நல்லருள் படைத்த அன்பரொடு
சேர வுங்கருணை கூர்வையோ
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - அறிவதற்கு, அரிய - அருமையான, பிரமமே பிரம்ம ஸ்வரூபியாக விளங்கும் பொருளே!, அமல - பரிசுத்தனே!, சித்து-ஞானமும், சுகம்-சிவானந்தமும், உதயம்-உதிக்கின்ற, விலாசமே - திருவிளையாட்டே!, ஐவர் - ஐந்துபேர், என்ற - என்று கூறப்படுகின்ற, புலம் - புலன்களாகிய, வேடர் - வேடர்களின், கொட்டமது - கொட்டம், அடங்க - அடங்க, மர்க்கடம் - குரங்கினது, வன் - வலிமை பொருந்திய, முட்டியாய் - பிடியையொத்த பிடிப்புடையவனாகி, அடவிநின்று-காட்டிலிருந்து, மலையருகில்-மலையின்பக்கத்தில், நின்று-தங்கியும், சருகு-சாய்ந்த இலைச்சருகு, ஆதி - முதலியவைகளை, தின்று - சாப்பிட்டு, பனி-பனியினாலும், வெயில்-வெயிலினாலும், மெய்-தேகம், வருந்து - வருத்தப்படக்கூடிய, தவம் - தவத்தை, இலை-செய்தவில்லை, நல்-நல்லதாகிய, சரியை-சரியை, கிரியை-கிரியை, யோகம்-யோகம், எனும் - என்று கூறப்பெறும், மூன்றதாய் - மூன்றாக, மேவுகின்ற-பொருந்துயுள்ள, சவுபானம் - படிகளாகிய, நல் - நல்ல, நெறி - மார்க்கத்தை, விரும்ப-ஆசைப்பட, இல்லை - இல்லை, உலகத்திலே - உலகத்தில், பொய்-அசத்தியம், முடங்கு - தங்கிய, தொழில் - தொழில்கள், யாது - எதுவோ, அதற்கு - அத்தொழிற்கு, நல் - நல்ல, சாரதித்தொழில் - சாரதித்தொழிலை, நடத்திடும்-நடத்துகின்ற, புத்தி-புத்தியும், யூகம்-யூகத்தையும், அறிவும்-அறிவும், அற்ற-இல்லாத, மூகம் - மூகத்தன்மையும், இவை-இவைகளையே, பொருள்-மெய்ப்பொருள், என - என்று, கருதும்-நினைக்கின்ற, மருளன்-மயக்கத்தையுடையவனாகிய, யான் - அடியேன், தெய்வம் - தெய்வீகமுள்ள, நல் - நல்ல, அருள் திருவருளை, பெற்ற - அடைந்த, அன்பரொடு - தேவரீரின் அடியார்களுடன் சேரவும்-சேர்ந்துவாழவும், கருணை-கருணை, கூர்வையோ-செய்வையோ? எ-று.

(வி-ரை) 'ஐவர்' இது தொகைக்குறிப்பு. ஐவர் என்றது ஐம்புலன்களை. ஐம்புலன்களை வேடர் என்றது உருவகம். 'கொட்டம்' என்றது குறும்பு நடத்தை, ஒழுங்கற்ற நடத்தையென்பது பொருளாம். உலகில் 'குரங்குப் பிடியாய்' என்று சொல்லுவது வழக்கமாதலின், 'மர்க்கடவன் முட்டியாய்' என்றார். 'முட்டி' என்பது பிடிப்பு என்னும் பொருளது. 'அடவிநின்று' என்றதில் 'நின்று' என்றது ஈண்டு இருந்து வசித்து என்னும் பொருளது. 'மலையருகிநின்று' என்றதும் அது. 'சருகாதி' என்றதனால் காய், கனி, கிழங்கு முதலியவைகளையும், கந்தமூலங்களையுங் குறிக்கும். 'பனி வெயிலினால் வருந்து' என்றது பனியால் நனைதலையும் வெயிலாலுலர்தலையும் குறித்தது. 'தவம்' இது 'தபஸ்' என்ற வடசொற்றிரிபு. முத்திப்பேறு பெறுதற்குச் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்குபாதங்களும் நல்லனவாதலின் 'நற்சரியை கிரியையோகம்' என்றார். 'சவுபானம்' என்றது படிக்கட்டு என்பது பொருளாம். இந்த சரியைமுதல் நான்குபாதங்களும்

முத்திமேடையிற் சென்றிருக்கப் படிக்கட்டுகள்போன்று இருத்தலின் 'சவுபானம்' என்றார். இதனைச் சோபானம் எனவுங் கூறுவர். இது வடசொல்.

'பொய்முடங்குதொழில்' என்றது பொய்யாகிய உலகசம்பந்தமான லௌகிகங்கள் அத்தனையும் பொய்முடங்கு தொழில்கள் என்பன அறியற்பாலதாம். 'சாரதித்தொழில்' என்றது வண்டியோட்டுந்தொழில்; ஈண்டு அப்பொய்முடங்குதொழிலை நடத்துவித்தலை உணர்த்தியதாம். 'முடங்குதல்' என்றது ஈண்டு தங்குதலை உணர்த்திற்று. 'புத்தி, யூகம், அறிவு' என்றதில், 'புத்தி' என்றது விசாரித்தறியும் அறிவை. 'யூகம்' என்றது யோசனையை. 'அறிவு' என்றது கல்வியறிவை. இனி அறிவு என்றது ஞானம் எனினுமாம். 'மூகம்' என்றது ஊமைத்தன்மையை. 'மருளன்' என்றது மயக்கத்தால் பிறழ எண்ணுந் தன்மை யுடைமைபற்றி என்பது காண்க. 'புலவேடர்' இது புலமாகிய வேடர் என விரிதலின் இது பண்புத்தொகை. 'கொட்டமது' இதில் அது என்றது பகுதிப்பொருள் விகுதி. 'வன்முட்டி' இது வன்மை+முட்டி என்ற இருசொற்கள் கூடிநின்ற ஒருதொடர். 'மெய்வருந்துதல்' என்றது காயக்கிலேசாதிகளை. ஈண்டு பொய்யாகிய உடம்பை 'மெய்' என்றது மங்கலவழக்கு. 'யாது' இது 'யா' என்னும் வினா வடியாகப்பிறந்த வினாப்பெயர். 'அதற்கு' இது சுட்டுப்பெயர். இதில் அகரம் சுட்டெழுத்து 'தெய்வநல்லருள்' இது தெய்வத்தின் நல்லருள் எனவும் தெய்வத்தன்மை பொருந்திய நல்லருள் எனவும் இருபொருளில் பொருள் மயங்கி நின்றது. 'அன்பர்' என்றது அன்புடையவர்களாகிய அடியார்களை. 'கூர்வையோ' என்றது செய்தருளுவையோ என்பது பொருளாம். ஈண்டு இதன் ஈற்றில் நின்ற ஓகாரம் ஐயவினாப்பொருளில் வந்தது. அன்பரொடு மரீஇ இருத்தல் சிவானந்தப்பேறு பெறுதற்கு முக்கியமானது ஒன்றுதலாம். "தெய்வ நல்லருள் படைத்த வன்பரொடு சேரவுங் கருணை கூர்வையோ" என்றார். இதனை,

> "செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
> அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
> மாலற நேய மலிந்தவர் வேடமு
> மாலயந் தானு மரனெனத் தொழுமே" என்ற சிவஞானபோதப்

பன்னிரண்டாம் சூத்திரத்தையும் அதன் உரையையும் கண்டறிக.

சிற்சுகோதய விலாசமே! நான் பெற்ற பிறப்புகள் எண்ணிலாதன;
அவற்றுள் இப்பிறப்பு நல்லது இதில அறியவேண்டுவனவற்றை
அறியலாம் உன்னையும் என்னையுமறிந்து முத்தியின்ப முழுக
வேண்டும்; இதுவன்றித் தேகமும் நானும் நழுவின்
என்ன பிரயோசனம் என்கின்றார்

ஏக மானவுரு வான நீயருளி
னாலனேகவுரு வாகியே
எந்த நாளகில கோடி சிருஷ்டிசெய
இசையு நாள்வரை யநாள்முதல்



ஆக நாளது வரைக்கு முன்னடிமை
கூடவே சனன மானதோ
அநந்த முண்டுநல சனன மீதிதனுள்
அறிய வேண்டுவன அறியலாம்
மோக மாதிதரு பாச மானதை
அறிந்து விட்டுனையும் எனையுமே
முழுது ணர்ந்துபர மான இன்பவெள
மூழ்க வேண்டும்இது இன்றியே
தேக மோநழுவி நானுமோ நழுவின்
பின்னை உய்யும்வகை உள்ளதோ
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - அறிவதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே-பிரமமே!, அமல-பரிசுத்தனே! சித்து-ஞானமும், சுகம்-சிவானந்தமும், உதயம்-உதிக்கின்ற, விலாசமே - திருவிளையாட்டே!, ஏகம் - ஒன்றே, ஆன - ஆகிய, உருவான - ரூபத்தோடிருந்த, நீ - தேவரீர், அருளினால் - கருணையினாலே, அநேக-பலவாகிய, உருவாகி-வடிவங்களாகி, அகிலகோடி-அண்டகோடிகளை, சிருஷ்டிசெய்ய-படைக்க, இசையும்-பொருந்தும், நாள் - நாள்களின், வரை-எல்லை, எந்த-எந்த, நாள் - காலமோ?, அந்த - அந்த, நாள்-காலம், முதலாக-முதலாக, நாளது - நாளது, வரைக்கும் - வரையிலும், உன் - தேவரீரின், அடிமை - தொண்டனாகிய அடியேன், கூடவே - கூடவே, சனனமானதோ-பிறந்தபிறப்போ, அனந்தம்-கணக்கற்றது, உண்டு-இருக்கின்றது, (ஆனாலும்) நல்ல-நல்ல, சனனம்-பிறவி, ஈது-இது, இதனுள் - இந்தப்பிறவியில், அறிய வேண்டுவன - தெரிந்துகொள்ள வேண்டியவைகளை, அறியலாம் - தெரிந்து கொள்ளலாம், மோகமாதி-மோகம் முதலியவைகளை, தரு-தருகின்ற, பாசம்-பாசம், ஆனதை-ஆனதை, அறிந்து - உள்ளபடி அறிந்து, விட்டு - அதனைக் கைவிட்டு, உன்னையும் - ஆண்டவனாகிய தேவரீரையும், என்னையும்-அடிமையாகிய அடியேனையும், முழுதும் - முற்றும், உணர்ந்து - அறிந்து, பரமான-மேலான, இன்பவெள்ளம் - ஆனந்தப்பெருக்கிலே, மூழ்கவேண்டும் - ஆழ வேண்டும், இது-இது, அன்றியே-அல்லாமல், தேகம் - அடியேனின் உடல், நழுவி-அடியேனைவிட்டு நீங்கி, நானும்-அடியேனும், நழுவின்-அத்தேகத்தை விட்டு நழுவுவேனாயின், பின்னை - பிறகு, உய்யும்-உஜ்ஜீவிக்கும், வகை-வழியுள்ளதோ-அடியேனுக்கும் இருக்கிறதோ? எ-று.

(வி-ரை) இறைவன் ஒருவனே எனவே தங்கள் முழங்குகின்றமையால் 'ஏகமான உருவானநீ' என்றார். இறைவன் எல்லா இடத்தும் எல்லாப் பொருளுள்ளுங் கலந்து அவையவைகளாகவும் விளங்குபவனாதலின் அநேகன் என வேதங்கள் முழங்குவதாலும் 'அருளினால் அநேக உருவாகி' என்றார்.

பரமான்மாவும், சீவான்மாவும், நித்தியம் அநாதியாதலின் என்று இறைவன் உளனே அன்றும் ஆன்மாவும் உண்டு. இதுகொண்டே 'எந்தநா ளகில கோடி சிருஷ்டிசெய விசையுநாள் வரையநாண் முதலாக நாளது வரைக்கு முன்னடிமைகூடவே சனனமானதோ அனந்தமுண்டு' என்றார். 'எந்தநா ளகிலகோடி சிருஷ்டிசெய விசையுநாள்' என்றது ஆதிபிரபஞ்ச சிருஷ்டிகாலத்தை யுணர்த்தியது. நீ சிருஷ்டிக்கும் பொழுதெல்லாம் சிருஷ்டிக்கப் பெற்றேனென்பார் 'உன்னடிமை கூடவே சனனமானதோ அநந்தமுண்டு' என்றார். 'அநந்தம்' இது முடிவற்றது என்னும் பொருளது. ந+அந்தம். இது வடசொற்சந்தி, இதில் நகம் எதிர்மறைஉபசர்க்கம், முத்திப்பேற்றிற்கு ஏற்ற பிறப்பு மனிதப்பிறப்பே ஆதலின் 'நலசனனமீது' என்றார்.

"அரியது கேட்கின் நெடியவெவ் வேலோய்
அரிது அரிது மானிடராகப் பிறத்தலரிது"

என்ற ஔவையார்வாக்கு ஈண்டு ஒப்பிடத்தகுந்தது.

'அறியவேண்டுவன' என்றது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களை. 'மோகமாதி' என்றது மோகம், மதம், லோபம், குரோதம், மாச்சரியம் முதலியவைகளையாம். 'பாசம்' என்றது அநாதியே யுள்ளதாகி ஆன்மாக்களைப்பற்றி நின்று பதியை அறியவொட்டாது செய்வது. 'பாசம் நீங்கப் பலிக்கும் முத்தி' ஆதலில் 'பாசமானதை யறிந்துவிட்டு' என்றார். 'உனை' என்றது இறைவனை. 'எனை' என்றது உயிரை. 'பரமான இன்பவெள்ளம்' என்றது சிவானந்தப் பேரின்பவெள்ளத்தை. 'நானுமே நழுவின்'; என்றதில் 'நான்' என்றது ஆன்மாவை. ஆன்மா நழுவுதலாவது தேகத்தைவிட்டு நழுவல். அ+நாள்=அந்நாள். இது 'அநாள்' என்று வந்தது தொகுத்தல் விகாரம். 'சனனமீது' இதில், 'ஈது' என்பது இது என்னும் சுட்டு ஆதிநீண்டு நின்றது. 'உனையும், எனையும்' இவை முறையே உன்னையும், என்னையும் என்பவற்றின் தொகுத்தல் விகாரங்கள். 'உள்ளதோ' இது ஐயவினா; இல்லை என்னும் பொருளது. 'பாசமானதை' இதில் 'ஆனது' என்றது சொல்லுருபு. 5

சிற்சுகோதய விலாசமே! அடியேன் சித்தியோக நிலையில் நின்று மௌனானந்தப் பேரின்பசுகம் பெற்று அவ்வழியாச் சுக வடிவாய் இருப்பேனோ என்கின்றார்

நியம லக்ஷணமும் இயம லக்ஷணமும்
ஆச னாதிவித பேதமும்
நெடிது ணர்ந்திதய பத்ம பீடமிசை
நன் றி லங்குமச பாநலத்
தியல றிந்துவளர் மூலகுண் டலியை
இனிதி றைஞ்சியவ ளருளினால்



எல்லை யற்றுவளர் சோதி மூலஅனல்
எங்கள் மோனமநு முறையிலே
வயமி குந்துவரும் அமிர்த மண்டல
மதிக்கு ளேமதியை வைத்துநான்
வாய்ம டுத்தமிர்த வாரி யைப்பருகி
மன் னு மாரமிர்த வடிவமாய்ச்
செயமி குந்துவரு சித்த யோகநிலை
பெற்று ஞானநெறி அடைவனோ
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - அறிவதற்கு, அரிய - அருமையான, பிரமமே - பிரமஸ்வரூபியே!, அமல - பரிசுத்தனே! நியமம் - நியமத்தின், லக்ஷணமும் - இலக்கணத்தையும், இயமம் - இயமத்தின், லக்ஷணமும் - இலக்கணத்தையும், ஆசனாதி - ஆசனம் முதலியவைகளின், பேதமும்-வேறுபாடுகளும், நெடிது-நெடுங்காலம் கற்று, உணர்ந்து-நன்றாய் அறிந்து, இதயம்-மனமாகிய, பத்மம்-தாமரை, பீடம்-ஆசனம், மீது-மேலே, நின்று-நிலைபெற்று இருந்து, இலகும்-விளங்குகின்ற, அசபாநலத்து-அசபாக்கினியின், இயல் - இலக்கணத்தையும், அறிந்து - அறிந்து, வளர் - வளர்கின்ற, மூலம்-மூலாதாரத்து, குண்டலியை-குண்டலிசக்தியை, இனிது-இனிதாக, இறைஞ்சி-பணிந்து, அவள்-அச்சத்தியின், அருளினால் - கிருபையினால், எல்லை - வரம்பு, அற்று-அற்று, வளர்-வளர்கின்ற, ஜோதி-பிரகாசத்தைக்கொண்ட, மூலஅனல்-மூலாக்னியுடன், எங்கள்-எங்களுடைய, மோனம் - மோனம், மநு - மந்திரம், முறையிலே - வழியிலே, வயம்-வெற்றி, மிகுந்து - அதிகரித்து, வரும் - வருகின்ற, அமிர்தமண்டலம்-அமிர்தமண்டலமாகிய, மதிக்குளே - சந்திரமண்டலத்திற்குள்ளே, மதியை-அறிவை, இருத்தி - இருக்கவைத்து, நான் - அடியேன், வாய்மடுத்து-வாயை வைத்து, அமிர்தவாரியை - அமிர்தக்கடலை, பருகி - உண்டு, மன்னும் - நிலைபெற்ற, ஆர்-நிறைந்த, அமிர்தம்-அமிர்தத்தின், வடிவமாய்-வடிவமாகி, செயம்-வெற்றி, மிகுந்து - அதிகரித்து, வரு - வருகின்ற, சித்தயோகம்-சித்தர்களின் யோகம், நிலை - நிலையை, பெற்று - அடைந்து, ஞானம்-ஞான, நெறி-மார்க்கத்தை, அடைவனோ-அடைவேனோ? எ-று.

(வி-ரை) 'நியமம்' இது அட்டயோகத்துள் ஒன்று. இது தத்துவநூல் தெரிதல், தவம் தூய்மை தெய்வம் வழிபடல் முதலியன. 'லக்ஷணம்' என்றது இலக்கணம். 'இமம்' இதுவும் அட்டயோகத்தொன்று. இது இச்சை, களவு, கொலை, பொய் ஆகிய இவைகளினை நீங்கியிருத்தல். 'ஆசனம்' என்றது அட்டாங்கயோக இருப்பை குறிக்கும். 'நெடிதுணர்தல்' என்றது மிக உணர்தலை. 'இதய பதுமபீடம்' என்றது, மனமாகிய பதுமாசனம் என்பதாம். 'அசபாநலம்' என்றது அசபாக்கினியை. 'இயல்' என்றது தன்மையை. 'மூலகுண்டலியை' என்றது மூலாதாரத்துக் குண்டலிசக்தியை என்பதாம்.

'எல்லை' என்றது ஈண்டு அளவு குறித்துநின்றது. 'ஜோதிமூல அனல்' என்றது ஜோதிப்பிரகாசத்தையுடைய மூலாக்கினியை. 'மோனமநு'' என்றது மோனமந்திரத்தை. 'முறை' என்றது ஈண்டு ஒழுங்கை. 'வயம்' என்றது வெற்றி; ஈண்டு யோகசித்தியின் வெற்றியை. 'அமிர்தமண்டல மதிக்குளே' என்றது அமிர்தமண்டலத்தோடு விளங்கும் மதிமண்டலத்துளே என்பதாம். 'மண்டலம்' என்றது வட்டம், வளைவு என்றது பொருளதாம்.

'மதியைவைத்து' என்றது ஈண்டு அறிவை நாட்டுதலை உணர்த்திற்று. 'வாய்மடுத்து' என்றது வாய்நிறையக்கொண்டு பருகி என்பதாம். 'அமிர்தவாரி' என்றது அமிர்தவெள்ளத்தை. 'மன்னுதல்' என்றது நிலைபெற்று இருத்தலை. 'ஆர் அமிர்தவடிவமாய்' என்றது நிறைந்த அமிர்தவடிவமாய் என்பதாம். 'அமிர்தம்' என்றது அழியாமையை. இனி இன்பவடிவமாய் என்பாரும் உளர். 'செயம்' இது ஜெயம் என்ற வடசொற்சிதைவு. 'சித்தியோகநிலை' என்றது சித்தர்களின் யோகநிலை என்பதாம். 'யோகம்' என்றது இறைவனைத் தன்னுள்ளே கண்டு ஆனந்தத்து அழுங்கும் நிலை. 'ஞானநெறி' என்றது நான்காவது பாதமாகிய ஞானபாதத்தை. 'நியமலட்சணமும் இயமலக்ஷணமும்' என்பதன்கண்ணுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 'பீடமிசை' இது மிசை என்றது ஏழனுருபு, இடப்பொருளது. 'அவளருளினால்' இதில் அவள் என்றது குண்டலிசக்தியை. அவள் என்பதில் அகரம் பண்டறி சுட்டு. 'அருளினால்' இதில் ஆல் மூன்றனுருபு கருவிப்பொருளது. 'ஜோதி மூலவனல்' இதற்கு ஜோதிமயமாகிய மூலவனல் எனப் பண்புத்தொகையாகக் கொள்வாரும் உண்டு. 'மோனமநுமுறை' இதில் 'மநுமுறை' என்பதற்கு மந்திரநூலின்படி எனப் பொருள் கூறுவாரும் உண்டு. (முறை-புத்தகம், நூல்.) 'அடைவனோ' ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. இது ஐயத்தின்கண் எழுந்த வினாவென அறிக. 'மதிக்குளே' இது 'மதிக்குள்ளே' என்பதன் தொகுத்தல் விகாரம்.

6

சிற்சுகோதய விலாசமே! அடியேன் செல்வம் ஈகை மதிப்பு நோயற்ற நிலை வாழ்வுபெறவும் ஞானநெறிநிட்டை கூறவும் உள்ளிருந்து உணர்த்தியதுமன்றி குருவாகவும் வந்து அருள்செய்ததை எவ்வாறு புகழ்வேன் என்கின்றார்

எறிதி ரைக்கடல் நிகர்த்த செல்வமிக<br>
  அல்ல லென்றொருவர் பின்செலா<br>
தில்லை யென்னுமுரை பேசி டாதுலகில்<br>
  எவரு மாமெனம திக்கவே<br>
நெறியின் வைகிவளர் செல்வ மும்உதவி<br>
  நோய்க ளற்றசுக வாழ்க்கையாய்<br>
நியம மாதிநிலை நின்று ஞானநெறி<br>
  நிஷ்டை கூடவுமெந் நாளுமே



அறிவில் நின்றுருகு வாயு ணர்த்தியதும்<br>
  அன்றி மோன குருவாகியே<br>
அகில மீதுவர வந்த சீரருளை<br>
  ஐய ஐயஇனி என்சொல்கேன்<br>
சிறிய னேழைநம தடிமை யென்றனது<br>
  திருவு ளத்தினிலி ருந்ததோ<br>
தெரிவ தற்கரிய பிரம மேஅமல<br>
  சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - தெரிந்து கொள்ளுதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே-பிரமமாகி விளங்கும் பரம்பொருளே! அமலா-பரிசுத்தமுடையவனே!, சித்து-ஞானமும், சுகம் - சிவானந்தமும், உதயம் - உதிக்கின்ற, விலாசமே-திருவிளையாட்டே!, எறி-அலையெறிகின்ற, கடல் - கடலின், திரை-அலையை, நிகர்த்த - ஒத்த, செல்வம் - செல்வமானது, மிக - மிகவும், அல்லல் - துன்பந்தருவது, என்று-என்று, ஒருவர்-அப்பொருள் செல்வமுடைய ஒருவர், பின்-பின்னே, செலாது - செல்லாதும், இல்லை - உனக்குத்தரப் பொருளில்லை, என்-என்கின்ற, உரை - சொல்லை, பேசிடாது - சொல்லாதபடியும், உலகில்-உலகத்திலுள்ள, எவரும்-எத்தகையவரும், ஆமென - ஆமென்று, மதிக்கவே-மதித்திடவே, நெறியில்-நல்லவழியில், வைகி-தங்கி, வளர் - வளர்வதற்குரிய, செல்வமும்-செல்வத்தையும், உதவி-தந்தருளி, நோய்கள் - பிணிகள், அற்ற-இல்லாத, சுகம்-சுகமாகிய, வாழ்க்கையாய்-வாழ்க்கையை யுடையவர்களாய், நியமம்-நியமம், ஆதி-முதலிய, நிலை-நிலையிலே, நின்று-நிலைத்திருந்து, ஞானநெறி-ஞானமார்க்கமாகிய, நிஷ்டை - நிஷ்டையை, கூடவும் - பொருந்தவும், எ-எந்த, நாளுமே - காலமே, அறிவின் - அறிவிலே, நின்று - நிலைத்திருந்து, குருவாய் - குருவாகி, உணர்த்தியது - அறிவித்தது, அன்றி - அல்லாமல், மோனம்-மௌனம், குரு - குருமூர்த்தம், ஆகியே - ஆகியே, அகிலமீது-பூமியின்மேல், வர-வரும்படி, வந்த-வந்தருளிய, சீர்-சிறந்த, அருளை-தேவரீரின் திருவருளை, ஐயஐய-ஐயய்ய, என் - இனி என்னென்று, சொல்வேன்-எடுத்துப் புகழ்ந்து கூறுவேன், சிறியன் - சிறியனாகிய, ஏழை - இந்த எளியன், நமது-நம்முடைய, அடிமை-தொண்டன், என்று-என்று, உனது-தேவரீரது, திரு-அழகிய, உளத்தினில்-மனத்தில், இருந்ததோ - அமைந்து கிடந்ததோ? எ-று.

(வி-ரை) 'எறிதிரைக் கடல்' இது 'திரை எறிகடல்' எனச் சொல் மாற்றிப் பொருள்கொள்ளக் கிடந்தது. 'நிகர்த்த' இது உவமவுருபு.

"நிறைசெல்வம் நீரிற் சுருட்டுநெடுந் திரைகாள்"

எனக் **குமரகுருபர சுவாமிகள்** சொல்லியதுபோல 'எறிதிரைக் கடனிகர்த்த செல்வமிக அல்லலென்று' என்றார். இங்கு செல்வம் நிலையின்றிப்போவதும் வருவதுமாக இருக்கும் இயல்புடைமையால் கடல் அலையைச் செல்வத்திற்கு ஒப்புரைத்தார்.

"இன்னல் தரும்பொருளை ஈட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம்"

எனப் **பெரியார்** கூறியதனால் 'செல்வமிக அல்லலென்று' என்றார். 'ஒருவர்' என்றது செல்வரை.

"செல்வரைப் பின்சென்று சங்கடம்பேசித் தினந்தினமும்
பல்லினைக் காட்டிப் பரதவியாமற் பரானந்தத்தின்"

எனப் **பட்டினத்தடிகள்** கூறியதுபோல 'ஒருவர் பின்செலாது' என்றார். 'இல் என்னுரை பேசிடாது' என்றது இரப்பவர்க்கு இல்லை என்று சொல்லாமல் என்பதாம்.

"இலனென்னு மெவ்வ முரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள"

என்ற **திருக்குறள்** ஈண்டு நோக்கத்தக்கதாகும்.

'எவரும் ஆம் என மதிக்க' என்றது எத்தகைச் சிறப்புடையோர்களும் சிறப்பாக மதிக்க என்பது பொருளாம். 'நெறியின் வைகிவளர் செல்வம்' என்றது அறத்தாற்றில் ஈட்டி அறத்தாற்றில் வைத்தபொருள் என்பதாம். 'நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்' என்றது பழமொழியாதலின் 'நோய்களற்ற சுகவாழ்க்கையாய்' என்றார். 'நியமம்' என்றது அட்டாங்க யோகத்து ஒருபகுதி. 'ஞானநெறி நிஷ்டை' என்றது ஞானமார்க்கமாகிய சுவானுபூதி நிலையாகிய நிஷ்டையை என்பதாம். இறைவன் என்றும் அறிவுக்கு அறிவாய் நின்று உணர்த்துபவனாதலின் 'எந்நாளுமே அறிவினின்று குருவாய் உணர்த்தியது' என்றார். அவ்வாறு அறிவுக்கறிவாய் உணர்த்தியது அல்லாமல் மௌனகுருவாகவும் வந்து அருள் செய்தமையால் 'அன்றி மோனகுருவாகியே அகிலமிதவர' என்றார். 'வந்தசீரருள்' என்றது தேவரீருக்கு உண்டாகிய திருஅருள் என்பதாம். 'ஐயஐய' இது ஆனந்த வியப்பினால் அடுக்கிவந்த அடுக்குத்தொடர். 'இனி என் சொல்வேன்' என்றது இனி அடியேன் எந்தவிதமாகப் புகழ்வேன் என்றதாம். இவன் சிறியவன், ஏழை என்று தேவரீருள்ளத்திற் கிடந்ததோ அதனால்தான் அறிவுக்கறிவாய் உணர்த்தியும் குருவாகவந்து உணர்த்தியதுமோ என்பார் 'சிறியனேழை நமதடிமை யென்றுனது திருவுளத்தினி லிருந்ததோ' என்றார்.

7

சிற்சுகோதய விலாசமே! அன்புருவமாக அன்பரோடும்
இன்பவீட்டில் இருப்பேனோ என்கின்றார்

எவ்வு யிர்த்திரளும் உலகி லென் னுயிர்
எனக்கு ழைந்துருகி நன்மையாம்
இதமு ரைப்பஎன தென்ற யாவையும்
எடுத்தெ றிந்துமத யானைபோல்



கவ்வை யற்றநடை பயில அன்பரடி
கண்டதே அருளின் வடிவமாக்
கண்ட யாவையும் அகண்ட மென்னஇரு
கைகுவித்து மலர்தூ வியே
பவ்வ வெண்டிரை கொழித்த தண்தரளம்
விழியு திர்ப்பமொழி குளறியே
பாடி யாடியு ளுடைந்து டைந்தெழுது
பாவையொத் தசைத லின்றியே
திவ்ய அன்புருவ மாகி அன்பரொடும்
இன்ப வீட்டினி லிருப்பனோ
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - தெரிந்துகொள்ளுதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே - பிரமஸ்வரூபமாக விளங்குகின்ற பரம்பொருளே!, அமல - பரிசுத்தமானவனே!, சித்து - ஞானமும், சுகம் - ஆனந்தமும், உதயம் - உதித்தற்கு இடமாயிருக்கின்ற, விலாசமே - திருவிளையாட்டே! உலகில் - உலகத்தில், எ-எந்த, உயிர்த்திரளும்-உயிர்களின் கூட்டங்களும், என்-அடியேனின், உயிர் என - உயிரேபோல்வன என்று, குழைந்து - இளக்கமுற்று, உருகி-கரைந்து, நன்மையாய் - நன்மையாக, இதம் - இனிமையான சொற்களை, உரைப்ப-சொல்லவும், மதம் - மதங்கொண்ட, யானையைப்போல் - யானையைப்போல, எனது-அடியேனுடையது, என்ற - என்று சொல்லப்படும், யாவையும்-எல்லாவற்றையும், எடுத்து-எடுத்து, எறிந்து-வீசிஎறிந்துவிட்டு, மதம்-மதங்கொண்ட, யானைபோல் - யானையைப்போல, கவ்வை - குற்றம், அற்ற - இல்லாத, நடை-நன்னடையை, பயில - பழக, அன்பர்-அன்பர்கள், அடி-திருப்பாதம், கண்ட-கண்டுமகிழ்ந்ததே, தேவ - தெய்வத்தன்மைபொருந்திய, அருளின் - திருஅருளின், வடிவம் ஆ-வடிவமாக, கண்ட-பார்த்த, யாவையும்-எல்லாம், அகண்டம்-அகண்டாகாரம், என்ன-என்று சொல்லும்படி, இரு-இரண்டு, கை-கைகளையும், குவித்து - கூப்பி, மலர்-மலர்களை, தூவியே-இட்டு அர்ச்சித்தே, பவ்வம்-சமுத்திரத்தின், வெண் - வெள்ளிய, திரை - அலைகள், கொழித்த-ஒதுக்கிய, தண்-குளிர்ந்த, தரளம்-முத்துக்கள்போன்ற நீர்த்துளிகளை, விழி - கண்கள், உதிர்ப்ப-உகுக்க, மொழி - சொற்கள், குழறியே-குழறி, பாடி-பாடியும், ஆடி-ஆடியும், உள்-மனம், உடைந்து உடைந்து-நெக்குவிட்டு நெக்குவிட்டு, எழுது-எழுதப்பெற்ற, பாவை - சித்திரப்பாவை, ஒத்து - ஒத்து, அசைதல்-அசைதல், இன்றியே - இல்லாமல், திவ்ய - மேலாகிய, அன்பு-அன்பின், உருவம்-உருவம், ஆகி-கொண்டு, அன்பரொடு - அடியார்களுடன், இன்பம் - முத்தியின்ப, வீட்டினில்-வீட்டிலே, இருப்பனோ-இருப்பேனோ? எ-று.

(வி-ரை) 'எவ்வுயிர்' இது எகரவினாவடியாகப் பிறந்தபெயர்; எல்லா உயிர்களும் என்பது பொருள். உலகத்து எவ்வளவு கடைப்பட்ட உயிரா

யிருந்தாலும் அது துன்பப்படச் சகியாது, என் உயிர்போல் எண்ணி மனம் உருகி இரங்கி அதற்கு உதவிசெய்யவேண்டும் என்பார் ‘எவ்வுயிர்த்திரளு மூலகி லென்னுயிரெனக் குழைந்தருகி’ என்றார். ‘இதம்’ என்றது ஹிதம் என்ற வடசொற் சிதைவு; நன்மை என்பது பொருள். இதற்கு எதிர் மொழி அஹிதம் என்பதாம். மதம்மிகுந்த யானைதான் தன் எதிரிற் கண்டவைகளை எல்லாம் எடுத்தெறியும்; அதுபோல எனது என்றவைகளை எல்லாம் எடுத்தெறிந்து என்பார் ‘எனதென்ற யாவையு மெடுத்தெறிந்து மதயானைபோல்’ என்றார். ‘மதயானைபோல்’ என்பது உபமானம். ஈண்டு புறப்பற்றில்லாமை உணர்த்தப்பெற்றது. ‘கவ்வை’ என்றது குற்றம், இனி துன்பம் எனினுமாம். ‘கவ்வையற்ற நடை’ என்றது துன்பந்தருவதாகிய குற்றமற்ற நன்னடை என்றதைக் குறித்தது. அடியாரை அவனெனப் பாவித் திறைஞ்சவேண்டும் என்பார் ‘அன்பரடி கண்டதே யருளின் வடிவ மாக்கண்ட யாவையு மகண்டமென்ன விருகை குவித்து ... ... வன்புருவமாகி’ என்றார். ‘அருள்வடிவம்’ என்றது திருவருள் வடிவத்தை. ‘அகண்டம்’ இது பிரிவற்றது, பரந்தது என்னும் பொருளது. ஈண்டு அகண்டரூபமாகிய பரமாகாயத்தை உணர்த்தியது.

கண்களில் ஆனந்தபாஷ்பஞ் சொரிய என்பதற்கு ‘பவ்வ வெண்டிரை கொழித்த தண்டரளம் விழியுதிர்ப்ப’ என்றார். ‘பவ்வம்’ என்றது சமுத்திரத்தை. ‘தண்டரளம்’ என்றது தண்ணியமுத்தை. ‘மொழிகுளறி’ என்றது ஆனந்தமேலீட்டால் சொல் தளர்தலை. ‘எழுதுபாவை’ என்றது எழுதப்பெற்ற பொம்மை, தீட்டிய சித்திரம் என்ற பொருளதாம். ‘அசைத லின்றி’ என்றது தேகம் அசைவின்றி என்பதாம். இனி, முன் பாடி, ஆடி என்றதால், அசையாமல் எப்படி ஆடமுடியும் என ஐயுறலாம், பாடி ஆடுதல் ஒருநிலை. அசைவின்றி இருத்தல் ஒருநிலை என்றறிக. இனி, மனஅசைவு இன்றி எனப் பொருள் கோடலுமாம். ‘திவ்யம்’ என்றதற்கு மேலான என்று பொருளுரைத்தாம்; இனி தெய்வீகம் பொருந்திய எனப்பொருள் கூறினுமாம். என்னை? அன்பே சிவரூபமாதலின் என்க. இதனை,

“அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே”

என்ற **திருமந்திரப்பாவால்** அறிக.

‘அன்பரொடு’ என்றது சிவபெருமான் திருவடித்தொண்டரொடு என்பதாம். ‘இன்பவீடு’ என்றது பேரின்ப வீடாகிய முத்திவீட்டைக் குறித்தது. ‘எவ்வுயிர்த்திரளும்’ இதன் ஈற்றில் நின்ற உம்மை இழிவுசிறப்பும்மை. ‘உரைப்ப’ ‘பயில’ என்பன எதிர்கால வினையெச்சங்கள். ‘யாவையும்’ இது யாவினாவின் அடியாகப் பிறந்தபெயர்; எல்லாவற்றையும் என்பது பொருள். ‘மலர்தூவல்’ என்றது மலரைச் சிந்தல் என்பதாம்; அதாவது புட்பத்தால் அர்ச்சித்து வணங்குதல் என்பதாம். ‘தூவியே’ இதன் ஈற்றில் நின்ற ஏகாரம் இசைநிறைக்கவந்த ஏகாரம். ‘தண்டரளம்’ இது பண்புத்தொகை; தண்மையாகிய தரளம் என விரியும். ஆனந்தபாஷ்பத்தை ‘தண்டரளம்’



என்றது உருவகம். ‘உடைந்துடைந்து’ இது மிகுதிப்பொருளில் அடுக்கி வந்த அடுக்குத்தொடர். ‘இருப்பனோ’ இதில் ஈற்றில் நின்ற ஓகாரம் வினா ஓகாரம். இது ஐயவினா. 8

சிற்சுகோதய விலாசமே! தேவரீரின் திருவருளை நம்பினோர்கள் மாயையினாலே துன்பப்படலாமா? கருணைகொண்டு அந்த மாயை நீக்கியருள் என்கின்றார்

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
  மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
  மறந்து நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பும் என்னையொரு
  மையல் தந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென்
  பாரதத் தினுமி துள்ளதோ
சுத்த நித்தவியல் ப்ராகு மோவுனது
  விசுவ மாயை நடுவாகவே
சொல்ல வேண்டும்வகை நல்ல காதிகதை
  சொல்லு மாயையினு மில்லைஎன்
சித்த மிப்படி மயங்கு மோஅருளை
  நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
  சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - தெரிந்து கொள்வதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே-பிரம்மஸ்வரூபமாக விளங்குகின்ற பரம்பொருளே!, அமல - பரிசுத்த மானவனே!, சித்து-ஞானமும், சுகம்-ஆனந்தமும், உதயம்-உதித்தற் கிடமா யிருக்கின்ற, விலாசமே - திருவிளையாட்டே!, மத்தர் - உன்மத்தம் பிடித்தவர் களும், பேயர்-பேய்க்கோட்பட்டவர்களும், ஒடு-உடனே, பாலர்-பாலர்களும், (என்ற இவர்களது) தன்மையது - குணத்தை, மருவியே - பொருந்தியே, துரியம்-துரிய, வடிவமாய்-வடிவமாகி, மன்னு - நிலைபெற்றிருக்கின்ற, தேச மொடு-தேசத்தோடு, காலம் ஆதி-காலம் முதலியவைகளை, மறந்து - மறந்து, நின்-தேவரீரின், அடியார் - அடியார்களினுடைய, அடியிலே - திருவடியிலே, பத்தியாய் - பக்திகொண்டு, நெடிது - மிகவும், நம்பும் - நம்பிக்கொண்டிருக் கின்ற, என்னை - அடியேனை, ஒரு - ஒப்பற்ற, மையல் - மயக்கத்தை, தந்து- கொடுத்து, அகிலம் - உலக, மாயை - மாயையை, பாருபார் - பார்பார், என- என்று, நடத்த - நடத்த, வந்தது - வந்தது, என் - எது?, இது - இத்தகைய காரியம், பலிதத்திலும் - மகா காரியமாகிய பரதத்திலாகிலும், உள்ளதோ-

இருக்கின்றதா?, (இல்லையே) சுத்தநித்தம் - பரிசுத்தமும் சத்தியமுமாகிய, இயல்பு - தேவரீரின் இயல்புக்கு, ஆகுமோ - இது ஒத்ததாகுமோ?, உமது - தேவரீரது, விசுவமாயையிலும்-பிரபஞ்ச மாயையிலும், இல்லை-இல்லையாகும் என்-இது என்ன வியப்பு, வகை-வழியை, சொல்லவேண்டும் - கூறவேண்டும்' நல்ல-நல்லதாகிய, காதி-காதியென்பவனின், கதை - கதையிற் சொல்லப்படு' கின்ற, மாயையிலும் - மாயையின் சிறப்புக்களிலும், இல்லை - இந்த விதமாக இல்லை, என் - அடியேனின், சித்தம் - மனம், இப்படி - இந்தவிதமாக, மயங்குமோ-மயக்கங்கொள்ளுமோ?, அருளை - தேவரீரின் திருவருளை, நம்பினோர்கள் - நம்பினவர்கள், பெறு - அடைகின்ற, போது - பயன், இதோ - இது தானோ? எ-று.

(வி-ரை) 'மத்தர்' என்றது பித்துப்பிடித்தவர்களை. 'உன்மத்தம்' என்றது மத்தமென நின்றது. 'மத்தம்' என்பது பித்து என்பது பொருளாம். 'பேயர்' என்றது பேய் பிடிக்கப்பட்டவர்களை. 'பாலர்' என்றது இளஞ் சிறார்களை. பத்தர், மந்தர், பேயர் பாலர்போல் இருப்பாராதலினால் 'மத்தர் பேயரொடு பாலர் தன்மையது மருவி' என்றார். 'துரியம்' இது நான்காவது நிலை சுழுத்திக்கு மேற்பட்டது. 'தேசம்' என்றது இடத்தை. 'காலம்' என்றது பொழுதை. 'நெடிது' இது ஈண்டு மிகுதிப்பொருள் தந்து நின்றது. 'ஒருமையல்' இதில் ஒரு என்றது ஒப்பற்ற என்பது பொருளாம். 'மையல்' இது மயக்குவது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர்.

'பாருபாரு' இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. இனி, இது வியப்பினால் வந்த அடுக்கு என்பாரும் உண்டு. 'பாரதம்' இது மகாகாவியமாகிய பாரதத்தைக் குறிக்கும். இது பாரதவம்சத்தவர்கள் சரித்திரங் கூறலின் இதற்குப் பாரதம் என்றபெயராயிற்று. 'விசுவமாயை' என்றது பிரபஞ்சமாயையை. 'காதிகதை' என்றது ஞானவாசிட்டத்துக்கதை. இக்காதி திருமாலைநோக்கித் தவஞ்செய்து மாயையின் காரியங்கள் எல்லாவற்றையும் காணும் வரம்வேண்டி அவ்வாறே பெற்று மாயையின் செயல் எல்லாங்கண்டு அம்மாயையினின்றும் நீங்கினவன். இவன் கதையில் மாயையின் காரியங்கள் எல்லாம் விரிவாகக் காட்டியிருக்கின்றனர். 'பேயரொடு' இதில் ஒடு என்பது எண்ணுப்பொருளில் வந்தது. 'பாலர்' இது பருவத்தைக் குறிக்கும்பெயர்; பாலப்பருவத்தை யுடையோர் என்பது ஈண்டுபொருளாம். 'தன்மையது' இதில் அது என்றது பகுதிப்பொருள் விகுதி. 'மாயை' இது மயக்குவது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். 'சித்தம் இப்படி மயங்குமோ' என்றதில் நின்றவினா. 'சித்தம் இப்படி மயங்கலாமா' என்பது பொருளாம். 'மயங்குமோ' 'பேறிதோ' இவை இரண்டின் ஈற்றில் நின்ற ஓகாரம் வினாப்பொருளது. முதலது ஐயவினா. இரண்டாவதுவினா எதிர் மறைப்பொருள் குறித்துவந்த விடைதழுவிய வினா. இதிற் குறித்தகாதி கதையை ஞானவாசிட்டம் இருபத்துமூன்றுவது கதையைப்படித்து அறிந்து கொள்ளுக.





சிற்சுகோதய விலாசமே! தேவரீரின் தக்ஷிணாமூர்த்தக் கோலவிருக்கையை எத்திக்கிலும் எக்காலும் வணங்குகின்றேன் என்கின்றார்

பன்மு கச்சமய நெறிப டைத்தவரும்
    யாங்க ளேகடவு ளென்றிடும்
பாத கத்தவரும் வாத தர்க்கமிடு
    படிற ருந்தலை வணங்கிடத்
தன்மு கத்திலுயிர் வரவ ழைக்குமெம
    தரும னும்பகடு மேய்க்கியாய்த்
தனியி ருப்பவட நீழ லூடுவளர்
    சனக னாதிமுனி வோர்கள்தஞ்
சொன்ம யக்கமது தீர அங்கைகொடு
    மோன ஞானம துணர்த்தியே
சுத்த நித்தஅரு ளியல்ப தாகவுள
    சோம சேகரநிர் பாணுவாய்த்
தென்மு கத்தின்முக மாயி ருந்தகொலு
    எம்மு கத்தினும் வணங்குவேன்
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
    சிற்சு கோதய விலாசமே.

(ப-ரை) தெரிவதற்கு - தெரிந்துகொள்ளுதற்கு, அரிய - அரிதாகிய, பிரமமே - பிரமஸ்வரூபமாக விளங்குகின்ற பரம்பொருளே!, அமல - பரிசுத்தமானவனே!, சித்து - ஞானமும், சுகம் - ஆனந்தமும், உதயம் - உதித்தற்கு இடமாகயிருக்கிற, விலாசமே-திருவிளையாட்டே, பல்-பல, முகம்-துறைகளையுடைய, சமயம் - சமயங்களாகிய, நெறி - மார்க்கங்களை, படைத்தவரும்-படைத்தவர்களும், யாங்களே-நாங்களே, கடவுள்-தெய்வம், என்றிடும்-என்று கூறும், பாதகத்தவரும்-பாபிகளும், வாத-வாதிக்கின்ற, தர்க்கம் - தர்க்கத்தை, இடும் - செய்கின்ற, படிறரும் - வஞ்சகரும், தலைவணங்கிட - தலைதாழ்த்தி வணங்கவும், தன்முகத்தில்-தன்னிடத்தில், உயிர் - ஜீவன்களை, வர-வரும்படி, அழைக்கும் - அழைக்கின்ற, எமதருமனும்-எமதருமராஜனும், பகடு-எருமைக்கடா, மேய்க்கியாய் - மேய்க்கின்றவனாக, தனி-தனியாக, இருப்ப-இருக்கவும், வடநீழலூடு-கல்லாலவிருக்ஷத்தின் நிழலில், வளர்-வீற்றிருக்கின்ற, சனகன்-சனகன், ஆதி-முதலிய, முனிவோர்கள்-முனிவர்கள், சொல் - சொல்லுகின்ற, மயக்கம் - மயக்கமானது, தீர - நீங்க, அம்கை - அழகியகை, கொடு-கொண்டு, மோன - மௌன, ஞானமது - ஞானத்தை, உணர்த்தி-அதிகரித்து, சுத்தம்-சுத்தமும், நித்தம் - நித்தமுமாகிய, அருள் - திருவருளானது, இயல்பதாக-இயற்கையாக, உள - உள்ள, சோமசேகரன் - சோமசேகரன் என்கின்ற, நிர்பாணுவாய் - கருணாநிதியாகி, தென்முகத்தில் - தென்திசையில், முகமாய்-

முகமாக இருந்த, கொலு - கொலுவை, எம்முகத்திலும் - எத்திசையிலும்-வணங்குவேன்-வணக்கஞ்செய்வேன் எ-று.

(வி - ரை) 'பன்முகம்' இது பல்+முகம்=பன்முகம் என ஆயது. பலதுறை பலவழிகள் என்பது பொருளாம். 'சமயநெறி' இது சமயமாகிய நெறி என விரிதலின் பண்புத்தொகை. 'பன்முகச் சமயநெறி படைத்த வரும்' என்றது பல சமயாவாதிகளும் என்பது பொருளாம். 'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவரும்' என்றது தன்னையே கடவுள் என்று கூறிக்கொண்டு திரியும் மாயாவாதிகளை உணர்த்தியது. 'வாததர்க்கமிடு படிறரும்' என்றது எப்பொழுதும் குதர்க்கவாதம் இடும் வஞ்சகநெஞ்சினரை உணர்த்தியதாம். 'தலை வணங்கிட' என்றது வாயடங்கித் தலைகுனிந்து வணங்க என்றதாம். 'தன்முகம்' என்றது தன் இடத்தில் என்பதாம். ஈண்டு 'முகம்' என்றது இடப்பொருள் தந்துநின்றது நியாயப்படி நடுநின்று ஜீவப்பிராணிகளின் உயிர் கவர்தலின் தருமன் எனவும், நடுவன் எனவும் பெயர் உண்டாயது. எமனுக்கு உயிர் கவரும் வேலை இல்லையாயின மையின் எருமை மேய்க்கியாக வேண்டியதாயிற்று என்பார் 'தன்முகத்தி லுயிர் வரவழைக்கு மெமதருமனும் பகடுமேய்க்கியாய்த் தனி இருப்ப' என்றார்.

இறைவன் தட்சணாமூர்த்தியாய் யோகத்திருந்தபோது எல்லா உயிர்களும் அசைவற நின்றுவிட்டன. ஆதலின் எமனுக்கு உயிர் கவரும் வேலை இல்லை ஆயிற்று என்பதறிக. வேலை இல்லாமையால் வேலையாட்களுமின்றித் தனியே யிருக்கின்றான் என்பார் 'தனி இருப்ப' என்றார். 'வட நீழல்' என்றது கல்லால விருக்ஷத்தின் நீழலை. (வடம்-ஆலவிருட்சம்) 'நீழல்' இது நிழல் என்பதன் அதிநீட்டம். 'சனகனாதி முனிவர்' என்றது சனகர், சனற்குமாரர், சனந்தார், சனாதார் என்னும் பிரமபுத்திரர் நால்வரை உணர்த்தியதாம். 'சொன்மயக்கம்' இது சொல்லின்மயக்கம், வேதத்தின் மயக்கம், சொல்லும் ஞானவிஷயத்து உண்டான மயக்கம் என்னும் பல பொருள்பட நின்றது. 'மயக்கமது' இதில் அது என்பது பகுதிப்பொருள் விகுதி. 'அங்கை கொடு' என்றது அங்கைகொண்டு என்பதாம். அதாவது கைக்குறியால் மௌனியாய் நின்று உபதேசித்தாராதலின் 'அங்கை கொடு மோன ஞானம துணர்த்தியே' என்றார். 'கைக்குறி' என்றது சின்முத்திரை முதலிய கைக்குறிகளை உணர்த்திற்று. 'சுத்தம்' என்றது அமலமாய்நிற்றலை. 'நித்தம்' என்றது சாசுவதமான வுண்மையை. 'அருளியல்பு' என்றது திருஅருளின் இயல்பை. 'சோமசேகர' என்றது சந்திரனைத் தலைக்கணிந்த என்ற பொருளதாம். 'கிர்பாளு' இது கிருபையைக்கொண்டு உயிர்களை ஆள்பவன், கிருபையை ஆள்பவன், கருணையாளன் என்னும் பொருளது. 'தென் முத்தின் முகமாயிருந்த' என்றது தென்பக்கம் முகந்திருப்பிய கோலமாயிருந்த மூர்த்தத்தை என்பதாம். இறைவன் ஒரு கரத்தாற்காட்டித் தன் முகத்தைத் தென்முகங்கூட்டி மௌனத்து இருந்த குறிப்பு தன் பாதத்தை அடைந்தோர்க்கு யமபயம் இல்லை என்பதாம். இதுகொண்டே இச்செய்யுள்



முற்பாகத்தே 'எமதருமனும் பகடுமேய்க்கியாய்த் தனி இருப்ப' என்றதூஉம் என்பதறிக. 'கொலு' என்றது வீற்றிருக்கை என்பது பொருள். 'எம்முகம்' என்றது எத்திசையிலும் என்பதாம். இச்செய்யுளில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள்.

10

---

## ஆகாரபுவனம் சிதம்பரரகசியம்

### இறைவன் அடியாருயிர்த்துணைவன்; எங்கும் நிறைந்து பிரகாசிப்பவன்

ஆகார புவனமின்பா கார மாக
அங்ஙனே யொருமொழியால் அகண்டா கார
யோகாநு பூதிபெற்ற அன்ப ராவிக்
குறு துணையே என்னளவும் உகந்த நட்பே
வாகாரும் படிக்கிசைகிண் கிணிவா யென்ன
மலர்ந்தமல ரிடைவாசம் வயங்கு மாபோல்
தேகாதி யுலகமெங்குங் கலந்து தானே
திகழனந்தா னந்தமயத் தெய்வக் குன்றே.

(ப-ரை) ஆகாரம் - வடிவத்தன்மையதாய்த் தோன்றப்பெறும், புவனம்-அண்டமானது, இன்பம் - சுகம், ஆகாரமாக-வடிவமாக, அங்ஙனே - அவ்வண்ணமே, ஒரு - ஒரு, மொழியால் - சொல்லால், அகண்ட - விரிந்த, ஆகாரம்-வடிவம் (ஆகிய), யோகம் - யோகத்தின், அநுபூதி - (சிந்தனையாலாகிய) அனுபவத்தை, பெற்ற - அடைந்த, அன்பர்-அன்பர்களது, ஆவிக்கு-உயிர்க்கு, உறு துணையே! - (பொருந்தி) உற்ற துணையே! என் - என்னுடைய, அளவும்-இடத்தும், உகந்த - ஆர்வத்தைவைத்த, நட்பே - சிநேகமே!, வாகு - வனப்பு, ஆரும் - பொருந்தும், படிக்கு - விதமாக, இசை - சப்திக்கின்ற, கிண்கிணி-கிண்கிணியினுடைய, வாய்-வாய், என்ன-என்று உவமையாகச் சொல்லும்படி, மலர்ந்த - விகசிதத்தைப்பெற்ற (விரிந்த), மலர் - பூவின், இடை - இடத்தில், வாசம் - மணம், வயங்குமாபோல் - விளங்குதல்போல, தேகம் - உடம்பு (தநு), ஆதி-முதலாகிய, உலகம்-உலகம், எங்கும்-எல்லாயிடத்தும், கலந்து-இணைந்து, தானே-(பரமாகிய) தானேயாகி, திகழ்-பிரகாசிக்கின்ற, அனந்தம் - முடிவற்ற, ஆனந்தம்-இன்பத்தின், மயம்-வடிவமான, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, குன்றே-மலையே! எ-று.

(வி-ரை) 'ஆகாரபுவனம்' 'சிதம்பரரகசியம்' இரண்டு சொற்றொடர்களும் இது முதலாகவரும் முப்பத்துமூன்று செய்யுட்களின் தொகுதிக்குப்

பெயராக எய்தியது. ‘ஆகாரபுவனம்’ என முதற்செய்யுளின் முதற் சொற்கள் அமைந்ததனால் இப்பதிகத்திற்கு (பாத்தொகுதிகட்கு) ‘ஆகாரபுவனம்’ எனப் பெயராயிற்று. இது முதல்பற்றி வந்தபெயர். ‘ஆத்திசூடி’ என்பது போலாம். இதற்கு ‘வடிவுடைய உலகம்’ என்பது பொருள். இனி வடிவுடன் தோன்றுகின்ற உலக சம்பந்தியாய் நிற்கின்ற கடவுளைப்பற்றிக் கூறுகின்றபடியால் இம் முப்பத்துமூன்று செய்யுட்களாலான தொகுதிக்கு ‘ஆகாரபுவனம்’ எனப் பெயரிட்டார் எனினுமாம். இறைவன் அட்டமாவுருவுடையோன். அதில் மண்ணும் ஒன்று, விண்ணும் ஒன்று, நீரும் ஒன்று, நெருப்பும் ஒன்று, வாயுவும் ஒன்று. இப் பஞ்சபூதங்களின் சேர்க்கையே புவனமாதலின் இறைவன் வடிவாகிய உலகையும், அந்த உலகில் இறைவன் சம்பந்தப்பட்டிருக்கிற தன்மையையுங் கூறுதலினால் ‘ஆகாரபுவனம்’ என்று இதற்குப் பெயராயிற்று.

‘சிதம்பர இரகசியம்’ இத்தொகுதிக்கு ‘சிதம்பர இரகசியம்’ எனவும் பெயரிட்டுள்ளார். இதனுள் சிதம்பர சம்பந்தமான அந்தரங்கம் கூறப்படுதலின் இதற்கு (இப்பகுதிக்கு அல்லது இம் முப்பத்துமூன்று பாக்களாலான தொகுதிக்கு) ‘சிதம்பர இரகசியம்’ என மறுபெயரும் இடப்பெற்றிருக்கிறது. ‘சிதம்பரம்’ என்பது சித்தாகிய அம்பரம் என்பது பொருள். ‘இரகசியம்’ என்பது மறைபொருள். ‘சிதம்பரம்’ சாந்தோக்கியோபநிடத்தில் ‘பிரமபுரமாகிய இச்சரீரத்திலுள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள்ளே இருக்கும் ஆகாசம்’ என்பது முதலாகத் தகரவித்தை கூறப்பெற்றிருக்கின்றது. சித்தத்திருக்கின்ற ஆகாயம், சித்தாகிய ஆகாயம் எனப் பொருள் விரியும். ஈண்டு ஆகாசம் என்றது பிரமமாகிய சிவத்தை. புறத்தே இவ்வாறே இப்பிரமாண்டம் பிரமபுரம் எனவும், தில்லை இருதயத்தானமாகவும், இத் தில்லைத்தானத்தில் நிருத்தஞ்செய்யும் சிவம் ஆகாசம் எனவுங் கூறப்பெறும். இந்த ஆகாசம் பூதாகாசம்போலச் சடமாகாது சித்தேயாம் ஆதலால் சிதம்பரம் எனப்பெறும். ‘சிதம்பர இரகசியம்’ என்பது சிதம்பரத்துள்ள இரகசியப் பொருளைப்பற்றிக்கூறும் தொகுதி எனப்பொருள் தந்து நின்றது. ‘ஆகாரபுவனம்’ ‘சிதம்பர இரகசியம்’ இவ்விரண்டும் வடசொற்றொடர்கள்.

‘சிதம்பர இரகசிய விளக்கம்’ வேதத்திலும், தரிசினோபநிடதத்திலும் ‘சிதம்பரம்’ இருதய மத்தியா யுள்ளதெனக் கூறப்பெற்றிருக்கின்றது. இதனால் ‘தில்லை’ விராட்புருடனுடைய இருதயஸ்தானம் என்பது துணிபு. ஓர் மகாயோகியின் உடம்பை வடக்கே தலையும், தெற்கே பாதமுமாக வைத்து நோக்கின் அதுவும் நம் சிதம்பரக்கோயிலின் அமைப்பும் ஒத்தே இருக்கும். தாவரமாகிய அண்டமும், சங்கமமாகிய பிண்டமும் சமமாம்; ஆதலால் பிண்டமாகிய தேகத்தில் இடைக்கும், பிங்கலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனைநாடியும், பிரமாண்டத்தில் உள்ள இப்பாதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவிலுள்ள தில்லையும், கருணைநிதியாகிய சிவபெருமான் ஆனந்த நிருத்தஞ்செய்யுந் தானமாகும். இதனை,



“வலங்கைமான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி
யலைந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே
யிலங்கைநே ரிடைபோ மற்றை யிலங்குபிங் கலையா நாடி
நலங்கிள ரிமய நேர்போ நடுவுபோஞ் சுழுனை நாடி”

“நாடரு நடுவி னாடி நலங்கிளர் தில்லை நேர்போய்க்
கூடுமங் கதனின் மூலக் குறியுள ததற்குத் தென்னர்
மாடுறு மறைகள் காணா மன்னுமம் பலமொன் றுண்டங்
காடுது மென்று மென்றா னென்னையா ளுடைய வையன்”

என்னுங் **கோயிற்புராணச்** செய்யுள்களாலும்,

“இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
யுடன்கிள ரொளியே யாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம் பலம தாகும்”

“எண்டரு பூத மைந்து மெய்திய நாடி மூன்று
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்ட மாகும் பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டினுங் காண லாகும்”

“ஆதலா லிந்த வண்டத் தறிவரும் பொருளா மென்றுந்
தீதிலா மூல நாடிற் றிகழ்சிவ லிங்க மேனி
மீதிலா மந்த நாத வெளியின்மே லொளிமன் றங்குக்
காதலான் மடவாள் காணக் கருதுற நிருத்தஞ் செய்வோம்”

என்னுந் **திருவாதவூரடிகள் புராணச் செய்யுள்களா**லும் நன்கறியலாம். இந்தத் திருநடனமே பஞ்சகிருத்தியங்களாகின்றன. இதனை,

“இருவகை இவை கடந்த வியல்புநம் மொளியாம் ஞான
வுருவமா னந்த மான வுயிரியாம் பெய ரெமக்குப்
பரபதம் பரம ஞானம் பராற்பர மிலது காத்த
றிருமலி யிச்சை செய்தி திகழ்நட மாகு மன்றே”

எனக் **கோயிற் புராணத்தி**லும்,

“அந்தநன் னடமே தென்னி லைந்தொழி னடத்த லாகும்
பந்தம தகற்று மிந்தப் படிவமு மதுவே யாகும்
வந்தல கத்தில் யாருங் காண்பரேல் வழுவா முத்தி
தந்தரு ளளிக்குந் தெய்வத் தலமுமத் தலமே யாகும்”

எனத் **திருவாதவூரடிகள் புராணத்தி**லும்,

“ஐந்து நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப னாதன்”

என்று **சிவஞானசித்தியாரி**லும்,

"தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமா
யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

எனவும் வந்துள்ள **செய்யுள்களால்** நன்கு அறியலாம். இன்னும்,

"மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்
சாய வமுக்கியரு டானெடுத்து—நேயத்தா
லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்த
லானெந்தை யார்பரதந் தான்"

என்ற **உண்மை விளக்கப்பா**வும்,

"மன்று னிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்தநிலை போற்றி"

என்ற **போற்றிப் பஃறொடை**யும்,

"நீங்கலரும் பவத் தொடர்ச்சி நீங்கமன்று
ளின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ் செய்யும்"

என்ற **சிவப்பிரகாசப்பா**வும் இதனை மேலும் மேலுந் தெளிவுறுத்தும். இந்தத் திருநடனத்தைத் தரிசித்தலால் ஆனந்தம் விளையும். இதனை,

"புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்குங் கண்ணீருடன் சோருநெஞ் சுருக்கும்
ஒளிக்கு ளானந்தத் தமுதூறு முள்ளத்தே"

என்னுந் **திருமந்திரத்தா**லும்,

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போது
மனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்னுந் **திருவாசகத்தா**லும் உணரலாம்.

மலத்தில் சிமிழ்ப்புண்ட ஆன்மாக்களுக்குச் சிவபிரான் பெத்த முத்திகளை அருளுதற்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்கரமே திருவுருவாகக்கொண்டு நடித்தருளும் நடனம் ஊனநடனம், ஞானநடனம் என இருதிறப்படும். ஊனநடனமாவது:—பிரமன், மால், ருத்திரன் முதலிய தேவர்கள் தத்தமது படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய ஐந்தொழில்களையும் இயற்றற் பொருட்டு நடிக்கும் நடனமாம். இனி, ஞானநடனமென்பது:—பசுகரணம் சிவகரணமாய் நிற்றலால் சிவத்தோற்றமொன்றே பெற்றுப் பிரபஞ்சத்தோற்றமில்லாத பதஞ்சலி, வியாக்ரபாதர் முதலிய முனிவர்களுக்கு அருளும் நடனமாம். அருட்பராசத்தியர் அமலனை அம்பலத்து ஆட்டுவித்துத் தன்னிரு



கண்ணுங் களிக்கக்காண்பது உயிர்கள் பிறவித்தொடக்கு ஒழிந்து முத்தியடையவேண்டும் கருணையினாலேயே என்க. இறைவன் நடனம் ஊனநடனம், ஞானநடனம் என இருதிறப்படும் என்பதனை,

"ஊன நடன மொருபா லொருபாலாம்
ஞான நடந்தா னடுவே நாடு"

எனவும்,

பதஞ்சலி, வியாக்ரபாத முனிவர்களுக்கு அருளியதே **ஞானநடனம்** என்பதை,

"நற்றவத்தோர் தாங்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்றாடல்"

எனவும்,

இறைவி இறைவனின் ஆனந்தத் திருநடனங்காணல் ஆன்மாக்கள் மலத்தொடக்கொழிந்து முத்தியடைதற்பொருட்டே என்பதை,

"உரையுணர்வுக் கெட்டா வொருவன் மிகுபஞ்சாக்
கரத்தால் வரைமகடான் பாதி—பரையிடமாய்க்
காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு"

எனவுங் கூறிய **செய்யுட்களால்** அறியலாம். இறைவன், ஸ்ரீ பஞ்சாக்கரமே திருவுருவாகக்கொண்டு நடிக்கின்றார் என்பதனை,

"நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்தவவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதா யெழுந்துநின்ற நேர்மையிற்
செவ்வையொத்து நின்றதே சிவாயமஞ் செழுத்துமே"

எனவும்,

"ஆடும் படிகே ணல்லம் பலத்தினையனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகர முதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்"

எனவுங் கூறிய **ஆன்றோர் செய்யுட்களால்** நன்கறியலாம்.

ஆரண ஆகமங்களாலும் அறிந்து ஓத அறியதும், குணவரம்பு கடந்ததும், 'திருச்சிற்றம்பலம்' என உயர்ந்தோராற் புகழ்ந்து ஏத்தப் பெறுவதுமாகிய அழியாப் பரசுடர்ச் சிவவொளிச் சிதாகாசவடிவம் விளங்காநிற்கும் இச்சிதாகாச வடிவினையே ஊனக்கண்ணாற் கண்டோர் 'இரகசியம்' 'சிதம்பர இரகசியம்' எனக் கூறுகின்றனர். இரகசியத்தை நிட்களமென்றும், வியக்தாவியக்த லிங்கத்தைச் சகள நிட்களமென்றும் ஸ்ரீ ஆனந்த நடராஜமூர்த்தியைச் சகள வடிவம் என்றும் உரைப்பர். இன்னும் பல இரகசியங்கள் அமைந்துள்ளன. அவைகளைக் குருமூலமாக உபதேசமுறையிற் கேட்டுத் தெளிக. 'சிதம்பரம்' இது சர்வ உயிர்களுக்கும் பொதுவிடம். களங்கமற்ற சுவர்ணமய ரூபமுடையது. இது சுத்த கேவலதானம். இது யாவர்க்குஞ் சரணாலயமாக இருப்பது. பரஞானமாக விளங்குவது. புதுமையானது.

சத்தியஞான வடிவமாக இருப்பது. தரிசிக்கும் ஆன்மாக்களுக்குப் பசுஞானத்தைநீக்கி ஞானானந்த சிவரூபமாவது. எல்லாவற்றிற்கும் மேலானதாக விளங்குவது. பதமுத்திகளுக்கு அப்பாலுக்கு அப்பாலாய் வயங்குவது. மாயைக்கு மிக மேலான இடம். தத்துவாதீத அமலன் அனவரத ஆனந்தத்தாண்டவத்திற்கு அதிட்டானமாய் இருப்பது. இச்சிதம்பரத்தை உபநிடதங்கள் 'சத்' என்றும், 'சபா' என்றும், 'பரம்' என்றும், 'சத்தியம்' என்றும், 'மகத்து' என்றும், 'விவிக்தம்' என்றும், 'அற்புதம்' என்றும், 'புண்டரீகம்' என்றும், 'குகை' என்றும், 'ஞானானந்தம்' என்றும், 'பரமவியோமம்' என்றும், 'பரமாலயம்' என்றும், 'சுத்தம்' என்றும், இன்னோரன்ன பெயராற் றுதிக்கின்றன. இச் சிதம்பரத்தில் அருட்பெருஞ்ஜோதி அருட்டிருநடனம் ஆன்மாக்களின் உய்வின்பொருட்டே அருட்சத்தியின் பரம கருணையால் நடைபெறுகின்றதென்பதனை,

"ஆதி நடஞ்செய்தா னென்பர்க ளாதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரு மறிகிலர்
ஆதி நடமாட லாரு மறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே"

என்னுந் **திருமந்திரத்தா**லும்,

"பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி யீசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரனட மாடுமே"

என்னுந் **திருமந்திரத்தா**லும் தெள்ளிதின் அறியலாம்.

'ஆகார புவன மின்பா காரமாக' என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:— கண்ணாகிய புலனுக்குத் தோற்றுந் தன்மையதாய உலகம் இன்பவடிவமாக என்பது பொருளாம். துன்பத்துக் கிருப்பிடமும், துன்பஞ் செய்வதும், துன்பமயமாகியதுமாகிய தோன்றும் இவ்வுலகை உள்ளபடி அறிந்து பசுபோதமொழிந்து சிவபோதத்தால் காண்பார்க்குச் சிவவடிவமாகித் தோன்றி அம்மெய்ஞ்ஞானிகளுக்கு இன்பம் பயக்குமாதலினால், 'ஆகாரபுவனம் இன்பாகாரமாக' என்றார். "அங்ஙனே யொருமொழியா லகண்டாகார யோகானுபூதிபெற்ற அன்பராவிக்கு உறுதுணையே" என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்: அவ்வண்ணமே ஒரு சொல்லால் விரிந்த வடிவமாகிய யோகத்தின் சிந்தனையாகிய அனுபவத்தையடைந்த அன்பர்களது உயிர்க்குப் பொருந்திய உற்றதுணையே என்பது இதன் திரண்டபொருள். 'அங்ஙனே' என்றது சிவவடிவமாகி இன்பம் பயக்கும் அவ்வண்ணமாகவே என்பது குறித்ததாம்.

'ஒருமொழி' என்றது ஒருவார்த்தை. ஒப்பற்ற மொழி. அதாவது அருட்குருவின் ஞானோபதேசமொழியை. 'அகண்டாகார யோகானுபூதி' அகண்டம் - விரிந்து, ஆகாரம் - வடிவு இது இறைவனின் எங்குமாய் எல்லா



மாகி விரிந்து நின்ற நிலையை உணர்த்திற்று. யோகம்-கூட்டம், ஈண்டு இறைவன் சம்பந்தத்தைக் குறித்தது; அதாவது, இறைவன் தன்னுட்டானாய் நின்ற நிலையையறிதல். அநுபூதி - அனுபவித்து அறியும்பேறு. அதாவது இறைவனை தன்னுட்கண்டு தன்னைக் காணாது அவனாகி நிற்கும் இன்பநிலையை அனுபவவாயிலால் அறிதல். 'பெற்ற அன்பர் ஆவிக்கு உறுதுணையே' என்பது இறைவன் எங்குமாய், எல்லாமாய், இன்பரூபமாய் இருக்குந் தன்மையை குரு உபதேசத்தால் ஞானம் கைவரப்பெற்று குருநிறுத்திய நிலையிலிருந்து நிட்டைகூடி அவ்வின்பத்தை அனுபவித்த அன்பர்களின் உயிர்க்குப் பொருந்திய துணையே என்றதாம்.

'யோகாநுபூதி பெற்றஅன்பர் ஆவிக்கு உறுதுணை' என்றதால் மற்றையர் ஆவிக்குள் இறைவன் இல்லையோவென ஐயுறுவாரும் இருக்கலாம். அவ் ஐயுறவு அறியாமையால் வந்ததேயாம். இறைவன் எல்லாவுயிர்க்கும் உயிராகவே அமர்ந்துள்ளான் என்பது சுருதியின் முழக்கம். இதில் ஐயுறவு எய்தவேண்டுவதில்லை. மற்றையர், தம் உயிர்க்குளும் இறைவன் இருத்தலை அறியாமையால் உணராதார்க்கு இன்பரூபமான இறைவன் நிலையைக்கண்டு இன்புறும் பேறின்றி உலகிலுழன்று துன்புறுகின்றனர் என்பதாம். (உறுதுணை-உற்றதுணை. பொருந்திய துணை.) 'என்னளவு முகந்த நட்பே' என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:—'என்னிடத்தும் ஆர்வத்தை வைத்த சினேகமே' என்பது இதன் பிண்டப்பொருள். 'என்னளவும்' என்றதிலுள்ள உம்மை இழிவுசிறப்பு. எத்திறத் தகுதியுமில்லாத அற்பனாகிய என்னிடத்தும் என்றதாம். **பெரியார்** தம்மைத் தாழ்த்தியே யுரைப்பது மரபு. சிறியாரே தம்மைப் புகழ்ந்து உரைத்திடுவர். இதனை,

"கற்றறிந்தார் கண்ட தடக்கம் அறியாதார்
பொச்சாந்துந் தம்மைப் புகழ்ந் துரைப்பர்"

என்ற பதினெண்கீழ்க் கணக்குச் **செய்யுளா**லும் அறியலாம்.

'உகந்த' என்றதால் இறைவனின் கருணைத் திறத்தை வெளியிட்டதாயிற்று. 'நட்பே' என்றதால் இறைவன் தனக்காவன செய்தும், ஆகாதனவற்றைத் தடுத்தும் நட்பினன்போற் செய்தலை வெளியாக்கினதாம். நட்பின் இலக்கணத்தை,

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு"

என்ற **திருக்குறளா**ல் நன்கறியலாம்.

"வாகாரும் படிக்கிசை கிண்கிணிவாய் என்ன மலர்ந்த மலரிடை வாசம் வயங்குமாபோல" என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:—'பண் அமையச் சப்திக்கின்ற கிண்கிணிவாயைப்போல மலர்ந்துள்ள பூவின்கண் அதன் மணம் விளங்குதல்போல' என்பது இதன் திரண்டபொருள். வாகு-அழகு; ஈண்டு பண்ணழகைக் குறித்தது (பண்-இராகம்) 'இசை கிண்கிணி' இது

வினைத்தொகை. 'கிண்கிணி' என்பது ஓர்வகைக் காலணியில் சப்தித்தற் பொருட்டு கோக்கப்பெற்றிருக்கும் மணி. 'கிண் கிணீர்' என ஒலிக்குங் காரணம்பற்றி இதற்குக் கிண்கிணி எனப் பெயர் வந்தது. 'கிண்கிணிவாய்' என்றதில் 'வாய்' மணியின் முன்பாகத்துள்ள திறப்புப்பக்கத்தைக் குறித்தது. 'வாய் என்ன' திறப்புப்பாகம் என்று சொல்லும்படி. 'கிண்கிணிவாய் என்ன மலர்ந்த மலர்' என்பது ஓர் இயைபு. 'என்ன' உவமப்பொருள் உணர்த்தி நின்றது. 'வாசம்' இது நறுநாற்றம் தீநாற்றம் என்னும் இரண்டற்கும் பொதுவாயினும் ஈண்டு நறுநாற்றத்தையே உணர்த்திற்று.

"நாற்றமொன் றில்லாத பூவொடு சாந்தனையும்
நாற்றந்தான் வேண்டியது போலும்" என்றும்,
"பொன்மலர் நாற்ற முடைத்து"

என்றும் **ஆன்றோர்** கூறியதனால் அறியலாம்.

வயங்குதல் - விளங்குதல்; ஈண்டு பரிமளித்தலை உணர்த்திற்று. 'கிண்கிணிவாய் என்ன மலர்ந்தமலர்' என்றதனால் அப்போழ் தலரும்பூ, புதுப்பூ என்பது பெற்றாம். அரும்பு வாய்திறத்தற்குமுன் மணம் வெளிப்படாது அடக்கிக்கிடக்கும், முற்றும் மலர்ந்திட்டால் மணத்திற்கு ஆதிகாரணமாகிய தேனும், தாதுவும், சத்துங் குறைந்துகொண்டேவந்து மணம் சுருங்கிடும். அப்போழ் தலரும் மலரில் வாசனை மிக்க இருக்கும் என்பதுய்த்துணர்க. மிக மலர்ந்த பூவின்கண், மணத்திற்கு ஆதியாகவுள்ள மகரந்தம் காற்றாலும் வண்டுகளாலும் குறைந்துகொண்டேவரும். இன்னும் மணத்திற்கு ஆதியாயுள்ள தேன், சத்து முதலியன வண்டுகளால் கவரப்பெற்றிடும்; பின் மலர்ந்த மலர் மணத்திற் குறைந்துகொண்டேவரும். பின் வெயிலால் வாடி மணம் மாறிடும். ஆதலின் 'வாகாரும் படிக்கிசை கிண்கிணிவாய் என்ன மலர்ந்த மலர்' என்றார். வண்டுகள் வாசனையை நுகரும் என்பதற்கும் வாசனையைப் பிரித்திடும் என்பதற்கும்,

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" எனவும்,
"கொங்காராயும் வண்டே" எனவும்,
கொங்குணும் வண்டே" எனவும்,

"அரும்பா லகாமுனம் பூமணஞ் சொற்பொரு ளாகமுயிர்
கரும்பாஞ் சுவையெள்ளு மெண்ணெயும் போலொத்த காதலரைப்
பெரும்பாலி னல்லன்னங் கங்கா சலத்தைப் பிரிப்பதுபோல்
சுரும்பாம் புலவர் யமனுலை செக்கெனத் தோன்றினையே"

எனவும் **பெரியார்கள்** கூறியதனால் அறியலாம்.

கிண்கிணிவாய், அன்றலரும் மலர்வாய்க்கு உவமையாயிற்று. இறைவன் உடல் உயிர் முதலிய எல்லாவற்றுள்ளும் உறைதற்கு 'மலர்ந்த மலரிடை வாசம் உறைதல் உவமையாக வந்தது. 'போல' உவமஉருபு. 'தேகாதி யுலகமெங்குங் கலந்து தானேதிகழ்' என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:—



'உடம்பு முதலாகிய உலகம் எல்லாவற்றோடும் கூடி பரமேயாகிய தானேயாகிப் பிரகாசிக்கின்ற' என்பது இச் சொற்றொடரின் பொழிப்பாகும். தேகம்- தநு, உடல். 'ஆதி' என்றது மற்றைச் சடபதார்த்தங்களை. 'உலகம்' என்றது ஆகாரபுவனத்தை. 'கலந்து' என்றது தாதான்மியத்தன்மையை. அதாவது இறைவனின் சர்வாந்திரியாமியாந்தன்மையை உணர்த்துதலாம். 'தானே' என்றது பராபரப்பொருளை. 'தானே' என்றதன் ஈற்று 'ஏ' தேற்றப்பொருள் தந்துநின்றது.

'கலந்துதானே' 'உடல் முதலியவைகளும் உலகும்' அநாதியே மலத்து மறைந்து கிடக்கும் ஆன்மாக்களுக்கு அவ் ஆன்மாக்களின் உய்வின்பொருட்டு இறைவன் தன் கருணையால் தந்ததாதலாலும், அவைகளாகவும் அவைகள் அல்லவாகவும் இறைவன் இருப்பதனாலும், அவனின்றி வேறு இன்மையாலும் 'கலந்துதானே' என்றருளிச்செய்தார். திகழ்-விளக்கம். இறைவனே விளக்கம் உடையவன் அவனின்றி விளக்கமில்லை. இறைவனே பிரகாசனாதலின் 'கலந்துதானே திகழ்' என்றார். 'அனந்தானந்தமயத் தெய்வக்குன்றே' என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:—'ஈறிலாத இன்பவடிவமாகிய தெய்வமலையே' என்பது இதன் தொகைப்பொருள். அனந்தம் (ந+அந்தம்) முடிவற்றது, ஈறில்லாதது, கணக்கற்றது என்பன இதன்பொருள். ஈண்டு அழிவில்லாத என்றபொருளில் இயைந்து வந்தது. ஆனந்தம்-சுகம், மயம்-வடிவம், தன்மை. ஈண்டு வடிவம் என்ற பொருளது. குன்று-மலை. இறைவன் தோற்றக்கேடு இல்லாதவனாதலாலும், சுகவடிவன், ஆன்மாக்களுக்கு சுகத்தைச் செய்பவன், சுகத்தைத்தருபவனாதலினாலும் 'அனந்தானந்தமயம்' என்றார். இறைவன் ஈறிலாதவன் என்பதனை,

"ஆதியனே அந்த நடுவாகி அல்லானே"

என்ற **ஆன்றோர் திருவாக்கு**களால் நன்கறியலாம்.

அனந்த, ஆனந்தம், மயம் இவை வடசொற்கள்; அனந்த+ஆனந்தம்= அனந்தானந்தம், இது தீர்க்கசந்தி. இறைவன் வரம்பிலின்பமுடையனாதலாலும், வரம்பிலின்பமுடைமை இறைவனின் எட்டுக்குணங்களுள் ஒன்றாதலினாலும் 'அநந்தாநந்தமயத் தெய்வக்குன்றே' என்றார். தெய்வம் என்னும் பதம் கடவுளையும், புண்ணியப்பெருக்கால் பொன்னுலகவாழ்க்கையை யுடையார்க்கும், சிறு தெய்வங்களுக்கும் பொதுப்பெயராக வழங்கினும் ஈண்டு பரம்பொருளைக் குறித்தது. இறைவன் அளவைகளால் அளந்து அறிந்து காணமுடியாதவனாதலினானும், அவன் கல்யாண குணங்கள் சிற்றறிவும் சின்னாளும் பல்பிணியும், பெருமயக்கமுடைய பசுக்களால் அளந்து அறிந்துகொள்ள முடியாததாதலினானும், எவரானும், எதானும் அசைக்க அழிக்கமுடியாத போற்றலுடையனாதலினாலும், எங்குமாய்த்தோன்ற நிற்பவனாதலினானும் இறைவனைக் குன்றே என்றார். இதனை,

"அளக்க லாக அளவும் பொருளுந்
துளக்க லாக நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே"

என்று மலைக்கு இலக்கணங் கூறப்பெற்றிருப்பதனானும் அறியலாம். இத
னானேயன்றோ பிறபெரியாரும்,

"ஆராத வின்ப மருளு மலைபோற்றி" எனவும்,

"மந்திர மாமலை மகேந்திர வெற்ப!
அந்தமில் பெருமை அருளுடை அண்ணல்" எனவும்,

"இருள்கடிந் தருளிய வின்ப வூர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்"

என்று இறைவனைத் துதித்தனர்.

'அங்ஙனே' இதில் அகரம் சுட்டுப்பொருளில்வந்தது. ஙனம்-விதம், ஏ-தேற்றப்பொருளில் வந்தது. 'ஒரு மொழியால்'இதில் 'ஆல்' மூன்றனுருபு கருவிப்பொருளில் வந்தது. 'அன்பராவி' ஆறும்வேற்றுமைத்தொகை; அன்பருடைய ஆவியென விரியும். 'இசை'இது காலங்கரந்த பெயரெச்சம். 'என்ன' உவமவுருபு; வினைப்பால் உவமமாகவந்தது. இதனை,

"அவைதாம் ... ... ...
அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ
ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க
... ... ... ...
ஆறா றவையும் அன்ன பிறவும்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே" எனவும்,

"அன்ன ஆங்க மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம்"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்களால் நன்கறியலாம்.

'வயங்குமா' இது 'வயங்குமாறு" என்றதன் கடைக்குறை விகாரம். 'தெய்வக்குன்றே' விளியுருபு ஏற்று நின்றது. இது,

"காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர்
காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர்"

என எட்டுச்சீர்கள் தட்டின்றுவந்து முடிந்த எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம். இது பாடாண்டிணை, கடவுள் வாழ்த்து, கந்தழி. இதன் விளக்கங்களை முதற்பாட்டின் உரையிற் கண்டறிக. இறைவன் அன்பர் உயிர்த்



துணைவன், எனக்குஞ் சிநேகன் உலகு உடல் எல்லாவற்றுள்ளும் கலந்து பிரகாசிக்கும் இன்பவடிவன் என்பதாம். 1

### இறைவன் எல்லாமாய் நின்ற நிலையினை
### எடுத்துதகரித்தமை

அனந்தபத உயிர்கள்தொறும் உயிரா யென்றும்
ஆனந்த நிலையாகி அளவைக் கெட்டாத்
தனந்தனிச்சின் மாத்திரமாய்க் கீழ்மேல் காட்டாச்
சதசத்தாய் அருட்கோயில் தழைத்த தேவே
இனம்பிரிந்த மான்போல்நான் இடையா வண்ணம்
இன்பமுற அன்பர்பக்க லிருத்தி வைத்துக்
கனந்தருமா கனமேதண் அருளில் தானே
கனிபலித்த ஆனந்தக் கட்டிப் பேறே.

(ப-ரை) அனந்தம் - ஈறில்லாத, பதம் - குறிகளைக்கொண்ட, உயிர்கள்-உயிர்களின், தொறும் - இடமெல்லாம், உயிராய் - (அவ்வுயிர்களுக்கெல்லாம்) உயிராகி, என்றும் - எந்தக் காலத்திலும், ஆனந்தம் - சுகத்தின், நிலையாகி-இருப்பிடமாகி, அளவைக்கு - (தார்க்கிகராற் குறிக்கப்பெறும் காட்சி அளவு, அனுமான அளவு, சப்த அளவு, முதலிய) பிரமாணங்களுக்கு, எட்டா - தட்டாத, (கிட்டாத) தனந்தனி - (தன்னந்தனி) மிகவுந் தனிமையாகிய, சின் மாத்திரம்-சித்தின்வடிவு மாத்திரம், ஆய்-ஆகி, கீழ்-கீழெல்லையையும், மேல்-மேலெல்லையையும், காட்டா - காண்பியாத, சதசத்தாய் - சத்தோடு அசத்துமாகி, அருள் - திருவருளாகிய, கோயில் - கோயிலின்கண்ணே, தழைத்த-செழித்து வளர்ந்திருக்கின்ற, தேவே - தெய்வமே!, நான் - (அடியேனாகிய) நான், இனம்-தன் கூட்டத்தினின்றும், பிரிந்த-(தவறி) விலகிய, மான்போல்-மானையொப்ப, இடையா - துன்பப்படாத, வண்ணம் - விதமாக, இன்பம்-சுகத்தை, உற-எய்த (பெற), அன்பர்-(உனது) அடியார்களின், பக்கல்-இடத்தில், இருத்திவைத்து - இருக்குமாறு அமைத்து, கனம் - மேன்மையைத், தரும் - தந்தருளும், மா - பெரிய, கனமே - சிறப்பமைந்த பொருளே!, தண்-குளிர்ந்த, அருளில்-அருளாகிய தருவில், தானே-தானேயாக, கனி-கனியாக பலித்த-பழுத்து அடியேனுக்குக் கிட்டிய, ஆனந்தம்-இன்பமயமாகிய, கட்டி-சர்க்கரைக்கட்டி என்னச் சொல்லப்பெறும், பேறே-பெரிய பாக்கியமே! எ-று.

(வி-ரை) "அனந்தபத வுயிர்கடொறு முயிராய்" என்றதன் கண்ணுள்ள விசேடங்கள்:—ஈறிலாத குறிகளைக்கொண்ட உயிர்களின் இடமெல்லாம் அவ்வவ்வுயிர்களுக்கெல்லாம் உயிராகி என்பது இத்தொடரின் பொழிப்புப் பொருளாம். 'அனந்தம்' ஈறிலாத, இனி, முடிவற்ற எனினுமாம். அதாவது, உயிர்கள் தோன்றித்தோன்றி மறைதலினாலும், பின்னும் மறைந்த உயிர்கள் தோன்றுதலினாலும், உயிர்கள் பிறவாப் பேறாகிய முத்தி எய்தினும் மற்று

உயிர்கள் நின்றிருப்பதாலும் ஈறிலா, முடிவிலா என்னும் பொருள்தரும் அனந்தம் என்றார். பதஉயிர்கள்-குழிகளைக்கொண்ட உயிர்கள். பதம்-குறி; அதாவது, பலவகை யோனிபேதங்களாகக் குறித்துக் கூறப்படுவன. ஈண்டு எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்களில் தோன்றும் உயிர்களைக் குறித்தது. எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்களாகப் பகுத்துக் கூறினும் ஒவ்வொரு யோனிபேதத்திற்கும் கோடானுகோடிப் பிறப்புகள் வரம்பின்றிப் பெருகிக் கிடத்தல் அறியத்தக்கது. கோடானுகோடிப் பிறப்புகளைக்கொண்ட யோனிபேதம் ஒன்றேபோல எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதங்களோடுறழ உயிர்ப்பிறப்புக் கணக்கிட்டு அடங்காதென்பது உய்த்துணரத்தக்கது. இப்பிறப்புகளனைத்தும் நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்பில் அடங்கிக் கிடக்கும். இவையனைத்தும் அருட்பெருஞ்சோதியாகிய அமலன் ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டுச் செய்யும் அருள்விளையாட்டென்பதும் ஈண்டு அறியற்பாலதாம். இவ்வாறு இறைவனின் அருளால் தோன்றி யியங்கும் புங்கானுபுங்கமான உயிர்கள்தோறும் நின்று அவ்வுயிர்களுக்கு உயிராய் நிற்பவன் அவ்விறைவனாதலின் 'உயிர்கள் தொறும் உயிராய்' என்று கூறியருளினார். 'தொறும்' இது பன்மைப் பொருள்தரும் இடைச்சொல். இறைவன் உயிர்க்குயிராய் இருந்தருளுகின்றான் என்பதனை,

"ஊண்பழித் துள்ளம் புகுந்தென் னுணர்வது வாயவொருத்தன்" எனவும்,

"எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்" எனவும்,

"உணர்ந்தமா முனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர் வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கு முயிரே" எனவும்,

"இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய் எனவும்,

"கருதரிய உயிர்க் குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும்
ஒருதனிநா யகமென்றால் உன்புகழ்க்கோர் வரம்பாமோ"

எனவும், ஆன்றோர் கூறிய வாக்குகளாலும் நன்கு உணரலாம். இன்னும்,

"இருளென நிலவென வெழுதரு கதிரென
வருளுயி ருறுதர மணிதர நிலவுவை"

என்பதும் நன்கு வலியுறுத்தாநிற்கும்.

'என்றும் ஆனந்த நிலையாகி" என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:— என்றும் - எப்பொழுதும்; ஈண்டு நித்தியத்தைக் காட்டியது. ஆன்மா நித்தியம் என்பது சித்தாந்தக்கொள்கை யாதலினாலும் ஆன்மாவுக்குள் ஆன்மாவாக நிற்கும் இறைவனும் நித்தியனாதலினால் 'என்றும்' என்றார். இதனை,

"அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்" எனவும்,



"ஆதிகுண மொன்று மில்லா னந்தமிலான் வரக்கூவாய்" எனவும்,

"முன்புமாய்ப் பின்பும் முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே" எனவும்,

"ஈறிலாப் பதங்க ளியாவையும் கடந்த
இன்பமே என்னுடை அன்பே"

எனவும், கூறியதனால் அறியவும். 'ஆனந்தநிலையாகி' இறைவன் ஆனந்தமயனாகலினாலும், உயிர்கட்கு ஆனந்தத்தைச் செய்பவனாதலினாலும் 'ஆனந்த நிலையாகி' என்றார். இதனை,

"தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்றதனால் அறியலாம்.

"அளவைக்கெட்டாத் தனந்தனிச் சின்மாத்திரமாய்" என்றதன்கண்ணுள்ள விசேடங்கள்:—உயிர்களின் அறிவால், அவைகட்கு இயைந்த அளவைகளால் அறியப்படாதவன் இறைவனாதலினால் 'அளவைக்கெட்டா' என்றார். அளவை என்றது காட்சி அளவை, அனுமான அளவை, ஆகம அளவை முதலிய அளவைகளை. 'தனந்தனிச் சின்மாத்திரமாய்' என்றது தனக்குத்தானே ஒப்பன்றி வேறு ஒப்பில்லாத சித்தாகி என்பதாம். தனந்தனி' இது 'தன்னந்தனி' என்பதன் விகாரம். 'சின்மாத்திரம்' என்றது சித் மாத்திரம் என்பதன் மரூஉ. இறைவன் சத்தாகி, சித்தாகி, ஆனந்தமாகி இருப்பவனாதலினால் 'சின்மாத்திரமாய்' என்று கூறினார். இதனை,

"சத்து மசத்துந் தணந்தவர் தானாகிச்
சித்து மசித்துந் தெரியாச் சிவோகமாய்" எனவும்,

"முத்தியு ளானந்தச் சத்தியுண் மூழ்கினார்
சித்தியு மங்கே சிறந்துள தானே" எனவும்,

"சத்து மசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்து மசித்துஞ் சிவபரத்தே சேர்த்துச்
சுத்த மசுத்தமறச் சுகமான சொ
லத்த னருட்குரு வாமவன் கூறிலே"

எனவும் வரும் **திருமந்திரச் செய்யுட்**களால் அறியலாம்.

'கீழ்மேல் காட்டாச் சதசத்தாய் அருட்கோயில் தழைத்த தேவே' என்றதன் கண்ணுள்ள விசேடங்கள்:—'கீழ்மேல்' என்றது தாழ்வையும் உயர்வையும். இறைவன் சத்தும், அசத்துமாக இருக்கிறான். இறைவன் சத்தாக

இருப்பின், அசத்தாக எங்ஙனம் இருத்தல் கூடுமெனின் அவனன்றி வேறொன்றில்லை யாதலினால் சத்தும் அவன் அசத்தும் அவன் என்றனர் பெரியார்கள். இதனாலன்றோ **ஆன்றோர்**, 'இருளுநீ ஒளியுநீ' எனவும் 'புண்ணியநீ பாவநீ' எனவும், 'அசத்துநீ சத்துநீ' எனவும்கூறினர். 'சதசத்து' என்பது சத்தும் அசத்துமாய் இருப்பது என்பது பொருள். இறைவனைச் சதசத்து என்றது ஏனெனின், இறைவன் சத்தாக இருந்தும் அசத்துக்குள்ளும் நின்று அவைகளை ஆட்டுவிக்கின்றானாதலினால் என்க. 'அருட்கோயில் தழைத்ததேவே' என்றது ஏனெனின், இறைவன் அருள்மேனியன் ஆதலினாலும், இறைவன் எல்லோர்க்கும் அருள்புரிவோனாதலினாலும், இறைவன் அருளுக்கும் அருளாக இருப்பவனாதலினாலுமாம். 'அருள்' என்றாலும் 'கருணை' யென்றாலும் ஒன்றேயாம்.

"அருளல்ல தில்லை யரனவ னன்றி
அருளில்லை யாதலி னாலோ ருயிர்க்குத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே"

என்ற **திருமந்திரச் செய்யு**ளால் இதனை அறியலாம். மேலும்,

"நீடுபரா சத்திநிக ழிச்சாஞான
நிறைகிரியை தரவதனை நிமலன்மேவி
நாடரிய கருணைதிரு வுருவமாகி
நவின்றபல கலைநாத விந்துவாதி
கூடுமொளி வளர்குடிலை மாயைமேவிக்
கொடுவினைகொ டனுகரண புவனபோகம்
பீடுபெற நிறுவியவை யொடுக்குமேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றியாமே"

என்ற **சிவப்பிரகாசத்தாலும்** நன்கறியலாம். இதனானன்றோ **மணிவாசகரும்**,

"பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண் டாய்மெய்மை யார்விழுங்கு
மருளே யணிபொழி லுத்தர கோசமங் கைக்கரசே
யிருளே வெளியே யிகபர மாகி யிருந்தவனே"

என்று கூறினர்.

'தழைத்த' செழித்த என்னும் பொருளது. 'தேவே' என்பது விளியுருபு ஏற்றுநின்றபெயர். 'இனம் பிரிந்த மான்போல் நான் இடையா வண்ணம்' என்றதன் கண்ணுள்ள விசேடங்கள்:—தனது கூட்டத்தை விட்டுப் பிரிந்த மானைப்போல யான் துன்புறாதபடிக்கு என்பதாம். இனம்-கூட்டம். 'போல்' இதுபோல என்பதன் விகாரம். இடைதல்-துன்பப்படுதல். இயற்கையிலே மான்மருளுந் தன்மையுடையது, தன் இனத்தைவிட்டுப்



பிரியின் அதிகம் அலமரும் என்பது கருத்து. ஈண்டு பெருந்துயர் உறுதலைக் குறித்து நின்றது. இதனை,

"வலைப்படு மான்போல் வளரிருட் பூவில்
அலைப்படக் கண்டும் அருளால்—தலையாறு
கொண்டதணி காசலனே கூறருளைச் செய்யாக்கால்
மிண்டனேற் கெங்கே விடிவு" எனவும்,

"மேயவினம் விட்டகன்ற மென்மான்போல் மேதினியில்
ஏயதுணை இன்றாகனி ஏங்கியே—நோயுற்றேன்
தேனார் பழனிமலைத் தேவே திருக்குமரா
பானுடி யாளப் பரி"

எனவும் வந்த **தனிச்செய்யுள்களா**னும் அறிக.

"இன்பமுற அன்பர்பக்கல் இருத்தி வைத்துக் கனந்தரு மாகனமே" என்பதன்கண்ணுள்ள விசேடங்கள்:—"சுகமடைய நின்அடியவர்கள் பக்கத்தில் இருக்கும்படி வைத்து மேன்மையைத் தருகின்ற மேலான பொருளே" என்பது இதன் பொழிப்புப்பொருள். 'இன்பம்' என்றது சிவானந்த இன்பத்தை. 'அன்பர்' என்றது சிவனடியார்களை. அன்பர் பக்கம் சேறற்கு அவனருள் இன்றியமையாக் கருவியாதலினால் 'இன்பமுற அன்பர்பக்கல் இருத்திவைத்து' என்றருளிச் செய்தார். இதனாலன்றோ 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றார் **பெரியாரும்**. இன்னும்,

"ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தா லாரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தா லாரொருவர் ஓடாதாரே
உருகுவித்தால் ஆரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தால் ஆரொருவர் பணியாதாரே
காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

என்ற **அப்பர் திருவாக்கும்** இதனை நன்கு வலியுறுத்தும்.

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே"

என்ற **சிவஞானபோதம்** பன்னிரண்டாஞ் சூத்திரத்தின்படி,

அயரா அன்பின் அரன்கழல் சென்ற முத்தர்க்குச் சீவன்முத்தி நிலைக்கண் அவ்வறிவு, இச்சை, செயல்கள் ஒரே வழிப்புரத்திற் செல்லுங்கால் அவை செல்லும் இடம் இவை என்பது உணர்த்தும் முகத்தான் வாக்கு மனாதீதமாய்ப் பத்தியினான்மறவாது ஏத்த நின்ற முதல்வனை வாக்கு

மனக் கோசரமாம்படி வழிபடுமாறுணர்த்தல் கூறியவிடத்து இச்சை வியாபரிக்குமிடம் அன்பரொடு மரீஇ என்றாராதலின் தன் இச்சைப்படி அன்பர் பக்கல் இருத்திவைத்தமையைக் கூறினாராயிற்று. இதனானன்றோ,

"மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு
மெய்த் தவரை மேவா வினை" என்றார்.

'இருத்தி' என்னாது 'இருத்திவைத்து' என்றதனால் அன்பர்பக்கம் இருத்தி அவரினின்றும் நீங்காது எப்போழ்தும் அவ் அன்பர்பக்கம் வைகும் பேற்றைப் பேசினாராயிற்று. 'கனம்' என்றது ஜீவன்முத்திநிலையை. 'மாகனமே' என்றது மிகப் பெரிய பொருளே என்பதாம். இறைவன் பெரிய பொருள்கள் யாவற்றினும் மிக மிகப் பெரிய பொருள் என்பது உணரற்பாலது. இதனானன்றோ,

"விண்ணுக் கொருமருந்தை வேதவிழுப் பொருளை" எனவும்,

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" எனவும்,

"ஒப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கு
மப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்கா ணம்மானாய்" எனவும்,

"எப்பொருட்குந் தானேயா யாவைக்கும் வீடாகு
மப்பொருளா நஞ்சிவனைப் பாடுதுங்கா ணம்மானாய்"

எனவும் **மணிவாசகர்** கூறிப்போந்தார்.

இனி, 'மாகனமே' என்பதற்குப் 'பெருமேகமே' எனவும் கூறுவர். மேகம் கைம்மாறு கருதாது உலகிற்கு மழையைப் பொழிந்து உதவுதல்போல உதவும் இயல்பினன் இறைவனாதலினால் கைம்மாறு கருதாது உலகுக்குபகாரஞ்செய்யும் பெருமழை போன்றவனே என்பதும் கொள்ளத்தக்கதே. மேகம் கைம்மாறு கருதாது மழைபொழிந்துதவுதலைத் **தமிழ்வேதம்,**

"கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு"

எனக் கூறியது கொண்டுந் தெளிக.

"தண்ணருளிற் றானே கனிபலித்த வானந்தக் கட்டிப்பேறே" என்ற தன்கண்ணுள்ள விசேடங்கள்:—குளிர்ச்சிபொருந்திய கருணை என்னும் மரத்தில் தானேயாகக் கனியாகப் பழுத்து அடியேனுக்குக் கிடைத்த இன்பமயமாகிய சர்க்கரைக்கட்டியே போன்ற பெரிய பாக்கியமே என்பது இதன் திரண்டபொருள். 'தண் அருள்' என்றது குளிர்ந்த கிருபையை; அருள் தன்மையுடையதாதலின் 'தண்அருள்' என்றார்.



இனி, அருளையே - தண்மை எனவும், ஈரம் எனவும், செந்தண்மை எனவுங் கூறுதலுண்டு. அருள், கருணை, அளி என்பன ஒருபொருட் சொற்கள். இவை முறையே 'தண்' என்னும் அடைபெற்று வருதல் உண்டு. இதனை, 'தன்னருட் பெருக்கே' எனவும், 'தண்ணளியால் மன்பதை யோம்பாதார்க்கு' 'தண்கருணைச் சாகரமே' என **ஆன்றோர்** வழங்கியது கொண்டு தெளிக. அருள், கருணை தண்ணெனவும் ஈரமெனவும், செந்தண்மை எனவும் வந்தமையை,

"தண்ணிலா நெஞ்சச் சழக்கர்" எனவும்,

"ஈரமிலா நெஞ்சத் தவர்" எனவும்,

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்"

எனவும் எழுந்துள்ள **பெரியார் வாக்கு**களானும் அறிக.

தருக்கள் கிருஷி, சூரியன், மழை முதலியவற்றின் சகாயத்தால் கனி தரும், ஈண்டு கூறிய தண்ணருட்கு அவ்வாறு எவ்வித தூண்டுதல், உதவி, கிருஷித்தொழில் முதலிய இன்றித்தானே, சுபாவமாகவே கனி பழுத்தது என்பது காட்டா 'தானே கனி பலித்த' என்றார். கனி - கனிவு, இளக்கமுடைய காரணம்பற்றிவந்த காரணப்பெயர். பலித்த - பழுத்த; இனி கிடைத்தா என்பர், அமைந்த என்பது பொருள். 'கட்டி' என்றது சக்கரைக் கட்டியை. 'ஆனந்தக்கட்டி' என்றது ஆனந்தத்தைத்தருங் கட்டி எனவும், ஆனந்தமயமாகிய கட்டி எனவும் பொருள் விரியும். அருட்கோயில் தழைத் தவே! மாகனமே! ஆனந்தக்கட்டிப்பேறே! இனம்பிரிந்த மான்போல நான் துன்புறுதபடி இன்புறும்படி அன்பரிடத்து இருத்திவைத்து அருளினையே என்று கூறி அவன் தண்ணருளைச் சிந்தித்து அவ்வானந்த நிலையில் ஈடுபட்டவராகி விண்ணப்பிக்க எண்ணிய அதனையும் மறந்து சிவானந்தநிலையில் மோனமுற்றிருத்தலை இச்செய்யுள் விளக்காநின்றது.

'தொறும்' என்றதன்கண்ணுள்ள உம்மை முற்றும்மை. 'தனந்தனி' இது 'தன்னந்தனி' என்பதன் தொகுத்தல் விகாரம். 'கீழ்மேல்' இது உம்மைத்தொகை, 'கீழும் மேலும்' என விரியும். அருட்கோயில்' இது பண்புத் தொகை; அருளாகிய கோயில் என விரியும் ஈண்டு அருள் கோயிலாக உருவகப்படுத்தப்பெற்றது. 'இனம் பிரிந்த' இரண்டாம் வேற்றுமைத்தொகை; இனத்தைப்பிரிந்த என விரியும். உயிர்களுக்கெல்லாம் உயிராகி நிற்கும் இறைவன் தன்னைத்துன்புறுவண்ணம் தன் அடியார் கூட்டத்தில் அமைத்துச் சேர்த்தருளியதற்கு வியந்து நயந்து மகிழ்ந்து கூறல் என்பதாம். 2

சிவப்பேறே சீரியபேறென்பதாம்

பேறனைத்தும் அணுவெனவே உதறித் தள்ளப்
பேரின்ப மாகவந்த பெருக்கே பேசா
வீறனைத்தும் இந்நெறிக்கே என்ன என்னை
மேவென்ற வரத்தேபாழ் வெய்ய மாயைக்

**கூறனைத்துங் கடந்தஎல்லைச் சேட மாகிக்**
**குறைவறநின் றிடுநிறைவே குலவா நின்ற**
**ஆறனைத்தும் புகுங்கடல்போல் சமய கோடி**
**அத்தனையுந் தொடர்ந்துபுகும் ஆதி நட்பே.**

**(ப-ரை)** பேறு - பெற்ற பாக்கியங்கள், அனைத்தும் - எல்லாம், அணு- (அற்பமானதாகிய) அணு, எனவே-என்றே, உதறி - (அசட்டையாக) உதறி, தள்ள - அகற்றும்வண்ணம், பேர் - பெரிய, இன்பமாக - ஆனந்தமாக, வந்த வந்தருளிய, பெருக்கே - பெருவெள்ளமே! பேசா - மௌனமாகிய, வீறு- பெருமை, அனைத்தும் - எல்லாம், இ - இந்த, நெறிக்கே - வழிக்கே, என்ன என்று, என்னை - அடியவனாகிய என்னைக் (கடாக்ஷித்து), மேவு - இந்த வழிக்கே பொருந்துக, என்ற - என்று கட்டளையிட்டருளிய, வாத்தே பேருதியமே! பாழ் - சூனியமாகிய (ஒன்றுமில்லாத), வெய்ய - கொடுமையை யுடைய, மாயை - மாயையின் காரியமாகிய பாசபந்தங்களின், கூறு - பாகு பாடுகள், அனைத்தும் - எல்லாம், கடந்த - (தாண்டிய) எல்லாவற்றையும் விட் டகன்ற, எல்லை - எல்லையாகிய, சேடமாகி - (சேஷமாகி) மிஞ்சி நிற்பதாகி, குறைவு-குற்றம், அற-இல்லாதபடி, நின்றிடும் - நிலையுற்றொளியும், நிறைவே பரிபூரணப்பொருளே!, குலவாநின்ற-விளங்கி நிற்கும், ஆறு-ஆறுகள், அனைத் தும்-எல்லாம், புகும்-புகப்பெறும், கடல்போல்-கடலைப்போல, சமயம்-சமயத் தின், கோடி-கோடிகள், அத்தனையும் - எல்லாமும், தொடர்ந்து-பற்றிவந்து, புகும்-உள்ளேவந்து கூடுமிடமாகிய, ஆதி-முதன்மையாகிய, நட்பே - உறவே! எ-று.

**(வி-ரை)** பெரிதாகிய சிவப்பேற்றின் முன்னர் இவ்வுலக வாழ்வும், வானுலக வாழ்வும், மற்றைய பதவிகளும் அற்பமானதினால் 'பேறனைத்தும் அணுவெனவே உதறித்தள்ளப் பேரின்பமாக வந்த பெருக்கே' என்றார். 'பேறு' என்று பொதுப்படக் கூறினதனால் இவ்வுலகப்பேறும் வானுலகப் பேறுங் குறித்தாம். அவையனைத்தும் அநித்தியம், சிவானந்தப்பேறே நிலை யானது சத்தியமும் நித்தியமும் என்றபடி. இதனை,

"யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
றேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே"

என்ற **மணிவாசகர்** திருவாக்கான் நன்குணரலாம்.

'பேசாவீறு' என்றது ஈண்டு மோனத்தை; 'இந்நெறிக்கே' இதில் இகரம் பண்டறிசுட்டு. 'நெறி' என்றது சிவானந்தப்பேறடையும் நெறியை. 'நெறிக்கே' என்றதன்கண்ணுள்ள ஏகாரம் தேற்றப்பொருள்தந்து நின்றது. 'பேசாவீறை' சும்மா இருக்குந் திறம் என்பர். இதனானன்றே, **அருணகிரி நாதரை ஆறுமுகப்பெருமான்** 'சும்மா இரு' என்றருளினர். இதனை,



"வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்சென்ற
பரையற்ற வேலவன் போதித்தவா பஞ்ச பூதிகமற்
றுரையற் றுணர்வற் றுளமற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே"

என்ற **கந்தரலங்காரச் செய்யுளா**லும் நன்குணரலாம்.

'வாத்தே' இது வருவது என்ற பொருள்குறித்து வந்தது, காரணப் பெயர். வருவது வாத்து; இதனை வரவு எனவுங் கூறுவர். 'பாழ்மாயை' இதில் பாழ் என்றது சூனியத்தை. மாயை அறியப்படாச் சூனியமாக இருத்தலின் பாழ் என்றார். இதனாலன்றே **திருவள்ளுவரும்** நீர் எந்தவூர் என்று கேட்டவரைநோக்கி அவர்க்கு விடையாக,

"எந்தவூ ரென்றீர் இருந்தவூர் நீர்கேளீர்
அந்தவூர்ச் செய்தி அறியீரோ—அந்தவூர்
முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாலும் பாழென் றறி" என்றருளினர்.

'மாயை' மருட்டுவது மாயை, மயங்கச்செய்வது மாயை. மாயை யாவது:—மாயை என்பது கடகலசாதிகட்கு மண்ணைப்போலத் தனுகரண புவன போகங்களாகிய உலகத்திற்கு முதற்காரணமாகும். உலகத்திற்கு முதற்காரணமும் இறைவனேயன்றி மாயை என்பதோர் பொருள் இல்லை யெனில் சித்தாகிய இறைவனிடத்து ஜடமாகிய உலகந் தோன்றாதாகலான் மாயையே முதற்காரணமாகும். உலகவடிவாய்த் தோன்றிய அம்மாயை நிலைபெற்றுள்ளதாயின் இறைவனாற் போந்தபயன் யாதோ வெனின் மாயை ஜடமாகலால் தானாக உலகவடிவாய்க் காரியப்படமாட்டாது. ஆதலால் இறைவன் நிமித்தகாரணமும் மாயை முதற்காரணமுமாம். இன்னும் இதன் விவரங்களை சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் முதலிய ஞானநூல்களிற் கண்டு தெளிக. குலாலன் மண்ணாகிய முதற்கருவியைக்கொண்டு தண்ட சக்கரமாகிய துணைக்கருவியால் குடத்தை வனைந்து காரியம் அதாவது வனைதலாகிய காரியம் முடிந்தபின் எஞ்சி நிற்பதுபோல்; மாயையாகிய முதற்கருவி சிற்சத்தியாகிய துணைக்கருவியால் உலகமாகிய காரியம் முற்றுப் பெற்றபின் தான் தனித்து எஞ்சி நிற்பவன் இறைவனாதலின் 'மாயைக் கூறனைத்துங் கடந்த வெல்லைச் சேடமாகி' என்றருளினர்.

'நிறைவும்' அதனினும் நிறைந்தபொருளை நோக்குமிடத்து குறை வாகத் தோன்றல் வழக்காதலினாலும், இறைன் நிறைந்த பொருள்களிலெல் லாம் நிறைந்த பொருளாதலினாலும், இறைவனினும் நிறைந்த பொருள் இல்லையாதலினாலும் 'குறைவற நின்றிடு நிறைவே' என்று திருவாய்மலர்ந் தார். ஆறுகள் எல்லாம் கடலில்போய் அடங்குவது கண்கூடு. எல்லா ஆறும் கடலிலேயே போய் ஒடுங்கும். அதுபோல சமயகோடிகளெல்லாம் எம் சைவ சமயத்து ஒடுங்குதலினால் 'குலவாநின்ற ஆறனைத்தும் புகுங் கடல்போற் சமயகோடி யனைத்தும் தொடர்ந்து புகும்' என்றோதியருளினர். எல்லாச்

சமயமும் இச் சைவசமயத்துக்குச் சோபானங்களாக அமைந்து கிடக்கின்றன என்பதாம். அவ்வச்சமயங்களால் குறிக்கப்படும் கடவுளும் எம் மாதேவற்கே யாம்.

"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்"

என்ற அருமைத்திருவாக்கு ஈண்டு கருதற்பாலது. இன்னும்,

"அறுவகைச் சமையத்தோர்க்கு மவ்வர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய் வேதாக மங்களின் குறியிறந்தங்
கறிவினி லருளான் மன்னியம் மையோ டப்பணுகிச்
செறிவொழி யாதுநின்ற சிவனடி சென்னி வைப்பாம்"

என்ற **புறச்சமயநேறியில்** இதனை நன்கறியலாம்.

'ஆதிநட்பு' என்றது பழஞ்சிநேகத்தைக் குறித்தது. 'என்றுநீ யன்று நான்' என்றதுகொண்டு இனி முதன்மைச் சினேகம் என்பதுமாம். அதாவது தலையாயநட்பு ஈண்டுக்குறித்து ஓதப்பெற்றது என்பதாம். ஆறனைத் தும்புகும் கடல்போற் சமயகோடி யத்தனையுந் தொடர்ந்துபுகும் என்னும் இக்கருத்தினை,

"கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி னொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே"

என்ற **கம்பர்** வாக்கும் இங்கு ஒப்பிடத்தக்கது. இறைவன் எல்லாப் பேற்றிலும் பெரும்பேறாய் இருப்பதையும் இந்தப்பேற்றை எய்த மௌன நிலை தந்தமையையும் பாராட்டி பூரணமே, சமயகோடிகளுக்கெல்லாம் உள்ளகமாக இருப்பவனே என்று புகழ்ந்து, மகிழ்ந்து ஆனந்தத்தழுந்தல். 3

### இறைவன் ஆதியுமந்தமுமிலாதவமலன்
### என்பதன் விரி

ஆதியந்தம் எனும்எழு வாயீறற் றோங்கி
　　அருமறைஇன் னமுங்காணு தரற்ற நானு
பேதமதங் களுமலைய மலைபோல் வாதப்
　　பெற்றியரும் வாய்வாதப் பேய ராகச்
சாதகமோ னத்திலென்ன வடவால் நீழல்
　　தண்ணருட்சந் திரமௌலி தடக்கைக் கேற்க
வேதகசின் மாத்திரமா யெம்ம னோர்க்கும்
　　வெளியாக வந்தவொன்றே விமல வாழ்வே.



(ப-ரை) ஆதி - முதல், அந்தம் - முடிவு, எனும் - என்று சொல்லப்படும் எழுவாய்-பிறப்பும், ஈறு - இறப்பும், அற்று - இல்லாததாகி, ஓங்கி - வளர்ந்து, அரும்-அருமையாகிய, மறை - வேதங்கள், இன்னமும் - இப்பொழுதுங்கூட, காணாது-காணமுடியாது, அரற்ற-வருந்தி அலறுகிற்க, நானா-பலவகைப்பட்ட, பேதம் - வேறுபாடுகளைக் கொண்டுள்ள, மதங்களும் - மதங்களும், மலைய-ஒன்றோடொன்று போர்செய்ய, மலைபோல் - (சலிப்பில்லாத் தன்மையால்) மலையையொத்த, வாதம்-வாதிக்கின்ற, பெற்றியரும்-தன்மையை யுடையவர்களும், வாய்வாதம் - வாக்குவாதத்தைச் செய்கின்ற, பேயர் - பேய்த்தன்மை யுடையவர்கள், ஆக - ஆகிய ஒழிய, சாதகம் - முத்தியைப் பெறுதற்குரிய பழக்கம், மோனத்தில்-மௌனநிலையில் இருக்கிறது, என்ன-என்று எல்லோருக்கும் வெளியிடுதற்பொருட்டு, வடவால்-வடக்கேயுள்ள கல்லால விருக்ஷத்தின், நீழல்-நிழலில் எழுந்தருளியிருக்கும், தண்-குளிர்ந்த, அருள்-கருணையை யுடைய, சந்திரமௌலி - சந்திரனை யணிந்தருளிய ஜடாபாரத்தை யுடையவனே!, தடம் - விசாலம்பொருந்திய, கைக்கு - சின்முத்திரையோடு கூடிய கைக்கு, ஏற்க - பொருந்த, வேதகம் - எமது தன்மையைப் பேதிக்கும் இயல்பைக் கொண்டுள்ள, சின்மாத்திரமாய்-சித்ரூபமாத்திரமேயாகி, எம்-எங்களை, அன்னோர்க்கும்-ஒத்தவர்களுக்கும், வெளியாக - வெளிப்பாடாக, வந்த-வந்து தோன்றியருளிய, ஒன்றே-ஒப்பற்ற தனிப்பொருளே!, விமலம்-நிர்மலமாகிய, வாழ்வே-வாழ்வே! எ-று.

(வி-ரை) இறைவன் ஆதி, மத்தி, அந்தம் இல்லாதவன் ஆதலின் இறைவனுக்கு ஆதிமத்தியாந்தரகிதன் என்பது பெயர் ஆயிற்று. இது பற்றியே தாயுமானப் பெருந்தகையாரும் 'ஆதியந்த மெனுமெழு வாயீறற் றோங்கி' என்றார். இனம்பற்றி மத்தியும் வருவித்துக்கொள்ளக்கிடந்தது. 'ஆதிமத்தியாந்தரகிதன்' என்றதோடமையால் 'காலாதீதன்' எனவும் வேதங்கள் கூறுகின்றன. இதனாலன்றோ,

"காலங் கடந்த பழம்பொருளே கருணை நிறைந்த சாகரமே
மாலங் கறியா மாண்பினனே மறைக்கும் எட்டா முழுமுதலே
சீலந் தெரியாச் சிறியனெனைச் சிவனீ வந்து தடுத்தாண்டு
கோலங் காட்டிக் குருவாகி குணமே செய்த திறம்வாழி"

என்றார் **பெரியாரும்.**

இறைவன் பூரணன். இருந்தபடி இருப்பவன். இனி, அவன் தேய்தல் வளர்தல் இல்லாதவன் என்பதனை உணர்த்தவே 'ஓங்கி' என்றார். இறைவன் பரிபூரணன், ஓங்கிநிற்பவன். தேய்தல் வளர்தல் இல்லாதவன் என்பது மாத்திரமோ. எப்படி இறைவன் தேய்தல் வளர்தல் இல்லாதவனோ அவ்வாறே அவனைச்சேர்ந்து, சார்ந்துள்ளவைகளும் தேய்தல் வளர்தல் இல்லாதன என்பர் **பெரியார்.** இதனை,

"கருமுடிவிற் கற்பாந்த காலமெலாங் கடக்கினுநின்
திருமுடியிற் பிறைசிறிதுந் தேயாது வளராதே"

என்ற **நாவலர்** வாக்கானும் அறியலாம்.

வேதம் இறைவனால் தரப்பெற்றதாயினும் ஆன்மபோதத்தால் வேதத்தை நோக்குழி இறைவன் அதிற்றட்டுப்பட்டு நில்லான். சிவபோதத்தால் நோக்குழி வேதப்பொருளாய் இறைவன் நிற்றல் புலனும். இதற்கு அவன் அருள்வேண்டும் இதனாலன்றோ,

"அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றும்,

"காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

என்றும் கூறியருளினர். இறைவன் வேதத்திற்கு எட்டாவியன்பொருள் என்பதனை,

"பண்டை நான்மறைக்கும் எட்டா பராபரன்" எனவும்,

"இருக்காதி சதுர்வேதம் இசைப்பதுமுன் பலபேதம்
ஒருக்காலும் ஒன்றுரைத்த தொன்றுரைக்க வரியாதே"

எனவும் **பெரியார்** கூறியருளினர்.

"வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப" எனவும்,

"அல்லையீ தல்லையீ தென மறைகளு மன்மைச்
சொல்லினாற் றுதித்திளைக்கும்"

எனவும் கூறிய **பெரியார்** வாக்குகளும் ஆராயத்தக்கனவாம்.

வாதப்போரில் சலியாது உறுதியுற்று நிற்கின்ற தன்மையால் 'மலை போல்' என்று அருளினர். வாதிப்போர் பிடித்தபிடி விடாது வாதஞ் செய்தலினால் 'பேயாக' என்றார். "அரசமரத்தைப் பிடித்தபேய் பிள்ளையாரையும் பிடித்ததுபோல" என்ற **முதுமொழி**யும் ஈண்டு ஒப்புநோக்கத் தக்கது. சாதகம் - பழக்கம்; ஈண்டு சித்தி என்னும் பொருளில் நின்றது. சிவானந்தப்பேறு சித்தித்தல் மோனநிலையால் என்பதாம். என்னை? மோனத்தால் ஞானமும், ஞானத்தால் சிவமும் முறையே தோன்றுதலினால் என்க. 'வடவால்' என்றது கல்லாலவிருக்ஷத்தை. வடக்கே இக்கல்லாலவிருக்ஷம் இருத்தலின் வடவால் என்றார். இந்த ஆலவிருக்ஷத்தின் நிழலிலேதான் சிவபெருமான் பிரமபுத்திரர்களாகிய சனகாதிமுனிவர்களுக்குத் தக்ஷிணாமூர்த்தியாக யோகத்திருந்து மோனநிலையில் நின்று சின்முத்திரைகாட்டி ஞானோபதேசஞ் செய்தருளினார் என்பது அறியற்பாலது. 'சந்திரமௌலி' இது சிவபெருமான் திருநாமத்தொன்று. சடாபாரத்தில் சந்திரனை அணிந்துள்ள காரணம்பற்றி வந்தபெயர். குருபத்தினியைக்கூடல், பக்ஷபாதம் புரிதல் முதலிய குற்றங்களைச்செய்த சந்திரன் தன்பால்வந்து அடைந்து இரந்தபோது அவனுக்கருள்செய்து அவனைத் தலைமேற்றாங்கி அருள் புரிந்தனர். இவ்வாறு செய்தற்குக் காரணம் யாதோவெனின் எத்தகைப் பாவத்தைப் புரிந்தோராயினும் தன்னைச் சரண்புகுந்து வேண்டின் அருள் புரியும் கருணைக்கடல் இறைவன் என்பதை ஆன்மாக்கள் அறிந்து தன்னையடைந்து உய்யவேண்டுமென்பதே காரணமாகும். அழகே பிழம்பா



யுள்ள இறைவற்கு, எல்லாப்பொருள்களுக்கும் அழகை அருளும் பெருமாற்கு, எல்லா அழகையும் உணரும் அறிவாக இருந்தருளும் சுந்தரற்குத் தன்னை அழகுசெய்துகொள்ளுமாறு அணிந்துகொள்ளவேண்டியது ஒன்றிருக்கவில்லை என்பது அறிஞர் அறிவர். இனி, இறைவன் தான் வாலறிவன் என்னும் உண்மையை ஆன்மாக்கள் அறிதற்பொருட்டே திங்களைச் சூடியருளினர் எனவுங் கூறுவர். இதனை,

"தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி
ஆமதி யானென அமைத்த வாறே"

எனப் **பட்டினத்தடிகள்** கூறியவாற்றானும் அறியலாம்.

'தடக்கைக்கேற்க' என்றது சின்முத்திரைகாட்டியருளிய கையை. சின்முத்திரையின் இரகசியார்த்தத்தைக் குருமுகமாகக்கேட்கும் விதிப்படி கேட்டிடுக. 'எம்மனோர்க்கும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இழிவு சிறப்புஉம்மை. முன் வேதங்களையெல்லாம் ஐயந்திரிபுஅறக் கற்றுத் தவநெறிநின்ற தூயர்களாகிய சனகாதிமுனிவர்களுக்கு அருள்செய்த நீ ஒன்றுக்கும்பற்ற எளியராகிய எமக்கும் என உணர்த்தினாராயிற்று. 'வெளியாகவந்த' என்பது தனது ஞானகுருவாகிய மௌனதேசிகரை. அன்று வடவால் நீழலில் நின்ற தக்ஷிணாமூர்த்தமே எம்மனோர்க்கருள மௌனதேசிக மூர்த்தமாகவந்து அருளிச்செய்தது என்பது குறிப்பு. ஒன்று-ஒப்பற்ற பொருள், தனிப்பொருள், ஒருபொருள் என்னும் பொருள் பொதிந்து நிற்கின்றது. விமலம் - மலமற்றது; இது வடமொழி. வாழ்வு-செல்வம்; வாழ்வைத்தருவது வாழ்வது. இதனை,

"இம்மைமுதல் முத்திவரை இன்பினையே தந்தருளும்
செம்பொருளே வாழ்வே சிவமேயெம்—பெம்மானே
கங்கையொடு திங்கள் கதித்த சடையானே
சங்கையற எற்குமருளைத் தா"

என்ற **தனிப்பாடலா**லும் நன்கறியலாம்.

பிறப்பு இறப்பின்றி வேதமுங் காணமுடியாத பொருளாகி நிற்பவனே! முத்தியடைதற்கு வழி மௌனத்தில் இருக்கிறதெனக்காட்டத் தக்ஷிணாமூர்த்தியாகினவனே! நீயே அடியேற்குப் பரமாசாரியனாகவந்தருளினை எனத் துதிக்கின்றனர். 4

## இறைவன் வேதங்கூறிய வடிவாதிகளுக்கும் அப்பாலுக் கப்பாலாய் இருந்தோளிர்வா னென்றமை

விமலமுதற் குணமாகி நூற்றெட் டாதி
வேதமெடுத் தெடுத்துரைத்த விருத்திக் கேற்க
அமையுமிலக் கணவடிவா யதுவும் போதா
தப்பாலுக் கப்பாலாய் அருட்கண் ணாகிச்

சமமுமுடன் கலப்புமவிழ் தலும்யாங் காணத்
தண்ணருள்தந் தெமைக்காக்குஞ் சாட்சிப் பேறே
இமையளவும் உபகார மல்லால் வேறொன்
றியாக்கா நிர்க் குணக்கடலா யிருந்த ஒன்றே.

(ப-ரை) வேதம் - மறைகள், நூற்றெட்டு - நூற்றெட்டுச் சுலோகங்கள், ஆதி-முதலாக, எடுத்தெடுத்து-எடுத்து எடுத்து, உரைத்த - விளம்பிய, விருத்திக்கு-இலக்கண விரிவிற்கு, ஏற்க-தக்கதாக, அமையும் - பொருந்தியிருக்கும், விமலம்-நிர்மலம், முதல்-முதலாகிய, குணம்-குணங்களையுடையது, ஆகி-ஆகி, இலக்கணம்-இலட்சணம் பொருந்திய, வடிவாய்-உருவமுடையதாகி, அதுவும்-அந்தத் தன்மையும், போதாது - பற்றாதபடி, அப்பாலுக்கு - அப்புறத்திற்கு, அப்பாலாய்-அப்புறமாகி, அருள்கண்-கிருபையினிடத்தவர், ஆகி-ஆகி, சமம்-சமத்துவமும், உடன்-அதனோடு, கலப்பும்-கூட்டமும், அமிழ்தலும் - பிரிவும், யாம் காண - நாங்கள் எல்லோரும் பார்க்கும்படி, தண் - குளிர்ந்த, அருள்-கிருபையை, தந்து-செய்து, எம்மை-எங்களை, காக்கும்-காத்தருளும், சாட்சி-சாட்சியாக நிற்கும், பேறே-பாக்கியமே, இமையளவும் - க்ஷணப்பொழுதிலுங் கூட, உபகாரம் - பிறர்க்கு நன்மையை, அல்லாமல் - அல்லாதபடி, வேறு-நன்மைக்கு மாறுபட்டதாகிய, ஒன்று - ஒன்றை, இயக்கா - புரியாத, நிர்க்குணம்-குணமிலா, கடலாய்-கடலாகி, இருந்த-இருந்தருளிய, ஒன்றே-ஒப்பற்ற பொருளே! எ-று.

(வி-ரை) விமலம்-மலமின்மை. அமலம் - புறத்தூய்மையைக் காட்டும். விமலம்-அகத்தூய்மையைக் காட்டும். 'அதுவும் போதாது' என்றது வேதத்தாற் கூறப்பெற்ற குணங்களை. அப்பாலுக்கப்பால் என்றது வேதமுடிவாகிய அப்பாலுக்கும் அப்பாலாகி என்பதாம். 'அருட்கண்ணதாகி' என்றது அருட்சத்தியின் இடத்ததாகி என்பதாம். அதாவது அருளில் என்பதாம். 'சமம்' என்றது பரமான்மாவும் ஜீவான்மாவும் சித்துக்களென் றோதப்படுதலாகிய சமம். 'கலப்பு' என்றது முத்திநிலையில் கூடிநிற்கும் அத்துவிதக் கலப்பை. 'அவிழ்தல்' என்றது பிரிவு. இது எழுத்தகரம்போலத் தனித்து நிற்கும் நிலையை உணர்த்தியதாம். இதனை,

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு"

என்ற **திருக்குறளாலும்** அறியலாம்.

'யாம்' எனவும், 'எமை' எனவுங் கூறியது ஆன்மாக்களை. இனி, அன்பர்களை, தொண்டர்களை என்பாரும் உண்டு. 'சாக்ஷிப்பேறு' என்றது சாக்ஷிபூதமாகிய இலாபமே என்பது பொருளாம். இறைவன் ஆன்மாக்க டோறும் அந்தர்யாமியாய் நின்றருளி சாட்சியாக இருந்துபகரிக்கின்றான். அவ்வவ் ஆன்மாக்கள் செய்யும் நல்வினை தீவினைகளுக்குத் தக்கபடி பயனளிப்பவன் இறைவனாதலின் இறைவன் சாட்சிபூதமாக இருக்கவேண்டியவன்



ஆகின்றான். எல்லா ஆன்மாக்களுக்கும் இறைவன் பெரும்பேறாதலின் 'பேறே' என்றார். இனி, இதனை உவமைஆகுபெயராய் இறைவனுக்கு ஆயிற்று என்பாரும் உண்டு. 'இமை' ஈண்டு காலநுண்மையைக் குறித்தது. 'இமை' கண்ணிமைக்குங் காலஅளவைக் குறிக்கும். இதனை இலக்கணிகள் மாத்திரைக்காலம் எனவும் மாத்திரை எனவுங் கூறுவர். இதனை,

"இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை"

என்ற **நன்னூற்சூத்திரத்தா**னே நன்கறியலாம்.

இறைவன் பரம கருணாநிதியாதலினாலும் எப்பொழுதும் ஆன்மாக்களுக்கு எய்தும் துன்பங்களைத்துடைத்து இன்பமே செய்பவனாதலினாலும் 'இமையளவும் உபகாரமல்லால் வேறொன்றியக்கா' என்றார். இனி, ஆன்மாக்கள் துன்பமும் எய்துகின்றனவே என்றாலோ அறியாது கடாயினை! அத்துன்பங்கள் வினைக்கீடாக வந்தன என்றறிக. அதுவும் பரம கருணாநிதியின் ஆக்கினையேயன்றோ எனின், ஆம். இது இரணவயித்தியன் கட்டியைக் கத்திகொண்டறுப்பதுபோலவும், புண்ணைச் சூடிடுவது போன்றதுமாகிய செயல்கள் என்றறிக. வயித்தியன் புண்ணுடையான் நோவுறக் கட்டியை அறுப்பதும், புண்ணைச் சூடிடுவதும் நோயாளியை வருத்தவன்றே, அவனுக்குச் சுகமுண்டாக்கவே. அது போன்றதாம் இறைவன் ஆன்மாக்களின் தீவினைக் கீடாக தீயுணவூட்டல் என்றறிக. இறைவன்பால் கருணை ததும்பி நிற்கின்றது. ஆன்மாக்களுக்குக் கருணையே புரிகின்றான்.

இக்கருணை இருதிறப்படும். அவையாவன:—அறக்கருணை, மறக்கருணை என்பனவாம். அறக்கருணையாவது, குற்றஞ்செய்த பிள்ளையைத் திருத்தி அக்குற்றத்தை இனிச் செய்யாதிருக்குமாறு செய்தற்குக் கருணை மிக்கதாய் அப்பிள்ளையை இன்சொற் கூறித் தடுத்து இனி இது செய்யாதே என்று அப்பிள்ளைக்கு விருப்புறும் தின்பண்டங்கள் தந்து மகிழ்ச்சி உண்டாக்குவது போல்வதாம். மறக்கருணையாவது, குற்றஞ்செய்த பிள்ளையைத் தந்தை பிரம்புகொண்டு அடித்து அக்குற்றத்தை இனிச் செய்யாதபடி செய்தால் கருணையின் காரியமேயாம். அதுபோலத் தீவினைக் கீடாகத் தீவுணாத்தருதல் மறக்கருணையாம். இறைவன் முற்றுணர்வோனாதலால் எந்தெந்த ஆன்மாக்களுக்கு அறக்கருணை ஏற்குமோ அவ்வவ் ஆன்மாக்களுக்கு அறக்கருணை புரிவன். எவ்வெவ் ஆன்மாக்களுக்கு மறக்கருணை ஏற்றதாகுமோ அவைகளுக்கு மறக்கருணை புரிவன் அறிவுப்பிழம்பாகிய இறைவன் செயல் சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய ஆன்மாக்கள் கணித்தறியும் தாமுடையன அல்ல. இதனானன்றோ **பெரியா**ரும்,

"நல்ல குருநாதன் நம்மை வருத்துவது
கொல்ல அல்ல பொல்லாக் குணம்போக" என்றருளினர்.

இறைவன் சந்நிதானத்தில் எல்லாம் தானே நடைபெறும். சூரியன் உதித்த மாத்திரையில் தாமரை மலர்கின்றது, ஆம்பல் குவிகின்றது, சில சுருங்குகின்றது, சில விரிகின்றது, சில வளர்கின்றது, சில தேய்கின்றது.

அதுபோல இறைவன் சந்நிதியில் எல்லாம் நிகழ்கின்றவாதலினாலும், முத்தொழிற்கும் ஒவ்வோர் அதிகாரியை ஏற்படுத்தி இறைவன் நடத்தி வைக்கின்றானாதலினாலும் 'இயக்கா' என்றார். 'இயக்கா' என்பது 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். முத்தொழிலை பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் என்போர் சிவபெருமான் ஆணையானே நடாத்துகின்றனர் என்பதனை,

"சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும் மறைக்கோவும்
தழற்கால் சூலம்
அங்கேந்தும் அம்மானுந் தத்தமது தொழிற்றலைநின்
றூற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப யிருமுனிவர்
பணிந்து போற்றக்
கொங்கேந்தும் மணிமன்றுட் குனித்தருளும் பெருவாழ்வைக்
குறித்து வாழ்வாம்"

என்ற **காஞ்சிபுராணச் செய்யுளா**லும் நன்கறியலாம்.

'நீர்க்குணக்கடல்' என்றது குணநீதனாதலினால் என்க. 'குணங்குறி அற்றவன்' 'குணமிலி குறியிலி' என்ற ஆன்றோர் வாக்கு இதனை நன்கு விளக்கும் எனினும் அருட்குணமுடையான், அருள்வடிவுடையான் என்பது அறிதற்பாற்று. வேதப்பகுதியாகிய உபநிடதங் கூறும் இலக்கணம் நீமுற்றும் அமையப்பெற்றவனே, அதற்குமேலும் அப்பாலுக் கப்பாலாய் இருப்பவனே, தண்ணருள் தந்து எம்மைக்காக்கும் சாட்சிப்பேறே, யார்க்கும் எப்பொழுதும் உபகாரமே செய்பவனே எனத் துதித்து இறைவன் கல்யாணகுணங்களில் ஈடுபட்டு மௌனானந்த முறுகின்றார் என்பதாம். 5

### கடவுள் பலவாகிக் கருணைக்கடலாகி நிற்போன்

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
ஒளியாகி வெளியாகி உருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணு தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
எந்தையே எம்மானே என்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூருங் கருணை விண்ணே.

(ப-ரை) ஒன்றுஆகி - (தன்னையன்றி வேறொன்றில்லாத தானேயான ஒருபொருளாகி, பலஆகி - பலபொருள்களுமாகி, பலவா - பலவிதங்களாக, கண்ட-காணப்பெற்ற, ஒளிஆகி - ஒளியுடைய பொருள்களும் உருவமுமாகி,



வெளிஆகி - (அவைகள் எல்லாம் சஞ்சரித்தற்கு இடமாகிய) ஆகாயமாகி, உருவம்ஆகி - வடிவமாகி, நன்றுஆகி - நன்மையாகி, தீதுஆகி - தீமையாகி, மற்றும்ஆகி - மேற்கூறியவைகளேயல்லாமல் வேறுள்ள பொருள்களுமாகி, நாசம் - அழிவு (கேடு), உடன் - அதனோடு, உற்பத்தி-தோற்றம், நண்ணுது-பொருந்தாதது, ஆகி - ஆகி, இன்றுஆகி-இன்றைப்பொழுதுமாகி, நாளையும்-நாளைப்பொழுதும், ஆம் - ஆகும், ஆன - ஆகிய, எந்தையே - எம்முடைய அப்பனே!, எம்மானே - எமது ஆண்டவனே!, என்றென்று-என்றவிதமாகப் பலதரஞ்சொல்லி, ஏங்கி - ஏக்கமுற்று, கன்றுஆகி-கன்றைப்போலாகி, கதறினர்க்கு - கதறினவர்களுக்கு, சேதாஆகி-அப்பொழுது ஈன்ற பசுப்போன்றவனாகி, கடிதினில்வந்து - விரைவில் வந்தருளி, அருள் - கிருபையை, கூரும்-புரியும் (செய்யும்), கருணை-கருணையுருவான, விண்ணே-ஆகாயமே! எ-று.

(வி-ரை) இறைவனைத்தவிர்த்து வேறுபொருள் இல்லையாதலினால் 'ஒன்றாகி' என்றார். ஈண்டு

"ஒருவனு யுலகத்தே நின்ற நாளோ"

என்ற **நாவுக்கரசர்**வாக்கு கருதத்தக்கதாகும்.

இனி, ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன் இறைவன் ஆதலினால் தனிப்பொருள் என்னுங் கருத்தில் 'ஒன்றாகி' எனும் கோளும் கொள்ளக் கிடக்கும்.

"ஒருவ னென்னு மொருவன் காண்க"

**(திருவாசகம்)** என்னும் **மணிவாசகர்** திருவாக்கு ஈண்டு கருதற்பால தொன்றாம். இறைவன் அந்தர்யாமியாய் எல்லாத் தாவரசங்கமத்திலும் கலந்து நிற்கின்றானாதலின் 'பலவாகி' என்றார். இனி அவனின்றி எதுவும் இல்லையாதலின் 'பலவாகி' என்றார். இதனை,

"அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய
மாமனு மாமியுநீ
யொப்புடைய மாதரு மொண்பொருளுநீ யொருகுலமுஞ்
சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ துணையாயென்
னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
யிப்பொன்னீ யிம்மணிநீ யிம்முத்துநீ யிறைவனீ
யேறூர்ந்த செல்வனீயே" என்பதனால் நன்கறியலாம்.

இறைவன் ஒளிமயமானவனாதலினாலும், ஒளியுடைப்பொருளெல்லாம் கலந்து ஒளிக்கு ஒளியாக இருப்பவனாதலினால் 'பலவாக்கண்ட ஒளியாகி' என்றார். இதனை,

"ஞானச் சுடர் விளக்காய் நின்றாய்நீ" எனவும்,
"எண்டிசைக்கு மொண்சுடராய் நின்றாய் நீயே" எனவும்,

"ஒருசுடரா யுலகேழு மானான் கண்டாய்
ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்"

எனவும், கூறிய **தேவாரங்களால்** இறைவன் ஒளியுருவன் என்பது தேறப் பெறும்.

இறைவன் உருவம், அருவம், ரூபாரூபம் என்னும் மூன்று திருமேனியை யுடையவனாதலினாலும், தோன்றும் உருவனைத்தும் அவன் உருவே ஆதலினாலும், அருட்சத்தியின் உருவிற்கலந்து விளங்குபவனாதலினாலும், அருளே உருவாக உடையவனாதலினாலும் 'உருவுமாகி' என்றார். இறைவன் ஆன்மாக்களுக்கு நல்வினைப்பயனையும், தீவினைப்பயனையும் ஊட்டுபவனாதலின் நன்றாகித் தீதாகி' என்றருளினார். இதனாலன்றோ **பெரியார்கள்,**

"நன்றுநீ தீதுநீ நலமுநீ யலவுநீ
என்றுநீ யிருளுநீ இன்பநீ துன்பநீ
ஒன்றுமா முத்திநீ ஓதுநீ நாகுநீ
அன்றுநீ இன்றுநீ என்றுநீ இறைவனே" எனவும்,

"அருளுநீ இருளுநீ அளியுநீ அழிவுநீ
தெருளுநீ மருளுநீ அன்புநீ வன்புநீ
பொருளுநீ புகழுநீ பொருவுநீ ! ஒறுவுநீ
குருவுநீ சிவமெனக் குலவுமா முதல்வனே" என்றருளினார்.

இன்னும் **மணிவாசகரும்,**

"இன்பமும் துன்பமும் இல்லானே யுள்ளானே" எனவும்,

"கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கில்
தேறும் வகையென் சிவலோகா திகைத்தால் தேற்ற வேண்டாவோ"

எனவும், கூறியது கண்டு தெளியலாம்.

இறைவன் 'உருவுமாகி,' 'நன்றாகித் தீதாகி மற்றுமாகி' என்றதனால் உற்பத்திநாசம் உடையனோ ஈசன் என்று ஐயுறுவாறுபின் அடுத்து 'நாசமுடன் உற்பத்தி நண்ணாதாகி' என்றருளினர். இது இறைவன் 'தோற்றக் கேடில்லாதவன்,' 'ஆதி அந்தம் இல்லாதவன்' என வேதங்கள் முழங்குவதால் நன்கறியலாம். இறைவன் அன்றுமிருந்தான் இன்றுமிருக்கிறான் நாளையுமிருப்பான் அதற்குமேலும் இருப்பன் என்பது விளக்க 'இன்றாகி நாளையுமாய் மேலுமான' என்றருளினார். இன்று, நாளை என்பதோடு இனம்பற்றி அன்றுங் கொள்ளக்கிடந்தது. இது இறைவன் 'காலாதீதன்' என்பது குறித்துக் கூறியதாம். இறைவன் எவ்வுயிர்க்கும் இன்பருளிக் காப்பவனாதலினாலும், தாயாகிய அருட்சத்திக்கு நாதனானதனாலும் 'எந்தையே' என்றார், 'எம்மான்-எமது பெருமான். இறைவனிலும் பெரிய



பொருள் இல்லையாதலினால் 'யெம்மானே' என்றார். இதனாலன்றோ "பெரிய பொருளில் பெரிய பொருளே" என இறைவனை விளித்தனர்.

'கன்றாகி' இதற்குக் கன்றைப்போலாகி என்பது பொருள். 'கன்று' என்றது ஈண்டு புனிற்றிளங்கன்றைக் குறித்தது. என்னை? புனிற்றிளங் கன்று முற்றும் தாயருளையே நாடிநிற்குந்தன்மையது ஆதலினால் என்க. 'சேதா' சமீபத்தில் கன்றையீன்ற பசு என்பது பொருள். இப்பசு கன்றின் பக்கல் அன்பும், ஆர்வும் மிக மிக உடையதாய் அதன் காப்பிலேயே தன் கருத்தை இருத்தி நிற்கும். இதுபற்றியன்றோ **கம்பரும்,**

"என்றலுமே யடியின்மிசை நெடிதுவீழ்ந் தழுவானை இவன்யா ரென்று
கன்றுபிரி காராவின் றுயருடைய கொடிவினவக் கழற்கான் மைந்தன்"

என்றார். இன்னும்,

"கன்றிற் கிரங்கும் பசுப்போலக் கடையேற் கிரங்கும் கருணையனே"

எனவும் கூறினர்.

இறைவன் அடியார்க்கு அருள்புரியப் பரபரப்புடன் பரிந்து வருவோனாதலின் 'கடிதினில்' என்றார். 'கடிது' ஈண்டு விரைவுப்பொருள் தந்தது. 'விண்' என்றது ஆகாயத்தை. ஏனை நான்குபூதங்களும் தன்னகத்தடங்க தான் ஒன்றாய் இருப்பதாதலின் 'விண்ணே' என்றார். இறைவன், கருணைகரன், கருணைச்சொரூபனாதலின் கருணைவிண்ணே என்றார். இனிச் சிதம்பரத்தலத்தே இறைவன் ஆகாசரூபமாக இருந்தருளுகின்றானாதலினாலும், ஆண்டு ஆனந்தத்தாண்டவத்தைச்செய்து ஐந்தொழிலையும் நடாத்துகின்றானாதலினாலும் கருணைவிண்ணே என்றார். ஈண்டு சுவாநுபூதியால் அறியற்பாலனவாய ரகசியங்கள் பலவுள. அதனை ஆசிரியர்பால் முறைப்படிக் கேட்டறிக. 'உருவும் ஆகி' என்றதன்கண்ணுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. 'எந்தையே!' 'எம்மானே!' இவை விளியுருபு ஏற்றபெயர்கள். ஒன்றாகியும், பலவாகியும், எல்லாம் அடங்கும் ஆகாயமாகியும், உருவாகியும், நன்மை தீமைகளுமாகி; பிறப்பிறப்பற்றதாகி; இன்றும், நாளையும், அதற்கு மேற்பட்ட காலமுமாகி; எந்தாய், எம்மானே என்று இரங்குவார்க்கு விரைவினில் வந்து அருள்புரியும் கருணைவடிவாகிய ஆகாயமுமாய் இருப்பவனே எனத் துதித்து ஆனந்தத் தழுந்துகின்றார் என்பதாம். 6

## கண்டனுபவித்ததைச் சொல்லிக் கடவுள் கருணையை வேண்டல்

அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
  ஆரமிர்தே என்கண்ணே அரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
  பூரணமாய் நின்றவொன்றே புனித வாழ்வே

கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவி யாதி
விரிவினையுங் கூட்டிஉயிர்த் திரளை யாட்டும் [ளே.
விழுப்பொருளே யான்சொலும்விண் ணப்பங்கே

(ப-ரை) அருள் - அருள்வடிவமாக, பழுத்த-பழுத்த, பழச்சுவையே-பழத்தின் ருசியே!, கரும்பே-கரும்பே!, தேனே-தேனே!, ஆர்-நிறைந்த, அமிர்தே-அமிர்தமே!, என் - என்னுடைய, கண்ணே - கண்ணே!, அரிய - அருமையுடையன, ஆன - ஆகிய, பொருள் - பொருள்கள், அனைத்தும்-யாவற்றையும், தரும் - படைக்கும் (உண்டாக்கும்), பொருளே-பொருளே!, கருணை-கிருபை, நீங்கா - அகலாத, பூரணமாய் - நிறைவாய், நின்ற - நின்றருளிய, ஒன்றே-ஒப்பென்பதில்லாத தனிப்பொருளே!, புனிதம் - தூயதாகிய, வாழ்வே-வாழ்வே!, கருது-நினைத்தற்கு, அரிய-அரிதாகிய, கருத்து-நினைப்பு, அதனுள்-அதற்குள்ளே!, கருத்தாய் - நினைப்பாய், மேவி-தங்கி, காலமும்-காலத்தையும், தேசமும் - தேசங்களையும், வகுத்து - படைத்து, கருவி - கருவிகள், ஆதி-முதலாகிய, விரிவினையும் - பரப்பையும், கூட்டி - ஒன்றுசேர்த்து, உயிர்-உயிர்களினுடைய, திரளை - கூட்டத்தை, ஆட்டும் - ஆட்டுகின்ற, விழு - மேலான, பொருளே-பொருளே!, யான்-அடியேனாகிய நான், சொலும்-சொல்லுகின்ற, விண்ணப்பம்-விண்ணப்பத்தைக், கேள்-கேட்டருள் எ-று.

(வி-ரை) 'அருள்பழுத்த' அருளொடு பழுத்த என்பது பொருள். 'பழம்' என்றது ஈண்டு வாழை, பலா, மா என்னு முக்கனியை. என்னை? அதனினும் இனிய பழங்கள் இல்லாமையினால் என்க. இதனான்றே பெரியாரும்,

> "தொக்கபெரு வேதப் பொருளே தூயவனே முக்கட் கரும்பே
> முக்கனியின் சாரே பாலே முதுபொருளே கருணைத் தேனே
> தக்கனொரு வேள்வி குலைத்துத் தருக்ககற்றி யருள்செய் முதல்வா
> பக்குவங்கண் டென்னைப் பார்த்துப் பரிந்தணைத்துக் கொள்க நீயே"

என்றார், **ஒரு பெரியார்.**

இறைவன் இனிமை சொல்லொணாத பெருமையுடையதாதலின் அருள் பழுத்த பழச்சுவையே என்றதோடு அமையாது தான்கண்ட மிக்க மதுரச் சுவையுடைய பொருளனைத்தும் அவனேயாகக் கூறுகின்றார். கரும்பே, தேனே, அமுதே எனக்கூறியருளினர். 'கரும்பு' மதுரச்சுவையுடையதாயினும் அதனிடத்துக் கோது (சக்கை) உள்ளமையின் இறைவன் கோதற்றவன் என்பதனை விளக்கத் 'தேனே' என்றார். தேனின் இடத்துக் கோதில்லையானாலும், உயர்ந்த பூக்களினிடத்துப் பிறப்பதாகிய உயர்பிறப்பு உடையதாக இருந்தாலும் வண்டால் எச்சிற்படுத்தப்பெற்ற தோஷம் உண்மையால் 'அமுதே' என்றார். 'அமுது' ஈண்டு பாலைக் குறிக்கும். ஒருவன் பிறந்த அத்ததியிலிருந்து உயிர் உடலைவிட்டுப் பிரியும் அந்தம்வரை உபயோகப்படுவது ஆதலினாலும் புனிதமுள்ள பசுவினின்று



கறக்கப் பெறுவதனாலும் ஈச்சுரப்பிரீதி யுடையதாதலினாலும், 'அமுதே' என்றார் என்க. இனி, அமுது என்பதற்கு தேவாமிர்தமெனப் பொருள் கூறுவாருமுண்டு. அவ்வாறாயினும் அமிர்தம் பிறப்பாலும் பயனாலும் சிறப்புடைமை கொள்ளற்பாற்று.

"கண்ணின்றிக் காட்சியில்லை" ஆதலினாலும், "கண்ணிற்சிறந்த உறுப்பில்லை" எனப் **பெரியார்** கொண்டாடியுள்ளமையாலும் இறைவனை 'என் கண்ணே' என்றார். இறைவன் அன்பர்க்கு அவர் அரிதாக எண்ணும் பொருளையெல்லாந் தந்தருளுபவனாதலின் 'அரியவான பொருளனைத்துந் தரும்பொருளே' என்றார். இனி, இறைவன் படைத்தருளிய பொருளெல்லாம் அரியனவாகவே இருத்தலின் இவ்வாறு கூறியருளினரென்னலும் ஒன்று. இறைவன் என்றும் அருட்சத்திசகிதனாதலின் 'கருணைநீங்கா' என்றார். இறைவன் குறைவில்லாதவன், குறைவற்றவன், முழுமுதல்வன் ஆதலின் 'பூரணமாய் நின்ற வொன்றே' என்றார். இறைவனன்றி வேறு பொருள் என்பது இல்லையாதலினால் 'ஒன்றே' என்றார். இறைவனால் அளிக்கப்படும் வாழ்வெல்லாம் புனிதமுடையதாதலினாலும் இறைவனே வாழ்வும், வாழ்வை அருளுவோனுமாதலினால் 'புனிதவாழ்வே' என்றார். இறைவன் எல்லார் கருத்திலும் குடிகொண்டிருப்பவனாதலினாலும், அறிவுக்கு அறிவாய் இருப்பவனாதலினால் 'கருதரிய கருத்ததனுட் கருத்தாய்மேவி' என்றார். கருத்துட்குடிகொண்டிருக்கும் இறைவனைக் கண்டுகொள்ள முடியாதிருக்குங் கருத்தாகலின் 'கருதரிய கருத்து' என்றார். ஆன்மாக்களுக்கு இறைவனே காலதேசம் வகுத்து முதற்கருவி துணைக்கருவிகளைத் தந்து அருள்புரிவோனாதலினால் 'காலமுந்தேசமும் வகுத்துக் கருவியாதி விரிவினையுங்கூட்டி என்றார். 'கருவியாதி' என்றதில் ஆதி என்றதால் வினை, பயன் முதலியவற்றைக் குறித்தார். உலகையும் உயிர்களையும் இறைவனே உண்ணின்று ஆட்டிவைக்கின்றானாதலினால் 'உயிர்த்திரளை ஆட்டும்' என்றார்.

> "ஆட்டுவித்தால் ஆர்ஒருவர் ஆடாதாரே"

என்ற **திருநாவுக்கரசுசுவாமிகள்** வாக்கு ஈண்டு ஒப்பிடத்தக்கது.

இறைவனே பொருள் அவனைத்தவிர்த்து வேறுபொருள் இல்லை என்பது தோன்றவும், இறைவனையன்றியும் பொருள் சிலஉள என்னும் மதத்தர் உண்டாதலின் அவர்கூறும் பொருள்களெல்லாவற்றினும் பொருளாய், அப்பொருளுக்கும் பொருளாய் அவைகள் எல்லாவற்றினும் மேலான பொருளாய் விளங்குபவன் இறைவனே என்பது தோன்ற 'விழுப்பொருளே' என்றார். விண்ணப்பம் - வேண்டுகோள். நீயே பொருள், நீயே விழுப்பொருள், நீயே அனைத்துயிர்க்கும் காலம், தேசம் கருவியாதிதந்து அருளிச் செய்பவன். நீயே சராசரங்களை ஆட்டுவிப்போன். உன்னை ஒப்பாரும் மிக்காரும் இல்லையாதலினால் உன்பால் விண்ணப்பஞ்செய்தல் அடுக்கும் நீயே கொடுக்கும் முதல்வனாதலினால் நீ கேட்டு இல்லையெனாது அருள்செய்க

என்பதுகொண்டு 'யான்சொலும் விண்ணப்பங்கேளே' என்றார். நீ அருள் உருவனாதலின் நீ கேட்டாற்போதும். கேட்டால் அருள்செய்யாதிராய் என்பது நிச்சயமாதலால் கேட்டு எனக்கு அருள்செய் என்னாது 'கேளே' என்றார். 'அருள்பழுத்த' அல்வழிப்புணர்ச்சியாதலின் ளகரம் டகரம் ஆகாது நின்றது. 'பொருளனைத்தும்' என்றதிலுள்ள ஈற்று உம்மை முற்றும்மை. 'சொலும்' இது 'சொல்லும்' என்பதன் தொகுத்தல்விகாரம். 'கேளே' ஈற்றில்நின்ற ஏகாரம் ஈற்றசை. பழச்சுவையே! கரும்பே! தேனே! அமிர்தே! கண்ணே! பொருளே! ஒன்றே' வாழ்வே! விழுப்பொருளே! என் விண்ணப்பத்தைக் கேட்டருள் என்கின்றார் என்பதாம். 7

மக்கள் பிறப்பே மாண்பினையுடைத்து

விண்ணவரிந் திரன்முதலோர் நார தாதி
விளங்குசப்த ரிஷிகள்கன வீணை வல்லோர்
எண்ணரிய சித்தர்மனு வாதி வேந்தர்
இருக்காதி மறைமுனிவர் எல்லா மிந்தக்
கண்ணகல்ஞா லம்மதிக்கத் தானே உள்ளங்
கையில்நெல்லிக் கனிபோலக் காட்சி யாகத்
திண்ணியநல் லறிவாலிச் சமயத் தன்றோ
செப்பரிய சித்திமுத்தி சேர்ந்தா ரென்றும்.

(ப-ரை) விண்ணவர்-விண்ணுலகவாசிகளாகிய தேவர்களும், இந்திரன்-தேவர்களுக்கெல்லாம் அரசனாகிய இந்திரன், முதலோர் - மற்றும் இந்திரன் முதலாகிய விசேட தேவர்களும், நாரதர் - நாரதரும், ஆதி-அவர்முதலாகிய, விளங்கும் - சிறந்துதோன்றும், சப்தரிஷிகள் - ஏழு ரிஷிமார்களும், கனம்-பெரிய, வீணை-யாழில், வல்லோர்-வல்லவர்களாகிய தும்புரு முதலியவர்களும், எண் - கருதுதற்கு, அரிய - அரிதாகிய, சித்தர் - சித்தர்களும், மனு-மனுவும், ஆதி-அவனுள்ளிட்ட, வேந்தர்-அரசர்களும், இருக்கு-இருக்கு வேதத்தையும், ஆதி - அதுமுதலாகிய, மறை - வேதங்களையும் (கற்றுத்தேர்ந்த), முனிவர்-முனிவர்கள், எல்லாம் - (ஆகிய) எல்லோரும், இந்த-இந்த, கண்ணகன்-பரந்த (இடமகன்ற), ஞாலம் - உலகம், மதிக்க - மதிக்கும்படியாக, உள்ளங்கையில்-உள்ளங்கையிலிருக்கின்ற, நெல்லி - நெல்லி விருக்ஷத்தின், கனி - பழத்தை, போல - ஒப்ப, காட்சிஆக - கண்கூடாக (கண்ணுக்கு நேராக) திண்ணிய-உறுதியான, நல்லறிவால்-உயர்ந்த ஞானத்தினால், இ சமயத்து-இந்தச் சிவசமயத்தில், அன்றோ-(இருந்து) அல்லவா, செப்பு-சொல்லுதற்கு, அரிய-அருமையான, சித்தி - சித்திகளையும், முத்தி - முத்தியையும், என்றும்-எக்காலத்தும், சேர்ந்தார்-அடைந்தார்கள் எ-று.

(வி-ரை) ஆன்மாக்களில் 'அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது' என்றபடி மானுடப்பிறப்பே அரியது. மானிடராகப் பிறந்தவர்க்கே ஞானம்



உரியதாகும். ஞானம்பெற்ற மனிதர்களே தக்கது இது தகாதது இது என உணர்ந்து தக்கனவாகிய நல்லறங்களைச்செய்து அவரவர்களின் அறங்களுக்கேற்றதாகிய வானுலகப்பதவிகளைப் பெறுகின்றனர். தேவர்களெல்லாம் பசுக்களே. இப்பசுக்கள் ஞானங்கைவரப்பெற்றுப் புண்ணியங்களைச்செய்து தேவர்களாகவும் தேவேந்திராதி பட்டங்களைப் பெற்றவர்களுமாகின்றனர். இந்திரன் தானும் பசுவே புண்ணியப்பெருக்கால் வானுலக அரசாட்சியைப் பெற்றான். ஆகையால் 'விண்ணவர் இந்திரன்' என்றார். இது உம்மைத் தொகையாக 'விண்ணவரும் இந்திரனும்' எனவிரியும். இந்திரன்-இது ஒரு பட்டப்பெயர். 'முதலோர்' என்றது பிரம விஷ்ணுக்களைக் குறித்து நின்றது. ரிஷிகணங்களுள் 'நாரதர்' சிரேஷ்டராதலினால் 'நாரதாதி விளங்கு சப்த ரிஷிகள்' என்றார். சப்தரிஷிகளாவார்:—அத்திரி, ஆங்கீரசன், கௌதமன், சமதக்கினி, பாரத்துவாஜன், வசிட்டன், விசுவாமித்திரன் ஆகிய எழுவர்கள்.

இனி ஒருசாரார் அகத்தியர், ஆங்கீரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்பாரும் உண்டு. 'கனவீணை வல்லோர்' என்றது யாழ்வல்லோராகிய அந்தரவாசிகளைக் குறித்தது. இவர்களைத் 'தும்புரு' என்பர். இவர்கள் ஓர்வகைத் தேவஜாதியார் என்பது அறியத்தக்கது. 'சித்தர்' என்றது அரன் அருளால் அட்டமாசித்திகளைப் பெற்று இன்றும் சஞ்சரிப்போர்களை. சித்திகளைப்பெற்றோர் சித்தர். சித்திகள் எட்டுவகையாதலின் 'அட்டமாசித்தி' எனப் பெயராயது. 'மாசித்தி' பெரியசித்தி, பெறுதற்கு அரியசித்தி எல்லாச் சித்திகளும் இவ் எட்டுச் சித்திகளுள் அடங்கும். அவ் எட்டுச்சித்திகளாவன:—அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராசத்தி, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்னும் எட்டாம். 'அணிமா' என்பது அன்மாப்போலாதல். 'மகிமா' என்பது மகத்துவம்பெறுதல். 'கரிமா' தன் உடல் கண்டிப்பின்றாகிக் கண்டிப்புள்ளவற்றையும் உருவ வல்லவனாதல். 'இலகிமா' என்பது இலகுத்துவம் பெறுதல். 'பிராசத்தி' என்பது வேண்டுவன எல்லாம் அடைதல். 'பிரகாமியமாவது நிறையுள்ளவனாதல். 'ஈசத்துவம்' என்பது எல்லாவற்றையும் ஆளுந்தன்மைபெறுதல். 'வசித்துவம்' என்பது எல்லாவற்றையுந் தன்வசமாக்குந் தன்மையுள்ளவனாதல். இவ்வகை எட்டுச்சித்தியும் பெற்றார் பலர். அவர்களுள் தலைசிறந்தவர்களாவார் நவசித்தர் எனப்பெறுவர். அவராவார்:—சத்தியநாதர், சகோதநாதர், ஆதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர் என்னும் ஒன்பதின்மராம். இச்சத்திகளைப் பெற்றோர்களெல்லாம் சிவசமயத்திலிருந்து சிவனை ஆராதித்தே பெற்றனர் என்பது அறியத்தக்கது.

'மநுவாதி' என்றது சூரியகுலத்து உதித்த மநுச்சக்கரவர்த்தியையும் அவன் வழிவந்த மாந்தாதா முதலிய அரசர்களையுங் குறித்து நின்றது. 'மனு' என்றது சிருஷ்டி ஆரம்பகாலத்திலே பூமி பரிபாலனஞ் செய்தற் பொருட்டுத் தெய்வாஞ்ஞையாற் பிறந்தவர்கள். இவ்வாறு பதினான்கு மனுக்கள் பிறந்துளர். மனுக்களாவார்:—சுவாயம்புவன், சுவாரோசிஷன், உத்தமன்,

தாமசன், ரைவதன், சாக்ஷுசன், வைவசுதவன், சூரியசாவர்ணி, தக்ஷசா வர்ணி, ப்ரஹ்மஸாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ரௌவியன் பௌசியன் என்பவர்களாம். இம்மனுக்களே அவ்வச் சிருஷ்டிதோறும் மனுஷவர்க்கத்தைத் தோற்றுவிப்போர்களாதலின் இவர்களே மனுஷர் களுக்கு மூலபிதாக்களாவர். இப்போதுள்ள சிருஷ்டிக்கு மூலபிதா வைவசுதமனு. இது ஏழாவது மந்வந்தரம். ஒரு மந்வந்தரகாலம் 4320000 மநுஷ்யவர்ஷமாம் இவ்வண்ணம் ஆறு மந்வந்தரம் சென்றன. இப்பொழுது செல்லாநிற்பது ஏழாவது மந்வந்தரம் என்பர். 'இருக்காதிமறை' என்றது இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்னும் வேதங்களை. உலகப் பற்றை வேண்டாமென வெறுத்துவிட்டவர்கள் முனிவர்கள். இவர்கள் வீட்டின்பத்தையே நாடிநிற்போராதலின் 'முனிவர்' என்றார். 'கண்ணகன் ஞாலம்' என்றது பரந்த உலகத்தை. உள்ளங்கையில் நெல்லிக்கனியை வைத்து நோக்கின் அக்கனியின் அகமும் புறமும் தெளிவாய்த் தெரியும். ஆதலினால் தெளிவாகக் கண்கூடாகக் காண்பதை 'உள்ளங்கை நெல்லிக் கனிபோல' என்று வழங்குவதாயிற்று. 'திண்ணிய நல் அறிவு' என்றது சிவஞானத்தை. இச்சமயம் என்றது சிவசமயத்தை. இஞ்ஞானம் பலதிறப் படும். அதனை,

> "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
> பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கியஞானம்
> உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
> தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்"

என்ற **சேக்கிழார் திருவாக்கா**னும் அறியலாம்.

இஞ்ஞான பேதங்களின் விரிவுகளையெல்லாம் ஆசிரியர்பால் கேட்கு முறையாற் கேட்டறிந்துகொள்க. அறிவே இன்புதருவது, அறிவே பொருளை உணர்த்துவது, அறிவே பொருளாய் நிற்பது, அறிவே முத்தி தருவது, அறிவே முத்திப்பேறுவது. இதனை,

> "அறிவு வடிவென் றறியாத வென்னை
> அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
> அறிவு வடிவென் றருளா லறிந்தே
> அறிவு வடிவென் றறிந்திருந் தேனே"

> "அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
> அறிவுக் கறிவல்ல தாதாரமு மில்லை
> அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
> டடைகின் றனமறை யீறுக டாமே"

என்னுந் **திருமந்திரச் செய்யுள்களால்** அறியலாம்.

'செப்பரிய' என்பது சொல்லிக்காட்ட ஒண்ணாத என்பதாம். அனுபவத் தால் அறியத்தக்கது என்பது பொருளாம். 'சித்தி' என்பது அட்டமாசித்தி



களை. இனிச் சிவானந்தப்பேற்றின் சித்திஎன உரைப்பாரும் எண்டு. 'முத்தி' என்றது வீட்டுப்பேற்றை. 'முத்தி' என்பதை அறியவேண்டின்,

> "முத்தியி லத்தன் முழுத்த வருட்பெற்றுத்
> தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
> மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
> பத்தியி லுற்றோர் பரானந்த போதரே"

எனவும்,

> "வளங்கனி தேடிய வன்றுட் பறவை
> யுளங்கனி தேடி யுழிதரும் போது
> களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி
> நலங்கொண்ட நால்வரு நாடுகின் றாரே"

எனவும் எழுந்த **திருமூலர் திருவாக்குகளால்** அறியலாம். இந்திரன் முதலிய தேவர்களும், நாரதாதி ரிஷிகளும் தும்புரு முதலியவர்களும் சித்தர்களும், மநு முதலிய அரசர்களும், முனிவர்களும் எல்லோரும் தம் ஞானத்தால் இச் சமயத்தில் இருந்துகொண்டு சித்தி, முத்திகளை அடைந்தனர் என்று சொல்லுகின்றனர் என்பதாம். 8

### அறிவுள்ள அறிஞர்களா லமைக்கப்பட்டவையே சமயமெனல்

> செப்பரிய சமயநெறி யெல்லாந் தந்தம்
> தெய்வமே தெய்வமெனுஞ் செயற்கை யான
> அப்பரிசா ளருமஃதே பிடித்தா லிப்பால்
> அடுத்தஅந் நூல் களும்விரித்தே அநுமா னாதி
> ஒப்பவிரித் துரைப்பரிங்ஙன் பொய்மெய் என்ன
> ஒன்றிலைஒன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
> இப்பரிசாஞ் சமயமுமாய் அல்ல வாகி
> யாதுசம யமும்வணங்கும் இயல்ப தாகி.

(ப-ரை) செப்பு - சொல்லுதற்கு, அரிய - அருமையுடையதான, சமய நெறி-சமயமார்க்கங்கள், எல்லாம்-எல்லாமும், தந்தம் - தங்கள் தங்கள், தெய் வமே - தெய்வங்களையே, தெய்வம் - தெய்வங்கள், எனும் - என்று உறுதியாக் கூறும், செயற்கை - (அந்த) செய்கைக்கு உள், ஆன-ஆகிய, அ-அந்த, பரிசு-(சமயநெறிகளின்) தன்மையில், ஆனாரும்-நின்றவர்களும், அஃதே-அதனையே, பிடித்து-பற்றி, ஆலிப்பால்-ஆரவாரத்தினால், அடுத்த-(தங்களுக்குப்) பொருந் தினவாகிய, அ-அந்த, நூல்களும் - சமயநூல்களையும், விரித்து - விரித்தும், அனுமானம் - அனுமானப் பிரமாணம், ஆதி - முதலிய பிரமாணங்களுக்கு, ஒப்ப-பொருந்த, விரித்து-விவரித்து, உரைப்பர்-கூறுவார்கள், இங்ஙன்-இந்த விதமாக, பொய் - ஒன்றைப்பொய், மெய் - ஒன்றைமெய், என்ன - எனவும், ஒன்று-ஒன்று, இலை - இல்லை, ஒன்று-ஒன்றுண்டு, என - எனவும், பார்ப்பது-

காண்பது, ஆர்க்கும் - எத்தகையோர்களுக்கும், ஒவ்வாது - பொருந்ாது, இ-இந்த, பரிசு - தன்மை, ஆம் - ஆகும், சமயம் - பல்வகையாகிய சமயங்கள், ஆய்-ஆகியும், அல்ல - அவைகள் அல்லாதன, ஆகி-ஆகியும், யாது-எந்தகைய, சமயமும்-சமயங்களும், வணங்கும்-தொழத்தகும், இயல்பது-இயற்கையினையுடையது, ஆகி-ஆகி எ-று.

(வி-ரை) சமயம் என்பது அறிவுடைய மக்களால் உலகவாழ்க்கையில் ஒழுங்கை நிறுவவும், இன்பு அடையவும், மறுமை முத்தி இன்பங்களைப் பெறுதற்கும் ஏற்படுத்திய கொள்கையாம். உலகத்து எல்லோரும் ஒரு தன்மைத்தான அறிவுபெற்றவர்களல்லர் ஆதலினால் சமயமும் பலவாகப் பல்கின. அவரவர் தத்தம் மதமே சிறந்தமதம், தம்மார்க்கமே சன்மார்க்கம், தத்தங் கடவுளே முழுமுதற் கடவுளென்று சாதித்துப் போதித்து வாதித்து நிற்பர். அவ்வாறு கண்ட சமயங்களில் வைதிகசமயம் ஆறு எனப்பெறும். அவையாவன:—சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம் என்பவைகளாம். வேதாந்தமதங்கள் ஆறுவகைப்படும்; அவைகளாவன:—கபிலமதம், கணாதமதம், பதஞ்சலிமதம், அக்ஷபாதமதம், வியாசமதம், ஜைமினிமதம் என்பவைகளாம். புறச்சமயங்கள் ஆறு. அவைகளாவன:—பௌத்தம், ஜைனம், பைரவம், காளாமுகம், உலோகாயதம், சூனியவாதம் என்பவைகளாம். இனிச் சமயவகை முப்பத்துநான்காக வகுப்பர். அவை வருமாறு:—உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், நிகண்டாவாதம், ஆசீவகம், பட்டாசாரியம், பிரபாகரம், சத்தப்பிரமவாதம், மாயாவாதம், பாற்கரியம், நிரீச்சுரசாங்கியம், சிவசாங்கியம், விஷ்ணுசாங்கியம், பஞ்சராத்திரம், தருக்கம், மீமாஞ்சை, சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம், பாடாணவாத சைவம், நிமித்தகாரண பரிணாமவாதசைவம், சுத்தசைவம், பேதவாதசைவம், சங்கிராந்தவாதசைவம், அவிகாரவாதசைவம், ஐக்கியவாதம், சிவமதவாதம், கிரீடாப்பிரமாவாதம் என்பனவாம். இவைகளேயன்றி இன்னும் கோடிக்கணக்கான சமயங்கள் உலகில் நிலவா நிற்கின்றன. ஆதலினாலன்றோ **பெரியாரும்,**

"செப்பரிய சமயநெறி"

என்றார். 'அநுமானம்' இது **தருக்கசாத்திரத்திற்** சொல்லப்பெற்ற எண்வகை அளவைகளுள் ஒன்று.

இது நேரே அறியப்படாது சாதித்துப் பெறற்பாலதாய் மறைந்துநின்ற பொருளை அதனைவிட்டு நீங்காது யாண்டுமுளதாய் நிகழும் ஏதுவைக்கொண்டு உணர்தலாகிய ஆன்மாவின் ஞானசக்தி. எண்வகை அளவைகளாவன:—காட்சி, அநுமானம், உவமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகம், சம்பவம். 'காட்சி' என்பது கண்ணால் நேரிற்காண்டல். 'அநுமானம்' என்பது, புகையைக்கண்டு நெருப்பு உண்டெனத் தீர்மானித்தல். 'உவமானம்' என்பது மான் பசுப்போன்றது என்பதாம். 'ஆகமம்' என்பது பெரியார் வாய்ச்சொல்லாம். 'அருத்தாபத்தி' என்பது அருத்தத்தினால் உண்மையை அறிதல், 'இவன் பகலுண்ணான் உடல்பருத்திருக்கிறான்' என்ற இடத்து



இரவில் திருட்டுத்தனமாக உண்கின்றான் என்பது பெறப்படுவது. 'அபாவம்' என்பது முன்னுமில்லை, பின்னுமில்லை, எந்தக்காலத்தும் இல்லையெனல். 'ஐதிகம்' என்பது இம்மரத்தில் பேயுளது எனல். 'சம்பவம்' என்பது ஆயிரத்தில் நூறு உண்டு எனல். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' எனவும், 'வாக்குடையான் மன்றுகொளும்' எனவும் கூறிய பிரமாணப்படி 'வல்லான் ஆட்டிய பம்பரம்போல' வாக்குவல்லவர்களே கக்ஷியிற் ஜெயம்பெறுவர்.

"பொய்யுடை யொருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே"

"மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே"

என்பதன்படி வாக்குச்சதுரால் பொய் மெய்யாகவும் மெய் பொய்யாகவும் மாறிமாறிச் சுழன்று 'வல்லவனுக்கு வல்லவனுண்டு வையகத்தில்' என்றபடி ஒருவரையொருவர் வென்றுகொண்டே எல்லாச்சமயங்களும் நிலைநின்றுவிடுகின்றன. ஆதலின் 'இங்ஙன் பொய்மெய் யென்ன வொன்றில்லை யொன்றெனப் பார்ப்பதொவ்வாதார்க்கும்' என்றனர்.

எல்லாச்சமயமும் எமது சைவசமயத்திற்குச் சோபானமுறையாக நிற்றலின் 'இப்பரிசாஞ் சமயமுமாய் அல்லவாகி' என்றார். எண்ணிறந்தன வாய்க் கோடானுகோடியாய் விளங்குஞ் சமயங்களையெல்லாந் தன்னகத்தே கொண்டு அவைகட்கெல்லாம்மேலாய் மணிமௌலியாய் விளங்குவது நம் சைவசமயமாதலின் 'யாது சமயமும் வணங்கும் இயல்பதாகி' என்றார். 'செப்பரிய' என்றதில் 'செப்பு' என்பது திசைச்சொல். 'அரிய' இது அருமை என்பதின் மைகெட்டு அரிய என ஆயிற்று. இது பெயருரிச்சொல். 'தெய்வமே' என்பதன்கண்ணுள்ள ஏகாரம் தேற்றப் பொருளது. 'யெல்லாம்' இது 'எல்லாமும்' என இருக்கவேண்டுவது தொக்குநின்றது. 'அஃது' இது ஆய்தம் இடைவந்தசுட்டு. அஃது+ஏ= அஃதே எனப் புணர்ந்தது.

"முன்னுயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டு மல்வழி யான"

என்ற **தொல்காப்பிய** விதிப்படி ஆய்தங்கெடாது நின்றது.

அநுமானம்+ஆதி=அநுமானாதி இது வடசொற்புணர்ச்சி தீர்க்க சந்தி. 'ஒன்றில்லை' ஒன்று+இல்லை=ஒன்றில்லை. 'ஒன்றில்லை' என்பது தொகுத்தல்விகாரம். ஒவ்வாது+ஆர்க்கும்=ஒவ்வாதார்க்கும் இதில் 'ஆர்க்கும்' என்பது யார்க்கும் என்பதன் போலி. 'இப்பரிசு' இதில் இகரச்சுட்டு பண்டறிசுட்டு. 'யாது' வினாப்பெயர். 'சமயமும்' இதில் உம்மை முற்றும்மை. 'இயல்பதாகி' இதில் 'ஆகி' என்பது வினையெச்சம் வருஞ் செய்யுளின்கண்ணுள்ள 'ராஜாங்கத்தில் அமர்ந்தது' என்ற தொடரின்கண்ணுள்ள 'அமர்ந்தது' என்ற வினைமுற்றைக்கொண்டு முடிந்தது. இச் செய்யுள் குளகம். என்னை? பலபாட்டுகள் ஒருவினைமுற்றைக்கொண்டு முடிவது. இதனை,

"குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்"
என்ற **தண்டியலங்காரச் சூத்திரத்**தால் அறிக.

ஒரேபாட்டில் பொருள் பூர்த்திபெறுவது (முற்றுவது) முத்தகச்செய்யுளாம். அதனை,

"அவற்றுள் முத்தகச் செய்யுட் டனிநின்று முடியும்"
என்ற **தண்டியலங்காரச் சூத்திரத்**தால் அறியலாம். நம் சிவசமயம் அகச்சமயம், அகப்புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச்சமயங்களெல்லாமாகியும் அவைகள் அல்லவாகியும் எல்லாச்சமயங்களும் வணங்கும் இயல்புடையதாகியும் இருக்கின்றதென்கின்றார் என்பதாம்.

9

சமயமென்பது பல்வகையான மக்களின்
அறிவின் திறத்தனவேயாம்

இயல்பென்றுந் திரியாமல் இயம மாதி
  எண்குணமுங் காட்டியன்பால் இன்ப மாகிப்
பயனருளப் பொருள்கள்பரி வார மாகிப்
  பண்புறவுஞ் சௌபான பக்ஷங் காட்டி
மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதி டாதி
  மற்றங்க நூல்வணங்க மௌன மோலி
அயர்வறச்சென் னியில்வைத்து ராசாங் கத்தில்
  அமர்ந்ததுவை திகசைவம் அழகி தந்தோ.

(ப-ரை) என்றும்-எந்தக்காலத்தும், இயல்பு - (தன்னுடைய) இயற்கைத் தன்மை, திரியாமல் - மாறுபட்டழியாமல், இயமம்ஆதி - இயமம் முதலாகிய, எண்-எட்டு, குணமும்-பண்புகளையும், காட்டி-காண்பித்து, அன்பால்-அன்பினாலே, இன்பம் - சுகானந்தம், ஆகி-ஆகி, பயன் - பயனை (பேற்றை), அருள - தந்தருள, பொருள்கள்-பொருள்களும், பரிவாரம்-பரிவாரங்களும், ஆகி-ஆகி, பண்பு-பண்பை (குணத்தை), உறவும்-அடையவும், சௌபானபக்ஷம்-சௌபானபக்ஷத்தினை, காட்டி-காட்டி, மயல்-மயக்கத்தை, அறு-அறுக்கவல்ல, மந்திரம்-மந்திரமும், சிக்ஷை-சிக்ஷையும், சோதிடம் - சோதிடமும், ஆதி - முதலாகிய, மற்று-இவைகளல்லாது மற்றுமுள்ள, அங்கநூல்-உறுப்பு நூல்களும், வணங்க-நமஸ்கரிக்க, மௌனம் - மோனநிலையாகிய, மோலி - மகுடத்தை, அயர்வு-சோர்வு, அற-நீங்க, சென்னியில் - தன்தலைமேல், வைத்து-பூண்டு, ராஜாங்கத்தில்-ராஜரீகத்தில், அமர்ந்தது-வீற்றிருப்பது, வைதிகம்-வேதாந்த சம்பந்தமுடைய, சைவம் - சைவசமயம், அழகிது - அழகுடையதாக இருக்கின்றது, அந்தோ-ஐயோ! எ-று.

(வி-ரை) சிற்றறிவும் சிறுதொழிலும், பல்பிணியும் பெருமயக்குமுடைய மக்கள் கண்ட மதங்கள்பல. அவருள்ளும் தத்துவஞானம் உணர்ந்தார் கண்ட மதங்கள்பல. இன்னோர்கண்ட மதங்கள் நாளுக்குநாள், காலத்துக்குக்காலம்,



இடத்துக்கு இடம் இயல்புமாறித் திருத்தவும், புதுக்கவும், செறிக்கவும், விரிக்கவும், சுருக்கவும் பெறுதலாகிய மாறுபாடுகளை அடையும், எல்லாம் வல்லவனும், பேரறிவுப்பிழம்பும் ஆதியந்தமில்லாதவனுமாகிய இறைவன் தந்தமதம் ஒன்று. அது இவ்வைதிக சைவமதமாம். இறைவன் ஆன்மாக்களிடத்துள்ள கருணையால் தனு, கரண, புவன, போகங்களைத்தந்து ஒரு நன்னெறி நின்று உய்வுபெறுமாறு இச்சைவசமயத்தைத் தந்தருளினன். இது, பேரறிவுமயனாகிய இறைவனால் தரப்பெற்ற மதமாதலின் அவ்விறைவனைப்போலவே இயல்பு மாறுபடாது என்றும் ஒரேபடித்தாய் இருக்கின்றதென்பதை உணர்த்தவேண்டி 'இயல்பென்றுந் திரியாமல்' என்றார். 'இயமம்' இது அட்டயோகத்து ஒன்று. இதில் முக்கியமானது புலன் அடக்கி இருத்தல் இயமநிலையில் நிற்பவர் கவனிக்கவேண்டுவன பத்து விஷயங்கள் உள. அவை வருமாறு:—கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமை, இரக்கம், வஞ்சமின்மை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம் உண்ணல், தூய்மை என்பனவாம். அட்டாங்கயோகங்களாவன:—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, என்பனவாம். 'இயமமாதி யெண்குணம்' என்றதனால் அட்டாங்கயோகங்களையுங் குறித்தது. அன்பே இன்புக்குக் காரணமாம், வன்பே (அன்பின்மையே) துன்புக்குக்காரணமாம். இதனாலன்றோ,

"அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு"
என்றனர் **திருவள்ளுவரும்**,

"இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்" என்றார் **பெரியாரும்**.

இன்னோரன்ன பிரமாணங்களால் இன்புக்கு, அறத்திற்கு, முத்திக்கு அன்பு இன்றியமையாதது என்பது விளங்கும்.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்" என்றார் **திருக்குறளுடையாரும்**.

இக்கருத்துகளை நன்கறிந்தே **பெரியா**ரும், "அன்பால் இன்ப மாகி" என்றருளினர்.

வைதிகசைவம் அரசாகச் சிம்மாதனம் ஏறிநிற்பதாக வர்ணனை செய்கின்றாராதலினால் அரசர்க்குப் பரிவாரங்கள்போல நம் வைதிகசைவத்திற்குப் பொருள்களைப் பரிவாரங்களாக அமைத்து 'பயனருளப் பொருள்கள் பரிவாரமாகிப் பண்புறவும்' என்றார். பொருள் என்றது வேதப்பொருள்களை ஆகமம் பொருள்களை, தத்துவப்பொருள்களை என்பர். ஈண்டு ஏனைய சமயவாதிகளாற் கூறப்படும் பொருளென்று கோடலே சிறப்புடைத்தாம்.

ஒருவன் பல பிறப்புகள்பெற்று அவ்வப்பிறப்புகளிற் செய்த புண்ணியப் பேற்றாலும், புறச்சமயங்கள் புக்கு அவ்வச்சமயங்களிற் கூறிய புண்ணிய நெறிநின்றபேற்றாலுமே கடைசியில் வைதிக சைவத்தைச் சாருதல்கூடும். ஆகையினாலும், அவ்வச்சமயங்கள் கூறுந்தெய்வமாகிச் சிவபெருமானே அருள் புரிவதனாலும் 'சௌபானபக்ஷங் காட்டி' என்றார். வேதத்து உறுப்பாகி நின்று மக்கள் மயக்கத்தை அகற்றுவதனால் 'மயலறு மந்திரஞ் சிக்ஷை சோதிடாதி' என்றார். மந்திரம், சிக்ஷை, சோதிடம் இவை வேதத்தின் அங்கங்கள். 'மற்றங்கநூல்' என்றது வியாகரணம், நிருத்தம், சந்தோபி சிதத்தை. வேதத்தின் ஆறு அங்கங்களாவன:—சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தோபிசிதம் என்பவைகளாம். இவற்றன் 'சிக்ஷை' என்பது வேதத்தின் உச்சாரண இலக்கணத்தை உணர்த்துவது. 'வியாகரணம்' என்பது வேதத்தின் பல இலக்கணத்தை விவகரிப்பது. நிருத்தமாவது வேதத்தின் பதங்களுக்கு விவகாரணங்கூறுவது. இதனை 'நிகண்டு' எனவுங் கூறுவர். 'சோதிடம்' என்பது லக்கினம், திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் முதலியவற்றால் வைதிக கருமங்களைச் செய் தற்கு உரியகாலத்தை அறிவிப்பது. 'கற்பம்' என்பது ஆசிவலாயநீயம், போதாயநீயம், ஆபஸ்தம்பம் முதலிய சூத்திரங்களிலிருந்து வைதிக கருமங் களுக்குப் பிரயோகிக்கும் முறைமைகளைக் கூறுவது. இதனை மந்திரம் எனவுங் கூறுவர். 'சந்தோபிசிதம்' என்பது வேதங்களின் உக்தை முதலிய சந்தோபேதங்களுக்கு அக்கர சங்கியை கற்பிப்பது.

வேதமாகிய புருஷனுக்கு 'சந்தோபிசிதம்' பாதமாகும். 'கற்பமும்' 'நிருத்தமும்' காதுகளாம். 'சிட்சை' மூக்காம். 'சோதிடம்' கண்களாம். வியாகரணம்' முகமாம். முத்தி இன்பப்பேற்றுக்கு முந்தினபடி மோனநிலை. இந்த மோனநிலை ஞானத்தின்முடிவாம். இதனாலன்றோ **ஔவைப்பிராட்டி** யாரும்,

"மோனம் என்பது ஞானவரம்பு"

என்றருளினர்.

இதுகொண்டே 'மௌன மோலி' 'அயர்வறச் சென்னியில்வைத்து ராஜாங்கத்தில் அமர்ந்தது' என்றார். வைதிக சைவத்தின் உன்னதநிலையை உண்மையாய் நூலாராய்ச்சியாலும், கேள்வியாலும், குரு உபதேசத்தாலும், அனுபவத்தாலும் உணர்ந்த பெரியாராதலின் வியந்து நயந்து மகிழ்ந்து வாயூறி ஆனந்தத்தொடு கூறுகின்றாராதலின் 'அழகிது அந்தோ' என்றார். 'அந்தோ' இது திசைச்சொல்; இரக்கக்குறிப்பு. ஈண்டு மகிழ்ச்சிக்குறிப்புப் பொருளில் வந்தது. 'அந்தோ' என்பது சிங்களச்சொல் என்பர் இலக் கணிகள். வேதசம்பந்தமாகிய சித்தாந்தசைவம் தன் இயற்கைகெடாமல், இயமம் ஆதிகாட்டி, ஆகந்தமாகி, சௌபான பக்ஷத்தைக்காட்டி, மந்திரம் முதலிய நூல்கள் எல்லா நூல்களும் வணங்க மௌன கிரீடத்தைச் சிரசில் வைத்து ராஜரீகத்தில் வீற்றிருந்தது | என்று கூறி அதன் பெருமையை நினைந்து ஆநந்தியா நிற்கின்றார் என்பதாம்.





சைவசமய மொன்றே மாந்தர்கட்கு இகபரப்பேற்றைத் தந்துதவுவது

அந்தோஈ ததிசயமிச் சமயம் போலின்
றறிஞரெல்லாம் நடுஅறிய அணிமா ஆதி
வந்தாடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கும் மற்றும் மற்றும்
இந்த்ராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன் றித் தாயகம்வே றில்லை இல்லை
சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்
தக்கநெறி இந்நெறியே தான்சன் மார்க்கம்.

(ப-ரை) அந்தோ - ஐயோ!, ஈது - இது, அதிசயம் - ஆச்சரியமானது (ஆதலால்), இ-இந்த, சமயம்போல் - (சைவ) சமயத்தைப்போல், இன்று- (வேறொரு) மார்க்கம் இல்லை, அறிஞர்-ஞானிகள், எல்லாம் - எல்லாரும், நடு- சத்தியமான நிலைமையிலிருந்து, அறிய-தெரியுங்கால், (ஆராய்ந்து பார்க்குங் கால்) அணிமா - அணிமாவும், ஆதி - மற்றைய சித்துக்களும், வந்து-கைகூடப் பெற்று, ஆடி-(சித்துக்கள் செய்து) விளையாடி, திரிபவர்க்கும் - திரிகின்றவர் களுக்கும், பேசா - பேசாது, மோனம் - மௌனநிலையை, வைத்து-தன்னிடத் துக்கொண்டு, இருந்த - இருந்தோர்களாகிய, மாதவர்க்கும் - பெரிய தபசை யுடையவர்களுக்கும், மற்றும் மற்றும்-பின்னும் பின்னும், இந்திராதி-இந்திரப் பட்டம் முதலிய, போகம்-சுகந்தரும் பதவி, நலம்-நலத்தை, பெற்றபேர்க்கும்- அடைந்த பிரம விஷ்ணுக்களுக்கும், இது - இந்தச்சைவநெறியை, அன்றி- அல்லாமல், தாயகம் - தாய்வீடு, வேறு - மற்றொன்றும், இல்லைஇல்லை-இல்லை யாகும் இல்லையாகும், சந்தான - சந்தான, கற்பகம்போல் - கற்பகத்தருவைப் போல, அருளை - திருவருளை, காட்ட-காட்டிடற்கு, தக்க-தகுதியாகிய, நெறி- மார்க்கம், இ-இந்த, நெறியேதான்-மார்க்கமே, சன்மார்க்கம் ஆகும் எ-று.

(வி-ரை) 'ஈததிசயம் இதில் சுட்டு நீண்டது. 'இச்சமயம்' என்றது வைதிக சைவத்தை. 'அறிஞர்' என்றது ஞானவான்களை. 'அறிஞர்' இதில் ஞகரம் பெயரிடைநிலை. 'நடுவறிய' என்றது உண்மைநிலையில் நின்று அறிதலை. தராசின் நடுமுள் நடுவே நிற்கின்றது இருதட்டும் சமமாக யிருக்கும் அளவும் நடுநிற்கும். ஒருதட்டில் கனம் ஏற்பட்டவுடன் அப்பக்கஞ் சாய்ந்து உண்மையைக் காட்டிவிடும் இதிலிருந்து பக்கபாதம் பேசாது சத்தியமாகப் பேசலை 'நடுப்பேசல்,' 'நடுச்சொல்லல், 'நடுநின்று பேசல்' என்பனவாதி ஏற்பட்டன. 'அணிமா ஆதி' என்றது அணிமா முதலிய அட்டமாசித்திகளை. 'அணிமாவாதி வந்தாடித் திரிபவர்' என்றது சித்தர் குழாத்தை. 'பேசாமோனம்' என்றது சும்மாயிருக்கும் மௌனிகளை. 'மாதவர்' மகாதபசை யுடையவர்களை. 'மற்றும் மற்று' மிகுதிப்பொருள் பற்றி அடுக்கிவந்தது. 'மற்று' என்றது சுட்டியதற்கு இனத்தை. 'இந்திராதி' என்றது இந்திரப்பட்டம், இந்திரப்பதவி முதலிய பதவிகளை. 'போகநலம்'

இது பண்புத்தொகை; போகமாகிய நலம் என விரியும். இந்திரன் பெற்ற இந்திரப்பட்டமும் அவன் இந்திரபோகமும், பிரமன்பெற்ற பிரமப்பட்டமும் அயன்சத்தியலோக வாழ்வும், விஷ்ணுபெற்ற விஷ்ணுபட்டமும், பதவியும், அவன் வைகுந்த வாழ்க்கையும் எல்லாம் இச்சிவசமயத்திருந்து சிவனைப் பூஜித்தபேறு என்பதே இப்பெரியார் கருத்து. இதனை,

> 'வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
> புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பும்
> அண்டர்தொழ வாழுன் இறுமாமப்பும் ஆலாலம்
> உண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்"

என்ற **திருவிளையாடற்புராணச் செய்யு**ளால் நன்கறியலாம்.

இதுபற்றியே நம் தாயுமானப் பெருந்தகையாரும் 'இந்திராதி போக நலம் பெற்றபேர்க்கு மிதுவன்றித் தாயகம் வேறில்லையில்லை' என்றருளிச் செய்தார். தாயகம் - தாய்வீடு. (அகம்-வீடு) இல்லை இல்லை - நிச்சயப்பொருள் தர அடுக்கிவந்தது. 'சந்தான கற்பகம்' இது பொன்னுலகத்துள்ள பஞ்ச தருக்களில் ஒன்று. பொன்னுலகத்தருக்கள் ஐந்தாவன:—அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவாம். இனி 'சந்தான கற்பகம்' என்பதை உம்மைத்தொகையாகக்கொண்டு 'சந்தான தருவையும்' 'கற்பகத்தருவையும்' போல் எனப் பொருள் கூறுதலும் அமையும். 'கற்பகம்' தன்னிடத்து இல்லாதிருந்தாலும் கற்பித்துக்கொடுப்பதாதலின் இத்தரு விற்குக் 'கற்பகம்' எனப் பெயர் எய்திற்று; இது காரணப்பெயர். 'நெறி' என்றது மார்க்கத்தை. மார்க்கம், சமயம் என்பன ஒரு பொருளின. 'இந்நெறியேதான்' இதில் 'தான்' நிச்சயப்பொருள் தந்துநின்றது. இதனைச் சிலர் அசை என்பர். 'சன்மார்க்கம்' வடசொல். நன்மார்க்கம், நல்வழி, நற்சமயம் என்பதாம். 'இந்நெறியே அருளைக் காட்டத்தக்கநெறி' என்றமையால் ஏனையநெறிகள் அருளைக் காட்டுவன அல்ல என்பதும், ஏனைய நெறிகள் எல்லாம் மருள்நெறிகள் என்பனவும் அருத்தாபத்தியாற் பெறவைத் ததும் ஆயிற்று. இதனை தான் பெற்றபேறு வையகம் பெறவேண்டும் என்னும் ஆர்வத்தாற் கூறுகின்றார் என்பது வெளிப்படை. இதனை இவரே பின்னோரிடத்தில்,

> "சைவ சமய மேசமயம் சமயாதீதப் பழம் பொருளைக்
> கைவந் திடவே மன்றுள் வெளிகாட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
> பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்ட முத்திதருந்
> தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் செகத்தீரே" எனவும்,

> 'காகமுறவு கலந் துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ
> போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா
> யேக வுருவாய்க் கிடக்குதையோ வின்புற் றிடநா மினியெடுத்த
> தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் செகத் தீரே"

எனக் கூறியது கொண்டுந் தெளியலாம்.



சைவசமயம்போல் வேறு சமயம் இல்லை. அணிமாவாதி சித்துகள் செய் வோர்க்கும், மௌனமாதவர்க்கும், இந்திராதி போகம் பெற்றவர்க்கும், இச்சமயத்தையன்றித் தாயகம் வேறில்லை. திருவருளைக் காட்டுதற்குத் தகுதி யாகிய மார்க்கம், இந்தச் சைவநெறியே சன்மார்க்கமென்று வியந்து நயந்து மகிழ்ந்து கூறுகின்றார் என்பதாம்.

11

பலசமயக்கொள்கைகளையும் சைவசமயமே கொண்டு
போலிவது

> சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
> சமயசங்கே தப்பொருளுந் தானென் றுகப்
> பன்மார்க்க நெறியினிலுங் கண்ட தில்லை
> பகர்வரிய தில்லைமன் றுள் பார்த்த போதங்
> கென்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன
> எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்
> கன்மார்க்க நெஞ்சமுள எனக்குந் தானே
> கண்டவுடன் ஆனந்தங் காண்ட லாகும்.

(ப-ரை) சன்மார்க்கம் - சன்மார்க்கம் என்று சொல்லப்பெறும் சைவசம யத்தின், ஞானமதின் - ஞானத்தினுடைய, பொருளும் - பொருளும், வீறு- (தாம்தாமே மேலென்று) இறுமாந்துள்ள, சமயம்-சமயநூல்களால், சங்கேதம்- நிச்சயிக்கப்பெற்ற, பொருளும்தான் - அர்த்தமுமே, ஒன்று ஆக - ஒன்றுபெற் றிருக்க, பன்மார்க்க - பல மார்க்கமாகிய, நெறியினிலும்-(சமய) வழிகளிலும், கண்டது-பார்த்தது, இல்லை - இல்லை, பகர்வு-சொல்லுதற்கு, அரிய-அருமை யான, தில்லை-திருத்தில்லை நகரிலுள்ள, மன்றுள்-திரு அம்பலத்தில், பார்த்த போது - தரிசித்தபோது, அங்கு - அவ்விடத்தில், என்மார்க்கம்-என்னவழி, இருக்குது - இருக்கின்றது, எல்லாம் - யாவும், வெளியே - வெளியே, என்ன- என்று, எ - எந்த (எல்லா), சமயத்தவர்களும் - சமயத்தினரும், வந்து - வந்து, இறைஞ்சாநிற்பர் - தொழுவர், கன்மார்க்க-கல்லின்தன்மைபெற்ற, நெஞ்சம்- மனம், உள - உடைய, எனக்குத்தானே-எனக்குங்கூட, கண்டவுடன்-பார்த்த மாத்திரத்திலே, ஆனந்தம் - இன்பம், காண்டல் ஆகும் - பெருகித்தோன் றும் எ-று.

(வி-ரை) எல்லாமார்க்கங்களிலும் சிறந்தமார்க்கமும் நல்லமார்க்கமுமாய் விளங்குவது சைவமார்க்கமாதலினால் 'சன்மார்க்கம்' என்றார். 'சன்மார்க்க ஞானமதின் பொருள்' என்றது 'பரமசிவத்தை' தருக்கும் பலப்பல சமயத்தில் குறிக்கப்பெற்ற பொருளாய்க் கடவுளும் பரமசிவமேயாம் என்பது வேதத் துணிபும் பெரியார் சித்தாந்தமுமாதலினால், 'வீறுசமய சங்கேதப்பொருளும் தானென்றாகப் பன்மார்க்க நெறியினிலுங் கண்டதில்லை' என்றார். எல்லா மார்க்கத்தாலுங்கொண்டாடுந் தெய்வமாகி அவர்கள் பாவித்த உருவாகி தெய்வமாகி எம் சிவபெருமான் அருள்புரிவன். ஆனால் அம்மார்க்கத் தெய் வங்கள் எம் சன்மார்க்கத்தெய்வமாகிய சிவமாகிவந்தருள வலியிலதாகும்

என்பது ஒருதலை. இறைவன் ஞானசொரூபன், ஞானமயன், ஞானப் பொருளாதலின், 'சன்மார்க்க ஞானமதின் பொருள்' எனக் குறித்தார் சங்கேதம் - குறி. குறிப்பொருள். இறைவன் எல்லாமாய் அல்லதுமாய் இருப்போன் ஆதலினால் 'சமய சங்கேதப் பொருளும் தானொன்றாக' என்றார். கடலுள் ஆறு அனைத்தும்வந்து அடங்குதல்போல் எல்லாச் சமயமும் இச் சைவசமயத்தில் அடங்குகின்றன என்றும், எல்லாச்சமயமும் இச் சைவசமயத்துக்குச் சோபானமாக அமைந்து இருக்கின்றன என்றும் முன்னர் கூறியதும் இதுகொண்டே என்பது தெள்ளிதின் அறியக்கிடக் கின்றன.

'பகர்வரியதில்லை' என்றது சொல்லரிய மேன்மைபெற்று விளங்குவது என்னும் பொருளது. இத் தில்லைத்தலத்தில் தில்லைமரங்கள் (ஒருவகை மரம்) அதிகமாகயிருந்த காரணம்பற்றி இத்தலத்திற்குத் 'தில்லை' என்னும் பெயர் எய்திற்று. 'மன்று' என்றது பொன்னம்பலத்தை. தில்லையம்பலத்தில் வெட்டவெளியே பட்டப்பகற்போற் காணக்கிடைப்பதன்றி எந்தரூபமாவது, ரூபாரூபமாவது காணக்கிடைக்கவில்லை. எல்லாம் அரூபமாகக் காண்கின்றது எச்சமயத்தார்களும் கடவுள் அரூபி என்பதை மறுக்க இயலாதாதலின், 'எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சாநிற்பர்' என்றார். இனி, கடவுள் ரூபாரூபம் உடையவரென்னும் கொள்கையினையுடைய மதத்தர் இருப்பின் அவர் எவ்வாறு வணக்கஞ்செய்வரென்னின், ரூபாரூபத்தை விளக்க சிவலிங்க ரூபம் பக்கத்தே அமைந்திருத்தல்கொண்டு அச்சமயத்தரும் 'வணங்குவ ரென்க. இனிக் கடவுள் ரூபமுடையவரென்பவர்க்கோவெனின், நடராஜ உருவம். உருவங் கடவுளுக்கு உண்டென்னும் மதத்தாரை வணங்கச்செய்யு மென்க. 'கன்மார்க்கம்' ஈண்டு மார்க்கம் என்பது தன்மை என்னும் பொருளது. ஈண்டு கடினத்திற்குக் கல் உவமானமாயிற்று. இவர் தன் நெஞ்சினக்க மின்மையை கல்லுவமைதந்து விளக்கினார். இவரே முன்னோ ரிடத்தும்,

> "கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
> கன்னெஞ்ச முருக விலையே"

என்றார். கல்லின் கடினமனத்தை, வன்றன்மையை குறிக்கவந்த **பெரியார்,**

> "வைகலும் நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
> மெல்லென்றல் சாலவரி தாகும்"

என்றார். **மணிவாசகப்பெருமானும்**

> "கன்னா ருரித்தென்ன வென்னையுந்தன் கருணையினாற்
> பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
> மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
> தென்னா தென்னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ"

என்றருளினார்.



'எனக்குந்தானே' என்றதன்கண்ணுள்ள உம்மை இழிவு சிறப்பும்மை. 'ஆனந்தம்' என்றது மகிழ்ச்சி. ஈண்டு தாயுமானவர் குறித்தது சிவானந்தத்தை. தில்லையம்பலத்தே அரூபமாக அமர்ந்தருளியிருக்கும் சிவபாஞ் சுடரைக் கண்டமாத்திரத்தே என்னை அறியாது எனக்குச் சிவானந்தம் உண்டாயிற்று என்பதை விளக்கவே 'ஆனந்தங் காண்டலாகும்' என்றார். 'ஆனந்தங்கண்டது' என இறந்தகாலத்தாற்கூறாது எதிர்காலத்தாற் கூறியதனாலே காணுந்தொறும் காணுந்தொறும் ஆனந்தம் உண்டாகிக்கொண்டே இருக்கின்றதென்பதை உணர்த்தாநின்றது. ஒருபொருளைப் புதிதாய் நோக்குவோர்க்கு நோக்கிய அப்பொழுது ஆச்சரியம் ஆனந்தம் உண்டாகும் பின் அடுத்தது நோக்க நேரின் அத்துணை ஆச்சரியமும் ஆனந்தமும் விளையா. 'பழகப்பழகப் பாலும் புளிக்கும்' என்றபடி பல்கால் நோக்கநோக்க உவர்ப்பும் ஏற்படலாம். ஆனால், நம் தில்லையம்பலத்து வெளியாகிற்கும் ஒளியைக் காண்டொறுங் காண்டொறும் ஆனந்தமே ஆகும் என்றதைக் குறித்தற் பொருட்டே 'ஆனந்தங்காண்டலாகும்' என்றார். 'சன்மார்க்கம்' இது வட சொல், 'சத்மார்க்கம்' என்பது மருவிவந்தது. 'ஞானமதின்' ஞானமது + இன் = ஞானமதின் 'ஞானமது' என்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. 'பன்மார்க்கம்' பல் + மார்க்கம் = பன்மார்க்கம். "லளவேற் றுமையிற் றடவுமல் வழி அவற்றோ டுறழ்வும் ; வலிவரி னாமெலி மேவி னணவு மிடைவரி னியல்பும் ஆகு மிருவழி யானு மென்ப" என்ற சூத்திரவிதிப்படி லகர ஒற்றின்முன் மெல்லின எழுத்தாகிய மகரம்வர லகரம் னகரமாகத் திரிந்தது.

'என்மார்க்கம்' ஈண்டு 'என்னமார்க்கம்' என்பது கடைகுறைந்து நின்றது. 'இருக்குது' என்பது 'இருக்கின்றது' என்பதன் மரூஉ. இறைஞ்சா நிற்பர் - இறைஞ்சுவர் என்னும் பொருளது. 'இறைஞ்சா' இது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கல் + மார்க்கம் = கன்மார்க்கம் இதுவும் பன்மார்க்கம் என்றது போன்றதே. 'நெஞ்சமுள' இதில் 'உள' என்பது உள்ள என்பதன் தொகுத்தல் விகாரம். சைவசமய ஞானப்பொருளும், நூல்களால் நிச்சயிக்கப்பெற்ற பொருளும் ஒன்றாகப் பொருந்தியிருக்க வேறு எந்தமார்க்கத்திலுங் கண்டதில்லை. தில்லையம்பலத்தில் என்னமார்க்கம் இருக்கிறது. எல்லாம் வெளியே என்று எல்லாச்சமயத்தவர்களும் வணங்குவர். கல்லையொத்த என் மனமும் அவ்வெளியைக் கண்டவுடனே உருகி ஞானானந்தங் கொண்டதென்கின்றார் என்பதாம். 12

### இறைவனே அகத்தும் புறத்தும் இருந்து அனைத்தையும் அசைவிப்பவன்

> காண்டல்பெறப் புறத்தினுள்ள படியே உள்ளுங்
> காட்சிமெய்ந் நூல் சொல்லும்பதியாங் கடவுளே நீ
> நீண்டநெடு மையுமகலக் குறுக்குங் காட்டா
> நிறைபரிபூ ரண அறிவாய் நித்த மாகி

வேண்டுவிருப் பொடுவெறுப்புச் சமீபந் தூரம்
விலகலணு குதல்முதலாம் விவகா ரங்கள்
பூண்டஅள வைகள்மனவாக் காதி யெல்லாம்
பொருந்தாம லகம்புறமும் புணர்க்கை யாகி.

(ப-ரை) காண்டல்பெற - கண்ணுக்குநேராய் (பிரத்தியக்ஷமாக என்பர் வடநூலார்), புறத்தில் - வெளியில், உள்ளபடியே - இருக்கும்விதமாகவே, உள்ளும்-அகத்தும் (உள்ளிடம்) (ஆகும் என்று) மெய்-உண்மையாகிய, காட்சி நூல்-அறிவு நூல்கள், சொல்லும்-விளம்பும், பதி-பதிப்பொருள், ஆம் - ஆகும், கடவுளே - தெய்வமே, நீ - தேவரீராகிய நீ, நீண்ட - நீண்டிருக்கும் (மிகுந்த என்னும் பொருள் கூறுவர் சாதுக்கள்), நெடுமையும் - நீட்சியும், அகலம்-அகலமும், குறுக்கும்-குறுக்கமும், காட்டா-தோற்றுவிக்காத, நிறை-நிறைந்த, பரிபூரணம் - முற்றுநிறைந்த முழு, அறிவாய் - ஞானமாகி, நித்தமாகி-சத்தியமாகி, வேண்டு-விரும்பப்படுவதாகிய, விருப்பொடு-விருப்பத்துடன், வெறுப்பு-(வேண்டப்படாததாகிய) வெறுப்பும், சமீபம் - அண்மையும், தூரம் - சேய்மையும், விலகல் - அகன்று நீங்கலும், அணுகல் - கிட்டிச்சேர்தலும், முதலாம்-முதலாகிய, விவகாரங்கள் - விவகாரங்களும், பூண்ட - தக்கனவாகக்கொண்ட, அளவைகள் - பிரமாணங்கள், மனம் - மனமும், வாக்கு - சொல்லும், ஆதி-முதலாகிய, எல்லாம் - எல்லாவற்றிற்கும், பொருந்தாமல் - தட்டாமல், அகம்-உள்ளும், புறம்-புறத்தும், புணர்கையாகி-கூடுவதுமாகி (தங்கியிருப்பது) எ-று.

(ப-ரை) இச்செய்யுளும் அடுத்தசெய்யுளும் பொருள்தொடர்ந்து முற்றுகின்றது. இது குளகம். உலகத்தை உற்றுநோக்குமிடத்து எல்லாம்அவன் அருளாகவும், எல்லாம் அவன் ஒளியாகவும், எல்லாம் அவன் செயலாகவும், எல்லாம் அவன் மகிமையாகவுங் காண்கின்றபடியால் 'காண்டல்பெறப் புறத்தினுள்ளபடியே' என்றார். இறைவன் எவ்வாறு எல்லாமாய் அல்லவுமாய் ஒளியாய் புறத்தே விளக்கி எல்லாப் பொருள்களிடத்தும் வியாபித்து இருக்கின்றானோ அவ்வண்ணமே உள்ளும் எல்லாத் தத்துவங்களுமாய், அல்லவுமாய், அத்தத்துவங்களை இயக்குகின்றவனுமாய் எல்லாவற்றுள்ளும் வியாபித்திருக்குந்தன்மையைச் சுவானுபூதியாற் கண்டறிந்தபடியே வேதநூலுங் கூறுகின்றபடியால் 'காண்டல்பெறப் புறத்தினுள்ளபடியே உள்ளுங் காட்சிமெய்ந்நூல் சொலும்பதியாங் கடவுளே' என்றார். சிவமே பசுக்கட்கெல்லாம் பதியாதலின் 'பதியாங் கடவுளே' என்றார். இறைவன் புறத்தும் அகத்தும் ஒரே படித்தாகக் காணப்படினும் அவன் சிற்றறிவினர்களாகிய பசுக்களால் முற்றுங் காணப்படுந்தன்மையன் அன்று என்பதனை விளக்கிக்காட்டவே 'மனவாக்குக்கு எட்டாதவன்' என்னும் பொருள்தரும் கடவுள் என்னும் பதத்தைக் காட்டி 'பதியாங் கடவுளே' என்றார். இறைவன் முற்றறிவன், நிறையறிவன், அறிவுமயனாதலின் 'பரிபூரண வறிவாய்' என்றார். பரிபூரணம் - மிக நிறைவு. இறைவன் ஈறிலானாதலினால் நித்தமாகி என்றார். இறைவன் விருப்பு வெறுப்பில்லாதவன் ஆதலினால் 'வேண்டு விருப்பொடு வெறுப்பு' என்றார். இதனையன்றோ திருவள்ளுவரும்,



"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

என்றார்

'சமீபந்தூரம்' என்றது சேய்மை, அண்மைகளை. 'விலகலணுகுதல்' என்றது எட்டல், கிட்டல்களை. அளவைகள் பொருளை நிச்சயித்தற்கு ஏற்படாதாதலின் 'பூண்ட அளவை' என்றார். ஈண்டு கூறியது தருக்க நூல்களிற் கூறிய அளவைகளை. 'மனவாக்காதி' என்பது இனம்பற்றிக் காயத்தையும் உடன்கூட்டி மனம், வாக்கு, காயம் ஆதியவற்றால் எனப்பொருள் கோடல் வேண்டிற்று. இறைவன் எல்லாவற்றினொடும், எல்லாச் சராசரங்களினொடுந் தோய்ந்தும் தோயாது இருக்குந் தனிப்பொருளாதலின் 'பொருந்தாம லகம் புறமும் புணர்க்கையாகி' என்றார். ஈண்டு இவ்வண்ணங் கூறியதால் அகண்டாகார சொரூபியாகிய இறைவனுக்கு விகாரம், விவகாரம் இல்லை என்பது உணரற்பாற்று. இறைவன் புறத்தும் அகத்தும் கலந்திருக்கும் பேரொளி என்பதை,

"அண்ட பிண்ட சராசரங்க ளனைத்தி னுள்ளுங் கலந்தானைக்
கொண்ட சோதி மயத்தானைக் குறுக்கல் நீட்டல் விருப்புவெறுப்
பண்டல் நீங்கல் விகாரம் அற்றே யென்றும் உளமுதலை
தொண்டர் தங்கள் தனிவாழ்வைத் தூய சிவத்தைப் போற்றுதுமே"

என்ற பாட்டானும் அறியலாம்.

'காண்டல்' இது அல் விகுதிபெற்ற தொழிற்பெயர். 'உள்ளும்' இது ஆகுபெயராய் மனத்தை, உள்ளிடத்தைக் குறித்தது. 'சொலும்' இது 'சொல்லும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'கடவுளே' இது விளிப்பெயர். 'காட்டா' எதிர்மறைப் பெயரெச்சம். இச்செய்யுள் குளகம். வருஞ் செய்யுளோடு பொருள் தொடர்ந்து நிற்கின்றது. புறத்தே உள்ளபடியே அகத்தும் ஆம் கடவுளே! நீ நீட்சி, அகலம், குறுக்கம் காட்டாது பரிபூரணமாகி நித்தமாகி விருப்பு, வெறுப்பு, சமீபம், தூரம், நீங்கல், சேர்தல் முதலிய விகாரங்கள் பொருந்தாமல் பிரமாணம், மனம், வாக்கு முதலியவைகளுக்கும் பொருந்தாமல் உள்ளும் புறமும் கலப்பதாகி இருக்கின்றாய் என்கின்றார். 13

காரியமாகியும் காரணமாகியும் நிற்பவன் கடவுளேயாம்

ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற
அமலமாய் நடுவாகி அனந்த சத்தி
யோகமுறும் ஆனந்த மயம தாகி
உயிர்க்குயிரா யெந்நாளும் ஓங்கா நிற்ப
மோகஇருள் மாயைவினை உயிர்கட் கெல்லாம்
மொய்த்ததென்கொல் உபகார முயற்சி யாகப்
பாகமிக அருளஒரு சத்தி வந்து [கொல்.
பதிந்ததென்கொல் நானெனுமப் பான்மை என்

(ப-ரை) ஆகிய - தோன்றிய, சற்காரியம் - நற்கருமங்களுக்குப் பொருந்திய, ஊகத்துக்கு-யுக்திக்கு, ஏற்ற - அமைந்த, அமலமாய்-மலரகிதமாய் (மலமற்றதாய், தூயதாய் என்றபடி) நடுவாகி - நடுநிலைமையுள்ளதாகி, அனந்தம்-முடிவில்லாத, சத்தி - சத்திகளின், யோகம் - புணர்ச்சி, (கூட்டம், சேர்க்கை) உறும்-அமைந்த, ஆனந்தமயம்-சுகரூபம், ஆகி-ஆகி, உயிர்க்கு - உயிரினுக்கு, உயிராய் - உயிராகி, எக்காலும் - எஞ்ஞான்றும், (எப்பொழுதும்) ஓங்காநிற்ப-உயர்ந்து நிற்க, மோகம்-அஞ்ஞானமாகிய, இருள்-இருட்டும், மாயை-(அதற்காதாரமாகிய) மாயையும், வினை-(அதனால் விளைவதாகிய) வினைகளும், உயிர்கட்கு எல்லாம் - எல்லா உயிர்களுக்கும், மொய்த்தது-வந்து நிறைந்ததற்கு, என்-காரணம்யாது?, உபகாரம்-தன்னால் செய்யப்பெறும் உதவியே, முயற்சியாக-உயிர்களின் பிரயத்தனமாக, பாகம் - பரிபக்குவத்தை, மிக-அதிகமாக, அருள - கருணையாற் கொடுத்தற்பொருட்டு, ஒரு-ஒரு, சத்தி - சத்தி, வந்து-வந்து, பதிந்தது - கூடியூன்றியதற்கு, என் - காரணம் யாது? நான் - நான், எனும் - என்று கூறும்படியான, அப்பான்மை - அந்த (அகங்காரத்) தன்மை, (உண்டாதற்கு) என்-காரணம் யாது? எ-று.

(வி-ரை) ஈற்றிலே நின்ற 'கொல்' அசைநிலையாக நின்றது. இதனை ஈற்றசை என்பர். இறைவன் செய்வதெல்லாம் ஆன்மாக்களின் துயரையகற்றி இன்புறுதற்கான அருட்செயல்களேயாதலினாலும், இறைவன் தூயவுடம்பினனாதலினாலும் இயல்பாகவே பாசபந்தங்களினின்றும் நீங்கினவனாதலினாலும் 'ஆகியசற் காரியவூ கத்துக் கேற்ற வமலமாய்' என்றார். இறைவன் எல்லா ஆன்மாக்களிடத்தும் பட்சபாதமின்றி அவ்வவ் ஆன்மாக்களின் வினைக்குத் தக்கபடி பயன் அருள்வோனாதலின் 'நடுவாகி' என்றார். இறைவன்பால் பல சத்திகள் தோய்ந்திருப்பதால் 'அனந்தசத்தி யோகமுறும்' என்றார். யோகம்-கூட்டம், சேர்க்கை. இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனச் சத்திகள் மூன்றுள. இவைகளினின்றும் அநேகஞ் சத்திகள் உதிக்கின்றன. இச்சாசத்தி - உயிர்க்கருணேசம். ஞானசத்தி - கருமங்களை அறிந்து ஊட்டல். கிரியாசத்தி - உலகங்களாக்கல். என மூன்று சத்திகளும் மூன்று தொழில்கொண்டுளார். இனி சத்திகளைப் பஞ்சசத்திகளாகப் பிரிப்பர். அவராவார்:—சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்பவைகளாம். சிற்சத்தி - உயிர்க்கு ஒளியாக நிற்பது. பராசத்தி - பிராணன் முதலிய வாயுவாக நிற்பது. இச்சாசத்தி - பஞ்சபூதமாக நிற்பது. ஞானசத்தி-ஐம்பொறியுணர்ச்சியாக நிற்பது. கிரியாசத்தி - மற்றை வினைத்துணையாக நிற்பது. இதன்றிச் சத்திகள் நாற்பத்திரண்டாகும்.

அவைவருமாறு:—அதிக்கிராந்த விந்துக பராசத்தி, அந்திக்கிராந்த விந்துக பராசத்தி, பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞான சத்தி, கிரியாசத்தி, சிவசத்தி, விந்துசத்தி, மனோன்மணி, மகேசுவரி, உமை, திருவாணி, ஆரணி, செனனி, உரோதயித்திரி, வித்தாரை, சுதாரை, போதினி, ஆப்பியாயினி, தீத்தை, சூக்குமை, சேயை, விபூதி, அமலை, அமோகை, வித்துதை, சருவதோமுகி, பத்திரை, பலப்பிரமதனி,



பலவிகாணி, கணும்பிகை, காளி, துர்க்கை, திருமால், சர்வபூத்தமனி, இரௌத்திரிவாமை, என்பனவாதியாம். இவையன்றிக் கோடானுகோடி சத்திகள் உள என்பர். இறைவன் வரம்பில் இன்பமுடையவனாதலினால், 'ஆனந்த மயமதாகி' என்றார். எல்லா உயிர்களிடத்தும் இறைவன் அந்தர்யாமியாக எள்ளுக்குள் எண்ணெய்போல், பூவில் மணம்போற்கலந்து ஜீவசாட்சியாக நிற்பவனாதலினால் 'உயிர்க்குயிராய் எக்காலும் ஓங்காநிற்ப'என்றார். சைவசித்தாந்தப்படி ஆன்மா அநாதி, இறைவன் அநாதியாதலின் 'உயிர்க்குயிராய் எக்காலும் ஓங்காநிற்ப' என்றார். 'எக்காலும்' என்ற சொல்லால் ஆன்மா அநாதியென்பதைக் குறிப்பித்தார். இதனானன்றோ,

"என்றுநீ அன்றுநான்"

என்றார் **பெரியாரும்.**

மாயை மோகத்தையூட்டி அறியாமையைச் செய்வதாதலினால் 'மோக இருண் மாயை' என்றார். இருள் என்றது அறியாமையை. மாயை-சுத்த மாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூன்றுள. மாயை ஐந்தெனவும் பிரிப்பர். பஞ்சமாயைகளாவன:—தமம், மாயை, மோகம், அவித்தை, அநிர்தம் என்பவைகளாம். மாயை ஜீவசைதன்னியத்தை மறைக்கையால் 'தமம்' எனப் பெயர்பெறும். மாயை ஜகரூபமான அக்கிராத்தோற்றத்திற்குக் காரணமாகையான் 'மாயை' எனப் பெயர்பெறும். மாயை விபரீதஞானத்தை உண்டாக்கையால் 'மோகம்' எனப் பெயர்பெறும்.. மாயை உணர்வை யழிக்கையால் 'அவித்தை' எனப் பெயர்பெறும். மாயை சத்துருபத்துக்கு அந்நிய மாகையால் 'அநிர்தம்' எனப் பெயர்பெறும். மாயையே உயிர்களின் வினைகளுக்குக் காரணமாகையால் மாயையோடு அதனால் எய்தும் வினையையுங் கூட்டி 'மோகவிருண் மாயைவினை யுயிர்கட்கெல்லாம் மொய்த்ததென்கொல்' என்றார். இதனானே இறைவன், ஆன்மா, மாயையெனும் மூன்றும் அநாதியென்னும் சைவசித்தாந்தக்கொள்கையை ஈண்டு பதியவைத்தார். இறைவன் திருவருளால் பக்குவநிலையுற்ற ஆன்மாக்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம், சத்திபாதம் ஏற்படுகின்றதாதலினால் 'உபகார முயற்சியாகப் பாகமிகவருள வொருசத்திவந்து பதிந்ததென்கொல்' என்றார். ஒருசத்தி என்றது அருட் சத்தியை. இதைத் திரோதானசத்தி எனவுங் கூறுவர். முத்திநிலை எய்தும் வரை நான் என்னும் அகங்காரம் எழுந்து நிற்குமாதலினால் 'நானெனு மப்பான்மை என்கொல்' என்றார்.

'அகங்காரம்' முப்பத்தாறுதத்துவங்களுள் ஒன்று; இது புத்திதத்துவத்தினின்றுந்தோன்றி, இவ்விடத்தே யாவர்தான் என்னோடு ஒப்பாவர், ஒருவரும் இல்லையென அகந்தைப்படுதற்குக்காரணமாய் வாயிற்காட்சிக்கு விஷயமாய்த் தோன்றியதொன்றனை இது இன்னதென்று புத்திதத்துவம் நிச்சயிக்கும்படியாக யான் எனவும், எனது எனவும் அதன்கண் ஒருப்பட்டு ஒருப்பட்டெழுந்து ஆன்மாவுடன் முதல்வனது ஆணையினாலே வேற்றுமையின்றி நிற்கும். அது குணவொற்றுமைபற்றி முத்திறப்படும். அவையாவன:—வைகரியாங்காரம், தைசதாங்காரம், பௌதிகாங்காரம் என்பவைகளாம். -இச்

செய்யுளில்வந்த 'கொல்' என்பது மூன்றும் ஐயப்பொருளில்வந்தன. 'கொல்' என்னும் இடைச்சொல் ஐயப்பொருள்தரும் என்பதனை,

"கொல்லே யையம் அசைநிலைக் கூற்றே"

என்ற நன்னூற் சூத்திரத்தால் நன்கறியலாம்.

கடவுளே! நீ மலரகிதமாய், நடுவுநிலையுள்ள சுகரூபமாய் உயிருக்குயிராய் நின்றிருக்க, எல்லா உயிர்களிடத்தும் அஞ்ஞானயிருளும், மாயையும், வினைகளும் வந்து அடைந்ததற்குக் காரணம்யாது? பரிபக்குவத்தை அளித்தற்பொருட்டு ஒரு சத்திவந்து கூடியதற்குக் காரணம்யாது? நான் என்ற அகங்காரம் உண்டாதற்குக் காரணம்யாது? என இறைவனை வியந்து வினவித்துதிக்கின்றார் என்பதாம். 14

அகங்காரமே ஆன்மாக்களிடத்துக் கிரியாரூபமாக விருந்து விஷயங்களைக்கொண்டு தொந்தரை புரிவது

நானென்னும் ஓரகந்தை யெவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானு வாகித்
தான்வந்து தொடருமித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்
ஊனென்றும் உடலென்றுங் கரண மென்றும்
உள்ளென்றும் புறமென்று மொழியா நின்ற
வானென்றுங் காலென்றுந் தீநீ ரென்றும்
மண்ணென்றும் மலையென்றும் வனம தென்றும்.

(ப-ரை) நான் என்னும் - நான் என்கின்ற, ஓர் - ஒரு, அகந்தை-அகங்காரமானது, எவர்க்கும் - எப்படிப்பட்டவர்களிடத்தும், வந்து - உதித்து, நலிந்த உடன்-(அவர்களை) துன்புறுத்தலும், சகமாயை - உலகமாயையானது, நானு ஆகி-பலபேதங்களுடையனவாகி, தான்-அந்த உலகமாயை, வந்து-வந்து, தொடரும் - பற்றிக்கொள்ளும், இத்தால்-இதனால், வளரும் - விருத்தியடைகின்ற, துன்பம்-துன்பமாகிய, சாகரத்தின்-சமுத்திரத்தின், பெருமை-பெருமையை, சாற்றவல்லார்-எடுத்துப்புகலும் வல்லமையை உடையவர்கள், எவர்-யாவர்?, ஊன் - மாமிசம், என்றும் - என்றும், உடல் - (மாமிசத்தால் ஆக்கப்பெற்ற) தேகம், என்றும் - என்றும், கரணம் - (உடலிலிருக்கும்) கரணங்கள், என்றும்-என்றும், உள் - அகம், என்றும் - என்றும், புறம் - புறம், என்றும்-என்றும், ஒழியா-நீங்காது, நின்ற-நின்ற, வான் - ஆகாயம், என்றும்-என்றும், கால்-காற்று, என்றும் - என்றும், தீ-நெருப்பு, நீர் - ஜலம், என்றும்-என்றும், மண்-பூமி, என்றும்-என்றும், மலை-மலைகள், என்றும்-என்றும், வனமது-காடு, என்றும்-என்றும் எ-று.

(வி-ரை) இந்தப்பாட்டுப் பின்வரும் பாடல்களோடு இயைந்து பொருள் முடிவுறுகிறது. இச் செய்யுள் குளகம். 'நான்' என்பது ஆணவமலத்தின் நடிப்பு. இவ் ஆணவமலம் விஞ்ஞானகலர் முதலாயுள்ள எல்லோரையும்பற்றி



நிற்பது. அளவிடற்கரிய எல்லா ஆன்மாக்களிடத்துங்கூடி அவர்களை மறைத்து நிற்பது. அவ்வான்மாக்களின் புண்ணிய பாவங்களுக்கு ஈடான தோர் உடல்களைக் கடவுளின் காருண்ணியத்தாற் பொருத்தி, அவன், அது ஆகிய உடம்பென்னத்தான் என்னத் தோன்றாமற் பிரிவற்று நிற்கச்செய்து, அவ்வுடம்போடு கூடுகையில் எண்ணிறந்த போகங்களை முயற்சியாற் புசிப்பித்து, அந்தப் புசிப்பாலுண்டாகிய இதாகிதங்களாலே மீளவும் புண்ணிய பாவங்களை அர்ச்சித்துக்கொண்டு அவற்றால் இறந்து பிறந்து வருந்துமாறு செய்வது இவ்ஆணவமலமே. இவ் ஆணவமலம் எண்ணிறந்த ஆன்மாக்களோடுங்கூடி நின்று மறைத்துந் தானொன்றாய் இருப்பதாய், ஆன்மாக்களுடைய பக்குவாபக்குவங்கட்குத் தக்கதாக அவரவர்களிடத்திலே மறைந்து நின்று, அந்த ஆன்மபோதகங்களின் மீட்சியிலே நீங்குவதாய் இருக்கிற தன் காரியமான எண்ணிறந்த சத்திகளையுடையதாய், செறிந்த இருளெனும்படி நின்று ஆன்மாக்களுக்கு மிக்க மறைப்புகள் செய்வதாய், செம்பினுடன்கூடி யிருக்கப்பெற்ற களிதமானது அந்தச்செம்பு உள்ளவன்றே அதனை மறைத்து உள்ளும் புறம்புங் கலந்து அவ்வெட்டுவாய்தோறும் நின்றாற்போல, ஆன்மபோதத்தோடுங் கலந்து மறைந்து கேவலத்தில் ஆவாரக சத்தியாலும், சகலத்தில் அதோநியாமிக சத்தியாலும், அஞ்ஞான நிகழ்ச்சிக்குக் காரணமாய் நின்ற அநாதிமலமாய், ஆன்மாவின் இச்சா ஞானக்கிரியைகள் சற்றுஞ் சீவியாதபடி மறைத்து நிற்பது. இது முத்திப்பேறுபெற்ற நிலையிலேதான் நீங்குவது. முத்தி நிலையிலும் நீங்குவதன்று மறைந்து நிற்பது என்பர் அநுபோகிகளாதலின் 'நானென்று மோரகந்தை எவர்க்கும் வந்து நலிந்தவுடன்' என்றார். நானென்னும் ஓர் அகந்தை வந்தவுடன் துன்பங்களெல்லாம் உண்டாகுமாதலினால் 'அகந்தை எவர்க்கு வந்து நலிந்தவுடன்' என்றார்.

'சகமாயை' என்றது அசுத்தமாயையை. 'அசுத்தமாயை' என்பது நாசம் இல்லாததாய், உருவம் இல்லாததாய், ஒன்றாய், சகல சகத்திற்கும் ஒரு காரணமாய், சடமாய், சர்வ வியாபியாய், பத்திக்குப் பரிக்கிரக சத்தியாய், ஆன்மாக்களுக்குத் தனுகரணம் உண்டாக்குவதாய் மலங்களில் ஒன்றாய், விபரீத உணர்வைச் செய்வதாய் உள்ளது. ஆழ, நீள, அகலங் காண முடியாததாய், இறைவன் திருவருளாலன்றிக் கரைகாண முடியாததாய்ப் பிறவித்துன்பம் இருத்தலின், 'துன்ப சாகரத்தின் பெருமையெவர் சாற்ற வல்லார்' என்றார். இதனானன்றே திருவள்ளுவரும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்"

என்றார்.

'உடல்' என்றதில் பொறி, புலன், கன்மேந்திரியங்கள் அடங்கலின் 'கரணம்' என்பதனை வேறுபிரித்து உரைத்தார்போலும். 'கரணம்' என்றது அந்தக்கரணங்களை. அந்தக்கரணங்களாவன:—மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்காம். 'மனம்' பற்றும், 'புத்தி' நிச்சயிக்கும், 'சித்தம்' சிந்திக்கும், 'அகங்காரம்' கொண்டெழுப்பும்.

'ஓர் அகந்தை' என்றதில் 'ஓர்' என்பது தனிமைப்பொருளில் வந்தது. என்னை? துன்பத்தை விளைப்பதற்கு அகந்தைபோல்வ தொன்றில்லையாதலினால். 'எவர்க்கும்' என்றதன் ஈற்றும்மை முற்றும்மை. 'தொடருமித்தால்' 'இதால்' என்பது இத்தால் என விரித்தல் விகாரம் பெற்றது. இடையே தகரவொற்றுத் தோன்றி நின்றது. 'சாகரம்' இது கடலுக்குக் காரணப்பெயர். சகரபுத்திரர்களால் தோண்டப்பெற்றது என்ற பொருளது. 'எவர் சாற்றவல்லார்' இது விடைதழுவிய வினு. எவரும் வல்லர் அல்லர் என்னும் பொருள் குறித்து நின்றமை காண்க. 'ஊனென்றும்........மலையென்றும்' என்றதன்கண்ணுள்ள உம்மைகள் எண்ணுப்பொருளில் வந்தன. 'மொழியாநின்ற' 'மொழியா' இது செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சம். 'வமைது' இதில் ஈற்றில் நின்ற அது பகுதிப்பொருள்விகுதி. இச்செய்யுள் குளகம் அடுத்த கவிகளைத் தொடர்ந்து பொருள்முற்றுகின்றது. உயிர்களை 'நான்' என்னும் அகங்காரம் அவர்களுக்குள்தோன்றி அவர்களை வருத்தியவுடன் உலகமாயையானது பலபேத உருவாகித்தோன்றும். இதனுல் வரும் துன்பம் சொல்லத்தரமன்று. மாமிசம், உடல், அந்தக்கரணம், அகம், புறம், ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், மண்ணென்றும், மலையென்றும், காடென்றும் தோற்றங்கள் உண்டாகின்றனவெனக் கூறுகின்றனர் என்பதாம்.

15

அகங்காரதத்துவமே தூலசூக்குமாதிகளுக்குங்
காரணமாவ தென்க

மலைமலையாங் காட்சிகண்கா ணுமை யாதி
மறப்பென்றும் நினைப்பென்றும் மாயா வாரி
அலையலையா யடிக்குமின்ப துன்ப மென்றும் [கத்
அவைவிளைக்கும் வினைகளென்றும் அதனைத் தீர்க்
தலைபலவாஞ் சமயமென்று தெய்வ மென்றுஞ்
சாதகரென் றும்மதற்குச் சாட்சி யாகக்
கலைபலவா நெறியென்றுந் தர்க்க மென்றுங்
கடலுறுநுண் மணலெண்ணிக் காணும் போதும்.

(ப-ரை) மலைமலைஆம் - மலைமலையாகும், காட்சி - காணப்பெறுங் காட்சிகளும், கண்-கண்ணுக்கு, காணுமை-தோன்றுதன, ஆதி - முதலாகிய, மறப்புயென்றும்-மறதியென்றும், நினைப்புயென்றும் - நினைத்தல்யென்றும், மாயையாகிய, வாரி-கடலுள், அலைஅலையாய்-அலைகள் அலைகளாய், அடிக்கும்-வந்து தாக்குகின்ற, இன்பம்-இன்பமும் (சுகம்), துன்பம் என்றும் - துன்பமும் என்றும், அவை - அவைகளை, விளைக்கும் - தோற்றுவிக்கின்ற, வினைகள் என்றும் - கர்மாக்கள் என்றும், அதனை - அவைகளை, தீர்க்க - ஒழிக்க, தலை-முதன்மைபெற, பல - பலவாகிய காரணங்களால், ஆம் - உண்டாகிய, சமயம் என்றும்-சமயங்கள் என்றும், தெய்வம் என்றும் - (அந்தச்சமயங்களுக்கு ஏற்ற) தெய்வங்கள் என்றும், சாதகர் என்றும் - அப்பியாசிகள் (அனுஷ்டிப்போர்)



பழகுவோர் என்றும், அதற்கு-அந்தப் பழக்கத்துக்கு, சாட்சியாக - சாட்சிபூதமாக, கலைபல - பலகலை, (கலை-சாஸ்திரங்கள்) களால், ஆம் - சொல்லப்பெற்ற, நெறியென்றும்-மார்க்கங்களென்றும், தர்க்கம் என்றும் - நியாயவாதம் (தர்க்க சாஸ்திரம்) என்றும், கடல் - கடலில், உறும்-இருக்கும், நுண்-நுண்ணிதாகிய, மணல்-மணலை, எண்ணி - கணக்கிட்டு, காணும்போதும் - அளவு காணுவதிலும் எ-று.

(வி-ரை) இப்பாட்டு குளகம் அடுத்த செய்யுளைத் தொடர்ந்து நிற்கின்றது. நானென்னும் அகந்தை தோன்றியவுடன் மாயை தோன்ற அதன் காரியமாக தனுகரணபுவனங்கள்முதலிய கட்புலனும் பெரும் பொருள்கள் தோன்றுகின்றன என்றார். தோன்றுபொருளனைத்தும் பருப்பொருளும் எண்ணிறந்தனவாகவும் இருத்தலின் 'மலைமலையாங் காட்சி' என்றார். மாயையாற் றோன்றுவன காட்சிப் பொருள்களாகிய பருப்பொருளும் நுண்பொருட்கள் மாத்திரமோ கட்புலனுகதனவும் சூக்குமமானவுமாகிய பொருள்களுந் தோன்றுகின்றன என்பதைக் கூறவே 'கண்காணுமையாதி' என்றார். கண் காணுத பொருளையும் எண்காணும் என்பது ஈண்டு அறியற்பாலது. எண்-எண்ணம், நினைவு. இனி அதனினுஞ் சூக்குமமாகிய மறப்பையும் நினைப்பையும் கூறினுர். உலகில், மறப்பு நினைப்பும், இன்பதுன்பமும் மாயாகாரியம் என்பது வெளிப்படை. இதனுனே 'மறப்பென்று நினைப்பென்றும்' எடுத்தோதினுர். இவைகள் ஒன்றன்பின் ஒன்றாக மாறி மாறித் தோன்றிக்கொண்டிருப்பதாலும் எல்லையின்றி யிருத்தலாலும், முடிவு காணப்படாமையாலும் 'மாயாவாரி அலை அலையா யடிக்கும்' என்றார்.

'வாரி' நீண்டது என்னுங் காரணம்பற்றிச் சமுத்திரத்திற்கு வந்த பெயர். 'அலை' போவதும் வருவதுமாய் அலைவது என்னுங் காரணம்பற்றித் திரைக்கு வந்தபெயர். 'அலை அலை' என்பது மிகுதிபற்றி அடுக்கிவந்தது, இன்பத்தைப்பெறவும் துன்பத்தைப்போக்கவும் வினைபுரியவேண்டி யிருத்தலினுலும், இன்பமும் துன்பமும் வினைகளால் வருவதாதலினுலும் 'அதை விளைக்கும் வினைகள்' என்றார். இன்பதுன்பங்கட்குக் காரணமாகிய வினை ஒழிந்து இருப்பதே இன்பமென்று அதனைத் தவிர்க்கப் பற்பல கூட்டத்தார் தலைக்குத்தலை சமயங்களைக் கற்பியாநிற்கின்றார் என்பதை 'தலைபலவாஞ் சமயமென்றும்' என்றார். சமயங்கள் ஏற்படின் அவ்வச் சமயங்களுக்கு தெய்வங்கள் ஏற்படவேண்டியிருத்தலின் 'தெய்வமென்றும்' என்றார். தெய்வம் ஒன்று ஏற்படின் அத்தெய்வ வழிபாடுடையவர் இருக்கவேண்டுமாதலின் 'சாதகரென்றும்' என்று கூறினுர். சமயமும் அதற்குத் தெய்வமும், அதனை வழிபடுவோரும் ஏற்படின் அவைகளை ஒழுங்குபெற உணர்த்தற்கு நூல் வேண்டப்படுதலின் 'கலைபலவா நெறியென்றும்' என்று கூறினுர். சமயம் பலவாகவும், தெய்வம் பலவாகவும், வழிபடுவார் பலவாகவும், நூல் பலவாகவும் ஏற்படின் தர்க்கம் கிளம்புமாதலின் 'தர்க்கமென்றும்' என்றார். இவ்வாறு ஏற்பட்ட துன்பங்கள் இத்துணை என எண்ணிமுடியாது பரந்து கிடத்தலின் 'கடலுறுநுண் மணலெண்ணிக் காணும்போதும்' என்றார். கடலின் கண்

ளுள்ள நுண்ணியமணலை எண்ணினும் எண்ணமுடியாதபடி எண்ணிறந்து நிற்கின்ற அல்லல்கள் எனவரும் பாட்டைத்தொடர்ந்து பொருள் செல்கின்றது. இச்செய்யுள் குளகம், வருஞ்செய்யுளைத் தொடர்ந்து பொருள் செல்கின்றது. மிகுதிகாட்ட கடல்நுண்மணலைக் குறித்தார். ஆற்றுமணலைக் குறித்தலுமுண்டு. இதனை,

"ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மினென
வறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்று
மெங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடி யோ
னன்னீர் பஃறுளி மணலினும் பலவே"

என்ற **புறநானூற்றுச் செய்யுளா**னும் அறிக.

'காட்சி' இது காணப்படுவது என்னும் பொருளது. காண் என்னும் பகுதியடியாகப் பிறந்தபெயர். இச் செய்யுளின்கண் வந்த உம்மைகள் அனைத்தும் எண்ணும்மைகள். 'மாயாவாரி' இது மாயையாகிய வாரி என விரிதலின் இது பண்புத்தொகை. 'அதைத் தீர்க்கும்' என்றதில் அது என்றது வினைகளை. 'அது' என்றது சாதி ஒருமை. அகங்காரத்தால் முற்பாட்டிற்சொன்ன காட்சிப்பொருளேயன்றிக் கண்ணுக்குப் புலனாகாத மறதி, நினைப்பு, இன்பம், துன்பம், வினைகள் என்பனவும் சமயங்கள், தெய்வங்கள், அப்பியாசிகள், மார்க்கங்கள், தர்க்கம் என்பனவும் கடலின் நுண்மணலினும் அதிகம் எண்ணிக்கைக்கு அடங்காது தோன்றுகின்றன என்கின்றார் என்பதாம்.

10

வினைதந்து வினைவிளைவாகிய இவ்வுடலம் ஆரியன் வெள்ளத்தால் அழிந்து மறைவதாம்

காணரிய அல்லலெல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையுமதைக் கட்டோ டேதான்
வீணினிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தையெனக் காணவொரு விவேகங் காட்ட
ஊ ணுறக்க மின்பதுன்பம் பேரு ராதி
ஒவ்விடவும் எனைப்போல வுருவங் காட்டி
கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங்
கொள்கையென அருள்மௌன குருவாய் வந்து.



**(ப-ரை)** காண் அரிய-எல்லைகாண்டற்கு அரிதாகிய, அல்லல்-துன்பங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், கட்டுக்கட்டாக - கூட்டங் கூட்டமாக, விளையும்-உற்பத்தியாகும், அதை-அத்துன்ப உற்பத்திகளை, கட்டோடே-அடியோடே, வீணினில் - ஒன்றும் ஆகாதபடி, கர்ப்பூரமலை - கர்ப்பூரமலையானது, படுதீ-பெருந்தீ (கொடியநெருப்புக்கு) பட்ட-உள்ளாகி அழிந்த, விந்தை-ஆச்சரியம், என-போல, காண-தோற்றமாக, ஒரு விவேகம்-ஒப்பற்ற ஞானத்தை, காட்ட-தமியேற்கு உணர்த்துதற்பொருட்டு, ஊண் - உணவும், உறக்கம் - தூக்கமும், இன்பமும் - சுகமும், துன்பம் - துக்கமும், பேர்-பெயரும், ஊர்-ஊரும், ஆதி-இதுபோன்ற மற்றவைகளும், ஒவ்விடவும் - பொருந்தியிருக்கவும், எனை-என்னை, போல - ஒப்ப, உருவம் - மனுவுஷ உருவம், காட்டி - (தோன்றுமாறு) தோன்றி, கோணற - மாசு அகல (குற்றம் ஒழிய) ஓர் - ஒரு, மான் - மானை, காட்டி-காண்பித்து, மானை-(கட்டிலுள்ள) மற்றோர் மானை, ஈர்க்கும்-கைப்படுத்தும் (பிடிக்கும்), கொள்கை - தன்மை என - போல, அருள் - அருள்மிகுந்த, மௌனகுருவாய்-மௌனகுருவாகி, வந்து-எழுந்தருளிவந்து எ-று.

**(வி-ரை)** இச்செய்யுள் குளகம் அடுத்த செய்யுளைத் தொடர்ந்து நிற்கின்றது. கடலின் நுண்மணலைக் கணக்கிட்டுக் காணினும் காணுதற்கரிதாகிய அல்லல் என முன்பாட்டின் இறுதியும் இப்பாட்டின் முதலுஞ் சம்பந்தப்பட்டு நின்றது. 'கடலுறு நுண் மணலெண்ணிக் காணும்போதும் காணரிய அல்லல்' எனப் பொருள்முடிபு கொள்க. அல்லல் - இருள்மயமானதும் இன்பம் அல்லாததும் எனப் பொருள் குறித்த பெயர். (அல்லல்-துன்பம்) மிக்க இருளாக இருப்பது எனவும், நன்மையல்லாதது நன்மையல்லாதது எனவும், இருண்டது இருண்டது எனவும் இதற்குப் பொருள் கூறுவாருமுண்டு. 'கட்டுக் கட்டாக' இது கூட்டங் கூட்டமாக என்னும் பொருளது. வீணினில் - வீணாகுமாறு என்றும் பொருளது. அல்லல் அனைத்தும் ஒழிந்தேக என்னுங் கருத்துக்கொண்டு 'கர்ப்பூரமலை படுதீப்பட்ட விந்தையென' என்று கூறினார். 'விவேகம்' என்பது ஞானம் ஈண்டு உபதேச ஞானத்தைக் குறித்தது. ஒரு-ஒப்பற்ற. ஈண்டு தனிமைப்பொருள் தந்தது. 'காட்ட' ஈண்டு செய்ய என்னும் பொருளது. உபதேசங் காட்டலாவது உபதேசஞ் செய்தலாம். 'ஊண் உறக்கம்' என்றதனால் எம்போலவந்த பரமாசிரியனும் உண்டும் உறங்கியும் நின்றார் என்பது குறித்தார். உண்ணுவது 'ஊண்' 'உறக்கம்' என்பதில் 'அம்' தொழிற்பெயர் விகுதி. 'ஆதி' என்றமையால் சாதி, குலம், மரபு, சமயம், தொழில், பண்பு முதலியனவுங் குறித்து நின்றது. 'எனைப்போல' என்றது மனிதவடிவத்தோடு என்பதாம்.

'காட்டி' என்பது ஈண்டு தோன்றி என்னும்பொருளது. 'பெருநெருப்புக்கு ஈரமில்லை' என்றபடி பரமாசாரியனின் திருவடித்தரிசனமே பிராரத்துவ கன்மங்களையும் ஆகாமிய சஞ்சிதங்களையும் போக்கியருளும். சஞ்சிதம் நீங்கியவுடனே ஞானமுதிக்கும். ஞானோபதேசஞ் செய்தவுடனே தன்னையுந் தலைவனையுங்கண்டு தத்துவாதீதப்பொருளை யுணர்ந்து முத்திப்பேரின் புறவுறுதலின் 'கர்ப்பூரமலைப் படுதீப்பட்ட விந்தையெனக் காண'

என்றும் 'ஒரு விவேகங் காட்ட' எனவுங் கூறினர். 'பரமாசாரியன்' ஒருவனுக்கு வாய்த்தல் அவன் பண்ணிய நல்வினைப் பயனாலேயே எய்தும். இதனை, 'குருவும் பெண்டும் கொடுத்து வாய்த்தவனுக்கு வாய்க்கும்' என்னும் பழமொழியாலறியலாம். இதுபற்றியன்றே இத்**தாயுமானவரும்**,

> "மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
> வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்றார்.

ஆன்மாவின் பக்குவநோக்கி இறைவனே கன்றைநினைந்து கனிந்தோடி வரும் பசுப்போல அருள்புரிய பரமாசாரிய வடிவத்துடன் வந்தருள்கின்றான் என்பது நூலோர், மேலோர் துணிபு என்பதும் ஈண்டு அறியற்பாலதொன்றாம். வேடர் காட்டில் மான்பிடிக்கும்போழ்து அதன் இனமாகிய தன்னிடம் பழகிய மற்றோர் மானைக்காட்டிப் பிடிப்பர். அதுபோல, இறைவன் யான் மருளாவண்ணம், வெருளாவண்ணம் எனைப்போல உருவங்காட்டி மானிடச்சட்டை சாத்தி வந்தாண்டுகொண்டான் என்பார்.

> "ஊனுறக்க மின்பதுன்பம் பேரு ராதி
> யொவ்விடவு மெனைப்போல வுருவங் காட்டிக்
> கோணறவோர் மான்காட்டி மானை யீர்க்குங்
> கொள்கையென வருள்மௌன குருவாய் வந்து" என்றார்.

இறைவன் சற்குருவாக எழுந்தருளிவந்தது தன் நயங்கருதி அன்று அருளால் என் நயங்கருதியே என்பது தோன்ற 'கோணற' அற. கோண்-கோணல், மனக்கோட்டம். இறைவன் அருளாலே, எனக்கு அருள்செய்த அருள்வடிவனாகிய மௌனதேசிகனைத் தோன்றினனென்பது விளக்கவே 'அருள்மௌன குருவாய்வந்து' என்றார். அகங்காரத்தால் விளையும் அளவு காண்டற்கரிய துன்பங்களையெல்லாம் ஒழித்து அருள, ஞானோபதேசஞ் செய்ய என்போல மானுடச்சட்டைசாத்தி ஓ இறைவனே! மௌனகுருவாய் வந்தருளினை என்கின்றார் என்பதாம்.

17

உடல், பொருள், ஆவி ஆகிய மூன்றினையும் அர்ப்பணஞ் செய்தவனுக்கு ஆரியன் பரமசுகமருள் வரும்

> வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை
> வசமெனவே அத்துவா மார்க்க நோக்கி
> ஐந்துபுலன் ஐம்பூதங் கரண மாதி
> அடுத்தகுணம் அத்தனையும் அல்லை அல்லை
> இந்தவுடல் அறிவறியா மையுநீ யல்லை
> யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று
> பந்தமறும் பளிங்கனைய சித்து நீஉன்
> பக்குவங்கண் டறிவிக்கும் பான்மை யேம்யாம்.



(ப-ரை) வந்து - (அருளொடு அடியேனிடம்) வந்து, என்-என்னுடைய, உடல்-காயம் (தேகம்,) பொருள்-சொத்து (உடைமை) ஆவி-உயிர், மூன்றும்-ஆகியமூன்றையும், தன்கை-தனதுகைக்கு, வசமெனவே - வசமானது என ஏற்றுக்கொண்டு, அத்துவாமார்க்கம்-அத்துவாமார்க்கத்தை, நோக்கி-கண்டு, ஐந்து-ஐந்தாகிய, புலன் - புலன்களும், ஐம் - ஐந்தாகிய, பூதம் - பூதங்களும், கரணம்-அந்தக்கரணங்கள், ஆதி-முதலாக, அடுத்த - சேர்ந்த, குணம்-குணங்கள், அத்தனையும்-எல்லாவற்றையும், அல்லைஅல்லை-நீயல்லைநீயல்லை, இந்தவுடல்-இந்ததேகமும், அறிவும்-அறிவும், அறியாமை-அறியாமையும், நீயல்லை-நீயல்லை, யாதொன்று பற்றில்-யாதொரு பொருளைக்கொள்ளினும், அதன்-அந்தப்பொருளின், இயல்பாய்-தன்மையாய் (மயமாய்,) நின்றும் - நின்றும், பந்தம் - (அந்தப்பற்றியபொருளின்) தொடர்பு, அறும்-தன்னிடத்துகொண்டிலாதிருக்கும், பளிங்கு-ஸ்படிகத்தை, அனைய - போன்ற, சித்து - சித்துப் பொருள், நீ-நீயாகயிருக்கின்றனை, உன்-உன்னுடைய, பக்குவம் - பக்குவத்தைக், கண்டு-பார்த்து, அறிவிக்கும் - தத்துவத்தையுணர்த்தும், பான்மையேம்-தன்மையையுடையேம், நாம்-நாமாக யிருக்கின்றோம்; எ-று.

(வி-ரை) இச்செய்யுளும் அடுத்தசெய்யுளைத் தொடர்ந்து பொருள் முற்றுகின்றது ஆதலின் இச்செய்யுளுங் குளகமே. உடைமையையும், உடலையும், உயிரையும் மறந்து இறைவனையே நினைந்திருக்கும் அன்பர்க்கே இறைவன் பரமாசாரிய உருவம்பூண்டு அவர் பக்குவமறிந்து அனுக்கிரகிப்பன். அவர் உயிர், உடல், உடைமைகளைத் தனதாகக்கொண்டு அவர்க்கு அருள் புரிவன். இதனுனே, 'வந்தெனுடல் பொருளாவி மூன்றுந் தன்கை வசமெனவே' என்றார். ஈண்டு,

> "அன்றே யென்றன் ஆவியும் உடைமை எல்லாமுங்
> குன்றே யனையாய் என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ"

என்ற **மணிவாசகர்** வாக்கையும்,

> "அன்பாய் உடல்பொருள் ஆவியெலாம் ஏற்றெனக்
> கின்பார் குருவா இனிதுவந்தே—துன்பெல்லாம்
> போக்கிச் சிவானந்தப் புத்தமுத மீந்தசெல்வன்
> நோக்குசிவ மாங்கண் ணுதல்"

என்ற **பெரியார்** வாக்கானும் உணரலாம்.

'மூன்றும்' என்றதன் கண்ணுள்ள உம்மை முற்றும்மை. 'அத்துவா' என்பது பக்குவான்மாக்களை பாகதியடைவிக்கை காரணமாக பரமாசாரியன் உபயோகிக்கும் வழி. இவ் அத்துவா ஆறுவிதப்படும். அவையாவன:—மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்பனவாம். பரமாச்சரிய வடிவாய் வந்தருளிய இறைவன் அனுக்கிரகிக்கும்பொழுது 'நான்' என்றது யார் என்பதை அப்பக்குவான்மாவுக்கு உணர்த்துவான். அவ்வாறு உணர்த்தும்பொழுது புலன் நீயல்லை, பூதங்கள் நீயல்லை, கரணம் நீயல்லை, குணங்கள் நீயல்லை, இந்தவுடல்

நீயல்லை, அறிவு நீயல்லை, அறியாமை நீயல்லை எனப் புலவன்முதல் அறியாமையீறாகவுள்ளன நீயல்லை இதெல்லாம் அல்லாததாய் அதற்கு அப்பாற்பட்டதாய் இவைகளையெல்லாம் உடையாதாயுள்ள பொருள் ஒன்றுண்டு. அதுதான் நீ என்று உபதேசித்து ஆத்மதரிசனஞ் செய்துவைப்பன். அதனையே ஈண்டு 'ஐந்துபுலனைம்பூத ... ... ... நீயல்லை' என்றார்.

ஆன்மா சித்துப்பொருள். ஆன்மா இல்லையென்று சொல்லுகிறது உண்டாகையால் சூனியம் என்பது இன்றி, என்னுடைய தேகம் என்று ஞானம் வருகையால், தேகமும் அல்லாமல், இந்திரியங்களை ஒழிந்து இருக்கிற சொற்பனவத்தையிலும் அறிகையால் இந்திரியங்களும் அல்லாமல் சுழுத்தி, துரியம், துரியாதீதங்களிலே அந்தக்கரணங்களும், பிராணவாயுவும் அற்றிருக்கையால், அந்தக்கரணங்களுக்கும் பிராணவாயுவிற்கும் அன்னியமாய், விழித்தபோது பண்ணின காரியக்குறைகளைப் பண்ணவும், அறியவுஞ் செய்கையால், க்ஷணிகனும் அல்லாமல், தேகத்திற்கு அப்புறத்திலேயிருக்கிற பதார்த்தத்தைக் கிரகிக்கையால் அணுபரிமாணனும், மத்தியபரிமாணனும் அல்லாமல், தானே ஒன்றையும் அறியமாட்டாமல் இருக்கையால் சுதந்தரனும் அல்லாமல், சுகதுக்கங்கள் பலவகைப்பட்டிருக்கையால் ஒருத்தனும் அல்லாமல், சுகதுக்க பலத்தைப் புசிக்கையாய் அ கருத்தாவும் அல்லாமல், நித்தியனாகி, வியாபகனாகி, மலத்தினாலே தடைப்பட்ட ஞானசொரூபியாய், அநேகனாகிக் கருத்தாவாய், அசுதந்தரனாகிச் சார்ந்ததன் வண்ணமாய் இருப்பவன்.

இந்த ஆன்மா அந்தக்கரணங்களுக்கு அன்னியமாக யிருந்தாலும், இராஜாவும் மந்திரியுங் கூடி இருக்குமாப்போல அந்தக்கரணங்களுடன் விடயபோகநிமித்தங் கூடிக்கொண்டிருப்பன். மலத்தால் தடைப்பட்ட ஞானசொரூபியாகையால் பஞ்சாவத்தையைப் பொருந்தியிருப்பன். இப்படி ஒரு ஆத்துமா உண்டென்பதற்குப் பிரமாணம் யாதென்னில் தொழிலைப் பொருந்தியிருக்குந் தேகாதிகள் சடமாகையால் கடாதிகளைப்போலத் தாமே சேட்டியா. இவைகளைச் சேட்டிக்கிறவனெவனோ அவனே ஆத்துமா. ஆத்துமாக்களுக்குக் கேவல, சகல, சுத்தமென்று முறையே ஆணவம், மாயை, சிவசத்திகளால் மூன்றவத்தைவரும்; என்பனவாதி ஆன்மஞானத்தைப் பரமாச்சரியன் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணர்த்துவன். இதனையே 'யாதொன்று பற்றினத னியல்பாய்நின்று பந்தமறும் பளிங்கனைய சித்துநீ' என்று கூறியருளினார்.

ஆன்மாவை உணர்த்திய ஆசிரியன் பதியாகிய தன்னை உணர்த்துகின்றார். பதியாவது:—ஒன்றாய், பரிபூரணமாய், அறிவுக்கு அறிவாய் நின்மலமாய், உயிர்க்குயிராய், குறியுங்குணமுமில்லாததாய், அருவும், உருவும், அருவுருவுமாய், இவை அல்லாததுமாய், அகண்டிதமாய், ஆனந்தமாய், விளங்குவது. இவ்வாறு விளங்கும் பரமசிவம் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் பஞ்சசத்திகளாகிய அருளும்,



பின்னமின்றிச் சூரியனுங் கிரணமும்போல் ஒன்றியிருக்கும். இவ்வாறு இருக்கிற பரமசிவம் ஆன்மாக்களை இரட்சிக்கும்பொருட்டு அருவமாகிய சிவம், சத்தி, நாதம், விந்து நான்கும், அருவுருவமாகிய சதாசிவம் ஒன்றும், உருவமாகிய மகேச்சுரன், உருத்திரன் இருவரும் இவர்கள் அதிகாரத்தால் நடக்கும் பிரமவிஷ்ணுக்கள் இருவரும் ஆக ஒன்பது மூர்த்திகளுமாய் உபாதானத்திரயங்களைக்கொண்டு சிருஷ்டித்தும், திதித்தும், சங்கரித்தும், திரோபவித்தும், அநுக்கிரகித்தும் இங்ஙனம் பஞ்சகிருத்தியங்களைச் செய்யாநிற்கும். எவ்வாறு இயற்றும் என்னில் தன்மை, முன்னிலை, படர்க்கையாக நின்றியற்றும். தன்மையாவது:—பரிபூரணமாக இருக்கை. முன்னிலையாவது:—இச்சா ஞானக்கிரியைகளாய் இருக்கை. படர்க்கையாவது;—மனம், புத்தி, அகங்காரம், சித்தம், உள்ளம் ஆக ஐந்து; அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம், ஆக ஐந்து; பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், ஆக ஐந்து ஆகிய பதினைந்து பிராகாரமாயிருக்கை.

பிரபஞ்சம் இவ்விடங்களில் எவ்வாறு காரியப்படுமெனின், இவற்றுள் கரணங்களை அக்கரங்கள் செலுத்த, அக்கரங்களை மூர்த்திகள் செலுத்த மூர்த்திகளை இச்சாஞானக்கிரியைகள் செலுத்த இஞ்ஞானம் காரியப்படும். இவ்வாறு பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும்பொழுதும் அந்தச்சிவம் அதிற்றாக்கற்று நிற்கும். இந்தப்பதியே ஆன்மாக்களின் பரிபக்குவமுணர்ந்து மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல மானிடச்சட்டை சாத்திவந்து பரமகுருவாகி அவ்வான்மாவைச் சிடனாகக்கொண்டு அவனை அவனுக்குணர்த்தித் தன்னையுங்காட்டித் தான் இன்னாரென்பதையும் அறிவித்து ஞானோபதேசஞ் செய்து முத்திநிலை யருளுவன். அதனையே இவர் 'உன்பக்குவங்கண்டறிவிக்கும் பான்மையே யாம்' என்றார். பளிங்கு தூய்மையும் ஒளியும் வெண்மையும் துல்லியமும் உடையதாய்நின்று தன்னைச் சார்ந்தபொருளின் நிறத்தைக்காட்டுதல்போல் ஆன்மாவும் தன்னைச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்பன் என்பதனை உணர்த்தவே 'பந்தமறும் பளிங்கனைய சித்துநீ' என்றார். குருசெய்தருளும் நன்றியைப் பாராட்டிக் கூறுகின்றார். வந்து என் உடல் பொருள் ஆவியை ஏற்று அத்துவா மார்க்கத்தால் ஐம்புலன்களும் பஞ்சபூதங்களும், அந்தக்கரணங்கள், குணங்கள், ஆகிய இவைகளெல்லாம் நீஅல்ல. இந்தத் தேகமும், அறியாமைகளும் நீயல்ல. சார்ந்ததன்வண்ணமாய் நின்று பற்றறும் பளிங்கில்போன்ற சித்துநீ. உன் பக்குவம்கண்டு அறிவுறுத்தும் தன்மையாம் என்று அனுக்கிரகிக்கின்றார் என்பதாம். 18

ஆன்மா அறிவாக நிற்பினும், முதல்வனோடு
மாறுபாடுடையதென்கிறார்

அறிவாகி ஆனந்த மயமா யென்றும்
அழியாத நிலையாகி யாதின் பாலும்
பிறியாமல் தண்ணருளே கோயி லான
பெரியபரம் பதியதனைப் பெறவே வேண்டின்

நெறியாகக் கூறுவன்கேள் எந்த நாளும்
நிர்க்குணநிற் குளம்வாய்த்து நீடு வாழ்க
செறிவான அறியாமை எல்லாம் நீங்க
சிற்சுகம்பெற் றிடுகபந்தந் தீர்க்க வென்றே.

(ப-ரை) அறிவு ஆகி - சித்துஆகி, ஆனந்தமயமாய் - ஆனந்தவுருவாகி, என்றும் - எந்தக்காலத்தும், அழியாத - கெடாத, நிலையாகி-சத்தாகி, யாதின் பாலும் - எதனிடத்தும், பிரியாமல் - விலகாமல் (அப்பாலாகாமல்), தண்-குளிர்ந்த, அருளே - அருளையே, கோயில் ஆன-கோயிலாகப்பெற்ற, பெரிய-பெரிதாகிய, பெரும்-உயர்வான, பதியதனை-பதிப்பொருளை, பெற-அடைய, வேண்டின் - (நீ அடைய) விரும்பினல், நெறியாக - ஒழுங்காக, கூறுவன்-உபதேசிப்பேன், கேள் - கேட்பாயாக, எந்த - எந்த, நாளும்-காலத்தும், நிர்க்குணம் - நிர்க்குணப்பொருள், நிற்கு - உனக்கு, உளம் - மனத்தினிடத்து, வாய்த்து-அமைந்திருக்கப்பெற்று, நீடு - நெடுங்காலம், வாழ்க - வாழக்கடவை, செறிவான - நெருங்கியிருந்த, அறியாமை - அஞ்ஞானம், எல்லாம்-முழுதும், நீங்க - அகன்றொழிய, சிற்சுகம் - ஞானனந்த சுகத்தை, பெற்றிடுக - பெறக்கடவை, என்று-என்று சொல்லி எ-று.

(வி-ரை) இச்செய்யுள் குளகம் அடுத்த செய்யுளைத் தொடர்ந்து நிற்கிறது. இறைவன் அறிவுமயன், ஞானசொரூபி, அறிவுக்கறிவாய் இருப்பவனுதலினல் 'அறிவாகி' என்றார். ஆன்மாவும் அறிவுடைப்பொருள் தானேயெனின் அறியாது கடாயினை. ஆன்மாவின் அறிவு சிற்றறிவு. இறைவன் அறிவு பேறறிவு. ஆன்மாவின் அறிவு மலத்தால் மறைப்புண்ணும். இறைவன் அறிவு என்றும் விளங்கியிருப்பது. ஆன்மா உணர்த்த உணர்வது. இறைவன் ஒருவர் உணர்த்தாது தானே உணர்வோன். ஆன்மா இறைவனல் உணர்த்தப்பட நிற்போன் இறைவன். இறைவன் ஆன்மாவுக்கு உணர்த்துவோன் என்பதறிக. இறைவன் இன்பசொரூபன், எல்லாவுயிர்க்கும் இன்பு அருள்வோன் ஆதலின் 'ஆனந்தமயமாய்' என்றார். இறைவன் நித்தியன், ஆதியந்த மில்லாதோன் ஆதலின் 'என்றும் அழியாத நிலையாகி' என்றார். இறைவன் அண்டபிண்ட சராசரங்கள் எல்லாவற்றிலும் வியாபித்துத் தோய்ந் தோயாது இருப்பவனுதலின் 'யாதின்பாலும் பிரியாது' என்றார். இறைவன் அருள் சத்தியோடு கூடியிருப்பவன் ஆதலினாலும் அருள்மயன் ஆதலினாலும் அருளின்றி அவனில்லை, அவனின்றி அருளில்லையாதலாலும், 'தண்ணருளே கோயிலான' என்றார்.

இறைவன் பெரியபொருளிற் பெரியபொருள் ஆதலினாலும் இறைவனிலும் பெரியபொருள் இல்லை ஆதலினாலும், இறைவனே உயர்ந்த பொருள் ஆதலினாலும் இறைவனே சர்வான்மாக்களுக்கும் பதியாதலினாலும் அவனைத் தவிர்த்து வேறு பதி இல்லை ஆதலினாலும் 'பெரியபரம் பதியதனை' என்றார். 'நெறியாக' என்பது முறையாக என்ற பொருளது. இனி சீடனுக்குக் குரு உபதேசிக்கும் நெறியாக, மார்க்கமாக எனினுமாம். இறைவன் குணமிலி,



குணத்திற்கு அப்பாற்பட்டவனுதலினல் 'நிர்க்குணம்' என்றார். 'நிர்க்குணம்' இது வடசொல். குணம் இல்லாதது என்னும் பொருளது. நிர்க்குணம் என்றது ஈண்டு இறைவனைக் குறித்தது. 'உளம்' இது 'உள்ளம்' என்பதன் தொகுத்தல்விகாரம். உள்ளம் என்றது மனத்தைக் குறித்தது. இது உள்ளிடமாக யிருப்பது என்னும் பொருளது. இனி உள்ளுதற்கு (நினைத்தற்கு) கருவியாக யிருத்தலின் 'உள்ளம்' என்று பெயரியற்று என்பர். 'நீடுவாழ்க' இது வியங்கோள். சிவானந்தப் பேறுபெற்று நெடுங்காலம் வாழ்கவென்ற பொருளது. 'செறிவான அறியாமை' என்றது அஞ்ஞானத்தை. இந்த அஞ்ஞானம் ஆணவமலத்தின் காரியமாகையால் 'அறியாமை' என்றது ஆகுபெயராய் ஆணவமலத்தைக் குறித்தது. 'எல்லாம்' என்றது சேடமின்றி முற்றும் ஒழிதலை. மலநீக்கம் எய்தியதும் ஆன்மாக்கள் சிவானந்தம் கூறுவர். சிவானந்தம் உற்றவர் உலக பாசபந்தங்களினின்றும் விடுபட்டு வேதனையற்று இருப்பர். இதுவே வீடு மோக்ஷம் எனப்பெறும் இதனையே தாயுமானவர் 'சிற்சுகம் பெற்றிடுக பந்தந் தீர்கவென்றே' என்றார். 'சிற்சுகம்' இது சித்+சுகம் என்னும் இரு வடசொற்களின் சந்தி. சித்தோடுகூடிநிற்கும் சுகம், சித்தாகி நிற்குஞ் சுகம் எனப் பொருள் விரியும். 'பெற்றிடுக' இதுவும் வியங்கோளே. 'என்றே' என்றதில் ஈற்று 'ஏ' ஈற்றசை. சித்தாகி ஆனந்த வடிவாகி சத்தாகி எதனிடத்தும் நீங்காமல் அருளையே கோலாகப்பெற்ற பதிப்பொருளைப் பெற விரும்பினையாயின் ஒழுங்காய்ச் சொல்லுகிறேன். எக்காலத்தும் நிர்க்குணப்பொருள் உனக்கு மனத்தின்கண் பொருந்தப் பெற்று நெடுங்காலம் வாழக்கடவை. அஞ்ஞானம் முற்றும் ஒழிய ஞானசுகத்தினைப் பெறக்கடவை என்றன் முதலாய குரு உபதேசங் கூறுகின்றார் என்பதாம்.

19

## இறைவன் ஸர்வ சூனியமாகவிருக்குந் தன்மையனென்பதை விளக்கல்

பந்தமறும் மெய்ஞ்ஞான மான மோனப்
பண்பொன்றை அருளியந்தப் பண்புக் கேதான்
சிந்தையில்லை நானென்னும் பான்மை யில்லை
தேசமில்லை காலமில்லை திக்குமில்லை
தொந்தமில்லை நீக்கமில்லை பிறிது மில்லை
சொல்லுமில்லை இராப்பகலாந் தோற்ற மில்லை
அந்தமில்லை ஆதியில்லை நடுவு மில்லை
அகமுமில்லை புறமுமில்லை அனைத்து மில்லை.

(ப-ரை) பந்தம் - பந்தங்கள், அறும் - அற்றுப்போதற்குக் காரணமான, மெய்ஞ்ஞானம்-உண்மையறிவு, ஆன-ஆகிய, மோனம்-மோனமென்னும், பண்பு-தன்மை, ஒன்றை - ஒப்பற்றதாகிய வொருநிலையை, அருளி-(தமியேனுக்குத்) தந்தருளி, அந்த-அந்த, பண்புக்கு-நிலைமைக்கு, சிந்தை-மனம், இல்லை-இல்லை, நான் - (அகங்காரத்தால் எழும்) நான், என்னும் - என்று கூறும், பான்மை-

தன்மை, இல்லை இல்லை, தேசமில்லை-ஊரில்லை, காலம்இல்லை-காலமில்லை, திக்கும் இல்லை - திக்குகளும் (திசை) யில்லை, தொந்தம் இல்லை - சம்பந்தம் இல்லை, நீக்கம் இல்லை-அகற்சி (பிரிவு) இல்லை, பிரிதும் இல்லை - இவைகளல்லாத மற்றையவைகளுமில்லை, சொல்லும் இல்லை-வார்த்தையுமில்லை, இரா-இராத்திரியும், பகலும் - பகற்காலமும், ஆம் - ஆகிய, தோற்றம்-காட்சிகளும், இல்லை-இல்லை, அந்தம் இல்லை-ஈறும் (முடிவும்) இல்லை, ஆதி இல்லை-ஆரம்பமும் (முதலும்) இல்லை, நடுவும் இல்லை - மத்தியும் (இடையும்) இல்லை, அகமும் இல்லை-உள்ளுமில்லை, புறமும் இல்லை - வெளியுமில்லை, அனைத்தும்-யாவும், இல்லை-இல்லை எ-று.

(வி-ரை) இச்செய்யுளும் குளகம்; வருஞ் செய்யுளோடு பொருள் தொடர்ந்து நிற்கின்றது. 'பந்தம்' என்றது மாயா பந்தத்தை. ஞானத்தின் முடிபு மோனமாதலினால் 'மெய்ஞ்ஞானமானப் பண்பு' என்றார். இதனை 'மோனமென்பது ஞானவரம்பு' என்ற திருவாக்கால் அறியலாம். 'சிந்தையில்லை' என்றது மனமிறந்த நிலையை. 'சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே' என்ற இத் தாயுமானவர் வாக்காலேயே அறியலாம்.

'நானென்னும் பான்மை' என்றது ஆணவமலத்தை. சொல்லில்லை என்றது பேசாநிலைமையைச் சிந்தைமுதலாகப் புறமீறாகச் சொல்லப்பெற்றவை இல்லை என்றவர் அனைத்துமில்லை என்றது சொன்ன தொழியச் சொல்லாதன எவை எவையுண்டோ அவைகளனைத்தும் இல்லையென்பதாம். பானருளால் சிவானந்தப்பேறாகிய முத்தியின்பத்தைப் பெற்றார்க்கு ஆனந்தமயனாகிய இறைவனையன்றி வேறு யாதுந் தோற்றுதல் இல்லையாகையால் 'சிந்தைமுதல் எல்லாம் இல்லை' என்றார். இதனை,

"பண்ணிய புண்ணிய நண்ணிய பெற்றியாற்
கண்ணுதற் பெரியன் திண்ணிய கையையன்
இருக்கை விட்டே யுருக்கமா வெழுந்து
திருக்கிளர் கங்கைப் பெருக்குறை சடையை
அரவை மழுவைக் காத்தொளிர் மானை
விரவிய வெருக்கைத் தாக்கதற் றன்னை
இறைத்த கடல்விடங் கறைத்த களத்தை
மறைத்து மானுட நிறைத்து வந்தே
கண்ணிறை யமுதாய் உண்ணிறை குருவாய்த்
தண்ணருள் நோக்கம் எண்ணுறக் காட்டித்
தலைமிசைக் கரமலர் நிலைபெறச் சூட்டி
உலைவிலா ஞானம் அலைவறச் செவிவாய்
ஊட்டிய பின்னை நீட்டிய பொறிபுலன்
காட்டிய கரணம் சேட்டிடு மாணவம்
கேட்டிடு பேதம் திட்டிடு மாசை
கோட்டிய பூதம் கூட்டிய வினைகள்



நாட்டிய உலகம் தாட்டிக உரைகள்
போட்டிசெய் யுள்ளம் ஓட்டிய வுணர்வு
வாட்டிடு மிரவு மூட்டிடு பகலே
பூட்டிய உயிரே ஈட்டிய எல்லாம்
இல்லை இல்லை இல்லை எனவாய்
வல்லை ஒழிந்தது ஒல்லென வம்மா!
இன்பச் சிவச் சுடர் தன்னில்
மன்னியா னந்த மயமா யினனே"

என்ற **அகவற்பா** நன்கு விளக்காநிற்கும். இன்னும்,

"வான்கெட்டு மாருதமாய்ந் தழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என்உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

என்னும் **மணிவாசகர் திருவாக்கா**லும் அறியலாம்.

மற்றும் இவ்வனுபோகநிலையையும் அதன் இரகசியங்களையும் ஆசிரியர்பால் கேட்டுணரும் முறையிற் கேட்டுணர்க. குருமுகமாகக் கேட்டு நிட்டைகூடினர்க்கே இதன் இரகசியம் விளங்கும். மோனநிலையை அருளிச்செய்து இதற்கு மனமில்லை; நான் என்பதில்லை; தேசம், காலம், திக்கு, தொடர்பு நீக்கம், மற்றும் யாதும் இல்லை; வாக்கில்லை; முடிவில்லை; முதல், நடு, முடிவு, இல்லை; அகம்புறம் இல்லை; எல்லாம் இல்லையாகும் எனக் குரு உபதேசித்தமையைக் கூறுகின்றார் என்பதாம். 20

ஏகான்மவாதியை மறுத்து, எல்லாம் அநாதிநித்தியாகுமெனல்

இல்லையில்லை யென்னினொன் றுமில்லா தல்ல
இயல்பாகி என்றுமுள்ள வியற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதா யான்றா னென்னத்
தோன்றாதெல் லாம்விழுங்குஞ் சொரூப மாகி
அல்லையுண்ட பகல்போல அவித்தை யெல்லாம்
அடையவுண்டு தடையறவுன் அறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா னாகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குந் தானே.

(ப-ரை.) இல்லைஇல்லை - இல்லையில்லை, என்னின் - என்றுகூறின், ஒன்றும் - (மேற்கூறியவைகள்) ஒன்றும், இல்லாதது - இல்லாதிருப்பது, அல்ல-அல்ல, இயல்பு-இயற்கை, ஆகி-ஆகி (இவ்வியற்கையும்,) என்றும்-எந்தக் காலத்தும், உள்ள - உள்ளதாகிய, இயற்கை-இயற்கை, ஆகி - ஆகி, சொல்-கூறற்கு, அரிய - அரிதாகிய, தன்மையதாம் - பண்பையுடையதாகி, யான்-யான், தான்-தான், என்ன-என்று, தோன்றாது - காணப்படாமல், எல்லாம்-எல்லாவற்றையும், விழுங்கும்-விழுங்கும் (வாய்மடுக்கும், கௌளீகரிக்கும்,

உட்கொள்ளும்,) சொரூபம்ஆகி-பெருவடிவமாகி, அல்லை-இருட்டை, உண்ட-விழுங்கிய, பகல்-சூரியனை, போல - ஒப்ப, அவித்தை-அஞ்ஞானம், எல்லாம்-முழுவதையும், அடைய - ஒன்றுபட (ஒன்றுசேர) முழுவதையும், உண்டு - விழுங்கி (அழித்து,) தடை-தடைகள், அற-நீங்கிப்போக, உன்-உன்னுடைய, அறிவைத்தானே-அறிவையே, வெல்ல-வென்று, உண்டு-உண்டு (விழுங்கி,) இங்கு-இவ்விடத்து, உன்னையும் - (விவகரித்தற்குரிய ஆன்மாவாகிய) உன்னையும், தானாக - (பரமான்மாவாகிய) தானாக, கொண்டு-தனக்கு சொந்தமாகக் கொண்டு, பேசாமை-மோனநிலையானது, வேதகமாய்-உன்னுடைய நிலையை வேறாக்குவதாய், விளக்கும்-உனக்கு விளக்கிக்காட்டும் எ-று.

(வி-ரை) குரு உபதேசானுக்கிரக அனுபவங் கூறியருளுதல் இப்பாட்டின் பொருளாம். மேற்கூறியவைகளெல்லாம், இல்லைஇல்லை என்று சொல்லினும் அவைகள் இல்லாது போகவில்லை. அவ்வாறு கூறின் சூன்யவாதமாக முடியுமாதலினால் அவையனைத்தும் அறிவுள்ஒடுங்கும் என்பார் 'இல்லைஇல்லை யென்னினொன்று மில்லாததல்ல வியல்பாகி என்றுமுள்ள வியற்கையாகி சொல்லரிய தன்மையதா யான்றானென்னத் தோன்றுமெதல்லாம்' என்றார். இல்லைஇல்லை என்னினும் அவையனைத்தும் காரணகாரிய சம்பந்தத்தால் சற்காரியமாகிக் காரியம் காரணத்தொடுங்க, காரணம் அறிவுள் ஒடுங்க அறிவு ஆனந்தத்தொடுங்கும் என்க. ஆனந்தம் மௌனயோகத்தால்வந்த ஆனந்தம். இதே சிவானந்தம். சிவானந்தத்திடுபட்டு ஆனந்தமயமாய் அத்துவிதமாயுள்ள ஆன்மா ஆனந்தமாகவே நிற்கும். ஆனந்தம் எம் சிவமென்பதீண்டறியற்பாலதொன்றாம். இந்த நிலையில் ஆனந்தமயமாகிய சிவத்தைத் தவிர்த்து வேறு காணப்பெறுதென்பதாம். இதன் இரகசியத்தை சற்குருபாற் கேட்டு ஆனந்தநிலையில் நின்று அனுபவதாலறிந்திடுக. துக்காகாரமாகிய உலகும், உலகப்பொருள்களும், தத்துவங்களும் ஆனந்தத்து ஒடுங்கி ஆனந்தமயமாய்க் காணுதலை, இருளும் ஒளியும் ஒரே இடத்ததாயினும் இருள்மிக்கவழி ஒளி அதனுள் அடங்கிநிற்றலையும் ஒளி மிக்கவழி இருள் அதனுள் அடங்கிநிற்றலையும்போல் ஆனந்தானுபவம் மிக்கவிடத்துத் துக்கசம்பந்தமான பிரபஞ்சமனைத்துந் தத்துவங்களனைத்தும் அவ்வானந்தத்திற் கரந்தமையை 'எல்லாம் விழுங்குஞ் சொரூபமாகி அல்லையுண்ட பகல்போல அவித்தையெல்லாமடையவுண்டு' என்றார். 'அவித்தை' என்றது அஞ்ஞானம், அறியாமை. அஞ்ஞானமே, அறியாமையே துக்கம் ஞானமே அறிவே இன்பம். அறிவு உதயமாகஉதயமாக அஞ்ஞானந் தேய்ந்துவரும். அஞ்ஞானம் தேயத்தேய அறிவு பிழம்பாகும். அவ்வறிவு பேரறிவாகி ஆனந்தமயமாய் நிற்கும் அவ்வானந்தமே சிவம். இதனையே,

> "தடையற வுன்னறிவைத் தானே வெல்லவுண்டிங்
> குன்னையுந் தானாகக் கொண்டு"

என்றார். இதனை,

> "இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
> தெழுகின்ற ஞாயிறே போன்று
> நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
> னீயலாற் பிறிதுமற் றின்மை
> சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
> திருப்பெருந் துறையுறை சிவனே
> யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
> யாருன்னை யறியகிற் பாரே"

என்றருளிய **மணிவாசகர்** திருவாக்கானும் நன்கறியலாம்.

ஈண்டு சிற்றறிவாகிய ஆன்மாவின் அறிவும் ஆன்மாவும் பேரறிவில் பெரியபொருளில் அப்பும் உப்பும்போலக் கலந்துநிற்றலையே இப்பெரியார் 'தடையற வுன்னறிவைத் தானே வெல்ல வுண்டிங் குன்னையுந் தானாகக் கொண்டு' என்றதால் விளக்கினார் ஆறுகடலுட்கலந்தகாலத்து ஆறு என்னும் நாமம்போய்க் கடல் என்றானதுபோல ஆன்மா சிவத்தொடு கலந்தகாலை சீவான்மநாமம் போய்ப் பரமான்மசொரூபம் பெறுகின்றது. அப்பரமான்ம சொரூபம் பெற்ற ஞான்றே பேசாமையாகிய மௌனம் தோன்றாநிற்கின்றதாதலின் 'வேதகமாய்ப் பேசாமை விளங்குந்தானே" என்றருளிச்செய்தார். இல்லைஇல்லை என்றதால் ஒன்றும் இல்லாதது அல்ல இயற்கையும் என்றும் உள்ள இயற்கையுமாகிச் சொல்லற்கரிதாய் யானென்று காணப்படாமல் எல்லாவற்றையும் விழுங்கும் சொரூபமாகி இருளைக் கெடுக்கும் கதிரவன் போல் அஞ்ஞானத்தை முற்றும் விழுங்கித் தடையின்றி உன்அறிவைவென்று ஈங்கு உன்னையுந் தானாகக்கொண்டு மோனநிலையானது உன் நிலையை வேறுபடுத்துவதாய் உனக்கு விளங்கும் என்று குரு அனுக்கிரகித்தது என்பதாம். ()

## ஆன்மா மேலான சிவஞானத்தினாலே சத்தியப்பொருள் அசத்தியப்பொருள் பேதங்காணல்

> தானான தன்மயமே யல்லா லொன்றைத்
> தலையெடுக்க வொட்டாது தலைப்பட் டாங்கே
> போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
> போயொளிப்ப தல்லாது புலம்பவே றின்றாம்
> ஞானாகா ரத்தினொடு நேய மற்ற
> ஞாதுருவும் நழுவாமல் நழுவி நிற்கும்
> ஆனாலு மிதன்பெருமை யெவர்க்கார் சொல்வார்
> அதுவானா லதுவாவர் அதுவே சொல்லும்.

(ப-ரை) தான் - (எல்லாப்பொருள்களும்) தானே, ஆன - ஆகிய, தன்-தன்னுடைய, மயம்-உருவமே, அல்லால்-அன்றி, ஒன்றை-பிறிது ஒருபொருளையும், தலையெடுக்க - கிளம்ப (தோன்ற), ஒட்டாது - விடாது, தலைப்பட்டு-கிளம்பி, அங்கே - அந்தவிடத்தே, போனாலும் - செல்லினும், கர்ப்பூரம்-கர்ப்பூரமும், தீபம்-அதன் சுடரும், போல-ஒப்ப, போய் - சென்று, ஒளிப்பது-ஒன்றுபட்டு மறைவது, அல்லாது-அல்லாமல், புலம் - (ஜீவான்மாவாகிய உன்)

அறிவுக்கு, வேறாய் - வேறுபட்டதாய், இன்றாம் - இல்லையாகும், (மேலும்) ஞானம் - ஞானத்தின், ஆகாரத்தினொடு - ரூபத்தோடு, ஞேயம் - ஞேயமும் (காட்சிப்பொருள்), மற்ற - இவையல்லாத, ஞாதுருவும் - ஞாதுருவும் (காண்பான்), நழுவாமல் - நீங்காமல், நழுவி-நீங்கி, நிற்கும்-நின்றிருக்கும், ஆனாலும்-அவ்வாறாயினும், இதன் - இதனின், பெருமை - பெருமையை, ஆர் - எவர், எவர்க்கு-யாருக்கு, சொல்வார்-கூறும் ஆற்றலுடையவர் யாவர், அது - அது, ஆனால் - ஆகிவிட்டால், அது - (தாம் முன்னிருந்த தன்மை தோன்றாமல்) அதுவே, ஆவர் - ஆகிவிடுவர், அதுவே - அந்தப்பொருளே, சொல்லும்-அதன் சிறப்பை உணர்த்தா நிற்கும் எ-று.

(வி-ரை) இறைவன் திருவருளால் சிவானந்தப்பேறடைந்து அத்துவிதமாநின்ற சீவான்மா சீவபோதந் தலையெடுக்கவொட்டாது சிவபோதமாகவே நிற்கும். ஒருக்கால் சீவபோதம் தலையெடுக்கின் சுடர்வாய்ப்பட்ட கர்ப்பூரம் சுடருக்குள்ளே ஐக்கியப்பட்டுக் கலந்தெரிவதுபோல ஆகும் என்பதனை,

"தானான தன்மயமே யல்லா லொன்றைத்
தலையெடுக்க வொட்டாது தலைபட் டாங்கே
போனாலுங் கர்ப்பூர தீபம் போலப்
போயொளிப்ப தல்லாது புலம்வே றின்றாம்" என்றார்.

'தான்' என்றது பரசிவத்தை. 'கர்ப்பூரதீபம்போல' என்றது உவமையணி. இறைவன் திருவருளால் சிவானந்தப்பேறடைந்த ஜீவன் ஆன்மா, சிவம், அறிவு என்று கூறப்பெறும் திரிபுடியுந்தோன்றாது சிவானந்தமயமாகவேயிருக்குந்தன்மையை 'ஞானாகாரத்தினொடு ஞேயமற்ற ஞாதுருவு நழுவாமனழுவி நிற்கும்' என்றார். 'நழுவாமல் நழுவி நிற்றலாவது' நழுவினதும் அன்று, நழுவாமல் நின்றதுமன்று. பின் என்னையெனின்? சம்பந்தாவைக்கியத்தால் அபேதமாகத் தோன்றும் என்பதாம். சிவானந்தப் பேறுற்றார் பெற்ற பெற்றியை அவ்வனுபவநிலையில் நின்று அவ்வனுபவத்தை அனுபவித்து அறியற்பாலதேயன்றி எத்தகையோர்க்கும் எவரும் சொல்லிக் காட்டுந் தரமன்று என்பதை 'ஆனாலும் இதன்பெருமை யெவர்க்கார் சொல்வா ரதுவானா லதுவாவ ரதுவேசொல்லும்' என்றார். 'அதுவானால்' என்றது அச்சிவானந்தமேயானால், அச்சிவமேயானால் சிவத்தோடு அபேதமாகக் கலந்தால் என்பதாம். 'அது ஆவர்' என்றது அச்சிவானந்தமேயாகி நிற்பர். அச்சிவமேயாகிடுவர் என்பதாம். 'அதுவே சொல்லும்' என்றது அச்சிவானந்தநிலையே கூறும் என்பதாம். இதனை,

"குருவாகிப் பரனார்வந்து கொளச்செவியிற் கொடுத்த ஞானத்
திருவாக்காற் பெற்ற பேற்றைத் தெரியவெங்ஙன் உரைப்ப னந்தோ
பெருவாரி யாகு மந்தப் பெரியசிவா னந்தத் தேனை
உருவாகி யுண்டுண் டோரே உதவறிவர் உரைக்கொ ணாதே."

என்ற ஓர் **பெரியார்** வாக்கானுந் தெள்ளிதினுணரலாம்.



ஞானம் - அறிவு, ஞேயம் - சிவம், ஞாதுரு - ஆன்மா. இதனைத் திரிபுடி என்பர். 'அதுவானால்,' 'அதுஆவர்' 'அதுவே சொல்லும்' என்றதன்கணுள்ள சுட்டுக்கள் பண்டறிசுட்டு. 'எவர்க்கு' இது வினாப்பெயர். 'ஆர்சொல்வார்' இது வினாப்பெயர். 'ஆர்' இது 'யார்' என்பதன்போலி. 'ஞானாகாரத்தினொடு' இதில் 'ஒடு' மூன்றனுருபு. உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. 'மற்ற' இடைச்சொல் சுட்டியதற்கு இனமாகிய ஞாதுருவைக் குறித்தது. எல்லாப்பொருளும் தானேயாகிய தன்மயமேயன்றி எதையும் தலையெடுக்கவிடாதும், தலையெடுத்தாலும் கற்பூரதீபம்போல் ஒன்றுபட்டு மறைவதல்லாமல் உன் அறிவே அல்லாது வேறு இல்லாதாகும். இன்னும் ஞானரூபத்தோடு ஞேயமும், ஞாதுருவும் நீங்காமல் நீங்கிநிற்கும். ஆயினும் இதன் பெருமையை எவர் எவர்க்குச் சொல்லக்கூடும். பரமான்மா ஆகிவிட்டால் சீவான்மா தான் முன்னிருந்த நிலைதோன்றாது அப்பரமான்மாவே ஆகிவிடும் அந்தப் பரமான்மாவே அந்த மோனரகசியத்தின் சிறப்பைக் கூறும் என்று உபதேசித்தமை கூறப்பெற்றிருக்கின்றது என்பதாம். 22

## தத்துவாதீனப்பொருளாகிய சிவத்தைச் சென்று கூடும் இயல்புரைத்தமை

அதுவென்றா லெதுவெனவொன் றடுக்கும் சங்கை
ஆதலினா லதுவெனலு மறவே விட்டு
மதுவுண்ட வண்டெனவுஞ் சனக னாதி
மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தா ரென்றும்
பதியிந்த நிலையெனவு மென்னை யாண்ட
படிக்குநிரு விகற்பத்தாற் பரமா னந்தக்
கதிகண்டு கொள்ளவுந்நின் னருள்கூ ரிந்தக்
கதியன்றி யுறங்கேன்மேற் கருமம் பாரேன்.

(ப-ரை) அது - அது, என்றால்-என்று கூறினால், எது-எது, என-என்று, சங்கை-வினா, ஒன்று-ஒன்று, அடுக்கும்-எழும், ஆதலினால்-ஆகையினால், அது-அது, எனலும்-என்று கூறுதலையும், அறவே-முற்றுமே, விட்டு-ஒழித்து, மது-தேனை, உண்ட - குடித்த, வண்டு - வண்டு, எனவும் - ஒப்பவும் (நிகர்க்கவும்), சனகன்ஆதி - சனகன் முதலிய, மன்னவர்கள்-அரசர்களும், சுகர்முதலோர்-சுகர்முதலிய ரிஷிகளும், வாழ்ந்தார்-வாழ்ந்தனர், என்றும்-என்றும், இ-இந்த, நிலையில்-நிலைமையில், பதி-பொருந்தினில், எனவும்-என்று அனுக்கிரகித்தும், என்னை - (தமியேனாகிய) என்னை, ஆண்டபடிக்கு - ஆண்டருளியவிதமே நிருவிகற்பத்தால்-நிர்விகற்பசமாதியாலே, பரம-மேலாகிய, ஆனந்தகதி-இன்பகதியை, கண்டுகொள்ளவும் - கண்டுகொள்ளும்படியாகவும், நின்அருள் - தேவரீரின்கிருபை, கூர்-கூர்ந்தருளவேண்டும், இந்த - இந்த, கதி - கதியைப்பெற்றால், அன்றி - அல்லாமல், உறங்கேன் - நித்திரைசெய்யேன், மேல்கருமம்-மேலே நடக்கவேண்டிய காரியங்களையும், பாரேன்-கவனியேன் எ-று.

(வி-ரை) அது இது என்று சுட்டறிவால் சுட்டி அறிந்தனவாகிய நிலநீர் முதலிய சுட்டுப்பொருள்களெல்லாம் ஞானசொரூபியாகிய இறைவனது திருவுருவமேயாகும் என்றறிந்து அப்பொருள்களை அது இது என்றறியும் சுட்டறிவை யொழித்து எல்லாஞ் சிவமாகக் கண்டிருப்பர் சிவானந்தத்தழுந்திய சிவஞானிகள். ஏனெனின் அது இது என்றறியும் அனைத்தறிவிலும் சிவனிருத்தலால் என்னறிவிலும் சிவன் இருக்கின்றான் என அறிந்து அது நான் என்பதாகிய சோஹம்பாவனையால் பந்தம் அவிழ்ந்து சிவபரஞ்சுடரைப் பெற்றுத் தமதுடம்பை அவனுக்கே கோயிலாக்கிக் கசிந்துருகுந் தொண்டியற்றிச் சிவானுபவிகளாய் எக்காலும் எவ்விடத்தும் வாழ்வர். இவர்கள் அனைத்தறிவுஞ் சிவமென்றறிந்தோராவர். இதனை,

> "அது இது என்ன அனைத்தறி வாகும்
> அதஇது என்றறிந் துந்தீபற
> அவிழ்ந்த சடையானென் றுந்தீபற"

எனவரும் **திருவுந்தியார் செய்யுளா**லறிக.

இன்னும், தத்துவங்கள் எல்லாங்கழன்று சிவத்தைச் சென்றணைந்த ஆன்மா அத்துவிதமாகி இரண்டற்று நின்றநிலையில் ஒன்றை ஒன்று சுட்டியறிய இயலாவாதலின் நம் தாயுமானவர் இச்செய்யுளில் 'அதுவென்றாலெதுவென வொன்றடுக்குஞ் சங்கை யாதலினா லதுவெனலும் அறவேவிட்டு' என்றார். பூக்களில் தேனையுண்ட வண்டு ஆனந்தந் தலைக்கொண்டு தேன்மயமாகவே இருக்கும் அதுபோல சிவனருளால் சிவானந்தத்தில் அழுந்தினவர்கள் சிவானந்தமாகவே இருப்பர் சிவானந்தவசமே யிருப்பர். இது கொண்டே 'மதுவுண்ட வண்டெனவும்' என உவமை கூறினார். ஈற்று உம்மை எண்ணும்மை. 'சனகன்' இவன் மிதிலைக்கு அரசன், இவன் தத்துவஞானி 'சுகமுனிக்கு' அனுபவஞானத்தில் ஐயமுண்டாயபோது அதனை அறிந்து உண்மை கொளுத்தியவர். 'எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்—முத்தர் மனமிருக்கும் மோனத்தே' என்றபடி சக்கரவர்த்தியாய் உலகாண்டும் மோனநிலை வழுவாது சிவானந்தப் பெருவெள்ளத் தழுந்தியவர். தன்மனை தீப்பற்றி எரிந்து வீழ்ந்த காலத்தும் அதற்காகக் கவலையுறாது, அவ் அரண்மனைப்புறத்தில் காயவைத்திருந்த கோவணத்திற்காகக் கவலைகொண்டோடி எடுக்க விரைந்த சுகமுனிவரை நோக்கி அவர் அனுபவத்து ஏற்பட்ட ஐயத்தை அகற்றியவர், ஆதி என்றதால், சிகித்துவசன், பகீரதன், மாபலி முதலிய மன்னர்களைக் குறித்தது. இவ்வரசர்கள் எல்லாந் தத்துவஞானிகள் சிவானந்தத்து அழுந்தியிருந்த பெரியார்கள். சிறப்புப்பற்றிச் சனகனை முற்கூறினார். 'சுகர்' இவர் வியாச முனிவர் புத்திரர். கிளிவயிற்றிற் பிறந்தவர். கிளிமுகம் உடையவர். தாய் வயிற்றிலிருக்கும்பொழுதே தத்துவஞானம் பெற்றவர். புவியிற் பிறந்தால் மாயை பற்றிக்கொள்ளும் எனத் தாய் வயிற்றிலேயே பன்னீராண்டு இருந்து பின் பிறந்தவர். பிறந்ததும் ஓரிடத்தில் நின்றால் மாயை பற்றிக்கொள்ளு



மெனப் பிறந்ததும் ஓட ஆரம்பித்தவர். ஜனகர்பால் ஞானதத்துவத்தில், அனுபவத்தில் ஐயம் அகற்றிக்கொண்டவர். தெய்வலோகப் பெண்ணாகிய அரம்பை தன்னுடன்சேர சுகரை வலியுறுத்தியும், தன் சாகசமுழுதுங் காட்டியும் தன் சித்தஞ்சலியாது இருந்தவீரர். முனிவருள் இவர் ஒருவரே வேல்விழிச்சியர் மோகவலையுட்படாது நின்ற தீரர். 'முதலோர்' என்றது சிவயோகி, நாரதர் முதலிய முனிவர்களை. 'நிர்விகற்பம்' என்றது நிர்விகற்ப சமாதியை. நான் அவன் என்னும் பேதமின்றி நான் அற்று அவனேயாகி சிவானந்தத்தில் சிவானந்தமயமாய் நிற்றல். 'பரமானந்த கதி' என்றது சிவானந்தத்தழுந்தியிருக்கும் நிலையை. 'அது' என்றால் 'எது' என்று ஒரு கேள்வி பிறக்கும். ஆகையால் 'அது' என்பதையும் முற்றும்விட்டு மது உண்ட வண்டுபோல சனகன், சுகர், வாழ்ந்தனராகையால் இந்த நிலையில் அமை என ஆஞ்ஞாபித்து என்னை ஆண்டருளியபடி நிர்விகற்ப சமாதியால் மேலான இன்பநிலையைக் காணவும், கிருபை கூர்ந்தருளவேண்டும். இந்தக் கதியை அடைந்தாலன்றித் தாங்கேன், இனி நடக்கவேண்டிய காரியங்களையும் நோக்கேன் எனக் கூறுகின்றார் என்பதாம். 23

## இறைவன் எங்கும் நிறைந்தவனெனல்

பாராதி விண்ணனைத்தும் நீயாச் சிந்தை
  பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து
வாராயோ வென்பிராண நாதா என்பேன்
  வளைத்துவளைத் தெனைநீயா வைத்துக் கொண்டு
பூராய மாமேலொன் றறியா வண்ணம்
  புண்ணாளர் போல்நெஞ்சம் புலம்பி யுள்ளே
நீராள மாயுருகிக் கண்ணீர் சோர [ன்.
  நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையா நிற்பே

(ப-ரை) பார் ஆதி-மண் முதலாக, விண்-ஆகாயம் ஈறாகவுள்ள, அனைத்தும்-பூதபௌதிகங்களெல்லாம், நீ-(பரமான்மாவாகிய) நீ, ஆ-ஆக(ப்பாவித்து), சிந்தை - என் மனத்தில், பரிய-பெரிதாகிய, மடல் - ஏட்டில், எழுதி - (அந்த ஏட்டில் இதனைத்) தீட்டி, பார்த்துப் பார்த்து-பன்முறையும் நோக்கி நோக்கி, என்-என்னுடைய, பிராணநாதா-ஆவித்தலைவா!, வாராயோ-வந்தருள் செய்யாயோ, என்பேன்-என்று சொல்லாநிற்பன், என்னை-(அடியேனாகிய) என்னை, வளைத்து வளைத்து-பன்முறையுந் தடுத்துத் தடுத்து, நீ-(பரமான்மாவாகிய) நீ, ஆ-ஆக, வைத்துக்கொண்டு - வைத்துக்கொள்ளுதலால், மேல்-மேலே, ஒன்று-ஒரு காரியத்தையும், பூராயமா - ஆதியோடந்தமாக, அறியா-தெரிந்துகொள்ளாத, வண்ணம்-விதமாக, புண்ணாளர்-புண்ணாளிகள், போல-ஒப்ப (போன்ற), நெஞ்சம்-மனமானது, புலம்பி - வருந்திப் பிரலாபித்து, உள் - உள்ளகத்தே தானே, நீர் - நீராக, ஆளமாய் - பெருக்கெடுக்க, உருகி - உருகி, கண்ணீர்-கண்ணீராக, சோர - ஒழுக, நெட்டுயிர்த்து - பெருமூச்சுவிட்டு, மெய் - இத்

தேகத்தை, மறந்து-மறந்து, ஓர்-ஒரு, நிலையாய்-நிலையையேயுற்று, நிற்பேன்-நின்றிருப்பேன் எ-று.

(வி-ரை) காமிகட்குப் பார்க்கும் பொருளெல்லாம் தன்னாற் காதலிக்கப்பட்ட அக்காதலியாகவே தோன்றும் வெறுவெளியை நோக்குமிடத்தும் அவள் உருவெளித்தோற்றந் தோன்றும். இதனை, உருவெளித் தோற்றத்தில் சீதையைக்கண்ட இராவணன் சூர்ப்பனகையை நோக்கி,

"பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் புகுந்தாளை நோக்கி
நெய்ந்நின்ற கூர்வாளவ நேருற நோக்கு நங்காய்
மைந்நின்ற வாட்கண் மயினின்றென வந்தென் முன்னர்
இந்நின்ற வளாங்கொ லியம்பிய சீதை யென்றான்"

அதற்கு சூர்ப்பனகை இராவணனை நோக்கி தான் காதலித்திருக்கும் இராமனை உருவெளித்தோற்றத்திற் கண்டு,

'செந்தாமரைக் கண்ணொடுஞ் செங்கனி வாயினோடும்
சந்தார் தடந்தோளொடுந் தாழ்தடக் கைகளோடும்
அந்தா ரகலத்தொடு மஞ்சனக் குன்றமென்ன
வந்தா னிவனாகுமவ் வல்விலி ராமனென்றாள்"

என்ற **கம்பராமாயணச் செய்யுளா**ல் நன்கறியலாம்.

அதுபோலச் சிவானந்தபோகத்திலழுந்தி அவ்வின்பத்தை அனுபவித்தவர்களுக்கு எந்தப் பொருளைப் பார்த்தாலும் எந்த இடத்தைப் பார்த்தாலும் சிவமாகவே காணும். காமிகளுக்குத்தோன்றிய தோற்றம் பொய்த்தோற்றம் ஆனால் சிவஞானிகள் காண்கின்ற காட்சி மெய்க்காட்சியாகும். இதுகொண்டே நம் தாயுமானவர் "பாராதி விண்ணனைத்து நீயாச் சிந்தை பரியமட லாவெழுதிப் பார்த்துப் பார்த்து வாராயோ வென்பிராண நாதா வென்பேன்" என்றார். இறைவன் ஆன்மாக்களுக்கு இன்பஞ் செய்வோனாதலினாலும், இன்பசொரூபனாதலினாலும், உயிர்க்குயிராய் இருந்து இயக்குவோன் ஆதலினாலும் 'பிராணநாதா' என்று கூறினர். 'மடல்' ஈண்டு ஏட்டைக் குறித்தது. 'பார்த்துப் பார்த்து' இது மிகுதிப்பொருள்பற்றி அடுக்கி வந்தது. 'வளைத்து வளைத்து' இதுவுமது. 'பூராயம்' இது வடசொல். முழுதும் என்பது பொருள். 'எனை' இது என்னை என்பதன் தொகுத்தல்விகாரம்.

பூமி முதல் ஆகாயம் ஈறாகவுள்ள எல்லாப் பூதபௌதிகங்களும் நீயாகவே நினைத்து என் மனததை ஏடாகக்கொண்டு எழுதிப் பல்கால் நோக்கி என் பிராணநாயகனே! வந்து எனக்கு அருளாயோ என்று கூறு நிற்பேன். நீ என்னைப் பல்காலுந் தடுத்துத் தடுத்து என்னை நீயாகவே வைத்துக்கொள்ளுகையால் மேலே ஒரு காரியத்தையும் ஆதியோடந்தமாகத் தெரியாதபடி புண்ணுளிகளைப்போல மனம் புண்ணாகி உருகிக் கண்ணீராய் ஒழுகப் பெருமூச்சுவிட்டு உடல் மறந்து ஒரு நிலைப்பட்டு நிற்பேனெனத் தன் அனுபவநிலையைக் கூறுகின்றார் என்பதாம்.





## ஞானசாத்திர அறிவுடையவரே கடவுளை அறிவாரெனல்

ஆயுமறி வாகியுன்னைப் பிரியா வண்ணம்
அணைந்துசுகம் பெற்றவன்ப ரையோ வென்னத்
தீயகொலைச் சமயத்துஞ் செல்லச் சிந்தை
தெளிந்திடவுஞ் சமாதானஞ் செய்வேன் வாழ்வா [ன்
காயிலைபுன் சருகாதி யருந்தக் கானம்
கடல்மலையெங் கேயெனவுங் கவலை யாவேன்
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே.

(ப-ரை) உன்னை - (பரமான்மாவே) உன்னை, ஆயும் - ஆராய்கின்ற அறிவு-ஞானத்தை, ஆகி-பெற்றவராகி, பிரியா - (நின்னைவிட்டு) அகன்று நீங்கா, வண்ணம்-விதமாக, அணைந்து-கூடி, சுகம் - இன்பானந்தம், பெற்ற அடைந்த, அன்பர்-நினது அடியார்கள், ஐயோ-ஐயோ, என்ன-என்று இரங்கிக்கூற, தீய-கொடிதாகிய, கொலை-கொலைசெய்யத் தூண்டும், சமயத்தும்-சமயமார்க்கங்களிலும், சிந்தை-மனமானது, செல்ல-ஏக, தெளிந்திட - (அத்தகைய மனம் அந்நெறிகளிற் செல்லாதவாறு) தெளிவுறவும், சமாதானம் - (எனக்கு நானே) சமாதானத்தை, செய்வேன் - செய்துகொள்ளுவேன், வாழ்வான் - ஜீவித்திருத்தற்பொருட்டு, காய்-காயும், இலை - இலையும், புன்-அற்பமாகிய, சருகு-சருகையும், ஆதி - மற்றும் இவை முதலானவற்றையும், அருந்த-உண்ணுதற்பொருட்டு, கானம்-காடும், கடல்-கடலும், மலை-மலையும் (ஆகிய இவைகள்), எங்கே-எங்கிருக்கின்றன, எனவும்-என்றும், கவலைஆவேன்-(சிற்சிலசமயங்களிற்) கவலையுறுவேன், வானில்-ஆகாயத்தில், மதி-சந்திரனையும், கதிரை-சூரியனையும், முன்னிலையா-முன்னிலையாக, வைத்து-வைத்துக் கொண்டு, நேரே - அவர்களுக்கு எதிரிலே, வாய்-துவாரம், இல்-இல்லாத, கும்பம்-குடம், போல் - போல, கிடந்து - விழுந்து, புரள்வேன் - புரளுவேன் எ-று.

(வி-ரை) இச்செய்யுள் குளகம். அடுத்தகவியைத் தொடர்ந்து நிற்கின்றது பொருள். மக்களிற் பெரும்பாலர் பொது அறிவு பெற்றிருப்பர். மிகச் சிலரே சீரிய அறிவு பெற்றிருப்பர். சீரிய அறிவு என்றது தத்துவ ஆராய்ச்சி அறிவு. தன்னை அறியும் அறிவு, தலைவனை அறியும் அறிவு. இவ் அறிவு முற்பிறப்புகளிற் செய்துள்ள புண்ணியப் பேற்றால் இறைவன் திருவருளால் எய்துவதாகும். தன்னைத் தலைவனை அறிந்த அறிவினரே இறைவனைக்கூடி நீங்காது சுகம்பெற்றிருப்பர். இது பற்றியே தாயுமானவரும் 'ஆயுமறி வாகி யுன்னைப் பிரியா வண்ண மணைந்து சுகம் பெற்ற வன்பர்' என்றார். 'ஆயும் அறிவு' என்றது தன்னைத்தலைவனை ஆயும் அறிவை. இனி வேதநூல் ஆயும் அறிவினர் என்பாரும் உண்டு.

அறிவினர்க்கே அருள் உண்டு. அருள் குடிகொண்ட நெஞ்சினரே இரங்குவ ராதலின் 'ஆயுமறிவாகி ... ... ... அன்ப ரையோ வென்ன' என்றார். 'ஐயோ' இரக்கக்குறிப்பு. 'அணைந்து சுகம் பெற்ற அன்பர்' என்றது யோக சமாதியிலிருந்து சிவானந்தத்தழுந்தினவரை. கொலை கொடிது, கொல்லுதல் கொடும்பாவம். இதுகொண்டே 'தீய கொலை' என்றார். இதனை,

"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்"

என்ற **நான்மணிக்கடிகைச் செய்யுளா**லும்,

"உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்"

என்ற **திருக்குறளா**லும் நன்கறியலாம்.

'தீயகொலைச்சமயம்' என்றது உயிர்ப்பலி கேட்குந் தெய்வங்களைக் கொண்டுள்ள சமயங்களை. இனி, இதற்கு தனக்கு உய்வைத் தராது தன்னை வருத்திக் கொல்லும் புன்சமயங்களைக் குறித்தார் என்பர். 'வாழ்வான்' இது 'வான்' விகுதிபெற்ற எதிர்கால வினையெச்சம். தவத்தை மேற்கொள்ளும் நோக்கமுடையவன் ஆவேன் என்பதை 'காயிலைபுன் சருகாதியருந்தக் கானம் கடன்மலை யெங்கே யெனவுங் கவலையாவேன்' என்றார். ஆதி என்றது கிழங்கு, வேர், நீர், கனி முதலியவற்றை. 'கடல்' என்றது கடற்கரை இடத்தை. 'வாயில் கும்பம்' வாயில்லாத கலசம். வாய் இருப்பின் புவியிற் படிந்துவிடுமாதலின் வாயில்லாக் கும்பம் என்றார். இது உவமையணி. வாயில்லாக்குடம் இல்லையாதலினால் இல்லாத ஒன்றை உவமை குறித்தலின் இல் பொருளுவமையணி என்பர் **இலக்கணிகள்**. 'மதி' இது மதசம்பந்தமுடையதாதலின் 'மதி' என்னும் பெயர்வந்ததென்பர் **வடநூலார்**. இறைவனே தன்னைக்காத்துத் தன் பவத்தைப்போக்கி இன் பருள்வோன் என்று இறைவனைத் தஞ்சம்புகுந்த அறிவுடையதனால் 'மதி' என்னும் பெயர் எய்திற்றென்பர் தமிழர் (மதி-அறிவு) 'கதிர்' இது கிரகணங் களுக்கு ஆகிப்பின் அதனையுடைய சூரியனுக்கு ஆனமையால் ஆகுபெயர். (கதிர்-ஒளி.) ஈண்டு சூரியனைக் குறித்தது. சூரியனுக்குக் கதிரோன் என்னும் பெயர் உண்மையுமறிக.

உன்னை ஆராய்ந்து அறியும் அறிவினையுடையவர்களாகி, உன்னைவிட்டு நீங்காதவாறு சேர்ந்து இன்புற்ற அடியார்கள் என்னைக்கண்டு ஐயோவென்று பரிதபிக்க கொடிய கொலைபுரியும் சமயநெறிகளிலெல்லாம் சிந்தைசெல்ல அக்காலத்து அச்சமயநெறிகளில் மனஞ்செல்லாது தெளிவுடைய எனக்குத் தானே சமாதானஞ் செய்துகொள்ளுவேன். உயிர்வாழ்தற்பொருட்டுக்காய், இலை, சருகு முதலியவற்றை உண்ணுதற்பொருட்டு காடு, கடல், மலை. எங்கிருக்கின்றன என்றும் கவலைப்படுவேன். ஆசாயத்திலுள்ள சந்திர



சூரியர்களை முன்னிலையாக வைத்துக்கொண்டு அவர்களுக்கெதிரில் வாயில்லாத குடம் புரள்வதுபோல விழுந்து புரள்கின்றேன் என்று தன்னியல்பு கூறுகின்றார் என்பதாம்.

52

முச்சுடரேறிவது முதலவன் ஆணை

நேரேதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர வுங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரேயங் கவர்பெருமை யென்னே யென்பேன்
அடிக்கின்ற காற்றேநீ யாரா லேதான்
போராதே சுழல்கின்றாய் என்பேன் வந்து
பெய்கின்ற முகில்காள்எம் பெருமா னும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதமென் னேகருதிச் சாற்று மென்பேன்.

(ப-ரை) நேரேதான்-ஒழுங்காகத்தானே, இரவு - இராத்திரியும், பகல்-பகற்காலத்திலும், கோடா-பிசகாத, வண்ணம்-விதமாக, நித்தம்-தினந்தினம், வர-வரும்படி, உங்களை - சந்திரசூரியர்களாகிய உங்களை, இந்நிலைக்கே-இந்த நிலையிற்றானே, வைத்தார் - நிலைபெறுமாறு வைத்தருளியவர், ஆரே - யார்?, ஆங்கு - அவ்விடத்து, அவர் - (அவ்வாறுவைத்த) அவரின், பெருமை - பெருமையை, என்-எப்படிப்பட்டதென்று, என்பேன் - வியந்துகூறுவேன், அடிக்கின்ற-வீசிமோதும், காற்றே - காற்றே, நீ-நீ, யாரால் - யாருடைய கட்டளையால், போராதே-இடைவிடாமல், சுழல்கின்றாய் - சுழன்று திரிகின்றாய், என்பேன்-என்று யான் கூறுவேன், வந்து-வந்து, பெய்கின்ற-மழையைப் பொழிகின்ற, முகில்காள்-மேகங்களே!, எம்பெருமான் - எமது கடவுள், நும்போல்-உங்களைப்போல, தாராளமா-ஏராளமாக (மிகவும்), கருணை-அருளை, பொழிய-மழைபோற்கொட்ட, செய்யும் - செய்யவேண்டிய, சாதகம் - அப்பியாசம், என்-யாது, கருதி - (நீங்கள்) நன்றாயெண்ணி, சாற்றும் - சொல்லுங்கள், என்பேன்-என்று கேட்பேன் எ-று.

(வி-ரை) சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய மக்களாற் செய்யப்படுங் காரியங்கள் அவன் அருளில்லாதவிடத்து நேராதலும் கோடாதிருத்தலும், முற்றுப்பெறுதலும் முடியாதாதலினாலும், அபாரமான மனுஷர்களின் புத்திக்கெட்டாத சில காரியங்கள் நிகழ்கின்றனவாதலினாலும் அவைகளைக் கிஞ்சிக்ஞராகிய ஆன்மக்கள் செய்துவைத்தல் கூடாதாதலினாலும் அவற்றின் மூலம் இறைவனை உணரலாமாதலினாலும் எத்தகைய மனிதர்களினுடைய புத்திக்கும் எட்டாத புதுமையாக அமைந்து இறைவன் ஆக்கினையால் உலகில் தோன்ற நின்ற மதியை, கதிரை, சுற்றை, மேகத்தை நோக்கி வினவுகின்றார். முதலில் மதிகதிரை நோக்கி நீங்கள் நிரலே இரவுபகல் சிறிதுந் தவறாதே முறைப்படி தோன்றிவர வைத்தவர் யார் என்கின்றார். 'கோடா' என்றது தவறாது என்ற பொருளது. 'ஆரே' 'என்னே' இவை

வியப்பின்கண் வந்தவினை. போகாதே நீங்காதே என்ற பொருளது. 'சுழலல்' ஈண்டு சஞ்சரித்தல் என்னும் பொருளது. மேகம் கடல் நீரையுண்டு கொண்டு வந்து மழையாகப் பெய்தலின் 'வந்து பெய்கின்ற முகில்காள்' என்றார். இனி பருவகாலங்களில் தவறாது வந்து பெய்கின்ற மழையே என்னும் பொருளில், 'வந்து பெய்கின்ற முகில்காள்' என்றார். மேகங்கள் பலவாதலின் பன்மையாற் கூறினார்.

இறைவன் அருள்செய்யின் அதற்குத் தட்டுத்தடையில்லை ஆதலினாலும், ஆன்மாக்களின் பக்குவமறிந்து அருளுவனாதலினாலும், பொருள் செய்யப் புகின் புங்கானு புங்கமாக மழைபோற் கொட்டுவனாதலினாலும், ஆன்மாக்களிடத்துக் கைம்மாறு கருதாது அருளுவனாதலினாலும், 'நம்போல் தாராளமாக் கருணை பொழியச்செய்யுஞ் சாதகம்' என்றார். 'நம்போல்' என்றது மிகுதியையும், கைம்மாறு கருதாமையையுங் குறித்து நின்றது. 'சாதகம்' என்றது அவனை அடுக்கும் முறையை, அவனை அறிந்து இரக்கும் முறையை என்பாருமுண்டு. இனி, அவனை வயப்படுத்து முறையை என்பர் ஒரு சாரார். 'கருதி' என்றது என் நிலைக்கு இரங்கிக் கருணைகொண்டு என்னும் பொருளது. 'இரவுபகல்' இது உம்மைத்தொகை, இரவும்பகலும் என விரியும். 'நித்தம்வர' இதுவும் உம்மைத்தொகை, 'நித்தமும்வர' என விரியும். 'காற்றே' 'முகில்காள்' இவை விளியுருபு ஏற்றபெயர்கள். 'சாற்றும்' முன்னிலை ஏவல்வினைமுற்று. இராத்திரியும் பகலும் தவறாதபடி தினந் தினம் வரும்படி சந்திர சூரியர்களாகிய உங்களை இந்தத்தன்மையில் வைத்தருளியவர் யார்? அவர் பெருமையை என்னென்று சொல்லுவேன் வீசுங் காற்றே! நீ யாருடைய கட்டளையால் இடையறாது சுழல்கின்றனை? என்று சொல்லுவேன். மழைபெய்கின்ற மேகக்கூட்டங்களே எங்கடவுள் உங்களைப் போல மிகுதியாக அருள்மழையைச் சொரியும்படிச்செய்யும் சாதகம் யாது ஆலோசித்துச் சொல்லுங்கள் என்பேன் என்று தன் நிலை கூறுகின்றார் என்பதாம்.

26

### வியாபகமாயுள்ள ஆகாயத்தினையுங் கடந்த நிலையே கடவுள்நிலை

கருதரிய விண்ணே நீ யெங்கு மாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சி யாக
வருபொருளெப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்
மண்ணேயுன் முடிவிலெது வயங்கு மாங்கே
துரியவறி வுடைச்சேட னீற்றி னுண்மை
சொல்லாயோ சொல்லென்பேன் சுருதி யேநீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
னுரையன்றோ உன்முடிவை யுரைநீ யென்பேன்.

(ப-ரை) கருதஅரிய - எண்ணுதற்கொண்ணாத, விண்ணே - ஆகாசமே, எங்கும்நீ-நீ எவ்விடத்தும், ஆகி-ஆகி, கலந்தனையே - கலந்திருக்கின்றாயே, உன்-உனது, முடிவின்-முடிவாகியவிடத்தில், காட்சிஆகி-காணப்படுவதாகி, வரு-வருகின்ற, பொருள்-பொருளானது, எப்படி - எவ்வண்ணம், இருக்கும்-அமைந்திருக்கும், சொல்லாய்-சொல்லுவாய், என்பேன்-என்று கேட்பேன், மண்ணே-பூமியே, முடிவில்-உனதுமுடிவில், எது-எந்தப்பொருள், வயங்கும்-விளங்கியிருக்கும், ஆங்கு-அவ்விடத்திலுள்ள, துரியம் - மேலான, அறிவு - அறிவை, உடைய-கொண்டுள்ள, சேடன்-ஆதிசேஷனென்பவன், ஈற்றின்-முடிவானபொருளின், உண்மை - உண்மையினை, சொல்லாயோ - சொல்ல மாட்டாயோ, சொல்-சொல்வாயாக, என்பேன்-என்றுவினவுவேன், சுருதியே-வேதமே, நீ - நீ, ஒருவரைப்போல் - ஒருவர்க்குப்போல, அனைவருக்கும் - யாவர்க்கும், உண்மைஆம்-சத்தியமாய் இருக்கும், முன்உரை-முதல்நூலாக இருக்கின்றாய், அன்றோ-அல்லவா, நீ-நீ, உன்-உன்னுடைய, முடிவை-முடிவானபொருளை, உரை-சொல்வாயாக, என்பேன்-என்றுகேட்பேன், எ-று.

(வி-ரை) பூதங்கள் ஐந்து. அவையாவன:—மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், என்பனவாம். ஆகாயத்தினின்று காற்றுப் பிறக்கும், காற்றினின்று தீப்பிறக்கும், தீயினின்று நீர் பிறக்கும், நீரினின்று மண் பிறக்கும். தோற்றியமுறையே மண் நீரில் ஒடுங்கும், நீர் நெருப்பில் ஒடுங்கும், நெருப்பு காற்றில் ஒடுங்கும், காற்று ஆகாயத்தில் ஒடுங்கும். ஆகாயம் பரத்திற் பரக்கும், பரத்தில் ஒடுங்கும். ஆகாயம் எங்கும் பரந்து நிரந்து இருக்கும் தன்மையது. ஆனதுபற்றியே 'கருதரிய விண்ணே' என்றும், "எங்குமாகிக்கலந்தனையே' என்றும், 'உன்முடிவின் காட்சியாக வருபொருள் எப்படி யிருக்கும் சொல்லா யென்பேன்' என முறையே கூறினர். 'விண்' என்றது ஈண்டு ஆகாயத்தை. 'பொருள்' என்றது மூலப்பொருள், அதாவது இறைவனை.

"ஆகாசத்தினின்று சத்தம் பிறக்கும்
சத்தத்தினின்று சகலமும் பிறக்கும்"

என்பர் **பெரியார்**. ஈண்டு இது நுணுக்கமாய் ஆராயவேண்டியதொன்றாம்.

பிரகிருதி என்னும் மண்ணில் நாம் தோன்றினோம், மண்ணே நமக்குத் தாயுந் தந்தையுங் குருவுமாக வயங்குகின்றது. இம்மண்ணே குருவாகி நன்மார்க்கங்களைப் போதிக்கின்றது. இறைவன் மகிமைகளையும் அவன் உண்மையையும் நன்கு விளக்கிக் காட்டுவதாக யிருக்கின்றது. இதைப் புத்திமான்கள் அறிவர். விவேகிகள் இதை ஒப்புவர். அறிஞர்கள் இதனை ஆட்சேபியார். தோற்றமுறையே ஆகாயத்தில் காற்று, காற்றில் நெருப்பு, நெருப்பில் நீர், நீரில் மண்தோன்றி நிற்பினும் பூமியைத்தாங்கி நிற்பது எது? ஆதிசேடன், ஆதிசேடனைத் தாங்கிநிற்பது கூர்மம், கூர்மத்தைத் தாங்கிநிற்பது சத்தி, சத்தியைத்தாங்கிநிற்பது சிவம். பூமியின்முடிவில் நிற்பது ஆதிசேடன். இவன் ஆயிரம்பணாமகுடங்களையுடையவன் பெரிய அறிவாளி ஈராயிரம் நாக்குடையவன் என வேதபுராணங்கள் முழங்குகின்றன. ஆதலின் இறைவனைப் பற்றித் தெரியவேண்டுமானால் பூமியைத்தாங்கி நிற்கும் ஆதிசேடனைக் கேட்டால் தெரியவருமோ என வினவுகின்றார். ஆயிரந்தலையும் ஈராயிரம்

நாவும்படைத்த அதிபெரும் புலவனாகிய ஆதிசேடனாலும் அளந்தறியமுடியா தவன் செப்பொணாத தன்மையையுடையவன் இறைவன் என்பதை நன் கறிந்தே 'மண்ணேயுன் முடிவிலது வயங்குமாங்கே தரியவறி வுடைச்சேட னீற்றிலுண்மை சொல்லானோ சொல்லென்பேன்' என்று கூறினார். வேதம் ஒருவராற் செய்யாதபடி இறைவனால் தரப்பெற்றது. இது ஒலிவடிவமாக இருப்பது. ஆதலின் 'சுருதி' என்று பெயராயிற்று. 'செய்யாமொழி' 'எழுதாக்கிளவி' எனவுங் கூறுவர் இதனால் அறியலாம். இரகசியார்த்தத்தை யுடையது ஆதலின் இதற்கு 'மறை' என்ற பெயர் வந்தது. 'அறிவின் வடிவாயது ஆதலின் இதற்கு வேதம் என்று பெயா ஏற்பட்டது. இத்தகைய வேதமே இறைவனைக் காணாது கதறுகின்றது. ஏன், இறைவன் அறிவுக்கு அறிவானவன் ஆகவினால் என்க, ஞானத்திற்கும் ஞானமாக இருப்பேன் இதுபற்றியன்றோ பெரியாரும், 'வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளி யென்ப' என்றார் இறைவனை. இதுகொண்டே நம் தாயுமானவர் 'சுருதியேநீ ஒருவரைப்போ லனைவருக்கு முண்மையா முன்னுரையன்றோ வுன்முடிவை யுரைநீ யென்பேன்' என்று உரைத்தருளினார். 'ஆங்கே' அங்கே என்றசுட்டு நீண்டு 'ஆங்கே' என ஆயது. 'அறிவுடைச்சேடன்' 'உடைய' என்னுஞ்சொல் ஈறுகெட்டு 'உடை' என நின்றது. 'சேடன்' இது 'சேஷன்' வடசொற்றிரிபு. 'ஒருவரைப்போ லனைவர்க்கும்' 'ஒருவரை' என்றது உருபு மயக்கம்; ஒருவர்க்குப் போல் என நான்கன் உருபுப் பொருள்தந்து நின்றது. என்னை,

> "யாதா னுருபிற் கூறிற் றாயினும்
> பொருள்சென் மருங்கில் வேற்றுமை சாரும்"

என்பது இலக்கணம் என்பதறிக.

'அனைவர்க்கும்' இதில்வந்த உம்மை முற்றும்மை. 'உரைநீ' நீ உரை என்பது மொழிமாறி நின்றது. முன்னிலை ஒருமை ஏவல்.

ஆகாயமே நீ எங்கும் கலந்து இருக்கின்றனையே உன் முடிவாகிய எல்லையில் காணப்படுவதாய் வரும்பொருளானது எந்தவிதமாகயிருக்கும் சொல்லுவாயாக என்பேன்; பூமியே உன்முடிவு எல்லையில் எந்தப் பொருள் நின்று பிரகாசிக்கும். அங்கேயுள்ள மேலான அறிவையுடைய ஆதிசேஷன் முடிவான பொருளின் உண்மையைச் சொல்லமாட்டானோ? நான் அவனைச் சொல்லென்று கேட்பேன். வேதமே! நீ ஒருவர்க்குப்போல் யாவர்க்கும் உண்மையான முதல்நூல் அல்லவா நீ உன் முடிவான பொருளைச் சொல்வாய் என்று கேட்பேன் என்று தன்நிலைமை கூறுகின்றார் என்பதாம். 27

கடல்கரை பிறழாநிற்பதுங் கடவுளாணை

உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்க நீட்டி
யொலிக்கின்ற கடலே இவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி யுன்னைவைத்தா ரியாரே என்பேன்
கானகத்திற் பைங்கிளிகாள் கமல மேவும்



வரிசிறைவண் டினங்காளோ திமங்கா டூது
மார்க்கமன்றோ நீங்களிது வரையி லேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
பேசியதுண் டோ ஒருகாற் பேசும் என்னே.

(ப-ரை) உரை - சொல், இறந்து - கடந்து (சொல்லளவுக்கடங்காது), பெருமை - பெருமையை, பெற்று - பொருந்தி, திரை - அலைகளாகிய, கை- கைகளை, நீட்டி-நீட்டி, ஒலிக்கின்ற - கோஷிக்கின்ற (இரைகின்ற), கடலே- சமுத்திரமே, இவ்-இந்த, உலகம்-உலகத்தை, சூழ-சூழ்ந்து (வளைந்துசுற்றி), கரையும் - கரைகளும், இன்றி - இல்லாதபடி, உன்னை - (கடலே) உன்னை, வைத்தார் - (இருக்கும்படி) வைத்தவர் (பொருந்தவைத்தவர்), யாரே-யாவர்?, என்பேன்-என்றுகேட்பேன், கானகத்தில்-காட்டிடத்திலுள்ள, பைம்-பசுமை யாகிய, கிளிகாள்-கிளிகளே!, கமலம்-தாமரையில் (தாமரைமலரில்), மேவும்- தங்கியிருக்கும், வரி-கோடுகளோடு கூடிய, சிறை-சிறகுகளையுடைய, வண்டு- வண்டின், இனங்காள் - கூட்டங்காள்!, ஓதிமங்காள் - அன்னப்பறவைகளே!, தூது-(நீங்கள் காலம்செலுத்துவது) தூது, மார்க்கம்-வழி, அல்லவா-அல்லவா?, நீங்கள் - நீங்கள், இதுவரை - இந்தக்காலபரியந்தம், பெரிய - பெரிதாகிய, பூரணம்-பூரணமான (நிறைந்த), ஆம் - பொருளாம், பொருளை - இறைவனை, கண்டு - பார்த்து, பேசியது - வார்த்தையாடியது, உண்டோ - (என்றாகிலும்) உண்டா?, ஒருகால்-ஒருமுறையாகிலும், பேசும் - (என்னிடம்) சொல்லும், என்பேன்-என்று கேட்பேன். எ-று.

(வி-ரை) ஏவல்செய்வோன் எஜமானனை அறியக்கூடும். கதிர், மதி, காற்று, மேகம், மண், கடல், மலை, முதலியன இறைவன் ஏவிய ஏவலர். இறைவன் பணித்தபணியைத் தலைமேற்கொண்டு அன்கட்டளைப்படி நடந்து வருகின்றது. அவற்றுள் கடலும் ஒன்றாதலின் கடலைநோக்கி கரையின்றி இருக்கும்படிவைத்தவர் யார் என்று கேட்பேன் என்கின்றார். முன்னொரு முறை 'ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ' என்றார். ஆழாழி கரையின்றி நிற்பது இறைவன் ஆணை என்பதை அறிவுறுத்தினார். ஆழம், நீளம், அகலம், பொருள் யாரானும் அளந்தறியமுடியாத் தன்மையதாதலாலும், மேகத்திற்கு நீரைத்தந்து உலகுக்குக் கருவியாக இருக்க உபகரித்திடலாலும் 'உரை யிறந்து பெருமைபெற்று' என்றார். கடல் அலைகளை, கடலுக்குக் கை என்று கூறுவது கவிமரபு. 'ஒலிக்கின்ற கடலே' என்றது இயல்பு நவிற்சிஅணி.

ஏரிகரை உடைத்துக்கொண்டால் ஏரிஜலம் ஊரிற்புக ஊர் முழுகி விடுகிறது. கடல் கரைபுரண்டால் யாரால் அணையிடமுடியும்? ஒருபங்கு நிலமும் இரண்டுபங்கு ஜலமும் இருக்கும்பொழுது கடல் கரைபுரண்டால் பூமி முழுகிவிடாதோ. கரையுமின்றிக் கடல் எல்லைகடவாது பூமியைச் சூழ்ந்திருப்பது வியப்பன்றோ இக்கடல் எதனால் நிற்கின்றது இறைவன் ஆணையால் நிற்கின்றது என்பதனை வலியுறுத்தவே 'கடலே யிவ்வுலகஞ்சூழக்

கரையுமின்றி யுன்னைவைத்தாரியாரே யென்பேன்' என்றார். காதலர்கள் தூதுவிடுமிடத்து பத்துப்பொருளைத் தூதுவிடுவர். அவற்றுள் கிளி, வண்டு, ஓதிமம்-(அன்னம்) ஆகிய இவைகளும் ஒன்றாதலினால் 'கானகத்திற் பைங்கிளிகாள் கமலமேவும் வரிசிறைவண் டினங்காளோ திமங்காடூது மார்க்கமன்றோ' என்றார். இதனை,

"ஆயுங்கால் வண்டுமயில் அன்னங் குயில்கிளியே
பாயுமென் பூவைகார் பாங்கிநெஞ்சு—தோயுமென்
தென்றலிவை பத்தூர் திகழுந்தூ துப்பொருளாம்
குன்றமுலைக் கோதாய் குறி" என்ற இலக்கணச் செய்யுளாலும் அறிக.

கிளியையும், வண்டையும், அன்னத்தையும் நோக்கிப்பேசின் அவை பேசுமேயெனின் இது கவிமரபு. அஃறிணைப்பொருள்கள் கேட்பது போலவும், பேசுவது போலவும், நடப்பதுபோலவும், நடப்பிப்பதுபோலவும் புனைந்துரைத்துக்கூறல் மரபாகும். இதனை; **நன்னூலார் பொதுவியலில்** 409-சூத்திரத்தில்.

"கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே" என்றது கொண்டுதெளிக.

தூதுமார்க்கமாய் அவைகளும் ஒருக்காலும் கண்டிருக்கமாட்டா என்ற துணிவுபற்றியே "தூது மார்க்கமன்றோ நீங்களிது வரையிலேயும் பெரியபரிபூரணமாம் பொருளைக்கண்டு பேசியதுண்டோ' என்று ஐயவினாவிற் கேட்கின்றார். கானகத்துக்கிளி, சிறைவண்டினம், ஓதிமம் ஆகிய இவைகளின் இனங்கள் முற்றையும் நோக்கியே விளித்துக் கேட்கின்றார். இதனானேயே பன்மையாய் விளித்தார். இறைவன், பெரியபொருள், பரிபூரணமான பொருளென்றாலும் எனக்கு எட்டவில்லை. ஒருக்கால் பறந்துகாணும் இயல்புடைய நீங்களாயினுங் கண்டதுண்டோ என்பான் 'பெரியபரி பூரணமாம் பொருளைக்கண்டு பேசியதுண்டோ' என்றார். கடலே கரையில்லாதபடி உன்னை வைத்தவர் யார் என்று கேட்பேன்; காட்டிலுள்ள கிள்ளைகளே! தாமரையில் வசிக்கும் சிறகையுடைய வண்டுகளே! அன்னப்பட்சிகளே! நீங்கள் தூதுசொல்லும் இயல்புடையவர்களல்லவோ இதுவரை பெரிய பரிபூரணப் பொருளைக்கண்டு பேசியதுண்டா ஒருதரம் என்னிடம் பேசுங்களென்று கேட்பேனென்று கூறுகின்றார் என்பதாம். 28

### மாயையின்தன்மை இற்றெனக்கூறல்

ஒருவனவன் யானைகெடக் குடத்துட் செங்கை
யோட்டுதல்போ லுன்பேதை யுப்போ டப்பை
மருவவிட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம்
வயங்கவிட்டு மைக்யமுன்னி வருந்தி நிற்பேன்



அருளுடைய பரமென்றோ வன்று தானே
யானுளனென் றும்மெனக்கே யாண வாதி
பெருகுவினைக் கட்டென்று மென்னாற் கட்டிப்
பேசியதன் றேயருணூல் பேசிற் றன்றே.

(ப-ரை) ஒரு-ஒரு, வனவன்-வேடன், யானை - (தன் எதிரேயிருந்த ஒரு) யானை, கெட-காணாது மறைந்துபோக, குடத்துள் - (அதைத் தேடுதற்காக) தன் பக்கத்தேயுள்ள குடத்துள், செம்கை-தன்னுடைய செவந்தகையினை, ஓட்டுதல்போல்-விட்டுத்துழாவித்தேடும் செய்கையைப்போல, பேதை-அறிவில்லாதவனாகிய, நான்-அடியேன், உப்போடு-உப்பினோடு, அப்பை - நீரை, மருவ-கலந்து பொருந்தும்படி, இட்டும் - (கரையுமாறுகலந்து) இட்டும், கர்ப்பூரம்அதனில் - கர்ப்பூரத்தில், தீபம் - விளக்கை, வயங்க - சுடர்கொளுத்திப் பிரகாசிக்க, இட்டும் - கொளுத்தியிட்டும், ஐக்யம் - இன்னும் ஒற்றுமையை, உன்னி-நினைந்து, வருந்தி-துன்பமுற்று, நிற்பேன்-நின்றிருப்பேன், அருள்-திருவருளை, உடைய - (தனக்குத் துணைக்காரணமாக) உடைய, பரம்-பரம்பொருள், என்றுளதோ-என்றைக்குண்டோ, அன்றுதானே - அன்றைக்கே, யான்-தமியேனும், உளன்-உள்ளவனாக இருக்கின்றேன், என்றும்-என்றும், எனக்கே-ஜீவான்மாவாகிய என்றனக்கே, ஆணவம்ஆதி-ஆணவம் முதலியவைகள், பெருகும் - அதிகப்படுதற்குக் காரணமாகிய, வினைக்கட்டு - கர்மபந்தம், என்றும் - (உளதாகி இருக்கிறது) என்றும், என்னால் - (இந்த உண்மை) தமியேனால், கட்டி - (புனைந்து) கட்டி, பேசியது - சொல்லப்பட்டது, அன்று - அல்ல, அன்றே - பண்டைக்காலத்தேயே, அருள்நூல் - முத்திநூல்களால், பேசிற்று-கூறப்பெற்றதாம்; எ-று.

(வி-ரை) வனவன்-வனத்தில் வசிப்போன், (வேடன்), செங்கைஓட்டுதல்-கையை உள்ளேவிட்டுத் துழாவிப்பார்த்தல், தேடிப்பார்த்தல் என்னும் பொருளது. 'நான்பேதை' மொழிமாறிநின்றது பேதையாகிய நான் என்பது பொருள். 'ஒருவனவன் யானைகெடக்குடத்துட் செங்கையோட்டுதல்' உபமானம். 'போல்' ஈண்டு உவமஉருபு. உப்பையும் நீரையும் ஒன்றுசேர்த்து உப்பு நீருட்கரைந்து ஒன்றாகி ஐக்கியப்பட்டிருக்கவும், (அப்பு-நீர்,) கர்ப்பூரத்தில் தீபத்தைப் பிரகாசிக்கவிட்டு கர்ப்பூரம் தீபத்தோடு கலந்து எரிந்து பிரகாசிக்கவும், ஐக்கியப்பட்டிருப்பது அறியாது ஐக்கியப் படவில்லையே என வருந்திநிற்கின்றேனென இருஉபமானங்கள் ஐக்கியோ பாவத்திற்குக் கூறினார். உப்பும் அப்பும்கூடிய ஐக்கியம், பின் உப்பையும் அப்பையும் ஐக்கியோபாவத்தினின்றும் பிரித்து உப்புவேறு அப்புவேறாக ஆக்கலாம். இது சீவன்முத்தநிலைக்கு உவமானமாகும்.

கர்ப்பூரமுந் தீபமுங்கலந்தகலப்பு கலந்தது கலந்ததே. பின் எந்த வாற்றாலும் பிரித்திட முடியாது. இது பரமுத்திநிலைக்கு உவமானம். இது கொண்டே இருவகை முத்திநிலையைக்குறிக்க இரண்டு உதாரணங்கள்

தந்தார். இது நனித்து ஆராயத்தக்கது. இதனை, 'உப்போ டப்பை மருவ விட்டுங் கர்ப்பூர மதனிற் றீபம் வயங்கவிட்டு மைக்யமுன்னி வருந்துகிற்பேன்' என்றார். இறைவனும், ஆன்மாவும் அறுதியாதலினாலே 'அருளுடைய பரமென்றே வன்று தானே யானுளன்' என்றார். இறைவன் அநாதிமலமுத்தனாதலினாலும் ஆன்மாக்கள் அநாதிமலபெத்தராதலினாலும், இறைவனுக்கு ஆணவாதி மலக்கட்டுகள் இல்லை என்பதும் ஆன்மாக்களுக்கே மலபந்தமுண்டென்பதுங்கொண்டு 'என்றும் எனக்கே யாணவாதி பெருகுவினைக் கட்டென்றும்' என்று கூறினார். இது யான் புனைந்து கூறுவதன்று. 'இது இறைவனருளால்வந்த வேதங்கள் கூறுவதாகும் என வலியுறுத்தற்கே 'என்னாற் கட்டிப் பேசியதன் றேயருணூல் பேசிற் றன்றே' என்றார். 'அருள் நூல்' என்றது வேதநூலை. இனி, அருணூல் என்றது மோக்ஷநூல் என்பாரும் உண்டு.

இறைவனோடு அந்தர்முகமாக சுவாநுபூதி நிலையிலிருந்து பகிர்முகப் பட்டாலை ஆணவாதிமலம் வந்து தொடர, பின் இவ்வாறு வேடன் யானை காணாது பக்கத்திருந்த குடத்துட் கைவிட்டுத்துழாவிய கதைபோல இடர்ப்படுதலும் உண்டாமென அறியற்பாற்றும். சுவாநுபூதிநிலையைவிட்டுப பகிர்முகப்பட்டது அறிவற்ற செயலெனக் காட்டவே 'நான்பேதை' என்றார். பிறருக்குமங்கலை ஆச்சாரியர்பால் முறைப்படி கேட்டுணர்க. தன் முன் நின்ற யானையைக்காணாத வேடன் அவ்யானை தன் சமீபத்திலிருக்கும் குடத்துக்குள் நுழைந்துகொண்டதோவென்று அக்குடத்துக்குள் தன் கையைவிட்டுத் துழாவிப்பார்த்த பேதமைத்தன்மைபோல் பேதையாகிய யான் உப்பையும் நீரையும் சலந்தும், கர்ப்பூரத்தில் தீபத்தை கலக்கவிட்டும் பின்னும் ஐக்கியபாவத்தை நினைத்து வருந்துந் தன்மையுடையவனாக இருக்கின்றேன். பரம்பொருள் என்றுண்டோ அன்று தமியேனும் உளனன்றோ? எனக்கே ஆணவாதி பெருகுதற்குரிய வினைப்பந்தம் உண்டு. இறைவற்கு இது இல்லை. நான் இது காட்டிச் சொல்வதன்று. வேதநூற் கூற்று இதுவாம் என்பதாம்.

29

**நான் என்பதோன்றில்லை என்பதை அறிவதே**
**மெய்ம்மைஞானம் எனல்**

அன்றுமுத லின்றைவரைச் சனன கோடி
யடைந்தடைந்திங் கியாதனைய லழிந்த தல்லால்
இன்றைவரை முத்தியின்றே எடுத்த தேக
மெப்போதோ தெரியாதே இப்போ தேதான்
துன்றுமனக் கவலைகெடப் புலைநா யேனைத்
தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது
சென்றிடவே பெருளைவைத்த நாவ லோய் நஞ்
சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே.



(ப-ரை) அன்றுமுதல்-படைப்புக்காலந் தொடங்கி, இன்றுவரை-இந்த நாள்மட்டும், சனனகோடி - கோடிக்கணக்கான சன்மங்களை, அடைந்து அடைந்து - (பலமுறையும்) பெற்றுப்பெற்று, இங்கு - இந்த நிலையற்றதாகிய உலகில், யாதனையால் - துன்பத்தினால், அழிந்தது - அழிந்ததே, அல்லால்-அல்லாமல், இன்றைவரை-இன்றுகாறும், முத்தி - முத்திப்பேறை யடைதல், இன்றே-இல்லாது போயிற்றே, எடுத்த - வினையின்பயனைப் பெற்ற, தேகம்-உடம்பை, எப்போதோ - ஒழித்துவிடுவது எந்தக்காலமோ, தெரியாதே-அது தெரிந்துகொள்ள முடியாததாக இருக்கின்றதே, (ஆதலால்) இப்போதே-இந்தக்கணமே, துன்று-மிகுந்த, மனக்கவலை-மனக்கிலேசங்கள், கெட-நீங்கியொழிய, புலை - கீழான, நாயேனை - நாயையொத்த என்னை, தொழும்பு-தொண்டனாக, கொள-ஆண்டுகொள்ளற்பொருட்டு, சீகாழி-சீகாழித்தலத்துத் திருஅவதாரஞ் செய்த, துரையே - பிரபுவாகிய ஞானசம்பந்தா!, தூது-(பரமசிவன்) தூதாக, சென்றிட - (பரவைநாச்சியாரிடம்) செல்லவும், பொருளை-பரம்பொருளை, இட்ட - அனுப்பிய, நாவலோய் - திருநாவலூரில் அவதாரஞ் செய்தருளிய சுந்தரமூர்த்தியே!, நம்சிவன் - நமது பரமசிவன், அப்பா-அப்பா, என்ற-என்று அழைக்கப்பெற்ற, அருள் - திருவருளாகிய, செல்வம்-செல்வத்தைக்கொண்டுள்ள, தேவே-தெய்வமாகிய திருநாவுக்கரசே! எ-று.

(வி-ரை) இது குளகம்; அடுத்த செய்யுளோடு பொருள் தொடர்ந்து நிற்கின்றது. 'அன்றுமுதல்' என்றது தேகம் எடுக்கத்தொடங்கிய அந்த நாளிலிருந்து என்பதாம். 'சனனகோடி' என்றது கோடிக்கணக்கான பிறப்புகளைப் பிறப்பெடுக்கத் தொடங்கியதிலிருந்து இன்றுவரை வினைகளைச் செய்து மேலும்மேலும் பலகோடி பிறப்புகள் பிறந்து உழன்றுகொண்டிருக்கின்றேன் என்பதை, 'அன்றுமுத லின்றைவரைச் சனனகோடி யடைந்தடைந்திங் கியாதனையா லழிந்ததல்லால்' என்றார். ஆன்மாக்கள் தேகம் எடுக்கத் தொடங்கியதிலிருந்து முத்தி எய்தும்வரை பலகோடி பிறப்புக்களிற் புக்குழலும் என்பதை,

"கன்னபுர மாலே கடவுளிலு நீயதிகம்
உன்னிலுமோ யானதிகம் ஒதக்கேள்—முன்னமே
உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக் கொன்றுமில்லை
என்பிறப்பெண் ணத்தொலையா தே"

எனக் காளமேகப்புலவரும்,

"மாதா வுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்து விட்டானே—நாதா
இருப்பையிலே வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையிலே வாராமற் கா"

என சொக்கநாதப்புலவருங் கூறிய கவிகளால் கண்டறியலாம்.

ஞானிகள் உடற்சுமையைப் பாரமாகக் கருதுபவராதலினாலும், உடற்சுமையைப்போடற்குச் சுழிக்காதவருமாதலினால் இந்த எடுத்த தேகம்

எப்போதொழியுமோ என்பான் 'எடுத்ததேகம் எப்பொழுதோ தெரியாதே' என்கின்றார். சைவப்பெரியார்களுக்குத் தொண்டு பூண்டுவிட்டால் பிறவித் துயர் தீர்க்கும் முத்திப்பேறு எய்தும் என்னுந் துணிவாலே 'இப்போதே தான் துன்றுமனக் கவலைகெடப் புலைநாயேனைத் தொழும்புகொளச் சீகாழித் துரையே தூது சென்றிடவே பொருளைவைத்த நாவலோய்நஞ் சிவனப்பா வென்றவருட் செல்வத்தேவே" என்றார். 'சீகாழித்துரையே' என்றது ஸ்ரீகாழியில் திருஅவதாரஞ் செய்தருளிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை. 'தூது சென்றிடவே பொருளைவைத்த நாவலோய்' என்றது பரவைநாய்ச்சியார் திருமனைக்குப் பொருளாகிய சிவபெருமானைத் தூதுவிடுத்த வரும் திருநாவலூரில் அவதாரஞ் செய்தருளியவருமாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை. 'நஞ்சிவனப்பா வென்றவருட் செல்வத் தேவே' என்றது திருநாவுக்கரசரை. இவர் கைலைக்குச் சென்றகாலை சிவபெருமான் இவரை 'அப்பா' என்று அழைத்தாராகையினாலும், திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசரை 'அப்பா' என்று அழைத்தாராகையாலும் திருநாவுக்கரசருக்கு 'அப்பர்' என்ற திருநாமம் வழங்கலாயிற்று. விசேடம்பற்றி 'நஞ்சிவ னப்பா வென்ற அருட்செல்வத் தேவே' என்றார். திருஞானசம்பந்தரை 'துரையே' என்றார். சிவபெருமான் புத்திரர் என்ற முறையால் சுந்தரமூர்த்திசுவாமிகளை 'நாவலோய்' என்றார். இவர் சிவபெருமான் றோழராதலால், திருநாவுக்கரசர் சிவபெருமானால் என் அப்பா என்று அழைக்கப்பெற்ற பேறுபெற்றவராதலினால் 'தேவே' என்றார். நாய், எஜமான் விசுவாசமுடையதாதலினால் நான் என்றும் நன்றியுடையவனாக இருப்பேன் என்பதனை விளக்க 'நாயேன்' என்றார். இதனை,

> "யானை யனையவர் நன்பொரீஇ நாயனையார்
> கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்—யானை
> யறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேல்
> மெய்யதா வால்குழைக்கு நாய்"

என்ற **நாலடியா**ராலும் அறியலாம்.

நாய் கக்கியதை உண்ணும் இழிபுடையது. இத்தகைய இழிபு ஜீவப் பிராணிகள் எதனிடத்தும் இல்லை. நாய் கக்கியதை உண்பதைப்போல் வெறுத்துவிட்ட உலகப்பற்றில் பின்னும் மனம் செல்ல அதைப்பற்றி இடர்ப்படும் இயல்பு மக்கட்குண்டு. ஆகையால் 'புலை நாயேன்' என்றார். படைப்புக் காலந் தொடங்கி இன்றுவரையிலும் கோடானுகோடி ஜனனங்களை எடுத்து எடுத்து துன்பத்தால் அழிந்தேனேயல்லால் முத்திபெற்றேன் இல்லை. வினையால் வந்ததேகம் ஒழிந்துபோவது என்றோ? தெரியப்படாதிருக்கின்றதே. ஆதலால் துன்பநீங்க நாயேனைத் திருஞானசம்பந்தா! சுந்தரமூர்த்தி சுவாமியே! திருநாவுக்கரசே! தொண்டுகொள்ளுங்கள் என்பேன் என்கின்றார் என்பதாம்.





மாணிக்கவாசகரைத் தெய்வ மெனல்

> தேவர்தொழும் வாதவூர்த் தேவே என்பேன்
> திருமூலத் தேவே இச்சகத்தோர் முத்திக்
> காவலுறச் சிவவென்வாக் குடனே வந்த
> வரசேசும் மாவிருந் துன் னருளைச் சாரப்
> பூவுலகில் வளரருணை கிரியே மற்றைப்
> புண்ணியர்கால் ஓஎன்பேன் புரையொன் றில்லா
> ஓவியம்போ லசைவறவுந் தானே நிற்பே
> னோதரிய துயர்கெடவே யுரைக்கு முன்னே.

(ப-ரை) தேவர் - தேவர்கள், தொழும் - பணியும் (அஞ்சலிக்கும், வணங்கும்), வாதவூர் - திருவாதவூர் என்னும் தலத்தில் அவதரித்த, தேவே-தெய்வமாகிய மாணிக்கவாசக சுவாமிகளே!, என்பேன் - என்றுஅழைப்பேன், திருமூலத்தேவே - திருமூலர் என்னுந் திருப்பெயரையுடைய சுவாமியே!, இ - இந்த, செகத்தோர் - உலகத்தவர்கள், முத்திக்கு - மோக்ஷத்தை அடைதற்பொருட்டு, ஆவல்-விருப்பம், உற-அடைய, சிவஎன்-சிவஎன்ற, வாக்குடனே-சொல்லுடனே, வந்த-திருஅவதாரஞ்செய்த, அரசே-(சிவவாக்கியர் என்னும் திருப்பெயரையுடைய) அரசே!, சும்மா இருந்து - உயிர்கள் சும்மா இருந்துகொண்டு, உன்-தேவரீராகிய உமது, அருளை - அருளை (கிருபையை), சார - அடைதற்பொருட்டு, பூ-பூமியாகிய, உலகில்-உலகத்தில், வளர் - வளர்ந்து நிற்கும், அருணகிரியே-அருணகிரியார் என்னும் திருப்பெயரையுடைய சுவாமியே!, மற்றை-இன்னும் மற்றுமுள்ள, புண்ணியர்காள்-புண்ணியவான்களே!, ஓ என்பேன் - ஓவென முறையிடாநிற்பேன், புரை - குற்றம், ஒன்று - ஒரு சிறிதும், இல்லா - இல்லாத, ஓவியம்போல்-சித்திரப்பாவைபோல், அசைவு-ஆட்டம் (சலனம்), அறவும்-இல்லாதபடியும், நிற்பேன்-நின்றிருப்பேன், ஓது-கூறல், அரிய-அருமையாகிய துயர்-துன்பம், கெட-அழியும்படி, உரைக்கும்-சொல்லும், முன்னே-முன்பாகவே எ-று.

(வி-ரை) இச்செய்யுள் குளகம். அடுத்தகவியைச் சார்ந்து பொருள் முற்றுறுகின்றது. 'தேவர்தொழும் வாதவூர்த் தேவே யென்பேன்' என்றது திருவாதவூரிலே அவதாரஞ் செய்தருளிய மாணிக்கவாசகரை இம் மணிவாசகர் திருவாக்குகளாகிய 'திருவாசகம்' 'திருக்கோவையார் என்னும் நூற்களைச் சிவபெருமானே ஆதரத்தொடு கேட்டுத் தம் திருக்கரத்தால் எழுதி 'திருச்சிற்றம்பலமுடையார்' எனக் கைச்சாத்திட்டார். ஆதலின் இவரைச் சாமானியமாக எண்ணாது 'அறிவாற் சிவனே' எனப் **பெரியார்** பலருந் துதிப்பர். 'திருமூலத்தேவே' என்றது திருமந்திரம் பாடியருளிய திருமூலத்தேவரை. இவர் நந்திதேவர் மாணாக்கர். இவர் சிவயோகியார் என்னும் இயற்பெயருடையவர். இவர் அகஸ்தியரைக் காணும்பொருட்டுத் தெற்கு நோக்கிச் செல்லும் வழியில் திருவாவடுதுறையில் மூலன் என்னும்

ஓர் இடையன் இறந்து கிடக்க அவனால் மேய்க்கப்பட்ட பசுக்கள் நின்று கதறி அழுவதைக் கண்டிரங்கி அவன் உடம்பிற் பிரவேசித்து அவனைப் போலவே அப்பசுக்களை மேய்த்து அவற்றின் துயரத்தை ஒழித்துப் பின் வந்து தன் சரீரத்தைத் தேடிக் காணாமையால் அம்மூலன் சரீரத்தோடேயே அங்கிருந்து மூவாயிரவருடம் யோகம் சாதித்து வருடத்திற்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல் பாடியருளினார். அப்பாடல் மூவாயிரமே 'திருமந்திரம்' எனப் பெயர்பெற்று விளங்குகிறது.

'சிவ்வாக்கியர்' என்னும் ஒரு யோகியார் தாய் வயிற்றிலிருந்து பிறக்கும்பொழுதே 'சிவசிவ' என்று ஜெபித்துக்கொண்டு பிறந்தவராகையால் அவரை 'செகத்தோர் முத்திக் காவலுறச் சிவவென் வாக்குடனே வந்த வரசே' என்றார். அருணகிரிநாதர்க்கு முருகப்பிரான் காட்சி தந்தருளி 'சும்மா இரு' என்று உபதேசித்தருளினர். அதனையே சுட்டி அருணகிரிநாதர் தாம் பாடிய **கந்தரனுபூதியில்**,

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
யம்மா பொருளொன் றுமறிந் திலனே"

எனப் பாடியிருக்கின்றார். இதுகொண்டே, 'சும்மா விருந்துன் னருளைச் சாரப் பூவுலகில் வள ரருண கிரியே' என்றார்.

ஓவென்பேன் ஓ என்று முறையிட்டுக் கதறுவேன் என்றபடி; ஓ இது ஒலிக்குறிப்பு. புரை-குற்றம். ஓவியம்-சித்திரம். சித்திரம் அசைவற்றிருக்குமாதலின் 'ஓவியம்போல் அசைவற' என்றார். இதுபற்றியே **நன்னூலாரும்**, "சித்திரப் பாவையி னத்தக வடங்கி" என்றார். பிறவித்துயரம் இத்தன்மைத்து என்று சொல்லித் தீராததாதலின் 'ஓதரிய துயர்' என்றார். இதனானன்றே,

"இடும்பைக் கிடும்பை இயலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே" என்றார் **பெரியாரும்**.

மாணிக்கவாசகரே! திருமூலரே! சிவவாக்கியரே! அருணகிரிநாதரே! மற்றுமுள்ள புண்ணியவான்களே! என்று விளித்து ஓவென முறையிடுவர். சித்திரப்பாவைபோல் அசைவற நிற்பேன். என் துயரம் தீரும்படி சொல்லும் முன்னே என்று கூறுகின்றார்.



## சுகமுனிவன் பேறு போற்றியது

ஓதரிய சுகர்போல வேனோ னென்ன
வொருவரிலை யோஎனவு முரைப்பேன் தானே
பேதமபே தங்கெடவு மொருபே சாமை
பிறவாதோ ஆலடியிற் பெரிய மோன





நாதனொரு தரமுலகம் பார்க்க விச்சை
நண்ணானே என்றென்றே நானா வாகிக்
காதன்மிகு மணியிழையா ரெனவா டுற்றேன்
கருத்தறிந்து புரப்பதுன்மேற் கடன்முக் காலும்.

(ப-ரை.) ஓதரிய-தபோமகிமையை எடுத்துச் சொல்லவொண்ணாதபடி உயர்ந்த, சுகர்-சுகமுனிவர்க்கு வாய்த்தது, போல - போல, ஏன் ஏன் - ஏன்! ஏன்!, என்ன - என்று பிரதியுத்தரங்கூற, ஒருவர் - ஒருவர், இலையோ - இல்லையோ, எனவும்-என்றும், உரைப்பேன் - சொல்லாநிற்பேன், தானே-தன்னியல்பிலே, பேதம்-வித்தியாசமும், அபேதம்-வித்தியாசம் இன்மையும், கெடவும் - ஒழியவும், ஒரு - ஒப்பற்ற, பேசாமை - மௌனநிலைமையானது, பிறவாதோ-எனக்குத் தோன்றாதோ?, ஆல்-வடக்கேயுள்ள கல்லாலவிருக்ஷத்தின், அடியில்-நிழலிலே வீற்றிருந்த, பெரிய-பெரியோனாகிய, மோனநாதன்-மோனநிலையிலிருந்த இறைவன், ஒருதரம் - இன்னொருமுறை, உலகம்-இப்பூவுலகை, பார்க்க - கடாட்சித்தருள, இச்சை - விருப்பம், நண்ணானே-கொள்ளானே (அடையானே), என்றென்றே - இவ்வாறு பலகாற்கூறி, நானாவாகி - பலவிதமாகக் கலக்கமுற்று, காதல் - ஆசை, மிகும் - அதிகரித்துள்ள, அணியிழையார்-(நாயகனைப் பிரிந்த) கல்லாபரணமணிந்த பெண்கள், என-போல, வாடுற்றேன் - வாட்டம் அடைந்தேன், கருத்து-அடியேனுடைய (கருத்தை) நினைவை, அறிந்து-தெரிந்து (உணர்ந்து), புரப்பது-அடியேனைக் காத்தருள்வது, முக்காலும் - மூன்றுதரமும், உன்மேல் - தேவே உன்மேலே பொறுத்த, கடன்-கடன்மையாகும் எ-று.

(வி-ரை) 'சுகர்' இவர் ரிஷிசிரேஷ்டர். இவர் வியாசருக்குக் கிருதாசி என்னும் அப்சரஸ்திரீயிடத்துப் பிறந்த புத்திரனார். கிருதாசி கிளிரூபத்தோடு இருந்தபடியினால் இவர் கிளிமுகம்பெற்று விளங்கினார். இதனாலேஇவருக்கு 'சுகர்' என்னும் பெயர் உண்டாயிற்று. சுகம்-கிளி. இவர் பிறந்துபுவியில் தங்கினால் மாயைப் பற்றிக்கொள்ளுமென பிறந்தவுடனே ஓடத்தொடங்கினார். பிரிவாற்றாமையால் தாதையாகிய வியாசர் அவரைத்தொடர்ந்து 'சுகா!' 'சுகா!' என்று கத்திக்கொண்டோடினார். தாதை சுகா!சுகா! என்று கத்தித் தொடர்ந்தபொழுது வழியிலிருந்த தாவரசங்கமங்களெல்லாம் ஏன்! ஏன்! என்றனவாம். அதனையே, 'ஓதரிய சுகர்போல வேனோனென்ன வொருவரிலையோவெனவு முரைப்பேன் றானே' என்றார். இறைவன் எல்லாமாய், எல்லாவற்றுள்ளும் இருப்பவனாதலின் சுகர் சிவத்தோடு ஐக்யமுற்றுச் சிவமாகி அபேதமாய் நின்றநிலையில் தாவரசங்கமத்துளெல்லாநின்ற சுகவைக்கியத்தோடுநின்ற சிவம் ஏன்! ஏன்! என்றதென்பதறிக. சிவானந்தப்பேறுபெற்றவர்க்குச் சிவானந்தந்தவிர வேறு எதுந்தோன்றாது. அது இது என்னும் பண்பில்லை நானென்பதில்லை, இதுபற்றியன்றோ **அருணகிரியாரும்**,

"வரையற் றவுணர் சிரமற்றுவாரிதி வற்றச்சென்ற
பரையற்ற வேலவன் போதித்தவா பஞ்சபூதிகமற்

துரையற் றுணர்வற் றுளமற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே" என்றார்.

பேதம் அபேதமற்றுத் 'தாடலை' போல் நிற்பர். தான்+தலை தாள் என்னும் பதமும் புணர்ந்துழி ளகரமும் தகரமுங்கூடி டகரமாக நின்றது இந்த டகரம் ஒன்றாயினும் இதனுள் ளகரமும் தகரமும் சேர்ந்திருக்கிறது; இதுபோல் இரண்டாகியும் ஒன்றாகியும் சிவமும் சீவனும் இருக்கும் முத்திநிலை இந்த நிலையிற் பேச்சில்லை. மௌனமேயாகும். இதனையே, 'பேதமபேதங் கெடவுமொரு பேசாமை பிறவாதோ' என்றார். இதனை,

"பூதங்க ளற்றுப் பொறியற்றுச் சாரைம் புலன்களற்றுப்
பேதங் குணமற்றுப் பேராசை தானற்றுப் பின்முற்றுக்
காதங் கரணங் களுமற்ற வானந்தக் காட்சியிலே
ஏதங் களைந்திருப் பேனிறை வாகச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தார்** வாக்கானுந் தெளிக.

முன்னொருகால் சனகாதிமுனிவர்களுக்காக வடக்கேயுள்ள கல்லால விருக்ஷத்தின் நீழலில் தக்ஷிணாமூர்த்தியாக நின்று அருள் செய்ததுபோல உலகத்து இன்னொருமுறை இச்சைவைக்கானோ அவ்வாறு வைத்து வந்தருளுவனேல் என் சந்தேகங்கள் தீர்ந்துகொள்வேனே என்ற கருத்தில் 'ஆலடியிற் பெரிய மோன நாதனொரு தரமுலகம் பார்க்கவிச்சை நண்ணானோ வென்றென்றே' என்றார். நாயகனைப்பிரிந்த நாரிகள் காதல்மிகுதியால் வாடுவர். என் அவர்கள் மனம் மிக இளகிய தன்மையுடையதாதலால், 'விட்டுப் பிரிந்தார்க்கே விசனந் தெரியும்' என்பது பழமொழி இன்னும்,

"நங்கை பயணம் நமக்கென் றுரைத்தளவில்
அங்கம் பசலைநிற மானதே—செங்கை
வளைநெகிழப் பாதி மறுத்தேனென் றோத
உளநெகிழப் பாதி யுடைந்து"

என்ற **தனிப்பாடலால்** நன்கறியலாம்.

இதுகொண்டே 'காதன்மிகு மணியிழையா ரெனவாடுற்றேன்' என்றார். இறைவா நீர் சர்வாந்தரியாமியாய் எல்லாப் பொருளுள்ளும் எள்ளுக்குள் எண்ணெய்போல் இருப்பவனாதலினால் என் உள்ளக்கருத்து வள்ளலாகிய உனக்குத் தெரியாததன்று, முக்காலும் முறையிட்டுக் கேட்டுக்கொள்ளுகின்றேன் என்பார் 'கருத்தறிந்து புரப்பதுன்மேற் கடன்முக்காலும்' என்றார். சிவமே நீ பதி நாங்கள் பசுக்கள் எங்களைக்காப்பது உனது கடமை என்பது தோன்ற 'உன்மேற்கடன்' என்றார். இறைவனுக்கு ஆன்மாக்களைக் காக்கவேண்டியது கடன் அவ்வாறு காவாதொழியின் அது அவனுக்கே பரமாம் என்பதுகொண்டு **நக்கீரரும்** தம் செய்யுளில்,

"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
யார்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்குங்



கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்கா ணிரங்கா யினி" என்றார்.

தந்தையார் அழைக்கும்பொழுதெல்லாம் என் என் எனத் தாவரமும் பிரதியுத்தரங்கொடுத்த சுகர்க்குப்போல என் என் என எனக்கு ஒருவர் இலையோ? எனக்கு மௌனநிலை யுண்டாகாதோ? கல்லால மாத்தடியில் மோனியாகநின்ற பெருமான் இன்னொருதரமும் உலகத்தைப் பார்க்க நினையானோ? என்றென்று பலவிதமாக மிகப் புலம்பி நாயகன் பிரிவாற்றாது வருந்தும் மாதைப்போல் வருந்துகின்றேன். எனது கருத்தை அறிந்து என்னைப் பாதுகாத்தருள்வது முக்காலும் உன் கடன்மையாகும் என இறைவனிடம் விண்ணப்பித்துக்கொள்ளுகின்றார் என்பதாம். 32

## காலத்துடன் மரபிலுள்ளார் மாட்சியோடு வாழ்கவெனக் கூறல்

காலமொடு தேசவர்த்த மான மாதி
கலந்துநின்ற நிலைவாழி கருணை வாழி
மாலறவுஞ் சைவமுதன் மதங்க ளாகி
மதாதீத மானவருண் மரபு வாழி
சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத்
தயவுவைத்து வளர்த்தவருட் டன்மை வாழி
ஆலடியிற் பரமகுரு வாழி வாழி
அகண்டிதா காரவரு ளடியார் வாழி.

(ப-ரை) காலம் ஒடு - காலதத்துவத்தோடும், தேசவர்த்தமானம் ஆதி - தேசவர்த்தமானாதிகளோடும், கலந்து - பிரிவறக்கூடி, நின்ற - நின்றருளும், நிலை-நிலையுடைப்பொருள், வாழி-வாழ்வதாக, கருணை - (அப்பரம்பொருளில் பிரிவின்றிக் கலந்து நிற்கும்) திருவருள், வாழி - வாழ்வதாக, மால் - மயக்க, அறவும்-ஒழியவும், சைவம் முதல் - சைவம் முதலாகிய, மதங்கள் - பல்வேறுபட்ட சமயங்கள், ஆகி-ஆகி நின்றும், அதீதம் ஆன - அம்மதங்களுக்கெல்லாமும் எட்டாததான, அருள்மரபு-திருவருள்மரபு, வாழி-வாழ்வதாக, சாலம்-மாயாவிகாரம், மிகும் - மிக்க, எளியேன் - ஏழையேன், இ - இந்த, வழக்கு-வழக்கைப், பேச - பேசும்படி, தயவுவைத்து - கிருபைவைத்து, வளர்த்த-வளர்த்த, அருள் தன்மை-திருவருளின் தன்மை, வாழி - வாழ்வதாக, ஆல்-வடவாலவிருக்ஷத்தில், அடியில் - நிழலில் எழுந்தருளியிருக்கும், பரமகுரு-பரமாச்சாரியன், வாழி வாழி-வாழ்வதாக! வாழ்வதாக!, அகண்டிதம்-சிதைக்கப்பெறாத, ஆகாரம் - உருவத்தையுடைய, அருள் - உன் திருவருளுக்கு, அடியார்-தொண்டு பூண்டவர்களாகிய அன்பர்கள், வாழி-வாழ்வதாக எ-று.

(வி-ரை) இறைவன் காலதத்துவத்தோடும் மற்றும் எல்லாத் தத்துவங்களோடும் கலந்து இருப்பவனாதலினாலும் அண்டபிண்ட சராசரங்கள் அனைத்தினும் பாலுள் நெய்போல் பரந்து இருப்பவனாதலினாலும், 'காலமொடு

தேசவர்த்த மானமாகிக் கலந்துநின்ற நிலைவாழி' என்றார். இறைவனொடு அபின்னமாகி இருக்கும் சத்தி அருட்சத்தியாதலினாலும் அவ்அருளே ஆன்மாக்கள் உய்வதற்கு முக்கியமான ஆதாரமாகையாலும், 'கருணை வாழி' என்றார். 'அருள் மரபு' என்றது நந்தியம்பெருமான் முதலாக வந்த சந்தான குரவர்களை. "காலமொடு..............நிலைவாழி" என்ற இடத்துப் பரசிவத்தினை வணங்கிய பெரியார், இறைவன் அருட்டன்மையை வாழ்த்துவான் 'சாலமிகு மெளியேனிவ் வழக்குப் பேசத் தயவுவைத்து வளர்த்த வருட் டன்மை வாழி" என்றார். முன்னர் 'கருணை வாழி' என்றது அருட்சத்தியை. ஈண்டு குறித்தது அருட்டன்மையை. 'ஆலடியிற் பரமகுரு' என்றது தக்ஷிணாமூர்த்தியை. 'அடியார் வாழி' என்றது சமயகுரவர்களையும் அறுபான்மும்மை நாயன்மார்களையும் மற்றை அடியார்களையும் 'மாலறவும்' என்றது மயக்கமற என்ற பொருளது.

சந்தானகுரவர்கள் சைவமததாபர்களாய் அதன் உண்மைகளை உலகுக்கு விரித்துரைத்தவர்களாதலின் 'சைவமுதன்மதங்களாகி' என்றார். அவர்கள் சைவமதமாகவும் அம்மதத்திற்கு மேற்பட்டவர்களாகவும் சிவப்பேறுபெற்றச் சிவானந்திகளாகவும் விளங்குவதால், 'மதாதீன மான அருண் மரபு' என்றார். தன்னை மிகவும் எளிமைப்படுத்தியுரைக்க 'சாலமிகு மெளியேன்' என்றார். "ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ" என்ற இலக்கணத்தால் 'சால' 'மிகு' என்னும் சொற்கள் மிகமிகுந்த எளியேன் என்னும் பொருள்தந்தது. இதனை **'மீமிசைச்சொல்'** என்பர் இலக்கணிகள். 'ஆலடியில்' வடவாலவிருக்ஷநிழலை. இது கல்லால் என்பர். இதனை,

"கல்லா னிழன்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே"

என்ற **சிவஞானபோதச்** செய்யுளால் அறிக.

'வாழிவாழி' மிகுதிக்கண் இரட்டித்தது. மிகவும் வாழி என்பது வாழிய என்பதன் கடைக்குறை விகாரம். இதனை,

"வாழிய வென்பத னீற்றி லுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே"

என்ற **நன்னூற் சூத்திரத்தா**லும் உணர்க.

இறைவன் அருள் கண்டிக்கப்படாதது துண்டிக்கப்படாதது. கடல் போற் பரந்ததாதலின் இறைவன் அருளை 'அகண்டிதா காரவருள்' என்றார். காலதேசங்களோடு கலந்துநின்ற இறைவன் வாழி! அவன் கருணை வாழி! திருவருள் மரபு வாழி! மாயாவிகாரமுடைய ஏழையேன் இந்த விவகாரம் பேசும்படி கிருபைவைத்து வளர்த்த திருவருட்குணம் வாழி! ஆலடியில் அமர்ந்த தக்ஷிணாமூர்த்தி வாழி! உன் அருளுக்கு அடியாராயுள்ளார் வாழி! என எல்லோரையும் வாழ்த்துகின்றார்.



---



## தேன்முகம்



பிரமனே! நீ படைத்த உலகம் மாயை முயற்கொம்போ? கானலோ?
ஆகாயத் தாமரையோ? நீயே சொல்லவேண்டும்

தேன்முகம் பிலிற்றும் பைந்தாட்
செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னா
லாட்டிய வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ
கானலம் புனலே யென்கோ
வான்முக முளரி யென்கோ
மற்றென்கோ விளம்பல் வேண்டும்.

**(ப-ரை)** தேன்-மதுவை, முகம்-தன்கண் நின்றும் (தன்னிடத்திருந்தும்), பிலிற்றும் - துளிக்கின்ற, பைம் - பசுமையாகிய, தாள் - தண்டைக்கொண்ட (நாளம்), செய்ய-செவந்த நிறமுடைய, பங்கயத்தில் - தாமரைப்பூவின்மேல், மேவும்-எழுந்தருளி யிருக்கின்ற, நான்முகம்-நான்கு திருமுகங்களைக் கொண்டிருக்கின்ற, தேவே-தெய்வமே!, நின்னால் - உன்னால், ஆட்டிய - ஆக்கி நிலை நிறுத்தப்பெற்ற, அகிலம்-உலகைப் பற்றியிருக்கின்ற, மாயை-மாயையானது, கான் - காட்டிலே வாழ்கின்ற, முயல் - முயலினது, கொம்பே-கொம்புதான், என்கோ - என்று சொல்வேனோ?, கானல் - கானலாகிய நீர்தான், என்கோ-என்று சொல்வேனோ?, வான்-ஆகாயத்தின், முகம் - இடத்தேயுள்ள, முளரி-தாமரைமலர், என்கோ-என்று சொல்வேனோ?, மற்று - இவற்றின் வேறாகிய பொருள், என்கோ-என்று சொல்வேனோ?, விளம்பல் - (அதன் உண்மையை தேவரீரே) சொல்லல், வேண்டும்-வேண்டும் எ-று.

**(வி-ரை)** இப்பதிகத்தின் முதற்பாடலில் 'தேன்முகம்' என ஆரம்பித்திருப்பதால் இப்பதிகத்திற்குத் **'தேன்முகம்'** என்று பெயரிட்டார்.

"முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினு
மிடுகுறி யானு நூற்கெய்தும் பெயரே"

என்ற **இலக்கணத்தின்**படி 'முதனிமித்தினும்' என்றபடியாற் கொள்க.

'தேன்முகம்' என்றதில் முகம் ஏழாம் வேற்றுமையுருபு இடப்பொருள் தந்தது. இதனை,

"கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை எனாஅ

முன்னிடை கடைதலை வலமிடம் எனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார்"

என்ற **தொல்காப்பியச்சூத்திரத்து** அன்னபிறவும் என்றதனானே 'முகம்' இடப்பொருள் உருபு என்றாம்.

இனி, 'முகம்' என்பதனை முற்பக்கம் எனப் பொருள்கோடலும் ஒன்று. 'பிலிற்றும்' துளிக்கும், சொட்டும் என்னும் பொருளது. 'பைந்தாட் செய்ய பங்கயம்' 'பைம்' என்பது பசுமை என்பதன் விகாரம்; 'செய்ய' இது செம்மை என்பதன்விகாரம். இதனை,

"ஈறு போத லிடையுகர மிய்யாதல்
ஆதி நீட லடியகர மையாதல்
தன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரிதல்
இனமிக லினையவும் பண்பிற் கியல்பே"

என்ற **சூத்திரவிதி** என்றறிக.

பிரமன் முன்னொரு யுகத்தில் திருமால் வயிற்றிலிருந்து தோன்றிய கமலத்தில் உதித்தான் எனவும், அப்பிரமன் அத்தாமரையையே (மாலின் உந்தியந் தாமரையையே) தனது ஆதனமாகக் கொண்டிருக்கின்றான் என்பது புராண சரித்திரம் ஆதலினால் 'செய்யபங் கயத்தின்மேவு நான் முகத் தேவே' என்றார். இதனை,

"பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்"

என்ற **ஔவைப்** பாட்டாலும்,

"யாவையும் யாரையும் படைக்க நான்முகக்
கோவை யீன்றதோர் கோக னகமே"

என்ற **திருவரங்கக் கலம்பகச்** செய்யுளாலும் அறியலாம்.

'அகிலமாயை' என்றது பிரபஞ்ச மாயையை. நின்+ஆல்+நாட்டிய= நின்னாலாட்டிய எனப் புணர்ந்தது. இதற்குவிதி,

"தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்" என்பதும்,
"னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே" என்பதாம்.

'நின்னால் படைத்து நாட்டப் பெற்ற' என்பது பொருளாம். ஆன்மாக்களுக்குப் பந்தத்துக்கு ஏதுவாகிய மாயையின் காரியமே உலகம் முதலிய எல்லாம். இனி, மாயையால் தோன்றிய தோற்றமே உலகத்தோற்றம் என்பர். சிவபோதம்பெற்ற சீவர்களுக்கு உலகம் முதலியன தோன்றாது அவையில்லையாகக் காணும் ஆதலினால் 'நான்முகத் தேவே நின்னா லாட்டிய



வகிலமாயை கான்முயற் கொம்பே யென்கோ.........முளரியென் கோமற் றென்கோ' என்றார். கானல்நீர் உண்மைபோல் தோற்றப்பெறினும் ஆராய்ச்சி முகத்தே இல்லையாகும். 'முயற்கொம்பு' சொற்படுபொருளேயன்றி உண்மை விசாரணையில் இல்லையாகும். ஆகாயத்தாமரை ஆதாரமற்றது; இது சொற்பொருளேயன்றி உண்மைவிசாரணையில் இல்லையாகும். முயற் கொம்பு என்ற இடத்து ஒருக்கால் சிறிது ஐயுறுதற்கானும் இடம் உண்டு. ஆனால் ஆகாயத்தாமரை என்ற இடத்து தாமரை ஆகாயத்து இருக்கமுடியா தெனத் தோற்றமுண்டாம் ஆதலால், அதற்குப்பின் அதனை வைத்தார்.

ஈண்டு கூறிய மூன்றுவமானத்தில் முதற்கூறிய 'கால்நீர்' கண்ணுக்குக் கானல்நீர்போல் தோன்றுகிறது. கிட்டச்சென்று ஆராய்வுழி இல்லையாகிக் கானல் உண்மைதேறக் கிடக்கின்றது. இரண்டாவது கூறிய உவமானம் கேட்டவுடன் முயலுக்குக் கொம்புண்டோ என ஐயுறவும் இடமுண்டாம். பின் முயலைக் கண்டுழி முயலுக்குக் கோடில்லை என்பது உணரலாகும். மூன்றாவது கூறி 'ஆகாயத்தாமரை' கேட்டார்க்கு ஆகாயத்தில் தாமரை எப்படி இருக்கக்கூடும். தாமரை தங்க ஆதாரமில்லையே. இருக்கமுடியா தென உண்மை விசாரணைக்கு முன்னே தோன்றுமாதலினால் முறையே வைத்தார். இது **அபூதவுவமை அணிக்கு** உதாரணமாம். "மலடி மகன் முயற்கொம்பின் மீதேறி ஆகாயத் தாமரையைப் பறிக்கப்போய்க் கயிற்றரவு கடித்து மாண்டான்" என்பதும், இன்மையணிக்கு உதாரணமாகும். இக் கருத்தேகொண்டு,

"கண்ணுதலோன் கருணையொடு குருவா வந்து
கடையேனை யாண்டருளி உண்மை ஞானம்
நண்ணுமிரு செவியூட்டி நயந்த ஞான்றே
நான்முதலாக் கரணங்கள் உலகம் யாவும்
எண்ணுபெறு கானநீர் முயலின் கொம்போ
டியம்புவிட்பூ என்றியம்ப இல்லா தாகி
அண்ணுபெருஞ் சிவானந்த மன்றி யொன்றும்
அடியேற்குத் தோன்றவிலை யம்ம வம்ம"

என்ற **பெரியார்** வாக்காலும் நன்குணரலாகும்.

'என்கோ' இதில் ஈற்று ஓ வினாப்பொருளில் வந்தது. 'கானலம்புனலே' கானல்+அம்=கானலம். இதில் 'அம்' சாரியை. 'புனலே' இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. 'வான்' என்றது விண்ணிடத்தை. முகம் - இடம் என்ற பொருளது. 'முளரி' இதில் ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. 'முளரியே' என இருக்கற்பாலது 'முளரி' என்றது காண்க. கொம்பே, புனலே, முளரியே என்றதன்கண்ணுள்ள ஏகாரங்கள் எண்ணேகாரங்கள் எனினும் பொருந்தும். தாமரை முள்ளரையை யுடைமையால் முளரி என்று பெயர் எய்திற்று. தாமரை சேற்றில் முளைத்து எழுவதால் பங்கஜம் என்ற பெயர் எய்திற்று. பற்று இடைச்சொல்

சுட்டியவைகட்கு இனத்தைக் கூறிற்று. ஐயப்பாட்டை அகற்றல் வேத உணர்ச்சியுடையார்க்கே அமையுமாதலால் நான்கு வேதங்களைக் கற்று வல்லனாதலின் வேதா என்னும் பெயரும் பெற்றிருக்கின்றாயாதலின் நீதான் சொல்லவேண்டும். பிறரைக் கேட்டுப் பயனில்லை என்ற பொருளில் 'நான்முகத் தேவே ... ... ... ... ... மற்றென்கோ விளம்பல் வேண்டும்" என்றார். இச்செய்யுள், விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் ஆக ஆறுசீர்களைக்கொண்ட அடியாலாகிய ஆசிரிய விருத்தம்; இதனை அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம் என்பர். 1

பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்ற மூவரில் எவன் இறைவன்
என்று பிரமனைக் கேட்கின்றார்

வேண்டுவ படைத்தாய் நுந்தை
விதிப்படி புரந்தா னத்தைக்
காண்டக வழித்தான் முக்கட்
கடவுடா னினைய வாற்றால்
ஆண்டவ னெவனோ வென்ன
வறிகிலா தகில நீயே
ஈண்டிய வல்ல றீர
வெம்மனோர்க் கியம்பு கண்டாய்.

(ப-ரை) வேண்டுவ-உலகத்து உயிர்களால் வேண்டப்படும் பொருள்களையெல்லாம், படைத்தாய்-நீ உண்டாக்கினை, நுந்தை-உன்பிதாவாகிய விஷ்ணு, விதிப்படி - பாதுகாக்கவேண்டிய ஒழுங்குபடி, புரந்தான் - ரக்ஷித்தான், அத்தை-அதனை, முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, கடவுள் - உருத்திரமூர்த்தி, காண்தக-எல்லோருங் காணத்தக்கபடி, அழித்தான்-சங்கரித்தான், இனைய-இத்தகைய, ஆற்றால்-தன்மையால், ஆண்டவன்-இறைவன், எவன்-யாவன், என்ன-என்று, அகிலம்-உலகம், அறிகிலாது - உணர்ந்துகொள்ள முடியாது (ஆதலால்), ஈண்டிய-மிகுந்துள்ள, அல்லல்-சந்தேகத்தால் உண்டாகிய துன்பம், தீர-அகல, எம்மனோர்க்கு-எங்களைப்போன்றவர்களுக்கு, நீயே-நீயே, இயம்பு-சொல்லுக, கண்டாய்- அசையாகி நின்றது எ-று.

(வி-ரை) இறைவன் திருவருள் ஆணையால் பிரமன் படைக்கின்றான். மால் காக்கின்றான். உருத்திரன் அழிக்கின்றான். பிரமன் படைத்தற்றொழிற்கே உரியன். மால் படைத்தல், காத்தல் இரண்டிற்கும் உரியன். உருத்திரன் படைத்தல், காத்தல், அழித்தல் மூன்றிற்கும் உரியன். இதனை,

"பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப்பொ ருந்து
மருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன்"



"சாற்றுமச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவ ரானும்
தோற்றவ னுருத்தி ரன்றான் சொல்லிய வவற்குச் சத்தி
மாற்றருங் கிரியை யென்பர் மற்றவ ரிருவர் பாலும்
போற்றுறு மரியு திப்பன் பொறியவன் சத்தி யாமால்"

"அத்திரு மாலு மாவு மளிப்பவத் துதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலுஞ் செங்கேழ் முளரிவா னவன வற்குச்
சத்திவேண் கமலை யன்னோர் தாவரு முலகிற் றோற்ற
நித்தனங் குருகு கேச னினைவுமாத் திரையி னமால்"

"ஆக்குறுஞ் செயல தொன்றே யயன்றனக் காக்க லோடு
காக்குறுஞ் செயலி ரண்டுங் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குத லென்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நிக்கரு மிறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்"

என்ற **பிரபுலிங்கச் செய்யு**ளாலும் அறியலாம்.

இதனானே பிரமனிலும் மால் உயர்ந்தோன். மாலினும், உருத்திரன் உயர்ந்தோன். இம்மூவர்க்கும் ஆதியாக நிற்பவன் இறைவன். அவனே சிவம், பரசிவம், பரமான்மா எனப்பெறுவன். காப்பான் படைப்பானையும் அவன் படைத்த பொருள்களையும் படைத்துக்காப்பன் அழிப்பான் காப்பானையும், அவன் காக்கும் பொருள்களையும், படைப்பானையும் அவன் படைத்த பொருள்களையும் அழிப்பன் மீண்டும் எல்லாவற்றையும் படைப்பன். எந்தப் பொருள் எவ்விடத்தில் ஒடுங்குகின்றதோ அந்தப்பொருள் அவ்விடத்திலிருந்தே தோன்றும். இதனை,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்தமாதி யென்மனார் புலவர்"

என்ற **சிவஞானபோத** முதற்சூத்திரத்தானும் அதன் உரையானும் நன்கறியலாம்.

'வேண்டுவ' என்றது உயிர்களுக்கு இன்றியமையாத வேண்டுவனவும் பிறவுமாகிய ஒளிப்பொருள், உணவுப்பொருள், உடைப்பொருள் மற்றும் இம்மைச்சுகத்துக்கு உரிய பொருள்களைக் குறிக்கும். அப்பிரமனும் இறைவன் திருவருளாற் பிரமனுக்கு உணர்த்தியவைகளை உணர்த்தியாங்கு, உணர்த்திய முறையில், உணர்த்தி அளவில் படைப்பன் என்க. 'நுந்தை' இது முறைப்பெயர். பிரமன் விண்டுவின் வயிற்றிலிருந்து பிறந்த காரணத்தால் விண்டுவை பிரமன் தந்தை என்றார். 'விதிப்படி' என்றதற்கு முறைப்படி என்பது பொருள். இனி இறைவன் விதித்தவிதிப்படி எனினும் பொருந்தும். அத்தை - இது (அது+ஐ=அதை) அதை என்பதன் விரித்தல் விகாரம். ருத்திரன் - முக்கண்ணையுடையோன், சூரியன், சந்திரன், அக்கினி எனும் முச்சுடரும் மூன்று கண்ணாகப்பெற்றவன். இறைவன்

மூர்த்தமேயாகும். இறைவனே! தேவர்கள் எல்லாமாகித் தேவர்களுக்கும் தெரியாத ஒளியுருவம் உடையவனாய், மூவர்களாய் அம்மூவர்க்கும் முதல்வனாகி நிற்கின்றான். இதனை,

"கடவுளராய்க் கடவுளர்க்கும் காணரிய ஒளியுருவாய்
அடன்மூவர்க் காதிமுதல் ஆனதுநஞ் சிவமேயாம்"

என்ற **பெரியார்** வாக்கானு நன்குணரலாம்.

ஒருவன் படைக்கின்றான், ஒருவன் காக்கின்றான், ஒருவன் துடைக்கின்றான், இவர்கள் மூவரும் சமம் என்றே உலகத்தவர் என எண்ணியிருப்பர் தாரதம் கண்டறிய வல்லவரல்லர். வேதாவே! நீ, வேதாகமங்களெல்லாம் கற்றுணர்ந்தவன். முன்னாளிலோ ஒருக்கால் தெரியாதிருந்திருக்கலாம். முருகப்பிரான்பால் குட்டுப்பட்டதற்குப்பின் வேதாகமங்களில் ஐயம் உனக்கிருக்க நியாயமில்லை. பின்னையும் வந்துகேள்விகேட்டு எங்கே குட்டிவிடுவானோவென்று ஐயந்திரிபறக் கற்றிருப்பையாதலினால் உன்னைக் கேட்டால் உண்மை தெரியலாமெனக் கேட்கின்றேன் என்பார் 'நீயே ஈண்டிய வல்லநீர வெம்மனோர்க் கியம்பு' என்றார். கண்டாய் - ஈற்றசையாக ஒதுக்குவர். இனி, கண்டாய் என்பதற்கு வேதப்பொருளையெல்லாங் கற்றறிந்து கண்ட பிரமனே எனினும் பொருந்தும். இனி, நீ படைத்ததையும், மால் காப்பதையும், உருத்திரன் அழிப்பதையும் கண்ட பிரமனே என உரைசெய்வாருமுண்டு. பிரமனே நீ உலகத்தையும் உலகத்துப் பொருள்களையும் படைத்தாய் உன் தந்தையாகிய மால் நீ படைத்தவற்றைக் காத்தான். உருத்திரமூர்த்தி அவைகளைத் துடைத்தான். உங்கள் மூவரில் எவன் இறைவனென்பது உலகம் அறியாது அவ்வுண்மையை நீயே எம்மனோர்க்கு உணர்த்தவேண்டும் என்பதாம். 2

தத்துவநியதி களைந்து நோக்கில் எல்லாம் பறந்தோடி யொடுங்கின
சர்வ சங்காரகாலத்தில் கடைசியாக எஞ்சிநின்ற பொருள்
யாது? என்கின்றார்

கண்டன வல்ல வென்றே
கழித்திடு மிறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக்
கோதிலா முத்தி அத்தால்
பண்டையிற் படைப்புங் காப்பும்
பறந்தன மாயை யோடே
வெண்டலை விழிகை காலில்
விளங்கிட நின்றான் யாவன்.

(ப-ரை) கண்டன-கட்புலனாலும் ஆராய்ச்சி யறிவாலும் காணப்பட்ட பொருள்களெல்லாம், அல்ல - பரம்பொருளல்ல, என்று-என்று, கழித்திடும்-



நியதி வாக்கியங்களால் களைந்து செல்லுகின்ற, இறுதிக்கண் - முடிவில், கொண்டது - பரம்பொருள் என்று கொள்ளப்பெற்றது, (யாதோ அதுவே) பரமானந்த - மேலான இன்பத்தைத் தந்தருளும், கோதிலாத - குற்றமற்ற, முத்தி-மோக்ஷமாகும், அத்தால்-அதனால், பண்டையின்-முன்னிருந்ததாகிய, படைப்பும் - சிருட்டியும், காப்பும் - இரக்ஷிப்பும், மாயையோடே - மாயையினுடன், பறந்தன-ஓடி யொழிந்தன, வெண்-வெண்மையாகிய, தலை-சிரமும் (பிரமன் தலையும்), விழி-கண்ணும் (மாலின் கண்ணும் முறையே), கை-கரத்தினிடத்தும், காலில் - தாளினிடத்தும் (பாதம்), விளங்கிட - பிரகாசிக்கும்படி, நின்றான்-சர்வ சங்காரகாலத்திலே பேர் ஈமத்தே ஆனந்த நடனஞ்செய்து கொண்டு எஞ்சிநின்றவன், யாவன்-எவன்? எ-று.

(வி-ரை) கண்டபொருள்கள் எல்லாவற்றையும் ஆராயுங்கால் இறைவன் இதுவல்ல, இதுவல்ல என்றே செல்ல கடைசியில் மாயா தத்துவமுங் கடந்த பின் பொருள் தோன்றா நிற்கும். அப்பொருள் தோன்றவே ஆனந்தம் உதியா நிற்கும்; மோனம் உண்டாகும் முத்தி கைகூடும். கண்ட பொருள்களல்ல இறைவன் என்பதனை,

"அல்லையீ தல்லையீதென மறைகளு மன்மைச்
சொல்லினாற் றுதித்திளைக்கு மிச்சுந்தர னுடற்
கெல்லை யாகுமோவென் னுரையென்செய் கோவிதனைச்
சொல்லுவேனெனு மாசையென் சொல்வழி கேளா" எனவும்,

"பூதங்களல்ல பொறியல்ல வேறுபுலனல்ல வுள்ளமதியின்
பேதங்களல்ல வினையன்றிநின்ற பிறிதல்ல வென்றபெருநூல்
வேதங்கிடந்து தடுமாறும்வஞ்ச வெளியென்ப கூடன்மறுகிற்
பாதங்களோவ வளையிந்தனாதி பகர்வாரை யாயுமவரே"

எனவருஞ் செய்யுள்களாலும் அறியலாம். தத்துவங்களை எல்லாம் நியதி களைந்துகொண்டே சென்றால் கடைசியில் எஞ்சிநிற்பது பரம்பொருளே யன்றி வேறில்லை என்பதனை,

"பூதாதி தத்து வங்கள் பூராவுங் கடந்து நேடின்
வேதாதி நூல்கள் கூறும் விழுப்பொருளைக் காண லாகும்
மோதாதி மாயை தானும் முற்றமொழிந் தோட்டெ டுக்கும்
ஈதாதி முத்தி மோன எழிற்சுகமாங் கண்டு கொள்ளே"

என்ற **தனிப்பாவாலும்** அறியலாம்.

மாயை ஒழியவே பிரமனும் அவன் படைப்பும் மாலும் அவன் காப்பும் அற்று இறைவன் ஒருவனே நிற்பன் என்பதனை, "பண்டையிற் படைப்புங் காப்பும் பறந்தன மாயை யோடே" என்றார். பிரமன், மால் இவர்கள் இறைவன்பால் ஒடுங்குவர். பிரமனும், மாலும் இறைவனைப் பூசித்த பேற்றினாலேயே இப்பதவி பெற்றனர். பிரமன் இறைவனுக்கும் ஐந்து தலை இருக்கிறது. நமக்கும் ஐந்து தலை இருக்கிறது நாம் இறைவனுக்குச் சமம்

என்று அகங்காரங்கொண்டான். இதனை அறிந்து இறைவன் வீரபத்திரக் கடவுளைக்கொண்டு ஐந்து தலையில் ஒருதலையைக் கிள்ளியெறியச் செய்தார். எல்லாம் படைக்கின்றோம் என்று அகங்கரித்திருந்த பிரமனுக்குத் தன் ஐந்தாவது தலையை ஆக்கிக்கொள்ள முடியாமை கண்டு இறைவனைப் பணிந்து உண்மை ஞானங் கைவரப்பெற்றான். அக்காலத்து பிரமன் தலை இறைவன் கையில் நின்றது. மால் சலந்தராசுரனைச் சம்மரிக்கச் சக்கரம் பெறற்குச் சிவனைத் தினமும் ஆயிரம் செந்தாமரைகளால் அருச்சித்து வந்தான். ஒருநாள் இறைவன் இவன் பத்தியைச் சோதிக்க ஒரு மலரை ஒளித்தார். ஒரு மலர் குறைந்ததற்கு வருந்தித் தன் கண்ணையே மலராக இடந்து அர்ச்சித்தான். இறைவன் மகிழ்ந்து சக்கரமீந்து கமலக்கண்ணன் என்னும் நாமமுந் தந்தருளினார். இஞ்ஞான்று மால்கண் இறைவன் தாளில் நின்றது. இவைகொண்டே "வெண்டலை விழிகை காலில் விளங்கிட நின்றான் யாவன்" என்றார். இது **நிரைநிரைப் பொருள்கோள் அணி**. வெண்டலை கையிலும், விழிகாலிலும் விளங்கிட நின்றானென இயையும். 'வெண்டலை' என்றது பிரமகபாலத்தை. 'விழி' என்றது திருமாலின் கண்ணை. இக்கருத்தை,

"வான்பணிக் தாலவ னென்பே யுரைக்கு மலரிலயன்
தான்பணிக் தாலவன் றன்றலை யேசொல்லுந் தாரணியுன்
டான்பணிக் தாலவன் கண்ணே பரிந்து பரிந்துரைக்கும்
நான்பணிக் தாலெனக் கார்சொல்லு வார்சொக்க நாயகற்கே"

என்ற பல பட்டடைச் **சொக்கநாதர் செய்யுளா**லும் நன்கறியலாம். 3

இறைவன் திருஉருவில் விபூதி விளங்க கங்கையைத்தாங்கி, நெற்றிக்கண் தோன்றப் பேருருவுடன் காணல்

விளங்கவெண் ணீறு பூசி
  விரிசடைக் கங்கை தாங்கித்
துளங்குநன் னுதற்கண் டோன்றச்
  சுழல்வளி நெடுமூச் சாகக்
களங்கமி லுருவந் தானே
  ககனமாய்ப் பொலியப் பூமி
வளர்ந்ததா ளென்ன வுள்ள
  மன்றென மறையொன் றின்றி.

(ப-ரை) விளங்க-பிரகாசிக்குமாறு, வெண்ணீறு - திருவெண்ணீற்றை, பூசி-பூசிக்கொண்டு, விரி-பரவிய, சடை-சடையின்கண், கங்கை-கங்காநதியை, தாங்கி-சுமந்து, துளங்கு-பிரகாசிக்கின்ற, நல்-நல்ல (சிறந்த), நுதல்-நெற்றியினிடத்து, கண்-விழியானது, தோன்ற-பிரகாசிக்கவும், சுழல்-சுழன்றுவீசும், வளி - காற்றானது, நெடுமூச்சு - பெருமூச்சு (நெட்டுயிர்ப்பு), ஆக - ஆகவும், ககனமே-ஆகாசமே, களங்கம்-குற்றம், இல்-இல்லாத, உருவம்தானே-உருவ



மாக, பொலிய - விளங்கவும், பூமி - பூமியே, வளர்-நீண்ட, தாள் - திருவடி, என்ன-ஆகவும், மன்று-சிற்றம்பலமானது, உள்ளம்-இருதயம், என-ஆகவும் (கொண்டு), மறை-இரகசியம், ஒன்றுஇன்றி-ஒருசிறிதுமில்லாமல், எ-று.

(வி-ரை) இச்செய்யுள் அடுத்த செய்யுளோடு பொருள் தொடர்ந்து நிற்கின்றது. இறைவன் சர்வ சங்காரகாலத்தில் எல்லாவற்றையும் பொடியாக்கிடுவன். அவைகள் யாவும் இறைவனையன்றி வேறிடமின்மையால் அவன்பாற் படியும். இதனை, தன்னையன்றி வேறு பற்றுக்கோடில்லை என்பதனை ஆன்மாக்கள் அறிந்து உய்தற்பொருட்டு இறைவன் அணிந்து காண்பன் என்பது தோன்ற 'விளங்க வெண்ணீறு பூசி' என்றார். இறைவன் பாகத்து உறையும் உமாதேவியார் காத்து உற்பத்தியான கங்கையை இறைவன் தன் ஜடாபாரத்தில் தாங்கியருளினார். ஏனெனில்? கங்கைப் பெருக்கு உலகங்கள் எல்லாவற்றையும் அழிக்கும்படி அகங்கரித்து வருதலும் அதன் ஈறு அடக்கி ஒடுங்குமாறே ஜடைக்காட்டில் அடக்கினர். இதனை,

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
யிடத்திலே வைத்த விறைவர் சடாம
குடத்திலே கங்கை யடங்கும்"

என்னும் **புகழேந்திப்புலவர்** வாக்காலும்,

"செங்கைமழு வேந்துபிரான் சீதநீர்க் கங்கைதனைப்
புங்கச் சடையுட் புகுத்திலனேல்—தங்குபெரு
மாலெங்கே வேதனெங்கே வேறுளதே வெங்கேசொல்
நூலெங்கே சற்றே நவல்"

என்ற **தனிவெண்பாவா**லும் அறியலாம்.

நுதற்கண் - இறைவனுக்கு முச்சுடரும் மூன்று கண்களாக விளங்குகின்றன. வலக்கண் சூரியன், இடக்கண் சந்திரன், நெற்றிக்கண் அக்கினி. விவேகத்திற்கிடமாகிய லலாடத்தானத்தில் அக்கினியிருந்து விளங்குவதால் 'துளங்குநன் னுதற்கண் டோன்ற' என்றார். சுழல்வளி - சுழன்றடிக்குங் காற்று. இறைவனது விராட் உருவிற்குக் காற்று மூச்செனு வேதங்கூறும். ஆகாசம் மாசுமருவற்று மற்றைப்பூதங்கள் தன்பாலடங்க இடமாகயிருத்தலால் இறைவனுக்கு உருவம் என்றார். இறைவன் அட்டமாவுருவினன் எனப்படுவனாதலின் எல்லாப்பூதமும் அவன் உருவேயென்பது ஈண்டு மறக்கற்பாலதன்று. சர்வமும் தன்பாலொடுங்க இடந்தரலால் உவமையானும் ஆகாச உருவர் எனக்கு இடந்தந்து நின்றமை காண்க. இறைவன் அமலன் விமலனாதலின் 'களங்கமில் உருவம்' என்றார். 'மன்று' என்றது அம்பலத்தை. விராட்புருடனுக்குத் தில்லைஅம்பலம் இருதயத்தானமாதலின் 'உள்ளம் மன்றென்' என்றார். இச் செய்யுளானே இவைகளுக்கும் அப்பாலுக்கும் அப்பாலாயும் விளங்குபவன் என்பது ஈண்டு உணரற்பாற்று. இதனை,

"தேனினிய குயிலே கேட்டியே லெங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவிற் பாதாள மேழினுக் கப்பாற்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதி குணமொன்று மில்லா னந்தமிலான் வரக் கூவாய்"

என்ற **திருவாசகத்தா**லும் அறியலாம்.

'வெண்ணீறு' இது வெண்மை+நீறு என இருசொல் ஒருசந்தி. 'ஈறு போதல்' என்ற விதிப்படி ஈற்று மைகெட்டு நின்றது. 'விரிசடை' இது வினைத்தொகை. இது விரிந்த சடை, விரிகின்ற சடை, விரியும் சடை என விரிதலால் முக்காலத்துக்கும் பொதுவாக நின்றது. "காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை" என்பது **இலக்கணம்**. 'கங்கை' இது 'கங்கா' என்ற வடசொல்திரிபு என்பர். 4

வரதக்கையோடும், அபயக்கையோடும் எங்கு நிறைந்து குற்றமற்ற நடனத்தைச் செய்யும் அவனே இறைவன் என்கின்றார்

மறைமுழக் கொலிப்பத் தானே
வரதமோ டபயக் கைகள்
முறைமையி னோங்க நாத
முரசெனக் கறங்க எங்கும்
குறைவிலா வணநி றைந்து
கோகிலா நடனஞ் செய்வான்
இறையவ னெனலா மியார்க்கு
மிதயசம் மதமீ தல்லால்.

**(ப-ரை)** மறை-வேதத்தின், முழக்கு - முழக்கமானது, ஒலிப்ப-சப்திக்கவும், தானே - தமக்குத்தாமே, வரதமோடு - வரங்கொடுக்குங் கைகளோடு, அபயக்கைகள்-அபயஸ்தங்களும், முறைமையின் - ஒழுங்காக, ஓங்க-மிகுந்து விளங்கவும், நாதம் - நாதத்துவமானது, முரசென - முரசவாத்தியத்தைப் போல, கறங்க-சப்திக்கவும், எங்கும் - எல்லாவிடங்களிலும், குறைவு - குறைவானது, இலா-இல்லாத, வணம்-வண்ணம், நிறைந்து-நிறம்பி, கோது-குற்றம், இலா-இல்லாத, நடனம்-நடனத்தை, செய்வான் - செய்கின்றவன், இறைவன்-கடவுள் (முதல்வன்), எனலாம்-என்று சொல்லலாம், யார்க்கும்-எத்தகையோர்க்கும், இதயம் - மனத்துக்கு, சம்மதம் - ஒப்பத்தகுந்த காரியமாகும், ஈது-இது, அல்லால்-ஆகும் அல்லாமல் எ-று.

**(வி - ரை)** இச்செய்யுள் அடுத்த செய்யுளைப் பொருள்நோக்கால் தொடர்ந்து நிற்கிறது. இறைவன் பஞ்சகிருத்தியங்களும் நடத்தற்பொருட்டு அம்பலத்தினின்று திருஅருள் நடனம்புரியுங்காலை திருச்சிலம்பொலி செய்கின்றது. திருக்காடமாரகம் ஒலிக்கின்றது திருச்சிலம்பொலி வேதஒலி



என்பர். இதனை, "மறைச்சிலம் பொலிசெய" என்றலால் அறியலாம். திருக்காடமாரகத்து ஒலியால் தோற்றங்கள் எல்லாம், படைப்பெல்லாம் உண்டாகின்றன. "சத்தம்பிறந்த இடத்து சகலமும் பிறக்கும்" என்னும் பெரியோர் வாக்கு இதனை வலியுறுத்தும். இதுபற்றியன்றோ "தோற்றமொரு கைத்துடியில்" எனவும், "திருக்கா டமாகத்தால் தெரிதா எல்லாந்தோன்றும்" என்றனர். இந்த நடனம் அகவாத நடனம் ஆனந்த நடனம் வேறு. இறைவன் இடக்காத்தொன்று அருளொடு வாந்தருங் காமாதலினும் வலக்காத்தொன்று அபயம்தருங் காமாதலினும் 'வாரமோடபயக்கைகள் முறைமையி னோங்க' என்றார். இறைவனுக்கு எட்டுத்தோள்களாதலின் அவற்றின் இரண்டன் விசேடங்குறித்துக் கூறினர். இறைவன் எட்டுக்கரங்களைவீசி நிருத்தம் புரிபவன் என்பதனால் அறியலாம். இதனை, "எண்டோள்வீசி நின்றாடும்பிரானை" என்றார் **திருநாவுக்கரசர்**. இறைவன் ஆன்மாக்கள் வேண்டிய வேண்டிய வரங்களைத் தருபவன் என்பதும் ஆன்மாக்களுக்கு என்றும் பயமகற்றி ஆசாதிர் என்று அருள்செய்யும் கருணைத்திறம் இதனால் விளக்கியதாயிற்று. மறை - இரகசியார்த்தமுடையது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். இன்னும் அந்தணர் ஒழித்து மற்றையர் காணக்கூடாது ஓதக்கூடாது என மறுக்கப்பட்டமையால் மறை என்ற பெயர் எய்திற்று என்பர். இதனை,

"செய்யா மொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரில்லாதா ரில்"

என்ற **வெள்ளி வீதியார்** வாக்கால் நன்குணரலாம்.

'நாத முரசெனக் கறங்க' என்றது டமாக ஒலியை. இறைவன் பரிபூரணன் எங்கும் நிறைந்துள்ளவனாதலின் 'குறைவிலா வணநிறைந்து' என்றார். இவர் நடனம் பஞ்சகிருத்தியத்தின் காரணமாக நடிக்கப்படுதலின் 'கோதிலா நடனஞ் செய்வான்' என்றார். முன்னைப் பாட்டாலும் இறைவன் உருவத் திருமேனியழகை வர்ணித்தாராதலின் 'இறையவ னெனலாம்' என்றார். இதனை எவரும் மறுத்துக் கூறாரென்பார் 'யார்க்கும் இதயசம்மதம் ஈது' என்றார். என்னை, எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததொன்று இது என்பதாம்.

'வாதம்', 'அபயம்' வடசொற்கள். அபயம்-பயம் இன்மை. அபயம் என்பதில் அகரம் எதிர்மறை உபசர்க்கம். 'வணம்' இது 'வண்ணம்' என்பதன் தொகுத்தல் விகாரம். எனலாம்+யார்க்கும்=எனலாமியார்க்கும் எனப் புணர்ந்தது. இதனை,

"தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே"

என்ற விதிப்படி இடையே ஒரு இகரம் தோன்றிற்று. 5

அடிக்கடி பிறந்துபிறந்து வேதனைப்படும் விஷ்ணு கடவுளானால் மாயையும் நான் கடவுளெனவந்து நின்றிடும் என்கின்றார்

அல்லலாந் தொழில்ப டைத்தே
அடிக்கடி யுருவெ டுத்தே
மல்லன்மா ஞாலங் காக்க
வருபவர் கடவு ளென்னில்
தொல்லையாம் பிறவி வேலை
தொலைந்திடா திருணீங் காது
நல்லது மாயை தானும்
நானென வந்து நிற்கும்.

(ப-ரை) அல்லல் - துக்க உருவம், ஆம் - ஆகிய, தொழில் - தொழிலை, படைத்தே-பெற்று, அடிக்கடி - திரும்பத்திரும்ப பலமுறை, உரு-உடம்பை, எடுத்து-எடுத்து (பெற்று), மல்லல்-வளப்பம்பொருந்திய, மா-பெரிய, ஞாலம்-உலகை, காக்க-காத்தற்பொருட்டு, வருபவர் - வருகின்றவர், கடவுள் - இறைவன், எனின்-என்றால், தொல்லை-பழமை, ஆம் - ஆகிய, பிறவி - பிறப்பாகிய, வேலை-சமுத்திரமானது, தொலைந்திடாது-ஒழியாது, இருள் - அஞ்ஞானம், நீங்காது-ஒழியாது, நல்லது - நன்மையாகத்தோன்றும், மாயை - மாயையும், நான்என-நானென்று, வந்து-வந்து, நிற்கும்-நின்றிடும் எ-று.

(வி-ரை) படைக்கும் பிரமனும், காக்கும் மாலும், அகங்காரதத்துவங்களால் மயங்கித் திரிந்து அதன் பயனாய் மாயைக்கடங்கி வேதனைப் படுவோராதலின் 'அல்லலாந் தொழில் படைத்தே' என்றார். இனி, இதற்குப் பிறப்பும் இறப்பும் வினையினால் வருவதாலும், ஆன்மாக்களுக்குத் துன்பந்தருவதாதலினாலும் ஆன்மாக்களுக்கும் தமக்கும் அல்லல் (துன்பத்தைத்) தருவதாகப் படைத்தல் காத்தற்றொழிலைப்பூண்டு என்று பொருள் குறிப்பாரும் உண்டு. பலகோடி பிரமர்கள் உதித்தனர். ஒவ்வொரு பிரமர்கள் முடியவும் அவர் என்புகளையும், பலகோடி மால்கள் உதித்தனர், அம்மால்கள் முடியவும் அவர் என்புகளையும் இறைவன் மாலையாக அணிந்துளான் எனப் புராணங்கள் கூறுவதாலும் மால் மச்சமாதி மா ஈராகப் பத்துப் பிறப்புப் பிறந்துளான் என்பதனாலும் 'அடிக்கடி யுருவெடுத்தே' என்றார். இறைவன் மால் பிரமர்களின் என்புமாலையை அணிவோன் என்பதனை,

"தலைமாலை தலைக்கணிந்து" எனவும்,

"கண்டவிடம் நித்தியத்தைக் காட்டவுங்கங் காளமுதல்
அண்டவிடந் தரவைத்தாய் அம்புயஞ்செய் குற்றமெவன்"

எனவுஞ் சொற்ற **சான்றோர்** வாக்குகளாலும் அறியலாம்.

இறைவன் மால்பிரமர் என்புமாலையை அணிவதற்குக்காரணம் தான் ஈறிலான் என்பதை ஆன்மாக்கள் உணரவும், எல்லாருக்கும் எல்லாவற்றிற்கும்



ஆதாரஞ் சிவபெருமானே என்பதை ஆன்மாக்கள் அறிந்து உய்யவுமேயாம். பிறவி மாறிமாறிவந்து கொண்டிருப்பதால் அதனைக் கடலுக்கொப்புக்கூறுவர் இதனை,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

என்ற **திருக்குறளால்** அறியலாம்.

இதுபற்றியே 'தொல்லையாம் பிறவிவேலை' என்றார். வேலை - சமுத்திரம். ஒருசிலர் 'வேலை' என்பதற்குப் பிறப்புத்தொழில் என்றுங் கூறுவர். 'இருள் நீங்காது' என்றதில் இருள் என்றது அஞ்ஞானத்தை. மாயைத் தோற்றம் அனைத்தும் ஆன்மாக்களுக்கு நல்லதுபோற்றோன்றி ஆன்மாக்களை மேலும் மேலும் பாசத்துள் அழுத்தி உய்வைக் கெடுப்பதாதலின் 'நல்லது மாயை' என்றார். இனி, இறைவன் திருவருளால் ஆன்மாக்கள் உய்வை எய்தவே மாயைத்தோற்றம் வருமாதலின் நல்லது மாயை என்று உரைத்திடுவாருமுண்டு. 6

நான் என்பது ஞானமின்று, நான் என்பது உள்ளவை மோனம் உண்டாகாது எனல்

நானென நிற்கு ஞான
ஞானமன் றந்த ஞானம்
மோனமா யிருக்க வொட்டா
மோனமின் றாக வேதான்
தேனென ருசிக்கு மன்பாற்
சிந்தைநைந் துருகும் வண்ணம்
வானென நிறைந்தா னந்த
மாகடல் வளைவ தின்றே.

(ப-ரை) நான் - நான், என - என்று, நிற்கும் - (பேசும் விவகாரத்தை யுடையதாகி) நிற்கும், வானம் - ஞானமானது, ஞானம் - ஞானம், அன்று-அல்ல, அந்த - நான் என்று கூறும் அந்த, ஞானம் - ஞானமானது, மோனமாய்-மௌனமாக (சும்மா), இருக்க - இருக்கும்படி, வொட்டா - விடாது (செய்யாது), மோனம்-மௌன நிலைமை, இன்றாகவே தான்-இல்லையென்ற காலத்திலே, தேன் என - மதுவைப்போல, ருசிக்கும் - சுவையைத் தரும்படியான, அன்பால்-அன்பினால், சிந்தை - மனம், நைந்து - நைந்து (இளகி), உருகும்-கரையும், வண்ணம்-விதமாக, வான் - ஆகாயத்தை, என - போல, நிறைந்து-பூரணமாகி, ஆனந்தம்-சிவானந்தம் (முத்தியின்பம் ஆகிய), மா-பெரிய, கடல்-கடலானது, வளைவது-சூழ்தல், இல்லை-இல்லையாகும் எ-று.

(வி-ரை) ஆன்மாவை 'நான்' என்கிற அகங்கார தத்துவம்பற்றி நிற்கும் வரை ஞானந் தோன்றற்கு இடமில்லை. என்னை? மாண்புறும் மனிதைய

மேலே மாசு படிந்து சூழ்ந்து கிடக்கும்வரை அதற்கு ஒளி தோற்றமுறாது. மாசைக் கழுவிய பின்னரே புறத்து ஒளிதாக்க அம்மணி ஒளிதாநிற்கும்; அதுபோல, ஆன்மாவைப்பற்றி நிற்கும் 'நான்' என்ற மாசு அறின் எங்குமாய் ஒளியாய் நிற்கும் ஒளி அதன்கண் படியாநிற்கும், அப்போது அம்மணி ஒளிராநிற்கும். ஆன்மாவை நான் என்ற அஞ்ஞான இருள் நீங்கிய பின்னர் எங்குமாய் நிற்கும் பேரொளி பிரதிபலிக்க ஆன்மா சித்துருவாக ஒளி உருவாக நிற்கும். அவ்விறைவன் ஒளி ஆனந்த ஒளியாதலினால் ஆன்மா ஞானஒளி பெற்று, ஞானமே ஆனந்தமாதலின் இறைவனைப்போல ஆனந்த மயமாகும். சிவானந்த ஒளியில் ஈடுபட்டு சிவானந்தமயமாய் நிற்கும். இதுவே பரமானந்தமுத்தி எனப்படும்.

முத்தி என்பது விடுபட்ட நிலைமை. அதாவது ஆன்மாவை அணுகியே பற்றி நின்ற 'நான்' என்ற அகங்காரதத்துவம் அற்றவுடன் துன்பவாதனைகள் அற்றுப்பற்றுது அகலும், அதுவே ஆனந்தமாம். மெய்ப்பொருளைக்காண நான் என்ற அகங்காரம் அறவேண்டும். நான் அறவே ஆன்மபோதம் அறும், ஆன்மபோதம் அறவே எல்லாப் பொருளும் பொய், மெய்ப்பொருள் இறைவனே என்னும் உண்மைஞானம் எய்தும், உண்மை ஞானம் எய்தவே சிவபோதம் தோன்றும், சிவபோதந் தோன்றவே ஆனந்தானுபவனுவன் அதுவே முத்தியாகும். இதனை,

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணுப் பிறப்பு" எனவும்,

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கு
மாசறு காட்சி யவர்க்கு" என்னும் **திருக்குறள்களா**லறியலாம்.

ஆனந்தநிலை வேண்டுவான் மெய்ப்பொருளை அறிதல்வேண்டும் என்பதனை,

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு"

என்ற **திருக்குறட்செய்யுளா**லறியலாம். நான் அறச் சிவானந்தஞ் சித்திக்கும் என்பதனை,

"நல்லமணி மேற் பொதிந்த நாசவழுக் கற்றக்கால்
நல்லமணி நல்லமணி யாநிற்கும்—நல்லசிவ
ஒள்ளொளியைப் பெற்றின்ப முற்றிடவு நீயின்னே
கள்ளநான் அற்றிடவே காண்"

என்றதனால் அறியலாம்.

இதனையே தாயுமானவர், நானென ... ... ... வளைவ தின்றே" என்ற இந்தப் பாட்டால் விளக்கினார். நான் என நிற்கு ஞானம் இருளேயாதலினால் 'நானென நிற்குஞான ஞானமன்று' என்றார். 'மோன மென்பது ஞானத்தின் வரம்பு' என்றமையால் ஞானம் உதித்தாலன்றி



மோனம் உதியாதாதலின் 'அந்த ஞானம் மோனமா யிருக்க ஒட்டா' என்றார். மோனமே இன்பமாதலினால் "மோனமின்றாகவேதான் தேனென ருசிக்கு மன்பாற் சிந்தைகைக் திருகும் வண்ணம் வானென நிறைந்தா னந்த மாகடல் வளைவ தின்றே" என்றார்.

7

சிவானந்தம் இல்லை என்று சொல்லின் முத்திசூனியம் ஆகிக் குருவில்லையாகி அஞ்ஞானமுண்டாமெனல்

இன்றென விருப்போ மென்னி
    னென்றுஞ்சூ னியமா முத்தி
நன்றொடு தீது மன்றி
    நாமுன்னே பெறும வித்தை
நின்றது பெத்தந் தானே
    நிரந்தர முத்தி யென்னின்
ஒன்றொரு வரைநான் கேட்க
    வுணர்வில்லை குருவு மில்லை.

**(ப-ரை)** இன்று-இல்லை, என-என்று, இருப்போம் - இருந்துவிடுவோம், என்னின்-என்றால், என்றும் - எந்தக்காலத்திலும், முத்தி - முத்தி என்பது, சூனியம் - சூனியம், ஆம் - ஆய்முடியும், (அப்பொழுது) நன்றொடு - நன்மையுடன், தீதும்-தீமையும், அன்றி - அல்லாமல், நாம் - நாம், முன்னம் - முற்காலத்தே, பெறும் - பெற்றிருந்த, அவித்தை - அவிச்சை, நின்றது - நிலை பெற்றது, பெத்தந்தானே-அந்த அவிச்சைநிலை பெற்றிருக்கப்பெற்ற பெத்த நிசைதானே, நிரந்தரம் - எப்பொழுதும், முத்தி - முத்திநிலை, என்னின்-என்று சொன்னால், ஒருவரை-ஒருத்தரை, நான்-நான், ஒன்று-ஒருபொருளை, கேட்க-கேட்டுக்கோடற்கு, உணர்வு-அறிவு, இல்லை-இல்லையாகும், குருவும்-ஆச்சாரியனும், இல்லை-இல்லையாகும் எ-று.

**(வி-ரை)** ஒருவன் ஆனந்தம் என்பது ஒன்றில்லை முத்தி என்பது ஒன்றில்லை என்றிருப்பானாகின் சூனியவாதமாகமுடியும். வாதனைகள் அற்றிருப்பதே முத்தி, முத்திநிலையே ஆனந்தநிலை. மாயையால் மயக்குண்டு பொருளல்லவற்றைப் பொருளெனக்கொண்டு மருண்டு உழலும் ஆன்மாக்கள் பரன் அருளாலேயே செம்பொருளை உணரவேண்டும். இதற்குப் பிறவிகடோறும்செய்த புண்ணியம் நண்ணி யுதவவேண்டும். பொருளல்லாதவற்றைப் பொருளெனக்கொண்டு அதன்கண் பற்றுவைத்துத்திரியின் துன்பமேயன்றி இன்பம் ஒருநாளுமில்லை. செம்பொருள் கண்டார்க்கே இன்பம் எய்தும். ஒருவன் துன்பத்தினின்று நீங்கி இன்புற உலகம் பொய்ப்பொருள் பற்றைக்காட்டு மெய்ப்பொருள் வேண்டுமென்பதற்குப் பிரமாணம்.

"யாதனின் யாதனி னீங்கியான் நோதல்
லதனி னதனி னிலன்" எனவும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" எனவும்,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்" எனவும்,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"

எனவுங்கூறிய **திருக்குறட்பாக்கள்** நன்குணர்த்தும்.

வேதாகமங்களாலும் ஆன்றோர்களாலும் கூறப்பெறும் 'ஆனந்தம்' 'முத்தி' என்பவைகள் இல்லையென்றால் ஒன்றுமில்லை என்னும் சூனியமே பயனாகும் என்பார் 'இன்றென விருப்போ மென்னி னென்றுஞ்சூ னியமாம்' என்றார். முத்திப்பேறு பெற்றவர்க்கே இன்பம் எய்தும், முத்திப்பேறு பெறுதற்கு ஞானம் உறவேண்டும். ஞானம் உறப் பானருள்வேண்டும். பானருள்பெறப் புண்ணியம் புரிதல் வேண்டும். பாவத்தை விலக்கவேண்டும் எனக் கூறியிருப்ப ஆனந்தம் என்பதொன்றில்லை என்பார் முத்தியில்லை என்பர். முத்தியில்லை என்போர் பாவபுண்ணியம் இல்லை என்பர். ஆதலின் 'முத்தி நன்றொடு தீதுமன்றி' என்றார். 'நன்றில்லை தீதில்லை' என்றவர்க்கு ஞானம் சூனியமாகி அஞ்ஞானமே தலையெடுத்து நிற்கும். அவ் ஆன்மாக்கள் பெத்தநிலையில்தானே நிற்பர். இதுபற்றியே 'நாமுன்னே பெறுமவித்தை நின்றது பெத்தந்தானே' என்றார். அவ்விவேகசூனியர் பெத்தநிலையையே முத்திநிலையென மருண்டிருப்பாராதலின் அவ்வான்மாக்களுக்கு அப்பெத்த நிலையே முத்திநிலையாகும் என்பார் 'பெத்தந்தானே நிரந்தரமுத்தி யென்னின்' என்றார். 'பெத்தநிலை' என்றது ஆன்மாக்கள் மலத்துள் அழுந்திக் கட்டுண்டு கிடக்கும் நிலை. பெத்தநிலையே முத்திநிலை யென்றிருக்கும் ஆன்மாவுக்கு அறிவில்லையாகும், (அறிவு விளக்கமின்றி மழுங்கி மூடுண்டு கிடக்கும்) ஆதலினாலேயே 'ஒன்றொரு வரைநான் கேட்க வுணர்வில்லை' என்றார். உணர்வில்லார்க்கு எத்துணை ஞானோபதேசஞ் செய்யினும் பயனில்லை. அவர்க்குக் குரு வேண்டுவதில்லை. குருவுபதேசம் பயன்படாதாதலினால் 'குருவுமில்லை' என்றார். இதனை,

"பொல்லாத மூர்க்கருக் கெத்தனைதான் புத்திபோதிக்கினும்
நல்லார்க் குண்டான குணம்வருமோ" எனவும்,

"கல்லாப் புல்லோர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப்
போயிற் றன்றே" எனவும்,

"வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால வரிதாகு மஃதேபோல்
வைகலு நல்லறங் கேட்பினுங் கீழ்கட்கு
கல்லினும் வல்லென்னு நெஞ்சு"

என்ற செய்யுளாலும் அறியலாம்.





சிவானந்த முத்தி, பூமியின் இயற்கைப்படி இருப்போமென்றால்
சாருவாகன் உறவு செய்வான் எனல்

இல்லையென் றிடினிப் பூமி
யிருந்தவா றிருப்போ மென்னில்
நல்லவன் சாரு வாகன்
நான்சொலு நெறிக்கு வீணில்
தொல்லையேன் ஆக மாதி
தொடுப்பதேன் மயக்க மேதிங்
கொல்லைவந் திருமின் என்ன
உறவுசெய் திடுவ னந்தோ.

(ப-ரை) இல்லை - (சிவானந்த முத்தி) இல்லை, என்றிடின் - என்று கூறினால், இப்பூமி-இந்தப் பூலோகம், இருந்தவாறு - இருந்தபடியே, இருப்போம் - இருந்துவிடுவோம், என்னில் - என்போமானால், நல்லவன் - நல்லவனாகிய, சாருவாகன்-சாருவாகன், நான் - (சாருவாகனாகிய) நான், சொலும் - கூறுகின்ற, நெறிக்கு-மார்க்கத்திற்கு, வீணில்-வீணாக, தொல்லை-தொந்தரவு, ஏன்-எதற்கு, ஆகமாதி - ஆகமம் முதலியவைகளை, தொடுப்பது-தொடங்குவது, ஏன்-எதற்காக, மயக்கம்-மயக்கம், ஏது-எதற்கு, இங்கு - இவ்விடத்தில், ஒல்லை-சீக்கிரத்தில், வந்து-(என்னிடத்தில்) வந்து, இருமின்-(என்னோடுகூட) இருங்கள், என்ன - என்று, உறவு - சிநேகம், செய்திடுவன் - செய்துகொள்வான் எ-று.

(வி-ரை) ஆனந்தமில்லை, முத்தியில்லை, மோக்ஷ நரகமில்லை, இதனால் உலகத்தில் உலகம் இருந்தபடி இருப்போம் என்றாலோ சாருவாகன் உறவு கொண்டாட வருகின்றான். சாருவாகன் சொல்லுவது என்னவென்றால் 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' சாமியாவது பூதமாவது ஒன்றுமில்லை. ஈதெல்லாம் சுத்தப்பொய். மோக்ஷமுமில்லை, நரகமுமில்லை, இன்புற விரும்பிய பொருளையுண்டு மாதர் போகம் துய்த்து இருப்பதே இன்பம், இறப்பதே முத்தி இது தெரியாதது அன்றே. இதற்கு வேதம் எதற்கு? ஆகமம் எதற்கு? புராணம் எதற்கு? ஏன் வீண் சங்கடப்படவேண்டும். ஒரு தொல்லையும் வேண்டாம் என் நிலையில் வாரும் நண்பரே என்று உறவு கொண்டாட வருகின்றான் என்ற கருத்தால் "இல்லை ... ... ... வுறவு செய்திடுவ னந்தோ" என்று இச்செய்யுளைக் கூறுகின்றார். சாருவாகன்-சாருவாக மதத்தைச் சார்ந்தவன். சாருவாகம் இது புறப்புறச் சமயத்தொன்று. இது இவன் நிரீச்சுரவாதி தெய்வம் இல்லை என்போன். உலகாயத மதத்தின் ஒரு பிரிவாகும். இவர்கள்,

"நாவுக் கினிக்க வுண்டுசுக நாரி யரைக் கூடிமிக
மேவும் இன்பம் பெறன்முத்தி மேலும்மேலும் ஐம்பொறிக்கே
தாவும் வழியிற் சென்றினிது தணவா தின்பந் துய்த்திடுமின்
யாவும் இயற்கை நெறியாகும் யானிங் குரைத்த சத்தியமே" எனவும்,

"ஊடலும் ஊடல் போக்கி உவப்புறக் கூடல் தானும்
தேடரு முத்தி யன்றித் தெரிதரா தொன்றை நாடி
ஓடியிங் குழல்வ தெற்றே உணர்விலா மாந்தர் கோளே
நீடிய பொறிகட் கின்பம் நிறைதரத் துய்ப்பீர் நீரே"

எனவும் உபதேசம்புரிவர்.

இவர்களால் மக்கள் உண்மை அறியாது கெட்டுக் கொடுநரகிற்கு ஆளாகி மீளாதிருப்பாராதலின் இவர் மிகக்கெட்டோர் என்னும் பொருள் குறித்து 'நல்லவன் சாருவாகன்' என்றார். இது பிறகுறிப்பு என்பர் இலக்கணிகள். கல்வி கற்பது முதலில் துன்பந்தருவதாகும். அதனினும் வேதாகமம் கற்பது சாலவுந் துன்பந்தருவதாகும். கற்று அறிந்தபின் இன்பம் பயக்கும். இதுபற்றியன்றோ,

"தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காம
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது"

என்றார் குமாரகுருபரசுவாமிகளும்.

இக்கருத்துக்கொண்டே 'நான்சொலு நெறிக்குவீணில் தொல்லையே ஞகமாகி தொடுப்பதேன்' என்றார். நான் சொல்லுவதில் சிறிதும் மயக்கமில்லை. எல்லாரும் அனுபவத்தறிந்த விஷயம் என்பது தோன்ற 'மயக்கமேதிங் கொல்லைவந்திருமின்' என்றார். ஒல்லை விரைவுக்குறிப்புக் காலந் தாழ்க்க வேண்டாம் சீக்கிரம் வாரும் இன்பநிலையிலிரும் என்றபொருளில் 'ஒல்வந்திருமினென்ன உறவு செய்திடுவன்' என்றார். 'அந்தோ' சிலர் இதை அசையாக ஒதுக்கினர். பொருள் கூறாது விட்டனர். ஈண்டு இரக்கக் குறிப்புத்தந்து நின்றது. இதனை அதிசய இரக்கம் என்பர் புலவர். 9

பிரமபுத்திரர் நால்வருக்கு உபதேசஞ்செய்த தக்ஷிணாமூர்த்தி எல்லாப் பொருளுந் தானே என்று கூறுகின்றார் நான் சித்தி முத்திபெற அருள் நீ செய்வாயாக என விளம்பல்

அந்தணர் நால்வர் காண
அருட்குரு வாகி வந்த
எந்தையே எல்லாந் தானென்
றியம்பின னெம்மைப் படைத்த
தந்தைநீ எம்மைக் காக்குந்
தலைவனே நுந்தை யன்றோ
பந்தமில் சித்தி முத்தி
படைக்கநின் னருள்பா லிப்பாய்.



(ப-ரை) அந்தணர் - (பிரமபுத்திரர்களாகிய சனகன் முதலிய) அறவோர்கள், நால்வர் - நால்வர்களும், காண - காணுமாறு, அருள்-அருட்படிவமான, குரு - ஆசாரியக்கோலத்துடனே, ஆகி - அன்புருவமேயாகி, வந்த - எழுந்தருளிவந்த, எந்தையே-தக்ஷிணாமூர்த்தமாய் நின்ற எமது தந்தையாகிய இறைவனே!, எல்லாம் - எல்லாப்பொருள்களும், தான் - தானே, என்று - என்று, இயம்பினன்-கூறாமற் கூறியருளினன் (ஆனாலும்), எம்மை-எங்களை, படைத்த-சிருஷ்டித்த, தந்தை-தந்தை, நீ-நீயாகின்றாய், எம்மை - எங்களை, காக்கும்-காக்கின்ற, தலைவன் - முதல்வன், நுந்தை - உன்னைப்பெற்ற பிதாவாகிய மகாவிஷ்ணு, அன்றோ-அல்லவா, பந்தம்-கட்டு, இல்-இல்லாத, சித்தி, சித்தியையும், முத்தி-முத்தியையும், படைக்க-யாங்கள் பெறுமாறு (யாங்கள் பெற்றுவாழ), நின் - உன்னுடைய, அருள் - கிருபையை, பாலிப்பாய் - தந்தருளுவாயாக எ-று.

(வி-ரை) 'அந்தணர் நால்வர்' என்றது பிரமபுத்திரர்களாகிய சனகாதியர்களை. இவர்கள் வேதங்களையும் மற்றைய ஆகமங்களையும் ஐயந்திரிபற உணர்ந்தோர். இவர்கள் தத்துவப்பொருளிற் சந்தேகமுற்று இறைவனை அனுக்கிரகிக்குமாறு தவங்கிடந்து வேண்டினர். இறைவன் வடக்கே கைலைக்குச் சமீபத்துள்ள கல்லால விருக்ஷத்தினடியில் தென்முக நோக்கிநின்று மௌனயோக மூர்த்தமாகநின்று தத்துவார்த்தப் பொருள்களையெல்லாம் உபதேசித்தருளினர். அந்நால்வரும் தங்கள்தங்கள் அறிவு பக்குவங்களுக்கு ஏற்றவாறு பொருளையறிந்து ஆனந்தித்தனர். தன்னை அடைந்து துதிப்போர்க்கு எமபயமில்லை என்பதனை எமன்திசையாகிய தென்பால்நோக்கித் தக்ஷிணாமூர்த்தியாக நின்றார். இறைவனால் என்னை முன் உதைபட்ட யமனாதலின் அவனுக்கு அந்த ஞாபகம் இருக்கும் என்பதாம். இதனை,

"வண்டிட்ட கூந்தலும் வாரிட்ட கொங்கை வரைகளுங்கற்
கண்டிட்ட சொல்லும் கயற்கண்ணி பாகமுங் கைதொழுதேன்
தண்டிட் டடிக்கு மறலிவந் தாற்சன்னை யிட்டுதைத்
துண்டிட்டு வாசிறு பிள்ளாயென் றாருக் கனுப்புவனே"

"பாட்டா னதைவண்டு பாடுங் குழற்சண் பகவல்லிதன்
றாட்டா மரையைத் தொழுதே னினியென் றலையில்விதி
தீட்டான் கருமுகில் போலே வருமந்தச் சேட்டெருமை
மாட்டா னினிவர மாட்டான் வந்தாலும் வணங்குவனே"

எனவுங் கூறிய **புலவர்கள்** மொழியாலும் அறியலாம்.

சின்முத்திரையால் பதி, பசு, பாசம் என மூன்றுண்டு. பாசநீங்கிப் பசுக்கள் பதியொடு கூடுவதே இன்பம், முத்தி என விளங்குகிறது. திருவடியைக் காட்டிநின்ற கை விறவித்துயர் நீக்கிடற்கு என் தாள்சேரவே தக்க வழியாம் என்பதைக் காட்டுகின்றது. இன்னும் இவர் தக்ஷிணாமூர்த்தத்தில் அறியக்கிடப்பது பல. அவைகளை ஆசிரியர்பால்கண்டு முறைப்படி கேட்

டுணர்க. இக்தத் தக்ஷிணாமூர்த்தத்தில் எல்லாந்தானான நிலையையும் உணர்த்துகின்றார். இதனை,

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச் [வாம்"
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல்

என்ற **திருவிளையாடற்புராணச் செய்யு**ளாலும் அறியலாம்.

அந்தணர் நால்வராவார்:—சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனந்தனர் என்பவர்கள். இவர் தண்ணளிபூண்ட பெருந்தகையோர்களாதலினால் அந்தணர் என்றார். இதனை,

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்ற **திருக்குறளால்** அறிக.

'எந்தை' 'தந்தை' 'நுந்தை' என்பன முறைப்பெயர்கள். எம்+தை= எந்தை; தம்+தை=தந்தை. நீர்+தை=நுந்தை. இதில் 'நீர்' என்றது 'நும்' என ஆயிற்று. 'நீர்' என்பது நும் என ஆதலை,

"தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்னு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல"

என்ற **நன்னூற்சூத்திரத்தான்** அறிக. நும்+தை=நுந்தை. 'நும்' இயல்பாகப் புணர்ந்ததை,

"நும்மெ னிறுதி யியற்கை யாகும்"

என்ற **தொல்காப்பியச் சூத்திரத்தா**னறியலாம்.

'தை' என்றது முறைப்பெயர் விகுதி. 'அன்றோ' இதில் ஈற்று ஓ வினாப்பொருளில் வந்தது. 'பந்தமில் சித்தி' என்றதனால் அருட்சித்தி என்பதாகும். என்னை, அணிமா முதலிய அட்டமா சித்திகள் பந்தமுறுஞ் சித்தியாகும்.
10

---



# பன்மாலை

பாமாலையையே நீ கல்லாத நானும் பாமாலை
சூடினேன் எனக்கூறல்

பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்ச மென்று
நன்மாலை யாவெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்
சொன்மாலை மாலையாய்க் கண்ணீர் சோரத்
தொண்டனே னெந்நாளும் துதித்து நிற்பேன்
என்மாலை யறிந்திங்கே வாவா என்றே
யெனைக்கலப்பாய் திருக்கருணை யெம்பிரானே.

(ப-ரை) பல்-பலவாகிய, மாலை-மாலைகளின், திரள்-கூட்டங்கள், இருக்க-இருக்கும்பொழுதும் (அவைகளின்மேலெல்லாம் விருப்பங் கூறாது), தம்மை-தம்மைத்தாமே, உணர்ந்தோர் - அறிந்துகொண்டவர்களாகிய ஞானிகள், பாமாலைக்கே - பாட்டுக்களாலாகிய மாலைகளினிடத்தே, நீதான் - நீதான், பட்சம் - விருப்பங்கொண்டிருக்கின்றாய், என்று - என்று (பல்வகைமாலைகளினுள்ளும் பாமாலையையே), நல் - நல்ல, மாலை ஆ-மாலையாக, எடுத்து - அறிந்தெடுத்து, நல்லோர் - அறிவுமிக்க ஞானவான்களாகிய பெரியோர்கள், சொன்னார்-துதித்துச்சொல்லி உன் திருப்பாதங்களிற் சூட்டினார்கள், நலம்-நன்மையினை, அறிந்து - (இதுஎனப்பாகுபாடுபடுத்தி) அறிந்து, கல்லாத-அத்தகைய நலத்தைத்தரும் வீட்டுநூலாகிய ஞானநூற்களைக் கல்லாத, நானும்-அடியேனாகிய நானும், சொன்னேன் - பாமாலையைப்பாடிச் சூட்டினேன், சொல்-சொல்லும்படியான, மாலைமாலை ஆ-தாரைதாரையாக, கண்-கண்களிலிருந்து, நீர்-கண்ணீர், சோர-வடிய, தொண்டனேன்-தேவரீரிடத்துத் தொண்டுபூண்டவனாகிய அடியேன், எந்நாளும்-இன்றுபோலவேஎந்தநாளும் (எந்தக்காலத்திலும்), துதித்து-தேவரீரைவழுத்தி, நிற்பேன்-மனமுருகிநிற்பேன், திரு-அழகிய(சிறந்த), கருணை-கிருபையையுடைய, எம்-எம்முடைய, பிரானே-பெருமானே(இறைவனே), என்-அடியேனுடைய, மாலை-ஆசையை (விருப்பத்தை), அறிந்து-தெரிந்து, இங்கே-இவ்விடத்து, வாவா-வருகவருக, என்றுஏ - என்று சொல்லிக்கொண்டே, எனை - அடியேனாகிய என்னை, கலப்பாய் - கூடியருள்வாயாக எ-று.

(வி-ரை) '**பன்மாலை**' இப்பதிகமாகிய பத்துப்பாடல்களில் முதற்செய்யுளின் முதற்சீர் பன்மாலை என்று தொடங்கியிருப்பதால் இப்பதிகத்திற்குப் பன்மாலை எனப் பெயர் எய்திற்று. மணிமாலை, முத்துமாலை, கனகமாலை, பூமாலை முதலிய மாலைகள் இருக்க அவைகளையெல்லாம் தவிர்த்துப் பாமாலைக்கே, இறைவனாகிய நீ விரும்புகின்ற தன்மையை அறிந்தோர் என்பார் 'பன்மாலைத் திரளிருக்கத் தமையு ணர்ந்தோர் பாமாலைக்

கேசீதான் பட்ச மென்று' என்றார். என்னை? மணிமாலை வரைசாணை வட்டத்துக்கடைபடும், முத்துமாலை துளைபடும், பூமாலை வாடும், வதங்கும், வண்டுமூசும், தேன்பிலிற்றாது, இக்காரணங்களாலே அவைகளை நீக்கி என்றும் வாடாது, எத்தனைநாட்கள் கழிந்தாலும் அப்போதலர்ந்ததுபோற் பொலிந்து பொருட்டேன் சுரந்துகொண்டிருக்கும். ஆதலினால் பாமாலை விரும்பினர் என்க. இதனை,

"பூமாலை யென்றுநற் பொன்மாலை யென்றும் பொருவின்முத்துத்
தாமாலை யென்று மணிமாலை யென்றுஞ் சொலவுறுமத்
தோமாலை கள்பொரு மோசவ ராயலுத் தாயவிந்தப்
பாமாலை மாலையுண் ணீக்கிநன் மாலைப் பயத்தலினே"

என ஒரு புலவரும்,

"பூமாலை புலர்ந்துசந்தங் குறைந்துமணந் தந்தாழ்த்தல் பொருந்த றேர்ந்து
பாமாலை யறிஞரவைக் களமுதல மணக்குமென்றே பலகற் றோருங்
தேமாலை வயல்சூழெட் டகச்செல்வே டிருவடிக்குச் சிதைவில் சந்த
மாமாலை தான்பல்சந்த மாலையொன்று சதசந்தம் வழுக்க டீர்த்து"

என ஒரு புலவரும்,

"மணிமாலை கடைபெறுமே துளைபெறுமே தாளவெள்ளொண் வண்ணமாலை
அணிமாலைப் பூமாலை வண்டாடும் வாடிடுமே ஆய்ந்த சொர்ணக்
கணிமாலை தீயுறவாய்த் தட்டுறுமே கொட்டுறுமே கண்டே கந்தா
பணிமாலைக் கலைமாலைப் பாமாலை புனைந்தனன்யான் பரித்தாள் வாயே"

என ஒரு புலவரும்,

"பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப்
பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெறமுக்கண்
மூர்த்தி தாளிற்
றொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தலங்கல் சூட்டவரிச்
சுரும்புந் தேனும்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தா ளடிமுடிமேற்
கொண்டு வாழ்வாம்"

என **பரஞ்சோதிமுனிவரும்**,

"என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன் வாய்ச் சொல்"

என **இறையனாரும்** கூறிய கவிகளால் நன்கு உணரலாம்.

நல்லோர்கள் நன்றாய்ப் பாமாலை உனக்குச் சாத்தினர், கல்லாத நானும் ஏதோ அவாவால் சொன்மாலை சாத்தினேன் என்பார் 'நன்மாலை யாலெடுத்துச் சொன்னார் நல்லோர், நலமறிந்து கல்லாத நானுஞ் சொன்னேன்' என்றார். நானும் என்றதன் ஈற்று உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. இறைவன் உள்ளங்கசிந்து அழுதழுது பாடி இறைஞ்சினர்க்கு அருள் செய்தவன், அருள் செய்பவன். இதனை,

"எழுதரு மறைக டேறா விறைவனை யெல்விற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
யழுதடி யடைந்த வன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்" எனவும்,

"பரிந்து வந்து பரமா னந்தம் பண்டே யடியேற் கருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தி லருமா லுற்றே னென்னென்று
சொரிந்த கண்ணீர் சொரிய வுண்ணீ ருரோமஞ் சிலிர்ப்ப வுகந்தன்பாய்
புரிந்து நிற்ப தென்று கொல்லோவென் பொல்லா மணியைப் புணர்ந்தே"

எனவும்,

"நினையப் பிறருக் கரிய நெருப்பை நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனையொப் பாரை யில்லாத் தனியை நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டங்
கனையக் கண்ணீ ரருவியாய்க் கையுங் கூப்பிக் கடி மலராற்
புனையப் பெறுவ தென்றுகொல் லோவென் பொல்லா மணியைப் புணர்ந்தே"

எனவும்,

"கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி" எனவும்,

"உடம்பெல்லாங் கண்ணா யண்ணா வெள்ளந்தான் பாயாதா" எனவும்,

"அழுகே னின்பா லன்பா மனமா யழல் சேர்ந்த
மெழுகே யன்னா ரின்னார்" எனவும்,

"நல்கா தொயானமக் கென்றுன் னாமம்பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா"

எனவும் **மணிவாசகர்** கூறியருளியவைகளால் தாயுமானப் பெருந்தகையும், 'மாலையாக் கண்ணீர் சோரத் தொண்டனேன்எந்நாளும் துதித்து நிற்பேன்' என்றருளினார். இறைவன் வேண்டிய வேண்டியாங் களிப்பவனாதலினாலும்,

"வேண்டுவார் வேண்டுவதே யளிப்பான் கண்டாய்"

எனச் **சைவப்பெரியார்** கூறியருளியதனாலும் 'என்மாலை யறிந்திங்கே வாவாவென்றே யெனைக் கலப்பாய்' என்றனர்.

அடியேன் மாயை வயத்தனாய் மயங்கிவாத் தடைப்படினும், தாமதமாயினும் மார்ச்சால நியாயமாய் நீயேவந்து கலந்தருள் செய்யவேண்டும் என்பார் 'வாவா வென்றே யெனைக்கலப்பாய்' என்றுங் கூறினர். இறையே நீ பெருங்கருணைத் தடங்கடலாதலின் இது செய்யாதிராய் என்பார். 'திருக்கருணை யெம்பிரானே' என்றார். 'மாலை மாலையா' என்பது மிகுதிப் பொருளில் அடுக்கிவந்தது. இச்செய்யுள் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர்

மாச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் என நாலு காய்ச்சீர் களாலும் நாலு மாச்சீர்களாலும் ஆகிய எண்சீர்க்கழி நெடிலடி வாசிரிய விருத்தம். 1

இறைவன் கருணைவடிவான நவவடிவமென்றல்

கருணைமொழி சிறிதில்லேன் ஈத லில்லேன்
கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக் கேற்க
ஒருபொழுதும் பெற்றறியேன் என்னை யாளு
மொருவா உன் னடிமைநா னொருத்த னுக்கோ
இருவினையு முக்குணமுங் கரண நான்கும்
இடர்செயுமைம் புலனுங்கா மாதி யாறும்
வரவரவு மேழைக்கோ ரெட்ட தான
மதத்தொடும்வந் தெதிர்த்தநவ வடிவ மன்றே.

(ப-ரை) கருணை - அடியேன் கருணையோடுகூடிய, மொழி - வார்த்தையோ, சிறிது-இலேசமும், இல்லேன்-இல்லாதவனாகயிருக்கின்றேன், ஈதல்-வறியோர்க்கு ஒன்றைக்கொடுத்தல், இல்லேன் - இல்லாதவனாக யிருக்கின்றேன், என்-அடியேனுடைய, கருத்துக்கு - அபிப்பிராயத்திற்கு (விருப்பத்திற்கு), ஏற்க-பொருந்த, ஒருபொழுதும்-ஒருகாலத்திலும், கண்ணீர்-கண்ணீரையும், கம்பலை - உடல் நடுக்கத்தையும், பெற்றறியேன் - பெற்று அறிந்தேனில்லை, என்னை - அடியேனாகிய என்னை, ஆளும் - ஆண்டு அருள்செய்யும், ஒருவா-ஒப்பற்ற இறைவனே!, உன்-தேவரீருடைய, அடிமை-தொண்டனாகிய, ஒருத்தனுக்கோ - ஒருவனுக்குத்தானே, இரு - இரண்டாகிய, வினைகளும்-வினைகளும், மு-மூன்றாகிய, குணமும் - குணங்களும், கரணம் - காரணங்கள், நான்கும்-நான்கும், இடர்-துன்பத்தை, செய்யும்-செய்கின்ற, ஐம்புலனும்-ஐந்துபுலன்களும், காமம்-காமமும், ஆதி - அதுமுதலானவைகளாம், ஆறும்-ஆறும், வரவரவும்-வரவர, ஏழைக்கு-அறிவிலியாகிய அடியேனுக்கு, ஓர்-ஒரு, எட்டதான-எட்டாகிய, மதத்தோடும்-கருவங்களுடன், வந்து-வந்து, எதிர்த்த-சம்பவித்ததான, நவவடிவம்-ஒன்பதுவகை உருவதான, மன்றே - சிதாகாயமாகிய அம்பலமே! எ-று.

(வி-ரை) இச்செய்யுள் அடுத்த செய்யுளைத் தொடர்ந்து பொருள் முடிவு பெறுகின்றது. மக்களுக்கு அன்புங் கருணையும் இல்லாதவிடத்து உயிர்களிடத்து இரங்குந்தன்மை யுண்டாகாது. இரங்குந்தன்மை யுண்டாகாதவிடத்து இன்மொழி கருணைமொழி பிறவாது. மகனைப் பிறந்தவன் இனியமொழியும் கருணைமொழியுங் கூறுக்கால் அம்மகனுக்குச் சிறப்பில்லை. இதுபற்றியே,

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" எனவும்,



"இன்னாசெய் தார்க்கும் இனியவே கூறுக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

எனவுங் கூறினர் **பெருநாவலர்**.

"இன்சொலா லன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலா லென்றும் மகிழாதே" என்றார் **பெரியாரும்**,

உயிர்களுக்கு இரங்கும் இயல்புடையார்க்கு, கருணையுடையார்க்கே ஈதற்குணம் உண்டாகும். ஈயாமைக்குணம் கருணையில்லாத தன் காரியமென்பது ஈண்டு அறியற்பாலதாம். இதனை,

"உள்ளத் தருள்பழுத்த உத்தமரே யிவ்வுலகிற்
றுள்ளித் துடிக்குமுயிர் சோர்வறிவர்—பள்ளமுறு
வெள்ள மெனப்பரிவர் வேண்டுந் துணைபுரிவர்
கள்ளமிலா தீவர் கனிந்து"

என்பதனாலும் அறியலாகும். இதுகொண்டே **பெரியாரும்**, 'ஈதலில்லேன்' என்றார்.

இறைவன்மாட்டு இடையறா அன்பு பூண்டார்க்கு இறைவனை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும், அவன் புகழ்கேட்குந்தோறும் கேட்குந்தோறும், அவனைக் காண்டொறும் காண்டொறும் தொடுமணற்கேணியில் நீர் சுறப்பதுபோல் கண்ணீர்பெருகும், உடம்பு நடுங்கும், நாகுழறும், மயிர் சிலிர்க்கும், இது அன்பான் எய்தும் மெய்ப்பாடு. இதனை,

"கலைமதி சூடும்பெம்மான் கருணையார் நாமங் கேட்க
நிலைபெறு புகழைக் கெண்ணே நேயமென் கண்ணுற் காண
உலைபெறு மெழுகே யானேன் உடல்நடுக் குற்றேன்ரோமந்
தலைகொடு சிலிர்த்த நாவுந் தழுதழுத் திட்ட தம்மா"

என்ற **பெரியார்** வாக்காலும் அறியலாம்.

இதனானன்றோ, 'கண்ணீர்கம் பலையென்றன் கருத்துக் கேற்க ஒருபொழுதும் பெற்றறியேன்' என்றார். 'இருவினை' என்றது நல்வினை தீவினைகளை. 'முக்குணம்' என்றது தாமதம், இராஜசம், சாத்வீக குணங்களை. 'காரணம் நான்கு' என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை. ஐம்புலனும் ஆன்மாக்களுக்குத் துன்புசெய்வனவாகும். ஐம்புல நுகர்ச்சியை வெறுத்தவர்க்கே வீடு சித்திக்கும் ஐம்புலனின் வழி மனத்தைச் செலுத்தினவர் பிடிபடுக்கப்பட்ட களிறுபோலக் கூபத்தில் வீழ்ந்த மதயானைபோல மாழ்கா நிற்பர். இதனானன்றோ,

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்" எனவும்,

"ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி" எனவும்,

"வஞ்சப் புலனென்னுங் காட்டில்
வகைகெட் டலைந் தேன்"

எனவும், 'புலப்பகை' எனவும் **பெரியார்** கூறினர். இதனால் 'இடர்செயு மைம்புலன்' என்றார்.

ஐம்புலன்களாவன:—சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பவைகளாம். 'காமாதி ஆறு' என்றது காமக்குரோத லோப மோக மத மாச்சரியங்களை. 'எட்டதானமதம்' என்றது குலம், ரூபம், யௌவனம், வித்தை, தனம், பிரபுத்துவம், சகாயம், சகசம் என்பனவற்றை. இதில் சிற்சிலவற்றை மாறுபட உரைப்பாருமுண்டு. 'நவந்தருபேதம்' என்றது பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன், சத்தி, சிவம், நாதம், விந்து என்பவைகளை. 'ஒருத்தனுக்கே ... ... ... நவவடிவமன்றே' என்றவைகளில் ஒன்று முதல் முறையே ஒன்பதுவரை வந்தமை காண்க. இதில் எழு என்ற எண்ணைக் குறிக்கும் விஷயமின்மையால் எழு என்னும் எண்ணுப்பெயர் தொனிக்க 'எழைக்கோரெட்ட தான' எனக் கூறியநயங் கருதத்தக்கது; இஃதோர் அலங்காரம் இதனை,

"வஞ்சகத்தி லொன்றனைத் துதிக்கைமிகத் திரண்டானை வணங்கா ருள்ளே
அஞ்சாண மூன்றனை மறைபொழிநால் வாயானை யத்த னுதித்
அஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி யாறனைத் தகளெழானைச் [வாம்"
செஞ்சொன்மறைக் கெட்டானைப் பரங்கிரிவாழ் கற்பகத்தைச் சிந்தை செய்

எனவும்,

"சீரிலங்கு மாடகூட வீதவீறு தில்லையான்
திருவிருக்கு மார்பனெங்க டிருமலைக்கு முன்புபோய்
நீரிருந்து மாலைகேனு மவன்மறுத் துரைக்கிலென்
நெஞ்சுசொல்லும் வார்த்தையாக நீங்கள்சொல்லும் வண்டுகாள்
வாரியொன்று பாயிரண்டு மாலைமூன்று நாலுவேய்
மதியமைந்து கங்குவாறு மாரனேழு வாடையெட்
டாரமொன்ப தன்றில்பத் தடங்கலும் மொறுக்குமால்
அத்தனைக்கெலா மிலக்கெ னவியொன்று காணுமே"

என்ற **புலவர்** வாக்காலும் அறியலாம்.

'இருவினையும்-காமாதியாறும்' என்றதன்கண்ணுள்ள உம்மைகள் எண்ணும்மைகள்.

2

பெரியவாழ்வே! உருவங்களையெல்லாம்படைத்த உருவில்லானே! என்
மனமாயையை அழிக்குங் குருவே! அடியேனுக்கு உன்
திருப்பாதத்தை முடிமேல் வைத்தருள் என்கின்றார்.

வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே எளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவேஎன் தெய்வமே கோதிலாத



படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படியெனக்குன் திருக்கருணை பற்று மாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்கவேண்டும்
அடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே.

(ப-ரை) வடிவு-உருவங்கள், அனைத்தும்-எல்லாவற்றையும், தந்த-உண்டாக்கிய, வடிவு-உருவம், இல்லா-இல்லாத, சுத்தம் - தூய (பரிசுத்தமான), வான்-சிறந்த (மேலான), பொருளே-பொருளாக இருப்பவனே (இறைவனே), எளியனேன்-எளியேனுடைய, மனம்-மனத்தில், ஆம்-உண்டாகிய, மாயை-மாயையினுடைய, குடி - குடிதன்னை, கெடுக்க - அழிப்பதற்காக, துசம் - கொடியை (துவசம்), கட்டி - கட்டி, கொண்ட - கொண்டருளிய, மோன - மௌனமாகிய, குருவே - ஆசாரியனே (குருவே), என் - அடியேனுடைய, தெய்வமே-கடவுளே! (இறைவனே!), கோது-குற்றம், இல்லாதபடி-இல்லாத விதமாக, எனக்கு - அடியேனாகிய எனக்கு, ஆனந்தம் - சுகம், வெள்ளம் - பெருக்கு (வாரி), வந்து - வந்து, தேக்கும்படி - நிறையும்வண்ணம், எனக்கு-அடியேனாகிய எனக்கு, உன்-தேவரீருடைய, திரு-மேலான (சிறந்த), கருணை-அருள், பற்றும்-படியும் (பதியும்), ஆறு-வண்ணம், இன்னம் - முன்வைத்தது போல பின்னும் ஒருமுறை, அடி-உன் திருவடியை, எடுத்து - தூக்கி, என்-அடியேனுடைய, முடியில் - தலைமேல், வைக்க - வைத்தருள, வேண்டும் - வேண்டும், அடி-ஆதியும், முடி-அந்தமும், ஒன்றும்-ஏதொன்றும், இல்லாத-இல்லாததாகிய, அகண்டம்-எங்கும் பரந்து வியாபித்துள்ள, வாழ்வே-பெரிய வாழ்வே! எ-று.

(வி-ரை) சோதிப்பிழம்பாய் இறைவனிடத்தே அருட்சத்தி தோன்ற, அவ்வருளால் உயிர்கள் இன்பு அடைதற்பொருட்டு மாயைதோன்றி மாயா காரியமாகிய உலகம் மற்றைப்பொருள்கள் தோன்றாநிற்கும். இதனானேயே, 'வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த வான்பொருளே' என்றார். 'வான் பொருளே' இதில் வான் உயர்வைக் குறித்தது. இறைவன் ஒருவனே மாயை வயப்படாதவன், மற்றையன மாயாசம்பந்தமுடையனவாதலின் இறைவனைச் 'சுத்தவான் பொருளே' என்றார். ஒருகாரியத்தைத் தப்பாது முடிப்பதென உறுதிகொண்டு தொடங்குவதை, கங்கணங்கட்டிக் கொள்ளல், துசங்கட்டிக் கொள்ளல், ஒட்டாரங் கட்டிக்கொள்ளல் எனக் கூறுவது உலகவழக்கு. இறைவன் கருணையால் ஆன்மாக்களை உய்விக்கத் தனுகரண புவனபோகங்களை யளித்து விதிவிலக்குகளைக்காட்டி நெறிப்படுத்தி ஆகாமிய, சஞ்சித, பிராரத்துவங்களைப்போக்கி முத்திப்பேரானந்தத்தைத் தந்தருளுகின்றான். இன்னும் ஆன்மாவின் பக்குவாபக்குவங்களறிந்து ஆச்சாரியத் திருக்கோலம் பூண்டுவந்தும் அருள்செய்து ஞானோபதேசத்தால் நன்னெறிகாட்டி மெய்ஞ்ஞானத்தை ஊட்டியருளி முத்திப்பேரின்பை அருள்செய்கின்றான். தாயுமானவருக்கும் இறைவன் பரமாச்சாரியாராக மௌனகுருவாகவந்து அருள்

புரிந்தனாராதலினால் 'எளியனேன் மனமா மாயைக் குடிகெடுக்கத் அசங் கட்டிக்கொண்ட மோன குருவேயென் றெய்வமே' என்றார்.

தாயுமானப் பெரியாருக்கு இறைவன் மௌனதேசிகராக ஆச்சாரியத் திருக்கோலங்கொண்டுவந்து கடாட்சித்து ஞானோபதேசஞ்செய்து திருவடி தீட்சை செய்தருளிய காலத்தே இறைவன் திருவருட்சத்தி பதிந்து சிவா னந்தப் பெருவெள்ளத்து மூழ்கி இன்புற்றிருந்தாராதலினால் பின்னும் ஒருமுறை திருவடிதீட்சை புரிந்தருள இறைவனை வேண்டுவான், 'கோதிலாத படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும், படியெனக்குன் றிருக்கருணை பற்று மாறே, அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்கவேண்டும்' என் கின்றார். இறைவன் ஆதியந்தமில்லாதவனும் அகண்டாகாரனும் சத்து சித்து ஆனந்தமாக விளங்குபவனுமாதலினால், அடிமுடி யொன்றில்லாத வகண்ட வாழ்வே' என்றார். 'வடிவனைத்தும்' இதில் உள்ள உம்மை முற் றும்மை. 'தசம்' இது 'தவசம்' என்பதன் இடைக்குறை விகாரம். 3

இறைவா! உலகவாழ்வு எல்லாம் மயக்கந்தருவதென அறிந்தும் அதனி னின்றும் தப்பவழி தேடாதிருந்திட்டேன் எனக் கூறிநைதல்

வாழ்வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன் தேர்ந்த
வாறேநா னப்பாலோர் வழிபா ராமல்
தாழ்வுபெற்றிங் கிருந்தே னீதென்ன மாயம்
தடையுற்றால் மேற்கதியுந் தடைய தாமே
ஊழ்வலியோ அல்லதுன்றன் றிருக்கூத் தோஇங் [ம்
கொருதமியேன் மேற்குறையோ உணர்த்தா யின்ன
பாழவதிப் படவெனக்கு முடியா தெல்லாம்
படைத்தளித்துத் துடைக்கவல்ல பரிசி னனே.

(ப-ரை) வாழ்வு-உலக வாழ்வு, அனைத்தும் - எல்லாம், மயக்கம் - மயங்கு தற்கு ஏதுக்களே, என-என்று, தேர்ந்தேன் - தெளிந்தேன், தேர்ந்த-தெளி வடைந்த, ஆறே - விதமாகவே, நான் - அடியேனாகிய நான், அப்பால்-அதன் பிறகு, ஓர்-ஒரு, வழி - நல்வழியை, பாராமல்-பார்க்காதபடி, தாழ்வு-தாமதம், பெற்று-பெற்று, இங்கு-இம்மாயாகாரிய உலகில், இருந்தேன் - வாழ்நாளைக் கழித்திருந்தேன், ஈது - இது, என்ன - எத்தகைய, மாயம் - மாயமாக இருக் கிறது, தடை - தடையானது, உற்றால் - உண்டானால், மேல் - மேலாகிய, கதியும்-முத்திக்கதியும், தடை-தடை, ஆமே-ஆய்விடுமே, (இதற்குக் காரணம்) ஊழ் - ஊழினது, வலியோ - வல்லமைதானோ?, அல்லது - அன்றி, உன்- தேவரீரது, திரு-அழகிய, கூத்தோ - விளையாட்டோ?, இங்கு - இவ்விடத்து, ஒரு-ஒரு, தமியேன்-அடியேனின், குறையோ - குறைவுபாடோ? (இவைகளை அறியாதிருக்கின்றேன்), உணர்த்தாய் - அதனைத் தேவரீரே தெரிவித்து அருள்வீராக, எல்லாம் - எல்லாப் பொருள்களையும், படைத்து - உண்டாக்கி, அளித்து-காப்பாற்றி, துடைக்க-அழிக்க, வல்ல-வலிமையுடைய, பரிசினனே-



தன்மையனே, இன்னம்-இன்னுங்கூட, பாழ்-பாழாகிய, அவதி-துன்பத்தை, பட - அனுபவிக்க, எனக்கு - அடியேனாகிய எனக்கு, முடியாது - முடியாது (வன்மையில்லை) எ-று.

(வி-ரை) உலகவாழ்வனைத்தும் மாயையின் காரியமாதலினாலும், உலக வாழ்வு மாயையின் காரியம் என்பது இறையருள் பெற்றவரே யுணரவல்லா ராதலினாலும், நீ ஆச்சாரிய வடிவோடு வந்தருளி ஞானோபதேசம் பெற்றத னால் உலகவாழ்வு மாயையின் காரியமென்பதறிந்தேன் என்பார் 'வாழ் வனைத்து மயக்கமெனத் தேர்ந்தேன்' என்றார். உலகவாழ்வு மயக்கம் என்ப துணர்ந்தும் அதனின்றும் நீங்கியுய்யுநெறி கைப்பற்றா திருக்கின்றேனென் பார் 'தேர்ந்தவாறே நானப் பாலோர் வழிபாராமல் தாழ்வுபெற்றிங் கிருந்தேன்" என்றார். இதனை, "வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்" என்பதனாலறியலாம். மாயையிற் சிக்கி உலகில் ஈடுபட்டுக் கிடப்போர் தாழ்வேயன்றிப் பேரின்பவாழ்வு பெறுதலில்லை. ஆதலினால் 'வழிபாராமல் தாழ்வு பெற்றிங் கிருந்தேன்' என்றார். இது மாயையின் மயக்கவன் மையோ? என்பார் 'ஈதென்ன மாயம்' என்றார். உலகமாயையில் உழன்று உய்வு வழிபெறாது நிற்பின் மேற்கதியடைதல் கூடாது. இதனை,

"உலக வாழ்விற் குப்புற்றே உழல்வார்க் குய்ய வழியில்லை
நிலவுநல்ல வரம் புரிந்தே நிற்பின் ஞானக் குருவருளாற்
கலக மாயைக் கட்டறுத்துக் கனமா ஞான ஒளிபெறலாம்
சுலவு பிறவிக் கடல்கடந்தே சுகமாம் முத்தி பெறலாமே"

என்றதனாலும் அறியலாம்.

இதுபற்றியே நம் தாயுமானவரும், 'தடையுற்றால் மேற்கதியுந் தடைய தாமே' என்றார். உய்யுநெறி பற்றாது உலக வாழ்வில், உலக மாயையில் உழன்றுகொண்டிருப்பது ஊழ்வலியோ? "ஆட்டுவித்தா லாரொருவர் ஆடா தாரே" என்றபடி உன் திருவிளையாட்டோ? எல்லாஞ் சிவன் செயலாகாது சீவன் செயலும் உண்டாதலின் இது உன் திருவிளையாட்டாகாது என் அறியாமையால் இழைத்த குறையேயாகும் என்பார் 'ஊழ்வலியோ வல்ல துன்றன் றிருக்கூத்தோ விங்கொரு தமியேன்மேற் குறையோ உணர்த்தாய்' என்றார். பிறவிகடோறும் உலகில் உடலெடுத்து உலகவாழ்க்கையை விரும்பி நிற்போர் துன்பத்தையே அனுபவிப்பர். இன்பம் என்பது பிராந்தியே. இதனானன்றோ,

"இடும்பைக் கிடும்பை இயலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே" என்றார் பெரியாரும்,

"நான்படும் பாடு சிவனே யுலகர் நவிலும் பஞ்சு
தான்படு மோசொல்லத் தான்படு மோவெண்ணத் தான் படுமோ
கான்படு கண்ணியின் மான்படு மாறு கலங்கி நின்றே
னென்படு கின்றனை யென்றிரங் காயெனி லென்செய் வேனே" எனவும்,

"படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
னுடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
னுடலுயிரா தியவெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்"

எனவும் கூறிய **பெரியார்** வாக்காலும் அறியலாம்.

இதுபற்றியே 'இன்னம் பாழ்வதிப் படவெனக்கு முடியாது' என்றார். எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிக்க வல்லவனாகிய உனக்கு என் மாயையை யழித்து சுகனாந்தப் பேருளல் இயலாததன்று என்பார். 'எல்லாம் படைத் தளித்துத் துடைக்கவல்ல பரிசி ஞனே' என்றார். இறைவன் எல்லாவற்றையும் ஆக்கிக் காத்து அழிப்பவன் என்பதனை,

"விச்ச தன்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய்"

என்ற **மணிவாசகர்** திருவாக்கால் நன்கறியலாம்.

'ஈதென்ன' 'இது என்ன' எனற்பாலது சுட்டு நீண்டு நின்றது. ஊழ் வலியோ, கூத்தோ, குறையே என்றதன்கண்ணுள்ள ஓகாரங்கள் வினைப் பொருளில் வந்தன. 4

எல்லாவற்றுள்ளும் உறைபவனே! இனிமைதரும் இறைவனே! உடம்புப் பாரத்தை என்மேல் ஏன் சுமத்தினை நிறுத்தினை என வினவுகின்றார்

நானுனிங் கெனுமகந்தை யெனக்கேன் வைத்தாய்
நல்வினை தீ வினையெனவே நடுவே நாட்டி
ஊனாரு முடற்சுமையென் மீதேன் வைத்தாய்
உயிரெனவு மென்னையொன்று வுள்ளேன் வைத் [தாய்
ஆனாமை யாயகில நிகில பேத
மனைத்தினுள்ளுந் தானாகி அறிவா னந்தத்
தேனாகிப் பாலாகிக் கனியாய்க் கன்னற்
செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த வொன் [றே.

(ப-ரை) ஆனாமைஆய்-நீங்காமையாகி, அகிலம் - உலகத்திலுள்ள, நிகல-பலவகையாகிய, பேதம் - பேதரூபங்கள், அனைத்தின் - எல்லாவற்றின், உள்ளும்-உள்ளும், தான்ஆகி-தானேநிறைந்து, பால் - (இனிய சுவையுடைய பயனுடைய) பால், ஆகி-ஆகி, கனியாய் - முக்கனியாகி, கன்னல் - கரும்பினுடைய, செழும்பாகு-செழுமையாகிய சர்க்கரைப்பாகு, ஆய்-ஆகி, கற்கண்டு ஆகி-கற்கண்டாகி, திகழ்ந்த-விளங்கிக்கொண்டிருக்கின்ற, ஒன்றே - ஒப்பற்ற பொருளாகிய இறைவனே!, இங்கு-இந்த உலகத்தில், நான்-நான் என்னும், நான் - நான் என்னும், அகந்தை-அகங்காரதத்துவத்தை, எனக்கு - அடியேனாகிய எனக்கு, ஏன்-எதற்காக, வைத்தாய்-வைத்தருளினை, நல்வினை - நல்ல



வினை, தீவினை - தீயவினை, எனவே - என்றவைகளை, நடுவே - (என் வாழ் நாளின்) மத்தியில், நாட்டி-நிறுத்தி, ஊண் - மாமிசம், ஆரும் - பொருந்திய (நிறைந்த), உடல் - உடம்பாகிய, சுமை - பாரத்தை, என் - அடியேனுடைய, மீது-மேலே, ஏன்வைத்தாய்-எதற்காகவைத்தருளினை, என்னை-அடியேனாகிய என்னை, உயிர் எனவும்-உயிரென்றுகூறவும், உள் - உடம்பிற்குள், ஒன்று ஆ-ஒருபொருளாக, ஏன்வைத்தாய் - எதற்காக வைத்தருளினை எ-று.

(வி-ரை) அகங்காரதத்துவத்தால் ஆணவம் கிளம்பி 'நான்', 'நான்' என்பது பிறக்கிறது. இந்த நான் சாகிறவரை இறைவனைக் காண்பதறிதாம். ஞானம் பெறல் அருமையாம். முத்தி எய்தல் அருமையாம். இதனானன்றே **திருவள்ளுவரும்,**

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"

எனக் கூறினர். **பிரபுலிங்கலீலை நூலுடையாரும்,**

யானென தென்ப திருந்திடு காறு
ஞான முறுனது நண்ணில னுயிற்
றுனிலை யாத சகந்திகழ் கிற்கும்
தீனமி லாத சிவந்திக ழாதே" எனக் கூறினர்.

இதுகொண்டே நம் தாயுமானவரும், 'நானுனிங் கெனுமகந்தை யெனக் கேன் வைத்தாய்' என்றார். நல்வினையுந், தீவினையும் கன்மமலத்தின் காரிய மாகும். நல்வினை தீவினை இரண்டும் அற்றவர்க்கே வீடுசித்தியாம் முத்திப் பேறாகும். இருவினை யொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் பெற்றவருக்கே சிவனருள் வாய்க்குஞ் சிவானந்தப்பேறெய்தும். இதுபற்றியே 'நல்வினை தீவினையெனவே நடுவேநாட்டி' என்றார். மாயாமலத்தால் வந்தது இத்தேகம். ஞானிகட்கு உடம்புபாரம், சுமை, இதனை,

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை"

என்ற **திருக்குறளால்** நன்கறியலாம். இன்னும்,

"புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு"

என்ற **குமரகுருபரசுவாமிகள் வாக்காலும்** உணரலாம்.

இதுபற்றியே தாயுமானவரும், 'ஊனாரு முடற்சுமையென் மீதேன் வைத்தாய்' என்றார். இறைவன் எல்லாவற்றுள்ளுந் தோய்ந்துந் தோயா திருப்பவனாதலினாலும் சத்து சித்து ஆனந்தமாக இருப்பவனாதலினால் "ஆனாமை யாயகில நிகில பேத மனைத்தினுள்ளுந் தானாகி யறிவானந்தத்

தேனுகி" என்றார். இறைவனை ஆன்றோர் தேனுக்கும் பாலுக்கும் ஒப்பிட்டுரைப்பர். இதனை,

"அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை
யருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றை"

என்ற **திருநாவுக்கரசர் திருவாக்கா**லும்,

"கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்ற" எனவும்,

"தேனை யானெயைக் கரும்பின் றேறலை" எனவும்,

"பாலு மமுதமுந் தேனுடனாகும் பராபரமாய்" எனவும்,

"மாற்றே னெனவந்த காலனை யோலமிட
வடர்த்த கோற்றேன்"

எனவும் கூறிய **சான்றோர் திருவாக்குகளா**னும் உணரலாம்.

இதனானேயே நம் தாயுமானப் பெரியாரும், அறிவா னந்தத் தேனாகிப் பாலாகிக் கனியாய்க் கன்னற் செழும்பாகாய்க் கற்கண்டாய்த் திகழ்ந்த வொன்றே என்றார். 'நான்' 'நான்' மிகுதியால் அடுக்கிற்று. ஊன் = மாமிசம். 'ஊ' என்னும் ஓரெழுத்தொருமொழி னகரச்சாரியை பெற்றுநின்றது. "ஆமா கோனவ் வணையவும் பெறுமே" என்ற சூத்திரத்து 'அணையவும்' என்ற உம்மையாற் கொள்க. 5

இறைவ! நான் கல்வி கேள்வி கற்றும் பயனிலாதிருக்கின்றே னென்பதாம்

ஒன்றியொன்றி நின்றுநின்று மென்னை என்னை
யுன்னியுன் னும் பொருளலைநீ உன்பா லன்பால்
நின்றதன்மைக் கிரங்கும்வை ராக்கிய னல்லேன்
நிவர்த்தியவை வேண்டுமிந்த நீல னுக்கே
என்றுமென்று மிந்நெறியோர் குணமு மில்லை
இடுக்குவார் கைப்பிள்ளை யேதோ வேதோ
கன்றுமனத் துடனாடு தழைதின்றாற் போற்
கல்வியுங்கேள் வியுமாகிக் கலக்குற் றேனே.

(ப-ரை) ஒன்றி ஒன்றி - ஒவ்வொரு நூல்களிலும் அழுந்தி அழுந்தி, நின்றும் நின்றும் - அந்தந்த நூல்களிலே கூறியவண்ணம் சாதகஞ்செய்து பார்த்தும், என்னை - என்ன பிரயோசனம்?, நீ-தேவரீர், என்னை-அடியேனை, உன்னி - நினைத்து (குறித்து), உன்னும் - நினைக்கப் பெறுகிற, பொருள்-பொருளாக, அல்லை - இருப்பாய் அல்லை, (ஆகையினால்) உன்பால் - தேவரீரிடத்து, அன்பால் - அன்புடனே, நின்ற - இருந்த (நின்ற), தன்மைக்கு-



அன்பர் குணத்தைப் பெறும்பொருட்டு, இரங்கும்-உன்னை நோக்க இரங்கும்படியான, வைராக்கியன் - உலக விஷயத்தில் திடமான வெறுப்புடையவனல்லேன், இந்த-இந்த, நீலனுக்கும்-பொய்யனுக்கு, அவை-அந்தப் பொய்நெறிகள், நிவர்த்தி வேண்டும் - நீங்கிவிடல் வேண்டும், என்றும் என்றும்-எந்தக் காலத்திலும், இ-இந்த, நெறி - நன்னெறியைப் பெறுதற்கு, ஓர்-ஒரு சிற்றளவும், குணமும்-நற்குணமும், இல்லை - அடியேன்பால் இல்லை (இவ்வாறிருக்க), இடுக்குவார்-கக்கத்து இடுக்கிக்கொள்ளும், கைப்பிள்ளை-சிறுபிள்ளையாதற்கு, ஏதோ ஏதோ-காரணம் என்ன? காரணம் என்ன?, கன்றும்-வருந்துகின்ற, மனத்துடன் - மனத்துடனே, ஆடு - ஆடானது, தழை - தழைகளை, தின்றாற்போல் - மேய்ந்த தன்மையைப்போல, கல்வியும் - பல்வகைக் கல்விகளையும், கேள்வியும்-பல்வகைக் கேள்விகளையும், ஆகி-உடையவனாகி, கலக்குற்றேன்-கலங்கலுற்றேன், ஏ-இது என்ன பரிதாபம் எ-று.

(வி-ரை) இறைவன் வேதங்களாலும் அறியப்படாத பெற்றியன். அவனை நூலளவையால் அறியமுடியாது என்பார் 'ஒன்றியொன்றி நின்று நின்று மென்னை' என்றார். மிகுதிபற்றி ஒன்றி என்பதும், நின்று என்பதும் இரட்டித்து வந்தன. தற்போதத் தடிப்படையார்க்குத் தட்டுப்படும் பொருளன்று இறைவன் இதனை,

"சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லையன்றி யொன்றில்லை யாருன்னை
அறியகிற் பாரே"

என்ற **மணிவாசகர்** திருவாக்காலறியக் கிடக்கும்.

இதனானேயே 'என்னை யுன்னி யுன்னும் பொருளைநீ' என்றார். இறைவனே நின் அடியார்கள் உன்பாற் பற்றுவைத்து ஏனைய பற்றெல்லாந் துறந்து நின்றனர். என்னை? "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் கியாண்டு மிடும்பை யில" என்றதனால் என்க. அதுபோல் எல்லாப்பற்றையும் ஒழித்து நின்பாலேயேபற்றும் வைராக்கியமுடையவனாக இருக்கவில்லை என்பார் 'உன்பாலன்பால் நின்றதன்மைக் கிரங்கும் வைராக்கியனல்லேன்' என்றார்.

நீலனுக்கே என்றதன் குறிப்பு:—நீலி என்பவள் பழையனூர் வணிகன் மனைவி, இவள் கல்யாணமாகிக் கொஞ்சநாளில் இறந்து திருவாலங்காட்டிலே பேயாய்த் திரிந்துகொண்டிருந்தாள். ஒருநாள் அவள் கணவன் அக் காட்டு வழியே தனித்துச் சென்றபோது இந்த நீலிபேய் அவனது இரண்டாம் மனைவியைப்போல் வடிவங்கொண்டு ஒரு கள்ளிக்கொம்பைப் பிள்ளையாக்கி மருங்கிலே தாங்கிக்கொண்டு அவனைத்தொடர, அவ்வணிகன் அவளைப்பேய் என நிச்சயித்து அப்பேயினது வஞ்சகமொழிகளுக்கு இணங்காது ஓடினன். பேயும் இது முறையோ என்னைக் காட்டில் தனியே என்னைவிட்டுச் செல்லுகிறீரே என்று கூறி அழுது பின்றொடர்ந்து காஞ்சியை யடைந்து

அங்கே பொதுவிடத்திற்கூடியிருந்த வேளாளர்பாற்சென்று தன்வழக்கைச் சொல்லிற்று. அவ்வேளாளர் இவ்விருவர் வழக்கையுங் கேட்டு அந்நீலியை நோக்கி நீ சொல்லுதற்குச் சாட்சியாது என்று கேட்க, அவள் இப்பிள்ளையே சாட்சி; இதோ இப்பிள்ளையை விடுகின்றேன் இது அப்பாவென்று அழைத்துத் தந்தைமடிமேல் ஏறுதோ பாருங்களென்று சொல்லி விடுக்க குழந்தையும் அவள் சொல்லியவாறே அப்பாவென்று கூவி அழைத்துக் கொண்டு வணிகன் மடிமேலேறிற்று. இதுகண்டு வணிகன் இது பேய்க் கூத்தென அலறிக் கதறிக் கூறினன்.

அதுகேட்ட வேளாளர், அது உண்மையானால் நாங்கள் பிணையாவோம் எனப் பிணைப்பட்டனர். பின்னர் அவ்வணிகனையும் நீலியையும் ஓர் அறையிற்போட்டுச் சிறிதுநேரம் இருக்கச் செய்தனர். வணிகன் என்ன தடுத்தும் விதிவழி மதியாதலால் அவர்கள் சம்மதியாது வலாத்காரஞ்செய்து ஓர் அறையில் நீலியையும் பிள்ளையையும் வணிகனையும் இட்டுத் தாளிட்டனர். கடைசியில் வணிகன் தடுக்க முடியாதவனாகி அவ்வறையில் இருந்தான். பேயாகிய நீலி அவன் உயிரைக் குடித்து முகட்டை இடித்துக்கொண்டு சென்றுவிட்டது. இதனை வேளாளர் கண்டு வேளாளர் எழுபதின்மரும் அவ்வணிகன் உயிர்க்காகத் தம் பிராணனைக் கொடுத்தனர். இத்தகைய கள்ளம் பொருந்திய ஆண்மகனை நீலின் ஆண்பாலாக நீலன் என்பர். அதனையே ஈண்டு தாயுமானவர் குறித்தார். இதற்கு மிகுந்த வஞ்சக முள்ளவன் என்பது பொருள்.

தனக்கென ஒரு அறிவு திடமின்றிப் பிறர் சொல்லுவனவற்றைக் கேட்டு நடப்பவனை "எடுப்பார் கைப்பிள்ளை" என்பது பழமொழி. அது போல நான் சுயமாய் ஒன்றும் உணராது சொல்லுவார் சொற்களைக் கேட்பவனாக இருக்கின்றேனென்பார் 'இடுக்குவார் கைப்பிள்ளை' என்று தன்னைக் கூறிக்கொண்டார். ஆடு ஒரு பக்கத்துத் தழை தின்றுகொண்டு இருக்கும் பொழுது தூரத்தே பார்க்கும் அங்கு பச்சென்று கண்டால் அங்கு சென்று இரண்டொரு தழையை மேயும் பின் தூரத்தே நோக்கும். அங்கு பச்சென்று தோன்றினால் அங்குச் சென்று இரண்டொரு தழையை மேயும். இவ்வாறு ஒரு இடத்தும் நிலைத்து வயிறார உண்ணாது திரிந்து அலையும். இதனுனேயே ஆசிரியர் கடைமாணர்க்கு ஆட்டை ஒப்புக்கூறினர். இதனை,

"அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
யன்னர் தலையிடை கடைமா ணாக்கர்"

என்ற சூத்திரத்தால் அறியலாம்.

ஆடு தழை மேய்வதுபோல் எங்கும் எதுவும் நிரம்பக் கல்லாது திரிந் துழல்கின்றேன் என்பார் 'ஆடுதழை தின்றாற்போல் கல்வியுங் கேள்வியு மாகி' என்றார். நிறைகல்லார் நெஞ்சம் ஞானத் தெளிவின்றிக் கலங்கி இருக்குமாதலின் 'கலக்குற்றேன்' என்றார்.





அருந்துணைத் தலைவியே! நீயே அருந்துணையெனல்

உற்றதுணை நீயல்லாற் பற்று வேறொன்
றுன்னேன்பன் னாளுலகத் தோடி யாடிக்
கற்றதுங்கேட் டதுமிதனுக் கேது வாகும்
கற்பதுங்கேட் டதுமமையும் காணா நீத
நற்றுணையே அருட்டாயே இன்ப மான
நாதாந்த பரம்பொருளே! நார ணாதி
சுற்றமுமாய் நல்லன்பர் தமைச்சே யாகத்
தொழும்புகொள்ளுங் கனகனமே சோதிக் குன்றே

(ப-ரை) உற்ற - பொருந்திய, துணை-உதவி, நீ - தேவரீராகிய உம்மை, அன்றி - அல்லாதபடி, பற்று - ஆதரவு, வேறு - (உன்னைத் தவிர்த்து) வேறு, ஒன்று-ஒரு பொருளினை, உன்னேன் - கருதமாட்டேன், பன்னாள் - பலநாள், உலகத்து-உலகத்தில், ஓடி-ஓடியும், ஆடி-ஆடியும், கற்றதும்-கற்ற கல்விகளும், கேட்டதும்-கேட்ட ஞானக்கேள்விகளும், இதனுக்கு-இதற்கு, ஏது-காரணம், ஆகும் - ஆம், கற்பதும் - இனி கற்கப்போவதும், கேட்பதும் - இனி கேட்கப் போவதும், அமையும் - போதுமானதாகும், காணா - யாவருங் கண்டறிய முடியாத, நீதம்-ஒழுக்குள்ள (நியதமுள்ள), நல்-நல்ல (உயர்ந்த), துணையே-பற்றுக்கோடே (உதவியே), அருள் - கிருபையையுடைய, தாயே - தாயே, இன்பம்-சுகரூபம் (ஆனந்தரூபம்), ஆன - ஆகிய, நாதம் - நாததத்துவத்தின், அந்தம்-முடிவிலுள்ள, பரம் - மேலான, பொருளே - பொருளே!, நாரணாதி-நாராயணன் முதலியோர்கள், சுற்றம் - உறவினர், ஆயும்-ஆகியும், நல்-நல்ல, அன்பர் தம்மை-அடியார்களாகிய அன்பர்களை!, சேய்-புத்திரர், ஆக-ஆகவும், தொழும்பு - அடிமை (தொண்டு), கொள்ளும் - கொள்ளுகின்ற, கனகனமே-மிகவுங் கனத்த பொருளே!, சோதி-சுடர், குன்றே-மலையே எ-று.

(வி-ரை) அநாதியே மலத்து அழுந்திக்கிடந்த ஆன்மாக்களை அம்மலத்தினின்றும் எடுத்து உய்விக்கக் கருதி தநு, கரண, புவன, போகங்களையளித்து வேதாகமங்களையும் அருளித் தந்து அடியார் வேண்டிய வேண்டியாங்கு அளித்து அருள் செய்பவனாதலினாலும், இறைவனைத் தவிர்த்து வேறு ஒருவர் உய்வைத்தர முடியாதாதலினாலும், மற்றைப் பொய்ப்பொருளிற் பற்றுவைப்பின் அப்பற்று மேலும் மேலும் இருளுக்கே காட்டிவிடு மாதலினாலும் 'உற்றதுணை நீயல்லால் பற்றுவேறொன் றுன்னேன்' என்றார். இதனைச் **சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்,**

"மற்றுப் பற்றெனக் கின்றிநின் திருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந்தே னினிப் பிறவாத தன்மைவந் தெய்தினேன்"

என்றதனாலும் இதன் உண்மையை உணரலாம். 'உலகில் கற்பது இறைவன் உள்ளானென்பது உணர்ந்து அவனை வழிபடற்கே இதனை,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்"

என்ற **பெரியார்** வாக்கால் நன்கறியலாம்.

தான் இதுவரை ஓடி உழன்று கற்றதும் கேட்டதுமாகிய இவைகளால் உன்னை யுணர்ந்தேன். உன்னைத் தொழுகின்றேன். உனக்குத் தொண்டு பூண்டேன் என்பார் 'பன்னா ளுலகத்தோடி யாடிக் கற்றதுங் கேட்டது மிதனுக் கேதுவாகும்' என்றார். இதனை,

"உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே"

என்ற **மணிவாசகர் திருவாசகத்தா**லும் அறியலாம்.

இறைவன் தோன்றாத் துணையாதலினால் 'காணாத நற்றுணையே' என்றார். இறைவன் சாலப்பரிந்து ஊட்டுந் தாயினும் பேரன்பு பூண்டு ஆன்மாக்கட்கு அருளுவோனாதலின் 'அருட்டாயே' என்றார். இறைவன் தானும் இன்பமயமாய்த் தன்னைச் சார்ந்த ஆன்மாக்களுக்கும் இன்பூட்டி, சாராதனவற்றையும் சாரவைத்து இன்பூட்டிச் 'சங்கரன்' என்னுந் திருநாமம் பூண்டவனாதலின், "இன்பமான நாதாந்தப் பரம்பொருளே" என்றார். இறைவன் நாததத்துவமுங்கடந்த நற்பொருளாதலின் "நாதாந்தப் பரம்பொருள்" என்றார். 'நாரணாதி' என்றது நாராயணன் உள்ளிட்ட பிரமன், இந்திரன் முதலிய தேவகணங்களை. 'கனகனமே' மிகமிகக் கனத்த பொருளே என்பதாம். இறைவன் மால் பிரமர் காணமுடியாதபடி ஜோதிமலையாக நின்றருளினவராதலின் 'ஜோதிக் குன்றே' என்றார். இது உருவகம். 7

மூவுருவானவனே! ஆனந்தக்கூத்தாடுமணியே! சின்முத்திரைக்காக வேண்டுகின்றாரெனல்

குன்றாத மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்து மாடி
நின்றாயே மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர் நெஞ்ச
மன்றாக வின்பக்கூத் தாட வல்ல
மணியேஎன் கண்ணேமா மருந்தே நால்வர்க்
கன்றாலின் கீழிருந்து மோன ஞான
மமைத்தசின்முத் திரைக்கடலே அமர ரேறே.

(ப-ரை) குன்றாத-கேடடையாத, மூ-மூன்று, உருவாய்-உருவங்களாகி, அருவாய்-ரூபமற்றதாகி, ஞானம்-ஞானத்தின், கொழுந்து-கொழுந்து (சிகை, முடிவு), ஆகி-ஆகி, அறுசமயம்-ஆறுசமயங்களின், கூத்தையும்-கூத்தினையும்,



ஆடிநின்றாயே - ஆடியும் தேவரீர் நின்றருளினீரே!, மாயைஎனும் - மாயையென்று கூறப்படுகின்ற, திரையை-திரையினை, நீக்கி - அகற்றி (போக்கி), நின்னை-தேவரீரை, யார்-யாரே, அறியவல்லார்-தெரிந்துகொள்ள வல்லவராவார், நினைப்போர்-நினைக்கும் அன்பர்களின், நெஞ்சம்-நெஞ்சை, மன்றாக-நடனசபையாகக்கொண்டு, இன்பம்-ஆனந்தம், கூத்து-நடனம், ஆட-ஆடுதற்கு வல்லவனாகிய, மணியே-இரத்தினமே!, என்கண்ணே-அடியேனுடைய கண்போன்றவனே!, மாமருந்தே-பெரிய அமிர்தமே!, நால்வர்க்கு-சனகாதிமுனிவர்கள் நால்வருக்கு, அன்று-முன்னாளில், ஆல்-வடக்கேயுள்ள கல்லாலமரத்தின், கீழேஇருந்து-கீழே நிழலிலிருந்து, மோனம்-மௌன நிலையைத்தரும், ஞானம்-ஞானத்தினை, அமைத்த - பொருத்திய (உண்டாக்கிய), சின்முத்திரை - சின்முத்திரையோடுகூடிய, கடலே - கடலே, அமரர் ஏறே-தேவர்களுக்குள் எல்லாம் உயர்ந்துள்ளவனே! எ-று.

(வி-ரை) இறைவன் தானே தனிமுதல்வனாகி நிற்கின்றான். அன்றியும் பிரமன், மால், ருத்திரன் என்னும் மூவுருவாகியும் நிற்கின்றான். ஒரு பொருள் மற்றொரு பொருளாக அல்லது மற்றும் பலபொருளாக ஆகுங்கால் தன் நிலைமை திரிந்து தன் இயல்பு குறைதல் உண்டு. ஆனால் இறைவன், பிரமன், மால், ருத்திரனாகியும் தான்தானேயான பரிபூரண நிலையிலுங் குறைவுபடவில்லை, மாறுபடவில்லை என்பதை உணர்த்தவே 'குறையாத மூவுருவாய்' என்றார். இறைவன் ரூபன், ரூபாரூபன், அரூபன் என்னும் மூன்று திருமேனியுடையவனாதலின் 'அருவாய் ஞானக் கொழுந்தாகி' என்றார். எல்லாச் சமயத்தாராலும் வணங்கப்படும் தெய்வந்தானேயாகி அவர் பாவித்த பாவனாரூபத்துடன்சென்று அவர்க்கும் அருள்செய்பவர் சிவபெருமானேயாதலினால் "அறுசமயக் கூத்து மாடி நின்றாயே' என்றார். மாயை ஆன்மாக்களுக்கு இருளைநீக்கும் ஒளியாக நிற்பினும், மாயை மயக்குந் தன்மையுடையதாதலினாலும், இறைவனைக்காணற்கு மறைப்பாயிருத்தலினாலும் 'மாயையெனுந் திரையைநீக்கி நின்னையார் அறியவல்லார்' என்றார். இறைவன் வேதத்துச்சியிலும், அம்பலத்தும், மெய்யடியாருள்ளத்தும் ஆனந்தக்கூத்தாடி நிற்பவனாதலின் 'நினைப்போர்நெஞ்ச மன்றாக வின்பக் கூத்தாட வல்லமணியே' என்றார். இதனை,

"சுத்தவே தாந்தச் சுடர்முடியி னுந்தகர
வித்தையாம் பொற்றலத்தும் மெய்யடியார்—சித்தத்தும்
நின்றாடும் பெம்மான் நிறைபூ ரணப்பெருமான்
குன்றாத் திருவடியே கூறு"

என்றதனாலும் அறியலாம்.

ஆன்மாக்களுக்கு அருள்வழி காட்டுவான் இறைவனாதலின் 'கண்ணே' என்றார். பிறவிநோய்தீர்த்துப் பேரின்பந்தந்து, முத்திநிலை மேவச்செய்பவனாதலின் 'மாமருந்தே' என்றார். இதுபற்றியன்றோ **திருநாவுக்கரசர்**, இறைவனை 'மூலநோய் தீர்க்கு முதல்வன் கண்டாய்' என்றார். இறைவனுக்கு 'வைத்

தியநாதன்' என்னுந் திருநாமம் ஒன்று ஏற்பட்டிருப்பதனாலும் அறியலாம். இனி, இறைவன் அழியாமையைத்தந்து அருள்வதாலும், ஆனந்தமயமாக இருப்பதனாலும் அமுதே என்னும் பொருளில் மருந்தே என்றார் எனலும் ஒன்று. 'சின்முத்திரைக்கடல்' இது சின்முத்திரையோடு திகழுங் கடல் என விரிதலின் மூன்றாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை என்க. 'அமரர் ஏறே' என்றது தேவதேவே என்னும் பொருளது. 8

வஞ்சனேன், இவ்வுடலோடிருக்கையில் அருள்புரிவ தெந்தநாள் எனல்

திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து [ம்
தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்லா
கரையவே கனிந்துருக்கு முகத்தி லேநீ
கனிந்தபர மானந்தக் கட்டி இந்நாள்
வரையிலே வரக்காணேன் என்னாற் கட்டி
வார்த்தைசொன்னாற் சுகம்வருமோ வஞ்ச னேனை
இரையிலே யிருத்திநிரு விகற்ப மான
இன்பநிஷ்டை கொடுப்பதையா எந்த நாளோ.

(ப-ரை) திரை-அலை, இல்லாத (அற்ற), கடல்போல - சமுத்திரத்தை யொப்ப, சலனம்-அசைவு (நடுக்கம்), தீர்ந்து-நீங்கி (அற்று), தெளிந்துஉருகும்-தெளிவாகி உருகுகின்ற, பொன்போல-பொன்னைப்போல, செகத்தை-உலகத்தை (பிரபஞ்சத்தை), எல்லாம்-எல்லாம், கனிந்து-இளக்கமுற்று, கரைய-கரையும்படி, உருக்கும் - உருகச்செய்யும், முகத்தில் - இடத்தில், கனிந்த-நன்றாய் இளகிய, பரமம் - மிகவுயர்ந்த, ஆனந்தம் - சுகத்தைதரும், கட்டி - பொற்கட்டியாக, நீ-தேவரீராகிய நீர் இருக்கின்றீர், (ஆனால்) இ-இந்த, நாள் வரையில்-நாளளவும், வர-தேவரீர் வருதலைக், காணேன் - (அடியேன்) கண்டிலேன், என்னால்-அடியேனால், கட்டி-கட்டாயப்படுத்தி (வலாத்காரப்படுத்தி), வார்த்தை-வார்த்தைகளை, சொன்னால்-கூறியதனால், சுகம்வருமோ-ஆனந்தமுண்டாகுமோ, வஞ்சனேனை - வஞ்சகனாகிய என்னை, இரையிலே - சோற்றுப்பையாகிய இந்த உடலிலே, இருத்தி-இருக்கச்செய்து, நிருவிகற்பம்ஆக-விகற்பம் இல்லாததுமாக, இன்பம் - சுகத்தைத்தரவல்ல, நிஷ்டை - நிஷ்டையை, கொடுப்பது-அனுக்கிரகித்தருள்வது, ஐயா-ஐயனே, எந்தநாளோ-எந்தக்காலமோ (அறியேனே) எ-று.

(வி-ரை) அலைநீரில் உருவங்காணலாகாது. சலனமற்றுத் தெளிந்து நிற்கும் நீரில் உருவங்காணலாகும். ஆகையால் தன்னைக்காண, தலைவனைக் காண அலையுமனம் அமைதிபெறவேண்டும். இதுகொண்டே 'திரையில்லாக் கடல்போலச் சலனந்தீர்ந்து' என்றார். இதனையே,

"அலையு மனத்தை அகத்தடக்கு மவனே சரிபை கடந்தோனும்
அலையு மனத்தை அகத்தடக்கு மவனே கிரியை கடந்தோனும்



அலையு மனத்தை அகத்தடக்கு மவனே யோக தற்பரனும்
அலையு மனத்தை அகத்தடக்கு மவனே ஞான வதிசூரன்"

நிஷ்டானுபூதி என்று பொருந்தக்கூறினர் பெரியார்.

மனம் அடங்கி ஞானம் பிறந்தகாலை எல்லாத் தத்துவங்களும் 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்' தொழியும். இறைவனுந் தானும் தனித்துநின்று அபேதமாகக் கலப்பேற்படும். ஆனந்தமயமான இறைவன் சோதிதரிசனம் சொல்லொணாச் சுகவடிவாய் சுந்தரவடிவாய்க் காணும் அதுபற்றியே பெருந்தகையாரும்,

"தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை எல்லாம்
கரையவே கனித்துருக்கு முகத்தி லேநீ
கனிந்தபர மானந்தக் கட்டி" என்றார்.

ஈது சுயானுபூதியில் ஈடுபட்டு அனுபவித்த அனுபவமாகும். பிரபஞ்சத்திற் புகுந்து உழல்வார்க்கு அவ் இறைவன் தரிசனங்கிட்டாது. ஆனந்தம் எய்தமுடியாதாதலின் 'இந்நாள் வரையிலே வரக்காணேன்' என்றார். இன்பஞ் சொல்லளவிலில்லை அனுபவ அளவே வேண்டியதொன்றாகும் என்பார் 'என்னால் கட்டி வார்த்தை சொன்னாற் சுகம்வருமோ' என்கின்றார். 'இரை' என்றது ஆகுபெயராய் உணவாலாகும் உடலைக்குறித்தது. தேகாபிமான மற்றவர்களுக்குத் தான் நிட்டைகூடும் தேகாபிமானமுள்ளவர்களுக்கு நிட்டை கிட்டவே வாராதாதலின் தேகத்து வெறுப்புற்று நிட்டை நிலையில் விருப்புற்று 'இரையிலே யிருத்திநிரு விகற்பமான வின்பநிஷ்டை கொடுப்பதையா வெந்நாளே' என்றார். பிள்ளைக்கு ஞானம், உயர்வு, இன்பம், முதலியவைதந்துகாப்பவன் தந்தையாதலின் இறைவனை 'ஐயா' என்றார். 9

பிரபஞ்சவாழ்க்கையில் உழலும்வரை சிவானந்தமுத்தி யடையமுடியாது

எந்தநா ளுனக்கடிமை யாகு நாளோ
எந்நாளோ கதிவருநாள் எளிய னேன்றன்
சிந்தைநா ளதுவரைக்கு மயங்கிற் றல்லால் [சொல்
தெளிந்ததுண்டோ மௌனியாய்த் தெளிய வோர்
தந்தநாண் முதலின்பக் கால்சற் றல்லால்
தடையறவா நந்தவெள்ளந் தானே பொங்கி
வந்தநா ளில்லைமெத்த வலைந்தேன் உன்னை
மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே.

(ப-ரை) எந்தநாள் - எந்தக்காலம், உனக்கு - தேவரீருக்கு, அடிமையாகும்-தொழும்பனாகும், நாளோ-காலமோ, கதி-முத்திக்கதி (பரகதி), வரும்-உண்டாகும், நாள்-காலம், எந்நாளோ - எந்தக்காலமோ?, எளியனேன் தன்-

எளியேனின், சிந்தை - மனமானது, நாளதுவரைக்கும் - இந்நாள் வரையிலும், மயங்கிற்று-மயங்கினதே, அல்லால் - அல்லாமல், தெளிந்தது-தெளிவைப் பெற்றது, உண்டோ - உண்டுகொல்லோ? (தெளிவடைய வில்லையே), மௌனியாய் - மௌனகுருவாக வந்து, தெளிய - அடியனேன் தெளியும்படிக்கு, ஓர்-ஒரு, சொல்-உபதேசமொழியை, தந்த - அருளிச்செய்த, நாள்-நாள், முதல்-முதலாக, இன்பம் - ஆனந்தத்தின், கால் - காலானது, சற்று-ஒரு சிறிது உண்டானது, அல்லால்-அல்லாமல், தடை - தடையானது, அற-நீங்க, ஆனந்தம்-ஆனந்தமாகிய, வெள்ளம் - வெள்ளம் (வாரி), தானே-தனக்குத்தானே, பொங்கி - பெருகி, வந்த - வந்ததாகிய, நாள் - காலம், இல்லை-இன்று, (ஆதலால்) மெத்த-மிகவும், அலைந்தேன் - வருந்தினேன், (அத்துயரால் இறந்துபட்டிருப்பேன் அவ்வாறு இறக்கவில்லை எனெனில்?) உன்னை-தேவரீரை, மறவா - மறவாமையாகிய, இன்பத்தாலே - ஆனந்தத்தாலேயே, வாழ்கின்றேன்-இதுவரையும் உயிர் வாழ்ந்திருக்கின்றேன் எ-று.

**(வி-ரை)** பிரபஞ்சமாயை யுட்பட்டுக் கிடக்கும் நாள்வரையும் இறைவனைச் சிந்திக்க, துதிக்க, வழிபட, சிவானந்தமுற முத்திப்பேறெய்த முடியாது. பிரபஞ்ச மாயையுட் கிடவாது அதற்கு அப்பால் நின்றவர்களுக்கே இறைவனைச் சிந்தித்தல், வழிபடல் முதலிய செய்தற்கு இயலுவதாகும். இவர்க்கே சிவானந்தம் சித்திக்கும்; முத்திப்பேறு கைகூடும். இதனை,

> "உலகத் தாசை வ்யம்பட்டே உழலும் வரையில் இறைவனை
> இலகத் துதிக்க வெண்ணிடற்கோ எள்ளத் தனையுங் கூடவில்லை
> கலகத் தடியாக் கதித்திருக்கும் காமங் கடந்தே கதிபெறவுன்
> மலரிற் சிறந்த நின்றாளை மன்னு மென்றன் தலைக்கணியே"

என்றதனாலும் உணரக் கிடக்கும். இதுகொண்டே நமது **தாயுமானப் பெருமானாரும்**, "எந்நா ளுனக்கடிமை யாகு நாளோ எந்நாளோ கதி வருநா ளெளிய னேன்றன் சிந்தைநா ளதுவரைக்கு மயங்கிற் றல்லால் தெளிந்த துண்டோ" என்றார்

தேவரீர் அடியேன்பாற் கருணைகொண்டு மௌனகுருவாய் வந்து அருளிச்செய்தபின், அந்த ஞானோபதேசத்தைக் கேட்டதிலிருந்து சிவானந்தத்தின் இன்பக்கால் கொஞ்சங் கொஞ்சம் வந்து கொண்டிருக்கின்றது. ஆனால், அடியேனுக்குத் தடையற ஆனந்தவெள்ளம் தானே பெருக்கெடுத்து வரவில்லை. இதற்குக் காரணம் பிரபஞ்ச மாயையேயாகும். அச்சிவானந்தத்தைப் பெறாமல், பிரபஞ்ச மாயையுள்புக்குக் கெட்டலைந்து தடுமாறுகின்றேன். மிக வருத்தமுறுகின்றேன். தேவரீர் பெருங்கருணைபூண்டு அம்மாயையினைப்போக்கிச் சிவானந்த வெள்ளத்திற்றிளைத்து இன்புற அருள் செய்யவேண்டுமென்னுங் கருத்தால், "மௌனியாய்த் தெளிய வோர்சொல் தந்தநாண் முதலின்பக் கால்சற் றல்லால் தடையறவா னந்தவெள்ளந் தானே பொங்கிவந்தநா ளில்லைமெத்த வலைந்தேன்" என்றார்.



சிவானந்தப்பெருக்கை அனுபவிக்காத இத்தேகத்தை என் சுமந்திருக்க வேண்டுமென மாற்றிடுவேன்; அவ்வாறு மாற்றாததற்குக் காரணம் யாதெனில்? உன்னை மறவாது நினைத்திருப்பதனால் ஏற்படும் இன்பம் ஒன்றை யுன்னியே உயிர் வாழ்ந்திருக்கிறேன் என்பார் 'உன்னை மறவாவின் பத்தாலே வாழ்கின் றேனே' என்றார். 10

---

## நி னை வொ ன் று

பேரின்பநிஷ்டைகொண்டு, குருமொழியால் அகம்புறப்பற்றை யகற்றல்வேண்டும்

> நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்
> நிற்குமிட மேயருளாம் நிஷ்டையரு ளொட்டும்
> தனையென்று மறந்திருப்ப வருள்வடிவா னதுமேல்
> தட்டியெழுந் திருக்குமின்பந் தன்மயமே யதுவாம்
> பினையொன்று மிலையந்த வின்பமெனு நிலயம்
> பெற்றாரே பிறவாமை பெற்றார்மற் றுந்தான்
> மனையென்றும் மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த
> வாதனையா மாசையொழி மன்னொருசொற்கொண்டே.

(ப-ரை.) நினைவு ஒன்றும்-எண்ணம் சிறிதும், நினையாமல் - எண்ணாமல், நிற்கின்-நின்றால், அகம்-(அப்படி நிற்றலே அறியாத) இடம், என்பர்-என்று சொல்லுவர் மேலோர்கள், நிற்கும்இடமே-(அவ்வண்ணம்) நிற்கின்ற இடமே, அருளாம்-அருள்நிலையாகும், நிஷ்டை-நிஷ்டையினால், அருள் - (உண்டாகும்) அருளும், ஒட்டும்-வந்துசேரும், தனைஎன்றும்-தன்னைஎந்தக்காலத்திலும், மறந்திருப்பது-மறந்திருப்பதனால், அருள்வடிவு-அருளின் உருவம், ஆனதுபோல்-ஆனவகைபோல, மேல்தட்டி-மேலே தட்டிக்கொண்டு, எழுந்திருக்கும்-எழுந்து நிற்கும், இன்பம்-ஆநந்தம், தன்மயமாய் - தனதுமயமாகி, அதுவாம் - அந்த ஆநந்தமயமாயிருக்கும், பினை-பிற்பாடு, ஒன்றும்இலை - (வேறு) ஒன்றுமில்லையாகும், அந்த-அத்தகைய, இன்பம்எனும்-ஆனந்தமென்று சொல்லப்பெறும், நிலயம்-நிலையினை, பெற்றாரே-அடைந்தவர்களே, பிறவாமை-பிறவாததன்மையென்னும்பேற்றை, பெற்றார்-அடைந்தவர்கள், மற்றும் - பின்னும், தான்-தானென்னுந் தற்போதத்தையும், மனைஎன்றும்-வீடென்றும், மகவுஎன்றும்-புதல்வரென்றும், சுற்றம்என்றும்-உறவினரென்றும் (கூறப்படும்), அசுத்தம்-அசுத்தமாகிய, வாதனைஆம் - வாசனையென்கிற புறப்பற்றுகளாகிய, மாசை-(ஆசையாகிய) குற்றத்தை, ஒரு-(ஆசாரியனது) ஒப்பற்ற, சொல்கொண்டே-உபதேசமொழியைக்கொண்டு, ஒழி-உன்னினின்றும் நீக்கிவிடுவாயாக. எ-று.

**(வி-ரை)** இறைவன் ஆசாரிய திருக்கோலத்துடன்வந்து ஞானோபதேசஞ்செய்தவுடனே தற்போதங் கழன்றோட தானென்பதற்றுச் சிவபோதம் முளைத்தெழும். சிவபோதம் முளைத்தெழுந்த அவசரத்தில் திருவருள் தோன்றாநிற்கும். இவன் அருள்மயமாய் நிற்பன் அஞ்ஞான்று ஆனந்தந் தலைக்கூடும். இதனை,

"நல்ல குருவே வந்தெனக்கு நாடு ஞான மொழியதனைச்
சொல்ல நானென் பதுவற்றேன் தூய வருளே உதித்ததனால்
வல்ல வின்ப வானந்த வாரி குளித்தேன் அதன்மயமாய்
எல்லை யில்லா வானந்த இன்ப வடிவே யாயினனே"

என்ற **ஆப்தர்** வாக்கானும் நன்கறியலாம்.

இதுகொண்டே இத்தாயுமானவர் 'நினைவொன்று நினையாம னிற்கினக மென்பார்' என்றார். நினைவொன்றும் நினையாமல் நிற்பது அகம் என்றார். இதுதான் இடமென்பதறியற்பாற்று. இந்த நினைவொன்றும் நினையாமல் நிற்பதே அருள்உதித்தற்கு அதனாலெய்தும் பிறவாமையையே இடமென்றும் பொருளாகவுங் குறித்தார். இந்த அருளால் நிஷ்டையும், நிட்டையால் பிறவாமையும் உண்டாகுமென்பதுகொண்டே, 'நிற்குமிடமேயருளா ... ... பின்னையொன்றுமில்லை' எனவும், 'பிறவாமை பெற்றார்' என்றுங் கூறினார். இதற்குஆசிரியவசனமே காரணமாதலின், ஆசிரியவசனத்தை ஏவல் என்பர். இதுகொண்டன்றோ, 'மனையென்று மகவென்றுஞ் சுற்றமென்று மசுத்த வாதனையா மாசையொழி மன்னொருசொற் கொண்டே' என்றார். எல்லா நினைவும் மறந்த இடமே அருள் இவ்வருளே ஆனந்தமாகும். இதனானே பிறவாமை எய்தும். இதுவே முத்தி எனப்பெறும். மாயாகாரியமாகிய உலகில் மாயையின்வலியால் மனைமக்கள் சுற்றமென்பவரால் ஆசையுண்டாகி வாதனையுண்டாக்கும். இதுவே பிறப்புக்குக் காரணமாகி ஜனனமரணங்களிற் கிடந்துழலச்செய்யுமாதலின் இது ஒழித்தல்வேண்டும். இவை ஆசாரியனின் அருளுபதேசம் இன்றியமையாததென்பதறிக. ஆசையே பிறவிக்குக் காரணமென்பதனை,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்னுந் **திருக்குறளா**லறியலாம்.

பிறவாமையே முத்தி அது அவாவற்றால் கைகூடும் என்பதனை, 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது வேண்டாமை வேண்ட வரும்' என்றதனாலும் அறியலாம். 'இன்பந் தன்மயமாய்' என்றது இன்புறவாதலை. 'அதுவாம்' என்றது தானும் இறைவனும் ஏகமாய்க்காணும் அத்துவிதநிலையை. 'மன்னொரு சொற்கொண்டே' ஈண்டு 'மன்' என்றது ஆசாரியரை. இனி, 'ஒரு சொற்கொண்டே மன்' எனக்கொண்டு கூட்டி ஆசாரியரென்பதனை வருவித்து, ஆசாரியரின் ஒரு ஞானோபதேசத்தையுட்கொண்டு அதன்வழியே,



அதன்படியே நிலைபெற்றிரு எனப்பொருள்கோடலுமொன்றாம். ஈண்டு 'மன்' என்றது நிலைபெற்றிரு என்னும் பொருளில்வந்த முன்னிலை ஏவலாகும். மனையென்றும், மகவென்றும், சுற்றமென்றும் என்றதன்கண்வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'மனை' என்றது இடவாகுபெயராய் மனைக்குரிய பெண்டாட்டியைக் குறித்தது. 'சுற்றம்' இது சுற்றியிருப்பவரென்னும் பொருள் பற்றிவந்த காரணப்பெயர். இறைவனைத்தவிர்த்து மற்றை உலகப்பொருள்களின்மேல்வைக்கும் ஆசை துன்பந்தருவதும் அசுத்தமானதுங்கொண்டு, 'அசுத்த வாதனையா மாசை யொழி' என்றார். இதுமுதல் ஒன்பதுபாட்டும் ஒரு தொகுதியாகும். 'பதிகம்' என்பது பத்துப்பாட்டைக் குறிக்குமாயினும் ஒன்றிரண்டு குறைந்தோ கூடியோநிற்பினும் இழுக்கில்லை. ஒன்பது பாடலை நவமணிமாலையெனவுங் கூறுவர். இப்பதிகத்தின் முதற்செய்யுள் 'நினைவொன்றும்' என்று தொடங்கினமையால் இப்பதிகத்திற்கு முதற்சீர்கொண்டு 'நினைவொன்றும்' என்று பெயரிட்டார். இந்தப் பதிகத்தில் ஞானிகளுக்கு இன்னது இடம், இன்னது பொருள், இன்னது ஏவல் என்பவைகளைச் சுட்டிக்காட்டுதலின் 'ஞானிகளிடம் பொருளேவல்' எனவுங் குறிக்கப்பெற்றது. இது காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர் என எட்டுச் சீர்கள்கொண்ட அடியாலாகிய பாவாதலால் இது எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தமாகும். 1

குருமொழியே உன் பிறப்பொழிந்து முத்திதரவல்லது
என்கின்றார்

ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும் அந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்கும் எனமொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
கருமொழியிங் குனக்கில்லை மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனைமே
தருமொழியிங் குனக்கில்லை உன்னைவிட்டு நீங்காத் [ல்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே.

**(ப-ரை)** ஒரு-ஒரு, மொழியே - (குருஉபதேச) வார்த்தையே, பல - பலவாகிய, மொழிக்கு-வார்த்தைகளுக்கு, இடம்-இடத்தை, கொடுக்கும்-தரும், அந்த - அத்தகைய, ஒரு - ஒப்பற்ற, மொழியே - (குருஉபதேசச்)சொல்லே, மலம் - பாசபந்தங்களாகிய மலங்களை, ஒழிக்கும் - நீக்கும், ஒழிக்கும் - நீக்கும், என - என்று, மொழிந்த - சொன்ன, குரு - ஞானாசிரியருடைய, மொழியே - சொல்லே, மலையிலக்கு - மலைக்குறிபோன்றிருப்பது, மற்றை-மற்றைய, மொழி - சொற்கள், எல்லாம் - எல்லாமும், கோடு - கோடிட்ட கட்டங்கள், இன்றி - இல்லாதபடிக்கு, வட்டு - வட்டு (சூது), ஆடல்-ஆடுதலை, கொள்வது-மேற்கொள்ளுதலை, ஒக்கும்-ஒத்திருக்கும், கண்டாய்-காண்பாயாக,

இங்கு-ஈண்டு, உனக்கு-உனக்கு, கரு-கருப்பவாசம் என்னும், மொழி-சொல், இல்லை-இல்லையாகும், மொழிக்குமொழி-சொல்லுக்குச்சொல், ருசிக்க - மதுரத்தைத்தர, கரும்பு - கணுக்குக்கணு இனிக்கும் கரும்பு, அனைய - ஒத்த, சொல்-உபதேசச்சொற்களை, கொடு - கொண்டு, உனை-உன்னை, காட்டவும்-காண்பிக்கவும் (அறிவிக்கவும்), கண்டனை-(தன்னை அதாவது நான் என்னும் சொல்லுக்குப் பொருளாய் இருப்பது எது என்பதனை) அறிந்தாய், இங்கு-(இனி இவ்விடத்து) இவ்வாறாயபின் இனி, மேல் - அதற்குமேலே, உனக்கு-உனக்கு, தரும் - உபதேசிக்கும், மொழி - சொற்கள், இல்லை - இல்லையாம், (ஆதலால் இனி) உன்னை-உன்னை, விட்டு-விட்டு, நீங்கா-நீங்காத, தற்பரமாய்-தற்பரமாகவும், ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, பொன்பொது - பொற்சபை, ஆம்-ஆகவும், நில்-நீ நிற்கக்கடவாய் எ-று.

(வி-ரை) 'ஒருமொழி' என்றது ஞானாசிரியரின் ஞானோபதேசமொழியை. இது சித்தாந்த மகாவாக்கியமாகும். ஞானதேசிகன் உபதேசித்த இவ்வொரு மொழியே வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் முதலியவற்றின்கண் ஓதப்பெறும் பொருள்களெல்லாம் அடங்கி இருக்குமாதலின் 'ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும்' என்றார். ஞானாசிரியரது ஞானோபதேசங்கேட்ட மாத்திரத்தினே தத்துவங்களை உணர்ந்து தன்னையுந் தலைவனையும் அறிந்து நானென்பது அற்று ஆனந்தமயமாகிப் பிறநெறியாகிய முத்திப்பேறு பெறுவாராதலின் 'ஒருமொழியே பலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த குருமொழியே' என்றார். ஞானாசிரியன் ஞானோபதேசமொழியே திடமானது, முக்குற்றமற வுணர்த்துவது, வீட்டுநெறியாவது, ஞானம் ஊட்டுநெறியாவது, வீடு கூட்டுநெறியாவது ஆதலின் 'மலையிலக்கு மற்றைமொழி யெல்லாம் கோடின்றி வட்டாடல் கொள்வதொக்கும்' என்றார். வட்டாடுவோர் (வட்டு - சூது ஆடுவோர்) கோடிட்டுக் கட்டம் வகுத்தாடுவர் கோட்டாலாகிய கட்டம் இன்றிச் சூதாடல் முடியாது. இதனை,

"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்."

என்ற **திருக்குறளா**லும் அதன் உரையாலும் உணரலாம்.

இது கொண்டே 'கோடின்றி வட்டாடல் கொள்வதொக்கும்' என்றார். இதனானே, மற்றைச் சமயமொழிகளெல்லாம் முத்திக்கு வழியாகாது, முத்திப்பேறுதராது என்பது பெற்றாம். குருவின் உபதேசமொழி கேட்டால் ஞானங் கைவரப்பெற்று ஆனந்தப்பேறும் அருட்பதிவும் பெற்றுச் சிவசாயுச்சியராவராதலின் 'கருமொழியிங் குனக்கில்லை' என்றார். கேட்க ஆனந்தமாய் இருப்பதும், நினைக்க நினைக்க ஆனந்தமாய் இருப்பதும், கேட்டபின் ஆனந்தவடிவமாக்கும் தன்மையுடையதுமாகக் குருமொழி இருத்தலினால் 'கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனை' என்றார். உயர்ந்தமொழி ஆசாரியரின் ஞானோபதேசமொழியினும் சிறந்தமொழி வேறெதுவும் இல்லை, இந்த மொழியிலேயே பலமொழியும் அடங்கியுளது



எனக் கூறினாராகையால் 'மேல் தருமொழியிங் குனக்கில்லை' என்றார். குருவின் ஞானோபதேசமொழியே வேதாந்தமொழி, முத்திமொழி, இறுதி நூலின் எல்லைமொழி. இதற்குமேல் மொழியில்லை. இதுவே முற்றமுடிந்த மோனமொழி என்பது உணரத்தகும். இறைவன் எல்லா ஆன்மாக்கள் தோறும் தோய்ந்துந் தோயாதும் இருப்பவனாதலின் 'உன்னைவிட்டு நீங்காத் தற்பரமாய்' என்றார். அவ் இறைவன் ஆனந்தமயமானவனாதலினாலும், சிதாகாசமயமாயும் இருப்பவனாதலினாலும், இறைவனைக் கண்டடைந்தவர் சிவபோதங்கழன்றுச் சிவபோதமாக இருப்பாராதலினாலும் 'தற்பரமாயானந்தப் பொற்பொதுவாய் நில்லே' என்றார். இறைவன் தானே உயர்ந்தவன், தனக்குமேல் ஓர் உயர்வு இல்லாதவனாதலின் 'தற்பரம்' என்றார். நில்லே என்பதில் ஏகாரம் ஈற்றசை. 2

திருவருளே நிலையானது அதைப்பற்றி நில் அதுவே சொல்லின்
முடிபாகும் இதைப்பற்றி நில் என்பதாம்

நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்
நேயவருண் மெய்யன்றோ நிலயமதா நிற்கக்
கல்லாதேயேன் படித்தாய் கற்றதெல்லா மூடம்
கற்றதெல்லா மூடமென்றே கண்டனையு மன்று
சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே
தொடர்ந்துபிடி மர்க்கடம்போற் றொட்டதுபற் றுநில்
எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறைகொண் டடிநீ
இராப்பகலில் லாவிடமே யெமக்கிடமென் றறிந்தே.

(ப-ரை) நில்லாத-நிலைபெற்றிராத, ஆக்கை-தேகம், நிலைஅன்று - நிலையுடையதல்ல, என-என்று, கண்டாய்-அறிந்தனை, நேயம் - (சீவர்களிடத்து) கிருபையுள்ள, அருள்-திருவருளானது, மெய்-உண்மையானது, அன்றோ-அல்லவா?, அது-அத்திருவருளையே, நிலயம்ஆ - இடமாகக்கொண்டு, நிற்க-அதிற் பொருந்தியிருக்க, கல்லா-கற்றுக்கொள்ளாமல், என்படித்தாய்-எதற்காக வேறுவேறாகிய கல்விகளைப் படித்தாய்?, கற்றதுஎல்லாம் - நீகற்றகல்விகளெல்லாமும், மூடம் - மூடத்தனத்துக்குக் காரணமாகவே யிருக்கின்றன, கற்றதுஎல்லாம் - (ஆனால்) நீ கற்றகல்விகளெல்லாமும், மூடம்என்றே-மூடத்தன்மையானதென்று, கண்டனையும்அன்று - அறிந்துகொண்டாயுமல்லை. சொல் சொல்லாலே - சொற்களினாலே, பயன்இல்லை - பிரயோசனமில்லை, சொல்முடிவை - சொற்களினுடையமுடிவை, தானேதொடர்ந்து - தொடர்ந்து தொட்டது-சென்று, பிடி - பற்றிக்கொள், மர்க்கடம்போல் - குரங்குபோல, தொட்டது-(அவ்வாறு) பிடித்ததையே, பற்று-பற்றிக்கொண்டு, நில் - (அதனையே பற்றுக்கோடாகக்கொண்டு) நிலைத்திருப்பாயாக, (அதன்பிறகு) இரா-இரவும், பகல் இல்லா-பகலுமில்லாத, இடமேஎமக்கு-இடமேயெமக்கு, இடம்என்று - இடமாகுமென்று, அறிந்தே-அறிந்து (உணர்ந்து) (அவ்வனுபோகவின்பத்தை),

எல்லாரும்அறிந்திட - உலகத்தார்யாவரும் தெரிந்துகொள்ள, நீ - நீ, வாய்-வாயாகிய, பறை-பறையை, கொண்டு - (உணர்த்துங்கருவியாகக்) கொண்டு, அடி-சாற்றித் தெரிவிப்பாயாக எ-று

**(வி-ரை)** தேகம் நீரில் எழுதிய எழுத்துப்போல் நிலையில்லாதது. இதனை, 'நீரின் எழுத்தாகும் யாக்கை' என்ற **குமரகுருபரர்** வாக்கானும் அறியலாகும். இதுபற்றியன்றோ **திருவள்ளுவரும்**,

"நெருந லுளனொருவ னின்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்றார்.

இதுகொண்டே, 'நில்லாத வாக்கைநிலை யன்றெனவே கண்டாய்' என்றார். இதனை,

"நடலை வாழ்வுகொண் டென்செய்தீர்
சுடலை சேர்வது சொற்பிரமாணமே"

என்ற **தேவாரத்தா**னும் நன்கறியலாம்.

எவ்வாறு இறைவன் நித்தியமோ அதுபோல நெருப்பிற் சூடுபோலவும், நீரிற்றண்மைபோலவும், இறைவனினின்று அபின்னமாயுள்ள அருளும் நித்தியமாம். இறைவன் அருண்மேனியன்றோ. அருள்பெற்றார்க்கே ஆனந்தம் நிச்சயமாதலின், 'நேயவருண் மெய்யன்றோ நிலையதா நிற்கக் கல்லாதே' என்றார். ஞானநூலைக்கல்லாது உலகநூலைக் கற்பதெல்லாம் கலகலவென்று சப்திப்பதேயன்றிக் கவைக்குதவாததாகும் எனப் பெரியார்கள் கூறிப் போந்தனர். இதனை,

"காட்டுநன் ஞானக் கலையொன்றைக் கல்லாதே
வீட்டுமுல கக்கலைகள் வீணாகத்—தேட்டமுடன்
கற்றதனால் உண்டோ கதிக்குவழி சொற்குழப்பே
உற்றனா னம்முணர வுன்"

என்ற **பெரியார்** வாக்கானும் உணர்க.

இதுகொண்டே, 'நிலையதா நிற்கக் கல்லாதே யென்படித்தாய்க் கற்றதெல்லாம் மூடம்' என்றார். ஞானநூலைக்கல்லாது பசுநூல்களில் பொழுதைப்போக்கிக் கற்றுவிட்டனை, அவையும் அவைகளாலெய்தும் பயனும் நிலையற்றதெனவும் அறிந்தாயில்லை என்பார் 'கற்றதெல்லாம் மூடமென்றே கண்டனையு மன்று' என்றார். வீண் ஆரவாரச்சொற்களாற் பயனில்லை சொன்முடிவான ஞானத்தைத்தேடி கற்பாயாக என்பார் 'சொல்லாலே பயனில்லை சொன்முடிவைத் தானே தொடர்ந்துபிடி' என்றார். மெய்ஞ்ஞானத்தைத் தொடர்ந்ததனால்மட்டும் பயனில்லை, அதைப் பிடித்திட வேண்டும், பிடித்த ஞானத்தை உறுதியாய்ப்பற்றி நில்லாது விட்டுவிடின் அதுவும் பயனற்றதாகும் அதனைக் குரங்கு பிடியாய்ப் பிடித்து நிற்கவேண்டுமென்பார் 'மர்க்கடம்போற் றொட்டாது பற்றுநில்' என்றார். உலகில் அருளுடையார் தாம்பெற்ற இன்பம் பிறரும் பெறவென அவாவி அதற்



காவன செய்வாராதலின், நீயறிந்த அதனை உலகுய்ய பறையடித்துத் தெரிவியென்பார், 'எல்லாரு மறிந்திடவே வாய்ப்பறை கொண்டடிநீ' என்றார். தான்பெற்ற இன்பம் உலகுபெற முயற்சிப்பார் அறிவுடையோர் என்பதனை,

"தாமின்புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்ற **திருக்குறளா**ல் அறியலாம்.

இறைவன் அருட்பதிவுபெற்று மோனானந்த நிலையிலிருப்பதே முத்தி, அதுவே இராப்பகலற்ற இடமாதலின், 'இராப்பகலில் லாதவிடமே யெமக்கிடமென் றறிந்தே' என்றார். தேகம் சப்ததாதுக்களாற் கட்டப்பட்டதாதலின் 'யாக்கை' (யாக்கை = கட்டப்பட்டது) என்றார். இதுகாரணப் பெயர். அறிவை மறைப்பது, மூடுவது அறியாமையாதலின், அறியாமையை 'மூடம்' என்றார். 'சொன்முடிவு' என்றது 'அத்துவிதநிலையை' குரங்குக் குட்டித் தன் தாயைக் கட்டிப் பிடித்துக்கொள்ளும் தாய் எத்தனை கிளைகள் தாவிச்சென்றாலும் குட்டி நெகிழாதுபற்றிப் பிடித்திருக்கும்; அதுபோல எத்தனை மாயைவேகம் சண்டமாருதம்போல்வீசினும் பிடித்தபிடி விடாதிருக்கவேண்டுமென்பார் 'மர்க்கடம்போல் தொட்டது பற்றுநில்' என்றார். இராப்பகலில்லாத இடமென்றது சகலகேவலங்களற்ற மோனானந்த முத்திநிலையை. 'யாக்கை' என்பது ஆக்கையெனவந்தது இலக்கணப்போலி. தொட்டஅது = தொட்டவது, 'தொட்டது' என்றது தொகுத்தல்விகாரம். 3

உலகவாழ்க்கையினை விரும்புவோன் இடம் பொருள்
ஏவலைக் கவனித்தல் வேண்டும்

இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநா யெனவே
எங்கேநீ யகப்பட்டாய் இங்கேநீ வாடா
மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை
மன்னிடமே யிடம் அந்த மாநிலத்தே பொருளும்
இடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்
செய்யுமிந்த நிலைநின்றோர் சனகன்முதன் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவுநீ பாசக்
கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே.

**(ப-ரை)** இடம் - இடத்தையும், பொருள் - பொருளையும், ஏவல் ஏவலர்களையும், குறித்து - பெறுமாறுவிரும்பி, மடம் - மடத்தில், புகும்-நுழையும், நாய்-நாயைப்போல, எங்கே-எவ்விடத்தே, நீ-நீ, அகப்பட்டாய்-சிக்குண்டாய்?, நீ-நீ, இங்கே-இவ்விடத்திற்கு, வாடா-வந்து சேரடா, மடம்-அறியாமையை, பெறு-கொண்டுள்ள, பாழ்-பாழாகிய, நெஞ்சாலே-மனத்தினாலே, அஞ்சாதே-பயப்படாதே, நிராசை-ஆசை இன்மை, மன்-நிலைத்துள்ள, இடமே-இடமே, இடம்-இடமாகும், அந்த-அந்த, மா-பெரிய, நிலத்தே - இடத்திலே, பொருளும்-(சிவாநுபூதிச்செல்வம் என்கிற) எல்லாப்பொருளும் உளவாகும், இடம்-

(இடமும் பொருளும் ஆகிய இவைகள்) ஊறுதியை, பெறவே - பெற்று, நிற்கின்-நிற்குமானால், எல்லா - எல்லா, உலகமும்-உலகங்களும், வந்து-உன்பால் வந்து, ஏவல்-பணிவிடையை, செய்யும் - செய்திடும், இந்த-இந்த, நிலை-நிலையில், நின்றோர் - நின்றவர்கள், செனகன்முதல் - ஜனகமகாராஜன் முதல், முனிவர் - முனிவர்கள், கடம்-மதத்தை, பெறும் - பெற்றுள்ள, மா-பெரிய, மதயானை-மதயானைபோலவும், நீ-நீ, பாசம்-பாசத்தினுடைய, கட்டு-பந்தம், ஆன - ஆகிய, நிகளம் - விலங்கினை, (ஒத்த) பந்தம் - பந்தமாகிய, கட்டு-தளை, அவிழ-தானே அறுந்து ஒழியும்படி, பார்-உபாயத்தைத்தேடுக எ-று.

(வி-ரை) ஒருவன் உலகில் வாழவேண்டுமானால் இடம், பொருள், ஏவல் என்பன மூன்றும் இன்றியமையாதனவாம். இம்மூன்றுங் கருதி உலகில் உழன்று இடர்ப்படுதல் மிகப் பரிதபிக்கத்தக்கது. மடம் என்பது வைதீகர்களுக்கு உரியது. நாய் வைதீகர்களுக்கு மிக இழிவான பொருள் தொட்டால் சசேலஸ்நானம் செய்யவேண்டும் என்பது விதி. மடத்துள் நாய் நுழைந்தால் மடம் அபரிசுத்தமாயிற்று என்று அதற்கு கழுவல், மெழுகல், மந்தரநீர் புரோக்ஷித்தல் என்ன ஆசாரச்சடங்குகள் அத்தனையும் புரிவர். தேவர் நிவேதனத்திற்கு உரிய பொருள்களை நாய் கௌவுமேல் அது மிகவுங் கூடாதகாரியமென்று வருந்துவர். இது துர்நிமித்தம் என்றும் எண்ணுவராதலின் நாயை மடத்துவாசலின்கண் கண்டாலுமே அடித்துத்துரத்துவர் உள்ளே நுழைந்திட்டாலோ எலும்பு நொறுங்க நையப்புடைப்பர். இது பற்றியே 'இடம்பொருளே வலைக்குறித்து மடம்புகுநாயெனவே யெங்கேநீ யகப்பட்டா யிங்கேநீ வாடா' என்கின்றார். இடம் பொருள் ஏவல்களைப் பெற வேண்டுமானால் நிராசையே ஒருவன் பெறவேண்டும். நிராசை பெற்றவர்க்கே இடம் பொருள் ஏவல் என்ற மூன்றுஞ் சித்திக்கும். இதனை,

"தூசாமணியுந் துகிலும் புனைவா
ணேசா முருகா நினதன் பருளா
லாசா நிகளந் துகளா யினபின்
பேசா வனுபூதி பிறந்ததுவே"

என்ற **கந்தாநுபூதியாலும்** அறியலாம்.

"நிமலஞானம தற்றால் வானும் வையமும் வந்து
தாள் வணங்கும்"

எனப் பிறருங் கூறியதுங் காண்க.

இதனானேயே 'மடம்பெறுபாழ் நெஞ்சாலே யஞ்சாதே நிராசை மன்னிடமே யிடமந்த மாநிலத்தே பொருளுந் திடம்பெறவே நிற்கினெல்லா வுலகமும்வந் தேவல்செய்யுமிந்த நிலைநின்றோர் செநகன்முதன் முனிவர்' என்றார். இதனான் நிராசை இடமென்பதும், அந்த இடத்தே அனுபவிக்கப் பெறும் சிவாநந்தப்பேறு பொருள் என்பதும், எல்லாவுலகும் வந்தேபணிவது ஏவல் என்பதும் பெறப்படும். நிராசை பெற்றார்க்கன்றி மற்றையர்க்கு பாச



பந்தத்தை அறுக்க ஒண்ணாது. பாசபந்தக்கட்டை அறுக்க நிராசை என்பது வேண்டும். நிராசை பெற்றவரே சிவாநந்தத்தை அனுபவிப்பர். பிறர் அனுபவிக்க முடியாது. இது கொண்டன்றோ **மாணிக்கவாசகர்,**

"தந்தைதாய் குரவனுசான் சங்கானிராசை பெண்டிர்
மைந்தர்பல் லுயிருஞ்சுற்ற மாசிலா வீசனன்ப
ரந்தமில்பிறவி யேழுமடுபகை யென்ப தோர்ந்தே
யெந்தையார்கருணை காட்டியெம்மை யாட்கொண்ட வன்றே"

என்றதாக பரஞ்சோதிமாமுனிவருங் கூறியுளார்.

இக்கருத்துக்கொண்டே நமது தாயுமானப் பெரியார் 'கடம்பெறுமா மதயானை யென்னவு நீ பாசக்கட்டான நிகளபந்தக் கட்டவிழப் பாரே' என்றார். 4

நல்லாசிரியனை அணுகியே உலகின் தன்மையும் உண்மையின்
தன்மையும் அறிதலாவதாம்

பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற்
பார்த்தனையே முடிவினின்று பாரெதுதா னின்ற
தாராலுமறியாத சத்தன்றோ அதுவா
யங்கிருநீ எங்கிருந்து மதுவாவை கண்டாய்
பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப்
புலம்பாதே சஞ்சலமாப் புத்தியைநாட் டாதே
ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே
உள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே.

(பரை) பார்ஆதி-பூமிமுதலாகிய, அண்டம்எல்லாம் - உலகங்களெல்லாம், படர்-பரவிய, கானல்போல்-கானலாகிய நீர்போல (பொய்யாய் அழிவதை), பார்த்தனையே-கண்டாயே, முடிவில்நின்று-அந்தத்திலிருந்து, பார்-நோக்குக, எதுதான் - (அந்தவிடத்தில்) எந்தப்பொருளே, நின்றது - நின்றிருந்தது (அத்தகையபொருள்), ஆராலும்அறியாத - எத்தகையோராலும் அறிந்துகொள்ளமுடியாத, சத்துஅன்றோ - சத்துப்பொருளல்லவா?, நீ - நீ, அதுஆய் - அப்பொருளாகி, அங்குஇரு - அவ்விடத்தேயிருப்பாயாக, (நீ அவ்வண்ணம் இருப்பாயேயானால்) எங்குஇருந்தும்-எவ்விடத்தில் நீ யிருந்தாலும், அதுஆவை-அப்பொருளே நீயாவாய், நீ-நீ, பூராயம்ஆகவும்-முற்றும் (ஆதியும் அந்தமும்) ஆகவும், மற்றொன்றைவிரித்து - வேறொன்றை விவரித்து, புலம்பாதே-நீ புலம்பவேண்டாம், மா-பெரிய, புத்தியை-அறிவை, சஞ்சலம்-துயரத்தில் (சலனத்தில்), நாட்டாதே-அழுத்தாதே (விட்டுவிடாதே), நீ ஒன்றையும்-நீ எந்தப்பொருளையும், ஓராதே-நேர்ப்பட்டு அறிந்துகொள்ளாதே (அறிக்கவனஞ்செலுத்தாதே), முன்னிலை-(நீ யாதொன்றையும்) சாட்சி, வையாதே-வைக்காதே, எல்லாம் - யாவும், உள்ளபடிமுடியும் - உள்ளவிதமாகவேமுடிவுபெறும், உள்ளபடி-இது உண்மையாகும் எ-று.

(வி-ரை) ஞானசாரியனின் ஞானோபதேசத்தால் உலகாதி தத்துவங்களெல்லாம் பொய் இறைவனே சத்தியம்; இறைவனே பொருளென்றது உணர்ந்தபின் உலகம்முதலிய அண்டங்களெல்லாம் கானற்சலமாகக்காணும்; இதுகண்டன்றோ ஒரு **பெரியார்**,

"எவ்வுலகும் எப்பொருளும் எவ்வினையும் எப்பயனும்
ஒவ்வியதோர் நித்தியமாய் உன்னுதே—செவ்வியகற்
கானற் சலமாகும் காட்டுமுயற் கொம்பாகும்
தானறிந்து தற்பரத்தைச் சார்" என்று கூறினர்.

இக்கருத்தேகொண்டு நம்தாயுமானவரும், 'பாராதி யண்டமெலாம் படர்கானற் சலம்போற் பார்த்தனையே' என்றார். தத்துவங்களையெல்லாம் முறையே நியதி களைந்துசென்றால் அந்தத்திற் காண்பது சிவதத்துவமே யன்றி வேறு ஒன்றில்லையாகும். வாழைமரத்தையெடுத்துப் பட்டைபட்டையாக உரித்துக்கொண்டுபோனால் கடைசியிற் காணப்படுவது தண்டாகும். அதுபோலத் தத்துவங்களையெல்லாங்களைந்து அசாரமாக ஒதுக்கிச்செல்லுங்கால் ஈற்றில் சிவதத்துவமே காணப்பெறும். இதுபற்றியே, 'முடிவினின்று பாரெதுதா னின்றதாரானு மறியாத சத்தன்றோ' என்றார். சத்தையறியச் சத்தாலேயேதான்கூடும்; அசத்துக்கள் அறியமுடியாது. குருவருள்பெற்ற சத்துக்கள் காணக்கூடும்; ஆதலின் 'ஆராலும் அறியாத சத்து' என்றார். குருகடாட்சம் பெற்றோர் சத்தையறிந்து சத்தோடுகலந்து சிவானந்தத்தில் மூழ்கிச் சத்துமயமா யிருப்பர். இதுகொண்டே, 'ஆராலு மறியாத சத்தன்றோ வதுவா யங்கிருநீ யெங்கிருந்து மதுவாவை கண்டாய்' என்றார். ஈண்டு அதுவாதல் என்றது சிவோகம்பாவனையை. அந்தச் சிவானந்தப்பேற்று நிலையினின்றும் வழுவிவிடாதே. வழுவுவையாயின் 'நான்' என்னும் அகங்கார தத்துவம்பற்றும். பின்னர் படிப்படியாய் மாயாதத்துவங்கள்வந்து தொந்திக்கத் தொடங்குமென்பார் 'பூராய மாகவுநீ மற்றொன்றை விரித்துப் புலம்பாதே சஞ்சலமாப் புத்தியை நாட்டாதே ஓராதே யொன்றையுநீ முன்னிலைவை யாதே யுள்ளபடி முடியுமெலா முள்ளபடி காணே' என்றார். ஓராதே யொன்றையுநீ முன்னிலை வையாதே என்றதற்கு காண்பான், காட்சி, காணப்படுபொருள்களெல்லாம் ஒன்றாய்க்காண் என்பதாம். வேறு பிரிக்காதே. சத்து, சித்து, ஆனந்தமே அம் மெய்ப்பொருள் என்றறிக என்பதாம். 5

சைவசமயமே எச்சமயத்துஞ் சிறந்ததெனல்

உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட்
டுளங்கருத வேண்டா நிஷ் களங்கமதி யாகிக்
கள்ளமனத் துறவைவிட் டெல் லாந்துறந்த துறவோர்
கற்பித்த மொழிப்படியே கங்குல்பக லற்ற



வெள்ளவெளிக் கடன்மூழ்கி இன்பமயப் பொருளாய்
விரவியெடுத் தெடுத்தெடுத்து விள்ளவும்வா யின்றிக்
கொள்ளைகொண்ட கண்ணீருங் கம்பலையு மாகிக்
கும்பிட்டுச் சகம்பொயெனத் தம்பட்ட மடியே.

(ப-ரை) உள்ளபடி-உள்ளபடியாகவே, என்ன-என்று நான் சொல்லவும், (அதை அநாதரவுசெய்து) நீ - நீ, மற்றொன்றை-வேறொன்றை, தொடர்ந்து-பின்பற்றி, உளம்-மனமே (நீ அதையே), கருத-எண்ண, வேண்டாம்-நினைக்க வேண்டாம், நிஷ்களங்கம்-களங்கமில்லாத, மதி-அறிவு, ஆகி - (உடையவன்) ஆகி, கள்ளம் - வஞ்சக, மனம் - மனத்தினொடு, துறவை - பொய்த்துறவை, விட்டு-நீக்கி, எல்லாம் - (மெய்யாகவே) எல்லாவற்றையும், விட்டு - அகற்றி (ஒழித்து), துறவோர்-உண்மைத்துறவினர், கற்பித்த - உணர்த்திய, மொழி-சொல்லின், படியே-விதமாகவே, கங்குல்-இரவும், பகல்-பகலும், அற்ற-இல்லாத, வெள்ளம்-(சுகோதயமாகிய) பெருக்கைக்கொண்ட, வெளி-ஜோதிமயமாகிய, கடல்-(ஆனந்தக்)கடலில், மூழ்கி - முழுகி, இன்பம்-ஆனந்தம், மயம்-வடிவான, பொருள்-பொருள், ஆகி-ஆகி, விரவி - (அந்த இன்பமயப்பொருளொடு) கலந்து, எடுத்து-எடுத்து, எடுத்து-எடுத்து, எடுத்து-எடுத்து, விள்ளவும்-(முக்காலும் எடுத்துச்) சொல்லவும், வாய் - வாய், இன்றி - இல்லாமல், கொள்ளை-மிகுதி, கொண்ட-ஆகிய, கண்ணீரும்-(ஆனந்தத்தால்) கண்ணீரும், கம்பலையும்-உடம்பு நடுங்குதலையும், ஆகி-கொண்டு, கும்பிட்டு - இருகரங்களையுங் குவித்துக் கும்பிட்டு, சகம் - இந்தப் பிரபஞ்சம், பொய் - பொய்யானது என்று, தம்பட்டம்-பறையை, அடி-அடித்துச்சாற்று எ-று.

(வி-ரை) சைவசமயமே சமயம்; சைவசமயத்தாற் கூறப்படுந்தெய்வமே தெய்வம் பிறசமயங்கள் முத்திதரா. பிறதெய்வங்கள் தெய்வங்களாகா இதனை,

"சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்
வைவைத்த சீர்திருத் தேவார முந்திரு வாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே."
என்ற **செய்யுளா**லறியலாம்.

இதுகொண்டே நம் தாயுமானப் பெருந்தகையாரும் 'உள்ளபடி யென்னவுநீ மற்றொன்றைத் தொடர்ந்திட் டுளங்கருத வேண்டா' என்றார். தூய பளிங்கில் சூரியன் ஒளி தோன்றுமாறுபோல இறைவன் தோற்றம் தூய மனத்தேயாகும். இதுபற்றியே 'நிஷ்களங்கமதியாகி' என்றார். உண்மையில் மனந்துறவு பூணாதார் உலகை வஞ்சித்தற்குத் துறவுக்கோலம் பூண்டு திரிவர். இவர்களுக்காகவன்றோ,

"வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று" என்றும்,

"மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்"

என்றுங் கூறினர் **திருவள்ளுவனார்**,

இது கொண்டேயன்றோ தாயுமானவரும் 'கள்ளமனத் துறவைவிட் டெல்லாம் துறந்த துறவோர் கற்பித்த மொழிப்படியே கங்குல்பகலற்ற வெள்ளவெளிக் கடன்மூழ்கி' என்றார். 'கங்குல் பகலற்ற வெள்ளவெளி' என்றது பரவெளியை. இனி சகல கேவலாதிகளிற் சிதாகாசமெனினுமாம். இறைவன் ஆனந்தமயனாதலின் 'இன்பமயப்பொருளாய்' என்றார். இறைவன் மனவாக்குக் கெட்டாதவனாதலின் அவன் உரைத்தற்கரியன் என்பார் 'விரவி யெடுத்தெடுத் தெடுத்து விள்ளவும் வாயின்றி' என்றார். இதனை,

"அன்றுமுதல் யாரேனும் ஆளாய் உடனாகிச்
சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதில்லை—இன்றிதனை
எவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது." எனவும்,

"ஒன்றுங் குறியே குறியாத வாலதனுக்
கொன்றுங் குறியொன்றி லாமையினால்—ஒன்றோடு
உவமிக்க லாவதும் தானில்லை ஒவ்வாத்
தவமிக்கா ரேயிதற்குச் சான்று."

என்ற **திருக்களிற்றுப்படியாரா**லும் அறியலாம்.

இறைவனை உள்ளபடி ஞானாசிரியன் கடாட்சவீட்சண்யத்தால் அறிவார்க்கு உடம்பு வெயர்த்தலும், கண்ணீர் ததும்புதலும், உடல் கம்பித்தலும், உடம்பு நடுங்குதலும், நாத்தழுதழுத்தலும், மனந்துடித்தலும், வாய்குழறலும், மயிர்க்குச்செடுக்குதலும் ஆகிய மெய்ப்பாடுகள் தோன்றும். இதனை,

"காலனை யுதைத்த காலன் காமப்
பாலனை யெரித்த பார்வையன் கண்ணுதல்
தன்பா லன்பு தான்படைத் தவர்க்கே
என்பு முருக எழுமே வியர்வை
கண்ணீர்ப் பெருக்குக் கதித்துப் பாயும்
உண்ணெகக் கம்பித் துடம்பு நடுங்கும்
நாத்தழு தழுக்கும் நல்லுரை குழறும்
எத்து மனந்துடித் தின்பம் பெருகும்
மயிர்க்குச் செறியும் மற்றிவை செயிர்ப்பில்
மெய்ப் பாடாச் சிவணிடுங் காணே"

என்ற **நுண்பொருள் நூலாற்** அறியலாம்.

இதுபற்றியே நம் தாயுமானவரும் 'கொள்ளை கொண்ட கண்ணீருங் கம்பலையுமாகிக் கும்பிட்டு' என்றார். 'கடல்' இது கடக்கமுடியாதது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். கட+அல்=கடவல், 'கடல்' என ஆயது மரூஉ என்பர்.





இறையவன் திருவுருவத் திறம் விளம்பல்

அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டா
லத்துவித வானந்த சித்தமுண்டாம் நமது
குடிமுழுதும் பிழைக்குமொரு குறையுமில்லை எடுத்த
கோலமெல்லா நன்றாகும் குறைவுநிறை வறவே
விடியுமுத யம்போல அருளுதயம் பெற்ற
வித்தகரோ டுங்கூடி விளையாட லாகும்
படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப்
பாலருட னுன்மத்தர் பசாசர்குணம் வருமே.

(ப-ரை) அடிமுடியும் - அடியும்முடியும், நடுவும்அற்ற - நடுவுமில்லாத, பரவெளி-பரமாகாசத்தை, மேற்கொண்டால் - நீ மேற்கொண்டால், அத்துவிதம் - (இறைவனுடன்) இரண்டறக்கலந்து ஆனந்தம் அனுபவித்தற்கு ஏதுவாகிய, ஆனந்தம்-இன்பமயமாகிய, சித்தம்உண்டாம்-மனமுண்டாகும், நமது குடி-நம்முடைய குடும்பம், முழுதும்-எல்லாம், பிழைக்கும்-உய்வைப்பெறும், ஒருகுறையும்-யாதொரு தாழ்வும் (குற்றமும்), இல்லை-இல்லையாகும், எடுத்த கோலம் - மேற்கொண்டகோலங்கள், எல்லாம் - எல்லாமும், நன்றுஆகும் - நன்மையானதேயாகும், குறைவு-தாழ்வும், நிறைவு-மிகுதியும், அற-இல்லாதபடி (நீங்க), விடியும் - விடிகின்ற, உதயம்போல - சூரியஉதயகாலமொப்ப, அருள்-அருளின், உதயம்பெற்ற-உதயத்தையடைந்த, வித்தகர்ஓடும் - ஞானியர்களுடனே, கூடிவிளையாடல்-சேர்ந்துவிளையாடுதல், ஆகும்-வந்துசேரும், படிமுழுதும்-பூமிமுழுவதையும், விண்முழுதும்-விண்ணுலகம்முழுவதையும், தந்தாலும்-கொடுத்தாலும், களியா-களிப்பையடையாத, பாலருடன் - குழந்தைகளுடனே, உன்மத்தர் - பித்தர், பசாசர் - பிசாசுபிடித்தவர்கள் (ஆகிய இவர்களின்), குணம்-குணமானது, வரும்-உண்டாகும் எ-று.

(வி-ரை) இறைவன், ஆதிமத்தியாந்தரகிதன். (அடி நடுமுடியற்றவன்) பரவெளியும் அடி நடுமுடியற்றது. இறைவன் அட்டமா வுருவினனாதலின், இறைவன் ஆகாசமாகவும் நிற்கின்றான். சிதம்பரத்தலத்தில் இறைவன் ஆகாசரூபமாகவே நின்று தான் தன் அருபதரிசனத்தை அடியார்க்கு அருளுகின்றான். இதுபற்றியே, 'அடிமுடியு நடுவுமற்ற பரவெளிமேற் கொண்டால்' என்றார். இறைவனைக்கண்டார்க்கு ஆனந்தம்பெருகித் தானென்பதற்றுத் தலைவன் மயமாயிருப்பர். இது சோகம் பாவம். இதனை, 'அத்துவித வானந்த சித்தமுண்டாம்' என்றார். இருளிற் கிடந்தார்க்குப் பொருள் தெரியாது நெறி தெரியாது தட்டித்தடமாடுவர். ஒளிபெற்றால் பொருள்களெல்லாம் நன்கு புலனாகும், நெறி தெளிவாகப் புலனாம். வழிக்கொண்டுசெல்வர். இது போல அஞ்ஞான இருளிற்கிடப்போர் பொருளையறியமுடியாது பொருளல்லவற்றைப் பொருளாக்கண்டு மருண்டு நெறிபிறழ்ந்து சங்கடப்பட்டலைவர். ஞானாசாரியன் திருவருளுபதேசமாகிய ஞானஒளிபெற்றார் பொருளை

விளங்கக்கண்டு சன்மார்க்கநெறி நின்று மோனானந்த முத்திப்பேறடைவ ராதலின், 'விடியுமுத யம்போல வருளுதயம் பெற்ற வித்தகரோ டுங்கூடி' என்றார். சிவானந்தப் பேறுபெற்றவர் பலரைப்போலப் பசித்தலுண்பர் சென்றதற் கிரங்கார் வருவனகருதார்; இதனை,

"பசித்தா லழுது தகித்திடல் பின்பசிக்
கென் செய் வேனென உன்னுதிருத்தல்
ஆன முயற்சி தானறிந் திடாமை
பெற்றோர்க் குற்ற பெருந்துயர் இழவுநோய்
மற்றதற் கிரங்கப் பொற்புட னிருத்தல்
எய்துமப் பெற்றோர்க் கெய்திய வின்பச்
செய்திகள் கண்டே உய்திற னலே
மகிழாச் செய்கை சகித்தொரு பயனை
எண்ணி முயலா தெதுவோ புரிதல்
கழிவுக் கிரங்கா மொழிதிருக் குணமும்
வருவன கருதா வளனும் மகிழ்வும்
எல்லாம் பாலரின் சொல்லார்
செயலிவை ஞானியர் செயல்போ லும்மே"

என்ற **நுண்பொருணூறு** என்னும் நூலாலறியலாம்.

உன்மத்தர்போல வைதாரையும் வாழ்த்தினரையும் பாகுபடுத்திப் பாராது எல்லோரையுஞ் சமமாய் நோக்குங்காட்சியும் தன் சுகம்பேணுப் பெற்றியும், தேகாபிமானமற்றிருப்பர்; இதனை,

"வாழ்த்தி னோரையுந் தாழ்த்தி னோரையும்
சமமா நோக்கித் தமக்கெனச் சுகத்தை
நாடாத் தன்மையுந் தேடா நன்மையும்
மானமே மற்றபி மானமே தவிர்த்தலும்
உடலம் பேணுத் திடமும் பித்தர்
குணமிவை தணவா எனநன்
ஞானியர் செயல்போற் றுனினித் திடுமே"

**நுண்பொருணூறு** என்றதனாலறியலாம்.

பசாசர்போலவும் இருப்பர், பேய்பிடித்தவர் தேகத்திலே ஒருத்தர் செய்யும் இதாகிதங்கள் பிடித்தபேய்க்கேயாகத் பாரமற நிற்பர். அதுபோல எய்துவதெல்லாம் இறைவற்காகத்தான் தாக்கற்றுநிற்பர். இதனை,

"தாக்கல் ஆக்கல் ஊக்கல் எல்லாம்
போக்கறப் பிடித்த நோக்கப் பேய்க்கே
பற்றத் தனக்குப் பற்றுவ தின்றி
நிற்றல் போய் யற்புதம்
இதுஞா னிக்கும் பொதுவா கும்மே"

**நுண்பொருணூறு** என்பதனாலறியலாம்.



இதனானேயே, 'படிமுழுதும் விண்முழுதுந் தந்தாலுங் களியாப் பாலருட னுன்மத்தர் பசாசர்குணம் வருமே' என்றார். எ-ஈற்றசை. 7

இறைவனைப் பக்குவமுற்ற ஞானியர்களே அறிவர் அபக்குவிகள் அறிய முடியாது என்கின்றார்

வரும்போமென் பனவுமின்றி என்றுமொரு படித்தாய்
வானாதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியாம் [மே
இரும்போகல் லோமரமோ என்னுநெஞ்சைக் கனன்
விட்டமெழு காவுருக்கும் இன்பவெள்ள மாகிக்
கரும்போகண் டோசீனி சருக்கரையோ தேனோ [வார்
கனியமிர்தோ எனருசிக்கும் கருத்தவிழ்ந்தோ ருணர்
அரும்போநன் மணங்காட்டும் காமரசங் கன்னி [ம்.
யறிவாளோ அபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கு

(ப-ரை) வரும்-இது வரும், போம்-இது போகும், என்பனவும்-என்பவைகளும், இன்றி-இல்லாமல், என்றும்-எக்காலத்திலும், ஒரு-ஒரே, படித்தாய்-தன்மையை உடையதாகி, வான் ஆதி - ஆகாசம் முதலாகிய, தத்துவத்தை-தத்துவக்கூட்டங்களை, வளைந்து - வளைத்து, அருந்தி - புசித்து, வெளியாம்-வெளிப்படும், இரும்போ-கடினத்தால் இரும்புதானோ, கல்லோ-கல்லுதானோ, மரமோ - மரந்தானோ, என்னும் - என்று சொல்லப்படுகின்ற, நெஞ்சை-மனத்தை, கனல் - நெருப்பின், மேல் - மேலே, இட்ட - வைத்த, மெழுகா-மெழுகைப்போல, உருக்கும் - உருக்கிவிடும், இன்பம் - ஆனந்தம், வெள்ளம்-சமுத்திரம், ஆகி-ஆகி, கரும்போ-(இனிமையினால்) கரும்புதானோ, கண்டோ-கற்கண்டுதானோ, சீனிசருக்கரையோ-சீனிச்சருக்கரைதானோ, தேனோ-தேன் தானோ, கனி-முக்கனிகள்தானோ, அமிர்தோ-அமிர்தந்தானோ, என-என்று கூறும்படி, ருசிக்கும் - தித்திக்கும், (அத்தகைய பொருளை) கருத்து-மனம், அவிழ்ந்தோர் - விரிந்தோர், உணர்வார் - அறிவார்கள், அரும்போ - பூவின் அரும்போ, நல்-நல்ல, மணம்-வாசனையை (நாற்றம்), காட்டும் - கொடுக்கும் (வீசும்), கன்னி-கன்னிப்பெண்ணாய் இருப்பவள், காமரசம்-காமச்சுவையை, அறிவாளோ-அறிந்திடுவாளோ, அ நலம் - அந்தப்பரமானந்தம், அ பக்குவர்க்கோ-பக்குவம் அல்லாதவர்களுக்கோ, விளங்கும்-தெரியும் எ-று.

(வி-ரை) போக்குவரவு இன்றி என்றும் ஒரு படித்தாய் இருக்கும் பூரணன் இறைவன் ஆதலினாலும் வான்முதலாகிய பூததத்துவங்களாகி அவைக்கும் அப்புறமாய் அவைகளுக்கு ஆதாரமாய் அவைகளை எல்லாம் தன் அகத்தே கொண்டும் விளங்குபவன் ஆதலினாலும், 'வரும்போமென் பனவுமின்றி யென்றுமொரு படித்தாய் வானாதி தத்துவத்தை வளைந்தருந்தி வெளியாம்' என்றார். இதனை,

"வானமுதற் றத்துவங்கள் மாண்கங்கை வேணியனே
மானவவைக் காதார மற்றவனே—ஈனமிலா

மால்பிரமன் றனவனே மன்னுமவ னுதாரம்
மேல்வருமுன் றனவரும் மிக்கு."

என்ற **ஞானசாகர வெண்பா**னும் அறியலாம்.

"இளகி உருகா இயல்புடைய நெஞ்சை இரும்பு கல்மரம்"
என்பர் பெரியர்.

இதுகொண்டே தாயுமானவரும் 'இரும்போகல் லோமரமோ வென்னு நெஞ்சை' என்றார். இதுபற்றியன்றே **மணிவாசகரும்**,

"இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தெ னென்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினை"

என்றார்.

"மருங்குலு மொன்று தாய்க்குமொரு மகளாதலோர்ந்து
மிரும்பினு மியன்றநெஞ்சத் திவர்களோ விருந்துகாண்க"

என்ற **சீவகசிந்தாமணிச் செய்யுளும்** ஈண்டு கருதற்பாலதாம்.

இறைவனால் எய்தும் ஆனந்தப்பேரின்பத்தை ஒப்புச்சொல்ல அரிதெனினும் கரும்பின்சுவைக்கும், கண்டுக்கும், சீனிக்கும், தேனுக்கும், முக்கனிக்கும், அமிர்துக்கும் ஒப்பிட்டுக்கூறுவர் பெரியோர் இதுகொண்டே 'கரும்போகண் டோசீனி சருக்கரையோ தேனோ கனியமிர்தோ வெனருசிக்கும்' என்றார். இதனை,

"முக்கட் கரும்பே கற்கண்டே மொழியுஞ் சீனிச் சர்க்கரையே
தொக்க பாகே பழரசமே தூய தேனே பசும்பாலே
மிக்க வமிர்தே எனவினிக்கும் மேலோய் இறைவா முதல்வாவோ
செக்கர்ப் பிறைசேர் சடையானே சிறியேன் விழுமந் துடைத்தருளே."

என்றார் **அதிசயபுராண** முடையாரும்.

இறைவன்கணின்றும் பெரும் பேரின்பச்சுவையை ஆனந்தாமிர்தத்தை மனமிளகிய ஞானிகள் அறிவர் மற்றையர் அறியார். கண்ணுள்ளார் அன்றே கதிரவனைக் காணமுடியும் கண்ணிலார்க்குக் காணமுடியுமோ! கண்ணிலார்க்கு இரவும் பகலும் எது? 'விழியிலார்க்கேது விளக்கு' இது கொண்டே 'கருத்தவிழ்ந்தோ ருணர்வார்' என்றார். பூ அரும்பு மலர்ந்தாலன்றி மணந்தராது, பக்குவமடைந்தவளே யாயினும் புருஷசுகங் கன்னியறியாள். கணவனைக் கலந்த காரிகையே காம இன்பத்தை அறிவள். இதனை,

"கலைநிறைந்த மதிபோற் பெண்ணாள் கவின்பருவம் பெற்றுளேனும்
நிலைமையறி புருடன் றன்னை நேர்ந்தணைந்து புணர்ந்தா லன்றி
தலைமைதரு மின்ப போகம் தையலவள் தேர்வாள் கொல்லோ
உலைமெழுகா முள்ளத் தாரே உயர்ந்தசிவா நந்தந் துய்ப்பர்."

என்ற **செய்யுளா**னும் நன்கறியலாம்.

இது பற்றியே நம் தாயுமானவரும் 'அரும்போநன் மணங்காட்டுங் காமரசங் கன்னி அறிவாளோ அபக்குவர்க்கோ வந்நலந்தான் விளங்கும்' என்றார்.





இறைவன் உண்மையை உணர்த்துவது மனம் அதுவும்
ஒரு குருவாகும் என்கின்றார்

தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத்
தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையது வான
கோனாக வொருமுதலிங் குண்டெனவும் யூகங்
கூட்டியதுஞ் சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞான
வானாக வம்முதலே நிற்குநிலை நம்மால்
மதிப்பரிதா மெனமோனம் வைத்ததுமுன் மனமே
ஆனாலு மனஞ்சடமென் றழுங்காதே யுண்மை
யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே.

(ப-ரை) தானேயும்-தானாகவேயும், இ-இந்த, உலகம்-உலகமானது, ஒரு முதலும் - ஒருமுதற்பொருளும், ஆகா தன்மையினால் - ஆகாததன்மையால் (இதனை), படைத்து-உண்டாக்கி, அளிக்கும்-காத்தருளுகின்ற, தலைமை அது-தலைமைத்தன்மையது, ஆன-ஆகிய, கோன்-இறைவன், ஆக-ஆக, ஒருமுதல்-ஒப்பற்ற ஒரு முதற்பொருள், இங்கு-இவ்விடத்தே, உண்டு எனவும்-இருக்கின்றதென்றும், யூகம் கூட்டியதும்-யுத்தியையுண்டாக்கியதும், சகம் முடிவில்-உலகமுடிவிலே, குலவுறும் - விளங்கும், மெய்ஞானம் - உண்மையாகிய ஞானமயமான, வான் ஆக-ஆகாயமாக, அம்முதலே-அந்த முதற்பொருளே, நிற்கும்நிலை-நிற்கின்ற நிலையானது, நம்மால்-நம்மாலே, மதிப்பு-மதிக்கப்பெறுவது, அரிது ஆம் - அரியதாகும், என - என்று, மோனம் - மௌனநிலையை, வைத்ததும்-அமைத்ததும், உன் மனமே-உன்னுடைய மனமேயாகும், ஆனாலும் - அவ்வாறாயினும், மனம்-மனமானது, சடம் என்று-சடமென்று, அழுங்காதே-வருந்தாதே, உண்மை - மெய்ஞ்ஞானத்தை, அறிவித்த - உணர்த்திய, இடம்-இடத்தில், குருஆம்-ஆசாரியனாகும், அருள் இலது-அருளில்லாதது, ஒன்று இல்லை-ஒருபொருளுமில்லையாம் எ-று.

(வி-ரை) கடத்தையும் படத்தையுங் கண்டவர்கள், கடத்தை வனைந்த குலாலனொருவன் உண்டென உணரவும், படத்தைவரைந்த ஓவியனொருவன் உண்டென உணரவும், மனமே காரணம். அதுபோல உலகையும், உலகப் பொருள்களையும், அவைகளின் இயக்கங்களையும், அவைகளின் குணகுணங்களையுங் கண்டறிந்தோர், இவ்வுலகும்பொருள்களும் தானே உண்டாயிருக்க மாட்டா. இவைகளைப் படைத்து இயக்குபவன் ஒருவனுளன் என மனம் யூகித்தறிகிறது. இதுகொண்டே, 'தானேயு மிவ்வுலக மொருமுதலு மாகாத் தன்மையினாற் படைத்தளிக்குந் தலைமையதுவான கோனாக வொருமுதலிங் குண்டெனவும் யூகங் கூட்டியதும்' என்றார். ஞானாசிரியனருளால் தத்துவங்களைக் களைந்து கண்டபொழுது எல்லா மொழிய ஞானப்பிழம்பாகிய இறைவன் நிற்றலைக் கண்டதும் மனமேயாதலினாலும், இதனை அறிய மோன நிலையைக் கூட்டியதும் மனமேயாதலினாலும், 'சகமுடிவிற் குலவுறுமெய்ஞ் ஞானவானாக வம்முதலே நிற்குநிலை நம்மால் மதிப்பரிதா மெனமோனம்

வைத்ததுமுன் மனமே' என்றுங் கூறினர். அஞ்ஞானமாகிய இருள் உள்ள வரை துன்பே. ஞானமாகிய ஒளி யுதித்தால் இன்பே. துன்பத்துக்கேது வாகிய அஞ்ஞானமாகிய அந்தகாரத்தைப்போக்கி, இன்பத்திற்கு ஏதுவாகிய ஞானஒளியை அருள்பவன் குரு. இதுபற்றியே குருவுக்கு இப்பெயர் வந்தது. இது காரணப்பெயர். கு = அஞ்ஞானமாகிய இருட்டு, கு = (அஞ் ஞானமாகிய இருட்டை) குச்சிதப்படுத்துவோன்; அதாவது அஞ்ஞானத்தை அழிப்போனென்பது பொருளாம்.

இறைவனே, உலகத்தையும் பொருள்களையும் படைத்து அளித்துத் துடைப்பவன். உலகம் முதலிய எல்லாம் அழிதன்மாலைய. அந்தத்தில் இறைவனே ஞானப்பிழம்பாக, ஆனந்தமயமாக, ஜோதிவடிவாக நிற்பவ னென்று உணர்த்துவது மனமாகுமாதலின் மனத்தை ஜடமென்று எள்ளித் தள்ளிவிடாதே. அதுவே உனக்கு குருவாகின்றது என்பார். 'மனஞ்சட மென் றழுங்காதே யுண்மை யறிவித்த விடங்குருவா மருளிலதொன் றிலையே' என்றார். இறைவன் திருவருள் இன்றேல் எதுவும் இன்றாம். இறைவன் திருவருள் உண்டேல் எல்லாம் உண்டாமென்னும் ஞானநூற் கொள்கைகொண்ட பெரியாராகிய தாயுமானவர் 'அருளிலதொன்றிலையே' என்றார். ஈற்றேகாரம் தேற்றப்பொருளில் வந்தது. 9

---

## பொன்னை மாதரை

இறைவனே உன்னையும் உன் அருளையும் நாடுகின்றேன்; பொன்னைப் பெண்ணை மண்ணை விரும்பவில்லை என்கின்றார்

**பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்**
**என்னை நாடிய வென்னுயிர் நாதனே**
**உன்னை நாடுவன் உன்னருட் டூவெளி**
**தன்னை நாடுவன் தன்னந் தனியனே.**

**(ப-ரை)** பொன்னை-பொன் முதலிய பொருளையும், மாதரை-பெண்களை யும், பூமியை - பூமியையும், நாடிடேன் - இச்சிக்கமாட்டேன் (விரும்பேன்), என்னை-அடியேனை, நாடிய-விரும்பிய, என் - அடியேனின், உயிர்-உயிர்க்கு, நாதனே-தலைவனே!, உன்னை-தேவரீரை, அருள் - அருளாகிய, தூ-பரிசுத்த மாகிய, வெளிதன்னை-வெளியை (ஆகாயத்தை), நாடுவன்-விரும்புவன், தன் னந்தனியன்-தனியனாகிய அடியேன் எ-று.

**(வி-ரை)** 'பொன்' என்றது பொன்முதலாய செல்வப்பொருள்களை. 'பொன்' மாயையின்காரியம். உலகை விரும்பினர்க்குப் பொன் இன்றியமை யாது வேண்டிய தொன்றாம். இதனை, "பொருளிலார்க் கிவ்வுலக மில்லை" என்றதனால் அறியலாம். இச்செல்வப்பொருள் செய்யுந்தீங்கு எண்ணித் தொலையாது எட்டிலடங்காது. இதனை,



"சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாருங் குருடராய் முடிவ ரன்றே."

என்ற **குசேலோபாக்கியானம்.**

"செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணார்
சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார்
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்
வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்."

என்ற **வில்லிபாரதம்.**

"அறியாமை யோடிளமை கூடுவதா மாங்கே
செறியப் படுவதாஞ் செல்வம்—சிறிய
பிறைபெற்ற வாணுதலாய்த் தானேயா டும்பேய்
பறைபெற்று லாடாதோ பாய்ந்து."

பழமொழி.

என்றும் கூறிய சான்றோர் செய்யுளாலறியலாம். 'பெண்ணும்' மாயையின் உருவம் இது முத்தி எய்துதற்கு முற்றும் இடையூறாக இருப்பது. இது பற்றியன்றோ **கம்பரும்,**

"தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கைய ரால்வருங்
காமமில்லை யெனிற்கடுங் கேடெனு
நாமமில்லை நரகமு மில்லையே."

என்றார். இன்னும்,

"இலைநல வாயினு மெட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
விலையாண் முலைநலங்கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் ளீரே."

எனவும்,

"மனைபுகு வள்கண் மனைவியை நாடிற்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழு மன்பை
நனவது போலவு நாடவொண் ணாதே."

எனவும் கூறிய **திருமந்திரமும்** நோக்கத் தக்கது.

"விண்குலா வுயர் விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ
கண்க ளானது காமத்தி னாலன்றோ."

என்ற **தற்றலப்புராணம்** நன்கு பெண்களால் வருங்கேட்டை விளக்கி கின்றது.

"காமமே பிறவிவித் தாகுங் கண்ணிலாக்
காமமே சிவனடிக் கலப்பு நீக்கிடுங்
காமமே யவத்தையிற் கலக்கச் செய்திடுங்
காமமே நரகெலாங் காணி யாக்குமே."

என்ற **காசிரகசியச்செய்யுளுங்** கண்டுதெளியலாம்.

'பூமி' என்றது வீடு, மனை, வயல், நிலம் முதலியவற்றை இது பொருளுள் அடக்கும். பொன், பெண், மண் என்கின்ற இவைபற்றிவரும் மூவாசையும் திருவருளைப்பெறத் தடையாய் நிற்பனவாதலின் 'பொன்னைமாதரைப் பூமியை நாடிடேன்' என்றார்.

"வாழு மனைமேன் மதலையர்மேல் வான்பொருண்மேல்
வீழு மனமவற்றின் வீழாது தானேம்பித்
தாழு மவிர்சடையோன் றாள்விழையப் பெற்றவரே
யேழு பவக்கடலு மேறும் புணைபெற்றார்"

என்ற **பிரமோத்தரகாண்டச்செய்யுள்** இங்கு ஒப்பிடத்தக்கது.

இறைவன் எல்லாவுயிர்க்கும் உயிராயிருப்பவனாதலின் 'என்னை நாடிய என்னுயிர் நாதனே' என்றார். இதனை,

"என்னுளே யுயிர்ப்பாய்ப் புறம் போந்துபுக்
கென்னுளே நிற்கு மின்னம்ப ரீசனே"

என்ற **தேவாரத்தா**லும் உணரலாம்.

பொன்னினும், புவியினும், பூவையரினும் உயிர் சிறந்தது. அதனினும் உயிர்க்குயிராயிருக்கும் நீ சிறந்தவனாதலின் அடியேன் இறைவா நின்னையும் நின் அருள்வெளியையும் நாடினேனென்கின்றார். 'பொன்னைமாதரை பூமியை' உம்மைத்தொகைகள். எண்ணும்மை தொக்குநின்றது. 'பொன்னையும் மாதரையும் பூமியையும்' என விரியும். 'நாடிடேன்' என்பதை 'நாடினேன்' எனவும் பாடபேதங் கூறுவர். இது பெரும்பாலும் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் என நான்கு சீர்கொண்ட அடிகளாகிய கலி விருத்தம். இத்தொகுதி ஓர் மாலையாக எழுபத்தாறு செய்யுள்கொண்டது. இதில் முதற்செய்யுளின் முதலடியில் **பொன்னைமாதரை** எனத் தொடங்கியதால் இம்மாலைக்கு 'பொன்னைமாதரை' எனப்பெயராயது. ஏ-ஈற்றசை.

என்னது என்றவைகளை இறைவனே நின்னது என்றதால் அவைகளை
உன்னிடம் சேர்த்துவிட்டேன், பின்னும் அவைகளை என்னிடம்
சேர்ப்பித்தால் அடியேன் உய்யமுடியாது என்கின்றார்

தன்ன தென்றுரை சாற்று வனவெலாம்
நின்ன தென்றனை நின்னிடத் தேதந்தேன்
இன்ன மென்னை யிடருறக் கூட்டினால்
பின்னை யுய்கிலன் பேதைய னாவியே.



**(ப-ரை)** தன்னது - தன்னுடையது, என்று-என்று, உரை-சொற்களால், சாற்றுவன-சொல்லப்படுபவைகள், எல்லாம்-எல்லாமும், நின்னது-தேவரீரது, என்றனை-என்று சொல்லினை, (ஆகையால்) நின்-தேவரீரது, இடத்தே-இடத்திலே, தந்தேன்-கொடுத்துவிட்டேன், என்னை-அடியேனை, இன்னம்-இன்னமும், இடர் - துன்பம், உற - வந்துகூடும்படி, கூட்டினால் - அடியேனிடத்தே சேர்த்துவிடுவையேயானால், பின்னை-பிறகு, பேதையன்-அடியேனாகிய நான், ஆவி உயிர், உய்கிலேன்-பிழைக்கும்வன்மை யில்லாதவனாவேன் எ-று.

**(வி-ரை)** ஆன்மாக்கள் உய்தற்பொருட்டுத் தனு, கரண, புவன, போகங்கள் இறைவனாற் றரப்பட்டன. அவைகளை அறியாமையால் என்னது என்று அகங்கரித்திருந்தேன். இறைவன் ஞானாசிரியனாக வந்து அருள் செய்தபொழுது எல்லாம் அவனுடையனவென்று அவனிடமே சேர்த்தலையே ஈண்டு, 'தன்ன தென்றுரை சாற்றுவன வெலாம் நின்ன தென்றனை நின்னிடத் தேதந்தேன்' என்றார். இதுவே, ஆசிரியர் ஆட்கொண்டருள வருங்கால் குரு காணிக்கையாக உடல், பொருள் ஆவிகளைக் கொடுத்தலாம். இதனை,

"அன்றே யென்ற னாவியு முடலு முடமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ
வின்றோ ரிடையூ றெனக்குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ விதற்கு நாயகமே"

என்ற **மணிவாசகர் திருவாக்கா**ன் நன்கறியலாம்.

உடல், பொருள், ஆவிகளை எனதென மீட்டும் எண்ணிப் பற்றுவைப்பேனேல் யான் எனது என்னுஞ் செருக்கு என்னைக் கவிந்துகொள்ள முத்தியெய்தாது உலகப்பித்திற் பட்டுழன்று கெடுவேன். இந்த இந்த அகங்கார மமகாரங்கள் எனக்கு வேண்டாம் என்பார், 'இன்ன மென்னை யிடருறக் கூட்டினால் பின்னை யுய்கிலன் பேதைய னாவியே' என்றார். இதனை,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்' என்றும்,

"அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு"

என்றும் கூறிய **திருவள்ளுவர் வாக்கா**னும் அறியலாம்.



இறைவனே! அடியேன் அறிவு உதயமாகி உன்னைவணங்கி என் சிந்தை
யைத் திறைகொடாதிருக்கின்றேன் பாவியேன் ஆனாலும் என்னை
அழைத்து ஆண்டருள் புரிவாயாக என்கின்றார்

ஆவி யேஉனை யானறி வாய்நின்று
சேவி யேன்களச் சிந்தை திறைகொடேன்
பாவி யேனுள பான்மையைக் கண்டுநீ
கூவி யாள்எனை யாட்கொண்ட கோலமே.

(ப-ரை) ஆவியே - என் உயிரே!, உனை - உன்னை (அறிவிற்கு அறிவாம் உன்னை), யான்-நான், அறிவுஆய் - அறிவுவடிவமாய், நின்று - நின்று, சேவியேன் - அஞ்சலியாதிருக்கின்றேன், களம் - கள்ளத்தனமுடைய (வஞ்சக), சிந்தை-மனத்தை, திறை-கப்பமாக, கொண்டேன் - கொடாதிருக்கின்றேன், பாவியேன்-பாவங்களையேசெய்து திரிபவனாகிய அடியேன், உள-இருக்கின்ற, பான்மையை-தன்மையை (விதத்தை), கண்டு-நோக்கி, எனை-அடியேனை, ஆட்கொண்ட-அருளால் அடிமைகொண்ட, கோலமே-அருட்டிருவுருக்கொண்ட இறைவனே!, நீ-தேவரீராகிய நீர், கூவி-அழைத்து, ஆள் - ஆண்டருள் செய்வாயாக எ-று.

(ப-ரை) இறைவன் உயிர்க்குயிராய் இருப்பவன் ஆதலின் 'ஆவியே' என்றார். ஆன்மா பாசத்தினின்றும் நீங்கி அறிவுபெற்றாலன்றி இறைவனைக் காண முடியாதாதலின் 'யானறிவாய் நின்று சேவியேன்' என்றார். இதனை, "அறிவுதனைக் கொண்டறி வதனைக்கண்டு" என்ற **பெரியார்** வாக்கினாலும் அறியலாம். அறிவுமயமாகிய இறைவனைக் காண்டற்கு ஆன்மாவும் அறிவுமயமாக வேண்டும் இதற்கு ஞானாசிரியன் திருவருள் வேண்டும். மனத்தை இறைவற்கு அர்ப்பணஞ் செய்தாலொழிய சிவானந்தப்பேறு பெறுதல் கூடாதென்பதொருதலை. இதுகொண்டே, 'கள்ளச்சிந்தை திறைகொடேன்' என்றார். கள்ளச் சிந்தையைத் திறைகொடுத்தலாவது தற்போதங்கழன்று சிவபோதமாக நிற்கும் நிலை. தாயைக்கட்டித் தழுவித் தன்னைக்காத்துக் கொள்ளுங் குரங்குக்குட்டி போலாது, தாய் தன்னைக்கவ்வி எடுத்தணைத்துக் காத்துக்கொள்ளக் கிடக்கும் பூனைக்குட்டிபோல இருக்குந் தன்மையுடைய அடியேனை 'மார்ச்சால நியாயம்பற்றி' அடியேனைக் காக்கவேண்டு மென்பார் 'பாவியேனுள பான்மையைக்கண்டுநீ கூவியாளெனை' என்றார். குரங்குக்குட்டி தாயைக்கட்டித் தழுவிவிடாது பற்றிநின்று தன்னைக் காத்துக்கொள்வது 'மர்க்கட நியாயம்'. பூனை தன் குட்டியைக் கவ்வித்தழுவிக் காப்பது 'மார்ச்சால நியாயம்'. 'கோலமே' என்றது இறைவன் அருட்டிருமேனிதாங்கி ஆசாரியவடிவாய் வந்தருளியதை என்க. 3

சிவவேடமும், அதற்கேற்ற பத்தியும், ஒழுக்கமுமின்றி இறைவனே
உன் அருள் பெறமுடியாது என்கின்றார்

கோல மின்றிக் குணமின்றி நின்னருட்
சீல மின்றிச் சிறியன் பிழைப்பனோ
ஆல முண்டு மமிர் துரு வாய்வந்த
கால மெந்தை கதிநிலை காண்பதே.

(ப-ரை) எந்தை - எனது தந்தையே!, கோலம் - சிவசின்னங்கள் பூண்ட வடிவம், இன்றி-இல்லாமலும், குணம் - (சிவவேடமாகிய விபூதி உருத்திராக்கங்களைப் பூணுதற்கேற்ற) பத்திக்குணம், இன்றி-இன்றியும், நின்அருள் - தேவரீரது அருளை (அடைதற்குரிய), சீலம்-நல்லொழுக்கம், இன்றி-இல்லாமலும், சிறியன்-அற்பனாகிய அடியேன், பிழைப்பனோ-உய்வைப்பெறுவேனோ?



(இவைகள் ஒன்றுமின்றி அடியேன் உய்யவேண்டின்), ஆலம் - விஷத்தை, உண்டும் - அருந்தியும் (அது), அமிர்து - (சாவைத்தவிர்த்து சாவாமையைத் தரும்) அமிர்தத்தின், உருவாய்-உருவமாகி, வந்த-வந்த (தோன்றின), காலம்-காலத்தில்தான், கதி-தேவரீரின் சிவகதியானது, நிலை-நிலையினை, காண்பது-நான் காணப்பெறுவதாகும் எ-று.

(வி-ரை) கோலம் என்றது சிவவேடத்தை. சிவவேடமாவது விபூதி தரித்தலும், உருத்திராக்கமணிவதுமாம். இதனை,

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்வீரே யாமாகிற்
றங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே" என்ற **திருமந்திரம்**

"புழுகுசெஞ் சாந்திவை புனைந்து புன்மல
மொழுகுமொன் பான்றுளை யுடம்பை யென்றுநீ
யழகுசெய் திடின்மல மகலு மோபரன்
முழுகுவெண் ணீறிடின் முற்று மாயுமே"

என்ற **சீகாளத்திப்புராணம்.**

"ஆயிரங் கலனுடம் பனைத்துந் தாங்கினும்
மாயிரும் பொறையலால் வருவ தண்டுகொள்
நாயகன் விழிமணி யொன்றோர் நாளுடன்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே"

என்ற **சீகாளத்திப்புராணம்.**

"நீறணிதல் ஈசன் நிறையக்கம் பூணல்சிவப்
போதனப் பேசும் பெருமறையே—கூறவரு
பொன்மணி யாதியணி போக்கா மலநோயை
மன்னக்க நீறுசெயும் மற்று" என்ற **ஆப்தர்வாக்கு.**

"வெள்ளிய நீறுறப்பூசி மேதகுகண் மணிபூண்டே
புள்ளியவஞ் செழுத்தினரா யுண்மைநெறி யியங்கடியார்
வள்ளியமா மலர்ப்பாத மரீஇப்பணிசெய் தொழுகினுற்
றெள்ளியஞா னசிரியற் சேர்ந்தனைத்தும் பெறலாகும்"

**திருப்பெருந்துறைப்புராணம்** என்னும் வாக்குகளாலறியலாம்.

'குணம்' என்றது பத்திக்குணத்தை. இனி, கருணை, பொறை, அடக்கம், தயை, ஈகை எனினுமாம். 'சீலம்' என்றது,

"நம்பனைப் பூசித்தல் நற்கோயில் போய்த்தொழுதல்
பம்புசிவத் தொண்டர் பணிபுரிதல்—இடும்பருரை
நல்விரதம் பூணல் நமசிவய என்றோதல்
சொல்லுபெருஞ் சீலமெனச் சொல்"

என்றபடி சிவபெருமானைப் பூசித்தல் முதலிய சிவவழிபாடுகளாம். மக்கட்கு ஆலமுண்டு அமுதாக்கிக்கொள்ள வலியின்று. இறைவனே இது செய்யக்கூடியவன். இன்னும் இறையருள் பெற்றார்க்குங் கூடுவதாம். கோலம், குணம், சீலமில்லாக்கடையேன் நின்னருள் பெறுதல் யாங்ஙனம்? ஆதலின் ஆலமுண்டு அமுதாக்க வல்லேனல்லேனாதலின் அடியேனுக்கு அருள்செய்து கதிதரவேண்டுமென்பார் 'ஆலமுண்டு மமிர்தரு வாய்வந்த காலமெந்தை கதிநிலை காண்பதே' என்றார். ஏ-ஈற்றசை. 4

ஆண் பெண் அது என உயர்திணை அஃறிணையாகி நிற்கும் உன்னைத் தேவர்களானாலும்சரி மனிதர்களானாலுஞ்சரி காணக்கூடியவர்களாவாரோ என்கின்றார்

காணுங் கண்ணிற் கலந்தகண் ணேஉனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணும் அதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியு ணிற்கவே.

(ப-ரை) காணும்-நோக்குதற்கு உரிய, கண்ணில் - அறிவாகிய கண்ணின் உள்ளே, கலந்த - கூடியிருக்கின்ற, கண்ணே - பெருமையையுடைய இறைவனே!, சேணும்-விண்ணினிடத்தும், மண்ணும்-மண்ணினிடத்தும், திரிபவர்-திரிகின்றவர்கள், உன்னை - தேவரீராகிய உம்மை, காண்பரோ - காண்பார்களோ? ஆணும்-ஆண்பாலும், பெண்ணும்-பெண்பாலும், அது - அஃறிணைப் பொருளாகிய அது, என்னும் - என்று சொல்லப்படும், பான்மையும் - பகுதிகளும் (ஆகிய இவைகளை), பூணும் - கொண்டுள்ள, கோலம்-தேவரீரது திருக்கோலமானவைகள், பொருந்தி - அமைந்து, உள் - அவர்களுடைய மனத்தினிடத்து, நிற்கவே-நிலைபெற்றிருக்கவே எ-று.

(வி-ரை) காண்பார் கண்களுக்குள்ளே கண்ணொளியாய்க் கலந்து நிற்பவன் இறைவன். 'கண்ணின்றிக் காட்சியில்லை. அக்கண்ணும் காணற்குரிய ஒளியைப் பெறுவிடத்துக் காணமுடியாது. காணுங் கண்ணுக்கு உள்ளொளியாய்க் காட்டி நிற்பவன் இறைவன். இதனை,

"கண்ணவன்காண் கண்ணொளிசேர் காட்சியான்காண்" எனவும்,
"காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே"

எனவும் வரும் திருநாவுக்கரசு தேவாரத்தாலும் நன்கறியலாம்.

இதுபற்றியே 'காணுங் கண்ணிற் கலந்த கண்ணே' என்றார். 'சேணும் பாருந்திரிபவர்' என்றது விண்ணிற் சஞ்சரிக்கும் தேவர் முதலியவர்களையும் புவியிற் சஞ்சரிக்கும் மக்கள் முதலியவர்களையுங் குறித்தது. இனி இதற்கு, அன்னவடிவமாக விண்ணிற் பறந்து தேடிய பிரமனையும், ஏனவடிவமாக மண்ணிடந்து தேடிய மாலும் எனினுமாம். இதனை,

"மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரும் மாதவனும்
அணிகொண்ட புண்டரிக மகவாத சதுமுகனும்



ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே
ஏனத்தின் வடிவாகி யெகினத்தின் வடிவாகி
அடிதேடி யறிவலென வவனியெலா முழுதிடந்தும்
முடிதேடி வருவலென மூதண்ட மிசைப் பறந்தும்
காணரிய வொரு பொருளாய்க் களங்கமற விளங்குபெரும்
சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்"

என்ற சைவ எல்லப்ப நாவலர் வாக்காலும் அறியலாம்.

இறைவன் ஆண், பெண், அது எனக் கூறப்பெறும் உயர்திணைப் பொருள்களும் அஃறிணைப் பொருள்களுமாய் நிற்பவன் ஆதலின் 'ஆணும் பெண்ணும் அதுவெனும் பான்மையும்' என்றார். ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னும் உத்தியால் உயர்திணைப் பலர்பாலையும், அஃறிணைப் பலவின்பாலையும் அடக்கிற்று. இறைவன் உயர்திணைப் பொருளாயும் அஃறிணைப்பொருளாயும் இருக்கின்றான் என்பதனை,

"அவனவ ளதுவென வறைதரு வகைமையு
ளிவனிவ ளிதுவென வியைதரா வருமையை"

என்ற வாட்போக்கிக் கலம்பகத்தாலும் அறியலாம்.

இறைவன் எங்குமாய் எல்லாமாய் நிற்பினும் அவனருளின்றி அவனைக் காண முடியாதாம். இதனை,

"எங் கிறைவ னுளனென்பாய் மனனேயா
னெங் கெனத் திரிவாரின்"

என்றதாலும் அறியலாம். இதுபற்றியே 'ஆணும்......பொருந்தியுணிற்கவே' என்றார். ஏ-ஈற்றசை. 5

நிற்கவேண்டிய நிலையில் நிற்பவர் அருள்வர்க்கம் ஆவர்; மற்றையர் மனிதர் எனற்கும் உரியர் அன்று என்பதாம்

நிற்கு நன்னிலை நிற்கப்பெற் றார்அருள்
வர்க்க மன்றி மனிதரன் றேஐயா
துர்க்கு ணக்கடற் சோங்கன்ன பாவியேற்
கெற்கு ணங்கண் டென்பெயர் சொல்வதே.

(பரை) நிற்கும் - நிற்பதற்கு உரியதாகிய, நல் - நல்ல, நிலை-நிலையினில், நிற்க-நிற்கும்படி, பெற்றார் - பெற்றவர்களே, அருள்வர்க்கம் - அருள்வர்க்கம் என்று சொல்லப்படுவோர்கள், அன்றி-அவ்வாறல்லாது, மனிதர்-சாமானிய மனிதர், அன்றே-அல்ல, ஐயா - ஐயனே!, துர் குணம் - கெட்ட குணமாகிய, கடலில்-கடலின்கண், (அகப்பட்ட) சோங்கு - மரக்கலத்தை, அன்ன-ஒத்த, பாவியேற்கு-பாவியாகிய அடியேனுக்கு, என்-என்ன, குணம்-நற்குணங்களை, கண்டு-பார்த்து, என்-என்ன, பெயர்-பெயரை, சொல்வது - இட்டழைப்பது எ-று.

(வி-ரை) நிற்கும் நல்கிலை என்றது சைவநெறியை. இனி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நிலைகளைப்பற்றி நிற்றலை எனினுமாம். இனி வேதங்கூறும் நன்னிலை என்பாரும் உண்டு. 'அருள்வர்க்கம்' இறைவன் திருவருளைப் பரிபூரணமாக ஏற்றுகிற்கும் கூட்டம் என்பதாம். இத்தகையார் நாயனர், தொண்டர், அடியார், பெரியார், சுவாமி, அறவோர் என்னும் பெயருக்குரியராவர்.

"நண்ணருங் கதிபெறு நமது தொண்டரை
மண்ணுல கத்தவர் மனித ரேயென
வெண்ணலை யவர்தமை யாமென் றெண்ணுதி
கண்ணுறி னன்னவர் கழலின் வீழ்தியால்."

என்ற **கந்தபுராணச் செய்யுள்** ஈண்டு கருதற்பாலதொன்றும்.

'துர்க்குணம்' என்றது காமமாதி தீக்குணம் ஆறனையும். என்னிடம் யாதும் நற்குணம் இல்லை என்பார் 'எற்குணங்கண்டு' என்றார். துர்க்குணம் படைத்தார் மக்களாய்ப் பிறந்தும் தமக்கும் உலகுக்கும் யாதொருபயனுமின்றி நரகுக்கே ஆளாகி வாளாபோவர் ஆதலின் 'என்பெயர் சொல்வதே' என்றார். பெறற்கரிய மனிததேகம் பெற்றவர் ஞானமுங் கல்வியும் நயந்து தானமுந் தவமுஞ்செய்து சிவானந்தப்பேறு பெற்று உய்யவேண்டும் அதனைப்பெறார் பிறந்தும் பிறவாதாரே என்பது இதனாலறியக் கிடக்கின்றது.

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு."

என்ற **திருக்குறளும்**,

"ஒழுக்க நெறியில்லார் ஓங்கறமுஞ் செய்யார்
இழுக்க ணகல இயம்பும்—விழுப்பொருளுங்
கேளா ரிவர்மாக்கள் கேட்டிற்கன் றேபிறந்தார்
வாளா கழிவர் மதி."

என்ற **பெரியார்** வாக்கும் ஈண்டு நோக்கத்தக்கதாகும். எ-ஈற்றசை. 6

என்னை அழைத்து அருள் செய்யாவிடின் என் ஒழுக்கம்
பொய்யாம் என்கின்றார்

சொல்லை யுன்னித் துடித்தத லால்அருள்
எல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன்
வல்லை நீயென்னை வாவென் றிடாவிடின்
கல்லை யாமிக் கருமி நடக்கையே.

(ப-ரை) சொல்லை-(தேவரீர் அடியேற்கு உபதேசித்த) சொல்லை, உன்னி-நினைத்து, துடித்தது-உடல் பதைபதைத்தது, அலால்-அல்லாமல், அருள்-திருவருளின், எல்லை-எல்லையை, உன்னி - எண்ணி, எனை - என்னை, அங்கு-அவ்வருளின் இடத்து, வைத்திலேன்-இருத்தினேன் இல்லை, வல்லை-விரைவில், நீ-தேவரீராகியநீர், என்னை - அடியேனாகியஎன்னை, வாஎன்று - வாவென்று, இடாவிடின்-அருள்செய்து அழைத்துக்கொள்ளாவிட்டால், இ-இந்த, கருமி-



தீவினையேனாகிய என்னுடைய, நடக்கை-ஒழுக்கமானது, கல்லையாம் - பொய்யாகும் எ-று.

(வி-ரை) 'சொல்லை யுன்னி' என்றது குருவின் உபதேசமந்திரத்தை. 'துடித்தது' என்றது உள்ளப்பாவசத்தாலுண்டாய மெய்ப்பாடு. குருவின் உபதேசம்பெறினும் குருவருள் கைவரப்பெற்றுச் சுவானுபவம் பெற வேண்டும். குருவருள் மென்மேலும் இன்றேற் சுவானுபவமின்றாகும்; சுவானுபவமில்லாதகாலத்துச் சிவானந்தப்பேறு எய்தாது. இதுகொண்டே, 'அருள் எல்லை யுன்னி யெனையங்கு வைத்திலேன்' என்றார். 'வல்லை' என்றது விரைவுக்குறிப்புணர்த்துஞ்சொல். 'கல்லை' இது 'கல்ல' என்னும் ஆந்திரமொழித்திரிபென்பர். 'பொய்' என்னும் பொருளது. 'கருமி' கருமத்தைச்செய்வோனென்றபொருளது. கருமம் ஈண்டு தீவினையைக் குறித்து நின்றது. 'நடக்கை' 'நட' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. ஈண்டு ஒழுக்கத்தைக் குறித்தது. குரு உபதேசம்பெறினும், அவ்வுபதேசவழிநின்று சுயானுபவம் பெறல்வேண்டும் சுயானுபவம்பெறற்கு குருஅருள்வேண்டுமாதலினால் 'வல்லை நீயென்னைவாவென் றிடாவிடிற் கல்லையாமிக்கருமி நடக்கையே' என்றார். இதனை,

"குருமொழியைப் பெற்றாலுங் கூடுகிட்டை வேண்டும்
தருமனுப வத்தால் தானே—வரும்பேறு
இச்சிவப் பேறும் இனியகுரு நல்லருளே
வச்சிட்டக் காலே வரும்"

என்ற **பெரியார்** மொழியும் வலியுறுத்தும். 7

கைமெய் கருத்துகளால் உன்னை வணங்கியும் அடியேனுக்குப்
பூரண இன்பம் உண்டாகவில்லை

கையு மெய்யுங் கருத்துக் கிசையவே
ஐய தந்ததற் கைய மினியுண்டோ
பொய்ய னேன்சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்ய தாமின்ப மென்று விளைவதே.

(ப-ரை) ஐய - ஐயனே!, கையும் - கரங்களையும், மெய்யும்-இந்த தேகத்தையும், கருத்துக்கு - அடியனேனின் எண்ணத்திற்கு, இசையவே-பொருந்தவே, தந்ததற்கு-அடியேன்தேவரீருக்குத்தந்ததற்கு, இனி-இனிமேல், ஐயம்-சந்தேகம், உண்டோ - இருக்கின்றதோ?, பொய்யனேன் -பொய்யையுடைய அடியேனது, சிந்தை-மனத்தின்கண்ணுள்ள, பொய் - பொய்யானது, கெட-நீங்க, பூரணம் - நிறைவாகிய, மெய்யதாம் - உண்மையாகிய, இன்பம் - சுகம், என்று-எக்காலத்து, விளைவது-உண்டாவது? எ-று.

(வி-ரை) கை, மெய், கருத்து என்னும் மூன்றையும் முறையே உன்னைத் தொழுதலுக்கே ஆக்கினன் என்பார் 'கையு மெய்யுங் கருத்துக் கிசையவே ஐய தந்ததற் கையமினி யுண்டோ' என்றார். இதுபற்றியன்றே,

"கண்ணுதலா வயனோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடு நன்னாவே நன்னா
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிக
ளண்ணல்பொலங் கழலிணைக்கு நெஞ்சமே நெஞ்ச
மவனடிக்கீ ழடிமைபுகு மடிமையே யடிமை"

என்று **பிரமோத்தரகாண்ட நூலுடையாரும்,**

"துதிப்பதற்கு வாயமைத்தாய்ச் சூழ்வதற்குத் தாளமைத்தாய்
மதிப்பதற்கு மனமமைத்தாய் வணங்குதற்குத் தலையமைத்தாய்
கதிப்பதற்கு நூலமைத்தாய்க் கடிக்குளத்து ளமர்ந்தறிவி
னுதித்தவனக் கடியேங்க ளுதவுவதென் கைம்மாறே"

என்று **துளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி நூலாசிரியரும்.**

"கைகாள் கூப்பித் தொழீர், கடி-மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பரம்பரை யார்த்த பரமனைக், கைகாள்... எனவும்,

"ஆக்கையாற் பயனென், அரன்-கோயில் வலம்வந்து
பூக்கையா லாட்டிப் போற்றியென் னாதவிவ், வாக்கையாற்... எனவும்,

"நெஞ்சே நீநினையாய், நிமிர்-புன்சடை நின்மலனை
மஞ்சாடு மலைமங்கை மணாளனை, நெஞ்சே...

என்று **திருநாவுக்கரசு சுவாமிகளுங்** கூறியருளினர்.

'கையு மெய்யுங் கருத்துக் கிசைய' என்றது கையையும் மெய்யையும், வாய், கண், மூக்கு, செவி முதலிய பொறிகளையும் கூட்டியேயாமென்க. சிறப்புப்பற்றிக் கையை மெய்யினின்றும் பிரித்து முற்பட வைத்தார் அஞ்சலிக்கவும், புட்பஞ்சாத்தவும், இன்றியமையாது வேண்டப்பெறுதலின் என்க. 'மெய்' என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும், ஐம்பொறிகளையுங் கொள்ளல்வேண்டும் என்றது எற்றால் எனின்,

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே"

என்ற **இலக்கணத்தால்** என்க. ஏ-ஈற்றசை. 8

இறைவனை அகத்திற்காணுங்கால் உண்டாம் இன்பம்
இயம்ப ஒண்ணாதது என்கின்றார்

என்று முன்னை யிதய வெளிக்குளே
துன்ற வைத்தன னேஅருட் சோதிநீ
நின்ற தன்மை நிலைக்கென்னை நேர்மையாம்
நன்று தீதற வைத்த நடுவதே.



(ப-ரை) நன்று - நன்மையும், தீது - தீமையும், அற - இல்லாதுநீங்க, வைத்த - (அடியேனைத் தேவரீரது திருவருள் நிலையில் பொருத்தி) வைத்த, நடுவதே-ஐந்தொழிற்கும் பொதுவாய்நிற்கும் இறைவனே!, என்றும் - எந்தக் காலத்திலும், உன்னை-தேவரீராகியஉம்மை, இதயம்-மனமாகிய, வெளிக்கு-ஆகாயத்தினுக்கு, உளே - உள்ளே, துன்ற - பொருந்தியிருக்கும்படி, வைத்தனனே-வைத்தேனை (அதற்குப்பொருந்தி), அருள் - அருளாகிய, சோதி-சோதியே, நீ - தேவரீர், நின்ற - (அடியேனுடைய மனத்தில்) நின்றருளிய, தன்மை-தன்மையாகிய, நிலைக்கு-நிலைமைக்கு, என்னை-என்ன, நேர்மைஆம் ஒப்பாகும் எ-று.

(வி-ரை) இறைவன் அடியார் உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டுறைபவன். இதுபற்றியன்றோ அடியார் திருமேனியை 'நடமாடுங்' கோயில் என்றனர் **பெரியார்.** இதுகொண்டே தாயுமானவரும் 'என்று முன்னை யிதய வெளிக்குளே துன்ற வைத்தன னேயருட் சோதி' என்றார். இதனை,

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சது
ரந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே
னியாதுநீ பெற்றதொன் றென்பாற்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனோர்கை மாறே"

என்ற **மணிவாசகர்** திருவாக்கு விளக்கமுறுத்தும். இறைவன் சிந்தையே கோயிலாக்கொள்வோன் என்பதனை,

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம்ப லத்துமென் சிந்தை யுள்ளும்
உறைவான உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந் தமிழின்
றுறைவாய் நுழைந்தனையோ வன்றி ஏழிசைச் சூழல் புக்கோ
இறைவா தடந்தோட் கென் கொலாம் புகுந் தெய்தியதே"

என்ற **திருக்கோவையார் செய்யுளாலும்** அறியலாம்.

"உள்ளமே கோயிலா உவந்த பெருமான்"

எனப் பிற **பெரியாருங்** கூறியது கொண்டுதெளிக. 9

இறைவனே! அடியேன் உன் அருள் அடைந்தும் மனச்சலன மில்லாத் திடம் பெறாதவனாக இருக்கின்றேன் அருள்செய்வாயாக என்கின்றார்.

வைத்த தேகம் வருந்த வருந்திடும்
பித்த னானருள் பெற்றுந் திடமிலேன்
சித்த மோன சிவ சின்ம யானந்தம்
வைத்த வைய அருட்செம்பொற் சோதியே.

(ப-ரை) சித்த-சித்தாக உள்ளவனே!, மோன - மோனகுருவாக (கல்லாலின்கீழ் தக்ஷிணாமூர்த்தமாக) இருந்தவனே!, சிவ-மங்களகரம் ஆனவனே!, சித்-ஞான, மயம்-வடிவான, ஆனந்தம்-இன்பத்தை, வைத்த - அடியேனுக்கு இதயத்து உண்டாக்கிவைத்து அருள்செய்த, ஐய-ஐயனே!, அருள் - கிருபை பொருந்திய, செம் - செவந்த, பொன் - பொன்னின், சோதியே-பிரகாசமே! வைத்த-உண்டாக்கப்பெற்ற, தேகம்-இந்த உடல், வருந்த - வருந்துதலினாலே, வருந்திடும் - துன்பத்தை எய்தும், பித்தன் - பித்துப் பிடித்தவனாகிய, நான்-அடியேன், அருள் - தேவரீரது அருளை, பெற்றும்-அடைந்தும், திடம்-மனச்சலனமில்லாதிருக்கும் திடம், இலேன் - இல்லாதவனாக இருக்கின்றேன் (அருள்செய்வாயாக) எ-று.

(வி-ரை) தேகம் ஆன்மாக்களுக்கு இறைவனாற் கொடுக்கப்பட்டதாதலின் 'வைத்ததேகம்' என்றார். தேகம் நான் என்னும் மந்தமதியால் தேகத்திற்கு வரும் இன்ப துன்பங்களைத் தனதாகக்கொண்டு ஆன்மா வருந்துகின்றதாதலின் 'வைத்த தேகம் வருந்த வருந்திடும் பித்தன்' என்றார். அறிவுத்திடமில்லார் வீணே வருந்துவாராதலினாலும், அறிவின்மையால் தேகத்தைத் தானாகக்கொண்டு அதன் துன்பத்தைத் தன்னதாகப் பாவித்து வருந்துவதாலும் 'பித்தன் நான்' என்றார். இன்னும் அறியாமை நீங்காமையின் 'அருள்பெற்றுந் திடமிலேன்' என்றார். 'சித்தமோன' என்பதற்கு 'உண்மையான மௌனநிலையை அறிவிப்பவனே' எனப் பொருள் கூறினாரும் உண்டு. இனி, 'சித்தமான மௌனநிலையை யுணர்த்துவோனே' எனப் பொருள் கண்டாரும் உண்டு. இனி 'சித்த மோன சிவசின்ம யானந்தம் வைத்த வைய' என்பதற்கு, 'அடியேனுடைய மனத்தினிடத்தே மௌனநிலையையும் சிவசின்மயானந்தத்தையும் வைத்தருளிய அப்பனே எனப் பொருள்கொள்ளினும் இழுக்காது.

"பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணமேனி பொலிந் திலங்கும்"

எனச் **சேரமான்பெருமாணாயனார்** அருளியதால் இறைவனை நம் தாயுமானவர் 'செம்பொற்சோதியே' என்றார். 10

உலக இச்சையில் மனம்வைத்த அடியேனைத் தடுத்தாட்கொண்டால் உன்னைத்தடுப்பவர் இல்லை என்பதாம்

செம்பொன் மேனிச் செழுஞ்சுட ரேமுழு
வம்ப னேனுனை வாழ்த்து மதியின்றி
இம்பர் வாழ்வினுக் கிச்சைவைத் தேன்மனம்
நம்பி வாவெனி லென்கொல் செய்வதே.

(ப-ரை) செம்பொன் - செவந்த பொன்னையொத்த, மேனி - நிறத்தையுடைய, செழும்சுடரே-செழுமையாகியஒளியே!, முழு - முழு, வம்பனேன்-துஷ்டனாகியஅடியேன், உனை-தேவரீராகியஉம்மை, வாழ்த்தும் - துதித்தற்



குரிய, மதிஇன்றி-அறிவில்லாது, இம்பர் - இவ்வுலகத்தின், வாழ்வினுக்கு - வாழ்க்கையின்பொருட்டு, மனம்-மனத்தினிடத்து, இச்சை - விருப்பத்தை, வைத்தேன்-வைத்துவிட்டேன், நம்பி-பூரணனே, வாஎனின் - அடியேனாகிய என்னை வாவென்றழைத்திட்டால், நான் - அடியேன், என்கொல் - என்ன, செய்வது-செய்திடுவேன்? (செய்யக்கிடந்ததொன்றுமில்லை), எ-று.

(வி-ரை) 'செழுஞ்சுடரே' என்றதற்குச் செழுமையாகிய ஒளியே எனலும் ஒன்று. 'வம்பனேன்' வம்புசெய்வோன் என்பதுபொருள். வம்பு = துஷ்டத்தனம். 'வம்பு' நீங்கும்ஆம். 'இம்பர்' இகரச்சுட்டடியாகப் பிறந்த பெயர். பூரணனாகிய நீ என்னை வலிந்தாட்கொண்டால் சுதந்தரஹீனனாகிய அடியேன் என்செய்யக்கடவேன் என்பார் 'நம்பி வாவெனி லென்கொல் செய்வதே' என்றார். 'கொல்' அசைநிலை. இதனை,

"கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே"

என்ற **சூத்திரத்தால்** அறியலாம்.

இறைவன் அறைகூவி வீடருளுவோனாதலின் 'வாவெனி லென்கொல் செய்வதே' என்றார். நன்மைசெய்தாரை மறவாது துதித்தல் அறிவுடைமையாகும். இதுபற்றியே,

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று" என்றார் **திருவள்ளுவரும்**.

அடியேனை உய்விக்க நீயருளியவற்றை மறந்து உன்னைத் துதியாதிருக்கும் அடியேன் மதிகேடனென்பார் 'வாழ்த்தும் மதியின்றி' என்றார். 'இச்சைவைத்தேன் மனம்' ஈண்டு மொழிமாறி நின்றது. இதை 'மனம் இச்சைவைத்தேன்' எனக் கொண்டுகூட்டிப் பொருள்கொளல் வேண்டும். ஏ-ஈற்றசை. 11

இறைவனே! சிந்தையும் செயலும் நின்னதென் றறியாது என்னதென்று மூக்குற்றங்களுக்காளானேன்

செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணு மறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யி லேசுழன் றேன்என்ன புன்மையே.

(ப-ரை) ஐய-ஐயனே!, செய்யும்-செய்கின்ற, செய்கையும் - தொழிலும், சிந்திக்கும்-நினைக்கும், சிந்தையும்-நினைப்பும், நின்னது - தேவரீரது, என்று-என்று, எண்ணும் - நினைக்கின்ற, அறிவு - ஞானம், இன்றி - இல்லாதபடி, வெய்ய-கொடிய, காமம் - காமமும் (ஆசையும்), வெகுளி-கோபமும், மயக்கம்-மயக்கமும், ஆம்-ஆகிய, பொய்யிலே-பொய் நடையிலே, உழன்றேன் - சுற்றித்திரிந்தேன், என்ன-இது என்ன, புன்மை-இழிவான காரியம்? எ-று.

(வி-ரை) வினைவழி மதி. மதிவழி செயல் அவரவர் செய்த வினைக்குத் தக்கபடி இச்சை யுதிக்கின்றது. இச்சைக் கேற்ப தொழில் எழுகின்றது இது இறைவன் ஆணை. இதனை,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" என்ற **திருக்குற**ளால் அறியலாம்.

இச்சையும்தொழிலும் இறைவன் ஆணையால் நிகழ்கின்றதென்றறியாமல் என்னதாக்கொண்டேன் இது 'நான்' என்னும் அகங்காரதத்துவத்தின் செயல். அகங்காரந் தடிக்கவே முக்குற்ற வயப்பட்டே னென்பார் 'செய்யுஞ் செய்கையும்.........பொய்யிலே சுழன்றேன்' என்றார். இவ்வாறு இருத்தல் இழிவான காரியம் என்பார் 'என்ன புன்மையே' என்றார். காமம், வெகுளி, மயக்கம் என்னும் இம்மூன்றுமே பிறவிநோய்க்குக் காரணம். இதிற் புகுந் தேன் செத்துப் பிறக்கு நெறிக்கே நின்றேன் என்பார் 'வெய்ய காம வெகுளி மயக்கமாம் பொய்யிலே சுழன்றேன்' என்றார். காமம், வெகுளி, மயக்கம் செய்யுங் கேட்டைச் சொல்லொணாது. அவை மூன்றும் நீங்கினால்தான் உய்ய வகையுண்டு என்பதனை,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக் கெடு நோய்"

என்ற **திருக்குற**ளால் நன்கறியலாம். எ-சற்றசை. 12

இறைவனே! நிலையில்லாத இந்தத் தேகம் அன்பர்கள் அருவருக்கத்தக்கது இதனால் துன்பமேயன்றி இன்பம் இல்லை என்கின்றார்

புன்பு லானரம் பென்புடைப் பொய்யுடல்
அன்பர் யார்க்கு மருவருப் பல்லவோ
என்பொ லாமணி யேஇறை யேஇத்தால்
துன்ப மன்றிச் சுகமொன்று மில்லையே.

(ப-ரை) என்-அடியேனுடைய, பொல்லா-துவாரம் இடப்படாத (துளையிலா), மணியே-மணியே! இறையே-ஆண்டவனே!, புல்-அற்பமான, புலால்-மாமிசத்தையும், நரம்பு-நரம்பையும், என்பு-எலும்பையும், உடை - உடையதாகிய, பொய் - நிலையில்லாத, உடல் - (இந்த) தேகமானது, அன்பர் - அன்பர்கள், யார்க்கும் - எத்தகையோர்க்கும், அருவருப்பு - அருவருக்கத்தக்க பொருள், அல்லவோ - அல்லவோ?, இத்தால் - இந்தச்சரீரத்தால், துன்பம்-துயரம், அன்றி-அல்லாமல், சுகம் - இன்பம், ஒன்றும் - ஒருசிறிதும், இல்லை இல்லை எ-று.

(வி-ரை) தேகம், எலும்பு, நரம்பு, மாமிசம் முதலிய சப்ததாதுக்களால் ஆக்கப்பட்டது, யாக்கப்பட்டதாதலினாலும், நிலையில்லாததுமாதலினால், 'புன்புலா னரம் பென்புடைப் பொய்யுடல்" என்றார். இதனை,



"என்பினை நரம்பிற் பின்னிக் குடர்வழும் பிறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும் பொழுகி நாறித்
துன்பமோ டெவற்றி னுக்கு முறையுளாய்ப் புறந்தோன் மூடும்
வன்புலை யுடம்பே யாவி வருத்திடும் பிணிவே றில்லை"

என்ற **காஞ்சிப்புராணச்செய்யுளா**லும்,

"குடரு மெலும்புங் கொழுவுங் குருதியுமீருளுந் தசையுந்
தொடரு நரம்பும் போர்த்ததோலு மூளையும் வழும்பு
மடரு மூவர் நீருகனி யருவருக்கும் பல்வீயும்
படரு முடலை யும்பொருளா நினைப்பரோ பண்புடையோர்"

என்ற **திருப்பெருந்துறைப்புராணச் செய்யுளா**லும்,

"பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிலிதன் றிருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருளெனவே யொருகணமு நாடாரே"

என்ற **சிவதருமோத்தரச் செய்யுளா**லும்,

"ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந்தோற் பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
யேற்றுத் திரிந்துவிட் டேனிறைவா கச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தடிகள் பாடலா**லும் அறியலாம்.

'பொலா' இது 'பொல்லா' என்பதன் தொகுத்தல் விகாரம். 'இறை' இது கடவுளுக்குத் தலைமைபற்றிவந்தபெயர். 'இத்தால்' இது 'இதனால்' என்பதன் மரூஉ. 13

எல்லாம்வல்ல இறைவனே அடியேனுக்கு நீயேகதி என்னைக் காத்தருளவேண்டும் என்கின்றார்

இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினும்
சொல்ல வோவறி யாத தொழும்பன்யான்
செல்ல வேறொரு திக்கறி யேன்எலாம்
வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே.

(ப-ரை) இல்லை-இல்லை (என்றும்), உண்டுஎன்று-உண்டென்றும், எவர்-எவர்களுடைய, பக்கம்-பக்கத்தும், ஆயினும் - ஆயினும், (போய்) சொல்ல - சொல்லுதற்கு, அறியாத-தெரியாத, தொழும்பன்-தொண்டனாகிய, யான்-அடியேன், செல்ல-போதற்கு, வேறு - உன்னைத்தவிர்த்துவேறு, ஒரு - ஒரு, திக்கு - கதி, அறியேன் - அறியாதிருக்கின்றேன், எலாம் - எல்லாக்காரியங்களையும், வல்ல-செய்யவல்ல, நீ - தேவரீராகியநீர், எனை - அடியேனை, வாழ்விக்க-வாழுமாறு அருள்செய்ய, வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) அடியேன் அறிவிற்கடைப்பட்டவனாதலின் இன்னவைகள் என்னிடத்தில்லையென அறியவும் சொல்லவும் தெரியாதிருக்கிறேன். இன்னவைகள் என்னிடம் இருக்கின்றனவென அறியவுஞ் சொல்லவுந் தெரியாதிருக்கின்றேன். அவைகளை ஒருவாறு அறிந்தேனாயினும் யாரிடஞ் செல்வது? எப்படிச் சொல்வது என்பதுந் தெரியாதிருக்கின்றேன் என்பார், 'இல்லை யுண்டென் றெவர்பக்க மாயினும் சொல்லவோ வறியாத தொழும்பன்யான்' என்றார். என் குறைபாட்டை நின் திருவருளால் அறிந்து அக்குறைகளைத் தீர்க்கும்படி யாரைச் சரண்புகலாமென்று ஆராய்ந்தபொழுது நின்னையன்றி வேறு யாரையுங் கண்டிலனாதலின் அடியேனை வாழ வாழ்விக்கவேண்டுமென்பார், 'செல்ல வேறொரு திக்கறியேனெலாம் வல்ல நீயெனை வாழ்விக்க வேண்டுமே' என்கின்றார். இதனை,

"தன்சிறுமை தேறாத் தனியிளஞ் சேய்போல
என்சிறுமை காணா திறுமாந்தேன்—நின்னருளால்
என்புன்மை கண்டேன் இறைவா சரண்புக்கேன்
அன்புகொடு காக்க வனை"

என்ற **பேரியார் தனிச்செய்யுளா**லும் உணரலாம். ஏ-ஈற்றசை. 14

இறைவ! அடியேன் நின் அடியாரிடம் அன்பு பூண்டவன் தேவரீர்
அடியேன் என்னையறியாது புகுந்துகின்றாய் உன்
அருளை வேண்டுவன் என்பதாம்

வேண்டுஞ் சீருண் மெய்யன்பர்க் கேயன்பு
பூண்ட நானென் புலமறி யாததோ
ஆண்ட நீயுன் னடியவ னென்று
தூண்டு வேனன் றித் தொண்டனென் சொல்வதே.

(ப-ரை) சீர்-சிறந்த, அருள்-தேவரீரது அருளானது, வேண்டும் - அடியேனால் வேண்டப்படும், மெய் - (தேவரீருடைய) உண்மை, அன்பர்க்கே-அடியார்களுக்கே, அன்பு-அன்பைப், பூண்ட-கொண்ட, நான் - அடியேன், என்-அடியேனின், புலம்-உளம், அறியாதது-அறியாமல், ஆண்ட-அடியேனை ஆட்கொண்ட, நீ-தேவரீர், உன்-தேவரீரின், அடியவன்-தொண்டன், நான் என்று - அடியேனென்று, தூண்டுவன் - எச்சரிப்பன், அன்றி-அல்லது, தொண்டன்-அடியனேன், என்சொல்வது-என்னசொல்லத் தக்கதாகும் எ-று.

(வி-ரை) இறைவன்மாட்டு அன்பு பூண்டவர். இறைவனின் அன்பரிடத்தும் அன்புபூண்பன் என்பதாதலின், 'சீருண் மெய்யன்பர்க்கேயன்பு பூண்டநான்' என்றார். இறைவன் கருணைசொரூபனாதலின் அவ்வான்மாக்களுள்ளே அவ்வான்மாக்களையறியாதே அவருட்புக்கிருந்து அருள் செய்கின்றானாதலின், 'நானென் புலமறியாததோ ஆண்டநீ' என்றார். அடியேன் நின்னிடத்து அன்பு பூண்டிருப்பதனால் அரூபியாகிய நின்னிடத்து அன்புபூண்டமையை உனக்கு அடியேன் எவ்வாறறிவிக்கக்கூடும். எவ்வெவர்



உள்ளத்தினும் இருந்து எல்லாமறிபவனானாலும் அடியேன் நின்னிடத்து அன்பு பூண்டமையை நின் அடியாரிடத்து அன்புபூண்டு அவர் தொண்டு செய்தலாலறிநீ என்று சொல்லிக்காட்டுவதன்றி வேறு வழியுண்டோ என்பார் 'உன்னடியவ னென்று தூண்டுவே னன்றித் தொண்டனென் சொல்வதே' என்றார். இதனை,

"உடையா னுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன்
னடியார் நடுவு ளிருக்கு மருளைப்புரியாய்ப் பொன்னம் பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே"

எனவும்,

"தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னி னுத்தர கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று நின்னைச் சிரிப்பிப்பனே"

எனவும் கூறியருளிய **மாணிக்கவாசகர் திருவாக்குகளா**னும் அறிக. ஏ-ஈற்றிசை. 15

உயிர்க்குயிராய் என்னுட்கலந்திருக்கும் இறையே! என் மனக்
கிலேசத்தை மாற்று. நின் திருவருட்காட்சியைத்
தந்தருள் என்பதாம்

எனக்கு ளேயுயி ரென்ன விருந்தநீ
மனக்கி லேசத்தை மாற்றல் வழக்கன்றோ
கனத்த சீருட் காட்சிய லாதொன்றை
நினைக்க வோவறி யாதென்ற னெஞ்சமே.

(ப-ரை) எனக்கு-அடியேனுக்கு, உளே-மனத்தினுள்ளே, உயிர் - உயிர், என்ன-என்றுசொல்லும்படி, இருந்த-எழுந்தருளிவீற்றிருந்த, நீ - தேவரீர், மனம் - மனத்தின்கண்ணுள்ள, கிலேசத்தை - (விளைந்த) துன்பத்தினை, மாற்றல்-அகற்றிவிடுதல், வழக்கு - தேவரீரின்கடமை, அன்றோ - அல்லவா?, கனத்த-மேலான, சீர் - சிறப்பினையுடைய, அருள் - தேவரீரின் திருவருள், காட்சி - தரிசனத்தினை, அல்லாது - அல்லாமல், ஒன்றை - வேறொன்றினை, நினைக்கவோ-எண்ணவென்றாலோ, என்றன் - அடியேனது, நெஞ்சம்-மனம், அறியாது-அறியாதிருக்கின்றது எ-று.

(வி-ரை) "ஒப்புனக் கில்லா வொருவ னேயடியே னுள்ளத்துளொளிர்
கின்ற வொளியே" எனவும்,

"தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த செல்வமேசிவ
பெரு மானே" எனவும்,

"நானு ரடியணை வாவென்று நாய்க்கொரு தவசிட்டிங்
கூனு ருடல் புகுந்தானுயிர் கலந்தானுளம் பிரியான் எனவும்,

"எங்கணு யகனே என்னுயிர்த் தலைவா வேலவார் குழலிமா
ரிருவர் தங்கணு யகனே" எனவும்,

"ஊனு யுயிரா யுணர்வா யென்னுட் கலந்து"

எனவும், **மணிவாசகர்** கூறியருளியபடி இறைவன் அடியார் உள்ளுக் குள்ளே உணர்வாகவும், உயிராகவும் இருப்பவன் இன்னும் ஊனுக இருப்ப வனும் அவனேயாதலின் 'எனக்குளே யுயிரொன்ன விருந்தநீ' என்ருர்.

ஒருவீட்டிற் குடியிருப்பார் வீட்டைப் பழுதுபார்த்துப் பத்திரப்படுத்த வேண்டுவது எப்படிக் கடன்மையோ அதுபோல அடியேனுக்குளே இருந் தருளும் ஈசா, என் மனக்கிலேசத்தைத் தீர்க்கவேண்டுவதுன் கடன்மை யன்ருே என்பார் 'மனக்கிலேசத்தை மாற்றல் வழக்கன்ருே' என்கின்ருர். நின் மேலான சிறந்த திருவருட்காட்சியைக் கண்டவடியேன் அவ்வானந் தத்திலேயே ஈடுபட்டுக் கிடந்தமையால் என் நெஞ்சம் வேறு அறிதற் கில்லாது போயிற்று என்பார் 'கனத்த சீரருட் காட்சியலாதொன்றை நினைக்க வோவறி யாதென்ற னெஞ்சமே' என்கின்ருர். 'எனக்குளே' இது 'எனக்குள்ளே' என்பதன் தொகுத்தல்விகாரம். 'அலாது' இது அல்லாது என்பதன் தொகுத்தல்விகாரம். 'உள்' இது ஆகுபெயராய் உள்ளிடத்தைக் குறித்தது. 'எனக்குளே யுயி ரென்ன' என்பதற்கு எனக்குள்ளே உயி ரென்று சொல்லும்படி எனப் பொருள் உரைப்பாரும் உளர். 'நெஞ்சமே' என்றதின் ஈற்று ஏகாரம் ஈற்றசை. 16

இறைவனே! நீ மார்க்கண்டேயர்க்கருள்செய்த கருணையை நினைந்து
நின்னைச் சரணடைந்தேன் அருள்செய்

நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க்
கஞ்ச லென்ற வருளறிந் தேயையா
தஞ்ச மென்றுன் சரணடைந் தேன்எங்கும்
செஞ்செ வேநின்ற சிற்சுக வாரியே.

(ப-ரை) எங்கும்-எல்லாவிடங்களிலும், செஞ்செவே-நிறைவாக, நின்ற-நின்ற, சிற்சுகம்-ஞானனந்த, வாரியே-சமுத்திரமே!, நெஞ்சு-மனம், உகந்து-விரும்பி (இச்சித்து), உனை - தேவரீரை, நேசித்த - அன்புசெய்த, மார்க்கண்டர்க்கு - (மிருகண்டமுனிவர் புத்திரராய) மார்க்கண்டேயமுனிவர்க்கு, அஞ்சல்-பயப்படாதே, என்று - என்று அருளிச்செய்த, அருள் - தேவரீரது திருவருளின்செயலை, அறிந்து-அறிந்து, ஐயா - ஐயனே! தஞ்சம் - அடைக்கலம், என்று-என்று, உன்-தேவரீரது, சரண்-திருவடிகளை, அடைந்தேன்-அடியேனடைந்தேன் (அருள்செய்வாயாக), எ-று.

(வி-ரை) 'மார்க்கண்டேயர்' இவர் மிருகண்டுமுனி புத்திரர். இவர் தத்துவஞானமுணர்ந்த முனிவர். இவர் தனக்கு ஆயுள் பதினறு என்பதை அறிந்து சிவபெருமானைப்பூசித்துத் தன்னைக் கொல்லவந்த காலனைச் சிவன் ருனால் உதையுண்டு சாவச்செய்து தான் என்றும் பதினருக இருக்கும் சிரஞ்சீவிப்பட்டம் பெற்றவர். இறைவன் தன்னை அன்புசெய்து தன்பால் வந்து வேண்டும் அடியார்க்கு அவர்கள் வேண்டுவனவெல்லாம் அருள் செய்வோன்.



"வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"

**தேவாரம்** எனவும்,

"வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டு மயன்மாற் கரியாய்நீ"

**திருவாசகம்** எனவும் பெரியார் கூறியுளராதலினலும், மார்க்கண்ட முனி வர்க்கு அவர் வேண்ட அஞ்சலென்று அருள்செய்து காலனைக் காலா லுதைத்து 'காலகாலன்' என்னுந் திருநாமமும் பெற்ருேனதலினலும் அடியேன் தேவரீரைச் சரணடைந்தேன் என்பார் 'நெஞ்சு கந்துனை நேசித்த மார்க்கண்டர்க் கஞ்ச லென்ற வருளறிந் தேயையா தஞ்ச மென் றுன் சரணடைந்தேன்' என்பார்.

"பார்பதம் அண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே" என்றபடிக்கும்,

"ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை" என்றபடிக்கும்,

இறைவன், எல்லாமாய் அல்லவுமாய் எங்குமாய் நிறைந்து நிற்கும் பரிபூரணப்பொருளாதலின், 'எங்குஞ் செஞ்செவே நின்ற' என்ருர். இறைவன் சத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் இருப்பவனுதலின் 'சிற்சுக வாரியே' என்ருர். 'மார்க்கண்டர்' இது தத்திதாந்தநாமம். மிருகண்டு முனிபுத்திரர் என்ற பொருளில் வந்தது. 17

இறைவனே! சப்தசமுத்திரங்களும் அட்டகுல பர்வதங்களும் நின்
சிற்சொருபத்திலே அடங்கினதென்ருல் உயிர்கள்
எவரிடத்திலே இருக்கின்றன

வாரி யேழும் மலையும் பிறவுந்தான்
சீரி தான நின் சின்மயத் தேயென்ருல்
ஆரி லேயுள தாவித் திரள்அதை
ஓரி லேன்எனை யாண்ட வொருவனே.

(ப-ரை) என்னை - அடியேனை, ஆண்ட - ஆண்டுகொண்டருளிய, ஒருவனே-ஒப்பற்ற இறைவனே!, வாரி-சமுத்திரங்கள், ஏழும் - ஏழும், மலையும்-எட்டுமலைகளும், பிறவும்-மற்றுள்ளஎல்லாமும் (இருப்பது), நின் - தேவரீரது, சின்மயத்தே-சிற்சொருபத்தே, என்ருல்-என்றுகூறினல், ஆவி-உயிர்களின், திரள்-கூட்டங்கள், ஆரிலே-எவரிடத்திலே, உள்ளது-இருக்கின்றன?, அதை-அந்த உண்மையை, ஓரிலேன்-ஆராய்ந்தறிந்திலேன் எ-று.

(வி-ரை) இறைவனுடைய சிற்சத்தித்திருமேனிமாயையிற் பிரதிபலித்த போது சர்வாண்ட புவனங்களும் அவற்றுள் பொருள்களுந் தோற்றமுறு

கின்றனவாதலினாலும் அச்சத்தி பராமுகையாகின்றகாலத்து எல்லாம் அவன்பாலொடுங்குகையாலும் 'வாரி யேழுமலையும் பிறவுந்தான் சிரி தான கின் சின்மயத் தேயென்றால்' என்றார். இதனை,

"விச்ச தன்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய்" எனவும் **திருவாசகம்.**

உலகம் முதலிய சர்வாண்டபிண்ட சராசரங்களெல்லாம் இறைவன் திருவருட்சித்தியினின்றும் தோன்றி ஈற்றில் அவன்பாலே யொடுங்குகின்றன என்பதை,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்"

என்ற **சிவஞானபோதச் சூத்திரத்தா**னும் அதன் உரையாலும் அறிக.

இன்னும் உலகம்முதல் யாவும் இறைவன் திருமேனியை என்பதனை,

"ஈசனு புலகேழு மலையுமாகி யிராவணனை
யிராவணனை யீடழித்திட் டிருந்தகாளோ" எனவும்,

"எற்றானை யேழுலகு மானான்றன்னை யேழ்கடலு
மேழ்மலையு மானான் றன்னை"

எனவும் **அப்பர்தேவாரம்.**

"கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினி லடங்கித் தோன்றும்
பெற்றியுஞ் சாக்கி ராதி யுயிரினிற் பிறக்தொ டுங்க
முற்றதும் போல வெல்லா வுலகமு முதிக்தொ டுங்கப்
பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பானு மன்றே"

(**சிவஞானசித்தியார்**) என்ற பிரபல பிரமாணங்களானும் அறியலாம்.

ஆவியும் இறைவன்பால் அந்தத்திலொடுங்கவேண்டுவதே, ஒடுங்குவதே, என்பது தோன்ற 'ஆரிலே யுளதாவித் திரள்' என்றார். 'வாரி' இது கடலுக்குப்பெயர். இது காரணப்பெயர். நீண்டிருக்குங் காரணம்பற்றி வந்த பெயர். (வார் = நீட்சி) 'மலையும்' என்றது அட்டகுலபருவதங்களையும் மற்றுமுள்ள மலைகளையும் என்க. 'பிறவும்' என்றது எனைச் சராசரங்களை. 'ஓரிலேன்' இது ஓர் என்னும் பகுதியடியாகப்பிறந்தது. (ஓர் = தெளி) 18

இறைவனே! உன்னையன்றி மற்றை எவரே என் உள்ளக்குறிப்பறிந்து
அருளவல்லர் இனிச் சொல்ல முறையில்லை

ஒருவ ரென்னுளத் துள்குங் குறிப்பறிந்
தருள்வ ரோஎனை யாளுடை யண்ணலே



மருள னேன்பட்ட வாதை விரிக்கினோ
பெருகு நாள்இனிப் பேச விதியின்றே.

(ப-ரை) எனை - அடியேனை, ஆள் - தொண்டனாக, உடைய - உடைய, அண்ணலே-பெரியோனே! (இறைவனே), ஒருவர்-(தேவரீரையன்றி வேறு), ஒருவர், என்-அடியேனின், உளத்து-மனத்தினிடத்து, உள்கும்-நினைக்கின்ற, குறிப்பு-கருத்தை, அறிந்து - அறிந்து, அருள்வரோ - அருள்செய்வாரோ?, மருளனேன்-மயக்கத்தையுடைய அடியேன், பட்ட-பட்ட, வாதை - துன்பங்களை, விரிக்கினோ-விவரமாக எடுத்துச்சொன்னாலோ, நாள்பெருகும்-நாட்கள் அதிகமாகும் (ஆதலால்), இனி - இனிமேல், பேச - எடுத்துச்சொல்ல, விதி - முறைமை, இன்று-இல்லை எ-று.

(வி-ரை) இறைவன் சர்வாந்தரியாமியாய் எல்லாப்பொருளுள்ளுங் கலந்துங் கலவாதிருப்பவனாதலினாலும், உணர்வுக்குணர்வாயிருப்பனாதலினாலும், அவன் உள்குவார் உள்குவதறிபவனாதலினாலும் 'ஒருவரென்னுளத்துள்ளுங் குறிப்பறிந் தருள்வரோ வெனையாளுடை யண்ணலே' என்றார். இன்னும்,

"உள்குவா ருள்ளத் துள்ளுறை சோதியை"

என்பதனாலும் அறிக.

இறைவனைத் தவிர்த்து மற்றையர் பசுக்களாதலினாலும், அவர் கிஞ்சிக்ஞராதலினாலும் பசுக்கள் அறியமுடியாது என்பார் 'ஒருவ ரென்னுளத் துள்ளுங்குறிப்பறிந் தருள்வரோ' என்றார். அடியேன் மாயைவயப்பட்டு அஞ்ஞானத்து அழுந்திக்கிடப்பவனாதலின் 'மருளனேன்' என்றார். "நான் படும்பாடு சிவனே உலகர் நவிலும் பஞ்சுதான் படுமோ" என்றதனால் 'மருளனேன் பட்டவாதை விரிக்கினோ பெருகும்' என்றார். 'உளத்து' இது 'உள்ளத்து' என்பதன் தொகுத்தல்விகாரம். 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல். 19

இறைவனே! ஆண்டருள் என்று கதறிய அடியேனை இப்பொழுது
அன்புசெய்யவில்லை முடியாவென்று கைவிட்டால்
உலகம் எப்படித் துதிக்கும்

இன்று னக்கன் பிழைத்தில னென்றே
அன்று தொட்டெனை யாளர சேயென்று
நின்ற ரற்றிய நீலனைக் கைவிட்டால்
மன்ற மெப்படி நின்னருள் வாழ்த்துமே.

(ப-ரை) அரசே-இறைவனே!, இன்று-இப்பொழுது, நான்-அடியேன், உனக்கு-தேவரீருக்கு, அன்பு-அன்பு, இழைத்திலன்-செய்யவில்லை, என்றே-என்று, அன்று-பூர்வம், தொட்டு-தொடங்கி, எனை-அடியேனை, ஆள்என்று-ஆண்டருளென்று, நின்று-நின்று, அரற்றிய-கதறின, நீலனை - வஞ்சனாகிய அடியேனை, கைவிட்டால்-கைநெகிழ விட்டுவிடுவாயானால், மன்றம் - உலகம்,

நின் - தேவரீரது, அருள் - அருளை, எப்படி - எவ்வண்ணம், வாழ்த்தும் - துதிக்கும் எ-று.

(வி-ரை) ஞானிகள் இருவினையொப்பும், மலபரிபாகமும் வந்தவர்களாதலின் அவர்கட்கு அருள்செய்தல் அருமையன்று என்போன் வஞ்சகனுக்கு அருள்செய்தலே உலகம் போற்றத்தக்கதாகும் என்பார் 'நீலனைக் கைவிட்டால் மன்றமெப்படி நின்னருள் வாழ்த்தும்' என்றார். அடியேனைக் கைவிடாது அருள்வதே வியப்பும் உலகம் புகழ்ந்து போற்றத் தக்கதும் என்பார் 'மன்ற மெப்படி நின்னருள் வாழ்த்துமே' என்றார். 'மன்று' சபை. ஈண்டு கற்றோரை உணர்த்திற்று.

"வல்லவன் சொல்லே மன்று கொள்ளும்"

என்பதனாலறியலாம். 'மன்று' ஈண்டு ஆகுபெயர். இதனை,

"பொருண்முத வாறோ டளவைசொற் றானி
கருவி காரியங் கருத்த னுதியுள்
ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே"

என்ற **சூத்திரத்தா**னறிக.

'இன்றுனக் கன்பிழைத் திலனோ னென்றோ' என்றதனால் முன் இறைவனுக்கு அன்பிழைத்தமை பெறப்பெற்றது. முன்னர் நினக்கு அன்பிழைத்திலேனெனின் என்னை ஆண்டிராய என்பது தோன்ற 'அன்று தொட்டெனை யாளாசே' என்றார். இனி,

"அறியாப் பருவத் தெனையாண்டாய்"

என்ற **பெரியார்** வாக்கின்படி நீ திருவருளே திருமேனியாக உடையவனாதலின் நினக்கு அன்பு செய்யினும் அன்புசெய்யாவிடினும் என்னை ஆண்டருளல், என்னை உய்வித்தல் உன் கடனென்பதுங் குறிப்பித்தாயிற்று. 20

இறைவனே! நின்திருவருளை அடியேன்மீது சிறிது வைத்தாலன்றி
அடியேன் உய்யமுடியாது என்கின்றார்

வாழ்த்து நின்னருள் வாரம்வைத் தாலன்றிப்
பாழ்த்த சிந்தைப் பதகனு முய்வனோ
சூழ்த்து நின்ற தொழும்பரை யானந்தத்
தாழ்த்து முக்க ணருட்செம்பொற் சோதியே.

(ப-ரை) சூழ்த்துநின்ற-சூழ்ந்துகொண்டுநின்ற, தொழும்பரை - தொண்டர்களை, ஆனந்தத்து - சிவானந்தத்தில், ஆழ்த்தும் - முழுகச்செய்கின்ற, முக்கண் - திரிநேத்திரங்களையும் (மூன்றுகண்களையும்), அருள் - திருவருளினையும் (உடைய), செம்பொன் - செழுமையாகிய பொன்னைப்போன்ற, சோதியே-பிரகாசத்தையுடையவனே!, வாழ்த்தும் - யாவராலும் வாழ்த்தப் பெருந்தன்மைவாய்ந்த, நின்-தேவரீரது, அருள்-திருஅருள், வாரம் - விருப்



பத்தை, வைத்தால் - அடியேனின்மேல்வைத்தால், அன்றி - அல்லாமல், பாழ்த்த-பாழாகிய (கேடுகெட்ட), சிந்தை-மனத்தையுடைய, பதகனும்-பாவியாகிய அடியனேனும், உய்வனோ-பிழைப்பனோ எ-று.

(வி-ரை) இறைவன் நெற்றிக்கண் ஞானக்கண்ணாகும். இறைவன் முக்கண்ணுடையன், ஐந்து முகத்துக்குப் பதினைந்துகண்ணுடையன் திருமேனியெல்லாங் கண்ணாகவுடையன், பேருருடையனாதலின் 'முக்கணருட் செம்பொற் சோதியே' என விளித்தார். எப்பெற்றியர்க்கும் இரங்கி அருள்வோனாதலின் 'வாழ்த்து நின்னருள்' என்றார். 'சூழ்த்து' இது 'சூழ்' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. 'சூழ்ந்து' என்பது ஒற்றுவலித்து இறந்தகாலங்காட்டிற்று. 'ஆனந்தம்' என்றது சிவானந்தத்தை. இறைவன் திருவருள்வடிவன், ஆன்மாக்களின் மயக்கைப்போக்கி அஞ்ஞானத்தை நீக்கி ஞானத்தையூட்டித் தெளிவருள்வோன் என்பதனை,

"இருள் கெடுத் தருளுஞ் சோதி இமையவர் கரியபெம்மான்
தெருள் கொடுத் தின்ப மாக்கித் திருவருள் புரிந்தஈசன்
அருள் கொடிங் குயிரை யெல்லா மதனதன் வினைகட்கீடாச்
சுருள் பவந் தொலைப்பான் கண்டாய்த் தோகைபங் காளன்றானே" எனவும்,
"மருளினை யருளால் வாட்டி மன்னுயிர்க் களிப்பன் கண்கட்
கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்" 21

**சிவஞானசித்தியார்** எனவும் வருஞ் செய்யுட்களாலறியலாம்.

இறைவனே! தஞ்சமென்று உன்னை அடைந்த அடியேற்கு என் உள்ளம்
வருத்தாது அருள் சிவானந்த முத்தியை அருள் என்கின்றார்

சோதி யேசுட ரேசுக மேதுணை
நீதி யேநிச மேநிறை வேநிலை
ஆதி யேஉனை யானடைந் தேன்அகம்
வாதி யாதருள் வாய்அருள் வானையே.

(ப-ரை) சோதியே - ஒளிமயமானவனே!, சுடரே - (ஒளியைத்தரும்) சுடரே!, சுகமே-ஆனந்தமயமானவனே!, துணை-ஆன்மாக்களுக்குத் துணையாநிற்கின்ற, நீதியே - நீதிமயமானவனே!, நிசமே - உண்மைப்பொருளே!, நிறைவே - பரிபூரணப்பொருளே!, நிலை - எக்காலும் அழிவின்றி நிலைத்திருக்கும், ஆதியே-முதற்பொருளே!, உனை - தேவரீரை, யான்-அடியேன், அடைந்தேன் - தஞ்சமென்றுவந்து அடைந்தேன், அகம் - அடியேனின் உள்ளம், வாதியாது-அடியேனை வருத்தாது இருக்குமாறு, அருள்வாய்-அருள் செய்வாயாக, வானையே - சிவானந்த முத்திப்பேற்றை, அருள் - அருள்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் சோதிப்பிரகாசனாதலின் 'சோதியே' என்றார். சோதிக்குச் சுடர் ஆதாரமாதலினாலும், இறைவன் ஆதார ஆதேயங்களாக நிற்பவனாதலினாலும் 'சுடரே' என்றார். ஆன்மாக்களுக்கு வேண்டுவது

சுகமுமாதலின் அத்துக்க நிவிர்த்தியும் சுகமுமாய் நிற்பவன் இறைவனாதலி னாலும் 'சுகமே' என்றார். துக்க நிவிர்த்தியே சுகம் என்பது ஈண்டு உணரற்பாலது.

இறைவனே ஆன்மாக்களுக்குத் துணையாய்நின்று அவையவை செய்யும் கன்மங்களுக்கு ஈடாகச் சுகதுக்கங்களைத்தந்து உய்விப்பவனாதலினாலும் 'துணைநீதியே' என்றார். இறைவன் ஆதிமத்தியந்தரகிதனாய், நித்தியனாக யிருத்தலின் 'நிசமே' என்றார். இறைவன் அங்கு, இங்கு, எனாதபடி எங்கும் பிரகாசமாகி நிறைந்து பூரணனாக நிற்பவனாதலின் 'நிறைவே' என்றார். இறைவன் எல்லாப்பொருள்களுக்கும் நிலையாகி எல்லாந் தோற்று தற்கும் பின்னர்போய் ஒடுங்குதற்கும் இடமாய் நிற்றலினாலும் அவைகள் தோன்றல்மூலமாகவும் இருத்தலினாலும், அந்தத்து அவ்விறைவனே நிலைத்து நிற்பவனாதலினாலும், ஆதியிலும் அவனே இருத்தலினாலும் 'நிலை ஆதியே' என்றார். மனம் மாயையிற்கிடந்து உழன்றால் சுகம் எய்தாதாதலினாலும், அம்மாயையினின்றும் நீங்கினார்க்கே சுகம் பிராப்தமாகுமாதலினாலும் 'அகம் வாதியாதருள்வாய் அருள்வானையே' எனக் கூறினார். இதனை,

"மாயைதான் செய்துயரம் மற்றொன்றற் கூறவற்றே
தாயையே யொப்பாய்த் தமியனாஞ்—சேயை
எடுத்தணைத்துக் காத்தேநீ இன்பசுக வாழ்வு
கொடுத்திடவின் னேயருள் கூர்" என்றதனால் அறியலாம்.

இறைவன் அட்டமாவருவில் ஆகாசமும் ஒன்றாதலினாலும் "வானாகி மண்ணாகி" எனப் பெரியார் கூறியுளராதலினாலும் ஈண்டு வான் என்றது ஆகாசத்தை. அருள்வான்என்றது சிதாகாயம் அருள்வான் என்றதற்கு நின்னையே தந்தருள். இறைவன் தன்னைத்தருதலும் ஆன்மாவைக்கொள்ளலுமே ஆனந்தப்பேறாம். இதனை,

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்"

22

என்ற **மணிவாசகர் வாக்கா**லும் அறியலாம்.

அடியேனைக் கலந்து நின்று ஆனந்தத்தேனைச் சொரியும் இறைவனைத் தியானித்து அடைந்தேன் நான் என்னும் அகங்காரம் என்னை விட்டகல எக்காலத்தும் வாழ்ந்திருப்பேன் என்கின்றார்

வானைப் போல வளைந்துகொண் டானந்தத்
தேனைத் தந்தெனைச் சேர்ந்துக லந்தமெய்ஞ்
ஞானத் தெய்வத்தை நாடுவன் நானெனும்
ஈனப் பாழ்கெட வென்று மிருப்பனே.



**(ப-ரை)** வானை - ஆகாயத்தை, போல - ஒப்ப, வளைந்து - சூழ்ந்து, கொண்டு - கொண்டு, ஆனந்தம் - ஆனந்தமாகிய, தேனை - தேனை, தந்து - கொடுத்து, எனை-அடியனேனை, சேர்ந்து - கூடி, கலந்து - பிரிவறக்கலந்த, மெய் - சத்தியமாகிய, ஞானம் - ஞானமயமாகின்ற, தெய்வத்தை - கடவுளை, நாடுவன் - தியானித்துஅடைவேன், நான் - நான்என, என்னும் - விவகரிக்கின்ற, ஈனம்-இழிவாகிய, பாழ-பாழாகியநெறி, கெட - அழிய, என்றும்-எக்காலத்தும், இருப்பன்-வாழ்ந்திருப்பன் எ-று. ஏ-ஈற்றசை.

**(வி-ரை)** வான் - ஆகாயம். எங்கும் பரந்து சூழ்ந்திருப்பதனாலும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருப்பதாதலினாலும் எல்லாம் அதனுள் ஒடுங்கும் தோற்றமுறையாலாதலினாலும் 'வான்' என்றார். இனி இடஆகு பெயராய் மழைமேகம் என்பாருமுண்டு. இது உவமையாகவந்தது. இது வினைஉவமம். 'ஆனந்தத்தேன்' இது பண்புத்தொகை; 'ஆனந்தமாகிய தேன்' என விரியும். இறைவன் சத்தியமும், நித்தியனுமாய், ஞான சொரூபியுமாயிருத்தலினால் 'மெய்ஞ் ஞானத் தெய்வம்' என்றார். உயிர்களை 'நான்' என்னும் அகங்கார தத்துவமே பற்றிநின்று உயிர்களைத் துன்புறுத்தி அவ்வுயிர்கள் முத்தியடையாது கெடுத்தலினால் 'நானெனு மீனப்பாழ்' என்றார். நான் என்னும் செறுக்கற்றவர் வீடுபெற்றின்புறுவாராதலின் 'நானெனு மீனப்பாழ் கெடவென்று மிருப்பனே' என்றார். இதனை,

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்" எனவும்,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்"

எனவும் எழுந்த **திருக்குறளா**லும்,

"நானற்ற விடத்தே நலங்காணும்" எனவும்,

"நான் கெட்டென் னுள்ளமுங் கெட்டபின்
"நாதனைக் கண்டேன்"

எனவுங் கூறிய **பெரியார்** வாக்குகளாலும் அறியலாம்.

23

இறைவனே! இரும்பைக்காந்தம் இழுப்பதுபோல் அடியேனை ஏற்றுத் திருவடியைத்தந்து அருளுவீர் எனல்

இரும்பைக் காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமற் றிருவடிக்
கரும்பைத் தந்துகண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்என தன்னையொப் பாமனே.

**(ப-ரை)** எனது-அடியேனது, அன்னை-தாயை, ஒப்பு-போல, ஆம்-ஆகியிருக்கின்ற; மனே-இறைவனே (மன்னே), இரும்பை-இரும்பினை, காந்தம்-

காந்தக்கல்லானது, இழுக்கின்ற - கவர்ச்சி சத்தியால் தன் பக்கல் இழுத்துக் கொள்கின்ற, ஆறு - விதம்போல், எனை - அடியேனை (என்னை), திரும்பி- (மீட்டும் பிறப்பைத்) திரும்பிப், பார்க்க-பார்க்கும்படி, ஒட்டாமல் - விடாமல், திருவடி - தேவரீரது திருவடிகளாகிய, கரும்பை - கரும்பை, தந்து-கொடுத்தருளி, கண்ணீர் - கண்ணீரையும், கம்பலை - மெய் நடுக்கத்தையும், எலாம்- (இன்னுமுள்ள அடியார்களின் தன்மைகள்) எல்லாம், அரும்ப - அடியேனிடத்து உண்டாகும்படி, செய்-செய்தருள்வாயாக எ-று.

**(வி-ரை)** உலகப் பொருள்களிலெல்லாம் இரும்பே கடினமானது இளக்கமற்றது. இத்தகைய இரும்பைக் காந்தமென்னும் ஒருவகைக்கல் தன்பால் இழுத்து அசைவறச்செய்து தன்னிடத்தே இருத்திக்கொள்கின்றது. இரும்பிற்கொரு தொழிலுமின்றி அசைவறச்செய்து விடுகின்றது. தன் வயமாக்கித் தன் தொழிலே அதன் தொழிலாக்கி விடுகின்றது. அதுபோல அடியேனை நின்வயமாக்கி எனக்கொரு தொழிலுமின்றி எல்லாம் நின்றொழிலாக்கி ஆனந்தம் எய்துவிக்கவேண்டும் என்பார் 'இரும்பைக் ... ... கரும்பைத்தந்து' என்றார். இறைவன் திருவடியே அருட்பாதமாதலினாலும், இன்பங் கூட்டுவிப்பதாதலினாலும் 'திருவடிக் கரும்பைத்தந்து' என்றார். இதனை,

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது" எனவும்,

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது" எனவும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

எனவும், **திருவள்ளுவநாயனார்** திருவடி விசேடங்கூறியது கண்டுதெளிக.

உண்மைப் பத்தியாளர்க்குக் கண்ணீர், கம்பலை முதலிய மெய்ப்பாடு உண்டாம் ஆதலினால் 'கண்ணீர் கம்பலை யெலாமரும்பச்செய்' என்றார். 'மன்னே' என்பது 'மனே' எனவாயது தொகுத்தல் விகாரம். இறைவன் என்றும் அழிவின்றி நித்தியமாக இருப்பவன் ஆதலின் 'மன்னே' என்றார். அரும்பச்செய் - தோன்றச்செய் என்பது பொருள். அரும்புதல் - தோன்றுதல் 'இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு' என்ற இதனையே 'வலிந்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல், சலிப்பின் விகாரி யவன்றான்' எனச் **சிவஞான போதத்திலும்**, 'இரும்பைக் காந்தம் வலித்தாற் போலியைந் தங்குயிரை' எனச் **சிவஞான சித்தியாரிலும்**, கூறினமை காண்க. இன்னும்,

"அடியே னிரும்பே யாயிடினும் அருளார் காந்தம் நீயன்றோ
முடியா துண்டோ உன்னருட்கே முடிக்கும் ஆற்றற் பெரியோனே
கடிதே யென்னை வந்தணைத்துக் கலங்கே லென்றிங் கருள்செய்து
படியா ரின்பச் சிவானந்தம் படியவருள்க பரம்பரனே"

என்ற **பெரியார் வாக்கானும்** அறியலாம்.





இறைவனை உறவினரெனச் சொல்லுவதிற் பயனிலை;
ஆதியஞ்சோதியே எனல்

அன்னை யப்பனென் னாவித் துணையெனுந்
தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென்
என்னைப் பூரண வின்ப வெளிக்குளே
துன்ன வைத்த சுடரெனத் தக்கதே.

**(ப-ரை)** அன்னை-தாய், அப்பன்-தகப்பன், என் - அடியேனின், ஆவி- உயிரின், துணை-துணை (சகாயம்), எனும்-என்று சொல்லப்படுகின்ற, தன்னை- தனக்கு, ஒப்பு-நிகர், அற்ற-இல்லாத, சற்குரு-ஞானாசிரியன், என்பது-என்று கூறுவது, என்-என்ன, என்னை - அடியேனை, பூரணம் - நிறைந்த, இன்பம்- ஆனந்தமாகிய, வெளிக்கு - வெளியினிடத்தே (ஆகாசத்தே), துன்ன-பொருந்தியிருக்கும்படி, வைத்த-வைத்தருளிய, சுடர்-சோதி, என-என்று சொல்ல, தக்கது-தகுதி உடையதாகும் எ-று.

**(வி-ரை)** தாயின்கடமை பிள்ளையின் உடலை வளர்த்தல், தந்தையின் கடமை கல்வியை ஊட்டி அறிவு ஒழுக்கங்களைப் போதித்து முதன்மையுறச் செய்தல், ஆசிரியன் ஞானத்தையூட்டி இறைவனைக்காட்டி ச் சிவானந்தத்திற் பூட்டி விடல். இறைவன் ஆனந்தமயமாக இருந்து ஆனந்தத்தைத் துய்ப்பித்தல். இதுபற்றியே "மாதா பிதா குரு தெய்வம்" எனப் பெரியோர் முறைப்படுத்திக் கூறினர். இதுபற்றியன்றோ "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" "எழுத்தறி வித்தவன் இறைவனாகும்" என்னும் ஆப்த மொழிகள் எழுந்தன. இனி, ஆன்மாக்களின் பக்குவமறிந்து "மான் காட்டி மான் பிடிப்பதுபோல" இறைவனே ஆசாரிய வடிவந்தாங்கி எழுந்தருளி வந்து ஞானோபதேசஞ் செய்கின்றானாதலின் 'அன்னை யப்பனென் னாவித் துணையெனுந் தன்னை யொப்பற்ற சற்குரு வென்பதென்' என்றார். ஞானாசிரியன் அவ் இறைவனே என்பார் 'என்னைப் பூரண வின்பவெ ளிக்குளே துன்னவைத்த சுடரெனத் தக்கதே' என்றார் 'சற்குரு' என்றது ஞானாசிரியனை. 'வெளி' என்றது பரவெளியை. இதனை,

"சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்
தத்தனை நல்கருள் காணா வதிமூடர்
பொய்த்தகு கண்ணா னமரென்பர் புண்ணியர்
அத்த னிவனென் றடிபணி வாரே" எனவும்,

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே"

என்றுங்கூறிய **திருமந்திரச்செய்யுளாலும்** அறியலாம். வ-சுற்றசை.

இறைவன் முதல்வனாய் எல்லாவற்றிற்கும் வித்தாகி எல்லாமாய்ப்
பரிபூரணனாக நிறைந்து நிற்பவன் என்கின்றார்

தக்க கேள்வியிற் சார்ந்தநற் பூமியின்
மிக்க தாக விளங்கு முதலொன்றே
எக்க ணுந்தொழ யாவையும் பூத்துக்காய்த்
தொக்க நின்றுமொன் றாய்நிறை வானதே.

(பதை) தக்க - தகுதியுடைய, கேள்வியில் - விசாரணையில், சார்ந்த - பொருந்திய, நல்-நல்லதாகிய, பூமியில்-இப்பூவுலகத்தில், மிக்கதுஆக-உயர்ந்ததாக, விளங்கும்-விளங்குகின்ற, முதல்-இறைவனாகிய வித்து, ஒன்றே-ஒன்றுதானே, எக்கணும்-எத்திசையிலும், தொழ-வணங்க, யாவையும் - எல்லாவற்றையும், பூத்து-புஷ்பித்து, காய்த்து - காய்காய்த்து, ஒக்க - (அவைகளுடன் தனித்தனியே) பொருந்தக்கூடி, நின்றும்-நின்றிருந்தாலும், ஒன்றாய் - ஒரே பொருளாகி, நிறைவு-எல்லாவற்றிலும் அகம்புறம் என்னுதபடி நிறைந்த பரிபூரணமாய், ஆனது-ஆகியிருந்தது எ-று.

(வி-ரை) 'தக்ககேள்வி' என்றது ஞானக்கேள்வியை. இதுபற்றியன்றோ **பெரியாரும்,**

"முற்றப் பகலு முனியா தினிதோதிக்—
கற்றலிற் கேட்டலே நன்று" என்றார்.

ஞானவேள்விகள் நான்கனுள் முன்னிற்பது கேள்வியாகும். இது கொண்டு சிந்திப்பது இரண்டாவதாகும், சிந்தித்தபின் தெளிவுபிறக்குமாதலின் தெளிதல் மூன்றாவதாக நின்றது. தெளிந்தபின்னர் நிட்டைகைகூடுமாதலினால் நிட்டை நான்காவதாக நின்றது. கேட்ட கேள்வி இறைவனேயாய சற்குருவிடம் கேட்ட தாதலின் 'தக்க கேள்வி' என்றார். இவ்வுபதேசங் கேட்டபின் வேறு கேட்கவேண்டுவதில்லையாதலினாலும், இதனைச் சிந்தித்தபின் தெளிவுபெற வேறு நூல்கள் வேண்டாமையினாலும், தெளிவு பெற்றபின் நிட்டைக் கிடையூறு உண்டாகாது. இவ்வாறு கேட்டுத் தெளிந்து, நிட்டை கூடினோர் பின் பிரபஞ்சத்திற்றிரும்பாது முத்திப் பதவி பெறுவர். இவ்வளவுக்கும் ஞானாசிரியர்பாற் கேட்டதேயாதலினால் 'முதலொன்றே எங்கணுந் தொழ யாவையும் பூத்துக்காய்த் தொக்க நின்றுமொன் றாநிறை வானதே' என்றார். இதனை,

"உணர்ச்சியச் சாக வுசாவண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி—புணர்ந்ததனை
யூர்கின்ற பாக னுணர்வுடைய னாகுமேற்
பேர்கின்ற தாகும் பிறப்பு"

என்றார் **அறநெறிச்சாரம் உடையாரும்.**

'எங்கணும்' இது 'எங்கனும்' என்றதன் வலித்தல் விகாரம். செய்யுளில் எதுகைபற்றி வலித்தது. எ-சற்றசை. 26



அறுவகைச் சமயங்களுக்கும் இடமாகி நின்று தன் உருவைக்காட்டிய
இறைவனை விரும்பிச் சிவானந்தத்தை யனுபவிப்பேன்
என்கின்றார்

ஆன மான சமயங்க ளாறுக்கும்
தான மாய்நின்று தன்மயங் காட்டிய
ஞான பூரண நாதனை நாடியே
தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே.

(ப-ரை) ஆன-உண்டாகிய, மானம்-பெருமை பொருந்திய, சமயங்கள்-சமயங்கள், ஆறுக்கும்-ஆறினுக்கும், தானம்-இடம், ஆய்-ஆகி, நின்று-நின்று, தன்மயம்-தன் உருவினை, காட்டிய-காட்டின, ஞானம்-ஞானம் (சிவஞானம்), பூரணம்-நிறைவுகொண்ட, நாதனை - தலைவனை (இறைவனை), நாடியே-விரும்பியே, தீனனேன்-எளியவனாகிய அடியேன், இன்பம்-சிவானந்தமாகிய நிரதிசயானந்தத்தை, தேக்கி - பரிபூரணமாகக்கொண்டு, திளைப்பன் - அனுபவிப்பேன் எ-று.

(வி-ரை) கோடிக்கணக்காய் விரிந்து பரந்துள்ள பற்பலவாகிய சமயங்கள் எல்லாம் அறுசமயத்துள் அடங்குதலினாலும் 'ஆனமான சமயங்கள் ஆறுக்கும்' என்றார். இவ்வறுவகைச் சமயத்தார்க்கும் அருள் செய்பவன் இறைவனே ஆதலினால் 'தன்மயம் காட்டிய' என்றார். இதனை,

"காப்போன் காப்பவை கருதாக்
கருத்துடைக் கடவு டிருத்தகு
மறுவகைச் சமயத்தறு வகையோர்க்கும்
வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி"

என்ற **மணிவாசகர்** வாக்கானும் அறியலாம்.

இறைவன் ஞானபூரணன், ஞானமயன் ஆதலினால் 'ஞானபூரண நாதனை' என்றார். இறைவன் எளியர்க்கிரங்கி யருள்புரிந்து சிவானந்தம் ஊட்டுவோன் ஆதலினாலும் இறைவன் அனுக்கிரகம் பெற்றோர்கள் சிவானந்தத்தைப்பெற்று இன்புற்றிருப்பர்கள் ஆதலின் 'தீன னேனின்பந் தேக்கித் திளைப்பனே' என்றார். குறையற நிறைய அனுபவிப்பேன் என்பார் 'தேக்கித் திளைப்பனே' என்றார். 'ஆறுக்கும்' என்றதன்கண் உள்ள உம்மை முற்றும்மை. 'தீனன்' இது வடசொல் எளியேன் என்ற பொருளது. 'இன்பம்' என்றது சிவானந்தத்தை, இதை நிரதிசய ஆனந்தம் என்பர். எ-சற்றசை. 27

இறைவன் எனக்குப் பெருகிய சிவானந்தப்பேறாய்ப் போக்குவரவற்ற
பூரணனாக இருக்கின்றான் அதுவே அவ் இறைவன்
மயமாகும் என்கின்றார்

தேக்கி யின்பந் திளைக்கத் திளைக்கவே
யாக்க மாயெனக் கானந்த மாகியே

போக்கி ஞேடு வரவற்ற பூரணம்
தாக்கி நின்றவா தன்மய மாமதே.

(ப-ரை) இன்பம்-சிவானந்தத்தை, தேக்கி-குறையற முழுதுங்கொண்டு, திளைக்கதிளைக்க-அனுபவிக்கவனுபவிக்க, ஆக்கமாய்-விருத்தியாகி, எனக்கு-அடியனேனுக்கு, ஆனந்தம்ஆகி-இன்பமாகி, போக்கிஞேடு-போக்கும், வரவு-வரவும், அற்ற - இல்லாத, பூரணம் - பூரணப்பொருளானது; தாக்கி - வந்து மேலிட்டு, நின்றவா-நின்றவிதம் என்னே, அதே - அதுவே, தன்மயம்ஆம்-தன்மயம் (தற்சொரூபம்) ஆகும் எ-று.

(வி-ரை) ஆன்மாக்கள் போக்குவரவுடையன. இதனை,

"அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே"

என்ற **சிவஞானபோதச் சூத்திரத்தா**லறியலாம்

இறைவன் போக்குவரவு அற்றவன் அதுபோலவே அவன் ஆனந்தமும் போக்குவரவற்றதாகும். இதுகொண்டே "போக்கி ஞேடு வரவற்ற பூரணம் தாக்கி நின்றவா தன்மய மாமதே' என்ருர். இதனை,

"போக்கும் வரவும் புணர்வு மிலாப் புண்ணியனே"

என்ற **மணிவாசகர் திருவாக்கா**னும் அறியலாம்.

'திளைக்கத்திளைக்கவே' மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. 'தேக்கி இன்பம்' என்றதில் 'இன்பம்' என்றது சிவானந்தத்தை. 'ஆக்கம்' மேலும் 'மேலும் ஆக்கப்படுதலின் விருத்திக்கு ஆக்கம் என்ற பெயராயிற்று. செல்வம்' எல்லோராலும் விரும்பி ஆக்கப்படுதலின் செல்வத்திற்கு ஆக்கம் என்ற பெயரெய்திற்று.

"ஆக்கம் பெரியா சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப"

என்ற **குமரகுருபரர் வாக்கா**னும் அறியலாம். 28

மோனநிலைப்பொருளே! சிவானந்த மளிப்பதென்பது

அதுவென் றுன்னு மதுவு மறநின்ற
முதிய ஞானிகண் மோனப் பொருளது
எதுவென் றெண்ணி யிறைஞ்சுவன் ஏழையேன்
மதியு ணின்றின்ப வாரி வழங்குமே.

(ப-ரை) அது - அது, என்று - என்று, உன்னும் - நினைக்கும், அதுவும்-அந்நினைப்பும், அற - இல்லாதபடி, நின்ற - நின்ற, முதிய - ஞானமுதிர்ந்த, ஞானிகள்-ஞானவான்களின், மோனம்-மௌனநிலையினால் எய்தும், பொருள்-பொருளாகிய, அது - அது, எது - எது, என்று-என்று, எண்ணி - நினைத்து, இறைஞ்சுவன் - வணங்குவேன்; (அப்பொருடானே) ஏழையேன் - எளியேனுடைய, மதியுள்-அறிவினுள், நின்று-நின்று, இன்பம் - இன்பமாகிய (சிவானந்தமாகிய), வாரி-பெருக்கை (வெள்ளத்தை), வழங்கும்-பெருகச்செய்யும் எ-று.



(வி-ரை) மெய்ஞ்ஞானமுற்ருேர் இறைவனை அகத்தும் புறத்தும் ஒரே தன்மையிற் கண்டு சுகிப்பர். இதனை,

"அது இது என்றும் அவன் நானே என்றும்
அது நீயே ஆகின்ருய் என்றும்—அதுவானேன்
என்றுந் தமை உணர்ந்தார் எல்லாம் இரண்டாக
ஒன்ருகச் சொல்வரோ உற்று"

என்ற **திருக்களிற்றுப்படியாரா**லும் அறியலாம்.

இதுகொண்டே 'அதுவென்றுன்னு மதுவு மறநின்ற முதியஞானிகள் மோனப் பொருளது' என்ருர். இதனை, 'அதுவிது வென்பவ ரவனையறியார்' என்ற **திருமந்திரத்தா**லும் அறியலாம். இன்னும்,

"அது இது என்ற அனைத்தறி வாகும்
அது இது என்றறிந் தற்றிபற
அவிழ்ந்த சடையா னென்றுந் தீபற"

என்ற **திருவுந்தியாரா**லுங் காண்க.

அது அத்துவிதப் பொருளாதலினாலும் சுட்டி அறியப்படாதது ஆதலினாலும் 'எதுவென்றெண்ணி இறைஞ்சுவன்' என்ருர். அறிவுக்கு அறிவாகி நின்று ஆனந்தம் விளைக்கின்றமையின் 'மதியுணின் றின்பவாரி வழங்குமே' என்ருர். ஏ-ஈற்றசை. 29

இறைவனே! அடியேனும் மற்றுமுள்ள உலகும் பொருளும் உன்னுளடங்கியுளேம் இதுகண்ட அடியேன் எவர்க்கும் சொல்ல வாக்கற்றவனு யிருக்கின்றேன் என்கின்ருர்

வாரிக் கொண்டெனை வாய்மடுத் தின்பமாய்ப்
பாரிற் கண்டவை யாவும் பருகினை
ஓரிற் கண்டிடு மூமன் கனவென
யாருக் குஞ்சொல வாயிலை யையனே.

(ப-ரை) ஐயனே - இறைவனே!, எனை - அடியேனாகிய என்னை, வாரி-கவர்ந்து, கொண்டு-கொண்டு, வாய் மடுத்து-உண்டு, இன்பம்-சுகரூபம், ஆய்-ஆகி, பாரில் - இப்பூமியினிடத்தே, கண்டவை - அடியேன் கண்டவைகள், யாவும்-எல்லாவற்றையும், பருகினை - விழுங்கிவிட்டனை, ஓரில் - யோசிக்கும் இடத்து, ஊமன்-ஊமையாகிய ஒருவன், கண்டிடும்-காணும், கனவு-கனவே,

என-போல, யாருக்கும் - எவர்களிடத்தும், சொல - சொல்லுதற்கு அடியேனுக்கு, வாய்-வாக்கு, இல்லை-இல்லையாயிற்று எ-று.

**(வி-ரை)** சிவஞானிகள் சிவானந்தநிலையில் ஆனந்தானுபவிகளாய் நிற்குங்காலை தன்னை யறியார், மண்முதல் எல்லாத் தத்துவங்களும் அறியார் இறைவனையன்றி எதனையுங் காணார். இது கொண்டே 'வாரிக்கொண்டென்னை வாய்மடுத் தின்பமாய்ப் பாரிற்கண்டவை யாவும் பருகினை' என்றார். இதனை,

"அவனையகன் றெங்கின்று மாங்கவனு மெங்கு
மிவனை யொழிந் துண்டாத லில்"

என்ற **திருவருட்பயனாலும்** அறியலாம்.

பரமானந்தத்துள் அழுந்தியவர் மௌனநிலையிலே நிற்பர் திரும்பப் பிரபஞ்சத்தை நோக்கார் ஆதலின் 'ஓரிற் கண்டிடு மூமன் கனவென யாருக்குஞ் சொல வாயிலை யையனே' என்றார். "கண்டவர் விண்டிடார்" என்ற **பெரியார்** மொழியும் ஈண்டு நோக்கத் தக்கது. வாய்மடுத்தல் - விழுங்கல். ஈண்டு இறைவனுகக் காண்கையைக் குறித்தது. இதனை, "சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட" என்ற **மணிவாசகர்** வாக்கானும் அறியலாம். 30

ஞானிகளுக்கு உண்மைப்பொருளான இறைவனே! உலகில்
உழலும் பொய்யனேற்குச் சரணடையத்தக்க
இடம் எங்குளது

ஐய மற்ற வதிவரு ணர்க்கெலாங்
கையி லாமல கக்கனி யாகிய
மெய்ய னேஇந்த மேதினி மீதுழல்
பொய்ய னேற்குப் புகலிட மெங்ஙனே.

**(ப-ரை)** ஐயம் - (தமது அநுபவத்திலே) சந்தேகம், அற்ற-நீங்கிய, அதி-மிகுந்த, வருணர்க்கு - வர்ணாச்சிரமிகளாகிய ஞானியர்களுக்கு, எல்லாம் - எல்லாம், கையில் - (உள்ளங்) கையிலுள்ள, அமலகம் - நெல்லி, கனிஆகிய-பழமாகிய, மெய்யனே-உண்மைப்பொருளாகிய இறைவனே!, இந்த - இந்த, மேதினிமீது - பூமியின்மேலே, உழல் - சுழன்றுகொண்டிருக்கின்ற, பொய்யனேற்கு - பொய்யுடைய அடியேனுக்கு, புகல் - சரணடைவதற்கு, இடம் - இடம், எங்ஙனே-எங்குள்ளது? எ-று.

**(வி-ரை)** சிறந்தஞானிகள் ஞானதத்துவங்களிற் சிறிதும் ஐயமில்லாதவர்களாதலினால் 'ஐயம்அற்ற' என்றார். ஞானிகளிற் சிறந்தோர் சாதி, குலம், சமயம் முதலியவற்றிற் சிறிதும் பற்றின்றி இருப்பர் அவர்களை அதிவருணாச்சிரமிகள் என்பர் அவர்களையே 'அதிவருணர்க்கென்றார்' அதிவர்ணாச்சிரமிகள் சாதி, குலம், சமயம் முதலியவற்றிற் பற்றற்றவர்கள் என்பதனை,



"சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே"

என்ற **மணிவாசகர் வாக்கானும்** அறிக.

'மெய்யனே' என்றது இறைவனை; என்னை, இறைவன் நித்தியனாதலின் என்க. 'மேதினி' பூமிக்கொரு பெயர். திருமாலாற் கொல்லப்பெற்ற மதுகைடவர்களின் மேதசினால் இப்பூமி நனைந்ததனால் இப்பெயர் வந்தது. மெய்யுணர்வின்றிப் பொய்யாகிய உலகம் முதலியவற்றை மெய்யென நினைத்ததனால் 'பொய்யனேன்' என்றார். அதிவர்ணாச்சிரமிகள்போல ஞானமில்லேன். அதிவர்ணாச்சிரமிகட்குக் கையில் நெல்லியங்கனிபோன்று இருந்து அருள் செய்கின்றனை. பொய்யனேற்கு நீ அருள்செய்வையோ. நீ அருள்செய்யாதிருப்பையேயானால் எனக்குப் புகலிடம் யாதுகூறுதி என்பார் 'மெய்ய னேயிந்த மேதினி மீதுழல் பொய்யனேற்குப் புகலிடமெங்ஙனே' என்றார். புகலிடம் சரண்புகும் இடம் என்ற பொருளது. ஏ-ஈற்றசை. 31

இறைவனே! அகங்கார மமகாரம் நீங்கி உன் திருஅருள்மயம்
ஆகாதிருக்கின்றேன் அடியேன் எவ்வாறு உய்வேன்

எங்ங னேயுய்ய யானென தென்பதற்
றங்ங னேயுன் னருண்மய மாகிலேன்
திங்கள் பாதி திகழப் பணியணி
கங்கை வார்சடைக் கண்ணுத லெந்தையே.

**(ப-ரை)** திங்கள்-சந்திரன், பாதி - அரைப்பங்காக, திகழ - பிரகாசிக்க, பணி-பாம்பை, அணி-அணிந்துள்ள, கங்கை - கங்கை பொருந்தியுள்ள, வார்-நீண்ட, சடை-சடாபாரத்தைக் கொண்டுள்ள, கண்ணுதல்-நெற்றிக்கண்ணையுடைய, எந்தையே - எமது தந்தையே!, யான்-நான் என்பதாகிய அகங்காரமும், எனது-என்னுடையது என்னும் மமகாரமும், என்பது - என்பவைகள், அற்று - நீங்கி, அங்ஙனே - அப்படிப்பட்ட இடத்திலே, உன் - தேவரீரது, அருள் - திருவருளின், மயம் - வடிவம், ஆகிலேன் - ஆனேன் இல்லையே, எங்ஙனே-அடியேன் எந்தவிதமாக, உய்ய-பிழைக்க எ-று.

**(வி-ரை)** 'நான்' என்ற அகங்காரமும், 'எனது' என்கின்ற மமகாரமும் உள்ளவரைச் சிவானந்தத்தை எய்துதற்கு இடமில்லை. 'நான்' என்ற அகப்பற்றும் 'எனது' என்ற புறப்பற்றும் மாயையின் காரியங்களாம். மாயாமலம் உள்ளவரைச் சிவப்பேறு எய்தல் முடியாததாம். ஆதலின், "எங்ஙனே யுய்ய யானென தென்பதற், றங்ஙனேயுன் னருண்மய மாகிலேன்" என்றார். இதனை,

"பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"

என்ற **திருக்குறளால்** நன்கறியலாம்.

'திங்கள்பாதி திகழ்' என்றது பிறைச்சந்திரன் பிரகாசிக்க என்பது பொருள். இனி பாம்பைக்கண்டு சந்திரன் ஒளிமழுங்கி நிற்க, எனப் பொருள் கூறுவர் சிலர். இது பொருந்தாது. இறைவனையடைந்த எதற்குஞ் சத்துருத்துவம் இல்லை என்பதறிக. ஒருக்கால் பெரியார் இவ்வாறு கூறியிருப்பின் அஃதோரலங்காரத்தாற் கூறியிருப்பரென அறிக. 'மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ னுளமே புகுந்தவதனால்' என்றார் **திருஞானசம்பந்தரும்.** 32

இறைவனே! எல்லாம் திருவருளின் வடிவே; அடியேன் கை செய்வது தேவரீரது பூஜையே; அடியேன் பகர்வது உன் திருமந்திரமே எனல்

**கண்ணிற் காண்பதுன் காட்சிகை யாற்றொழில்**
**பண்ணல் பூசை பகர்வது மந்திரம்**
**மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே**
**அண்ண லேஉன் னருள்வடி வாகுமே.**

(ப-ரை) அண்ணலே-இறைவனே!, கண்ணின்-கண்ணினால், காண்பது-பார்க்கப்பெறுவது, உன் - இறைவனே தேவரீரது, காட்சி - தரிசனமே, கையால் - அடியேனின்கையால், தொழில் - தொழிலை, பண்ணல் - செய்யப் பெறுவது, பூசை-தேவரீருக்குச் செய்யப்பெறும் பூஜையேயாகும், பகர்வது-அடியேனாற் சொல்லப்பெறுவது, மந்திரம்-தேவரீரைத்துதிக்கும் மந்திரமே, மண்ணொடு - மண்ணுடனே, ஐந்தும் - ஐந்தென்று எண்ணப்பெறும் பூதங்களும், வழங்கு - அவைகளினால் உண்டாகி வழங்குகின்ற பௌதிகங்களும், உயிர் - உயிர்கள், யாவும்-எல்லாமும், உன்-தேவரீரது, அருள்-திருவருளின், வடிவு-உருவே, ஆகும்-ஆகும் எ-று.

(வி-ரை) இறையே அடியேன் உன்னைத் திரிகாணத்தாலும் வணங்காநிற்கின்றேன் என்பார் 'கண்ணிற் காண்பதுன் காட்சி' எனவும், 'கையாற்றொழில்பண்ணல் பூசை' எனவும், 'பகர்வது மந்திரம்' என்றார். பூசையும், மந்திரம் மனத்துத் தியானித்தே புரியவேண்டுதலாதலின் மனவாக்குக் காயம் என்னும் திரிகரண பூசையும் அடங்கியமை காண்க. இறைவன் அட்டமாவுருவினன் ஆதலின், 'மண்ணொ டைந்தும் வழங்குயிர் யாவுமே அண்ணலேயுன் னருள்வடி வாகுமே' என்றார். இதுகொண்டே,

"நீரானே தீயானே நெறியானே கதியானே
[illegible]
[illegible]
[illegible]"

[illegible]



'அட்டமூர்த்தி யாழ்கனின் னமுதாயவானந்த வெள்ளத்தான்' என்ற **மணிவாசகர்** மணிவாக்கானும் அறியலாம். அட்டமூர்த்தங்கள் யாவை என்பனவற்றை,

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா
னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"

என்ற **மணிவாசகர்** திருவாக்கால் அறிக. ஏ-ஈற்றசை. 33

சுவாமியே! இறைவனே! தந்தையே! எல்லா உருவமும் நின் உருவம் என்று துதிக்காதவன் நின்னைத் துதிக்கவல்லவனோ?

**வடிவெ லாநின் வடிவென வாழ்த்திடாக்**
**கடிய னேனுமுன் காரணங் காண்பனோ**
**நெடிய வானென வெங்கு நிறைந்தொளிர்**
**அடிக ளேஅர சேஅரு ளத்தனே.**

(ப-ரை) நெடிய - நீண்டுபெரிதாயிருக்கின்ற, வான் - ஆகாயம், என - என்றுசொல்லும்படி, எங்கும்-எல்லாயிடத்திலும், நிறைந்து-நிறைந்து, ஒளிர்-விளங்கிக்கொண்டிருக்கின்ற, அடிகளே - சுவாமியே! அரசே - இறைவனே! அருள்-கிருபையுள்ள, அத்தனே-தந்தையே!,- வடிவெலாம்-உருவங்களெல்லாமும், நின்-தேவரீரது, வடி - வடிவம் (உருவம்), என - என்று, வாழ்த்திடா-துதிக்காத, கடியனேனும் - கடினசித்தத்தையுடைய அடியனேனும், உன்-தேவரீரது, காரணம் - முதன்மைத்தன்மையினை, காண்பனோ-காணவல்லன் ஆவனோ! எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாவற்றினும் உள்ளும் புறம்பாயிருக்கின்றானாதலினாலும், எல்லாமாய் அல்லவுமாய் இருக்கின்றானாதலினாலும் 'வடிவெலாநின் வடிவென வாழ்த்திடா' என்றார். இதுகொண்டன்றோ **மணிவாசகரும்,**

"ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே" என்றார்.

'இருக்கின்ற தெண்டிசை யண்டம் பாதாள
முருக்கொடு தன்னடி வோங்கலில் வண்ணத்
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே"

என்ற [illegible] என்றும்.

[illegible]

தல். 'காரணம்' என்றது நீ எல்லாவற்றிற்கும் காரணனாகிய முதல்வன் என்ற பொருள்தந்துநின்றது. 34

இறைவனே! உன்னைத் துதித்துத் தொடராப்பித்தன் மலநீங்க எதனைக்கற்கட்டும் என்கின்றார்

அத்த னேஅகண் டானந்த னேஅருட்
சுத்த னேஎன வுன்னைத் தொடர்ந்திலேன்;
மத்த னேன்பெறு மாமல மாயவான்
கத்த னேகல்வி யாததுகற்கவே.

(ப-ரை) அத்தனே - தந்தையே!, அகண்ட - பரந்த (விசாலமான, பரிச்சேதிக்கக்கூடாத), ஆனந்தனே-ஆனந்தத்தை உடையவனே!, அருள்-கிருபை வடிவான, சுத்தனே-தூய்மையானவனே! (அமலனே!), என-என்று, உன்னை-தேவரீரை, தொடர்ந்திலேன் - பின்பற்றாதிருந்து விட்டேன், மத்தனேன்-உன்மத்தனாகிய அடியேன், பெறும் - அடைந்திருக்கிற, மா - பெரிய, மலம்-மலங்கள் (மாயாமலம்), மாய - கெடும்படி, வான் - மேலாகிய (உயர்ந்த), கத்தனே - சர்வ சக்தியையும் உடைய இறைவனே!, யாது - எந்த, கல்வியது-கல்வியினை, கற்க-கற்கச்சொல்லுகின்றனை? எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப் பொருட்கும் கடவுளும் முதல்வனாக இருத்தலின் 'அத்தனே' என்றார். இறைவன் பேரானந்தப் பெரும்பிழம்பாய் இருப்பவன் ஆதலின் 'அகண்டானந்தனே' என்றார். இறைவன் அருண்மேனியுடையன் ஆதலினாலும் விமலன் ஆதலினாலும் 'அருட்சுத்தனே' என்றார். மலமற்றுய்ய உன்னைத்தொட வேண்டியதிருக்க அவ்வாறு உன்னைத்தொடாது மாயையை மேலும்மேலும் பெருக்கி இடர்ப்படுமாறு உலகைத் தொடர்கின்றே னென்பார் 'உன்னைத் தொடர்ந்திலேன்' என்றார். விழலுக்கு முத்துலைகட்டி இறைப்பவர்போலப் பயனற்ற காரியஞ் செய்யாது வீண்காரியம் செய்கின்றேன் இது பித்தன் செயல்போல்வது என்பார் 'மத்தனேன்' என்றார். உன்னைத்தொடாது ஏதேதோகற்க உன்னுகின்றேன் என்பார் 'பெறுமாமல மாயவான் கத்தனே கல்வியாதது கற்கவே' என்கின்றார். எல்லாம் படைத்துக் காத்தருள்வோன் நீ என்பார் 'வான் கத்தனே' என்றார். வான்-ஈண்டு உயர்வுப்பொருள் தந்தது. இனி, 'ஆகாச வடிவுடையவனே' என்பாரும் உண்டு. 'கத்தன்' இது 'கர்த்தன்' என்ற வடசொற்சிதைவு. ஏ-ஈற்றசை. 35

இறைவனே! நூல்களைக் கற்றதனால் இன்ப உதயம் உண்டாகா, அந்நூல் சொற்க நெறியில் நின்றால்தான் இன்பம் பெறலாம் என்கின்றார்

கற்று மென்பலன் கற்றிடு நான்முறை
சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி



நிற்றல் வேண்டும் நிருவிகற் பச்சுகம்
பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே.

(ப-ரை) நிருவிகற்ப-நிருவிகற்ப சமாதியிலேபெறும், சுகம் - சுகத்தினை, பெற்றபேர்-அடைந்தவர்கள், பெற்ற - அநுபவித்த, பேசா - சொல்லளவாற் சொல்லிக் காட்டமுடியாத, பெருமையே - பெரிய பொருளே!, கற்றும் - பல நூல்களைக்கற்றும், என் - என்ன, பலன் - பிரயோசனம்?, கற்றிடும் - கற்கப்படுகின்ற, நூல் - அந்நூல்களின் (சாத்திரங்களின்), முறை - முறைகள், சொற்ற-சொல்லிய, சொற்கள்-வார்த்தைகள், சுகாரம்பமோ - இன்பம் உண்டாதற்குக் காரணமாகுமோ, நெறியில்-அவை (அந்நூற்கள்) சொன்ன நெறியில், நிற்றல் - நின்றிருத்தல், வேண்டும் - வேண்டும் (அப்பொழுதுதான் இன்பம் பெறலாம் என்பதாம்) எ-று.

(வி-ரை) கற்றபடி நில்லாதகாலத்துக் கற்றதனாலாய பிரயோசனமென்ன? கற்றவழியில் நில்லார்க்கு அக்கல்வி பயன்தருவதாகுமோ? ஏட்டுக் கல்வியாகவன்றோ முடியும். கற்றவழி நில்லாதார்க்கு அவர் கற்றது பயனற்றதாகும் என்பார் 'கற்று மென்பலன்' என்றார். கற்பது இறைவனை யுணர்ந்து அவனை வழிபட்டு இன்புற்று முத்தி எய்தலே அவ்வாறு கற்றயான் கற்றபடி நெறி நில்லாதிருக்கின்றேன் என்பார் 'கற்றிடு நான்முறை சொற்ற சொற்கள் சுகாரம்பமோ' என்றார். இதனாலன்றோ,

"கற்ற தனாலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்"

என்றார் திருவள்ளுவரும்.

இறைவனே சிவானந்தந்தருவதாய நிட்டைநெறியில் நிற்கச் செய்வாயாக என்பார் 'நெறிநிற்றல் வேண்டும்' என்றார். அந்தர்முகத்தே இறைவனைக்கண்ட நிருவிகற்பமுடையார் பேசாது ஆனந்தானுபவத்தில் அழுந்தி இன்புற்றிருப்பர் ஆதலின் 'நிருவிகற்பச் சுகம்பெற்ற பேர்பெற்ற பேசாப் பெருமையே' என்றார். 'நெறி' என்றது நிட்டையை, சிவானந்தநெறியை. இனி ஞானாசிரியன் காட்டிய சும்மாயிருத்தலாகிய நெறியை எனினுமாம். 36

தாயையொத்த இறைவனே! உன்மனி சக்திக்கு ஒடுங்கிடமாக இருக்கும் பொருளே! அகங்கரித்துக் குழறித்திரியும் அடியேனுக்குங் கதிகிட்டுமோ என்கின்றார்

பெருமைக் கேயிறு மாந்து பிதற்றிய
கருமிக் கைய கதியுமுண் டாங்கொலோ
அருமைச் சீரன்பர்க் கன்னையொப் பாகவே
வருமப் பேரொளி யேஉன்ம னந்தமே.

(ப-ரை) அருமை - அருமையாகிய, சீர் - சிறப்பையுடைய, அன்பர்க்கு-அடியார்களுக்கு, அன்னை-தாய்க்கு, ஒப்புஆகவே-சமானமாகவே, வரும்-வருகின்ற, அ-அந்த, பேர்-பெரிய, ஒளியே - சோதியே, உன்மனி - உன்மனிசக்

திக்கும், அந்தமே-ஒடுங்கும் இடமாக இருக்கும் பொருளே!, பெருமைக்கே-பெருமையின்பொருட்டாகவே, இறுமாந்து-அகங்கரித்து, பிதற்றிய-குழறிய, கருமிக்கு-தீவினையேனுக்கு, ஐய-அப்பனே! (இறைவனே!), கதியும் - நற்கதியும், உண்டாங்கொலோ-உண்டாகுமோ? உண்டாகாது என்பதுபொருள் எ-று.

(வி-ரை) உலக ஆடம்பரங்களைவிரும்பி அகங்காரங்கொண்டு பிதற்றித் திரிகின்றேன்; அதுகொண்டு பல வினைகளைப் புரியாநிற்கின்றேன். இப்படிப் பட்ட எனக்குக் கதிபெற வழியுண்டோ என்றபொருளில், 'பெருமைக்கே யிறுமாந்து பிதற்றிய கருமிக்கைய கதியுமுண் டாங்கொலோ' என்றார். உன்மனிசத்தியாவது:—சாந்தியதீதை. இது சிவசாதாக்கியத்திற்போய் ஒடுங்கும். இது காரணவியாப்திக்கு எட்டாததாய் அதிசூக்குமமாய் இருக்கும் இது அளவுபடாத பிரகாசமாக இருக்கும். இது தியான ரூபத்தில் விளங்கும். இது சர்வவியாபகமாக இருப்பது. இனி, 'உன்மனுந்தம்' என்பதற்கு பராற்பரநாதமுடிவு எனக் கூறினும் பொருந்தும். 'பெருமைக்கே' என்றதின் ஈற்றேகாரம் தேற்றப்பொருளில்வந்தது. 'இறுமாப்பு'-அகங்காரம். 'பிதற்றல்' - முறைபிறழப்பேசல். 'கருமி'-கருமங்களைச் செய்வோன். ஈண்டு வினைகளைப்புரிவோன் என்ற பொருளது. 'கதி' என்றது ஒப்வை. 'கொல்' ஐயப்பொருள் குறித்துவந்தது என்னலுமாம். கொல், ஓ-அசைகள். 37

இறைவனே! பாவியேன் கல்மனத்தை உருக்கி யருள்வா
யாக என்கின்றார்

உன்ம னிக்கு ளொளிர்பரஞ் சோதியாம்
சின்ம யப்பொரு ளேபழஞ் செல்வமே
புன்ம லத்துப் புழுவன்ன பாவியேன்
கன்ம னத்தைக் கரைக்கக் கடவதே.

(ப-ரை) உன்மனிக்கு-உன்மனிசக்திக்கு, உள்-உள்ளே, ஒளிர் பிரகாசிக்கின்ற, பரம்-மேலாகிய, சோதி - ஒளி, ஆம் - ஆகிய, சின்மயம் - ஞானாகர, பொருளே-பொருளே!, பழம்-பழமையாகிய (பண்டை), செல்வமே-செல்வமே (பாக்கியமே), புல் - அற்பமாகிய, மலத்து - மலத்தினுள்ளேயுள்ள, புழு-புழுவை, அன்ன-ஒத்த, பாவியேன்-பாவியாகிய அடியேனுடைய, கல் - கல் போன்ற கடினமுடைய, மனத்தை - நெஞ்சை, கரைக்க - உருக்க, கடவது-கடவை எ-று.

(வி-ரை) இறைவன் உயர்ந்த ஒளிப்பிழம்பாய் நிற்றலின் 'பரஞ்சோதியே' என்றார். உலகிருளை ஒழிக்கும் சுடரொளிபோலாது, அகவிருளொழிக்கும் ஆதியஞ்சோதியென்பதே பொருள்; இது, பரம்சோதி. இறைவன் ஞானமயன் ஆதலின் 'சின்மயப்பொருளே' என்றார். 'சின்மயம்' இது சித்து+மயம் என இருவடசொற்களின் சந்தி. 'சித்து'-அறிவுடைப்பொருள். இறைவன் தொன்மைக்குந் தொன்மையன் ஆதலின் 'பழஞ்செல்வமே' என்றார். இதனை,



"பரமானந்தப் பழங்கட லதுவே"

"சொற்பதங் கடந்த தொல்லோன்"

"பழமை தனக்கும் பழமை யானவனே"

என வரும் **ஆன்றோர்** அமுத மொழிகளாலும் அறியலாம்.

என் மனங் கல்லைப்போற் கடினமுடையது. அது நின்னாலன்றிக் கரைக்கப்படுவதன்று என்பார் 'கன்மனத்தைக் கரைக்கக்கடவதே' என்றார். இதனை,

"கீழ்கட்குக் கல்லினும் வல்லென்னு நெஞ்சு" எனவும்,

"கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுந்தி வினைகடிந்த வேதியனை"

என்ற **ஆன்றோர்** வாக்குகளாலும் அறியலாம். இறைவன் அன்பர் மனத்தை யுருக்கி ஆனந்தம் பெருக்குவோன் என்பதனை,

"செப்பார் முலைபங்கன் றென்னன் பெருந்துறையான்
றப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினன்"

என **மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கா** லறியலாம். எ-சற்றசை. 38

இறைவனே! இதுவரை அடியேன் உன்னைவந்து சேர்ந்திலேன்
இதுவென்ன என் அறிவு

கரையி லின்பக் கடலமு தேஇது
வரையி ஞானை வந்து கலந்திலேன்
உரையி லாவின்ப முள்ளவர் போலவித்
தரையி லேநடித் தேனென்ன தன்மையே.

(ப-ரை) கரை-அளவு (எல்லை), இல்-இல்லாத, இன்பம் - ஆனந்தமாகிய, கடல்-கடலின்கண்ணே எழுந்த, அமுதே - அமிர்தமே!, இதுவரையில்-இதுகாறும், நான்-அடியேன், உனை-தேவரீரை, வந்து-கிட்டிவந்து, கலந்திலேன்-சேர்ந்தேனில்லை, உரை - பேச்சு, இலா - அற்ற, இன்பம் - சிவாநந்தத்தை, உள்ளவர்-பெற்றுள்ளவர், போல - ஒப்ப, இ-இந்த, தரையிலே உலகத்திலே, நடித்தேன் - நடித்துக்கொண்டிருந்தேன், என்ன - இது எப்படிப்பட்ட, தன்மை-குணமாகும்? எ-று.

(வி-ரை) இறைவன் பேராநந்தக்கடலாகவும், அதில் விளைந்த அமிர்தமாகவும் இருத்தல்பற்றி 'கரையி லின்பக் கடலமுதே' என்றார். இதுபற்றியே **மணிவாசகரும்**,

"பரமா னந்தப் பழங்கட லதுவே" என்றார்

"பரமா னந்தப் பழங்கடற் பிறந்த
உரமார் ஞான உயர்திரு வமுதே" என்றார் ஓர் **பெரியாரும்**.

இறைவன் எல்லாப் பொருளிலும் கலந்துங் கலவாதிருந்தாலும் அநு பவித்தார்க்கே இன்பந்தருமாதலினாலும் இதுவரை நீ கலந்திருந்தும் நான் அதனை அறியாதவனாய் நான் கலவாதிருந்தேனே அவ்வானந்தத்தை அநு பவியாதிருந்தேனே என்பார் 'இதுவரையில் நானுனைவந்து கலந்திலேன்' என்றார். இறைவன் எல்லாருள்ளத்துங் கலந்து அவர் உள்ளங்களைக் கவர் வோன் என்பதை,

"என் உள்ளங் கவர்கள்வன்"

"கருத்தினி லொளித்தருள் கள்வன்"

என்பனபோன்ற **பெரியார்** வாக்குகளாலும் அறியலாம்.

உன்னைக் கலந்து இன்பத்தை அனுபவியாதிருந்தும் உன்னைக் கலந்து இன்பந்துய்த்த அடியான்போல் நடித்தேன் என்பார் 'உரையிலா வின்ப முள்ளவர்போலத், தரையிலே நடித்தே னென்ன தன்மையே' என்றார். இதனை,

"நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே"

என்ற **மணிவாசகர்** திருவாக்கோடு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது. கரையில்லா வின்பக் கடலமுதென்றது, கடலுக்குங் கடவுளுக்கும் ஒக்கும் எனும், 'அமுதம்' என்றது, அழிவற்ற இன்பந் தருதலினாற் கூறியது. எ-ஈற்றசை 39

இறைவனே! மாதர்களின் பொய் இன்பத்தில் அழுந்திக்கிடந்தமை இனிப் போதும் என்கின்றார்

மையு லாம்விழி மாதர்க டோதகப்
பொய்யி லாழும் புலையினிப் பூரைகாண்
கையி லாமல கக்கனி போன்றவென்
ஐய னேஎனை யாளுடை யண்ணலே.

(ப-ரை) கையில் - (உள்ளங்) கையில் இருக்கின்ற, ஆமலகம்கனி-நெல்லி பழம், போன்ற-ஒத்த, என்-அடியேனின், ஐயனே - தந்தையே! எனை அடி யேனை, ஆளுடை-ஆண்டுகொண்டருளிய, அண்ணலே-பெரியோனே!, மை- அஞ்சனம், உலாம்-விளங்கும், விழி-கண்களையுடைய, மாதர்கள்-பெண்களி னுடைய, தோதகம் - வஞ்சகம்பொருந்திய, பொய்யில் - பொய்இன்பத்தில், ஆழும்-அழுந்துகின்ற, புலை-நீசத்தன்மை, இனி-இனி, பூரை-போதும் எ-று.

(வி-ரை) மாதர்கள் கண்ணேமிக மயக்குந்தன்மையுடையது. இதுபற்றி கண்ணிற்குக் கடுவையும், வேலையும், வாளையும், அம்பையும் ஒப்புக்கூறி யுளார்கள் ஆன்றோர். அதன் வேகத்தை அதிகப்படுத்தமையுந் தீட்டி விட்டாலோ அதன் கொடுமை கூறவொண்ணாதது என்பார் 'மையுலாம் விழிமாதர்' என்றார். ஈண்டு 'மைவிழி யார்மனை அகல்' என்ற **ஒள்வை** **வாக்கு** கருதற்பாலது. இதுபற்றியன்றோ **மணிவாசகரும்**,



"மைய லாயிந்த மண்ணிடை வாழ்வெனு மாழியு ளகப்பட்டுத்
தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான் தலை தடுமாறாமே
பொய்யெ லாம்விடத் திருவரு டந்துதன் பொன்னடி யினைகாட்டி
மெய்ய னுய்வெளி காட்டிமுன் னின்றதோ ரற்புதம் விளம்பேனே"

என்றார்.

"உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத் தீயி னொப்பாய்
விழைதரு வேனை விடுதி கண்டாய்"

என்ற **மணிவாசகர்** வாக்குங் காணத்தக்கது. இறைவன் அடியார்க்கு எளியனாதலின் 'கையிலாமல கக்கனி போன்றவென் னையனே' என்றார். இதனை,

"தானே புவந்தெங் காதலத்து மேவாவமர்ந்த மாமணியைத்
தொழுது வினைக்கு விடை கொடுப்பாம்"

எனவும் **பிரபுலிங்கலீலை**.

"தடக்கையா நெல்லிக் கனியெனக் காயி" எனவும் **திருவாசகம்**.

"மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்
கையிலா மலகக்கனி யொக்குமே" எனவும் **தேவாரம்**.

"ஒருபொரு ளல்லா நாயேன் உளங்குடி கொண்ட நாதன்
கருணையா லங்கை நெல்லிக் கனியென மேவி வந்து
இருளுறு மனத்த னேனை எடுத்திழுத் தின்ப நல்கி
தெருளுற வைத்த சோதி திருவடி யென்றும் வாழி"

எனவும் வருஞ் செய்யுள்களாலறியலாம். 40

இறைவனே! நீ அருள்செய்தால் பசுத்துவம்நீங்கி மனோலயம்பெற்று உய்வே னெனல்

அண்ண லேஉன் னடியவர் போலருட்
கண்ணி னாலுனைக் காணவும் வாவெனப்
பண்ணி னாலென் பசுத்துவம் போயுயும்
வண்ண மாக மனோலயம் வாய்க்குமே.

(ப-ரை) அண்ணலே - பெரியோனே!, உன் - தேவரீரது, அடியவர்- தொண்டர்களை, போல்-போல, அருள்-(தேவரீரது திருவருள்), கண்ணினால்- கண்ணினாலே, உனை-தேவரீரை, காணவும்-தரிசிக்கவும், வாவென-வாவென்று, பண்ணினால்-அடியேன்சொல்லும்படிச் செய்தனையாயின், என்-அடியேனின், பசுத்துவம் போய்-சீவத்தன்மை நீங்கி, உய்யும் - பிழைக்கும், வண்ணம்-விதம், ஆக-ஆக, மனோ-மனத்தின், லயம்-ஒடுக்கம், வாய்க்கும்-கைகூடும் எ-று.

(வி-ரை) இறைவன் யாராலும் அணுகுதற்கு (நெருங்குதற்கரிய புகழுடையன்) அரிய புகழுடையோன் ஆதலினால் 'அண்ணல்' என்றார். அண்ணல் - பெருமைபொருந்தியவன்; பெருமையைப் பிறருக்குத் தருபவ

னென்று மாறும். உயிர்களுக்குச் சிவதரிசனங் கிட்டுமாயின் ஆனந்தம் எய்தும். சிவதரிசனம் பெறற்குப் பசுபோதம் நீங்கவேண்டும். பசுபோத மகன்று சிவபோதம் பெற்றவரே சிவதரிசனம் பெறற்கு உரியர் ஆவர் பசுபோதங் கழல்வதற்கு மனோலயம் வேண்டும். சிவபோதம்பெற்றுச் சிவதரி சனம் உற்றவரே சிவானந்தப்பேறு பெற்றவராவர். இவர்களே சிவனடியவர் எனப் பெறுவோர். சிவதரிசனம் அருட்கண்ணாலேயே காணற்கு உரிய தாகும். இதுபற்றியே, 'அண்ணலேயுன் னடியவர் போலருட் கண்ணி னாலுனைக் காணவும்' என்றார். இதனை,

"பண்ணிய தவத்தி னாலே பரன்குரு வாகி வந்தே
திண்ணிய ஞான மூட்டத் திகழ்மனோ லயந்தா னெய்தும்
கண்ணிய லயத்தா லெங்கோன் காட்சியு மெய்து மெய்தப்
புண்ணிய சிவானந் தப்பேர்ப் புணரியின் மூழ்க லாமே"

என்ற **ஆன்றோர் வாக்கா**னும் அறியலாம்.

ஊனக்கண்கொண்டு காண்பது காட்சியன்று ஞானக்கண்ணதுகொண்டு உத்தமனைத் தன்னுள் காண்பதே ஆனந்தம் எனப் பெரியார் கூறுவதும் இதுபற்றியன்றோ,

"அறிவுதனைக் கொண் டறிவுதனைக் கண்டு" எனவும்,

"காட்டு வித்தா லாரொருவர் காணாதாரே" எனவும்,

**பெரியார்** கூறியபடி இறைவனை அவன் அருளால் காணவேண்டி யிருத்த லின் 'அருட் கண்ணி னாலுனைக் காணவும்' என்றார். 'பசுத்துவம்' என்றது பசுபோகத்தை. 'மனோலயம்' என்றது மனம் இறைவன்பாற்போய் ஒடுங்குகை. 'உனை' இது 'உன்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். 'உயும்' இது 'உய்யும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'உய்தல்' உஜ்ஜீ வித்தல், பிழைத்தல் என்னும் பொருளது. மனம்+லயம்=மன+லயம்= மனோலயம். இது தீர்க்கசந்தி. 41

இறைவனே! இரவும் பகலுஞ் சேட்டையில் இருந்து மௌனி மௌனி என்று நடிக்கும் வஞ்சனேனுக்கும் உய்வு உண்டோ?

வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென்
றேய்க்குஞ் சொற்கொண் டிராப்பக லற்றிடா
நாய்க்கு மின்பமுண் டோநல் லடியரைத்
தோய்க்கு மானந்தத் தூவெளி வெள்ளமே.

**(ப-ரை)** வாய்க்கும் - வாயினுக்கும், கைக்கும்-கையினுக்கும், மௌனம்-மௌனம், மௌனம்-மௌனம், என்று-என்று, ஏய்க்கும்-ஏமாற்றும், சொல்-சொல்லை, கொண்டு - கொண்டு, இரா - இரவும், பகல் - பகலும், அற்றிடா-அகன்று ஒழியாத, நாய்க்கும்-நாயனையேனுக்கும், இன்பம்-சுகம், உண்டோ-உண்டாகுமோ, நல்-நல்ல, அடியரை-தொண்டர்களை, தோய்க்கும் - முழுகு



விக்கின்ற, ஆனந்தம் - இன்பமாகிய, தூ - பரிசுத்தமான, வெளி-ஆகாயத்தி னின்றும், வெள்ளமே-ஒழுகாநின்ற பிரவாகமே! எ-று.

**(வி-ரை)** வாயாற் பேசாமலும் கையாற் சாடைகாட்டாமலும் இருந்து விட்டால் மனிதர் தம்மை மௌனஞானகன் என நினைப்பரென்று வாய் பேசாது கைச்சாடை காட்டாதிருக்கின்றேன். மனோமௌனம் பெற்றிலேன் என்பார், 'வாய்க்குங் கைக்கு மௌன மௌனமென் றேய்க்கும்' என்றார். மனோவடக்கமும், பஞ்சேந்திரிய ஒடுக்கமும் இன்றி வேடங்காட்டுதல் உலகை ஏய்த்தற்காதலின் 'ஏய்க்கும்' என்றார். இதனை,

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்" என்றும்,

"தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று" என்றும்,

"வானுயர் தோற்ற மென்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்"

என்றும் எழுந்த **நூல்க**ளால் நன்கறியலாம்.

'இராப்பகல்' என்றது கேவல சகலத்தை. நாய், கக்கியதை மீண்டும் உண்கின்ற தன்மைபோல வெறுத்தவைகளை மீண்டும் விரும்பிக்கொள்ளுந் தன்மையுடைமையால் 'நாய்க்கும்' என்றார். 'நாய்க்கும்' என்றதன்கண் ணுள்ள உம்மை இழிவுச் சிறப்பும்மை. தூவெளி என்றது சிதாகாசத்தை. ஈண்டு சிதம்பரத்தைக் குறித்தது. 'வாய்க்குங் கைக்கும்' என்பதன்கண் ணுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. 'உண்டோ' என்றதன் கண்ணின்ற ஓகாரம் எதிர்மறை வினாவில் வந்தது. 'தோய்த்தல்' முழுகு வித்தல். 42

இறைவனே! நீ தாயுந் தந்தையும் அன்றோ யாம் நும் பிள்ளைகள் அன்றோ எனல்

தூய தான துரிய வறிவெனும்
தாயுநீ யின்பத் தந்தையு நீயென்றால்
சேயதா மிந்தச் சீவத் திரளன்றோ
ஆயும் பேரொளி யான வகண்டமே.

**(ப-ரை)** ஆயும்-அறிஞரால் ஆராயப்படுகின்ற, பேர் - பெரிய (பரமாகிய), ஒளி-ஜோதி, ஆன-ஆகிய, அகண்டமே - வியாபகமாகிய பொருளே!, தூயது-பரிசுத்தம் உடையது, ஆன - ஆகிய, துரியம் - துரியம், அறிவு - ஞானம், என்னும்-என்கின்ற, தாயும்-அன்னையும், நீ-நீ, இன்பம் - சுகத்தினைக்கொடுக் கும், தந்தையும்-பிதாவும், நீ-நீ, என்றால்-என்று கூறின், இந்த-இந்த, சீவன்-உயிர், திரள் - கூட்டம், அன்றோ - அல்லவோ, சேய் - பிள்ளைகள், ஆம்-ஆகும் எ-று.

(வி-ரை) இறைவன் சகல ஆன்மாக்களுக்கும் தந்தை. அவனினின்றும் நீங்கா அருட்சத்தியே தாய். இதுபற்றியே **திருநாவுக்கரசரும்**,

"ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன் றோன்றினராய்
மூன்றா யுலகம் படைத் துகந்தான்" என்றார்.

'துரியம்' என்பது சுத்தநிலையை. இது நான்காவதுநிலை. இனி, துரிய அறிவு என்பதனை அருட்சிவம் என்பர். இறைவன் தந்தையுந்தாயும் ஆங்கால் ஆன்மகோடிகள் எல்லாம் சேய்கள் என்பன வெளிப்படை. இது ஏகான் வாதியை மறுத்தற்கு எழுந்த செய்யுளாகும். இன்னும் இறைவனைத் தந்தையென்றும், இறைவியைத் தாயென்றுங்கொண்டன்றோ, 'விடையதா நிறையே தாதை மற்றவன்பான் மின்னெமதன்னை' என்றார் பெரியார். இதுகொண்டே 'தாயுநீ யின்பத் தந்தையுநீ' என்றார். 'எனும்' இது 'என்னும்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'அகண்டம்' கண்டிக்கப்படாதது என்னும் பொருளது. 'பேரொளி' என்றது பரஞ்ஜோதியாகிய இறைவனை. ஏ-ஈற்றசை. 43

இறைவனே! தேவரீரது வியாபக இயற்கையானது தற்போதத்துக்குள் அடங்குமோ மோனிகள் உன்னைக் கூடுவர் என்கின்றார்

அகண்ட மென்ன வருமறை யாகமம்
புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ
செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை
உகந்த பேருனை யொன்றுவ ரையனே.

(ப-ரை) ஐயனே - கடவுளே!, அகண்டம் - வியாபகம், என்ன - என்று, அரும்-அரிய, மறை-வேதங்களும், ஆகமம்-ஆகமங்களும், புகன்ற-சொல்லிய, நின் - தேவரீரது, தன்மை - இயற்கையானது, போதத்து - தற்போதத்துக் குள்ளே, அடங்குமோ-உள்ளாகுமோ?, செகங்கள்-உலகங்கள், எங்கும் - முழுவதும், திரிந்து-அலைந்து, நல்-நல்ல, மோனத்தை - மோனநிலையை, உகந்த பேர்-பெற்றோர்கள், உனை-தேவரீரை, ஒன்றுவர்-வந்துகூடுவர் எ-று.

(வி-ரை) இறைவன் கண்டிக்கப்படாதவனாகி எங்கும் வியாபகனாக இருத்தலின் 'அகண்டமென்ன' என்றார். இறைவன் பசுபோதத்தால் அறியப்பெறுந் தன்மையுடையவனன்று அச்சிவபெருமான் திருவருள் பெற்று அச்சிவபோதத்தாலே அறியப்பெறுபவனாதலின், 'போதத்து அடங்குமோ' என்றார். வேதாகமம், இறைவனால் அருளப்பெற்றமையானும், இறைவன் நிலையை உணர்த்துகின்றமையானும் 'அருமறை யாகமம்' என்றார். வேதமும் ஆகமமும் உணர்த்த அரியாது திகைத்து 'அகண்டம்' இறைவன் என முடிவிற்கூறியது எனில் பசுஞானத்தாற் கூடியவனன்று இறைவன் என்பார் 'அகண்டமென்ன வருமறை யாகமம் புகன்ற நின்றன்மை போதத் தடங்குமோ' என்றார். தலங்கடோறுஞ் சென்று, தீர்த்தங்கடோறும் படிந்து, மூர்த்திகளையெல்லாம் முறையே தரிசித்துவந்த புண்ணியத்தால் சற்குருவாய்க்கப்பெற்று ஞானோபதேசம் பெற்றவர்களே உன்னைப் பொருந்



துவர் என்பார் 'செகங்க ளெங்குந் திரிந்துநன் மோனத்தை உகந்த பேருனை யொன்றுவ ரையனே' என்றார். மோனநிலையைத் தந்தருளுஞ் சற்குரு செகங்களெங்குந் திரிந்தவர்க்கே கிடைக்குமென்பதனை, இவரே

"மூர்த்திதலந் தீர்த்த முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்ற **பராபரக்கண்ணியா**லும் அறியலாம்.

போதம், அறவு, ஞானம், ஈண்டு பசுஞானத்தைக் குறித்தது. "மோனமென்பது ஞான வரம்பு" என்பது ஈண்டு உணரத்தக்கது. 44

இறைவனே! உன்னையன்றி வேறு தெய்வத்தை அஞ்சலிக்கவும் எண்ணேன் எனல்

ஐய னேஉனை யன்றி யொருதெய்வம்
கையி னாற்றொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னாமுனக் கேவெளி யாகுமே.

(ப-ரை) ஐயனே-கடவுளே!, உனை-தேவரீரை, அன்றி-அல்லாமல், ஒரு-வேறொரு, தெய்வம்-தெய்வத்தை, கையினால்-கைகளினால், தொழவும் - அஞ்சலித்தற்கும், கருதேன் - எண்ணேன், கண்டாய் - தேவரீர் கண்டிருக்கின்றீரன்றோ?, பொய்யன் - பொய்கூறுவோன், ஆகிலும் - ஆனாலும், பொய்யை-இந்தவிஷயத்தில்பொய்யை, உரையேன்-கூறேன், சுத்த-பூரண, மெய்யன்-சத்தியன், ஆம்-ஆகிற, உனக்கே-தேவரீருக்கே, வெளிஆகும் - தெளிவாகத் தோன்றும் எ-று.

(வி-ரை) பொருளாயிருப்பவனும், தேவர்தம் தேவாய் விளங்குபவனும், ஒப்புயர்வற்றவனும் சிவபெருமானாதலினாலும், எல்லாம் அருளவல்லான், எல்லாஞ் செய்யவல்லான் சிவபெருமானாதலினால் 'ஐயனே யுனையன்றி யொருதெய்வம் கையினாற் றொழவுங் கருதேன் கண்டாய்' என்றார். இதுபற்றியன்றோ **மணிவாசகரும்**,

"பழுதிறொல் புகழான் பங்கநீ யல்லாற்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்" எனவும்.

"திருப் பெருந்துறை யுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ வெனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்" என்றும்,

"கற்றைவார் சடையெம் மண்ணல் கண்ணுதல் பாத நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே"

எனவும், திருவாய்மலர்ந்தது கொண்டுதெளிக.

'கையினாற் றொழுவுங் கருதேன்' என்றதனால் வாயாற்றுதியேன், மனத்தாற் சிந்தியேன் என்பது கூறியதாயிற்று. இது, உபலக்கணத்தாற் போந்தமை. மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரணத்துள் காய வணக்கமே இல்லாதபோழ்து ஏனையவணக்கம் எங்ஙன் உண்டாம் உண்டாகாது என்பதனை உய்த்து உணரவைத்தார். 45

இறைவனே! ஞானகாயமும் ஞானவொளியுமாய் இருக்கின்ற நீயே எல்லாமென வறிதலே கல்வியாம் எனல்

வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
ஒளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தவன் றேகற்ற கல்வியே.

(ப-ரை) வெளியில்-சிதாகாயத்தில், நின்ற-நிலைபெற்றிருந்த, வெளியாய்-ஞானகாயமாய், விளங்கிய - பிரகாசித்த, ஒளியில் - பூதவொளியில், நின்ற-நிலையுற்றிருந்த, ஒளி-பரவொளி, ஆம்-ஆகும், உன்தன்னை-தேவரீரை, நான்-அடியேன், தெளிவு - அடியேனுக்கு ஞானத்தெளிவை, தந்த - கொடுத்த, கல்லால் - கல்லாலமரத்தின், அடி - நிழலில் (இருந்துபதேசித்தருளிய) தேவு-தட்சணாமூர்த்தியாகியதெய்வம், என்று-என்று, களி-மனமகிழ்ச்சி, பொருந்த-அமைய, அன்றே-அல்லவா, கற்ற-அடியேன் கற்ற, கல்வியே-கல்விகள் எ-று.

(வி-ரை) இறைவன் சிதம்பரமன்றில் ஆகாயத்தி லாகாயமாக விளங்குகின்றான் ஆதலினாலும் பூத ஒளியில் காரண ஒளியாய் நிற்கின்றானாதலினாலும், 'வெளியி னின்ற வெளியாய் விளங்கிய ஒளியி னின்ற வொளியாமுன்தன்னை' என்றார். இறைவன் அட்டமாவுருவினன் ஆதலினாலும், அவ்வெட்டுத் திருவுருக்களில் ஆகாயமும் ஒன்று ஆதலினாலும், பூத ஆகாயத்துக்குக் காரண ஆகாயமாய் இருத்தலினாலும், "வெளியினின்ற வெளியாய்" என்றார். கண்ணுக்குத்தோன்றும் ஒளி பூத ஒளி இது கண்ணுக்குப் புலனாவது. இவ்வொளிக்குள் காரண ஒளியாய் ஞானக்கண்ணாற் காண்கின்றவர்களுக்குக் காணக்கூடியவனாக இருக்கின்றானாதலின், 'விளங்கிய ஒளியினின்ற வொளியாய்' என்றார். இதனைப்,

"அம்பலத்து வெளிக்கு ளோங்கு மருவொளியே சோதிச் சோதி
இம்பருரை வருவ மெட்டாய் இருப்போனே எந்தை யாதி
அம்புதமக் கண்ணன் வேதா அரிவரிய சோதிக் குன்றே
கம்பமதக் களிற்றுப் போர்வைக் கண்ணுதலெம் முயிரா மன்றே"

என்ற **ஆப்தர்வாக்கா**னும் அறியலாம்.

'ஒளியினின்ற ஒளி' என்றது பரவொளி, ஆனந்த ஒளி எனப்பெறும். இறைவனாகிய பரவெளியே, அப்பரவொளியே முன்னாள் கல்லாலின் நீழலில் நின்று மோன உருவந்தாங்கி நால்வருக்கு அருள் செய்தது ஆதலினாலும், அதுவே அடியேற்கு ஆசாரியத்திருக்கோலம் பூண்டு மௌனதேசிகனாய்



வந்து தானாந்தன்மைதந்து ஆனந்தத்துப் படியவைத்ததாதலினாலும், உன்றன்னை நான், 'தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று களிபொருந்த' என்றார். கற்றதன்பயன் கண்ணுதலோன் கழல்தொழுவே யாதலினால் 'பொருந்த வன்றே கற்ற கல்வியே' என்றார். 'அன்றே' என்றதன்கண்ணுள்ள ஈற்று 'ஏ' வினாப்பொருளில் வந்தது. எ-ஈற்றசை. 46

தில்லை நடராஜனே! கரியகூந்தலையுடைய பெண்கள் மையலிற் பட்டழியவோ அடியேன் பிறந்தது எனல்

கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்
தல்லை யொத்த குழலின ராசையால்
எல்லை யற்ற மயல்கொள வோஎழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே.

(ப-ரை) எழில் - அழகிய, தில்லையில் - சிதம்பரத்தில், திகழும் - விளங்குகின்ற, திரு - அழகிய, பாதனே - திருவடிகளையுடையவனே!, கல்லை-கல்லின் தன்மையை, உற்ற-அடைந்த, கருத்தினர் - மனத்தை யுடையவர்களும், கார்-மழைமேகத்தின், நிறத்து-நிறத்தை உடைமையால், அல்லை - இரவினை, ஒத்த-ஒத்த, குழலினர் - கூந்தலையுடைய பெண்களின், ஆசையால் - காதலினால், எல்லை-அளவு, அற்ற-கடந்த, மயல் - மயக்கத்தை, கொள்ளவோ - கொண்டடியேன் அழியவோ பிறந்தது எ-று.

(வி-ரை) மாதர் மனம் கடினமுடைமையின் 'கல்லையுற்ற கருத்தினர்' என்றார். ஒளியைக்கண்டு உள்ளம் உருகவேண்டியதிருக்க கரிய இருளைக் கண்டு உள்ளம் உருகுதல் வியப்பே, இருளைக்கண்டு அஞ்சி அகன்று ஒளியையன்றே அடையவேண்டும் என்பார் 'கல்லையுற்ற கருத்தினர் கார்நிறத்து அல்லை யொத்த குழலின ராசையால் எல்லை யற்ற மயல் கொளவோ' என்றார். சுத்தவேதாந்தச் சுடர்முடியிற் றிகழும் திருவடி அருள்மயமானதாவன்றே ஆன்மாக்களை உய்விக்கத் தில்லைமன்றிற் றிருநடனம் புரிகின்றது அதனைக்கண்டு இன்புற்று பிறந்த பயனைப்பெறாது வீணே மாதராசையால் மாழ்குகின்றேன் மடிகின்றேன் மேலும் மேலும் செத்துப் பிறக்க வழியைத் தேடுகின்றேன் என்ற அவல நெஞ்சினராய் 'மயல் கொளவோ எழில் தில்லையிற் றிகழுந் திருப்பாதனே' என்றார். இதனை,

"நாரியர் மோகத் தாலே நாளுமே யுழன்று நெஞ்சம்
தேரிட வழியே யின்றித் திரிதரு வீரே கேண்மின்
பாரினிற் பிறவா முத்திப் பயன்பெற வேண்டு வீரேல்
சீரிய வம்ப லத்தான் திருவடி காண வாரீர்"

என்றதனாலும் அறியலாம்.

இன்னும், 'தையலார் மயலிற்பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ என்ற **பரஞ்சோதிமுனிவர்** வாக்கும் கருதற்பாலதாம். 'அல்லையொத்த குழலினர்' இது அன்மொழித்தொகை, பெண்களைக் குறித்தது. 'ஆசை

யால்' ஈண்டு மூன்றனுருபு கருவிப்பொருளில் வந்தது. 'கொள' இது 'கொள்ள' என்றதன் தொகுத்தல் விகாரம். 'பாதனே' சினையாகு பெயர்; ஈண்டு குஞ்சித பாதத்தையுடைய நடராஜமூர்த்தியைக் குறித்தது. 47

பார்வதி பாகனாகிய இறைவனே ஞானாசாரியனை வணங்கின் பிறவிக்குரிய கருமங்கள் இல்லையாம்

திருவ ருட்டெய்வச் செல்வி மலைமகள்
உருவி ருக்கின்ற மேனி யொருபரம்
குருவை முக்கணெங் கோவைப் பணிநெஞ்சே
கருவி ருக்கின்ற கன்மமிங் கில்லையே.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, திருவருள் - திருவருள் என்னும், தெய்வம்-தெய்வத்தன்மையாகிய, செல்வி - செல்வத்தை உடையவளாகிய, மலை - மலையாசனின், மகள் - மகளாகிய பார்வதிதேவியின், உரு - வடிவமானது, இருக்கின்ற - பொருந்தியிருக்கின்ற, மேனி - திருமேனியையுடைய, ஒரு-ஒப்பற்ற, பரம் - மேலாகிய, குருவை - பரமாச்சாரியனை, முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, எம் - அடியோங்களுடைய, கோவை - இறைவனை, பணி-வணங்குக, (நீ வணங்குவையே எனின்,) கருத்தாயின் கருப்பவசத்தில் இருக்கின்ற-இனி இருத்தற்கு உரிய, கன்மம்-வினைகளானவை, இங்கு - இவ்வுலகத்தில், இல்லை-(நமக்கு) உண்டாவதில்லை எ-று.

(வி-ரை) இறைவன் வாமபாகத்து எழுந்தருளியிருக்கும் பார்வதிதேவி இறைவனின் அபின்னசத்தியாகிய திருவருளாதலினாலும் அச்சத்தி ஒருகால் இமோற்பருவதராஜன் புத்திரியாகத் தோன்றிச் சிவபெருமானை அடைந்தது ஆதலினாலும், மலையாசன் செல்வத் தவப்புத்திரியாகிய அந்தப் பார்வதிதேவியைச் சிவபெருமான் தன் இடப்பாகத்து இருக்கவைத்துக்கொண்டானாதலினாலும், 'திருவருட் டெய்வச் செல்வி மலைமகள் உருவிருக்கின்ற மேனி' என்றார். பார்வதிபாகனாகிய அந்தச் சிவபெருமானே அருளால் ஆசாரிய வடிவங்கொண்டு அருளவந்தான் ஆதலினாலும், அவன் ஞானாசிரியத் திருவடிவின் வந்தானாலும் திரிநேத்திரதாரியாகிய சிவனே என்பார் 'ஒரு பரம் குருவை முக்கணெங்கோவை' என்றார். இறைவனைப் பணிவார்க்குப் பிறப்பில்லை என்பது சத்தியமாதலினாலும், பிறப்புக்குக் கன்மம் காரணமாதலினாலும் 'முக்கணெங் கோவைப் பணிநெஞ்சே கருவிருக்கின்ற கன்மமிங் கில்லை' என்றார். இதனை, 'பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா ரிறைவனடிசேரா தார்' என்ற **திருக்குறள்** நன்கு வலியுறுத்தும் 48

அருளும் இறைவன் உள்ளத்துள்ளே இருக்க வினையேது, ஒன்றும் என்னைப் பற்றாது

கன்ம மேது கடுநர கேதுமேற்
சென்ம மேது எனைத் தீண்டக் கடவதோ
என்ம னோரத மெய்தும் படிக்கருள்
நன்மை கூர்முக்க ணாத னிருக்கவே.



(ப-ரை) என் - அடியேனின், மனம்-மனதின், ரதம்-விருப்பம், எய்தும்-(அடியேன்) அடையும், படி - விதமாக, அருள் - கிருபையைச்செய்கின்ற, நன்மை - நலம், கூர் - மிகுந்த, முக்கண் - திரிநேத்ரங்களையுடைய, நாதன்-இறைவன், இருக்க (என் உள்ளத்தின்கண்) இருக்கையில், கன்மம்-வினைகள், ஏது-ஏது?, கடு - கடுமையாகிய, நரகம் - நரகவேதனை, ஏது-ஏது?, மேல்-இனி மேல்வரும், சென்மம்-பிறப்பு, ஏது-ஏது? (மேற்கூறிய மூன்றனுள் ஏதவும்), தீண்ட-அடியேனைப்பற்ற, கடவதோ-கூடியதாமோ?, எ-று.

(வி-ரை) இறைவன் அந்தர்யாமியாய் எல்லா ருள்ளத்துள்ளும் இருந்து வருவ தன்மையினும் உண்மை. அவ்வாறு உள்ளத்துள் சார்ந்து உறையும் அக்கள்வனாகிய இறைவனை அந்தர்முகநோக்கால் கண்டு தொண்டு பூண்டு ஆனந்தங்கொண்ட பேர்களுக்கு கர்மமும், அதனால் எய்தும் நரகத்துன்பம் பிறப்பும் இல்லையாதலினால்,

"கன்ம மேது கடுநர கேது மேற்
சென்ம மேதெனைத் தீண்டக் கடவதோ"

என்றார். இதுபற்றியன்றோ,

"அல்ல லென்செயு மருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொண்டன்று னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே"

எனத் **தேவாரம்** முழங்கிற்று. இன்னும்,

"அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம்—
... ... ...
கணபதியைக் கைதொழுதக் கால்"

என்ற **ஔவையார்** வாக்கும் ஈண்டு கவனிக்கற்பாலது.

(ஈண்டு சிவனும் கணேசனும் அபேதம் என்பது அறியத்தக்கது.) 49

பாழ்நெஞ்சே சிவபெருமான் பாதங்களே நமக்குத் தஞ்சம் எனல்

நாத கீதனென் னாதன்முக் கட்பிரான்
வேத வேதியன் வெள்விடை யூர்திமெய்ப்
போத மாய்நின்ற புண்ணியன் பூந்திருப்
பாத மேகதி மற்றிலை பாழ்நெஞ்சே.

(ப-ரை) பாழ்-அடியேனின் பாழாகிய, நெஞ்சே-மனதே!, நாதம்-நாதத்தையும், கீதம்-கீதத்தையும் (உடையவனாகிய), என்-அடியேனுடைய, நாதன்-இறைவன், முக்கண்-திரிநேத்திரங்களையுடைய, பிரான் - பெருமான், வேதம்-வேதமாகவும், வேதியன்-வேதப்பொருளாயும் இருப்பவன், வெள் - வெண்மையாகிய, விடை - இடபத்தை, ஊர்தி - வாகனமாக ஏறி நடத்துபவனுமாகிய

சிவபெருமான், மெய்-உண்மையாகிய, போதமாய்-அறிவாகி, நின்ற - அடியேனுள்ளிருக்கின்ற, புண்ணியன்-தருமமூர்த்தி (இவ் ஆண்டவனுடைய), பூம்-அழகிய, திரு - சிறந்த, பாதமே - திருவடிகளே, கதி-நமக்குப் புகலிடமாகும், மற்று-அதைத் தவிர்த்து வேறு ஒன்று, இலை-நமக்குப் புகலிடமாவது இல்லை (இதை நீ அறி.) எ-று.

(வி-ரை) இசை நாதத்தத்துவத்திலிருந்து உண்டாவதாதலின் 'நாதகீதன்' இறைவன் இசைப்பிரியன். நாதத்தத்துவகை இருப்பவன். இதனுலேயே இறைவற்கு 'சாமகானப் பிரியன்' என்னுந் திருநாமம் ஒன்று ஏற்பட்டது பத்துத்தலை, இராவணனுக்குப் பரிவுகாட்டியது அவன் பாடிய சாமவேத இசையினுலன்றே. பாணபத்திரன் ஆளாக விறகு தலையிற் சுமந்தது அவ் இசையினுலன்றே இதனுலேயே 'நாதகீதன்' இன்னும், இறைவன் என்றும் தான் வீணை வாசிக்கும் வேலையுடையோன் என்பதனை, **ஞானசம்பந்த சுவாமிகள்,**

> "வேயுறு தோளி பங்கன் விடமுண்ட கண்டன்
> நல்ல வீணை தடவி"

என்ற **கோளறு பதிகத்**திற் கூறியது கொண்டுந் தேர்க.

ஞானசம்பந்தர் இறைவனை குழந்தைப் பருவத்திலேயே கண்டுகொண்டவர், ஞானப்பாலை யுண்டவர். ஆதலின் அவர் வாக்குப் பிரமாணமாம். இறைவன் வேதத்திருவுருவாய் விளங்குபவன், வேதப்பொருளாய் இருப்பவன், வேதத்தை அருளிச்செய்தவன் ஆதலின் 'வேதவேதியன்' என்றார். தருமசொரூபியாகிய இடபத்தைத் தான் வாகனமாகக் கொண்டுள்ளவன் ஆதலினுலும், இடபமும் வெண்மைநிற முடையனுதலினுலும் 'வெள்விடையூர்தி' என்றார். இறைவன் பால்போல் பழுதற்ற நெஞ்சத்துத் தருமவான் உள்ளத்தே உவப்போடிருப்பவன் என்னுந் தத்துவார்த்தம் உணரத்தக்கது. 'மெய்ப்போதம் - சிவஞானத்தை. இறைவன் திருப்பாதத்தையே பற்றல் வேண்டும் அதுவே பிறவாநெறி தருவது. மற்றைப் பற்றெல்லாம் பிறப்புக் கேதுவானது பற்றி 'பாதமேகதி மற்றிலை பாழ்நெஞ்சே' என்றார். இதனுனன்றே **திருநாவுக்கரசரும்,**

> 'மற்றுப் பற்றெனக் கின்றிநின் றிருப்பாதமே மனம் பாவித்தேன்
> பெற்றலும் பிறந்தே னினிப் பிறவாத தன்மைவந் தெய்தினேன்
> கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடிமுடி
> நற்றவா வுனை நான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே"

என்றனர். 50

நெஞ்சே! சிவபெருமான் திருவருளைப்பெற்றவர்களே ஞானிகளாவர்; அவர்கள் வாயினின்றும் வருஞ்சொற்களே ஞானச் சொற்கள் எனல்

> மற்று னக்கு மயக்கமென் வன்னெஞ்சே
> கற்றை வாசடைக் கண்ணுத லோனருள்



> பெற்ற பேரவ ரேபெரி யோர்எலாம்
> முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே.

(ப-ரை) வல் - கடின, நெஞ்சே - மனமே!, உனக்கு - உனக்கு, மற்றும் - இன்னமும், என் - என்ன, மயக்கம் - மயக்கம்?, கற்றை - கற்றையாகிய, வார்-நீண்ட, சடை-சடையையுடைய, கண்ணுதலோன் - நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானின், அருள்-திருவருளை, பெற்ற-அடைந்த, பேர்-அடியார்களாகிய, அவரே - அம்மக்களே, பெரியோர் - ஞானிகளாவர், எலா - எல்லா ஞானங்களையும், முற்றும்-முழுதும், ஓர்ந்தவர்-அறிந்தவர்கள் ஆவர், மூதுரை - அவர்களின் பழமைபொருந்திய சொற்களே, அர்த்தம் - ஞானார்த்த வார்த்தைகளாகும் எ-று.

(வி-ரை) இறைவன் கழற்கு உருகிக் குறுகா நெஞ்சாதலின் 'வன்னெஞ்சே' என்றார். இதுபற்றியே **மணிவாசகரும்,**

> "வன் னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னுதே
> கன் னெஞ் சுருக்கிக் கருணையினு லாண்டுகொண்ட
> வன்னந் திளைக்கு மணிதில்லை யம்பலவன்
> பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என்றார்,

சிவபெருமானின் அடியவர்கள்தான் உண்மையிற் பெரியர். ஞானப்பிழம்பாயுள்ள சிவபெருமான் அருள் பெற்றார்க்கு ஞானந்தலைப்படுமாதலின் எல்லாமுணர்ந்தவர். அவர் உரையே வேதவாக்காகும். தொன்னூற்பொருளாகும். இதுகொண்டே 'கற்றைவார் சடைக் கண்ணுதலோ னருள் பெற்றபே ரவரே பெரியோர்' என்றும் 'எலாம் முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே' என்றுங் கூறினர். இதுகொண்டேதான் **ஔவைப்பிராட்டியா**ரும் 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்றருளிச்செய்தார்.

இதனையே கொண்டன்றே தேவாரத்திருமறையும் 'கங்கைவார் சடைக் காந்தார்க் கன்பாகி லவர்கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே' என்றருளியது. 'மூதுரை அர்த்தமே' என்றதற்கு அவர் திருவாயினின்றும் உதிக்கும் சொற்களே வேதார்த்த உரைகள் எனப் பொருள் கோடலுமாம். 'மூதுரை' வேதம். என்னை எல்லா நூற்கும் முற்பட்ட நூலாதலின் என்க. 'பேரவரே' 'அர்த்தமே' என்பதிலும் உள்ள ஏகாரங்கள் தேற்றப்பொருளில் வந்தன. 51

ஆவரணத்தைத் தாண்டிய ஞானிகள் தேடுஞ் சிவபெருமான் சத்தியோடு நிறைந்திருக்கும் எனல்

> உரையி றந்துளத் துள்ள விகாரமாம்
> திரைக டந்தவர் தேடுமுக் கட்பிரான்
> பரைநி றைந்த பரப்பெங்கு மங்கனே
> கரைக டந்தின்ப மாகக் கலப்பனே.

(ப-ரை) உரை - சொல், இறந்த - அற்ற, உள்ளத்து-மனத்தினிடத்து, உள்ள - உள்ளதாகிய, விகாரம் - வேறுபாடு, ஆம் - ஆகிய, திரை - திரையை (ஆவரணத்தை), கடந்தவர் - தாண்டியவர்கள், தேடும் - தேடுகின்ற, முக்கண்- திரிநேத்திரங்களையுடைய, பிரான் - சிவபெருமான், பரை - திருவருட்சத்தி, நிறைந்த - நிறைந்த, பரப்பு - நிலம், எங்ஙன் - எவ்விடத்தே, அங்ஙனே- அவ்விடத்தே, கரை-வரம்பு, கடந்து-தாண்டி, இன்பம்-சுகவடிவம், ஆக-ஆக, கலப்பன்-கலப்பேன் எ-று.

(வி-ரை) 'உரையிறந்தவர்' என்றது மௌனயோகிகளை. சிற்சில பெரியார் ஆடலும் பாடலும் செய்தனர், சிற்சில பெரியார் ஊடலுங் கூடலும் புரிந்தனர், சிற்சில பெரியார் வாடலுந் தேடலும் உற்றனர், சிற்சில பெரியார் உலக வியாபாரத் துழன்றனர் எனினும் அவர்கள் தற்போதங் கழன்று சிவபோதத்தாற் செய்ததாகலின் அவர்கள், 'உரையிறந் துளத்துள்ள விகாரமாந் திரைகடந்தவர்' களே. 'உள்ளவிகாரமாந்திரை' என்றது ஆவரணத்தை. 'பரைநிறைந்த பரப்பு' என்றது திருவருட்சத்தி நிறைந்த பரப்பை. இதனைத் திருவருள் விலாச வியாபகம் எனவுங் கூறுவர். ஈண்டு சிதாகாயத்தைக் குறித்தது. இறைவன் திருவருள் இருக்கின்றமையான், இறைவன் ஆச்சாரியனாக எழுந்தருளிவந்து உபதேசித்தருளியதனால், அடியேன் நெஞ்சம் அவனைப் பற்றி நிற்றலினால், மற்றைப் பற்றுக்களில் உவர்ப்புண்டாயதால், 'கரை கடந் தின்பமாகக் கலப்பன்' என்றார். 'கரை' என்றது அளவின்றி என்ற பொருளில் வந்தது. ஏ-ஈற்றசை. 52

முத்திநிலையில் பிரிதிவிமுதல் எல்லாத் தத்துவங்களும் எம்மைப்போல்
அலந்துபோ எனல்

கலந்த முத்தி கருதினுங் கேட்பினும்
நிலங்க ளாதியு நின்றெமைப் போலவே
அலந்து போயின மென்னு மருமறை
மலர்ந்த வாய்முக்கண் மாணிக்கச் சோதியே.

(ப-ரை) அரும் - அரிய, மறை - வேதங்களை, மலர்ந்த - திருவாய்மலர்ந் தருளிய, வாய் - திருவாயையும், முக்கண் - திரிநேத்திரங்களையும் உடைய மாணிக்கம் - மாணிக்க, சோதியே - சுடரே!, கலந்த - கலந்த, முத்தி - முத்தி நிலையினை, கருதினும் - சிந்தித்தாலும், கேட்பினும் - கேட்டாலும், நிலங்கள்- பிரிதிவிகள், ஆதி - முதலானவைகளும், எம்மை - அடியேமை, போலவே- ஒப்பவே, நின்று - திகைத்துநின்று, அலந்து - துன்புற்று, போயினம்-போயினோம், என்னும்-என்று கூறிடும் எ-று.

(வி-ரை) இறைவன் ஆன்மாக்கள் உய்வு எய்தற்பொருட்டுத் தனுகரண புவன போகங்களைத் தந்து நெறிநின்று வாழ வேதாகமங்களைத் தன் திருவாயால் வகுத்தருளி யுரைத்தானாதலின் இறைவனை 'அருமறை மலர்ந்த வாய் முக்கண் மாணிக்கச்சோதியே' என்றார்.- இறைவன் அருண்மேனிதாங்கி



அடியார்க்கு அருள்செய வருங்கால் செக்கர்மேனியனாகத் தோன்றியருளுதலினாலும், கண்ணுக்கும் எண்ணுக்கும் இன்பந்தரும் செவ்வொளியாதலாலும், மும்மையும் பயக்கும் முதொளியாதலாலும், எல்லா ஒளியையுந் தன்னுளொடுக்கித் தானேயாகி நிற்குந் தற்பர முழுஒளி யாதலாலும், 'மாணிக்கசோதியே' என்றார். 'தோளாமணியே' 'துவாரமிலாமணியே' எனப் பிற **பெரியார்** கூறியதுங் கண்டு தெளிக. 'கலந்தமுத்தி' என்றது இறைவனுந் தானும் அனன்னியமாக ஒன்றுபட்ட அவசரத்தை. இறைவனுந் தானும் அத்துவிதக் கலப்புற்றகாலை பிரிதிவி தத்துவமுதல் எல்லாத் தத்துவங்களுந் தோன்றாது இறைவனே தோன்ற, சோகம் பாவனையால் இறைவனாகத் தானவனாக் காண்பனாதலால் 'நிலங்க ளாதியு நின்றெமைப் போலவே அலந்து போயின' என்றார். 'கருதினுங் கேட்பினும்' இதன்கண்வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'நிலங்களாதியும்' என்றதன்கண்வந்த உம்மை முற்றும்மை. 53

இறைவனே! அடியேனையும் உன்னடியாருடன் சேர்த்து
அருள வேண்டுகிறேனெனல்

சோதி யாதெனைத் தொண்டருட் கூட்டியே
போதி யாதவெல் லாமெளப் போதிக்க
ஆதி காலத்தி லுன்னடிக் காந்தவம்
ஏது நான்முயன் றேன்முக்க ணெந்தையே.

(ப-ரை) முக்கண்-மூன்றுகண்களையுடைய, எந்தையே-எமது தந்தையே!, என்னை-அடியேனை, சோதியாது - பரீட்சிக்காமல், தொண்டருள் - அடியார்களுடன், கூட்டி-சேர்த்து, போதியாத - உபதேசிக்கக்கூடாத அருமையுடைய, எல்லாம் - பொருள்களையெல்லாம், மெள்ள - பைய, போதிக்க - உபதேசிக்க, ஆதி-முன், காலத்தில்-காலத்தில், உன் - தேவரீரது, அடிக்கு - திருவடிக்குத் தொண்டு செய்யும்படியான உரிமை, ஆம்-ஆகும், தவம்-தவம், ஏது - எதனை, நான்-அடியேன், முயன்றேன்-முயன்று புரிந்தேன்? எ-று.

(வி-ரை) 'ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை தான் சாந் துயரந் தரும்' நட்பாயோ ஏவலாயோ ஒருவனைக் கொள்ள ஆராய வேண்டும். இது சிற்றறிவுடைய மனிதர்க்கே. இறைவனே! நீயோ பெரியன், அறிவுப்பிழம்பாய் நிற்பவன். நினக்கு அடியேனைச் சோதிக்கவேண்டிய அவசியமில்லை. அடியே னுள்ளத் திருந்தறியும் நீ சோதிப்பதேன்? ஒருக்கால் உலகிற்குக் காட்டவேண்டிச் சோதிப்பையாயின் சோதனை கடினமாக இருக்குமாதலின் நான் தவறியேவிடுவேன் ஆகையால் என்னைப் பரீட்சியாது நின் அடியானாக்கித் தொண்டருட் சேர்க்கவேண்டு மென்பார் 'சோதியாதெனைத் தொண்டருட் கூட்டியே' என்றார். **பட்டினத்தடிகள்,**

"வாளான் மகவரிந் தூட்டவல்லே னல்லேன் மாதுசொன்ன
சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் றொண்டுசெய்து

நாளாறிற் கண்ணிடக் தப்பவல் லேனல்ல னுனிச்சென்
ருளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே"

என்றதும் ஈண்டு கருதற்பாலது.

தொண்டர் குழாத்திற் கூடியிருத்தலே சிவப்பேற்றிற்கு ஏதுவாதலின் 'தொண்டருட் கூட்டி என்றார். இதுபற்றியன்றே பிறரும் 'தொண்டருட் சேர்த்திகண்டாய்' என்றார். இன்னும்,

"உடையா னுன்ற னடுவிருக்கு முடையா னடுவு ணீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன்
னடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே"

என்ற **மணிவாசகர் திருவாக்குங்** கருதற்பாலது.

'போதியாதன' என்றது இவன் பக்குவி அல்லான் என்று தள்விடாது சிறியேற்குப் போதிக்கக்கூடாத அருபெரும் ஞானரகசியத்தை என்றபடி. அடியேன் அபக்குவியாதலின் பக்குவிகட்குப் போதிக்கக்கூடிய ஞானம் கருத்தி லிறங்குமாறு போதிக்கவேண்டு மென்பார் 'மௌனப் போதிக்க' என்றும். 'மௌ' இது 'மௌன' என்றதன் தொகுத்தல் விகாரம். ஆதிக் காலம் என்றது ஜனன மெடுத்த காலத்தைக் குறித்தது. இனி, முற்பிறப்புகளில் என்னினுமாம். தந்தை தன் மகனுக்குப் போதித்துக் கல்வியூட்டி அவனை முந்தி யிருக்கச்செய்தல் கடமை. அதுபோல்தேவரீரும் அடியேனுக்குப் போதித்து முத்தியில் முந்தியிருக்கச்செய் என்பார் 'முக்கண் எந்தையே' என்றார். இதனை,

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்"

என்ற **குறளால்** அறியலாம். 54

அடியாரைக் காத்தருள்செய்யும் இறைவனே! அன்னைபோல் வந்து
காத்தருளிய உன் திருவருள் வாழ்ந்திருப்பதாக எனல்

எந்த நாளைக்கு மீன்றரு டாயென
வந்த சீரருள் வாழ்கவென் றுன்னுவேன்
சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாம்
தந்து காக்குந் தயாமுக்க ணாதியே.

(ப-ரை) சிந்தை-அடியார்களின் மனத்தினது, நோக்கம் - எண்ணத்தை, தெரிந்து - உணர்ந்து, குறிப்பு - அவ் அடியார்கள் எண்ணிய விருப்பங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், தந்து - ஈந்தருளி, காக்கும்-காத்தருளும், தயா-அருளையுடைய, முக்கண்-திரிநேத்திரங்களையுடைய, ஆதியே - முதல்வனே!, எந்த-எந்த, நாளைக்கும்-காலத்தும், ஈன்று-பெற்று, அருள் - அருளிய, தாய்-



அன்னை, என - போல, வந்து - எழுந்தருளிவந்து காத்த, சீர் - சிறப்புடைய, அருள்-தேவரீரது திருவருளானது, வாழ்க-வாழ்ந்திருப்பதாக, என்று-என்று, உன்னுவேன்-சிந்தித்துவேண்டுவேன் எ-று.

(வி-ரை) இறைவன் ஆன்மாக்களுக்கு அநாதியே கருணைகொண்டு தனுகரண புவனங்களைத்தந்து உய்விக்க அருள் செய்கின்றானாதலின் 'எந்த நாளைக்கு மீன்றரு டாயென' என்றார். இதுபற்றியன்றே **மணிவாசகரும்**,

"தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ நம்பி யினித்தான் நல்குதியே
தாயே யென்றுன் றானடைந்தேன் றயாநீ யென்பா லில்லையே
நாயே னடிமை யுடனாக வாண்டாய் நான்றான் வேண்டாவோ"

என்றார்.

இறைவன் எல்லோருள்ளத்தும் உறைகின்ற சோதியாதலின் நீண்டெஞ்சத்து இருந்து என் எண்ணமெலாம் அறிவையாதலின் என்விருப்பத்தை முற்றுவித்தல் உனக்கு அரிதன்று என்பார் 'சிந்தை நோக்கந் தெரிந்து குறிப்பெலாம் தந்து காக்கும் தயா முக்கணாதியே' என்றார். இதனை,

"உள்ளு முள்ளத் துள்ளானே! உள்ளு மெல்லாந் தருவானே
கள்ளப் புலையேன் கருத்தறிந்தாய்க் கடையேன் துன்பங் கண்டாயே
வெள்ளம் பெருகுஞ் சடையானே! விடைமே லூரும் விமலாநீ
எள்ளி யிகழா தாட்கொண்டே இன்பக் கதியெற் கீந்தருளே"

என்ற **செய்யுளானும்** உணரலாம். 55

எத்தனையோ ஜன்மங்களை எடுத்துவிட்டேன் அடியேனுக்கு
முத்திதந்து காத்தருளும் எனல்

கண்ண கன்றவிக் காசினி யூடெங்கும்
பெண்ணொ டாண்முத லாமென் பிறவியை
எண்ண வோவரி தேழை கதிபெறும்
வண்ண முக்கண் மணிவந்து காக்குமே.

(ப-ரை) கண் அகன்ற - விசாலமான (இடமகன்ற), இ-இந்த, காசினி-பூமி, ஊடு - உள்ளே, எங்கும் - எல்லா இடங்களிலும், பெண்ணொடு - பெண்ணுடனே, ஆண் - ஆண்களும், முதலாம் - முதலாகிய, என்-அடியேனுடைய, பிறவியை-பிறப்புக்களை, எண்ணவோ-கணக்கிடவென்றாலோ, அரிது-அருமையாகும், ஏழை-அறிவிலியாகிய அடியேன், கதி-முத்தியை, பெறும்-அடையும், வண்ணம்-படி, முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, மணி-மாணிக்கம், வந்து-எழுந்தருளிவந்து, காக்கும்-காத்தருளும் எ-று.

(வி-ரை) பாசுராமர் க்ஷத்திரிய அரசர்களையெல்லாங் கொன்று பூமியைத் தனதாக்கிக்கொண்டு பின் காசிபமுனிவருக்குத் தானஞ்செய்தார்

ஆதலின் உலகிற்குக் காசிபமுனிவருக்கு உரியது என்னும் பொருளில் 'காசினி' என்னும் பெயர் ஏற்பட்டது. உலகில் உயிர்களுக்கு ஜன்மம் பல. இச்சன்மசாகரத்தைக் கடந்தே இறைவன் திருவடிப்புணையைச் சார வேண்டும். வினையினால் எய்தும் இப்பிறவிநோயை நீக்க மூலநோய் தீர்க்கும் முதல்வன் திருவடி பெறல்வேண்டும். இதுகொண்டே 'பெண்ணோடாண் முதாலா மென்பிறவியை எண்ணவே வரிது' என்றார். இதுபற்றியன்றோ **மணிவாசகரும்,**

> "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்லசு ராகி முனிவராய்த் தேவராய்ச்
> செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
> ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
> மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்"

என்றார். இன்னும்,

> "அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
> அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
> பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
> பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
> முன்னை யெத்தனை யெத்தனை ஜென்மமோ
> மூட னாயடி யேனு மறிந்திலேன்
> இன்ன மெத்தனை யெத்தனை சென்மமோ
> என்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கையும் நோக்குக. 56

இறைவனே! நின் திருவருள் தரிசனத்தையன்றி அடியேனுக்கு வேறு தஞ்சமில்லை. இனி உமது பாரமெனல்

காக்கு நின்னருட் காட்சியல் லாலொரு
போக்கு மில்லைஎன் புந்திக் கிலேசத்தை
நீக்கி யாளுகை நின்பரம் அன்பினர்
ஆக்க மேமுக்க ணனந்த மூர்த்தியே.

(ப-ரை) அன்பினர்-அன்பினர்களுக்கு, ஆக்கமே-செல்வமே!, முக்கண்-திரிநேத்திரங்களையுடைய, ஆனந்தம் - சுக, மூர்த்தியே - வடிவே!, காக்கும்-காத்தலையே இயல்பாகக்கொண்டுள்ள, நின் - தேவரீரது, அருள்-திருஅருள், காட்சி - தரிசனத்தையே, அன்றி-அல்லால் (அடியேனுக்கு), ஒரு-வேறொரு, போக்கும் - புகலிடமும், இல்லை - அடியேனுக்கு இல்லை (ஆதலால்), என்-அடியேனின், புந்தி - மனத்தின், கிலேசத்தை - வருத்தத்தை, நீக்கி-அகற்றி, ஆளுகை-ஆண்டருளுதல், நின்-தேவரீரது, பரம்-பாரமாகும் எ-று.



(வி-ரை) இறைவன் ஆன்மகோடிகளைக் காத்தற்பொருட்டுச் சராசரங்களையும் புவனத்தையும் ஆக்கியுளனாதலினாலும் பார்க்குமிடங்களிலெல்லாம் அவன் அருட்டிருமேனியே காணப்படுதலினாலும், நீக்கமறநிறைந்து நிற்கின்றான் ஆதலினாலும், 'காக்கு நின்னருட் காட்சியல்லா லொரு போக்குமில்லை' என்றார். இறைவன் உள்ளத் துள்ளுறை சோதியாதலினாலும், அஞ்ஞானத்தாலேயே கிலேசங்கள் உண்டாகின்றன வாதலினாலும், என் உள்ளத் துள்ளே ஞானஒளி யுண்டாக்கி அஞ்ஞானத்தைப் போக்கிக் கிலேசத்தைத் தீர்த்தருளவேண்டு மென்பார் 'புந்திக்கிலேசத்தை நீக்கி யாளுகை நின்பரம்' என்றார். இறைவன் அடியார்க்கு ஞானச்செல்வத்தை அருளி, ஆனந்தம் பயப்பவன் ஆதலினாலும், இறைவன், ஞானசொரூபியாதலினாலும், ஆனந்தமயனாதலினாலும், 'அன்பினர் ஆக்கமே, முக்கணனந்த மூர்த்தியே' என்றார்.

இறைவன் சிவானந்தமே கதியெனக்காட்டி எளியேன்செய்கை திருவருட்செய்கையே என்கின்றார்

ஆனந் தங்கதி யென்னவென் னானந்த
மோனஞ் சொன்ன முறைபெற முக்கணெங்
கோனிங் கீந்த குறிப்பத னால்வெறுந்
தீனன் செய்கை திருவருட் செய்கையே.

(ப-ரை) ஆனந்தம் - சிவானந்தமே, கதி - அடைக்கலம், என்ன - என்று தெரியவும், என் - அடியேனுக்கு, ஆனந்தம் - ஆனந்தரூபமான, மோனம்-மௌனநிலையினை, சொன்ன - அருளிச்செய்த, முறை - முறையினை, பெற-அடையவும், முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, எம்-எம்முடைய, கோன்-இறைவன், இங்கு - இவ்விடத்து, ஈந்த - அருளிச்செய்த, குறிப்பதனால்-குறிப்பினாலே, வெறும்-வறிய, ஏழை-ஏழையாகிய அடியேனின், செய்கை-தொழில் செய்கை, திருவருள் - திருவருளின், செய்கையே - செய்கையே யாகும் எ-று.

(வி-ரை) நாற்பத்தெட்டாஞ் செய்யுளிலிருந்து முறையே இதுகாறும் முக்கணெங்கோ' 'முக்கண்நாதன்' 'முக்கட்பிரான்' 'கண்ணுதலோன்' 'முக்கண்சோதி' 'முக்கண் எந்தை' 'முக்கண்ஆதி' 'முக்கண்மணி' 'முக்கண் ஆனந்தமூர்த்தி' எனவும் பலகாலுங் கூறியது 'கண்ணுக் கணிகலங்கண்ணோட்டம்' என்றபடி இறைவன் கருணைத்திருநோக்கையும், அவன் தலைமையையும், அவன் ஆனந்தசொரூபத்தையும் இவர் அவைகளில் ஈடுபட்ட தன்மையையும் கூறிப் புகழ்ந்தார். சிவானந்தத் தழுந்தலே முத்தி, அச்சிவானந்தம் மோனத்தால் எய்தும் என உபதேசித்த அருட்டன்மையுங் குறித்தே 'என்னானந்த மோனஞ் சொன்ன' என்றார். தன் எளிமை தோன்றவும், இறைவன் எளியார்க் கிரங்கியருளுந் திறமுந்தோன்றவும், சிவானந்தத் தழுந்திய வடியேன் செய்கை அடியேன் செய்கையன்று திருவருட்செய்கையே என்பதுவுந்தோன்ற 'வெறுந்தீனன்செய்கை திருவருட்செய்கையே' என்றார். 58

கடவுளைத் திரிகரணத்தாலும் வழிபடவேண்டு மெனல்

கையி னாற்றொழு தேத்திக் கசிந்துள
மெய்யி னாலுனைக் காண விரும்பினேன்
ஐய னேஅர சேஅரு ளேஅருள்
தைய லோர்புறம் வாழ்சக நாதனே.

(ப-ரை) ஐயனே-கடவுளே!, அரசே-அரசனே!, அருளே-கிருபாரூபனே!, அருள்-திருவருளாகிய, தையல்-சத்தியாம் தேவி, ஓர்-ஒரு, புறம் - திருமேனியின் பக்கத்தில், வாழ் - வசித்தற்கு உரிய, சகம் - உலகத்திற்கு, நாதனே-தலைவனே!, கையினால் - அடியேனுடைய கைகளினால், தொழுது-(வணங்கி) அஞ்சலித்து, ஏத்தி - வாயினால் துதித்து, உளம் - மனமானது, கசிந்து-உருகி மெய்யினால்-உண்மை அன்போடு, உனை-தேவரீரை, காண - தரிசிக்க, விரும்பினேன்-ஆவலுற்றேன் எ-று.

(வி-ரை) இறைவனைத் திரிகரணத்தால் வழிபட்டோரே மெய் அன்பர் எனப்பெறுவர் ஆதலின் 'கசிந்துளம்' என்றதனால் மனமும், 'ஏத்தி' என்றதனால் வாக்கும் 'கையினாற் றொழுது' 'மெய்யினால்' என்றதனால் மெய்யும் பெறப்பட்டதைக் காண்க. சிவபெருமானே கடவுள் என்பார் 'ஐயனே' என்றார். எம்மையெல்லாம் தண்ணருளாற் காப்பவன் என்பார் 'அரசே' என்றார். என்றும் அருளோடு கூடியவன். அரூபத்தையுடைய கடவுள் அடியவரைக் காத்தற்பொருட்டு அடியார்க்கு அருட்சத்தியாகிய பார்வதி தேவியாரோடு திருவுருவத் திருமேனிதாங்கி வந்தருளுவன் என்பதுதோன்ற 'தையலோர் புறம்வாழ்' என்றார். இறைவன் உலகுக்கெல்லாந் தலைவன், அவனைத் தவிர்த்து யார்க்கும் வேறு தலைவன் இல்லை என்பார் 'சகநாதனே' என்றார். இதனை,

"அருவமா நிற்கும் பெம்மான் அடியவர் தம்மைக் காக்கத்
திருவருட் சத்தி யாகுந் திருமலை மகளைப் பாகம்
பொருவற வைத்துத் தோன்றிப் புகழுருக் காட்டுங் கோலம்
கருவரு பிறப்பு நீத்தோர் காண்பரென் றியம்பு வோமே"

என்றதனாலும் அறியலாம்.

'மெய்யினால்' என்பதற்குச் சத்தியமாகவே எனவும், இந்தப் புன்புலால் யாக்கையினால் எனவுங் கூறுவாரும் உளர். 59

இறைவனே! உலகவாழ்வு சதமென்று நினைக்கும் யான் நின் சிவானந்த மோட்சத்தில் படிவது எந்தக்காலம் என்கின்றார்

சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே
மிகுத்த தீமை விளைய விளைக்கின்றேன்
அகத்து ளாரமு தாமைய நின்முத்திச்
சுகத்தி னின்வந்து தோய்வதெக் காலமே.



(ப-ரை) அகத்துள்-(அடியார்களின்) மனத்தின் உள்ளே, ஆர்-நிறைந்த, அமுது-அமிர்து, ஆம்-ஆகும், ஐய-ஐயனே!, சகத்தின்-உலகத்தின், வாழ்வை-வாழ்க்கையை, சதம்-நிலையுடையது, என-என்று, எண்ணி-நினைத்து, மிகுத்த-அதிகமாகிய, தீமை - தீமைகள், விளைய - உண்டாம்படி, விளைக்கின்றேன்-விளைவித்துக்கொண்டிருக்கின்றேன் (இவ்வாறிருப்பேனாயின்), நின் - தேவரீரது, முத்தி-மோட்ச, சுகத்தில்-ஆனந்தத்தில், நான்-அடியேன், வந்து-வந்து, தோய்வது-படிவது, எ-எந்த, காலம்-காலமாகும்? எ-று.

(வி-ரை) உலகமும் உலகவாழ்க்கையும் நிலையல்லாதது ஆதலினால் 'சகத்தின் வாழ்வைச் சதமென வெண்ணியே' என்றார். இதனை, 'வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்' என்ற **தேவாரத்திருமறையாலும்,**

"கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்
கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்
எட்டி யடிவைப் பரோவிறை வாகச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தடிகளின் திருவாக்காலும்,**

"கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரான் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க் கொழிய நீத்து"

என்ற **நாலடியார்ச் செய்யுளாலும்,**

'குடம்பை தனித் தொழியப் புட்பறந் தற்றே யுடம்போ டுயிரிடை நட்பு' என்ற **திருக்குறளாலும்** நன்கறியலாம். உலகவாழ்வில் தீமைபுரியாது வாழ்தல் மிகக் கட்டசாத்திய மாதலின் 'மிகுந்த தீமை விளைய விளைவிக் கின்றேன்' என்றார். இதனை,

"நாப்பிளக்கப் பொய்யுரைத்து நலவநிதியந்தேடி
நலமொன்று மறியாத நாரியரைக் கூடி"

என்ற **பட்டினத்தடிகள் வாக்கால்** நன்கறியலாம்.

உலகவாழ்வு நிலையற்றது இது ஒருவனால் விரும்பப்படத் தக்கதன்று, ஒவ்வொருவனும் விரும்பத்தக்கது சிவபெருமானாகிய அம்பலத்தாடும் இறைவன் திருவடி தரிசனமே என்பதுகொண்டு,

"நீரிற் குமிழி இளமை நிறை செல்வம்
நீரிற் சுருட்டு நெடுந் திரைகள்—நீரின்
எழுத்தாகும் யாக்கை நாமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று"

என்றார் **குமாரகுருபர சுவாமிகளும்,**

உலகவாழ்வில் உழன்று திரிபவர்க்கு முத்திச்சுகம் கிட்டாதென்பது சாதமாதலின் 'நின்முத்திச் சுகத்தினன் வந்து தோய்வ தெக்காலமே' என்றார். இதுபற்றியன்றே **பரஞ்சோதிமுனிவரும்,**

"அரவக லல்குலார்பால் ஆசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றுலகில் வேதஞ் சாற்றிய தலைவன்" என்றார். 60

இறைவனே! உன் திருவருளால் இவ் உலகவாழ்க்கை இந்திரஜாலத்தை
ஒத்தது என்று அறிந்து உன் திருக்கோலத்தைத் தேடுதல்
எக்காலம் என்கின்றார்

கால மூன்றுங் கடந்தொளிரா நின்ற
சீல மேநின் றிருவரு ளாலிந்த்ர
சால மாமிச் சகமென வெண்ணி நின்
கோல நாடுத லென்று கொடியனே.

**(ப-ரை)** காலம் - காலங்கள், மூன்றும் - மூன்றையும், கடந்து-தாண்டி, ஒளிராநின்ற-ஒளிர்கின்ற, சீலமே-குணத்தவனே!, நின் - தேவரீரது, திருவருளால்-திருவருளினாலே, இ - இந்த, சகம்-உலகமானது, இந்த்ரசாலம்-இந்திரஜாலம், ஆம்-ஆகும், என்-என்று, எண்ணி-சிந்தித்து, நின்-தேவரீரது, கோலம்-திருக்கோலத்தை, கொடியன் - கொடியேன், நாடுதல் - தேடுதல், என்று-எக்காலம்? எ-று.

**(வி-ரை)** 'காலம் மூன்று' என்றது இறப்பு, நிகழ்வு, எதிர்வுகளை. இறைவன் காலாதீதன் ஆதலின் 'காலமூன்றுங் கடந்தொளிரா நின்ற சிவமே' என்றார். இதனை, காலந் தேசங் கற்பனையே கருதல் கடந்தொளிர் தற்பரனே' என்ற **அழகக்கவியா**லும் அறியலாம்.

இந்திரஜாலமாவது ஜாலவித்தைகளுக்குள் எல்லாம் பெரியதோர் ஜாலம். இதனைக் கண்கட்டி வித்தை என்பர். இது தோன்றும்போதே இல்லையால் முடியுந் தன்மையது. மெய்யினை யுணர்ந்து பற்றுதற்கும், பொய்யினை யுணர்ந்து புறந்தள்ளற்கும் இறைவன் திருவருள் வேண்டுமாதலால், 'நின்றிரு வருளா லிந்த்ர சாலமாமிச் சகமென வெண்ணிநின், கோல நாடுத லென்று' என்றார். 61

இறைவனே! நான் மோட்சம் அடையும் நல் ஊழ் உண்டோ என்கின்றார்

கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொரு ளே நினக் கன்பின் றிப்
படியி லேழைமை பற்றுகின் றேன்வெறும்
மிடியி னேன்கதி மேவும் விதியின்றே.

**(ப-ரை)** கொடிய - கொடுமையுடையதாகிய, வெம் - வெவ்விய, வினை-தீவினை என்னும், கூற்றை-யமனை, துரந்திடும்-ஓட்டுகின்ற, அடிகள்-கடவுள், ஆம்-ஆகிய, பொருளே - செம்பொருளே!, வெறும் - வெறுவிதாகிய, மிடியனேன் - தரித்திரனாகிய அடியேன், கதி-நற்கதியை, மேவும்-அடையும், விதி-ஊழ், இன்று-இல்லை, நினக்கு-தேவரீருக்கு, அன்பு-அன்பு, இன்றி-இல்லாமல், படியில் இவ்வுலகில், ஏழைமை - அறிவில்லாமையைப், பற்றுகின்றேன்-ஆதாரமாகப் பற்றிக்கொண்டிருக்கின்றேன் எ-று.



**(வி-ரை)** எமன் கைக்குத் தப்புவது அரிது. இறைவன் திருவருள் பெற்றார்க்கே இது எளிது. யமன் கைக்குத் தப்பினவர்கள் இல்லை என்பதனை,

"தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்ற மளந்துநுங் நாளுண்ணும்" என்றதாலும்,
"இழைத்தநா ளெல்லை யிகவா பிழைத் தொரீஇக்
கூற்றங் குதித் துய்ந்தா ரீங்கில்லை" என்றதாலும் அறியலாம்.

இறைவன் திருவருள் பெற்றார் எமனையும்வெல்வர் என்பதனை,

"உலையா முயற்சி களைகணு வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—யுலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான் முளையே போலுஞ் சரி"

என்ற **குமரகுருபர சுவாமிகள் வாக்கால்** அறியலாம்.

இதுகொண்டே 'கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும் அடிகளாம்பொருளே' என்றார். 'இறைவன் திருவருள் தனக்குப் பெரிது மின்மையால் படியி லேழைமை பற்றுகின்றேன் வெறும் மிடியினேன்' என்றார். உலகவாசை வைத்துள்ளவரை நின் திருவருட்செல்வம் பெறல் முடியாது, நின் திருவருள் பெறுதவரைக் கதிகூடல் கிட்டாது என்பார், 'மிடியினேன் கதிமேவும் விதியின்றே' என்றார். 62

இறைவனே! மாயையிற் சிக்கவைத்து விட்டபின் கதியடைய
தெந்நாள்? என்கின்றார்

விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே.

**(ப-ரை)** விதியையும் - விதியையும், விதித்து - வகுத்து, என்னை-(அவ்விதிக்கு ஆளாக) அடியேனையும், விதித்து - வகுத்து, இட்ட - அடியேனுக்கென்று பொருந்திய, மதியையும்-அறிவையும், விதித்து-வகுத்து, அ - அந்த, மதி-அறிவானது, மாயையில்-மாயையின்கண்ணே, பதிய - (அழுந்த, வைத்த-வைத்த, பசுபதியே - பசுபதியே! நின்-தேவரீரது, அருள் - திருவருளினாற் கிடைக்கும், கதியினை-கதியை, கண்டு-பார்த்து, களிப்பது-மகிழ்ச்சி உறுவது, எப்படி-எந்தவிதம்? எ-று.

(வி-ரை) இறைவன் ஆன்மாக்கள் பொருட்டாகத் தனுகரண போகங்களை ஆக்கி இன்பந் துய்த்தற்கு நெறியையுங்காட்டி அவ்வவ் ஆன்மாக்களின் வினைக் கீடாக நன்மை தீமை, மோக்ஷம், நரகம், விதித்தலானுதலினாலும், விதிவழி மதி செல்லுகின்ற தாதலினாலும் 'விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட மதியை யும்விதித்து' என்றார். விதிவழியே மதிசெல்லுகின்றது என்பதனை,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்ற திருக்குறளா லறியலாம்

ஆன்மாக்களைப் பக்குவப்படுத்த இறைவன் மாயையை வகுத்தளானுதலின் 'மாயையில் பதிய வைத்த பசுபதி' என்றார். இறைவன் ஆன்மாக்களுக்கெல்லாந் தலைவன் ஆதலின் 'பசுபதி' என்றார். இறைவனே நின் திருவருளா லன்றி எனக்கு இருவினை ஒப்பு மலபரிபாகம் ஏற்படா தென்பார் 'நின்னருட் கதியை யெப்படிக் கண்டு களிப்பதே' என்கின்றார். 63

அடியேன் கணக்கற்ற நமஸ்காரங்கள் செய்கிறேன்; என்பொய்மை ஒழுக்கத்தை நீக்கி அருளவேண்டும் எனல்

கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டு மின்றுமென் பானின் றுணர்த்திடும்
அண்ட னேஉனக் கோர்பதி னாயிரம்
தெண்டன் என்பொய்மை தீர்த்திடல் வேண்டுமே.

(ப-ரை) கண்ட-நோக்கிய, கண்ணுக்கு-கண்களுக்கு, காட்டும்-பொருள்களை விளக்கிக் காட்டுகின்ற, கதிர் - சூரியன், என - என்று ஒப்புச்சொல்ல, பண்டும்-முன்னும், இன்றும் - இப்பொழுதும், என்பால் - அடியேனிடத்தில், நின்று - நின்று, உணர்த்திடும் - (உள்ளவாறு) தெரிவிக்கின்ற, அண்டனே-தேவனே!, உனக்கு - தேவரீருக்கு, ஒருபதினாயிரம்-கணக்கற்ற ஆயிரக்கணக்கான, தெண்டன் - நமஸ்காரம் (செய்கின்றேன்), என் - அடியேனுடைய, பொய்மை - பொய் ஒழுக்கத்தை, தீர்த்திடல் - நீக்கி அருள, வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) இவ்வுலகில் கதிரொளியின்றிக் காட்சி இலை. கதிரொளி அத்துவிதமாகக் கண்ணிற் கலந்து பொருள்களைக் காணச் செய்கின்றது. அதுபோலவே இறைவன் எல்லா உயிர்களிடத்துங் கலந்து நின்று உணர்த்தி வருகின்றானுதலின் 'கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப் பண்டு மின்று மென் பானின் றுணர்த்திடும்' என்றார். இறைவனே யின்றி யண்டமில்லையாதலின் 'அண்டனே' என்றார். 'பதினாயிரம்' ஈண்டு மிகுதிப்பொருளில் வந்தது. 'பொய்மை' என்றது பொய்யாந்தன்மையை. ஏ-ஈற்றசை. 64



அம்பலத்தாடும் சோதியே! நின் அடியார்க்குப் பணிகளைச் செய்யப் பல்பிறவியெடுப்பேன்

வேண்டும் யாவு மிறந்து வெளியிடைத்
தாண்டு வாரற்ற சோதிப் பிரான் நின்பால்
பூண்ட வன்பர்தம் பொற்பணி வாய்க்குமேல்
ஈண்டு சன்ம மெடுப்ப னனந்தமே.

(ப-ரை) வேண்டும்-விரும்பப்பெறுகின்ற, யாவும் - எல்லாப்பொருள்களையும், இறந்து - தாண்டி (கடந்து), வெளியிடை - பரவெளியில், தாண்டுவார்-தாண்டிவிடுவார்கள், அற்ற-இல்லாத (தானேசுடர்செய்யும்), சோதி - ஒளிமயமான, பிரான்-பெருமானாகிய கடவுளே!, நின்-தேவரீர், பால்-இடத்து, பூண்ட-அன்புகொண்ட, அன்பர்-அடியார்கள், பொன்பணி-அழகிய திருப்பணிகளைச் செய்ய, வாய்க்குமேல் - அடியேனுக்குக் கிடைக்குமாயின், ஈண்டு-நெருங்கிய, அனந்தம் - கணக்கற்ற (முடிவற்ற), சன்மம்-பிறப்புகள், எடுப்பன்-அடியேன் விருப்புடன் எடுப்பேன் எ-று.

(வி-ரை) உலகில் புறக்கண்ணால் காணப்படுவன யாவும் பூதபௌதிக சம்பந்தமானவைகளே. இவைகள் அனைத்தும் மாயாசம்பந்தத்தன. மாயைத் தோற்றங்களே. இவைகள் அனைத்தினும் இச்சை செல்லா நிற்கும். இறைவனே இவைகள் எல்லாவற்றினுக்கும் அப்பாற்பட்டவனுதலின், 'வேண்டும் யாவு மிறந்த வெளியிடை' என்றார். இனி, இதற்கு யான், யான், என வேண்டப்பெறும் தத்துவங்கள் எல்லாவற்றையுங் கடந்து எனப்பொருள் கூறுவாருமுண்டு. வெளி என்றது பராகாயத்தை. இறைவன் சுயம்பிரகாசன் ஆதலின், 'தாண்டு வாரற்ற சோதி' என்றார். இறைவன் பணியினும் இறைவன் அடியார்க்குச் செய்யும் பணி இறைவனுக்கு மிக உவப்புடையது ஆதலின் 'நின்பால் பூண்ட வன்பர்தம் பொற்பணிவாய்க்குமேல்' என்றார். இதனை,

"கருமுகி னிகரன குழன்மட வரலியர் களபமென் னகிலினை கலவாரே
மருமல ரயனுட னரிமக பதிமிக மகிழ்பத மனமுற மதியாரே
யொருவித னிருவினை விதிமதி விபரித முறுபிற வியினெறி யுழலாரே
யருமறை முடிவினி னடமுடை யவனினை யடிதொழு மடியவ ரடியாரே"

எனக் கூறிய பெரியார் வாக்காற் றெரியலாம். (சிவஞானதீபம்.) 65

இறைவனே! இத்தேகம் அழியுமுன் தேவரீரோடு கலப்பேனோ எனல்

எடுத்த தேக மிறக்குமு னேயெனைக்
கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த வின்பக் கிளர்மணிக் குன்றமே.

(ப-ரை) அடுத்தபேர் - ஆசிரயித்தவர்களின், அறிவாய் - அறிவாகி, அறியாமையை - அவர்களுடைய அஞ்ஞானத்தை, கெடுத்த - நீக்கிய, இன்பம்-

79

சுகவடிவமாகிய, கிளர் - விளங்குகின்ற, மணி - மாணிக்க, குன்றமே - மலையே!, எடுத்த-எடுத்த, தேகம் - உடம்பு, இறக்கும் - செத்து அழியும், முன்னே-முன்னே, என்னை-அடியேனை, கொடுத்து-தேவரீருக்குக் கொடுத்து, நின்னையும்-தேவரீரையும், கூடவும்-கலக்கவும், காண்பனோ-காண்பேனோ? எ-று.

(வி-ரை) இத்தேகம் வீழ்தற்குமுன் உண்மைஞான முணர்ந்து இறைவனை அடைந்தவரே பிறவாநெறிபெற்றவர் ஆதலின், 'எடுத்ததேகம் இறக்குமுன்' என்றார். 'இப்பிறவி தப்பினா லெப்பிறவி வாய்க்குமோ' என்றது ஈண்டு கருதற்பாலது. பெறற்கரிய இத்தேகம் பெற்றதன்பயன் 'உத்தமனைத் தன்னுள்ளே காண்' என்றபடி இறைவனைத் தன்னுட் காணவேண்டுதலின் 'எனைக் கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ' என்றார். எனைக் கொடுத்து என்றது நான் என்னும் அகந்தையைக் கெடுத்து, தன் சுதந்தரத்தைக் கெடுத்து என்பது பொருளாம். இறைவன் அநாதியே கலந்திருப்பவனாயினும், மாயையால் அறியாது கிடக்கும் நிலைமையினை நீங்கி இறைவன் கலந்திருக்குந் தன்மையை யறிதலையே 'கூடவுங் காண்பனோ' என்றார். இதனை,

> "ஊனாகி யூனி லுயிராகி யெவ்வுலகுந்
> தானாகி நின்ற தனையறிவ தெக்காலம்"

என்ற **பத்திரகிரியார் வாக்கா**லும் அறியலாம்.

சலியா நிலைமையாலும், ஒளிமயத்தாலும், வளர்தரு தன்மையாலும் இறைவனை 'ஒளிமணிக் குன்றமே' என்றார். இறைவன் அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தையூட்டி இன்பருள்வோனாதலின் 'அடுத்தபே ரறிவா யறியாமையைக் கெடுத்த இன்பக்கிளர் மணிக் குன்றமே' என்றார். 66

இறைவனே! நீ எனக்குத் திருவருள் செய்யுங்காலம் எது என்கின்றார்

> குன்றி டாத கொழுஞ்சுட ரேமணி
> மன்று ளாடிய மாணிக்க மேஉனை
> அன்றி யார்துணை யாருற வார்கதி
> என்று நீயெனக் கின்னருள் செய்வதே.

(ப-ரை) குன்றிடாத - அழியாத, கொழும் - கொழுமையாகிய, சுடரே-சுடரே!, மணி-அழகிய, மன்றுள்-தில்லைச்சிற்றம்பலத்தில், ஆடிய திருநடனம் செய்கின்ற, மாணிக்கமே - மாணிக்கமணியே!, உனை - தேவரீரை, அன்றி-அல்லாமல், துணை-அடியேனுக்குத்துணை, எவர் - யார்?, உறவு - சுற்றம், யார்-யார்?, கதி-தஞ்சம், ஆர்-யார்? (ஒருவருமே இல்லை ஆகையினால்), நீ - தேவரீர், எனக்கு - அடியேனுக்கு, இன் - இனிய, அருள்-திருவருளை, செய்வது-செய்வது, என்று-எந்தக்காலமாகும்? எ-று.

(வி-ரை) என்றும் ஒருபடித்தாய், நித்தியமாய், வியாபகமாய் இன்ப ஒளியுருவாய் இறைவன் இருப்பவன் ஆதலின் 'குன்றிடாத கொழுஞ்சுடரே' என்றார். ஆன்மாக்களுக்கு இறைவன் ஆதிமுதல் சார்துணையாய்



எடுக்கும் பிறவிகளிலெல்லாந் தானுங் கூடநின்று அருள்செய்து வருவோனாதலின், 'உனையன்றி யார் துணை' என்றார். இதனை,

> "பண்டு தொட்டுப் பாவியேன் பானீ நின்றாய் என்றேனும்
> விண்டு நீதான் பிரிந்துளாயோ விமலா வமலா யுனையன்றிக்
> கொண்ட துணையும் வேறுண்டோ கோலப் பூங்கொம் போர்பாகா
> கண்டு கொண்டே என்கருத்தைக் கடையேற் கருளல் நின்கடனே"

என்ற **ஆப்தர் வாக்கா**லும் அறியலாம். ஏ-ஈற்றசை. 67

இறைவனே! தேவரீர் அடியேன் மனத்தில் உற்றிருத்தலால் என் அஞ்ஞானம் ஒளித்தது என்கின்றார்

> அருளெ லாந்திரண் டோர்வடி வாகிய
> பொருளெ லாம்வல்ல பொற்பொது நாதஎன்
> மருளெ லாங்கெடுத் தேயுள மன்னலால்
> இருளெ லாமிரிந் தெங்கொளித் திட்டதே.

(ப-ரை) அருள்-திருவருள், எலாம்-எல்லாம், திரண்டு - ஒன்றுசேர்ந்து ஓர்-ஒரு, வடிவு-வடிவம், ஆகிய - ஆகிவிளங்குகின்ற, பொருள் - பொருள்கள், எலாம்-எல்லாம், வல்ல-ஆக்கிக்காத்து அழிக்கவல்ல, பொன்-பொன்மயமாகிய, பொது-அம்பலத்தில், நாத-திருநடனத்தைச் செய்கின்ற இறைவனே!, என்-அடியேனுடைய, மருள்-மயக்கம், எலாம்-முழுதையும், கெடுத்து - அழித்து, உள்ளம் - அடியேன் மனத்தில், மன்னலால் - தேவரீர் நிலையுற்றிருத்தலால், இருள்-அஞ்ஞானமாகிய இருள், எலாம - முற்றும், இரிந்து-ஓடி, எங்கு-எந்த இடத்தில், ஒளித்து-மறைந்து, இட்டது-இட்டது? எ-று.

(வி-ரை) இறைவன் அருளே திருமேனியாக உடையவன் ஆதலின் 'அருளெலாந் திரண்டோர் வடிவாகிய' என்றார். இறைவன் எல்லாவற்றையும் ஆக்கிக்காத்து ஒடுக்குபவன் ஆதலின் 'பொருளெலாம் வல்ல' என்றார். இறைவன் பொன்னம்பலத்தே நின்று ஊனநடனமும் ஞானநடனமும் புரியும் ஆனந்தக்கூத்தன் ஆதலின் 'பொற்பொதுநாத' என்றார். பொன்னம்பலம் - சிதம்பரம். இறைவனை அந்தர்முகத்தே தரிசித்தபின் அஞ்ஞான இருள் அகன்றோட ஞானவொளி நிறைந்ததாதலின், 'மருளெலாங் கெடுத்தேயுள மன்னலால் இருளெலா மிரிந்தெங் கொளித்திட்டதே' என்றார். ஏகாரம் - ஈற்றசை. 68

இறைவனே! பழவினை அகலின் உன்திருவடி அடைவன் எனல்

> எங்கு மென்னை யிகலுற வாட்டியே
> பங்கஞ் செய்த பழவினை பற்றறால்
> அங்க ணாஉன் னடியிணை யன்றியே
> தங்க வேறிட முண்டோ சகத்திலே.

(ப-ரை) எங்கும்-எந்த இடத்திலும், என்னை - அடியேனை, இகல்-பகை, உள-மிக, வாட்டி-வாட்டுவித்து, பங்கம்-கேவலத்தை (இழிவை), செய்த-உண்டாக்கிய, பழம் - பழமையாகிய, வினை - வினையானது, பற்று - சம்பந்தம், அற்ருல் - நீங்கிப்போகுமானால், அங்கணா - அழகிய கண்களையுடைய பெருமானே!, உன்-தேவரீருடைய, அடி-பாத, இணை - இரட்டை, அன்றி - அல்லாது, சகத்தில் - இவ்வுலகத்தில், தங்க - அடியேன்சென்று தங்கியிருக்க, வேறு - (உன் திருவடியையன்றி) வேருக, இடம் - இடமானது, உளதோ - உண்டோ? எ-று.

(வி-ரை) ஆன்மா முத்தியின்பத்தை எய்தாது பிறப்பெடுத் தழலச் செய்வது வினையே ஆதலின் வினை ஆன்மாவுக்குப் பகையாயது. இது கொண்டே, 'எங்கு மென்னை யிகலுற வாட்டியே பங்கஞ் செய்த பழவினை' என்ருர். ஈண்டு பழவினை என்றது பிராரத்துவ கன்மத்தை. இறைவன் ஆன்மாக்களை அருளொடு நோக்குவோன் என்னும் பொருள்கொண்டே 'அங்கணா' என்ருர். எல்லா உயிர்களும் இறைவனையே பற்றுக்கோடாகக் கொண்டு நிற்றலின் 'உன்னடியிணை யன்றியே தங்க வேறிட முண்டோ சகத்திலே' என்ருர். ஈண்டு ஈசனே ஆதாரன் என்பது கருத்து. ஏ - ஈற்றசை.

69

இறைவனே! உன்னை நேருறக்கண்டு கலந்தாலன்றி என்
அருள் ஏக்கந்தீரா தென்கின்ருர்

உண்ட வர்க்கன்றி யுட்பசி யோயுமோ
கண்ட வர்க்கன்றிக் காத லடங்குமோ
தொண்ட ருக்கெளி யானென்று தோன்றுவான்
வண்ட மிழ்க்கிசை வாக மதிக்கவே.

(ப-ரை) உண்டவர்க்கு-சாப்பிட்டவர்களுக்கு, அன்றி-அல்லாமல் (மற்றவர்களுக்கு), உள் - வயிற்றிற்குள்ளேயுள்ள, பசி - பசிநோயானது, ஓயுமோ-அடங்குமோ?, கண்டவர்க்கு - நேருறக்கண்டவர்களுக்கு, அன்றி-அல்லாமல் (மற்றவர்களுக்கு), காதல் - ஆசைநோய், அடங்குமோ-நீங்குமோ? (தீருமோ) (அதுபோல), வண்-வளப்பம் பொருந்திய, தமிழ்க்கு-செந்தமிழ்ப்பாடலுக்கு, இசைவு-பொருத்தம், ஆக-ஆக, மதிக்க-எல்லோரும் எண்ணுமாறு, தொண்டருக்கு-அடியவர்களுக்கு, எளியான்-எளியவனாகிய எமது இறைவன், என்று-எந்தக்காலத்தில், தோன்றுவான்-வெளிப்பட்டருள்வான்? எ-று.

(வி-ரை) 'உண்டவர்க்குப் பசிதீரும், கண்டவர்க்குக் காதலடங்கும்' என்பது பழமொழி. அதனையே இங்கு உண்டவர்க்கன்றி ... ... லடங்குமோ' என்ருர். இறைவன் 'தொண்டருள்ளத் தொடுக்கம்' ஆதலின் 'தொண்டருக் கெளியான்' என்ருர். 'அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்' என்றதும் கருதத்தக்கது. 'கண்டவர்க் கன்றிக்காத லடங்குமோ' என்றதில் கண்டவர்க்கு என்பதற்கு அநுபவித்துக் கண்டவர்க்கு என்று பொருள் கூறலும் ஒன்று. 'வண்டமிழ்' என்றது தமிழ்வேதமாகிய தேவார திருவாசகங்களை. 'தொண்டருக் ... ... ... வாக மதிக்கவே' என்றதற்கு, 'மேலாகிய தேவார திருவாசகங்களாகிய வளப்பம் பொருந்திய தமிழ்ப் பாமாலைகளுக்கு அன்னியப் பொருந்தியிருந்த புயங்களையுடையவனே! அடியவர்களுக்கு எளியவன் என்று தேவரீரை யாவரும் மதிக்கும்படி அடியேனுக்குப் பிரத்தியக்ஷமாக வந்து தரிசனந் தந்தருளு' எனப் பொருள் உரைப்பாருமுண்டு. 'உட்பசி' வயிற்றின் உள்ளிருந்து எழுகின்ற பசி என்பது பொருள். ஏ - ஈற்றசை.



70

இறைவனே! காமக்கடலில் முழுகிய அடியேன் விதியை சிந்திக்க
என் கண்கள் நித்திரை கொள்ளவில்லை எனல்

மதியுங் கங்கையுங் கொன்றையும் மத்தமும்
பொதியுஞ் சென்னிப் புனிதநின் பொன்னடிக்
கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்
விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே.

(ப-ரை) மதியும்-சந்திரனும், கங்கையும் - கங்கைநதியும், கொன்றையும்-கொன்றைமலரும், மத்தமும் - ஊமத்தமலரும், பொதியும் - சூடியிருக்கின்ற, சென்னி - முடியையுடைய, புனித - பரிசுத்தமுடையவனே!, நின் - தேவரீருடைய, பொன் - அழகிய, அடி - திருப்பாதமாகிய, கதியை - தஞ்சத்தினை, விட்டு-விட்டு, இந்த-இந்த, காமத்தில்-காமக்கடலில், ஆழ்ந்த - முழுகிய, என்-அடியேனுடைய, விதியை-ஊழ்வினையை, எண்ணி-சிந்தித்து, விழி - அடியேனுடைய கண்கள், துயில்வது-தூங்குவது, அன்று-அல்ல எ-று.

(வி-ரை) 'மதியுங்.....பொதியுஞ் சென்னி' என்றதில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். இறைவன் அறிவுப்பிழம்பு என்பதை அறிந்து ஆன்மாக்கள் உய்யவேண்டி இறைவன் மதி சூடினன் என்பர். இன்னும் எப்பாவத்தையும் நீக்கி அப்பாலெடுத்து உயர்வாக்குவோன் என்பது காட்டவே மதியணிந்தன ரென்பர். இறைவன் தண்ணளி உடையவன் என்பது காட்டக் கங்கையைச் சடையில் அணிந்தருளினர் என்பர். இறைவன் பிரணவசொருபன், பிரணவப் பொருளாயிருப்பவன் என்பது காட்ட கொன்றைமாலையை அணிந்துள்ளார். இறைவன் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்பார் யார்க்கும் ஆதாரன் எல்லாவற்றிற்கும் ஆதாரன் என்பது காட்டக் கொன்றையணிந்த முடியில் மத்தமும் அணிந்தார். கரும்பு இருக்க இரும்பைக் கறிப்பார்போல 'புனிதநின் பொன்னடிக் கதியை விட்டிந்தக் காமத்தி லாழ்ந்தவென்' என்ருர். துக்கங் கவலை பிடித்தார்க்குத் தூக்கம் பிடியா தாதலின், 'விதியை யெண்ணி விழிதுயி லாதன்றே' என்ருர். இதனை,

"வேதங்க ளேத்தும் விமலா விறைவாவுன்
பாதங் கதியென்னப் பற்ருது—தோதகப்புன்
மாதர் மயக்கத்தில் மாழ்குமெனைத் தூக்கியெடுத்
தேதமகற் றிக்கா வினிது"

என்ற சிவநெறி வெண்பாவாலும் அறியலாம். ஏ-ஈற்றசை.

ஆசாரியக்கோலங் கொண்டுவந்து அஞ்ஞான நீங்க எனக்கு
ஞானத்தினை உணர்த்து எனல்

அன்றெ னச்சொல ஆமென அற்புதம்
நன்றெ னச்சொல நண்ணிய நன்மையை
ஒன்றெ னச்சொன வொண்பொரு ளேஒளி
இன்றெ னக்கருள் வாய்இரு ளேகவே.

(ப-ரை) அன்று-அல்ல, என-என்று, சொல - சொல்லவும், ஆம் - ஆகும், என-என்று சொல்லவும், அற்புதம்-அதிசயம், நன்று - நன்றாய் இருக்கிறது, என-என்று, சொல-சொல்லவும், நண்ணிய-நெருங்கிய, நன்மையை - நன்மையானபொருளை (ஆசாரியத் திருக்கோலம் பூண்டுவந்து), ஒன்று-ஒன்றே, என-என்று, சொன - திருவாய்மலர்ந்தருளிச்செய்த, ஒண் - ஒளிபொருந்திய, பொருளே-இறைவனென்னும் பொருளே!, இருள்-அஞ்ஞானம், ஏக-ஒழியும் படி, இன்று - இப்பொழுது, எனக்கு - அடியனேனுக்கு, ஒளி - ஞானப்பிரகாசத்தினை, அருள்-கிருபைசெய்தருள்வாயாக எ-று.

(வி-ரை) பல சமயவாதிகளும் இறைவனை அன்றெனவும், ஆமெனவுங் கூறி இடர்படாநிற்பச் சித்தாந்த சைவர் ஒன்றே எனக் கூறி வலியுறுத்தி நின்றார் ஆதலின், 'அன்றென.........நன்மையை' எனவும், 'ஒன்றெனச் சொன ஒண்பொருள்" எனவுங் கூறினார். இதுபற்றியன்றே **பத்திரகிரியாரும்,**

"ஆயுங் கலைகளெல்லா மாராய்ந்து பார்த்ததற்பின்
நீயன்றி யொன்றுமில்லா நிசங்காண்ப தெக்காலம்" என்றார்.

"அன்றென்று மாமென்று மாறு சமயங்க
ளொன் றென்றே டொவ்வா துரைத்தாலு—மொன்று
பொரு தனையே நோக்குவாரு ளத்திருக்கு
மருதனையே நோக்கி வரும்"

என்றார் **பட்டினத்தாரும்,**

இங்கு 'ஒளி' என்றது ஞானஒளியை. 'இருள்' என்றது அஞ்ஞானத்தை. இனி, ஆணவமல இருளை எனினும் ஆம். ஏ-ஈற்றசை. 72

மனமே! எமதூதர்கள் வருவார்களே; அவருக்கு என்ன சமாதானஞ்
சொல்லப்போகிறாய்? எனல்

இருவ ரேபுகழ்ந் தேத்தற் கினியராம்
ஒருவ ரேதுணை யென்றுண ராய்நெஞ்சே
வருவ ரேகொடுங் காலர்கள் வந்தெதிர்
பொருவ ரேஅவர்க் கென்சொல் புகல்வதே.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, இருவரே-பிரம்மாவும் விஷ்ணுவுமாகிய இருவர்களே, புகழ்ந்து-புகழ்ந்து, ஏத்தற்கு - துதிப்பதற்கு, இனியவர் - இனிமை



யுடையவர், ஆம் - ஆகும், ஒருவரே - ஒப்பற்றவரே!, துணை - நமக்குத்துணை, என்று - ஆவரென்று, உணராய் - அறிவாயாக, கொடும் - கொடுமையாகிய, காலர்கள் - எமதூதர்கள், வருவரே-வருவார்களே!, எதிர் - எதிரிலே, வந்து - வந்து, பொருவரே-போர்செய்வரே, அவர்க்கு-அந்த எமதூதர்களுக்கு, என்-என்ன சமாதானத்தை, புகல்வது-கூறுவது? எ-று.

(வி-ரை) இருவர் என்றது ஈங்கு பிரமவிஷ்ணுக்களை. 'இருவரே' என்றதில் ஈற்றேகாரம் பிரிநிலைப்பொருள். என்னை,

"பிரிநிலை வினவெண் ணீற்றசை தேற்றம்
இசைநிறை யெனவா றேகா ரம்மே"

என்பது **சூத்திரம்.**

இருவரே புகழ்ந்தேத்தற் கினியராம் என்றது திருவண்ணாமலைப்பெருமான் புராணகதையைக் குறித்து நின்றது. 'ஒருவர்' என்றது சிவபெருமானை. ஈண்டு ஒப்பற்றவர் என்ற பொருளில் வந்தது. 'எங்கா ளாயினுங் கூற்றுவன் வருவன்' என்றபடி எமன் வருதல் உண்மையுள்ளெல்லாம் உண்மையாதலின் 'வருவரே கொடுங்காலர்கள்' என்றார். இதுபற்றியன்றே **பட்டினத்தடிகளும்;**

"காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு"

என்றார். ஏ - ஈற்றசை. 73

இறைவனின் செச்சைமேனியை விழிகளாற் கண்டேன் கணமே கீர்த்தி,
கல்வி, அறிவு, சத்தியம், அன்பு முதலிய பெற்றேனெனல்

புகழுங் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையும் அன்பு மளித்தவே
சுகவி லாசத் துணைப்பொரு டோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே.

(ப-ரை) சுகம் - ஆநந்தத்தினைத்தரும், விலாசம் - லீலையினையுடைய, துணை-உயிர்க்குத் துணையாகிய, பொருள்-செம்பொருளாகிய இறைவனின், தோற்றம்-தரிசனத்திற்கு, ஆம் - உரியதாகும், ககனம் - செவ்வானம் ஒத்த, மேனியை - திருமேனியை, கண்களே - அடியேனின் விழிகளே, கண்டன-தரிசித்தன (அவ்வாறு தரிசித்த மாத்திரத்தில்), புகழும் - புகழையும், கல்வியும் - வித்தையினையும், போதமும் - அறிவையும், பொய்-பொய்யை, இல்லா-இல்லாத, அகமும்-மனத்தையும், வாய்மையும் - சத்தியத்தினையும், அன்பும்-அன்பினையும், அளித்த-கொடுத்தன எ-று.

(வி-ரை) உலகத்து ஒருவன் தோன்றின் புகழ்பெற வேண்டுவது அவசியமாதலின் 'புகழும்' என்றார். இதனை,

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று"

என்ற **திருக்குறளால்** அறியலாம்.

கல்வி அறிவு விருத்திக்கும், புகழுக்கும் ஆதாரமாக இருத்தலின் கல்வியை அதன்பின் வைத்தார். அறிவில்லார் புகழ்தருஞ் செய்தற்கில்லை. கல்வி இல்லார்க்கு அறிவில்லை. இதுகொண்டே 'கல்வியும்' என்றார். இதனை,

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூஉங் கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை"

என்றதனால் நன்கறியலாம்.

'போதம்' என்றது அறிவை. புகழ், கல்வி இரண்டற்கும் அறிவு ஆதாரம் ஆதலின் போதத்தை அதற்குப்பின் வைத்தார். 'போதம்' என்பதற்கு ஞானம் எனினும் பொருந்தும். 'பொய்யிலா அகம்' என்றது தூய அகத்தை. இதுபற்றியன்றே **திருவள்ளுவரும்**,

"புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்" என்றார்.

தூயஉள்ளத்தே இறைவன் களிப்பொடு குலாவி விளங்குவன் என்பது உணரத்தக்கது. 'அன்பு' எல்லாவற்றினும் மிக முக்கியமாதலின் மும்மைக்கும் வேண்டற்பால தொன்றாதலினாலும் அன்பை ஈற்றில்வைத்தார். இதனை,

"அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு" எனவும்,

"அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு"

எனவும் வந்த **திருக்குறள்களால்** அறியலாம்.

'ககனமேனி' என்றது தில்லையம்பல வெளியை. இறைவன் சுகாநந்த லீலாவிபூதிப் பொருளாதலின், 'சுகவிலாசத் தனிப்பொரு டோற்றம்' என்றார். 'புகழும் ... ... மன்பும்' இவற்றுள் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். ஏ - ஈற்றசை. 74

இறைவனைச் சிந்தித்து ராப்பகல் கலந்து இருப்பவர்களே நான் வணங்குந் தெய்வம் எனல்

**கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை**
**விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை**
**எண்ணி யெண்ணி யிரவும் பகலுமே**
**நண்ணு கின்றவர் நான்றொழுந் தெய்வமே.**



**(ப-ரை)** கண்ணுள்-விழிகளுக்குள், நின்ற-நிலைபெற்றிருக்கின்ற, ஒளியை-சோதியை, கருத்தினை - அடியேனின் கருத்தாய் இருக்கின்ற ஒருபொருளை, விண்ணுள் - ஆகாயத்தில், நின்று - நிலைபெற்று, விளங்கிய - விளங்கிய, மெய்யினை - உண்மைப்பொருளை, எண்ணி எண்ணி-பலமுறை நினைத்து, இரவும்-இராத்திரியும், பகலும் - பகற்காலத்திலும், நண்ணுகின்றவர் - இடைவிடாது சேர்ந்திருப்பவர், நான்-அடியேன், தொழும் - வணங்கும்படியான, தெய்வம்-தெய்வம் ஆவர் எ-று.

**(வி-ரை)** இறைவன் கண்ணுக்குக் கண்ணாகவும், எண்ணுக்கெண்ணாகவும் இருப்பவன் ஆதலின் 'கண்ணு ணின்ற வொளியைக் கருத்தினை' என்றார். இறைவன் சிதம்பரத்தே சிற்றம்பலத்தில் அரூபமாக ஆகாசவடிவமாக நிற்கின்றானாதலின் 'விண்ணு ணின்று விளங்கிய மெய்யினை' என்றார். இடைவிடாது எண்ணுதலின் 'எண்ணி எண்ணி' என்றார். நண்ணுகின்றவர் என்றது தொண்டர்களை. இறைவன் அடியரை வணங்குதல் இறைவற்கு உவப்பானதாதலின் 'நான் றொழுந் தெய்வமே' என்றார். இதுபற்றியன்றே **திருநாவுக்கரசரும்**,

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
யுவராதே யவரவரைக் கண்ட போது
வுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணி
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே"

என்றார். ஏ-ஈற்றசை. 75

சிவபெருமானே! உன்னையன்றி ஒருதெய்வம் உண்டு என்பவர் வருந்துவர்; உன்னைச் சார்ந்தவர் உய்வர் என்கின்றார்

தெய்வம் வேறுள தென்பவர் சிந்தனை
நைவ ரென்பதும் நற்பர தற்பர
சைவ சிற்சிவ னேஉனைச் சார்ந்தவர்
உய்வ ரென்பதும் யானுணர்ந் தேனுற்றே.

**(ப-ரை)** வேறு-சிவபெருமானுக்கு அந்நியமாக, தெய்வம் - ஒருதெய்வம், உளது-உண்டு, என்பவர்-என்று சொல்லுபவர், சிந்தை-மனம், நைவர்-வருந்துவர், என்பதும்-என்பதையும், நல்-நல்ல, பரம்-உயர்ந்த, தற்பர - தனக்குமேல் உயர்வின்றித் தானே உயர்வாய்நிற்கும் இறைவனே!, சைவ-சைவமார்க்கத்தினுற் சொல்லப்பெறும், சித்-ஞானசுகமான, சிவனே - மங்களகரனாகிய இறைவனே!, உன்னை-தேவரீரை, சார்ந்தவர்-அடைந்தவர்கள், உய்வர்-பிழைப்பர், என்பதும் - என்பதையும், உற்று - நன்றாய் ஆராய்ந்து, யான் - அடியேன், உணர்ந்தேன்-அறிந்தேன் எ-று.

(வி-ரை) இறைவன் உண்மையை உணர்ந்து அவனை வழிபட்டோரே முத்திப்பேறெய்தற்குரியர். இறைவனைப்பற்றிய சிந்தனையற்றுப் பிரபஞ்ச மாயையிற் பட்டுழன்று நிற்பவரே நரகுக்கு ஆளாகுபவராதலினாலும், 'தெய்வம் வேறுள......உய்வரென்பதும்' என்றார். இதனை,

"அம்பல வாண னடியிணை தொழுவார்
இம்பரி லுயர்வார் எனுங்கதி பெறுவார்
வம்புறு நரகே வாழிட மாகும்
எம்பெரு மானை எணாதவர் தமக்கே"

என்றதனால் நன்கறியலாம். ஏ-ஈற்றசை. 76

மனமே! சுற்றத்தாரோ ஆபத்து நேர்ந்த காலத்து உதவுவோர்? இல்லை. இறைவன் திருவடியையே துணையாகப் பற்றவேண்டுமெனல்

உற்ற வேளைக் குறு துணை யாயிந்தச்
சுற்ற மோநமைக் காக்குஞ்சொ லாய்நெஞ்சே
கற்றை வார்சடைக் கண்ணுதல் பாதமே
பற்ற தாயிற் பரசுகம் பற்றுமே.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, உற்ற-ஆபத்து நேர்ந்த, வேளைக்கு - காலத்தில், இந்த - இந்த, சுற்றமோ - உறவின்முறையாரோ, உறு - பொருந்திய துணை-துணை, ஆய்-ஆகி, நம்மை-நந்தம்மை, காக்கும் - காப்பாற்றும், சொல்லாய்-சொல்வாயாக, கற்றை-கத்தையாகிய, வார்-நீண்ட, சடை-சடைக்காட்டையும், கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுமுடைய இறைவன், பாதமே-திருவடியே, பற்றது-நமக்குப் பற்றுக்கோடு, ஆயின்-ஆனால், பர-மேலாகிய சிவானந்த, இன்பம்-சுகம், பற்றும்-உண்டாகும் எ-று.

(வி-ரை) உற்றார் உறவினர் எல்லாம் ஒருவன் செல்வத்துடன் வாழும்போதுதான் சூழ்ந்திருப்பர். காலன் வருங்காலத்து உதவமாட்டார் ஆதலின், 'உற்றவேளைக் குறுதுணை யாயிந்தச் சுற்றமோ நமைக் காக்கும்' என்றார். இதுபற்றியன்றோ **பட்டினத்தடிகளும்**,

"உற்றார் பெற்றா ருடன்பிறப்பார் பிள்ளைகளார்
மற்றா ரிருந்தாலென் மாளும்போ துதவுவரோ
கற்றா விழந்தவிளங் கன்றதுபோ லேயுருகிச்
சிற்றாகிச் சிற்றின்பஞ் சேர்ந்தனையே நெஞ்சமே"

என்றார். இன்னும் இதனை,

"உற்றா ரியாருளரோ வுயிர்கொண்டு போகும்போது
குற்றாலத் துறை கூத்தரல்லா னமக்கு"

என்ற **தேவாரச்** செய்யுளும் நன்கு புலப்படுத்தும்.



இறைவனைத் தஞ்சமடைந்து சுற்றநீ, மற்றுநீ என்றவனைப்பற்றி நிற்பிற் காலன்கைக்குத் தயாபரகதி பெறலாம் என்பார் 'கண்ணுதல் பாதமே பற்றதாயிற் பரசுகம்பற்றுமே' என்றார். ஏ - ஈற்றசை. 77

நெஞ்சே! சிவத்தைப்பெறின் பேறு அடையலாம்

பற்ற லாம்பொரு ளேபரம் பற்றினால்
உற்ற மாதவர்க் குண்மையை நல்குமே
மற்றும் வேறுள மார்க்கமெ லாமெடுத்
தெற்று வாய்மன மேகதி யெய்தவே.

(ப-ரை) பற்றல் - அச்சிவபெருமான் எல்லாராலும் பற்றல், ஆம்-ஆகிய, பொருளே - பரம்பொருளே ஆகும், பரம் - அந்த உயர்ந்தபொருளாகிய சிவத்தை, பற்றினால்-அன்புறப்பிடித்தால், உள்ள-அவ்வாறுபற்றிய, மா-பெரிய, தவர்க்கு - தவத்தை உடையவர்க்கு. உண்மையை - சத்தியமாகிய மோட்ச இன்பத்தினை, நல்கும்-தந்தருளும் (ஆதலால்), மனமே-நெஞ்சே!, கதி-மோட்ச இன்பத்தினை, எய்த-அடைதற்கு (நீ சிவசமயத்தை மேற்கொண்டு), வேறு-வேறாகி, உள-உள்ளனவாகிய, மற்றும்-மற்றைய, மார்க்கம்-சமயங்களை, எலாம்-எல்லாவற்றையும், எடுத்து-எடுத்து, எற்றுவாய்-உதறி எறிவாயாக. எ-று.

(வி-ரை) இறைவனே பற்றக்கூடிய பொருள் அவனைப்பற்றியே ஏனைப் பற்றுகளைவிட்டிருப்பின் முத்தியின்பம்வந்து கூடும் என்பார் 'பற்றலாம் பொருளேபரம்' என்றார். இதனை,

"பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்" எனவும்,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

எனவுங் கூறினர் **வள்ளுவர்**.

நெல்லை எடுத்தபின் பதரைத் தூற்றிவிடவேண்டியது நியாயமாதலின் சிவபெருமானைப் பற்றிக்கொண்டு 'மற்றும் வேறுள மார்க்க மெலா மெடுத்தெற்றுவாய்' என்றார். இது செய்யிற் கதி தப்பாதென்பார் 'மனமே கதி எய்தவே' என்றார். இது 'நெஞ்சறிவுறுத்தல்' என்னுந்துறை. ஏ-ஈற்றசை. 78

## ஆ ர ண ம்

இறைவனே! நின் அருவத்திருமேனியை காணப்பெற்றிலேன்,
உருவமேனியானுருகுவேன் எனல்

ஆரண மார்க்கத் தாகம வாசி
யற்புத மாய்நடந் தருளும்
காரண முணர்த்துங் கையும்நின் மெய்யும்
கண்கண்மூன் றுடையவென் கண்ணே
பூரண வறிவிற் கண்டில மதனாற்
போற்றியிப் புந்தியோ டிருந்து
தாரணி யுள்ள மட்டுமே வணங்கத்
தமியனேன் வேண்டிடத் தருமே.

(ப-ரை) கண்கள் - விழிகள், மூன்று-மூன்றை, உடைய-கொண்டுள்ள, என்-அடியேனுடைய, கண்ணே-கண்ணே!, ஆரணம் - வேதமாகிய, மார்க்கத்து-வீதியில், ஆகமம்-ஆகமமாகிய, வாசி-குதிரை, அற்புதமாய்-விநோதமாக (ஆச்சரியகரமாக), நடந்து-நடந்து, அருளும்-அருள்கின்ற, காரணம்-காரணத்தினை, உணர்த்தும் - தெரிவித்தருளும், நின் - தேவரீருடைய, கையும் - (சின் முத்திரை தாங்கிய) திருக்கரமும், மெய்யும் - திருமேனியையும், பூரணம்-வியாபகமாகிய, அறிவில் - அறிவினால், கண்டிலம் - அடியேங்கள் காணவில்லை, அதனால் - அதனாலே, தாரணி - பூமியில், உள்ள - இருக்கிற, மட்டும்-வரையும், போற்றி-புகழ்ந்து, இ-இந்த, புந்தியோடு-மனதோடு, இருந்து - தங்கி இருந்து (சிந்தித்து), வணங்க-தொழும்படி, தமியனேன்-தமியேன், வேண்டிட-விரும்ப, தரும்-தக்கதாகும் எ-று.

(வி-ரை) வேதமும், ஆகமமும் இறைவனாலே தரப்பட்டதாயினும் வேதம் பொதுவும் ஆகமம் சிறப்புமாகும். இதனை,

"வேதம் பசுவதன் பான்மெய் யாகம நால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறு நெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்"

என்ற **வெண்பாவான்** நன்கறியலாம்.

இறைவன் திருவடியாகிய முத்திநிலையை அடைபவர்க்கு வேதம் மார்க்கமாகவும் ஆகமம் வாகனமாகவும் இருக்கின்றன என்பார் 'ஆரண மார்க்கத் தாகம வாசி அற்புதமாய் நடந்தருளும்' என்றார் 'காரண முணர்த்துங் கை' என்றது சின்முத்திரையோடுங் கூடிய திருக்கரத்தை. இத்திருக்கரத்தால்



விளக்கிய உண்மைகள் பல. அவைகள் அனைத்தையும் ஞானாசிரியர்பால் உபதேசமுறையிற் கேட்டுணர்க. பிண்டமாகக் கூறின், பதி, பசு, பாச முப்பொருளுண்மையும், பசுக்களைப் பாசம் மறைத்து நிற்கின்றநிலையையும், பசுக்கள் பாசத்தினின்று நீங்கியபின்னே இறைவனைக் காணக்கூடும், சேரக்கூடும் என்பதனையும், இறைவன் திருவடிசேரலே முத்தி எனபதனையும் முத்தியின்பத்தின் தன்மையையும் முறையே உணர்த்தா நிற்கின்றது. இதனை, ஞானமுத்திரை எனவுங் கூறுவர். 'மெய்யும்' என்றது திவ்ய உருவத்திருமேனியை. இறைவன் தடத்தமாக நின்றருளும்போது இறைவன் திருமேனி தோற்றமின்றி அருவமாக இருக்குமாதலின் 'பூரண வறிவிற் கண்டிலம்' என்றார். உருவத்தியானத்தாலேயே அன்பும், ஆராமையும் ஆனந்தமும், ஆர்வமும், ஆக்கமும் விளையும் ஆதலின், கண்கண் மூன்றுடைய கடவுளினையே மனம் வாக்குக் காயங்களாகிய திரிகரணத்தாலும் வழிபட விரும்பி யிருப்பதை யுணர்த்தவேண்டி, 'போற்றியிப் புந்தியோ டிருந்து தாரணியுள்ள மட்டுமே வணங்கத் தமியனேன் வேண்டிடத் தருமே' என்றார்.

போற்றி என்றதனால் வாக்கினையும், புந்தி என்றதனால் மனத்தினையும், வணங்க என்றதனால் காயத்தினையுங் குறித்தமையுங் காண்க. இறைவனை, உருவத் திருமேனியோடு பாவித்து வழிபடல் சிறந்தது. அருவத்திருமேனியால் வழிபடல் அகத்து உருக்கம் பயவா தென்பதனை,

"எல்லா மாகி அல்லவுமாய் எங்கும் நிறைந்த பரஞ்சுடரே
சொல்லா ருருவம் ஒன்றதனிற் சோதி யுன்னைத் தொழுவோரே
ஒல்லே வெயிலிற் படும் வெண்ணெய் ஒப்பா உள்ளம் உருகிடுவர்
மல்லா ரின்ப வாரிதியில் மகிழ்ந்து திளைத்தே யின்புறுவர்"

எனவும்,

"அருவங் கண்ணுக் கெங்கடங்கும் அதனை எண்ணல் எப்படியோ
அருவம் உளத்தை யுருக்கிடுமோ அடுத்து நினைக்க இடமின்றே
உருவந் தானே உபாசனைக்கிங் குவந்த பொருளாங் கண்டிடுக
கருவங் கொண்டோர் சிலைவணக்கங் கவையின் றென்பர் கருத்திலரே"

எனவும் எழுந்த **பெரியார்** வாக்கான் அறிந்திடுக.

'தாரணி' இது பூமிக்கோர் பெயர். பொருள்களைத் தரித்திருப்பதால் இப்பெயர் வந்தது. இப்பதிகத்தின் முதற்செய்யுளின் முதற்சீர் 'ஆரணம்' என்று தொடங்குதலின் இப்பதிகத்திற்கு 'ஆரணம்' என்று பெயர் வந்தது. விளச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என எழு சீர்கள் ஓரடிக்கண்வர நான்கடியான் அமைந்த ஆசிரியவிருத்தம் ஆதலின் இது எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம். இப்பதிகமும் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது.

உலகங்களைப் படைத்துக்காத்து ஒடுக்கும் இறைவனே! எனைப் பிறவிக் கடலினின்றும் எடுத்து அருள்புரியவேண்டும் எனல்

இடமொரு மடவா ளுலகனைக் கீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றும்
தடமுறு மகில மடங்குநா ளம்மை
தன்னையு மொழித்துவிண் ணெனவே
படருறு சோதிக் கருணையங் கடலே
பாயிருட் படுகரிற் கிடக்கக்
கடவனோ நினைப்பு மறப்பெனுந் திரையைக்
கவர்ந்தெனை வளர்ப்பதுன் கடனே.

(ப-ரை) இடம்-இடதுபாகத்தை, ஒரு-ஒப்பற்ற, மடவாள்-மடப்பத்தினை யுடையவளாகிய, உலகு - அண்டங்களையெல்லாம் ஈன்ற, அன்னைக்கு-தாயாகிய உமாதேவியாருக்கு, ஈந்திட்டு-கொடுத்தருளி, எ-எல்லா, உலகத்தையும்-உலகங்களையும், ஈன்றும்-படைத்தும், தடம் - பெருமை, உறும்-பொருந்திய, அகிலம்-உலகங்கள், மடங்கும்-ஒடுங்கும், நாள்-காலத்தில், அம்மை - பார்வதி தேவியார், தன்னையும்-தன்னையும், ஒழித்து-அடக்கியருளிக்கொண்டு, விண்-ஆகாயம், என-போல, படர் - எங்கும்பரவி வியாபித்து, உறும்-இருக்கின்ற, சோதி - ஒளிமயமாகிய, கருணை - கிருபை நிறைந்த, கடலே - சமுத்திரமே!, பாய்-பரவியுள்ள, இருள் - அஞ்ஞான இருள்நிறைந்த, படுகரில் - பிறவிக்கடலில், கிடக்க-அழுந்திக்கிடக்க, கடவனோ - தக்கவனோ அடியேன், நினைப்பு-நினைப்பும், மறப்பு - மறப்பும், எனும்-என்று சொல்லப்படுகின்ற, திரையை-அலைகளை, கவர்ந்து-கிரகித்துக்கொண்டு, எனை-அடியேனாகிய என்னை, வளர்ப்பது - வளர்த்து அருள்புரிவது, உன் - தேவரீரது, கடன் - கடன்மையாகும் எ-று.

(வி-ரை) 'இடம்' என்றது வாமபாகத்தை. 'ஒரு' ஈண்டு ஒப்பின்மைப் பொருளில் வந்தது. இறைவி என்றும் இளமைக் கோலத்தையுடையவள் ஆதலின் 'மடவாள்' என்றார். 'மடம்' என்றது மடப்பத்தினை. திருவருட் சத்தியே உலகங்களையெல்லாம் ஈன்றளித்தருளுதலின் 'உலகனைக்கு' என்றார். தோற்றமுறையே சர்வமும் சத்தியுள்ளே யொடுக்கம். சத்தி சிவத்துள் ஒடுக்கம் ஆதலின், 'எவ்வுலகத்தையு மீன்றும் தடமுறு மகில மடங்குநா ளம்மை தன்னையு மொழித்து' என்றார். 'விண்' என்றது ஆகாயத்தை. ஆகாயம் சர்வவியாபகமாக இருத்தல்போல இறைவனும் சர்வவியாபகனாக இருக்கிறான் என்பதை உவமையால் விளக்கினார். 'விண் என' என்று சோதிப்பிரகாசனும் கருணையங்கடலுமாகிய உன்னைத் தஞ்சம் புகுந்தும் இருட்கிடங்கிற் கிடக்கலாமோ என்பார், 'படருறு சோதிக் கருணையங்கடலே பாயிருட் படுகரிற் கிடக்கக் கடவனோ" என்றார். 'நினைப்பு மறப்பெனுந் திரை' என்றது சகல கேவலங்களை. 'நினைப்பு மறப்பெனுந் திரை' என்றதனால் 'படுகர்' என்றதற்குக் கடலெனப் பொருள் கூறப்பெற்றது. இறைவன்



உமாதேவியாரை இடதுபாகத்து வைத்தருளுவது ஆன்மாக்களினிடத்து வைத்த கருணையினாலேயாம். இதனை,

"படைப்பாதி தொழிலும் பத்தர்க்கருளும் பாவனையுநாலு
மிடப்பாக மாதராரோடி யைந்துயிர்க்கின்ப மென்று
மடைப்பானு மதுவுமுத்தி யளித்திடுமி யோகும்பாசந்
துடைப்பானுந் தொழிலுமேனி தொடக்கானேற் சொல்லொணாதே"

என்ற **சிவஞானசித்தியாரா**லும் அறியலாம்.

இறைவனிடத்திருந்தே எல்லாம் யாவையுந் தோன்றுகின்றன. தோன்றியமுறையே தோன்றியவைகள் எல்லாம் ஒடுங்கும் ஈற்றில் எல்லாம் இறைவனிடத்தொடுங்கும். இதுபற்றியே 'எவ்வுலகத்தையு மீன்றும் தடமுறு மகில மடங்குநா ளம்மை தன்னையு மொழித்து' என்றார். ஈண்டு அம்மை என்றது அருட்சத்தியை. இதனை,

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்"

என்ற **சிவஞானபோதச் சூத்திரத்**தால் அறியலாம்.

'மறப்பெனும்' இதில் 'எனும்' என்றது என்னும் என்றதன் தொகுத்தல் விகாரம். 'கவர்ந்தெனை' இதில் 'எனை' என்றது என்னை என்பதன் தொகுத்தல் விகாரம். 'கடவனோ' ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. ஏ - ஈற்றசை. 2

இறைவன் உண்மை நிலையையும் தன் உண்மை நிலையையும் உணர்த்துகின்றார்

வளம்பெறு ஞான வாரிவாய் மடுத்து
மண்ணையும் விண்ணையுந் தெரியா
தளம்பெறுந் துரும்பொத் தாவியோ டாக்கை
யானந்த மாகவே யலந்தேன்
களம்பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக்
காட்சியே சாட்சியே அறிஞர்
உளம்பெறுந் துணையே பொதுவினி னடிக்கு
முண்மையே உள்ளவா றிதுவே.

(ப-ரை) வளம்-வளப்பத்தை, பெறும்-பெற்றுப்பொருந்தியுள்ள, ஞானம்-ஞானமாகிய, வாரி - சமுத்திரத்தை, வாய் - வாயினால், மடுத்து - நிரம்பப் பருகி, மண்ணையும் - பூமியையும், விண்ணையும் - ஆகாயத்தையும், தெரியாது-உணராது, அளம்-கடலில், பெறும்-அகப்பட்ட, துரும்பு-ஒரு சிறு துரும்பை, ஒத்து-ஒத்து, ஆவியோடு-உயிருடனே, ஆக்கை-உடம்பும், ஆனந்தம் - இன்புருவம், ஆகவே - ஆகவே, அலந்தேன்-வருந்தினேன், களம்-வஞ்சகத்தை, பெறு-

கொண்டுள்ள, வஞ்சம் - கபடமுடைய, நெஞ்சினர் - மனத்தையுடையவர்கள், காணு - கண்டறியாத, காட்சியே-திருக்காட்சியை யுடையவனே!, சாட்சியே-சிவசாட்சியாய் உள்ளவனே!, அறிஞர்கள் - ஞானிகளின், உளம் - உள்ளத்தினிடத்து (மனத்தினிடத்து), பெறும் - இடமாகக்கொண்டுள்ள, துணையே-அடியேனின் உயிர்த்துணையே!, பொதுவினில் - தில்லைச்சிற்றம்பலத்தில், நடிக்கும் - ஆனந்த நடனத்தைச் செய்தருளுகின்ற, உண்மையே - மெய்ப்பொருளே!, உள்ள-உண்மையான, ஆறு-விதம், இதுவே-இதுவேயாகும் எ-று.

(வி-ரை) 'வளம்பெறு ஞானவாரி' என்றது சிவஞானப்பெருக்கை. 'வளம்பெறு' என்றது சிவாநந்த வளத்தை. 'வாய் மடுத்தல்' என்றது வாய் நிறையக்கொண்டு உண்ணல். 'அளம்பெறுந் துரும்பு' என்றது கடலிற் கிடந்த துரும்புபோல என்பது பொருள். 'ஆவியோ டாக்கை' இதில் ஒரு மூன்றனுருபு. உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. இறைவன் கள்ளநெஞ்சினர் காணுப் பொருளாதலின் 'களம் பெறு வஞ்ச நெஞ்சினர் காணுக் காட்சியே' என்றார். இறைவன் கற்றறிந்த தூய உளத்தினர் காண அவர் நெஞ்சுளுறைபவன் ஆதலின், 'அறிஞர் உளம்பெறுந் துணையே' என்றார். இதனை,

"கல்லாக் கபடர் காணுத் கருணை விளக்கே முழுமுதலே
சொல்லார் கல்விக் கரைகண்டார் சுத்த வுளத்தே நின்றிருந்தே
எல்லாய் விளங்கும் பெருஞ்சோதி இறையே கொன்றை முடியானே
வல்லாய் என்றன் வருத்தமெலாம் வந்தே யகற்றி வாழ்வருளே"

என்றதனுலும் அறியலாம்.

இறைவன் யார் மனத்தும் இருந்து சாட்சிபூதமாக விளங்குஞ் சோதியாதலினல் 'சாக்ஷியே' என்றார். 'இதுவே' என்றதன் ஈற்று ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. 3

இறைவனே! அடியேனைப் பிறவிக்கடலினின்று கரையேற்றிக் காப்பது உன்கடன் என்கின்றார்

உள்ளமே நீங்கா வென்னைவா வாவென்
றுலப்பிலா வானந்த மான
வெள்ளமே பொழியுங் கருணைவான் முகிலே
வெப்பிலாத் தண்ணருள் விளக்கே
கள்ளமே துரக்குந் தூவெளிப் பரப்பே
கருவெனக் கிடந்தபாழ் மாயப்
பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப்
பாலிப்ப துன்னருட் பரமே.

(ப-ரை) உள்ளமே-அடியேனுடைய மனத்தினையே இடமாகக்கொண்டு தங்கி, நீங்கா-விட்டுப்பிரியாது இருந்து, என்னை-அடியேனை, வாவா - வருக! வருக!, என்று-என்று அழைத்து, உலப்பு-கெடுதல், இலா-இல்லாத, ஆனந்தம்-



இன்பம், ஆன்-ஆகிய, வெள்ளமே - மழையினையே, பொழியும் - பெய்கின்ற (சொரிகின்ற), வான்-உயர்ந்த (மேலாகிய), கருணை-கிருபையாகிய, முகிலே-மேகமே!, வெப்பு-வெம்மை (சூடு), இலா-இல்லாத, தண்-குளிர்ச்சிபொருந்திய, அருள்-அருண்மயமாகிய, விளக்கே-விளக்கே! (தீபமே), கள்ளமே-வஞ்சனையாகிய இருளினையே, துரக்கும் - ஓட்டும், தூ-பரிசுத்தமாகிய, வெளி-ஆகாயமாகிய, பரப்பே-பரப்பே!, கரு-கருப்பம், என - என்று சொல்லும்படியாகி, கிடந்த-கிடந்த, பாழ்-பாழாகிய, மாயை - மாயாசம்பந்தத்தோடுகூடிய, பள்ளம்-கடலில், வீழாது - வீழாதபடிக்கு, என்னை - அடியேனுகிய என்னை, கரை-கரையில், ஏற்றி - ஏற்றி, பாலிப்பது - காப்பாற்றுவது, உன்-தேவரீருடைய, அருள்-திருவருட்கு, பரம்-பாரமாகும் எ-று.

(வி-ரை) இறைவன் யார் மனத்தும் இருக்குஞ்சோதி ஆதலின் 'உள்ளமே நீங்கா' என்றார். இதுபற்றி யன்றோ **மணிவாசகரும்**,

"உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப் பாகா" என்றார்.

இறைவனே ஞானுசிரியராக வந்து தடுத்தாட்கொண்டமையானே, 'என்னைவா வாவென் றுலப்பிலா வானந்தமான வெள்ளமே' என்றார். இறைவனிடத்திருந்து பெறும் ஆனந்தம் ஏனைய ஆனந்தங்கள் போலாது நித்தியமாய் நிட்களமாய்க் கெடாத ஆனந்தமாதலின் 'உலப்பிலா ஆனந்தம்' என்றார். இறைவன் ஆன்மாக்களிடத்திருந்து கைம்மாறு கருதாது அருள் புரிவோனுதலினுலும், நிரம்பப்புரிவோனுதலினுலும் 'பொழியுங் கருணைவான் முகிலே' என்றார். ஈண்டு வான் என்றது உயர்வுப்பொருள் தந்து நின்றது. 'கருணை முகில்' இது 'கனையாகிய முகிலே' என விரிதலின் பண்புத்தொகை. பூதவிளக்கு வெப்பமுடையது, இறைவனுகிய ஞானவிளக்கு வெப்பமின்றித் தட்பமுடையவன் ஆதலினுலும், குளிர்ந்த சோதிவிளக்காய் நிற்பவன் ஆதலினுலும் 'வெப்பிலாத் தண்ணருள் விளக்கே' என்றார். 'விளக்கு' இது விளக்கிக்காட்டுவது என்னுங் காரணம்பற்றி வந்த பெயர். 'துரக்குந் தூவெளிப்பரப்பே' என்றதனல் 'கள்ளமே' என்றதற்குக் கள்ளமாகிய இருளினை என உரை உரைக்கப்பெற்றது. இது **ஏகதேச உருவகம்** என்பர் 'பாழ்மாயப் பள்ளம்' என்றது கருப்பவாசத்தை. 'பாழ்மாயப் பள்ளம்' என்று தான் முற்கூறிய 'கரு' என்பதனை விளக்கிக்கூறினர். 'கரை' என்பது முத்திக்கரையினை. பிறப்பே பெருந்துன்பந் தருவது ஆதலினுலும், பிறப்பற்று இருத்தலே முத்தியாதலினுலும், பிறப்பற்று இருப்பதே இன்பந்தருவது ஆதலினுலும், இந்நிலை இறைவன் அருளாலேயே கிடைக்க வேண்டியது ஆதலினுலும் 'பள்ளமே வீழா தெனைக்கரை யேற்றிப்பாலிப்ப துன்னருட் பரமே' என்றார். இதனை,

"பிறந்துலகிற் பட்டதுயர் போதும் போதும்
பெருநமனுக் காளாக மாட்டேன் மாட்டேன்
இறந்தபட வெண்ணிடினே யஞ்சு நெஞ்சே
என்செய்வேன் எனையஞ்சே லென்று காக்கச்

சிறந்தபொருள் நீயிருக்கச் சிந்தை யென்னே
சிறியேனுன் மலர்ச்சரணே பற்றி நின்றேன்
அறந்திகழும் உமைப்பாகா! அப்பா! முத்தி
அருங்கரையேற் றிக்காத்தா ளனுகி வந்தே" எனவும்,

"இன்னுமொரு தாயின் இருங்கருப்பை ளத்தினிலே
தன்னி விழாதருள்வாய் தம்பைமுடிச்—சென்னியனே
முக்கண்ணு இக்கணமே மோக்கக் கரையேற்றி
தக்க சுகநிலையைத் தா"

எனவும் வருவனவற்றாலும் அறியலாம்.

'வாவா வென்று' இது மிகுதிப்பொருளில் அடுக்கியது. 'பாப்பே' இது விளியுருபு ஏற்றபெயர். ஏ-ஈற்றசை. 4

இறையே! நினதருளை இரந்தும் அது கிடைக்கப்பெருமையால்
மனதுடைந்து தூக்கம் பிடியாதிருக்கின்றேன் தேவரீர்
அதனை அருளல்வேண்டுமெனல்

பரம்பர மாகிப் பக்குவம் பழுத்த
பழவடி யார்க்கருள் பழுத்துச்
சுரந்தினி திரங்குந் தானகற் பகமே
சோதியே தொண்டனே னின்னை
யிரந்துநெஞ் சுடைந்து கண்டுயில் பெரும
லிருந்தது மென்கணி லிருட்டைக்
கரந்துநின் கண்ணாற் றுயில்பெறல் வேண்டிக்
கருதினேன் கருத்தி து தானே.

(ப-ரை) பரம்-உயர்வாகிய, பரம்-உயர்ந்ததன்மை (மிக உயர்ந்ததன்மையினையுடையவர்கள்), ஆகி - ஆகி, பக்குவம் - பரிபக்குவநிலையில், பழுத்த - முதிர்ந்த, பழ-பழமையாகிய, அடியார்க்கு-தொண்டர்களுக்கு, அருள்-அருளானது (அருளாகியகனி), பழுத்து - முதிர்ந்து, சுரந்து - இன்பத்தினைத்தந்து (இன்பமாகியதேனைச்சுரந்து), இனிது-இன்பமுற, இரங்கும் - இரங்குகின்ற, தானம்-கொடுக்குந்தன்மையிற்சிறந்த, கற்பகமே-கற்பகத்தருவே!, சோதியே-ஒளியே!, தொண்டனேன்-அடியேன், நின்னை-தேவரீரை, இரந்து-கெஞ்சிக்கேட்டு (தேவரீர் இரங்காமையினாலே), நெஞ்சு-மனது, உடைந்து-உடைந்து, கண்-கண்கள், துயில் - தூக்கத்தை (உறக்கத்தை), பெருமல் - அடையாமல், இருந்ததும் - இருந்தநிலைமையையும், என் - அடியேனினுடைய, கண்ணில் - கண்ணிலுள்ள, இருட்டை-இருட்டினை, கரந்து-மறைத்து, நின் - தேவரீரது, கண்ணால் - திருவருட்கண்ணால், துயில் - தூக்கத்தை, பெறல் - அடைதலை, வேண்டி-விரும்பி, கருதினேன்-நினைத்தேன், கருத்து-அடியேனின் உள்ளத்தக்கருத்து, இதுதான்-இதுவேயாகும் எ-று.



(வி-ரை) 'பரம்பரமாகி' மிக உயர்ந்த தன்மையுடையவர்களாகி என்பது பொருள். ஞானமிகுந்து சொரூபதரிசனம் பெற்றோர் என்பது பொருள். இனி இதற்கு வமிசபாரம்பரையாக எனப்பொருள் கூறினருமுண்டு. 'பக்குவம்பழுத்த' என்பதற்கு இருவினையொப்பு மலபரிபாகம்பெற்றுச் சத்திநிபாதமுற்றநிலையினை. பண்டுதொட்டு இறைவன்மாட்டு அன்புபூண்டொழுகுவார் என்பார் 'பழவடியார்' என்றார். இறைவன் பழவடியார்க்கருள் தாட்காது புரிவனுதல்பற்றி 'பழவடி யார்க்கருள் பழுத்துச் சுரந்தினி திரங்குந் தான கற்பகமே' என்றார். 'தானகற்பம்' என்பது தானத்தைச் செய்யும் இயல்புடைய கற்பகத்தரு என்பது பொருள். கற்பகம் - தன்னிடத்துவந்து யாசிப்பவர்க்கு வேண்டும்பொருள்களைத் தன்னிடத்தாக்கிக் கொடுப்பதாதலின் இதற்குக் 'கற்பகம்' என்று பெயர் வந்தது. காரணவடமொழிப்பெயர். இறைவன் ஒளிமயனுதலின் 'சோதியே' என்றார்.

'நெஞ்சுடைந்து' என்றது மனம் இளகிற்கும்நிலையை; இனி நின் சிவானந்தம் பெருமையால் மனமுடைந்தபோதலை. மனமுடைதலாவது-ஏமாறி நிற்கும் நிலையாம். கவலையுற்றார்க்கு கண்ணுறக்கம் வாராதாதலின் 'கண்டுயில் பெருது' என்றார். 'கண்ணில் இருட்டைக் கரத்தலாவது கண்ணில் விளக்கமுண்டாக்கி உன்னைக் காட்டி ஞானத்தினை உணர்வித்து என்பது பொருளாம். 'கண்ணிற்றுயில்' என்றது தூங்காமற்றூங்குநிலையை. 'அருள் பழுத்து' என்றதனால் சுரந்து என்பதற்கு இன்பத்தேனைச் சொரிந்து என்றும். எல்லாம் அறிபவனுதலினுலும், எல்லாவற்றையும் விளக்கிக் காட்டுபவனுதலினுலும், ஒளிமயமானவனுதலினுலும், இருட்டை அகற்றுபவனுதலினுலும் 'சோதியே' என்றார். "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்ற மேலோர்வாக்கின்படி அன்பர்கள் வேண்டுவனவெல்லாம் தந்தருள்புரிவோனுதலின் 'தான கற்பகமே' என்றார். ஏ - ஈற்றசை. 5

இறைவனே! உன்னைக்கண்டு சும்மா இருக்காத என்
அறியாமையை நீக்குபவர் யார்?

கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்துங்
காரணங் கண்டுசும் மாதான்
வருத்தமற் றிருந்து சுகம்பெறு வண்ணம்
வருந்தினேன் மதியின்மை தீர்ப்பார்
ஒருத்தரார் உளப்பா டுணர்பவர் யாவர்
உலகவர் பன்னெறி யெனக்குப்
பொருத்தமோ சொல்லாய் மௌனசற் குருவே
போற்றிநின் பொன்னடிப் போதே.

(ப-ரை) கருத்தின் உள் - அறிவுக்கு உள்ளே, கருத்தாய் - அறிவாய், இருந்து-எழுந்தருளி இருந்துகொண்டு, உணர்த்தும்-அறிவிக்கும், காரணம்-

காரணத்தை, கண்டு - பார்த்து, சும்மா-சும்மா, வருத்தம் - துன்பம், அற்று-இல்லாதபடி, இருந்து - இருந்து, சுகம்-இன்பத்தினை, பெறு - அடையாத வண்ணம் - விதமாக, வருந்தினேன் - அடியேன் துன்பமுற்றேன், (அடியேனுடைய) மதி-அறிவு, இன்மை-இல்லாமையை, தீர்ப்பார்-அகற்றுபவராகிய, ஒருத்தர் - ஒருவர், ஆர் - யார்?, உளம் - அடியேனின் மனத்தின்கண்உள்ள, பாடு-கஷ்டங்களை, உணர்பவர்-அறிபவர், யார்-யாவர்?, உலகவர் - உலகத்தாருடைய, பல்-பல, நெறி-மார்க்கங்கள், எனக்கு-அடியேனுக்கு, உள்-மனத்தினுக்கு, பொருத்தமோ - சம்மதமாகுமோ?, சொல்லாய் - சொல்லுவாயாக, மௌன-மோன, சற்குருவே - நல்லதேசிகனே!, நின் - தேவரீரது, பொன்-அழகிய, அடி-பாதமாகிய, போது-தாமரைகட்கு, போற்றி-நமஸ்காரம் எ-று.

(வி-ரை) அறிவுக்கு அறிவாய் இருந்து எல்லா முணர்த்துபவன் இறைவன் ஆதலினால் 'கருத்தினுட் கருத்தா யிருந்துநீ யுணர்த்தும் காரணம் என்றார். இதனை,

"அறிய விரண்டல்ல றெங்கறிவு தன்ற
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு"

என்பதனு லறியலாம்.

சும்மா இருத்தலே சுகம்பெறு வழியாம். சும்மா இராதார் வருத்தமுறுவர் ஆதலின் 'சும்மாதான் வருத்தமற்றிருந்து சுகம்பெறுவண்ணம் வருந்தினேன்' என்றார். சும்மா இராமை அறிவில்லாச் செயலாகும் என்பது தோன்ற 'மதியின்மை தீர்ப்பார்' என்றார். எல்லாருளத்தும் இருந்து அவரவர் மனத்துள்ளுவதை உணரவல்லவன் நீயே என்பார், 'ஒருத்தரார் உளப்பா டுணர்பவர்' என்றார். 'பன்னெறி' என்றது சமய கோடிகளை. பல்வகைய மார்க்கத்து நின்றவரையுமாம். 'பொருத்தமோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இது விடைதழுவிய வினா; பொருத்தமில்லை என்பது பொருள். 'சொல்லாய்' இது 'ஆய்' ஈற்று முன்னிலை ஏவல். இறைவனே மௌனதேசிகனாக வந்து அருள் புரிந்தமையினாலும் ஆசிரியன்பாலே உசாவி அறியவேண்டிய முறைமையுடைமையினாலும் 'சொல்லாய் மௌன சற்குருவே' என்றார். ஆசாரியன் திருவடியே தஞ்சம் ஆதலினாலும், அதுவே போற்றவேண்டுவதாதலினாலும் 'போற்றிநின் பொன்னடிப் போதே' என்றார். ஏ-ஈற்றசை. 6

நீ மோனகுருவாகவா யான்செய்த பாக்கியமென் எனல்

அடியெனு மதுவும் அருளெனு மதுவும்
அறிந்திடி னிர்க்குண நிறைவும்
முடியெனு மதுவும் பொருளெனு மதுவும்
மொழிந்திடிற் சுக மன மாயைக்



குடிகெட வேண்டிற் பணியற நிற்றல்
குணம் எனப் புன்னகை காட்டிப்
படிமிசை மௌனி யாகிநீ யாளப்
பாக்கிய மென்செய்தேன் பரனே.

(ப-ரை) அடி-(ஆதாரமாகிய) முதல், எனும் - என்று சொல்லப்பெறும், அதுவும் - அந்தப்பொருளும், அருள் - திருஅருள், எனும்-என்று சொல்லப்பெறும், அதுவும் - அந்தப்பொருளும், அறிந்திடின் - அறியுமிடத்தே, நிர்க்குணம்-நிர்க்குணமாகிய, நிறைவும்-சர்வவியாப்பியமாகிய பூரணப்பொருளும், முடி-முடிவுஇடமாகியபொருள் (அந்தப்பொருளும்), எனும்-என்று சொல்லப்பெறுவதாகிய, அதுவும்-அந்தப்பொருளும், மொழிந்திடில்-சொல்லுமிடத்து, சுகம் - அதுவே சுகமாகும், மனம்-மனத்தால் உற்பத்தியாகிய, மாயை-மாயையானது, குடிகெட - குடிவிட்டோடி ஒழிய, வேண்டின்-விரும்பினால், பணி-தொழில், அற - நீங்க, நிற்றல் - நின்றிருத்தலே, குணம் - நல்ல குணமாகும், என - என்று சொல்லி, புன்னகை - குறுஞ்சிரிப்பு, காட்டி - காட்டுவித்து, படி - பூமியின், மிசை - மேலே, மௌனி - மோனகுரு, ஆகி - ஆகிவந்து, நீ-தேவரீர், ஆள-அடியேனைத் தடுத்தாட்கொள்ள, என்-என்ன, பாக்கியம்-பாக்கியத்தை (புண்ணியத்தை), பரனே - மேலானவனாகிய இறைவனே! செய்தேன்-அடியேன் செய்திருந்தேன்? எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப்பொருள்களுக்கும் எல்லாவற்றிற்கும் ஆதியாகயிருத்தலின் 'அடியெனு மதுவும்' என்றார். இறைவனின் அருளே காரியப்பட்டுச் சகலாண்ட புவனங்களும் எல்லாமும் ஆகின்றபடியாலும் எல்லாம் இறைவன் திருவருள் உருவேயாதலினாலும் 'அருளெனும் அதுவும்' என்றார். குணாதீதனாகியும், பரிபூரணனாகியும், எல்லாப்பொருளும் வந்து ஒடுங்கும் இடமாகியும், தவத்தோர் தவமுடிவாகியும் நிற்பவன் இறைவனாதலின், 'அறிந்திடி னிர்க்குண நிறைவும் முடியெனு மதுவும்' என்றார். இறைவனே பொருளாதலினாலும், அவனையன்றிப் பொருளில்லையாதலினாலும், 'பொருளெனு மதுவும்' என்றார். இறைவனே இன்பமயமாகவும் இன்பஞ் செய்வோனுமாக இருத்தலின் 'மொழிந்திடிற் சுகம்' என்றார். இறைவன் இன்பமயன், இன்பஞ்செய்வோன் என்னுங் காரணம் பற்றியே இறைவனுக்கு 'சங்கரன்' என்னும் பெயர் வழங்குவதுங் கண்டுதெளிக.

மாயைக்கு நிலைக்களம் மனமாதலின் 'மனமாயை' என்றார். மனமாயை அடியோடகன்றாலொழிய சும்மாயிருத்தல் கூடாத காரியமாதலினாலும், மனமாயை கெட்டால் தொழில் நீங்குமாதலினாலும், இதுவே குணமாதலினாலும் இஞ்ஞானம் சற்குரு உபதேசத்தாற் கிட்டுவதாதலினாலும் 'மனமாயைக் குடிகெட வேண்டிற் பணியற நிற்றல் குணமெனப் புன்னகை காட்டி' என்றார். சற்குரு தரிசனமும், சற்குரு கடாட்சமும், சற்குரு உபதேசமும், சற்குரு அருளும் தவமுடையார்க்கே எய்துவதாதலின் 'படி

மிசை மௌனியாகி நீயானப் பாக்கிய மென்செய்தேன்' என்றார். இறைவனே சற்குருவாக வந்தருளுதலின் 'பரனே' என்றார். முதலிரண்டடிகளில் வந்த 'அது' என்னுஞ் சுட்டுக்கள் பண்டறிசுட்டுக்கள். உம்மைகள் எண்ணும்மைகள். புன்னகை - குறுஞ்சிரிப்பு. இப் பெரியார்க்கு அருள் செய்தவர் மௌனதேசிகராதலின், 'மௌனியாகி நீயான' என்றார். இச் செய்யுளின் முதலிரண்டடிகளின் கருத்தை,

"ஆதிமுத லாவானும் ஆய திருவருளாஞ்
சோதியுரு வானும் சுகநிறைவாம்—நீதியனும்
நிற்குணனுஞ் செம்பொருளும் நீறணிந்த மேனிதிகழ்
அற்புதனு மெங்க ளரன்"

என்றதனாலறியலாம். பின்னிரண்டடிகளின் கருத்தை,

"மனமாயை யற்றால் மருவுதொழி லோயும்
இனமாகச் சும்மா விருக்க—மௌனந்தான்
உறவாகு மப்போழ்தே ஓங்குசிவா னந்தந்
திறமாக வாய்க்குந் தெளி"

என்ற **சிவானந்த வெண்பாவால்** அறியலாம்.

7

இறைவனே! எல்லாம உன் செயலாக எண்ணும்
பரிசு தந்தருள்

என்செய லின்றி யாவுநின் செயலென்
றெண்ணுவே னெவ்வொரு காலம்
புன்செயன் மாயை மயக்கினென் செயலாப்
பொருந்துவே னஃதொரு காலம்
பின்செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்
பித்தனே னன்னிலை பெறநின்
தன்செய லாக முடித்திடல் வேண்டும்
சச்சிதா னந்தசற் குருவே.

(ப-ரை) என்-அடியேனினுடைய, செயல்-செய்கை, இன்றி-இல்லாமல், யாவும் - எல்லாமும், நின் - தேவரீரது, செயல் - செய்கை, என்று - என்று ஒவ்வொரு - (தற்போதம் அற்ற) ஒவ்வொரு, காலம்-காலத்தில், எண்ணுவேன்-அடியேன் நினைப்பேன், அஃது - அதனையே, ஒரு - ஒரு, காலம் - காலத்தில், புன் - அற்பமாகிய, செயல்-செய்கைகளையுடைய, மாயை-மாயையினுடைய, மயக்கின் - மயக்கத்தினால், என் - அடியேனினுடைய, செயல்ஆ - செயலாக (எண்ணி), பொருந்துவேன் - மனம் பொருந்தி இருப்பன், பின் - பின்பு, செயல் - செய்கைகளின், யாதும் - எதுவும், நினைவு - நினைத்தல், இன்றி-இல்லாதபடி, கிடப்பேன் - சும்மா இருப்பேன், பித்தனேன் - பித்துக்கொண்



டவனாகிய அடியேன், நல்-நல்ல, நிலை-(தடுமாற்றமில்லாத) நிலையை, பெற-அடைய, சத்து-சத்தாகவும், சித்து-சித்தாகவும், ஆனந்தம்-ஆனந்தமாகவும் (விளங்கிய), சற்குருவே - பரமகுருவே!, நின்னை - தேவரீருடைய, செயல்-செயலே, ஆக - ஆக, முடித்திடல் - முடிவுசெய்தருளல், வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) ஞானிகள் தற்போதங்கழன்று சிவபோதத்திருப்பர். அவர்கள் தம் செயல்கள் எல்லாவற்றையுஞ் சிவன் செயலாகவே செய்வர். பிறர் செய்வனவற்றை எல்லாஞ் சிவன் செய்வதாகவே சிந்தையிற் றெளிவர். இதுபற்றியே 'என்செய லின்றி யாவுநின் செயலென் றெண்ணுவேன்' என்றார் இதனை,

"சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்
சிவனுடைய தென்னறிவ தென்றுஞ்—சிவனவன
தென்செய லாகின்ற தென்று மிவையிற்றைத்
தன் செயலாக் கொள்ளாமை தான்"

எனத் **திருக்களிற்றுப்படியார்** செய்யுளால் அறியலாம்.

மாயையிற்சிக்கி யானெனும் அகந்தையிற் கிடப்போர் எல்லாந் தன் செயலா மதிப்பர். இதுகொண்டே, 'புன்செயன் மாயை மயக்கினென் செயலாப் பொருந்துவேன்' என்றார். நிர்விகற்ப சமாதிக்காலத்தில் தன் செயல், சிவன் செயல் என்பது தோன்றாது மன அசைவின்றி நிற்பாதலின் 'பின் செயல் யாது நினைவின்றிக் கிடப்பேன்' என்றார். ஓர்கால் ஒன்றும், ஓர் கால் மற்றொன்றும், ஓர்கால் வேறொன்றுமாக எண்ணுவது பித்தர் செயலாதலினால் 'பித்தனேன்' என்றார். முன்கூறிய மூன்றில் எல்லாஞ் சிவன் செயலாகக் காண்டலே நன்னிலையாதலின், "நன்னிலை பெறநின்றன் செயலாக முடித்திடல் வேண்டும்' என்றார். இறைவனே சற்குருவாக வந்தருள் செய்கின்றானாதலின் 'சச்சிதானந்த சற்குருவே' என்றார். ஞானியர் செயலெல்லாம் தன்செயலாக் கருதாது சிவச்செயலாகவே கருதுவர் என்பதனை,

"யானென தென்னும் பற்றை யறவெறிந் துள்ள மென்றுங்
கோனெழிற் கழற்கே வைத்துக் குறையிலாச் சிவானந் தத்தேன்
தானெடி துண்ட மேலோர் தஞ்செய லெல்லா மந்த
வானெழிற் சோதி யாதி வான்செய லாகச் செய்வர்"

என்ற விருத்தத்தால் அறியலாம்.

8

இறைவனே! நீ மௌனகுருவாகி வந்தருளியபோதே பிறவியற்றது;
சிவஞானத்தைக் கிருபை செய்யெனல்

குருவுரு வாகி மௌனியாய் மௌனக்
கொள்கையை யுணர்த்தினை அதனாற்
கருவுரு வாவ தெனக்கிலை இந்தக்
காயமோ பொய்யெனக் கண்ட

திருவுரு வாள ரனுபவ நிலையுஞ்
சேருமோ ஆவலோ மெத்த
அருவுரு வாகி அல்லவாய்ச் சமய
மளவிடா வானந்த வடிவே.

(ப-ரை) அரு-அருவமும், உரு-உருவமும், ஆகி-ஆகி, அல்ல-அவைகளும் அல்ல, ஆய் - ஆகி, சமயம் - சமய நூற்களால், அளவு - அளவு, இடா-செய்து உரைக்கமுடியாத, ஆனந்தம் - இன்பமயமாகிய, வடிவே - உருவமே!, குரு-ஆசாரிய, உருவாகி - திருக்கோலங்கொண்டு, மௌனியாய் - மௌனியாகி (வந்து), மௌனம் - மௌனநிலைமையின், கொள்கையை - தத்துவங்களை, உணர்த்தினை-அடியேனுக்குப் போதித்தருளினை, அதனால்-அந்தக்காரணத்தினால், எனக்கு-அடியேனுக்கு, கரு - கருப்பையில், உரு - உருவத்தை, ஆவது-கொள்வது, இல்லை-இனி இல்லையாகும் (ஆயினும்), இந்த - இந்த, காயமோ-சரீரமோ, பொய் - நிலையற்றது, என - என்று, கண்ட-அறிந்த, திரு-அழகிய, உரு-வடிவத்தை, ஆளர் - கொண்டவர்களாகிய சிவஞானச்செல்வர்கள், அனுபவம்-அனுபோகத்தின், நிலையும்-நிலையும், சேருமோ-அடியேனுக்குக் கிடைக்குமோ?, ஆவலோ - (அந்நிலையைப் பெறவேண்டுமென்ற) ஆசையோ, மெத்த-மிகவும் அதிகமாக இருக்கிறது எ-று.

(வி-ரை) இறைவன் மௌனகுருவாகி வந்து மௌனநிலையினை யுணர்த்தினனாதலின் 'குருவுருவாகி மௌனியாய் மௌனக்கொள்கையை யுணர்த்தினை" என்றார். ஞானாசாரியனுடைய திருநோக்கமும், திருவுபதேசமும் பெற்றபேர்க்கு பிறப்பில்லை யாதலினால், 'கருவுரு வாவ தெனக் கிலை' என்றார். இதனை,

"பரிச வேதி கைத்தொட்ட பாரக் கரும்பொன் செம்பொன்னா
வரிசை பெற்ற பின்னிரும்பா வருத லில்லை யதுபோல
உரிய குரவன் உபதேசம் உய்யக் கொண்ட தவத்தி னர்க்குத்
தெரிக பிறப்பே இலையாகும் தெளிக விதுவே சத்திய மாம்"

என்ற பெரியார் வாக்கானும் அறியலாம்.

நிலையில்லாக் காயத்தின் தன்மையை யறிந்து அதனிடத்துப் பற்று விட்ட பெரியார் எல்லாஞ் சிவமாக்கண்டு சிவானந்தத்து முழுகிக் கிடப்பர் ஆதலினாலும், ஞானாசிரியன் உபதேசம் பெற்றார்க்கும் சுயானுபூதிமான்களாதற்குக் குருவின் திருவருள் வேண்டு மாதலினாலும், 'இந்தக் காயமோ பொய்யெனக் கண்ட திருவுருவாள ரனுபவ நிலையுஞ் சேருமோ' என்றார். பகிர்முக முற்று அந்தர்முகமாகவே பரமான்வைத் தரிசித்து சிவானந்தத்திலே யழுந்திக்கிடத்தல் தனக்கு எய்தவேண்டும் அதற்கு உன் அருளே வேண்டற்பாலது. அதன்மேலே அடியேனுக்கு அளவுகடந்த ஆசையாக இருக்கிறது, நீ யருள் செய்யவேண்டும் என்பார் 'திருவுருவாள ரனுபவ நிலையுஞ் சேருமோ வாவலோ மெத்த' என்றார். இறைவன் அருவாகியும்,



உருவாகியும், அவை யிரண்டுமல்லாத ரூபாரூபமும் உடையவனாதலின் 'அருவுருவாகி யல்லவாய்' என்றார். இறைவன் சமயகோடிகள் யாவற்றானும் அளந்தறிய முடியாதவன் ஆதலினால் 'சமய மளவிடா வானந்த வடிவே' என்றார். அருவம் - நிர்க்குணப் பிரம்மம்; உருவம் - சகுணப் பிரம்மம். 'சேருமோ' இதிலுள்ள ஈற்று ஓகாரம் ஐயப்பொருளில் வந்த வினா. 'அருவுருவாகி' உம்மைகள் தொக்கன. 'அல்லவாய்' இதிலும் உம்மை தொக்கது. 9

ஓ தட்சணாமூர்த்தியே! முத்தியினை விரும்பினர்க்கு மோனநிலையினை யன்றி வேறு மார்க்கம் உண்டோ என்கின்றார்

வடிவிலா வடிவாய் மனநினை வணுகா
மார்க்கமாய் நீக்கருஞ் சுகமாய்
முடிவிலா வீட்டின் வாழ்க்கைவேண் டினர்க்குன்
மோனமல் லால்வழி யுண்டோ
படியிரு ளகலச் சின்மயம் பூத்த
பசுங்கொம்பை யடக்கி யோர் கல்லா
லடியிலே யிருந்த வானந்த வரசே
அன்பரைப் பருகுமா ரமுதே.

(ப-ரை) படி-உலகத்தின், இருள்-அஞ்ஞானமாகிய இருள், அகல-நீங்க-சின்மயம் - ஞானமயமாகிய மலர்களை, பூத்த - புட்பித்த, பசும்-பசுமையாகிய, கொம்பை - கொடியை, அடக்கி - உள்ளே பொதிந்துகொண்டு, ஓர்-ஒரு, கல்-கல்லாகிய, ஆல்-ஆலமரத்தின், அடியிலே-நிழலிலே, இருந்த - தட்சணாமூர்த்தியாகி எழுந்தருளியிருந்த, ஆனந்த-ஆனந்தமயமாகிய, அரசே-அருள் அரசே-அன்பரை-அன்புசெய்பவர்களை, பருகும்-பருகுகின்ற, ஆர் - அரிய, அமுதே-அமுதமே!, வடிவு-உருவம், இலா-இல்லாத, வடிவு-உருவம், ஆய் - ஆகி, மனம்-மனத்தின், நினைவு - எண்ணம், அணுகா-கிட்டப்பெறாத, மார்க்கம்-வழி, ஆய்-ஆகி, நீக்கு-பிரிவு (இடையீடு), அரு - இல்லாத, சுகம் - இன்பம், ஆய் - ஆகி, முடிவு - கேடு (அழிவு), இலா-இல்லாத, வீட்டின்-முத்திநிலையின், வாழ்க்கை-வாழ்வினை, வேண்டினர்க்கு-விரும்பினவர்களுக்கு, உன்-தேவரீரது, மோனம்-மௌனநிலையினை, அல்லால் - அல்லாமல், வழி - மார்க்கம், உண்டோ - வேறு உளதோ? எ-று.

(வி-ரை) 'வடிவிலா வடிவாய்' என்றது ரூபாரூப வடிவினை. இதனைச் சதாசிவ வடிவம் என்பர். இதுதான் லிங்காகார உருவம். இச் சிவலிங்கத்தினிடத்து ரூபமும் உண்டு ரூபமில்லாமையும் உண்டாதலின் என்க. இறைவன் எவ்வாறு மனவாக்குக் கெட்டாத நிலையினனோ, அவ்வாறே அவனாற் பெறப்பெறு முத்தியின்பமும் மனவாக்குக்கு எட்டாதது. இதனை,

'குறையா நிறையாப் பூரணமாய்க் குறுகா நெடுகாக் கொள்கையதாய்
நிறையா ரின்பப் பெருங்கடலாய் நிலையாய்த் தலையாய் நித்தியமாய்

அறைவார் சொல்லுக் கெட்டாதாய் ஆயு மனனுக் கப்பாலாய்ப்
பிறையார் சடிலப் பெம்மான்போல் பிறங்கு மந்த முத்தியதே"

என்ற **அமுதவாக்கா**னும் அறியலாம். இதுகொண்டே,

'வடிவிலா வடிவாய் மனவினை வணுகா மார்க்கமாய் நீக்கருஞ் சுகமாய் முடிவிலா வீட்டின்' என்றார். ஞானத்தின் முடிவுமோனம், மோனத்தின் விளைவு இன்பம், இன்பானுபூதியே முத்திநிலை யாதலின் 'வீட்டின் வாழ்க்கை வேண்டினர்க்குன் மோனமல் லால்வழி யுண்டோ' எனறார். இதனை,

> "கருது வதன்முன் கருத்தழி யப்பாயும்
> ஒருமகன் கேள்வ னென்றுந் தீபற
> உள்ள அறிய னென்றுந் தீபற"

என்ற **திருவுந்தியாரா**லும் அறியலாம்.

'பசுங்கொடி' என்றது திருவருட்சத்தியை. 'கல்லா வடியிலேயிருந்த வானந்த வரசே' என்றது தட்சணாமூர்த்தியை. இறைவன் அன்பரைத் தன்மயமாகவும் தன்வயமாகவும் ஆக்கிக்கொள்கின்றான் ஆதலின் 'அன்பரைப் பருகுமா ரமுதே' என்றார். 'படி இருள்' உலகத்து அஞ்ஞானம் என்றும். இனி படிந்த இருள் எனவும் பொருள் கோடலும் ஒன்று. இவ்வாறு பொருள் கொள்ளின் உலகில் என்ற சொல்லை வருவித்துக் கோடல் வேண்டும். 10

---

## சொல்லற்கரிய

இறைவனே! என்னை மயக்கத்தில்விட்டு, யமனுக்கு
ஆளாக்கிவிட்டனையோ என்கின்றார்

**சொல்லற் கரிய பரம்பொருளே**
**சுகவா ரிதியே சுடர்க்கொழுந்தே**
**வெல்லற் கரிய மயலிலென்னை**
**விட்டெங் கொளித்தாய் ஆகெட்டேன்**
**கல்லிற் பசிய நாருரித்துக்**
**கடுகிற் பெரிய கடலடைக்கும்**
**அல்லிற் கரிய வந்தகனுர்க்**
**காளாக் கினையோ அறியேனே.**

(ப-ரை) சொல்லற்கு-(ஞானாசிரியன் வந்து ஞானோபதேசத்தால் அந்தர் முகமாகக் காட்டக் காணலும் அனுபவத்தாற் காணக் காணவேயன்றி) சொல் லளவையால் எடுத்துச் சொல்லுதற்கு, அரிய-அருமையான, பரம் - மேலான, பொருளே-பொருளே! (இறையே!), சுகம் - ஆனந்தமாகிய, வாரிதியே-சமுத்



திரமே!, சுடர் - சோதி (ஒளி), கொழுந்தே - கொழுந்தே!, வெல்லற்கு-(தேவரீரை அடைந்தவர்க்குஅன்றி மற்றவர்களால்) வென்று நீங்குதற்கு, அரிய - அருமையான, மயலில் - மயக்கத்தில், என்னை - அடியேனை, விட்டு - விடுத்து, எங்கு-எந்த இடத்திலே, ஒளித்தாய்-மறைந்துகொண்டனை?, ஆ-ஐயோ!, கெட்டேன்-கெட்டுப்போனேனே!, கல்லில்-கல்லின்கண், பசிய-பசுமையாகிய, நார்-நாரை, உரித்து-உரித்து, கடுகில்-கடுகினுள், பெரிய-பெரிதாகிய, கடல்-கடலை, அடைக்கும்-அடைக்கக்கூடிய வல்லமைபொருந்திய, அல்லின்-இரவைக்காட்டிலும், கரிய - கரியநிறத்தையுடையவனாகிய, அந்தகனுர்க்கு-யமனுக்கு, ஆளாக்கினையே - அடிமையாக்கினையோ? அறியேன்-அடியேன் தெரிந்திலேன் எ-று.

(வி-ரை) இறைவன் சொல்லிக்காட்ட முடியாதவனாதலின் 'சொல்லற் கரிய பரம்பொருளே' என்றார். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே" என்றதனால் நினைத்தற்கும் அரிய பரம்பொருளே என்பதும் பெற்றாம். வேதம், ஆகமம் முதலியன அபரஞானமாதலின் வேதாகமங்களாலுஞ் சொல்லற்கரியன் என்பதாம். இதனை,

> "பண்டை நான்மறைக்கு மெட்டாப் பராபரன்"

என்ற **பெரியார்** வாக்காலும் அறியலாம். இன்னும் இதனை,

> "இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த
> னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே"

என்ற **அப்பர் வாக்கா**லும் அறியலாம்.

இறைவன் இன்பப்பெருக்காதலின் 'சுகவாரிதியே' என்றார். இறைவன் ஒளியுருவனாதலின் 'சுடர்க்கொழுந்தே' என்றார். அகடிதகடன சாமர்த்தியம் உடையது மாயை ஆதலினாலும், இறைவன் அருள்பெற்றார்க்கன்றி எவரானும் வெல்லமுடியாது ஆதலினாலும் 'வெல்லற்கரிய மயலில்' என்றார். 'மயல்' என்றது ஈண்டு மாயையினை. இதுபற்றியன்றே,

> "வனத்த கொன்றைச் சடையானே வண்ணப் பிறையுஞ் சூடியவா
> மனத்தா லுன்னை எண்ணேனே மதித்துத் துதியா திருந்தேனே
> கனத்த மாயை தனைவெல்லுங் கணக்கு மறியேன் கலக்குற்றேன்
> சினத்த யமனார்க் காளாவேன் சிறியேற் கிரங்கா விடினீயே"

என்ற **பெரியார்** வாக்காலும் அறியலாம்.

இறைவன் கரந்தெங்கும் பரந்துறையுந் தனிநாயகன் ஆதலினாலும், ஊனக்கண்ணுக்கெட்டாதவனாதலினாலும் 'எங்கொளித்தாய்' என்றார். 'ஆகெட்டேன்' இது வியப்புப்பொருளில் வந்தது: இதனை, இடைச்சொல் என்பாரும் உண்டு. நமன் வன்மையை யுணர்த்தவே 'கல்லிற்பசிய நாருரித்து கடுகிற்பெரிய கடலடைக்கும்' என்றார். இதனை,

> "கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள்"

என்ற **திருக்குறளின் சிறப்புப்பாயிரத்தா**லும் அறிபலாம்,

'அல்லிற்கரிய' என்றதில் 'இல்' உருபு ஒப்புப்பொருளில் வந்தது. யமன் கரியநிறம் உடையவனாதலின் 'அல்லிற்கரிய அந்தகனார்' என்றார். இதனை,

"கருமுகில் போலே உருமந்தச் சேட்டெருமை
மாட்டா னினிவர மாட்டான்"

என்ற **பெரியார்** வாக்காலும் அறியலாம்.

தம் இனத்தரை யமன்கொண்டகாலை எமனை குருடா, பொட்டையா என்று மனிதர் வையும் வழக்கும்பற்றி யமனுக்கு 'அந்தகன்' என்னும் பெயர் ஏற்பட்டது. எல்லாம் இறைவன் ஆணையால் நடக்கின்றதாதலின் 'ஆணாக்கினையோ' என்றார். இறைவன் அற்புதம் அறிதற்கு அரியதாதலின் 'அறியேனே' என்றார். இப்பதிகத்தின் முதற்பாவின் முதலடி யிருசீரும் 'சொல்லற்கரிய' என்று தொடங்குதலின் இப்பதிகத்திற்கு **சொல்லற்கரிய** என்று பெயராயது. இது அந்தாதித் தொடையாக அமைந்துளது. 'எனை' இது 'என்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். இது, மாச்சீர் மாச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் காய்ச்சீர்களாக ஓரடிக்கு ஆறுசீர் வந்த ஆசிரிய விருத்தமாதலின் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஏ-ஈற்றசை. 1

இறைவனே! நின்னை அடியேன் சேர்ந்து நீக்கமற இருக்க
வேண்டாமா? என்கின்றார்

அறிவிற் கறிவு தாரகமென்
றறிந்தே அறிவோ டறியாமை
நெறியிற் புகுதா தோர்படித்தாய்
நின்ற நிலையுந் தெரியாது
குறியற் றகண்டா தீதமயக்
கோதி லமுதே நினைக்குறுகிப்
பிறிவற் றிருக்க வேண்டாவோ
பேயேற் கினிநீ பேசாயே.

(ப-ரை) அறிவிற்கு-ஆன்ம அறிவிற்கு (சிவபோகத்திற்கு), அறிவு-இறை அறிவு (சிவபோதம்), தாரகம்-ஆதாரம், என்று-என்று, அறிந்து-தெரிந்து, அறிவொடு-அறிவுடனே, அறியாமை-அறியாமைகளாகிய, நெறியில்-மார்க்கத்தில், புகுதாது-பிரவேசியாமல், ஓர்-ஒரு, படித்தாய்-தன்மைத்தாகி, நின்ற-நின்ற, நிலையும்-நிலையையும், தெரியாது-உணர்கிலாது, குறி-அடையாளம், அற்று-இல்லாது, அகண்ட-விரிந்துபரந்த, அதீதம்-அதீத, மயம்-மயமாகிய, கோது-குற்றம், இல்-இல்லாத, அமுதே-அமிர்தமே, நினை-தேவரீரை, குறுகி-சேர்ந்து, பிரிவு-நீக்கம், அற்று-இல்லாது, இருக்க-இருக்க, வேண்டாவா-வேண்டாமோ?, பேயேற்கு-பேயேனுக்கு, இனி-இனியாகிலும், நீ-தேவரீர், பேசாய்-சொல்வாயாக? எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்க்குயிராயும் அறிவுக்கறிவாயும் நிற்கின்றானாதலின் 'அறிவிற்கறிவு தாரகமென் றறிந்தே' என்கின்றார். இதனை,



"நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே"

என்ற **மணிவாசகர்** வாக்காலும் அறியலாம். இன்னும்,

"ஊனாகி யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து"

"ஆனா அறிவா யளவிறந்த பல்லுயிர்க்குங் கோனாகி"

என்றதூஉங் காண்க. இதனானன்றே பிறரும்,

"அறிவுக்கறிவா யகண்டமாய் நின்ற நிறைவை" என்றார்.

சகல கேவலத்தினின்று நீங்கி தன்னைக்கண்டு தலைவனையறிந்த அறிவு, அறியாமைநீங்கி அறிவுமயமாய் நின்றிருத்தல் வேண்டுமென்பார் 'அறிவோ டறியாமை நெறியிற் புகுதா தோர்படித்தாய் நின்ற நிலையுந் தெரியாது' என்றார். இறைவன் அறிவுமயமாய் அகண்டமாய் இருப்பவன் ஆதலின் 'குறியற் றகண்டா தீதமயக் கோதிலமுதே' என்றார். 'பிரிவற்று' என்றது அத்துவித நிலையை; இது கொண்டன்றே, ஒரு **பெரியாரும்**,

"அறிவுக் கறிவாம் பழம்பொருளே! அணியார் தில்லைப் பழம்பொருளே!
நெறியி னறிவே யறியாமை நீங்கி முத்திச் சுகத்திருந்து
குறிய தேதுங் குறியாதே கோவே யுன்றன் குறைகழற்கே
வறியன் வந்த விதங்கண்டு வாழ்வைத் தந்தா றாழ்வாமோ" என்றார்.

'தாரகம்' இது வடசொல்; ஆதாரமாக இருப்பது என்னும் பொருளது. 'அறிவோ டறியாமை' இது சகல கேவலநிலை. அதாவது எல்லா மறிந்தும் அறியாதிருக்கும் நிலை. 'குறியற்று' என்றது அதற்கினமாய குணமற்று என்றதனையும் அவாவி நின்றது. 'அதீதம்' என்றது அப்பாற்பட்ட நிலைமையை. 'பிறிவு' ஈண்டு 'பிரிவு' என்பது எதுகைநோக்கி வல்லினமாகி நின்றது. பேய்போன்ற மனத்தினன், பேய்பிடித்த மனத்தினையுடையேன் என்ற பொருளில் 'பேயேற்கு' என்றார். என்னை? இறைவன் பேயோடாடியாதலினானென்க. இது கொண்டன்றே காரைக்காலம்மையும் பேயுருவங் கொண்டனள். 'இனி' என்றது ஈண்டு எதிர்காலங் குறியாது நிகழ்காலங் காட்டி நின்றது. இவ்வாறு வருதலை,

"பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு"

என்ற **திருக்குறளி**னலறிக. ஏ-ஈற்றசை. 2

இறைவனே! சிவானுபூதியால் அடியேன் மனவிருளைப்போக்கல்
வேண்டுமெனல்

பேசா வனுபூ தியையடியேன்
பெற்றுப் பிழைக்கப் பேரருளால்
தேசோ மயந்தந் தினியொருகால்
சித்தத் திருளுந் தீர்ப்பாயோ

பாசா டவியைக் கடந்தவன்பர்
　　பற்று மகண்டப் பரப்பான
ஈசா பொதுவில் நடமாடு
　　மிறைவா குறையா வின்னமுதே.

(ப-ரை) பாசம்-பாசமாகிய, அடவியை-காட்டினை, கடந்த-தாண்டிய, அன்பர்-பக்திமான்கள், பற்றும்-பிடித்துக்கொள்ளும், அகண்டம்-கண்டிக்கப் படாத, பரப்பு-பெரும்பரப்பு, ஆன-ஆகிய, ஈசா-ஈசனே!, பொதுவில்-திருச் சிற்றம்பலத்திலே, நடம்-ஆனந்தநடனத்தை, ஆடும்-ஆடுகின்ற, இறைவா-தலைவனே!, குறையா-குறைவில்லாத, இன்-இனிய, அமுதே-அமிர்தமே!. பேசா-பேசாமைக்குக் காரணமாகிய, அநுபூதியினை-சிவானுபூதியை, அடியேன்-தொண்டனேன், பெற்று-அடைந்து, பிழைக்க-உஜ்ஜீவிக்க, பேர்-பெரிய, அருளால்-கருணையினால், தேசோமயம்-தேவரீரது தேஜோமயத்தை, தந்து-கொடுத்தருளி, இனி-இனியாகிலும், ஒரு-ஒரு, கால்-தரம், சித்தத்து-அடியேனின் மனத்தின்கண்உள்ள, இருளும்-இருளினையும், தீர்ப்பாயோ-நீக்கிவிடுவாயோ? எ-று.

(வி-ரை) 'பேசாவநுபூதி' என்றது மௌனானந்த அனுபோக நிலையை. 'அனுபூதி' என்பது தானே அனுபவமாகக் கண்டறிந்ததும், பிறர்க்கு எடுத்துச் சொல்லிக்காட்ட இயலாததுமான அறிவை. இது நினைவுக்கயலாய் வேறாகிய உணர்வாகும். 'பிழைக்க' என்றது பிறவிப் பெருங்கடலின்றும் முத்திக்கரையேறி யுய்தலை. இதனை,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
　நிலமிசை நீடுவாழ் வார்"

என்ற **திருக்குறளா**னும் அறிக.

'தேசோமயம்' என்றது இன்பப்பேரொளி வடிவை. 'சித்தத்திருள்' என்றது அஞ்ஞானமாகிய இருளை. 'பாசாடவி' இது பண்புத்தொகை; பாசமாகிய காடு என விரியும். காட்டு புக்கோன் மீளவழி யறியாது திகைப்பன், இருளிற்கிடந் தலக்கணுறுவன், கடிவாய், சிங்கம் முதலிய துட்ட மிருகங்களாற் கஷ்டமுறுவன். அதுபோலப் பாசமாகிய காட்டுட் புக்கானும் அஞ்ஞான விருளிற்பட்டுத் தட்டுக் கெட்டலைந்து மனை மக்கள், மண் பொன், பெண் ஆசைகளால் துன்புறுவன் ஆதலின் அடவி பாசத்துக் குவமையாதல் அறிக. 'இனி' என்றது இனியாகிலும் என்னும் பொருளது. இஃதன்றி முன்னொருகால் அருள் செய்ததுபோல இன்னொரு முறையும் அருள் புரியாயோ எனக் கூறுவாருமுண்டு. இது அத்துணைப் பொருத்த முடையதாகா தென்பதனை உசாவியறிக. பாசாடவியைக் கடந்த அன்பர் இறைவன் அருள்பெற்றாராதலின் அவர் எல்லாஞ் செய்யவல்லராவர் என்பது தோன்றவும், எவரானும் பற்றற்கரிய அகண்டப்பரப்பு இவ்வன்பரார் பற்றப்பெறும் என்பது தோன்றவும் 'அன்பர் பற்றும் அகண்டப் பரப்பான ஈசா' என்றார். இதனை,



"அடியார்க் கெளியன் சிற்றம் பலவன்" 　　　　எனவும்,

"அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை" 　　　　எனவும்,

"பத்திவலையிற் படுவோன்"

எனவும் வருவனவற்றாலறிக.

எல்லாமுடையன், ஞானச்செல்வன் என்பதுதோன்ற 'ஈசா' என்றார். புறவிருளை நீக்கக் கதிரொளி வேண்டுவதுபோல அடியேனின் அகவிருளை நீக்க இறைவா நின் தேசோமயந்தா என்ற குறிப்பு கருதற்பாலது. 'பொது' என்றது ஈண்டு தில்லையம்பலத்தை. 'நடம்' என்றது ஈண்டு ஞானக்கூத்தை. இறைவன் நிறைவும் இன்பமயமும் நித்தியனும் ஆனவனாதலின் 'குறையா இன்னமுதே' என்றார். இறைவன் திருவருள் பெற்றார் பேசாவனுபூதி எய்தும் என்பதனை, அருணகிரியார் **கந்தரனுபூதியில்**,

"ஆசாநிகளந் துகளாயின பின்பேசா
　வநுபூதி பிறந்ததுவே"

என்றதும் ஈண்டு ஒப்பிட்டு நோக்கற்பாலது.

அகஇருள் நீங்கத் தேசோமயந் தருதற்குத் திருவருள் கூறவேண்டுமென்பார் 'பேரருளால்' என்றார். பாச + அடவி = பாசாடவி; இது வடமொழிப்புணர்ச்சி; தீர்க்கசந்தி. 　　　　3

இறைவனே! சிவானந்தக்கடலிற் புகுதற்பொருட்டு அன்பினால் கரைந்து
உருகி கண்ணீர்பெருக்கிப் பித்தாகிநிற்கேனோ எனல்

இன்பக் கடலிற் புகுந்திடுவா
　　னிரவும் பகலுந் தோற்றாமல்
அன்பிற் கரைந்து கரைந்துருகி
　　அண்ணா அரசே எனக்கூவிப்
பின்புற் றழுஞ்சே யென விழிநீர்
　　பெருக்கிப் பெருக்கிப் பித்தாகித்
துன்பக் கடல்விட் டகல்வேனோ
　　சொரூபா னந்தச் சுடர்க்கொழுந்தே.

(ப-ரை) சொரூபம்-சகளத் திருமேனியிலிருந்து உற்பத்தியாவதாகிய, ஆனந்தம்-ஆனந்தமாகிய (இன்பமாகிய), சுடர்-ஒளியையுடைய, கொழுந்தே-கொழுந்தே!, இன்பம்-ஆனந்தமயமாகிய, கடலில்-சமுத்திரத்தில், புகுந்திடுவான்-பிரவேசிக்குமாறு, இரவும்-இராத்திரியிலும், பகலும்-பகலிலும், தோற்றாமல்-காணாதபடி, அன்பின்-அன்பினால், கரைந்து-இளகி, கரைந்து-இளகி, உருகி-மனம் உருகி, அண்ணா-அப்பனே!, அரசே-அரசனே!, என-என்று, கூவி-கூப்பிட்டு, பின்பு-பின்னாக, உற்று-தொடர்ந்து, அழும்-அழுகின்ற, சேய்-குழந்தை, என-என்ன (போல), விழி-கண், நீர்-நீர், பெருக்கிப்

பெருக்கி - மிகவும் பெருகவடித்து, பித்து - பித்துக்கொண்டவன், ஆகி-ஆகி, துன்பம்-துக்கமாகிய, கடல்-கடலை, விட்டு-விட்டு, அகல்வேனோ-நீங்குவேனோ? எ-று.

(வி-ரை) 'இன்பக்கடல்' என்றது சிவானந்தத்தை. இது அந்தர் முகமாக இறைவனைத் தரிசிப்பதால் பெறப்படுவது. 'புகுந்திடுவான்' இதில் 'வான்' விகுதி எதிர்காலங் காட்டிநின்றது. இரவும் பகலும் என்றது சகல கேவலத்தை. 'அன்பில்' இது வேற்றுமை மயக்கம்; அன்பினால் என்ற பொருளது. 'கரைந்து கரைந்து' ஈண்டு மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. "அழுதபிள்ளை பால்குடிக்கும்" என்ற பழமொழிபோல் தாயை நோக்கி அழுதபிள்ளை அமுதம் பெறுதல்போல் நீ அழுதாற்றித் தொடரும் எனக்கு அருள்புரியவேண்டும் என்பார் 'அன்பிற் கரைந்துகரைந்து ... ... பெருக்கிப் பித்தாகி' என்றார். 'துன்பக்கடல்' இது பண்புத்தொகை; இது துன்பமாகிய கடல் எனவிரியும். துன்பக்கடலாவது பகிர்முகமாகிப் பிரபஞ்சத்து நுழைய அதனுலெய்தும் இன்பதுன்பங்களை அனுபவித்தல், யான் எனது என்னும் அகங்கார மமகாரங்களால் விளையும் வேதனைகளைக்கொள்ளல் முதலியவற்றை. அன்பர்க்கு அருபமாகிய அகன்வடிவில் இன்பஞ்சலியாது ஆதலினாலும், சகள வடிவிலேயே இன்பம் பிறக்குமாதலினாலும் 'சொரூபானந்தச் சுடர்க்கொழுந்தே' என்றார். அப்பன் அழுங்குழவிக்கு ஆரருள் புரிவன் ஆதலின் 'அண்ணா' என்றார். உலகத்துயிர்களைக் காத்தல் அரசன் கடன்மைபோல அருளரசாகிய நீயும் என்னைக் காக்கவேண்டும் என்பார் 'அரசே' என்றார். 'கூவி' என்றது ஈண்டு அழைத்து என்னும் பொருளது. 'பிற்புற்றமும்' என்றது தொடர்ந்தழுதலை. இதனை,

"கல்லா மழலை கனியூறல் கலந்து கொஞ்சுஞ்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்து விளையாடு மகிழ்ச்சி மைந்தர்தமை
இல்லார் தமக்கிங் கில்வாழ்வின் இனிமை யென்னாம்"

என்ற **வில்லிபுத்தூரார் வாக்கா**லும் அறியலாம்.

இன்பக்கடலிற் புக்குத்திளைக்கக் கொண்டபே ராவலைக் குறிக்கவே 'பித்தாகி' என்றார். 'சேய்' ஈண்டு இளமைத்தன்மை குறித்து நின்றது. சேய்-குழந்தை.

4

இறைவனே! அடியேனுக்கு எல்லாவுறவும் நீயேயெனல்

கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக்
கோவே மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே இமயவரை
யென்றாய் கண்ணுக் கினியானே



தொழுந்தெய் வமுநீ குருவுநீ
துணைநீ தந்தை தாயுநீ
அழுந்தும் பவநீ நன்மையுநீ
ஆவி யாக்கை நீதானே.

(ப-ரை) கொழுந்து - ஒளிக்கொழுந்து, திகழ்-விளங்குகின்ற (பிரகாசிக்கின்ற), வெண் - வெள்ளிய, பிறை - பிறைச்சந்திரனை அணிந்த, சடிலம்-சடாபாரத்தினையுடைய, கோவே - இறைவனே!, மன்றில் - தில்லை அம்பலத்தில், கூத்தாடற்கு - நடனஞ்செய்தற்கு, எழுந்த - தோன்றிய, சுடரே - ஞானப் பிரகாசமே!, இமயம் - இமயம் என்னும் பெயரையுடைய, வரை - மலையில் அவதரித்த, என் - அடியேனின், தாய் - தாயாகிய உமாதேவியாரின், கண்ணுக்கு - விழிகளுக்கு, இனியானே - இனிமையுடையவனாக இருப்பவனே!, தொழும்-அடியேன் வணங்கும், தெய்வமும்-கடவுளும், நீ-நீயே!, குருவும்-ஞானாசாரியனும், நீ-நீயே, துணை-உதவியும், நீ-நீயே!, தாயும்-அன்னையும், நீ - நீயே, அழுந்தும் - அடியேன் அழுந்திக்கிடக்கிற, பவம் - பவவடிவமும், நீ-நீயே!, நன்மையும்-நன்மைகளும், நீ-நீயே, ஆவி-உயிரும் நீயே, யாக்கை-உடம்பும், நீதான்-நீயேதான் எ-று.

(வி-ரை) 'கொழுந்து' என்றது ஒளிச்சிகையை. இனி, கொழுந்து திகழ் என்பதற்குக் கொழுந்துபோல விளங்குகின்ற எனப் பொருள் கூறுவாரும் உண்டு; (கொழுந்து-தளிர்) வெண்பிறை என்றது வெள்ளியபிறைச் சந்திரனை; ஈண்டு ஒற்றைக்கலைச் சந்திரனை. 'கோவே' என்றசொல் இறைமையை உணர்த்தி நின்றது. 'மன்று' என்றது தில்லை அம்பலத்தை. 'கூற்று' என்றது ஆனந்தக்கூத்தினை. 'இமயவரை என்றாய்' என்றது இமோர் பருவதராஜன் தவப்புதல்வியாய் வளர்ந்தவளும், சர்வலோக மாதாவுமாகிய உமாதேவியாரை. 'சுடரே' என்றது நடராஜமூர்த்தத்தை. இருவினைக் கீடாக எய்தும் இன்பதுன்பம், நரகமோக்ஷங்கள் இறைவன் சன்னிதான விசேடத்தாற் காரியப்பட்டுப் பலனளிக்கின்றமையினால் 'அழுந்தும் பவநீ நன்மையு நீ' என்றார். இதனை,

"கூறு நாவே முதலாகக் கூறுங்கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ"

என்ற **மணிவாசகர்** திருவாக்கானும் அறியலாம்.

இறைவன் உயிர்க்குயிராய் நின்று உயிரையும் அதன் குடிலாகிய உடலையும் இயக்குகின்றானாதலின் 'ஆவியாக்கை நீதானே' என்றார். இதனை,

"ஊனாயுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனா யமுதமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்"

என்ற **திருவாசகத்தா**லறியலாம். இன்னும்,

"ஊனாகி யுயிராகி யதனுணின்ற வுணர்வாகிப்
பிறவனைத்து நீயாய் நின்றார்"

என்ற **திருநாவுக்கரசர்** திருவாக்குங் காண்க. இன்னும்,

"குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்"
என்ற **திருஞானசம்பந்தர்** திருவாக்கு நோக்கத் தக்கது.

இமயவரை - இது பனியால் மூடப்பட்ட மலையாதலின் இப்பெயர் வந்தது. இமம்-பனி. வரை - இது இருமடியாகுபெயர். வரை என்பது கோடு. இது கோட்டையுடைய மூங்கிற்காகி, பின் மூங்கில்விளையும் மலைக் கானமை காண்க. ஏ-ஈற்றசை. 5

இறைவனே! மாயப்பிறவியை அறுத்தெறிய தேனே! அமுதே! கோனே!
எனக் கதறுதல் நின் செவி கேளாதிருப்பது என்ன
காரணம் என்கின்றார்

தானே யகண்டா காரமயந்
தன்னி லெழுந்து பொதுநடஞ்செய்
வானே மாயப் பிறப்பறுப்பான்
வந்துன் னடிக்கே கரங்கூப்பித்
தேனே என்னைப் பருகவல்ல
தெள்ளா ரமுதே சிவலோகக்
கோனே எனுஞ்சொன் னினதுசெவி
கொள்ளா தென்னோ கூறாயே.

(ப-ரை) தானே தானாகவே, அகண்டாகாரம்-விரிந்து எங்குமாகப்பரந்த, மயம் - தன்மை, தன்னில் - அதனிலிருந்தும், எழுந்து - தோன்றி, பொது- ஐந்தொழில் நடத்தற்குப் பொதுவாகிய, நடம் - கூத்தினை, செய்வானே- செய்பவனே!, மாயம்-மாயாசம்பந்தமுடைய, பிறப்பு-பிறவியை, அறுப்பான்- அறுத்தெறிந்துவிடுதற்காக, வந்து - அடியேன் தேவரீரின் சமுகத்தே வந்து, உன்-தேவரீது, அடிக்கே - திருவடிகளுக்கே, கரம் - கைகளை, கூப்பி-குவித்து அஞ்சலிசெய்து, தேனே - தேனே!, என்னை-அடியேனை, பருக-உட்கொள்ள, வல்ல-வல்ல, தெள்-தெளிவாகிய, ஆர்-அரிய, அமுதே-அமிர்தமே!, சிவலோகம்- சிவபுரத்திற்கு, கோனே - அரசே!, என்றும் - என்று நான் அழைக்கின்ற, சொல்-வார்த்தையை, நினது-தேவரீருடைய, செவி - திருச்செவியில், கொள் ளாது - ஏற்றுக்கொள்ளாதிருத்தல், என்னோ - என்ன காரணத்தினாலோ?, கூறாய்-சொல்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் ஆகாச வடிவாயுள்ளான். அவ்வாகாச வடிவாகிய அம்பலத்து எழுந்து பொதுநடஞ் செய்கின்றானாதலின் 'தானே யகண்டா காரமயந் தன்னி லெழுந்து பொதுநடஞ் செய்வானே' என்றார்.

"அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போலுலகில் தங்கி—நிகளமாம்
ஆணவ மூல மலமகல ஆண்டனன்காண்
மாணவக என்னுடனாய் வந்து"

என்ற **திருக்களிற்றுப்படியாரா**லும்,



"அகளமாயாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந் தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற"

என்ற **திருவுந்தியாரா**லும் அறியலாம்.

பிறப்பு மாயையினால் எய்துவதாகலின் 'மாயப் பிறப்பு' என்றார். இறை வனடி அடைந்தாலன்றி பிறப்பு அறாது ஆதலினால் 'மாயப் பிறப்பறுப் பான் வந்துன் னடிக்கே கரங்கூப்பி' என்றார். இதனை,

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது" எனவும்,

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்" எனவும்,

எழுந்த **திருக்குறட் செய்யுள்**களா லறிக.

இறைவன் எல்லாவற்றையும் தன்னுட் காப்பவன் ஆதலினால் 'என்னைப் பருகவல்ல தெள்ளா ரமுதே' என்றார். என்னோ-இதிலுள்ள ஈற்று ஓகாரம் வினாப்பொருளது. இறைவன் அடியார்களுக்கு அருள்புரிய தங்கணங்களோடு கூடியிருக்கும் இடம் சிவலோகம் எனப்பெறும். இனி முத்தியுஞ் சிவலோகமே. அதற்குத் தலைவன் சிவனாதலின் 'சிவலோகக் கோனே' என்றார். 'கொள்ள தென்னோ' இது 'கொள்ளாததென்னோ' என்பதன் தொகுத்தல் விகாரம். 'கூறாய்' இதில் 'ஆய்' முன்னிலை ஏவல் விகுதி. ஏ-ஈற்றசை. 6

இறைவனே! துன்பமேதரும் சமுசாரத்தில் தடுமாறும் பாவியேனை
தேவரீர் தடுத்தழைத்து அருள்செய்யக்கூடாதோ எனல்

கூறு நின்ற விடர்க்கவலைக்
குடும்பக் கூத்துட் டுளைந்துதடு
மாறு நின்ற பாவியைநீ
வாவென் றழைத்தா லாகாதோ
நீறார் மேனி முக்கணுடை
நிமலா அடியார் நினைவினிடை
யாறாய்ப் பெருகும் பெருங்கருணை
அரசே என்னை யாள்வானே.

(ப-ரை) நீறு-விபூதி, ஆர்-பொருந்திநிறைந்த, மேனி-திருமேனியையும், முக்கண் - திரிநேத்திரங்களையும், உடை - பெற்றுள்ள (பொருந்திய), நிமலா- நிர்மலனே!, அடியார் - அடியவர்கள், நினைவின் - மனத்தின், இடை-இடத்து, ஆறாய்-ஆறுபோல, பெருகும்-பெருகுகின்ற, பெரும்-பெரிய, கருணை-அருளை யுடைய, அரசே-அரசே!, என்னை-அடியனாகிய என்னை, ஆள்வானே - ஆண்டு அருள்செய்பவனே!, கூறுநின்ற - சொல்லப்படுகின்ற, இடர்-துன்பத்திற்குக் காரணமாகிற, கவலை - வியசனத்தைத் தருகின்ற, குடும்பம் - சமுசாரமாகிய,

கூத்துள் - கூத்தாட்டத்துக்குள், உழலாநின்று - முழுகி (கிடந்து, படிந்து), தடுமாறுகின்ற-தடுமாறுகின்ற, பாவியை-பாவியாகிய அடியேனை, நீ-தேவரீரே, வா - வா, என்று - என்று, அழைத்தால் - அழைத்தருள்செய்தால், ஆகாதோ உனக்குப் பொருந்தாதது ஆகுமோ? எ-று.

(வி-ரை) குடும்பசாகரத்தில் அடுக்கடுக்காக எடுக்க வெடுக்கத் தொலையாத தாகத் துன்பமுங் கவலையும் தொடர்ந்து நிற்கின்றதாதலின் 'கூறுகின்ற விடர்க்கவலைக் குடும்பம்' என்றார். இதனை,

"பொல்லா மனையாந் திமிங்கலமும் புதல்வ ரைந்தர் மீன்கணமும்
சொல்லார் கடனுங் கொடுஞ்சுரவும் சூழுங் குடும்பச் சாகரத்தில்
கல்லா வீழல் வருங்குருவே கடையேன் பட்டு விழித்திடுதல்
நல்லாய் நீதா னறியாயோ நயந்து காக்க வருவாயே"

என்றதனால் அறிக.

குடும்ப வாழ்வு ஒரு கூத்தாட்டுப்போல் இருத்தலின் 'குடும்பக் கூத்துள்' என்றார். இரவில் கூத்தளவில் ஒன்றுபட்டிருந்து ஆட்டம் முடிந்தவுடன் வெவ்வாறாகிவிடுவதுபோல் குடும்பத்தாரும் வினையளவிற் கூடி வினையோயத் தாந் தாம் ஓடிப் பிரிந்துவிடுதலின் குடும்பம் நாடகக் கூத்தாதல் காண்க. இறைவன் திருமேனியில் விபூதி படிந்திருத்தலின் 'நீறார் மேனி' என்றார். இதனை,

"நீலத்தாற்கரிய மிடற்றார் நல்லநெற்றி மேலுறை
கண்ணினார் பற்று, சூலத்தாற் சுடலைப்பொடி
நீறணிவார் சடையார் சிலத்தார்"

என்ற **தேவாரத்தா**லும் அறியலாம்.

இறைவன் மலரகிதன் ஆதலின் 'நிமலா' என்றார். இறைவன் என்றும் அடியார் இதயத்துத் தேனூற்றாய்த் திகழ்வோனாதலின் 'அடியார் நினைவினிடை யாறாய்ப் பெருகும் பெருங்கருணை யரசே!' என்றார். இதனை,

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்"

என்ற **திருக்குறளா**லும் அறியலாம்.

இறைவன் எல்லாரையும், எல்லாவற்றையும் ஆண்டு அருள்புரிவோனாதலின் 'என்னை யாள்வானே' என்றார். இனி குருமூர்த்தமாகி வந்து ஆண்டருள்புரிந்தமையால் இவ்வாறு கூறினர் எனினும் பொருந்தும். 7

இறைவனே! அடியேனைக் காக்கும் மார்க்கத்தைத் திருவுளங்கொள்
உன் கருத்து எனக்குத் தெரியவில்லை காத்திருக்கின்றேன்
அருள்செய் எனல்

வானே முதலாம் பெரும்பூதம்
வகுத்துப் புரந்து மாற்றவல்ல
கோனே என்னைப் புரக்குநெறி
குறித்தா யிலையே கொடியேனைத்



தானே படைத்திங் கென்னபலன்
றன்னைப் படைத்தாய் உன்கருத்தை
நானே தென்றிங் கறியேனே
நம்பி னேன்கண் டருள்வாயே.

(ப-ரை) வானே-ஆகாயமே, முதலாம்-முதலான, பெரும்பூதம் - பெரிய பூதங்கள் ஐந்தினையும், வகுத்து - உண்டாக்கி, புரந்து - காப்பாற்றி, மாற்ற-அழிக்க, வல்ல-வல்லமையுடைய, கோனே-தலைவனே!, என்னை-அடியேனாகிய என்னை, புரக்கும் - காப்பாற்றும், நெறி - மார்க்கத்தை, குறித்தாய்-திருவுளம் பற்றினாய், இல்லையே - இல்லையே, கொடியேனை - கொடியவனாகிய என்னை, தானே - மாத்திரமே, படைத்து - உண்டாக்கி, இங்கு - இவ்விடத்து, என்ன-என்ன, பலன்-பயனை, படைத்தாய் - பெற்றாய்?, உன்-தேவரீரின், கருத்தை-திருவுள்ளக்கிடையை, நான் - அடியேன், ஏது-யாது, என்று - என்று, இங்கு-இவ்விடத்து, அறியேன் - அறியாதிருக்கின்றேன் (ஆயினும்), நம்பினேன்-(தேவரீரையே) நம்பியிருக்கின்றேன், கண்டு - (அவ் உண்மைகளை) தேவரீர் தெரிந்துகொண்டு, அருள்வாய்-கிருபை செய்தருள்வாயாக எ-று.

(வி-ரை) 'வானே முதலாம் பெரும்பூதம்' என்றது ஆகாயமுதலாகிய பஞ்சபூதங்களை. அவையாவன:—விண், காற்று, தீ, நீர், மண் என்பனவற்றை. இறைவன் தன்னிடத்துத் தோன்றிய அருட்சத்தி வழிவந்த மாயையினால் பூதபௌதிகங்களைப் படைக்கின்றானாதலினாலும், காக்கின்றானாதலினாலும் பின் தன்னுள் கரக்கின்றானாதலினாலும் 'வானே முதலாம் பெரும்பூதம் வகுத்துப் புரந்து மாற்றவல்ல கோனே' என்றார். இதனை,

"படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத் துடைக் கடவுள்"

என்ற **திருவாசகத்தா**லும் அறியலாம்.

இன்னும், 'அனைத் துலகு மாக்குவாய் காப்பா யழிப்பாய்' என்றதுங் காணத்தக்கது. இறைவன் ஆன்மாக்களையும் உலகையும் மற்றுள்ளனவற்றையும் சிருட்டித்தது கருணையே காரணம். ஆன்மாக்கள் உய்யவேண்டுமென்பது கொண்டே அவர் படைத்த படைப்புக்களால் அவர் அடையும் பயன் யாது இன்று இதுகொண்டே 'எனைத் தானே படைத்திங் கென்ன பலன்' என்றார். இது கொண்டன்றோ **பட்டினத்தடிகளும்**,

"உன்னாற் பிரயோச னப்வேண தெல்லாமுண் டுனைப்பணியும்
என்னாற் பிரயோச னமேதுண்டு காளத்தி யீச்சுரனே" என்றார்.

தன்னைப் படைத்துத் தனக்கு வேண்டுவனவற்றை எல்லாந் தந்து காக்குந் தலைவனை மறந்து பிரபஞ்சத்துட் புக்கு தானல்லாதவற்றைத் தானாகக்கொண்டு தன்னதல்லாவற்றைத் தன்னதாகக்கொண்டு திரியுஞ்

சயமையுடைமையாற் 'கொடியேனை' என்றார். இறைவன் ஆன்மாக்களைப் படைத்த குறிப்பு எவரானும் அரிதற்கரிது என்பார் 'உன் கருத்தை நானே தென்றிங் கறியேனே' என்றார். நம்பத்தகுவோனும், வேண்டத்தகுவோனும் இறைவன் ஆதலினாலும் நம்பினோரைக் காப்பவனும், வேண்டிய வேண்டிய அன்பர்க்கு வேண்டுவன ஈந்தருள்வோனும் இறைவன் ஆதலினாலும் 'நம்பி னேன் கண்டருள்வாயே' என்றார். இதனை,

> "வேண்டத் தக்க தறிவோய்நீ
> வேண்ட முழுதுந் தருவோய்நீ"

என்ற **திருவாசகம்** புலப்படுத்தும். ஏ-ஈற்றசை. 8

இறைவனே! ஞானிகள் கண்ட பொருள்நீ, மூடர்கள்
காணமுடியாதிருக்கின்றாய் எனல்

கண்டார் கண்ட காட்சியுநீ
காணார் காணக் கள்வனுநீ
பண்டா ருயிர்நீ யாக்கையுநீ
பலவாஞ் சமயப் பகுதியுநீ
எண்டோண் முக்கட் செம்மேனி
யெந்தாய் நினக்கே யெவ்வாறு
தொண்டாய்ப் பணிவர் அவர்பணிநீ
சூட்டிக் கொள்வ தெவ்வாறே.

(ப-ரை) கண்டார் - மெய்ஞ்ஞானத்தைக் கண்ட அறிஞர்கள், கண்ட-கண்ட (தரிசித்த), காட்சியும் - காட்சிச் செம்பொருளும், நீ-நீயே, காணார்-மெய்ஞ்ஞானம் பெறாதவர்கள், காண-காணமுடியாத, கள்வனும்-மறைபொருளாய் இருப்பவனும், நீ-நீயே, பண்டு - பழமையாகிய, ஆர் - நிறைந்த, உயிர்-உயிரும், நீ-நீயே, யாக்கையும்-உடலும், நீ-நீயே, பலவாம்-பலவாகிய, சமயம்-சமயங்களின், பகுதியும்-பாகுபாடுகளும், நீ-நீயே, எண்-எட்டு, தோள்-தோள்களும், முக்கண்-மூன்று கண்களும், செம்-செவந்த, மேனி-திருமேனியையும் (கொண்டுள்ள), எந்தாய்-எனது தந்தையே!, நினக்கே-தேவரீருக்கே, எ-எந்த, ஆறு-விதமாக, தொண்டு-தொண்டர், ஆய்-ஆகி, பணிவர்-வணங்குவர், எ-எந்த, ஆறு - விதம், அவர் - அவர்களுடைய, பணி-தொண்டினை, நீ-தேவரீர், சூட்டி-ஏற்று, கொள்வது-கொள்வது, எ-எந்த, ஆறு-விதம்? எ-று.

(வி-ரை) மெய்ஞ்ஞானிகள் இறைவனை அந்தர்முகமாக ஒளியுருவாய் ஆனந்தமயமாகக் காண்பர். பகிர்முகத்தில் எல்லாஞ் சிவமாகக் காண்பர். அவர் காணும் பிரபஞ்சமும் அதன்கணுள்ள சராசரங்களும் சிவமாகக்காணும் ஆதலான் 'கண்டார் கண்ட காட்சியுநீ' என்றார். ஞானமுணரார், இறைவன் தன்னுள்ளும் புறம்புமாய் எங்கும் இருப்பினும் இறைவனைக் காணார். இறைவன் அவர்க்குத் தோற்றான் ஆதலின் 'காணார் காணக் கள்வனுநீ' என்றார். இறைவன் எல்லா வுயிரும் உடலுமாக இருக்கின்றானாதலின் 'பண்டா ருயிர்நீ யாக்கையுநீ' என்றார். இறைவன் சமயகோடிகளாயும் அவரவர் வணங்குந் தெய்வமுமாக இருத்தலின் 'பலவாஞ் சமயப் பகுதியுநீ' என்றார். இதனை,



> "அறுவகைச் சமயத் தோர்க்கு மவ்வவர் பொருளாய் வேறுங்
> குறியது வுடைத்தாய் வேதா கமங்களின் குறியிறந் தங்
> கறிவினி லருளான் மன்னி யம்மையோ டப்பனாகிச்
> செறிவொழி யாதுநின்ற சிவனடி சென்னி வைப்பாம்"

என்பதனாலும் அறியலாம்.

ஏனைய தேவர்கட்கு நான்கு புயங்களும் சிவபெருமானுக்கு எட்டுப் புயங்களும் உண்டாதலின் 'எண்டோண் முக்கட் செம்மேனி' என்றார். இதனை, 'எண்டோள் வீசி நின்றாடும் பிரான்' என்ற **திருநாவுக்கரசர்** வாக்கானும் அறிக. இறைவனுக்கு நெற்றிக்கண்ணோடு முக்கண் உண்டாதலினாலும், செவந்த திருமேனி யுடையனாதலாலும் 'முக்கட் செம்மேனி' என்றார். செக்கர்மேனியன், செம்பவளமேனியன் என்பனவற்றாலும் இதனை அறியலாம். எல்லாமாய் இறைவன் இருத்தலின் 'எவ்வாறு தொண்டாய்ப் பணிவர், அவர்பணி நீசூட்டிக் கொள்வ தெவ்வாறே' என்றார். ஏ-ஈற்றசை. 9

இறைவனே! முத்தியை உன் அருளால் நாடுங்கால் உலகம்
சொற்பனமாகிக் காண்கின்றது என்கின்றார்

சூட்டி யெனதென் றிடுஞ்சுமையைச்
சுமத்தி எனையுஞ் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து வினைவழியே
கூத்தாட் டினையே நினதருளால்
வீட்டைக் கருது மப்போது
வெளியா முலக வியப்பனைத்தும்
எட்டுக் கடங்காச் சொப்பனம்போ
லெந்தாய் இருந்த தென்சொல்வேன்.

(ப-ரை) சூட்டி-மேற்பூண்டு, எனது - அடியேனுடையது, என்றிடும் - என்றுசொல்லும், சுமையை - சுமையினை, சுமத்தி - சுமக்குமாறுசெய்து, எனையும்-அடியேனாகிய என்னையும், சுமை - சுமைஎடுக்கும், ஆள் - ஆள், ஆ-ஆக, கூட்டி-சேர்த்து, பிடித்து-பிடித்து, வினை-வினையின், வழியே-வழியாக, கூத்து - அடியேனின்கூத்தை, ஆட்டினையே - ஆட்டுவித்தாயே, நினது - தேவரீரது, அருளால்-திருவருளினாலே, வீட்டை - முத்தியின்பத்தை, கருதும்-எண்ணிவிரும்பும், அப்போது - அந்தக்காலத்தில், வெளி-வெளிப்படையாக, ஆம்-தோன்றுகின்ற, உலகம்-உலகத்தினுடைய, வியப்பு-ஆச்சரியங்கள், அனைத்தும்-எல்லாம், எட்டுக்கு-ஓலையில் எழுதுதற்கு, அடங்கா - அடங்காத,

சொப்பனம்-கனவை, போல்-ஒப்ப, இருந்தது - இருந்தவிதத்தை, எந்தாய் - எனது தந்தையே! என் - என்னவென்று, சொல்வேன் - சொல்லுகிற்பேன்? எ-று.

(வி-ரை) 'சுமை' என்றது ஈண்டு உடம்பைக்குறித்தது. உயிர்கள் செய்யும் வினைக்கு சாட்சியாகநின்று அவ்வவ்வினைக்குத் தக்கபலனை ஊட்டுபவன் இறைவன் ஆதலினால் 'குட்டியெனதென் றிடுஞ்சுமையைச் சுமத்தியெனையுஞ் சுமையாளாக் கூட்டிப்பிடித்து வினைவழியே கூத்தாட்டினையே' என்றார். இதனை,

"ஊட்டுவிப்பானும் உறங்குவிப்பானு மிங்கொன்றோ டொன்றை
மூட்டுவிப்பானும் முயங்குவிப்பானு முயன்றவினை
காட்டுவிப்பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப்பானு மொருவனுண்டே தில்லை யம்பலத்தே"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கானும் அறிக.

இறைவன் திருவருளாலேயே வீட்டிச்சை பிறக்குமாதலின், 'நினதருளால் வீட்டைக் கருதமப்போது' என்றார். வீட்டைநோக்க மற்றையவெல்லாம் போயொழியுமாதலின் 'வெளியா முலக வியப்பனைத்தும் ஏட்டுக் கடங்காச் சொப்பனம்போ லெந்தா யிருந்த' என்றார். 'என்னையும்' என்றது 'எனையும்' எனத் தொகுத்தல்விகாரம் பெற்று நின்றது. 10

---

## வ ம் ப னே ன்

இறைவனே! தேவரீருக்கு ஏவல் செய்யக் கட்டளையிட்டுக் காத்தருளினீர் அடியேன் உய்ந்தேன் அடியேனுக்குக் குறையேயில்லை என்கின்றார்

வம்பனேன் கள்ளங் கண்டு
மன்னருள் வெள்ள ராய
உம்பர்பா லேவல் செய்யென்
றுணர்த்தினை ஓகோ வானோர்
தம்பிரா னே நீ செய்த
தயவுக்குங் கைம்மா றுண்டோ
எம்பிரா னுய்ந்தே னுய்ந்தேன்
இனியொன்றுங் குறைவி லேனே.

(ப-ரை) வம்பனேன்-வம்புசெய்பவனாகிய அடியேனினுடைய, கள்ளம்-கபடத்தை, கண்டும்-பார்த்தும், மன்-நிலையுள்ள, அருள் - திருவருள், வெள்ளர்-கடலினர், ஆய - ஆகிய, உம்பர் - தேவரீராகியதேவர், பால் - இடத்தே,



ஏவல்-தொண்டு, செய்-செய்க, என்று-என்று, உணர்த்தினை - அறிவித்தாய், ஓகோ-ஓகோ இஃதாச்சரியம், வானோர் - தேவர்களுக்கு, தம்பிரானே-தலைவனே!, நீ-தேவரீர், செய்த-செய்த, தயவுக்கும்-கிருபைக்கும், கைம்மாறு-அடியேன் செய்யக்கூடிய பிரதிப்பிரயோசனம், உண்டோ-ஏதேனும் இருக்கின்றதோ?, எம்பிரான்-எமது பெருமானே!, உய்ந்தேன் - உஜ்ஜீவித்தேன், உய்ந்தேன் - உஜ்ஜீவித்தேன், இனி - இனிமேல், ஒன்றும் - ஒரு சிறிதும், குறைவு-குறைவு, இலேன்-இல்லாதவனாக இருக்கின்றேன் எ-று.

(வி-ரை) இப்பதிகத்து முதற்செய்யுளின் முதலடியின் முதல் 'வம்பனேன்' எனத் தொடங்கியதால் இப்பதிகத்திற்கு **வம்பனேன்** எனப் பெயர் எய்தியது. இது அந்தாதியாகி மண்டலித்து நின்றது. வம்பு - ஈண்டு அடாதகாரியங்களாகிய அட்டத்தனத்தின்மேல் நின்றது. கள்ளம் - கபடத்தன்மை; இது, உண்மைக்கு மாறாயது. இறைவன் பரமகருணாநிதியாதலின் மக்கள் அட்டரும் கபடருமாயிருப்பினும் அவர்பாலுங் கருணைகொண்டு நல்வழிப்படுத்தி அருள் புரிவோன் ஆதலினால் 'வம்பனேன் கள்ளங் கண்டு மன்னருள் வெள்ளராய உம்பர்பால் ஏவல்செய் என்று உணர்த்தினை' என்றார். 'உம்பர்' என்றது ஈண்டு சிவபெருமானைக் குறித்தது. உயர்ந்தவன்-உயர்ந்தானத்திருப்பவன் ஆதலினால், இது உகரச் சுட்டியாகப் பிறந்த பெயர். இறைவன் திருவருள் என்றும் அழியாது நிலைபெற்றிருப்பது ஆதலினால் 'மன்னருள்' என்றார். இறைவன் தேவாதிதேவன் ஆதலினால் 'வானோர் தம்பிரான்' என்றார். 'வானோர் தம்பிரானே' என முன்னர்க் கூறியவர் பின்னும் 'எம்பிரானே' என்று கூறியதின் காரணம் என்னை எனின்? சிவபெருமான் வானோர்க்குப் பெருமானே யன்றி எமக்குப் பெருமான் அல்ல என்று எண்ண இடந்தந்திடுமென்றே பின்னடியில் 'எம்பிரானே' என்றார். 'உய்ந்தேன்' என்பது ஈண்டு மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. இறைவன் திருவடிக்குத் தொண்டுபூண் டொழுகுவார்க்கு யாதொரு குறையுமில்லையாதலினால் 'ஒன்றுங் குறைவிலேனே' என்றார். இதனை,

"கடனஞ்ச முண்டருளுங் கண்டத் தெம்மான்
கழலிணைக்கே யன்புடைய னாகி நாளும்
படவரவின் றலைச்சுமையா முலகு தன்னில்
பணிபலவும் புரிந்துதமிழ் பாடி நின்றேன்
தொடவருமோ அயனென்னைத் தொந்த மிட்டே
துரிதத்தில் வந்தகலி தோற்றச் சென்றே
அடலழிந்து கெட்டொழிந்து போயிற் றம்மா
அறிந்துலகீர் ஆண்பணிக்கே ஆளா வீரே!"

எனவும்,

"காலன் வீழ உதைத்தருளுங் காலன் ஈசன் உமைபாகன்
ஞாலத் தென்றும் விடையேறி நயந்து தோன்றிப் புரியருளான்

சிலக் கழலே பணிந்திட்டேன் சிறியேற் கேதுங் குறையில்லை
சாலச் சுகமும் வாழ்வதுமே சார்ந்த திங்ஙன் சலிப்பறவே"

எனவும் கூறிய **பெரியார்களின்** வாக்குகளாலும் அறியலாம். எ-ஈற்றசை. 1

இறைவா! சிவானந்த வெள்ளத்தில்மூழ்கி ஆனந்தமயமாக இருக்கும்படி
இரகசியமாகப் பிரார்த்திக்கின்றேன் எனல்

குறைவிலா நிறைவாய் ஞானக்
கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித்
துளைந்துநான் றோன்று வாறுள்
ளுறையிலே யுணர்த்தி மோன
வொண்சுடர் வைவா டந்த
இறைவனே உனைப் பிரிந்திங்
கிருக்கிலே னிருக்கி லேனே.

**(ப-ரை)** குறைவு-குறைவு, இலா - இல்லாத, நிறைவுஆய் - பூரணமாகி, கோதுஇல் - குற்றமில்லாத, ஞானம் - ஞானமென்னும், ஆனந்தம் - ஆனந்தமாகிய, வெள்ளம்-பெருக்கின், துறையிலே-வழியிலே, படிந்து - பொருந்தி, மூழ்கி-முழுகி. திளைந்து-அழுந்திக்கிடந்து, நான் - அடியேன், தோன்று-தோன்றுத, ஆறு-விதம், உள்ளுறையிலே-மறைவிலே, உணர்த்தி-அறிவித்து, ஒள்-பிரகாசம்பொருந்திய, சுடர்-ஞானஒளியாகிய, வை-கூர்மைபொருந்திய; மோன-மௌனநிலையாகிய, வாள் - வாளாயுதத்தை, தந்த - கொடுத்தருளிய, இறைவனே-தலைவனே!, உன்னை-தேவரீரை, பிரிந்து - விட்டுநீங்கி, இங்கு-இவ்வுலகத்தின்கண்ணே, இருக்கிலேன் - தங்கிலேன், இருக்கிலேன் - தங்கிலேன் எ-று.

**(வி-ரை)** 'குறைவிலா நிறைவு' என்றது பரிபூரணத்தன்மையை. 'கோதிலானந்தவெள்ளம்' என்றது சிவானந்தவெள்ளத்தை. 'துறை' என்றது ஈண்டு சைவசமயத்தினை. சிவானந்தத்தில் மூழ்கினவர்களுக்கு 'நான்' என்னும் அகங்காரதத்துவம் தலைகாட்டாதாதலின் 'நான்றோன்று வாறு' என்றார். 'உள்ளுறை' என்றது உள்ளுக்குள் ஒருபொருளும் தோன்றக்கூறுவது. இதனை இரட்டுறமொழிதல் என்பர். இனி சிலேடை என்றலுமாம். புறப்புறச் சமயங்களாகிய அஞ்ஞானக்காடுகளை அழிப்பதற்கு வாள்வேண்டுதலின் 'ஒண்சுடர்வை வாள்தந்த இறைவனே' என்றார். 'உனைப் பிரிந்து' என்றது மறந்திருத்தலை. இறைவன் எல்லாவற்றிலும் கலந்தும் கலவாதும் இருக்கின்றானாதலின் அவனைப் பிரிதல் சாத்தியமானது அன்று ஆதலின் 'பிரிந்து' என்றதற்கு மறந்து என்பதே பொருளாதல் காண்க. இறைவன் ஞானாசிரியராகவந்து மௌனதேசிகமூர்த்தமாய்வந்து



உபதேசித்தருளினமையின் 'உள்ளுறையிலே யுணர்த்தி மோனவொண்சுடர் வைவாடந்த' என்றார். ஏ-ஈற்றசை. 2

இறைவனே! நின் அகண்டானந்தக் காட்சியைக் காண வா என்று
அழைத்தால் இன்பவாழ்வு உண்டோ என்கின்றார்

இருநில மாதி நாத
மீறதா மிவை கடந்த
பெருநில மாய தூய
பேரொளிப் பிழம்பாய் நின்றும்
கருதரு மகண்டா னந்தக்
கடவுள் நின் காட்சி காண
வருகவென் றழைத்தா லன்றி
வாழ்வுண்டோ வஞ்ச னேற்கே.

**(ப-ரை)** இரு - பெரிதாகிய, நிலம் - பிருதிவிதத்துவம், ஆதி - முதலாக, நாதம்-நாததத்துவம், ஈறது-ஈறு, ஆம்-ஆகவுள்ள, இவை-இவைகளை, கடந்த-தாண்டி அப்பால்நின்ற, பெரிய-பெரியநிலம், ஆய-ஆகிய, தூய-பரிசுத்தமான, பேர்-பெரியதாகிய, ஒளி-பிரகாசத்தின், பிழம்பாய்-திரளாகி, நின்றும்-இருந்தும், கருது-நினைப்பது, அரும்-அரிதாகிய, அகண்டம்-விரிந்துபரந்தபெரிய, ஆனந்தம் - இன்பத்தைத்தருகின்ற, கடவுள் - கடவுளே!, நின் - தேவரீரின், காட்சி - தரிசனத்தை, காண - கண்டுஉய்யுமாறு, வருகஎன்று - வாவென்று, அழைத்தால்-கூப்பிட்டால், அல்லது-அல்லாமல், வஞ்சனேற்கு - கள்ளனாகிய அடியேனுக்கு, வாழ்வு-மோக்ஷானந்தவாழ்வு, உளதோ-உண்டோ? எ-று.

**(வி-ரை)** தத்துவங்களில் பிருதிவிதத்துவமே முதல் நிற்பதுபற்றி 'இரு நிலம் ஆதி' என்றார். நாததத்துவம் முப்பத்தாறுவதுதத்துவம் ஆதலினால் 'நாதம் ஈறதாம்' என்றார். பிருதிவிதத்துவம்முதலாக நாததத்துவம்முடிய முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாற்பட்ட இடமே 'தத்துவாதீதம்' 'பெருநிலம்' என்னப்படுவன. இதனை ஞானாகாயம் என்பர். இதுவே சிதம்பரமாகும். 'பேரொளிப்பிழம்பாய்' என்றது நடராஜ மூர்த்தத்தை. 'கருதரும் அகண்டானந்தக் கடவுள்' என்றது ஆகாசலிங்கத்தை. இறைவனைக்காணற்கும் அவன்பால் அன்பு செய்தற்கும் அவன் அருள்வேண்டுமாதலின் 'கடவுள்நின் காட்சிகாண வருகவென் றழைத்தாலன்றி வாழ்வுண்டோ' என்றார். இதனை,

"தில்லை நடம்புரியுந் தேவாநீ வாவென்று
சொல்லியழைத் தாளாயேற் சொன்மோன—எல்லை
தனிலிருந் துய்வனோ தானுவே நாயேன்
இனியேனு மான எழு"

என்ற வெண்பாவாலும் அறியலாம். ஏ-ஈற்றசை. 3

இறைவனே! வஞ்சனை பொறாமை யாதியவைகளுக்கு இடமாக இருக்கும்
அடியேனைக் காத்தல் தேவரீர் கடமையாமெனல்

வஞ்சனை யழுக்கா றாதி
வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை வலிதின் மேன்மேல்
நெக்குநெக் குருகப் பண்ணி
அஞ்சலி செய்யுங் கையு
மருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத்
தற்பரா பரமு னக்கே.

(ப-ரை) தற்பரா-தனக்குமேலொன்றில்லாததாகிய கடவுளே!, வஞ்சனை-கள்ளமும், அழுக்காறு - பொறாமை, ஆதி - முதலியகுணங்கள், வைத்திடும்-வைக்கப்பட்டிருக்கும், பாண்டம்-பாத்திரம், ஆன-ஆகிய, நெஞ்சனை - மனத்தினையுடையவனாகிய அடியேனை, வலிதின் - பலாத்காரமாக, மேன்மேல்-மேலும் மேலும், நெக்கு நெக்கு - நெகிழ்ந்து நெகிழ்ந்து, உருக - உருகும்படி, பண்ணி - செய்து, அஞ்சலி-நமஸ்காரம், செய்யும்-செய்கின்ற, கையும்-கையும், அருவி-நதிபோல், நீர்-கண்நீர்பாயும்படியான, விழியும்-கண்களும், ஆக-ஆகும்படிச்செய்து, தஞ்சம்என்று-தேவரீருக்கேஅபயமென்று, இரங்கி-மனம்இளகி, காக்க-காப்பாற்றும்படி, உனக்கே-தேவரீருக்கே, பரம்-பாரமாகும் எ-று.

(வி-ரை) 'வஞ்சனை அழுக்காறுதி' என்றதனால் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் முதலியவற்றையுங் கொள்க. தேகம் உயிர் என்பது இருப்பதற்கு இடமாக இருத்தலினால் 'பாண்டம்' என்றார். இது பற்றியே பிறரும் 'பவ்வீபாண்டம்' 'புன்மலப் புழுப்பாண்டம்' என்றனர். நெஞ்சையுடையவன் என்னும் பொருளில் 'நெஞ்சனை' என்றார்; இதில் ஐ இரண்டன் உருபு. நெக்குருகப் பண்ணுதலாவது நெஞ்சுருகப்பண்ணுதல். 'அருவிநீர் விழி' என்றது ஆநந்தக்கண்ணீர் ஒழுகும் கண்ணை. தற்பரன்-தனக்குமேலில்லாதவன்; தானே உயர்பொருளாய் இருப்பவன் என்னும் பொருளது. வஞ்சனையாதிய தீக்குணங்கள் இறைவன் சிந்தனை இல்லாதார்க்கு உண்டாகுங் குணங்களாம். இறைவன் சிந்தனையுள்ளார்க்கு எய்தும் மெய்ப்பாடுகள் நெஞ்சுருகல், அஞ்சலிசெய்தல், அருவிநீர் விழியுடையராதல் என்பது அறியற்பாலது. தற்போதங் கழன்று சிவபோதம் உண்டாக்குவிக்க வேண்டுமென்பது இச்செய்யுளின் கருத்து. இதனை,

"உடைந்து நைந்து நெக்குநெக் குளங்கு ழைந்து சின்மயத்
தடைந்து கண்ண சும்பிருந்து தாரை பாய வன்புநீர்
குடைந்து வாழு மன்பர் சிந்தை கோயில் கொண்டு வாழ்வரான்
மடந்தை பாக மாய்க் கலைசை வாழ்சி தம்ப ரேசரே"

என்ற கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதிச் செய்யுளானும் அறியலாம். 'பரம்' இது 'பாரம்' என்பதன் விகாரம்.





இறைவனே! தேவரீரது திருவடிகளுக்கு அன்புசெய்யும்படி தேவரீர்
வெளிப்பட்டுவந்து அடியேனை அஞ்சலென்பது
எந்தக்காலம் என்கின்றார்

உனக்குநா னடித்தொண் டாகி
யுன்னடிக் கன்பு செய்ய
எனக்குநீ தோற்றி யஞ்சே
லென்னுநா ளெந்த நாளோ
மனக்கிலே சங்க ளற்ந்த
மாதவர்க் கிரண்டற் றோங்குந்
தனக்குநே ரில்லா வொன்றே
சச்சிதா னந்த வாழ்வே.

(ப-ரை) மனம் - மனத்தின்கண் எழும், கிலேசங்கள்-துயரங்கள், தீர்ந்த-நீங்கப்பெற்ற, மா - பெரிய, தவர்க்கு - தபோதனர்களுக்கு, இரண்டு - இரண்டாகும் நிலைமை, அற்று-நீங்கி, ஓங்கும்-ஓங்கிய, தனக்கு-தனக்கு, நேர்-ஒப்பு, இல்லா-இல்லாத, ஒன்றே-ஒப்பற்றபொருளே!, சச்சிதானந்த-சத்தும் சித்தும் ஆனந்தமுமான, வாழ்வே-வாழ்வே!, உனக்கு-தேவரீருக்கு, நான் - அடியேன், அடி-தேவரீரது திருவடி, தொண்டு - அடிமை, ஆகி - ஆகி, உன் - தேவரீரது, அடிக்கு-திருவடிகட்கு, அன்பு-பக்தி, செய்ய-செய்ய, எனக்கு-அடியேனுக்கு, நீ-தேவரீர், தோற்றி-வெளிப்பட்டருளிவந்து தரிசனந்தந்து, அஞ்சேல்-பயப்படாதே, என்னும் - என்று சொல்லுகிற, நாள் - நாள், எந்த - எந்த, நாள்-நாளோ? எ-று.

(வி-ரை) உன் திருவடித் தொண்டனாகி உன் திருவடிக்கு அன்புசெய்ய அருள் செய்யவேண்டும் என்பார் 'உனக்கு நான் அடித்தொண்டனாகி உன்னடிக்கு அன்பு செய்ய' என்றார். இதில் 'அடித்தொண்டாகி' என்பதற்கு வழித்தொண்டென்றும் பொருள் கொள்ளலும் ஆம். இறைவன் ஆசாரிய வடிவாகத் தோன்றி அஞ்சலென்றருளி அருள் செய்தலையே 'எனக்கு நீ தோற்றி அஞ்சேலென்னுநாள் எந்த நாளோ' என்றார். இனி அந்தர் முகத்தே தோன்றி அருள் செய்தலும் ஆம். இறைவன் எவருளத் திருப்பினும் மனக்கிலேச முடையவர்க்கு திரோதானத்தில் மறைந்திருப்பன். மனக்கிலேச மற்றவர்களுக்கு அனன்னியமாகத் தோன்றி விளங்குவன் ஆதலினால், 'மனக் கிலேசங்க ளற்ந்த மாதவர்க் கிரண்டற் றோங்கும்' என்றார். என்னை? மனக்கிலேசம் முதலியன அஞ்ஞானத்தின் காரியங்கள். அஞ்ஞான முள்ளவரை ஞானசொரூபியாகிய இறைவன் வெளிப்பட்டுத் தோற்றான். இறைவன் ஒப்பிலியாதலின் 'தனக்கு நேரில்லா வொன்றே' என்றார். இதனை யன்றோ பெரியாரும் 'இணையிலி' 'பிணையிலி' 'தனியன்' எனப் பெரியார் கூறினர். வாழ்வாகவும், வாழ்வு அருள்வோனாகவும் ஈசன் நிற்றலின் 'வாழ்வே' என்றார்.

இறைவனே! தேவரீருக்கு அடித் தொண்டனாகிய என்னை அஞ்சல் என்பது எக்காலம் என்று கூறுகின்றார்

வாழ்வென வயங்கி யென்னை
வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த
ஊழ்வினைப் பகுதி கெட்டிங்
குன்னையுங் கிட்டு வேனோ
தாழ்வெனுஞ் சமய நீங்கித்
தமையுணர்ந் தோர்கட் கெல்லாம்
சூழ்வெளிப் பொருளே முக்கட்
சோதியே அமர ரேறே.

**(ப-ரை)** தாழ்வு - பிரயோசனத்தால் குறைவுபட்டது, எனும் - என்று சொல்லும், சமயம்-சமயங்களை, நீங்கி-நீங்கி (அகற்றி), தமை-தங்களது ஆன்ம நிட்சயத்தினை, உணர்ந்தோர்கட்கு-அறிந்தவர்களுக்கு, எல்லாம் - எல்லாவகைகளினாலும், சூழ் - ஆராயப்படுகின்ற, வெளி - வெளிப்படையாகத் தோன்றுகின்ற, பொருளே - பொருளே!, முக்கண் - திரிநேத்திரங்களையுடைய, சோதியே-ஒளியே!, அமரர் - தேவர்களென்கிற யானைகளுக்கு, ஏறே - ஆண் சிங்கமே!, வாழ்வு - உலகவாழ்க்கை, என - என்று, வயங்கி - விளங்கி, என்னை-அடியேனை, வசம்-வயம், செய்து-செய்து, மருட்டும் - மயக்குகின்ற, பாழ்த்த-பாழாகிய, ஊழ் - ஊழ்வினை, பகுதி-பகுப்பு, கெட்டு-கெட்டு, இங்கு-இப்பிறப்பில்தானே, உன்னையும்-தேவரீரையும், கிட்டுவேனோ-அடைவேனோ? எ-று.

**(வி-ரை)** 'வாழ்வு' என்றது ஈண்டு உலகவாழ்வை. உலகவாழ்வு அனைத்தும் மாயையின் காரியம். இதுபற்றியன்றோ **பெரியாரும்** 'வாழ்வாவது மாயம்' என்றார். மாயாகாரியமாகிய உலகவாழ்க்கை ஊழ்வினைக்கு ஏற்ப வந்து எய்துவது ஆதலின் 'என்னை வசஞ்செய்து மருட்டும் பாழ்த்த ஊழ்வினைப் பகுதி கெட்டு' என்றார். இருவினையொப்பு மலபரிபாகம் வந்தவர்க்கே சிவானந்தஞ் சித்திக்கும் ஆதலினால் 'ஊழ்வினைப் பகுதி கெட்டு இங்கு உன்னையுங் கிட்டுவேனோ' என்றார். 'தாழ்வெனுஞ் சமயம்' என்றது இறைவன் இலக்கணத்தை அறியாது மாறுபடக் கூறி வழியும் சமயங்களை. 'தன்னை உணர்ந்தவன் தலைவனை உணர்வன்' என்ற மொழிப்படி தன்னை எவன் அறிகின்றானோ அவனே இறைவனை அறிவானாதலின் தமை யுணர்ந்தோர்கட்கெல்லாம் சூழ்வெளிப் பொருளே' என்றார். இறைவன் வெளியும், ஒளியுமாக இருக்கின்றானாதலின், 'சூழ்வெளிப்பொருளே முக்கட்சோதியே' என்றார். இறைவன் தேவதேவன் ஆதலின் 'அமரரேறே' என்றார். இதனை, 'தேவாதி தேவன் திருவொற்றியூர் வரதன்' என்ற **பெரியார் வாக்கானும்** அறிக.

ஊழ்வினை என்றது ஈண்டு சஞ்சிதத்தை. இறைவனுக்கு முச்சுடரும் மூன்று நேத்திரங்களாதலின் 'முக்கட்சோதியே' என்றார்.





இறைவனே! நந்திருவடியை அடைந்தாலன்றித் தாபத்திரயத்தா லுண்டாய துன்பம் நீங்குமோ என்கின்றார்

ஏறுவாம் பரியா ஆடை
இருங்கலை யுரியா என்றும்
நாறுநற் சாந்த நீறு
நஞ்சமே யமுதாக் கொண்ட
கூறருங் குணத்தோய் உன்றன்
குரைகழல் குறுகி னல்லால்
ஆறுமோ தாப சோபம்
அகலுமோ வல்ல ருனே.

**(ப-ரை)** ஏறு-ரிஷபத்தை, வாம்-தாவிச்செல்லும், பரிஆ - குதிரையாகவும், இரு-பெரிய, கலை-மானினுடைய, உரி-தோல், ஆடைஆ-உடையாகவும், நீறு-விபூதி, என்றும் - எந்தக்காலத்தும், நாறும் - வாசனைவீசும், நல் - நல்ல, சாந்தம்ஆ - கலவையாகவும், நஞ்சமே - விஷமே, அமுதஆ - உணவாகவும், கொண்ட-விரும்பிக்கொண்ட, கூறு - சொல்லுதற்கு, அரு - அருமையான, குணத்தோய்-(அரும்பெருமங்களமான) குணங்களையுடையோனே!, உன்தன்-தேவரீரது, குரை-சப்திக்கின்ற, கழல்-வீரக்கழலையணிந்த திருப்பாதங்களை, குருகின்-அடைந்தால், அல்லால்-அல்லது, தாபம் - அடியேனின் முத்தாபங்களால் உண்டாகிய, சோபம் - விடாயானது, ஆறுமோ - தணிவுபெறுமோ?, அல்லல்-துன்பமானது, அகலுமோ-நீங்குமோ? எ-று.

**(வி-ரை)** ஏறு - ஆண்பால் விலங்கின்பெயர்; ஈண்டு ரிஷபத்தைக் குறித்தது. சிவபெருமானுக்குத் தருமதேவதையே ரிஷபமாகி வாகனமாகத் தாங்கி நிற்கின்றது என்பது வேதவாக்கியம். 'வாம்' இது 'வாவும்' என்பதன் விகாரம். இடைகுறைந்து நின்றது. (வாவும் - தாவிச் செல்லும்) பரி - குதிரை; தலைவனைத்தாங்கி விரைந்து செல்வது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். ஆடை - வஸ்திரம், இடையை அடுத்திருப்பது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். உரி - தோல், இது உரிக்கப்படுவது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். 'சாந்தம்' என்றது சந்தனக்கலவையை. 'நீறு' நீற்கப்பட்டது என்னும் பொருள் பற்றிவந்த பெயர். சாம்பர், பரி, பீதாம்பரம், சந்தனக்கலவை, அமிர்தம் முதலியன ஏறவும், உடுக்கவும், பூசவும், உண்ணவும் இருக்க அவைகளை விடுத்து மந்தகதியினதாய ரிஷபத்தையும், புன்புலால் நாற்றத்தோலையும், புழுதியாகிய பூதியையும் (சாம்பலையும்) கொல்லும் விஷத்தையும் ஏறவும், உடுக்கவும், பூசவும், உண்ணவும் கொண்டது இறைவன் ஆன்மாக்களிடத்துக் கொண்ட கருணையாதலின், இறைவன் கருணைத்தன்மையை விளக்க ஈண்டு, 'ஏறுவாம் ... ... கூறருங்குணத்தோய்' என்றார். கழல்-வீரர் அணியுங்காலணி. குரைகழல்-சப்திக்குங்கழல். இறைவன் திருவடி

எமனை உதைத்துக்கொன்ற திருப்பாதம் ஆதலினாலும், அடைந்தார் வினையைப்போக்கி உய்வைத்தருதலினாலும் 'குரைகழல்' என்றார். இறைவன் திருவடியைச் சேர்ந்தார்க்குத் துன்பங்கள்நீங்கி இன்பம் பெருகுமாதலின் 'குரைகழல் குறுகினல்லால் ஆறுமோ தாபசோபம் அகலுமோ அல்லல் தானே' என்றார். இதனை,

"இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்ற **திருக்குறளா**லறிக.

தாபசோபம்-இது உம்மைத்தொகை. தான்-ஏ-ஈற்றசை. 7

இல்லை நடராஜனே! குணமொன்றமில்லா அடியேனுக்கு ஞானத்தினையும்; சிவாநந்தத்தையும் தந்தருளுவாயோ என்கின்றார்

தானமுந் தவமும் யோகத்
தன்மையு முணரா வென்பால்
ஞானமுந் தெவிட்டா வின்ப
நன்மையு நல்கு வாயோ
பானலங் கவர்ந்த தீஞ்சொற்
பச்சிளங் கிள்ளை காண
வானவ ரிறைஞ்ச மன்றுள்
வயங்கிய நடத்தி னனே.

(ப-ரை) பால் - பாலினது, நலம் - இனிமையை, கவர்ந்த-கொண்டுள்ள, தீம்-இனிமையாகிய, சொல்-சொல்லைக்கொண்ட, பச்சு-பசுமைநிறம் வாய்ந்த, இளம் - இளமைபொருந்திய, கிள்ளை - கிளிப்பிள்ளை போன்ற பார்வதிதேவியானவள், காண-கண்டு களிப்புறவும், வானவர்-தேவர்கள், இறைஞ்ச-வணங்கவும், மன்றுள்-பொன்னம்பலத்தில், வியங்கிய-விளங்கியருளிய, நடத்தினனே-திருநடனத்தையுடையவனே!, தானமும்-ஈகைத்தன்மையும், தவம்-தவத்தையும், யோகம் - யோகத்தினுடைய, தன்மையும் - நிலைமையையும், உணரா-தெரியாத, என்பால் - அடியேனிடத்தில், ஞானமும் - ஞானத்தினையும், தெவிட்டா - தெவிட்டாத, இன்பம் - சிவானந்தமாகிய, நன்மையும்-நன்மையையும், நல்குவாயோ-அடியேனுக்குத் தந்தருளுவாயோ? எ-று.

(வி-ரை) "தானமுந் தவமும் தான் செய்வாராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே"

என்ற **ஔவைப் பிராட்டியார்** திருவாக்கின்படி கிரகஸ்தாசிரமத்திற்கு உரியதாய தானமும், வானப்பிரஸ்தாசிரமத்திற்கு உரியதாய தவமும், சந்நியாசத்திற்கு உரியதாகிய யோகமும் தனக்கில்லாமையைக் கூறிடுவான் 'தானமுந் தவமும் யோகத் தன்மையு முணரா வென்பால்' என்றார்.

'ஞானம்' என்றது சிவஞானத்தை. 'தெவிட்டா இன்பநன்மை' என்றது சிவானந்த இன்பத்தை. 'பானலங் ... ... ... பச்சிளங்கிள்ளை'



என்றது உமாதேவியாரை. 'வானவர்' என்றது பிரமன் விஷ்ணு ஆதி தேவர்களை. 'மன்று' என்றது தில்லைஅம்பலத்தை. 'நடம்' என்றது ஞானநடனத்தினை. ஐந்தொழில் நடந்தேறும் பொருட்டு அருட்சத்தியாகிய தேவியே இறைவனை அம்பலத்தில் ஆட்டுவிக்கின்றுளாதலின் 'பச்சிளங் கிள்ளை காண' என்றார். மால்பிரமர் முதலிய தொழில் இறைவன் திருநடனத்தால் நடைபெறுதலால் 'வானவர் இறைஞ்ச' என்றார். இதனையெல்லாம்,

"சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும்
மறைக்கோவுந் தழல்கால் குலம்
அங்கேந்து மம்மானுந் தத்தமது
தொழிற்றலைநின் றுற்றச் செய்தோர்
பங்கேர்தும் பெருமாட்டி விழிகளிப்ப
விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றட் குனித்தருளும்
பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்"

என்ற **சிவஞானர் திருவாக்கா**னும் அறிக.

உலக இன்பந் தெவிட்டுந்தன்மையது. இறைவன் தந்தருளும் இன்பம் தெவிட்டாதது ஆதலின் 'தெவிட்ட இன்ப நன்மையும்' என்றார். 8

எங்கும் நிறைந்தவனை நிலையாமல் காமத்தில்
ஆழ்வேனேவெனல்

நடத்தியிவ் வுலகை யெல்லாம்
நாதநீ நிறைந்த தன்மை
திடத்துட னறிந்தா னந்தத்
தெள்ளமு தருந்தி டாதே
விடத்திர ளனைய காம
வேட்கையி லழுந்தி மாயைச்
சடத்தினை மெய்யென் றெண்ணித்
தளரவோ தனிய னேனே.

(ப-ரை) நாத-ஓ இறைவனே!, இ-இந்த, உலகை-உலகங்களை, எல்லாம்-எல்லாம், நடத்தி-நடைபெறுமாறுசெய்து, நீ-தேவரீர், நிறைந்த-இவ்வுலகங்கள் எல்லாவற்றிலும் வியாபித்து நிறைந்திருக்கிற, தன்மை - தன்மையினை, திடத்துடன்-உறுதியொடு, அறிந்து - உணர்ந்து, ஆனந்தம் - பெரிய இன்பமென்னும், தெள் - தெளிவாகிய, அமுது - அமிர்தத்தினை, அருந்திடாதே - உண்ணுதபடி, விடத்திரா-விஷத்தின், திரள்-கூட்டத்தை, அனைய - ஒத்த, காமம் - பெண்களின்மேல்வைத்த பற்றுகிய, வேட்கையில் - விருப்பத்தில், அழுந்தி-முழுகி, மாயை-மாயாகாரியமாகிய, சடத்தினை - உடம்பை, மெய்-

நிலையானது, என்று-என்று, எண்ணி-நினைத்து, தனியனேன் - தனித்துள்ள தமியேன், தளரவோ-தளர்ச்சிஅடையவோ? எ-று.

(வி-ரை) உலகையும் உயிர்களையும் படைத்து அவற்றினுள்ளிருந்து இயக்குவிப்பவன் இறைவனாதலின், 'நடத்தியிவ் வுலகை யெல்லாம் நாதநிறைந்ததன்மை' என்றார். 'திடத்துடன் அறிந்து ஆனந்தத் தெள்ளமுதருந்திடாது' என்றது பரமான்மாவை அறிந்து அவனோடு அத்துவிதமாகக் கலக்குங் கலப்பை. காமமானது மும்மைப்பயனையுங் கெடுத்து அழிப்பது ஆதலின் 'விடத்திர ளனையகாம வேட்கையில் அழுந்தி' என்றார். இதனை,

"மனைபுகு வார்கண் மனைவியை நாடிற்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழு மன்பை
நனவது போலவு நாடவொண் ணாதே"

என்ற **திருமந்திரச் செய்யுளாலும்,**

"கொடுங்கனன் மதவிடங் குறுகி னுண்டிடிற்
சுடுங்கருத் தழித்திடுந் தொலைவு செய்யுமால்
கடுந்துயர்க் காமமோ கருதி னன்னசெய்
திடும்பினுந் தொடர்ந்துவெந் நிரயத்திட்டிடும்"

என்ற **திருக்கூவப்புராணச் செய்யுளா**லும் அறியலாம்.

மாயாகாரியமாகிய இத்தேகம் நிலையில்லாதது ஆதலின் 'மாயைச் சடத்தினை மெய்யென் றெண்ணித் தளரவோ' என்றார். இதனை,

"புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப் படுதலான்"

என்ற **சமணமுனிவர்** வாக்கானும் அறியலாம். 9

இறைவனே! தேவரீரிடத்து அன்பு இல்லாதபடி உலகமயக்கத்தில் முழுகி வருந்தவோ எனல்

தனிவளர் பொருளே மாறாத்
தண்ணருங் கருணை பூத்த
இனியகற் பகமே முக்க
ணெந்தையே நினக்கன் பின்றி
நனிபெருங் குடிலங் காட்டு
நயனவேற் கரிய கூந்தல்
வனிதையர் மயக்கி லாழ்ந்து
வருந்தவோ வம்ப னேனே.



(ப-ரை) தனி-ஒப்பற்ற, வளர்-வளர்ந்த, பொருளே - பொருளே! (இறைவனே!), மாறா-மாறுபடாத, தண்-குளிர்ச்சிபொருந்திய, அரு - கிடைத்தற்கு அரிய, கருணை-கிருபையாகிய, பூத்த-(பூக்களைப்) புஷ்பித்த, இனிய-(உள்ளத்திற்கு) இன்பத்தைத்தரும், கற்பகமே - தெய்வக் கற்பகவிருக்ஷமே!, முக்கண்-திரிநேத்திரங்களையுடைய, எந்தையே-அடியேனின் தந்தையே!, வம்பனேன்-வீணனாகிய அடியேன், நினக்கு - தேவரீரிடத்து, அன்பு - அன்பு, இன்றி-இல்லாதபடி, நனி-மிகவும், பெரும்-பெரிய, குடிலம்-கொடுமைத்தன்மையை, காட்டும்-செய்கின்ற, நயனம்-கண்களாகிய, வேல்-வேல்களையும், கரிய-கருமை நிறமுடைய, கூந்தல்-கேசத்தையும் உடைய, வனிதையர்-பெண்கள், மயக்கில் மயக்கமாகிய கடலில், ஆழ்ந்து-முழுகி, வருந்தவோ-வருத்தப்படவோ? எ-று-

(வி-ரை) இறைவன் ஒப்புயர்வு அற்றவன் ஆதலினாலும், அவனே பொருளெனப்படுவோன் ஆதலினாலும், 'தனிவளர் பொருளே' என்றார். இறைவன், அருட்டிருமேனி யுடையோன் ஆதலினாலும், ஆன்மாக்களுக்கு அருள் செய்தலையே தன் கடன்மையாகப் பூண்டுள்ளோனாதலினாலும், "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்ற **தேவாரத் திருவாக்கி**ன்படி அன்பர்க்கு வேண்டுவனவற்றை ஈவோன் ஆதலினாலும், 'மாறாத் தண்ணருங் கருணைபூத்த இனிய கற்பகமே' என்றார். நீ மூன்று நேத்திரங்களுடையவன் ஆதலின் எளியேனைக் கண்டுகொள்ளல் சிரமமுடையதன்று என்பார் 'முக்கண் எந்தையே' என்றார். பிள்ளையின் வருத்தத்தை நீக்கி உய்வடைவித்து உயர்வுசெய்தல் தந்தையின் கடன்மையாதலால் நீ என்னை வருந்தாதபடி செய் என்பார் 'எந்தையே' என்றார். வனிதையர் கண்களுக்குக் குடிலமாவது ஆடவரை மயக்கி வருத்துந்தன்மை. இதனை, 'கொல்லுலை வேற்கணல்லார்' 'நஞ்சவிழியார்' 'கள்ளவிழியார்' 'கூற்றன்ன கண்ணார்' என்பனவாகப் **பெரியார்** கூறியுள்ளனவற்றா லறியலாம்.

பெண்கள் கண்ணும், கூந்தலுமே ஆடவரை மயக்குவன ஆதலின் 'நயனவேற் கரிய கூந்தல்' என்றார். முலையை விட்டாரே அது மயக்குவதன்றோவெனின் அற்றன்று. அது, வல்லவாட்டின் மறைந்து கிடப்பதாதலின் அதனைக் கூறிற்றிலர்போலும் என்க. மாதர் மயக்கில் வீழ்ந்து ஆழ்ந்தவர் முத்திப்பேறெய்தாது பிறந்திறந்து உழன்று வருந்துவர் ஆதலின் 'வனிதையர் மயக்கில் ஆழ்ந்து வருந்தவோ வம்பனேனே' என்றார். இப்பதிகம் முதற்பாவின் முதற்சீரில் வம்பனேன் என்றுதொடங்கி ஈற்றுப்பாவின் ஈற்றடியின் ஈற்றுச்சீரிலும் வம்பனேன் என வந்து மண்டலித்து நின்றது காண்க. ஏ-ஈற்றசை. 10

---

## சிவன் செயல்

இறைவனே! எல்லாம் சிவன்செயலென்று தெளியாமல் வீண்
எண்ணங்களை நீங்காதுகொண்டு ஆசைவெள்ளத்து
அழுந்துகிறேனெனல்

சிவன்செய லாலே யாதும்
வருமெனத் தேறேன் நாளும்
அவந்தரு நினைவை யெல்லா
மகற்றிலேன் ஆசை வெள்ளம்
கவர்ந்துகொண் டிழுப்ப அந்தக்
கட்டிலே யகப்பட் டையோ
பவந்தனை யீட்டி யீட்டிப்
பதைக்கின்றேன் பாவி யேனே.

**(ப-ரை)** பாவியேன்-பாவியாகிய அடியேன், யாதும்-எல்லாம் (எதுவும்), சிவன் - சிவபெருமானின், செயலாலே - செய்கையினாலே, வரும் - வந்திடும், என - என்று, தேறேன் - தெளிவுகொள்ளேன், நாளும் - ஒவ்வொருநாளும், அவம்-வீணினையே (பயனின்மையையே), தரும்-தருகின்ற, நினைவை - எண்ணங்களை, எல்லாம்-எல்லாம், அகற்றிலேன்-ஒழித்துவிட்டேனில்லை, ஆசை-ஆசை என்று சொல்லப்படும், வெள்ளம் - பிரவாகமானது (பெருக்கானது), கவர்ந்து - (தன்பால்) இழுத்து, கொண்டு-கொண்டு, இழுப்ப-இழுக்க, அந்த-அந்த, கட்டிலே-பிணிப்பிலே, அகப்பட்டு-சிக்கிக்கொண்டு, ஐயோ - அந்தோ, பவம்-பாவம், தன்னை-தன்னை, ஈட்டிஈட்டி-சம்பாதித்துச் சம்பாதித்து, பதைக்கின்றேன்-துடிக்கின்றேன் எ-று.

**(வி-ரை)** இப்பதிகத்தின் முதற்செய்யுளின் முதலடியின் முதலிலே 'சிவன்செயல்' என்று ஆரம்பிக்கப்பெற்றது ஆதலின் இதற்குச் 'சிவன் செயல்' என்று பெயர் எய்திற்று. இது அந்தாதியாகி மண்டலித்து நின்றது. இறைவன் - ஒளிமயன், ஆனந்தவடிவன். உலகத்தில் இருளகற்றி இன்பத்தைச்செய்யும் மங்களப்பொருள். ஒளியாயும், ஒளிக்கும் ஒளிதருபவனுயும், இன்பமாயும், இன்பத்தைத் தருபவனாகியும் இருப்பவன் ஆதலின் இறைவனை மங்களப்பொருள் என்னுங்கருத்தால் 'சிவன்' என்றனர். "அவனன்றி ஓர்அணுவும் அசையாது" என்பது முதுமொழியாகவும், பொதுமொழியாகவும் இருத்தலினாலும், எல்லாம் அவன் செயலாகவும் இருத்தலினாலும் இறைவனே எல்லாவுயிர்களினிடத்தும், எல்லாப்பொருள்களினிடத்தும் வியாப்பியமாக உள்ளே கலந்து இயக்குகின்றானாதலினாலும், இறைவன் உயிர்களின் வினைக்குத்தக்கபடி இன்பதுன்பங்களை வகுத்து உயிர்களை அவையவைகளின் வினைகளுக்குத்தக்கபடி ஆட்டுவித்து இன்பதுன்பங்களை உண்



பிக்கின்றானாதலினாலும், எல்லாம் அவன் ஆணைவழி நடக்கின்றதாதலினாலும் 'சிவன்செயலாலே யாதும்வரும் எனத்தேறேன்' என்றார்.

உயிர்களின்மாட்டு மாயை கூடிநின்று மயக்கித் தன் வழிப்படுத்தி அவாவை எழுப்பிச் காரியங்களைச் செய்விக்கின்றன. ஈண்டு உயிர்கள் தற்போதந் தடித்து இறைவன்வகுத்த நெறிகளைமறந்தும், அதற்குப் பிறழ்ந்தும் நடக்கின்றதாதலினாலும் அதனாற் றுன்புற்றுப் பிறப்பு இறப்புகளிற் பட்டு உழல்கின்றதாதலினாலும், இச்சைவழி மனஞ்சென்று தொழில்களை நடத்துகின்றதாதலினாலும் 'அவந்தரு நினைவு' என்றார். மாயையும், அதன் செயலும் இறைவன் ஆணையால் ஆன்மாக்களை உய்விக்க எழுந்ததே என்பதும் ஈண்டு உணரத்தக்கது. அம்மாயை ஜீவபோதத்தை இழுக்கவல்லது என்பதும், அம்மாயையால் உண்டாம் நினைவை இறைவன் வேதாகம நெறிகொண்டு அகற்றி வேதாகமநெறி வழிசெல்வதே உயிர்களுக்கு இன்பம் பயப்பதென்றறிந்து நடத்தல்வேண்டும். அவ்வாறின்றி நினைவின் வழியெல்லாம் இச்சையைச் செலுத்தாது வேதாகம நெறிப்படியும், உண்ணின்று இயக்கும் இறைவன் கட்டளைக்கு மாறாக உயிர்கள் நினைத்தும் இச்சையுற்றும் கருமங்களைச்செய்து துன்பங்களை அனுபவிக்கின்றதாதலினாலும் 'ஆசைவெள்ளம் கவர்ந்துகொண் டிழுப்பவந்தக் கட்டிலே யகப்பட்டு ஐயோ பவந்தனை யீட்டியீட்டி' என்றார். பாவங்களைப் புரிதற்கு அஞ்ஞானத்தாலுண்டாம் இச்சையே காரணம் என்பார் 'அந்தக் கட்டிலே அகப்பட்டு ஐயோ பவந்தனை ஈட்டிஈட்டி' என்றார். ஈண்டு 'ஈட்டிஈட்டி' என மிகுதிபற்றி இரட்டித்தது. காடு அந்தகாரமுடையதும், துன்பந்தருவதும் ஆதலின் 'அந்தக் கட்டிலே அகப்பட்டு' என்றார். இன்னும், பாசாடவிக்குளே' எனவும், 'பாசவலை' எனவும், 'பாசக்கடல்' எனவுங் கூறியதூஉங் காண்க. பவஞ்செய்வோர் துன்பத்துட்பட்டுத் துடிபவர்; இம்மை மறுமைப் பயனை இழப்பர் ஆதலின் 'பவந்தனை ஈட்டி ஈட்டிப் பதைக்கின்றேன்' என்றார். அவந்தரு நினைவுகொண்டு, ஆசைவழிப்பட்டுப் பவந்தனை ஈட்டுபவர் பாவிகள் ஆதலின் 'பாவியேன்' என்றார். 'பவம்' ஈண்டு தீத்தொழிலைக் குறித்து நின்றது. ஆசையே எல்லோர்க்கும் பிறவித்துன்பந் தருவதாகும் என்பதனை,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாப்பிறப் பீனும் வித்து"

என்ற **திருக்குறளா** லறியலாம்.

எல்லாஞ் சிவன்செயலாகுமாயின் அவந்தரும் நினைவும், இச்சையும், செயலும் என் எழவேண்டும் என்பராயின், ஈதும் இறைவன் அவ்வவ் உயிர்களின் வினைக்கீடாக அமைத்த ஆக்கினை என்க. இதுபற்றியன்றோ **பெரியாரும்**, "நினைவுநீ மறப்புநீ" எனவும், "நன்மைநீ தீமைநீ" எனவும், "நரகுநீ மோக்ஷநீ" எனவுங் கூறினார் என்க. சிவன்செயலன்றி வேறில்லை எனினும் பாசத்துட்பட்டுக் கிடக்கும் சீவன் செயலும் உண்டெனவறிக.

இச்சீவன் செயலும் சிவனருளால் நிகழ்வனவே யாதலின் இதுவுஞ் சிவன் செயலாகும். மெஞ்ஞானமுற்றோர் தனக்கொரு செயலின்றி இச்சை யின்றிச் செய்வர். அப்போழ்து அச்சீவன் செயலெல்லாம் சிவன்செயலே யாகும். ஞானமிலாப் புல்லர் தற்போதத்தடிப்புண்டு எல்லாந் தன்செய லாகவே கருதிச்செய்வர். இவர் செயலெல்லாந் தற்போதத்தாலெழுஞ் செயலேயாகும். இதனைச் சிவன்செயலெனவே கொள்ளல்வேண்டும். இதனை,

"சும்மா தனுவருமோ சும்மா பிணிவருமோ
சும்மா வருமோ சுகதுக்கம்—நம்மான்முன்
செய்தவினைக் கீடாச் சிவனருள்செய் விப்பதென்
றெய்தவினை நாடி யிரு" எனவும்,

"கூட்டுவதுங் கூட்டிப் பிரிப்பதவும் ஒன்றொன்றை
யாட்டுவதும் ஆட்டி யடக்குவதும்—காட்டுவதும்
காட்டி மறைப்பதுவும் கண்ணுதலோன் முன்னமைத்த
வேட்டின் படியென் றிரு" எனவும்,

"எல்லாஞ் சிவன்செயலே என்றுலுஞ் ஜீவன்றன்
பொல்லாத்தற் போதத்திற் புக்கழுந்தி—எல்லைகடந்
தாக்குவதும் அச்சிவனார் தன்செயலோ நெஞ்சேநீ
தாக்கற் றிருத்தல் சரி"

எனவும் கூறியருளிய **பெரியார்** வெண்பாக்களாலுந்தெளிக. எ-ற்றசை. 1

இறைவனே! உன்னடி போற்றாது பாழான சமயப்படுகுழியில் வீழ்ந்து அடிக்கின்றேனெனல்

பாவியே னினியென் செய்கேன்
பரமனே பணிந்துன் பாதம்
சேவியேன் விழி நீர் மல்கச்
சிவசிவ என்று தேம்பி
ஆவியே நிறைய் வந்த
அமுதமே என்னேன் அந்தோ
சாவிபோஞ் சமயத் தாழ்ந்து
சகத்திடைத் தவிக்கின் றேனே.

(ப-ரை) பரமனே - மேலான இறைவனே!, பாவியேன் - பாவியாகிய அடியேன், இனி-இனிமேல், என்-என்ன, செய்வேன்-செய்திடுவேன்?, உன்-தேவரீருடைய, பாதம்-திருவடிகளை, பணிந்து-வணங்கி, சேவியேன்-தரிசிக்கா திருக்கின்றேன், விழி - கண்களில், நீர் - நீரானது, மல்க - பெருக, சிவ-சிவ!, என்று - என்று அதித்து, தேம்பி - வாட்டமுற்று, ஆவியே-உயிரே! றைய - பூரணமாகுமாறு, வந்த - வந்தருளிய, அமுதமே - அமிர்தமே! என்



னேன் - என்றுசொல்லித் துதிக்காதிருக்கின்றேன், அந்தோ - ஐயோ!, சாவி-பாழாக, போம்-போகின்ற, சமயத்து-புறப்புறமும் புறமும்ஆம் சமயங்களிலே, ஆழ்ந்து-மூழ்கி, சகத்து-உலகத்து, இடை-இடத்தே, தவிக்கின்றேன்-தளர்வுறு கின்றேன் எ-று.

(**வி-ரை**) மாயைக் காட்டில் புகுந்துள்ள உயிர் தக்கதிது, தகாதிது என வறியாது தக்கனவற்றைவிட்டும், தகாதனவற்றைப் புரிந்தும் தடுமாறி உழல்கின்றன. இதுபற்றியே 'பாவியேன்' என்றார். பாவத்தையே செய் துழலும் உயிர்கள் உய்வுபெறவேண்டின் இறைவனைச் சிந்தித்து, அவனைத் துதித்து, அவனடி உய்வுபெறவேண்டும். இதுபற்றியே 'பாவியே னினியென் ... ... ... ... ஆவியே நிறைய வந்த வமுதமே யென்னேன்' என்றார். இறைவன் யாதினும், எல்லாரினும் உயர்ந்தவன் ஆதலின் 'பரமனே' என்றார். இறைவன்பாதம் பணிந்தார்க்கு எல்லாஞ் சித்தியாகும், அல்லல் அகலும் ஆதலின் 'பரமனே பணிந் துன்பாதஞ் சேவியேன்' என்றார். பாவிகளுக்கு அவர் செய்த பாவப்பெருக்கால் பரன்பாதம் பணிய வொட்டாது. இதுபற்றியன்றே,

"உன்னக் கருத்துண் டுரைப்பதற்கு நாவுண்டு
பன்னச் சிவநூல் பலவுண்டு—முன்னமறைக்
கெட்டாத சோணகிரி யீசரிரு தாள்பணிய
வொட்டாது பாவ முயர்ந்து"

என்றார் **அருணகிரியந்தாதி நாலுடையாரும்**,

இதுகொண்டே இவ்வாசிரியரும் 'பாதம் சேவியேன்' என்றார். இறை வன் திருவருள் பெறுதற்குப் பஞ்சாக்கர மந்தரஜெபமே சிறந்தது. இம்மந்தர ஜெபத்தால் துன்பமெல்லாம் போயொழியும்; இன்பமெலாம் வந்தெய்தும்; பிறவித்துயர் போயொழியும் முத்தியின்பம் வந்து கைக்கூடும். இதனை,

**உபதேசகாண்டம்**

"பஞ்ச பாதக ராயினும் பாவமே
தஞ்ச மாகச் சரிப்பவ ராயினும்
நஞ்ச யின்றவ னுமை முரைப்பரே
லஞ்சு மஞ்சுமென் னெஞ்சக மஞ்சுமால்" எனவும்,

**விருத்தாசலப்புராணம்**

"திருத்தமா யொருத்தன் செவிப்புலன் கேட்பச் சிவசிவ வென்றிடிற் பனைமே
விருத்திய விடிபோ லெரிந்திடும் பாவ மிறப்பொடு பிறப்பெலா மிரியு
மொருத்தன்வா யாரச் சிவவென முக்கா லுரைத்திடி லோருரை யதற்குக்
கருத்தன்வாழ் பதத்தி லிருத்திடு மிரண்டுங் கடவுண்மேற் கடன்களாய்நிற்கும்"

**பட்டினத்தார்**

"தவியா திருநெஞ்சமே தில்லை மேவிய சங்கரனை
புவியார்க் கிருக்கின்ற ஞானு காளைப் புராந்தகனை

யவியா வினைக்கைப்பொன் னம்பலத் தாடியை யைந்தெழுத்தாற்
செவியாம லீசெவித் தாற்பிற வாமுத்தி சித்திக்குமே" எனவும்,

**திருமந்திரம்**

"குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மான மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே"

எனவும் வருவனகொண்டறிக.

பஞ்சாக்கரம்: தூலம், சூக்குமம், காரணம் என முத்திறப்படும். அவற்றுள் தூலம் - நமசிவய என்பது. சூக்குமம் - சிவயநம என்பது. காரணம்-சிவ என்பதாம். இத்திருவெழுத்தைந்தும் ஓதத் தவம் வேண்டும்; அவஞ் செய்வார்க்கு எய்துவதன்று. இதுகொண்டே 'விழிநீர் மல்க' 'சிவசிவ வென்று தேம்பி' என்றார். இதனன்றோ "நானேயோ தவஞ் செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்" என்றார் **மணிவாசகரும்**. சித்தாந்த சைவம் ஒழிய ஏனைய சமயங்கள் சிவானந்தமாகிய முத்தியினையளிப்பது அல்ல ஆதலினால், 'சாவிபோஞ் சமயத்தாழ்ந்து சகத்திடைத் தவிக்கின்றேனே' என்றார். இதுபற்றியன்றோ "சாவிபோ மற்ற சமயங்கள்" என்றார் **திருவுந்தியாரிலும்**. இன்னும்,

"இன்றிச் சமயத்தின் அல்லதுமற் றேழையுடன்
ஒன்று சொலி மன்றத்து நின்றவரார்—இன்றிங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்
எங்குமிலை கண்டாய் இது"

**திருக்களிற்றுப்படியாரிலுங்** கண்டு தெளியலாம்.

'அலியே நிறையவந்த வமுதமே' என்பதற்கு 'தடாகம் நிறையவந்த நீரே' என்ற பொருளும் தரநின்றமை காண்க. "ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம் பேரறி வாளன் திரு" என்ற **திருக்குறளோடு** ஒப்பிட்டுக் காண்க. 'பாவியேன்' என்பதற்கு நான் என்னும் ஒரு சொல்லை வருவித்து நான் தேவரீரைச் சிந்தியாதிருக்கின்றேன் எனப் பொருள் கோடலுமாம். இவ்வாறு கொள்ளின் பாவியேன் என்றதால் மனத்தால் நினைத்தலும், சிவசிவ என்னலால் வாயாற் செபித்தலும், பணிந்துன் பாதம் சேவியேன் என்பதால் காயவணக்கமும் ஆகிய திரிகரணவழிபாடுஞ் சொல்லப்பெற்றமை காண்க. ஏ-ஈற்றசை.

2

இறைவனே! நின்திருவடிக்கே சரணாகவந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொள்ளும் எனல்

இடைந்திடைந் தேங்கி மெய்புளகிப்ப
எழுந்தெழுந் தைய நின் சரணம்
அடைந்தன னினிநீ கைவிடே லுனக்கே
யபயமென் றஞ்சலி செய்துள்



உடைந்துடைந் தெழுது சித்திரப் பாவை
யொத்துநா னசைவற நிற்பத்
தொடர்ந்துநீ யெனையாட் கொள்ளுநா ளென்றோ
சோதியே ஆதிநா யகனே.

**(ப-ரை)** சோதியே-ஒளிமயமானவனே! ஆதி-எல்லாவற்றிற்கும்முதலாகவுள்ள, நாயகனே-இறைவனே!, இடைந்துஇடைந்து - விலகிவிலகி, ஏங்கி-அழுது, மெய்-சரீரம், புளகிப்ப - புளகாங்கிதங்கொள்ள (மயிர்க்குச்செடுப்ப), எழுந்து - எழுந்து. எழுந்து - (பலமுறை) எழுந்து, ஐய - அழகனே!, நின்-தேவரீருடைய, சரணம்-திருவடிகளை, அடைந்தனன்-தஞ்சமென்று அடைந்தேன், இனி-இனிமேல், நீ - தேவரீராகியநீர், கைவிடேல் - (அடியேனாகிய என்னை) கைவிட்டுவிடாதீர், உனக்கே-தேவரீரிடத்திலேயே, அபயம்-அடைக்கலம், என்று-என்றுவிண்ணப்பித்து, அஞ்சலி-கும்பிடு, செய்து-இட்டு, உள்-மனம், உடைந்துஉடைந்து - நெகிழ்ந்துநெகிழ்ந்து, எழுது - எழுதப்பெற்ற, சித்திரம்-சித்திரிக்கப்பெற்ற, பாவை-பொம்மைக்கு, ஒத்து-ஒப்பாகி, நான் - அடியேன், அசைவு-சலனம், அற - இல்லாதபடி, நிற்ப - நிற்க, நீ - தேவரீர், என்னை-அடியேனை, தொடர்ந்து-விடாதுபற்றி, ஆட்கொள்ளும் - தேவரீரின் ஆளாகக்கொண்டு அருள்செய்யும், நாள்-நல்லநாள், என்றோ - எந்தநாளோ? எ-று.

**(வி-ரை)** இடைந்து இடைந்து - விலகி விலகி. அதாவது விட்டு விட்டு என்பதாம். இனி இதற்கு வருந்தி வருந்தி என்று கொள்ளினும் அமையும். இடைந்து இடைந்து, எழுந்தெழுந்து இவை மிகுதிக்கண் இரட்டித்து வந்தன. இறைவன்மாட்டு மெய்யன்புற்றார்க்கு எழுங்குணஞ் செயல்கள்கள் 'இடைந் ... ... சரணம் அடைதல்' என்பது அறியற்பாலது. இறைவன் அடைந்தாரைக் கைவிடாதபடி அருளாளனாதலின் 'இனிநீ கைவிடே லுனக்கே யபயம்' என்றார். அபயம்-பயமின்மை என்னும் பொருளதாய்ப் பின் பயமின்மையைச் செய்வோனைக் குறித்து நின்றது. உள் உடைதலாவது மனமுருகுதல். எழுது சித்திரம்-ஈண்டு எழுதப்பட்ட சித்திரம் என்னும் பொருள்தந்தது. இறைவனருளால் இறைவன்மாட்டு அன்புபூண்டு இறைவனின் சிவானந்தத்துத் திளைப்பவர் மனமுருகி எழுதிய சித்திரப்பாவைபோல் அசைவற நிற்பர் ஆதலின் 'உள் உடைந்து உடைந்து எழுது சித்திரப்பாவை ஒத்துநான் அசைவறநிற்ப' என்றார். இதனை,

"கண்கணீர் பெருகி யோடக் கருத்தெலா நினையே காண
நுண்மயிர்க் கால்க டோறும் நுவல்புள கேறி நிற்ப
பண்ணுறத் தீட்டு சித்ரப் பாவைபோ லசைவே யின்றி
நண்ணிடு நாளு முண்டோ நாதனே நமச்சி வாயா"

என்ற **பெரியார்** வாக்கானும் அறியலாம். இன்னும்,

"உடைந்து நைந்து நெக்குநெக் குளங்கு ழைந்து சின்மயத்
தடைந்து கண்ண சும்பிருந்து தாரை பாய வன்புநீர்
குடைந்து வாழு மன்பர்சிந்தை கோயில் கொண்டு வாழ்வரான்
மடந்தை பாக மாய்க்கலைசை வாழ் சிதம்ப ரேசரே"

என்றதனானும் அறியலாம். 3

இறைவனே! அடியேன் இன்பநிலையில் இருக்குமாறு கைவிடுதல்
தேவரீருக்கு முறையோவெனல்

ஆதியாய் நடுவாய் அந்தமாய்ப் பந்தம்
யாவுமற் றகம்புற நிறைந்த
சோதியாய்ச் சுகமா யிருந்தவெம் பெருமான்
தொண்டனேன் சுகத்திலே யிருக்கப்
போதியா வண்ணங் கைவிடன் முறையோ
புன்மையே னென்செய்கேன் மனமோ
வாதியா நின்ற தன்றியும் புலன்சேர்
வாயிலோ தீயினுங் கொடிதே.

**(ப-ரை)** ஆதி-முதல், ஆய்-ஆகி, நடு-மத்தி, ஆய்-ஆகி, அந்தம்-ஈறு, ஆய்-ஆகி, பந்தம் - பற்றுக்கள், யாவும் - எல்லாம், அற்று - நீங்கி, அகம்-உள்ளிலும், புறத்தும்-புறத்திலும், நிறைந்த-கலந்துநிறம்பிய, சோதி - ஒளிப்பிழம்பு, ஆய்-ஆகி, சுகம்-ஆனந்தம், ஆய்-ஆகி, இருந்த-எழுந்தருளி இருந்த, எம்-அடியேங்களுடைய, பெருமான் - இறைவனே!, தொண்டனேன் - அடியேனாகிய நான், சுகத்திலே - இன்பானந்தநிலைமையிலே, இருக்க - இருக்கும்படி, போதியா- உபதேசிக்காத, வண்ணம் - விதம், கைவிடல்-கைவிட்டுவிடுதல், முறையோ- நீதியாகுமோ?, புன்மையேன்-அற்பத்தன்மையுடைய அடியேன், என்-என்ன, செய்கேன் - செய்வேன்?, மனமோ - மனதோ, வாதியா-வருத்திக்கொண்டு, நின்றது-நிற்கின்றது, அன்றியும்-அது அல்லாமலும், புலன்-விடயங்கள், சேர்-சேர்தற்குரிய, வாயிலோ - பொறிகளோ, தீயினும் - நெருப்பைப்பார்க்கிலும், கொடிதே-கொடியதாக இருக்கின்றதே எ-று.

**(வி-ரை)** இறைவன் எல்லாவற்றிற்கும் ஆதியாக இருக்கின்றான் ஆதலின் 'ஆதியாய்' என்றார். இறைவன், எல்லாப்பொருளும் அந்தத்திற்போய் ஒடுங்கும் நிலையனாக இருத்தலின் 'அந்தமாய்' என்றார். இறைவன் ஆதிமத்தியாந்தரகிதன் ஆதலின் 'நடுவாய்' என்றார். இறைவன் 'பொறிவாயி லைந்தவித்தான் ஆதலின் 'பந்தம் யாவு மற்று' என்றார். இறைவன் அண்டங்களாய், எல்லாமாய் அவற்றுள் எல்லாம் அகமும் புறமும் நிறைந்து இருப்பவன் ஆதலின் 'அகம்புறம் நிறைந்த' என்றார். இறைவன் சோதிசொரூபன் ஆதலின் 'சோதியாய்' என்றார். இறைவன் ஆனந்தமயன் ஆதலின் 'சுகமாய் இருந்த' என்றார். 'சுகத்திலே' என்றது சிவானந்தத்தை. இறைவன் ஞானாசிரியனாக வந்து அருள்செய்வோன் ஆதலினாலும், அருள்செய்தோன்



ஆதலினாலும், அருள்செய்கிறவன் ஆதலினாலும் 'போதியாவண்ணம்' என்றார். மனத்தினிடம் மாயை பிறந்து, மனத்தைத் தன்வயமாகக்கொண்டு வளர்த்தலின் 'மனமோ வாதியாநின்ற' தென்றார். இதனை,

"மாயையென் றொருத்தி தன்பான் மனமெனு மைந்தன் றோன்றித்
தாயகல் லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கிவைத் தான்"

என்ற **வில்லிபாரதச் செய்யு**ளா லறியலாம்.

ஐம்புலனும் மனத்தினைத் தன்வழிப்படுத்தி மாயாகாரிய உலகிற் பிரவேசிக்கச்செய்து அவாவினைப் பெருக்கி வினைகளை யியற்றுமாறுசெய்து அல்ல லுறுத்துவதாதலின், 'புலன்சேர் வாயிலோ தீயினுங் கொடிதே' என்றார். இதனை,

"இந்திரியக் குஞ்சரத்தை ஞான விருங்கயிற்றாற்
சிந்தனைத் தாள்பூட்டிச் சேர்த்தியே—பந்திப்பார்
இம்மைப் புகழு மினிச்செல் கதிப்பயனுந்
தம்மைத் தலைப் படுத்து வார்" எனவும்,

"தன்னைத்தா னெஞ்சங் கரியாகத் தானடங்கிற்
பின்னைத்தா னெய்தாப் பேறில்லை—தன்னைக்
குடி கெடுக்கு நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின்
பிடி படுக்கப் பட்ட களிறு" எனவும்,

எழுந்த **அறநெறிச்சாரத்தா**லும் அறியலாம். 4

இறைவனே! ஐம்புல வேடர்கள் அடியேனை உயிரொடுந் தின்கின்றார்கள்
தாயில்லாச் சேயேபோல் வருந்துகின்றேன் எனல்

வாயிலோ ரைந்திற் புலனெனும் வேடர்
வந்தெனை யீர்த்துவெங் காமத்
தீயிலே வெதுப்பி யுயிரொடுந் தின்னச்
சிந்தைநைந் துருகிமெய்ம் மறந்து
தாயிலாச் சேய்போ லலைந்தலைப் பட்டேன்
தாயினுங் கருணையா மன்றுள்
நாயக மாகி யொளிவிடு மணியே
நாதனே ஞானவா ரிதியே.

**(ப-ரை)** தாயினும்-தாயைப்பார்க்கிலும், கருணை-கிருபை, ஆம்-நிறைந்த (கிருபையைச்செய்யும்), மன்றுள் - பொன்னம்பலத்தில், நாயகம் - தலைவன், ஆகி - ஆகி, ஒளி - பிரகாசத்தை, விடும் - செய்கின்ற, மணியே - மாணிக்கமே!, நாதனே - இறைவனே!, ஞானம் - ஞானமயமாகிய, வாரிதியே-சமுத்திரமே!, வாயில்-பொறிகளாகிய, ஓர்-ஒரு, ஐந்தில் - ஐந்துவழிகளில், புலன் - ஐம்புலன், எனும்-என்கின்ற, வேடர்-வேடுவர்கள், வந்து-நெருங்கி, என்னை - அடியேனை, ஈர்த்து - இழுத்து, வெம் - கொடிய, காமம் - காமமாகிய, தீயிலே-நெருப்பால்

வெதுப்பி-சுட்டு, உயிரொடு-பிராணனோடு, தின்ன-உண்ண, சிந்தை-மனம், நைந்து-மெலிந்து, உருகி-இளகி, மெய்-சரீரத்தினை, மறந்து - மறந்து, தாய்-தாய், இல்லா-இல்லா, சேய்-பிள்ளை, போல்-போல, அலைந்து-திரிந்து, அலைப்பட்டேன்-வருந்தினேன் எ-று,

(வி-ரை) 'வாயிலோர் ஐந்து' என்றது பஞ்சேந்திரியங்களை. "பொறிவாயி லைந்தவித் தான்" என்ற **திருவள்ளுவர் வாக்கா**லும் அறியலாம். 'புல னெனும் வேடர்' என்றது உவமையணி. வேடர்கள் காட்டில் பறவை, விலங்குகளைப் பிடித்து இழுத்து நெருப்பிலிட்டுச் சுட்டு உண்பர்; அதுபோல் ஐம்பொறிக் காட்டில் செல்லும் ஆன்மாக்களை ஐம்புலன்களாகிய வேட்டுவர் பிடித்து இழுத்து, காமமாகிய நெருப்பிலிட்டுச் சுட்டு உயிரொடும் உண்கின்றார் என்பார் 'வாயிலோர் ... ... ... ... ... யுயிரொடுந் தின்ன' என்றார். 'காமக் கனலிற் கருகுஞ் சருகு' என்ற **பட்டினத்தடி**கள் ஈண்டு ஒப்பிட்டுக் காணத்தக்கது.

தாயிலன்புடையவன் இறைவன். எல்லா உயிர்க்கும் பரமதாயாக இருப்பவன் இறைவன். அவ்வாறிருந்தும் என்னைக் கவனியாதிருத்தல் முறையன்று என்பார் 'தாயிலாச் சேய்போ லலைந்தலைப்பட்டேன்' என்றார். 'தாயினுங் கருணையா மன்றுள்' என்பதிலுள்ள இன் எல்லைப்பொருளில்வந்த ஐந்தன்உருபு. உம்மை உயர்வுச் சிறப்புப்பொருளில் வந்தது. 'மன்று' என்றது பொன்னம்பலத்தை. ஒளிவிடுமணி - நடராஜமூர்த்தி. 'ஞானவாரிதி' என்றது சிவபெருமானை; இறைவன் ஞானசாகரமாக விளங்குபவன் ஆதலின் என்க. இறைவன் எல்லா உயிர்களுக்கும் தலைவன் ஆதலின் 'நாதனே! என்றார். இதுபற்றியே 'பசுபதி' என்ற திருநாமமும் இறைவனுக்கு வழங்குதல் காண்க. 'வாயிலோர் ஐந்து' இது ஓர் ஐந்து வாயில் என இயையும் மொழிகள் மாறிநின்றன. ஐந்து செவ்வெண். ஐம்பொறிகளும் ஞானேந்திரியங்களாதலின், அதனாலேயே இறைவனை வழிபடவேண்டியதாதலின். அதனானேயே இறைவனை அடையவேண்டியதாதலின் 'வாயிலோர் ஐந்து' என்றார். ஐந்து வாயிலுக்கும் ஐந்து வேடர் உண்டாதலின் 'புலனெனும் வேடர்' என்பதற்கு ஐம்புல வேடர் என்பது பொருளாம். 5

இறைவனே! அடியேனை மறக்குமாறு தேவரீரையே
சிந்திக்காநிற்கின்றேன் என்கின்றனர்

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு
நாட்டமே நாட்டத்து ணிறைந்த
வானமே எனக்கு வந்துவந் தோங்கு
மார்க்கமே மருளர்தா மறியா
மோனமே முதலே முத்திநல் வித்தே
முடிவிலா வின்பமே செய்யுந்
தானமே தவமே நின்னைநா னினைந்தேன்
தமியனேன் றனைமறப் பதற்கே.



(ப-ரை) ஞானமே - அறிவே, வடிவு-உருவம், ஆய்-ஆகி, தேடுவார்-தேடுகின்றவர்கள், தேடும்-தேடுகின்ற, நாட்டமே-தேடப்படும்பொருளே!, நாட்டத்துள்-காணப்படும் பிரபஞ்சப்பொருள்கள் எல்லாவற்றின் உள்ளும், நிறைந்த-நிறைந்து நிற்கின்ற, வானமே - பரம ஆகாயமே!, எனக்கு - அடியேனுக்கு, வந்து-(சமீபமாக) வந்து, வந்து-(மிகச் சமீபமாகப் பல்காலும்) வந்து, ஓங்கும்-உயர்ந்து தோன்றுகின்ற, மார்க்கமே - வழியே! (நெறியே)!, மருளர் - மயக்கத்தையுடையவர்கள், அறியாதாம் - தாம் உணராத (தெரியமுடியாத), மோனமே - மௌனநிலையே!, முதலே - தலைவனே!, முத்தி-மோட்சத்தினை விளைவிக்கும், நல்-நல்ல, வித்தே-விதையே, முடிவு-இறுதி, இல்லா-இல்லாத, இன்பமே - ஆனந்தத்தையே, செய்யும் - செய்கின்ற, தானமே - கொடையே, தவமே-தவமே, தமியனேன்-அடியேன், தன்னை-தன்னை, மறப்பதற்கு-மறந்துவிடும்படி, நான் - அடியேன், நின்னை - தேவரீரை, நினைத்தேன் - சிந்தனை செய்தேன் எ-று.

(வி-ரை) இறைவன் ஞானசொரூபியாதலின் அவனைக் காணற்கு ஞானமே வேண்டற்பாலது. மெய்ஞ்ஞானிகள் இறைவன் அருளால் மெய்ஞ்ஞானம் பெற்றவர்கள் ஞானவடிவாக விளங்குபவர்கள் ஆதலின் 'ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடு நாட்டமே' என்றார். இறைவன் கண்ணுண்மணியாகவும், கண்ணுள் ஒளியாகவும் இருப்பவன் ஆதலின் 'நாட்டத்து ணிறைந்த வானமே' என்றார். இதுபற்றியன்றே **இராமலிங்க சுவாமி**களும்,

"கண்ணு ளமுதக் கடலேயென் கண்ணே
கண்ணுட் கருமணியே" என்றார். இன்னும்

"கண்ணே கண்ணுண் மணியே யென் கண்ணிற்
கலந்த கருவிழியே"

எனக் கூறியதுங் காண்க.

'வானமே' என்றது ஆகாயத்தை. 'நெறியுநீ நெறிதரு பயனுநீ' என்றதனால் இறைவனை 'நெறியே' என்றார். 'மருளர்' என்றது அஞ்ஞானத்தையும் மயக்கத்தையும் உடையவர்களை. 'மோனமே' என்றது மோனப்பொருளை. ஆனந்தத்தின் முதிர்ச்சி மோனமாதலின் 'மோனமே' என்றார். இறைவன் எல்லாருக்கும், எவற்றிற்கும் முதல்வன் ஆதலின் 'முதலே' என்றார். இறைவன் முத்திநெறியாகவும், முத்திப்பொருளாகவும், முத்திக்கு வித்தாகவும் இருத்தலின் முன்னே 'நெறியே' என்றவர் ஈங்கு 'முத்தி நல்வித்தே' என்றார். இறைவன் ஈறிலா இன்பவடிவன் ஆதலின் 'முடிவிலா வின்பமே' என்றார். இறைவன் அறமும், அறப்பயனும், தவமும், தவப்பயனுமாக இருத்தலின் 'செய்யுந் தானமே, தவமே' என்றார். தானம் என்றது இல்லறத்திற் குரியது. இதன் இம்மைப்பயன் புகழ்; மறுமைப்பயன் சுவர்க்காதிபதங்களாம். 'தவம்' என்றது வானப்பிரஸ்தத்திற் குரியது. இதன் பயன் சித்தியெய்தல், முத்தி எய்தல்களாம். துன்பந்தருவதை மறந்து இன்பந்தருவதை நினைக்கவேண்டுமாதலின் துன்பந்தருவதாகிய தன்னை

மறத்தலையும் இன்பந்தருவதாகிய இறைவனை நினைத்தலையும் வேண்டினே னென்பார் 'நின்னைநா னினைந்தேன் தமியனேன்றனை மறப்பதற்கே' என்றார். ஏ-ஈற்றசை. 6

இறைவனே! நின் அடியார் பணிகிடைப்பதாயின் உலக வாழ்க்கையும் பிறவியும் வேண்டுமெனல்

மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்
வந்துநின் னன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கின் அன்றியா னந்த
வற்புத நிட்டையி னிமித்தம்
துறவது வேண்டும் மௌனியா யெனக்குத்
தூயநல் லருடரி னின்னம்
பிறவியும் வேண்டும் யானென திறக்கப்
பெற்றவர் பெற்றிடும் பேறே.

(ப-ரை) யான்-யான் என்னும் அகங்காரமும், எனது - எனது என்னும் மமகாரமும், இறக்க-ஒழிய, பெற்றவர்கள்-பெற்றவர்கள், பெற்றிடும்-பெற்றிடும் படியான, பேறே-இலாபமே! (இலாபப்பொருளே!) நின் - தேவரீரது, அன்பர் தம் - அடியார்களினுடைய, பணி-தொண்டு, ஆம்-ஆகிய, அறம்-தருமம், வந்து-வந்து, கிடைக்கின்-அடியேனுக்குக் கிடைக்குமேயானால், மறம் - பாவம், மலி-மிகுந்த, உலகம் - பிரபஞ்சத்தின், வாழ்க்கையே-வாழ்வே, வேண்டும்-அடியேனுக்கு வேண்டும், அன்றி - (அடியார் தொண்டு) கிடையாதபக்ஷத்தில், ஆனந்தம்-சிவானந்தத்தினைப்பயக்கும், அற்புதம் - அதிசயமான, நிட்டையின்-நிஷ்டை, நிமித்தம் - கூடியிருக்கும்பொருட்டு, துறவு-துறவுமார்க்கம், வேண்டும் - வேண்டும், மௌனியாய்-மோனகுருவாகி வந்து, எனக்கு-அடியேனுக்கு, தூய-பரிசுத்தமான, நல்-நன்மையான, அருள்-அருளை, தரின் - தருவதாயிருந்தால், இன்னம்-இனிமேலும், பிறவியும்-பிறப்பும், வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) மாயாகாரியமாகிய உலகில் பாவமே பெருகிப் புண்ணியஞ் சுருங்கி இருக்கின்றது ஆதலின் 'மறமலி யுலகம்' என்றார். அன்பர்பணி செய்தலின் மேலான புண்ணியம் வேறு இல்லை ஆதலினாலும், அது கிடைக்கின் மற்றைப் பாவங்கள் வந்தணுகாது ஆதலினாலும், 'மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும் வந்துநின் னன்பர்தம் பணியாம் அறமது கிடைக்கின்' என்றார். இதுபற்றியன்றே,

"செல்வ மென்ன கீர்த்தி யென்ன சித்தியென்ன கற்றிடுங்
கல்வி யென்ன வீங்கிவற்றி னற்ப யன்கள் காண்பரே
நல்லதென் கலைசை மேய நாத னன்பர் நாமமே
சொல்லி யேத்தி யேவல்செய் தொழும்பர் காண வல்லரே"

எனவும்,



"கருமுகி னிகரன குழன்மட வரலியர் களபமென் னகிலினை கலவாரே
மருமல ரயனுட னரிமக பதிமிக மகிழ்பத மனமுற மதியாரே
யொருவுத லிருவினை விதிமதி விபரித முறுபிற வியினெறி யுழலாரே
யருமறை முடிவினி னடமுடை யவனிணை யடிதொழு மடியவ ரடியாரே'

எனவும் வரும் **பாக்களா**லும் அறிக.

இந்த அன்பர்பணி கிட்டாதான் நிட்டை கூடியிருக்கத் துறவுமார்க்கம் வேண்டுமென்பார் 'அன்றியா னந்த வற்புத நிட்டை யினிமித்தம் துறவது வேண்டும்' என்றார். ஞானிகள் பிறப்பற்றுப் பிறவாப் பேறுபெற இச்சிப்பர் என்றாலும், நான் பிறக்குந்தோறும், பிறக்குந்தோறும் மௌனியாய் வந்து முன்போற் குருவுபதேசஞ் செய்வதாயிருந்தால் பிறப்பும் வேண்டும் என்பார் 'மௌனியா யெனக்குத் தூயநல் லருடரி னின்னம் பிறவியும் வேண்டும்' என்றார். 'பிறவியும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இழிவுச் சிறப்பும்மை. யான் என்னும் அகங்காரத்தையும், எனது என்ற மமகாரத்தையும் களைந்தவர் இறைவனைப் பெறுவர் ஆதலின் 'யானென திறக்கப் பெற்றவர் பெற்றிடும் பேறே' என்றார். 'அறமது' 'துறவது' என்றவற்றின்கண்ணுள்ள ஈற்று 'அது' என்பவைகள் பகுதிப்பொருள் விகுதிகள். 7

இறைவனே! கற்றதும் கேட்டதும் தேவரீர் திருவடிக்கு அன்புசெய்து தேவரீரைத் தரிசித்தற்கே எனல்

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே
பெருகிய கருணைவா ரிதியே
நற்றவத் துணையே ஆனந்தக் கடலே
ஞாதுரு ஞானஞே யங்கள்
அற்றவர்க் கறாத நட்புடைக் கலப்பே
அனேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே.

(ப-ரை) பெற்றவர்-ஞானஞ் சித்திக்கப்பெற்றவர்கள், பெற்ற-அடைந்த, பெரு - பெரிதாகிய, தவம் - தவமாகிய, குன்றே - மலையே!, பெருகிய-பெருக்கெடுத்த, கருணை - கருணைவெள்ளம் நிறைந்த, வாரிதியே-சமுத்திரமே!, நல்-நல்ல, தவம்-தவத்திற்கு, துணையே - உதவியாக நிற்பவனே!, ஆனந்தம் - சிவானந்தமயமாகிய, கடலே - கடலே!, ஞாதுரு - காண்பான், ஞானம் - காட்சி, ஞேயம் - காணப்படுபொருள் (ஆகிய இம்மூன்றும்), அற்றவர்க்கு - நீங்கினவர்கட்கு, அறாத - நீங்காத, நட்பு - சிநேகத்தை, உடை - உடைய, கலப்பே-கூட்டுறவே!, அனேகமாய்-பற்பலவகைகளில், கற்றதும்-கற்றுக்கொண்டதும், கேள்வி - ஞானக்கேள்விகள், கேட்டதும் - உசாவி அறிந்ததும், நின் - தேவரீருடைய, அடிக்கு - திருவடிக்கு, அன்பு - அன்புசெய்து, நின்னை-தேவரீரை, கண்டிடும்-தரிசிக்கும், பொருட்டு-காரணமாக, அன்றோ-அல்லவா? எ-று.

(வி-ரை) 'பெற்றவர்' என்ற இடத்து அவாய்நிலையால் ஞானம் என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. 'பெருந்தவக் குன்றே' என்றது சிவபெருமானை. தவஞ் செய்வார்க்கு மலையாக விளங்குபவன் ஆதலின், இனி தவஞ் செய்த மலை எனினும் பொருந்தும். என்னை? 'பரமனே பரம யோகி' என்றார் ஆகலின். உலகில் மக்களால் காணப்படும் பொருள்களுள் மலையும் கடலும் பெரியன ஆதலின், 'மூன் மலையே' என்றார். ஈண்டு 'கருணைக்கடலே' என்பார் கருணை வாரிதியே என்றார். இறைவன் நற்றவஞ் செய்வார்க்குத் துணையாக நிற்பவன் ஆதலின் 'நற்றவத் துணையே' என்றார். இறைவன் அடியார்களை ஆனந்தத்து ஆழவைப்போன் ஆனந்தக்கடலே என்றார். முன்வாரிதி கடல் என்பன ஒருபொருட் சொற்கள். இது பொருட் பிரிதி நிலையணி. கூறியதுகூறல் என்னும் குற்றமாகாது. என்னை? அருளானே ஞானப்பெரியார் கருத்தும் அழகும்உற மொழிந்தாராதலின் என்க. ஞாதரு ஞானஞேயம் என்பன திரிபுடிகளாகிய காண்பான் காட்சி, காணப்படு பொருள்களை. இம்மூன்றும் சங்கற்ப ஞானமாதலால், இச்சங் கற்ப ஞானமற்றவர்கள் நீங்க நட்பாய்க் கலந்திருப்பவன் இறைவன் என்பார். 'ஞாதரு ஞானஞேயங்கள் அற்றவர்க் கறுத நட்புடைக் கலப்பே' என்றார் 'அன்பு' என்ற இடத்து 'செய்து' என்னுஞ் சொல் கூட்டி உரை செய்யப் பெற்றது. இது சொல்லெச்சமாம்.

"கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்"

என்ற **திருக்குறளின்படி** நான் கற்றதும் கேட்டதும் நின்னைக் கண்டு நின் அருளானந்த வெள்ளத்தில் முழுகி முத்தியுறவன்றோ அதனை எய்தாதவழி அடியேன் கற்றதால், கேட்டதால் என்னபயன் என்பார்,

"கற்றதுங் கேள்வி கேட்டது நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே" என்றார். இதுபற்றியன்றோ,

"கற்கவிடர்ப் பட்டுமிகக் கற்றவெல்லாங் கற்றவர்பாற்
றற்கமிட்டு நாய்போலச் சள்ளெனவோ—நற்கருணை
வெள்ள மடங்கும் விரிசடையார்க் காளாகி
யுள்ள மடங்கவல்ல வோ"

என்ற **சிவபோகசார வெண்பாவாலும்** நன்கறியலாம்.

இறைவனே நின்னைக் கண்டிலேன், காணும் பேறு தந்தருள்க என்பது கருத்தாம். காண்-எ-ஈற்றசை. 8

இறைவனே! அடியேன் உன் அடைக்கலம் என்கின்றார்

அன்றுநால் வருக்கு மொளிநெறி காட்டு
மன்புடைச் சோதியே செம்பொன்
மன்றுண்மூக் கண்ணுங் காளகண் டமுமாய்
வயங்கிய வானமே என்னுள்



துன்றுகூ ரிருளைத் துரந்திடு மதியே
துன்பமு மின்பமு மாகி
நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே
நேசமே நின்பரம் யானே.

(ப-ரை) அன்று-அந்த முற்காலத்தே, நால்வருக்கும் - சனகாதிமுனிவர்கள் நால்வருக்கும், ஒளி-அருளொளி நிறைந்த, நெறி-மார்க்கத்தை, காட்டும்-காட்டுகின்ற, அன்பு - அன்பினை, உடை - உடைய, சோதியே - ஒளியுருவே!, செம்பொன் - செவந்த பொன்னால் வேய்ந்ததாகிய, மன்றுள் - பொன்னம்பலத்தே, மூக்கண்-திரிநேத்திரங்களும், காளம் - விஷம்பொருந்திய, கண்டமும்-கழுத்தும், ஆய்-ஆகி, வயங்கிய-விளங்கி இருக்கும், வானமே - ஆகாயமே!, என் - அடியேனின், உள் - உள்ளத்திலே, துன்று - நெருங்கிய, கூர்-மிகுந்த, இருளை-அஞ்ஞானமாகிய இருட்டை, துரந்திடும்-ஓட்டுகின்ற, மதியே-ஞான சந்திரனே!, துன்பமும் - கஷ்டமும், இன்பமும் - சுகமும், ஆகி-ஆகி, நின்ற-நிலைபெற்றிருக்கும், வாதனையை-வேதனைகளை, கடந்தவர்-நீங்கிய ஞானிகள், நினைவே - எண்ணமே!, நேசமே-அன்பே!, யான்-நான், நின்-தேவரீருடைய, பரம்-பட்சம் எ-று.

(வி-ரை) 'அன்று' என்றது வட ஆலவிருக்ஷத்தின்கீழ் தக்ஷணாமூர்த்தமாக இருந்ததைக் குறித்தது. 'நால்வருக்கு' என்றது பிரமபுத்திரர்களாகிய சனகாதி முனிவர்களை. 'ஒளிநெறி என்றது ஞான ஒளிநெறியை. அதாவது பதி, பசு, பாச லட்சணங்களையும், முத்திநெறியையும் விளக்குவித்ததைக் குறித்தது. 'அன்புடைச் சோதி' என்றது தன் அருள் இன்பச் சோதியாகிய சிவபெருமானை. 'செம்பொன் மன்று' என்றது பொன்னம்பலத்தை. மூக்கண்-நெற்றிக்கண்ணோடு கூடிய மூன்று கண்களை. இவை முறையே சூரியன் சந்திரன் அக்கினி என்பனவாம். 'காளகண்டம்' என்றது கடலில் எழுந்த ஆலகால விடத்தைத் தேவர்கள் உய்யும்பொருட்டுண்டு கண்டங் கருத்ததாதலின் அந்தக் கண்டத்தைக் 'காளகண்டம்' என்றார். 'வானம்' என்றது சிதாகாயமாகிய சிவத்தை. 'என்னுள் துன்றுகூ ரிருள்' என்றது அஞ்ஞான இருளை. மதி-சந்திரன். இருளை அகற்றுவது நிலவாதலின் 'மதியே' என்றார். இனி அஞ்ஞானத்தை அகற்றுவது அறிவு ஆதலின் 'அறிவே' எனினும் ஆம்; இது இரட்டுற மொழிதல். இன்பமும் துன்பமும் ஆகிய வாதனைகளைக் கடந்த ஞானிகள் உள்ளத்து இறைவன் சுயம்பிரகாசமாகத் தோன்றியருளுவன் ஆதலின், 'துன்பமு மின்பமு மாகிநின்றவாதனையைக் கடந்தவர் நினைவே நேசமே" என்றார். யான் நின் அடிமை. அடியேன் நின்பாரம், அடியேனை உய்வித்து இன்பருள்வது உன் கடமை என்பார் 'நின்பரம் யானே' என்றார். ஏ-ஈற்றசை. 9

இறைவனே! நின் திருவருள் வியாபகத்தில் கலந்தகாலை யான் என்பது காணப்படவில்லை எனல்

யானெனல் காணேன் பூரண நிறைவில்
யாதினு மிருந்தபே ரொளிநீ
தானென நிற்குஞ் சமத்துற வென்னைத்
தன்னவ னாக்கவுந் தகுங்காண்

வானென வயங்கி ஒன்றிரண் டென்ன
மார்க்கமா நெறிதந்து மாறாத்
தேனென ருசித்து என்பரைக் கலந்த
செல்வமே சிற்பர சிவமே.

**(ப-ரை)** வான்-மேகத்தை, என-கொடுத்தருளுந்தன்மையால் ஒப்புக்கூற, வயங்கி - விளங்கி, ஒன்று - ஒன்றெனவும், இரண்டு-இரண்டெனவும், என்ன- என்று சொல்லமுடியாத, மார்க்கமாம்-செந்நெறியாம், நெறி-வழியை, தந்து- அளித்தருளி, மாறு-மாறுபடாத, தேன்-தேன், என - என்று சொல்லும்படி, ருசித்து - சுவையினைத் தந்து, அன்பரை - அன்பர்களை, உள் - உள்ளத்தி னிடத்தே, கலந்த - கூடிநின்ற, செல்வமே - செல்வமே!, சிற்பரம் - ஞானமய மாகிய, சிவமே-சிவமே! (மங்களமே), பூரணம் - முழுமையுமாகிய, நிறைவில்- சர்வவியாபகத்தில், யான் - யான், எனல் - என்று சொல்லுவதை, காணேன்- அறிகிலேன், யாதினும்-எப்பொருளினும், இருந்த-தங்கிய, பேர்-பெரிய, ஒளி- சோதியே!, நீ-தேவரீர், தான்-தானே, என-என்று, நிற்கும் - நின்றிருக்கின்ற, சமத்து - சமநிலைமையில், உற - பொருந்தியிருக்கும்படி, என்னை-அடியனாகிய என்னை, தன்னவன் - உன்னவன் ஆக, ஆக்கவும் - ஆக்கிக்கொள்ளவும், தகும்- தக்கதாகும் எ-று.

**(வி-ரை)** சிவஞானம் பெற்றவர்கள் சிவானந்தத்தில் அழுந்தியிருக்கும் நிலையில் 'யான்' என்னும் தற்போதங் கழன்றிடுமாதலின், 'யானெனல் காணேன்' என்றார். சிவபெருமான் அகண்டாகார புவனப் பேரொளிப் பிழம்பாக நிற்பவன் ஆதலின் 'பூரணநிறைவில் யாதினு மிருந்த பேரொளி' என்றார். ஞானநிலையில் அபேதமாக இறைவனுடன் கலந்திருப்பர் ஞானிகள் ஆதலின் 'நீதா னெனநிற்குஞ் சமத்துற' என்றும், 'என்னைத் தன்னவ னாக்கவுந் தகுங்காண்' என்றும் கூறினார். 'நீதான் எனநிற்குஞ் சமத்துற' என்றது அபேதத்தால் சோகம்பாவனையில் தானவனாந்தன்மையில் ஆனந் தத்து அழுந்துநிலைமையை 'தன்னவன்' என்பது தன் தொண்டனாக என்னும் பொருளது. 'காண்' என்றது ஈண்டு அசைநிறைக்க வந்தது வான் என்றது ஈண்டு ஆகுபெயராய் மேகத்தைக் குறித்தது. 'ஒன்றிரண் டென்ன மார்க்கம்' என்றது சுத்தாத்துவித மார்க்கத்தை, 'தேன் என' என்றதில் 'என' என்பது உவமஉருபாக நின்றது. 'உள் அன்பரைக் கலந்த செல்வமே' 'இது அன்பரை உள்கலந்த செல்வமே' என்றதின் மொழி மாறிநின்றநிலை. (உள் - மனம்) உள் இடமும் ஆம்.

இப்பதிகம் அந்தாதியாகி முதற்பாட்டின் முதற்சீராகிய 'சிவன்' என்னுஞ் சொல்லையே கடைசிபாட்டின் கடையடிக் கடைச்சீரிற் பெற்று மண்டலித்து வந்தது! காண்க. 10

---



## தன்னையொருவர்

இறைவனே! நீ என்னுள் கலந்திருந்தும் அறியாதிருக்கின்றேன்;
இனியேனும் உன் திருவருள் நிலையை எனக்குக் கொடுக்க
நினையாயோ என்கின்றார்

தன்னை யொருவர்க் கறிவரிதாய்த்
தானே தானய் எங்குநிறைந்
துன்னற் கரிய பரவெளியாய்
உலவா வமுதாய் ஒளிவிளக்காய்
என்னுட் கலந்தாய் யானறியா
திருந்தாய் இறைவா இனியேனும்
நின்னைப் பெறுமா றெனக்கருளா
நிலையைக் கொடுக்க நினையாயோ.

**(ப-ரை)** தன்னை - இறைவனாகிய தன்னை, ஒருவர்க்கு-மற்றொருவர்க்கு, அறிவு-அறிதல், அரிது-அருமை உடையது, ஆய்-ஆகி, தானே-தானே, தான்- தான், ஆய்-ஆகி, எங்கும்-சர்வத்திலும் எல்லா இடத்திலும், நிறைந்து-வியாபக மாகி, உன்னற்கு-எண்ணுதற்கு (நினைத்தற்கு), அரிய-அரிதாகிய, பரம் - பரம், வெளி - ஆகாயம், ஆய் - ஆகி, உலவா - கெடாத, அமுது-அமிர்தம், ஆய்-ஆகி, ஒளி-பிரகாசிக்கின்ற, விளக்கு-விளக்கு, ஆய் - ஆகி, என் - அடியேனின், உள்- உள்ளே, கலந்தாய் - கூடியிருப்பவனே! (அவ்வண்ணமிருந்தும்), யான் - அடி யேன், அறியாது - தேவரீரை அறிந்துகொள்ள முடியாதபடி, இருந்தாய்- மறைந்து இருந்தாய், இறைவா - தலைவனே!, இனியேனும் - இனியாகிலும், நின்னை-தேவரீரை, பெறும்-அடையும், ஆறு-விதமாக, எனக்கு-அடியேனுக்கு, அருள் - திருவருள், ஆம் - ஆகிய, நிலையை - நிலையினை, கொடுக்க - தந்தருள, நினையாயோ-எண்ணமாட்டாயோ? எ-று.

**(வி-ரை)** இறைவன் அங்கு, இங்கு என்று கூற முடியாதபடி எங்கும் நிறைந்து ஒளியுருவாய் நின்றிருந்தாலும் ஆன்மாக்கள் காணமுடியாதபடி பாசத்தால் மறைப்புண்டு கிடத்தலின் 'தன்னை யொருவர்க் கறிவரிதாய்த் தானே தானு யெங்குநிறை' என்றார். இறைவன் பரவெளியாய் நிறைந்து ஆன்மாக்களுக்கு இன்பஞ்செய்து நிற்றலின் ஒளிப்பிழம்பாய் நிற்றலின் 'துன்னற்கரிய பரவெளியா யுலவா வமுதா யொளி விளக்காய் என்னுட் கலந்தாய்' என்றார். தான் திரோதானசத்தியால் மறைப்புண்டு கிடத்தலின் இறைவனைக் காணமுடியா திருத்தலின் 'யானறியா திருந்தாய் இறைவா' என்றார். நின் திருவருளிருந்தால் நின்னைக் காணலுமாம் என்பார் 'நின்னைப் பெறுமா றெனக் கருளா நிலையைக் கொடுக்க நினையாயோ' என்றார். 'தன்னை' என்றது இறைவன் தன்னை. 'ஒருவர்' என்றது மலத்துள் மறைப்

புண்டு கிடப்போரை. 'அறிவரிது' என்றது அகக்கண் புறக்கண்களால் அறியமுடியாமையை. 'என்னுள்' என்றது ஆன்மாவினுள். அவனருளாலே அவனைக் காண்டலும், அவனை வணங்கலும் வேண்டியிருத்தலின் 'நின்னைப் பெறுமா றெனக்கருளா நிலையைக் கொடுக்க நினையாயோ' என்ருர். இறைவன் எங்கும் நிறைந்துள்ளமையை,

"என்னுக் குள்ளே எண்ணெயென எல்லாப் பொருளில் எவ்விடத்தும்
என்ள லின்றி யிருக்குமிறை என்றே வேத மியம்பிடவும்
தெள்ளத் தெளிய வறியாதே திகைத்துத் திரிந்தே னலந்தேனே
வெள்ளை யறிவேன் கடைத்தேற வெள்ளை விடையாய் வந்தருளே"

என்ற **பெரியார்** வாக்கானும் அறிந்திடுக. இறைவன் அருளாலேயே இறைவனைக் காணவேண்டும் என்பதனை,

"நீயே யுன்னை நாயேற்கு நேரக் காட்டா திருந்திட்டால்
பேயே னறியும் பெற்றியிலை பெரிய பொருளே! பெருமானே!
ஆயே என்னும் அருளாளா! அடியேற் கிரங்கி வாராயோ
வாயோ புலரப் புலம்பிநனி வாடி நின்ற தறிவாயே"

என்றதனானும் அறிக.

இப்பதிகத்து முதற் செய்யுளின் முதலடியில் 'தன்னை யொருவர்' எனத் தொடங்கினமையால் இப்பதிகத்திற்குத் 'தன்னை யொருவர்' எனப் பெயர் வந்தது. இப்பதிகமும் அந்தாதியாகி மண்டலித்து நின்றது. 1

இறைவா! அடியேனுக்குப் பாசம் நீங்கி மறவாதிருக்குந்தன்மை வருமோ வெனல்

நினையு நினைவுக் கெட்டாத
நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்
வினையைக் கரைக்கும் பரமவின்ப
வெள்ளப் பெருக்கே நினதருளால்
மனைவி புதல்வ ரன்னைபிதா
மாடு வீடென் றிடுமயக்கம்
தனையு மறந்திங் குனைமறவாத்
தன்மை வருமோ தமியேற்கே.

**(ப-ரை)** நினையும்-நினைக்கின்ற, நினைவுக்கு-எண்ணத்திற்கு (கருத்திற்கு), எட்டாத - எட்டாத, நெறி - மோனநெறியை, பெற்று-அடைந்து, உணர்ந்த-அந்த நெறியால் தேவரீரை அறிந்த, நெறியாளர்-சன்மார்க்கரது, வினையை-வினைகளை, கரைக்கும் - கரைத்து அழிக்கின்ற, பரமாம் - மேலான, இன்பம்-ஆனந்தமயமாகிய, வெள்ளம் - பிரவாகத்தின், பெருக்கே - பெருக்கே, நினது-தேவரீரது, அருளால்-திருஅருளால், மனைவி - பெண்ஜாதி, புதல்வர் - மக்கள், அன்னை - தாய், பிதா - தந்தை, மாடு - பசுக்கள், வீடு - வீடு, என்றிடும்-என்று



சொல்லும், மயக்கம் - அவர்களிடத்து அன்பினுல் கொண்டுள்ள பாசமயக்கம், தன்னையும்-தன்னையும், மறந்து-மறந்து, இங்கு-இவ்விடத்து, உன்னை - தேவரீரை, மறவா - மறவாத, தன்மை - குணம், தமியேற்கு-இழிவினு லொப்பற்ற அடியேற்கு, வருமோ-உண்டாகுமோ? எ-று.

**(வி-ரை)** ஞானவரம்பாகிய மோனம் பேரின்பப் பேறளிப்பதும் நினைவுக்கு எட்டாதநிலை யாதலே 'நினையு நினைவுக் கெட்டாத நெறி' என்ருர். 'நெறிபெற் றுணர்ந்த நெறியாளர்' என்றது மோனநிலை யடைந்த ஞானியரை. சிவானந்தப் பெருக்கு அடியாரின் வினையைக் கரைத்து ஒழிக்கும் ஆதலினுலும், வினையினீங்கி யார்க்கே சிவானந்தம் பூரணமாக எய்தும் ஆதலினுலும் 'வினையைக் கரைக்கும் பரமவின்ப வெள்ளப்பெருக்கே' என்ருர். பெண்டுபிள்ளை, பண்ட பதார்த்தங்களாகிய நிலையில் பொருள்களிடத்துப் பற்றுவைப்பவர்க்குத் துக்கமே பிராப்தியாம். அப்பற்றை எல்லாம் அறுத்து அரனிடத்தே அன்புவைத்தவர்க்கே சிவானந்தஞ் சித்தித்தல் சத்திய மாதலினுலும் அப்பற்றுகள் அறவும், இறைவன் பற்று எய்தவும் இறைவன் திருவருள் வேண்டுமாதலினுலும், 'நினதருளால் மனைவி புதல்வ ரன்னைபிதா மாடுவீ டென்றிடு மயக்கம் தனையு மறந்திங் குனைமறவாத் தன்மை வருமோ தமியேற்கே' என்ருர். இக் கருத்துப்பற்றி யன்றே **பட்டினத்தடிகளும்**,

"தாயும் பகைகொண்ட பெண்டிர் பெரும்பகை தன்னுடைய
சேயும் பகையுற வோரும் பகையிச் செகமும்பகை
ஆயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கிலிங் காதலினுற்
தோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே"

என்ருர். இன்னும்,

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண் டென்று மகிழ்வ தெல்லாம்
கேடுண் டெனும்படிக் கேட்டுவிட் டோமினிக் கேண்மனமே
ஓடுண்டு கந்தையுண் டுள்ளே யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார் நமக்குத் துணையுமுண்டே"

என்ருர்.

பற்றுக்க ளெல்லாவற்றிலும் பலமான பற்று மனைவிபற்று ஆதலினுலும், அதுவே முத்திக்கு இடையூருக இருப்பதாதலினுலும், 'மனைவியை' முதலிற் கூறினர். இதுபற்றியன்றே **பட்டினத்தடிகளும்**,

"பெண்ணுகி வந்தொரு மாயா பிசாசம் பிடித்திட் டென்னைக்
கண்ணுல் வெருட்டி முலையான் மயக்கிக் கடிதடத்துப்
புண்ணுங் குழியிடைத் தள்ளியென் போதப் பொருள்பறிக்க
எண்ணு துனைமறந் தேனிறை வாகச்சி யேகம்பனே"

என்ருர், எ-ஈற்றசை. 2

இறைவனே! பேரின்பப்பொருளாகிய உன்னை நினைந்துருகாம
லிருத்தலாமோ வெனல்

வரும்போ மென்னு மிருநிலைமை
    மன்னு தொருதன் மைத்தாகிக்
கரும்போ தேனோ முக்கனியோ
    என்ன வென்னுட் கலந்துநலம்
தரும்பே ரின்பப் பொருளேநின்
    றன்னை நினைந்து நெக்குருகேன்
இரும்போ கல்லோ மரமோவென்
    னிதய மியாதென் றறியேனே.

(ப-ரை) வரும் - வரும், போம் - போகும், என்னும் - என்கின்ற, இரு-இரண்டு, நிலைமை - நிலைமையை, மன்னுது - பொருந்தாமல், ஒரு - ஒரே, தன்மைத்து-தன்மையையுடையது, ஆகி-ஆகி, கரும்போ - கரும்பின் ரசமோ, தேனோ - தேனோ, முக்கனியோ - வாழை பலா மா என்னும் முக்கனிகளோ, என்ன - என்று சொல்லும்படி, என் - அடியேனின், உள்-மனத்தினிடத்தே, கலந்து-கூடி, நலம்-நன்மையைத், தரும் - தருகின்ற, பேர் - பெரிய, இன்பம்-ஆனந்தமயமாகிய, பொருளே - பொருளே!, நின் - தேவரீர், தன்னை-தன்னை, நினைந்து-எண்ணி, நெக்கு-மனநெகிழ்ந்து, உருகேன் - உருகிலேன் (ஆதலால்), என் - அடியேனுடைய, இதயம் - மனமானது, இரும்போ - இரும்புதானோ, கல்லோ - கல்தானோ, மரமோ-மரந்தானோ, யாது-இவைகளுள் எது, என்று-என்று, அறியேன்-அறிந்தேனில்லை எ-று.

(வி-ரை.) வரும் போம் என்னும் இருநிலைமைகளாவன நினைப்பு, மறப்புகளை. 'ஒருதன்மைத்தாகி' என்றது இறைவனையே தியானித்து மௌனானந்த நிட்டைநிலையில் இருக்கும் நிலையை. உலகில் சுவைதரும் பொருள் கரும்பு, தேன், முக்கனி முதலியனவாதலினாலும், உணர்ந்ததனைக் கொண்டே உணரமுடியாத அதனை உவமை கூறவேண்டிய இலக்கணமாதலினாலும் எடுத்துக்காட்ட, சொல்லமுடியாத பேரின்பச் சுவைப்பொருளாம் இறைவனை 'கரும்போ தேனோ முக்கனியோ என வென்னுட் கலந்து நலந்தரும் பேரின்பப் பொருளே' என்றார். கரும்பு, தேன், முக்கனி மதுரச் சுவை மிக்குடையவாயினும் குணதோடங் கலந்தனவே. இறைவன்மாட்டுக் குணமேயன்றித் தோடஞ் சிறிதுமில்லை என்பது தோன்ற 'நலந்தரு பேரின்பப்பொருளே' என்றார். முக்கனி என்றது வாழை, பலா, மா என்னும் முக்கனிகளை. மனம் பேரின்பப் பொருளாகிய இறைவனை எண்ணி எண்ணி உருகாதிருத்தலின் கடினப்பொருள்களாகிய இரும்போ, கல்லோ, மரமோ என்றார். இது தன்னெஞ்சின் நிலைக்கிரங்கியதாம். இதனை,

"என்னுட் கலந்தே யொளித் திருந்தே எள்ள வில்லாச் சுவைக்கனியோ
மன்னுந் தேனோ பாலேயோ மற்றுங் கரும்போ சருக்க ரையோ



என்ன வினித்தே யின்பருளும் எங்கள் சிவனார் திருவடிக்கே
இன்ன முருகா விதயந்தான் இயம்பின் வயிரக் கல்லாமே"

என்ற பாட்டானும் அறிக. வ-ஈற்றசை. 3

இறைவனே! நீ அறிவுக்கு அறிவாய் நிற்பவனாதலின்
அறியவுங் காணவு முடியாதெனல்

அறியுந் தரமோ நானுன்னை
    அறிவுக் கறிவாய் நிற்கையினல்
பிறியுந் தரமோ நீயென்னைப்
    பெம்மா னேபே ரின்பமதாய்ச்
செறியும் பொருணீ நின்னையன்றிச்
    செறியாப் பொருணன் பெரும்பேற்றை
நெறிநின் றொழுக விசாரித்தால்
    நினக்கோ வில்லை எனக்காமே.

(ப-ரை) அறிவுக்கு-ஆன்மாவின் உணர்வுக்கு, அறிவு-உணர்வு, ஆய்-ஆகி, நிற்கையினல் - நிற்பதனல், நான் - அடியேன், உன்னை - தேவரீரை, அறியும்-அறியும், தரமோ - தன்மையுண்டோ?, பெம்மானே - எமது பெருமானே!, பேரின்பம்-பேரானந்தம், அது-அது, ஆய் - ஆகி, செறியும் - எல்லாவற்றினும் கலந்து நிறைந்திருக்கும், பொருள் - பொருள், நீ - தேவரீரே (ஆதலால்), நீ - தேவரீர், என்னை - அடியேனை, பிரியும்-பிரிந்திருக்கும், தரமோ-தன்மையதோ?, நின்னை-தேவரீரை, அன்றி-அல்லாமல், செறியா - வேறு இடத்தில் சேர்ந்து நில்லா, பொருள்-பொருளாகிய, நான் - அடியேன், பெறும் - அடையும், பேற்றை - பிரயோஜனத்தினை, நெறி-உரியநெறியிலே, நின்று-இருந்து, ஒழுக - முற்றும், விசாரித்தால் - விசாரணைசெய்யப் புகுந்தால், நினக்கோ-தேவரீருக்கோ, இல்லை-இல்லை, எனக்கு-அடியேனுக்கே, ஆம்-ஆகும் எ-று.

(வி-ரை) இறைவன் அறிவுமயன், அறிவுக்கு அறிவாய் இருப்பவன், பேறறிவுப் பிழம்பாய் இருப்பவன் இத்தகையனை சிற்றறிவு காணல் முடியாததாம், இதுகொண்டே 'அறியுந் தரமோ நானுன்னை யறிவுக் கறிவாய் நிற்கையினல்' என்றார். இதுபற்றியன்றோ திருமூலரும்,

"அண்ண லிருப்பிட மாரு மறிகிலர்
அண்ண லிருப்பிட மாய்ந்து கொள்வார்களுக்
கண்ண லழிவின் றியுள்ளே யமர்ந்திடு
மண்ணலைக் காணி லவனிவ னருமே"

"அறிவறி வாக வறிந்தன்பு செய்மின்
அறிவறி வாக வறிவுமிவ் வண்ணம்
அறிவறி வாக வணிமாதி சித்தி
அறிவறி வாக வறிந்தன னந்தியே" என்று கூறியருளினர்.

அநாதியே இறைவன் ஆன்மாக்களிற் கலந்து இருக்கின்றானதலினாலும் பிறவிகடோறுஞ் சாட்சியாகநின்று அவையவைகளின் கன்மங்களுக் கீடாகப் பயனளித்து வருகின்றானதலின் 'பிரியுந் தாமோ நீயென்னைப் பெம்மானே பேரின்பமதாய்ச் செறியும் பொருணீ' என்றார். இறைவன் ஆன்மாக்கள் தோறுங் கலந்து நிற்றலினால் இறைவனுக்கு ஏதேனும் பயனுண்டோ? யாதொரு பயனுமின்று. கருணையாலே ஆன்மாக்களுக்கு இன்பமருளவே கலந்து நிற்கின்றான் இறைவன் கலப்பால் ஆன்மாக்கள் பாசநீக்கம் பரம முத்தி முதலிய பயன்களை அடைகின்றன. இதுபற்றியே 'நான் பெரும் பேற்றை நெறிநின்றெழுக விசாரித்தா னினக்கோவில்லை யெனக்காமே' என்றார். இதனை,

"உன்னாற் பிரயோசனம் வேணதெல்லா முண்டெனைப்பணியு
மென்னாற் பிரயோசன மேதுண்டுகாளத்தி ஈச்சுரனே"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கானும்,

"பொருளாற்பயனைப் பொருள்பெற்றார் போதப்பெறுவர் அப்பொருடான்
பொருளுற்றாராற் பெறுபயன்றான் புகலஉண்டோ வதுபோல
தெருளும் பொருளாங் கைலாயா சிறியே னின்னாற் பெறலனந்தம்
அருளே நீதான் என்பெற்றாய் அறியாச் சிறிய என்னானே"

என்றதனானும் நன்கறியலாம். ஏ-ஈற்றசை. 4

இறைவனே! எல்லாம் பொய்மயமான இவ்வுலகில் எவ்வாறுய்வே
னெனல்

எனதென் பதும்பொய் யானெனல்பொய்
எல்லா மிறந்த விடங்காட்டும்
நினதென் பதும்பொய் நீயெனல்பொய்
நிற்கு நிலைக்கே நேசித்தேன்
மனதென் பதுமோ வென்வசமாய்
வாரா தைய நின்னருளோ
தனதென் பதுக்கு மிடங்காணேன்
தமியே னெவ்வா றுய்வேனே

**(ப-ரை)** எனது - என்னுடைய பொருள்கள், என்பதும்-என்று யாவற்றையும் சொல்லுதலும், பொய்-பொய்யாகி யொழியும், யான்-நான், எனல்-என்று சொல்லி விவகரித்தலும், பொய்-பொய்யாகும், எல்லாம்-எல்லா விவகாரங்களும், இறந்த - அற்ற, இடம் - இடத்தினை, காட்டும் - காட்டுகின்ற, நினது - தேவரீருடையது, என்பதும் - என்று விவகரித்தலும், பொய்-பொய்யாகும், நீ-தேவரீர் (நீ), எனல்-என்று விவகரித்தலும், பொய்-பொய்யாகும், (ஆகையால்) நிற்கும் - நிலைபெற்று இருக்கும், நிலைக்கே-தன்மைக்கே, நேசித்தேன்-இச்சித்தேன், மனது-மனது, என்பதுமோ-என்று சொல்லப்போகும் பொருளோ, என்-அடியேனின், வசமாய் - வழியாய், வாராது-வருவதில்லை,



ஐய-ஐயனே!, நினது-தேவரீருடைய, அருளோ-திருவருளோ, தனது-தன்னுடையது, என்பதற்கும்-என்று கூறுவதற்கும், இடம்-இடத்தை, காணேன்-காணவில்லை, தமியேன்-அடியேன், எவ்வாறு-எந்த விதம், உய்வேன்-பிழைப்பேன்? எ-று.

**(வி-ரை)** 'எனது' என்றது-பெண்டு பிள்ளைகள், பண்டு பதார்த்தங்கள், வீடு வாசல், தோட்டம் துறவு, பொன் மணி முதலிய புறப்பொருள்களைக் குறிக்கும். இவை யனைத்தும் மாயாசம்பந்தம் உடையன ஆதலின் பொய் என்றார்; இவைகளைப் புறப்பற்று என்பர். 'யான்' இது அகங்கார தத்துவத்தின் தடிப்பு. இது அகப்பற்று எனப்பெறும். இது ஆகாமியம் ஏறுதற்குக் காரணமாக இருப்பது. இதுவும் துக்கத்திற்கேதுவாம். இந்த யான் என்பதும் தத்துவவிசார ஞானத்தால் இல்லையாய் அழிதலின் 'யானெனல் பொய்' என்றார். இதுபற்றியன்றே **மணிவாசகரும்**, "யானே பொய்யென் னெஞ்சம் பொய்யென் னன்பும்பொய்" என்றார். 'எல்லாமிறந்த விடம்' என்றது அப்பாலுக்கப்பாலை. 'நீயெனல் பொய்' என்றது முத்திநிலையில் நீ நான் என்னும் பேதம் அற்று, சுட்டற்று அபேதமாக நிற்றலின் 'நீயெனல் பொய்' என்றார். இறைவனும் தானும் அபேதமாய்ச் சிவானந்தத்து அழுந்தியிருக்கும் நிலையையே 'நிற்குநிலை' என்றார். மனது தன்வயப்படாமல், மனது வயப்பட்டுப் புருடன் இருப்பனேல் இறையருள் பெறல் அரிது. இது கொண்டே, 'மனதென்பதுமோ வென்வசமாய் வாராதைய நின்னருளோ தனதென்பதுக்கு மிடங்காணேன்' என்றார். இவ்வண்ணமிருப்பின் அடியேன் உய்ய முடியாதென்பார் 'தமியேனெவ்வா றுய்வேனே' என்றார். இதனை,

"தின்னை யறப்பெறு கிற்கிலே னன்னெஞ்சே
பின்னையான் யாரைப் பெறுகிற்பே—னின்னை
யறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டுக்
துறக்கந் திறப்பதோர் தாள்"

என்ற **அறநெறிச்சாரத்தினாலும்** அறியலாம். ஏ-ஈற்றசை. 5

இறைவனே! தேவரீரின் திருவருள் எனக்குக் கிட்டுமானால் எனக்கு
'எல்லாச் சித்தியும் கிடைக்கும் மனத்துயரும் அகலும் என்கின்றார்

உய்யும் படிக்குன் றிருக்கருணை
யொன்றைக் கொடுத்தால் உடையாய் பாழ்ம்
பொய்யு மவாவு மழுக்காறும்
புடைபட் டோடும் நன்னெறியா
மெய்யு மறிவு பெறும்பேறும்
விளங்கும் எனக்கு னடியார்பாற்
செய்யும் பணியுங் கைகூடும்
சிந்தைத் துயரந் தீர்ந்திடுமே.

(ப-ரை) உடையாய் - எல்லாம் உடையவனே!, உய்யும் - அடியேன்கதி அடையும், படிக்கு-பொருட்டு, உன்-தேவரீருடைய, திருக்கருணை-திருவருள், ஒன்றை-ஒன்றினை, கொடுத்தால்-கொடுத்தருளுவாய் ஆயின், பாழ்-பாழாகிய, பொய்யும் - பொய்யும், அவாவும் - ஆசையும், அழுக்காறும் - பொறாமையும், புடை-பக்கங்களிலெல்லாம், பெயர்ந்து-வேரற்று, ஓடும்-ஓடி ஒழியும், நல்-நல்ல, நெறி-மார்க்கம், ஆம் - உண்டாவதற்கு உரிய, மெய்யும் - உண்மையும், அறிவு-அறிவினாலே, பெறும்-அடையக்கூடிய, பேறும்-பயனும், விளங்கும்-பிரகாசிக்கும், எனக்கு - அடியேனுக்கு, உன் - தேவரீரின், அடியார்பால் - அடியவர்களிடத்து, செய்யும் - செய்யவேண்டிய, பணியும் - பணிவிடையும், கைகூடும்-கையிற் கிடைக்கும், சிந்தை - மனத்தின், துயரம் - வியாகூலம், தீர்ந்திடும்-தீர்ந்துபோம் எ-று.

(வி-ரை) உய்வாவது, மாறுபாடின்றி, அழிவின்றி எக்காலும் ஒரு தன்மையாய் நித்தியவாழ்வுபெற்று வாழ்தல். இது இறைவன் திருவருளால் எய்துவது. இதுகொண்டே, 'உய்யும் படிக்குன் றிருக்கருணை யொன்றைக் கொடுத்தால்' என்றார். 'கருணை' என்றது ஈண்டு திருவருளை. 'உடையாய்' என்றது இறைவனை; இறைவன் எல்லாரையும், எல்லாவற்றையும் உடையவன் ஆதலின் 'உடையாய்' என்றார். பாழ்ம் பொய் - பாழுக்குக்காரணமாகிய பொய், பாழைச் செய்கின்ற பொய் என்பது பொருள். 'பாழ்' என்றது ஈண்டு அழிவை. பொய், அவா, அழுக்காறு இம்மூன்றும் மருளுற்றார்க்கு உரியன. ஆதலின் இறைவன் அருள் வந்ததும் இம்மூன்றும் ஓடிவிடும் என்பார் 'திருக்கருணை யொன்றைக் கொடுத்தா லுடையாய்ப் பாழ்ம் பொய்யு மவாவு மழுக்காறும் புடைபட் டோடும்' என்றார். **திருவள்ளுவரும்,**

"அழுக்கா றவாவெகுளி யின்னாச் சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்" என்றனர்.

வாய்மை, அறிவு பெறும்பேறும் நன்னெறி அருளுற்றார்க்கு எய்துவன ஆதலின், 'நன்னெறியா மெய்யு மறிவுபெறும் பேறும் விளங்கும்' என்றார். இதுகொண்டே **திருவள்ளுவரும்,**

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற" என்றார்.

அடியார்பணி கிடைப்பது இலேசல்ல, திருவருள் பெற்றவர்க்கே எய்தும். இதுகொண்டே, 'எனக்கு உன்னடியார்பாற் செய்யும் பணியுங் கைகூடும்' என்றார். இறைவனின் திருவருளுக்கு இலக்காயவர்க்கு மனத்தின்கண் உள்ள துயரெல்லாம் நீங்கிடும். இன்பம் பெருகும் ஆதலின் 'சிந்தைத் துயருந் தீர்ந்திடுமே' என்றார். இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். இறைவன் அருள்பெற்றார் துன்புறவர் என்பதனை,

"ஆற்றோடு தும்பை யணிந்தாடு மம்பல வாணர் தமைப்
போற்றா தவர்க் கடை யாளமுண் டேயிந்தப் பூதலத்தில்



சோற்றாவி யற்றுச் சுகமற்றுச் சுற்றத் துணியு மற்றே
எற்றாலும் பிச்சை கிடையாம லேக்கற் றிருப்பர் களே" எனவும்,

"பொய்யோ டுலோபம் புரட்டுப்பே ராசைசினம்
ஐயோ பொறாமை யனைத்துமுறும்—வெய்யகடுங்
கூற்றுதைத்த பெம்மான் குறைகழற்கிங் கன்பில்லாச்
சோற்றுத் துருத்தி கட்கே சொல்"

எனவும் வரும் **பாக்களா** லறியலாம். இறைவன் திருவருள் பெற்றார்க்கு எய்தும் பேற்றை,

"அடியார்க் கெளியவ ரம்பலவாண ரடிபணிந்தால்
மடியாமற் செல்வ வரம்பெற லாம்வைய மேழளந்த
நெடியோனும் வேதனுங் காணாத நித்த நிமலனருட்
குடிகாணு நாங்க ளவர்காணு மெங்கள் குலதெய்வமே"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கையும் நோக்குக. எ-ஈற்றசை. 6

இறைவனே! சிந்தைத் துயரம் என்னோடு போராட பிரபஞ்சவாழ்க்கையை மெய்யாக எண்ணி உழலுகின்றேன் இத்தகைய எனக்கு உன் திருவருள் எவ்வாறு எய்தும் என்கின்றார்

சிந்தைத் துயரென் றொருபாவி
சினந்து சினந்து போர்முயங்க
நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை
நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்
எந்தப் படியுன் னருள்வாய்க்கும்
எனக்கெப் படிநீ யருள்செய்வாய்
பந்தத் துயரற் றவர்க்கெளிய
பரமா னந்தப் பழம்பொருளே.

(ப-ரை) பந்தம் - பிறவிப்பிணியால் வந்த, துயர்-துன்பம், அற்றவர்க்கு-அற்றவர்களுக்கு, எளிய - எளியவனாகிய, பரம-உயர்ந்த, ஆனந்தம்-இன்பத்தினைத்தருகின்ற, பழம்-பழமையாகிய, பொருளே-செம்பொருளாக இருக்கின்ற இறைவனே!, சிந்தை-மனத்து, துயர்-துக்கம், என்ற - என்கின்ற, ஒரு - ஒரு, பாவி-பாவி, சினந்து-கோபித்து, சினந்து-கோபித்து, போர்-போரை, முயங்க-செய்ய, நிந்தைக்கு-பழிக்கு, இடம்-இடம், ஆய்-ஆகி, சகம் - (நிலையற்றதாகிய) பிரபஞ்சத்தின், வாழ்வை - வாழ்க்கையை, நிலை - நிலையானது, என்று-என்று, உணர்ந்தே-தெரிந்தே, நிற்கின்றேன் - அதனிடத்தே பற்றுடையனாக நின்று கொண்டிருக்கின்றேன், உன்-தேவரீரது, அருள்-திருவருள், எந்தப்படி-எந்த விதமாக, வாய்க்கும்-கிடைக்கும், எனக்கு-அடியேனுக்கு, நீ-தேவரீர், எப்படி-எவ்விதம், அருள்-கிருபையை, செய்வாய்-செய்தருள்வாய்? எ-று.

(வி-ரை) மாயையால் அவா உண்டாம். அவாவால், விருப்பு வெறுப்பு உண்டாம். விரும்பியது கைகூடியவழி இன்பும் அது எய்தாதவழி துன்பு

மும் உண்டாம். இந்தத் துன்பம் இறைவன் அருள் வாய்க்கப் பெறாதவர்க்கே எய்தும். இதுகொண்டே, 'சிந்தைத் துயரென் றொருபாவி சினந்து சினந்து போர்முயங்க' என்றார். 'சிந்தைத் துயரென் றொருபாவி' இது உருவக அணி. 'சினந்து சினந்து' இது மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. பொய்யை மெய்யென்று கொள்ளல் நிந்தைக் கிடமாதலினாலும், பொய்யாகிய பிரபஞ்சத்தை மெய் என்றுகொண்டது நிந்தைக்கிடம் ஆதலினாலும், 'நிந்தைக் கிடமாய்ச் சகவாழ்வை நிலையென் றுணர்ந்தே நிற்கின்றேன்' என்றார். பொய்யை மெய்யென்றுகொண்டு உழலும் அடியேனுக்கு எந்தவிதத்தில் உன் அருள்வாய்க்கும் எனவும், பொய்யனேற்கு நீ எவ்வாறு அருள்செய்வாய் என்பதுவுங்கொண்டு 'எந்தப் படியுன் னருள் வாய்க்கும் எனக்கெப் படிநீ யருள் செய்வாய்' என்றனர். இறைவன் திருவருள் பாசபந்தம் அற்றவர்க்கே எய்துவது ஒன்றாகும். இறைவன் திருவருளோ இறைவ னடியார்க்குப் பேரானந்தம் பயப்பது ஒன்கும். இவைகொண்டே 'பந்தத் துயரற் றவர்க் கெளிய பரமா னந்தப் பழம்பொருளே' என்றார். இறைவன் தொன்மைக் குந் தொன்மையன் ஆதலின் 'பழம் பொருளே' என்றார். இதனை,

"முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

என்ற **மணிவாசகர் வாக்கா**லும் அறியலாம். 7

உலகத்தவரே உங்கள் அஞ்ஞானம் நீங்காமைக்குக் காரணம்
என்ன வெனல்

பொருளைப் பூவைப் பூவையரைப்
பொருளென் றெண்ணு மொருபாவி
இருளைத் துரந்திட் டொளிநெறியை
யென்னுட் பதிப்ப தென்றுகொலோ
தெருளத் தெருள வன்பர் நெஞ்சந்
தித்தித் துருகத் தெவிட்டாத
அருளைப் பொழியுங் குணமுகிலே
அறிவா னந்தத் தாரமுதே.

(ப-ரை) தெருள-தெளிவு அடைய, தெருள-தெளிவு அடைய, அன்பர்-அன்பர்களின், நெஞ்சம்-மனத்தினிடத்து, தித்தித்து-இனித்து, உருக-உருகும்படி, தெவிட்டாத - வெறுக்காத, அருளை - கிருபையாகிய மழையை, பொழியும்-பெய்கின்ற, குணம்-குணம்பொருந்திய, முகிலே-மேகமே!, அறிவு-அறிவுவடிவமாகிய, ஆனந்தத்து - ஞானானந்தமயமாகிய, ஆர் - நிறைந்த, அமுதே-அமிர்தமே!, பொருளை - பொன்னையும், பூவை-மண்ணையும், பூவையரை-பெண்களையும், பொருள் - நிலையுடைய பொருள்கள், என்று - என்று, எண்ணும்-நினைக்கின்ற, ஒரு-ஒரு, பாவி - பாவியாகிய, இருளை - அஞ்ஞான இருட்டை, துரந்து - அகற்றி (நீக்கி), விட்டு-விட்டு, ஒளி - ஒளியையுடைய,



நெறியை-சன்மார்க்கத்தை, என் - அடியேனின், உள்-மனத்தில், பதிப்பது-பதியச்செய்வது, என்று-எந்தநாளோ? எ-று.

(வி-ரை) பொன், மண், பெண் ஆகிய இம்மூன்றும் மாயாகாரியங்கள். இவைகளிற் பற்றுவைத்தார்க்கு அஞ்ஞானம் அகல்வது அரிது. ஞானம் உறல் அரிதினும் அரிது. இன்னும் நீரிற் சுருட்டும் நெடும் அலைகளும், வண்டிச்சக்கரத்தின் சுழற்சிகளும் போன்றன. நிலையில்லாதன. துன்பமே பெரிதுந் தருவன. இதுகொண்டே, 'பொருளைப் பூவைப் பூவையரைப் பொருளென் றெண்ணு மொருபாவி' என்றார். 'இருள்' என்றது அஞ்ஞானத்தினையும், அதனால் எய்தும் துன்பத்தினையும். 'ஒளி' என்றது ஞானத்தையும், ஆனந்தத்தினையும். எவ்வளவுக்கு எவ்வளவு தெளிவு பிறக்கின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு மருள் ஓடும். மருள் எவ்வளவுக்கு எவ்வளவு அகன்றொழிகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு ஆனந்தம் பெருகும். இதுகொண்டே 'தெருளத் தெருள வன்பர் நெஞ்சந் தித்தித் துருகத் தெவிட்டாதே' என்றார். 'தெருளத் தெருள' இது மிகுதிப்பொருளில் அடுக்கி வந்தது. 'பொழியும்' என்பதற்கு ஏற்ப 'முகிலே' என்றார். 'குணம்' என்பது முகிலுக்கு விசேடணம். 'குணமுகிலே' என்றது இறைவனை. அமுது-அழிவில்லாதது, அழியாமையைச் செய்வது என்ற பொருளில் வந்த பெயர். அமுது மிக இனிமையுடைய பொருளாதலின் மிக்க மதுரச் சுவையுடையதற்கு அமுதை ஒப்புக் கூறுவர் புலவோர். ஈண்டு, 'ஆர் அமுது' என்றது இறைவனை. அழிவின்மையாலும், இன்பம் பயத்தலாலும் உவமையாயிற்று. 'அமுது' பாற்கடலில் தோன்றிய தேவர் தம் ஓர்வகை மதுரஉணவு. இது தேவர்க்கு நரை, திரை, சாக்காட்டை அகற்றியது. இறைவன் சத்து, சித்து, ஆனந்தமான பொருளாக இருப்பவன் ஆதலினால் 'அறிவானந்தத் தாரமுமே' என்றார். கொல்-அசை. 8

இறைவனே! குடும்பத்துன்பங்கள்யாவும் பிச்சை எடுத்து உண்பேனேல்
என்னைவிட்டும் அகன்றுபோ மெனல்

ஆரா வமிர்தம் விரும்பினர்க
ளறிய விடத்தை யமிர்தாக்கும்
பேரா னந்தச் சித்தனெனும்
பெரியோய் ஆவிக் குறியோய் கேள்
காரார் கிரக வலையினிடைக்
கட்டுண் டிருந்த களைகளெல்லாம்
ஊரா லொருநாள் கையுணவேற்
றுண்டா லெனக்கிங் கொழிந்திடுமே.

(ப-ரை) ஆரா-தெவிட்டாத, அமிர்தம்-அமிர்தத்தை, விரும்பினர்கள்-விரும்பியவர்களாகிய தேவர்கள், அறிய-தேவரீரின் மகிமையை அறியும்படி, விடத்தினை - நஞ்சை, அமிர்து-அமிர்தம், ஆக்கும் - ஆக்கிய, பேர் - பெரிய,

ஆனந்த-ஆனந்த, சித்தன்-சித்தன், என்னும் - என்கின்ற, பெரியோய்-பெரியோனே!, ஆவிக்கு-அடியேனின் உயிருக்கு, உரியோய்-உரியவனே!, கேள்-கேட்டருள்வாயாக, கார்-கருமை, ஆர்-நிறைந்த, கிரகம்-சமுசாரம், வலையின்-வலையின், இடை-உள்ளே, கட்டுண்டுஇருந்த-கட்டுப்பட்டிருந்த, கலைகளெல்லாம்-விடாய்களெல்லாம், ஊரால்-ஊர்தோறும், ஒருநாள்-ஒவ்வொருநாளாக, கை - கையினால்ஏற்கும், உணவு-பிச்சைச்சோற்றை, ஏற்று - பிச்சைஎடுத்து, உண்டால் - உண்பேனாயின், எனக்கு - அடியேனுக்கு, ஒழிந்திடும் - ஒழிந்து போகும்? எ-று.

(வி-ரை) 'ஆராவமிர்தம் விரும்பினர்கள்' என்றது தேவர்களை; என்னை? பூவுலக மனிதர்களைப்போல் நரை, திரை, மூப்பு, சாக்காடின்றி இருத்தற் பொருட்டு ஓர் மருந்து தேடித் திருப்பாற்கடலைக்கடைந்து அமிர்தம் பெற்றார், அதனை விரும்பியுண்டார் ஆதலின் என்க. தேவர்கள் அமிர்தம் பெறுதற்பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்தகாலையில் முதலில் ஆலகால விஷம் எழ, அது தேவர்களையெல்லாங் கொல்லுமாறு எழ அவர்கள் பயந்து சென்றோடிச் சிவபெருமானிடத்துச் சரணம்புக அவர், அவர்களுக்கு அபயந் தந்து விடத்தை உண்டு அழிவின்றிநின்றார். விடம் கழுத்தைக்கடந்து செல்ல ஆற்றல் இல்லாது கழுத்திலேயே நின்றுவிட்டது. ஆன்மாக்களுக்கு இறைவனின் அழிவின்மையைக்காட்ட அக்கருப்புக் களத்தே நின்றது. செய்யற்கு அரியசெயல் செய்பவன் சித்தன் ஆதலின் விடத்தை யமிர் தாக்கும் பேரானந்தச் சித்தன் என்றார்.

இறைவன் சித்துக்கள்புரிதல் ஆன்மாக்களுக்கு ஆனந்தத்தைவிளைக்க ஆதலினாலும், இறைவன் ஆனந்தமயன் ஆதலினாலும் ஆனந்தச்சித்தன் என்றார். இன்னும் மதுரையில் கல்லானைக்குக் கரும்பருந்திய எல்லாம் வல்ல சித்தர் ஆதலினாலும் 'ஆனந்தச்சித்தர்' என்றார். சத்து, சித்து, ஆனந்தமாக இருப்பவன் இறைவன்ஆதலின் சித்தாயுள்ள இறைவனைச் சித்தர் என்றலும் ஒன்று. இறைவன் விடமுண்ட சித்தராதலை,

"அண்டருக்கு முனிவருக்கு மழலான கொடுவிடத்தைக்
கண்டமட்டு நகர்ந்திடவுங் கண்டமட்டிற் கடவாதே"

எனவும், **திருவருணைக்கலம்பகம்.**

"கண்டவிட நித்தியத்தைக் காட்டவுங்கங் காளமுத
வண்டவிடந் தரவைத்தா யம்புயஞ்செய் குற்றமென்"

எனவும், **வாட்போக்கிக்கலம்பகம்** கூறிய வாக்குகளால் அறியலாம்.

இறைவன் உயிர்க்குயிராய் இருப்பவன் ஆதலினாலும் உயிர்களை உய்விப்பவன் ஆதலினாலும் 'ஆவிக்குரியோய்கேள்" என்றார். "ஊனாகி யுயிராகி யுண்மையுமாய்" என்ற **மணிவாசகர்** வாக்காலும் அறியலாம். சம்சார வாழ்க்கை துக்ககரமானது ஆதலின் 'காரார் கிரகவலை' என்றார். 'ஊரால்' இதில் 'ஆல்' என்னும் மூன்றனுருபு தொறுப்பொருளில் வந்தது. 'ஊர் தோறுந் தேவகுலம்' என்பதுபோல. 'கையுணவு' என்றது பிச்சையுணவை,



இல்லை நீத்துத் துறந்துவந்தார் பசிநோய் உற்றகாலை இரந்து உண்பர், கையில் ஏற்றுஉண்பர். இந்த நிலையில் நிற்கின் பிரபஞ்சமாயை அற்றோடும் ஆதலின் 'ஊரா லொருநாள் கையுண வேற்றுண்டா லெனக்கிங் கொழிந்திடுமே' என்றார். இதனை,

"மாறுண்டுலாவி மயங்கு நெஞ்சே மனைதோறுஞ் சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுண்டே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்காலும் அறியலாம். இன்னும்,

"ஊரொலா மட்ட சோறு நம்மதே"

எனவும், **மணிவாசகர்** கூறிய **திருவிளையாடற்புராண அடைவா**லும் இதனை தெளியலாம். எ-ஈற்றசை. 9

இறைவனே! உடல், பொருள், உயிர் மூன்றையும் தேவரீருக்குக் கொடுத்தும் உன் திருவருள் நில்லாமையாகிய மயக்கம் உண்டாதலென் எனல்

எனக்கென் றிருந்த வுடல்பொருளும்
யானு நினவென் றீந்தவண்ணம்
அனைத்து மிருந்து மிலவாகா
வருளாய் நில்லா தழிவழக்காய்
மனத்துட் புகுந்து மயங்கவுமென்
மதிக்குட் களங்கம் வந்ததென்னோ
தனக்கொன் றுவமை யறநிறைந்த
தனியே தன்னந் தனிமுதலே.

(ப-ரை) தனக்கு-தேவரீர் தனக்கு, ஒன்று-ஒரு, உவமை - ஒப்பு, அற-இல்லாதவகை, நிறைந்த-வியாபித்துள்ள, தனியே - ஒப்பற்ற பொருளே!, எனக்கு-அடியேனுக்கு, என்று-என்று, இருந்த-நம்பி இருந்த, உடல்-உடம்பும், பொருள்-பொருளும், யானும்-நானும், நின-தேவரீருடையவை, என்று-என்று, ஈந்த-கொடுத்த, வண்ணம்-விதமாக, அனைத்தும்-எல்லாம், இருந்தும்-இருந்தும், இலது-இல்லாதன, ஆக-ஆக, அருளாய்-அருள்வடிவாக, நில்லாது-நிற்காமல், அழி-கெடும், வழக்காய்-வழக்காகி, மனத்துள்-மனத்துக்குள்ளே, புகுந்து-நுழைந்து, மயங்கவும் - கலக்கமடையவும், என்-அடியேனின், மதிக்குள்-அறிவுக்குள், களங்கம்-களங்கம், வந்தது-வந்ததற்குக்காரணம், என்னோ-யாதோ? அறிகிலேன் எ-று.

(வி - ரை) இறைவன் ஆன்மாக்களுக்காகவே தந்த தனுகரணங்கள் ஆதலினால் 'எனக்கென் றிருந்தவுடல்' என்றார். வினைக்கீடாக விருப்புணவை உண்ண இறைவன் அருளால் ஆன்மா ஈட்டிய பொருள் ஆதலினால் உடலொடு பொருளையுங் கூட்டியுரைத்தார். 'யானும்' என்றது உயிரை. ஞானாசிரியருக்குத் தன் உடல், பொருள், ஆவி என்னும் மூன்றையுந் தத்தஞ் செய்துதரவேண்டுவது முறையாதலினாலும், அவ்வாறே மௌனதேசிகர்க்குத் தத்தஞ்செய்தார் ஆகையினாலும் 'உடல் பொருளும் யானும் நின வென்றீந்த

வண்ணம்' என்றார். ஞானாசிரியரின் உபதேசத்தாலும், அனுக்கிரகத்தாலும் சிவாநந்தத்தழுந்தியகாலை எல்லாத் தத்துவங்களும் மறைய சிவாநந்தமே மேலிட்டு நிற்கும். இதுபற்றியே, 'அனைத்து மிருந்து மிலவாகா வருணாய் நில்லாது' என்றார். 'அழிவழிக்கு' என்றது ஈண்டு அழிக்கவந்த வழக்கு என்ற பொருளது. இனி, தீர்வழக்கென்பாரு முண்டு. 'மதிக்குட் களங்கம் வந்த தென்னே' இதில் களங்கம் என்றது மாயாகளங்கத்தை. இனி, அஞ் ஞான இருள் என்றலும் ஒன்று. இறைவன் ஒப்பிலியாதலினால் 'தனக்கென் றுவமையற நிறைந்த' என்றார். ஈண்டு இறைவன் ஒப்பில்லாதவன் என்ற மாத்திரையானே இறைவன் தனக்குமேல் உயர்வு இல்லாதவன் என்பதும் பெறப்பெறும். இறைவன் ஒப்பற்ற பொருள் என்பதை வலியுறுத்தற்கே 'தனியே' எனவும் அதற்குப்பின்னும் 'தனிமுதலே' என்றுங் கூறினர். 'நிறைந்த தனியே' ஈண்டு, பரிபூரணத் தனிப்பொருளே என்ற பொருள் பெற்று நின்றது. இறைவன் எல்லாப் பொருட்கும் முதல்வன் ஆதலின் 'முதலே' என்றார். 'நின' இது 'நின்ன' என்பதன் தொகுத்தல் விகாரம். 'இலது' இது 'இல்லாதது' என்பதன் விகாரம். இப்பதிகத்தின் முதற் செய் யுளின் முதலில் தொடங்கிய 'தன்' என்ற அசை இப்பதிகத்தின் ஈற்றில் 'தன்னந்தனி முதலே' என்ற சீர்களில் 'தன்' என வரத் தொடுத்தமையால் மண்டலித்து வந்தது காண்க. 'என்னோ' இது வினாவடுக்கு. இதில் ஈற்று ஓகாரத்தை அசை என்பாரும் உண்டு. 10

---

## ஆசையெனும்

ஆசையுடையார்க்குப் பல கெடுதல்வரும்; கல்வி கேள்விகள் பயன்படா தொழியுமெனல்

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவுமன
தலையுங் காலம்
மோசம்வரும் இதனாலே கற்றதுங்கேட் டதுந்தூர்ந்து
முத்திக் கான
நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி
நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே நிராசையின்றேற்
றெய்வ முண்டோ.

(ப-ரை) ஆசை எனும்-அவா என்று சொல்லப்படுகின்ற, பெரியகாற்று-பெரியகாற்றின், ஊடு-மத்தியில் (அகப்பட்ட), இலவம்-இலவமரத்தினுடைய, பஞ்சு - பஞ்சு அலைவதுபோல, எனவும்-என்று சொல்லும்படி, மனது - மன மானது, அலையும்-அலைகின்ற, காலம்-காலத்தில், மோசம்வரும்-கேடுவந்து



விடும், இதனாலே - இதனால், கற்றதும்-கற்றகல்விகளும், கேட்டது - கேட்ட ஞானக்கேள்விகளும், தூர்ந்து-அழிந்து, முத்திக்கு - மோட்சத்திற்கு, ஆன-ஏற்ற, நேசமும்-ஆசையும், நல்-நல்ல, வாசமும்-குருகுலவாசம், சிவக்ஷேத்திர வாசம் முதலிய வாசங்களும், போய்-நீங்கி, புலன்-ஐம்புலன், ஆய்-வழியாகி, கொடுமை-கொடுமையாகிய, இல்-சமுசாரபந்தத்தை, பற்றி-கொண்டழுந்தி, நிற்பர்-ஆசைவலையிற் கட்டுப்பட்டிருப்பர், (ஆதலால்) தேசு - ஒளி, பழுத்து-மிகுந்து, அருள் - திருவருள், பழுத்த - மிகுந்த, பராபரமே - பராபரமே!, நிராசை - ஆசைஇல்லாமை, இன்றேல் - இல்லையேயானால், தெய்வம் - ஒரு வனுக்குத் தெய்வம், உண்டோ - உளதாமோ? எ-று.

(வி-ரை) உயிர்களை மாயை பற்றி ஆசையைத் தூண்டிவிடுகின்றது. ஆசை மனத்தினின்று கிளம்பி மனத்தை ஆட்டிவைக்கின்றது. இது கொண்டே 'ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ் செனவு மனதலையுங் காலம்' என்றார். ஆசையே மனதை ஆட்டிவைக்கின்றது. இதுகொண்டே மனம் ஆடி ஓடி யுழல்கின்றது. இதுகொண்டே பெரியார்கள் மனதைக் 'குரங்கு' என்றார். இதனை, 'பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காகும்' என்றது கொண்டுந்தெளிக. உலகத்து நொய்ய பொருள்களி லெல்லாம் பஞ்சே நொய்யது ஆதலின், பெருவலியுடைய காற்று அதனை இலேசாக அலைவிக்கும் என்பது தோன்ற, 'இலவம்பஞ் செனவு மனதலையுங் காலம்' என்றார். பஞ்சு நொய்யது என்பதனை, "நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பஞ்சு" என்ற **நீதிவெண்பா** அடியாலும் அறியலாம். காற்றின்வேகந் தோற்றுவிக்கப் 'பெருங்காற்று' என்றார்.

மனம் ஒருவழி நில்லாது அலையுமேயானால் ஞானம் நிலைநிற்காது. ஞானிகளுக்கு மனம் அலையாது ஞானசூரியர்களுக்கே மனது அலையும். இதுகொண்டே 'மோசம்வரும்' எனவும், 'இதனாலே கற்றதுங் கேட்டதுந் தூர்ந்து முத்திக்கான நேசமுநல் வாசமும்போய்ப் புலனாயிற் கொடுமைபற்றி நிற்பரந்தோ' என்றார். 'தூர்தல்' என்றது ஈண்டு கல்விகேள்வியின் வாசனை யின்றிப்போதலை. கல்வி கேள்வியற்றகாலை முத்தி நினைவே தலை எடுக்காது. கல்வி கேள்விகள் அற்றவர் முத்தியையும், முத்தியயருளும் இறைவனையும் மறந்து புலன் சென்றவழியெல்லாஞ் செல்லாநிற்பர். புலன் செல்வழி கல்வி, கேள்வியற்றதனால் கேட்டின் வழிசெல்லும் என்பதுபற்றி "கொடுமை பற்றி நிற்பரந்தோ' என்றார். 'கொடுமை' என்றது பாவவழிகளை, தீ நெறியை. 'அந்தோ' இது இரக்கப்பொருள் தருஞ்சொல். இறைவன் தேசோமயன், அருட்சொரூபன் ஆதலின் 'தேசுபழுத் தருள் பழுத்த பராபரமே' என்றார். 'பழுத்து' என்றது ஈண்டு மிகுதிப்பொருள் காட்டவந்தது. ஆசையற்றவர்க்கே இறை தரிசனங்கிட்டுமாதலின் 'நிராசை யின்றேற் றெய்வமுண்டோ' என்றார். ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்த இடைச் சொல். இந்தச் செய்யுட் கருத்துக்கொண்டே **சிவபோகசார** நூலுடை யாரும்,

"தாத்தியுன்னை யாசை தொடாமலென்றும்
விரத்தியினை லாங்கவற்றை விட்டு—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப் பிரபஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய்"

என்றார்.

'பெருங்காற்று' என்றது சண்டமாருதத்தை. 'புலனாயிற் கொடுமை' இது, புலன்+ஆய்+இல்+கொடுமை; இது நான்கு சொற்களாலாகிய தொடர். மனம், தனித்து மனமாகி நில்லாது புலன்வழிப்பட்டு மனமும் புலனாகிவிடும் என்பது தோன்ற 'புலன்ஆய்' என்றார். இச்செய்யுள் முதல் நாற்பது செய்யுள்கள் ஒருபகுதியாகி **ஆசையெனும்** பெயர் பூண்டது. இப்பகுதியின் முதற்செய்யுளின் முதலடியின் முதற்சீர் 'ஆசையெனும்' என்று தொடங்கினமையின் இப்பெயர்கொண்டது. இச்செய்யுள் நான்கு காய்ச்சீர்களும் இரண்டு மாச்சீர்களுங்கொண்ட ஆறுசீர் அடிகள் நான்குகொண்ட அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். இப்பகுதியில் பலவகை விருத்தங்கள் விரவிவந்தன. இது அந்தாதியாகத் தொடரவில்லை. 1

இறைவனே! உன் திரு அருள் நிறைவில் இருப்பதுவோ
சகசநிட்டை என வினவல்

இரப்பானங் கொருவனவன் வேண்டுவகேட் டருள்செ
  வேசற் றேதான் [யென
புரப்பான்ற னருணாடி யிருப்பதுபோல் எங்குநிறை
  பொருளே கேளாய்
மரப்பான்மை நெஞ்சினன்யான் வேண்டுவகேட்டிரங்
  மௌனத் தோடந் [கெனவே
தரப்பான்மை யருணிறைவி லிருப்பதுவோ பராபரமே
  சகச நிட்டை.

(ப-ரை) இரப்பான்-யாசகஞ் செய்பவனாகிய, ஒருவன்-ஒருவன் என்னும், அவன்-அவன், வேண்டுவ-தனக்கு வேண்டியவைகளை, கேட்டு-கேட்டு, அங்கு-அவ்விடத்தே, அருள்-கிருபையை, செய் - செய்தருளவேண்டும், என-என்று, ஏசு-பழிப்பு, அற்று-அற்று, புரப்பான்-காப்பாற்றுபவனுடைய, அருள்-கிருபையினை, நாடி - எதிர்பார்த்து, இருப்பது - இருப்பதை, போல் - ஒப்ப, எங்கும்-எல்லா இடங்களிலும், நிறை - வியாபகமாயுள்ள, பொருளே - பொருளே!, கேளாய்-கேட்டருள்வாயாக, மரம் - மரத்தினுடைய, பான்மை-தன்மையினை ஒத்த, நெஞ்சினன்-மனத்தையுடைய, யான்-அடியேன், வேண்டுவ - விரும்புபவைகளை, கேட்டு - கேட்டருளி, இரங்கு - இரங்கி அருள்க, எனவே-என்று, மௌனத்தோடு - மோனநிலையுடன், அந்தரம் - ஆகாயத்தின், பான்மை-தன்மை அமைந்த, அருள்-தேவரீரின் திருவருள், நிறைவில்-பூரணநிலையில், இருப்பதுவோ - இருப்பதுதானோ, பராபரமே - பராபரப்பொருளே!, சகச நிஷ்டை-அடியேனுக்கு சகசநிஷ்டையென்று சொல்லப்படுவது எ-று.



(வி-ரை) 'இரப்பான்' என்றது யாசகனை. (இரவலன்). 'புரப்பான்' என்றது ஈவோனை. (புரப்பான் - காப்பவன்) 'இரப்பானங் ... ... ... ... யிருப்பதுபோல்' என்றது உவமை. 'எங்கு நிறை பொருள்' என்றது அங்கிங் கெனாதபடி எங்கு நிறைந்துள்ள பரிபூரணப் பொருளை தன் நெஞ்சின் கடினத்தைக் காட்டுவான் 'மரப்பான்மை நெஞ்சினன்' என்றார். இறைவன் திருவருள் ஒன்றையே நாடி வேறுவழியில் மனத்தைச் செலுத்தாது அந்த அருளின் வியாபகத்திலேயே கலந்து மோனத்து நிற்றல் சகசநிட்டை என்பார் 'வேண்டுவகேட் டிரங்கெனவே ... ... ... ... ... யருணிறைவி லிருப்பதுவோ பராபரமே சகச நிட்டை' என்றார். இரப்பார் ஈவார்மாட்டுச் சென்று தன்குறை இரந்து அவர்களின் அலர்ந்த அருள்முகம் நோக்கி வேறுவழி நோக்காது பிறிது சிந்தனையின்றி இருத்தலை. இறைவனையே சிந்தித்துத் தன்குறை இரந்து அவன் அருளைநோக்கி அசைவற மோனத்து நிற்கும் ஞானநிலைக்கு ஒப்பிட்டுக் கூறினர். இது எடுத்துக்காட்டுஉவமையணி. 'அந்தரப் பான்மை' என்றது ஆகாயத் தன்மையை. இறைவன் எங்கும் வியாபித்துப் பரமாகாசமாய் இருக்கின்றானாதலின் 'அந்தரப்பான்மை' என்றார். 'அந்தரம்' என்றது ஆகாசத்தை. 'அருணிறைவு' என்றது பரிபூரணனாந்தத்தை. இச்செய்யுளும் முதற்செய்யுள்போல வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். 2

ஆட்டுவான் வினைவழி ஆன்மா நிற்குமெனல்

சாட்டையிற் பம்பர சாலம் போலெலாம்
ஆட்டுவா னிறையென வறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே.

(ப-ரை) நெஞ்சமே-மனமே!, சாட்டையின்-கயிற்றினால் ஆட்டப்பெறுகிற, பம்பரம்-பம்பரங்களின், சாலம்-கூட்டம், போல்-போல, எல்லாம்-உயிர்கள் முதலிய எல்லாவற்றையும், இறை-கடவுள், ஆட்டுவான்-ஆட்டுவிப்பான், என-என்று, அறிந்து-உணர்ந்து, தேட்டம் - விருப்பம், ஒன்று-ஒன்று, அற-நீங்க, அருள்-திருவருளின், செயலில்-செய்கைக்குள்ளாகி, நிற்றியேல்-நிற்பாயானால், வீட்டு-இல்லிலிருந்து செய்யும், அறம்-இல்லறமும், துறவு-வீட்டை விட்டுத் துறந்து செய்யும், அறம்-துறவறமும், (ஆகிய) இரண்டும் - இரண்டு அறங்களும், மேன்மையே-மேன்மையை உடையனவே எ-று.

(வி-ரை) 'சாட்டை' என்றது பம்பரத்தை ஆட்ட உபயோகிக்குங் கயிற்றை. 'சாலம்' என்றது கூட்டத்தைக் குறிக்கும் வடசொல். 'எலாம் ஆட்டுவான்'என்றதில் 'எலாம்' என்றது உலகங்களையும் உலகத்து உயிர்களையும் உயிர்களுக்கும் உலகங்களுக்கும் பம்பரம் உவமையாயிற்று. பாசத்திற்குச் சாட்டை உவமையாயிற்று. இறைவனுக்கு ஆட்டுவோன் உவமையாயிற்று. பதி, பசு, பாசங்களுக்குப் பொருந்திய உவகை காட்டியது காண்க. 'நெஞ்சமே' இது

முன்னிலை விளி. இது நெஞ்சறிவுறுத்தல் என்னுந் துறை. 'தேட்டம்' என்றது ஈண்டு பிரபஞ்சஆசையை. 'அருள்' இறைவனின் திருவருளை. 'வீட்டறம்' என்றது இல்லறத்தை. மேன்மையே என்றதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. 'நிற்றியேல்' என்பதில் 'ஏல்' விகுதி நிற்றலின் அருமையைக்காட்டி நின்றது. இறைவன் திருஅருட்செயலில் நில்லாது போனால் இல்லறந் துறவறம் இரண்டும் மேன்மையுடைய தன்றென்பது குறிப்பெச்சம். 'சாட்டையிற்……………ஆட்டுவானிறை' என்பதைப் **பட்டினத்தடிகள்**,

"இருவினைப் பாசக் கயிற்றுவழி யாட்டுவிப்பானு
மொருவனுண்டே தில்லையம்பலத்தே"

என்ற அடியொற்றிக் கண்டுதெளிக. 'நெஞ்சமே தேட்டமொன் றறவருட் செயலினிற்றியேல்' என்பதனைப் **பட்டினத்தடிகள்**,

"நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்பு"

என்ற அடியோடொற்றிப் பொருள்காண்க. 'திருவருட் செயலி னிற்றி யேல் வீட்டறந் துறவற மிரண்டு மேன்மையே' என்பதனைப் **பட்டினத் தடிகள்**,

"காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தை சுற்றி
ஓடே யெடுத்தென்ன வுள்ளன்பிலா தவரோங்கி விண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே"

என்ற செய்யுளோடு ஒப்பிட்டுக் காண்க. இன்னும்,

"கானநாடு கலந்து திரிகிலேன்
ஈனமின்றி யிருந்தவஞ் செய்கிலேன்" எனவும்,

"நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்"

எனவும் **அப்பர்சுவாமிகள்** கூறிய பாசுரங்கொண்டும் பொருள் தெளிக.

இச்செய்யுள் நாற்சீர் அடிகள் நான்கு கொண்ட கலிவிருத்தம் ஒவ்வோர் அடிக்கும் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் நான்கு கொண்டு வந்தன. 3

இறைவனே! அறிவில்லாத அடியேனுக்கு அறிவூட்டியது
நினையாத நெஞ்சம் எத்தகையதெனல்

தன்னெஞ்ச நினைப்பொழியா தறிவிலிநான் ஞானமெ
தன்மை பேச [னும்
உன்னெஞ்ச மகிழ்ந்தொருசொல் லுரைத்தனையே அத
யுருகேனையா [னையுன்னி



வன்னெஞ்சோ இரங்காத மரநெஞ்சோ இருப்புநெஞ்
வைர மான [சோ
கன்னெஞ்சோ அலதுமண்ணாங் கட்டிநெஞ்சோ என
கருதிற் றானே. [துநெஞ்சங்

(ப-ரை) நெஞ்சம்-நெஞ்சமானது, தன்-தன்னிடத்தேஉள்ள, நினைப்பு-எண்ணங்கள், ஒழியாது - நீங்காது, அறிவிலி - அறிவில்லாதவனாகிய, நான்-அடியேன், ஞானம்-ஞானம், எனும்-என்று சொல்லப்படும், தன்மை-தன்மையினை, பேச - எடுத்துப்பேசுமாறு, உன் - தேவரீரின், நெஞ்சம் - உள்ளம், மகிழ்ந்து-சந்தோஷித்து, ஒருசொல்-ஒருமொழி, உரைத்தனையே-உபதேசித்தனையே, அதனை-அந்த உபதேசத்தினை, உன்னி-எண்ணி, உருகேன்-உருக மாட்டேன், (ஆதலால்) ஐயா-ஐயனே!, எனது-அடியேனது, நெஞ்சம்-மனமானது, கருதின் - எண்ணுமிடத்து, வல் - வலிமையுடைய, நெஞ்சோ - மனமோ, இரங்காத-இரக்கமில்லாத, மரம்-மரத்தாலாய, நெஞ்சோ-மனமோ, இரும்புநெஞ்சோ - இரும்பாலாகியமனமோ, வைரம்-வயிரம், ஆன - ஆகிய. கல்நெஞ்சோ-கல்லாலாகியமனமோ, அலது-அல்லது, மண்ணாங்கட்டி - மண்ணாங்கட்டியால்ஆகிய, நெஞ்சோ-மனமோ? அறிந்திலேன்; எ-று.

(வி-ரை) ஞானிகள் எப்பொழுதும் பிரபஞ்ச சம்பந்தமான நினைப்பொழிந்து இறைவனையே சிந்தித்துச் சிவானந்தத்து அழுந்தியிருப்பர். அறிஞர் இறைஞானம் அடைதற்பொருட்டு ஞானவிசாரணையிலேயிருப்பர், அறிவிலா மூடனாகிய நான் ஞானத்தை எடுத்துப் பேசும்படி ஆசாரிய திருக்கோலம்பூண்டு உபதேசித்தருளினை என்பார் 'தன்னெஞ்ச நினைப்பொழியா ... ... ... தொருசொல் லுரைத்தனையே' என்றார். இது அடியேன்மாட்டுள்ள உன் இயல்பாய கருணையே என்பார் 'அதனையுன்னி யுருகேனையா' என்றார். இவ்வாறு நீ செய்த கருணையை நினையாத அடியேன் நெஞ்சம் கடினமுடையது என்பார் மரநெஞ்சோ, இரும்புநெஞ்சோ, கல்நெஞ்சோ, மண்ணாங்கட்டிநெஞ்சோ என்கின்றார். பாவின் இறுதியில் வந்'தானே' என்பது 'தான்' 'ஏ' என்ற ஈற்றசை. இச்செய்யுளை **மணிவாசகர்** திருவாய் மலர்ந்தருளிய,

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னையாண்டாய்க்
குள்ளந்தா னின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே"

என்ற செய்யுளோடு ஒப்பிட்டு நோக்குக.

இச்செய்யுள் காய்ச்சீர் நான்கும் மாச்சீர் இரண்டுங்கொண்ட அறுசீர் அடிகள் நான்குகொண்ட அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். தான்-ஏ-ஈற்றசைகள். 4

தன் சோபனப் பாட்டுக் குருவரு ளிவற்றைப் போற்றல்

வாழி சோபனம் வாழிநல் லன்பர்கள்
சூழ வந்தரு டோற்றமுஞ் சோபனம்
ஆழி போலரு ளையன் மவுனத்தால்
ஏழை யேன்பெற்ற வின்பமுஞ் சோபனம்.

(ப-ரை) சோபனம் - அடியேன் பாடும் இந்தச் சோபனப்பாட்டு, வாழி-வாழ்க, நல்-நல்ல, அன்பர்கள்-அடியார்கள், வாழி-வாழ்க, சூழ - அடியேனைச் சூழும் வண்ணம், வந்து - எழுந்தருளிவந்து, அருள் - கிருபையைப்புரிந்த, தோற்றமும்-திருவருளின் தோற்றமும், சோபனம்-சுகமாகுக, ஆழி - சமுத்திரம், போல்-போல, அருள்-கிருபையைக்கொண்டுள்ள, ஐயன்-ஞானகுருவின், மவுனத்தால் - மௌன உபதேசத்தால், ஏழையேன் - எளியேன், பெற்ற-அடைந்த, இன்பமும்-சுகமும், சோபனம்-சுகமாகுக எ-று.

(வி-ரை) இறைவன் திருவருளால் 'பாட்டுவித்தால் யாரொருவர் பாடாதாரே' என்றபடி பாடிய தன் சோபனப்பாட்டு வாழி யென்பார் 'வாழி சோபனம்' என்றார். இறைவன் திருவருளைப் பூரணமாகப் பெறுதற்கும், அத்திருவருள் தன்பால் நிலைத்து நிற்கைக்கும் அடியார் கூட்டுறவு வேண்டப் பெறுதலின் 'வாழி நல் லன்பர்கள்' என்றார். இதுகண்டன்றோ **தேவாரம்** என்னும் தமிழ்மறையிலும்,

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
 திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
யுவராதே யவரவரைக் கண்ட போது
 வுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்துநோக்கி
யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
 யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
 கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே"

என்றார்.

இந்த சிவஞானமும், சிவானந்தமும், துக்கநிவிர்த்தியும் திருவருளால் பெற்றமையானே 'சூழவந்தரு டோற்றமுஞ் சோபனம்' என்றார். திருவருளே மவுனதேசிக குருவாக வந்தருளினமையால், அவ்வாசானாற் பெற்ற இன்பம் பரிபூரணம் ஆதலினல் 'ஆழிபோ லருளையன் மவுனத்தால், ஏழையேன் பெற்ற சோபனம்' என்றார். வாழி - இது வாழிய என்பது கடைகுறைந்து நின்றது. என்னை? "வாழிய என்பத னீற்றுயிர்மெய் யகலுமுரித் தஃதேகினு



மியல்பே" என்பது இலக்கணவிதி. சோபனம் - இது ஆகுபெயராய்ச் சோபனப் பாட்டைக் குறித்து நின்றது. ஆழி - ஆழமுடையது என்னும் பொருட்டாய்க் கடலைக் குறித்து நின்றது. 'தோற்றமும்' 'இன்பமும்' என்றதன் கண்ணுள்ள உம்மைகள் எண்ணும்மைகள். அழிவில்லாதாகிய கடவுளுக்கும் வாழ்த்துப்பாடல் என்னையெனின்? அவனும், அவன் திருவருளும், அவன் திருவடியும் அடியேன் பாட்டும் வாழ்ந்திருப்பதாக என்று ஆராமைபற்றி எழுந்த வாழ்த்தென்க. இதனை,

"நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏக னனேக னிறைவ னடிவாழ்க"

என **மணிவாசகரும்**,

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு' என **ஆழ்வாருங்** கூறியது கொண்டு தெளிக. ஐயன் - உயர்ந்தோன். ஈண்டு குருமூர்த்தத்தைக் குறித்தது.

இது மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் என நான்கு சீர்கள்கொண்ட நான்கடியான் வந்த கலிவிருத்தம். 5

இறைவனருள் புரியு மிடமி தெனல்

கொடுக்கின் றோர்கள்பாற் குறைவையா
 தியானெனுங் குதர்க்கம்
விடுக்கின் றோர்கள்பாற் பிரிகிலா
 துள்ளன்பு விடாதே
அடுக்கின் றோர்களுக் கிரங்கிடும்
 தண்டமி ழலங்கல்
தொடுக்கின் றோர்களைச் சோதியா
 ததுபராஞ் சோதி.

(ப-ரை) தண் - குளிர்ந்த, தமிழ் - தமிழ்ச்சொற்களாலாகிய, அலங்கல்-மாலைகளை, தொடுக்கின்றோர்கள்-புனைந்துசாத்துகின்ற அடியார்களை, சோதியாதது - சோதிக்காததாகிய, பரம் - மேலானதாகிய, சோதி - சுடரானது, கொடுக்கின்றோர்கள் - கொடையாளர், பால் - இடத்தே, குறை - குறைவை, வையாது-வைக்காது, யான்எனும்-யானென்கின்ற, குதர்க்கம்-குதர்க்கத்தை, விடுக்கின்றோர்கள்-விட்டொழிக்கின்றவர்கள், பால் - இடத்தினின்றும், பிரிகிலாது-பிரிந்துபோகாது, உள்-மனத்தின்கண், அன்பு-அன்புபெற்றிருத்தலை, விடாதே - நீங்காமல், அடுக்கின்றோர்களுக்கு - வந்து சேர்கின்றவர்களுக்கு, இரங்கிடும்-இரங்கி அருள்செய்யும் எ-று.

**(வி-ரை)** தருமங்கள் எல்லாவற்றினும் இரப்பார்க்கு ஈவதே சிறந்த தருமம். இதுபற்றியன்றே **ஔவைப்பிராட்டியாரும்** "ஈதலறம்" என்றருளிச்செய்தார். பின்னும், "அறஞ் செய விரும்பு" "ஈவது விலக்கேல்" எனவுங் கூறியருளினள். இறைவன் தருமங்கள் செய்வோர்க்குக் குறை செய்யாதவன் ஆதலின் 'கொடுக்கின்றோர்கள்பாற் குறைவையாது' என்றார். இதனை வலியுறுத்த,

"நிறை நெஞ்சுடையானை நல்குர வஞ்சும்
அறனை நினைப்பானை அல்பொரு ளஞ்சும்"

என்றார் **திரிகடுகமுடையாரும்**.

'யான்' என்னும் அகங்காரத்தை விட்டவர்பால் அஞ்ஞான இருள் அகலும் ஆதலினாலும், ஞானம் விளங்குமாதலினாலும், இறை யொளி யொளிரும் ஆதலினாலும் 'யானெனுங் குதர்க்கம் விடுக்கின்றோர்கள்பாற் பிரிகிலாது' என்றார். இறைவன் கற்பகம்போலத் தன்னை வந்து அடுக்கின்றார்களுக்கு வேண்டிய வேண்டியாங் கருளுவோனாதலின் 'உள்ளன்பு விடாதே அடுக்கின்றோர்களுக் கிரங்கிடும்' என்றார். இதனை, "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்ற **திருநாவுக்கரசு தேவாரத்தாலும்** அறியலாம். இறைவன் தமிழ்வடிவானவன். தமிழ்ப்பாட்டு விருப்பினன். தமிழ்நாட்டு வைத்த விருப்பால் முச்சங்கத்தும் புலமைத்தலைமை வகித்தோன். அடியர்கள் பாட்டுக்கு உருகுவோன். இதனை,

"கடுக்க வின்பெறு கண்டனூர் தென்றிசை நோக்கி
யடுக்க வந்தவந் தாடுவானுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடைவீசி
மடுக்கவுந் தமிழ்திருச் செவிமாந்தவு மன்றோ"

என்ற **திருவிளையாடற்புராணச் செய்யு**ளாலும் அறியலாம். இதுகொண்டே

"தண்டமி ழலங்கல் தொடுக்கின்றோர்களைச்
சோதியா ததுபராஞ் சோதி" என்றார்.

இறைவன் தமிழ்ப்பாட்டு விருப்புடையன் என்பதைப் பாடிய பாவலர்க்கு அருள்செய்தன்மை பெரியபுராணத்துப் பலவிடத்துங் காணலாம். இன்னும்,

"நமக்கு மன்பிற் பெருகிய சிறப்பின்மிக்க, அர்ச்சனை
பாட்டே யாகுமாதலான் மண்மே னம்மைச் சொற்றமிழ்
பாடுகென்றார் தூய்மறை பாடும் வாயார்"

என்ற **சேக்கிழார் திருவாக்கா**னும் அறியலாம்.

குதர்க்கம் - ஒழுக்கற்ற விவகாரம் என்னும் பொருள் குறித்து நின்ற வடசொல். தண் + தமிழ் = தண்டமிழ்; தண்-இது தமிழுக்கு அடையாக வந்தது. இது விசேடனம் பயக்கவந்த அடைமொழி. அலங்கல்-மாலை. 'சோதியா ததுபராஞ் சோதி' சொற்பின்வரு நிலையணி. இது முரண்டொடையாக வந்தது



என்பது ஒரு சாரார். இது பொருளால் முரணவில்லை என அவர் தமை மறுக்க. 'பராஞ்சோதி' இது உயர்ந்த மேலான ஒளிமயமானவனைக் குறித்தது. இது மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என ஐஞ்சீரடி நான்கு கொண்ட காப்பியக் கலிநிலைத்துறைச் செய்யுள். இதனை ஐஞ்சீர் விருத்தம் என்பார் உண்டு. 6

இறைவனே! அடியேனை உலகமாயையில் உழலவிட்டாயே, இனி எந்தக் காலத்தில் உனது பேரின்பவீட்டில் இருக்கவைப்பாய் எனல்

உலக மாயையி லேயெளி யேன்றனை
யுழல விட்டனை யேஉடை யாய்அருள்
இலகு பேரின்ப வீட்டினி லென்னையும்
இருத்தி வைப்பதெக் காலஞ்சொ லாய்எழில்
திலக வாணுதற் பைந்தொடி கண்ணிணை
தேக்க நாடகஞ் செய்தடி யார்க்கெலாம்
அலகி லாவினை தீர்க்கத் துசங்கட்டும்
அப்ப னேஅரு ளானந்தச் சோதியே.

**(ப-ரை)** எழில் - அழகுபொருந்திய, திலகம் - பொட்டை அணிந்துள்ள, வாள் - ஒளிபொருந்திய, நுதல்-நெற்றியையும், பைம்-பசுமையாகிய, தொடி-வளையலையும் அணிந்துள்ள உமாதேவியின், இணை-இரண்டு, கண்-கண்களும், தேக்க-நிறையும்படி, நாடகம்-ஞானக்கூத்தை, செய்து-செய்து, அடியார்க்கு-தொண்டர்களுக்கு, எலாம்-எல்லாம், அலகு-கணக்கு, இலா-இல்லாத, வினை-வினைகளை, தீர்க்க-ஒழித்தற்பொருட்டு, துசம்-கொடியை, கட்டும்-கட்டுகின்ற, அப்பனே-தந்தையே!, அருள் - அருளையும், ஆனந்தம்-ஆனந்தத்தையுடைய, சோதியே - சுடரே!, எளியேன் - ஏழையாகிய என், தனை - தன்னை, உலகம்-பிரபஞ்சத்தின், மாயையில்-மாயையில், உழல - அலைய, விட்டனையே - விட்டு விட்டாயே, அருள் - தேவரீரின் திருவருளில், இலகும்-விளங்குகின்ற, பேர்-பெரிய, இன்பம் - ஆனந்தத்தைத் தருகின்ற, வீட்டில்-மோக்ஷத்தில், என்னையும்-அடியேனையும், இருத்தி - இருக்கும்படியாகச்செய்து, வைப்பது - வைத்தருள்வது, எ-எந்த, காலம்-நாள், சொலாய்-சொல்லி அருள்வாயாக எ-று.

**(வி-ரை)** 'உலகமாயை' என்றது உலகப்பற்றை. 'எளியேன்' என்றது தன் அறிவு குறைவைக் காட்டவந்த சொல். என்னை இறைவன் சிவஞானத் திற்குமுன் சீவனறிவு கிஞ்சிஞ்ஞத்துவ முடைமையின் என்க. உலகப்பற்று துன்பமே தருவதாதலின் 'உழல விட்டனையே' என்றார். இறைவன் எல்லா ஆன்மாக்களையும் தன்பால் உடையவன் ஆதலின் 'உடையாய்' என்றார். 'பேரின்பவீடு' திருவருள்மயமும் ஆனந்தமயமும் உடையது ஆதலின் 'அருள் இலகு பேரின்பவீடு' என்றார். 'என்னையும்' என்றதில் உள்ள உம்மை இழிவுச்சிறப்பு. எளியனாகிய என்னையும் என்ற பொருளது. 'சொலாய்' இது சொல்லாய் என்பதன் தொகுத்தல் விகாரம். 'ஆய்' இது முன்னிலையேவல் விகுதி. திருவருட்சத்தியாகிய உமாதேவியார் கண்டு களிக்கவும், ஐந்தொழில்

நடைபெறவும் நடிக்கின்ற திருநடனமாதலின், 'எழில் திலக வாணுதற … … … … நாடகஞ் செய்து' என்றார். 'தேக்க' இங்கு நிரம்புதல் என்னும் பொருளது. இறைவன் திருநடனத்தைத் தரிசித்தார்க்கு வினை தீரலும் முத்தி எய்துதலும் சத்தியமாதலின் 'அலகிலா வினை தீர்க்க' என்றார். அலகுஇலாவினை-பிறதெய்வங்களாலே தீர்க்கமுடியாத பிராரத்த கன்மத்தை. 'துசம்' இது 'துவஜம்' என்ற வடசொற்சிதைவு. துவஜம்-கொடி. என்னை? போருக்குச் செல்வோர் கொடிகட்டி யுயர்த்துப் பிடித்துச் செல்வர் ஆதலின் என்க. தந்தையின் கடன்மை தன் மைந்தனை உயர்ந்த இடத்து வைத்தல், உயர்வாக இருக்கச்செய்தல். இதனை,

"தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்"
என்றதால் அறிக.

ஆதலின் என்னைத் துன்பந்தரும் மாயாமயமாகிய உலகத்தில் விடாது மாயையற்ற இடமாகிய அருள் இலகு பேரின்பவீட்டில் வைத்தருளல் உன் கடன்மை என்பதைக் குறிப்பிப்பார் 'அப்பனே' என்றார். 'அருளானந்தச் சோதி' என்றது சிவபெருமானை. 'மாயை' இது மனத்தை மயக்குவது என்னும் பொருள்பற்றி வந்தபெயர். 'வீடு' இது வேதனைகளெல்லாம் விடுபட்ட இடம் என்னும் பொருள் தந்து நின்றது. இது 'விடு' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. பைந்தொடி - பசுமையாகிய வளையல், இது அன்மொழித் தொகையாய் உமாதேவியாரைக் குறித்தது.

இச்செய்யுள் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் என் எட்டுச்சீர் கொண்ட அடிகள் நான்கான் வந்த எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 7

நெஞ்சே! அத்துவிதநிலையில் நில் இதனால் சித்திமுத்தி உண்டாகும்
இதுவே சுகர் முதலோர் நின்ற நல்லநிலை என்கின்றார்

முன்னிலைச்சுட் டொழுதியெனப் பல்காலு நெஞ்சேநா
மொழிந்தே னேநின் [ன்
றன்னிலையைக் காட்டாதே என்னையொன்றாச் சூட்டா
சரணன் போந்த [தே
அந்நிலையே நிலைஅந்த நிலையிலே சித்திமுத்தி
யனைத்துந் தோன்றும்
நன்னிலையீ தன்றியில்லை சுகமென்றே சுகர்முதலோர்
நாடி னரே.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, முன்னிலை - முன்னிலையாக, சுட்டு-சுட்டு தலை, ஒழுதி-ஒழிவாயாக, என-என்று, பல-பல, காலும்-தரமும், நான் - நான், மொழிந்தேனே - சொன்னேனே, நின்றன்-உன்னுடைய, நிலையை-நிலைமையினை, காட்டாது-காட்டாமலும், என்னை-என்னை, ஒன்றாக-ஒருபொருளாக, சூட்டாது - வையாமலும், நான் - நான், சரண் - சரணம், போந்த - புகுந்த,



அ-அந்த, நிலையே-நிலையே, நிலை-நன்னிலையாகும் (எனெனின்), அந்த-அந்த, நிலையிலே - நிலையிலேயே, சித்தி - சித்தியும், முத்தி - முத்தியும், அனைத்தும்-எல்லாமும், தோன்றும் - உளவாகும், ஈது - இதை, அன்றி-அல்லாமல், நல்வேறாகிய நல்ல, நிலை - நிலை, இல்லை - இல்லை, சுகம் - இதுவே இன்பநிலையம், என்றே-என்றுகொண்டு, சுகர்-சுகமுனி, முதலோர்-முதலியவர்கள், நாடினர்-இந்நிலையை விரும்பினர்கள் எ-று.

(வி-ரை) 'முந்நிலைச் சுட்டு' என்றது பேர், ஊர், ஜாதி, குலம், குணம், குறி முதலிய விசேடண விசேடியங் கருதி அறிந்து உலகில் நிற்கும் நிலை. 'ஒழிதி' இது நீக்கிவிடு என்னும் பொருள்தந்த முன்னிலைஏவல், 'நெஞ்சம்' என்பது 'நெஞ்சே' விளியுருபு ஏற்று நின்றது. இது பெயர். 'மொழிந்தனனே' இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. 'நின்தன்னிலையைக் காட்டாதே' என்றது மனோதத்துவம் முனைத்தெழாது மனமிறக்க வேண்டுமென்ற கருத்தால் இதுகொண்டன்றோ **இந்நூலாசிரியர்** பிறிதோர் இடத்தில்,

"சினமிறக்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"
என்றார்.

'என்னை யொன்றாச் சுட்டாதே'-அகங்காரதத்துவத்தை எழும்பவிடாதே என்ற பொருளாம். இதன் மனோதத்துவமும் அகங்காரதத்துவமும் ஒடுங்கி சிவதத்துவநிலையில் நிற்றி என்பார் 'சரணன்போந்த அந்நிலையே நிலை' என்றார். இந்தச் சிவதத்துவநிலையில் நிற்போருக்கு எல்லாச் சித்திகளுங் கைகூடும், முத்தியுண்டாம் ஆதலினால் 'அந்த நிலையிலே சித்தி முத்தி யனைத்துந் தோன்றும்' என்றார். இதுவே நல்நிலை, இதினும் மேலான நிலையில்லை என்பார் 'நன்னிலை யீதன்றியிலை' என்றார். இதுகொண்டே சுகராதி முனிவர்கள் இந்நிலையைப் பற்றிநின்றார் என்பார் 'சுகமென்றே சுகர் முதலோர் நாடினரே' என்றார். இதனை,

"மனமிறந்து நானிறந்து மற்றுலகந் தானும்
பினமிறந்த வந்தவொரு பெற்றி—கனமிகுந்த
ஆனந்தங் காணும் அருளொளிரு மிதுவேபே
ரானந்த மானந்த மாம்"
என்றதனாலும் அறிக.

இந்தச் செய்யுள் நான்குகாய்ச்சீரும் இரண்டுமாச்சீருங் கொண்ட அடிகள் நான்கு கொண்ட அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஏ-ஈற்றசை. 8

உந்தி அத்துவைத நிலையினையே நலனெனக் கொள்ளாம
லலைவேனோ வெனல்

அத்துவிதம் பெறும்பேறென் றறியாமல் யானெனும்
யகந்தை யோடு [பே
மத்தமதி யினர்போல மனங்கிடப்ப இன்னமின்னம்
வருந்து வேனோ

சுத்தபரி பூரணமாய் நின்மலமாய் அகண்டிதமாய்ச்
சொரூபா னந்தச்
சத்திகணீங் காதவணந் தன்மயமாய் அருள்பழுத்துத்
தழைத்த வொன்றே.

(ப-ரை) சுத்தம் - சுத்தநிலையாகிய, பரிபூரணமாய் - வியாபகமாகி, நின் மலம்-நிருமலம், ஆகி-ஆய், அகண்டிதம்-அளவுகடந்து, ஆய்-ஆகி, சொரூபம்-சொரூபமாகிய, ஆனந்தம் - ஆனந்த, சத்திகள்-சத்திகள், நீங்காத-விலகாத, வண்ணம்-விதம், தன் - தன்னுடைய, மயமாய்-மயமாகி, அருள் - திருவருள், பழுத்து-கனிந்து, தழைத்த-செழித்த, ஒன்றே-ஒப்பற்றபொருளே!, பெறும்-அடையத்தக்க, பேறு-பலன், அத்துவிதம்-அத்வைதம், என்று-என்று, அறியாமல்-ஆராய்ந்து உணராமல், யான்-நான், எனும்-என்னும், பேய் - பேய்த் தன்மைகூடிய; அகந்தை-அகங்காரத்து, ஒடு-உடன் சேர்ந்து, மத்தம்-பயித்தியம்பிடித்த, மதியினர் - புத்தியையுடையவர், போல - போல, மனம்-மனமானது, கிடப்ப-அழுந்திக்கிடக்க, இன்னம்-இன்னும் (பின்னும்), இன்னம்-இன்னும் (பின்னும்), வருந்துவேனோ-துன்ப முறுவேனோ? எ-று.

(வி - ரை) அத்துவிதம் - இரண்டென்பதின்றி ஒன்றுபட்டிருக்கும் நிலைமை. 'பெறும்பேறு' என்றது பெறும் பயன். அகங்காரதத்துவம் பேயினுங் கொடியதாதலின் 'யானெனும் பேயகந்தையோடு' என்றார். 'மத்தமதி' என்றது பித்துக்கொண்ட அறிவை. 'இன்னம் இன்னம்' என்பது மிகுதிக்கண் அடுக்கி வந்தது. இறைவன் பூரண நிறைவாயும், மலரகிதனுகவும், கண்டிக்கப்படாதவனுகவும், ஆனந்தமயனுகவும், திருவருட்சத்தியை யுடையவனுகவும், தன்மயனுகவும், ஒன்ருகியும் இருக்கின்றவன் ஆதலின், 'சுத்தபரி பூரணமாய் ... ... ... ... தழைத்த வொன்றே' என்ருர். இச்செய்யுளின் கருத்தை,

"நானீயென் றியம்புபே தாபேத மற்றவர்கள் நாடிப் பெற்ற
தானீயாம் முத்திநிலை நாயேனும் பெறுவேனே தானென் ருேங்கும்
நானேயென் பதனுடனே எனதென்னும் பற்றுமெனை நன்ருய்ப் பற்றிக்
கோனே!என் குருமணியே! குமரேசா! எனையலைக்கக் கொண்டிட் டேனே"

என்ற பேரியார் செய்யுளுடன் ஒப்பிட்டு நோக்கித்தெளிக. இச்செய்யுளும் மேற்செய்யுள்போன்ற அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 9

திரிசிராமலையில் எழுந்தருளி இருக்கும் தாயுமானேச்சுரனே!
நீயே எல்லாத் துணையுமெனல்

தந்தை தாயுநீ என்னுயிர்த் துணையுநீ
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ உனையலால்
மற்ருெரு துணைகாணேன்



அந்த மாதியு மளப்பருஞ் சோதியே
ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ்
சிரகிரிப் பெருமானே.

(ப-ரை) அந்தஉம் - முடிவும், ஆதியும் - முதலும், அளப்பு - அளத்தல், அரும்-அருமையான (முடியாத), சோதியே-சுடருருவே!, ஆதியே-முதலே!, அடியார்-அன்பர், தம்-தங்கள், சிந்தை-மனத்தில், மேவிய - பொருந்தியுள்ள, தாயுமானவன்-தாயும்ஆனவன், எனும் - என்று அழைக்கப்பெறும், சிரகிரி-திரிசிராமலையில் எழுந்தருளியிருக்கின்ற, பெருமானே - சிவபெருமானே!, தந்தைஉம்-தகப்பனும், தாயும்-தாயும், நீ-நீயே, என் - அடியேனின், உயிர்-உயிருக்கு, துணையும்-துணைவனும், நீ-நீயே, சஞ்சலம் - மனத்துயரம், அது-அதை, தீர்க்க-நீக்குதற்பொருட்டு, வந்த-எழுந்தருளிவந்த, சோதி - சோதி மயமாகிய ஞானசிரியரின், வடிவும்-திருமூர்த்தமும், நீ - நீயே, உனை - தேவரீரை, அலால் - அல்லாமல், மற்று - வேறு, ஒரு - ஒரு, துணை - துணையை, காணேன் - கண்டிலேன்; எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்ச்சார்பாயுள்ள துணைவனுதலின் 'என் உயிர்த் துணையுநீ' என்ருர். ஞானசிரியன் பிரபஞ்சத்துயரந் தீர்ப்பவனுதலின், மாயைத்துயர் தீர்ப்பவனுதலின் 'சஞ்சலமது தீர்க்கவந்த தேசிகவடிவுநீ' என்ருர். இறைவனே உயிர்களுக்குத்துணைவன். மற்றைய தந்தைதாய், தாரம் தனையன் முதலிய தமர் ஆபத்துக்குதவாதவர். இதுகொண்டே **பட்டினத்தடிகளும்,**

"ஊருஞ் சதமல்ல வுற்ருர் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்ருள் சதங்கச்சி யேகம்பனே" எனவும்,

"தாயும் பகைகொண்ட பெண்டிர் பெரும்பகை தன்னுடைய
சேயும் பகையுற வோரும் பகையிச் செகமும்பகை
ஆயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கிலிங் காதலினுற்
தோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே" எனவும்,

"தாயாருஞ் சுற்றமும் பெண்டிருங் கைவிட்டுத் தாழ்ந்திடுநாள்
நீயாரு நானு ரெனப்பகர் வாரந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வ ரேகொண்ட நோயுமொரு
பாயாரு நீயுமல் லாற்பின்னை யேதுநட் பாமுடலே" எனவும்,

"அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோபங் கயன்வகுத்த
குடியான சுற்றமுந் தாரமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாருெக்கு மென்றினஞ் சார்ந்திலரே"

எனவும் கூறியது கொண்டறிக.

"அப்பனி யம்மைநீ யையனுநீ
யன்புடைய மாமனு மாமியுநீ
ஒப்புடைய மாதருமொண் பொருளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
இப்பொன்னீ இம்மணிநீ யிம்முத்துநீ
யிறைவனீ யேறூர்ந்த செல்வனீயே"

எனவருளிய **அப்பர்வாக்கானும்** அறிக

'அந்த மாதியு மளப்பருஞ் சோதியே' என்றது ஆதியந்தம் அறிய முடியாத சோதியுருவாக நின்றவனே என்பது பொருள். இது திருமாலும் பன்றியாய், நான்முகன் அன்னவடிவாய் அடிமுடிதேடி அறியமுடியாதபடி திருவண்ணாமலைத் தலத்துச் சோதிவடிவாக நின்றதைக் குறித்ததெனினு மாம். திரிச்சிராப்பள்ளியில் சதாசிவமூர்த்தமாக எழுந்தருளியிருக்குஞ் சிவபெருமான் அவ்வூர் வணிகன் மனைவியாகிய அரதனவதி என்பாளுக்குத் தாயாகிவந்து மருத்துவம் பார்த்து அருள் செய்தமையால் தாயுமானேஸ்வரர் எனப் பெயர் பெற்றார். இறைவன் எல்லார்க்குந் தந்தையாய் இருப்ப தன்றித் தாயுமாய் இருப்பது இவ்வூரில் வெளிப்படக் காட்டியருளினர். 'தாயுமானவர்' என்றதில் உள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. 'சிரகிரி' இது திரிசிரன் என்னும் அரக்கனால் ஆளப்பெற்றமையால் திரிசிரா மலை, திரிசிரகிரி, சிரகிரி என்பவனவாதிப் பெயர்கள் வந்தன. இனி மேரு மலையின் மூன்று சிகரங்களில் ஒன்று ஆதிசேடன் வாயுபகவான் இவர்க்கும் நேர்ந்த சண்டையால் இங்குவந்து விழுந்ததென்னும் புராணகதைபற்றி இதற்குச் சிரகிரி என்னும் பெயர் வந்ததென்பாரும் உண்டு. இதன்படி பொருள்கொள்ளின் மேருவின் சிரமாகிய (சிகரமாகிய) கிரி எனப் பொருள் பெறும். முன்னையது திரிசிரன் அரசிருக்கையாக இருந்தகிரி என்பது பொருளாகும். இந்நூலாசிரியர் இத்தலத்தே பிறந்தவர். இதுபற்றியே இவர் பெற்றோர் இவர்க்குத் **தாயுமானவர்** எனப் பெயரிட்டனர். இது காரண இடுகுறிப்பெயர்.

10

மடநெஞ்சே! பெண்கள் மயக்கில் தளராமல் இராமேச்சுரத் தெழுந்தருளி யிருக்கும் இராமநாதனை வணங்குவாயாக என்கின்றார்

காதி லோலையை வரைந்துமேற் குமிழையுங்
கறுவிவேள் கருநீலப்
போது போன்றிடுங் கண்ணியர் மயக்கிலெப்
போதுமே தளராமல்
மாது காதலி பங்கனை அபங்கனை
மாடமா ளிகைசூழுஞ்
சேது மேவிய ராமநா யகன்றனைச்
சிந்தைசெய் மடநெஞ்சே.



(ப-ரை) மடம் - அறியாமையையுடைய, நெஞ்சே - மனமே!, காதில்-செவியில் அணிந்த, ஓலையை-பொன் ஓலையினை, வரைந்து-தொலைத்து, மேல்-அதற்குமேல், குமிழையும் - குமிழம்பூவையொத்த மூக்கினையும், கறுவி-சினந்து, வேள்-மன்மதனின், கரு-கருமைநிறத்தையுடைய, நீலம்-நீலோற்பலமாகிய, போது-பூவினை, போன்றிடும் - ஒத்திருக்கின்ற, கண்ணியர் - கண்களையுடைய மாதர்களின், மயக்கில்-மயக்கத்தில் அகப்பட்டு, எப்போதும்-எக்காலத்தும், தளராமல் - தளர்ச்சி அடையாமல், மாது - உமாதேவியாகிய, காதலி-ஆசைநாயகியை, பங்கனை - இடதுபாகத்தில் உடையவனை, அபங்கனை - நாசமில்லாதவனை, மாடம்-மாடங்களும், மாளிகை-மாளிகைகளும், சூழும்-சூழ்ந்திருக்கிற (இராமேச்சுரத்து எழுந்தருளி இருக்கும்), இராமநாயகன் தனை - இராமநாதனை, சிந்தைசெய்-தியானிப்பாயாக எ-று.

(வி-ரை) 'காதி லோலையை வரைந்து' என்றதில் 'ஓலை' என்பது பொன்னாற்செய்த ஓர் காதணி. குண்டலம், குழைபோல அணியப்பெறுவது காதில் அணி அணிவதற்காகச் செய்த தொளையில் பனையோலையைச் சுருட்டி வைத்து காதுத் தொளையைப் பருமனாக்குவதுண்டு. துளை பெரிதானதும் அப் பனையோலைச்சுருள் இருந்த இடத்தில் பொன்னாலும், பொன்னாற் செய்து மணிகள் பதித்தும் வட்ட வடிவமாகச் செய்து அணிவர். அவ்அணி பனைஓலைச்சுருள் இருந்தஇடத்தில் வைக்கப்பெறுதலின் 'ஓலை' என்ற பெயராயிற்று. இதனைக் கம்மல் எனவுங் கூறுவர். சிறிதா யிருப்பதனைத் தோடு எனவுங் கூறுகின்றனர். ஆடவரை மயக்கற்பொருட்டு, தனக்கு மிகு அழகு செய்தற்பொருட்டு அணியப் பெறுதலின் பொன்னோலை என்றும். இதுபற்றியே பிறரும் 'இருபெருங் குழையிட்ட பொன்னோலையின் வாசியே' என்றனர். 'வரைந்து' இது சிலுக்கிடல் என்னும் பொருளது. சிலுக்கிடலாவது-துளைத்தல். மேற்கொண்டு-வென்று எனப் பொருள் கூறலுமாம். 'குமிழையும்' என்றது நாசியை. மூக்கு குமிழமலர்போல இருத்தலின் உவமைஆகுபெயராய் மூக்கிற்குக் குமிழ் என்ற பெயர் ஆயிற்று. 'குமிழையும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மையாக வந்தது. 'கறுவி' என்றது கோபித்து என்ற பொருளது. கண்கள் காதளவும் ஓடி திரும்பி மூக்கில் வந்து முட்டுதலால் 'காதி லோலையை வரைந்து மேற்குமிழையுங் கறுவி' என்றார். இதனை, "காதள வோடிய கலகக் கண்ணார்" என்ற **பெரியார்** வாக்குகளாற் காண்க.

கருநீலப்பூ-என்றது, கருத்த நிறத்தையுடையதாகிய நீலோற்பலத்தை. இது மன்மதன் மலர்ப்பாணங்கள் ஐந்தில் ஐந்தாவது பாணம், கொல்லுங் குணமுடையது. இது கண்ணுக்கு உவமப்பொருளாயிற்று; கண்ணின் கொடுமைதோன்ற, 'வேள் கருநீலப்போது போன்றிடுங் கண்ணியர்' என்றார். நீலோற்பலத்தின் தன்மையை,

"சூலக்காத்தர் திருவெங்கை வாணர்முன் சுட்டமதன்
நீலக்கணையிற் கைவைத்தா னினிச்சற்று நேரிற்பில்

காலர்க் கிரையிடு ... ... ... காரிகையார்
கோலக் களபக்குன் றன்றோ மருவக் குறுகுவதே"

என்ற **சிவப்பிரகாசர் வாக்கா**லும் அறிக. கண்ணை நீலோற்பலத்துக்கு ஒப்பிடுதலை,

"காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று"

என்ற **திருக்குறளா**லறியலாம். 'நீலுண் கண்ணாள்' என்பன வாதியால் அறிக.

'எப்போதுமே' என்றது இனி எக்தக்காலத்திலும் தளராமல் அதாவது ஒருகாலத்துந் தளராதபடி என்பது பொருளாம். 'மாது' என்றது உமா தேவியாரை. காதலி பங்கன் - காதலியாதலின் பங்களித்தான் என்பது தோன்றக் கூறினார். இனி மாதுமையாள் காதலித்துப் பங்கைப் பெற்றாளாதலின் மாது காதலிபங்கன் எனலும் ஆம். அபங்கன் - கேடில்லாதவன். 'பங்கனை யபங்கனை' இது முரண்டொடை. 'சேது' என்றது சேதுத் தலத்தை; இராமர் இலங்கைக்குச் செல்ல குரங்குகளைக்கொண்டு கட்டிய எழுநூற்று முப்பது யோசனை நீளமுள்ள பாலத்தை. இந்தத் தலம் இதற்குப் பக்கத்தே இருப்பதால் இப்பெயர் வந்தது. இராமரால் தாபித்துப் பூஜிக்கப்பெற்ற சிவபெருமானை இராமநாதன் என்றார். இராமர் இராவணனைக் கொன்ற காலத்து அப்பிரமகத்தி இராமரைப் பற்றிக்கொள்ள அத்தோடத்தை இராமர் சேதுவில் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூஜித்து நீக்கிக் கொண்டாரென்பது புராண வரலாறு. 'மடநெஞ்சே' இதில் 'நெஞ்சு' விளியுருபு ஏற்று நின்றது. மடம்-அறியாமை. இது நெஞ்சுக்கு அடைமொழி. இனி, இச்செய்யுளுக்கு சதா மாதர் மயக்கத்துத் தளராமல் சிலபோதாகிலும் ராமநாதனைச் சிந்தைசெய் என்பாரும் உண்டு. இதற்கு, இனி ஒருகாலத்தும் மயக்கத்துச் சிக்கித் தளராது இராமநாதனைச் சிந்தைசெய் எனக் கோடலே சிறப்புடைத்தாம். ஈதே ஆசிரியர் கருத்தமென்க. இச்செய்யுள் மாச்சீர், விளச்சீர், விளச்சீர், விளச்சீர், காய்ச்சீர் என ஆறுசீர்கள் கொண்ட அடி நான்குகொண்ட அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 'சேது' இது பாண்டிநாட்டுத் திவ்விய தலங்களிலொன்று. இது இராமநாதபுரஞ் ஜில்லாவைச் சேர்ந்தது. 11

தில்லை நடம்புரியுந்தேவே! நீ எங்கும் நிறைந்தவனாதலினால் உன்னாலே உன்னைக் காண்பதல்லால் என் அறிவாற் காணமுடியுமோ எனல்

அண்டமுமாய்ப் பிண்டமுமாய் அளவி லாத
வாருயிருக் கோருயிரா யமர்ந்தாயானால்
கண்டவரார் கேட்டவரார் உன்னா லுன்னைக்
காண்பதல்லால் என்னறிவாற் காணப் போமோ



வண்டுளப மணிமார்பன் புதல்வ னொடு
மனைவியொடுங் குடியிருந்து வணங்கிப் போற்றும்
புண்டரிக புரத்தினினா தாந்த மௌன
போதாந்த நடம்புரியும் புனித வாழ்வே.

**(ப-ரை)** வண்-வளப்பம்பொருந்திய, துளபம்-துளசிமாலையையும், மணி-கௌத்துபமணியையும் அணிந்துள்ள, மார்பன் - மார்பினையுடைய விஷ்ணு, புதல்வனொடும் - புத்திரனாகிய பிரமனொடும், மனைவியொடும் - மனைவியாகிய இலட்சுமிதேவியொடும், குடியிருந்து - குடியாக இருந்துகொண்டு, வணங்கி-பணிந்து, போற்றும் - துதிக்கும், புண்டரிக புரத்தினில் - புண்டரிகபுரம் என்னும் பெயரையுடைய சிதம்பரத்தில், நாதம்-நாதத்தத்துவத்தின், அந்தம்-முடிவாயுள்ள, மௌனம் - மோனநிலையில், போதாந்தம் - அறிவினுக்கெட்டாத, நடம்-திருநடனத்தை, புரியும்-செய்கின்ற, புனிதம் - பரிசுத்தமாகிய, வாழ்வே-வாழ்வாகி இருப்பவனே!, அண்டம்-அண்டவடிவம், ஆய் - ஆகியும், பிண்டம்-பிண்டவடிவம், ஆய்-ஆகியும், அளவு-எண்ணிக்கை, இலாத-இல்லாத ஆர்-நிறைந்த, உயிருக்கு-ஆன்மாக்களுக்கு, ஓர்-ஒப்பற்ற, உயிராய் - உயிராகியும், அமர்ந்தாய்-அமர்ந்திருப்பாய், ஆனால் - ஆனால், கண்டவர் - (தேவரீரை) கண்டவர், ஆர்-யார், கேட்டவர்-(தேவரீரை) கேட்டவர், ஆர்-யார், உன்னால்-தேவரீரால், உன்னை-தேவரீரை, காண்பது-தரிசிப்பது, அன்றி-அல்லாமல், என் - அடியேனின், அறிவால் - சிற்றறிவால், காணப்போமோ - தரிசிக்கக் கூடுமோ? எ-று.

**(வி-ரை)** இறைவன் அண்டாண்ட பிண்டங்களாகவும், அவற்றுனுள்ளும் புறம்பும் சரியாய் நிற்பவனாதலினாலும் உயிர்க்கு உயிராயும் இருப்பவனாதலினாலும், 'அண்டமுமாய்ப் பிண்டமுமா யளவிலாத ஆருயிருக் கோருயிரா யமர்ந்தாய்' என்றார். இதனை,

"விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க" எனவும்,

"வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே" எனவும்,

"எல்லா உலகு மானாய் நீயே"

எனவும், **தேவாரத்தா**னும் அறிக.

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா
னுலகே ழெனத்திசை பத்தெனத் தானொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"

எனவுங் கூறிய **மணிவாசகர் திருவாக்கா**னும், இறைவனை ஊன்கண்ணால், செவியால் காண்டலரிது. இதனை,

"மணிகொண்ட நெடுங்கடலுள் விழிவளரும் மாயவனும்
அணிகொண்ட புண்டரிக மகலாத சதுமுகனும்
ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே"

என்ற **சைவ எல்லப்பநாவலர் திருவாக்கானும்** அறிக.

'கண்டவரார் கேட்டவரார்' என்பது. 'கேட்டவரார்' என்பதற்கு நின்னுரையை நேரிற் கேட்டவரார் எனவும், நின்னைக் கண்டதாகச் சொல்லியதைக் கேட்டவர்யார் எனவும் நின் இயல்புமுரைக்கக் கேட்டவர் யார் எனவும் பொருள்தந்துநின்றது. இதனைக் 'கண்டவர் விண்டிடார்' என்ற பெரியார் கூற்றானும் அறிக. இறைவனைக் காண இறைவன் அருள்வேண்டும், அவனை உணர அவன் அருள் வேண்டும் ஆதலின், 'உன்னை யுன்னைக் காண்பதல்லா லென்னறிவாற் காணப்போமோ' என்றார். இதனை,

"அவனருளாலே யவன்றாள் வணங்கி"

என்றும்,

"காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"

என்றும் கூறியவைகளால் தெளியலாம்.

பசுக்களின் அறிவு சிற்றறிவாதலின் பேரறிவுப்பிழம்பாகிய இறைவனைக் காணமுடியாதென்பார் 'என்னறிவாற் காணப் போமோ' என்றார். 'வண்டுளப மணிமார்பன்' என்பதற்கு வளப்பம்பொருந்திய துளபமாலையையணிந்த அழகியமார்பன் எனப் பொருள்கொள்வாருமுண்டு. 'மணி' என்பது அழகையும், கௌத்துவமணி எனவும் இருபொருள்தந்து நின்றது. 'வண்டுளப மணிமார்பன் புதல்வனொடு மனைவியொடும்' என்றது விஷ்ணு தன் புத்திரனாகிய பிரமனோடும் மனைவியாகிய திருமகளோடும் வந்து குடியிருந்ததை. ஓர்யுகத்தில் மாலின் உந்திக்கமலத்திலிருந்து பிரமன் பிறந்தனனாதலால் பிரமன் மாலுக்குப் புத்திரனாயினன். 'புண்டரிகபுரம்' என்றது சிதம்பரத்தை. புண்டரிகம்-புலி; இதனானே சிதம்பரத்திற்குப் புலியூர் என்னும் பெயர் வந்தமை காண்க. சிம்பரத்தில், புலியுருவாகிய வியாக்கிரபாதர் சிவனைப் பூசித்தகாரணம்பற்றி இப்பெயர் வந்தது. இனி, விராட்புருடனின் இருதயத்தானமாகச் சிதம்பரம் விளங்கலின் 'புண்டரிகபுரம்' எனப் பெயர் எய்திற்றெனலுமாம். 'புண்டரிகம்' என்றது ஈண்டு இருதயகமலத்தைக் குறிக்கும். இறைவன் நாததத்துவத்து முடிவிலும், மோன தொந்தத்து முடிவிலும் நடிப்பவன் ஆதலின் 'நாதாந்த மௌன போதாந்த நடம்புரியும் புனிதவாழ்வே' என்றார். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்ற இலக்கணப்படி மொழியாதிருந்த வேதாந்தமுடிவும், சித்தாந்த முடிவும், யோகாந்தவந்தமுடிவும், காலாந்தமுடிவும் கொள்ளலுமாம். இனி இறைவன் திருநடனம் சொல்லிறந்த தூயவிடத்தும், மன விகற்பமற்ற அறிவின் முடிவிலும் நிகழ்வதாகலின், 'நாதாந்த மௌன போதாந்த நடம் புரியும் புனிதவாழ்வே' என்றார் இந்தச் செய்யுள் காய்ச்சீரைந்தும் கடையில் மாச்சீர் இரண்டும் ஆக எழுசீர்கொண்ட அடி நான்குகொண்ட எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.





இறைவனே! அடியேனின்மனம் சலனம்அற்று இருக்கும்படி சும்மா இருக்குந் தன்மையை அடைவேனோ என்கின்றார்

பொறியிற் செரியைம் புலக்கனியைப்
புந்திக் கவராற் புகுந்திழுத்து
மறுகிச் சுழலு மனக்குரங்கு
மாள வாளா விருப்பேனோ
அறிவுக் கறிவாய்ப் பூரணமாய்
அகண்டா னந்த மயமாகிப்
பிறிவற் றிருக்கும் பெருங்கருணைப்
பெம்மா னேஎம் பெருமானே.

(ப-ரை) அறிவுக்கு - அறிவிற்கு, அறிவு - அறிவு, ஆய் - ஆகி, பூரணம்-வியாபகம், ஆய்-ஆகி, அகண்ட - கண்டிக்கப்படாத, ஆனந்தம் - சுகம், மயம்-வடிவம், ஆகி-ஆகி, பிரிவு - நீக்கம், அற்று - இல்லாதபடி, இருக்கும் - இருக்கின்ற, பெரும் - பெரிய, கருணை - கருணையையுடைய, பெம்மானே - பெருமானே!, எம்-எமது, பெருமானே-இறைவனே!, பொறியில் - ஐம்பொறியில், செறி-அமைந்துள்ள (தொங்கும்), ஐம்-ஐந்து, புலம்-புலன்களாகிய, கனியை-பழங்களை, புந்தி-புந்திஎன்னும்படியான, கவரால் - மரக்கப்புகளின்வழியாய், புகுந்து-ஏறிநுழைந்து, இழுத்து - இழுத்து, மறுகி-மயங்கி, சுழலும் - சுழலுகின்ற, மனம்-மனமாகிய, குரங்கு-குரங்கு, மாள-மடியும்படி, வாளா-சும்மா, இருப்பேனோ-இருந்திடுவேனோ? எ-று.

(வி-ரை) 'பொறி' என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பஞ்சேந்திரியங்களை. 'ஐம்புலன்' என்றது சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்னும் ஐம்பொறிகளால் முறையே உணரப்பெறும் உணர்ச்சியை. 'புந்தி' என்றது 'புத்தி' என்பதன் மெலித்தல்விகாரம். புந்தி-அந்தக்கரணம் நான்கனுள் ஒன்று. இது மனத்தால் நினைக்கப்படுவதை விசாரிக்கும் இயல்பது. ஈண்டு பொறியைத் தருவாகவும், புலனைக் கனியாகவும், புந்தியைக் கிளைகளாகவும், மனதைக் குரங்காகவும் வர்ணித்தார். 'புலக்கனி' 'மனக்குரங்கு' என்பன முறையே 'புலனாகியகனி' 'மனமாகிய குரங்கு' என முறையே விரிதலின் பண்புத்தொகை. 'புலக்கனி' என்றதனால் பொறி மரமாயிற்று. புந்திக்கவர் - புந்தியாகியகவர்; இதுவும் பண்புத்தொகை. லௌகீக விவகாரங்களினால் மனம் எப்பொழுதும் சஞ்சலமுற்றும், ஓரிடமிருந்து ஓரிடந் தாவிக்கொண்டுமிருப்பதனால் மனத்தைக் குரங்குக்கு ஒப்பிட்டார். இதுபற்றியன்றோ **உபநிடதக்காரரும்**,

"பொன்போல விலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காம்
புத்திவிசா ரித்தறியும் பொலிவதனா லரவாந்
தன்போல விலையெனலா லகங்கார மதமாத்
தனைநிகராஞ் சித்தமொரு தன்மையினா னுப

மின்போலுஞ் சலனமன மசையாம னிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து
வன்போடு வருமகங்கா ரத்தினையுங் கடிந்தால்
வைத்தவிடத் திருந்தசித்த மகத்துவமுந் தருமே" என்றார்.

இறைவன் அறிவுக்கு உள்ளாகியிருந்து அறிவை அறியச்செய்வன் ஆதலின், இறைவனை 'அறிவுக்கறிவாய்" என்றார். இறைவன் எங்கும் நிறைந்து, பரந்து, இன்பப்பேரொளிமயமாக நிற்பவன் ஆதலின் 'பூரணமா யகண்டானந்த மயமாகி' என்றார். இறைவன் எள்ளுக்குள் எண்ணெய் போல் அனன்னியமாக இருப்பவன் ஆதலினாலும் கருணைசொரூபனாதலினாலும், எல்லார்க்குந் திருவருளைச் செய்பவனாதலினாலும் 'பிரிவற்றிருக்கும் பெருங்கருணைப்பெம்மானே' என்றார். ஈண்டு 'பெம்மான்' என்றது பெரியவன் என்ற பொருளிலும், 'பெருமான்' 'கடவுள்' என்ற பொருளில் வந்தது. 'மனக்குரங்குமாள' இதில் 'மாள' என்றது மடிய, சாக, இறக்க என்னும் பொருளில்வந்து நின்றது. வாளா - சும்மா என்ற பொருளது; சும்மா இருத்தலாவது வாதனையற்று மோனத்து இருத்தலை. பெம்மான், பெருமான் என்பன விளியுருபு ஏற்று பெம்மானே, பெருமானே என நின்றன. இச்செய்யுள் மாச்சீர், மாச்சீர், காய்ச்சீர் மாச்சீர், மாச்சீர் காய்ச்சீர் என ஆறுசீர்கள்கொண்ட அடிகள் நான்கின்வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 13

இறைவனே! நின்னை அடியேன்பற்றி நின் அருளால் கடல்நீர்போற் சித்தந் தெளியப் பெறுவேனோ என்கின்றார்

உரையுணர் விறந்து தம்மை
யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங்
காட்டிடு முகிலே மாறாப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த
பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந்
தெளிவனோ சிறிய னேனே.

(ப-ரை) உரை-சொல்லும், உணர்வு-அறிவும், இறந்து-இறக்கப்பெற்று, தம்மை - தம்மை, உணர்பவர் - உணர்பவர்களாகிய ஞானிகளது, உணர்வின்-அறிவின், ஊடே-உள்ளே, கரை-எல்லை, இலா-இல்லாத, இன்பம் - ஆனந்தம், வெள்ளம்-பெருக்கை, காட்டிடும்-காட்டுகின்ற, முகிலே-மேகமே!, மாறா-மாறுபடாத, பரை - திருவருட் பராசத்தி, எனும் - என்று சொல்லப்படுகின்ற, கிரணம்-கதிர், சூழ்ந்த-சூழப்பெற்ற, பானுவே-சூரியனே!, நின்னை-தேவரீரை, பற்றி-பற்றி, திரை-அலை, இல்லா-இல்லாத, நீர்போல - கடல் நீரைப்போல, சிறியனேன்-சிறியவனாகிய அடியேன், சித்தம்-மனம், தெளிவனோ - தெளிவு அடைவேனோ? எ-று.



(வி-ரை) 'உரையுணர் விறந்து' என்றது சொல்லும் மனமும் இறந்த தன்மையை. உரை உணர்வு இறந்து நின்றவர்களுக்குப் பரதரிசனமும், ஆன்மதரிசனமும் உண்டாம். ஆன்மதரிசனமாவது-தனுவாதி தத்துவங்கள் தானல்லாமையுந் தான் வேறாகி நிற்றலையுங் கண்டறிதல். அறிவுக்கறிவாய், உணர்வுக்குணர்வாய் இருக்கும் இறைவன் அருளால் ஆன்மதரிசனத்தைக் கண்டவர், பரமான்ம தரிசனத்தையுங் காண்பர். இவ்வாறு ஆன்மதரிசனத்தையும், பரமான்ம தரிசனத்தையும் இறையருளாற் கண்டவர் பேரானந்த வடிவனாகிய இறைவனோடு அனன்னியமாகக் கூடிச் சோகம்பாவனையில் ஒன்றாகத் '**தாடலைபோல்**' இருப்பர்; இது பேரின்பநிலையாகும். இதுவே முத்திநிலை. இதுகொண்டே 'தம்மை யுணர்பவ ருணர்வி னூடே கரையிலா வின்பவெள்ளங் காட்டிடு முகிலே' என்றார். இன்பமயமாகி இன்மழை பொழிந்து இன்பவெள்ளத்தைப் பெருக்குவோனாதலின் 'முகிலே' என்றார். கிரணங்களும் கதிரவனும் வேறுவேறாகக் காணப்படினும், கதிரவனின்றிக் கிரணமில்லை. கிரணமில்லாது கதிரவனில்லை. அதுபோல் இறைவன்பாலுள்ள திருஅருட்சத்தி அனன்னியம் சத்தியின்றிச் சிவமில்லை, சிவமின்றிச் சத்தியில்லை என்பார் 'பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே' என்றார். 'திரையிலா நீர்' என்பது அலையில்லாக் கடலை; நீர் - ஈண்டு ஆகுபெயராய்க் கடலைக் குறித்தது. சித்தந்தெளிய ஞானமுதிக்கும், ஞானமுதிக்கச் சிவானந்தம் பெருகுமாதலின் 'திரையிலா நீர்போற் சித்தந் தெளிவேனோ சிறியனேனே' என்றார். இதனானன்றோ இவ்வாசிரியரும் பிறிதோரிடத்தே,

"சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே" என்றார்.

தன் அறிவின் எளிமை தோன்ற, மாயையின் ஆற்றலைக் கடக்க வலியின்மை தோன்ற 'சிறியனேனே' என்றார். 'தெளிவனோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. பானு-சூரியன். இச்செய்யுள் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் ஆக ஆறுசீர்கொண்ட அடிகள் நான்கான்வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஏ-ஈற்றசை. 14

திருவருளோடு கலந்து சிவானந்தத்தைப்பெற இன்பநிதந்து வைத்தருளிய மௌனகுருவின் சேவடியைச் சிந்திப்போம் என்கின்றார்

கேவல சகல மின்றிக்
கீழொடு மேலாய் எங்கும்
மேவிய வருளின் கண்ணாய்
மேவிட மேலா யின்பம்
தாவிட வின்பா தீதத்
தனியிடை யிருத்தி வைத்த
தேவெனு மௌனி செம்பொற்
சேவடி சிந்தை செய்வாம்.

(ப-ரை) கேவலம்-மறத்தலும், சகலம்-நினைத்தலும், இன்றி - இல்லாத படி, கீழொடு - கீழினோடு, மேலாய் - மேலாகி, எங்கும் - எல்லா இடத்தும், மேவிய - பொருந்திய, அருளின் - அருளினுடைய, கண்-கண், ஆய் - ஆகி, மேவிட-பொருந்தவும், இன்பம் - ஆநந்தம், மேலாய் - அதிகரித்து, தாவிட-உயரவும், இன்பம்-ஆநந்தம், அதீதம்-அதீதமாகிய, தனியிடை-தனியிடத்தில், இருத்தி-அடியேனை இருக்க, வைத்த-வைத்த, தே-தெய்வம், என்னும் - என்கின்ற, மௌனி - மௌனகுருவின், செம்பொன் - செம்பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த, சேவடி - செவந்த திருப்பாதங்களை, சிந்தைசெய்வாம் - சிந்திப்பாம்; எ-று.

(வி-ரை) இறைவன் மறப்புநினைப்பில்லான், கீழ்மேல் இல்லான், எங்குமாய்உள்ளான், திருவருள் திருமேனியுடையான் ஆதலின் 'கேவல சகலமின்றிக் கீழொடு மேலா யெங்கும் மேவிய வருளின் கண்ணாய்' என்றார். 'இன்பாதீதநிலை' என்றது சிவானந்தநிலை பரமான்மதரிசனநிலை என்பதாம். இந்நிலையில் பேரின்பந் துய்ப்பாராதலின் 'மேலா யின்பந்தாவிட' என்றார். பக்குவிகட்கு இறைவனே ஞானாசிரியனாகவந்து அருள்செய்தலினால் 'தேவெனு மௌனி' என்றார். திருவருட்பேறு சித்தித்தற்கு முத்திவாழ்வுறற்குக் குருவின் திருவடியே துணையாதலின் 'செம்பொற் சேவடி சிந்தை செய்வாம்' என்றார். செம்பொன்சேவடி-செவ்வியபொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த சேவடி என்றால் 'செம்பொன்' என்பது அடையடுத்த ஆகுபெயராயிற்று. இனி, இதற்கு செம்பொன் நிறமுடைய எனப் பொருள் கோடலும் ஒன்று. இனி, செவ்வியதும் அழகியதுமாகிய சேவடி என்று பொருள்கோடலும் ஒன்று. இச்செய்யுளால் குருவாகவந்த இறைவனைத் துதித்தார். பிறரும்,

"பாச மைந்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசு மெழ்வகைப் பிறப்புனக்கிலை யெனப்பேசித்
தூசு நீக்கிய சுயம்பிர காசனைத் தொழுவாம்"

"தாரணி யவர்க்கு நாலாஞ் சத்தினி பாதமெய்த
ஆருணி போலத் தோன்றி யொருமொழி யாலெனக்குக்
கோரணி காட்டு மாறு சமயத்தின் கோளைநீக்கிப்
பூரண சொரூபங் காட்டும் புண்ணியன் பொலந்தான்போற்றி"

என்றலுங் காண்க. **(வள்ளலார் சாத்திரம்)**

'தனியிடை' என்றது ஒப்பற்ற இடம் என்றபொருளது. 'மௌனி' என்றது மௌனதேசிகரை. 'சேவடி' இது செம்மை + அடி என இரு சொல் ஒருசந்தி. 'ஈறுபோதல்' என்ற விதியால் ஈறுபோய், ஆதிநீடல் என்ற விதியால் சேம் என நின்று, இனையவும் என்ற விதியால் மகரங் கெட்டு சே என நின்றது. 'செய்வாம்' - இது தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று. இச்செய்யுள் முந்திய செய்யுள்போலவந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.





இறைவா! இவ்வுலகி னியல்பறிந்திலனே எனல்

நேற்றுளா ரின்று மாளா
நின்றனர் அதனைக் கண்டும்
போற்றிலே னின்னை அந்தோ
போக்கினேன் வீணே காலம்
ஆற்றிலேன் அகண்டா னந்த
வண்ணலே அளவின் மாயைச்
சேற்றிலே யின்னம் வீழ்ந்து
திளைக்கவோ சிறிய னேனே.

(ப-ரை) நேற்று - நேற்றையதினத்தில், உளார்-இருந்தவர்கள், இன்று-இன்றையத்தினம், மாளாநின்றனர்-மடிந்தனர், அதனை-அத்தகைய நிலையாமையை, கண்டும் - கண்ணுக்குநேரே கண்டும், நின்னை - நித்தியனாகிய தேவரீரை, போற்றிலேன் - வணங்காதிருக்கின்றேன், அந்தோ - ஐயோ! காலம்-காலத்தை, வீணே - வீணாகவே, போக்கினேன் - கழித்தேன் (இனி), ஆற்றிலேன் - சகித்திடேன், அகண்டம் - கண்டிக்கப்படாத, ஆனந்தம் - சுகத்தையூட்டும், அண்ணலே-பெரியோனே!, சிறியனேன்-சிறியேன், அளவு - அளவு, இல்-இல்லாத, மாயை-மாயையாகிய, சேற்றிலே-சேற்றிலே, வீழ்ந்து-விழுந்து, இன்னம்-இன்னமும், திளைக்கவோ-துன்பத்தை யனுபவிக்கவோ? எ-று.

(வி-ரை) நீரின் மேலெழுத்துப்போன்று நிலையில்லாதது இந்தத் தேகம் என்பார் 'நேற்றுளா ரின்று மாளா நின்றனர்' என்றார். இந்தக்கருத்தை,

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்ற **திருக்குறளோடு** அடி யொப்பிட்டுக் காண்க. இன்னும்,

"வீற்றிருந்தா ளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா னின்றுவெந்து நீறானான்—பாற்றெளிக்க
எல்லீரும் வாருங்க ளேதென் றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம்"

என்ற **பட்டினத்தடி**கள் வாக்கையும் ஒப்பிட்டுக் காண்க.

அழிவில்லாத முத்தியின்பம் இருக்க அதனைத்தரும் நித்தியனாகிய நீ யிருக்க உன்னையடைந்து அம்முத்தியின்பத்தைப் பெறாது நிலையில்லாக் காயத்தை நம்பி இப்பிரபஞ்சவாழ்வில் உழலுவேனோ என்பார் 'நேற்றுளா ரின்று மாளா நின்றன ரதனைக் கண்டும் போற்றிலே னின்னை யந்தோ போக்கினேன் வீணேகாலம்' என்றார். இதுகொண்டன்றோ **பட்டினத்தடி**களும்,

"விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகிறார் சுற்றத்தார்—பட்டதுபட்

டெங்ஙோ முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்" என்றார்.

இந்தச் செய்கை என்னாலேயே சகிக்க முடியாததாக இருக்கின்றதென்பார் 'ஆற்றிலேன்' என்றார். இறைவன் யாராலும் அண்ணற்கு அரிய பெரியன் ஆதலின் 'அண்ணலே' என்றார். இறைவன் பேரின்ப சொரூபன் ஆதலின் 'அகண்டா னந்த அண்ணலே' என்றார். 'மாயைச் சேறு' என்றது பிரபஞ்சமயக்கத்தை. 'இளைக்கவோ' என்றதில் ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. 'இன்னம்' என்றது வருங்காலத்தைக் குறித்து நின்றது. 'மாளா' இது மாண்டு என்ற பொருள் தருதலின் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இதுவும் முன்னைச் செய்யுள்போல வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஏ-ஈற்றசை. 16

விளக்குக்குமுன் இருள் நில்லாதுபோல, ஞானத்துக் கெதிரில்
அஞ்ஞானம் நில்லாது என்பது

போதமென்பதே விளக்கொவ்வும் அவித்தை பொய்யிரு
நீதி லாவிளக் கெடுத்திரு டேடவுஞ் சிக்கா [ளாம்
தாத லால்அறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்.

(ப-ரை) போதம் - அறிவு, என்பதே - என்பதுவே, விளக்கு-விளக்கை, ஒவ்வும் - ஒக்கும், அவித்தை - அஞ்ஞானமே, பொய் - பொய்யாகிய, இருள்-இருளை, ஆம்-ஒத்திருக்கும், நீது-தீமை, இல்லா-இல்லாத, விளக்கு-விளக்கை, எடுத்து-ஏந்திக்கொண்டு, இருள்-இருளை, தேடவும் - தேடினாலும், சிக்காது-கிடைக்காது, ஆதலால் - ஆகையால், அறிவாய் - ஞானமாக, நின்ற - நின்ற, இடத்து-இடத்தில், அறியாமை-அஞ்ஞானமானது, ஏதும்-சிறிதும், இல்லை-இல்லை, என்று-என்று, எம்-எமது, பிரான்-இறைவன் திருவாய்மலர்ந்தருளிய, சுருதியே-வேதங்களே, இயம்பும்-கூறும் எ-று.

(வி-ரை) 'போதம்' என்றது ஈண்டு ஞானஅறிவை. அறிவுக்கும் அறியாமைக்கும் இடம் ஒன்றேயாயினும் ஒன்று மிக்கவழி ஒன்று ஒன்றன் மறையும். எப்படி இருள் மிக்கவழி ஒளி மறைந்ததோ அதுபோல அஞ்ஞானம், மிக்கவழி ஞானம் மறைப்புண்ணும், எப்படி ஒளி மிக்கவழி இருள் மறைகின்றதோ அவ்வாறே ஞானம் மிக்கவழி அறியாமை மறைவுறும் என்பார், 'போதமென்பதே விளக்கொவ்வு மவித்தை பொய் யிருளாம்' எனவும், 'நீதிலா விளக்கெடுத் திருடேடவுஞ் சிக்கா ... ... ... ... ஏதுமில்லை" என்றார். அணையா விளக்கு மங்கா விளக்கு, தூண்ட மணிச்சுடர் விளக்கென்பார் 'நீதிலா விளக்கு' என்றார். 'சிக்கா' இது திசைச்சொல், கொங்குநாட்டுச்சொல். 'எம்பிரான் சுருதி' என்றது எம்பெருமானால் தரப்பெற்ற வேதம் என்பது பொருள். 'சுருதி' இது, ஒலிவடிவாய் இருப்பது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். எழுதாக்கிளவி, என்றதூஉங்



காண்க. 'இயம்பும்' இது முக்காலமும் உணர்த்தி நின்றது. 'போதமென்பதே விளக்கு' என்ற இக்கருத்தையே,

"இருளே யுலகத் தியற்கை யிருளகற்றுங்
கைவிளக்கே கற்றவறி வுடைமை—கைவிளக்கி
னெய்யேதன் னெஞ்சத் தறிவுடைமை நெய்தந்த
பால்போ லொழுக்கத் தவரே பரிவில்லா
மேலுலக மெய்து பவர்"

என்ற **அறநெறிச்சாரத்தா**லும் அறியலாம்.

'அவித்தை' இது அறியாமை, அஞ்ஞானம், என்றபொருளது; வடசொல். இது மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என வந்த ஐஞ்சீர் அடிகள் நான்குகொண்ட கலிநிலைத்துறை. 17

இறைவன் அளவையை யார் கூறவல்லார்; கடல் மணலை எண்ணினும்
இது அரிது எனல்

சுருதி யேசிவா கமங்களே உங்களாற் சொல்லும்
ஒருத னிப்பொரு ளளவையீ தென்னவா யுண்டோ
பொருதி ரைக்கட னுண்மண லெண்ணினும் புகலக்
கருத வெட்டிடா நிறைபொரு ளளவையார் காண்பார்.

(ப-ரை) சுருதியே - வேதங்களே!, சிவன் - சிவபெருமான் அருளிய, ஆகமங்களே - ஆகமங்களே!, உங்களால் - உங்களால், சொல்லும் - சொல்லப்படுகிற, ஒரு - ஒரு, தனி - ஒப்பற்ற, பொருள் - பொருளினுடைய, அளவை-அளவையானது, ஈது-இதுதான், என்ன-என்றுகூற, வாய்-வாக்கு, உண்டோ-உளதோ?, பொரு-மோதுகின்ற, திரை-அலைகளையுடைய, கடல்-கடலிலுள்ள, நுண்-நுண்ணிய, மணல் - மணலை, எண்ணினும் - எண்ணிக் கணக்கிட்டாலும், புகல-சொல்லவும், கருத-நினைக்கவும், எட்டிடா - எட்டாத, நிறை - பரிபூரணமாகிய, பொருள்-பொருளின், அளவை - அளவை, யார் - யாவர், காண்பார்-காண வல்லவராவர்? எ-று.

(வி-ரை) இறைவன் பெருமையை, இறைவன் அருளிய வேதாகமங்களாலும் உணரமுடியாது. ஏனெனில் இவ்வேதாகமங்களும் மாயாகாரியமாகிய வைகரியாதி வாக்கின் பகுதியாக இருத்தலினாலென்க. இறைவன், ஆன்மாவின் சிற்றறிவுக்கேற்பச் சிறிது காட்டியுளன். அதற்குமேல் காட்டினும் ஆன்ம அறிவு அறியுந் தரத்தன்று. இறைவன் அருளிய வேதாகமங்களின் பொருளை தேற முடியாதாராகி மயங்கி மயங்கி ஒவ்வொருவர் ஒவ்வொரு கொள்கையுடையராகிப் பலசமயங் கண்டதுங் காண்க. 'இனிச் சுருதியே! வேதங்களே! உங்களாற் சொல்லப்பெறும் இறைவனின் தன்மையை உங்கள் மூலமேனும் அறியவும் சொல்லவும் இவ்வுலகில் யார்க்கு அறிவு உண்டு, வாயுண்டு எனக் கோடலும் ஒன்று. 'வாயுண்டு' என்ற

மாத்திரையானே அவாய்நிலையால் 'அறிவுண்டு' என்று கோடலுமாம். அவ்வாறு இறைவனை அறியவும் சொல்லவும் முடியாதென்பதனை 'பொருதிரைக்கட லுண்மணை லெண்ணினும்' என்ற உவமைமுகத்தால் விளக்கினார். 'எண்ணினும்' என்றதன்கண்ணுள்ள உம்மை எண்ண இயலாமையைக் காட்டிற்று. சாத்திய மின்மையை 'கடல் நுண்மணல் எண்ணினும் புகல, சுருத எட்டிடா' என்றார். 'யார் காண்பார்' இது விடை தழுவிய வினா; எவருங் காணார் என்னும் விடையைப் பயந்து நின்றது. இதுபற்றியன்றே அப்பர் சுவாமிகள் "அரியானை" என்றார். பெரிய புராணத்து முதல் எடுத்துத் தந்தருளிய இறைவனும், "உலகெலா முணர்ந் தோதற் கரியவன்" என்றருளிச் செய்தார். 'சுருதியே சிவாகமங்களே' விளியுருபு ஏற்று நின்றது. 'சுருதி' என்றது இருக்காதி சதுர்வேதங்களை. 'சிவாகமம்' என்றது காமிகாதி ஆகமங்களை. இச்செய்யுள் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என ஐஞ்சீர் அடிகள் நான்குகொண்ட கலிநிலைத்துறை. 18

பிரபஞ்சம் பொய்ப்பொருள்; இறைவனே! நீ ஒருவனே மெய்ப்பொரு ளெனல்

மின்னைப் போன்றன வகிலமென்
றறிந்துமெய்ப் பொருளாம்
உன்னைப் போன்றநற் பரம்பொரு
ளில்லையென் றோர்ந்து
பொன்னைப் போன்றநின் போதங்கொண்
டுன்பணி பொருந்தா
என்னைப் போன்றுள வேழைய
ரையஇங் கெவரே.

**(ப-ரை)** அகிலம்-உலகங்கள், மின்னை - (நிலையாமையாலே) மின்னலை, போன்றன-ஒத்தன, என்று - என்று, அறிந்து - தெரிந்து, மெய் - உண்மை, பொருள்-பொருள், ஆம் - ஆகிய, உன்னை - தேவரீரை, போன்ற-ஒத்த, நல்-நன்மையைத் தருகின்ற, பரம்-மேலான, பொருள்-பொருள், இல்லை-இல்லை, என்று-என்று, ஓர்ந்து-ஆராய்ந்து, பொன்னை-பொன்னை, போன்ற-போலச் சிறந்த, நின்-தேவரீர் அருளிய, போதம்-ஞானத்தை, கொண்டு-கொண்டு, உன்-தேவரீரின், பணி-திருத்தொண்டை, பொருந்தா-பொருந்தாத, என்னை-அடியேனை, போன்று - ஒத்து, உள்ள - உள்ள, ஏழையர்-அறிவிலிகள், ஐய-ஐயனே!, இங்கு-இவ்வுலகத்தில், எவர்-யாவர்? எ-று.

**(வி-ரை)** உலகம் அநித்தியமானது, தோன்றி மறையுந் தன்மையது ஆதலின் 'மின்னலைப் போன்றன வகிலமென்றறிந்தும்' என்றார். இறைவனே மெய்ப்பொருள் அவனை ஒழிந்த மற்றையவெல்லாம் பொய்ப்பொருளாகும். மெய்ப்பொருள் கண்டார்க்கே வீடு சித்திக்கும். இதனை,



"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

என்னும் **திருக்குறளா** லறியலாம்.

இறைவன் அருண்மயனாதலாலும், இன்பமயனாதலாலும், ஒளிப்பிழம்பாதலாலும், 'உன்னைப்போன்ற நற்பரம் பொருளில்லை யென்றோர்ந்து' என்றார். 'பொன்னைப்போன்ற நின்போதம்' என்றது சிவஞானபோதத்தை. "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்றபடி இறைபணியினும் இன்பந் தருவது வேறு இல்லை யாதலினால் 'பணிபொருந்தா என்னைப் போன்றுள வேழைய ரையவிங் கெவரே' என்றார். 'ஓர்தல்' இது அளவைகளான் அளந்து தெளிந்து கொள்ளலைக் குறித்தது.

"எத்தனைதான் கற்றாலு மெத்தனைதான் கேட்டாலு
மெத்தனைசா தித்தாலு மின்புரு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது"

என்ற **சிவபோகசார** வெண்பாப்படி உலகம் பொய்யென் றுணர்ந்து அரனடிக் கன்புசெய்தால் இன்பஞ் சித்திக்கும் என்பது கருதி இக்கவி கூறியருளினர். 'மின்' இது மின்னுவது என்னுங் காரணம் பற்றி வந்த பெயர். இச்செய்யுளும் மேற்செய்யுள்போல் வந்த கலிநிலைத்துறையாம். ஏ-ஈற்றசை. 19

இறைவனே! நீ ஸகலவித பந்துவுமாவாய் எனல்

தாயுந் தந்தையு மெனக்குற வாவதுஞ் சாற்றின்
ஆயு நீயுநின் னருளுநின் னடியரு மன்றோ
பேய னேன்றிரு வடியிணைத் தாமரை பிடித்தேன்
நாய னேஎனை யாளுடை முக்கண நாயகனே.

**(ப-ரை)** நாயனே-நாதனே!, என்னை-அடியேனை, ஆள்-ஆளாக, உடை-உடைய, முக்கண்-திரிநேத்திரங்களையுடைய, நாயகனே-தலைவனே!, தாயும்-தாயும், தந்தையும்-தகப்பனும், எனக்கு-எனக்கு, உறவு - சுற்றமாவதும், சாற்றின் - சொல்லுமிடத்தில், ஆயும் - ஞானிகளால் ஆராயப்படுகின்ற, நீயும்-தேவரீரும், நின்-தேவரீரின், அருளும் - திருவருளும், நின் - தேவரீரின், அடியரும் - அடியார்களுமாம் (ஆதலால்), அன்றோ - அல்லவோ, பேயனேன்-பேயை ஒத்தவனாகிய அடியேன், திருவடி-தேவரீரின் திருவடியாகிய, இணை-இரண்டாகிய, தாமரை-தாமரைமலர்களை, பிடித்தேன்-பற்றினேன் எ-று.

**(வி-ரை)** ஆன்மாக்களுக்கெல்லாம் இறைவன் தந்தையாகவும் திருவருட்சத்தி தாயாகவும் இருத்தலினால் 'தாயுந் தந்தையும் ஆயுநீயு நின்னருளும்' என்றார். இதுபற்றியன்றே **மணிவாசகரும்**,

"அம்மையே யப்பா வொப்பிலா மணியே" என்றும்,

"வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும் வைத்து"

என்றார். சிவனடியார்களுக்குச் சிவனடியார்களே யுறவாதலின் 'எனக் குறவாவதும் நின்னடியரு மன்றோ' என்றார். இதுபற்றியன்றோ **பட்டினத்தடிகளும்,**

"தோடுண்ட கண்டனடியார் நமக்குத் துணையுமுண்டே" என்றும்,

"அடியா ருறவு மான்பூசை நேசமு மன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோ"

என்றும் கூறியருளினர்.

"அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனு மாமியுநீ
ஒப்புடைய மாதரு மொண் பொருளுநீ
யுயர்குலமும் சுற்றமு மோரூருநீ"

என்ற **தேவாரமும்** நோக்கத்தக்கது.

"விடையதூ ரிறையே தாதை மற்றவன்
பான்மி னெம தன்னை"

என்றதும் கருதற்பாலது. பிரபஞ்சமாயையிற் பட்டுத் திரிகின்றமையின் 'பேயனேன்' என்றார்.

"பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்து"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கையும் நோக்குக. இச்செய்யுளும் முன்னைச் செய்யுள்போலக் கலிநிலைத்துறை. 20

நிலையில்லாப் பொருள் கண்கூடாதலின் மனஞ்சலிக்கின்றது, நிலையில் அவ்வாறாகாமையின் அஃதில்லை எனல்

காந்தமதை யெதிர்காணிற் கருந்தாது செல்லும்அக்
காந்தத் தொன்றா
தோய்ந்தவிட மெங்கேதா னங்கேதான் சலிப்பறவு
விருக்கு மாபோல்
சாந்தபதப் பரம்பொருளே பற்றுபொரு ளிருக்குமத்தாற்
சலிக்குஞ் சித்தம்
வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமை நின்றநிலை
வாய்க்கு மன்றே.

(ப-ரை) சாந்தம்-சாந்தம் என்னும், பதம்-பதமாகிய, பரம்-மேலான, பொருளே-பொருளே!, காந்தத்தை-காந்தத்தை, எதிர்-முன்னே, காணின்-கண்டக்கால், கருந்தாது - இரும்பானது, செல்லும் - அக்காந்தத்திடத்தே சென்றுபோய் அணையும், அ-அந்த, காந்தத்து - காந்தத்துடன், ஒன்றா-பொருந்தாமல், எய்ந்த - ஒழிந்து நின்ற, இடம் - இடம், எங்கே - எங்கே?, (இல்லை என்பதாம்) அங்கே - அந்த இடத்தில், சலிப்பு-அசைவு, அறவும்-இல்லாமலும், இருக்குமா - இருக்கின்றவிதம், போல் - போல, பற்று-பற்றுதற்கு உரிய, பொருள் - விடயப்பொருள்கள், இருக்கும் - இருக்கின்ற, அத்தால்-அதனால், சித்தம்-மனமானது, சலிக்கும் - அசைவுறும், வாய்ந்த-எதிரீடாகப் பொருந்திய, பொருள்-விடயப்பொருள், இல்லை-இல்லை, எனின்-என்றால், பேசாமை - மௌனமாக, நின்ற-நின்ற, நிலை - நிலையானது, வாய்க்கும்-உண்டாகும் எ-று.



(வி-ரை) 'காந்தமது' இதில் அது என்பது பகுதிப்பொருள் விகுதி. 'கருந்தாது' என்றது கருமைநிறம் பொருந்திய உலோகமாகிய இரும்பை. தாது-உலோகம். அசைவற்று இருக்கும் இரும்பானது காந்தத்திற்கு முற்பட்ட மாத்திரத்தில் சென்றோடி அதனோடு ஒட்டிக்கொள்ளுகிறது. அது போலப் பிரபஞ்சத்து மாயாசம்பந்தமாகிய பொருள்கள் இருப்பதனால் என் மனது சலிக்கின்றது என்பார் 'காந்தமதை யெதிர்காணிற் ... ... ... ... சலிக்குஞ் சித்தம்' என்றார். மாயாகாரிய உலகமும், உலகப்பொருள்களும் இல்லையேயானால் மனச்சலன மில்லையாகும். மோன நிலையுண்டாகும் என்பார். 'வாய்ந்தபொரு ளில்லையெனிற் பேசாமை நின்ற நிலை வாய்க்கும்' என்றார். 'சாந்தபதப் பரம்பொருளே' என்றது மோனாந்த நிலையைத் தந்தருளும் இறைவனை. 'அத்தால்' இது அதனால் என்பதன் மரூஉ. 'பரம் பொருளே' இது விளியுருபு ஏற்று நின்றது. 'எய்ந்த' இது அகாரஈற்றுப் பெயரெச்சம். இதற்கு 'எய்' பகுதி. 'இருக்குமா' இது இருக்குமாறு என்றதன் கடைக்குறை விகாரம். இச்செய்யுள் காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் என ஆறுசீர்கள் கொண்ட அடி நான்கான்வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். அன்று - ஏ- ஈற்றசைகள். 21

அடிமையானவன் நிஷ்டையிலிருக்கப் பகிர்முக வாசனை வருவதேனெனல்

பொற்பு றுங்கருத் தேயக மாயதிற் பொருந்தக்
கற்பின் மங்கைய ரெனவிழி கதவுபோற் கவினச் [து
சொற்ப னத்தினுஞ் சோர்வின்றி யிருந்தநான் சோர்ந்
நிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொல் நிமலா.

(ப-ரை) நிமலா - மலமற்றவனே!, கற்பின் - கற்பையுடைய, மங்கையர்-பெண்களைப்போல, பொற்பு-அழகை, உறும்-பொருந்திய, கருத்தே-கருத்துத் தானே, அகமே - வீடாக, பொருந்த - பொருந்தவும், விழி - கண்கள், கதவு-கதவை, போல-போல, கவின-அழகுசெய்யவும், சொற்பனத்தினும்-கனவிலும், சோர்வு-தளர்ச்சி, இன்றி-இல்லாமல், இருந்த-வாழ்ந்திருந்த, நான்-அடியேன், சோர்ந்து-வாடி, நிற்பதற்கு-இருப்பதற்கு, இந்த-இந்த, வினை-கர்மம், வந்த-உண்டான, ஆறு-வகை, என்-யாது? எ-று.

(வி-ரை) இறைவன் அடியார்களின் மனத்தைக் கோயிலாகக்கொண்டு உறைபவன் ஆதலின் 'பொற்புறுங் கருத்தே' என்றார். 'பொன்போல

இலங்கு மனம்' எனப் பிறர் கூறியதுங் காண்க. 'அகம் மனம் மனையே பாவம் அகலிடம் உள்ளுமாமே' என்றதனால் 'அகம்' ஈண்டு வீடு எனக் கொள்ளப்பெற்றது. மனம் கருதுதற்கு இடமாக இருத்தலின் கருத்தெனப் பெற்றது. பெண்கள், கணவன் கற்பித்தபடி, மாமன் மாமியர் கற்பித்தபடி, தாய் தந்தையர் கற்பித்தபடி, பெரியார் கற்பித்தபடி வேதங் கற்பித்தபடி நடத்தல் வேண்டும். அவ்வாறு நடக்கும் பெண்களே கற்புடையர் எனப் பெறுவர். இதுகொண்டே 'கற்பின் மங்கையர்' எனச் சிறப்பித்துக் கூறினர். இதனைக் "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்ற சூத்திரத்தால் அறியலாம். 'சொற்பனத்தினும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. அதாவது நனவிற் சோர்வின்றி இருந்ததுபோலக் கனவிலும் சோர்வின்றியிருந்த என்ற பொருள்தந்து நின்றது. தேகம் உள்ள வரையிலும் பிராரத்துவகர்மம் விடாதாதலினால் நிட்டையில் இருக்கும் ஞானிகளுக்கும் பகிர்முகமாக ஒவ்வோர் காலம் நாட்டம் செல்லும் ஆதலினால் 'சோர்வின்றி இருந்தநான் சோர்ந்துநிற்ப தற்கிந்த வினைவந்த வாறென்கொல்' என்றார். கொல் - ஐயப்பொருளில் வந்த இடைச்சொல். இறைவன் அகத்தூய்மையன் ஆதலின் 'நிமலா' என்றார். மனத் தூயர் நடுநின்று உண்மை கூறுவர் ஆதலின் உள்ளவாறு கூறவேண்டும் என்பார் நிமலா என விளித்தார். இச்செய்யுள் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என ஐஞ்சீர் கொண்ட அடி நான்கான்வந்த கலிநிலைத்துறை. 22

நான் கற்றறிந்தவனாகியும் வினைவந்த காரண மறிகிலே னெனல்

வந்தவா றிந்தவினை வழியிது எனமதிக்கத்
தந்தவா றுண்டோ உள்ளுணர் வில்லைஅன்றித் தமியேன்
நொந்த வாறுகண் டிரங்கவு மில்லைகற்ற நூலால்
எந்த வாறினித் தற்பரா உய்குவே னேழை.

(ப-ரை) தற்பரா - தற்பரனே!, இந்த - இப்பொழுது அனுபவித்தற்குக் காரணமாயுள்ள, வினை-வினையானது, வந்த - வந்ததற்கு, ஆறு-விதம் இது, என-என்று, மதிக்க-எண்ண, உள் - மனத்தின், உணர்வு - உணர்ச்சி, தந்த-தேவரீர்கொடுத்த, ஆறு-விதம், உண்டோ - உண்டோ? (உளதோ), இல்லை-இல்லையே, அன்றி-அது அல்லாமலும், தமியேன்-அடியேன், நொந்த-வருந்திய, ஆறு-விதத்தை, கண்டு-பார்த்து, இரங்கவும்-இரங்கியருளவும், இல்லை-இல்லை, ஏழையேன் - எளியேனாகிய அடியேன், கற்ற-கற்ற, நூலால்-நூலறிவால், எந்த - எந்த, ஆறு - விதம், இனி - இனிமேல், உய்குவேன் - பிழைப்பேன் எ-று.

(வி-ரை) இப்பொழுது நான் அனுபவித்துவரும் பிறவித்துன்பத்திற்குக் காரணமாக உள்ள வினை வந்ததற்குக் காரணத்தினை நீ எனக்கு உணர்த்தவில்லை என்பார் 'வந்தவா றிந்தவினை வழியிது வெனமதிக்கத் தந்தவா றுண்டோ' என்றார். இதுபற்றியன்றோ பட்டினத்தடிகளும்,



"என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே" என்றார்.

இறைவன் அருட்டிருமேனியனாக இருக்க 'தமியே னொந்தவாறுகண் டிரங்கவு மில்லை' என்றது என்னையெனின் இறைவன் அவ்வவ் உயிர்க்குரிய கன்மங்களுக்கீடாக அருள் செய்பவன் ஆதலின் அவ்வுயிரின் பிராரத்துவ கன்மத்தால் தன்னிட்டை கலைந்து பகிர்முகப் படும்பொழுது தான் அனுபவித்த சிவானந்தம் தடைப்பட்டது பொறாது ஆறாமையாற் கூறியது என்க. இறைவன் தன்மை, முன்னிலை, படர்க்கையாக உணர்த்தாவிடின் கற்ற கல்வி யறிவாற் பயனில்லை. தனக்கருள் இறைவன் செய்திலன் என்பார் 'கற்றநூலா லெந்தவா றினித்தற்பரா வுய்குவேனேழை' என்றார். இச்செய்யுளும் முன்னைச் செய்யுள்போல் ஐஞ்சீரடி நான்குகொண்ட கலிநிலைத்துறை. 23

நீ நல்லாரின் சேர்க்கை வைத்தும் அருளிலையேல் நன்மனப்பேறு அடைவேனோவெனல்

சொல்லாலும் பொருளாலும் அளவை யாலும் [நாடி
தொடரவொண்ணா வருநெறியைத் தொடர்ந்து
நல்லார்க ளவையகத்தே யிருக்க வைத்தாய்
நன்னர்நெஞ்சந் தன்னலமு நணுகு வேனோ
இல்லாளி யாயுலகோ டுயிரை யீன்றிட்டு
எண்ணரிய யோகினுக்கு மிவனே யென்னக்
கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனிக்
கற்பகமே பராபரமே கயிலை வாழ்வே.

(ப-ரை) இல் ஆளியாய்-குடும்பியாகி, உலகோடு-உலகத்தோடு, உயிரை-உயிர்களை, ஈன்றிட்டு-படைத்து, எண்-எண்ண (நினைக்க), அரிய அரிதாகிய, யோகினுக்கும் - யோகமார்க்கத்திற்கும், இவனே - இவனே (இக்கடவுளே), என்ன - என்று கூறும்படி, கல் - கல்லாகிய, ஆலின் - ஆலமரத்தின், கீழ்-அடியில், இருந்த - இருந்து யோகமார்க்கத்தினைக் காட்டியருளிய, செக்கர்-செவந்த மேகத்தையொத்த (செவ்வானத்தையொத்த), மேனி - நிறத்தையுடைய, கற்பகமே-கற்பகத்தருவே!, பராபரமே-பராபரப்பொருளே!, கயிலை-திருக்கயிலாயவெற்பின்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற, வாழ்வே - செல்வமே!, சொல்லாலும் - வாக்கினாலும், பொருளாலும் - அருத்தத்தினாலும், அளவையாலும் - பிரமாண அளவைகளாலும், தொடர - பின்சென்று கண்டறிய, ஒண்ணா-முடியாத, அருள் - திருவருளின், நெறியை - மார்க்கத்தை, தொடர்ந்து-பின்சென்று, நாடி-கண்டு, நல்லார்கள்-ஞானிகள், அவை - சபையின், அகத்தே-இடத்தே, இருக்க-இருக்கும்படி, வைத்தாய்-வைத்தருளினை,

நன்னர் - நல்ல, நெஞ்சந்தன் - மனத்தினது, நலமும் - பேற்றையும், நணுகுவேனோ-அடைவேனோ? எ-று.

(வி-ரை) சொல்லும் பொருளும் அளவையும் மாயாசம்பந்த முடைமையின் மாயாரகிதனாகிய இறைவனின் திருவருள் நெறியைத் தொடரமுடியாதென்பார், 'சொல்லாலும் பொருளாலும் ... ... ... ... வொண்ணா வருணெறியை' என்றார். உம்மைகள் எண்ணும்மைகள். அறிவுடையரே, சிவஞானம் பெற்றவரே, அடியார்களே நல்லாராதலின் நல்லார்கள் என்பதற்கு ஞானிகள், சிவனடியார்கள் எனப் பொருள் செய்தாம். 'நணுகுவேனோ' என்றதின் ஈற்று ஓகாரம் ஐயவினாப்பொருளில் வந்தது. இறைவன் உலகிற்கு இல்லறநெறியைக் காட்டப் போகியாகியும், யோக மோனத்தைக் காட்ட யோகியாயும் இருந்தருளினர். இதனை,

"போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்
யோகியா யோகமுத்தி யுதவுதலதுவு மோரார்"

என்ற சித்தியார் செய்யுளாலும் அறியலாம். இதுகொண்டே, "இல்லாளியாயுலகோ ... ... ... ... கீழிருந்த செக்கர் மேனி" என்றார். இறைவன் அடியார்க்கு வேண்டுவது அளிப்போன் என்பதைக் குறிப்பிக்கவே 'கற்பகமே' என்றார். இறைவன் 'எரிவண்ணன்' 'செந்தீவண்ணன்' 'செக்கர் மேனியன்' 'தழல்வண்ணன்' 'சுடர் வண்ணன்' எனத் தமிழ்மறை முழங்குதலின் 'செக்கர்மேனிக் கற்பகமே' என்றார். 'அளவை' என்றது காட்சிப்பிரமாணம் முதலாகத் தருக்கநூலிற்கொண்ட அளவைகளை. 'அவை யகத்தே' 'அகத்தே' அகம் என்பது இடப்பொருள் தந்த ஏழனுருபு. ஏகாரம் தேற்றேகாரம். 'கல்லாலின் கீழிருந்த செக்கர் மேனி' என்றது தக்ஷிணாமூர்த்தத்தை. 'கல்லால்' என்றது வடவாலவிருக்ஷத்தை. 'செக்கர்' என்றது செவ்வானத்தை. இச்செய்யுள் காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர், மாச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர், மாச்சீர் என எட்டுச் சீர்கொண்ட அடி நான்கால் வந்த எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

24

சாக்கிர சொற்பன நிலைகளும் தத்துவங்களும் இச்செய்யுளிற் கூறுகின்றார்

சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்தும்
சத்தாதி வசனாதி வாயு பத்தும்
நீக்கமிலந் தக்கரணம் புருட னோடு
நின்றமுப் பானைந்தும் நிலவுங் கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயு பத்தும்
அடுத்தனசத் தாதிவச னாதி யாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே.



(ப-ரை) இந்திரியம் - மெய்யாதி இந்திரியங்கள், பத்தும்-பத்தும், சத்தாதி - சத்தம் ஆதி விடயங்கள் பத்தும், வசனாதி - வசனம் ஆதி விடயங்கள் பத்தும், வாயு-பிராணன் ஆதி வாயுக்கள், பத்தும்-பத்தும், நீக்கம்-நீங்குதல், இல்-இல்லாத, மனம்-மனம், ஆதி - ஆதியாகிய அந்தக்கரணங்கள் நான்கும், புருடனோடு-ஆன்மாவுடனே, முப்பான்-முப்பதோடு கூடிய, ஐந்தும்-ஐந்தும் ஆகிய தத்துவங்கள், நுதலினில்-லலாடஸ்தானத்தில், நின்ற-நின்ற அவஸ்தை, சாக்கிரம்-சாக்கிராவஸ்தை, ஆ-ஆகவும், நிலவும் - விளங்கிடும், கண்டத்தில்-கண்டஸ்தானத்தில், ஆக்கிய - உண்டாக்கப்பட்டிருக்கிற, சொப்பனம்-சொப்பனவஸ்தை, அதனில் - அதனில், வாயு - பிராணன் முதலாகிய வாயுக்கள், பத்தும்-பத்தும், அடுத்தன-அடுத்திருப்பதாகிய, சத்தாதி-சத்தம் முதலாகிய, வசனாதி-வசனம் முதலாகிய, ஆக-பத்து விஷயங்களாக, நோக்கு-காணப்படுகிற, கரணம்-அந்தக்கரணங்கள், புருடன் - ஆன்மா, உடனே-உடன், கூட-கூடிநிற்க, இருபத்தைந்து-இருபத்தைந்து தத்துவங்கள், ஆ-ஆகவும், நுண்ணியோர்-நுண் அறிவுடையோர்கள், நுவல்வர்-கூறுவர் எ-று.

(வி-ரை) 'சாக்கிரம்' என்றது விழிப்பிலே உள்ள நிலைவை. 'இந்திரியம் பத்து' என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும்; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகிய பத்தை. 'சத்தாதி வசனாதி' என்றது ஞானேந்திரியங்களின் விடயங்களாகிய சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஐந்தும்; கன்மேந்திரியங்களின் விடயங்களாகிய வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் ஐந்துமாம். 'வாயு பத்தும்' என்றது பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்னும் பத்துவாயுக்களை. 'அந்தக்கரணம்' என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கினையும். 'புருடன்' என்றது ஆன்மாவை. லலாடத்தானத்திலிருந்து நாக்கடிவரை சாக்கிரத் தானமாகும். கண்டந்தொடங்கி இதயம்வரை சொற்பனத் தானமாகும். சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவிகள் தொழில் செய்துகொண்டிருக்கும்; சொற்பனத்தில் இருபத்தைந்து கருவிகள் வேலைசெய்துகொண்டிருக்கும்; ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் லலாடஸ்தானத்தில் நிற்க மற்ற இருபத்தைந்து கருவிகளுடன் கண்டஸ்தானத்திலே நின்று சூக்குமதேகத்தால் பயன்கொண்டு அசிவனமாக நின்ற அவதாம் சொற்பனமென்றறிக.

"சாக்கிரந் தானே சாற்றக் கேண்மோ
மொழிதத் துவங்கள் முப்பத் தாறில்
சிவதத் துவங்கள் செப்பிடு மைந்தும்
புருட னொழிந்த புகல்க லாதிகள்
ஆறும் பூதம் ஐந்து மாக
ஈறெட் டாகிய எண்ணு கருவிகள்
நீங்க நின்ற எஞ்சிய கருவிகள்
இருப தடனே இயம்பு புறத்துக்

கருவி யறுபதில் கவின்வா யுக்கள்
பத்தும் பகரும் வசன மாதி
ஐந்து மாமுப்பத் தைந்தி னுடனே
நெற்றி யிடத்தே நேர நின்று
கண்டுகேட் டுண்டுயிர்ப் பின்றிக் காணு
மயக்கத் தழுந்தி மன்னி யாங்கே
அறியச் செலுத்த வாங்கரு விகள்தமை
கைவிட் டோங்கிக் காணவ தாமே"

என்றும், (நுண்பொருள்நூறு)

"சொற்பனந் தானே சொல்லுங் காலை
சாக்கிரத் திருந்த சாற்று கருவிகள்
முப்பத் தைந்தில் மூன்று நிற்கும்
ஞானேந் திரியமும் கன்மேந் திரியமும்
ஆகிய பத்தும் அமைய லலாடத்து
எஞ்சிய கருவிக ளிருபத் தைந்தும்
கண்டத் திருந்து கவின்குக் குமமாம்
உடலிற் பயனை யுண்டே யான்மா
அசீவன மாக வமைவது தானே" (நுண்பொருள்நூறு)

என்றும் கூறிய செய்யுட்களால் சாக்கிரம், சொற்பனங்களின் இலக்கணங்களை அறியலாம். இச்செய்யுளும் மேற்செய்யுள்போலவந்த எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். ஏ-ஈற்றசை. 25

சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் மூன்றவத்தைகளையும் தத்துவங்களையும்கூறி இதன் நிலைகளை ஞானிகளே அறிவர் எனல்

சுழுத்தியித யந்தனிற்பி ராணஞ் சித்தம்
சொல்லரிய புருட னுடன் மூன்ற தாகும்
வழுத்தியநா பியிற்றுரியம் பிராண னோடு
மன் னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்
அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியா தீதம்
அதனிடையே புருடனொன் றி யமரு ஞானப்
பழுத்திடும்பக் குவரறிவ ரவத்தை யைந்திற்
பாங்குபெறக் கருவி நிற்கும் பரிசுதானே.

(ப-ரை) இதயம்-இதயஸ்தானம், தன்னில்-தன்னில், சுழுத்தி-சுழுத்தி அவஸ்தையுளதாகும், (அவ்விடத்தே நிற்குங்கருவிகள்) பிராணன் - பிராண வாயுவும், சித்தம்-சித்தம், சொல்லரிய-சொல்லுதற்கரிதாகிய, புருடன்-புருடனுடனே, மூன்றதாகும்-மூன்றாகும், வழுத்திய-சிறப்பித்துச்சொல்லப்பட்ட, நாபியில்-உந்தியில், துரியம்-துரியாவத்தையானது தங்கியிருக்கின்றது, பிராண



னோடு-அவிடத்துப்பிராணவாயுவோடு, மன்னு-நிலைபெற்ற, புருடனும்-புருடனும், கூட-கூடியே, வயங்கா-பிரகாசியா, நிற்கும்-நிற்கும், அழுத்திடும்-அழுத்துதற்குரிய, மூலம்-மூலத்தானம், தன்னில்-தன்னில், துரியம் - துரியாதீத அவஸ்தையாகும், அதன்-அதன், இடை-இடத்தில், புருடன்-புருடனுடனே, ஒன்றி - பொருந்தி, அயரும் - அமர்ந்திருக்கும், அவத்தை - அவத்தைகள், ஐந்தில்-ஐந்தில், (பஞ்சாவத்தைகளில்) பாங்கு-பாங்கு, பெற-ஆக, கருவி-கருவி, நிற்கும்-நிற்கும், பரிசு-தன்மையை, ஞானம்-ஞானம், பழுத்திடும் - முதிர்ந்த, பக்குவர்-பக்குவிகள், அறிவர்-அறிவார்கள்; எ-று.

(வி-ரை) சுழுத்தி இதயத்தை இடமாகக்கொள்ளும், இங்கே பிராணன் சித்தம் புருடன் என்ற கருவிகள் மூன்றே என்பார், 'சுழுத்தி யிதயந்தனிற் பிராணன் சித்தம் சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்' என்றார். இதனை,

"சுழுத்தி நிலையைச் சொல்லுங் காலை
பேசிய வாயுவிற் பிராண னுடனே
அந்தக் கரணத் தாஞ்சித் தத்துடன்
புருட னிதயப் பொருட்டி லமைய
இருக்கு மவதா மென்றியம் பிடுவர்
இந்த நிலையில் முந்திய கருவி
இருபத் தைந்தில் எஞ்சிய மற்றை
இருபத் திரண்டு மிருக்கு மந்தக்
கண்டத் தென்பர் கவின்ஞா னியரே"

என்ற **நுண்பொருள்நூற்றுச்** செய்யுளாலும் அறியலாம்.

துரியாவஸ்தைக்கு இடம் நாபித்தானம். இங்கே பிராணவாயுவும் புருடனும் இருப்பர் என்பார், 'வழுத்தியநா பியிற்றுரியம் பிராணனோடு மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்' என்றார். இதனை,

"துரிய நிலையே சொல்லுங் காலை
அரிய சித்தம் அமைந்தித யத்துற
பிராண வாயும் பிறங்கு புருடனும்
நாபி யிடத்தே நயந்தொன் றின்றி
நின்ற வவதா நிலையா கும்மே"

என்ற **நுண்பொருள்நூற்றின்** செய்யுளாலும் அறிக.

துரியாதீதமானது மூலத்தானத்தில் ஆன்மா ஒன்றுமே தனித்து நிற்கும் நிலையாம் என்பார், 'அழுத்திடுமூ லந்தன்னிற் றுரியாதீதம் அதனிடையே புருடனொன்றியமரும்' என்றார். இதனை,

"துரியா தீதத் துகளறு நிலையைத்
தோன்றக் கிளப்பின் தூய நாபியில்
பிராணன் நிற்கப் பிறங்கு புருடன்

தனித்து வந்தே தகைசால் மூலத்
தானத் தமரு மவசரந் தானே"

என்ற **நுண்பொருள்நூற்றுப்பாவா** லறியலாம்.

சித்தம் நினைவிற்கு ஆதாரம். நினைவிற்கு அக்கினிவேண்டும். அக்கினிக்குத்தானம் இதயம் ஆகையால் சுழுத்திக்கு இடம் இதயமும் கருவி மூன்றுமாயின் நாபிக்குக்கீழ் பிராணவாயு இயங்காதாகையாலும், அப்புவை ஒழித்து எழுந்திராத ஆகையாலும் அப்புவுக்குத் தானம் நாபி ஆகையாலும் துரியத்திற்கு இடம் நாபியும், கருவி இரண்டும் ஆயினகாண்க. பிருதிவித்தானம் மூலாதாரம் ஆகையால் துரியாதீதத்திற்கு இடம் மூலத்தானம் ஆயிற்று என்பதறிக. இச்செய்யுளும் முன்னைய செய்யுள்போல எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். தான்-ஏ-ஈற்றசை. 26

இறைவனே! தேகத்தையேபேணும் அடியேன் அடியவர் கூடத்திருந்து அவர் சேடத்தை உண்டு உய்ய உன்னருள்வேண்டும் என்கின்றார்

இடத்தைக் காத்திட்ட சுவாவெனப்
புன்புலா லிறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினேன்
உன்னன்பர் தயங்கும்
மடத்தைக் காத்திட்ட சேடத்தால்
விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய்
நின்னருள் வேண்டும்.

(ப-ரை) விடத்தை - விஷத்தை, காத்திட்ட - காத்துக்கொண்டிருந்த (அதன் கொடுமையை நீக்கியுண்ட), கண்டத்தாய் - திருமிடற்றையுடையவனே!, இடத்தை - (எஜமானனின் வீட்டு) இடத்தை, காத்திட்ட - காத்துக்கொண்டிருந்த, சுவா-நாய், என-என்று கூறும்படி, புன்-அற்பமாகிய, புலால்-புலால் நாற்றத்தையுடைய, இறைச்சி-மாமிசத்தால் ஆக்கப்பட்ட, சடத்தை-இந்த உடம்பினை, காத்திட்ட - காத்துக்கொண்டிருந்த, நாயினேன் - நாயை ஒத்தவனாகிய அடியேன், உன்-தேவரீரின், அன்பர்-அடியார்கள், தயங்கும்-சஞ்சரிக்கின்ற, மடத்தை-மடத்தை, காத்து-காத்துக்கிடந்து, இட்ட-அவர்களளித்த, சேடத்தால் - பரிகலசேடத்தால், விசேடம்-சிறப்பு, ஆய்-ஆகி, வாழ-வாழுதற்கு, நின் - தேவரீரின், அருள் - கிருபை, வேண்டும் - அடியேனுக்கு வேண்டும் எ-று.

(வி-ரை) நாய் எஜமானன் வீட்டைக் காப்பதுவே தொழிலாகக்கொண்டு உண்டு உறங்கிக் காலத்தைக் கழிப்பதுபோல அடியேன் உண்டு உடுத்தி உறங்கி நிலையில்லாத இந்த யாக்கையைப்பேணுவதே தொழிலாக நின்றேன் ஆன்மார்த்தமானகாரியம் ஒன்றுஞ் செய்திலேன் என்பார் 'இடத்தைக் காத்திட்ட சுவாவெனப்' புல் புலா லிறைச்சிச் சடத்தைக் காத்திட்ட



நாயினேன்' என்றார். தேகத்தை வளர்ப்பதாற் பயனில்லை; ஞானத்தைப் பெற சொரூபதரிசன முயலல் வேண்டும் என்பதும் இதனாலேயே முத்தியின்பஞ் சித்திக்கும் என்பது கருத்துத்தோன்றக் கூறினர். இதனை,

"ஊற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
எற்றுத் திரிந்துவிட் டேனிறை வாகச்சி யேகம்பனே." எனவும்,

'எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கெனு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கெனுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும்புன் னாயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரிய முடன்வளர்த் தேனித னாலென்ன பேறெனக்கே"

எனவும் எழுந்த **பட்டினத்தடிகள்** வாக்காலும் இதன் உண்மை வெளியாம்.

'தயங்கும்' விளங்கும் எனவும் பொருள் கொள்ளலாம். 'மடம்' இது ஞானிகள், அடியார்கள் வசிக்கும் இடம். 'உன் அன்பர் தயங்கும்' என்றதின் அருத்தாபத்தியால்தான் அன்பனல்லாமைவிளக்கினாராயிற்று. அன்பனல்லாத தனக்கு இறைவன் அருள்செய்வானோ என்னின் உண்ண யோக்கியதையற்றதும், உண்டாரைக் கொல்லுவதுமாகிய விடத்தையே அமுதமாக்கினது அகடிதகடன சக்தியுடையவன் இறைவன் ஆதலின் அருள்செய்வன் என்னும் உறுதி உண்டென்பார் 'விடத்தை காத்திட்ட கண்டத்தோய் நின்னருள் வேண்டும்' என்றார். தேகத்தின் இழிவு தோன்றவே 'புன் புலா லிறைச்சிச் சடம்' என்றார். இதனை,

"புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை
நிலையென விரும்பி"

என்ற **அரிச்சந்திர புராணச் செய்யுளை**யும் ஒப்பிட்டுக் காண்க.

'விடம்' என்றது ஆலகால விடத்தை. இச்செய்யுள் மாச்சீர், காய்ச்சீர், விளச்சீர், விளச்சீர், மாச்சீர் என ஐந்து சீர்கொண்ட அடி நான்குகொண்ட கலிநிலைத்துறை. 27

பிராரத்துவ வாசனையால் தொழில் உண்டாகும் மாயாகாரியமாகிய மனத்தால் பற்றுதற்கு ஏதுவாகிய பிரபஞ்சம் எல்லாம் காரியரூபமாகிய பொய்யெனக் கூறினர்

வாத னைப்பழக் கத்தினன் மனம்அந்த மனத்தால்
ஓத வந்திடுமுரை உரைப் படிதொழி லுளவாம்
ஏத மம்மன மாயையென் றிடிற்கண்ட வெல்லாம்
ஆத ரஞ்செயாப் பொய்அதற் கையமுண் டாமோ.

(ப-ரை) வாதனை - (பிரபஞ்சமூலமாக விளையும் பிராரத்துவ) வாதனையின், பழக்கத்தினால் - பழக்கத்தால், மனம் - மனந் தோன்றும், அந்த-அந்த,

மனத்தால் - மனத்தினாலே, ஓத - சொல்ல, உரை-சொல், வந்திடும்-பிறக்கும், உரை-சொல்லின், படி-படியே, தொழில்-தொழில், உள-உள்ளதாக, ஆம்-ஆகும், ஏதம்-வாதனையினுள்ளே சிக்கியுள்ளே, அ-அந்த, மனம்-மனமானது, மாயை-மாயையின்காரியம், என்றிடில்-எனக் கூறினால், கண்ட-கண்கூடாகக் கண்ட, எல்லாம் - எல்லாம், ஆதரம் - விருப்பத்தை, செய்யா-செய்யத்தகாத, பொய்-(காரியரூபத்தால்) பொய்யேயாகும், அதற்கு-அங்ஙனம் சொல்வதற்கு, ஐயம்-சந்தேகம், உண்டாமோ-உளதாகுமோ? எ-று.

(வி-ரை) மாயையின் காரியமானது மனம். இம் மனத்தாற் காணப்படும் பொருள்கள் யாவும் பொய்யாம். 'வாதனை' இது 'வாசனை' என்ற வடசொல்லின் மரூஉ. மனமே உலகத்துன்பங்களுக்கெல்லாம் காரணமாதலினாலும், துன்பமுறுவது மனமே ஆதலினாலும் 'ஏதமம் மனம்' என்றார். இதனானே, எல்லாத் துன்பங்களுக்கும் மனமே காரணம். ஆதலின் மனம் இறக்கவேண்டும். மனம் இறந்தவர்க்கே புத்தி, முத்தி சித்தியெய்தும். இதுகொண்டே **பட்டினத்தடிகளும்,**

"அம்பல வாண ரடிக்கமல மறவாதிரு" எனவும்,
"தவியாதிரு நெஞ்சமே" எனவும்,
"தோயுநெஞ் சேமரு தீசர்பொற் பாதஞ் சுதந்திரமே" எனவும்,

"நாடிக்கொண் டீசரை நாட்டமுற் றுயிலை நாதரடி
தேடிக்கொண் டாடித் தெளிந்தா யிலைசெக மாயைவந்து
மூடிக்கொண் டோமென்றுங் காமாயுதங்கண் முனிந்த வென்றும்
பீடிப்பையோ நெஞ்சமே யுனைப்போ லில்லை பித்தர்களே" எனவும்,

"நித்தநித்தம் மாறுண்டுலாவி மயங்குநெஞ்சே மனைதோறுஞ் சென்று
சோறுண்டு தூங்கிப்பின் சும்மா விருக்கச் சுகமுமுண்டே" எனவும்,

"கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே" எனவும்,

"கேண் மனமே, ஓடுண்டு கந்தையுண் டுள்ளேயெழுத் தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்டனடியார் நமக்குத் துணையு முண்டே" எனவும்,

"ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்வல் லறமுநட்பும்
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி
என்றென் றிருமன மேயுனக் கேவுப தேசமிதே" எனவும்,

"நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்பு பொம்மல்
ஆட்டமென் றேயிரு பொல்லா வுடலை யடர்ந்த சந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்க விழ்நீர்
ஓட்டமென் றேயிரு நெஞ்சே யுனக் குபதேச மிதே" எனவும்,

"எதப்பட் டாயினி மேற்படும் பாட்டை யீதென் றறிந்து
போதப்பட் டாயில்லை நல்லோ ரிடஞ்சென்று புல்லறிவால்



வாதைப்பட் டாய்மட மாதர் கலவி மயக்கத்திலே
பேதைப்பட் டாய்நெஞ் சமேயுனைப் போலில்லை பித்தருமே" எனவும்,

"சுரப்பற்று வல்வினை சுற்றமு மற்றுத் தொழில்க ளற்றுக்
கரப்பற்று மங்கையர் கையிணக் கற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனமடங்கப்
பரப்பற் றிருப்பதன் றோபரா மாபர மானந்தமே" எனவும்.

"பங்கயத்தோன், எழுதாப் படிவரு மோசலி யாதிரொன்
னேழை நெஞ்சே" எனவும்,

"நீமனமே மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை" எனவும்,

"விதியார் படைப்பு மரியா ரளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பு நம் பாலணுகாது பரானந்தமே
கதியாகக் கொண்டுமற் றெல்லாந் துயிலிற் கனவெனநீ
மதியா திருமன மேயிது காணன் மருந்துனக்கே" எனவும்,

"நானெனத் தனைபுத்தி சொன்னாலுங் கேட்டிலை நன்னெஞ்சமே
ஏனிப் படிக்கெட் டுழலுகின் றாயினி" எனவும்,

"பேயாய் விழிக்கின் றனைமன மேயென்ன பித்துனக்கே" எனவும்,

"ஒழியாப் பிறவி யெடுத் தேங்கி யேங்கி யுழன்ற நெஞ்சே"

எனவும், கூறிய **பட்டினத்தடிகள் வாக்குகளா**னும் அறிக.

இச்செய்யுளும் மாச்சீர், விளச்சீர், விளச்சீர், விளச்சீர், மாச்சீர் என ஐந்துசீர் அடிகள் நான்கான்வந்த கலிநிலைத்துறை.

28

ஆனடியார்களோடுகூடி பொய்யை யகற்றி மெய்யை அறிதலே
ஞானம் என்கின்றார்

ஐய வாதனைப் பழக்கமே மன நினை வதுதான்
வைய மீதினிற் பரம்பரை யாதினு மருவும்
மெய்யி னின்றொளிர் பெரியவர் சார்புற்று விளங்கிப்
பொய்ய தென்பதை யொருவிமெய் யுணருதல் போதம்.

(ப-ரை) ஐய-ஐயனே!, மனம்-மனத்தினுடைய, நினைவு - எண்ணங்கள், வாதனை - பிராரத்துவவாதனையின், பழக்கமே - பழக்கத்தால்விளைவதேயாம், வையம்-உலகத்தின், மீதினில்-மேலே, பரம்பரை-வழிவழியாக, (பாரம்பரியமாக) யாதினும் - எல்லாப்பொருள்களிலும், மருவும்-பொருந்தும், மெய்யில்-உண்மையில், நின்று-நிலைத்து, ஒளிர்-பிரகாசிக்கின்ற, பெரியவர்-பெரியவர்களினுடைய, சார்வு-சார்பை, உற்று-அடைந்து, விளங்கி-விளங்கி, பொய்யது-பொய்யானது, என்பதை - என்பதை, ஒருவி - நீக்கி, மெய் - உண்மையை, உணருதல்-அறிதலே, போதம்-ஞானம் என்பதாம்; எ-று.

(வி-ரை) 'வையம்' என்றது பூமியை. பொருள்கள் வைப்பதற்கு இடமாய் இருப்பது என்பது பொருள். 'மெய்' என்றது மெய்ப்பொரு

னாகிய இறைவனை. மெய்யடியார் சார்புற்றால் பொய்யெல்லாம் பொய்யாய்ப் போய் ஒழிய, மெய்ப்பொருள் தோன்றும் என்பார். 'மெய்யினின் றொளிர் பெரியவர் சார்வுற்று விளங்கி பொய்ய தென்பதை யொருவிமெய் புணருதல் போதம்' என்றார். 'போதம்' ஞானம். உண்மையறிதலே ஞானமாகும் என்பதூஉம் இதனாலறியலாம். 'பெரியவர்' என்றது சிவனடியாரை. இதனை, "தொண்டர்தம் பெருமை" சொல்லவும் பெரிதே என்பதனாலும் அறியலாம், இச்செய்யுளும் முன்னைச் செய்யுள்போல்வந்த கலிநிலைத்துறை. 29

குலமுதலில்லா அடியார் அரனவர் என்பதாம்

குலமி லான்குணங் குறியிலான்
குறைவிலான் கொடிதாம்
புலமி லான்தனக் கென்னவோர்
பற்றிலான் பொருந்தும்
இலமி லான்மைந்தர் மனைவியில்
லான்எவன் அவன்சஞ்
சலமி லான்முத்தி தரும்பர
சிவனெனத் தகுமே.

(ப-ரை) குலம்-குலம், இலான்-இல்லாதவனும், குணம்-குணமும், குறி-பெயர்முதலிய அடையாளங்களும், இலான்-இல்லாதவனும், குறைவு-தாழ்வு, இலான்-இல்லாதவனும், கொடிது - கொடியது, ஆம்-ஆகிய, புலம் - விஷயப் பற்று, இலான்-இல்லாதவனும், தனக்கு - தனக்கு, என்ன-என்று, ஓர்-ஒரு, பற்று - ஆதாரம், இலான் - இல்லாதவனும், பொருந்தும் - பொருந்துகின்ற இல்லம்-வீடு, இலான்-இல்லாதவனும், மைந்தர்-புத்திரர்களும், மனை-மனைவியும், இல்லான்-இல்லாதவனும், எவன்-யாவன், அவன் - அவனே, சஞ்சலம்-சலனம், இலான்-இல்லாதவனும், முத்தி - மோக்ஷத்தை, தரும்-கொடுத்தற்குரிய, பரம்-மேலாகிய, சிவம்-சிவமும்ஆவன், என-என்றுகூறத், தகும்-தகுதியுடையதாகும்; எ-று.

(வி-ரை) 'குலம்' எனவே. குலம். குடி, ஜாதிமுதலிய எல்லாம் குறிக்கும். "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பது இலக்கணம். 'குறி' என்றது பெயர்க்குறிப்பை. இனி பெயரடையாளம், வண்ணம், வடிவுபற்றிவரும் அடையாளங்கள் எனினும்ஆம். 'குறைவிலான்' என்றமையால் பரிபூரணத்துவத்தைக் குறித்தது, 'புலம் இலான்' என்றது விருப்பு வெறுப்பற்ற நிலையை. "வேண்டுதல் வேண்டாமையிலான்' என்ற **திருவள்ளுவர்வாக்குங்** கருதற்பாலதாம். இனி, "பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீரொழுக்க நெறிநின்றார் நீடுவாழ்வார்" என்ற **குறட்பொருளுங்** கருதத்தக்கதாம். 'இலம்' உலகவீட்டை. இது இல்லம் என்பதன் தொகுத்தல் விகாரம். 'சஞ்சலம்' என்றது மாயையான்வருந்துயர். 'குலமிலான்' என்றதுமுதல் மனையில்லான் என்றது முடியக்கூறியவை இறைவன் இலட்



சணங்கள். அடியார் இறைவனே எனக் கருதத்தக்கவர்ஆதலின் இறைவன் இலக்கணங்களைக் கூறினர். இதனை,

"நரன்சுரன் ஞானியா மென்பது நன்றல
பிரமமே ஞானியாம்" எனவும்,

"பரப்பிரம மிவனென்றும் பரசிவன் றானென்றும்
பரஞான மிவனென்றும் பராபரன் றானென்றும்
அரன்றருஞ் சிர்நிலை யெல்லாமிவ னேயென்றும்
அருட் குருவை வழிபடவே"

எனவும் **சிவஞானசித்தியார்** வாக்கானுமறிக.

"நல்ல சிவனடியார் நம்பெருமா னென்றுதொழ
வல்ல வினையனைத்தும் வற்றியே—எல்லையிலா
ஆனந்த மாகும் அரனே யவருருவாத்
தானனிவர் தின்பருளத் தான்" (தனிச்செய்யுள்)

எனவுங்கூறிய **பெரியார்** திருவாக்குகளிலும் அறியலாம். இது முன்னைச் செய்யுள்போலவே ஐஞ்சீரான்வந்த கலிநிலைத்துறை. எ-ஈற்றசை. 30

இறைவனே! உடம்பு இறந்தபின் தானே பொய் அது இறவாது இருந்தபோதும் பொய்தானே என்கின்றார்

கடத்தை மண்ணென வுடைந்தபோ
தோஇந்தக் கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோ
தோசொலத் தருமம்
விடத்தை நல்லமிர் தாவுண்டு
பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டிஎவ் வுயிரையு
நடிப்பிக்கு நலத்தோய்.

(ப-ரை) விடத்தை - நஞ்சை, நல் - நல்ல, அமிர்து - அமுதம், ஆ-ஆக, உண்டு - சாப்பிட்டு, பொன் - பொன்னால் வேய்ந்த, பொது - அம்பலமாகிய, வெளிக்கு - சிதாகாயத்தில், நடத்தை - திருநடனத்தை, காட்டி - செய்து, எ-எல்லா, உயிரையும்-ஆன்மகோடிகளையும், நடப்பிக்கும்-ஆட்டுகின்ற, நலத்தோய் - நன்மையைச் செய்பவனே!, கடத்தை - மட்குடத்தை, உடைந்த-உடைந்த, போதோ - பொழுதுதானோ, மண் - மண், என - என்று, சொல-சொல்ல, தருமம் - தருமம் ஆகும், இந்த - இந்த, கருமம் - வினையினால் வந்த, சடத்தை-தேகத்தை, இறந்த - இறந்த, போதோ-பொழுதிற்றானோ, பொய்-பொய், என-என்று, சொல-சொல்ல, தருமம்-தருமம் ஆகும் எ-று.

(வி-ரை) 'கடம்' என்றது பாத்திரத்தை. பாத்திரம் உடையுமுன் பாத்திரமாக இருந்தாலும் மண்ணே பாத்திரமாக உருவம்மாறி நின்றது.

பாத்திரம் ஆகுமுன்னும், பாத்திரம் ஆனபின்னும், அப்பாத்திரம் உடைந்த பின்னும் மண் மண்ணாகவே இருந்தது. அதுபோல இந்தத் தேகம் பொய்யாகிய மாயையிலே தோன்றி, பொய்யாகிப் பின் அழிந்தபின் பொய்யாய்ப் போயது என்பார், 'கடத்தை மண்ணென வுடைந்தபோ தோவிந்தக் கருமச் சடத்தைப் பொய்யென விறந்தபோதோ சொலத்தருமம்' என்றார். இதனை,

"மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ
ஐயாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கனவாய் மெல்லப் போனதுவே"

என்ற **பட்டினத்தடிகள் வாக்கா**லும்,

"வாழ்வாவது மாயம் மண்ணாவது திண்ணம்"

என்ற **தேவாரத்தா**லும் நன்கறியலாம்.

இறைவன் ஈறிலான் என்பதுதோன்ற மால் பிரமாதிதேவர் அஞ்சவந்த நஞ்சை அமுதமாக உண்டசெய்தியை விளக்குவான் 'விடத்தை நல்லமிர்தா வுண்டு' என்றார். 'பொற்பொது' என்றது பொன்னம்பலத்தை. இறைவன் நடனம்புரிதல் பஞ்சகிருத்தியம் நடைபெறற் பொருட்டாதலின் 'நடத்தைக் காட்டி யெவ்வுயிரையு நடப்பிக்கு நலத்தோய்' என்றார். இறைவன் எல்லா வுயிரும் எல்லாப் பொருளுமாய் இருத்தலின் அவன் நடத்தால் எல்லா உயிரும் நடைபெறுகின்றது. இதனை,

"எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசைவின்
அல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே
வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்த வந்நாள்
புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே"

என்ற **அருணைக் கலம்பகத்தா**லும்,

"வேதமடி யுண்டன விரிந்தபல வாகம விதங்களடி
யுண்டன வோரைம்
பூதமடி யுண்டன விநாழிகைமுதற் புகல்செய் பொழுதொடு
சலிப்பில் பொருளின்
பேதமடி யுண்டன பிறப்பிலி யிறப்பிலி பிறங்கலர
சன்றன் மகளார்
நாதனம லன்சமர வேடவடிவங் கொடுநரன் கையடி
யுண்ட பொழுதே"

என்ற **பாரதச் செய்யுளா**லும் அறியலாம்.

இச்செய்யுளும் மேற்செய்யுள் போல்வந்த கலிநிலைத்துறை.





தன்வினைக் கிரங்கல்

நானெனவு நீயெனவு மிருதன்மை நாடாமல்
நடுவே சும்மா
தானமரு நிலையிதுவே சத்தியஞ்சத் தியமெனநீ
தமிய னேற்கு
மோனகுரு வாகியுங்கை காட்டினையே திரும்பவுநான்
முளைத்துத் தோன்றி
மானதமார்க் கம்புரிந்திங் கலைந்தேனே பரந்தேனே
வஞ்ச னேனே.

(ப-ரை) நான் - நான், எனவும் - என்று கூறவும், நீ-நீ, எனவும்-என்று கூறவும், இரு-இரண்டு, தன்மை-வகையாக, நாடாமல்-பிரித்து உணராமல், நடுவே-மத்தியில், சும்மா தான்-மௌனமாக, அமரும்-இருக்கின்ற, நிலை-வேறு நிலையாகிய இதுவே, சத்தியம் - சத்தியம் (உண்மை), சத்தியம் - சத்தியம் (உண்மை), என் - என்று, நீ-தேவரீர், தமியனேற்கு-தமியேனுக்கு, மோன-மௌன, குரு-தேசிகர், ஆகியும் - ஆகியும் (வந்து), கை - சின்முத்திரையோடு கூடிய கையை, காட்டினையே - காட்டியருளினையே (அவ்வாறு காட்டியும்), திரும்பவும் - மறுபடியும், நான் - நான், முளைத்து - வெளிப்பட்டு, தோன்றி-வந்து, மானதம்-மனசு, மார்க்கம்-(சென்ற) வழியே, புரிந்து - செய்து, இங்கு-இவ்விடத்து, அலைந்தேனே - திரிந்தேனே, பரந்தேனே - விஷயாதிகளில் பாவிகின்றேனே, வஞ்சனேன்-பாவினேன் ஆதலினால் எ-று.

(வி-ரை) 'நான்' என்னும் தன்மைமுனைப்பும், 'நீ' என்னும் முன்னிலை முனைப்பும் முத்திநிலையில், சிவானந்தநிலையில் தோன்றாது பேதித்த இந்தநிலை அபேதநிலையில் இருப்பதே ஆனந்தம். 'தாடலை' போற் றழுவலன்றோ சிவானந்தம் இதுகொண்டே அடிகள், 'நானெனவு ... ... மோனகுரு வாகியுங்கை காட்டினையே' என்றார். 'சும்மாதா னமருநிலை' என்றது மோனானந்த நிட்டை நிலையை. 'சத்தியம் சத்தியம்' இது சாதம் பற்றி இரட்டித்தது. 'நீ' என்றது மோனகுருவை. 'கைகாட்டினது' என்று சின்முத்திரையும் அபயங் காட்டியதையும் குறித்தது. பிராரத்துவ கன்மத்தால் சிவானந்தநிட்டை கூடியவர்க்கும் பகிர்முகப்படுதல் உண்டாதலின் 'திரும்பவு நான்முளைத்துத் தோன்றி' என்றார். 'மானதமார்க்கம்' என்றது மனவழிச் செல்லுதலை. மனத்தின்வழிச் செல்லுவோர் மாயையிற்பட்டு வருந்துவர் ஆதலின் 'இங்கு அலைந்தேனே, பரந்தேனே" என்றார்.

'வஞ்சனேனே' என்றது தானல்லவற்றைத் தானாகவும், தனதல்லாத வற்றைத் தனதாகவும்கொண்டு மாயையிற் சிக்கி யுழல்கின்றமையின் என்க. 'மோனகுருவாகியும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை, என்னை? அந்தர்யாமியாகி அறிவுக்கு அறிவாயிருந்து உணர்த்தின

தல்லாமல் பரமாசிரியராகவும் உணர்த்தினை என்ற பொருள்தந்து நின்ற மையின் என்க, 'நானெனவும் நீயெனவும்' இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 'நான்' என்றது அகங்கார தத்துவத்தை. 'மானதம்' இது மனஸ் என்ற வடசொல் திரிபு. இச்செய்யுள் நான்கு காய்ச்சீரும் இரண்டு மாச்சீரும் கொண்ட நான்கடியால் வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஏ-ஈற்றசை. 32

என்தன்மை எனக்குக் காட்டாது தன்மயமாக்கிக்கொண்டது
தக்ஷிணாமூர்த்தம் என்கின்றார்

தன்மயம் சுபாவம் சுத்தம் தண்ணருள் வடிவம் சாந்தம்
மின்மய மான வண்ட வெளியுரு வான பூர்த்தி
என்மய மெனக்குக் காட்டா தெனையப கரிக்கவந்த
சின்மய மகண்டா காரந் தக்ஷிணா திக்க மூர்த்தம்.

(ப-ரை) தக்ஷிணம்-தென்பாகமாகிய, திக்கம்-திக்குப்பக்கத்தில் திரும்பி யருளியிருக்கின்ற, மூர்த்தம் - மூர்த்தமானது, தன் - தன், மயம் - மயமும், சுபாவம் - சுபாவமும், சுத்தம் - சுத்தமும், தண் - குளிர்ந்த, அருள்-அருளின், வடிவம் - உருவமும், சாந்தம் - சாந்தமும், மின் - மின்னலையொத்த, மயம்-உருவமும், ஆன - ஆகிய, அண்டம் - அண்டத்தின், வெளி - வெளியில், உரு-உருவம், ஆன-ஆகின்ற, பூர்த்தி-பூரணமும், என்-அடியேனின், மயம்-உருவத்தை, எனக்கு-அடியேனுக்கு, காட்டாது-காட்டாமல், என்னை-அடியேனை, அபகரிக்க-கவர, வந்த-வந்த, சின்-ஞான, மயம்-ரூபமும், அகண்டாகாரம்-அகண்டாகாரமும், ஆம்-ஆகும் எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப் பொருளாயும் எல்லாப் பொருளின் உள்ளும் புறம்புமாய் இருத்தலினாலும் எதுவும் அவனல்லதில்லை யாதலினாலும், 'தன்மயம்' என்றார். இறைவன் செயற்கையின்றி இயற்கையாக உள்ளவன் ஆதலின் 'சுபாவம்' என்றார். இறைவன் விமலனும், அமலனும் ஆகிய தூய உடம்பினனாதலின் 'சுத்தம்' என்றார். இறைவன் கிருபாகரன், அருள் வடிவினன் ஆதலின் 'தண்ணருள் வடிவம்' என்றார். இறைவன் சத்துவன் ஆதலின் 'சாந்தம்' என்றார். இறைவன் சோதி சொரூபன் ஆதலின் 'மின்மயமான' என்றார். இறைவன் அண்டாண்டங்கள் எல்லாம் நிறைந் தொளிர்கின்றவன் ஆதலின் 'அண்டவெளி யுருவான பூர்த்தி' என்றார். 'என்மயம்' என்றது மாயாதத்துவ உருபினை. அபகரிக்க என்றது மாயாசம்பந்தமான தனுகரணங்கள் கழல நான் கழல இறைவனோடு சோகம் பாவனையால் அபேதமாக இருத்திவைத்த நிலையை. 'சின்மயம்' என்றது சித்ரூபத்தை. 'அகண்டாகாரம்' என்றது பரிபூரணத்துவ நிலையை. இறைவன் தக்ஷிணாமுகமாக நின்று சனகாதி முனிவர்களுக்கு யோக நிலையில் அமர்ந்து மௌனநிலையில் நின்றதை ஈண்டு 'தக்ஷிணா திக்கமூர்த்தம்' என்றார். இச்செய்யுள் மேற்செய்யுள்போல வந்த கலிநிலைத்துறை. 33



கிஞ்சிஞ்ஞனே ஆசாரியர் அருளாலும் ஞானநூல் ஆராய்ச்சியாலும்
சர்வஞ்ஞன் ஆவான் என்கின்றார்

சிற்ற ரும்பன சிற்றறி வாளனே தெளிந்தால்
மற்ற ரும்பென மலரெனப் பேரறி வாகிக்
கற்ற ரும்பிய கேள்வியான் மதித்திடக் கதிச்சீர்
முற்ற ரும்பிய மௌனியாய்ப் பரத்திடை முளைப்பான்.

(ப-ரை) சிறு-சிறியமலரின், அரும்பு-அரும்பினை, அன்ன-ஒத்த, சிறு-சிறிதாகிய, அறிவு - அறிவு, ஆளனே - உடையவனே, தெளிந்தால்-ஆசாரிய மூர்த்தியின் அருள் தெளிவான அறிவை அடைந்தால், மற்று - முன்னதற்கு வேறுபட்ட, அரும்பு-பெரிய அரும்பு, என-என்று சொல்லும்படியும், மலர்-மலர், என-எனவும், பேர்-பெரிய, அறிவு - அறிவைப்பெற்றவன், ஆகி - ஆகி, கற்று - கற்கற்பாலதாகிய நூல்களைக் கற்று, அரும்பிய - உண்டாகிய, கேள்வியால்-கேள்வியினாலே, மதித்திட-யாவரும் மதிக்க, கதி-நற்கதிக்கு உரிய, சீர்-சிறந்த குணங்கள், முற்றும்-முழுதும் அடைந்து, மௌனியாய் - மவுனநிலையை உடையவன் ஆகி, பரத்திடை-மோக்ஷநிலத்தில், முளைப்பான் - போய்ச்சேருவான் எ-று.

(வி-ரை) 'சிற்றரும்பு' இது சிறுமை + அரும்பு என்னும் இரண்டு சொல் ஒரு சந்தி. அன் இது அன்ன என்பதன் தொகுத்தல் விகாரம். 'தெளிந்தால்' என்பது மருளின் நீங்கித் தெருளடைதல். தெளிதல் ஈண்டு ஞானத்தெளிவைப் பெறுதலைக் குறித்தது. 'கற்றரும்பிய' இது கற்று உண்டாகக்கூடிய என்னும் பொருளது. 'கேள்வி' என்றது ஞானக் கேள்வியை. 'கதிச்சீர்' என்ற முத்திக்கதியை. இது 'சீர்கதி' என்றற்பாலது கதிச்சீர் என மொழிமாறி நின்றது. 'பரம்' என்றது மோக்ஷத்தை.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து"

என்ற **திருக்குறளின்** பொருள் ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது. இன்னும் இதன்கருத்தை,

"பாயும் அற்ப அங்கணநீர் பரவை தன்னுட் படிந்திட்டால்
ஏயும் பேரும் நிலைதானும் இல்லா தழிந்தே பரவையெனத்
தோயும் நிலைமை தனைப்போலத் தொந்தத் துயிர்கள் ஞானமுறில்
நோயும் வினையுந் தாமோட நுவலும் பரமா விளங்குவரே"

என்ற **பெரியார் தனிப்பாடலால்** அறிக. 34

தெளிவுடைய மனமே சிறந்ததாகும்; தெளிவுடைய மனத்தில்
மயக்கம் வருதல் பொருத்த மன்றெனல்

மயக்கு சிந்தனை தெளிவென விருநெறி வகுப்பால்
நயக்கு மொன்றன்பா லொன்றிலை யெனனல வழக்கே
இயக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற லினிதாம்
பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க்கெய்தல் பண்போ.

(ப-ரை) மயக்கு - மயக்கப்பட்ட, சிந்தனை - மனம் (எனவும்), தெளிவு-தெளிந்த மனம், என-எனவும், இரு-இரண்டு, நெறி-மார்க்கத்தின், வகுப்பால் - பாகுபாட்டினால், நயக்கும் - விரும்பப்பட்ட, ஒன்றன்பால் - ஒன்றினிடத்து, ஒன்று-ஒன்று, இல்லை-இல்லை, எனல்-என்று கூறுதல், நல்-நல்ல, வழக்கே-வழக்கேயாகும், இயக்கம்-சஞ்சரித்தலை, உற்றிடும்-பொருந்தியுள்ள, மயக்கத்தின்-மயக்கத்தினும், தெளிவு-தெளிவை, உறல்-அடைதல், இனிது-இனிது, ஆம் - ஆகும், பயக்க - முத்தியைத்தர, வல்லது - வல்லதாகிய, ஓர்-ஒப்பற்ற, தெளிவு - ஞானத்தெளிவை, உடையவர்க்கு - உடையவர்களுக்கு, எய்தல்-மயக்கம்வந்து சேருதல், பண்போ-குணமோ எ-று.

(வி-ரை) 'மயக்கு சிந்தனை தெளிவென' என்றது மத்திபதீபம்; மயக்கு சிந்தனை, தெளிவு சிந்தனை என இயைந்து பொருள்தரும். 'மயக்கு சிந்தனை' இது மயக்கத்தையுடைய சிந்தனை; இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கதொகை. 'இருநெறி' இதில் 'நெறி' என்றது பகுப்பை. தெளிந்த சிந்தையில் மயக்கமில்லை, மயங்கிய சிந்தையில் தெளிவில்லை. ஆதலின் 'நயக்கு மொன்றன்பா லொன்றிலை யென்னல் வழக்கே' என்றார். மயங்கிய சிந்தை துன்பந் தருவதேயாகும் இருவினைக்கீடாய்ப் பிறப்பிறப்புகளைத் தரும், ஆனால் தெளிந்த சிந்தை பிறப்பறுத்து முத்தியின்பத்தை எய்துவிக்கும். ஆதலினால் மயக்கசிந்தனையினும் தெளிந்த சிந்தனையே இன்பந் தருவதாகும் என்பார், 'இயக்க முற்றிடு மயக்கத்திற் றெளிவுற லினிதாம்' என்றார். தெளிவுடையவர்க்கு மயக்கம் வருதல் புதுமையே என்பார் 'பயக்க வல்லதோர் தெளிவுடை யவர்க் கெய்தல் பண்போ' என்றார். இதனை,

"ஒளிக்குமுன் னிருட்கும் வன்மை உண்டுகொல் என்னே யுன்றன்
அளித்திரு வருடன் னாலே அமைதெளி வடைந்த பின்னும்
களித்திரு மங்கை தோயக் கானவெம் மயிலூர் வீரா!
துளித்துளித் துயரம் வந்து தோன்றிடு மாயந் தானே"

என்ற அழுதகவியானும் அறிக.

தெளிவு-சிவானந்தத்தை, முத்தியின்பத்தைத் தருவதாதலின் 'பயக்க வல்லதோர் தெளிவு' என்றார். 'ஓர் தெளிவு' ஒப்பற்ற தெளிவு. சிவஞானத் தெளிவாதலின் 'பயக்க வல்லதோர் தெளிவு' என்றார். இச்செய்யுளும் மேற் செய்யுள்போல ஐஞ்சீரான் வந்த கலிநிலைத்துறை. ஈற்று ஓகாரம் வினாப் பொருளது.

35

இறைவனே! மூர்த்தம் எழும் உன்னையடைய சோபானமே; எனக்கு மயக்கம் இல்லை உன்னைச் சேர்ந்து தெளிவடைகின்றேன் எனல்

அருள்வடி வேழு மூர்த்தம்
அவைகள்சோ பான மென்றே
சுருதிசொல் லியவாற் றாலே
தொழுந்தெய்வ மெல்லா மொன்றே



மருளெனக் கில்லை முன்பின்
வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னிலையா முன்னைச்
சேர்ந்தியான் றெளிகின் றேனே.

(ப-ரை) அருள்-தேவரீரது திருவருள், வடிவு-உருவமானது, எழு-எழு, மூர்த்தம்-உருவங்களாகும், அவைகள்-அந்த மூர்த்தங்கள், சோபானம்-தேவரீரை அடைவதற்குப் படிகள், என்றே-என்றே, சுருதி-வேதம், சொல்லிய-கட்டளையிட்டருளிய, ஆற்றாலே-தன்மையினாலே, தொழும்-எல்லாச்சமயத்தாராலும் தொழப்படுகின்ற, தெய்வம்-கடவுள், ஒன்றே-ஒன்றேயாகும், முன்-முன்னும், பின் - பின்னும், வரு - வருகின்ற (வந்துபோகின்ற), நெறிக்கு-வழிக்கு, எனக்கு-அடியேனுக்கு, மருள்-மயக்கம், இல்லை-இல்லை, தெருளின்-தெளிவாக, முன்னிலை - பிரத்தியட்சம், ஆம் - ஆகவிளங்கும், உன்னை - தேவரீரை, சேர்ந்து-அடைந்து, இ-இந்த, வழக்கு-வழக்கினை, யான்-அடியேன், தெளிகின்றேன்-தெளியா நின்றேன் எ-று.

(வி-ரை) 'அருள் வடிவு என்றது' இறைவன் ஆன்மாக்கள் மேற்கொண்ட கருணையால் வந்த திருவுருவை. 'எழுமூர்த்தம்' என்றது சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் ஆகிய எழு திருவுருவங்களை. இவ் எழு உருவங்களும் இறைவனை அடைதற்குப் படிகளாக இருத்தலின் 'அருள்வடி வேழு மூர்த்த மவைகள் சோபான மென்றே' என்றார். இனி, எழு மூர்த்தம் என்பதற்கு, திருமால், இந்திரன், பிரமன், உபமந்யு, சூரியன், நந்தி, முருகன் என எழு மூர்த்தங்கள் என்பர். மற்றொரு சாரார் சதாசிவன், அநந்தன், நீலகண்டன், அம்பிகை, கந்தர், திருமால், பிரமன் என்பர். வேதம் பக்ஷபாதமின்றி நடுநின்று பேசுவதாதலின் அதன் சொல்லை ஐயுறாதுகொண்டு தெளிந்தேன் என்பார் 'சுருதி சொல்லிய வாற்றாலே தொழுந் தெய்வ மெல்லாமொன்றே மருளெனக் கில்லை' என்றார். வீழ்வார்க்கு வீழ்வார் துணையில்லை. அவர் துணையைக்கொண்டால் இவருஞ் சேர்ந்து விழவேண்டியதே மருளுடையார் தெருளுடையாரைச் சேர்ந்தால் மருண்டதன்மை நீங்கித் தெளிவடைதல் கண்கூடாதலின், 'தெருளின்முன் னிலையா முன்னைச் சேர்ந்தியான் றெளிகின்றேனே" என்றார். இச்செய்யுள் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் மாச்சீர் என ஆறுசீர் கொண்ட அடி நான்கான்வந்த அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம். ஏ - ஈற்றசை.

36

இறைவனே! என் ஜனன மரணத்துக்குக் கணக்கே இல்லை; என் திரிகரணமும் உன்னதே. என்னை உன் அடிமைகுடியாக வைத்தருள் எனல்

எத்தனைப் பிறப்போ எத்தனை யிறப்போ
எளியனேற் கிதுவரை யமைத்தது
அத்தனை யெல்லா மறிந்தநீ யறிவை
அறிவிலி யறிகிலேன் அந்தோ

சித்தமும் வாக்குந் தேகமு நினவே
　　சென்மமு மினியென லாற்று
வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா
　　மறைமுடி யிருந்தவான் பொருளே.

(ப-ரை) மறை-வேதத்தின், முடி-உச்சியில், இருந்த-தங்கியிருந்த, வான்-மேலான, பொருளே-பொருளே!, எளியனேற்கு-எளியவனாகிய அடியேனுக்கு, இதுவரை - இந்த ஜென்மம் வரையில், அமைத்தது - அமைக்கப்பெற்றது, எத்தனை - எத்தனை, பிறப்போ-ஜென்மமோ, எத்தனை-எத்தனை, இறப்போ-மரணமோ, அத்தனை-அவ்வளவையும், எல்லாம்-எல்லாவற்றையும், அறிந்த-தெரிந்த, நீ-(சர்வஞ்ஞனாகிய) தேவரீர், அறிவை-அறிவாய், அறிவிலி-அறிவில்லாதவனாகிய அடியேன், அறிகிலேன்-அறியும் ஆற்றல் இல்லேன், அந்தோ-ஐயோ!, சித்தமும்-மனமும், வாக்கும்-வாக்கும், தேகமும்-உடம்பும், நினவே-உன்னுடையனவே, சென்மமும்-பிறப்பும், இனி-இனி, என்னால்-அடியேனால், ஆற்று-தாங்கமுடியாது (பொறுக்கமுடியாது ஆதலால்), இங்கு - இவ்விடத்து, என்னை - அடியேனை, நின்-தேவரீரின், அடி அடிமை, குடி-குடி, ஆ - ஆக, வைத்திடு-வைத்தருள்வாயாக எ-று.

(வி-ரை) ஆன்மாக்கள் தம் கர்மத்துக் கீடாகப் பலகோடி ஜென்மங்கள் எடுக்கின்றன வாதலினால் 'எத்தனை பிறப்போ எத்தனை யிறப்போ' என்றார். இதனாலன்றோ, **பட்டினத்தடிகளும்,**

"அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ
　　அப்ப னெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ
　　பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னை யெத்தனை யெத்தனை சென்மமோ
　　மூட னாயடி யேனு மறிந்திலேன்
இன்ன மெத்தனை யெத்தனை சென்மமோ
　　என்செய் வேன்கச்சி யேகம்ப நாதனே"

என்றருளிச் செய்தார்.

கடற்சிறு மணலை எண்ணினும் பிறப்பினை எண்ணி முடியாத தாயினும் பேரறிவுப் பிழம்பாகிய இறைவனுக்கு அரிதல்ல என்பார் 'எல்லா மறிந்தநீ யறிவை' என்றார். தன்னால் அறிய முடியாதது என்பார் 'அறிவிலி அறிகிலேன்' என்றார். ஞான ஆசாரியனாக வந்தருளுங்காலை மன வாக்குக் காயம் மூன்றையும், உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தஞ் செய்தலின் 'சித்தமும் வாக்குந் தேகமு நினவே' என்றார். தன்னை இறைவன் அடிமைக் குடியாக வைத்தருளுதலை விரும்பி 'வைத்திடிங் கென்னை நின்னடிக் குடியா' என்றார். இறைவன் வேதாந்த முடிவில் நடனம் புரிவோன் ஆதலின் 'மறைமுடி யிருந்த வான்பொருளே' என்றார். மறைமுடிவு - உபநிடத வாக்கிய பொருள். இதுவும் மேலைச் செய்யுள் போல வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.





இறைவா! நின்னை அடைந்தவரே பெரியோ ரெனல்

வான்பொரு ளாகி யெங்குநீ யிருப்ப
　　வந்தெனைக் கொடுத்து நீ யாகா
தேன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை
　　யிருவினை வாதனை யன்றோ
தீன்பொரு ளான வமிர்தமே நின்னைச்
　　சிந்தையிற் பாவனை செய்யும்
நான்பொரு ளானே னல்லனல் லரசே
　　நானிறந் திருப்பது நாட்டம்.

(ப-ரை) வான் - மேலான, பொருள்-பொருள், ஆகி-ஆகி, எங்கும்-எவ்விடத்தும், நீ-தேவரீர், இருப்ப-இருக்கவும், வந்து-தேவரீரை யடுத்து, என்னை-அடியேனை, கொடுத்து-தேவரீருக்குக் கொடுத்து, நீ-தேவரீரே, ஆகாது-ஆகிவிடாமல், பொருள் - சடப்பொருள், போல - போல, ஏன் - ஏனோ, கிடக்கின்றேன் - கிடக்கின்றேன் (இதற்குக்காரணம்), முன்னை - முன் சென்மத்திற்செய்த, இரு-இரண்டாகிய, வினை-வினைகளின், வாதனை - வாதனை, அன்றோ-அல்லவோ, தீன் - உண்ணக்கூடிய, பொருள் - பொருள், ஆன-ஆகிய, அமிர்தமே-அமுதமே, நின்னை-தேவரீரை, சிந்தையில்-மனத்தில், பாவனை-பாவனை, செய்யும் - பண்ணுகின்ற, நான் - அடியேன், பொருள்-ஒருபொருளின் தன்மை, ஆனேன் - ஆயினேன், நல்லநல் - மிகவும் நல்ல, அரசே - அரசே!, நான்-அடியேன், இறந்து-சுதந்தரத்தை இழந்து, இருப்பது-இருப்பது, நாட்டம்-என்னுடைய விருப்பம் எ-று.

(வி-ரை) 'வான்பொருள்' என்பது உயர்ந்த பொருள் என்ற பொருளில் இனி ஆகாயம் போன்ற பொருளாகி எனவும், ஆகாயமாகி எனவும் பொருள் கொள்வாரும் உண்டு. எங்குநீ யிருக்க உன்னைக்கண்டு என்னை உனக்குக் கொடுத்து நீயேயாகி நில்லாமல் ஜட பதார்த்தம்போற் கிடக்கின்றேன் என்பார். 'எங்குநீ யிருப்ப வந்தெனைக் கொடுத்துநீ யாகா தேன் பொருள் போலக் கிடக்கின்றேன்' என்கின்றார். தன்னைக் கொடுத்தலாவது-தத்துவங்கள் கெட்டுத் தான்கெட்டு நிற்குநிலை. அன்றி, தானிறந்து நிற்குநிலை. 'நீயாகிநில்லாமல்' என்றது இறைவனுந் தானும் அபேதமாய் நிற்குநிலையை. ஆன்மாவுஞ் சித்துப்பொருளே யாயினும் மருளுற்று மாயை வழிப்பட்டபோழ்து சுதந்தரமிழந்து நிற்றலால் 'ஜடப்பொருள் போல' என்றார். 'பொருள்' என்றது ஜடப்பொருளை. இவ்வாறு இருத்தற்கு முன்னைப் பிராரத்வ கர்மமே என்பார், 'முன்னை யிருவினை வாதனை யன்றோ' என்றார். இறைவன் இன்பமயன் எல்லார்க்கு அனுசரிக்கத் தகுந்தவன், அடியார்க்கு எளியன் ஆதலின் 'தீன்பொருளான வமிர்தமே' என்றார். அமிர்தம் - ஆகுபெயர். பொருளல்லாத அடியேன் தேவரீரைச் சிந்தையிற் பாவனைசெய்த பலனால் நானும் பொருளானேன் என்பார் 'நின்னைச் சிந்தையிற் பாவனை செய்யும் நான்பொருளானேன்' என்றார். 'நான்' என்ற மாயா காரியமாகிய

அகங்காரத்துவமே பிறவிகட்குந் துன்பங்களுக்குங் காரணமாக நின்றிருப்பதால் 'நானிறந் திருபது நாட்டம்' என்றார். இதனை,

"வான்கெட்டு மாருதமாய்ந் தழனீர் மண்கெடினுந்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

என்ற **மணிவாசகர் வாக்கா**னும் அறிக.

இச்செய்யுள் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் மாச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என எழுசீர்கொண்ட அடிகள் நான்கான்வந்த எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். 38

இறைவா! நின் கருணைப்பிரவாகத்தி லாழ்ந்த யான் பற்றறுநா
ளென்று ளெனல்

நாட்டமூன் றுடைய செந்நிற மணியே
நடுவுறு நாயக விளக்கே
கோட்டமில் குணத்தோர்க் கெளியநிர்க் குணமே
கோதிலா வமிர்தமே நின்னை
வாட்டமி னெஞ்சங் கிண்ணமாச் சேர்த்து
வாய்மடுத் தருந்தினன் ஆங்கே
பாட்டளி நறவ முண்டயர்ந் ததுபோற்
பற்றயர்ந் திருப்பதெந் நாளோ.

(ப-ரை) நாட்டம்-கண்கள், மூன்று-மூன்றாக, உடைய-வாய்க்கப்பெற்ற, செம்-செவந்த, நிறம்-நிறத்தையுடைய, மணியே-மாணிக்கமே!, நடு-எல்லாப் பொருள்களுக்கும் நடுவாக, உறு - உள்ள, நாயக-தலைமையாகிய, விளக்கே-தீபமே!, கோட்டம்-குற்றம், இல்-இல்லாத, குணத்தோர்க்கு-நற்குணத்தினை உடையவர்களுக்கு, எளிய-எளியனாகத்தோன்றுகின்ற, நிர்க்குணமே-நிர்க்குண வஸ்துவே!, கோது-குற்றம், இலா-இல்லாத, அமிர்தமே-அமுதமே, நின்னை-தேவரீரை, வாட்டம்-குற்றம், இல் - இல்லாத, நெஞ்சம் - மனம், கிண்ணம்-கிண்ணம், ஆ - ஆக, சேர்த்து - பொருத்தி, வாய் - வாய், மடுத்து - வைத்து, அருந்தினன் - உண்டேன், ஆங்கே - அவ்வாறே, பாட்டு - இசைபாடுகின்ற, அளி-வண்டுகள், நறவம் - தேனை, உண்டு-உண்டு, அயர்ந்தது - அயர்ந்தது, போல் - போல, பற்று - பற்றுதல், அயர்ந்து - நீங்கி, இருப்பது - இருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ எ-று.

(வி-ரை) இறைவன் அடியார்க்கு அருள்செய்ய மூன்று கண்களும் செக்கர்மேனியனுமாகத் தோன்றியருளுதலின் "நாட்ட மூன்றுடைய செந்நிற மணியே' என்றார். இறைவன் பக்ஷபாதமில்லாதவன் ஆதலினாலும், எல்லார்க்கும் தலைவனாகி நிற்றலினாலும், ஒளியுருவன், ஒளிமயன் ஆதலினாலும், 'நடுவுறு நாயக விளக்கே' என்றார். நல்லவர் உள்ளத்து அருள்வடிவாய் இன்பவடிவாத் தோன்றி நிற்பவன் ஆதலினால் 'கோட்டமில் குணத்தோர்க் கெளிய நிர்க்குணமே கோதிலா வமிர்தமே' என்றார். இறைவனை அமிர்தம் என்றதற்கு ஏற்பத் தன்னெஞ்சை கிண்ணமாக உவமித்தார். வண்டுகள் இயல்பில்பாடும் இயல்பு உடையது ஆதலின் 'பாட்டளி' என்றார். நின் அருளாலே நின்னைக்கண்டு நின் சிவானந்தத்தில் முழுகி இன்புற்றுத் தன்னை மறந்து இருக்குந்தன்மை என்று வாய்க்கும் என்பார், 'பாட்டளி நறவ முண் டயர்ந்ததுபோற் பற்றயர்ந்திருப்ப தெந்நாளோ' என்றார். 'பற்றயர்ந் திருப்பது' என்றது சிவானந்த நிட்டை பெற்றிருத்தலை. "இறுமாந் திருப்பன் கொலோ" என்ற **அப்பர்** திருவாக்கு ஈண்டு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. அமிர்தம் விஷத்திற்குப்பின் பிறந்தது. உண்ட தேவரை நெடுநாள் ஜீவிக்கச்செய்ததே யொழிய மரணத்தைத் தவிர்த்ததில்லை. முயன்று மெய்வருந்தக் கைவருந்தக் கடைந்த அசுரர்க்கு வஞ்சகஞ்செய்து தேவர்க்கே யுணவாயது ஆதலின் திருப்பாற்கடல் விடம் ஒப்பாதல் தப்பாதலின் 'கோதிலா வமிர்தே' என்றார். இச்செய்யுளும் மேலைச் செய்யுள்போல் எழுசீரான்வந்த எழுசீர்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். ஈற்று 'ஓ' வினைப் பொருளது. 39



மனக்குரங்கை யடக்குதல் நின்கடமையா மெனல்

என்னுடை யுயிரே என்னுளத் தறிவே
என்னுடை யன்பெனு நெறியாய்
கன்னன்முக் கனிதேன் கண்டமிர் தென்னக்
கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய வுறவே உன்னைநான் பிரியா
வண்ணமென் மனமெனுங் கருவி
தன்னது வழியற் றென்னுழை கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும்.

(ப-ரை) என்னுடை-எனது, உயிரே-ஆவியே!, என்-எனது, உள்ளத்து-மனத்தே இருக்கின்ற, அறிவே-அறிவே!, என்னுடை-எனது, அன்பு-அன்பு, என்னும்-என்கின்ற, நெறியாய்-நெறியையுடையவனே!, கன்னல்-கரும்பும், முக்கனி-முக்கனிகளும், தேன்-தேனும், கண்டு-கற்கண்டும், அமிர்து-அமிர்தமும், என்ன-ஒப்ப, என்னை - அடியேனை, கலந்து-கூடி, மேவிட-பொருந்த, கருணை-கிருபை, மன்னிய-நிலையாக அமைந்துள்ள, உறவே-உறவே!, உன்னை-தேவரீரை, நான்-அடியேன், பிரியா-பிரியா, வண்ணம்-விதம், என்-அடியேனின், மனம்-மனம், என்னும்-என்கின்ற, கருவி-சாதனமானது, தன்னது-தன்னுடைய, வழி-நெறியை, அற்று-நீங்கி (தொலைத்து), என்-அடியேனின், உழை-இடத்து, கிடப்ப - தங்கிக்கிடக்க, தண்-குளிர்ந்த, அருள்-தேவரீரது அருள், வரம்-வரம், வேண்டும்-அடியேனுக்கு வேண்டுவதாகும் எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்களுக்கெல்லாம் உயிராயும், அறிவுக்கும் அறிவாய் இருப்பவன் ஆதலின் 'என்னுடை யுயிரே யென்னுளத் தறிவே'

என்றார். இறைவன் அன்புமயமாக இருப்பவன் ஆதலின் 'என்னுடை யன்பெனு நெறியாய்' என்றார். "அன்பே சிவம்" என்ற **திருமூலர்** திருவாக்கு ஈண்டு அறியற்பாலது. இறைவன் உயிர்க்கு எல்லாரினும் இனியன், அவ்வுயிரினும் இனியன் ஆதலின் 'கன்னன் முக்கனிதேன் கண்டமிர் தென்னக் கலந்தெனை மேவிடக் கருணை மன்னிய வுறவே' என்றார். மனமே இன்ப துன்பங்களை எய்துதற்குக் கருவியாக இருத்தலின் 'மனமெனுங் கருவி' என்றார். "மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்று **ஒளவைப் பிராட்டி** யருளியபடி மனம்போன போக்கிற் போகாது மனத்தை அடக்கினவரே முத்தியின்பம் பெறுவர் ஆதலின் 'தன்னது வழியற் றென்னுழைக் கிடப்பத் தண்ணருள் வரமது வேண்டும்' என்றார். 'என்னுழை' என்றதில் உழை என்றது ஏழன்உருபு இடப்பொருளில் வந்தது. மனம் ஒருவழிப் பட்டிட்டால் இறைவன் திருவருளின்ப வடிவுகாணும் ஆதலினாலும், அவ்வொருப்படலும் இறைவன் தன்னருள் வரத்தாற் பெறவேண்டிய தாதலினாலும் 'என்னுழைக் கிடப்பத் தண்ணருள் வரமது வேண்டும்' என்றார். 'உன்னைநான் பிரியாவண்ணம்' என்றது சிவாநந்தநிட்டை நீங்காதிருத்தலை. இச்செய்யுளும் மேற்செய்யுள் போல் வந்த எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 40

---

## எனக்கெனச் செயல்

எம்பெருமானே! உடல் பொருளாவி எனு மூன்றையும் உனக்கே அர்ப்பணஞ் செய்தேனெனல்

**எனக்கெனச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின்**
**தனக்கெனத்தகும் உடல்பொருளாவியுந் தந்தேன்**
**மனத்தகத்துள வழுக்கெலா மாற்றிஎம் பிரானீ**
**நினைத்ததெப்படி யப்படி யருளுதனீதம்.**

(ப-ரை) எனக்கு-அடியேனுக்கு, என - என்ன, வேறு-அன்னியமாகிய, செயல்-ஒரு செய்கை, இல்லை-இல்லை, யாவும்-எல்லாம், இங்கு-இவ்விடத்தில், ஒரு-ஒப்பற்ற, நின்-தேவரீர், தனக்கு-தமக்கு உரிமையுடையது, என-என்ன, தகும் - சொல்லத்தகுதி யுடையதாகும், (ஆகையால்) உடல் - அடியேனின் உடம்பினையும், பொருள் - உடைமையினையும், ஆவியும் - உயிரினையும், தந்தேன் - தேவரீருக்குக் கொடுத்தேன், மனத்து - அடியேனின் மனத்து, அகத்து-உள்ளே, உள்ள-உள்ள, அழுக்கு - அழுக்குகள், எல்லாம்-எல்லாவற்றையும், மாற்றி-நீக்கி, எம்-எமது, பிரான்-பெருமானே!, நீ-தேவரீர், நினைத்தது-எண்ணியது, எ-எந்த, படி-விதமோ, அ-அந்த, படி-விதமே, அருளுதல்-கிருபைசெய்தல், நீதம்-முறையாகும் எ-று.



(வி-ரை) இந்தப்பகுதி இருபத்தெட்டு பாக்கள் கொண்டது. இப்பகுதியின் முதற்பாவில் முதல் அடியின் முதலின் **எனக்கெனச் செயல்** என்று தொடங்கினதினால் இப்பகுதிக்கு இப்பெயர் வந்தது. 'எனக்கு' என்றது சிவனை. இதில், அகங்கார மமகாரங்களை யொழித்துப் பார்க்குமிடத்தும், ஜீவாத்துமா ஸ்வாதந்திரியமின்றிப் பரமாத்துமாவுக்கே அடிமையாதலையும் உடம்பினுள் உயிர்போல அந்த ஜீவாத்துமாவினிடத்துப் பரமாத்துமா அந்தராத்துமாவாய் நின்று இயங்குதலையும் நோக்குமிடத்தும், எனக்கென்று சொல்ல ஒரு செய்கையுமில்லை; இப்பிரபஞ்சமெல்லாம் இறைவனை உனக்கே யுரியன வென்று சொல்லத்தகும் என்பதே மகுடத்தின் பொருள். இதனை,

"நன்றாரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னார்தப்பினால்
தன்னாலு மாடிச் சலித்திடு மோவந்தத் தன்மையைப்போல்
உன்னாலி யானுந் திரிவதல் லான்மற் றுனைப்பிரிந்தால்
என்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தடிகளின்** திருவாக்கின்படி உயிர்க்குயிராய் இருந்து உயிர்களை ஆட்டுவிப்போன் ஆதலின், 'எனக்கெனச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின் தனக்கெனத்தகும்' என்றார்.

"என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கும் இங்கு ஒப்பிடத்தக்கது. ஞானாசிரியராக வந்த இறைவனுக்கு உடல் பொருள் ஆவி மூன்றையுந் தந்துளாராதலின், 'உடல்பொருளாவியுந் தந்தேன்' என்றார். இதுபற்றியன்றோ **மணிவாசகரும்**,

"தந்ததுன் றன்னைக்கொண்ட தென்றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்" எனவும்,

"அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ"

என்று **மணிவாசகருங்** கூறியதுங் காண்க. உயிர்களுக்கு மாசுதங்கும் இடம் மனம் ஆதலின் 'மனத்தகத்துள வழுக்கெலா மாற்றி' என்றார். இதுபற்றியன்றோ **திருவள்ளுவரும்**,

"மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற"

என்றார். அடியேன் நின்னுடைமையாதலின் உடையாய் நீ நினைத்தது எவ்வண்ணமோ அவ்வண்ணமே அடியேனைச் செய்துகொள் என்பார், 'எம்பிரான் நீ நினைத்த தெப்படி யப்படி யருளுதனீதம்' என்றார். அடிமையானவரை தமது மனப்படி நடத்துவர் தலைவரென்பது பற்றி இங்ஙனங் கூறப்பட்டது. இதனானன்றோ **மணிவாசகரும்**,

"நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோவிதற்கு நாயகமே" எனவும்,

"ஆயக்கடவே னானோதா னென்ன தோவிங் கதிகாரங்
காயத்திடுவா யுன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே" என்றார்.

'வேறிலை' இதில் 'இலை' என்பது இல்லை என்பதன் தொகுத்தல் விகாரம். 'கொருநின்' என்றதில் 'ஒரு' என்றது ஒப்பின்மைப் பொருளில் வந்தது. 'மனத்தகத்து' இதில் 'அகத்து' என்பது இடப்பொருள் தந்து நின்றது. உளவழுக்கெலாம் என்பதில் உள, எலாம் என்பன முறையே உள்ள, எல்லாம் என்பதன் தொகுத்தல் விகாரங்கள். எம்பிரான் அண்மை விளியாதலின், இயல்பு. எம்-என்றது, தன்மைப்பன்மை, எல்லாவுயிர்களையும் உளப்படுத்தியது. நீதம் என்றது முறை என்ற பொருளில் வந்தது. மாச்சீர் விளச்சீர் விளச்சீர் விளச்சீர் மாச்சீர் என ஐந்து சீர்கள் கொண்ட அடி நான்கால் வந்த கலிநிலைத்துறை இருபத்தெட்டால் ஆகிய பாகம். 1

இறைவனே! அறியாமையுடையனாகிய வென்னை
ஆண்டருளுவை யெனல்

**உளவ றிந்தெலா நின்செய லாமென வுணர்ந்தோர்க்**
**களவி லானந்த மளித்தனை அறிவிலாப் புன்மைக்**
**களவு நாயினேற் கிவ்வண மமைத்தனை கருத்துத்**
**தளருந் தன்மையிங் காரொடு புகலுவேன் தக்கோய்.**

(ப-ரை) தக்கோய்-தகுதியுடையோனே!, உளவு-ஞானநூற்களின் உட்கருத்தை, அறிந்து-உணர்ந்து, எலாம் - எல்லாம், நின்-தேவரீரின், செயல்-செய்கையே, ஆம்-ஆகும், என-என்று, உணர்ந்தோர்க்கு - அறிந்தவர்கட்கு, அளவு-அளவு, இல்-இல்லாத, ஆனந்தம்-இன்பத்தை, அளித்தனை - கொடுத்தருளினை, அறிவு - அறிவு, இலா - இல்லாத, புன்மை - அற்பத்தன்மையும், களவு - திருட்டுத்தனமுள்ள, நாயினேற்கு - நாயையொத்த கடையனேற்கு, இ-இந்த, வண்ணம்-விதம், அமைத்தனை-அமைத்தாய், கருத்து-மனமானது, தளரும் - தளர்ச்சியடையும், தன்மை - தன்மையை, இங்கு - இவ்விடத்து, ஆரொடு-யாரிடம், புகலுவேன்-சொல்லுவேன் எ-று.

(வி-ரை) உளவு அறிதல் - ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள சம்பந்தத்தின் சூக்ஷ்மத்தை அறிதல். 'உளவு' என்றது ஞானசாத்திரங்களின் உட்கிடக்கையை, தனதல்லாதவற்றைத் தனது என்றும், தானல்லாதவற்றைத் தான் என்றுங் கொண்டுழன்றமையின் 'களவு நாயினேற்கு' என்றனர். நாயினேன் - நைச்யாநு ஸந்தாநம்: தம்மை இகழ்ந்து கூறிய பணிமொழி. ஞானநூற்களை யறிந்தார்க்கு தன்னையுந் தலைவனையும் அறியுந் திறன் உண்டாகும் தன்னையுந் தலைவனையும் அறிந்தார் சிவாநந்தத்தழுந்தி இன்புறுவர் ஆதலின், 'உணர்ந்தோர்க் களவிலானந்த மளித்தனை' என்றார்.



அளவிலானந்தம்-முத்தியின்பம். இதனை 'கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியை' என்றதனாலும் இன்னும்,

"இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியா—யன்பமைத்துச்
சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே
யூராகக் கொண்டா னுவந்து"

என்ற **மணிவாசகர்** வாக்கானும் அறியலாம்.

அடியேன் மனத்தளர்ச்சியைக் கேட்டருளும் தன்மையன் உன்னையன்றி வேறிலர் என்பதனைக் குறிப்பதற்கே, 'கருத்துத் தளருந் தன்மையிங் காரொடும் புகலுவேன் தக்கோய்' என்றார். 2

இறைவா! நின் அருள் பெற்றவரே உன்னை ஒப்பிலாதவ
னென்கிறார்க ளெனல்

**என்னைத் தாவின்ன வண்ணமென் றறிகிலா வேழை**
**தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய்**
**பின்னைத் தானின்ற னருள்பெற்ற மாதவப் பெரியோர்**
**நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்.**

(ப-ரை) தக்கோய் - தகுதியை யுடையோனே!, என்னை - அடியேனை, இன்ன-இப்படிப்பட்ட, வண்ணம்-விதத்தையுடையவன், என்று-என்று, அறிகிலா-அறிந்துகொள்ளக்கூடாத, ஏழை - எளியனேன், தன்னைத்தான் - தன்னைத்தான், அருந்திட-தெரிந்துகொள்ள, அருள்-அருளை, புரிதியேல்-செய்வையாயின், பின்னை-பிறகு, நின்றன்-தேவரீரது, அருள்-கிருபையை, பெற்ற, பெற்ற, மாதவம்-மகத்தாகிய விரதம் முதலிய தவங்களைமுடித்த, பெரியோர்-அறிஞர்கள், நெறியால்-முறையால், நின்னை - தேவரீரை, நிகர் - நிகராவார், ஆர்-யார், என-என்று, வாழ்த்துவர்-புகழ்வார்கள் எ-று.

(வி-ரை) ஆன்மா தன்னைத்தானே அறியும் ஆற்றல் உடையதல்ல. உணர்த்த உணருந் தன்மையது. இதுபற்றியே 'என்னைத் தானின்ன வண்ணமென் றறிகிலா வேழை தன்னைத் தானறிந் திடவருள் புரிதியேற் றக்கோய்' என்றார். இதுபற்றியன்றோ **ஒருபெரியார்**,

"என்னை யானிங் குணர்ந்திடவு மெளியே னறியேன் சங்கரனே!
என்னை நீதா னுணர்த்திட்டால் ஏழை யறிவே னுன்றன்னை
பின்னை எய்தாப் பேறிங்கே பிறவு முண்டோ பெருமானே!
உன்னை யறிந்தார் பெறுமோன உயர்ந்தஞான சுகமுறுமே" என்றனர்.

இறைவனை உணரும் ஞானம் பெற்றவர் இறைவனுக்கு ஒருதெய்வம் ஒப்பென்றுரையார்; ஞானம் பெறாதவரே இறைவனுக்கு ஒப்பாச் சிறுதெய்வத்தைப் பேசுவர். இதனை,

"உமையோர் பாகத் திறையவனே உன்னை யுணர்ந்தோர் யாரேதான்
தமையே நிகர்க்குந் தற்பரனே சாற்றும் புன்மைத் தேவர்தமை

அமைவா வுனக்கிங் கொப்பென்றே அறைவர் அறிவோர் கடைகெட்டோர்
இமையோர் தங்கள் பெருவாழ்வே என்ற னிதயத் தொளிர்வோனே"

எனவும் வருஞ் **செய்யுள்களா**லும் அறியலாம்.

இதுகொண்டே இவ்வாசிரியர் 'பின்னைத் தானின்ற னருள்பெற்ற மாதவப் பெரியோர் நின்னைத் தானிக ராரென வாழ்த்துவர் நெறியால்' என்றார். 'பொரு விறந்தனை கருவறந்தனை' எனவும்,

"காயுமயின் மூவர்புரம் வேவநகை யாடுகங் காதா னுமாதான்சங்
கானாத ஞசலக் கடவுளுக் கிணையா வோர் கடவுளையு மறிவிப்பவனே"

எனவும் **வாட்போக்கிக் கலம்பகத்தா**லும் அறியலாம். 3

இறைவனே! நின் அடிக்கு அன்பு செய்பவர்கள் அடையும்
பெருமையே பெரிதெனல்

ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புதா னீட்டும்
காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்
போத நித்திய புண்ணிய எண்ணரும் புவன
நாத தற்பர நானெவ்வா றுய்குவேன் நவிலாய்.

(ப-ரை) ஏதம் - குற்றம், இன்றி-இல்லாதபடி, தன்-இறைவனுகியதன், அடியிணைக்கு - இரண்டு திருப்பாதங்களுக்கு, அன்பு-அன்பை, ஈட்டும்-செய்கின்ற, காதல்-ஆசையையுடைய, அன்பர்க்கு - அன்பர்களுக்கு, கதி - முத்தி, நிலை-நிலையானது, ஈது-இது, என-என்று, காட்டும்-காட்டுகின்ற, போத-ஞானமயமானவனே!, நித்திய-என்று முள்ளவனே!, புண்ணிய - புண்ணியவானே!, எண்-எண்ணுதற்கு, அரு-அருமையான, புவனம்-புவனங்களுக்கு, நாத-இறைவனே!, தற்பர - தற்பரனே! நான் - அடியேன், எ - எந்த, ஆறு-விதம், உய்குவேன்-பிழைப்பேன், நவிலாய்-சொல்லியருள்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் திருவடிக்கண்ணே அன்புவைத்தவர்களுக்கே இறைவன் கதிதருவன். என்னை, பற்றற்றானாகிய இறைவன் தாண் மலரிற் பற்று வைத்தவர் ஏனைப் பிரபஞ்சப் பற்றெல்லாமற்று நிற்பர். பிறப்புக்கு வித்தாகிய பிரபஞ்ச ஆசை நீங்கவே ஞானோதயம் உண்டாகும். ஞானோதயம் உண்டாகவே இறைவன் வெளியாவன். இறைவன் வெளிப்படவே ஆனந்தம் உதியா நிற்கும்; இது முத்தியாம். இதுகொண்டே ஆசிரியர் 'ஏத மின்றித்தன் னடியிணைக் கன்புதா னீட்டும் காத லன்பர்க்குக் கதிநிலை யீதெனக் காட்டும்' என்றார். இதனை, "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்" என்ற **திருக்குறளா**லறியலாம். இறைவன் ஞானசொரூபியாதலின் 'போத' என்றார். இறைவன் சத்தியன், அழிவில்லான், என்று முள்ளவன் ஆதலின் 'நித்திய' என்றார். இறைவன் புண்ணியவடிவன், எல்லா உயிர்க்கும் இன்பமே புரிவோன் ஆதலின் 'புண்ணிய' என்றார். இறைவன் சர்வாண்டங்களுக்கு நாயகன் ஆதலின் 'எண்ணரும் புவநாத' என்றார். இறைவன் எல்லாரிலும், எல்லாவற்றிற்கும்



உயர்ந்தவன். தனக்குமேல் ஒருவன் இல்லாதவன் ஆதலின் 'தற்பர' என்றார். நின் திருவடிக்கு அன்புவைத்தார்க்குக் கதியருளும் இறைவனே! நின் திருவடிக்கு அன்புவையா எளியேன் எவ்வாறு உய்வேன் என்பார், 'நானெவ்வாறுய்குவே னவிலாய்' என்றருளினார். தத்பரன் - ஜீவாத்மாவிலும் மேம்பட்டவன். தன்பரன் என்று பிரித்தால், தன்னில்தான் மேம்பட்டவனென்று பொருளாம். 4

இறைவனே! தேவரீரையன்றி வேறு எதனையும் சிந்தியேனெனல்

வேத மெத்தனை யத்தனை சிரத்தினும் விளங்கும்
பாத நித்திய பரம்பர நிரந்தர பரம
நாத தற்பர சிற்பர வடிவமாய் நடிக்கும்
நீத நிர்க்குண நினையன்றி யொன்றுநா னினையேன்.

(ப-ரை) வேதம் - வேதங்கள், எத்தனை - எத்தனையோ, அத்தனை - அத்தனையின், சிரத்தினும்-முடிகளிலும், விளங்கும்-பிரகாசிக்கின்ற, பாத-திருப்பாதங்களை உடையவனே!, நித்திய - நித்தியமாய் உள்ளவனே!, பரம்பர-மேலான கடவுளே!, நிரந்தர-சாசுவதனே! (என்றும் ஒரேதன்மையாய் உள்ளவனே!), பரம-உயர்ந்தவனே!, நாத-நாயகனே!, தற்பர-தற்பரனே!, சிற்பரம்-உயர்ந்த ஞானம், வடிவம்-வடிவத்தை உடையவன், ஆய்-ஆகி, நடிக்கும்-திருநடனத்தைச் செய்கின்ற, நீத - நீதியை உடையவனே!, நிர்க்குண - நிர்க்குணனே!, நின்னை-தேவரீரை, அன்றி-அல்லாமல், ஒன்றும்-வேறு ஒன்றையும், நான்-அடியேன், நினையேன்-எண்ணேன் எ-று.

(வி-ரை) யுகங்கடோறும் இறைவன் ஆன்மாக்க ளுய்தற்பொருட்டு வேதங்கள் தந்தருளுகின்றானாதலினாலும், யுகா யுகங்களுக்கு வேதங்கள் வெவ்வேறாக எழுமாதலினாலும், எத்தனைச் சதுர்யுகங்கள் கழிந்தன, எத்தனை வேதங்கள் பிறந்தன என்று கணக்கிட்டுச் சொல்லமுடியா தாதலாலும் 'வேத மெத்தனை யத்தனை சிரத்திலும் விளங்கும், பாத' என்றார். இனி, இதற்கு, பண்டைநான் மறைகளின் உச்சியினின்று நடிப்போனாதலின் இவ்வாறு கூறின ரென்பாரு முண்டு. 'சிற்பரவடிவு' என்றது ஞானாகாரிய வடிவத்தை. இறைவன் நீதிமயமானவன் ஆதலின் 'நீத' என்றார். இறைவன் குணாதீதன் ஆதலின் 'நிர்க்குண' என்றார். நீயே பொருளாகவும் மற்றையவெல்லாம் பொய்யாகவும் இருத்தலின் உன்னையன்றி மற்றொன்றையும் நினைந்தில னென்பார் 'நினையன்றி யொன்றுநா னினையேன்' என்றார். பாத, நித்திய, பரம்பர, நிரந்தர, பரம, நாத, தற்பர, நீத, நிர்க்குண இவைகள் விளியுருபு ஏற்ற பெயர்கள். அண்மைவிளி. 5

இறைவனே! எல்லாம் நீயே யெனல்

நெறிக டாம்பல பலவுமாய் அந்தந்த நெறிக்காம்
செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்
அறியுந் தன்மையிங் காருனை அறிவினு லறிந்தோர்
பிறியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய்.

(ப-ரை) நெறிகள் - மார்க்கங்கள், தாம் - தாம், பல - அநேகம், பலவும்-அநேகமும், ஆய்-ஆய், அந்த-அந்த, அந்த-அந்த, நெறிக்கு-மார்க்கங்களுக்கு, ஆம்-பொருத்தமாகிய, செறியும் - பொருந்திய, தெய்வமும் - தெய்வங்களும், பலபல-அநேகம் அநேகம், ஆகவும் - ஆகவும், செறிந்தால் - தேவரீர் நிறைந்திருப்பின், இங்கு-இவ்வுலகத்தில், உன்னை - தேவரீரை, அறியும் - தெரிந்து கொள்ளும், தன்மை - விதத்தினர், ஆர் - யார், அறிவினால் - ஞானத்தினால், அறிந்தோர் - தேவரீரைத் தெரிந்து கொண்டவர்கள், பிரியும் - நீங்கும், தன்மை-வகை, இல்லா - இல்லாத, வகை-விதம், கலக்கின்ற - அவர்கள்பால் வெளிப்பட்டுக் கூடுகின்ற, பெரியோய்-பெரியவனே! எ-று.

(வி-ரை) உலகத்து உயிர்கள் தத்தம் அறிவுக்கும் தவத்திற்குந் தக்கவாறு சமயமார்க்கங்களை ஏற்படுத்தி அச்சமயத்துக்குத் தக்க தெய்வத்தை வகுத்து வணங்குகின்றன இவையும் இறைவன் திருவருளினால் ஏற்படுவதாதலின் 'நெறிக டாம்பல பலவுமா யந்தந்த நெறிக்காம் செறியுந் தெய்வமும் பலபல வாகவுஞ் செறிந்தால்' என்றார். இறைவனே அவ்வத் தெய்வங்களாகி அவர்க்கு அருள் செய்தலின் 'அறியுந் தன்மையிங் காருனை' என்றார். இறைவன் ஞானிகளின் அகத்தைவிட்டு நீங்காதவன் ஆதலின், 'அறிந்தோர் பிரியுந் தன்மையில் லாவகை கலக்கின்ற பெரியோய்' என்றார். இதுபற்றியே **மணிவாசகரும்**,

"நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க" என்றார்.

"சமய மெல்லா நீயானாய் சமயஞ் சொல்லுந் தேவானாய்
இமய வல்லி பங்காவோ எவ்வா றுன்னை யறிவேனே
அமைய நீதா னுண்ணின்றே அறிய வுணர்த்தி னல்லால்யான்
தமையே தமக்கு கிகராக்கொள் தாயே யுன்னை யுணரேனே"

என்ற **பெரியார்** வாக்கானும் தெளிக. 6

உலகங்களையும் உயிர்களையும் அவைகட்கு வேண்டுவனவற்றையும்
படைத்து நீ எனக் கருள் செயாத தேனெனல்

**பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்து அதிற் பிறங்கும்
உருய பல்லுயி ரெத்தனை யமைத்து அவைக் குறுதி
வருவ தெத்தனை யமைத்தனை அமைத்தருள் வளர்க்கும்
அரிய தத்துவ எனக்கிந்த வண்ணமே னமைத்தாய்.**

(ப-ரை) பெரிய-பெரியனவாகிய, அண்டங்கள் - அண்டங்கள், எத்தனை-எத்தனை, அமைத்து - வகுத்து, அதில் - அவ் அண்டத்துக்குள், பிறங்கும்-விளங்குகின்ற, உரிய - உரியவைகளாகிய, பல் - பலவகைப்பட்ட, உயிர்-உயிர்கள், எத்தனை-எத்தனை, அமைத்து-வகுத்து, அவைக்கு-அவைகட்கு, உறுதி-உறுதி, வருவ-உண்டாவனவாகிய பொருள்கள், எத்தனை-எத்தனை, அமைத்தனை-வகுத்தாய், அமைத்து-இவ்விதம் அமைத்து, அருள்-அவற்றினிடத்துக்



கிருபையை, வளர்க்கும்-பெருக்குகின்ற, அரிய-அரிதாகிய, தத்துவ-உண்மைப் பொருளே!, எனக்கு-அடியேனுக்கு, இந்த - இந்த, வண்ணம் - விதம், என்-எதற்காக, அமைத்தாய்-அமைத்தனை எ-று.

(வி-ரை) எல்லா வுயிர்களையும் நற்கதி புகுவிக்கவேண்டுமென்று இயல்பாயெழுந்த பெருங்கருணைத்திறத்தால், அவற்றிற்குக் கைகால் முதலிய உறுப்புக்களோடுகூடிய உடம்பைத் தந்து, வாழுமிடத்தையும் உண்டாக்கி, மற்றும் அவை வாழ்தற்கு வேண்டிய உணவு முதலிய நுகரப்படும் பொருள்களும் அவை உய்யும் வகை யுணர்த்துகின்ற தத்துவநூல்களும் முதலிய பலவற்றையும் அமைத்தருளியநீ, உன்னையன்றி வேறு கதியில்லாத எளியேன் இந்தப் பிரபஞ்சத்தில் உழலாமல் உய்யுமாறு அருள் செய்யலாகாதோ? யென்பதே விளக்கம். "பெரிது பெரிது புவனம் பெரிது" என்ற திருவாக்கின்படி உலகம் பெரி தாதலினாலும், இவ்வுலகம்போலப் பல பல ஆயிரம் உலகங்கள் உள வாதலினாலும், 'பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்து' என்றார். இறைவனே தனு, கரண, புவன, போகங்களைத் தந்தவனாதலின் 'பெரிய வண்டங்க ளெத்தனை யமைத்ததிற் பிறங்கும் ... ... ... ... ... ... த்தவைக் குறுதி வருவ தெத்தனை யமைத்தனை" என்றார். இறைவன் தத்துவாதீதப் பொருளாதலின் 'அரிய தத்துவ' என்றார். பிரபஞ்ச மாயையிற் பட்டுழலாது உனது சிவாநந்தத்தையே பெற்று இன்புற்றிருக்க விரும்பும் அடியேனுக்கு அது கிட்டாவகை என் செய்தாய் என்பார் 'எனக்கிந்த வண்ணமே னமைத்தாய்' என்கின்றார். பரமாத்மாவாகிய இறைவனுக்கு அருமை - அறிதற்கு அருமையும், பெறுதற்கு அருமையுமாம். 'எத்தனை' என்பனவெல்லாம் வியப்புப் பொருளில் வந்த வினாக்கள். 7

காரணப்பொருள் தியானிக்கத் தக்கதெனல்

**கணம தேனுநின் காரணந் தன்னையே கருத்தில்
உணரு மாதவர்க் கானந்த முதவினை ஒன்றும்
குணமி லாதபொய் வஞ்சனுக் கெந்தைநிர்க் குணமா
மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார்.**

(ப-ரை) கணமதேனும் - ஒருகணப்பொழுதாயினும், நின் - தேவரீரின், காரணம் - சர்வகாரணம், தன்னையே-தன்னையே, கருத்தின் - மனத்தினால், உணரும்-அறிகிற, மாதவர்க்கு-பெரியதவத்தையுடையோர்களுக்கு, ஆநந்தம்-இன்பத்தை, உதவினை-கொடுத்தாய், ஒன்றும் - ஒருசிறிதும், குணம்-குணம், இலாத-இல்லாத, பொய்-பொய், வஞ்சகனுக்கு-வஞ்சகங்களையுடையவனாகிய அடியேனுக்கு, எந்தை-எந்தையே!, நிர்க்குண-நிர்க்குணனே!, மா - பெரிய, மணம்-வாசனை, உலாம் - வீசப்பெற்ற, மலர் - தாமரைமலரையொத்த, பாதம் - திருவடிகளை, தரின் - கொடுத்தருள்வையேயானால், உன்னை - தேவரீரை, மறுப்பார்-மறுக்கவல்லவர், யார்-யாவர்; எ-று.

(வி-ரை) பெரும்பெரும் தவத்தைச்செய்தோருக்கும் இறைவன் காரணமுணருதல் முடியாததாகும் என்பதும், அவர்களுக்கு ஒருக்ஷணம்

இறைவன் காரணம் அறியப்பெறின் பெரும்பேறுபெறுவர் என்பதுந் தோன்ற 'கணமதேனுநின் காரணந் தன்னையே கருதி உணரு மாதவர்க் கானந்த முதவினை' என்றார். அடியேன்குணஞ் சிறிதுமில்லாதவன். இத் தகைய எனக்கு நின் மலர்ப்பதந் தந்தால் தனிமுதல்வனாகிய தேவரீரை, தன் வயத்தனாகிய தேவரீரை, பரதந்தரனல்லாத தேவரீரை யாவர் தடுப்பார் என்பார், 'குணமி லாதபொய் வஞ்சனுக் கெந்தைநிர்க் குணமா மணமு லாமலர்ப் பதந்தரின் யாருனை மறுப்பார்' என்கின்றார். இக்கருத்துப் பற்றியே, ஒரு புலவர்,

"சற்று நல்ல குணமில்லாத் தமியேற் கருள லாகாதோ
உற்று நீதா னருள்புரியின் உமையா ளுன்னைத் தடுப்பாளோ
பெற்ற தாயு மவளன்றோ பெரிய பிள்ளை மணிப்பிள்ளை
குற்ற மென்னக் கூறுவரோ கூற்றை யுதைத்தாய் கூறுகவே"

என்ற செய்யுளாலும் அறியலாம்.

'ஆனந்தம்' என்றது சிவாநந்தத்தை, முத்தியானந்தத்தை, 'குணமா மணமு லாமலர்ப்பதம்' என்றது அடியார்க்கருளுங் குணத்தையும், சிவாநந்த மணத்தையும் குறித்தது. அடியார்க்கு அருளுங் குணமாவது பிறவித்துயர் போக்குதலை. 'மணமாவது' அடியார்க்கு சிவாநந்தபோக மணந்தருதலை. இதனை,

"பிறவாதிருக்க வரம்பெறல் வேண்டும் பிறந்து விட்டால்
இறவாதிருக்க மருந்துண்டு காணிது வெப்ப டியோ
அறமார் புகழ்த்தில்லை யம்பல வாண ரடிக்கமல
மறவா திருமன மேயது காணன் மருந்துனக்கே" எனவும்,

"நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின்பதமே"

எனவும் கூறிய **பட்டினத்தடிகள்** வாக்காலும் அறிக. 8

முத்தியின் நிரதிசய வின்பம் இஃதென ஒப்புக்கூறி விளக்கல்

**கன்னன் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த
தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்
நன்ன லத்தநின் னற்பதந் துணையென நம்பச் [ன்.
சொன்ன வர்க்கெனு லாங்கைம்மா றில்லைஎன் சொல்வே**

(ப-ரை) நல்-சிறந்த, நலத்த-அழகையுடையவனே!, கன்னல் - கரும்பும், முக்கனி - மூன்றுகனிகளும் (வாழை, பலா, மா), கண்டு - கற்கண்டும், தேன்-தேனும், சருக்கரை-சர்க்கரையும், கலந்தது-கலந்தது, என்ன-என்று சொல் லும்படி, முத்தியில்-முத்திநிலையில், கலந்தவர்க்கு-கூடினவர்களுக்கு, இன்பம்-சுகம், ஆய்-ஆகி, இருக்கும்-இருக்கின்ற, நின்-தேவரீரின், நல் - நல்ல, பதம்-திருவடியே, துணை - துணை, என - என்று, சொன்னவர்கட்கு-சொல்லியவர் களுக்கு, என்னால்-அடியேனால், ஆம்-செய்யக்கூடியதாகிய, கைம்மாறு-பிரதி யுபகாரம், இல்லை - எப்பொழுதும் இல்லை, என் - அவ்வாறு சொல்லிய அவ் அறிஞரின் பெருமையினை என்னவென்று, சொல்வேன்-கூறுவேன் எ-று.

(வி-ரை) முத்தியின்பம் எல்லா நன்மணமும், எல்லா இன்ப ஒளியும், அழகும், எல்லா மதுரச்சுவையும் ஒருங்கு கலந்து வேறு பிரிக்க முடியாத வாறு இருக்குமாதலின் 'கன்னல் முக்கனி கண்டுதேன் சருக்கரை கலந்த தென்ன முத்தியிற் கலந்தவர்க் கின்பமா யிருக்கும்' என்றனர். இதனு னன்றோ **மணிவாசகரும்** இறைவனை,

"தேனையும் பாலையுங் கன்னலையு மொத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற்
கொண்டருளும் வானவன் பூங்கழலே
பாடுதுங்கா ணம்மானாய்" எனவும்,

"ஊனா யுயிரா யுணர்வா யென்னுட் கலந்து
தேனா யமுதமு மாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழி யெமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க் கொன்றைச் சேவகனார்" எனவும்,

"ஞானக் கரும்பின் றெளிவைப் பாகை நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயி னானைச் சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டு கொண்ட கூத்தனை"

எனவும் கூறிய **மணிவாசர்** வாக்கானும் அறியலாம்.

இறைவன் திருத்தாள் துன்பமகற்றி முத்தி இன்பந் தருதலின் 'நற்றாள்' என்றார். இதனை,

"நற்றா டொழாஅ ரெனின்" எனவும்,

"மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார்"

எனவும், **திருவள்ளுவர்** கூறியது கொண்டுந் தெளிக. 9

விரைவில் உய்யுமாறுகூறி வீடருளெனல்

**தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாஞ் சகத்தில்
பந்த மாமென்றே யருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை நீயெனை யின்னமவ் வல்லலி லிருத்தின்
சிந்தை தான்றெளிந் தெவ்வண முய்வணஞ் செப்பாய்.**

(ப-ரை) தந்தை-அப்பனும், தாய்-அன்னையும், மகவு-புத்திரன், எனும்-என்றுசொல்லப்படுகின்ற, அவை - அவைகள், எலாம் - எல்லாம், சகத்தில் - பூமியில், பந்தம்-தளை, ஆம்-ஆகும், என்றே-என்றே, அரு - அருமையாகிய, மறை - வேதங்களை அருளிச்செய்த, வாயினால் - திருவாக்கினால், பகர்ந்த - சொல்லியருளிய, எந்தை - எமதுதந்தையாகிய, நீ - தேவரீர், என்னை - அடி யேனை, இன்னமும்-இன்னமும், அ-அந்த, அல்லலில்-துன்பத்தில், இருத்தின்-இருக்கச்செய்தால், சிந்தை - மனம், தெளிந்து - தெளிந்து, உய் - உய்யும் வணம்-விதம், செப்பாய்-சொல்வாய்; எ-று.

(வி-ரை) 'தந்தை தாய்தமர் மகவெனு மவையெலாம்' என்றதில் உம்மைகள் தொக்குகின்றன. 'தமர்' என்றது சுற்றத்தாரை, தம்மவர் என்னும் பொருளது. 'மகவு' இது இளமைப்பொருள் குறிக்குஞ்சொல் ஈண்டு மக்கள்மேல் நின்றது. 'சகத்தில்' இது 'ஜகம்' என்ற வடசொற்சிதைவு. 'அருமறை வாயினால்' என்பதற்கு வேதவாக்கினால் எனப் பொருள் கூறுதலும் ஒன்று. தாய், தந்தை, தாரம், தனயன், தமர் என்பனவாகிய சந்தைக் கூட்டங்கள் மாயையால் ஏற்படுவன. இவர்களின்மேல்வைத்த பற்றற்றால் இறைவன் பற்றுதானேயுண்டாகும். முத்தி சித்திக்கும் என்பார் 'தந்தை தாய்தமர் ... ... ... வாயினாற் பகர்ந்த எந்தை' என்றார். மனைமக்கள் தாய்தந்தை சுற்றத்தார்மேல் வைக்கும்பற்றாகிய காதல் துன்பந்தருவதாகும். பிறவித்துன்பத்தை யுண்டாக்குவதாகும். இதுபற்றியே, 'எந்தை நீயெனை யின்னமவ் வல்லலி விருத்தின் என்றார். இதனாலன்றோ **ஔவைப்பிராட்டியாரும்,**

> "அம்மி துணையாக ஆறிழந்த வாறொக்கும்
> கொம்மை முலையார்தங் கொண்டாட்டம்" என்றார்.

> "நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமு ஞானமுமே
> அல்லாது வேறு நிலையுள தோவக மும்பொருளும்
> இல்லாளுஞ் சுற்றமு மைந்தரும் வாழ்வு மெழிலுடம்பும்
> எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே" என்றும்,

> "ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
> பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்
> சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
> யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே" என்றும்,

> "விடப்படு மோவிப் பிரபஞ்ச வாழ்க்கையை
> விட்டுமனந் திடப்படுமோ" என்றும்,

> "அடர்ந்த சந்தைக் கூட்டமென் றேயிரு"

எனவும் **பட்டினத்தடிகள்** கூறியதாலும்,

> "தாய்தந்தை தாரந் தனையர் தமரென்னும்
> மாய்கைதரு பாச வலைப்பட்டே—நோய்கொண்டே
> அல்லலுறு நாயேனை அத்தா பரஞ்சுடரே
> வல்லைவந்து காத்தருள் வா"

என்ற **தனிப்பாட்டாலும்** அறியலாம். 10

அருட்குணம் பாராட்டல்

துய்யன் தண்ணருள் வடிவினன்
பொறுமையாற் றுலங்கும்
மெய்ய னென்றுனை யையனே
அடைந்தனன் மெத்த



நொய்யன் நண்ணிய அறிவிலன்
ஒன்றைநா றாக்கும்
பொய்ய னென்றெனைப் புறம்விடி
னென்செய்வேன் புகலாய்.

(ப-ரை) துய்யன்-பரிசுத்தன், தண்-குளிர்ந்த, அருள்-அருள்மயமான, வடிவினன் - உருவமாய் இருப்பவன், பொறுமையால் - பொறுமையுடனே, துலங்கும் - விளங்குகின்ற, மெய்யன் - மெய்மையானவன், என்று - என்று கொண்டு, ஐயனே-இறைவனே!, உன்னை-தேவரீரை, அடைந்தனன்-அடைந்தேன், மெத்த-மிகவும், நொய்யன்-அற்பன், நண்ணிய-நட்பமாகிய, அறிவு-அறிவு, இலன் - இல்லாதவன், ஒன்றை - ஒன்றினை, நாறு-நூறாக, ஆக்கும்-விருத்திசெய்கின்ற, பொய்யன்-பொய்மையன், என்று-என்றறிந்து, என்னை-அடியேனை, புறம்-புறத்தே, விடின்-விட்டுவிட்டால், என்-என்ன, செய்வேன்-செய்யக்கூடியவனாவேன், புகலாய்-சொல்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் இயற்கையாகவே பாசபந்தங்களில் நின்றும் நீங்கியவன் ஆதலின் 'துய்யன்' என்றார். இறைவன் அருட்டிருமேனியன் ஆதலின் 'தண்ணருள் வடிவினன்' என்றார். இறைவன் அடியார் செய்யும் பிழை பொறுத் தருள்பவனாதலின் 'பொறுமையாற் றுலங்கும் மெய்யன்' என்றார். இறைவனை நோக்க ஆன்மா கிஞ்சிஞ்ஞன் ஆதலின் 'மெத்த நொய்யன்' என்றார். ஆன்மா சிற்றறிவு உடையவன் ஆதலின் 'நண்ணிய அறிவிலன்' என்றார். ஒரு பொய்யை நிலைநாட்டப் பலபொய்கூற வேண்டியிருத்தலினால் 'ஒன்றைநூ றாக்கும் பொய்யன்' என்றார். ஆன்மா இறைவன் பற்றுக் கோடின்றி உய்யமுடியா தாதலின், 'என்றனைப் புறம்விடி னென்செய்வாய் புகலாய்' என்றார். இறைவனே சத்தியப் பொருளாதலினாலும், அடியார் பிழை பாராதவன் ஆதலினாலும் 'பொறுமையாற் றுலங்கும் மெய்யன்' என்றார். திருவருட் சொரூபியும், பொறுமையாற் றுலங்கும் மெய்யனுமாகிய தேவரீர் அடியேன்பாலுந் தண்ணருள்புரிந்து என் பிழைகளைப் பொறுத்து புறம்போக விடாது நின் திருத்தாளடி சேர்த்து உய்விக்க வேண்டு மென்பதனை இச்செய்யுளாற் பெரியார் குறிப்பிக்கின்றார். 11

இறைவனே! நீ என் நெஞ்சத்திருந்து ஆனந்த நடனம் புரியின்
அடியேன் உய்வேன் என்கின்றார்

ஒன்ற தாய்ப்பல வாய்உயிர்த் திரட்கெலா முறுதி
என்ற தாய்என்று முள்ளதாய் எவற்றினு மிசைய
நின்ற தாய்நிலை நின்றிடு மறிஞஎன் னெஞ்சம்
மன்ற தாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்.

(ப-ரை) ஒன்றது - ஒன்று, ஆய் - ஆகி, பல-பல, ஆய்-ஆகி, உயிர்-உயிர்களின், திரட்கு-கூட்டங்களுக்கு, எலாம்-எல்லாம், உறுதி-உறுதி, என்றது-என்று சொல்லப்படுவது, ஆய் - ஆகி, என்றும் - எந்தக்காலத்தும், உள்ளது-

அழிவின்றி இருப்பது, ஆய் - ஆகி, எவற்றினும் - எவ்வகைப்பட்ட பொருள்களினும், இசைய - பொருந்த, நின்றது-இருப்பது, ஆய்-ஆகி, நிலை-சர்வதமாக, நின்றிடும்-நிற்கும், அறிவு-பேரறிவினனே!, என்-அடியேனின், நெஞ்சம்-மனம், மன்று - சபை, அது - அது, ஆய்-ஆகக்கொண்டு, இன்ப-ஆநந்த, உரு - வடிவம், கொடு - கொண்டு, நடிப்பின் - நடனம் புரிந்தருள்வாயாயின், வாழ்வேன்-உய்வேன் எ-று.

(வி-ரை) "அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே யுலகு" எனவும். "எழுத் தகரம் போல நிற்பன் எங்க ளிறை" என்னவும் ஆன்றோர் கூறியதுபோல இறைவன் தான் தனிப்பொருளாயும் எல்லாப் பொருள் எல்லா வுயிர், எல்லா வுடல்களிலும் எள்ளுக்குள் எண்ணெய்போலவும், பூவினில் மணம் போலவும் இருக்கின்றான் ஆதலின் 'ஒன்றதாய்ப் பலவாய்' என்றார் இறைவன் உயிர்க்குயிராய் நின்று எல்லா உயிர்களுக்கும் அருள் செய்து வருகின்றானாதலின் 'உயிர்த் திரட்கெலா முறுதி என்றதாய்' என்றார். இறைவன் என்றும் நித்தியனாக இருத்தலின் 'என்று முள்ளதாய்' என்றார். இறைவன் எல்லாவற்றிலும் தோய்ந்துந் தோயாதிருப்பவன் ஆதலின் 'எவற்றினு மிசைய நின்றதாய்' என்றார். இறைவன் அறிவுமயன், ஞானவடிவன் ஆதலின் 'நிலை நின்றிடு மறிவு' என்றார். இறைவன் எல்லா உயிரினுள்ளும் உடலினுள்ளும் கோயிலாக்கொண்டு உறைந்தாலும் மலநீங்கிய ஞானிகள் ஞானக்கண்களுக்கு வெளிப்படத் தோன்றுவன் இந்த அவசரமே இறைவன் தோற்றம் பெறும் பேறாகும். இறைவன் தோற்றம் பெற்றார்க்குச் சிவாநந்தஞ் சித்திக்கு மாதலினாலும், அதுவே முத்தியுமாகலானும், 'அறிவென் னெஞ்சம் மன்றதா யின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்' என்றார். அன்றி, உலக வடிவாயுள்ள விராட்புருஷனது இருதய கமல ஸ்தானமான சிதம்பரதலத்துப் பொன்னம்பலத்தில் நீ நடராஜமூர்த்தியாய் ஆனந்தத் தாண்டவஞ்செய்து பஞ்சகிருத்தியங்களையும் நடப்பித்தல் போல என்பக்கல் திருவுள்ள முவந்து எனது இருதயகமலத்தில் எழுந்தருளி நினது உளமகிழ்ச்சிக்கு அறிகுறியாக நடனம் புரிந்தால் நின் கருணைக்கு இலக்காய் யான் உய்வே னென்றதுவுமாம் இதுகொண்டன்றோ அடியாரை 'ஈசன் நடமாடுங் கோயில்' என்றார் **பெரியாரும்**. 12

இறைவனே! தேவரீரின் திருவருளால் அடியேன் சகசநிஷ்டை அடையும் வண்ணம் நீ இரங்கி அருள்புரிதல்வேண்டும் எனல்

தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்
கினியி ரங்குதல் கடன்இது சமயம்என் னிதயக்
கனிவு மப்படி யாயின தாதலாற் கருணைப்
புனித நீயறி யாததொன் றுள்ளதோ புகலாய்.

(ப-ரை) தனி-தனித்து, இருந்து-இருந்து, அருள்-அருட்டன்மையான, சகசமே-சகசநிஷ்டையே, பொருந்திட - அடைந்திட, தமியேற்கு - தமியேனுக்கு, இனி - இனிமேல், இரங்குதல் - கிருபைசெய்தல், கடன் - தேவரீர்



கடன்மையாகும், இது - (அதற்கு) இது, சமயம்-சமயமாகும், என் - அடியேனுடைய, இதயம்-மனத்தினுடைய, கனிவும்-கனிவும், அ-அந்த, படி-விதமே, ஆயினது - ஆயிற்று, ஆதலால் - ஆகையால், கருணை - கருணாமூர்த்தியாகிய, புனித-பரிசுத்தனே!, நீ-தேவரீர், அறியாதது - தெரிந்திராதது, ஒன்று-ஒரு விஷயம், உள்ளதோ-உண்டோ, புகலாய்-சொல்லுவாய்; எ-று.

(வி-ரை) 'தனியிருந்தருட் சகசமே பொருந்திட' என்றது மோன சமாதியை, அன்றி, தனி இருத்தல் - சம்சார பாசபந்தத்திற் பற்றின்றி விலகியிருத்தல்; மனம்புறமாகிய பிரபஞ்ச விஷயங்களிற் செல்லாமல் ஒரு நிலைப்பட்டு உள்நோக்கி நிற்றலுமாம். இது, யோகத்தின் அங்கம் எட்டனுள் பிரத்தியாகாரமெனப்படும். 'இதயக்கனிவு' என்றது மனவுருக்கத்தை. இறைவன் திருவருட் டிருமேனியனாதலின் 'கருணைப்புனித' என்றார். தான் அந்தர்முகமாக இறைவனைக்கண்டு சிவாநந்தத்தில் மூழ்கியிருத்தல் சஞ்சிதவினையாற்றடைபட்டுப் பகிர்முகப்படநேருதலின், 'தனியி ருந்தருட் சகசமே பொருந்திடத் தமியேற்கினி யிரங்குதல் கடனிது சமயம்' என்றார். தன் பரிபக்குவநிலையை யுணர்த்துவான் 'என்னிதயக் கனிவு மப்படி யாயின' என்றார். இறைவன் எல்லாம் உணரும் ஆற்றல் உடையன் ஆதலின் 'நீயறி யாததொன் றுளதோ' என்றார். இதுபற்றியன்றோ **சிவப்பிரகாசரும்**,

"கிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்கள் நிமலன்றாளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங் கிடைக்கும்"

என்றார். **திருமூலரும்**, "ஒன்றி நின்றே பலவூழி கண்டேன்" என்றார். 13

இறைவனே! உன்திருவடிகட்கு அன்புசெயும்நாளே நன்னாளெனல்

திருந்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாணல்ல புண்ணியஞ் செய்யுநாள் பொருந்
திருந்த நாள்வெகு தீவினை யிழைத்தநாள் என்றால் [தா
அருந்த வாஉனைப் பொருந்துநா ளெந்தநாள் அடிமை.

(ப-ரை) திருந்து-திருத்தமாகிய, சீர் - சிறந்த, அடி - திருப்பாதமாகிய, தாமரைக்கு - தாமரைகளுக்கு, அன்பு - அன்பு, தான்-தன்னை, செய்ய-செய்தற்கு, பொருந்தும்-பொருந்தியிருக்கின்ற, நாள்-நாள், நல்ல-நல்ல, புண்ணியம்-புண்ணியம், செய்யும்-செய்கின்ற, நாள்-நாளாகும், பொருந்தாது-அன்பு செய்யப் பொருந்தாது, இருந்த-இருந்த, நாள்-நாள், வெகு-அதிக, தீவினை-பாவங்களை, இழைத்த-செய்த, நாள்-நாளாகும், என்றால் - என்று சொல்லுமிடத்து, அரும் - அருமையாகிய, தவா - தவ வடிவத்தை யுடையவனே!, அடிமை-அடியேன், உனை-தேவரீரை, பொருந்தும்-அடையும், நாள்-நாள், எந்த-எந்த, நாள்-நாளோ எ-று.

(வி-ரை) இறைவன் திருவடி உயிர்களுக்கு இன்பம் அருள்செய்யுந் திருவடி ஆதலின் 'திருந்து சீரடித் தாமரை' என்றார். சீர் - அழகுமாம்.

சடைமுடியும் தோலுடையும் முதலிய வேடம் பற்றியும், மெய்யுணர்வு அவாவின்மை முதலிய குணம்பற்றியும், சிவபிரானை, 'அருந்தவா' என்று விளித்தார். அன்றிச் சிவபெருமான் சனகர் முதலிய நால்வர்க்கும் யோக நிலையை உபதேசிக்கும்போது கொண்டருளிய தக்ஷிணாமூர்த்தி நிலையைக் கருதி 'அருந்தவா' என விளித்தாருமாம். இறைவன் திருவடி சிந்திக்க அது மனமாசகற்றுமாதலினாலும், மனமாசகல ஞானந்தோன்றுமாதலினாலும், ஞானம் உதிக்க ஆனந்தஞ் சனிக்குமாதலினாலும், 'திருந்து சேவடித் தாமரைக் கன்புதான் செய்யும் பொருந்துகா ணல்ல புண்ணியஞ் செய்யுநாள்" என்றார். இதனையன்றே திருநாவுக்கரசரும், "பெரும்பற்றப் புலியூரானைப் பேசாதநாளெல்லாம் பிறவாநாளே" என்றார் இதனை,

"எங்க ளிறைவா வினைகளைக்க எய்ந்த நாளே' நன்னாளாம்
துங்க வுன்னை மறந்தநாள் தொலையாத் தீமை புரிந்தநாள்"

என்றார் பிறரும். இதுகொண்டன்றே சைவப்பெரியாரும், "புண்ணியா நின்பொன்னடி என்மனத்தே வழுவாதிருக்க வரந்தருவாய்" என்றார். 14

இறைவனே! தேவரீரிடத்து அன்புவைத்தும் அடியேனுக்கு துன்பமும் அகங்காரமும் உளவாதல் பொருந்தாது என்கின்றார்

**பின்னும் முன்னுமாய் நடுவுமாய் யாவினும் பெரிய**
**தென்னுந் தன்மையாய் எவ்வுயிர்த் திரளையு மியக்கி**
**மன்னுந் தண்ணருள் வடிவமே உனக்கன்பு வைத்தும்**
**துன்னு மின்னலேன் யானெனு மகந்தையேன் சொல்லாய்.**

(ப-ரை) பின்னும்-பிற்காலத்தும், முன்னும்-முற்காலத்தும், ஆய்-ஆகி, நடுவும்-இடைக்காலங்களிலும், ஆய்-உள்ளதாகி, யாவினும் - எல்லாப்பொருள்களினும், பெரியது-பெரிய பொருள், என்னும்-என்று சொல்லப்படுவது ஆகி, எ-எந்த, உயிர்-உயிர்களின், திரளையும்-கூட்டங்களையும், இயக்கி-ஆட்டுவித்து, மன்னும் - நிலைபெற்றுள்ள, தண் - குளிர்ந்த, அருள் - திருவருள், வடிவமே-உருவே!, உனக்கு-தேவரீரிடத்து, அன்பும்-அன்பையும், வைத்தும்-வைத்தும், துன்னும்-வந்துநெருங்கும், இன்னல்-துன்பம், என்-யாதுக்கு, யான் - நான், என்னும்-என்று சொல்லும், அகந்தை-அகங்காரம், என்-எதற்கு, சொல்லாய்-சொல்லியருள்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் ஆதியிலு மிருந்தான், அந்தத்திலு மிருக்கிறான். இறைவன் ஆதிமத்தியாந்த ரகிதனாதலின் "பின்னு முன்னுமாய் நடுவுமாய்' என்றார். இறைவன் பெரிய பொருள்கள் எல்லாவற்றினும் பெரியன் ஆதலின், 'யாவினும் பெரிய தென்னுந் தன்மையாய்' என்றார். இறைவன் எல்லா உயிர்களுக்குமெல்லாம் உயிராய் நின்று அவ்வுயிர்களை வினைக்கயிற்றால் ஆட்டிவைக்கின்றானாதலின் 'எவ்வுயிர்த் திரளையு மியக்கி மன்னுந்தண்ணருள் வடிவமே' என்றார். இறைவன் மாட்டு அன்புவைத்தால் அவ் அன்பு, பிராரத்துவ வினைகளாகிய பஞ்சுப்பொதியில் இட்ட நெருப்பென்ன அவையில்லாமல் ஒழித்து இன்பமே நல்கும். இதுகொண்டே, "உனக் கன்பு



வைத்தும் துன்னு மின்னலேன் யானெனு மகந்தையேன் சொல்லாய்' என்றார். உடலெடுத்த ஞான்றே துன்பம் வருதல் நிட்சயமாதலினால் 'துன்னு மின்னலேன்' என்றார். இதனாலன்றே குமரகுருபர சுவாமிகளும், "உறுங்கவ லொன்றுற் றுழியுங் கைகொடுக்கும்', எனக் கல்விச் சிறப்புச் சொல்லவந்த விடத்துக் கூறினர். இறைவன் திருவடிக் கன்பு செய்வார்க்கு அகங்கார தத்துவம் அகன்றொழியும் ஆதலின், 'யானெனு மகந்தையேன்' என்றார். 'அன்பு வைத்தும்' என்றதன்கண்ணுள்ள உம்மை ஐயப்பொருளில் வந்தது. 'இன்னல்' இது துன்பம் என்னும் பொருளது. இனிமை அல்லாது என்னுங் காரணக்குறி. இறைவன் தண்ணருள் நிலைபேறுடையதாதலின் 'மன்னுந் தண்ணருள்' என்றார். 15

இறையே! பொய்வாழ்க்கையை நம்பி மெய்யாகிய உன்னை மறந்து அடியேன் எவ்வண்ணம் உய்வேனெனல்

**மின்னை யன்னபொய் வாழ்க்கையே நிலையெனமெய்யாம்**
**உன்னை நான்மறந் தெவ்வண முய்வணம் உரையாய்**
**முன்னை வல்லினை வேரற முடித்துஎன்று முடியாத்**
**தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடும் தக்கோய்.**

(ப-ரை) முன்னை - முற்பிறப்புகளிற்செய்த, வல் - வலிய, வினை - பாவவினைகளை, வேர்-மூலம், அற-ஒழிய, முடித்து - நாசம்செய்து, என்றும்-எக்காலத்திலும், முடியா-அழிவில்லாத, தன்னை-தேவரீரை, தன் - தேவரீரின், அடியார்க்கு - அடியார்களுக்கு, அருள்-திருவருளை, புரிந்திடும் - செய்கின்ற, தக்கோய்-தகுதியுடையோனே!, மின்னை - மின்னலை, அன்ன-ஒத்த, பொய்-பொய்யாகிய, வாழ்க்கையே-வாழ்வையே, நிலை - நிலை, என - என்று, மெய் - உண்மை, ஆம்-ஆகிய, உன்னை-தேவரீரை, நான்-அடியேன், மறந்து-மறந்துவிட்டு, உய்-உஜ்ஜீவிக்கும், வணம்-விதம், எ-எந்த, வணம்-விதம், உரையாய்-சொல்லியருள்வாயாக; எ-று.

(வி-ரை) பிரபஞ்சமும், பிரபஞ்சவாழ்வும் நிலை இல்லாதது, தோன்றி அழியும் மாலையது ஆதலின் 'மின்னையன்ன பொய்வாழ்க்கை" என்றார். இதுபற்றியன்றே குமரகுருபரசுவாமிகளும்,

"நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரி
லெழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று"

என்றார்.

அறியாமைமிகுதியால் நிலையில்லாதனவற்றை நிலையுடையதாக எண்ணிக்கொண்டும், நிலையுடைய உன்னை மறந்தும் நின்றேனென்பார். 'மின்னையன்னபொய் வாழ்க்கையே நிலையென மெய்யாம் உன்னை நான்மறந் தெவ்வண முய்வண முரையாய்' என்றார். இறைவன் தன்பக்கல் அன்புசெலுத்துவோர் வினைகளையெல்லாங்களைந்து தன்னையே தமர்க்கு நல்குந தறபர

னாதலின், 'முன்னைவல்வினை வேரற முடித்தென்று முடியாத் தன்னைத் தன்னடி யார்க்கருள் புரிந்திடுந் தக்கோய்' என்றார். முன்னை வல்வினை என்றது ஆகாமிய, சஞ்சிதங்களை. பிறப்பு அநாதியாய்வருதலின் உயிரால் அளவின்றி ஈட்டப்பட்ட சஞ்சிதகருமங்களும், அவற்றில் இப்பிறப்பிலனுபவிக்குமாறு எடுத்துக்கொண்ட பிராரப்தகருமமும், இதின் காரியமாக சேர்வதான ஆகாமிய கருமமும் ஆகிய மூன்றுவகையும், 'முன்னைவினை' என்றதில் அடங்கும், "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந்தான் முந்துறும்" என்றபடி வினைப்பயன் விலக்குதற்கரிய தவறா வலியினதாதலால், 'வல்வினை' எனப்பட்டது. வினைக்கு, 'வேர்' என்றது, அவித்தையின் காரியமான அவாவை. என்றுமுடியாத தன்னைத்தன் அடியார்க்கு அருள் புரிதலாவது சிவாநந்தத்து ஆன்மாக்களைப் படியச்செய்தலை. இதுபற்றியன்றோ **மணிவாசகரும்**, "தந்ததுன்றன்னைக் கொண்ட தென்றன்னை" என்றார். சிவோகம்பாவனையில் அபேதமாகக்கானலின் நான்நீ என்பது தோற்றுதலிற்றலின் தந்ததுன்றன்னை என்றார். "வினையறுத்து வீடுதரு விமலன்" எனப் பெரியார் கூறுதலின், 'முன்னை வல்வினை வேரறமுடித்து' என்றார். 16

தம்மை இறைவன் ஆட்கொண்டருளுங் காலத்தை
எதிர்பார்த் திருக்கின்றமை

எம்ப ராபர எம்முயிர்த் துணைவஎன் றிறைஞ்சும்
உம்ப ரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்றாய் உன்றன்
அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை
நம்பி னேன் இனிப் புரப்பதெக் காலமோ நவிலாய்.

(ப-ரை) எம் - அடியோங்களுடைய, பராபர - பராபரனே!, எம் - அடியோங்களுடைய, உயிர் - உயிர்க்கு, துணைவ - துணைவனே!, என்று - என்று, இறைஞ்சும்-துதித்து வணங்கும், உம்பர்-தேவலோகத்தினர்க்கும், இம்பர்க்கும்-இவ்வுலகினர்க்கும், உளம்-மனத்தின், கணே-இடத்தே, நடிக்கின்றாய்-திருநடனம் புரிபவனே!, உன்-தேவரீர், தன்-தன், அம்-அழகிய, பொன்-பொன் போன்ற, மா - பெருமைபொருந்திய, மலர்-தாமரைபோன்ற, பதத்தையே-திருப்பாதங்களையே, துணை-துணை, என-என்று, அடிமை-அடியேன், நம்பினேன்-நம்பியிருக்கின்றேன், இனி-இனி, புரப்பது-காத்தருள்வது, எ-எந்த, காலமோ-காலமோ, நவிலாய்-சொல்லி யருள்வாயாக எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாரிலும் உயர்ந்தோன் ஆதலினாலும், இறைவன் தனக்கு ஒப்புயர்வு அற்றவன் ஆதலினாலும் 'எம் பராபர' என்றார். பராபரன் - பராத்பரன்: இவ்வடசொல், மேலான பொருளிலும் மேலானவன் என்று பொருள்படும். இறைவன் உயிர்க்குயிராய் இருந்து உயிர்களை இயக்குகின்றவனாதலின் 'உயிர்த் துணைவ' என்றார். இதனானன்றோ **திருநாவுக்கரசரும்**,



"என்னுளே யுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே" என்றார்.

'உம்பர்' என்றது தேவர்களை. இது உகரச் சுட்டடியாகப் பிறந்த பெயர். இது உயர்ந்த இடத்தில் உள்ளவர்கள் என்ற பொருளது. 'இம்பர்' இதுவும் இகரச் சுட்டடியாகப் பிறந்தபெயர். இந்த உலகத்து உள்ளவர்கள் என்ற பொருளது. உம்பருலகத்துள்ளவர்களும், இவ்வுலகத்துள்ளவர்களும் பசுக்களாதலினாலும், இறைவன் பசுபதியாதலினாலும் 'இறைஞ்சும் உம்பரிம்பர்க்கு முளக்கணே நடிக்கின்றாய்' என்றார். 'மலர்மிசை யேகினான்' என்றபடி அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து செல்லுதல் இறைவனின் இயல்பாதலின் இங்ஙனங் கூறியதுவுமாம். 'நடிக்கின்றாய்' என்றதனால், திருவுள்ள முகந்தருளுதல் தோன்றும். பிறவிக் கடலைக் கடத்தற்கு இறைவன் திருவடி புணையாதலின், உன்றன், அம்பொன் மாமலர்ப் பதத்தையே துணையென வடிமை, நம்பினே னினிப் புரப்பதெக் காலமோ நவிலாய்' என்றார். 'புரப்பது' என்றது பிரபஞ்ச அல்லலில் விழுந்து தவியாது காத்து முத்திப்பேறளித்தலை. பொன்-விரும்பி நன்கு மதித்துப் பாராட்டப்படுஞ் சிறப்புடைமைக்கும், மற்றைப் பல பொருள்களைப் பெறுதற்கு உரியதாதற்கும் உவமம். 17

எளிமையை இறைவன் பக்கல் விண்ணப்பித்துக் கொள்ளுதல்

பாடி ஆடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தனர் அமலநின் னடியர்யான் றொழும்பன்
நாடி யேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே என்னினிச் செய்வேன்.

(ப-ரை) பாடி-பாடியும், ஆடி-ஆடியும், நின்று-நின்று, இரங்கி-அழுது, நின்-தேவரீரது, பதம் - திருப்பாதங்களாகிய, மலர் - மலரை, முடி-சிரசின், மேல்-மேலே, சூடி-தரித்து, நின்-தேவரீரின், அடியார்-அடியார்கள், வாழ்ந்தனர்-நித்தியவாழ்வை அடைந்தார்கள், தொழும்பன்-தொண்டனாகிய, யான்-அடியேன், இந்த-இந்த, உலகத்தை - உலகத்தை (பூமியை), நாடி-இச்சித்து, மெய்-மெய்யானது, என-என்று, நம்பி-நம்பி, வெறும்-நன்மையே இல்லாது வெறுமையேயாகிய, தீமையே-பாவங்களையே, தேடினேன்-சம்பாதித்தேன், இனி-இனி, என்-என்னகாரியத்தை, செய்வேன்-செய்வேன் எ-று.

(வி-ரை) நின் அடியார் பலரும் நின் பொற்பதமான தாமரைகளைத் தம் முடிசூடிப் பக்தியதிசயத்தால் ஆடிப்பாடி அகங்கரைந்து இசைப் பாடிப் பாடிக் கண்ணீர்மல்கி முத்திப்பேரின்ப வாழ்வு பெறாநிற்க, அடியேன் இவ்வுலகத்தைச் சதமென்றெண்ணி அதனிடத்துப் பற்றுவைத்துக் கொடிய பாவத்தைத் தேடிக்கொண்டேன்; இனி உய்யுமாறு செய்யக்கடவேனென்றுங் கருத்துப் புலனாகவே, இறைவன்மாட்டு அன்பு பூண்டோர் மனங்கசிந்துருகிப்பாடி ஆடி வணங்குவர். இறைவன் பாட்டிலே விருப்புடையன்

ஆதலின் அடியார்கள் இறைவனைப் பாடிப் பரவுகின்றனர். இதனானன்றே நம் திருநாவுக்கரசரும், "பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே" என்றும், "ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே" என்றும் கூறியருளினார். மற்றும், "பத்தனாய் பாடமாட்டேன்" என்றுங் கூறினர். **மணிவாசகரும்,** "பாட வேண்டு நான்போற்றி நின்னையேபாடி நைந்து நைந்துருகி நெக்குநெக் காடவேண்டு நான்போற்றி" என்றருளிச் செய்தார். முடிமேற் சூடற்கேற்ப 'பதமலர்' என்றார். பூவே சென்னியிற் சூடற்குரியதாதலின் அடியேனே, நின்னைப் பாடகிலாதும், நின்னை நினைந்து நெஞ்சுருகி நெக்குவிட்டாடவுஞ் செய்யகிலாது பொய்யாம் பிரபஞ்சவாழ்வை மெய்யென்று என்னறியாமையாற்கொண்டு அதிலேயே மயங்கிப் பறறுவைத்துழன்று தீமையைத்தேடிக் கொண்டே னென்பார். 'தொழும்பன் நாடியேயிந்த வுலகத்தை மெய்யென நம்பித் தேடினேன் வெறுந்தீமையே' என்றார். இனி என் செயலாலாவதொன்றில்லை உன்னருளிருந்தாற் கரை ஏறுவே னென்பார் 'என்னினிச் செய்வேன்' என்றார். 18

நான் மாயையால் கட்டுண்டலையக் காரணமென்னெனல்

**களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும்**
**அளவு மாயையிங் காரெனக் கமைத்தனர் ஐயா**
**உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தின்உன் னடிமை**
**வளரு மாமதி போனமதி தளர்வின்றி வாழ்வேன்.**

**(ப-ரை)** களவு-திருட்டு, வஞ்சனை-வஞ்சனை, காமம்-ஆசை, என்று-என்று கூறப்பெறும், இவை-இவைகளை, எலாம் - எல்லாம், காட்டும் - காண்பிக்கும், அளவு-அளவினையுடைய, மாயை-மாலயயினை, இங்கு-இவ்விடத்து, எனக்கு-அடியேனுக்கு, அமைத்தனர்-பொருத்தினர், ஆர்-யாவர், ஐயா-ஐயனே!, உளவிலே-அந்தரங்கத்திலே, உள்ள-உளள, ஆறு - படி, எனக்கு - அடியேனுக்கு, உணர்த்தின்-தெரிவிக்கின், உன-தேவரீரின், அடிமை-அடிமையேன், மதி-அறிவு, தளர்வு-தளர்ச்சி, இன்றி-இலலாமல்,' வளரும்-விருத்தியாகின்ற, மா-பெரிய, மதி-சந்திரனை, போல்-போல, (அறிவுவளர்ந்து) வாழ்வேன் - வாழ்ந்திருப்பேன்; எ-று.

**(வி-ரை)** பிரபஞ்சமாயையில் மருண்டு பொய்ப்பொருளை மெய்ப்பொருளெனக்கொண்டு, பொன்னைமாதரை, பூமியைநாடிப் பொய், களவு, வஞ்சம், கொலை முதலிய பாவங்களைச்செய்து உயிர்கள் உழலுகின்றவாதலின், 'களவு வஞ்சனை காமமென் றிவையெலாங் காட்டும் அளவு மாயை' என்றார். 'களவு வஞ்சனை காமமென் றிவையெலாம்" என்றதனால் சொல்லாதொழிந்த பொய், கொலைகள் முதலியவும் கூட்டிக்கொள்க. எல்லாப்பாவங்களுக்கும் காமமே காரணம் ஆதல்பற்றிக் கடைசியிற் காமம் என்றார். இவையனைத்து மாயா காரியங்கள். மாயையின் திருவிளையாடல்கள். மாயைசெய்யுந்துயரை.

"அன்ன விசார மதுவே விசார மதுவொழிந்தால்
சொன்ன விசாரந் தொலையா விசாரநற் றோகையரைப்



பன்ன விசாரம் பலகால் விசாரமிப் பாவிநெஞ்சுக்
கென்னவி சாரம்வைத் தாயிறை வாகச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்காலறியலாம்.

இம்மாயையும் அநாதிஆதலின், இதுவும் இறைவன் திருவருளால் ஆன்மாக்களை உய்விக்கத் தாப்பெற்றதாதலின், 'மாயையிங் காரெனக் கமைத்தனரையா' என்றார். மாயையைவகுத்த ரகசியம் உணர்ந்தபோதே ஞானமுதித்திடும் ஆதலின், 'உளவி லேயெனக் குள்ளவா றுணர்த்தினுன் னடிமை வளருமாமதி போன்மதி தளர்வின்றி வாழ்வேன்' என்றார். திரிபதார்த்த உணர்ச்சியே ஞானமாதலின் இவ்வாறு கூறினர். மாயையிற் சிக்குண்டு மதிமயங்கிக் கிடக்குங்கால் அறிவு தேய்மதிபோற் றேய்ந்துவரும் என்பதாம், இறைவன் உண்மைத்தத்துவம் உணரவருங்காலம் அறிவு வளர்பிறைச் சந்திரன்போல்வளரும் என்பதூஉம் இதனாற் குறிப்பித்த உள்ளுறையாம். 19

தன்னிழிவு கூறி இறைவனை வேண்டல்

**வான நாயக வானவர் நாயக வளங்கூர்**
**ஞான நாயக நான்மறை நாயக நலஞ்சேர்**
**மோன நாயக நின்னடிக் கன்பின்றி முற்றும்**
**தீன னய்அகம் வாடவோ என்செய்வேன் செப்பாய்.**

**(ப-ரை)** வானம் - விண்ணுலகத்திற்கு, நாயக - தலைவனே!, வானவர்-தேவர்களுக்கு, நாயக - தலைவனே!, வளம்-வளப்பம், கூர்-மிகுந்த, ஞானம்-ஞானத்திற்கு, நாயக - தலைவனே!, நால் - நான்காகிய, மறை-வேதங்களின், நாயக - தலைவனே!, நலம் - நன்மை, சேர் - சேர்ந்துள்ள, மோனம்-மௌன நிலைக்கு, நாயக-தலைவனே!, நின்-தேவரீரின், அடிக்கு - திருப்பாதங்களுக்கு, அன்பு - அன்பு, இன்றி-இல்லாமல், முற்றும்-முழுதும், தீனன்-ஏழை, ஆய்-ஆகி, அகம்-மனமானது, வாடவோ-வருந்தவோ, என் - என்ன, செய்வேன்-செய்வேன், செப்பாய்-சொல்வாயாக எ-று.

**(வி-ரை)** 'வானம்' என்றது விண்ணுலகத்தை. இனி வானம் என்றது சுவர்க்கலோகத்தையேயன்றி சத்தியலோகம், வைகுந்தம், கைலாயம் முதலிய மேலதாகவுள்ள எல்லாத் தேவர்கள் உலகங்களை எல்லாங் கோடலுமாம். என்னை, இறைவன் வானலோகங்கள் எல்லாவற்றிற்குந் தலைவன் ஆதலின், 'வானவர்' என்றது ஈண்டு இந்திரன், பிரமன், விஷ்ணு, ருத்திரன், மகேச்சுரன் முதலாகிய தேவர்களை எல்லாம். இறைவன் ஞானசொரூபி, ஞான முதல்வன் ஆதலின் 'ஞான நாயக' என்றார். வேதம் இறைவனால் தாப்பெற்றதாதலினாலும், இறைவனையே வேதங்கள் துதிக்கின்றவாதலினாலும் 'நான்மறை நாயக' என்றார். இதனை, "மறை முதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி" என்ற **சீகாளத்திப் புராண** அடியாலும் "வேதத் தனிமுதல்வா" என்ற **தேவாரத் திருமறை** வாக்காலும் அறியலாம்.

இறைவன் தட்சணாமூர்த்தியாய்க் கல்லால மரத்தடியில் மோன யோகத் திருந்தாராதலின் 'நலஞ்சேர் மோன நாயக' என்றார். இறைவனே நின் திருவடிக்கு அன்பில்லாமையால் ஏழையாயினேன். அகம் வாடினேன் அடியேன் செயலால் ஆவதொன்றில்லையே. 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி உன்றாள் வணங்க உன்னருளன்றோ வேண்டும், அதனை அடியேனுக் கருளிச்செய் என்பார், 'நின்னடிக் கன்பின்றி முற்றும் நினையகம் வாடவோ வென்செய்வேன் செப்பாய்' என்றார். 20

வாதனைக்கிடமாயின யான் வாழ்வதெங்ஙன மெனல்

ஏத மற்றவர்க் கின்பமே பொழிகின்ற விறையே
பாத கக்கருங் கன்மனங் கோயிலாப் பரிந்து
சூத கத்தனை யாதினு மிச்சைமேற் றோன்றும்
வாத னைக்கிட மாயினேன் எவ்வணம் வாழ்வேன்.

(ப-ரை) ஏதம் - குற்றம், அற்றவர்க்கு - நீங்கினவர்களுக்கு, இன்பமே-ஆநந்தத்தையே, பொழிகின்ற-சொரிகின்ற, இறையே-கடவுளே!, பாதகம்-தீயதாகிய, கருங்கல் - கருங்கல்லையொத்த, மனம் - மனமானது, கோயிலா-கோயிலாக, பரிந்து-விரும்பி, சூது-வஞ்சகங்கொண்ட, அகத்தனை-மனத்தையுடையவனாகி, யாதினும்-எப்பொருளிடத்தினும், இச்சை-விருப்பம், இடம்-இடம், மேல்-மிகுதியாக, தோன்றும் - தோன்றுகின்ற, வாதனைக்கு-துன்பத்திற்கு, இடம்-இடம், ஆயினேன்-ஆயிருக்கின்றேன், எ-எந்த, வண்ணம்-விதம், வாழ்வேன்-வாழ்வேன்; எ-று.

(விரை) 'ஏதம்' என்றது ஆணவாதிமும்மலங்களால் தோன்றுங் குற்றங்களை. இனி காம, குரோத, வெகுளி, மதம், மாச்சரியம் முதலியவற்றை எனினுமாம். பிரபஞ்ச மாயையில்மருண்டு யான் எனது என்ற அகங்கார மமகாரங்களைக்கொண்டிருக்குங் குற்றம்எனினுமாம். குற்றம்பொருந்திய மாசுடைமனத்தில் இறைவன் இருத்தல் விளங்காது. குற்றமற்றமனத்தில், தூயமனத்தில் இறைவன் இருத்தல் விளங்கும். தூய, மாசகன்ற மனத்தார்க்கே ஞானக்கண் விளக்கமுறும், அதனால் இறைவனைக் கண்டின்புறுவர். மாசுண்டமணியில் ஒளிவிளங்காததுபோல, இறைவன்தோன்றான். இம் மனத்தினர்க்குச் சிவாநந்தஞ் சித்தாயது. துன்பங்களே பிரதிபலித்துக் கொண்டிருக்கும் இதுபற்றியே இப்பெரியார் "ஏதமற்றவர்க் கின்பமே பொழிகின்றவிறையே' என்றார். குற்றமற்ற மெய்யடியார்கட்குப் பேரானந்தமழையைச்சொரிதல், ஈசுவரனை நினது இயல்பு என்பது பொருளாம். இறை - இறைமையென்றபண்பினடி, தலைமையுணர்த்துகின்ற இச்சொல்; ஆகுபெயராய், தலைவனையுணர்த்திற்று. இனி எல்லாப்பொருள்களிலும் இறுப்பவன் (அந்தர்யாமியாய்உறைபவன்) என்றும் இதற்குப் பொருள் கொள்ளலாம்; இறுத்தல்-தங்குதல்; ஐ-கருத்தாப்பொருள்விகுதி. வாதனை-புலன்களின்மேற் பழைய பயிற்சி வசத்தாற்செல்லும் நினைவு. கருங்கல்-எப்பொழுதும் எக்காரணத்தாலும் நெகிழ்ச்சி பெறாமைக்கு உவமை.



"வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும் அஃதேபோல்
வைகலும் நல்லறங் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு" எனக்காண்க.

இன்பம் என்றது சிவாநந்த இன்பம், முத்தியின்பங்களை. 'இன்பமே' என்றதில் உள்ள ஏகாரம் தேற்றேகாரம். இதனால் ஏதமற்றவர்க்கு இன்பமேயன்றித் துன்பம் ஒருநாளும் இல்லை என்பது தெளிவுறுத்தியதாயிற்று. பெருங்கருணைத் தடங்கடலாகிய இறைவன் பிரபாவங்கள்கேட்டும் இளகி அவன்மாட்டு அன்புசெலுத்தாமையால் 'கருங்கல்மனங் கோயிலா' என்றார். இதனன்றோ **மணிவாசகரும்,**

"வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தா னின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே"

என்று கூறியருளினர். விளக்குநீங்க இருள்மண்டியாங்கு இறைவன்மாட்டு அன்பில்லார் நெஞ்சத்துச் சூதும், இச்சையும் குடிகொண்டதென்கின்றார். இச்சையால் துன்பமுண்டாதல் கண்கூடாதலின் 'வாதனைக்கிடமாயினேன்' என்றார். இத்தகைய அடியேன் நின்னருளின்றேல் வாழமுடியாதென்பார் 'எவ்வனம் வாழ்வேன்' என்றார். 21

நின் திருவருளுக்கு இலக்காக்காமல் தள்ளுதல் நீதியோ வெனல்

தெளிவோ டீகையோ வறிகிலான் அறிவிலான் சிறிதும்
அளியி லான்இவன் றிருவருட் கயலென வறிந்தோ
எளிய னாக்கினை என்செய்வேன் என்செய்வேன் எல்லா
வொளியு மாய்நிறை வெளியுமாய் யாவுமா முரவோய்.

(ப-ரை) எல்லா - எல்லா, ஒளியும் - பிரகாசத்துடன்கூடிய பொருளும், ஆய்-ஆகி, நிறை-எங்கும் நிறைந்த, வெளியும் - வெளியும், ஆய்-ஆகி, யாவும்-இன்னும் மற்றுமுள்ள எல்லாப்பொருள்களும், ஆம்-ஆகி நிற்கின்ற, உரவோய்-ஞானமூர்த்தியே!, தெளிவொடு - மனத்தெளிவினோடு, ஈகையோ - கொடையையோ, அறிகிலான்-அறியாதிருக்கின்றான், அறிவு-அறிவு, இலான்-இல்லாதவனாக இருக்கின்றான், சிறிதும் - கொஞ்சமும், அளி - கிருபை, இலான்-இல்லாதவனாக இருக்கின்றான், இவன்-இவன், திரு-திரு, அருட்கு - அருளினுக்கு, அயல் - புறம், என-என்று, அறிந்தோ-தெரிந்தோ, எளியன்-ஏழை,

அக்கினி-யாக்கிவிட்டாய், என் - என், செய்வேன் - செய்வேன்!, என்-என், செய்வேன்-செய்வேன்! எ-று

(வி-ரை) தருமங்கள் எல்லாவற்றிலும் இரப்பார்க்கு ஈதலே சிறந்தது. ஒருவன்பால் ஈகைக்குணம் இருப்பின் எல்லாத் தருமங்களும் அவனிடம் பொருந்தி நிற்கும் எல்லாத் தருமங்களும் பொருந்தப் பெறுதற்கு மனம் அறிவின் றெளிவுடையதாக இருக்கவேண்டும். மனத்தில் அறிவுந் தெளிவும் அமையாதவிடத்து மனத்தே தருமம் சிறிதுந் தங்குதலரிது. இதுகொண்டே, 'தெளிவோ டீகையோ வறிகிலா னறிவிலான்" என்றார். ஈகையே தருமங்கள் எல்லாவற்றினுஞ் சிறந்தது. ஈகை உள்ளானிடத்து எல்லாத் தருமங்களும் வதியும் என்பதனை 'ஈதலறம்' என்ற **ஔவை திருவாக்கால்** நன்குணரலாம். இறைவன் திருவருள் பெறவேண்டுமாயின் மனத்தெளிவும், வண்மைக் குணமும், அறிவும், அருளும் வேண்டப்படுதலின் 'தெளிவோ ... ... ... ... ... ... ... ... அளியிலா னிவன்" என்றார். 'அளி' என்றது பிறவுயிர்களிடங் காட்டும் இரக்கத்தை. ஒருவன் பிறவுயிர்களிடம் இரக்கங்காட்டாத இடத்து இறைவனிடம் இவன் இரக்கத்தை யாங்ஙனம் எதிர்பார்த்தல் கூடும் ஆதலான் 'திருவருட் சயலென வறிந்தோ' என்றார். 'என்செய்வேன்' என்பது இரக்கத்தால் அடுக்கி வந்தது. 'எல்லா ஒளியுமாய்' என்றது சூரிய, சந்திர, அக்கினி முதலிய திரிசுடர் ஒளியையும், மற்றைய கோள்களின் ஒளியையுங் குறித்தது. 'நிறைவெளி' என்றது எங்கும் வியாபகமாக இருக்கும் ஆகாயத்தை. இறைவன் ஞானசொரூபியாதலின் 'உரவோய்' என்றார். சிவாநந்தம் பெருமையால் 'எளியனுக்கினை' என்றார்.

22

அடியார் கருத்திற்றங்குகின்ற தேவரீரின் திருஅருள்
அடியேனுக்கு எந்தக்காலம் வருமெனல்

கண்ணினுண் மணியென்னவே தொழுமன்பர் கருத்துள்
நண்ணு கின்றநின் னருளெனக் கெந்தநா ணணுகும்
மண்ணும் விண்ணும்மற் றுள்ளன பூதமும் மாறாப்
பெண்ணு மாணுமாய் அல்லவாய் நிற்கின்றபெரியோய்.

(ப-ரை) மண்ணும் - பூமியும், விண்ணும்-ஆகாயமும், மற்றும் - மற்றும், உள்ள-உள்ளவையாகிய, பூதமும் - (தீ, நீர், கால் முதலிய) பூதங்களும், மாறா-நீங்காத, பெண்ணும்-பெண்ணும், ஆணும் - ஆணும், ஆய்-ஆகி, அல்ல-அவைகள் அல்லன, ஆய்-ஆகி, நிற்கின்ற - நிற்கின்ற, பெரியோய் - பெரியோனே!, கண்ணின்-கண்ணின், உள்-உள்ளே, மணி-மணி, என்ன-என்றுசொல்லும்படி, தொழும்-வணங்குகின்ற, அன்பர்-அன்பர், கருத்துள் - மனத்தின்கண்ணே, நண்ணுகின்ற-சேர்கின்ற, நின்-தேவரீர், அருள் - திருவருளானது, எனக்கு-அடியேனுக்கு, எந்த-எந்த, நாள்-காலத்தில், நணுகும்-சேரும்; எ-று.

(வி-ரை) "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை" என்ற **பெரியாரின்** வாக்குப்படி ஒருவனுக்குக் கண்ணே சிறந்த உறுப்பாகும். என்னை, 'கண்ணுள்ள



போதே காட்சி' என்றார் ஆகலின் அந்தக்கண்ணினும் மணியில்லையாயின் காணமுடியாது. எவ்வாறு உலகப்பொருள்களைக் காண்பதற்குக் கண் உதவுகிறதோ இதுபோல ஞானமயமாகிய இறைவன் அகத்தின்கண் கண்ணாக இருந்ததன்னை அறிவிக்கின்றானாதலின் அடியார்கள் இறைவன் 'கண்ணே' 'கண்மணியே' 'கருத்தே' என்று துதிக்கின்றனர். இதுகொண்டே 'கண்ணினுண்மணியென்னவே தொழுமன்பர்' என்றார். இதுகொண்டன்றோ **சுந்தரமூர்த்திசுவாமிகளும்,**

"கண்ணா யேழுலகுங் கருத்தாய வருத்தமுமாய்ப்
பண்ணா ரின்றமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே" எனவும்,

"கண்ணனைய் மணியானைக் கருத்தானை யருத்தானைய்
எண்ணனை யெழுத்தானை யெழுத்தினுக்கோ ரியல்பானைய்
விண்ணனைய் விண்ணிடையே புரமெரித்த வேதியனே
அண்ணனை வையாறர்க் காளாய்நா னுய்க்தேனே"

எனவுந் **திருநாவுக்கரசர்** கூறினர்.

"எண்ணுவா ருள்ளத்தே நண்ணுவான் கண்டாய்" எனப் பெரியார் கூறியபடி இறைவன் சிந்திப்பார் சிந்தையுட் கலக்கும் ஜோதியாதலின், 'கண்ணினுண் மணியென்னவே தொழுமன்பர் கருத்துள் நண்ணுகின்ற நின்னருள்' என்றார். இறைவன் அட்டமாவுருவில் ஐம்பூதவுருவும் இறைவன் உருவாதலின், 'மண்ணும் விண்ணுமற் றுள்ளன பூதமுமாறாப் பெண்ணு மாணுமா யல்லவாய் நிற்கின்ற பெரியோய்" என்றார். ஆண்பெண் அலியாய் நிற்பவன் இறைவன் இதுகொண்டே **தேவாரத்தும்,** "ஆணும் பெண்ணுமா அடியார்க் கருணல்கி" எனவும், "ஆணும் பெண்ணும்மெனநிற்பரோனு மாவாரமாப் பூணுமேனும் புகலூர் தனக்கொர் பொருளாயினன்" என முழங்கினமையும் காண்க. "எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டி" என்ற **திருவிளையாடற்புராணச் செய்யுளோடு** அடியொற்றிக் காண்க.

23

உலகங்காப்பவனே! அடியேனை எவ்விடத்தும் பிறக்கும் வண்ணஞ்
செய்தலென்? எனல்

சகமெ லாந்தனி புரந்தனை தகவுடைத் தக்கோர்
அகமெலா நிறைந் தானந்த மாயினை அளவில்
மகமெ லாப்புரிந் தோரைவாழ் வித்தனை மாறு
இகமெ லாமெனைப் பிறந்திடச் செய்ததேன் எந்தாய்.

(ப-ரை) சகம்-உலகங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், தனி - பொதுநீங்க, புரந்தனை-காத்தனை, தகவு-தகுதியை, உடை-பொருந்திய, தக்கோர்-மேலோர்களுடைய, அகம்-மனம், எலாம்-எல்லாம், நிறைந்து-நிரம்பி, ஆனந்தம்-ஆனந்த உருவம், ஆயினை - ஆகினை, அளவு-அளவு, இல்-இல்லாத, மகம்-

யாகங்கள், எலாம்-எல்லாவற்றையும், பரிந்தோரை-செய்தவர்களை, வாழ்வித்தனை-வாழச்செய்தனை, மாறா-நீங்காமல், என்னை-அடியேனை, இகம்-இவ்வுலகங்கள், எலாம்-எல்லாம், பிறந்திட-பிறக்கும்படி, செய்தது-செய்தது, என்-யாதுக்கு, எந்தாய்-எனது தந்தையே! எ-று.

(வி-ரை) இறைவன் அருட்சன்னிதி விளக்கத்தால் பஞ்சகிருத்தியங்களும் நடைபெறுகின்ற தாதலின், 'சகமெலாந்தனி புரந்தனை' என்றார். இறைவன் அடியவர் சிந்தையே கோயிலாக்கொண்டு வாழ்வோனாதலின் 'தகவுடைத்தக்கோர் அகமெலா நிறைந் தானந்த மாயினை' என்றார். இம்மைப்பயனைஎய்துதற்கும், மறுமைப்பேற்றைப் பெறுதற்கும் மகங்களே இன்றியமையாததாதலினாலும், அம்மகங்களுக்குப்பேறுஅளிப்பவன் எம்இறைவனாதலினாலும், 'அளவில் மகமெலாம் புரிந்தோரை வாழ்வித்தனை' என்றார். வினையினால் உடலனந்தம் என்றதனால், இவ்வுலகில் வினையினாலே எண்ணிலாப் பிறவிஎடுத்து எய்த்தலினால், 'இகமெலா மெனைப்பிறந்திடச் செய்ததே னெந்தாய்'என்றார். 'அளவில் மகம்' என்றது கணக்கற்ற சைவயாகங்களை. 'எலாம்' என்பன எல்லாம், 'எல்லாம்' என்பதன் தொகுத்தல்விகாரம். 24

என்னை அடியார் பணிசெய வருளுவாயெனல்

**ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலாய் எளியேன்**
**வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணை நீ வளர்ப்பாய்**
**ஆய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவால் [யோய்.**
**தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந் தூ**

(ப-ரை) ஆய்ந்த-ஆராயப்பெற்ற, மா-பெரிய, மறை-வேதங்கள், எத்தனை-எத்தனை, அத்தனை-அத்தனையும், அறிவால்-ஞானத்தால், தோய்ந்த - படியப்பெற்ற, பேர்கட்கும்-பேர்கட்கும், தோன்றிலா - காணப்பெறாத, தோன்றல்-பெரியோன், ஆம்-ஆகிய, தூயோய்-பரிசுத்தனே!, ஏய்ந்த-பொருத்தமுடையதாகிய, நல்-நல்ல, அருள்-அருளை, பெற்றவர்க்கு-அடைந்தவர்களுக்கு, எளியேன்-ஏழையாகிய அடியேன், ஏவலாய்-ஏவல் ஆள் ஆகி, வாய்ந்த-அமைந்த, பேர்-பெரிய, அன்பு-அன்பை, வளர்க்கவும் - விருத்திசெய்யவும், நீ-தேவரீர், கருணை-கிருபையை, வளர்ப்பாய்-விருத்திசெய்வாய் எ-று.

(வி-ரை) 'ஏய்ந்த நல்லருள்' என்றது சிவனருளை. இறைவனின் அடியார்க்கு ஏவல் புரிதல் சிவனருளைப் பெறற்கும், ஞானமுறுதற்கும், சிவானந்தந் துய்த்தற்கும் இன்றியமையாதது ஆதலினால் "ஏய்ந்த நல்லருள் பெற்றவர்க் கேவலா யெளியேன் வாய்ந்த பேரன்பு வளர்க்கவுங் கருணைநீ வளர்ப்பாய்" என்றார். பாச நீங்கிச் சிவானந்தம்பெற அடியார் பணி வேண்டுமென்பதனை,

"செங் கமலத் தாளிணைகள் சேரலொட்டா
திரிமலங்க ளறுத்தீச னேசரோடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா
மரனெனவே தொழு திறைஞ்சி யாடிப்பாடி



யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ
மியாவர்க்கு மேலானோ மென்றிருமாப் பெய்தித்
திங்கண் முடியா ரடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தி யுடையோரே"

என்ற **சிவஞானசித்தியார் செய்யுளா**லும் அறியலாம்.

வேதங்கள் வைகரிசம்பந்த முடையதாதலின் தத்துவாதீதனாகிய இறைவனை அறிதற் கரிதாம். வேதங்களை இன்னுந் தேரா இறைவனை வேதங்களையுணர்ந்தோர் அறிய முடியா தாதலின், 'ஆய்ந்த மாமறை யெத்தனை யத்தனை யறிவால் தோய்ந்த பேர்கட்குந் தோன்றிலாத் தோன்றலாந் தூயோய்' என்றார். இறைவன் ஞானிகளுளத்துத் தோன்றுபவன், ஞானக் கண்ணுக்குத் தோன்றுபவன், வேதச்சிகையிற் றோன்றுபவன், அம்பலத்துத் தோன்றுபவன்,எல்லாப்பொருள்களுள்ளும் அந்தர்யாமியாய்த்தோன்றுபவன் ஆதலின் உயர்ந்த ஆண்மகனைக் குறிக்கும் 'தோன்றல்' என்னு மொழி கொண்டு 'தோன்றிலாத் தோன்றலாந் தூயோய்' என்றார். இது முரண் டொடை. என்னை? "சொல்லினும் பொருளினும் முரணத் தொடுப்பது முரண்டொடை" என்பது இலக்கணம். இக்கருத்தை, "உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச் சிற்றம்பலத் தொருத்தன்" என்ற **சிற்றம்பலக் கோவையா**லும் அறியலாம். 25

உன் இன்பத்திலாழாமற் றுன்பத்தில்வீழ்ந் தழலுகிறேனெனல்

**தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமியேன்**
**மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்**
**ஒக்க லுய்தந்தை மகவெனும் பாசக்கட் டுடனே [ந்தேன்.**
**துக்க வெள்ளத்தி லாழ்கின்றேன் என்செய்வான் றுணி**

(ப-ரை) தக்க - தகுதியாகிய, நின் - தேவரீரது, அருள் - திருவருளைப் பற்றிய, கேள்வியோ - ஞானக்கேள்விகளோ, சிறிது-சிறிதும், இன்றி - இல்லாமல், தமியேன்-தமியேன் (தாழ்மையுடையஅடியேன்), மிக்க-மேற்பட்ட, தெய்வமே-தெய்வமே!, நின்-தேவரீரது, இன்பம்-ஆனந்தம், வெள்ளத்தில்-கடலில் (பிரவாகத்தில்), வீழேன் - முழுகாதவனாக இருக்கின்றேன், ஒக்கல்-சுற்றத்தவர்கள், தாய்-தாயும், தந்தை-தந்தையும், மகவு-புத்திரரும், என்னும்-என்கின்ற, பாசம்-பாசமாகிய, கட்டுடன்-பந்தத்துடன், துக்கம்-துக்கமாகிய, வெள்ளத்தில்-சமுத்திரத்தில், ஆழ்கின்றேன்-மூழ்குகின்றேன், என்-என்ன, செய்வான்-செய்ய, துணிந்தேன்-துணிந்தேன்; எ-று.

(வி-ரை) 'தக்க நின்னருட் கேள்வி' என்றது சிவஞானக்கேள்விகளை. ஞானக்கேள்வி கேட்டார்க்கே சிந்தனையும், தெளிவும், அன்பும், சாதகமும், நிட்டையும், சிவானந்தமும் கைகூடுமாதலினால் 'தக்க நின்னருட் கேள்வியோ சிறிதின்றித் தமியேன் மிக்க தெய்வமே நின்னின்ப வெள்ளத்தில் வீழேன்' என்றார். கேட்டலும் நிட்டைகூடலும் இறைவன் திருவருளால் வாய்க்க

வேண்டுதலின் 'இன்ப வெள்ளத்தில் வீழேன்' எனவும் 'துக்கவெள்ளத்தில் ஆழ்கின்றே னென்செய்வேன் றணிக்தேன்' எனவுங் கூறுகின்றார். இதனை னன்றே ஔவைப்பிராட்டியும், "கேள்விமுயல்" என்றார். "முற்றுப் பகலு முனியா தினிதோதிக் கற்றலிற் கேட்டலே நன்று" என்றார் பிறரும். 'ஒக்க ருய்தந்தை மகவெனும் பாசக்கட்டு' இதில் இனம்பற்றி மனைவியையும் வருவிக்க. 'சிறிதின்றி' என்றதில் உம்மை தொக்குநின்றது. 'சிறிதுமின்றி' எனப் பொருள்பயந்துநின்றது. 'என்செய்வான்' என்பதில் 'வான்' விகுதி எதிர்காலங்காட்டிநின்றது.

26

அருளுண்டாம் வண்ணங் கிருபை செய்வாயெனல்

பவப்பு ரிந்திடும் பாவியேற் கருணிலை பதியத்
தவஞ்செ யும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்
அவம்பு ரிந்திடார்க் கான ந்த வமிர்தத்தை யளிக்க
நவங்கொ டத்துவத் திரையெறி கடலெனு நலத்தோய்.

(ப-ரை) அவம் - வீணனகாரியங்களை, புரிந்திடார்க்கு - செய்யாதவர்களுக்கு, ஆனந்தம் - ஆனந்தமாகிய, அமிர்தத்தை - அமிர்தத்தை, அளிக்க-கொடுக்க, நவம்-புதுமை, கொள்-கொண்ட, தத்துவம்-தத்துவமாகிய, திரை-அலைகள், எறி-வீசும், கடல் - சமுத்திரம், எனும் - என்று சொல்லப்பெறும், நலத்தோய் - நன்மையினை யுடையவனே!, பவம் - பாவத்தினை, புரிந்திடும்-செய்கின்ற, பாவியேற்கு-பாவியாகிய அடியேனுக்கு, அருள் - திருவருளின், நிலை-நிலையை, பதிய - உண்டாக, தவம் - தவத்தை, செயும் - செய்யும், படி-வண்ணம், தயை-தயவு, செய்து-செய்து, அருள்வதே-அருளுவதே, தருமம்-தருமமாகும் எ-று.

(வி-ரை) 'பவம்' இது வடசொல், தொழிலைக் குறிக்கும், ஈண்டு பாதகத்தொழிலைக் குறித்து நின்றது. 'அருணிலை' என்றது சிவானந்த நிலையை. வேள்வி செய்வோர்க்கு இம்மை மறுமைப் பயன்களே எய்தும், தவஞ்செய்வோர்க்கு முத்திப்பேறு சித்திக்கும் ஆதலினால் முன்னைச் செய்யுளில் "அகமெலாம் புரிந்தோரை வாழ்வித்தனை" என்றவர் 'அருணிலை பதியத்தவஞ் செயும்படித் தயவுசெய் தருள்வதே தருமம்' என்று ஈண்டு கூறுகின்றார். 'அவம்' என்றது பாவத்தை. இனி, வீண்காலம் போக்கலையுங் குறிக்கும். இதனை,

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு"

என்பதனாலறியலாம். தவத்தின் சிறப்பை,

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்"

என்னுந் **திருக்குறளா**லறியலாம். 'ஆனந்தவமிர்தம்' என்றது சிவானந்தத்தை 'நவம்' ஈண்டு 'புதுமை' என்னும் பொருளில் நின்றது.

27



இறைவனே! அடியர் நின்னைப் பொருளாகப்பற்றினர்
நான் உலகம்பற்றினேனெனல்

உற்று ணர்ந்தெலா நீயல தில்லையென் றுனையே
பற்று கின்றனர் எந்தைநின் னடியர்யான் பாவி
முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதருன்
அற்றி ருந்திடத் தொழில்செய்வான் றனை நிக ரானேன்.

(ப-ரை) எந்தை-எமது தந்தையே!, நின்-தேவரீருடைய, அடியர் - அடியார்கள், உற்று-ஆராய்ந்து, உணர்ந்து - தெரிந்து, எல்லாம்-எல்லாப்பொருள்களும், நீ-தேவரீர், அலது-அல்லாது, இல்லை-புறம்பாக வேறுபொருள் இல்லை, என்று-என்று, உனையே-தேவரீரையே!, பற்றுகின்றனர் - அடைகின்றார்கள், யான்-அடியேன், பாவி - பாவி, முற்றும் - முழுவதும், மாயம் - மாயம், ஆம்-ஆகும், சகத்தையே-உலகத்தையே, சத்தியம்-நித்தியம், என-என்று, முதல்-முதல், தான்-தான், அற்று-இல்லாது, இருந்திட-இருக்க, தொழில்-காரியங்களை, செய்வான் - செய்கின்றவனாகிய ஒருவன், தன்னை-தன்னை, நிகர் - ஒப்பானவன், ஆனேன்-ஆயினேன்; எ-று.

(வி-ரை) உலகத்துக்காணப்படுகின்ற பொருள்களும், உலகமும் இறைவனன்றி இல்லை என்பதனை மிகவுந் தேறத்தெளிய ஆராய்ந்தறிந்தனர் என்பதனை உணர்த்த, 'உற்றுணர்ந்தெலா நீயல தில்லையென் றுனையே பற்றுகின்றனர்' என்றார். இறைவனைத் தெளிந்தறிந்தவரே அடியார் எனப்பெறுவர் என்பார் 'நின் அடியர்' என்றார். நல்வினைப்பயனால் தவத்தால் நின் அடியர்க்கு நின்னைப்பற்றுதல் வாய்த்தது. நான் அது செய்யாது பாவமேபுரிந்துழன்றேன் என்பார் 'யான்பாவி முற்று மாயமாஞ் சகத்தையே மெய்யென முதலுன் அற்றிருந்திடத் தொழில்செய்வான் றனைநிகரானேன்' என்றார். முதலின்றி வாணிபஞ் செய்வார்க்கு இலாபம்இல்லை என்பதுகொண்டு, 'முதலுன் அற்றிருந்திடத் தொழிசெய்வான்றனை நிகரானேன்' என்றார். இதனை,

"முதலுள பண்டங் கொண்டுவா ணிபஞ்செய்
ததன்பய னுண்ணு வணிகரும் பதரே" எனவும்,

"முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறலாமோ—வைப்போ
டிகலிப் பொருள்செய்ய வெண்ணியக்கா லென்னு
முதலிலார்க் கூதிய மில்"

எனவும்வரும் **பதினோண்கீழ்க்கணக்குச் செய்யுட்களா**லறிக.

இறைவன் ஒருவனே பொருள், அவனின்றி யொன்றுமில்லை. பிரபஞ்சம் அனைத்தும்பொய் அடியேன்பாவி மெய்ப்பொருளாகிய நின்னைப் பற்றாது பொய்ப்பொருளாகிய பிரபஞ்சத்தைப்பற்றி அழிகின்றேனே எனக்கருள்செய்யலாகாதோ என்கின்றார். இக்கருத்துக்கொண்டே,

"தாத்திரியுன்னை யாசை தொடாரம லென்றும்
விரத்தியினு லாங்கவற்றை விட்டுப்—பரத்திலன்பு
செய்யடா செய்யடா சேரப் பிரபஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய்" எனவும்,

"எத்தனைதான் கற்றாலு மெத்தனைதான் கேட்டாலு
மெத்தனைசா தித்தாலு மின்புறு—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடுமுலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது"

எனவும் சிவபோகசாரஞ் செப்பியதுங்காண்க. 28

---

## மண்டலத்தில்

இறைவன் அகடிதகடனு சாமர்த்திய மியம்பல்

மண்டலத்தின் மிசையொருவன் செய்த வித்தை
யகோவெனவும் வாரணாதி
அண்டமவை யடுக்கடுக்கா யந்தரத்தி னிறுத்துமவ
தானம் போல
எண்டருநல் லகிலாண்ட கோடியைத்தன் னருள்வெளி
லிலக வைத்துக் [யி
கொண்டுநின்ற வற்புதத்தை எவராலு நிச்சயிக்கக்
கூடா வொன்றை.

(ப-ரை) மண்டலத்தின்-பூலோகத்தின், மிசை-மேலே, ஒருவன்-ஒருவன், செய்த-செய்த, வித்தை-வித்தையானது, அகோ-ஆச்சரியம், எனவும்-என்று சொல்லவும், வாரணம்-கோழி, ஆதி-முதலியவைகளின், அண்டம்-முட்டை, அவை-அவைகளையும், அடுக்கடுக்காய்-அடுக்கடுக்காக, அந்தரத்தில் - ஆகாசத்திலே, நிறுத்தும்-அடுக்கிவைக்கின்ற, அவதானம்-சாமர்த்தியம், போல-ஒப்ப, எண்-எண்ணிக்கையை, தரும்-தருகின்ற, நல்-நல்ல, அண்டம் - உலகங்களின், அகில-எல்லா, கோடியை - கோடிக் கணக்குகளை, தன்-தன்னுடைய, அருள்-அருளின், வெளியில்-சிதாகாயத்தில், இலக-விளங்கும்படி, அடக்கி-அடக்கி வைத்து, கொண்டு - கொண்டு, நின்ற - இருக்கிற, அற்புதத்தை - அதிசயப் பொருளை, நிச்சயிக்க - இவ்விதமென்று துணிய, கூடா - கூடாத, ஒன்றை-ஒப்பற்ற பொருளை எ-று.

(வி-ரை) இப்பதிகம் பதினொரு பாடல் கொண்டது. இப்பதிகத்தின் முதற் செய்யுளின் முதலில் 'மண்டலத்தின்' எனத் தொடங்கியதால் இதற்கு **மண்டலத்தின்** எனப் பெயராகியது. இப்பதிகம் அந்தாதித்



தொடையாக மண்டலித்து வந்தது. இச்செய்யுள் முதல் எட்டுச் செய்யுள் குளகச் செய்யுளாக வந்தது. என்னை, "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது இலக்கணம். 'மண்டலம்' இது மண்ணாகிய தலம் என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'அகோ' இது வியப்புப் பொருள்தர வந்த இடைச்சொல். 'ஒருவன்' என்றது ஒப்பற்றவனாகிய இறைவனைக் குறித்தது. 'வாரணம்' பலபொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல், ஈண்டு கோழியைக் குறித்தது. 'அண்டமவை' இதில் அவை என்பது பகுதிப்பொருள் விகுதி. 'அடுக்கடுக்காக' இது மிகுதியினால் அடுக்கி வந்த அடுக்குத்தொடர். 'அந்தரம்' என்றது ஆகாயத்தை. 'அந்தரத்தில்' இதில் 'இல்' ஏழனுருபு, இடப்பொருள் தந்து நின்றது. 'அவதானம்' ஈண்டு சாமர்த்தியம் என்னும் பொருளில் வந்தது. அண்டங்கள் கணக்கிறந்தன வாதலின் 'அகிலாண்ட கோடியை' என்றார். 'அகில+அண்டம்' என்னும் இருசொற்களின் சந்தி தீர்க்கசந்தி இது வடசொற்புணர்ச்சி. 'அருள் வெளி' என்றது சிதாகாயத்தை. இறைவன் சர்வவியாபியாய் நின்று ஒன்றன்மே லொன்றாக நிறுத்துகின்றானாதலின் 'தன்னருள் வெளியில் இலக வைத்து' என்றார். எவராலும் என்றதன்கண்ணுள்ள உம்மை உயர்வு சிறப்புப்பொருளில் வந்தது. இது காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், காய்ச்சீர், மாச்சீர், மாச்சீர் என நான்கு காய்ச்சீர்களும் இரண்டு மாச்சீர்களும் ஆக ஆறுசீர்கொண்ட அடி நான்கான்வந்த அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 1

கடவுட்டன்மையைக் கவின்பெறக்கூறல்

ஒன்றிரண்டாய் விவகரிக்கும் விவகாரங் கடந்துவழாம்
யோக பூமி
நின்றுதெளிந் தவர்பேசா மௌனநியா யத்தைநிறை
நிறைவைத் தன்னை
யன்றியொரு பொருளிலதா வெப்பொருட்குந் தான்முத
அசல மாகி [லாய்
என்றுமுள்ள வின்பத்தைத் தண்ணென்ற சாந்தபத
வியற்கை தன்னை.

(ப-ரை) ஒன்று-ஒன்றாகவும், இரண்டாய்-இரண்டாகவும், விவகரிக்கும்-விவகாரஞ்செய்யும், விவகாரம்-விவகாரத்தை, கடந்து-நீங்கி, எழாம் - எழாவதாகிய, யோகம்-யோகம், பூமி-பூமியிலே, நின்று-தங்கியிருந்து, தெளிந்தவர்-தெளியஅறிந்தோர்க்கு, பேசா-பேசாதிருத்தலாகிய, மௌனம்-மவுனமாகிய, நியாயத்தை - நீதியை, நிறை - நிறைந்த, நிறைவை - பூரணத்தை, தன்னை-தன்னை, அன்றி-அல்லாது, ஒரு-ஒரு, பொருள் - பொருள், இலாத-இல்லாத, எ-எந்த, (எல்லா), பொருட்கும் - பொருள்களுக்கும், தான்-தானே, முதல்-முதற்பொருளாகி, அசலம்-சலியாதபொருள், ஆகி-ஆகி, என்றும்-எக்காலத்தும், உள்ள-நிலைபெற்ற, இன்பத்தை-ஆநந்தத்தை, தண்-குளிர்ந்தது, என்ற-

என்றிருக்கிற, சாந்தம்-சாந்தம், பதம்-பதம் என்னப்பெறும், இயற்கை-இயற்கையாகிய, தன்னை-பொருளை; எ-று.

(வி-ரை) 'ஒன்று' என்ற விவகாரம் என்றது ஏகான்மவாதத்தை. 'இரண்டு' என்றவிவகாரம் என்றது சீவான்மாவேறு, பரமான்மாவேறு என்ற பேதவாதத்தை. யோகபூமிகள் எழு என்றது, சுபேச்சை-விசாரணை-தனுமானசி, சத்துவாபத்தி-அசஞ்சத்தி-பதார்த்தபாவனை-துரியகை என்பர். இவ்வேழுபூமியில் சுபேச்சையில் துற்சங்கவற்சிதர்களும், விசாரணையில் ஞானசாத்திரம் பயின்றவர்களும், தனுமானசிசத்வாபத்தியில் மூவேடனை நீத்தவர்களும், அசஞ்சத்தியில் ஞானவுணர்ச்சி அடைந்தவர்களும், பதார்த்தபாவனையில் தவம்புரிந்தவர்களும், துரியகையில் திரிபுடியற்றவர்களும் சிவமாந்தன்மை அடைந்தவர்களும் அடையும் பூமிகளாம். ஏழாந்தலமென்றது-துரியகை'யை. இந்த ஏழாந்தலமாகிய துரியகையில்நின்று தெளிந்தவர் என்றது - சிவமாந்தன்மை அடைந்தவர்களை. 'நிறை நிறைவை' என்றது-குறைவொன்றுமில்லாப்பரி பூரணத்தை. இறைவன் சர்வவியாபியாய் எல்லாப் பொருளிலும் எள்ளுக்குளெண்ணெய்போல் இருப்பவன் ஆதலின், 'தன்னையன்றி யொருபொருளிலாத' என்றார். இறைவனே எப்பொருளுக்கு முதற்பொருளாயிருப்பதனால் 'தான்முதலாய்' என்றார். இறைவன் சலனமற்றவன் ஆதலின் 'அசலமாகி' என்றார். இறைவன் நித்தியனாதலினாலும் ஆனந்தமயனாதலினாலும் 'என்றுமுள்ள வின்பத்தை' என்றார். இறைவன் தண்ணருளுடையோன் ஆதலினாலும், சாந்தமூர்த்தியாதலினாலும், 'தண்ணென்ற சாந்தபத வியற்கைதன்னை' என்றார். 2

இறைவன் தன்மையை விளக்கிக் கூறுகின்றார்

பதமூன்றுங் கடந்தவர்க்கு மேலான ஞானபதப்
பரிசு காட்டிச்
சதமாகி நிராலம்ப சாக்ஷியதாய் ஆரம்பத்
தன்மை யாகி
விதமியாயுங் கடந்தவித்தை யெனுமிருளைக் கீண்டெழு
விமல மாகி
[ந்து
மதமாறுங் காணாத வானந்த சாகரத்தை
மௌன வாழ்வை.

(ப-ரை) பதம்-பதங்கள், மூன்றும்-மூன்றினையும், கடந்தவர்க்கு - தாண்டினவர்களுக்கு, மேலான - மேன்மையாகிய, ஞானம் - ஞானமாகிய, பதம்-பதத்தின், பரிசு-தன்மையை, காட்டி-காண்பித்து, சதம் - என்றும் நிலையுள்ளது, ஆகி-ஆகி, நிராலம்ப-பற்றுக்கோடற்ற, சாட்சியதாய் - சாட்சிபூதமாகி, ஆரம்பம்-முதலாகும், தன்மை-தன்மை, ஆகி-உடையது ஆகி, விதம்-விதங்கள், யாவும்-எல்லாவற்றையும், கடந்து-தாண்டி, அவித்தை-அஞ்ஞானம், என்னும், என்று கூறப்படும், இருளை - இருட்டை (அந்தகாரத்தை), கீண்டு - கிழித்து, எழுந்து-எழுந்து, விமலம்-மலமற்றது (மலரகிதம்), ஆகி-ஆகி, மதம்-மதங்கள்



ஆறும்-ஆறும், காணா-காணமுடியாத, ஆனந்தம்-இன்பமயமாகிய, சாகரத்தை-கடலை, மௌன-மோனபதமாகிய, வாழ்வை-வாழ்வை எ-று.

(வி-ரை) 'பதமூன்று' என்றது சரியை, கிரியை, யோகம் என்று கூறப்பெறும் மூன்று பாதங்களாற் பெறக்கூடிய சாலோக, சாமீப, சாரூப பதவிகளை. 'ஞானபதப் பரிசு' என்றது சிவானந்த நிலையை. இறைவன் என்றும் ஒரு படித்தாய் இருப்பவன் ஆதலின் 'சதமாகி' என்றார். இறைவன் தனக்கென ஒரு பற்றுக்கோடின்றிச் சர்வத்திற்கும் பற்றுக்கோடாக நிற்பவன் ஆதலின் 'நிராலம்ப சாக்ஷியதாய்' என்றார். இறைவன் தானே தனக்கு முதலாகியும், எல்லாவற்றிற்கும் முதல்வனாகியும் நிற்றலின் 'ஆரம்பத்தன்மையாகி' என்றார். இறைவன் காலம், தேசம், கற்பனை முதலிய எல்லாங் கடந்தவன் ஆதலின் 'விதமியாவுங் கடந்து' என்றார். இறைவன் மலரகிதனாதலின் 'விமலமாகி' என்றார். 'மதம் ஆறு' என்றது உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம் என்பவைகளை. இறைவன் ஆனந்தசாகரனாதலின் 'ஆனந்த சாகரத்தை' என்றார். இறைவன் மோனானந்த செல்வராதலின் 'மௌன வாழ்வை' என்றார். இறைவன் முன் அவித்தை நிலை நில்லா தாதலினாலும் சிவஞான முற்றார்க்கு முன் அவித்தையிருள் ஓடி ஒளியு மாதலினாலும் 'அவித்தை யெனு மிருளைக் கீண்டெழுந்து விமலமாகி' என்றார். 3

இறைவன் இயல்பை எழில்பெறப்பேசல்

வாழ்வனைத்துந் தந்தவின்ப மாகடலை நல்லமிர்தை
மணியைப் பொன்னைத்
தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை அத்துவித
சாரந் தன்னைச்
சூழ்பெரும்பே ரொளியையொளி பரந்தபர வெளியையின்
சுகத்தை மாறு
[பச்
தேழுலகுங் கலந்து இன்றாய் நாளையாய் என்றுமா
மியற்கை தன்னை.

(ப-ரை) வாழ்வு-வாழ்வுகள், அனைத்தும்-எல்லாவற்றையும், தந்த-கொடுத்தருளிய, இன்பம் - ஆனந்த, கடலை - சமுத்திரத்தை, நல்-நல்ல, அமிர்தை-அமிர்தத்தை, மணியை - ரத்னமணியை, பொன்னை - தங்கத்தை, தாழ்வு - குறைவு, அற-நீங்க, என்-அடியேனினது, உள்ளத்து-மனத்தகத்து, இருந்த-எழுந்தருளியிருக்கும், தத்துவத்தை-உண்மைப்பொருளை, அத்துவித-அத்துவித, சாரம்-சாரம், தன்னை-தன்னை, சூழ்-வளைந்த, பெரும் - பெரிய, பேர்-பெரிய (மிகப்பெரிய), ஒளியை - சோதியை, ஒளி - சோதி, பரந்த - பரவிய, பரம்-மேலாகிய, வெளியை-ஆகாயத்தை, இன்பம்-ஆனந்த, சுகத்தை-சுகத்தை, மாறுது-நீங்காது, ஏழ்-ஏழு, உலகும் - உலகங்களிலும், கலந்து - வியாபித்து, இன்று - இன்றும், ஆய்-ஆகி, நாளை - நாளையும், ஆகி-ஆகி, என்றும் - எந்நாளும், ஆம்-ஆகின்ற, இயற்கை-இயற்கைப்பொருள், தன்னை-தன்னை; எ-று.

(வி-ரை) உயிர்களுக்கு அவையவைகளின் வினைகளுக்கீடாய் வாழ்வைத்தருபவன் இறைவன் ஆதலின் 'வாழ்வினைத்தந் தந்தவின்ப மாகடலை' என்றார். இறைவன் இன்பமயமாதலினாலும், உயிர்களுக்கும் அடியார்களுக்கும் இன்பஞ்செய்பவன் ஆதலினாலும் 'இன்ப மாகடலை' என்றார். நித்தியனாகி அடியார்களுக்கு நித்திய சிவாநந்த வாழ்வைத்தருபவன் ஆதலினால் இறைவனை 'நல்அமிர்தை' என்றார். இறைவன் செந்நிறமுடைமையாலும், பொன்னிறமுடைமையாலும், சிறப்பும் அழகும் உடைமையாலும் ஆனந்தம் பயப்பவனாகியும் இருத்தலின் 'மணியைப் பொன்னை' என்றார். இறைவன் யார்மனத்தும் உறையுஞ்சோதியாதலினாலும், உண்மைப்பொருளாய் இருப்பவன் ஆதலினாலும், இறைவன் உள்ளத்துள்ளவரையில் தாழ்வுவாராதலினாலும் 'தாழ்வறவென் னுளத்திருந்த தத்துவத்தை' என்றார். 'உளம்' இது உள்ளம் என்றதன் தொகுத்தல்விகாரம். இறைவன் முத்திநிலையில் 'தாடலை போல்' கலந்தின்பம் அருள்வோனாதலின் 'அத்துவித இன்பசாகரந்தன்னை' என்றார். இறைவன் ஒளிமயன் ஆதலின் 'சூழ்பெரும் பேரொளியை' என்றார். இறைவன் சிற்பரஆகாயவடிவன்ஆதலின் 'ஒளிபரந்த பரவெளியை' என்றார். இறைவன் சுகசொரூபன் ஆதலின் 'சுகத்தை' என்றார். இறைவன் சர்வாண்டங்களிலுள்ளும் வியாபகமாய் நித்தியமாய் நிற்றலின் 'எழுலகுங் கலந்தின்றாய்க் காலையா யென்றுமா மியற்கைதன்னை' என்றார். இச்செய்யுளும் இறைவன் தன்மையை உயிர் அனுபவநிலையிற் கூறியதாகும். 4

இறைவ னேற்றத்தினை எண்ணி விளக்கல்

தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ்
சமத்தை லோகம்
மின்னை நிகர்த் திடவழியாச் சொரூபானந் தச்சுடரை
வேத மாதி
யென்னையறி வரிதென்னச் சமயகோ டிகளிடைய
இடைய றாத
பொன்னைவிரித் திடுமுலகத் தும்பருமிம் பரும்பரவும்
புனித மெய்யை.

(ப-ரை) தன்னை - தன்னை (சீவான்மாவை), அறிந்தவர்-அறிந்தவர்கள், தம்மை-தங்களை, தான்-தான் (பரமான்மா), ஆக-ஆகும் வண்ணம், செய்து, அருளும் - அருள் செய்கின்ற, சமத்தை-சமநிலையை, லோகம்-உலகத்தின், மின்னை - மின்னலை, நிகர்த்திட - ஒத்து அழியவும், அழியா-தான் அழியாதிருக்கின்ற, சொரூபம்-சொரூபத்தோடுகூடிய, ஆனந்தம்-ஆனந்தமயமாகிய, சுடரை-சோதியை, வேதம்-வேதமும், ஆதி - முதலியவைகளும், என்னை-என்ன ஆச்சரியம், அறிவு-அறிந்துகோடல், அரிது - அரியதாயிருக்கிறதென்று கூறவும், சமயம் - மார்க்கங்கள், கோடி - கோடிக்கணக்கான எல்லாம், இடைய - காணாதனவாகிப் பின்வாங்கவும், இடை-மத்தியிலே, அறாத-விட்டு அகலாத, பொன்னை - பொன்னை, விரித்திடும் - விரிக்கும், உலகத்து-



தேவலோகத்து, உம்பரும்-தேவர்களும், இம்பரும்-இப்பூலோக மனிதர்களும், பரவும் - துதிக்கின்ற, புனிதம் - பரிசுத்தமாகிய, மெய்யை - திருமேனியுடையதை எ-று.

(வி-ரை) தத்துவ ஆராய்ச்சி செய்து சீவான்மாவாகிய தன்னை அறிபவர் பரமான்மாவை அறிந்து அதனொடுகலந்து இன்புறுவர். இதுகொண்டே 'தன்னையறிந் தவர்தம்மைத் தானாகச் செய்தருளுஞ் சமத்தை' என்றார். இதுகொண்டன்றோ **மணிவாசகரும்**, "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட வத்தன்" எனவும், "தந்ததுன் றன்னை கொண்டதென் றன்னை" எனவுங் கூறினர். உலகந்தோன்றி அழியுந் தன்மையது ஆதலின் மின்னலை ஒப்புக் கூறினர். இறைவன் அழியாமையுடையன் ஆனந்தமயன் ஆதலின், 'அழியாச் சொரூபானந்தச் சுடரை' என்றார். வேதத்தானும் அறியமுடியாதவன் இறைவன் ஆதலின் 'வேதமாதி யென்னை யறிவரிதென' என்றார். சமயங்கள் இறைவனைக்காண முடியாது தடுமாறி நிற்கின்றதாதலின் 'சமயகோடிகளிடைய' என்றார். இடைதல்-பின்வாங்கல். பொன்னை விரித்திடு முலகம்: தேவலோகம் பொன்னுலகம் என்றும். இனி, பொன்னை மிகுதியாகத்தேடும் உலகத்து எனக்கொண்டு பூலோகத்து எனப் பொருள் கூறுவாரும் உண்டு. ஈண்டு தேவரும் பூவுலகில் வந்து தொழுது உய்ந்தமை புராணங்களால் அறிகின்றுமாதலின் 'பொன்னை விரித்திடு முலகத்தும்பரு மிம்பரும் பரவும்' என்றார். இறைவன் எட்டுக் குணங்களில் இயற்கையே தூய உடம்பினனாதலின் 'புனிதமெய்யை' என்றார். 'வேதமாதி' வேதமும் ஆகமமும் முதலிய எல்லாங் கொள்ளக் கிடந்தது. 'வேதமாதி யென்னை யறிவரிதென்ன' என்றதில் என்னை என்பதை வினாவாகவும், ஆச்சரியக் குறியாகவும், இரண்டனுருபு ஏற்ற என் என்னும் பெயராகவும் பொருள்கொள்ள நின்றது. 'கோடி' என்பது தனக்குரிய எண்ணைக் குறிக்காது மிகுதிப்பொருள் குறித்து நின்றது. 'பொன்னை விரித்திடு முலகம்' என்பதில் 'பொன்னை' என்ற சொல்லை 'இடையறாத' என்ற தொடரோடு கூட்டி 'இடையறாத பொன்னை' என்று பொருள் கோடலு மொன்று. 5

இறைவனின், தத்துவவிபவம் விரித்தல்

பரவரிய பரசிவமாய் அதுவெனலாய் நானெனலாய்ப்
பாச சாலம்
விரவிநின்ற விசித்திரத்தை ஐக்யபதத் தினிதிருந்த
விவேகந் தன்னை
இரவுபக லினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்க
ளிதயம் வேதச்
சிரமெனவாழ் பராபரத்தை ஆனந்த நீங்காத
சிதாகா சத்தை.

(ப-ரை) பரவு-துதித்தற்கு, அரிய-அரிதாகிய, பரசிவமாய்-பரமசிவமாகி, அது-அது, எனல்-என்றுசொல்லுதற்கு, ஆகி-ஏதுவாகி, நான்-நான், எனல்-

என்றுசொல்லுதற்கு, ஆகி - ஏதுவாகி, பாசம்-பாசத்தின், சாலம் - கூட்டத்தால், விரவி - கலந்து, நின்ற-நின்ற, விசித்திரத்தை - விசித்திரவடிவத்தை, ஐக்யம்-கலப்பின், பதத்து-பதத்தில், இனிது-இன்பமாய், இருந்த - இருந்த விவேகம் - ஞானவடிவம், தன்னை - தன்னை, இரவு-இரவும், பகல் - பகலும், நினைப்பு - நினைப்பும், மறப்பு - மறதியும், என்னும் - என்றுகூறப்பெறும், தொந்தம் - தொடர்பு, அறியார்கள்-அறியாதவர்களின், இதயமே - மனமே, வேதம்-வேதத்தினுடைய, சிரம் - முடியென்று, வாழ் - அம்மனத்தினிடத்து வாழ்கின்ற, பராபரத்தை-பராபரப்பொருளை, ஆனந்தம் - இன்பம், நீங்காத-நீங்காத, சிதாகாசத்தை-ஞானாகாயத்தை; எ-று.

(வி-ரை) இறைவன் வேதங்களாலுந்தெரிந்து துதித்தற்கு அரியவன் ஆதலினால் 'பரவரிய பரசிவமாய்' என்றார். இறைவன் அது என்னும் முன்னிலைச்சுட்டாயும், நான் என்னும் தன்மைச்சுட்டாயும், பிரபஞ்சம் என்னும் படர்க்கைச்சுட்டாயும் இருக்கின்றானாதலினாலும் 'அதுவெனலாய் நானெனலாய் பாசசாலம் விரவிநின்ற விசித்திரத்தை' என்றார். ஐக்கிய பதம் என்றது சீவான்மா பரமான்மாக்களின்கலப்பை. அத்துவிதநிலையை. 'ஐக்கியபதத்தினிதிருந்த விவேகம்' என்றது, சுகானந்தவனுபவத்திருந்த ஞானத்தை. 'இரவுபக னினைப்புமறப் பெனுந்தொந்த மறியார்' என்றது, சிவஞானிகளை. 'வேதச்சிரம்' வேதத்தின் உச்சியை. 'சிதாகாசம்' என்றது சித்தாம் ஆகாசத்தை. 'பரசிவம்' என்றது உயர்ந்த மங்களாகரனை. என்னை இறைவன் மங்களமுடையோன், மங்களத்தைச்செய்பவன் ஆதலின் என்க. 6

இறைவனின் நிலையைப் புகழுதல்

அத்துவித வனுபவத்தை அனந்தமறை யின்னமின்ன
மறியே மென்னும்
நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத் தன்னரு
ளினைவுக் குள்ளே [ளா
வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக வெந்நாளும்
வளர்த்துக் காக்குஞ்
சித்தினைமாத் தூவெளியைத் தன்மயமா மானந்தத்
தெய்வந் தன்னை.

(ப-ரை) அத்துவிதம் - அத்துவிதநிலையில் அறியப்படும், அனுபவத்தை-அனுபவப்பொருளை, அனந்தம்-எண்ணிறந்த (கணக்கற்ற), மறை-வேதங்கள், இன்னம் - இன்னம், இன்னம் - இன்னம், அறியேம்-அறியோம், என்னும்-என்று கூறிடும், நித்தியத்தை-என்றுமுள்ளதாகிய காலாதீத மெய்ப்பொருளை, நிராமயத்தை - நோயற்றதை, நிர்க்குணத்தை - குணங்களைக் கடந்து நின்ற பொருளை, தன் - தன்னுடைய, அருளால் - அருளினாலே, நினைவுக்கு-கருத்துக்கு, உள்ளே-உள்ளே, வைத்து-அகப்படுத்திவைத்து, வைத்து-அகப்படுத்தி வைத்து, பார்ப்பவரை-(எப்பொழுதும்) பார்ப்பவர்களை, தான்-தானே, ஆக-



ஆகுமாறு, எ-எந்த, நாளும்-நாளும், வளர்த்து-வளரும்படிச்செய்து, காக்கும்-காப்பாற்றுகின்ற, சித்தினை - சித்துப்பொருளை, மா - பெரிய, தூ - பரிசுத்தமுள்ள, வெளியை - ஆகாயத்தினை, தன்மயம் - தன்மயம், ஆம்-ஆகிய, ஆனந்தம் - இன்பத்தைத் தந்தருளும், தெய்வம் - தெய்வம் (கடவுள்), தன்னை-தன்னை எ-று.

(வி-ரை) 'அத்துவித வனுபவத்தை' என்றது இறைவனொடுகூடி ஒன்றல்லவும், இரண்டல்லவும் ஆகி நின்று காணும் பொருளை. 'இன்னமின்னம்' வருங்காலங்களையும் தொடர்ந்து நிகழ்கால மிகுதியைச் சுட்டி நின்ற மிகுதிப் பொருளில் அடுக்கிவந்த அடுக்கு. இறைவன் பற்றற்ற பழம்பொருளாதலின் இறைவனுக்கு நோயில்லை, இதுகொண்டே இறைவனை 'நிராமயன்' என்றார். இறைவன் குணாதீதன் ஆதலின் 'நிர்க்குணத்தை' என்றார். இறைவன் எவராலும் எட்டுதற்கு அரியவன் ஆயினும் அன்பர் உளத்து இருந்து அவர்கள் அகக்கண்ணுக்குத் தோன்றுபவனாதலினாலும், அனுபோகத்தே சோகம் பாவனையால் தானேயாகித் தோற்றுவித்தலினாலும் இன்பானந்தம் பெருகச் செய்தலினாலும், 'தன்னருளா னினைவுக்குள்ளே வைத்து வைத்துப் பார்ப்பவரைத் தானாக வெந்நாளும் வளர்த்துக் காக்குஞ் சித்தினை' என்றார். ஆனந்தமயமே இறைவன்மயமாதலின் 'தன்மயமா மானந்தத் தெய்வந் தன்னை' என்றார். 7

நெஞ்சொடு நிகழ்த்தல்

தன்னிலே தானாக நினைந்துகனிந் தவிழ்ந்துசுக
சமாதி யாகப்
பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமேஉன்
புரைக டீர்ந்தா
யென்னிநே யான்பிழைப்பேன் எனக்கினியா ருன்போ
இல்லை யில்லை [ல்வார்
உன்னிலோ திருவருளுக் கொப்பாவாய் என்னுயிர்க்கோ
ருறவு மாவாய்.

(ப-ரை) தன்னிலே-தன்உடம்பினிடத்தே, தானாக - உடம்பிற்கு அன்னியமாய் தான்ஆத்மசொரூபமாகஇருப்பதாக, நினைந்து-(விசாரித்து)எண்ணி, கனிந்து-மனமுருகி, அவிழ்ந்து-மனம்விரிந்து, சுகம்-சுகத்தை உண்டாக்கும் சமாதி - சமாதி, ஆக - ஆக, பொன்னிலே - பொன்னினாற் செய்யப்பெற்ற, பணிதி-ஆபரணம், போலும்-போலும், மாயை-மாயையினால், தரும்-விளையும், மனமே-நெஞ்சே!, உன்-உனது, புரைகள் - குற்றங்கள், தீர்ந்தாய் - நீங்கினை, ஆயின்-ஆனால், யான்-நான், பிழைப்பேன்-உய்வேன், இனி-இனி, எனக்கு-எனக்கு, உன்-உன்னை, போல்வார்-போல உதவிபுரிவோர், யாவர் - யாவர்?, இல்லை-ஒருவருமில்லை, இல்லை-ஒருவருமில்லை, உன்னிலோ - ஆலோசித்துப் பார்த்தாலோ, திரு - திரு, அருளுக்கு - அருளினுக்கு, ஒப்பு - சமத்துவம்,

ஆவாய்-ஆவாய், என்-என்னுடைய, உயிர்க்கு-உயிர்க்கு, ஓர்-ஒப்பற்ற, உறவு-உறவும், ஆவாய்-ஆகுவாய்; எ-று.

(வி-ரை) ஆன்மா உடலோடு கூடியிருக்கும்பொழுது தானல்லாத தனு கரணங்களைக்களைந்து அவற்றின் அன்யமாகஇருக்கும் தன்னையறிந்து ஞானமுற்று இறைவனைக்கண்டு எல்லாங்கழன்றோட இறைவனோடு ஒன்றுபட்டு ஆனந்தம் அனுபவித்து இருக்குநிலை சமாதி ஆதலின் 'தன்னிலே தானாக நினைந்து கனிந்து அவிழ்ந்து சுகசமாதியாக' என்றார். தட்டான் பொன்னையே உருக்கித் தட்டிக்கொட்டி ஆபரணஞ்செய்வதுபோல இறைவன் மாயையே மனமாக ஆக்கினனாதலின், 'பொன்னிலே பணிபோலு மாயைதரு மனமே' என்றார். 'புரை' என்றது தானல்லாதவற்றைத்தானாகவும், தன்னதல்லாவற்றைத் தன்னதாகவும்கொண்டு வேதனைப்படும்தவற்றை. 'பிழைப்பேன்' என்றது வேதனைகளினின்றுநீங்கிச் சிவாநந்தத்தழுழ்கியிருக்கும் முத்திப்பேறடைதலை. "என்னின் எனக்கினியாரில்லை" என்ற திருநாவுக்காசர் வாக்குக்கிணங்க, 'எனக்கினி யாருன் போல்வாரில்லையில்லை' என்றார் மாயையினின்று நீங்கியகாலை இறைவன் பிரதிபலித்தலினால் 'உன்னிலோ திருவருளுக் கொப்பாவாய்' என்றார். 'தன்னைக் குடிகெடுக்கு நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின் பிடிபடுக்கப்பட்டகளிறு' என்றபடி நெஞ்சம் புரை தீர்ந்து அருண்மயமாகநிற்பின் 'பின்னைத்தான் எய்தாப்பேறில்லை' என்றபடி அருண்மயமாகி நின்று ஆனந்தமயமாகி நிற்றலின் 'என்னுயிர்க்கோ ருறவுமாவாய்' என்றார். 'உறவுமாய்' என்றதன்கண் உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மை. நீ திருவருளுக்கு ஒப்பாவாதுமன்றி என் உயிர்க்கு உறவுமாவாய் என்பதுபொருளாம். 'இல்லைஇல்லை' என்பது சாதம்பற்றி அடுக்கி வந்த அடுக்கு.

8

இறைவனின், பெருநிலை பேசல்

உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதி யேனுமுனை
யொழிந்து தள்ளற்
கறவுமரி தரிதன்றோ இகபாரமு முன்னையன்றி
யாவ துண்டோ
வறிதிலுன்னை யசத்தென்னல் வழக்கன்று சத்தெனவும்
வாழ்த்து வேன்என்
சிறுமைகெடப் பெருமையினின் சென்மதே யத்தினிநீ
செல்லல் வேண்டும்.

(ப-ரை) உற-மிகவும், உடலை-இந்தத்தேகத்தை, எடுத்தவரில்-பெற்றுப் பிறந்தவர்களில், பிரம-பிரமா, ஆதி-முதலானோர், எனும்-ஆனாலும், உன்னை-மனமே! உன்னை, ஒழிந்து-நீங்கி, தள்ளற்கு-காலத்தைக் கடத்தற்கு, அறவும்-முற்றும் (மிகவும்), அரிது - அருமை, அரிது - அருமை, அன்றோ-அல்லவா?, இகம்-இவ்வுலக சித்திகளும், பாரமும்-பரலோக சித்திகளும், உன்னை-உன்னை, அன்றி-அல்லாது, ஆவது-கைகூடுவது, உண்டோ-உளதோ?, வறிதில்-வீணே, உன்னை-உன்னை, அசத்து-அசத்து, என்னல் - என்று சொல்லுதல், வழக்கு-(தர்மம்) விவகாரம், அன்று-அல்ல, சத்து-(உன்னை) சத்துப்பொருளென்றே, வாழ்த்துவன் - வாழ்த்துவேன், என் - என்னுடைய, சிறுமை-தாழ்வு, கெட-நீங்க, பெருமையின்-பெருமையினால், நின்-உன்னுடைய, சென்மம் - பிறந்த, தேயத்து - பூமிக்கு, இனி - இனி, செல்லல் - நீபோதல், வேண்டும்-வேண்டும் எ-று.



(வி-ரை) மால்பிரமர்க்கும் தனுவுண்டு, அவரும் பசுக்களே யாதலினால் 'உறவுடலை யெடுத்தவரிற் பிரமாதியேனும்' என்றார். அவாய் நிலையால் மாலையும் உடன் கொள்க. இனம்பற்றி எனினும் ஆம். மால் பிரமரும் மாயை வயப்பட்டவரே. இவர்கள், மனப்பித்துக்கொண்டு இன்ப துன்பங்களில் உழன்று வருந்துகின்றனராதலின் 'உனையொழிந்து தள்ளற் கறவுமரிதன்றோ' என்றார். இம்மைவாழ்வும், மறுமை வாழ்வும் மனத்தாலும் மனத்துக் காரியமாகிய வினையாலும் எய்துதலின் 'இகபாரமு முன்னையன்றி யாவதுண்டோ' என்றார். அசத்து - அறிவிலாப்பொருள், ஜடம் என்பதாம். சத்து - அறிவுடைப்பொருள். சிறுமை என்றது மாயையில் உழன்று தவிக்கும் எதத்தை. 'நின்சென்ம தேயத் தினிநீ செல்லல் வேண்டும்' என்றது மனமே நீ இறத்தல் வேண்டும் என்பதாம். இதுகொண்டன்றோ பட்டினத்தடிகளும் 'செத்தாரைப் போலே திரி' என்றார். இவ் வாசிரியரே பிறிதோரிடத்து "சினமிறக்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும் மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்று கூறியிருத்தல் கொண்டுந் தெளிக. பிரமாதியேனும்-என்றதில், உம்மை உயர்வு சிறப்புப்பொருளது. இகபாரம்-இது உம்மைத்தொகை, 'இகமும் பாரமும்' எனவிரியும். சென்மதேயம்-என்றது பாழை.

9

மன மழிவதே மாட்சிமை யெனல்

வேண்டியநா ளென்னோடும் பழகியநீ யெனைப்பிரிந்த
விசாரத் தாலே
மாண்டுகிடக் கினுமந்த வெல்லையையும் பூரணமா
வணக்கஞ் செய்வேன்
ஆண்டகுரு மௌனிதன்னு வியாளெனதற் றவனருணு
ணுவேன் பூவிற்
காண்டகவெண் சித்திமுத்தி யெனக்குண்டாம் உன்னாலெ
கவலை தீர்வேன். [ன்

(ப-ரை) வேண்டிய-மிகுந்த, நாள்-நாட்கள், என்னோடும்-என்னுடனே கூட, பழகிய - பழகியிருந்த, நீ - நீ, என்னை - என்னைவிட்டு, பிரிந்த-நீங்கிய, விசாரத்தாலே-துயரத்தாலே, மாண்டு-நீசெத்து, கிடக்கினும் - இருந்தாலும், அந்த-அந்த, எல்லையையும் - இடத்தையும், பூரணமாய்-(பூர்த்தியாய்) நிறைய,

வணக்கம்-நமஸ்காரத்தை, செய்வேன்-செய்வேன், ஆண்ட-(நீ யொழிந்தகன் றதனால்) என்னை ஆண்டருள்செய்த, குரு - குருவாகிய, மௌனி - மௌன சுவாமிகள், தன்னால் - தன்னால், யான் - யான் (என்பதும்), எனது - எனது, என்பது-என்பதும், அற்று-நீக்கி, அவன்-அக்குருவின், அருள்-திருவருளே!, நான்-நான், ஆவேன்-ஆகிவிடுவேன், பூவில்-பூலோகத்தில், காண்-காண, தக-தக்க, எண்-எட்டு, சித்தி-சித்திகளும், முத்தி-மோக்ஷமும், எனக்கு - எனக்கு, உண்டாம் - உண்டாகும், உன்னால் - உன்னாலே, என் - என்னுடைய, கவலை-வியசனம், தீர்வேன்-ஒழிவேன் எ-று.

(வி-ரை) வேண்டிய நாள் என்பது ஈண்டு மிகுதிப் பொருளில் வந்தது. எனக்கு வேதனையாயிருந்த நீ எனக்கு இன்பம் உண்டாக நீங்கியதால் அந் நன்றி யறிதலைக் காட்ட நீ மாண்ட எல்லை நோக்கிப் பூரண நமஸ்காரஞ் செய்வேன் என்பார், 'மாண்டு கிடக்கினு மந்த வெல்லையையும் பூரணமா வணக்கஞ் செய்வேன்' என்றார். 'மனம் மாளலாவது' மனம் அடங்கல், மன மடங்கவே குருவருள் சித்திக்கும். அது அடங்க யான் எனது என்னும் அகங் காரம் ஒழிந்திடும். திருவருள் வயத்தனாய்த் திருவருள் மயமாக இருப்பேன் என்பார், 'ஆண்டகுரு மௌனிதன்னா லியானெனதற் றவனருளா னாவேன்' என்றார். மனமே நீமாண் டடங்கினால் எனக்கு அட்டமாசித்திகளும், முத்திப் பேறும் உண்டாகும் என்பார் 'பூவிற் காண்டகவெண் சித்திமுத்தி யெனக் குண்டாம்' என்றார். மனமொடுங்கினால் பிரபஞ்ச விவகாரம் அகலும், அது அகலவே கவலை ஒழியும் ஆதலின், 'உன்னா லென் கவலை தீர்வேன்' என்றார். 'ஆண்டகுரு மௌனி' என்றது மௌனதேசிகரை. 'எண் சித்திமுத்தி' என்பதற்கு உயர்வாக எண்ணப்பெறும் சித்திகளும், முத்திகளும் எனப் பொருள் கோடலும் ஒன்று. ஐம்புல வழிச்சென்று துன்பத்தை உண்டாக்கு வதும் மனமே யாகும், ஞானவிசாரத்தாலே அடங்கிக் கிடந்து சிவானந்தம் பெறுதற்குக் காரணமாய் இருப்பதும் மனமேயாகும் ஆதலின் மனம் அடங்கப்பெற்றவரே சித்திகளும் முத்தியும் சிவானந்தமும் பெற்றவராவர் இதுகொண்டன்றோ,

"மனமே எல்லாத் துன்பினுக்கு மருவுமூல காரணமாம்
மனமே எல்லா வின்பினுக்கு மேய்ந்த நல்ல காரணமாம்
மனமே போன வழியெல்லாம் மற்றும் போகா தடக்கித்தீ
மனமே மடியக் கண்டவரே மன்னு முத்தி பெற்றவரே"

என்ற அமுத கவியாலும் அறியலாம். இன்னும்,

"நின்னை யறப்பெறு கிற்கில னன்னெஞ்சே
பின்னை யான் யாரைப் பெறுகிற்பே—னின்னை
யறப்பெறு கிற்பேனேற் பெற்றேன்மற் றீண்டு
திறக்கந் திறப்பதோர் தாள்"

என்ற அறநெறிச் சாரத்தாலும் அறியலாம். 10



மனதைப் போற்றல்

தீராத வென்செனன வழக்கெலாந் தீருமிந்தச்
செனனத் தோடே
யாரேனு மறிவரிய சீவன்முத்தி யுண்டாகும்
ஐய ஐயோ
காரேனுங் கற்பகப்பூங் காவேனு முனக்குவமை
காட்டப் போமோ
பாராதி யாகவெழு மண்டலத்தி னின்மகிமை
பகர லாமோ.

(ப-ரை) தீராத-நீங்காத, என் - என்னுடைய, செனனம்-சென்மத்தில் உண்டாகிய, வழக்கு-விவகாரங்கள், எல்லாம் - எல்லாம், இந்த - இந்த, சனனத்தே - சன்மத்திலேயே, தீரும் - நீங்கும், யாரேனும் - எவராலும், அறிவு-அறிதல், அரிய-அரிதாகிய, சீவன்முத்தி - சீவன் முத்திநிலையும், உண்டாகும்-உண்டாகும், ஐய-ஐயா, ஐயோ-அந்தோ, காரேனும்-மேகத்தையாகிலும், கற்பகம்-கற்பகவிருக்ஷங்கள் நிறைந்த, பூங்கா எனும்-அழகிய சோலையாகிலும், உனக்கு-மனமாகிய உனக்கு, உவமை-ஒப்புப்பொருளாக, காட்ட - எடுத்துச் சொல்ல, போமோ-படுமோ, பார்-பூமி, ஆதி-முதல், ஆக - ஆகவுள்ள, எழு-ஏழாகிய, மண்டலத்தில்-லோகங்களில், நின் - உன், மகிமை - பெருமையை, பகரலாமோ-சொல்லமுடியுமோ எ-று.

(வி-ரை) மனம் மாயையினால் மருண்டு வழியாலா வழியிற் சென்று பிறப்புப் பலவெடுத்து உழலுகின்றது. மனமடியவே பிறப்பொழிந்திடுகின்ற தாதலினால் 'தீராத வென்செனன வழக்கெல்லாந் தீருமிந்தச் செனனத் தோடே' என்றார். ஜனனம் ஒழிய சீவன் முத்தியடைவர் இதுகொண்டே 'யாரேனும் அறிவரிய சீவன்முத்தி யுண்டாகும்' என்றார். மனம் இல்லாத தனைக் கற்பித்துத் தரவல்லதாதலின் காரையும், கற்பகப் பூங்காவையும் உவமை கூறினர். உலகம் ஏழாதலின் 'பாராதியாகவெழு மண்டலத்தில்' என்றார். ஏழு உலகங்களாவன:—பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்பனவாம். 'பகரலாமோ' என்றதில் ஓகாரம் விடைதழுவிய வினா; ஒருவராலும் நின் மகிமை கூறமுடியா தென்பதாம். 11

---

## பாயப்புலி

இறைவனே! என்னை மாயைக்கு இரையாக்காதே எனல்

பாயப் புலிமுன மான்கன்றைக்
  காட்டும் படிஅகில
மாயைப் பெரும்படைக் கேயிலக்
  காவெனை வைத்தனையோ
நீயெப் படிவகுத் தாலுநன்
  றேநின் பெருங்கருணை
தாயொத் தடியார்க் கருள்சச்சி
  தானந்த தற்பரமே.

**(ப-ரை)** நின்-தேவரீரது, பெரும் - பெரிய, கருணை - திருவருளை, அடியார்க்கு-அடியவர்கட்கு, தாய்-தாயினை, ஒத்து-ஒப்பாகி, அருள்-கிருபையைச் செய்கின்ற, சத்து-சத்தும், சித்து-சித்தும், ஆனந்தம் - ஆனந்தமும், (தனக்குத் திருமேனியாகக்கொண்ட) தற்பரமே-தற்பரவஸ்துவே!, பாய-பாயும்படி, புலி-புலிக்கு, முன்னம் - எதிரில், மான்-மானானது, கன்றை - தன்கன்றை, காட்டும் - காட்டிக்கொடுக்கின்ற, படி - தன்மைபோல, அகிலம்-உலகத்தின், மாயை-மாயையாகிய, பெரும்-பெரிய, படைக்கே - ஆயுதத்திற்கே, இலக்கு-லட்சியம், ஆ-ஆக, எனை - அடியேனை, வைத்தனையோ - வைத்தாயோ?, நீ-தேவரீர், எ-எந்த, படி - விதம், வகுத்தாலும் - வகைப்படுத்தி வைத்தாலும், நன்றே-நல்லதே; எ-று.

**(வி-ரை)** 'பாயப்புலி' என்னும் பகுதி ஐம்பத்தொன்பது செய்யுள் கொண்டது. இப்பகுதியின் முதற்செய்யுளின் முதலடியின் முதலிலே **பாயப்புலி** எனத் தொடங்கியதால் இப்பகுதிக்கு இப்பெயர் வந்தது. இப்பகுதியாகிய ஐம்பத்தொன்பது செய்யுள்களும் கட்டளைக் கலித்துறையால் அமைந்திருக்கின்றது. இதில் முதற்பத்துச் செய்யுளே அந்தாதியாக வந்துளது. மானானது புலி பாயும்படித் தன் கன்றைக்காட்டிக் கொடுப்பது போலத் தேவரீர் அடியேனைப் பிரபஞ்சமாயைக்குக் காட்டிக் கொடுத்துவிட்டீரே என்பார். 'பாயப் புலிமுன மான்கன்றைக் காட்டும்படியகில மாயைப் பெரும்படைக்கே யிலக்காவெனை வைத்தனையோ' என்கின்றார். இதற்கு பாய - பாயும்படி, அ - தன்மேற் பாயவந்த அந்த, புலிமுனம் - புலிக்கு முன்பு, கன்றைக்காட்டும் - தன் கன்றைக் காட்டிக்கொடுத்துவிட்டுத் தன்னை ஒளித்துக்கொள்ளும் மானைப்போல என சிலர் உரை கூறியுள்ளார். இது பொருத்தமுடைய பொருளன்று. இறைவன் மாயைக்குப்பயந்து ஆன்மாவைக் காட்டிக் கொடுத்துவிட்டுத் தான் ஒளித்துக்கொள்ளுகிறான் எனப் பொருள்பட்டு இறைவ இலக்கணத்திற்கு வழுவாகி விடுதல் காண்க. விரிக்கிற் பெருகும். இவ்வாறு வருவதனை இல்பொருளுவமையணியாக உரைத்த



தெனக் கோடலே சால்புடைத்து. இவ்வாறு இவர்கள் உரைத்த உரைக்கு ஆதாரமாக, மான் தன்மேற் பாயவரும் புலிமுன் தன் குட்டியை ஓட்டிக் காட்டிவிட்டு அதனை அப்புலி உண்ணுங் காலத்திற்குள் பதுங்கிக்கொள்ளுதல் மானின் இயற்கைச்சுபாவம் எனக் கூறுகின்றனர். இதற்கு ஆதாரம் எந்த நூலிலுங் கண்டிலேம்.

'மாயைப் பெரும்படை' என்றது மாயை அழிக்குந்தன்மை உடையது ஆதலின் படை என்றார். 'படுப்பது படை' இது சத்துருக்களை அழிக்குங் காரணம்பற்றி வந்தபெயர். மிக்க ஆற்றல் உடைமைப்பற்றி 'பெரும்' என்ற அடைமொழிதந்து வைத்தார். இறைவனே நீ உடையான் அடியேன் உன் உடைமை, நீ எப்படி வைப்பினும் நன்றே. அதனால் வரும் லாபநஷ்டம், நன்மை தீமை உன்னதே என்பார் 'நீ எப்படி வகுத்தாலு நன்றே' என்றார். இதுகொண்டன்றோ **மணிவாசகரும்**, 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்றார். கன்றை புலிக்குமுன் காட்டுதல் கருணையற்ற செய்கை. நீயோ பெருங்கருணைத் தாய்போல அடியார்க்கு அருள்செய்பவன். என்னையேன் இவ்விடர்க்குக் காட்டிவிட்டாய் என்னுங் குறிப்புத் தோன்ற, 'நின்பெருங்கருணைத் தாயொத்தடி யார்க்கருள் சச்சிதானந்த தற்பரமே' என்றார். இறைவன் சத்து சித்து ஆனந்தமாக விளங்குபவன் ஆதலின் 'சச்சிதானந்த தற்பரமே' என்றார். 1

இறைவ! நின் காட்சி நல்கின் வினை யோடுமெனல்

தற்பர மாஞ்சிற் பரமாகி
  மன்றந் தனினடித்து
நிற்பர்அம் போருகன் மால்பணி
  நீதர்என் னெஞ்சகமாங்
கற்பரந் தாங்கு கரைந்திட
  வானொத்த காட்சிநல்கும்
பொற்பர மாயென் வினைக்கருந்
  தாதைப் பொடிசெய்ததே.

**(ப-ரை)** அம்போருகன் - தாமரைமலரை ஆதனமாகக்கொண்ட பிரமனும், மால்-விஷ்ணுவும், பணி-வணங்கத்தக்க, நீதர்-தன்மையை உடையவர், தற்பரம்-தற்பரம், ஆம்-ஆகிய, சிற்பரம் - சிற்பரம், ஆகி-ஆகி, மன்றம்-பொன்னம்பலம், தன்னில்-தன்னில், நடித்து - திருநடனத்தைச் செய்து, நிற்பர்-எழுந்தருளி இருப்பர், (இவ் இறைவன்) என் - அடியேனுடைய, நெஞ்சகம்-மனம், ஆம்-ஆகிய, கல் - கல்லானது, பரந்தாங்கு-பரவிகின்ற தன்மையைப் போல, கரைந்திட-உருக, வான்-உயர்வு, ஒத்த-பொருந்திய, காட்சி - திருக்காட்சியை, நல்கும் - தந்தருளும், பொற்பு-அழகுபொருந்திய, அரம் - அரம் என்னும் தேய்க்குங்கருவி, ஆய்-ஆகி, என்-அடியேனின், வினை-வினையாகிய, கருந்தாதை-இரும்பை, பொடி-துகள், செய்தது-செய்துவிட்டது; எ-று.

(வி-ரை) 'தற்பரம்' என்றது தனக்குமேல் ஒரு நாயகன் இன்றித் தானே எல்லோர்க்கும் நாயகனாக இருப்பவன் என்பது பொருள். 'சிற்பரம்' என்றது சித்தாகவும் பரமாகவும் இருப்பவன் என்பது பொருள். மன்றம் - என்றது அம்பலத்தை. பிரமன் விண்டுவின் உந்தித்தாமரையில் உதித்தவன் என்ற புராணம்பற்றி, அம்போருகன் என்றார். ஆங்கு - இது உவமைப்பொருள்தர வந்தது. வான் - உயர்வுப்பொருள் தந்து நின்றது. பொன் - ஈண்டு அழகு என்னும் பொருளது. கருந்தாது - என்றது கரும்பொன்னை. கரும்பொன் - இரும்பு. ஈண்டு,

> "தாதலத்தி னுள்ளதமிழ்க் குற்ற மெல்லாம்
> அராவுமர மாயிற் றன்றே—இராவணன்மேல்
> அம்பு நாட்டாழ்வா னடிபணியும் மாதித்தன்
> கம்ப நாட்டாழ்வான் கவி"

என்ற செய்யுள் உவமை அடியொற்றி நோக்கத்தக்கது. இறைவன் காட்சியே வினையை யொழிக்கும் என்ற இக்கருத்தையே,

> "பொன்னம் பலத்தாடும் பொல்லா மணிதன்னை
> முன்னம் பரிந்து முடுகின்றே—இன்றுநிகள்
> சொல்லித் துதித்தேத்திச் சூழ்ந்திறைஞ்சு மன்பருக்கே
> இல்லையெல்லாத் தொல்லைவினைக ளே"

என்ற செய்யுளாலும் அறியலாம். ஏ-ஈற்றசை. 2

அம்பலவா! நீ அருள் புரிவா யெனல்

> செய்யுந் தவஞ்சற்று மில்லாத
> நான்உன் றிருவடிக்கே
> கொய்யும் புதுமல ரிட்டுமெய்
> யன்பர் குழாத்துடனே
> கையுஞ் சிரமிசைக் கூப்பிநின்
> றாடிக் கசிந்துருகி
> உய்யும் படிக்கருள் செய்வதென்
> றோபுலி யூரத்தனே.

(ப-ரை) புலியூர் - சிதம்பரத்தில் எழுந்தருளியிருக்கும், அத்தனே-கடவுளே!, செய்யும்-செய்யக்கூடிய, தவம்-தவமானது, சற்றும்-சிறிதும், இலாத-இல்லாத, நான் - அடியேன், உன் - தேவரீரது, திரு - திரு, அடிக்கு-பாதங்களுக்கு, கொய்யும்-பறிக்கக்கூடிய, புது-அப்பொழுது பூத்த, மலர் - மலரை, இட்டு - அர்ச்சித்து, மெய்யன்பர்-உண்மை அடியார், குழாத்துடனே-திருக்கூட்டங்களுடனே (கலந்து), கையும் - கைகளையும், சிரம் - தலையின், மிசை-மேலே, கூப்பி-குவித்து அஞ்சலித்து, நின்று-நின்று, ஆடி-கூத்தாடி, கசிந்து-மனங்கசிந்து, உருகி - உருகி, உய்யும் - பிழைக்கும், படி - படிக்கு, அருள்-கிருபை, செய்வது-பாலிப்பது, என்றோ-எந்த நாளோ எ-று.



(வி-ரை) தவமும் தவமுடையார்க்கே எய்தும் ஆதலினால் 'செய்யுந் தவஞ்சற்று மில்லாத நான்' என்றார். இதனை, "தவமும் தவமுடை யார்க்காகு மவமதனை யஃதிலார் மேற்கொள்வது" என்ற **திருக்குறளா**லும் அறியலாம். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றதூஉங் காண்க. இதனான்றே **பட்டினத்தடிகளும்**,

> "கையார வேற்றுநின் றங்ஙனர் நின்று கரித்துனியைத்
> தையா தடுத்துநின் சந்நிதிக் கேவந்து சந்ததமும்
> மெய்யார நிற்பனிந் துள்ளே யுரோமம் விதிர்விதிர்ப்ப
> வையா வென்றோல மிடுவதென்றோ கயிலா யத்தனே" எனவும்,

> "ஆடுகின் றிலைகூத் துடையான் கழற்கன்பிலை யென்புருகிப்
> பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பாதமலர்
> சூடுகின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
> தேடுகின்றிலை தெருவுதோ றலகிலை செய்வதொன் றறியேனே"

எனவும் **மணிவாசகர்** கூறியருளினர்.

இவைகளானே, புதுமலரிட்டு அருச்சித்தலும், அடியார் குழாத்துடன் கூடி இருத்தலும், இறைவனைக் கைகுவித்து வணங்குதலும், ஆனந்தத்தாற் கூத்தாடுதலும், மனங்கசிந் துருகுதலும், மெய்யுருகுதலும் சிவனடியார்களுக்கிருக்கவேண்டிய இலக்கணங்கள் என்பதவும் அறியத்தக்கன. 'எந்நாளோ' என்றதன்கண்ணுள்ள ஓகாரம் இரக்கப்பொருளும் அருமைப்பொருளுந் தோன்ற நின்றது. அடியாரை யீடேற்றும் பாதமாதலின் 'திருவடி' எனப் பெற்றது. 'கொய்யும் மலர்' என்றமையானே அருச்சனைக்கு உரிய மலர்கள் என்பது பெற்றாம். 'புதுமலர்' என்றது அன்றலர்ந்த மலரை. தில்லைப் பதியில் புலிக்கால் முனிவர் இருந்து தவஞ் செய்ததால் 'புலியூர்' எனப் பெற்றது. 'அத்தன்' இது 'கடவுள்' என்னும் பொருளில் வந்தது. 3

இறைவனே! உன் சொரூபானந்த வடிவத்தைக்காண எத்தனை நாட்கள் செல்லு மெனல்

> அத்தனைச் சிற்றம் பலவனை
> என் னுயி ராகிநின்ற
> சுத்தனைச் சுத்த வெளியா
> னவனைச் சுகவடிவாம்
> நித்தனை நித்த நிராதார
> மாகிய நின்மலனை
> எத்தனை நாள்செல்லு மோமன
> மேகண் டிறைஞ்சுதற்கே.

(ப-ரை) மனமே-மனதே!, அத்தனை-எனது கடவுளை, சிற்றம்பலவனை-சிதாகாயத்து நடிப்பவனை, என் - அடியேனுடைய, உயிர் - உயிர், ஆகி-ஆகி,

நின்ற - எழுந்தருளி நின்ற, சுத்தனை - பரிசுத்தமுடையவனை, சுத்த - சுத்த வெளி-ஆகாயவடிவம், ஆனவனை-ஆகியருளி யிருப்பவனை, சுக-இன்ப, வடிவு-உருவம், ஆம்-ஆகிய, நித்தனை - நித்தியம் ஆனவனை, நித்தம் - என்றும், நிர் ஆதாரம்-ஆதாரமற்றது, ஆகிய-ஆகியிருக்கின்ற, நின்மலனை - மலம் அற்றவனை (மலரகிதனை), கண்டு-கண்களாற் றரிசித்து, இறைஞ்சுதற்கு - வணங்கிடற்கு, எத்தனை-எத்தனை, நாள்-காலம், செல்லுமோ-கழியுமோ எ-று.

(வி-ரை) தில்லை நடம்புரியுந் தேவனை சர்வலோக நாயகன் ஆதலின் 'அத்தனை' என்றார். இறைவன் சிதாகாயமாகிய அம்பலத்தாடுபவன் ஆதலின் 'சிற்றம்பலவனை' என்றார். இறைவன் உயிர்க்குயிராய் நின்று உயிர்களை இயக்குபவன் ஆதலின் 'என்னுயிராகி நின்ற சுத்தனை' என்றார். இறைவன் அட்டமாவுருவில் ஆகாய உருவமும் ஒன்றாதலின் 'சுத்த வெளியானவனை' என்றார். 'சுத்தவெளி' என்றது பராகாயத்தை. இறைவன் நித்தியனும் இன்பமயமானவனும் ஆதலின் 'சுகவடிவாம் நித்தனை' என்றார். இறைவன் எல்லாப் பொருள்களுக்கும், எல்லா வுயிர்களுக்கும், எல்லா அண்டங்களுக்கும் ஆதாரம் ஆனவனாகித் தனக்கென ஓர் ஆதாரமற்று இருத்தலின் 'நிரா தாரமாகிய நின்மலனை' என்றார். இதுவரை இறைவனைத் தரிசித்தது தடத்தாதலினாலும், இனி சொரூபத்திற் றரிசிக்கவும் விருப்புடையவராதலினாலும், 'எத்தனை நாள்செல்லுமோ மனமேகண் டிறைஞ்சுதற்கே' என்றார். ஈண்டு தடத்தம் துவிதத்தையும், சொரூபம் அத்துவிதத்தினையும் உணர்த்தினமை உய்த்துணர்ந்தறிக. இதனானன்றே **பெரியாரும்** 'தன்னுள்ளே தலைவனைக் கண்டறி' என்றார். எ-ஈற்றசை. 4

இறைவன் திருவடிவத்தைக் கூறினால் சிதாகாய வடிவமே எனல்

கண்டா ருளத்தினிற் கா லூன்றிப்
பெய்யுங் கருணைமுகி
லண்டார் புரத்துக்கு மன்பர்
வினைக்கு மசனிதன்னைக்
கொண்டாடி னார்முனங் கூத்தாடு
மத்தன்றன் கோலமெல்லாம்
விண்டாலம் மாஒன்றுங் காணாது
வெட்ட வெறுவெளியே.

(ப-ரை) கண்டார்-(இறைவனை) உள்ளபடி தரிசித்தவர், உளத்தினில்-மனங்களில், கால்-பாதம், ஊன்றி-பதித்து, கருணை-கருணையாகிய மழையை, பெய்யும்-பொழிகின்ற, முகில்-மேகம் ஆகிய, அண்டார்-தன்னைவந்தடைந்து வணங்காத திரிபுரத்தவர்களுடைய, புரத்துக்கும்-திரிபுரங்களுக்கும், அன்பர்-சிவனடியார்களின், வினைக்கு-வினைகளுக்கும், அசனி-இடியாகும், தன்னை-இறைவனாகிய தன்னை, கொண்டாடினார்-பூசித்தோர், முன்னம் அவர்களுக்கு முன்னால், கூத்தாடும் - திருநடனஞ் செய்யும், மத்தன் - பித்தன், தன்-தன், கோலம் - திருவடிவம், எல்லாம் - எல்லாம், விண்டால் - சொல்லுமிடத்தே, அம்மா - அம்மா என்ன ஆச்சரியம், ஒன்றும்-ஒருசிறிதும், காணாது-காணப்படாது, வெட்ட-வெட்ட, வெறும்-வெறும், வெளியே-சிதாகாயமே எ-று.



(வி-ரை) 'கண்டார்' என்றது சொரூப தரிசனத்தைக் கண்ட மெய்யன்பர்களை. 'காலூன்றி' என்றது பொருந்தி யிருத்தலை. 'பெய்யுங் கருணை முகில்' இது 'கருணை பெய்யும் முகில்' என்பது மொழிமாறி நின்றதிலை. இறைவனை 'முகில்' என்றது உருவகம். இறைவனை 'அசனி' என்றது **ஏகதேசஉருவகம்.** இதனானே அண்டார்புரமும், அன்பர் வினையும் ஆகிய இவைகள் மலைகள் என வருவித்து உரை உரைக்கற்பாற்று. இறைவன் தன்னை ஏத்துவார்முன் நின்று கூத்தாடுங் குணம்பற்றி இறைவனை 'மத்தன்' என்றார். இது 'உன்மத்தன்' முதற்குறை விகாரச்சொல். 'அம்மா' இது வியப்புப் பொருள்தரும் இடைச்சொல். 'வெட்ட வெறுவெளி' என்றது பரவெளியை. இறைவன் அப்பாலும், அப்பாலுக் கப்பாலுமாக இருப்பவன் ஆதலின், 'அம்மா வொன்றுங் காணாது வெட்டவெறு வெளியே' என்றார். எ-தேற்றப் பொருளில் வந்த ஏகாரம். 5

இறைவனே நீ என்னில் கலந்தால் கண்ணுங் கதிரவனும்போல
அபேதமாய் விளங்குவாயெனல்

வெளியான நீயென் மனவெளி
யூடு விரவின் ஐயா
ஒளியாருங் கண்ணு மிரவியும்
போனின் றுலாவுவன்காண்
அளியாருங் கொன்றைச் சடையாட
அம்புலி யாடக்கங்கைத்
துளியாட மன்று ணடமாடு
முக்கட் சுடர்க்கொழுந்தே.

(ப-ரை) வெளி-சிதாகாயரூபம், ஆன - ஆகிய, நீ-தேவரீர், என்-அடியேனுடைய, மனம்-மனமாகிய, வெளி-ஆகாயத்தின், ஊடு-இடத்தே, விரவின்-கலந்தருளுவீரேயானால், ஐயா-அப்பனே! ஒளி - பிரகாசம், ஆரும்-பொருந்திய, கண்ணும்-விழியும், இரவியும்-கதிரவனும், போல-ஒப்ப, நின்று-நின்று, உலாவுவேன் - உலாவுவேன், அளி-வண்டுகள், ஆரும் - நிறைந்த, கொன்றை-கொன்றை மாலையைத்தரித்த, சடை - சடாபாரமானது, ஆட - ஆடவும், அம்புலி - (அச்சடாபாரத்தின் கண்ணேயுள்ள) சந்திரன், ஆட - ஆடவும், கங்கை-கங்கையின், துளி-நீர்த்துளி, ஆட-ஆடவும், மன்றுள் - அம்பலத்தில், நடம்-ஆனந்த நிர்த்தனம், ஆடும்-ஆடும், முக்கண் - மூன்று விழிகளையுடைய, சுடர்-அக்கினி, கொழுந்தே-கொழுந்தே எ-று.

(வி-ரை) இறைவனே! நீ ஆகாயவடிவினன், பராகாயமாக நிற்பவன், இத்தகைய தேவரீர் அடியேனின் மன ஆகாயத்தோடு கலக்கவேண்டும்

என்பார், 'வெளியான நீயென் மனவெளியூடு விரவினையா' என்றார். - மனவெளியூடு விரவலாவது - ஆன்மாவின் கண்ணே திரோதான சத்தியால் மறைப்புண்டு கிடந்த இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுதலையே ஈண்டு குறித்தது. 'ஒளியாருங்கண்ணு மிரவியும் போனின் றுலாவுவன்' என்றது, அபேதமாக நின்றிருத்தலை. 'இரவி' இது 'ரவி' என்ற வடசொற்றிரிபு. இறைவன் பிரணவ வடிவன், பிரணவப் பொருளாயிருப்பவன் என்பதை ஆன்மாக்கள் அறிந்துய்ய இறைவன் அணிந்தருளினன். இதனையே 'அளியாருங் கொன்றைச்சடை' என்றார். மன்று - என்றது ஈண்டு அம்பலத்தை. சடர்க்கொழுந்தே - என்பதற்கு வேதமுடிவே, வேதக் கொழுந்தே என்னினும் ஆம். 'முக்கண்' என்றது சோம சூரியாக்கினிகளை. பின்னிரண்டடியின் கருத்துகளை, "கருவூரனுக்கா மான்சாயச் செங்கை மழுவலஞ், சாய வணைந்த கொன்றைத்தேன், சாயநல்ல திருமுடிசாய்ந்த சிவக்கொழுந்தே" என்ற பாவடிகளோயும் அடியொற்றிக் காண்க. 6

இறைவா! யான் மாதர் போகங் கடந்து நின்னடி சேருவ தெப்போ தெனல்

கொழுந்தா துறைமலர்க் கோதையா
மோகக் குரைகடலி
லழுந்தாத வண்ண நின் பாதப்
புணைதந் தருள்வதென்றோ
எழுந்தா தரவுசெ யெம்பெரு மான்என்
றிறைஞ்சி விண்ணோர்
தொழுந் தாதையே வெண்பொடி
பூத்தமேனிச் சுகப்பொருளே.

(ப-ரை) விண்ணோர் - தேவர்கள், எழுந்து - எழுந்து நின்று, எம்-எங்களுடைய, பெருமான்-பெருமானே!, ஆதரவு-உதவியை, செய்-செய், என்று-என்று கூறித் தோத்தரித்து, இறைஞ்சி - வணங்கி, தொழும் - தொழுதற்கேற்ற, தந்தையே - அப்பனே!, வெண் - வெண்மையாகிய, பொடி-திருநீறு, பூத்த - விளங்கிக்கொண்டிருக்கின்ற, மேனி - திருமேனியையுடைய, சுகம்-ஆனந்தமயமான, பொருளே - பொருளானவனே!, கொழு-செழுமையாகிய, தாது - மகரந்தம், உறை - பொருந்தியுள்ள, மலர் - மலர்மாலையை யணிந்த, கோதையர் - பெண்களினுடைய, மோகம் - ஆசை என்னும், குரை-சப்திக்கின்ற, கடலில்-கடலிலே, அழுந்தா-முழுகா, வண்ணம்-விதம், நின் - தேவரீரின், பாதம்-திருவடியாகிய, புணை-தெப்பத்தை, தந்து - கொடுத்து, அருள்வது-அருளிச்செய்வது, என்றோ-எக்காலமோ? எ-று.

(வி-ரை) தாது - என்றது மகரந்தத்தை. மிகுந்த நறுமண முடைமையின் 'கொழுந்தாது' என்றார். கோதையர் - என்றது பெண்களை. இது உவமையாகு பெயர். கோதை போல்வார் என்பது பொருள்; கோதை-மாலை.



கடல் அலை யுடைத்து, அலை மோதுதலால் சப்தம் உண்டாகிறது. எந்தக் கடல் அலை மிகுந்துளதோ அக்கடலில் வீழ்வார்க்கு ஆபத்து அதிகம் அலையால் மொத்துண்டு, ஈர்ப்புண்டு பாறைகளிற் றாக்கிச் சின்னபின்னப் படுத்தப்பட்டுச் சிதைவு உறுவர். இதுகொண்டே 'மோகக் குரைக்கடல்' என்றார். அதாவது அலை எறி கடல என்பதாம். மோகத்தைக் கடத்தற்கு இறைவன் திருவடிப் போதே வேண்டுமாதலின் மோகத்தைக் கோஷிக்குங் கடலுக்கு உவமித்தவர் இறைவன் திருவடியைப் புணையாகக் கூறினர். இதுகொண்டன்றோ **திருவள்ளுவ நாயனாரும்**, "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா ரிறைவ னடிசேரா தார்" என்றருளிச் செய்தார். என்றோ- இதில் உள் ஓகாரம் ஐயப்பொருளில் வந்த வினா. 'வெண்பொடி' என்றது திருநீற்றை இதனை, "காடுடைய சுடலைப் பொடி பூசி" என்ற **திருஞானசம்பந்தர் திருவாக்கா**னும் அறிக. இறைவன் 'சுகசொரூபன்' ஆதலின் 'சுகப்பொருளே' என்றார். 7

இறைவனின் திருவடிநிழலைத் தரிசித்தாலன்றி பிரபஞ்சமாயை அடியேனைவிட்டு ஒழியாது

சுகமாகு ஞானந் திருமேனி
யா நல்ல தொண்டர் தங்க
ளகமேபொற் கோயி லெனமகிழ்ந்
தோமன்று ளாடியகற்
பகமேஉன் பொன்னடி நிழல்கண்
டாலன்றிப் பாவிக்கிந்தச்
செகமாயை யானவ ருங்கோடை
நீங்குந் திறமில்லையே.

(ப-ரை) சுகம்-ஆனந்தம், ஆகும்-உண்டாதற்குக் காரணமாகிய, ஞானம்-ஞானமே, திரு-மேன்மை தங்கிய, மேனி-வடிவமாக, ஆம்-ஆகியுள்ள, நல்ல-நல்ல, தொண்டர்-அடியார், தங்கள்-தங்களுடைய, அகமே-மனமே, பொன்-அழகிய, கோயில் - கோயில், என - என்று, மகிழ்ந்து - சந்தோஷத்துடன் கொண்டு, மன்றுள் - திருச்சிற்றம்பலத்தில், ஆடிய - கூத்தாடியருளிய, கற்பகமே - கற்பக விருக்ஷமே!, உன் - தேவரீருடைய, பொன் - அழகிய, அடி-திருவடி, நீழல்-நிழலை, கண்டால்-தரிசித்தால், அன்றி-அல்லாமல், பாவிக்கு-பாவியாகிய அடியேனுக்கு, இந்த - இந்த, செகம் - பிரபஞ்சத்தின், மாயை-மாயையாகிய, அரும்-நீங்குதற்கு அரிய, கோடை-கோடையானது, நீங்கும்-தொலையும், திறம்-தன்மை, இல்லை-இல்லை; எ-று.

(வி-ரை) மெய்ஞ்ஞானம்-சிவஞானமாகிய ஆனந்தந்தருவது ஒன்றாதலினால்'சுகமாகுஞானம்'என்றார். இறைவன் ஞானவடிவினன் ஆதலின்'சுகமாகு ஞானந்திருமேனியா' என்றார். இறைவன் அடியார் அகத்தே விரும்பி யுறைபவன் ஆதலினாலும், திருச்சிற்றம்பலத்தே ஐந்தொழிலும் நடைபெறற்

பொருட்டுத் திருநடனஞ் செய்வோன் ஆதலினாலும் 'நல்ல தொண்டர் தங் களகமே பொற்கோயி லெனமகிழ்ந்தே மன்றுளாடிய கற்பகமே' என்றார். செகமாயை உயிர்களைத் துன்புறுத்துவ தொன்றாதலின் 'செகமாயை யான வருங்கோடை' என, கோடையை உவமை கூறினர். கோடைவெப்பத்தைத் தணிப்பது மரநிழல் ஆதலின் 'கற்பகமேயுன் பொன்னடிநீழல் கண்டாலன் றிப், பாவிக்கிந்தச் செகமாயை யானவருங் கோடைநீங்குந் திறமிலையே' என்றார். வெவ்விதாகிய பிரபஞ்சமாயையில் தான் துன்புறுதலாலும் பாவஞ் செய்தவர்களையே துன்பந் தொடருமாதலினாலும் தன்னைப் 'பாவி' என்றார். சாதாரண மரங்கள்போலாது கற்பகம் தன்னை அடைந்தார்க்கு வேண்டுவன வெல்லாந்தந்து, நிழலுந்தந்து ஆனந்தமுந் தருவதாதலால் இறைவனைக் 'கற்பகம்' ஆகவும், இறைவன் திருவடியை நிழலாகவும் உருவகப்படுத்தினார். மாயைத்துன்பம் நீங்கவும், சிவானந்தம் உறவும் இறைவன் திருவருள் வேண்டுதலினாலும், அது தனக்கு இல்லாமையினாலும் 'நீங்குந் திறமிலையே' என்றார். ஈண்டு,

"பொன்னார் புரிசடையான் பொன்னம் பலத்தாடி
பொன்னார் திருவடியைப் பூண்டுதொழும்—பொன்னார்
திருவடியார் வெம்மாயைத் தீங்கின்றி யின்பத்
திருவடிவா நிற்பர் நிகழ்ந்து"

என்ற தனிக்கவிச் **சிந்தாமணியாலும்** அறியலாம். 8

இறைவனே! தேவரீரைத் தெரிந்து தூங்காமற் றூங்கி நின்றாலொழிய
இன்ப மிலையெனல்

நீங்கா துயிருக் குயிராகி
நின்ற நினையறிந்தே
தூங்காமற் றூங்கினல் லாதே
யெனக்குச் சுகமுமுண்டோ
ஓங்கார மாமைந் தெழுத்தாற்
புவனத்தை யுண்டுபண்ணிப்
பாங்கா நடத்தும் பொருளே
அகண்ட பரசிவமே.

(ப-ரை) ஓங்காரம்-பிரணவம், ஆம்-சொரூபமாகும், ஐந்து-ஐந்து, எழுத்தால்-(பஞ்சாட்சர) மந்திரத்தால், புவனத்தை - உலகங்களை, உண்டுபண்ணி-உண்டாகும்படிசெய்து, பாங்கு - ஒழுங்கு, ஆக - ஆக, நடத்தும்-(அவ்வுலகங்களை) நடத்திவைக்கும், பொருளே-பொருளாகநிற்கும் இறைவனே!, அகண்ட-அகண்டாகாரமாகிய, பரம் - மேலானதாகிய, சிவமே - சிவமே!, நீங்காது-நீங்காமல், உயிருக்கு-உயிர்களுக்கு, உயிர்-உயிர், ஆகி-ஆகி, நின்ற-தங்கிநின்றருளும், நினை-தேவரீரை, அறிந்து - தெரிந்து, தூங்காமல் - தூங்காமல், தூங்கின்-தூங்கினால், அல்லாதே-அல்லாமல், எனக்கு-அடியேனுக்கு, சுகமும்-ஆனந்தமும், உண்டோ-உண்டாவதுண்டோ எ-று.



(வி-ரை) இறைவன் சர்வாந்தரியாமியாகி எல்லா உயிருக்கும் உயிராகி நின்று இயக்கி யருள்கின்றவன் ஆதலின் 'நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினை' என்றார். 'தூங்காமற் றூங்கி' என்றது நனவிற் சுழுத்தியி லிருத்தலை. இதனை, "வினவிற் பாசத்தை யறிவுறுதற் கவத்தை புலன்வினை மாறியே, நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட் டிகழு நலனுசவே" என்ற **செய்யுளாலும்** அறியலாம். ஓங்காரத்தின் பிரிவாகிய அகாரம், உகாரம், மகாரம் மூன்றும் விந்துநாதங்கள் ஆகிய வரி வடிவும் ஒலி வடிவுங் கூடியபொழுது ஐந்தெழுத்தாக விளங்கும். இது தூலபஞ்சாட்சரமாகும். இதுகொண்டே 'ஓங்காரமாம் ஐந்தெழுத்தால்' என்றார். 'ஓம்' இது ஆதி அக்ஷரம், இது சிருஷ்டிக்கு முன் உள்ள அவசரத்தில் பிரமத்தின் வேறாகாத சிற்சோதியாக வுள்ளது. இது சிருஷ்டியின்பொருட்டு விகாரப்படுங்கால் விந்துவடிவமாகக் கிடக்கும். இந்த வடிவில் இதனிடத்து உளதாகிய ஐந்தவசக்தியினாலே புருஷாம்சமாகிய நாதங் கம்பிதமாகும். அதாவது வட்ட வடிவினதாகிய விந்து விஷமப்பட்டு அண்ட வடிவுபெறும். பிரணவம் விஷமப்பட்டவிடத்து விந்து என்றும், அது விஷமப்படாதவிடத்து நாதம் என்றும் பெயர் பெறும். காரணத்தில் ஒடுங்கிநின்ற உலகத்தை மீளவும் எழுப்புவது சைதன்யா சேஷ்டையேயாம். சைதன்னிய சேஷ்டையின்றி உலகம் இயங்காது. இப் பிரணவம், தூலப்பிரணவம், சூக்குமப் பிரணவம் என இருவகைப்படும். 'உற்றீம்' தூலமும், 'ஓம்' என்பது சூக்குமமும் ஆகும். பிரணவம் பதினாறு உறுப்புகளா லாகியது அவ்வுறுப்புக்களை மாத்திரை என்பர்.

அப்பதினாறு மாத்திரைகளாவன:—1 - அ. 2 - உ. 3 - ம். 4-அர்த்தம். 5-நாதம். 6-விந்து 7-கலை. 8-களாதீதை. 9-சாந்தி. 10-சாந்தியாதீதை. 11 - உன்மனி. 12 - மனோன்மனி. 13 - புரி. 14 - மத்தியமை. 15-பசியந்தி. 16-பரை. இப்பதினாறும் நூற்றைம்பத்தாறாகவும் வகுக்கப்பெறும். அகாரம் பிரமத்தைக் குறிக்கும். உகாரம் குவிவையும், மகாரம் ஒழுக்கத்தையுங் குறிக்கும். அகர, உகர, மகரப் பொருள் கோளில் சைவம், வைஷ்ணவம் முதலிய சமயவாதிகள் வேறுபட் டுரைப்பாரும் உண்டு. பிரணவமே மந்திரங்களுள் சிறந்தது. இதனை ஆதிமந்திரம் என்றும், இராஜமந்திரம் என்றும் கூறுவர். இதனை உச்சரித்தமாத்திரத்தில் பாசங்களை எல்லாங் கடந்து உயர்வு அடைவர். இதுபற்றியே இதற்கு 'ஓம்' எனப் பெயர் ஆயிற்று. இது உச்சரிப்பு மாத்திரையால் நாதமாயும், எழுதும்போது விந்துவாயும், விந்துநாதங்களாகிய வரிவடிவும் ஒலிவடிவுங் கூடியபோது ஐந்தெழுத்தாயும விளங்கும். இதுவே பஞ்சாட்சரமாம். தூலபஞ்சாட்சரம், சூட்சுமபஞ்சாட்சரம், காரணபஞ்சாட்சரம் என மூன்றுவகைப்படும். அட்டாக்ஷரம், சடாட்சரம் முதலிய மந்திரங்கள் எல்லாம் பிரணவத்தின் துணையின்றி உச்சரிக்கின் பயன் தருதலில்லை. ஆனால் பஞ்பாட்சரங்களுக்கு இப்பிரணவம் துணையாக முன்னோதாவிடினும் பயனருளும். இதுகொண்டே 'ஓங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணி' என்றார். இறைவனே பொருள், உண்மைப் பொருள் ஆதலின் 'பொருளே' என்றார். இறைவன்

கண்டித மில்லாதவன் ஆதலினாலும் உயர்ந்தவன் ஆதலினாலும், மங்களகர னாதலினாலும் 'அகண்ட பரசிவமே' என்றார். 9

இறைவனே! அத்துவித இன்பத்தை அடையாதபடியால் அலைகின்றேனெனல்

சிவமாதி நான்முகக் கோவந்த
மாமறை செப்புகின்ற
நவமா யிலங்கிய வொன்றே
இரண்டற்ற நன்மைபெறு
தவமே தருமைம் புலப்பொறிக்
கேயென் னறிவுபொல்லாப்
பவமே விளைக்கவென் றேவெளி
மானெனப் பாய்ந்ததுவே.

**(ப-ரை)** சிவம்-சிவபெருமானே!, ஆதி-முதல்வனே! என்று, நால்-நான் காகிய, முகம்-முகங்களையுடைய, கோ-பிரமன், வந்த-கற்றுக்கொண்ட, மா-பெரிய, மறை-வேதங்கள், செப்புகின்ற-சொல்லுகின்ற, நவம்-புதுமை, ஆய்-உடையது ஆகி, இலங்கிய-விளங்கி நிற்கின்ற, ஒன்றே-ஒப்பற்ற பொருளே!, இரண்டு-துவிதம், அற்ற-இல்லாத (அத்துவித சம்பந்தமாயுள்ள), நன்மை-நன்மையினை, பெறாது - அடையாமல், அவமே - பயனற்றதையே (வீண் தீனயே), தரும் - கொடுக்கும், ஐம் - ஐந்தாகிய, புலம் - புலனுக்கு உரிய, பொறிக்கே-இந்திரியங்களுக்கே, என் - அடியேனின், அறிவு - அறிவானது, பொல்லா-கொடிய, பவமே-பிறவியையே, விளைவிக்க-விளைவிக்க, என்றே-என்றுதானே, வெளிமான் - வெளிமான், என - என்று ஒப்புக் கூறும்படி, பாய்ந்தது-தாவிக்குதித்தது எ-று.

**(வி-ரை)** 'சிவம்' என்றது மங்களகரப் பொருளாகிய இறைவனை. சிவனே எல்லாப் பொருள்களுக்கும் ஆதி என வேதங்கள் கூறலின் 'சிவமாதி நான் முகக் கோவந்த மாமறை செப்புகின்ற" என்றார். பிரமனின் நான்கு முகங்க ளாலும் நான்கு வேதங்களாலும் பயிலப் பெற்றமையின் 'நான்முகக் கோவந்த மாமறை' என்றார். இனி இறைவனிடமிருந்து உபதேச முறையாகப் பிரம னுக்குக் கிடைக்கப்பெற்ற எனவும், பிரமன் கற்றுத் தெளிவுபெற்ற என உரைக்கினும் அமையும். 'செப்பு' இது சொல்லும் என்னும் பொருள் குறித்த திசைச்சொல். இறைவன், "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே, பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என **மணிவாசகர்** திருவாய் மலர்ந்தருளியபடி புதுமைக்கும் புதுமையானவன் ஆதலின் 'நவமா யிலங்கிய வொன்றே' என்றார். இரண்டற்ற நன்மை-அத்துவிதானந்தக் கலப்பாற்பெறும் ஆனந்தத்தை. பஞ்சேந்திரியங்களின் வழியே மனஞ் செல்ல அறிவு தடுமாற்றமடைதலின் 'அவமேதரு மைம்புலப் பொறிக்கே யென்னறிவு பொல்லாப் பவமேவிளைக்க வென்றே'



என்றார். 'வெளிமான்' இது மான் ஜாதியில் ஒன்று. இது தாவிப்பாயும் ஏற்றம் உடையது. ஈண்டு, மனம்விரைவிற் பொறிவழிப் பாய்தலின் வெளி மானை உவமை கூறினார். எ-ஈற்றசை. 10

இறைவனாகிய பரமானந்தவெள்ளம் மெய்த்தவத்தோரிடம் நிலவுகின்றதெனல்

ஆறொத் திலங்கு சமயங்க
ளாறுக்கு மாழ்கடலாய்
வீறிப் பரந்த பரமான
வானந்த வெள்ளமொன்று
தேறித் தெளிந்து நிலைபெற்ற
மாதவர் சித்தத்திலே
யூறிப் பரந்தண்ட கோடியெல்
லாநின் றுலாவியதே.

**(ப-ரை)** ஆறு-நதிகளை, ஒத்து-ஒத்து, இலங்கு - விளங்குகின்ற, சமயங் கள் - சமயங்கள் (மார்க்கங்கள்), ஆறுக்கும்-ஆறினுக்கும், ஆழ் - ஆழம்மிகுந்த, கடல்-சமுத்திரத்திற்கு, ஆய்-ஒப்பாகி, வீறி-மிஞ்சி, பரந்த-பரவிய, பரமான-மேலானதாகிய, ஆனந்தம்-ஆனந்தமயமாகிய, வெள்ளம் - பிரவாகம், ஒன்று-ஒன்று, தேறி - மனத் தேறுதலைப்பெற்று, தெளிந்து - மனத்தெளிவை யடைந்து, நிலை-உறுதி நிலையை, பெற்றுகொண்ட, மா-பெரிய, தவர்-தவத் தவர்கள், சித்தத்திலே - மனத்தினிடத்தே, ஊறி - ஊற்றெடுத்து, பரந்து, பரவி, அண்டம் - அண்டங்களின், கோடி - கோடிகள், எல்லாம் - எல்லாவற் றிலும், நின்று-நின்று, உலாவியது-வியாபியா நின்றது; எ-று.

**(வி-ரை)** ஆறு கோடைவெப்பை நீக்கி விடாயைத் தவிர்த்தல்போலச் சமயம் பிறவித்துயர் நீக்கி முத்தியின்பந்தருதலின் ஆறு சமயத்திற்கு உவமம் ஆயிற்று. சமயங்கள் ஆறு - அகச்சமயங்க ளாறினையும். என்னை? இவைகளே இறைவனை அடைதற்கு ஏதுவாக இருத்தலினால் என்க. சமயங் கள் தன்னிடத்து வந்து அடங்கற்கு இடமாக இருத்தலின் இறைவனை 'ஆழ் கடலாய் வீறிப்பரந்த பரமான வானந்த வெள்ளமொன்று' என்றார். தேறி-என்றது ஈண்டு அறிதலை. 'தெளிந்து' என்றது குருமூர்த்தத்தாலும், சுவானு பவத்தாலும் நிட்சயித்தலை. 'நிலைபெற்ற' என்றதற்கு உறுதிநிலை என்றும், உறுதிநிலையாவது - வைராக்கிய நிலையை. இனி ஞானநிலை, மோனநிலை எனினும் பொருந்தும். 'அண்டகோடி' ஈண்டு 'கோடி' எண்ணுப் பொரு ளைக்காட்டாது மிகுதிப் பொருளைக்காட்டி நின்றது. இறைவன் அடியார் உள்ளத்துக் கோயிலாக் குடிகொண்டிருப்பதன்றிச் சர்வாண்ட கோடியிலும் எள்ளுக்குள் எண்ணெய்போல் வியாபித்து இருப்பவன் ஆதலின், 'மாதவர் சித்தத்திலே யூறிப் பரந்தண்ட கோடியெல்லா நின்றுலாவியதே' என்றார். இதனை,

"உள்ளாய்ப் புறம்பாய் எங்குமாய் ஓங்கி நின்ற உயர்பொருளே
வெள்ளா னேறும் விமலாவென் வெள்ளை யுள்ளத் தொளிர்சுடரே"

எனப் பெரியார் பரவுதலுங் காண்க. (சிவாநந்த சிந்தாமணி) எ-ஈற்றசை 11

இறைவ! என்மனம் நின்னை மறவா தெனல்

நடக்கினும் ஓடினும் நிற்கினும்
வேறொரு நாட்டமின்றி
கிடக்கினுஞ் செவ்வி திருக்கினும்
நல்லருட் கேள்வியிலே
தொடக்குமென் னெஞ்சம் மனமற்ற
பூரணத் தொட்டிக்குளே
முடக்குவன் யான்பர மாநந்த
நித்திரை மூடிடுமே.

(ப-ரை) நடக்கினும்-நடந்தாலும், ஓடினும்-ஓடினாலும், நிற்கினும்-நின்றாலும், வேறு-வேறாகிய (அந்நியமான), ஒரு-ஒரு, நாட்டம் - மனம், இன்றி-இல்லாதபடி, கிடக்கினும்-கிடந்தாலும், செவ்விது - செம்மையாக (சுகமாக), இருக்கினும்-இருந்தாலும், நல் - நல்ல, அருள் - திருவருளின் விஷயமாகிய, கேள்வியிலே - விசாரணையிலே, என் - அடியேனுடைய, நெஞ்சம் - மனம், தொடக்கும்-கட்டுப்பட்டிருக்கும், யான் - அடியேன், மனம் - மனம், அற்ற-இறந்த, பூரணம் - பரிபூரணப்பொருளாகிய, தொட்டிக்கு - தொட்டியினது, உளே - உள்ளே, முடக்குவன் - அடங்கிக்கிடப்பன், பரமானந்தம்-சிவாநந்தமாகிய, நித்திரை - யோகநித்திரை, மூடிடும் - அடியேனைக் கவிந்துகொள்ளும் எ-று.

(வி-ரை) முதல் இரண்டடியினும் வந்த உம்மைகள் எண் உம்மைகள். மனம் எஞ்ஞான்றும் ஞானக் கேள்வியிலே பயில மனந் திடப்பட்டுச் சிவானந்தப் பேறெய்தி முத்தியுறுவாராதலின் 'நல்லருட் கேள்விலே தொடக்குமென் னெஞ்சம்" என்றார். இதனை,

"உணர்ச்சி யச்சாக வுசாவண்டி யாகப்
புணர்ச்சிப் புலனைந்தும் பூட்டி—புணர்ந்ததனை
ஊர்கின்ற பாகன் உணர்வுடைய னாகுமேற்
பேர்கின்ற தாகும் பிறப்பு"

என்ற அறநெறிச்சார நாலுடையார் வாக்கானும் அறியலாம். இன்னும்,

"நின்று மிருந்துங் கிடந்து நினை
என்றுஞ் சிவன்ற னினை"

என்ற பெரியார் திருவாக்கையும், அடியொன்றிக் காண்க. மேலும்,

"இருக்கினு நிற்கும் போதும் இரவுகண் டுயிலும் போதும்
பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியுண் டுய்க்கும் போதும்
முருக்கிதழ்க் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பால தாமே"

என்னும் திருக்கருவை யந்தாதி ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்கத் தக்கதாகும்.



'பூரணத்தொட்டி' இது பண்புத்தொகை. பூரணமாகிய தொட்டி என விரியும். பூரணம் என்றது இறைவனை. என்னை? இறைவனே பூரணன் ஆதலின் என்க. பரமானந்த நித்திரை-என்றது சிவாநந்தயோக நித்திரையை. 12

மோனத்தால் முத்தியும் சித்தியும் உண்டாம் நெஞ்சே துயர்
ஒழி, கண்ணே உறங்கு என்கின்றார்

எண்ணாத தெண்ணிய நெஞ்சே
துயரொழி என்னிரண்டு
கண்ணே உறங்குக என்னாணை
முக்கட் கருணைப்பிரான்
தண்ணார் கருணை மௌனத்தி
னான்முத்தி சாதிக்கலாம்
நண்ணாத தொன்றில்லை எல்லா
நலமு நமக்குளவே.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, எண்ணாதது - (இவ்வளவு காலமாக) எண்ணத்தகாதனவாகிய பாவகர்மங்களை, எண்ணிய-சிந்தித்தமையாலாகிய, துயர்-(உண்டான) துன்பங்களையெல்லாம், ஒழி-போக்கிக் கொள்ளுவையாக, என் இரண்டு கண்களே-என்னுடைய இரண்டாகிய கண்களே!, உறங்கு - கவலையில்லாமல் நித்திரை புரிவை, என் ஆணை-என்மேலாணை, முக்கண் கருணைப்பிரான்-மூன்றாகிய கண்களையுடைய கிருபாவடிவினை யுடையோனான பெருமானின், தண் ஆர்-குளிர்ச்சி நிறைந்த, கருணை-கிருபையோடுண்டாகக்கூடிய, மௌனத்தினால்-மோன நிலையினாலே, முத்தி சாதிக்கலாம்-பேரின்பத்தினைப் பெறலாம், நண்ணாதது-இனி நமக்கு கிட்டாதது, ஒன்றும் இல்லை-ஒன்றுமே கிடையாது, எல்லா நன்மை-எல்லாவிதமான நலங்களும், நமக்கு - இனிமேல் நமக்கு, உள-உறுதியாக உண்டாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுள் நெஞ்சறி வுறுத்தல் என்னும் துறையின்பாற் படும். கவலையுடையார்க்கும் துயரம் உடையார்க்கும் உறக்கம் வாராதாதலின் 'நெஞ்சே துயரொழி' என்றதன்பின் 'என்னிரண்டு கண்ணேயுறங்கு' என்றார். 'கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம்' எனவும், "கண்ணெனப்படுவது கருணைக்கண்ணே" எனவும் பெரியார் கூறியருளியதனால் இறைவன் மூன்று கண்வழியாகவும் கருணையைச் செலுத்துபவன் என்பது தோன்ற 'முக்கட் கருணைப்பிரான்' என்றார். கண்கள் மூன்றிருந்து கருணையின்றேல் எவ்வாறு கருணையைச் செலுத்துவன் என்னும் ஐயம் நிகழாவண்ணம் இறைவன் கருணையே வடிவமாகக் கொண்டவன் என்பதை உணர்த்துவான் 'கருணைப்பிரான்' என்ற நயங் கருதத்தக்கது. 'அவனருளாலே அவன்றாள்'

வணங்க வேண்டுமாதலின் மோனமும் இறைவன் கருணையாலேயே எய்தும் என்பார் 'தண்ணார்கருணை மௌனத்தினால்' என்றார். மோனமே ஞானத்தை எய்துவிக்கும், ஞானம் விளங்க இறைவன் உள்ளத்தே வெளிப்படுவன், இறைவன் வெளிப்பட்டுத் தோன்றலே சிவானந்தம்பெருகும், முத்தி சித்தி எய்தும் என்னும் இக்கருத்தை,

"கருது வதன்முன் கருத்தழி யப்பாயும்
ஒருமகள் கேள்வன்என் றுந்தீபற
உன்ன அறியனென் றுந்தீபற" என்ற **திருவுந்தியாராலும்**,

"அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யேநிற்க முன்னிற்கும்—சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு"

என்ற **திருக்களிற்றுப்படியார் செய்யுளாலும்** அறியலாம். எ-ஈற்றசை. 13

நானென்ப தொழியின் நலம் பெறலா மெனல்

நானென் றொருமுத லுண்டென்ற
நான்றலை நாணஎன் னுள்
தானென் றொருமுதல் பூரண
மாகத் தலைப்பட்டுஒப்பி
லானந்தந் தந்துஎன் னறிவையெல்
லாமுண் டவசநல்கி
மோனந் தனைவிளைத் தாலினி
யாது மொழிகுவதே.

(ப-ரை) நான்-நான், என்று-என்று, ஒரு-ஒரு, முதல்-முதன்மையாகிய பொருள், உண்டு-உண்டு, என்ற-என்று அலங்கரித்திருந்த, நான்-அடியேன், தலை-தலைசாய்த்து, நாண-வெட்கமுற, என்-அடியேனுடைய, உள்-மனத்தில், தான்-தான், என்று-என்று, ஒரு-ஒப்பற்ற, முதல்-முதற்பொருள், பூரணம்-வியாபகம், ஆக-ஆக, தலைப்பட்டு-தோன்றி, ஒப்பு-சமத்துவம், இல்-இல்லாத, ஆநந்தம் - சிவாநந்தத்தை, தந்து - ஈந்து, என் - அடியேனுடைய, அறிவை-அறிவை, எல்லாம் - முற்றும், உண்டு - விழுங்கி (வியாப்பியமாகக்கொண்டு), அவசம் - பரவசத்தை, நல்கி - தந்து, மோனம்-மௌனநிலை, தனை-தன்னை, விளைத்தால்-உண்டாக்குமேயாயின், இனி-இனிமேல், யாது-எதனை, மொழிகுவது-சொல்லுவது எ-று.

(வி-ரை) ஆன்மாக்கள் ஞானம் பெறுதவரைத் தேகாதி தத்துவங்களை நான் நான் என மருண்டு கெட்டலைகின்றன. ஞானமுற்றகாலை நான் என்று ஒன்றைக் காணாது இறைவனையே சிவாநந்தத்து மூழ்கி முத்தியின்பம் எய்துகின்றது. 'நானென் றொருமுதல் உண்டென்ற நான்' என்றது அகங்கார



தத்துவத்தின் செயல். இது அவித்தையால் எய்துவது. இறைவன் முதல்வனாதலினாலும் பூரணப்பொருளாகையினாலும் 'தானென் றொருமுதல் பூரணமாகத் தலைப்பட்டு' என்றார். இறைவன் ஞானிகளினுள்ளே விளங்கித் தோற்றுவன். அவன் தோற்றத்தால் இன்பம் உதயமாகும்; ஆதலின் 'ஒப்பி லானந்தந் தந்து' என்றார். சிவஞானிகளுக்குப் பசுபோதங் கழன்று சிவபோதமே விளக்கமுறும் ஆதலினால் 'என்னறிவை எல்லாமுண்ட வசநல்கி' என்றார். சிவாநந்தத் தழுந்தினர்க்கு அவசம் பிறந்து மோனநிலை பெறுவர் ஆதலின் 'மோனந்தனை விளைத்தால்' என்றார். இதன் விளக்கங்களனைத்தினையும் சுயானுபூதிமான்கள்பால் உபதேசமுறையாற் கேட்டுச் சுயானுபவத்தால் அறியற்பாலதாகும். எ-ஈற்றசை. 14

இறைவனே! நற்குணமில்லாத அடியேன் உண்மையறிந்து மௌனநிலை பொருந்த மௌன சற்குருவாக வந்தருளினை யெனல்

தானந் தவஞ்சற்று மில்லாத
நானுண்மை தானறிந்து
மோனம் பொருளெனக் கண்டிடச்
சற்குரு மோன னுமாய்த்
தீனன் றனக்கிங் கிரங்கினை
யேஇனிச் சிந்தைக்கென்று
மானந்தந் தானல்ல வோபர
மேசச்சி தானந்தமே.

(ப-ரை) பரமே - மேலான கடவுளே!, சச்சிதானந்தமே - உண்மையறிவானந்தப்பொருளே!, தானம்-கொடையும், தவம்-தவமும், சற்றும்-சிறிதும், இல்லாத - இல்லாத, நான் - அடியேன், உண்மை - உண்மை, தான் - தான், அறிந்து - உணர்ந்து, மோனம் - மௌனநிலையே, பொருள் - சத்தியமாகிய பொருள், என-என்று, கண்டிட-அறிந்துகொள்ள, சற்குரு-சற்குரு, மோனனும்-மவுன சற்குரு, ஆய்-ஆகி, தீனன்-எளியேன், தனக்கு-தனக்கு, இங்கு-இவ்விடத்து, இரங்கினையே - இரங்கி அருள் செய்தாயே, இனி - இனி, சிந்தைக்கு-மனத்திற்கு, என்றும்-எக்காலத்தும், ஆனந்தம் - இன்பம், தான்-தான், அல்லவோ-அன்றோ எ-று.

(வி-ரை) மக்கட்குத் தானமுந் தவமும் இன்றி அமையாது இருக்க வேண்டியவைகள் ஆதலின், 'தானந் தவஞ் சற்று மில்லாத நான்' என்றார். இதுபற்றியன்றோ **ஔவைபிராட்டியாரும்**, "தானமுந் தவமுந் தான்செய் வாராயின் வானவர்நாடு வழிதிறந் திடுமே" என்றருளிச்செய்தார். உண்மை-என்றது உண்மைப் பொருளாகிய இறைவனை என்க. இனி, ஞான உண்மைகளை அறிந்து எனினும் ஆம். மோனம் - என்றது மோன நிலையை. மோன சமாதிநிலை எனினும் ஆம். ஞானவரம்பாகிய மோனம் வாய்த்தபின் ஆனந்த நிலையே யாதலினால் 'தீனன் றனக்கிங் கிரங்கினையே யினிச் சிந்தைக்கென்று

மானந்தந் தானல்லவோ' என்றார். இறைவன் உயர்ந்தவைகள் எல்லாவற்றினும் கனிமிக உயர்ந்தவனாக இருத்தலினாலும், சத்தும், சித்தும், ஆனந்தமுமாகிய பொருளாதலினாலும் 'பரமே சச்சிதானந்தமே' என்றருளிச் செய்தார். இச் செய்யுளின் கருத்தை,

"வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடனென்பாய் போல
இனையனா னென் றுன்னை யறிவித் தென்னை
யாட் கொண்டெம் பிரானாய்க் கிரும்பின்பாவை" எனவும்,

"கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம் பெருமான் செய்திட்ட விச்சை தானே"

என்ற **மணிவாசகர் திருவாக்குகளோடு** ஒப்பிட்டுக் காண்க. 15

இறைவனே! அடியேனை வாழச்செய்தல் தேவரீரின்
கருணைக்குக் கடன்மையாகும் எனல்

எனக்கோர் சுதந்திர மில்லையப்
பாஎனக் கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொரு
ளேஎன்னை வாழ்வித்திட
நினக்கே பரம்நின்னை நீங்காத
பூரண நீள்கருணை
தனக்கே பரம்.இனிச் சும்மா
விருக்கத் தகுமென் றுமே.

(ப-ரை) அப்பா - அப்பனே!, எனக்கு - அடியேனுக்கு, ஓர் - யாதொரு, சுதந்தரம் - சுவாதீனமும், இல்லை - இல்லை, எய்ப்பில் - இளைப்புக் காலத்தில், வைப்பு-நிட்சேபம், ஆய்-ஆகி, மனம் - மனத்தின் கண்ணுள்ள, கோது-(கிலேசத்தை) துயரத்தை, அகற்றும் - போக்கும், பரம் - மேலான, பொருளே-பொருளே!, என்னை-அடியேனை, வாழ்வித்திடல் - வாழச்செய்தல், நினக்கே-தேவரீருக்கே, பரம் - கடன்மையாகும், (அதல்லாமல்) நின்னை - தேவரீரை, நீங்காத - பிரியாத, பூர்ணம்-பூரணமாகிய, நீள் - நீண்ட, கருணை - கருணை, தனக்கே-தனக்கே, பரம் - கடன்மையாகும், (இவைகள் வாய்க்கப்பெற்றால்) இனி-இனிமேல், சும்மா - அடியேன் மவுனமாக, இருக்க - இருக்க, என்றும்-எக்காலத்தும், தகும்-தகுதியுடையதாகும் எ-று,



(வி-ரை) இறைவன் ஒருவனே சுதந்தரன், மற்றை ஆன்மாக்களெல்லாம் பரதந்தரர்களாகையால் 'எனக்கோர் சுதந்தர மில்லையப்பா' என்றார். மனக்கோது - என்பதற்கு குற்றம் என்பது பொருள். துயரமும், கிலேசமும் மனத்துறுங் குற்றமாதலின் துயரம் என்றும். இறைவனின் கருணையினாலேயே ஆன்மா சிவானந்தம் எய்தவேண்டி யிருத்தலின் 'நினக்கேபரம் நீங்காத பூரண நீள்கருணை தனக்கேபரம்' என்றார். சும்மாயிருத்தல் என்றது-திரிகரணசேட்டை ஒழிந்து மோன நிலையுற்றிருத்தலைக் குறித்தது. ஏ-ஈற்றசை. 16

மனமே! சாங்காலத்தில் பிறவிகளுதவாது மௌனநிலையே
உதவிசெய்யும் எனல்

இடம்பெறு வீடு மின்னார்சேய்
சகமு மிருநிதியு
முடம்பைவிட் டாருயிர் போம்போது
கூடி யுடன்வருமோ
மடம்பெறு மாயை மனமே
இனியிங்கு வாமௌனி
திடம்பெற வைதத மௌனஞ்
சகாயம் தெரிந்துகொள்ளே.

(ப-ரை) இடம்பெறு - விசாலமாகிய, வீடு - மனையும், மின்னார் - பெண்களும், சேய்-பிள்ளைகளும், சகமும் - உலகும், இரு-பெரிய, நிதியும்-திரவியமும், (இவைகளெல்லாம்) ஆர்-அருமையாகிய, உயிர்-உயிரானது, உடம்பை-தேகத்தை, விட்டு-நீங்கி, போம் - போகும், போது-காலத்தில், கூடி-ஒன்று சேர்ந்து, உடன்-ஆன்மாவுடன், வருமோ-வருமோ?, மடம் - அறியாமையை, பெறு-பெற்ற, மாயை-மாயாகாரியமாயுள்ள, மனமே-நெஞ்சே!, இனி-இனிமேல், இங்கு - என் சமீபத்தில், வா - வா, மௌனி - மவுனசற்குரு, திடம்-வலிமை, பெற-உற, வைத்த-பொருந்திய, மௌனம்-மவுனநிலையே, சகாயம்-எப்பொழுதும் உதவிசெய்வதாகும், தெரிந்துகொள்-அறிவாயாக எ-று.

(வி-ரை) 'இடம்பெறுவீடு' விசாலமான வீடு, மின்னார், இது உவமை ஆகுபெயராய் மின்னலை ஒத்த பெண்களைக்குறித்து நின்றது. 'சேய்' இளமைப்பெயர் ஈண்டு அதனை உடைய மக்களைக் குறித்தது. 'மடம்' ஈண்டு அறியாமையைக் குறித்தது. மனம், மாயையின் காரியமாகையால் 'மாயை மனமே' என்றார். 'மௌனி' என்றது மௌனதேசிகரை. இச்செய்யுளின் கருத்தே கொண்டு **பட்டினத்தடிகளும்**,

"ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே" எனவும்,

“கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்
கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்
வெட்டி யடிவைப்ப ரோவிறை வாகச்சி யேகம்பனே” எனவும்,

“மனையாளு மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாசன்மட்டே
யினமான சுற்ற மயானமட்டே வழிக்கேது துணை
தினையா மளவெள் ளளவாகினு முன்பு செய்ததவந்
தனையாள வென்றும் பரலோகஞ் சித்திக்குஞ் சத்தியமே”

எனவும் கூறியதூஉங் காண்க. ஏ-ஈற்றசை 17

இறைவனே! இந்த உடம்பையே துணை என்று நம்பினேனுக்குக்
கதியுளதோ வெனல்

நாற்றச் சடலத்தை ஒன்பது
வாச னடைமனையைக்
சோற்றுப் பசையினை மும்மல
பாண்டத் தோடக்கறையை
ஆற்றுப் பெருக்கன்ன கன்மப்
பெருக்கை அடர்கிருமிச்
சேற்றைத் துணையென்ற நாய்க்குண்
டோகதி சேர்வதுவே.

(ப-ரை) நாற்றம் - துர்க்கந்தம் வீசும், சடலத்தை - உடம்பை, ஒன்பது-ஒன்பது வாசல்-துவாரங்களைக்கொண்ட, நடை-நடக்கும், மனையை-வீட்டை, சோற்று-சாதத்தால் ஆகிய, பசையினை - பசையை, மும்-மூன்று, மலம்-மலங்கள் பொருந்திய, பாண்டம்-பாத்திரமாகிய, தொடக்கு-தொடக்கினைஉடைய, அறையை-சிறுவீட்டை, ஆற்று - ஆற்றின், பெருக்கு - பெருக்கை, அன்ன-ஒத்த, கன்மம் - கருமத்தின், பெருக்கை - வெள்ளத்தை, அடர் - நெருங்கிய, கிருமி-புழுக்கள்நிறைந்த, சேற்றை - சேற்றை, துணை-உதவி, என்ற-என்று எண்ணியிருந்த, நாய்க்கும் - நாயினேனுக்கும், கதி-கதியை, சேர்வது-பெறுவது, உண்டோ-உளதோ எ-று.

(வி-ரை) உடம்பு மலமூத்திர நிறைந்த புன்புலால் யாக்கையாதலின் ‘நாற்றச் சடலத்தை’ என்றார். இதனன்றோ “சலமலப்பேழை” என்றார் **பட்டினத்தடிகளும்.** இத்தேகம் ஒன்பது பெருந்துவாரங்களை யுடையதாகி (நடக்கும்) இயங்கும் இயல்புடையது ஆதலினால் ‘ஒன்பதுவாசல் நடை மனையை’ என்றார். இதனையே “நாற்றப் பாண்டம் நான்முழத் தொன்பது பீற்றற் றுண்டம்” என்றார். இத்தேகம் சோற்றாற் சமைந்ததாதலின் ‘சோற்றுப் பசையினை’ என்றார். “சோற்றாலடித்த சுவர்போலப் பார்த்தலே இரண்டுகால் வீடு” என்ற **பெரியார்** வாக்கும் ஈண்டு கருதற்பாலது. **பட்டினத்தடிகளும்** “சோற்றுத் துருத்தி” என்றார். ஆணவம், கன்மம், மாயா



மலம் என மும்மலங்களோடு கூடியது இத்தேகம் ஆதலின் ‘மும்மலபாண்டத் தொடக்கை’ என்றார். இதனை “கிருமி கிண்டுங் கிழங்குஞ் சருமி” என்ற **பட்டினத்தடிகள்** வாக்கோடொப்பிட்டுக் காண்க. இச்செய்யுளின் கருத்தை

“உற்றைச் சரீரத்தை யாபாசக் கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய
காற்றிற் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல்செய்தே
யெற்றுத் திரிந்து விட்டே னிறைவாகச்சி யேகம்பனே”

என்ற **பட்டினத்தடிகள்** வாக்காலுந் தெளியலாம். மேலும்,

“எல்லாப் படியாலும் எண்ணினு லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை—நல்லார்
அறிந்திருப்ப ராதலினா லாங்கமல நீர்போற்
பிறிந்திருப்பர் பேசார் பிறர்க்கு”

என்ற நல்வழி வெண்பாவையும் கண்டு நோக்குக. ஏ-ஈற்றசை. 18

இறைவனே! இவ்வுலகம் கானற்சலமென வறிந்தேனெனல்

பொய்யா ருலக நிலையல்ல
கானற் புனலெனவே
மெய்யா வறிந்தென்ன என்னு
லிதனை விடப்படுமோ
கையான் மௌனந் தெரிந்தேகல்
லானிழற் கண்ணிருந்த
வையாஅப் பாஎன் னரசேமுக்
கண் ணுடை யாரமுதே.

(ப-ரை) பொய்-பொய், ஆர்-நிறைந்த, உலகம்-இந்தப் பிரபஞ்சமானது, நிலை-நிலையுடையது, அல்ல-அல்ல, கானல்-கானலாகிய, சலம்-நீரைப்போன்றுளது, என-என்று, மெய்-உண்மை, ஆ-ஆக, அறிந்து-தெரிந்தும், என்ன-என்னபயன், என்னால் - அடியேனால், இதனை - இப்பிரபஞ்ச வாழ்க்கையை, விட-விட்டுவிட, படுமோ - கூடுமோ?, கையால் - (சின்முத்திரைக்) கையால், மவுனம்-(காட்டிய) மவுனநிலையை, தெரிந்து-தெரிந்து, கல்-கல்லாகிய, ஆல்-ஆலவிருக்ஷத்தின், நிழல்கண்-நிழலினிடத்து, இருந்த - எழுந்தருளி இருந்த, ஐயா-ஐயனே!, அப்பா-அப்பனே! என்-அடியேனின், அரசே-அரசே!, மு-மூன்று, கண்-கண்களை, உடை - கொண்டுள்ள, ஆர் - அரிய, அமுதே-அமிர்தமே! எ-று.

(வி-ரை) உலகம் மாயையின் தோற்றமாதலினாலும், நித்தியமல்லாததாதலினாலும் ‘பொய்யாருலகம்’ என்றார். நிலையில்லை என்பது அறிந்தாலும் நின்கருணை இல்லாமையால் பல ஜென்மங்களாகத் தொடர்ந்துவந்த இப் பிரபஞ்சப்பற்றுவிட முடியவில்லை என்பார், ‘கானற் புனலெனவே மெய்யா

வறிந்தென்ன, வென்று விதனை விடப்படுமோ' என்கின்றார். இறைவன் தட்சணாமூர்த்தியாய்க் கையாற் சின்முத்திரைக் குறிகாட்டித் தன் திருவடி காட்டி மௌனியாய் நின்று சனகாதியர் ஐயநீக்கி மெய்ப்பொரு ளுணர்வித் தனராதலின் இந்நூலாசிரியர் 'கையான் மௌனந் தெரிந்தே கல்லானிழற்க ணிருந்த வையா' என்றார். இச் செய்யுளின் கருத்தை,

"விடப்படுமோ விப்பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனந்
திடப்படுமோ நின்னருளின்றியே தினமே யலையக்
கடப்படுமோ வற்பர் வாயிலிற்சென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோ சொக்கநாதா சவுந்தர பாண்டியனே"

என்ற **பட்டினத்தார்** வாக்கோடும் ஒப்பிட்டுக் கண்டு தெளிக. 19

இறைவனே! அடியேனுக்கு அன்பு பெருகும்படிச்செய்து சுகநிட்டையை தாராதிருந்தால் இறப்பேனெனல்

ஆரா வமுதென மோனம்
வகித்துக்கல் லானிழற்கீழ்ப்
பேராது நால்வ ருடன்வாழ்மூக்
கண்ணுடைப் பேரரசே
நீரா யுருகவுள் ளன்புதந்
தேசுக நிட்டையைநீ
தாரா விடினென் பெருமூச்சுத்
தானத் தனஞ்சயனே.

(ப-ரை) ஆரா-தெவிட்டாத, அமுது-அமிர்தம், என-என்று சொல்லும் படி, மோனம்-மவுனமுத்திரையை, வகித்து-தாங்கி, கல்-கல், ஆல்-ஆலமரத் தின், நிழல்-நிழலின், கீழ்-கீழே, பேராது-நீங்காது, நால்வருடன் - சனகாதி முனிவர் நால்வர்களுடன், வாழ் - வாழ்கின்ற, மு - மூன்று, கண்-கண்களை, உடை-உடைய, பேர்-பெரிய, அரசே-அரசே!, நீராய்-நீரின்தன்மை உடைய தாய், உருக-உருகும்படி, உள் - உள்ளத்தின்கண், அன்பு - அன்பை, தந்து-கொடுத்து, சுகம்-இன்பமயமாகிய, நிட்டையை-மவுனநிட்டையை, நீ-தேவரீர், தாராவிடில்-கொடாது என்னைக் கைவிட்டால், என்-அடியேனுடைய, பெரு-பெரிய, மூச்சு-மூச்சு (நெட்டுயிர்ப்பு), தான்-தான், அ-அந்த, தனஞ்சயனே. தனஞ்சயன் என்னும் காற்றேயாகும் எ-று.

(வி-ரை) காணக் காணத் தெவிட்டாத இன்பமும், அழியாச் சிவானந்த மும் சனகாதி முனிவர்களுக்கருளி வடவால நீழலில் சின்முத்திரை கைகாட்ட மௌனியாக தட்சணாமூர்த்தமாக இறைவன் நின்றருளியதால் "ஆராவமு தென மோனம் வகித்துக் கல்லானிழற் கீழ்ப் பேராது நால்வ ருடன்வாழ் முக்கண்ணுடைப் பேரரசே" என்றார். இறைவன் மாட்டு அன்பு உடை யார்க்கு அவ்வான்மாவால் உள்ளம் உருகும் ஆதலின் 'நீராயுருக வுள்ளன்பு தந்தே' என்றார். இதனை,



"என்னை யாண்டாய்க் குள்ளந்தா னின்றுச்சி
யளவு நெஞ்சா யுருகாதா லுடம் பெல்லாங்
கண்ணா யண்ணா வெள் ளந்தான் பாயாதா"

என்ற **மணிவாசகர்** வாக்கோடு ஒப்பிட்டுக் காண்க.

இறைவன் அடியேனுக்கு உள்ளன்புதந்து சுகநிட்டை தாராவிடின் இறந்துபடுவேன் என்பார், 'உள்ளன்பு தந்தே சுகநிட்டையை நீ தாராவிடி னென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே' என்றார். பெருமூச்சு துயரத் தால் உண்டாவது; இதனை நெட்டுயிர்ப்பு எனக் கூறுதலும் உண்டு. இறை வன் அருள் செய்யாமையால் துயருற்று நெட்டுயிர்த்தலை ஈண்டுக் கூறினர். பெருஞ்சோகமே உடனே மரணந் தருதலினால் பெருமூச்சுத்தானத் தனஞ் சயன் என்றார். 'தனஞ்சயன்' இது தசவாயுக்களுள் ஒன்றாம். இது உயிர் நீங்கிய பின்னும் உடலில் இருந்து உடம்பை வீங்கச்செய்து வெடிப்பித்துத் தலையைக் கிழித்துக்கொண்டுசெல்வது. 'சுகநிட்டை' என்றது சிவராஜ யோக நிட்டையை. ஏ-தேற்றேகாரம். 20

நின் கருணையிருக்க என்மனம் வயப்பட என்ன தடையுளதெனல்

வாயுண்டு வாழ்த்த மௌனஞ்செய்
போது மௌனவருட்
டாயுண்டு சேயென்ன வென்னைப்
புரக்கச் சதானந்தமா
நீயுண்டு நின்னைச் சரண்புக
நானுண்டுஎன் னெஞ்சமையா
தீயுண் டிருந்த மெழுகல
வோகதி சேர்வதற்கே.

(ப-ரை) ஐயா-ஐயனே!, வாழ்த்த - தேவரீரை வாழ்த்துவதற்கு, வாய்-வாய், உண்டு - இருக்கிறது, மௌனம் - மௌனநிலை, செய்-கூடும், போது-பொழுது, மௌனம் - (அதனைக் கூட்டிமுடிக்க) மௌனரூபமாகிய, அருள்-திருவருளென்னும், தாய்-தாயானவள், உண்டு-உண்டு, சேய்-பிள்ளை, என்ன-போல, என்னை-அடியேனை, புரக்க-காப்பாற்ற, சதானந்தம்-நித்தியானந்தம், ஆம்-ஆகிய, நீ-தேவரீர், உண்டு-உண்டு, நின்னை-தேவரீரை, சரண் - அடைக் கலமாக, புக-புகுதற்கு, நான்-அடியேன், உண்டு-உண்டு, கதி-மோட்சத்தை, சேர்வதற்கு-அடைதற்கு, என்-அடியேன், நெஞ்சம்-மனமானது, தீ-நெருப் பினால்,உண்டு-காய்ச்சப்பெற்று, இருந்த-இருந்த, மெழுகு-மெழுகு, அலவோ-அல்லவோ எ-று.

(வி-ரை) 'வாயே வாழ்த்துகண்டாய்' என்றபடி 'வாழ்த்த வாயுண்டு' என்றார். இறைவனை வாழ்த்தின் இறைவன் அருள்பெறலாம். இறைவனி னின்றும் அபின்னமாயுள்ள திருவருளை தாயாதலின் 'மௌனவருட்டா யுண்டு' என்றார். உயிர்கள் எல்லாம் இறைவனுக்குச் சேய்களாதலின்

'சேயென்ன வென்னைப் புரக்க' என்றார். இறைவன் நித்தியானந்தமயன் ஆதலின் 'சதானந்தமா நீயுண்டு' என்றார். ஆன்மாக்களெல்லாம் இறைவனையே சரண்புக்கு உய்யவேண்டுமாதலின் 'நின்னைச் சரண்புக நானுண்டு' என்றார். இறைவனை அன்பாலன்றி உள்ளம் உருகினார்க்கு முத்திக்கதி உண்டாதலின் 'நெஞ்சமையா நீயுண்டிருந்த மெழுகலவோ கதி சேர்வதற்கே' என்றார். ஏ-ஈற்றசை. 21

நான் எத்தொண்டுசெய்து உய்வேனெனல்

கல்லா லெறிந்துங் கைவில்லா
லடித்தும் கனிமதுரச்
சொல்லாற் றுதித்துநற் பச்சிலை
தூவியுந் தொண்டரின
மெல்லாம் பிழைத்தனர் அன்பற்ற
நானினி யேதுசெய்வேன்
கொல்லா விரதியர் நேர்நின்ற
முக்கட் குருமணியே.

(ப-ரை) கொல்லா - கொல்லாமையையுடைய, விரதியர் - விரதத்தையுடையவர்களாகிய சைவர்கள், நேர் - (முன்பே) பிரத்தியட்சமாக, நின்ற - எழுந்தருளியிருக்கின்ற, மு-மூன்று, கண் - கண்களையுடைய, குரு - அழகிய நிறமுடைய, மணியே - மாணிக்கமே!, கல்லால் - கற்களினால், எறிந்தும்-வீசி அடித்தும், கை - கையிலுள்ள, வில்லால் - வில்லினால், அடித்தும்-அடித்தும், கனி-முக்கனிகள் போன்ற, மதுரம்-இன்சுவைபொருந்திய, சொல்லால்-சொற்களினால், துதித்தும் - போற்றிசெய்தும் (துதித்தும்), நல் - நல்ல (பரிசுத்தமான), பச்சு - பசுமையாகிய, இலை - இலைகளால், தூவியும் - அர்ச்சித்தும், தொண்டர்-அடியார்களின், இனம்-கூட்டம், எல்லாம்-எல்லாரும், பிழைத்தனர்-உஜ்ஜீவித்தார்கள், அன்பு-அன்பு, அற்ற - இல்லாத, நான் - அடியேன், இனி-இனிமேல், ஏது-என்ன, செய்வேன் - தொண்டைச்செய்து பிழைப்பவனாவேன் எ-று.

(வி-ரை) சாக்கியநாயனார் இறைவன் மாட்டு அன்பால் கல்லையே மலராக எண்ணி இட்டுக் கதியடைந்தவராதலின் 'கல்லா லெறிந்தும்' என்றார். அர்ச்சுனன் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து அத்தவத்திற்கு இடையூறாகவந்த சிவபெருமானாகிய வேடனை வில்லாலடித்துப் பேறுபெற்றானாதலின் 'வில்லா லடித்தும்' என்றார். சமயகுரவர்கள் நால்வரும் செந்தமிழ்ப் பாமாலையை இறைவற்குச் சூட்டிக் கதியெய்தினராதலின் 'கனிமதுரச்சொல்லாற் றுதித்தும்' என்றார். 'தமிழ்' என்ற சொல்லே இனிமையுடையது என்னும் பொருள் தரலினாலும், தமிழே இழுமெனு மொலியுடன் மதுரமுடைமையின் 'கனி மதுரச் சொல்லால்' என்றார். **வியாக்கிரமபாதர், ஔவைப் பிராட்டியார்** முதலியவர் பச்சிலை இட்டுப் பாகதிபெற்றவர்



ஆதலின் 'நற்பச்சிலை தூவியும்' என்றார். இதனானன்றோ **பெரியாரும்**, "இறைவற்கா மொரு பச்சிலை" என்றருளிச்செய்தார். இன்னும், "ஒருகரத்து நீராலும் மலராலும் நெஞ்சுருகப் பண்ணலாமே" என்ற **புலவர்** வாக்கும் கணிக்கற்பாலதாம். கொல்லாமை சைவசமயத்திற்கே சிறந்த தாகலின் சைவர்களை 'கொல்லா விரதியர்' என்றார். இறைவன் செம்மணிமலை போன்ற தோற்றத்தனாதலின் 'முக்கட் குருமணியே' என்றார். 22

நீ உண்மையில் நிற்பின் சித்திகைக் கூடுமெனல்

முன்னிலைச் சுட்டொழி நெஞ்சேநின்
போத முளைக்கிலையோ
பின்னிலைச் சன்மம் பிறக்குங்கண்
டாய்இந்தப் பேய்த்தனமேன்
தன்னிலை யேநில்லு தானே
தனிச்சச்சி தானந்தமா
நன்னிலை வாய்க்கும்என் சித்தியுங்
காணும் நமதல்லவே.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, முன்னிலை - முன்னிலையாகிய, சுட்டு - சுட்டினை, ஒழி-நீக்குவாயாக, நின்-உன்னுடைய, போதம்-அறிவானது, முளைக்கில் - தலையெடுப்பின், ஐயோ - ஐயோ, பின்னிலை-பிறகே, சன்மம் - பிறப்பு, பிறக்கும்-தோன்றும், இந்த - இப்படிப்பட்ட, பேய்த்தனம் - பேய்த்தன்மை, என்-எதற்கு, தன்-தன்னுடைய, நிலையே-உண்மை நிலையிலேயே, நில்-நிற்பாயாக, தானே-வலிய, தனி-ஒப்பற்ற, சச்சிதானந்தம்-உண்மை அறிவு ஆனந்தம் ஆகிய, நல்-நல்ல, நிலை-நிலைமை (கதி), வாய்க்கும்-எய்தும், எண் - எட்டு, சித்தியும்-சித்திகளும், காணும்-உண்டாகும், நமது - (முன்னிலையிற் காணும் பொருள்களெல்லாம்) நம்முடையது, அல்லவே-அல்லவாகும் எ-று.

(வி-ரை) நான் என்கின்ற தற்போதம் தடித்து நிற்றலும், பகிர்முகமுற்று பிரபஞ்சமாதியவற்றை முன்னிலையிற் கண்டு அதன் இடத்தே இச்சை வைக்கின் பிறப்புண்டாம் ஆதலின், 'முன்னிலைச் சுட்டொழி நெஞ்சே' என்றார். இதனை, "அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்ற **திருக்குறளாலும்** அறியலாம். 'நின்போதம்' என்றது பசுபோதத்தை. 'முளைத்தல்' என்பது அதிகரித்துத் தலைப்படுதல். 'ஐயோ' இது இரக்கப்பொருள் குறிக்கவந்த இடைச்சொல். முன்னே காணும் பொருள்கள்மேல் பற்றுவைத்தலும் நான் என்று அகங்கரித்து நிற்றலும் அலைக்குந் தன்மையதாதலால் 'பேய்த்தனம்' என்றார். 'தன்னிலை' என்றது தனது உண்மை நிலையை. அதாவது ஸ்படிகம்போல மாசற்று நிற்கு நிலையை. 'சச்சிதானந்தமா நன்னிலை' என்றது உண்மை அறிவு ஆனந்தமாகிய நிலையை, இதுவே பதித்தன்மைபதியும் நிலையாம். மாசற்ற பளிங்குபோல மனம் மாயையிற் பற்றாது நின்றால் ஈசுரத்தன்மை பிரதிபலிக்

கும் என்பதறிக. 'எண்சித்தி' என்றது அட்டமாசித்திகளை. 'நமது அல்லவே' என்றது பற்றற்ற நிலையை உணர்த்திற்று. இச்செய்யுளின் கருத்தை,

"அதுவிது வென்றே அவச்சுட் டொழிந்தால்
பொதுவதனில் ஆடியருள் புண்யன்—புதுமலர்த்தாள்
கிட்டலாங் கிட்டலாம் கேட்பாய் மடநெஞ்சே
எட்டலா மேமுத்தி யிங்கு"

என்ற **சித்தாந்த சிந்தாமணிச்** செய்யுளாலும் அறியலாம். ஏ - தேற்றப் பொருளில் வந்தது. 23

நான் வாயால் எதையும் மொழிந்தேனேயல்லாமல்
உண்மை நிட்டையி லில்லை யெனல்

சொல்லான் மௌன மௌனமென்
றேசொல்லிச் சொல்லிக்கொண்ட
தல்லான் மனமறப் பூரண
நிட்டையி லாழ்ந்ததுண்டோ
கல்லாத மூட னினியென்செய்
வேன்சகற் காரணமாம்
வல்லாள னான மௌன
சதானந்த மாகடலே.

(ப-ரை) சகத்-உலகத்திற்கு, காரணம்-காரணம், ஆம்-ஆகிய, வல்லாளன்-வல்லவனாகிய, மௌன-மௌனத்தினால், சதானந்தம்-நித்தியானந்தமாகிய, மா-பெரிய, கடலே-கடலே! சொல்லால்-சொல்லினால், மவுனம்-நான்மவுனமாக இருக்கின்றேன், மவுனம்-நான் மவுனமாக இருக்கின்றேன், என்றே-என்று, சொல்லி-பேசி, சொல்லிக்கொண்டது-பேசிக்கொண்டதே, அல்லால்-அல்லாமல், மனம்-மனம், அற-ஒடுங்க, பூரணம் - பரிபூரண, நிட்டையில் - நிட்டையினில், ஆழ்ந்தது-முழுகியது, உண்டோ - உண்டோ, கல்லாத - நிட்டைக்கு உரிய ஞானநூற்களைக் கல்லாத, மூடன்-மூடனாகிய அடியேன், இனி - இனிமேல், என்-எதனை, செய்வேன்-செய்வேன் எ-று

(வி-ரை) மௌனம் என்பது அறிவைப் பகிர்முகப்படுத்தாது அந்தர்முகப்படுத்தி இறைவனையே சதா சிந்தித்துத் தொழிலற்று ஆநந்தமுற்றிருக்கும் நிலை. அறிவை அந்தர்முகப் படுத்தாது பகிர்முகப்படுத்து உலக விவகாரங்களிற் புக்குழன்றுகொண்டு மௌனம் மௌனம் என்கின்றேன் மனமறப் பூரணநிட்டையில் இருந்ததுண்டோ என்பார். 'சொல்லான் மௌன மௌனமென்றே சொல்லிச் சொல்லிக்கொண்ட தல்லான் மனமறப் பூரண நிட்டையி லாழ்ந்த துண்டோ' என்கின்றார். மனமறப் பூரண நிட்டை என்றது - மனம் இந்திரிய வயமான சேட்டைகளுக்கு ஊடங்காது விருப்பு வெறுப்பற்று அகங்கார மமகாரங்களற்றுச் சதா இறைவனையே சிந்தித்து ஆனந்தம் உற்றிருக்கும் நிலை. இறைவன் கல்லாலின்கீழ் தட்சணாமூர்த்தி



யாக' மௌனயோகியாய் நின்றருளியதனாலும், இறைவன் ஆனந்தமயனானவன் ஆதலினாலும், இறைவன் வரம்பி லின்பமுடையவன் ஆதலினாலும், உலக காரணனாதலினாலும், 'சகற் காரணமாம் வல்லாளனான மௌனசதானந்த மாகடலே' என்று இறைவனை விளித்தார். 24

கல்லால நிலைநின்ற நின்னைக்காணில் எல்லாங் கூடுமெனல்

ஆரண மாகம மெல்லா
முரைத்த வருண்மௌன
காரண மூலங்கல் லாலடிக்
கேயுண்டு காணப்பெற்றால்
பாரணங் கோடு சுழநெஞ்ச
மாகிய பாதரச
மாரண மாய்விடும் எண்சித்தி
முத்தியும் வாய்த்திடுமே.

(ப-ரை) ஆரணம்-வேதங்களும், ஆகமம்-ஆகமங்களும் ஆகிய, எல்லாம்-எல்லா ஞானக்கலைகளையும், உரைத்த - திருவாய்மலர்ந்தருளிய, அருள்-கிருபையை உடைய, மௌனம்-மவுன நிலையைக்கொண்ட, காரணம்-எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிய, மூலம் - முதற்பொருள், கல்-கல், ஆல் - ஆலவிருக்ஷத்தின், அடிக்கே-கீழே, உண்டு-இருக்கின்றது (அந்தப்பொருளை), காண-காண, பெற்றால்-கிடைத்தால், பார்-நிலத்தாலும், அணங்கு-பெண்களாலும், சுழல்-சுழல்கின்ற, நெஞ்சம் - மனம், ஆகிய - ஆகிய, பாதரசம் - பாதரசமானது, மாரணம் - சாதலை, ஆய்விடும் - பெற்றுவிடும், எண்-எட்டாகிய, சித்தி - சித்திகளும், முத்தியும்-மோட்சமும், வாய்ந்திடும்-கிடைக்கப்பெறும் எ-று.

(வி-ரை) 'ஆரணமாகமம்' இது உம்மைத்தொகை. ஆரணமும் ஆகமமும் எனவிரியும் எண்ணும்மை தொக்கது. இறைவனே வேதாகமங்களை ஆன்மாக்களின் பொருட்டுக் கருணையினால் அருளிச் செய்தனன். இதனை, 'வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்' என்ற **திருமூலர்** திருவாக்காலும் அறியலாம். 'மூலம்' ஆதிப்பொருள் என்பது பொருள் இறைவன் எல்லாவற்றிற்கும் ஆதிகாரணன் ஆதலினாலும், மௌனசொரூபியாகக் கல்லாலினடியில் வீற்றிருந்தருளினான் ஆதலினாலும் 'மௌன காரணமூலங் கல்லாலடிக்கேயுண்டு' என்றார். 'பாரணங்கு' என்பதற்கு (பார்-பூமி, அணங்கு-துன்பம்.) பிரபஞ்சத்து உண்டாகும் மாயைத் துயர் எனப்பொருள் கொள்ளினும் நன்றே. பாதரசம் கட்டிப்படாது எதிலும் ஒட்டாது நிலையுறாது உழன்றுகொண்டு தளும்பிக்கொண்டிருக்கும் ஆதலினால் 'பாரணங்கோடு சுழனெஞ்சமாகிய பாதரசம்' என்றார். தட்சணாமூர்த்தியைத் தரிசித்தோர் மனம் ஒருநிலைப்பட்டுச் சிவானந்தப்பேற்றினை யடைந்து சித்திமுத்தி எய்தும் என்பார். 'அருண்மௌனகாரணங் ... ... ... ... சித்திமுத்தியும் வாய்த்திடுமே' என்றார். ரசத்தைக் கட்டிவிட்டால் எல்லா லோகங்களையும் வேதிக்கலாமாகையால், இந்த இரசவாதியர் மதங்கொண்டே. 'சுழனெஞ்ச

மாகிய பாதரசம் மாரணமாய்விடும் என் சித்திமுத்தியும் வாய்த்திடுமே' என்றார். ஏ - ஈற்றசை. 25

நான் யோகநிஷ்டை அறியேனெனல்

சித்த மவுனி வடபான்
மவுனிநந் தீபகுண்ட
சுத்த மவுனி எனுமூவ
ருக்குந் தொழும்புசெய்து
சுத்த மவுன முதன்மூன்று
மௌனமுந் தான்படைத்தேன்
நித்த மவுனமல் லாலறி
யேன்மற்றை நிட்டைகளே.

(ப-ரை) சித்த மவுனி - சித்த மவுனி, வடபால் மவுனி-வடபால் மவுனி, நம்-நமது, தீபகுண்ட - தீபகுண்டத்து, சுத்த மவுனி - சுத்த மவுனி, எனும்-என்று சொல்லப்படுகிற, மூவருக்கும் - மூன்று பேர்கட்கும், தொழும்பு-தொண்டு, செய்து-இயற்றி, சுத்த மவுனம்-சுத்தமாகிய மவுனம், முதல்-முதலாகிய,மூன்று-மூன்று, மவுனமும்-மவுனங்களையும்,தான்-தான், படைத்தேன்-பெற்றேன், நித்தம்-எக்காலத்தும், மவுனம் - மோனம், அல்லால்-அல்லாமல், மற்றை-வேறாகிய, நிட்டைகள்-யோகநிஷ்டைகளினை, நான்-நான், அறியேன்-அறியேன் எ-று.

(வி-ரை) 'சித்த மவுனி' என்றது தன்பால் வந்து அருள்செய்த மௌன குருமூர்த்தியை. 'வடபால் மவுனி' என்றது தட்சணாமூர்த்தியை. 'நம் தீபகுண்ட சுத்த மவுனி' என்றது மண்டல குண்ட வேதிகையிட்டுத் தனக்கு மந்திரோபதேசஞ் செய்தருளிய தீட்சாகுருவை. 'சுத்த மவுனமுதல் மூன்று மவுனமும்' என்றது வாக்கு மவுனம், மன மவுனம், காய மவுனம் என்ற மூன்று மவுனங்களை. 'நித்த மவுனம்' என்றது சதா மவுனமாக இருத்தலை. 'நிட்டை' யோகநிட்டையை. 'மூவருக்கும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. ஏ-ஈற்றசை. 26

நின் திருவருள் வாய்க்கப்பெற்ற வெனக்குக் குறைவில்லை யெனல்

கண்டே னினதருள் அவ்வரு
ளாய்நின்று காண்பதெல்லா
முண்டே அதுவு நினதாக்கி
னேன்உவட் டாதவின்ப
மொண்டே யருந்தி யிளைப்பாறி
னேன்நல்ல முத்திபெற்றுக்
கொண்டேன் பராபர மேஎனக்
கேதுங் குறைவில்லையே.



(ப-ரை) நினது-தேவரீருடைய, அருள்-திருவருளினை, கண்டேன்-தரிசித்துக்கொண்டேன், அவ் - அதனுடைய, அருளாய் - அருள்மயமாய், நின்று-இருந்து, காண்பது - காணுவது, எல்லாம்-யாவும், உண்டே-உளதே, அதுவும் - அவ்வண்ணங் காணுந்தன்மையும், நினது - தேவரீரதுவாக, ஆக்கினேன்-ஆக்கிவிட்டேன் (அர்ப்பணஞ் செய்தேன்), உவட்டாத தெவிட்டாத, இன்பம்-ஆனந்தத்தை, மொண்டு-முகந்து, அருந்தி-உண்டு, இளைப்பு - அடியேனுக்குண்டாகிய இளைப்பை, ஆறினேன் - தீர்த்துக்கொண்டேன், நல்ல-மெய்மையான, முத்தி-மோட்சத்தினை, பெற்றுக்கொண்டேன்-அடைந்தேன், பராபரமே-பராபரப்பொருளே!, எனக்கு-அடியேனுக்கு, இனி - இனிமேல், ஏதும்-சிறிதும், குறைவு-குறைவு, இல்லை-இல்லை எ-று.

(வி-ரை) 'கண்டேன் நினது அருள்' என்றது இறைவன் அருட்டிருமேனியை. இனி அந்தர்முகத்து இறைவனைக் காணுங் காட்சியை எனினுமாம். 'அருளாய் நின்று' என்றது அருளொடு கலந்து அருள்வயமாய் நிற்றலை. அத்துவிதமாக நிற்றலுமாம். 'காண்ப தெல்லா முண்டே யதுவு நினதாக்கினேன்' என்றது தற்போதமற்று காண்பனவற்றையெல்லாஞ் சிவமாகக் காணுதலையும், செய்வனவற்றையெல்லாம் சிவச்செயலாகச் செய்தலையும். 'இளைப்பாறினேன்' என்றது பிரபஞ்ச மாயை பற்றிவரும் துன்பங்களினின்று நீங்கி இன்புறுதலை. 'நல்லமுத்தி' என்றது சீவன் முத்தியை. சீவன் முத்தியைத் தவிர்த்துப் பெறத்தகுந்த பேறில்லையாதலின் 'பரமே யெனக் கேதுங் குறைவில்லையே' என்றார். ஏ-ஈற்றசை. 27

யோகரகசிய மறிந்தேன் சந்திரமண்டலத்தமுதம் பருகுவேனெனல்

மேற்கொண்ட வாயுவுங் கீழ்ப்பட
மூலத்து வெந்தழலைச்
சூற்கொண்ட மேக மெனவூமை
நின்று சொரிவதையென்
றற்கண்ட தன்றுமௌ னோப
தேசிய ளிக்கையினிப்
பாற்கண்டு கொண்டனன் மேலே
யமிர்தம் பருகுவனே.

(ப-ரை) மேல் - மேலே, கொண்ட - நோக்கிச் செல்லுகின்ற, வாயுவும்-காற்றும், கீழ்ப்பட-கீழாக, மூலத்து - மூலாதாரத்துள்ள, வெம் - வெவ்விய, தழலை-அக்கினியை, சூல்-கருப்பம், கொண்ட - பெற்ற, மேகம்-மேகம், என-என்று சொல்லும்படி, ஊமை - மவுன மந்திரம், நின்று - நிலையுற்றிருந்து, சொரிவதை-பொழிதலை, என்றல்-அடியேனல், கண்டது - தெரிந்துகொண்டது, அன்று-அல்ல, மௌன-மௌன, உபதேசி - குரு, அளிக்கையின்-அருளிச் செய்ததனால், இ-இந்த, பால் - இடத்தில், கண்டு-தெரிந்து, கொண்ட

னன்-கொண்டேன், மேலே-இனிமேல், அமிர்தம்-(சந்திரமண்டலத்தினுள்ள) அமிர்தத்தினை, பருகுவன்-உண்பேன் எ-று.

(வி-ரை) 'மூலத்து வெந்தழல்' என்றது மூலாதாரத்து அக்கினியை. 'ஊமை' என்றது அசபையை. இது ஒரு மகாமந்திரம், இதனை முறைப்படி ஞானாசிரியர்பாற் கேட்டுணரத்தக்கது. இது வைகரி வாக்கால் விளக்கிக் கூறத்தக்கதன்று. 'அமிர்தம்' என்றது சந்திரமண்டலத்தினின்றிழியும் அமிர்தத்தை. இதன் விரிவெல்லாம் யோகநூற்களை ஐயந்திரிபறப் பயின்று அநுபூதிபெற்ற பெரியார் வாய்க் கேட்டுணரற்பாலது. எ - ஈற்றசை. 28

இறைவனே! என் மனம் நிலையற் றலைகின்ற தெனல்

சொல்லாற் றொடர்பொரு ளாற்றொட
ராப்பரஞ் சோதிநின்னை
வல்லாளர் கண்ட வழிகண்டி
லேன்சக மார்க்கத்திலுஞ்
செல்லாதென் சிந்தை நடுவே
கிடந்து திகைத்துவிம்மி
யல்லான தும்பக லானதும்
வாய்விட் டரற்றுவனே.

(ப-ரை) சொல்லால்-வார்த்தையாலும், தொடர் - சொற்கள்பற்றி விளையும், பொருளால் - பொருள்களினாலும், தொடரா - பின்பற்றிட முடியாத, பரஞ்சோதி - பரஞ்சோதியே!, நின்னை - தேவரீரை, வல்லாளர் - அறிவால், வன்மைபெற்றவர்கள், கண்ட - தரிசித்த, வழி - மார்க்கத்தை, கண்டிலேன்-அடியேன் அறிந்துகொள்ளவில்லை, சகம் - பிரபஞ்சத்தின், மார்க்கத்திலும்-வழியிலும், என் - அடியேன், சிந்தை - மனமானது, செல்லாது - விரும்பிப் புகாது, நடுவே-இரண்டற்கும் மத்தியிலே, கிடந்து-தங்கி, திகைத்து-மயங்கி, விம்மி-விம்மி, அல்லானதும் - இருட்காலத்திலும், பகலானதும்-பகற்காலத்திலும், வாய்விட்டு வாய் திறந்து, அரற்றுவன்-அலறுவேன் எ-று.

(வி-ரை) சொல்லும் பொருளும் வைகரி சம்பந்தமுடைமையின் இறைவனைத் தொடர முடியாதென்பார், 'சொல்லாற் றொடர் பொருளாற் றொடராப் பரஞ்சோதி' என்றார். இறைவன் மேலான ஒளிமயன். ஒளிக்கும் ஒளியாக இருப்பவன் ஆதலினால் 'பரஞ்சோதி' என்றார். 'வல்லாளர்' என்றது அறிவின் வன்மை யுடையார், ஞானவன்மையுடையார் என்ற பொருளது. 'கண்டவழி' என்றது இறைவனைக் கண்டடைந்த வழியை. திருவருட் சகாயந் தனக்கின்மையின் இறைவனை அடைய வல்லாளர் கண்ட வழியைக் கண்டிலேன் என்பார், 'நின்னை வல்லாளர் கண்டவழி கண்டிலேன்' என்றார். மனம் யாதானும் ஒன்றைப்பற்றியே நிற்கும் இயல்புடையது ஆதலின் பிரபஞ்சமார்க்கத்துப்பற்றி நிற்கின்றதோ என்னில் பிரபஞ்சமே முற்றும் பொய் எனக் கண்டமையால் அதிலும் பற்றி நின்றிற்றிலது



என்பார், 'சகமார்க்கத்திலுஞ் செல்லாது என்சிந்தை' என்றார். இறைவனைக் கண்டடையும் வழியையும் பற்றாது பிரபஞ்சமார்க்கத்தையும் பற்றாது, இரண்டுக்கும் இடையே நின்று தவிக்கின்றேன் என்பார், 'நடுவே கிடந்து திகைத்து விம்மி அல்லானதும் பகலானதும் வாய்விட் டரற்றுவனே' என்றார். அரற்றல் - பிரலாபித்தழுதல். எ-ஈற்றசை. 29

தட்சணாமூர்த்தி தன் தன்மையில் ஐயங்கொளல்

அறியாத வென்னை யறிவாயு
நீயென் றகம்புறமும்
பிறியா தறிவித்த பேரறி
வாஞ்சுத்தப் பேரொளியோ
குறியாத வானந்தக் கோவோ
அமுதருள் குண்டலியோ
சிறியேன் படுந் துயர் கண்டுகல்
லானிழல் சேர்ந்ததுவே.

(ப-ரை) சிறியேன்-அற்பனாகிய நான், படும்-அநுபவிக்கும், துயர்-துன்பத்தை, கண்டு-பார்த்து, கல்-கல், ஆல் - ஆலமரத்தின், நிழல் - நிழலை, சேர்ந்தது-எழுந்தருளியது, அறியாத - யாவராலும் அறியக்கூடாத, என்னை-அடியேனை, அறிவாயும் - அறிகின்றவனும், நீ - நீயே, என்று - என்று, அகம்-உள்ளும், புறமும் - வெளியும், பிறியாது - நீங்காதிருந்து, அறிவித்த - தெரிவித்த, பேர் - பெரிய, அறிவாம் - அறிவாகிய, சுத்த - சுத்த, பேர் - பெரிய, ஒளியோ-அருட்பெருஞ் சோதியோ, குறியாத-எண்ணக்கூடாத, ஆனந்தம்-இன்ப, கோவோ-தலைவனோ, அமுது - அருள் அமிர்தத்தை, அருள்-அருளுகின்ற, குண்டலியோ-குண்டலிசத்தியோ! எ-று.

(வி-ரை) 'அறியாத வென்னை' என்றது அவிச்சையில் முழுகிக்கிடந்த என்னை என்றுரைப்பாரும் உண்டு. சற்குருவாக வந்த மௌனதேசிகர் அனுக்கிரகித்ததும் திருவருட் சத்திபதிய இறைவன் தட்சணாமூர்த்தியாக திருக்காட்சி கொடுத்தருளியதனால் அத்தட்சணாமூர்த்தி சர்வ வியாபகனாகிய 'பேரறிவாஞ் சுத்தப் பேரொளியோ?' எனவும், தனக்குக் குருமூர்த்தமாக வந்தருளிய மௌனதேசிகரோ என்பார் 'குறியாத வானந்தக் கோவோ?' எனவும், திருவருட்சத்தியோ என்பார். 'அமுதருள் குண்டலியோ' எனவுங் கூறினார். பேரொளியோ, கோவோ, குண்டலியோ என்பவற்றின் ஈற்று ஓகாரங்கள் ஐயப்பொருளில் வந்தவை. எ ஈற்றசை. 30

இறைவனே! தேவரீர் எங்குமிருக்க வணங்கவிலையால் மேற்கதியடைவ தெங்ஙனமெனல்

எல்லா முதவு முனையொன் றிற்
பாவனை யேனுஞ்செய்து
புல்லா யினுமொரு பச்சிலை
யாயினும் போட்டிறைஞ்சி

நில்லேன் நல் யோக நெறியுஞ்செ
யேன் அரு ணீதியொன் றுங்
கல்லேன்எவ் வாறு பரமே
பரகதி காண்பதுவே.

(ப-ரை) பரமே - பரம்பொருளே!, எல்லாம்-எல்லாவற்றையும், உதவும்-கொடுக்கும், உனை-தேவரீரை, ஒன்றில்-விக்கிரகம் ஒன்றில், பாவனையேனும்-பாவனையாகிலும், செய்து-பண்ணி, புல்-புல்லை, ஆயினும்-ஆகிலும், ஒரு-ஒரு, பச்சு - பசுமையாகிய, இலை - இலையை, ஆயினும் - ஆகிலும், போட்டு - தூவி, இறைஞ்சி-வணங்கி, நில்லேன்-நின்றேனில்லை, நல்-நல்ல, யோகம் - யோகத்தின், நெறியும்-மார்க்கத்தையும், செய்யேன் - அனுட்டியேன், அருள் - திருவருட்சம்பந்தமான, நீதி - தருமநூல், ஒன்றும் - ஒன்றையாகிலும், கல்லேன்-கற்றிலேன் (இத்தகைய அடியேன்), எ-எந்த, வாறு-விதம், பரகதி-முத்தியை, காண்பது-கண்டுகொள்வது எ-று.

(வி-ரை) இறைவன் "வேண்டிய வேண்டியாங் களிக்கு முதல்வன்" ஆதலின் 'எல்லா முதவும் உனை' என்றார். ஒன்றில் - ஏதானும் ஒன்றில் என்பது பொருள். அதாவது, விக்கிரகத்தில் அல்லது சிலையில் என்றபடி. இறைவன் "பத்தர் அத்தத்தில் அறுக்குக்கு முத்திப்பதங் கொடுக்கும் பித்தர்' எனவும், "பச்சிலை யிடினும் பத்தர் கிரங்கி மெச்சிச் சிவபத வீடருள்பவனை" எனவும் கூறியதனால் 'ஒன்றிற் பாவனை யேனுஞ் செய்து புல்லாயினு மொரு பச்சிலை யாயினும் போட் டிறைஞ்சி நில்லேன்' என்றார். சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கில் சரியை கிரியைகளை "ஒன்றிற் ... ... ... ... நில்லேன்" என்பதாற் கூறினர். 'யோக நெறியுஞ் செயேன்' என்பதால் யோகத்தைக் கூறினர். 'அருணீதியுங் கல்லேன்' என்பதால் ஞானத்தைக் கூறினர். 'பரகதி' என்றது முத்திப்பேற்றை. 'உதவும் உனை' என்றதில் 'உனை' என்றது 'உன்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். ஏ-ஈற்றசை. 31

மனத்திற் குடிகொண்டவனே! நான் கொண்டது மாயா
காரியமே எனல்

ஒன்றுந் தெரிந்திட வில்லைஎன்
னுள்ளத் தொருவஎனக்கு
என்றுந் தெரிந்த விவைஅவை
கேள்இர வும்பகலும்
குன்றுங் குழியும் வனமும்
மலையுங் குரைகடலும்
மன்றும் மனையும் மனமாதி
தத்துவ மாயையுமே.



(ப-ரை) என்-அடியேனுடைய, உள்ளத்து-மனத்தினிடத்தே விளங்கும், ஒருவ-ஒப்பற்றவனே!, எனக்கு-அடியேனுக்கு, ஒன்றும்-(மாயைக்கு அன்னியமான) ஒருபொருளும், தெரிந்திட - தோன்ற, இல்லை - இல்லை, என்றும்-எக்காலத்தும், தெரிந்த-(அடியேனுக்கு) தெரிந்திருப்பவை, இவை-(அடியிற் கூறிய) இவைகளேயாகும், அவை - அவைகளை, கேள் - கேட்டருள்வாயாக, இரவும்-இராக்காலமும், பகலும்-பகற்காலமும், குன்றும்-சிறுமலையும், குழியும் - குழிகளும், வனமும் - காடும், மலையும் - பெரிய மலையும், குரை-சப்திக்கின்ற, கடலும்-சமுத்திரமும், மன்றும்-அம்பலமும், மனையும்-வீடும், மனம்-மனம், ஆதி-முதலிய, தத்துவம்-தத்துவக்கூட்டங்களும் ஆகிய, மாயையுமே-மாயையின் காரியங்களேயாம் எ-று.

(வி-ரை) என் மனம் அந்தர் முகப்பட்டு உன்னையும் உன் தத்துவங்களையும் அறியாது இருக்கின்றேன் என்பார். 'ஒன்றுந் தெரிந்திடவில்லை யென்னுள்ளத் தொருவ' என்றார். நான் என்றும் பகிர்முகத்தே யுலாவி யுழல்கின்றே னாதலின் மாயா காரியப் பொருள்களையே காண்கின்றே னென்பார் 'எனக் கென்றுந் தெரிந்தவை இவை அவை கேள் ... ... ... ... மாயையுமே' என்றார். இதில் வந்த உம்மைகள் எல்லாம் எண்ணுப் பொருளன. 'குழி' என்பதற்குக் குளம்எனப் பொருள் கோடலும் ஆம். மனமாதி தத்துவம்' என்றது தேகதத்துவங்களை. ஏ-ஈற்றசை. 32

மோகாந்தகாரத்தில் மூழ்கிக் கிடக்குமென்னை முத்திக்கரை சேரெனல்

பழுதுண்டு பாவையர் மோக
விகாரப் பரவையிடை
விழுகின்ற பாவிக்குந் தன்றாட்
புணையை வியந்தளித்தான்
தொழுகின்ற வன்ப ருளங்களி
கூரத் துலங்குமன்று
ளெழுகின்ற வானந்தக் கூத்தன்என்
கண்மணி என்னப்பனே.

(ப-ரை) தொழுகின்ற - வணங்குகின்ற, அன்பர் - அடியார்களுடைய, உள்ளம்-மனமானது, களி - மகிழ்ச்சி, கூர - மிக, துலங்கும் - விளங்குகின்ற, மன்றுள் - சபையின்கண்ணே, எழுகின்ற - நடிக்கின்ற, ஆனந்தம்-ஆனந்தம், கூத்தன்-கூத்தன், என்-அடியேனின், கண் - கண்ணினுள் உள்ள, மணியை-மணியை ஒத்தவன், என்-அடியேனின், அப்பன்-தந்தை (ஆகிய முதல்வன்), பழுது-துன்பம், உண்டு-அடைந்து, பாவையர்-பெண்களினுடைய, மோகம்-காம, விகாரம்-விகாரம் என்னும், பரவையிடை-சமுத்திரத்தில், விழுகின்ற-விழுந்து மூழ்குகின்ற, பாவிக்கும்-பாவியாகிய அடியேனுக்கும், தன்-தனது, தாள்-திருவடியாகிய, புணையை-தெப்பத்தை, வியந்து-அதிசயமுற்று, அளித்தான்-தந்தருளினன் எ-று.

(வி-ரை) 'பழுது' என்பதற்குக் குறைவு என்பது பொருள்; ஈண்டு துன்பமாகிய குறையை உணர்த்திற்று. 'பாவையர்' பெண்கள். இது பாவை போல்பவர்களை உணர்த்ினமையால் உவமைஆகுபெயர். 'மோகவிகாரம்' இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மோகமாகிய விகாரம் என விரியும். விகாரத்தை உண்டுபண்ணுவதை விகாரம் என்றார். மோக விகாரத்தைக் கடலுக்கு உவமித்தார் ஆழம், நீளம், பரப்பு, அகலம், கரைசேரற் கருமை, அழிவு தருதல் முதலியவற்றால் உவமை ஆயிற்று. 'பரவை' சமுத்திரம், இது பரந்து இருப்பது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர், மோகவிகாரத்தைக் கடற்கு உவமை கூறியதற்கேற்ப இறைவன் திருவடியை 'புணை' என்றார். "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்ற திருக்குறள் இங்கு அடியொற்றிக் காணத்தக்கது. 'உளம்' இது 'உள்ளம்' என்பதன் தொகுத்தல் விகாரம். 'மன்று' என்றது பொன்னம்பலத்தை. ஏ - ஈற்றசை. 33

இவன் களங்கமுடையவனென்று கொண்டோ இரக்கங் காட்டாமை

அழுக்கார்ந்த நெஞ்சுடை யேனுக்கை
யா நின் னருள் வழங்கி
னிழுக்காகு மென்றெண்ணி யோவிரங்
காத வியல்புகண்டாய்
முழுக்காத லாகி விழி நீர்
பெருக்கிய முத்தரெனுங்
குழுக்காண நின்று நடமாடுந்
தில்லைக் கொழுஞ்சுடரே.

(ப-ரை) முழு-பூரணமாகிய, காதல்-அன்புள்ளவர்கள், ஆகி-ஆகி, விழி-கண்களின், நீர்-நீரை (ஆனந்தபாஷ்பத்தை), பெருக்கிய - பெருகச்செய்த, முத்தர்-ஜீவன்முத்தர், எனும் - என்கின்ற, குழு-கூட்டம், காண - தரிசிக்க, நின்று-எழுந்தருளிநின்று, நடம் - திருநடனத்தை, ஆடும் - ஆடியருள்கின்ற, தில்லை - சிதம்பரத்தில் கோயில்கொண்டருளி யிருக்கின்ற, கொழும்-கொழுமையாகிய, சுடரே - சுடரே!, ஐயா - ஐயனே!, அழுக்கு - வஞ்சகம், ஆர்ந்த-நிறைந்த, நெஞ்சு-மனத்தை, உடையேனுக்கு-உடையவனாகிய அடியேனுக்கு, நின்-தேவரீரது, அருள் - திருவருளை, வழங்கின் - தந்தருளினால், இழுக்கு-குற்றம், ஆகும்-ஆகும், என்று-என்று, எண்ணியோ-நினைத்தோ, இரங்காத-அடியேனிடத்துத் தேவரீர் இரங்கியருளாத, இயல்பு-தன்மை எ-று.

(வி-ரை) இருவினை ஒப்பு மலபரிபாகம் உற்றவர்க்கே சத்திபாதம் எய்தும் இறைவன் தோன்றி யருள்செய்வன். அஃதிலார்க்கு இறைவன் தோன்றி யருள்செய்வதில்லை இதுகொண்டே 'அழுக்கார்ந்த நெஞ்சுடையேனுக் ... ... ... இரங்காத வியல்பு கண்டாய்' என்றார். இறைவன் மாட்டு முதிர்ந்த அன்புடையார்க்கு விழிநீர் பெருகல் முக்கிய மெய்ப்பாடாதலினால்



'விழிநீர் பெருக்கிய முத்தர்' என்றார். விழிநீர் பெருக்கும் பூரண அன்புடையரே சீவன்முத்தர் ஆதலினால் 'முத்தர்' என்றார். 'காதல்' என்றது இறைவன் மாட்டுவைத்த அன்பை. இறைவன் பதஞ்சலி, வியாக்கிரமபாதர், முதலிய முனிவரர் கண்களிக்க அம்பலத்துத் திருநடனம் புரிதலின் 'முத்தரெனுங் குழுக்காண நின்று நடமாடும்' என்றார் இறைவன் சுடரொளியாய் நின்றருள்வோனாதலின் 'சுடரே' என்றார். 'எண்ணியோ' என்றதன் ஈற்று ஓகாரம் ஐயப்பொருளில் வந்தவினா. 34

பாவையர் மாயத்திற் படுவை இறைவன் அருளைக் கோறவில்லையெனல்

ஆலம் படைத்த விழியார்கண்
மால்கொண் டவர்செயிந்திர
சாலம் படைத்துத் தளர்ந்தனை
யேஎன்றுந் தண்ணருள்கூர்
கோலம் படைத்துக்கல் லாலடிக்
கீழ்வைகுங் கோவுக்கன்பாங்
காலம் படைக்கத் தவம்படை
யாதென்கொல் கன்னெஞ்சமே.

(ப-ரை) கல்-கருங்கல்லை ஒத்த, நெஞ்சமே-மனதே!, ஆலம்-விஷத்தை, படைத்த - பொருந்திய, விழியார்கள் - கண்களையுடைய பெண்களின்மேல், மால்-காமமயக்கம், கொண்டு-கொண்டு, அவர் - அப்பெண்கள், செய்-காட்டுகின்ற, இந்திர-இந்திர, ஜாலம் - ஜாலத்துக்கு, படைத்து - உட்பட்டு, தளர்ந்தனையே-தளர்வடைந்தனையே, என்றும்-எந்நாளும், தண்-குளிர்ச்சி பொருந்திய, அருள் - அருள், கூர் - மிக்க, கோலம் - திருவடிவத்தை, படைத்து - கொண்டு விளங்கி, கல்-கல், ஆல் - ஆலவிருட்சத்தின், அடி - அடியில், கீழ்-கீழே, வைகும் - எழுந்தருளி இருக்கும், கோவுக்கு - தக்ஷிணாமூர்த்தியாகிய இறைவனுக்கு, அன்பு-அன்பு, ஆம்-ஆம்படியான, காலம்-(நல்ல) காலத்தை, படைக்க - பெற, தவம் - தவத்தை, படையாதது - பெறாதது, என் - என்ன காரணம் எ-று.

(வி-ரை) 'ஆலம்' விடம். ஆலம் ஒத்த என்னாது 'ஆலம்படைத்த என்றது விழிகளின் கொடுமையை விளக்க. ஆடவர்க்குக் காமத்தையூட்டி அவர்களை வருத்துதலின் ஆலம் உவமையாயிற்று. 'விழியார்' இது சினைஆகுபெயராய்ப் பெண்களைக் குறித்தது. இக்கருத்தை,

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
னோக்கமிம் மூன்று முடைத்து" எனவும்,

"நஞ்சிலே தோய்ந்த நளின விழிப்பெருமாள்
நெஞ்சிலே யிட்ட நெருப்பு"

எனவும், வருஞ் செய்யுள்கள் நன்கு விளக்கும்.

ஜாலங்களிற் பெரியது இந்த்ர ஜாலமாதலால் 'அவர்செய் இந்த்ரஜாலம்' என்றார். 'கல்லாலடிக்கீழ் வைகுங்கோ' என்றது தக்ஷிணாமூர்த்தியை. இச் செய்யுளில் 'படைத்து' என்றசொல் பன்முறை வந்தது சொற் பின்வரு நிலையணி. 'என்கொல்' இதில் கொல் ஐயப்பொருளில் வந்தது. 'கன்னெஞ்சம்' இது உவமைத்தொகை; கல்போன்ற நெஞ்சம். 35

மாயையில் மயங்கித் தவிப்பது ஊழ்வினையோ வெனல்

சும்மா விருக்கச் சுகஞ்சுக
மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங்
கேட்டும் அறிவின்றியே
பெம்மான் மௌனி மொழியையுந்
தப்பியென் பேதைமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேன் அந்
தோவென் விதிவசமே.

(ப-ரை) அம்மா - அம்மா, சும்மா - மௌனமாக, இருக்க-இருந்தக்கால், சுகம் - சுகம் உண்டாகும், சுகம் - சுகம் உண்டாகும், என்று - என்று, சுருதி. வேதங்கள், எல்லாம்-எல்லாம், நிரந்தரம்-எக்காலத்தும், சொல்லவும்-கூறவும், கேட்டும்-அவ்வுண்மைமொழியைக் கேட்டிருந்தும், அறிவு-அறிவு, இன்றியே-இல்லாமலே, பெம்மான்-எமது பெருமானாகிய, மௌனி-அடியேனது மௌன குருவின், மொழியையும் - உபதேசத்தையும், தப்பி-தவறி, என்-அடியேனி னுடைய, பேதமையால் - அறிவீனத்தினால், வெம் - வெம்மையாகிய, மாயம்-வஞ்சகமாகிய, காட்டில்-காட்டிலே (அடவியில்), அலைந்தேன்-திரிந்திட்டேன், அந்தோ-ஐயோ, என்-அடியேனினுடைய, விதி-இது தலைவிதியின், வசமே-வழியேயாகும் எ-று.

(வி-ரை) 'சும்மா இருத்தல்' என்பது மனம் மொழி காயங்களால் சேட்டை ஒழிந்து மௌனமுற்றிருத்தல். 'சுகம்' என்றது ஆநந்தத்தை. 'சுருதி' இது ஒலிப்பது என்னுங் காரணம்பற்றி வந்த காரணப்பெயர். இதுபற்றியே வேதங்களுக்கு 'எழுதாக்கிளவி' என்றோர் பெயர் ஏற்பட்டது. 'அம்மா' இது வியப்படைச்சொல். 'மௌனி' என்றது ஞானாசிரியனாக வந்து கடாட்சித்த மௌனதேசிகனைக் குறித்தது. மாயையின் கொடுமையை விளக்க 'வெம்' என்னும் அடைமொழியைப் பெய்துவைத்தார். மாயை செய்யும் வஞ்ச மிகுதிபற்றி 'காடு'என்றார். காடு போன்றதைக் காடு என்றது உவமை. இனி 'காடு' மிகுதி எனினும் ஆம். 'அந்தோ' இது ஐயோ என்னும் இழிவு இரக்கங்காட்டும் திசைச்சொல். எல்லாம் ஊழின்படியே நடத்தலினால் 'அந்தோ என் விதிவசமே' என்றார். இதனை, "பங்கயத்தோன் எழுதாப்படியாமோ" எனவும், "பண்டை விதியின் பயனே காண்" எனவும், "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தாமுந் துறும்" எனவும் வந்த பிரமாணங்களால் அறியலாம். ஏ-ஈற்றசை. 36



பிரபஞ்சவாழ்வு பொய்யானது கண்டு உறவினரே துணை என்றிருந்தேன் எனல்

தினமே செலச்செல வாழ்நாளு
நீங்கச் செகத்திருள்சொற்
பனமே யெனவெளி கண்டே
யிருக்கவும் பாசபந்த
வினமே துணையென் றிருந்தோம்
நமன்வரி னென்செய்குவோம்
மனமேநம் போலவுண் டோசுத்த
மூடரிவ் வையகத்தே.

(ப-ரை) மனமே - நெஞ்சே!, தினம் - ஒவ்வொரு நாளும், செல-கழிய, செல-கழிய, வாழ் - வாழ்வுக்குரிய ஆயுள், நாளும் - நாட்களும், நீங்க-ஒழிய, செகத்து-பிரபஞ்சத்து, இருள் - அந்தகாரமானது, சொற்பனமே - கனவே, என-என்று சொல்லும்படி, வெளி - வெளிப்படையாக, கண்டே - பார்த்தே, இருக்கவும்-இருந்தும், பாசம்-பாசத்தாலாகிய, பந்த-கட்டுக்களாகிய, இனமே-கூட்டமே, துணை - உதவி, என்று - என்று எண்ணி, இருந்தோம் - வாழ்ந்து இருந்தோம், நமன்-எமன், வரின்-வந்தால், என்-என்ன சமாதானம், செய்குவோம்-சொல்லுவோம், நம்-நம்மை, போல்-போல, சுத்த-முழு, மூடர்-மூடர், இ - இந்த, வையகத்து - பிரபஞ்சத்தில், உண்டோ - இருக்கின்றனரோ? இல்லை எ-று.

(வி-ரை) 'செலச்செல' இது மிகுதிபற்றி அடுக்கிவந்தது. 'வாழ்நாளும்' இதில் ஈற்று உம்மை இறந்ததுதழீஇய எச்சஉம்மை; தினம் செல்வதல்லாமல் வாழ்நாளுஞ் செல்லுகின்ற தென்பதாம். 'செகத்திருள்' என்றது ஜெக மாயையை. 'சொற்பனமே' என்று கூறியது சொற்பனம்போற் பொய் யாதலைக் குறித்தது. இதுபற்றியன்றோ பட்டினத்தடிகளும்,

"மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ்செந்தீ
மையா நின்மாயை யுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யா யிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே"

என்று கூறியருளினர்.

'சுத்தமூடர்' என்றது சிறிதும் கலவாத மூடத்தனம் என்றது இது பற்றியே முழுமூடத்தனம் என்றும். 37

ஆணவமலத்தை அகற்றுவாயெனல்

கடலைத் தனைமலை யெத்தனை
யத்தனை கன்மம்அதற்
குடலைத் தனையத் தனைகட
னுண்மண லொக்கும்இந்தச்

சடலத்தை நான்விடு முன்னே
யுனைவந்து சாரவிருட்
படலத்தை மாற்றப் படாதோ
நிறைந்த பராபரமே.

(ப-ரை) நிறைந்த-எல்லாவிடத்தும் வியாபகமாயுள்ள, பராபரமே - பராபரமே!, கடல் - சமுத்திரங்கள், எத்தனை - எத்தனை, மலை - பருவதங்கள், எத்தனை-எத்தனை, அத்தனை-அந்த அளவினையுடையது, கன்மம் - கன்மங்களாகும், அதற்கு - அக்கன்மங்களுக்கு, உடல் - தேகங்கள், எத்தனை - எத்தனை, அத்தனை - அந்த அளவினை, கடல்-கடலிலேயுள்ள, நண்-நட்பமாகிய, மணலை-மணலினை, ஒக்கும்-ஒத்திருக்கும், (ஆதலால்) இந்த - இந்த, சடலத்தை - தேகத்தை, நான் - அடியேன், விடும்-விட்டு நீங்கும், முன்னே - முன்னமே, உன்னை - தேவரீரை, வந்து - வந்து, சார - கூடும்படி (அடையும்படி), இருள் - ஆணவ, படலத்தை - விருத்தியை, மாற்ற - நீக்க, படாதோ - கூடாதோ எ-று.

(வி-ரை) கன்மவெள்ளம் தன்வழி இழுப்பதால் நதிக்கொப்பாகும்; ஈண்டு மிகுதியும் பரப்பும்பற்றிக் கடலையும், உயரம்பற்றிக் மலையையும் ஒப்புக் கூறுவார் 'கடலெத்தனை மலையெத்தனை யத்தனைகன்மம்' என்றார். "என் பிறப்போ வெண்ணித் தொலையாது" என்ற காளமேகப்புலவன் வாக்கின்படி ஜன்மங்கடோறும் எடுத்த பிறப்பிற்கு அளவுகாணல் அருமையுடையதாதலின் 'கன்மமதற் குடலெத்தனை யத்தனை கடலுண் மணலொக்கும்' என்றார். அதாவது கடல்நுண் மணலினும் அதிகமாகக் கணக்கிடத்தக்க பல பிறப்பெடுத்திருக்கிறேன் என்கிறார். "அரிது அரிது மானிடராகப் பிறத்தலரிது" மானிட தேகம்பெறல் அருமையினும் அருமையுடையது ஆதலின் 'இந்தச் சடலத்தை நான் விடுமுன்' என்றார். 'இருட்படலம்' என்றது ஆணவமலத்தை. என்னை? ஆணவமலமே பிறப்பிறப்பிற்குக் காரணமாதலின் என்க. ஆணவமலத்தை மூலமலம் என்றும் கூறுவர். இம் மூலமலமே கன்மத்துக்குக் காரணமாகும். கன்மமே பிறப்புக்குக் காரணம். பிறப்பு துக்க சம்பந்தமுடையது என்பதும் அறியவேண்டிய தொன்றாம். 38

அம்பலவா! உன்னையன்றித் துணையில்லை யெனல்

நினையு நினைவு நினையன்றி
யில்லை நினைத்திடுங்கால்
வினையென் றொருமுத னின்னையல்
லாது விளைவதுண்டோ
தனையுந் தெளிந்துஉன்னைச் சார்ந்தோர்க
ளுள்ளச்செந் தாமரையா
மனையும்பொன் மன்றமு நின்றாடுஞ்
சோதி மணிவிளக்கே.



(ப-ரை) தனையும்-தங்கள் உண்மைத்தன்மையை, தெளிந்து-தெளிந்து, உன்னை-தேவரீரை, சார்ந்தோர்கள்-விரும்பினோர்களுடைய, உள்ளம் - மனமாகிய, செம் - செவந்த, தாமரை - தாமரை, ஆம் - ஆகும், மனையும்-வீட்டினிடத்தும், பொன் - பொன்மயமாகிய, மன்றமும் - அம்பலத்தினிடத்தும், நின்று-எழுந்தருளி, ஆடும்-நிர்த்தனஞ் செய்யும், சோதி - பிரகாசம்பொருந்திய, மணி - இரத்தின, விளக்கே - தீபமே!, நினையும்-நினைக்கின்ற, நினைவும்-எண்ணமும், நினை-தேவரீரை, அன்றி-அல்லாமல், இல்லை - நினைப்பதில்லை, நினைத்திடுங்கால் - எண்ணுமிடத்து, வினை - கர்மம், என்ற-என்று சொல்லப்படுகின்ற, ஒரு - ஒரு, முதல் - முதலாகிய கன்மப்பொருள், நினை-தேவரீரை, அல்லாது-அல்லாமல், விளைவது-உண்டாவது, உண்டோ-உண்டோ எ-று.

(வி-ரை) உன்னையன்றிப் பிறிதொன்றையும் நினைந்திலேன் என்பார், 'நினையு நினைவு நினையன்றி யில்லை' என்றார். எல்லாச்செயலும் பசுபோதத்தா லின்றிச் சிவபோதத்தாலேயே செய்யப்பெறுதலின் அவ்வினையும் நீயே என்பார், 'நினைத் திடுங்கால் வினையென் றொருமுத னின்னையல்லாது விளைவ துண்டோ' என்றார். தன்னை யறிந்தவன் தலைவனை அறிவான் என்றபடித் தன்னை யறிந்தவரே தலைவனை அறிவர். அவர் உள்ளத்து இறைவன் நின்று நித்தஞ் செய்வன் இதனையே 'தன்னையுந் தெளிந்து துன்னைச் சார்ந்தோர்க ளுள்ளச் செந்தாமரை மனையும் பொன்மன்றமு நின்றாடுஞ் சோதி' என்றார். 'உள்ளச் செந்தாமரை' என்றது, இருதய கமலத்தை. விளக்கு - தீபம், இது இருளை அகற்றி ஒளியைக் காட்டிப் பொருள்களை விளக்கமாகக் காட்டலின் விளக்கு எனத் தீபத்திற்கும் பெயராயிற்று. ஈண்டு மணிவிளக்கு என்றது, பண்பும் பயனும்பற்றி வந்த உவமம். 39

உன்னடிமையான யான் கன்மத்தால் வருந்துதல் தகுதியோ எனல்

உள்ளத் தையுமிங் கெனையுநின்
கையினி லொப்புவித் துங்
கள்ளத்தைச் செய்யும் வினையால்
வருந்தக் கணக்குமுண்டோ
பள்ளத்தில் வீழும் புனல்போற்
படிந்துன் பரமவின்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேயெளி
தாந்தில்லை வித்தகனே.

(ப-ரை) பள்ளத்தில் - தாழ்வாகிய நிலத்தில், வீழும்-பாய்ந்து ஓடி விழுகின்ற, புனல்போல்-ஜலத்தைப்போல, படிந்து - அமைந்து, உன்-தேவரீரது, பரம - மேலான, இன்பம் - ஆநந்த, வெள்ளத்தில் - சமுத்திரத்தில், மூழ்கினர்க்கே-திளைத்தவர்கட்கே, எளிது - எளிமை, ஆம்-ஆகின்ற, தில்லை - சிதம்பரத்தில்மேவி யருளியிருக்கின்ற, வித்தகனே - ஞானமயனே!, உள்ளத்தை

யும்-அடியேனது மனத்தையும், இங்கு-இவ்விடத்து, என்னையும்-அடியேனையும், நின்-தேவரீரது, கையில்-இடத்தில், ஒப்புவித்தும்-ஒப்புவித்தும், (இன்னமும்) கள்ளத்தை - வஞ்சனையை, செய்யும் - செய்கின்ற, வினையால் - கர்மத்தினால், வருந்த - துன்பப்பட, கணக்கும் - கணக்கும், உண்டோ - இருக்கின்றதோ எ-று.

(வி-ரை) 'உள்ளத்தை' என்றது உள்ளத்துக்கு ஆதாரமாகிய உடலைக் குறித்தது. இது தானியாகுபெயர். எனை - என்றது ஆவியை. இனம்பற்றிப் பொருளும் வருவித்துக் கொளற்பாலது. உடல், பொருள், ஆவி மூன்றையும் இறைவனே உனக்குத் தத்தஞ் செய்திருக்க தனக்கென ஒரு சுதந்தரமில்லை. சுதந்தரமில்லாதபோது கன்மம் எங்கிருந்து வரும், அதனால் எப்படி இன்பதுன்பம் விளையும், எது விளையினும் இறைவனுக்கே என்பார் 'உள்ளத்தையு மிங்கெனையு ... ... ... கணக்குமுண்டோ?' என்றார். அன்பர் விரைந்துசென்று இறைவன் பிரம்மானந்தத்தை அனுபவித்தலைப் பள்ளத்தில் வீழும் வெள்ளத்திற்கு உவமித்தார். 40

மனமே! எமன் வாதை கடக்க இறைவன் திருவடி வேண்டு மெனல்

கள்ளம் பொருந்து மடநெஞ்ச
மேகொடுங் காலர்வந்தா
லுள்ளன் பவர்கட்குண் டோஇல்லை
யேஉல கீன்றவன்னை
வள்ளம் பொருந்து மலரடி
காணமன் றுடுமின்ப
வெள்ளச்செம் பாதப் புணையேயல்
லாற்கதி வேறில்லையே.

(ப-ரை) கள்ளம் - வஞ்சம், பொருந்தும் - பொருந்திய, மடம் - அறியாமையையுடைய, நெஞ்சமே-மனமே!, கொடும்-கொடிய, காலர்-யமபடர்கள், வந்தால்-வந்தால், அவர்கட்கு-அவர்களுக்கு, உள் - மனத்து, அன்பு - அன்பு, உண்டோ - உள்ளதோ, இல்லையே - (சிறிதும்) இல்லையே, உலகு-பிரபஞ்சத்தினை, ஈன்ற-பெற்ற, அன்னை-தாய், வள்ளம்-கிண்ணத்தைப்போல, பொருந்தும்-ஒத்துத் தோன்றுகின்ற, மலர்-தாமரைமலரை ஒத்த, அடி-திருவடியை, காண-தரிசிக்கும்படி, மன்று-அம்பலத்தில், ஆடும்-நடனத்தைச் செய்கின்ற, இன்பம்-ஆனந்தம், வெள்ளம்-கடலாகிய இறைவனது, செம்-செவந்த, பாதம்-திருவடியாகிய, புணையே - மரக்கலமே, அல்லால் - அல்லாமல், வேறு-வேறு, கதி-புகலிடம், இல்லை-இல்லையாகும் எ-று.

(வி-ரை) அறியாமையாலே வஞ்சகம் மிகுந்த தென்பார் 'கள்ளம் பொருந்து மடநெஞ்சமே' என்றார். கூற்றுவனும் அவன் படரும் மிகக் கொடியர் என்பார், 'கொடுங்காலர்' என்றார். இதனை "கூற்றினும் பாவலர் கொடிய ராவரே" எனச் **சோழன்** கூறியதாலும் அறியலாம். உடலையும்



உயிரையுங் கூறு செய்பவன் ஆதலின் யமனுக்கு இப்பெயர் வந்தது. 'உலகு ஈன்ற அன்னை' என்றது அருட்சத்தியை. இறைவனை ஆட்டுவித்து விழி கழித்தவள் இறைவி ஆதலின் "உலகீன்ற அன்னை வள்ளம் பொருந்து மலரடி காண மன்றாடும்" என்றார். இதனானன்றோ,

"ஓர்பங் கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
இருமுனிவர் பணிந்து போற்றக்
கொங் கேந்தும் மணிமன்றுட் குனித்தருளும்
பெருமானைக் குறித்து வாழ்வாம்"

என்றார் **சிவஞான முனிவரும்.**

பிறவிக்கடல் கடக்கவும் முத்திக்கரை சேரவும் இறைவன்தாள் புணை என்பதனை விளக்கவே 'செம்பாதப் புணையே யல்லால்' என்றார். ஏ-ஈற்றசை. 41

என் உருவம் நின் உருவமே எனல்

தன்மய மானசு பாவத்தின்
மெள்ளத் தலைப்படுங்கால்
மின்மய மானச கம்யா
துரைத்தென் வெளியிலுய்த்த
சின்மய முத்திரைக் கையேமெய்
யாகத் தெளிந்தநெஞ்சே
நின்மய மென்மய மெல்லா
நிறைந்த நிராமயமே.

(ப-ரை) தன் - (ஆன்மாவாகிய) என்னுடைய, மயம் - மயம் (வியாபகம்), ஆன-ஆகிய, சுபாவத்தில் - இயற்கையில், மெள்ள - அடைவாக, தலைப்படுங்கால்-உணரும் இடத்து, மின்-மின்னலின், மயம்-தன்மையை, ஆன-பெற்ற, சகம்-பிரபஞ்சம், யாது-எதை, உரைத்து-சொல்லி, என்-என்ன, வெளியில்-விளக்கத்தில், உய்த்த-தந்த, சின்மயம் - மவுன, முத்திரை - முத்திரையுடன் கூடிய, கையே - திருக்கரமே, மெய்-சத்தியம், ஆக-ஆக, தெளிந்த-தெளிவாகத்தெரிந்த, நெஞ்சே-மனமே!, நின்மயம் - தேவரீர் வியாபகமும், என்-அடியேன், மயம்-வியாபகமும், எல்லாம்-இரண்டும், நிறைந்த-எங்கும் பூரணமான, நிராமயமே-நிராமயமேயாகும் எ-று.

(வி - ரை) ஜீவ ஆன்மாவானது பரமான்மாவுக்கு வேறுபட்டதாகத் தோன்றினும், தத்துவநியதி களைந்து சொரூபதரிசனத்தை நோக்குழி தானே அதுவே, அதுவே தானாக அபேதமாகக் காணப் பெறுதலின் 'நெஞ்சே! நின்மய மென்மய மெல்லா நிறைந்த நிராமயமே' என்றார். இச் செய்யுளில் சின்மய முத்திரைப்பொருட் சூக்குமமும், அத்துவித ஆனந்த நிலை இரகசியமும் கூறப்பெற்றிருத்தலின் ஞானாசிரியர்பாற் கேட்குமுறை

யாற் கேட்டு அனுபூதியாற் கண்டு இதன் இரகசியார்த்தத்தை அறிந்து கொள்ளக் கடவர்.

42

நின்னை ஸர்வ பந்து வெனக் கொண்டே னெனல்

ஆயுங் கலையுஞ் சுருதியுங்
காண்டற் கரியவுனைத்
தோயும் படிக்குக் கருணைசெய்
வாய்சுக வான்பொருளே
தாயும் பிதாவுந் தமருங்
குருவுந் தனிமுதலும்
நீயும் பரையுமென் றேயுணர்ந்
தேன்இது நிச்சயமே.

(ப-ரை) ஆயும் - ஆராயப்படுகின்ற, கலையும்-பல நூல்களும், சுருதியும்-வேதங்களும், காண்டற்கு - கண்கூடாகக் காணற்கு, அரிய - அருமையாகிய, உன்னை-தேவரீரை, தோயும்-அடையும் படிக்கு-படிக்கு, கருணை-கருணையை, செய்வாய் - செய்தருள்வாய், சுக - ஆனந்த உருவாகிய, வான் - மேலான, பொருளே - பொருளே!, தாயும்-அன்னையும், பிதாவும்-தந்தையும், தமரும்-சுற்றத்தாரும், குருவும்-ஆசாரியனும், தனி-ஒப்பற்ற, முதலும் - முதற்பொருளும், நீயும்-தேவரீரும், பரையும்-பராசத்தியும், என்றே - என்றே, உணர்ந்தேன்-அறிந்தேன், இது-இது, நிச்சயமே-சத்தியமே எ-று.

(வி-ரை) 'ஆயுங்கலை' என்றது அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பயனையும் பயக்கும் நூற்களை. இதனை, "அறம் பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே" என்ற **நன்னூலாலும்** அறிக. இறைவன் 'அரியான்' ஆதலின், 'ஆயுங் கலையுஞ் சுருதியுங் காண்ட கரிய வுனை' என்றார். 'தோயும்படி' என்றது இறைவனைக் கண்டு அத்துவிதமாகக் கூடலை. இனி, சாமீப பதவியை யடைய என்னினும் ஆம். இறைவன், பொருளாய் இருப்பவனும், சிறந்தவனுமாக இருப்பவனும் ஆதலின் 'சுகவான் பொருளே!' என்றார். "அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாமனு மாமியுநீ" என்ற **திருநாவுக்கரசர்** கருத்தைக்கொண்டே, 'தாயும் பிதாவுந் தமருங் குருவுந் தனிமுதலு நீயும் பரையு மென்றே யுணர்ந்தேன்' என்றருளினர். ஈற்று ஏ-தேற்றப் பொருளில் வந்தது.

43

அடியேன் விண்ணப்பங் கேட்டிலையோ வெனல்

அல்லும் பகலு முனக்கே
யபய மபயமென் று
சொல்லுஞ்சொ லின்னந் தெரிந்ததன்
றோ துதிப் பார்கண்மனக்



கல்லுங் கரைக்கு மௌனா
உனது கருணையென்பாற்
செல்லும் பொழுதல்ல வோசெல்லு
வேனந்தச் சிற்சுகத்தே.

(ப-ரை) துதிப்பார்கள் - துதிக்கின்றவர்களுடைய, மனம்-நெஞ்சமாகிய, கல்லும்-கல்லையும், கரைக்கும் - உருகச்செய்கின்ற, மௌனா - மவுனகுருவே!, அல்லும்-இரவும், பகலும்-பகலும், உனக்கே - தேவரீருக்கே, அபயம்-அடைக்கலம், அபயம்-அடைக்கலம், என்று-என்று, சொல்லும் - (கூப்பிட்டுச்) சொல்லும், சொல் - வார்த்தை, இன்னம் - இன்னமும், தெரிந்தது - (தேவரீரின் காதுக்கு எட்டித்) தெரிந்தது, அன்றோ - இல்லையோ?, உனது - தேவரீரினுடைய, கருணை-கிருபையானது, என்பால் - அடியேனின் இடத்து, செல்லும்-அடையும், பொழுது-காலத்து, அன்றோ-அல்லவோ, அந்த - அந்த, சிற்சுகத்து-ஞானானந்தத்தில், செல்லுவேன்-மூழ்குவேன் எ-று.

(வி-ரை) 'அல்லும் பகலும்' இதில் வந்த உம்மைகள் இரண்டும் எண்ணும்மைகள். 'உனக்கே' இதில் ஈற்றேகாரம் தேற்றப்பொருளில் வந்தது. 'மௌனா' என்றது மௌனதேசிகரை. இது விளியுருபு ஏற்று நின்றது. 'கல்லும்' இது இரண்டன்தொகை. உம்மை உயர்வுச் சிறப்புப் பொருளது. சிவானந்தத்தழுந்தி இன்புற்றிருக்கச் சற்குரு கடாட்சம் வேண்டுமாதலினாலும், இறைவனே சற்குருவாக வந்து அருள்செய்கின்றானாதலினாலும், 'உனது கருணையென்பாற் செல்லும்பொழுதல்லவோ செல்லுவேனந்தச் சிற்சுகத்தே' என்றார். ஈண்டு, "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்ற **பெரியார்** வாக்கு நோக்கத்தக்கது. ஏ - ஈற்றசை.

44

நெஞ்சே! எல்லாஞ் சிவன்செய லெனல்

எல்லாஞ் சிவன்செய லென்றறிந்
தாலவ னின்னருளே
யல்லாற் புகலிடம் வேறுமுண்
டோஅது வேநிலையா
நில்லாய்உன் னாற்றமி யேற்குக்
கதியுண்டுஇந் நீணிலத்திற்
பொல்லா மயக்கத்தி லாழ்ந்தாவ
தென்ன புகனெஞ்சமே.

(ப-ரை) எல்லாம் - யாவும், சிவன் - முதல்வனாகிய சிவனின், செயல்-செயலே, என்று - என்று, அறிந்தால் - தெரிந்துகொண்டால், அவன்-அம்முதல்வனாகிய சிவபெருமானின், இன்-இனிய, அருளே - திருவருளே, அல்லால் - அல்லாமல், புகல் - அடைக்கலம் அடைதற்கு உரிய, இடம் - இடம், வேறும்-மற்றும் வேறாகிய தொன்று, உண்டோ-இருக்கின்றதோ?, அதுவே-அதுவே, நிலை - நிலை, ஆ-ஆக, நில்லாய் - நிற்பாயாக, (அவ்வாறு நிற்பையே

யானால்), தமியேற்கு - தமியேனுக்கு, உன்னால் - தேவரீரால், கதி - நற்கதி, உண்டு - உள்ளதாகும், இ - இந்த, நீள் - பெரிய, நிலத்தில் - பிரபஞ்சத்தில், பொல்லா-தீமையான, மயக்கத்தில்-மயக்கத்தில், ஆழ்ந்து-ஆழ்ந்ததால், ஆவது-உண்டாகியபயன், என்ன-யாது, நெஞ்சமே-மனமே, புகல்-கூறுவாயாக எ-று

(வி-ரை) அஞ்ஞானத்தால் நிறைந்து, மாயையிற் சிக்கி மருண்டு கிடப்போர் எல்லாஞ் சிவன்செயல் என்பதனை அறியார். எல்லாம் தன் செயலாகவே ஆணவத்தடிப்பால் எண்ணி வினையினான் மொத்துண்டு பிறந்திறந்து கெடுவர். ஞானிகளே எல்லாஞ் சிவன் செயலாகக் காண்பர். எல்லாஞ் சிவமாகக் காண்பர். அவர்கள் சிவத்தையே புகலிடமாகக் கொண்டுய்வர். இதுகொண்டே "எல்லாஞ் சிவன்செய லென்றறிந்தா லவனின் னருளே யல்லாற் புகலிடம் வேறு முண்டோ" என்றும் 'உன்னாற் றமியேற்குக் கதியுண்டு' என்றும் கூறினார். பிரபஞ்ச மயக்கத்திற் புக்கவர்க்குத் துன்பமே யல்லாது முத்திக்கதி இல்லை என்பார் 'நீணிலத்திற் பொல்லா மயக்கத்தி லாழ்ந் தாவதென்ன புகனெஞ் சமே' என்றார். 45

உய்தற்கு வேண்டுவன வேண்டி நிற்றல்

ஒளியே ஒளியி னுணர்வே
உணர்வி னுவகைபொங்குங்
களியே களிக்குங் கருத்தே
கருத்தைக் கவளங்கொண்ட
வெளியே வெளியின் விளைசுக
மேசுகர் வீறுகண்டுந்
தெளியேன் தெளிந்த வரைப்போற்றி
டேன்என்ன செய்குவனே.

(ப-ரை) ஒளியே-பிரகாசமே!, ஒளியின் - அந்தப் பிரகாசத்தினுடைய, உணர்வே-அறிவே, உணர்வின்-அறிவினிடத்து, உவகை-சந்தோஷம், பொங்கும் - பெருகுகின்ற, களியே - களிப்பே, களிக்கும் - மகிழ்கின்ற, கருத்தே-கருத்தே, கருத்தை - கருத்தை, கவளம் - கவளமாக, கொண்ட - விழுங்கின, வெளியே-சிதாகாசமே, வெளியின்-அந்த ஆகாயத்தினிடத்தில், விளை - உண்டாகிற, சுகமே-ஆனந்தமே, சுகர்-சுகரினுடைய, வீறு-பெருமையை, கண்டும்-அறிந்தும், தெளியேன்-தெளிந்திலேன், தெளிந்தவரை - தெளிந்தவர்களையும், போற்றிடேன் - வணங்கலுஞ் செய்யேன், என்ன - (இனி உய்ய) யாது, செய்குவேன் - செய்வேன் எ-று.

(வி-ரை) இறைவன் ஒளிமயன் ஆதலினால் 'ஒளியே' என்றார். 'உணர்வின் உவகை' என்ற இடத்து உணர்வுஎன்றது ஆன்ம உணர்வை. 'வெளியே' என்றது சிதாகாயத்தை. இறைவன் அட்டமாவுருவில் ஆகாயமும் ஒன்றாதலினாலும், சித்துருவினனாதலாலும், 'வெளியே' என்றார். இறைவன் சுகாநந்த உருவினன் ஆதலின் 'வெளியின் விளைசுகமே' என்றார். சுகர் வரலாற்றை



இந்நூலின்கண் வந்துள்ள விருத்தினிடத்துக் குறித்துளோம் ஆங்குக் காண்க. 'வீறு' என்றது ஈண்டு ஞானவைராக்கியப் பெருமையை. ஏ - ஈற்றசை. 46

அடியேன் பிறப்பைப் போக்குவ தெக்காலமோ வெனல்

மறக்கின்ற தன்மை யிறத்தலொப்
பாகும் மனமதொன் றிற்
பிறக்கின்ற தன்மை பிறத்தலொப்
பாகும்இப் பேய்ப்பிறவி
இறக்கின்ற வெல்லைக் களவில்லை
யேஇந்தச் சன்மவல்லல்
துறக்கின்ற நாளெந்த நாள்பர
மேநின் றொழும்பனுக்கே.

(ப-ரை) பரமே-பரம்பொருளே!, மறக்கின்ற - (ஆன்மாக்கள்) மறக்கும், தன்மை - தன்மையானது, இறத்தல் - இறத்தலுக்கு, ஒப்பாகும் - நிகராகும், மனம்-மனமானது, ஒன்றில்-ஒருபொருளினிடத்து, பிறக்கின்ற-பற்றுகின்ற, தன்மை-தன்மை, பிறத்தல் - பிறத்தலுக்கு, ஒப்பாகும் - நிகராகும், இ-இந்த, பேய்-பேய்த்தன்மையையுடைய, பிறவி - பிறவிகள், இறக்கின்ற-கழிகின்ற, எல்லைக்கு - அளவிற்கு, அளவு-எல்லை, இல்லையே - இல்லையே, இந்த-இந்த, சன்மம் - பிறப்பால் உண்டாகும், அல்லல் - துன்பத்தை, துறக்கின்ற-விட்டு நீங்கும், நாள்-காலம், நின்-தேவரீருடைய, தொழும்பனுக்கு-தொண்டனுக்கு, எந்த-எந்த, நாள்-காலம்; எ-று.

(வி-ரை) பிறவி ஆன்மாவை அங்கோடிங் கலைகின்றமையின் பற்றினவரை அலைக்கும் பேய் போல்வது என்பார் 'பேய்ப்பிறவி' என்றார். 'இறக்கின்ற வெல்லைக் களவில்லையே' என்றது இந்தப் பேய்ப்பிறவி எடுத்து எடுத்து இறந்து இறந்து கழிப்பதற்குக் கணக்கில்லை என்றதாம். "பிறந்து நான் இந்தமண்மேற் பட்டதுயரம் போதும்" எனவும், "அல்லற்பிறவி எடுத்தலுத்தேன்" எனவும் **பெரியார்** கூறியபடி பிறவி துன்பந் தருவதாதலால், 'சன்மவல்லல் துறக்கின்ற நாளெந்தநாள்' என்றார். இதனாலன்றே **பெரியாரும்**, "மாயப்பிறவி இனி வேண்டேன்" என்றார். 'மறக்கின்ற தன்மை யிறத்த லொப்பாகு மனமது ஒன்றிற் பிறக்கின்ற தன்மை பிறத்தலொப்பாகும்' என்றதை "உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி, விழிப்பதுபோலும் பிறப்பு" என்ற **குறள்** ஆசிரியர் கருத்தையும் ஒப்பிட்டுக்காண்க. ஏ-ஈற்றசை.

இறைவனின் திருக்கூத்து வியத்தல்

காட்டிய வந்தக் கரணமு
மாயையிக் காயமென்று
சூட்டிய கோலமு நானா
வியங்கத் துறையிதனா

ணாட்டிய நான்றனக் கென்றோ
ரறிவற்ற நானிவற்றைக்
கூட்டிநின் றாட்டினை யேபர
மேநல்ல கூத்திதுவே.

(ப-ரை) பரமே-பரம்பொருளே!, காட்டிய-விளக்கிய, அந்தக்கரணமும்-மனமாதி கரணங்களும், மாயை-அசுத்த மாயாகாரியமாகிய, இ-இந்த, காயம்-உடம்பு, என்று-என்று, சூட்டிய-பெயர் சூட்டப்பெற்ற, கோலமும்-உருவும், நானா-பலவிதமாக, இயங்க-இயங்காநிற்க, துறை-பற்பல துறைகளையுடைய, இதனுள் - இதற்குள்ளே, நாட்டிய-நிலைக்கச்செய்த, நான்-நானே, தனக்கு-தனக்கு, என்று-என்ன, ஓர்-ஒரு, அறிவு-சுதந்தர அறிவு, அற்ற - இல்லாத, நான்-நான் (ஆக இருக்கிறேன்), இவற்றை-இத்துறைகளை, கூட்டி-சேர்த்து, நின்று-இருந்து, ஆட்டினையே - ஆட்டுவித்தனையே, இது-இது, நல்ல-நல்ல, கூத்தே-கூத்தேயாகும் எ-று.

(வி-ரை) 'அந்தக்கரணம்' என்றது மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை. 'மாயை யிச்சாயம்' என்றது அசுத்தமாயையின் காரியமாகிய இந்த உடல் என்பதாம். ஆன்மா சுதந்தரமற்றது பரதந்தரன் ஆதலின் 'இதனுள் நாட்டிய நான்றனக் கென்றோ ரறிவற்ற நான்' என்றார். சூத்திரக்காரன் ஒருவன் ஜடமாகிய பாவைகளை ஆட்டிவைக்குமாறு ஆன்மாவாகிய அடியேனை உடலிற் புகுத்தி வினைக்கயிற்றால் ஆட்டிவிக்கின்றாய் என்பார் 'இவற்றைக் கூட்டிநின் றாட்டினையே' என்றார். இவ்வாறு ஆட்டிவைப்பது தருமமோ என்பார் 'பரமே நல்ல கூத்திதுவே' என்றார். இதனை,

"ஆதிமுத லாங்கூத்தன் தனுகரணம் ஆன்மாவுக் காக்கிக் கூட்டி
மோதிவரு வினைக்கயிற்றால் உழல்வித்தே பிறப்பிறப்பால் மூசுவித்தான்
நீதிமிகு திருவருளுக் கழகாமோ என்குறையோ நேருநான்றான்
ஒதிடற்குச் சுதந்தரனே அறிவிப்பா ராரேயோ உலகிலம்மா"

என்ற **சித்தாந்த சிந்தாமணிச் செய்யுளா**லும் அறியலாம். எ-ஈற்றசை. 48

நீ மாயாகாரியத்தைவிடில் பரிபூரணசுகம் பெறுவாயெனல்

பொல்லாத மாமர்க் கடமன
மேஎனைப் போலடுத்த
வெல்லாற்றை யும்பற்றிக் கொண்டனை
யேஎன்னை நின்மயமா
நில்லாய் அருள்வெளி நீநானிற்
பேனரு ணிட்டையொரு
சொல்லாற் பதிந்து பரிபூர
ணானந்தந் தோய்குவனே.



(ப-ரை) பொல்லாத-துன்பங்களுக்குக் காரணமாகிய, மா-பெரிய, மர்க்கடம் - குரங்கை ஒத்த, மனமே-மனமே!, என்னை - என்னைப் பற்றிக்கொண்டது, போல்-போல, அடுத்த-என்னைச் சூழ்ந்துள்ள, எல்லாவற்றையும் - எல்லாப் பொருள்களையும், பற்றி - பிடித்து, கொண்டனையே - கொண்டாயே, என்னை-இது என்ன, நீ-நீ, அருள்வெளி-சிதாகாயத்தில், நின்மயம்-தன்மயம், ஆ-ஆக, நில்லாய் - நிற்பாயாக, (அங்ஙனம் நிற்பையேயானால்) நான் - நான், அருள்-திருவருள், நிட்டை - நிட்டையிலே, ஒரு-ஒரு, சொல்லால் - சொல்லினால், பதிந்து - பதியப்பெற்று, நிற்பேன் - இருப்பேன், பரிபூரணம் - மிக நிறைந்த, ஆநந்தம்-சுகத்தில், தோய்குவன்-மூழ்குவன் எ-று.

(வி-ரை) மனமானது மாயை வயப்பட்டு இச்சையை எழுப்பி வினையையூட்டி பிறப்பில் இறப்பில் உழலச் செய்வதால் 'பொல்லாத' என்று மனத்திற்கு அடைமொழி கொடுத்தார். மனமானது ஒன்றைப்பற்றி விடாது நிற்பதனால் 'மாமர்க்கடமனமே' என்றார். இனி, மனமானது கண்ட கண்ட மாயா சம்பந்தமாய பிரபஞ்சப் பொருள்களினிடத்துத் தாவிச்சென்று பற்றி விடாது கொண்டுநிற்றலின் 'மாமர்க்கட மனமே' என்றார் எனினும் பொருந்தும். இதனனேயே,

"பொன்போல இலங்குமனம் சஞ்சலத்தாற் குரங்காகும்"

என்றார் **உபநிடதத்தாரும்.**

மனம் ஆன்மாவை வயப்படுத்துவதுபோல உலகப் பொருள்களையும் பற்றி அதில் உழலச்செய்தலால் 'எனைப்போலடுத்த வெல்லாற்றையும் பற்றிக் கொண்டனையே' என்றார். 'எல்லாவற்றையும்' என்பது 'எல்லாற்றையும்' என நின்றது தொகுத்தல்விகாரம். 'என்னை' என்பது வியப்பின்கண் வந்தவினா. 'நின்மயமாய் நில்லாய்' என்றது களங்கமற்று பொன்போல் இலங்கும் பரிசுத்த நிலையை. 'நீ அருள்வெளி' என்றது ஆகாயத்தின் கூறுமனமாதலின் களங்கமற்ற ஆகாயமே நீ. நீ அவ்வாறு களங்கமற்று இரு என்றதாம். நீ களங்கமற்று ஆகாயம்போலிருப்பின் அருள் நிட்டையைப்பெற்றுப் பரிபூரணானந்தத்தில் மூழ்குவேன் என்பார் 'அருள்வெளிநீ நானிற்பே னருணிட்டை யொருசொல்லாற் பதிந்து' என்றார். 'ஒரு சொல்லால்' என்றது சற்குருவினுடைய கடாட்சத்தாற் பெற்ற உபதேச மொழியை. நிட்டையில் நின்றோர் பரிபூரணானந்தம் அடைவர் ஆதலின் 'அருள்நிட்டை யொருசொல்லாற் பதிந்து பரிபூரணானந்தந் தோய்குவனே' என்றார். 49

நல்வழி வாராவிடின், திருவருளென்னும் ஆயுதத்தாற் கொல்வே னெனல்

வாராய்நெஞ் சேஉன்றன் றன்மார்க்கம்
யாவையும் வைத்துக்கட்டுஇங்
காராய் அடிக்கடி சுற்றுகின்
றாய்உன் னவலமதிக்

கோரா யிரம்புத்தி சொன்னாலு
மோர்கிலை ஓகெடுவாய்
பாராய் உனைக்கொல்லு வேன்வெல்லு
வேன் அருட் பாங்குகொண்டே.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, வாராய் - வருவாயாக, உன் - உன், தன்-தனக்கு இயல்பாய் உள்ள, துன் - கெட்ட, மார்க்கம் - வழிகள், யாவையும்-எல்லாவற்றையும், வைத்து-ஒருபுறத்தேவைத்து, கட்டு-கட்டிடு, இங்கு-இவ்விடத்திலிருந்து, ஆராய்-ஆராய்வையாக, அடிக்கடி-எந்நேரமும், சுற்றுகின்றாய் - உலகமெல்லாம் சுழன்று திரிகின்றாய், உன் - உன்னுடைய, அவலம்-கேடான, மதிக்கு - அறிவுக்கு, ஓர்-ஒரு, ஆயிரம்-ஆயிரக்கணக்கான, புத்தி-புத்திமதிகளை, சொன்னாலும்-போதித்தாலும், ஓர்கிலை-ஆராய்ந்து தெரிந்தாய் இல்லை, ஓ-ஓ!, கெடுவாய் - கெட்டுப்போவாயே, பாராய்-ஆராய்ந்து பார்ப்பாயாக; உன்னை - உன்னை, அருள் - திருவருளென்னும், பாங்கு - ஆயுதம், கொண்டு - கொண்டு, கொல்லுவேன் - அழிப்பேன், வெல்லுவேன் - நீ தலையெடாதபடி வென்றுவிடுவேன் எ-று.

(வி-ரை) இது நெஞ்சறிவுறுத்தலாகும் அதாவது, நெஞ்சுக்குப் புத்தி போதித்தலாம். ‘துன்மார்க்கம்’ என்றது கேட்டைத் தருவதாகிய உலக மாயையிற் சிக்கி உழலுகையை. ‘ஆராய்’ என்றது, நீ பிரபஞ்ச மாயையிற் சிக்குண்டு திரிகையால் வருங் கேடுகளை ஆராய்ந்துபார் என்பதாம். ‘அடிக்கடி’ என்றது எப்பொழுதும் என்னுப் பொருளது. ‘அவலமதி’ என்றது கேட்டைத்தரும் புத்தியை. ஈண்டு ‘ஆயிரம்’ என்னும் பொருள் தராது மிகுதிப்பொருள் தந்து நின்றது, என் புத்தி கேளாது நின் அவலமதிப்படி நடப்பின் கெட்டழிவாய் என்பார், ‘ஓ கெடுவாய்’ என்றார். ‘ஓ’ இரக்கத்தால் வந்தது. திருவருளைப் பற்றின் மன மிறக்குமாதலின் ‘பாரா யுனைக் கொல்லுவேன் வெல்லுவேன் அருட்பாங்கு கொண்டே’ என்றார். ‘பாங்கு’ கட்டாரா எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும்.

“சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே”

என இவ்வாசிரியரே **பராபரக்கண்ணியிற்** கூறியதுங் கண்டு தெளிக.
ஏ-ஈற்றசை. 50

வேதாதங்கட் கெட்டா விமலனைப் பற்றெனல்

மாதத்தி லேயொரு திங்களுண்
டாகி மடிவதைநின்
போதத்தி லேசற்றும் வைத்திலை
யேவெறும் புன்மைநெஞ்சே



வேதத்தி லேதர்க்க வாதத்தி
லேவிளங் காதுவிந்து
நாதத்தி லேயடங் காதந்த
வான்பொரு ணாடிக்கொள்ளே.

(ப-ரை) வெறும்-அறிவில்லாத, புன்மை-இழிவாகிய, நெஞ்சே-மனமே! மாதத்திலே-ஒவ்வொரு மாதத்திலும், ஒரு-ஒரு, திங்கள்-சந்திரன், உண்டாகி-பிறந்து, மடிவதை - அழிவதை, நின் - உனது, போதத்திலே - அறிவிலே, சற்றும்-சிறிதும், வைத்திலையே-எண்ணினாய் இல்லையே, வேதத்திலே - மறைகளினாலேயும், தர்க்கம் - தர்க்க நெறிகொண்டுசெய்யும், வாதத்திலே-வாதத்தினாலேயும், விளங்காது-விளங்காமலும், விந்து - விந்துவிலும், நாதம்-நாதத்திலும், அடங்காது-அடங்காமலும் இருக்கின்ற, அந்த-அந்த, வான்-மேலான, பொருள் - பொருளை, நாடி - ஆராய்ந்து, கொள் - பற்றிக்கொள்வாயாக எ - று.

(வி-ரை) மாதா மாதம் சந்திரன் பிறந்து வளர்ந்து தேய்ந்து மறைவதைக்கண்டாய் இதிலிருந்தே உலகமும் உலகப் பொருள்களும் நிலையில்லாதன என்றறி என்பார், ‘மாதத்திலேயொரு திங்களுண்டாகி மடிவதைநின் போதத்திலே சற்றும் வைத்திலையே’ என்றார். சந்திரன் மாதம் மாதம் பிறப்பதனாலேயே இளஞ்சந்திரனுக்கு ‘பிறை’ என்ற பெயர் உண்டாயிற்று. இது ‘பிற’ என்ற பகுதியடியாகப் பிறந்தது. பிறப்பது ‘பிறை’ இது காரணம்பற்றி வந்தபெயர். உலகம் நிலையில்லாதது என்று அறிந்து இறைவனை நாடாது அழிவதும், அழிவைத் தருவதையும்பற்றி நிற்றலால் அறிவில்லாததும் அற்பம் உடையை நெஞ்சே நீ என்பார், ‘வெறும்புன்மை நெஞ்சே’ என்றார். இறைவன் வைகரி சம்பந்தமாகிய வேதத்திற்கு எட்டாதவனாகவும், சுத்தமாயா காரியமாகிய நாதவிந்துகளுக்கு அப்பாற்பட்டவனாதலாலும், ‘வேதத்திலே தர்க்க வாதத்திலே விளங்காது விந்துநாதத்திலே யடங்காதந்த வான்பொருள்’ என்றார். இறைவனை நாடிக்கொண்டால் உனக்குத் துன்பமில்லை, இன்பமேயாகும் என்பார் ‘நாடிக்கொள்ளே’ என்றார். நான் சொல்லுவதற்காகத் தாட்சண்யம்பற்றி இறைவனைப் பற்றவேண்டாம் நீயும் ஆராய்ந்து பார்த்துப் பற்றிக்கொள் என்பார், ‘நாடிக்கொள்ளே’ என்றார். துன்பத்தை யனுபவிப்பது மனமாதலின் மனத்தை நோக்கிக் கூறினர்.
ஏ - ஈற்றசை. 51

நீ எல்லா மறிந்தும் என் மனத்துன்ப மேனறிய
வில்லை யெனல்

எங்கும் வியாபித் துணர்வாய்
உனக்கென் னிதயத்துள்ளே
தங்குந் துயரந் தெரியாத
வண்ணந் தடைசெய்ததார்

அங்கங் குழைந்துள் ளுருகுமன்
பாளர்க் கணைகடந்து
பொங்குங் கருணைக் கடலேசம்
பூரண போதத்தனே.

(ப-ரை) அங்கம்-சரீரம், குழைந்து-இளகி, உள்-மனமானது, உருகும்-உருகும், அன்பாளர்க்கு - தொண்டர்களுக்கு, அணை - வரம்பு, கடந்து-கடந்து, பொங்கும் - பொங்குகின்ற, கருணை - கிருபை, கடலே - கடலே!, சம்பூரண-பரிபூரணப்பொருளே!, போதத்தனே-ஞானசொரூபனே!, எங்கும்-எவ்விடத்தும், வியாபித்து-நிறைந்து, உணர்வாய் - அறிகின்றாய் (அவ்வாறிருக்க), என்-அடியேனின், இதயம்-மனத்தில், தங்கும்-தங்கியுள்ள, துயரம்-துன்பம், தெரியாத-அறிந்துகொள்ளாத, வண்ணம்-விதம், தடை-மறைப்பை, செய்தது-செய்துவிட்டது, ஆர்-யார் எ-று.

(வி-ரை) இறைவன் எங்கும் பரவி வியாபித்து எல்லாம் அறிபவன் ஆதலின், 'எங்கும் வியாபித் துணர்வாய்' என்றார். இறைவனை உணராதபடி ஆன்மாவை ஆணவமலந் தடைசெய்திருப்பதைக் குறிப்பிப்பான் 'என்னிதயத்துள்ளே தங்குந்துயரந் தெரியாதவண்ணம் தடைசெய்ததார்' என்றார். இறைவன் மனங்கசிந்து உருகும் அன்பர் அகத்தேயிருந்து சிவானந்தம் பெருகக் கருணைபாலிப்பவன் ஆதலினால், 'அங்கங்குழைந் துள்ளுருகு மன்பாளர்க் கணைகடந்து பொங்குங் கருணைக்கடலே' என்றார். இறைவன் அன்பர்க்கு அபரிமிதமாக அருள் செய்பவன் ஆதலினால் 'அணைகடந்து பொங்குங் கருணைக்கடலே' என்றார். இறைவன் கிருபாசமுத்திரம் ஆதலின் 'கருணைக் கடல்' என்றார். இறைவன் முற்றறிவன், பேரறிவன், ஓதாதுணர்வோன், உணர்த்தாதே யுணர்வோன் ஆதலின் 'சம்பூரண போதத்தனே' என்றார். 52

இறைவனே! பொய்யர் நட்பைவிட்டகல்வது எக்காலம் என்கின்றார்

வையக மாதர் சுகத்தையும்
பொன்னையும் மாயைமல
மெய்யையும் மெய்யென்று நின்னடி
யார்தம் விவேகத்தையும்
ஐயமில் வீட்டையும் மெய் நூலை
யும்பொய்ய தாகவெண் ணும்
பொய்யர்தந் நட்பை விடுவதென்
றோபரி பூரணமே.

(ப-ரை) பரிபூரணமே - சருவ வியாபியாயுள்ள பொருளே!, வையகம்-பூமியில், மாதர்-பெண்கள், சுகத்தையும் - (காம) இன்பத்தையும், பொன்னையும்-பொருளையும், மாயை-மாயாகாரியமாகிய, மலம் - அழுக்குள்ள, மெய்யையும்-உடம்பினையும், மெய்யென்று-சத்தியமென்று, நின்-தேவரீருடைய, அடியார்தம் - அடியார்களுடைய, விவேகத்தையும் - விவேகத்தையும், ஐயம் - சந்தேகம், இல்-இல்லாத, வீட்டையும்-முத்தியையும், மெய்-உண்மை, நூலையும்-நூல்களையும், பொய்யதாக-பொய்யாக, எண்ணும் - நினைக்கின்ற, பொய்யர்-பொய்யர், தம் - தங்கள், நட்பை - சிநேகத்தை, விடுவது - விட்டு நீங்குவது, என்றோ-எக்காலமோ? எ-று.



(வி-ரை) 'வையக மாதர் சுகத்தையும் பொன்னையும்' என்பதற்கு, பூமியையும், மாதர் சுகத்தையும், பொன்னையும் எனப் பிரித்துப் பொருள்கோடலும் ஒன்றாம். முன்னோரிடத்தும் 'பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்' என்றதுங் காண்க. 'மாயைமல மெய்யையும்' என்றது மாயையின் காரியமாயதும், மாயையிற் கட்டுப்பட்டுழல்வதும், மலம் நிறைந்ததுமாகிய உடல் என்பார் 'மாயைமல மெய்யையும்' என்றார். இவ் உலக இன்பத்திற்குக் கருவிகளாகப் பெரிதும் பெண், பொன், உடல்வேண்டப் பெறுதலினாலும், மறுமைக்குப் பயனற்றதாகையினாலும், அவை அநித்தியமாதலாலும் அதனை நித்தியமாக நினைந்து வாழ்ந்தேன் என்பார் 'வையகமாதர் சுகத்தையும் பொன்னையும் மாயைமல, மெய்யையு மெய்யென்றும்' என்றார். அடியார் விவேகத்தையும், அத்துவித முத்தியையும், இறைவன் நூலையும் பொய்யென் போர் நட்பைப் பூண்டிருந்தேன் என்பார் 'நின்னடியார் ... ... ... பொய்யர்தம் நட்பைவிடுவ தென்றோ' என்றார். சிவனடியார் விவேகம் உண்மை விவேகம் ஆதலின் 'நின்னடியார் தம் விவேகத்தையும்' என்றார். 'ஐயமில் வீடு' என்றது சுத்தாத்துவித முத்திநிலையை. மெய்நூல் - என்றது இறைவன் அருளிய நூலை. பொய்யர்தம் நட்பென்றது-புறச்சமயிகளின் நட்பை. 'வையகம்' இது பொருள்கள் வைப்பதற்கு இடமாக இருப்பது என்னும் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். இந்தச் செய்யுளில் வந்த உம்மைகள் அனைத்தும் எண்ணும்மைகள். இறைவன் எங்குமாய் எல்லாவற்றிலுமாய் நிறைந்திருப்பவனாதலின் 'பரிபூரணமே' என்றார். 53

இறைவனே! வினையால் நைந்துருகும் அடியேனுக்குத் தெளிவடையத்
தக்க பரிபக்குவ காலம் வருமோ வெனல்

அளியுங் கனியொத் தருவினை
யானுந் தயர்வுறுவேன்
தெளியும் படிக்குப் பரிபாக
காலமுஞ் சித்திக்குமோ
ஒளியுங் கருணையும் மாறுத
வின்பமு மோருருவாய்
வெளிவந் தடியர் களிக்கநின்
றுடும் விழுப்பொருளே.

(ப-ரை) ஒளியும்-பிரகாசமும், கருணையும்-கிருபையும், மாறுத-நீங்காத, இன்பமும்-சுகமும், ஓர்-ஒரு, உரு உரு, ஆய்-ஆகி, வெளி-வெளியே, வந்து-

வந்து (சகளிகரித்து), அடியார்-சிவனடியார்கள், களிக்க-மகிழ, நின்று-(சிற்சபையில் எழுந்தருளி) நின்று, ஆடும்-ஆனந்தநிர்த்தனத்தைச் செய்தருளும், விழு-சிறந்த, பொருளே-பொருளே!, அரு-கொடிய, வினையால்-வினையினால், அளியும்-கனிந்த, கனி-கனியை, ஒத்து-ஒத்து, நொந்து-வருந்திவாடி, அயர்வுறவேன் - அயர்வாகின்றேன், தெளியும் - தெளியும், படிக்கு - வண்ணம், பரிபாக - பரிபக்குவ, காலம் - காலமும், சித்திக்குமோ - அடியேனுக்கு உண்டாகுமோ எ-று.

(வி-ரை) 'அளியுங்கனி' என்றது மிகக்கனிந்த கனி என்ற பொருளது. 'அருவினை' தடுக்கமுடியாத துன்பங்களைத்தரும் வினை என்ற பொருளாதலின் கொடியவினை என்றாம். 'அயர்வுறுதல்' வேதனையாற் களைத்தல் என்ற பொருளது. 'தெளியும்படிக்கு' என்றது சிவஞானத்தால் தெளிவுறுதலைக் குறித்தது. 'பரிபாக காலம்' என்றது நல்வினையால் வருஞ் சுகானுபவத்தையும் தீவினையால்வருந் துக்கானுபவத்தையும் சிவபுண்ணிய மிகுதியால் சமத்துவமாக எண்ணும் ஞானபக்குவம் பெறுங்காலம். இறைவன் ஒளிமயமாகவும் கருணையுருவினனாகவும், ஆனந்தமயனாகவும் இருத்தலினால், 'ஒளியுங் கருணையு மாறாத வின்பமு மோருருவாய் வெளிவந்து' என்றார். இறைவன் அம்பலத்துப் பதஞ்சலி, வியாக்கிரபாதர், மால், பிரமர் கண்களிக்க அம்பலத் தாடியவர் ஆதலினால் 'வெளிவந் தடியார் களிக்க நின்றாடும் விழுப் பொருளே' என்றார். இறைவனைத் தவிர்த்து மேலான பொருள் இல்லாமையாலும், எல்லோர்க்கும் மேன்மையைத் தருதலாலும் 'விழுப் பொருளே' என்றார். 54

இறைவனே! என்மனம் புண்படத் தளரவைத்தாய் எல்லாம்
உன் செயலேயன்றி என் செயலில்லை எனல்

அடையார் புரஞ்செற்ற தேவேநின்
பொன்னடிக் கன்புசற்றும்
படையாத வென்னைப் படைத்துஇந்தப்
பாரிற் படர்ந்தவினைத்
தடையாற் றளையிட்டு நெஞ்சப்புண்
ணாகத் தளரவைத்தாய்
உடையா யுடைய படியன்றி
யான்செய்த தொன்றில்லையே.

(ப-ரை) அடையார்-பகைஞர்களுடைய, புரம் - திரிபுரத்தினை, செற்ற-எரித்தழித்த, தேவே - தேவனே!, நின் - தேவரீருடைய, பொன் - அழகிய, அடிக்கு-திருவடிக்கு, அன்பு-அன்பினை, சற்றும் - கொஞ்சமும், படையாத-வைக்காத, என்னை-அடியேனை, இந்த-இந்த, பாரில்-உலகத்தில், படைத்து-உண்டாக்கி, படர்ந்த - பரவிய, வினை - வினை என்னும், தடையால் - விலங்கினால், தளையிட்டு - தளைமாட்டி, நெஞ்சம் - மனமானது, புண் - புண், ஆக-



உண்டாக, தளர-தளரும்படி, வைத்தாய்-வைத்தனை, உடையாய்-அடியேனை ஆளாக உடையவனே!, நீ - தேவரீர், உடைய - உடைத்தாம், படி - தன்மை, அன்றி-அல்லாமல், யான்-அடியேன், செய்தது-செய்தது, ஒன்று-யாதொன்றும், இலை-இல்லை எ-று.

(வி-ரை) 'அடையார்' என்றது திரிபுராதியர்களை. 'புரம்' என்றது திரிபுரத்தை. 'தேவே' என்றது சிவபெருமானை. ஆன்மாக்களை இறைவன் வினைவழி ஆட்டுவிக்கின்றான் ஆதலின் 'வினைத்தடையாற் றளையிட்டு நெஞ்சம்புண்ணாகத் தளரவைத்தாய்' என்றார். 'உடையாய்' என்பதற்கு எல்லாவற்றையும் தனது உடைமையாக உடையவனே எனப் பொருள்கொள்ளலும் ஒன்று. இறைவன் சந்நிதி மகிமையில் எல்லாத்தொழிலும் நடைபெறுகின்றதாதலினாலும் ஆன்ம சுதந்தரன் அல்ல ஆதலினாலும் 'உடைய படியன்றி யான்செய்த தொன்றிலையே' என்றார். ஏ-ஈற்றசை. 55

நின்னடிக் கன்பிலார் எமன் வருகையி லென்செய்வா ரெனல்

ஆடுங் கறங்குந் திரிகையும்
போல அலைந்தலைந்து
காடுங் கரையுந் திரிவதல்
லால்நின் கருணைவந்து
கூடும் படிக்குத் தவமுய
லாத கொடியர்எமன்
தேடும் பொழுதென்ன செய்வார்
பரானந்த சிற்சுடரே.

(ப-ரை) பரம்-உயர்ந்த, ஆனந்தம்-சுகத்தைத்தரும், சித்-ஞானமயமான, சுடரே - சுடரே!, ஆடும் - ஆகாயத்திற் பறக்கும், கறங்கும் - காற்றாடியையும், திரிகையும்-குயவன் தண்டசக்கரத்தையும், போல-போல, அலைந்து-திரிந்து, அலைந்து-திரிந்து, காடும்-காட்டிலும், கரையும்-பூமியிலும், திரிவது-சஞ்சரிப்பது, அல்லால்-அல்லாமல், நின்-தேவரீருடைய, கருணை-கிருபை, வந்து-வந்து, கூடும்-அடையும், படிக்கு-படிக்கு, தவம்-தவத்தை, முயலாத - செய்யாத, கொடியர்-கொடியவர்கள், எமன்-கூற்றுவன், தேடும்-தேடும், பொழுது-காலத்தில், என்ன-உய்வதற்கு என்னகாரியத்தை, செய்வார்-செய்வார்கள் எ-று.

(வி-ரை) 'ஆடுங் கறங்கு' என்றது ஆகாயத்திற் காற்றில் பறக்கும் காற்றாடியை. **பட்டினத்தடிகள்** தேகத்தை, "காற்றிற் பறக்குங் கானப்பட்டம்" என்றதூஉங் காண்க. 'திரிகை' மாவரைக்கும் திரிகைக்கல் என்பாரும் உண்டு. 'அலைந்து அலைந்து' இது மிகுதிபற்றி அடுக்கி வந்தது. இறைவன் அருளைப் பெறத் தவஞ்செய்யாதவர் வீணே தவவேடம் பூண்டு காடுங் கரையும் திரிவதிற் பயனில்லை என்பார் 'அலைந் தலைந்து காடுங் கரையும் திரிவதல் லானின் கருணைவந்து கூடும்படிக்குத் தவமுயலாத கொடியர் எமன் தேடும் பொழு தென்ன செய்வார்' என்றார். 56

நெஞ்சே கற்றதனாற் பயனில்லை, அன்பருடன் சேரப்பாரெனல்

கற்றும் பலபல கேள்விகள்
　　கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத்
　　தூடு சுழலிலென்னும்
குற்றங் குறைந்து குணமே
　　விடுமன்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண்
　　டாய்சுத்த மூடநெஞ்சே.

(ப-ரை) சுத்த-முழு, மூடம்-மூடத்தனத்தையுடைய, நெஞ்சே-மனமே!, கற்றும்-பலநூல்களைப் படித்தும், பலபல - பற்பல, கேள்விகள் - கேள்விகளை, கேட்டும்-கேட்டும், கறங்கு-காற்றாடி, என-என்று ஒப்புக்கூற, சுற்றும்-சுற்றித் திரியும், தொழில்-தொழிலை, கற்று - தேர்ந்து, சிற்றின்பத்து - உலக இன்பத்து, ஊடு-ஊடே, சுழலின்-அலைந்தால், என்-என்ன பிரயோசனம், ஆம்-ஆகும், குற்றம்-குற்றம், குறைந்து-இல்லாதபடி, குணம்-நற்குணம், மேலிடும்-அதிகரிக்கின்ற, அன்பர் - சிவனடியார், கூட்டத்தை-கூட்டத்தை, முற்றும்-முழுவதும், துணை-உதவி, என-என்று, நம்பு-நம்பிடுவாயாக எ-று.

(வி-ரை) 'கற்றும்' என்றது பல ஞானநூற்களைக் கற்றும் என்பது கொண்டு. 'பலபல கேள்விகள் கேட்டும்' என்றது பற்பல ஞானக்கேள்விகளை விசாரித்தறிந்தும் என்பது பொருளாம். இனி, கற்றல் கேட்டல் என்பதனோடு இனம்பற்றிச் சிந்தித்தல், தெளிதல்களையும் கூட்டியுரைப்பினும் பொருளாம். இதில் நின்ற உம்மைகள் இரண்டும் எண்ணுப் பொருளில் வந்தன. ஞானநூற்களைக் கற்றாரும், பற்பல ஞானநூற்களைக் கேட்டாரும் வினைவயத்தால் சிற்றின்பத்திலுழல லுண்டாதலின், 'கற்றுங் ... ... ... சிற்றின்பத்தூடு சுழலினென்னும்' என்றார். குற்றம் அற்றவன் இறைவனே ஆதலினாலும், மக்களிற் குற்றமற்றவர்கள் இல்லை யாதலினாலும், 'குற்றங் குறைந்து குணமே விடுமன்பர் கூட்டம்' என்றார். ஈண்டு "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள், மிகைநாடி மிக்க கொளல்" என்ற **திருக்குறள்** இங்குக் கருதத்தக்கது. அடியார் கூட்டத்துள் கூடியிருப்பின் கற்றதுங் கேட்டதும் வீணாகாது பயன்படுமாதலின் 'அன்பர் கூட்டத்தையே முற்றுந் துணையென நம்புகண்டாய்' என்றார். இதனானன்றே **ஔவைப் பிராட்டியாரும்** "பெரியாரைத் துணைக்கொள்" என்றாள். இன்னும்,

> "அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப்
> படிமீதில் வேறு பயனுளதோ பங்கயன் வகுத்த
> குடியான சுற்றமும் தாரமும் வாழ்வும் குயக்கலங்கண்
> தடியா லடியுண்ட வாறொக்கு மென்றினஞ் சார்ந்திலரேல்"

என்ற **பட்டினத்தார்** வாக்குங் காண்க.





பேத வுணர்வை நீக்கியதற்குக் கைம்மாறென் தரவல்லே னெனல்

நீயென நானென வேறில்லை
　　யென்னு நினைவருளத்
தாயென மோன குருவாகி
　　வந்து தடுத்தடிமைச்
சேயெனக் காத்தனை யேபர
　　மேநின் றிருவருளுக்
கேயென செய்யுங்கைம் மாறுள
　　தோசுத்த வேழையனே.

(ப-ரை) பரமே-பரம்பொருளே!, நீ-நீ, என-என்றும், நான்-நான், என-என்றும், வேறு - அன்னியம், இல்லை - இல்லை, என்னும்-என்று சொல்லும், நினைவு-எண்ணமானது, அருள-அடியேனுக்கு உண்டாக்க, தாய்-தாய், என-என்று கூறும்படி, மோன - மௌன, குரு - குருவாகி, வந்து - எழுந்தருளி வந்து, தடுத்து - (பிரபஞ்ச விசாரத்தினின்றும்) தடுத்து, அடிமை - அடிமையாகிய அடியேன், சேய் - தேவரீருடைய குழந்தை, என - என்று, காத்தனையே-காத்தருள் செய்தாயே, நின் - தேவரீருடைய, திருவருளுக்கே-திருவருட்கே, சுத்த - சுத்த, ஏழையேன் - எளியேன், செய்யும் - செய்தற்குரிய, கைம்மாறு - பிரதியுபகாரம், உளதோ-உண்டோ?, என-(உண்டாயின்) அது இன்னதென்று சொல்வாயாக எ-று.

(வி-ரை) 'நீயென நானென வேறில்லை' என்றது அத்துவித பாவனையை. இதனால் முன் தனக்குத் துவிதபாவனையே இருந்ததென்பது குறித்ததாகும். உலகில் தாயிற் சிறந்த அன்புடையவர் இல்லையாம். இறைவனோ தாயினுமானச் சிறந்த அன்புடையவன். ஈண்டு தாய்போலும் அன்பின் என்பார் 'தாயென மோன குருவாகி' என்றார். இறைவனே பக்குவிகட்கு அவர்களின் பக்குவமறிந்து சற்குருவாகிவந்து கடாட்சித்தருளலால் 'மோன குரு வாகிவந்து தடுத்தடிமைச் சேயெனக் காத்தனையே பரமே' என்றார். இறைவன் கைம்மாறு வேண்டாது அனைத்துயிர்க்கும் அருள்செய்பவன் ஆதலினாலும், அவனுக்குக் கைம்மாறு செய்யவும் இயலா தாதலினாலும் 'நின்றிரு வருளுக்கே யென்செய்யுங் கைம்மா றுளதோ' என்றார். தேவரீர் கைம்மாறு கருதினீராயின் அடியேன் செய்யுந் தாமுடையன் அல்லன் என்பார் 'சுத்த வேழையனே' என்றார். எ-ஈற்றசை.



நின் உபதேசப்படி இயமாதி செய்வே னெனல்

ஆத்திரம் வந்தவர் போலலை
　　யாமல் அரோகதிட
காத்திரந் தந்துஎன்னை யேயன்னை
　　போலுங் கருணைவைத்திம்

மாத்திர முன்னின் றுணர்த்தினை
யேமௌ னாஇனிநான்
சாத்திரஞ் சொன்ன படியிய
மாதியுஞ் சாதிப்பனே.

(ப-ரை) மௌனா-மௌனகுருவே!, ஆத்திரம் - மிகவும் அவசரம், வந்தவர் - அடைந்தவர், போல் - போல, அலையாமல் - திரியாமல், அரோகம் நோயின்மையாகிய, திடம்-வலிமையான, காத்திரம்-சரீரம், தந்து கொடுத்து, என்னை-அடியேனை, அன்னை-தாய், போலும்-போலும், கருணை-கிருபையை, வைத்து - செய்து, இ-இந்த, மாத்திரம் - அளவாயினும், முன் - கண்ணுக்கு நேரே, நின்று - எழுந்தருளி நின்று, உணர்த்தினையே - தெரிவித்தனையே, இனி-இனிமேல், நான்-அடியேன், சாத்திரம்-சாஸ்திரம், சொன்ன-கூறிய, படி-விதமாக, இயமாதியும்-இயமம் முதலாகிய எட்டுவகையோக உறுப்புகளையும், சாதிப்பன்-செய்துமுடிப்பேன்; எ-று.

(வி-ரை) 'ஆத்திரம்' விரைவு உணர்த்துஞ் சொல். 'அரோகம்' நோயின்மை. இது வடசொல் (அ+ரோகம்=அரோகம்) இதில் அகரம் எதிர்மறை உபசர்க்கம் காத்திரம்-தேகம் இது வடசொல். 'இம்மாத்திரம்' என்பது இந்த அளவு என்னும் பொருளது. இனி, இதற்கு இம்மென்னு மாத்திரையில் உபதேசித் தருளினையே எனப்-பொருள் கூறினும் பொருந்தும். 'மௌனா' இது விளியுருபு எற்று நின்றது. சேய்மை விளி. 'சாத்திரம்' இது சாஸ்திரம் என்ற வடசொற் சிதைவு. இயமமாதி யோக உறுப்புகளாவன- ஆதாரம், இயமம்,நியமம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, சமாதி, தியானம் என்பன. எ-ஈற்றசை. 59

---

## உடல் பொய்யுறவு

### குருவின் உபதேசமே மெய்யுறவெனல்

உடல்பொய் யுறவாயின் உண்மையுற வாகக்
கடவாரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
யுற்றுப்பார் மோனனொரு சொல்லே யுண்மைநன் றாய்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ்.

(ப-ரை) உடல் - தேகமே, பொய் - நமக்குப்பொய், உறவு - சொந்தம், ஆயின்-ஆகுமேயானால், உண்மை-சத்தியமாகிய, உறவு-சொந்தம், ஆக-ஆதற்கு, கடவார் - கடன்மைப்பட்டவர், ஆர் - யாராவார்? தண் - குளிர்ந்த, அருளே-திருவருளே, கண்டாய் - கண்டாய், திடம்-உறுதி, உடன் - உடனே, உற்று-கவனித்து, பார் - பார்ப்பாயாக, மோனன் - மௌனகுருவின், ஒரு-ஒப்பற்ற சொல்லே-உபதேசமொழியே, உண்மை - சத்தியமாகும், நன்று-நன்கு, ஆக-



ஆக; பற்றி-பற்றி, பார்-பார்ப்பாயாக, மற்ற - மற்றவைகள், எல்லாம்-எல்லாம், பாழ்-பொய்யேயாகும் எ-று.

(வி-ரை) 'உடல்' இது மாயாகாரியமாகியது; வினையினால் ஆகியது. துன்புறுதற்கே உரியதாதலின், துன்பப்படு என்னும் பொருளையுடைய இச்சொல் தேகத்திற்குக் காரணப்பெயராக அமைந்தது. எல்லாக் காலத்தும், எல்லா இடத்தும், எல்லாத்தொழிற்கும் நம்மைவிட்டு நீங்காத இந்த வுடலே பொய்யாகுமாயின் பின் எதுதான் நமக்கு உறவுடையதாகும் என்பார், 'உடல் பொய் யுறவாயி னுண்மையுற வாகக் கடவாரார்' என்றார். உண்மை உறவாவது திருவருளும், குருவுபதேசமுமாம் என்பார், 'தண்ணருளே கண்டாய்-திடமுடனே, உற்றுப்பார் மோன னொருசொல்லே யுண்மை' என்றருளினார். 'திடமுடனே' என்றது சிவஞானத்திடத்துடனே என்ற பொருளதாம். 'தண்ணருள்' என்றது இறைவன் திருவருளை. இறைவன் திருவருளும், குருஉபதேச மொழியுந்தவிர்த்து உடம்பு முதல் மற்றைய எல்லாம் சுத்தப்பொய் என்பார் 'நன்றாய்ப் பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ்' என்றார். இக்கருத்தை,

"காடோ செடியோ கடற்புறமோ கனமே மிகுந்த
நாடோ நகரோ நகர்நடுவோ நலமே மிகுந்த
வீடோ புறந்திண்ணை யோதமி யேனுடல் வீழுமிட
நீடோய் கழுக்குன்றி லீசா வுயிர்த்துணை நின்பதமே"

என்னும் **பட்டினத்தடிகளின்** வாக்காலும்,

"மூப்புப் பிணியே தலைப்பிரிவு நல்குரவு
சாக்காடு மெல்லாஞ் சலமிலவாய்—நோக்கிர்
பருந்துக் கிரையாமிங் யாக்கையைப் பெற்றான்
மருந்து மறப்பதோ மாண்பு"

என்ற **அறநெறிச் சாரத்தாலும்** அறியலாம்.

'உடற் பொய்யுறவு' என்னும் இப்பகுதி எண்பத்துமூன்று செய்யுள்கள் கொண்டது. எல்லாச் செய்யுளும் நேரிசை வெண்பாக்களால் ஆயது, இப்பகுதியின் முதற்செய்யுளின் முதலடியில் முதலில் 'உடல் பொய் யுறவு' என்று தொடங்கலின் இப்பகுதிக்கு 'உடல் பொய் யுறவு' எனவே பெயர் எய்தியது. 1

### பஞ்சபூதமு மவனுகையால், நீ அறியவேண்டியது யாதெனல்

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லால்
கற்குநெறி யாதினிமேற் காண்.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, பார்-பிருதிவி, ஆதி-முதலிய, பூதம்-பூதங்கள், எல்லாம்-எல்லாம், பார்க்குங்கால்-ஆராயுங்காலத்து, அ-அந்த, பரத்தின்-

பரம்பொருளின், சீர்-சிறந்தவடிவு, ஆக-ஆக, நிற்கும்-இருக்கும், திறம்-விதம், கண்டாய் - அறிந்தாய் (ஆதலால்), யாம் - நாம், நேராக-ஒழுங்காக, நிற்கும்-நிற்கின்ற, திருவருளில்-திருவருள் நிலையில், நிற்பது - இருப்பது, அல்லால்-அல்லாமல், இனி-இனி, மேல்-மேலே, கற்கும் - தெரிந்துகொள்ளும், நெறி-வழி, யாது-யாது எ-று.

(வி-ரை) 'பார்' இது பருமையுடையது என்னும் காரணம்பற்றிப் பூமிக்குவந்த காரணப்பெயர். இது, பார்வைக்குப் புலனாகி உண்மைபோல் தோன்றி அழியும் மாலையது என்ற பொருளது. 'அப்பரம்' இதில் வந்த அகரச்சுட்டுப் பண்டறிசுட்டு. இறைவன் உயர்வானவன் ஆதலின் 'பரம்' எனப் பெயர் எய்தினன். இறைவன் அட்டமா வுருவில் பூதங்களின் உருவம் சேர்ந்த தாதலினால், 'பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தன் சீராக நிற்குந் திறங்கண்டாய்' என்றார். கற்பதெல்லாம் இறைவன் திருவருள் பெற்று நிற்கவே யாதலினால் 'நேராக நிற்குந் திருவருளில் நெஞ்சேயாம் நிற்பதல்லாற் கற்குநெறி யாதினிமேற் காண்' என்றார். இதனாலன்றோ திருவள்ளுவரும், "கற்றதனா லாயபய னென்கொல் வாலறிவன், நற்றா டொழாஅ ரெனின்" என்பதனா லறியலாம். 2

உண்மை யுணரா வெனக்கு நின் அடியானென்பது எவ்விதம் விளங்கு மெனல்

**மெய்யான தன்மை விளங்கினால் யார்க்கேனும்**
**பொய்யான தன்மை பொருந்துமோ—ஐயாவே**
**மன்னு நி ராசையின்னம் வந்ததல்ல உன்னடிமை**
**யென்னு நிலை யெய்துமா றென்.**

(ப-ரை) ஐயாவே-ஐயனே!, மெய்யான-உண்மையான, தன்மை-தன்மை, விளங்கினால்-விளங்குமேயாகில், யார்க்கு-எப்படிப்பட்டவர்கள், ஏனும்-என்றாலும், பொய்-பொய், ஆன-ஆகிய, தன்மை - தன்மை, பொருந்துமோ - உண்டாகுமோ, மன்னும்-நிலையாகிய, நிராசை-ஆசையின்மை, இன்னும்-இன்றளவும், வந்தது-வந்தது, அல்ல - இல்லை (இவ்வாறாயின்), உன் - தேவரீருடைய, அடிமை - அடிமை, என்னும் - என்று கூறும்படியான, நிலை நிலையானது, எய்தும் - அடையும், ஆறு-விதம், என்ன-என்னவாகும் எ-று.

(வி-ரை) 'மெய்யான தன்மை' என்றது மெய்ஞ்ஞான நூற்களிற் கூறியிருக்கப்பெற்ற இறைவன் தத்துவங்களும் ஆன்மதத்துவங்களும் மாயாதத்துவங்களும் ஆகிய இவற்றின் உண்மை நிலைகளை. இனி, மெய்கண்ட சாத்திரங் கூறும் உண்மைநிலை எனினும் பொருந்தும். 'பொய்யானதன்மை' என்றது பொய்ச் சமயவாதிகள் கூறும் பொய்ப் பொருள்களின் தன்மையை. நின் திருவருளுக் குரியவனாக இருந்தும் அடியேனுக்கு ஆசையின்மை எய்தவில்லை. ஆசை யின்மை என்னும் நிராசை உண்டாகாதகாலத்து அடியேன் தேவரீரின் அடியான் எனச் சொல்ல என்ன தகுதி உண்டு என்பார்,



'மன்னுநி ராசை யின்னம் வந்ததல்ல வுன்னடிமை யென்னுநிலை யெய்துமா றென்' என்றார். நிராசை உண்டாய காலத்தே தான் சிவானந்தப் பேறு கிட்டும் இதனாலன்றோ **மணிவாசகரும்**,

> "தந்தைதாய் குரவ னான் சங்கர னிராசை பெண்டிர்
> மைந்தர்பல் லுயிருஞ் சுற்ற மாசிலா வீச னன்பர்
> அந்தமில் பிறவி யேழு மடிபகை யென்ப தோர்ந்தேம்
> எந்தையார் கருணை காட்டி யெம்மையாட் கொண்ட வன்றே"

என்று கூறியருளினர். 3

இறைவனே! அறிவென்னும் பெயர் நின்னருளா லேற்பட்டதெனல்

**அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்**
**குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயாம்**
**நீயுணர்த்த நா னுணரு நேசத்தா லோவறிவென்**
**றேயெனக்கோர் நாமமிட்ட தே.**

(ப-ரை) அறியாமை - அஞ்ஞானம், மேலிட்டு - அதிகப்பட்டு, அறிவு - ஞானம், இன்றி-இல்லாது, நிற்கும்-வாழும், குறியேற்கு-குறிப்பைக் கொண்டுள்ள அடியேனுக்கு, அறிவு-அறிவு உடையவன், என்ற - என்று சொல்லும் படியான, கோலம் - உருவம், வறிதே - வீணே, ஆம் - ஆகும், நீ - தேவரீர், உணர்த்த-உள்ளத்தின்கண்ணே இருந்து அறிவிக்க, நான்-அடியேன், உணரும்-எல்லாவற்றையும் அறியும், நேசத்தாலோ - அன்பினாலோ, எனக்கு-அடியேனுக்கு, அறிவு-அறிவுடையவன், என்று-என்று, ஓர்-ஒரு, நாமம்-பெயர், இட்டது-ஏற்படுத்தியது எ-று.

(வி-ரை) 'அறியாமை' என்றது அறிவின்மையை, இதுவே அஞ்ஞானம், இருள் எனவும், அவித்தை எனவும் பெறும். 'குறியேற்கு' என்றது குறிப்பைக் கொண்டுள்ள அடியேனுக்கு என்பது பொருள். இனி, குறுகிய தன்மையுடையவன், சிறுவன் என்னும் பொருளது. 'ஆம்' இது 'ஆகும்' என்பதன் தொகுத்தல் விகாரம். இறைவன் எல்லா உயிருள்ளும் நின்று உணர்த்தி வருகின்றானாதலின் 'நீயுணர்த்த நானுணரு நேசத்தாலோ, வறிவென்றே யெனக்கோர் நாமமிட்ட தே' என்றார். இருள்மேலிட்டவிடத்து விளக்கம் இருக்காது ஆதலின் 'அறியாமை மேலிட் டறிவின்றி நிற்கும்' என்றார். ஆன்மாவுக்கு 'அறிவன்' என்றதோர் உண்மையால் இவ்வாறு கூறினர். இதனானே இறைவன் அறிவு மயன் சுதந்தரன். ஆன்மா சுதந்தர ஹீனன் இறைவன் உணர்த்த உணர்வோன், ஆட்ட ஆடுவோன் என்பதூஉம் அறியத்தக்கதாகும். 4

மனக்குரங்கைக் கண்டித்தல்

**ஏதுக்குச் சும்மா விருமனமே என்றுனக்குப்**
**போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு**

**வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடினையேஉன்**
**புந்தியென்ன போதமென்ன போ.**

(ப-ரை) மனமே - நெஞ்சமே!, ஏதுக்கு - என்னகாரணத்திற்காக (அலைகின்றாய்), சும்மா-மவுனமாக, இரு - இரு, என்று-என்று, உனக்கு-உனக்கு, போதித்த-உபதேசித்த, உண்மை-சத்தியத்தை, எங்கே-எவ்வழியிலே, போக-போமாறு, விட்டாய்-விட்டுவிட்டாய், வாதுக்கு - வீண்தர்க்கத்திற்கு, வந்து-வந்து, எதிர்த்த-தாக்கிய (எதிர்கொண்ட), மல்லரை-மல்லரை, போல்-போல வாதாடினையே-வம்புசெய்தாயே, உன்-உனது, புந்தி - புத்தி, என்ன-இருந்த விதம் என்ன, போதம் - அறிவு, என்ன-இந்தவிதம் என்ன, போ - என்னை விட்டுத்தொலைந்து போவாயாக எ-று.

(வி-ரை) மாயாப் பிரபஞ்சத்தில் ஈடுபட்டு அலைகின்ற மனதை நோக்கி விளித்துக் கூறுதலினால் 'ஏதுக்கு சும்மாஇரு மனமே' என்றார். 'சும்மா' இருத்தலாவது,

> "மனமாதி மூன்றும் மருவுசெய லற்றே
> கனமான ஈசன் கழலைத்—தினமான
> சிந்தனையி னின்று சிவானந்தப் பேரின்பில்
> வந்தனையா நிற்கும் வளம்"

என **சித்தாந்த சாகரநூலிற்** கூறியபடி திரிகரண சேட்டையொடுங்கிச் சிவன்கழலைச் சிந்தித்துச் சிவானந்தப் பெருக்கில் மூழ்கி இருத்தல். 'மல்லர்' என்றது மல்யுத்தக்காரரை. 'போ' முன்னிலை ஏவல். சினம்பற்றி வந்த ஏவல். 5

இறைவனே! அத்துவிதக் கட்டுக்கு உள்ளாவது எக்காலமோ எனல்

**சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தால் துக்க**
**சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—திகபரத்தும்**
**விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்**
**கட்டுக்கு ளாவதென்றோ காண்.**

(ப-ரை) சகம்-உலகம், அனைத்தும்-எல்லாம், பொய்-பொய், என-என்று, உணர்ந்தால்-அறிந்தால், துக்கம் - துக்கம் (துன்பம்), சுகம் - சுகம் (இன்பம்), அனைத்தும்-எல்லாம், பொய்-பொய், அன்றோ-அல்லவா?, சோராது-சோர்வு அடையாமல், இகம் - இவ்வுலகத்தும், பரத்தும் - மேல் உலகத்தும், விட்டு-விட்டு, பிரியாத-நீங்காத, மேலான-மேலாகிய, அத்துவிதம்-அத்துவிதம் என்கின்ற, கட்டுக்கு-கட்டுக்கு, உள் - உள்ளே, ஆவது - அகப்படுவது, என்றோ-எக்காலமோ? எ-று.

(வி-ரை) இங்கு 'பொய்' என்றது மாறுபாட்டை, அஃதென்னை எனின் என்றும் ஒரே தன்மையில் இராது மாறுபாடடையுந் தன்மையது என்றதாம். இதனையே இவ்வுலகத்து உண்டாம் சுகதுக்கங்களும் பொய் என்றார்,



இறைவன் எல்லா உயிரினிடத்துங் கலந்துளன். அது திரோதானத்தால் தெரிய முடியாதபடி தடைபட்டிருக்கிறது. அத்திரோதானமே திருவருளாக விளங்குங்காலத்து அத்துவித உண்மை விளங்கும். இதனையே முத்தி, பேரின்பநிலை என்பர். இதனை,

> "மாயையினால் தோன்றுகின்ற வையஞ் சுகதுக்கம்
> போயொழிய மெய்ஞ்ஞானப் பூணையின்—வையகத்தார்
> சொல்லுமொரு அத்துவிதத் தூயசுகம் வாய்த்திடுமே
> அல்லவென்ப தில்லை யறி"

என்ற **சித்தாந்தசாகர** வெண்பாவாலும் அறியலாம். 6

சந்திரனிடத்து ஊறுகின்ற அமிர்தமானது மதுரவஸ்துக்களுள் எது வெனல்

**கற்கண்டோ தேனோ கனிரசமோ பாலோஎன் [ட**
**சொற்கண்டா தேதெனநான் சொல்லுவேன்—விற்கண்**
**வான மதிகாண மௌனிமவு னத்தளித்த**
**தானமதி லூறுமமிர் தம்.**

(ப-ரை) வில்-ஒளி, கண்ட-கொண்ட, வானம்-உயர்ந்த, மதி-சந்திரனை, காண - காணும்படி, மௌனி - மோனகுரு, மௌனத்து - மௌனநிலையில், அளித்த-உபதேசித்தருளிய, தானம்-இடமாகிய, அதில் - அம்மண்டலத்தில், ஊறும்-சுரக்கின்ற, அமிர்தம்-அமிர்தமானது, கற்கண்டோ-கற்கண்டுதானோ?, தேனோ-தேன்தானோ?, கனி-முக்கனிகளின், ரசமோ-சாறுதானோ?, பாலோ-பால்தானோ?, என்-அடியேனின், சொற்கு - வார்த்தைக்கு, அண்டாது-எட்டாது, எது-இவற்றுள் எந்தத்தன்மையது, என - என்று, நான் - அடியேன், சொல்லுவேன்-அறிந்துசொல்ல வல்லவனாவேன் எ-று.

(வி-ரை) 'கனி' என்றது ஈண்டு, வாழை, பலா, மா என்னும் முக்கனிகளைக் குறித்தது. கனிவு உடைமையால் கனிகளுக் கனி எனும் பெயர் உண்டாயிற்று. முதல் இரண்டடிகளிலும் வந்த ஓகாரங்கள் எல்லாம் வியப்பு வினாக்கள். 'வானமதி' உயர்ந்தமதி, இனி சிதாகாயத்திலுள்ள சந்திரமண்டலம் என்றலும் ஆம். 'மௌனி' என்றது மௌனகுருவை. 'மௌனி மவுனத்தளித்த தானமதி லூறுமமிர்தம்' என்றது யாதெனின், மூலாதாரத்திலே கீழ்நோக்கிய முகமாக கண்களை முகிழ்த்து குண்டலிசத்திதன்னைக் கும்பித்த பிராணவாயுவினால் அக்கினி மண்டலத்தை மூட்டி எழுப்பி மூலாதார முதற் கொண்டு ஆக்கினை முடிய ஆறு ஆதாரங்களினிடத்தும் செல்லுமேயாகில் சந்திரமண்டலத்திலிருந்தும் அமுதப்பிரவாகம் சிந்தும் அதனை உண்டு சிவயோகிகள் பசிதாகம், களைப்பு இளைப்பின்றிப் பேரின்பநிட்டையில் இருப்பர் இத்தகைய தன்மையினை அனுபவிக்கும்படி அடியேனுக்கு ஞானோபதேசத்தைச்செய்து யோகநிட்டை வழியையுங் காட்டியருளினர் என்பதாம். 7

நிட்டையின் பெருமை பேசல்

**கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்**
**வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று**
**மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்**
**பொய்யாம் பிறப்பிறப்புப் போம்.**

(ப-ரை) கேட்டலுடன் - ஞானோபதேசங்களைக் கேட்டலோடு, சிந்தித்தல்-மனத்தே நினைவுகூர்தல், கேடு-தீமை, இலா-இல்லாத, மெய்-உண்மையை, தெளிதல் - தெளிவுபெறல் (நிதித்தியாசனம்) முதலியவைகளால், வாட்டம்-தளர்ச்சி, அறு-நீங்காத, உற்பவம் - பிறவியாகிய, பிணி - நோய், மாறுமோ-ஒழியுமோ?, நாட்டம்-லட்சியம், உற்று - பொருந்தி, மெய்-உண்மை, ஆன-ஆகிய, நிட்டையினை - நிட்டையை, மேவினர்க்கு - அடைந்தவர்களுக்கு, அன்றோ-அல்லவோ, பொய்-பொய், ஆம்-ஆகிய, பிறப்பு-சனனமும், இறப்பு-மரணமும், போம்-ஒழியும் எ-று.

(வி-ரை) 'கேட்டல்' குருஉபதேசங் கேட்டல், ஞானநூற் கேட்டல், நிட்டை மார்க்கங் கேட்டல் என்னும் பொருளில் வந்தது. 'கேட்டலுடன்' என்றதில் உள்ள உடன் என்றது மூன்றன் உருபு, உடனிகழ்ச்சிப் பொருளது. 'சிந்தித்தல்' என்றது மனனம் பண்ணுதலை. 'மெய்த்தெளிவு' என்றது உபதேசித்த உபதேசங்களின் உண்மைப்பொருளைத் தேர்ந்தறிதல். 'உற்பநோய்' உற்பவித்தலாகிய நோய் என விரிந்து பிறவிநோயைக் குறிக்கும் இது பண்புத்தொகை. ஒருவனுக்கு முத்திப்பேறடைய கேட்டலும், சிந்தித்தலும், தெளிதலும், நிட்டை கூடலும் ஆகிய இந்நான்கும் வேண்டற்பாலனவாம். நிட்டை கூடாது கேட்டலாலும், சிந்தித்தலாலும், தெளிதலாலும் பயன் சித்திக்காது பிறப்பிறப்பறாதென்பார். 'நாட்டமுற்று மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான் பொய்யாம் பிறப்பிறப்புப் போம்' என்றார். 'பொய்யாம்' பிறப்பிறப்பு என்றது நித்தியமின்றி மாறி மாறி வரும் இயல்பு உடையது என்றும் பொருள் தந்து நின்றது. 8

மனமே! உலகை மதியாதவர் தத்துவத்திற் பொருந்தார் அனுபூதியிலேயே இருப்பர் அவர்களின் நீதியை ஆராய்வாயாக எனல்

**மாயா சகத்தை மதியாதார் மண்முதலா**
**யேயான தத்துவத்தி லெய்துவரோ—நேயானு**
**பூதிநிலை நிற்கப் பொருந்துவர்கள் அன்னவர்த**
**நீதியையே யோர்மனமே நீ.**

(ப-ரை) மனமே-நெஞ்சமே!, மாயா-மாயாகாரியமாகிய, சகத்தை - உலகத்தினை, மதியாதார் - சத்தியமென்று மதிக்காதவர்கள், ஆன-ஆகிய, மண்-பிருதிவி, முதலாயே - முதலாயுள்ள, தத்துவத்தில் - தத்துவங்களில், எய்துவரோ-பொருந்துவார்களோ, நேயம் - அன்புடைய, அனுபூதி - சுவானுபூதி, நிலை - நிலையினில், நிற்க-இருக்க, பொருந்துவர்கள்-இருப்பார்கள், (ஆதலால்)



அன்னவர்தம்-அத்தகையாரின், நீதியையே - நீதிதன்னையே, நீ-நீ, ஓர்-அறிவாயாக எ-று.

(வி-ரை) உலகம் அசுத்த மாயாகாரியமாதலின் 'மாயா சகத்தை' என்றார். 'மதியாதார்' என்றது தத்துவஞானிகளை. மண் முதலான ஆனதத்துவம் என்றது-பிருதிவி தத்துவம் முதலாக நாததத்துவம் ஈறாக உள்ள தத்துவங்களை. அனுபூதிநிலை என்றது - சுத்தாத்துவித சித்தாந்த சிவானுபூதியினை. 'அனுபூதி நிலைநிற்கப் பொருந்துவர்கள்' என்றது, சன்மார்க்க நெறியினர்களாகிய வைதிக சித்தாந்தசைவர்களை. 9

உறுதி கூறல்

**இகமுழுதும் பொய்யெனவே யேய்ந்துணர்ந்தா லாங்**
**மிகவளர வந்தவருண் மெய்யே—அகநெகிழப் [கே**
**பாரீர் ஒருசொற் படியே யனுபவத்தைச்**
**சேரீர் அதுவே திறம்.**

(ப-ரை) இகம் - இவ்வுலகம், முழுதும் - முற்றும், பொய் - நிலையற்றன, எனவே-எனவே, ஏய்ந்து - பொருந்தி, உணர்ந்தால் - அறிந்துகொண்டால், ஆங்கே - அந்தக்காலத்திலேயே, மிக-அதிகமாக, வளர-பெருக்கமுற, வந்த-ஏற்பட்ட, அருள்-திருவருள், மெய்யே-(அடைவது) உண்மையேயாம், அகம்-மனமானது, நெகிழ-இளக, பாரீர்-பாருங்கள், ஒரு-ஒப்பற்ற, சொல்-மோனி உபதேசச் சொல்லின், படியே - படியே, அனுபவத்தை - சிவானுபவத்தை, சேரீர்-சேருங்கள், அதுவே-அவ்வாறு செய்தலே, திறம்-உறுதியாகும் எ-று.

(வி-ரை) இகம் - என்றது இவ்வுலகத்தை. முழுதும் என்றது உலகத்தையும் உலகப்பொருள்களையும் என்பதாம். 'உலகம் பொய்யெனத்தோன்றவிடத்து அவைகளிடத்து அவாப் பிறக்கும்; அதுவே அவாவிய பொருளைப் பெற முயற்சி பிறக்கும். வினை எய்தும். வினைசார பிறப்பிறப்புறும் ஆகையாலும், ஞானமில்லார்க்கே உலகம் பொய்யாகத் தோன்றாதாகையாலும் 'இகமுழுதும் பொய்யெனவே யேய்ந்துணர்ந்தால்' என்றார். உண்மை ஞானம் உற்று உலகம் பொய்யென்று கண்டவர்க்கு இறைவன் மாட்டு அன்பு எய்துமாதலின் 'ஆங்கே மிகவளர வந்தவருண் மெய்யே' என்றார். 'ஒருசொல்' என்றது ஞானாசிரியரின் உபதேசமொழியை. ஞானசிரியன் உபதேசப்படி சிவானுபூதி நிலையைப் பெறுதல் ஆன்மாவுக்கு உறுதி தருவதாதலின், 'சேரீரதுவே திறம்' என்றார். 'அனுபவத்தை' என்றது சிவானுபூதி அனுபவத்தை. 10

மனமே! வேதாகமங்களெல்லாம் ஆனந்த பூரணமே மெய்ப்பொருளென்று சொல்லுவதை ஆராய்ந்தடங்குக எனல்

**ஆரணங்க ளாகமங்கள் யாவுமே யானந்த**
**பூரணமே யுண்மைப் பொருளென் னுங்—காரணத்தை**

**யோராயோ உள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மையினை**
**பாராயோ நெஞ்சே பகர்.**
[ப்

(ப-ரை) நெஞ்சு-மனமே!, ஆரணங்கள்-வேதங்களும், ஆகமங்கள்-சிவாகமங்களும், (ஆகிய) யாவும் - மற்றுமுள்ள எல்லாக்கலைகளும், ஆனந்தம் - சுக, பூரணமே - நிறைவையே, உண்மை சத்திய, பொருள் - பொருள், என்னும்-என்று மொழிந்திடும், காரணத்தை-காரணத்தை, ஓராயோ-ஆராய்ந்து உணராயோ?, உள் - மனத்தின், உள்ளே - உள்ளே, உற்று - கவனித்து நோக்கி, உணர்ந்து-அறிந்து, அ-அந்த, உண்மையினை-உண்மையை, பாராயோ-பார்த்திடாயோ, பகர்-சொல்லுவாயாக எ-று.

(வி-ரை) 'ஆரணங்க ளாகமங்கள்' என்றதனானே புராண இதிகாசங்களையும் கோடலுமாகும். 'ஆனந்த பூரணமே' என்றது அகண்டபரி பூரணானந்தப் பொருளாகிய சிவத்தைக் குறித்தது. 'உள்ளுள்ளே' என்றதில் முதல் நின்ற உள் இடவாகுபெயராய் மனத்தைக் குறித்தது. இரண்டாவது உள் இடப்பொருள் பயந்து நின்றது. 'பாராயோ' என்றது அதனைப்பற்றி ஆனந்தானுபவ நிட்டை பொருந்தப் பாராயோ என்னும் பொருளது. ஆரணமும் ஆகமமும் இறைவனாலே தரப்பட்ட நூற்களே. இவற்றுள் ஆரணம் பொதுவும், ஆகமம் சிறப்பும் ஆகும். இதனை, "வேதம் பசுவதன்பால் மெய்யாகமநூல்" என்றதனாலறியலாம். 'ஆரணம்' இது எங்கும் பரந்து நிறைந்துள்ள பரிபூரணப்பொருளை அடையுமாறு சொல்லும் அழகிய நூல் என்னும் பொருள்பற்றி வந்தது என்னும் காரணம்பற்றி வந்தபெயர். 'ஆகமம்' இது பதி, பசு, பாசங்களை நன்கு விளக்கிக்கூறும் நூல் என்னுங் காரணம்பற்றி வந்தபெயர் என்பர் புலவர். 11

வாயாற் பேசி அலைவதிற் பயனில்லை மௌன நிலையில்
நிற்கவேண்டும் எனல்

**நேராயம் மௌன நிலை நில்லாமல் வாய்பேசி**
**யாரா யலைந்நீ ராகெடுவீர் தேரீர்**
**திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்**
**கரையும் கரையுமனக் கல்.**

(ப-ரை) நேராய்-நேராக, அ-அந்த, மௌனம்-மவுனத்தின், நிலை-நிலையில், நில்லாமல்-நிற்காதபடி, வாய் - வாயினால், பேசி - பேசிக்கொண்டு, நீர்-நீங்கள், யாராய் - யாராக நினைந்து எண்ணி, அலைந்தீர் - அலைந்தீர்கள்?, ஆ-ஐயோ!, கெடுவீர்-(நீங்கள்) கெட்டுப்போவீர்கள், தேரீர்-(அதனை) ஆராயுங்கள், திரை-அலை, உந்தி-பாய்ந்து, இரையும் - சப்திக்கும், நதி - கங்கைபொருந்திய, சென்னியனை-சிரசை உடையவனை, நாவால்-நாவினால், கரையும்-சொல்லும் (அங்ஙனஞ் செய்வீரேல்), மனம்-மனமாகிய, கல்-கல்லானது, கரையும்-உருகும்; எ - று.



(வி-ரை) 'நேராய்' என்றது மனநேர்மையை, இனி குரு உபதேசித்த நேர்மைப்படி எனினும் ஆம்; 'அம் மௌனநிலை' இது (அ+மௌனம்) அந்த ஞானதேசிகன் உபதேசித்த மௌனநிலை என்னும் பொருளது. இனி, (அம்+மௌனம்) அழகிய மௌனநிலை எனினும் பொருந்தும். 'அம் மௌனம்' என்பதற்கு அந்த மௌனம் எனச் சுட்டாகக்கொண்டால், அகரம் பண்டறி சுட்டாம். 'வாய்பேசி' என்பதற்குக் கற்றதைக் கிளிப்பிள்ளை போலப் பேசி என்பதாம் அனுபவத்திற்கொண்டு கண்டு நிட்டை நில்லாது என்பது பொருளாம். இனி, 'வாய்பேசி' என்பதற்கு வீண் குதர்க்கம் பேசி எனவும் பொருள் கூறுவாருமுண்டு. 'ஆ கெடுவீர்' என்பதில் 'ஆ' இரக்கப் பொருள்தர வந்தது. 'திரையுந் திரையும்' 'கரையுங் கரையும்' என்றவை சொற்பிரிநிலைஅணி, இவைகளை மடக்கலங்காரம் எனினும் பொருந்தும். 'மனக்கல்' இது பண்புத்தொகை, மனமாகிய கல் என விரியும். 12

மனமே! ஒரு மொழியைக் கற்பாயாக எனல்

**அற்ப மனமே அகிலவாழ் வத்தனையுஞ் [னையொன்**
**சொற்பனங்கண் டாய்உண்மை சொன்னேனன்—கற்ப**
**றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்**
**கல்லாய்நீ தானோர் கவி.**

(ப-ரை) அற்பம்-இழிவாகிய, மனமே-நெஞ்சே!, அகிலம் - உலகத்தின், வாழ்வு-வாழ்வானது, அத்தனையும் - எல்லாம், சொற்பனம்-கனவாகும், கண்டாய் - காண்பாயாக, நான் - நான், உண்மை - சத்தியத்தை, சொன்னேன்-சொல்லினேன், கற்பனை - கற்பிதம் (பாவனை), ஒன்று-ஒரு சிறிதும், இல்லா-இல்லாத, இடத்து - இடத்தில், எனை - என்னை, சும்மா - மவுனமாக, வைத்திருக்க - வைத்திருக்கும்படி, நீ-நீ, ஓர்-ஒரு, கவி - கவியை, கல்லாய்-கற்றுக் கொள்வாயாக எ-று.

(வி-ரை) ஞானம் நிரம்பாத மனமாதலின் 'அற்ப மனமே!' என்றார். கனவுமுற்றுப் பெறுதலின்றி இடையே மறைந்துவிடுதலினால் காரண காரியங்களால் தோன்றி மறையும் இந்தப் பிரபஞ்சத்திற்கு உவமையாகக் கூறினார். 'கண்டாய்' இதனை அசையாகப் பொருள்கூறாது விலக்கினர் சிற்சில ஆசிரியர். 'கற்பனை' இது இல்லாததை உண்டுபண்ணிப் பேசல், தருதலைக்குறிக்கும். ஈங்கு அன்னிய பாவனையைக் குறித்தது. அன்னிய பாவனையாவது-துவைத நிலையாம். துவைதபாவம் உள்ளவரைக்கும் மௌனம் சித்திக்காதாதலின் 'கற்பனையொன் றில்லாவிடத்தே யெனைச்சும்மா வைத்திருக்க' என்றார். 'எனை' இது என்னை என்பதன் தொகுத்தல் விகாரம். 'கவி' என்றது ஈண்டு உபதேசமொழியைக் குறித்து நின்றது. உபதேசமொழியைக் 'கவி' என்றது மனதைக் கவியப் பண்ணுகின்ற காரணம்பற்றிப் போலும். 'ஓர்' ஈண்டு ஒப்பற்ற என்னும் பொருளில் வந்தது. என்னை, மவுனநிலை வாய்க்கச் செய்தலினால் என்க. 13

எல்லாந் திருவருளின் சங்கற்பமே என்று அமைந்திருக்கும் சுத்தர்க
ளிடத்தே தீநெறிகள் அணுகா தெனல்

**ஏதுந் திருவருளி னிச்சையா மென்றென்றைப்**
**போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி**
**செல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலாற்**
**சொல்லுமோ வேதத் தொனி.**

(ப-ரை) ஏதும் - ஏதுவும், திருவருளின்-திருவருளினுடைய, இச்சை. சங்கற்பமே, ஆம்-ஆகும், என்று-என்று, என்று-என்று, எ - எந்த, போதும்-காலத்தும், பொருந்தும்-அமைந்திருக்கின்ற, புனிதர்பால்-சுத்தர்களிடத்தே, தீது - தீங்காகிய, நெறி - மார்க்கம், செல்லுமோ-செல்லுமோ, செல்லாதே-எந்தக்காலத்துஞ் செல்லாதே, செல்லும் - விஷயங்கள் அடைதற்கு உரிய, இடம்-புனிதர்களின் இடமானது, இன்பம்-ஆனந்தமே, அலால்-அல்லாமல், வேதம்-வேதத்தினுடைய, தொனி-ஒலி, சொல்லுமோ-(இன்பத்திற்குப் புறம்பாக) வேறொன்று உண்டென்று சொல்லுமோ சொல்லாது எ-று.

(வி-ரை) 'ஏதும்' என்றது உலகத்தே நிகழும் இன்பந் துன்பந் தருஞ் செயல்கள் எல்லாம் என்ற பொருளது. 'திருவருள்' இறைவன் திருவருளை. இனி, திருவருள் என்றதற்கே இறைவன் எனப் பொருள்கொள்ளினும் அமையும். 'இச்சை' விருப்பம்; ஈண்டு சங்கற்பம் என்னும் பொருளது. 'புனிதர்' என்றது மனத்தின்கண் மாசின்றி விளங்கும் சிவநேசர்களாகிய அன்பர்களை. 'தீதுநெறி' தீயமார்க்கத்தை. தீயமார்க்கம் மருள்தரு நெறியை. தெருண்டார்க் கன்றி மருண்டார்க்கு இன்பமில்லை துன்பமே பிராப்தியாம் என்பதும் உணரத்தக்கது. 'வேதத்தொனி' இது வேதமாகிய ஒலி என விரிதலின் பண்புத்தொகை. வேதமே ஒலி வடிவினது ஆதலின் 'வேத ஒலி' என்றார்போலும். இதுபற்றியே வேதங்கட்கு 'சுருதி' எனும் பெயர் வழங்குதலுங் காண்க. 'செல்லுமோ செல்லா' என்றது முரண் தொடை. செல்லுமோ, சொல்லுமோ என்பவற்றின் ஈற்று ஓகாரங்கள் வினைப் பொருளில் வந்தன. 'செல்லாதே' இதின் ஈற்றேகாரம் தேற்றப் பொருளில் வந்தது. 14

இறைவனே! பற்பல சமயநெறிகூறும் வார்த்தையைக்
கேளாதே யெனல்

**கல்லேறுஞ் சில்லேறுங் கட்டியே றும்போலச்**
**சொல்லேறப் பாழ்த்த தொளைசெவிகொண்—டல்லேறு**
**நெஞ்சனென நிற்கவைத்தாய் நீதியோ தற்பரமே**
**வஞ்சனல்லேன் நீயே மதி.**

(ப-ரை) தற்பரனே-கடவுளே!, கல் - கல்களை, ஏறும்-எறிதலையும், சில்-சில்லோடுகளை, ஏறும் - எறிதலையும், கட்டி-மண்ணாங்கட்டிகளை, ஏறும் - எறிதலையும், போல-ஒத்திருக்கின்ற, சொல்-பற்பல சொற்கள், ஏற-ஏற, பாழ்த்த-பாழ்ப்பட்ட, தொளை-துவாரமுடைய, செவி-காதுகளை, கொண்டு - கொண்டு, அல்-அஞ்ஞானமாகிய இருள், ஏறு-ஏறிய, நெஞ்சன் - மனத்தையுடையவன், என-என்ன, நிற்க-அடியேனை நிலைத்திருக்க, வைத்தாய்-வைத்தாய், நீதியோ-இது தேவரீருக்கு நீதியாகுமோ?, வஞ்சன் - அடியேன் வஞ்சகத்தன்மையுடையவன், அல்லேன் - அல்லவே!, நீயே-தேவரீரே, மதி - மதித்திடுவீராக எ-று.

(வி-ரை) கல், சில், கட்டி இவை கடினத்திற்கும், பயனின்மைக்கும், துன்பு செய்தற்கும் உவமைகளாயின. 'சொல்' என்றது மருள் மதவாதிகள் சொல்லைச் சுட்டி நின்றது. பயன் இல்லாததும், துன்பந் தருவனவுமாகிய சொற் கேட்பதனாலும், ஞானமொழிகள் கேளாமையாலும் 'பாழ்த்த துளைச் செவிகொண்டு' என்றார். 'அல்' இருள், ஈண்டு இலக்கணையாய் அஞ்ஞானத்தைக் குறித்தது. 'தற்பரமே' இது விளியுருபு ஏற்றபெயர். 'தற்பரம்' தனக்குமேல் உயர்ந்தோன் இன்றித் தானே எல்லோரினும் உயர்ந்திருத்தலின் இறைவனுக்குத் தற்பரன் என்னும் பெயர் கூறப்படுகின்றது. கரவிலா மனத்தையுடைய அடியேனின் அறியாமையைப் போக்கி அறிவு தந்து அருளவேண்டுமெ என்பார் 'தற்பரமே வஞ்சனல்லேன் நீயேமதி' என்றார். 15

சீவான்மா, பரமான்மா, சித் இவை யொன்றேயாம்; பெத்தி நிலையில்
துவிதம் நிஷ்டையில் அத்துவித மெனல்

**அப்பொருளு மான்மாவும் ஆரணநூல் சொன்னபடி**
**தப்பில்லாச் சித்தொன்றுஞ் சாதியினல்—எப்படியுந்**
**தேரிற் றுவிதம் சிவாகமமே சொல்லுநிட்டை**
**யாருமிடத் தத்துவித மாம்.**

(ப-ரை) ஆரணம் - வேதமாகிய, நூல்-நூல், சொன்ன-சொல்லிய, படி-விதமாக, அ - அந்த, பொருளும்-பரமான்மாவும், ஆன்மாவும்-சீவான்மாவும், சாதியினல்-மரபினல், தப்பு-தவறுதல், இல்லா-இல்லாத, சித்து - சித்தாகிய, ஒன்று - ஒருவகைப்பொருளே!, ஆம்-ஆகும், எ-எந்த, படியும்-எந்தவிதத்தும், தேரின் - (பெத்த நிலையிலே நின்று) ஆராய்ந்தால், துவிதம் - (சீவான்மாவும் பரமான்மாவும்) துவைதமாக விளங்கும், சிவாகமமே - சிவாகமம் ஒன்றே, சொல்லும்-அறுதியிட்டுக் கூறும், நிஷ்டை-சகச நிட்டையை, ஆரும்-கூடும், இடத்து-காலத்தில், அத்துவிதம்-(சீவான்மாவும் பரமான்மாவும்) அத்துவிதம், ஆம்-ஆகும் எ-று.

(வி-ரை) அப்பொருள் - என்றது பரமான்மாவை. ஆரணநூல் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை, ஈண்டு நூல் என்னும் பொதுப் பெயருக்கும் ஆரணம் என்னும் சிறப்புப் பெயருக்கும் இடையே ஆகிய என்னும் பண்பு உருபு தொக்கு நின்றமை காண்க. சித்து என்னும் ஜாதி ஒற்றுமை நோக்குமிடத்து பரமான்மாவும், சீவான்மாவும் ஒரு ஜாதியேயாகும். ஆன்மாவானது தூலசித்தாகவும் பரமான்மா சூக்குமசித்தாகவும் இருக்கின்றன. சீவான்மா அறிவிக்க அறியும். பரமான்மா தானே அறியும். சீவான்மாவின் அறிவு

சிற்றறிவு. பரமான்மாவின் அறிவு பேரறிவு. இறைவன் ஆன்மாக்கள் எல்லாவற்றினுடனும் அத்துவிதமாகப் பொருந்தி யிருக்கின்றான். என்றாலும் பெத்த நிலையில் மலத்தடையால் துவிதமாக விளங்குதலினால் 'எப்படியுந் தெரிற்றுவிதம்' என்றார். மலத்தடை நீங்கி முத்த நிலையில் நிற்பதாகிய நிட்டையிலே சீவான்மா பரமான்மா இரண்டும் அத்துவிதமாகக் காணும். சிவாகமங் கூறும் நிட்டையே உண்மை நிட்டை என்பார் 'சிவாகமமே' என ஈற்றில் தேற்றேகாரந் தந்தார். 'துவிதம்' என்பது பரமான்மா வேறு சீவான்மா வேறு எனத் தோன்றும் நிலை. அத்துவிதம் என்பது இரண்டுங் கலந்த கலப்பால் பேதமின்றி இரண்டும் ஒன்றுபட்டுக் காணும் நிலை. 16

மனமே! தேகாதிகள் மெய்யோவென வினவல்

வேத முதலாய் விளங்கும் சிவவடிவாம்
போத நிலையிற் பொருந்தாமல்—ஏதமிகு
மோகாதி யல்லலிலே மூழ்கினையே நெஞ்சேஇத்
தேகாதி மெய்யோ தெளி.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, வேதம்-வேதம், முதலாய்-முதலாகி, விளங்கும்-விளங்குகின்ற, சிவ-சிவ, வடிவம் - உருவம், ஆம்-ஆகிய, போதம்-ஞான, நிலையில்-நிலையில், பொருந்தாமல்-பொருந்தி இராமல், ஏதம்-குற்றம், மிகும்-மிகுகின்ற, மோகம்-மோகம், ஆதி-முதலாகிய, அல்லலிலே-துன்பங்களிலே, மூழ்கினையே-அழுந்தினையே, இ-இந்த, தேகம்-தேகம், ஆதி-முதலியவைகள், மெய்யோ-மெய்யாமோ, தெளி-தெளிவாயாக எ-று.

(வி-ரை) வேதாதி - வேதம், ஆகமம், புராணம், சாஸ்திரம், இதிகாசம் முதலிய எல்லா நூற்களை. சிவபெருமான் பிரபாவம் வேதம், ஆகமம், புராணம், சாஸ்திரம், இதிகாசங்களில் மிகவும் புகழ்ந்து பேசப்படுதலின் 'வேத முதலாய் விளங்குஞ் சிவவடிவம்' என்றார். 'சிவவடிவம்' மங்களகர வடிவம் 'போதம்' ஞானம். 'போதநிலை' என்றது ஞானநிலையை மோகாதி விஷயங்கள் தீங்கு விளைப்பதாதலின் 'ஏதமிகு மோகாதி அல்லலிலே' என்றார். இத்தேகம் முதலியவை எல்லாம் பொய் என்பார் 'தேகாதி மெய்யோதெளி' என்றார். பொய்யாகிய இத்தேகத்திற்கு 'மெய்' எனப் பெயர் வந்தது 'சுடுகாட்டை' 'நன்காடு'. என்று கூறும் வழக்குப்போன்ற மங்கலவழக்கு. 'நெஞ்சு' எனும்பெயர் விளியுருபு ஏற்று 'நெஞ்சே' என நின்றது. மோகாதி-மோகம், லோபம், குரோதம், மதம், மாத்சரியங்களை. 17

நான் எனது என்பதற் கிடமில்லை யெனல்

நோக்கற் கரிதான நுண்ணியவான் மோன நிலை
தாக்கற் குபாயஞ் சமைத்தபிரான்—காக்குமுயிர்
அத்தனைக்கு நானடிமை யாதலினால் யானெனதென்
றித்தனைக்கும் பேசவிட மில்.



(ப-ரை) நோக்கற்கு - காணுதற்கு, அரிது-அருமை, ஆன-ஆகிய, நுண்ணிய-நுட்பமாகிய, வான்-சிறந்த, மோனம்-மவுனம், நிலை-நிலையை, தாக்கற்கு-அடைதற்கு, உபாயம் - தந்திரத்தை, சமைத்த - உண்டாக்கிய (அமைத்த), பிரான்-பெருமான், காக்கும்-இரட்சிக்கும், உயிர் - உயிர்கள், அத்தனைக்கும்-எல்லாவற்றிற்கும், நான்-அடியேன், அடிமை-அடிமை, ஆதலினால் - ஆகையினால், யான்-நான், எனது-என்னுடையது, என்று - என்று, இத்தனைக்கும்-இவ்வளவிற்கும், பேச-பேசுவதற்கு, இடம்-இடம், இல்-இல்லை எ-று.

(வ-ரை) மோனநிலையானது பெறற்கு அருமையுடையது ஆதலினாலும் காணற்கும் அருமையுடைய தாதலாலும், அதிசூக்குமம் உடையது ஆதலினாலும், எல்லா நிலையிலும் இது சிறந்தது ஆதலினாலும், 'நோக்கற் கரிதான நுண்ணியவான் மோனநிலை' என்றார். தற்போதம் இழந்து சிவபோதங் கொண்டவரே இறைவன் காக்கும் உயிர்களுக்கெல்லாம் தன்னை அடிமையாகக் கருதுவர் ஆதலின் 'பிரான் காக்குமுயிர் அத்தனைக்கும் நான் அடிமை' என்றார். தற்போதங் கழன்று சிவபோதம் முனைத்து நிற்றலால் அகங்கார மமகாரங்கள் இல்லை என்பார் 'யா னெனதென் றித்தனைக்கும் பேசவிட மில்' என்றார். 'யான்' என்பதனை அகங்காரம் என்பர். இதனைத் தமிழ்மக்கள் அகப்பற்றென்பர். 'எனது' என்பதனை மமகாரம் என்பர். இதனைப் புறப்பற்று என்பர் தமிழ் மக்கள். 18

அன்பர்க்கே இன்பங் கிடைக்குமெனல்

ஒன்றுமற நில்லென் றுணர்த்தியநம் மோனகுரு
தன்றுணைத்தா ணீடூழி தாம்வாழ்க—என்றென்றே
திக்கனைத்துங் கைகுவிக்குஞ் சின்மயராந் தன்மையர்க்
கைக்குவரு மின்பக் கனி. [கே

(ப-ரை) ஒன்றும்-ஒரு விகற்பமும், அற-இல்லாமல், நில்-நிர்விகற்பமாக இரு, என்று - என்று, உணர்த்திய - உபதேசித்த, மோனம் - மௌனத்தையுடைய, குரு - குருவினுடைய, துணை - இரண்டாகிய, தாள் - திருவடிகள், நீடூழி-நீண்டகாலம், வாழ்க-வாழக்கடவதாக, என்று-என்று, என்றே - வாழ்த்தியே, திக்கு-திசைகள், அனைத்தும் - எல்லாவற்றிலும், கை-கையை, குவிக்கும் - முகிழ்த்தி வணங்கும், சின்மயராம் - ஞானிகளாகிய, தன்மையர்க்கே-தகுதியுடையவர்க்கே, இன்பம்-சுகமயமாகிய, கனி-பழம், கைக்கு-கைகட்கு, வரும்-கிடைக்கும் எ-று.

(வி-ரை) 'ஒன்றும் அற' என்றது ஒரு விகற்பமும் இல்லாதபடி என்ற பொருளது. இதில் வந்த உம்மை இழிவு சிறப்பும்மை. 'நில்' முன்னிலை ஏவல், குருவினிடத்துள்ள அன்பும் ஆர்வுந்தோன்ற 'நம்மௌனகுரு' என்றார். 'குரு' இது அஞ்ஞானமாகிய இருளை அழித்தோட்டுபவன் என்னும் காரணம் கொண்டு விளங்கும் வடமொழிப்பெயர். குருவினிடத்து உள்ள பத்தியால் அவரை வாழ்த்துதலே தன் கடன்மையாகக் கருதி. 'மோனகுரு தன் றுணைத்தா ணீடூழி தாம்வாழ்க' என்றார். பரமகுருவை வாழ்த்தி வணங்கு

பவர்க்கே இறைவன் தரிசனமெய்து மாதலினால் 'திக்கனைத்துங் கைகுவிக்கும் சின்மயராந் தன்மையர்க்கே, கைக்குவரு மின்பக் கனி' என்றார். இதனன்றே சிறவர்க்கு வித்தியாரம்பச் சடங்கு செய்யுங்காலத்தும், 'ஹரி, ஓம், நன்றாக, குருவாழ்க, குருவே துணை' என முதலில் ஆசிரியர் ஓதுவிப்பதும், "எழுத்தறிவித்தவன் இறைவனாகும்" ஔவைப் பிராட்டியார் திருவாக்கும் ஈண்டு கருதத்தக்கது. சின்மயர் - ஞானிகளை. இது சித்மயம் என்னும் இருசொல் ஒரு சந்தி. சித் - அறிவு, ஞானம் என்னும் பொருளது. இன்பக் கனி-இறைவனை. இறைவன் ஆனந்தமயன் ஆதலினால் இவ்வாறு கூறினர். இறைவனை 'கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியே' எனவும், 'கற்றவர்கள் உண்ணுங் கனி' எனவும் உரைத்ததூஉங் காண்க. இறைவன் மாட்டு இடையறா முதிர்ந்த அன்பும் பத்தியும் உள்ளவர்க்குப் பார்க்குமிடமெல்லாம் இறைவன் திருவுருவே தோன்றுமாதலினால் 'திக்கனைத்துங் கைகுவிக்கும்' என்றார். 19

திரிகரணத்தாலும் மவுனம் உற்றவர்களே நல்லவர்கள் எனல்

**மனத்தாலும் வாக்காலு மன்னவொண் ணுமோன**
**வினத்தாரே நல்ல வினத்தார்—கனத்தபுகழ்**
**கொண்டவரு மன்னவரே கூரறிய முத்திநெறி**
**கண்டவரு மன்னவரே காண்.**

(ப-ரை) மனத்தாலும்-மனத்தினாலும், வாக்காலும்-வாக்கினாலும், மன்ன-நிலைக்க, ஒண்ணு-முடியாத, மோனம் - மவுனநிலையையுடைய, இனத்தாரே-கூட்டத்தார்களே, நல்ல-நல்ல, இனத்தார் - கூட்டத்தினர், கனத்த-பெரிய, புகழ்-கீர்த்தியை, கொண்டவரும் - அடைந்தவர்களும், அன்னவரே-அத்தன்மையினரே, கூறு-சொல்லற்கு, அரிய - அருமையுடைய, முத்தி - மோட்ச, நெறி - மார்க்கத்தை, கண்டவரும் - அனுபவித்தவர்களும், அன்னவரே-அத்தன்மையவர்களே எ-று.

(வி-ரை) 'மனத்தாலும் வாக்காலும்' என்றதனால் இனம்பற்றிக் காயத்தாலும் என்பதும் உடன்கூட்டி எண்ணப்பெறும். இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். நிலைபெறச் சாதிக்கமுடியாத மௌனம் ஆதலின் இம்மௌனிகளை, 'மன்னவொண்ணு மோனவினத்தாரே' என்றார். முத்தியின் நிலை-மனவாக்குக் கெட்டாதது. இத்தன்மைத்தென சொல்லாற் சொல்லிக் காட்ட அரியது ஆதலின் 'கூறரிய முத்திநெறி' என்றார். 'கண்டவரும்' இது 'காண்பவரும்' என இருக்கற்பாலதாகிய நிகழ்காலமும் இறந்தகாலமாயது நிட்சயம்பற்றி வந்த காலவழுஅமைதி. இதனை,

"விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉம் முக்காலமு மேற்புழி"

என்ற **தொல்காப்பியச் சூத்திரவிதி** கொண்டு இயைத்துக்கொள்க. மோனிகளின் பெருமையை,



"மக்கள் தம்மில் மிகவுயர்ந்தார் மருவு துன்ப மொன்றில்லார்
துக்க மென்ப தென்றுமிலார் தொடரும் பிறவித் துயரற்றார்
திக்கெல் லாமும் அந்தரமும் திகழத் ததிக்கு மிசையாளர்
மிக்க முத்திப் பெரும்பேறு மேவி னின்றோர் மோனிகளே"

என்ற **சித்தாந்த சிந்தாமணிச்** செய்யுளாலும் அறியலாம். 20

இறைவனே! ஒளிக்கும் ஒளியாகும் தன்மையைப் பெறுமாறு
சித்த மிரங்கியருள் எனல்

**கண்ணொளியே மோனக் கரும்பே கவலையறப்**
**பண்ணொளிக்கு முள்ளொளியாம் பான்மையினை—நண்**
**சித்த மிரங்கிலதென் சித்தந் தெளியாவே [ணிடவுன்**
**றித்தனைக்கு மாதரவு மில்.**

(ப-ரை) கண் - கண்ணுக்குள் விளங்கும், ஒளியே - ஒளியே! மோனம்-மௌன, கரும்பே - கரும்பே!, கவலை - கவலை, அற-நீங்க, பண்-செய்கின்ற, ஒளிக்கும் - ஒளிக்கும், உள் - உள்ளே விளங்குகின்ற, ஒளியாம் - ஒளியாகும், பான்மையினை-தன்மையை, நண்ணிட-அடைந்திட, உன்-தேவரீரது, சித்தம்-மனமானது, இரங்கிலது - இரங்காதது, என்-என்ன காரணமோ?, சித்தம்-அடியேனின் மனம், தெளியா-தெளியாதிருக்கின்ற, இத்தனைக்கும்-இவ்வளவிற்கும், வேறு-வேறுவகையான, ஆதரவு-ஆதாரம், இல்-இல்லை எ-று.

(வி-ரை) இறைவன் கண்ணாகவும், கண்ணுண் மணியாகவும், அம் மணியுள் ஒளியாகவும் விளங்குபவன் ஆதலினால் 'கண்ணொளியே' என இறைவனை விளித்தார். இறைவன் இன்பமயன் ஆதலின் 'மோனக் கரும்பே' என்றார். இறைவன் தட்சணாமூர்த்தமாக மௌனயோகத்தில் இருந்தமையால் 'மோனக் கரும்பே' என்றது. இதனை,

"கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதாம்
மண்டலத்தைப் போல வழங்கியதாந்—தொண்ட
ருடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு.

என்ற **பட்டினத்தடிகள் வாக்கா**லுந் தெளியலாம்.

'ஒளிக்குமுள் ஒளியாம் பான்மை' என்றது அத்துவித நிலையை. இறைவனே தேவரீரையன்றி அடியேற்கு வேறு ஆதாரம் இல்லாதிருக்கவும் அடியேனின் சித்தத்தைத் தெளிவிக்காதிருத்தல் யாது காரணம் என்பார், 'உன்சித்த மிரங்கிலது என்சித்தந் தெளியாவே' என்றார். எல்லாம் உன் செயலே, அடியேன் செயல் ஒன்றில்லை என்பார், 'இத்தனைக்கு மாதரவு மில்' என்றார். 21

ஆன்மாவின் தன்மை கூறல் என்கின்றார்

**அறியாமை சாரி னதுவாய் அறிவா**
**நெறியான போததுவாய் நிற்குங்—குறியாற்**

சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய்.

(ப-ரை) அறியாமை-அறியாமையை, சாரின்-அடையப்பெற்றால், அவ் அறியாமையே, ஆய் - ஆக, அறிவு - அறிவுமயம், ஆம் - ஆகிய, அது-நெறியை, ஆன-அடைந்த, போது-பொழுது, அது-அவ் அறிவாகவே, ஆய்-ஆகி, நிற்கும்-இருக்கும், குறியால்-இத்தகைய தன்மையினால், சத்து-சத்து-அசத்து-அசத்து என்று, அருள் - திருவருள், உணர்த்த - அறிவிக்க, தான்-தான், உணராநின்ற - அறியாநின்ற, விதம் - விதத்தினை, உற்று-அடைந்து, அறிவு-அறிவு, எனும்-என்கின்ற, பேர்-பெயர், மெய்-மெய்யாகும் எ-று.

(வி-ரை) 'அறியாமை' என்றது அஞ்ஞானத்தை. 'அறிவாம் நெறி' என்றது ஞானத்தை. சத்து-என்றது சிவத்தை. அசத்து-என்றது பிரபஞ்சத்தை. சதசத்து-என்றது ஆன்மாவை. 'சதசத்து' சத்தும் அசத்தும் ஆக இருப்பது என்பது. (சத்து அசத்து சதசத்து) சத்து அசத்தினையறியாது. அசத்து சத்தினையறியாது. அருளுணர்த்த என்றதில் அருள் என்றது திருவருளை. இறைவன் உணர்த்த ஆன்மா அறிந்துகொண்டு அறிவன் என்ற பெயரைப் பெறுகிறது, இதுபற்றியன்றே இறைவனைப் பெரியார் "அறிவுக் கறிவே" எனத் துதியா நின்றனர். 22

இறைவன் குருலிங்க ஜங்கமங்களாக இருக்கும் வாய்மையினைப் பரிபாகிகளே அறிவரெனல்

குருலிங்க சங்கமமாக் கொண்ட திரு மேனி
கருவொன்று மேனிநம்பாற் காட்டாது—அருளென்று
கண்டவர்க்கே யானந்தங் கண்டுகொள லாமலது
கொண்டவர்க்கிங் கென்ன கிடைக் கும்.

(ப-ரை) குரு - ஆசாரியனாகவும், லிங்கம்-சதாசிவமூர்த்தமாகவும், சங்கமம்-அடியார்கள், ஆகவும்-ஆகவும், கொண்ட-வெளிப்பட்ட, திரு-திரு அருள், மேனி-மேனிகளே அல்லாமல், கரு-பிறப்பில், ஒன்று - பொருந்திய, மேனி-உருவம், நம்பால் - நம்மிடத்தே, காட்டாது - காட்டமாட்டாது, அருள்-திருவருள், என்று - என்று, கண்டவர்க்கே - உண்மையை அறிந்தவர்களுக்கே, ஆனந்தம்-இன்பம், கண்டு-அனுபவித்து, கொள்ளல்-கொள்ளுதல், ஆம்-ஆகும், அல்லது-அது அன்றி, கொண்டவர்க்கு-வேறுவகையாப் பாவித்தவர்களுக்கு, இங்கு-இவ்வுலகில், என்ன-எது, கிடைக்கும்-சித்தியாகும் எ-று.

(வி-ரை) இறைவன் பிறந்து இறந்து வேதனைப்படுவோன் அல்லன். இறைவனே பரிபாகிகட்கு அருள்புரிய குருமூர்த்தமாக எழுந்தருள்வன். இன்னும் அடியார்க்கு அருள் செய்தற்பொருட்டு லிங்காகாரமாகிய சதாசிவ வடிவாய்த் தோன்றி யருள்பவன், இதனை ரூபாரூபத் திருமேனி என்பர். இன்னும் ஆன்மாக்களுக்கு அருள்செய்ய அடியார் திருமேனி



பூண்டு வெளிப்பட்டருளுவன் ஆதலினால் இறைவன் குருலிங்க சங்கமர்களாகத் திருமேனி கொள்பவன் என்பார் 'குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி' என்றார். இறைவன் ஏனைத் தேவர்போல் பிறந்து இறந்து வேதனைப் படுவோன் அல்ல ஆதலின், 'கருவொன்று மேனி நம்பாற் காட்டாது' என்றார். 'அருள்' என்றது திருவருள் திருமேனிகொண்டவனாகிய இறைவனை. 'அலது கொண்டவர்' என்றது இறைவன் குருலிங்க சங்கமமே வடிவாக உடையன் என்பதற்கு மாறாயதை யுணர்த்திற்று. 'என்ன கிடைக்கும்' என்ற வினாவால் ஒன்றும் கிடைக்காது என்பது பெற்றாம். 23

இறைவன் திருவடியைச் சார்ந்தார்க்கு முடியாத காரியம்
எதுவும் இல்லை யெனல்

புலியி னதளுடையான் பூதப் படையான்
பலியிரந்து மெல்லாம் பரிப்பான்—மலிபுனல்சேர்
பொன்முடியான் முக்கட் புனிதன் சரண்புகுந்தோர்க்
கென்முடியா து ஏதுமுள தே.

(ப-ரை) புலியின் - புலியினுடைய, அதள்-தோலை, உடையான்-ஆடையாக உடையவன், பூதம் - பூதங்களை, படையான் - படையாக உடையவன் பலி-பிச்சை, இரந்தும் - ஏற்றும், எல்லாம் - எல்லாவற்றினையும், பரிப்பான்-தாங்குவான், மலி - நிறைந்த, புனல் - நீரையுடைய கங்காநதியை, சேர்-அணிந்த, பொன்-அழகிய, முடியான்-சடாபாரத்தை யுடையவன், முக்கண்-மூன்று கண்களை உடைய, புனிதன்-பரிசுத்தன், சரண் - அவனுடைய திருவடிகளில், புகுந்தோர்க்கு - சரணாக அடைந்தவர்க்கு, என் - எந்தக்காரியந்தான், முடியாது - முடியாதுபோகும், ஏதும் - எந்தக்காரியமும், உளதே-சித்திக்குமே எ-று.

(வி-ரை) சிவபக்தியில்லாது கருமத்தாலேயே முத்தியடையலாம் என்று இறுமாந்திருந்த தாருகவனத்து இருஷிகளின் தவங் குலைந்த காலத்து இதற்குக் காரணன் சிவபெருமானே என்றறிந்து அவரைக்கொல்ல அபிசார ஹோமஞ்செய்ய அதிற்றோன்றிய புலியை சிவனைக்கொல்ல ஏவினர். அதுசிவன்பால் வரவே அதன்றோலை உரித்து ஆடையாக அணிந்தார். இதனையே 'புலியதளுடையான்' என்றார். இறைவன் பூதகணங்களைப் பரிவாரமாக உடையவன் ஆதலினால் 'பூதப்படையான்' என்றார். இறைவன் தாருகவனத்தவர் தவத்தை மாற்ற திகம்பரராய்ப் பிரமகபாலந்தாங்கி அவ் இருஷிபத்தினிகள்பால் யாசிக்கச் சென்றாராதலின் 'பலியிரந்தும்' என்றார். உமாதேவியாரின் திருவிரலில் வியர்வையினாலுண்டாகிய வெள்ளம் கங்கை பிறந்து உலகத்தை எல்லாம் அழிக்கும்படிப் பெருகி வருகையில் அதனை வீறு அடக்கித் தன் ஜடாபாரத்தில் அடக்கி அருளினர். ஆதலின் அதனை, 'மலிபுனல்சேர் பொன்முடியான்' என்றார். ஈண்டு முடி என்றது ஜடாமுடியை. இறைவன் முக்கண்மூர்த்தி ஆதலின் 'முக்கட்புனிதன்' என்றார். இறைவன் அமலன், விமலன், நிமலன் ஆதலின் புனிதன் என்றார். யாரும்

(அடைக்கலம்) சரண்புக ஆதாரமாக இருக்கும் பாதத்தைச் சரண் என்றது ஆகுபெயர். இறைவன் சரண் சிறப்பை,

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது" எனவும்,

எனவும் கூறியருளிய **திருவள்ளுவர்** திருவாக்கால் நன்கறியலாம். 24

ஞானியர் இறைவன் நாமென்பதில்லை என்பர் எனல்

**சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே**
**யல்லும் பகலு மரற்றுவதென்—நல்லசிவ**
**ஞானமயம் பெற்றோர்க ணாமில்லை யென்பர் அந்தோ**
**மோனமய மான முறை.**

(ப-ரை) சொல்லுக்கு-வாக்கிற்கு, அடங்கா - உட்படாத, சுகம்-இன்பமய மான, பொருளை-இறைவனை, நாம்-ஆன்மாக்களாகிய நாம், எனவே-என்றே, அல்லும் - இரவிலும், பகலும் - பகலிலும், அரற்றுவது - பிதற்றுவது, என்-என்ன, நல்ல-நல்ல, சிவம்-சிவம், ஞானம்-ஞான, மயம்-மயத்தை, பெற்றோர்கள் - அடைந்த அன்பர்கள், நாம் - முதல்வனுக்குப் புறம்பாக நாம், இல்லைநிற்பது இல்லை, என்பர்-என்று சொல்லுவர், அந்தோ ஐயோ!, மோனம்-மௌனம், மயம்-தன்மை, ஆன-ஆகிய, முறை - முறைமை இதுவே ஆகும்; எ-று.

(வி-ரை) 'சொல்லுக்கடங்கா' என்றதனால் "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே" வாக்கு, மனம், காயங்களுக்கு அடங்கா எனப் பொருள்கோடற்கு உரித்து. அறிவியே சுகசொரூபனாயுள்ள இறைவனை, அறிவியே துக்கரூபமாயுள்ள ஆன்மாவெனக் கூறுதல் பொருந்தாப் புலப்பம் என்பார் 'சொல்லுக் கடங்காச் சுகப்பொருளை நாமெனவே, அல்லும் பகலும் அரற்றுவதென்' என்றார். இதனை,

"தன்னைச் சிவமெனத் தருக்கிப் பிதற்றல்
என்பசு ஞானம் எனவே புகல்வர்
பின்ன மிதுவே பேசின்
மன்னிய ஞானம் மற்றூர் பிதற்றே"

என்ற **நான்பொருள் நூறல்** அறியலாம். ஞானம் பெற்றோர் இறைவனின்றி யாமில்லை என்பார், 'நல்லசிவ ஞானமயம் பெற்றோர்க ணாமில்லை யென்பரந்தோ மோனமய மான முறை' என்றார். 25

இறைவனை ஒருமொழி யுணர்த்தியமையாற் புகழ்தல்

**ஐயா அருணகிரி யப்பா உனைப்போல**
**மெய்யாக வோர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்**
**சாற்றரிதென் றேசற்றார் தன்னனையாய் முக்கணெந்தை**
**நாற்றிசைக்குங் கைகாட்டி னன்.**



(ப-ரை) ஐயா - ஐயனே!, அருணகிரி-அருணகிரிநாதர் என்னும் திருப் பெயரினைப்பெற்ற, அப்பா-என் அப்பனே!, உன்னை - உன்னை, போல-ஒப்ப, மெய்யாக - உண்மையாக, ஓர் - ஒப்பற்ற, சொல் - மொழியை, விளம்பினர்-சொன்னவர்கள், யார் - யாவர், வையகத்தோர் - உலகத்தவர்கள், சாற்று-சொல்லுதல், அரிது - அருமையாகும், என்று-என்று, ஏசற்றார்-இளைத்துப் போயினர், தன்னனையாய் - தன்னைத்தானே ஒத்தவனே (ஒப்பற்றவனே), முக்கண்-மூன்று கண்களைப் படைத்த, எந்தை - எமது தாதை, நாற்றிசைக்கும் - நாலுதிக்கிற்கும் (எல்லாத்திசைகளிலும்), கை - சின்முத்திரக் கையை, காட்டினன்-காட்டியருளினர் எ-று.

(வி-ரை) 'ஐயா' விளி உருபு ஏற்ற பெயர். 'அருணகிரி' என்றது குமரக் கடவுளின் திருவருளுக் கிலக்காகிய 'அருணகிரிநாதரை' 'மெய்யாக வோர் சொல் விளம்பினர் யார்' என்றது **கந்தரனுபூதியில்** 'சும்மாவிரு சொல்லற' என்றதை. 'முக்கண் எந்தை' என்றது சனகாதி முனிவர்கட்காகக் கல்லால மர நீழலில் தட்சணாமூர்த்தமாகவந்து மௌனயோகத்திருந்து சின்முத்திரை காட்டியருளிய இறைவனை.

அருணகிரியார் வரலாறு:—அருணகிரியார் திருவண்ணாமலை என்னும் சிவக்ஷேத்திரத்தில் அவதரித்தவர். குமரக்கடவுள் பத்தியுடையவர். இளமை யிலே கவி பாடுந் திறம் வாய்ந்தவர். இசைஞானம் பெரிது முடையர். இளமையில் தாய் காலகதி அடையத் தமக்கைபால் வளர்ந்தார். சிற்றின்பத் தில் அதிகமாக ஈடுபட்டவர். வறுமைநோய் வாய்ப்பட்டுச் சகிக்க முடியாது திருவண்ணாமலைக் கோயிலில் வல்லாள மன்னனாற் கட்டப்பெற்ற கோபுரத் தேறி குப்புற்று வீழ்ந்து மாள எண்ணி வீழ்ந்தார். குமரக்கடவுளே ஒரு முனிபுங்கவராக வந்து தாங்கி அருள்செய்து உபதேசஞ்செய்து மறைந்தார். அதிலிருந்து **அருணகிரிநாதர்** துறவு பூண்டு குமரக்கடவுளையே பாடத் தொடங்கி கந்தரந்தாதி, கந்தரனுபூதி, கந்தரலங்காரம், திருப்புகழ் முதலிய பிரபந்தங்களைப் பாடிப் பரவிவந்தார். குமரக்கடவுள் தனக்கு ஞானோப தேசஞ் செய்ததைக் குறித்து, **கந்தரனுபூதியில்,**

"செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல்லற வென்றலுமே
யம்மா பொரு ளொன்று மறிந்திலனே"

எனவும், உபதேசத்தின் பெருமையைக் **கந்தரலங்காரத்தில்,**

"வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச் சென்ற
பரையற்ற வேலவன் போதித்தவா பஞ்ச பூதிகமற்
றுரையற் றுணர்வற் றுளமற் றுயிரற் றுபாய மற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே"

எனப் புகழ்ந்து கூறியுளார்.

இன்னும் இவ் வருணகிரியார் குமரக்கடவுளின் அருள் செய்தமையைக் **கந்தரனுபூதியில்,**

> "தூசா மணியுந் துகிலும் புனைவா
> ணேசா முருகா நினதன் பருளா
> லாசா நிகளந் துகளா யினபின்
> பேசா வனுபூதி பிறந்ததுவே"

என்றும், கூறியதுங் காண்க. இங்ஙனங் கூறினரேனும் காலவாராய்ச்சியாளரின் போக்கு வேறாயிருத்தலு மீண்டறிதற்பாலதாம். 26

அறிஞரின் பெருமையுரைத்தல் என்கின்றார்

**காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ
தீதற்ற காயமுமச் செய்கையே—போதமாய்
நிற்பரல்லா லிச்சகத்தி னேரார்கள் நேர்ந்திடினுந்
தற்பரமாக் கண்டிருப்பார் தாம்.**

**(ப-ரை)** காது-துளை, அற்று - அறுந்து, போன - போன, முறி - எழுதோலையை, கட்டிவைத்தால் - கட்டிவைத்ததினால், ஆவது-பிரயோசனப்படுவது, உண்டோ-உண்டோ, (அதுபோலவே) தீது-நோய் முதலியன, அற்ற-இல்லாத, காயமும்-உடம்பும், அ-அந்த, செய்கையே - தன்மையதே, (ஆகையால்) போதமாய்-ஞானவடிவமாய், நிற்பர் - இருப்பர், அல்லால்-அல்லாமல், இ-இந்த, சகத்தில்-உலகத்தில், நேரார்கள்-பொருந்தார்கள், நேர்ந்திடினும்-ஒருகால் பொருந்தினாலும், தற்பரமாக - தற்பர சொரூபமாகவே, கண்டு - பார்த்து, இருப்பர்-இருப்பார்கள் எ-று.

**(வி-ரை)** துவாரமில்லாத எழுதோலைகள் பயன்படாது ஆதலினால் 'காதற்றுப் போனமுறி கட்டிவைத்தா லாவதுண்டோ' என்றார். நோய் முதலிய குற்றமற்ற சரீரமே பயனில்லையாயின், நோய்முதலிய குற்றமுடைய சரீரம் எதற்காகும்? என்பார். 'தீதற்ற காயமுமச் செய்கையே' என்றார். போதம்-ஞானம். ஈண்டு போதமாய் நிற்பர் என்றது ஞானமயமாய் இருப்பர் என்பதாம். பிரபஞ்சத்து ஈடுபடார் பட்டாராலும் எல்லாஞ் சிவமாகவே கண்டுகொண்டிருப்பார் என்பார், 'இச்சகத்தி னேரார்க ணேர்ந்திடினுந், தற்பரமாக் கண்டிருப்பர்' என்றார். "தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்தொடுங் கூடிவாழ்வர்" என்றது ஈண்டு நோக்கற்பாலதாகும். 27

இறைவன் என் வஞ்சக மனத்தில் இல்லை என்றால் அவன் சர்வ
வியாபகன் என்னும் இலக்கணம் பழுதாகும் எனல்

**வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினான்
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனே—னுள்ளத்தில்
இல்லனென்றால் அன்னவன்றா னெங்கும் வியாபகத்தா
னல்லனென்றுஞ் சொல்லவழக் காம்.**



**(ப-ரை)** வெள்ளம்-கங்கைநதியானது, குலாவு - விளங்கும், சடை-சடாபாரத்தையுடைய, வெள்ளம் - வெள்ளப்பெருக்கை ஒத்த, கருணையினான், கிருபையை உடைய இறைவன், கள்ளம் - கபடம், குலாவு-பொருந்திய, வஞ்சம்-வஞ்சனையையுடைய, கள்ளனேன் - திருடனாகிய என்னுடைய, உள்ளத்தில் - மனத்தில், இல்லன் - இல்லை, என்றால் - என்றால், அன்னவன்-அந்த முதல்வன், தான் - தான், எங்கும் - எந்த விடத்தும், வியாபகத்தான் - சர்வ வியாபி, அல்லன்-அல்லன், என்றும் - என்றும், சொல்ல-மொழிய, வழக்கு-நியாயம், ஆம்-ஆகும்; எ-று.

**(வி-ரை)** வெள்ளம் என்றது ஈண்டு கங்காநதியை. இறைவன் கிருபாசமுத்திர மாதலினால் 'வெள்ளக் கருணையினான்' என்றார். ஈண்டு வெள்ளம் என்றது பெருக்கு என்னும் பொருளது. இறைவன் அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்ச் சர்வவியாபகனாக இருப்பவன் ஆதலினால் 'அன்னவன்றான் எங்கும் வியாபகத்தான் அல்லன் என்றுஞ் சொல்ல வழக்காம்' என்றார். இறைவன் வஞ்சகமனத்தில் தங்குவதில்லை எனின் அவ் இறைவனின் சர்வவியாபகத் தன்மைக்கு விருத்தமாகும். பின்னை என்னை எனின் மனத்தே கள்ளம் உள்ளவரையில் இறைவன் தோன்றான். திரோதானசத்தி இறைவனைக் காணாதபடி மறைத்து நிற்கும். கள்ளமிலாக் கருத்தினர்க்குத் திருவருட்சத்தி காட்டியருள இறைவனை, ஆனந்தமயனை, பேரொளிப்பிழம்பைக் கண்டு களிப்பர் என்பது இக்கவியால் அறியக்கிடக்கும். 28

மோனத்தை உபதேசித்த இறைவனைத் துதிக்க வணங்க
காண விறைகின்றேன் எனல்

**தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்
வைத்தவருண் மோன வள்ளலையே—நித்தமன்பு
பூணக் கருதுநெஞ்சு போற்றக் கரமெழும்பும்
காணத் துடிக்குமிரு கண்.**

**(ப-ரை)** தத்துவம் - தத்துவங்களாகிய, பேயோடே - பேய்களுடனே, தலை-தலை, அடித்து-மோதி, கொள்ளாமல் - கொள்ளாதபடி, அருள்-கிருபை, வைத்த-பாலித்த, மௌன-மவுன உபதேசஞ்செய்த, வள்ளலையே-வள்ளலையே, நித்தம்-பிரதிதினம், அன்பு - அன்பு, பூண-கொள்ள, நெஞ்சு - மனமானது, கருதும்-எண்ணும் (தியானிக்கும்), போற்ற-வணங்க, கை-கைகள், எழும்பும்-கிளம்பும், இரு-இரண்டு, கண்-கண்களும், காண-தரிசிக்க, துடிக்கும்-பதைக்கும் எ-று.

**(வி-ரை)** பிரபஞ்சாதிகளில் பற்றுவைக்கின், அகப்பற்று, புறப்பற்று களைக் கொள்ளின் மனது அலைவுறும் ஆதலினாலும், துன்பமே பெருகும் ஆதலினாலும், பிறப்பிறப்பிற்குக் காரணமாகும் ஆதலினாலும், 'தத்துவப் பேயோடே தலையடித்துக் கொள்ளாமல்' என்றார். 'வைத்த' என்றது உபதேசித்தருளி அந்நிலையில் அமர்த்திய என்றதாம். 'மௌனவள்ளம்' என்றது

மௌனகுருவை. ஜடமாகிய கரமும், கண்ணும் எழும்பும், அடிக்கும் என முறையே கூறியது மனத்தின் இச்சையை விளக்கவே. பகிர் முகப்பட்டு அன்புருதபடி அந்தர்முகமாகச் சொரூப தரிசனங்கண்டு சிவானந்தத்திருக்க அருளி மௌனதேசிகனை வாழ்த்திட மனம் எண்ணும் வணங்கக் கைஎழும், காணக் கண்விரையும் என்பது இச்செய்யுளாற் கூறிய பொருளாம். 29

குருவே கர்மவினையால் சுழலும் அடியேன் தேவரீரின் கருணையைப் பெறுவேனோ எனல்

தொல்லைவினைக் கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்
எல்லையிலா நின்கருணை யெய்துவனோ—வல்லவனா
மோன குருவே முழுதினையுந் தானுணர்ந்த
ஞான குருவே நவில்.

(ப-ரை) தொல்லை-பழமையான, வினைக்கு - வினைகளுக்கு, ஈடாய்-சரியாக, சுழல்கின்ற-திரிகின்ற, ஒருவன்-ஒருவனாகிய, நான்-அடியேன், எல்லை-அளவு, இலா-இல்லாத, நின் - தேவரீருடைய, கருணை - கிருபையை, எய்துவனே - அடைவேனோ, வல்லவன் - எல்லாம் வல்லவன், ஆம் - ஆகிய, மோன-மவுன, குருவே-குருவே!, முழுதினையும் - எல்லாவற்றையும், தான்-தானே, உணர்ந்த-தெரிந்துகொண்ட, ஞான-ஞானத்தினையுடைய, குருவே-குருவே! நவில்-சொல்லி அருள்வாயாக; எ-று.

(வி-ரை) தொல்லைவினை என்றது கன்மவினையை. ஆன்மாக்கள் கன்மத்துக்கீடாக தேகத்தை எடுத்து மாயையிற்சிக்கி இன்ப துன்பங்களிற் பட்டுழல்கின்றமையினால் 'தொல்லை வினைக்கீடாய்ச் சுழல்கின்ற நானொருவன்' என்றார். நின்கருணை என்றது இருவினை ஒப்பை. என்னை இருவினை ஒப்புற்றவர்க்கே ஞானங் கைவல்லியம் ஆகும். கன்மந்தொலையும் ஆனந்தம் சித்திக்கும். எல்லாம் முடித்திட வல்லவன் ஆதலினால் 'வல்லவனா மோன குருவே' என்றார். முழுதினையும் - பூரணஞானத்தினை. "வினைக்கயிற்றிலாடும் பம்பரம்" என்ற **பட்டினத்தடிகள்** வாக்கு கன்மத்தால் சுழல நன்கு விளக்கிக் காட்டாநிற்கும். இறைவன் கருணை அளவு விடற்கரியதாதலின் 'எல்லையில்லா நின்கருணை' என்றார். 30

இறைவனே! உன்னைப்போ லொரு தெய்வம் உண்டோ என்கின்றார்

மூன்றுகண்ணா முத்தொழிலா மும்முதலா மூவுலகுந்
தோன்றக் கருணைபொழி தோன்றலே—ஈன்றவன்னை
தன்னைப்போ லன்பு தழைத்தோய் ஒருதெய்வ
முன்னைப்போ லுண்டோ வுரை.

(ப-ரை) மூன்று-மூன்று, கண்ணா-கண்களை யுடையவனே!, மு-மூன்று, தொழிலா - தொழிலை யுடையவனே!, மும்-மூன்று, முதலா - மூர்த்திகளாய் உள்ளவனே!, மூ - மூன்று, உலகங்களும் - உலகங்களும், தோன்ற-தோன்ற,



கருணை-கருணையை, பொழி-சொரிகின்ற, தோன்றலே-பெரியவனே!, ஈன்ற-பெற்ற, அன்னை - தாய், தன்னை - தன்னை, போல் - போல, அன்பு-அன்பு, தழைத்தோய் - பெருக்கமாக உடையவனே!, உன்னை - தேவரீரை, போல்-போல, ஒரு-ஒப்பற்ற, தெய்வம்-கடவுள், உண்டோ-இருக்கின்றதோ, உரை-கூறுவாயாக எ-று.

(வி-ரை) இறைவனுக்கு நெற்றிக் கண்ணோடுகூட மூன்று சுடரும் முக்கண்களாக அமைந்திருத்தலின் 'முக்கண்ணு' என்றார். பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் முத்தொழில் புரியுந் தேவர்களும் சிவபெருமானின் கூறாகலினாலும், மூவராயும், மூவர்க்கும் முதல்வனாகவும் நிற்றலினாலும் 'முத்தொழிலா' என்றார். இறைவன் மும்மூர்த்திகளுந் தானாகவே இருத்தலினால் 'மும்முதலா' என்றார். மூவுலகும் படைத்துக் காத்துத் தன்னுட் காப்பவன் இறைவன் ஆதலின் 'மூவுலகுந் தோன்றக் கருணை பொழி தோன்றலே' என்றார். உயிர்க்குத் தாயினும் அன்புடையவர் இல்லையாதலினாலும், இறைவன் தாயினும் சால அன்புடையவன் ஆதலினாலும், 'ஈன்ற வன்னை தன்னைப்போ லன்பு தழைத்தோய்' என்றார். இறைவன் ஒப்புயர்வு அற்றவன் ஆதலினால் 'ஒரு தெய்வம் உன்னைப்போல் உண்டோ' என்றார். 31

இறைவனே! நிருவிகற்ப நிஷ்டை எப்போது வருமோவெனல்

நேசிக்குஞ் சிந்தை நினைவுக்கு ளுன்னைவைத்துப்
பூசிக்குந் தானிறைந்து பூரணமா—யோசித்து
நின்றதல்லான் மோனா நிருவிகற்ப நிட்டைநிலை
என்றுவரு மோஅறியே னே.

(ப-ரை) மோனா-மவுனகுருவே!, நேசிக்கும்-விரும்புகின்ற, சிந்தை-மனமானது, நினைவுக்குள்-எண்ணத்தில், உன்னை-தேவரீரை, வைத்து-எழுந்தருளச்செய்து, பூசிக்கும் - வணங்கும், தான் - தானே, நிறைந்து - நிறைவாகி, பூரணம்-நிறைவு, ஆய்-ஆக, யோசித்து-எண்ணி, நின்றது-நின்றதே, அல்லால்-அல்லாமல், நிருவிகற்பம்-நிர்விகற்பம், நிட்டை-நிட்டை, நிலை - நிலையானது, என்று-எக்காலத்து, வருமோ-எய்துமோ, அறியேன்-அறிகிலேன் எ-று.

(வி-ரை) பத்தி மிகுந்த மனமாதலின் 'நேசிக்குஞ் சிந்தை' என்றார். சிந்தையிலே துவிதபாவனையாக வைத்துப் பூசித்தலினால் 'நினைவுக்கு ளுன்னை வைத்துப் பூசிக்கும்' என்றார். நிறைந்து பூரணமா யோசித்து என்றது-நன்றாய் மனத்தகத்துச் சிந்தித்தலை. பூசித்ததும், யோசித்து நின்றதும் துவிதபாவனையாகவே என்பது அறியத்தக்கது. மோனா என்றது - இறைவனை. என்னை? இறைவனே ஆன்மாக்கள் பக்குவமறிந்து அருள்புரிய ஆசாரிய திருக்கோலத்துடன் எழுந்தருளுகின்றான் ஆதலின், இறைவனே மோனதேசிகனாக வந்தது இவ்வாசிரியர்க்கு அறியற்பாலது. நிருவிகற்பம் என்றது-நீ நான் என்னும் பேதாபேதம் இல்லாது தானதுவாய், அதுதானாய்

அத்துவித நிலையில் நிற்கும்நிலை. அதாவது, சோகம் பாவனையில் இரண்டெனும் உணர்ச்சியற்று ஒன்றாந்தன்மையில் நிற்றல். "புணர்ப்ப தொக்க எந்தை என்னை யாண்டுபூண நோக்கினாய்" என்ற **மணிவாசகர்** திருவாக்கு ஈண்டு கருதி நோக்கத்தக்கது. 32

இறைவனே! அறிவுமயமாய் ஆனந்தம் எய்தினால் தேகம் வேண்டேன் அது எய்தும்வரை தேகம் வேண்டும் எனல்

**அறிவி லறியாமை யற்று அறிவாய் நின்று**
**பிறிவறவா னந்தமயம் பெற்றுக்—குறியவிழ்ந்தால்**
**அன்றைக் குடல்வேண்டேன் ஐயாஇவ் வாக்கையையே**
**யென்றைக்கும் வேண்டுவனே யான்.**

(ப-ரை) ஐயா-ஐயனே!, அறிவில் - அறிவுடனே, அறியாமை - அறியாமையை, அற்று - நீங்கி, அறிவாய் - அறிவே உருவம் ஆகி, நின்று - இருந்து, பிறிவு-நீக்கம், அற - இல்லாதபடி, ஆனந்தம் - சுகம், மயம் - ரூபம், பெற்று-பெற்று, குறி-எண்ணம், அவிழ்ந்தால்-அகன்றால், அன்றைக்கு-அந்தக் காலத்தில், உடல்-தேகத்தை, வேண்டேன்-விரும்பேன் (அவ்வாறில்லாதகாலத்து), என்றைக்கும் - எக்காலத்தும், இவ் - இந்த, ஆக்கையையே - தேகத்தையே, யான்-அடியேன், வேண்டுவன்-விரும்புவன் எ-று.

(வி-ரை) அறிவு அறியாமை அற்று என்றது-பாசங்கள் கழன்று நிற்கும் நிலையை. அறிவாய் நின்று என்றது-ஞானமாக நிற்றலை. பிறிவற ஆனந்தமயம் பெற்று என்றது-அத்துவித நிலையிலிருந்து சிவானந்தத்து மூழ்குதலை. குறி அவிழ்தல் என்றது - அந்தர்முகப்பட்டு மனம் ஒருமைப்பட்டு நிற்றலை. பாசங்களின் நீங்கி, அத்துவிதமாக நின்று ஆனந்தித்து, மனமொருமைப்பட்டால் தேகம் வேண்டேன் என்றார். இம்மூன்றுஞ் சித்திக்காதவிடத்து தேகம் வேண்டுவேன் என்பார், 'இவ்வாக்கையையே என்றைக்கும் வேண்டுவனேயான்' என்றார். அவாய் நிலையால் 'இம்மூன்றுஞ் சித்திக்காதவிடத்து' என்பது வருவித்துக் கோடற்பாற்று. 'வேண்டுவனே' என்றதில் ஈற்றேகாரம் அசையாக நின்றது. 33

உடலை வருத்துவதால் பயனில்லை யெனல்

**உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்**
**விடவிடவே நாடுவரோ மெய்யைப்—படபடென**
**வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனான்**
**ஆண்டநீ தானே யறி.**

(ப-ரை) உடலை - சரீரத்தை, பழித்து-நிந்தித்து, இங்கு-இவ்விடத்தே, உணவும்-ஆகாரமும், கொடாமல்-தராதபடி, மெய்யை-உடம்பை, விடவிடவே-விட்டுவிடவே, நாடுவரோ - விரும்புவரோ? (விரும்பார்கள் ஆதலால்), படபடென - துரிதமாக, இந்த-இந்த, உடல்-உடம்பை, மெய்-உண்மை, உணரா-



அறியாத, பொய்யன் - பொய்யனாகிய, நான் - அடியேன், வேண்டுவேன்-விரும்புவேன், ஆண்ட - அடியேனை ஆட்கொண்ட, நீ - தேவரீர், தானே-தானே, அறி-அறிவாயாக எ-று.

(வி-ரை) உயிர் உடம்போடு கூடியிருந்தே விதிவிலக்குகளை அறிந்து புண்ணியங்களையும் தவத்தையும் புரிந்து ஞானம் பெற்று முத்தி யடைய வேண்டி யிருத்தலினால், ஞானம் பெறவும், முத்தியடையவும் உயிரும் உடலும் வேண்டும். ஆதலின் உடலைப் பேணவேண்டும். உடல் கெடின் உயிர் கெடும். அறியாது-தேகத்தைப் பேணாது தேகத்துக்கு வேண்டிய உணவு கொடாது தேகத்தை அழிக்கின்றார்கள். இதுகொண்டே 'உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல் விடவிடவே நாடுவரோ மெய்யை' என்றார். இதனானன்றே **பெரியாரும்,** உடலை "நடமாடுங் கோயில்" என்றனர். இன்னும்,

"உடம்பு மெலியின் உயிரும் மெலியும்
உடம்பிங் கழியின் உயிருமீண் டழியும்
உண்மை ஞான முணவே தெங்ஙன்
முத்தி யெய்தும் முறைதான் யாண்டே
மெய்யை மெய்யா வித்தகத் தோர்ந்தே
வளர்க்கும் வண்ணம் வளர்த்திடல் வேண்டும்
தளரா துயிருந் தானே வளரும்
உணர்வு பெறவே உறுதி
இணர்மென் கூந்தல் இதுவா கும்மே"

என்னும் **நுண்பொருள் நூற்றலும்** அறியலாம். இன்னும், உடலின் பெருமையை,

"உடம்பினை முன்னமிழுக் கென் றிருந்தே
னுடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டே
னுடம்புளே யுத்தமன் கோயிற் கொண்டானென்
னுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே"

என்ற **திருமூலர் திருமந்திரமும்** நன்குணர்த்தும்.

அடியேன் உடம்பைப் பேணல் உடல்மேற் கொண்ட அவாவினாலன்று. நின்னை அடையும் அவாவினாலேயாம். யார் மனத்தும் உறையுஞ் சோதியே நீ யறியாதது முண்டோ என்பார், 'படபடென வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப் பொய்யனா னாண்டநீ தானே யறி' என்றார். 34

இறைவனே! அடியேனை ஏன் கைவிட்டா யெனல்

**அறியாயோ வென்னையுநீ ஆண்டநீ சுத்த**
**வெறியாய் மயங்கவுமேன் விட்டாய்—நெறிமயங்கிக்**
**குன்றுஞ் செடியுங் குறுகுயோ ஐயாவே**
**கன்றுகெட்டாற் றாயருகே காண்.**

(ப-ரை) ஐயாவே-ஐயனே!, நீ-தேவரீர், என்னையும் - அடியனேனையும், அறியாயோ - அறிந்ததில்லையோ, ஆண்ட - (அடியேனை) ஆண்டருளின, நீ-தேவரீர், சுத்த-(அடியேன்) முழு, வெறியாய்-வெறியனாகி, மயங்கவும்-மயங்கி விடவும், என்-ஏன், விட்டாய்-கைவிட்டுவிட்டாய், கன்று-கன்றானது, கெட்டால்-காணமற்போனால், அருகே-சமீபத்தில் உள்ள, தாய்-தாய்ப்பசுவானது, நெறி-வழி, மயங்கி-தவறி, குன்றும் - குன்றுகளையும், செடி - செடிகளையும், குறுகுமோ-அணுகுமோ; எ-று.

(வி-ரை) இறைவன் சர்வஞ்ஞன் ஆதலின் 'நீ அறியாயோ வென்னையும்' என்றார். இறைவன் ஆண்டானும் உயிர்கள் அடிமைகளாகவும் இருத்தலி னாலும், சற்குருவாக வந்து ஆண்டருள் செய்தமையாலும் 'ஆண்டநீ' என்றார். காட்டினாற் காணவும், ஆட்டினாலாடவும், உணர்த்தினால் உணரவும் உரியனாகி சுதந்தரமின்றிப் பரதந்தரனாகஇருக்க உன் அடிமையாகிய என்னைநீ வைதிக சைவநெறியை விட்டுப் புறம்பே பிரபஞ்சத்தல்ல லுற்றலைய ஏன் விட்டாய் என்பார் 'ஆண்டநீ சுத்தவெறியாய் மயங்கவு மேன்விட்டாய்' என்றார். இவ் வெண்பாவிற் பின்னிரண்டடியிற் கூறியவை உவமானம். தாய்ப்பசு தன் கன்று காணாதுபோனால் அது சென்ற இடந்தேடிச்சென்று கண்டுபிடித்துத் தன் வயமாக்கிக்கொள்ளும். அவ்வாறு செய்யாது குன்றையும், செடியையும் நாடி அங்கு அலைந்துகொண்டிராது. மோப்பங்கொண்டு கண்டுபிடித்திடும். வாளா இருந்திடாது அதுபோல அடியேன் வழி மயங்கியகாலத்து அருள் புரிந்து அடியேனை ஆட்கொள்ளுவாயாக என்பார். 'குன்றுஞ் செடியுங் குறு குமோ வையாவே, கன்று கெட்டாற் றாயருகே காண்' என்றார். 35

இறைவனே! நிர்விகற்ப நிட்டையை அடைவதே பொருளெனல்

**ஏதுக் குடற்சுமைகொண் டேனிருந்தேன் ஐயனே**
**ஆதிக்க மோன வருட்டாயே—சோதியா**
**மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே**
**பின்னமற நில்லாத பின்.**

(ப-ரை) ஐயனே - ஐயாவே!, ஆதிக்கம் - உரிமையையுடைய, மோனம்-மௌன நிலையை, அருள்-கொடுத்தருளும், தாயே-தாயே!, சோதி-பிரகாசம், ஆம்-ஆகிய, மன்ன-இறைவனே!, நிருவிகற்பம் - நிர்விகற்பமாகிய, ஆனந்தம்-சிவானந்தம் தரும், நிட்டையிலே-நிட்டையிலே, பின்னம்-குறைவு, அற-நீங்க, நில்லாத - அமைந்திராத, பின் - காலத்து, ஏதுக்கு - எதற்காக, உடல்-உடம்பாகிய, சுமை - சுமையை, கொண்டு - சுமந்து, ஏன்-எதற்காக, இருந்தேன்-வாழ்ந்திருந்தேன் எ-று.

(வி-ரை) 'ஏதுக்கு' முதல்நின்ற 'ஏ' காரம் வினாப்பொருளில் வந்தது. அகவினா என்ன பயன் குறித்தோ என்ற பொருளது. பெற்ற உடலாற் பெற வேண்டிய ஞானந் தவம் பெறாத காலத்து இவ்வுடம்பு சுமையே என்பார். 'ஏதுக் குடற்சுமை கொண்டேன்' என்றார். இவ்வுடம்போடு கூடி இருந்



தாலும் பயன் இல்லை என்பார். 'இருந்தேன் ஐயனே' என்றார். இறைவன் சர்வ ஆன்மாக்கட்கும் தாயாக இருந்தருளுந் தயாபரன் ஆதலினாலும், மோன நிலை காட்டி முத்திப்பேரின்பம் அருள்வோனாதலினாலும் 'ஆதிக்க மோன வருட்டாயே' என்றார். இறைவன் சோதிமயன் ஆதலினாலும் எல்லாவற்றிற்கும் இறைவன் ஆதலினாலும் 'சோதியா மன்ன' என்றார். பின்னமற-என்றது பிரிவின்றி அத்துவிதமாக நிற்றலைக் குறித்தது. பின்னம்-சிதைவு, குறைவு, பிரிவு. இச்செய்யுளின் கருத்தை,

> "முத்திநிலை கூட முறையாய்ச் சரியைமுதல்
> வைத்தபடி நான்கும் வகை வகையா—இத்தலத்தில்
> செய்யார் எடுத்தவுடல் சிச்சீ சுமை சுமையே
> உய்ய வகை யுண்டோ உரை"

என்ற அமிர்த கவியாலும் அறியலாம். 36

இறைவனே! உடலோம்பலே முத்தியடைய நெறியெனல்

**பின்னு முடற்சுமையாப் பேசும் வழக்கதனால்**
**என்னபல னுற்றிருந்தோமே—அன்னதனா**
**லானந்தந் தானேதா னாகுமெம் மையனே**
**ஏனிந்தத் துன்ப மினி.**

(ப-ரை) எம்-எங்களுடைய, ஐயனே-ஐயனே!, பின்னும்-மேலும், உடல்-உடம்பை, சுமை-சுமை, ஆ-ஆக, பேசும்-கூறும், வழக்கதனால்-வழக்கத்தாலே, என்ன-யாது, பலன்-பயன், நாம்-நாம், உற்று-அடைந்து, இருந்தோம்-இருந்தோம், அன்னதனால்-அவ் உடலினால், ஆனந்தம் - சிவானந்தமானது, தானே தான்-தன்னாலேயே, ஆகும் - உண்டாகும், இனி - இனி, இந்த-இத்தகைய, துன்பம்-துன்பம், ஏன்-எதுக்கு எ-று.

(வி-ரை) இறைவன் தனுகரணங்களை உய்வுப்பேற்றுக்குக் கருவியாகவே தந்தருளியிருக்கின்றான் ஆதலினாலும், உடலிடங்கொண்டு கோயிலா ஈசன் உறைகின்றானாதலின் இவ்வுடலைச் சுமை சுமை எனக் கூறல் பொருத்த முடையது ஆகாதென்பார். 'பின்னுமுடற் சுமையைப் பேசும் வழக்கதனால், என்னபல னுற்றிருந்தோமே' என்றார். முத்திப்பேறு இவ்வுடலாலேயே பெறல்வேண்டும். அதற்கு மானிடத்தேகமே ஏற்றது. இதனை, "அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது" என்ற **ஔவைத் திருவாக்கும்** நோக்கத்தக்கது. இதனானன்றே **திருமூலரும்**,

> "உடம்பா ரழியி லுயிரா ரழிவர்
> திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்" என்றார்.

இந்த உடலாலேயே உயர்ந்த சிவானந்தம் பெறலாம், உடம்பினுள் உத்தமனைக் காணலாம் என்பார், 'அன்னதனா லானந்தந் தானேதா னாகும்' என்றார். 37

உலகத்தை வெறுத்து உண்மைநெறி நின்றால் சிவானந்த முண்டா மெனல்

துன்பக் கடலிற் றுளைந்ததெலாந் தீர்ந்ததே
இன்பக் கடலி லிருமென்ன—அன்பிற்
கரைந்து கரைந்துருகிக் கண்ணருவி காட்ட
விரைந்துவரு மானந்த மே.

(ப-ரை) துன்பம்-துன்பமாகிய, கடலில் - கடலிலே, துளைந்தது-முழுகியது, எல்லாம்-எல்லாம், தீர்ந்தது-தொலைந்தது, (இனி) இன்பம்-சுகமாகிய, கடல்-கடலிலே, இரும்-இரும், என்ன-என்று மனத்திற்குக்கூறி, அன்பினாலே, கரைந்து-கசிந்து, கரைந்து-கசிந்து, உருகி-உருகி, கண்-கண்களில், அருவி - வெள்ளம்போல் நீரினை, காட்ட - சிந்த, ஆனந்தம் - இன்பமானது, விரைந்து-அதிசீக்கிரத்தில், வரும்-உண்டாகும்; எ-று.

(வி-ரை) பிரபஞ்சமாயையால் வரும் துக்கம் மிகப்பரந்தது, கரை எறற்கரியது என்பார் 'துன்பக்கடல்' என்றார். துளைதல் - முழுகல்; இனி தத்தளித்தல் எனினுமாம். 'தீர்ந்ததே' ஈற்றேகாரம் தேற்றப்பொருளில் வந்தது. தீர்ந்ததே என்றது உறுதிபற்றி எதிர்காலம் இறந்தகாலத்தாற் கூறப்பெற்றது; இது காலவழுவமைதி. இன்பக்கடலில் இரும் என்றது நெஞ்சறிவுறுத்தல். ஈண்டு ஒருமையிற் பன்மை வந்தது பால்வழுவமைதி. "ஒருமையிற் பன்மையும் பன்மையி லொருமையும், ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே" என்றது இலக்கணம். இனி இரும் என்றதற்கு உலகத்தவர்களே இரும் என கூறலுமாம். கரைந்து கரைந்து இது மிகுதிபற்றி அடுக்கி வந்தது. கண்ணருவி என்றது-ஆனந்தக்கண்ணீர்ப் பெருக்கை. ஆனந்தமே என்றது-சிவானந்தத்தை. 38

இறைவனே நிர்விகற்ப நிட்டைபெற்று ஆனந்தமுற அருளினை அதற்கு அடியேனை முற்றும் தேவரீருக் கீந்தேன் என்கின்றார்

கரைந்து கரைந்துருகிக் கண்ணீரா றாக
விரைந்தே நிருவிகற்ப மெய்த—நிரந்தரமு
நின்னையே சிந்திக்க நீகொடுத்தாய் மோனநான்
என்னைமுழு துங்கொடுத்தே னே.

(ப-ரை) மோன - மௌனதேசிகனே!, கரைந்து-மெலிந்து, கரைந்து-மெலிந்து, உருகி-நெகிழ்ந்து, கண்-கண்களில், நீர் - நீர், ஆறு - ஆறுபோல, ஆக-பெருக, விரைந்து - சீக்கிரமாக, நிருவிகற்பம்-ஞானநிட்டையை, எய்த-பெற, நிரந்தரமும் - எப்போழ்தும், நின்னையே - தேவரீரையே, சிந்திக்க-எண்ண, நீ - தேவரீர், கொடுத்தாய் - அருள் செய்தீர், நான் - அடியேன், என்னை - எளியேனை, முழுதும் - முற்றும், கொடுத்தேன் - தத்தஞ்செய்தேன் எ-று.



(வி-ரை) 'கரைந்து கரைந்து' இது மிகுதியால் அடுக்கியது. கரைதல்-மெலிதல் எனினும், தேய்வுறல் எனினும் பொருந்தும். ஆறு ஆக என்றது ஆறுபோலப் பெருக என்னும் பொருள் தந்தது. 'போல' என்னும் உவமவுருபு தொக்குநின்றது, உவமத்தொகை. நிருவிகற்பம் என்றது-நிர்விகற்ப நிட்டையை, அத்துவிதானந்தப்பேற்றை. நிரந்தரம் என்றது - இடைவிடாது சிந்தித்தலை. நின்னையே ஈற்றேகாரம் தேற்றப்பொருளது. பிறசிந்தனையின்றி உன்னையே சிந்திக்க என்றலாம். 'நீ கொடுத்தாய்' இதில் 'நீ' என்றது இறைவனை. மோன என்றது மௌனதேசிகனை. ஈண்டு இறைவனே ஞானாசிரியன் ஆதல் மறக்கற்பாலதன்று. 'என்னை முழுதுங் கொடுத்தேன்' என்றது உடல், பொருள், ஆவி என்னும் மூன்றையுந் தந்தமையை. ஈண்டு தற்போதத்தை இழந்து நிற்றலை என்று கொள்ளினும் இழுக்கா. இவ்வாறு பொருள் கூறுவாரும் உளர். 39

மனமே! நீ இறந்தா லானந்த முண்டாமெனல்

அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற்
கல்லு முருகாதோ கன்னெஞ்சே—பொல்லாத
தப்புவழி யேனினைந்தாய் சந்ததமு நீயிருந்த
வெய்ப்பிலே யானந்த மே.

(ப-ரை) கல்-கல்போன்ற, நெஞ்சே-மனமே!, அல்லும்-இரவும், பகலும்-பகலும், பேர் - பெரிய, அன்புடனே - அன்புடனே பாராட்டி, தான்-தான், இருந்தால் - இருந்துகொண்டிருந்தால், கல்லும் - கருங்கல்லும், உருகாதோ-உருகிப்போகாதோ, பொல்லாத-தீமையான, தப்பு-தவறாகிய, வழி-வழியை, என்-எதற்காக, நினைந்தாய்-எண்ணினாய், சந்ததமும் - எப்பொழுதும், நீ-மனமாகிய நீ, இறந்த-ஒடுங்கிய, எய்ப்பிலே - நிலையிலே, ஆனந்தம் - சுகம் உண்டு, எ - று.

(வி-ரை) அன்புடைமை எத்தகைய கடின மனத்தையும் இளகச்செய்யும் என்பார், 'அல்லும் பகலும்பே ரன்புடனே தானிருந்தாற், கல்லு முருகாதோ' என்றார். பொல்லாத தப்புவழி என்றது பிரபஞ்ச மாயாகாரிய வழியை; இனி, இதற்கு மருள்மார்க்கங்களாய பொய்ச்சமையங்களை என்பர். இது பொருந்தாது. நீ யிறந்தால் என்றது-மன ஒடுக்கத்தை. எப்பிலே இது அதே காலத்தே என்றும் பொருள்தந்தது. எப்புகாலம், ஆனந்தம் என்றது சிவானந்தத்தை. 'அல்லும் பகலும்' என்றதில் வந்த உம்மை எண்ணும்மை. 'கல்லும்' என்றதன் ஈற்று உம்மை உயர்வுச் சிறப்பும்மை. 40

இறைவனே! என்னைத்தந்தேன் ஆனந்தமுற்றே னெனல்

கொடுத்தேனே யென்னைக் கொடுத்தவுட னின்ப
மடுத்தேனே நீடுழி வாழ்ந்தே—யடுத்தேனே
பெற்றேனே பெற்றுப் பிழைத்தேனே சன்மவல்ல
விற்றேனே ஏழையடி யேன்.

(ப-ரை) ஏழை - அறிவிற் குறைந்தவனாகிய, அடியேன் - அடியேன், என்னை-அடியேனை, கொடுத்தேனே-கொடுத்துவிட்டேனே, கொடுத்த-அவ்வாறு கொடுத்த, உடன் - உடனே, இன்பம் - சுகத்தை, மடுத்தேனே - உண்டேனே, நீடூழி - பலவூழிகாலம், வாழ்ந்தே - வாழ்ந்திருந்தே, அடுத்தேனே-அடுத்திருந்தேனே, பெற்றேனே - பெறவேண்டியவைகள் எல்லாவற்றையும் அடைந்தேனே, பெற்று-அவ்வண்ணம் அடைந்து, பிழைத்தேன் - உச்சீவித்தேன், சன்மம் - ஜனனத்தால் உண்டாகக்கூடிய, அல்லல் - துன்பங்களை எல்லாம், இற்றேனே-ஒழித்தேனே; எ-று.

(வி-ரை) இறைவன் மௌன தேசிகனாகத் திருக்கோலங் கொண்டுவந்து கடாட்சித்த காலத்துக் குருகாணிக்கையாகத் தன் உடல், பொருள், ஆவி மூன்றையுங் கொடுத்தமையால், 'கொடுத்தேனே என்னை' என்றார். உடல் பொருள் ஆவி மூன்றையும் ஆசாரியனாக வந்தருளிய இறைவனுக்குப் பாத காணிக்கையாகத் தந்ததும் இவன் செயலெல்லாம் அவன் செயலாகி நின்ற காலை இன்பம் பெருகியமையின், 'கொடுத்தவுடன் இன்பம் மடுத்தேனே' என்றார். தன் செயலெல்லாம் அற்று அவன் செயலாகிப் பேரின்பத்து மூழ்கி சகல கேவலம் அற்றிருந்த நிலையினை நோக்கி, 'நீடூழி வாழ்ந்தே அடுத்தேனே' என்றார். ஈண்டு அடுத்தல் என்றது திருவருளினைச் சார்ந்திருக்கப் பெற்றிருந்தமையை. பெற்றேனே என்றது சிவாநந்தப் பெருக்கைப்பெற்றுய்ந்தமையை. சிவாநந்த வெள்ளத்தில் மூழ்கி இன்புற்றிளைத்திருக்கு நிலையிலே அவத்தை யனைத்துங் கழன்றோடி ஒழிந்தமையால் 'பிழைத்தேனே' என்றார். இத்தகைய இறைவன் திருக்கருணையால் பிறப்பிறப்பொழிந்து பேரின்பமுத்தி பெற்றுய்ந்தமையால் 'சன்ம அல்லல் அற்றேனே' என்றார். 41

ஆனந்தமே அகமகிழ்வு தரு மெனல்

பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றோம் எனவுரைக்கக் காரியமேன்—சற்றேனு
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி ஏசற்று
வாக்கற்றாற் பேசுமோ வாய்.

(ப-ரை) பிறவாமை-மீண்டும் பிறவாது இருத்தலை, பெற்றோம்-அடைந்தோம், பேசாமை - மவுனம், ஆய்-ஆக, இருக்க - இருக்க, கற்றோம்-தெரிந்துகொண்டோம், என - என்று, உரைக்க - கூறுவதனால், காரியம்-பயன், என்-என்ன, சற்றேனும்-சிறிதாகிலும், நீக்கு-பிரிவு, அற்ற-நீங்கிய, இன்பம்-சிவாநந்த, நிலை - நிலைமை, பொருந்தி-அடைந்துபொருந்தி, ஏசு-பழிப்பு, அற்று-இன்றி, வாக்கு-பேச்சு, அற்றால்-நின்றுவிட்டால், வாய்-வாயானது, பேசுமோ-சொல்லிக்கொண்டிருக்குமோ எ-று.

வி-ரை) மௌனம் பெற்றோர்க்குப் பிறவாமையுறும். மௌனம்என்பது மன வாக்குக் காயங்களால் மவுனமாக இருத்தல். மௌனம் பெற்றவர் மௌனம் பெற்றோம் என மனத்தால் நினைக்க அளவே மனமவுனம் அகன்ற



தாயிற்று. மௌன முற்றேன் என்று பிறர்க்கு எடுத்துரைக்கையில் வைகரி வாக்கு காரியப்படுதலினால் வாக்கு மௌனம் அகன்றதாயிற்று. வைகரி வாக்கு காரியப்படுங்காலத்தே சகல தத்துவங்களும் காரியப்படும் ஆகையினாலே காய மவுனமும் அகன்றோடியதாகும். ஆக மூன்று மவுனமும் அகன்றோடிய போழ்து மௌனமாக இருக்கின்றேன் பிறவாமை பெற்றேன் என்பது பயனில் வீண் கூற்றே யாகும் என்பார், 'பெற்றோம் பிறவாமை பேசாமை யாயிருக்கக் கற்றோமென வுரைக்கக் காரியமேன்' என்றார். 'கண்டவர் விண்டிடார்' என்றபடி. கொஞ்சமாகிலும் சிவானந்த நிலையைப் பெற்று பழிப்புற்று வாக்கற்று நின்றவர் வாய் பேசார் என்பார், 'சற்றேனு நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று வாக்கற்றாற் பேசுமோ வாய்' இதனை "வாய் பேசாதே மவுனம் விடாதே" முதுமொழியுங் கண்டு தெளிக. 42

சிவபெருமான் திருவருளை நாடாதவர்க்கு இனி என்ன
வாழ்க்கை இருக்கிறது என்கின்றார்

காலன் றனையுதைத்தான் காமன் றனையெரித்தான்
பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை—ஞாலமெச்சப்
பின்னே நடக்கவிட்டான் பேரருளை நாடாதார்க்
கென்னே நடக்கை யினி.

(ப-ரை) காலன்-எமன், தனை-தன்னை, உதைத்தான் - உதைத்தவனும், காமன்-காமன், தனை-தன்னை, எரித்தான் - எரித்தவனும், பாலன்-உபமன்யுவாகிய குழந்தையின், பசிக்கு-பசிக்கு, இரங்கி-இரக்கங்கொண்டு, பால்-பால்மயமான, கடலை-திருப்பாற்கடலை, ஞாலம்-பூலோகம், மெச்ச-புகழ, பின்னே-அப்பாலனுக்குப் பின்னே, நடக்க - நடக்க, விட்டான் - விட்டவனும் ஆகிய இறைவனின், பேர் பெரிய, அருளை-திருவருளை, நாடாதார்க்கு - விரும்பாதவர்களுக்கு, இனி - இனிமேல், என் - என்ன, நடக்கை - நடக்கையுளது, எ - று.

(வி-ரை) சிவபெருமான் பத்திமிகுந்த மார்க்கண்டேயருக்காக யமனை உதைத்தமையால் 'காலன்றனை யுதைத்தான்' என்றார். கல்லடியில் தட்சணாமூர்த்தியாக மௌன யோகத்தில் இருந்தகாலை அதனைக் குலைக்கவந்த மன்மதனைப் பார்த்தெரித்தமையால் 'காமன் றனையெரித்தான்' என்றார். உபமன்யு பாலராக இருக்கும்பொழுது பால்வேண்டியழ அவர்க்குத் திருப்பாற்கடலை அவர்பால் இறைவன் அனுப்பினன் ஆதலால் 'பாலன் பசிக்கிரங்கிப் பாற்கடலை ஞாலமெச்சப் பின்னே நடக்கவிட்டான்' என்றார். ஈண்டு இறைவன் கருணையை விளக்கவேண்டித் தன்னை நம்பித் தன்னிடத்து அன்பு செலுத்திய மார்க்கண்டேயற்கு எமனை உதைத்த கதையைக் கூறினர். இதனானே இறைவன் ஆற்றலையும் அவன் கருணையையும் விளக்கினர். சிவனடியார்க்கு யமபயமில்லை என்பதுங் குறிப்பித்தார். யோகில் நின்றற்கு இடையூறாக தேவர் தூண்டுதலால் மலரம்பு தொடுத்த மன்மதனைப் பார்த்

தெரித்தமையைக் கூறினதால் இறைவன் அடியார்க்கு மோகத்தை முனிதல், காமத்தை யகற்றல் இலேசாக அவனருளால் எய்திடும் என்பது குறிப்பித்ததாம்.

பாலணுகிய உபமன்யு பால்வேண்டி யழுதபொழுது திருப்பாற்கடலை அருள் செய்ததைச் சொல்லியதால் சிவபெருமான் அடியார்க்குத் துன்பம் என்பதில்லை. எந்நாளும் இன்பமேயாம். அவர் எத்தகைய அரிய பொருளையும் எய்திடுவர் என்பதைக் குறிப்பித்தனர். இதனானே இறைவன் பேரருளைப் பெற்றோர்க்குச் சாவில்லை. உலகமாயை துன்புறுத்தாது. அவர்க்கு எய்தாத இன்பமில்லை. எதுவும் அரியதன்று. அவன் பேரருளைப் பெறாதார்க்குத் துன்பமே பெரிதுண்டாம். அந்தகற்கே ஆளாவர். தாழ்வேயன்றி வாழ்வில்லை. எல்லாம் அரிதே என்பார் 'பேரருளை நாடாதார்க் கென்னே நடக்கையினி' என்றார்.

43

கண்ணீர் பெருக்கிக் கைகூப்பி நாவாற் றுதித்து வணங்குவோர்களுடைய மனமே ஞானச்சுடர் என்கின்றார்

**விண்ணருவி மேன்மேல் விளங்குவபோ லேயிரண்டு**
**கண்ணருவி வெள்ளமொடு கைகூப்பித்—தண்ணமிர்த**
**வெள்ளமே ஆனந்த வெற்பே எனத்தொழுவோ**
**ருள்ளமே ஞான வொளி.**

(ப-ரை) விண்-ஆகாயத்தின்கண்ணுள்ள, அருவி-கங்காநதி, மேல்மேல்-மேலும்மேலும், விளங்குவ-பெருக்கெடுத்துப் பாய்ந்து விளங்குவது, போலே-போல, இரண்டு-இரண்டு, கண்-கண்களிலும், அருவி-அருவி, வெள்ளமொடு-பெருக்குடனே, கை - கையை, கூப்பி - குவித்துவணங்கி, தண் - குளிர்ச்சி பொருந்திய, அமிர்தம் - அமிர்தத்தின், வெள்ளமே - பெருக்கே, ஆனந்தம்-ஆனந்தசொரூபமாகிய, வெற்பே-மலையே!, என-என்று கூறி, தொழுவோர்-தோத்தரித்து வணங்குவோர், உள்ளமே - மனமே, ஞானம்-ஞானமயமாகிய, ஒளி-சுடராம் எ-று.

(வி-ரை) 'விண்ணருவி' என்றது ஆகாய கங்கையை. 'கண்ணருவி வெள்ளம்' என்றது ஆனந்தக் கண்ணீர் வெள்ளத்தை. இது மனத்தால் அதித்தலாம். மனம் நினைந்தமாத்திரத்தில் அன்பின் பெருக்கால் கண்ணீர் பெருகா நிற்கும். இதனை, "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர் புன்கணீர் பூச றரும்" என்ற **திருக்குறளா** லறியலாம். கைகூப்பி வணங்கல் இது காயவணக்கம். 'தண்ணமிர்த வெள்ளமே யானந்த வெற்பே' எனத் தொழுவோர் என்றது வாக்கால் வணங்கும் வணக்கம். மேற்கூறிய முறையானே மனம், வாக்கு, காயம் என்னும் திரிகரண வணக்கமுங் கூறப்பெற்றது. 'உள்ளமே ஞானவொளி' என்றது திரிகரணத்தாலும் இறைவனை வணங்குகின்றவர்களின் உள்ளமே ஞானவொளி உறையும் இடம் என்றதாம். ஞான ஒளி என்றது - ஞானசோதியாகிய இறைவனை.

44



இறைவன் கல்லால் அடியில் வீற்றிருந்தருளி எல்லோரும் ஈடேற ஓர் வசனத்தைச் சொல்லாது சொல்லியருளினன் என்கின்றார்

**பிள்ளைமதிச் செஞ்சடையான் பேசாப் பெருமையினன்**
**கள்ளவிழும் பூங்கொன்றைக் கண்ணியான்—உள்ளபடி**
**கல்லாலின் கீழிருந்து கற்பித்தா னோர்வசன**
**மெல்லாரு மீடேற வே.**

(ப-ரை) பிள்ளை - ஒன்றாம்பிறை, மதி-சந்திரனைத்தரித்த, செம்-செவ்விய, சடையான்-சடையை உடையவனும், பேசா-வேதாகமங்களாலும் பேசுதற்கு அரிய, பெருமையினன்-பெருமையையுடையவனும், கள் - தேனானது, அவிழும்-சிந்தும், பூம்-அழகிய, கொன்றை-கொன்றைப் பூவாலாகிய, கண்ணியான் - மாலையையுடையவனும் ஆகிய இறைவன், கல் - கல்லாகிய, ஆலின்-ஆலவிருட்சத்தின், கீழ்-நிழலில், இருந்து-இருந்து, உள்ளபடி-சத்தியமாகவே, எல்லாரும் - யாவரும், ஈடேற - உய்ய, ஓர்-ஒரு, வசனம்-வசனத்தை, கற்பித்தான்-போதித்தருளினன் எ-று.

(வி-ரை) 'பிள்ளைமதி' என்றது பிறைச்சந்திரனை. 'பேசாப் பெருமையினன்' வேதங்களாலும் சொல்லரிய பெருமையை உடையவன் என்பது பொருள்; இனி இரட்டுற மொழிதலாக, கல்லா லடியில் மௌனியாய் நின்றருளிய பெருமையினன் என்றதும் ஆம். இதுகொண்டே 'கல்லாலின் கீழிருந்து கற்பித்தான் ஓர்வசனம்' என்றவிடத்து ஓர் வசனம் சொல்லாமற் சொன்னான். கைகாட்டும் வித்தையாற் கூறியருளினன் எனக் கொள்ளற்கு இடம் தந்தது. சும்மா விருத்தலாகிய மோனானந்தநிட்டை பொருந்தியவர் ஈடேறி யுய்வர் ஆதலின் 'எல்லாரு மீடேறவே' என்றார். இறைவன் பிரணவமாக விளங்குபவன், பிரணவ உட்பொருளாய் இருப்பவன் என்பதை ஆன்மாக்கள் அறிந் துய்தற்பொருட்டே பிரணவ ஆகாரமாக விளங்கும் கொன்றைப்பூவை மாலையாகக் கொண்டமை அறியற்பாலதாம். இறைவன் தன்னை அடைந்தார் யாரையுந் தலைமேற்கொண்டு தாங்கி அருள்புரிவோன் என்பதை ஆன்மாக்களுக் குணர்த்தவே, சந்திரன் கலைகுறையுஞ் சாபம் பெற்றுக் கலை குறைந்துவா அஞ்சி இறைவனைச் சரண்புகத் தலைமேற் றாங்கிக் காத்தருளினர். முன் சந்திரனை ஈடேற்றிய அச்சந்திரசேகரன் எல்லோரையும் ஈடேற்றவே கல்லாலடியில் நின்றருளி ஓர் வசனம் கற்பித்தது. அவ்வசனம் 'சும்மா இரு' என்பதாம்.

45

இறைவனே! தேவரீரின் திருவடிக்கே அடியேன் பித்துடையவனெனல்

**புலனைந்துந் தானே பொரமயங்கிச் சிந்தை**
**யலமந் துழலு மடிமை—நலமிகுந்த**
**சித்தான மோன சிவனேநின் சேவடிக்கே**
**பித்தானு லுண்டோ பிறப்பு.**

(ப-ரை) நலம்-நன்மை, மிகுந்த-மிகுந்த, சித்து-ஞானசொரூபம், ஆன, மோன - மௌனத்தைப் போதிக்க எழுந்தருளிய, சிவனே - சிவபெருமானே! புலன்-புலன்கள், ஐந்தும்-ஐந்தும், தாமே-தாமே, பொர-வலியவந்து போரிடலால், சிந்தை-மனம், மயங்கி-கலங்கி, அலமந்து - சுழன்று, அடிமை-அடியேன், நின்-தேவரீரது, சே-செவந்த, அடிக்கே - திருவடிக்கே, பித்தனல்-பித்துக்கொண்டிருப்பேனேயானால், பிறப்பு-சென்மம், உண்டோ-உண்டாகுமோ; எ-று.

(வி-ரை) 'புலனைந்தும்' என்றதன்கண் நின்ற உம்மை முற்றும்மை. 'அலமந்து' இது சுழன்று என்னும் பொருளது. இதற்கு 'அலமா' பகுதி. இறைவன் ஞானசொரூபியாக விருத்தலினாலும் மௌனியாகக் கல்லாலடியிற் காட்சி கொடுத்தருளியதனாலும் 'நலமிகுந்த சித்தான மோனசிவமே' என்றார். ஞானத்தின் முடிவுமோனமே. இதுகொண்டே ஔவைப் பிராட்டியாரும் 'மோனம் என்பது ஞானவரம்பு' என்றார். இதனனேயே இந்நூலாசிரியரும் நலமிகுந்த 'சித்தான மோனசிவனே' என்றதும், இறைவன் திருவடிக்கண் பத்திமிகின் பிறப்பு நீங்கிவிடும் என்பார், 'நின்சேவடிக்கே பித்தனலுண்டோ பிறப்பு' என்றார். இதில் வந்த வினவிடை தழுவியவினா. என்னை, பிறப்பு இல்லை என்னும் விடையை உடன்தழுவி நிற்றலினலென்க. இக்கவியின் கருத்தை,

"இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" எனவும்,

"அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது" எனவும்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்"

எனவும் வரும் **திருக்குறள்களாலும்** அறியலாம். 46

இறைவனே! மௌனத்தைப் பெற்றவர்கள் பிறஒன்றில் நாட்டம் வையார் எனல்

**நிறைகுடந்தா னீர்கொளுமோ நிச்சயமா மோன
முறையுணர்ந்தார் யாதை முயல்வார்—பிறையணிந்த
மிக்ககை லாயமலை வித்தகனே வேதியனே
செக்கரணி மேனியனே செப்பு.**

(ப-ரை) நிறை-நீர் நிறைந்த, குடம் - குடமானது, நீர் - (வேறு அதற்கு மேலும்) நீரை, கொள்ளுமோ - கொள்ளுமோ?, நிச்சயம் - சத்தியம், ஆம்-ஆகும், மோனம்-மவுனம், முறை-முறையினை, உணர்ந்தார் - தெரிந்தவர்கள், யாதை - (அதற்குப் புறம்பாகிய) எதனை, முயல்வார் - முயற்சிப்பர், பிறை-சந்திரப்பிறையை, அணிந்த - தரித்தருளிய, மிக்க - மேலான, கைலாயம்-



கைலாயம் என்னும், மலை - மலையில் எழுந்தருளி இருக்கும், வித்தகனே-ஞானச்சதுரனே, வேதியனே - வேதத்தை உடையவனே, செக்கர்-செம்மையான, அணி-அழகிய, மேனியனே - திருமேனியை யுடையவனே!, செப்பு-சொல்லுவாயாக; எ-று.

(வி-ரை) 'நிறைகுடந்தான் நீர் கொளுமோ' இது உவமானம். அதுபோல 'மோனமுறை யுணர்ந்தார் யாதை முயல்வார்' என்றது உவமேயம். நீர்நிறைந்த குடம் பின் வேறு நீரை உட்கொள்ளாததுபோல நிச்சயமாம் மோனம் முறை உணர்ந்தவர் பிற எதையும் முயலார் என்றதாம். பிறையணிந்த வித்தகனே, மிக்க கைலாயமலை வித்தகனே எனக் கொள்க. இன்றேல் பிறையணிந்தவனே, கைலாயமலையில் எழுந்தருளியிருக்கும் வித்தகனே எனக் கோடல் செவ்விதாகும். பிறை மாதம் மாதம் புதிது புதிதாகப் பிறப்பதனல் பிறை எனப் பெயர் வந்தது. இது காரணப் பெயர். மிக்க-இது சிறந்த மேலாகிய என்னும் பொருளது. வித்தகன் இது ஞானவித்தகத்தைக்காட்டி நின்றது. வித்தகம் என்பது வன்மை, கெட்டிக்காரத்தன்மை என்னும் பொருளது. இறைவன் அகடிதகடனசக்தன் ஆதலின் வித்தகனே என்றார். வேதியனே என்பதற்கு வேதப்பொருளாய் நிற்பவனே, வேதத்திற்கு உரியவனே, வேதத்தைத் தந்தருளியவனே என்பன பொருளாம். கைலாயமலை என்றது சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் வெள்ளியங்கிரியை. செக்கரணி மேனியனே என்பதற்குச் செவ்வானம்போன்ற அழகிய திருமேனியை உடையவனே எனப் பொருள் கோடலுமாம். 47

இறைவனே! தேவரீரே அடியேனுக்குப் புகலிடம் என்கின்றார்

**துங்கமழு மானுடையாய் சூலப் படையுடையாய் [ரு
திங்களணி செஞ்சடையாய் சேவுடையாய்—மங்கையொ
பாலுடையாய் செங்கட் பணியாய்என் சென்னியின்மே
காலுடையாய் நீயே கதி. [ற்**

(ப-ரை) துங்கம் - பரிசுத்தமுடைய, மழு - மழுப்படையையும், மான்-மானையும், உடையாய்-ஏந்தியருளி இருப்பவனே!, சூலம்-சூலமாகிய, படை-ஆயுதத்தை, உடையாய் - உடையவனே!, திங்கள் - சந்திரனை, அணி-சூடிய, செம் - செவ்விய, சடையாய்-சடாபாரத்தை உடையவனே!, சே-ரிஷபவாகனத்தை, உடையாய் - உடையவனே!, மங்கை - உமாதேவியாரை, ஒரு-ஒரு, பால்-பக்கம், உடையாய்-கொண்டிருப்பவனே!, செம்-செவந்த, கண்-கண்களையுடைய, பணியாய் - சர்ப்பங்களை ஆபரணமாக உடையவனே!, என்-அடியேனுடைய, சென்னியின் - தலையின், மேல்-மேலே, கால்-(வைத்தருளிய திருவடியை, உடையாய்-உடையவனே!, நீயே-தேவரீரே, கதி - அடியேனுக்குப் புகலிடம் எ-று.

(வி-ரை) இறைவன் திருக்கரத்துள்ள மழுப்படை பஞ்சகிருத்தியங்களிலே சங்காரத்தைச் செய்வதனல் 'துங்கமழு' என்றார். தாருகாவனத்து ரிஷிகள் சிவபெருமானை அழித்துவிட அபிசாரஹோமஞ்செய்தகாலை அதில்

எழுந்த மானைச் சிவபெருமானைக் கொல்லுமாறு ஏவ அது உடன்றுவர அதனை நம்பெருமான் இடதுகரத்து எடுத்துத் தூக்கிப் பிடித்தருளினர். இது ஆன்மாக்கள் இறைவனாகிய தான் அழிவில்லாதவன் என்பதனை அறிக் துய்யவேயாம். இதுபற்றியே 'மானுடையாய்' என்றார். 'சூலம்' இது முத்தலைச் சூலத்தைக் குறித்தது. இது சிவபெருமான் திரு ஆயுதங்களில் ஒன்று. இறைவன் அருட்டிருமேனிகொண்டு அடியார்க்கு அருள்செய்யத் தோன்றும் திருமேனியைத் தாங்கி வருவது தருமமேயாகிய ரிஷபம், அதனைக் குறிப்பான் 'சேவுடையாய்' என்றார். இறைவன் இடதுபாகத்தில் உமாதேவியாரை உடையவன் ஆதலின், 'மங்கையொரு பாலுடையாய்' என்றார். இறைவன் தாருகாவனத்துத் தங்கள் அபிசார ஹோமத்துவந்த சர்ப்பங்களை ஏவ அதனைச் சிவபெருமான் ஆபரணங்களாக அணிந்துகொண் டனன் ஆதலின் 'செங்கட் பணியாய்' என்றார். ஆசாரிய திருக்கோலமாய் வந்தருளியகாலை திருவடிதீட்சை செய்தமையின், 'என் சென்னியின்மேற் காலுடையாய்' என்றார். எல்லாம் இறைவனிடத் திருந்து தோன்றி இறைவ னிடத்தே யொடுங்கலின் 'நீயேகதி' என்றார். ஈண்டு நீயே தஞ்சம் என்பது பொருள்.

48

சிவபெருமானே நமக்கு எக்காலத்தும் துணை என்கின்றார்

**இனிய கருணைமுகி லெம்பிரான் முக்கட்**
**கனிஅமிர்த வாரியின்பக் கட்டி—தனிமுதல்வன்**
**நித்தன் பரமன் நிமலன் நிறை வாய்நிறைந்த**
**சுத்தன் நமக் கென்றுந் துணை.**

(ப-ரை) இனிய - இனிதாகிய, கருணை - கருணை மழையைப்பொழியும், முகில்-மேகம், எம்-எமது, பிரான்-பெருமான், முக்கண்-மூன்றுகண்களுடன் கூடிய, கனி-பழம், அமிர்தம் - அமிர்தமயமாகிய, வாரி-சமுத்திரம், இன்பம்-இன்பத்தினை விளைவிக்கும், கட்டி-கரும்புக்கட்டி, தனி-ஒப்பற்ற, முதல்வன்-முதல்வன் (இறைவன்), நித்தன்-என்றும் உள்ளவன், பரமன் - மேலானவன், நிமலன்-நின்மலன், நிறைவாய்-எங்குமாய், நிறைந்த - நிறைந்துள்ள, சுத்தன்-தூயன் (இத்தகைய இறைவன்), நமக்கு - நமக்கு, என்றும் - எக்காலத்தும், துணை-துணையாகும் எ-று.

(வி-ரை) மேகம் உலகிற்குக் கைம்மாறு கருதாது|மழையைப் பொழித லின், ஆன்மாக்களிடம் எதையும் எதிர்பாராது அருள்புரியும் இறைவனுக்கு உவமையாகக் கூறினர். இறைவன் மேகத்தினும் விசேடமுடைமையின் 'இனிய கருணைமுகி லெம்பிரான்' என்றார். இறைவன் எல்லோர்க்கும் கருணையை மழைபோலப்பொழிந்து இன்பத்தை உண்டாக்குபவன் ஆதலின் 'இனிய கருணைமுகில்' என்றதன்பின் 'முக்கட்கனி, அமிர்தவாரி, இன்பக் கட்டி' என, இனிமையுடைய மூன்று பொருள்களை உவமையாக்கி அத னடியே உவமையாகுபெயராய் இறைவனைக் குறித்தார். இறைவன் எல் லார்க்கும் முதலாகையாலும், ஒப்பற்றவன் ஆகையாலும், 'தனி முதல்வன்'



என்றார். இறைவன் ஈறிலான் ஆதலின் 'நித்தன்' என்றார். இறைவன் எல்லாரிலும் உயர்ந்தவன், தனக்குமேல் உயர்ந்தவனும், ஒப்பவனும் இல்லா தவன், ஆதலினால் 'பரமன்' என்றார். இறைவன் அகச்சுத்தமும் புறச்சுத்த மும் உடையவன் ஆதலின் 'நிமலன்' என்றும், 'நிறைவாய் நிறைந்த சுத்தன்' என்றுங் கூறினார். இத்தகைய இறைவனே ஆன்மாக்களுக்கெல்லாம் என் றென்றுந் துணையாதலின் 'நமக்கு என்றுந் துணை' என்றார்.

49

இறைவன் கல்லாலமரத்தடியிலிருந்து சனகாதி முனிவர்கட்கு
உண்மைப்பொருளைப் போதித்தருளினன் என்கின்றார்

**நீதியாய்க் கல்லாலி னீழலின்கீ ழேயிருந்து**
**போதியா வுண்மையெல்லாம் போதித்தான்—ஏதில்**
**சனகாதி யாய தவத்தோர்க்கு ஞான**
**தினகரனு மோன சிவன்.**

(ப-ரை) ஞானம்-ஞானமயமாகிய, தினகரனும் - சூரியனும், மோனம்-மௌனநிலைவாய்ந்த, சிவன்-சிவபெருமான், நீதியாய் - நீதியை உடையவன் ஆகி, கல்-கல், ஆலின் - ஆலமரத்தின், நீழலின் - நிழலில், கீழே - அடியிலே, இருந்து-எழுந்தருளி இருந்து, ஏதம் - குற்றம், இல்-இல்லாத, சனகாதி-சன காதிகள், ஆய - ஆகிய, தவத்தோர்க்கு - தவஞானிகளுக்கு, போதியா-போதித்து, உண்மை - உண்மைகள், எல்லாம் - எல்லாவற்றையும், போதித் தான்-உபதேசித்தான் எ-று.

(வி-ரை) 'நீதியாய்' என்றது போதிக்கும் நீதியுடையவன் ஆகி, என்ற பொருள். அதாவது போதிக்கும் முறைப்படி என்பதாம். இனி, 'நீதியாய்ப் போதித்தான்' என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளினும் கொள்ள லாம். 'நிழல்' என்பது ஆதி நீண்டு 'நீழல்' என நின்றது. 'போதியா' இது 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இனி, 'போதிய உண்மை' என்பதற்குப் போதித்தற்கு அரிதாகிய நுண்ணிய திண்ணிய இரகசியப் பொருள்களை எல்லாம் எனப் பொருள்கோடலும் ஒன்று. சனகாதி முனி வர்கள் வேதங்களெல்லாம் பயின்று தேர்ந்த தூயர் ஆதலினாலும் உபதேசங் கோடற்குப் பக்குவமுடையவர்களாகவும் இருந்ததனால், 'ஏதில் சனகாதி' என்றார். 'ஏதமில்' என்றது விகாரமுற்று நின்றது, தவத்தோர்க்கே ஞானா சிரியன் கிட்டுமாதலின், 'தவத்தோர்க்கு ஞான தினகரனு மோன சிவன் போதித்தான்' என்றார். சூரியன் புறஇருளை அகற்றுவதுபோல இறைவன் அகத்திருளை அகற்றுபவன் ஆதலின், 'ஞானதினகரன்' என்றார்.

50

மனமே! நீ பிறந்த எல்லையிலே சும்மா இரு என்கின்றார்

**தேகச் செயருனும் சிந்தையுட னேகுழையில்**
**யோகநிலை ஞானிகளுக் கொப்புவதோ—மோகநிலை**
**யல்லலிலே வாழ்வாரோ அப்பனே நீயற்ற**
**எல்லையிலே சும்மா விரு.**

(ப-ரை) அப்பனே-(மனமாகிய) அப்பனே!, தேகம் - தேகத்தினுடைய, செயல் - செய்கை, தானும் - தானும், சிந்தை-மனத்தின், உடனே-உடனே, குழையில் - கூடி உருகிவிடுமாயின், யோகம் - நிட்டைநிலையானது, ஞானி களுக்கு - ஞானிகளுக்கு, ஒப்புவதோ-ஒத்திருப்பதோ? (அவர்கள்), மோகம்-ஆசை, நிலை - நிலையாகிய, அல்லலிலே - துன்பத்திலே, வாழ்வாரோ-வாழ்ந் திருப்பார்களோ, நீ - நீ என்பது; அற்ற - அற்ற, எல்லையிலே - இடத்திலே, சும்மா-சும்மா, இரு-இருப்பாயாக எ-று.

(வி-ரை) தேகம் பிரபஞ்சத்தை ஒட்டி நிற்பது; சிந்தை ஞானத்தை ஒட்டி நிற்பது. தேகச்செயல் குழைதலாவது - பிரபஞ்ச வியாபாரம்விட்டுத் தேகாபிமானம் நீங்கும் நிலை. சிந்தை குழைதலாவது-சிந்தை பிரபஞ்சத்தை மாயை வயப்பட்டு நாடாது பரத்தை நாடி நிற்கும் நிலை. இவ் இரண்டுங் கூடியவழி ஞானிகள் யோகத்து நில்லாது அதற்கு மேம்பட்ட சிவானந்தத்து அழுந்தி இன்புற்றிருக்கும் நிலையை நாடுவர். இதுகொண்டே, 'தேகச் செயலும் சிந்தையுடனே குழையில் யோகநிலை ஞானிகளுக் கொப்பு வதோ' என்றார். யோகம்-ஞானத்தைப் பெறுவதற்கு வழியாக இருப்பது. மோகம்-பிரபஞ்ச மாயையிற் சிக்கிச் சிற்றின்பத்து மனம்பற்றி யிருப்பது. ஆதலின், ஞானிகள் ஞானவழியைவிட்டுப் பிரபஞ்சமாயா வழியிற் செல்லார் என்பார், 'மோகநிலை அல்லலிலே வாழ்வாரோ' என்றார். 'நீ அற்ற நிலை' என்றது அபேத நிலையை. 'சும்மா இரு' என்ற மோன நிலையில் இரு என்றதாம். 51

கர்ம நிஷ்டனாகிய சிறுவனே! சும்மா இருந்தால் சுகம் உதயம் ஆகுமே, என் கட்டி நின்று அலைகின்றாய் எனல்

சும்மா விருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா யோகமினி யேனடா—தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண் டாம்கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ.

(ப-ரை) கன்மம்-கர்மம், நிட்டா-நிட்டையில் இருப்பவனே!, சிறு-சிறிய, பிள்ளாய்-பிள்ளையே!, நீ-நீ, சும்மா - மௌனமாக, இருக்க - இருக்க, சுகம்-ஆனந்தம், உதயம் - உதயநிலை, ஆகுமே - உண்டாகுமே, இ-இந்த, மாயா-பிரபஞ்சமாயாகாரியமாகிய, யோகம் - யோகம், இனி - இனிமேலே, ஏன்-எதற்கு, அடா-அடா, தம்-தம்முடைய, அறிவின்-அறிவினுடைய, சுட் டாலே-சுட்டுதலினாலே, ஆகுமோ-(மேற்கூறிய சுகோதயம்) உண்டாகுமோ?, சொல்ல-வற்புறுத்திக்கூற, வேண்டாம்-வேண்டாவாம் எ-று.

(வி-ரை) நீ மௌனத்தில் இருப்பாயேயானால் ஆனந்தம் உண்டாகும் என்பார், 'சும்மா இருக்கச் சுகமுதயமாகுமே' என்றார். மாயாயோகம் என் பது-பிரபஞ்ச மாயையில் சிக்கிப் பிரபஞ்சத்துக்கான காரியங்களைச் செய்தல். பிரபஞ்சமாயாகாரியத்தில் மனத்தைச் செலுத்தி அதற்காக உழைத்தலாகிய



இதனால் துன்பமே யுண்டாகும், மௌனயோக நிலையால் இன்புண்டாகும் ஆதலால் அம்மௌனயோக நிட்டையைவிட்டு பிரபஞ்சத்தேன் உழலு கின்றாய் என்பார் 'இம்மாயா யோகமினி யேனடா' என்றார். மனம் பகிர் முகப்பட்டு பிரபஞ்சத்தை நாடி ஒவ்வொன்றையும் சுட்டியறிந்து நான், எனது என்றிருக்கும் நிலையையே 'தம்மறிவின் சுட்டாலே யாகுமோ சொல்ல வேண்டாம்' என்றார் பகிர்முகப்பட்டு சுட்டறிவாற் சுகானந்தம் பிறவா, அந்தர்முகப்பட்டு மௌனயோக நிட்டையிலிருக்கின் சிவானந்தமுத்தி யுண்டாம் என்பதே இச்செய்யுளின் கருத்தாகும். 52

மனமே! நீ இறந்து நின்ற நிலையே நிஷ்டை எனல்

நீயற்ற வந்நிலையே நிட்டை அதி னீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே இன்பமுண்டு வா.

(ப-ரை) நீ-நீ, அற்ற-இறந்த, அ-அந்த, நிலையே - நிலையிலே, நிட்டை-நிட்டை ஆகும், அதில் - அந்த நிலையில், நீ - நீ, இலையோ - நின்றிருக்கவில் லையோ, வாய் - வாய், அற்றவனே - பேசாமையாகிய மௌனநிலையில் நிற் பவனே, மயங்காதே - மயங்கவேண்டாம், போய் - யோகநிலையிற் சென்று, அற்று-எல்லாவற்றையும் மறந்து, இருந்தாலும்-நீ நின்றாலும், நீ-மனமாகியநீ, என்றும்-எக்காலத்தும், உள்ளாய்-இருக்கின்றாய், சும்மா-வீணாக, வருந்தாதே-வருத்தமுறாதே, இன்பம் - இன்பமானது, உண்டு - எக்காலத்திலும் உண்டு, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) 'நீ' என்றது மனத்தை. 'நீயற்ற அந்நிலை' என்றது மனம் ஒடுங்கிய நிலையை, நிட்டையிலே மனம் ஒடுங்கிச் செயலற்று இருக்கின்றதே யன்றி இல்லாது ஒழியவில்லையாகலின் 'நிட்டையதில் நீயிலையோ வாயற் றவனே மயங்காதே' என்றார். 'வாயற்றவனே' என்பது மனம் வாக்கு காயங் களின் வியாபாரமற்றிருக்கின்றவனே என்றதாம். வாயற்றிருத்தல் வாய் பேசாதிருத்தல். அதாவது மௌனியாய் இருத்தல். இது குணம்பற்றி மன தையும் யாக்கையையும் தழுவிக்கோடற்கு உரித்து. 'போயற் றிருந்தாலும்' என்றது மனமே நீ ஒடுங்கி அடங்கி மவுனமாயிருந்தாலும் என்றது பொரு ளாம். 'போகாய்' என்பது மனமடங்கி வியாபாரம் அற்றகாலத்தும் நீ இல் லாது போய்விடமாட்டாய் என்றது பொருளாம். 'என்று முள்ளாய்' என்றது சிவானந்தப்பேற்றுக்கு முன்னும் பின்னும் நீ யிருக்கிறாய் என்பதாம். பாசம்-கட்டு; அது, மனத்தின் காரியம். 53

ஐயோ என்று அழுத அப்பனே! வாடா உடல், பொருள், ஆவி மூன்றையும் நமக்குக் கொடுத்தனையே அந்நிலையில் நில் எனல்

வாவாவென் றின்பம் வரவழைக்குங் கண்ணீரோ
டாவாவென் றேயழுத வப்பனே—நீவாடா

**எல்லா நமக்கெனவே யீந்தனையே ஈந்தபடி**
**நில்லா யதுவே நிலை.**

(ப-ரை) வாவா-வா! வா!, என்று-என்று, இன்பம்-ஆநந்தத்தை, அழைக்கும்-அழைப்பிக்கின்ற, கண்ணீரோடு - கண்ணீருடன், ஆவா-ஐயோ, என்று-என்று. அழுத-அழுத, அப்பனே-அப்பா, நீ-நீ, வாடா - வாடா, எல்லாம்-யாவும், நமக்கு-நமக்கு, எனவே-என்றே, ஈந்தனையே-கொடுத்தனையே, ஈந்த-கொடுத்த, படி - படி, நில்லாய் - நிற்பாயாக, அதுவே - அதுவே, நிலை-உனக்கு ஆனநிலையாகும் எ-று.

(வி-ரை) 'வாவா' என்றது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. 'இன்பம்' என்றது சிவாநந்தத்தை. அவா இது ஐயோ என்னும் பொருளது. நிசைச்சொல். எல்லாம் என்றது உடல், பொருள், ஆவி என்னும் மூன்றினையுங் குறிக்கும். ஈந்தபடி என்றது தற்போதம் இழந்துநின்ற நிலையை. இன்பம் வரவழைக்குங் கண்ணீர் என்றது ஆநந்தக் கண்ணீரை. நில்லாய் அதுவே நிலை என்றது உலகமாயையிற் சிக்குதலின்றி சேட்டையற்று இருக்கும் நிட்டை நிலையிலே நிற்பாயாக என்பதாம். இனி பகிர்முகப்பட்டு பிரபஞ்சத்துள் நுழைந்துவிடாதே, விட்டாற் சுகம் குடி ஓடிப்போம் துக்கமே பிராப்தியாம் என்ற பொருளது.

"பெற்றவொரு மோனம் பிழைத்தாற் பிழைப்பில்லை
நிற்குநிலை மாறுமே நில்"

என்ற **பெரியார்வாக்கும்** ஈண்டு கருதற்பாலதாம். அதுவே என்றது பண்டறிசுட்டு. நிட்டை நிலையாகிய அது என்பதாம். 'அதுவே' என்பதில் ஈற்றேகாரந் தேற்றப்பொருளது.

54

குருவின் திருவருளால் உண்டாகிய வழியே நல்லவழி என்கின்றார்

**நில்லாப் பொருளை நினையாதே நின்னையுள்ளோர்**
**சொல்லாப் பொருட்டிரளைச் சொல்லாதே—கல்லாத**
**சிந்தை குழைந்துசுகஞ் சேரக் குருவருளால்**
**வந்தவழி நல்ல வழி.**

(ப-ரை) நில்லா-நிலை இல்லாதனவாகிய, பொருளை-உலகப்பொருள்களை, நினையாதே - எண்ணாதே, நின்னை - உன்னை, உள்ளோர் - உள்ளிட்டோர், சொல்லார்-சொல்லத்தகாத, பொருள்-பொருள்களின், திரளை-திரட்சியை, சொல்லாதே - பேசாதே, கல்லாத - உண்மையைக் கற்காத, சிந்தை - மனம், குழைந்து-உருகி, சுகம்-ஆநந்தத்தை, சேர-பெற, குரு-ஆசாரியர், அருளால்-கருணையினால், வந்த-வந்த, வழி-வழியே, நல்ல-சுகமான, வழி-வழியாம் எ-று.

(வி-ரை) 'நில்லாப்பொருள்' என்றது அழிதன் மாலையதாகிய உலகப் பொருள்களை 'நின்னை யுள்ளோர்' என்றது உன்போன்ற சற்சனர் என்னும் பொருளது. 'சொல்லாப் பொருட்டிரள்' என்றது சொல்லத்தகாத வீண்



சொற்களை. திரள் என்றது ஈண்டு சொற்பெருக்கத்தைக் குறித்தது. கல்லாத என்றது ஞான நூற்களை, உறுதிப் பொருள்களைக் கல்லாத என்னும் பொருளது. குழைந்து என்றது அன்பால் இளகுதலை. குரு அருளால் வந்தவழி என்றது மோன நெறியை. நல்லவழி என்றது சிவாநந்தப் பேரின்பத்தை அனுபவிப்பதற்கு நல்லவழி என்பதாம். குரு என்றது மௌனதேசிகரை.

55

நல்லவழி இது தீயவழி இது என்றல் பிழையாகும் என்கின்றார்

**வழியிதென் றும் அல்லா வழியிதென் றுஞ் சொல்லிற்**
**பழிபழியாம் நல்லருளாற் பார்த்துஓர்—மொழியுனக்கே**
**யேற்றிருக்கச் சொன்னவன்றே எங்கும் பெருவெளியாம்**
**பார்த்தவிட மெல்லா நீ பார்.**

(ப-ரை) வழி-(நல்ல) மார்க்கம், இது-இதுவே, என்றும்-என்றும், அல்லா-தீய (நல்லது அல்லா), வழி - மார்க்கம், இது - இதுவே, என்றும் - என்றும், சொல்லின் - சொன்னால், பழிபழி - பெரும்பழி, ஆகும் - ஆகும், நல்-நல்ல, அருளால்-கிருபையால், பார்த்து-நோக்கி, ஓர்-ஒரு, மொழி - வார்த்தையை, உனக்கு-உனக்கு, ஏற்றிருக்க-உபதேசித்திருக்க, சொன்ன-(அவ்வுபதேசத்தை யுனக்குச்) சொன்ன, அன்றே-அப்பொழுதே, எங்கும்-எவ்விடத்தும், பெரும்-பெரிய, வெளியாம்-வெளியாகும், பார்த்த-நோக்கிய, இடம்-இடம், எல்லாம்-முழுதும், நீ-நீ, பார்-மறுபடியும் பார்ப்பாயாக எ-று.

(வி-ரை) 'வழி' இது நல்வழி, தீவழி இரண்டிற்கும் பொதுவாக நின்றும் சிறப்புப்பற்றி நல்வழியையே ஈண்டு குறித்தது. 'அல்லா வழி' இது நல்லதல்லா வழி என்னும் பொருளது அதாவது தீயவழி என்பதாம். 'பழிபழி' ஈண்டு 'பழி' என்னுஞ் சொல் மிகுதிபற்றி அடுக்கியது. என்னை, "அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல் இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்" என்றது இலக்கணம். 'ஓர்மொழி' என்றது உபதேசமொழியை. ஆசாரியர் உபதேசம்பெற்ற அந்தஞான்றே தற்போதங் கழன்று சிவபோதந் தோன்றி எங்கும் அகண்டாகார சிவமாகத் தோற்றினமையால் 'எங்கும் பெருவெளியாம்' என்றார். பேத பாவனையால் பிரபஞ்சத்திற் கண்டனவெல்லாம் அபேத பாவனையாகக் காணும்பொழுது வெட்டவெளியாகத் தோன்றும் பரசிவத்தையன்றி வேறு ஒன்றுங் காணப்படாதாதலால் 'பார்த்த விடமெல்லாம் நீபார் எங்கும் பெரு வெளியாம்' என்றார். வெளி என்றது பராகாயத்தை.

56

அகத்துறவு புறத்துறவு ஆகிய இரண்டில் ஒன்றினைக் கொள்ளெனல்

**பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையை**
**லாருந் துறக்கை யரிதரிது—நேரே [ப்போ**
**மனத்துறவு மப்படியே மாணு இவற்றி**
**லுனக்கிசைந்த வாறென்றே யோர்.**

(ப-ரை) பார் - பிரபஞ்சம், அனைத்தும் - எல்லாம், பொய் - நிலையல்ல, எனவே-என்றே, பட்டினத்துப் பிள்ளையை - பட்டினத்து அடிகளை, போல, ஆரும்-எத்தகையரும், துறக்கை - துறவடைதல், அரிது அரிது-மிக அங்ஙனமேயாம், மாணு-மாணவகனே, இவற்றில்-இவ்விரண்டனுள், உனக்கு, இசைந்த-பொருத்தமாகிய, ஆறு-வழி, ஒன்றே-ஒன்றினையே, ஓர்-ஆராய்ந்து கொள்வாயாக எ-று.

(வி-ரை) 'பாரனைத்தும் பொய்' என்றது மாயாசம்பந்தமாகிய, பிரபஞ்சமும் பிரபஞ்சப் பொருள்களும் நிலையில்லாதது என்பது பொருள். பட்டினத்தடிகள் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தவர் ஆதலின் 'பட்டினத்துப் பிள்ளையைப்போல்' என்றார், 'ஆரும்' இது 'யாரும்' என்றதின் போலி, இதிலுள்ள 'உம்மை' உயர்வுச் சிறப்பு உம்மை. துறவு அகத்துறவு, புறத்துறவு என இரண்டுண்டு. இவ் இரண்டு துறவும் பூண்டவர் பட்டினத்தடிகள் ஆதலின் 'மனத்துறவும்' அப்படியே என்றார். மனத்துறவும் என்றதன் கண்ணுள்ள உம்மை புறத்துறவு பூண்டதன்றி அகத்துறவும் பூண்டார் என்ற பொருள்தருதலின் இறந்ததுதழீஇய எச்ச உம்மை. 'மாணு' இது விளியுருபு ஏற்று நின்றது. அகத்துறவு, புறத்துறவு, இரண்டுங் கூடாவழி இரண்டில் ஒன்றையாயினுங் கொள்க என்பார், 'மாணுவிவற்றி லுனக்கிசைந்த வாறொன்றே யோர்' என்றார். இவர் நோக்கம் யாதெனின் இவற்றுள் ஒன்றைக்கொள்ளின் மற்றதுங் கைகூடும் என்றுந் துணிபேயாம். 57

சும்மா இருந்தால் ஆநந்தம் தானே உண்டாகும் என்கின்றார்

ஓராம லேஒருகா லுன்னமல் உள்ளொளியைப்
பாராமல் உள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான்.

(ப-ரை) ஓராமல்-(ஒன்றினையும்) ஆராயாமலும், ஒருகால் - ஒருதரமாகிலும், உன்னமல்-(ஒன்றினையும்) எண்ணாமலும், உள்-மன, ஒளியினை-ஒளியை, பாராமல்-பார்க்காமலும் (ஏகதேசமாகப் பாராது, உள்ளபடி-உண்மையாகவே, பார்த்திருந்தால் - நோக்கியிருந்தால் (சமட்டிரூபமாக நோக்கி இருந்தால்), ஆனந்தம்-சிவாநந்தம், வெள்ளம்-வெள்ளமானது, தத்தி-தாவி, கரை-கரை, புரண்டு-கடந்து, எழுந்து-மேற்கிளம்பி, பத்து-பத்தாகிய, திசையும்-திசையிலும், பரந்து-பரவி, வாராதோ-வாராதோ எ-று.

(வி-ரை) 'ஓர்தல்' ஆராய்ந்து பார்த்தல். 'உன்னல்' மனத்து நாடிக் காணல். 'உள்ளொளி' என்றது அந்தர்யாமியாக உறையும் இறைவனாகிய ஒளியை. பாராம லுள்ளபடி பார்த்திருத்தல் என்பது வேறு பார்க்காமல் உள்ளபடியே ஒளியைப் பார்த்திருந்தால் அதாவது ஏகதேசமாகப் பாராது சமட்டி ரூபமாக நோக்கினால் என்பதாம். பத்துத்திசையும் என்றது எல்லாத்



திக்குக்களிலும் எல்லா இடங்களிலும் என்பது பொருளாம். மேல்கீழ் அகவிடம் எல்லாம் பத்துத் திசைக்குள் அடங்கலால் 'பத்துத் திசையும் பரந்தெழுந்து' என்றார். 'ஆநந்த வெள்ளம்' என்றது சிவாநந்த வெள்ளத்தை. 'கரைபுரண்டு' வருதலாவது கரைகடந்து பெருகி வருதல். 'வாராதோ' இது வரும் என்றபடி. 'பத்துத் திசையும்' என்றதன் விடை தழுவிய வினா; உம்மை முற்றும்மை. 58

நான் உன்னுள் அடங்கி இருப்பதுபோல் என்னுள் நீ
அடங்கி இரு என்கின்றார்

தானான தன்மைவந்து தாக்கினா லவ்விடத்தே
வானாதி மாயை வழங்காதோ—ஞானாகேள்
உன்னுள்ளே தோன்று முறவாகி நின்றதென
என்னுள்ளே யென்று மிரு.

(ப-ரை) தான் - தான் என்னும் அகங்காரம், ஆன - ஆன, தன்மை - தன்மை, வந்து-உண்டாகி, தாக்கினால்-பொருந்தினால், அ-அந்த, இடத்தே-இடத்திற்றானே, வான்-ஆகாயம், ஆதி - முதலிய, மாயை-மாயா காரியங்கள், வழங்காதோ-விளையாதோ, ஞான-ஞானத்தை உடையவனே, கேள்-கேட்பாயாக, உன்-உனக்கு, உள்ளே-உள்ளே, தோன்று - தோன்றுத, உறவு-நான் உறவு, ஆய் - ஆகி, நின்றது-நின்றது, என - ஒப்ப, என் - எனக்கு, உள்ளே-உள்ளே, என்றும்-எந்தக்காலத்தும், இரு-நீ இருப்பாயாக எ-று.

(வி-ரை) 'தான் ஆனதன்மை' என்றது தான் என்னும் அகங்கார தத்துவத்தின் தன்மை என்பது பொருள். 'வானாதி மாயை' என்றது பிரிதிவி முதல் வான் ஈறாகவுள்ள பஞ்சபூத தத்துவங்களை. 'தான்' என்னும் அகங்காரதத்துவம் தலை எடுத்த உடனே, எனது என்பதும் கிளம்புதலின் பிரபஞ்சமாயை முற்றும் கவிந்துகொள்ளும் ஆதலின், 'தானான தன்மைவந்து தாக்கினால்' என்றார். ஈண்டு 'தான்' என்னும் அகங்கார தத்துவமே எல்லாக் கேட்டிற்கும் காரணம் என்பதும், அந்தத் தான் என்னும் அகங்காரம் ஒழியின் மோனநிலை கைகூடும் சிவாநந்தம் சித்திக்கும் என்பது அறியற்பாலது. 'உன்னுள்ளே' என்றது மனத்துள்ளே என்னுள்ளே என்றது ஆன்மாவின் உள்ளே என்பது ஈண்டு உணரத்தக்கது. 59

என்னையும் உன்னையும் வேறுபடுத்தி அறியாமல் நிற்கும் நிலையை
அருள்செய்ய வேண்டும் எனல்

என்னையுன்னை யின்னதிது வென்னும விற்கும்நிலை
தன்னையரு ளென்ற தருணத்தில்—அன்னைபெற்ற
பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றிகண்டா யையனே
உள்ளத்தி னுள்ளே யுணர்.

(ப-ரை) ஐயனே-ஐயனே!, என்னை - என்னையும், உன்னை - உன்னையும், இன்னது-இன்னது, இது-இது, என்னமல்-என்று சுட்டிக்கூறாமல், நிற்கும்-

நிற்கும், நிலைதன்னை-நிலையை, அருள் - அருள்புரியவேண்டும், என்ற-என்ற, தருணத்தில்-சமயத்தில், அன்னை - தாயானவள், பெற்ற - தான்பெற்ற, பிள்ளைக்கும்-பிள்ளைக்கும், சொல்லாத-சொல்லக்கூடாத, பெற்றி-தன்மையை, உள்ளத்தின்-மனத்தின், உள்ளே-உள்ளே, உணர்-அறிவாயாக எ-று.

(வி-ரை) என்னை என்றது ஆன்மாவை. உன்னை என்றது மாயாகாரியமாகிய மனத்தை. இன்னது இது என்றது சுட்டிப் பேதித்தறியும் அறிவைக் கூறியது. 'இன்னது இது என்னாமல் நிற்கும் நிலை' மனமும் ஆன்மாவும், ஆன்மாவுக்குப் புறம்பாக மனத்தையும், மனத்துக்குப் புறம்பாக ஆன்மாவையும் பேதித்து அறியும் உணர்வு நீங்கி அபேதமாக நிற்கும் அமயத்தை. 'பிள்ளைக்கும்' என்றதன்கண் உள்ள உம்மை உயர்வுச் சிறப்பு உம்மை. மனமும் ஆன்மாவும்ஒன்றுபட்டு அபேதமாய்நின்ற அமையத்துத் திருவருள்வந்தாக்கும் நிலை தாயும் பிள்ளைக்குக்கூட எடுத்து உரைக்கமுடியாததாகிய தன்மையது. தன்னுள்ளேமாத்திரம் சிந்தித்தின்புறும் தன்மையதாம் என்பார் 'அன்னைபெற்ற பிள்ளைக்குஞ் சொல்லாத பெற்றி கண்டாய்' என்றார்.

60

பேசுவோர் நிட்டையில் நிலையார், நிட்டையில் இருப்போர் பேசார்

சொன்னவர்தா நிட்டை தொகுத்திரார் நிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமௌனன்—தன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்க வடநீழ
லிருப்பா னிருவிகற்பத் தே.

(ப-ரை) சொன்னவர்-சொல்லியவர்கள், தம்-தம், நிட்டை-நிட்டையில், தொகுத்து-கூடி, இரார்-இருக்கமாட்டார்கள், நிட்டையிலே - யோகத்திலே, மன்னினவர்-நிலைபெற்றவர்கள், போதியார் - பிறருக்குப் போதிக்கமாட்டார்கள், மா-பெரிய, மௌனன் - மௌனகுரு, தன்னுள் - தன்னிடத்து, விருப்பாக-ஆசையாக, கை-சின்முத்திரக்கை, காட்டி - காட்டி, மிக்க - மேலாகிய, வட - வடக்கேயுள்ள கல்லாலமரத்தின், நீழல் - நிழலிலே, நிருவிகற்பத்தே-நிருவிகற்ப சமாதியிலே, இருப்பன்-எழுந்தருளி இருப்பன் எ-று.

(வி-ரை) அந்தர் முகத்தே இறைவனையே தியானித்து அத்துவிதநிலையில், மௌனானந்த யோகநிட்டையில் நிற்பவர்கள் பகிர்முகப்பட்டால் அவர் தம் யோகநிட்டை குலைந்திடுமாதலால் 'சொன்னவர் தாநிட்டை தொகுத்திரார்' என்றார். அந்தர்முகத்தே இறைவனையே தியானித்து சோகம் பாவனையால் தானான தத்துவ யோகநிட்டையில் இருப்பவர்கள் பகிர்முகப்பட்டுப் பிரபஞ்சத்தைப் பாரா ராதலினால் 'மன்னினவர் போதியார்' என்றார். இதற்குத் திருட்டாந்தம் வடவாலின் நீழலில் தட்சணாமூர்த்தமாக நின்றருளிய பெருமான் சனகாதிமுனிவர்க்கு ஞானோபதேசஞ் செய்யப் புகுந்தகாலை சின்முத்திரைக் கையோடு மௌனானந்த நிலையில் நின்றருளியதே போதிய சான்றாகும் என்பார். 'தன்னுள் விருப்பாகக் கைகாட்டி மிக்க வடநீழல் இருப்பான் நிருவிகற்பத்தே' என்றருளினார். இதனை,



"விருப்பாக வுள்ளே வியன்சோதி கண்டு
பொருப் பெனவே மோனம் பொருந்தின்—திருப்பி
உலகிற் புகுவரோ உத்தமன்கல் லாலன்
இலகு கரியென்றே எண்"

என்ற **அமுதகவியா**லும் அறியலாம்.

61

இறைவன் ஆடல் ஆன்மாக்களின் கன்மத்தை நசித்தற் பொருட்டன்றோ வெனல்

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேராய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடல்லா
லாடுவதேன் ஆட்டு மவன்.

(ப-ரை) இந்த - இந்த, நிருவிகற்பத்து - நிர்விகற்ப சமாதியில், எந்தை-எனது தந்தையாகிய தட்சணாமூர்த்தி, நிட்டை-யோகநிட்டை கூடி, இருக்க-இருக்க (அதன் இரகசியத்தை), நீ-நீ, சிந்தை-மனத்தில், தேராய்-ஆராய்ந்து தெளியாய், செகம் - பிரபஞ்சம், அனைத்தும் - எல்லாம், வந்த - உண்டாகிய, தொடர்ப்பாடு - கன்மங்களின் தொடர்ச்சி, கெட - தொலைதற் பொருட்டு, அன்றோ - அல்லவா?, ஆட்டும் - உலகத்தினை ஆட்டுவிக்கும், அவன் - அந்த மோனநிட்டை கூடியிருந்த இறைவன், ஓர்-ஒரு, பாத்திரத்துக்கு-விளையாட்டிற்கு, ஆடல்-நடனத்தைச் செய்தல், அல்லால் - அல்லாமல், ஆடுவது - திருநடனத்தைச் செய்தல், ஏன்-எதற்காக எ-று.

(வி-ரை) 'இந்த' என்றது பண்டறிசுட்டு. கல்லாலின்கீழ் மௌன யோகத்தைக் குறித்தது. 'நிருவிகற்பத்து எந்தை' என்றது கல்லாலின்கீழ் மௌனியாய் நின்ற தட்சணாமூர்த்தியை. 'தொடர்ப்பாடு' என்றது கன்ம மலத்தை. 'நிட்டை' என்றது மௌன நிட்டையை. 'வந்த தொடர்ப்பாடு' என்றது கன்மத் தொடர்ச்சியை. இறைவன் சர்வ உயிர்க்கும் உயிராக இருந்து அசைவிக்கின்றான். இறைவன் மௌனத்திருந்தால் எல்லா உயிரும் அசைவற்றிருந்துவிடும். அவன் ஆடினால் எல்லா உயிரும் ஆடும். உயிர்கள் ஆடின் அவ்வுயிர்கள் கன்மத்தைப்புசிக்க நேரும். அவ்வாறு அனுபவிக்கவே நாளுக்குநாள் கன்ம நசியும் ஆதலின், 'வந்ததொடர்ப் பாடுகெட வன்றோவோர், பாத்திரத்துக் காடல்லா வாடுவதே னாட்டுமவன்' ஆட்டமாடல் சிரமமில்லாதசெயல் என்று காட்டுதற்கே 'ஆடல் ஆடுவதே' என்றார். ஆன்மாக்களின் உய்வின்பொருட்டே இவ்வாடலைச் செய்கின்றதைக் காட்டிடற்கே 'நாட்டு மவன்' என்றார்.

62

நான் அவனாகிநிற்கும் நாளென்னாளோ வெனல்

அவனே பரமு மவனே குருவும்
அவனே யகில மனைத்தும்—அவனேதா

மானவரே சொன்னா லவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள்.

(ப-ரை) அவனே-அவனே (முதல்வனே), பரமும்-இறைவனும், குருவும்-ஆசாரியனும், அவனே - அவனே (அவ்விறைவனே), அகிலம் - பிரபஞ்சம், அனைத்தும்-எல்லாம், அவனே - அவனே (அவ்விறைவனே), தாம் - தாமாக, ஆனவரே - ஆனவர்களே!, சொன்னால் - சொல்லும் இடத்து, அவரே-அவர்களே, எனக்கு - எனக்கு, குரு - ஆச்சாரியன், நான் - நான், அவன்-அவன், ஆய்-ஆகி, நிற்பது-நிற்குங்காலம், எந்த-எந்த, நாள்-காலம் எ-று.

(வி-ரை) அவனே என்றது இறைவனை. இது பண்டறிசுட்டு. பரம்-கடவுள். இது உயர்ந்தவன் என்ற காரணம்பற்றி வந்த பெயர். அவனே என்பது பன்முறைவந்த இது சொற்பொருட் பிரிதிநிலையணி. குரு இது அஞ்ஞானமாகிய இருட்டை அழிப்பவன் என்னுங் காரணம்பற்றிவந்த காரணப்பெயர். அவனே தாம் ஆனவர் என்றது சோகம்பாவனையால் அவனாகி நின்றவர். இது அத்துவித நிலையைக் குறித்தது. அவரே என்றது அத்துவிதநிலை அடைந்தவர்களை அதாவது, அவனேதா மானவரைக் குறித்தது. நான் அவனா நிற்கும் நிலை என்றது அத்துவிதானந்த நிலையை. நாள் என்றது ஈண்டு காலத்தைக் குறித்தது. இச்செய்யுளின் கருத்தை,

"ஈசனொடு சுற்றம் ஈன்றெடுத்த தாய்தந்தை
நேசன் பிரபஞ்சம் நேர்பொருள்கள்—பேசரிய
மோனநிலை வீடும் மொழியுங்கால் சற்குருவே
ஆனவவன் ஆநாள் அறை"

என்ற **அழதகவியாலும்** அறியலாம். 63

மனமே! நீ அடங்கின், நான் உனக் கடிமைதா னெனல்

நாளவங்கள் போகாமல் நாடோறு நந்தமையே
யாளவந்தார் தாளின்கீ ழாட்புகுந்தாய்—நீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தால் நெஞ்சேயுன்
ஆட்டானா னையமில்லை யால்.

(ப-ரை) நாள்-காலம், அவங்கள் - வீண் காரியங்களில், போகாமல் - கழியாமல், நாடோறும் - (தினந்தோறும் தினந்தினம்) எந்தநாளும், நம் - நம், தமையே-தமையே, ஆள-ஆண்டருள, வந்தார்-வந்த ஆசாரியரது, தாளின்-திருவடியின், கீழ்-கீழே, ஆள்-அடிமையாகி, புகுந்தாய் - சரணம் புகுந்தாய், நீள-மறுபடியும், உன்னை-உன்னை, காட்டாமல்-தோற்றுவிக்காமல், நிற்கும்-இருக்கும், கருத்து - கருத்தை, அறிந்தால் - அறிந்தாய் ஆகில், நெஞ்சே-மனமே, நான்-நான், உன்-உன்னுடைய, ஆள்-அடிமை, தான்-தான், ஐயம்-சந்தேகம், இல்லை-இல்லை எ-று.

(வி-ரை) 'நாளவங்கள் போக்காது' என்றது திருவருள் நிலையில் நின்று நிட்டை சாதித்தலைச் செய்யாது மருள் நிலையில் நின்று காலத்தைக்



கொன்னே கழித்து ஒழித்தலைக் குறித்தது. 'நம்மையே ஆளவந்தார்' என்றது ஞானாசிரியரை. 'ஆட்புகுந்தாய்' என்றது சரணடைந்ததை. 'உன்னைக் காட்டாமல் நிற்குங் கருத்தறிந்தால்' என்றது பிரபஞ்சமுகத்தே திரும்பாது நிற்கும் கருத்தை அறிந்தால் என்ற பொருளதாம். 'நின் னாட்டான்' (நின்+ஆள்தான்) உனக்கு ஆளானவனே என்றனர். இதிற் சிறிதும் சந்தேகமில்லை என்பார் 'ஐயமில்லையால்' என்றார். இதில் 'ஆல்' சாரியை. 64

நெஞ்சே! யான்தான் என்பது அற்றிருப்பதுவே
சுகநிஷ்டையெனல்

யான்றா னெனலறவே யின்பநிட்டை யென்றருணைக்
கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ—தோன்றி
இழுக்கடித்தாய் நெஞ்சேநீ யென்கலைகள் சோர
அழுக்கடிக்கும் வண்ணார்போ லாய்.

(ப-ரை) யான்-நான், தான்-தான், எனல் - என்ற கூறல், அறவே-அற்றொழிகையே, இன்பம்-சுகம், நிட்டை-நிஷ்டை, என்று - என்று, அருணை-திருவண்ணாமலையிலிருந்த, கோன்-அருணகிரிநாதர், தான்-தான், உரைத்த-கட்டளையிட்ட, மொழி - (சொல்) உபதேசம், கொள்ளாயோ - உட்கொள்ளாயோ, தோன்றி-முன்னாலே உண்டாகி, நெஞ்சே-மனமே, என் - என்னுடைய, கலைகள்-ஆடைகள், சோர - சோரும்படி, அழுக்கு-அழுக்கு அகலும்படி, அடிக்கும்-அடிக்கின்ற, வண்ணார்-வண்ணாரை, போலாய்-போலாக, நீ-நீ என்னை, இழுக்கடித்தாய்-இழுக்கடித்தனை எ-று.

(வி-ரை) 'யான்' என்றது அகங்காரத்தை 'தான்' என்றது மமகாரத்தை. யான் என்ற அகங்காரமும், தான் என்ற மமகாரமும் அற்றால் அதுவே இன்ப நிட்டையாகும் என்று **அருணகிரிநாதர்** அருளிச் செய்திருக்கிறார் என்பர். 'யான்றா னெனலறவே யின்பநிட்டை யென்றருணைக், கோன்றா னுரைத்தமொழி கொள்ளாயோ' என்றார். 'என் கலைகள்சோர வழுக்கடிக்கும்' இதனை 'என் கலைகள் அழுக்குசோர அடிக்கும்' எனக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுக. இது உவமானம். ஈண்டு, கலைகள்சோர' என்றது மத்திபதீப அலங்காரம். 'கலைகள்' என்றது சிலேடை 'கலை' வண்ணாரைத் தழுவும்போது 'வஸ்திரம்' என்றும், 'கலை' நெஞ்சைத் தழுவும்போது 'நூலறவு' என்றும் பொருள் தரும். 65

மனமே! எங்கும் வியாபித்துள்ள சிவம் நீ அத்துவிதமா நிற்கின்
சிவாநந்தத்தை விளைவிக்கும் எனல்

எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கினெஞ்சே
தங்குஞ் சுகம்நீ சலியாதே—அங்கிங்கென்
றெண்ணாதே பாழி லிறந்து பிறந்துழலப்
பண்ணாதே யானுன் பரம்.

**(ப-ரை)** நெஞ்சே-மனமே!, இரண்டற்று-துவிதபாவனை நீக்கி, நிற்கில்-நின்றால், எங்கும்-எந்த இடத்தும், சிவமே - சிவசொரூபமேயாகும், (அவ்வாறானால்) சுகம்-இன்பமானது, தங்கும்-நிலைபெற்றிடும், நீ-நீ, சலியாதே-சலனமுறாதே (அசையாதே), அங்கு - அவ்விடமுண்டு, இங்கு - இவ்விடம் இல்லை, என்று-என்றும், எண்ணாதே - நினையாதே, பாழில்-வீணாக, இறந்து - மரணமடைந்தும், பிறந்து - உற்பத்தியாகியும், உழல - வருந்த, பண்ணாதே - செய்யாதே, யான்-நான், உன்-உன்னுடைய, பரம்-அடைக்கலம் எ-று.

**(வி-ரை)** இறைவன் அங்கு இங்கு எனாதபடி வியாபித்திருப்பவன் ஆதலினால் 'எங்குஞ் சிவம்' என்றார். இறைவன் எங்குமாய் வியாபித்திருக்கும் நிலைமை அத்துவித நிலையில் நின்றால் அறியலாமே அன்றி துவித நிலையில் அறியமுடியாதாதலின் 'எங்குஞ் சிவமே இரண்டற்று நிற்கில் நெஞ்சே!' என்றார். அத்துவிதநிலையில் நின்று எங்குமாக உள்ள சிவத்தைக் கண்டார்க்கு ஆனந்தஞ் சித்தியாகும் ஆதலின் 'தங்குஞ் சுகம்' என்றார். இறைவன் அங்குண்டு இங்கில்லை, இங்குண்டு அங்கில்லை என்று எண்ணல் மனச் சலனத்தால் வருவதாதலின் 'நீ சலியாதே அங்கிங்கென் றெண்ணாதே' என்றார். சலனப்பட்டு துவிதமாகினால் பிறப்பும் அதனாலாய துன்பங்களும் வரும் ஆதலினால் 'பாழி லிறந்துழலப் பண்ணாதே' என்றார். இம்மையில் மாயையில் பட்டுத்தவித்தற்கும் மனமே காரணம், மாயையினின்றும் நீங்கி சிவானந்தம் அனுபவித்தற்கும் மனமே காரணமாதலின் 'யானுன் பரம்' என்றார். 66

நெஞ்சே! விபரீத எண்ணத்தை விடின் ஆனந்தமே மயமாகு மெனல்

மெய்யைப்பொய் யென்றிடவும் மெய்யணையாப் பொய்ந்நெஞ்சே
பொய்யைத்தான் மெய்யெனவும் போகுமோ—ஐயமறத்
தன்மயத்தை மெய்யெனவே சார்ந்தனையே லானந்த
மென்மயமு நின்மயமு மே.

**(ப-ரை)** மெய்யை-உண்மையானவைகளை, பொய்-பொய், என்றிடவும்-என்று சொல்லவும், மெய்-உண்மை, அணையா-சேராத, பொய் - பொய்யைத் தழுவி நிற்கின்ற, நெஞ்சே - மனமே!, பொய்யை - பொய்யை, தான்-தான், மெய்-உண்மை, எனவும்-என்று கூறவும், போகுமோ - தக்கதாகுமோ, ஐயம்-சந்தேகம், அற-நீங்க, தன்மயத்தை-தன்மயமாகும் ஆன்மாவின் நிச்சயத்தை, மெய்-உண்மை, எனவே-என்றே, சார்ந்தனையேல் - அடைவாய் ஆனால், என்மயமும்-என்னுருவமும், நின்-உன்னுடைய, மயமே-உருவமேயாகும்(அதுவே), ஆனந்தம்-சுகரூபம் எ-று.

**(வி-ரை)** 'மெய்யை' என்றது மோட்சானந்த அனுபவத்தை. இனி, இந்தத் தேகத்தை என்று பொருள் கூறுவாறும் உண்டு. ஞானசூனியத்தால் உன்னைத் தேறுதிருத்தலின் 'மெய் அணையாப் பொய் நெஞ்சே' என்றார். காரியப்பாட்டால் பொய்யாகிய பிரபஞ்சத்தை மெய் எனக் கொள்ளுதலின்



'பொய்யைத்தான் மெய் எனவும் போகுமோ' என்றார். 'தன்மயத்தை' என்றது ஆன்மாவின் நிச்சயத்தை; இனி, எல்லாந் தன்மயமாக விளங்கும் இறைவனை எனினும் பொருந்தும். சீவான்மா, பரமான்மாவின் நிச்சயங்கள் ஐயமற எற்படின் ஆனந்தம் எய்தும் ஆதலின் 'ஐயமறத் தன்மயத்தை மெய் யெனவே சார்ந்தனையே லானந்தம்' என்றார். ஆநந்தமயமாக நிற்கும் நிலையில் மனமும் ஆன்மாவும் ஒன்றாக இயைந்துகாணு மாதலின் 'என்மயமு நின்மயமே' என்றார். 67

நான் என்னும் தற்போதங் கழன்று மௌனத்தில் இருந்தவர்களுக்கு முத்திவருமெனல்

பூங்கா வனநிழலும் புத்தமுதுஞ் சாந்தபதம்
வாங்காத வானந்த மாமழையும்—நீங்காவாம்
சொல்லிறந்து மாண்டவர்போற் றூமௌன பூமியினா
னில்லையென நின்ற விடம்.

**(ப-ரை)** சொல்-வாக்கு, இறந்து-மடிந்து, மாண்டவர் - இறந்தவர்களை, போல்-போல, தூ-சுத்தமாகிய, மௌனம்-மௌனமாகிய, பூமியில் - பூமியில், நான்-நான் என்னுந் தற்போதம், இல்லை-இல்லை, என-என்று சொல்லும்படி, நின்ற-இருந்த, இடம்-இடத்தில், பூம்-அழகிய, கா-கற்பகத்தின், வன-வனத்தின், நிழலும்-நிழலும், புத்து - புதிய, அமுதும் - தேவாமிர்தமும், சாந்தம்-சாந்தமாகிய, பதம்-பதமும், வாங்காத - நீங்காத, ஆனந்த-ஆனந்தமயமாகிய, மா-பெரிய, மழையும் - இன்பமழையும், நீங்கா - நீங்காதபடி, ஆம்-இருப்பனவாகும் எ-று.

**(வி-ரை)** 'பூங்காவனம்' என்றது சிறப்புப்பற்றி இந்திரன் கற்பகச் சோலையைக் குறித்தது. இனி இந்திரன் கற்பகச் சோலைக்கு 'பூங்காவனம்' என்னும் பெயர் உண்மையும் அறிக. 'புதுமை' என்றசொல் ஈற்று மை கெட்டு 'புது' என நின்று ஒற்று இரட்டி 'புத்து' என நின்றது புத்து+அமுதம்=புத்தமுதம் என ஆயிற்று. இது புதியது, என்னும் பொருளது, 'அமுதம்' இது தேவர்பொருட்டுத் திருமால் திருப்பாற் கடலிலிருந்து எடுத்துத்தந்த சாவாமையைத்தரும் ஒருவகை உணவு. முத்தி இன்பம் இன்பப் பெருக்கையும் மனோசாந்தத்தையும் உடையது ஆதலின் 'சாந்தபதம் வாங்காத ஆனந்தமழையும்' என்றார். 'சொல்லிறந்து' என்றது பேச்சொழிந்து என்ற பொருளதாம். 'மாண்டார்போல்' இறந்தவர்களைப்போல், இதனை,

"வித்தாரமும் மிடும்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கு ஈண்டு நோக்கற்பாலது. 'தூமௌனம்' பரிசுத்தமாகிய மௌனம் ஈண்டு மௌனம் என்றது திரிகரண மௌனத்தை. 'நான் இல்லை என நின்ற இடம்' என்றது தற்போதம் இழந்து நின்ற நிலையை, 68

மௌனகுருவே வந்து அடியேனுக்கு இடம் பொருள் ஏவல்களை
அருளிச் செய்தார் எனல்

**இடங்கானம் நல்லபொரு ளின்பம் எனக்கேவ**
**லடங்காக் கருவி அனைத்து—முட னுதவ**
**மந்தார தாருவென வந்து மவுனகுரு**
**தந்தானோர் சொற்கொண்டு தான்.**

(ப-ரை) எனக்கு - அடியேனுக்கு, இடம்-தங்கும் இடமானது, கானம்-காடாகவும், பொருள்-அனுபவிக்கும் பொருள், நல்ல-நல்ல, இன்பம்-சுகமாகவும், ஏவல்-ஏவற்காரர்கள், அடங்கா-இலேசில் அடங்காத, கருவி-தத்துவங்களாகவும், அனைத்தும்-இவை எல்லாம், உடன்-உடனே, உதவும்-அருளக்கூடிய, மந்தார - தேவலோகத்து பஞ்சதருக்களில் ஒன்றாகிய மந்தாரம் என்னும், தாரு-விருட்சம், என-என்று சொல்லும்படி, வந்து-எழுந்தருளிவந்து, மௌனம்-மோன, குரு - தேசிகன், ஓர் - ஒரு, சொல்-சொல்லை, கொண்டு-கொண்டு (உபதேசித்தருளி), தந்தான் - எல்லாப்பொருள்களையும் தந்தருளினான் எ-று.

(வி-ரை) பிரபஞ்சத்திலுள்ளார்க்கு இடம், பொருள், ஏவல் என்ற மூன்றும் இன்றியமையாது வேண்டற்பாலது. இடம்-வீடு, பொருள்-பொன், ஏவல் வேலைக்காரர் இதுபோலவே, மௌனகுருவானவர் எழுந்தருளிவந்து அடியேன் தங்கி இருத்தற்கு இடமாகும், அனுபவிக்க நல்ல பொருள் சிவானந்தமும், ஏவலாளர்களாக அடங்காத தத்துவங்கள் அடங்கி நடக்கவும் அருள்புரிந் தளித்தருளினன் என்பார், 'இடங்கான நல்லபொரு ளின்பமெனக் கேவ லடங்காக் கருவி யனைத்து முடனுதவ' என்றார். 'மந்தார தாரு' இது தேவலோகத்துக் கற்பகதருக்களில் ஒன்று இது வேண்டுவார்க்கு வேண்டுவனவெல்லாந் தந்து இன்பமுந் தந்தருளுவது. 'ஓர்' ஒரு என்றதாம், இனி ஒப்பற்ற என்றலும் ஆம். 'சொல்' என்றது ஞானோபதேச மொழியை. அது 'சும்மா இரு' என்ற சொல்லாம். 69

மனமே! மௌனகுரு உபதேசித்தருளிய ஒரு சொல்லைக்கொண்டு
சும்மா இருப்பையேயானல் யாவும் நேருமெனல்

**தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி**
**ஆனவையெல் லாந்தாமே யாகுமே—மோனகுரு**
**சொன்னவொரு சொல்லாற் சுகமா யிருமனமே**
**இன்ன மயக்கமுனக் கேன்.**

(ப-ரை) மனமே - நெஞ்சே!, மோன - மௌன, குரு-குரு, சொன்ன-உபதேசித்தருளிய, ஒரு-ஒரு, சொல்லால்-சொல்லினல், தானம் - ஈகையும், தவம் - தவமும், ஞானம் - ஞானமும், சாற்று-சொல்லல், அரு-அரிய, சித்தி-அட்டமா சித்திகளும், முத்தி-மோட்சமும், ஆனவை-ஆகியவைகள், எல்லாம், தானே - தன் இச்சையாலேயே (வலிய), ஆகும் - சித்திக்கும், (ஆதலினல்) சுகம்-இனி சுகம், ஆய்-ஆகி, இரு-இருப்பாயாக, இன்னமும்-இன்னமும், உனக்கு-உனக்கு, மயக்கம்-மயக்கம், ஏன்-எதற்கு எ-று.



(வி-ரை) "தானமுந் தவமுந் தான்செய்வா ராயின், வானவர் நாடு வழிதிறந் திடுமே" என்ற ஔவைப் பிராட்டியாரின் திருவாக்கின்படி ஒப்பற்ற ஞானசிரியர் திருஉபதேசத்தால் தானமும் தவமும் அதனல் எய்தக்கூடிய சித்தி முத்திகளும் எய்திற்று என்பார், 'தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி, யானவையெல் லாந்தாமே யாகுமே' என்றார். சாற்றரிய சித்தி, சாற்றரிய முத்தி என முதனிலைத் தீபக அலங்காரமாக இயைத்துப் பொருளுரைத்தலும் ஆம். அட்டமா சித்தியின் பெருமைகளும், முத்தியின் பெருமையும் எடுத்துச்சொல்ல அடங்காததாதலின் 'சாற்றரிய' என்றார். 'எல்லாந் தாமே யாகுமே' என்றதனல் இம்மை இன்பங்களும், மறுமை இன்பங்களும் முத்தியும் கொள்ளக்கிடந்தது. 'சொல்லால்' என்றது மூன்றன் உருபு ஏற்ற பெயர். கருவிப்பொருளில் வந்தது. 'இன்னமயக்க முனக்கேன்' ஞான தேசிகன் உபதேசங்கேட்டு தெருளடையவேண்டியதிருக்க மருளேன் என்பார் இவ்வாறு கூறினர். 'தானந் தவஞானஞ் சாற்றரிய சித்திமுத்தி' என்றதில் உம்மைகள் தொக்குகின்றன. 'சித்தி' சித்திப்பது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். 70

மனமே! ஞானதேசிகன் உபதேசித்த உபதேசத்தை மறவாது
சிந்தித்தால் பிறப்பிறப்பு ஒழியும் எனல்

**உன்னை உடலை உறுபொருளைத் தாவெனவே**
**யென்னை யடிமைக் கிருத்தினன்—சொன்னவொரு**
**சொல்லை மறவாமற் றோய்ந்தானெஞ் சேஉன்னு**
**லில்லை பிறப்பதெனக் கே.**

(ப-ரை) நெஞ்சே - மனமே!, உன்னை - உயிராகிய உன்னையும், உடலை-உடலையும், உறு - பொருந்திய, பொருள் - செல்வத்தையும், தா - தா, என-என்று ஏற்றுக்கொண்டு, என்னை - அடியேனை, அடிமைக்கு - தொண்டுக்கு, இருத்தினன் - வைத்துக்கொண்டருளியவனாகிய தேசிகன், சொன்ன உபதேசித்தருளிய, ஒரு-ஒரு, சொல்லை மொழியை, மறவாமல்-மறந்துவிடாமல், தோய்ந்தால்-சிந்தித்து அதிற்பொருந்தினல், உன்னல்-உன்னாலே, எனக்கு-எனக்கு, பிறப்பது-பிறவி, இல்லை-இல்லையாகும் எ-று.

(வி-ரை) ஞானதேசிகனிடம் உபதேசம் பெறுமுன் 'உடல் பொருள் ஆவி' மூன்றையும் குரு காணிக்கையாகத் தருதலினலும் ஆசிரியன் ஏற்றுக் கொள்ளுதலினலும் 'உன்னை உடலை யுறுபொருளைத் தாவெனவே, என்னை யடிமைக் கிருத்தினன்' என்றார் 'உன்னை' என்றது உயிரும் மனமும் ஒன்றாகி யிருக்குந் தன்மைபற்றி என்க. 'உறுபொருளை' என்றது புறப்பொருள்களை. பொன் முதலியவற்றை. 'இருத்தினன்' என்றது ஞான

தேசிகனை. இது வினையா லணையும் பெயர். 'சொன்ன ஒருசொல்' என்றது 'சும்மா இரு' என்ற ஞானோபதேச மொழியை. 'தோய்தல்' என்றது குரு உபதேசத்தைச் சிந்தித்து அதில் தோய்ந்து நிற்றலை. (தோய்தல்-பொருந்தி இருத்தல்) ஞானதேசிகன் சொற்படி மௌனானந்த நிட்டையில் நிற்கின், பிறவித்துன்பம் நீங்கும் என்பார் 'நெஞ்சே யுன்னால் இல்லை பிறப்பது எனக்கே' என்றார். 'உன்னை, உடலை உறுபொருளை' இதில் உம்மைகள் தொக்குநின்றன. 71

நெஞ்சே! எனக்கும் உனக்கும் உறவாந்தன்மை இல்லை எனல்

எனக்கு முனக்குமுற வில்லை யெனத்தேர்ந்து
நினைக்கவரி தானவின்ப நிட்டை—தனைக்கொடுத்தே
யாசான் மவுனி யளித்தான்நெஞ் சேஉனையோர்
காசா மதியேனான் காண்.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, எனக்கும்-எனக்கும், உனக்கும்-உனக்கும், உறவு-சம்பந்தம், இல்லை-இல்லை, என-என்று, தேர்ந்து-தெளிந்து, நினைக்க-எண்ணுதற்கு, அரிது - அரியது, ஆன - ஆகிய, இன்பம் - சுகம், நிட்டை-நிஷ்டை, தனை-தனை, ஆசான் - குருமூர்த்தியாகிய, மௌனி-மவுனதேசிகர், கொடுத்து-கொடுத்து, அளித்தான்-அருள்செய்தான், (ஆகையினால்) உன்னை, நான் - யான், ஓர்-ஒரு, காசா - காசுக்கும், ஆ - சமமாக, மதியேன்-மதிக்கமாட்டேன் எ-று.

(வி-ரை) எனக்கு என்றது ஆன்மாவை. உனக்கு என்றது மனதை. ஆன்மா சித்துப்பொருள், மனம் ஜடப்பொருள். ஆகையால் ஆன்மாவிற்கும் மனத்திற்கும் உறவில்லை என்பது ஞானதேசிகன் அருளால் அறிந்தேன் என்றார். சிவானந்தயோகநிட்டையின் சிறப்பு எண்ணற்கு அரியது ஆகலின் 'நினைக்கவரிதான வின்பநிட்டை'என்றார். நினைக்கவரிது என்பதனால் சொல்ல அரிது, எய்த அரிது என்பனவுந் தானே அமையும். மனத்திற்குப் புறம்பாக ஆன்மா தனி என்பது ஆசாரியன் அருளால் அறிந்து கொண்டேன் ஆதலின் மனமே இனி உன்னை மதிக்கமாட்டேன் என்பார் 'நெஞ்சே யுனையோர் காசாமதியே னான்காண்' என்றார். காசு ஈண்டு ஓர் சிறு அற்பசெப்பு நாணயத்தைக் குறித்தது. 72

மௌனதேசிகர் என் அறிவுக்கு இணங்கச்சொல்லி அனுக்கிரகித்த படியால் மனம் மவுனமாயிற்று எனல்

ஆனந்த மோனகுரு வாவெனவே யென்னறிவின்
மோனந் தனக்கிசைய முற்றியதால்—தேனுந்து
சொல்லெல்லா மோனம் தொழிலா தியுமோனம்
எல்லாநன் மோனவடி வே.



(ப-ரை) ஆனந்தம்-ஆனந்தமயமாகவுள்ள, மோனம் - மவுன, குரு-தேசிகன், ஆம்-எனக்கு மவுனானந்தநிலை உண்டாகும், எனவே-என்று, என்-அடியேனின், அறிவில்-அறிவிலே, மோனம்-மவுனம், தனக்கு-தனக்கு, இசைய-பொருந்த, முற்றியதால்-எல்லாங் கைகூடி வந்ததனால், தேன்-தேனைப்போல, உந்து-ருசிக்கின்ற, சொல்-மொழி, எல்லாம்-அனைத்தும், மோனம்-மோனமே ஆயிற்று, எல்லாம்-மற்றெல்லாமும், நல்-நல்ல, மோன-மவுன, வடிவே-வடிவமாகவே ஆயிற்று எ-று.

(வி-ரை) மோனகுரு சிவ ஆனந்தத்தை அருளிச் செய்தமையாலும், ஆனந்தமயமாக இருந்ததனாலும் தன்னையும் இருத்தியதனாலும் 'ஆனந்த மோனகுரு' என்றார். ஆம் என்றது சிவானந்தம் ஆம் என்ற பொருளது. எனவே என்றது என்று அனுக்ரகித்தருளியபொழுது என்ற பொருளது. முற்றியது என்றது ஆசான் அனுக்கிரகித்தருளிய உடனே அவ் ஆனந்த நிலை சம்பூரணமாகக் கிட்டியது. என்றதாம் 'தேனுந்து' இது தேனைப்போல ருசிக்கின்ற என்ற பொருளது. தேன் தேனைப்போல உந்து கிளம்புகின்ற என்பதாம். இனிய சொற்கள் சொல்லின் இனிமையாவது ஞானப் பொருளமைந்த தண்ணிய திண்ணிய இன்சொற்கள் என்பதாம். 'தொழிலாதி' என்றமையால் தொழிலும் அதற்கு அதற்குக் காரணமாயுள்ள மனமும் மோனம் என்பதாம். எல்லாம் என்றது மனம் வாக்கு காயம் ஆகிய மூன்றினையும் குறித்து, மவுனவடிவு என்றது மௌனசொரூபமே என்றதாம். 73

மௌனகுருவே! அறிஞர்கள் எல்லாம் மௌனத்தை நாடினர்கள் நான் ஒருவன் அகங்காரத்தால் அலைந்து திரிந்தது எனெனல்

எல்லாமே மோன நிறை வெய்துதலால் எவ்விடத்து
நல்லார்கள் மோன நிலை நாடினர்—பொல்லாத
நானெனவிங் கொன்றை நடுவே முளைக்கவிட்டிங்
கேனலைந்தேன் மோனகுரு வே.

(ப-ரை) மோன - மவுன, குருவே - குருவே!, எல்லாமே - முழுதுமே, மோனம்-மவுனம், நிறைவு - பூர்த்தியை, எய்துதலால்-அடைதலால், நல்லார்கள்-அறிஞர்கள், எ-எந்த, இடத்தும்-இடத்திலும், மோனம் - மோன, நிலை-நிலையையே, நாடினர்-நாடினர்கள் (விரும்பினர்கள்), பொல்லாத-பொல்லாத, நான் - நான், என - என்று, இங்கு-இவ்விடத்து, ஒன்றை-ஒன்றை, நடுவே-மத்தியிலே, முளைக்க-முளைக்க, விட்டு-விட்டு, இங்கு-இவ்வுலகில், ஏன்-எதற்காக, அலைந்தேன்-திரிந்தேன் எ-று.

(வி-ரை) 'மோன நிறைவு' ஈண்டு மோனானந்த நிறைவைக் குறித்தது. 'நல்லார்கள்' என்றது ஞானிகளைக் குறித்தது. "நல்லார் அறிந்திருப்பர் அங்கமல நீர்போற் பிறிந்திருப்பர் பேசார் பிறர்க்கு" என்ற ஔவை வாக்கும் ஈண்டுகருதி நோக்கத்தக்கது. 'நான்' என்னும் அகங்காரதத்துவம் எல்லாக் கேட்டிற்குங் காரணமாக இருத்தலின் 'பொல்லாத நான்' என்றார். 'முளைக்க விடல்' தோன்றவிடலைக் குறித்தது. 74

மௌனகுரு அருளிய மௌனநிலையே சுகரூபமாகும் எனல்

**மோன குருவளித்த மோனமே யானந்தம்**
**ஞான வருளுமது நானுமது—வானாதி**
**நின்ற நிலையுமது நெஞ்சப் பிறப்புமது**
**வென்றறிந்தேன் ஆனந்த மே.**

(ப-ரை) மோன - மௌன, குரு - ஆசாரியன், அளித்த - உபதேசித்த, மோனமே - மவுனநிலையே, ஆனந்தம் - ஞானானந்தமாகும், (என்னெனின்) ஞானம் - ஞானசொரூபமாக யிருக்கிற, அருளும் - திருவருளும், அது-அது, வான்-ஆகாயம், ஆதி - முதலிய பஞ்சபூதங்கள், நின்ற - நிற்கின்ற, நிலையும். இடமும், அது-அதுவே, நெஞ்சம்-மனம், பிறப்பும் - உண்டாதற்குக் காரணமாக இருப்பதும், அது-அதுவே, என்று-என்று, அறிந்தேன்-உணர்ந்தேன், (இவ்வாறு அறிந்த பின்பு) ஆனந்தமே-எல்லாம் ஆனந்தமேயாம் எ-று.

(வி-ரை) மோனம் என்றது மவுன உபதேசத்தையும், மவுன நிலையையுங் குறித்தது. ஆனந்தம் என்றது சிவானந்தத்தை. அருள் என்றது திருவருளை. நான் என்றது ஈண்டு ஆன்மாவைக் குறித்தது. வான் என்றது ஆகாயத்தை; ஆதி என்றது ஏனைப் பூதங்களாகிய காற்று, நெருப்பு, நீர், மண் ஆகிய இவைகளை. நெஞ்சம் என்றது மனத்தை. இவ்வுண்மை அறியவும் ஆனந்தமயமாயினேன் என்பார் 'என்றறிந்தேன் ஆனந்த மே' என்றார். 75

மௌன குருவானவர் என்னை ஆனந்தநாட்டில் குடித்தனக்காரனாக ஆக்கிவைத்தார் எனல்

**அறிந்த வறிவெல்லா மறிவன்றி யில்லை**
**மறிந்த மனமற்ற மவுனஞ்—செறிந்திடவே**
**நாட்டினான் ஆனந்த நாட்டிற் குடிவாழ்க்கை**
**கூட்டினான் மோன குரு.**

(ப-ரை) அறிந்த-என்னால் அறியப்பெற்ற, அறிவு-அறிவு, எல்லாம்-எல்லாம், அறிவு-என்னுடைய அறிவே, அன்றி-அல்லாமல், இல்லை-அன்னியமாக வேறில்லை, மறிந்த-தடைப்பட்ட, மனம்-மனம், அற்ற-இறந்த, மவுனம்-மவுன நிலையானது, செறிந்திட-பொருந்த, மோன-மவுன, குரு-தேசிகன், நாட்டினான்-என்நெஞ்சில் நிலைபெறச் செய்தான், ஆனந்தம்-சிவானந்தம், நாட்டில்-நாட்டில், வாழ்க்கை-வாழ்வை உடைய, குடி-குடியாக, கூட்டினான் - கூட்டிவைத்தான் எ-று.

(வி-ரை) அறிந்த அறிவு என்றது அறிந்த பொருள்களை, அறிவன்றி இல்லை என்றது ஞானதேசிகன் அருளிச்செய்தபின் எல்லாம் என் அறிவிடத்தே கண்டேன் என்பதாம். சமஷ்டி ஞானத்தால் அறிவும் காணும் தன்மை உண்டாயிற்று என்பதாம், மனமற்ற மவுனம் என்றது மனம் இறந்த



மௌனம் என்பதாம். ஆனந்தநாடு என்றது சிவானந்தவாழ்வை. குடிவாழ்க்கை கூட்டினான் என்றது சிவானந்தத்தில் முழுகி இருக்கச்செய்தான் என்பதாம். மோனகுரு என்றது தனது ஆசிரியராகிய மௌனதேசிகரை. முதலடியில் அறிவு என முக்கால் வந்தது சொற்பின்வருநிலையணி. 76

மௌனகுருவே! தேவரீர் குருவாகி வந்து அருள் நிலையைப் போதிக்கு முன்பே உடல், பொருள், ஆவியை ஏற்றுக்கொண்டனையே எனல்

**குருவாகித் தண்ணருளைக் கூறுமுன்னே மோனா**
**உருநீ டுயிர்பொருளு மொக்கத்—தருதியென**
**வாங்கினையே வேறுமுண்மை வைத்திடவுங் கேட்டிடவு**
**மீங்கொருவ ருண்டோ இனி.**

(ப-ரை) மோனா-மவுனகுருவே!, குரு-தேவரீர் குரு, ஆகி - ஆகி, தண்-குளிர்ந்த, அருளை-திருவருளை, கூறும் - அடியேனுக்கு உபதேசித்தருளும், முன்னே-முன்னே, உரு-உடம்பையும், நீடு-நிலைத்ததாகிய, உயிர்-உயிரையும், பொருள்-பொருளையும், ஒக்க-ஒருமிக்க (ஒன்றுசேர), தருதி - தந்திடுவாயாக, என-என்று, வாங்கினையே-பெற்றுக்கொண்டாயே, வேறும்-மற்றும், உண்மை-உண்மையை, வைத்திடவும்-போதிக்கவும், கேட்டிடவும் - கேட்கவும், ஈங்கு-இவ்விடத்தில், இனி-இனிவேறு, ஒருவர் - ஒருவர், உண்டோ - இருக்கின்றனரோ எ-று.

(வி-ரை) 'குரு' என்றது மௌனகுருவை. 'தண்ணருள்' என்றது தண் அருள்மயமாகிய மௌனானந்தத்துக்கு உரிய உபதேசத்தினை. குருவாகி வந்து தன் அருளைப் போதிக்கு முன்னரே உடல், பொருள், ஆவி மூன்றினையும் ஏற்றுக்கொண்டாய் என்பார், 'மோனவுரு நீடுயிர் பொரு மொக்கத் தருதியென வாங்கினையே' என்றார். 'மோன வுருவுரு' என்றது மௌனத்திற்கு உரியதாகிய உடல் என்றதாம். 'நீடுயிர்' என்றது ஆன்மாவை, என்னை அழிவில்லாதது ஆதலின். நீடுதல் - அழியாது நிலைத்திருப்பது என்பது பொருள். 'பொருளும்' என்றதன் உம்மை முற்றும்மை. 'வேறும் உண்மை' என்றது உண்மை ஞானோபதேசத்தினை. 'வைத்திட' என்றது உபதேசித்திடற்கு என்ற பொருளது. 'கேட்டிடவும்' இது முன்னரே உடல், உயிர் பொருள்களைக் கொடுத்திட்டதால் இனிகேட்டு வாங்கிடற்கு வேறு கேட்டு வாங்கவும் என்றதாம். 'ஒருவர்' என்றது வேறு ஞானதேசிகன் என்பதாம். 'உண்டோ' இது விடைதழுவிய வினா இல்லை என்பது பொருளாம். 'ஈங்கு' என்றது இவ் உலகில் என்ற பொருளாம். 77

மௌனதேசிகன் ஞானோபதேசங் கேட்ட உடனேயே சுகந் தோன்றத் தொடங்கியது எனல்

**இனிய கருப்புவட்டை யென்னாவி லிட்டா**
**னனியிரத மாறாது நானுந்—தனியிருக்கப்**
**பெற்றிலேன் மோனம் பிறந்தவன்றே மோனமல்லாற்**
**கற்றிலே னேதுங் கதி.**

(ப-ரை) இனிய - மதுரமாகிய, கருப்பு - கரும்பின், வட்டை-கட்டியை, என்-அடியேனுடைய, நாவில்-நாக்கில், இட்டால் - வைத்தால், நனி-மிகவும், இரதம்-இரசமானது, மாறாது-நீங்காமல், நானும்-அடியேனும், தனி-தனித்து, இருக்கவும் - இருக்கவும், மோனம்-மௌனநிலை, பெற்றிலேன்-அடைந்தேனில்லை, பிறந்த - உற்பத்தியாகிய, அன்றே - அந்தநாளிலேயே, மோனம்-மவுனம், அல்லால் - அல்லாமல், ஏதும் - ஏதவும், கதி-புதியவழியை, கற்றிலேன்-கற்றேன் இல்லை எ-று.

(வி-ரை) கரும்பு எப்பொழுதும் மதுரச்சுவையுடையது ஆதலின் 'இனிய கருப்பு' என்றார். 'கருப்பு' இது - கரும்பு என்றதன் வலித்தல் விகாரம். 'வட்டு' என்றது வெல்லக்கட்டியை. நாவே ருசி அறிகருவி ஆதலின் 'நாவில் இட்டால்' என்றார். கரும்புக்கட்டியாகிய வெல்லத்தை நாவில் வைத்ததும் மதுரம் உதித்தல்போல ஞானதேசிகன் உபதேசித்தருளிய மாத்திரையே சிவாநந்தம் உதிக்கத் தொடங்கிற்று என்பார் 'இனிய கருப்புவட்டை என்னாவி விட்டான் நனியிரத மாறாது' என்றார். இது உருவகம். ஆசாரியன் அருள் பூரண மின்மையால் மோனநிலை கூடிற்றில்லை என்பார், 'நானுந் தனியிருக்கப் பெற்றிலேன் மோனம்' என்றார். மோனம் கருவிலே அமைந்தது. இது திரோதானத்தால் மறைக்கப்பட்டிருந்தது. ஆசாரியன் அருளால் அம்மறைவு நீக்கப்பெற்றது என்பார், 'பிறந்தவன்றே மோன மல்லாற் கற்றிலே னேதுங்கதி' என்றார். 'கதி' என்றது சாருங் கதியை. 78

என் ஐயனே! நீ மௌனமாக இருக்குங்குறி மாயையைக் கொன்றமைக்கோ வெனல்

ஏதுக்குஞ் சும்மா விருநீ எனவுரைத்த
சூதுக்கோ தோன்றாத் துணையாகிப்—போதித்து
நின்றதற்கோ என்னையா நீக்கிப் பிரியாமற்
கொன்றதற்கோ பேசாக் குறி.

(ப-ரை) என்-அடியேனுடைய (என்னுடைய), ஐயா-ஐயனே, ஏதுக்கும்-எல்லாவற்றிற்கும், நீ-நீ, சும்மா-மௌனமாக, இரு-இருப்பாயாக, என-என்று, உரைத்த - கட்டளையிட்ட, சூதுக்கோ - தந்திரத்திற்கோ, தோன்றா - கண் முன்னே காணப்படாத, துணை - உதவி, ஆகி-ஆகி, போதித்து - உபதேசித்தருளி, நின்றதற்கோ - இருந்ததன்மைக்கோ, நீக்கி - அடியேனை மாயையினின்றும் பிரித்து, பிரியாமல் - வேறுபடுத்தாமல், கொன்றதற்கோ - மாயா பாசங்கள் தலையெடுத்துக் கிளம்பாதபடி அடக்கியதற்கோ, பேசா - பேசா திருக்கும், குறி-அடையாளம் எ-று.

(வி-ரை) 'ஏதுக்கும்' என்றதற்கு வினைகளால் வரும் இன்பதுன்பங்கள் எதற்கும் என்ற பொருளது. சும்மா இரு என்றது திரிகரணத்தாலும் சும்மா இருத்தலை. 'சூது' ஈண்டு தந்திரத்தைக் குறித்தது. 'தோன்றாத் துணை' கண்ணுக்குமுன் எதிர்படாது உதவிபுரியும் நிலையைச் சுட்டிற்று.



போதித்தல் என்றது உபதேசித்தலை. நீக்கி என்றது மாயையினின்றும் பிரித்து வேறுபடுத்தி விடுத்தலை. பிரியாமல் என்றது தன்னின் வேறாக்காதபடி தன்னுள்ளே அடங்கிக்கிடக்க என்றபடி. கொன்றது என்றது மாயையின் வீறையடக்கி தலைஎடுக்காதபடி அடக்கிவைத்தலைக் குறித்தது. பேசாக் குறி என்றது மௌனவடிவம் என்பதாம். சூதுக்கோ, நின்றதற்கோ, கொன்றதற்கோ என்பவற்றுள் உள்ள ஓசாரங்கள் வினாப்பொருளில் வந்த இடைச்சொல். பேசாக்குறி உரைத்த சூதுக்கோ, போதித்து நின்றதற்கோ, நீக்கிப் பிரியாமற் கொன்றதற்கே என இயைத்துப் பொருள்கொள்க. 79

குருவே நான் என்பதற்றிருத்தலே கைம்மாறெனல்

குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத்
தறிவறியாய் நின்றுவிட ஆங்கே—பிரிவறவுஞ்
சும்மா விருத்திச் சுகங்கொடுத்த மோனநின்பாற்
கைம்மாறு நானொழிதல் காண்.

(ப-ரை) குறியும் - அடையாளமும், குணமும் - குணமும், அற - (நீங்க) ஒழிய, கூடாத - கூடுவதற்கு அரிய, கூட்டத்து - சிவனடியார் கூட்டத்து, அறிவு-அறிவு, அறிவாய்-அறிவுமயமாய், நின்று-இருந்து, விட-விட, ஆங்கே-அவ்வாறு நின்ற சமயத்தே, பிரிவு-நீக்கம், அறவும்-அறவும், சும்மா-மவுனமாக, இருத்தி - இருக்கச்செய்து, சுகம்-ஆனந்தத்தை, கொடுத்த - தந்த, மோன-மவுன தேசிகனே!, நின்பால்-தேவரீர்பால், கைம்மாறு-நான் செய்யக்கூடிய பிரதியுபகாரம், நான்-நான், ஒழிதல்-நீங்கி இருத்தலேயாம் எ-று.

(வி-ரை) குறி என்றது சுட்டியறியுந் தன்மையை இதனை முன்னிலைச் சுட்டு எனவுங் கூறுவர். குணம் என்றது இராசத முதலிய தாமத குணங்களை. கூடாத கூட்டம் என்றது சிவனடியார் கூட்டத்தை. அறிவு அறிவாய் என்றது அந்தர்முகத்தே அறிவுவடிவாய்க் காணுதலை. பிரிவற என்றது அத்துவிதமாக இருக்கும் முத்திநிலையை. சும்மா இருத்தி என்றது மௌனானந்த நிலையில் இருக்கச்செய்து என்பது பொருளாம். சுகம் கொடுத்த என்றது சிவாநந்தமாகிய முத்திச்சுகத்தை. மோன என்றது மௌனதேசிகனை. 'மோன' இது அண்மைவிளி. கைம்மாறு என்றது நன்றி செய்தவர்க்குச் செய்யும் பிரதியுபகாரம். நான் ஒழிதல்காண் என்றது நான் என்னும் அகங்காரம் ஒழிந்திருத்தல்; இதனை நான் என்னும் ஜீவபோதம் அற இருத்தல் என்பதாம்; அதாவது, ஜீவபோதங்கழன்று சிவபோதமாக இருத்தல். 80

மனமே! நான்தான் அற்றிருத்தலே பூரண மெனல்

நான்றா னெனுமயக்க நண்ணுங்கால் என்னுணை
வான்றா னெனநிறைய மாட்டாய்நீ—யூன்றாமல்
வைத்தபவு னத்தாலே மாயை மனமிறந்து
துய்த்துவிடு ஞான சுகம்.

(ப-ரை) நான் - நான், எனும் - என்னும் அகங்காரமும், தான் - தான், எனும்-என்னும் மமகாரமும் ஆகிய, மயக்கம் - மயக்கமானது, நண்ணுங்கால்-பொருந்துமிடத்து, என்-என்மேல், ஆணை-ஆணையாக, வான்-ஆகாயம், தான்-தான், என-என்று கூறும்படி, நீ-மனமே நீ, நிறைய-பூரணமாக, மாட்டாய்-மாட்டாய், ஊன்றுமல் - யாதினும் இலட்சியம் வையாமல், வைத்த - வைத்த, மவுனத்தாலே - மவுனநிலையாலே, மாயை - மாயாகாரியமாகிய, மனம்-மனம், இறந்து-ஒழிந்து (ஒடுங்கி), ஞானம்-ஞானமயமாகிய, சுகம்-ஆநந்தம், துய்த்து-அனுபவித்து, விடும்-ஆகிவிடும் எ-று.

(வி-ரை) 'நான்' என்றது அகங்காரத்தை. 'தான்' என்றது மமகாரத்தை. நான் என்பதும் தான் என்பதும் மாயையின் சேட்டையாதலின் 'மயக்கம்' என்றார். 'நான்றானெனும்' எனும் என்னுஞ்சொல், நான் என்பதோடும் தான் என்பதோடும் இயைந்து 'நான் என்னும் தான் என்னும் மயக்கம்' எனப் பொருள்கோடலின் இது கடைமொழித் தீபகமாம். ஆகாயம் எங்கும் நிறைந்து நிற்கும் பொருள் ஆதலின் 'வான்றானென நிறைய மாட்டாய்' என்றார். ஊன்றுமல் என்றது மனம் யாதினும் பற்றுவைத்து நோக்காமல் என்பது பொருளாம். மனம் மாயாகாரிய முடைய தாதலின், 'மாயை மனம்' என்றார். 'மனமிறந்து' என்றது மனம் அடங்குதலை. 'ஞானசுகம்' என்றது சிவஞானனந்த சுகத்தை. 'துய்த்தல்' ஈண்டு அனுபவ முறலைக் குறித்தது. 81

மௌனகுருவே! தேவரீரே தாயெனல்

ஞானநெறிக் கேற்றகுரு நண்ணரிய சித்திமுத்தி
தானந் தருமந் தழைத்தகுரு—மானமொடு
தாயெனவும் வந்தென்னைத் தந்தகுரு என்சிந்தை
கோயிலென வாழுங் குரு.

(ப-ரை) என்-அடியேன், சிந்தை - மனம், கோயில்-திருக்கோயில், என-ஆக, வாழும் - வாழ்கின்ற, குரு - மவுனதேசிகராகியவரே!, ஞானம் - ஞான, நெறிக்கு-மார்க்கத்திற்கு, ஏற்ற - தகுதியாகிய, குரு-குரு, நண்-அடைதற்கு, அரிய - அரிய, சித்தி - இம்மைப்பயன்களும், முத்தி - மறுமைப்பயன்களும், தானம்-தானங்களும், தருமம்-தருமங்களும், தழைத்த - பெருகிய, குரு-குரு, மானம்-பெருமை, ஒடு-உடன், தாய்-தாய், எனவும்-என்று சொல்லும்படியும், வந்து-எழுந்தருளிவந்து, என்னை - அடியேனை, தந்த-ஈன்றருளிய, குரு-குருவாகும் எ-று.

(வி - ரை) ஞானநெறி என்றது சைவசித்தாந்த சன்மார்க்கத்தை. சித்தி என்றது இம்மைப் பயன்களாகிய அட்டமாசித்திகளை. வாழ்வை. முத்தி என்றது சிவாநந்தத்து அழுந்தி இன்புறுதலாகிய சிவானந்த மௌன யோக நிட்டையாகிய முத்தியை. தானம் என்றது இரப்பார்க்கு ஈதலை. தருமம் என்றது முப்பத்திரண்டு அறங்களை. மானம் ஈண்டு பெருமை என்னும் பொருளது; இது தன்மௌனகுரு தேசிகரின் பெருமையைக் கூறியதாம். 82



குருவின் விசுவாசமே சுத்தநிலைக்குக் காரணமெனல்

சித்துஞ் சடமுஞ் சிவத்தைவிட இல்லையென்ற
நித்தன் பரமகுரு நேசத்தாற்—சுத்தநிலை
பெற்றேமே நெஞ்சே பெரும்பிறவி சாராமற்
கற்றேமே மோனக் கரு.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, சித்தும் - அறிவுடன்கூடிய பொருள்களும், சடமும் - அறிவில்லாத பதார்த்தங்களும், சிவத்தை - சிவபெருமானை, விட-தவிர, இல்லை-விளக்கமுறுதல் இல்லை, என்ற-என்ற, நித்தன் - நித்தியனாகிய, பரம-மேலாகிய, குரு-குருவின், நேசத்தால் - அனுக்கிரகத்தால், சுத்தம்-பரிசுத்தமான, நிலை-நிலையை, பெற்றேம்-அடைந்தோம், பெரும்-பெரிய, பிறவி-பிறப்பினை, சாராமல் - அடையாமல், மோனம் - மௌனத்தின், கரு - வித்தையை, கற்றேம்-தெரிந்துகொண்டோம் எ-று.

(வி-ரை) சித்து என்றது அறிவுப் பொருள்களை; அதாவது ஆன்மாக்களை. ஜடம் என்றது அறிவில்லாத பதார்த்தங்களை. ஆன்மாக்கள் இறைவன் சன்னிதான விசேடத்தால் காரியப்படுதலினாலும், இறைவன் சிற்சத்தியால் வினைப்பயன்களை அனுபவித்தலினாலும், 'சித்துஞ் சடமும் சிவத்தை விட இல்லை' என்றார். இவ் உண்மை ஞானதேசிகன் அருளால் எய்திற்று ஆதலின், 'சிவத்தைவிட இல்லை என்ற நித்தன் பரமகுரு' என்றார். இறைவனே ஞானாசிரியனாக வருகின்றான் ஆதலின் 'நித்தன் பரமகுரு' என்றார். சுத்தநிலை என்றது மாயாவிகாரம் அற்றநிலை. பிறவி துன்பம் தருதலிற் பெரியது ஆதலினாலும், தொடர்ந்துவருந் தன்மையுடையது ஆதலினாலும், களைதற்கரியது ஆதலினாலும் 'பெரும் பிறவி' என்றார். கரு என்றது வித்தை. மோனக்கரு என்றது மோனவித்தையை. 83

---

## ஏசற்றவந்நிலை

நெஞ்சே! மௌன நிலையி விருப்பையேயானால் சிவபெருமான்
இன்பத்தைத் தந்தருளுவன் எனல்

ஏசற்ற வந்நிலையே யெந்தைபரி பூரணமாய்
மாசற்ற வானந்த வாரி வழங்கிடுமே
ஊசற் சுழல்போ லுலகநெறி வாதனையாற்
பாசத்துட் செல்லாதே பல்காலும் பாழ்நெஞ்சே.

(ப-ரை) பாழ்-வீணிலே பாடுபடுகின்ற, நெஞ்சே-மனமே! ஏசு - குற்றம், அற்ற-இல்லாத, அ-அந்த, நிலையே-மவுனநிலையிலேயே, எந்தை-எமது பிதாவாகிய சிவம், பரிபூரணமாய்-பரிபூரணமாகி, மாசு-குற்றம், அற்ற - இல்லாத,

ஆனந்தம் - சிவானந்தம், வாரி வெள்ளம், வழங்கிடும்-தந்தருளுவன், ஊசல்-ஊசற்கயிற்றின், சுழல் - சுழற்சியை (நிலையில்லாமை), போல்-போல, உலகம்-பிரபஞ்சம், நெறி - மார்க்கத்தின், வாதனையால் - வாசனையினால், பல் - பல, காலும்-தரமும், பாசத்துள்-பாசத்தளையுள், செல்லாதே-நுழையாதே எ-று.

(வி-ரை) 'ஏசற்ற அந்நிலை' என்றது கருவி கரணங்கள் ஒடுங்கிய மௌனநிலையை. மௌனநிலை அல்லாதநிலை ஏச்சுக்கு இடமாதலின் மௌன ஒழுக்கத்தை 'ஏசற்ற அந்நிலை' என்றார். 'எந்தை' என்றது இறைவனை. சிவானந்தம் மாசு மருவற்ற நிலையாதலின் 'மாசற்ற வந்நிலை' என்றார். பரிபூரணம்-என்றது அகண்டாகாரத்தை. 'வாரி' சமுத்திரம், ஈண்டு பெருக்கைக் குறித்து நின்றது. 'ஊசற் சுழல்' ஈண்டு உவமையாக வந்தது; நிலை நில்லாமைக்கு உதாரணமாகும். உலகநெறி-என்றது முத்திநெறிக்கு மாறுகிய பிரபஞ்சமார்க்கத்தை. வாதனை-என்றது 'வாசனை' என்ற வடசொல்லின் சிதைவு. பாசத்துள்-என்றது பாசத்தளையை. பாசத்துட் புகுந்தார் மௌனானந்த இன்பம் அனுபவிக்க முடியாதாதலின் 'பாசத்துட் செல்லாதே' என்றார். பாழுக்கே யுழலு நெஞ்சாதலின் 'பாழ்நெஞ்சே' என்றார். இது பத்துச் செய்யுள்களாலாகிய பதிகம். இதன் முதற்பாவின் முதலடியில் முதலில் 'ஏசற்ற வந்நிலை' என்று தொடங்கியமையால் இப்பதிகத்திற்கு ஏசற்ற வந்நிலை என்று பெயராயிற்று. இப்பதிகம் பத்துப்பாட்டும் கொச்சகக் கலிப்பா. இது அந்தாதித் தொடையாக மண்டலித்து வந்துளது. 1

சிவானந்தத்தில் அழுந்தி இறைவன் திருவடித்தாள் அடைந்தால்
முத்தியில் வாழலாம் என்கின்றார்

பாழாகி யண்டப் பரப்பையெல்லாம் வாய்மடுத்து
மாழாழி யின்பத் தழுந்தப் படியாயோ
தாழாயோ எந்தையருட் டாட்கீழ் நெஞ்சேஎனைப்போல்
வாழாது வாழ்ந்தழியா வண்ண மிருப்பாயே.

(ப-ரை) நெஞ்சே - மனதே!, பாழாகி - வீணாகி, அண்டம்-உலகத்தின், பரப்பை - விசாலத்தை, எல்லாம் - எல்லாம், வாய்மடுத்தும் - உட்கொண்டும், ஆழ்-ஆழ்ந்த, இன்பத்து-ஆனந்த, ஆழி-கடலில், ஆழ்ந்த-மூழ்க, படியாயோ-கற்காயோ?, எந்தை-எமது பரமபிதாவின், அருள்-திருவருள், தாள்-திருவடி, கீழ் - கீழே, தாழாயோ - வணங்காயோ, (அவ்வாறு வணங்குவையேயாயின்) என்னை - என்னை, போல்-போல, வாழாது - வாழாமல், வாழ்ந்து - வாழ்ந்து, அழியா-அழியாத, வண்ணம்-விதம், இருப்பாய்-இருக்கக்கடவை எ-று.

(வி-ரை) பாழாகி என்றது மனம் இறத்தலை. அண்டப் பரப்பை எல்லாம் வாய்மடுத்தல் ஆவது-பிரபஞ்சமயம் இல்லாதபடிச் செய்தல். ஆழாழி இன்பம் என்றது சிவானந்த சாகரத்தை. எந்தை என்றது சிவபரஞ்சுடரை. அருட்டாள் என்றது திருவருளின் திருவடியை. வாழாது வாழ்தல் என்றது-முத்தியின்பத்தை. வாய்மடுத்தல் - விழுங்கல். ஆழி இது ஆழமுடையது



என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். அழுந்தல்-மூழ்கல். இது நெஞ்சறிவுறுத்தல் என்னுந் துறை. நெஞ்சே இது நெஞ்சு என்னும் பெயர்ச்சொல் விளியுருபு ஏற்று நின்றது. 2

நெஞ்சே! பேரின்பமடைய குருகடாட்சம் வேண்டும் ஆகலால் அருட்
குருவின் திருவடிக்கீழ் பேயர்போல் இருப்பாயாக என்கின்றார்

இருப்பா யிருந்திடப்பே ரின்பவெளிக்கே நமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக வாளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே.

(ப-ரை) இருப்பாய் - இருப்பாய், இருந்திட - இருக்க, நமக்கு - நமக்கு, குரு-குருவினுடைய, பார்வை - கடாட்சம், இல்லாமல் - விளையாமல், பேர்-பெரிய, இன்பம் - ஆனந்த, வெளிக்கு - வெளியை, கூட-அடைய, கிடைத்திடுமோ - கிடைக்குமோ, நமக்காக - நம்பொருட்டு, அருள் - அருளை, பாய்-விரித்து, ஆள-ஆட்கொள்ள, வந்தார்-வந்தவராது, பொன்-அழகிய, அடிக்கீழ்-திருவடிக்கீழ், மருள்-மருள் பொருந்திய, பேயர் - பேயாற் பீடிக்கப்பட்டவர், போல்-போல, இருக்க-இருக்க, வஞ்சம் - வஞ்சமே குடிகொண்ட, நெஞ்சே-மனதே, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) இருப்பாய் இருந்திட என்றது நிலையாக இருத்தலை. பேரின்ப வெளி என்றது சிதம்பரம் என்னும் சிதாகாய வெளியை. குருப்பார்வை என்றது குருகடாட்சத்தை. நமக்காக ஆளவந்தார் என்றது ஞானதேசிகனை. மருட்பேயர் என்றது மருள்கொண்டவரும், பேய்க்கோட் பட்டவரும் என்னும்பொருளது. மருளரும், பேயரும் ஆம். இனி மருளோடு கூடிய பேயர் எனவும் பொருள் கூறலாம். 'கண்டாய்' இது அசை. நெஞ்சம் பொய்யை மெய்யாகவும், மெய்யைப் பொய்யாகவும்கொண்டு திரிதலின் 'வஞ்சநெஞ்சே' என்றார். இவ்வுலக இன்பங்களை அடைதற்கும் குருகடாட்சம் வேண்டும், பேரின்பப்பேறு அடைதற்கும் குருகடாட்சம் வேண்டும். ஜோதிடநூலார் கூற்றுப்படி உலக இன்பங்களைப் பெறுதற்குத் தேவகுருவாகிய வியாழபகவான் அருள்வேண்டும் என்பர். இதுவும் இச்செய்யுளில் சிலேடைப் பொருளாகக்கொள்ளக் கிடக்கின்றது. 3

இறைவன்மேல் அன்புசெய் எனல்

வஞ்சமோ பண்டையுள வாதனைபா னீயலைந்து
கொஞ்சமுற்றாய் உன்னைக் குறைசொல்ல வாயுமுண்டோ
அஞ்சலஞ்ச லென்றிரங்கு மானந்த மாகடற்கீழ்
நெஞ்சமே என்போல நீயழுந்த வாராயோ.

(ப-ரை) நெஞ்சமே - மனமே!, வஞ்சமோ - நீ செய்வது வஞ்சனையோ? (இல்லை இல்லை), பண்டை-பூர்வஜென்மத்தால், உள-சேர்ந்த, வாதனையால்-

வாதனையினாலே, நீ-நீ, அலைந்து - பிரபஞ்சத்தில் அலைந்து, கொஞ்சம் - சிறுமையை, உற்றாய்-அடைந்தாய், உன்னை-உன்னை, குறை - குற்றம், சொல்லற்கு, வாயும் - வாயும், உண்டோ - இருக்கின்றதோ (இனி), அஞ்சல்-பயப்படாதே!, அஞ்சல் - பயப்படாதே!, என்று - என்று, இரங்கும்-இரங்குகின்ற, ஆனந்தம் - ஆனந்த, மா - பெரிய, கடற்கீழ் - கடலில், என்-என்னை, போல-போல, நீ-நீ, அழுந்த-மூழ்க, வாராயோ-வாராயோ எ-று.

(வி-ரை) பண்டையுளவாதனை - என்றது பூர்வஜன்மங்களிற் செய்த கன்மத்தால் வந்த வாதனை என்பது பொருளாம். 'கொஞ்சமுற்றாய்' இது அற்பத்தன்மையை அடைந்தாய், சிறுமையினை அடைந்தாய் என்ற பொருளது. 'அஞ்சல் அஞ்சல்' இது மிகுதிப் பொருளால் அடுக்கி வந்தது. ஆனந்தமா கடல் - என்றது அருட்குருவை, இனி இறைவன் எனினும் ஆம். ஆனந்தப் பெருங்கடல், இனி பெரிய ஆனந்தக்கடல் எனினும் ஆம். 'கடற் கீழ்' ஈண்டு கீழ் என்பது இடப்பொருள் தந்து நின்றது. 'வஞ்சமோ' என்பது உன்மேல் வஞ்சனையில்லை உன் பூர்வகன்மச் சேட்டை இது என்பதாம். நீ அலைந்து - என்றது நீ பிறவி எடுத்து அலைந்து என்ற பொருளது. என்போல நீயழுந்த-என்றது மௌன மோனத்திருக்க என்ற பொருளது. 4

மனமே! கல்லாலநீழலில் நின்றானைக் காணில் எல்லாங் கூடுமெனல்

**வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த**
**பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ**
**ஓராயோ நெஞ்சே உருகாயோ உற்றிருந்து**
**பாராயோ அவ்வுருவைப் பார்க்கநிறை வாய்விடுமே.**

(ப-ரை) நெஞ்சே-மனமே! வாரா-வரத்தகாத, வரவாய்-வரவாகி, வடம்-கைலாயத்தே கல்லாலவிருட்சத்தின், நிழல்கீழ் - நிழலில், வீற்றிருந்த எழுந்தருளியிருந்த, பூராயம் - உண்மை வரலாறு, நம்மை - நம்மை, புலப்படுத்த-தெரிவிக்க, வேண்டி-வேண்டி, அன்றோ - அல்லவா?, (இஃதன்றி வேறல்ல) ஓராயோ-(நெஞ்சேநீ) இதனை அறியாயோ?, உருகாயோ-உருகமாட்டாயோ?, உற்று-பொருந்தி, இருந்து - இருந்து, பாராயோ - பார்க்கமாட்டாயோ, அ-அந்த, உருவை-திருவுருவத்தை, பார்க்க-தரிசிக்க, நிறைவாய்விடும்-ஆனந்தம் பூர்த்தியாகிவிடும் எ-று.

(வி-ரை) வாரா வரவு என்றது வருதற்கரிய வரவு என்ற பொருளது. இனி, இறைவன் எங்கும் நிறைந்தவன் ஆதலின் வரவேண்டுவதின்று வட ஆலின்கீழ் மௌனியாகத் தட்சணாமூர்த்தியாகத்தோன்றி யருளினன், ஈண்டு அடியோமுக்கு அருள்செய்து உய்விக்க அவனே ஈண்டு சற்குருவாகவும் தோன்றியருளினான், காட்சிதந்தருளினன் என்பதாம். சனகாதி முனிவர்க்கு ஞானோபதேசஞ்செய்ய இறைவன் கைலையில் வடவால விருக்ஷத்தின் நிழலில் தட்சணாமூர்த்தமாக இருந்து மௌனயோக நிட்டையைக் காட்டி சின்முத்திரைக் கரங்காட்டி அருள்செய்து தெளிவித்தார்; பின்னர்,



இறைவன் அடியார்களுக்கு ஞானோபதேசஞ்செய்ய எழுந்தருளுங் காலமெல்லாம் அக்கல்லாலின் நிழலில் நின்ற உருவோடே வந்தருள் செய்தனர். நமது தாயுமான சுவாமிக்கும் மௌனியாக வந்து கடாட்சித்தருளினமையின், 'வாரா வரவாய் வடநிழற்கீழ் வீற்றிருந்த பூராய நம்மைப் புலப்படுத்த வேண்டியன்றோ' என்றார். 'பூராயம்' ஆதியோடந்தம்வரை உள்ள உண்மைச் சரிதம். அவ்வுரு - என்றது அம்மௌன தேசிகர் உருவை. ஈண்டு அகரச்சுட்டு பண்டறிசுட்டு. திருவுருவைத் தரிசித்தருளிய மாத்திரையே சிவானந்தப் பேரின்பஞ் சித்தியாகும் என்பார், 'அவ்வுருவைப் பார்க்க நிறை வாய் விடுமே' என்றார். 5

நெஞ்சே! இடைவிடாமல் நீ கரைந்து உருகு உனக்கு
சிவானந்தம் உண்டாகும் எனல்

**வாயாதோ வின்பவெள்ளம் வந்துன் வழியாகப்**
**பாயாதோ நானும் பயிராய்ப் பிழையேனோ**
**ஓயாம லுன்னி யுருகுநெஞ்சே அந்நிலைக்கே**
**தாயான மோனனருள் சந்திக்க வந்திடுமே.**

(ப-ரை) நெஞ்சே-மனமே! இன்பம்-சுக, வெள்ளம்-கடல் (பெருக்கம்), வாயாதோ-வந்து பொருந்தாதோ?, உன்-உனது, வழியாக-மூலமாக, வந்து-உண்டாகி, பாயாதோ-பாயாதோ?, நானும் - (அவ் இன்பவெள்ளத்தை எதிர்பார்க்கும்) நானும், பயிர் - அன்பு என்னும் பயிர், ஆய் - ஆக, பிழையேனோ-பிழைக்கமாட்டேனோ, ஓயாமல் - இடைவிடாமல், உன்னி - எண்ணி, உருகு-கரைவாயாக, அந்த-அந்த, நிலைக்கே-நிலைக்கே, மோனன் - மோனகுருவின், அருள் - கிருபையானது, சந்திக்க - நாம் சந்திக்க, வந்திடும் - கிடைத்திடும் எ - று.

(வி-ரை) வாயாதோ?, பாயாதோ?, பிழையேனோ? இம்மூன்றும் விடைதழுவிய வினாக்கள்; இவைகள் முறையே வாய்க்கும், பாயும், பிழைப்பேன் என்னும் பொருள்தந்து நின்றன. இன்பவெள்ளம் என்றது சிவானந்தப் பெருக்கை. உன்வழி என்றது மனத்தின் வழியாக என்றபடி. பயிராய் என்றது அன்புப்பயிராய் என்ற பொருளது; இது உவமத்தொகை பயிர் போலப் பிழையேனோ என்னும் பொருளது. பயிர்க்கு வெள்ளம் வேண்டுதல் போல அன்புப்பயிர் தழைத்துப் பிழைக்க இன்பவெள்ளம் வேண்டும் என்பதாம். தாயான என்றது தாய்போலும் அன்புடையவனான என்ற பொருளது. மோனன் என்றது மௌனகுருவை. சந்திக்க என்றது ஈண்டு கூட என்னும் பொருளது. இறைவனை ஓயாமல் நினைந்து நினைந்து நெஞ்சம் உருகுவார்க்குக் குருவருள் கிடைக்கும் என்பது கருத்து. அதாவது, இறைவனை ஓயாமல் நினைக்க நினைக்க இறைவனே பரம ஆசாரியனாக வந்தருள் புரிந்திடுவன் என்பதாம். 'வந்திடுமே' என்றதில் ஈற்று ஏகாரம் ஈற்றசை. 6

மனமே! பரத்திற் சதாநிந்தை செலுத்தின் சுகமுண்
டாகும் என்கின்றார்

வந்த வரவை மறந்துலகாய் வாழ்ந்துகன்ம
பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்
இந்தமதி யேனுனக்கிங் கென்மதிகேள் என்னாலே
சந்ததநெஞ் சேபரத்திற் சாரினின்ப முண்டாமே.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, வந்த - பிரபஞ்சத்தினிடத்தே நாம் வந்த, வரவை - வருகையின் காரணத்தை, மறந்து - மறந்து, உலகு-பிரபஞ்சமயம், ஆய் - ஆகி, வாழ்ந்து - வாழ்ந்து, கன்மம் - கர்மத்தின், பந்தம் - கட்டு, உற-பொருந்த, உன்னை-நெஞ்சே உன்னை, படிப்பிக்க-படிப்பிக்க, கற்றவர்-படித்தவர், யார்-யார்?, உனக்கு-நெஞ்சே உனக்கு, இந்த - இம்மாதிரியான, மதி-அறிவு, என்-எதற்கு, என்-என்னுடைய, மதி-புத்தியை, கேள்-கேட்பாயாக, என்னாலே-என் மூலமாக, சந்ததம்-எப்பொழுதும், பரத்தில் - பரம்பொருளினிடத்தே, சாரின்-சேர்ந்திடுவாயேயானால், இன்பம் - சுகம், உண்டாம்-உண்டாகும் எ-று.

(வி-ரை) இத்தேகம் வினையினால் வந்தது என்பதை மறந்து என்பார், 'வந்தவரவை மறந்து' என்றார். 'வினையினால் வந்ததித்தேகம்' என்ற **பெரியார்** வாக்கு ஈண்டு கருதற்பாலது. இனி, எதற்காக வந்தோம்?, இருவினை ஒப்பு, மலபரிபாகம்பெற்று முத்திப்பேறடைதற்கன்றோ என்பதை மறந்து எனப் பொருள்கோடலும் ஆம். மாயாகாரியமாகிய உலகிற் சிக்கிநிற்கின்றாயே என்பார், 'வந்தவரவை மறந்துலகாய் வாழ்ந்து கன்மப், பந்தமுற வுன்னைப் படிப்பிக்கக் கற்றவர் யார்?' என்றார். இந்தப் புத்தி பொல்லாதது. பிரபஞ்சத்தை மறந்து சதா இறைவனையே சிந்தித்திருப்பையேயானால் சிவானந்தப் பேரின்பமுத்தி உனக்குச் சித்தித்திடும் என்பார், 'இந்த மதி யேனுனக்கிங் கென்மதிகே ளென்னாலே, சந்ததநெஞ் சேபரத்திற் சாரின்ப முண்டாமே' என்றார். இன்பம் என்றது சிவானந்தமாகிய பேரின்பத்தை. ஏ-ஈற்றசை.

7

மனமே! நீ இறந்தால் உன்னைப் பூசிப்பேன் என்கின்றார்

இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்குன்
னன்புநிலை யென்பார் அதுவுநினை யன்றியுண்டோ
உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சேநீ
தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே.

(ப-ரை) நெஞ்சே-மனமே!, இன்பம்-ஆனந்தம், மயம் - சொரூபம், ஆய்-ஆகி, உலகம்-பிரபஞ்சம், எல்லாம்-முற்றும், பிழைப்பதற்கு-உய்வதற்கு, உன்-உன்னுடைய, அன்பு - அன்பு, நிலை-காரணம், என்பர்-என்று கூறுவார்கள், அதுவும் - அந்த அன்பின் நிலையும், நின்னை - உன்னை, அன்றி - அல்லாமல் (உனக்கு அன்னியமாக), உண்டோ-உளதோ?, உன்-உன்னுடைய, புலத்தை-அறிவை, ஓரின்-ஆராய்ந்து பார்த்தால், அருட்கு - திருவருளுக்கு, ஒப்பு-சமானம், ஆவாய்-ஆவாய், நீ-நீ, தென்புலத்தாரோடு - பிதிர்த் தேவதைகளுடன், இருந்து-இருந்து, செய்-நான் செய்யும், பூசை-பூசனைகளை, கொண்டு-ஏற்றுக் கொண்டு, அருள்-அருள்வாயாக எ-று.



(வி-ரை) மாயாகாரியமாகிய மனம் மாயாகாரியமாகிய பிரபஞ்சத்திற் சாரின் பிரபஞ்சமயமாகித் துன்புறும், என்னை பிரபஞ்சம் மருள்வழி யாதலின் என்க. மருள்வழி விட்டு அருள்வழி நிற்பின் பிரபஞ்சம் மறையும் மனம் மடியும். இவ்வளவிற்கும் அன்பே காரணம், இவ்வன்பு மனத்தினின்றுதிப்பது. இதுபற்றியே, 'இன்பமய மாயுலக மெல்லாம் பிழைப்பதற்குன் னன்புநிலை யென்பா ரதுவு நினையன்றி யுண்டோ' என்றார். மனம் இறைவன் மாட்டுவைத்த அன்புமய மாகிவிடின் திருவருளுக்கு ஒப்பாகும். அவ்வன்பே திருவருளாம். இதனை, **திருமந்திரம்**,

"அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகிலா
ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே"

என்ற வாக்காலும் அறியலாம்.

இதுகொண்டே தாயுமான சுவாமிகளும், 'இன்பமயமா யுலகமெல்லாம் பிழைப்பதற்குன் னன்புநிலை யென்பா ரதுவுநினை யன்றியுண்டோ' என்றார். 'உன்புலத்தை யோரினருட் கொப்பாவாய் நெஞ்சே' என்று கூறினார். நெஞ்சேநீ இறந்து படுவையேயானால் உன்னை நான் பூசிப்பேன் என்பார், 'நெஞ்சேநீ தென்புலத்தா ரோடிருந்து செய்பூசை கொண்டருளே' என்றார். 'தென்புலம்' இது தெற்கேயுள்ள பிதுர்த்தேவதைகள் வாழும் உலகம். தென்புலத்தா ரோடிரு, என்பூசை கொண்டருள் என்றவைநீ இறந்துபடு என்று குறிப்பித்ததாம்.

8

நெஞ்சே! நான் திருவருளோடு கூடியகாலத்து நீயொளித்தாய் எனல்

அருளேயோ ராலயமா வானந்த மாயிருந்த
பொருளோடி யானிருக்கப் போயொளித்த நெஞ்சேநீ
மருடீர் முயற்கோடோ வான்மலரோ பேய்த்தேரோ
இருடீர நீயுறைந்த தெவ்விடமோ காணேனே.

(ப-ரை) நெஞ்சே - மனமே!, அருளே - திருவருள்தானே, ஓர் - ஒரு, ஆலயம் - கோயில், ஆ-ஆக, ஆனந்தம் - இன்பசொரூபம், ஆய்-ஆக, இருந்த-இருந்த, பொருளோடு-இறைவனுடன், யான் - நான், இருக்க-வாழ்ந்திருக்க, போய்-போய், ஒளித்து-மறைந்து, நீ - மனமாகிய நீ, மருள் - மயக்கம், தீர்-நீங்கிய, முயல் - முயலின், கோடோ - கொம்போ?, வான் - ஆகாயத்துள்ள, மலரோ - தாமரையோ?, பேய்-பேயின், தேரோ - தேரோ? (கானற்சலமோ)

இருள் - என்னுடைய அஞ்ஞானமாகிய இருள், தீர - நீங்கிய மாத்திரத்தில், நீ-நீ, உறைந்தது-போய்த்தங்கியது, எ-எந்த, இடமோ-இடமோ, காணேன்-நான் அறியேன் எ-று.

(வி-ரை) இறைவன் திருவருளையே திருமேனியாக உடையவன் ஆதலினாலும், ஆனந்த ரூபனாகையாலும் 'அருளேயோ ராலயமா வானந்தமாயிருந்த பொருளோடு' என்றார். பொருளோடு யான் இருக்க என்றது திருவருளோடு கூடியிருக்கும் அத்துவித நிலையை. பிரபஞ்சத்தில் ஆன்மா படிந்து அப் பிரபஞ்சமயமாக இருக்குமளவும் கூட இருந்து இன்பதுன்பங்களை யூட்டிவந்த மனம், பம்பரம்போ லாட்டிவந்த மனம், பொய்யை மெய்போற் காட்டிவந்த மனம், பிறப்பிறப்பில் வாட்டிவந்த மனம், திருவருளோடு கலந்தகாலை இருந்த இடம்தெரியாது மறைந்திட்டதாதலின், 'பொருளோடியானிருக்கப் போயொளித்த நெஞ்சே' என்றார். மனம் என்ற ஒருபொருள் இல்லையாம்படி மறைந்திட்டதாதலின், 'நெஞ்சேநீ மருடீர் முயற்கோடோ வான்மலரோ பேய்த்தேரோ' என்றார். இது இன்மையை உணர்த்திற்று. முயற்கொம்பு, ஆகாயத்தாமரை, பேய்த்தேர், இவை இருப்பனபோலத் தோன்றி இல்லாது இருப்பதற்கு உவமானங்களாம். மனம் இருந்த இடமுந்தெரியாது சென்ற இடமுந்தெரியாது போனமையின், 'நீ உறைந்தது எவ்விடமோ காணேனே' என்றார். 'ஆலயமா' இது ஆலயம்+ஆக, என்ற இருசொல் ஒரு சந்தி. ஆக என்பது ஆ என நின்றது விகாரம். ஏ-ஈற்றசை. 9

மனமே! எல்லா இடத்தும் இறைவனின் பரிபூரணமே
வியாபித்து இருக்கின்றது எனல்

எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே
அவ்விடத்தே யுன்னைநெஞ்சே ஆராயிற் கண்டிலனே
அவ்விடத்து மாயையிலே மாண்டனையோ அவ்விடமு
செவ்விடமே நீயுஞ் செனனமற்று வாழியவே. [ஞ்

(ப-ரை) நெஞ்சே-மனமே!, எ-எல்லா, இடத்தும்-இடத்திலும், பூரணம்-நிறைவாக, ஆம் - ஆகி இருக்கின்ற, எந்தை - எனது தந்தையாகிய, பிரான்-பெருமானினது, தண்-தண்ணிய, அருளே-திருவருளே, அ-அந்த, இடத்தே-பரிபூரணத்தே, உன்னை-மனமாகிய உன்னை, ஆராயின்-விசாரிக்கும் இடத்து, கண்டிலேனே-காணவில்லையே, அ-அந்த, இடத்து - பரிபூரணத்தில், மாயையிலே - மாயையினிடத்தில், மாண்டனையோ - ஒடுங்கிவிட்டாயோ, அ-அந்த இடமும் - மாயையும், செவ் - செம்மையாகிய (தக்க), இடமே - இடமே (ஆதலினால்), நீயும் - மனமாகிய நீயும், செனனம் - (பிறந்து) தோன்றுதல், அற்று - இல்லாது ஒழிய, வாழிய - அம்மாயையின் இடத்திருந்தே வாழக்கடவாய் எ-று.

(வி-ரை) சர்வந்தரியாமியாகிய இறைவனின் திருவருள் அதனால் அவன் திவ்விய தேஜோமயத்தைக் கண்டானந்தித் திருக்குங்காலை மனந் தோன்று



தாதலின் 'எவ்விடத்தும் பூரணமா மெந்தைபிரான் றண்ணருளே யவ்விடத்தே யுன்னைநெஞ்சே யாராயிற் கண்டிலனே' என்றார். தத்துவஞானிகள் மோனநிட்டையில் இருக்குங்காலை பிரபஞ்சந் தோன்றாது. மனம் முனைத்து நில்லாது. ஆதலின் 'அவ்விடத்து மாயையிலே மாண்டனையே' என்றார். அம்மனம் பிறகுந் தோன்றிடின் சிவாநந்தப்பேற்றைத் துய்த்தற்கு இடமாகும் ஆதலினாலும், பிரபஞ்சப்பற்று தொடரும் ஆதலினாலும், பிறப் பிறப்பிற் பட்டுழலவேண்டிவரும் ஆதலினாலும் 'அவ்விடமுஞ் செவ்விடமே நீயுஞ் சனனமற்று வாழியவே' என்றார். ஏ-ஈற்றசை. 10

---

## காடுங் கரையும்

உலகத்தவர்களே! மனம்போன இடமெல்லாம அதன்பிறகே
அலையாதீர்கள் எனல்

காடுங் கரையு மனக்குரங்கு
கால்விட் டோட அதன்பிறகே
யோடுந் தொழிலாற் பயனுளதோ
ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிரா
யாடுங் கருணைப் பரஞ்சோதி
யருளைப் பெறுதற் கன்புநிலை
தேடும் பருவ மிதுகண்டீர்
சேர வாருஞ் சகத்தீரே.

(ப-ரை) மனம் - மனமாகிய, குரங்கு - குரங்கானது, காட்டும் - காட்டினிடத்தும், கரையும்-மேட்டினிடத்தும், கால்-காலை, விட்டு-உதறிக்கொண்டு, ஓட-கண்டகண்ட இடங்களெல்லாம் ஓட, அதன்-அந்த மனத்தின், பிறகே-பின்னே, ஓடும் - ஓடும், தொழிலால் - தொழிலினால், பயன் - பிரயோஜனம், உளதோ உண்டோ?, (இல்லையே) ஒன்று-ஒன்று, ஆகி-ஆகி, பல-பல, ஆய்-ஆகி, உயிர்க்கு-உயிர்க்கு, உயிர்-உயிர், ஆய்-ஆகி, ஆடும்-நடிக்கின்ற, கருணை-கருணை உருவாகிய, பரம் - பரம், சோதி - சுடரினுடைய, அருளை - அருளை, பெறுதற்கு-பெறும் பொருட்டு, அன்பு - அன்பு, நிலை-நிலையை, தேடும்-தேடுதற்கு உரிய, பருவம்-காலம், இது - இதுதான், (ஆகையால்) சகத்தீரே-பிரபஞ்சத்தவர்களே!, சேர-ஒரேமட்டாக, வாரும்-கூடிவாருங்கள் எ-று.

(வி-ரை) குரங்கு ஓரிடந்தங்காது மரத்திற்கு மரம், கிளைக்குக் கிளை தாவுதல் போல மனம் கண்டகண்ட பொருள்களினிடத்தெல்லாம் பற்றியோடுதலின் 'காடுங்கரையு மனக்குரங்கு கால்விட்டோட வதன்பிறகே ஓடுந் தொழிலாற் பயனுளதோ' என்றார். குரங்கு உணவுதேடியும், விளையாட்டயரவும் காடுங்கரையும் தாவி ஓடும் ஆதலின் 'காடுங் கரையும்' என்றார்.

'மனக்குரங்கு' இது மனமாகிய குரங்கு என விரிதலின் பண்புத்தொகை. 'கால்விட்டோடல்' ஈண்டு கால் விசைத்தோடல் என்னும் பொருளது. 'பயனுளதோ' இது விடைதழுவிய வினா; பயனில்லை என்பது பொருளாம். இறைவன் தான் தனிமுதற் பொருளாகவும், எல்லாமாகியும், எல்லா உயிர்களுக்கும் உயிராகியும், எல்லா உயிர்களுக்கும் கருணை செய்தற்பொருட்டு திருச்சிற்றம்பலத்து ஆனந்த நிர்த்தனஞ் செய்தருளுகின்றான் ஆதலினாலும், ஒன்றாய் என்றும், பலவாய் என்றும், உயிர்க்கு உயிராய் என்றும், 'ஆடுங் கருணைப் பரஞ்சோதி' என்றார். இறைவன் தனக்குமேல் இல்லாதவனும், தானே மேலானவனாகவும் இருப்பவன் ஆதலினாலும், ஜோதிமயன் ஆதலினாலும், கிருபாசமுத்திரமாக விளங்கலினாலும், 'கருணைப் பெருஞ்சோதி' என்றார். அருள்-இறைவன் திருவருளை. இது முத்திப்பேற்றிற்கு இன்றியமையாது வேண்டற்பால தொன்றாம். இதனை, "அருளிலார்க்கு அவ்வுலக மில்" என்னும் **ஆன்றோர்** வாக்குகளானும் அறியலாம். இவ்வருள் தொடர்புபற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்த இடத்து எய்துவது. ஆதலினால் 'அருளைப் பெறுதற்கு அன்புநிலை தேடும் பருவம் இது' என்றார். "தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்" என்றபடி தான் மாத்திரம் அருளைப்பெற நோக்காது உலகத்தவரை எல்லாம் அழைப்பார். 'சேரவாருஞ் செகத்தீரே' என்றார். இதனை "நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்றார், **திருமூலர்** திருமந்திரத்தே. "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும், பெருமை யுடைத்திவ் உலகு" என்றபடி உடலைவிட்டு உயிர் பிரியுங் காலம் எந்த நாள் எந்த நேரம் என்பது தெரிதரப் படாதிருத்தலின் 'பருவம் இது கண்டீர்' என்றார்.

இதுவும் இதனைத் தொடர்ந்துவரும் செய்யுளும் ஆக மூன்று செய்யுள்களும் ஒருதொடர். இது **காடுங் கரையும்** என்னும் பெயர் பெற்றது. இப் பகுதியின் முதற்செய்யுளின் முதலடியின் முதல் இரண்டு சீரும் 'காடுங் கரையும்' என்று தொடங்கலின் இதற்கு இப்பெயர் வந்தது. இம்மூன்று செய்யுள்களும், மாச்சீர் மாச்சீர் காய்ச்சீர் மாச்சீர் மாச்சீர் காய்ச்சீர் என ஆறுசீர் கொண்ட அடிகள் நான்கானாகிய அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம். 1

உலகத்தவர்களே! சிற்றம்பலத்தைத் தரிசிக்கச் சேரவாருங்கள் எனல்

சைவ சமய மேசமயம்
சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளிக்
காட்டும் இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி
புகுத வேண்டாம் முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேர வாரும் சகத்தீரே.



**(ப-ரை)** சைவம் - சைவமாகிய, சமயமே - சமயமொன்றுமே, சமயம்-உண்மையாகிய சமயம், (ஏனெனின்) சமயம்-சமயங்களுக்கெல்லாம், அதீதம்-அதீதமாகிய அச் சைவசமயத்திலே விளங்கும், பழம்-அனாதியாகவும், நித்திய மாகவும் உள்ள, பொருளை - இறைவனை, கைவந்திட - கைவசமாகும்படி, மன்றுள்-பொன்னம்பலத்திலே, வெளி-வெளிப்படையாக, காட்டும் - காட்டுகின்ற, இந்த - இந்த, கருத்தை - உண்மையை, விட்டு-விட்டு, பொய்-பொய், வந்து-மேலிட்டு, உழலும்-உழல்வதற்குக் காரணமாகிய, சமயம் - புறச்சமயம், நெறி - மார்க்கங்களில், புகுத - நுழைய, வேண்டாம் - வேண்டாம், முத்தி-மோக்ஷத்தை, தரும் - கொடுக்கின்ற, தெய்வம் - தெய்வம் எழுந்தருளியிருக்கின்ற, சபையை-சபையை, காண்பதற்கு - தரிசிப்பதற்கு, சகத்தீரே-உலகத்தவர்களே!, சேர-ஒருங்கே, வாரும்-வாருங்கள் எ-று.

**(வி-ரை)** சைவசமயத்தைத் தவிர்த்து எந்தச் சமயமும் மங்களகரமாகிய முத்தி இன்பத்தைத்தரவல்லது அல்ல என்பார் 'சைவசமயமே சமயம்' என்றார். 'சமயமே' என்றதன் ஈற்று ஏகாரம் தேற்றேகாரம், எல்லாச் சமயங்களிலும் உயர்ந்து நிற்பது சைவசமயமே, இச் சைவசமயத்தாற் போற்றப்படும் சிவபெருமான் உயர்ந்தகடவுள். இச்சிவமே பிறப்பிறப்பில்லாத, அநாதியாகிய, ஆதியந்தமில்லாத நித்தியப்பொருள் என்பார் 'சமயாதீதப் பழம் பொருளை' என்றார். இதுகொண்டன்றோ **மணிவாசகரும்**, "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளே" எனவும், "பாமா னந்தப் பழங்கடலதுவே" என்றும், "பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என்றுங் கூறியருளினர். மன்று என்றது பொன்னம்பலத்தை. இதுவே விராட் புருடனுக்கு இருதயத்தானமாக இருத்தலின், ஈண்டு சிவபெருமான் நடராஜாவாக இருந்து ஐந்தொழிலும் நடைபெறத் திருநடனம் புரிந்தருளுகின்றானாதலின் 'மன்றுள் வெளிக்காட்டும் இந்தக் கருத்தைவிட்டு' என்றார்.

ஏனைச் சமயங்கள் எல்லாம் இச் சைவசமயத்திற்கு முன் பொய்ச்சமயங்கள் என்பதையும். அச்சமயங்கள் முத்தி தரவல்லதல்ல என்பார், 'பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுதவேண்டாம்' என்றார். தரிசித்த மாத்திரத்தே முத்திதருவது சிதம்பரம் ஆதலின் 'முத்திதருந் தெய்வசபையைக் காண்பதற்கு' என்றார். இதனை, "காசியி லிறந்தும் கமலையிற் பிறந்துந் தேசமர் தில்லையுட் டிருநடனங்கண்டும்" என்ற **பெரியார்** வாக்கு நோக்கத்தக்கது. காசியில் இறந்தார்க்கெல்லாம் முத்தியும் திருவாரூரில் பிறந்தார்க்கெல்லாம் முத்தியும், தில்லையைத் தரிசித்தவர்களுக்கெல்லாம் முத்தியும், திருவண்ணாமலையை நினைத்தவர்களுக் கெல்லாம் முத்தியும் எய்தும் என்பது அறியத்தக்கது. உலகத்துள்ளவர்களே! பொய்ச்சமயத்துழன்று தவிக்கும் மக்களே சிதம்பர தரிசனத்தைப்பெற்று முத்திப் பேறுபெற வாருங்கள் என்பார். 'தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் ஜெகத்தீரே' என்றார். மாலாதி தேவரும்வந்து தரிசித்துப் பேறடைவது தில்லையாதலினாலும், அருட்சத்தியாகிய இறைவியுங் கண்களிக்க இறைவன் திருநடஞ்செய்வதாதலினாலும், பஞ்சகிருத்தியங்களும் இத்தில்லைத் திருநடனத்தால் நடைபெறு

கின்றதாதலினாலும், இத்தில்லையைத் தரிசித்தமாத்திரையே முத்திப்பேறு சத்தியமாதலினாலும், "சமயாதீதப் பழம்பொருளைக் கைவந்திடவுவே, மன்றுள் வெளிகாட்டும்" என்றும், "முத்திதரும் தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாரும்" என்றுங் கூறியருளினார். சைவசமயத்தைத் தவிர்த்து ஏனைய சமயங்கள் பொய் பொய்யே என்பார். 'பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுத வேண்டாம்' என எதிர்மறை முகத்தாற் கூறியருளினார். இவ்வாசிரியர் இது கொண்டே, "அயர்வறச் சென்னியில்வைத்து ராஜாங்கத் திலமர்ந்தது வைதிகசைவ மழகிதந்தோ" என்றும், "சந்தான கற்பகம்போ லருளைக் காட்டத்தக்க, நெறியிந் நெறியேதான் சன்மார்க்கம்" எனவுங் கூறியருளியது கொண்டுந் தெளியலாம்.

2

உலகத்தவரே! காகம்போலச் சிவபோகத்தை நாமெல்லோருங் கூடி உண்ணவாருங்க ளெனல்

காக முறவு கலந்துண்ணக்
　　கண்டீர் அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
　　பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ
　　இன்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
　　சேர வாரும் சகத்தீரே.

(ப-ரை) காகம்-காகமானது, உறவு-இனமாகிய காகங்களோடு, கலந்து-கூடி, உண்ண - சாப்பிட, கண்டீர் - பார்த்தீர்கள் (ஆதலினால்), அகண்ட-அகண்ட, ஆகாரம் - ரூபத்தையுடைய (சர்வ வியாபகம் வாய்ந்த), சிவ - சிவ, போகம் - அனுபவம், என்னும் - என்கின்ற, பேர் - பெரிய, இன்பம் - ஆனந்தம், வெள்ளம் - பெருக்கானது, பொங்கி-பொங்கி, ததும்பி - வழிந்து, பூரணமாய்-நிறைவாகி, ஏக-ஒரே, உருவாய்-உருவமாகி, கிடக்குது-இருக்கின்றது, ஐயோ-அந்தோ, நாம்-நாம், இனி-இனிமேல், இன்பு - சுகம், உற்றிட-அடைய, எடுத்த-பிறந்த, தேகம்-உடம்பு, விழும்-விழுவதற்கு (அழிவதற்கு), முன் - முன்னே, புசிப்பதற்கு - அந்தப் பேரின்பவெள்ளத்தை உண்பதற்கு, சகத்தீரே-உலகத்தினரே, சேர-ஒன்றுசேர்ந்து, வாரும்-வாருங்கள் எ-று.

(வி-ரை) ஏதேனும் உணவுப்பொருள் கிடைப்பின் காகமானது தான் மாத்திரம் உண்ண விரும்பாது தனது இனத்தையுங் கரைந்தழைத்து உண்பது காகத்தின் இயல்பு; இதனை,

"காலை துயிலெழுதல் காணாமலே புணர்தல்
மாலை குளித்து மனைபுகுதல்—ஏலவே
உற்றா ருடனுண்ணல் ஓங்கத் தனைக்காத்தல்
கற்றார்க்கும் காக்கைக்குங் காண்" என்றதனாலும் அறியலாம்.



இதுகொண்டே இப்பெரியார், 'காக முறவு கலந் துண்ணக் கண்டீர்' என்றார். இறைவனாகிய சிவபெருமான் அகண்டாகாரமாகவும், பேரின்பப் பெருக்காயும், மங்களகரமாயும் இன்பம் அருள்வோனாகியும், மங்களஞ் செய்வோனாகியும் இருத்தலின், 'அகண்டாகாரசிவ ... ... ... கிடக்குதையோ' என்றார். எல்லாஞ் 'சிவமயம்' ஆதலினால் 'பூரணமாய் ஏகவுருவாய்க் கிடக்குது' என்றார். போகம்-என்றது சிவபோகத்தை. பேரின்ப வெள்ளம்-என்றது சிவானந்தப் பெருக்கை. 'இன்பஞ் செய்தலிற் சங்கரன்' என்றதனால் 'பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பி' என்றார். பூரணமாய் - என்றது இடைவிடாது எங்கும் வியாபித்து இருத்தலை. எல்லாஞ் சிவனுருவாதலின் 'ஏக உருவாய்' என்றார். 'கிடக்குது' இது 'கிடக்கின்றது' என்றதன் மரூஉ. 'ஐயோ' இது மகிழ்ச்சியின் வந்த இடைச்சொல். "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை யுடைத்திவ் வுலகு" என்றார் ஆதலின் 'இனி எடுத்த தேகம் விழுமுன்' என்றார். சிவானந்தப் பெரும் போகமாகிய பேரின்ப முத்தியை இந்த மனிததேகத்தாலன்றி எய்த முடியாது, இம்மனித தேகமும் இலேசிலே எய்துவதன்று, பலஜென்மங்களிற் செய்துள்ள புண்ணியத்தாலேயே எய்தற்பாலதாம். ஆதலினாலேயே 'எடுத்த தேகம்' என்றார். இதனானன்றோ, "அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது" என்றார். புசிப்பது-என்றது அனுபவித்தலை. சேரவாரும்-என்றது ஒருங்கு வாருங்கள். ஒன்றுகூடி வாருங்கள் என்பதாம். சகத்தீரே - என்றது உலகத்துமக்களை. இது முன்னிலைப் பன்மைவிளி. இச்செய்யுட் கருத்தையே,

"எங்குஞ் சிவமே எலாஞ் சிவமே எம்மான் சிவனே இன்பருள்வோன்
பொங்கும் நல்ல பூரணமாம் புலனின் வழியே செல்லாது
தங்கச் சிவத்தின் நிலையறிந்து தூயமனிதப் பிறப்பெடுத்தீர்
இங்கு வாரும் இனிதருந்தி இன்புற் றிருக்கப் பாரீரே"

என்ற அமுத கவியாலும் அறியலாம்.

3

---

## எடுத்ததேகம்

தாயுமானேஸ்வரரே! தேவரீர் அடியேனுக்கு மௌனநிலை தந்தபோது உடல் பொருள் ஆவி மூன்றையுந் தந்தேனெனல்

எடுத்த தேகம் பொருளாவி மூன்று நீ
　　எனக்கொன் றில்லை யெனமோன நன்னெறி
கொடுத்த போதுகொ டுத்ததன் றேபினுங்
　　குளறி நானென்று கூத்தாட மாயையை
விடுத்த வாறுங்கண் ணீரொடு கம்பலை
　　விலகு மாறும்என் வேட்கைப்ர வாகத்தைத்
தடுத்த வாறும் புகலாய்ச் சிரகிரித்
　　தாயு மான தயாபர மூர்த்தியே.

(ப-ரை) சிரகிரியில்-திரிசிராமலையில் எழுந்தருளியிருக்கும், தாயுமானசுவாமி என்னும் திருப்பெயர்கொண்ட, தயாபர-கருணையிற் சிறந்த, மூர்த்தியே-மூர்த்தியே, எடுத்த-இவ்வுலகிற் கொண்ட, தேகம் - இந்த உடல், பொருள்-உடைமை, ஆவி - உயிர், மூன்றும் - இம்மூன்றனையும், நீ-தேவரீர், எனக்கு - அடியேனுக்கு, ஒன்று - ஒரு சுதந்தரமும், இல்லை - இல்லை, என்று, மோனம்-மவுனம், நல்-நல்ல, நெறி-மார்க்கத்தை, கொடுத்த-தந்தருளிய, போது - பொழுது, கொடுத்தது - மேற்குறித்த உடல், பொருள், ஆவி மூன்றினையும் தேவரீருக்குக் கொடுத்தது, அன்றோ-அல்லவோ?, (அவ்வாறிருந்தும்) பினும்-திரும்பவும், நான்-நான், என்று-என்னும் அகங்காரத்தைக்கொண்டு, குழறி - குழறி, கூத்தாட - கூத்தாடும்படிக்கு, மாயைமாயையை, விடுத்த-ஏவிய, வாறும்-வண்ணமும், கண்ணீர் - கண்ணீர், ஒடுஉடன், கம்பலை-உடல் நடுக்கமும், விலகும்-விலக்கிய, ஆறும்-விதமும், என்-அடியேனின், வேட்கை-ஆசையாகிய, ப்ரவாகத்தை - வெள்ளத்தை, தடுத்த-தடைப்படுத்திய, ஆறும்-விதமும், புகலாய்-சொல்வாயாக எ-று.

(வி-ரை) எடுத்த என்றது வினையினால் கொண்ட என்றதாம். 'மூன்றும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து ஞானோபதேசம் செய்தருளினமையால் 'நீ' என இறைவனைச் சுட்டினர். தற்போதங்கழன்று சிவபோதம் பெற்றிருத்தலைக் குறிப்பிப்பான், 'எனக்கொன்றில்லை எனமோன நன்னெறி கொடுத்தபோது' என்றார். 'பினும்' இது பின்னும் என்பதன் தொகுத்தல் விகாரம். ஞானாசிரியன் உபதேசம்பெற்று அனுபூதிநிலையில் நிற்குங்காலையும் பிராரர்த்த கன்மத்தாலே அவ் அனுபூதியினின்றும் நழுவி பகிர்முகப்பட்டுப் பிரபஞ்சத்தை நோக்குவர் ஆதலினால், 'பினுங்குளறி நானென்று கூத்தாட மாயையை விடுத்த வாறும்' என்றார். கூத்தாட என்றது மாயையிற் சிக்கிப் பிரபஞ்சத்தில் உழலுதலைக் குறித்தது. சிவானந்தத்தில் முழுகி இருப்போர்க்குக் கண்ணீரும் கம்பலையும் உண்டாகும், சிவானந்தத்தை அனுபவிக்கும் நிலையாகிய அனுபூதி குலைந்த காலத்துக் கண்ணீருங் கம்பலையும் அகன்றிடுமாதலினால் 'கண்ணீரொடுகம்பலை விலகுமாறும்' என்றார். வேட்கை என்றது சிவானந்த வேட்கையை. வேட்கைஅவா. பிரவாகம் என்றது மிகுதிகாட்டி நின்றது. சிரகிரி என்றது திரிசிராமலையை.

இந்தத்தலத்து எழுந்தருளி இருக்கும் இறைவன் செட்டிப்பெண்ணுக்குத் தாயாகிவந்து மருத்துவம் பார்த்து அருள் செய்தமையின் தாயுமானவருக்கு மாதரு பூதேஸ்வரர் என்னும் பெயர் எய்திற்று. 'தாயும் ஆனவர்' என்பதில் உள்ள உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை, எல்லா உயிர்களுக்கும் தந்தையாக இருப்பதும் அன்றித் தாயுமாக இருப்பவன் என்னும் பொருள் குறித்து நின்றது. இறைவன் தண்ணளியுடையோன் ஆதலினாலும், உயர்ந்தோன் ஆதலினாலும், அடியார்க்கு அருள்செய்வான் மூர்த்திகரிப்போன் ஆதலினாலும், 'தயாபரமூர்த்தியே' என்றார். மகாமேருமலையின் சிகரங்கள் மூன்றில் ஒன்று வாயுக்கும், ஆதிசேடனுக்கும் நேர்ந்தபோரால் இத்தலத்து



வந்து வீழ்ந்து ஓங்கி நிற்கின்றமையின் இக்குன்றினுக்குச் 'சிரகிரி' என்ற பெயர் வந்தது. தலபுராணத்தை நோக்கி இதன் விரிவுகாண்க. 'புகலாய்' இது முன்னிலை ஏவல். இது இரண்டு கட்டளைக்கலிப்பாவால் ஆகிய ஒரு பகுதி. இதன் முதற்செய்யுளின் முதலடியில் முதல் இரண்டுசீர் 'எடுத்த தேகம்' என்று தொடங்கினமையின் இப்பகுதிக்கு **எடுத்ததேகம்** எனப் பெயர் எய்தியது. 1

தாயுமானேஸ்வரனே! இயமமாதிகளை அடியேன் செய்யும் வண்ணம்
காக்கும் காவலும் கடவுளும் நீயே எனல்

நோயும் வெங்கலிப் பேயுந் தொடரநின்
　　னூலிற் சொன்ன முறையிய மாதிநான்
றோயும் வண்ண மெனைக்காக்குங் காவலும்
　　தொழும்பு கொள்ளுஞ் சுவாமியு நீகண்டாய்
ஓயுஞ் சன்மம் இனியஞ்ச லஞ்சலென்
　　றுலகங் கண்டு தொழவோ ருருவிலே
தாயுந் தந்தையு மானேய் சிரகிரித்
　　தாயு மான தயாபர மூர்த்தியே.

(ப-ரை) சன்மம் - பிறப்பு, ஓயும் - ஒழிந்துபோகும், இனி - இனிமேல், அஞ்சல் - பயப்படாதே, அஞ்சல் - பயப்படாதே, என்று - என்றுசொல்லி, உலகம் - உலகத்தார், கண்டு - பார்த்து, தொழ-வணங்கும்படி, ஓர்-ஒரு, உருவிலே-வடிவத்திலே, தாயும்-தாயும், தந்தையும் - தந்தையும், ஆனோய் - ஆனவனே!, சிரகிரி-திரிசிரபுரத்தில், தாயும்ஆனவர்-தாயும்ஆனவர் என்னும் பெயருடன் விளங்கும், தயாபர-கருணையினையுடைய உயர்ந்த, மூர்த்தியே-முதல்வனே!, நோயும்-வியாதியும், வெம் - கொடிய, கலி - வறுமை ஆகிய, பேயும்-பேயும், தொடர - அடியேனைத் தொடர, நின்-தேவரீரது, நூலில்-வேதாகமங்களாகிய நூலில், சொன்ன - விதித்த, முறை - ஒழுங்கின்படி, இயமம்-இயமம், ஆதி - முதலியவைகளை, நான்-அடியேன், தோயும்-அனுபவிக்கும், வண்ணம்-விதம், எனை-அடியேனை, காக்கும்-(வேறு விஷயங்களிற் செல்லாது தடுத்துக்) காக்கும், காவலும் - காவலும், தொழும்பு - (என்னை) அடிமை, கொள்ளும்-கொள்ளும், சுவாமியும்-சுவாமியும், நீ-நீயே எ-று.

(வி-ரை) 'நோய்' வாத பித்த சிலேட்டுமங்களின் மிகுதியாலுங் குறைவாலும் உடலைப்பற்றி வருந்துன்பம். இதனை, "மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர், வளிமுதலா வெண்ணிய மூன்று" என்ற **திருக்குறளா**லும் அறியலாம். வெங் கலிப்பேய் - என்றது பண்புத்தொகை. 'வெங் கலியாகிய பேய்' என விரியும். கலியின் கொடுமைநோக்கி 'வெம்' எனும் அடைமொழி தந்தார். கலி - என்றது வறுமை நோயைக் குறித்தது. பேய் போல் அலைத்தலின் 'வெங்கலிப்பேய்' என்றார். இது மனத்தை இடமாகக் கொண்டு எழும் நோய். நோயும் பேயும் தொடர அதனின்றும் விடுபட்

டுய்ய இறைவன் அருளிய வேதம், ஆகமம் சொல்லிய முறை இயமாதிறேய வேண்டலின். 'நோயும் வெங்கலிப் பேயுந் தொடரகின் நூலிற்சொன்ன முறையிய மாதிநான் றேயும் வண்ணமெனைக் காக்குங் காவலும்' என்றார். இயமம் ஆதி - என்றது இயமம் முதலாகிய எண்வகை யோகங்களை. இயமம் என்பது கொல்லாமை, வாய்மை, கள்ளாமை பிறர் மனைவியரையும் பொது மகளிரையும் விரும்பாமை. இரக்கம், வஞ்ச மில்லாமை, பொறையுடைமை, மனங் கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமை என்னும் பத்துக் குணங்கள் பெற்றிருத்தல்,

'ஆதிமுதல் இறைவன் நீயே அன்புடைய தாயும் நீயே
நீதிதிகழ் தந்தை நீயே நேயமிகு குருவும் நீயே
ஓதிடுமென் சுற்ற நீயே ஒண்பொருளு நீயே நீயே
கோதிலமு தான முத்திக் கொளுநிலமுங் கண்ணுதலோய் நீயே"

என்ற **சித்தாந்த சிந்தாமணிப்படி,**

இறைவன் கடவுளும் அம்மைஅப்பனும் ஆக இருத்தலின் 'தொழும்பு கொளுஞ் சுவாமியுநீ' என்றும், 'தாயுந் தந்தையு மானேய்' என்றுங் கூறினர். 'இயமாதி நான் றேயும் வண்ணம் எனைக் காக்குங் காவல்' என்றதற்குச் சற்குருவெனக் கோடலும் ஆம். 'ஒருருவில் தாயுந் தந்தையும் ஆனேய்' என்பதற்கு உமாதேவி இடதுபக்கமாக அமைந்திருக்கும் அர்த்தநாரீசுரர் ஆகிய திருக்கோலம் உடைமையைக் குறித்ததாகக் கொளினும் ஆம். 'ஓயுஞ் சன்மம்' மொழிமாறி நின்றது. சன்மம் ஓயும் எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுக. சன்மம் ஓய்தலாவது - பிறப்பறுதல்; அதாவது, பிறவாப்பேருகிய முத்தி எய்தல் என்பதாம். 2

---

## முகமெலாம்

இறைவனே! அறிஞர் உன்னிடத்து அன்பு செய்ய நான் ஒன்றுஞ்
செய்யாமலிருக்க எவ்வாறு பிழைப்பேன் எனல்

முகமெ லாங்கண் ணீர் முத்தரும் பிடச்செங்கை முகிழ்ப்ப
அகமெ லாங்குழைந்து ஆனந்த மாகநல் லறிஞ
ரிகமெ லாந்தவ மிழைக்கின்றார் என்செய்கோ வேழை
சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய்.

**(ப-ரை)** சகம்-உலகம், எலாம்-எல்லாம், பெற-பெறுதற்காக, நல்-நல்ல, அருள் - திருஅருளே, உதரம்-வயிறு, ஆ-ஆக, சமைந்தோய் - பெற்றவனே, முகம்-முகம், எலாம் - முழுமையும், கண் - கண்ணினின்றும் வடிகின்ற, நீர்-நீராகிய, முத்து-முத்துக்கள், அரும்பிட - உதிர்ந்திட, செம்-செவந்த, கை-



கரங்கள், முகிழ்ப்ப - குவிக்க, அகம் - மனம், எலாம் - முழுதும், குழைந்து-உருகி, ஆனந்தம்-இன்பம், ஆக - ஆக, நல்-நல்ல, அறிஞர் - அறிவுடையோர்கள், இகம்-இம்மை, எலாம்-முற்றும், தவம்-தவத்தை; இழைக்கின்றார்-செய்கின்றார்கள், ஏழை-எளியனேன், என்-என்ன, செய்கோ-செய்வேனே எ-று.

**(வி-ரை)** கணீர் இது கண்ணீர் என்பதன் தொகுத்தல்விகாரம். கண்ணீர் என்றது ஆநந்த பாஷ்பத்தை. முத்தரும்பிட என்றது முத்துப்போல் உதிர்ந்திட என்னும் பொருளது; இது உவமத்தொகை. செம்மை+கை என்னும் இருசொற்கள் செங்கை எனப் புணர்ந்து நின்றது. செம்மை என்னும் பண்புப்பெயர்; ஈறுபோதல் என்னும் விதிப்படி மை கெட்டு செம்+கை என நின்று சந்தியில் மகரம் ஙகரமாயிற்று. முகிழ்ப்ப இது குவிக்க என்னும் பொருளது. அகம் - இது இடஆகுபெயராய் மனத்தைக் குறித்தது. தவமிழைக்கின்றார் என்றது தன்னை மறந்து இறைவனையே சிந்தித்து இருத்தலைக் குறிக்கின்றது. சிவம் சத்தியைப்பெற்றும, சத்தி சிவத்தைப்பெற்றும் சத்தியும் சிவமுங்கூடி உலகனைத்தும் ஈன்றமையின் 'சகமெ லாம்பெற நல்லரு ளுதரமாச் சமைந்தோய்' என்றார்.

"சிவமது சத்திதன்னைத் திகழ்தர ஈன்றதாலோ
தவமிகு சத்திதானே தழைசிவம் ஈன்றதம்மா
நவமிகு மிருவர்தாமும் நன்குறக் கூடியண்டம்
புவனமெல் லாமுமீன்ற புகழ்தரு முறைமையாலே"

"சிவத்தினுக் கன்னைசத்தி செப்புதாய் தாரஞ்சேயாம்
குவலயத் திந்தநீதி கொண்டறிந் துய்யவல்லார்
அவமிகு முலகவாழ்வை அவாவிடார் அறிஞரோதும்
பவமறு ஞானநிட்டை பற்றிமெய் முத்திசார்வார்"

என்ற **அழர்தகவியாலும்** அறியலாம். 1

---

## திடமுறவே

இறைவனே! இனி நான் மாயையில் மூழ்க முடியாதெனல்

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணி நின்னைக் கைகுவித்தோ னலனே
அடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்னுவிப் பற்றே பராபரமே.

**(ப-ரை)** என்-அடியேனின், ஆவி-உயிருக்கு, பற்றே - ஆதாரமே, பராபரமே-பராபரமே, திடம்-வலிமை, உற-பொருந்த, நின்-தேவரீரது, அருளை-திருவருளை, சேர்த்து - கூட்டி, என்னை - அடியேனை, காத்து-காத்து, ஆள-

இரட்சிக்க, உனக்கு-தேவரீருக்கு, கடன்-கடன்மை, என்று-என்று, எண்ணி-நினைத்து, நின்னை-தேவரீரை, கை-கை, குவித்தேன்-கூப்பி வணங்கினேன், நான்-அடியேன், அலனோ - அல்லவோ, அடைவு - முறை, கெட்ட-கெட்ட, பாழ்-பாழான, மாயை-மாயை என்னும், ஆழியிலே-சமுத்திரத்திலே படிந்து, இன்னம்-இன்னமும், அல்லல்-துன்பம், பட-பட, முடியாது-முடியாது எ-று.

(வி-ரை) இறைவன் அன்பர்களைச் சோராவண்ணம் காக்கக் கடன்மைப் பட்டுள்ளவன் ஆதலினாலும், இறைவன் அருட்டிருமேனி யுடையவன் ஆதலினாலும், உயிர்களைக்காத்தல் அருட்சத்தியால் ஆதலினாலும் 'திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக் கடனுனக்கென் றெண்ணி' என்றார். மலினம்படிந்த நீர்ப்பரப்பில் கல்லெறிந்தகாலை அம்மலினமாகிய பாசி அலை அடங்கியபின் திரும்பவும் அம்மலினப் பாசிவந்து மூடிக்கொள்வதுபோல இறைவன் தியானம் சிறிது நீங்கினும் அம்மாயைவந்து பற்றிக்கொள்ளும் ஆதலால் 'அடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற், படமுடியாது' என்றார். இறைவன் உயிர்க்குயிராய் உயிர்த்துணையாய் இருப்பவன் ஆதலின், 'என்ஆவிப் பற்றே' என்றார். இதுமுதற் கொண்டுள்ள பத்துப் பாடல்களாகிய இப்பதிகம், 'திடமுறவே' என்னும் பெயர்த்து. இப்பதிகத்தின் முதற்செய்யுளின் முதலடியின் முதற்சீர் **திடமுறவே** என்று தொடங்கினமையின் இப்பெயர் வந்தது. இப்பதிகத்துப் பத்துப்பாடலும் கொச்சகக் கலிப்பாக்கள். 1

அருட்குருவாகி வந்தருள் புரிவா யெனல்

ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ வந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே பராபரமே.

(ப-ரை) பூராயம்-புராதனம், ஆக-ஆக, அருள்-திருவருள், பூரணத்தில்-நிறைவில், அண்டம்-உலகத்திற்கு, முதல்-முதலாகிய, பார் - பிருதிவி, ஆதி-முதலாய பஞ்சபூதங்களை, வைத்த - வகுத்துவைத்த, பதியே - இறைவனே!, பராபரமே - பராபரமே, ஆராமை - அடியேனின் தரியாமையை, கண்டு-பார்த்து, இங்கு - இவ்விடத்து, அருள்-அருள், குரு-குரு, ஆய்-ஆகி, நீ-தேவரீர், ஒரு-ஒரு, கால்-தரம், வாராயோ-வாராயோ?, வந்து-அவ்வண்ணம் வந்து, வருத்தம்-துன்பம், எல்லாம்-முழுதையும், தீராயோ-ஒழிக்காயோ எ-று.

(வி-ரை) ஆராமை-என்றது இறைவன் வந்து அருள் செய்யாமையாலே மனம் தரியாதிருக்குந் தன்மை. மனம் பொறாதிருக்குந் தன்மை எனினும் ஆம். இனி, இதற்கு அறியாமை எனப்பொருள் கூறினரும் உண்டு. அருட்குரு - அருளைச் செய்கின்ற குரு. இறைவனின் திருவருளாகிய குரு எனினும் ஆம். என்னை இறைவன் உயிர்களினிடத்துவைத்த கருணையினாலே இறைவன் திருவருளே ஆன்மாக்களின் பக்குவமறிந்து குருமூர்த்தமாக



வந்து அருள் செய்தலின், திருவருளே குரு வடிவங்கொண்டுவந்து அருள் செய்தலின் அருட் குரு என்றார். வருத்தம் - என்றது பிரபஞ்சமாயையால் படும் துயர்களை. பூராயம் - என்றது பழமை குறித்தது. இனி, இதற்கு விசித்திரமாக எனப் பொருள் கூறினரும் உண்டு. அருட்பூரணம் - என்றது திருவருளின் நிறைவைக் குறித்தது. பாராதி - என்றது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களை. சர்வாண்டங்களும், அவைகட்கு ஆதாரமாகிய பஞ்சபூதங்களும் இறைவன் திருவருட் சந்நிதியில் நடைபெறுகின்ற தாதலின், 'பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற் பாராதி வைத்த பதியே பராபரமே' என்றார். 2

இறைவனே! நின்னடைந்தவர் அருள்வடிவானார்கள்
என் கதியாதெனல்

வாழாது வாழஉனை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழி யென்னவரு ளானார் அழுக்காற்றோ
டேழா யெனவுலக பேசுமினி நானொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே.

(ப-ரை) பராபரமே-பராபரமே!, வாழாது-(அநித்தியவாழ்வினுக்கு எதுவாக) வாழாமல், வாழ - (நித்தியவாழ்வினுக்கு எதுவாக) வாழுமாறு, உனை-தேவரீரிடம், வந்து-வந்து, அடைந்தோர்-அடைக்கலம் என்று அடைந்தவர்கள், எல்லாரும்-எல்லோரும், ஆழ்-ஆழமாகிய, ஆழி-கடல், என்ன - என்ன, அருள்-அருள்வடிவம், ஆனார்-ஆனார்கள், அழுக்காற்றோடு - பொறாமையுடன் கூடிய, ஏழாய்-எளியன், என - என்றுகூறி, உலகம் - உலகத்தவர்கள், ஏசும்-பழித்தற்கு உரிய, நான்-அடியேன், ஒருவனும் - ஒருவன் மாத்திரம், இனி-இனிமேல், பாழ்-பாழ், ஆகா - அடையா, ஆறு-விதம், நீ-தேவரீர், என்-அடியேனின், முகம்-முகத்தை, பார்-பார்த்திரங்கு எ-று.

(வி-ரை) வாழாது வாழ என்றது மாயையிற்பட்டுப் பிரபஞ்சத்துழன்று துன்புறாது திருவருள் வயப்பட்டுச் சிவானந்தபோகத்து அழுந்தி இன்புற்று இருத்தலைக் குறித்தது. உனை என்றது இறைவனை. வந்தடைந்தோர் என்றது அன்புடைய தொண்டர்களைக் குறித்தது. ஆழி - இது ஆழமுடையது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். ஆழ் - ஆழி என்றது, மிக ஆழமாகிய கடல் என்பது பொருளாம் அருள் ஆனார் என்றது அருண்மயமானார்கள். ஏழாய் என்றது எளியவனே என்னும் பொருளது. ஏழை என்றது விளியுருபு ஏற்று நின்றது. 'உலகம்' இது இடவாகுபெயராய் உலகத்தவர்களைக் குறித்தது. உலகம் என்றது உலகத்துள்ள அறிவாளிகளை. இதனை, "உலகம் என்ப துயர்ந்தோர் மாட்டே" என்ற **சூத்திரத்தால்** அறியலாம். ஏசும் ஈண்டு இகழும் என்னும் பொருளது. பாழாகாது என்றது பிரபஞ்சமாயையிற் சிக்கி யுழலாது என்னும் பொருளது. துன்புறவோர் முகத்தைப்பார்த்த மாத்திரமே கருணை ஆளர்களுக்கு இரக்கம் உண்டாகிக் கருணை

செய்யத் தொடங்குவர் ஆதலினால் 'முகம்பார்' என்றார். இதனான்றே "பசித்தோர் முகம்பார்" என்றார் **பட்டினத்தடிகளும்.** 3

இறைவனே! அடியேன் விடமுண்ட மீன்போல் துடிக்கின்றேன் என்கின்றார்

**உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற**
**கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ**
**வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்**
**பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.**

**(ப-ரை)** பராபரமே-பராபரமே!, உள்ளத்தின் - அடியேன் மனத்தின், உள்ளே-உள்ளே, ஒளித்து-மறைந்திருந்து, என்னை-அடியேனை, ஆட்டுகின்ற-நடிப்பிக்கின்ற, கள்ளம்-வஞ்சகம், கருணையை-கருணையை, யான்-அடியேன், காணும் - தரிசிக்கும், தரம் - தரம், ஆமோ-ஆகுமோ, விடக்கு-மாமிசத்தை, உண்பார்-உண்பவர், வெள்ளத்தை-பள்ளத்தில் நிற்கும் நீரை, மாற்றி-வடியும் படிச்செய்து மாற்றி, நஞ்சு-விஷத்தை, ஊட்டும்-நீரிற் கலக்கிவைக்கப்பெற்ற, பள்ளத்தில்-பள்ளத்தில் அகப்பட்ட, மீன்-மீன்களை, போல் - போல, பதைத்தேன்-துடித்தேன் எ-று.

**(வி-ரை)** "இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான்" என **மணிவாசகர் திருவாக்கின்படி** இறைவன் எல்லாருள்ளத் துறைவோன்; இதனாலன்றே "உள்ளத் துள்ளே உறைபெருஞ் சோதி" எனவும் பெரியார் கூறியுளார். இவ்வாறு இறைவர் எவர் மனத்தும் உறைந்தாலும் தற்போதம் உடையார்க்குத் தோன்றுவா னல்லன். எள்ளிட இடனின்றி எங்கும் பரந்து நிறைந் துறையுஞ் சோதி. எல்லார் மனத்திருந்தும் மாயைத் திரையால் மூடப்பட்டார்க்குத் தோற்றுவானல்லன் என்பதனை விளக்கவே 'உள்ளத்தி னுள்ளே யொளித் தென்னை யாட்டுகின்ற' என்றார். இறைவன் உயிர்க் குயிராய் இருந்து உயிர்களை யியக்குகின்றா னாதலின் 'ஒளித்தென்னை யாட்டுகின்ற' என்றார். உயிர்கள் உய்யவே தனு கரண புவன போகங்களைத் தந்து அவைகள் கன்மங்களுக்குத்தக்க புசிப்புகளைத் தந்து உய்விக்கின்றா னாதலின் 'கள்ளக் கருணையை யான்காணுந் தரமாமோ' என்றார். மீன் பிடிப்போர் பள்ளத்துள்ள நீரை இறைத்து மாற்றி அதில் விஷ மிட்டு மீனை மடிவித்துப் பிடிப்பர் என்பர் இது சிற்சில விடங்களில் வழக்கம் போலும் இதுகொண்டே 'வெள்ளத்தை மாற்றிவிடக் குண்பார் நஞ்சூட்டும் பள்ளத்தின் மீன்போற் பதை பதைத்தேன்' என்றார். 'இதனை "விடங் கொண்ட மீன் போலும்" எனப் பிறருங் கூறினர். வெள்ளம் என்றது ஈண்டு மிக்க நீரைக் குறித்தது. "ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே" என்று **திருநாவுக்கரசர்** கூறியாங்கும் "கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு வானாகி நின்றாயை" என்று **மாணிக்கவாசகர்** கூறியாங்கும் இவ்வாசிரியர் 'என்னை ஆட்டுகின்ற கள்ளக் கருணையை' என்றார். 4



இறைவனே! தேவரீரையன்றி வேறு தெய்வத்தை நினைப்பதுஞ் செய்யேன் என்கின்றார்

**வாவிக் கமலமலர் வண்டாய்த் துவண்டுதுவண் [ய்**
**டாவிக்கு ணின்றவுனக் கன்புவைத்தார்க் கஞ்சலென்பா**
**பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர் போலவொன்**
**பாவிக்க மாட்டேன் பதியே பராபரமே. [றைப்**

**(ப-ரை)** பதியே-இறைவனே!, பராபரமே - பராபரமே!, வாவி-குளத்தினுள்ள, கமலம்-தாமரை, மலரில் - மலரில், வண்டு - வண்டுபோல், ஆய்-ஆகி, துவண்டு-வாடி, துவண்டு - வாடி, ஆவிக்குள் - உயிருக்குள்ளே, நின்ற-நிலைத்திருக்கின்ற, உனக்கு-தேவரீரிடத்து, அன்பு-அன்பை, வைத்தார்க்கு-வைத்த அடியார்களுக்கு, அஞ்சல் - பயப்படாதே, என்பாய் - என்று கூறியருளுவோய், பூ-பூவை, விற்கும்-விற்கும், வான்-சிறந்த, கடையில்-கடையில், புல்-புல், விற்போர்-விற்பவரை, போல-போல, ஒன்றை - (உன்னையன்றி வேறு) ஒருபொருளை, பாவிக்க-பாவனைசெய்ய, மாட்டேன்-மாட்டேன் எ-று.

**(வி-ரை)** கமலமலர் இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கமலம் என்னும் சிறப்புப் பெயர்க்கும் மலர் என்னும் பொதுப்பெயர்க்கும் இடையே ஆகிய என்னும் பண்பு உருபுதொக்கு நின்றது. 'கமலமாகிய மலர்' என விரியும். வாவிக்கமலம் இது எழன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. வண்டாய்த்துவண்டு இது வண்டுபோலாகித் துவண்டு எனப் பொருள் விரிதலின் இது உவமத்தொகை. துவண்டு துவண்டு-இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. இறைவன் அன்பர்க்கருளும் இயல்பு உடையோன் ஆதலின், 'ஆவிக்குணின்ற வுனக்கன்பு வைத்தார்க் கஞ்சலென்பாய்' என்றார். 'பூவிற்ற கடையில் புல்விற்பதுபோல்' என்றும் சாமானிய வசனத்தை ஈண்டு உவமையாகக் காட்டுவான், 'பூவிற்கும் வான்கடையிற் புல்விற்போர்போல, ஒன்றைப் பாவிக்க மாட்டேன்' என்றார். 'பூ' சிறந்த பொருளுக்கும் 'புல்' தாழ்ந்த பொருளுக்கும் உவமை. ஈண்டு பூ இறைவனுக்கும் புல் ஏனைத்தேவர்களுக்கும் உவமை. பாவித்தல் என்றது சிந்தனை செய்தலை. இச்செய்யுளின் கருத்தை,

"பொன்னைக் கேட்கும் வாயதனால் புளியங் காயைக் கேட்பார்போல்
உன்னை நினைக்கும் மனத்தாலே உன்னைப் புகலும் வாயாலே
பின்னைத் தெய்வம் எனவொன்றைப் பேயேன் எண்ணேன் பேசேனன்
மின்னைச் செய்யும் வேணியனே விளங்கு நீல மிடற்றோனே."

என்ற **அழதகவியாலும் அறியலாம்.** 5

இறைவனே! அடியேன் நிலை தேவரீர் காணவில்லையோ என்கின்றார்

**விண்ணுது வெற்பின் விழுந்தாங் கெனமார்பிற் [யோ**
**கண்ணுறு பாய்ச்சிடுமென் காதல்வெள்ளங் கண்டிலை**

**தண்ணுறு சாந்தபதத் தற்பரமே நால்வேதப்**
**பண்ணுறு மின்பப் பதியே பராபரமே.**

(ப-ரை) தண் - குளிர்ந்ததன்மை, நாறும்-கொண்டுவிளங்கும், சாந்தம்-சாந்தமாகிய, பதம் - பதத்தையுடைய, தற்பரமே - தற்பரனே!, நால்-நான்காகிய, வேதம்-வேதங்களின், பண்-பண்களுள்ளும், நாறும்-பிரகாசிக்கின்ற, இன்பம் - ஆனந்தமயமாகிய, பதியே - இறைவனே!, பராபரமே-பராபரமே!, விண் - ஆகாய, ஆறு - கங்கை, வெற்பில் - மலையின்மேல், விழுந்த-விழுந்த, ஆங்கென-அதைப்போல, மார்பில்-அடியேனின் மார்பின்மேல், கண்-கண்ணிலிருந்து வழியும் நீராகிய, ஆறு - வெள்ளம், பாய்ச்சிடும் - வழிந்தோடவிடும், என் - அடியேனுடைய, காதல் - ஆசையாகிய, வெள்ளம் - பெருக்கை, கண்டிலையோ-பார்க்கவில்லையோ எ-று.

(வி-ரை) விண்ணுறு-என்றது ஆகாய கங்கையை. 'ஆங்கு' இது உவம உருபு. கண்ணுறு-என்றது ஆனந்தக்கண்ணீர் அருவியை. காதல் வெள்ளம் என்றது - ஈண்டு ஆசைப்பெருக்கை. 'கண்டிலையோ' இதில் ஓகாரம் வினாப் பொருளில் வந்தது. தண் இது தண்மை என்னும் பண்புப்பெயர் ஈறு கெட்டு நின்றதில்லை. நாறு இது தோன்றும், விளங்கும் என்னும் பொருளது; முளைக்கும் என்னினும் பொருந்தும். சாந்தபதம் என்றது மௌனானந்த நிலையை. இறைவன் ஆனந்தமயன் ஆதலின் 'இன்பப் பதியே' என்றார். இறைவன் தானே உயர்ந்தவனாய், தனக்குமேல் ஒருவன் இல்லாதவனாக இருத்தலின் 'தற்பரமே' என்றார். அன்பு மிகுதியால் அகநெகிழ்ந்து கண்ணீர் மல்க அழுவார்க்கு இறைவன் அருள் செய்வோன் ஆதலின், 'கண்ணுறு பாய்ச் சிடுமென் காதல் வெள்ளங் கண்டிலையோ' என்றார். இது கொண்டன்றோ **மணிவாசகரும்**, "உடம் பெல்லாங் கண்ணா யண்ணா வெள்ளந் தான் பாயாதா" எனவும், "அழுதா லுன்னைப் பெறலாமே" எனவும், "உன்றா ளிணையன்புக் காரா யடியே னயவே மயல் கொண் டழுகேனே" எனவும் கூறியருளினர். 6

இறைவனே! உன்னை எக்குங் காண்கின்றே னெனல்

**கூடியநின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்கும்என**
**வாடியவென் னெஞ்சமுக வாட்டமுநீ கண்டிலையோ**
**தேடியநின் சீரருளைத் திக்கனைத்துங் கைகுவித்துப்**
**பாடியநான் கண்டாய் பதியே பராபரமே.**

(ப-ரை) பதியே - இறைவனே!, பராபரமே - பராபரமே, கூடிய-ஒரே மட்டாகச் சேர்ந்துள்ள, நின்-தேவரீரது, சீர்-சிறப்புகளையுடைய, அடியார்-அடியார்களின், கூட்டம்-சங்கம், என்று-எக்காலத்து, வாய்க்குமோ-கிடைக்குமோ, என-என்று, வாடிய-வாட்டமடைந்த, என்-அடியேனின், நெஞ்சம்-மனத்தையும், முகம்-முகத்தினுடைய, வாட்டம் - வாட்டத்தையும், நீ-தேவரீர், கண்டிலையோ-பார்க்கவில்லையோ, தேடிய-அன்பர்களால் தேடப்பெற்ற,



நின் - தேவரீரினுடைய, சீர்-சிறந்த, அருளை - திருஅருளைக்குறித்து, திக்கு-திசைகள், அனைத்தும்-எல்லாம், கை - கரங்களை, குவித்து - கூப்பி வணங்கி, பாடிய-துதித்துக்கொண்டிருக்கும், நான்-நான், கண்டாய்-காண்பாயாக எ-று.

(வி-ரை) கூடிய என்றது-சிவபெருமானிடத்து வைத்துள்ள அன்பால் அவன் பால் ஒருங்கு சேர்ந்த என்ற பொருளதாம். நின் என்றது சிவபெருமானை. இறைவன் அடியார் சிறந்தவர் ஆதலின் 'சீர் அடியார்' என்றார். சிவன் அடியார் கூட்டத்தைத் தரிசிக்கவும், அவரைப் பூஜிக்கவும், அவருடன் உடனுறையவும் எய்தின் சிவானந்தப்பேறு எய்தும் ஆதலின் 'கூடிய நின் சீரடியார் கூட்டமென்றோ வாய்க்கும்' என்றார். இதனை,

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே"

என்ற **சிவஞானபோதச்** சூத்திரத்தாலும் அறியலாம்.

சர்வந்தரியாமியாகிய இறைவன் உள்ளும் புறமும் உள்ளவன் ஆதலின் மனத்துவாட்டம் தெரியும் என்பார் 'வாடிய வென்னெஞ்சு வாட்டநீ கண்டிலையோ' என்றார். "அகத்தி னழகு முகத்திற் றெரியும்" ஆதலின் என் மனவாட்டங் காண்பதற்கரிதா யிருந்தாலும் முகவாட்டமாகிலுங் கண்டிலையோ என்பார் 'முகவாட்டமுநீ கண்டிலையே' என்றார். 'பாடுவார்க் கருளும் பரமன்' நீ ஆதலின் உன் திருவருளையே துதித்து பாடுகின்றேன். அங்கிங்கெனாதபடி எங்குமுள்ளவன் நீ ஆதலின் திக்கனைத்தும் நோக்கி உன்னைக் கைகுவித்து வணங்குகின்றேன் என்பார் 'தேடியநின் சீருருளை திக்கனைத்துங் கைகுவித்துப்பாடிய நான் கண்டாய்' என்றார். இச்செய்யுட்கு 'பாடியநான் கண்டாய் கூடியநின் சீரடியார் கூட்டம் ... ... வாட்டமுநீ கண்டிலையோ' என்று இயைத்துப் பொருள் கொடலும் ஆம். தேடிய என்றது-மெய்யன்பர் வேதமுதலிய வாயிலாக அரிதிற் றேடிக்கண்ட என்ற பொருளாம். 7

இறைவனே! என் மனத்துயரை நீக்கியருளிய தாயாகிய உனக்கு
உபசாரஞ்சொல்ல அடியேன் யார் என்கின்றார்

**நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடு**
**மஞ்சலெனு வாழுமென தாவித் துணைநீயே**
**சஞ்சலமாற் றினைஇனிமேற் றுய்க்குபசா ரம்புகன்று**
**பஞ்சரிக்க நானார் பதியே பராபரமே.**

(ப-ரை) பதியே - இறைவனே! பராபரமே - பராபரமே! நெஞ்சத்தின்-அடியேனின் மனத்தின், ஊடே-உள்ளே, நினைவு-நினைவு, ஆய்-ஆகி, நினைவு-அந்த நினைவின், ஊடும்-உள்ளும், அஞ்சல் - பயப்படாதே, என-என்று தேற்றரவுசெய்து இருந்து, வாழும் - வாழுகின்ற, எனது - அடியேனினது, ஆவி-

உயிரின், துணை-துணையாகிய, நீயே-தேவரீரே, சஞ்சலம்-அடியேனின் மனத் துயரத்தை, மாற்றினை-நீக்கினை, இனிமேல் - இனிமேல், தாய்க்கு-தாய்போலும் உனக்கு, உபசாரம் - உபசாரமொழிகள், புகன்று-சொல்லி, பஞ்சரிக்க-கெஞ்ச, நான்-அடியேன், யார்-யார்? எ-று.

(வி-ரை) 'நினைப்பு மறப்புநீ' எனப் **பெரியார்கள்** அருளிச்செய்தவாறு இறைவன் மனமாகியும், மனத்தின் நினைவாகியும், நினைவின் பொருளாகியும் விளங்குபவன் ஆதலின், 'நெஞ்சத்தி னூடே நினைவாய் நினைவூடு, மஞ்சலென வாழு மெனதாவித் துணையே' என்றார். அடியார் அகத்தே இருந்து அவர் அச்சம் தவிர்ப்பவன் இறைவன் ஆதலின் 'நினைவூடும் அஞ்சலென வாழும் எனது ஆவித்துணையே' என்றார். அடியார் உள்ளமே திருக்கோயிலாக்கொண்டு வாழுபவன் அரன் ஆதலினாலும் உயிர்கட்குப் பெறற்கரிய பெருந்துணையாய் நிற்பவன் ஆதலினாலும் 'நினைவூடும் அஞ்சலென வாழும் ஆவித்துணையே' என்றார். இறைவன் தாயினுஞ் சாலப் பரிந்தருள் புரிவோன் ஆதலினாலும், தாய்போலச் சஞ்சலந் தவிர்த்தமையாலும், 'சஞ்சல மாற்றினை இனிமேற் றாய்க்குப சாரம்புகன்று பஞ்சரிக்க நானார்' என்றார். இச்செய்யுளின் கருத்தை,

"ஊனாகி யுடலாகி யுளமாகி யுணர்வாகி உணர்வி னூடே
தானாகி நின்றருளுந் தற்பரமாஞ் சிவபெருமான் தானே யென்றன்
கோனாகிக் கூத்தாட்டு வானாகி நினைவனைத்துங் கூட்டி வைத்தான்
நானாகி நின்றநிலை யவனாகிச் சுட்டற்றேன் நலம்பெற் றேனே."

எனவரும் **தனிப்பாடலாலும்** அறிக. 8

இறைவனே! புத்தியால் தேவரீரைத் துதித்து முத்தி விரும்பா மூடனாகிய அடியேன் சித்தி எவ்வா றடைவேன்? எனல்

**புத்திநெறி யாகவுனைப் போற்றிப் பலகாலு**
**முத்திநெறி வேண்டாத மூடனேன் ஆகெடுவேன்**
**சித்திநெறிக் கென்கட வேன் சீரடியார்க் கேவல்செயும்**
**பத்திநெறிக் கேனுமுகம் பார்நீ பராபரமே.**

(ப-ரை) பராபரமே-பராபரமே!, புத்தி-புத்தியின், நெறி-வழி, ஆக-ஆக உன்னை-தேவரீரை, பல-பல, காலும் - தரமும், போற்றி - துதித்து, முத்தி-முத்தியின், நெறி - மார்க்கத்தை, வேண்டாத-விரும்பாத, மூடனேன்-மூடனாகிய அடியேன், ஆ-ஐயோ!, கெடுவேன்-கெடுவேன், சித்தி-சித்தி, நெறிக்கு-மார்க்கத்திற்கு, என்-என், கடவேன்-செய்யக்கூடியவனாவேன், சீர் - சிறந்த, அடியார்க்கு-தேவரீரின் அடியார்க்கு, ஏவல்-பணி, செயும்-செய்யும்படியான, பத்தி-பக்தி, நெறிக்கு-மார்க்கத்திற்கு, ஏனும்-ஏனும் (ஆகிலும்), நீ-தேவரீர், முகம்-அடியேனின் முகத்தை, பார்-பார்த்தருள்வீராக எ-று.

(வி-ரை) புத்திநெறி - என்றது ஞானநெறியை. புத்தியால் இறைவன் உண்டு என்பதை உணர்ந்து வேதாகமங்களிற் கூறிய விதிப்படி சரியை,



கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கினையும் கொண்டு நின்று இறைவன் திருவருளைப் பெறல். புத்தி இயற்கையாலும், வேதாகமநூல் உணர்ச்சியாலும், கற்றோர் கூட்டுறவாலும் எய்தும் செயற்கையாலும் எய்தற்பாலனவாம். இதனாலன்றோ **திருவள்ளுவநர்**, "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் நற்றா டொழாஅ ரெனின்" என்றார். முத்திநெறி - என்றது அறிவு துணையாக இறைவன் உண்மையை உணர்ந்து ஞானம்பெற்றுச் சிவாநந்தப் பெறும்பேறு துய்த்திடற் கேதுவாகிய வழியாம். புத்திநெறி நின்று முத்திநெறிபெற் றொழுகாமையின் 'மூடனேன் ஆ கெடுவேன்' என்றார். 'ஆ கெடுவேன்' இது இரக்கத்தால் வந்த வியப்பு. சித்திநெறி - என்றது முத்தி சித்திக்கு நெறியை இப்பெரியாரே, "அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டக்கால் இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்றபடியாலும், "தவமும் தவத்தால் எய்தும்" எனவும், "அவனருளாலே அவன்றாள் வணங்கி" எனவும் கூறியபடி அன்பர் பணி செய்ய, அரன் கழல் பணிய இறைவன் திருவருள் வேண்டப்பெறுதலின் 'சீரடியார்க் கேவல் செயும் பத்தி நெறிக்கேனும் முகம்பார்' என்றார். அடியேன் முகத்தைக் கடாட்சித் தருளின் அடியேனுக்கு அருள்செய்ய தேவரீருக்குத் திருவுள மிரங்கும் என்பார், 'முகம்பார்நீ' என்றார். 9

இறைவனே! காண்டல் முதலிய பத்தி வழிபாடு செய்யாத அடியேன் எவ்வாறு முத்தியை விரும்புவேன் எனல்

**கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினை யேயிதயங்**
**கொண்டறியேன் முத்தி குறிக்குந் தரமுமுண்டோ**
**தொண்டறியாப் பேதைமையேன் சொல்லேனின் றொன்**
**பண்டறிவாய் நீயே பகராய் பராபரமே. [மையெல்லாம்**

(ப-ரை) பராபரமே-பராபரமே!, கண்டு-தேவரீரைக் கண்ணுக்கு நேராகக்கண்டு, அறியேன்-அறிந்திலேன், கேட்டு - தேவரீரின் புகழைக் காதினாற் கேட்டு, அறியேன்-அறிந்திலேன், காட்டும்-எல்லாவற்றையும் ஆன்மாவிற்குக் காட்டியருளும், நினையே - தேவரீரையே, இதயம் - மனத்திலே, கொண்டு-அமைத்துவைத்து, அறியேன் - அறிந்திலேன், தொண்டு - அடிமைத் தன்மையே, அறியா-தெரியாத, பேதமையேன் - அறிவில்லாத அடியேன், நின்-தேவரீரது, தொன்மை-பழமை, எல்லாம்-எல்லாம், சொல்லேன் - புகழ்ந்து கூறேன், பண்டு - இவற்றை எல்லாம் முன்னரே, அறிவாய் - தேவரீர் அறிந்திருக்கின்றீர், (இத்தன்மை அடியேனுக்கு) முத்தி-முத்தியை,குறிக்கும்-எண்ணும், தரமும் - தகுதியும், உண்டோ-உளதோ, நீரே - தேவரீரே, பகராய்-சொல்லி அருள்வீராக எ-று.

(வி-ரை) முத்திபெறற்கு இறைவனை யாதாமொருபாவனை திவ்யமங்கள ரூபத்தாற் காண்டலும், இறைவனின் கல்யாண குணங்களைப் பெரியார்பாற் கேட்டலும், சர்வ வியாபகமாக, திவ்விய தேஜோமயமாக அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்த இறைவனை மனத்தே சிந்தித்துப்போற்றலும் வேண்டுமாத

வின் காண்டல், கேட்டல், சிந்தித்தல் இம்மூன்றும் இல்லாத அடியேனுக்கு முத்திபெற எண்ணும் எண்ணம் உண்டாதற்கு இடமில்லை என்பார். 'கண்டறியேன் கேட்டறியேன் காட்டுநினையே யிதயங், கொண்டறியேன் முத்தி குறிக்குந் தாமுண்டோ' என்றார். தொண்டு என்றது சரியையாதி சதுர்ப் பாதங்களை. அவையாவன:—சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாம். தொன்மை என்றது அநாதிமுதலாந் தன்மையை. இதனை, "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே" என்ற **மணிவாசகர்** திருவாக்கானும் அறியலாம். பகராய்-இது முன்னிலை ஏவல். பேதமை என்றது அறியாத்தன்மையை. காட்டுநினை என்றது எங்கும் நினது மயமே காட்டும் என்றும், வேதாதிநூல்கள் காட்டும் என்றும், இன்பநிலை காட்டும் என்றும், பொருள்கோடலும் ஆம். 10

---

## த ன் னை

நெஞ்சே! மண் பெண் பொன்னை மெய்யென்று என்னை இழுத்து என்பயன் அடைந்தாய் என்கின்றார்.

**தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்து**<br>
**மன்னைப் பொருளெனவே வாழாமற் பாழ்நெஞ்சே**<br>
**பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்யெனவே**<br>
**என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே.**

(ப-ரை) பாழ்-பாழாகிய, நெஞ்சே - மனமே!, தன்னை - இறைவனாகிய தன்னை, அறிய - தெரிய, தனது - இறைவனது, அருளால் - திருவருளால், தான்-(இறைவனாகிய) தான், உணர்த்தும்-அறிவிக்கின்ற, மன்னை-முதல்வனை, பொருள்-உறுதிப்பொருள், என - என்று, வாழாமல் - வாழாது, பொன்னை-பொன்னாகிய பொருளையும், புவியை - நிலமாகிய மண்ணையும், மடம்-இளமைபொருந்திய, பூவையரை - பெண்களையும், மெய் - உறுதிப்பொருள்கள், என-என்றுகொண்டு, என்னை-என்னை, கவர்ந்து-பற்றி, இழுத்திட்டு-இழுத்து, என்ன-யாது, பலன்-பிரயோசனத்தை, கண்டாய்-நீ அனுபவித்தாய் எ-று.

(வி-ரை) "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே, காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்ற **திருநாவுக்கரசர்** திருவாக்கின்படி இறைவன் திருவருளாலேயே இறைவனைக் காணவேண்டி இருத்தலின், 'தன்னை யறியத் தனதருளாற் றானுணர்த்து மன்னைப் பொருளெனவே வாழாமல்' என்றார். மாயாகாரியமாகிய மனமானது மாயாசம்பந்தமான பொன்னை, மாதரை, புவியை நாடச் செய்கின்றது ஆதலின் 'பொன்னைப் புவியை மடப் பூவையரை மெய்யெனவே என்னைக் கவர்ந்திழுத்திட் டென்னபலன் கண்டாயே' என்றார். இச்செய்யுளின் கருத்தை,



"மாயையென் றொருத்தி தன்பான் மனமெனு மைந்தன் றோன்றி<br>
தூயநல் லறிவன் றன்னைத் தோற்றமின் றாக்கி வைத்தான்<br>
றாயொடு தந்தை மக்க டாரமென் றிவர்பால் வைத்த<br>
நேயமு மவன்றன் னாலே நிகழ்ந்ததோர் நினைவு கண்டாய்" எனவும்,

"குயின்றவைம் பொறிவாய் நின்று குறித்தவைம் பொருளுந் தானே<br>
யயின்றுமுக் குணங்க ளோடு மறுவகைப் படைக ளோடும்<br>
பயின்றா சானு மந்த மனமெனும் பகைவ னுங்குத்<br>
துயின்றபோ தொளித்து நின்ற தோன்றறுந் தோன்றுங் கண்டாய்"

எனவரும் **வில்லிபுத்தூரார்பாரதச்செய்யுள்**களாலும்அறியலாம். இன்னும்,

"மண்பெண் பொன்னாசை மயக்கத்தி லேவிழுந்து<br>
கண்கெட்ட மாடதுபோற் கலங்கினேன் பூரணமே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்குங் கருதற்பாலதாம். 1

---

## ஆ க் கு வை

இறைவனே! முத்தொழில் நினதே யெனல்

**ஆக்குவை மாயை யாவும் நொடியினி லவற்றை மாள**<br>
**நீக்குவை நீக்க மில்லா நினைப்பொடு மறப்பு மாற்றிப்**<br>
**போக்கொடு வரவு மின்றிப் புனிதநல் லருளா னந்தந்**<br>
**தாக்கவுஞ் செய்வா யன்றோ சச்சிதா னந்த வாழ்வே.**

(ப-ரை) சச்சிதானந்தம் - சத்து சித்து ஆனந்தம் என்னும், வாழ்வே-சொரூபமாக உள்ளவனே!, மாயை - மாயைகள், யாவும் - எல்லாவற்றையும், ஆக்குவை-உண்டாக்கியருள்வாய், அவற்றை - அம்மாயைகளை, நொடியினில்-நொடிப்பொழுதில், மாள - அழியும்படி (நீங்கும்படி), நீக்குவை - நீக்குவாய், நீக்கம் - நீங்குதல், இல்லா-இல்லாத, நினைப்பொடு-நினைப்புடனே, மறப்பும்-மறப்பையும், மாற்றி-ஒழித்து, போக்கொடு-போக்குடனே, வரவும் - வரவும், இன்றி - இல்லாதபடி, புனிதம் - பரிசுத்தமாகிய, நல்ல-நல்ல, அருள்-அருள்மயமாகிய, ஆனந்தம்-இன்பத்தை (சிவாநந்தத்தை), தாக்கவும் - அடையவும், செய்வாய்-செய்வாய், அன்றோ-நீ அப்படிப்பட்டவன் அல்லவோ எ-று.

(வி-ரை) இறைவன் ஆக்கல், காத்தல், அழித்தல், அநுக்கிரகித்தல் எல்லாம் ஆன்மாக்களின்மேல்வைத்த கருணையினாலேயேயாதலின் 'ஆக்குவை மாயையாவு நொடியினி லவற்றைமாள நீக்குவை நீக்கமில்லா நினைப்பொடு மறப்புமாற்றி' என்றார். ஆக்குவை - சிருட்டியை. மாளநீக்குவை என்றது சங்காரத்தை. 'போக்கொடு ... ... ... அருளானந்தத் தாக்கவுஞ் செய்வாய்' என்றது அநுக்கிரகித்தலை. இனம்பற்றித் திதியையும், திரோபவத்தையும் கூட்டிக் கோடலுமாம். நினைப்பொடு மறப்பு அற்று, போக்

கொடு வரவுமின்றி, புனிதநல் அருளானந்தத் தாக்கவுஞ் செய்வாய் என்றது சிவாநந்த போகமாகிய முத்திபேறளித்ததைக் குறித்தது. இறைவன் சத்தும், சித்தும், ஆனந்தமும் ஆக இருப்பவன் ஆதலின் 'சச்சிதானந்த வாழ்வே' என்றார். போக்கொடு வரவு இறப்பொடு பிறப்பை. நினைப்பொடு மறப்பற்றநிலை என்றது சிவானந்தாதீத நிலையை. 1

---

## கற்புறு சிந்தை

இறைவனே! உன்னையன்றி வேறு தெய்வத்தைக் கருதேனெனல்

கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோ
ரிற்புறத் தவரை நாடார் யாங்களு மின்ப வாழ்வுந்
தற்பொறி யாக நல்குந் தலைவநின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே.

(ப-ரை) பூரணம்-பரிபூரணம், 'ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே, கற்பு-கற்பானது, உறு - பொருந்திய, சிந்தை - மனத்தை உடைய, மாதர்-பெண்கள், கணவரை - தங்கள் நாயகரை, அன்றி - நாடுதலை அன்றி, வேறு-வேறாகிய, ஓர்-ஒரு, இல்-தன் வீட்டிற்கு, புறத்தவரை-அயலானவர்களாகிய ஆடவர்களை, நாடார் - விரும்பார்கள், (அதுபோல) யாங்களும்-நாங்களும், இன்பம்-சுகம், வாழ்வும்-வாழ்க்கையையும், தன்-தன், பொறி-செல்வம், ஆக-ஆக, நல்கும் - தந்தருளுகின்ற, தலைவ - இறைவனே, நின் - தேவரீரை, அலது - அல்லாமல், ஓர் - மற்றும் ஒரு, தெய்வம் - தெய்வத்தை, பொற்பு - பொலிவு, உற-அடைதற் பொருட்டு, கருதோம்-நாடோம் எ-று.

(வி-ரை) கற்பு கணவன் முதலிய **பெரியார்** கற்பித்த அறநெறியில் நிற்கும் நிலை. இதனை, "கற்பெனப் படுவது சொற்றிறம் பாமை" என்ற **ஔவைப்பிராட்டியார்** திருவாக்கானும் அறியலாம். மாதர் தம் கணவரை விரும்பாதிருப்பினும், தம் கணவர்க்குச் சமமாகவாகிலும் உயர்வாகவாகிலும் ஒருத்தரை மதிப்பினும் கற்பிழந்தவர் ஆவர். நரகத்துழல்வர். அதுபோல சிவபெருமானை மதியாதவரும், அவர்க்குச் சமமாகவாகிலும், உயர்வாகவாகிலும் பிறதெய்வத்தைக் கருதினவர் சாமித்துரோகிகளாகி நரகத்துழல்வர் என்பது இச்செய்யுளிற் கூறிய பொருளாம். யாங்களும் இன்பவாழ்வும் என்றதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். எங்களையும் எங்கள் இன்பவாழ்வையும் தன் செல்வமாகத் தருபவன் இறைவன் என்பார் 'யாங்களு மின்பவாழ்வுந் தற்பொறியாக நல்கும் தலைவ' என்றார். இறைவன் சம்பூரண, பரிபூரண ஆனந்தமயன் ஆதலின் 'பூரணானந்த வாழ்வே' என்றார். இறைவன் எல்லாந் தருதலினாலேயே 'ஈச்சுரன்' என்னும் பெயர் எய்தியமையுங் காண்க. தலைவ-இது அண்மைவிளி. அலது இது அல்லது என்பதன் தொகுத்தல் விகாரம்.



இப்பதிகத்தின் முதற் செய்யுளின் முதலடியின் முதலில் 'கற்புறு சிந்தை' என்று தொடங்கியமையால் இப்பதிகத்திற்குக் **கற்புறு சிந்தை** என்னும் பெயர் எய்தியது. இது முதல் எழு செய்யுள்களும் ஒரு பதிகம். இது விளச்சீர், மாச்சீர், மாச்சீர், விளச்சீர், மாச்சீர், மாச்சீர் என ஆறுசீர் கொண்ட அடிகள் நான்காலாகிய அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம். 1

இறைவனே! எனக்கு நற்கதியு முண்டோ என்கின்றார்

முருந்திள நகையார் பார முலைமுகந் தழுவிச் செவ்வாய்
விருந்தமிர் தெனவ ருந்தி வெறியாட்டுக் காளாய் நாளு
மிருந்தலோ காய தப்பே ரினத்தனா யிருந்த வேழை
பொருந்தவுங் கதிமே லுண்டோ பூரணா னந்த வாழ்வே.

(ப-ரை) பூரணம் - பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே!, முருந்து - மயில் இறகின் அடிபோன்ற, இளம்-சிறிய, நகையார்-பல்வரிசைகளையுடைய பெண்களின், பாரம் - பெரிய, முலை - முலை, முகம்-முகட்டை, தழுவி - தழுவிக்கொண்டு, செவ் - செவந்த, வாய் - அதரத்தை, விருந்து-விருந்தாகக் கொடுக்கப்பட்ட, அமிர்து-தேவாமிர்தம், என - என்று கருதி, அருந்தி - பானம்பண்ணி, வெறி - வெறி, ஆட்டுக்கு-ஆடலுக்கு, ஆள்-ஆள், ஆய் - ஆகி, நாளும் - நாள்தோறும், இருந்த - இருந்த, லோகாயுதம்-உலோகாயுதம் என்னும், பேர்-பெயரைப்பூண்டுள்ளார், இனத்தன்-கூட்டத்தன், ஆய்-ஆக, இருந்த-இருந்த, ஏழை - அறிவிலி ஆகிய அடியேன், மேல்-இனியொருகால், கதி - நற்கதியை, பொருந்தவும் - அடையவும், உண்டோ-தந்திரமுண்டோ எ-று.

(வி-ரை) 'முருந்திள நகையார்' இது அன்மொழித்தொகை. முருந்தை ஒத்த புன்முறுவல் உடைய பெண்களைக் குறித்தது. 'முலைமுகம்' முலையின் முகட்டைக் குறிக்கும் இனி 'முகம்' என்பதை இடப்பொருள் உருவாகக்கொண்டு முலைத்தலத்து என உரைப்பினும் ஆம். செவ்வாய் விருந்தமிர்து-என்றது அதரபானத்தை. விருந்தமிர்து-என்றது புத்தமிர்தத்தை. "விருந்து தானே புதுமை மேற்றே" என்றதனால் அறியலாம். வெறியாட்டு-என்றது-களியாட்டை; இது வெறிகொண்டார் ஆடும் ஆட்டம் வெறியாட்டமாம், அன்றிக் கள்ளுண்டு களித்து ஆடுவார் ஆட்டம் வெறியாட்டாம், 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' இன்புற்று வாழ்வதே முத்தி, கடவுளேது, சுவர்க்கமேது, நரகமேது என்று கூறுவது அவர் மதம். ஏழை என்றது அறிவு குறைவுநோக்கி. கதி என்றது முத்திக்கதியை. முருந்து-மயிலின் தோகையின் அடிக்கட்டை. நகை என்றது பல் வரிசையை. (தந்தபந்தி)

இறைவனே! வேறு யாவர் என் பாவந் தொலையப்
போதிக்க வல்லார் எனல்

தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம்போ
பாதகச் சிந்தை பெற்ற பதகனுன் பாத நீழ [ர்த்த

லாதர வடைய வுள்ளன் பருள்கிலை யாயின் மற்றியார்
போதனை செய்ய வல்லார் பூரண னந்த வாழ்வே.

(ப-ரை) பூரணம் - பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே!, தீது - தீமைகள், எலாம்-எல்லாமும், ஒன்று-ஒன்றாகக்கூடி, ஆகியிருந்த, வன்மை - தன்மை, செறிந்து - பொருந்தி, இருள் - (அஞ்ஞானமாகிய) இருள், படலம் - போர்வையை, போர்த்த - மூடப்பெற்ற, பாதகம்-பாபம், சிந்தை - சிந்தை, பெற்ற - கொண்ட, பதகன்-பாபியாகிய அடியேன், உன்-தேவரீரது, பாதம்-திருவடியினுடைய, நீழல்-நிழலை, ஆதரவு-ஆதாரமாக அடைய, உள் - உள்ளத்து, அன்பு - அன்பை, அருள்கிலை - தந்தருள்கிலை, ஆயின் - ஆனால் (அடியேனின் பாவந்தொலைய), போதனை - போதனையை, செய்ய-போதிக்க, வல்லார்-வல்லவர்கள், மற்று-வேறு, யார்-யாவர் எ-று.

(வி-ரை) 'தீதெலாம்' ஈண்டு ஈற்று முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. 'ஒன்றும் வண்மை' இது ஒன்றும் வன்மை, ஒன்றும் தன்மை எனவும் பாட பேதங்களுள. உன்-என்றது இறைவனை. நீழல்-இது 'நிழல்' என்ற பெயர் ஆதி நீண்டுநின்றது. கருணைவள்ளலாகிய இறைவனே! தேவரீரின் திருவடி நிழலை அடைய தேவரீரே அருள் செய்யாதிருந்தால் மற்று யாவரே வந்து போதிக்கும் தாமுடையவராவர் என்பார். 'பதகன் உன் பாத நீழல் ஆதரவடைய உள்ளன்பு அருள்கிலை யாயின் மற்று யார் போதனை செய்யவல்லார்' என்றார். இதனை,

"இருளாய வுள்ளத்தி னிருளைநீக்கி இடர்ப்பாவங்
கெடுத் தேழை யெனை யுய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டி"

என்ற **தேவாரத்தால்** நன்கறியலாம். 3

இறைவனே! நீநெறியை உபதேசித்து என்னை அழித்தல்
அழகோ எனல்

நாதனை நாதா தீத நண்பனை நடுவாய் நின்ற
நீதனைக் கலந்து நிற்க நெஞ்சமே நீவா வென்றால்
வாதனை பெருக்கி யென்னை வசஞ்செய் து மனந்துன் மா
போதனை செய்த னன்றோ பூரண னந்த வாழ்வே. [ர்க்க

(ப-ரை) பூரணம் - பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே!, நாதனை-இறைவனை, நாத-நாததத்துவங்களுக்கும், அதீத-எட்டாத, நண்பனை-துணைவனை, நடுவாய்-நடுவு நிலைமையில், நின்ற - இருந்த, நீதி-நீதிமான், தனை-தன்னை, கலந்து கூடி, நிற்க-நிற்க, நெஞ்சமே - மனமே!, நீ-நீ, வா - வருக, என்றால் - என்று கூறினால், மனம் - அடியேனின் மனமானது, வாசனை-உலகவாசனையை, பெருக்கி - பெருகச்செய்து, என்னை-அடியேனை, வசம்-தன்வசம், செய்து - வசீகரித்து, துன்-கெட்ட, மார்க்கம் - வழிக்கான, போதனை-உபதேசத்தை, செய்தல்-செய்தல், நன்றோ-நல்லதோ எ-று.



(வி-ரை) இறைவன் எல்லாருக்கும் தலைவன் ஆதலின் 'நாதனை' என்றார். இறைவன் நாததத்துவத்திற்கும் அப்பாற் கடந்து நிற்பவன் ஆதலின் 'நாதாதீத நண்பனை' என்றார். அன்பர்க்குத் துணையா நிற்பவன் ஆதலின் 'நண்பனை' என்றார். இறைவன் பொதுவில் நடுகின்றுடுவோன் ஆதலினாலும் பக்ஷபாதம் அற்றவன் ஆதலினாலும் 'நடுவாய்நின்ற நீதனை' என்றார். வாதனை என்றது பிரபஞ்ச மாயாவாதனைகளை. மனம் மாயாபாசத்தில் அழுந்தி தான் வருந்துதல் மட்டுமன்றி உயிரையும் வருத்துகின்றது ஆதலின், 'வாதனை பெருக்கி என்னை வசஞ்செய்து, மனந்துன்மார்க்க போதனை செய்தனன்றோ' என்றார். என்னை என்றது-ஆன்மாவை. வசஞ்செய்தல் என்றது மனத்தின்வழி ஆன்மா சென்று கட்டுப்பட்டிருத்தல். 4

இறைவனே! சிறியேனை உய்யக் கொண்டாயாயின் அதனால் உண்டாகும்
புண்ணியம் உனக்கே எனல்

எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற்
பிறப்புக் காசை
பண்ணிஎன் னறிவை யெல்லாம் பாழாக்கி
எனைப்பா ழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று சிறியனை
யுய்யக் கொண்டாற்
புண்ணிய நினக்கே யன்றோ பூரண
னந்த வாழ்வே.

(ப-ரை) பூரணம் - பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே, எண்ணிய-நான் நினைத்த, எண்ணம் நினைவு, எல்லாம் - அனைத்தும், இறப்பு - மரணத்துக்கு, மேல் - மேல் வருவதாகிய, பிறப்புக்கு - பிறப்புக்கு, ஆசை-விருப்பத்தை, பண்ணி-உண்டாக்கி, என்-அடியேனது, அறிவு-அறிவு, எல்லாம்-முழுவதையும், பாழ்-பாழ், ஆக்கி-ஆக்கி, என்னை-அடியேனையும், பாழ்-பாழ், ஆக்கும்-ஆக்குகின்ற, திண்ணிய-வலிய, வினையை-வினையை, கொன்று-கெடுத்து, சிறியேனை - சிறியேனை, உய்ய - உய்விக்க, கொண்டால் - ஏற்றுக் கொண்டால், புண்ணியம் - அந்தப் புண்ணியமும், நினக்கே - தேவரீருக்கே, அன்றோ-அல்லவோ எ-று.

(வி-ரை) பிரபஞ்ச சம்பந்தமான எண்ணங்கள் எல்லாம் மாயைபற்றி எழும் எண்ணங்களாம். அவற்றாலே பிறவி ஏற்படுகின்றது. இதனை, "அவா வென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்ற **திருக்குறளாலும்** அறியலாம். இது கொண்டே இப்பெரியார் 'எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற் பிறப்புக்காசை பண்ணியென் னறிவை யெல்லாம் பாழாக்கி யெனைப் பாழாக்கும்' என்றார். பிறப்பிறப்பிற்கும் நரகவேதனைக்கும் மற்றிம்மைத் துயர்க்கும் வினையே காரணமாக

நிற்றலின், 'திண்ணிய வினையைக் கொன்று சிறியனை உய்யக் கொண்டாய்' என்றார். ஒழித்தற்கரிய வினையாதலின் 'திண்ணிய வினையை' என்றார்.

"வினையெலாம் விட்டபேர்க்கு விமலமாம் இன்பவீடு
தனையருள் செய்ய எங்கள் தாணுவே வந்து தோன்றும்
கனையிருட் படலம் போக்கிக் கதிர்திகழ் ஞானச் சோதி
முனைதர நெஞ்சுள் நிற்க மொழிய வோர் குறையு முண்டோ"

என்ற **சித்தாந்த சிந்தாமணிச் செய்யுளாலும்** அறியலாம். 5

இறைவனே! எனக்கென ஒருபொருள் உண்டோ என்கின்றார்

பத்திநீ பத்திக் கான பலனுநீ பலவாச் சொல்லுஞ்
சித்திநீ சித்தர் சித்தித் திறமுநீ திறமார் மோன
முத்திநீ முத்திக் கான முதலுநீ முதன்மை யான
புத்திநீ எனக்கொன் றுண்டோ பூரண னந்த வாழ்வே.

(ப-ரை) பூரணம் - பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே - வாழ்வே!, பத்தி - பத்திமயமாக இருப்பவனும், நீ-தேவரீரே, பத்திக்கு - பத்திக்கு, ஆன-ஆகிய, பலனும்-பயனும், நீ-தேவரீரே, பல - பலவகை, ஆ-ஆக, சொல்லும்-சொல்லப்பெறும், சித்தி - சித்தியும், நீ-தேவரீரே, சித்தர்-சித்தர்களினுடைய, சித்தி-சித்திகளின், திறமும்-வகைகளும், நீ-தேவரீரே, திறம்-உறுதி, ஆர்-பொருந்திய, மோனம்-மௌன, முத்தி-முத்தியும், நீ-தேவரீரே, முத்திக்கு-முத்தியைத் தருவதற்கு, ஆன-உரியதாகிய, முதலும்-முதல்வனும், நீ-தேவரீரே, முதன்மை - முதன்மை, ஆன - ஆகிய, புத்தி - அறிவும், நீயே-தேவரீரே, எனக்கு - எனக்கென, ஒன்று - ஒருபொருள், உண்டோ - இருக்கின்றதோ எ-று.

(வி-ரை) சத்து சித்து ஆனந்தமாகிய இறைவன் காண்பானும், காணப்படுபொருளும், காட்சியுமாக இருத்தலினாலும், அவனலா தொன்றில்லையாதலினாலும், 'பத்திநீ ... ... புத்திநீ' என்றார். இதனை,

"அறிவும் அறிவானும் அறியப் படுபொருளும்
நெறியினறி விப்பானு நீயே—குறியிஃதேல்
எல்லாமா யல்லதுமாம் ஈசனே எற்குண்டோ
சொல்லாரு நானெனதென் சொல்"

என்னும் சைவ இரகசியம் என்னும் **நூற்கூற்றனும்** அறியலாம்.

நீ என்பது இச்செய்யுளிற் பன்முறையும் வந்தது **சொற்பொருட் பின்வருநிலையணி**. பத்திக்கானபலன் என்றது இம்மை, மறுமை, முத்தி முதலிய பயன்களை. சித்தி என்றது அட்டமா சித்திகளை. சித்தித்திறம் என்றது சித்திக்குரிய ஞானம், முயற்சிகளை. முத்திக்கானமுதல் என்றது இறைவனை. முதன்மையான புத்தி என்றது சிவஞானத்தை. 6



இறைவனே! காலம் வீணாயிற்று இது என்னாற் சகிக்க முடியவில்லை எனல்

தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடைய னாகிப் பிதற்றுதல் செய்த னன்றோ
தீயிடை மெழுகாய் நொந்தேன் தெளிவிலேன் வீணே கா
போயின தாற்று கில்லேன் பூரண னந்த வாழ்வே. [லம்

(ப-ரை) பூரணம்-பரிபூரண, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, வாழ்வே-வாழ்வே!, தாயினும் - தாயைப் பார்க்கிலும், இனிய - இனியனாகிய, நின்னை-தேவரீரை, சரண்-அடைக்கலம், என-என்று, அடைந்த-அடைந்த, நாயேன்-நாயனையேன், பேயினும்-பேயைப்பார்க்கிலும், கடையன்-இழிந்தவன், ஆகி-ஆகி, பிதற்றுதல்-பிதற்றுதலை, செய்தல் - செய்வது, நன்றோ-நன்மை தருவதாகுமோ, தீ - நெருப்பின், இடை - இடையே இட்ட, மெழுகு-மெழுகைப் போல, ஆய் - ஆகி, நொந்தேன் - உருகி மெலிந்து வருந்தினேன், தெளிவு-தெளிவு, இலேன்-இல்லாத எளியேன், காலம்-காலங்கள், வீணே-பயனற்று, போயின - ஒழிந்தன, ஆற்றகில்லேன் - அடியேன் பொறுக்க முடியாதவன் ஆயினேன் எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்களைத்தாயினும் சாலப்பரிந்து காத்தருள் புரிகின்றானாதலினாலும், தாயினும் மிக்க அன்புடையவன் ஆதலினாலும் 'தாயினுமினிய நின்னை' என்றார். **சைவப் பெரியார்களும்**, "தாயான சங்கரனை" எனவும், "தாயினு மன்புடைத் தாணுவே" எனவும், பல விடங்களிலும் போற்றியுள்ளார்கள். 'பேய்' பிடித்தவர் தாறுமாறாக உளறுதலும், உழலுதலும், உலைதலும் கண்கூடாதலின் 'பேயினுங் கடையனாகிப் பிதற்றுதல் செய்தல் நன்றோ' என்றார். 'தீயிடை மெழுகாய் நொந்தேன்' இது உவமம். இறைவனைச் சிந்தியாத, துதியாத நாள்கள் எல்லாம் கொன்னே கழிந்த நாட்கள் ஆதலினால் 'தெளிவிலேன் காலம் வீணே போயின' என்றார். இது கொண்டன்றோ **திருநாவுக்கரசும்**, "புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்றார். 'காலங்கள் அவமே சென்ற' என்றார் பிறரும். 7

---

## மலைவளர் காதலி

மலைவளர்காதலிப் பெண்ணுமையாகிய தேவியே! உன் அருளுண்டாயின் எல்லாம் அடைவே னெனல்

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்

கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
    காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் ருளிற்
    கருத்தொன் றுமுண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
    ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
    நானெனு மகந்தைதீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
    மதுசூத னன்றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
    வளர்காத லிப்பெ ணுமையே.

**(ப-ரை)** நதி-பலபல ஆறுகளையும், உண்ட - தன்னுள் அடக்கிக்கொண் டுள்ள, கடல்-கடல், என - என்று சொல்லும்படி, சமயத்தை - பற்பலவாகிய சமயங்களையும், உண்ட - தன்னிடம் வைத்துக்கொண்டுள்ள, பரம்-மேலான ஞான-ஞானவடிவமாகிய, ஆனந்த - ஆனந்தமயமான, ஒளியே - ஜோதியே, நாதம் - நாததத்துவத்தின், அந்தம் - முடிவில் விளங்கும், ரூபமே-உருவமே!, வேதம் - வேதத்தின், அந்தம் - முடிவில் பிரகாசிக்கும், மோனமே - மௌன நிலையே!, நான்-நான், எனும் - என்று சொல்லும், அகந்தை-அகங்காரத்தை, தீர்த்து-ஒழித்து, என்-அடியேனது, மதி-அறிவை, உண்ட-விழுங்கிய, மதி-அறிவுமயம், ஆன-ஆகிய, மதி-பூரணசந்திரனுக்கு நிகராகிய, வதன-முகத்தை உடைய, வல்லியே-பூங்கொடிபோன்றவளே!, மதுசூதனன்-நாராயணனுக்கு, தங்கையே-இளையசகோதரியே!, வரை-மலை, ராஜனுக்கு-அரசனுக்கு, இரு-இரண்டு, கண் - கண்களின், மணி-மணிகள்போன்று, உதித்த - அவதரித்து அருளிய, மலை - இமயமலையில், வளர்-வளர்ந்த, காதலி - (தாயும் தந்தையும்) விரும்பத்தகுந்த, பெண் - புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, கறை-விஷக்கறை, உண்ட-கொண்ட, கண்டர்-கண்டத்தை உடைய சிவபெருமான், பால்-இடதுபாகத்திலே உறையும், அம்மை-தாயே, நின்-தேவரீரது, தாளில்-திருவடியின் இடத்தில், கருத்து - எண்ணம், ஒன்றும் - ஒன்றும், உண்டாகுமேல்-உதித்து இருக்கும் ஆனால், பதி - இடம், உண்டு-உண்டு, நிதி-செல்வம், உண்டு - உண்டு. புத்திரர்கள் - புத்திரர்களும், மித்திரர்கள் - சிநேகர்களும், பக்கம்-உறவினரும், உண்டு - உண்டு, எ-எந்த, காலம் - காலத்திலும், பவிசு-திறமை, உண்டு-உண்டு, தவிசு - நல்லசயனம், உண்டு-உண்டு, திட்டாந்தம்-திருஷ்டாந்தம், ஆக-ஆக, யம - யமனுடைய, படர்-தூதர், எனும்-என்னும், திமிரம்-இருட்டு, அணுகா-அணுகாத, கதி-நற்கதி, உண்டு-உண்டு, ஞானம்-ஞானம், ஆம்-ஆகிய, கதிர்-சூரியன், உண்டு-உண்டு, சதுர் - வல்லமைகளும், உண்டு-உண்டு, காயம்-தேகம், சித்திகளும்-அழிவில்லாதிருக்கும் சித்திகளும், உண்டு-உண்டாகும் எ-று.



**(வி - ரை)** பதியுண்டு - என்றது பூலோகஇடத்தை. பொதுப்படக் கூறினமையால் இம்மை, மறுமை, மோக்ஷப்பதிகளையுங் குறிக்கும். இனி, பூலோக அரசப்பேறு உண்டாம் எனவும், இந்திராதி பதவிகளும் எய்தும் எனவுங் கொள்ளக் கிடந்தது. இனி பரமபதியாகிய இறைவனின் திருவருள் உண்டாகும் எனக்கொள்ளினும் அமையும். நிதியுண்டு - என்றது இவ்வுலகச் செல்வங்களை. இது பொதுப்படக் கூறினமையால் இம்மைச் செல்வங்களும், சங்கநிதி, பதுமநிதி முதலிய தேவலோகச் செல்வங்களும், முத்திக்கேதுவாகிய ஞானச்செல்வங்களையுங் குறிக்கும். "தம்பொருள் என்ப தம் மக்கள்" எனவும்,

> "பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
> றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
> புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
> மக்களையிங் கில்லா தவர்" என **நளவெண்பாவும்**

கூறியதனால் எல்லாச் செல்வத்திலும் சிறந்தது புத்திரச் செல்வம் ஆதலினால் 'மித்திரர்கள் உண்டு' என்றார்.

'செயற்கரிய யாவுள நட்பி னதுபோல் வினைக்கரிய யாவுள காப்பு' என்றார் ஆதலின் 'மித்திரர்கள் உண்டு' என்றார். வாழ்க்கைக் கின்பம் சுற்றஞ் சூழ வாழ்தல் ஆதலினால் 'பக்கமுண் டெக்காலமும்' என்றார். எக்காலமும் - என்பது மத்திபதீப அலங்காரம். எக்காலமும் பதியுண்டு, எக்காலமும் நிதியுண்டு, எக்காலமும் புத்திரர்கள் உண்டு, எக்காலமும் மித்திரர்கள் உண்டு, எக்காலமும் பக்கம் உண்டு, எக்காலமும் பவிசுண்டு, எக்காலமும் தவிசுண்டு, எக்காலமும் யமபடரெனுந் திமிரம் அணுகா, எக்காலமும் கதியுண்டு, எக்காலமும் ஞானமாங் கதிருண்டு, எக்காலமும் காயசித்திகளுமுண்டு என இயையும். பவிசு - என்றது எதனையுஞ் செய்து சாதிக்குந் திறமையை. தவிசு - என்றது - ஆசனம், ஈண்டு சுகசயன அமளியைக் குறித்தது. யமபடர் - என்றது யமதூதர்களை. திமிரம் - என்றது இரவை. திமிரம் அணுகாக்கதி - என்றது இரவாப் பிறவாப்பேற்றை. ஞானிகளுக்குப் பிறப்பிறப் பில்லை யாதலினால் 'திட்டாந்தமாக யமபடரெனும் திமிரமணுகாக் கதியுண்டு ஞானமாங் கதிருண்டு' என்றார். திட்டாந்தம் - என்றது 'திருஷ்டாந்தம்' என்னும் வடமொழியின் சிதைவு. கதியுண்டு - என்றது மோக்ஷகதியை. அஞ்ஞானத்தை இருளாகக் கூறுதலின், அதனை அகற்றும் ஞானத்தை கதிர் என்றார் இது உருவகம். சதுர்-என்றது சாமர்த்தியத்தை. 'காய சித்தி' இது காயம் + சித்தி என்னும் இருசொற்களாலாகிய ஒரு சந்தி. இதற்குக் காயம் அழிவின்றி நெடுங்காலும் நிலைத்திருக்கப் பெறும் சித்தியாம். காயசித்தியைக் கூறவே ஏனைய சித்திகளையும் தழுவிநின்றது. கறையுண்ட கண்டவர் - என்றது சிவபெருமானை. தேவரைக் காக்கும்பொருட்டுத் திருப்பாற்கடலில் எழுந்த ஆலகாலவிஷத்தை உண்டு களங் கறுத்தமையால், கறைக்கண்டர் என்று சிவபெருமானுக்குப் பெயர் எய்தியது கண்டு தெளிக.

உமாதேவியார் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து இறைவனின் இடப்பாகம் பெற்றமையினால் 'கறை யுண்ட கண்டர்பா லம்மை' என்றார். கருத்து - என்றது சிந்தனையை. 'கருத்து' உண்டாகவே அதியாகிய சொல்லும், தொழுதலாகிய காயச்செயலும் நிகழுமாதலின் 'கருத்தொன் றுண்டாகு மேல்' என்றார். ஆறுகள் அனைத்தும் கடலை இடமாகக் கொள்வதுபோலப் பலவாஞ் சமயங்களும் தன்னுள்ளே வந்தொடுங்க சைவசித்தாந்தம் இராஜாங்கத்தில் இருப்பதனாலும், இந்தச் சைவசித்தாந்தத்தின் ஞான ஒளியாகி இறைவி விளங்கலின் 'நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர ஞானவானந்த வொளியே' என்றார். அபரஞானத்திற்கு மூலமாகிய நாததத்துவம் சத்தியாகிய தன்னால் குடிலை அதிட்டிக்கப்படுவதனாலேயே விளைகின்றதாதலின், 'நாதாந்த ரூபமே' என்றார். இறைவி வேதங்கள் எல்லாம் புகழப்படுபவள் ஆதலினாலும், மோனானந்தரூபி ஆகையாலும், 'வேதாந்தமோனமே என்றார்.

இறைவன் திருவருட்சத்தி சகாயத்தாலேயே 'நான்' என்னும் அகங்கார தத்துவம் அடங்கி ஜீவபோதங் கழலவேண்டி இருத்தலினாலும், இறைவி ஞானரூபி ஆதலினாலும், இறைவியின் திருமுகமண்டலம் பூர்ணசந்திரோதயத்தினும் சிறந்த பொலிவு உடையதாதலினாலும், இறைவி மரகதப் பூங்கொடி போல்பவள் ஆதலானும், (வல்லி+கொடி) இது உவமையாகு பெயர். 'நானெனு மகந்தை தீர்த்தென் மதியுண்ட மதியான மதிவதன வல்லியே' என்றார். தேவர்களுக்கு இடுக்கண் செய்த மது என்னும் அசுரனைத் திருமால் கொன்றருளியதனால் திருமாலுக்கு 'மதுசூதனன்' என்று பெயராயிற்று. திருமால் பூமியில் கிருஷ்ணாவதாரம் எடுத்தகாலை இறைவி கிருஷ்ணனைத் தேவகியிடத்திருந்தும் அப்புறப்படுத்தி ஆயர்மனையிற் கிடக்கச்செய்து தான் மாயைவடிவால் குழந்தை ரூபமாயிருந்து கம்சன்மேலே தூக்கி எறிந்து கீழே வாளைப்பிடித்தகாலை உன்னைக்கொல்ல வேறு ஒருவன் வளர்கின்றான் என்றுகூறி அந்தரஞ் சென்றதனால் 'மதுசூதனன் தங்கையே' என்றார். வரைராஜன் என்றது இமோத்பருவதராஜனை. இறைவி தக்ஷாயணியாக' இருந்து, தந்தை தன் நாயகனையும், தன்னையும் மதியாது யாகம் செய்தகாலை தான் சென்றபோது தன்னை அவமரியாதையாக நடத்தினதால் தன் சரீரத்தை அவன் வேள்விக்குண்டத்தில் வீழ்த்திவிட்டபின் இறைவி தனக்கு மகளாகவேண்டும் என்று தவஞ் செய்துகொண்டிருந்த இமோற் பருவதராஜனுக்கு மகளாகப் பொற்றடாகத்து இருந்தாளாதலினாலும் இமோத்பருவதராஜனும் அவன் மனைவி மேனையும் அன்போடு வளர்த்தார்கள் ஆதலினாலும், இறைவன் ஆங்குச்சென்று மணந்துகொண்டான் ஆதலினாலும் 'வரைராஜனுக்கு இருகண் மணியா யுதித்த மலைவளர் காதலிப்பெ ணுமையே' என்றார்.

இது தேவை நகரில் எழுந்தருளி இருக்கும் இறைவியின் பெயர். இப்பதிகத்து எட்டுப்பாடல் இத்தேவியார் துதியாகும். இப்பதிகத்து எஞ்சிய பாடல்கள் இரண்டில் ஒன்று அகிலாண்டநாயகி துதியாகவும், மற்றொன்று, பெரியநாயகி துதியாகவும் அமைந்தனது. இப்பதிகத்தின் ஒன்பது பாடல்



களின் ஈற்றில் 'வரைராஜனுக் கிருகண் மணியா யுதித்தமலை வளர்காதலிப்பெ ணுமையே' என்றது மகுடம். இது பதினான்குசீர் கொண்ட அடிநான்கால் வந்த ஆசிரியவிருத்தம் ஆதலின் இது பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம். 1

உமாதேவியே! அடியேன் மனத்தைச் சிற்றின்பத்திலே
புகவிடாதே யெனல்

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே அவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே அடியிலேமேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலையாமல் அறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்திலே உனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப்பெ ணுமையே.

(ப-ரை) வளம்-வளப்பம், மருவு - பொருந்திய, தேவை - தேவை நகரத்திலே எழுந்தருளியிருக்கின்ற, அரசே-அரசியே!, வரை-மலைகளின், ராஜன்-அரசனாகிய இமோற்பருவத ராஜனின், இரு - இரண்டு, கண் - கண்களின், மணியாய் மணியாக, உதித்த-அவதரித்த, மலை-மலையினிடத்தே, வளர்-வளர்ந்தருளிய, காதலி-(தாய்தந்தையர்கள் இருவராலும்) விரும்பி வளர்க்கப்பெற்ற, பெண் - புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, வலிய - காதலை ஊட்டும் வன்மை பொருந்திய, மடம்-மடப்பத்தையுடைய, மாதர்-பெண்களினுடைய, தெட்டிலே-வஞ்சகத்திலும், வாய்-வாயிலிருந்து புறப்படும், வெட்டிலே-சொல் வெட்டுக்களிலும், சிறு-சிறிய, இடையிலே-மருங்குலிலும், நடையிலே-அவர்கள் ஒயில் நடையிலும், சேல்-சேல்மீனை, ஒத்த - ஒப்புச் சொல்லும்படியான, விழியிலே-கண்களிலும், பால்-ஆவின்பாலை, ஒத்த-ஒத்த, மொழியிலே-மதுரச் சொற்களிலும், சிறு-சிறிய, பிறை - பிறைச்சந்திரனை ஒத்த, நுதல் - நெற்றியின், கீற்றிலே-வகிரிலும், பொட்டிலே - அந் நெற்றியின்கண் அணிந்துள்ள திலகத்திலும், அவர்-அப்பெண்கள், கட்டு-உடுத்தியிருக்கும், பட்டிலே-பட்டு வஸ்திரத்திலும், புனை - அவர் தம்மேனியிலே பூசப்பெற்றுள்ள, கந்தம் -

வாசனை, பொடியிலே-பொடியிலும், அடியிலே - அவர்களின் அழகிய பாதத்திலும், மேல் - மேற்படக்கினம்பி, பூரித்த - பருத்து இறுமாந்த, முலையிலே-முலைகளிலும், நிற்கின்ற - அவர்கள் நிற்கின்ற, நிலையிலே - நிலையிலும், புத்தினை - புத்தியை, நுழைய-புகும்படி, விட்டு-விட்டு, தெட்டிலே-மனம்போன போக்கிலேயே, அலையாமல் - திரியாமல், அறிவிலே - ஞானமார்க்கத்திலும், பொறையிலே-மன அடக்கத்திலும், நின்-தேவரீரது, அடியர்-தொண்டர்களினுடைய, கூட்டத்திலே - கூட்டத்திலும், நிலை-நிலை, பெற்ற - பொருந்திய, அன்பிலே - அன்பிலும், மலைவு - மயக்கம், அற்ற-இல்லாத, மெய் - உண்மையாகிய, ஞானம்-ஞானத்தின், ஞேயத்திலே-ஞேயத்திலே, உன் - தேவரீரது, இரு-இரண்டு, தாள்-திருவடிகளின், மட்டிலே - அளவிலும், மனது-அடியேனின் மனது, செல-செல்லும்படி, நினது - தேவரீரது, அருளும்-திருவருளையும், அருள்வையோ-தந்தருள்வையோ எ-று.

(வி-ரை) தெட்டிலே என்றது வஞ்சனையை. வாய்வெட்டு முதலியன ஆடவரை மயக்கற்காதலின் தெட்டிலே என்பதற்கு வஞ்சனை என்றும். வலிய என்பது தெட்டிலே வலிய என்பது பொருளாம். இனி, வலிய என்பதனை மடமாதர் என்பதனேடிணைத்துப் பொருள் கூறுவாரும் உண்டு. மிக்க அழகுடைமையின் பெண்களை மாதர் என்றால் மாதர் அழகு இது பண்பாகு பெயராய் அதனை உடைய பெண்களைக் குறித்தது. வாய்வெட்டு என்றது ஆடவரை மயக்கும் சாதுரியமொழிகளை. இடைக்கு உவமை குறியாது 'சிற்றிடை' என்றதனால் உண்டோ இன்றோ என ஐயங்கொள்ளும் தன்மையதாய இடை என்பதாம். இதுகொண்டே பிறரும், "நுண்ணிடை", "நூற்பகவன்ன இடை", "ஈக்காற்றுக் காற்றுஇடை", "ஐயநுண்ணிடையாய்", "முலையும் அந்தரமே இடையு மந்தரமே" எனக் கூறினர். **மணிவாசகரும்** திருக்கோவையாரில்,

"அகல்கின்ற வல்குற் றடமது கொங்கை யவையவநீ
புகல்கின்ற தென்னை நெஞ்சுண்டே யிடையடையார் புரங்க
ளிகல்குன்ற வில்லிற் செற்றோன் றில்லை யீசனெம்மா னெதிர்ந்த
பகல்குன்றப் பல்லுகுத்தோன் மழனம் அன்ன பல்வளைக்கே" எனவும்,

"பொட்டணி யானுதல் போயினும் பொய்போலிடை யெனப்பூ
ணிட்டணி யான்றவிசின் மலரன்றி மிதிப்பக் கொடான்
மட்டணி வார்குழல் வையான் மலர்வண் டுறுதலஞ்சிக்
கட்டணி வார்சடை யோன்றில்லைபோ லிதன் காதலனே"

எனவும் கூறியது கண்டுதெளிக. இன்னும்,

"வாலோங் கியகற் சிராமலை யான்வரை மாண்பொழில்வாய்
சேலோ விழிக்கிணை பாலோ மொழிக்கிணை சிற்றிடைக்கு
நூலோ விணைவயிற் றிறகிணை யாலோ நுவறலென
மாலோங் கிடச்சொலு மென்சொ லினிச்செவி வாங்கரிதே"

என்ற **திரிசிராமலைக் கோவையாலும்** அறியலாம். நடையிலே என்றது அன்ன நடையை. இதனை, "அன்ன நடையும் அன்னமிலா ஐயர் நடையும்" எனவும்,



"திருவளர் தாமரை சீர்வளர்காவிக ளீசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங்காந்தள் கொண்டோங்கு தெய்வ
மருவளர் மாலையோர் வல்லியி னொல்கியன நடைவாய்க்
கருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே" எனவும்,

"குன்முதிர் துள்ளுநடைப் பெடைக்கிற்றுணைச் சேவல் செய்வான், தேன்முதிர் வேழத்தின் மென்பூக்குதார் செம்மலூரன், பேட்டன மடவநடைபயில் பிடியை" எனவும், "அன்னஞ் சிலம்பு நடையினமானை" என்னும் **ஆன்றோர்** வாக்குகளானும், "அன்னநடை மின்னலிடை பின்னற்சடை, கன்னன்மொழி யாயிழை" என வருவனவற்றாலறியலாம். சேலொத்த விழியிலே என்றது சேல் மச்சம்போலப் பிறழும்கண்ணை, சேல்போல வலம் இடமாகப் பிறழுங்கண்ணை. இதனை, "செழுநீர்த் தடத்துக் கயன்மிளிர்ந்தாலொப்பச் சேயரிக்கண், அழுநீர் துளம்ப வலமருகின்றன" எனவும், **திருப்புகழாசிரியர்,** "இருகுழை எறிந்த கெண்டைகள்" எனவும், "சேலுலாவிய கூர்விழி" எனவும்,

"வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கெண்டையாலும் அனைவோரும் என்றார்.

"காரே கருங்குழல் மின்னே துவளிடை கண்கயலே
பாரே புகழ்மயி லேயெழில் எண்ணிறை பத்மவனத்
தேரே விளங்குந் திருவே சிராமலைச் செம்மலுறை
சீரே மலிவரைப் பூம்பொழி லேயிது தேரிடினே" எனவும்,

"வெள்ளம் பொதிந்த சடையார் சிராமலை மெல்லியலே
உள்ளங் கவர்ந்தென துள்ளக் கமலத் துறைதிருவே
விள்ளங் கயலின நின்கட் கொவ்வாமையான் வெள்கியன்றோ
பள்ளம் புகுந்தீருட புக்கே கரந்து படிவதுவே" எனவும்,

"மஞ்சே தவழுஞ் சிராமலை யான்வரை மான்மயிலே
அஞ்சேல் விழிசிவக் கத்துவர் வாயி னணி வெளுக்க
மஞ்சே கிகர்குழல் மின்பிறை மேவ வளர் தவளக்
கொஞ்சேர் தொடைசூட் டுசீனை யெங் காடினை கூறுகவே"

எனவும் வரும் **திரிசிராமலைக் கோவைச்** செய்யுள்களாலும், இன்னும், "வேல்போல் நிறம்படைத்து வீரவாள்போ லிரண்டு சேல்போற் கயல்போற் றிசைபார்த்து" எனவும் "கயலோ நும்கண்கள்" எனவும் "அங்கயற்கண்ணி" என்பனவாதிகளாலும் அறியலாம். "கயலைச் செருவி" என்ற **புகழேந்தி** வாக்கால் அறியலாம், பாலொத்த மொழியிலே - என்றது பால் போலும் இனிய மொழி என்பதாம், அதாவது ஈண்டு மதுரத்தைக் குறித்தது. இதனை, "பாலூறு தேன்வாய் படிவீ கடை திறவாய்" எனவும், "பாலேய் மொழியினள்" எனவும், "பாலுங் கைப்ப மொழி பாவாய்" எனவும் வருவனகொண்டு தெளியலாம். சிறுபிறை நுதற்கீற்று - என்றது பூர்வபச்சசது அட்டமிச்

சந்திரனை. இதனை, ஆன்றோர் பலரும் 'பிறை நுதால்' என மகிழ்உ முன்னிலையாற் கூறியதூஉம் கொண்டு தெளியலாம். இன்னும்,

"வில்லேர் பிறையேய் வளநுதலாற் காமத்திற்
கல்லாப் புலையேன் கலங்குவனோ—சொல்லார்
முருகன் திருவடிக்கே முற்றியொளி ரன்பிற்
பெருகி யான் நிற்கப் பெறின்"

என்ற **தனிச்செய்யுளா**லும் அறியலாம்.

பொட்டு - என்றது திலதத்தை. இது ஆடவரை வசீகரித்தற்பொருட்டு நெற்றி நடுவில் அணியும் வண்ண நறும் புள்ளியை. இதனை, "சிக்கப்புள் ஒட்டுக்குள் ளாவதுபோ லுள்ளபணக் காரர்களுன் பொட்டுக்குள் ளாக வென்று பொட்டிட்டாள்" என்ற **விறலிவிடு தூதின்** வாக்காலும் அறியலாம். அவர்கட் பட்டிலே - என்றது அவர்கள் புனையும் கோல வண்ணப் பட்டுச் சீலையை. இதனை,

"புன்புலால் நாற்றப் பவ்வீப் புழுவுடம் பாகும் பாண்டம்
என்புளார் யாக்கை என்ப தெவர்கொலோ அறியார் அம்மா
முன்பதே தோன்று வண்ணம் மொழு மொழு வென்ன மின்னும்
வன்னமாப் பட்டால் மூடின் மயங்குமோ வென்றன் நெஞ்சே"

என்ற **அழுதகவியா**லும் அறியலாம்.

புனைகந்த பொடி - என்றது உடம்பின் வெடிநாற்றம், வியர்வை நாற்றம் தோன்றாது மறைய அணியும் வாசனைப் பொடியை. அடி - என்றது அன்ன நடை நடக்க வாய்ந்த வன்னமென் பாதத்தை. செம்பஞ்சூட்டிச் செவந்து தோன்றும் பாதத்தை. மேற் பூரித்த முலையிலே - என்றது அடிபரந்து ஈர்க் கிடைபுக இடையின்றிப் பருத்து எழுந்து மார் பிடமெலாங் கவர்ந்து நிற்கும் முலை என்னும் பெயர் பூண்ட தசைக்கட்டியை. இதனை, "புலியூரம் பலவர்க் குற்ற பத்தியர் போலப் பணைத்திறு மாந்த பயோத ரத்து" என்னும் **திருக்கோவை**யார் அடியானும்,

"இருப்பை விட்டயனுர் நெடிதுநாட் டவஞ்செய்
திருகையுஞ் சிந்தையும் வருந்தி
செருப்பயின் றிறந்த மதனனைச் சூட்டத்திருமுடி
வேண்டு மென்றி யானை
மருப்பையுங் கும்பத்தலத்தையுஞ் சக்ரவாகத்தையும்
வட கனகப்
பொருப்பையும் படைத்துத் தெளிந்தபின் படைத்த
புளகித பூரண முலையாள்"

என்னும், **அரிச்சந்திர புராண** வாக்கானும்,

"தனக்குன்று செய்யும் தொழில் சொல்லவோ தமியேனைக் கண்டால்
கனக்கும் புளகிக்கும் பூரிக்கும் பாரிக்கும் கண்களுக்கும் சினக்கும்"

என்ற **காளிமுத்துப் புலவர்** வாக்கானும்,



"வாரிட்டு விம்மிப் புடைத்திறுகி யினகிமணி மார்பிட மெலாங் கவர்ந்து
வட்டமிட் டடியிட்டு நாளுக்கு நாண்மேல் வளர்ந்துபூ ரித்து முத்து
மாலையிட் டிறுமாந்து பட்டவர்த் தனயானை மத்தகத் தோடெ திர்த்து
வாதிட்டு மல்லிகைப் பூச்செண் டினைத்தினம் வாட்டப்படுத்தி வரையைப்
போரிட்டு மைந்தர்கண் மனஞ்சூறை யிட்டுமேற் புளகித்து வச்ர ரத்னப்
புதுச்செப் பினைத்தோழ மைக்கொண்டு பொன்னினைப்பொடியாவராவிமீதிற்
போட்டிட்ட தென்னவே தேமற் படர்ந்துசெம் பொற்சரிகை வேலை யிட்டுப்
புனைதரு ரவிக்கையை யிறுக்கிக் கிழித்துப் புறப்பட்டு வாசனைப் பூந்
தாரிட்டு வரவரப் பளபளப் பாகியுயர் தங்கக் கிண்ணத்தை யொத்துச்
சந்தனம் புனுகுகஸ் தூரிகர்ப் பூரஞ்சவ் வாதுகுங் குமமணிந்து
சந்த்ரகாவிச்சேலை வல்லவாட் டுக்குட் டதும்பியண் ணாந்திடை யினித்
தாங்காதெ னக்கனத் தோங்கிமன் மதனுஞ் சலாமிட்டு நிற்க வுந்தான்
சீரிட்டு நின்றுதந் தலைவணங் காமற் றிரண்டபூண் முலைக ளுன்றன்
திருமார்பி லணையவோ ரூசிமே லேதவஞ் செய்கின்ற தொக்கு மென்னுஞ்
சிறுரோம ரேகையான் வந்தான்ப ராக்கென்று சேவித்து நிற்கிறுன்பார்
திகழ்வடுக நாதநுரை மெச் சுப்பிர தானிசிவ சுப்ரமண் ணியராசனே"

என்ற **சுப்பிரமணியக் கவிராயர்** வாக்காலும் அறியலாம்.

நிற்கின்ற நிலையிலே - என்றது ஆடவர்களின் கண்ணையும் எண்ணையுங் கவரவென அலங்கரித்து நிற்கும் நிலையைக் குறித்தது. இதனுனே விலைமாதரைக் குறித்ததாகும். இதுபற்றியன்றே பெரியாரும் 'மேனி மினுக்குதல் வேசையர்க் கழகு' என்றார். புந்தி - என்றது அறிவை; இது 'புத்தி' என்பதன் மெலித்தல் விகாரம். நெட்டியிலே யலைதல் - என்றது நினைத் திரிதல், மாளத்திரிதலை. அறிவிலே - என்றது ஞானத்தை. இனி ஆகு பெயராய் ஞானமார்க்கத்தைக் குறித்ததெனினும் ஆம். பொறை - என்றது மோன நிலையை. அடியர் கூட்டம் - என்றது சாதுசங்கத்தை, அன்பர் குழாத்தை. தொண்டர் குழுவை. என்னை, "அடியர் குறவு மரன்பூசை நேசமு மன்புமன்றிப் படிமீதில் வேறு பயனுளதோ" எனப் **பட்டினத்தடி**களுங் கூறினர் ஆதலின் என்க.

நிலைபெற்ற அன்பு என்றது சிவானந்த அன்பை. மலைவற்ற மெய்ஞ் ஞான ஞேயத்திலே என்றது-மயக்கஞ் சிறிதுமில்லாத சிவஞான நேயத்தை. "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றதனால் 'உன்னிருதாண் மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ' என்றார். தேவை என்றது தேவை நகரியை. அரசு என்றது பொதுப்பாலாயினும் ஈண்டு அரசு என்னும் பெண்பாலைச் சுட்டிநின்றது. வரைராஜன் என்றது இமோற் பருவத ராஜனை. என்னை, இமோற் பருவதராஜன் தவஞ்செய்து திருவருட் சத்தியாகிய தட்சாயணியைத் தனக்கு மகளாகப் பெற்றானுதலின், இதனுனேயே 'பார்வதி' என ஒரு திருநாமமும் இவ் அம்மைக்கு வழங்குவதுகண்டு தெளியலாம். 'மலையரசனிடத்தில் வளர்ந்தருளியமையின் மலைவளர் காதலிப் பெண்ணுமையே' என்றார். (பெண்+உமையே) பெண்ணுமையே என்றது

பெணுமையே என நின்றது தொகுத்தல் விகாரம். வேசையர்கள் ஆசை விழுப்பந்தாராது பிறவிக்கடலுள் எழுத்தி நரகத்து விழுத்துமாதலின் 'நெட்டிலே அலையாது' என்றும், அறிவு மார்க்கத்தில் நின்று பொறையைக் கையாண்டு அடியர் கூட்டத்திற்கூடி யுறைந்து அன்புநிலையில் நின்று ஞான ஞேயம்பெற்றுத் திருவருட்சத்தி இருபாதமலரிலே மனநாட நின்றால் முத்தி சித்தித்தல் சத்தியம் ஆதலின், 'அறிவிலே பொறையிலே நின்னடியர் கூட்டத்திலே நிலைபெற்ற வன்பிலே, மலைவற்ற மெய்ஞ்ஞான ஞேயத்திலே புனிதநாள் மட்டிலே மனதுசெல' என்றார். திருவருளை அடையவுந் திருவருட்சகாயம் வேண்டும் ஆதலின் 'நினதருளு மருள்வையோ' என்றார். 2

இறைவியே! தத்துவங்களைக் காட்டியருளிய நின்னை மறவே னெனல்

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போதபூ ரணவெளிக்கு
ளேதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
வெல்லாஞ்செய் வல்லசித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கும்
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலுவாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
மாமருந் துக்கமிர் தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே.

(ப-ரை) வேதம்-வேதங்கள், முதலான-முதலாகிய, நல்-நல்ல, ஆகமம்-ஆகமங்களின், தன்மை-தன்மையை, விளக்கும்-விளக்கிக்காட்டுகின்ற, உள்-அக, கண்-கண், இல்லார்க்கும்-இல்லாதவர்களுக்கும், மிக்க-மேலாகிய, நின்-தேவரீருடைய, மகிமையை-பெருமையை, கேளாத - கேட்காத, செவிடர்க்கும்-செவிடர்களுக்கும், வீறு - மிகுந்த, வாதம்-வாதம், புகலும் - பேசுகின்ற, வாய் - வாயையுடைய, வாத - வாத, நோயாளர்க்கும் - நோயாளிகளுக்கும், எட்டாத - எட்டப்படாத, மு-மூன்று, கண் - கண்களை, உடை-உடைய, மா-பெரிய, மருந்துக்கு-அமிர்தத்திற்கு, அமிர்தமே - அமிர்தமாக இருப்பவளே!, வரை-மலை, ராஜனுக்கு-அரசனுக்கு, இரு-இரண்டு, கண்-கண்களின், மணி-மணியாக, உதித்த - அவதரித்தருளிய, மலை - இமயமலையினிடத்தே, வளர்-



வளர்ந்த, காதலி-(தாயும் தந்தையும்) விரும்பத்தகுந்த, பெண்-புத்திரியாகிய, உமையே-உமாதேவியே!, பூதம்-பிருதிவி முதலியவைகள், முதலாகவே-முதலாகவே, நாதம்-நாததத்துவம், பரியந்தம் - வரைக்கும், பொய்-பொய்யாம், என்று-என்று, என்னை-எனக்கு, காட்டி-அறிவுறுத்தி, என் - அடியேனின், போதத்தின்-அறிவின், நடு-மத்தியில், ஆகி-ஆகி, அடி-ஆதியும், ஈறும்-அந்தமும், இல்லாத-இல்லாத, போதம்-ஞானம், பூரணம்-நிறைவின், வெளிக்குள்-சிதாகாசத்தில், ஏதும்-ஏதவும் (ஒன்றும்), அற-இல்லாதபடி, நில்-நிற்பாயாக, என்று-என்று, உபாயமா - உபாயமாக, வைத்து - வைத்து, நினைவு-எண்ணங்களை, எல்லாம்-எல்லாம், செய் - செய்யக்கூடிய, வல்ல - வல்லமைகொண்ட, சித்தாம்-ஞானமாகிய, இன்பம்-ஆனந்தம், உருவை-வடிவை, தந்த-தந்தருளிய, அன்னையே - தாயே!, நின்னையே - தேவரீரையும், எளியேன் - ஏழையேன், மறந்து-மறந்து, உய்வனோ-உஜ்ஜீவிப்பனோ எ-று.

(வி-ரை) பூதமுதலாக என்றது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்கள் முதலாக வைத்து எண்ணப்பெறும் ஆத்மதத்துவம் இருபத்திநான்கு, வித்தியாதத்துவம் ஏழு, சிவதத்துவம் ஐந்து ஆகிய உண்ணிலைக்கருவிகளாகிய முப்பத்தாறு தத்துவங்களையும், புறநிலைக்கருவிகளாகிய பிருதுவியின்கூறு ஐந்து, அப்புவின்கூறு ஐந்து, தேயுவின்கூறு ஐந்து, வாயுவின்கூறு ஐந்து, ஆகாசத்தின்கூறு ஐந்து ஆகிய பூதகாரியங்கள் இருபத்தைந்தையும், தசவாயுக்கள், தசநாடிகள், வசனாதிகள் ஐந்து, வாக்கு நான்கு, குணங்கள் மூன்று, அகங்காரம் மூன்று ஆக தத்துவம் தொண்ணூற்றாறைக் குறித்தது. நாதபரியந்தம் என்றது பரமசிவனுடைய பராசத்தியருளினாலே குடிலையிலே தோன்றுவதாகிய நாததத்துவத்தை. ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து அருள்புரியும் தத்துவஞான முணர்த்துங்காலை தொண்ணூற்றாறு தத்துவங்களும் பொய்யாய்ப் போயொழிய இவைகட்குப் புறம்பாக இருக்குந் தன்னைக் காண்பனாதலின் இவ்வருளும் திருவருட்சத்தியின் சகாயமாதலினாலும், 'பூதமுதலாகவே நாதபரியந்தமும் பொய்யென் றெனைக்காட்டி' என்றார். இதனை,

"நாட்டுமைம் பூதமுதல் நாதமீ றாகுவன
காட்டுபொய் என்றென்னைக் காண்பித்து—கூட்டுறவால்
ஒன்றிரண் டென்னுமல் ஒன்றாகி நின்றநிலை
தன்னுசுக முத்தியெனச் சொல்"

என்ற அமுதவாக்கானும் அறியலாம்.

"அறிவுதனைக் கொண்டு அறிவுதனைக் கண்டே
அறிவுமய மாகின் அறிவதே யின்பம்"

என்றபடி

இறைவன் திருவருட்சகாயத்தால் அறிவு பெற்று, அறிவுமயமாகிய இறைவனைத் தரிசித்து அறிவுமயமாகி நிற்பின் அதுவே பரமானந்தம் ஆகும். ஆதலின் 'என் போதத்தின் நடுவாகி ... ... ... இன்பவுருவைத் தந்த அன்னையே' என்றார். அறிவுக்கறிவாய் இருத்தலின், 'போதத்தின் நடுவாய்' என்றார். அடியீறுமில்லாத என்றது - ஆதியும் அந்தமும் இல்லாமையை.

போதபூரணஒளி என்றது-ஞானபூரணமாகிய சிதாகாசத்தை. எதுமறநிற்றல் என்பது திரிகரண மௌனத்தை. சித்தாம் இன்பவுரு என்றது ஞானானந்த உருவை. உய்வனோ என்றதின் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இது விடைதழுவியவினா. உய்வனோ என்பது உய்யேன் என்ற பொருளது. திருவருட்சத்தியாகிய இறைவியினின்றே எல்லாந்தோன்றி நின்று, சுகித்து, மறைந்து, ஒடுங்குகின்றனவாதலின், 'அன்னையே' என்றார். இறைவன் திருவருளே ஆகிய திருச்சத்தியை, எல்லா உயிர்களுக்கும் அருளே புரியுந் தாயை மறந்தபேர் உய்வைப்பெறார் ஆதலின் 'நின்னையே யெளியேன் மறந் துய்வனோ' என்றார். வேதம் பொதுநூலும் ஆகமம் சிறப்புநூலும் ஆதலின் 'வேதமுதலானநல் லாகமத்தன்மையை' என, நல் எனும் அடைமொழி ஆகமத்திற்குத் தந்தார். வேதம் பொதுவும் ஆகமம் சிறப்பும் ஆதலை "வேதம் பசுவதன்பால் மெய்யாகம நூல்கள்" என்றதனா லறியலாம். உட்கண் என்றது ஞானக்கண்ணை. வேதப்பொருளையும் ஆகமப்பொருளையும் ஞானக் கண்ணே விளக்கிக் காட்டுமாதலின், 'வேதமுத லானநல் லாகமத் தன்மையை விளக்குமுட் கண்ணிலார்க்கு' என்றார். முக்கண்ணுடை மாமருந்தாகிய இறைவன் உட்கண்ணாகிய ஞானக்கண்ணாலன்றிக் காணமுடியாதவன் என்றமையால் ஊனக்கண்ணாகிய பசுவை அறிவாலும், அப்பசுவைப் பந்தித்து தொந்தித்தநிற்கும் பாச அறிவாலும் காணமுடியாதவன்என்பது **அருத்தா பத்தியாற்** பெறப்படும். இறைவன் ஞானக்கண்ணாலேயே காணப்படுவன் என்பது பெற்றாம். இஞ்ஞானக்கண்ணைத் திருவடிஞானம் எனவுங் கூறுவர். இதனை,

"ஊனக் கண்ணுங் கெட்டானே உற்றுப் பற்றிப் பந்திப்ப
தான பாச வறிவிற்கும் தானு விட்டான் விட்டானே
ஞானக் கண்ணாற் காண்பார்க்கு நல்ல இன்ப வடிவாக
மோன வின்பந் தலையெடுக்க முன்னே தோன்றி நின்றிடுமே"

என்ற **அமுதகவியானும்** அறியலாம்.

'வாத ரோயாளர்' எனப் பின் கூறியதால் வீறுவாதம் என்பதற்குக் குதர்க்கவாதத்தை மிகவும் பேசும் எனப் பொருள்கோடலே தகுதியுடைத்தாம். குதர்க்கவாதம் துன்பமே தருவதாதலின் 'வாத ரோயாளர்' என்றார். இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'வாதமாகிய ரோய்' எனவிரியும். 'மாமருந்து' ஈண்டு தேவாமிர்தத்தைக் குறித்தது; மருந்து போல்வானை மருந்து என்றது உவமை ஆகுபெயர். 'அமிர்தமே' இது அழிவில்லாமையைத் தருவது, அழிவில்லாதது என்னுங் காரணம் பற்றிவந்த காரணப் பெயர். 3

இறைவியே! அடியேன் அடியார் பணி செய்வ தென்றா னெனல்

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
மெய்யெலா முள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
வேதனைக ளுறவேதனுந்



துடியிட்ட வெவ்வினையை யேவினன் பாவிநான்
றொடரிட்ட தொழில்களெல்லாந்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
றொண்டர்பணி செய்வதென்றோ
வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி
லரிவையோர் பரவைவாயி
லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிக
ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண்ணுமையே.

(ப-ரை) அடி - பண்டைக்காலத்தே, இட்ட - இறைவனால் தந்தருளப் பெற்ற, செம்-செவ்விய, தமிழின் - தமிழினுடைய, அருமை - அருமையை, இட்டு-குறித்து, ஆரூரில்-திருவாரூரின் இடத்தே, அரிவை - பெண்ணாகிய, ஓர் - ஒப்பற்ற, பரவை - பரவை என்னும் திருநாமம்பூண்ட பெண்ணாரின், வாயில்-தலைவாயிலாகிய, அ-அந்தத் தலைவாயிலின், மட்டும்-வரைக்கும், அடி-தன் திருவடிகளை, இட்டு-வைத்து, நடை-நடையை, நடந்து-நடந்து, அருள்-அருளிய, அடிகள்-சிவபெருமானது, அடி - மூலமாகிய திருஅடி, ஈது-இது, முடி-திருமுடியாகிய அங்கம், ஈது-இது, என - என்று, வடி-வடித்து, இட்ட-சொல்லிய, மறை - வேதங்களை, பேசு - பேசுகின்ற, பச்சு - பசுமை நிறத்தையுடைய, இளம்-இளமையாகிய, கிள்ளையே-கிளிபோன்றவளே!, வளம்-வளப்பம், மருவு-பொருந்திய, தேவை - தேவை நகரியின்கண் எழுந்தருளி இருக்கும், அரசே - இறைவியே!, வரை - மலைகளின், ராஜனுக்கு - அரசனுக்கு (இமோத்பருவத ராஜனுக்கு), இரு-இரண்டு, கண்-கண்களின், மணி-மணிகள் போன்று, உதித்த-அவதரித்து அருளிய, மலை-இமயமலையினிடத்தே, வளர்-வளர்ந்த, காதலி-(தாயும் தந்தையும்) விரும்பத்தகுந்த, பெண்-புத்திரியாகிய, உமையே-உமாதேவியே!, மிடி - வறுமை, இட்ட - கொண்ட, வாழ்க்கையில்-வாழ்க்கையினால், உப்பு-உப்பை, இட்ட-வைத்த, கலம்-மண்பாண்டம், எனவும்-போலவும், மெய் - உடம்பு, எலாம் - எல்லாம், உள் - உள்ளூற, உடைந்து - உடைந்து, வீறு-மிகுதி, இட்ட - கொண்ட, செல்வர் - பிரபுக்களின், தலை-முன், வாசல்-வாசலிலே, வாசம்-வாசம், ஆய்-ஆகி, வேதனைகள்-துன்பங்களை, உற-அடைய, வேதனும் - பிரமனும், துடி-துடித்தலை, இட்ட - பொருந்திய, வெவ் - கொடிய, வினையை - வினைகளை, ஏவினன்-தூண்டிவிட்டான், பாவி-பாவியாகிய, நான் - அடியேன், தொடர் - ஆரம்பித்து, இட்ட - கொண்ட, தொழில்கள்-தொழில்கள், எல்லாம்-அனைத்தும், துண்டு-துண்டுகள், இட்ட-இடப்பட்ட, சாண் - ஒருசாண் அளவினதாய, கும்பியின் - வயிற்றின், பொருட்டு-காரணமாகவே, ஆயது-ஆயிற்று, (இதனைவிட்டு) உன்-தேவரீரின்,

தொண்டர்-அடியார், பணி-பணிகளை, செய்வது - செய்திடுவது, என்றோ-எந் தக்காலமோ? எ-று.

(வி-ரை) மிடியிட்ட வாழ்க்கை என்றது - தரித்திர வாழ்க்கையை. வறுமை நோயால் உள்ளம் பெரிதும் துன்புற்று உடையும் தேகம் மெலியும் ஆதலினால், 'மிடியிட்ட வாழ்க்கையா உப்பிட்ட கலமெனவு மெய்யெலா முள்ளுடைந்து' என்றார். உப்பிட்ட பாத்திரம் புறத்தே நன்கு தோன்றி னும் உட்பக்கத்தே உளுத்துப் பொடியாய் உதிர்வதுபோல உடம்பும்புறத்தே அந்தமாகச் சட்டவட்டமாகத் தோன்றினும் உள்ளத்தே விதனம் முதலிய வற்றால் பதனழிந்து கெட்டிருக்கும்; இதுகொண்டே உப்பிட்ட கலத்தை ஒப்பிட்டுக் கூறினர். **பட்டினத்தடிகளும்**, "ஊறை யிறைக்கின்ற உப்பிருந்த பாண்டத்தை" என்றார். இன்னும் பிறரும், "பொத்தை யூன்சுவர் புழுப் பொதிந் துளித்த சும்பொழுகிய பொய்க்கூரை" என்றனர். இதனாலேயே **திருவள்ளுவரும்**, "நெருப்பினுட் டுஞ்சலு மாகுநிரப்பினுள் யாதொன்றுங் காண்பா டரிது" என்றார்.

"தரித்திரங் களிப்பாங் கடலுக்கோர் வடவை சாற்று
மெண்ணங்கள் வாழிடமாந்
தரித்திரம் பற்பறுக்க முந்தோன்றத் தக்கபே
ராகர மென்ப
தரித்திர நன்மைசா லொழுங்கென்னுந் தழைவனந்
தனக் கழறழலாந்
தரித்திரங் கொடிய வெவற்றினுங் கொடிதத் தகையதை
யொழித்தனன் றாமே"

என்னுங் **குசேலோபாக்கியானச்** செய்யுளாலும் அறியலாம்.

வறுமை யுற்றோர் தம் வறுமையினால் வரும் நோவைத் தீர்த்துக்கொள்ள அவர் தம் தலைவாயிலில் நின்று இரப்பர் ஆதலினால் 'வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய் வேதனைகளுற' என்றார். இதனை.

"வித்தி நல்லறம் விளைந்த வதன்பயன்
துய்ப்போர் தம்மனைத் துணிச்சித றுடுத்து
வயிறுகாய் பெரும்பசி யலைத்தற் கிரங்கி
வெயிலென முனியாது புயலென மடியாது
புறங்கடை நின்று புன்கண் கூர்ந்து
முறங்கடை நில்லா தயர்வோர் பலரால்"

என்னும் **மணிமேகலை** யடிகளாலும் அறியலாம். **பட்டினத்தடிகளும்**, "செல்வரைப் பின்சென்று சங்கடம் பேசித் தினந்தினமும் பல்வினைக் காட்டிப் பரதவியாமல்" என்றதூஉங் காண்க.

பிரமன் வேதங்களை ஓதுகின்றவன் ஆதலின் 'வேதா' என்னும் பெயர் பெற்றான். 'வெவ்வினை' வெம்மையதாகிய பிறவிநோய் செய்தலின், இன்ப துன்பங்களில் உழலச் செய்தலின் வினையை 'வெவ்வினை' என்றார். மக்கள்



உலகில் படும் இராப்பாடும், பகற்பாடும் சாப்பாட்டிற்கே யாதலினால், 'பாவி நான் றெருட்டிட்ட தொழில்க ளெல்லாம் துண்டிட்ட சாண்கும்பியின் பொருட் டாயது' என்றார். இதுகொண்டன்றோ **பட்டினத்தடிகளும்**,

"பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே" என்றார்.

"சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையா
னாழி யரிசிக்கே நாம்"

என்ற **நல்வழி வெண்பாப்** பொருளையும் கண்டு தெளிக.

சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தூதாளாகத் திருவாரூரில் பரவைநாய்ச்சியார் வாசற்படிக்கு நடந்தது, அச்சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாசுரத்து அருமையாதலின், 'வழியிட்ட செந்தமிழி னருமையிட் டாரூரி லரிவையோர் பரவைவாயி லம்மட்டு மடியிட்டு நடைநடந் தருளடிகள்' என்றார். இதனை,

"அரவக லல்குலார்பா லாசை நீத்தவர்க் கேவீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னை
பரவைதன் புலவி தீர்ப்பான் சமுதுகண் படுக்கும் பானு
ளிரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்"

என்ற **திருவிளையாடற் புராணச்** செய்யுளாலும் அறியலாம்.

'அரிவை' இது பெண்களின் எழு பருவங்களில் ஒரு பருவத்துப் பெயர். ஈண்டு பெண்ணைக் குறித்தது. இது ஆகுபெயர். 'நடை நடந்தருளடிகள்' என்றது சிவபெருமானை. 'பசுமை' என்னும் பண்புப்பெயர் 'பச்' என நின்றது. கிளிபோலும் மொழி யுடைமையின் இறைவியைக் கிள்ளையே என்றார். கிள்ளை போல்வளைக் கிள்ளை என்றது உவமையாகுபெயர். 4

இறைவியே! தேவரீரின் திருநாமத்தை உச்சரிக்கும் அடியார்நாம
முச்சரிக்குமுடிவதோ வெனல்

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகிஎழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புட்பமிசை வீற்றிருக்கு
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்திஎன் றுன்
னாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்கவசமோ

ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடியீன்ற
வன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே.

(ப-ரை) ஆர் - ஆத்திமாலையை, அணி - அணிந்தருளும், சடை - சடாபாரத்தையுடைய, கடவுள் - சிவபெருமான், ஆரணி-வேதமுதல்வியே, என என்று, புகழ்-துதிக்க, அகில-எல்லா, அண்டகோடி - அண்டகோடிகளையும், ஈன்ற-பெற்றருளிய, அன்னையே-தாயே, பின்னையும்-(அகிலாண்டகோடிகளை எல்லாம்) பெற்ற பிறகும், கன்னி-கன்னிகை, என-என்று, மறை-வேதங்கள், பேசும் - துதிக்கின்ற, ஆனந்தம்-சுக, ரூபம் - வடிவம்கொண்ட, மயிலே-மயில் போன்றவளே!, வார் - இரவிக்கையை, அணியும் - அலங்கரிக்கின்ற, இரு- இரண்டு, கொங்கை - தனங்களையுடைய, மாதர்-பெண்கள், மகிழ்-மகிழும்படியான, கங்கை-கங்காதேவியினால், புகழ்-புகழப்பெற்ற, வளம்-வளப்பம், மருவு-பொருந்திய, தேவை - தேவைநகரியில் எழுந்தருளியிருக்கும், அரசே-இறைவியே!, வரை-மலைகளின், ராஜனுக்கு-அரசனாகிய இமோத் பருவதராஜனுக்கு, இரு-இரண்டு, கண் - கண்களின், மணியாய் - மணியாக, உதித்த - தோன்றியருளிய, மலை-இமயமலையினிடத்தே, வளர்-வளர்ந்தருளிய, காதலி - (தாயும் தந்தையும்) விரும்பும், பெண் - புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, பூரணி - பூரணி என்றும், புராதனி - புராதனி என்றும், சுமங்கலை - சுமங்கலை என்றும், சுந்தரி-சுந்தரி என்றும், புராந்தகி - புராந்தகி என்றும், திரியம்பகி-திரியம்பகி என்றும், எழில் - அழகுபொருந்திய, புங்கவி - புங்கவி என்றும், விளங்கும் - விளங்குகின்ற, சிவசங்கரி - சிவசங்கரி என்றும், சகஸ்ர-ஆயிரம், தளம்-இதழ்கள் கொண்ட, புட்பம் - புஷ்பத்தின், மிசை-மேலே, வீற்றிருக்கும்-எழுந்தருளி இருக்கும், நாரணி - நாரணி என்றும், மநம் - மனத்திற்கு, அதீதம்-எட்டாத, நாயகி - இறைவி என்றும், குணம் - குணத்தை எல்லாம், அதீதம்-கடந்த, நாதம்-நாதத்தின், அந்தம்-முடிவில்விளங்கும், சத்தி-சத்தி என்றும், உன் - தேவரீரது, நாமமே - திருநாமங்களையே, உச்சரித்திடும்-உச்சரிக்கின்ற, அடியார் - சிவனடியார், நாமமே - திருப்பெயர்களையே, நான்-அடியேன், உச்சரிக்க-ஜெபிக்க, வசமோ-வசமாகுமோ? எ-று.

(வி-ரை) சத்தியாகிய உமாதேவியும், சத்தனாகிய சிவபெருமானும் அபேதம் ஆதலினாலும் சத்தியுஞ் சத்தனும் பிரிந்திருப்பதில்லை யாதலினாலும், சிவபெருமானுக்குரிய புகழனைத்தும் உமாதேவியாருக்கும் உண்டு. இதனை,

"அருளது சத்தியாகு மரன்றனக் கருளையின்றித்
தெருள்சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தியில்லை



மருளினை யருளால்வாட்டி மன்னுயிர்க் களிப்பன்கண்கட்
கிருளினை யொளியாலோட்டு மிரவியைப் போலவீசன்" எனவும்,

"சத்தியாய் விந்துச் சத்தியாய் மனோன்மணிதானாகி
யொத்துறு மகேசையாகி யுமைதிரு வாணியாகி
வைத்துறுஞ் சிவாதிக்கிங்ங னுருஞ்சத்தி யொருத்தியாகும்
எத்திற னின்றானீச னத்திற மவளுநிற்பள்"

என்ற **சிவஞானசித்தியார்** வாக்காலும் அறியலாம்.

பூரணி என்றது - இறைவன் பூரணன் ஆதலின், அவனின்றும் அபின்னமாய்நிற்கும் இறைவியை 'பூரணி' என்றார். அதாவது நிறைவு - உடையவளே என்பது பொருள். புராதனி என்றது - இறைவன் பழம் பொருளுக்கும் முன்னைப்பழம் பொருளாய் விளங்குபவன் ஆதலின் இறைவியினின்றும் அபின்னமாய் நிற்கும் சத்தியாகிய இறைவியை 'புராதனி' என்றார். சுமங்கலை என்றது - நித்திய மங்கலியத்தையுடையவள் என்பது பொருள். என்னை? இறைவன் ஏனைத்தேவர்கள் போலச் செத்துப் பிறப்பவன் அல்லன் ஆதலின் 'சுமங்கலை' என்றார். இதனானன்றே **சௌந்தரலகரி** யாசிரியரும்,

"வேத ரஞ்சகன்மால் புரந்தரன் வேகசண்ட குபேரனே
டாதி யெண்டிசை பாலர்பொன்றவு மாதியந்த மிலாததோர்
நாதர் பொன்றிலரே துன்மங்கல நாணுறுந் திறமாதலால்
நீ தழைத்தது யோகாம்பிகை நீலமென்பது பாவமே"

எனக் கூறியருளினர்.

இறைவன் தன்வயத்தனாதலின் இறைவியுந் தன்வயத்தியே என்பார் 'சுதந்தரி' என்றார். இறைவன் திரிபுராதியர்களின் திரிபுரத்தை எரியெழத் தகித்தருளினன் ஆதலின், அவனின் வேறாகாத அவன் திருவருளேயாகிய சத்தியாகிய உமாதேவியாரை 'புராந்தகி' என்றார். இறைவன் திரியம்பகம் என்னும் வில்லைத் தாங்கியுள்ளவன் ஆதலின் இறைவியையும் 'திரியம்பகி' என்றார். 'திரியம்பகம்' இது சிவபெருமான் திருக்கையில் கொண்டிருக்கும் வில்லின்பெயர். இறைவனும் அவனின் வேறாகாத திருவருளாகிய சத்தியும் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கி பரிசுத்தமுடைமையின் 'எழிற்புங்கவி' என்றார். எல்லா உயிர்களுக்கும் இன்பத்தை அருளும் இறைவனின் திருவருட் சத்தியாதலின் இறைவியைச் 'சங்கரி' என்றார். சஹஸ்ரதள புஷ்பமிசை வீற்றிருக்கும் நாரணி என்றது, இறைவி மூலாதாரம் முதலாகவுள்ள ஆறு ஆதாரங்களுக்கும் மேலே லலாட ஸ்தனத்திலே ஆயிரம் இதழ்களுடனே யிருக்கும் தாமரைமலரின் நடுவே வீற்றிருப்பவள் ஆதலின் 'சஹஸ்ரதள புஷ்பமிசை வீற்றிருக்கும் நாரணி' என்றார். இதனை,

"மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு
முதுகளம்விற் புருவநடு மொழிவதாறு
ஞாலமுமென் புனலுமனற் பிழம்புங் காலு
நாதமுறு பெருவெளியு மனமுமாக

மேலணுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பான்
மென்கமலத் தாயிரந்தோட் டருணபீடத்
தாலவிடம் பருகியதன் மகிழ்ந ரோடு
மானந்த முறும்பொருளை யறியலாமே"

என்பதனால் இனிது அறியலாம்.

நாரணி என்றது இறைவனுக்கு நாராயணன் என்னும் திருநாமம் உண்டாதலின் இறைவியை 'நாரணி' என்றார். இந்நாரணன் என்னும் திருநாமம் சிவபெருமானுக்குக் காரணக்குறியாகவும், விண்டுவுக்கு இடுகுறியளவாகவும் வழங்குவதாம். இறைவி பசுஞானம், பாசஞானங்களுக்கு எட்டாதவள் ஆதலின் 'மநாதீதநாயகி' என்றார். இறைவி அசுத்த மாயாசம்பந்தப்பட்டதாகிய குணங்களை எல்லாங் கடந்து நாதத்தத்துவத்திற்கு மேற்பட்டு விளங்குபவள் ஆதலின் 'குணாதீத நாதாந்த சத்தி' எனக் கூறினார். 'அடியார் நாமமே நானுச்சரிக்க வசமோ' என்றதனால் அடியார் மாட்டுள்ள பத்தி குறித்ததாயிற்று. என்னை அடியாரைப் பத்திசெய்வோர் அரன்பத்தி செய்பவரிலும் அதிகம் என்பாராதலின். இதனை,

"செல்வமென்ன கீர்த்தியென்ன சித்தியென்ன கற்றிடுங்
கல்வியென்ன வீங்கிவற்றி னாற்பயன்கள் காண்பரோ
நல்லதென் கலைசைமேய நாதனன்பர் நாமமே
சொல்லியேத்தி யேவல்செய் தொழும்பர்காண வல்லரே"

என்ற **கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதிச்** செய்யுளாலும் அறியலாம். இன்னும்,

"நீறு கண்டிகை புனைந்துநந் திகழ்வடி வென்னக்
கூறி லிங்கபூ சனைபுரி குணத்தரை நாமாத்
தேறு கின்றவ ரொழிவில்பே ரின்பமெய்த் தேவர்
வேறு கண்டவர் வெந்துயர் விடாததீ நரகர்"

என்ற **திருக்கூவப் புராணச் செய்யுளா**லும் அறியலாம்.

ஆர் அணி சடை என்பதற்கு - அழகு நிறைந்த சடை என்றும் பொருளாம். இறைவி வேதமுதல்வி ஆதலின், 'ஆரணி' என்றார். இறைவியே இறைவனின் திருவருட் சத்தியாய் நின்று எல்லா அண்டகோடிகளையும் ஈன்றருள்கின்றாளாதலின், 'அகிலாண்ட கோடியீன்ற அன்னையே' என்றார்.

"ஈசனரு ளிச்சையறி வியற்ற வின்ப
மிலயமொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவ மாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகிப்
பேசரிய வுயிரையெல்லாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையுமொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்"

என்ற **சிவஞானசித்தியாரா**லும்,



"அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
மண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதா யினானு
மண்டங்க ளுள்ளும் புறப்புங்கரி யாயி னானு
மண்டங்க ளீன்றா டுணையென்ப ரறிந்த நல்லோர்" எனவும்,

"பங்கயற்க ணரியபரம் பரனுருவே தனக்குரிய
படிவ மாகி
யிங்கயற்க ணகனுலக மெண்ணிறந்த சராசரங்க
ளீன்றுந் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற்குமரி பாண்டியன் மகள்போற்
கோலங் கொண்ட
அங்கயற்க ணம்மையிரு பாதப்போ தெப்போது
மகத்துள் வைப்பாம்"

எனவும் வரும் **திருவிளையாடற் புராணச்** செய்யுளாலும் அறியலாம்.

இறைவி சர்வாண்ட கோடிகளையும் பெறாது பெற்றவள் ஆதலின், 'பின்னையுங் கன்னியென மறை பேசு மானந்த ரூப மயிலே' என்றார். இதனை,

"சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்று
முவந் திருவரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன் பிரமசாரி யாகும் பான்மொழி கன்னி யாகும்
தவந்தரு ஞானத் தோர்க்கித் தன்மைதான் றெரியு மன்றே"

என்பதனால் அறியலாம்.

மறை பேசும் - என்றது மறைகளாற் றுதிக்கப்படுதலை. இனி மறையை மொழிந்தருளும் என உரைப்பாரும் உண்டு. இறைவி சுகரூபி ஆதலின் 'ஆனந்தரூப மயிலே' என்றார். மயிலே என்றது மயில்போலுஞ் சாயலை உடையவளே என்ற பொருளது. இது உவமைஆகுபெயர். வாரணியும் இருகொங்கை மாதர்கள் கண்டுமகிழும் கங்கையால் புகழ் எனவும், வாரணியும் இருகொங்கை மாதர்கள் கண்டுமகிழும் சிறப்புடையவளும், கங்கையால் புகழப்படுபவளும் ஆகிய வளமருவு தேவையரசே எனவும், வாணியும் கொங்கை மாதராகிய மகிழ் கங்கைபுகழ் வளமருவு தேவையரசே எனவும் பொருள் கொள்ளக் கிடத்தல் காண்க. 5

இறைவியே! தேவரீரைப் பாகம்பெறப்பாடுதல் முதலியவைகளைச்
செய்ய வறியேன் எனல்

பாகமோ பெறவுனைப் பாடவறி யேன்மல
பரிபாகம் வரவுமன திற்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரவென் றாற்கள்ள மனதுமோ மெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்

மோகமோ மதமோ குரோதமோ லோபமோ
    முற்றுமாற் சரியமோதான்
முறியிட் டெனைக்கொள்ளும் நிதியமோ தேடவெனின்
    மூசுவரி வண்டுபோல
மாகமோ டவும்வல்லன் எனையாள வல்லையோ
    வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
    வளர்காத லிப்பெணுமையே.

(ப-ரை) வளம்-வளப்பம், மருவு-பொருந்திய, தேவை - தேவைநகரியில் எழுந்தருளி இருக்கும், அரசே-இறைவியே!, வரை-மலைகளின், ராஜனுக்கு-அரசனாகிய இமோத் பருவத ராஜனுக்கு, இரு - இரண்டு, கண்-கண்களின், மணி-மணி, ஆய்-ஆகி, உதித்த-அவதரித்தருளிய, மலை-இமோத் பருவதத்தின் கண்ணே, வளர்-வளர்ந்தருளிய, காதலி - (தாய் தந்தையர்களால்) விரும்பப் பெறும், பெண்-புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, உனை-தேவரீரை, பாகமோ-நயத்தையோ, பெற-அடைய, பாட-பாடுதற்கு, அறியேன்-அறியாதவனாக இருக்கின்றேன், மலம்-மலம், பரிபாகம்-பரிபாகம், வரவும்-உண்டாகவும், மனதில்-அடியேனின் மனத்தினிடத்தில், பண்புமோ - நற்குணமுமோ, சற்றும்-சிறிதும், இலை-இல்லை, நியமமோ-நியமங்களையோ, செய்திட-செய்யவெனின், பாவியேன் - பாவியாகிய அடியேனினுடைய, பாபம் - பாபத்தின், ரூபம்-வடிவம் ஆகிய, தேகமோ - உடம்போ, திடம் - வலிவு, இல்லை-இல்லை, ஞானமோ-ஞானத்தையோ, கனவிலும் - கனவிலாகிலும், சிந்தியேன் - நினையேன், பேர்-பெரிய, இன்பம்-இன்பத்தை, சேர-அடையலாம், என்றாலே என்னிலோ, கள்ளம்-வஞ்சகத்தன்மையுடைய, மனது-மனதும், மெத்தவும்-மிகவும், சிந்திக்குது-ஆலோசியா நிற்கின்றது, என்-அடியேன் என்ன, செய்குவேன்-செய்யக்கடவேன், மோகமோ-மோகம் மாத்திரமோ, மதமோ - மதம் மாத்திரமோ, குரோதமோ - குரோதம் மாத்திரமோ, லோபமோ - லோபம் மாத்திரமோ, முற்றும்-முதிர்ந்துள்ளதாகிய, மாற்சரியமோ - மாற்சரியமும், (ஆகிய இவைகள் எல்லாம்) முறி - முறியோலை, இட்டு - எழுதிக்கொண்டு, எனை-அடியேனை, கொள்ளும்-அடிமையாகக் கொள்ளும், (இவற்றினிடையே) நிதியமோ - திரவியத்தையோ, தேட-தேடுவோம், எனின்-என்றாலோ, மூசு-மலர்களிலே மொய்க்கும், வரி-கோடுகளைக் கொண்டுள்ள, வண்டு-வண்டுகள், போல-போல, மாகம் - (பூமியிலே மாத்திரம் அன்றி) ஆகாயத்திலும், ஓடவும்-ஓடவும், வல்லன் - வல்லவனாக இருக்கின்றேன், (இத்தன்மையுடைய) எனை-அடியேனை, ஆள - ஆட்கொள்ள, வல்லையோ - வல்லமை யுள்ளவளாக இருக்கின்றனையோ? எ-று.

(வி-ரை) பாகமோ என்றது சொல்லின்பம், பொருளின்பம், நடையின்பம், தொடையின்பம், அணியின்பம், முதலான சந்த இன்பங்களை. இதன்ஈற்றில் நின்ற ஓகாரம் எதிர்மறைப் பொருள்தந்து நின்றது. பாட்டுக்கருள்வோன்



பரமன் ஆதலின், அவன் பாகப் பாவையாகிய உமையையும் பாடிப் பாவிப் பயன்பெற்றோர் பலராதலின் 'பாடவறியேன்' என்றார். "பாட்டுக்கருளும் பரமா" "பாடலுகந்தாய்" "பாடுவார் பாடலுக் குவப்பாய் போற்றி" "பண்ணார்ந்த பாடல்கேட் டின்புற்றாய்" "பாட்டுக்கு மாட்டுக்கும் பண்பா போற்றி" எனத் **தேவார** முதலிய திருமுறைகளிற் பயின்று வந்ததூஉங் கண்டு தெளிக. இருவினையொப்பு வந்தகாலத்து மலபரிபாகம் எய்தும். சத்திநிபாதம் உண்டாகும் இதற்கு மனஞ் செம்மையுறல் வேண்டும். மனஞ் செம்மையுறலாவது-அடக்கம், வாய்மை, தெளிவு முதலிய எய்தல். மலபரிபாகம் சிவாநந்தப்பேறு எய்துதற்கு வேண்டற்பாலது, ஆதலின் 'மலபரிபாகம் வரவு மனதிற் பண்புமோ சற்றுமிலை' என்றார். இலை-இது இல்லை என்பதன் தொகுத்தல் விகாரம். நியமம் என்றது சரியை, கிரியை, யோக முறைகளைக் குறித்து நின்றது. ஜெப தபங்களை எனினும் ஆம். சரியை, கிரியை, யோகானுஷ்டானங்களைச் செய்தற்குத் தேகதிடம் வேண்டப்படுதலின், 'நியமமோ செய்திடப் பாவியேன் பாபரூப தேகமோ திடமில்லை' என்றார்.

இத்தேகம் வினையினை லெடுத்த தேகம் ஆதலின் 'பாபரூபதேகம்' என்றார். ஞானத்தைச் சிந்திக்க திருவருட் சகாயம் வேண்டுமாதலினாலும், அதற்குத் தவம் வேண்டு மாதலினாலும், தான் தவஞ் செய்யாமையாலும் 'ஞானமோ கனவிலுஞ் சிந்தியேன்' என்றார். என்னை? "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றதனால் என்க. 'கனவிலும்' என்றதன்கண் உள்ள உம்மை இழிவுச் சிறப்புப் பொருளது. பேரின்பம் - என்பது முத்தியின்பத்தை. தானல்லாதவற்றைத் தானாகவும், தனதல்லாதவற்றைத் தன்னதாகவும் கருது மனம் ஆதலின் 'கள்ள மனம்' என்றார். மெத்தவுஞ் சிந்திக்குது - என்றது தனக்குத் தவமில்லாமையால் முத்திமார்க்கத்திற் செல்ல ஒட்டாது அதற்கு மாறாய விஷயங்களையே எண்ணுகின்றது என்பதாம். இனி, மலைத்து நிற்கின்ற தென்பாரும் உண்டு. 'சிந்திக்குது' இது 'சிந்திக்கின்றது' என்பதன் மரூஉ விகாரம். சிதைவு எனினும் ஆம். மோகம்-என்றது பெண்களிடத்துக் கொண்ட காமஇச்சை. மதம் - இது 'யான்' எனக் கொள்ளும் அகங்காரம். குரோதம் - என்றது க்ஷாத்திரஞ் சாதித்தலை; பழம்பகை எனினும், தீராப்பகை எனினும் பொருந்தும். லோபம்-என்றது பிசினாறித்தனத்தை. மாற்சரியம்-என்றது இது உட்பகை ஆறினில் ஒன்று. இதுபொறாமைபற்றி எழுவது. முறையிட்டுக்கொள்ளும் என்றது உரிமைபற்றி வந்து ஆட்கொள்ளுதலை. மோகமோ, மதமோ, குரோதமோ, லோபமோ, மாற்சரியமோ என்றதகண் உள்ள ஓகாரங்க ளனைத்தும் தெரிநிலைப் பொருளன. இதனை, "ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே" என்ற **சூத்திரத்தா** லறியலாம். இதனை, அசைநிலை என்பாரும் உண்டு. மாகம் - என்றது ஆகாயத்தினை. பூமியில் ஓடி யலைவது மாத்திரமின்றி ஆகாயவழியாக ஓடவும் வல்லமை கொண்டிருக்கின்றது என்பதனைக் குறித்தது. "திரைகட லோடியுந் திரவியந்தேடு" என்றபடி பூமியெல்லா மோடி உழன்று, கடலைக் கடந்து சென்று

ஓடிமுயன்று சம்பாதிப்பது மன்றி ஆகாயவிமானி வழியாய் ஆகாயத்துஞ் சென்று பொருள் தேடுகின்றா ராதலின் 'நிதியமோ தேடவெனின் மூசுவரி வண்டுபோல மாகமோடவும் வல்ல' என்றார். 'நிதியமோ' என்றதன் ஈற்று ஓகாரம் பிரிநிலைப்பொருளில் வந்தது. வல்லையோ - என்றது இத்தகைய இழிந்த வெனக்கும் அருள் செய்வையோ எனும் பொருள் தந்தமையின் வினாப்பொருளில் வந்தது. இவ்வினா ஐயவினா எனப் பெறும். 'எனையாள' இதில் 'எனை' என்றது 'என்னை' என்பதன் தொகுத்தல் விகாரம். 6

இறைவியே! வினைப்போகமாகிய சரீரத்தினிடத்தே அகப்பட்டு
அடியேன் அலைவது தகுதியோ என்கின்றனர்

தூளேறு தூசுபோல் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கிநாளுஞ்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவையெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றி
னட்பேற வுள்ளுடைந்து
நயனங்க ளற்றதோ ரூரேறு போலவே
நானிலந் தனிலலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே.

(ப-ரை) வேள்-மன்மதன், ஏறு-ஏறி நடத்தும், தந்தியை -(இருளாகிய) யானையை, கன - பருத்த, தந்தியுடன் - யானைகளுடன், வென்று-ஜயித்து, விரை-வாசனை, ஏறு-மிகுந்த, மாலை - மலர்மாலைகளை, சூடி-அணிந்து, விண்-ஆகாயத்தில், ஏறு-ஏறிச் சஞ்சரிக்கின்ற, மேகங்கள்-மேகங்கள், வெற்பு-மலை, ஏறி-ஏறி, மறைவுற-மறைத்துக்கொள்ள, வெருட்டிய - அச்சுறுத்திய, கரும்-கருமையாகிய, கூந்தலாய் - கூந்தலை உடையவளே!, வாள் - வாளாயுதத்தின் தன்மையை, ஏறு - கொண்டுள்ள, கண்ணியே - திருநேத்திரங்களை உடையவளே!, விடை - ரிஷபத்தை வாகனமாக, ஏறும்-ஏறிச்செலுத்தும், எம்-அடியோங்களுடைய, பிரான் - பெருமானுடைய, மனதுக்கு - மனத்தினுக்கு, இசைந்த-ஒத்த, மயிலே - மயில்போன்ற சாயலை உடையவளே!, வரை - மலைகளின், ராஜனுக்கு-அரசனாகிய இமோத்பருவத ராஜனுக்கு, இரு - இரண்டு, கண்-கண்களின், மணியாய்-மணியாக, உதித்த-தோன்றியருளிய, மலை-இமய



மலையினிடத்தே, வளர்-வளர்ந்தருளிய, காதலி-(தாயும் தந்தையும்) விரும்பும், பெண் - புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, தூள் - அழுக்கினுடைய அணுக்கள், ஏறு - அடைந்துள்ள, தூசு - வஸ்திரம், போல - போல, வினை-கன்மம், ஏறு - சேர்ந்த, மெய் - சரீரம், எனும் - என்கின்ற, தொக்கினுள் - தோற்பையுள்ளே, சிக்கி - அகப்பட்டு, நாளும்-எந்நாளும், சுழல் - சுழற்சி, ஏறு-மிகுந்த, காற்றின் - காற்றின், இடை - இடையே அகப்பட்ட, அழல் - நெருப்பு, ஏறு-இடப்பட்ட, பஞ்சு-பஞ்சு, என-என்று சொல்லும்படி, அறிவை-அடியேனுடைய அறிவை, எல்லாம்-முற்றும், சூறையிட்டு-சூறையாடி, நாள்-நாட்கள், ஏற-செல்ல, நாள்-நாட்கள், ஏற-செல்ல, வார்த்திகம்-கிழப்பருவம், எனும்-என்கின்ற, கூற்றின் - யமனினுடைய, நட்பு-சிநேகம், ஏற-மிக உண்டாக, உள்-மனம், உடைந்து-கலங்கி, நயனங்கள்-கண்கள், அற்ற - இல்லாத, ஓர்-ஒரு, ஊர்-ஊரிற்றிரியும், ஏறு-பன்றியை, போலவே-ஒப்பவே, நான்-அடியேன், நிலம் - உலகம், தனில் - தன்னில், அலையவோ - அலைவது உனக்குத் திருவுளச் சம்மதமோ? எ-று.

(வி-ரை) தூள் என்றது - அழுக்குகளின் பரமாணுக்களை. இனி புழுதி எனினும் ஆம். ஏறுதல் ஈண்டு படிதலை. தூசு என்றது - வஸ்திரத்தை. அழுக்கின் றூள் வினைக்கூட்டத்திற்கு உவமம் ஆயது. என்னை? மிகுதிபற்றி என்க. தூள் ஏறுதல் வினைவந்தடைதற்கு உவமம். தூசு வினை ஏறு மெய்க்கு உவமம். பிராரத்துவம், சஞ்சிதம், ஆகாமியம் எல்லாம் தொடர்ந்துபற்றிக் கோடலின் 'தூளேறு தூசுபோல் வினைஏறு மெய்' என்றார். பொய்யாகிய உடலை 'மெய்' என்றது மங்கலவழக்கு. இடுகாட்டை நன்காடெனவும், கருப்புஆட்டை வெள்ளாடு என்பதும் போன்றது. தொக்கு என்றது தேகத்தை. தேகம் தோற்பையாதலின் தொக்கு என்றார். இது சினையாகுபெயர். இதனை,

"நார்த்தொடுத் தீர்க்கிலென் னன்றாய்த் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர்—பழிக்கிலென்
றோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால்"

என்ற நாலடியார்ச் செய்யுளானும் அறியலாம்.

சுழலேறுகாற்று என்றது - சுழன்று வீசும் பெருங்காற்றை. இதனைச் சூறாவளிக்காற்று எனவுங் கூறுவர். அழல் என்றது ஈண்டு நெருப்பை. 'அழலேறு பஞ்சு' என்பது நெருப்புப்பற்றிய பஞ்சுக் காற்றும் நெருப்புங் கலந்தால் எத்தகைய வலிய பொருளையும் தகித்து அழித்துவிடும். நொய்ய தாம் பஞ்சு சூறைக்காற்றும் நெருப்புங் கலந்து அழிக்கப் புகுந்தால் எம்மாத்திரம் என்பது தோன்ற 'சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்சென்' என்றார். சூறையிட்டு என்பது கொள்ளை கொடுத்தலை. நாளேற நாளேற இது மிகுதிக்கண் அடுக்கிவந்தது. நரை, திரை, மூப்பு, பிணி, இவைகள் எல்லாம் எமன்விடு தூதுவர்கள் ஆதலின் 'வார்த்திக மெனுங்கூற்றி னட்பேற' என்றார். இக்கருத்துக்கொண்டே ஓர் பெரியாரும்,

“உதித்தநாட் டொட்டே உயிர்தனைக் காலன் உற்றெடுத் தோடிட நின்றான்
விதித்தவா றதிலோ நூறிலோ கொடுபோய் விடுவனே வீணெனம் எதற்கே
கதித்ததே மூப்பு நரைதிரை யின்னுங் கண்டறிந் திலாய்கொலோ பேதாய்
பதித்தமூப் பாதி பாசவெங் கூற்றன் படரென வறிகுவ தறிவே” என்றார்.

‘நயனங்க ளற்றதோ ரூபேறு’ என்றது குருட்டு ஊர்ப்பன்றியை, ஏறு என்னுஞ் சொல் பன்றிக்கும் ஆகும் என்பதை, “பன்றி புல்வாய் உழையே கவரி, என்றிவை நான்கும் ஏறெனற் குரிய” என்ற **தொல்காப்பியச் சூத்**திரத்தால் அறியலாம். இழிவு புலப்படக் குருட்டு ஊர்திரி பன்றியை உவமித்தார். உலகம்: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்காகப் பகுக்கப் படுதலின் ‘நானிலம்’ என்றார். பாலை என்னும் ஓர் நிலம் உண்டே ஆதலின் ஐந்து நிலமன்றோ எனின் அற்றன்று, “முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை என்பதோர் படிவங் கொள்ளும்” என்றபடி பாலை முல்லை குறிஞ்சி என்னும் இரண்டு நிலத்தினின்று கழிந்ததாதலின் ‘நானிலம்’ என்றார். இதனை,

“மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருத நெய்த லெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”

என்ற **தொல்காப்பியச் சூத்திரத்**தாலும் அறியலாம்.

அலையவோ - என்றது உழன்று கெடுதலை. இருளை மன்மதனுக்கு வாகனமாகக் கூறுதல் புலவர் வழக்காதலின் இருளை ‘வேளேறு தந்தியை’ என்றார். வேள் - விருப்பத்தை ஊட்டுபவன் என்று காரணங் குறித்த பெயர். தந்தி - இது யானைக்குப் பெயர். தந்தத்தை உடையது என்னுங் காரணங் குறித்த பெயர். கனதந்தி - என்றது பெரிய யானைகளை. ‘கனதந்தியைக் கனதந்தியுடன்’ என்று வந்தது **சொற்பொருட் பிரிதி நிலையணி.** யானை கருப்புநிற முடைமைபற்றிக் கூந்தலுக்குக் கூறிய உவமப் பொருள்களில் ஒன்றாயிற்று. இதனை, ‘இருண்மால்களிலும்’ எனவும் ‘கங்குல் களிறு’ எனவும் வருவன கொண்டு தெளிக. இனி ‘கனதந்தி’ என்பதனைக் ‘கனபந்தி’ எனப் பாடமோதி மேகவரிசை எனவும் பொருள் கூறுவர். மாலை சூடி - என்றது புஷ்பமாலைகளைச் சூடி என்பது பொருள். ஈண்டு போர்செய்ய தும்பைமாலை சூடித் தனக்கு ஒப்பென வந்த இருளையும் யானையையும் மேகத்தையும் வென்று வாகைமாலை சூடி அச்சுறுத்தி அவைகளை வெற்பேறி மறையச்செய்த கூந்தலாய் என்னும் பொருள்பட ‘வேளேறு தந்தியைக் கனதந்தியுடன் வென்று விரையேறு மாலைசூடி விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற’ என்றார். இனி, இதற்கு இருளையும் யானையையும் வென்று வாலகமாலை சூடியும், மேகங்கள் வெற்பேறி மறைய அச்சுறுத்தியும் என நேரே கோடலே சிறப்புடைத்தாம். ‘கருங் கூந்தலாய்’



என்பதற்குக் கரிய கூந்தலை உடையவளே என்பது பொருள். இனி, ‘கருங் கூந்தல்’ என்பதை அண்மை விளியாக்கி ‘ஆய்’ என்பதையும் ஓர் அண்மை விளியாக்கி உரைத்தலும் ஆம். கருங் கூந்தல் - என்பது கரிய கூந்தலை உடையவளே என்றபோது உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஆய் - என்பதற்குத் ‘தாயே’ என்பது பொருளாம். வாளேறு கண்ணி - என்றது வாளை ஒத்த கண்ணை உடையவளே என்பது பொருள். வாள்-கண்ணுக்கு உவமைப்பொருளாதலின் ‘வாளேறு கண்ணி’ என்றார். ‘வாளன்ன கண்ணாள்’ எனப் பிறருங் கூறியது காண்க. ‘வாள்’ என்பதற்கு ஒளி எனப் பொருள் கோடலும் ஒன்று. ‘வாட்டடங் கண்ணி’ என்றதூஉங் காண்க. விடையேறு மெம்பிரான் - என்றது சிவபெருமானை. சிவபெருமான் இடபவாகனம் உடையராதலின் இவ்வாறு கூறினர். மாலே விடையாகச் சிவபெருமானைத் தாங்கியதாகப் புராணங்கள் முழங்கும். இதனை, “மால் விடைப் பாகா” என்ற **ஆன்றோர்** வாக்கா லறியலாம். மயில்போன்ற சாயலுடைய தேவியை மயில் என்றது உவமஆகுபெயர். இனி, இறைவி மயில் உருவங்கொண்டு சிவனைப் பூசித்ததுண்டாதலின் மயிலே என்றார் எனினும் ஆம். இறைவிக்குச் சிவகாமியுமை என ஒரு பெயர் உளதாதலினாலும் இறைவன் இச்சையே சத்தியாகியதாதலினாலும், ‘மனதுக் கிசைந்த மயிலே’ என்றார். 7

இறைவியே! நம் மௌனமந்திர மருளெனல்

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
    புந்திமுத லானபேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்கள்என்
    போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
    விதித்தான் இவ்வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
    வித்தையை வியந்தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
    நாதாந்த வெட்டவெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
    ஞானவா னந்தமயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
    மகிமைபெறு பெரியபொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
    வளர்காத லிப்பெணுமையே.

(ப-ரை) நாதம்-நாத, வடிவு-வடிவம், ஆகிய - ஆகிய, மகா-மகா (பெரிய), மந்த்ரம்-மந்தரத்தின், ரூபியே-வடிவமாக விளங்குபவளே!, நாதம்-நாதத்தின்,

அந்தம்-முடிவிடமாகிய, வெட்ட-வெறும், வெளியே - வெளியே!, நல்-நல்ல, சமயம்-சமயமாகிய சைவசமயம், ஆன-ஆகிய, பயிர்-பயிர், தழைய-செழிக்க, வரு-வருகின்ற, மேகமே-மேகமே!, ஞானம்-ஞானத்தையும், ஆனந்தம்-ஆனந்தத்தையும் உடைய, மயிலே-மயிலே!, வாதம்-தர்க்கம், இடு-செய்கின்ற, பர இதர, சமயம்-சமயங்கள், யாவுக்கும் - எல்லாவற்றிற்கும், உணர்வு - அறிந்து கொள்ளல், அரிய - அருமையாகிய (முடியாத), மகிமை - மேன்மை, பெறு - பெற்றுள்ள, பெரிய-பெரிய, பொருளே-பொருளே!, வரை-மலைகளின், ராஜனுக்கு-அரசனாகிய இமோத்பருவத ராஜனுக்கு, இரு - இரண்டு, கண்-கண்களின், மணியாய்-மணிபோல, உதித்த - அவதரித்தருளிய, மலை - இமயமலையினிடத்தே, வளர் - வளர்கின்ற, காதலி-(தாய் தந்தையர்களால்) விரும்பப்படுகின்ற, பெண்-புத்திரியாகிய, உமையே - உமாதேவியே!, பூதமொடு - பூதங்களுடன், பழகி-பழகி, வளர் - வளர்கின்ற, இந்திரியம் - இந்திரியங்கள், ஆம்-ஆகின்ற, பேய்கள்-பேய்கள், புந்தி - புந்தி, முதலான-முதலாகிய, பேய்கள், போர்-யுத்தம், ஆடு-ஆடுகின்ற, கோபம்-கோபம், ஆதி-முதலாகிய, பேய்கள்-ராக்ஷசம் - ராக்ஷசர்களும், பேய்கள் - பேய்களும், என் - அடியேனுடைய, போதத்தை, அறிவை, ஊடு-உள், அழித்து-அழித்து, வேதனை-துன்பத்தை, வளர்த்திட - விருத்தியாக்குமாறு, சதுர்-நான்காகிய, வேதன் - வேதங்களுக்குரியவனாகிய பிரமன் என்னும், வஞ்சன்-வஞ்சன், விதித்தான்-வகுத்தான், இவ்-இந்த, அல்லல்-துன்பங்கள், எல்லாம்-எல்லாம், வீழும்-அழியும், படிக்கு-படிக்கு, உனது - தேவரீரது, மௌநம் - மௌனம், மந்தரம்-மந்தரம் ஆகிய, ஆதிக்யம் - மேன்மையாகிய, வித்தையை-வித்தையை, வியந்து-மனமகிழ்ந்து, அருள்வையோ-அருளிச் செய்வையோ? எ-று.

(வி-ரை) பூதம் என்றது பஞ்சபூதங்களை. அவை பிருதிவி முதலைந்து. இந்திரியம் என்றது பஞ்சேந்திரியங்களை. அவை மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. பஞ்சேந்திரியங்கள் பேய்போற் பற்றலின் பேய் என்றார். புந்திமுதல் என்றது புத்தி, மனம், சித்தம், அகங்காரங்களை. பேய்க்கோட்பட்டார் செயல்கள் எல்லாம் அவர் செயலாகாது பேயின் செயலாவதுபோலக் கோபாதி முதலியவைகள் கன்மேந்திரியம், ஞானேந்திரியங்களின் செயலாக நிற்றலின், 'பூதமொடு ... ... பேய்களென் போதத்தை யூடழித்து' என்றார். வேதனை என்றது அகங்கார மமகாரங்களால் வரும் வேதனைகளை. சதுர்வேத வஞ்சன் என்றது பிரமனை. வேதங்களை யுணர்ந்த பிரமன் கற்றதன்பயனாகிய தண்ணருளின்றித் துன்புறுத்தலாகிய வன்கண்மை செய்தலின் 'வஞ்சன்' என்றார். இனி, 'சதுர்வேத அஞ்சன்' எனப் பிரித்துப் பொருள் கூறுவாருமுண்டு. அஞ்ஞான்று நான்கு வேதங்களை யுணர்ந்தவனும் அன்னவாகனத்தை யுடையவனும் ஆகிய பிரமன் என்பது பொருளாம். போதம் என்றது சிவஞானத்தை. அல்லல் என்றது துன்பங்களை. அல்லல் எல்லாம் வீழ என்றது துன்பங்கள் தொலைய என்னும் பொருளது. உனது மௌன மந்த்ராதிக்யவித்தை என்றது - ஸ்ரீ வித்தையை. அதாவது திரிபுர சக்ர மந்தரத்தை என்பர். இதன் விரிவை எல்லாம் சற்குருவின்பாற்



கேட்டுத் தெளிக. இறைவி நாதாந்தமாகவும், நாதவடிவாகவும் இருப்பவள் ஆதலின், 'நாதவடிவாகிய மஹாமந்த்ர ரூபியே' எனவும், 'நாதாந்த வெட்ட வெளியே' எனவுங் கூறினார்.

'சைவசமயமே சமயம்' எனவும், 'சைவத்தின்மேற் சமயமில்' எனவும் கூறியதனால் நற்சமயமான பயிர் என்பதற்குச் சைவசமயம் என்பது பொருளாம். பயிர்தழைய மேகவருஷம் வேண்டப்படுதலின், 'நற்சமயமான பயிர் தழைவரு மேகமே' என்றார். இறைவி ஞானவடிவாகவும், ஆனந்த வடிவாகவும் விளங்கலின் 'ஞானவானந்த மயிலே' என்றார். இறைவிக்கு மயில் சாயலால் உவமானம். இது உவமையாகுபெயர். வாதமிடு பரசமயம் என்றது-குதர்க்கவாதம் புரியும் புறச்சமயங்களையும், புறப்புறச் சமயங்களையுங் குறித்து நின்றது. இறைவி மாயாகாரிய மனவாக்குக் கெட்டாதவளாதலின், 'வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய, மகிமைபெறு பெரிய பொருளே' என்றார். இறைவி பெரிய எவற்றினும் மிகப் பெரியள் ஆதலின் 'பெரிய பொருளே' என்றார். மேகம் என்றது - மழை மேகத்தை. இந்திரியமாம் பேய்கள் புந்தி முதலான பேய்கள் என்பவற்றில் உம்மை தொக்கு நின்றன. இந்திரியத்தையும், புந்தி முதலானவற்றையும் பேய்கள் என்றது **உவமையணி**. இது வினைஉவமம். பேய் அலைப்பதுபோல் அலைத்தலின் வினை உவமமாம். ரூபியே, வெட்டவெளியே, மேகமே, மயிலே, பெரிய பொருளே, உமையே என்பன முறையே விளியுருபு ஏற்ற பெயர்கள். 8

---

## அகிலாண்ட நாயகி

அகிலாண்ட நாயகியே! நீ அருளின் புகழடைவே னெனல்

வட்ட மிட்டொளிர்பி ராண வாயுவெனு
நிகள மோடுகம னஞ்செயு
மனமெ னும்பெரிய மத்த யானையையென்
வசம டக்கிடின்மு மண்டலத்
திட்ட முற்றவள ராஜ யோகமிவன்
யோக மென்றறிஞர் புகழவே
யேழை யேனுலகி னீடு வாழ்வன் இனி
யிங்கி தற்குமனு மானமோ
பட்ட வர்த்தனர் பராவு சக்ரதர
பாக்ய மானசுக யோகமும்
பார காவிய கவித்வ நான்மறை
பராய ணஞ்செய்மதி யூகமும்

மட்ட சித்தியுந லன்ப ருக்கருள
விருது கட்டியபொ னன்னமே
அண்ட கோடிபுகழ் காவை வாழுமகி
லாண்ட நாயகியெ னம்மையே.

(ப-ரை) பட்டவர்த்தனர் - பட்டந்தாங்கிய அரசர்கள், பராவு-துதிக்கத்தக்க, சக்ரதர-சக்ரவர்த்தித்துவம் என்கிற, பாக்யமான-பாக்கியமாகிய, சுக-இன்பமயமான, யோகமும் - யோகத்தையும், பார - பெரும், காவிய-காவிய கவித்வம் - கவிபாடுந் திறமையும், நான் - நான்கு, மறை - வேதங்களை, பாரா-யணம்-பாராயணம், செய்-செய்பக்கூடியதான, மதி-அறிவு, யூகம் - யூகத்தையும் (நுட்பத்தையும்), அட்ட-எட்டு, மா-பெரிய, சித்தி - சித்திகளையும், நல்-நல்ல, அன்பருக்கு-அடியார்களுக்கு, அருள்-கொடுத்தருள, விருது-விருதை, கட்டிய - கட்டிக்கொண்ட, பொன் - சுவர்ணமயமான, அன்னமே-அன்னம் போன்றவளே!, அண்டம் - உலகம், கோடி - கோடிகள் எல்லாம், புகழ்-புகழ்கின்ற, காவை-திருவானைக்கா என்னும் தலத்தில், வாழும் - வாழ்ந்து அருளுகின்ற, அகிலாண்டநாயகி - அகிலாண்ட நாயகி என்னும் திருநாமம் பூண்ட, என்-அடியேனின், அம்மையே-தாயே!, வட்டம்-சுழலுதலை, இட்டு - செய்து, ஒளிர்-விளங்குகின்ற, பிராண-ஜீவ, வாயு-காற்று, எனும் - என்று சொல்லும் படியான, நிகளம்-சங்கிலி, ஒடு-உடனே, கமனம்-நடத்தலை, செயும் - செய்யும்படியாகிய), மனம் - மனம், எனும் - என்னும், பெரிய - பெரிய, மத்தம்-மதமயக்கங்கொண்ட, யானையை-யானையை, என்-அடியேனின், வசம்-வசம், அடக்கின் - அடக்கும்படிச்செய்தால், மூ - மூன்று, மண்டலத்து-உலகங்களிலும், இட்டம் - விரும்பும் தகுதியை, உற்ற - கொண்ட, வளம் - வளப்பம் பொருந்திய, ராஜ-இராஜ, யோகம்-யோகமே, இவன் - இவனின், யோகம்-யோகம், என்று - என்று, அறிஞர் - யோகஞான அறிவுடையோர்கள், புகழ-புகழும்படி, ஏழையேன்-எளியேன், உலகில்-உலகத்தில், நீடு - நெடுங்காலம், வாழ்வன்-வாழ்வேன், இனி-இனி, இங்கு-இவ்விடத்து, இதற்கும்-இதற்கும், அநுமானமோ-அநுமானந்தானே? எ-று.

(வி-ரை) மனம் பிராண வாயுவினால் பலம்பெற்று இயல்வது. இப்பிராணவட்டம் வட்டமாகச் சுழன்று சுழன்று செல்லுந் தன்மையது. இது கொண்டே 'வட்டமிட் டொளிர் பிராண வாயுவெனு நிகளமோடு கமனஞ் செயு மனமெனும் பெரிய மத்தயானையை' என்றார். பிராணவாயு என்றது ஜீவக்காற்றை. நிகளம் என்பது சங்கிலி. பிராணவாயு மனத்தைப் பர்தப் படுத்துத் தன்வழியில் ஈர்ப்பதாதலின் பிராணவாயுவைச் சங்கிலிக்குவமை யாக்கினார். கமனித்தல்-நடத்தல். மனத்தை யானைக்கு ஒப்பாகக்கொண்டு [illegible]

[illegible]



மின்போலுஞ் சலனமன மசையாம னிறுத்தி
விசாரிக்கும் புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து
வன்போடு வருமகங்கா ரத்தினையுங் கடிந்தால்
வைத்தவிடத் திருந்தசித்த மகத்துவங் கருமே"

என்ற உபநிடதச் செய்யுளாலும் அறியலாம்.

மூ மண்டலம்-என்றது திரிலோகத்தை. ராஜயோகம்-என்றது சிவராஜ யோகத்தை. யோகம்-என்பது மனதை யடக்கி ஒடுக்கி, பிராணவாயுவை யடக்கிச் சிவஞானத்தால் சிவனைத் தரிசித்துச் சிவானந்த அநுபோக நிலையில் நிஷ்டைகூடி யிருத்தல். இதனைப் பிராணாயாமம் எனவுங் கூறுவர்.

"செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்து
கும்பத்தமரர் குழாம் வந்தெதிர் கொள்ள
வெம்பொற் றலைவனிவ னென்னச் சொல்ல
வின்பக் கலவி யிருத்தலு மாமே" எனவும்,

"ஏற்றி இறக்கி யிருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்கு
கூற்றை யுதைக்குங் குறியது வாமே" எனவும்,

"புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கு முரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே"

எனவும் வரும் **திருமந்திரங்**களால் நன்கறியலாம். சிவானந்தபோக வினைவுக்குச் சைதன்ய ஆன்மா ஒன்றுபட்டிருத்தலாகும். இதுகொண்டன்றே **பட்டினத்தடி**களும்,

"மாயகட் போரையு மாயா மலமெனு மாதரையும்
வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்று பின்றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தோயுமதே நிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே" எனவும்,

"அட்டாங்க யோகமும் ஆதார மாறும் அவத்தை யைந்தும்
விட்டேறிப் போன வெளிதனிலே வியப்பொன்று கண்டேன்
வட்டாகிச் செம்மதிப் பாலூறலுண்டு மகிழ்ந் திருக்க
வொட்டாத பேரின்ப மென்னை விழுங்கி யிருக்கின்றதே" எனவும்,

[illegible]

அனுமான மாவது - காரியத்திலிருந்து காரணத்தை ஊகித்தறிதல். சேய்மைக்கண்ணே புகை கண்டவழி நெருப்புண்டென்று அறிதல் அனுமானமாகும். பட்டவர்த்தனர் - என்றது அரசர்களை. இது அரசபட்டத்தைக் கொண்ட காரணம்பற்றி வந்த பெயர். சக்ரதராபாக்யம் - என்றது அரசர்களுக்கெல்லாம் அரசாக விளங்குஞ் சக்ரவர்த்தித் தன்மை. சுகயோகம் என்றது ஈண்டு இன்புற்று வாழும் அதிர்ஷ்டப் பேற்றை. பாரகாவிய கவித்வம் - என்றது பாரகாவியம் பாடக்கூடிய கவிச்சமர்த்தை. நான்மறை என்றது இருக்காதி சதுர்வேதங்களை. மதியூகம் - என்றது நுண்ணறிவை. அட்டசித்தி - என்றது அணிமா முதலிய எட்டுச்சித்திகளை.

எட்டுச் சித்திகளாவன:—1-அணிமா, 2-மகிமா, 3-கரிமா, 4-இலகிமா, 5-பிராத்தி, 6-பிராகாமியம், 7-ஈசத்துவம், 8-வசித்துவம் என்பவைகளாம். 1-ஆன்மாப்போதல் அணிமா. 2-மகத்துவமாதல் மகிமா. 3-தன்னுடல் கண்டிப்பின்றாய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவ:வல்லவனாதல் கரிமா. 4-இலகுத் தன்மையாதலே இலகிமா. 5-வேண்டுவனவற்றை அடைதலே பிராத்தி. 6-நிறையுளனாதலே பிராகாமியம். 7-ஆட்சியுள்ளவன் ஆதலே யீசத்துவம். 8-எல்லாவற்றையுந் தன்வசமாக்க வல்லுனனாதலே வசித்துவம்.

நல் அன்பருக்கு-என்றது சிவன் அடியாரை. விருது-என்றது வெற்றிச் சின்னத்தை. பொன் அன்னமே - என்றது அழகிய அன்னமே என்பது பொருளாம். இனிப் பொன்னிற அன்னமே என்பாரும் உண்டு. இறைவன் பொன் வண்ணன், ஐவண்ணன் என மறைகள் முழங்குகின்றன ஆதலின் சத்தனுக்குள்ளது சத்திக்கும் என்ற நியாயத்தால் இறைவிக்குங் கூறினர் என்பர். அன்னம் என்றது - உவமையாகுபெயர். அண்டகோடி-என்றதில் 'கோடி' மிகுதிப் பொருள் தந்து நின்றது. கோடி என்பது நூறுலட்சத்திற்கு எய்திய பெயர். காவை - என்றது திருவானைக்காவை. இத்தலம் யானை பூசித்து முத்திப்பேறு பெற்ற தலமாதலினாலும், இது முன்னாளில் யானைக்காடாக இருந்ததாதலினாலும் இதற்கு யானைக்கா எனப் பெயர் ஆயிற்று. பஞ்சலிங்க தலத்தில் இது ஒன்று. இதில் இருக்கும் இலிங்கம் அப்புலிங்கம். இத்தலத்துச் சிறப்பாகிய மகாத்மியத்தை **திருவானைக்கா புராணத்திற்** காண்க. இத்திருவானைக்காவில் வாழும் ஈசுரர்க்கு அப்புலிங்கர் என்றும், அம்மையாருக்கு: அகிலாண்டநாயகி என்றும் திருநாமங்கள். 'பொன் அன்னமே' என்பதும், 'அகிலாண்டநாயகி யென்னம்மையே' என்பதும் விளியுருபு ஏற்று நின்றது. இச்செய்யுள் திருவானைக்காவில் எழுந்தருளி இருக்கும் அகிலாண்டநாயகியம்மன் என்ற பெயர் சூட்டி அவள் தோத்திரமாகச் சந்தக்கவி விருத்தமாகப் பாடினமையின் இதற்கு "அகிலாண்டநாயகி சந்தவிருத்தம்" என்று பெயராயிற்று. 1

---

## பெரிய நாயகி விருத்தம்

பெரியநாயகியே! தேவரீரின் அருள்நீர் பாய்ச்சி சிவாநுபவவிளைவை எனக்குத்தந்தருளிக் காக்கவல்லையோ என்கின்றார்

காற்றைப் பிடித்துமட் கரகத் தடைத்தபடி
    கன்மப் புனற்குளூறுங்
கடைகெட்ட நவவாயில் பெற்றபசு மட்கலக்
    காயத்து ளெனையிருத்திச்
சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
    துருத்திக்குண் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேன்அருட்
    டோயநீ பாய்ச்சல்செய்து
நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
    நாட்டிப் புலப்பட்டியு
நமனென தீப்பூடு மனுகாமன் முன்னின்று
    நாடுசிவ போகமான
பேற்றைப் பகுத்தருளி யெனையாள வல்லையோ
    பெரியவகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கபிலைமா நகர்மருவு
    பெரியநா யகியம்மையே.

(ப-ரை) பெரிய-பெரிதாகிய, அகில - எல்லா, அண்ட - உலக, கோடி-கோடிகளை, பெற்ற - பெறுதுபெற்ற, நாயகி - இறைவியே!, பெரிய-பெரிய, கபிலை-கபிலை என்னும், மா-பெரிய, நகர்-நகரின்கண்ணே, மருவு-எழுந்தருளி இருக்கின்ற, பெரியநாயகி - பெரியநாயகி என்னுந் திருநாமம்பூண்ட, அம்மையே-தாயே!, காற்றை-வாயுவை, பிடித்து-பிடித்து, மண்-மண்ணாற்செய்த, கரகத்து-கலயத்தில், அடைத்த-அடைத்துவைத்த; படி-தன்மையைப்போல, கன்மம்-கன்மமாகிய, புனற்குள்-ஜலத்திற்குள், ஊறும் - ஊறிக்கொண்டிருக்கும், கடைகெட்ட - இழிந்த, நவ - ஒன்பது, வாயில் - வாயில்களை, பெற்ற - கொண்ட, பசு-பச்சையாகிய, மண்-மண்ணாற்செய்த, கலம்-பாத்திரம்போன்ற, காயத்துள்-தேகத்தின் உள்ளே, எனை-அடியேனை, இருத்தி-இருக்கச்செய்து, சோற்றை-சாதத்தை, சுமத்தி-ஏற்றி, நீ - தேவரீர், பந்தித்து-கட்டி, வைக்க-வைக்க, துருத்தி-துருத்தியின், உள்-உள்ளே அடைத்துவைத்த, மது - கள், என்ன-என்று சொல்லும்படி, துள்ளி-துள்ளி, துடித்து - பதைத்து, என்ன-என்ன, பேறு - இலாபம், பெற்றேன் - அடியேன் அடைந்தேன், (ஒன்றுமே இல்லை ஆதலினால்) நீ-நீ, அருள்-திருஅருளாகிய, தோயம்-நீரை, பாய்ச்சல்-பாய்ச்சுதலை, செய்து-செய்து, நாற்றை - நாற்றை, பதித்தது-நட்டது, என-

என்று சொல்லும்படி, ஞானம் - ஞானம், ஆம் - ஆகிய, பயிர்தனை - பயிரை, நாட்டி-நட்டு, புலம் - ஐம்புலன்களாகிய, பட்டியும் - பட்டிமாடுகளும், நமன் என்று, ஆன-சொல்லப்படுகின்ற, தீ-தீய, பூடும்-களை என்னும் பூண்டு களும், அணுகாமல்-சேராமல், முன்-எதிரில், நின்று-நின்று, நாடு - விரும்பு தற்கு உரிய, சிவ-சிவ, போகம்-அனுபவம் ஆகிய, பேற்றை-பலனை, பகுத்து, அருளி-அருளிச்செய்து, எனை-அடியேனை, ஆள-அருளுடன் ஆட் கொள்ள, வல்லையோ-வல்லையோ? எ-று.

(வி-ரை) இது கயிலைமா நகரின்கண் எழுந்தருளியிருக்கும் இறைவி தோத்திரமாக விண்ணப்பமுறையில் பாடப்பெற்றது. இறைவியின் திரு நாமம் 'பெரியநாயகி' என்பது ஆதலின் இவ் விருத்தத்திற்குப் பெரியநாயகி விருத்தம் என்று பெயர் ஆயிற்று. காற்றைப்பிடித்து மண்பாண்டத்து அடைத்ததைப்போல என்னை இவ் உடலில் அடைத்துவைத்தாய் என்பார், 'காற்றைப் ... ... ... காயத்து ளெனையிருத்தி' என்றார். மட் காகம், இது மண்+காகம் என்னும் இருசொல் ஒரு சந்தி. "ணனவல்லினம் வர டறவும்" என்ற விதி. 'மண்' என்ற நிலைமொழி ஈற்றில் நின்ற ணகா வொற்று 'காகம்' என்னும் வருமொழிமுதல் வல்லினம் வந்தபோது டகா வொற்றாயது. உயிருக்குக் காற்றையும், உடலுக்கு மட்காகத்தையும் உவ மித்தார். 'கன்மப்புனல்' ஈண்டு கன்மமாகிய புனல் என விரியும். கன்மத்தைப் புனலாக உருவகப்படுத்தினர். என்னை? கன்மத்தால் வந்ததேகம் ஆதலினு லும், கன்மப்பலனையே அனுபவித்தலினாலும் என்க. கடைகெட்ட நவ வாயில் என்றது உடம்பின்கண் உள்ள ஒன்பது துவாரங்களின் இழிவு நோக் கியாம். இதனை,

"புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்வினும் வலிதாக் கருதினை யிதனுள்
பீளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டக முடிவிற் சுட்டெலும் பாகும்;
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கான் நன்கறியலாம்.

குயவன் மண்ணாற் கலங்கள்செய்து அது பலமாக இருத்தற்பொருட்டுச் சூளையிற் போடுவன். அவ்வாறு சூளையிற் சுட்ட சட்டியே வலுக்கொள்ளும். சுடாச் சட்டியாகிய பசுமட்கலம் பலமாயிராது; சீக்கிரம் உடைந்துவிடும்; சிறிது நீர்படினுங் கரைந்திடும். இத்தேகம் பலமற்றதாதலின் பசுமட் கலத்தை ஒப்பிடுவார். 'கடைகெட்ட நவவாயில் பெற்ற பசுமட், கலக்காயத்து ளெனையிருத்தி' என்றார். 'அன்னமயம் பிராணமயம்' என்றபடி உண்ணும்



உண்வே உயிர்க்கூறுபெற்று உறுதி தருதலின் ஆகாரம் பிரதானமாயிற்று. இதுகொண்டு இவ்வாசிரியரும், 'சோற்றைச் சுமத்திநீ பந்தித்துவைக்க' என்றார். உணவு உயிர்க்கூறாகி உற்று உயிர் பலப்படுகிறது என்பதனை,

"நெல்லு முயிரன்றே நீருமுயி ரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"

என்ற **புறநானூறிலும்**, "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே" என்ற **சங்கநூல் வாக்கானும்**,

"நீருஞ் சோறு முண்போர்க்கு நீறுஞ் சோறுஞ் சத்தாகி
ஆடும் உயிரி னொருபங்காய் அங்கே யொட்டி உறந்தருமால்
யாருங் காணு முடலாகி அதிக பலமாம் ஒருபங்கே
தீருங் கழிவா மலமூத்ரம் செப்பு மற்றை யொருபங்கே"

என்னும் **பெரியார் வாக்கா**லும் அறியலாம்.

இறைவன் தன் திருவருளால் எல்லா உயிர்களுக்கும் அவ்வவற்றின் கன்மமலங்களுக்குத் தக்கபடி விருப்புவெறுப்புக்களை ஊட்டி உய்யச் செய்கின்றானாதலினாலும், அந்தத் திருவருளே உமையாகிய அருட்சத்தி ஆதலினாலும் 'நீ பந்தித்துவைக்க' என்றார். அருத்திக்குள் இட்ட கள் புளிப்பு மிகமிக பொங்கித் துள்ளிக்குதிக்கும் என்பது இயல்பு. இங்கு அருத் திக்கள் துள்ளிக் குதிப்பதுதான் அறியாமையால் துள்ளித் துடித் துழல்வ தற்கு உவமை ஆக்கினார். பேறு என்றது பயனை, இலாபத்தை. உலகில் உய்வுபெறத் திருவருட்சகாயம் வேண்டப்படுதலினாலும், அத் திருவருளே இறைவி ஆதலினாலும் 'அருட்டோயம் நீ பாய்ச்சல்செய்து' என்றார். முத் திப்பேறு பெறற்கு ஞானம் ஆதாரம் ஆதலின் 'காற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை நாட்டி' என்றார். 'நாற்று' இது தோன்றுவது என் னும் பொருள்கொண்ட 'நாறு' என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயர். நாறுவது நாற்று. நாட்டல் என்றது நடுதலை. பயிரைப் பட்டிமாடுகள் மேய்தல்போல நீ நட்ட ஞானமாகிய பயிரைப் புலன்களாகிய பட்டிமாடு அழித்துவிடாதபடிக்கும் நமனாகிய களை மண்டிவிடாதபடிக்கும் காத்துச் சிவ போகமாகிய பயனை அடையச்செய் என்பார், 'ஞானமாம் பயிரதனை நாட்டிப் புலப்பட்டியும் நமனென தீப்பூடும் அணுகாமல் முன்னின்று நாடுசிவ போக மான பேற்றைப் பகுத்தருளி எனையாள வல்லையோ' என்றார். இக்கருத்தை,

"நெஞ்சின் ஞானப் பயிர்நாட்டி நேரும் புலனும் விலங்கினங்கள்
மிஞ்சு பயிரை யுண்ணுமே மேவு நமனுங் களைமண்டி
விஞ்சி யழிக்கா வகைகாத்து விளங்கு போகப் பயனுண்ண
அஞ்சொல் உமைசேர் பங்கவெனக் கருள்வ தென்றோ அறியேனே"

என்ற **அழதகவியும்** ஆராயத்தக்கதாகும்.

## தந்தை தாய்

மௌனகுரு அருளப்பெற்றவுடனே எல்லாங் கானநீராயிற் றெனல்

**தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை**
**சகமனைத்து மௌனியரு டழைத்த போதே**
**யிந்திரசா லங்கனவு கான னீரா**
**யிருந்ததுவே இவ்வியற்கை யென்னே என்னே.**

(ப-ரை) மௌனி-மௌனகுருவினுடைய, அருள்-திருவருள், தழைத்த-செழித்த, போதே-உடனேயே, தந்தை - தந்தையும், தாய் - தாயும், மகவு-பிள்ளைகளும், மனை - மனைவியும், வாழ்க்கை - (மேற்கூறியவர்களுடன் கூடி வாழும்) வாழ்க்கையும், யாக்கை-தேகமும், சகம்-உலகும், அனைத்தும்-இவைகள் எல்லாமும், இந்திரசாலம் - இந்திரஜாலமாகவும், கனவும் - கனவாகவும், கானல்நீர் - கானற்ஜலமாகவும், ஆய்-ஆகி, இருந்ததுவே - இருந்ததே, இவ்-இந்த, இயற்கை-சுபாவம், என்னே-யாதோ!, என்னே-யாதோ! எ-று.

(வி-ரை) 'தந்தைதாய் ... ... ... சகமனைத்தும்' என்றதில் ஈற்றும்மைபெற்று நின்றது. தந்தை என்பதில் தை முறைப்பெயர் விகுதி. தந்தை உடம்பிலிருந்து தாவிச் செல்லற்கு இடமாய் நிற்றலின் தாய் எனப் பெயராயிற்று; இது காரணப்பெயர். மகவு இது ஆகுபெயர். இளமை குறிக்கும் பெயர். இளமையை உடையவன் என்பது பொருள். சிறப்புப் பற்றி ஆண்மகவைக் குறித்தது. மனை இது இடவாகுபெயர். மனைக்குரியவள் என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். மனை-வீடு. வாழ்க்கை ஈண்டு வாழ்வுக்கு ஆதாரமாகிய செல்வத்தையும் அதுகொண்டு வாழும் சுகவாழ்வையும் குறித்தது. மௌனி என்றது மௌனதேசிகனை. தழைத்தபோது என்றது செழித்தோங்கலைக் குறித்தது. இதனானே ஞானகுருவின் ஞானோபதேசம் பெற்றதும் ஊன்றிப்பதிந்து செழித்தோங்கற் காதாரமாக இருந்த மனத்தின் பரிபக்குவநிலை தோன்ற நின்றது. இந்திரசாலம்-ஜாலங்களிலெல்லாம் பெரிய ஜாலம் என்னும் பொருளது. இதனை மிருகேந்திரன், ராஜேந்திரன், தேவேந்திரன் என்பனபோற் கொள்க. கனவு இது "குறிய தன் கீழாக் குறுகலும் அதனோ, டுகரம் ஏற்றலும் இயல்புமாந் தூக்கின்" என்ற **சூத்திரவிதியால்** கனா என்றது கனவு என நின்றது. கானல்நீர் என்றது பேய்த்தேரை. வேனிற்காலத்து நீர்போற்றோன்றும் வெயிலின் வெக்கையை. என்னே என்னே என்பது வியப்புப்பொருளில் அடுக்கி நின்றது. ஞானகுருவின் அருளுபதேசம் பெற்றதும் தந்தைதாய் முதலிய தொடர்புச் சுற்றமும் அவர்களோடு கூடிவாழும் வாழ்க்கையும் உலகும் பொய்யாய்ப் போயொழிந்ததைக் குறித்தது. இறைவனே மாணவனின் பரிபக்குவமறிந்து ஞானாசிரியனாகவந்து உண்மைகாட்டினமையின் பொய்யாயின வெல்லாம் பொய்யாய்ப் போயொழிய மெய்யாயின தோன்றிற்று.



மெய்யாயினது. இறைவனே என்பதாம். சுற்றம், வாழ்க்கை, உலகம் இவற்றின் நிலையாமை கண்டு அவற்றுள் வெறுப்புற்று நின்ற நிலையை யுணர்த்திற்று. இதனை,

"மெய்ஞ்ஞான தேசிகனா மேலாஞ் சிவன்வந்து
உய்ஞ்ஞான போத முணர்த்திடவே—ஐயோ
புவிவாழ்வு சுற்றமெலாம் போயொழிந்த பேய்த்தேர்
குவியிந்த்ர ஜாலம்போற் கொண்டு" எனவும்

"ஆறிவா ரெல்லா மகன்ற நெறியருளும்
போறிவான் வாராத பின்" எனவும்,

"எற்கும் புவியிடத்தில் இந்திரசா லங்களவு
நீர்க்குமிழி பேய்த்தேர் நினைப்புமறப்—பார்க்குமது
போலநிலை நில்லாத பொய்வாழ்வை மெய்வாழ்வென்
றேலநிலை நில்லாத வாறென்" எனவும்,

"தந்தையுந் தாயுந் தாரந் தனயரும் வாழ்வும் எல்லாம்
முந்திய கனவு பேய்த்தேர் மொழிதரு மிந்த்ர ஜாலம்
அந்தகன் முயலின் கொம்பே ஆமென வகன்ற தப்பா
வந்திறை குருவா ஞான வளமது தந்த ஞான்றே"

எனவும் வருவனவைகளால் அறியலாம்.

இது முதல் எழுசெய்யுள்கள் ஒரு பகுதி. இப்பகுதிக்கு 'தந்தைதாய்' என்று தலைப்பிட்டது முதற்செய்யுளின் முதலடியின் முதலில் **தந்தை தாய்** எனத் தொடங்கியதால் இப்பெயர் வந்தது. இதவும் பின்வரும் ஏனைய பாக்களும் கலியினப்பாக்கள். முதலாறுபாடல்கள் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளன. 1

இறைவனே! முற்றுங்கொடுக்க இசைந்தகாலத்து எது இருந்தென் எது போயென் என்கின்றார்

**என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால**
**மியாதிருந்தென் எவைபோயென் என்னை நீங்கா**
**அன்னைபோ லருள்பொழியுங் கருணை வாரி**
**ஆனந்தப் பெருமுகிலே அரசே சொல்லாய்.**

(ப-ரை) என்னை - அடியேனை, விட்டு - எந்தக்காலத்தும் விட்டு, நீங்கா-பிரியாத, அன்னை-தாயை, போல்-போல, அருள்-அருளை, பொழியும்-சொரிகின்ற, கருணை-கிருபையின், வாரி-சமுத்திரமே!, ஆனந்தம்-இன்பமயமாகிய, பெரும்-பெரிய, முகிலே-மேகமே!, அரசே-அரசே!, என்னை - ஆன்மாவாகிய என்னை, நான்-அடியேன், கொடுக்க - தேவரீருக்குக் கொடுக்க, ஒருப்பட்ட-சம்மதித்த, காலம்-காலத்தில், யாது - எது, இருந்து - இருந்து, என்-என்ன பயன்?, எது-எது, போய்-என்னைவிட்டுச் சென்றாலும், என்-என்ன நஷ்டம்?, சொல்-தேவரீர் சொல்லியருள்வீராக எ-று.

(வி-ரை) என்னை என்றது - ஆன்மாவை. ஞானாசிரியரிடம் ஞானோபதேசம் பெறற்குமுன் ஆசாரியன் திருவடிக்கு உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தஞ்செய்யவேண்டி யிருத்தலின் 'என்னைநான் கொடுக்க வொருப்பட்ட காலம்' என்றார். ஒருப்படல் - மனஞ்சம்மதித்தல். காலம் + யாது = காலமியாது எனப் புணர்ந்தது. "தன்னொழி மெய்முன் யவ்வரி னிகரந், துன்னு மென்று துணிகரு முளரே" என்றது விதி. யாது இது யா என்னும் வினா அடியாகப் பிறந்த வினாப்பெயர். இருப்பது உடல் ஆதலினால் இந்த உடலாற் பயன் என்ன என்றார். எவைபோயென் என்றது- பொருளை நீங்குவது பொருள் ஆதலின் இறைவன் உயிர்க்குயிராய் என்றும் விட்டகலாது அருள்புரிந்து கொண்டே இருப்பவன் ஆதலின் 'என்னை நீங்கா வன்னைபோலருள் புரியுங்கருணை வாரி' என்றார். இறைவன் கருணை அளவிட்டறிய முடியாததாதலின் 'கருணைவாரியே' என்றார். வாரி இது நீண்டது என்றுங் காரணம்பற்றிக் கடலுக்குவந்த காரணப்பெயர். இறைவன் தானும் இன்பமயமாக இருந்து உயிர்களுக்கும் கைம்மாறு கருதாது இன்பைச் சொரிகின்றானாதலின் 'ஆனந்தப் பெருமுகிலே' என்றார். இறைவன் எல்லா உயிர்கட்குந் தலையாய்நின்று காத்தருள்புரிகின்றானாதலின் 'அரசே' என்றார். இச்செய்யுளானே யான் என்பதும் எனது என்பதும் ஆகிய அகப்பற்று புறப்பற்றுகள் அறுங்காலம் ஞானாசிரியர் ஞானோபதேசத்தால் வருங்காலத்து உடல் பொருளாற் பயனில்லை அவை இருந்தென் போய் என் என்கின்றார். இதனை,

"வந்தகுரு என்னைத்தான் வாய்ந்தெடுத்தாட் கொண்டபினம்
இந்த உடல்பொருள்கள் எற்றிற்கோ—சந்ததமும்
நானே அவனா நவிலுமவ னேநானா
ஆனேன் சுகத்தழுந்தி யங்கு"

என்ற **பெரியார்** வாக்கானும் அறியலாம். 2

இறைவா! முத்தி எய்த உன் திருவருளே கூட்டும் எனல்

**அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை**
**யறியாத சிறியேனா னதனான் முத்திக்**
**கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்**
**கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.**

(ப-ரை) அரசே - அரசே!, நான் - அடியேன், நின்-தேவரீரது, திருக்கருணை - திருவருளை, அல்லாது - அன்றி, ஒன்றை - வேறு ஒருபொருளை, அறியாத-அறிந்துகொள்ளாத, சிறியேன்-சிறியவனாகிய அடியேன், அதனால்-ஆகையினால், முத்தி - முத்தியாகிய, கரை - கரையை, சேரும் - அடையும், படிக்கு-வண்ணம், உன்-தேவரீருடைய, அருள் - திருவருளாகிய, புணையை-மரக்கலத்தை, கூட்டும் - கிடைக்கச் செய்கின்ற, கைப்பிடியே - தேவரீரின் கைப்பிடியையே, கடைப்பிடி - உறுதிப்பிடி, ஆ - ஆக, கருத்துள்-மனத்தின் இடத்தே, கண்டேன்-கண்டுகொண்டேன் எ-று.



(வி-ரை) இறைவனையன்றி வேறு ஒன்றுங் காணப்படாமையானும், எல்லாம் இறைவன் திருவருள் மயமாக இருத்தலினாலும், 'அரசேநின் றிருக்கருணை யல்லாதொன்றை அறியாத சிறியேன்' என்றார். ஆன்மா கிஞ்சிஞ்ஞன் ஆதலின் 'சிறியேன்' என்றார். முத்தி-என்பது வேதனைகளனைத்தும் அற்ற இடம். வேதனைகளற்ற இடமே இன்பநிலையாதலின் முத்தி என்பது பேரின்பநிலையாகும். பிறவித்துன்பத்தைக் கடலாகவும் அதனினின்றும் விடுபட்டு அடையும் பேரின்ப நிலையாகிய முத்தியைக் கரையாகவும் கொண்டாராதலின், 'முத்திக்கரை சேரும்படிக்கு' என்றார். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி அம்முத்திக்கரை சேரற்கு இறைவன் திருவருள் வேண்டப்படுதலின் 'உன் அருட்புணையைக் கூட்டுங் கைப்பிடியே' என்றார். இதனை, "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவ னடி சேரா தார்" என்ற **திருக்குறளா**லும் அறியலாம். கைப்பிடி-என்றது பற்றுக்கோட்டை. கடைப்பிடி - என்றது காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் பெருந்துணிவை. இச்செய்யுட் கருத்தை, "அருளிற் பெரிய தகிலத்து வேண்டும் பொருளிற் றலையி லதுபோல்" தின்ற திருவருட்பயனாலும்,

"அருளிற் பெரிய ததுவுளதோ வஃதே
பொருளிற் சிறந்த பொருளின்—திருவுருவாம்
ஈதே பெறவேண்டும் இங்கிதனைப் பெற்றக்கால்
ஏதே யருமை எனக்கு"

என்ற **அழுதகவியா**லும் அறியலாம். 3

தன்னையுந் தலைவனையுந் திருவருளையுங் கண்டதை வியந்து கூறுகின்றார்

**கண்டேனிங் கென்னையும்என் றனையு நீங்காக்**
**கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்**
**விண்டேனென் றெனைப்புறம்பாத் தள்ள வேண்டாம்**
**விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்றோ.**

(ப-ரை) இங்கு-இவ்விடத்தில், என்னையும்-அடியேனையும், கண்டேன்-பார்த்தேன், என்றனையும்-அடியேனையும், நீங்கா-நீங்காத, கருணையும்-கருணையையும், நின்-தேவரீரின், தன்மையும் - தன்மையையும், நான் - அடியேன், கண்டேன்-பார்த்தேன், கண்டேன் - பார்த்தேன், (ஆனால்) விண்டேன்-இவ்விரகசியத்தை வெளியிட்டுச் சொன்னேன், என்று - என்று, என்னை - அடியேனை, புறம்பு-வெளி, ஆ-ஆக, தள்ள-தள்ளிவிட, வேண்டாம் - வேண்டாம், விண்டதும்-இவ்வாறு அடியேன் சொன்னதும், நின்-தேவரீரது, அருள்-திருவருள், களிப்பின் - களிப்பாலாகிய, வியப்பால் - அதிசயத்தால், அன்றோ - அல்லவோ? எ-று.

(வி-ரை) தன்னையுந் தலைவனையுந் திருவருளையுங் கண்ட மகிழ்ச்சி தோன்ற 'கண்டேனிங் கென்னையும்' எனக் கண்டதை முற்கூறினார். இதனை

சீதையைக் கண்டதாக ஆஞ்சனேயர் இராமபிரான் இடத்துச் சொல்லுவதாகச் சொல்லுஞ் சமயத்தில்

"கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர் நாயக வினித்துறத்தி யையமும்
பண்டுள துயரு மென்றனுமன் பன்னுவான்"

என்று கூறிய **கம்பராமாயணச் செய்யு**ளால் அறியலாம்

'தன்னை யறிந்தவன் றலைவனை அறிவன்' ஆதலின் என்னைவிட்டு நீங்காத உன் திருவருளையும், அத்திருவருள் வடிவமாகிய உன்னையுங் கண்டேன் என்பார், 'என்றனையு நீங்காக் கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்' என்றார். 'கண்டேன் கண்டேன்' என மகிழ்ச்சியால் அடுக்கி வந்தது. 'தன்னை யறிதலாவது' அஞ்ஞானத்தால் தானல்லாதவற்றைத் தானாகவும், தனதல்லாதவற்றைத் தனதாகவும் கொண்டிருந்த மருண்டநிலை நீங்கி குருகடாக்ஷத்தால் தன்னை உள்ளபடி அறிதல். தன்னை யறிந்தவன் தலைவனையும் கண்டு அவன் அருட்பிரகாசத்திற் கலந்து இன்புற்றிருப்பன். 'கண்டவர் விண்டிடார்' என்றபடி கண்டதை வெளியிட்டுச் சொல்லார் அவ்வாறு சொல்லின் கண்டவராகார். இவர் தான்பெற்ற இன்பம் வையகமும் பெறவேண்டும் என்ற ஆதரத்தொடு திருவருட் சகாயத்தாற் கூறுகின்றாராதலின் 'விண்டேனென் றெனைப்புறம் பாத்தள்ள வேண்டாம்' என்றார். அவ்வாறு விண்டதும் அடியேன் செயலன்று உன் திருவருளினால் எய்திய மகிழ்ச்சியின் செயலென்பார், 'விண்டதுநின் அருட்களிப்பின் வியப்பாலன்றோ' என்றார். 'அன்றோ' என்றதன் ஈற்று 'ஓ' வினாப்பொருளில் வந்தது. இதனை,

"குருவருளால் ஞான நாட்டங் கொண்டவுடன் கண்டே னென்னைத்
திருவருளைக் கண்டேன் கண்டேன் சிவமாகி நின்ற ஜோதிப்
பெருவருவுங் கண்டே னையோ பிறகுசிவ ஜோதி யன்றி
மருவுமெனைக் காணே னெல்லாம் வழுத்துசிவ மாயிற் றம்மா"

என்ற **பெரியார் வாக்கா**லும் அறியலாம். 4

இறைவா! நீ எல்லா உயிர்களையும் மோக்ஷத்தில் சேர்த்தால்
உன் லீலைக்குக் குறைவோ வெனல்

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென வுவட்டா வின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவி லாசம்.

**(ப-ரை)** ஓ-ஓ, என்ற-என்று கொண்டாடத்தக்க, சுத்த-வெறு, வெளி-வெளி, ஒன்றே-ஒன்றின்கண்ணே, நின்று-நின்று, இங்கு-இவ்விடத்துள்ள, உயிரை-உயிர்களை, எல்லாம்-எல்லாம், வம்மின்-வாருங்கள், என-என்று



அழைத்து, உவட்டா-தெவிட்டாத, இன்பம்-இன்பத்தைத் தருகின்ற, தே-தெய்வம், என்ற-என்று சொல்லப்படுகின்ற, நீ-தேவரீர், கலந்து-கூடி, கலந்து-கூடி, முத்தி-மோக்ஷத்தில், சேர்த்தனையேல்-சேர்த்துக்கொண்டால், செகம்-பிரபஞ்சத்தின், விலாசம்-லீலை, குறைவு-குறைவு, ஆமோ-ஆகுமோ? எ-று.

**(வி-ரை)** 'ஓ' இது ஆனந்த மேலீட்டா லுண்டாகும் ஆனந்த அநுகரண ஒலி. சுத்தவெளி-என்றது வெட்டவெளியை; ஆகாசத்தை. ஒன்றே நின்று-என்பது எழன்தொகை. ஒன்றினிடத்தே நின்று என விரியும். உயிரை எல்லாம்-என்றது சர்வான்மாக்களையும். வம்மின்-இது முன்னிலைப் பன்மை ஏவல். வாருங்கள் என்னும் பொருளது. இதில் 'மின்' முன்னிலைப் பன்மை ஏவல் விகுதி. 'தே' ஈது ஓரெழுத் தொருமொழி. தெய்வம் என்னும் பொருளது. 'கலந்து கலந்து' ஈண்டு கலந்து என்பது மிகுதிப் பொருளில் அடுக்கி வந்தது. 'செகவிலாசம்' பிரபஞ்சலீலையை. என்னை? இறைவனுக்கு ஐந்தொழிலும் விளையாட்டாதலினான் என்க. பக்குவான்மக்கள் மட்டும் முத்திப்பேறடைய ஏனைய பிறந்திறந் துழல வைப்பானேன். எல்லா ஆன்மாக்களையும் ஒன்றுசேர முத்தியிற் சேர்த்தால் என்ன குறைவரும் என்பார் 'உவட்டா வின்பத் தேவென்ற நீகலந்து கலந்து முத்திசேர்த்தனையேற் குறைவாமோ செகவிலாசம்' என்றார். 5

இறைவனே! எல்லாம் உன் சங்கல்பப்படியே நிகழு மெனல்

செகத்தையெல்லா மணுவளவுஞ் சிதறு வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பைஅணுத் திரளை யெல்லா
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைத்த வாறே யெல்லாம்.

**(ப-ரை)** செகத்தை-உலகங்களை, எல்லாம்-எல்லாம், அணு-அணு, அளவும்-அளவும், சிதறு-கெடாத, வண்ணம்-விதமாக, அணுவில்-பரமாணுவிடத்து, வைப்பை-ஒடுக்குவை, அணு-பரமாணுக்களின், திரளை-கூட்டங்களை, எல்லாம்-எல்லாம், மகத்துவம்-ஆச்சரியம், ஆ-ஆக, பிரமாண்டம்-பெரிய உலகங்கள், ஆக-ஆக, செய்யும்-உண்டாக்கும், வல்லவா-வல்லவனே!, எல்லாம்-யாவும், நீ-தேவரீர், நினைந்த-சங்கற்பித்த, ஆறே-விதமே எ-று.

**(வி-ரை)** சர்வ சங்காரகாலத்தில் ஜகத்தை எல்லாம் ஒடுக்கி யருளுங்கால் எல்லாம் தோன்றிய முறையே ஒடுங்கும்பொழுது எல்லாம் மாயையில் ஒடுங்கும். மாயையில் ஒடுங்குமுன் ஜகமெல்லாம் அணுப்பிரமாணமாய் நிற்குமாதலால் 'செகத்தை யெல்லா மணுவளவுஞ் சிதறுவண்ணம் சேர்த்தணுவில் வைப்பை' என்றார். பிறகு தோற்றுவித்தருளுங் காலத்தே அவ் அணுவிலிருந்து ஜெகத்தை எல்லாம் ஆக்குதலால், 'அணுத்திரளை யெல்லா மகத்துவமாப் பிரமாண்டமாகச் செய்யும் வல்லவா' என்றார். இதனை,

"அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
மண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயி னனு

மண்டங்க ளுள்ளும் புறப்புங் கரியாயி னுனும்"

என்னுந் திருவிளையாடற் புராணச் செய்யுளாலும் நன்கறியலாம்.

ஆக்கல் காத்தல் ஒடுக்கல் எல்லாம் இறைவன் சங்கற்பமாதலின் 'நீ நினைந்த வாறே யெல்லாம்' என்றார். மாப்பிரமாண்டம் என்றது - மிகப் பெரிய பிரமாண்டங்கள் என்பதாம். 6

இறைவனே! மனந்துடித்து இருகண் அருவிசோர மன
நெகிழ்ந்து உருகுவேனோ என்கின்றார்

சொல்லாலே வாய்துடிப்ப தல்லா னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சுங் கல்லான் முக்கட்
கனியேநெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ.

(ப-ரை) கல்-கல், ஆல் - ஆலவிருட்சத்தின் கீழிருக்கின்ற, மு - மூன்று, கண்-கண்களையுடைய, கனியே - கனியே!, சொல்லாலே - சொற்களினாலே, வாய் - அடியேனுடைய வாய், துடிப்பது - பதைப்பது, அல்லால்-அல்லாமல், நெஞ்சம்-மனதும், துடித்து-பதைத்து, இரு-இரண்டு, கண்-கண்கள், நீர்-நீர், அருவி-அருவியைப்போல, சொரிய - பொழிய, தேம்பி-வாடி, கல்-கல், எய்-ஒப்ப, இருந்த-சமைக்கப்பட்டிருந்த, நெஞ்சம்-மனதும், நெக்கு - நெகிழ்ந்து, உருகிடவும்-உருகவும், காண்பேனோ-காணுவேனோ? எ-று.

(வி-ரை) உள்ளபடி மனத்தே அன்பும் உருக்கமின்றி எல்லாரையும் எத்திவிட கற்ற கல்விச் சமத்தால் பேசுகின்றேன் என்பார், 'சொல்லாலே வாய்துடிப்ப தல்லால்' என்றார். 'நெஞ்சந் துடித்தல்' ஆவது அன்பின் பெருக்கால் மனம் பதைத்தல். இருகணீரருவி என்றது ஆனந்தக் கண்ணீர்ப்பெருக்கை. கல்லால் என்றது வடஆலவிருக்ஷத்தை. கனியே என்றது முக்கனிகளை. இறைவன் எல்லார்க்கும் இன்பு அருள்வோனாதலின் 'கனியே' என்றார். இனி, எல்லாரிடத்தும் இளகின்ற இன்பருள்வோனெனினும் ஆம். நெக்குருகிட என்றது நெக்குவிட்டு உருகுதலை. அதாவது கட்டுவிட்டிளகுதல். கொல்லோ இது கொல்+ஓ என ஈரிடைச்சொல். 'கொல்' ஐயப்பொருளிலும், 'ஓ' வினைப்பொருளிலும் வந்தது. 7

---

## பெற்றவட்கே

கல்நெஞ்சுடையவர்கள் சிவாநந்தப்பேற்றின் இன்பத்தை
அறியார் எனல்

பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெறுப்பேதை யறிவாளோ பேரா னந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண் டாகும்
உறுதவரே கன்னெஞ்ச முடைய ராவார்.



(ப-ரை) பெற்றவட்கே - பிள்ளையைப் பெற்றவர்களுக்கே, அந்த-அந்த, வருத்தம்-கருவுயிர்க்குந் துன்பம், தெரியும் - தெரியும், பிள்ளை - பிள்ளையை, பெறு-பெறாத, பேதை - பேதைப்பெண், அறிவாளோ - அந்த வருத்தத்தை அறிவாளோ, (அறியாள் அதுபோல) பேர்-பெரிய, ஆனந்தம் - சிவானந்தம், உற்றவர்க்கே - அனுபவிப்பவர்களுக்கே, கண்ணீர் - கண்ணீரும், கம்பலை - நடுக்கமும், உண்டாகும்-உண்டாகும், உறாதவரோ - (ஆனந்தம்) அடையாதவரோ, கல்-கல்போன்ற, நெஞ்சம்-மனதை, உடையர்-உடையவர்கள், ஆவார்-ஆவார்கள் எ-று.

(வி-ரை) பெற்றவட்கே என்ற இடத்து அவாய்நிலையால் பிள்ளை என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. அந்த வருத்தம் என்றது வயாநோயை. பேதை என்ற பருவப்பெயர் ஆகுபெயராய் பெண்ணைக் குறித்தது. 'அறிவாளோ' இதின் ஈற்று ஓகாரம் வினைப்பொருளில் வந்தது. பேரானந்தம் என்றது பெரிய சிவாநந்தத்தை. 'கண்ணீர் கம்பலை' இது உம்மைத்தொகை. 'கண்ணீரும் கம்பலையும்' என விரியும். கண்ணீர் என்றது ஆனந்தக் கண்ணீரை. 'கம்பலை' ஆனந்தத்தால் உண்டாகும் தேகஅசைவு, ஆட்டம். உறாதவர் என்றது சிவாநந்தத்தை உறாதவர்களை. பிள்ளைபெறுந் துயரம் பிள்ளையைப் பெற்றவட்கே தெரியும். மலடி பிள்ளைபெறுந் துயரத்தை அறியாள்; அதுபோல சிவானந்தம் பெற்றவர்க்குத்தான் சிவானுபவந்தோன்றும். கல் நெஞ்சமுடையவர் சிவானுபவப்பேற்றை அறியார் என்று விளக்கினாராயிற்று. "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்", "முகம்போல முன்னுரைப்பதில்" என்றபடி மனத்தின் கண்ணே உண்டாகும் அன்பின் நெகிழ்ச்சி முகத்திற் கண்ணீராலும், உடம்பில் அதன் அசைவாலும் அறியக் கிடக்கும் என்பதாம். கண்ணீர் பெருகுதலையும், உடம்பு அசைவு உறுதலையும் மெய்ப்பாடு என்பர். உறாதவர் என்றது சிவாநந்தத்தைப் பெறாதவர்களை. கன்னெஞ்சம் இது உவமத்தொகை; கல்போன்ற நெஞ்சம் என விரியும். இதுமுதல் பதினொரு பாடல்கள் ஒருதொடர். இப்பகுதிக்கு 'பெற்றவர்கட்கே' எனப் பெயரிட்டார். இப்பதிகத்து முதற்பாடலின் முதலடியின் முதல் பெற்றவட்கே எனத் தொடங்கியதால் இப்பெயர் வந்தது. இப்பதிகம் அந்தாதித் தொடையாக இயைந்தது. 1

இறைவனே! நீ வன்னெஞ்சர்க் கிரங்குவது எவ்வாறு எனல்

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி
அப்பனே ஆனந்த வடிக ளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே.

(ப-ரை) ஆவா - ஐயோ, என்று - என்று, அழுது - அழுது, தொழும்-வணங்குகின்ற, கையர் - கையை உடையவர்கள், ஆகி - ஆகி, அப்பனே-அப்பனே!, ஆனந்த - இன்பத்தை விளைவிக்கும், அடிகளே-சுவாமியே!, நீ-தேவ

ரீர், வாவா - வாவா, என்றவர்க்கு - என்று அழைத்தவர்களுக்கு, அருளும்-அருளைச்செய்கின்ற, கருணை-கருணையையுடைய, எந்தாய்-எனது தந்தையே!, நீ-தேவரீர், வல்-வலிய, நெஞ்சர்க்கு-நெஞ்சினை உடையவர்களுக்கு, இரங்குவது-இரங்கி அருள்வது, எவ்வாறு-எந்தவிதம்? எ-று.

**(வி-ரை)** 'ஆவா' இது 'ஐயோ' என்னும் பொருள் குறிக்கும் இரக்கச் சொல். 'அடிகளே' இது ஞானத்தால் உயர்ந்தாரைக் குறிக்குஞ் சொல். ஈண்டு இறைவனைக் குறித்தது. 'அடிகளே!' என்பது விளியுருபு ஏற்ற பெயர். 'வாவா' என்றது விரைவுபற்றி அடுக்கி வந்தது. 'அழுதா லுன்னைப் பெறலாமோ' என்ற மணிவாசகர் அழு தழுதே இறைவன் திருவடிநீழ லடைந்தா ராதலினாலும், "ஆவாவென் ... ... ... கருளுங் கருணை யெந்தாய்" என்றார். மணிவாசகர் அழுதழுது இறைவன்றாள் அடைந்தமையை,

"எழுதரு மறைகடேறா விறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் தாளும்புகண் ணீருண்மூழ்கி
அழுதடி யடைந்தவன்ப னடியவர்க் கடிமை செய்வாம்"

என்ற **திருவிளையாடற் புராணச்** செய்யுளால் அறியலாம்.

எந்தாய்-என்றது முன்னிலை விளி. 'நீயே' என்பதில் ஏ-ஈற்றசை. 2

இறைவனே! அடியேனுக்கு இன்னம் அன்பு பெருகப் பாராய் எனல்

நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
 நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கெனவோ ரன்பு முண்டோ
 பெம்மானே இன்னமன்பு பெருகப் பாராய்.

**(ப-ரை)** பெம்மானே - பெருமானே!, நினைவு - அடியேனின் நினைவின், ஊடே - உள்ளே, நின்று-இருந்து, உணர்த்தி-அறிவுறுத்தி, நிகழ்த்தலாலே-நடத்துகையாலே, எளியேற்கும் - எளியனாகிய எனக்கும், தாகம் - தாகரூபமாகவும், மோகம் - மோகரூபமாகவும் உள்ளவன், நீயே-தேவரீரே!, பேயேற்கும்-பேயை ஒத்த அடியேனுக்கும், தனக்கும்-தனக்கும், என - என்று, ஓர்-ஒரு, அன்பும் - அன்பும், உண்டோ - உளதோ?, பெம்மானே - பெருமானே!, இன்னும்-இன்னமும், அன்பு-அன்பானது, பெருக - வளர, பாராய் - அருட்கண் நோக்குவாயாக எ-று.

**(வி-ரை)** நீயே - என்றது இறைவனை; இதில் 'ஏ' தேற்றப்பொருளில் வந்தது. இறைவன் முன்னே தன் எளிமையுந் தாழ்மையும் தோன்ற 'எளியேற்கும்' என்றார். எளிமை அறிவு போதாமையைக் குறித்துளது. இனி சுதந்தரமின்மைக் குறித்தது எனினும் ஆம். இன்ப சுகாநந்தப் பேற்றிற்கும் பிறவித்துயரின் நின்றும் நீங்கற்கும் இறைவன் வேண்டப்படுபவன் ஆக இருந்தலினால், 'நீயேயிங் கெளியேற்கும் தாகமோகம்' என்றார். தன்



மனம் அலைக்க அலைந்து திரிகின்றமையின் 'பேயேன்' என்றார். இறைவனே உள்ளே இருந்துகொண்டு ஆட்டுவிக்கின்றான் ஆதலின், அவனின்றி அணுவும் அசையா தாதலின், அவனின்றி ஒருசெயலும் இல்லை ஆதலின் "நினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்தலாலே" என்றும், "பேயேற்குந் தனக்கெனவோ ரன்புமுண்டோ" என்றுங் கூறினார். இறைவன்மாட்டு அன்பு பெருகப் பெருக சிவானந்தம் பெருகுகின்ற தாதலின், 'பெம்மானே யின்ன மன்பு பெருகப் பாராய்' என்றார். "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றபடி அவனிடத்து அன்பு பெருகுதற்கும் அவன் அருள்வேண்டி இருத்தலினால், 'பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய்' என்றார். 'பாராய்' முன்னிலையேவல். ஈண்டு 'பாராய்' என்றது பெருக்கி அருள் என்று வேண்டிக்கொண்டதாம். 3

இறையே! அடியேன் துன்பந்தொலைக்க வாராயோ உன் திருவடியை
என் தலைமேல் இன்னொருதரம் வைக்காயோ எனல்

பாராயோ என்றுயர மெல்லா மையா
 பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ இன்னமொரு காலா னாலு
 மலர்க்காலென் சென்னிமிசை வைத்தி டாயோ.

**(ப-ரை)** ஐயா-ஐயனே!, என்-அடியேனுடைய, துயரம் - துன்பம், எல்லாம் - அனைத்தும், பாராயோ - தொலைத்தொழிக்கப் பார்க்கமாட்டாயோ?, பகரும்-நான் சொல்வதற்கு, முன்னே-முன்னே, தெரியாதோ-தேவரீருக்குத் தெரியாதோ?, பாவியேன் - பாவியாகிய என், முன் - எதிரில், இன்னம்-மற்றொரு, கால்-தரம், வாராயோ-வரமாட்டாயோ?, மலர்-தாமரைமலர்போன்ற, கால்-திருஅடிகள், என்-அடியேனுடைய, சென்னி-தலையின், மிசை-மேலே, வைத்திடாயோ-சூட்டாயோ? எ-று.

**(வி-ரை)** தண்ணருளுடன் ஆன்மகோடிகளின் துன்பங்களைப்போக்கி, இன்பத்தை அருள்வோன் இறைவன் ஆதலினாலும், பார்த்தமாத்திரத்தே கருணை சொரூபியாகிய இறைவனுக்குக் கருணை பிறக்கும் ஆதலினாலும், 'பாராயோ வென்றுயரமெல்லா மையா' என்றார். இறைவனே நீ சர்வ வியாபகன் ஆதலினாலும் உணர்த்தாது உணர்வோனாதலினால் 'பகருமுன்னே தெரியாதோ' என்றார். ஒருவனுக்கு பிறத்தல் இறத்தல் துயரும், உலகத் துயரும், காமக்கலகத்துயரும், பொன்றேடுதுயரும், மனைவி மக்கள் பொருட்டெய்துந் துயரும் எனப் பலப்பல துயரங்களுண்டாதலின் 'என்றுயரமெல்லாம்' என்றார். இதனை,

"அன்னவிசார மதுவே விசார மதுவொழிந்தால்
சொன்னவிசாரந் தொலையா விசாரம்நற் றோகையரைப்
பன்னவிசாரம் பலகால் விசாரம்இப் பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம் வைத்தா யிறைவாகச்சி யேகம்பனே"

என்ற **பட்டினத்தடிகளின்** திருவாக்காலும் அறியலாம்.

திருவருட்பேற்றைப் பூரணமாக அனுபவித்தற்கு இன்னும் பரிபக்குவம் பெறுமையால் 'பாவியேன்முன் வாராயோ' என்றார். முன் மௌனதேசிகராக இறைவன்வந்து அருள் செய்துளானாதலினாலும் அப்பொழுதே திருவடித்தீட்சை தந்தருளியுளானாதலினாலும் 'வாராயோ வின்ன மொருகாலானுலு மலர்க்காலென் சென்னிமிசை வைத்திடாயோ' என்றார். 'மலர்க்கால்' இது உவமத்தொகை; மலர்போலுங் காலென விரியும். பாராயோ, தெரியாதோ, வாராயோ, வைத்திடாயோ என்ற இவைகளின் ஈற்றில் நின்ற ஓகாரங்கள் அனைத்தும் வினாப்பொருளில் வந்தன. 4

இறைவனே! அடியேன் பேறின்பம் பெறுவதெக்கா லெனல்

வைத்திடுங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில்
 வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச்
சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக் கொண்டு
 தியக்கமற வின்பசுகஞ் சேர்வ தென்றோ.

(ப-ரை) வைத்திடும் - அவ்வாறு என் சிரசின்மீது வைக்கின்ற, காலை-திருவடிகளை, பிடித்து-பற்றிக்கொண்டு, கண்ணிலும்-கண்களிலும், மார்பில்-மார்பிலும், வைத்து - வைத்து, அணைத்து - தழுவி, கொண்டு - கொண்டு, கையால் - அடியேன் கைகளால், வளைத்து - வளைத்து, கட்டி-கட்டி, சித்தம்-நெஞ்சின், மிசை - இடத்து, புக - புகுந்து பொருந்த, இருத்தி - வைத்து, பிடித்து - பற்றி, கொண்டு - கொண்டு, தியக்கம் - மயக்கம், அற-இல்லாமல், இன்பம்-பேரின்பம், சுகம் - ஆனந்தத்தை, சேர்வது - அடியேன் அடைவது, என்றோ-எக்காலமோ? எ-று.

(வி-ரை) பல பிறப்புகளிற் செய்த புண்ணியவசத்தால் பெற்ற திருவடியை அரும்பெரும் தவத்தாற் பெற்றெடுத்த தன் அருமை மகளை கட்டியணைத்து முத்திட்டு மகிழுமாறு மகிழுவன் என்பார், 'வைத்தணைத்துத் ... ... ... இன்பசுகஞ் சேர்வதென்றோ' என்றார். வைத்திடும் காலை என்றது-இறைவன் தன் சென்னிமிசை வைத்துத் திருவடி தீட்சை செய்தகாலை. கண்ணின் என்றது இன ஒருமை இதற்குக் கண்களில் என்று பொருள்; இரண்டு கண்களாதலின். கண்ணின் மார்பில் இது உம்மைத் தொகை, 'கண்களிலும்' மார்பிலும்' என விரியும் உம்மை தொக்குநின்றது. வளைத்துக்கட்டி என்றது அணைத்துத் தழுவிக்கொள்ளுதலை, சித்தமிசைப் புகவிருத்தி என்றது ஆராநெஞ்சில் அன்பொடு பதித்தல், அதாவது இடைவிடாது சிந்தித்திருகுதலை. தியக்கமற என்றது மயக்கமின்றி; அதாவது வேறு எதுஞ் சிந்தனையின்றி அத்திருவடிகளையே சிந்தித்திருத்தலை. இதனையன்றோ **மணிவாசகப் பெருமானார்** தனக்குச் சிவபெருமான் திருப்பெருந்துறையில் ஒருமுறை திருவடிதீட்சை செய்திருக்கவும் பின்னும் பின்னும் வேட்ட நெஞ்சாய், 'எனக்கின்று முன்கழல் காட்டி மீட்கவும் மறுவில் வானனே' என்றார். இன்பசுகம் என்றது சிவானந்தப் பெருஞ்சுகத்தை.



"அண்ணாவோ எங்கள் தேவே அடியேற்குக் கருணையாலே
பண்ணார்கின் கால்கள் காட்டிப் பரிந்தெனது தலைமேல்வைத்தே
நண்ணுப்பே ரின்பந்தந்த நலப்பேற்றைப் பின்னும் பின்னும்
எண்ணுயி ரங்காற் செய்யின் எனக்கென்றுந் தெவிட்டாதப்பா"

என்ற **அமுதவாக்கைக்** கொண்டும் அறியலாம். 5

இறைவனே! ஏன் எனை மாயையில் அழுந்த வைத்தா யெனல்

சேராமற் சிற்றினத்தைப் பிரிந்தெந் நாளுந்
 திருவடிப்பே ரினத்துடனே சேரா வண்ணம்
ஆராக நானலைந்தே னரசே நீதா
 னறிந்திருந்து மாயையிலே னழுந்த வைத்தாய்.

(ப-ரை) அரசே-அரசனே!, சிற்று-சிறிய, இனத்தை - இனத்தவர்களை, சேராமல் - கூடிக்கலவாமல், பிரிந்து - அவர்களினின்றும் நீங்கி, எ - எந்த, நாளும் - பொழுதும், திரு அடி - தேவரீரின் திருவடியை யடைந்த, பேர்-பெரிய, இனத்துடனே-கூட்டத்தவர்களுடனே, சேரா-கலவாத, வண்ணம்-விதம் (அடியேனை), ஆர் - யார், ஆக - ஆக எண்ணிக்கொண்டு, அலைந்தேன்-அடியேன் திரிந்தேன், நீர் - தேவரீர், தான் - தான், அறிந்து-இவ் உண்மைகளைத் தெரிந்து, இருந்தும் - இருந்தும், ஏன்-எதற்காக, மாயையில்-மாயையிலே, அழுந்த-மூழ்க, வைத்தாய்-வைத்தாய்? எ-று.

(வி-ரை) "பெரியாரைத் துணைக்கொள்" என **ஔவைப்பிராட்டி** மொழிந்ததுபோலப் பெரியார் இனத்தைச் சேரின் முத்திப்பேறு தப்பாது. சிறியவர் இனத்தைச் சேறின் உலகில் துன்பமும், இழிவும், எய்தும் பிறப்பிறப்பில் பட்டுழலவேண்டி வரும். சிற்றினம் - என்றது கல்வி, அறிவு, ஒழுக்கம், பத்தி முதலியவைகளிற் குறைவுபட்டாரையும் அவைகளைப் பெறாதவர்களையும். இனி பெத்தான்மாக்களை எனினும் பொருந்தும். திருவடிப்பேரினம் என்றது கல்வியால், அறிவால், ஒழுக்கத்தால், பத்தியால் சிறந்து நிற்பவர்களை. இனி முத்தான்மாக்களை எனினும் பொருந்தும். இதனையன்றோ சங்கத்தார்கள் 'எல்லாம் விடு சிறியாரோ டியாத்த தொடர்பு' என்றனர். 'சிறியார்தம் உறவு வேண்டேன்' என்றார் மற்றோர் **பெரியாரும்**. பெரியாரைத் துணைக்கோடலை **திருவள்ளுவரும்**,

"அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்" எனவும்,

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்"

எனவுங் கூறியதானும், சிறியார் தொடர்புவிட்டு நீங்கவேண்டு மென்பதை,

"நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்"

எனவுங் கூறிய அருமைத் திருவாக்குகளாலும் அறியலாம். 6

நீ அடியேனுள்ளத் திருப்பது பொய்யோ வெனல்

வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
 வசமெனவே யான்கொடுக்க வாங்கிக் கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
 சிறியேற்கிங் குளவுரையாய் திகையா வண்ணம்.

(ப-ரை) வைத்த - அடியேன் தேடிவைத்த, பொருள் - செல்வப்பொருளும், உடலும் - உடலும், ஆவி - உயிரும் ஆகிய, மூன்றும்-இம்மூன்றையும், நின் - தேவரீரது, கைவசம்-கையினிடத்தே, யான்-அடியேன், கொடுக்க-தர, வாங்கி-தேவரீர் வாங்கி, கொண்டு-கொண்டு, சித்தம்-அடியேனின் மனத்தின், மிசை - இடத்தே, புகுந்தது-நுழைந்து இருந்தது, தான்-தான், மெய்யோ-உண்மைதானோ?, பொய்யோ-பொய்தானோ?, இங்கு-இவ்விடத்தில், திகையா-அடியேன் மயங்கா, வண்ணம் - விதம், சிறியேற்கு - சிறியவனாகிய அடியேனுக்கு, உளவு-உண்மை இரகசியத்தை, உரையாய்-உரைப்பாயாக எ-று.

(வி-ரை) இறைவனே மௌனகுருவாக அருள்புரிய வந்தகாலத்துக் குருகாணிக்கையாக உடல், பொருள், ஆவி மூன்றையுந் தத்தஞ்செய்துள்ளமையால், 'வைத்த பொரு ளுடலாவி மூன்று நின்கை வசமெனவே யான் கொடுக்க வாங்கி' என்றார். 'மூன்றும்' என்றதன்கண்ணுள்ள உம்மை முற்றும்மை. இறைவன் குருவாக எழுந்தருளி உடல் பொருளாவி மூன்றையும் தத்தமாக வாங்கிக்கொண்டு மனத்துக் குடிகொண்டமையால், 'வாங்கிக் கொண்டு சித்தமிசைப் புகுந்ததுதான்' என்றார். அந்தர்முகம் விட்டுப் பகிர்முகப் படுங்கால் உலகவிவகாரந் தலைப்படலினால், 'மெய்யோ பொய்யோ' என்றார். தனக்குப் பூரணஅறிவு இன்மையான் 'சிறியேற்கு' என்றார். உளவு-என்றது உண்மை இரகசியம் என்ற பொருளது. உரையாய் - இது முன்னிலை ஏவல். உண்மை தெரியாதவரை மனந்தெளியா வன்மையதாகையால், 'திகையாவண்ணம்' என்றார். இதனை,

"உடலுடனே மூன்றுங்கொண் டுள்ளுறைதல் பொய்யோ
படவரவம் பூண்ட பரமா—கெடவென்னைப்
பற்றிப் பிரபஞ்சம் பாசத்து ளிட்டாயே
சற்றறியச் சொல்லித் தணி"

என்ற **பெரியார்** வாக்கானும் அறியலாம். 7

இறைவனே! பேரானந்தத்தை பூராவும் தாராது திவலைகாட்டி மறைத்தால் திகைக்காதோ உள்ளம் என்கின்றார்

திகையாதோ எந்நாளும் பேரா னந்தத்
 தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தாய் உண்டு டுத்து
 வாழ்ந்தேனு னிரண்டுகான் மாடு போலே.



(ப-ரை) திகையாதோ - அடியேனின் மனமானது மயங்காதோ, எ-எந்த, நாளும்-காலமும், பேர்-பெரிய, ஆனந்தம்-இன்பமயமாகிய, தெள்-தெளிந்த, அமுதம் - அமுதத்தை, உதவாமல் - தராமல், திவலை - ஒருசிறு துளியை, காட்டி-காட்டி, வகையாக-விதம்விதமாக, அலக்கழித்தாய்-அலைய வைத்தாய், இரண்டு-இரண்டு, கால் - கால்களையுடைய, மாடு-மாடு, போல்-போல, உண்டு-உண்டும், உடுத்து - உடுத்தும், நான்-அடியேன், வாழ்ந்தேன்-வாழ்ந்தேன் எ-று.

(வி-ரை) திகையாதோ என்றது என் மனந்திகையாதே என்று வருவித்து முடிக்க. எந்நாளும் என்றதில் நாள் என்பது காலத்தை உணர்த்தா நின்றது. பேரானந்தம் என்றது - சிவானந்தத்தை. பேரானந்தத்தெள்ளமுது என்றதும் அது. பேரானந்தமாகிய தெள்ளமுது என விரியும். திவலை-துளி, ஈண்டு பேரானந்தத் தெள்ளமுதம் என்றதற்கு ஏற்பத் திவலைகாட்டி என்றார். அலக்கழித்தல் என்றது துன்புறுத்தலை. துன்பம் பலபலவகையாக வருதலினாலும், இன்பதுன்பங்களை இறைவன் அவை அவைகளின் வினைகட்கு ஏற்பத் தருகின்றான் ஆதலினாலும் 'வகையாக வலக்கழித்தாய்' என்றார். பிறந்தது இறைவன் திருவருளைப்பெற்று முத்தியடைய வாதலினால் அது செய்யாது உண்டு உடுத்துத் திரிகின்றேன் என்பார் 'உண்டுடுத்து வாழ்ந்தேனு னிரண்டுகான் மாடுபோல' என்றார். ஈண்டு தன்னை மாடு என்றது திருவருளைப்பெற அறிவு இருந்தும் அது பெறாது கழித்தலைத்தமையாயின் 'இரண்டுகான் மாடுபோல' என்றார். இரண்டுகான் மாடுபோல என்றது இல்பொருளுவமையணி. இதனை அபூதவுவமை என்பர் வடமொழியாளர். 8

இறைவனே! வீடன்றோநிலை அது அன்றோ தோன்றவேண்டும் என்கின்றார்

மாடுமக்கள் சிற்றிடையர் செம்பொ னாடை
 வைத்தகன தனமேடை மாட கூடம்
வீடுமென்பாற் றொடர்ச்சியோ இடைவி டாமன்
 மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும்.

(ப-ரை) மாடு-மாடும், மக்கள்-பிள்ளைகளும், சிற்றிடையார்-பெண்களும், செம்-செவந்த, பொன் - பொன்னும், ஆடை - ஆடைகளும், வைத்த - தேடி வைத்த, கனம்-பெரும், தனம் - திரவியமும், மேடை - உப்பரிக்கையோடும் கூடிய, மாடம்-மாளிகைகளும், கூடம் - சாலைகளும் (ஆகிய எல்லாம்), வீடும்-அடியேனைவிட்டு ஓடும், என்பால்-என்னிடத்து, தொடர்ச்சியோ - தொன்று தொட்டுவரும் தொடர்ச்சியுடையனவோ?, இடைவிடாமல் - இடைவிடாது, மிக்க-மேன்மைப்பட்ட, கதி-கதியாகிய, வீடு-மோட்சம், அன்றோ-அல்லவோ, விளங்கல்-தோன்ற, வேண்டும்-வேண்டும் எ-று.

(வி-ரை) மக்கள் - இது மகவு என்னும் சொல்லடியாகப் பிறந்தது. சிற்றிடையார் - இது சிறிய இடையை உடையவர்களாகிய மாதர்களைக் குறித்

தது. இடையார் என்றது சினையாகுபெயர். வீடும் - இது விடு என்னும் வினையடியாகப் பிறந்தது. அகலும், நீங்கும் என்னும் பொருளது. மாடு, மக்கள், மாதர், செம்பொன், ஆடை மாடகூடம் இவைகள் எல்லாம் உலகப் பொருள்கள் மாயாகாரியங்கள் ஆதலினால் 'வீடும்' என்றார். இதனை,

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வ தெல்லாம்
கேடுண் டெனும்படி கேட்டுவிட்டோ மினிக் கேண்மனமே"

என்ற **பட்டினத்தடிகள்** திருவாக்கானும் அறியலாம்.

சிவானந்தப் பெரும்பேறு நிச்சயமாதலினால் 'இடைவிடாமல் மிக்கநி வீடன்றோ விளங்கல் வேண்டும்' என்றார். வீடன்றோ என்றது முத்தி வீட்டை. இதுவும் 'விடு' என்னும் வினையடியாகப் பிறந்தது. வீடு நித்தியம் என்பது,

"விட்டே னுலகம் விரும்பே னிருவினை வீணருடன்
கிட்டே னவருரை கேட்டுமி ரேன்மெய் கெடாதநிலை
தொட்டேன் சுகதுக்க மற்றுவிட்டேன் றொல்லை நான்மறைக்கு
மெட்டே னெனும்பர மென்னிடத்தே வந்திங் கெய்தியதே"

என்றார் **மணிவாசகரும்**. 9

இறைவனை வேதகம் என்பன முதலான அதிமொழிகளால் விளிக்கின்றார்

**விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற**
**வேதகமே போதகமே விமல வாழ்வே**
**களங்கரகி தப்பொருளே என்னை நீங்காக்**
**கண்ணுதலே நாதாந்தக் காட்சிப் பேறே.**

**(ப-ரை)** விளங்க-தெரியும்படி, எனக்கு-அடையேனுக்கு, உள்ளுள்ளே-மனத்துக்குள்ளே, விளங்காநின்ற-பிரகாசியாநின்ற, வேதகமே-வேதவித்தே, போதகமே - ஞானவித்தே!, விமல - மலமற்ற (பரிசுத்தமாகிய), வாழ்வே-வாழ்வே, களங்கம் - மாசு, ரகிதம்-நீங்கிய, பொருளே - பொருளே!, என்னை-அடியேனை, நீங்கா-பிரியாத, கண்ணுதலே-நெற்றிக்கண்படைத்த கடவுளே!, நாதம்-நாததத்துவத்தின், அந்தம்-முடிவில், காட்சி - தர்சனம் அருளுகின்ற, பேறே-இன்பப்பேறே! எ-று.

**(வி-ரை)** இறைவன் "உயிர்க்கு உயிர் ஆனாய்" என்றபடி உயிர்க்கு உயிராய் இருப்பவன் ஆதலினால் 'விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்காநின்ற வேதகமே' என்றார். இதனானன்றோ **தேவாரத்** திருமுறைகளில் இறைவனை "உள்ளத்துள்ளுறையுஞ் சோதி" எனப் புகழ்ந்து துதித்தனர். இறைவன் வேதவித்தாக விளங்குபவன் ஆதலினால் 'வேதகமே' என்றார். இறைவன் ஞானவித்தாக இருப்பவன் ஆதலினால் 'போதகமே' என்றார். இயற்கையிலே இறைவன் பாசபந்தங்களினின்றும் நீங்கியவன் ஆதலினால் 'விமலவாழ்வே' எனவும் 'களங்கரகிதப்பொருளே' எனவுங் கூறினார். இறைவன் எல்லாப்



பொருள்களிலும் உட்பொருளாக இருப்பவன் ஆதலினால் 'என்னை நீங்காக் கண்ணுதலே' என்றார். இறைவன் நெற்றிக்கண் உடையவன் ஆதலினால் 'கண்ணுதலே' என்றார். இறைவன் நாதாந்தத்தில் ஜோதிசொரூபமாக விளங்குகின்றவன் ஆதலினால் 'நாதாந்தக் காட்சிப்பேறே' என்றார். விமலம் என்றால் பரிசுத்தம் என்பது பொருள்; விமலம்-மும்மலத்தையும் அழிக்குமென்பதுவுமாம். இது, வி+மலம் = விமலம் (மலம் அற்றது) என்பது கொண்டுவந்த பெயருமாம். 10

இறைவனே! அடியேனை விட்டுவிடாதே என்கின்றார்

**நாதமே நாதாந்த வெளியே சுத்த**
**ஞாதுருவே ஞானமே ஞேய மேநல்**
**வேதமே வேதமுடி வான மோன**
**வித்தேஇங் கென்னையினி விட்டி டாதே.**

**(ப-ரை)** நாதமே - நாதரூபத்தை உடையவனே!, நாதாந்த - நாதமுடிவாகிய, வெளியே - சிதாகாசமே!, சுத்த - பரிசுத்தமான, ஞாதுருவே - ஆன்மாவே!, ஞானமே-ஞானமே!, ஞேயமே-சிவமே!, நல்-சிறந்த, வேதமே-வேதமாக விளங்குபவனே!, வேதம்-வேதத்தின், முடிவான-அந்தமாகிய, மோன-மவுன, வித்தே-வித்தே (நிலையே), இங்கு-இவ்விடத்து, என்னை - அடியேனை, இனி-இனிமேல், விட்டிடாதே-கைவிடாதே எ-று.

**(வி-ரை)** இறைவன் நாததத்துவமாகியும், நாதாந்தமாகியும் அதற்கு மேலுள் வெறும் வெளியாகியும் நிற்பவன் ஆதலினால் 'நாதமே நாதாந்த வெளியே' என்றார். காண்பான், காட்சி, காணப்படு பொருள் முறையே ஞாதுரு, ஞானம், ஞேயம் என்பர். இவைகளைத் திரிபுடி எனவுங் கூறுவர். காணப்படு பொருள் சிவம் ஆதலின் ஞேயம் என்பதனைச் 'சிவம்' என்றும். இறைவன் இதனை, "அறிவுமவ் வறிவுதானு யறிவிக்கு மறிவோடன்றி லறிவொ டானந்தமாகி நின்ற தன்றே" என்ற **பரமஞான விளக்கம்** நூலாலும்,

"அறியறிவாய் ஆங்கே அறிவிக்கு மறிவாய்
அறிவுடனா னந்தமுமே யாகி—அறியவொணா
அதீதமுமா நின்ற அரும்பொருளே செப்பும
அதீதசிவ மாகும் அறி"

என்னும் **செய்யுளாலும்** அறியலாம்.

வேதமும், வேதப்பொருளும், ஆக இருத்தலின் 'வேதமே' என்றார். வேதாந்த முடிவு மோனானந்த சொரூபமாதலின் 'வேதமுடிவான மோன வித்தே' என்றார். "ஞானவரம்பாகிய மோனநிலை" யில் நின்றவர் காணும் பொருள் சிவமாதலின், 'வேதமுடிவான மோன வித்தே' என்றார். இறைவன் திருவருளினுக்குப் புறம்பாகாதபடிக் காத்தருளவேண்டும் என்பார், 'இங்கென்னை யினி விட்டிடாதே' என்றார். 11

## கல்லாலின்

இறைவனே! ஜனகாதி முனிவர்க்கு நீ உணர்த்தியது கைகாட்டு
அது சொல்லுந் தன்மையதன்று என்கின்றார்

கல்லாலி னிழறனி லொருநால் வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றால்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபே யன்றோ.

(ப-ரை) கடவுள்-கடவுளாகிய, நீ-தேவரீர், கல்-கல், ஆலின் - ஆலவிருட்சத்தின், நிழல்-நிழல், தன்னில் - தன்னிலே, ஒரு - ஒப்பற்ற, நால்வர்க்கும்-ஜனகாதி முனிவர்களாகிய நான்கு பேர்களுக்கும், உணர்த்துவதும் - உபதேசிப்பதும், கை-கையினால், காட்டு-குறிப்புக்காட்டல், என்றால்-என்று சொல்வதானால், சொல்லாலே - (அந்த ஞானரகசியம்) சொல்லினாலே,, சொல்ல - சொல்லுதற்கு, படுமோ-கூடுமோ?, சொல்லும்-அவ்விரகசியத்தைச் சொல்லுகிறேன் என்று துணிந்து சொல்லப்புகும், தன்மை - தன்மை, துரும்பு - ஒரு சிறிய துரும்பை, பற்றி - உதவியாகப் பிடித்துக்கொண்டு, கடல்-கடலை, கடக்கும்-தாண்டப்புகும், துணிபே - துணிவைப்போன்றது, அன்றோ - அல்லவா? எ-று.

(வி-ரை) கல்லால் என்றது சிவபெருமான் ஜனகாதி முனிவர்க்கு ஞானோபதேசஞ்செய்தற்பொருட்டுத் தட்சணாமூர்த்தமாக எழுந்தருளியிருந்த கல்லாலவிருக்ஷத்தை. இது கைலைக்கண் உள்ளது. ஒரு நால்வர் என்றது ஜனகாதி முனிவர்கள் நால்வரை. அவர்களாவார்:—சனகர், சனற்குமாரர், சனந்தனர், சனாதனர் இவர்கள் பிரமபுத்திரர்கள். கைகாட்டு என்றது அபயாஸ்தக் குறியையும், சின்முத்திரையையுங் குறிக்கும். அந்தச் சின்முத்திரைப்பொருளை மாயாகாரியமாகிய வைகரிவாக்கால் விளக்கமுடியாதென்பார் 'சொல்லாலே சொலப்படுமோ' என்றார். அவ்வாறு சொல்லப் புகுந்தாலும் சொல்லி முடிக்க முடியாது என்பதை, மரக்கலங்கொண்டு கடக்க வேண்டி கடலைத் துரும்புபற்றிக் கடக்கப்புகுந்ததை ஒத்திருக்கின்றது என்றார். அதாவது:—குருவின் உபதேசமுகத்தானே இவ்வான்மா பிறவிக் கடலைக் கடக்க முடிவதேயல்லாமல், அஃதில்லாமல் தான்தோன்றியாகிய ஞானத்தைக்கொண்டு தலைவனைக்கண்டு அவனடி கிட்டமுடியாதென்னும் அறிவைக் குறிப்பாலுணர்த்தியபடி.

இதுமுதல் முப்பதுபாடல் ஒரு தொகுதி. இம் முப்பது பாடல்களும் அந்தாதித் தொடையாக அமைந்திருக்கின்றன. இன்னும் இப்பகுதியின் முதற்பாட்டின் முதலடி முதற்சீரும் கடைசிபாட்டின் கடைசி அடியின் கடைசிச்சீரும் ஒன்றாகி மண்டலித்தும் வந்தது. இப்பகுதியின் முதற்பாட்டின் முதலடியின் முதற்சீரில் 'கல்லாலின்' என்று தொடங்கியதால் இதற்குக் **கல்லால்** என்று பெயர் உண்டாயது. இம் முப்பது பாக்களும் கலியினத்தைச் சேர்ந்தவை. 1



இறைவனே! தேவரீரை உன் அருளைக் கொண்டுதான்
அறியவேண்டும் என்கின்றார்

அன்றோஆ மோஎனவுஞ் சமய கோடி
யத்தனையும் வெவ்வேறா யரற்ற நேரே
நின்றாயே நினைப்பெறுமா றெவ்வாறு ஆங்கே
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவே றுண்டோ.

(ப-ரை) அன்றோ-இது உண்மைப்பொருள் அல்லவோ?, ஆமோ - இதுதான் ஆகுமோ?, எனவும்-என்றும், சமயகோடி-சமயகோடிகள், அத்தனையும்-எல்லாம், வெவ்வேறாய் - வித்தியாசம் வித்தியாசமாக, அரற்ற-பிதற்றும்படி, நேரே-அவரவர் கொள்கைகளுக்குநேரே, நின்றாயே-நின்றாயே, நினை - தேவரீரை, பெறும் - அடையும், வழி - வழி, எ - எந்த, ஆறு - விதம், அங்கே-அவ்விடத்து, நின் - தேவரீரின், அருள் - திருவருளை, கொண்டு - கொண்டு, அறிவது - தெரிந்துகொள்வது, அல்லால் - அல்லாமல், நெறி-அறியும்வழி, வேறு-வேறு, உண்டோ-உண்டோ? எ-று.

(வி-ரை) இதுதானோ இது அல்லவோ என்பார் 'அன்றோவாமோவெனவும்' என்றார். ஓகாரங்கள் இரண்டும் வினாப்பொருளில் வந்தன. சமயகோடி-என்றது கோடிக்கணக்கான சமயங்கள் என்றதாம். 'கோடி' என்றது நூறுலட்சம் என்னுந் தொகையைக் காட்டாது மிகுதிப்பொருள் காட்டி நின்றது. சமயகோடிகள் உண்மை காணாது உளறிக் குழறுகின்றதாதலின் 'வெவ்வேறாயரற்ற' என்றார். நின்னருள் இல்லாமையால் நேரில் நிற்கும் உன்னை அறிந்துகொள்ள முடியாதனவாயின என்பார், 'நேரே நின்றாயே நினைப்பெறுமா றெவ்வாறு' என்றார். "அவனருளாலே அவன்றாள்வணங்கி" என **மணிவாசகர்** கூறியாங்கு அவனைக்காண அவன்றாள் வணங்க அவன் அருள் வேண்டுமாதலின், 'ஆங்கே நின்னருள்கொண்டறிவதல்லால் நெறிவே றுண்டோ' என்றார். இது விடை தழுவிய வினா. உண்டோ-என்பது 'இல்லை' என்னும் விடையை உடன் தந்து நின்றது. 2

இறைவனே! உலகம்முதல் எல்லாம் நீயல்லாதில்லை என்றால் அடி
யோங்கள் மட்டும் தேவரீரின் வேறோ என்கின்றார்

நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ
நிலநீர்தீக் கால்வானு நீய லாத
குறியாது மில்லையென்றால் யாங்கள் வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய்.

(ப-ரை) கோதை - உமாதேவியாரை, ஒரு-ஒரு, கூறு-பாகமாக, உடையாய்-உடையவனே!, நெறி-முறையாக, பார்க்கின்-பார்த்தால், நின்னை-தேவரீரை, அன்றி-அல்லாமல், அகிலம்-உலகம், வேறோ-வேறாக இருக்கின்றதோ?,

நிலம்-நிலமும், நீர்-ஜலமும், தீ-நெருப்பும், கால்-காற்றும், வானும்-ஆகாசமும் நீ-தேவரீர், அலாத-அல்லாத, குறி - அடையாளம், யாதும்-எதுவும், இல்லை-இல்லை, என்றால் - என்று சொன்னால், யாங்கள் - அடியோங்கள் மாத்திரம், வேறோ - வேறாகுமோ?, கூறாய் - தேவரீரே திருவாய்மலர்ந்தருளுவீராக, கூறாய்-தேவரீரே திருவாய்மலர்ந் தருளுவீராக எ-று.

(வி-ரை) நெறி என்றது முறையை. இனி ஞானநெறி பற்றிப் பார்க்கின் எனினும் பொருந்தும். நின்னை என்றது இறைவனை. இறைவன் அட்டமா உருவினன் ஆதலின் 'நிலநீர்தீக் கால்வானு நீயலாத குறியாது மில்லை' என்றார். யாங்கள் என்றது ஆன்மாக்களை. கோதை - என்றது உமாதேவியாரை. இது உவமைஆகுபெயர். கோதை போன்றவள் என்பது பொருள். கோதை-மாலை. 'கூறாய்கூறாய்' ஈண்டு விரைவின் அடுக்கிவந்தது. உலகம் மாயையின் காரியம். அம்மாயையோ ஜடம். அதை நடத்துவிப்பவன் இறைவன் ஆதலின் 'நின்னையன்றி யகிலம் வேறோ' என்றார் என்னினும் ஆம். உமாதேவியார், பாகம்பெற்ற கதையைத் திருவாசகத்தில் அறிக. 3

இறைவனே! அடியேன் தேகச் சுமையைச் சுமந்து மனம்போனபடி அலைய வைத்த தேவரீர் பெருமையை அறியேன் என்கின்றார்

கூறுடைய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்
  குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல வென்னை
  வைத்தனையே பரமேநின் மகிமை நன்றே.

(ப-ரை) பரமே - பரம்பொருளே!, கூறு - கூறுகளை உடையன, ஆய-ஆகிய, ஐம் பூதம் - பஞ்ச பூதங்களால் ஆக்கப்பெற்ற, சுமையை-தேகமாகிய சுமையை, தாங்கி-சுமந்து, குணம்-நற்குணம், இலா-இல்லாத, மனம் - மனம், எனும்-என்கின்ற, பேய்-பேய்பிடித்த, குரங்கின் - குரங்கின், பின்னே - பின்னாலே தொடர்ந்து, மாறாத-தொலையாத, கவலையுடன்-கவலையோடு, சுழல-சுழலும்படி, என்னை - அடியேனை, வைத்தனையே - வைத்தாயே, நின்-தேவரீரது, மகிமை-பெருமை, நின்று-அழகாக இருக்கின்றது எ-று.

(வி-ரை) கூறுடைய ஐம்பூதம் - என்றது பஞ்சீகரிக்கப்பட்ட பஞ்சபூதங்களையாம். இதனை, "ஐந்து பூதமும் பத்தாக்கி அதிற்பாதி நன்னான் காக்கி வந்தன தூலபூதம்" என்ற **பெரியாரின்** திருவாக்கா லறியலாம். பூதச்சுமை என்றது பூதங்களாலாகிய உடம்பை. இதனை, "சுளியார் சுமைபோ டற்கு" என்றதால் அறியலாம். 'பொன்போல இலங்குமனஞ் சஞ்சலத்தாற் குரங்காகும்' என்றபடி சலிக்குந் தன்மைக்குக் குரங்கு ஒப்பு கூறப்பெற்றது. அதிக சலனத்தைக்காட்ட பேய்பிடித்த குரங்கு மனம் என்பார், 'பேய்க் குரங்கின் மனம்' என்றார். இதனை,

"திரிகையி லாயிர வெல்லாழி மண்விண்ட ருசிரபதத்
திரிகையி லாயிர வாநந்த நாடகிசேரி மகோத
திரிகையி லாயிர மிக்கு மைந்தா செந்திலா யொருகால்
திரிகையி லாயிரக் கோடி சுற்றோடுந் திரிந்துள்ளமே"

என்ற **யமகச்** செய்யுளையும் நோக்கி அறிக.

ஓயாக் கவலை ஒழியாக் கவலையால் மனம் சுழலுதலால் 'மாறாத கவலையுடன் சுழல' என்றார். இறைவன் உயர்ந்தவற்றுளெல்லாம் மிக உயர்ந்தவன் ஆதலினால் 'பரமே' என்றார். 4



இறைவ! நீயே நானாக ரகசியந் தெரிந்திருந்தால் சுகவாழ்வு பெறுவேன் என்கின்றார்

நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
  நானாகி நீயிருந்த நியாயஞ் சற்றே
யின்றெனக்கு வெளியானால் எல்லாம் வல்ல
  விறைவா நின் னடியருட னிருந்து வாழ்வேன்.

(ப-ரை) எல்லாம்-எல்லாஞ் செய்தற்கு, வல்ல-வலிமையுடைய, இறைவா-இறைவனே!, நன்று - இது நல்லது, என்றும் - என்றுகூறவும், தீது - இது தீயது, எனவும் என்று கூறவும், எனக்கு-அடியேனுக்கு, இங்கு - இவ்வுலகத்தின்கண்ணே, உண்டோ-உளதோ?, நீ-தேவரீர், நான்-அடியேன், ஆகி-ஆகி, இருந்த-இருந்த, நியாயம் - நியாயமானது, இன்று - இப்போழ்து, எனக்கு-அடியேனுக்கு, சற்று - கொஞ்சம், வெளி - வெளிப்பட, ஆனால் - தெரியும் ஆனால், நான் - அடியேன், நின் - தேவரீரது, அடியர்-அடியார்கள், உடன்-உடனே, இருந்து-கூடியிருந்து, வாழ்வேன்-சுகமாக வாழ்வேன் எ-று.

(வி-ரை) அவ்வவ் உயிர்களின் கன்மத்திற்கீடாக விருப்புவெறுப்புகளை அருளிச்செய்து உய்விக்கின்றானாதலின் 'நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ' என்றார். இதனை, "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற **மணிவாசகர்** திருவாக்குக் கொண்டுந் தெளிக. நானாகி நீயிருந்த நியாயம் - என்றது குருவருளினால் ஞானோபதேசம் பெற்றுத் தன்னையறிந்து தலைவனை அறிந்து சிவானந்தப்பெருக்கில் மூழ்கி அத்துவிதமாகக் கலந்து நின்ற கலப்பை இது சோகம்பாவனையால் சுட்டிறந்து நிற்குநிலையைக் குறித்தது. இது சுத்தாத்துவித நிலையாம். இறைவன் சர்வசக்திமானாதலினால், எல்லாம்வல்ல இறைவா என்றார். சிவாநந்தமுற்று வாழ்வேன் என்பார் 'நின்னடியருடன் இருந்து வாழ்வேன்' என்றார். 5

இறைவனே! நின் திருவருள் நோக்கம் எங்கே எனல்

வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
  வையகத்தார் கற்பனையா மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
  பரமேநின் னானந்தப் பார்வை யெங்கே.

(ப-ரை) பரமே-பரம்பொருளே!, வாழ்வு-சுகவாழ்வு, எனவும் - என்றும், தாழ்வு-தாழ்வு, எனவும்-என்றும், இரண்டு - இரண்டுவிதம், ஆ-ஆக, பேசும்-சொல்லப்படுகின்ற, வையகத்தார்-உலகத்தாருடைய, கற்பனை-கற்பனை, ஆம்-ஆகிய, மயக்கம்-மயக்கம், ஆன-ஆகிய, பாழ் - பாழாகிய, வலையை - வலையை, கிழித்து - கிழித்து, உதறி - உதறி எறிந்துவிட்டு, செயல் - செயல், போய்-அற்று, வாழ-வாழ்வதற்கு, நின் - தேவரீரது, ஆனந்தம் - ஆனந்தமயமாகிய, பார்வை-நோக்கம், எங்கே-எங்கே? எ-று.

(வி-ரை) வாழ்வு என்றது செல்வ வாழ்வை; இதனால் பூலோக இன்ப சுகங்களை எய்தலாம். இதனால் அவா மேலும்மேலும் பெருகிஓங்கும். இதனை, "பொருளுடையான் கண்ணதே போகம்" என்பதனால் அறியலாம். தாழ்வு என்றது வறுமை வாழ்க்கையை; வறுமையுற்றார்க்குத் துன்பமே யல்லாது இன்பம் இல்லை. இதனை, "பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்ற **திருவள்ளுவர்** வாக்கு தெளிவுறுத்தும். ஆதலின் வெறுப்பு உண்டாம். விருப்பும் வெறுப்பும் பிறவிக்குக் காரணமாகும். விருப்பும் வெறுப்பும் மாயைபற்றி வருவது. இது நீங்கின் ஞானஞ் சித்திக்கும். முத்திப்பேறுண்டாம் ஆதலினால், 'வாழ்வெனவுந் தாழ்வெனவு ... ... ... கிழித்துதறிச் செயல்போய் வாழ' என்றார். கற்பனை என்றது இல்லாத ஒன்றை உண்டாக்கிக் கூறுவது; பொய்யை மெய்படுத்துரைப்பது. மாயை சேட்டைச் செய்தலின்,'பாழ்வலை' என்றார். மாயையும் சூன்யமாதலின் மாயா சம்பந்தவலையைப் பாழ்வலை என்றார் என்பாருமுளர். செயல்போய் என்றது செயலற்றுச் சும்மா இருக்கும் மோனநிலையை. செயல் என்றது மனம் வாக்கு காயம் என்னுந் திரிகரணச்செயலை. ஆனந்தப்பார்வை என்றது திருவருள் நோக்கத்தை; ஆனந்தமயனாகிய இறைவனின் திருவருள் நோக்கம் சிவானந்தப்பேற்றைத் தருதலின் 'ஆனந்தப்பார்வை' என்றார். 6

என்னை ஆண்ட அமுதே தேவரீரைக் காணாது துன்புற்றேன் என்கின்றார்

எங்கேயெங் கேயருளென் றேழையி ரந்தா
னேழையிவ னெனவுமெண்ணி யிச்சை கூரு
மங்கேயங் கேயெளிவந் தென்னை யாண்ட
ஆரமுதே உனைக்காண்பா னலந்து போனேன்.

(ப-ரை) ஏழை-ஏழையாகிய, இவன்-இவன், அருள்-திருவருள், எங்கே-எங்கே, எங்கே - எங்கே, என்று-என்று, எம்மை-எம்மை, இரந்தான்-யாசித்தான், எனவும்-எனவும், எண்ணி-கருதி, இச்சை-அடியேன் விருப்பம், கூரும்-கொள்ளும், அங்கே-அந்த இடத்தில், அங்கே-அந்த இடத்தில், எளி-எளிதில், வந்து - வந்து, என்னை - அடியேனை, ஆண்ட - ஆட்கொண்ட, ஆர் - அரிய, அமுதே - அமிர்தமே, உனை - தேவரீரை, காண்பான்-தரிசிக்கும்பொருட்டு, அலந்து-துன்பப்பட்டு, போனேன்-போனேன் எ-று.

(வி-ரை) எங்கே எங்கே - என்றது அவா மிகுதியான் எழுந்த விரைவுக் குறிப்புத்தரா அடுக்கிவந்த அடுக்குத்தொடர். அருள் - என்றது திருவருளை.



ஏழை-என்றது எளிமைகருதி. அன்பர்கள் ஆராமைபற்றிக் காடு, மலை, நாடு நகரம், கோயில், குளம் முதலிய இடங்களிலெல்லாம் இறைவன் தரிசனையை விரும்பிக் காட்சி தந்தருளவேண்டுவாராதலின், அங்கெல்லாம் அருள்செய்வானாதலின், 'அங்கங்கே எளிவந்தெனை யாண்ட ஆரமுதே' என்றார். இறைவனை ஆரமுதே என்றது - இனிமை மிகுதியை நோக்கியும், ஊறின்மை நோக்கியும் ஆம். இறைவன் அழிவில்லாதவன் ஆதலின் அமுதன் எனப் பெரியார் பலவிடத்தும் வழங்கியுள்ளமை கண்டுதெளிக. 'அங்கே அங்கே' இது மிகுதிப் பொருள்பற்றி அடுக்கிவந்தது. ஞானிகள் நிட்டையினின்று பகிர்முகப் படும்போது இறைவன் சிவானந்தம் மறைவுறுமாதலின் அக்காலத்துக் கர்மவயத்தால் துன்புளதாம் ஆதலினாலும் அக்காலத்தே இறைவன் தரிசனங் கிட்டாக்கால் துன்புண்டாமாதலின் 'உனைக் காண்பான் அலந்து போனேன்' என்றார். 7

இறைவனே! மவுன ஞானம்பெற்று வாழ்வது என்றோ என்கின்றார்

போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
பொருந்துநா ளத்தனையும் போக்கி னேனென்
ஞானநா யகனேநின் மோன ஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந் நாளோ.

(ப-ரை) என் - அடியேனது, ஞான - ஞான, நாயகனே - தலைவனே!, போன-சென்ற, நாட்கு - நாள்களைக்குறித்து, இரங்குவதே - இரங்குவதே, தொழில்-தொழில், ஆ-ஆக, இ-இந்த, ஙனம் - விதம், பொருந்தும் - பொருந்திய, நாள்-நாட்கள், அத்தனையும்-எல்லாம், போக்கினேன் - தொலைத்தேன், நின்-தேவரீரது, மோனம்-மவுனமான, ஞானம்-ஞானத்தின், நாட்டம்-நோக்கத்தை, உற்று-அடைந்து, வாழ்ந்து - வாழ்ந்து, இருக்கும்-இருக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளாகுமோ? எ-று.

(வி-ரை) போனநாள் என்றது - கொன்னே கழிந்தநாளை. அதாவது இறைவன் திருவருள் நோக்கத்தால் எய்தக்கூடி மோனஞானம் பெறாது அவலமாகக் கழிந்தநாளை, கழிந்ததற்கு இரங்குவது அறிவுடையார்க் கழகல்ல ஆதலின் 'போனநாட் கிரங்குவதே தொழிலா' என்றார். "கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சான்" என்ற **சங்க** வாக்கும் கருதற்பாலதாம். கழிந்ததற்கு இரங்குவதால் இரங்கும் அந்நாளும் வீணாகுமாதலின் 'இரங்குவதே தொழிலா விங்ஙன், பொருந்தநாளத்தனையும் போக்கினேன்' என்றார். இன்னும்,

"நானெனத் தனைபுத்தி சொன்னாலுங் கேட்டிலைநன் னெஞ்சமே
ஏனிப்படிக் கெட் டுழலுகின்றா யினி யேதுமில்லா
வானத்தின் மீனுக்கு வன்றூண்டி லிட்ட வகையதுபோற்
போனத்தை மீள நினைக்கின்றனை யென்ன புத்தியதே"

என்ற **பட்டினத்தடிகள்** வாக்கும் ஈண்டு நோக்கத்தக்கது.

என் ஞானநாயகனே என்றது அருளோடு தனக்கு குருமூர்த்தமாக எழுந்தருளிய மௌனதேசிகரை. பிறவிக்கோடைக்கு இறைவன் ஞான நாட்டம் பெருங் குளிர்வாரி ஆதலின், 'நின்மோன ஞான நாட்டமுற்று வாழ்ந்திருக்குநா ளெந்நாளோ' என்றார். இதனை,

"அவியா உலகப் பெருநெருப்பை அவித்தே இன்பப் பெருஞ்சுகத்தைத்
தவியா திருவென் றெனக்கருளும் தகைசால் எம்மான் சிவபெருமான்
நவியார் கரத்தன் அருணோக்கம் நாடிப் பெற்றாற் சிவானந்தம்
புவிமீ தின்னே வந்திடுமால் புலம்பித் தவியீர் ஜகத்தீரே"

என்ற **அமுதகவியாலும்,**

"உலக நெருப்பைக் கடந் தொழியா ஞான
உத்தி மடுப் பேனோ"

என்ற **பதிபசுபாச** விளக்கச் செய்யுளாலும் அறியலாம். 8

புன்மாதர் புறம்போன வென்னை எமன்பற்ற வருவ தெப்போ தெனல்

**நாட்பட்ட கமலமென்ன விதய மேவு**
**நறுந்தேனே துன்மார்க்க நாரி மார்கண்**
**வாட்பட்ட காயமிந்தக் காய மென்றோ**
**வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி.**

(ப-ரை) நாள்-அப்பொழுது, பட்ட-மலர்ந்த, கமலம்-தாமரை, என்ன-என்று நினைத்து, இதயம்-அடியேன் மனத்தகத்து, மேவும்-பொருந்தி இருக்கின்ற, நறும்-நறுவிதாகிய, தேனே-தேனே!, துன்மார்க்கம்-தீயநெறியுள்ள, நாரிமார்-பெண்களுடைய, கண்-கண்களாகிய, வாள்-வாளாயுதம், பட்ட-தாக்கிய, காயம்-உடலம், இந்த-இந்த, காயம் உடல், வல்-கொடிய, கூற்றும்-யமனும், உயிர்-உயிரை, பிடிக்க-பற்ற, வரும்-வருகிற, அ-அந்த, நீதி-நியாயம், என்றோ-எந்தக்காலமோ? எ-று.

(வி-ரை) நாள்-என்பது தினத்தைக் குறியாது பொழுதைக் குறித்து நின்றது. பட்ட-என்பது மலர்தலைக் குறித்தது. 'நாட்பட்ட கமலம்' அப்பொழுது அலர்ந்த தாமரை என்பதாம். புஷ்பங்களில் எல்லாம் சிறந்தது தாமரை ஆதலினால் தாமரைமலரைக் கூறினார். இதனை, "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே" என்பதனாலும், "பூவினிற் கமலம் போலும்" எனவும், "பூவினிற் பொங்கு தாமரை போலும்" எனவும் வருவனவற்றாற் றெளியலாம். இருதயம் கமலவடிவமாக இருத்தலினாலும், இறைவன் இருதய கமலத்து இருப்பதனாலும், இறைவன் இருதயத்திருந்து இன்பம் ஊட்டி வருதலினாலும், 'நாட்பட்ட கமலமென்ன விதயமேவு நறுந்தேனே' என்றார். தேனின் இனிமை வாசனை, சிறப்புகளை விளக்க 'நறுந்தேனே' என்றார். ஹிருதயம்-என்பது விகாரப்பட்டு 'இருதயம்' என நின்றது. துன்மார்க்க நாரி-என்றது விலைமாதரை. கண்ணின் கொடுமை குறிக்கவும் கண்ணால் மாதர்களை வசியஞ் செய்தலினாலும், காமுகரைக் கண்களே மாதர்



காமத்தை மூட்டித் துன்பஞ்செய்தலாலும் 'கண் வாள்' என்றார். இதனா னன்றோ, "கண்ணால் வெருட்டி முலையால் மயக்கி" எனப் **பட்டினத்தடி** களும் கூறினார். இன்னும், "கண்வாளாற் போழ்ந்து முலைமலையான் மொத்திய காயமிதை" என்றார் **பிறரும்.** கண்ணின் கொடுமையை "பண்டறி யேன் கூற்றென்பதனை யினியறிந்தேன் பெண்டகையாற் பேரமர்க்கட்கு" எனவும், "கண்டா ருயிருண்ணும் தோற்றத்தாற் பெண்டகைப் பேதைக் கமர்த்தனகண்" எனவும், "மைவிழியார் மனையகல்" எனவும் வருவனவற்றாற் றெளிக. 'கூற்றும்' என்றதன்கண்ணுள்ள உம்மை இறந்ததுதழீஇய எச்ச உம்மை. 'என்றோ' என்றதில் ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. 9

இறைவனே! தேவரீர் வேறு ஒரு அண்டத்தைப் படைத்துவிட்டால் நீதி முதலியன எங்கே என்கின்றார்

**நீதியெங்கே மறையெங்கே மண்விண் ணெங்கே**
**நித்தியரா மவர்களெங்கே நெறிதப் பாத**
**சாதியெங்கே ஒழுக்கமெங்கே யாங்க ளெங்கே**
**தற்பரநீ பின்னு மொன்றைச் சமைப்ப தானால்**

(ப-ரை) தற்பரா-தற்பரனே!, நீ-தேவரீரே, பின்னும்-பிறகும், ஒன்றை-வேறு ஒரு அண்டத்தை, சமைப்பது-படைப்பது, ஆனால்-ஆகுமானால், நீதி-இப்பொழுது வழங்கிவரும் நீதி, எங்கே-எங்கே?, மறை-வேதங்கள், எங்கே-எங்கே?, மண்-பூ உலகமும், விண்-விண்ணுலகமும், எங்கே-எங்கே?, நித்தியர்-நித்தியர்கள், ஆம்-ஆகும், அவர்கள்-அவர்கள், எங்கே-எங்கே?, நெறி-ஒழுங்கு, தப்பா-தவறாத, சாதி-சாதிகள், எங்கே-எங்கே?, ஒழுக்கம்-ஆசாரம், எங்கே-எங்கே?, யாங்கள்-நாங்களெல்லாம், எங்கே-எங்கே? எ-று.

(வி-ரை) நீதி என்றது மறைநீதி, மனுநீதி முதலிய உலக நீதிகளை. மறை என்றது வேதத்தை. ஈண்டு இருக்காதி பண்டை நான்மறைகளைக் குறித்தது. மறை என்றது இரகசியார்த்தமுடையது என்னுங் காரணம் பற்றி வந்தபெயர். மண்விண் என்றது மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும். நித்தியர் என்றது நித்திய சூரிகளை. (நித்தியர்-அழிவற்றவராகி என்றும் உள்ளவர்களைக் குறித்தது.) நெறி என்றது வர்ணாசிரம நெறியை. சாதி என்றது மக்களின் ஜாதிப்பகுப்பை. ஒழுக்கம் என்றது நல்லொழுக்கத்தை. ஒழுக்கம் என்பது நல்லொழுக்கம் தீயொழுக்கம் என்னும் இரண்டையுங் குறிக்கும் ஆயினும் சிறப்புப்பற்றி நல்லொழுக்கத்தைக் குறித்தது. இறைவன் தானே உயர்ந்தவனாகித் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனாக விளங்கலின் 'தற்பரா' என்றார். இச்செய்யுட் கருத்தை,

"தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந்திரும்பி விட்டால்
பொய்வைத்த சொப்பனமா மன்னர் வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வ மெங்கே மண்டலீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங்கே யிதுகண் மயக்கே"

என்ற பட்டினத்தடிகள் திருவாக்காலுந் தெளியலாம். 10

இறைவனே! அடியேன் அகங்கார மமகாரம் அற்றிருப்பே னெனல்

ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்ல வென்று
போனாலும் யான்போவ னல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன்.

(ப-ரை) மோன-மவுனத்தையுடைய, புண்ணியனே - புண்ணியா!, ஆனாலும் - ஆகுமானாலும், இங்கு-இந்த இடத்து, யான்-நான், எனது-என்னுடையது, என்னும்-என்று கூறப்படுகின்ற அகங்கார மமகாரங்கள், அற்ற-நீங்கிய, எல்லை - இடம், கதிதான் - உயர்ந்த மோட்சகதிதான், அல்ல-அல்ல, என்று-என்று, போனாலும் - ஒழிந்திட்டாலும், யான் - அடியேன், போவன் - அந்த நிலைக்கே போவேன், அல்லால் - அல்லாமல், வேறு-அது அல்லாது மற்றையதாகிய, ஒரு-ஒரு, பொருளை-பொருளை, நாடேன்-விரும்பேன் எ-று.

(வி-ரை) தான் அல்லாதவற்றைத் தானாகக்கொண்டு நான் நான் என்றிருக்கையாகிய அகப்பற்றை அகங்காரம் என்பர். தன்னதல்லாதவற்றைத் தன்னதாகக்கொண்டு எனது எனது என்றிருக்கை புறப்பற்றாகும். இதனை மமகாரம் என்பர். இவ்விரண்டும் மாயாமயக்கம். இவ்விரண்டும் அற்றவர்க்கே முத்தி, சித்திக்கும். இதனை, "பற்றற்ற கண்ணே பாகதிக்கும் ஐயமுண்டோ உற்றறிந்து காண்பாய் உளவு" எனவும், **ஆன்றோர்** வாக்காலும், "யானென தென்னுஞ் செருக் கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்" என்ற **திருக்குறளா**லும் அறியலாம். இதுகொண்டே, "ஆனாலும் யானெனதிங் ... ... ... ... அல்லவென்று போனாலும்" என்றார். போனாலும் - என்றதால் போகாதென்னுந் துணிபு தொனித்து நின்றது காண்க. ஈற்று உம்மை எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. இந்த உம்மை எதிர்மறைப் பொருள் தரும் என்பதை, "எதிர்மறை சிறப்பைய மெச்சமுற்றளவை தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே" என்ற **பவணந்திமுனிவர் சூத்திரத்**தாலும் அறிக. மோனப் புண்ணியனே-என்றது மௌனதேசிகனை. வேறு பொருள்-என்றது அதற்குப் புறம்பாகி நின்ற வேறு ஒருபொருளை. 11

இறைவனே! எல்லாம் உன்மயமே எனல்

பொருளேநின் பூரணமே லிட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
இருடானுண் டோஅல்லால் வெளிதா னுண்டோ
இன்பமுண்டோ துன்பமுண்டோ யாமங்குண்டோ.

(ப-ரை) பொருளே - பரம்பொருளே!, நின் - தேவரீரது, பூரணம்-திருஅருளின் நிறைவு, மேலிட்ட - அடியேனுக்கு அதிகப்பட்ட, காலம் - காலத்திலே, போக்கு - போக்கும், வரவு - வரவும், உண்டோ - இருக்கின்றதோ?, தற்போதம்-தற்போதம், உளதோ - இருக்கின்றதோ?, இருள் - அந்தகாரம், 



தான்-தான், உண்டோ - இருக்கின்றதோ?, அல்லால்-அதல்லாமற்போனால், வெளி - ஒளி, தான் - தான், உண்டோ - இருக்கின்றதோ?, இன்பம் - சுகம், உண்டோ-இருக்கிறதோ?, துன்பம்-துக்கம், உண்டோ-உளதோ?, யாம்-அடியேங்கள், அங்கு-அந்த இடத்தில், உண்டோ - இருக்கின்றோமோ? (ஒன்றுந் தோன்றா) எ-று.

(வி-ரை) பொருளே என்றது ஈண்டு பரம்பொருளை; இது விளியுருபு ஏற்று நின்றது. பூரணம் என்றது திருவருட் பூரணத்தை. போக்குவரவு என்றது இறத்தல் பிறத்தலை. தற்போதம் என்றது ஜீவபோதத்தை. இருள் என்றது அஞ்ஞானத்தை. வெளி என்றது ஞானத்தை. இன்பமுண்டோ துன்பமுண்டோ என்றது சுகதுக்கங்களை. 'நிழலில் அருமை வெயிலில் நின்றறி' என்றபடி துன்பத்தை அறிந்தால் அது நீங்கியவழி இன்பம் என்று காணும். அதேபோல இன்பம் நீங்கினாலன்றோ துன்பம் ஒன்று உண்டென்பது தோன்றும் துன்பமே இல்லை எல்லாஞ் சுகமாக இருக்கும்பொழுது இன்பதுன்பப் பகுப்பில்லை யாயிற்றென்க. திருவருட் பூரணமுற்ற இடத்து நான் நீ என்றும் சுட்டறிவில்லை யாதலினால் 'யாமங்குண்டோ' என்றார். சூரியனை நோக்கியகண் சூரியன் ஒளியில் வயப்பட்டு உலகத்தைக் காணாதவாறுபோல சிவத்தை நோக்கிச் சிவானந்தத்து ஈடுபட்டவர்க்கு சிவத்தையன்றி வேறு ஒன்றுந் தோன்றாது என்பதாம். இதனை,

"ஆதவன் தன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்தபோது
ஆதவன் ஒளியே விட்டே அகிலந்தோன்றாத வாபோற்
சேதனச் சிவத்தை நோக்கிச் செகத்தினை நோக்குங்காலை
சேதனச் சிவமே விட்டுச் செகமெலாம் மறைந்துபோமே"

என்ற **பதிபசுபாச** விளக்கச் செய்யுளாலும்,

"கதிரொளி தன்னிற் கண்ணொளி கூடிக் கலந்திடி னுலகமுன் றோன்றா
கதிரொளி மயமே யாகிடு மிதுபோற் கறைமிடற் றண்ணலார் தன்னின்
அதிவித வருளிற் கலந்திடி னிந்த வகிலமு மெதுவுமே தோன்றா
பிதியவ னன்றித் தன்னையுங் காணார் பாக்கிய மிதனினு முண்டோ" 12

என்ற **அமுதவாக்கா**னும் அறியலாம்.

இறைவனே! நான் உண்மையனல்லே னெனல்

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளி லென்போ
லொருபாவி தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளவுத் துறவு மின்றிக்
காசினிக்கு ளலைந்தவரார் காட்டாய் தேவே.

(ப-ரை) தேவே-கடவுளே!, நீ-தேவரீர், படைத்த-உண்டாக்கின, உயிர்-உயிர்களின், திரளில்-கூட்டத்திலே, என் - அடியேனை, போல்-போல, ஒரு-ஒரு, பாவி-பாவி, உண்டோ - இருக்கின்றானோ?, தேகம்-தேகம், ஆதி - முதலாகக் கூறப்பட்ட, உலகம்-உலகமானது, பொய் - பொய், ஆ-ஆக, கண்டே

யும்-பார்த்தும், எள் - எள்ளத்தனை, அளவு-அளவாகிலும், துறவு - துறத்தல், இன்றி-இல்லாமல், காசினிக்குள் - உலகத்துள், அலைந்தவர் - உழன்றவர்கள், ஆர்-யார்?, காட்டாய்-காட்டுவாயாக எ-று.

(வி-ரை) தேகம் முதலியனவும் உலகும் நிலையுள்ளனவல்ல தோன்றி மறையுந் தன்மையன. மாயையின் காரியம் என்று அறிந்தும் அதன்கண் உவர்ப்புத்தோன்றி முத்தியின்பத்திற்குச் சாதனமாகிய துறவுகொள்ளா திருத்தலினால் 'பாவி' என்று தன்னைக் கூறினார். உயிர்த்திரள் என்றது ஆன்மகோடிகளை. விளக்கைப் பிடித்துக்கொண்டே கிணற்றுக்குள் விழு வார்போல தேகாதி உலகம் பொய்யென்றறிந்தும் அதில் விருப்புவைத்துப் பிறப் பிறப்பிற்கே காரணமாக உழலலால், 'உண்டோநீ படைத்த வுயிர்த் திரளி லென்போல் ஒருபாவி' என்றார். எள்ளளவுத் துறவும் என்றது சிறு அளவிலாகிலுந் துறவுகோடலை. 'எள்' ஈண்டு ஒரு சிறு அளவைக்காட்ட வந்தது. 'துறவாவது' உலக விஷயாதிகளில் மனந்துறந்து நிற்கும் நிலை, பற்றற்றிருத்தலை "அற்றது பற்றெனின் உற்றது வீடு" என்பது **பெரியார்** வாக்கு ஆதலின், பற்றற்ற நிலையாகிய துறவு வீடுபேற்றிற்கு நெறியாகும். உலகம் பரசுராமரால் க்ஷத்திரிய அரசர்களினிடம் இருந்து ஜெயித்து வாங் கப்பெற்று பிறகு காசிபமுனிவருக்கு அவரால் தத்தஞ் செய்யப்பெற்றதால் உலகம் காசிபமுனிவருக்குச் சொந்தமானது ஆயிற்று. ஆதலினால் காசிப முனிவருக்குச் சொந்தமானது என்னும் பொருளில் உலகிற்கு காசினி என்னும் பெயர் உண்டாயிற்று. 'அலைந்தவரார்' இதில் 'ஆர்' என்னும் வினா 'யார்' என்பதன் போலி. 13

மூவர் பாடல் கேட்ட நின் செவி என் பாடல் ஏற்பதோ வெனல்

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
  செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
  மூடனேன் புலம்பியசொன் முற்று மோதான்.

(ப-ரை) தேவர் - பிரமாதிதேவர்கள், எலாம் - எல்லாம், தொழ - வந்து வணங்குதலினாலே, சிவந்த - சிகப்புநிறங்கொண்ட, செம் - செவ்விய, தாள்- திருவடியைக்கொண்டுள்ள, மு - மூன்று, கண் - கண்களையுடைய, செம்- செம்மையாகிய, கரும்பே - கரும்புபோல்பவனே!, மொழிக்குமொழி - வார்த் தைக்குவார்த்தை, தித்திப்பு - மதுரம், ஆக-ஆக, மூவர்-திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்திகள் என்னும் சைவப் பெரியார் மூவர், சொலும் - பாடிய, தமிழ்-தமிழ்ப்பாடல்களை, கேட்கும்-கேட்கும், திரு-தேவ ரீரது அழகிய, செவிக்கு - காதுகளுக்கு, மூடனேன்-மூடனாகிய அடியேன், புலம்பிய - புலம்பிய, சொல் - சொற்கள், முற்றுமோ - ஏற்றுக்கொள்ளப் பெறுமோ? எ-று.

(வி-ரை) இறைவன் திருவடியில் பிரமாதிதேவர்கள் வந்து வணங்கும் போது அவர் திருவடியில் அத்தேவர் முடிகள் படுதலினால் செவக்கின்றது



ஆதலின், 'தேவரெல்லாந் தொழச் சிவந்த செந்தாண் முக்கட் செங்கரும்பே' என இறைவனை விளித்தார். 'செந்தாள்' - செவ்விய பாதம். தொழும் அடியார்க்குச் செம்மைதரும் பாதம் என்க. இறைவன் திரிநேத்திரம் உடையவன் ஆதலினாலும், எல்லோர்க்கும் இன்பஞ்செய்வோனாதலினாலும், செக்கர்மேனியன் பவளமலை போல்பவன் ஆதலினாலும், 'செந்தாண் முக்கட் செங்கரும்பே' என்றார். தேவாரம் பாடிய மூவரும் சொல்லுக்குச் சொல் மதுரச்சுவை சொட்ட மொழிந்துளாராதலினால், 'மொழிக்கு மொழி தித்திப் பாக மூவர் சொலும்' என்றார். மூவர் - என்றது சைவப்பெரியார்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் என்னும் மூவரை இதனை, "மூவர் தமிழ்க் குருகரன்" "மூவர் தமிழ்க் கருள்புரிந்த ஈசன்" என வருவனவற்றாலும் அறியலாம். 'செவிக்கே' என்றதன் ஈற்றேகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது. ஏகாரம் தெரிநிலைப் பொருளில் வந்தது. வரும் என்பதனை, "பிரிநிலை வினா எண் ஈற்றசை தேற்றம், இசைநிறை எனஆறு ஏகா ரம்மே" என்ற **சூத்திரத்தா** லறியலாம். மூவர் சொலும்- என்பதில் 'சொல்லும்' என்பது சொலும் என வந்தது தொகுத்தல் விகாரம். தமிழ் என்றது-தமிழ்ப்பாடல்களாகிய தேவாரங்களை. இது ஆகுபெயர். 14

இறைவனே! பாவிபடுங் கண்கலக்கம் பார்க்கவில்லையோ என்கின்றார்

முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
  மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை ஐயோ ஐயோ
  பாவிபடுங் கண்கலக்கம் பார்த்திலாயோ.

(ப-ரை) மூது - பெரிய, அறிவுக்கு - அறிவிற்கு, இனியாய் - இனிமை உடையவனே!, எனக்கு-அடியேனுக்கு, இனி-இனி, ஆனந்த - சுக, வாழ்வு- வாழ்வு, முற்றுமோ - கிட்டுமோ, நின் - தேவரீரது, முளரி - தாமரை மலர் போன்ற, தாளில்-திருப்பாதங்களில், பற்றுமோ-விருப்பந்தருமோ, சற்றும்- சிறிதும், இல்லை-இல்லை, ஐயோ-ஐயோ, ஐயோ - ஐயோ, பாவி - பாவியாகிய அடியேன், படும்-அனுபவிக்கின்ற, கண்-கண், கலக்கம் - கலக்கத்தை, பார்த் திலாயோ-தேவரீர் பார்க்கவில்லையோ எ-று.

(வி-ரை) முற்றுமோ என்றது ஈண்டு கைகூடுமோ என்ற பொருளது. ஆனந்த வாழ்வு என்றது சிவானந்த வாழ்வை. இறைவன் மூதறிவுடையவ ரால் பத்தி செய்யப்பெற்று அவர்க்கு இன்பருளி ஆனந்தம் உண்டாக்கு பவன் ஆதலின் 'மூதறிவுக்கு இனியாய்' என்றார். 'முளரித்தாள்' இது உவமத்தொகை. முளரிபோலுந்தாள் என விரியும். முளரி இது தாமரைக் குப்பெயர். இப்பெயர் தாமரைக்கு முள்ளறையை உடையது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். பற்றற்றவனாகிய சிவபெருமானருளிற் பற்றி லார்க்குச் சிவானந்தப்பேறு கிடையாதாதலினாலும், தனக்குக் கொஞ்சமும் இல்லாமைபற்றி இரங்கி 'ஐயோ! ஐயோ!' என்றார். 'ஐயோ' இரக்கக் குறிப் புச்சொல். இது பொருணிலையால் இருமுறை அடுக்கிவந்தது. என்னை?

"அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்"

எனச் **சூத்திரமுண்டாதலின்** என்க.

இறைவன்மாட்டு அன்பிலார்க்குத் துன்பமே பிராப்தியாதலினால், 'பாவி படுங் கண்கலக்கம் பார்த்திலாயோ' என்றார். கருணைமூர்த்தியாகிய இறைவன் பார்த்தால் இரங்கியருள் செய்வான் என்னும் பொருள்கொண்டு, 'கண்கலக்கம் பார்த்திலாயோ' என்றார். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பர் ஆதலினால் அடியேனின் உள்ளக்கருத்துத் தேவரீருக்குத் தோன்றும் என்பது கொண்டோம்.

15

குருமூர்த்தியின் கைகாட்டும் சின்முத்திரைப் பொருளை உணர்ந்து
கருமங்கள் முடிவது என்றோ என்கின்றார்

**பார்த்தனவெல் லாமழியும் அதனாற் சுட்டிப்**
**பாராதே பார்த்திருக்கப் பரமே மோன**
**மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை**
**முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ.**

(ப-ரை) பார்த்தன - கண்களாற் கண்டவைகளாகிய, எலலாம்-எல்லாப் பொருள்களும், அழியும்-அழிந்துவிடும், அதனால்-ஆகையினால், சுட்டி-சுட்டி, பாராதே-பார்த்திடாதே, பார்த்து-சுட்டிப்பாராதே பார்த்து, இருக்க-இருக்க, பரமே - பரம்பொருளே!, மோனம் - மவுன, மூர்த்தி-குருமூர்த்தி, வடிவாய்-வடிவு ஆகி, உணர்த்தும் - அறிவுறுத்திய, கை - கையினால், காட்டும்-காட்டுவதனின், உண்மை-உண்மையானது, முற்றி-முற்றுப்பெற்று, எனது-அடியேனது, அல்லல்-துன்பத்திற்கு ஏதுவாகிய, வினை-கருமங்கள், முடிவது-முடிவு பெறுவது, என்றோ-எக்காலமோ? எ-று.

(வி-ரை) உலகிற் காண்பன எல்லாம் அழிகின்றது ஆதலின் அவைகளைச் 'சுட்டிப் பாராதே' என்றார். சுட்டிப் பார்த்தலாவது-ஜீவபோதத்தாற் காண்கை. சுட்டிப்பாராமல் பார்த்திருத்தலாவது - சிவபோதத்தாற் பார்த்திருத்தல். இறைவனே குருமூர்த்தியாக வந்தருளுகின்றானாதலின் 'பரமே மோனமூர்த்தி வடிவா யுணர்த்தும்' என்றார். கைகாட் டுண்மை - என்றது சின்முத்திரையின் பொருளை. குருவருள் இன்று முத்தி எய்தாது என்பார், 'கை காட்டுண்மை முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ' என்றார். இதனானன்றோ ஒரு **பெரியார்**,

"உலகுமுதல் எல்லா மீங்கே உறுதியல தோன்றி மாயும்
நலமுண்டோ பற்று வைப்பின் நாட்டமதில் வையேல் வையேல்
நிலவரவு சூடும் பெம்மான் நிறை பரம குருவாய் வந்து
குலவெழிற்கை காட்டு ஞானங் கொண் டறிந்து முத்தி சேரே"

என்றார்.

16



இறைவனே! ஆன்மாக்கள் நிலையெனல்

**என்றுளை நீ யன்றுளம்யாம் என்ப தென்னை**
**இதுநிற்க எல்லாந்தா மில்லை யென்றே**
**பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்ப டைக்கும்**
**பொற்புடையா யென்னினது பொருந்தி டாதோ.**

(ப-ரை) நீ - தேவரீர், என்று-என்றைக்கு, உளை-உள்ளாயோ, அன்று-அக்காலத்து, யாம்-யாங்களும், உளம்-உள்ளோம், என்பது-என்று சொல்வது, என்னை-என்ன?, இது-இது, நிற்க-கிடக்க, எல்லாம்-எல்லாப் பொருள்களும், தாம்-தாம், இல்லை-இல்லை, என்றே - என்னும்படி, பொன்றிட - அழித்திட, செய் - செய்தலில், வல்லவன் - வல்லவனாகிய, நீ - நீயே, எம்மை - எங்களை, படைக்கும் - படைக்கின்ற, பொற்பு - அழகை, உடையாய் - உடையவனே என்னின்-என்றால், அது-அது, பொருந்திடாதோ-பொருந்திடாதோ? எ-று.

(வி-ரை) பதி, பசு, பாசம் என்னும் பொருள் மூன்றும் அனாதி ஆதலின் 'என்றுளைநீ யன்றுளம்யா மென்ப தென்னை' என்றார். இதுபற்றியன்றோ "என்றுநீ யன்றுநான்" எனத் **திருவாசகத்து** ஓதிவைத்தார். **திருமூலரும்** "பதியினைப்போலப் பசுபாச மனாதி" என்றார். 'எல்லாந்தா மில்லையென்றே பொன்றிடச்செய் வல்லவனீ' என்றது சம்மார கர்த்தத்துவத்தை. ஈங்கு சம்மாரமென்பது-ஆன்மாக்கள் கன்மத்தால் அல்லற்பட்டுத் தொல்லை யுறுதலால் அவைகளை இளைப்பாற்றற் பொருட்டு ஒடுக்குதலாம். 'எமைப் படைக்கும் பொற்புடையாய்' என்பது சிருஷ்டியை. ஆன்மாக்கள் ஒடுங்குங்கால் மலத்தொடு ஒடுங்கினமையால் அம்மலத்தைப் போக்கி அமலமாக்கி உய்விக்கவே தனு கரண புவன போகங்களை ஆன்மாக்களுக்குத் தந்தருளுகின்றான், இதுவே சிருட்டியாகும். அனாதியே இருந்த ஆன்மாக்களைக் கன்மத்தால் மொத்துண்டு தவிக்குங்கால் தன்பாலொடுக்கி இளைப்பாற்றி மலத்தோடொடுங்கிய ஆன்மாக்களை அம்மலத்தினின்று முய்விக்க தனுகரண புவன போகங்களைத் தந்து உய்விக்கின்றான் என்பதனை இச்செய்யுளால் விளக்கி **ஏகான்மவாதிகளையும், சூன்யோபதானவாதிகளையும்** மறுத்தார். இதனானன்றோ "உள்ளது போகாது இல்லது வாராது" என்ற நியாயமும் ஏற்பட்டது.

17

இறைவனே! உலகம் காரணகாரிய மயமெனல்

**பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று**
**புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்**
**திருந்தபடி யென்றிருப்ப தன்றே யன்றோ**
**எம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம்.**

(ப-ரை) எம் - எங்களுடைய, பெருமான் - பெருமானே!, பொருந்து - பொருந்திய, சகம்-உலகம், அனைத்தினையும் - முழுவதையும், பொய் - அநித்தியம், பொய்-அநித்தியம், என்று-என்று, புகன்ற-தீர்மானித்துச் சொல்லிய,

படி-விதமாக, மெய்-அவ்வாறு கூறியதே சத்தியம், என்றே-என்றே, போத-ஞான, ரூபத்து - ரூபத்துடன், இருந்த - இருந்த, படி-விதமாக, என்று-எக்காலத்து, இருப்பது-இருப்பது, அன்றே-அக்காலத்தில், அன்றோ-அல்லவோ, யான் - அடியேனாகிய நான், கவலை - துன்பத்தாலுண்டாகும் ஏக்கம், எய்தா-அடையாத, காலம்-காலமாகும் எ-று.

(வி-ரை) பொருந்து சகம் என்றது மண்ணீர் காற்று நெருப்பு ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களாலாகிய உலகம் என்பது பொருள். பொய் பொய் என்றது நிலையில்லாது மாறுபாடு உடையது என்னும் பொருளது. சூனியமானது என்னும் பொருள் அன்று என்பது உணரத்தக்கது. போதரூபம் என்றது-ஞானரூபத்தினை. இருந்தபடி இருப்பது என்றது-சும்மாயிருப்பது; மோன நிட்டையில் திரிகரணச்சலனமின்றி இருத்தலை. எம்பெருமான் என்றது இறைவனை, ஞானகுருவினை எனினும் பொருந்தும். கவலை-துன்பம்.

18

இறைவனே! வாவென்றழைத்துத் திருவருள் பாலித்தாற் குறையுமோ வெனல்

காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே எனைவாவா வென்று கூவிக் [லாய்.
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ சொல்

(ப-ரை) காலமே - காலமே, காலங்கள் - காலங்கள், ஒரு-ஒரு, மூன்றும்-மூன்றினையும் (முக்காலத்தையும்), காட்டும் - காட்டுகின்ற, காரணமே-காரணமே!, காரண - காரண (நிமித்தம்), காரியங்கள் - காரியங்கள் (செயல்), இல்லா-அற்ற, கோலமே - உருவமே!, என்னை - அடியேனை, வாவா - வாவா, என்று-என்று, கூவி-அழைத்து, குறைவு - குறைவு, அற-நீங்க, நின்-தேவரீரது, அருள் - திருவருளினை, கொடுத்தால் - கொடுத்தருளினால், குறைவோ-குறைவாகுமோ?, சொல்வாய்-சொல்வாயாக எ-று.

(வி-ரை) காலமே என்றது இறைவனை. காலம் ஜடமாதலினால் காலம் கடவுளாகாது. இது உவமையாகுபெயராய்க் காலம்போன்ற இறைவனைக் குறித்தது. இறைவன் ஒப்பிலி ஆயிற்றே இறைவனைக் காலத்தால் ஒப்பிட்டுக் கூறலாமோ எனின் அறியாது கடாயினாய் ஏகதேச ஒப்பென்க. இறைவனை பொன்னே மணியே என்பதுபோல ‘அவனலாயதொன்றில்லை’ என்றதால் காலமுங் கடவுளே என்றதால் இழுக்கென்னே இறைவன் காலமாகவும் இருக்கிறான். காலத்திற்கு அப்பாற்பட்டவனாகவும் இருக்கிறான் என்பது அறியற்பாலது. இதுபற்றியன்றோ இறைவனுக்கு ‘காலாதீதன்’ என்றுந் திருநாமமும் ஏற்பட்டது. ‘காலம் ஒருமூன்று’ என்பது இறப்பு, எதிர்வு, நிகழ்வு ஆகிய முக்காலங்களை. காலம், சடம், அநேகம், நித்தியம். இது சனனி, ரோதயித்திரி, ஆரணி என்னும் சத்திகளால் அதிட்டிக்கப்பெற்றது. சிருட்டி முதலியவற்றிற்குத் துணைக்காரணமாய் நிற்பது. உலகம் காலத்தாற் றோன்



றும், காலத்தால் நிற்கும், காலத்தால் அழியும், காலத்தால் காரியப்படும். அஞ்ஞான்று இக்காலமே எல்லாப்பொருட்கும் ஆதாரமாய் நின்று தனக்கோராதாரமின்றி நிற்கும். இதனானே இச்செயல்பற்றி இறைவனுக்கு உவமம் ஆயிற்று. காலத்தைக் காரியப்படுத்துவோன் இறைவன். காலத்திற்கு ஆதாரமாக் இருப்பவன் இறைவன் என்பது மறக்கற்பாலதன்று. சடமாகிய காலம் காரணகாரியப் படுதலினாலும் சித்தாகிய இறைவன் காரணகாரியப் படுதலில்லை ஆதலினாலும் ‘காரணகாரியங்க ளில்லாக்கோலமே’ என வேறு பிரித்துவைத்து இறைவன் பெருமையை விளக்கினார். வாவா-இது விரைவுப் பொருளில் அடுக்கிநின்றது. நின் அருள் என்றது இறைவன் திருவருளை. குறைவோ-இது விடைதழுவிய வினா; இங்குக் குறைவின்றாம் என்னும் பொருளாம்.

19

இறையே! அடியேனைக் கல்லாகப் படைத்திருந்தால் நலமாயிருக்கும் எனல்

சொல்லாய தொகுதியெல்லாங் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே
கரணமுட னுறவு கலக்க மாட்டேன்.

(ப-ரை) சொல் - சொற்களினால், ஆய-ஆகிய, தொகுதி - கூட்டம், எல்லாம் - எல்லாவற்றையும், கடந்து - தாண்டி, நின்ற-நின்ற, ஆனந்த-ஆனந்த, சொரூப-சொரூபத்தையுடைய, சுடரே-சோதியே!, தொண்டனேனை - அடியேனை, கல்லாக-கல்லாக, படைத்தாலும் - படைத்தாலும், மெத்த - மிகவும், நன்றே-நல்லதே, நான் - அடியேன், கரணம்-கரணங்கள், உடன்-ஒடு, உறவு-சிநேகம், கலக்க-கூட, மாட்டேன்-மாட்டேன் எ-று.

(வி-ரை) இறைவன் வாக்குக்கு எட்டாதவன் ஆதலினால், ‘சொல்லாய தொகுதியெலாங் கடந்துநின்ற’ என்றார். சொல் மாயையினால் தோன்றுவது. வைகரியினால் வருவது. இறைவன் பாசஞானத்தால் அறியப்பெறாதவன் என்பது உணரத்தக்கது. இறைவன் ஆனந்தமயனும் ஜோதிப்பிரகாசனுமாதலினால் இறைவனைச் ‘சொரூபானந்தச் சுடரே’ என்றார். பெறற்கரியதாகிய இந்த உயர்ந்த மனிதப்பிறப்பு எடுத்து ஞானமின்றிக் கரணசேட்டைகளுக்குள்ளாகிப் பிறப்பிறப்பிற் பட்டுழல வழி தேடிக்கொண்டேன்; நான் இழிந்த கல்லாகப் படைக்கப்பட்டிருப்பேனானால் கரணமுதலியன இல்லாதிருத்தலினால் பிரபஞ்ச சேட்டையின்றி, இன்பதுன்பமின்றி, பிறப்பிறப்பின்றி இருப்பேன் என்பார், ‘கல்லாகப் படைத்தாலு மெத்தநன்றே, கரணமுட னுறவு கலக்கமாட்டேன்’ என்றார்.

20

இறைவனே! அடியேன் வாய்ஞானம்பேசி உடலை ஓம்பிவருகின்றே னெனல்

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுள்உனைக் காணவே காய மாதி

புலங்காணார் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமை கண்டாய்.

(ப-ரை) கடவுள்-கடவுளே!, கலங்காத-கலக்கமுறாத, நெஞ்சு-மனத்தை, உடைய - கொண்டுள்ள, ஞான - ஞானிகளாகிய, தீரர்-வீரர்கள், உனை-தேவரீரை, காணவே-தரிசிக்கும்பொருட்டே, காயம்-உடம்பு, ஆதி-முதலானவைகளின், புலம்-இடத்தை, காணார்-காணாதவர்கள் ஆனார்கள், நான்-அடியேன், ஒருவன்-ஒருத்தன்மாத்திரம், ஞானம்-வாசாஞானம், பேசி - பிதற்றி, பொய்-பொய்யாகிய, கூடு-உடலை, காத்தது-காத்திருந்தது, என்ன-என்ன, புதுமை-அதிசயம், கண்டாய்-காண்பாயாக எ-று.

(வி-ரை) கலங்காத நெஞ்சுடைய ஞானதீரர் - என்றது ஞானவாளால் மாயைப்பகையை வெட்டி 'எறிந்து புலன்' பொறிவழி கலங்கிச் செல்லாது நிற்பவர் ஆதலின் என்க. உனைக் காணவே-என்றது ஞானதீபத்தால் ஞானமயனாகிய உன்னைக் கண்டமாத்திரத்தால் என்பதாம். காயமாதி புலங்காணார்-என்றது சிவானந்தப் பேரின்பத்துச் சிவமயமாகின்ற அமயத்து உலகாதி தோன்றாமையைக் குறித்ததாம். 'ஞானம் பேசி'-வாய்ப்பேச்சளவில் ஞானத்தைப் பேசி என்றதாம். பொய்க்கூடு - என்றது நிலையற்றதாகிய உடலை. என்ன புதுமை-என்றது என்ன வியப்பு என்பதாம். இது தன்னை இகழ்ந்த குறிப்பாம். தீரர் - என்றது மனோதயிரியம் உடைமைபற்றி. கண்டாய்-தேற்றப் பொருளைப் புலப்படுத்துதற்கு, எதிர்காலத்தாற் கூறாது இறந்த காலத்தாற் கூறினார். 'கண்டாய்' என்பதை முன்னிலை யசையாகவுங் கொள்ளலாம்.

21

இறைவனே! அடியேன் படும்பாடு மூன்று கண்ணிருந்தும் பார்க்க
வில்லையோ? தெரியாதோ என்கின்றார்

கண்டிலையோ யான்படும்பா டெல்லா மூன்று
கண்ணிருந்தும் தெரியாதோ கசிந்துள் ளன்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ கருணை நீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா.

(ப-ரை) கருணை-கிருபை, நீங்கா-நீங்காத, சுத்த-சுத்த, பரிபூரணம்-பரிபூரணம், ஆம்-ஆகிய, சோதி-ஒளிமயமாகிய, நாதா-இறைவனே!, யான்-அடியேன், படும்-படுகின்ற, பாடு-துன்பத்தை, கண்டிலையோ - பார்த்திலையோ?, மூன்று-மூன்று, கண் - கண்கள், இருந்தும் - தேவரீருக்கு இருந்தும், பார்த்திலையோ-பார்க்கவில்லையோ?, கசிந்து-மனம் உருகி, உள் - உள்ளத்தின்கண், அன்பு-அன்பு, ஆர்-நிறைந்த, அன்பர் - அன்பர்களாகிய, தொண்டர்-தொண்டர்களுக்கு, தொண்டன்-அடியேன்தொண்டன், அன்றோ-அல்லவோ? எ-று.

(வி-ரை) அடியேன் படும்பாடு இரண்டு கண்களுடைய மக்களுக்கே தெரியுமே. மூன்று கண்களுடைய தெய்வமாகிய உனக்குத் தெரியாதோ என்பார் 'கண்டிலையோ ... ... தெரியாதோ' என்றார்.



அடியேன் நின் அடியார்க்கு அடியேனாகிய வழித்தொண்டன் என்பார் 'தொண்டரடித் தொண்டன் அன்றோ' என்றார். இறைவனே கருணையையே வடிவமாகக் கொண்டவனாகிய நீ அடியேன்மாட்டுக் கருணைகாட்டாது இருத்தல் சரியன்று என்பார் 'கருணை நீங்கா' என்றார். இறைவன் விமலன், அமலன் ஆதலின் 'சுத்த' என்றார். சுத்த என்றது அகபரிசுத்தம், புறப்பரிசுத்தம் இரண்டையுங் குறித்தது. இறைவன் சர்வந்தரியாமியாகி எங்கும் பரந்து நிறைந்துள்ளவன் ஆதலினால் 'பரிபூரணமாம்' என்றார். இறைவன் ஜோதிவடிவன் ஆதலினால் 'சோதிநாதா' என்றார். அனற்பிழம்பு வடிவமானவன் என்றபடி பிறவிருளொழிக்கும் சுடர்வடிவானவனும், அகவிருளகற்றும் ஒளிமயமானவனும் இறைவனே யென்க. சிவபெருமான் எல்லார்க்கும் மேலோனாகி எல்லார்க்கும், எல்லாவற்றிற்குந் தலைவனாகி நிற்கும் இறைமை தோன்ற 'நாதா' என்றார். 'நாதன்' என்னும் பெயர் விளியுருபு ஏற்று 'நாதா' என நின்றது. இறைவனுக்கு முச்சுடரும் மூன்று கண்கள் ஆதலின் 'முக்கண்ணன்' என்றார். மூன்றாவது கண் ஞானக்கண் ஆம்.

22

அடியேனின் கன்மத்தை எல்லாந்தொலைத்த தேவரீரை விட்டுநீங்கி
மயங்கித் தவிக்கின்றேன் என்கின்றார்

சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந்
தூவெளியே எனைத்தொடர்ந்து தொடர்ந்தெந் நாளு
வாதியா நின்றவினைப் பகையை வென்ற [ம்
வாழ்வேஇங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன்.

(ப-ரை) சோதியாய் - ஒளிமயமாகி, இருள் - இருட்டின், பிழம்பை-கூட்டத்தை, சூறை - கொள்ளை, ஆடும் - கொள்ளும், தூ - பரிசுத்தமான, வெளியே-சிதாகாய உருவாய்விளங்குபவனே!, எனை-அடியேனை, தொடர்ந்து-பின்பற்றி, தொடர்ந்து - பின்பற்றி, எ - எந்த, நாளும் - காலமும், வாதியா-வருத்தா, நின்ற-நின்ற, வினை - வினையாகிய, பகை - சத்துருவை, வென்ற-சயித்த, வாழ்வே - பெரிய வாழ்வானவனே!, உன்னை - தேவரீரை, பிரிந்து-விட்டுநீங்கி, இங்கு-இவ்விடத்து, மயங்குகின்றேன்-மயங்காநிற்கின்றேன் எ-று.

(வி-ரை) ஞானசோதி முன் அஞ்ஞான இருள் நிலைத்து நிற்காது ஆதலின் 'சோதியாய் இருட்பிழம்பைச் சூறையாடும் தூவெளியே' என்றார். சோதி என்றது ஞானப்பிரகாசத்தை. இருட்பிழம்பு என்றது அஞ்ஞான இருளை. சூறையாடல் என்றது கொள்ளை கொள்ளலை. ஈண்டு அஞ்ஞான இருள் இல்லாது ஒளித்தலைக் குறித்தது. இருளை ஒளி தன்னுளடக்கிக் கொள்ளுதலினால் 'இருட்பிழம்பைச் சூறையாடி' என்றார். இறைவன் சுத்தனாகியும், சிதாகாயவடிவனாகவும் இருத்தலின் 'தூவெளியே' என்றார். உலகத்து ஒளிகளின் அந்தராத்மாவாயுள்ளவ னென்றபடி. தொடர்ந்து தொடர்ந்து என்றது மிகுதிபற்றி அடுக்கிவந்தது. ஈண்டு இறைவன் மௌனகுருவாக வந்து அருள் புரிந்ததைக் குறித்தது. வினைகளை

வந்து தொந்தித்துப் பிறப்பிறப்பு, இன்பதுன்பங்களை ஊட்டி வருத்துதலின் 'வாதியா நின்ற வினைப் பகையை' என்றார். இறைவன் திருவருள் பெற்றார்க்கு வினையான் வரும் துன்பம் இல்லையாகும். இதனையன்றே பொய்யாமொழிப் புலவராகிய **திருவள்ளுவரும்** தம் தமிழ்மறையில் "இருள்சேரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" எனக் கூறியருளினர். பேரின்பவாழ்வைத் தந்தருளிய இறைவனை 'வாழ்வே' என்றார். மயங்காநின்றேன் என்றது கலங்கிநிற்றலைக் குறிக்கின்றது. 'மயங்கா'-இது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஈண்டு மயங்கி என்னும் பொருளது.

23

இறைவா! தேவரீருக்குச் செய்யக்கூடிய கைம்மாறுண்டோ எல்லாம் தேவரீர் செயலென்று கைகுவித்து வணங்குவேன் என்கின்றார்

மயக்குறுமென் மனமணுகாப் பாதை காட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வே நானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வே றில்லை.

(ப-ரை) மயக்குறும் - மயக்குகின்ற, என் - அடியேனின், மனம் - மனமானது, அணுகா-பொருந்தாத, பாதை-வழியை, காட்டி-காண்பித்து, வல்-கொடிய, வினையை-கன்மவினைகளை, பறித்தனையே-போக்கினையே, வாழ்வே-பேரின்ப வாழ்வே!, நான்-அடியேன், என-என்ன, செய-செய்ய, கடவேன்-கடவேன், செயல் - செய்கைகள், எல்லாம் - எல்லாம், நினதே - தேவரீரதே, என்று-என்று, செம்-செவ்விய, கை-கைகளை, குவிப்பேன் - கூப்பி வணங்குவேன், அல்லால் - அதனையன்றி, செயல் - செய்கை, வேறு-வேறு, இல்லை-மற்று ஒன்றில்லை எ-று.

(வி-ரை) பிரபஞ்சமயக்கத்திற் பட்டுத் தவிக்கும் மனம் என்பார் 'மயக்குறு மனம்' என்றார். ஞானநெறி, முத்திநெறி, அருள்நெறி பிரபஞ்ச மாயை யுட்பட்டார்க்கு எய்தாதாதலின், 'மன மணுகாப் பாதை காட்டி' என்றார். பாதை-என்றது முத்திநெறியை. இதனையன்றே **மணிவாசகரும்**,

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே" என்றார்.

வினை பிறப்பிறப்புத் துயர்களைத்தரும் கொடுமைபற்றியும், பறித்தற்கு அருமை தோன்றவும் 'வல்வினையை' என்றார். பேரின்ப வாழ்வைத் தருபவனை 'வாழ்வே' என்றது ஆகுபெயர். 'நினதே' என்றதன்கண்ணுள்ள ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. செங்கை குவிப்பது - என்றது தனது இருகரங்களையும் கூப்பி நன்றுபாராட்டித் துதித்து வணங்குதலை.

24



இறைவனே! சமயங்கள் எல்லாம் உன் திருவிளையாட்டே எனல்

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளே நின் விளையாட் டல்லான்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா.

(ப-ரை) விளங்கு-சமயகோடிகளுக்குள் எல்லாம் விளங்கிக்கொண்டிருக்கும், பரம் - பெரிய, பொருளே - பொருளாய் நிற்கும் இறைவனே!, வேறு - முரண், படும்-படும், சமயம்-சமயங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், புகுந்து-உள்நுழைந்து, பார்க்கின் - ஆராய்ந்து பார்த்தால், நின் - தேவரீரது, விளையாட்டு-திருவிளையாடலே, அல்லால் - அல்லாமல், மாறு-வித்தியாசம், படும்-படும், கருத்து-கருத்து, இல்லை-இல்லையாகும், முடிவு-அந்தம், இல்-இல்லாத, மோனம்-மவுன, வாரிதியில் - சமுத்திரத்தில், நதி - ஆறுகளின், திரள் கூட்டங்கள், போல்-போல, வயங்கிற்று-விளங்கிற்று எ-று.

(வி-ரை) ஒரு சமயத்திற்கும் மற்றொரு சமயத்திற்கும் அபிப்பிராயபேதங்கள் ஏற்பட்டு முரணி நிற்றலின் 'வேறுபடு சமயம்' என்றார். சமயங்கள் பல ஆதலின் 'சமயமெல்லாம்' என்றார். புகுந்து பார்க்கின் என்றது - அவ்வச் சமய நூற்களை ஆராய்ந்து பார்க்கின் என்பதாம். இறைவன் அவரவர் கன்மத்திற்கும் தன்மத்திற்கும் அறிவுக்கும் ஏற்றவாறு சமயங்களை வகுத்தருளி இருத்தலின் 'நின் விளையாட்டல்லால் மாறுபடுங் கருத்தில்லை' என்றார். இதனையன்றே, "யாதொரு தெய்வங் கொண்டீரத் தெய்வமாகி, யாங்கே மாதொரு பாகனார் தாம்வருவர்" என்றார். எல்லாச் சமயங்களுள்ளும் விளங்குங் கடவுள் சிவபெருமானேயாம். எல்லாச் சமயங்கட்கும் இறைவன் இடந் தந்துளானாதலினாலும், எல்லாச் சமயங்களும் இறைவன்மாட்டடங்கலினாலும், 'முடிவின்மோன வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற்று' என்றார். 'அம்மா' ஈற்றசை. இதனை வியப்புப்பொருள் தரவந்தசொல் என்னினும் வழா.

25

இறைவனே! அடியேனை அகண்டத்தில் சும்மா இருக்க வைத்தாய் எனல்

அம்மாஈததிசயந்தா னன்றே அன்றே
அகண்ட நிலை யாக்கியென்னை யறிவாம் வண்ணஞ்
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமா யிருப்பதல்லாற் சொல்வா னென்னே.

(ப-ரை) அம்மா-ஆச்சரியம், ஈது-இது, அதிசயந்தான் - அதிசயந்தான், அன்றே-அல்லவோ?, அகண்ட-வியாபகமாகிய, நிலை-நிலையில், ஆக்கி-ஆக்கி, என்னை - அடியேனை, அறிவு - அறிவுமயம், ஆம் - ஆகும், வண்ணம் - விதம், சும்மாவே-சும்மாவே, இருக்க - இருக்கும்படி, வைத்தாய் - வைத்தாய், ஐயா-

ஐயா, ஆங்கே-அவ்விடத்தே, சுகமாய்-சுகமாக, இருப்பது-இருப்பது, அல்லாமல், சொல்வான்-சொல்லுதற்குரியது, என்னே-வேறு என்ன இருக்கிறது? எ-று.

**(வி-ரை)** அம்மா-இது வியப்புப் பொருள் காட்டவந்த இடைச்சொல். அன்றே அன்றே - இது மகிழ்ச்சியால் அடுக்கி நின்றது. அகண்டநிலை என்றது பரிபூரணநிலையை. இறைவன் ஞானாசிரியனாக எழுந்தருளிவந்து ஞானோபதேசஞ் செய்து சுட்டுணர்வுற்றுக்கிடந்த ஆன்மா தன்னையும் தலைவனையும் உணர்ந்தது ஏகதேசப்பட்டுக்கிடந்த தானிறந்து அவனும் பரிபூரணனந்த நிலை தந்து திரிகாணமவுனம் தந்தருளியமையான் 'அகண்ட நிலையாக்கி யென்னை யறிவாம் வண்ணஞ் சும்மாவே இருக்கவைத்தாய்' என்றார். மோனானந்தநிட்டை சுகமாயமானதாதலினால் 'சுகமயமாயிருப்பதல்லால்' என்றார். இதனை,

"போதங் கழன்றுள்ள பொய்கழன்று பூரணமாம்
சீதப் பெருஞ்ஜோதிச் சீருளில்—ஏதமின்றி
நின்றுசும்மா ஆனந்த நிட்டையிலே தங்கினர்க்கு
ஒன்றுசுக மன்றியுண் டோ"

என்ற **சிவாகசியச் சிந்தாமணி** நூலாலறிக.

"தானவனென் சுட்டும் பன்னித் தன்னதெனும் பற்று மற்றுக்
கோனவன்முன் சொன்ன கொள்கை கொண்டறிந்து சும்மா விருந்தால்
தானவரெல் லாரும் போற்றத் தனிச்சிவா னந்த வாழ்வில்
ஏனமர மாட்டா ரிந்த இருநிலத்து மக்க டாமே"

என்ற **அழதகவியாலும்** அறியலாம்.

"போதமற்று நிட்டையற்றுப் பூரணமா முண்மைதனில்
ஏதமற்றுச் சும்மா இரு"

என்ற **ஞானமணிமாலைச்** செய்யுளும் நோக்கற்பாலது. 26

இறைவனே! எல்லாம் நின் செயலன்றோ எனக்கெனச்
செயல் ஏது? எனல்

என்னே நான் பிறந்துழல வந்த வாறிங்
கெனக்கெனவோர் செயலிலையே ஏழை யேன்பான்
முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வர முறையேன் எந்தாய்.

**(ப-ரை)** எந்தாய் - எந்தையே!, இங்கு-இவ்விடத்தில், நான்-அடியேன், பிறந்து-உதித்து, உழல-கஷ்டப்படும்படி, வந்த-வந்த, ஆறு-வழி, என்-யாது?, எனக்கு-அடியேனுக்கு, என-என்று, ஓர்-ஒரு, செயல் - செயலும், இலையே-இல்லையே, ஏழையேன்பால்-ஏழையாகிய அடியேனிடத்து, முன் - முன்னே, செய் - செய்தன்ன, வினை - பிராரத்தவவினை, எனவும் - எனவும், பின்னே-



அதன்பிறகே மத்தியில், வந்து - வந்து, மூளும் - மூள்கின்ற, வினை-ஆகாமிய வினை, எனவும்-எனவும், வர-சொல்லப்பெற்று வருகைக்கு, முறை-முறைமை, ஏன்-யாது? எ-று.

**(வி-ரை)** தற்போதங் கழன்று சிவபோதங்கொண்டு எல்லாஞ் சிவன் செயலாகவே செய்தலால் பிராரத்தவவினையும் ஆகாமியவினையும் வந்தடையாது. இதனை,

"சலமிலனாய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவனவர் தாஞ்செய் வினைதன்னை
நலமுடனே பிறர்செய் வினையூட்டி யொழிப்பானாய்
நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினிலென் செயலெல்லா முன்விதியே நீயே
யுண்ணின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றா யென்று
நிலவுவதோர் செயலெனக் கின்றுன் செயலேயென்று
நினைப்பார்க்கு வினைகளெல்லா நீங்குந் தானே"

என்ற **சிவஞானசித்தியார்** வாக்கா லறியலாம்.

வினைகள் உடையார்க்கே பிறப்பும் இறப்பும் உண்டு ஆகையினாலும் 'என்னே ... ... ... வாமுறையேன்' என்றார். முன்னே செய்வினை-என்றது பிராரத்வ கர்மத்தை. பின்னே வந்து மீளும் வினை - என்றது ஆகாமியத்தை. 27

இறைவனே! திருவருளால் அடியேனைக் காவாது தள்ளித்தள்ளி
வைப்பது நலமோவெனல்

தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயான தென்கொலையா ஏக தேசம்
பூரணத்துக் குண்டோதான் புகலல் வேண்டும்.

**(ப-ரை)** தாய் - அடியேனுக்குத்தாய், ஆன - ஆகிய, தண் - தண்ணிய, அருளை-திருவருளை, நிரம்ப - நிறைய, வைத்து - வைத்து, தமியேனை - அடியேனை, புரவாமல்-காக்காமல், தள்ளித்தள்ளி-தள்ளித்தள்ளி, போய்-சென்று, (அதனால்) ஆனது-உண்டாகிய பிரயோசனம், என்கொல்-யாது?, ஐயா-ஐயா!, பூரணத்துக்கு-தேவரீரது பரிபூரணத்திற்கு, ஏகதேசம்-ஏகதேசம், உண்டோ-உள்ளதோ?, புகலல்-சொல்லல், வேண்டும்-வேண்டும் எ-று.

**(வி-ரை)** இறைவன் திருஅருள் உயிர்கட்குத் தாய்போன்றதாதலின் 'தாயான தண்ணருளை' என்றார். 'தள்ளித்தள்ளி' - இது தள்ளி என்பது அவலம்பற்றி அடுக்கி வந்தது. 'என்கொல்' - ஈண்டு கொல் அசைநிலையாக வந்தது. புரவாமல் என்றது காக்காமல் என்னும் பொருளது. இது 'புர' என்னும் பகுதி அடியாகப் பிறந்தது. 'ஆமல்' எதிர்மறைப்பொருள் தந்து நின்றது. பூரணம் என்றது எல்லாம் இறைவனிடத்தும், இறைவன் எல்லா

வற்றினிடத்தும் நிறைந்து நிற்கும் நிலையே 'பூரணம்' என்பதற்கு இலக்கணமாம். ஏகதேசம் என்றது வேற்றுமையை. எல்லா உயிரும் இறைவனிடத் தொடுங்குகின்றன. இறைவன் மாயாதி தனுக்களிலும், உயிரிலும் உயிர்க்குயிராய் நிறைந்து நிற்கின்றான் ஆதலினால் இறைவனைப் 'பூரணனே' என்றார். எல்லா உயிர்க்குந் திருவருள் பாலிக்கும் தேவரீர் அடியேனைத் தள்ளிவைப்பது என்? வேற்றுமையாலோ என்பார், 'ஏகதேசம் பூரணத்துக் குண்டோ தான்' என்றார்.

28

இறைவனே! அடியேனை மலமாயா கன்மங்க ளிடைவைத்து
துன்பப்படச் செய்தாயே எனல்

புகலரிய நின்விளையாட் டென்னே எந்தாய்
புன்மையறி வுடையவென்னைப் பொருளாப் பண்ணி
யிகல்விளக்கு மலமாயை கன்மத் தூடே
யிடருறவுஞ் செய்தனையே இரக்க மீதோ.

(ப-ரை) எந்தாய் - எமது தந்தையே!, புகல் - எடுத்துச் சொல்லுதற்கு, அரிய - அரிய, நின் - தேவரீரின், விளையாட்டு - திருவிளையாடல், என்னே-யாதோ?, புன்மை - அற்பமாகிய, அறிவு - அறிவை, உடைய-கொண்டுள்ள-என்னை - அடியேனை, பொருள் - ஒருபொருள், ஆ - ஆக, பண்ணி-மனத்தின் மதித்து, இகல்-யுத்தத்தை (சண்டையை), விளக்கும் - உண்டாக்கும், மலம், மலமும், மாயை - மாயையும், கன்மம் - கன்மங்களும் (ஆகிய), அத்து-அவைகளின், ஊடே-மத்தியில், இடர்-துன்பம், உறவும்-அடையவும், செய்தனையே-செய்துவிட்டாயே, இரக்கம் - உயிர்களிடத்துவைத்துள்ள இரக்கம், ஈதோ-இதுதானோ? எ-று.

(வி-ரை) போறிவினனாகிய இறைவனின் திருவிளையாட்டின் மகிமை சிற்றறிவுடைய பசுக்களால் அறியுந்தரம் அன்று. ஆதலினால், 'புகலரிய நின் விளையாட்டு' என்றார். விளையாட்டு - சிரமஞ் சிறிதுமின்றிச் செய்யப்படுவது என்பது பொருள். என்னை? இறைவன் சர்வ சக்தன் ஆதலால், 'என்னே' இது வியப்பின்கண் வந்தவினா. பசுக்கள் கிஞ்சிஞ்ஞர் ஆதலின் 'புன்மையறி வுடைய வென்னை' என்றார். மலம், மாயை, கன்மம் என்னும் இவைகள் முத்திப்பேறடையா வண்ணம் தடையாய் நின்று துன்புறுத்துவதனால் 'இகல் விளக்கு மலமாயை கன்மத் தூடே' என்றார். இறைவன் கருணாமூர்த்தியாக இருந்தும் தன்னை இடருறச் செய்தமையால் 'இரக்க மீதே' என்றார்.

29

இறைவனே! என் நெஞ்சின் காடின்னியத்தை வியத்தல்

இரக்கமொடு பொறையீத லறிவா சார
மில்லேனு னல்லோர்க ளிட்டங் கண்டாற்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ.



(ப-ரை) எந்தாய் - எமது தந்தையே!, இரக்கமொடு - இரக்கத்துடன் பொறை - பொறுமையும், ஈதல் - கொடுக்குந் தன்மையும், அறிவு - அறிவும், ஆசாரம்-ஒழுக்கமும், இல்லேன்-இல்லாதவனாகிய, நான்-அடியேன், நல்லோர்கள் - சிவனடியார்கள், கூட்டம் - திருக்கூட்டத்தை, கண்டால்-தரிசித்தால், கரக்கும்-ஒளித்துக்கொள்ளும், இயல்பு-இயற்கையை, உடையேன்-உடையவனாக இருக்கின்றேன், பாழ்-அடியேனது பாழாகிய, நெஞ்சம் - மனமானது, கருந்தாதோ-இரும்போ?, வல் - வலிய, உருக்கோ - உருக்குத்தானோ?, கரிய-கருமையாகிய, கல்லோ-கருங்கல்லோ? எ-று.

(வி-ரை) முத்திநெறி, பத்திநெறி, ஆகிய சன்மார்க்க நெறியில் நிற்பவர்க்கு இரக்கம், பொறை, ஈகை, அறிவு, ஒழுக்கம் வேண்டும்; அடியார் கூட்டுறவு வேண்டும். இவைகள் இல்லாதகாலத்து அவன் சன்மார்க்கநெறியில் நின்றவனாகான். ஆதலினால் 'இரக்கமொடு ... ... ... மியல்புடையேன்' என்றார். மேற்கூறிய சன்மார்க்கத்துக்கு இன்றியமையாத இரக்கமாதி பற்றாதமனம் கடினமனம் என்பார், 'பாழ்நெஞ்ச மெந்தாய் கருந்தாதோ வல்லுருக் கோகரிய கல்லோ' என்றார். இரக்கமாதி இல்லா மனம் பயனற்ற மனம் ஆதலின் 'பாழ்நெஞ்சு' என்றார். பாழ்-ஈண்டு நலமின்மையைக் குறித்தது இனி, இரக்கமாதி இல்லாத மனம் தன்னை உடையானுக்குப் பாழைச் செய்வதனால் 'பாழ்நெஞ்சு' எனினும் ஆம். தாது-உலோகம். கருந்தாது-கரிய உலோகம்; இரும்பைக் குறித்தது. இரும்பினும் உருக்கு இரும்பலமுடையது; இளகுந்தன்மை இல்லாதது ஆதலின் 'வல்லிரும்போ' என்றார். கருமை+கல்=கருங்கல்; இது இருசொற்களின் சந்தி; இது இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை.

30

---

## பராபரக்கண்ணி

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே பராபரமே.

(ப-ரை) சீர்-சிறப்பு, ஆரும்-பொருந்தியுள்ள, தெய்வம்-தெய்வத்தன்மை வாய்ந்த, திருவருள் - திருவருள், ஆம்-ஆகிய, பூமி - பூமி, முதல் - முதலாக உள்ள, பார் - நிலவுலகம், ஆதி - முதலாக உள்ள பூமிகளை, ஆண்ட - ஆண்டு அருளிய, பதியே-இறைவனே!, பராபரமே-உயர்ந்த பொருள்களிலெல்லாம் உயர்ந்த பொருளாகிய சிவமே! எ-று.

(வி-ரை) இதுமுதல் முந்நூற்று எண்பத்தொன்பது கண்ணிகள் ஈற்றில் 'பராபரமே' என முடிகின்றமையால் இக்கண்ணிகள் **பராபரக்கண்ணி** எனப் பெயராயது. இது கண்ணிபோன்று இருத்தலின் உவமையாகுபெயராய் கண்ணி என்று பெயராயிற்று. பராபரம் - மேலானதில் மேலான பொருள். பராத் - மேலாகி, பரம் - நிற்பது; அதாவது, மேலானதெனப்

பிறர் சொல்வதெல்லாம் அழியினும் தானழியாத் தன்மையதாகி நிற்பது. கண்ணி என்றது, பறவை பிடிக்கும் வலையெனவும் பொருளாதலின், ஈண்டு கடவுள் ஆன்மாக்களைத் தனது பேரருள் வலைக்குட்படுத்தியாள்வது என்னும் விளக்கமுமாம். இரண்டடிப் பாக்களை கண்ணி என்று கூறுவது மரபு. இது கலிப்பாவின் இனத்தைச் சேர்ந்தது. இறைவன் ஆன்மாக்களுக்கு அருள் செய்யுங் கருணையுடையோன். அக்கருணையே திருவருள். அத்திருவருளே சத்தி. இச்சத்தியினிடத்திருந்தே ஆன்மாக்கள் பொருட்டு மாயையாதி உலகங்கள் வெளிப்படுகின்றனவாதலினால் திருவருளாலே வெளியாம் உலகம் முதலியன திருவருளாகும். இதுகொண்டே 'திருவருளாம்பூமி முதற் பாராதி' என்றார். திருவருள் தேவதேவனாகிய முழுமுதற்கடவுளின் திருவருள் ஆதலின் 'தெய்வத் திருவருள்' என்றார்.

இத்தெய்வத் திருவருள் ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டுப் பூத்ததாதலின், 'சீரார் தெய்வத்திருவருள்' என்றார். தோற்றிய முறையே உலகம் சத்தியிலும் சத்தி இறைவனிலும் ஒடுங்கும் எல்லாவற்றையுங் காரியப்படுத்துகின்றவன் இறைவன் ஆதலினால் 'பூமிமுதற் பாராதியாண்ட பதியே பராபரமே' என்றார். இனி, நிலமுதல் நாதம் ஈறாகிய முப்பத்தாறு தத்துவங்களாகிய பூமி எனக் கொள்ளினும் இழுக்காது. இன்னும் திருவருளாம் பூமி என்பதறகு முப்பத்தாறு தத்துவங்கட்கு ஆதாரமாய் நிற்கும் சிவசத்தி என்னலும் ஆம். இக்கண்ணி இறைவனை முன்னிலையாக்கி விளித்ததாம். 1

**கண்ணாரக் கண்டோர் கருப்பொருள்கா ணாமலருள்**
**விண்ணா டிருந்தவின்ப வெற்பே பராபரமே.**

(ப-ரை) கண் - (இறைவனாகிய தேவரீரை) கண், ஆர - பொருந்த, கண்டோர் - தரிசித்தவர்கள், கரு-தாயின் கருப்பத்தில் உதித்தலாகிய, பொருளை, காணாமல் - காணாதவராகி நித்தியராய்ச் சிவானந்தப்பெருக்குற்று வாழ, அருள்-செய்தருளும், விண்-சிதாகாசத்தின், நாடு-இடத்தே, இருந்த-எழுந்தருளியிருக்கும், இன்ப - ஆனந்தமயமாகிய, வெற்பே - மலையே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண் என்றது - ஞானக் கண்ணை. ஞானக்கண்ணாற் றன்னைக் கண்ட அடியார்களுக்குப் பிறவியாகிய மூலநோய் தீர்த்து முத்தியருள்பவன் சிவபெருமானாதலின் 'கருப் பொருள் காணாமலருள்' என்றார். இறைவன் விண்ணாதிபூத மைந்தும் ஆனவன் ஆதலின் 'விண்ணா டிருந்த' என்றார். இறைவன் சலியா நிலையினன் ஆதலின் 'வெற்பே' என்றார். இதில் இறைவனை ஆனந்தமலையே என்றமை, அசைதலில்லாமையினையும் மேலான தன்மையினையும், காம்பீரியப் போக்கினையும் குறித்தெழுந்தமையாம். இன்பமயமானவன் ஆன்மாக்கட்கு இன்பமருள்வோன் ஆதலின் 'இன்ப வெற்பே' என்றார். "அளக்க லாகா அளவும் பொருளும் துளக்க லாகா நிலையுந் தோற்றமும் வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே" என்ற **பவணந்தி**



**யார்** வாக்குநோக்கி "இன்பவெற்பே" என இறைவனை விளித்த அருமை அறிந்துகொள்க. 2

**சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ**
**வந்த கருணை மழையே பராபரமே.**

(ப-ரை) சிந்தித்த - அடியேன் எண்ணிய, எல்லாம் - எல்லாவற்றையும், என்-அடியேனின், கருத்து-விருப்பத்தை, அறிந்தே-தெரிந்தே, உதவ-அருளிச்செய்ய, வந்த-எழுந்தருளிவந்த, கருணை - கருணைமயமாகிய, மழையே-மழையே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) "எண்ணிய எண்ணியாங் கெய்துவர் எண்ணியார், திண்ணியராகப் பெறின்" என்ற **திருக்குறளின்**படி எண்ணிய எல்லாம் அடியேன் விருப்பறிந்து ஊட்டவந்த 'கருணைமழையே' என விளிக்கின்றார். மழை-இறைவனுக்குவமம். உயிர்களுக்கு வேண்டும் எல்லா இன்பங்களும் தரவல்லது மழை ஆதலினாலும் உயிர்களுக்கு எவ்வா இன்பமும் தந்தருளும் இறைவனுக்கு அது ஒப்பாயிற்று. இதனானன்றே **திருவள்ளுவரும்**, "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத், துண்ணின் றுடற்றும் பசி" என்றார். 'எல்லாமென்' என்றதின்கண் உம்மை விகாரத்தாற் றொக்கது. 3

**ஆரா வமுதே அரசே ஆனந்தவெள்ளப்**
**பேராறே மோனப் பெருக்கே பராபரமே.**

(ப-ரை) ஆரா - தெவிட்டாத, அமுதே - அமிர்தமே!, அரசே-அரசே!, ஆனந்தம்-சுகத்தின், வெள்ளம் - பெருக்கின், பேர் - பெரிய, ஆறே-நதியே!, மோனம்-மௌனத்தின், பெருக்கே-வெள்ளமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் நிலைத்த வின்பம் தரவல்லனாதலின் 'ஆரா அமுதே' என்றார். இறைவனைத் தலைமைபற்றி 'அரசே' என்றார். இறைவன் பேரின்ப வடிவன், உயிர்களுக்கெல்லாம் இன்பம் அருளுவோன் ஆதலின் 'ஆனந்த வெள்ளப் பேராறே' என்றார். இது இறைவனைத் தன் சுயானுபூதியில் அனுபவித்து ஆனந்தித்த ஆனந்த மேலீட்டால் விளித்ததாகும். 'வெள்ளம்'-இது மிகுதிப் பெருக்கைக் காட்டவந்த சொல். இதனை, "குடியோம்பிக் கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம் வெள்ளத்தின் மேலும் பல" என்ற **குமரகுருபர சுவாமிகள்** வாக்காலும் அறியலாம். 4

**ஆரறிவா ரென்ன அனந்தமறை யோலமிடும்**
**பேரறிவே இன்பப் பெருக்கே பராபரமே.**

(ப-ரை) ஆர் - (தேவரீரை) யார், அறிவார் - அறியவல்லவர், என்ன - என்று, அனந்தம்-அநேகமாகிய, மறை-வேதங்கள், ஓலமிடும்-முழங்குகின்ற, பேர்-பெரிய, அறிவே-ஞானமயமானவனே!, இன்பம் - ஆனந்த, பெருக்கே-வெள்ளமே!—, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனால் தந்தருளப் பெற்றதும், ஞானமேயாக இருந்த பெருஞானப் பிழம்பாகிய இறைவனைத்தானே அறியமுடியாது தடுமாறுதலால் சிற்றறிவுடைய உயிர்களால் அறிதல் முடியாது எனத்துணிந்து வேதங்கள் இறைவனை உன்னை யாரறிவார் என்று முழங்குகின்றதென்பார் 'ஆர் அறிவாரென்ன அனந்தமறை ஓலமிடும்' என்றார். வேதம் வைகரி சம்பந்தமுடைமையின் வேதமும் அறியாதவன் என்றும். 'ஆர்' இது 'யார்' என்பதன் போலி. இதனையன்றே பரஞ்சோதி முனிவரும், "பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்லவுள்ள மதியின், பேதங்க ளல்ல விவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல், வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற், பாதங்க ணோவ வளையிந்த ணுதி பகர்வாரை யாயு மவரே" என்றார். ஓலமிடல் என்றது பெருஞ் சத்தமிட்டுக் கூறல். போறிவு என்றது ஞான பூரணத்தை. இன்பப்பெருக்கு என்றது ஒப்புயர்வற்ற சிவாநந்தத்தை. இறைவன் போறிவுப் பிழம்பாக இருப்பவன் ஆதலின் ஞானப்பிழம்பாகிய இறைவனை எனினும் ஆம். 5

உரையிறந்த அன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரையிறந்த வின்பக் கடலே பராபரமே.

(ப-ரை) உரை - பேச்சு, அற்ற - இல்லாத (மௌனமுற்ற), அன்பர்-அடியார்களின், உளத்து-உள்ளத்தினிடத்தே, ஒங்கு-வளர்கின்ற, ஒளியாய்-சோதியாய், ஓங்கி-வளர்ந்து, கரை-எல்லை (அளவு), இறந்த-கடந்து நிற்கின்ற, இன்பம்-ஆனந்தமாகிய, கடலே-கடலே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உரையிறந்த என்றது - பேச்சற்ற என்ற பொருளது. பேச்சற்றிருத்தலாவது - மௌனநிலையில் நிற்றல். "ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குறித்தே" என்றபடி வாக்கு மவுனங் கூறவே மனோ மவுனம் காய மவுனமுங்கொண்டு திரிகரண மவுனத்தையுங் கொள்ளக்கிடந்தது. அன்பராலன்றி ஏனையரால் மௌனநிட்டைகூட முடியாதாதலின் 'உரையிறந்த அன்பர்' என்றார். இறைவனுகிய ஒளி அன்பருள்ளத்து அன்பர் அன்பு பெருகப் பெருக ஓங்கிக்கொண்டே இருக்கக் காணுமாதலின் 'ஓங்கொளியா யோங்கி' என்றார். ஆனந்தமயமாகிய இறைவனின் ஆனந்தம், அவனால் எய்தும் ஆனந்தம் அளவிட்டறிய, அளவிட்டுச் சொல்ல முடியாது ஆதலின், 'கரையிறந்த இன்பக் கடலே' என்றார். 'உளத்து' இது உள்ளத்து என்பதன் தொகுத்தல் விகாரம். 6

எத்திக்குந் தானுகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே.

(ப-ரை) எ-எந்த, திக்கும்-திசையினும், தான்-தானே, ஆகி - வியாபகமுற்ற, என் - அடியேனின், இதயத்தே - மனத்தினிடத்தும், ஊறி-சுரந்து, தித்திக்கும் - இனித்திருக்கின்ற, ஆனந்தம் - பேரின்பமயமாகிய, தேனே-தேனே!, பராபரமே!—, எ-று.



(வி-ரை) இறைவன் சர்வந்தரியாமி ஆதலின் 'எத்திக்குந் தானுகி' என்றார். இதனையன்றே **பட்டினத்தடிகளும்**, "எட்டுத் திசையும் பதினறு கோணமு மெங்கு மொன்றாய் முட்டித் ததும்பி முளைத்தோங்கு சோதியை" என்றார். இறைவன் எல்லாருள்ளத்தும் உறைபவன் ஆதலின், 'என் இதயத்தே யூறி' என்றார். **மணிவாசகப்** பெருமானும், "சிறைவான்புனற் றில்லைச் சிற்றம்பலத்து மென்சிந்தையுள்ளு முறைவான்" என்றார். அடியார் உள்ளத்து ஊறிப் பெருகிச் சிவாநந்தத்தைப் பெருக்குவோன் ஆதலின், 'இதயத்தே யூறித் தித்திக்கும் ஆனந்தத் தேனே' என்றார். இனிமை செய்தலின் இறைவனைத் தேனுக ஒப்பு உருவகஞ் செய்தார். **மணிவாசகரும்**, "தேனைப் பாலைத் திகழொளியைத் தேவர்க டங்கோனை" என்றார். இதயத்தே - என்றதில் ஏகாரம் தேற்றப் பொருளது. 7

திக்கொடுகீழ் மேலுந் திருவருளாம் பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே.

(ப-ரை) திக்கொடு - எட்டுத்திக்குகளுடனே, கீழ் - பூமியிலும், மேல்-ஆகாயத்திலும் வியாபித்திருக்கும், திருவருளாம் - தேவரீரின் திருவருட்டன்மையாகிய, பொற்பு - உண்மைவிளக்க அழகை, அறிந்தோர் - உணர்ந்த ஞானிகள், கைக்குள்-உள்ளங்கையினில், வளர்-பொருந்தியிருக்கின்ற, நெல்லி-நெல்லியின், கனியே-பழமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) திக்கொடு கீழ்மேல் என்றது - பத்துத்திசையையுங் குறித்தது. கீழ் என்றது - கீழ் உள்ளதாகிய பூமியையும், மேல் என்றது - மேலேயுள்ளதாகிய விண்ணையுங் குறித்தது. 'கீழ் மேல்'-பண்பாகு பெயர்கள். எல்லாம் தேவரீரின் திருவருளின் விளக்கமே என்னும் பண்பையறிந்தோர் என்பார் 'திருவருளாம் பொற்பறிந்தோர்' என்றார். பொற்பு என்றது - அழகு, இது பொன் என்னும் பகுதியடியாகப் பிறந்தது. பொன் - அழகு, பொற்பு-பண்புப்பெயர். கைக்குள்-உள்ளங்கையை. 'வள்' ஈண்டு தங்கியுள்ள என்னும் பொருளது. ஏனைக்கனிகள் கையில் வைத்திருக்கையிற் கெட்டுப்போதலும் உண்ண உண்ணக் குறைந்துவந்து கடையில் இல்லாதுபோதலும் உண்டு; அவைகள் போலாது கெடாதும் உண்ணஉண்ணக் குறைவுபடாதும், மேலும் மேலும் ஓங்கிவளர்ந்து கொண்டிருப்பதுமாகிய கனி என்பார் 'வளர்கனியே' என 'வளர்' என்னும் அடைமொழி கொடுத்தோதினுல் எனினும் பொருந்தும். எவ்வாறு உள்ளங்கை நெல்லிக்கனி தெளிவாக உள்ளும் புறமும் காண்பதற்கு எளிதாக இருக்கிறதோ அதுபோல் இலேசாக இறைவன் காண இருப்பன் என்பது இதன் பொருளாம். இனி உண்டிடாதே கையிற் கொண்டிட்டாலே அழியாமையைத் தரும். கருநெல்லிக் கனிபோல்வோனே எனப் பொருள் கூறுவாரும் உண்டு. உண்ணுதே கையிற் கொண்டாலே சாவாமையைத்தரும். நெல்லிக்கனியுளதேற் கொளத்தக்கது.

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேஎன் னுள்ளத் தெளிவே பராபரமே.

(ப-ரை) முத்தே - முத்தே, பவளமே - பவளமே, மொய்த்த-நெருங்கிய, பசும்-பசுமையாகிய, பொன்-பொன்னின், சுடரே-ஒளியே, சித்தே-அறிவே, என்-அடியேனின், உள்ளம்-மனத்தினிடத்து உள்ள, தெளிவே - தெளிவே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகில் உயிர்கட்கு அரிய பொருள்களுள் முத்து முதலாகிய நவமணிகளும், பொன் முதலிய உலோகப்பொருளும் சிறந்ததாதலின் இறைவனை உயர்த்தவனே என்பார் 'முத்தே, பவளமே, பசும்பொன் னொளியே' என்றார். நவமணிகளுள் முத்து சிறந்து முதனிற்றலால் முத்தே என முதலில் அழைத்தார். இன்னும் விபூதி அணிந்து வெண்ணிறமாகத் தோன்றலின் 'முத்தே' என்றார். 'பால்வண்ணன்' என்று பிறருங் கூறியது கண்டு தெளிக. இறைவன் செம்பவள உருவுடையவன். செவந்தமேனியன் ஆதலின் 'பவளமே' என்றார். 'செம்பவளக் குன்றே' 'நெருப்புமேனியாய்' 'அந்திமேனியாய்' 'மாணிக்கமலையே' 'பவளத்தடங் குன்றே' 'முக்கட்பவள மலை' எனப் **பெரியார்** கூறியதுங் காண்க. இறைவனை 'பொன்வண்ணன்' எனப் பொன்வண்ணத் தந்தாதியிற் **காரைக்காலம்மையார்** கூறியபடி 'பசும்பொற் சுடரே' என்றார். பசும் என்றது பொன்னுக்கு அடைமொழி. ஈண்டு பசுமை செழுமையைக் குறித்தது. "செழும் பொன்னே" எனப் பிறரும் இறைவனைக் கூறியது கண்டு தெளியலாம். முத்து, பவளம், பொன் முதலியன தனக்குப் புறம்பாகிய புறப்பொருள். பிரிதின் கிழமைப்பொருள் தன்னிற் பிரிவின்றி அகத்தே இருக்கும் அகப்பொருளாகியது அறிவு ஆதலினாலும், முத்து முதலியவற்றின் உபயோகத்தை அறிவதும் அனுபவிப்பதும், பாராட்டுவதும் அறிவு ஆதலினாலும், இறைவன் அறிவுமயன் ஆதலினாலும் 'சித்தே' என்றார். அறிவு கருவியாகத் தெளிவு பிறத்தலின் 'தெளிவே' என்றார். 9

**கண்ணே கருத்தேஎன் கற்பகமே கண்ணிறைந்த**
**விண்ணே ஆனந்த வியப்பே பராபரமே.**

(ப-ரை) கண்ணே-(உலகப் பொருள்களைக்காண உதவியாக இருக்கின்ற) கண்ணே!, கருத்தே - (அகப் பொருளைக்காணக் கருவியாக இருக்கின்ற கருத்தே!, என்-அடியேனின், கற்பகமே-(அடியேன் எண்ணியவைகளை எண்ணியாங் குதவுதலால்) கற்பகமே!, கண் - அடியேனின் அறிவாகிய அகக்கண், நிறைந்த-நிறைந்துள்ள, விண்ணே - சிதாகாயமே!, ஆனந்தம் - ஆனந்தத்தை விளைவிக்கும், வியப்பே - ஆச்சரியப்படத்தகுந்த பொருளே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண்ணே என்றது புறப்பொருள்களைக் காண்பதற்குக் கருவியாக இருக்கின்ற கண்ணாகிய உறுப்புகளை. கண்ணுக்குக் கண்ணாக இருப்பவன் ஆதலின் 'கண்ணே' என்றார். மனம் அகப்பொருள்களைக் காண்பதற்குக் கருவியாக இருத்தலின் 'கருத்தே' என்றார். கருதுங் காரணம்பற்றியே மனத்திற்குக் கருத்தெனும் பெயர் வந்தமைகொண்டு தெளிக, கருத்தால்



பொருள் நிச்சயம் கண்டபின் தெளிவு, ஆனந்தம் பிறக்கும். இது கொண்டே புறக்கண்ணினும் அகக்கண் சிறந்தது. வேண்டியார் வேண்டுவனவற்றைக் கற்பித்துத்தரும் தேவலோகக் கற்பகத்தருவைப்போல அடியார் வேண்டுவனவற்றை வேண்டளவறிந்து பக்குவமறிந்து பண்பறிந்து ஈந்தருளுபவன் இறைவன் ஆதலின் 'என் கற்பகமே' என்றார். அறிவு ஆகாசவடிவினனாதலின் 'கண்ணிறைந்த விண்ணே' என்றார். இறைவன் ஆனந்தத்தையே யூட்டிப் புதிய பொருளினும் புதிய பொருளாய் பழய பொருளினும் பழம் பொருளாய் நிற்கின்றானாதலின் 'ஆனந்த வியப்பே' என்றார். "அற்புத மலையே அருணிறைந்த சாகரமே, விற்பன வித்தே விளங்குபெருஞ் ஜோதியே" எனப் பிறருங்கொண்டு புகழ்ந்தமை கண்டு தெளியலாம். 10

**வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பாற்**
**றாக்காதே தாக்குந் தனியே பராபரமே.**

(ப-ரை) வாக்காய் - வாக்காகி, மனதாய் - மனதாகி, மனம் - மனமும், வாக்கு-வாக்கும், இறந்தவர்பால் - இறந்து நின்றவர்களிடத்தே, தாக்காதே-பொருந்தாதே, தாக்கும் - பொருந்தும், தனியே - ஒப்பற்றபொருளே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லாம் அவனாய், எல்லாச்செயலும் அவனது ஆதலின் 'வாக்காய்' என்றார். இறைவன் தத்துவங்களாகியும் தத்துவங்கள் தொண்ணூற்றாறையுங் கடந்தவனாகியும் நின்றலின் 'மனமாய்' என்றார். மனவாக்கு இறந்தவர் என் மௌன நிலையுற்ற ஞானிகளை. தாக்கதே தாக்கும் என்றது தங்காது தங்குதலை. ஏன் இறைவன் அங்கிங்கெனாதபடி எங்கும் இருப்பவன் ஆதலின் 'தாக்காதே தாக்கும்' என்றார். "விருப்பென்ன ஓரிடையில் மேவான்" என்ற வாக்கும் ஈண்டு கருதற்பாலது. எள்ளுக்குள் எண்ணெய் போல் இறைவன் எங்குந்தங்கி இருந்தாலும் ஞானியர் உள்ளத்து அவர் காண இருத்தலின் 'மனவாக் கிறந்தவர்பாற் றாக்காதே தாக்குந்தனியே' என்றார். இறைவன் ஒப்பு உயர்வு அற்றவன் ஆதலின் 'தனியே' என்றார். 11

**பார்த்தவிட மெல்லாம் பரவெளியாய்த் தோன்றவொரு**
**வார்த்தை சொல்லவந்த மனுவே பராபரமே.**

(ப-ரை) பார்த்த-நோக்கின, இடம்-இடங்கள், எல்லாம் - எல்லாம், பரவெளியாய்-பராகாயமாக, தோன்ற-தோன்றும்படி, ஒரு-அடியேனுக்கு ஒரு, வார்த்தை-உபதேசமொழியை, சொல்ல-சொல்லும் பொருட்டு, வந்த-வந்தருளிய, மனுவே-மநுஷரூபமே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனே பரிபக்குவ காலமுணர்ந்து ஆசாரியத் திருவுருவங்கொண்டு வந்தருளுகின்றானாதலின், 'ஒரு வார்த்தை சொல்லவந்த மனுவே' என்றார். ஒருவார்த்தை என்றது சித்தாந்தமகா வாக்கியமாகிய ஞானோபதேசம். இறைவனின் ஞானோபதேசம் பெற்றபின் ஞானம்பெற்ற அடியார்க்கு இறைவன் சிதாகாசவடிவாகக் காணப்படுவன் ஆதலின் 'பார்த்த

விட மெல்லாம் பரவெளியாய்த் தோன்ற' என்றார். பரவெளி என்றது பராகாயம். அதுவே 'சிதாகாசம்' குருமூர்த்தியாக வந்து உபதேசித்த ஞானோபதேசம் ஒப்பற்ற ஞானோபதேசம் ஆதலின் 'ஒரு வார்த்தை' என்றார். 12

**வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்க்கவெ**
**கானந்தந் தந்த அரசே பராபரமே.** [னக்

(ப-ரை) வான்-ஆகாயத்தின், அந்தம்-முடிவாகவும், மண்ணின்-பூமியின், அந்தம்-முடிவாகவும், வைத்து-வைத்து, வைத்து-வைத்து, பார்க்க-பார்க்கும் படி, எனக்கு - அடியேனுக்கு, ஆனந்தம் - இன்பத்தை, தந்த - தந்தருளிய, அரசே-அரசே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வான் அந்தம் என்று கூறியது - ஆகாயத்தின் மேன்முடிவை. மண்ணினந்தம் என்றது - பூமியின் கீழ்முடிவை. 'வைத்து வைத்து' மிகுதிப் பொருளில் அடுக்கி வந்தது. இது வியாபித்து நின்று நின்று என்னும் பொருளது. ஞானிகளுக்கு அவர் பார்க்கும் இடங்களிலெல்லாம் இறைவன் வியாபகமாகக் காண்பன் ஆதலின் 'வானந்த ... ... ... ஆனந்தந்தந்த அரசே' என்றார். ஆனந்தம் என்றது - சிவாநந்தத்தை. தான் இறைவனுக் குத் தொண்டாந் தன்மையால் 'அரசே' என்றார். வானந்த மண்ணி னந்தம் என்றது - அவரோகண ஆரோஹணக்கிரமம். 13

**அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த**
**இன்பப் பெருக்கே இறையே பராபரமே.**

(ப-ரை) அன்பை - அடியேனிடத்து அன்பை, பெருக்கி - மிகுவித்து, எனது-அடியேனது, ஆர்-அருமையாகிய, உயிரை-உயிரை, காக்க-காத்தருள, வந்த - வந்தருளிய, இன்பம் - ஆனந்த, பெருக்கே - வெள்ளமே!, இறையே-கடவுளே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அன்பு என்றது - இறைவன்மாட்டு அன்பை. "அன்பினைப் பெருக்கிப் பொழுதினைச் சுருக்கி" என்ற **மணிவாசகர்** வாக்கு ஈண்டு கருதற் பாலது. ஆருயிர் என்றது - மனிதப்பிறப்பை. இறைவன் ஆனந்தமயன் சுகசொரூபன் ஆதலின் 'இன்பப் பெருக்கே' என்றார். இறைவன் எல்லா உயிர்களுக்குந் தலைவன் ஆதலின் 'இறையே' என்றார். 14

**வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகத்து**
**கானபணி யான வணியே பராபரமே.** [க்

(ப-ரை) வானம்-ஆகாயம், எல்லாம்-முழுதும், கொண்ட-தன்னிடத்தே அடக்கிக்கொண்ட, மௌனம்-மவுன நிலையாகிய, மணி - அழகிய, பெட்டகத் துக்கு-பெட்டியில், ஆன-வைப்பதற்குரிய, அணி-அலங்காரம், ஆன - ஆகிய, அணியே-ஆபரணமானவனே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மௌன நிலையுற்றார் மனத்தகத்தே சிதாகாயமுற்று மொடுங் கிக் காணுமாதலின் 'வானமெல்லாங் கொண்ட மௌனமணிப் பெட்டகம்'



என்றார். மௌனயோகிகள் உள்ளத்து ஆனந்தமயமாக இறைவன் உறை கின்றான் ஆதலின் 'மௌனமணிப் பெட்டகத்துக் கான பணியான வணியே' என்றார். 15

**ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்கள்**
**நாடும் பொருளான நட்பே பராபரமே.**

(ப-ரை) ஓடும்-ஓட்டையும், இரு-பெரிய, நிதியும்-திரவியமும், ஒன்றாக-ஒரேதன்மைத்தாக, கண்டவர்கள் - நோக்கிய ஞானிகள், நாடும் - தேடும், பொருள்-பொருள், ஆன-ஆகிய, நட்பே-நண்பே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உண்மை ஞானியர் 'ஓடுஞ் செம்பொனும் ஒக்க நோக்குவார்' என்றபடி, 'ஓடு மிருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்' என்றார். இதன் உண்மையை **திருநாவுக்கரசர்** திருச்சரிதத்தில் திருக்கோயில் புற்செதுக்கும் போது சிவபெருமான் திருவருளால் திருநாவுக்கரசர் மனப்பான்மையைச் சோதிக்க புற்களுடன் கிடந்த நவமணிகளையும் செம்பொன் திரளையும் பரற் கற்களோடு ஒன்றாகச்சேர்த் தெறிந்தார் என்னுங் கதையால் அறியலாம். இதனையன்றோ **சேக்கிழாரும்** "செம்பொன்னு நவமணியுஞ் சேணிளங்க வாங்கவையு, மும்பர்பிரான் றிருமுன்றி லுள்பருக்கை யுடனொக்க, வெம் பெருமான் வாகீச ருழவாரத் தினிலேந்தி, வம்பலர்மென் பூங்கமல வாவி யினிற் புகவெறிந்தார்" என்ற **செய்யுளா** லறியலாம். சிவஞானிகள் மாயா காரியமாகிய உலகப்பொருள்களைப் பொருள் செய்யாது மெய்ப்பொருளாகிய இறைவனையே நாடுவர் என்பார் 'ஓடு மிருநிதியு ... ... ... நாடும் பொருளான நட்பே' என்றார். நட்கப் படுவதை 'நட்பே' என்றது ஆகு பெயர். 'ஓடு மிருநிதியும்' இதில் வந்த உம்மைகள் எண்ணும்மைகள். 16

**சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவா**
**ழுத்தமர்கட் கான வுறவே பராபரமே.**

(ப-ரை) சித்தம்-மனத்தினிடத்தே தோன்றும், நினைவும்-எண்ணமும், செயும்-அந்நினைவின்படிச் செய்கின்ற, செயலும்-செய்கையும், நீ-தேவரீரே, என-என்று, வாழ் - வாழ்கின்ற, உத்தமர்கட்கு - ஞானிகளுக்கு, ஆன-தகுதி யான, உறவே-சுற்றமே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சித்தம் என்றது - ஈண்டு மனத்தை. சிந்திப்பதற்கு இடமாக இருப்பது என்னும் பொருளது. நினைவு - எண்ணத்தை. அவர் அவர்கள் கர்மத்திற்குத் தக்கபடி இறைவனே நினைவை எழுப்புகின்றான். அந்த நினைவின்படியே செயல் நிகழ்கின்றது ஆதலின் 'சித்த நினைவுஞ் செயலும் நீயென்' என்றார். தற்போதமற்று சிவபோதமுற்று நிற்பவர்கள் ஞானிகள் ஆதலின் 'சித்த நினைவுஞ் செயலும் நீயென வாழுத்தமர்' என்றார். "உள்ளத் துறவே" என்ற **பெரியார்**களின் கூற்றின்படி இறைவன் ஞானிகள் உள் ளத்தே ஆனந்த ஜோதிமயமாக நிற்றலின் 'உத்தமர்கட் கானஉறவே' என்றார். 'சித்த நினைவுஞ் செயலும்' என்றதன்கண்ணுள்ள உம்மைகள் எண்ணுப்

பொருளில் வந்தன. இது காரணகாரியத் தொடர்ச்சியை விளக்கி நின்றது. உறவு என்றது - சுற்றத்தை. 17

**போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றியெனு**
**வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே. [ம்**

(ப-ரை) போதாந்தம்-ஞானமுடிவை அறிந்த, புண்ணியர்கள்-புண்ணியவான்கள், போற்றி போற்றி, சய - ஜய, போற்றி - போற்றி, எனும் - என்று துதித்துக்கூறும், வேதாந்த - (சித்தாந்தப்பொருளை உள்ளபடி கண்டறிய அப்பொருளடங்கியுள்ள) வேதாந்த, வீட்டில் - வீட்டினுள்ளே ஏற்றிவைத்த, விளக்கே-தீபமே!, பராபரமே!—, எ-று.

(வி - ரை) போதாந்தம் என்றது ஞானமுடிபு; அதாவது ஞானக்கொழுந்து. 'போதாந்தப் புண்ணியர்' புண்ணிய மிகுதியால் ஞானக்கொழுந்தாய் விளங்குபவர்கள் என்பது பொருளாம். ஞானிகள் இறைவனை என்றும் வாழ்த்தி வணங்கிச் சிவானந்தம் உறுவர்கள் ஆதலினல் 'போற்றி சயபோற்றி எனும்' என்றார். வேதாந்தம் பொது சித்தாந்தச் சிறப்பு. வேதாந்தத்து விளங்கும் முடிபு சித்தாந்தச் செம்பொருள் ஆதலினலும் சித்தாந்தச் செம்பொருள் ஆனந்த ஜோதிமயமாக நிற்கும் ஆதலினலும் 'வேதாந்த வீட்டில் விளக்கே பராபரமே' என்றார். ஆன்மா தன்னையும் இறைவனையும் விளங்கக்காட்டி அத்துவிதானந்த இன்பம் விளைத்தலின் 'வேதாந்த வீட்டில் விளக்கே' என்றார். விளக்குவது 'விளக்கு' இது காரணப்பெயர். விளக்கு-தெளியக்காட்டுவது. 18

**முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே**
**சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே.**

(ப-ரை) முத்தாந்தம் - மோக்ஷநிலையத்து, வீதியில் - வீதியினிடத்தே விளங்கும் தேவரீரது, முளரி - செந்தாமரைபோன்ற திருவடியை, தொழும்-வணங்குகின்ற, அன்பருக்கே-அன்பர்களுக்காகவே, சித்தாந்தம் - சித்தாந்தம் என்னும், வீதி-ராஜவீதியில், வரும் - எழுந்தருளி வருகின்ற, தேவே - தெய்வமே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) முத்தாந்தம் என்றது முத்தியின் முடிபு என்னும் பொருள் தரும். ஈண்டு முத்திநிலையை உணர்த்திற்று. இதனை அந்தமுத்தி எனக்கொண்டு கூட்டி உயிர்கள் அந்தத்தில் அடையும் முத்தி என்க. இறைவன் முத்திப்பொருள், முத்திக்கதிபதி, முத்தி அருள்பவன் ஆதலின் 'முத்தாந்த வீதி முளரி' என்றார். முளரி என்றது முளரிபோன்ற பாதத்தை. இது உவமையாகுபெயர். (முளரி - செந்தாமரை) சித்தாந்தவீதி இராஜவீதி ஆதலின் முத்திச் சிம்மாதனத்து இருக்கும் இறைவன் சித்தாந்தமாகிய இராஜவீதியிற் பவனி வருவன் ஆதலின் 'சித்தாந்த வீதிதரும் தேவே' என்றார். 'வீதி' என்னுஞ் சொல் மார்க்கத்தையும், இடத்தையும் உணர்த்துதல் அறிக. 'அன்பருக்கே' என்பதில் 'ஏ' தேற்றேகாரம். இதனனே



தொழாத அன்பருக்கு சித்தாந்த வீதியில் வந்து காட்சியருளான் என்பது பெறப்படும். 'முளரி' இது முள்ளரையை உடையது என்னுங் காரணம் பற்றித் தாமரைக்கு வந்தபெயர். 19

**ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற**
**ஆனந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே.**

(ப-ரை) ஈனம் - இழிவை, தரும் - கொடுக்கும், உடலம் - சரீரத்தை, என்னது-என்னது எனவும், யான்-யான் எனவும், என்பது-என்று கூறுவது, அற - ஒழிய, ஆனந்தம் - தேவரீர் சிவானந்தத்தை, வேண்டி-விரும்பி, அலந்தேன்-துன்புற்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உடல் மாயாசம்பந்தம் உடையது ஆதலினலும், பொறி புலன்களைக்கொண்டு வாட்டி அலக்கழித்து பிறவிக் கேதுவாக்கலானும் 'ஈனந்தருமுடல்' என்றார். எனது என்றது - மமகாரத்தை. யான் என்றது-அகங்கார தத்துவத்தை. 'யான்' என்னும் அகங்காரமும், 'எனது' என்னும் மமகாரமும் அற்றவர்கள் சிவஞானிகள் ஆதலினலும், இவர்களுக்குச் சிவானந்தங் கைக்கூடுமாதலினலும் 'ஈனந்தரு முடலம் என்னதியா னென்பதற வனந்தம் வேண்டி யலந்தேன்' என்றார். அலந்தேன் என்றது - கிடைக்கப் பெருமையினல் என்க. 20

**என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைந்**
**தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே.**

(ப-ரை) என்பு - எலும்பு, உருகி - நெக்குவிட்டு உருகி, நெஞ்சம் - மனமானது, இளகி-கரைந்து, கரைந்து கரைந்து - உருகி உருகி, அன்புருவாய்-தேவரீர் மாட்டு அன்பு-மயமாக, நிற்க-நின்றிருக்க எண்ணி (அது கைகூடாமையினல்), அலந்தேன்-துன்பம் அடைந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'என்பு' இது 'எலும்பு' என்பதன் விகாரம்; அன்பு மிகுதியும் உடையாருக்கு எலும்பு உருகுதலும், மனங் கரைதலும் இயற்கை ஆதலின் 'என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்து கரைந் தன்புருவாய் நிற்க' என்றார். என்பு உருகுதல் ஆவது - எலும்பு நெக்குவிட்டுருகுதல். மனங்கரைதலாவது-மனங் குழைவடைதல். கரைந்து கரைந்து என்பது - மிகுதிப்பொருளில் அடுக்கி நின்றது. அன்புருவாய் நிற்க என்றது - அன்புமயமாய் நிற்றலை. எலும்பு கடினமுடைய தாதலின், மனம் கல்லினும் வன்மையுடைத்தாதலின் முறையே உருகல், இளகல் இன்றி 'அலந்தேன்' என்றார். 21

**சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்**
**சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே.**

(ப-ரை) சுத்த - பரிசுத்தமாகிய, அறிவு - அறிவுருவம், ஆய்-ஆகி, சுகம்-நித்தியானந்தத்தை, பொருந்தின்-அடைந்தால், அல்லால்-அல்லாமல், என்-அடியேனின், சித்தம்-மனம், தெளியாது-தெளிவடையாது, என் - இதற்கு அடியேன் என்ன, செய்வேன்-செய்யமாட்டுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சுத்த அறிவு என்றது மாசற்ற அறிவை. அதாவது பதி ஞானத்தை. சுகம் என்றது நித்தியானந்தமாகிய சிவானந்தத்தை. இனி முத்தி இன்பத்தை எனினும் ஆம். தெளிவடையாது என்றது அன்புறு நிலையினின்று மாறிச் சாந்தி பெறுதென்பதாம். இறைவனே தேவரீரின் அருளின்றி அறிவு உருவாதலும், நித்தியானந்த முறலும், சாந்திபெறலும் முடியாததாகும். அதற்குத் தேவரீரின் அருளே வேண்டும்; அதற்கு அடியேன் என்செயக் கடவது? எவ்வாறு தேவரீரின் திருவருளைப்பெறவேன் என முறையிடுகின்றார். சித்தம் என்றது சிந்தித்தற்கு ஆதாரமாக நிற்கும் மனத்தை. 22

மாறா வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கந்
தேறுதென் செய்வேன் சிவமே பராபரமே.

(ப-ரை) மாறா - பேதப்படாத (இடையீடில்லா), அனுபூதி-சிவானுபவம், வாய்க்கின்-கிடைக்கின், அல்லால் - அல்லாமல், என்-அடியேனின், மயக்கம்-மனமயக்கம், தேறுது - தெளிவடையாது, என் - அடியேன் இதற்கு என்ன, செய்வேன்-செய்யக்கடவேன், சிவமே-மங்களாகரனே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாறா என்பது தோன்றித்தோன்றி மறையாத என்னும் பொருளது. அனுபூதி என்றது-சிவசொரூபங்கண்டு அந்தச் சிவானந்தத்தே அழுந்தி இன்புற்றிருக்கும் நிலையை. மயக்கம் என்றது-பிரபஞ்சமாயையால் உண்டாம் மனமருட்சியை. தேறுது என்றது - மனச்சாந்த மடையாது என்பதாம். தன்னையுந் தலைவனையும் அறிந்து தலைவனைக்கூடி இன்புற்றிருக்கும் நிலையே தெளிந்த நிலையாகும். என்செய்வேன் என்றது-அடியேன் தேவரீரின் திருவருளைப்பெற்று சிவானந்தம் பெறுதற்கு என் செயக்கடவேன் என்பதாம். மனத்துயர் அமங்கலமானது. அமங்கலந்தொலைந்து மங்கள முண்டாக மங்களசொரூபியை வேண்டவேண்டு மாதலின் மங்களகரன் என்னும் பொருள்கொண்ட 'சிவமே' என்றார். 23

தாகமறிந் தின்பநிட்டை தாராயே லாகெடுவேன்
தேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே.

(ப-ரை) தாகம் - (அடியேனுக்கு உண்டாயிருக்கும்) ஆவலை, அறிந்து-தேவரீர் தெரிந்து, இன்பம்-சிவானந்த, நிஷ்டை - நிஷ்டையை, தாராயேல்-தரா தொழிவாயாயின், ஆ-ஐயோ!, கெடுவேன்-கெடுவேன்!, தேகம் - இந்த உடம்பானது, விழுந்திடின்-நழுவிவிட்டால், என்-அடியேன் பிறகு என்ன, செய்வேன்-செய்யக்கடவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'தாகம்' இது இன்றியமையாததும் பெரிதும் ஆகிய ஆவலைக் குறித்தது. தாபத்திரயங்களா லுண்டாகிய வெப்பத்தால் தாகம் ஏற்பட்டது. அதனைத் தணிக்க சிவானந்தமாகிய இன்பவெள்ளம் வேண்டும் என்பார் 'தாகமறிந் தின்பநிட்டை தாராயேல்' என்றார். பெறுதற்கரிய இந்த மானிட தேகத்தாலேயே சிவானந்த நிட்டை பெறவேண்டி இருத்தலின் 'தேகம் விழுந்திடில் என்செய்வேன்' என்றார். 'ஆகெடுவேன்' இவை



இரக்கப்பொருள் குறிக்கவந்த சொற்கள். நிட்டை என்பது - தலைவனை அறிந்து அவனைக்கண் டானந்தத் தழுந்தி இருக்கும் நிலை. 24

அப்பாஎன் னெய்ப்பில்வைப்பே ஆற்றுகிலேன்போற்றி
செப்புவதல்லால்வேறென்செய்வேன்பராபரமே.[யென்று

(ப-ரை) அப்பா-என் தந்தையே!, என் - அடியேனின், எய்ப்பு-குறைவு, இல் - இல்லாத, வைப்பே - உன்னும் இடத்து உதவும் பொக்கிஷமே! (நிக்ஷேபமே), ஆற்றுகிலேன் - பிறவிநோயை ஆற்ற முடியாதவனாக இருக்கின்றேன், (இந்நோயைத் தணித்துக்கொள்ளற் பொருட்டு) போற்றி - தேவரீருக்குப் போற்றி, என்று - என்ற, செப்புவது - நமஸ்காரம் சொல்லுவது, அல்லால்-அல்லாமல், வேறு - வேறு, என்செய்வேன் - அடியேன் என்ன செய்யக்கடவேன்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எல்லா உயிர்களுக்குந் தந்தையாதலினால் 'அப்பா' என்றார். 'எய்ப்பில் வைப்பு' என்பதற்குத் தளர்ந்தகாலத்து உதவும் குறையா நிதியே எனினும் ஆம். வைப்பு என்றது இளைத்தகாலத்து உதவ வேண்டுமென்று தேடிவைத்த திரவியத்தைக் குறிக்கும். 'ஆற்றுகிலேன்' இதில் 'இல்' இடைநிலை முடியாமைப் பொருளுணர்த்தி நின்றது. 'போற்றி' இது துதி, நமஸ்காரம் என்னும் பொருள்தரும் தமிழ்ச்சொல். 'செப்புவது' ஈண்டு செப்பு என்பது திசைச்சொல். 25

உற்றறியு மென்னறிவு முட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே ஐயா பராபரமே.

(ப-ரை) உற்று - (பொறிகளைக்கருவியாகக்) கொண்டு, அறியும் - அறிகின்ற, என் - அடியேனுடைய, அறிவும் - அறிவும், உள் - உள்ளேயிருப்பனவாகிய, கருவி-அந்தக்கரணங்கள், போல்-போல, சவி-ஒளி, மாண்டு-மழுங்கி, அற்றும் - ஒழிந்தும், இன்பம் - இன்னமும் அடியேனுக்கு சிவானந்தத்தை, தந்திலையே-தந்தருளினாய் இல்லையே, ஐயா-அப்பனே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உற்று என்றது - புறக்கருவிகளாகிய ஐம்பொறிகளை உற்று என்னும் பொருளது. அறிவு என்றது-புலன்களை அறியும் அறிவு என்பதாம். உட்கருவி என்றது - மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களாகிய அந்தக் காரணங்களை. சவி என்றது - புலன்களைப்பற்றி நிகழும் அறிவின் ஒளியை. சவிமாண்டற்று என்றது - அறிவு பொறி புலன்வழி செல்லாது அடங்கி நிற்கும் நிலையைக் குறித்தது. இன்பம் என்றது - சிவானந்தத்தை. இன்பங் கூட்டுவிப்போன் இறைவன் ஆதலின் 'இன்பந்தந்திலையே ஐயா' என்றார். 26

சொல்லா லடங்காச் சுகக்கடல் வாய்மடுக்கின்
அல்லாலென் றுாக மறுமோ பராபரமே.

(ப-ரை) சொல்லால் - (மவுனானந்த நிட்டையிலிருந்தறிவதன்றி) சொல்லால், அடங்கா-சொல்லி முடியாத, சுகம்-சுகானந்தமாகிய, கடலில் - சாகரத்தில், வாய்-வாய்வைத்து, மடுக்கின்-பருகினால், அல்லால் - அல்லாமல், என்-

அடியேனின், தாகம் - மோக்ஷானந்தத்தை அனுபவிக்கவேண்டும் என்னும் ஆசை, மாறுமோ-அடங்கிடுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிவபெருமான் திருவருளால் பெறும் சிவானந்தம் மாயையின் காரியமாகிய வைகரி சம்பந்தப்பட்ட வாக்காற் சொல்லிக்காட்ட முடியாதது ஆதலின், 'சொல்லா வடங்கா' என்றார். இச் சிவானந்தத்தை குரு அருளால் மௌன நிட்டையிலிருந் துணரமுடியாது. சொல்லிக்காட்டுந் தன்மை யுடையதல்ல என்பார் 'சொல்லா வடங்காச் சுகக்கடலில்' என்றார். வாய் மடுத்தல் என்றது நிறம்ப உண்ணலைக் குறிக்குஞ்சொல் என்பதாம். தாகம் என்றது மோட்ச வேட்கையை. மறுமோ என்றது சிவானந்தம் துய்த்து அடங்கி சாந்தநிலை பெறலைக் குறித்தது. துய்த்துவேட்கை நிற்றலைக் குறித்தது. மறுமோ என்றது விடைதழுவிய வினா. மறுதல் என்னும் பொருளது. 27

**பாராயோ என்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை**
**தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.**

(ப-ரை) என்னை - அடியேனின், முகம் - முகத்தை, பாராயோ - (குரு மூர்த்தியாகக் கோலங்கொண்டருளி வந்து) நேரிற் பார்க்கமாட்டாயோ, (அவ்வாறு) ஒரு - ஒரு, கால் - தரம், பார்த்து-பார்த்து, என்-அடியேனின், கவலை-துன்பத்தை, தீராயோ-தீர்த்தருளாயோ, வாய் - திருவாயை, திறந்து-மலர்ந்தருளி, செப்பாய்-சொல்லி அருள்வாய், பராபரமே!—, எ று.

(வி-ரை) 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்றபடி அடியேன் முகத்தை நோக்கியருளின் அடியேன் கவலை தேவரீருக்குப் புலப்பட்டு இரக்கம் உண்டாகி அடியேனின் கவலையைத் தீர்ப்பீர் என்னும் கருத்துக் கொண்டு 'பாராயோ என்னை முகம்' என்றார். ஒருகால் என்றது-இன்னும் ஒருமுறை என்னுங் குறிப்பைக்கொண்டது. தேவரீரின் திருவுளம் அடியேன் கேட்கச் சொல்லினாலன்றி அடியேன் அறியும் ஆற்றல் உடையவன் அல்லன் என்பார் 'வாய்திறந்து செப்பாய்' என்றார். 'செப்பாய்' இது திசைச்சொல். சொல் என்னும் பொருளது. 28

**ஓயாதோ வென்கவலை உள்ளேயா னந்தவெள்ளம்**
**பாயாதோ ஐயா பகராய் பராபரமே.**

(ப-ரை) என்-அடியேனின், கவலை-துயரம், ஓயாதோ-அடியேனைவிட்டு நீங்காதோ?, உள்ளே-அடியேன் உள்ளத்தின் கண்ணே, ஆனந்தம்-சிவானந்தமாகிய, வெள்ளம்-வெள்ளம், பாயாதோ-பெருக்கெடுத்துப் பாயாதோ, ஐயா-அப்பனே!, பகராய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கவலை என்றது-பிரபஞ்சமாயை பற்றிவரும் மனோசஞ்சலத்தை. இனி முத்திப்பேறு என்று எய்துமோ? அடியேனுக்குக் கிடைக்குமோ? திருவருள் கைகூட்டுமோ என்பனவாதிய கவலை எனவுங் கூறுவர். உள்ளே என்றது - அந்தர்முகத்தை. 'பகராய்' முன்னிலையேவல். 'ஓயாதோ' 'பாயாதோ' என்றதன் ஈற்று ஓகாரங்கள் வினாப்பொருளில் வந்தது. 29



**ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த**
**பாகோ மெழுகோ பகராய் பராபரமே.**

(ப-ரை) ஓகோ - ஓகோ!, உனை-தேவரீரை, பிரிந்தார்-பிரிந்த அடியார்களின், உள்ளம்-மனம், கனலில்-நெருப்பில், வைத்த-வைக்கப்பெற்ற, பாகோ-பாகுதானோ?, மெழுகோ-மெழுகுதானோ?, பகராய் - சொல்லி அருள்வாயாக பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'ஓகோ' இது வியப்புப்பொருள் தரவந்த வியப்புக்குறி. உனை என்றது - இறைவனை. பிரிந்தார் என்றது - மெய்யடியார்களை. உள்ளம் என்றது - மனத்தை. இது இடவாகுபெயர். உள்ளே இருக்குங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். கனல் என்றது - நெருப்பை. கனலுவது கனல். (கனலுதல்-தகித்தல்) பாகும், மெழுகும் நெருப்பிற்குச் சமீபத்தில் வைத்தவுடன் நீரா உருகுந் தன்மையதாதலின் 'பாகோ மெழுகோ' என்றார். ஈற்று ஓகாரங்கள் இரண்டும் வினாப்பொருளது. 'பாகோ மெழுகோ' என்றதனால் அப்பாகினும் மெழுகினும் அதிகம் உருகுகின்ற தென்பது பொருளாம். இறைவனைவிட்டு பகிர்முகப்படுங்கால் அடியார்க்கு ஆராமைதோன்றி உள்ளம் உருகுவர் ஆதலின் இவ்வாறு கூறினர். இதனை, "விண்ணோர் போற்றும் அண்ணாவோ! விடையூர்தேவே என்னுயிரே, கண்ணேமணியே கருதொளியே! கலந்தாய் எங்கோ மறைந்தாயே, பெண்ணார் பாகப் பெருமானே! பித்தாய் அடியேன் நெருப்பிட்ட, எண்ணோர் பாகோ மெழுகோவென் றியம்ப உருகியுலந்தேனே" என்ற அழுதவாக்கானும் அறிக. 30

**கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளை**
**பார்த்தவனா னென்னைமுகம் பாராய் பராபரமே.** [ப்

(ப-ரை) நான் - அடியேன், கூர்த்த - அடியேனின் நுண்ணிய, அறி - அறிவு, அத்தனையும்-முழுதையும், கொள்ளை - தேவரீருக்குக் கொள்ளையாக, கொடுத்து-கொடுத்து, உன்-தேவரீரது, அருளை-திருவருளையே, பார்த்தவன்-எதிர் பார்த்துக்கொண்டிருப்பவன், (ஆகையினால்) என்னை-அடியேனை, முகம்-அடியேனின் முகத்தை, பாராய்-பார்த்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கூர்த்த அறிவு என்றது கூரிய அறிவை. கூரிய அறிவே அதி நுட்பமான விஷயங்களுள் எல்லாம், நுழைந்து ஆராய்ந்து அறியும் தன்மை யுடையதாகும் ஆதலின் 'கூர்த்த அறிவு' என்றார். இதனானன்றோ, "குசைநுனி அதனினுங் கூரியமதி" என்றார் பிறரும். அறிவு அத்தனையும் கொள்ளை கொடுத்தலாவது சிந்தனை முற்றையுஞ் சிவத்துக்கே ஆக்கல். இதனானன்றோ பெரியார்களும், "சிந்தனை யுனக்குத் தந்தேன்" எனவும், "சிந்தனைநின் றனக்காக்கி" எனவுங் கூறினர். அடியேன் முகத்தை நோக்கின் தேவரீருக்குக் கருணைபிறக்கும் என்பார், 'என்னை முகம் பாராயோ, என்றார். 'அத்தனையும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. 31

**கடலமுதே தேனேஎன் கண்ணே கவலைப்**
**படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே.**

(ப-ரை) கடல்-திருப்பாற்கடலில் பிறந்த, அமுதே-அமிர்தமே!, தேனே-தேனே!, என் - அடியேனின், கண்ணே - கண்ணே!, கவலை - கவலையானது, பட-இனிமேல் அனுபவித்து, முடியாது-முடிவுபெறாது, (ஆகையால்) என்னை-அடியேனை, நீ - தேவரீர், முகம் - முகம், பார் - பார்த்தருள் செய்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேவர்கள் சாகாமருந்து பெறற்பொருட்டு கடலில் இனிய சுவையுடைய மருந்து தோன்றிற்று. அதனை உண்டு நரை, திரை, மூப்பு, சாக்காடு அற்று இருந்தனர் ஆதலின் 'கடலமுதே' என்றார். அமுது-அழிவில்லாதது. அழிவில்லாமையைத் தருவது என்னும் பொருளது. தேனே என்றது - நறுமணமும் இன்சுவையும் குறித்து உவமை ஆயிற்று. இதனை, "தேனையும் பாலையும் கன்னலையு மொழித்தினிய, கோனவன்போல் வந்தென்னை" எனவும், "ஊனா யுயிரா யுணர்வா யென்னுட் கலந்து, தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய், வானோ ரறியாவழி யெமக்குத் தந்தருளும்" எனவரும் **மணிவாசகத்**தாலும் அறியலாம். இறைவன் உயிர்கட்கு அறிவாகவும், அறிவிப்பவனாகவும் இருத்தலின் 'கண்ணே' என்றார். முகம்பார் என்றது-முகம்பார்த்து அருள்செய் என்ற குறிப்பினது ஆம். 32

**உள்ள மறிவாய் உழப்பறிவாய் நானேழை**
**தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.**

(ப-ரை) உள்ளம்-அடியேனின் மனத்தை, அறிவாய்- தேவரீர் அறிவீர், உழப்பு - அடியேன் துன்பப்படுதலை, அறிவாய் - அறிவீர், நான் - அடியேன், ஏழை - அறிவில்லாதவன், தள்ளி - அடியேனை ஏற்று அருள்செய்யாது துன்பமேபடும்படித் தள்ளி, விடின் - விட்டால், மெத்த-அடியேன் மிகவும, தவிப்பேன்-வருந்துவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப் பொருளிலும், எல்லா உயிருள்ளும் சர்வந்தரியாமியாய் இருப்பவன் ஆதலின், 'உள்ளம் அறிவாய், உழப்பு அறிவாய்' என்றார். தள்ளிவிட்டாலும் இறைவன் திருவருளைப்பெறும் நெறியறிந்து கூடும் அறிவின்மையால் 'ஏழை' என்றார். உழப்பு என்றது பிரபஞ்சமாயையிற் சிக்கிப் பிறந்திறந்து உழல்வதை. தவிப்பேன் என்றது தாபத்திரயங்களால் வருந்துவதை. இதனை, "எங்கு நிறைந்த பரம்பொருளே! ஏழை எண்ணம் அறியாயோ!, பொங்கி எழுமென் அல்லலெலாம் பொல்லா மணியே! அறிவாயே!, அங்கக் கருணைப் பெருங்கடலே தோன்ற வந்தே காத்தருள்வாய், தங்கி நின்றே தாமதித்தால் தமியேனை தவித்துச் சாவேனே!" என்ற **அழுத** வாக்காலும் அறியலாம். 33

**கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்**
**கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.**



(ப-ரை) கன்றினுக்கு - சுதந்தரம் இல்லாத கன்றின் பொருட்டாக, சேதா - ஈன்றணிமையுடைய பசுவானது, கனிந்து - மனம் உருகி, இரங்கல்-இயற்கைக்கருணையினால் இரங்குதல், போல - போல, கருணை - கருணைக்கடலாகிய, எந்தாய் - எனது தந்தையே!, எனக்கு - என்பொருட்டு, என்று-எக்காலம், இரங்குவாய்-இரங்கியருள்வாய்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கன்று - என்றது ஈண்டு புனிற்றிளங் கன்றைக் குறிக்கும். ஆபத்தினின்றும் தன்னைக் காத்துக்கொள்ள அறிவு ஆற்றல் அற்றகன்று என்பதாம். சேதா என்றது - கன்றைச் சமீபத்தில் ஈன்றுநின்ற பசுவைக் குறித்தது. கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் என்றது உவமை. தந்தைக்குச் சேயைக் காத்தல் கடனாதலினாலும், ஏனைப் பிதாக்களைப்போலாது நீ கருணையுடைய பிதா, கருணைக்கடலாகிய பிதா ஆதலினாலும் என்னைக் காத்தருள்செய் என்பார் 'என்றிரங்குவாய் கருணையெந்தாய்' என்றார். என்று என்றது - எந்தக்காலத்து என்று காலத்தை வினவி நின்றது. 34

**எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி யேழை**
**புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே. [நெஞ்சம்**

(ப-ரை) எண்ணாத-(பிரபஞ்சமாயைக் குட்பட்டுத் தட்டழிந்து தடுமாறி கிட்டுதற்கு அரிய பலவற்றை மனத்தில் தேட்டமுற்று) எண்ணக்கூடாத, எண்ணம்-எண்ணங்கள், எலாம்-எல்லாவற்றையும், எண்ணி-நினைந்து, எண்ணி-நினைந்து, ஏழை - எளியேனுடைய, நெஞ்சம்-மனமானது, புண் - புண், ஆக-ஆக, செய்தது - செய்தது, இனி-இனி, போதும் - போதும், பராபரமே!—, எ-று.

(வி - ரை) அடியேன் பிரபஞ்சமாயையிற் பட்டு எண்ணாதன எண்ணி நெஞ்சு புண்ணானது போதும் என்பது பொருளாக இக்கண்ணியைத் திருவாய்மலர்ந்தருளினார். இனி தேவரீரின் திருவருளைப் பெறும்பொருட்டு கிட்டுதற்கரிய பலவற்றை மனத்தே சிந்தித்து அது கிட்டாமையால் அடியேன் நெஞ்சம் புண்ணானது போதும் என்பது பொருளாகக் கூறினும் பொருந்தும். அறிவு குறைவு நோக்கித் தன்னை 'ஏழை' என்றார். என்னை? கிட்டற்கரியனவற்றை எண்ணுதலின் என்க. எண்ணி வருந்தின் நெஞ்சு புண்ணும் என்பது யாருமறிந்தது 'ஏழை நெஞ்சம் புண்ணாக' என்றார். இதனை, "செஞ்சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணும்" எனவும், "நெடுந்தூரம் எண்ணி நெஞ்சு புண்ணாவது" என்ற **ஆன்றோர்** வாக்குகளாலும் அறியலாம். 35

**ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை**
**பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே.**

(ப-ரை) உன் - இறைவனே தேவரீரது, அடிமை-அடிமையாகிய நான் ஆழி - சமுத்திரத்தினிடையே அகப்பட்ட, துரும்பு - செத்தை, எனவே-ஒப்பாக, அங்கும் - சொர்க்க நரகங்களிலும், இங்கும் - எண்ணரிய பிறவிகள்

எடுத்த இவ்வுலகிற்கும், பாழில்-வீணாக, திரிவது-திரிந்து உழல்வது, என்ன-என்ன, பாவம்-பாவப்பயன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சமுத்திரத்துத் துரும்பு ஓரிடத்து நிலைபெற்றிராமல் கரை சேரும்வரை அலையில் அலைந்துகொண்டே கிடக்கும். இதனை இறப்பதும் சொர்க்க நரகங்களில் உழல்வதும் பூமியிற் பிறப்பதும் போவதும் வருவதுமாக இருக்கும் தனக்கு ஒப்பிட்டுக் கூறிடற்கு 'ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை, பாழிற்றிரிவ தென்னபாவம்' என்றார். அங்கு என்றது-சுவர்க்க நரகங்களாகிய இடங்களை. இங்கு என்றது - இப்பிரபஞ்சத்தை. பாழிற் றிரிவது என்றது-இறத்தல், பிறத்தல்களை. இக்கருத்தை "இங்கிருக்க வென்று லெமனெட்டா னிவ்விடம்விட், டங்கிருக்க வென்று லயனெட்டான்—எங்குவைத்துப், பேணுவே னிவ்வுடலைப் பித்தா பிறை சூடும் தாணுவே சொக்கநா தா" என்ற **தனிப்பாடற்றிரட்டுச்** செய்யுளாலும் அறியலாம். 36

## கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற் குற்றமென்றென் நெஞ்சே கொதிக்கும் பராபரமே.

(ப-ரை) கற்ற - உலக நூற்களைக்கற்ற, அறிவால் - அறிவினாலே, உனை-தேவரீரை, நான்-அடியேன், கண்டவன் - கண்ணுக்கு நேராகக் கண்டவனை, போல்-போல, கூத்தாடில்-நடித்தால், குற்றம் - அவ்வாறு நடிப்பது குற்றமாகும், என்று-என்று, என் - அடியேனின், நெஞ்சே - மனமே, கொதிக்கும்-கொதிக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கல்வி ஞானக்கல்வி, உலகக்கல்வி என இருதிறப்படும். உலகக் கல்வியால் இறைவனைக்காண முத்தி எய்தமுடியாது. இறைவனைக்காண முத்தி எய்த ஞானக்கல்வியே வேண்டும். உலகக் கல்வியைக்கற்று கடவுளைக் கண்டதுபோல் நடிப்பின் அது வஞ்சம் ஆம். இதுகொண்டே, 'கற்றவறிவா ... ... ... என் நெஞ்சே கொதிக்கும்' என்றார். கூத்தாடல் என்றது-நடித்தலை. 'நெஞ்சே இதின் ஈற்று ஏகாரம் தேறிலை ஏகாரம். இதனானன்றே, **சமண** முனிவர்களும், "அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா, துலகநூல் ஓதுவ தெல்லாம்—கலகல, கூஉந்துணை யல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந் துணை யறிவா ரில்" என்றனர். 37

## ஐயோ உனைக்காண்பா னாசைகொண்ட வத்தனையும் பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே.

(ப-ரை) ஐயோ - ஐயோ!, உனை-தேவரீரை, காண்பான்-காண, ஆசை-அடியேன் ஆசை, கொண்டது - கொண்டது, அத்தனையும் - அவ்வளவும், பொய்யோ-பொய்தானோ?, வெளியா-வெளிப்படையாக, புகலாய் - சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'ஐயோ' இது இரக்கக் குறிப்புத்தர வந்து நின்றது. காண்பான்-என்றது ஆச்சரிய திருக்கோலமாகக் காண என்பதாம். இனி ஆனந்த



மோனாதீத ஜோதியாய் மௌனநிட்டையி லிருந்து காண என்பாரும் உண்டு. இதற்குங் குரு கடாட்சம் வேண்டும் என்பதறிக. அடியேன் கொண்ட ஆசையும் வீணாகி, பட்டபாடும் வீணாகிவிடுமோ என்பார் 'ஆசைகொண்டதத்தனையும் பொய்யோ' என்றார். வெளியாப் புகலாய் என்றது - அடியேன் அறியும்படி வெளிப்படையாகப் புகன்றருள்வாய் என்பதாம். இனி இதற்கு ஆகாயவாணியாக நின்று புகலுவாய் எனப் பொருள் கொள்வாரும் உண்டு. (வெளி-ஆகாயம்) புகலாய் என்றது-சொல்லியருள்வாயாக என்ற பொருளது. இது முன்னிலையேவல். 38

## துன்பக்கண் ணீரிற் றுளைந்தேற்குன் னானந்த இன்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே.

(ப-ரை) துன்பம் - (உலக சம்பந்தமான) துன்பங்களால், கண் - கண்களினின்றும் வழிகின்ற, நீரில் - நீரிலே, துளைந்தேற்கு - படிந்த அடியேனுக்கு, உன் - தேவரீருடைய, ஆனந்தம் - நிரதிசயானந்தத்தால் விளையும், இன்பம்-இன்பத்தால் உண்டாகும், கண்-கண்களின், நீர்-ஆனந்தபாஷ்பம், வருவது-சொரிவது, எ-எந்த, நாள்-காலமோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பிரபஞ்சமாயையே துன்பத்திற்குக் காரணமாகலின் 'துன்பக் கண்ணீர்' என்பதற்கு உலக சம்பந்தமான துன்பங்களால் உண்டாகுங் கண்ணீர் என்றும். 'துளைதல்' ஈண்டு முழுகல், படிதல் என்னும் பொருளது. உன் ஆனந்தம் என்றது-சிவானந்தத்தை. இன்பக்கண்ணீர் என்றது-துன்பக் கண்ணீராகிய சோகபாஷ்பத்துக்கு எதிரிடையாகிய ஆனந்த பாஷ்பத்தை. இக்கண்ணால், அடியேனின் பிரபஞ்ச வாதனையற்று சிவாநந்தப் பெருக்கில் முழுகி ஆனந்திப்பது எந்த நாளோ என இறைவனை வினவுகின்றார். 39

## வஞ்சனையும் பொய்யுமுள்ளே வைத்தழுக்கா றாயுளறும் நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே.

(ப-ரை) வஞ்சனையும் - வஞ்சனையையும், பொய்யும் - பொய்யையும், உள்ளே - மனத்துக்குள்ளே, வைத்து - வைத்துக்கொண்டு, அழுக்காறாய்-பொறாமையாக, உளறும் - குழறிப் பேசுகின்ற, நெஞ்சனுக்கும் - மனத்தை உடைய அடியேனுக்கும், நெறிதான் - சன்மார்க்க நெறிதான், உண்டோ-சித்திக்குமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வஞ்சனையும், பொய்யும் மனத்தகத்து உறும் மாசாகும். இவ்விரண்டும் இன்மையே தூய மனத்திற்கு அழகாகும். "புறந்தூய்மை நீரானமையு மகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்" என்றும், "பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற செய்யாமை செய்யாமை நன்று" என்றும் கூறினர் **திருவள்ளுவநாயனாரும்**. பொறாமையின் இழிவை "அழுக்கற்றகன்றாருமில்லையஃ தில்லார் பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்" என்ற திருக்குறளாலும் அறியலாம். வஞ்சனை, பொய், அழுக்காறு ஆகிய இம்மூன்றில் தனித் தனி ஒன்றொன்றிருப்பினுமே முத்திநெறி கூடல் கூடாதாம். இம்மூன்றும்

ஒருமிக்கக் கூடின் எவ்வாறு முத்தி சித்திக்கும் என்பார் 'வஞ்சனையும் பொய்யும் ... ... ... நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான்' என்றார். நெறி என்றது - முத்திநெறியை. 'நெஞ்சனுக்கும்' என்றதன்கண்ணுள்ள ஈற்று உம்மை முற்றும்மை. 40

**பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானாலும்**
**மோசம்போ னேனான் முறையோ பராபரமே.**

(ப-ரை) பாசம் - பிரபஞ்சப்பற்று, போய்-அகன்று, நின்றவர் - ஞானத்துடன் நின்றவர்கள், போல் - போல், நான் - அடியேன், பாராட்டி-நடித்து, ஆனாலும் - ஆனாலும், மோசம் - மோசம், போனேன் - போய்விட்டேன், முறையோ-இது ஒழுங்கு உடையது ஆகுமோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பாசம் என்றது-மாயாகாரியமாகிய பிரபஞ்சப்பற்றை. பாசம் போய் நின்றவர்-என்றது சிவஞானியரை. பாராட்டி என்றதனால்-உண்மையாய்ப் பாசம் அகன்று நில்லாது அகன்றவன்போல் நின்று மோசம் போனேன் என்பார் 'பாராட்டி யானாலு மோசம் போனேன்' என்றார். 'முறையோ' இது ஒழுங்கோ, இது நீதியோ என்னும் பொருளது. இனி இதற்கு முறையீடாகவுங் கூறலும் அமையும். 41

**நன்றறியேன் தீதறியேன் நானென்று நின்றவனார்**
**என்றறியேன் நானேழை யென்னே பராபரமே.**

(ப-ரை) நன்று-நல்லதை, அறியேன் - அறியாதவனாக இருக்கின்றேன், தீது-தீமையை, அறியேன் - அறியாதவனாக இருக்கின்றேன், நான் - நான், என்று-என்று அகங்கரித்துக்கூறி, நின்றவன்-நின்றவன், ஆர்-யாவன், என்று-என்று, அறியேன் - அறியாதவனாக இருக்கின்றேன், (ஆகலால்) நான்-அடியேன், ஏழை - அறிவில்லாதவன், என்னே - இதற்குக் காரணம் என்னே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நன்றறியேன் தீதறியேன் என்றது - பகுத்தறிவில்லாமையை உணர்த்திற்று. 'நான் என்று நின்றவன் யார்' நான் நான் என்று அகங்கார தத்துவத்தோடு கூறிக்கொண்டிருந்தவன் யார் என்பதை அறியாதிருக்கின்றேன். நான் என்று நின்றவன் யார் என்று அறியாதிருக்கின்றேன் என்றதனால் ஆத்மஞானமில்லாமையும், சிவஞானமில்லாமையும் உணர்த்தப் பெற்றது. பகுத்தறிவும், ஆன்ம அறிவும், ஞானமும் என்னும் இவைகளில் எதுவும் இல்லாமையால் 'ஏழை' என்றார். இவ்வாறு அடியேன் நிற்றற்குக் காரணம் யாதோ என்பார், 'என்னே' என்றார். 'ஆர்' இது 'யார்' என்பதன் போலி. 42

**இன்று புதிதன்றே எளியேன் படுந்துயரம்**
**ஒன்றுமறி யாயோ உரையாய் பராபரமே.**

(ப-ரை) எளியேன் - எளியேனாகிய அடியேன், படும் - அனுபவிக்கும், துயரம்-துன்பம், இன்று-இந்த ஜன்மத்திலேவந்த, புதிது-புதியது, அன்றே-



அல்லவே, ஒன்றும்-ஒன்றையும், அறியாயோ-தேவரீர் அறிந்திலீரோ?, உரையாய்-சொல்லி அருள்வீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இன்று என்றது - இந்த ஜன்மத்தைக் குறித்தது. 'புதிது அன்றே' என்றவதனால் எளியேன் படுந் துயரங்கள் பல ஜன்மங்களிற்செய்த கர்மப்பலனால் வந்தது என்பதாம். இதனை இந்த ஜன்மத்தில் மாத்திரமன்று பல ஜன்மங்களிலும் துய்த்து வருகின்றேன் என்பார் 'இன்று புதிதன்றே எளியேன் படுந்துயரம்' என்றார். 43

**எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைநான் பட்டதுயர்**
**அத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே.**

(ப-ரை) நான்-அடியேன், எத்தனைதான்-எத்தனை கோடிதான், சன்மம்-பற்பல உலகிற் பற்பல ஜன்மங்கள், எடுத்து-எடுத்து, பட்டதுயர்-அந்த அந்த ஜன்மங்களில் அடியேன் பட்டவேதனை, எத்தனை - எவ்வளவு, அத்தனையும்-அவைகள் எல்லாவற்றையும், நீ-தேவரீர், அறிந்தது - தெரிந்து கொண்டது, அன்றோ-அல்லவோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஜன்மம் அநந்தமாதலின் 'எத்தனைதான் ஜன்மமெடுத்து' என்றார். உடலெடுத்த உயிர் துன்பப்பட்டே தீரவேண்டும் ஆதலின் 'எத்தனை நான் பட்டதுயர்' என்றார். இறைவன் முற்றறிவுடையோன் ஆதலின் 'அத்தனையுநீ அறிந்தது அன்றோ' என்றார். ஜன்மம் என்றது-பிறப்பை. 44

**இந்தநாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரும்**
**அந்தநாட் காக்கவல்லா ரார்காண் பராபரமே.**

(ப-ரை) இந்த - இந்த, நாள்-நாளில், சற்றும்-கொஞ்சமும், இரங்கிலையேல்-இரக்கம் செய்யவில்லையானால், காலன்-எமன், வரும்-வருகின்ற, அந்த-அந்த, நாள்-காலத்தில், காக்க-அடியேனைக் காத்தருள, வல்லார்-வல்லவர்கள், ஆர்-யார், காண்-கண்டருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காலகாலனாகிய நீ சிறிது இப்பொழுது அருள்செய்யின் பின் யமபயமில்லை. இப்பொழுது நீ சிறிதும் அருள் செய்யாதிருப்பின் காலன் வருவதிற் சந்தேகமில்லை. அக்காலத்து உன்னைத் தவிர்த்து உதவுவாரும் இல்லை என்பதாம். 45

**உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ**
**சற்றிரங்கி யாளத் தகாதோ பராபரமே.**

(ப-ரை) உற்று உற்று-அடிக்கடி தேவரீரை உற்று உற்று, நாடி-பார்த்து, உளம்-மனம், மருண்ட - மயக்கத்தைக்கொண்ட, பாவியை-பாவியாகிய அடியேனை, நீ - தேவரீர், சற்று - சிறிது, இரங்கி-இரக்கம் செய்து, ஆள-ஆண்டு கொண்டருள, தகாதோ-தகாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உற்று உற்றநோக்கியும் தேவரீர் காணக் கிடைக்காமையால் உளம் மருண்டேன் என்பார் 'உற்றுற்றுநாடி யுளமருண்டபாவியை' என்றார்.

இறைவன் தரிசனம் கிடைக்கப் பெறுமையால் 'பாவி' என்றார். 'தகாதோ' இதன் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. 46

எள்ளளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே.

(ப-ரை) எள்ளளவும்-எள்ளளவாகிலும், நின்னை-தேவரீரை, விட - விட, இல்லா-வேறுதுணை இல்லாத, எனை - அடியேனை, மயக்கில் - மீட்டும் பிறவி மயக்கமாகிய பெரும் பள்ளத்தில், தள்ளுதலால் - தள்ளுவதனால், என்ன - என்ன, பலன்-பிரயோசனம், சாற்றாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எள்ளளவும் - இது சிற்றளவைக் குறிக்கவந்தது. எள் - சிறு அளவுகாட்ட வந்தசொல். மயக்கு என்றது பிரபஞ்ச மயக்கத்தை. கருணைக் கடலாகிய தேவரீர் அடியேனை பிறவிமயக்கமாகிய படுகுழியில் தள்ளுதலால் தேவரீருக்கும் அடியேனுக்கும் ஒருபயனும் இல்லை என்பார் 'என்னபலன் சாற்றாய்' என்றார். 47

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி யெனையடிமை சேர்த்தாய் பராபரமே.

(ப-ரை) பாடி - தேவரீரின் திருவருளைத் தேடிக்கொள்ளாது உலகின் கண்ணே தேவரீரைப் பாடியும், படித்து-பலநூல்களைப் படித்தும், பாராட்டி-தேவரீரைப்புகழ்ந்து துதித்து, நிற்பதற்கோ - நிற்பதற்காகவோ, எனை - அடியேனை, அடிமை-அடிமையாக, சேர்த்தாய்-தேடிச் சேர்த்தாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) படித்து என்றது-இறைவன் துதியாகவுள்ள நூற்களைப் படித்தலை உணர்த்தி நின்றது. பாராட்டி என்றது-துதிப்பாடல்களைப் பாடுதலை. இறைவன் மௌனானந்த குருவாகவந்து அருள் புரிந்தமையால் 'அடிமை சேர்த்தாய்' என்றார். 48

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லறவென் சொல்லிறுதிக்
கென்னத்தைச் சொல்வேன் எளியேன் பராபரமே.

(ப-ரை) சொன்னத்தை - முன்னேயிருந்த பெரியோர்கள் சொல்லியவற்றை, சொல்வது - சொல்லிக்கொண்டிருப்பது, அல்லால் - அல்லாமல், சொல்லற-சொல்லுதல் அற்றுநீங்க, சொல் - அடியேனின் சொல்லின், இறுதிக்கு-முடிவுக்கு, என்னத்தை - எதை, சொல்வேன் - சொல்லுவேன், எளியேன்-ஏழையேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சொல்லற என்றது - மௌனமுற்றிருக்க என்ற பொருளது. சொல்லிறுதி என்றது-மௌனானந்த நிட்டையை. மௌனநிட்டை தேடிக் கொள்ளும் ஆற்றல் இன்மையால் 'எளியேன்' என்றார். 49

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே.



(ப-ரை) சொல்லும் - சொல்லினாலேயும், பொருளும் - அச்சொல்லின் பொருளினாலேயும், அற்று-விவகரிப்பதைவிட்டு, சும்மா-மௌனமாக, இருப்பதற்கே - வாழ்ந்து இருப்பதற்கே, அல்லும் - இரவும், பகலும் - பகலிலும், எனக்கு-அடியேனுக்கு, ஆசை-விருப்பம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பொருள் என்றது-சொற்குறித்த பொருளை. சும்மா இருப்பது என்றது-மௌனானந்த நிட்டை நிலையை. 'அல்லும் பகலும்' என்றதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். 50

நேச நிருவிகற்ப நிட்டையல்லால் உன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே.

(ப-ரை) உன்-தேவரீரின், அடிமைக்கு-அடிமையாகிய எனக்கு, நிருவிகற்பம்-(பிரபஞ்சத்தை மறந்திருக்கும்) நிருவிகற்ப, நிட்டை-நிட்டைச்சமாதியில், நேசம் விருப்பம், அல்லால்-அல்லாமல், ஆசை - பிறிதொன்றின்மேல் ஆசை, உண்டோ-இருக்கின்றதோ?, நீ-தேவரீர், அறியாதது-அறியாதது, அன்றே-அல்லவே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நிருவிகற்ப நிட்டை என்றது - இறைவனை அந்தர்முகத்தே கண்டு சிவானந்தத்தே முழுகித் தன்னையுமறந்து நிற்குநிலை. இறைவன் எப்பொருளிலும் எல்லாவிடத்தும் உள்ளும் புறமும் கலந்துங் கலவா துறைகின்றானாதலினாலும், முற்றுணர்வு உடையோன் ஆதலினாலும் 'நீயறியா தன்றே' என்றார். 'நீயறியாதது அன்றே' என்பது நீயறியா ததன்றே' எனப் புணரல்வேண்டும். 51

துச்சனென வேண்டாம்இத் தொல்லுலகி லல்லல்கண்
அச்ச மிகவுடையேன் ஐயா பராபரமே. [டால்

(ப-ரை) ஐயா - அப்பனே!, துச்சன் - அடியேனை அற்பன், என-என்று நினைத்தல், வேண்டாம்-வேண்டாம், இ-இந்த, தொல்-பழமையாகிய, உலகில்-உலகத்தில் உள்ள, அல்லல் - துன்பங்களை, கண்டால் - பார்த்தால், அச்சம்-பயம், மிக - அதிகமாக, உடையேன் - உடையவனாக இருக்கின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாயாகாரிய உலகம் தொன்றுதொட்டு வருவதாதலின் 'தொல் உலகம்' என்றார். அல்லல் - பிறவித் துன்பங்களை. தந்தை தன் மக்களுள் சிறியன் பெரியன், நல்லவன், கெட்டவன் என்பது நோக்காது எல்லாப் பிள்ளைகளுக்கும் அருள்செய்யக் கடன்மைப்பட்டிருப்பதுபோல தேவரீர் அற்பனாகிய என்னையும் ஒதுக்கித் தள்ளிவிடாது அருள்செய் என்பார், 'ஐயா' என்றார். 52

கண்ணாவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணாவார் நட்பை மதியேன் பராபரமே.

(ப-ரை) கண்-அடியேனின் கண்ணுக்கு சமானம், ஆவாரேனும் - ஆனவர்களாக இருந்தாலும், உனை-தேவரீரை, கை:கைகளை, குவியார் - குவித்து

வணங்காதவர்கள், ஆயின்-ஆனால், அந்த-அந்த, மண்-மண், ஆவார் - ஆகின்ற வர்கள், நட்பை-சிநேகத்தை, மதியேன்-ஒரு பொருளாக மதிக்கமாட்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண்ணானது சிறந்த உறுப்பு ஆதலினாலும் இன்பம் பயப்ப தாதலினாலும் அன்பும் அருமையும் உடையவர்களை 'கண் ஆவார்' என்றார். இறைவனை வணங்காதவர் உய்தல் இல்லை ஆதலினால் 'மண்ணாவார்' என்றார். 53

**கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க**
**எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே.**

(ப-ரை) கொல்லா-(எந்த உயிரையும் எந்தக் காரணத்தாலும்) கொல்லா திருப்பதாகிய, விரதம்-விரதம், குவலயம்-இந்த உலகம், எல்லாம் - எல்லாம், ஓங்க-பெருகிப்பரவ, எல்லார்க்கும் - எல்லா ஆன்மகோடிகளுக்கும், சொல்லு வது - எடுத்துச் சொல்லவேண்டும் என்னும் அதுவே, என் - அடியேனின், இச்சை-விருப்பம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கொல்லாதிருப்பதே சிறந்த விரதம். கருணையுடைமைக்கு அழகாகும் உயிர்களைக்கொன்று அதன் ஊனைப் புசிப்பார் அருள் இல்லா தவரே. இருள் உலகஞ் சேரற்கு உரியவரே. இதனை, "தன்னூன் பெருக் கற்குத் தான்பிறி தூனுண்பர், னெங்ஙன மாளு மருள்" என்றார். 'எல்லார்க் கும்' என்றதன் ஈற்று உம்மை முற்றும்மை. சிறியர், பெரியர், நண்பர், பகை வர், ஆண் பெண் முதலிய எல்லோர்க்கும் என்பதாம். 54

**எத்தாற் பிழைப்பேனோ எந்தையே நின்னருட்கே**
**பித்தானேன் மெத்தவுநான் பேதை பராபரமே.**

(ப-ரை) எந்தையே - அடியேனின் தந்தையே!, எத்தால் - எந்தவகை யாகிய உபாயத்தால், பிழைப்பேனோ - அடியேன் உய்வேனோ? அறியேன், நின்-தேவரீரது, அருட்கே-திருவருட்கேபெற, பித்து-பித்து, ஆனேன் - ஆயி னேன், மெத்தவும் - மிகவும், நான் - அடியேன், பேதை-அறிவில்லாதவனாக இருக்கின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பிள்ளைக்கு நெறிகாட்டுபவன் தந்தை "தந்தை மகற்காற்று நன்றி அவையத்து முந்தி யிருப்பச் செயல்" என்ற திருக்குறளால் அறிய லாம். ஆதலின் 'எந்தையே!' என விளித்தார். 'பிழைப்பேனோ' இதின் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. நின் அருட்கே என்றது - இறைவ னின் திருவருளை. 55

**வாயினாற் பேசா மௌனத்தை வைத்திருந்துந்**
**தாயிலார் போனான் றளர்ந்தேன் பராபரமே.**

(ப-ரை) வாயினால் - வாயினாலே, பேசா - பேசக்கூடாததாகிய, மௌன த்தை-ஒரு மவுனநிலையை, வைத்திருந்தும்-அடியேன்கொண்டிருந்தும் (தேவ ரீரின் திருக்கருணை அடியேனிடத்து இல்லாமையால்), தாய் - தாய், இலார்-



இல்லாத பிள்ளைகள், போல்-போல, நான்-அடியேன், தளர்ந்தேன்-தளர்ச்சி அடைந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நாவடங்கவே மனஞ் செயல் அடங்கும் ஆதலின் 'வாயினாற பேசா மௌனத்தை' என்றார். மனோ மௌனத்தையும் செயல் மவுனத்தை யும் குறிக்கும் ஆதலின் திரிகரணம் மௌனம் எனக் கொளின் இழுக்காது. இனி வாயினால் பேசிக் காட்டமுடியாத சிறப்பினையுடைய மௌனத்தை எனப் பொருள் கூறினாரும் உண்டு. தாய்பிரிந்த பிள்ளைக்குத் தவிப்பு அதிகம் ஆதலினால் 'தாயிலார் போன் நான் தளர்ந்தேன்' என்றார். 56

**அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன் கண்ணார**
**என்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே.**

(ப-ரை) அன்னை - தாய், இலா - இல்லாத, சேய் - பிள்ளையை, போல்-போல, அலக்கண்-துயரத்தை, உற்றேன - அடைந்தேன், கண்-கண், ஆர - பொருந்த, என்-அடியேன், அகத்தில்-மனத்தில், தாய்-தாயை, போல்-போல, இருக்கும்-எழுந்தருளி இருக்கின்ற, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தாயில்லாப் பிள்ளைக்கு உணவின்றிக் கஷ்டம் ஏற்படும். உண வில்லாதகாலத்து உயிர்ப்பலம், உடற்பலம் ஒடுங்கும். பலம் ஒடுங்கத் துன்ப மும் நோயும் பெருகும், இன்பம் இல்லையாகும். இதுகொண்டே 'அன்னை யிலாச் சேய்போ லலக்கணுற்றேன்' என்றார். எல்லா உயிர்க்கும் தாயும் தந்தையுமாகிய நீ என் மனத்தகத்துத் தாய்போல் இருக்கின்ற இறைவனே நீ அடியேனின் அலக்கண்களைக் கண்ணுற்று அவைகளை நீக்கி ஆதரவு அளித்து அருளாயோ என்பார், 'கண்ணார என்அகத்தில் தாய்போல் இருக் கும் பராபரமே அன்னையிலாச் சேய்போ லலக்கணுற்றேன்' என்றார். 57

**உற்றுநினைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தீயாய்ப்**
**பற்றநொந்தேன் என்னைமுகம் பார்நீ பராபரமே.**

(ப-ரை) உற்று-(அடியேனின் நிலைமையை) ஆராய்ந்து, நினைக்கில்-எண் ணிப்பார்த்தால், துயரம்-துயரமானது, உள் - மனத்தின், உள்ளே - உள்ளே, செம்-செவந்த, தீ-நெருப்பு ஆய் - அக, பற்ற-பற்றி எரிதலால், நொந்தேன்-நொந்துபோனேன், நீ - தேவரீர், என்னை - அடியேனை, முகம்-முகம், பார்-பார்த்து அருள்வீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளுள்ளே என்றதில் முதல் 'உள்' இடவாகுபெயராய் மனத்தையும் இரண்டாவது உள் உள்ளிடத்தையுங் குறித்து நின்றது. 'செந் தீயாய்'-உவமத்தொகை. என்னை முகம்பார்த்தால் என் அகவேதனை தேவரீ ருக்குப் புலனாகும். புலனாகவே கருணைக்கடலாகிய தேவரீர் பரிந்துவந்து அருள்புரிவீர் என்பார், 'என்னை முகம்பார் நீ' என்றார். 58

**பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார் சொற்கேட்**
**கைவிடவும் வேண்டாம்என் கண்ணே பராபரமே. [டுக்**

(ப-ரை) என் - அடியேனின், கண்ணே - கண்போன்றவனே!, இவன்-இவன், பொய்யன்-பொய்க்காரன், என்று-என்று (யாராகிலும் தேவரீரிடம் வந்து), மெள்ள - மெதுவாக, போதிப்பார் - போதிப்பவர்களுடைய, சொல்-கோட் சொல்லை, கேட்டு - செவியுற்று, கைவிடவும் - தேவரீர் அடியேனைக் கைவிட்டுவிடவும், வேண்டாம்-வேண்டாம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்கட்கு அறிவாய் இருந்து அறிவிப்பவனும், கண்ணாய் இருந்து காட்டுபவனும் ஆதலின், இறைவனைக் 'கண்ணே' என்றார். போதிப்பார் என்றது - கோட் சொல்விகளை. இறைவன்பால் வந்து கோட் சொல்லுவோர் விரைந்து கூறினர். காலம் அறிந்து இடன் அறிந்து சொன் முறை அறிந்து பையப் பையக் கூறுவர் ஆதலின் 'மெள்ளப் போதிப்பார்' என்றார். 59

**எண்ண மறிந்தே இளைப்பறிந்தே ஏழையுய்யும்**
**வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே.**

(ப-ரை) எண்ணம்-அடியேனின் கருத்தை, அறிந்தே-அறிந்துகொண்டு பின், இளைப்பு - அடியேன் உளமெலிவையும், அறிந்தே - அறிந்துகொண்டு, ஏழை - எளியேன், உய்யும் - உஜ்ஜீவிக்கும், வண்ணம்-விதம், திருக்கருணை-தேவரீரின் திருக்கருணையை, வையாய் - அடியேன்பால் வைத்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் திருவருள் பெறவேண்டும் என்னும் எண்ணத்தைத் தவிர்த்து வேறு எண்ணமில்லை யாதலின் 'எண்ண மறிந்தே' என்றார். இறைவன் திருவருள் எய்தப்பெறுமையினால் உளம் வாடியிருக்கின்ற தாதலின் 'இளைப்பறிந்தே' என்றார். 60

**நாட்டாதே என்னையொன்றி னாட்டி யிதமகிதங்**
**காட்டாதே எல்லா நீ கண்டாய பராபரமே.**

(ப-ரை) என்னை - அடியேனை, ஒன்றில் - ஒருபொருளில், நாட்டாதே-நாட்டாதிருந்தருள்வாயாக, நாட்டி - (அடியேனை ஒருபொருளிலே) நாட்டி, இதம்-அதன்கண் உள்ள நன்மையையாகிலும், அகிதம் - தீமையையாகிலும், காட்டாதே - அடியேனுக்குக்காட்டி வைத்திடாதே, எல்லாம் - எல்லாவற்றிற்குங் காரணப்பொருள், நீயே-தேவரீரே, பராபரமே!— எ-று.

(வி-ரை) நாட்டாதே ஒன்றில் என்றது - மாயாகாரியப்பொருள்களில் கட்டுப்பட்டிருக்க வைத்தலை. இதமும் அகிதமும் கர்மங்களுக்குத் தக்கபடி இறைவன் புசிப்பிப்பன் ஆதலின் கர்மக்கட்டுக்குள் ஆக்கிவிடவேண்டாம் என்பார் 'நாட்டி யிதமகிதங் காட்டாதே' என்றார். 'கண்டாய்' அசைப் பொருளின்றி நின்றது. 61

**உன்னை நினைந் துன்னிறைவி னுள்ளே யுலாவுமென்னை**
**அன்னைவயிற் றின்னமடைக் காதே பராபரமே.**



(ப-ரை) உன்னை - தேவரீரையே, நினைந்து - எண்ணிக்கொண்டு, உன்-தேவரீரின், நிறைவின் - திருவருள் வியாபகத்தின், உள்ளே - உள்ளேயே, உலாவும்-சஞ்சரிக்கின்ற, என்னை-அடியேனை, அன்னை-ஒருதாயின், வயிற்றில், இன்னமும் - இனிமேலும், அடைக்காதே - அடைக்கவேண்டாம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'உன்னிறைவினுள்' என்றது (உன்+நிறைவு+இன்+உள்) இறைவனின் திருவருள் வியாபகத்தை. "நாதா இருப்பையிலே வாழ்சிவனே யின்னமோரன்னை, கருப்பையிலே வாராமற் கா" என்றதுங் காண்க. 62

**பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாறா**
**வரமெனக்குத் தந்தருள்என் வாழ்வே பராபரமே.**

(ப-ரை) என்-அடியேனின், வாழ்வே - வாழ்விற்குக் காரணனாக உள்ளவனே!, பரம் - அடியேனைக்காத்தருளுதல், உனக்கு - தேவரீருக்கே, என்று-என்று, எண்ணும்-நினைக்கும், பழக்கமே - பழக்கத்தையே, மாறா - அழியாத, வரம் - வரமாக, எனக்கு - அடியேனுக்கு, தந்தருள் - தந்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் நித்தியானந்த வாழ்வைத்தருபவன் ஆதலின் 'என் வாழ்வே' என்றார். பரம் என்றது - அடியேனைக் காத்தருளுவது தேவரீர் பாரம் ஆகும் என்ற பொருளாம். இறைவன் முதல்வன், அவனே அனைத்தையுங் காத்தருளுபவன் என்ற ஞானம் மனத்திருக்குமட்டும் இறைவன் பத்தி பெருகுமாதலின் 'எண்ணும் பழக்கமே மாறாவரம் எனக்குத் தந்தருள்' என்றார். 63

**வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்**
**சிந்திக்க நின்னருள் செய்யாய் பராபரமே.**

(ப-ரை) நின்னை-தேவரீரை, வந்தித்து-வணங்கி, மறவா-மறவாமையை, கடனாக - கடன்மையாகக்கொண்டு, சிந்திக்க - தேவரீரையே சிந்தித்திருக்க, நின்னது-தேவரீரது, அருள்-திருவருளை, செய்யாய்-செய்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காத்து அருள்புரிகின்ற இறைவனை வணங்கலும், அவன் செய்யும் நன்றிகளை எண்ணி எண்ணிச் சிந்தித்திருத்தலும் கடன்மையும் இன்பம் பயக்குங் காரியங்களும் ஆதலினால் 'வந்தித்து நின்னை' எனவும், 'மறவாக்கடனாகச் சிந்திக்க' எனவுங் கூறினர். 64

**எவ்வுயிரு மென் னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்**
**றெய்வ வருட் கருணை செய்யாய் பராபரமே.**

(ப-ரை) எவ்-எத்தகைய சிறிய, உயிரும்-உயிரும், என்-அடியேனுடைய அருமையான, உயிர்-உயிரை, போல்-போல, எண்ணி-நினைத்து, இரங்கவும்-இரங்கிடுதற்கும், நின்-தேவரீரது, தெய்வ-தெய்வத்தன்மை வாய்ந்த, அருள்-

திருவருளாகிய, கருணை - கருணையை, செய்யாய் - செய்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஒவ்வொருவருக்கும் அவரவர் உயிர் அருமையுடையது ஆதலின் 'என் உயிர்போல்' என்றார். இரங்கவும் என்றது - அவ்வுயிர்கள் துன்புறுங்கால் இரக்கங்கொண்டு அதற்கு உதவிபுரியவும் என்பது பொருளாம். அருள் கருணை என்றது-அருளாகிய கருணை என விரிதலின் பண்புத்தொகை. 65

**வெட்டவெளிப் பேதையன்யான் வேறுகப டொன்றறி**
**சிட்டருடன்சேர் அனந்தந் தெண்டம்பராபரமே. [யேன்**

(ப-ரை) யான்-அடியேன், வெட்டவெளி-வெளிப்படையான (மனத்தையுடைய), பேதையன் - அறிவில்லாதவன், வேறு - வேறு, கபடு-கபடத்தை, அறியேன்-தெரியேன், (ஆகையால் அடியேன் உய்ய) சிட்டருடன் - தேவரீரது அடியாருடன், சேர்-சேர்த்து அருள்புரிக, அனந்தம்-(இது செய்தற்காக) தேவரீருக்கு அநேகம், தெண்டம் - தெண்டம் செய்கிறேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வேறு என்றது-சுட்டியதற்கு இனத்தை உணர்த்திற்று. பேதைமைத் தன்மைக்குப் புறம்பாகிய வேறுகபடம் என்பது பொருளாம். 'சிட்டர்' இது 'சிரேஷ்டர்' என்பதன் திரிபு என்பர். இது வடமொழித்திரிபு. 'தெண்டம்' இது திசைச்சொல். 'அநந்தம்' இது ந+அந்தம் = அநந்தம் என்றாயிற்று. முடிவற்றது, எல்லையற்றது, எண்ணற்றது என்பது பொருளாம்.

**இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்**
**வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே.**

(ப-ரை) இரவு-இரவும், பகல்-பகலும், அற்ற-இல்லாத, இடத்து-துரியாதீத இடத்திலே, ஏகாந்தம்-ஏகாந்தமாகிய, யோகம்-சிவராஜயோகம், வரவும்-அடியேனுக்கு உண்டாகவும், திரு-திரு, கருணை - கருணையை, வையாய்-அடியேன்மீது வைத்து அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இரவு பகல் அற்ற இடம் என்றது-துரியாதீதத்தை. ஏகாந்தம்-தனி. யோகம்-கூட்டம் தத்துவங்களை எல்லாம் ஒழித்து எழுந்த ஜீவான்மா பரமான்மாவோடு கூடியிருக்கும் நிலை. இந்த ஏகாந்த இராஜயோகத்தில் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் அபேதமாக நிற்கும் நிலையில் சிவானந்தபோகம் விளையும். அந்தச் சிவாநந்தபோகத்தில் ஜீவான்மா அழுந்தி இன்புற்றிருக்கும். சிவாநந்த இராஜயோகநிட்டை வேண்டுமென்பார் 'இரவுபகலற்ற ... ... ... வரவுந் திருக்கருணை வையாய்' என்றார். இறைவன் திருக்கருணை இன்றி இது கூடாதாதலின் 'திருக்கருணை வை' என்றார். 67

**மால்காட்டிச் சிந்தை மயங்காம லின்றுசுகக்**
**கால்கட்டி வாங்காதே கண்டாய் பராபரமே.**

(ப-ரை) மால்-அடியேனுக்கு ஆசையை, காட்டி - காண்பித்து, சிந்தை-அந்த நிலையில் இருந்து அடியேன் சிந்தை, மயங்காமல் - மயங்காத வண்ணம்,



நின்று-நிலைத்து, சுகம்-சுகத்தின், கால்-ஆரம்பத்தை, காட்டி - செய்து, வாங்காதே-பின்வாங்காது இருந்தருளல் வேண்டும், பராபரமே!—, எ-று.

(வி - ரை) சிந்தைமயங்காமல் என்றது - அடியேன் மனம் அவ்வாசை நிலையிலிருந்தும் மாறுபடாதபடி என்றதாம். சுகக்கால் என்றது - சுவானந்தப் பேரின்ப ஆரம்பத்தை. வாங்காதே என்றது தேவரீர் அடியேனின் சிவாநந்த யோகநிட்டையில் கூடியிருக்கும் கூட்டத்திற் பிரிந்துபோகாதபடி என்பதாம். 'கண்டாய்' அசை பொருளின்றி நின்றது. 68

**எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றோன்றாத**
**வைப்பையழி யா நிலையா வையாய் பராபரமே.**

(ப-ரை) நீ-தேவரீர், எ-எந்த, பொருளும்-பொருளும், எனவே-என்றே, எண்ணி - நினைத்து, நான்-நான் என்னும் அகங்காரதத்துவம், தோன்றாத-உதியாத, வைப்பை - இடத்தை, அழியா - அடியேனுக்கு அழியாத, நிலை-நிலையது, ஆ-ஆக, வையாய்-வைத்தருளுவாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாவற்றுள் என்னுக்குள் எண்ணெய்போற் கலந்திருப்பதனால், அவனலா தொன்றில்லை ஆதலினாலும் 'எப்பொருளு நீஎனவே' என்றார். 'வைப்பு' சேமநிதி வைப்பை, வையாய் என ஒரு அடியில் வந்தமையின் முரண்டொடை. வைப்பை-வைப்பாய், வையாய் - வைக்க மாட்டாய் என முரண்பொருள் பொருள் விளைந்து நின்றமை காண்க. 69

**சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்**
**றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே.**

(ப-ரை) சும்மா-மௌனமாக, இருப்பதுவே-இருத்தலே, சுட்டு-சுட்டுதல், அற்ற-இல்லாத, பூரணம் - பரிபூரணநிலை, என்று-என்று, எம்மால்-எங்களால், அறிதற்கு - அறிந்துகொள்ளற்கு, எளிதோ - இலேசானதாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சும்மா இருப்பது என்றது - மனவாக்குக் காயங்களால் செயலொழிந்து நிற்றலை. அதாவது மௌன நிட்டையை. சுட்டு அற்ற என்றது-சுட்டிக்காட்ட முடியாத என்ற பொருளதாம். எம்மால் என்றது - மாயையிற் சிக்கி உலகில் ஈடுபட்டு நிற்கும் ஜீவான்மாக்களை. 70

**முன்னொடுபின் பக்க முடியடி நாப் பண்ணற நின்**
**றன்னொடுநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே.**

(ப-ரை) நின் - தேவரீரின், தன்னொடு - தன்னொடு, முன் - முன், ஒடு-உடனே, பின் - பின்னும், பக்கம் - இருபக்கங்களும், முடி - முடியும், அடி-அடியும், நாப்பண்-மத்தியும், அற-இன்றி ஒழிய, நான் - அடியேன், நிற்பது-கலந்து நின்றிருப்பது, என்றோ-எந்நாளோ, சாற்றாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) முன்னொடு பின் என்பன ஆதி இடபேதங்கள் இன்றி பரிபூரண மயத்தோடு கலந்து நிற்பான்வேண்டி 'முன்னொடு ... ... ... நின்றன் னொடோ னிற்பதென்றோ' என்றார். 71

மைவ்வண்ணந் தீர்ந்த மௌனிசொன்ன தெவ்வண்ண
மவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே.

(ப-ரை) மை - இருள், வண்ணம் - மயமாகிய அஞ்ஞானத்தை, தீர்ந்த-அகற்றிய, மௌனி-மௌனதேசிகன், சொன்னது-அடியேனுக்கு உபதேசித்தருளியது, எ-எந்த, வண்ணம்-விதம், அ-அந்த, வண்ணம் - விதம், நிட்டை-சிவானந்த மௌனநிட்டையை, அருளாய் - அடைய அருள்புரிவாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இருளை அஞ்ஞானமாகக் கூறுவது புலவர் மரபு. இன்னும் அஞ்ஞானம் பொருளை உணராதபடிச் செய்கின்றது ஆதலின் இருள் என்னலும் ஆம். இதுகொண்டே 'மைவண்ணந் தீர்ந்த' என்றார். மௌனி என்றது - ஆசாரிய வடிவமாக வந்துபதேசித்தருளிய மௌனகுருவை. 72

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

(ப-ரை) வித்து-விதையை, அன்றி - ஆதாரமாகக்கொண்டு அல்லாமல், யாதும்-விருட்சமுதலிய எதுவும், விளைவது-விளைவது, உண்டோ-உண்டோ, (இல்லையாகும் அதுபோல) நின் - தேவரீரின், அருளாம் - திருவருளாகிய, சித்து - ஞானம், இன்றி - இல்லாமல், யாங்கள் - ஆன்மகோடிகளாகிய எங்களுக்கு, உண்டோ-செயல் உண்டோ, செப்பாய் - சொல்லியருள்வாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வித்தின்றி நாளில்லை என்றபடி விதை இன்றி மாஞ் செடி கொடி புல் பூடாதி இல்லை இது உபமானம். நின்னருளாஞ் சித்தன்றி யாங்களுண்டோ என்றது-உபமேயம். 73

ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே.

(ப-ரை) ஆங்காரம்-அகங்காரம், அற்று-ஒழிந்து, உன்-தேவரீரின், அறிவான-விஷய ஞானரூபமான, அன்பருக்கே-அடியார்களுக்கே, தூங்காத-(பிரபஞ்ச வியாபாரத்துடன்) உறங்காத, தூக்கம் - (அருள் வியாபகத்துடன்) தூங்கும், அது-அது, தூக்கும்-ஓங்கிநிற்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆங்காரம் என்றது-நான் என்ற அகங்கார தத்துவத்தை. உன் அறிவான அன்பர் என்றது-தேவரீரது அறிவுமயமாகிய அடியார் என்பதாம். தூங்காத தூக்கம் என்றது-உறங்காத உறக்கத்தை. தூங்கும் என்றது-ஓங்கி நிற்கும் என்பதாம். 'தூங்காத தூக்கம்' என்பதனை 'தூங்காமற் றூங்கி' என்பதனால் அறியலாம். தூங்காத தூக்கம் என்பது-அறிதுயிலாம். 74



சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே இன்பநிலை வாய்க்கும் பராபரமே.

(ப-ரை) சிந்தை - மனமானது, அவிழ்ந்து - நெகிழ்ந்து, அவிழ்ந்து-நெகிழ்ந்து, சின்மயம் - ஞானமயம், ஆம்-ஆகிய, நின்-தேவரீரின், அடிக்கே-திருவடிகளுக்கே, வந்தவர்க்கே-வந்து அடைந்தவர்களுக்கே, இன்பம் - சிவானந்தம், நிலை-நிலையானது, வாய்க்கும்-எய்தும், பராபரமே!—, எ-று,

(வி-ரை) அவிழ்ந்து அவிழ்ந்து என்றது - மனம் மிக உருகுதலைக் குறித்தது. 'சின்மயம்' இது சித்+மயம் என்னும் இருசொல் ஒருசந்தி; 'சின்மயம்' என நின்றது. அறிவுமயம், ஞானமயம் என்பது பொருளாம். 75

சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து நீயாகி
னல்லா லெனக்குமுத்தி யாமோ பராபரமே.

(ப-ரை) சொல்-வார்த்தை, ஆடா-பேசாத, ஊமரை-ஊமைகளை, போல்-போல, சொல் - பேச்சு, இறந்து - ஒழிந்து, நீ - தேவரீர், ஆகில் - (சோகம் பாவனையால்) ஆனால், அல்லால்-அல்லாமல், எனக்கு-அடியேனுக்கு, முத்தி-சிவானந்தப் பேரின்பமுத்தி, ஆமோ-உண்டாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சொல்லாடா ஊமர் என்றது - வாய்பேசாத ஊமைகள் என்பதாம். இது உவமை. சொல் இறந்து என்றது - மௌனம் பெற்று என்பது பொருளாம். முத்தி என்றது - வேதனைகள் அற்றுச் சிவானந்தப் பேரின்பத்து அழுந்தி இருத்தலை. 'ஆமோ' இது விடைதழுவிய வினா. ஆகாது என்பது தழுவிநின்றது காண்க. 76

பேச்சாகா மோனம் பிறவா முளைத்தென்றற்
காச்சாச்சு மேற்பயனுண் டாமோ பராபரமே.

(ப-ரை) பேச்சு - பேசுதல், ஆகா-அற்ற, மோனம் - மோனநிலையானது, பிறவா பிறந்து, முளைத்து - விளைந்தது, என்றற்கு - என்றுகூறற்கு, ஆச்சு-ஆயிற்று, ஆச்சு - ஆயிற்று, (ஆதலின்) மேல் - இனிமேல், பயன்-அதனாற்பிரயோசனம், உண்டாமோ-உண்டாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மோனம் என்றது - மவுனநிலையை. 'பிறவா' இது 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பிறந்து என்பது பொருள். பயன் என்றது - சிவானந்தப்பேரின்ப முத்தியை. 'உண்டாமோ' இதில் ஓகாரம் ஐயவினாப் பொருளில் வந்தது. 77

கெட்டியென் றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரண
தொட்டிலுக்குட் சேய்போற் றுயின்றார் பராபரமே. [மாந்

(ப-ரை) கெட்டி - கெட்டிக்காரர்கள், என்று - என்று கூறப்படுகின்ற, உன் - தேவரீரின், அன்பர்-அன்பர்கள், மலம் - ஆணவாதிமலங்கள், கெட்டு-ஒழியப்பெற்று, அயர்ந்து - அசந்து, ஓர் - ஒப்பற்ற, பூரணமாம் - தேவரீரின் பரிபூரண நிலையாகிய, தொட்டிலுக்கு - தொட்டிலுக்கு, உள்-உள்ளே, சேய்-

குழந்தை, போல்-போல, துயின்றார்-சிவராஜயோக நித்திரையில் தூங்கினர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கெட்டி என்றது-ஞானநிடத்தைக் குறித்தது. மலம் என்றது-ஆணவாதிமலங்களை. அயர்ந்து என்றது-ஓய்ந்து என்பது பொருளாம். இளைப்பாறி என்பதாம். பூரணம் என்றது - இறைவன் திருவருட் பரிபூரணத்தை. ஈண்டு திருவருள் பரிபூரணத்தை தொட்டிலாக உருவகப்படுத்தினர். 'சேய்' இது குழந்தை என்னும் பொருளது. இது இளமைப்பெயர். 'போல்' இது உவமஉருபு. 'துயின்றார்' என்று கூறியது இன்பானுபவ நிட்டையில் இருக்கும் நிலையை. 78

**காட்ட வருளிருக்கக் காணா திருண்மலத்து**
**நாட்ட மெனக்குவர னன்றோ பராபரமே.**

(ப-ரை) காட்ட-தேவரீரின் தரிசனத்தைக்காட்ட, அருள் - தேவரீரின் திருவருள், இருக்க-இருக்க, காணாது-முன்னுற்றுக்காணமல், இருள் - இருள் வண்ணமாகிய, மலத்து - ஆணவாதி மலங்களில், நாட்டம்-அடியேனின் கண்ணின்பார்வை, எனக்கு - அடியேனுக்கு, வரல் - வருதல், நன்றோ - நல்லதாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காட்ட என்றது-இறைவன் தேஜோமயானந்தத்தைக் காட்ட என்பது பொருளாம். அருள் என்றது-இறைவன் திருவருளை. என்னை? "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே" என்றும், "காணாரார் கண்ணுதலே காட்டாக்கால்" என்றும் தேவாராதிகள் முழங்குதல்போல் இறைவன் திருவருளே பக்குவான்மாக்களுக்கு இறைவனைக் காட்டுவிக்கும். 79

**எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கும்**
**அத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே.**

(ப-ரை) எ-எந்த, தன்மை-விதமான, குற்றம் - குற்றத்தை, இயற்றிடினும்-பிள்ளை செய்தாலும், தாய்-அப்பிள்ளையின் தாய், பொறுக்கும்-பொறுத்துக்கொள்ளுவாள், அ-அந்த, தன்மை-விதமாக, நின்-தேவரீரின், அருளும்-திருவருளும், அன்றோ-(எம்போலியர் குற்றத்தைப்) பொறுக்கும் அல்லவா?, பராபரமே!—, எ-று.

(வி - ரை) எத்தன்மைக் குற்றம் இயற்றிடினும் தாய் பொறுக்கும் என்றது-உவமை. அத்தன்மை நினதருளும் அன்றோ என்றது-உபமேயம். 'குற்றம்' இது அறிவு குறைவாற் செய்யும் பழுது ஆனகாரியம் என்னும் காரணம்பற்றி வந்தபெயர். 80

**எத்தனையோ தேர்ந்தாலும் என்னாலே யின்பமுண்டோ**
**சித்துருவே இன்பச் சிவமே பராபரமே.**

(ப-ரை) எத்தனையோ-எத்தனைவிதத்தாலோ, தேர்ந்தாலும்-ஆராய்ந்து தெளிந்தாலும் (தேவரீரினாலே அடியேனுக்குச் சுகமுண்டேயன்றி), என்னாலே - அடியேனினாலே, இன்பம் - அடியேனுக்கு உண்டாவதோர் இன்பம்



உண்டோ-உளதோ? சித்து-ஞான, உருவே-உருவமே, இன்பம்-இன்பத்தைத் தந்தருளும், சிவமே-சிவமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்னாலே என்றது - ஜீவான்மாவினால் இறைவன் ஞானசொரூபி ஆதலின் 'சித்துருவே' என்றார். இன்பம் என்றது - முத்தியின்பத்தை. இன்பச் சிவமே என்றது-முத்தியின்பத்தைத் தருஞ் சிவமே என்பது. இன்பச்சிவமே என்பதற்கு ஆனந்தமயமாகிய மங்களப்பொருளே என்னலும் ஆம். காண்பானும் காட்சியும், காட்சிப்பொருளும் இறைவனேயாம். 81

**மண்ணொடுவிண் காட்டி மறைந்துமறை யாவருளைக்**
**கண்ணொடுகண் ணாகவென்று காண்பேன் பராபரமே.**

(ப-ரை) மண் - மண், ஒடு - உடனே, விண் - ஆகாயம் முதலாகவுள்ள பிரபஞ்சத்தை, காட்டி-காண்பித்து, மறைந்து-மறுபடியும் திரோதானத்தால் மறைந்து, மறையா-மறுபடியும் ஒவ்வொருகால் தோன்றும், அருளை - தேவரீரின் திருவருளை, கண்ணொடு - கண்ணுடன் கலந்த, கண் - கண் ஒளி, ஆக-ஆக, என்று - எக்காலத்திலே, காண்பேன்-நீக்கம் இல்லாமல் கண்டிடுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பிரிதிவி முதலாக ஆகாய ஈறாக உள்ளவைகளை சிலகால் காண்பித்து திரோதானசத்தியால் மறைந்தும் மறையாதும் இருப்பவன் இறைவன் ஆதலின், 'மண்ணொடு விண்காட்டி மறைந்து மறையா' என்றார். இறைவன் உள்ளே கலந்து நிற்கும் பண்பு ஞானிகளே, குருவருள் பெற்றவர்களே அறிவர் ஆதலின், 'என்று காண்பேன்' என்றார். 82

**பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லாம்**
**அஞ்ச லெனும்பொருட்டே யன்றோ பராபரமே.**

(ப-ரை) பஞ்சரித்து-அடியேனினுடைய எளிமைத்தன்மையைக்காட்டி, நின்னை - தேவரீரை, பலகால் - பலநாளும், இரந்தது - கெஞ்சிக்கேட்டது, எல்லாம்-எல்லாம், அஞ்சல் - அடியேனை அஞ்சாதே, எனும் - என்று கூறும், பொருட்டு-படிக்கு, அன்றோ-அல்லவோ, பராபரமே!—, எ-று.

(வி - ரை) பஞ்சரித்தல் என்பது - தன் எழ்மைத்தனத்தைக் கூறல். பலகால் என்றது-பலநாளும் என்பது பொருள். பலகால் என்பது - பல ஜென்மாக்களிலும் எனப்பொருள் கூறுவாரும் உண்டு. 83

**எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கு மவ்வுயிரா**
**யங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே.**

(ப-ரை) எங்கு - எங்கு, எங்கே - எங்கே, பார்த்தாலும் - நோக்கினும், எ-எத்தகைய, உயிர்க்கும்-உயிர்களுக்கும், அவ்-அவ்வவ், உயிராய் - உயிராக, அங்கு-அங்கு, அங்கே-அங்கே (அவ்வவ் விடங்களில்). இருப்பது-இருந்தருள்வது, நீ-தேவரீர், அன்றோ-அல்லவோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்க்கு உயிராய்ப் பரந்தெங்குங் கலந்து உறைவோன் ஆதலின் 'எவ்வுயிர்க்கு மவ்வுயிரா யங்கங்கிருப்பது நீயன்றோ' என்றார். 84

**அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை**
**நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே.**

(ப-ரை) அனைத்தும் - (சர்வ வியாபகத்தன்மையால்) எல்லாம், ஆய்-தேவரீரே ஆகி, நின்றாயே - நின்றீரே, (அவ்வாறாயின்) யான் - அடியேன், வேறோ-தேவரீரினின்றும் வேறுபட்டவனோ?, நின்னை-தேவரீரை, நினைக்கும்-சிந்திக்கும், ஆறு-விதம், எங்கே-எவ்விதம், நிகழ்த்தாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அனைத்தும் என்றது - சராசரங்கள் எல்லாவற்றையும். யான் வேறோ என்றது-யான் வேறு அல்ல என்றபடி. 85

**நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்றால்**
**என்போத மெங்கே இயம்பாய் பராபரமே.**

(ப-ரை) நின்-தேவரீருடைய, போதத்தாலே-ஞானத்தாலே, நினைப்பு-நினைப்பும், மறப்பு-மறப்பும், என்றால்-உண்டாகுவன என்றால், என்-அடியேனுடைய, போதம்-சுதந்தரமான அறிவு, எங்கே - எவ்விடத்தது, இயம்பாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லாம் அவன்செயல் ஆதலினால் நினைப்பும் மறப்பும் அவன் செயலே யாமென்பார் 'நின்போதத்தாலே நினைப்பு மறப்பு மென்றால்' என்றார். அறிவுக்கறிவாய் இறைவன் நின்று உணர்த்துகின்றானாதலினாலும், இறைவன் அறிவுக்குமுன் ஆன்ம அறிவு சூரியன்முன் மின்மினிபோல் ஒன்றுமில்லாததே யாதலினாலும் பேரறிவுப் பிழம்பாகிய இறைவனை 'நின் போதத்தாலே நினைப்பு மறப்புமென்றால்' என்றும், 'என் போதமெங்கே சாற்றாய்' என்றுங் கூறினார். 86

**ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ**
**யென்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே.**

(ப-ரை) ஒன்றை-ஒருபொருளை, நினைந்து - பற்றிக்கொண்டு, ஒன்றை-அந்தக்ஷணமே மற்று ஒன்றை, மறந்து - மறக்குந்தன்மைவாய்ந்து, ஓடும்-பிரபஞ்சத்தில் உழன்று ஓடும், மனம் - மனமானது, எல்லாம்-வியாபகத்தன்மையால் எல்லாப்பொருள்களும், நீ-தேவரீரே, என்று - என்று, அறிந்தால்-அறிந்துகொள்ளுமாயின், எங்கே - எவ்விடத்தே, இயங்கும் - சஞ்சரிக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சார்ந்ததன் வண்ணமாக இருப்பது ஆன்மாவின் தன்மை ஆதலின், 'ஒன்றை நினைந் தொன்றை மறந்து' என்றார். மனம் பிரபஞ்ச மாயையிற் சுழன்றுகொண்டு இருப்பதாதலின் 'ஓடும் மனம்' என்றார். மனமானது எல்லாம் நீயே என்றறிந்தால் எல்லாம் சோதிப்பிரகாசமாகிய



நீயே என்றறிந்து தேவரீரின் திருவருளில் ஈடுபட்டு அசைவற நின்றிடும் என்பார் 'எல்லாம் நீயென்றறிந்தால் எங்கே இயங்கும்' என்றார். 87

**கொழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பி**
**லழுந்துமவர்க் கேசுகமுண் டாகும் பராபரமே.**

(ப-ரை) கொழுந்தில் - மரத்தினுடைய கொழுந்தில், வயிரம் - வயிரம் அடங்கியிருத்தல், என-போல, கோது-குற்றம், அற-நீங்க, உள்-உள்ளத்தின் கண் உதிக்கும், அன்பில் - அன்பினிடத்தே, அழுந்தும் - அழுந்தியிருக்கும், அவர்க்கே - அவர்களுக்கே, சுகம் - சிவானந்தம், உண்டாகும் - உதயமாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கொழுந்தில் வயிரம் என என்றது - உவமை. உள்ளன்பு என்றது - மனத்தின்கண் இறைவன்மாட்டுக் கொண்ட அன்பு என்பதாம். சுகம் என்றது - சிவானந்தப்பேறாகிய முத்திச்சுகத்தை. இறைவன்மாட்டு வைத்த அன்பில் அழுந்தி இருப்பவர்க்கு வீட்டின்பம் எய்தும் என்பது இக்கண்ணியாற் போந்த பொருளாம். 88

**பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்**
**பெற்றவர்க்கே நின்னருடான் பேறாம் பராபரமே.**

(ப ரை) பற்றும்-கதிர் ஊட்டமாய்ப்பிடிக்கும், பயிர்க்கு-பயிருக்கு, படர்-பாவிவரும், கொழுந்து-தளிர் நன்றாக விளங்குவது, போல்-போல, பருவம்-பரிபக்குவகாலம், பெற்றவர்க்கே-அடைந்த அன்பர்களுக்கே, நின்-தேவரீரின், அருள்-திருவருள், தான்-தான், பேறாம் - பெறும்பேறு, ஆம் - உண்டாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பருவம் பெற்றவர் என்றது-இருவினை ஒப்பு மலபரிபாகம் உற்றவர்களை. நின் என்றது-இறைவனாகிய சிவபெருமானை. அருள் என்றது-திருவருளை. 89

**யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான**
**தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே.**

(ப-ரை) யோகியர்க்கே-சிவராஜயோகத்தில் அமர்ந்திருப்பவர்களுக்கே, ஞானம்-சிவஞானம், ஒழுங்காம்-(இந்தச் சன்மத்தில்) ஒழுங்காகவந்து கூடும், பேர்-மிகுந்த, அன்பான - அன்புடையவர்களாகிய, தாகியரும் - மோட்சதாக முள்ளவர்களும், முன்னே - முற்பிறப்பில், யோகம் - சிவராஜயோகம், சார்ந்தோர்-செய்து முடித்தவர்களாம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) யோகியர் என்றது-சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களில் மூன்றாவதாகிய யோகபாதத்தில் நிற்பவர்கள். யோகமாவது தத்துவங்களைந்து தன்னை அறிந்து தலைவனை ஆங்கேகண்டு தன்னையு மறந்து தலைவனையே சிந்தித்து ஆநந்தித்து அழுந்தும் நிலை. மூன்றாம்பாதமாகிய யோகம் முற்றியபின் நான்காம்பாதமாகிய ஞானம் வந்து எய்தும் ஞான பூரணமுற்ற நிலையே முத்தியாம். இதுகொண்டே 'யோகியர்க்கே ஞானமொழுங்காம்' என்றார். 90

**அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே.**

(ப-ரை) அல்லும்-இரவும், பகலும்-பகலும், அறிவு-திருவருள்மயம், ஆகி-ஆகி, நின்றவர்க்கே-நின்றவர்களுக்கே, சொல்லும்-சொற்களும், பொருளும்-அச்சொல் குறிக்கும் பொருளும், சுமை-அதிகபாரமாம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அறிவாகி நின்றவர் என்றது - திருவருட்பேற்றால் ஞானமயமுற்றிருப்போர் என்பதாம். திருவருளும் ஞானமும் ஒன்றே யாதலின் திருவருள் மயமானவர் என்றும். சிவானந்த அனுபவத்திற்குப் பேசலும், அச்சொல்லின் பொருளைச் சிந்தித்தலும் இடையூறாக நிற்றலின் சொல்லும் அதனாற் குறிக்கப்படும் பொருளும் சிவானந்தநிட்டையில் இருக்கும் ஞானிகளுக்குப் பாரமாம். இதுகொண்டே 'அல்லும் பகலும் அறிவாகி நின்றவர்க்கே சொல்லும் பொருளும் சுமை' என்றார். இச் சிவஞானிகள் சொல்லற்றுச் செயலற்று சிந்தனையற்று சிவராஜயோக மௌனானந்தத்தில் இருப்பர் என்றதாம். 'காண்' அசை. 91

**எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க்கு உனைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே.**

(ப-ரை) எச்சில் - வண்டினுடைய எச்சில் ஆகிவிட்டது, என்று-என்று, பூவை-பூவினை, இகழ்ந்தோர்க்கு-பழித்தோர்க்கு, உனை-தேவரீரை, போற்ற-அர்ச்சித்து வணங்க, பச்சிலையும்-பசிய இலையையும், கிள்ள-கிள்ள, படுமோ-தகுதியுடையதாகுமோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வண்டு மதுவுண்டுகொண்டதால் மலர்வண்டின் எச்சிலாயிற்று. இதுகொண்டே 'எச்சிலென்று பூவை இகழ்ந்தோர்க்கு' என்றார். புட்பம் வண்டினாலும் மற்றையவைகளாலும் அசுசிசெய்யப் பெற்றிருக்கும் என்றே புட்பத்தை நறுநீராற் சுத்திசெய்து பின் மந்திராதிகளாற் பரிசுத்தப்படுத்தி இறைவனை அர்ச்சிக்கப் புட்பவிதி கூறிற்று. ஆதலின் மந்திரபூர்வமாய் சுத்திசெய்திடிற் றோடமில்லை என்பார் 'உனைப் போற்ற பச்சிலையுங் கிள்ளப் படுமோ' என்றார். பரமன் கூவிளம் அறுகுமுதலிய பச்சிலையையும் விரும்புகின்றான் ஆதலின் அப்பச்சிலைகளையும் மந்திரபூர்வமாக பரிசுத்தப்படுத்தி அர்ச்சிக்கவேண்டும் என்பதேயாம். பூ எவ்வாறு எச்சிற்படல் முதலிய அபரிசுத்தம் அடைகிறதோ அதுபோலப் பச்சிலையும் அடையும் ஆகையால் பூவை இகழ்ந்தால் பச்சிலையையும் இகழவேண்டியதே என்பது பொருளாம். 92

**அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
எந்தத் துறவினு நன்று எந்தாய் பராபரமே.**

(ப-ரை) அந்தக்கரணம் - அந்தக்கரணங்கள், அடங்க - அடங்கி நிற்க, துறப்பதுவே-உலகப் பற்றைத் துறந்து ஒழிவதே, எந்த-எப்படிப்பட்ட, துறவினும் - துறவிலும், நன்று - நல்லது, எந்தாய் - எமது தந்தையே!, பராபரமே!—, எ-று.



(வி-ரை) அந்தக்கரணம் என்றது-மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கினையும். துறப்பது என்பது - பற்றற்று நிற்கு நிலையை. இறைவன் எல்லா வான்மகோடிகளுக்கும் உத்தமோத்தம பிதாவாதலின் 'எந்தையே' என்றார். 93

**தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே.**

(ப-ரை) தன்னை-ஆன்மாவாகிய தன்னை, அறிந்தால்-தான் இத்தன்மையன் என்று அறிந்துகொண்டால், தலைவன் - பதியாகிய இறைவன், மேல் - மேலே, பற்று-பற்று, அலது-அல்லாமல், பின்னை-பிறகு, ஒரு-ஒரு, பற்றும்-பற்றும், உளதோ - இருக்கின்றதோ, பேசாய் - சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்னை என்றது-பசுவாகிய தன்னை என்பதாம். அறிந்தால் என்றது தத்துவங்களைந்து. 'நான்' என்னும் பதத்திற்கு உரியவன் யார் என்று கண்டு கோடலைக் குறித்தது. தலைவன் என்றது-பசுக்களுக்கெல்லாம் பதியாகிய தலைவனை, முழுமுதற் கடவுளை. இறைவன் ஒருவனே நித்தியன், அவனை அடைதலே பேரின்பம் என்றும் பிரபஞ்சம் முதலிய மாறுபாடுடையனவாகி அநித்தியமாக முடியும். இது மாயாசம்பந்தமானது பிறவித் துன்பைத்தருவது என்றும் அறிந்து துன்பத்திற்கே காரணமாகிய பிரபஞ்சப் பற்று ஒழிய இறைவன் பற்றுமிகும். 94

**அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்ட புண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே.**

(ப-ரை) அன்பால் - அன்பினாலே, கரைந்து - மனம் உருகி, கண்-கண்களிலே, நீர்-ஆனந்தநீர், ஆறு-ஆறு ஆக, கண்ட-வழியக்கண்ட, புண்ணியருக்கு-புண்ணியவான்களுக்கு, உன்பால் - தேவரீரிடத்து, வர-வந்துசேரற்கு, வழிதான்-வழிதான், உண்டோ-இருக்கின்றதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அன்புடையார்க்கு மனம் இளகல் ஆனந்தக்கண்ணீர் பெருகுதல் முதலியன இயல்பாகலின் 'அன்பாற் கரைந்து கண்ணீராறுகண்ட புண்ணியருக்கு' என்றார். பலபிறப்புகளிற் செய்த புண்ணியங்களின் பலனாலேதான் இறைவன்மாட்டு முதிர்ந்த அன்பு உண்டாகவேண்டும் ஆதலின் 'புண்ணியருக்கு' என்றார். 95

**தன்னை யறிந்துஅருளே தாரகமா நிற்பதுவே
யுன்னை யறிதற் குபாயம் பராபரமே.**

(ப-ரை) தன்னை-ஆன்மாவாகிய தன்னை, அறிந்து - அறிந்துகொண்டு, (பின்னர்) அருளே - இறைவன் திருவருளையே, தாரகமா - ஆதாரமாகக் கொண்டு, நிற்பதுவே-அத்திருவருள் மயமாக நின்றிருப்பதே, உன்னை-தேவரீரை, அறிதற்கு - தெரிந்து கொள்ளற்கு, உபாயம் - தந்தரமாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்னை என்றது - ஆன்மாவை. அருள் என்றது - இறைவன் திருவருளை. தாரகமாகிற்பது என்றது - திருவருளையே பற்றுக்கோடாகக் கொண்டு நிற்றலை. உன்னை என்றது - இறைவனை. இறைவனை அறியின் அவனோடு கலந்திருந்து சிவாநந்தமுத்திபெற முயன்று முத்திப்பேரின்பு அடையலாமாதலின் 'உன்னை அறிதற்கு உபாயம்' என்றார். 96

கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்லா<br>மற்றவிடத் தேவெளியா மன்றோ பராபரமே.

(ப-ரை) கற்ற - (பிரபஞ்சத்தேயிருந்து) படித்த, கலையால் - கல்வியின் தேர்ச்சியால், நிலைதான்-உண்மை நிலையானது, காணுமோ-காணப்படுமோ?, காண்ப-(முன்னிலைச் சுட்டாகக்) காணப்படுவன எல்லாம், அற்ற-தோன்றாது மறைந்த, இடத்தே - நிலையிலே, வெளியாம் - உண்மை நிலையானது வெளிப்படையாகத் தெரியவரும், அன்றோ-அல்லவோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகவித்தையால் திருவருளின் உண்மைநிலை காணமுடியாதென்பார் 'கற்றகலை யானிலைதான் காணுமோ' என்றார். அகங்கார மமகாரங்களாற் காணப்படும் சுட்டறிவு அற்றவிடத்தே திருவருள்நிலை காணப்பெறும் என்பார் 'காண்ப அற்ற இடத்தே வெளியாம் அன்றோ' என்றார். 97

கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்னரு<br>விண்மூடி னெல்லாம் வெளியாம் பராபரமே. [ளாம்

(ப-ரை) கண்-கண்களை, மூடி-மூடிக்கொண்டு தியானிப்பதாலும், கண்-கண்களை, விழித்து-விழித்துக்கொண்டு தியானிப்பதாலும், காண்பது-பொருளின் உண்மைநிலையைக் காண்பது, உண்டோ-முடியுமோ?, நின்-தேவரீரின், அருளாம்-திருவருளாம், விண்-ஆகாயம், மூடின்-எங்கும் கவிந்துகொண்டால், எல்லாம்-எல்லாஉண்மைகளும், வெளியாம்-தோன்றும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண்ணைவிழித்துத் தியானித்தால் நாட்டம், பிற இடங்களிற் சென்று கண்டு தியானத்துக்கு இடையூறாக்கும் என்று கண்மூடித் தியானிப்பர். இதுகொண்டே கண்மூடித் தியானித்தாலும் கண்ணை விழித்துக் கொண்டு தியானித்தாலும் உண்மைப் பொருளைக் காணமுடியாதென்பார் 'கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ' என்றார். விண் என்றது-ஆகாயத்தை. அருளாம் விண் என்றது - அருளாகிய விண் என விரிதலின் பண்புத்தொகை. மூடின் என்றது-எங்கும் கவிதலை. 98

நேரே நினதருளென் நெஞ்சைக் கவரின்ஒன்றும்<br>பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே.

(ப-ரை) நினது - தேவரீரது, அருள் - திருவருள், என் - அடியேனின், நெஞ்சை - மனத்தை, நேரே-நேராக, கவரின் - கவர்ந்தால், ஒன்றும்-அன்னியமாகிய பொருள் ஒன்றும், பாரேன் - பார்க்கமாட்டேன், சுகமும் - சிவானந்தப் பேரின்பத்தையும், படைப்பேன்-அடைவேன், பராபரமே!—, எ-று.



(வி-ரை) நினது அருள் என்றது-இறைவன் திருவருளை. நெஞ்சக்கவரின் என்றது-நெஞ்சு திருவருளின் வயப்பட்டிருத்தலை. ஒன்றும் பாரேன் என்றது-பிரபஞ்சம் தோன்றாதுமறையும் என்பதாம். சுகமும் படைப்பேன் என்றது - சிவானந்தப் பேரின்ப முத்திபெறுவேன் என்பதாம். 'சுகமும்' என்றதன் ஈற்று உம்மை எண்ணும்மை. படைப்பேன் என்றது பெறுவேன் என்னும் பொருளது. 99

வான்காண வேண்டின் மலையேற லொக்குமுன்னை<br>நான்காணப் பாவனைசெய் நாட்டம் பராபரமே.

(ப-ரை) உன்னை-தேவரீரை, நான் - அடியேன், காண - அடியேனின் சுதந்தரத்தால் தரிசித்தற்கு, பாவனை-பாவனை, செய்-செய்கின்ற, நாட்டம்-பாவனையானது, வான்-ஆகாயத்தை, காண-பார்க்க, வேண்டின் - ஆசைப்பட்ட ஒருவன், மலை-மலைமேல், ஏறல்-ஏறுதல், ஒக்கும் - ஒத்திருக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'வான்காண வேண்டின் மலையேறல் ஒக்கும்' இது உவமானம். 'உன்னை நான்காணப் பாவனைசெய் நாட்டம்' இது உபமேயம். வான் என்றது-ஆகாயத்தை. உன்னை என்றது-இறைவனை. இறைவனைக் காண வேண்டின் திருவருளின் சகாயத்தாலேயே காணவேண்டும். இதனாலன்றோ பெரியாரும், "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றார். "காண்பாரார் கண்ணுதலே முன்னின்று காட்டாக்காலே" எனத் **தேவாரமும்** முழங்கிற்று. திருவருட் சகாயமின்றி பாவனை முதலியன பயன்படாதென்பதாம். 100

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லால் வேறுமொ<br>சாதனைதா னுண்டோநீ சாற்றாய் பராபரமே. [ரு

(ப-ரை) வாதனை - பிரபஞ்சவாதனையை, விட்டு - விட்டுநீங்கி, உன்-தேவரீரின், அருளின் - திருவருளின், மன்னின் - அடியேன் அழுந்தினால், அல்லால் - அல்லாமல், வேறும் - வீடுபேற்றுக்கு வேறு, ஒரு - ஒரு, சாதனை-சாதனமும், உண்டோ - இருக்கின்றதோ, நீ-தேவரீர், சாற்றாய் - சொல்லி அருள்வீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வாதனை என்றது - பிரபஞ்சவாதனையை. பிரபஞ்சவாதனைகளாவது பிறத்தல், இறத்தல், இருத்தல், உழலல் முதலியனவாம். உன் அருளை என்றது-இறைவனின் திருஅருளைக் குறித்தது. வேறு ஒரு சாதனமும் உண்டோ என்றதுடன் வீடுபேற்றிற்கு என்னும் ஒரு சொல் அவாய் நிலையில் வருவித்து பொருள்கூறப் பெற்றது. 'சாதனைதான்' இதில் 'தான்' அசைபொருளின்றி நின்றது. மன்னல் - இருத்தல் - அழுந்தல் என்னும் பொருளது. சாற்றாய்-முன்னிலை ஏவல். 101

பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்<br>டாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே.

(ப-ரை) பாரகமும்-மண்முதலாகவும், விண்ணகமும் - ஆகாயம் ஈருக்கும் உள்ள யாவும், பற்ருக - காரியப்படுவதற்கு ஆதாரமாயிருப்பது, அருள்-தேவரீரின் திருவருள் ஆகிய, தாரகத்தை - ஆதாரத்தை, பற்றி-பற்றி, அன்ருே-அல்லவோ, சாற்ருய்-சொல்லாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'பாரகம்' இது பூமியாகிய இடம் என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'விண்ணகம்' இதும் விண்ணுகிய இடம் என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பற்று, ஆதாரம், தாரகம் என்பன ஒருபொருட் கிளவி. பாரகமும் விண்ணகமும் என்றதின் ஈற்று உம்மைகள் எண்ணும்மைகள். அருள் என்றது-இறைவன் திருஅருளை. 102

விளக்குந் தகளியையும் வேறென்ஞர் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.

(ப-ரை) விளக்கும்-தீபத்தையும், தகளியையும்-அந்தத் தீபம் எரிதற்குக் காரணமாயுள்ள தகளியையும், வேறென்ஞர் - (ஆகுபெயர் என்னும் இலக்கணத்தால் ஒன்ருகக் கூறினும் உண்மையில்) வெவ்வேறென்னுது ஒன்ருகக் கூறுபவர்களே, நின்னை - தேவரீரை, சீவன் - (ஜீவனிலும் வேருகிய சிவன் என்று கூருது) சீவன், என்று - என்று, சொல்வார் - சொல்வார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தீபத்தையும் தகளியையும் சேர்த்து விளக்கு என்பர். தகளியையும் இடஆகு பெயராக விளக்கெனல் இலக்கணவழக்கு. விளக்கும் என்றது-வேற்றுமை மயக்கம். நின்னை என்றது-பரமான்மாவை. சீவன் என்று சொல்லுவர் என்பது-சிவன் என்னுது சீவன் என்று கூறுவர் என்பதாம். 103

பாராதி நீயாப் பகர்ந்தால் அகமெனவு
மாராயுஞ் சிவனுநீ யாங்காண் பராபரமே.

(ப-ரை) பாராத-பூமி முதலியவைகளை, நீயாய்-தேவரீராக, பகர்ந்தால்-சொன்ஞல், அகம்-நான், எனவும்-என்றும், ஆராயும்-அகங்கரித்து ஆராயும், சிவனும்-சிவனும், நீ-தேவரீர், ஆம்-ஆகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பார்க்கப்படுவது என்னும் பொருளில் பூமிக்குப் 'பார்' என்னும்பெயர் ஏற்பட்டது. நீ என்றது-இறைவனை. இறைவன் மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களாகவும், திக்காகவும், சந்திர சூரியர்களாகவும், ஆன்மாவாகவும் விளங்கலின் அட்டமா வுருவினன் எனப்படுவன். இறைவன் சர்வந்திரியாமியாதலின் இறைவன் எல்லாமாக ஆகின்ருன். சீவனைச் சிவன் என்பது உபசாரவழக்கு. 'காண்' அசைநிலை. 104

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதரவுன்
மெய்யருளே யன்ருே விளம்பாய் பராபரமே.

(ப-ரை) பொய்யை - பொய்ப் பொருள்களை, பொய் - உள்ளபடி இது பொய்ப்பொருள்கள், என்று - என்று, அறியும் - அறிகின்ற, போதத்திற்கு-அறிவினுக்கு, ஆதரவு-ஆதாரமாக இருப்பது, உன்-தேவரீரின், மெய்-சத்தியமாகிய, அருளே-திரு அருளே!, அன்ருே-அல்லவோ?, பராபரமே!—, எ-று.



(வி-ரை) பொய்யைப் பொய்யென் றறியும் போதம் என்றது-காரியருபமான பதார்த்தங்களை காரியருபமான பதார்த்தங்களே காரணம் அன்று என்று அறியும் அறிவு என்பதாம். போதம் என்றது - அறிவை. மெய் அருளே என்றது - சித்திதரும் சத்திய நித்தியமான திருவருளை. 'அன்ருே' என்றதின் ஈற்று ஓகாரம் வினப்பொருளது. 105

வருவான்வந் தேனெனல்போன் மன்னியழி யுஞ்சகத்
தெரிவாக வில்லையென்ற நீரம் பராபரமே. [தைத்

(ப-ரை) மன்னி - நிலையுடையதாகக் காணப்பெற்று, அழியும் - காரியருபமாக மாறுபடும், சகத்தை-பிரபஞ்சத்தை, தெரிவாக-தெளிவாக, இல்லை-இல்லை, என்ற-என்று கூறிய, நீரம்-நீரம், வருவான் - இனிவரப்போகின்ற ஒருவன், வந்தேன்-துணிவுபற்றி வந்தேன், எனல் - என்று கூறுதல், போல்-போல இருக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) காரியருபமாக மாறுபடும் பிரபஞ்சத்தை காரியருபமாக இல்லை என்று சொல்லும் உறுதியை வரப்போகின்ருேன் துணிவுபற்றி வந்தேன் என்று கூறுதலை ஒக்கும் என்கின்ருர். ஆதலின் "மன்னி ... ... ... வில்லை யென்ற நீரம்" உபமேயம். 'வருவான் வந்தே னெனல் போல்' உபமானம். வரநிற்பவன் வந்தேன் என இறந்தகாலத்தாற் கூறுவது காலவழு அமைதி என்பர் இலக்கணிகள். ஈண்டு துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக வந்தது. 106

மாயா சகமிலையேன் மற்றெனக்கோர் பற்றுமிலை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே.

(ப-ரை) மாயா-மாயாகாரியமாகிய, சகம்-இந்தப்பிரபஞ்சம், இலையேல்-அடியேனுக்குத் தோன்ருதொழிந்தால், மற்று - மற்று, எனக்கு - அடியேனுக்கு, ஓர்-ஒரு, பற்றும்-பற்றும், இலை-இல்லாதேபோம், நீயே - தேவரீரே, நானென்று-நானென்று, வந்து-வந்து, நிற்பேன்-நிற்பேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாயாசகம் இலையேல் என்றது-முன்னிலைச்சுட்டில் இவ்வுலகம் இல்லாது ஒழிந்தால் என்பது பொருளாம். இறைவனுடன் கலந்தவழியே அந்நிலையில் சோகம்பாவனையாக தன்னை இறைவனுகக் காண்டலின் 'நீயே நானென்று வந்து நிற்பேன்' என்ருர். பிரபஞ்சம் தோன்ருவிடின் யாதொரு பற்றுந் தோன்ருது. பற்றல்லாம் ஒழியவே முத்திவந்து சித்திக்கும் என்பதாம். 107

வானாதி நீயெனவே வைத்தமறை என்னையுநீ
தானுகச் சொல்லாதோ சாற்ருய் பராபரமே.

(ப-ரை) வான் - தேவரீரின் வியாபகத்தாலே ஆகாயம், ஆதி - முதலியவற்றை, நீ - தேவரீர், எனவே - என்றே, வைத்த - சொல்லிவைத்த, மறை-வேதம், என்னையும் - அடியேனையும், நீ-தேவரீர், தானுக-தானுகவே, சொல்லாதோ-கூருதோ, சாற்ருய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் அட்டமாவுருவில் வான் முதலியவும் அடங்கும் ஆன்மாவும் ஒன்றாம் இவ்வாறு ஏன் கூறினர் எனின்? இறைவன் எல்லாவற்றினும் வியாபித்திருத்தலின் என்க. இறைவன் இல்லாத இடமும், இறைவன் இல்லாத பொருளும் இல்லை ஆதலின் இறைவன் எல்லாமாய் நிற்கின்றான். அவை அல்லவுமாய் இருக்கின்றான். இதனானன்றோ "அல்லாமாய் அல்லவுமாய் இருந்ததனை இருந்தபடி" என்றார்.

108

**வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்**
**கள்ளக் கருத்தே கவளம் பராபரமே.**

(ப-ரை) வெள்ளம் - வெள்ளம்போன்ற, கருணை - கருணையாகிய, மதம்-மதத்தைப் பொழிகின்ற, வேழம் - யானை, ஆம் - ஆகிய, நின் - தேவரீரின், அருட்கு - திருவருளுக்கு, என்-அடியேனின், கள்ளம் - வஞ்சகத்தையுடைய, கருத்தே-மனமே, கவளம்-கவளமாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'வெள்ளக்கருணை' இதில் வெள்ளம் நீர்ப்பெருக்கை உணர்த்திற்று. வேழம் என்றது-ஆண் யானையை. நின்னருள் என்றது-திருவருளை. 'கவளம்' இது யானைதின்னும் அரிசிக்கவளத்தை உணர்த்திற்று. 'கவளம்' பொதுவாக ஒரு வாயளவு உணவைக்குறிக்கும். வெள்ளக்கருணை இது உவமைத்தொகை.

109

**வண்டாய்த் துவண்டு மௌன மலரணைமேற்**
**கொண்டார்க்கோ வின்பங் கொடுப்பாய் பராபரமே.**

(ப-ரை) வண்டாய்-வண்டினைப்போலாகி, துவண்டு-துவண்டு, மௌனம்-மவுனமாகிய, மலர் - புஷ்பம், அணை - மஞ்சத்தின், மேல் - மேல், கொண்டார்க்கோ - உற்றவர்களுக்கோ, இன்பம் - தேவரீர் சிவாநந்தபோக சுகத்தை, கொடுப்பாய்-கொடுத்தருளுவாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வண்டாய் என்றது-தேன் வண்டைப்போலாகி என்பது பொருளாம். ஆய் இது 'ஆகி' என்பதன் விகாரம். 'மௌனமலரணை' இது பண்புத்தொகை. மௌனமாகிய மலரணை என விரியும்.

110

**மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்**
**தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே.**

(ப-ரை) மாயை - மாயை, முதலாம் - முதலாகிய, வினை - வினைக்கருவிகளும், நீ-தேவரீரே, மன் - அவைகளால் தொழிற்பட்டு நிலைபெற்றிருக்கும், உயிர்-உயிர்களும், நீ-தேவரீரே, மன்-நிலைபெற்ற, உயிர்-உயிர்கள், தேர்ந்து-மாயைக்கடந்து தெளிந்து, ஆயும் - ஆராயும், அறிவு - அறிவு, ஆனதும்-ஆகியிருப்பதும், நீ-தேவரீரே, அன்றோ-அல்லவோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சடமாகிய மாயையைக் காரியப்படுத்தலினால் 'மாயைமுதலாம் வினைநீ' என்றார். இறைவன் உயிர்க்கு உயிராய் நின்று அறிவிக்கின்றவன் ஆதலினால் அம்மாயைகளால் தொழிற்பட்டு நிலைபெற்றிருக்கும் உயிர்களும் இறைவனே என்பார் 'மன்னுயிர்நீ' என்றார்.

111



**என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவைகள்**
**நின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.**

(ப-ரை) என்-அடியேனின், அறிவும்-அறிவும், யானும்-நானும், எனது-என்னுடையது, என்பதவும் - என்பதும், ஆம் - ஆகிய, இவைகள்-இவைகள் எல்லாம், நின்னவை-தேவரீரினுடையவை, அன்றோ-அல்லவோ, நிகழ்த்தாய்-கூறியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆன்மாவிற்குத் தனக்கென ஒரு சுதந்தரம் இல்லை ஆதலின் 'என்னறிவும்' என்றார். 'யானும்' இது 'நான்' என்னும் அகங்காரதத்துவத்தை. 'எனது' என்றது மமகாரத்தை. இவையனைத்தும் இறைவன் பிரேரபனை ஆதலின் 'நின்னவையே யன்றோ' என்றார்.

112

**பாரறியா தண்டப் பரப்பறியா து உன்பெருமை**
**யாரறிவார் நானோ அறிவேன் பராபரமே.**

(ப-ரை) உன்-தேவரீரின், பெருமை-பெருமையை, பார்-மண்ணுலகம், அறியாது-அறிந்துகொள்ள முடியாது, அண்டம்-விண் உலகத்தின், பரப்பு-பரப்பு, அறியாது - அறிந்துகொள்ளமுடியாது, (அவ்வாறாயின்) யார் - (உன் பெருமையை) எவர்கள், அறிவார்-அறியக்கூடும், (ஆதலினால்) நானோ-அடியேனாகிய நானோ, அறிவேன்-அறியக்கூடியவன் ஆவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் மண்ஆதி விண்பரியந்தம் எங்கும் வியாபித்து நின்றனாலும் மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் அறிந்துகொள்ள முடியாது. இதுகொண்டே,'பாரறியாதஅண்டப்பாப்பறியாதுஉன்பெருமை' என்றார். பார் என்றதும் அண்டப்பரப்பு என்றதும் இடவாகுபெயர்களாய் மண்ணுலகத்தவரையும் விண்ணுலகத்தவரையும் குறித்து நின்றது.

113

**அண்ட மனைத்திலுமாய் அப்பாலுக் கப்பாலுங்**
**கொண்ட நின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே.**

(ப-ரை) அண்டம்-அண்டங்கள், அனைத்திலும் - எல்லாவற்றிற்குள்ளும், ஆய் - ஆகி, அப்பாலுக்கு - அவ் அண்டங்கள் எல்லாவற்றினுக்கும் அப்புறத்துக்கு, அப்பாலும்-அப்புறமாகிய வெளியிலும், கொண்ட-வியாபித்துக்கொண்டிருக்கிற, நின்னை-தேவரீரை, யார்-தேவரீரின் திருஅருள் துணையைப்பெறாத யார்தான், அறிந்து-தெரிந்து, கொள்வார்-கொள்ளுபவர்? (யாராலும் அறிந்து கொள்ள முடியாது), பராபரமே!—, எ-று.

(வி-ரை) அண்டம் என்றது-உலகங்களின் கோளங்களை. இது அண்டி இருப்பதற்கு ஆதாரமாக இருப்பது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். இறைவன் சர்வபரிபூரண வியாபகனாய் எல்லா அண்டங்களுள்ளும், பொருள்களுள்ளும் புறம்புமாக நிறைந்திருந்தாலும் இறைவன் திருவருள் பெற்றவர்க்கே தெரியக்கூடியவனாகவும் ஏனையர்க்குத் தெரிய முடியாதவனாகவும் இருத்தலினால், 'அண்ட மனைத்திலுமா அப்பாலுக் கப்பாலுங், கொண்ட நின்னை யாரறிந்து கொள்வார்' என்றார்.

114

**ஒப்புயர்வொன் றின்றி யொலிபுகா மோனவட்டக்**
**கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய் பராபரமே.**

(ப-ரை) ஒப்பு-சமத்துவமும், உயர்வு-உயர்வும் (சொல்லுவதற்கு), ஒன்று-ஒருபொருளும், இன்றி-இல்லாமல், ஒலி-சத்தம், புகா - இல்லாத, மோனம்-மவுனமாகிய, வட்டம் - வட்டவடிவமாகிய, கப்பலுக்கு - கப்பலுக்கு, ஆம்-பொருத்தமாகியுள்ள, சரக்கு - மேலான சரக்கு, நீ - தேவரீரே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் ஒப்பும் உயர்வும் அற்றவன் எனவே எல்லாம் இறைவனுக்குத் தாழ்ந்தனவே என்பது தோன்ற நின்றது. 'ஒன்றின்றி' இதில் உம்மை விகாரத்தாற் றொக்கது. ஒலி புகா மோனம் என்றது - பேச்சற்றதாகிய மௌனநிலை என்பதாம். மோனவட்டக் கப்பல் என மவுனநிலையைக் கூறியது உருவகம். மோனத்தை வட்டக்கப்பல் என்றதன் இரகசியத்தை இறைவன் கைகாட்டிய சின்முத்திரா விளக்கத்தா லறியலாம். இதன் இரகசியத்தை குருவிடம் முறையே கேட்டறியத்தக்கது. கண்டாய்-அசை. 115

**என்போ லெளியவரும் எங்கெங்கும் பார்த்தாலும்**
**உன்போல் வலியவரு முண்டோ பராபரமே.**

(ப-ரை) என்-அடியேனை, போல்-போல, எளியவரும் - எளியவர்களும், உன்-தேவரீரை, போல்-போல, வலியவரும் - வலியவர்களும், எங்கு எங்கும், எங்கும்-எங்கும் (எவ்வெவ்விடங்களிலும்), பார்த்தாலும்-தேடிப்பார்த்தாலும், உண்டோ-காணற்கு உண்டோ? (இல்லை), பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'என்போ லெளியார்' இல்லை என்றதினால் அடியேனை எளியர்க்கெல்லாம் எளியன் என்னிலும் எளியவர் இல்லை என்பதாம். 'உன்போல் வலியர்' இல்லை என்றதனால் தேவரீரே வலியரிலும் வலியர் தேவரீருக்குச் சமத்துவமான வலியரும் உயர்ந்த வலிமையும் உடையவர் இல்லை. தேவரீரே பெரு வல்லவர் தேவரீரே சர்வசக்தன் என்பதாம். ஒப்புயர்வற்ற சர்வசக்தனும் பேராற்றலும் பேரறிவுமுடைய தேவரீரே மிகவும் எளிய அடியேனுக்கு அருள்புரியவேண்டும் என்பது குறிப்பு. 116

**பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே**
**யார்க்குஞ் செயலில்லையே ஐயா பராபரமே.**

(ப-ரை) ஐயா-அப்பனே, பார்க்கின் - ஆராய்ந்து பார்த்தால், அண்டம்-அண்டத்தினுடையவும், பிண்டம் - பிண்டத்தினுடையவும், பரப்பு - விரிவு, அனைத்தும்-எல்லாம், நின்-தேவரீரின், செயலே-செய்கையின் காரியமாகவே இருக்கின்றன, யார்க்கும்-வேறு யார்க்கும், செயல்-ஒருசெயலும், இல்லையே-இல்லையாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அண்டம் என்றது-உலகங்களை. பிண்டம் என்றது-உயிர்களை. பரப்பு என்றது - சராசரங்களின் விரிவுகளை. நின் என்றது - இறைவனை. யார்க்கும் என்றது-சீவர்களை. 117



**ஒன்றே பலவே உருவே அருவேயோ**
**என்றே யழைப்பதுன்னை யென்றோ பராபரமே.**

(ப-ரை) ஒன்றே - ஏகமே!, பலவே - அநேகமே!, உருவே - சகளமே!, அருவே-நிட்களமே!, ஓ-ஓ, என்று-என்று முறையிட்டு, உன்னை - தேவரீரை, அழைப்பது-கூப்பிடுவது, என்றோ-எக்காலோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எழுத்தகரம்போலத் தனியாகவும், எல்லாவற்றுள்ளும் கலந்தும் இருக்கின்றான் ஆதலினாலும், வேதங்களெல்லாம் இறைவனை ஏக னனேகன் என்று கோஷிக்கின்றமையாலும் 'ஒன்றே பலவே' என்றார். 'ஓ என்று உன்னை அழைப்பது' என்றது ஓலமிட்டழைத்தலை. 118

**செப்புவதெல் லாஞ்செபநான் சிந்திப்ப தெல்லா நின்**
**ஒப்பி றியானமென வோர்ந்தேன் பராபரமே.**

(ப-ரை) நான் - அடியேன், செப்புவது - தேவரீரைப்பற்றிப் பேசுவது, எல்லாம் - எல்லாம், செபம் - தேவரீரைப்பற்றிச் செபிக்குஞ் செபமென்றும், சிந்திப்பது-(தேவரீரைப்பற்றி அடியேன்) நினைப்பன, எல்லாம் - எல்லாமும், நின் - தேவரீன், ஒப்பு - உவமை, இல் - இல்லாத, தியானம்-தியானம், என-என்றும், ஓர்ந்தேன்-ஆராய்ந்து அறிந்துகொண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'செப்புவது' இது சொல்வது என்னும் பொருளது. இது திசைச்சொல். இறைவனையன்றி ஒன்றில்லை யாதலின் 'செப்புவ தெல்லாம் செபம்' என்றார். நினைப்பும் நினைக்கப்படுபொருளும் இறைவன் ஆதலின் 'நான் சிந்திப்ப தெல்லா நின்னொப்பி றியானம்' என்றார். 'ஓர்ந்தேன்' இது தெளிந்தேன் என்னும் பொருளது. 119

**ஆரிருந்தென் ஆர்போயென் ஆரமுதா நின்னருளின்**
**சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே.**

(ப-ரை) சிவமே - மங்களகரனே!, ஆர் - யார், இருந்து-இருந்து, என்-என்னலாபம், ஆர் - யார், போய் - போய், என்-என்ன நஷ்டம், ஆர்-அரிய, அமுதாம் - அமிர்தமாகிய, உன் - தேவரீரின், அருளின்-திருவருளின், சீர்-பலம், இருந்தால்-இருக்குமேயானால், உய்வேன்-பிழைப்பேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'ஆர்' என்பன இரண்டும் 'யார்' என்பதன்போலி. இறைவனைத் தவிர்த்து மற்றையவர்கள் மரணவேதனையை, பிறவித் துன்பை அகற்ற முடியாது ஆதலின், 'ஆர் இருந்தென் யார் போய் என்' என்றார். இறைவன் அழிவில்லா நித்தியன் ஆதலின் 'ஆர் அமுதாம் நின் அருளின் சீர் இருந்தால்' என்றார். இறைவன் நித்தியன் தன் அடியானாகிய மார்க்கண்டற்காக எமனை உதைத்துக் கொன்ற காலகாலன் ஆதலின் 'நின்னருளின் சீரிருந்தால் உய்வேன்' என்றார். 120

**வஞ்சநமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கும்**
**அஞ்சி யுனையடைந்தேன் ஐயா பராபரமே.**

(ப-ரை) வஞ்ச-கபடமுடைய, நமன்-எமனினது, வாதனைக்கும் - தொந்தாவிற்கும், வன்-வலிய, பிறவி-பிறத்தலின், வேதனைக்கும்-கஷ்டத்திற்கும், அஞ்சி-பயந்து, உனை-தேவரீரை, அடைந்தேன்-தஞ்சமாகவிந்து சேர்ந்தேன், ஐயா-ஐயா!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மரணத்தை உண்டாக்கற்கு உரிய கபடங்களை எல்லாம் செய்தலின் 'வஞ்ச நமன்' என்றார். மாறாது தொடர்ந்துபற்றித் துன்பைச் செய்தலின் 'வன்பிறவி' என்றார். இறத்தற் றுன்பமும், பிறத்தற் றுன்பமும் சகித்தற்கு அரியதாக இருத்தலின் அஞ்சினேன் என்பார் 'அஞ்சி' என உரைத்தார். மரண பயத்தையும் பிறவித் துன்பத்தையும் போக்கி அருள் புரியத் தஞ்சமாக நினைச்சரண் அடைந்தேன் காத்தருள் என்பார் 'அஞ்சியுனையடைந்தேன் ஐயா' என்றார். 121

எந்தப் படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே.

(ப-ரை) உன்-தேவரீரின், இதயம் - திருவுள்ளம், எந்த-எந்த, படி-விதமாக, இருந்தது - இருந்தது, அந்த - அந்த, படி-விதமாகவே, எமக்கு - அடியோங்களுக்கு, வருவது-இன்பதுன்பங்கள் வருவது, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உயிர்களின் வினைகளுக்குத் தக்கபடி விருப்பு வெறுப்புக்களை ஊட்டுகின்றவன் இறைவன் ஆதலின் அடியேனின் கன்மத்திற்குத் தக்கபடி தேவரீரின் திருவுள்ளம் இருந்தது. அந்த விதமாகவே அடியேனுக்கு இன்பதுன்பங்களைத் தந்தருள்கின்றாய் என்பார் "எந்தப் படியுன் இதயம் இருந்தது" எனவும், அந்தப்படி வருவதன்றோ எனவும் கூறினார். அன்று ஓ-அசைகள், பொருளின்றி நின்றன. 122

எந்தெந்த நாளு மெனைப்பிரியா தென் னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.

(ப-ரை) எந்தெந்த - எந்த எந்த, நாளும்-காலத்தும், எனை-அடியேனை, பிரியாது-விட்டு நீங்காமல், என்-அடியேனின், உயிராய் - உயிர்க்கு உயிராய், சிந்தை - அடியேன் மனத்தில், குடி - குடியாக, கொண்ட - கொண்டிருந்த, அருள்-அருண்மயமாகிய, தேவே-தெய்வமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் அநாதியே ஆன்மாக்களை அருளால் காத்தருள அவ் ஆன்மாக்களுள்ளே புக்கிருக்கின்றானதலின் 'எந்தெந்த நாளும் எனைப் பிரியாது' என்றார். அடியேன் சிந்தையே கோயிலாக் கொண்டொளிர்வது அடியேன்மாட்டுவைத்த கருணையே என்பார் 'சிந்தைகுடி கொண்ட வருட் டேவே' என்றார். 123

அஞ்சலஞ்ச லென்றடிமைக் கப்போதைக் கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே.

(ப-ரை) அடிமைக்கு - தேவரீரின் அடிமையாகிய எனக்கு, அப்போதைக்கு - அப்பொழுதைக்கு, அப்போதே - அப்பொழுதே, அஞ்சல் - பயப்



படாதே, அஞ்சல்-பயப்படாதே, என்று-என்று, நெஞ்சில்-மனத்தினிடத்தே இருந்து, உணர்த்தும்-அறிவித்துக்கொண்டிருக்கும், நிறைவே-பரிபூரணமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அப்போதைக் கப்போதே என்றது - கர்மத்தால் துன்பம் அடையும், அக்காலங்களில் எல்லாம் அக்காலங்களில் எல்லாம் என்பதாம். 'அஞ்சல் அஞ்சல்' இது பொருணிலையால் அடுக்கிற்று. இறைவன் சர்வந்தரியாமியாய் சர்வவியாபகனாய் இருப்பவன் ஆதலின் 'நிறைவே' என்றார். 124

என்னையுன் றன் கைக்களித்தார் யாவர்என்னையான்கொடு
பின்னையுன்னாற் பெற்றநலம் பேசேன் பராபரமே.[த்துப்

(ப-ரை) என்னை - அடியேனை, உன்தன் - தேவரீரினுடைய, கைக்கு - கைக்கு, அளித்தார்-பிடித்துத் தந்தவர், யாவர்-யாவர்?, என்னை-அடியேனை, யான் - அடியேன், கொடுத்து-வலியக்கொடுத்து, பின்னை-பிறகு, உன்னால்-தேவரீரினால், பெற்ற-அடியேன் அடைந்த, நலம்-நன்மையை, பேசேன்-எடுத்துரைக்கும் ஆற்றல் இல்லாதவனாக இருக்கின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அடியேனை அநாதியே ஆட்கொண்டவன் தேவரீரே. தேவரீர் சர்வசக்தன். எல்லாம் தேவரீர் உடைமையே. அடியேனை தேவரீர் கைக்கு ஒருவர் தரவேண்டுமோ. தேவரீரே கொண்டதன்றோ என்பார் 'என்னையுன்றன் கைக்களித்தார் யாவர்?' என்றார். 'என்னையான் கொடுத்துப் பின்னை' என்றது இறைவன் குருமூர்த்தமாக வந்தருளிய ஞான உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தஞ் செய்தமையைக் குறிக்கின்றார். 125

வாய்பேசா வூமையென வைக்கவென்றோ நீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே.

(ப-ரை) வாய்-வாயினால், பேசா-பேசமுடியாத, ஊமை - ஊமை, என-என்று சொல்லும்படி, வைக்க-அடியேனை மௌனநிலையில் வைக்க, என்றோ-என்றோ, நீ-தேவரீர், மௌனம்-மௌனத்து, தாயாக-தாயாகி, வந்து-வந்து, அருளை-திருவருளை, தந்தாய்-அடியேனுக்குத் தந்தருளினாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வாய்பேசா ஊமை என்றது-உவமை. வாயினாற் பேசாமையால் ஊமையை ஒப்புக் கூறினார். ஊமையும் கையினாற் சாடைகாட்டுவன். ஆகையால் வாயாற் பேசாமைமட்டும் ஈங்கு உவமை இது ஏகதேசஉவமை. ஈண்டு மனம், வாக்கு, காயம் மூன்றும் தனக்கு செயலற்றிருக்கும் மௌனநிலையை குருமூர்த்தமாக்வந்து அருள்செய்த மௌனமூர்த்தியைக் குறித்துச் சொல்லியது. பக்குவம் அறிந்து இறைவனே ஆசாரியத் திருக்கோலத்துடன் வந்து அருள் செய்தமையின். வைக்க என்றது-மௌனநிலையில் வைக்க என்றதாம். தாயாக என்றது-தாய்போல என்னும் பொருது. ஈண்டு அன்பு பற்றி 'தாய்' என்றார். என்னை? தாயினும் அன்புடையார் இன்மையின் என்க. 126

**தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்**
**கென்னைக்கொண் டென்னபலன் எந்தாய் பராபரமே.**

(ப-ரை) எந்தாய்-எனது தந்தையே, தன்னை - தேவரீர் தன்னை, தந்து-அடியேனுக்கு ஆசாரியராகத்தந்து, என்னை-அடியேனை, தடுத்து-தடுத்து, ஆண்ட-ஆண்டுகொண்டருளிய, நின்-தேவரீரின், கருணைக்கு-திருஅருளுக்கு, என்னை-அடியேனை, கொண்டு-கொண்டு, என்ன - என்ன, பலன்-பிரயோசனம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்னைத்தந்து என்றது-தனக்கு ஆசாரியராகவந்து தன்னைக் கொடுத்தமையை. தன்னைத் தருதலாவது தன்மயமாக்குதல். சோகம்பாவனையால் இறைவனுந் தானும் ஒன்றாகி இறைவனாகி நிற்றல். இதுவே அத்துவிதநிலை. தடுத்தாட் கொள்ளலாவது என்றது - பிரபஞ்சமாயையிற் புகுந்துழலாது தடுத்து ஞானந்தந்து சிவானந்தப்பேறு தந்தருளியதைக் குறித்தது. 127

**மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்**
**பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.**

(ப-ரை) மார்க்கண்டர்க்கு - மார்க்கண்டேயரின் உயிர் கவருதல், ஆக-பொருட்டாகவந்த, மறலி-யமன், பட்ட-தேவரீரின் திருவடியால் உதைபட்ட, பாட்டை-துன்பத்தை, உன்னி-யோசித்து, பார்க்கின்-பார்த்தால், அன்பர்க்கு-தேவரீரின் அடியார்க்கு, என்ன - என்ன, பயம் - பயம் இருக்கிறது, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனே! மார்க்கண்டேயரின் உயிரைக் கவரவந்த யமன் பட்டபாட்டை ஆலோசித்துப் பார்த்தால் தேவரீரின் அடியார்களுக்கு என்ன பயம் இருக்கிறது என்கின்றார். 'காண்' அசைபொருளின்றி நின்றது. 128

**சுட்டியுண ராமற் றுரியநிலை யாய்வெளியில்**
**விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே.**

(ப-ரை) சுட்டி-முன்னிலைச் சுட்டால், உணராமல்-அறியாதபடி, துரிய நிலை-துரியநிலையாகிய, அ - அந்த, வெளியில் - சிதாகாசத்தில், விட்ட அடியேனைக் கொண்டுபோய் வைத்த, நின்னை-தேவரீரை, யானோ-அடியேனோ?, வியப்பேன்-புகழவல்லேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சுட்டி உணராமல் என்றது - பிரபஞ்சத்தைச் சுட்டியறியும் அறிவு. துரியநிலை என்றது - இரவு பகலற்ற சுத்த இடத்தை. இது நாலாவதுநிலை. வெளி என்றது - சிதாகாசத்தை. 'யானோ' என்றதன் ஈற்று ஓகாரம் எதிர்மறை ஓகாரம். அடியேன் புகழுந்தரமன்று பெருஞானிகளே புகழத்தக்கவர் என்பதாம். 129

**சூதொன்று மின்றியென்னைச் சும்மா விருக்கவைத்தாய்**
**ஈதொன்றும் போதாதோ இன்பம் பராபரமே.**



(ப-ரை) சூது - (பிரபஞ்சமூகமாக) வஞ்சகம், ஒன்றும் - ஒருசிறிதும், இன்றி-இல்லாமல், என்னை-அடியேனை, சும்மா-மவுனநிலையில், இருக்க-இருக்கும்படி, வைத்தாய் - வைத்தருளினை, இன்பம் - இன்பம் அடைதற்கு, ஈது-இது, ஒன்றும்-ஒன்றுமே, போதாதோ-போதாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சூது என்றது - பிரபஞ்சத்து மாயாசம்பந்தமாகவரும் கபடங்களை. சும்மா இருக்கவைத்தாய் என்றது - மௌனதேசிகராகவந்து சும்மா இருக்க உபதேசித்ததைக் கூறியருளுகின்றார். சும்மா இருக்க என்றது-திரிகரணங்களும் மௌனமுற்றிருக்கும் நிலையை. 'ஈது' இது 'இது' என்னும் சுட்டு ஆதி நீண்டுநின்றது. இன்பம் என்றது-சிவானந்தப் பேரின்பத்தை. 130

**வாயொன்றும் பேசா மௌனியாய் வந்தாண்ட**
**தேயொன்றும் போதாதோ வின்பம் பராபரமே.**

(ப-ரை) வாய்-வாய், ஒன்றும் - கொஞ்சமும், பேசா-பேசாத, மௌனியாய்-மவுனமூர்த்தியாக, வந்து - எழுந்தருளிவந்து, ஆண்டதே - ஆட்கொண்டதே, ஒன்றும் - அது ஒன்றும், இன்பம் - இன்பந்தருதற்கு, போதாதோ-பற்றாதோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'வாயொன்றும் பேசாத' இது சிறிதும் வாய்பேசாத என்ற பொருளது. ஈண்டு ஒன்றும் என்பது ஒருசிறிதும் என்னும் பொருள் தந்தமை காண்க. மௌனியாய் வந்தாண்ட என்றது குருவாக வந்தாண்டதைக் குறிக்கின்றது. 'இது ஒன்றும் போதாதோ' என்றது விடைதழுவிய வினா. இது ஒன்றே அமையும் என்னும் பொருளது. 131

**என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த**
**தொன்றும்போ தாதோ உரையாய் பராபரமே.**

(ப-ரை) என்றும் - எக்காலத்தும், இருந்தபடி - அடியேன் இருந்தவிதமாகவே, என்னை-அடியேனை, எனக்கு-அடியேனுக்கு, அளித்த-ஆனந்தானுபவத்தை அனுபவிக்க தந்தருளியது, ஒன்றும்-ஒருசெயலுமே, போதாதோ-அமையாதோ, உரையாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்றும் என்றது - நித்தியமாக என்றதாம்; என்னை? முத்தி நித்தியமாதலில் என்க. இருந்தபடி என்றது - விடயங்களுக்கு ஆளாகாமல் என்பதாம். அளித்த ஒன்றும் என்றது - மௌனானந்த உபதேசத்தை. 'போதாதோ' இது விடைதழுவிய வினா; போதியது ஆகும் என்பது பொருளாம். உரையாய் - இது முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று. 132

**எண்டிசைக்கீழ் மேலான வெல்லாம் பெருவெளியாக்**
**கண்டவிடத் தென்னையுநான் கண்டேன் பராபரமே.**

(ப-ரை) எண்-எட்டு, திசை-திக்குகளும், கீழ்-கீழேயுள்ளதாகிய பூமியும், மேல் - மேலேயுள்ளதாகிய ஆகாயமும், எல்லாம் - எல்லாம், பெரு - பெரிய, வெளியா-சிதாகாயமாக, கண்ட - பார்த்த, இடத்து - இடத்தே, என்னையும்-தேவரீருடன் அடியேனையும் அத்துவிதமாகக் கலந்திருக்க, கண்டேன்-அடியேன் பார்த்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) முன்னிலைச்சுட்டு ஒழிந்து எல்லாம் பெருவெளியாகத் தோன்றிய இடத்தே இறைவனையன்றி ஒன்றையுங் காணமையாலும், அவ் இறைவனுடனே தான் அபேதமாகக் கலந்திருந்தமையால் 'எல்லாம் பெருவெளியாக் கண்டவிடத்தே என்னையும் கண்டேன்' என்றார். தேவரீருடன் அபேதமாக என்னையுங் கண்டேன் என 'தேவரீருடன் அபேதமாக' என்னுஞ் சொற்கள் அவாய்நிலையால் வருவித்து உரைக்கப்பட்டது. 133

பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட மிடுவேன் பராபரமே.

(ப-ரை) பித்தனை-பித்துக்கொண்டவனாகிய அடியேனை, ஏதும் - உலக சம்பந்தமாகிய எதுவும், அறியா - அறியாத, பேதையனை - அறிவிலியாகிய அடியேனையும், ஆண்ட - ஆட்கொண்ட, உனக்கு - தேவரீருக்கு, எத்தனை தான்-எத்தனைதான், தெண்டம் - நமஸ்காரம், இடுவேன் - செய்வேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பிரபஞ்சமாயையிற் சிக்குண்டு பித்துப் பிடித்திருப்பவன் என்பார் 'பித்தனை' என்றார். இனி, தேவரீரிடத்துப் பித்துக்கொண்டிருக்கும் அடியேனை என்பாரும் உண்டு. ஏதும் அறியா என்றது-உலக சம்பந்தமாகிய எதுவும் என்பது பொருளாம். இனி, விவேகம் என்பது எதுவும் அறியாத என்பாரும் உளர். 134

தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளும்
நேயஉனை யாரே நினையார் பராபரமே.

(ப-ரை) தாயர் - தாய்மார்களின், கர்ப்பத்து - கர்ப்பப்பையின், ஊடே - உள்ளே (வாழுங்காலத்தும்), அனமும்-அன்னமும் (உணவும்), தண்-குளிர்ந்த, நீரும்-நீரும், தந்து-கொடுத்து, அருளும்-அருள்செய்கின்ற, நேய-அன்புடைய தேவரீரே, உனை - தேவரீரை, யாரே - எவர்தான், நினையார் - நினையாதவர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் கருவில் இருக்கும் உயிர்க்கும் உணவு தருபவன் ஆதலின், 'தாயர் கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளும் நேய'என்றார். 'அனமும்' இது அன்னமும் என்பதன் தொகுத்தல் விகாரம். 'யாரே நினையார்' என்ற வினாவால் எல்லோரும் நினைவர் என்பது பொருளாம். தேவரீரை நினையாதவர் ஒருவரு மிலர் என்றதாயிற்று. 135

விரிந்த மனமொடுங்கும் வேளையினா னாகப்
பரந்த வருள்வாழி பதியே பராபரமே.

(ப-ரை) பதியே-கடவுளே!, விரிந்த-பிரபஞ்சவழியில் பரவிக்கிடக்கின்ற, மனம்-அடியேனின் மனம், ஒடுங்கும்-குவியும், வேளையில்-சமயத்தில், நான்-நான், ஆக-என்று முந்திவந்தருளிய, பரந்த-விரிந்த, அருள்-தேவரீரின் திருவருள், வாழி-வாழ்ந்திருப்பதாக, பராபரமே!—, எ-று.



(வி-ரை) விரிந்த மனம் என்றது - பிரபஞ்சத்தின் முகமாகப் பரவியிருக்கும் மனம் என்பது பொருளாம். ஒடுங்கும் வேளை என்றது - பகிர்முகத்தினின்றும் நீங்கி அதோமுகப்பட்டு குவிந்து ஒடுங்குங்காலத்து என்பது பொருளாம். நானாகப் பரந்த வருள் என்றது - நானென்று முந்திவந்த தேவரீரின் பரந்த அருள் என்பதாம். இனி, அத்துவித நிலையில் நானே நீயாக, நீயே நானாகப் பரந்த தேவரீரின் திருவருள் எனக் கூறுவதுமாம். ()

சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மாம
வந்து பொழிந்தனை நீ வாழி பராபரமே. [ழையை

(ப-ரை) சிந்தனை - பகிர்முகவிஷயங்களை நினைத்தல், போய் - ஒழிந்து, நான்-நான், எனல் - என்னும் அகங்காரத்தடிப்பு, போய் - ஒழிந்து, தேக்க-ததும்ப, இன்ப-சிவானந்தமாகிய, மா-பெரிய, மழை-மழையை, வந்து-வந்து, பொழிந்தனை - சொரிந்தருளினை, நீ - அப்படிப்பட்டதேவரீர், வாழி-வாழி, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பகிர்முகப்பட்டு பிரபஞ்சமுகமாகத் திரும்பி பிரபஞ்சவிஷயமாகிய எண்ணங்கள் நீங்க என்பார் 'சிந்தனைபோய்' என்றார். 'நான்' என்கின்ற அகங்காரத்தடிப்பு அகன்றோடியவர்களுக்கே சிவானந்தம் பெருகுமாதலின் 'நான் எனல் போய்' என்றார். குறைவிலாத பரிபூரண சிவானந்த இன்பம் வழிந்தொழுக என்பார் 'தேக்க இன்பம்' என்றார். 137

தந்தேனே ஓர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே என்றனை நீ வாழி பராபரமே.

(ப-ரை) ஓர்-ஒப்பற்ற, வசனம்-சித்தாந்த மகாவாக்கியத்தை, தந்தேனே-உபதேசித்தருளினேனே, தந்தபடி-அவ்வாறு உபதேசித்தருளியபடி, இன்பமும்-இன்பவடிவோடும், வந்தேனே - வந்தருளினேனே, என்றனை - என்று திருவாய்மலர்ந்தருளினை, நீ-அவ்வாறு கூறியருளிய தேவரீர், வாழி-வாழி, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'ஓர்' ஈண்டு ஒப்பு உயர்வு அற்ற என்ற பொருளதாம். வசனம் என்றது - ஞானோபதேசத்தை. அது "சும்மா இருக்கச் சுகம்" என்னும் சித்தாந்த மகாவாக்கியம். தந்தபடிக் கின்பமுமாய் வந்தது என்றது - சிவானந்தப் பெருஞ்சோதியாகக் காட்சிதந்தருளியதைக் குறிக்கின்றது. தந்தேனே, வந்தேனே என்றதன்கண் உள்ள ஈற்று ஏகாரங்கள் தேற்றப் பொருளில் வந்தன. 138

மண்ணும்விண் ணும் வந்து வணங்காவோ நின்னருளை
கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற் பராபரமே. [க்

(ப-ரை) நின்-தேவரீரின், அருளை-திருவருளை, கண்ணுற-பிரத்தியட்சமாக, உள்-உள்ளத்துள்ளே, கண்டவரை - கண்டவர்களை, கண்டால்-தரிசித்தால், மண்ணும் - மண்ணுலகத்தவரும், விண்ணும் - விண்ணுலகத்தவரும், வந்து-வந்து, வணங்காவோ-வணங்கமாட்டாரோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நின் என்றது - இறைவனை. அருளை என்றது-திருஅருளை. இறைவனைக் கண்ணுற்கண்டவர் கடவுள் மயமானவர் ஆதலின் மண்ணுலகத்தவரும் விண்ணுலகத்தவரும் வணங்குவர் என்பதாம். 'மண்ணும் விண்ணும்' இடஆகுபெயர்களாகி மண்ணுலகத்தவரையும் விண்ணுலகத்தவரையும் குறித்து நின்றது. இதன்கண் உள்ள உம்மைகள் இரண்டும் எண்ணும்மைகள். உன் கண்டவர் என்றது-அந்தர்முகத்தே இறைவனைக் கண்டவர்களை.

என்றுங் கருணைபெற்ற வின்பத் தபோதனர்சொல்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும் பராபரமே.

(ப-ரை) என்றும் - எந்தக்காலத்தும், கருணை - தேவரீரின் கருணையை, பெற்ற-அடைந்து விளங்கிய, இன்பம்-சிவானந்தத்தோடு கூடிய, தபோதனர்-தவமுடையோர்களின், சொல்-திருவாக்கானது, சென்ற - போன, சென்ற-போன, திக்கு-திசைகள், அனைத்தும் - எல்லாம், செல்லும் - செல்வாக்கடையும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்றும் என்றது-இறப்பு, எதிர்வு, நிகழ்வு, எனும் முக்காலங்களையுங் குறித்தது. கருணை என்றது - இறைவன் திருஅருளை. இன்பத் தபோதனர் என்றது-சிவானந்தச் சொரூபமாக விளங்கும் தவத்தை உடையோர்களை. 'சென்ற சென்ற' இது மிகுதிக்கண் அடுக்கிவந்தது. திசையனைத்தும் என்றது-எல்லாத் திக்குகளிலும் என்னும் பொருளது. செல்லும் என்றது-செல்வாக்குறுதலை. 140

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே.

(ப-ரை) ஆடுவதும் - ஆனந்தத்தாலே தன்னைமறந்து ஆடுவதும், பாடுவதும் - அன்புமயமாக இருந்து தேவரீரைப் பாடுவதும், ஆனந்தம் - (தலங்களெல்லாஞ்சென்று) ஆனந்தத்துடனே, ஆக-ஆக, தேடுவதும் - தேவரீரைத் தேடுவதும், நின்-தேவரீரின், அடியார்-அடியார்களின், செய்கை-செய்கைகளாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆடுவதும், பாடுவதும், தேடுவதும் என்றதன்கண் நின்ற ஈற்று உம்மைகள் எண் உம்மைகள். ஆடுவது என்றது - ஆனந்தத்தாலே தன்னைமறந்து கூத்தாடுவதைக் குறித்தது. பாடுவது என்றது - அன்பால் மனம் உருகிப் பண் பாடுவதைக் குறித்தது. தேடுவது என்றது - தலங்கடோறும் தலங்கடோறும் சென்று இறைவன் தரிசனத்திற்காகத் தேடுதலைக் குறித்தது. நின் என்றது-இறைவனை. அடியார் என்றது-உள்ளன்புடைய தொண்டர்களை. 141

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே.

(ப-ரை) பொங்கிய - ததும்பி வழியப்பெற்ற, நின் - தேவரீரின், தண்-குளிர்ந்த, அருளை - திருவருளை, புட்கலமா - பூரணமாக, பெற்றவர்கட்கு-



அடைந்தவர்களுக்கு, ஞாயிறு - சூரியன், எங்கு - கிழக்குத்திசையைவிட்டு எந்தத் திசையிலாயினும், எழுந்து-உதித்ததனால், என்-என்ன ஆகும், இயம்பாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சூரியன் முதலிய கோள்கள் தமக்கு உரிய திசையை மாறி வேறு திசையிலுதித்தாலும் அடங்கினாலும் உலகுக்கு உற்பாதம் என்பர். உற்பாதங்கள் இறைவன் திருவருளைப் பெற்றோரை எதுஞ்செய வல்லது அல்லவாதலின் 'நின்தண் ணருளைப் புட்கலமாப் பெற்றவர்கட்கு எங்கெழுந் தென்ஞாயிறு' என்றார். 142

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே.

(ப-ரை) பாலரொடு - பாலகர்களுடன், பேயர் - பேய்பிடித்தவர்களும், பித்தர் - பித்துப்பிடித்தவர்களும் ஆகிய இவர்களின், பான்மை - குணத்தை, எனநிற்பது-என்று ஒத்திருத்தல், சீலம்-ஒழுக்கம், மிகு-மிகுந்த, ஞானியர்தம்-ஞானியர்களுடைய, செய்கை-செயலாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிவஞானிகள் எதனையும் விகற்பமாகக் காணாது நிர்விகற்பமாகக் காணலால் 'பாலர்' எனவும், சிவஞானிகள் ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம் என்பனவாதி அற்று இருத்தலின் 'பேயர்' எனவும், சிவஞானிகள் வைதாரையும் வாழ்த்தினாரையும் சுட்டி யறியாமையால் 'பித்தர்' எனவும், ஞானியர்க்கு உவமை கூறினர். சீலம் என்றது-துறவற நல்லொழுக்கத்தை.

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர் விளையாட்டே சுகங்காண் பராபரமே.

(ப-ரை) உண்டு-அன்னபானாதிகளை உண்டும், உடுத்து-ஆடை முதலியவைகளை உடுத்தும், பூண்டு - ஆபரணாதிகளைப் பூண்டும், இங்கு - இப் பிரபஞ்சத்தினிடத்தே, உலகத்தார் - உலகத்தவர்கள், போல் - போல, திரியும்-திரிகின்ற, தொண்டர் விளையாட்டே - தேவரீரின் திருத்தொண்டர்களின் திருவிளையாட்டே, சுகம்-அடியேனுக்கு இன்பந்தருவதாக இருக்கின்றது, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிவஞானியர் புளியம்பழமும் ஓடும்போல உலகத்தவரோடு உண்டு, உடுத்துத்திரிவர். அவர் மனம் பற்றற்றுநிற்கும். இறைவனையே பற்றிநிற்கும் ஆதலின் 'உண்டுடுத்துப் ... ... றிரியுந்தொண்டர்' என்றார். "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்றதிருவாக்கின்படி இஞ்ஞானியர்களையும் திருவிளையாட்டைக் காண்பதுவும் இன்பந்தருவதாக இருக்கின்றதென்பார் 'தொண்டர்விளையாட்டே சுகம்காண்' என்றார். 'காண்' அசை; பொருளின்றி நின்றது. 144

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே எந்தாய் பராபரமே.

(ப-ரை) கங்குல் - இரவும், பகல் - பகலும், அற்ற - நீங்கிய, திரு-திரு, காட்சியர்கள் - சுகோதய தரிசனமுடையார்கள், கண்டவழி - கண்டநெறி,

எங்கும்-எந்த இடத்தும், ஒரு-ஒரு, வழியே-நெறியேயாகும், எந்தாய் - எமது தந்தையே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கங்குல் பகல் அற்ற திருக்காட்சி என்றது-நினைப்பும், மறப்பும் இல்லாத காட்சியை. இதுவே சுகோதயக் காட்சியாம். திருக்காட்சியர் என்றது-சிவஞானியர்களை. கண்டவழி என்றது-சித்தாந்த வழியை. எங்கும் ஒருவழியே என்றது - எல்லா மார்க்கத்துக்கும் மேலானதாகிய ராஜபாட்டையாக நிற்பது; இவ் ஒருவழியே என்பதாம். 145

**காயநிலை யல்லவென்று காண்பா ருறங்குவரோ**
**தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே.**

(ப-ரை) காயம் - இந்தச் சரீரம், நிலை - நிலையுடையது, அல்ல - அல்ல, என்று - என்று, காண்பார் - விசாரித்து அறிபவர், உறங்குவரோ - நித்திரை செய்வாரோ? (பின் என் செய்வர் எனின்), தூய - பரிசுத்தம் பொருந்திய, அருள் - திருவருளை, பற்று - பற்றுக்கோடாக, தொடர்வார் - தொடர்வார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) காயம் அற்றதாகிய இவ்வுடலைக் 'காயம்' என்றது மங்கல வழக்கு; (காயம்-நிலை) இந்தச் சரீரம் காயசித்திகளால் எத்தனைகாலம் இருக்கினும் ஒருகாலத்து அழியும் ஆதலால் 'காயம் நிலையல்ல வென்று காண்பார்' என்றார். காண்பார் என்றது-அநுபவரூபமாக விசாரித்துப் பார்த்தவர்கள் என்பதாம். உறங்குவரோ என்றது விடைதழுவிய வினா; உறங்கார் என்பது பொருளாம். தூய அருள் - இறைவன் திருஅருள். 146

**அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்தமக்**
**கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே.**

(ப-ரை) அப்பும்-நீரும், உப்பும் - அதனுடன் கலந்த உப்பும், போன்ற-ஒத்த, அயிக்யம் - சாயுச்சியபதவியாகிய, பரம் - மேலான, ஆனந்தர் - ஆனந்தத்தை உடையவர்கள், தமக்கு-தமக்கு, ஒப்பு - சமமாகவும், உவமை - உவமித்தும், சொல்லவும்-கூறுவதற்கும், வாய்-வாய், உண்டோ - இருக்கிறதோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நீரில் உப்பு கலக்கப்பெற்றால் உப்பின் குணம் முற்றும் நீர்க்காகும்; அபேதமாக நீரும் உப்பும்கலக்கும். அது முன்னிருந்த அளவே நீர் இருக்கும். அதுபோல ஜீவான்மாவும் பரமான்மாவுங் கலந்தபொழுது இறைவன் குணம் முழுதும் ஆன்மாவுக்கு ஆகி ஜீவான்மா பரமான்மா இரண்டும் அபேதமாய் நிற்கும். இதுகொண்டே சாயுச்சியத்தை அடைந்தார் என்பார் 'அப்புமுப்பும் போன்ற வயிக்யபரானந்தர்' என்றார். 147

**சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்**
**கொத்தடிமை யான குடிநான் பராபரமே.**

(ப-ரை) சித்தம்-மனம், தெளிந்து-தெளிவடைந்து, சிவம் - (சிவோகம் பாவனையால்) சிவமாந்தன்மை, ஆனோர் - அடைந்தோர், எல்லோர்க்கும்-எல்



லோருக்கும், நான்-அடியேன், கொத்து - கூட்டத்தோடு, அடிமை-அடிமை, ஆன-ஆகிய, குடி-குடி, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சித்தந்தெளிந்து என்றது - பிரபஞ்ச சம்பந்தமான மாயா பாசங்கள் நீங்கி மெய்ஞ்ஞானம் பெற்றுத் தெளிவடைந்து நிற்கு நிலையை. சிவம் ஆனோர் என்றது-அந்தர்முகத்தே இறைவனைத் தரிசித்துச் சிவானந்த போகத்தில் மூழ்கி சிவோகம்பாவனையால் சிவமாகி நின்ற நிலையினரை. அத்துவிதக் கலப்பற்று நிற்பவரை எனினும் ஆம். கொத்தடிமை என்றது-வழிவழி குலத்தோடடிமை என்பதாம். 148

**தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்**
**செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே.**

(ப-ரை) தம் - தம்முடைய, உயிர் - உயிரை, போல்-போலவே, எ-எந்த, உயிரும் - உயிர்களும், தான் - தான், என்று-என்று எண்ணி, தண்-தண்ணிய, அருள்-அருள் (கிருபை), கூர்-மிகுந்த, செம்மையருக்கு-செம்மை உடையவர்களுக்கு, ஏவல் - ஏவற்றொழிலை, என்று - எக்காலத்தே, செய்வேன்-செய்பவனேவேன், பராபரமே!—, எ-று

(வி-ரை) 'தண்ணருள் கூர்தலாவது' அவ்வுயிர்கள் துன்புறக்கண்டால் பரிந்து சென்று அவ்வுயிர்களின் துன்பங்களைத் துடைத்தல். பிறவுயிர்களிடம் இரக்கங்காட்டும் கருணையாளர் செவ்வியராதலின் 'செம்மையர்' என்றார். 149

**விண்ணுக்கும் விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை**
**பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே.**

(ப-ரை) விண்ணுக்கும்-ஆகாசத்திற்கும், விண்ணாகி-ஆகாசமாகி, மேவும்-பொருந்துகின்ற, உனக்கு - தேவரீருக்கு, யான் - அடியேன், பூசை - பூஜை, பண்ணி - செய்து, நிற்கும் - நிற்கும், ஆறு-வழியை, பகராய்-அடியேனுக்குச் சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) விண்ணுக்கும் விண்ணாகி என்றது-பூதசம்பந்தமாகிய ஆகாயத்திற்கும் காரணமாகிய 'சிதாகாசமாகி' என்றதாம். பூசை என்றது - ஈண்டு அந்தர்யாமி பூசையை. அவனருளாலே அவன்றாள் வணங்கவேண்டி யிருத்தலின் 'பூசைபண்ணி நிற்குமாறு பகராய்' என்றார். 150

**நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே**
**மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே.**

(ப-ரை) நெஞ்சு - அடியேனுடைய மனமாகிய, அகமே - உள்ளிடமே, கோயில்-கோயிலாகவும், நினைவே - அடியேனினுடைய எண்ணமே, சு-நல்ல, கந்தம்-வாசனைத்திரவியமாகவும், அன்பே-அடியேனின் அன்பே, மஞ்சனம்-திருமஞ்சனம், நீர் - நீராகவும், பூசை - அடியேன் செய்கின்ற பூசையை, கொள்ள-ஏற்றுக்கொள்ள, வாராய்-வந்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் அடியார் நெஞ்சிடமே கோயிலாக வாழ்பவன் ஆதலின் 'நெஞ்சகமே கோயில்' என்றார். இறைவனைப்பற்றிச் சிந்தித்தலை மஞ்சனத் திரவியமாகக் குறிப்பார் 'நினைவே சுகந்தம்' என்றார். அன்பை திருமஞ்சன நீராகக் குறிப்பிப்பார் 'அன்பே மஞ்சனநீர்' என்றார். 'அன்பே' என்றதில் ஈற்று ஏகாரம் தேற்றம். 151

**கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான**
**சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே.**

(ப-ரை) கெட்ட - தீயதாகிய, வழி - நெறியிற் செலுத்தும், ஆணவம் - ஆணவமலமாகிய, பேய் - பேய், கீழாக - கெடுமாறு, மேல் - மேன்மை, ஆன - ஆகிய, சிட்டர்-பெரியோர்கள், உனை - தேவரீரை, பூசை-பூஜை, செய்வார் - செய்வார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆணவமலம் பேய்போற் பற்றித் தான் பற்றியவர்களை வருத்துதலினாலும், பிரபஞ்சப்பற்றைப்பண்ணிப் பிறப்பிறப்பை உண்டாக்குதலினாலும் 'கெட்டவழி யாணவப்பேய்' என்றார். மேலான சிட்டர் என்றது-ஞானத்தால் சிறந்த பெரியோர்களை. ஞானிகள் ஆணவமலத்தை வென்று அதனை அடக்கி உயர்தலின் 'ஆணவப்பேய் கீழாக மேலான சிட்டர்' என்றார். ஞானிகளே அந்தர்யாமி பூசைசெய்வர் ஆதலினாலும், அந்தர்யாமி பூசை புரியப்புரிய ஆணவமலம் அறும் ஆதலினாலும் 'சிட்டருனைப் பூசைசெய்வார்' என்றார். 152

**கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்**
**மேலெழுப்பில் தேகம் விழுமோ பராபரமே.**

(ப-ரை) கால் - பிராணவாயுவை, பிடித்து - உள்ளடக்கி, மூலம் - மூலாதாரத்துள்ள, கனலை - நெருப்பை, மதி-சந்திரனின், மண்டலத்தின்-சந்திரமண்டலத்தின், மேல் - மேலே, எழுப்பில்-தாக்கும்படி எழுப்பினால், தேகம் - இச்சரீரம், விழுமோ-நழுவுமோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கால் என்றது - மூக்கின் வழியாக வரும் பிராணக்காற்றை. மூலக்கனல் என்றது-மூலாதாரத்துள்ள ஜீவாக்கினியை. மதிமண்டலத்தில் மேல் எழுப்பில் என்றது - ஆஞ்ஞையின்மே லுள்ளதாகிய சந்திரமண்டலத்தில். மேல் எழுப்பில் என்றது - சந்திரமண்டத்தின் மேல்தாக்கும்படிக் கிளப்புதலை. மூலாதாரத்து அக்கினியை ஆஞ்ஞையின்மே லுள்ளதாகிய சந்திரமண்டலத்தில் தாக்கும்படி எழுப்பினால் அங்கு அமுததாரை கொப்பளித்தெழும்; அதனை உண்டு யோகியர் நெடுங்காலம் தேகம் விழாது காப்பாற்றிக்கொள்வர் என்னும் யோகசாதனத்தை ஈண்டு கூறினர். 153

**பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்**
**விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே.**

(ப-ரை) பஞ்ச - ஐந்துவிதமாகிய, சுத்தி சுத்திகளை, செய்து-பண்ணி, நின்னை-தேவரீரை, பாவித்து-பாவனைபண்ணி, பூசை-பூஜையை, செய்தால் - செய்யின், விஞ்சிய - மேலாகிய, ஞானம் - ஞானம், விளங்கும்-பிரகாசிக்கும், பராபரமே!—, எ-று.



(வி-ரை) பஞ்சசுத்திகளாவன:—1-பூதசுத்தி. 2-காயசுத்தி. 3-திரவிய சுத்தி. 4-ஆன்மசுத்தி. 5-மந்திரசுத்தி என்பனவாம். பாவித்து என்றது-சகளரூபமாகக் கொண்டு என்பதாம். பூசை செய்தால் என்றது - சிவாகம விதிப்படி சிவபூசை செய்தால் என்பதாம். விஞ்சிய ஞானம் என்றது-சிவஞானத்தை. 'விளங்குதலாவது' உதித்துப் பிரகாசித்தலை. நின்னை என்றது - சிவபெருமானை. 154

**அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால்**
**இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே.**

(ப-ரை) அன்பர் - சிவனடியார்களுக்கு, பணி - தொண்டு, செய்ய-செய்யும்படி, எனை-அடியேனை, ஆள்-அடிமை, ஆக்கி-ஆக்கி, விட்டால்-விட்டுவிட்டால், இன்பம்-சிவானந்தத்தின், நிலை-நிலையானது, தானே-தனக்குத்தானே, வந்து-வந்து, எய்தும்-சேரும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அன்பர் என்றது சிவபெருமானிடத்து அன்பு உடைய அடியார்களை. பணி என்றது-அவ் அடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டை. ஆள் ஆக்கல் என்றது-அடிமையாக்குதல். இன்பம் என்றது-சிவானந்தத்தை. தானே வந்தெய்தும் என்றது-வேறு முயற்சி எதுவும் இன்றி சிரமமின்றி அது தனக்குத்தானே வந்துசேரும் என்பதாம். 155

**மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்**
**வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.**

(ப-ரை) மூர்த்தி - சிவபெருமான் மூர்த்தங்களையும், தலம் - புண்ணியத் தலங்களையும், தீர்த்தம் - புண்ணிய தீர்த்தங்களையும், முறையால்-ஒழுங்காக, தொடங்கினர்க்கு-தரிசிக்கத் தொடங்கினவர்களுக்கு, ஓர்-ஒப்புயர்வு இல்லாத, வார்த்தை - ஞானோபதேச வார்த்தையை, சொல - உபதேசிக்க, சற்குருவும்-மேலான குருமூர்த்தியும், வாய்க்கும்-வந்து வாய்ப்பர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மூர்த்தி என்றது - சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள் செய்தற்பொருட்டு கொண்ட திருக்கோலங்கள். தலம் என்றது-அம்மூர்த்தங்கள் எழுந்தருளி இருக்கும் தலங்களை. தீர்த்தம் என்றது-திருத்தலங்களில் உள்ள தெய்வீக வாவி முதலியவைகளை. முறையால் தொடங்கினர்க்கு என்றது-தலங்களைச்சென்று ஆங்கு வசித்தலும், மூர்த்திகளைத் தரிசித்தலும், தீர்த்தங்களிற் படிதலுமாம். ஓர் வார்த்தை என்றது - ஒப்பற்ற சித்தாந்த மகாவாக்கியத்தை. 156

**விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்**
**அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே.**

(ப-ரை) விரும்பும் - விரும்பப்படுவதாகிய, சரியை-சரியை, முதல்-முதலாக, மெய்-உண்மையாகிய, ஞானம்-ஞானம் ஈறாக உள்ள, நான்கும்-நான்கும், அரும்பு - அரும்பும், மலர் - மலரும், காய் - காயும், கனி-கனியையும், போல்-போல, அன்றோ-அல்லவோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) விரும்பும் என்றது - முத்தியையடையவிரும்பிய நல்லோர்கள் அம்முத்தியைப் பெறற்கு விரும்பிச்செய்யும் என்னும் பொருளதாம். சரியை - கோயிற்குச் செல்லல் அலகிடல் முதலியன. கிரியை - அனுட்டான விதிப்படி ஆகமப்படி மூர்த்தியை மந்திரபூர்வமாகப் பூசித்தல். யோகம்-நிட்டைகூடி இருத்தல். மெய்ஞ்ஞானம் என்றது - தத்துவாதீத ஞானத்தை உணர்தல். இவை நான்கும் முறையே சோபானக்கிரமம் என்பார் 'அரும்பு மலர் காய் கனிபோல் அன்றோ' என்றார். 157

**தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ**
**ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே.**

(ப-ரை) நல்லோர்-நல்லவர்கள், தானம் - தானத்தையும், தவம் - தவத்தையும், தருமம் - தருமத்தையும், சந்ததமும் - எப்போதும், சிவஞானம்-சிவஞானத்தை, அணைய - அடைய, செய்வர் - (முயற்சி) செய்வார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தானம் என்றது - சற்பாத்திரம் அறிந்து பொன், பசு, பூமி முதலியவற்றைத் தருதல். 'தவம்' - இது கருவி கரணங்களை அடக்கி இறைவனையே சிந்தித்து நிட்டைகூடி நிற்றல். தருமம் என்றது - இல்லார்க்கும், இரப்பவர்க்கும் பொருள் முதலியவற்றைத் தருதல் முதலிய முப்பத்திரண்டு அறங்களைச் செய்தல். சிவஞானம் என்றது-சிவானந்தம் பெறுதற்காக அடையவேண்டிய சிவஞானம். நல்லோர் என்றது-சிவனடியார்களை.

**சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற ஆணவப்பேய்க்**
**கின்னல் வருவதெந்நாள் எந்தாய் பராபரமே.**

(ப-ரை) எந்தாய்-எமது தந்தையே!, சொன்னத்தை - ஒருமுறை சொல்லின சொல்லையே, சொல்லி - பலமுறை சொல்லி, துடிக்கின்ற - துடிதுடிக்கின்ற, ஆணவம்-ஆணவமாகிய, பேய்-பேய்க்கு, இன்னல்-துன்பம், வருவது-வருவது, எ-எந்த, நாள்-நாளோ!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நான் என்னும் அகங்காரத்தவம் கொண்டவற்கே கோபம் பிறக்கும். அகங்காரம் எனினும் ஆணவம் எனினும் ஒன்றே. இந்த ஆணவப்பேயாற் பீடிக்கப்பெற்றவர் தான் சொல்லியதையே கோபாவேசத்தால் பன்முறையுஞ் சொல்லிச் சாதிப்பர். 'மூர்க்கரும் முதலையுங் கொண்டது விடா அன்றோ?' எனக் கூறியுள்ளார். துடித்தல் என்றது-மனமும் உடலும் துடித்தலை. இது கோபத்தின் சேட்டை மெய்ப்பாடுகள். 159

**இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ**
**அன்றே விளைந்ததன்றோ ஆற்றேன் பராபரமே.**

(ப-ரை) இரு - இரண்டாகிய, வினை - நல்வினையுந் தீவினையும், வந்து-வந்து, ஏறியது-அடியேனிடங்கூடியது, இன்றோ-இன்றுதானோ?, (அவ்விதமன்று) நான்-அடியேன், என்றோ - எப்பொழுது உண்டோ, அன்றே - அப்பொழுதே; அன்றோ - அல்லவோ, விளைந்தது - உண்டாயது, அன்றோ-



அல்லவோ, ஆற்றேன் - அடியேன் இவ்வினைகளைத் தாங்கமுடியாதவனாக இருக்கின்றேன், பராபரமே!—, எ-று.

(வி - ரை) இருவினை என்றது - நல்வினை தீவினைகளை. 'இன்றோ' 'என்றோ' 'அன்றோ அன்றோ' இவைகளின் ஈற்று ஓகாரங்கள் வினாப்பொருளில் வந்த இடைச்சொல். 'அன்றே' என்றதன் ஈற்று ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. 'ஆற்றேன்' என்றது என்னால் சகிக்கமுடியாது நீ அடியேனை வினைகளினின்றுங் காத்தருள் என்றது பொருளாம். 160

**எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்முன**
**பண்ணவினை யேது பகராய் பராபரமே. [மே**

(ப-ரை) எண்ணமுந்தான் - எண்ணங்களுந்தான், நின்னை - தேவரீரை, விட-விட, இல்லை-இல்லையாகும், என்றால்-என்று கூறினால், யான்-அடியேன், முனமே-முற்பிறப்புகளிலே, பண்ண-செய்ய, வினை-கருமம், ஏது-எங்கிருந்து வந்தது, பகராய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி - ரை) எண்ணமுந்தான் என்றது - செயலன்றி எண்ணமுங்கூட என்று பொருள்தரலின் இதன்கண் உள்ள உம்மை எதிரதுதழீஇய எச்ச உம்மை. அவனன்றி அணுவும் அசையாது என்பது ஆப்தர்மொழி ஆதலின் என்க. "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே" எனவும், "அறிவித்தாலன்றி அறியாவுளம்" என்பதூஉங் கொண்டுதெளிக. முனமே - இது முன்னமே என்றதன் தொகுத்தல் விகாரம். பகராய் - இது முன்னிலை ஏவல் வினைமுற்று. முனமே என்றது-முற்பிறப்புகளை உணர்த்தி நின்றது. 161

**என்னையின்ன தென்றறியா வேழைக்கு மாகெடுவேன்**
**முன்னைவினை கூடன் முறையோ பராபரமே.**

(ப-ரை) என்னை-ஆன்மாவாகிய என்னை, இன்னது-இன்னதன்மையது, என்று-என்று, அறியா-அறிந்துகொள்ளாத, ஏழைக்கும் - எளியனாகிய அடியேனுக்கும், ஆ - ஆ, கெடுவேன் - கெடுவேன், முன்னை - பூர்வஜன்மத்து, வினை-கர்மங்கள், கூடல் - வந்தடைதல், முறையோ - நியாயந்தானோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்னை என்றது-ஆன்மாவை. 'ஆ கெடுவேன்'-இது இரக்கப் பொருளில் வந்தது. முன்னைவினை என்றது - பூர்வஜென்ம வினைகளை. 'முறையோ'-இது நீதிதானோ என்றதாம். ஏழை என்றது-தன்னையறியும் அறிவின்மைகுறித்து வந்தது. 162

**அறியாநான் செய்வினையை யையாநீ கூட்டுங்**
**குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே.**

(ப-ரை) ஐயா-ஐயனே!, அறியா-அறியாமல், நான் - அடியேன், செய்-செய்த, வினையை - கருமங்களை, நீ-தேவரீர், கூட்டும்-அடியேனிடம் சேர்ப்பிக்கும், குறி-குறிப்பு, ஏது-எதற்காக, எனக்கு-அடியேனுக்கு, உளவு - உள் மர்மத்தை, கூறாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அறியா நான் என்றது - நன்மை தீமைகளை அறிந்துகொள்ள முடியாத நான் என்பது பொருளாம். உளவு என்றது - இரகசியம் என்பது பொருளாம். அறியா நான் என்பதற்கு - என்னையே அறிந்துகொள்ளச் சக்தியற்ற நான் செய்த வினைக்கு எனப் பொருள் கூறலுமாம். வினை என்றது - நல்வினை தீவினைகள் இரண்டையுங் குறிக்கும். நல்வினை பொன் விலங்குபோலவும் தீவினை இரும்பு விலங்குபோல்வதும் ஆதலின் என்க. குறிப்பு - உள்ளக்கிடக்கை. 163

**என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்**
**தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே.**

(ப-ரை) என்னை-அடியேனை, கெடுக்க-கெடுத்தற்கு, இசைந்த-பொருந்திய, இரு-இரண்டாகிய, வினை-வினையாம், நோய்-நோய், தன்னை-தன்னை, கெடுக்க-கெடுத்தற்கு, தகாதோ - தேவரீருக்குத் தகாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்னைக் கெடுக்க என்றது-என்னை முத்திபுகாதபடி கெடுக்க என்பதாம். இருவினை என்றது - நல்வினை தீவினைகளை. வினை இறத்தல் பிறத்தலாகிய துன்பந்தருதலின் 'நோய்' என்றார். கெடுக்க என்றது - இருவினை நோயை இல்லாது அகற்றுதலை. 'தகாதோ'-இது கூடாதோ என்பது பொருளாக நின்றது; ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் நின்றது. 164

**வல்லமையே காட்டுகின்ற மாமாயை நாளொருவன்**
**இல்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே.**

(ப-ரை) வல்லமையே - சாமர்த்தியத்தினையே, காட்டுகின்ற - காண்பிக்கின்ற, மா - பெரிய, மாயை - மாயையானது, நான் - அடியேன், ஒருவன்-ஒருவன், இல்லை-இல்லை, எனின்-என்றால், எங்கே-எந்த இடத்தே, இருக்கும்-இருக்கும்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாமாயையின் வல்லமையாவது:—பிரபஞ்சத்தைக் காரியப் படுத்துதலாம். நான் ஒருவன் இல்லை எனின் என்றது - அடியேன் தேவரீருடன் இரண்டறக் கலந்துவிட்ட காலத்து என்பதாம். எங்கே இருக்கும் என்றது-பின் யாருக்காகத் தனுகரண புவன போகங்களாக விரிந்து தோன்றும் என்பது பொருளாம். 165

**முக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்**
**கிக்குணத்தை நல்கியதார் எந்தாய் பராபரமே.**

(ப-ரை) எந்தாய்-எனது தந்தையே!, முக்குணத்தால் - மூன்று குணங்களைக்கொண்டு, எல்லாம் - யாவும், முளைக்க - உண்டாகும்படிச் செய்கின்ற, பிரகிருதிக்கு - பிரகிருதிக்கு, இ-இந்த, குணத்தை - குணத்தை, நல்கியது-கொடுத்தது, ஆர் - யார்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) முக்குணம் என்றது-ரஜோகுணம், தமோகுணம், சத்துவகுணங்களை. எல்லாம் என்றது - பிரபஞ்சாதிகள் எல்லாவற்றையும். பிரகிருதி என்றது-மூலப்பிரகிருதியை. குணம் என்றது-உண்டாக்கும் குணத்தை. 166



**ஆற்றப் படாது துன்பம் ஐயஎன்னா லென்மனது**
**தேற்றப் படாதுஇனியென் செய்வேன் பராபரமே.**

(ப-ரை) ஐய - ஐயா!, துன்பம்-(இந்த உலக) துன்பம், என்னால்-அடியேனால், ஆற்ற-தாங்க, படாது-முடியாது இருக்கிறது, என்-அடியேனது, மனது-மனம், தேற்ற - எவராலுந் தெளிவிக்க, படாது-முடியாததாக இருக்கிறது, இனி - இனிமேல், என் - என்ன, செய்வேன் - செய்யக் கடவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) துன்பம் என்றது - பிரபஞ்சத் துன்பங்களை; வினையால் வரும் துன்பங்களை; பிறப் பிறப்பாகிய துன்பங்களை. பிரபஞ்சத்துன்பங்களை மாற்ற இறைவன் ஒருவனே வல்லவன். அவனையன்றி எவரும் வல்லர் அல்லர். இதனை "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதவர்" என்ற **திருக்குறளா**லும் அறியலாம். 167

**பூராய மால்மனதைப் போக்கவறி யாமலையோ**
**ஆரா யலைந்தேன் அரசே பராபரமே.**

(ப-ரை) அரசே-அரசே!, பூராயம்-வாலாற்றுமுறை, ஆய்-ஆக, மனதை-மனத்தை, போக்க - நசிப்பிக்க, அறியாமல் - அறியாதபடி, ஐயோ - ஐயோ, ஆராய் - அடியேன் யாராக எண்ணியோ, அலைந்தேன் - திரிந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பூராயம் என்றது - வாலாற்றுமுறை, சிறிது சிறிது என்னும் பொருளது. இனி முற்றும் எனப் பொருளுரைத்தாரும் உண்டு. 'மனதைப் போக்கலாவது-மனதை இறக்கச்செய்தல்; மடிவித்தல் என்பதாம். ஆராய் என்பது-யாராக என்னும் பொருளது. இனி, இதற்கு என்ன என வினைந்து எனப் பொருளுரைத்தாரும் உண்டு; இது பொருந்துமா என்பதுதான் யோசிக்கற்பாலது. அலைந்தேன் என்றது - வெம்மாயைக் காட்டில் உழலுதலைக் குறித்தது. ஆராய்-இது யாராய் என்பதன் போலி. 168

**சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும்**
**மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே.**

(ப-ரை) சினம்-கோபம், இறக்க-சாகும்படி, கற்றாலும்-அப்பியாசித்துக் கொண்டாலும், சித்தி-அட்டமாசித்திகள், எல்லாம்-எல்லாவற்றையும், பெற்றாலும் - அடைந்தாலும், மனம் - மனமானது, இறக்க - ஒடுங்க, கல்லார்க்கு-அப்பியாசியாதவர்களுக்கு, வாய் - வீணாகப்பேசி இருக்கும் வாய், என் - எதற்காக?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி கணமேயும் காத்தல் அரிது" ஆதலின் 'சினம் இறக்கக் கற்றாலும்' என்றார். சித்தி என்றது-அணிமா முதலாய அட்டமாசித்திகளை. மனம் இறக்க என்றது - மனம் அடங்கி நிற்க என்பதாம். வாய் என் என்றது - வீணாகப் பேசும் வீராப்புப் பேச்சிற்கு வாய் எதற்காக என்பதாம். 169

வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்தமனம்
ஏதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே.

(ப-ரை) எந்தாய்-எமது தந்தையே!, வாதுக்கு-சண்டைக்கு, வந்து-வந்து, எதிர்த்த-எதிர்த்த, மல்லரை-மல்லர்களை, போல்-போல, பாழ்த்த-பாழாகிய, மனம் - மனமானது, ஏதுக்கு - எதற்காக, கூத்தாடுது - கூத்தாடுகின்றது?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மல்லர் என்றது - மல்யுத்தஞ்செய்யும் மல்லகச் செட்டிகளை. மனம் பிரபஞ்ச மாயையில் புகுந்து உழல்கின்றது ஆதலின் 'பாழ்த்த மனம்' என்றார். ஏதுக்குக் கூத்தாடுது என்றது-எதிரிகள் இல்லாதபோது என் கூத்தாடுகின்றதென்பதாம். 'கூத்தாடுது'-இது கூத்தாடுகிறது என்பதன் மரூஉ.

சூதாடு வார்போற் றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும் பராபரமே.

(ப-ரை) சூது-சூதை, ஆடுவார்-ஆடுகின்றவர்கள், போல்-போல, மனம்-மனமானது, துவண்டு-வாடி, துவண்டு - வாடி, வாது-வாதை, ஆடின்-ஆடுமானால், என்ன-என்ன, பலன்-பிரயோசனம், வாய்க்கும்-எய்தும்?, பராபரமே!—, எ-று.

(வி - ரை) சூதாடுபவர்கள் தோல்வியடைந்தபோது அவர்கள் மனம் வாட்டம் அடையும் பிறகும் கெலிப்புப் பெறவேண்டுமென்று சண்டையிட்டுச் சண்டையிட்டு ஆடுவார்கள். இதனை ஈங்கு உபமானமாகக் கூறினர். 'துவண்டு துவண்டு'-இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. மனம் வாதாடின் என்றது-மனம் பொறிபுலன் வழிப்பட்டுப் பிரபஞ்ச இச்சையிற் புகுந்து அலக்கண்ணுறப் போராடின் என்பதாம் 'என்னபலன்' என்றதனுல் பலன் ஒன்றும் இல்லை; துன்பமே பிராப்தி என்பது பெறப்படும். 171

கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க்குரங்காய்
கள்ளமனந் துள்ளுவதென் கண்டோ பராபரமே. [க்

(ப-ரை) கொள்ளி-கொள்ளி, தேள்-தேள், கொட்டி-கொட்டினதனுல், குதிக்கின்ற-(விஷமேறி எரிச்சல் தாங்கமாட்டாமல்) குதிக்கின்ற, பேய்-பேய் பிடித்த, குரங்கு - குரங்கைப்போல், ஆய்-ஆகி, கள்ளம் - கபடத்தையுடைய, மனம் - மனமானது, துள்ளுவது - (கூத்தாடித்) துடிப்பது, என் - எதனை, கண்டோ-கருதியோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கொள்ளித்தேள் இத்தேள் கொட்டினுல் நெருப்புச் சுட்டது போல் கொட்டின இடத்தில் எரிந்துகொண்டிருக்கும். முன்னமே சேட்டை செய்யும் இயல்புடையது குரங்கு; அதோடு அதற்குப் பேயும் பிடித்தது; [illegible]

[illegible]



வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்த்திரு
சிந்தை யிதமகிதஞ் சேரும் பராபரமே. [ந்தாற்

(ப-ரை) வந்ததையும் - பிரபஞ்சத்தே வினைவயத்தால் வந்தவைகளையும், போனதையும் - நம் அனுபவத்தை விட்டுக்கடந்து சென்றவைகளையும், வைத்து - மனதில் எண்ணி, வைத்து-எண்ணி, பார்த்து - பார்த்துக்கொண்டு, இருந்தால்-இருப்போமேயானுல், சிந்தை-மனமானது, இதம்-இன்பத்தையும், அகிதம்-துன்பத்தையும், சேரும்-அடையும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வந்ததையும் என்றது - வினையால் வந்த நன்மை தீமைகளை என்பதாம். போனதையும் என்றது-வினைவயத்தால் அனுபவத்துக்கு வந்து கடந்துபோன நன்மை தீமைகளை என்பதாம். 'வைத்து வைத்து' என்றது மிகுதிப் பொருளில் அடுக்கியது. 173

ஏறுமயிர்ப் பாலமுணர்வு இந்தவிட யங்கனெருப்
பாறெனவு நன்ரு வறிந்தேன் பராபரமே.

(ப-ரை) ஏறும் - ஏறிநடத்தற்கு உரிய, மயிர்-மயிரினுற் செய்த, பாலம்-பாலமானது, உணர்வு-அறிவு என்றும், இந்த-இந்த, விடயங்கள்-ஐம்பொறிகளால்,அனுபவிக்கப்படும் விஷயங்கள், நெருப்பு-(மயிர்ப்பாலத்தின்கீழ்) நெருப்பாக ஓடும், ஆறு - ஆறு, எனவும் - என்றும், நன்ரு - நன்ருக, அறிந்தேன்-அறிந்து கொண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மயிர்ப்பாலம் இது மயிராகிய பாலம் என்பது பொருளாம்; மயிராற் செய்த பாலம் எனவும் பொருள் கொள்ளுவர். இந்தவிடயம் என்றது-ஐம்பொறிகளால் அனுபவிக்கப்பெறும் உலக சுகங்களை. 'நெருப்பாறு'-இது நெருப்பாகிய ஆறு என விரியும். மயிர்ப்பாலம், நெருப்பாறு இவை பண்புத் தொகைகள். 174

பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின்
அறிவின் விதித்தவிதி யாமோ பராபரமே.

(ப-ரை) பொறி - ஐம்பொறிகளின், வழியே - வழியே சென்று, ஏழை-எளியவனுகிய அடியேன், பொறி - அறுத்தன்மை, ஆய் - ஆகி, உழல்வது-கஷ்டப்படுவது, நின் - தேவரீரின், அறிவின் - பேரறிவினுல், விதித்த-நியமித்த, விதி-நியமம், ஆமோ-ஆகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'பொறி' என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளை. தான் பொறிவழிச் செல்லுதலினின்றும் தப்பிவிட அறிவு [illegible]

[illegible]

(ப-ரை) பாசம் - பாசத்தினுடைய, சாலங்கள் - கூட்டங்கள், எல்லாம்-எல்லாம், பற்று-பற்றை, விட-விட்டு நீங்க, ஞானம்-ஞானமாகிய, வை-கூர்மை பொருந்திய, வாள் - வாளைக்கொண்டு, வீசும் - வீசுகின்ற, நாள்-நாள், எந்த-எந்த, நாள்-நாளோ, இயம்பாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சூரியனைக்கண்ட இருள்போல ஞானம் உதயமானதும் பாசங்கள் எல்லாம் கழன்றோடும் ஆதலின், 'பாச சாலங்க ளெல்லாம் பற்றுவிட ஞானவைவாள் வீசுநாள் எந்தநாள்' என்றார். ஞானத்தை வாளாக உருவகப்படுத்தி "ஞானவாள்' என்றார்; இது பண்புத்தொகை. பாசங்களாகிய தளைகள் அற ஞானமாகிய வாள் வீசும்நாள் எந்தநாள் என்கின்றார். 176

**எந்தவுட லேனு மெடுத்தவுட னல்லதென்று**
**சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே.**

(ப-ரை) எடுத்த - உலகுதனில் எடுத்த, எந்த - எந்த, உடல் - உடம்பு, எனினும்-எதனிலும், நல்லது - (இந்த மனித உடல்) நல்லது, என்று-என்று, சிந்தைசெய - எண்ண, வந்த-வந்த, திறம் - அடியேனினுடைய திறத்திற்கு, செப்பாய்-காரணம் சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'எடுத்த எந்த உடல்' என்பதற்கு உலகில் எடுத்த எந்த உடலினும் என்பது பொருளாம். எனினும் என்பது-எதனிலும் என்பதன் சிதைவு. திறம் என்றது-அறிவின் திறத்தை. 177

**பொய்யெல்லா மொன்றாப் பொருத்திவைத்த பொய்யுட**
**மெய்யென்றான் மெய்யாய் விடுமோ பராபரமே.** [லை

(ப-ரை) பொய்-நிலையற்றனவாகிய, எல்லாம் - எல்லா தத்துவங்களையும், ஒன்றா-ஒன்றாக, பொருத்தி - கூட்டி, வைத்த - வைக்கப்பெற்ற, பொய்-நிலையற்றதாகிய, உடலை - இந்தத் தேகத்தை, மெய்-மெய்ப்பொருள், என்றால் - என்று கூறினால், மெய்-மெய்ப்பொருள், ஆய்-ஆகி, விடுமோ-விடுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பொய் என்றது-நிலையற்றதாகிய பிருதிவி முதலிய தத்துவங்களை. பொய் உடல் என்றது-மாறுபடுந்தன்மை யுடையதாகிய உடம்பை. மெய் என்றது-மங்கலவழக்கால் 'மெய்' என்று கூறினால் என்பது பொருளாம். விடுமோ - இது விடைதழுவிய வினா; விடாது என்னும் விடைதழுவி நின்றது.

**மின்னனைய பொய்யுடலை மெய்யென்று நம்பியையோ**
**நின்னை மறக்கை நெறியோ பராபரமே.**

(ப-ரை) மின்-மின்னலை, அனைய - ஒத்த, பொய்-பொய்யாகிய, உடலை-உடம்பை, மெய் - மெய்யானது, என்று-என்று, நம்பி - உறுதியாக எண்ணி, ஐயோ-ஐயோ!, நின்னை-தேவரீரை, மறக்கை-மறந்துவிடுதல், நெறியோ-அடியேனுக்கு நல்ல மார்க்கமாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மின்னல்-தோன்றி மறையும் தேகத்திற்கு உவமை ஆயிற்று. பொய்யாகிய உடலை மெய் என்றும், மெய்யாகிய தேவரீரை மறந்து நிற்கை



யும் நல்ல நெறியோ தீநெறியே என்பதாம். 'மறக்கை' இது மறந்துவிடுந் தன்மை என்னும் பொருளது. இது தொழிற்பெயர். 179

**நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற்**
**கித்தனைதான் றுன்பமுண்டோ என்னே பராபரமே.**

(ப-ரை) நித்தியம்-என்றும் நிலைபெற்றிருக்கை என்பது, ஒன்று-ஒன்று, இல்லாத-இல்லாத, நீர் - நீரினுடைய, குமிழி - குமிழியை, போன்ற-ஒத்த, உடற்கு - உடம்பிற்கு, இத்தனைதான் - இவ்வளவுதான், துன்பம் - துன்பம், உண்டோ-உளதோ, என்னே-இது என்ன தகுதியோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நித்தியம் என்றது-என்றும் ஒரே படித்தாய் இருக்குந் தன்மை, அதாவது நிலைவேறுடைமை; அழிவில்லாமை என்பது பொருளாம். இத்தனை என்பது - இவ்வளவு, இத்தகைய என்னும் பொருள்களில் நின்றது. துன்பம் என்றது பிறவித் துன்பங்களையும் பிரபஞ்சமாயையால்வருந் துன்பங்களையும், வினையால்வருந் துன்பங்களையும் குறித்து நின்றது. 'என்னே' இது வியப்புப்பொருளில் வந்தது. 180

**தேகமிறும் என்றுசடர் தேம்புவதென் நித்திரையி**
**னூகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே.**

(ப-ரை) தேகம்-இந்த உடம்பு, இறும்-அழியும், என்று-என்று எண்ணி, சடர்-உடலையே நம்பியிருக்கும் சாமான்ய மனிதர்கள், தேம்புவது - துன்பப்படுவது, என்-எதற்காக, நித்திரையின்-(நித்தியந்தூங்கும் சுழுத்தியில் உடலை ஆன்மா நீங்கியிருந்த) நித்திரையில் நடக்குஞ் செயலின், ஊகம் - அறிவை, அறிந்தால் - உய்த்து உணர்ந்தால், பயந்தான் - பயந்தான், உண்டோ-உண்டாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேகம் என்றது-மனித தேகத்தை. இறும் என்றது-அழியும் என்னும் பொருளது. சடர் என்றது-தேகத்தையே நம்பியிருக்கும், ஞானமில்லாதவர்களாகிய சாமான்ய மனிதரைக் குறித்தது. தேம்பல் என்றது-மனம் வருந்தலை. நித்திரையின் ஊகம் என்றது - நித்திரையின் சுழுத்தி நிலையில் ஆன்மா உடலைவிட்டு நீங்கித் தனித்துநிற்கும் நிலையின் தன்மையை.

**ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்**
**சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே.**

(ப-ரை) எடுத்த - எடுத்த, உடல் - சரீரம், சேதம் - அழிவை, உறின் - அடைந்தால், ஏதை-எந்த உடம்பை, சுமையா - சுமையாக, எடுப்பார் - எடுப்பார்கள், பின்னே-அதன்பின்னே, யாது-என்னகாரியம், செல்லும்-நடக்கும்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எடுத்த உடல் என்றது-எடுத்த மனித தேகத்தை. சேதம் உறின் என்றது-அழிந்துவிட்டால் என்னும் பொருளது. ஏதை என்றது-எந்த தேகத்தை என்பதாம். 'மானிடராக வாலரிது' என்று திருவாய் மலர்ந்தருளினர். மனிததேகம் வீழின் முத்திப்பேற்றிற்கு ஏதும் செய்து

கொள்ள முடியாது. மனிததேகம் உள்ளபொழுதே முத்திக்கான வழியைத் தேடுதல் வேண்டும். 182

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சிவனென் றிங்
கார்ப்பா லெடுத்ததெவ ராலே பராபரமே.

(ப-ரை) தோல் - தோலாற்செய்த, பாவை-பதுமையாகிய இவ் வுடம்பு, நாலாள்-(உள்ளேயிருக்கும் உயிர் நீங்கினால்) நாலு ஆள், சுமை-பாரம், ஆகும்-ஆகும், சிவன் - சிவனாகிய, ஒன்று - ஒன்று, இங்கு - இவ்வுலகில், ஆர்ப்பால்-ஆரவாரத்துடனே, எடுத்தது - இத்தகைய இந்தத் தேகத்தை எடுத்தது, எவராலே-யாவரால்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தோற்பாவை என்றது - தேகத்தை. இறந்தபின் சவத்தை நாலாள் சுமக்கமுடியாமல் சுமக்கவேண்டி இருத்தலின் 'நாலாள் சுமை' என்றார். ஆர்ப்பு என்றது-ஆரவாரத்தை. 183

ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே.

(ப-ரை) ஞாலத்தை - பிரபஞ்சத்தை, மெய்-சத்தியம், எனவே-என்றே, நம்பி - நம்பி, நம்பி - நம்பி, நாளும் - எந்தநாளும், என்தன்-அடியேனின், காலத்தை - காலத்தை, போக்கி-கழித்து, என்ன-என்னபயனை, கண்டேன்-அடைந்தேன்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இக்கண்ணி அநித்தியமாகிய உலகத்தையும் உலகவாழ்வையும் நித்தியம் என்று நம்பி நம்பி என்காலத்தை வீணே கழித்தேன் ஒருபயனையும் அடைந்தேன் இல்லை; இறைவனே தேவரீரின் திருவருளைப் பற்றியிருந்தால் முத்தியடைந்திருப்பேனே என இரங்கிக் கூறியதாகும். 'நம்பி நம்பி'- இது மிகுதிப்பொருளில் அடுக்கியது. நாளும் என்றது-ஒவ்வொரு நாளையும் என்னும் பொருளது. 184

பொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனைநின்
மெய்யருளின் மூழ்கின் விடுங்காண் பராபரமே.

(ப-ரை) பொய் - பொய்யாகிய, உலகம்-உலகத்தின், வாழ்க்கை - வாழ்வாகிய, புலை-புலையர்கள் வசிக்கும், சேரி-சேரியின், வாதனை-வாசனை, நின்-தேவரீரின், மெய் - மெய்யாகிய, அருளின் - திருவருட்கடலில், மூழ்கின்-மூழ்கினால், விடும்-விட்டுநீங்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலக வாழ்வு காரியரூபமாய் உள்ளது ஆதலின் 'பொய்யுலக வாழ்க்கை' என்றார். உலகவாழ்க்கை துன்பமும், துர்க்கந்தமும் உடையது என்பார் சிலேடையாக 'வாதனை' என்றார். இது கொண்டே உலகவாழ்க்கையை 'புலைச்சேரி' என்றார். 'காண்'-இது அசை. 185

நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன் னூற் போதம் பராபரமே.



(ப-ரை) விண் - ஆகாயத்தில், ஏற - ஏறுதற்கு, நூல் - நூலாற்செய்த, ஏணி-ஏணியை வைப்பதற்கு, நூற்கு-(ஏணிசெய்ய) நூலின்பொருட்டு, பருத்தி-பருத்திச்செடியை, வைப்பார்-வைப்பவர்கள், போலே-போலே, கருவி-கருவி நூல்களாகிய இலக்கணமும், நன்னூல் - நல்ல சாஸ்திர நூல்களையும் கற்று அறிந்த, போதம்-அறிவு ஆகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) விண் என்றது விசும்பைக் குறித்தது. இலக்கணம் கற்று சாஸ்திரங்கற்று அறிவுபெற்று அதனாலே முத்தியடைதல் என்னும் முயற்சி உபமேயம். விண் ஏற நூல் ஏணி செய்தற்குப் பருத்திச்செடி வைப்பது உபமேயம். திருவருளின் துணையின்றிக் கற்ற நூலறிவினால் முத்திபெற முடியாது என்பது இக்கண்ணியின் கருத்தாம். 186

சின்னஞ் சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கும்
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே.

(ப-ரை) மன்னும் - உலகவாழ்க்கை குறித்து நிலைபெற்றுள்ள, கலை-சாஸ்திரங்களின், ஞானமார்க்கம் - ஞானநெறிகள், சின்னஞ் சிறியார்கள்-மிகவுஞ் சிறிய பிள்ளைகள், செய்த-விளையாட்டிற்காகச் செய்த, மணல்-மணல், சோற்றை-சோற்றை, ஒக்கும் ஒத்திருக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மன்னுங்கலை என்பது-உலக நூற்களை. ஈண்டு, "அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா, துலகநூ லோதுவ தெல்லாம்—கலகல, கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம், போஒந் துணையறிவா ரில்" என்ற நாலடிச் செய்யுளால் இக்கண்ணியின் உண்மைதேறலாம். சிவஞான நூல்கள் கற்றலே இம்மை, மறுமை, முத்தி என்னும் மூன்றையுந்தர வல்லதாகும். ஏனைய நூல் எதுவும் சிறிதும் பயன் இல்லாதனவே என்கின்றார். இது குறித்தே 'மணற்சோற்றை ஒக்கும்' என உவமை முகத்தால் விளக்கினார். ()

வாசகஞா னத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே.

(ப-ரை) வாசகம் - வாசித்துச் சாமர்த்தியமாகப் பேசும், ஞானத்தால்-ஞானத்தினாலே, சுகம் - பேரானந்தம், வருமோ - வந்துவிடுமோ?, பாழ்த்த-பாழாகிய, பூசல் - தர்க்கவாதச்சண்டை, என்று - எந்தக்காலத்து, போமோ-போய் ஒழியுமோ, புகலாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வாசகஞானம் என்றது - பேச்சுச் சமர்த்தை. சுகம் என்றது-முத்திச் சுகத்தை. வருமோ என்றது-விடை தழுவிய வினா. இதற்கு வாராது என்பது பொருள். பாழ்த்த என்றது - பயன் அற்ற என்னும் பொருளது. பூசல் என்றது-சொற்போரை. 188

கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
னாட்டமின்றி வாய்பேச லன்றோ பராபரமே.

(ப-ரை) கேட்டதையே - தான் செவிசாய்த்துக் கேட்ட சொற்களையே, சொல்லும்-கற்றுக்கொண்டு திருப்பிச்சொல்லும், கிளி-கிளிப்பிள்ளை, போல.

போல, நின்-தேவரீரின், அருளில்-திருஅருளில், நாட்டம்-விருப்பம், இன்றி-இல்லாமல், வாய்-பிறர் சொன்னதைக்கேட்டு வாயால், பேசல்-பேசுதல், நன்றோ-நன்மை தருவதாமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கிளிப்பிள்ளை கற்றுக்கொடுத்ததையன்றி அதற்குமேல் வேறு ஒன்றும் பேச அறியாததனை ஈண்டு உவமையாகக் கூறினர். 'கேட்டதையே' என்றதன்கண் உள்ள ஈற்று ஏகாரம் தேற்றேகாரம். 'வாய்பேசல்' என்று கூறியது அநுபவஞானமின்றிப் பிறர் சொல்வதைக்கேட்டுக் கூறுதலையாம். நன்றோ என்றது-பயன் தருவது ஆகுமோ என்ற பொருளதாம். 189

**வெளியா யருளில் விரவுமன்பர் தேகம்**
**ஒளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.**

(ப-ரை) வெளி-சிதாகாயரூபம், ஆய்-ஆகி, அருளில்-தேவரீரின் திருஅருளில், விரவும்-கலக்கின்ற, அன்பர்-தேவரீரின் அன்பர்களின், தேகம்-சரீரம், ஒளி-பிரகாசம், ஆய்-ஆகி, பிறங்கியதும்-விளங்கினதும், உண்டோ-உளதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வெளி என்றது-சிதாகாயத்தை. அருள் என்றது-இறைவன் திருவருளை. விரவல்-கூடல், கலத்தல் என்னும் பொருளது. அன்பர் என்றது-சிவஞானியர்களாகிய அன்பர்களை. ஒளி என்றது-பூத ஒளியை. பிறங்கியதும் உண்டோ என்பது-விடைதழுவிய வினா; பிறங்கியதில்லை என்பதாம். என்னையெனின்? சூக்கும வடிவம்பெற்ற அவ்வன்பர்கள் தூலத் தன்மைபெற்று விளங்கார் என்பது உணரற்பாலதாம். 190

**காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை**
**ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே.**

(ப-ரை) நல்லோர்-ஞானிகள், காலம்-காலங்கள், ஒரு-ஒன்றுபட, மூன்றும்-முக்காலங்களையும், கருத்தில்-மனத்தில், உணர்ந்தாலும்-அறிந்திருந்தாலும், அதை-அதனை, ஞாலம்-உலகம், தனக்கு-தனக்கு, உரையார்-சொல்லார், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நல்லோர் என்றது-ஜீவகாருண்ய முடையவர்களாகிய ஞானிகளை. காலம் ஒருமூன்று என்றது-இறப்பு, எதிர்வு, நிகழ்வு என்னும் முக்காலங்களை. ஞானிகள் முக்காலத்தையும் உணர்ந்திருந்தும் உலகத்தார்க்கு எடுத்து உரையாமைக்குக் காரணம் கருணையேயாம். ஞாலம் என்றது இடவாகுபெயராய் ஞாலத்து உள்ள மனிதர்களைக் குறித்தது. 191

**கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்**
**றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே.**

(ப-ரை) கொல்லா-கொல்லாமையாகிய, விரதம்-விரதம், ஒன்று-ஒன்றை, கொண்டவரே-மேற்கொண்டவர்களே, நல்லவர்-நல்ல மனிதர்கள், மற்று-மற்று, அல்லாதார்-கொல்லா விரதத்தைக் கொள்ளாதவர்கள், யாரோ-அவர்கள் யாரோ, அறியேன்-அவர் இன்னரென்று சொல்ல அறியேன், பராபரமே!—, எ-று.



(வி-ரை) கொல்லா விரதம் என்றது-எவ்வுயிரையும் கொல்லா திருத்தலைக் கடன்மையாகக் கொண்டொழுகும் உறுதியுடைமையை. நல்லவர் என்றது-ஜீவகாருண்யமுடையவரை. இது, ஞானம் முதலியனவற்றைக் கொண்ட நல்ல மனிதர்கள் என்பதாம். அல்லாதார்-கொல்லா விரதத்தைக் கொள்ளாது கொன்று திரிபவர்கள். 192

**இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழிச்**
**செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே.**

(ப-ரை) இல்லாத-பொய்யாகிய, காரியத்தை-காரியங்களை, இச்சித்து-விரும்பி, சிந்தை-மனம்போன, வழி-வழிகளில், செல்லாமை-செல்லாதிருத்தல், நல்லோர்-நல்லவர்களின், திறம்-தன்மை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகம் அழிதன் மில்லையன ஆதலின் 'இல்லாத காரியத்தை' என்றார். மனம்போன வழியெல்லாம் செல்லின் இருமைத் துன்பமும் ஏற்பட்டுப் பிறப்பிற்கே ஆளாவர் ஆதலின் சிந்தைவழி நல்லவர்களாகிய ஞானிகள் செல்லார் என்பார் 'சிந்தைவழிச் செல்லாமை நல்லோர் திறம்' என்றார். இதனானும் முன்னைக் கண்ணியானும் நல்லோர் யார் என்று விளக்கினர். நூற்றுத் தொண்ணூற் றொன்றாம் கண்ணியில் நல்லோர் என்றதை விளக்கவே அடுத்த இருகண்ணிகளிலும் இவ்வாறு கூறினர் போலும். காண்-அசை. 193

**ஏதுவந்தும் ஏதொழிந்தும் என்னதியா னென்னார்கள்**
**போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே.**

(ப-ரை) போதம்-ஞானத்தின், நிலை-நிலையை, கண்ட-கண்டறிந்த, புலத்தோர்-அறிவையுடையோர்கள், ஏது-எத்தகையசெல்வம், வந்தும்-வந்தாலும், ஏது-எத்தகைய பொருள், ஒழிந்தும்-நீங்கினாலும் (அவைகளைக் குறித்து), என்னது-என்னுடையது, யான்-நான், என்னார்கள்-என்று அகங்கார மமகாரங்களோடு கூறார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) போதநிலைகண்ட புலத்தோர்-ஞானியர். என்னது என்றது மமகாரம்; புறப்பற்று. நான் என்றது-அகங்காரம்; அகப்பற்று. ஞானிகள்பால் அகங்கார மமகாரங்கள் இராது என்பது கருத்தாம். "மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும், ஒத்திருக்கும் உள்ளத்துறவோனே" என்ற புகழேந்தி வெண்பா இதனை வலியுறுத்தும். 194

**ஆயிரஞ்சொன் னாலும் அறியாத வஞ்சநெஞ்சப்**
**பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே.**

(ப-ரை) ஆயிரம்-ஆயிரம் விதமாக, சொன்னாலும்-எடுத்து உரைத்தாலும், அறியாத-அறிந்து கொள்ளும் விவேகமில்லாத, வஞ்சம்-கபடத்தையுடைய, நெஞ்சம்-மனத்தைக்கொண்ட, பேயரொடு-பேயர்களுடன், கூடின்-கூடினால், பிழை-அச்சேர்க்கை குற்றமே செய்யும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆயிரம் சொன்னாலும் என்பதற்கு - எவ்வளவுதான் ஆயிர விதமாகப் பலர் எடுத்துப் புகழ்ந்தாலும் எனவும், ஆயிரம் விதமாகச் சாமர்த்தியத்துடன் எடுத்துப்பேசும் திறமை இருந்தாலும், எனவும் பொருள் கொள்வாருமுண்டு. ஞானத்தை உணரும் தன்மை இல்லாதவருடன் கூடின் குற்றமாகும் என்பது கருத்து. காண் - அசை. 195

மாயா மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய வருணிலையி னிற்பார் பராபரமே.

(ப-ரை) மாயா-மாயாகாரியங்களாலாகிய, மயக்கு - பிரபஞ்ச மயக்கத்தினின்றும், ஒழிந்தார் - நீங்கியவர்கள், மற்று-மற்று, ஒன்றை - ஒருபொருளை, நாடுவரோ - விரும்புவார்களோ?, (விரும்பார், பின் என் செய்வர் எனின்) நேய-அன்புமயமாகிய, அருள் - திருஅருளின், நிலையில்-நிலையிலே, நிற்பார்-நின்றிருப்பார், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாயா மயக்கு - மாயையின் காரியமாகிய பிரபஞ்ச மயக்கம். ஒழிந்தார் என்றது - மாயையினின்றும் அகன்ற ஞானியரை. மற்று என்றது - சுட்டியதற்கு இனத்தை. இறைவன் திருவருள் ஆன்மாக்களின் மேல் வைத்த கருணையினால் உண்டாவது ஆதலின் 'நேயஅருள் நிலை' என்றார். 196

நித்திரையிற் செத்தபிண நேருமுடற் கிச்சைவையாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே.

(ப-ரை) நித்திரையில்-தினேதினே உறங்குங்காலத்து, செத்த-இறந்த, பிணம்-பிணத்தை, நேரும்-ஒத்த, உடற்கு - உடலின்மேல், இச்சை - விருப்பத்தை, வையா-வைக்காத. சுத்தர்களே - சுத்த மனத்தை உடையவர்களே!, நல்ல-நல்ல, துறவோர்-துறவினர் ஆவர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) செத்த பிணம் - உயிர் நீங்கி நின்ற உடம்பாகிய பிணம். உடல் என்பது - துன்பப்படுவது என்னும் பொருள் குறித்து வந்த காரணப்பெயர். சுத்தர் என்றது - மனத்தூய்மை உடையவர்களை. நல்ல துறவோர் என்றது - உண்மைத்துறவு உடையவர்கள் என்பது பொருளாம். துறவோர் என்றது-எல்லாப் பற்றையும்விட்டு அகன்றவர் என்பது பொருளாம். 197

எந்நெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ் சருமுளரோ காட்டாய் பராபரமே.

(ப-ரை) நின் - தேவரீரின், அருட்கு - திருஅருளுக்கு, எ - எத்தகைய, நெஞ்சமேனும்-மனமாக இருந்தாலும், இரங்குமே-உருகுமே, கல் - உருகாத கல், நெஞ்சரும் - நெஞ்சையுடையவர்களும், உளரோ - இருக்கின்றனரோ?, காட்டாய்-அவ்வாறு இருப்பின் காட்டுவாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் திருவருளால் உருகாத மனம் இல்லை என்பார் 'எந் நெஞ்சமேனு மிரங்குமே நின்னருட்கு' என்றார். இதனையன்றோ மணி



வாசகரும், "இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தெனென்புருக்கி" என்றார். "கரையாக் கன்மனமுக் கரைத்தருளுந் திருவருளே" எனப் பிறர் கூறியதுங் காண்க. 'உளரோ'-இது விடைதழுவிய வினா; இல்லை என்பது பொருளாம்.

மந்தவறி வாகிஇன்பம் வாயா திருந்தலைந்தாற்
சிந்தைமயங் காதோ என் செய்வேன் பராபரமே.

(ப-ரை) மந்தம்-மந்தமாகிய, அறிவு-ஞானம், ஆகி-ஆகி, இன்பம்-சுகம், வாயாது-கிடையாது, இருந்து-இருந்து, அலைந்தால்-அலைவேனாயின், சிந்தை-அடியேன் மனம், மயங்காதோ-திகைக்காதோ, (இத்திகைப்பை மாற்றுதற்கு) என் - என்ன உபாயத்தை, செய்வேன் - அடியேன் செய்வேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மந்த அறிவு என்றது-மூடமதியை; புத்திதீட்சண்யமின்மையை. இன்பம் என்றது - சிவானந்த இன்பத்தை. அலைந்தால் என்பது - பிரபஞ்ச ஆசையில் அலைந்தால் என்றதாம். 'சிந்தை மயங்காதோ'-இது விடைதழுவிய வினா; மயங்கும் என்பது பொருளாம். 'என்' இது 'என்ன' என்பதன் கடைக்குறை விகாரம். 199

தேடினேன் திக்கனைத்துந் தெண்டமிட்டேன் சிந்தை
வாடினேன் என்மயக்க மாற்றாய் பராபரமே. [நைந்து

(ப-ரை) திக்கு - திக்குகள், அனைத்தும் - எல்லாம், தேடினேன் - தேடினேன், தெண்டம்-(திக்குகள் எல்லாம் நோக்கி) நமஸ்காரம், இட்டேன்-செய்தேன், (காணப் பெறாமையால்) சிந்தை-மனம், நைந்து-வருந்தி, வாடினேன்-வாடினேன், என்-அடியேனுடைய, மயக்கம்-வாட்டத்தை, மாற்றாய்-மாற்றி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) திக்கனைத்தும் என்றது - எல்லா திக்குகளும் என்னும் பொருளது. இறைவன் குருவடிவாக எழுந்தருள்வன் ஆதலின் ஆசாரியன் தரிசனனோக்கித் தேடினன் எனப் பொருளுரைத்தலுமாம். இறைவன் சர்வ வியாபகன் ஆதலின் 'திக்கனைத்தும் தெண்ட மிட்டேன்' என்றார். குரு தரிசனம் பெறாமையால் வாடினேன் கருணை கூர்ந்து காட்சி தந்தருள வேண்டு மென்பார் 'என்மயக்கம் மாற்றாய்' என்றார். 200

மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ என்னை
யடிமைகொளல் வேண்டும் அரசே பராபரமே.

(ப-ரை) அரசே-அரசே!, மடிமை-சோம்பல், எனும்-என்று சொல்லும்படியாகிய, ஒன்றை-ஒருபொருளை, மறுத்து-தடுத்து, அன்றோ-அல்லவோ, என்னை-அடியேனை, அடிமை-அடிமையாக, கொளல்-கொள்ளல், வேண்டும்-வேண்டும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சோம்பலே ஒருவனை இம்மை மறுமைப்பயன் எய்தாவாறு அழிக்கின்றதாதலின் 'மடிமை எனும் ஒன்றை மறுத்தன்றோ' என்றார். மடிமை என்பது - மக்கட்குத் தீங்கு இழைத்தலில் ஒப்பற்றது ஆதலின்

'ஒன்றை' என்றார். கொளல் - இது கொள்ளல் என்பதன் தொகுத்தல் விகாரம். அரசன் குடிகளின் குற்றங் கடிந்து குணஞ்செய்தல் கடனாதலின் 'அரசே' என்றார்.

201

**காலர்பயந் தீரஇன்பக் காற்கபய மென்றெழுந்த**
**மாலை வளர்த்தனையே வாழி பராபரமே.**

(ப-ரை) காலர்-எமதூதர்களின், பயம்-பயமானது, தீர-நீங்க, இன்பம்-சிவானந்த இன்பத்தைத் தருவதாகிய, காற்கு - தேவரீரின் திருஅடிகளுக்கு, அபயம்-அபயம், என்று-என்று வாயாற் கூறி, எழுந்த-எழுந்த, மாலை-அடியேனின் விருப்பத்தை, வளர்த்தனையே - விருத்தி அடையுமாறு செய்தனையே, வாழி-வாழ்வீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காலர் என்றது - ஜீவப்பிராணிகளின் வாழ்நாட் காலத்தைக் கொள்ளை கொள்ளுதலால் 'காலர்' எனப் பெற்றனர். இது காரணப்பெயர். இன்பம் என்றது - சிவானந்த இன்பத்தை. கால் என்றது - இறைவன் திருவடியை. என்னை? காலனை யுதைத்தருளிய காலாதலின் என்க. அபயம் என்றது-பயம் இன்மை தந்தருள் என்பதாம். மால் என்றது - ஈண்டு பெரு விருப்பத்தை உணர்த்தி நின்றது.

202

**நீர்ப்புற் புதமாய் நினைவருட்கே நின்றழியப்**
**பார்ப்பதல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராபரமே.**

(ப-ரை) நீர்-நீரில் எழுகின்ற, புற்புதம்-குமிழ், ஆய்-ஆகி, நினைவு - அடியேன் மனத்தில் எண்ணம், அருட்கே - தேவரீரின் திருஅருளுக்கே, நின்று-தோன்றிநின்று, அழிய-மறைய, பார்ப்பது-காண்பது, அல்லால்-அல்லாமல், வேறு-வேறாகிய, ஒன்றை - தேவரீரின் திருஅருளை அடைதலாகிய ஒன்றை பாரேன்-கண்டேன் இல்லை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நீர்ப்புற்புதம் என்றது - நீரில் எழுகின்ற குமிழி என்பது பொருள்; இது ஏழாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. இது தோன்றி கூணே மறைதற்கு உபமானமாக வந்தது. வேறு ஒன்றை என்றது-இறைவன் திருவருளை அடைதலாகிய ஒன்றை என்பது பொருளாம். திருவருள்பெறத் திருவருட்சகாயம் வேண்டும் ஆதலின் அது பெற்றிலேன் என்பதும் ஆம்.

203

**நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாய்க்கரையப்**
**பார்க்குமிட மெல்லாமென் பார்வை பராபரமே.**

(ப-ரை) நீர்-நீரில் எழுகின்ற, குமிழி-குமிழியை, போல் - போல, என்-அடியேனின், நினைவு-எண்ணம், வெளியாய்-வெளிப்பட்டுத்தோன்றி, கரையும்-உடனே தேவரீரின் திருஅருள் வெள்ளத்தில் கரைந்து கலக்கும்படி, பார்க்கும்-பார்க்கின்ற, இடம்-இடங்கள், எல்லாம் - எல்லாம், என் - அடியேனின், பார்வை-நோக்கம், பராபரமே!—, எ-று.



(வி-ரை) 'நீர்க்குமிழி'-இது மனத்தெழும் நினைவுக்கு உவமை ஆயிற்று. 'வெளியாய்' என்பதற்கு மனத்தெழும் எண்ணம் சிதாகாயமாய்க் கரைய எனப்பொருள் கூறினாரும் உண்டு. என் நினைவு தோன்றாது தேவரீரின் திருஅருளையே எங்கெங்குங் காண்கின்றேன் என்பார் 'பார்க்குமிட மெல்லா மென்பார்வை' என்றார்.

204

**ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமுனைத்**
**தேடியோய் கின்றேன்என் செய்வேன் பராபரமே.**

(ப-ரை) ஆடி - சுழன்று ஆடி, ஓய் - ஓய்ந்து விழுகின்ற, பம்பரம்-பம்பரத்தை, போல்-போல, ஆசையுடன்-ஆசையோடு, உனை-தேவரீரை, எங்கும்-எல்லா இடங்களிலும், தேடி - தேடி (காணப்பெறாமையால்), ஓய்கின்றேன்-ஓய்ந்துபோகின்றேன், என் - அடியேன் இதற்கு வேறு என்ன, செய்வேன்-செய்யக்கடவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆடி ஓய்ந்து விழும் பம்பரம் உபமானம். ஆசையுடன் இறைவனைத் தேடி ஓய்ந்து விழுதல் உபமேயம். அடியேன் ஜீவசக்தியால் ஒன்றும் வழிதெரியேன் தேவரீரின் திருவருட் சகாயத்தால்தான் தேவரீரைக் காண வேண்டியவனாக இருக்கின்றேன் என்பார் 'என்செய்வேன்' என்கின்றார். என்னசெய்வேன் என்பது என்செய்வேன் என நின்றது.

205

**வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கு**
**நாதாந்த மோன நலமே பராபரமே.**

(ப-ரை) வேதாந்தம்-வேதாந்தமும், சித்தாந்தம் - சித்தாந்தமும், வேறு-வேறுபட்டது, என்னார்-என்று கூறாதவர்கள், கண் - கண்கள் கண்டு, களிக்கும்-களித்தற்கு உரிய, நாதம்-நாததத்துவத்தின், அந்தம்-முடிவில் விளங்கும், மோன-மவுன, நலமே-சுகப்பொருளே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வேதாந்தம் பொது ஆதலினாலும், சித்தாந்தம் சிறப்பு ஆதலினாலும், வேதாந்தம் சித்தாந்தத்திற்குச் சோபான முறையாக அமைந்திருத்தலினாலும் 'வேதாந்தம் சித்தாந்தம் வேறு என்னார்' என்றார். இறைவன் நாததத்துவத்தின் முடிவில் மௌனானந்த ஜோதியாய் விளங்கியிருப்பவன் ஆதலின் 'நாதாந்த மோன நலமே' என்றார். இக்கண்ணி இறைவனை முன்னிலையாக்கி அழைத்தலாகும்.

206

**ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னாத**
**மோனந் தமியேற்கு முத்தி பராபரமே.**

(ப-ரை) ஆனந்தம்-சிவானந்த சொரூபம், ஆன-ஆன, நின்னை-தேவரீரை, அன்றி-அல்லாமல், ஒன்றை-வேறாகிய ஒருபொருளை, உன்னாத - நினையாத, மோனம்-மவுனநிலையே, தமியேற்கு-அடியேனுக்கு, முத்தி - மோட்சம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆனந்தம் என்றது-சிவானந்த மயத்தை. நின்னை என்றது-இறைவனை. உன்னுதல் - எண்ணுதல், நினைத்தல். மௌனம்-திரிகரண ஒடுக்கம். முத்தி-வேதனைகள் விடுபட்ட நிலை.

207

**ஏதுக்கு முன்னைவிட வில்லையென்றால் என்கருத்தைச்**
**சோதிக்க வேண்டாம்நான் சொன்னேன் பராபரமே.**

(ப-ரை) ஏதுக்கும்-காரியங்கள் எல்லாவற்றிற்கும், உன்னை - தேவரீரை, விட-அன்றி (தவிர்த்து), இல்லை - துணையில்லை, என்றால் - என்று கூறினால், என்-அடியேனின், கருத்தை-மனத்தை, சோதிக்க-சோதனைசெய்ய, வேண்டாம்-வேண்டாம், நான்-அடியேன், சொன்னேன்-சொல்லிவிட்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஏதுக்கும் என்றது - அடியேனால் நிகழுங்காரியங்கள் எதற்கும் என்பது பொருளாம். உன்னை-இறைவனை. உன்னைவிட இல்லை என்றது-உன்னைவிடத் துணை வேறு இல்லை என்பதாம். அடியேன் சொல்லுவது சத்தியம் சந்தேகமுற வேண்டாம் என்பார் 'என் கருத்தைச் சோதிக்க வேண்டாம் நான் சொன்னேன்' என்றார். 208

**முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோ**
**ரெத்தனைபே ரென்றுரைப்பது எந்தாய் பராபரமே.**

(ப-ரை) எந்தாய்-எமது தந்தையே!, முத்தியிலும்-முத்திக் காலத்திலும், தேகம்-தேகத்தின், மிசை - இடத்தே, மூ-மூன்று, விதம்-வகை, ஆம்-ஆகிய, சித்தி - சித்திகளை, பெற்றோர் - அடைந்தவர்கள், எத்தனை-எத்தனை, பேர்-பேர்கள்,என்று-என்று, உரைப்பது-அளவிட்டுக்கூறுவது,பராபரமே!—,எ-று.

(வி-ரை) 'முத்தியிலும்' என்பதன்கண் உள்ள உம்மை முத்திக்கு முன்னன்றி முத்திக்காலத்திலும் என்ற பொருள் தருதலின் இறந்தது தழுவிய எச்சவும்மை. தேகமிசை மூவிதமாஞ்சித்தி என்றது - அருவசித்தி, உருவ சித்தி, அருவுருவசித்தி என்பனவற்றை. 'எத்தனைபேர் என்றுரைப்பது' என்றதனால் அளவிடற்கு அரியர் என்பது பெறப்படும். 209

**நீயன்றி நானார் நினைவார்என் னெஞ்சகமார்**
**தாயன்றிச் சூலுமுண்டோ சாற்றாய் பராபரமே.**

(ப-ரை) நீ-தேவரீரை, அன்றி-அல்லாமல், நான்-அடியேன், ஆர்-யார்?, நினைவு-எண்ணம், ஆர்-யார்?, என் - அடியேனின், நெஞ்சகம் - மனது, ஆர்-யார்?, தாய் - தாயை, அன்றி - அல்லாமல், சூலும்-கர்ப்பமும், உண்டோ - உளதோ, சாற்றாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நீ என்றது-இறைவனை; சர்வந்தரியாமியாய் சர்வ வியாபகமாய் நின்று ஆட்டும் இறைவனை. நான் என்றது - ஜீவான்மாவை; இறைவனால் ஆட்டுவிக்க ஆடும் ஆன்மாவை. தாயன்றிச் சூலுமுண்டோ என்றது-வேற்றுப் பொருள் வைப்பணி. தாயில்லாமற் சூலில்லை; அதுபோல நீ இல்லாமல் நான் இல்லை, நினைவு இல்லை, மனது இல்லை என்பது கருத்து. நினைவு கன்மங்களுக்குத் தக்கபடி இறைவன் திருவருளால் எழுமாதலின் 'நினைவார்' என்றார். மனம் சென்மாந்தர வினைகளுக்குத் தக்கபடி சங்கற்பிக்கும் ஆதலின் 'நெஞ்சகமார்' என்றார். 210



**அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிட நீ**
**யெங்குமே னேனென்ற தென்னே பராபரமே.**

(ப-ரை) அங்கமே-தேகமே, நின் - தேவரீரின், வடிவம் - வடிவம், ஆன-ஆகிய, சுகர்-சுகமுனிவர், கூப்பிட-அழைக்க, நீ-தேவரீர், எங்கும்-எவ்விடத்தும், ஏன்-ஏன், ஏன்-ஏன், என்றது - என்று பதில் உத்தரங் கொடுத்தது, என்னே-என்ன ஆச்சரியம்!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அங்கமே நின்வடிவம் ஆன என்றது-மேனிமுழுதும் இறைவன் வடிவாதல். என்னை? தூய்மையும் நிருவிகற்பமும் பெற்றிருத்தல். சுகர் என்றது - சுகவடிவங்கொண்ட சுகப்பிரம்ம ரிஷியை. இவர் ஒருவரே பெண்ணின்பத்தை முற்றுந் துறந்துவிட்ட முனிவர். இவர் சிவசொரூபத்தை எங்குங் கண்டார். காண்பன எல்லாஞ் சிவசொரூபமாகக் கண்டாராதலின் இவர் அழைத்தபோது எங்கும் எல்லாம் ஏன் ஏன் என்றது சிவம். என்னே-இது வியப்பிடைச் சொல். 211

**கொள்ளைவெள்ளத் தண்ணருண்மேற் கொண்டுசுழித் தார்த்**
**திழுத்தால் கள்ளமனக் கப்பலெங்கே காணும் பராபரமே.**

(ப-ரை) தண்-குளிர்ச்சிபொருந்திய, அருள்-தேவரீரது திருவருளாகிய, கொள்ளை-பெரிய, வெள்ளம் - வெள்ளமானது, மேற்கொண்டு - அதிகரித்து, சுழித்து-சுழித்து, ஆர்த்து-சப்தித்து, இழுத்தால் - இழுக்குமானால், கள்ளம்-கபடம்பொருந்திய, மனம்-மனமாகிய, கப்பல்-மரக்கலம் (அருள்பெரு வெள்ளத்தில் முழுகி அழுந்துவது அல்லாது), எங்கே - எவ்விடத்தே, காணும்-தோன்றும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'கொள்ளை' இது மிகுதிப்பொருள் காட்ட வந்தது. வெள்ளம் என்றது-பிரவாகத்தை. மாயையிற் சிக்கி மருண்டு தானல்லாததைத் தானாகவும், தன்னதல்லாதவற்றைத் தன்னதாகவுங் கொள்ளலின் 'கள்ள மனம்' என்றார். எங்கே காணும் என்றது - காணாது என்னும் பொருளது. திரு அருளைப் பெருவெள்ளமாகவும் தன்னை மரக்கலமாகவுங் கூறியது உருவகம். 212

**எக்கலையுங் கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மதஞ்**
**வக்கணையா லின்பம் வருமோ பராபரமே. [சொல்**

(ப-ரை) எ-எத்தகைய, கலையும்-நூல்களையும், கற்று - (ஐயந்திரிபு விபரீதம் என்னும் முக்குற்றங்களும் அறக்) கற்று, உணர்ந்தோம் - அவற்றின் பொருள்கள் எல்லாம் நன்றாய் அறிந்தோம், என்றவர்க்கும் - என்ற (அகங்கரித்துக்) கேட்டவர்கள் எல்லோர்க்கும், சம்மதம் - தகுந்த சமாதானத்தை, சொல் - சொல்லும்படியான, வக்கணையால் - கல்விச் சாமார்த்தியத்தால், இன்பம்-சிவானந்தபோகசுகம், வருமோ-வந்துவிடுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எக்கலையும் என்றது - எந்த இலக்கண இலக்கிய சம்பந்தமான நூல்களையும் என்பது பொருளாம். வக்கணை என்றது - கல்விச் சமர்த்தை. இன்பம் என்றது - சிவானந்தப்பெருக்கை. 'வருமோ' என்ற வினா, விடை தழுவிய வினா; வாராது என்பது பொருளாம். 213

**கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணும்நல்லோர்**
**சொல்லுணரின் ஞானம்வந்து தோன்றும் பராபரமே.**

(ப-ரை) கல் - கல்லை, எறிய-எறிந்தால், பாசி - ஜலத்தை மூடிக்கொண்டிருக்கும் பாசி, கலைந்து - விலகி, நல் - பாசியால் மூடப்பெற்ற நல்ல, நீர்-ஜலமானது, காணும் - தோன்றும் (அதுபோல), நல்லோர் - ஞானவான்களுடைய, சொல் - சொற்களை, உணரின்-அச்சொற்களின் பொருளை அறிந்தால், ஞானம் - ஞானம், வந்து - வந்து, தோன்றும் - வாய்க்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'கல்லெறியப் பாசி கலைந்த நன்னீர் காணும்' என்பது உபமானம். நல்லோர் சொல்லுணரின் ஞானம் வந்து தோன்றும் என்பது உபமேயம். பாசி - இது பசுமைநிறம் உடையது என்னும் காரணம் பற்றிவந்த பெயர். நல்லோர் என்றது - ஞானவான்களை. சொல் என்றது தத்துவநூற்கருத்துடைய சொற்கள் சித்தாந்த சாஸ்திரச் சொற்கள் என்பது பொருளாம். ஞானம் என்றது தத்துவஞானத்தை, சிவஞானத்தைக் குறித்தது.

**நின்னையுணர்ந் தோர்கடமை நிந்தித்த பேயறிஞ**
**ரென்னகதி பெறுவார் எந்தாய் பராபரமே.**

(ப-ரை) எந்தாய்-எமது தந்தையே!, நின்னை-தேவரீரை, உணர்ந்தோர்கள்-உள்ளபடி அறிந்தவர்கள் ஆகிய சிவனடியார்களை, நிந்தித்த - தூஷித்த, பேய்-பேய்த்தன்மையுடைய, அறிஞர்-அறிவை உடையவர்கள், என்ன - எத்தகைய, கதி-நரககதியை, பெறுவார்-அடைவார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நின்னை என்றது-இறைவனை. உணர்ந்தோர் என்றது - சிவனடியார்களை. நிந்தித்தோர் அழிவது திண்ணம் கொடுநரகிற்காளாவது திண்ணம் ஆதலின் 'என்னகதி பெறுவார்' என்றார். 215

**என்னதியா னென்னலற்றோர் எங்கிருந்து பார்க்கினுநின்**
**சன்னிதியாம் நீபெரிய சாமி பராபரமே.**

(ப-ரை) என்னது-என்னுடையது, யான்-நான், என்னல்-என்றுகூறல், அற்றவர்-ஒழித்த பெரியவர்கள், எங்கு-எவ்விடத்து, இருந்து-இருந்து, பார்க்கினும்-பார்த்தாலும் அவ்விடங்களில் எல்லாம், நின் - தேவரீரின், சன்னிதியாம்-சன்னிதியாகவே தோன்றும், நீ-தேவரீர், பெரிய - மகா, சாமி - தேவனாகக் காண்கின்றாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) என்னது என்பது-மமகாரச்சேட்டை. யான் என்பது-அகங்கார தத்துவச்சேட்டை. அற்றவர் என்றது-சிவஞானிகளை. இறைவன் சர்வவியாபகி ஆதலின் எல்லா இடங்களும் இறைவன் சன்னிதியாகக் காண்கின்றதென்பார் 'எங்கிருந்து பார்க்கினும் நின் சன்னிதியாம்' என்றார். சிவபெருமானினும் பெரியதெய்வம் இல்லையாதலின் 'நீ பெரியசாமி' என்றார். இதனை, "சைவத்தின்மேற் சமயமில்லை யதிற்சார், சிவமாம் தெய்வத்தின்மேற் றெய்வமில்லை" என்னும் **சைவ எல்லப்பநாவலர்** திருவாக்காலும் அறியலாம். 216



**சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக்**
**காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.**

(ப-ரை) சோற்று - சோற்றை அடைத்துவைக்கும், துருத்தி - தோற்பையாகிய இவ்வுடம்பு, சுமை-சுமையை, சுமப்ப-நெடுநாள் சுமந்திருக்க, கண்-கண்கள், பிதுங்க-பிதுங்க, காற்றை-ஜீவக்காற்றை, பிடித்து-வெளியே விட்டுவிடாது உள்ளடக்கி, அலைந்தேன்-திரிந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தினந்தினம் சோற்றைத்திணித்து உடலைப்பேணுதலால் 'சோற்றுத்துருத்தியை' என்றார். உடல் ஒரு சுமையாதலின் 'சுமைசுமப்ப' என்றார். "சுளியார் சுமைபோடுதற்கு" என்னும் சங்கவாக்காலும் அறியலாம். கண்பிதுங்க என்றது - கண் வெறித்துநிற்க அடயோகஞ் செய்தலைக் குறித்தது. காற்றைப்பிடித்து - பிராணவாயுவைப் பந்தித்து வைத்தலை. இதனால் ஒரு பயனும் பெற்றேன் இல்லை என்பார் 'அலைந்தேன்' என்றார். கண்டாய் - அசை. 217

**உள்ளபடி யொன்றை யுரைக்கின் அவர்க் குள்ளுறவாய்க்**
**கள்ளமின்றி அன்பாய்க் களிப்பேன் பராபரமே.**

(ப-ரை) உள்ளபடி - உண்மையாக, ஒன்றை - ஒப்பற்ற பொருளாகிய இறைவனை, உரைக்கின்-பொருந்த ஒருவர் கூறினால், அவர்க்கு-அவர்களுக்கு, உள்ளுற-மனதுபொருந்த, ஆய் - நெருங்கினவனாகி, கள்ளம்-கபடம், இன்றி-இல்லாமல், அன்பு-அன்பு, ஆய்-கொண்டு, களிப்பேன்-அவர்களுடன் ஆனந்திப்பேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளபடி என்றது - சாஸ்திரோக்தமாக என்பதாம். ஒன்றை என்றது - ஒப்பற்ற பொருளாகிய இறைவனை. அவர்க்கு என்றது - அவ்வாறு உரைக்கும் அவர்க்கு என்பது பொருளாம். உள்ளுறவாய் என்றது - அவர்களிடம் உள்ளத்திலே உறவு வைத்து என்பதாம். கள்ளமின்றி அன்பாய் என்றது-மெய்யன்புகொண்டு என்பதாம். களிப்பேன் என்பது-அவர்களுடன் கலந்து சிவானந்தத்தில் மூழ்கி இருப்பேன் என்பதாம். 218

**அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்**
**றொடுத்ததொன்றை யான்வேண்டிச் சொல்லேன் பராபரமே.**

(ப-ரை) அடுத்த-பொருந்திய, இயல்பாக-இயற்கையாக, ஒன்றை - ஒப்பற்ற பொருளாகிய இறைவனை, யான்-அடியேன், பகர்வது - பிறர்க்கு எடுத்துச்சொல்வது, அல்லால் - அல்லாமல், தொடுத்தது - கற்பித்தது, ஒன்றை - ஒன்றை, யான்-அடியேன், வேண்டி - விரும்பி, சொல்லேன் - சொல்லமாட்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அடுத்த இயல்பாக என்றது-கற்பனை கலவாமல் உள்ளதை உள்ளபடி என்பதாம். ஒன்றை - ஒப்பற்ற பொருளாகிய இறைவனை. பகர்வது என்றது-பிறர் உய்ய அவர்களுக்கு எடுத்து உரைப்பது என்பதாம். தொடுத்து என்றது-கற்பனைகளைக் கலந்து என்பது பொருளாம். சொல்லேன்-இது எதிர்மறை வினைமுற்று. 219

**உள்ளமறியாதொருவ ரொன்றையுன்னிப் பேசில்ஐயோ**
**துள்ளியிளங் கன்றாய்த் துடிப்பேன் பராபரமே.**

(ப-ரை) உள்ளம்-அடியேனுடைய மனத்தை, அறியாது - தெரியாமல், ஒருவர்-எவரேனும் ஒருவர், ஒன்றை - இறைவனைப்பற்றிய விஷயம் ஒன்றை, உன்னி-மனத்தில் ஏதோ ஒன்றைச் சங்கற்பித்துக்கொண்டு, பேசில்-சொன்னால், ஐயோ-ஐயோ!, துள்ளி-துடித்து, இளம்-இளமையாகிய, கன்று-கன்று, ஆய்-ஆகி (போலஆகி), துடிப்பேன்-துடித்திடுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளம் அறியாது என்றது-உண்மை ஞான நூல்களை ஆராய்ந்து கண்டுணர்ந்திருக்கிற அடியேனின் மனக்கருத்தை அறியாமல் என்பது பொருளாம். ஒருவர் என்றது - உண்மைகண்டு அறியா ஒருவர் என்பதாம். ஒன்றை உன்னி என்பது-சுருதி, உத்தி, அனுபவங்களுக்குப் பொருந்தாத ஒரு விஷயத்தை மனத்திற் சங்கற்பித்துக்கொண்டு என்பது பொருளாம். 'துள்ளி இளங் கன்றாய்' என்பது உவமை. 220

**எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே**
**யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.**

(ப-ரை) எல்லாரும் - உலகத்திலுள்ள யாவர்களும், இன்பு - சிவானந்த இன்பம், உற்று-அடைந்து, இருக்க-இருக்கும்படி, நினைப்பதுவே-நினைக்கும் அத்தன்மையே, அல்லாமல் - அல்லாதபடி, வேறு - அதற்கு வேறு ஆகிய, ஒன்றை - ஒரு விஷயத்தை, அறியேன்-எண்ண அறியேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லாரும் என்பது - உலகத்துள்ள மக்கள் எல்லாரும் என்பதாம். இனி, உலகத்துள் மக்கள் முதலிய எல்லா உயிர்களும் எனப் பொருள் கொள்ளினும் இழுக்காது. இதன்கண் உள்ள ஈற்று உம்மை முற்றும்மை. இன்பு என்றது - சிவானந்தசுகத்தை என்க. வேறு ஒன்றை அறியேன் என்றது - எல்லா உயிரும் சிவானந்தம் உறவேண்டும் என்பதைத் தவிர்த்து வேறு விருப்பங்கொண் டறியேன் என்பதாம். 221

**முன்னாண்மெய்ஞ் ஞான முனிவர்தவ மீட்டுதல்போ**
**லிந்நாளிற் காணவெனக் கிச்சை பராபரமே.**

(ப-ரை) முன் - முந்திய, நாள் - நாட்களில், மெய் - உண்மை, ஞானம்-ஞானத்தை அடைந்த, முனிவர் - முனிவர்கள், தவம் - தவத்தை, ஈட்டுதல்-சேர்த்தது, போல்-போல, இ-இந்த, நாளில் - நாள்களில், காண - யாவரும் தவத்தைச் சேகரித்துக் காண, எனக்கு-அடியேனுக்கு, இச்சை - விருப்பம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) முந்நாள் என்றது - பண்டைக் காலத்தை. மெய்ஞ்ஞான முனிவர் என்றது - சிவஞானம் பெற்ற முனிவர்களை. முனிவர் என்றது-உலகப்பற்றை வெறுத்துவிட்டவர் என்பது பொருள். 222



**கன்மமென்ப தெல்லாங் கரிசறவே மெய்ஞ்ஞான**
**தன்மநிலை சார்ந்ததன்பர் தன்மை பராபரமே.**

(ப-ரை) கன்மம்-கர்மம், என்பது - என்று சொல்லப்படுவது, எல்லாம்-எல்லாம், கரிசு-பற்று, அறவே-நீங்கவே, மெய்-உண்மை, ஞானம்-ஞானமாகிய, தன்மம்-தர்மம், நிலை-நிலையை, சார்ந்தது-அடைந்தது, அன்பர்-சிவனடியார்களின், தன்மை-குணம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கர்மம் என்றது - வினையை. நல்வினை தீவினை இரண்டும் உளப்படவேயாம். கரிசு என்பது - பற்றை. இதனை "கரிசுதானேகழறின் பற்றுங் குற்றமும் ஆகும்" என்பதனாலறிக. மெய்ஞ்ஞானம் என்றது சிவ ஞானத்தினை. 'ஞான தன்மம்'-இது பண்புத்தொகை; ஞானமாகிய தர்மம் எனவிரிதலின் இனி உம்மைத்தொகையாகக்கொண்டு ஞானமும் தன்மமும் என்று பிரிப்பாரும் உளர். 223

**கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற**
**மண்டிய பேரொளிநீ வாழி பராபரமே.**

(ப-ரை) கண்-கண், துயிலாது-தூங்காது நிற்கின்ற, என்-அடியேனின், அறிவின்கண் - அறிவினிடத்தே, ஊடே-உள்ளே, காட்சி-பிரத்தியட்சமாக, பெற-காணும்படி, மண்டிய-அமைந்து விளங்கிய, பேர்-பெரிய, ஒளி-சோதி, நீ - தேவரீரே, (ஆகையால்) வாழி - தேவரீர் வாழ்ந்திருப்பீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண் துயிலா தென்னறிவு என்றது-தெளிந்த அறிவை. காட்சி பெற என்றது - பிரத்தியட்சமாக என்பதாம். மண்டிய பேரொளி என்றது-மிகுந்துதோன்றி விளங்கிய திருஅருட் பெருஞ்சோதி என்பதாம். நீ என்றது-இறைவனை. வாழி - இது முன்னிலை வியங்கோள். 224

**நானான தன்மையென்று நாடாமல் நாடவின்ப**
**வானாகி நின்றனைநீ வாழி பராபரமே.**

(ப-ரை) நான்-நான் என்னும் சுதந்தரத்தன்மை, ஆன-ஆகிய, தன்மை-தன்மையை, என்றும்-எக்காலத்தும், நாடாமல் - விரும்பாதபடி, நாட-தேவரீரையே சரண் என்று விரும்ப, இன்பம்-ஆனந்தமயமாகிய, வான்-சிதாகாயம், ஆகி-ஆகி, நின்றனை - நின்றனை, நீ-ஆதலின் தேவரீர், வாழி-வாழ்ந்திருக்கக் கடவீர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நானான தன்மை என்றது-நான் என்னும் அகங்கார தத்துவம் கொண்டு எழும் தற்சுதந்தரத் தன்மையை. நாட என்றது - இறைவனாகிய தேவரீரை விரும்ப என்பது பொருளாம். இன்பவான் என்றது-ஆனந்தமயமாகிய சிதாகாயத்தை. 225

**அகத்தூ டணுவணுவாய் அண்டமெல்லாந் தானாய்**
**மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே.**

(ப-ரை) அணு-அணுவின், அகத்து - உள்ளே, ஊடு - உள்ளாக, அணு-அணுத்தன்மை, ஆய் - ஆகி, அண்டம் - அண்டங்கள், எல்லாம்-எல்லாமும், தான் - தானே, ஆய் - ஆகி, மகத் - மகத் (பெரிய பொருளாய்), ஆகி - ஆகி, நின்றனை-தேவரீர் நின்றருளியிருந்தீர், (ஆதலினால்) நீ-தேவரீர், வாழி-வாழ்ந்திருப்பீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அகத்து டணுவணுவாய் என்றது - அணுவுக்கு அணுவாய் இருத்தலை. இறைவன் சம்காரகலந்தே அணுவுக்கு அணுவாகி நிற்பன். அண்டமெல்லாந் தானாய் என்றது-சர்வாண்டங்களாகி நிற்றலை. இறைவன் திரிகாலத்தில் அண்டங்களெல்லாந் தானாகி நிற்பன். மகத்தாகி என்றது-பெரிதாய் இருத்தலை. இறைவன் சிருஷ்டிகாலத்தில் எல்லாவற்றையுங் கடந்த பெரிய பொருளாகி இருப்பன்.

226

காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே.

(ப-ரை) காரகம்-அந்தகாரத்துக்கு, ஆம்-இடமாய் இருக்கின்ற, கர்ப்பம்-கர்ப்பமாகிய, அறைக்கண்-வீட்டினிடத்து, ஊடும் - உள்ளிடத்தேயும், என்-அடியேன், கண்ணே-இடத்தே, வாரம்-அன்பு, வைத்து-வைத்து, காத்தனை-காப்பாற்றினை (ஆதலால்), நீ - தேவரீர், வாழி - வாழ்ந்திருப்பீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காரகம் என்றது-அந்தகாரத்தை. அந்தகாரம்-இருட்டு; இது வடசொல்; இது முதற்குறை விகாரச்சொல். கர்ப்ப அறை என்றது - தாய் வயிற்றுக் கர்ப்பப்பையை. என்கண்ணே - இதில் 'கண்' ஏழனுருபு. ஏ-தேற்றப்பொருளில் வந்த இடைச்சொல். வாரம் என்றது - அன்பு, பிரியம் என்ற பொருளது.

227

புரந்தோர்தந் தேசமென்பார் பூமியைப்போ ராடி
இறந்தோருந் தம்மதென்பார் என்னே பராபரமே.

(ப-ரை) புரந்தோர்-பூமியை ஆண்டவர்கள், பூமியை - இந்தப் பூமியை, தம்-தமது, தேசம்-தேயம், என்பார்-என்பார்கள், போராடி - இப்பூமிக்காகப் போர்செய்து, இறந்தவரும்-செத்தவர்களும், தம்மது-தம்முடையது, என்பார்-என்று கூறுவார்கள், என்னே - இது என்ன அறியாமையின் காரியம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) புரந்தோர் என்றது - பூமியை அரசுசெய்யும் அரசர்களை. (புரத்தல்-காத்தல்), இதுகொண்டே அரசர்க்குப் புரவலர் என்னும் பெயர் எய்தியது. போராடி இறந்தோர் என்றது - தான் அரசுசெய்கையில் அத்தேசத்தைப் பிடுங்கிக்கொள்ள எதிர்த்து வந்த அரசரோடு எதிர்த்துப் போராடி மடிந்த அரசர்களைக் குறித்தது.

228

மூர்த்தியெல்லாம் வாழிஎங்கள் மோனகுரு வாழிஅருள்
வார்த்தையொன்றும் வாழிஅன்பர் வாழி பராபரமே.



(ப-ரை) மூர்த்தி-மூர்த்திகள், எல்லாம்-யாவும், வாழி-வாழ்ந்திருப்பதாக, எங்கள்-அடியோங்களுடைய, மோன-மவுன, குரு-குரு, வாழி - வாழ்ந்திருப்பாராக, அருள்-மௌனதேசிகர் அருளிச்செய்த, வார்த்தை-ஞானோபதேசம், என்றும்-எந்தக்காலத்தும், வாழி - வாழ்ந்திருப்பதாக, அன்பர் - அடியார்கள், வாழி-வாழ்ந்திருப்பார்களாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மூர்த்தி எல்லாம் என்றது-மகேச்சுரனின் முகூர்த்தங்களாகிய இருபத்துநான்கு மூர்த்திகளை. மோனகுரு என்றது-தாயுமானசுவாமிகளைத் தடுத்து ஆட்கொண்ட மௌனதேசிகரை.

229

சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும் படிக்கருணீ செய்தாய் பராபரமே.

(ப-ரை) சொல்லும்-சொல்லும், பொருளும் - சொற்களின் பொருளும், தொடரா-தொடர்ந்து பற்றமுடியாத, அருள்-திருவருளின், நிறைவில்-வியாபகத்தில், செல்லும்-சென்று அடையும், படிக்கு-படிக்கு, அருள்-திருவருளை, நீ-தேவரீர், செய்தாய்-செய்து அருளினை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனும் அவன் திருஅருளும் மனோவாக்குகளுக்கு எட்டாதது ஆதலின் 'சொல்லும் பொருளுந் தொடரா' என்றார். 'சொல்' வைகரி சம்பந்தப்பட்டதாதலின் மாயைக்கு அப்பாற்பட்ட திருஅருளை அது தொடரமுடியாதென்க.

230

இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே.

(ப-ரை) இற்றை - இந்நாள், வரைக்கு-அளவுக்கு, உள்ளாக-உள்ளே, எண் - நினைத்தற்கு, அரிய-அரிதாகிய, சித்தி-காரிய சித்திகளையும், முத்தி-முத்தியையும், பெற்றவர்கள் - அடைந்தவர்கள், எத்தனை - எத்தனை, பேர்-பெயர்கள், பேசாய்-சொல்லியருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இற்றை என்றது - புனச்சிருஷ்டி முதல் இன்றுகாறும் என்பதாம். இற்றை என்பது இன்றை என்பதன் வலித்தல்விகாரம். எண்ணரிய சித்தி என்றது-அட்டமா சித்திகளை. எண்-எண்ணுதற்கு என்பதாம். இனி எட்டு அரியசித்தி எனப் பொருள் உரைப்பாரும் உண்டு. முத்தி என்றது - சித்தாத்துவித வைதிக சைவமுத்தியை. எத்தனைபேர் என்றது - அளவிற்கு அடங்காத பெயர் என்னுங் குறிப்புப்பொருளது. 'பேர்' இது 'பெயர்' என்பதன் மரூஉ. 'பேசாய்' - இது முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று; சொல்லி அருள்வாயாக என்ற பொருளதாம்.

231

நாடு நகருநிசா னாட்டிய பாளயமும்
ஈடுசெயு மோமுடிவி லெந்தாய் பராபரமே.

(ப-ரை) எந்தாய் - எமது தந்தையே!, நாடும் - நாடும், நகரும்-நகரமும், நிசா-அடையாளம், நாட்டிய-குறித்த, பாளயமும்-படையும், முடிவில்-முடிவுக் காலத்தில், ஈடு - பெருமையை, செயுமோ - கொடுக்குமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'நாடும், நகரும், பாளயமும்' என்றதன்கண் உள்ள ஈற்று உம்மைகள் எண்ணும்மைகள். நிசா என்பது-அடையாளம், இது வடசொல். பாளையம் என்றது-படையை; இது செந்தமிழ்ச் சொல். முடிவில் என்பது-வாழ்நாளின் அந்தியகாலத்து என்பதாம். 'செயுமோ' என்ற வினா, செய்யாது என்னுங் குறிப்பினது. 232

**தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே.**

(ப-ரை) தேடும்-தேடப்படுகிற, திரவியமும்-பொருளும், சேர்ந்த-சேர்க்கப்பட்ட, மணி - ரத்தின, பெட்டகமும்-பெட்டியும், கூட - போங்காலத்துக் கூட, வரும்-வரக்கூடிய, துணையோ-துணைகளோ, கூறாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேடுந்திரவியம் என்றது-தேடிவைக்குந் திரவியங்கள் என்பது பொருளாம். பெட்டகம் என்றது-பெட்டியை. கூடவரும் என்றது-இறந்து போங்காலத்துக் கூடவரும் என்பது பொருளாம். 233

**தேடாத தேட்டினரே செங்கைத் துலாக்கோல்போல்
வாடாச் சமனிலையில் வாழ்வார் பராபரமே.**

(ப-ரை) தேடாத-(இலகுவிலே) தேடப்படாத, தேட்டினரே - திருஅருளாகிய செல்வத்தை உடையவர்களே, செங்கை-வணிகரின் செவந்த கையில் உள்ள, துலாம்-தராசின், கோல் - கோலை, போல் - போல, வாடா - மெலிவு அடையாத, சமம்-சமமாகிய, நிலையில்-நிலையில், வாழ்வார்-வாழ்வார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேடாத தேட்டு என்றது - திருவருளாகிய செல்வத்தை; என்னை? இது இலேசிலே சம்பாதிக்கற்பாலது அன்று. திருஅருள் செல்வத்தைப் பெற்றவர்கள் இன்பம் வந்தகாலத்து மகிழ்ச்சி அடையாமலும் துன்பம் வந்தகாலத்து மனம் வருந்தி வாடாமலும் இன்பதுன்பங்களைச் சமமாகப் பாவித்து இவை வினையால் வந்தன என்றிருப்பர் ஆதலின் 'துலாக் கோல் போல் வாடாச் சமநிலையில் வாழ்வார்' என்றார். 234

**நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னே பகராய் பராபரமே.**

(ப-ரை) நீர் - (தேவரீரைக்காணாது) நீரைப்போல், ஆய் - ஆகி, கசிந்து-கசிந்து, உருகி-உருகி, நெட்டுயிர்த்து - பெருமூச்சுவிட்டு, நின்றேனை-நின்ற அடியேனை, பாராதது-கடாட்சம் செய்யாதது, என்னே-என்ன காரணமோ, பகராய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'நீராய்' இது உவமத்தொகை; நீர்போல் ஆய் எனவிரியும். கசிந்து உருகி என்றது-இளகி உருகுதலை. நெட்டுயிர்த்து என்றது - பெருமூச்சு விடுதலை. நீண்டுவிடும் மூச்சு ஆதலின் நெட்டுயிர்ப்பு என்றாயது. 235



**உள்ளபொரு ளாவி யுடன்மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே.**

(ப-ரை) உள்ள-அடியேனிடத்து உள்ள, பொருள்-பொருள்கள், ஆவி-உயிர், உடல் - உடல், மூன்றும் - மூன்றையும், அன்றே - தேவரீர் எதிரிட்ட அந்த நாளிலேயே, கொள்ளை-கொள்ளை, கொண்ட - கொண்ட, நீ-தேவரீர், என்-அடியேனின், குறை-குறைகளை, தீர்-தீர்த்தருளுக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளபொருள், ஆவி, உடல் மூன்றும் என்றது-அடியேனுடையது எனக் கருதப்பட்டுவந்த உடல் பொருள் ஆவி மூன்றும் என்பது பொருளாம். இதில் 'உம்' முற்றுப்பொருளில் வந்தது. அன்றே என்றது-மௌன தேசிகராக எதிர்ப்பட்டு வந்தருளிய காலத்தே என்பது பொருளாம். 'அன்றே' என்றதன் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளது. கொள்ளைகொண்ட என்றது-வாங்கிக்கோடலை. 236

**ஆழ்ந்தாயே யிவ்வுலகில் அல்லலெல்லாந் தீர்ந்தருளா
வாழ்ந்தாயே என்றனை நீ வாழி பராபரமே. [ல்**

(ப-ரை) இவ்-இந்த, உலகில்-பிரபஞ்சவாழ்க்கையாகிய கடலில், ஆழ்ந்தாயே - முழுகினையே!, அல்லல் - பிறவித்துன்பங்கள், எல்லாம் - எல்லாம், தீர்ந்து-நீங்கி, அருளால் - திரு அருளின் கருணையினால், வாழ்ந்தாயே-வாழ்ந்தனையே, என்றனை-என்று கூறி அருளினை (ஆதலால்) நீ - தேவரீர், வாழி-வாழ்ந்திருப்பீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'இவ்வுலகில் ஆழ்ந்தாயே' இதில் ஆழ்ந்தாயே என்ற வினைக்கு கடல் என்பது வருவிக்கப்பட்டது. உலகம் என்றது - பிரபஞ்சவாழ்க்கையாகிய கடலை. அல்லல் என்றது-பிறவித் துன்பங்களை. அருளால் என்றது-இறைவன் திரு அருளை. வாழ்ந்தாயே என்றது - குருமூர்த்தமாக எழுந்தருளிய காலத்துத் திருவாய்மலர்ந்தருளியதை. 'ஆழ்ந்தாயே' 'வாழ்ந்தாயே' என்றதன்கண்ணுள்ள ஈற்று ஏகாரங்கள் தேற்றப்பொருளன. 237

**தாரா வருளையெல்லாந் தந்து எனையு நின்னருளில்
வாராயோ என்றனை நீ வாழி பராபரமே.**

(ப-ரை) தாரா - அந்நாளில் தரக்கூடாத, அருளை - அருளை, எல்லாம்-முற்றும், தந்து - தந்தருளி, எனையும் - அடியேனையும், நின் - தேவரீரின், அருளில்-திரு அருளினால், வாராயோ-வரமாட்டாயோ, என்றனை-என்றுகூறி அருளினை (ஆதலால்), நீ - தேவரீர், வாழி - வாழ்ந்திருக்கக்கடவது, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'தாரா' இது தரக்கூடாத என்னும் பொருளது; இது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தந்தருளி என்றது - ஞானாசிரியராக வந்தருளியகாலத்து தந்தருளியதைக் குறிக்கின்றது. 'அருளில்'-இது வேற்றுமை மயக்காம்; 'அருளால்' என்னும் பொருள் தந்து நின்றமையின் ஏழாம் வேற்றுமை உருபு மூன்றும் வேற்றுமைப்பொருளில் மயங்கியது. 'வாராயோ'

இதன் ஈற்று ஓ வினாப் பொருள்தந்து நின்றது. இது ஆகாசம்பற்றி பிரிவு பற்றிவந்த வினா. 238

**ஆசையுன்மீ தல்லால் அருளறிய வேறுமொன் றிற்**
**பாசம்வையேன் நின்கருணைப் பாங்காற் பராபரமே.**

(ப-ரை) நின்-தேவரீரின், கருணை-திருஅருளின், பாங்கால்-பாங்கினால், ஆசை-அடியேனின் ஆசை, உன்-தேவரீரின், மீது-மேலே, அல்லால்-அல்லாமல், (சத்தியமாக) அருள் - தேவரீரின் திருஅருள், அறிய - அறிய, வேறு-வேறாகிய மற்று, ஒன்றில்-ஒன்றினிடத்து, பாசம்-விருப்பத்தை, வையேன்-வைக்கமாட்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆசை என்றது-ஈண்டு பெருவிருப்பத்தைக் குறித்தது. உன் என்றது-இறைவனை. வேறு ஒன்று என்றது-இறைவனைத் தவிர்த்து உலக சம்பந்தமாகிய இச்சைகள் யாதானும் ஒன்றில் என்பது பொருளாம். பாசம் என்றது-பற்றை, விருப்பத்தை. பாங்கு என்பது-வளப்பம், தன்மை என்னும் பொருளது. கருணை என்றது-திருஅருளை. அருள் அறிய என்றது-சத்தியமாக என்றதாம். 239

**ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா லின்னையன் றிப்**
**போதனையு முண்டோ புகலாய் பராபரமே.**

(ப-ரை) ஆதி-ஆதிதொடங்கி, அந்தம் - முடிவுவரை, நீ - தேவரீர், குருவாய்-ஞானாசிரியராக வந்து, ஆண்டது-அடியேனை ஆண்டருளியது, அல்லால்-அல்லாமல், நின்னை-தேவரீரை, அன்றி - அல்லாது, போதனையும் - அடியேனுக்கு உபதேசமும், உண்டோ-உளதோ, புகலாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆதி அந்தம் என்றது-முதலிலிருந்து முடிவுவரை என்ற பொருளது. நீ என்றது-இறைவனை. குருவாய் ஆண்டது என்றது-மௌன குருவாக இறைவன் வந்து அருளியதை. நின்னை என்றது - இறைவனை. 'போதனை' வேறு எவரின் உபதேசமும் என்பதாம், 'உண்டோ'-இது விடை தழுவிய வினா; இல்லை என்பது பொருளாம். 240

**தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப**
**வானாகச் செய்தவின்ப வானே பராபரமே.**

(ப-ரை) தானாக-வலிய, வந்து-கருணையினால் வந்தருளி, எனைத்தடுத்து-அடியேனைத் தடுத்து, ஆண்டு-ஆட்கொண்டருளி, இன்பம்-ஆனந்தமயமாகிய, வான் - சிதாகாயம், ஆக - ரூபத்தை அடைய, செய்த-செய்தருளிய, இன்பவானே-சுகசொரூபியே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தானாகவந்து என்றது-தானே வலியக் கருணையினால் வந்தருளி என்பதாம். தடுத்தாண்டு என்றது - பிரபஞ்சமாயையில் நுழையாது தடுத்து ஆண்டு என்ற பொருளதாம். இன்ப வான் ஆக என்றது-சிவானந்த சொரூப சிதாகாசவடிவமாக என்பது பொருளாம். இறைவன் சுகவடிவன், சுகமயன், சுகத்தை அருள்வோன் ஆதலின் 'இன்பவானே' என்றார். 241



**பற்றற் றிருக்குநெறி பற்றின் கடன்மலையுஞ்**
**சுற்ற நினைக்குமனஞ் சொன்னேன் பராபரமே.**

(ப-ரை) பற்று-உலகவிஷயங்களில் சம்பந்தம், அற்று-நீங்கி, இருக்கும்-இருக்கும்படியான, நெறி - நல்லமார்க்கத்தை, பற்றில் - கைக்கொண்டால், மனம் - அடியேனின் மனம், கடல் - கடலிலும், மலையும் - மலையிலும், சுற்ற-சுற்றித்திரிய, நினைக்கும் - நினையாநிற்கின்றது, சொன்னேன்-தேவரீருக்குத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பற்று என்றது-பிரபஞ்சப் பற்றுக்களை. முத்தி எய்தற்கு உலக பாசபந்தம் அற்று இருத்தல் நல்லநெறி ஆதலின் 'பற்றற் றிருக்குநெறி பற்றில்' என்றார். மனம் எப்பொழுதுஞ் சலிக்குந் தன்மையதாதலால் 'கடன் மலையுஞ் சுற்ற நினைக்கும்' என்றார். இதனானன்றே பெரியோர்களும் மனத்தைக் 'குரக்குமனம்' என்றார்கள். 242

**படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்**
**துடிப்பற்றார்க் கன்றோ சுகங்காண் பராபரமே.**

(ப-ரை) படிப்பு-உலக நூல்களின் படிப்பு, அற்று-நீங்கி, கேள்வி - கேட்டலும், அற்று - நீங்கி, பற்று - உலகப்பொருள்களின் ஆசை, அற்று - நீங்கி, சிந்தை - மனம், துடிப்பு - பதைப்பு, அற்றார்க்கு - நீங்கினார்க்கு, அன்றோ - அல்லவோ, சுகம்-சிவானந்தம் உண்டாவது, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கேள்வி-உலகசம்பந்தமான கேள்விகளை. பற்று-உலகப்பற்றை. சிந்தைத் துடிப்பு-மனத்தில் பிரபஞ்சமாயைபற்றி எழும் எழுச்சி. அன்றோ என்றது - அவர்களுக்குத்தான் சுகம் என்னும் பொருள் தந்து நின்றது. அற்று-பன்முறை வந்தது சொற்பொருள் பின்வருநிலையணி. காண்-அசை. 243

**சத்தாகி நின்றோர் சடங்க ளிலிங்கமென**
**வைத்தாரு முண்டோஎன் வாழ்வே பராபரமே.**

(ப-ரை) சத்து - சத்து உருவம், ஆகி - ஆகி, நின்றோர் - நின்றவர்கள், சடங்கள் - உடம்புகள், இலிங்கம் - இலிங்கவுருவம், என - ஆக, வைத்தாரும்-வைத்தவர்களும், உண்டோ-உளரோ, என்-அடியேனின், வாழ்வே-வாழ்வே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சத்தாகி நின்றோர் - சிவமாந்தன்மை அடைந்தபின் நித்தியமாகிய உருவத்தைப் பெற்றவர்கள். சடம்-காயம். இலிங்கம்-சதாசிவ ரூபம்; இது ரூபாரூபங் குறித்து நிற்குங்குறி. வாழ்வு-காரிய ஆகுபெயர். சடம் இலிங்கமாக வைத்தவர் பட்டினத்தடிகள் முதலியோர். 244

**சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்**
**வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே.**

(ப-ரை) சித்தம்-மனமானது, நிருவிகற்பம்-நிருவிகற்ப சமாதியை, சேர்ந்தார் - அடையப் பெற்றோர்களின், உடல் - சரீரங்கள், தீபம் - தீபத்திலே,

வைத்த-இட்ட, கர்ப்பூரம்-கர்ப்பூரத்தை, போல்-போல, வயங்கும் - பிரகாசிக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நிருவிகற்பம் - நிருவிகற்ப சமாதி. தீபம்வைத்த கர்ப்பூரம்-தீபத்தோடு சேர்ந்த கற்பூரம்; தீபமும் கற்பூரமும் கலந்து ஒரேஜோதியாகத் தோன்றுதல்போல் திருஅருட் ஜோதியோடு கலந்து ஜோதிமயமாக விளங்கல். இத்தகைய பேறுபெற்றவர் **மணிவாசகர்** முதலாயினோர். 245

ஆதிகா லத்திலெனை யாண்டனையே இப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே.

(ப-ரை) ஆதி-பூர்வ, காலத்தில்-காலத்திலே, எனை - அடியேனை, ஆண்டனையே-ஆண்டு அருள்செய்தாயே, இப்பால் - இப்பொழுது, நீ-நீ, போதி-அகன்றுபோ, எனில் - என்று கூறினால், நான் - அடியேன், எங்கே-எங்கே, போவேன்-போவேன்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆதிகாலத்தில்-தடுத்தாட்கொண்ட பூர்வகாலத்தில். இப்பால்-இந்தக் காலத்தில். போதி - இது முன்னிலை ஒருமை ஏவல். 246

நாவழுத்துஞ் சொன்மலரோ நாளுதிக்கும் பொன்மல
தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே.[ரோ

(ப-ரை) நா - நாவினால், வழுத்தும் - துதிக்கப்பட்டு எழுகின்ற, சொல்-சொல்லாகிய, மலரோ - மலர்களோ, நாள் - பிரதிதினமும், உதிக்கும் - மலர்கின்ற, பொன்-அழகிய, மலரோ-மலர்களோ, உனக்கு-தேவரீருக்கு, தேவை-விருப்பம், இன்னது-இன்னது தேவை, என்று-என்று, செப்பாய் - சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நாவழுத்து-அன்பர்களால் துதிக்கப்பெற்று எழும்சொற்கள். சொல்-ஆகுபெயராய்ச் சொற்களா லாக்கப்பெற்ற பாக்களையும் உணர்த்தும். நாளுதிக்கும் பொன்மலர் - அன்றலர்ந்த அழகிய பூக்கள். ‘நாள் உதிக்கும்’ என்றதனால் பொன்னாற் செய்த பூவைக்குறியாமை அறிக. ‘மலரோ’ என்ற இரண்டிலும் உள்ள ஏகாரங்கள் வினாப்பொருளில் வந்தன. 247

கன்னறரும் பாகாய்க் கருப்புவட்டாய்க் கற்கண்டாய்
இன்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே.

(ப-ரை) கன்னல் - கரும்பு, தரும் - தருகின்ற சாறிலிருந்து காய்ச்சிய, பாகு-பாகு, ஆய்-ஆகியும், கருப்பு - கரும்பு, வட்டு - வெல்லம், ஆய் - ஆகியும், கற்கண்டு-கற்கண்டு, ஆய்-ஆகியும், இன்-இனிய, அமுது-அமிர்தம், ஆய்-ஆகியும், என் - அடியேனின், உள-உள்ளத்தில், இருந்தாய் - எழுந்தருளி இருந்தாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ‘பாகு’ இது பாகமாகக் காய்ச்சப்படுவது, பதமாகக் காய்ச்சப்படுவது என்னும் பொருள் குறித்துவந்த காரணப்பெயர். கருப்பஞ்சாற்றிலிருந்து எடுத்த சாற்றைக் காய்ச்சிய பாகு என்பார் ‘கன்னறரும் பாகாய்’ என்றார். கருப்பு வட்டு-வெல்லம். கற்கண்டு - கல்போற் கடினமுடைய சர்க்கரைக்கட்டி என்னுங் காரணம் பற்றிவந்த காரணப்பெயர். 248



சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
அற்புதமே அன்பே அறிவே பராபரமே.

(ப-ரை) சிற்பரமே-சிற்பரமே!, தற்பரமே-தற்பரமே!, தெய்வம்-தெய்வத்தன்மைபொருந்திய, சுருதி - வேதங்களினால், சொன்ன - சொல்லப்பெற்ற, அற்புதமே-அற்புதமானபொருளே!, அன்பே-அன்புமயமானவனே!, அறிவே-அறிவுமயமானவனே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிற்பரமே-சித்துருவாகிய பரம்பொருளே. தற்பரமே - தானே பரமாகித் தனக்குமேல் உயர்ந்தபொருள் இல்லாத ஒன்றே. வேதம் இறைவனால் தரப்பெற்ற தாதலின் ‘தெய்வச்சுருதி’ என்றார். வேதம் எழுதாக்கிளவியாகி ஒலிவடிவாகி நிற்றலின் ‘சுருதி’ என்றார். இறைவன் வடிவம் அன்புமயம் ஆதலின் ‘அன்பே’ என்றார். 249

அறிவிப்பா னீயென்றா லைம்புலன்க டந்தந்
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே.

(ப-ரை) அறிவிப்பான் - மனத்தின்கண்ணே இருந்து அறிவிப்பவன், நீ - தேவரீரே, என்றால் - ஆனால், ஐம் - ஐந்து, புலம்-புலன்களையும், கடந்து-வென்று, அ-அந்த, நெறி-மேலான ஞானநெறியில், நிற்பார்-நிற்பவர், யாரே-யார்?, நிகழ்த்தாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனே எல்லார் மனத்தும் அறிவுமயமாக நின்று அவரவர் கன்மங்களுக்குத் தக்கபடி அறிவிக்கின்றான் ஆதலின் ‘அறிவிப்பாய் நீயென்றால்’ என்றார். ஐம்புலம் என்றது - மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறி உணர்ச்சியை. 250

அந்தக் கரணமெனு மாகாத பேய்களெனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ பராபரமே.

(ப-ரை) அந்தக்கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள், எனும்-என்கின்ற, ஆகாத - பொல்லாத, பேய்கள்-பேய்கள், எனை-என்னை, வந்து-வந்து, பிடித்து-பிடித்துக்கொண்டு, ஆட்ட-ஆட்ட, வழக்கோ-வழக்கு உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பேய்கள்போல மனம் பற்றுவதாலும், புத்தி நிச்சயித்தலினாலும், சித்தம் சிந்திக்கின்றதாலும், அகங்காரம் மான அவமானங் கொள்ளலினாலும் ‘பேய்கள்’ என்றார். 251

ஐவரொடுங் கூடாமல் அந்தரங்க சேவைதந்த
தெய்வ அறிவே சிவமே பராபரமே.

(ப-ரை) ஐவரொடும் - பஞ்சேந்திரியங்களாகிய ஐந்துபேரோடும், கூடாமல் - சேராமல், அந்தரங்கம் - அடியேனுக்கு அந்தரங்கமாகிய, சேவை-தரிசனத்தை, தந்த - கொடுத்த, தெய்வ - தெய்வீகமான, அறிவே - அறிவே (ஞானமே), சிவமே-சிவபெருமானே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஐவர்-தொகைக்குறிப்பு; ஈண்டு மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பஞ்சேந்திரியங்களை. கூடாமல்-சேராமல். கூடுதல் - ஐம்பொறி வழிச் செல்லுதல். சேவை என்றது-காட்சி, தரிசனம். இறைவன் அந்தரங்க சேவைதந்தது என்றது-இறைவன் மௌனகுருவாக வந்ததை உணர்த்தினர்.

**அருளாகி நின்றசுக மாகாமல் ஐயோ**
**இருளாகி நிற்க வியல்போ பராபரமே.**

(ப-ரை) அருள் - அருள்வடிவம், ஆகி - ஆகி, நின்ற-இருக்கின்ற, சுகம்-ஆனந்தரூபம், ஆகாமல்-ஆகாதபடி, ஐயோ-ஐயோ, இருள் - (பிரபஞ்சசம்பந்தத்தால்) இருளுருவம், ஆகி - ஆகி, நிற்க - அடியேன் நிற்பது, இயல்போ-பொருத்தமானதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அருள் ஆகி-திருவருள்வடிவாகி. சுகம் - சிவானந்த மயத்தை. இருள் - பிரபஞ்சசம்பந்தமாகிய அஞ்ஞானம். நிற்க - நிற்றல். நிற்றல் ஈண்டு இருத்தலை உணர்த்திற்று. 253

**அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்**
**துன்புறுத லன்றோநீ சொல்லாய் பராபரமே.**

(ப-ரை) அன்பர்-தேவரீரின் அடியார்கள், எல்லாம்-எல்லாரும், இன்பம்-சிவானந்தசுகத்தை, அருந்திடவும் - அனுபவிக்கவும், யான்-அடியேன், ஒருவன்-ஒருவன்மாத்திரம், துன்பு - துன்பத்தை, உறுதல்-அடைதல், நன்றோ-தேவரீருக்கு அழகு உடையது ஆகுமோ?, நீ-தேவரீர், சொல்லாய்-சொல்லி அருள்வீராக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அன்பர் - சிவனடியார். இன்பம் - சிவாநந்தம். அருந்திட என்றது-அனுபவித்தலைக் குறித்தது. துன்பு என்றது-பிரபஞ்ச மாயையால் எற்படுந் துன்பங்களையும் பிறவித்துன்பங்களைக் குறித்தது. நன்றோ - இது நன்றல்ல என்னும் பொருள் குறித்துவந்த வினா. நீ - இறைவனைச் சுட்டி விளித்த முன்னிலைச்சுட்டு. 254

**சந்ததமு நின்கருணை சாற்றுவத லால்வேறு**
**சிந்தை யறியேன்உன் சித்தம் பராபரமே.**

(ப-ரை) சந்ததமும்-எக்காலமும், நின்-தேவரீரின், கருணை - அடியேன் மாட்டுவைத்த கருணையை, சாற்றுவது - எடுத்துச் சொல்லுவது, அல்லால்-அல்லாமல், வேறு-மற்று ஒருகாரியத்தை, சிந்தை-மனத்தாலும், அறியேன்-சிந்தித்து அறியேன், உன் - இனி தேவரீரின், சித்தம் - திருவுளப்படி செய்தருள்க, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேவரீர் செய்த நன்றியைப் பாராட்டிப் புகழ்வதன்றிப் பிறகு எதனையும் மனத்தாலும் நினைத்தறியேன் என்பார், 'நின்கருணை சாற்றுவது அல்லால் வேறு சிந்தை அறியேன்' என்றார். 'சாற்றுவது' என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அடியேனை உன் சித்தப்படி செய்து கொள் என்பார் 'உன்சித்தம் பராபரமே' என்றார். 255



**நானா னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்**
**போனாலும் உன்னைவிட்டுப் போகேன் பராபரமே.**

(ப-ரை) நான் - நான், நான் - நான், என-என்று, குளறு-குழறுகின்ற, நாட்டத்தால்-நோக்கத்தால், என்னை-அடியேனை, விட்டு - நீங்கி, போனாலும்-அகன்று சென்றாலும், உன்னை - தேவரீரை, விட்டு - நீங்கி, போகேன்-அடியேன் போகமாட்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'நான் நான்' இது மிகுதியால் அடுக்கிவந்தது. நான் அகங்காரம். இது சுதந்தரம்பற்றி வருமொழி. குளறல் என்றது - பொருளின்றிப் புலம்பும் புலம்பல், மயக்கமொழி எனினுமாம். நாட்டம் - ஈண்டு நோக்கம், விருப்பம் என்னும் பொருள் தந்து நின்றது. 256

**இக்காயம் பொய்யென்றோ ரீட்டத் துனக்கபயம்**
**புக்காதா ருண்டோ புகலாய் பராபரமே.**

(ப-ரை) இ-இந்த, காயம்-உடல், பொய் - அநித்தியம், என்றோர்-என்று தெளிந்தவர், ஈட்டத்து-கூட்டத்துள், உனக்கு-தேவரீருக்கு, அபயம்-அபயம் என்று, புக்காதார் - வந்து அடையாதவர்கள், உண்டோ - உளரோ, புகலாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அபயம்-இது பயமின்மை தந்தருள் என்பது பொருள். 'புக்காதார்' இது 'புகு' என்னும் பகுதி ஒற்று இரட்டி நின்றது இறந்தகாலம் காட்டிற்று. 'உண்டோ' இது விடைதழுவிய வினா; இல்லை என்பது பொருளாம். 'புகலாய்' இது முன்னிலை ஏவல். காயமும் உலகமும் நிலை இல்லை எனக் கண்டோர் தேவரீரைச் சரண்புகுவர் என்பது கருத்து. 257

**தானுதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்**
**வானு தியுமொழுங்காய் மன்னும் பராபரமே.**

(ப-ரை) தான்-உயிர்களினிடத்தும் ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களிடத்தும்தான், ஆதல்-வியாபித்து இருத்தல், பூரணமே - இறைவனே தேவரீரின் பூரணத்துவம் ஆகும், (அந்த இடத்தே) சாரும் - அடையும், இடம் - இடம், உண்டு - அடியேனுக்கும் உண்டு, உயிரும் - உயிர்களும், வானுதியும் - ஆகாய முதலிய பஞ்சபூதங்களும், ஒழுங்காய்-முறையாய், மன்னும் - பொருந்தியிருக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அந்தப் பூரணத்துவத்திலே உயிரும் வான்முதலிய பஞ்சபூதங்களும் முறையே தங்கி ஒடுங்க இடமுண்டு என்பார் 'சாரும் இடம் உண்டு உயிரும் வானுதியும், ஒழுங்காய் மன்னும் பராபரமே' என்றார். வான் ஆதி-வான், காற்று, நெருப்பு, நீர், மண் முதலிய பஞ்சபூதங்கள். 258

**உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய**
**மின்னுமா னந்த விளக்கே பராபரமே.**

(ப-ரை) உன்னும்-பரிபக்குவத்தை அடைந்து தேவரீரையே நினைக்கும், மனம்-மனமானது, கர்ப்பூர - கர்ப்பூரத்தின், உண்டை-உருண்டை, போல-

போல, கரைய-கரைந்து ஜோதியிற்கூட, மின்னும் - பிரகாசிக்கின்ற, ஆனந்தம்-ஆனந்தமயமாகிய, விளக்கே-தீபமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கர்ப்பூரம் தீபத்தை அடைந்தக்கால் தீபத்தோடுகலந்து தீபமாகிக் கர்ப்பூரங்கரையும். அதுபோலப் பரிபக்குவப்பட்ட மனம் அணுவணுவாய் எல்லாம் கலரய தீபத்தோடு தீபமாய் ஆதலின் 'கர்ப்பூர உண்டைபோலக் கரையமின்னும் ஆனந்தவிளக்கே' என்றார். 259

**நாட்பட் டலைந்த நடுக்கமெல்லாந் தீரஉனக்**
**காட்பட்டுந் துன்பமெனக் காமோ பராபரமே.**

(ப-ரை) நாட்பட்டு-தேவரீரைக்காணாது நெடுநாளாக, அலைந்த-அலைந்த, நடுக்கம்-நடுக்கங்கள், எல்லாம்-எல்லாம், தீர-நீங்க, உனக்கு - தேவரீருக்கு, ஆட்பட்டும் - ஆளாகியும், எனக்கு - அடியேனுக்கு, துன்பம் - துன்பங்கள், ஆமோ-உண்டாவதாமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நாட்பட்டு-இறைவனைக் காணாது பிறவிகடோறும் தேடினமை. ஆட்பட்டு-இறைவனுக்கு ஆளாதலை. ஆமோஎன்றது-தேவரீருக்கு ஆட்பட்டபின் துன்பம் உண்டாகக் கூடாது என்னும் பொருள்தந்து நின்றது. 260

**பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தால்**
**ஆவிக் குறுதுணையார் ஐயா பராபரமே.**

(ப-ரை) ஐயா - ஐயா!, பாவி - பாவியாகிய அடியேன், படும்-படுகின்ற, கண்கலக்கம்-கண்கலக்கத்தை, பார்த்தும்-கண்டும், இரங்காது-தேவரீர் இரக்கங்காட்டாது, இருந்தால் - இருந்தால், ஆவிக்கு - அடியேனின் உயிருக்கு, உறு-பொருந்திய, துணை-உதவி, யார்-யார்?, பராபரமே!—, எ-று.

(வி - ரை) இறைவன் திருவருட்சகாயம் பெறுதிருத்தலின் 'பாவி' என்றார். 'கண்கலக்கம்' இச் சொற்றொடர் துயரம் என்னும் பொருள் தந்து நின்றது; துயரம் உற்றுழி கண்கலங்கி நீர் சோருமாதலின், என்க. ஆவிக்கு-அடியேன் ஆவிக்கு என அடியேன் என்னும் ஒருசொல் வருவித்துப் பொருள் உரைக்கப்பெற்றது. உறுதுணை-பெரிய உதவி; நல்ல உதவி. 261

**நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாமல்**
**என்னிறைவே பாவித்தேன் என்னே பராபரமே.**

(ப-ரை) நின்-தேவரீரின், நிறைவே-வியாபகத்தையே, தாரகம்-ஆதாரம், ஆய் - ஆகக்கொண்டு, நின்று - நின்று, சுகம் - சிவானந்தம், எய்தாமல்-அடையாமல், என் - அடியேனின், நிறைவே-வியாபகத்தையே, பாவித்தேன்-தேவரீரின் வியாபகமாக எண்ணினேன், என்னே - இது என்ன விபரீதம்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'தாரகம்' இது வடசொல்; ஆதாரம். பாவித்தல்-எண்ணுதல். அதாவது தன் வியாபகத்தை; இறைவன் வியாபகமாக மருண்டு எண்ணியதைக் குறித்தது. 262



**நின்னைச் சரண்புகுந்தால் நீகாக்கல் வேண்டுமல்லால்**
**என்னைப் புறம்விடுத லென்னே பராபரமே.**

(ப-ரை) நின்னை-தேவரீரை, சரண்-சரணம், புகுந்தால் - அடைந்தால், நீ-தேவரீர், காக்கல்-அடியேனைக் காத்தல், வேண்டும் - வேண்டும், அல்லால்-அல்லாமல், என்னை-அடியேனை, புறம்-(அன்னியமாகப்) புறத்திலே, விடுதல்-விட்டுவிடுதல், என்னே-என்ன அநியாயம்!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நின்னை - இறைவனை. சரண்புகுதல்-தஞ்சம் புகுதல். புறம் விடுதல் - இது காவாது அப்புறப்படுத்தலைக் குறித்தது. என்னே - வியப்பிடைச்சொல்; இது என்ன அநியாயம் என்னும் பொருளது. 263

**மாருத துன்பமெல்லாம் வந்துரைத்தால் நின்செவியில்**
**ஏருத வாறே தியம்பாய் பராபரமே.**

(ப-ரை) மாறுத-அடியேனைவிட்டு நீங்காத, துன்பம் - துன்பங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், வந்து -தேவரீரின் சந்நிதிக்கண்வந்து, உரைத்தால்-எடுத்துக்கூறி முறையிட்டால், நின்-தேவரீரின், செவியில் - திருச்செவியில், ஏறுத-ஏறுத, ஆறு-விதம், ஏது-என்ன, இயம்பாய் - சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மாறுததுன்பம் - நீங்கற்கு அரிய துன்பம்; அவை பிறவித்துன்பம் முதலியன. வந்து உரைத்தல்-சந்நிதிக்கண் சென்று முறையிட்டுக் கோடல். 264

**விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த**
**அஞ்சுபுல வேடருக்கு மாற்றேன் பராபரமே.**

(ப-ரை) விஞ்சு-மிகுந்த, புலம் - ஞானத்தின், பாடு-பெருமை, அனைத்தும்-எல்லாவற்றையும், வீறு-மிக்க, துன்பம் - துன்பரூபமாக, செய்ய-ஆக்க, வந்த-(வன்மைகொண்டு) வந்த, அஞ்சு-ஐந்து, புலம்-புலன்களாகிய, வேடர்க்கும்-வேடர்களுக்கும், ஆற்றேன்-சகியேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) புலம் - ஞானம். பாடு-இது பலபொருள் திரிசொல்; ஈண்டு பெருமை என்னும் பொருள் உணர்த்திநின்றது. அனைத்தும் - ஈற்று உம்மை முற்றுப்பொருளில் வந்தது. 'அஞ்சு' இது ஐந்து என்பதன் போலி. 'அஞ்சுபுலம்' என்றதில் 'புலம்' புலன்களை உணர்த்திற்று. புலன்களை வேடர் என்றது உருவகம். கொடுமை செய்தலின் 'வேடர்' என்றார். 265

**கன்னங் கரியநிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்**
**கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே.**

(ப-ரை) கன்னங்கரிய - மிகவும் இருண்ட, நிறம் - நிறத்தினையுடைய, காமம்-காமம், ஆதி-முதலிய, ராக்ஷச-இராட்சத, பேய்க்கு-பேய்க்கு, என்னை-அடியேனை, இலக்கு - இலக்காக, வைத்தது - வைத்தது, என்னே - என்ன அநியாயம்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கன்னங்கரிய - கன்னம் என்ற சொல் மிகுதிப்பொருள் காட்டியது. பென்னம்பெரிய, சின்னஞ்சிறிய என்பனபோல என்பதறிக. காமாதி. காமம், குரோதம், லோபம், மதம், மாச்சரியம் முதலியவைகளை. 266

**சித்திநெறி கேட்டல் செகமயக்கம் சென்மமற**
**முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே.**

(ப-ரை) சித்தி-அட்டமாசித்திகளின், நெறி - மார்க்கத்தை, கேட்டல்-பெரியாரை அடுத்துக் கேட்டல், செகம் - பிரபஞ்சத்தின், மயக்கம்-மயக்கமாகும், சென்மமற-இந்தப்பிறப்புஅற, முத்தி-முத்தியின், நெறி-மார்க்கத்தை அடையுமாறு, கேட்டல் - கேட்டல், முறை - தக்க முறை ஆகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சித்தி - அணிமாமுதலிய அட்டமாசித்திகளை. அட்டமாசித்திகளைப் பெரியாரை யடுத்துக் கேட்டல் புகழ் பெறவும், இன்மைப்பயன்களைப் பெறவும் ஆதலின் 'சித்திநெறி கேட்டல் செகமயக்கம்' என்றார். மூலநோயாகிய பிறவிநோயை அறுப்பது முத்திநெறி ஆதலின் 'சென்மமற முத்திநெறி கேட்டன் முறை' என்றார். காண்-அசை. 267

**சிந்தை சிதையச் சிதையாத வானந்தம்**
**எந்தவகை யாலேவந் தெய்தும் பராபரமே.**

(ப-ரை) சிந்தை - மனமானது, சிதைய-அடங்க, சிதையாத-அழியாத, ஆனந்தம்-சிவானந்தமானது, எந்த-எந்த, வகையாலே - விதத்தாலே, வந்து-வந்து, எய்தும்-சேரும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிந்தை சிதைய - மனம் ஒடுங்குதல். சிதையாத - அழியாத; இது எதிர்மறைப் பெயரெச்சம். ஆனந்தம்-சிவானந்தம். அழியாச் சிவானந்தம் பெற அழியாது என்பது கருத்தாம். 268

**கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்**
**தேர்த்தபடி தானே தெரிந்தேன் பராபரமே.**

(ப-ரை) கூர்த்த - நுண்ணிதாகிய, அறிவால் - தற்போத அறிவினால், அறிய-அறிந்துகொள்ள, கூடாது - முடியாது, என-என்று, குரவன் - குருநாதன், தேர்த்தபடி - தெளிவித்த விதம், தானே - தானே, தெரிந்தேன்-தெளிந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனை இறைவன் திருவருள் கொண்டன்றி ஜீவபோதத்தால் அறியமுடியாது என்பார் 'கூர்த்த வறிவா லறியக் கூடாது' என்றார். இஞ்ஞானோபதேசம் மௌனதேசிகராக வந்த குருமூர்த்தியின் உபதேசமாதலின் 'குரவன் தேர்த்தபடி தானே' என்றார். அறியக்கூடாது-இறைவனை அறியக்கூடாது. 269

**பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த**
**எத்தனைநாள் செல்லும் இயம்பாய் பராபரமே.**



(ப-ரை) பத்தர் - சிவனடியார்கள், அருந்தும் - அனுபவிக்கின்ற, பரம-மேலாகிய, சுகம்-சிவானந்தப் பெரும்போகத்தை, யான்-அடியேன், அருந்த-அனுபவிக்க, எத்தனை-எத்தனை, நாள்-நாட்கள், செல்லும்-செல்லும், இயம்பாய்-கூறி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பத்தர்-இது பக்தர் என்ற வடசொற் சிதைவு; பக்தியை உடையவர்கள் என்பது பொருள். அருந்தல்-அனுபவித்தல். பரமசுகம் - மேலான சுகம். அம்மேலான சுகம் சிவானந்தப் பெரும்போகமாம். பரம்-உயர்வு குறிக்குஞ்சொல்; உயர்வை உடையது, உயர்ந்திருப்பது; அவனால் எய்தும் பேறின்ப மாகிய சிவானந்தம் 'பரமசுகம்' எனப்பெயர் எய்திற்று. 270

**தீரத்தி னற்றுறவு சேராமல் இவ்வுலகிற்**
**பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே.**

(ப-ரை) தீரத்தினால்-மனோதிடத்தினால், துறவு-துறவறத்தை, சேராமல்-அடையாமல், இ - இந்த, உலகில் - உலகத்திலே, பாரத்தனம்-பராக்கிரமத் தன்மை, பேசல்-பேசுதல், பண்போ-குணமானதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தீரம்-மனோதிடம்; இது மனத்தின் பண்பு. துறவு என்றது உலகவிஷயங்கள் எல்லாவற்றிலும் பற்றற்று நிற்கும்நிலை. பாரத்தனம்-பெருந்தன்மை; ஈண்டு பராக்கிரமம். ஈற்று ஓ வினாப்பொருளில் வந்தது. பண்பன்று என்ற விடை தழுவிநின்ற வினா. 271

**இந்த வெளியினையுண் டேப்பமிடப் பேரறிவாத்**
**தந்தவெளிக் கேவெளியாய்ச் சார்ந்தேன் பராபரமே.**

(ப-ரை) இந்த - இந்த, வெளியினை-பூத ஆகாயத்தை, உண்டு-விழுங்கி, ஏப்பம் - ஏப்பம், இட - இட, பேர் - பெரிய, அறிவா-அறிவாக, தந்த-தந்த, வெளிக்கே - ஞானகாயத்திற்கே, வெளியாய் - பகிரங்கமாய், சேர்ந்தேன்-கூடினேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வெளி - பூத ஆகாயம்; உண்டேப்பமிட - விழுங்கி ஏப்பமிட; விசாரணை முகத்தால் அறிந்து அநித்தியமென்று உதறித்தள்ள என்பது குறிப்புப் பொருள். பேரறிவாத் தந்தவெளி-ஞானகாயம். 272

**உணர்த்துமுனை நாடா துணர்ந்தவையே நாடி**
**இணக்குறுமென் னேழைமைதா னென்னே பராபரமே.**

(ப-ரை) உணர்த்தும்-எல்லாவற்றையும் அறிவிக்கும், உனை-தேவரீரை, நாடாது-நாடாமல், உணர்ந்தவையே-அடியேனின் ஜீவபோதத்தால் அறியப்பட்டவைகளையே (பிரபஞ்சப் பொருள்களையே), நாடி-நாடி, இணக்குறும்-அவற்றில் அழுந்தும், என் - அடியேனின், ஏழைமைதான் - அறியாமைத்தான், என்னே-இருந்தவிதம் என்னே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எல்லா உயிர்க்கும் உயிராய் நின்று அறிவுக்கு அறிவாகி உணர்த்துகின்றான் ஆதலின் 'உணர்த்தும் உனை நாடாது' என்றார். உணர்ந்தவையே என்றது-பிரபஞ்சப்பொருள்களை. ஏழ்மை-அறிவின்வறுமை,

உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே.

(ப-ரை) உண்டு-இருப்பது, போல் - போலத்தோன்றி, இன்றும் - இல்லாதுமாறும், உலகை - உலகத்தை, திரம் - நித்தியம், என-என்று, உள்-உள்ளத்தே, கொண்டு - எண்ணி, நான் - அடியேன், பெற்ற - அடைந்த, பலன்-பயனை, கூறாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகம் காரியரூபத்தால் இருப்பதுபோலத் தோன்றி காரணரூபத்தால் இல்லாதுபோலத் தோன்றுதலின் 'உண்டுபோ லின்று முலகை' என்றார். திரம்-இது ஸ்திரம் என்ற வடமொழிச்சிதைவு. 'நான் பெற்றபலன் கூறாய்' என்றதனால் அடியேன் ஒருபலனும் பெற்றிலேன் என்பது கருத்தாம்.

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தேன் அக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே.

(ப-ரை) யாதும்-எல்லாம், உள்ளபடி - திருவருளின் சம்மதத்தில் உள்ளபடியே நடக்கும், என-என்று, உற்று-ஆராய்ந்து, உணர்ந்தேன்-அறிந்தேன், அ-அந்த, கணமே - க்ஷணத்திலேயே, கள்ளம் - வஞ்சகத்தன்மையையுடைய, மனம்-மனமானது, போன-சென்ற, வழி - வழியை, காணேன் கண்டிலேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உற்றுணர்ந்தேன் - ஆராய்ந்து அறிந்தேன். கணம் - இது காலத்தின் மிகமிக நுண்ணிய அளவைக் குறிக்குஞ் சொல். ஒருநொடிப் போதினுங் குறைந்த அளவினதாய காலம். தானல்லாததைத் தானெனவும் தன்னதல்லாததைத் தன்னதெனவுங் கூறியதால் 'கள்ளமனம்' என்றார். கள்ளமனம் போனவழி காணேன் - மனம் இறந்தது என்பது பொருளாம்.

சித்த மவுனஞ் செயல்வாக் கெலாமவுனஞ்
சுத்தமவுன மென்பாற் றோன்றிற் பராபரமே.

(ப-ரை) என் - அடியேனின், பால்-இடத்தே, சுத்தம் - (அடக்கமாகிய) சுத்த, மவுனம்-மௌனம், தோன்றில்-உண்டாகுமேயானால், சித்தம்-அடியேனின்மனம், மவுனம்-மௌனமாகும், செயல் - செய்கையும், வாக்கு-வாக்கும், எலாம்-எல்லாம், மவுனம்-மவுனத்தன்மை அடையும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சுத்தமவுனம் என்றது-மனோதத்துவம் அடங்கி நிற்கும்தன்மை. சித்தம் - மனம்; இது சிந்திப்பதற்கு ஆதாரமாக இருத்தலின் இப்பெயரால் வந்தது. வாக்கு-இது சொல்லை உணர்த்தி நின்றது. சுத்தமவுனம் உண்டானால் திரிகரணமவுனம் உண்டாகும் என்பது கருத்து. 276

எண்ணில்பல கோடியுயி ரெத்தனையோ வத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே.

(ப-ரை) எண்-கணக்கு, இல்-இல்லாத, பல-பலவாகிய, கோடி - கோடி வகைப்பட்ட, உயிர்-ஜீவராசிகள், எத்தனையோ-எவ்வளவோ, அத்தனைக்கும்-



அவ்வளவிற்கும், கண்ணில் - கண்ணில், கலந்த - மணிபோற் கலந்திருக்கும், அருள்-திருவருள், கண்ணே-கண்ணே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஜீவகோடிகளின் தொகை இத்துணையதென எவராலும் அறியமுடியாததாதலின் 'எண்ணில்' என்றும், ஜீவராசிகளின்வகை நால்வகைப் பிறப்பு எழுவகைத்தோற்றம் என்பனவாக வகுத்து எண்பத்துநான்கு லட்சம் யோனிபேதமாக வகுத்துள்ளமையினால் 'பல கோடி உயிர்' என்றும் அவ் உயிர்கள் அத்தனைக்குள்ளும் இறைவன் கலந்து ஜீவசாட்சியாய் நிற்றலின் 'உயிர் எத்தனையோ அத்தனைக்கும் கண்ணில் கலந்த அருள் கண்ணே' என்றார். இறைவன் அறிவுக்கு அறிவாய் நின்று உணர்த்துகின்றான் ஆதலின் 'கண்ணே' என்றார். 277

எனக்கினியா ருன்போலு மில்லையென்றால் யானும்
உனக்கினியா னாகா வுளவேன் பராபரமே.

(ப-ரை) உன் - தேவரீரை, போலும்-போலும், எனக்கு-அடியேனுக்கு, இனியார் - இனியவர்கள், இல்லை - இல்லை, என்றால் - எனின், யானும்-அடியேனும், உனக்கு - தேவரீருக்கு, இனியான்-இனிமை உடையவன், ஆகா-ஆகாத, உளவு-உளவு (மர்மம்), என்-யாது?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்னிலும் இறைவன் இனியன் ஆதலின் 'உன்போலும் எனக்கு இனியார் இல்லை' என்றார். பொன்னால் பொன் படைத்தார்க்குப் பிரயோசனம் உண்டு. அதனால் அவர்கள் அப்பொன்னை அருமை பெருமையாகக் கொண்டாடிப் பேணிப் பதனப்படுத்தி வைக்கின்றார்கள். பொன் படைத்தவர்களால் பொன்னுக்குப் பிரயோசனமுண்டோ? இறைவனால் ஆன்மா இன்புறுகின்றது ஆதலின் இறைவன் ஆன்மாக்களுக்கு இனியன் என்பது அறிக. 278

அண்டபிண்டங் காணேன் அகமும் புறமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே.

(ப-ரை) அகமும்-உள்ளும், புறமும்-புறமும், ஒன்றா - ஒருதன்மையாக, கண்ட-தரிசித்த, என்னை-அடியேனை, நீ-தேவரீர், கலந்த -: அத்துவிதமாகக் கூடிய, காலம்-காலத்து, அண்டம்-அண்டத்தின் தோற்றத்தையும், பிண்டம்-பிண்டத்தின் தோற்றத்தையும், காணேன்-கண்டிலேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அண்டபிண்டம் - உலகத்தையும் உலகத்து உயிர்களையும். ஞானம் தோன்றவே ஞானசொரூபியாகிய இறைவனை அன்றி வேறு ஒன்றுந் தோன்றாதாதலின் 'அண்டபிண்டங் காணேன்' என்றார். ஒன்றா என்றது-அந்தர்முகத்துக் கண்டதுபோல் பகிர்முகத்துங் காணுதலை. 279

எத்தனையோ கோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலும்
சித்தமிரங் கிலைஎன் செய்வேன் பராபரமே.

(ப-ரை) கோடி-கோடிக்கணக்காக, எத்தனையோ-எத்தனைவிதமாகவோ, எடுத்து-எடுத்து, எடுத்து - எடுத்து, சொன்னாலும் - (என் குறைகளை) மு[illegible]

யிட்டுக் கூறினும், சித்தம்-தேவரீரின் திருவுள்ளம், இரங்கிலை-இரங்கியருளவில்லை, என்-அடியேன், (இனி என்ன) செய்வேன்-செய்யமாட்டுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கோடி - மிகுதிப்பொருளில் வந்தது. எடுத்து எடுத்து - இது மிகுதிப்பொருளில் அடுக்கிவந்தது. 'சொன்னாலும்' என்ற இடத்து அவாய் நிலையால் என் குறைகளை என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. சித்தம்-உன் சித்தம்; 'உன்' என்பது அவாய்நிலையால் வருவித்துக் கொள்ளப் பெற்றது. 'என் செய்வேன்' என்றதனால் அடியேன் அசேதனன் அடியேன் செய்யக் கிடந்ததில்லை; செய்வித்தால் செய்வேன் என்பது குறிப்பாம். 280

அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே.

(ப-ரை) அன்று-பூர்வகாலத்திலே, அந்த-அந்த, நால்வருக்கும்-சனகாதி முனிவர்கள் நால்வருக்கும், அற்புதமா-ஆச்சரியமாக, உரைத்தது - கல்லால நிழலில் தட்சணாமூர்த்தியாகி உபதேசித்த, ஒன்று - சித்தாந்த மகாவாக்கியம் ஒன்றேயாகும், அந்த-அந்த, வார்த்தை - உபதேசம், எனக்கு-அடியேனுக்கு, உண்டோ-கிடைக்குமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) அன்று-சனகாதி முனிவர்க்கு இறைவன் தட்சணாமூர்த்தமாக நின்று உபதேசித்த காலத்தை. நால்வர் - சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர் முதலிய நால்வரை; இது தொகைக்குறிப்பு. ஒன்று-சித்தாந்த மகாவாக்கியம். 281

அப்பனென்றும் அன்னையென்றும் ஆரியனென்றும்மு
செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே. [னையே

(ப-ரை) அப்பன்-தந்தை, என்றும் - என்றும், அன்னை-தாய், என்றும்-என்றும், ஆரியன்-ஆசாரியன், என்றும்-என்றும், உனையே - தேவரீரையே செப்புவதும் - பலவாறாகக் கூறுவதும், உன் தேவரீரின், நிலை-நிலை, என்'என்னும், சீர்-சிறப்பாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உயிர்களைக்காத்து முன்னுக்குக் கொண்டுவந்து உய்வித்தலின் 'அப்பன்' என்றும், அருள்காட்டலின் 'அன்னை' என்றும், ஞானத்தை யூட்டலின் 'ஆரியன்' என்றும் கூறினார். உனையே - இது உன்னையே என்றதன் தொகுத்தல் விகாரம், செப்புவது-இது திசைச்சொல். காண்-அசை. 282

கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே.

(ப-ரை) கட்டும் - சனக்கட்டும், கனமும் - பெருமையும், அந்த - அந்த, காலர் - யமதூதர்கள், வரும்போது - வருங்காலத்து, எதிர்த்து - அவர்களை எதிர்த்து, வெட்டும் - வெட்டிச் சம்மரிக்கக்கூடிய, தளமோ-படையாகுமோ, விளம்பாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.



(வி-ரை) கட்டு - சனக்கட்டை. கனம் - இது வடசொல்; பெருமை என்னும் பொருளது. அந்த-இது பண்டறி சுட்டு. காலர்-ஜீவப்பிராணிகளின் வாழ்நாள்காலத்தைக் கவர்தலால் வந்த காரணப்பெயர். தளம்-படை. 283

பேசாத மோன நிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே.

(ப-ரை) பேசாத-வாய்விட்டுப் பேசாத, மோனம்-மௌனம், நிலை-நிலை, பெற்று - அடைந்தால், அன்றோ - அல்லவோ, நின்-தேவரீரின், அருள்-திரு அருள், ஆம் - ஆகிய, வாசாமகோசரந்தான் - வாக்கினால் அறியப்படாதநிலை, வாய்க்கும் கிட்டும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பேசாத மோனநிலை-திரிகரண மௌனநிலை. வாசாமகோசரம்-இது வடசொற்களின் தொடர்; வாசாம்+அகோசரம் எனப் பிரியும். இதற்கு வாக்கினால் அறியப்படாதது என்பது பொருளாம். 284

கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.

(ப-ரை) கற்றாலும் - (உலகநூல்கள் எல்லாவற்றையும்) கற்றாலும், கேட்டாலும் - அந்நூல்களின் மர்மங்களைக் கேட்டாலும், காயம் - இந்தத்தேகம், அழியாத-அழியாத, சித்தி-சித்தியை, பெற்றாலும்-அடைந்தாலும், இன்பம்-சிவானந்த இன்பம், உண்டோ-உண்டாகுமோ, பேசாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கற்றாலும், கேட்டாலும் இதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். "முற்றப் பகலும் முனியா தினிதோதிக், கற்றலிற் கேட்டலே நன்று" என்றதனால் 'கேட்டாலும்' என்றார். காயம் அழியாத சித்தி என்றது காயசித்தியை. 285

கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போல்
அண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே.

(ப-ரை) கண்ட-தான் தீண்டிய, வடிவு-உருவங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், கரைக்கின்ற-தன்மயமாகச் செய்கின்ற, அஞ்சனம் - அஞ்சனத்தை, போல்-போல, அண்டம்-அண்டங்கள், எல்லாம்-எல்லாமும், நின்-தேவரீரின், அருளே-திருவருளின் வியாபகமே, அன்றோ-அல்லவோ? பராபரமே!—, எ-று.

(வி-ரை) அஞ்சனம் தான் தீண்டிய உருவங்களை எல்லாம் தன்மயமாக்கும் ஆதலின் 'கண்ட வடிவெல்லாம் கரைக்கின்ற அஞ்சனம்' என்றார். அஞ்சனம் - மந்திரமை. அண்டாண்ட புவனங்கள் எல்லாமும் சராசரங்கள் எல்லாமும் திருவருளின் வியாபகமாக இருத்தலின் 'அண்டமெல்லா நின்னருளே யன்றோ' என்றார். 286

தன்செயலா லொன்றுமிலை தானென்றா னன்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே.

(ப-ரை) தன்-அடியேன்தன், செயலால் - செய்கையால், ஒன்றும்-ஒரு காரிய நிகழ்ச்சியும், இலை-இல்லை, தான்-அடியேன்தான், ஒன்று-ஒன்றாக, நான்-அடியேன், பாவி-பாவி, நின்-தேவரீரின், செயலாய்-செயலாக, நில்லா-நிற்காத, நினைவு-எண்ணம், ஏன்-எதற்காக?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன் என்றது - ஜீவான்மாவைக் குறித்தது. இறைவனுகிய பரமான்மாவின் சந்நிதியில் ஜீவான்மா ஒரு பொருளாகாதாதலின் 'ஒன்றுகா' என்றார். இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாகாமையால் 'பாவி' என்றார். நின்செயலாய் நில்லா நினைவு என்றது - எல்லாம் தேவரீரின் செயலே என்று கருதாத எண்ணம் என்பதாம். 287

கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

(ப-ரை) கொலை - கொலையையும், களவு-திருட்டையும், கள் - கள்ளுண்டலையும், காமம் - மாதரிச்சையையும், கோபம் - கோபத்தையும், விட்டால்-தன்னிடத்தினின்றும் அகற்றினுல், அன்றோ-அல்லவோ, மலை-மலை, இலக்கா-இலக்காக, நின்-தேவரீரின், அருடான் திருஅருள்தான், வாய்க்கும்-உண்டாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கொலை, களவு, கள், காமம், கோபம் இவை ஐந்தும் பஞ்ச மகாபாதகங்கள் ஆதலின் அவை இறைவன் திருவருள் பெறுதற்குத் தடை என்பார் 'கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ' என்றார். 288

தன்னை யறியாது சகந்தானு யிருந்துவிட்டால்
உன்னை யறியவரு ளுண்டோ பராபரமே.

(ப-ரை) தன்னை-ஆன்மாவாகிய தன்னை, அறியாது-இன்னதன்மையன் என்று அறியாதபடிக்கு, சகம்-பிரபஞ்சம், தான்-தான், ஆக-ஆக, இருந்து, விட்டால்-விட்டால், உன்னை-தேவரீரை, அறிய-அறிதற்கு, அருள்-திருவருள், உண்டோ-உதவி உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்னை என்றது - பசுவாகிய தன்னை. அறிதலாவது - தன் தன்மையை அறிதல். சகம் தானு இருந்துவிட்டால் என்றது-பிரபஞ்சப் பொருள்களில் பற்றுவைத்துப் பிரபஞ்சமயமாக நின்றிருத்தல். 'தானு' இது தான்+ஆக=தானுக என்பதன் கடைக்குறை விகாரம். 289

ஒன்றிரண்டென் றுன்னு வுணர்வுகொடுத் துள்ளபடி
என்றுமென்னை வையா யிறையே பராபரமே.

(ப-ரை) இறையே-இறைவனே!, ஒன்று-(இறைவனும் தானும்) ஒன்று, இரண்டு-(இறைவன்வேறு தான்வேறு ஆக) இரண்டு, என்று-என்று, உன்னு-நினையாத, உணர்வு - அறிவை, கொடுத்து - தந்து, உள்ளபடி-எக்காலத்தும் இருக்கின்றபடி, என்றும் - எக்காலத்தும், என்னை - அடியேனை, வையாய்-வைத்தருள்வாயாக, பராபரமே!—, எ-று.



(வி-ரை) ஒன்று என்றது-ஜீவான்மாவும் பரமான்மாவும் ஒன்று என்பது. இரண்டு - ஜீவான்மாவும் பரமான்மாவும் வேறு வேறான இரண்டு என்பது. என்று உன்னு உணர்வு - ஜீவான்மாவும் பரமான்மாவும் எந்தக்காலத்தும் அத்துவிதமாக இருக்கிறது என்னும் உணர்வு. 290

கருதுமடி யார்களுளங் காணவெளி யாகுந்
துரிய நிறை வான சுகமே பராபரமே.

(ப-ரை) கருதும் - தேவரீரை நினைக்கின்ற, அடியார்கள் - அடியார்களினுடைய, உளம் - மனம், காண - காணும்படி, வெளி - சிதாகாயம், ஆகும் - ஆகின்ற, துரியம்-துரியபூமியில், நிறைவு-நிறைந்திருக்கின்ற தன்மை, ஆன-ஆகிய, சுகமே-ஆனந்தமயமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கருதும் - இறைவனைக் காணும் என்பது பொருளாம். அடியார்கள்-சிவனடியார்கள். 'உளம்' இது 'உள்ளம்' என்பதன் தொகுத்தல் விகாரம். வெளி-சிதாகாயம். துரியம்-நாலாவது நிலம். இறைவன் சுகவடிவன் ஆதலின் 'சுகமே' என்றார். 291

பொய்குவித்த நெஞ்சன் அருட் பொற்பறிந்து திக்கனைத்துங்
கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே.

(ப-ரை) பொய்-பொய், குவித்த-நிறைக்கப்பெற்ற, நெஞ்சன்-மனத்தையுடைய அடியேன், அருள்-தேவரீரின் திருவருள், பொற்பு - மேன்மையை, அறிந்து-அறிந்து, திக்கு-திசைகள், அனைத்தும் - எல்லாவற்றிலும், கை-கை, குவித்து - கூப்பி, நிற்பது - நிற்பது, எந்த - எந்த, காலம் - காலம், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பொய்யாகியவற்றை எல்லாம் மெய்யாகக் கொள்ளுதலால் 'பொய் குவித்த நெஞ்சன்' என்றார். குவித்த என்றது-மிகுந்த பொய்யுடைமையைக் காட்டிற்று. பொற்பு-அழகு. இறைவன் சர்வவியாபகமாக எங்கும் நிறைந்து நிற்றலின் 'திக்கனைத்துங் கைகுவித்து' என்றார். 292

அத்துவித மான வயிக்ய வனுபமே
சுத்தநிலை அந்நிலையார் சொல்வார் பராபரமே.

(ப-ரை) அத்துவிதம் - அத்துவிதம், ஆன - ஆகிய, அயிக்யம்-அயிக்யத்தின், அனுபவமே - அனுபவமே, சுத்த - சுத்தாத்துவித, நிலை - நிலையாகும், அ-அந்த, நிலை - நிலையின் பெருமையை, யார் - யாவர், சொல்வார்-சொல்ல வல்லவராவர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அத்துவிதம் - இரண்டும் அல்லாமல், ஒன்றும் அல்லாமல், தாள்+தலை=தாடலை என ஆன சந்திபோல் கலந்திருக்கும் நிலை. அயிக்யம்-கலப்பு. சுத்தநிலை - சுத்தாத்துவித நிலை. 293

வைத்த சுவரலப்பின் மண்போமோ மாயையினேர்க்
கெத்தனைபோ தித்துமென்னும் எந்தாய் பராபரமே.

(ப-ரை) எந்தாய் - எனது தந்தையே!, வைத்த - மண்ணினால் வைக்கப்பட்ட, சுவர் - சுவரை, அலம்பின் - கழுவினால், மண் - அச்சுவரிலுள்ள மண், போமோ-போய்விடுமோ? (போகாது அதுபோல), மாயையினோர்க்கு-மாயையில் கட்டுபட்டு உழல்கின்றவர்களுக்கு, எத்தனை - எவ்வளவு, போதித்தும்-போதித்தாலும், என்னும்-என்னபிரயோசனமாகும்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வைத்தசுவர்-இது மண்ணால் வைத்தசுவர். 'மண்ணால்' என்பது அவாய்நிலையால் வருவித்து உரைக்கப்பட்டது. 'வைத்தசுவ ரலம்பின் மண் போமோ' என்றது உவமானம். 'மாயையினோர்க் கெத்தனை போதித்துமென்னும்' என்றது உபமேயம். 'எத்தனை என்பது எண்ணைக் குறிக்காது ஈண்டு அளவு குறித்து நின்றது. 294

பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னருளைக்
காட்டத் தகாதோஎன் கண்ணே பராபரமே.

(ப-ரை) என் - அடியேனின், கண்ணே - கண்போன்றவனே!, பூட்டு - இணைப்பு, அற்று-அற்று, தேகம்-உடம்பு, அற்று-அழிந்து, போகும்-போகும், முன்னே-முன்னமே, நின்-தேவரீரின், அருளை-திருவருளை, காட்ட-காட்ட, தகாதோ-தகாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பூட்டு என்றது-நரம்புகளின் யாப்பை யுணர்த்திற்று. இனி எலும்புகளின் இணைப்பு என்னினுமாம். பூட்டற்றுத் தேகமற்றுப் போகு முன்னே என்றது-அடியேன் இறந்தொழிதற்கு முன்னே என்பதாம். நின்-இறைவனை. அருளை-திருவருளை. 295

சொல்லிற் பதர்களைந்து சொன்முடிவு காணாதார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே.

(ப-ரை) சொல்லில்-கற்கும் நூற்களிலுள்ள சொற்களில், பதர்-பதராகிய சொற்களை, களைந்து-நீக்கி, சொல்-சொல்லின், முடிவு-முடிவை, காணாதார்-அறியாதார்கள், நெல்லில்-நெல்லிலுள்ள, பதர் - பதரை, போல-போல, நிற்பார்-பயனற்றவர்களாய் நிற்பார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சொல்லில்-கற்கும் நூற்களில் உள்ள சொற்களை. இனி சொல் என்பதனை ஆகுபெயராகக்கொண்டு சொல்லாகிய நூலைக் குறிப்பாரும் உண்டு. பதர் - உள்ளீடற்றது. சொன்முடிபு-சொல்லின் முடிந்த பொருள். "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்ற இலக்கணப்படி எல்லாச் சொல்லும் பொருளுடையதாயினும் ஞானப்பொருள் இல்லாத சொல் பயனற்ற பதர் போன்றதாகும் என்பார். 296

அழுக்காற்ரு னெஞ்ச மழுங்கியபுன் மாக்கள்
இழுக்காற்ரு லின்பநல மெய்தார் பராபரமே.

(ப-ரை) அழுக்காற்ரால் - பொருமையால், நெஞ்சம் - மனம், மழுங்கிய-வருந்திய, புன்-அற்ப, மாக்கள்-மனிதர்கள், இழுக்காற்ரால்-தமது துன்மார்க்கத்தால், இன்பம்-சிவானந்த சுகமாகிய, நலம்-நலத்தை, எய்தார்-அடையமாட்டார்கள், பராபரமே!—, எ-று.



(வி-ரை) "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத் தீயுழி யுய்த்து விடும்" என்று திருவள்ளுவர் கூறினமையால் அழுக்காறுகொண்டு புழுங்கு நெஞ்சினரைப் 'புன்மாக்கள்' என்ருர். இன்பம் - சிவானந்தம். பொருமையுடையார்க்குச் சிவாநந்தம் கிட்டாது என்பது கருத்தாகும். 297

தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே.

(ப-ரை) தேகம் - உடம்பும், ஆதி - முதலியவைகளும், பொய் - பொய், எனவே-என்றே, தேர்ந்த-தெளிந்த, உபசாந்தருக்கும்-உபசாந்தர்களுக்கும், மோகம்-மோகம், ஆதி-முதலியவைகள், உண்டோ-உளதாமோ?, மொழியாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தேகாதி - தனு, கரணம், புவனம், போகம் முதலியவைகள். உபசாந்தர் - மெய்ஞ்ஞானிகள். மோகாதி - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியங்கள் முதலியவற்றை. 'உண்டோ' என்றது உண்டாதல் இல்லை என்னுங் குறிப்பினதாம். 298

சாதனையெல் லாமவிழத் தற்போதங் காட்டாதோர்
போதனை நீ நல்குவதெப் போதோ பராபரமே.

(ப-ரை) சாதனை - சாதனங்கள், எல்லாம் - எல்லாம், அவிழ-நழுவிவிட, தற்போதம்-தற்போதம், காட்டாது-தலையெடாதிருக்க, ஓர்-ஒரு, போதனை-உபதேசம், நீ - தேவரீர், நல்குவது - தந்தருள்வது, எ - எந்த, போதோ-காலமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சாதனம் - தேகாதி சாதனங்கள். தற்போதம் - ஜீவபோதம். போதனை என்றது - ஞானோபதேசம். நழுவவிட என்றது - தேகாதிதத்துவங்களை மறந்து சிவானந்தபோகத்தழுந்திக் கிடத்தலை உணர்த்தியதாம். 299

ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவது எந்தாய் பராபரமே.

(ப-ரை) எந்தாய் - எனது தந்தையே!, ஒன்றும் - ஞானசம்பந்தமான ஒன்றும், அறியா-அறியாத, இருளாம்-(ஆணவ) இருள் உருவாகிய, உள்ளம்-மனத்தை, படைத்த - கொண்டுள்ள, எனக்கு-அடியேனுக்கு, என்று-எந்தக் காலத்தில், கதி-நற்கதி, வருவது-உண்டாவது?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஒன்றும் என்றது - ஞானசம்பந்தமாகிய விஷயம் ஒன்றும் என்பது. ஆணவம் அகலும்வரை அஞ்ஞான இருள் அகலாது. அஞ்ஞான இருள் அகலாதவரை நற்கதிபெறுதல் இயலாது. இதுபற்றியே 'என்று கதிவருவது எந்தாய்' என்ருர். அஞ்ஞானத்தை இருளாக உருவகப்படுத்துவது கவிமரபு. 300

சிந்திக்குந் தோறும்என் னுட் சிற்சுகமா யூற்றூறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே.

(ப-ரை) சிந்திக்கும்-தேவரீரின் திருவருள்வடிவை நினைக்கும், தோறும்-பொழுதெல்லாம், என் - அடியேனின், உள்-உள்ளத்தில், சித் சுகம் - ஞானானந்தம், ஆய் - ஆக, ஊற்று-ஊற்று, ஊறி-சுரந்து, புத்திக்கு - அடியேனின் புத்திக்கு, உள்-உள்ளே, நின்ற-நின்றருளி இருக்கின்ற, அருள் - திருவருள் மயமாகிய, பொற்பே-பொலிவே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சிந்தித்தலாவது - இறைவன் திருவருள் கோலத்தையும், திருவருள் மகிமையையும் நினைத்தல். சித்சுகம் - ஞானானந்தமயம். 'புந்தி' இது 'புத்தி' என்பதன் மெலித்தல் விகாரம். நிறை அருள் பொற்பு-திருவருளின் பரிபூரணப் பொலிவை. உள் - உள்ளம், மனம், உள்ளிடத்தில் இருப்பது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். ஊற்று ஊறி - நீர் ஊற்றுப்போலச் சுரந்தலை. 301

**என்றுமடைந் தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்**
**கன்றை யுதைகாலி கதைகாண் பராபரமே.**

(ப-ரை) என்றும் - எந்தக்காலத்தும், அடைந்தோர்கட்கு - தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு, இரங்கார் - இரக்கங்காட்டாதவர்களுடைய, குறிப்பு-நினைவு, அனைத்தும் - எல்லாம், கன்றை - பால்குடிக்க அணுகும் தன் இளங் கன்றை, உதை - உதைக்கின்ற, காலி - பசுவின், கதை-கதையாகும், காண்-காண்பாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இரங்கார்-இரங்காத மனிதர். பசு பால் வற்றியபின் தன்னிடம் பால் ஊட்டவரும் கன்றை உதைத்துத்தள்ளுவது உண்டு. இதை உவமானமாகக் கூறினார். 302

**குற்றங் குறையக் குணமே விட அருளை**
**உற்றவரே யாவிக் குறவாம் பராபரமே.**

(ப-ரை) குற்றம்-(நாளுக்குநாள்) பாவச்செயல்கள், குறைய-குறைவுபட, குணம் - புண்ணியச்செய்கைகள், மேலிட - அதிகரிக்க, அருளை - தேவரீரின் திருவருளை, உற்றவரே - அடைந்தவர்களே, ஆவிக்கு - அடியேனுடைய உயிருக்கு, உறவாம்-உறவினர் ஆவார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) குற்றம் - பாவச்செயல். 'குணம்' என்னும் பொதுச்சொல் சிறப்புப்பற்றி நல்ல குணமான செயல்களைக் குறித்தது. மேலிடல்-அதிகரித்தல். 'உறவு' இது 'உறு' என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயர். 303

**ஒருரையால் வாய்க்குமுண்மைக் கோரனந்த நூல்கோடி**
**பேருரையாற் பேசிலென்ன பேறும் பராபரமே.**

(ப-ரை) ஓர்-ஒரு, உரையால்-ஞானோபதேசத்தால், வாய்க்கும் - கிடைக்கும், உண்மைக்கு - உண்மைப்பொருளுக்காக, ஓனந்தம்-அளவற்ற, கோடி-கோடிக்கணக்கான, நூல்-நூல்களின், பேர்-பெரிய, உரையால்-உரையினால், பேசில்-பேசிப் படித்தாலும், என்ன-என்ன, பேறும் - பலனுண்டாகும், பராபரமே!—, எ-று.



(வி-ரை) ஓர் உரையால்-ஞானசிரியரின் ஒருவார்த்தையால். உண்மைப் பொருள்-இறைவன் திருவருள். 'ஓனந்தம் நூல் கோடி' என்பதை 'ஓனந்தம் கோடி நூல்' என மொழிமாற்றிப் பொருள் கொள்க. 304

**சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்கு ளேசுழலும்**
**அல்ல லொழிவதென்றைக் கையா பராபரமே.**

(ப-ரை) ஐயா-இறைவனே!, சொல்லும்-மக்களால் சொல்லப்படுகின்ற, சமயம் - சமயம், நெறி-மார்க்கம், சுற்றுக்கு-சுழலுக்கு, உளே - உள்ளே அகப்பட்டு, சுழலும் - சுழலுகின்ற, அல்லல்-துன்பம், ஒழிவது - அடியேனைவிட்டு அகன்றோடுவது, என்றைக்கு-என்று, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சொல்லும்-மக்கள் தங்கள் கன்மத்திற்குத் தக்கபடி சொல்லும். சமயநெறி-சமயமார்க்கம். முக்கூற்றுச் சமயநெறி ஆதலின் 'சுற்றுக்குளே' என்றார். சுத்த சித்தாந்த சைவநெறி அல்ல ஆதலின் 'சுற்றுக்குளே சுழலும்' என்றார். 305

**பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை**
**அடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே.**

(ப-ரை) பிடித்ததையே-(உண்மையை ஆராய்ந்து அறிய முயலாது) தான் கொண்டதையே, தாபிக்கும் - உண்மை என்று நிலைநாட்டும், பேர் - பெரிய, ஆணவத்தை-ஆணவத்தடிப்பை, அடித்து-அடித்து, துரத்த-ஓட்ட, வல்லார்-வல்லவர்கள், ஆர்-யார்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'தாபிக்கும்' அதன் உண்மையை ஆராய்ந்து அறிந்துகொள்ள முயலாது கன்மவசத்தால் முதலையும் மூர்க்கனுங் கொண்டது விடா என்றது போல உண்மையாகக்கொண்டு நிலைநாட்டும் என்பது பொருளாம். தப்பைப் பற்றி அதனை ஒப்பென்று தாபிப்பது ஆணவப் பேயின் சேட்டையாதலின் 'பேர் ஆணவத்தை' என்றார். காண் - அசை. 306

**நேசத்தா னின்னை நினைக்கு நினைவுடையார்**
**ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே.**

(ப-ரை) நேசத்தால் - அன்பினால், நின்னை - தேவரீரை, நினைக்கும்-சிந்திக்கும், நினைவு-சிந்தனையை, உடையார்-உடையவர்கள், ஆசை-பிரபஞ்ச ஆசையாகிய, கடலில் - கடலிலே, அழுந்தார் - முழுகமாட்டார், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனை அன்பொடு நினைப்பவர்க்குப் பிரபஞ்சம் நிலையில்லாததென்னும் ஞானம் உதிக்கும் ஆதலினாலும், இறைவனைச் சிந்தித்தலே மெய்யின்பந் தருவதென்று அறிவர் ஆதலினாலும், பிரபஞ்சத்திலே பற்று வைக்காராதலினாலும், 'நேசத்தா னின்னை நினைக்கு நினைவுடையார் ஆசைக் கடலி லழுந்தார்' என்றார். 307

**கள்ளாது கட்டுணவுங் காரியமோ நானொருசொல்**
**கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே.**

(ப-ரை) கள்ளாது-ஒருவன் திருடாதிருக்க, கட்டுணவும்-கட்டுப்படவும், காரியமோ - காரியமுண்டோ?, நான் - அடியேன், ஒரு - ஒப்பற்ற, சொல்-குருவின் ஞானோபதேசச் சொல்லை, கொள்ளாத-பெறாத, தோஷம்-குற்றம், அன்றோ-அல்லவோ (அடியேனுக்கும் பாசபந்தம் ஏற்பட்டிருப்பது), கூறாய்-கூறி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கள்ளாது - திருடாது; இது 'கள்' என்னும் பகுதியடியாகப் பிறந்து. கள்ளாது கட்டுணாக் காரியமோ உபமானம். "அடியேன் ஒரு தீவினையும் செய்யாதிருக்க இப்பாசபந்தம் வந்திருக்கும் தன்மை" என்ற உபமேயம் தொக்குநின்றது.
308

**சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா**
**நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே.**

(ப-ரை) சென்ற - போன, இடம் - இடங்கள், எல்லாம்-எல்லாம், திரு அருளே-தேவரீரின் திருவருளே, தாரகம்-ஆதாரம், ஆ-ஆக, நின்றவர்க்கே-நின்றவர்களுக்கே அன்றோ, ஆனந்தம் - ஆனந்தத்திற்குக்காரணம் ஆகிய, நிட்டை-சிவானந்த மவுனநிட்டை உளதாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சென்ற இடம் எல்லாம் - போன போன இடங்களிலெல்லாம். திருவருளே தாரகமா-இறைவன் திருவருளையே பற்றுக்கோடாகக் கொண்டு என்பதாம். 'அருளே' என்றதன்கண் உள்ள ஏகாரம் தேற்றேகாரம். இதனைப் பிரிநிலை ஏகாரம் என்பாரும் உளர். ஆனந்தம் - சிவானந்தம். 'உளதாகும்' என்னும் வினை தொக்குநின்றது.
309

**நீட்சி குறுகலில்லா நித்யசுகா ரம்பசக**
**சாக்ஷியா முன்னைவந்து சார்ந்தேன் பராபரமே.**

(ப-ரை) நீட்சி-ஒருகாலத்து நீளுதலும், குறுகல்-ஒருகாலத்து குறுகுதலும், இல்லா-இல்லாத, நித்திய - நித்தியமாகிய, சுகம் - சுகத்தின், ஆரம்பம்-தொடக்கத்திற்குக் காரணமாகிய, சகம் - உலகத்திற்கு, சாக்ஷியாம் - நிமித்த காரணமாயிருக்கின்ற, உன்னை-தேவரீரை, வந்து-வந்து, சார்ந்தேன்-அடைந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) முத்திச்சுகமாகிய சிவானந்தப்பேரின்பம் நீளாது குறுகாது தேயாது வளராது பெருகாது சிறுகாது என்றும் ஒரே படித்தாய் பேரின்பமயமாக இருத்தலின் 'நீட்சி குறுகலில்லா நித்தியசுகம்' என்றார். இல்லா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.
310

**வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ**
**நானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே.**

(ப-ரை) வான் - (சர்வவியாபகத்தால்) வான், ஆதி-முதலிய, தத்துவம்-தத்துவங்கள், ஆய் - ஆகி, மன்னி - நிலைபெற்று, நின்ற-நின்ற, காரண-சர்வ காரணனே!, நீ-தேவரீர், நான்-(சிவோகம்பாவனையால்) அடியேன், ஆகி-ஆகி, நிற்பது-நின்றருள்வது, எந்த-எந்த, நாளோ-காலமோ?, பராபரமே!—, எ-று.



(வி-ரை) வானாதி-வானம் முதலிய பஞ்சபூதங்கள். இறைவன் வானாதி தத்துவங்களுமாய் தான் தனியாயும் நிலைபெற்று இருத்தலின் 'மன்னிநின்ற' என்றார். நானாகி நிற்பது என்றது - சிவோகம்பாவனையால் ஆன்மாவுந் தானும் ஒன்றாய்க் காணும் நிலை.
311

**காட்டத்தி லங்கி கடையவந்தா லென்னஉன்னும்**
**நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே.**

(ப-ரை) காட்டு-காட்டின், அகத்தில்-உள்ளே, அங்கி-நெருப்பு, கடைய-(அரணிக்கட்டையைக்) கடைய, வந்தால்-வந்ததை, என்ன-போல, உன்னும்-தேவரீரைச் சிந்திக்கும், நாட்டத்தின்-நினைவின், ஊடு-உள்ளே, வந்த-வந்தருளிய, நட்பே-அடியேனின் உயிர்த்துணையே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) காட்டில் வேடர் தீ வேண்டுங்காலத்து அரணிக்கட்டை என்னும் தீக்கடைக்கோலை கடைய அதனின்று தீ உண்டாகும். இது கொண்டே, 'காட்டகத்தி லங்கி கடைய வந்தா லென்ன' என்றார். இது உவமை. 'என்ன' இது உவமஉருபு.
312

**நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தால் நித்தநித்தஞ்**
**செத்தபிழைப் பானதெங்கள் செய்கை பராபரமே.**

(ப-ரை) நித்திரை-தற்போத நித்திரை, ஆய் - ஆகி, தானே - தானே, நினைவு-திருஅருள் நினைவை, அயர்ந்தால்-மறந்திட்டால், நித்தநித்தம்-தினந்தினம், செத்த-இறந்த, பிழைப்பு-பிழைப்பு, ஆனது-ஆகிவிட்டது, எங்கள்-அடியோங்களுடைய, செய்கை-செய்கை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நித்திரை-தற்போதத்தால் உண்டாகும் சுழுத்திநிலை. நினைவு அயர்தல் - திருவருளை மறந்த நிலை. செத்த பிழைப்பு - மாண்ட பிழைப்பு.

**இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்றுமன**
**துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே. [ம்**

(ப-ரை) இன்பம்-சிவானந்தைத்தரும், நிட்டை - (சிவராஜயோகமாகிய) நிட்டையை, எய்தாமல் - அடையாமல், யாது - (பிரபஞ்சப் பொருள்) எது, எனினும்-என்றாலும், மனம்-மனமானது, சென்று-போய்ச்சென்று படிந்து, துன்புறுதல் - துக்கத்தை அடைதல், வன் - வலிய, பிறவி - இப்பிறவியினால் வரும், துக்கம்-துக்கமாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகப் பொருள்களில் பற்றுவைத்து உழலுவதே பிறவித் துன்பமாகும் என்பார் 'யாதெனினும் சென்று மனம் துன்புறுதல் வன்பிறவித் துக்கம்' என்றார்.
314

**பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோர்**
**ஐயமில்லை ஐயமில்லை ஐயா பராபரமே.**

(ப-ரை) ஐயா-அப்பனே!, பொய்-பொய்யாகிய உலகத்தின்மேல் வைத்துள்ள பற்று, அகல-நீங்க, மெய்-உண்மை, ஆன-ஆகிய, போதம்-திருவருள்

ஞானத்தின், நிலை-நிலையை, கண்டோர்க்கு-கண்டவர்களுக்கு, ஓர்-(முத்தியை அடைய) ஒரு, ஐயமிலை - சந்தேகமில்லை, ஐயமிலை - சந்தேகமில்லை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகமும், உலகத்தின்கண் உள்ள பொருள்களும் காரியரூபமாக இருந்து மாறிமாறி வருந்தன்மையது ஆதலின் உலகப்பற்று அற வேண்டும் என்பார் 'பொய்யகல' என்றார். போதம்-ஞானம், அறிவு. 315

மந்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே.

(ப-ரை) மந்திரத்தை - வேதசம்மதமல்லாத மந்திரங்களை, உன்னி-நினைந்து, மயங்காது - மயங்கித்தவிக்காது, எனக்கு - அடியேனுக்கு, இனி-இனியாகிலும், ஓர்-ஒரு, தந்திரத்தை-உபாயத்தை, வைக்க-கற்பிக்க, தகாதோ-தகாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மந்திரம் - வேதங்களாற் கூறப்படாத போலி மந்திரங்களை. தந்திரம் - சிவாகமத்தப் பேருகிய முத்திபடைதற்கு ஏதுவாகிய ஞானோபதேசத்தை. தகாதோ-கூடாதோ. 316

விண்கருணை பூத்ததென மேவி யுயிர்க்குயிராய்த்
தண்கருணை தோன்றவரு டாய்நீ பராபரமே.

(ப-ரை) விண்-சிதாகாயமானது, கருணை-கருணையை, பூத்தது-பூத்தது, என - என்று ஒப்புச் சொல்லும்படி, மேவி - உயிர்க்கு உயிராய்ப் பொருந்தி, தண் - (ஆன்மாக்களினிடத்தே) குளிர்ந்த, கருணை - கிருபை, தோன்ற-உண்டாக, அருள்-திருஅருள் செய்கின்ற, தாய்-தாய், நீ - தேவரீரே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'அருள் தாய்' இது அருள்கின்ற தாய், அருளிய தாய், அருளும் தாய் என பொருள்தரலின் வினைத்தொகை. 317

தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்றால்
நின்மயமா யெல்லா நிகழும் பராபரமே.

(ப-ரை) தன்-ஆன்மாவாகிய தன், மயமாய் - மயமாக, நின்ற - (பிரபஞ்சமிருப்பது என) நின்ற, நிலை - நிலையே, தானே - தானே, தானாகி - சொந்த ஆன்மநிலையாக, நின்றால் - நின்றால், நின் - தேவரீரின், மயமா - மயமாக, எல்லாம்-நிகழுங் காரியங்களெல்லாம், நிகழும்-நடக்கும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) தன்மயமாய் நின்றநிலை என்றது - சுதந்தரங்கொண்டு ஆன்மாவாகிய தன் மயமாகப் பிரபஞ்சம் இருப்பது என்று நின்றநிலை என்பதாம். தானே தானாகி நின்றால் என்றது - சுதந்தரம் இழந்து ஆன்மாவின் சொரூபத்தை அறிந்து தன் ஆன்மசொரூபமாக நின்றால் என்பதாம். 318

ஏங்கி இடையுநெஞ்ச வேழையைநீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே.



(ப-ரை) ஏங்கி-(திருவருளைப்பெற) ஏக்கங்கொண்டு, இடையும் - வருந்துகின்ற, நெஞ்சம் - மனத்தையுடைய, ஏழையை - ஏழையாகிய அடியேனை, நீ-தேவரீர், வா-வா, என்றே-என்று அழைத்தே, பாங்கு - திருவருட்பாங்கை, பெற-அடைய, செய்வது-செய்வது, உன்-தேவரீரின், மேல்-மீதுள்ள, பாரம்-பாரமாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஏங்கி இடையும் என்றது-திருவருளைப்பெறாது ஏங்கி வருந்தும் என்பது பொருளாம். திருவருளைப் பெறாமையால் தன்னை 'ஏழை' என்றார். 319

ஆண்ட நின்னை நீங்கா வடிமைகள்யாம் ஆணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே.

(ப-ரை) ஆண்ட - அடியோங்களை அடிமையாக ஆண்ட, நின்னை-தேவரீரை, நீங்கா-விட்டுப்பிரியாத, அடிமைகள்-அடிமைகளாகிய, யாம்-(யாங்கள்) அடியோங்கள், ஆணவத்தை-அகங்காரமாகிய ஆணவத்தை, பூண்டது - மேற்கொண்டது, என்ன-எத்தகையதாய, கன்மம்-கர்மமோ, சொல்லாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஆதிதொட்டே இறைவன் ஆண்டானாகவும் உயிர்கள் அடிமையாகவும் இருத்தலின் 'ஆண்ட நின்னை' என்றார். ஆன்மாக்கள் இறைவனை விட்டும், இறைவன் ஆன்மாக்களைவிட்டும் பிரிந்திருந்திருப்பதில்லை யாதலின் 'நீங்கா அடிமைகள்' என்றார். 320

எங்கணுநீ யென்றால் இருந்தபடி யெய்தாமல்
அங்குமிங்கு மென்றலைய லாமோ பராபரமே.

(ப-ரை) எங்கணும்-எவ்விடத்தும், நீ-தேவரீர், என்றால் - (சர்வவியாபகமாய்) நிறைந்து இருக்கின்றாய் என்றால், இருந்த-இருந்த, படி-நிலையிலேயே, எய்தாமல்-தேவரீரை அடையாமல், அங்கும்-அங்குள்ளாய், இங்கும்-இங்குள்ளாய், என்று - என்று, அலையல் - சுட்டி அலைதல், ஆமோ - தகுதியானது ஆகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் அங்கு இங்கு எனாதபடி எங்குமாய் நிறைந்து இருக்கையால் 'எங்கணுநீ என்றால்' என்றார். 'எங்கணும்'-இது 'எங்கண்ணும்' என்பதன் தொகுத்தல் விகாரம். அலையலாமோ-இது அலைதல் வேண்டாம் என்ற பொருளதாம். 321

கற்குமது வுண்டு களித்ததல்லால் நின்னருளில்
நிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே.

(ப-ரை) கற்கும் - கற்கக்கூடியதாகிய கல்வியாகிய, மது-தேனை, உண்டு-உண்டு, களித்தது-மகிழ்ந்தது, அல்லால் - அல்லாமல், நின்-தேவரீரின், அருளின்-திருவருளின், நிற்கும் - நின்றிருத்தலாகிய, மது - தேனை, நீ-தேவரீர், தான் - தான், தந்தது - கொடுத்தருளியது, உண்டோ - உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கற்கு மது-அபரஞானமாகிய தேன். நின் அருளின் நிற்குமது என்றது-பரஞானத்தே என்னும் பொருளதாம். கற்று மகிழ்ந்தேனே அல்லாது நின்திருவருளிற் கலந்துமகிழ்ந்திலேன் என்பது கருத்து. தான்-அசை.

அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே.

(ப-ரை) அண்டம் - அண்டங்களும், பகிரண்டம் - பகிரண்டங்களும், அறியாத-அறிய முடியாத, நின் - தேவரீரின், வடிவை - தேஜோமயவடிவை, கண்டவரை-தேவரீரின் திருஅருட்டுணையால் தரிசித்தவரை, கண்டால்-தரிசித்தால், கதி-முத்திப்பேரானந்தம், ஆம்-உண்டாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அண்டம் - உலகங்கள். பகிரண்டம் - உலக வெளிகள். நின்-வடிவை - இறைவனின் தேஜோமயானந்த வடிவத்தை. கண்டால் - தரிசித்து அவர்களுக்குத் தொண்டாளனால். கதி-முத்திக்கதி. 323

கலக்கமுற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே.

(ப-ரை) கலக்கம்-(மனத்திலே) கலக்கம், உற-உண்டாகும்படி, நெஞ்சை-மனத்தை, கலக்கி-கலங்கும்படிச் செய்து, திரும்ப-மறுபடியும், துலக்குபவன்-தெளிவை உண்டாக்கித் தெளிவிப்பவன், நீ-தேவரீர், அலையோ-அல்லவோ, சொல்லாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கலக்கம் உற நெஞ்சைக் கலக்கி என்றது - ஆன்மாக்களின் கன்மங்களுக்குத் தக்கபடி வினைகளையூட்டி இன்ப துன்பங்களைப் புசிப்பிக்கச் செய்து மனத்தகத்தே கலக்கத்தை உண்டாக்குதலை. 324

சிந்தையுமென் போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.

(ப-ரை) சிந்தையும்-அடியேனின் மனமும், என் - அடியேனை, போல-போல, செயல் - செய்கை, அற்று - ஒழிந்து, அடங்கி - ஒடுங்கி, விட்டால்-விட்டால், வந்தது-நிகழ்கின்றது, எல்லாம்-எல்லாம், நின்-தேவரீரின், செயலா-செயலாகவே, வாழ்வேன்-வாழ்ந்திருப்பேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'சிந்தையும்' என்றதன்கண் உள்ள உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை. செயலற்று அடங்கல் - மௌனநிலை அடைதல். என்போல-என் அறிவைப்போல; இனி 'என்' என்பதற்கு என் தேகத்தைப்போல என உரைப்பாரும் உண்டு. 325

பந்தமெலாந் தீரப் பரஞ்சோதிநீ குருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே.

(ப-ரை) பரம்-உயர்ந்த, சோதி-சிவப்பிரகாசமே!, பந்தம் - அடியேனின் பாசபந்தங்கள், எலாம் - எல்லாமும், தீர-தொலையும்படி, நீ-தேவரீர், குருவாய் - குருவடிவமாக, வந்த - வந்தருளிய, வடிவை - திருமேனி வடிவழகை, மறவேன்-அடியேன் மறக்கமாட்டேன், பராபரமே!— எ-று.



(வி-ரை) இறைவன் உயர்ந்தன வெல்லாவற்றினும் றனிமிக உயர்ந்து நிற்கும் பொருளாதலினாலும் ஜோதிப்பிரகாசன் ஆதலினாலும் 'பரஞ்சோதி' என்றார். இறைவனே குருமூர்த்தமாக எழுந்தருளிவந்து தடுத்தாட்கொண்டானாதலின், 'பந்த மெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய் வந்த வடிவை' என்றார். 326

தானந்த மான சகச நிருவிகற்ப
ஆனந்த நிட்டையருளையா பராபரமே.

(ப-ரை) ஐயா-அப்பனே!, தான் - தன் அளவிலேயே, அந்தம் - முடிவு, ஆன-ஆகிய, சகசம்-இயற்கையாய, நிருவிகற்பம் - விகாரம் இல்லாமல் நின்ற, ஆனந்தம்-சிவானந்த, நிட்டை-சிவயோகநிட்டையை, அருள் - அடியேனுக்கு அருள்செய்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தானந்தமான - தன்னளவிலே முடிந்து தனக்கு மேலொன்றுமில்லாதிருக்கின்ற என்றது. சகசம்-இயல்பாக உள்ளது. நிருவிகற்பம்-விகற்பமில்லாதது. ஆனந்தம்-சிவானந்தப் பெருஞ்சுகம். நிட்டை-சிவயோகசமாதி.

அல்லலெல்லாந் தீரஎனக் கானந்த மாகவொரு[பரமே.
சொல்லையென்பால் வைத்ததையென் சொல்வேன் பரா

(ப-ரை) அல்லல் - உலகத்துன்பங்கள், எல்லாம்-எல்லாமும், தீர-ஒழிந்தோட, எனக்கு-அடியேனுக்கு, ஆனந்தம்-சிவானந்தம், ஆக-உண்டாகும்படி, ஒரு - ஒப்பற்றதாகிய, சொல்லை - ஞானோபதேசத்தை, என் - அடியேனின், பால் - இடத்தே, வைத்ததை - கிருபையுடன் உபதேசித்ததை, என் - எந்த விதமாக, சொல்வேன்-புகழ்வேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அல்லல் பிரபஞ்சத்துன்பம்; ஜனனமரணத்துன்பம்முதலியன. ஆனந்தம்-சிவானந்தம். ஒருசொல் - ஞானோபதேசம். என்சொல்வேன்-எந்த விதமாகப் புகழ்ந்து கொண்டாடுவேன் என்பது. 328

சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.

(ப-ரை) சிந்தை-அடியேனின் மனத்து, மயக்கம் - அஞ்ஞான மயக்கம், அற-ஒழிய, சின்மயம் - சித்து உருவம், ஆய்-ஆகி, நின்ற - எழுந்தருளி நின்ற, உன்னை - தேவரீரை, தந்த - என்னிருதய கமலத்தே எழுந்தருளும்படிக் கிருபைசெய்து தந்த, உனக்கு - தேவரீருக்கு, என்னையும் - அடியேனையும், நான்-அடியேன், தந்தேன்-கொடுத்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மயக்கம் - அஞ்ஞானம். சின்மயம்-சித்துருவம், (சித்து-அறிவு) தந்தேன் என்றது-பாதகாணிக்கையாகச் சமர்ப்பித்தலை யுணர்த்திற்று. 229

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே.

(ப-ரை) மை-இருளுருவத்தை, காட்டும் - காட்டுகின்ற, மாயை - மாயா சம்பந்தமாகிய, மயக்கம்-மயக்கமானது, அற-ஒழிய, நீ-தேவரீர், குரு - ஆசா

ரியத்திருக்கோலம், ஆய்-ஆகி, (எழுந்தருளி வந்து) கை-சின்முத்திரைக் கையை, காட்டவும் - காட்டவும், கனவு - சொர்ப்பனத்தை, கண்டேன்-கண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மை-இருள். மாயை மயக்கம் என்றது - மாயையால் உண்டாகும் மயக்கம் எனப் பொருள் விரிதலின் மூன்றும்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. கனாக்கண்டேன் என்பது - கனவு கண்டேன் என ஆயது. "குறியதன் கீழாக் குறுகலு மதனோ, டுகர மேற்றலு மியல்பு மாந் தூக்கின்" என்பது இலக்கணம். 330

**மால்வைத்த சிந்தை மயக்கறஎன் சென்னிமிசைக்**
**கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே.**

(ப-ரை) மால் - பிரபஞ்ச சம்பந்தமாகிய ஆசையை, வைத்த - வைத்த, சிந்தை - மனத்தின், மயக்கம் - மயக்கம், அற - ஒழிய, என் - அடியேனின், சென்னி-தலையின், மிசை-மேலே, கால்-தேவரீருடைய திரு அடியை, வைக்கவும் - வைத்தருளவும், கனவு - கனவை, கண்டேன் - அடியேன் கண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கால் வைக்கவும் என்றது-திருவடி தீட்சையை. 'வைக்கவும்' என்றதன் ஈற்று உம்மை இறந்தததழீஇய எச்சஉம்மை. 331

**மண்ணாதி மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு**
**கண்ணார வுங்கனவு கண்டேன் பராபரமே.**

(ப-ரை) மண் - பிருதிவி, ஆன - ரூபத்தைக்கொண்ட, மாயை-பிரகிருதி மாயைகள், எல்லாம் - எல்லாமும், மாண்டு-அழிந்து, வெளி-வெளி, ஆக-ஆக, இரு - இரண்டு, கண் - கண்கள், ஆரவும் - பொருந்தவும், கனவு - கனவை, கண்டேன்-கண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மண் ஆன என்றது - பிரகிருதிமாயையின் காரியமாதலினால் என்றறிக. இனி, இகழ்ச்சிக் குறிப்பாகவுங் கூறுவர். மாண்டு வெளி ஆக என்றது - அம்மாயை அடியேன் மனத்து உதியாது சிதாகாயமாத்திரந் தோன்ற என்ற பொருளதாம். 332

**மண்ணீர்மை யாலே மயங்காது உன் கையாலென்**
**கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே.**

(ப-ரை) மண்-பிரபஞ்சத்தின், நீர்மையாலே-மாயையாலே, மயங்காது-மயங்காமல், உன்-தேவரீரின், கையால்-திருக்கையினால், என்-அடியேனின், கண்-கண்களிலிருந்துவரும், நீர் - சோகக்கண்ணீரை, துடைக்கவும்-துடைத்தருளவும், நான்-அடியேன், கண்டேன்-கனவுகண்டேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மண் நீர்மை-பிரபஞ்ச மாயை. கண்ணீர்-துன்பந் தாங்காது வரும் துன்பக் கண்ணீரை. நான் கண்டேன் என்றதில் - கனவு என்பதை அவாய்நிலையால் வருவித்து கனவு நான் கண்டேன் எனப் பொருள் உரைக்கப்பெற்றது. 333



**உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றோ**
**மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே.**

(ப-ரை) உள்ளது-மெய்ம்மையை, உணரா - அறியாத, உணர்வு - அறிவு, இலி-இல்லாதவன், மா-பெரிய, பாவி-பாபி, என்றோ - என்று எண்ணியோ, (அடியேற்குத் தரிசனந் தந்தருளாது) மெள்ள-மெதுவாக, மெள்ள - மெதுவாக, கைநெகிழ - கைசோர, விட்டாய் - தேவரீர் விட்டு விட்டீர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளது உணரா என்றது - நித்தியா நித்திய வஸ்துவின் விவேகமில்லாமையை. அறிவு - ஞானம். கைநெகிழ விட்டாய் - கைவிட்டு விடுதல். உணர்விலி - உணர்வு இல்லாமையை உடையவன். மெள்ள மெள்ள - இது அடுக்குத்தொடர். 334

**எல்லா நினதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ**
**அல்லா லெனக்குளதோ ஐயா பராபரமே.**

(ப-ரை) ஐயா - அப்பனே!, எல்லாம்-எல்லாமும், நினது-தேவரீருடைய, செயல்-திருவருட்செயல், என்று-என்று, எண்ணும்-நினைக்கும், எண்ணமும்-நினைவும், நீ-தேவரீரின் திருவருட்செயலால், அலால் - அல்லாமல், எனக்கு-அடியேனுக்கு என்று ஒரு எண்ணமும், உளதோ-உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'நீ' என்றது இறைவனை. 'உளதோ' இது 'உள்ளதோ' என்றதன் தொகுத்தல் விகாரம். எல்லா நினது என்றது- எல்லாமும் நினது என விரிதலின் இது உம்மைத்தொகை. 335

**பந்த மயக்கிருக்கப் பற்றொழிந்தே னென்றுளறும்**
**இந்த மயக்க மெனக்கேன் பராபரமே.**

(ப-ரை) பந்தம் - பிறவிப்பிணிப்பின், மயக்கு-மயக்கம், இருப்ப-இருந்துகொண்டிருக்க, பற்று-பிரபஞ்சப்பற்று, ஒழிந்தேன்-விட்டகன்றேன், என்று-என்று, உளறும் - உளறுகின்ற, இந்த - இந்த, மயக்கம் - மயக்கம், எனக்கு-அடியேனுக்கு, என்-எதற்காக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பந்தம் - பிறவிப்பிணிப்பை. இனி, பாசபந்தம், மாயாபந்தம் எனினும் பொருந்தும். மயக்கு-மாயாமயக்கத்தை. பற்று - பிரபஞ்சப்பற்றை. 'மயக்கம்' என்று கூறியது ஈண்டு மருட்சி என்னும் பொருளது. 336

**காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ யாதி**
**ஆட்சி யுனதருளே யன்றோ பராபரமே. [னுக்கும்**

(ப-ரை) காட்சி - உலகத்துக் காண்கின்ற காட்சி, எல்லாம்-எல்லாமும், கண்ணை-கண்ணின் உதவியால், விட - தவிர, கண்டது - வேறு சாதகத்தால் பார்த்தது, உண்டோ - உண்டோ (இல்லையாம் அதுபோல), யாதினுக்கும்-எல்லாவற்றிற்கும், உனது - தேவரீரது, அருளே - திருவருளே, அன்றோ-அல்லவோ, மாட்சி-மேலான தாரகமாகவிளங்குகின்றது, பராபரமே!—, எ-று,

(வி-ரை) காட்சி - பிரபஞ்சக்காட்சி. 'உண்டோ' இது விடை தழுவிய வினா; இல்லை என்பது பொருளாம். 'காட்சியெல்லாங் கண்ணைவிடக் கண்டதுண்டோ' என்றது உபமானம். 'யாதினுக்கு மாட்சி யுனதருளே' என்றது உபமேயம். 337

எட்டுத் திசையுமொன்றாய் இன்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறுண்டோ பராபரமே.

(ப-ரை) எட்டு-எட்டு, திசையும்-திசைகளிலும், ஒன்றாய்-ஒரே வியாபகமாய், இன்பம் - இன்பவடிவம், ஆய் - ஆக, நின்ற - எழுந்தருளியிருக்கின்ற, உன்னை - தேவரீரை, விட்டு - விட்டு, பிரிய - நீங்கி, இடம்-வாழ்தற்கு இடம், வேறுண்டோ-அடியேனுக்கு வேறு உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லா இடமும் எட்டுத்திசைக்குள் அடங்கலின் 'எட்டுத் திசையும்' என்றார். ஒன்றாய் - ஒரே வியாபகமாய். இன்பம் - சிவானந்தப் பெருக்கை. இறைவனைவிட்டுப் பிரிந்திருக்க வேறு இடம் இல்லை என்பதாம்.

பிரியா துயிர்க்குயிராய்ப் பின்னமற வோங்குஞ்
செறிவே அறிவே சிவமே பராபரமே.

(ப-ரை) பிரியாது - ஆன்மாக்களைவிட்டுப் பிரியாமல், உயிர்க்கு - உயிர்களுக்கு, உயிராய்-உயிராக, பின்னம்-வேறு, அற-இல்லாதபடி, ஓங்கும்-ஓங்குகின்ற, செறிவே-கலப்பே, அறிவே - அறிவுமயமே!, சிவமே - சிவமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப் பொருள்களிடத்திலும் கலந்தும் கலவாதிருக்கின்றான் ;ஆதலின், 'பிரியா துயிர்க்குயிராய் ... ... ... ஓங்குஞ் செறிவே' என்றார். செறிவு - கலந்து நிற்கும் நிலை. இறைவன் அறிவு வடிவினன் ஆதலின் 'அறிவே' என்றார். இறைவன் இன்பமயன் மங்களரூபி ஆதலின் 'சிவமே' என்றார். 339

ஏதேது சொன்னாலும் எள்ளளவு நீயிரங்காச்
சூதேதெனக்குளவு சொல்லாய் பராபரமே.

(ப-ரை) ஏதேது - அடியேன் குறைகளை எந்தெந்த விதமாக, சொன்னாலும் - தேவரீரிடம் எடுத்து முறையிட்டாலும், எள் - எள்ளின், அளவு-அளவாகிலும், நீ-தேவரீர், இரங்கா-இரங்காத, சூது - கபடத்தன்மை, ஏது-ஏன், எனக்கு அடியேனுக்கு, உளவு - உட்குட்டை, சொல்லாய் - சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எள்ளளவும் - ஒரு சிறிதும். சூது - கபட எண்ணம். உளவு-இரகசியம், மர்மம், குட்டு. அடியேன் முறையிட்டும் தேவரீர் அடியேனுக்கிரங்காததேன் என்பது கருத்தாம். 340

கற்பனையாப் பாடுகின்றேன் கண்ணீருங் கம்பலையும்
சொப்பனத்துங் காணேன் என்சொல்வேன் பராபரமே.



(ப-ரை) கற்பனையாய் - (படித்த படிப்பின் சாமார்த்தியத்தால்) கற்பனை அலங்காரமாக, பாடுகின்றேன் - செய்யுள்களைப் பாடுகின்றேன், (அது அல்லது அன்புமயமாக இருந்து), கண் - கண்களிலிருந்து, நீரும் - ஆனந்த பாஷ்பமும், கம்பலையும் - தேகநடுக்கமும், சொப்பனத்தும் - கனவிலாயினும், காணேன் - என்னிடத்துக் காணவில்லை, என் - (என் வினை இருந்தவாறு) என்னென்று, சொல்வேன்-சொல்லுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கற்பனை - கற்பித்துக்கூறல், அலங்கரித்துக்கூறல். கண்ணீர் கம்பலை என்றது-ஆனந்தமேலீட்டால் உண்டாகும் ஆனந்தபாஷ்பத்தையும், மெய் நடுக்கத்தையும் உணர்த்திற்று. இது ஆனந்தமேலீட்டால் எய்தும் மெய்ப்பாடு. 'சொப்பனத்தும்' என்றதன்கண் உள்ள உம்மை இழிவுச் சிறப்பு உம்மை. 'என்சொல்வேன்' ஈண்டு என்வினை இருந்தவிதத்தை என்னென்று சொல்லுவேன் என்பதாம். கண் என்றது-சாதி ஒருமை. 341

வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாறாப்பேர்
அன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே.

(ப-ரை) ஐயா - அப்பனே!, வன்பு - கடினத்தன்மை, ஒன்று - ஒன்று, நீங்கா-நீங்காத, மனது - அடியேனது மனமானது, இறப்ப - அடங்க, மாறா-என்றும் மாறுபடாத, பேர்-பெரிய, அன்பு - அன்பு; ஒன்றுமே - ஒன்றுமே, எனக்கு-அடியேனுக்கு, போதும்-போதுமானதாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வன்பொன்று நீங்கா மனம்-இளக்கமற்ற கடினமனம். மனது இறக்க-மனம் அடங்க. மாறாப் பேரன்பு-இடையறாததாகிய உழுவலன்பை. அன்பே முத்திக்கு வித்தாதலின் 'அன்பு ஒன்றுமே போது மெனக்கு' என்றார். 342

ஏதுந் தெரியா எளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொறாதோ பராபரமே.

(ப-ரை) ஏதும் - உண்மைத்தன்மை ஏதுவும், தெரியா - அறியாத, எளியேனை - ஏழையாகிய அடியேனை, வா - வா, என - என்று அழைத்து, நின்-தேவரீரின், போதம் - ஞான, நிலை - நிலையை, காட்டில் - காட்டியருளினால், பொறாதோ-அத்தன்மை அடியேனால் பொறுக்கமுடியாதோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) ஏதும் தெரியா - பதி பசு பாசங்களின் உண்மை ஏதுவுந் தெரியாத. இனி இறைவனே தேவரீரின் இயல் ஏதுந் தெரியாத என்பாரும் உண்டு. உண்மை கொஞ்சமும் அறியும் அறிவின்மையால் தன்னை 'எளியேனை' என்றார். போதநிலை - ஞானசொரூபானந்தநிலை. 'பொறாதோ' இது 'பொறு' என்னும் பகுதியடியாகப் பிறந்த வினா. பொறாதோ-இடவழு. இடம் மயங்கி வந்தது. 343

ஓராமலெல்லா மொழிந்தேதற்குன் றெய்வவருள்
தாராதிருக்கத் தகுமோ பராபரமே.

(ப-ரை) ஓராமல் - (பிரபஞ்ச விஷயங்கள் ஒன்றையும்) ஆராயாமல், எல்லாம் - எல்லா விவகாரங்களும், ஒழிந்தேற்கு-விட்டு விலகிநிற்கும் அடியேனுக்கு, உன் - தேவரீரது, தெய்வ - தெய்வத்தன்மை பொருந்திய, அருள்-திருவருளை, தாராது-தந்தருளாது, இருக்க-இருக்க, தகுமோ-தேவரீருக்குத் தகுதியுடையதாகுமோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லாம் என்றது - எல்லாப் பற்றையும், எல்லா விவகாரங்களையும் என்பது பொருளாம். ஒழிதல் - அவைகளைவிட்டு நீங்கி மௌனமாக இருத்தல். தகுமோ - முறையோ, நீதியோ என்னும் பொருளது. தகுமோ என்றது-விடை தழுவிய வினு; தகாது என்னும் குறிப்பிற்று. 344

மோனந் தருஞான மூட்டி எனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை யருளாய் பராபரமே.

(ப-ரை) மோனம்-மவுனநிலையை, தரும் - தருதற்குரிய, ஞானம் - சிவஞானத்தை, ஊட்டி - அடியேனுக்குப் புகட்டி, எனக்கு - அடியேனுக்கு, உவட்டா - தெவிட்டாத, ஆனந்தம் - சிவானந்தத்தைத் தருவதாகிய, வாழ்க்கை - முத்திவாழ்க்கையை, அருளாய் - அருள்செய்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) "மோனம் என்பது ஞான வரம்பு" ஆதலின் 'மோனந்தரு ஞானம்' என்றார். ஊட்டி - குருமூர்த்தமாக வந்து உபதேசித்தருளி என்பதாம். இனி திருவருட்செயலால் அடியேனுக்கு உண்டாகும்படிச் செய்து எனினுமாம். 345

வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே.

(ப-ரை) வாடும் - (தேவரீரைக் காணுமையால்) வாடிக்கொண்டிருக்கிற, முகம்-முகத்தை, கண்டு-பார்த்து, என்னை-அடியேனை, வாடாமலே-வாடாதபடிக்கு, காத்த-காத்தருளிய, நீடும்-ஓங்கி வளரும், கருணை-கருணை, நிறைவே-பூரணமே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'வாடும் முகம்' என்பதற்குத் தேவரீரைக் காணுமல் வாடிக்கொண்டிருக்கின்ற முகம் என்பது பொருளாம். இனி பிறவித்துயரால் வாடிக்கொண்டிருக்கின்ற என்முகம் எனப் பொருள் உரைப்பாரும் உண்டு. நீடுங்கருணை - பெருங்கருணை. நிறைவு-பரிபூரணத்தன்மை. 346

புந்தியினு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடியார்
சிந்தையிறப் போநின் றியானம் பராபரமே.

(ப-ரை) புந்தியினுல் - மனத்தினுல், நின் - தேவரீரின், அடியை - திருஅடியை, போற்றுகின்ற - துதிக்கின்ற, மெய் - உண்மை, அடியார்-அடியார்களின், சிந்தை - மனத்தின், இறப்போ - ஒடுங்குகின்ற இடந்தானே?, நின்-தேவரீரின், தியானம்-தியானம் பலிக்கும் இடம், பராபரமே!—, எ-று.



(வி-ரை) 'புந்தி' ஈண்டு மனத்தை உணர்த்திற்று. சிந்தை இறப்போ என்றது - மனம் அடங்கிய நிலையை. நின்தியானம் என்றது-நின் தியானம் பலிதம் பெறும் இடம் என்பது பொருளாம். 347

உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே.

(ப-ரை) உனக்கு - தேவரீருக்கு, உவமையா-ஒப்பாக, கருணை-கிருபை, உள்ளவரும் - வாய்ந்தவர்களும், வன்மைக்கு-கடினசித்தத்தில், எனக்கு-அடியேனுக்கு, உவமை - ஒப்பு, ஆனவரும்-ஆகியவர்களும், இல்லை-இல்லை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) வன்மை - ஈண்டு மனக்கடினம், கருணையில் உன்னை ஒப்பாரில்லை. மனவன்மையில் அடியேனை ஒப்பாரில்லை என்பது கருத்து. 348

தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்தும்
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே.

(ப-ரை) தாய்-(பெற்று எடுத்த அன்புள்ள) தாய், இருந்தும்-இருந்தும், பிள்ளை-அத்தாயின் பிள்ளை, தளர்ந்தால் - பசியால் தளர்வு அடைந்த தன்மையை, போல் - போல, எவ்விடத்தும் - சர்வ வியாபியாக எல்லா இடங்களிலும், நீ - தேவரீர், இருந்தும் - இருந்தும், நான் - அடியேன், தளர்ந்து-திருஅருளைப்பெறாது தளர்ச்சியடைந்து, நின்றேன் - நின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற் போல்' இது உவமானம், 'போல்' உவமவுருபு. 'எவ்விடத்தும் நீயிருந்தும் நான்றளர்ந்து நின்றேன்' இது உபமேயம். எவ்விடத்தும் இறைவன் சர்வ வியாபகமாய் இருக்கின்றான் ஆதலின் 'எவ்விடத்து நீயிருந்தும்' என்றார். 'தளர்ந்து நின்றேன்' என்ற இடத்து தேவரீரின் திருவருளைப்பெறாது தளர்ந்து நின்றேன் என தேவரீரின் திருஅருள் என்பதனைக் கூட்டி யுரைக்கப்பெற்றது. 349

வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானார்க் கின்பமுண்டோ பேசாய் பராபரமே.

(ப-ரை) வாயால் - வாய் இருந்ததினுலேயே, கிணறு - கிணரானது, கெட்ட - மண்விழுந்து கிணறு தூர்ந்த, ஆறே-விதமே, போல்-போல, வாய்-வாயாலேயே, பேசி-குதர்க்கங்களைப் பேசி, பேய்-பேயாக, ஆனார்க்கு-ஆனவர்களுக்கு, இன்பம்-சிவானந்த இன்பம், உண்டோ - உண்டாகுமோ, பேசாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) கிணறு கெட்ட என்றது - அதன்வழியாக மண்ணும் செத்தைகளும் விழுந்து அக்கிணறு தூர்ந்துபோதலை. வாயாற் கிணறு கெட்டவாறே போல் என்றது - உபமானம். வாய்பேசி பேயானார்க்கு என்றது-உபமேயம். பேயானார்க்கு - பேயின்தன்மையை அடைந்தார்க்கு. 350

**பாவமென்றா லேதும் பயமின்றிச் செய்யவிந்தச்**
**சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே.**

(ப-ரை) பாவம்-பாவத்தொழில்கள், என்றால்-என்றால், ஏதும்-கொஞ்சமும், பயம்-அச்சம், இன்றி - இல்லாமல், செய்ய - செய்தற்கு, இந்த-இந்த, சீவனுக்கு-சீவனுக்கு, ஆர்-யார், போதம்-அறிவு, தெரித்தார் - ஊட்டினார், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பாவம்-ஈண்டு அறத்திற்கு மாறாய தீச்செயல்களை. 'ஆர்' இது 'யார்' என்பதன் போலி. 'தெரித்தார்' இது தெரிவித்தார் என்பதன்மரூஉ. 'இந்த' இதில் இகரம் அண்மைச்சுட்டு. 351

**இன்ப நிருவிகற்ப மின்றேதா அன்றெனிலோ**
**துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே.**

(ப-ரை) இன்பம் - இன்பம் அடைதற்கு ஏதுவாகிய, நிருவிகற்பம்-நிருவிகற்ப, நிட்டை - நிட்டையை, இன்றே - இப்பொழுதே, தா-அடியேன் அடையும்படித் தந்தருள்வாயாக, அன்று - இல்லை, எனிலோ - என்றாலோ, துன்பம்-துன்பத்தை, பொறுப்பு - பொறுத்தல், அரிது - அருமையாகயிருக்க (முடியாது), சொன்னேன் - அடியேன் முறையிட்டுக் கொள்ளுகின்றேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இன்பம்-சிவானந்தமுத்தி இன்பம். நிருவிகற்பம்-பேதமற்றது. நிட்டை - சிவானந்தநிட்டை, நிலையாகிய சமாதி. அன்று - இது குறிப்பு வினைமுற்று. பொறுப்பரிது என்பது-பொறுக்கமுடியாது என்னும் பொருளை பயந்து நின்றது. 352

**கற்குநிலை கற்றாற் கருவியவி ழாது அருளாய்**
**நிற்குநிலை கற்பதுவே நீதம் பராபரமே.**

(ப-ரை) கற்கும்-கற்கத்தகுந்த, நிலை-நிலையினை, கற்றால்-கற்றுக்கொண்டால், கருவி-தத்துவங்கள், அவிழா-விட்டுப் பிரியாது, (ஆகையால்) அருள்-திருஅருள் மயம், ஆய்-ஆக, நிற்கும் - நிற்கும், நிலை - நிலையை, கற்பதுவே-கற்றுக்கொள்ளுவதே, நீதி-முறைமை, ஆகும்-ஆகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'கற்கும் நிலை' என்றது உலகவாழ்வுக்கு ஏதுவாகக் கற்கும் உலகநூல் கற்றநிலை என்பது பொருளாம். கருவி-தத்துவம். தத்துவங்கள் எல்லாம் கழன்ற நிலையே ஞானநிலை. ஞானம்பெற்ற நீயே முத்திக்குரிய நிலை ஆதலின் 'கருவி அவிழா' என்றார். 353

**காய்ச்சச் சுடர்விடும்பொற் கட்டிபோ னின்மலமாய்ப்**
**பேச்சற் றவரே பிறவார் பராபரமே.**

(ப-ரை) காய்ச்ச - நெருப்பில் இட்டுப் புடம் போடப்போட, சுடர்-பிரகாசம், விடும்-அதிகரித்து விடுகின்ற, பொன்-பொன்னின், கட்டி-கட்டியை, போல்-போல, நின்மலமாய்-நிர்மலமாக, பேச்சு - பேச்சு, அற்றவரே - ஒழிந்து



மவுனம் பெற்றவர்களே, பிறவார்-இனி ஜன்மத்தை எடாது முத்தியடைந்தவராவர், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'காய்ச்சச் சுடர்விடும் பொன்' என்றது உபமானம். 'புடமிட வொளிவிடு பொன்போல்' எனப் பிறர்கூறியதுங் காண்க. நின்மலம்-மலம் இல்லாமை. பேச்சற்றவர் - மவுனமுற்றவர்கள். 354

**பற்றொழிந்து சிந்தைப் பதைப்பொழிந்து தானேதான்**
**அற்றிருப்ப தென்றைக் கமைப்பாய் பராபரமே.**

(ப-ரை) பற்று-(பிரபஞ்சக் காரியங்களில்) பற்று, ஒழிந்து-நீங்கி, சிந்தை-மனத்தின், பதைப்பு-துடிப்பு, ஒழிந்து-நீங்கி, தானே-ஆன்மாவாகிய தானே, தான் - பிரமம் என்னும் பசுஞானம் நீங்கி, இருப்பது - திருவருள் மயமாக இருப்பது, என்றைக்கு - எந்நாள், அமைப்பாய் - அடியேனுக்கு அமைத்தருள்வாய்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பற்று-உலகப்பற்று. சிந்தைப் பதைப்பு - மனம் உலக விஷயாதிகளிற் செல்லத் துடிக்குந் துடிப்பு. 'இருப்பது' என்றது திருஅருள் மயமாய் இறைவனோடு தாடலைபோற்கூடி சோகம்பாவனையால் அபேதமாய் நிற்குநிலை. 355

**உருவெளிதான் வாதவூ ருத்தமர்க்கல் லாலினமுங்**
**குருவழிநின் றார்க்குமுண்டோ கூறாய் பராபரமே.**

(ப-ரை) உரு-தேவரீரின் திருவுருவம் தட்சணாமூர்த்தியாக, வெளிதான்-வெளிப்பாடுதான், வாதவூர்-திருவாதவூர்த்தலத்து அவதரித்த, உத்தமர்க்கு-உத்தமராகிய மாணிக்கவாசகர்க்கு, அல்லால் - அல்லாமல், இனமும் - இனி மேலும், குரு - ஆசாரியரின், வழி - வழிபாட்டின்வழி, நின்றார்க்கும் - நின்ற அன்பர்களுக்கும், உண்டோ - அத்தகைய தரிசனங் கிடைக்குமோ, கூறாய்-சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'உருவெளி' என்றது ஆசாரிய உருவத்துடன் வெளிப்படுகையை. மணிவாசகர் திருவாதவூரில் அவதரித்தவர் ஆதலின் மணிவாசகரை 'வாதவூர் உத்தமர்' என்றார். ஈண்டு மணிவாசகர்க்குத் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் தட்சணாமூர்த்த வடிவமாக வந்தருளிச் செய்ததைக் குறித்தார். 356

**தேகம்யா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி**
**ஆகுநெறி நல்லநெறி யையா பராபரமே.**

(ப-ரை) ஐயா - ஐயனே!, தேகம் - இந்தத்தேகமானது, யாதேனும்-(மூவகைச்சித்தியுள்) ஏதேனும், ஒரு-ஒரு, சித்தி-சித்தியை, பெற-அடையும் பொருட்டு, சீவன் முத்தி-சீவன்முத்தியை, ஆகும் - அடையும், நெறி-மார்க்கமே, நல்ல-நல்ல, நெறி-நெறியாகும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) சீவன்முத்தி அடைந்தார் அருவசித்தி, உருவசித்தி, அருவுருவ சித்தி என்னும் மூன்று சித்தியில் ஒன்றை அடைவர். இதுகொண்டே 'தேகம் யாதேனு மொருசித்திபெற' என்றார். 357

உலகநெறி போற்சடல மோயஉயிர் முத்தி
இலகுமெனல் பந்த வியல்போ பராபரமே.

(ப-ரை) உலகம்-உலகத்தின், நெறி - வழியை, போல் போல, சடலம்-தேகம், ஓய-நீங்க, உயிர்-அவ்வுடலினின்றும் நீங்கிய உயிர், முத்தி-மோட்சத்தில், இலகும் - விளங்கும், எனல்-என்றுகூறல், பந்தம் - பிறவிப்பிணிப்பின், இயல்போ-சுபாவந்தானோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) உலகநெறி-உலக இயலை. தேகம் விழுதலும் உயிர் நீங்குதலையுங் குறித்தது. சடலம்மாய - தேகம் உயிரைவிட்டு நீங்குதல். பந்தம்-பிறவிப்பிணிப்பு. 358

பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றெவர்க்குந்
திரமேது மில்லைநன்றாய்த் தேர்ந்தேன் பராபரமே.

(ப-ரை) பரமா - தேவரீரை சகளவடிவாகவும், பரவெளியாய் - நிட்கள வடிவாகவும், பார்ப்பது - தரிசிப்பது, அல்லான் - அல்லாமல், மற்று - வேறு, எவர்க்கும் - யார்க்கும், திரம் - வல்லமை, ஏதும் - ஏதுவும், இல்லை - இல்லையாகின்றது, நன்றாய் - இதனை நன்றாக, தேர்ந்தேன் - தெளிந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பரமா-சகளம். பரவெளி-வடிவமில்லாததாகிய நிட்களவடிவம். 'நன்றாய்த் தேர்ந்தேன்' இதனை என் அனுபவத்தால் நன்கு ஆராய்ந்து அறிந்தேன் என்பதாம். 359

தேடுவே னின்னருளைத் தேடுமுன்னே யெய்தினடம்
ஆடுவேன் ஆனந்த மாவேன் பராபரமே.

(ப-ரை) நின் - இறைவனே தேவரீரின், அருளை - திருவருளை, தேடுவேன்-தேடுவேன், தேடும்-தேடுதற்கு, முன்னே-முன்னமே, எய்தின் -தேவரீரின் திருவருள் கிடைத்துவிட்டால், நடம் - நடனம், ஆடுவேன்-ஆடுவேன், ஆனந்தம்-இன்பமயம், ஆவேன்-ஆகுவேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) நின் - இறைவன். அருள் - திருவருள். தேடுமுன் எய்தின் என்றது-பூர்வபுண்யவசத்தால் அத்திருவருள் எய்தினால் என்பது பொருளாம்.

உள்ளங் குழைய உடல்குழைய உள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன் பராப'ரமே.

(ப-ரை) உள்ளம் - மனமானது, குழைய - தியானத்தினால் உருகவும், உடல்-சரீரம், குழைய-உருகவும், உள்-உள்ளத்தில், இருந்த-இருந்த, கள்ளம்-வஞ்சகம், குழைய-அகலவும், என்று-என்றைக்கு, காண்பேன் - தேவரீரைக் காண்பேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உள்ளம் குழைய-மனம் உருக. உடல் குழைய-உடலம் நெக்குவிட்டு இளக. கள்ளம் குழைய - கள்ளம் அகன்றோட. காண்பேன் - இறைவனாகிய தேவரீரைக் காண்பேன். உள்ளக் குழைவு, உடல் குழைவு, கள்ளக் குழைவு எல்லாம் இறை தரிசனத்தால் எய்தும் என்பதாம். 361



பட்டப் பகல்போலப் பாழ்த்தசிந்தை மாளின்எல்லாம்
வெட்டவெளி யாக விளங்கும் பராபரமே.

(ப-ரை) பட்டப்பகல் - பட்டப்பகல், போல-போல, பாழ்த்த-பாழாகிய, சிந்தை - மனம், மாளின் - ஒடுங்கிவிட்டால், எல்லாம் - பிரபஞ்சம் எல்லாம், வெட்டவெளி - சிதாகாசரூபம், ஆக - ஆக, விளங்கும் - தோன்றும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) போல என்றது - உவமஉருபு. பாழ்த்த சிந்தை மாளின் - மன இருளாகிய அஞ்ஞானம் தொலைந்தால். எல்லாம்-பிரபஞ்சம் எல்லாம். 362

பார்க்கின ணுப் போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளின்எ
யார்க்குச் சரியிடலாம் ஐயா பராபரமே. [ன்னை

(ப-ரை) ஐயா-அப்பனே!, பார்க்கின்-ஆராயுமிடத்து, அணு-பரமாணுவை, போல் - போல, கிடந்த - இருந்த, பாழ்ம் - பாழாகிய, சிந்தை - மனமானது, மாளின்-ஒடுங்கினால், என்னை-அடியேனை, யார்க்கு-எவர்களுக்கு, சரி - ஒப்பு, இடலாம்-கூறலாம்?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மனம் அணு உருவம் உடையது என்பர் ஆதலின் 'பார்க்கினணுப்போல் கிடந்த பாழ்ஞ் சிந்தை' என்றார். பாழ்ஞ் சிந்தை மாளின்-மனம் ஒடுங்கல்; மனவியாபாரம் அற்று இருத்தல். 'என்னை யார்க்குச் சரியிடலாம்' என்றதனால் சிவஞானியர்க்கு ஒப்பிடலாம் என்பது குறிப்பாம்.

பாட்டுக்கோ அன்பினுக்கோ பத்திக்கோ அன்பர்தங்கள்
நீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய் பராபரமே.

(ப - ரை) பாட்டுக்கோ - அடியார்களின் பாட்டுக்குமாத்திரந்தானோ?, அன்பினுக்கோ-அன்பிற்குமாத்திரந்தானோ?, அன்பர்-அன்பர், தங்கள்-தங்களுடைய, நீட்டுக்கு-ஏவல்களுக்கு, எல்லாம்-எல்லாம், குறுகி-சமீபித்துவந்து, நின்றாய்-நின்றருளினை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பாட்டுக்கு - செந்தமிழ்ப் பாட்டுக்கு. அன்பினுக்கு - அடியார்களின் பத்தி முதிர்ச்சிக்கு. நீட்டுக்கு - ஏவலுக்கு கைநீட்டிக்காட்டி ஏவுதல் மரபாதலின் 'ஏவலுக்கு' 'நீட்டுக்கு' என்றார். பாட்டுக்கும், பத்திக்கும், நீட்டுக்கும் இறைவன் குறுகிநின்றருளியதை பெரியபுராணத் திவ்விய நூலால் அறியலாம். 364

முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே.

(ப-ரை) முத்தாந்தம்-முத்தி முடிவிற்கு, வித்தே-காரணமே, முளைக்கும் - அம்முத்தி யுண்டாதற்கு, நிலமாய் - பூமியாக, எழுந்த - எழுந்த, சித்தாந்தம் - சித்தாந்த, மார்க்கம் - சமயத்தில், சிறப்பே - விளங்குஞ் சிறந்த பொருளே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'முத்தாந்தம்' இது ।முத்தி+அந்தம் என இருவடசொல் புணர்ந்து நின்றது. வித்து - காரணம், சித்தாந்தம் - சைவசித்தாந்தம்,

சிறப்பே - சிறந்து விளங்கும். செம்பொருளே - இனி இதற்கு மேலான பொருளே எனினுமாம். 365

**உன்னா வெளியாய் உறங்காத பேருணர்வாய்**
**என்னாவிக் குள்ளே யிருந்தாய் பராபரமே.**

(ப-ரை) உன்னா - நினைக்க ஒண்ணாத, வெளியாய் - சிதாகாய சொரூபமாகி, உறங்காத - சோர்வு கொள்ளாத, பேர் - பெரிய, உணர்வாய் - அறிவு சொரூபமாகி, என் - அடியேனின், ஆவிக்குள் - உயிரினுள்ளே, இருந்தாய் - இருந்தருளினாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) உன்னாவெளி-நினைத்தற்கரிய சிதாகாயம். உறங்காத-சோர்வு அடையாத. இறைவன் ஆவிக்கு ஆவியாய் இருப்பவனாதலின் 'என் ஆவிக்குள் இருந்தாய்' என்றார். உணர்வு - ஞானம், அறிவு. 366

**தத்துவமெல் லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமாம்**
**நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே.**

(ப-ரை) தத்துவம்-தத்துவசம்பந்தமானகாரியங்களை, எல்லாம்-எல்லாம், அகன்ற - நீங்கிய, தன்மையர்க்கு - தன்மையையுடையவர்களுக்கு, சின்மயமாம் - ஞானமயமாகிய, நித்த-சத்தியமானவனே!, முத்த-முத்தனே!, சுத்த-நிர்மலனே!, நிறைவே-பரிபூரணனே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தத்துவமெல்லாம் அகன்ற தன்மையர் என்றது-தத்துவங்களை ஆய்ந்து அறிந்து அவைகளைக் கடந்துநின்ற ஞானியர்கள் என்பதாம். சின்மயம் - ஞானசொரூபம். இனி, சுத்தநிறைவே என எடுத்து சுத்தபரிபூரணமே எனப் பொருள் உரைப்பாரும் உண்டு. நித்த, முத்த, சுத்த என்பன அண்மைவிளிகள். 367

**உள்ளக் கொதிப்பகல உள்ளுள்ளே யானந்த**
**வெள்ள மலர்க்கருணை வேண்டும் பராபரமே.**

(ப-ரை) உள்ளம் - அடியேன் மனத்தின், கொதிப்பு-கொதிப்பு, அகல-நீங்கி, உள்-அந்த மனத்தின், உள்ளே-உள்ளே (பிறகு விளையும்), ஆனந்தம்-சிவானந்தமயமாகிய, வெள்ளம்-வெள்ளத்தில், மலர்-மலரக்கூடிய மலராகிய, கருணை-தேவரீரின் திருக்கருணை, வேண்டும் - அடியேனுக்கு வேண்டும், பராபரமே!—, எ-று.

(வி-ரை) துன்பம் மனத்துநீங்கிய அவசரத்து சிவாநந்தம், ஞானானந்தம் விளையுமாதலின் 'உள்ளுள்ளே ஆனந்தவெள்ளம்' என்றார். அந்த ஆனந்தத்தே கருணைதோன்றும் அக்கருணைவேண்டும் என்பார் 'ஆனந்த வெள்ளக் கருணை வேண்டும்' என்றார். 368

**என்னைப் புரப்பதருளின் கடனாம் என்கடனாம்**
**நின்னிற் பணியறவே நிற்கை பராபரமே.**



(ப-ரை) என்னை-அடியேனை, புரப்பது-காப்பது, அருள்-திருவருளின், கடனாம் - கடன்மையாகும், என் - அடியேனின், கடனாம் - கடன்மையாவது, நின்னில்-தேவரீரினிடத்து, பணி-திருப்பணியில், அறவே - மிகவும், நிற்கை-செய்துநிற்றல், பராபரமே!—, எ-று.

(வி-ரை) இறைவனே! அடியேனைக் காப்பது தேவரீரின் திருவருளின் கடன்மையாகும். அடியேனின் கடன் தேவரீர் திருப்பணியை மிகவுஞ் செய்து நிற்றலாம். 369

**தானேயா நன்னிலையைத் தந்தவரு ளானந்த**
**வானே மனாதீத வாழ்வே பராபரமே.**

(ப-ரை) தானே-சிவந்தானே, ஆம்-ஆகும், நல்-நல்ல, நிலையை-நிலைமையினை, தந்த-கொடுத்த, அருள் - அருளும், ஆனந்தம் - ஆனந்தமயமுமாகிய, வானே-சிதாகாயமே!, மனம்-மனத்திற்கு, அதீத-எட்டாத, வாழ்வே-வாழ்வே, பராபரமே!—, எ-று.

(வி-ரை) தானே ஆம் - ஆன்மா சிவமாகவே நிற்கும்நிலை. இது சோகம் பாவனையால் வந்தது என்பதறிக. சிவமாகி நிற்றல் சிறந்தநிலை ஆதலின் 'நல்நிலையை' என்றார். இறைவன் திருவருள் மயமும், ஆனந்தமயமுமாக நிற்றலானதலின் 'அருளானந்த வானே' என்றார். வான்-சிதாகாயத்தை. 370

**மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த நின்னிறைவைக்**
**கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே.**

(ப-ரை) மண்-மண், ஆதி-முதலிய, பூதம் - பூதங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், வைத்து - உள்ளே தங்கும்படி வைத்து, இருந்த - இருந்த, நின்-தேவரீரின், நிறைவை - பரிபூரணத்துவத்தை, கண் - கண்கள், ஆர-நிறைய, கண்டு-தரிசித்து, களித்தேன்-மகிழ்ந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மண் ஆதி பூதம்-மண், நீர், கால், தீ, விண். 'வைத்து இருந்த' என்றது அவைகளின் உள்ளும் புறம்புமாய் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் நிலையைக் குறித்ததாம். நின் நிறைவை - இறைவனின் பரிபூரணத்துவத்தை. 'கண்ணாரக் கண்டு களித்தேன்' என்றது குருமூர்த்தியின் ஞானோபதேசம் பெற்றபின் சர்வமும் சிவமயமாகக் கண்டதை ஈண்டு குறிக்கின்றார். ()

**அறியாமை யீதென் றறிவித்த வன்றேதான்**
**பிரியா வருணிலையும் பெற்றேன் பராபரமே.**

(ப-ரை) அறியாமை-ஆணவமலத்தின் வடிவமாகிய அஞ்ஞானம், ஈது-இது, என - என்று, அறிவித்த - தெரிவித்த, அன்றேதான் - அப்பொழுதே தான், பிரியா-அடியேனை விட்டு நீங்காத, அருள்-தேவரீரின் திருவருளின், நிலையும் - அடியேன் கலந்திருக்கும் நிலையையும், பெற்றேன் - அடைந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அறியாமை - ஆணவமல மறைப்பாகிய அறியாமையை. 'அறிவித்த அன்றேதான்' என்றது குருமூர்த்தமாக வந்தருளி ஞானோபதேசம்

செய்தபின் என்பதாம். பிறியா அருள்நிலை-திருவருளினின்று நீங்கி இல்லா நிலை என்பதாம். அதாவது சிவானந்தமயமாய் நிற்றலை உணர்த்தியதாம். ()

தீதெனவு நன்றெனவுந் தேர்ந்துநான் நேர்ந்தபடி
ஏது நடக்கவொட்டா தென்னே பராபரமே.

(ப-ரை) தீது - இது தீயது, எனவும் - என்றும், நன்று - இது நல்லது, எனவும் - என்றும், நான் - அடியேன், தேர்ந்ததுவும் - விசாரணைமுகத்தால் கண்டதும், நேர்ந்தபடி - தெளிந்த விதமாக, நடக்க - நடக்க, ஒட்டாது - ஒட்டாது, இது-இதற்கு, என்னே-காரணம் என்ன?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நன்மை தீமை அறிந்தபின் நன்மையைக் கடைப்பிடித்தும் தீமையைவிட்டொழித்தும் நடவாது இருப்பதற்குக் காரணம் அடியேனின் கன்மவினைதானோ என்பார் "தீதெனவு ... ... ... நடக்கவொட்டா தென்னே" என்றார். 'கன்மவினைதான் காரணம்' என்பது கருத்து. அக் கன்மவினையும் இறைவனின் திருவருட்சகாயம் இருப்பின் அகன்றோடும் என்பது அறிக. 373

கண்டவறி வகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய் பராபரமே.

(ப-ரை) கண்ட - கண்ட, அறிவு - காட்சியானது, அகண்டாகாரம்-அகண்டரூபம், என - என்று, மெய் - உண்மையாகிய, அறிவில்-அறிவினால், கொண்டவர்க்கே-கொண்டவர்களுக்கே, முத்தி - முத்திப்பேற்றை, கொடுப்பாய்-கொடுத்தருளுவாய், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கண்ட அறிவு - ஒவ்வொன்றையும் சுட்டியறியும் ஏகதேச அறிவு. மெய்யறிவு-மெஞ்ஞ்ஞானம். முத்தி-சிவானந்தப் பேரின்பமுத்தியை.

ஈறாக வல்வினைநா னென்னும லின்பசுகம்
பேறாம் படிக்கடிமை பெற்றேன் பராபரமே.

(ப-ரை) வல்-வலிய, வினை-வினைகள், ஈறு ஆக - முடிவு அடையும்படி, நான்-நான், என்னாமல் - என்று அகங்கரியாமல், இன்பம் - சிவானந்த, சுகம்-சுகமாகிய, பேறு ஆம் படிக்கு - பேற்றை அடையும் படிக்கு, அடிமை-தேவரீரின் அடிமைத் தன்மையை, பெற்றேன்-அடைந்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) வல்வினை என்றது-இறைவன் திருவருட் சகாயத்தாலன்றித் தொலையாத ஆணவமலத்தின் காரியமாகிய வல்வினை என்பதாம். 'நான் என்னாமல்' என்றது நான் என்னும் அகங்காரதத்துவம் தொலைய என்பதாம். 'இன்ப சுகம் பேறு' என்றது-சிவானந்தச் சுகப்பேறாகிய முத்தியை. ()

பெற்றோ ரனுபூதி பேசாத மோனநிலை
கற்றோர் உனைப்பிரியார் கண்டாய் பராபரமே.

(ப-ரை) அனுபூதி-சிவானுபூதியை, பெற்றோர்-சுவானுபூதியாக அடைந்தவர்களும், மோன - மௌனமாகிய, நிலை - நிலையை, கற்றோர்-கற்றுத் தெரிந்



தொழுகுவோரும், உனை - தேவரீரை, பிரியார் - பிரியமாட்டார்கள், பராபரமே!—, எ-று.

(வி-ரை) அனுபூதிபெற்றோர்-சிவானுபூதி நிலையினை அடைந்து சிவானந்தத்தைத் துய்ப்போர். மோனநிலை-நிரிகாண மவுனத்தை. கற்றோர்-தெரிந்தவர். பிரியார்-தாடலைபோல் கலந்து இன்புற்று வாழ்வர். 376

நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய் பராபரமே.

(ப-ரை) நீயே-தேவரீரே, நான்-அடியேன், என்று-என்று, நினைப்பும்-நினைப்பும், மறப்பும் - மறதியும், அற-நீங்க, தாயே - தாயே, அனைய - ஒத்த, அருள்-கிருபையை, தந்தாய்-தந்தருளினை, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நீயே நான் என்று என்றது-சிவோகம்பாவனையால் இறைவனே தானாக நிற்கும் நிலையையாம். நினைப்பு மறப்புமற என்றது - நினைத்தலும், மறத்தலும் இல்லாத நிலை. ஈண்டு மறந்தாலன்றோ நினைக்கவேண்டும், நினைத்தாலன்றோ மறக்கவேண்டும், அவ்வாறில்லாதநிலை. 377

சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேன் என்
அஞ்சலியுங் கொள்ளா யரசே பராபரமே.

(ப-ரை) அரசே - அரசே!, சஞ்சலம் - மனச்சலனம், அற்று - ஒழிந்து, எல்லாம் - பிரபஞ்சம் எல்லாம், நீ - தேவரீர், தான் - தான், என்று-என்று, உணர்ந்தேன் - அடியேன் அறிந்தேன், என் - அடியேனின், அஞ்சலியும்-நமஸ்காரத்தையும், கொள்ளாய்-கொண்டருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) சஞ்சலம் அற்று என்றது-பிரபஞ்சமாயையால் ஏற்படக்கூடிய மனச்சலனம் அற்று என்பது பொருளாம். எல்லாநீ என்றது - இறைவன் எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் இருத்தலினாலும் அவைகளை உண்ணின்று இயக்குகின்றமையானும் என அறிக. அஞ்சலி-வணக்கம்.

பூதமுத லாதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த வின்பக் கடலே பராபரமே.

(ப-ரை) பூதம் - பிருதிவி, முதல் - முதலாகவுள்ள பூததத்துவங்களிலிருந்து, நாதம் - நாததத்துவம், வரை - முடியவுள்ள தத்துவங்கள் எல்லாம், பொய்-பொய், என்று-என்று அறிந்த, மெய்யர்-உண்மை ஞானிகள், எல்லாம்-எல்லாம், காதலித்த-விரும்பின, இன்பம்-ஆனந்தமயமாகிய, கடலே-கடலே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பூதம்-மண், நீர், கால், தீ, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்கள். ஈண்டு காரணபஞ்சபூதம், சூக்குமபஞ்சபூதம், தூலபஞ்சபூதம் முதலிய எல்லாங் குறிக்கும். நாதம்-நாததத்துவத்தை. காதலித்த என்றது-இறந்தகாலத்தாயினும், காதலிக்கின்ற காதலிக்கும் என்னும் முக்காலமும் உணர்த்தி நின்றது. என்னை? மெய்ஞ்ஞானிகள் முக்காலத்தும் உண்மையின் என்க. 379

**வாக்குமனமொன் றுபட்ட வார்த்தையல்லால்வெவ்வேறா**
**போக்குடைய வார்த்தை பொருந்தேன் பராபரமே. [ய்ப்**

(ப-ரை) வாக்கு-வாய்ச்சொல்லும், மனம்-மனத்து எண்ணமும், ஒன்று-ஒன்றாக, பட்ட-பொருந்திய, வார்த்தை-வார்த்தையே, அல்லால்-அல்லாமல், வெவ்வேறாய் - ஒன்றுக்கு ஒன்று பேதப்பட்ட, போக்கு-போக்கை, உடைய-உடைய, வார்த்தை-சொல்லை, பொருந்தேன்-பேசேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) 'மனம்' ஈண்டு ஆகுபெயராய் மனத்து எண்ணத்தைக் குறித்தது. ஒன்றுபட்ட-ஒரே தன்மையான உண்மை. பொருந்தேன் - நான் அக்குணம் படையேன். 380

**வன்மையின் றியெல்லா மதித்துணர்வாய்க்காகெடுவேன்**
**தன்மையொன் றுந் தோயாத் தடையோ பராபரமே.**

(ப-ரை) வன்மை - கடினமனம். இன்றி - இல்லாமல், எல்லாம் - எல்லாவற்றையும், மதித்து-கிருபை வைத்து, உணர்வாய்க்கு - அறியவல்ல தேவரீருக்கு, ஆ-ஆ!, கெடுவேன்-கெடுவேன், தன்மை-நற்குணம், ஒன்றும்-ஒன்றும், தோயா-பொருந்தாமை, தடையோ-தடையாயிற்றோ, பராபரமே!—, எ-று.

(வி-ரை) எல்லாம்-அண்டாண்ட கோடிகளை. மதித்து-கிருபை வைத்து. 'ஆ கெடுவேன்'-இது இகழ்ச்சிக்குறிப்பு. 'தோயா' இது தோயாத என்பதன் கடைக்குறை விகாரம். இதனை ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் என்பர் இலக்கணிகள். 381

**பத்தர்சித்தர் வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல்**
**வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே.**

(ப-ரை) பத்தர்-சிவபக்தர்களும், சித்தர் - அட்டமாசித்திகளைப் பெற்றவர்களும், வாழி-வாழி, பரி-மிகவும், பக்குவர்கள்-மலபரிபாகம் உற்றவர்களும், வாழி-வாழி, செங்கோல்-திருஅருட் 'செங்கோல், வைத்தவர்கள் - பிடித்தவர்களும், வாழி - வாழி, குரு - அடியேனின் குருநாதன், வாழி - வாழி, பராபரமே!—, எ-று.

(வி-ரை) பத்தர் - அன்புடைய சிவத்தொண்டர். சித்தர்-சிவபெருமான் மாட்டு அன்புவைத்து தவஞ்செய்து அட்டமாசித்திகளைப் பெற்றவர்கள். பரிபக்குவர் - மலபரிபாகமுற்று சத்திநிபாத மடைந்தவர்கள். 'செங்கொல் வைத்தவர்களை' என்றதற்கு செங்கோல் தாங்கிய அரசர்களும் எனப் பொருளுரைப்பாரும் உண்டு. குரு - மௌனதேசிகரை. 382

**கல்லாதே னானாலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்**
**சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே.**

(ப-ரை) கல்லாதேன் - மெய்ஞ்ஞான நூற்களைக் கல்லாதவன், ஆனாலும்-ஆனாலும், கற்று-மெய்ஞ்ஞான நூற்களைக் கற்று, உணர்ந்த - மெய்ப்பொருள் கண்ட, மெய்-உண்மை, அடியார்-அடியார்களின், சொல்லாலே-சொல்லின்



துணையாலே, நின்னை - தேவரீரை, தொடர்ந்தேன்-பின்பற்றிப்பற்றினேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) கல்லாதேன்-மெய்ஞ்ஞான நூற்களைக் கல்லாதவன். கற்றுணர்ந்த மெய்யடியார் மெய்ஞ்ஞான நூற்களை ஐயம், திரிபு, விபரீதம் என்னும் முக்குற்றமறக் கற்று உண்மை அறிந்த மெய்ஞ்ஞானத் தொண்டர்கள். மெய்ஞ்ஞானியர் உபதேசக் கேட்டுத் தேவரீரைப் பற்றினேன் அடியேற்கு அருள் செய்க என்பது கருத்து. 383

**சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச் சுகங்கொடுத்த**
**நல்லுரைக்கே கொத்தடிமை நான்காண் பராபரமே.**

(ப-ரை) சொல்-சொற்கள், இறப்ப - ஒடுங்க (மௌனமுற), சற்குருவாய்-ஞானகுருவாக, தோன்றி - அடியேன்பால் வெளிப்பட்டுவந்து காட்சிதந்து, சுகம் - சிவானந்த இன்பம், கொடுத்த - தந்தருளிய, நல் - நல்ல, உரைக்கே-ஞானோபதேசத்திற்கே, நான்-அடியேன், கொத்தடிமை-நெருங்கிய அடிமை பராபரமே!—, எ-று.

(வி-ரை) சற்குருவாய்த் தோன்றி என்றது-பரமாசிரியராக வந்தருளிய மௌனதேசிகரை. சுகம்-சிவானந்தப்பேரின்பம். நல் உரை-ஞானோபதேசம். கொத்தடிமை - வழிவழி கூட்டத்தோடடிமை. நல்லுரை - சித்தாந்த மகா வாக்கியம். 384

**முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி**
**தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே.**

(ப-ரை) முத்திக்கு-மோட்சத்திற்கு, வித்தான-காரணமான, மோனம்-மோனநிலை என்றும், கரும்பு-கரும்பின், வழி-இடத்தே, தித்தித்திட-இனிக்கும்படி, விளைந்த-உண்டாகிய, தேனே-தேனே!, பராபரமே!—, எ-று.

(வி-ரை) முத்தி - சிவானந்தப் பேரின்பமாகிய முத்தியை. 'முத்தி' என்பது வாதனைகள் விடுபட்ட நிலை என்பது பொருளாம். இதுபற்றியே முத்தியை 'வீடு' எனவுங் கூறினர். வித்து-காரணம். மோனக்கரும்பு-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 385

**நித்திரையும் பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ**
**சுத்த வருணிலை நீ சொல்லாய் பராபரமே.**

(ப-ரை) நித்திரையும் - நித்திரையும், பாழ்த்த - பாழாகிய, நினைவும்-எண்ணமும், அற்று-நீங்கி, நிற்பதுவோ-நிற்பதுதானோ, சுத்த-பரிசுத்தமான, அருள்-திருஅருளின், நிலை-நிலையாகும், நீ-தேவரீர், சொல்லாய் - சொல்லி அருள்வாயாக, பராபரமே!—, எ-று.

(வி-ரை) நித்திரை - நித்தமும் எய்தும் சுழுத்தி நித்திரை. பாழ்த்த நினைவு - பிரபஞ்ச மாயையால் எய்தும் பயனற்ற எண்ணங்கள். நித்திரையும் நினைவும் அற்று இருப்பதுதான் திருஅருட் சுத்தநிலை என்பது கருத்து. 386

**மண்ணும் மறிகட லும் மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன் பராபரமே.**

(ப-ரை) மண்ணும் - பூலோகமும், மறி - அலைகள் மடங்கும், கடலும்-கடலும், மற்று-மற்றுள்ளனவாகிய, அளவும் - எல்லாப் பொருள்களும், உன்-தேவரீரின், கண்ணில் - தேவரீரின் திருவருள் நோக்கத்திலே, இருக்கவும்-இருக்கவும், நான்-அடியேன், கண்டேன்-தரிசித்தேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) மண்-பூலோகம். 'கடல்' - இது கடக்க ஒண்ணாதது என்னுங் காரணம் குறித்தபெயர். இதன்கண் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். பூமிமுதல் எல்லாம் தேவரீரின் திருவருள் நோக்கத்திற் கிலக்கானவை. எதுவும் திருவருள் நோக்கத்திற்குப் புறம்பானது இல்லை என்பது பொருளாம். 387

**பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்றனை நீ
யாட்டுகின்ற தேதோ அறியேன் பராபரமே.**

(ப-ரை) பூட்டி-அடியேனைத் தத்துவங்களிலே கட்டி, வைத்து-வைத்து, வஞ்சம்-வஞ்சகமான, பொறி-பஞ்சேந்திரியங்களின், வழி-வழியே, என்றனை-அடியேன்றன்னை, நீ-தேவரீர், ஆட்டுகின்றது-ஆட்டிவைப்பது, ஏதோ-எந்தக் காரணமோ?, அறியேன்-(அடியேன்) அறியேன், பராபரமே!—, எ-று.

(வி-ரை) பூட்டி-தத்துவக்கட்டிற் கட்டி. ஐம்பொறியும் மாயை வழியிற் செல்லலின் 'வஞ்சப் பொறி' என்றார். உய்வைக் கெடுக்கப் பொய்யை மெய்போற் காட்டுங் சபடத்தால் வஞ்சப்பொறி என்றார் எனினுமாம். இறைவன் ஆன்மாக்களை வினைக்கயிறால் ஆட்டுவோன் ஆதலின் 'ஆட்டுகின்றது' என்றார். 388

**பொய்யுணர்வா யிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையு முளதோ பராபரமே.**

(ப-ரை) பொய் - பொய்யாகிய, உணர்வு ஆய் - அறிவு உடையவனாகி, இந்த-இந்த, புழு-புழுக்கள் நிறைந்த, கூட்டை-தேகத்தை, காத்து-போற்றிக் காத்து, இருந்தேன்-இருந்தேன், உய்யும் இனிமேல் உஜ்ஜீவிக்கும், வகையும்-விதமும், உளதோ-உண்டோ?, பராபரமே!—, எ-று.

(வி-ரை) மெய்யை உணராமலும், பொய்யை மெய்யென்றும் அறிகின்றமையின் 'பொய் உணர்வு ஆய்' என்றார். தேகம் புழுமலி பாண்டம் ஆதலின் 'புழுக் கூட்டை' என்றார். உய்யும்வகை-முத்தி எய்தும் வழியை. 389

---

## பைங்கிளிக் கண்ணி

**அந்தமுட னாதி யளவாமல் என்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, அந்தம்-முடிவு, உடன்-உடனே, ஆதி-உற்பத்தி, அளவாமல் - அளவிடுதற்குக் கூடாமல், என் - அடியேனின், அறிவில்-அறிவின் இடத்திலே, சுந்தரம்-அழகிய, வான்-மேலான, சோதி-திருஅருட்சோதி சொரூபம், துலங்குமோ-பிரகாசிக்குமோ? எ-று.

(வி-ரை) 'கண்ணி' இது ஈரடிகளாலாகிய கலியினப்பாக்கள். இது பைங்கிளியை நோக்கி வினவுதலால் **பைங்கிளிக் கண்ணிகள்** என்ற பெயர் எய்தியது. கிளியை முன்னிலைப்படுத்தியது, ஸர்வ ஸ்வாமியான தேவன் சேதன வஸ்துவினின்மாட்டும் அருள்கொண்டவன் என்பது விளங்கவாம். பாதந்திரமான ஆன்மாவுமாம். அந்தமுடன் ஆதி - இது ஆதியுடன் அந்தம் என்பது முறைமாறி நின்றது. அந்தம்-முடிவு, ஆதி-ஆரம்பம்; அளவாமல்-அளவுகாண முடியாதபடி. என் அறிவில் - ஆன்மபோதத்தில். சுந்தர வான்சோதி-அழகிய திருஅருட் பெருஞ்சோதி சொரூபனாகிய இறைவன். 1

**அகமேவு மண்ணலுக்கென் னல்லலெல்லாஞ் சொல்லி
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே. [ச்**

(ப-ரை) பைங்கிளியே - பசுமையாகிய கிளியே!, அகம்-அடியேனுடைய மனக்கோயிலில், மேவும்-பொருந்தியிருக்கும், அண்ணலுக்கு-இறைவனுக்கு, என் - அடியேனுடைய, அல்லல் - துன்பங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், சொல்லி - கூறி, சுகம்-சுகம் என்னும் பெயரை, ஆன - கொண்டுள்ள, நீ-நீ, போய்-சென்று, சுகம் - சிவானந்தத்தை, கொடுவா-கொண்டுவா எ-று.

(வி-ரை) அகம் - மனக்குகை; இது, பலபொருளொருசொல். சுகம்-கிளி; இது சொல்லாலும், வடிவாலும் மனிதர்க்கு இன்பந்தருவதாதலின் 'சுகம்' என்றார். சுகம் கொடுவா-சிவானந்த சுகத்தைக் கொண்டுவந்துதா. இக்கண்ணி **கிள்ளைவிடுதூது** என்னும் துறையில் அடங்கும். 2

**ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே.**

(ப-ரை) பைங்கிளியே - பசுமையான கிளியே!, ஆவிக்கு - உயிருக்கு, உள்-உள்ளே, ஆவி-உயிர், எனும்-என்று கூறும், அற்புதனார்-அற்புதமூர்த்தியாக விளங்கும் இறைவன், சித் - ஞானமயமான, சுகம்தாம் - சுகமானது, பாவிக்கு - இந்தப் பாவிக்கு, இங்கு - இங்கு, கிட்டுமோ-கிடைக்குமோ, நீ-நீ, சொல்லாய்-சொல்வாயாக, எ-று.

(வி-ரை) இறைவன் உயிர்க்குயிராய் இருப்பவன் ஆதலின் 'ஆவிக்குளாவி எனும்' என்றார். இறைவன் புதுமைக்கும் புதுமையன் ஆதலின் 'அற்புதனார்' என்றார். 3

ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிறைக்குச் செப்பிவா பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, ஆரும் - எவரும் (ஒருவரும்), அறியாமல் - அறியாதபடி, அந்தரங்கம் - இரகசியமாக, வந்து- எழுந்தருளிவந்து, சேரும்படி-அணையும்படிக்கு, இறைக்கு - கடவுளுக்கு, செப்பி-சொல்லி, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) சேரும்படி - அணைந்தருளும்படி. 'செப்பி' இது திசைச் சொல். 4

ஆறான கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறாத தென்னோ குதலைமொழிப் பைங்கிளியே.

(ப-ரை) குதலை-மழலைச்சொல்லையுடைய, பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, ஆறு-ஆற்றைப்போல, ஆன-பெருகுவதாகிய, கண்ணீர்க்கு-கண்ணீருக்கு, என்-எனது, அங்கம்-உடம்பு, பங்கம்-நைந்து, ஆனதையும்-போனதையும், கூறாது-இறைவனுக்குச் சொல்லாதது, என்னோ-என்ன காரணம்? எ-று.

(வி-ரை) அங்கம்-காயம். 'என்' 'ஓ' இவ்விரண்டும் வினாப்பொருளில் வந்த வினாவடுக்கு. 'ஓ' அசை என்பாரும் உண்டு. குதலை - இது மழலைச் சொல். 5

இன்பருள வாடையழுக் கேறுமெமக் கண்ணல்சுத்த
அம்பரமா மாடை யளிப்பானோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, அண்ணல்-இறைவன், ஆடை-வஸ்திரம், அழுக்கு - அழுக்கு, ஏறும் - ஏறும்படியான, எமக்கு-எங்களுக்கு, இன்பு-இன்பத்தை, அருள-தர, சுத்த - சுத்தமாகிய, அம்பரம்-ஆகாயம், ஆம் - ஆகிய, ஆடை - வஸ்திரத்தை, அளிப்பானோ - தந்தருள்வானோ (சொல்லுக) எ-று.

(வி-ரை) "புனைந்தன அழுக்காம்" எனப் **பட்டினத்தடிகள்** கூறியதால் 'ஆடை அழுக்கு ஏறும் எமக்கு' என்றார். இன்பு - சிவானந்தம். இறைவன் திகம்பரன், திக்கையே ஆடையாக உடையவன் ஆதலின் அவனைப்போல 'சுத்த அம்பரமாம் ஆடை அளிப்பானோ' என்றார். 6

உன்னாமல் ஒன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னான் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, உன்னாமல்-நினையாமலும், ஒன்று-ஒன்று, இரண்டு-இரண்டு, என்று-என்று, ஓராமல்-ஆராய்ச்சி செய்யாதபடிக்கும், வீட்டு-முத்தியின், நெறி-சித்தாந்தமார்க்கத்தை, சொன்னான் - உபதேசித்தருளியவனாகிய ஞானமூர்த்தி, வரவும் - திரும்பத்திரும்ப அடியேன்பால் வந்தருளவும், வகை-உபாயத்தை, நீ-நீ, சொல்வாய்-சொல்லுவாயாக எ-று.



(வி-ரை) உன்னாமல் என்றது-இறைவனை அடியேனுக்கு அன்னியமாக நினையாதபடி என்பதாம். ஒன்று-அத்துவிதன். இரண்டு - துவிதன். வீட்டு நெறி-முத்திநெறி. 7

ஊருமிலார் பேருமிலார் உற்றார்பெற் றாருடனே
யாருமிலார் என்னை யறிவாரோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே-கிளியே!, ஊரும் - தனக்கென ஒரு ஊரும், இலார்-இல்லாதவர், பேரும் - தனக்கென ஒருபேரும், இலார்-இல்லாதவர், உற்றார் - உறவினரும், பெற்றார் - தாய் தந்தையும், உடனே-அவர்களோடு, யாரும்-எவரையும், இலார்-இல்லாதவர், என்னை-அடியேனைக் குறித்து, அறிவாரோ-அறிந்துகொள்வாரோ? எ-று.

(வி-ரை) "பேரூரில்லாப் பெருமான்" "தாயுமிலி தந்தையிலி" எனத் தேவார திருவாசகங்கள் முழங்குதலினால் 'ஊருமிலார் ... ... யாருமிலார்' என்றார். 8

ஊரைப்பா ராமலெனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த் தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, ஊரை ஒரு ஊரை, பாராமல்-பார்க்காமல், எனக்கு - அடியேனுக்கு, உள் - உள்ளாகிய, அகத்து-மனத்து (எழுந்தருளியிருக்கும்), நாயகனார்-எனது ஆண்டவன், சீரை-சிறப்புத்தன்மையினை, பார்த்தால்-நோக்கினால், கருணை-கிருபையை, செய்வாரோ-செய்தருள்வாரோ (சொல்லாய்) எ-று.

(வி-ரை) ஊரைப்பாராமல்-பகிர்முகமாக உலகினை நோக்காமல். இறைவன் எல்லாவற்றிற்குந் தலைவன் ஆதலின் 'நாயகனார்' என்றார். 9

என்று விடியும் இறைவாவோ என்றென்று
நின்ற நிலையெல்லா நிகழ்த்தாய்நீ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, என்று-எந்தக்காலத்து, விடியும் - என்னைப் பற்றியிருக்கும் ஆணவ இருள் நீங்கி விடிவு உண்டாகும், ஓ இறைவா-ஓ! இறைவனே!, என்று-என்று, அன்று-அன்று, நின்ற-கூறிக் கொண்டு நின்ற, நிலை-நிலைமைகள், எல்லாம்-எல்லாவற்றையும், நீ-நீ, நிகழ்த்தாய்-இறைவன்பாற் சொல்லுவாயாக எ-று.

(வி-ரை) விடியும் - ஆணவஇருள் நீங்கி ஞானோதயமாதல். 'இறைவாவோ' இது விளியுருபு ஏற்றபெயர்; ஆவோ இரண்டும் விளியுருபுகள் அடுக்கி நின்றன. இது முறையீடும் இரங்கலும் பற்றி வந்தது. (அவலமுறையீடு.) நிகழ்த்தாய் - இது முன்னிலை ஏவல் வினைமுற்று. 10

எந்த மடலூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தை மடலாவெழுதிச் சேர்ப்பேனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, எந்த - எப்படிப்பட்ட, மடல்-ஏட்டின், ஊடும்-உள்ளும், எழுதா-எழுதக்கூடாத, இறை-நாயகனின்,

வடிவை - வடிவத்தை, சிந்தை - என்னுடைய மனமாகிய, மடலால் - ஏட்டில், எழுதி-எழுதி, சேர்ப்பேனோ-என் மனத்தகத்துச் சேர்ப்பேனோ? எ-று.

(வி-ரை) காதலுற்றோர் தான் காதலித்த நாயகியை, நாயகன் பெருதவிடத்து அவர் உருவை எழுதிக்கொண்டு பனைமடலில் ஊர்ந்து சென்றால் அரசன் காதல் உண்மையென்று கண்டால் காதலித்தவர்க்குக் காதலிக்கப்பட்டவரைச் சேர்த்து அவர் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்வதென்பது பண்டைக்கால வழக்கு. மடலூறுவார் கௌபீனத்துடன் நீறணிந்து, எருக்கமாலைச் சூடிச் செல்வர். இதுகொண்டே 'சிந்தை மடலில் எழுதிச் சேர்ப்பேனோ' என்றார். 11

**கண்ணுண் மணி போலின்பங் காட்டி யெனைப்பிரிந்த**
**திண்ணியரு மின்னம்வந்து சேர்வாரோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, கண்-கண்ணின், உள்-உள்ளே, மணிபோல்-மணியைப்போல, இன்பம்-இன்பத்தை, காட்டி-தந்து, எனை-என்னை, பிரிந்த-நீங்கிய, திண்ணியரும்-எனது நாயகராகிய வன்னெஞ்சினரும், இன்னம்-இன்னமும், வந்த-வந்து, சேர்வாரோ-கூடுவாரோ எ-று.

(வி-ரை) கண்ணுண்மணி-கண்ணுக்குள் இருக்கும் கருமணியை. 'போல்' உவமைவுருபு. திண்ணியர்-வலிய மனதை உடையவர், இது காமம் மிக்க தலைவி பாங்கியை வினுதல் என்னுந் துறை. 12

**ஏடார் மலர்சூடேன் எம்பெருமான் பொன்னடியாம்**
**வாடா மலர்முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, ஏடு - இதழ்கள், ஆர்-நிறைந்த, மலர்-மலர்களை, சூடேன்-முடியேன், எம்-எம்முடைய, பெருமான்-இறைவரது, பொன் - அழகிய, அடியாம்-திருவடியாகிய, வாடா-வாடாத, மலர்-மலர், முடிக்கு-என்சிரத்திற்கு, வாய்க்குமோ-கிட்டுமோ?, எ-று.

(வி-ரை) சூடேன் - இறைவன் பிரிந்த சோகத்தால் மலர் சூடிலேன். இறைவன் திருவடி நித்தியமும் சத்தியமும் முத்தி அருள்வதுமாதலின் 'பொன் அடியாம் வாடா மலர்' என்றார். இது, **காம மிக்க கழிபடர்கிளவி.**

**கல்லேன் மலரேன் கனிந்தவன்பே பூசையென்ற**
**நல்லோர்பொல் லாவெனையு நாடுவரோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, கல்லேன் - கற்கவேண்டிய நூற்களைக் கற்கமாட்டேன், மலரேன் - இருதயத்தை மலரச்செய்யமாட்டேன், கனிந்த-பழுத்த, அன்பே - அன்பே, பூசை - பூசை, என்ற - என்று சொன்ன, நல்லோர்-நல்ல சிவனடியார்கள், பொல்லா-பொல்லாத, எனையும்-என்னையும், நாடுவரோ-விரும்புவரோ?, எ-று.

(வி-ரை) கல்லேன்-கற்கவேண்டிய ஞான நூற்களைக் கல்லேன். மலரேன்-இறைவன் பொருந்தியிருப்பதற்கு அகம் விரிந்து இரேன். அன்பே பூசை-அன்புமயமாக நிற்பதுவே பூசையாகும். 14



**கண்டதனைக் கண்டு கலக்கந் தவிர்எனவே**
**விண்டபெரு மானையுநான் மேவுவனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, கண்டதனை-சர்வாண்ட புவனங்களையும் படைத்த இறைவனை, கண்டு - ஞானக்கண்ணாற்கண்டு, கலக்கம்-மனக்கலத்தை, தவிர்-நீக்குவாயாக, எனவே-என்றே, விண்ட-உபதேசித்தருளிய, பெருமானையும்-ஆசாரியனையும், நான்-நான், மேவுவனோ-இன்னும் ஒருமுறை அடைவேனோ? எ-று.

(வி-ரை) கண்டதனை - முன்னிலையாகத் தரிசித்த அதனை. கலக்கம்-மனக்குழப்பம். விண்ட பெருமான்-ஞானசிரியன். 15

**காணாத காட்சி கருத்துவந்து காணமல்**
**வீணாள் கழித்து மெலிவேனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, காணாத - காணாத, காட்சி-திருவருள் காட்சியை, கருத்து-மனதின் இடத்தே, உவந்து-விரும்பி, காணமல்-பாராமல், வீண்-வீணாக, நாள்-நாட்களை, கழித்து-போக்கி, மெலிவேனோ-மெலிவு அடைவேனோ? எ-று.

(வி-ரை) இறைவன் தற்போத முடையவர்களுக்கும் காணப்படான் ஆகையால் 'காணாத காட்சி' என்றார். 16

**காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னவருள்**
**வேந்த னெமையிழுத்து மேவுவனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, காந்தம்-காந்தமானது, இரும்பை - இரும்பை, கவர்ந்து - தன்வசமாக்கி, இழுத்தால் - இழுத்ததை, என்ன-போல, அருள்-திருஅருள், வேந்தன்-அரசனாகிய இறைவன், எமை-எம்மை, இழுத்து-அடிமையாகக்கொண்டு, மேவுவனோ-கலப்பானோ? எ-று.

(வி-ரை) 'காந்தம் இரும்பைக் கவர்ந்திழுத்தா லென்ன' என்றார். இது உவமானம். 'எமை' இது எம்மை என்பதன் தொகுத்தல்விகாரம். 'என்ன' இது உவமவுருபு. 'மேவுதல்' என்றது ஈண்டு கலத்தலைக் குறித்தது. 17

**காதலால் வாடினதுங் கண்டனையே எம்மிறைவர்**
**போதரவா யின்பம் புசிப்பேனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைங்கிளியே-பசுமையான கிளியே!, காதலால் - இறைவனிடத்து வைத்த ஆசைப்பெருக்கால், வாடினதும்-வாடினதையும், கண்டனையே-பார்த்தாயே, எம் - எமது, இறைவர் - கடவுள், போதரவாய் - வரப்பெற்று, இன்பம்-சிவானந்த இன்பத்தை, புசிப்பேனோ-அனுபவிப்பேனோ? எ-று.

(வி-ரை) காதல்-இன்பத்தேட்டம். வாடினது-சோர்வு அடைதல். இவ்வாட்டம் தலைவனைக் காணப்பெறுமையால் என்க. புசித்தல்-அனுபவித்தல்.

**கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப் பலவடிகொள்**
**பட்டிக்கு மின்பமுண்டோ சொல்லாய்நீ பைங்கிளியே.**

(ப-ரை) பைங்கிளியே - பசுமையாகிய கிளியே!, கிட்டி - அன்பருடன் கலந்து, கொண்டு - கொண்டு, உண்மை - அவர்கள் போதிக்கும் உண்மை உபதேசங்களை, கேளா - கேட்காத, பல - பலவாகிய, அடி-அடிகளை, கொள் கொள்ளுகின்ற, பட்டிக்கும் - பட்டிமாட்டையொத்த யெனக்கும், இன்பம் சிவானந்தம், உண்டோ - உண்டாகுமோ, நீ - நீ, சொல்லாய் - சொல்லுவாயாக; எ-று.

(வி-ரை) பல அடிகொள் - பலவிதமாகிய துன்பங்களைக் கொள்ளும், பட்டிக்கும் என்றது - பட்டிமாடு அனைய எனக்கும். 'சொல்லாய்' இது முன்னிலை ஏவல் வினைமுற்று. 19

கிட்டுராய் நெஞ்சிற் கிளர்வார் தழுவவென் றால்
நெட்டுர ராவர் அவர் நேசமென்னோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, கிட்டு - சமீபித்த, ஊராய் - ஊரினராக, நெஞ்சில் - மனத்தினிடத்து கிளர்வார்-விளங்குவார்; தழுவ - தழுவவேண்டும், என்றால் - என்னில், நெட்டு - நீண்டதூரத்துள்ள, ஊரர்-ஊரில் உள்ளவர், ஆவர்-ஆவார், அவர்-அப்படிப்பட்ட அவரின், நேசம்-இவர் சிநேகம், என்னோ-எத்தன்மைத்து; எ-று.

(வி-ரை) கிளர்தல் - விளங்கி இருத்தலை. தழுவல்-அணைதல், அதாவது அத்துவிதமாகக் கலத்தலை. 20

கூறும் குணமுமில்லாக் கொள்கையினர் என்கவலை
ஆறும் படிக்கு மணைவரோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, கூறும் - தன்மையும், குணமும் - குணமும், இல்லா - இல்லாத, கொள்கையினால் - கொள்கையை யுடைய இறைவர், என் - என்னுடைய, கவலை - மனக்கவலை, ஆறும்படிக்கு-தணியும்படிக்கு, அணைவரோ-தழுவுவாரோ? (நீ கூறாய்) எ-று.

(வி-ரை) இறைவன் ஊரில்லான், பேரில்லான், குணமில்லான் என்பனவாதலின் 'குணமில்லா' என்றார்; இதன்கண் உள்ள உம்மை எண்ணும்மை. இனி கூறும் குணமும் இல்லான் என்பதற்கு எடுத்துச் சொல்லும் குணமும் இல்லாதான் என்றும் பொருள் கூறுவர். இப்பொழுது குணமும் என்றதன் கண்ணுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சஉம்மையாகும். 21

சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனியே தவிப்பேனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே-கிளியே!, சின்னஞ்சிறியேன்-மிகவுஞ் சிறியவனாகிய, தன் சிந்தை - எந்தன் மனத்தினை, இறைவர்-இறைவர், கவர்ந்தார் - கவர்ந்துகொண்டார், (அவ்வாறு இருக்க) தன்னந்தனியே-நான் மிகத் தனிமையாக இருந்து, தவிப்பேனோ-துன்புறவேனோ? எ-று.

(வி-ரை) சிந்திப்பதற்கு இடமாக இருத்தலின் மனத்தைச் 'சிந்தை' என்றார். தவித்தல்-அவரைப் பிரிந்து தவித்தலைக் கூறியது. 22



சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, சிந்தை-என்மனத்தில், மருவி - பொருந்தி, தெளிவித்து-மனத்தைத் தெளியும்படிச்செய்து, எனை-அடியேனை, ஆள -ஆட்கொள்ள, வந்த - எழுந்தருளிவந்த, குருநாதன்-குருமூர்த்தி, அருள் - திருவருள், வாய்க்குமோ - இனியொருதரம் கிடைக்குமோ, எ-று.

(வி-ரை) இறைவன் அடியார் உள்ளமே கோயிலாகக்கொண்டு உறைபவன் ஆதலின் 'சிந்தை மருவி' என்றார். இறைவன் குருநாதனாகவந்து மனக்கலக்கந் தீர்த்து ஞானத்தெளிவு உண்டாகும்படிச் செய்தருளினன் ஆதலின் 'தெளிவித்து' என்றார். 23

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
அல்லும் பகலு மணைவேனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, சொல் - வாக்கை, இறந்து - கடந்து, நின்ற - நின்ற, சுகம் - ஆனந்தத்தையே, ரூபம்-வடிவாகக் கொண்டுள்ள, பெம்மானை - இறைவனை, அல்லும் - இரவும், பகலும்-பகலும், அணைவேனோ-பிரியாமல் தழுவிக்கொண்டிருப்பேனோ?, எ-று.

(வி-ரை) சொல் இறந்து நின்ற சுகம்-வாக்குக்கு எட்டாத சுகம். 'அல்லும் பகலும்' இதன்கண்வந்த உம்மைகள் எண்ணும்மைகள். அணைதல்-கலத்தல். இதனை சாயுச்சியநிலை என்பர். 24

தற்போதத் தாலே தலைகீழ தாகஐயன்
நற்போத வின்புவர நாட்செலுமோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, தற்போதத்தாலே-தானென்ற ஆணவச்செருக்கினாலே, தலைகீழதாக-(நான்) தலைகீழாக, (இருப்பதனால்) ஐயன் - இறைவனது, நல் - நல்ல, போதம் - ஞானத்தின், இன்பு-ஆனந்தம், வர-என்னிடத்தே வந்துசேர, நாள்-நாட்கள், செலுமோ - செல்லுமோ? எ-று.

(வி-ரை) தற்போதம் - நான் என்னும் செருக்கு. தலைகீழாக - முறை மாறி அகங்கரித்து ஒழுகுதல். ஐயன் நல்ல போதம் - சிவானந்தம். தற்போதத் தடிப்புடையார்க்கு சிவஞானமும் சிவானந்தமும் உண்டாகா தென்பதாம். 25

தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவர் [யே.
என்னையணை யாதவண்ண மெங்கொளித்தார் பைங்கிளி

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, தன்னை - இறைவன் தன்னை, அறியும் - (கலக்க) அறிந்துகொள்ளும், தருணம் - சமயம், தலைவர்-அவ்விறைவன், என்னை - என்னை, அணையாத - தழுவாத, வண்ணம் - விதம், எங்கு-எந்தவிடத்திலே, ஒளித்தார்-மறைந்து நின்றார் எ-று.

(வி-ரை) தன்னை - இறைவனை. அறியுந் தருணம் - இறைவனைக் கலக்க நினைக்குஞ் சமயம். 26

தாங்கரிய மையலெல்லாந் தந்தெனைவிட் டின்னருளாம்
பாங்கியைச்சேர்ந் தார்இறைக்குப் பண்போசொல் பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, தாங்க - சகிக்க, அரிய - அருமையாகிய, மையல் - ஆசையை, எல்லாம் - எல்லாம், தந்து - கொடுத்து, எனை-என்னை, விட்டு - பிரிந்து, இன் - இனிய, அருளாம் - திருவருளாம், பாங்கியை - தோழியை, சேர்ந்தார் - அணைந்தார், (இவ்வாறு ஒழுகுவது) இறைக்கு - இறைவர்க்கு, பண்போ - அழகாகுமோ, சொல்- சொல்லுவாயாக எ-று.

(வி-ரை) தாங்கரிய மையல் - முத்திப்பேராசை. 'எனை' இது என்னை என்பதன் தொகுத்தல்விகாரம். 27

தாவியதோர் மர்க்கடமாந் தன்மைவிட்டே அண்ணலிடத்
தோவியம்போ னிற்கிலெனை யுள்குவரோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, தாவியது-மரத்திற்கு மரம் தாவுகின்ற, ஓர் - ஒரு, மர்க்கடம் - குரங்கு, ஆம் - ஆகிய, தன்மை- தன்மையை, விட்டே-விட்டே, அண்ணல்-இறைவன், இடத்தே-இடத்தே, ஓவியம் - சித்திரம், போல்-போல, நிற்கின் - நின்றால், (அப்பொழுதானாலும்) எனை-அடியேனை, உள்குவரோ-நினைப்பாரோ? எ-று.

(வி-ரை) மனம் பிரபஞ்சப்பற்றில் தாவிக்கொண்டு திரிதலின் 'தாவியதோர் மர்க்கடமாம் தன்மைவிட்டே' என்றார். இது உபமானம். 'ஓவியம் போல்' என்றது சித்திரம்போல் அசைவாநின்று என்பதாம். இது உவமை. 'போல்'-இது உவமஉருபு. 28

தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னையினிப்
பாரேறு தாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, தீரா-நீங்காத, கரு- பிறவி, வழக்கை - வழக்கை, தீர்வைஇட்டு - தீர்த்து, அங்கு-அங்கு, என்னை- அடியேனை, இனி-இனிமேல், பார் - பூமியில், ஏறு து-பிறவாதபடிக்கு, ஆண்டானை-ஆட்கொண்ட இறைவனை, பற்றுவனோ - இனி நான்சென்று அடைவேனோ? எ-று.

(வி-ரை) கருவழக்கை - தாயின் கர்ப்பத்தில் வந்துதிக்கும் பிறப்பை. பாரேறு து-பூமியில் பிறவாதபடி. 29

தூங்கிவிழித் தென்னபலன் தூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே-கிளியே!, தூங்கி - தினம்தினம் தூங்கி, விழித்து-விழித்து எழுந்து, என்ன-என்ன, பலன்-பயன்?, தூங்காமல்-



தூங்காமல், தூங்கி-தூங்கி, நிற்கும்-இருக்கும், பாங்கு-விதம் (தன்மை), கண்டால்-பார்த்தால், அன்றோ - அல்லவோ, பலன் - பிரயோசனத்தை, காண்பேன்-காண்பேன் எ-று.

(வி-ரை) தூங்கிவிழித்து-தற்போதத்தால் தூங்கி விழித்தலை. தூங்காமல் தூங்கி நிற்கும் பாங்கு-தற்போதம் கழன்று சிவபோதத்து இருத்தல். 30

தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
எல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே-கிளியே!, தொல்லை-தொன்று தொட்டுவரும் பழமை உடைத்தாகிய, கவலை-மனத்துயரங்களை, தொலைத்து- போக்கி, தொலையாத-அழிவில்லாத, எல்லை-அளவு, இலா-இல்லாத, இன்பம்- சிவானந்தசுகம், மயம்-உருவம், எய்துவனோ-அடைவேனோ?, எ-று.

(வி-ரை) தொல்லை-தொன்றுதொட்டுவரும் பழமை உடையது. கவலை- பிரபஞ்ச சம்பந்தமாகிய மனத்துயரம். 31

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந் தின்பணைந்தார்
வன்னெஞ்சத்தாலேநான்வாழ்விழந்தேன்பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, நல்-இளகிய நல்ல, நெஞ்சத்து - நெஞ்சையுடைய, அன்பர்-சிவனடியார்கள், எல்லாம் - எல்லாரும், நாதரை-இறைவரை, சேர்ந்து-அடைந்து, இன்பு - சிவானந்தசுகத்தை, அணைந்தார் - அடைந்தார்கள், வல் - இளக்கமில்லா வலிய, நெஞ்சத்தாலே- மனது படைத்ததினாலே, நான்-அடியேன், வாழ்வு-சிவானந்தப்பெருவாழ்வை, இழந்தேன்-இழந்துவிட்டேன் எ-று.

(வி-ரை) நல்நெஞ்சு - இறைவன்மாட்டு இளகுறும் அன்புடைய மனது. அன்பர்-சிவனடியார். நாதர்-சிவபெருமான். இன்பு அணைந்தார்-சிவானந்தப் பேரின்பத்தை அடைந்தவர். வல்நெஞ்சு-அன்பால் நெக்குவிட்டுருகாத நெஞ்சு.

நானே கருதின்வர நாடார்சும் மாவிருந்தாற்
றானே யணைவர்அவர் தன்மையென்னே பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, நானே - நானே, கருதின்-நினைத்தால், வர-அடியேன்பால்வர, நாடார்-சம்மதியார் (விரும்பார்), சும்மா-சும்மா (மௌனமாக), இருந்தால் - இருப்பேனானால், தானே - தானே இயல்பாக, அணைவர் - என்னைவந்து தழுவுவர், அவர் - அவ்விறைவரின், தன்மை-குணம், என்னே-இருந்தவிதம் என்ன? எ-று.

(வி-ரை) சும்மா இருந்தால்-மௌனமாக இருந்தால். இறைவன் நினைப்பு மறப்பற்று திரிகரண மௌனமுற்றார்பால் வந்து கலந்துச் சிவானந்தப் பெரும்போக இன்பம் தருகின்றான் ஆதலின் 'சும்மா இருந்தால் தானே அணைவர்' என்றார். 33

நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்கவறி யாமற் றிகைப்பேனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, நீரில் - நீரின்மேலே கிளம்புகின்ற, குமிழி - மொக்குளை, போன்ற-ஒத்த, உடல் - இந்தத்தேகம், நிற்கையிலே - நின்றிருக்கையிலேயே, சாசுவதம் - நித்தியமாகிய முத்தியை, சேர்க்க - சேர்த்துக்கொள்ள, அறியாமல் - தெரிந்து கொள்ளாமல், திகைப்பேனோ-மயங்குவேனோ? எ-று.

(வி-ரை) "நீர்மேற்குமிழி நிலையிலாக் காயம்" என்ற ஆன்றோர் வாக்கின் படி இத்தேகம் நீரில் எழுந்த மொக்குளேபோல் தோன்றி நிலையில்லாது அழிதலின் 'நீரிற்குமிழி போன்ற' என்றார்.

34

நெஞ்சகத்தில் வாழ்வார் நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தரல்லர் அவர் மார்க்கமென்னோபைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, நெஞ்சு-மனத்தின், அகத்தில் - இடத்தே, வாழ்வார் - வாழ்ந்து இருப்பார், நினைக்கின் - அவரை அடியேன் நினைத்தால், வேறு-அடியேன் வேறு, என்று-என்று, அணையார்-அடியேனைத் தழுவார், வஞ்சகத்தார் - அவர் வஞ்சகத்தன்மையுடையவரும், அல்லர் - அல்ல, அவர் - அந்த இறைவரின், மார்க்கம் - வழி, என்னோ-என்ன? எ-று.

(வி-ரை) நெஞ்சகம்-இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை; நெஞ்சாகிய இடம் என விரியும். மறந்தால் அன்றோ நினைக்கவரும்; மறத்தலும் நினைத்தலும் தற்போதச் செயலாதலின் 'நினைக்கின் வேறென் றணையார்' என்றார்.

35

பன்முத்தி ரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முத் திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, பல் - பலவாகிய, முத்திரை - முத்திரையைக்கொண்டுள்ள, சமயம் - புறச்சமயங்கள், பாழ்பட - அழிந்தொழிய, கல்-கல், ஆல்-ஆலமரத்தின், அடி-நிழலில், வாழ்-எழுந்தருளியிருக்கின்ற, சின்முத்திரை - சின்முத்திரையையுடைய, அரசை - அரசை, சேர்வேனோ-அடியேன் அடைவேனோ? எ-று.

(வி-ரை) பல்முத்திரை - பற்பலவாகிய சமயக் குறிகளை. விருட்சத்தை. சின்முத்திரை; அரசு-தட்சணாமூர்த்தி.

36

பச்சைகண்ட நாட்டிற் பறக்குமுனைப் போற்பறந்தேன்
இச்சையெல்லா மண்ணற் கியம்பிவா பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, பச்சை - பசுமையான பயிர்களையும் விருட்சங்களையும், கண்ட - கொண்டுள்ள, நாட்டில் - நாட்டினிடத்தே, பறக்கும் - தேடிப் பறந்து செல்லும், உனை - உன்னை, போல்-போல, பறந்தேன் - இறைவனை அடைய விரைந்தேன், இச்சை - எனது அவாவை, எல்லாம் - எல்லாம், அண்ணற்கு - இறைவற்கு, இயம்பி-சொல்லி, வா-வருவாயாக எ-று.



(வி-ரை) 'பச்சை' இது ஆகுபெயராய் பசுமைப் பயிர்களையும் மரங்களையும் குறித்து நின்றது. உனை-பைங்கிளியை. இது 'உன்னை' என்பதன் தொகுத்தல்விகாரம்.

37

பாசபந்தஞ் செய்ததுன்பம் பாராமல் எம்மிறைவர்
ஆசைதந்த துன்பமதற் காற்றேனன் பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, பாசம் - பாசத்தின், பந்தம்-பந்தங்களால், செய்த-செய்யப்பெற்ற, துன்பம்-வேதனைகள், பாராமல்-கவனியாமல், எம் - அடியோங்களுடைய, இறைவர் - கடவுள்மேல், ஆசை-அடியேன் வைத்திருக்கும் ஆசை, தந்த - உண்டாக்கிய, துன்பம் - துன்பம், அதற்கு-அதற்கு, நான்-அடியேன், ஆற்றேன்-சகியேன் எ-று.

(வி-ரை) 'பாசபந்தம்' இது மூன்றாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை; இது பாசத்தாலாகிய பந்தம் என விரியும். ஆசை-இறைவனைக்கண்டணைய வேண்டுமென்னுங் காதல்.

38

பாராசை யற்றிறையைப் பற்றநான் பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, பார் - பிரபஞ்சத்தினுடைய, ஆசை-விருப்பம், அற்று - நீங்கி, இறையை - ஆண்டவனை, பற்று-எனைய பற்றுகள், அற-இல்லாதபடி, பற்றி-பற்றிக்கொண்டு, நின்ற-இருந்த, பூராயம்-வரலாறு, எல்லாம்-எல்லாவற்றையும், புகன்று-இறைவற்குச்சொல்ல, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) பாராசை-பிரபஞ்ச சம்பந்தமாகிய ஆசைகளை. பற்றற-இஷ்ட காமியங்களை. பூராயம் - விருத்தாந்தத்தை. புகன்றுவா - இது கிள்ளைவிடு தூதாம்.

39

பேதைப் பருவத்தே பின்றொடர்ந்துஎன் பக்குவமுஞ்
சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, பேதை-அடியேனின் அறியா, பருவத்தே-பருவத்திலேயே, பின்-அடியேனின் பின்னே, தொடர்ந்து-தொடர்ந்து, என் - அடியேனின், பக்குவம் - பக்குவத்தை, சோதித்த-ஆராய்ந்து அறிந்த, அண்ணல் - இறைவன், வந்து - அடியேன்பால் வந்து, தோய்வாரோ-இப்பொழுது அணைவாரோ? எ-று.

(வி-ரை) பேதைப்பருவம் - இது பெண்களின் அறியாமைப்பருவத்தை உணர்த்தும். ஒன்றுமுதல் எழுவயதுவரைஉள்ள பருவம். பக்குவம்-நிலைமை.

பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்கொடிசேர்
செம்பயிரை நாடித் திகைத்தேனன் பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, பைம் - பசுமையாகிய, பயிரை-பயிரை, நாடும்-தேடிச்செல்லும், உன்-உன்னை, போல்-போல, பார்-உலகங்களை எல்லாம், பூத்த - பெறுதுபெற்ற, பைம்-பசுமையாகிய, கொடி-

கொடிபோன்ற உமாதேவியாரை, சேர்-இடதுபாகத்தே கொண்டுள்ள, செம்-செம்மையாகிய, பயிரை - பயிராகிய சிவபெருமானை, நாடி - விரும்பி, நான்-அடியேன், திகைத்தேன் - அவர் கிடைக்கப்பெறுமையினால் திகைத்தேன் எ-று.

(வி-ரை) பைம்பயிர்-இது பண்புத்தொகை; பசுமையாகிய பயிர் என்பது பொருள். 'பைம்' இது பசுமை என்னும் பண்பின் விகாரம். பைங்கொடி-இது அன்மொழித் தொகை. பசுமையாகிய கொடிபோன்ற உமாதேவியாரைக் குறித்தது. 41

பொய்க்கூடு கொண்டு புலம்புவனோ எம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே! பொய்-பொய்யாகிய, கூடு - சரீரத்தினை, கொண்டு - சுமந்து, புலம்புவனோ - வீணே புலம்பித்திரிவேனோ?, எம் - அடியோங்களுடைய, இறைவர் - ஆண்டவருடைய, மெய்-சத்தியநிலையாகிய, கூடு-சந்நிதானத்தில், சென்று-போய், விளம்பி-சொல்லி, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) பொய்க்கூடு - நிலையற்றதாகிய தேகம். புலம்புவனோ - எமது இறைவனைத் தழுவி ஆனந்தமுறாது வீணே புலம்பித் தவிப்பேனோ. மெய்க்கூடு-சத்தியநிலையாகிய திருவருட் சந்நிதானத்தை. 42

பொய்ப்பணி வேண்டேனைப் பொருட்படுத்தி அண்ணலென்பால்
மெய்ப்பணியுந்தந்தொருகான்மேவுவனோபைங்கிளியே

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, பொய்-பொய்யாகிய, பணி - தொண்டை, வேண்டேனை - விரும்பாத அடியேனை, பொருள் - ஒரு பொருளாக, படுத்தி - நினைத்து, அண்ணல் - இறைவன், என்-அடியேனின், பால்-இடத்தே, மெய் - தமது உண்மையாகிய, பணியும் - தொண்டினையும், தந்து - தந்தருளி, ஒருகால் - இன்னுமொருதரம், மேவுவனோ - வந்து அணைவரோ? எ-று.

(வி-ரை) பொய்ப்பணி - உண்மையாக இன்றி கபடமாகத் தொண்டன் போல் நடத்தலை. பொருட்படுத்தி-ஒருபொருளாக எண்ணுதல். 43

மண்ணுறங்கும் விண்ணுறங்கும் மற்றுளவெ லாமுறங்கும்
மெய்ப்பணியுந் தந்தொருகான மேவுவனோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, மண்-மண் உலகத்தவர், உறங்கும்-உறங்குவார்கள், விண்-விண் உலகத்தவர்கள், உறங்கும்-உறங்குவார்கள், மற்று-மற்றும் உள்ள, எலாம்-எல்லா உலகத்தினரும், உறங்கும்-உறங்குவார்கள், (அடியேன் மாத்திரம்) எம் - அடியோங்களது, இறைவர்-ஆண்டவரின்மேல்வைத்த, காதலால் - ஆசையால், கண் உறங்கேன் - நித்திரை செய்யேன் எ-று.

(வி-ரை) 'மண், விண்' என்பன இடவாகுபெயர்களாய் மண்ணுலகத்தவரையும், விண்ணுலகத்தவரையும் குறித்தன. காதல்-பேரன்பை. 44



மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரஎன்னை [யே.
வெட்டவெளி வீட்டிலண்ணன் மேவுவனோ பைங்கிளி

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, மட்டு-அளவு, படாத-படுத்தப்படாத, மயக்கம் - பிரபஞ்சமயக்கங்கள், எல்லாம்-எல்லாம், தீர-நீங்க, என்னை-அடியேனை, வெட்டவெளி-சிதாகாசமாகிய, வீட்டில்-வீட்டினிடத்தே, அண்ணல்-எமது தலைவனாகிய இறைவன், மேவுவனோ-அணைவானோ? எ-று.

(வி-ரை) மயக்கம் - பிரபஞ்ச மயக்கத்தை. ஈண்டு அகப்பொருட்டுறை போல் கூறிவருவதால் காமமயக்கம் என்னும் பொருள் தொனிக்குமாறு 'மயக்கம் எல்லாம்' என்றார். இது சொன்னயம். வெளி-ஆகாயம். வெட்டவெளி சிதாகாயம். 'வெட்டவெளிவீடு' இது பண்புத்தொகை. 45

மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம்
பாலை வனத்தில்விட்ட பாவமென்னோ பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, மாலை - ஆசையை, வளர்த்து - விருத்தி செய்து, என்னை - அவ் ஆசைகொண்ட அடியேனை, வளர்த்து-வளர்த்து, இறைவர்-இறைவர், பல்-பலவாகிய, நெறியாம்-மார்க்கங்களாகிய, பாலை-பாலையாகிய, வனத்தில் - வனத்திலே, விட்ட - விட்டுவிட்டதற்குக் காரணமாகிய, பாவம் - அடியேன் செய்த பாவம், என்னோ-என்னவோ? எ-று.

(வி-ரை) மாலைவளர்த்து என்றது - சிவபெருமானை இறையாக்கொண்டுள்ள சித்தாந்த சைவமார்க்கத்தினிடத்தும், தெய்வத்தின்மேற் றெய்வமாகி விளங்கும் சிவபெருமானிடத்தும் ஆசையைவளர்த்து என்பதாம். என்னை வளர்த்து என்றது-அவ் ஆசைக்கு இருப்பிடமாகிய அடியேனையும் வளர்த்து என்பதாம். இறைவர் என்றது-சிவபெருமானை. 46

மெய்யினோய் மாற்றவுழ்த மெத்தவுண்டுளம் மண்ணறந்த
மையனோய் தீர்க்க மருந்துமுண்டோ பைங்கிளியே.

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, மெய்யின் - உடம்பில் உண்டாகிய, நோய் நோய்களை, மாற்று-மாற்றக்கூடிய, அவுழ்தம்-மருந்துகள், உண்டு-உண்டு, எம்-அடியோங்களது, அண்ணல்-இறைவன், மெத்த-மிகவும், தந்த-உண்டாக்கிய, மையல்-காதலாகிய, நோய்-நோயை, தீர்க்க-தீர்ப்பதற்கு, மருந்தும்-மருந்துகளும், உண்டோ-இருக்கின்றதோ? எ-று.

(வி-ரை) மெய்யின்நோய்-பித்த வாத சிலேட்டும மிகுதிக் குறைவுகளால் உடம்பில் ஏற்படும் நோய்களை. 47

மேவுபஞ்ச வண்ணமுற்றாய் வீண்சிறையா லல்லலுற்றா [ய்
பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே.

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, மேவு-பொருந்திய, பஞ்ச - ஐந்தாகிய, வண்ணம் - வர்ணம், உற்றாய்-பெற்றிருக்கின்றாய், வீண்-வீணாக, சிறையால்-கூட்டில் அடைப்புண்டமையால், அல்லல் - துன்பத்தை,

உற்றாய்-அடைந்தாய் (இனி உன்னைச் சிறையிலிருந்தும் விட்டுவிடுகின்றேன்), பாவி-பாவியாகிய அடியேனின், பஞ்சம்-இழிவாகிய, வண்ணம்-தன்மையை, பகர்ந்து - அடியேனின் தலைவரிடம் சென்று கூறி, வா - திரும்பி வருவாயாக எ-று.

(வி-ரை) பஞ்சவண்ணம் - ஈண்டு ஐந்துவர்ணம் (நிறம்) என்றும் கேவலத் தன்மை என்றும் பொருள்படும். இது சொன்னயம். 48

**வாய்திறவா வண்ணமெனை வைத்தாண்டார்க்கு என்றுய**
**நீதிறவாச் சொல்லி னிசமாங்காண் பைங்கிளியே. [ரை**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, வாய்-வாயை, திறவா-வீண்வார்த்தைபேசத் திறவாதிருக்கும், வண்ணம்-விதம், எனை - அடியேனை, வைத்து - அடக்கிவைத்து, ஆண்டார்க்கு-ஆண்டருளிய அடியேனின் இறைவர்க்கு, என்-அடியேனின், துயரை காதற்றுயரை, நீதிறவா-நீ தருமம் வெளிப்படையாக உண்டாகும்படி, சொல்லின் - சொன்னால், நிசம் - இறைவர்க்கு உண்மை, ஆம்-ஆகும், காண்-நீ காண்பாயாக எ-று.

(வி-ரை) துயர் - ஆசைத்துயரை. ஆசையால் விளையுந் துயரத்தை. நீதிறவா-வெளிப்படையாக மறைக்காதபடி என்பதாம். 49

**வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே**
**காட்டிக் கொடுத்தானைக் காண்பேனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, வாட்டம் - மெலிவு, படாத - உண்டாகாமைக்குக் காரணமாகிய, மௌனம் - மௌன, இன்பம்-சுகத்தை, கையாலே-சின்முத்திரைக் கையாலே, காட்டி-காண்பித்து, கொடுத்தானை-கொடுத்தருளிய குருமூர்த்தியை, காண்பேனோ - அடியேன் இன்னும் ஒருமுறை தரிசிப்பேனோ? எ-று.

(வி-ரை) வாட்டப்படாத - பிரபஞ்சமாயையில் சிக்கி உழன்று மெலிவடையாத. மௌன இன்பம் என்றது - மௌனானந்த நிட்டையாற் பெறும் பேரின்பம். கையாலே காட்டி - சின்முத்திரைக் குறிக்கையாலே காட்டி. கொடுத்தானை-சிவானந்தப் பேரின்பத்தைக் கொடுத்தருளிய இறைவனை. 50

**வாரா வரவாக வந்தருளு மோனருக்கென்**
**பேராசை யெல்லாம்போய்ப் பேசிவா பைங்கிளியே.**

(ப-ரை) பைம் - பசுமையாகிய, கிளியே - கிளியே!, வாரா - வருவதற்கு அரிய, வரவாக-வரவாக, வந்து - அடியேன் பக்கல்வந்து, அருளும் - அருள் செய்யும், மோனருக்கு - மௌனதேசிகருக்கு, என் - அடியேனின், பேர்-பெரிய, ஆசை - ஆசையை, எல்லாம் - எல்லாம், போய் - சென்று, பேசி-சொல்லி, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) மோனருக்கு-மௌனதேசிக மூர்த்தத்தை. பேர் ஆசை என்றது - அம்மௌனகுருவினிடத்தில் வைத்துள்ள அளவுக்கடங்காது அதிகரித்துக்கொண்டே மிகும் ஆசையை. 51



**விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்கா யாகவென்பாற்**
**பண்ணியதெம் மண்ணன் மயல் பார்த்தாயோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, விண்ணவர்தம்-தேவர்களினுடைய, பால் திருப்பாற்கடலிற் பிறந்த, அமுதம்-அமிர்தமும், வேப்பம்-வேப்பமரத்தினுடைய, காய்-காய், ஆக-ஆகும்படி, என்பால்-அடியேனிடத்து, எம்-எமது, அண்ணல்-இறைவனின், மயல்-காதலானது, பண்ணியது-பண்ணிவிட்டது, பார்த்தாயோ-நீபார்த்தாயோ? எ-று.

(வி-ரை) பால் அமுதம் என்றது - திருப்பாற்கடலிற் பிறந்த அமிர்தம் எனவும், வெண்மையாகிய அமிர்தம் எனவும் பொருள் கூறுவர். வேப்பங்காய் ஆக என்றது-வேப்பங்காய்போல் கசப்புடையது ஆக என்பதாம். 52

**விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்ன அருட்**
**கண்ணு ளடங்கிடவுங் காண்பேனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, விண் - ஆகாயத்தின், உள்-உள்ளே, வளி-காற்றானது, அடங்கி - அடங்கி, வேறு - பேதத்தன்மை, அற்றது-நீங்கியது, என்ன - என்று கூறும்படி, அருள் - திருவருளின், கண் உள்-இடத்தில், அடங்கிடவும்-அடியேன் கலந்திடவும், காண்பேனோ-காணுவனோ? எ-று.

(வி-ரை) ஆகாயம் எங்கும் வியாபகமாக இருக்கின்றது அந்த வியாபகத்துள்ளே காற்றானது வியாப்பியமாக இருத்தலினாலும் வேற்றுமை தோன்றாத திறலினாலும் 'விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்ன' என்றார். அருட்கண்ணுள் - திருவருளினிடத்து. 53

**விண்ணார் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற [யே.**
**மண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னோ பைங்கிளி**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, விண் - ஆகாயத்தில், ஆர்-நிறைந்துள்ள, நிலவு-சந்திரன், தவழ்-தவழுகின்ற, மேடையில் - சந்திர மண்டலம் என்னும் மேடையில், எல்லாரும் - சிவனடியார்கள் எல்லாரும், உற-அமுதமுண்டு சுகமாக இருக்க, மண்ணான-பூமியாகிய, வீட்டில்-வீட்டிலே, என்னை - அடியேனை மாத்திரம், வைத்தது-வைத்திருப்பது, என்னோ-என்ன காரணமோ? எ-று.

(வி-ரை) 'விண் ஆர் நிலவு' என்றது ஆகாசத்திற் சஞ்சரிக்கும் சந்திரனை. நிலவுதவழ் மேடை - சந்திரமண்டலம். 54

**உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்தஎன் கள்ளமெல்லாம்**
**வள்ளலறிந் தால்எனக்கு வாயுமுண்டோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, உள்ளத்தின்-அடியேனின் மனத்தின், உள்ளே-உள்ளே, ஒளித்து - மறைந்து, இருந்த-இருந்த, என்-அடியேனின், கள்ளம்-கபடமாகிய காரியம், எல்லாம்-எல்லாவற்றையும்,

வள்ளல் - இறைவர், அறிந்தால் - அறிவாரானால், எனக்கு - அடியேனுக்கு, வாயும்-மறைத்துப் பேசுதற்கு வாயும், உண்டோ-இருக்கின்றதோ? எ-று.

(வி-ரை) இறைவன் பார்தெங்கும் கரந்துறைவோன் ஆதலினாலும், உள்ளமே கோயிலாக் கொண்டுறைபவன் ஆதலினாலும், யார்மனத்தும் இருக்குஞ்சோதி ஆதலினாலும் 'உள்ளத்தினுள்ளே ஒளித்திருந்து' என்றார். 55

**ஆகத்தை நீக்குமுன்னே ஆவித் துணைவரை நான்**
**தாகத்தின் வண்ணந் தழுவுவனோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே - கிளியே!, ஆகத்தை-தேகத்தை, நீக்கும் - விட்டுநீக்கும், முன்னே - முன்னமே, ஆவி - அடியேனின் உயிர், துணைவரை-சகாயரை, நான்-அடியேன், தாகத்தின் - ஆசையின், வண்ணம்-படி, தழுவுவனோ-அணைந்துகொள்வேனோ? எ-று.

(வி-ரை) ஆகத்தை நீக்கு முன்னே என்றது - உடலைவிட்டு உயிர் நீங்குமுன் என்பதாம். தாகத்தின் வண்ணம் என்றது - இச்சைப்படி என்பதாம். 'தழுவுவனோ' இதில் ஈற்று ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. இவ்வினா ஐயவினா. 56

**தானே சுபாவந் தலைப்பட நின் றன்ஞான**
**வானா னவரும் வருவாரோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, தானே-தான் என்னும், சுபாவம்-சுபாவமே, தலைப்பட-தலைப்பட்டு, நின்றால்-நின்றால், ஞானம்-ஞான, வான்-ஆகாசம், ஆனவரும்-உருவாக உடைய இறைவரும், வருவாரோ-எழுந்தருளி வருவாரோ? எ று.

(வி-ரை) தானே சுபாவம் - தான் என்னும் அகங்காரதத்துவ சுபாவம். இனி தானே எல்லாம் என்கின்ற ஏகான்மவாத தற்போதம். தலைப்பட நின்றால்-அதிகரித்து நின்றால் என்பது பொருளாம். ஞானவான்-சிதாகாசம்.

**கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாமல்**
**உள்ளத்தில் வந்த உபாயமென்னோ பைங்கிளியே.**

(ப-ரை) பைம்-பசுமையாகிய, கிளியே-கிளியே!, கள்ள-கள்ளத்தன்மையுடைய, தலைவர்-நாயகராகிய, அவர்-அவ் இறைவர், கைகாட்டி-கைசமிக்கை காட்டி, பேசாமல்-ஒன்றும் பேசாதபடி, உள்ளத்தில் - அடியேன் மனத்தில், வந்த-வந்தருளிய, உபாயம்-தந்திரம், என்னோ-என்ன?, எ-று.

(வி-ரை) வாய்திறந்து ஒன்றும் பேசாது கைச்சமிக்கை காட்டி உள்ளத்துக்குள் நுழைந்துகொண்டமையால் 'கள்ளத்தலைவர்' என்றார். கைகாட்டி-இது சிலேடை; கைச்சமிக்கை காட்டி என்றும், சின்முத்திரையாகிய கைக்குறி காட்டி என்றும் இருபொருள் தந்தமை காண்க. பேசாமல் என்றதும்-சிலேடை; ஒன்றும் பேசாமல் எனவும், மௌனமாக இருந்து என்றும் இருபொருள் தந்தமை காண்க. 58

---

# எந்நாட் கண்ணி

## தெய்வ வணக்கம்

**நீர்பூத்த வேணி நிலவெறிப்ப மன்றாடுங்**
**கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ.**

(ப-ரை) நீர் - கங்கைநீர், பூத்த - விளங்கித் தோன்றும், வேணி - ஜடாபாரத்தினிடத்து, நிலவு - சந்திரிகை, எறிப்ப - வீச, மன்று - பொன்னம்பலத்தே, ஆடும் - ஆனந்த நடனத்தைச் செய்யும், கார் - விடமுண்டதால் கருப்புநிறம், பூத்த - விளங்கித் தோன்றும், கண்டனை - கழுத்தையுடைய நடராஜமூர்த்தியை, யான் - அடியேன், காணும் - தரிசிக்கும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளாகுமோ? எ-று.

(வி-ரை) இறைவன் உமையம்மையாரின் உள்ளங்கையிற் பிறந்த கங்கையைப் பகீரதன் தவத்தால் பூலோகத்து விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல் மண்ணுக் கடங்காமல் வந்த காலத்து தன் ஜடா மகுடத்தில் அடக்கி அருளினர் ஆதலினால் 'நீர்பூத்த வேணி' என்றார். சந்திரனின் மாமனால் இடப்பெற்ற சாபவிமோசனமாகி அச்சந்திரன் உய்வு பெற இறைவன் பிறைச்சந்திரனைத் தன் ஜடாபாரத்து வைத்து அருளியதால் 'நிலவெறிப்ப' என்றார். 'மன்று' என்றது பொன்னம்பலமாகிய திருச்சிற்றம்பலத்தை. திருப்பாற்கடலில் மாலாதி தேவர் அமிர்தம் பெறற் பொருட்டுக் கடைந்தகாலை முன்னரெழுந்த ஆலகால விஷத்தைத் தேவருய்யும்பொருட்டு உண்டருளித் தான் நித்தியன் என்பதை ஆன்மாக்கள் அறிந்து தன்னைச் சரணடைந்து உய்யுமாறு விடக்கறை கண்டத்திற் றோன்ற நின்றருளியவன் இறைவன் ஆதலின் 'கார்பூத்த கண்டனை' என்றார். எந்நாள், (எ+நாள் = எந்நாள்) இது வினா. இது நான் அறியேனே எனப் பொருள்தரலின் அறியாவினா. ஓ - ஈற்றசை. பூத்தல், தோன்றல், விளங்கல். வேணி - ஜடை. நிலவு - சந்திரிகை. மன்று - பொன்னம்பலம். கார் - கருமைநிறம். கண்டம் - கழுத்து. இந்தக் கண்ணிகள் 'எந்நாளோ' என முடிதலின் இதற்கு எந்நாட் கண்ணிகள் எனப் பெயர் வந்தது. இதுமுதல் பதினொரு கண்ணிகள் தெய்வ வணக்கம் கூறப்படலின் இப் பகுதிக்கு தெய்வவணக்கம் எனத் தலைப்பிட்டார். 1

**பொன்னாரு மன்றுண் மணிப் பூவைவிழி வண்டுசுற்றும்**
**என்னா ரமுதினல மிச்சிப்ப தெந்நாளோ.**

(ப-ரை) பொன் ஆரும் மன்றுள் - பொன்னால் வேயப்பட்ட கனக சபையில், மணி பூவை-அழகிய நாகணவாய்ப் பறவைபோன்ற, (உமாதேவியினுடைய) விழி வண்டு - கண்களாகிய வண்டுகள், சுற்றும் - இடைவிடாமல் சுற்றிக்கொண்டிருக்கும், என் ஆர் அமுதின் - எனது பொருந்திய அமு

தத்தையொத்த, (இறைவனின்) நல ஃமிச்சிலை - இன்பச் சேர்க்கையை, இச்சிப்பது-யான் விழைந்து பெறுவது, எ-எந்த, நாளோ-நாளிலோ? எ-று.

(வி-ரை) இக்கண்ணி அர்த்தநாரீசுவர பாவத்தை எடுத்து விளக்கியது. மன்றுள் மணி பூவை சுற்றல் - இறைவன் நடனத்தில் இறைவி வைத்த கண் வாங்காமல் ஆனந்த மனுபவித்தல். பூவை - கிளிபோலப் பேசுவதொரு பறவை; ஈண்டு, உமாதேவியைக் குறித்தது. விழிவண்டு-உருவகம். அமுதம்-நடராஜப்பெருமான். 2

**நீக்கிமலக் கட்டறுத்து நேரே வெளியிலெம்மைத்**
**தூக்கிவைக்குந் தாளைத் தொழுதிடுநா ளெந்நாளோ.**

(ப-ரை) எம்மை-அடியனாகிய வென்னை, நீக்கி-(மும்மலச்சுழலிலிருந்து) நீக்கி, கட்டு அறுத்து - என்னை விடாமலே பந்தஞ் செய்துகொண்டிருக்கும் ஆணவமலத்தின் சம்பந்தத்தை வேருடன் களைந்தொழித்து, நேரே-(அவன்) முன்னே, வெளியில் - பரமாகாசமாகிய அம்பலத்தில், தூக்கி வைக்கும்-என்னைக் கருணையால் சேர்ப்பிக்கும், தாளை - திருவடியை, தொழுது இடும் நாள்-அருகிருந்து வணங்கும் நாள், எ-எந்த, நாளோ நாளிலோ? எ-று.

(வி-ரை) எம்மை - தன்னைப் போன்றவர்களையும் குறிக்கும் பன்மைத் தன்மை. மலக்கட்டறுத்து - மும்மலக்கட்டை நீக்கி. வெளி - சிதாகாசம். தூக்கிவைக்குந் தாள் - நடனஞ் செய்யுந் திருவடி. தாள் - சினையாகுபெயர். ஓ-இரக்கப் பொருள் தருவது. 3

**கருமுகங்காட் டாமலென்றுங் கர்ப்பூரம் வீசுந்**
**திருமுகமே நோக்கித் திருக்கறுப்ப தெந்நாளோ.**

(ப-ரை) கரு-இனிபிறக்கும், முகம்-இடத்தை, காட்டாமல் - காட்டாத படி, என்றும்-எந்தக்காலத்தும், கர்ப்பூரம் - கர்ப்பூரத்தின்மணம், வீசும்-வீசுகின்ற, திரு-அழகிய, முகமே-முகத்தையே, நோக்கி-தரிசித்து, திருக்கு-அடியேனது குற்றங்களை, அறுப்பது-தொலைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'கருமுகம்' என்றதில் முகம் என்றது எழுனுருபு. இடப் பொருள்தந்து நின்றது. இனி இறைவன் இயற்கையிலேயே திவ்விய பரிமளவாடையன் ஆதலின் 'கர்ப்பூரம் வீசும் முகமே' என்றார். திருக்கு-மனத்துண்டாம் குற்றம். 4

**வெஞ்சேலெனும் விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்சினரை**
**அஞ்சேலெனுங்கைக் கபயமென்ப தெந்நாளோ.**

(ப-ரை) வெம்-விரும்பத்தகுந்த, சேல்-சேற்கெண்டைபோன்ற, விழியார்-கண்களையுடைய பெண்களின், வேட்கை-விருப்பம் என்னும், நஞ்சுக்கு-விஷத்திற்கு, அஞ்சினரை-பயந்த சிவனடியார்களை, அஞ்சேல்-பயப்படாதே, எனும்-என்று கூறும், கைக்கு-அபயாஸ்தத்திற்கு, அபயம்-அபயம், என்பது-என்று கூறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) வெம் - இது விருப்பம் என்னும் பொருளது. 'வெம்மையே விருப்பம்' என்பதனான் அறிக. வெஞ்சேல் விழியார் - அழகிய பெண்கள். வேட்கைநஞ்சு-இது பண்புத்தொகை. வேட்கையாகிய நஞ்சு என விரியும். 5

**ஆறு சமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்**
**வீறுபரை திருத்தாண் மேவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) ஆறு - ஆறாகிய, சமயத்தும் - மார்க்கங்களிலும், அது - அச்சமயத்து, அதுவாய்-தெய்வமாகி, நின்று - இருந்து, இலங்கும் - விளங்குகின்ற, வீறு-மேலாகிய, பரை-பராசத்தியினுடைய, திரு-அழகிய, தாள்-திருவடியை, மேவும்-அடையும், நாள் நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அறுசமயம் - அகச்சமயங்கள் ஆறை. இறைவன் அவரவர்கள் கன்மங்களுக்குத் தக்கபடி உபாசிக்கும் தெய்வம் ஆகின்றான் ஆதலின் 'அது அதுவாய் நின்றிலங்கும்' என்றார். பரை-பராசத்தி. 6

**பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துஉலகை**
**இச்சையுட னீன்றாளை யாங்காண்ப தெந்நாளோ.**

(ப-ரை) பச்சை-மாகதமணியின், நிறம்-நிறத்தை, ஆய் - உடையவளாய், சிவந்த - சிவபெருமானுடைய செவந்த, பாகம் - பாகத்தை, கலந்து - கூடி, உலகை - உலகத்தை, இச்சையுடன்-கிருபையுடன், ஈன்றாளை-பெறுதுபெற்றருளிய பார்வதிதேவியாரை, யாம் - அடியோங்கள், காண்பது - தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவி மாகதமணியின்நிறம் உடையவள் ஆதலின் 'பச்சை நிறமாய்' என்றார். இறைவன் செக்கர்மேனியன் ஆதலின் 'சிவந்தபாகம் கலந்து' என்றார். இறைவனும் இறைவியுமாகிய சக்தன் சக்திகள் கூடி நின்றவழி உலகங்கள் எல்லாம் தோன்றுகின்றன ஆதலின் 'கலந்து உலகை இச்சையுடன் ஈன்றாளை' என்றார். 7

**ஆதியந்தங் காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்**
**போதவடி வாமடியைப் போற்றுநா ளெந்நாளோ.**

(ப-ரை) ஆதி-முதலும், அந்தம்-முடிவும், காட்டாது-தோற்றாது, அகண்டிதமாய் - சர்வ வியாபகமாய், நின்று - இருந்து, உணர்த்தும் - ஆன்மகோடிகளுக்கு அறிவு உறுத்தும், போதம்-ஞானத்தின், வடிவாம் - வடிவமாக இருக்கின்ற பராசத்தியின், அடியை - திருவடியை, போற்றும் - துதிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாள்-நாளோ? எ-று. 8

(வி-ரை) போதவடிவு - ஞானசத்தியாகிய பராசத்தி.

**கங்கை நிலவுச்சடைக் காட்டானைத் தந்தையெனும்**
**புங்கவெண் கோட்டானைபதப்புந்திவைப்பதெந்நாளோ.**

(ப-ரை) கங்கை-கங்காநதியானது, நிலவு - விளங்குகின்ற, சடை-சடையாகிய, காட்டானை - காட்டையுடைய சிவபெருமானை, தந்தை - அப்பன்

எனும் - என்று அழைக்கும், புங்கம் - உயர்வாகிய, வெண் - வெண்மையான, கோட்டு-கொம்பினையுடைய, ஆனை-ஆனைமுகக் கடவுளாகிய! விநாயகமூர்த்தியின், பாதம்-திருவடியை, புந்தி - மனத்தில், வைப்பது - வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'கங்கை நிலவுசடை' என்பதற்கு கங்கை விளங்கு சடை என்பது பொருள். 'காடு' ஈண்டு மிகுதிப்பொருள்தந்து நின்றது. 9

**அஞ்சுமுகங் காட்டாமல் ஆறுமுகங் காட்டவந்த**
**செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்நாளோ.**

(ப-ரை) அஞ்சும் - அடியார்கள் பயப்படும்படியான, முகம் - முகத்தை, காட்டாமல்-காட்டாது, ஆறுமுகம் - ஆறுதலை யுண்டாக்கும்படியாகிய ஆறுமுகங்களை, காட்ட - காட்ட, வந்த-வந்தருளிய சண்முகக்கடவுளின், செம்-செம்மையாகிய, சரணம் - சரணமடைதற்குயேற்ற, சே-செவந்த, அடியை-திருவடிகளை, சிந்தை - மனத்தில், வைப்பது - வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அஞ்சுமுகம் காட்டாமல் என்றது - மக்கள் பயப்படும்படியான கோபமுகங் காட்டாதபடி என்பதாம். ஆறுமுகம் காட்டவந்தது என்றது-மக்கள் துன்பம்நீங்கி ஆறுதல் அடையும்படி ஆறுதிருமுகங்களைக் காட்ட வந்தது என்பதாம். 10

**தந்தையிரு தாடுணித்துத் தம்பிரா னருள்சேர்ந்த**
**எந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ.**

(ப-ரை) தந்தை - தன்பிதாவின், இரு - இரண்டு, தாள் - கால்களையும், துணித்து-வெட்டி, தம்பிரான்-சிவபெருமானின், தாள்-திருவடியை, சேர்ந்த-அடைந்த, எந்தை - எமது பிதாவாகிய சண்டேசுரரின், இரு - பெரிதாகிய, தாள்-திருவடிகளின், இணைக்கே-இரண்டிற்கே, இன்பு-(அடைகின்ற) ஆனந்தம், உறுவது-அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இருதாள் துணித்து என்றது-சிவபெருமான் அபிஷேகத்திற்கு வைத்திருந்த திருமஞ்சனப்பாலை காலால் உதைத்துத்தள்ளிய தகப்பனது தாள்களை சிவபராதத்தைச் செய்தாயென வெட்டி நீக்கியதை உணர்த்துகின்றது. எந்தை - சண்டேசுரநாயனர். 11

---



## குருமரபின் வணக்கம்

**தூய்ய கரமலராற் சொல்லாமற் சொன்னவுண்மை**
**ஐயனைக் கல்லாலரசை யாமணைவ தெந்நாளோ.**

(ப-ரை) தூய்ய - பரிசுத்தமாகிய, கரம் - கையாகிய, மலரால் - தாமரையினால், சொல்லாமல்-வாய்திறந்து ஒன்றுஞ் சொல்லாது மௌனமூர்த்தியாய் நின்று, சொன்ன - (இருந்து சின்முத்திரைக் குறிகாட்டிச்) சொன்ன, உண்மை-உண்மை நிலையையுடைய, ஐயனை-ஐயனை, கல்-கல், ஆல்-ஆலமரத்தின் நிழலில் நின்றிருந்த, அரசை-அரசனை, அணைவது-அடையப் பெறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஐயன் கரம் மெய்ப்பொருள் உணர்த்திய கரம் ஆதலின் 'தூய்ய கர மலரால்' என்றார். 'கரமலரால் சொல்லாமற் சொன்ன' என்றது, சின்முத்திரைக் கரங்காட்டி மௌனயோக நிட்டையிலிருந்து வேதப் பொருளை உணர்த்தியதைக் குறித்தது. 1

**சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல**
**நந்தியடிக் கீழ்க்குடியாய் நாமணைவ தெந்நாளோ.**

(ப-ரை) சிந்தையினுக்கு - மனத்திற்கு, எட்டாத - எட்டாத (தட்டுப்படாத), சித் - சித்து (ஞான), சுகத்தை - சுகத்தை (ஆனந்தத்தை,) காட்ட-காட்டித்தர, வல்ல - சத்தி வாய்ந்த, நந்தி - நந்தியெம்பெருமான், அடி-திருவடியின், கீழ்-கீழே, குடியாய்-அடிமையாய் இருக்கும்படி, நாம்-அடியோம், அணைவது-அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'சிந்தையினுக்கு எட்டாத சித்சுகம்' என்றது சிவபெருமானை அணையத்தக்க ஞானனந்தத்தை. 'காட்டவல்ல' என்றது ஈண்டு எய்துவிக்க வல்ல என்பதாம். நந்தியெம்பெருமான் - சிவபெருமானிடத்தே ஞானேபதேசம் பெற்றவர் ஆதலின் 'சித்சுகத்தைக் காட்டவல்ல நந்தி அடிக்கீழ்' என்றார். 2

**எந்தை சனற்குமர னாதியெமை யாட்கொள்வான்**
**வந்த தவத்தினரை வாழ்த்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) எந்தை - எனது தந்தையாகிய, சனற்குமரன் - சனற்குமாரர், ஆதி - முதலாகவுள்ள, எமை - எம்மை, ஆட்கொள்வான் - ஆட்கொள்ளும் பொருட்டு, வந்த-வந்தருளிய, தவத்தினரை - தவமுனிவர்களை, வாழ்த்தும்-துதிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சனற்குமரன் என்றது-நந்தியெம்பெருமானுக்குப்பின் வந்தருளிய ஞானதேசிகரை. ஆதி என்றது-சத்தியஞான தரிசினிகள், பாஞ்சோதியார் முதலிய தவமுனிவர்களை. 3

பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) பொய் - பொய்யையேமருளால் மெய்ப்பொருளாக, கண்டார்-கண்டவர்கள், காணா - காணாத, புனிதம் - பரிசுத்தநிலை, எனும் - என்கின்ற, அத்துவிதம் - அத்துவிதமார்க்கத்தையுடைய, மெய்கண்டநாதன்-மெய்கண்டதேவாது, அருள்-அருளை, மேவும்-பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பொய்கண்டார் என்றது - பொய்ச் சமயங்களிற் கூறியுள்ளவற்றை மெய்யெனக்கொண்ட புறச்சமயிகளைக் குறித்தது. அத்துவிதமார்க்கம் பொய் கலவாது உண்மையை யுணர்த்துதலின் 'புனிதமெனும் அத்துவிதம்' என்றார். 4

பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை
சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்நாளோ.

(ப-ரை) பாதி-(சிவஞான சித்தியார் எட்டாவது சூத்திரம் முப்பதாவது திருச்செய்யுளின் முதல் இரண்டடியாகிய) பாதி, விருத்தத்தால் - விருத்தப் பாட்டினால், இ-இந்த, பார் - உலகம், விருத்தம் - பயனற்றது என்பது, ஆக-எவர்க்கும் தோன்றும்படி, உண்மை-சுத்தாத்துவித ஞானத்தை, சாதித்தார்-காட்டி நின்றருளிய அருணந்தி சிவாசாரியாரின், பொன் - அழகிய, அடியை-திருவடியை, தான்-தான், பணிவது-வணங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'பாதி விருத்தத்தால்' என்றது "அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனை யருளி லறியாதே யறிந்து குறியாதே குறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகிற்" என்றதாம். இதனாலன்றோ பிறரும், "பாரிலுள்ள நூலெல்லாம் பார்ப்பானேன் சித்தியிலே ஓர்விருத்தப் பாதிபோதும்" என்றார். 'பார்விருத்தமாக உண்மை சாதித்தார்' என்றது சகலாகம பண்டிதரென்னும் அருணந்தி சிவாசாரியாரை. 5

சிற்றம் பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ.

(ப-ரை) சிற்றம்பலம்-சிற்றம்பலத்திலே, மன்னும்-நிலைபெற்ற, சின்மயராம்-ஞானசொரூபியாகிய, தில்லை - தில்லை என்னும், நகர்-நகரில் வசித்த, கொற்றங்குடி-கொற்றங்குடி முதல்வர்க்கு, முதலை-ஆசாரியராகிய மறைஞான சம்பந்த சிவாசாரியரை, கூறும் - புகழும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சிற்றம்பலம்-இது சித்து+அம்பலம் என்னும் இருசொல் ஒரு சந்தி. இது தில்லை அம்பலத்தைக் குறித்தது. சின்மயர்-இது சித்து+மயர் என்னும் இருசொல் ஒருசந்தி. இதற்கு ஞானசொரூபி என்னும் பொருளாம்,



குறைவிலருண் ஞானமுதல் கொற்றங் குடியடிகள்
நறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்ப தெந்நாளோ.

(ப-ரை) குறைவு - குறைவு, இல் - இல்லாத (பரிபூரணமாகிய), அருள்-திருவருள், ஞானம் - ஞானத்திற்கு, முதல் - முதல்வராகிய, கொற்றங்குடி அடிகள் - கொற்றவன்குடி, உமாபதிசிவாசாரியாரின், நறை-தேனொழுகும், மலர்-தாமரைமலர்போலும், தாட்கு - திருவடிகளுக்கு, அன்பு - அன்பு செய்வதை, பெற்று-பெற்று, நாம் - நாம், இருப்பது-இருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) குறைவு இல் அருள் - பரிபூரணத் திருவருள். அருள்ஞானம்-சிவஞானம். 'அன்பு பெற்று' என்றது அன்பு செய்தலைப்பெற்று என்பது பொருளாம். 7

நாளவங்கள் போகாம னன்னெறியைக் காட்டியெமை
ஆளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந்நாளோ.

(ப-ரை) நாள்-நாள்கள், அவங்கள்-வீண்கள், போகாமல் - போகாதபடி, நல் - நல்ல, நெறியை - சன்மார்க்க நெறியை, காட்டி - காண்பித்து, எமை-எங்களை, ஆள - ஆண்டருள, வந்த - எழுந்தருளிவந்த, கோலங்கட்கு-(மெய்கண்ட பரம்பரையில்வந்த) திருக்கோலங்கட்கு, அன்பு-அன்பை, வைப்பது-வைத்து வணங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நாளவங்கள் போகாமல் - தவப்பொழுதாய்ப் போகாமல் அவப்பொழுதாகப் போதலை. நல்நெறியைக் காட்டி-சித்தாந்த சைவமார்க்கத்தைக் காட்டி. ஆளவந்தகோலம்-சந்தான குருமூர்த்தகோலம். 8

என்னறிவை யுள்ளடக்கி என்போல் வருமவுனி
தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) என்-அடியேனின், அறிவை-அறிவை, உள்-உள்ளே, அடக்கி-பிரபஞ்சமுகமாகவிடாது அடக்கி, என் - அடியேன், போல் - போல, வரும்-மானுட உருவத்துடன் எழுந்தருளிவரும், மவுனி - மௌனகுருவின், தன்-தன், அறிவுக்கு-அறிவினுக்கு, உள்ளே-உள்ளே, நான் - அடியேன், சாரும்-சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அறிவை உள்ளடக்கி - பஞ்சேந்திரியங்களைப் பிரபஞ்சமுகமாக விடாது உள்ளத்திலடக்கி. என்போல் வரும் - அடியேனைப்போல மானிடச் சட்டையோடுவரும். மவுனி-மௌனதேசிகர். மவுனிதன் அறிவுக்கு உள்ளே நான் சாரும் - மவுனகுருவின் திருவருள் வியாபகத்தில் வியாப்பியமாகக் கலக்கும். 9

ஆறுளொன்றை நாடின் அதற் காறுமுண்டா மென்றெ [மக்குக்
கூறு மவுனியருள் கூடுநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆறுள் - ஆறுசமயங்களுள், ஒன்றை - ஒருசமயத்தை, நாடின்-கொள்ளின், அதற்கு-அதற்கேற்ற, ஆறும்-வழியும், உண்டாம் - உண்டாகும்,

என்று - என்று, எமக்கு - அடியேமுக்கு, கூறும் - சொல்லியருளிய, மவுனி-மௌனகுருவின், அருள் - திருவருள், கூடும் - சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆறுள் - ஆறுசமயங்கள். அதற்காறுமுண்டாம் - அவரவர்கள் கன்மங்களுக்குத் தக்கவாறு சமயச்சார்வு உண்டாம். 10

நில்லாம னின்றருளை நேரேபார் என்றவொரு
சொல்லான் மவுனியரு டோற்றுநா ளெந்நாளோ.

(ப-ரை) நில்லாமல் - தற்போதத்தால் நிற்காமல், நின்று - அறிவுமயமாக நின்று, அருளை - திருவருளை, நேரே - நேராக, பார் - பார்ப்பாயாக, என்ற-என்றருளிச்செய்த, ஒரு - ஒரு, சொல்லால் - திருமொழியினால், மௌனி-மௌனகுருவின், அருள்-திருவருள், தோற்றும் - வெளிப்படும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நில்லாமல் - தற்போதமுனைப்பில் நில்லாது. நின்று - அறிவு மயமாக நின்று; ஞானோபதேச மொழிப்படி நின்று. ஒருசொல் - மகா வாக்கியம். 11

வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த
மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ.

(ப-ரை) வைதிகம் - வைதிகம், ஆம் - ஆகிய, சைவம் - சைவநெறியை யுடைய, மவுனி-மௌனகுருவானவர், மௌனத்து-மவுனநிலையில், அளித்த-உணர்த்தி அருளிய, மெய் - உண்மைப்பொருள், திகழ்ந்து - விளங்கி, என்-அடியேனின், அல்லல்-துன்பங்கள், விடியும்-தொலையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வைதிகம் - வேதசம்பந்தமானது. சைவம் - சிவசம்பந்தமுடையது. அல்லல்-பிறவித்துன்பம். 12

வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளே
தாக்கவும்என் னல்லலெல்லாந் தட்டழிவ தெந்நாளோ.

(ப-ரை) வாக்கு-சொல்லும், மனம் - மனமும், அற்ற-இல்லாத, மவுனி-மவுனகுரு, மவுனத்து - மௌனநிலையில் நின்று அருள்செய்த, அருளே-திருவருள் ஒன்றே, தாக்கவும்-அடியேன்பால் பதிந்ததும், என்-அடியேனின், அல்லல் - துன்பம், எல்லாம் - முற்றும், தட்டழிவது - தன்னிலையினின்றுங் குலைந்து அழிதல், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வாக்கு-பிரபஞ்சசம்பந்தமான வாக்கு. மனம் - பஞ்சேந்திரியங்களின்வழியே செல்லும் மனம். தாக்க-பதிதலை. தட்டழிவது - நிலைகுலைந்து அழிவது. 13

---



## அடியார் வணக்கம்

வெம்பந்தந் தீர்த்துஉலகாள் வேந்தன் றிருஞான
சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) வெம் - கொடிய, பந்தம் - பிறவிக்கட்டை, தீர்த்து - ஒழித்து, உலகு-உலகத்துச் சிவனடியார்களை, ஆள் - ஆட்கொள்ளும், வேந்தன்-ஞான அரசனாகிய, திருஞானசம்பந்தனை-திருஞானசம்பந்தமூர்த்திகளை, அருளால்-திருவருளின் துணையால், சாரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பிறவித்துயர் கொடியது ஆதலின் 'வெம்பந்தம்' என்றார். பந்தம் - உலகசம்பந்தமான பாசக்கட்டு. தீர்த்து-அற ஒழித்தலைக் குறித்து. உலகு-ஆகுபெயராய் உலகத்துள்ள சிவனடியார்களை. ஞானம் பொதுவாதலின் உலகத்து உயிர்களை எனினும் பொருந்தும். 1

ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னஉழ [ளோ.
வாரங்கொள் செய்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நா

(ப-ரை) ஏர்-அழகிய, இன்-இனிய, சிவம்-சிவத்தின், போகம் - இன்பம், இங்கு - இந்த உலகில், இவற்கே - இவருக்கே உரியதாகும், என்ன - என்று உலகங்கூற, உழவாரம் - உழவாரப்படையை, கொள்-கொண்டிருந்த, செம்-செவ்விய, கையர்-திருக்கரத்தையுடையவராகிய திருநாவுக்கரசுசுவாமிகளின், தாள் - திருவடியை, வாரம் - அன்பு, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஏர் - அழகை. சிவபோகம் - சிவாநந்தானுபவத்தை. இவற்கே-இதில் ஈற்று ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது. உழவாரம்-புல் செதுக்குங் கருவி; திருநாவுக்கரசர் வாக்குத் தொண்டும் மெய்த்தொண்டும் புரிந்து வந்தார் ஆதலின் திருக்கரத்தில் உழவாரப்படைதாங்கி இருப்பது அவர் திருக்கோலப் பொலிவு. 2

பித்தரிறை யென்றறிந்து பேதைபாற் றூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ.

(ப-ரை) இறை-சிவபெருமான், பித்தர்-பித்தர், என்று-என்று, அறிந்து-உணர்ந்து, பேதைபால்-பரவைநாச்சியாரிடத்து, தூது - தூதாக, அனுப்புவித்த - அனுப்பிவைத்த, தமிழ் - தமிழில், சமர்த்தர் - வல்லவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளின், மெய் - உண்மைக்கீர்த்தியை, புகழ்வது - பாராட்டிப் புகழ்ந்துபேசுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பித்தர் - அடியார்க்கு அருள்செய்யும் பித்துடையர் என்பது பொருளாம். தூது அனுப்புவித்த தமிழ்ச் சமர்த்தர் - சுந்தரமூர்த்தி சுவாமிகளை, மெய்-உண்மைப் புகழை. 3

போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூ ரையனன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ.

(ப-ரை) நாடு - நாட்டில் உள்ளவர்கள் எல்லாரும், போதம் - ஞானம், ஊர் - ஊரை, அறிய - அறிந்துகொள்ளும்படி, புத்தர் தமை - புத்த மதத்தினரை, வாதில்-வாதத்தினால், வென்ற-வெற்றியடைந்த, வாதவூர்-திருவாதவூரில் அவதரித்த, ஐயன்-மாணிக்கவாசக சுவாமிகளின், அன்பை-அன்பை, வாஞ்சிப்பது-விரும்புவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) போதவூர் - அறிவாகிய ஊரை. இனி சிதம்பரமானது ஞானமயமாகிய ஊர் என்பதை அறிய எனினுமாம். வாதவூர் ஐயன் - மாணிக்கவாசகர். 4

ஒட்டுடன்பற் றின்றி யுலகைத் துறந்தசெல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ தெந்நாளோ.

(ப-ரை) ஒட்டுடன்-பிரபஞ்ச சம்பந்தத்துடனே, பற்று-ஆசை, இன்றி-இல்லாதபடி, உலகை-உலகத்தை, துறந்த - விட்டுத் துறந்த, செல்வ-ஞானச் செல்வத்தையுடைய, பட்டினத்தார் - பட்டினத்தடிகள், பத்ரகிரி - பத்திரகிரியார் (ஆகிய இவ்விருவர்களினுடைய), பண்பு - குணத்தை, உணர்வது-அறிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஒட்டுடன் பற்று - பிரபஞ்ச சம்பந்தத்துடன் ஆசையை. உலகைத் துறந்த-உலகப்பற்றைத் துறந்த. 5

கண்டதுபொய் யென்றகண்டா காரசிவ மெய்எனவே
விண்டசிவ வாக்கியர்தாண் மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) கண்டது - ஊன்கண்ணாற் கண்டபொருள்கள் எல்லாம், பொய்-பொய் என்றும், அகண்ட-அகண்ட, ஆகார-ரூபத்தையுடைய, சிவம்-சிவபரம்பொருளே, மெய்-சத்தியமானபொருள், எனவே-என்றும், விண்ட-விளங்கச் சொல்லியருளிய, சிவவாக்கியர்-சிவவாக்கியரது, தாள் - திருவடியை, மேவும்-பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ--நாளோ? எ-று.

(வி-ரை) கண்டது - ஊன்கண்களால் காணப்படுவதாகிய பிரபஞ்சமும் பிரபஞ்சப் பொருள்களும். அகண்டாகாரம் - எங்கும் பரந்து நிறைந்திருத்தலாகிய பரிபூரணத்துவத்தை. 6

சக்கர வர்த்தி தவராச யோகியெனு
மிக்கதிரு மூலனருண் மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) தவராஜயோகி - தவராஜயோகியர்கள் எல்லாம், சக்கரவர்த்தி-தமக்குச் சக்கரவர்த்தி, எனும்-என்றுகூறும் சிறப்புவாய்ந்த, மிக்க-மேலான, திருமூலன்-திருமூலநாயனார், அருள்-திருவருளை, மேவும் - அடையும், நாள்-நாள், எ-எந்த, நாள்-நாளோ? எ-று.

(வி-ரை) சக்கரவர்த்தி - எல்லாப் பேரரசுகளும் தன்னடிக் கீழ்ப்படவாழும் மிகப் பேரரசு. இறந்துகிடந்த மூலன் என்னும் இடையன் தேகத்



துட் பரகாயப் பிரவேசஞ்செய்த தவராஜயோகியாதலின் இவருக்கு அவ் இடையன் பெயராகிய மூலன் என்ற திருநாமமே ஏற்பட்டது. இவரே 'திருமந்திரம்' என்னும் நூலைச் செய்தருளியவர். 7

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொன்ன
எந்தை யருணகிரி யிருக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) கந்தர்-முருகக்கடவுளின், அநுபூதி-திருவருட் பிரகாசத்தைப் பெற்று, கந்தரநுபூதி-கந்தரநுபூதி என்னும் பெயருடைய நூலை, சொன்ன-சொல்லியருளிய, எந்தை - எமது தந்தையாகிய அருணகிரிநாதரது, அருள்-திருவருளினை, நாடி-நாடி, இருக்கும்-இருக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கந்தர் - முருகக்கடவுளின் காரணப்பெயராகும். ஆறு திருவுருவங்கள் உடையவராகி இருந்து பின் ஒன்று சேர்க்கப்பட்டவர் ஆதலின் இப்பெயர் வந்தது. அநுபூதி - திருவருட் பிரகாசம். எந்தை - அருணகிரிநாதர். 8

எண்ணரிய சித்த ரிமையோர் முதலான
பண்ணவர்கள் பத்தரருள் பாலிப்ப தெந்நாளோ.

(ப-ரை) எண் - கணக்கிடல், அரிய - அரிதாகிய, சித்தர் - சித்தர்களும், இமையோர்-தேவர்கள், முதலான-முதலாகிய, பண்ணவர்கள் - மேலோர்கள், பத்தர்-சிவபத்தர்கள், அருள்-திருவருளை, பாலிப்பது-தந்தருள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எண் அரிய - எண்ணிக் கணக்கிட அரிய. இமையோர் - இமையாத நாட்டத்தை உடையவர்கள். 9

---

## யாக்கையைப் பழித்தல்

சுக்கிலமும் நீருஞ் சொரிமலமு நாறுமுடற்
புக்குழலும்வாஞ்சையினிப் போதுமென்பதெந்நாளோ.

(ப-ரை) சுக்கிலமும்-சுக்கிலமும், நீரும்-இரத்த நீரும், சொரி-வழிகின்ற, மலமும்-மலமும், நாறும்-நாற்றம் வீசுகின்ற, உடல் - இந்த உடம்பில், புக்கு-புகுந்து, உழலும் - உழலவேண்டும் என்னும், வாஞ்சை - விருப்பம், இனி-இனிமேல், போதும் - அமையும், என்பது - என்று அடியேன் கூறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சுக்கிலம்-சுவேத நீரை. இது உடம்பின் சப்த தாதுக்களில் ஒன்று. நீர் - செந்நீராகிய இரத்தத்தை. சொரி மலம் - மலமூத்திரங்களை, உழலல்-வருந்தல், வேதனைப்படல். இதுமுதல் பத்துக் கண்ணிகள் காயத்தின் இழிவு உரைக்கப் பெறுதலின் யாக்கையைப் பழித்தல் என மகுடம் எய்தியது. 1

நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்
பார்க்கு மிடத்திதன்மேற் பற்றறுவ தெந்நாளோ.

(ப-ரை) பார்க்கும் இடத்து - ஆலோசித்துப் பார்க்கின், நீர் - நீரில் உண்டாகும், குமிழி-குமிழிக்கு, பூண்-பூணை, அமைத்து-கட்டி, நின்றாலும்-நின்றாலும், நில்லா - நிலைபெற்றிருக்காத தன்மைபோன்ற, மெய்-இத்தேகம், இதன்மேல் - இதனிடத்து, பற்று - ஆசை, அறுவது - நீங்குவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தேகம் தோற்றி சீக்கிரம் அழிகின்ற தன்மையுடையது ஆதலினால், 'நீர்க்குமிழி பூண் அமைத்து நின்றாலும் நில்லா மெய்' என்றார்.

காக்கைநரி செந்நாய் கழுகொருநாள் கூடியுண்டு
தேக்குவிருந் தாமுடலைச் சீயென்ப தெந்நாளோ.

(ப-ரை) காக்கை காக்கையும், நரி-நரியும், செந்நாய்-செந்நாயும், கழுகு-கழுகும் (ஆகிய இவைகள்), ஒரு-ஒரு, நாள்-நாளில், கூடி-கூட்டம் போட்டு, உண்டு - சாப்பிட்டு, தேக்கு - ஏப்பமிடுகின்றதற்குயேற்ற, உடலை - இந்தத் தேகத்தை, சீ - சீ, என்பது - என்று இகழ்ந்துவிடுவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) செந்நாய் - ஒருவகைக் காட்டுநாய். தேக்கு - தேக்கெறிதலை. (ஏப்பமிடல்) என்பதாம். 3

செங்கிருமி யாதிசெனித்த சென்ம பூமியினை
இங்கெனுட லென்னுமிழுக் கொழிவ தெந்நாளோ.

(ப-ரை) செம்-செவந்த, கிருமி-புழுக்கள், ஆதி-முதலியன, செனித்த-பிறந்த, சென்மம்-பிறப்பிற் கேதுவாகிய, பூமியினை-பூமியாகிய இந்த உடலை, இங்கு-இவ்வுலகில், என்-என்னுடைய, உடல்-உடல், என்னும்-என்று கூறும், இழுக்கு-குற்றம், ஒழிவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சென்மபூமி - பிறப்பிடம். பூமியினை - பூமியாகிய தேகத்தை. இழுக்கு-குற்றம், கேவலம். 4

தத்துவர்தொண் ணூற்றறுவர் தாமாய்வாழி் நாட்டைப்
பித்தனென் னும் பிதற்றொழிவ தெந்நாளோ.

(ப-ரை) தத்துவர்-தத்துவங்கள், தொண்ணூற்றறுவர்-தொண்ணூற்றாறு, தாமாய்-தாமாகவே, வாழ் - வாழும்படியான, இ-இந்த, நாட்டை - நாடாகிய இத்தேகத்தை, பித்தன் - பித்தனாகிய அடியேன், நான் - நான், என்னும்-என்றுகூறும், பிதற்று - உளறல், ஒழிவது - நீங்குவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நாட்டை - தேகத்தை. முன்கண்ணியில் சென்மபூமி என்றது போலவாம். பித்தன்-நான் அல்லாததை நான் என்றதனால் பித்தன். பிதற்றுவரை-பொருளும் பயனும் இன்றி உரைக்கும் குழற்றுரையை. 5



ஊனொன்றி நாத னுணர்த்துமதை விட்டறிவேன்
நானென்ற பாவிதலை நாணுநா ளெந்நாளோ.

(ப-ரை) ஊன்-உடம்பில், ஒன்றி-பொருந்தியிருந்து, நாதன்-இறைவன், உணர்த்தும்-அறிவிக்கும், அதை-அந்த உண்மையை, விட்டு - மறந்துவிட்டு, நான்-நான், அறிவேன் - அறிவேன், என்ற - என்று சொல்லிய, பாவி-பாவியாகிய அடியேன், தலை - தலை, நாணும் - குனியும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) ஊன் - ஆகுபெயராய் உடம்பைக் குறித்தது. நாதன்-இறைவன். 6

வேலையிலா வேதன் விதித்தவிந்த்ர சாலவுடல்
மாலைவியா பார மயக்கொழிவ தெந்நாளோ.

(ப-ரை) வேலை-(படைக்கு வேலையன்றி) வேறு வேலை, இலா-இல்லாத, வேதன் - பிரமன், விதித்த - படைத்த, இந்திர ஜாலம் - இந்திர ஜாலத்தையொத்த, உடல் - தேகம், மாலை - மாலைக்காலத்து, வியாபாரம் - மருட்டுங் காரியம்போலும் விளைகின்ற, மயக்கு-மயக்கத்திலிருந்தும், ஒழிவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'இந்திர ஜாலம்' இது ஜாலவித்தைகளிலெல்லாம் பெரிய ஜாலம். ஈண்டு உண்மைபோல் தோன்றி இல்லாது ஒழிவதற்கு உபமானமாகக் கூறப்பெற்றது. 'மாலை வியாபார மயக்கு' என்றது மாலைக்காலத்து இயற்கைத் தன்மையாகிய மயக்குந் தன்மையாகிய மயக்கம் என்பது பொருளாம். 7

ஆழ்ந்து நினைக்கி னரோசிகமா மிவ்வுடலில்
வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆழ்ந்து - ஆழமாக உள்நுழைந்து, நினைக்கின் - நினைத்துப் பார்த்தால், அரோசிகமாம்-அருவருப்புக்கிடமாக உள்ள, இவ்-இந்த, உடலில்-உடம்பில், வாழ்ந்து - வாழ்ந்து, பெறும் - அடையும், பேற்றை - மோக்ஷலாபத்தை, மதிக்கும் - நன்கு மதிக்கும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) 'இவ்வுடல்' இதில் இகரம் அண்மைச்சுட்டு. பேறு - மோக்ஷப்பேறு. 8

மும்மலச்சே றான முழுக்கும்பி பாகமெனும்
இம்மலகா யத்து ளிகழ்ச்சிவைப்ப தெந்நாளோ.

(ப-ரை) மும்மலம் - மூன்றுமலங்களாகிய, சேறு - சேற்றினால், ஆன-ஆகிய, முழு-முழு, கும்பிபாகம்-கும்பிபாகம், எனும்-என்று கூறும்படியான, இ-இந்த, மல-மல நிறைந்த, காயத்து-உடம்பினிடத்து, இகழ்ச்சி-வெறுப்பை, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மும்மலம்-ஆணவம், கன்மம், மாயை. கும்பீபாகம்-ஒருவகைக் கோர நரகம். காயம்-உடம்பு. மலகாயம்-மலநிறைந்த காயம். 9

நாற்றமிகக் காட்டு நவவாயில் பெற்றபசுஞ்
சோற்றுத் துருத்தி சுமையென்ப தெந்நாளோ.

(ப-ரை) நாற்றம்-துர்வாசனையை, மிக-மிகவும், காட்டும் - காண்பிக்கும், நவம் - ஒன்பது, வாயில் - துவாரங்களை, பெற்ற-கொண்டுள்ள, பசும்-பசுமையாகிய, சோற்று - சோற்றைப்போட்டு அடைக்கும், துருத்தியை - தோற்பையை, சுமை - பாரம், என்பது - என்று கூறுவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நாற்றம்-துர்நாற்றத்தை உணர்த்தியது. காட்டல்-துர்க்கந்தம் வீசுதலை. நவவாயில்-கண், காது, வாய், மூக்கு முதலிய ஒன்பது துவாரங்களை.

உருவிருப்ப உள்ளேதா னூறுமலக் கேணி
அருவருப்புவாழ்க்கையைக்கண் டஞ்சுநாளெந்நாளோ.

(ப-ரை) உரு-உருவம், இருப்ப - இருந்தபடியே இருக்க, உள்ளேதான்-உள்ளுக்குள்ளேதான், ஊறும்-சுரக்கின்ற, மலம்-மலம்விளையும், கேணி-கிணற்றோடுகூடிய, அருவருப்பு-அருவருப்பாகிய, வாழ்க்கையை-வாழ்வை, கண்டு-பார்த்து, அஞ்சும்-பயப்படும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'உள்ளேதான்' இதில் 'தான்' பொருளின்றி நின்றமையின் அசை. மலக்கேணி - மலம்விளையும் கிணறு; ஈண்டு தேகத்தைக் குறித்தது. மலக்கேணி போல்வதாகிய தேகம் என்பதாம். 'கேணி' இது திசைச்சொல்; சிறுகிணறு என்பது பொருள். 11

---

## மாதரைப் பழித்தல்

மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவ தெந்நாளோ.

(ப-ரை) மெய் - தேகத்தில், வீசு - வீசுகின்ற, நாற்றம் - துர்நாற்றம், எல்லாம்-எல்லாவற்றையும், மிக்க-மிகுந்த, மஞ்சளால்-மஞ்சளினால், மறைத்து-மறைத்து, பொய் - பொய், வீசும் - பேசும், வாயார் - வாயையுடைய பெண்களின், புலை - கீழ்மை (நீச சம்பந்தத்தை), ஒழிவது - நீங்குவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மெய் - பொய்யாகிய உடலை; இது மங்கலவழக்கு. நாற்றம்-துர்நாற்றம். பொய்வீசும் வாய் - பொய்பேசும் வாய். புலை - கீழான சம்பந்தம், நீசசம்பந்தம். 1

திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயங் கடக்குநா ளெந்நாளோ.



(ப-ரை) திண்ணிய - திடமாகிய, நெஞ்சம் - ஆடவர்களின் மனமாகிய, பறவை-பட்சி, சிக்க - அகப்படும்படி, குழல் - கூந்தலாகிய, காட்டில்-காட்டினிடத்தே, கண்ணி - மாலாகிய கண்ணியை, வைப்போர் - வைப்வர்களாகிய பெண்களின், மாயம் - மாயத்தை, கடக்கும் - விட்டு நீங்கும், நாள் - நாள். எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) திண்ணிய நெஞ்சம்-ஞான திடம்பொருந்திய மனது; வைராக்கிய மனது. நெஞ்சைப் பறவை என்றது-உருவகம். சிக்க - அகப்படும்படி; இது திசைச்சொல். 'குழல் காட்டில்' இது பண்புத்தொகை; குழலாகிய காடு என விரியும், கண்ணி-பட்சி பிடிக்கும் சிறுவலை; கண்ணி வைப்போர்-மாதர்களை. கடக்கும் - விட்டு நீங்கும், தாண்டும். 'பறவை' இது காரணப் பெயர்; பறப்பது என்னும் பொருளது. 2

கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ.

(ப-ரை) கண்டு-கற்கண்டைப்போலும், மொழி-சொற்களை, பேசி-கூறி, மனம் - வாலிபர்களின் மனத்தை, கண்டுகொண்டு - அறிந்துகொண்டு, கைவிலையா - கைவிலையா (அடிமையாக) கொண்டுவிடும்-கொள்ளும், மானார்-மான்போன்ற விழியுடைய பெண்களின், பொய் - உண்மையில்லாத (சாலம்), கூத்து-நடிப்பினின்றும், ஒழிவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கண்டுமொழி - இது கற்கண்டைப்போலும் சொல் என விரிதலின் உவமத்தொகை. மனம் கண்டுகொண்டு-மனநிலை அறிந்து. கைவிலையாக்கொண்டுவிடும் - தன்கையில் விலைக்கு வாங்கிக்கொள்ளும், அதாவது தனக்கு அடிமையாக்கிக்கொள்ளும் என்பதாம். மானார் - இது உவமையாகுபெயர்; மான்போன்ற பெண்கள் என்பது பொருள். 3

காமனைவா வென்றிருண்ட கண்வலையை வீசுமின்னார்
நாம மறந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

(ப-ரை) காமனை - மன்மதனை, வா - வா, என்று - என்று அழைத்து, இருண்ட - இருண்ட, கண் - கண்களாகிய, வலையை - வலையை, வீசும்-வீசும், மின்னார் - மின்னலையொத்த பெண்கள், நாமம் - பெயரை, மறந்து - மறந்து, அருளை - திருவருளை, நண்ணும் - அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) காமனைவா என்று - வாலிப ஆடவரை வாட்டக் காமனைவா என்று அழைத்து. என்னை? பெண்கள் மன்மதனுக்குப் படை ஆதலின் நாங்கள் துணைசெய்வோம் எங்கள் பலத்தைக்கொண்டு இவ்விடனைப் மலர்ப் பகழியாற் றாக்குக என்பதாம். இருண்டகண்-கருங்கண். மின்னார் என்றது-மின்னலையொத்த பெண்கள்; இது உவமையாகுபெயர். 4

கண்களில் வெண்பீளை கரப்பக் கருமையிட்ட
பெண்கண் மயறப்பிப் பிழைக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) கண்கள்-கண்களிலே வடியும், வெண்-வெண்மையாகிய, பீளை-அழுக்கு, காப்ப-மறைய, கரு-கருமையாகிய, மை - அஞ்சனத்தை, இட்ட-தீட்டியுள்ள, பெண்கள் - மாதர்களின், மயல் - மயக்கத்திலிருந்தும், தப்பி-தப்பி, பிழைக்கும்-பிழைக்கின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வெண்பீளை என்றது - கண்ணிலிருந்து புறப்படும் வெள்ளிய நிற மலத்தை. காப்ப-தோன்றாது மறைய. மயல்-காமமயக்கம். பிழைத்தல்-உஜ்ஜீவித்தல். 5

வீங்கித் தளர்ந்து விழுமுலையார் மேல்வீழ்ந்து
தூங்குமதன் சோம்பைத் துடைக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) வீங்கி - விம்மி, தளர்ந்து - சில காலத்திற்குப்பின் தளர்ச்சி அடைந்து, விழும் - தொங்கி விழும், முலையார் - முலையையுடைய பெண்களின், மேல்-மேலே, வீழ்ந்து-படுத்து, தூங்கும்-நித்திரை செய்யும், மதன்-மன்மதனின் சேட்டை சம்பந்தமாகிய, சோம்பை-சோம்பலை, துடைக்கும்-ஒழிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "சிலந்தி போலக் கிளைத்துமுன் னெழுந்து, திரண்டு விம்மிச் சீப்பாய்ந் தேறி, உகிராற் கிற வுலர்ந்துள் ளுருகி, நகுவார்க் கிடமாய் நான்று வற்றும், முலையைப் பார்த்து முளரிமொட் டென்றும்" என்ற **பட்டினத்தார்** கூறியதை 'வீங்கித் தளர்ந்து விழும் முலை' என்றதோடு ஒப்பிட்டுக் காண்க. 'மதன் சோம்பை' என்றது மதன லீலைகளால் உண்டாகிய சோம்பலை. 6

கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வைச்சிருக்கு மாதர் மயக்கொழிவ தெந்நாளோ.

(பரை) கச்சு-இரவிக்கைக்குள், இருக்கும்-இருக்கும்படியான, கொங்கை-முலையும், கரும்பு-கரும்பின் உருசியும், இருக்கும் - இருக்கும்படியான, இன்-இனிய, மாற்றம்-சொல்லும், வைச்சு-வைத்து, இருக்கும் - இருக்கும், மாதர்-பெண்களின், மயக்கு - மயக்கத்தினின்றும், ஒழிவது - நீங்குவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கச்சு-இரவிக்கை. 'கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின் சொல்' என்றது சொல் நயம். கசந்திருக்கும் கொங்கை இனித்திருக்குஞ் சொல் என முரண்சொற்றொடையாகத் தொடுத்துள்ளமை காண்க. மாதர் மயக்கு-இது மூன்றும்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை; மாதரால் உண்டாகும் காமமயக்கம் என்பது பொருளாம். 7

பச்சென்ற கொங்கைப் பசப்பியர்பா ழானமயல்
நச்சென் றறிந்தருளை நண்ணுநா ளெந்நாளோ.

(ப-ரை) பச்சென்ற-பசுமையாகிய, கொங்கை-முலைகளையுடைய, பசப்பியர் - மயங்கச்செய்யும் பெண்களினுடைய, பாழான - பாழாகிய, மயல்-காம மயக்கம், நச்சு-நஞ்சு, என்று-என்று, அறிந்து-தெரிந்து, அருளை-திருவருளை, நண்ணும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) இளமாதர் முலை என்பார் 'பச்சென்ற கொங்கை' என்றார். "பச்சென்று வெச்சென்று பக்குவங்க டப்பாமே" என்றார் பிறரும். பசப்பியர் என்றது - சொற்களால் ஆடவரை மயக்கச் செய்வோர் என்பதாம். 8

உந்திச் சுழியா லுளத்தைச் சுழித்தகன
தந்தித் தனத்தார் தமைமறப்ப தெந்நாளோ.

(ப-ரை) உந்தி - நாபியாகிய, சுழியால்-சுழியினாலே, உளத்தை-ஆடவர் மனத்தை, சுழித்த-சுழித்து அழுத்தும், கன-பெரிய, தந்தி-யானையின் மத்தகத்தையொத்த, தனத்தார் - முலையையுடைய பெண்கள், தமை - தங்களை, மறப்பது-மறந்துவிடுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உந்தி - கொப்பூழ், சுழி-நீர்ச்சுழி. சுழித்த-சுழித்து காமவெள்ளத்து அழுத்தும் என்பதாம். தந்தி-யானை. யானையின்தலை முலைக்கு உவமை ஆதலின் 'கனதந்தித் தனத்தார்' என்றார். 9

தட்டுவைத்தசேலைப்பூங் கொய்சகத்திற்சிந்தையெல்லாங்
கட்டிவைக்கு மாயமின்னார் கட்டழிவ தெந்நாளோ.

(ப-ரை) தட்டு - தட்டுகள், வைத்த - வைத்துள்ள, பூஞ்சேலை-அழகிய புடவையின், கொய்சகத்தில் - கொய்சகத்திலே, சிந்தை - ஆடவர்களின் மனங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், கட்டி - முடித்து, வைக்கும்-வைத்துக் கொள்ளும், மாயம் - வஞ்சகத்தில் தேர்ந்த, மின்னார் - பெண்களின், கட்டு-மயல்கட்டு, ஒழிவது-விட்டு நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தட்டு - சேலையின் கரைகளை. கொய்சகம்-சேலையின் மடிப்பு. இக்காலத்து 'கொசவம்'என்பர். மின்னார்-இது உவமையாகுபெயர்; மின்னலையொத்த பெண்கள் என்பதாம். கட்டு என்றது-காமமயக்கக் கட்டை. 10

ஆழாழி யென்ன வளவுபடா வஞ்சநெஞ்சப்
பாழான மாதர்மயற் பற்றொழிவ தெந்நாளோ.

(ப-ரை) ஆழ்-ஆழமாகிய, ஆழி-சமுத்திரம், என்ன - என்று கூறும்படி, அளவுபடா - அளவுபடுத்த முடியாத, வஞ்சம் - வஞ்சகத்தை யுடைய, பாழான-பாழாகிய, மாதர் - பெண்களினுடைய, மயல் - காமமயக்கம், பற்று-விருப்பம், ஒழிவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆழாழி - மாதர்களின் வஞ்சகத்தின் மிகுதியும் அளவுபடுத்த முடியாமைக்கு உவமையாகியது. வஞ்சம் - கபடத்தன்மை. 11

தூயபனித் திங்கள் சுடுவதெனப் பித்தேற்று
மாய மடவார் மயக்கொழிவ தெந்நாளோ.

(ப-ரை) தூய - பரிசுத்தமான, பனி - குளிர்ந்த, திங்கள் - சந்திரன், சுடுவது - சுடும் தன்மையுடையது, என - என்று, பித்து - காமமயக்கத்தை, ஏற்றும்-ஊட்டும், மாயம்-வஞ்சகத்தையுடைய, மடவார்-பெண்களின், மயக்கு-காமமயக்கம், ஒழிவது-விட்டு நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பனி-குளிர்ச்சி. திங்கள்-இனிய அமுதம். பித்து-காமப்பித்தை,

**ஏழைக் குறும்புசெயு மேந்திழையார் மோகமெனும்
பாழைக் கடந்து பயிராவ தெந்நாளோ.**

(ப-ரை) ஏழை-ஏழை, குறும்பு-குறும்பை, செயும் - செய்கின்ற, ஏந்து-தாங்கிய, இழையார்-கல்லாபரணத்தையுடைய பெண்களின், மோகம் - காம ஆசை, எனும் - என்கின்ற, பாழை - பாழை, கடந்து - நீங்கி, பயிர் - பயிர், ஆவது-ஆவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஏழைக் குறும்பு - மடமைத்தனத்தாற் செய்யும் சேட்டை. இனி, தம் ஏழ்மைத் தனத்தைக்காட்டி மோசம் செய்யும் என்றுரைப்பாரும் உண்டு இது பொருந்தாமை ஊகித்தறிக. அறிவின்மையாலே சேட்டை செய்யும் எனக் கோடல் ஒருவாறு இயைபுடைத்தாயினுமாகும். 13

**விண்டு மொழிகுளறி வேட்கைமது மொண்டுதருந்
தொண்டியர்கள் கட்கடையிற் சுற்றொழிவ தெந்நாளோ.**

(ப-ரை) விண்டு-வாயைத் திறந்து, மொழி-சொற்களை, குளறி-குழறிக் குழறிப் பேசி, வேட்கை-காம ஆசையாகிய, மது-தேனை, மொண்டு-முகந்து, தரும் - தருகின்ற, தொண்டியர்கள் - விலைமாதர்களின், கண் - கண்களின், கடையில் - கடையினால் (ஓரத்தால்), சுற்று - சுழலுதல், ஒழிவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'விண்டு' இது வாயைத்திறந்து என்னும் பொருளது; இது வினையெச்சம். 'மொழிகுளறி' என்றது கொந்திக்கொந்தி மழலைச்சொற் பேசி. 'வேட்கை மது' இது பண்புத்தொகை; வேட்கையாகிய மது என விரியும். வேட்கையை மது என்றது உருவகம். 'தொண்டியர்' இது விலை மாதரைக் குறித்தது. இது காமத்தொண்டைச் செய்பவர் என்னும் பொருளது. இனி வேறு கூறுவாரும் உண்டு. 'கட்கடை' என்றது கண்ணின் கடைசியை, அதாவது கடைக்கண் பார்வையை. 14

**மெய்யிற் சிவப்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்
பொய்யிலின்பின் றென்று பொருந்தநா ளெந்நாளோ.**

(ப-ரை) மெய்யில் - உண்மையிலேயே, சிவம் - சிவம், பிறக்க-உண்டாக, மேவும்-அதனால் உண்டாகின்ற, இன்பம்-சிவானந்தம், போல்-போல, மாதர்-பெண்களுடைய, பொய்யில்-பொய்யிலே, இன்பு-ஆனந்தம், இன்று-இல்லை, என்று - என்று, பொருந்தா - அதைப்பற்றுறிருக்கும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மெய்யில் சிவம்பிறக்க-திரோபவத்தால் உள்ளத்துள்ளே மறைந்திருந்த சிவத்தை ஞானசிரியர் ஞானோபதேசத்தால் அந்தர்முகத்தே கண்டு அதனுடனே இரண்டறக்கலந்து நின்றநிலையைக் குறித்தது. தாடலைபோல் இரண்டறக்கலந்த கலப்பால் உண்டாகும் இன்பத்தையே 'மெய்யிற் சிவம் பிறக்க மேவுமின்பம்' என்றார். 15

---



## தத்துவ முறைமை

**ஐம்பூதத் தாலே யலக்கழிந்த தோஷமற
எம்பூத நாதனரு ளெய்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) ஐம் - ஐந்து, பூதத்தாலே - பூதங்களாலாகிய உடலுடன்கூடி, அலக்கழிந்த-உலகில் அலைந்துவருந்திய, தோஷம்-துன்பம், அற-நீங்கும்படி, எம் - எமது, பூதம் - பூதகணங்களுக்கு, நாதன்-தலைவனாகிய சிவபெருமான், அருள் - திருவருளை, எய்தும் - அடையும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஐந்துபூதம் - மண், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம். பூதம்-சிவகணங்களை. சிவபெருமான் திருவருளை அடைந்தார்க்கு பிறவித்துன்பம் இல்லை ஆதலின் இவ்வாறு கூறினார். 1

**சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர்பயந் தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ.**

(ப-ரை) சத்தம்-சத்தம், முதலாம் - முதலாகிய, புலனில் - ஐந்துபுலன்களில், சஞ்சரித்த - சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற, கள்வரெனும்-பொறிகளாகிய கள்வர் எனும், பித்தர் - பித்தர்களின், பயம் - அச்சம், தீர்ந்து-நீங்கி, பிழைக்கும்-உய்யும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சத்தம் முதலாம் புலன் - சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐம்புலன்களை. புலனில் சஞ்சரித்த கள்வர் என்றது சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஐம்பொறிகளை. 2

**நாளும் பொறிவழியை நாடாத வண்ணமெமை
ஆளும் பொறியா லருள்வருவ தெந்நாளோ.**

(ப-ரை) நாளும் - எக்காலமும், பொறி - ஐம்பொறிகளின், வழியை-வழியை, நாடாத - விரும்பிச்செல்லாத, வண்ணம் - விதம், எமை - எங்களை, ஆளும்-தடுத்தாட்கொள்ளும், பொறியால்-பொறியினால், அருள் - திருவருள், வருவது-உண்டாவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பொறி-அறிவு. இனி விளக்கம் என்பாரும் உளர். பொறிவழி என்றது-மெய், வாய், கண், மூக்கு, செவிகள் ஆகிய பொறிகளை. 3

**வாக்காதி யானகன்ம மாயைதம்பால் வீண்காலம்
போக்காம லுண்மை பொருந்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) வாக்கு-வாக்கு, ஆதி-முதலாகிய, கன்மம்-கர்மேந்திரியங்களால் உண்டாய, மாயை-மாயாகாரியங்கள், தம்பால்-தம்மிடத்தே, வீண்-பயனற்றதாக, காலம்-காலத்தை, போக்காமல் - கழிக்காமல், உண்மை - சத்தியமும் நித்தியமுமாகிய திருவருளை, பொருந்தும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வாக்காதி என்றது - வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் என்னும் கன்மேந்திரியங்களை. வீண்காலம் என்றது - பாழ்போங் காலம், உய்வுக்குஉரிய காரியஞ்செய்யாத நாளைக் குறிக்கும். 4

மனமான வானரக்கைம் மாலையாக் காமல்
எனையா ளடிகளடி யெய்துநா ளெந்நாளோ.

(ப-ரை) மனம்-மனம், ஆன - ஆகிய, வானரம் - குரங்கினுடைய, கை-கையில் அகப்பட்ட, மாலை-பூமாலை, ஆக்காமல்-ஆக்காதபடி, எனை-அடியேனை, ஆள்-அடிமையாக ஆட்கொள்ளும், அடிகள்-பெருமானின், அடி-திருவடியை, எய்தும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மனத்தைக் குரங்காக உருவகிப்பர் ஆதலின் 'மனம் ஆன வானரம்' என்றார். 'வானரம் கைமாலை ஆக்காமல்' என்றது குரங்கின் கைப்பூமாலைபோல என்ற பழமொழிப் பிரயோகமாகும். 5

வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணமெனக்
காட்டைத் திருத்திக் கரைகாண்ப தெந்நாளோ.

(ப-ரை) வேட்டை - (பிரபஞ்ச விஷயங்களில்) வேட்டையாடுகின்ற, புலம் ஐம்புலன்களாகிய, புலையர்-புலையர்கள், மேவாத-அடையாத, வண்ணம்-விதம், என-என, காட்டை - காட்டை, திருத்தி - செம்மைப்படுத்தி, கரை-முடிவாகிய பலனை, காண்பது-பார்ப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்" எனப் பட்டினத்தடிகள் கூறியருளியபடி "வேட்டைப் புலப்புலையர் மேவாத வண்ணம்" என்றார். காட்டை - மனக்காட்டை. திருத்தி - முக்குறும்பறுத்து நிற்றலை. கரை-முடிவை. கரையாவது முத்தியாகிய பலனை எய்தும் முடிவை. 6

உந்து பிறப்பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ.

(ப-ரை) உந்து-இருவினைகளால் செலுத்தப்படுகின்ற, பிறப்பு-பிறப்பையும், இறப்பு-இறப்பையும், உற்றுவிடாது-அடைந்துவிடாது, எந்தை-எமது தந்தையாகிய கடவுளின், அருள்-திருவருள், வந்து-வந்து, பிறக்க-தோன்ற, மனம்-அடியேன் மனம், இறப்பது-இறப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'உந்து பிறப்பிறப்பு' என்றது வினைகளால் ஆக்கப்பட்டு வரும் பிறப்பையும் இறப்பையும். 'எந்தை' என்றது பிறப்பறுத்துப் பிறவாப் பேறு தருபவனாகிய சிவபெருமானை. 'மனம் இறக்க' என்றது மனம் அடங்குதலை. 7

புத்தியெனுந் துத்திப் பொறியரவின் வாய்த்தேரை
ஒத்துவிடா தெந்தையரு ளோங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) புத்தி - புத்தி, என்னும் - என்றுகூறும், துத்தி - படப்புள்ளிகளாகிய, பொறி-புள்ளிகளையுடைய, அரவின்-பாம்பின், வாய் - வாயில் அகப்பட்ட, தேரை - தவளையை, ஒத்து விடாது - போலாகாமல், எந்தை - எமது



தந்தையாகிய கடவுளின், அருள் - திருவருளானது, ஓங்கும்-ஓங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) புத்தியை அரவாகவும், தன்னைத் தேரையாகவும் கூறியது உருவகம். துத்திப்பொறி-இது துத்தியாகிய பொறி என விரிதலின் பண்புத்தொகை. இருபெயரொட்டுப் பண்புத்தொகை எனினும் இழுக்காது. 'வாய்த்தேரை' இது வாயில் அகப்பட்ட தேரை என விரிதலின் ஏழாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. 8

ஆங்கார மென்னுமத யானைவா யிற்கரும்பாய்
ஏங்காம லெந்தையரு ளெய்துநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆங்காரம்-அகங்காரம், என்னும்-என்கின்ற, மத-மதம்கொண்ட, யானை-யானையின், வாயில்-வாயினிடத்தே, கரும்பா-கரும்பைப்போலகப்பட்டு, ஏங்காமல் - ஏக்கங்கொள்ளாமல், எந்தை - எமது தந்தையாகிய இறைவனின், அருள் - திருவருளை, எய்தும் - அடையும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "மனம் ... ... ... தன்போல இலையெனலால் மதமாத்தனை நிகராம்" என்றதனால் அகங்காரத்தை 'மதயானை' என்றார். ஆனைவாய்க் கரும்புபோல அகங்காரத்தினால் வருந்தாதபடி என்பார் 'ஆங்கார மென்னுமத யானைவாயிற் கரும்பா யேங்காமல்' என்றார். 9

சித்தமெனும் பௌவத் திரைக்கடலில் வாழ்துரும்பாய்
நித்தமலை யாதருளி னிற்குநா ளெந்நாளோ.

(ப-ரை) சித்தம்-சித்தம், எனும் - என்கின்ற, பௌவம் - பூரணச்சந்திரிகைக்காலத்து, திரை - அலைகளோடுகூடிய, கடலில் - கடலில் அகப்பட்ட, துரும்பு-துரும்புபோல், ஆய்-ஆகி, நித்தம்-நாள்தோறும், அலையாது-அலைந்து வருந்தாமல், அருளின்-இறைவன் திருவருளினிடத்தே, நிற்கும் - நின்றிருக்கும், நாள்-தினம், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) சித்தத்தைக் கடலாக உருவகப்படுத்தியுளார். பௌவம் என்றது - பூரணச்சந்திரனை. இனி பெரிய என்றும், நுரையோடுகூடிய என்றும் உப்புப்பொருந்திய என்றும் பொருள் கூறுவாரும் உண்டு. திரைக் கடல் என்றது - திரையையுடைய கடல் என விரிதலின் இரண்டாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. 10

வித்தியா தத்துவங்க ளேழும் வெருண்டோடச்
சுத்தபர போதத்தைத் துய்க்குநா ளெந்நாளோ.

(ப-ரை) வித்தியா-வித்தியா, தத்துவங்கள்-தத்துவங்கள், ஏழும்-ஏழும், வெருண்டு-அஞ்சி, ஓட-ஓடும்படி, சுத்த-சுத்த, பர - மேலாகிய, போதத்தை-போதத்தை, துய்க்கும் - அனுபவிக்கும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வித்தியாதத்துவங்கள் ஆவன:—கலை, காலம், நியதி, வித்தை, இராகம், புருடன், மாயை என்பன ஏழாம். இவைகள் தொண்ணூற்றாறு

தத்துவங்களுள் அடக்கம். சுத்தபரயோகம் என்றது-பரிசுத்தமாகிய சிவாநுபவம் என்பதாம். 11

சுத்தவித்தை யேமுதலாத் தோன்றுமோ ரைந்துவகைத்
தத்துவத்தை நீக்கியருள் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) சுத்த-பரிசுத்தமாகிய, வித்தை - வித்தை, முதலா - முதலாக, தோன்றும்-உண்டாகும், ஓர்-ஒரு, ஐந்து-ஐந்து, வகை-வகைகளாகிய, தத்துவத்தை-தத்துவங்களை, நீக்கி-அகற்றி, அருள்-திருவருளை, சாரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) "சுத்தவித்தை முதலாத் தோன்றும் ஓர் ஐந்துவகைத் தத்துவம்" என்றது சுத்தவித்தை, மயேச்சுரம், சதாசிவம், சத்தி, சிவம், என்பனவாம். 'அருள்' என்றது சுத்த சிவத்தின் திருவருளை. 12

பொல்லாத காமப் புலைத்தொழிலி லென்னறிவு
செல்லாம னன்னெறியிற் சேருநா ளெந்நாளோ.

(ப-ரை) பொல்லாத - கொடிய, காமம் - காமம் என்னும், புலை - நீச, தொழிலில்-தொழிலில், என்-அடியேனுடைய, அறிவு - அறிவானது, செல்லாமல்-நுழையாமல், நல்-நல்ல, நெறியில்-மார்க்கத்தில், சேரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) காமம் பிறவியைத் தந்து முத்தியை எய்தாதபடிச் செய்தலின் 'பொல்லாத காமப்புலைத் தொழில்' என்றார். "காமத்திற் கொடிய தொன்றிலையே" என்ற ஆன்றோர் வாக்கும் ஈண்டு அறியற்பாலது. 'நன்னெறி' என்றது சுத்த சித்தாந்த சைவமார்க்கத்தை. இனி திருவருள் நெறி என்பாரும் உண்டு. 13

அடிகளடிக் கீழ்க்குடியா யாம்வாழா வண்ணம்
குடிகெடுக்கும் பாழ்மடிமைக் கூறொழிவ தெந்நாளோ.

(ப-ரை) அடிகள் - சிவபெருமானின், அடி - திருவடியின், கீழ் - கீழே, குடி-குடியாக, யாம் - அடியோம், வாழா - வாழாத, வண்ணம் - விதம், குடி-அடியேங்கள் குடியை, கெடுக்கும் - கெடுக்கின்ற, பாழ் - பாழாகிய, மடிமை-சோம்பலின், கூறு - கூறுபாடு, ஒழிவது - நீங்குவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அடிகள்-சிவபெருமானை. 14

ஆன புறக்கருவி யாறுபத்து மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புன்முளைப்ப தெந்நாளோ.

(ப-ரை) ஆன - காரியரூபமாகவுள்ள, புறம் - புற, கருவி - தத்துவங்கள், ஆறுபத்தும் - அறுபதும், மற்று - காரணரூபமாகவுள்ள மற்றைய, உளவும்-உள்ளனவாகிய முப்பத்தாறுதத்துவங்களும், போன-அடியேனை விட்டு யகன்ற, வழியும் - இடத்தே, புல் - புல், முளைப்பது - முளைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) 'செத்த இடத்தே செடி முளைத்துவிட்டது' 'மாண்ட இடத்தில் மாமுளைத்துவிட்டது' 'புதைத்த இடத்தில் புல் முளைத்துவிட்டது' என்பன முதுமொழி. அதாவது இருந்த இடம், புதைத்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது என்பதாம். இம் முதுமொழிகொண்டே 'போனவழியும் புல்முளைப்ப தெந்நாளோ' என்றார். 15

அந்தகனுக் கெங்குமிரு ளானவா றுவறிவில்
வந்தவிருள் வேலை வடியுநா ளெந்நாளோ.

(ப-ரை) அந்தகனுக்கு - குருடனுக்கு, எங்கும் - உலகம் எங்கும், இருளான வாறு - இருளாக ஆகிய விதமாகவே, அறிவில் - அடியேனின் அறிவினிடத்தே, வந்த-ஆணவமலத்தால் வந்த, இருள் - அஞ்ஞான இருட்டின், வேலை - சமுத்திரம், வடியும் - வற்றும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) குருடனுக்குப் பட்டப்பகலும் இருளாகவே இருக்கும் ஆதலினல் 'அந்தகனுக் கெங்கு மிருளானவாறும்' என்றார். அறிவில் வந்தவிருள் என்றது - ஆணவமலத்தால் வந்து பிறந்த அஞ்ஞான இருளை. இருள்வேலை என்றது - இருளாகிய சமுத்திரம் என விரிதலின் பண்புத்தொகை; மிகுதி பற்றி இருளைச் சமுத்திரமாக உருவகப்படுத்தினர். 16

புன்மலத்தைச் சேர்ந்து மலபோதம் பொருந்துதல்போ
யின்மலத்தைச் சேர்ந்துமல நீங்குநா ளெந்நாளோ. [ய்

(ப-ரை) புன் - அற்பமான, மலத்தை - பிரபஞ்சகாரிய மாயையை, அடைந்து - சேர்ந்து, மலபோதம் - தற்போதம், பொருந்துதல் - அடைதல், போய் - நீங்கி, நின்மலத்தை-பரிசுத்தமான திருவருளை, சேர்ந்து-அடைந்து, மலம் - மாயாமலம், நீங்கும் - ஒழியும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மலபோதம் என்றது-தற்போதத்தை. இது ஆணவாதி மும்மல சம்பந்தமுடையதென அறிக. மலம் என்றது-பிரபஞ்ச சம்பந்தமான காரிய மாயையை. 17

கண்டுகண்டுந் தேறுக் கலக்கமெல்லாந் தீர்வண்ணம்
பண்டைவினை வேரைப் பறிக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) கண்டுகண்டும் - பார்த்துப்பார்த்தும், தேறு-தெளிவடையாத, கலக்கம்-மனக்கலக்கம், எல்லாம்-எல்லாம், தீரும் வண்ணம்-நீங்கும் படிக்கு, பண்டை - பழமையாகிய, வினை - வினைகளின், வேரை - வேரை, பறிக்கும்-பறித்தெறியும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கலக்கம் - மனக்குழப்பம். பண்டைவினைவேரை - அம் மனக்குழப்பத்திற்குக் காரணமாகிய முன்னைநாட்களின் வேரை என்பதாம். 18

பைங்கூழ் வினைதான் படுசாவி யாகவெமக்
கெங்கோன் கிரணவெயி லெய்துநா ளெந்நாளோ.

(ப-ரை) வினை - வினையாகிய, பைம் - பசுமையாகிய, கூழ்-பயிரானது, தான்-தான், படு - மிகுந்த, சாவி ஆக - சாவி ஆகும்படி, எமக்கு-அடியோங்கட்கு, எம்-எமது, கோன்-இறைவனின், கிரண-திருவருளின் கிரணங்களின், வெயில் - வெயிலானது, எய்தும் - காயும்; நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'பைங்கூழ்வினை' இது மொழிமாறி நின்றது. வினை ஆகிய பைங்கூழ் என்பது பொருள். வினையைப் பைங்கூழ் என்றது உருவகம். பயிரைக் கூழ் என்றது காரியவாகுபெயர். என்னை? பயிர் கூழுக்கு ஆதாரம் ஆதலின் என்க. தான்-அசை. 19

குறித்தவித மாதியாற் கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணமருள் வந்திடுநா ளெந்நாளோ.

(ப-ரை) குறித்த-மனத்தால் நினைத்த, விதம் - விதத்தாலும், ஆதியால் முதலியவைகளாலும், கூடும் - வந்துசேருகின்ற, வினை - தீவினை, எல்லாம்-எல்லாம், வறுத்த-வறுத்துவிட்ட, வித்தாம்-விதையாம், வண்ணம்-வண்ணம், அருள் - திருவருள், வந்திடும் - வந்துசேரும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) குறித்தவிதம் ஆதியால் என்றது-நினைப்பால் வருந் தீவினைப் பயன், வாக்கால்வருந் தீவினைப்பயன், காயத்தால்வருந் தீவினைப்பயன் என்பனவாம். வறுத்தவித்தாம் வண்ணம் என்றது-வறுத்த விதை முளையாது அழிதல்போல வினைப்பயன் சாராது வினைகள் எல்லாம் அழிய என்பதாம். ()

சஞ்சிதமே யாதி சரக்கான முச்சேறும்
வெந்தபொரி யாகவருண் மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) சஞ்சிதமே-சஞ்சிதவினையே, ஆதி-முதலாகிய, சரக்கு - சரக்குகள், ஆன-ஆகிய, மு - மூன்று வகையாகிய, சேறும் - சேறுகளும், வெந்த-நெருப்பில் வெந்த, பொரி-பொரி, ஆக-ஒப்ப உலரும்படி, அருள்-இறைவன் திருவருளை, மேவும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'சஞ்சிதம் ஆதி'-சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் ஆகியவற்றை. சஞ்சிதம் ஆகியவைகளை உளை என்பார் 'சரக்கான முச்சேறு' என்றார். சஞ்சித முதலிய கர்மங்கள் இறைவன் திருவருளால் தொலைய வேண்டி யிருத்தலின் 'வெந்த பொரியாக வருண்மேவுநா ளெந்நாளோ' என்கின்றார். 21

தேகமுத லன்காத் திரண்டொன்றாய் நின்றிலகு
மோகமிகு மாயை முடியுநா ளெந்நாளோ.

(ப-ரை) தேகம்-தேகம், முதல்-முதலாக, நான்கா - நான்காக விரிந்து, திரண்டு-பிறகு சேர்ந்து, ஒன்றாய் ஒன்றாக, நின்று-நின்று, இலகும்-விளங்கும், மோகம்-மோகத்தை, மிகும்-மிகுக்கும், மாயை-மாயையானது, முடியும்-நீங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) தேகம்முதல் நான்கு என்றது - தநு, கரண, புவன, போகங்களை. மாயையின் காரியமே தேகாதி ஆதலின் 'தேகமுத லன்காத் ... ... ... 'மோகமிகு மாயை' என்றார். மாயை மோகத்தை மிகுத்தலுவதாதலின் 'மோகமிகு மாயை' என்றார். 22

சத்த முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்துஞ்
சுத்தமா மாயை தொடக்கறுவ தெந்நாளோ.

(ப-ரை) சத்தம்-சத்தம், முதலா - முதலாக, தழைத்து - ஓங்கி, இங்கு-இவ்வுலகில், எமக்கு-அடியோங்களுக்கு, உணர்த்தும்-அறிவுறுத்துகிற, சுத்தம்-சுத்தம், ஆம்-ஆகிய, மாயை - மாயையின், தொடக்கு - சம்பந்தம், அறுவது-அற்றொழிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சத்தம்-நாதம். உணர்த்தும் - அபரஞானத்தை உணர்த்தும். தழைத்து-ஈண்டு விரிதலை. சுத்தமாம் மாயை-சுத்தமாயையை. 23

எம்மை வினையை யிறையையெம்பாற் காட்டாத
அம்மை திரோதை யகலுநா ளெந்நாளோ.

(ப-ரை) எம்மை - பசுக்களாகிய எங்களையும், வினையை-பாசத்தாலாகும் வினையையும், இறையை - பதியையும், எம்பால் - பசுக்களாகிய எம்மிடத்து, காட்டாத - தோற்றுவிக்காது மறைக்கின்ற, அம்மை-தாயாகிய, திரோதை. திரோதாயிசத்தி, அகலும் - அடியேனைவிட்டு அகலும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வினையை என்றது - பாசமாகிய வினையை. திரோதாயிசத்தி பதிபசு பாசங்களை ஆன்மா உணராதபடி மறைத்துவைக்கின்றமையின் 'எம்பாற் காட்டாத வம்மை திரோதை' என்றார். திரோதை யகல முப்பொருள் உண்மை உணர்ந்து மெய்ப்பொருளை அறிந்து வீடு கூடுவர் ஆதலின், 'திரோதை யகலுநா ளெந்நாளோ' என்றார். 24

நித்திரையாய் வந்து நினைவழிக்குங் கேவலமாஞ்
சத்துருவை வெல்லுஞ் சமர்த்தறிவ தெந்நாளோ.

(ப-ரை) நித்திரை - நித்திரைவடிவம், ஆய் - ஆகி, வந்து-வந்து, நினைவு-நினைவை, அழிக்கும் - கெடுக்கும், கேவலம் - கேவலாவஸ்தையாகிய, சத்துருவை-சத்துருவை, வெல்லும்-வெற்றிகொள்ளும்படியான, சமர்த்து-சாமார்த்தியத்தை, அறிவது-அறிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நித்திரையாய் வந்து என்பதற்கு - நித்திரைபோல வந்து என உரைப்பாரும் உண்டு. கேவலாஸ்தை என்பது-மறப்பு ஆதலின் 'நினைவு அழிக்குங் கேவலம்' என்றார். 25

சன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டுநா ளெந்நாளோ.

(ப-ரை) சன்னல்பின்னல்-சன்னல்பின்னல், ஆன-ஆகிய, சகலம்-சகலாவஸ்தை, எனும்-என்கின்ற, குப்பையிடை-குப்பையில், முன்னவன் இறைவ

னின், ஞானம்-ஞானமாகிய, கனலை-நெருப்பை, மூட்டும்-மூள்விக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சன்னல் பின்னலான என்றது-ஆன்ம தத்துவங்களுடன்கூடிக் காரியப்பட்டுப் பின்னிக் கிடக்கின்ற என்பது பொருளாம். சகலாவஸ்தையைக் 'குப்பை' என்றதற்கேற்ப இறைஞானத்தைக் 'கனல்' என்றார். கனல் மூட்ட குப்பை சாம்பராதல்போல இறைஞானம் உதிக்கச் சகலம் நீங்கும் என்பார். 26

மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

(ப-ரை) மாயா - மாயா சம்பந்தமாகிய, விகாரம் - விகாரத்தன்மையையுடைய, மலம்-மலத்தை, ஒழி-ஒழிக்கின்ற, சுத்தாவத்தை-சுத்தாவஸ்தையை, தோயா-அடைந்து, அருளை-திருவருளை, தொடரும் - பின்பற்றிச் செல்லும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மாயாவிகாரமலம் என்றது-மாயையினால் காரியப்பட்டுப் பார்த்து கிடக்கும் விஷயாதிகளால் உண்டாகுவதாகிய கன்மமலம் என்பது பொருளாம். சுத்தாவஸ்தை என்பது இருவினையொப்பு மலபரிபாகமுற்ற நிலை. 27

---

## தன்னுண்மை

உடம்பறியு மென்னுமந்த வூழலெல்லாந் தீரத்
திடம்பெறவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

(ப-ரை) உடம்பு - உடம்பே, அறியும்-எல்லாவற்றையும் அறிந்துகொள்ளும், என்னும்-என்று கூறும், அந்த-அந்த, ஊழ்-பகை, எல்லாம் - எல்லாம், தீர - நீங்க, திடம் - உறுதி, பெறவே - அடையவே, எம்மை-எங்களை, தெரிசிப்பது-தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உடம்பு அறியும் என்னுமந்த ஊழ் - தேகான்மவாதமாகிய பகையை. எம்மைத் தரிசிப்பது - தன்னை யறிதலை. ஊழ் - நரகவேதனை. உடம்புக்கு அன்னியமாக ஆன்மா ஒன்றுளது அதனை அறிந்தவனே தலைவனை அறிவன் ஆதலின் 'எம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ' என்றார். இதுமுதல் எட்டுக் கண்ணிகள் ஆன்ம உண்மை உணர்த்துதலால் இப்பகுதிக்குத் **தன்னுண்மை** என்னும் பெயர் இடப்பட்டது 1

செம்மையறி வாலறிந்து தேகாதிக் குள்ளிசைந்த
எம்மைப் புலப்படவே யாமறிவ தெந்நாளோ.

(ப-ரை) செம்மை - (ஞானநூல் ஆராய்ச்சியால் ஏற்பட்ட) ஒழுங்கான, அறிவால்-அறிவினாலே, அறிந்து-அறிந்து, தேகம்-உடம்பு, ஆதி-முதலியவைகளுக்குள், இசைந்த - பொருந்தியிருக்கின்ற, எம்மை-எம்மை, புலப்படவே-வெளிப்படையாக, யாம் - நாங்கள், அறிவது - அறிந்துகொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) செம்மை அறிவு - ஞானநூற்களைக் கற்றுக் கேட்டுத் தெளிந்த அறிவு. தேகாதி-தேகாதிதத்துவங்களை. எம்மை - ஜீவான்மாவை. புலப்பட-தெளிவாக வெளிப்படையாக. 2

தத்துவமாம் பாழ்த்த சடவுருவைத் தான்சுமந்த
சித்துருவா மெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

(ப-ரை) தத்துவம்-தத்துவம், ஆம்-ஆகிய, பாழ்த்த-பாழான, சடம்-சடமாகிய, உருவை-உருவத்தை, தான்-தான், சுமந்த - தாங்கிக்கொண்டிருக்கிற, சித்து-சித்து, உருவாம்-உருவமாக இருக்கின்ற, எம்மை - எங்களை, தெரிசிப்பது-தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தத்துவம்-பிரதிவியாதி தத்துவங்களை. தத்துவமாம் பாழ்த்த சடம்-தத்துவங்களால் சமைந்ததாகிய தேகத்தை. இது, தத்துவ ஆன்மவாதம்; அதாவது தத்துவங்களை ஆன்மா என்று கூறுவது. சித்து உருவாம் எம்மை என்றது-ஆன்ம வடிவத்தை. சித்து உருவாகிய எம்மை என விரிதலின் பண்புத்தொகை. 3

பஞ்சப் பொறியையுயி ரென்னுமந்தப் பஞ்சமறச்
செஞ்செவே யெம்மைத் தெரிசிப்ப தெந்நாளோ.

(ப-ரை) பஞ்சம்-ஐந்தாகிய, பொறி-பொறிகளை, உயிர்-உயிர், என்னும்-என்கின்ற, அந்த-அந்த, பஞ்சம்-சிறுமை, அற-நீங்க, செஞ்சவே - செம்மையாய், எங்களை-எங்களை, தெரிசிப்பது-நாங்கள் தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பஞ்சப்பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளை. இது இந்திரிய ஆன்மவாதத்தை மறுத்தலாம். இந்திரிய ஆன்மவாதமாவது-இந்திரியங்களையே ஆன்மா என்று கூறும் வாதமாம். 4

அந்தக் கரணமுயி ராமென்ற வந்தரங்க
சிந்தைக் கணத்திலெம்மைத் தேர்ந்தறிவ தெந்நாளோ.

(ப-ரை) அந்தக்கரணம் - அந்தக்கரணங்களையே, உயிர்-ஆன்மா, ஆம்-ஆகும், என்ற-என்கின்ற, அந்தரங்கம்-அந்தரங்கமாகிய, சிந்தை - எண்ணம், அழிய-கெட, எம்மை-எங்களை, தேர்ந்து-தெரிந்து, அறிவது-அறிந்துகொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அந்தக்கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரங்களை. இது அந்தக்கரண ஆன்மவாதம். அந்தரங்க சிந்தை - மனதாரக்கண்ட எண்ணம்.

முக்குணத்தைச் சீவனென்னு மூடத்தை விட்டருளால்
அக்கணமே யெம்மை யறிந்துகொள்வ தெந்நாளோ.

(ப-ரை) மூ - மூன்றாகிய, குணத்தை - குணங்களை, சீவன் - ஆன்மா, என்னும்-என்கின்ற, மூடத்தை-அறியாத்தன்மையை, விட்டு-நீக்கி, அருளால்-திருவருளின் செயலால், அ - அந்த, கணமே - க்ஷணத்திலேயே, எம்மை-எங்களை, அறிந்துகொள்வது - அறிந்துகொள்வது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) முக்குணம்-ரஜோகுணம், தமோகுணம், சத்துவகுணம். இது குண ஆன்மவாதம். குணங்களையே ஆன்மா என்று கூறும் வாதம். சீவன்-ஆன்மா. எம்மை-ஆன்மாவை. மூடத்தனம்-அறியாமை, அஞ்ஞானம். 6

காலையுயி ரென்னுங் கலதிகள்சொற் கேளாமற்
சீலமுட னெம்மைத் தெளிந்துகொள்வ தெந்நாளோ.

(ப-ரை) காலை-காற்றையே, உயிர்-ஆன்மா, என்னும்-என்கின்ற, கலதிகள்-மூதேவிகள், சொல்-சொற்களை, கேளாமல்-கேளாதபடி, சீலமுடன்-நல்லொழுக்கத்துடனே, எம்மை - எங்களை, தெளிந்து - தெளிந்து, கொள்வது-கொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) காலை-சீவக்காற்றை; இனி தசவாயுக்களை என்பாரும் உண்டு. உயிர்-ஆன்மா. கலதி-மூதேவி. 7

வான்கெடுத்துத் தேடு மதிகேடர் போலவெமை
நான்கெடுத்துத் தேடாம னன்கறிவ தெந்நாளோ.

(ப-ரை) வான்-ஆகாயத்தை, கெடுத்து - கெடுத்து (மறைத்து), தேடும்-தேடிக்கொண்டு திரியும், மதி - அறிவு, கேடர் - கேடர்கள், போல - போல, எமை-எங்களை, நான்கெடுத்து-நான் கெடுத்து, தேடாமல் - தேடிக்கொண்டு திரியாமல், நன்கு-எங்களை நன்றாக, அறிவது - அறிந்துகொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) வான்கெடுத்து - எங்குட் வியாபகமாக உள்ள ஆகாயத்தை மறைத்து அதனைத்தேடும் என்பதாம். அதாவது அதனைவிட்டு அதற்கு அன்னியமானவைகளை ஆகாயமென்று கூறித் தேடல் என்பது கருத்து. மதிகேடர்-மூடர். அறிவீனர். 8

---

## அருளியல்பு

ஈனந் தருநா டிதுநமக்கு வேண்டாமென்
றானந்த நாட்டி லவதரிப்ப தெந்நாளோ.

(ப-ரை) ஈனம்-இழிவை, தரும்-கொடுக்கும், நாடு-நாடாகிய, இது-இந்த உலகம், நமக்கு-நமக்கு, வேண்டாம் - வேண்டாம், என்று-என்று, ஆனந்தம்-ஆனந்தத்தைத் தருவதாகிய, நாட்டில் - திருவருளாகிய நாட்டில், அவதரிப்பது-அவதரிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) மாயா சம்பந்தத்திற்கு உள்ளாக்கி பிறப்பிறப்பைத் தந்து வேதனைப்படுத்துதலின் 'ஈனந் தருநாடு இது' என்றார். ஆனந்தநாடு-சிவானந்தப் பேற்றைத் தருவதாகிய திருவருளை. அவதரிப்பது-பிறப்பது. இதுமுதல் பதினெட்டு கண்ணிகளில் திருவருள் இயல்பு கூறுதலின் இப்பகுதிக்கு 'அருள் இயல்பு' எனப் பெயர் எய்திற்று. 1

பொய்க்காட்சி யான புவனத்தை விட்டருளா
மெய்க்காட்சி யாம்புவன மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) பொய்-பொய்யாகிய, காட்சி - காட்சியைக்கொண்டது, ஆன-ஆகிய, புவனத்தை-இப்பூலோகத்தை, விட்டு-விட்டு, அருளாம்-திருவருளாம், மெய்-உண்மை, காட்சி-காட்சியையுடையது, ஆம்-ஆகிய, புவனம்-உலகத்தை, மேவும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஜகம் மாயையின் காரியத்தால் நிலைபேறின்றித் திருவுடன் இருத்தலின் 'பொய்க்காட்சியான புவனத்தைவிட்டு' என்றார். திருவருள் காட்சியே சத்தியமும் நித்தியமும் மாறுபடாத தன்மையும் உடையது ஆதலின் 'அருளாம் மெய்க் காட்சியாம் புவனம்' என்றார். ஜகத்தைப்பற்றி இருத்தல் துன்பந்தருவதும் திருவருள்பற்றி இருத்தல் இன்பமும் சிவானந்தப் பெருஞ்சுகமுந் தருவதாதலின் 'மேவுநா ளெந்நாளோ' என்றார். 2

ஆதியந்தங் காட்டாம லம்பரம்போ லேநிறைந்த
தீதி லருட்கடலைச் சேருநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆதியந்தம் - முதலும் முடிவும், காட்டாமல் - தோற்றுவிக்காவண்ணம், அம்பரம்போலே-பூதாகாசத்தைப்போலே, நிறைந்த தீது-எங்கும் வியாபித்துள்ள குற்றம், இல் - இல்லாத, அருட்கடலை - அருளாகிய கடலை, சேரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவனைப்போலவே இறைவியும் ஆதியந்தமில்லாத பொருளாதலின், 'ஆதியந்தங் காட்டாமல்' என்றார். இறைவன் திருவருள் பூதவாகாயம்போல எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருப்பதாதலின், 'தீதில் அருட்கடல்' என்றார். கடல்-உருவகம். 3

எட்டுத் திசைக்கீழ்மே லெங்கும் பெருகிவரும்
வெட்டவெளிவிண் ணாற்றின் மெய்தோய்வதெந்நாளோ.

(ப-ரை) எட்டுத்திசை-எட்டாகிய திசைக்குள்ளேயும், கீழ்மேல்-கீழேயும் மேலேயும், எங்கும் பெருகிவரும் - இப்பத்துத்திசையுமல்லாத மற்றுமுள்ள இடங்களிலும் மிகுந்துவருகின்ற, வெட்டவெளி - சிதாகாசமாகிய, விண் ஆற்றில்-மேலுள்ள (சிவானந்தமாகிய) நதியில், மெய் தோய்வது - தேகம் படிவது, எ-எந்த, நாளோ - நாளோ? எ-று.

(வி-ரை) எங்கும்-பிறவுலகங்களை; சராசரமுமாம். மெய்தோய்தல் - உண்மையிற் கலத்தல். 4

சூதான மென்று கருதியெல்லா மோலமிடு
மீதான மானவெற்பை மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) சூதிஆனம் என்று-இரசிகமாக இறங்கிக் காணவொண்ணாதவிட மென்ற, சுருதி எல்லாம் ஓலம் இடும் - வேதங்களெல்லாம் முறையிடுகின்ற, மீது ஆனமான-மேலே உயர்ந்தவிடமான, வெற்பைமேவும்-மலையைச்சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சூது - நண்ணிய, அறியமுடியாத. சுருதி - எழுதாக்கிளவி, வேதம். வெற்பு-உருவகம். இறைவன் திருவருளை 'வெற்பு' என்றார். 5

**வெந்துவெடிக் கின்றசிந்தைவெப்பகலத் தண்ணருளாய்**
**வந்துபொழி கின்ற மழைகாண்ப தெந்நாளோ.**

(ப-ரை) வெந்துவெடிக்கின்ற - காமத்தீயால் வெந்து வெப்பமிகுதியி னாலே வெடிக்கின்ற, சிந்தை-அடியேனின் மனமாகிய, வெப்புஅகல-வெம்மை நீங்கும்படி, தண் அருளாய்வந்து-குளிர்ந்த அருளுருவாகவந்து, பொழிகின்ற மழைகாண்பது-சொரிகின்ற மழைமேகத்தைத் தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வெந்து வெடிப்பது - அஞ்ஞானத்தால் வெந்து காமத்தால் வெடிப்பது. மழை - உருவகம். சிந்தை வெப்பு-ஏழாம்வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. 6

**சூரியர்கள் சந்திரர்க டோன்றாச் சுயஞ்சோதி**
**பூரண தேயத்திற் பொருந்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) சூரியர்கள்-சூரியர்களும், சந்திரர்கள்-சந்திரர்களும், தோன்றா-உதிக்காத, சுயம்-சுயம், சோதி-சோதியையுடைய, பூரணம்-பரிபூரணமாகிய, தேயத்தில் - நாட்டில், பொருந்தும் - பொருந்துகின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சூரியர்கள் சந்திரர்கள் தோன்றா - பூத சூரிய சந்திரர்களை. சுயம்சோதி பூரணதேயம் - இயல்பாகவே சோதிப்பிரகாசமாக இருக்கின்ற நிறைவாகிய திருவருள் நாட்டில். நிறைவாகிய திருவருள் நாடு சூரியசந்திர களின் பிரகாசம் வேண்டுதலின்றி இயற்கையிலேயே ஜோதிப்பிரகாசமாக இருத்தலின் 'சுயஞ்சோதிப் பூரணதேயத்தில்' என்றார். 7

**கன்றுமன வெப்பக் கலக்கமெலாந் தீர அருள்**
**தென்றல்வந்து வீசுவெளி சேருநா ளெந்நாளோ.**

(ப-ரை) கன்று-புழுங்குகின்ற, மனம்-மனத்தினுடைய, வெப்பம் வெப்பத்தினால் உண்டாகிய, கலக்கம்-கலக்கங்கள், எலாம்-எல்லாம், தீர-நீங்கும்படி, அருள்-திருவருளாகிய, தென்றல்-தென்றற்காற்று, வந்து-வந்து, வீசும்-வீசுகின்ற, வெளி - வெற்றிடத்தை, சேரும் - அடையும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கன்று - அஞ்ஞானம் புழுங்குகின்ற; காமக்கனலால் புழுங்குகின்ற என்பது பொருளாம். அருள் தென்றல் என்றது - திருவருளாகிய தென்றற் காற்றை. திருவருளைத் தென்றல் என்றது உருவகம். 8



**கட்டுநமன் செங்கோல் கடாவடிக்குங் கோலாக**
**வெட்ட வெளிப்பொருளை மேவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) கட்டும் - பாசக்கயிற்றினால் கட்டுகின்ற, நமன் - எமனுடைய, செங்கோல் - செங்கோலானது (அடியேன்மீது செல்லாது), கடா - அந்த எமனது வாகனமாகிய எருமைக்கடாவை, அடிக்கும் - அடித்துத் துரத்தும், கோல்-கோல், ஆக-ஆக, வெட்ட - வெட்ட, வெளி - சிதாகாய வெளியாகிய, பொருளை-செம்பொருளை, மேவும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எமன் ஆன்மாக்களைப் பாசக்கயிற்றால் கட்டிச் செல்வதாகப் புராணங்கள் முழங்கலின் 'கட்டு நமன்' என்றார். எமன் உயிர்களுக்கு அச்சந் தருபவன் ஆதலின் 'நமன்' எனப்பெயர் எய்திற்று. 9

**சாலக் கபாடத் தடைதீர எம்பெருமான்**
**ஓலக்க மண்டபத்து ளோடுநா ளெந்நாளோ.**

(ப-ரை) சால-மிகுதியாகவுள்ள, கபாடம்-மாயையாகிய கதவின், தடை-தடையானது, தீர-நீங்க, எம் - எமது, பெருமான் - இறைவனின், ஓலக்கம்-அருள்மயமாகிய திருவோலக்கம், மண்டபத்து - மண்டபத்திலே, ஓடும்-உலாவித்திரியும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) மாயையானது பதியைக் காணாதவாறு ஆன்மாக்களுக்கு இடையே நின்று மறைத்தலின் 'கபாடம் தடைதீர' என்றார். மாயையைக் கபாடம் என்றது உருவகம். ஓலக்கம்-திருவருள்மயமாகிய இறைவன் கொலு மண்டபம். 10

**விண்ணவன்றா ளென்னும் விரிநிலா மண்டபத்தில்**
**தண்ணீ ரருந்தித் தளர்வொழிவ தெந்நாளோ.**

(ப-ரை) விண்ணவன் - சிவபெருமானின், தாள் - திருவடி, என்னும்-என்று சொல்லப்பெறும், விரி-பரந்த, நிலா-நிலா, மண்டபத்தில் - மண்டபத்திலே, தண்ணீர் - சிவானந்தமாகிய தண்ணீரை, அருந்தி - குடித்து, தளர்வு-பிறவியினால் உண்டாவதாகிய தளர்ச்சியினின்றும், ஒழிவது - நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நிலாமண்டபம் என்பதற்குக் குளிர்ந்த மண்டபம் எனவும், சந்திரகாந்தக் கல்லாகிய மண்டபம் எனவும் பொருள் உரைப்பர். தண்ணீர் என்பது-குளிர்ந்த நீராம்; ஈண்டு சிவானந்தப் பெருக்கைக் குறித்தது. 11

**வெய்யபுவி பார்த்து விழித்திருந்த வல்லலறத்**
**துய்ய வருளிற் றுயிலுநா ளெந்நாளோ.**

(ப-ரை) வெய்ய-கொடிய, புவி-ஜகத்தை, பார்த்து -நோக்கி, விழித்து-விழித்து, இருந்த-இருந்த, அல்லல்-துன்பங்கள், அற - தொலைய, துய்ய-பரிசுத்தமாகிய, அருளில் - திருவருளில், துயிலும் - ஆனந்த நித்திரைசெய்யும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பிரபஞ்சம் மாயைத் துயரோடு கூடியதாதலின் 'வெய்யபுவி' என்றார். அல்லல் - காமாதியால் உண்டாகுந் துன்பங்கள், ஜனனமரணத் துன்பங்களையுங் குறிக்கும். 12

**வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல**
**ஐயனடி நீழ லணையுநா ளெந்நாளோ.**

(ப-ரை) வெய்ய-கொடியதாகிய, பிறவி-பிறப்பாகிய, வெயில்-வெயிலின், வெப்பம்-சூடு, எலாம்-எல்லாம், விட்டு - நீங்கி, அகல-ஒழிய, ஐயன்-சிவபெருமானின், அடி-திருவடியாகிய, நிழல் - நிழலை, அணையும்-சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஐயன்-சிவபெருமானை. 'வெயில்வெப்பம்' இது வெயிலாகிய வெப்பம் எனவும், வெயிலாலாகிய வெப்பம் எனவும் விரியும். 'வெய்ய' இது வெம்மை என்னும் பண்படியாகப் பிறந்த பண்புரிச்சொல். 13

**வாதைப் பிறவி வளைகடலை நீந்தவையன்**
**பாதப் புணையிணையைப் பற்றுநா ளெந்நாளோ.**

(ப-ரை) வாதை - வேதனையைத் தருகின்ற, பிறவி - பிறப்பு என்னும், வளை-வளைந்த, கடலை-சமுத்திரத்தை, நீந்த-கடக்க, ஐயன்-சிவபெருமானின், பாதம்-திருவடியாகிய, இணை - இரட்டையாகிய, புணையை-கப்பலை, பற்றும்-பிடிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பிறவியை வளைகடல் என்றது-உருவகம். 'வளைகடல்' இது வளைந்தகடல், சங்குகளையுடைய கடல் எனப் பொருள்தரும். பிறவியை வளைகடல் என்றதற்கு ஏற்ப இறைவன் திருவடி இணையைப் புணை என்றார். புணை இணையை என்றது-இணைப்புணை என்பதன் மொழிமாற்று. 14

**ஈனமில்லா மெய்ப்பொருளை யிம்மையிலே காணவெளி**
**ஞானமெனு மஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ.**

(ப-ரை) ஈனம்-இழிவு, இல்லா-இல்லாத, மெய்-உண்மையான, பொருளை-கடவுளை, இம்மையிலே இப்பிறப்பிலேயே, காண - பார்க்க, வெளி - வெளிப்படையாக, ஞானம்-அறிவு, எனும்-என்னும், அஞ்சனத்தை-தெய்வீகமந்திர மையை, நான் - அடியேன், பெறுவது - அடைவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மெய்ப்பொருள் - கடவுள். இம்மை - இப்பிறப்பை; இதில் இகரம் அண்மைச்சுட்டு. வெளி - என்பதை ஞானத்திற்கு அடைமொழி ஆக்கி வெளிப்படையாக இறைவனைக் காட்டுவிக்கும் எனப் பொருள் கூறலுமாம். 15

**எல்லா மிறந்தவிடத் தெந்தைநிறை வாம்வடிவைப்**
**புல்லாமற் புல்லிப் புணருநா ளெந்நாளோ.**

(ப-ரை) எல்லாம்-எல்லாவற்றையும், இறந்த-கடந்த, இடத்து-இடத்தில், எந்தை-எமது தந்தையாகிய, நிறைவாம்-பரிபூரணமாம், வடிவை-வடிவத்தை,



புல்லாமல் - பொருந்தாமல், புல்லி-பொருந்தித்தழுவும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எல்லாம்-தத்துவங்கள் எல்லாவற்றையுங் குறித்தது. எல்லாம் இறந்த இடம் - தத்துவங்கள் எல்லாவற்றையும் கடந்த இடம் எந்தை-எமது தந்தை என்பதன் விகாரம். இது முறைப்பெயர். நிறைவாம் வடிவு-இறைவனின் பரிபூரணவடிவம். புல்லாமற் புல்லி - தற்போதத்தால் இன்றித் திருவருட்சகாயத்தால் பொருந்தல் என்பது பொருளாம். 16

**சடத்துளுயிர்போ லெமக்குத் தானுயிராய் ஞான**
**நடத்துமுறை கண்டுபணி நாம்விடுவ தெந்நாளோ.**

(ப-ரை) சடத்துள்-உடலில், உயிர் - உயிரை, போல் - போல, எமக்கு-அடியோங்களுக்கு, தான்-தான், உயிராய் - ஆன்மாவிற்குள் பரமான்மாஆகி, ஞானம் - ஞானத்தை, நடத்தும் - அனுபவிக்கச் செய்கின்ற, முறை - தன்மையை, கண்டு-உணர்ந்து, பணி-அடியோங்கள் தொழில்கள் எல்லாவற்றையும், விடுவது-விடுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சடம்-பூதவுடல். சடத்துள் உயிர்போல் என்றது - உவமை. தானுயிராய் என்றது-உயிர்க்குயிராய் என்பதாம்; அதாவது ஜீவான்மாவிற்குள் பரமான்மாவாக இருத்தலைக் குறிக்கின்றது. 17

**எக்கணுமாந் துன்ப விருட்கடலை விட்டருளாம்**
**மிக்ககரை யேறி வெளிப்படுவ தெந்நாளோ.**

(ப-ரை) எங்கணும்-எவ்விடத்தும், ஆம்-ஆகும், துன்பம் - துன்பமாகிய, இருள்-இருளாகிய, கடலை-சமுத்திரத்தை, விட்டு-நீங்கி, அருளாம்-திருவருளாகிய, மிக்க-மேலாகிய, கரை-கரையில், ஏறி-ஏறி, வெளிப்படுவது - வெளிவருவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) துன்பத்தை இருட்கடல் என்றது உருவகம், துன்பத்தைக் கடல் என்றதற்கு ஏற்பத் திருவருளைக் கரை என்றார். ஏனைய கடற்கரை போலச் சாமானியமானது அன்று. இது முத்திச் சுகந்தருங் கரை என்பார் 'மிக்க கரை' என 'மிக்க' என ஒரு விசேடணங் கொடுத்தார். 18

---

## பொருளியல்பு

**கைவிளக்கின் பின்னேபோய்க் காண்பார்போன் மெய்ஞ்ஞான**
**மெய்விளக்கின் பின்னேபோய் மெய்காண்ப தெந்நாளோ.**

(ப-ரை) கை - கையில் தாங்கிய, விளக்கின் - விளக்கு வெளிச்சத்தின், பின்னே-பின்னாலேயே, போய்-சென்று, காண்பார் - பொருள்களைக் காண்பவர்களை, போல் - போல, மெய் - உண்மை, ஞானம் - ஞானமாகிய, மெய்-உண்மை, விளக்கின்-விளக்கத்தின், பின்னே-பின்னாலேயே, போய்-சென்று, மெய்-மெய்ப்பொருளை, காண்பது-தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று,

(வி-ரை) இதுமுதல் பத்தொன்பது கண்ணிகள் மெய்ப்பொருளாகிய இறைவனின் தன்மையைக் கூறுதலினால் இப்பகுதிக்குப் பொருளியல்பு எனப் பெயர் சூட்டப்பெற்றது. கைவிளக்கின் பின்னேபோய் என்பது-கையில் தாங்கிய விளக்கின் வெளிச்ச உதவியால் வழிக்கொண்டு சென்று பொருள்களைக் காண்டலைக் குறித்தது. 1

கேடில்பசு பாசமெல்லாங் கீழ்ப்படவுந் தானேமே
லாடுஞ் சுகப்பொருளுக் கன்புறுவ தெந்நாளோ.

(ப-ரை) கேடு - அழிவு, இல்-இல்லாத, பசு-பசுத்துவமும், பாசம்-பாசத் தன்மையும், எல்லாம் - எல்லாம், கீழ்ப்படவும்-கீழாகவும், தானே-பதியாகிய தானே, மேல் - இவ் இரண்டினுக்கும் மேலாகி, ஆடும் - நடிக்கின்ற, சுகம்-ஆனந்தமயமாகிய, பொருளுக்கு - பதிப்பொருளுக்கு, அன்புறுவது - அன்பு வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பசு பாசம் அனாதி நித்தியப் பொருள் எனச் சித்தாந்தங் கூறலின் 'கேடில் பசுபாச மெல்லாம்' என்றார். சுகப்பொருள்-ஆனந்தவடிவானகிய சிவபெருமான். 2

ஆணவத்தை நீக்கி அறிவூடே யைவகையாக்
காணவத்தைக் கப்பாலைக் காணுநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆணவத்தை-ஆணவமலத்தை, நீக்கி-அகற்றி, அறிவு-அறிவின், ஊடே-உள்ளே, ஐ-ஐந்து, வகையா-வகையாக, காண்-காணப்படுகின்ற, அவத்தைக்கு - பஞ்சாவஸ்தைகளுக்கும், அப்பாலை - அப்பாற்பட்ட பொருளாகிய இறைவனை, காணும்-தரிசிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆணவம் - ஆணவமலம். ஆணவாதி மலங்களாவன:—ஆணவமலம், காமியமலம், கன்மமலம் என்பனவாம். இனி ஆணவமலம் ஒன்றொழியவே ஏனைமலங்கள் எல்லாம் ஒழிந்திடும் ஆதலின் ஆணவத்தை நீக்கி என ஆணவமலம் ஒன்றையே குறித்தார் என்பாரும் உண்டு. 3

நீக்கப் பிரியா நினைக்கமறக் கக்கூடாப்
போக்குவர வற்ற பொருளணைவ தெந்நாளோ.

(ப-ரை) நீக்க-பிரிக்கவும், பிரியா-நீங்காத, நினைக்க-நினைக்கவும், மறக்க-மறக்கவும், கூடா-கூடாத, போக்கு-போக்கும், வரவு-வரவும், அற்ற-இல்லாத, பொருள்-இறைவனை, அணைவது-கூடுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் ஆன்மாக்களுடன் அன்னியமாக இருக்கின்றானாதலின் 'நீக்கப் பிரியா' என்றார். இறைவன் மனத்தினிடத்தே அத்துவிதக் கலப்பாகக்கலந்து இருப்பவன் ஆதலின் 'நினைக்க மறக்கக்கூடா' என்றார். இறைவன் அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாக சர்வ வியாபகமாக இருப்பவனாதலின் 'போக்குவரவு அற்ற' என்றார். 4

அண்டருக்கு மெய்ப்பில்வைப்பா மாரமுதை என்னகத்
கண்டுகொண்டு நின்று களிக்குநா ளெந்நாளோ. [திற்



(ப-ரை) அண்டருக்கும் - தேவர்களுக்கும், எய்ப்பில் - உற்றவிடத்து உதவும் பொருட்டு, வைப்பாம் - வைக்கப்பெற்ற க்ஷேமநிதியாகும், ஆர்-அரிய, அமுதை-அமிர்தத்தை, என் - அடியேனின், அகத்தில் - மனத்தினிடத்தே, கண்டு-தரிசித்து, கொண்டு - கொண்டு, நின்று-நின்று, களிக்கும் - மகிழும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அண்டர்-தேவர். எய்ப்பில் வைப்பு-இளைத்தகாலத்து வேண்டுமென்று புதைத்து வைத்த பொருள். 5

காட்டுந் திருவருளே கண்ணாகக் கண்டுபர
வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) காட்டும்-உலகப்பொருள்களை எல்லாம் அனுபவிக்குமாறு காட்டித்தருகின்ற, திருஅருளே - திருவருளையே, கண்ணா-கண்ணாக, கொண்டு-கொண்டு, பரம் - மேலாகிய, வீட்டு-மோக்ஷத்து, இன்பம் - சுகத்தைத்தரும், மெய்-உண்மையான, பொருளை - பொருளாகிய கடவுளை, மேவும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'கண்ணாக்கொண்டு' என்றதற்குக் கருவியாகக்கொண்டு, துணையாக்கொண்டு என உரைப்பினும் அமையும். 'பரவிட்டு இன்பம்' இதில் 'பரம்' என்றது வீட்டிற்கு அடைமொழியாக நின்றது. பரம்-உயர்வு. 6

நானான தன்மை நழுவியே எவ்வுயிர்க்குந்
தானான வுண்மைதனைச் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) நான்-நான் என்னும் அகங்காரம், ஆன-உண்டாகிய, தன்மை-குணம், நழுவியே-நழுவப்பெற்று, எ-எந்த, உயிர்க்கும்-உயிர்களுக்கும், தான்-தானே, ஆன-ஆதாரமாயிருக்கின்ற, உண்மை-மெய்யாகிய பொருள், தன்னை-தன்னை, சாரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நான் ஆனதன்மை என்றது-நான் என முனைந்து நிற்கும் அகங்கார தத்துவத்தை. இறைவன் ஒருவனே எல்லாப் பொருள்களுக்கும் முதல்வனாகவும் ஆதாரனாகவும் இருத்தலின் 'தானான உண்மைதனை' என்றார். 7

சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர்பால்
வந்தபொருள் எம்மையுந்தான் வாழ்விப்ப தெந்நாளோ.

(ப-ரை) சிந்தை-நினைப்பு, மறந்து-ஒழிந்து, திருவருள்-திருவருள்மயம், ஆய்-ஆகி, நிற்பவர்-நிற்கும் ஞானிகள், பால்-இடத்து, வந்த-வந்த, பொருள்-சிவம், எம்மையும்தான்-அடியோங்களையுங்கூட, வாழ்விப்பது - வாழ்விப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பொருள்-பரசிவத்தை. வாழ்விப்பது என்றது-மோக்ஷவீட்டிலிருந்து சிவானந்தபோகத்தை அனுபவித்துக்கொண்டு இருக்கச்செய்தலைக் குறித்தது. 8

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கும் வியாபகமாய்
உள்ளவொன்றை யுள்ளபடி யோருநா ளெந்நாளோ.

(ப-ரை) எள்ளுக்குள் - எள்ளுக்குள்ளே, எண்ணெய் - எண்ணெயை, போல்-போல, எங்கும்-எவ்விடத்தும், வியாபகம்-வியாபகம், ஆய்-ஆக, உள்ள-உள்ள, ஒன்றை - ஒருபொருளை, உள்ளபடி - உள்ளவாறு, ஒரும் - உணரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எள்ளிலிருந்து வரும் நெய் என்னும் பொருள் குறித்து 'எண்ணெய்' என ஆயிற்று. நெய் என்பது - நெய்ப்புடையது என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். 9

அருவுருவ மெல்லா மகன்றுஅதுவா யான
பொருளெமக்கு வந்து புலப்படுவ தெந்நாளோ.

(ப-ரை) அருவு - அருவமும், உருவம் - உருவமும் என்கின்ற, எல்லாம்-எல்லாம், அகன்று - நீங்கி, அதுவாய் - அது என்னும் தற்பதப்பொருளாய், ஆன - ஆகிய, பொருள் - பொருளானது, எமக்கு-அடியோங்களுக்கு, வந்து-வந்து, புலப்படுவது-தோன்றுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அருவு - உருவம் இல்லாமை. உருவம் - உருவம் உடைமை. அதுவாய் ஆன என்றது - எல்லாந் தானான சிவத்தை. புலப்படுவது-மனக் கண்ணுக்குத் தோன்றல். 10

ஆரணமுங் காணு வகண்டிதா காரபரி
பூரணம்வந் தெம்மைப் பொருந்துநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆரணமும் - வேதங்களும், காணு-காணக்கூடாத, அகண்டித-கண்டிக்கப்படாத அண்ட, ஆகாரம் - வடிவத்தோடுகூடிய, பரிபூரணம்-பரிபூரணப்பொருள், வந்து-வந்து, எம்மை - எம்மை, பொருந்தும்-அணைகின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆரணம் - வேதத்தை. அகண்டித ஆகாரம் - விரிந்தவடிவை. பரிபூரணம் - எங்கும் வியாபித்து நிறைந்துநிற்கும்பொருள். இறைவன் எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருப்பவனாயினும் மாயையால் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களுக்கு மனக்கண்ணுக்குத் தோன்றநின்று தானாந்தத்துவமாகி நிற்றலை யுணர்த்திற்று. 11

சத்தொடுசித் தாகித் தயங்கியவா னந்தபரி
சுத்த வகண்டசிவந் தோன்றுநா ளெந்நாளோ.

(ப-ரை) சத்தொடு - உண்மையுடன், சித்து - அறிவும், ஆகி-ஆகி, தயங்கிய-விளங்குகின்ற, ஆனந்தம்-ஆனந்தமயமான, பரி-மிகுந்த, சுத்தம்-சுத்தமாகிய, அகண்ட-அகண்டாகார, சிவம்-சிவமானது, தோன்றும் - தோன்றுகின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.



(வி-ரை) சத்து-உண்மைப்பொருள். சித்து - அறிவை, இறைவன் உண்மையும், அறிவும், ஆனந்தமயனும், பரிசுத்தனும், அகண்டனும் ஆதலின் 'சத்தொடு சித்தாகி ... ... வகண்டசிவம்' என்றார். 12

எங்கெங்கும் பார்த்தாலு மின்புருவாய் நீக்கமின்றித்
தங்குந் தனிப்பொருளைச் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) எங்கெங்கும்-எவ்வெவ் விடங்களில், பார்த்தாலும்-பார்த்தாலும், இன்பு-சுக, உருவாய்-வடிவாய், நீக்கம்-நீங்குதல், இன்றி-இல்லாமல், தங்கும்-பொருந்தியிருக்கின்ற, தனி-ஒப்பற்ற, பொருளை-இறைவனை, சாரும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் அங்கு இங்கு எங்கு எனாதபடி எங்கும் நிறைந்து நிற்பவன் ஆதலினாலும், இன்பவடிவன் ஆதலினாலும் 'எங்கெங்கு பார்த்தாலும் இன்பு உருவாய் நீக்கமின்றித் தங்கும்' என்றார். இறைவன் ஒப்புயர்வின்றி தானே எல்லாரிலும் உயர்ந்தவனாய் தனக்குத் தானேயன்றி பிறிதோர் சமத்துவம் இல்லாதவனாக இருத்தலின் 'தனிப்பொருளை' என்றார். 13

அடிமுடிகாட் டாதசுத்த வம்பரமாஞ் சோதிக்
கடுவெளிவந் தென்னைக் கலக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) அடி-ஆதியும், முடி - அந்தமும், காட்டாத - இல்லாத, சுத்த-சுத்த, அம்பரமாம்-ஆகாயமாகிய, சோதி - அருட்சோதி, கடு-வெறு, வெளி-வெளி, வந்து-வந்து, என்னை-அடியேனை, கலக்கும்-பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'காட்டாத' ஈண்டு இல்லாத என்னும் பொருளது. சுத்த அம்பரம்-சுத்த ஆகாயத்தை. சோதிக்கடுவெளி-தேஜோராசி என்கிற கடுவெளி. ()

ஒன்றனையுங் காட்டா வுளத்திருளைச் சூறையிட்டு
நின்றபரஞ் சோதியுட னிற்குநா ளெந்நாளோ.

(ப-ரை) ஒன்றனையும்-உலகப்பொருள் எதனையும், காட்டா-தோன்றாதபடிச் செய்கின்ற, உளத்து - மனத்தகத்துள்ள, இருளை - இருளாகிய அஞ்ஞானத்தை, சூறையிட்டு - அடியோடு தொலைத்து, நின்ற-எழுந்தருளிவந்து நின்ற, பரம் - உயர்ந்த, சோதியுடன்-சோதியுடனே, நிற்கும்-கலந்துநிற்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அஞ்ஞானம் உலகப்பொருள் எதனையும் உள்ளபடி காட்டாது ஆதலின் 'ஒன்றனையும் காட்டா' என்றார். உளத்து இருள்-அஞ்ஞானத்தை. பரஞ்சோதி-பரசிவத்தை. 15

எந்தச் சமய மிசைந்துமறி வூடறிவாய்
வந்தபொருளே பொருளா வாஞ்சிப்ப தெந்நாளோ.

(ப-ரை) எந்த - எந்த, சமயம் - சமயங்களோடும், இசைந்து-பொருந்தியிருந்தும், அறிவூடு-அறிவுக்குள்ளே, அறிவு-அறிவு, ஆய்-ஆகி, வந்த-தோன்

தியய, பொருளே-பொருளையே, பொருளா-பொருளாக, வாஞ்சிப்பது-பிரியம் வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எந்தசமயம் - சமயகோடிகளை. பொருளே பொருள் என்றது-அறிவுக்கு அறிவாய் இருக்கும் அந்தப்பொருளே பரசிவப்பொருள் என்பதாம். 16

எவ்வாறிங் குற்றுணர்ந்தார் யாவ ரவர்தமக்கே
அவ்வாறாய் நின்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.

(ப-ரை) இங்கு - இவ்விடத்து, எ - எந்த, ஆறு - விதத்தாலும், உற்று-பொருந்தி ஆராய்ந்து, உணர்ந்தார் - அறிந்தவர்கள், யாவர் - யாவர்களோ, அவர்-அவர்கள், தமக்கே - தமக்கே, அ - அவர்கள் விரும்பிய அந்த, ஆறாய்-விதமாய், நின்ற - தோன்றுகின்ற, பொருட்கு - பொருளின்மேல், அன்பு-அன்பு, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) உற்றுணர்தல் - ஆராய்ந்து அறிதல். நின்றபொருள்-சிவத்தை. 17

பெண்ணா ணலியெனவும் பேசாம லென்னறிவின்
கண்ணூடே நின்றவொன்றைக் காணுநா ளெந்நாளோ.

(ப-ரை) பெண் - பெண் எனவும், ஆண் - ஆண் எனவும், அலி - அலி எனவும், பேசாமல்-சொல்லுதற்கரியதாய், என்-அடியேனின், அறிவின்கண்-அறிவின் இடத்தே, ஊடே - உள்ளே, நின்ற - நிலைத்துநின்ற, ஒன்றை - ஒப்பற்ற பொருளாகிய இறைவனை, காணும் - தரிசிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் அவன் அவள் அது எனற்கரிய தன்மையனாகியும் அவனாகியும் அவளாகியும் அதுவாகியும் இயைபவன் ஆதலின் 'பெண்ணா ணலியெனவும் பேசாமல்' என்றார். அலி என்றது-ஆணுமல்லாது பெண்ணு மல்லாது இரண்டுருவுந்தாங்கிய உருவை. 18

நினைப்பு மறப்புமற நின்ற பரஞ்சோதி
தனைப்புலமா வென்னறிவிற் சந்திப்ப தெந்நாளோ.

(ப-ரை) நினைப்பு - நினைத்தலும், மறப்பு - மறத்தலும், அற - ஒழியவே, நின்ற-அந்த இடத்திலே நின்றருளும், பரஞ்சோதி-பரஞ்சோதியை, புலமா-வெளிப்படையாக, என்-அடியேனின், அறிவில் - அறிவினிடத்தே, சந்திப்பது-சந்திக்கப்பெறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நினைப்பு - தற்போதச்செயலாகிய நினைப்பை. மறப்பு - அஞ்ஞானத்தால் உண்டாவதாகிய மறைப்பை. பரஞ்சோதி-சிவபரஞ்சுடரை. 19

---



## ஆனந்தவியல்பு

பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணாம னிற்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பேச்சு - பேச்சும், மூச்சு - மூச்சும், இல்லாத-இல்லாத, பேர்-பெரிய, இன்ப - ஆனந்த, வெள்ளம் - சாகரத்தை, உற்று-அடைந்து, நீச்சு-நீச்சு, நிலை-நிலையும், காணாமல்-தோன்றாதபடி, நிற்கும்-நின்றிருக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சிவானந்தவெள்ளத்துள் புகுந்தவர் மாயாகாரியமாகிய பேச்சற்று இருப்பர் ஆதலினாலும், மூச்சற்று இருப்பர் ஆதலினாலும் 'பேச்சு மூச்சு இல்லாதபேர் இன்பவெள்ளம்' என்றார். பேர் இன்பவெள்ளம் என்றது-சிவானந்தப்பெருக்கை. பேரின்பமிகுதியை வெள்ளம் எனக் கூறியது உருவகம். 1

சித்தந் தெளிந்தோர் தெளிவிற் றெளிவான
சுத்த சுகக்கடலுட் டோயுநா ளெந்நாளோ.

(ப-ரை) சித்தம்-மனம், தெளிந்தோர் - தெளிந்தவர்களுடைய, தெளிவில்-தெளிவினிடத்தே, தெளிவு-தெளிந்தபொருள், ஆன - ஆகிய, சுத்த-சுத்தமாகிய, சுகம் - சிவானந்த, கடலுள் - கடலுக்குள்ளே, தோயும் - படியும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சித்தந் தெளிந்தோர் என்றது - ஞானிகளை. சித்தந்தெளிதலாவது மனமருள் அற்றுத் திருவருட்சகாயத்தால் தெருளடைதல். தெளிவில் என்றது ஞானத்தெளிவை. சுகம்-சிவானந்தத்தை. 2

சிற்றின்ப முண்டூழ் சிதைய அனந் தங்கடல்போல்
முற்றின்ப வெள்ளமெமை மூடுநா ளெந்நாளோ.

(ப-ரை) சிற்றின்பம் - சிற்றின்பத்தை, உண்டு-அநுபவித்தற்கு உரிய, ஊழ்-ஊழ்வினை, சிதைய - கெடும்படி, அநந்தம் - அநேகம், கடல்-கடல்களை, போல்-போல, முற்று - பெருகிமுற்றிய, இன்பம் - சிவானந்த, வெள்ளம்-கடலானது, எமை-அடியேங்களை, மூடும்-மூடிக்கொள்ளும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சிற்றின்பம்-உலக இன்பங்கள். சிவானந்தம் எய்தியவர்களுக்கு வினையால்வரும் இன்பதுன்பங்கள் இல்லையாதலினால் 'சிற்றின்பம் உண்டு ஊழ் சிதைய' என்றார். 'எமை' இது எம்மை என்பதன் தொகுத்தல் விகாரம். 3

எல்லையில்பே ரின்பமய மெப்படியென் றோர்தமக்குச்
சொல்லறியா வூமர்கள்போற் சொல்லுநா ளெந்நாளோ.

(ப-ரை) எல்லை-அளவு, இல்-இல்லாத, பேர்-பெரிய, இன்பம்-சிவானந்த மயம்-மயம், எப்படி - எந்தவிதமாக இருக்கின்றது, என்றோர் - என்றவர்கள், தமக்கு-தமக்கு, சொல்-வைகரிவாக்கினால் சொல்ல, அறியா-அறியாத, ஊமர் கள்-ஊமைகள், போல்-போல (மௌனநிலையிலிருந்து), சொல்லும்-குறிப்பாக உணர்த்தும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எல்லையில் பேரின்பம் என்றது - வரம்புகாண முடியாதபடிப் பரந்துள்ளபேரின்பம் என்க. சொல் அறியா ஊமர்கள்போல் சொல்லும் என்றது-பேசத்தெரியாத ஊமையைப்போல் மௌனநிலையில் இருந்து குறிப் பால் உணர்த்தும் என்பது பொருளாம். 4

**அண்டரண்ட கோடி யனைத்து முகாந்தவெள்ளங்**
**கொண்டதெனப் பேரின்பங் கூடுநா ளெந்நாளோ.**

(ப-ரை) அண்டர் - தேவர்களின், அண்டம் - அண்டங்களின், கோடி-கோடி, அனைத்தும் - எல்லாம், உகாந்த - உகமுடிவின், வெள்ளம்-வெள்ளம், கொண்டது-கவர்ந்தது, என-என்று கூறும்படி, பேர்-பெரிய, இன்பம்-ஆநந்த வெள்ளம், கூடும் - எங்களைவந்து சேரும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உகாந்தவெள்ளம் என்றது-பிரளய வெள்ளத்தை. என-இது உவமைஉருபு. பேர் இன்பம் என்றது-சிவாநந்தப்பெருக்கை. 5

**ஆதியந்த மில்லாத வாதிய னாதியெனுஞ்**
**சோதியின்பத் தூடே துளையுநா ளெந்நாளோ.**

(ப-ரை) ஆதி-ஆரம்பமும், அந்தம் - முடிவும், இல்லாத - இல்லாததும், ஆதி - எல்லாப்பொருட்கும் ஆதியாக இருப்பதும், அனாதி - முடிவற்றதும், எனும்-என்று சொல்லப்பெறும், சோதி-சுயஞ்சோதியாகிய, இன்பத்து-சிவா நந்தத்து, ஊடே-உள்ளே, துளையும்-முழுகும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆதி அனாதி என்றது-தலைமை நோக்கி 'ஆதி' என்றும் முடி வின்மை நோக்கி 'அனாதி' என்றும் விவகரிக்கப் பெறுகின்ற என்பது பொருளாம். 6

**சாலோக மாதி சவுக்கியமும் விட்டநம்பால்**
**மேலான ஞானவின்ப மேவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) சாலோகம்-சாலோகமுத்தி, ஆதி-முதலிய, சவுக்கியமும் - சவுக் கியங்களும், விட்ட - நீக்கின, நம்பால் - நம்மிடத்து, மேலான - மேலாகிய, ஞானம்-ஞானம், இன்பம்-சுகம், மேவும்-பொருந்தும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சாலோக, சாரூப, சாமீப, சாயுச்சியங்களை 'சாலோகமாதி சவுக்கியமும்' என்றார். சாலோகம்-இறைவன் வசிக்கும் அதே உலகத்து வசிக்கும் பதவி. சாரூபம்-இறைவன் ரூபத்தை எய்தும்பதவி. சாமீபம்-இறை



வனுக்குச் சமீபித்து இருக்குந் தன்மை. சாயுச்சியம்-இறைவனோடு கலக் கும் பதவி. 7

**தற்பரத்தி னுள்ளேயுஞ் சாலோக மாதியென்னும்**
**பொற்பறிந்தா னந்தம் பொருந்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) தற்பரத்தின் - தான் சிவமாந்தன்மையுணர்ந்த, உள்ளேயும்-பிறகும், சாலோகம் - சாலோகம், ஆதி - முதலிய, எனும் - உண்டென்னும், பொற்பு-கருத்தை, அறிந்து - உணர்ந்து, ஆனந்தம்-சுகத்தை, பொருந்தும்-அடையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தற்பரம் - சோகம்பாவனையால் தானே பரனாதல், இதனையே தான் சிவமாந்தன்மை யுணர்தல் என்றும். பொற்பு-அழகு; ஈண்டு அழகிய கருத்தின்மேல் நின்றது. 8

**உள்ளத்தி னுள்ளேதா னூறுஞ் சிவானந்த**
**வெள்ளந் திளைந்து விடாய்தீர்வ தெந்நாளோ.**

(ப-ரை) உள்ளத்தின்-மனத்தின், உள்ளே - உள்ளே, தான்-தானாகவே, ஊறும்-சுரக்கின்ற, சிவானந்தம்-சிவானந்தமாகிய, வெள்ளம்-சமுத்திரத்தில், திளைந்து-முழுகி, விடாய்-பிரபஞ்சமாயையால் உண்டாகும் வெப்பம், தீர்வது-நீங்கப் பெறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உள்ளம்-மனம். விடாய் - தாகம்; ஈண்டு பிரபஞ்சமாயையால் ஏற்படும் வெப்பத்தை உணர்த்திற்று. 9

**கன்னலுடன் முக்கனியுங் கற்கண்டுஞ் சீனியுமாய்**
**மன்னுமின்ப வாரமுதை வாய்மடுப்ப தெந்நாளோ.**

(ப-ரை) கன்னலுடன் - கருப்பஞ்சாற்றுடனே, மு - மூன்று, கனியும்-கனிகளும், கற்கண்டும்-கற்கண்டும், சீனியும்-சீனிச்சக்கரையும், ஆய் - போல ஆகி, மன்னும்-நிலைபெற்றிருக்கின்ற, இன்பம்-ஆனந்தமயமாகிய, ஆர்-அரிய, அமுதை - அமிர்தத்தை, வாய்மடுப்பது - வாய்மடுத்துப்பருகுவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) முக்கனி-வாழைக்கனி, பலாக்கனி, மாங்கனிகளை. 10

**மண்ணா டுழன்ற மயக்கமெல்லாந் தீர்ந்திடவும்**
**விண்ணா டெழுந்தசுக மேவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) மண்-உலகத்தின், ஊடு-இடத்தே, உழன்ற-சுழன்று அலைந்த, மயக்கம் - மயக்கம், எல்லாம்-எல்லாமும், தீர்ந்திடவும்-தீரும்படி, விண்-சிதா காயத்தின், ஊடு - ஊடே, எழுந்த - உண்டாகிய, சுகம் - சிவானந்தசுகத்தை, மேவும்-பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மண் - ஆகுபெயர். உழன்ற - பிரபஞ்சமாயையால் அலைந்த. விண் - ஆகாயத்தை. சுகம் - சிவானந்தப்பெருஞ்சுகத்தை. தீர்ந்திடவும்-என்ற தன்கண் உள்ள உம்மை பொருட்டுப்பொருளில் வந்தது. 11

**கானற் சலம்போன்ற கட்டுழலைப் பொய்திர**
**வானமுத வாவி மருவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) கானல்-கானலாகிய, சலம்-நீரை, போன்ற-ஒத்த, கட்டு - பிரபஞ்சமாயையிற் கட்டுண்டு, உழலை - துன்பப்படுவதாகிய, பொய்-பொய்மைத் தன்மை, தீர-நீங்க, வான்-உயர்ந்த, அமுதம்-சிவானந்த அமிருதம் நிறைந்த, வாவி-தடாகத்தில், மருவும் - பொருந்தும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கானல் - கோடைக்காலத்தை. 'கானல் சலம்' இது பண்புத் தொகை; கானலாகிய சலம் என விரியும். கானல் சலம்போல் இருத்தலின் சலம் என்றார்.
12

**தீங்கரும்பென் றாலினியா தின்றா லினிப்பனபோற்**
**பாங்குறும்பே ரின்பம் படைக்குநா ளெந்நாளோ.**

(ப-ரை) தீம்-இனிய, கரும்பு-கரும்பு, என்றால்-என்று வாயாற் கூறினால், இனியா-இனித்துவிடாது, தின்றால்-வாயில்வைத்து மென்று அக்கரும்பைத் தின்றால், இனிப்பன - இனித்திருக்குந் தன்மையை, போல் - போல, பாங்குறும்-அனுபவத்திலே பேரின்பத்தைத்தரும், பேர் - பெரிய, இன்பம்-சிவானந்த சுகத்தை, படைக்கும் - பெறும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கரும்பென்று சொன்னால் தித்திக்குமா? தின்றாலன்றோ இனிக்கும் என்னும் பழமொழியை இக்கண்ணியில் பிரயோகித்திருக்கிறார். பேரின்பம்-சிவானந்தப் பேரின்பத்தை.
13

**புண்ணியபா வங்கள் பொருந்தாமெய் யன்பரெல்லா**
**நண்ணியபே ரின்பசுக நாமணைவ தெந்நாளோ.**

(ப-ரை) புண்ணியம் - புண்ணியப்பயன்களையும், பாவங்கள்-பாவப்பயன்களையும், பொருந்தா - பொருந்தாத, மெய்-உண்மை, அன்பர்-அடியார்கள், எல்லாம்-எல்லாரும், நண்ணிய - அடைந்த, பேர்-பெரிய, இன்பம்-சிவானந்த, சுகத்தை - பெருஞ்சுகத்தை, நாம் - அடியோங்கள், அணைவது - அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) புண்ணியபாவங்கள் பொருந்தா என்றது - புண்ணியப்பயனாகிய இன்பத்தையும் பாவப்பயனாகிய துன்பத்தையும் அடையாத என்பது பொருளாம். பேரின்பசுகம் - சிவானந்தப்பெரும் போகத்தை.
14

---



## அன்பு நிலைமை

**தக்கரவி கண்ட சரோருகம்போ லென்னிதய**
**மிக்கவருள் கண்டு விகசிப்ப தெந்நாளோ.**

(ப-ரை) தக்க - தனக்குப்பொருந்தியதாகிய, ரவி - சூரியனை, கண்ட-கண்ட, சரோருகம் - தாமரை, போல்-போல, என்-அடியேனின், இதயம்-மனமானது, மிக்க - மேலானதாகிய, அருள் - திருவருளை, கண்டு - கண்டு, விகசிப்பது-மலர்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ரவி, சரோருகம், விகசிப்பது, என்பன வடசொற்கள். ரவி-இது இருளை அழிப்பது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். ரவிகண்ட சரோருகம் - இது உவமானம். என் இதயம் மிக்க அருள்கண்டு விகசிப்பது உபமேயம்.
1

**வானமுகில் கண்ட மயூரபக்ஷி போலவையன்**
**ஞானநடங் கண்டு நடிக்குநா ளெந்நாளோ.**

(ப-ரை) வானம்-ஆகாயத்தினிடத்தே உள்ள, முகில்-மேகத்தை, கண்ட-கண்ட, மயூரம்-மயில், பக்ஷி - பக்ஷிகள், போல - போல, ஐயன் - இறைவன், ஞான-ஞான, நடம் - நடத்தை, கண்டு-பார்த்து, நடக்கும் - நடிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மயில்களுக்கு மேகத்தைக்கண்டால் மகிழ்வு உண்டாகும் ஆதலின் 'வான முகில்கண்ட மயூர பக்ஷிபோல' என்றார். 'கார்பெற்ற தோகையோ' என்றார் புகழேந்தியாரும். இது உபமானம். 'ஐயன் ஞான நடங்கண்டு நடிக்குநாள்' என்பது உபமேயம்.
2

**சந்திரனை நாடுஞ் சகோரபக்ஷி போலறிவில்**
**வந்தபரஞ் சோதியையாம் வாஞ்சிப்ப தெந்நாளோ.**

(ப-ரை) சந்திரனை - சந்திரனையே, நாடும் - விரும்புகின்ற, சகோரம்-சகோர, பக்ஷி-பறவை, போல - போல, அறிவில் - அறிவினிடத்தே, வந்த-தோன்றின, பரஞ்சோதியை-பரஞ்சோதியை, யாம் - அடியோம், வாஞ்சிப்பது-விரும்புவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'சந்திரனை நாடும் சகோரப் பக்ஷிபோல' என்பது உபமானம். 'அறிவில்வந்த பரஞ்சோதியை யாம் வாஞ்சிப்பது எந்நாளோ' என்பது உபமேயம். 'சகோரம்' இது ஒருவகைப்பக்ஷி. இது சந்திரன் கதிர்களை உண்டு வளர்கின்றது என்பர். அறிவில்வந்த பரஞ்சோதியை என்றது-இறைவனை. (வாஞ்சிப்பது-விரும்புவது).
3

**குத்திரமெய்ப் புற்றகத்துக் குண்டலிப்பாம் பொன்றாட்**
**சித்தனையென் கண்ணாற் றெரிசிப்ப தெந்நாளோ. [டுஞ்**

(ப-ரை) குத்திரம் - வஞ்சகம்பொருந்திய, மெய் - சரீரமாகிய, புற்று-புற்றின், அகத்து - உள்ளே, குண்டலி-குண்டலிசத்தியாகிய, பாம்பு-பாம்பு,

ஒன்று-ஒன்று, ஆட்டும்-ஆட்டும், சித்தனை-சித்தனாகிய இறைவனை, என்-அடியேனின், கண்ணால்-கண்ணினால், தெரிசிப்பது-தரிசிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) குத்திரம்மெய் - இது இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகை. மெய்புற்று-இது மெய்யாகிய புற்று என விரிதலின் பண்புத்தொகை. மெய்யைப் புற்று என்றது உருவகம். 4

அந்தரத்தே நின்றாடு மானந்தக் கூத்தனுக்கென்
சிந்தை திறைகொடுத்துச் சேவிப்ப தெந்நாளோ.

(ப-ரை) அந்தரத்து - சிதாகாயவெளியிலே, நின்று-எழுந்தருளிநின்று, ஆடும்-கிர்த்தனத்தைச்செய்யும், ஆனந்தம்-ஞானானந்த, கூத்தனுக்கு - கூத்தைச்செய்யும் நடராஜப்பிரபுவுக்கு, என்-அடியேனுடைய, சிந்தை-மனத்தை, திறை - கப்பணமாக, கொடுத்து - கொடுத்து, சேவிப்பது-சேவித்துக்கொண்டிருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அந்தரம் - ஆகாயம். ஆனந்தக்கூத்தன் என்றது - நடராஜமூர்த்தியை. சிந்தைதிறை கொடுத்தலாவது-மனத்தை அர்ப்பணஞ்செய்தல். சேவிப்பது-வணங்குவது. 5

கள்ளனிவ னென்றுமெள்ளக் கைவிடுதல் காரியமோ
வள்ளலே யென்று வருந்துநா ளெந்நாளோ.

(ப-ரை) இவன்-இவன், கள்ளன் - கள்வன், என்று - என்று இகழ்ந்து, மெள்ள - மெதுவாக, கைவிடுதல் - கைவிட்டுவிடுதல், காரியமோ - காரியமாகுமோ, வள்ளலே - வள்ளலே, என்று - என்றுகூறி முறையிட்டு, வருந்தும்-மனம் வருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உலகத்தில் ஞானவான்போல் நடித்து வருகின்றமையாலும், உண்மையில் ஞானம் இன்மையாலும் 'கள்வன் இவன்' என்றார். இறைவன்-சிவாநந்தம். வருந்துதல்-துக்கித்தல். 6

விண்ணாடர் காணா விமலா பரஞ்சோதி
அண்ணாவா வாஎன் றரற்றுநா ளெந்நாளோ.

(ப-ரை) விண்ணாடர்-தேவர்களும், காணா - காணமுடியாத, விமலர்-விமலரே!, பரஞ்சோதி - பரஞ்சோதியே!, அண்ணா - அண்ணா!, வாவா - வாவா, என்று-என்றுகூறி, அரற்றும்-பிரலாபிக்கும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'விண்ணாடு' இது விண்ணாகியநாடு என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இறைவன் உயர்ந்தவனும், சோதிப்பிரகாசனும் ஆதலின் 'பரஞ்சோதி' என அழைக்கப்பெற்றான். 7

ஏதேது செய்தாலு மென்பணிபோய் நின்பணியாம்
மாதேவா என்று வருந்துநா ளெந்நாளோ.



(ப-ரை) ஏதேது-எந்த எந்தத் தொழில்களை, செய்தாலும்-செய்தாலும், என்-அடியேனுடைய, பணி - தொழில்கள் எல்லாம், போய் - எனதல்லாதது ஆகப்போய், நின் - தேவரீரது, பணியாம் - தொழில்களாகும், (ஆதலால்) மாதேவா-மகாதேவா! அருள்புரிக, என்று-என்று, வருந்தும்-இரங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தான் சுதந்தரஹீனன் ஆதலின், பரதந்தரனாதலின் இறைவன் எவ்வுயிர்க்கும் உயிராய் நின்று இயக்குகின்றானாதலின் 'என்பணி போய் நின்பணியாம்' என்றார். 8

பண்டுங்கா ணேனான் பழம்பொருளே இன்றுமுனைக்
கண்டுங்கா ணேனெனவுங் கைகுவிப்ப தெந்நாளோ.

(ப-ரை) பழம் பழமையாகிய, பொருளே-பொருளே! தேவரீரை, நான்-அடியேன், பண்டு - முன்னும், காணேன் - தேவரீரைக்காணேன், இன்றும்-இன்றும், உனை - தேவரீரை, கண்டும் - பார்த்தும், காணேன் - தேவரீரைக் காணாதவனாக இருக்கின்றேன், எனவும் - என்று சொல்லியும், கை-கரங்களை, குவிப்பது-கூப்புவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் பண்டைப் பழம் பொருளுக்கும் பழம் பொருளாதலின் 'பழம்பொருளே' என்றார். 9

பொங்கேத மான புழுக்கமெல்லாந் தீரஇன்பம்
எங்கே யெங்கேயென் றிரங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பொங்கு - மிகுகின்ற, ஏதம் - குற்றத்தினால், ஆம் - ஆகின்ற, புழுக்கம் - மனப்புழுக்கம், எல்லாம்-எல்லாம், தீர-நீங்க, இன்பம்-சிவாநந்தப் பேரின்பம், எங்கே-எங்கே, எங்கே - எங்கே, என்று-என்றுகூறி, இரங்கும்-வருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பொங்கேதம் - இது பொங்கு+ஏதம் என்னும் இருசொல் ஒருசந்தி. 10

கடலின்மடை கண்டதுபோற் கண்ணீரா றாக
உடல்வெதும்பி மூர்ச்சித் துருகுநா ளெந்நாளோ.

(ப-ரை) கடலின் - கடலினுடைய, மடை-மடை, கண்டது-உடைந்தது, போல்-போல, கண்ணீர்-கண்ணின்நீர், ஆறு-ஆறுபோல, ஆக-பெருக, உடல்-உடம்பானது, வெதும்பி-வெதும்பி, மூர்ச்சித்து-மூர்ச்சித்து, உருகும்-மனம் உருகும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மடைகண்டது-இதில் கண்டது என்பதற்குத் திறந்துபடுதல்; உடைதல் என்பது பொருளாம். ஆறுஆக - இது ஆறுபோல் ஆக என விரிதலின் உவமத்தொகை. 'போல்' என்னும் உருபு தொக்குநின்றது. 11

புலர்ந்தேன் முகஞ்சருகாய்ப் போனே னிற்காண
அலந்தேனென் றேங்கி யழுங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) முகம்-அடியேனின் முகம், புலர்ந்தேன்-வாடினேன், சருகாய்-உடம்பு சருகாக, போனேன்-போயினேன், எனில்-அடியேனிடத்தே, காண-தேவரீரைத் தரிசிக்கும்பொருட்டு, அலந்தேன்-அலமந்தேன், என்று-என்று சொல்லி, ஏங்கி-இரங்கி, அழுங்கும்-வருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'சருகாய்ப் போனேன்' என்ற இடத்து உடம்பு என்பது வருவித்துப் பொருள் உரைக்கப்பெற்றது. சருகாய்ப் போதலாவது ஈரப்பசை அற்றுக் காய்ந்து உலர்ந்துபோதல். ஒன்றை விரும்பினூர்க்கு விரும்பிய அப்பொருள் கிடைக்காதகாலத்து முகம்வாடலும் அன்ன ஆகாரம் செல்லாது உடம்பு சருகாதலும் மெய்ப்பாடுக ளென்பதறியக் கிடந்தது. 12

புண்ணீர்மை யாளர் புலம்புமா போற்புலம்பிக்
கண்ணீருங் கம்பலையுங் காட்டுநா ளெந்நாளோ.

(ப-ரை) புண்-தேகத்திற் புண்பட்ட, நீர்மை-தன்மை, ஆளர்-ஆளர்கள், புலம்புமா-புலம்புந்தன்மை, போல-போல, புலம்பி - புலம்பி, கண்-கண்ணின், நீரையும்-நீரையும், கம்பலையும்-நடுக்கத்தையும், காட்டும்-காண்பிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) புலம்பல்-பன்னிப்பன்னி அழுதல். கம்பலை - உடம்பு நடுக்கம். கண்ணீர் பெருகலும், கம்மலையுண்டாதலும் மெய்ப்பாடென்றறிக. 13

போற்றேனென் றுலுமென்னைப் புந்திசெய்யும் வேதனை
காற்றேனுற் றேனென் றரற்றுநா ளெந்நாளோ. [க்கிங்

(ப-ரை) போற்றேன் - தேவரீரை வணங்கேன், என்றுலும்-என்றுலும், என்னை - அடியேனை, புந்தி-மனம், செய்யும்-செய்கின்ற, வேதனைக்கு-வருத்தத்திற்கு, இங்கு-இவ்வுலகில், ஆற்றேன் - சகியேன், ஆற்றேன் - சகியேன், என்று - என்று, அரற்றும் - புலம்பும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) போற்றேன் - எதிர்மறை வினைமுற்று. புந்திசெயும் வேதனை-அடியேனின் மனம் பிரபஞ்சத்து ஈடுபட்டு உழன்றுசெய்யும் மனவேதனை. ஆற்றேன் ஆற்றேன் என்றது அவலத்தால் வந்த அடுக்கு. 14

பொய்ம்முடங்கும் பூமிசில பொட்டலறப் பூங்கமலன்
கைம்முடங்க நான்சனனக் கட்டறுவ தெந்நாளோ.

(ப-ரை) பொய் - பொய்யானது, முடங்கும் - தங்கியுள்ள, பூமி-உலகம், சில - சில இடங்கள், பொட்டல்-பொட்டலாகி, அற-ஒழியவும், பூம்-அழகிய, கமலன்-தாமரையை ஆதனமாகவுடைய பிரமன், கை-படைக்கும் கையானது, முடங்க-முடங்கிக்கிடக்கவும், நான்-அடியேன், சனனம்-பிறவியாகிய, கட்டு-பிணிப்பு, அறுவது-அற்றுப்போவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பிரமன் மகாவிஷ்ணுவின் உந்தித்தாமரையில் தோன்றினவன் ஆதலின் 'கமலன்' எனப் பெற்றான். சனனக்கட்டு-பிறவிப்பிணி. 15



கற்குணத்தைப் போன்றவஞ்சக் காரர்கள்கை கோவாமல்
நற்குணத்தார் கைகோத்து நான்றிரிவ தெந்நாளோ.

(ப-ரை) கல்-கல்லின், குணத்தை-குணத்தை, போன்ற-ஒத்த, வன்மையையுடைய, வஞ்சக்காரர்கள் - வஞ்சனைக்காரர்களுடைய, கை - கையை, கோவாமல் - கோத்துக் கொள்ளாமல், நல் - நல்ல, குணத்தார் - குணத்தையுடையவர்களுடைய, கை-கையை, கோத்து-கோத்துக்கொண்டு, நான்-அடியேன், திரிவது-திரிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கல்குணம்-கடினத்தன்மை. வஞ்சகர்-பொய் நடிப்பு உடையவர். நல்குணம்-மனஇளக்கம், வாய்மை, கருணை, பக்தி முதலிய நற்குணங்களை. இனி, பொய், கொலை, களவு, கள், காமம் முதலிய தீக்குணம் அற்று வாய்மை முதலிய குணங்களைக் கொண்டிருத்தல். 16

துட்டனைமா மாயைச் சுழனீக்கி யந்தரமே
விட்டனையோ வென்று வியக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) துட்டனை - துஷ்டனாகிய அடியேனை, மா - பெரிய, மாயை-மாயையாகிய, சுழல்-சுழலினின்றும், நீக்கி - நீக்கி, அந்தரமே - சிதாகாயத்தினிடத்தே, விட்டனையோ-விட்டாயோ, என்று-என்று, வியக்கும்-தேவரீரை வியந்து துதிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆணவாதி தீக்குணங்களால் துடுக்கான காரியங்களைச் செய்தலின் 'துட்டன்' என்றார். அந்தரம்-சிதம்பரம். 17

---

## அன்பர்நெறி

அத்துவா வெல்லா மடங்கச்சோ தித்தபடிச்
சித்துருவாய் நின்றார் தெளிவறிவ தெந்நாளோ.

(ப-ரை) அத்துவா-அத்துவாக்கள், எல்லாம்-எல்லாவற்றையும், அடங்க-முழுதும், சோதித்தபடி - சோதித்தவண்ணம், சித்து - சித்தின், உருவாய்-உருவமாகி, நின்றார் - நின்ற அறிஞர்களின், தெளிவு-தெளிந்தநிலைமையை, அறிவது-அடியேன் உணர்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அத்துவா-ஆறு அத்துவாக்கள். ஆறு அத்துவாக்களாவன:—மந்திரம், பதம், அக்கரம், புவனம், தத்துவம், கலை என்பனவாம். சித்து உரு-ஞானவடிவம். 1

மூச்சற்றுச் சிந்தை முயற்சியற்று மூதறிவாய்ப் [ளோ.
பேச்சற்றோர் பெற்றவொன்றைப் பெற்றிடுநா ளெந்நா

(ப-ரை) மூச்சற்று - பிராணவாயுவை அடக்கி, சிந்தை - மனத்தின், முயற்சி-முயற்சி, அற்று-ஒழிந்து, மூதறிவாய்-ஞானம் உடையவராகி, பேச்சு-

வாய்ப்பேச்சு, அற்றோர் - நீங்கிய ஞானிகளின், பெற்ற-அடைந்த, ஒன்றை-ஒப்பற்றமுத்தியை, பெற்றிடும் - அடையும், நாள்-காலம், எ-எந்த, நாளோ-காலமோ? எ-று.

(வி-ரை) மூச்சற்று-பிராணவாயுவை அடக்கலை உணர்த்திற்று. சிந்தை முயற்சியற்று-மனோமவுனத்தை உணர்த்திற்று. மூதறிவு-ஞானமயம். 2

**கோட்டாலை யான குணமிறந்த நிர்க்குணத்தோர்**
**தேட்டாலே தேடுபொருள் சேருநா ளெந்நாளோ.**

(ப-ரை) கோட்டாலை - துன்பத்திற்குக்காரணம், ஆன-ஆகிய, குணம்-குணம், இறந்த-அற்ற, நிர்க்குணத்தோர்-குணமற்றவர், தேட்டாலே - விருப்பத்தாலே, தேடு-தேடப்படுகின்ற, பொருள் - அந்த செம்பொருள், சேரும்-அடியேற்குக்கிட்டும், நாள்-காலம், எ-எந்த, நாளோ-காலமோ? எ-று.

(வி-ரை) குணம் அற்றவர் ஆதலின் 'நிர்க்குணத்தோர்' என்றார். பொருள் என்றது-செம்பொருள். தனிப்பொருள் ஆகிய இறைவனே ஈண்டு பொருள் என்ற சொல்லிற்கு உரியவன் இறைவனே என்பது அறியற்பாலது.

**கெடுத்தே பசுத்துவத்தைக் கேடிலா வானந்தம்**
**அடுத்தோ ரடுத்தபொருட் கார்வம்வைப்ப தெந்நாளோ.**

(ப - ரை) பசுத்துவத்தை - பசுத்தன்மையை, கெடுத்தே - அழித்தே, கேடிலா-அழிவில்லாத, ஆனந்தம் - பேரின்பத்தை, அடுத்தோர் - அடைந்தவர்கள், அடுத்த-அடைந்த, பொருட்கு - பொருளுக்கு, ஆர்வம்-அதனிடத்து ஆசை, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பசுத்துவம்-பசுபோதத்தை; அல்லது பசுவின் தன்மையை. 4

**கற்கண்டா லோடுகின்ற காக்கைபோற் பொய்ம்மாயச்**
**சொற்கண்டா லோடுமன்பர் தோய்வறிவ தெந்நாளோ.**

(ப-ரை) கல்-கல்லை, கண்டால்-பார்த்தால், ஓடுகின்ற-பறந்தோடுகின்ற, காக்கை - காக்கையை, போல் - போல, பொய்-பொய்யாகிய, மாயம்-மாயத்தன்மைபொருந்திய, சொல்-சொல்லை, கண்டால்-கண்டால், ஓடும்-விட்டோடுகின்ற, அன்பர் - தேவரீரின் அடியார்களின், தோய்வு-கலப்பை, அறிவது-அறிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கல்கண்ட காக்கை - 'ஆயிரங் காக்கைக் கோர்கல்' என்பது பழமொழியாதலின், 'கற்கண்டா லோடுகின்ற காக்கைபோல்' என்றார். இது உவமானம்; இதில் 'போல்' உவமவுருபு. 5

**மெய்த்தகுலங் கல்விபுனை வேடமெல்லா மோடவிட்ட**
**சித்தரொன்றுஞ் சேராச் செயலறிவ தெந்நாளோ.**

(ப-ரை) மெய்த்த - உண்மையாகிய, குலம் - குலமும், கல்வி-கல்வியும், புனை - அலங்கரிக்கப்பெற்ற, வேடம் - வேடங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், ஓட - அகன்றோட, விட்ட - விட்ட, சித்தம் - மனத்தையுடைய ஞானிகள்,



ஒன்றும் - ஒன்றிலும், சேரா - சேராதிருக்கின்ற, செயல்-செயலை, அறிவது-அறிந்துகொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) மெய்த்தகுலம் - உண்மையில் உயர்ந்தகுலம்; குலம் கூறவும் குடியுங்கொள்ளக் கிடக்கும். கல்வி-உலகசம்பந்தமான கல்வி. வேடம் என்றது-உருத்திராக்கம் விபூதி முதலிய மனதுட் பத்தியின்றி அணிந்து உலகை மருட்டும் பொய்வேடத்தை உணர்த்தியது. 6

**குற்றச் சமயக் குறும்படர்ந்து தற்போதம்**
**அற்றவர்கட் கற்றபொருட் கன்புவைப்ப தெந்நாளோ.**

(ப-ரை) குற்றம்-குற்றத்தையுடைய, சமயம் - மார்க்கங்களின், குறும்பு-சேட்டையை, அடர்ந்து - அழித்து, தற்போதம் - தன்னறிவு (பசுத்துவம்), அற்றவர்கட்கு - நீங்கிய ஞானிகளுக்கு, அற்ற - அறுதியிடப்பெற்று வைத்த, பொருட்கு - பொருளின் இடத்து, அன்பு - அன்பை, வைப்பது - வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சமயம்-மதம்; ஈண்டு சமயம் என்றது சித்தாந்தசைவம் அல்லாத புறச்சமயங்களை என்பது அறியற்பாலது. 7

**தர்க்கமிட்டுப் பாழாஞ் சமயக் குதர்க்கம்விட்டு**
**நிற்குமவர் கண்டவழி நேர்பெறுவ தெந்நாளோ.**

(ப-ரை) தர்க்கம் - தர்க்கவாதத்தை, இட்டு - பேசி, பாழாம்-பாழாகிய, சமயம்-சமய, குதர்க்கம்-குதர்க்கங்களை, விட்டு - ஒழித்து, நிற்கும்-நிற்கின்ற, அவர்-அப்பெரியார்கள், கண்ட-பார்த்த, வழி-வழியாகிய, நேர்-நேர்மையை, பெறுவது-அடியேன் அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'தர்க்கம்' இது கலைகளில் ஒன்று; ஈண்டு நடுநின்று நியாய வழியில் வாதஞ் செய்தலை உணர்த்திற்று. குதர்க்கம் விட்டு நிற்குமவர் என்றது-கலைநிறைந்த ஞானியரை உணர்த்தியது. 8

**வீறியவே தாந்தமுதன் மிக்க கலாந்தவரை**
**ஆறுமுணர்ந் தோருணர்வுக் கன்புவைப்ப தெந்நாளோ.**

(ப-ரை) வீறிய-மேலாகிய, வேதாந்தம்-வேதாந்தம், முதல் - முதலாக, மிக்க-மிகுந்த, கலாந்தவரை-கலாந்தம் வரைக்கும் உள்ள, ஆறும்-ஆறு அந்தங்களையும், உணர்ந்தோர்-அறிந்தவர்களின், உணர்வுக்கு - அறிவுக்கு, அன்பு-அடியேன் அன்பு, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வேதாந்தம்-வேதமுடிபை; இனி உபநிடதம் எனினுமாம். 9

**கண்டவிட மெல்லாங் கடவுண்மய மென்றறிந்து[ளோ.**
**கொண்டநெஞ்சர் நேயநெஞ்சிற் கொண்டிருப்ப தெந்நா**

(ப-ரை) கண்ட-பார்த்த, இடம் - இடம், எல்லாம் - எல்லாம், கடவுள்-கடவுளின், மயம்-உருவமே, என்று-என்று, அறிந்து - உணர்ந்து, கொண்ட-கொண்டுள்ள, நெஞ்சர் - மனத்தையுடையவர், நேயம்-நேசத்தை, நெஞ்சில்-

மனதில், கொண்டு - கொண்டு, இருப்பது - இருப்பது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கண்ட இடம்-கண்ணுற்காணும் சர்வ இடங்களையும் உணர்த்திற்று. இச்செய்யுளால் எல்லாஞ் சிவமாக் காண்பர்பால் அன்புவைப்பது எந்தநாளோ என்பது பொருளாம். 10

பாக்கியங்க ளெல்லாம் பழுத்து மனப்பழுத்தோர்
நோக்குந் திருக்கூத்தை நோக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பாக்கியங்கள்-பாக்கியங்கள், எல்லாம்-எல்லாம், பழுத்து பெற்று, மனம்-தம்மனது, பழுத்தோர் - மனம் அடங்கியவர்கள், நோக்கும் - காணும், திருக்கூத்தை - திருக்கூத்தை, நோக்கும் - காணும், நாள் - காலம், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பழுத்து என்றது - முதலில் மிகவும்பெற்று என்னும் பொருளிலும், இரண்டாவது மனம் அடங்கிநிற்கும் அடக்க நிலையையும் உணர்த்தியது. 11

எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வறிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ.

(ப-ரை) எ-எந்த, உயிரும் - ஜீவன்களும், தன் - தன்னுடைய, உயிர்-உயிரை, போல்-போல, எண்ணும்-நினைக்கின்ற, தபோதனர்கள்-தவசிகளது, செவ்-செவ்விய, அறிவை-அறிவை, நாடி-விரும்பி அதனிடத்து, மிக-மிகவும், சிந்தை-மனத்தை, வைப்பது-வைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தபோதனர்-இது தவத்தையே செல்வமாகக்கொண்ட ஞானிகள் என்பதாம். எவ்வுயிரும் தன் உயிர்போல் எண்ணும் என்றது ஜீவகாருண்ணியத்தை உணர்த்தியதாம். 12

---

## அறிஞருரை

இருநிலனாய்த் தீயாகி என்றதிருப் பாட்டின்
பெருநிலையைக் கண்டணைந்து பேச்சறுவ தெந்நாளோ.

(ப-ரை) இருநிலனாய்த்தீயாகி-இருநிலனாய்த்தீயாகி, என்ற-என்ற, திருப்பாட்டின் - திருப்பாட்டினது பொருளின்படியே, பெரு - பெரிய, நிலையினையுடைய இறைவனை, கண்டு - பார்த்து, அணைந்து - அதனிடத்துப் பொருந்தி, பேச்சறுவது - அடியேன் பேச்சற்றிருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "இருநிலனாய்த் தீயாகி" என்றது திருநாவுக்கரசர் திருவாக்கு. பெருநிலை-அட்டமூர்த்தமாகிய அரும்பெருநிலையை உணர்த்தியது. அணைந்து-திருவருளைக் கூடுதலை, பேச்சறுவது-மவுனமுதலை. 1



அற்றவர்கட் கற்றசிவ னென்ற அத்துவித
முற்றுமொழி கண்டருளின் மூழ்குநா ளெந்நாளோ.

(ப-ரை) அற்றவர்கட்கற்ற சிவனும் - அற்றவர்கட்கற்ற சிவனும், என்ற-என்று கூறிய, அத்துவிதம் - அத்துவிதத்தன்மை, முற்றும்-அழகுறப்பூர்த்தியான, மொழி - திருச்சொல்லை, கண்டு - பார்த்து, நான்-அடியேன், அருள்-கிருபையாகிய கடலுக்குள்ளே, மூழ்கும்-முழுகுகின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அற்றவர்கட் கற்றசிவனும் - இது சகலாகம பண்டிதரென்னும் "சிவாசாரிய சுவாமிகள்" திருவாய்மலர்ந்தளியது. இச்செய்யுளில் இறைவன் முற்றத் துறந்தவர்கள் தம்மைச் சற்றும் பிரியாது ஒன்றுபட்டிருப்பவன் என்பதாம். அத்துவிதம் என்றது-இரண்டற்றது. 2

தானென்னை முன்படைத்தான் என்ற தகவுரையை
நானென்று வுண்மைபெற்று நாமுணர்வ தெந்நாளோ.

(ப-ரை) தானென்னை முன்படைத்தான் - தானென்னை முன்படைத்தான், என்ற-என்ற தலைப்பைக்கொண்ட செய்யுளின், தக - தகுதியுடைய, உரையை - சொற்களை, நான்-நான், என்று - என்று அகங்கரித்துப்பேசாத, உண்மை-உண்மை நிலையை, பெற்று-அடைந்து, நாம்-அடியோம், உணர்வது-அறிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "தானென்னை முன்படைத்தான்" என்றது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கு. தகவுரை என்றது - கருதற்பாலதாகிய சிறந்தமொழி என்பதாம். நானென்று உண்மை என்றது - ஆணவத்தடிப்பற்ற மெய்நிலை என்பதாம். 3

என்னுடைய தோழனுமாய் என்றதிருப் பாட்டின்
நன்னெறியைக் கண்டுரிமை நாஞ்செய்வ தெந்நாளோ.

(ப-ரை) என்னுடைய தோழனுமாய் - என்னுடைய தோழனுமாய், என்ற - என்று கூறிய, திரு - அழகிய, பாட்டின்-பாட்டினுடைய, நல்-நல்ல, நெறியை - வழியை, கண்டு - பார்த்து, நாம்-அடியோம், உரிமை-அதன்பால் உரிமையை, செய்வது-கொள்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "என்னுடைய தோழனுமாய்" என்ற இப்பாடல் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூர்த் தேவாரத்துள்ளது. உரிமைநாம் செய்வது-இறைவற்குத் தொண்டு புரிதலையாம். 4

ஆருடனே சேரு மறிவென்ற வவ்வுரையைத்
தேரும் படிக்கருடான் சேருநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆருடனேசேருமறிவு - ஆருடனேசேருமறிவு, என்ற - என்று கூறிய, அ - அந்த, உரையை - சொற்களை, தேரும்படிக்கு-தெளியும்படிக்கு, அருள்தான் - திருவருளைத்தான், சேரும் - அடியேனைவந்து சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "ஆருடனே சேருமறிவு" என்ற செய்யுள் எவர் திருவாக்கென்பது புலப்படவில்லை. என்றாலும் இது மௌனதேசிகர் திருவாக்கான் எழுந்தது போலும் என்பர். 5

உன்னிலுன்னும் என்ற வுறுமொழியா லென்னிதயந்
தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) உன்னிலுன்னும் - உன்னிலுன்னும், என்ற - என்று கூறிய, உறுமொழியால் - மேன்மைதங்கிய திருமொழியால், என் - அடியேனின், இதயம்-மனம், தன்னில்-தன்னில், உன்னி-நினைத்து, நல்-நல்ல, நெறியை-மார்க்கத்தை, சாரும்-சேரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "உன்னிலுன்னும்" என்றது திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்கு. இச்செய்யுளால் சிவத்தோடு இரண்டறக்கலக்கும் அத்துவித நிலை மாண்பு கூறப்பெற்றதாம். நன்னெறி-சன்மார்க்கம். 6

நினைப்பறவே தானினைந்தேன் என்றநிலை நாடி
அனைத்துமா மப்பொருளி லாழுநா ளெந்நாளோ.

(ப-ரை) நினைப்பறவே தானினைந்தேன்-நினைப்பறவே தானினைந்தேன், என்ற-என்றருளிச்செய்த, நிலை-நிலையினை, நாடி - விரும்பி, அனைத்தும்-எல்லாப் பொருள்களும், ஆம் - தானேயாகி, நின்ற - இருக்கின்ற, பொருளில்-அந்தப் பொருளினிடத்து, ஆழும்-அடியேன்முழுகும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "நினைப்பறவே தானினைந்தேன்" என்றது மாணிக்கவாசகப் பெருமான் திருவாய்மலர்ந்தருளியது. இறைவன் எல்லாமாய் அல்லவுமாய் இருத்தலின் 'அனைத்துமாமப்பொருள்' என்றார். நினைப்பறவே தானினைந்தேன் என்றது-மறவாது சதா சிந்தித்திருத்தலை. 7

சென்றுசென் றேயணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்று
நின்றுவிடும் என்றநெறி நிற்குநா ளெந்நாளோ. [கி

(ப-ரை) சென்று சென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றுகி-சென்றுசென்றே யணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றுகி, நின்றுவிடும்-நின்றுவிடும், என்ற - என்று திருவாய்மலர்ந்தருளிய, நெறி - மார்க்கத்தில், நிற்கும்-நிற்கின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "சென்று சென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றுகி நின்றுவிடும்" என்றது மணிவாசகர் திருவாக்கு. சென்றுசென் றணுவாய்த்தேய்ந்து ஒன்றுகி என்றது - தத்துவங்கள் தொண்ணூற்றாறையுங் களைந்து சென்று இறைவனைக்கண்டு அவனோடும் கலந்துநிற்கும் நிலையை உணர்த்துகின்றது. 8

ஆதியந்த மில்லா வரியபரஞ் சோதிஎன்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநா ளெந்நாளோ.



(ப-ரை) ஆதியந்தமில்லா அரியபரஞ்சோதி-ஆதியந்தமில்லா அரியபரஞ்சோதி, என்ற - என்று சொல்லியருளிய, நீதி - நீதி, மொழி - சொற்களை, கண்டு-பார்த்து, அதுவாய்-அப்பொருளேயாகி, நிற்கும்-நிற்கின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) "ஆதியந்தமில்லா அரியபரஞ்சோதி" என்றது மணிவாசகர் திருவாக்கு. அதுவாய் நிற்றல் என்றது சாயுச்ய நிலையை. 9

பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன் என்ற
நெறியுடையான் சொல்லினிலை நிற்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன் - பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன், என்ற - என்று கூறியருளிய, நெறியுடையான் - சித்தாந்த சைவநெறியையுடைய பெரியாரின், சொல்லின் - சொற்களின், நிலை-அடியேன் நிலையாகி, நிற்கும்-இருக்கின்ற, நாள்-நாள்; எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பிறிதொன்றி லாசையின்றிப் பெற்றிருந்தேன் என்றது-இன்ன பெரியார்வாக்கு என்பது அறிதர இயலாததாக இருக்கிறது. இதற்கு இறைவனே தேவரீரின் திருவடி இடத்தேயன்றி வேறு ஒரு பொருளிடத்தில் பற்று இன்றி இருக்கின்றேன் என்பது பொருளாம். 10

திரையற்ற நீர்போற் றெளியவெனத் தேர்ந்த
உரைபற்றி யுற்றங் கொடுங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) திரையற்ற நீர்போற்றெளிய - திரையற்ற நீர்போற்றெளிய, என-என்று சொல்லி, தேர்ந்த-தெளிவித்த, உரை - திருமொழியை, பற்றி-கொண்டு, உற்று-உணர்ந்து, அங்கு-அப்பொருளினிடத்தே, ஒடுங்கும்-அடங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) திரையற்ற நீர்போல் தெளிய என்றது-சலனமற்று ஞானத் தெளிவடைந்திருத்தலுக்கு உவமையாகக் கூறப்பெற்றது. 11

அறியா வறிவி லவிழ்ந்தேற என்ற
நெறியா முறையுணர்ந்து நிற்குநா ளெந்நாளோ.

(ப-ரை) அறியாவறிவில் அவிழ்ந்தேற - அறியாவறிவில் வீழ்ந்தேற, என்ற-என்று கூறியருளிய, நெறியாம்-நன்மார்க்கத்துக்குரிய, முறை-முறைமையை, உணர்ந்து-அறிந்து, நிற்கும்-நிற்கின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அறியா அறிவில் அவிழ்ந்தேற என்றது - இயல்பாகத் தான் அறியும் அறிவின்றி அறிவுக்கறிவாய் நின்று இறைவன் உணர்த்த உணர்ந்து ஞானமுற்று என்பதாம். 12

எனக்குனீ யென்று மியற்கையாப் பின்னும்
உனக்குநான் என்ற வுறுதிகொள்வ தெந்நாளோ.

(ப-ரை) எனக்குனீயென்று மியற்கையாய்ப் பின்னுமுனக்குநான்-எனக்குனீயென்று மியற்கையாய்ப் பின்னு முனக்குநான், என்ற - என்று கூறிய, உறுதி - உறுதிப்பொருளை, கொள்வது-அடியேன் மனத்தே கொண்டிருப்பது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எனக்குனீயென்று மியற்கையாய் என்றது - அடியேனுக்குள் இறைவனாகிய தேவரீர் இருக்கின்றீர்; இது இயல்பாக உள்ளது என்பதாம். 13

அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ.

(ப-ரை) அறிவை அறிவதுவே யாகும்பொருள் - அறிவை அறிவதுவே யாகும் பொருள், என்று-என்று, உறுதி - உறுதிபெற, சொன்ன - சொல்லியருளிய, உண்மையினை-உண்மைத்தன்மையை, ஒரும் - ஆராய்ந்து அறியும் நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று

(வி-ரை) "அறிவை அறிவதுவேயாகும் பொருள்" என்றது அருணகிரி நாதர் அருளிச்செய்தது. அறிவை அறிவது பொருள் என்றது-இறைவன் அறிவுமயன் ஆதலின் அறிவை அறிவதுவே பொருளாகும் என்றதாம். 14

---

## நிற்கு நிலை

பண்ணினிசை போலப் பரமன்பா னின்றதிறன்
எண்ணி யருளாகி யிருக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பண்ணின்-பண்ணோடுகூடிய, இசை-இசையை, போல்-போல, பரமன்பால் - இறைவனின் இடத்தே, நின்ற - பேதமின்றிக் கலந்துநின்ற, திறம்-திறத்தை, எண்ணி - நினைத்து, அருளாகி - அடியேன் அருள்வடிவாகி, இருக்கும்-இருக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பண்ணினிசைபோல் என்றது - உவமை. இது பண்ணும் இசையும் பிரிவு இன்றி இருப்பதுபோல் சிறிதும் வேறுபாடின்றி இறைவனிடத்துத் திருவருள் கலந்திருக்கிறது என்றதாம். 1

அறிவோ டறியாமை யற்றறிவி னூடே
குறியி லறிவுவந்து கூடுநா ளெந்நாளோ.

(ப-ரை) அறிவோடு-நினைப்புடனே, அறியாமை-மறப்பும், அற்று-நீங்கி, அறிவின்-கடவுண்ஞானத்தின், ஊடே-உள்ளே, குறியில்-குறியாக, அறிவு-அடியேனின் அறிவு, வந்து - வந்து, கூடும் - சேரும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அறிவோடு அறியாமை - சகல கேவலநிலை. முதல் அறிவு-பரஞானம். இரண்டாவது அறிவு என்றது - பசுஅறிவை. 2



சொல்லான் மனத்தாற் றொடராச்சம் பூரணத்தில்
நில்லா நிலையாய் நிலைநிற்ப தெந்நாளோ.

(ப-ரை) சொல்லால் - சொல்லினாலும், மனத்தால் - மனத்தினாலும், தொடரா - பின்பற்றக்கூடாத, சம்பூரணத்தில் - சம்பூரணநிலையில், நில்லா-நில்லா, நிலையாய் - நிலையாக, நிலைநிற்பது - நிலைநின்று இருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் மனவாக்குக் கெட்டாப் பரிபூரணப் பொருளாதலின் 'சொல்லான் மனத்தாற் றொடராச் சம்பூரணத்தில்' என்றார். நில்லா நிலை என்றது - தற்போதத்தாலன்றித் திருவருட் டுணையால் நிற்றலை உணர்த்திற்று. 3

செங்கதிரின் முன்மதியந் தேசடங்கி நின்றிடல்போல்
அங்கணனார் தாளி லடங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) செம்-செவந்த, கதிரின்-சூரியனின், முன்-முன்னாலே, மதியம்-சந்திரன், தேசு - பிரகாசம், அடங்கி - அடங்கி, நின்றிடல் - நின்றிருத்தல், போல்-போல, அங்கணனார்-இறைவனின், தாளில் - திருவடிநீழலில், அடங்கும்-அடங்கிநிற்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) செங்கதிர் என்றது-சூரியனை. இதில் செம் என்றது-இனம் விலக்கவந்த அடைமொழி. வெண்கதிரினின்றும் விலக்கியதுபற்றி என்க. 'கதிர்' இது கிரகணங்களுக்கு ஆகிப் பின் அக்கதிர்களையுடைய சூரிய சந்திரர்களுக்கானமையின் ஆகுபெயர். 4

வானூ டடங்கும் வளிபோல இன்புருவாங்
கோனூ டடங்குங் குறிப்பறிவ தெந்நாளோ.

(ப-ரை) வான்ஊடு - ஆகாயத்திற்குள்ளே, அடங்கும் - அடங்குகின்ற, வளி - காற்றை, போல் - போல, இன்பு-சுகத்தின், உருவாம்-வடிவாக இருக்கின்ற, கோன்ஊடு - இறைவனுக்குள்ளே, அடங்கும் - அடங்கும்படியான, குறிப்பை-குறிப்பை, அறிவது-அறிவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கோன்-இறைவனை. கோன்ஊடு அடங்கும் என்றது சாயுச்சிய முத்தியை. வான்ஊடு அடங்கும்வளி பதியோடு கலக்கும் பசுவிற்கு உபமானம். அபேதமாகக் கலக்கவேண்டும் என்பதை உணர்த்திற்று. 5

செப்பரிய தண்கருணைச் சிற்சுகனார் பூரணத்தில்
அப்பினிடை யுப்பாய் அணையுநா ளெந்நாளோ.

(ப-ரை) செப்பு - சொல்லுதற்கு, அரிய - அரிதாகிய, தண் - குளிர்ந்த, கருணை - கருணையையுடைய, சித்சுகனார்-ஞானானந்தசொரூபியாகிய இறைவனின், பூரணத்தில்-பரிபூரணத்தில், அப்பின்இடை-நீரில், உப்பாய்-உப்பைப் போல, அணையும்-கலக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அப்பினிடை உப்பாய் என்றது - நீரில் உப்பை இட்டுக் கலந்தால் உப்பு உருவம் தோன்றாது நீரிற்கலந்து நீர்மயமாய்த் தோன்றுவது

போல் இறைவனோடு கலந்து இறைவனின் ஞானானந்தமயமாக இருத்தலை உணர்த்திற்று. 6

தூயவறி வான சுகரூப சோதிதன்பால்
தீயினிரும் பென்னத் திகழுநா ளெந்நாளோ.

(ப-ரை) தூய-பரிசுத்தமாகிய, அறிவு-ஞானமயம், ஆன-ஆகிய, சுகரூபம்-ஆனந்தரூபத்தோடுங்கூடிய, சோதி - ஜோதிப்பிரகாசத்தின், தன்பால்-தன்னிடத்தே, தீயின்-நெருப்பிலிட்டுக்கலந்த, இரும்பு-இரும்பு, என்ன-என்று ஒப்புக்கூறும்படி, திகழும்-அடியேன் விளங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் இயல்பாகவே பாசபந்தங்களினின்றும் நீங்கிய தூய்மையுடையவன் ஆதலின், 'தூய' என்றும், இறைவன் அறிவு வடிவனாதலினால் 'அறிவான' என்றும் கூறினார். 7

தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ.

(ப-ரை) தீது-கெடுதல், அணையா-சேராத, கற்பூரம்-கற்பூரமும், தீபம்-தீபமும், என - என்று ஒப்புச்சொல்லும்படி, நான் - அடியேன், அகண்டம்-அகண்டமாகிய, சோதியுடன்-சோதியோடு, ஒன்றி-கலந்து, துரிசு - குற்றம், அறுவது-நீங்குவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தீது அணையா என்றது-காற்றாற் சலியாதிருத்தலும் நீரால் நனைந்து கெடாதிருத்தலும் ஆகிய இன்னோரன்ன தீமைகளைக் குறித்தது. 8

ஆராருங் காணாத அற்புதனார் பொற்படிக்கீழ்
நீரார் நிழல்போல் நிலாவுநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆராரும் - எத்தகையோரும், காணாத - கண்டறியாத, அற்புதனார்-அற்புதமூர்த்தியாகிய இறைவனின், பொற்பு-அழகு பொருந்திய, அடி-திருவடியின், கீழ்-கீழே, நீரார்-நற்குணமமைந்த, நிழல்-நிழலை, போல்-போல, நான்-அடியேன், நிலாவும் - நிலைபெற்று விளங்கும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நீரார் என்றது-நற்குணம் அமைந்த என்பது பொருளாம். நிழலுக்கு நற்குணமாவது அஃகாமை, தண்மை, சோகந்தவிர்க்கை முதலியனவாம். உருவும் நிழலும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாதிருப்பதுபோல இருக்க வேண்டும் என்பார் 'அற்புதனார் பொற்படிக்கீழ் நீரார் நிழல்போல்' என்றார். 9

எட்டத் தொலையாத வெந்தைபிரான் சந்நிதியில்
பட்டப் பகல்விளக்காய்ப் பண்புறுவ தெந்நாளோ.

(ப-ரை) எட்ட - மனத்தினால் எட்டுதற்கு, தொலையாத - முடியாத (கல்யாணகுணங்களை யுடைய), எந்தை - எமது தந்தையாகிய, பிரான்-பெருமானினது, சந்நிதியில் - சந்நிதியிலே, பட்டப்பகல் - பட்டப்பகலில் ஏற்றிய,



விளக்காய் - விளக்கைப்போல், பண்புறுவது - விளக்கம் அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் மனவாக்குக்கு எட்டாதவன் ஆதலின் 'எட்டத் தொலையாத எந்தை பிரான்' என்றார். பட்டப்பகலில் ஏற்றிய தீபம் ஒளி மழுங்கி நிற்கும் அதுபோல இறைவன் சந்நிதியில் தன் ஆன்மபோதம் ஒளியிழந்து தோன்ற வேண்டும் என்பார் 'பட்டப்பகல் விளக்காய் பண்புறுவது' என்றார். 10

கருப்புவட்டை வாய்மடுத்துக் கண்டார்நாப் போல
விருப்புவட்டா வின்புருவை மேவுநா ளெந்நாளோ.

(ப-ரை) கருப்புவட்டை - கரும்பு வெல்லத்தை, வாய்மடுத்து - வாயினாலுண்டு, கண்டார் - அதன் உருசியைக்கண்டவர்கள், நா - நாக்கை, போல-போல, விருப்பு - விருப்பம், உவட்டா - மாறாத, இன்பு - இன்ப (ஆனந்த), உருவை - வடிவை, மேவும் - அடியேன் பொருந்தும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'விருப்புவட்டா' இது விருப்பு+உவட்டா என்னும் இருசொற் சந்தி. இன்புரு என்றது - ஆனந்த உருவத்தை. மேவுதல் என்றது - ஈண்டு அணைதல், பொருந்தல், கூடல் என்னும் பொருளது. 11

துச்சப் புலனாற் சுழலாமற் றண்ணருளால்
உச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ.

(ப-ரை) துச்சம்-அற்பமாகிய, புலனால்-விஷயாதிகளின் விருப்பத்தால், சுழலாமல்-மயங்கிச் சுற்றாமல், தண் - குளிர்ந்த, அருளால் - திருவருளினால், உச்சி-உச்சிக்காலத்து, கதிர்-சூரியனின்முன் வைத்த, படிகம் - படிகக்கல்லை, ஒவ்வும்-ஒத்திருக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) உச்சிக்காலத்து சூரியனின் கதிரில் படிகக்கல்லை வைத்தால் அதனின்று நெருப்புண்டாகி அதை அடுத்துள்ள பொருள்களை எல்லாம் அழித்தொழிக்கும். ஆதலின் அதுபோல இறைவன் தண்ணிய திருவருளைக் கொண்டு விஷயப்பற்றுக்களை அறவே ஒழிக்கவேண்டும் என்பார் 'உச்சிக் கதிர்ப்படிக மொவ்வுநா ளெந்நாளோ' என்றார். 12

இம்மா நிலத்தி லிருந்தபடி யேயிருந்து
சும்மா வருளைத் தொடருநா ளெந்நாளோ.

(ப-ரை) இ-இந்த, மா-பெரிய, நிலத்தில்-பூலோகத்தில், இருந்தபடியே-இருந்தவிதமாகவே, இருந்து-இருந்து, சும்மா-சும்மா, அருளை - திருவருளை, தொடரும்-தொடருகின்ற, நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இப்பூலோகம் ஞானபூமியாதலின் மாநிலம் என்றார். (மா-பெரிய.) ஈண்டு ஞானத்தாற் பெரிய என்பது பொருளாம். இருந்தபடியே இருந்து என்றது-திரிகரண மௌனத்தோடு இருத்தலை உணர்த்திற்று. 13

**தானவனுந் தன்மையெய்தித் தண்டமென வண்டமெங்**
**ஞானமத யானை நடத்துநா ளெந்நாளோ. [கும்**

(ப-ரை) தான்-தான், அவன்-அவன், ஆம்-ஆகும், தன்மை-தன்மையை, எய்தி-அடைந்து, தண்டம்-யானைசெல்லும் வழி, என-ஆகக்கொண்டு, அண்டம்-உலகம், எங்கும்-எங்கும், ஞானம் - ஞானமாகிய, மதம் - மதம்கொண்ட, யானை - யானையை, நடத்தும் - அடியேன் நடத்தும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) தான் அவனுந் தன்மை - அத்துவிதநிலையை. சோகம்பாவனையால் தான் அவனாகவே காணல். 14

**ஒன்றிரண்டு மில்லதுவாய் ஒன்றிரண்டு முள்ளதுவாய்**
**நின்ற சமத்துநிலை நேர்பெறுவ தெந்நாளோ.**

(ப-ரை) ஒன்று-ஒன்றும், இரண்டு - இரண்டும், இல்லது - இல்லாதது, ஆய்-ஆகி, ஒன்று-ஒன்றும், இரண்டும் - இரண்டும், உள்ளது-உள்ளது, ஆய்-ஆகி, நின்ற-நின்றருளி இருக்கின்ற, சமத்து-சமமாகிய, நிலை-நிலையை, நேர்-நேராக, பெறுவது-அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஒன்று-ஏகம், இரண்டு-துவிதம். 15

**பாச மகலாமற் பதியிற் கலவாமல்**
**மாசில் சமத்துமுத்தி வாய்க்குநா ளெந்நாளோ.**

(ப-ரை) பாசம் - பாசமானது, அகலாமல் - நீங்காமலும், பதியில்-சிவத்தோடு, கலவாமல் - கலக்காமலும் (இருக்கிற அடியேனுக்கு), மாசு - குற்றம், இல் - இல்லாத, சமத்து-சமத்துவமாகிய, முத்தி-முத்தியின்பம், வாய்க்கும்-கிடைக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பாசம் என்பது-இறைவனை ஆன்மா அடைதற்குத் தடையாக இருப்பது. பாசத்தினின்றும் நீங்கினாலன்றி இறைவனுடன் கலத்தல் இல்லையாதலினால் 'பாசமகலாமல் பதியிற் கலவாமல்' என்றார். 16

**சிற்றறிவு மெள்ளச் சிதைந்துஎம்மான் பேரறிவை**
**யுற்றுஅறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ.**

(ப-ரை) சிற்று - சிறிய, அறிவு - பசுஅறிவு (பசுஞானம்), மெள்ள-மெதுவாக, சிதைந்து - அழிந்து, எம்மான்-எமது பெருமானாகிய கடவுளின், பேர்-பெரிய, அறிவை - அறிவு (சிவஞானத்தை), உற்று-அடைந்து, அறியா-அறியாத, வண்ணம் - விதம், அறிந்து - உணர்ந்து, ஓங்கும் - அடியேன் உயரும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சிற்றறிவு என்பது - இது சிறிய அறிவு என்பதாம். என்னை? பசுக்கள் அறிவெல்லாம் இறைவன் அறிவோடு ஒப்பிட்டு நோக்கும்பொழுது சிறியதாகலின் 'சிற்றறிவு' என்றார். இதனையே பசுக்களை கிஞ்சிக்ஞர் என்றார். 17



**தந்திரத்தை மந்திரத்தைச் சாரினவை யாமறிவென்**
**றெந்தையுணர் வேவடிவா வெய்துநா ளெந்நாளோ.**

(ப-ரை) தந்திரத்தை-தந்திரத்தையும், மந்திரத்தை - மந்திரத்தையும், சாரின் சார்ந்தால், அறிவு - அறிவுக்கு, நவை - குற்றம், ஆம்-ஆகும், என்று-என்று, எந்தை-எமது தந்தையாகிய கடவுளின், உணர்வே-அறிவே, வடிவா-அடியேனின் உருவாக, எய்தும்-அடியேன் பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) எந்தை உணர்வே வடிவா என்றது-இறைவன் அறிவுமயமாதலினாலும், இறைவனோடு கலத்தல் அறிவுடன் கலந்து அறிவுமயமாக விளங்குதல் ஆதலினாலும் இவ்வாறு கூறியதாம். 18

**போக்குவர வற்றவெளி போனிறைந்த போதநிலை**
**நீக்கமறக் கூடி நினைப்பறுவ தெந்நாளோ.**

(ப-ரை) போக்கு-செலவும், வரவு-வருகையும், அற்ற-இல்லாத, வெளி-ஆகாயம், போல்-போல, நிறைந்த-நிறைந்திருக்கின்ற, போதம்-ஞானத்தின், நிலை-நிலையை, நீக்கம்-நீங்குதல், அற-இல்லாதபடி, கூடி-கலந்து, நினைப்பறுவது-நினைப்பு மறப்பற்று இருப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நினைப்பறுவது என்றது-"ஒருமொழி யொழிதன்னினங்கொளற் குரித்தே" என்ற இலக்கணத்தால் மறப்பும் உடன் கூறப்பெற்றது. நினைப்பு மறப்பு அற்றிருத்தலாவது சகல கேவலங்களினின்றும் நீங்கி அறிவுமயமாக விளங்குதலை. 19

**காண்பானும் காட்டுவதும் காட்சியுமாய் நின்றவந்த**
**வீண்பாவம் போய்அதுவாய் மேவுநா ளெந்நாளோ.**

(ப-ரை) காண்பானும் - காண்கின்றவனும், காட்டுவதும் - காட்டப்படு பொருளும், காட்சியும் - காணுங்காட்சியும், ஆய் - ஆகி, நின்ற-நின்ற, அந்த-அந்த, வீண்-வீணாகிய, பாவம் - நினைப்பு, போய்-தொலைந்து, அதுவாய்-அதுவாகவே, மேவும்-பொருந்தும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவனே திரிபுடியாகி காண்பான்காட்சி, காரணப்பொருளாகி இருத்தலின் 'காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய் நின்ற' என்றார்.

**வாடாதே நானாவாய் மாயாதே எங்கோவை**
**நாடாதே நாடி நலம்பெறுவ தெந்நாளோ.**

(ப-ரை) வாடாதே - அடியேன் வாடிப்போகாமலும், நானாவாய்-பற்பல வகையாக, மாயாதே - கெடாமலும், எம் - எங்களது, கோவை - இறைவனை, நாடாதே-தேடாமல், நாடி - தேடி, நலம்பெறுவது - நன்மையை அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) வாடாதே மாயாதே என்பன எதிர்மறைகள். 'நானாவாய்' என்றது பற்பல வகையாக என்பது பொருளாம். இனி இதற்கு 'அகங்காரமுடையவனாய்' எனவும் பொருள் கூறுவர். 21

ஆடலையே காட்டிஎம தாடலொழித் தாண்டான்பொற்
றாடலைமேற் சூடித் தழைக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆடலையே - தனது திருநடனத்தையே, காட்டி - காண்பித்து, எமது-எங்களுடைய, ஆடல்-மன ஆட்டத்தை, ஒழித்து-அகற்றி, ஆண்டான்-ஆண்டருளிய கடவுளின், பொன் - அழகிய, தாள்-திருவடிகளை, தலைமேல்-தலைமேலே, சூடி-சூடிக்கொண்டு, தழைக்கும்-சிவாநந்தத்தில் ஓங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பொற்றாள் - ஜாதி ஒருமை. இனி ஞானபாதத்தைக் குறித்ததால் ஒருமை வந்தது என்னலுமாம். பொன் என்றது-ஈண்டு அழகு குறித்து நின்றது. இதற்குப் பொன்போலும் எனப் பொருள் கூறுவாரும் உண்டு. 22

மேலொடுகீ ழில்லாத வித்தகனார் தம்முடனே
பாலொடுநீர் போற்கலந்து பண்புறுவ தெந்நாளோ.

(ப-ரை) மேலொடு-மேலுடனே, கீழ்-கீழ், இல்லாத-இல்லாத, வித்தகனார் - ஞானசொரூபியாகிய இறைவன், தம்முடனே - தம்மோடு, பாலொடு-பாலுடனே, நீர்போல் - தண்ணீரைப்போல், கலந்து-கூடி, பண்புறுவது-அடியேன் சிறப்பை அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'மேலொடுகீழ்' என்பதில் ஒரு உருபு எண்ணுப் பொருளில் வந்தது. 23

அறியா தறிந்தெமையா ளண்ணலைநா மாகக்
குறியாத வண்ணங் குறிக்குநா ளெந்நாளோ.

(ப-ரை) எமை-அடியோங்களை, ஆள்-ஆண்டருளும், அண்ணலை-இறைவனை, அறியாது-அறியாமல், அறிந்து-அறிந்து, நாமாக - நாமாக, குறியாத-நினைக்காத, வண்ணம்-விதமாக, குறிக்கும் - நினைக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) 'அண்ணல்' இது உயர்ந்தோன் என்னும் பொருளது. எவரும் ஒப்புச்சொல்ல அணுகமுடியாதவன் என்பதாம். 24

ஓராமன் மந்திரமு முன்னுமன் நம்பரனைப்
பாராமற் பார்த்துப் பழகுநா ளெந்நாளோ.

(ப-ரை) ஓராமல்-ஆராயாமலும், மந்திரமும் - மந்திரத்தையும், உண்ணு மல்-நினையாமலும், நம்-அடியோங்களது, பரனை-கடவுளை, பாராமல் - பார்க்காமல், பார்த்து-பார்த்து, பழகும் - பழகும், நாள்-நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) இறைவன் உயர்ந்தவன், எல்லாரிலும் உயர்ந்தவன், அவனுக்கு மேல் உயர்ந்தது இல்லாமையினால் 'பரன்' எனப் பெற்றான். பாராமல் பார்த்து என்றது-ஞானக்கண்ணால் பதி அறிவாற்கண்டு என்பதாம். 25

ஊன்பற்று மென்னோ டுறவுபற்றும் பூரணன்பால்
வான்பற்றுங் கண்போன் மருவுநா ளெந்நாளோ.



(ப-ரை) ஊன்-தேகத்தையே, பற்றும்-உறுதியாகக்கொண்டு விரும்பும், என்னோடு - அடியேனுடனே, உறவு-உறவை, பற்றும்-கொள்ளும், பூரணன்பால் - பரிபூரணப்பொருளாகிய இறைவனிடத்தே, வான் - ஆகாயத்தை, பற்றும்-பற்றுகின்ற, கண்-கண்ணை, போல்-போல, மருவும் - கூடிக்கலக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஊன் - ஊனாலாகிய தேகத்தை. இது ஆகுபெயர். பற்றுதல் என்றது-உறுதியுடைய பொருளாக, சதமானதாக, சத்தியமானதாக எண்ணி விருப்பங்கொண்டிருத்தலைக் குறித்ததாம். 26

ஆண்டான் மௌனி யளித்தவறி வாலறிவைத்
தாண்டாமற் றாண்டித் துலங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆண்டான் - அடியேனைச் சீடனாக ஆண்டுகொண்ட, மௌனி-மௌனதேசிகமூர்த்தியாக வந்தருளிய குரு, அளித்த - உபதேசித்தருளிய, அறிவால்-அறிவினாலே, அறிவை-அடியேன் அறிவாகிய தீபத்தை, தாண்டாமல்-தூண்டிவிடாமல், தூண்டி-தூண்டிவிட்டு, துலங்கும்-அடியேன் விளங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆண்டான் என்றது - அடியேனையுஞ் சீடனாகக்கொண்டு ஆண்டருளிய என்பதாம். 27

ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதஞ் சாருநா ளெந்நாளோ.

(ப-ரை) ஆணவத்தோடு - அடியேன் ஆணவமலத்துடனே, அத்துவிதம் ஆனபடி-இரண்டறக்கலந்து இருந்தபடி, மெய்-சத்திய, ஞானம் - ஞானரூபியாகிய, தாணுவுடன் - இறைவனுடனே, அத்துவிதம் - இரண்டறக்கலந்து இருக்கும் தன்மையை, சாரும் - அடையும், நாள் - நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஆணவம் என்றது-ஆணவமலத்தை. இது 'நான்' என்னும் அகப்பற்றுக்குக் காரணமானது. 28

---

## நிலைபிரிந்தோர் கூடுதற்கு உபாயம்

கன்மநெறி தப்பிற் கடுநரகென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நாமணைவ தெந்நாளோ.

(ப-ரை) கன்மம்-செய்கின்ற கர்மங்களில், நெறி-வழியை, தப்பில்-தப்பிவிட்டால், கடு - கடுமையாகிய, நரகு - நரகவேதனை உண்டாகும், என்று-என்று, எ-எந்த, நாளும் - நாளும், நன்மை - நன்மையை, தரு - தருகின்ற, ஞானம்-ஞானத்தின், நெறி-மார்க்கத்தை, நாம்-அடியோம், அணைவது-சேர்வது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி - ரை) கன்மநெறி - வைதிக கர்மங்களைக் கொண்டுள்ள சரியை, கிரியை, யோகமார்க்கங்களைக் குறித்தது. 1

ஞானநெறி தானே நழுவிடினும் முப்பதத்துள்
ஆனமுத்தி நல்குமென வன்புறுவ தெந்நாளோ.

(ப-ரை) ஞானநெறி-ஞானமார்க்கமாகிய, தானே-இவ்வொன்று தானே, நழுவிடினும்-நழுவிவிட்டாலும், மு-மற்றையமூன்று, பதத்து - பாதங்களால், ஆன-ஆன்மாக்களுக்கு நன்மையாகிய, முத்தி - முத்திப்பதம், நல்கும்-தரும், என-என்று, அன்புறுவது-அவற்றின்மேல் அன்புவைப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) ஞானநெறி என்றது-நாலாம்பாதமாகிய ஞானபாதத்தை. 2

பன்மார்க்க மான பலவடிபட் டேனுமொரு
சொன்மார்க்கங் கண்டு துலங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) பன்மார்க்கம் - பலநெறிகள், ஆன - ஆகிய, பல-பல, அடி-அடிகளை, பட்டேனும் - பட்டவனாகிய அடியேனும், ஒரு-ஒப்பற்ற, சொல்-(ஞானதேசிகரின்) உபதேசமொழியினால் எய்தும், மார்க்கம்-முத்திவழியை, கண்டு-கண்டு, துலங்கும்-விளங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) பட்டேனும் இது-படு என்னும் வினைப் பகுதியடியாகப் பிறந்த தன்மை ஒருமை வினையா லணையும் பெயர். ஒருசொன் மார்க்கம் என்றது ஞானதேசிகராற் பெற்ற ஒப்பற்ற ஞானோபதேசத்தாற் பெற்றிடும் ஞான நெறியை உணர்த்திற்று. 3

அத்துவித மென்ற அன்னியச்சொற் கண்டுணர்ந்து
சுத்த சிவத்தைத் தொடருநா ளெந்நாளோ.

(ப-ரை) அத்துவிதம்-அத்துவிதம், என்ற-என்று கூறப்பெறும், அன்னியம் - வேறாகிய, சொல் - சொல்லை, கண்டு - ஆராய்ந்துபார்த்து, உணர்ந்து-உண்மையை அறிந்து, சுத்த - சுத்தமாகிய, சிவத்தை-சிவத்தை, தொடரும்-பற்றும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அன்னியச் சொல் என்றது - இதுவரை துவிதநிலையில் நின்றமையால் என்க. 4

கேட்டன்முத னான்காலே கேடிலா நாற்பதமும்
வாட்டமற வெனக்கு வாய்க்குநா ளெந்நாளோ.

(ப-ரை) கேட்டல் - கேட்டல், முதல் - முதலாகிய, நான்காலே-நான்கினாலே, கேடிலா-கெடுதல் இல்லாத, நால்-நான்காகிய, பதமும் - பதங்களும், வாட்டம்-துன்பம், அற - இல்லாதபடி, எனக்கு - அடியேனுக்கு, வாய்க்கும்-கிடைக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) கேட்டல் முதல் நான்கு என்றது-கேட்டல், சிந்தித்தல், தெளிதல், சுகானுபவம் என்பனவாம். நாற்பதம் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கினை. 5



என்னதியா னென்பதற எவ்விடமு மென்னாசான்
சன்னதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ.

(ப-ரை) என்னது-என்னுடையது, யான் - நான், என்பது - என்னும் புறப்பற்று அகப்பற்றுக்கள், அற - நீங்க, எ - எந்த, இடமும் - இடத்தையும், என்-அடியேனின், ஆசான்-குருமூர்த்திகள், சன்னிதியா-சந்நிதியாக, கண்டு-பார்த்து, நிட்டை - நிஷ்டையை, சாதிப்பது - சாதிப்பது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) என்னது - புறப்பற்று. யான்-அகப்பறு. 6

நாம்பிரம மென்றா னடுவேயொன் றுண்டாமாற்
றேம்பியெல்லா மொன்றாய்த் திகழுநா ளெந்நாளோ.

(ப-ரை) நாம்-நாமே, பிரமம்-பிரமம், என்றால்-என்று கூறினால், நடுவே-இடையே, ஒன்று-ஒன்று, உண்டாம்-உண்டாகும் ஆதலினால், தேம்பி-தேம்பி, எல்லாம் - எல்லாமும், ஒன்றாய் - ஒன்றாகி, திகழும் - விளங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) நாம்-ஜீவன்களை. பிரமம்-கடவுள். தேம்பி எல்லாம் ஒன்றாய் திகழும் நாள் என்றது-அத்துவிதநிலையை அடையும் நாளை. 7

மூச்சகமே யாதி முழுதுமகண் டாகார
சச்சிதா னந்தசிவந் தானென்ப தெந்நாளோ.

(ப-ரை) மு-மூன்று, சகம்-உலகங்கள், ஆதி-முதலாக, முழுதும்-முற்றும், அகண்டாகாரம் - அகண்டரூபமாகிய, சச்சிதானந்தம்-சத்து சித்து ஆனந்தம் ஆகிய, சிவம் - சிவமே, தான்-தானாகும், என்பது-என்று கூறுவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) சச்சிதானந்தசிவம் என்றது - சத்தும், சித்தும், ஆனந்தமும் ஆகிநிற்கும் சிவம் என்பதாம். சத்து என்றது - உண்மையை. சித்து என்றது-அறிவை. ஆனந்தம் என்றது-இன்பை. சிவம் என்றது-மங்களப்பொருளை. 8

எவ்வடிவும் பூரணமா மெந்தையுரு வென்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே யடங்குநா ளெந்நாளோ.

(ப-ரை) எ-எந்த, வடிவும் - உருவமும், பூரணம் - நிறைவு, ஆம்-ஆகிய, எந்தை-எமது தந்தையின், உரு-உருவமே, என்று-என்று, இசைந்த-பொருந்திய, அ-அந்த, வடிவுக்கு - வடிவத்திற்கு, உள்ளே - உள்ளே, அடங்கும்-அடியேன் ஒடுங்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

(வி-ரை) அவ்வடிவுக்குள்ளே யடங்கல் என்றது-பரிபூரணசொரூபத்துத் தானடங்கிநிற்கும் சாயுச்சியத்தை. 9

சிந்தித்த தெல்லாஞ் சிலபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வங்குநா ளெந்நாளோ.

**(ப-ரை)** சிந்தித்தது-அடியேன் எண்ணியது, எல்லாம்-எல்லாமும், சிவம்-சிவத்தினது, பூரணமாக-பூர்ணநிலைமையாகக் கொண்டு, வந்தித்து-அதனைத் துதித்து, வாழ்த்தி-வாழ்த்தி, வணங்கும்-நமஸ்கரிக்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** சிந்திப்பானும், சிந்தனையும், சிந்திக்கப்படுபொருளும் இறைவனேயாதலின் 'சிந்தித்தவெல்லாஞ் சிவபூரணமாக' என்றார். 10

தாங்கியபார் விண்ணாதி தானேஞா னாக்கினியாய்
ஓங்குமி யோகவுணர் வுற்றிடுநா ளெந்நாளோ.

**(ப-ரை)** தாங்கிய-ஆதிசேடனால் தாங்கப்பெற்ற, பார்-பூமி, விண்-மேல் உலகு, ஆதி - முதலியவைகள், தானே - தனக்குத்தானே, ஞானாக்கினி-ஞானத்தீ, ஆ - ஆக, ஓங்கும் - மிகுகின்ற, யோகம்-யோகத்தின், உணர்வு-உணர்ச்சி, உற்றிடும் - அடியேனுக்கு உண்டாகும், நாள் - நாள், எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** சர்வமும் ஞானாக்கினிமயமாகக் காண்பது யோகநிலையில் ஆதலினால், 'ஞானாக்கினியா யோங்கு மியோகம்' என்றார். ஆதி என்றது-மண்ணும் விண்ணும் அன்றி எஞ்சிய ஏனைய உலகங்களையும் உளப்படுத்துதற் கென்க.

ஆசனமூர்த் தங்க ளறவகண்டா காரசிவ
பூசைசெய வாசை பொருந்துநா ளெந்நாளோ.

**(ப-ரை)** ஆசனம்-யோக ஆசனமும், மூர்த்தம்-உபாசனாமூர்த்தங்களும், அற-ஒழிய, அகண்டாகார - பரந்துவிரிந்து எங்கும் வியாபகமாயுள்ள, சிவம்-சிவத்தின், பூசை-பூசையை, செய-செய்வதற்கு, ஆசை-இச்சை, பொருந்தும்-அமையும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** சிவம் அகண்டாகாரமாக எங்கும் விரிந்து பரந்து வியாபகமாக இருத்தலின் 'அகண்டாகார சிவம்' என்றார். பூசை என்றது ஆராதனையை. ஈண்டு மானத பூசையைக் குறிப்பித்ததாம். 12

அஞ்செழுத்தி னுண்மை யதுவான வப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ.

**(ப-ரை)** அஞ்செழுத்தின்-பஞ்சாட்சரத்தின், உண்மை-உண்மை, அது-அது, ஆன-ஆகிய, அ-அந்த, பொருளை-இறைவனை, நெஞ்சு - அடியேனின் மனத்தில், அழுத்தி-பதித்து, ஒன்றாகி - அப்பொருளோடு ஒன்றாகி, நிற்கும்-நிலைத்துநிற்கும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** பஞ்சாட்சரத்தின் உண்மைப்பொருளாக இருப்பவன் இறைவன் ஆதலின் 'அஞ்செழுத்தின் உண்மை அதுஆன அப்பொருளை' என்றார்.

அவ்வுயிர்போ லெவ்வுயிரு மானபிரான் றன்னடிமை
எவ்வுயிரு மென்றுபணி யாஞ்செய்வ தெந்நாளோ.



**(ப-ரை)** அவ்வுயிர்போல்-அகரமாகிய உயிர் எழுத்தைப்போல், எ-எந்த உயிரும்-உயிர்களும், ஆன-ஆகிய, பிரான்-பெருமானின், அடிமை - அடிமைகளே, எவ்வுயிரும் - எல்லா உயிர்களும், என்று - என்று எண்ணி, பணி - பணிவிடையை, யாம் - அடியோம், செய்வது - புரிவது, எ - எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** பணி என்றது-பணிந்து செய்யும் ஏவலைக் குறித்தது. 14

தேசிகர்கோ னான திறன்மவுனி நந்தமக்கு
வாசி கொடுக்க மகிழுநா ளெந்நாளோ.

**(ப-ரை)** தேசிகர்-குருக்களின், கோனான-அரசனாக இருக்கின்ற, திறல்-ஞானவெற்றிபூண்ட, மவுனி - மௌனதேசிகர், நந்தமக்கு - நமக்கு, வாசி-வாசியை, கொடுக்க - கொடுக்க, மகிழும் - அடியோம் களிப்பைப்பெறும், நாள்-நாள், எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** தேசிகர்கோன் என்றது - குருக்களுக்கெல்லாம் மேலான குரு என்பது பொருள்; அதாவது குருராஜன் என்பதாம். வாசி என்றது - பல பொருட் டிரிசொல். ஈண்டு பலபொருள் படக்கூறிய **சிலேடையணி**யாம் வாசி என்பது - குதிரை எனவும், மேன்மை எனவும், வாயுதாரணை எனவும் பொருள்தந்து நிற்றல் காண்க. 15

குருலிங்க சங்கமமாக் கொண்ட திருமேனி
அருண்மயமென் றன்புற் றருள்பெறுவ தெந்நாளோ.

**(ப-ரை)** குரு - குருவாகவும், லிங்கம் - லிங்கமாகவும், சங்கமம்-சங்கமர்களாகவும், கொண்ட - கொண்டிருக்கின்ற, திரு - அழகிய, மேனி-வடிவங்கள், அருள் - திருவருளின், மயம் - வடிவே, என்று - என்றுகொண்டு, அன்புற்று-அவர்களிடத்து அன்புவைத்து, அருள் - இறைவன் திருவருளை, பெறுவது-அடைவது, எ-எந்த, நாளோ-நாளோ? எ-று.

**(வி-ரை)** இறைவன் அருள் பெறற்கு குரு, லிங்க, சங்கமவணக்கம் வேண்டுமாதலின் 'குருலிங்க சங்கமமாக்கொண்ட திருமேனி அருண்மயமென்றன்புற்று' என்றார். 16

---

## காண்பேனோ வென்கண்ணி

சிந்திக்குந் தோறுந் தெவிட்டா வமுதேஎன்
புந்திக்கு ணீதான் பொருந்திடவுங் காண்பேனோ.

**(ப-ரை)** சிந்திக்குந்தோறும்-நினைக்கும் பொழுதெல்லாம், தெவிட்டா-தெவிட்டாத, அமுதே-அமிர்தமே, என் - அடியேனின், புந்திக்குள்-புத்திக்குள்ளே, நீதான்-தேவரீர், பொருந்திடவும்-அமைந்திருக்கவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) சிந்திக்கச் சிந்திக்கத் தித்தித்திருப்பவன் இறைவன் ஆதலின் 'சிந்திக்குந்தோறும் தெவிட்டா அமுதே' என்றார். இதுமுதல் முப்பத்தேழு கண்ணிகள் ஈற்றில் 'காண்பேனோ' என்று முடிதலின் இதற்கு காண்பேனோ வென்கண்ணி என்னும பெயராயிற்று.

1

கேவலத்தி னான்கிடந்து கீழ்ப்படா தின்பவருட்
காவலன்பா லொன்றிக் கலந்திடவுங் காண்பேனோ.

(ப-ரை) கேவலத்தில் - கேவலாவத்தையில், நான்-அடியேன், கிடந்து-கிடந்து, கீழ்ப்படாது-தாழ்வுபெற்றுப் போகாது, இன்பம் - சுகத்தைத்தரும், அருள்-திருவருள் மிக்க, காவலன்பால் - இறைவன் இடத்து, ஒன்றி - ஒன்று பட்டு, கலந்திடவும்-கூடிடவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) கேவலாவத்தை என்பது-ஆன்மா தத்துவங்கள் ஒன்றையும் கூடாதிருப்பதாம். இன்னும், சர்வசங்கார காலத்திலே சுத்த மாயாகாரணத்திலே ஆன்மா ஒடுங்கிச் சிருஷ்டிகாலம்வரை ஆணவமலத்தாலே மறைப்புண்டு கலையாதி தத்துவங்களோடு கூடாமல் யாதொரு நினைவுமின்றி இருப்பது என்னும் கட்டளையையுங் காண்க.

2

துரியங் கடந்தவொன்றே தூவெளியாய் நின்ற
பெரியநிறை வேஉனைநான் பெற்றிடவுங் காண்பேனோ.

(ப-ரை) துரியம் - துரியநிலையை, கடந்த - கடந்துநிற்கும், ஒன்றே-ஒப்பற்ற பொருளே! தூ - பரிசுத்தமாகிய, வெளியாய் - பரஆகாயமாக, நின்ற-நின்றருளியிருக்கின்ற, பெரிய-பெரிதாகிய, நிறைவே-பரிபூரணப்பொருளே!, உனை-தேவரீரை, நான்-அடியேன், பெற்றிடவும்-அடையவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) துரியம்-சித்தமொன்றும் இருதயத்தில் நிற்கப் பிராணவாயுவும் புருடனும் நாபித்தானத்திலே ஒன்றுமற நின்ற அவதாரம் என்னும் கட்டளை யாலறிக.

3

மாசற்ற வன்பர்நெஞ்சே மாறுத பெட்டகமாத்
தேசுற்ற மாமணிநின் றேசினையுங் காண்பேனோ.

(ப-ரை) மாசு-குற்றம், அற்ற-இல்லாத, அன்பர்-அன்புமிகுந்த அடியார்களின், நெஞ்சே - மனமே, மாறுத - நீங்காத, பெட்டகமா - பெட்டியாகக் கொண்டு, தேசுற்ற-அதிற்றங்கி ஒளிர்கின்ற, மா-பெரிய, மணி-மாணிக்கமே! நின்-தேவரீரின், தேசினையும் - பிரகாசத்தையும், காண்பேனோ - அடியேன் தரிசிப்பேனோ? எ-று.

(வி-ரை) அன்பர் என்றது - இறைவன்மாட்டு இடையறா ஆர்வம் பூண்டுள்ள தொண்டர்களைக் குறித்ததாம். (பெட்டகம்-பெட்டி.)

4

மாயா விகார மலமகல எந்தைபிரான்
நேயானு பூதி நிலைபெறவுங் காண்பேனோ.



(ப-ரை) மாயாவிகாரம் - மாயாவிகாரமாகிய, மலம்-மலமானது, அகல-நீங்க, எந்தை-எனது தந்தையாகிய, பிரான்-பெருமானினது, நேயம்-நேயத்தோடுங்கூடிய, அநுபூதி-அநுபூதியின், நிலை-நிலையை, பெறவும்-அடையவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) மாயாவிகாரமலம் என்றது-மாயையின் சேட்டையால் விகாரப்படவரும் மலம் என்க.

5

பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும் பொய்யெனவே
மெய்யநினை மெய்யெனவே மெய்யுடனே காண்பேனோ.

(ப-ரை) பொய்யுலகும் - பொய்யுலகமும், பொய்யுறவும் - பொய்யாகிய சுற்றத்தாரும், பொய்யுடலும் - பொய்யாகிய இத்தேகமும், பொய்யெனவே-உண்மையிற் பொய் என்று கண்டு, மெய்ய - நித்தியனே (சத்தியனே) நினை-தேவரீரை, மெய்-சத்தியன், எனவே-என்றே, மெய்யுடனே - இந்தத் தேகத்துடனே, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) பொய், மெய் என்ற சொற்கள் திரும்பத் திரும்ப வந்தமையின் சொற்பொருட்பின்வருநிலையணியாகும். பொய் என்றது-நிலையில்லாதது என்னும் பொருளது.

6

வாலற்ற பட்டமென மாயா மனப்படலங்
காலற்று வீழவுமுக் கண்ணுடையாய் காண்பேனோ.

(ப-ரை) வால்-வால், அற்ற - அறுபட்ட, பட்டமென - காற்றாடியைப் போல, மாயா - மாயையாகிய மனம்-மனத்தின்கண் உள்ள, படலம்-களங்கக் கூட்டம், கால்-அடி, அற்று-அறுந்து, வீழவும் - விழவும், முக்கண் - மூன்று கண்களை, உடையாய் - உடையவனே, காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) மாயா மனப்படலம் என்றது-மாயையால் உண்டாகிய மனத்துக் குற்றங்களின் தொகுதியை. காலற்று வீழ்தல் என்றது - அடியற்று ஒழிதல்; அதாவது முற்றும் அற்று ஒழிகை என்பதாம்.

7

உள்ளும் புறம்பு மொருபடித்தாய் நின்றுசுகங்
கொள்ளும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

(ப-ரை) உள்ளும் - உட்பக்கத்தும், புறம்பும் - வெளிப்பக்கத்தும், ஒரு-ஒரே, படித்தாய் - தன்மையாய், நின்று-நின்று, சுகம் - சிவானந்த சுகத்தை, கொள்ளும்படிக்கு - அடையும் வண்ணம், இறை-இறைவனாகிய, நீ-தேவரீர், கூட்டிடவும்-அடியேனைக் கலந்துகொள்ளவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) ஒரேபடித்தாய் என்றது-பேதமின்றி ஒரேவித இன்பமயமாய் என்பதாம்.

8

காட்டுகின்ற முக்கட் கரும்பே கனியேஎன்
ஆட்டமெல்லாந் தீரவுன தாடலையுங் காண்பேனோ.

(ப-ரை) காட்டுகின்ற - அடியார்களுக்குத் தரிசனங்காட்டுகின்ற, முக் கண்-மூன்றுகண்களையுடைய, கரும்பே - கரும்பே!, கனியே-கனியே!, என். அடியேனின், ஆட்டம் - பிரபஞ்ச ஆட்டம், எல்லாம் - முற்றும், தீர-ஒழிய, உனது-தேவரீரது, ஆடலையும்-திருநடனத்தையும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) 'கனி' என்றது உருவகம், கனிவும் இன்பும் உடையவன் ஆதலின் 'கனியே' என்றார்.

9

**தூங்காமற் றூங்கிச் சுகப்பெருமா னின்னிறைவில்**
**நீங்காம னிற்கு நிலைபெறவுங் காண்பேனோ.**

(ப-ரை) சுகப்பெருமான் - சங்கரனே!, தூங்காமல்-தூங்காதபடி, தூங்கி-தூங்கி, நின் - தேவரீரின், நிறைவில் - பரிபூரணத்திலே, நீங்காமல் - நீங்காத படிக்கு, நிற்கும்-நிற்கிற, நிலை-நிலையை, பெறவும்-அடையவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) இறைவன் சுகவடிவன். அடியார்க்கும் உயிர்கட்கும் சுகத்தைச் செய்பவன் ஆதலின் 'சுகப்பெருமான்' என்றார்.

10

**வாதவூ ராளிதனை வான்கருணை யால்விழுங்கும்**
**போதவூ ரேறேநின் பொன்னடியுங் காண்பேனோ.**

(ப-ரை) வாதவூராளிதனை - திருவாதவூரில் அவதரித்த மணிவாசகரை, வான்-உயர்ந்த, கருணையால்-கிருபையினாலே, விழுங்கும்-விழுங்கிய, போதம் ஊர் - ஞானபூமிக்கு, ஏறே-இறைவனே!, நின்-தேவரீரின், பொன்-அழகிய, அடியும்-திருவடியையும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) மணிவாசகப்பெருமான் திருவாதவூரிலே பிறந்தவர் ஆதலின் அவர்க்கு "திருவாதவூரர்" எனப் பெயராயிற்று. போதவூர் - ஞானபூமி, ஞானதலம். (போதம்-ஞானம்.)

11

**சாட்டையிலாப் பம்பரம்போ லாடுஞ் சடசால**
**நாட்டமற வெந்தைசுத்த ஞானவெளி காண்பேனோ.**

(ப-ரை) சாட்டை - சாட்டைக்கயிறு, இலா - இல்லாத, பம்பரம்போல்-பம்பரத்தைப்போல், ஆடும்-ஆடுகிற, சடம்-தேகத்தின், சாலம்-கூட்டத்தின், நாட்டம் - ஆசை (பற்று), அற - நீங்க, எந்தை-எனது தந்தையாகிய இறைவனின், ஞானவெளி - ஞானாகாயத்தை, காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) சாலம்-கூட்டம்; தேகத்தின் தத்துவக்கூட்டத்தில் என்பதாம். நாட்டம் - இது ஈண்டு விருப்பத்தை உணர்த்தியது. நாடுவது நாட்டம். ஞானவெளி என்றது - பராகாயத்தை. என்னை? இறைவன் பராகாயவடிவன் ஆதலின் என்க.

12

**மன்றாடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக்**
**குன்றேநின் றாட்கீழ்க் குடிபெறவுங் காண்பேனோ.**



(ப-ரை) மன்று-அம்பலத்தின் கண்ணே, ஆடும்-திருநடனத்தைச் செய்கின்ற, வாழ்வே-அடியோங்களது வாழ்வே!, மரகதம் - மரகதக்கொடி, சேர்-சேர்ந்துள்ள; மாணிக்கக்குன்றே - மாணிக்கமலையே!, நின்-தேவரீரின், தாள்-திருவடியின், கீழ்-கீழே, குடி-குடியாக, பெறவும் - வாழ்ந்திருக்கப் பெறவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) மரகதஞ்சேர் மாணிக்கக்குன்றே என்றது-உருவகம். பார்வதி தேவியார் பச்சைநிறப் பசுங்கொடியாதலின் 'மரகதஞ்சேர்' என்றார். பார்வதி தேவி இடதுபாகத்திருத்தலின் இவ்வாறு உருவகப்படுத்தினார் என்பது அறியற்பாற்று. இறைவன் மாணிக்கவண்ணன் ஆதலின் 'மாணிக்கக் குன்றே' என்றார். தாட்கீழ் குடிபெற என்றது-தாளடைந்து வாழ்தலை.

13

**பொய்யென் றறிந்தும்எமைப் போகவொட்டா தையஇந்த**
**வையங் கனமயக்க மாற்றிடவுங் காண்பேனோ.**

(ப-ரை) ஐய - ஐயனே!, பொய் - (இந்த உலகமானது) பொய், என்று-என்று, அறிந்தும்-தெரிந்தும், எமை-அடியோங்களை, போக - மேற்கதிக்குப்போக, ஒட்டா-விடாத, இந்த-இந்த, வையம்-உலகத்தின், கனம்-பெரிய, மயக்கம்-மயக்கத்தை, மாற்றிடவும்-மாற்றவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) 'போக' என்பதனோடு அவாய்நிலையால் மேற்கதி என்பது வருவித்து உரைக்கப்பெற்றது. மேல்நிலையாவது முத்திநிலை.

14

**தாயினும் நல்ல தயாளுவே நின்னை யுன்னித்**
**தீயின்மெழு கொத்துருகுஞ் சிந்தைவரக் காண்பேனோ.**

(ப-ரை) தாயினும்-தாயைக்காட்டிலும், நல்ல - நல்ல, தயாளுவே-தயாளத்துவத்தை உடையவனே!, நின்னை-தேவரீரை, உன்னி-நினைத்து, தீயின்-நெருப்பிலிடப்பெற்ற, மெழுகு - மெழுகை, ஒத்து-ஒத்து, உருகும் - உருகும்படியாகிய, சிந்தை - மனம், வர - அடியேனுக்குண்டாக, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) தயாளு - இது தயாளத்தை உடையவன் என்னும் பொருளது. தயாளம்-இளகுந்தன்மை, கிருபை என்பன பொருளாம் தீயின் மெழுகு என்றது உவமை. தீயின்கண் இட்ட மெழுகுபோல் உருகி என்பதாம்.

15

**என்செயினும் என்பெறினும் என்னிறைவா ஏழையன்யான்**
**நின்செயலென் றுன்னு நினைவுவரக் காண்பேனோ.**

(ப-ரை) இறைவா - கடவுளே!, ஏழையன்யான்-அறிவில் எளியவனாகிய அடியேன், என்-என்ன, செயினும் - செய்தாலும், என்-என்ன, பெறினும்-பெற்றாலும், நின்-தேவரீரின், செயல்-செய்கை, என்று-என்று, உன்னும்-எண்ணும், நினைவு-எண்ணம், வர - அடியேனுக்கு உண்டாக, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) கடவுள் எல்லார்க்கும் தலைவன் ஆதலின் 'இறைவன்' எனப் பெற்றான். தன்பால் அறிவு குறைந்திருக்குந் தன்மைபற்றி 'ஏழையன்யான்' என்றார்.

16

எள்ளத் தனையு மிரக்கமிலா வன்பாவி
யுள்ளத்து மெந்தை யுலாவிடவுங் காண்பேனோ.

(ப-ரை) எள்ளத்தனையும் - எள் அளவுங்கூட, இரக்கம்-உயிர்களிடத்து இரக்கம்காட்டுந்தன்மை, இலா - இல்லாத, வன்-கொடிய, பாவி-பாவியாகிய அடியேன், உள்ளத்தும்-மனத்தகத்தும், எந்தை-எமது தந்தையாகிய இறைவனே!, உலவிடவும் - தேவரீர் உலாவவும், காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று

(வி-ரை) இரக்கம் என்றது - ஜீவப்பிராணிகளின் துன்பங்கண்டும் அதனிடத்து மனம்பரிந்து உதவிபுரிதல். (இரங்கல்-வருந்தல்.)

17

வஞ்சகத்துக் காலயமாம் வல்வினையேன் ஆகெடுவே
னெஞ்சகத்தி லையா நீ நேர்பெறவுங் காண்பேனோ.

(ப-ரை) வஞ்சகத்துக்கு-வஞ்சகங்களுக்கு, ஆலயம்-கோவில், ஆம்-ஆகும், வல்-வலிய, வினையேன் - வினைகளையுடையவனாகிய அடியேன், ஆ - ஐயோ!, கெடுவேன் - கெடுவேன்!, நெஞ்சகத்தில்-அடியேனின் மனத்துள்ளே, ஐயா-ஐயனே!, நீ - தேவரீர், நேர்பெறவும் - நேர்மையாய் எழுந்தருளியிருக்கவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) ஆகெடுவேன் இது-இகழ்ச்சிப்பொருளில் வந்த இரக்கச்சொல். நெஞ்சகம் - இது நெஞ்சாகிய இடம் என விரியும். இது இருபெயரொட்டுப் பண்புச்சொல்.

18

தொல்லைப் பிறவித் துயர்கெடவு மெந்தைபிரான்
மல்லற் கருணை வழங்கிடவுங் காண்பேனோ.

(ப-ரை) தொல்லை - பழமையாகிய, பிறவி - பிறவிகளினாலுண்டாகும், துயர்-துன்பம், கெடவும்-கெட்டு ஒழியவும், எந்தை-அடியோங்களின் தந்தையாகிய, பிரான் - பெருமான், மல்லல் - வளப்பம் பொருந்திய, கருணை - கருணையை, வழங்கிடவும் - புரிந்தருளவும், காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி - ரை) பிறப்பு தொன்றுதொட்டுத் தொடர்ந்து வருவதாதலின் 'தொல்லைப்பிறவி' என்றார். தொல்லை என்றது - ஈண்டு பழமை என்னும் பொருளது. மல்லல் கருணை என்றது-வளப்பம் பொருந்திய கருணை. கருணைக்கு வளப்பமாவது துன்பத்தை அடியோடு தொலைத்தலும் இன்பம் பெருக அருள்புரிதலுமாம்.

19

வாளாருங் கண்ணியர் மயற்கடலி லாழ்ந்தேன்சற்
றாளாக வெந்தை யருள்செயவுங் காண்பேனோ.



(ப-ரை) வாளாரும்-வாளாயுதத்தை ஒத்த, கண்ணார் - கண்களையுடைய பெண்களின், மயல் - ஆசையாகிய, கடல்-கடலில், ஆழ்ந்தேன் - அழுந்தியவனாகிய அடியேன், சற்று - கொஞ்சம், ஆளாக - திருவடிக்கு ஆளாகும்படி, எந்தை-அடியேனின் பரம பிதாவாகிய இறைவன், அருள்-திருவருளை, செயவும்-செய்யவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) பெண்களின் கண்ணுக்கு வாளாயுதத்தையும் ஒப்புக்கூறல் உண்டாதலின் 'வாளாருங் கண்ணார்' என்றார். 'மயல் கடல்' இது உருவக அணி; மயல் கடலாக உருவகஞ் செய்யப்பெற்றது; இது கரைகாணாமையால் என்க.

20

பஞ்சாய்ப் பறக்குநெஞ்சப் பாவியைநீ கூவிஐயா
அஞ்சாதே என்றின் னருள்செயவுங் காண்பேனோ.

(ப-ரை) ஐயா-ஐயனே!, பஞ்சாய்-பஞ்சைப்போல, பறக்கும்-பறக்கின்ற, நெஞ்சம் - மனத்தையுடைய, பாவியை - தீவினைகளைச்செய்யும் பாவியாகிய அடியேனை, நீ-தேவரீர், கூவி-அழைத்து, அஞ்சாதே-பயப்படாதே, என்று-என்று, உன் - தேவரீரின், அருள் - திருவருளை, செயவும்-செய்யவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) நண்மையுடையதும் இலேசாய்ப் பறப்பதும் பஞ்சு ஆதலின் 'பஞ்சாய்ப் பறக்கு நெஞ்சம்' எனப் பறக்கு நெஞ்சத்திற்குப் பஞ்சை உவமை கொடுத்தார். தீவினையை மிகுதியுஞ் செய்துள்ளமையால் 'பாவியை' எனத் தன்னை இகழ்ந்து கூறினார். இறைவன் அறைகூவி வீடருளும் அமலன் ஆதலின் 'நீ கூவி அஞ்சாதே என்று உன்னருள் செயவும்' என்றார்.

21

ஆடுகறங் காகி அலமந் துழன்றுமனம்
வாடுமெனை ஐயா நீ வாவெனவுங் காண்பேனோ.

(ப-ரை) ஐயா - ஐயனே!, ஆடும் - சுழன்று ஆடுகின்ற, கறங்கு-காற்றாடி, ஆகி-ஆகி, அலமந்து-அலைந்து, உழன்று-கஷ்டப்பட்டு, மனம்-மனம், வாடும்-வாட்டப்படும், எனை-அடியேனை, நீ-தேவரீர், வாஎனவும்-வாவென்று கருணையுடனே அழைக்கவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) ஆடுகறங்கு - இது ஆடுகின்ற கறங்கு, ஆடினகறங்கு, ஆடும் கறங்கு என முக்காலத்துக்கும் பொதுவாக நிற்றலின் வினைத்தொகை.

22

சிட்டர்க் கெளிய சிவனேயோ தீவினையேன்
மட்டற்ற வாசை மயக்கறவுங் காண்பேனோ.

(ப-ரை) சிட்டர்க்கு-அடியார்களுக்கு, எளிய-எளியவனாகிய, சிவனேயோ-ஓ சிவபெருமானே!, தீ-கொடிய, வினையேன்-வினைகளைச்செய்துள்ளவனாகிய அடியேன், மட்டு - அளவு, அற்ற - இல்லாத, ஆசை - பிரபஞ்சமாயாசம்பந்த ஆசையின், மயக்கு - மயக்கம், அறவும்-தொலைந்து ஒழியவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) சிட்டர் - இது 'சிஷ்டர்' என்ற வடசொற்றிரிபு. இதற்குத் தெய்வத்தொண்டர் என்பது பொருளாம். இறைவன் அடியார்க் கெளியன் ஆதலின் 'சிட்டர்க் கெளிய சிவனேயோ' என்றார். 23

உண்ணின் றுணர்த்து முலப்பிலா வொன்றே நின்
தண்ணென்ற சாந்தவருள் சார்ந்திடவுங் காண்பேனோ.

(ப-ரை) உள் - அடியேனின் உள்ளத்துக்கு உள்ளே, நின்று - இருந்து, உணர்த்தும்-அறிவிக்கின்ற, உலப்பு-கெடுதல், இலா-இல்லாத, ஒன்றே - ஒப்பற்ற பொருளே!, நின்-தேவரீரின், தண்என்ற-குளிர்ச்சி பொருந்திய, சாந்த-சாந்தத்தோடு கூடிய, அருள் - திருவருளை, சார்ந்திடவும் - சேரவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) இறைவன் எவருள்ளத்தும் எள்ளுக்குள் எண்ணெய்போல் இருப்பவன் ஆதலினாலும், இறைவன் உணர்வுக்கு உணர்வாய் நின்று உயிர்களுக்கு உணர்த்துகின்றவன் ஆதலினாலும், 'உண்ணின் றுணர்த்து முலப்பிலா ஒன்றே' என்றார். 24

ஓடுங் கருத்தொடுங்க உள்ளுணர்வு தோன்ற நினைக்
கூடும் படிக்கிறைநீ கூட்டிடவுங் காண்பேனோ.

(ப-ரை) ஓடும் - பலவழிகளிலும் ஓடுகின்ற, கருத்து - மனம், ஒடுங்க-அடங்க, உள் - உள்ளத்துக்குள்ளே, உணர்வு - ஞான உணர்ச்சி, தோன்ற-உதிக்க, இறை-இறைவனே!, நினை-தேவரீரை, கூடும்படிக்கு-கலக்கும் வண்ணம், நீ-தேவரீர், கூட்டிடவும்-கூட்டிவைக்கவும், காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) ஓடும் கருத்து என்றது-பிரபஞ்ச ஆசைகளிற் சென்று ஓடுகின்ற மனம் என்பதாம். 25

வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை
நோக்காம னோக்கிநிற்கு நுண்ணறிவு காண்பேனோ.

(ப-ரை) வாக்கான்-வாக்கினாலும், மனத்தான்-மனத்தினாலும், மதிப்பு-மதித்து அறிதற்கு, அரியாய்-அருமையானவனே!, நின்-தேவரீரின், அருளை-திருவருளை, நோக்காமல் - பார்க்காமல், நோக்கி - பார்த்து, நிற்கும்-நிற்கும், நுண் - நுண்ணிய, அறிவு - ஞானத்தை யான் அடைய, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) நோக்காமல் நோக்கல் என்றது - தற்போதத்தால் நோக்காது சிவபோதத்தால் நோக்கல். 26

இவ்வுடம்பு நீங்குமுனே யெந்தாய்கேள் இன்னருளா
அவ்வுடம்புக் குள்ளே யவதரிக்கக் காண்பேனோ. [ம்

(ப-ரை) எந்தாய் - எமது தந்தையே!, கேள் - கேட்பாயாக, இ-அடியேனின் இந்த, உடம்பு-மனிதயாக்கை, நீங்குமுன்னே - நீங்குதற்கு முன்னால், நின்-தேவரீரின், அருளாம் - திருவருளாம், அ - அந்த, உடம்புக்கு - உடம்பினுக்கு, உள்ளே-உள்ளே, அவதரிக்க-பிறக்க, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.



(வி-ரை) இவ்வுடம்பு - மனித யாக்கையை. 'அவ்வுடம்பு' என்றதில் அகரம் புறச்சுட்டு; அவ்வுடம்பு என்றது - திருவருளை. இறைவன் சர்வலோகத்திற்கும் பரமபிதா ஆதலின் 'எந்தாய்' என்றார். 27

நித்தமா யொன்றாய் நிரஞ்சனமாய் நிர்க்குணமாஞ்
சுத்தவெளி நீவெளியாய்த் தோன்றிடவுங் காண்பேனோ.

(ப-ரை) நித்தமாய்-அழிவில்லாது என்று முள்ளதாய், ஒன்றாய்-ஏகமாகியும், நிரஞ்சனமாய்-களங்கரகிதமாயும், நிர்க்குணமாய்-குணம் அற்றதாகியும் (இருக்கிற), சுத்தவெளி - பரிசுத்தவெளியாகிய, நீ - தேவரீர், வெளியாய்-வெளிப்படையாய், தோன்றிடவும் - அடியேனுக்குமுன் தோன்றவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) நித்தமாய்-அழிவில்லாமல். இறைவன் களங்கமற்றவன் ஆதலின் 'நிரஞ்சனமாய்' என்றார். இறைவன் பராகாயமாக நிற்பவன் ஆதலின் 'சுத்தவெளிநீ' என்றார். 28

கண்ணிறைந்த மோனக் கருத்தேஎன் கண்ணேஎன்
உண்ணிறைந்த மாயை யொழிந்திடவுங் காண்பேனோ.

(ப-ரை) கண் - கண்களில், நிறைந்த-நிறைந்து காண்கின்ற, மோனம்-மௌனத்தின், கருத்தே - கருத்தே, என் - அடியேனின், கண்ணே - கண் போன்றவனே, என் - அடியேனின், உள் - உள்ளத்திலே, நிறைந்த-நிறைந்திருக்கின்ற, மாயை - மாயையானது, ஒழிந்திடவும் - தொலைந்துபோகவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) கண்ணிறைந்த மோனக் கருத்தே என்றது - காண்பனவெல்லாம் மோனப்பொருளாம். இறைவடிவாகவே காணப்படுதலின் இவ்வாறு கூறினார். இறைவன் காண்பானும், காட்சியும், காணப்படுபொருளாகவும் இருத்தலின் 'கண்ணே' என்றார். 29

அத்தா விமலா அருளாளா ஆனந்த
சித்தா எனக்குனருள் செய்திடவுங் காண்பேனோ.

(ப-ரை) அத்தா-கடவுளே!, விமலா-பரிசுத்தனே!, அருளாளா - அருளையுடையவனே!, ஆனந்த-இன்பமயமாகிய, சித்தா-அறிவுவடிவனே!, எனக்கு-அடியேனுக்கு, உன் - தேவரீரின், அருள்-திருவருள், செய்திடவும்-கிருபை செய்யவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) இறைவன் மலரகிதன் ஆகலின் 'விமலா' என்றார். ஈண்டு அகச்சுத்தத்தைக் குறித்தது. இனி இதற்கு ஆன்மாக்கள் ஆனந்தம் எய்த எல்லாச் சித்துஞ்செய்ய வல்லவனே என்னினுமாம். 'அருள் செய்திடவும்' என்றது கிருபைசெய்தலை. 30

**வீணே பிறந்திறந்து வேசற்றேன் ஆசையறக்**
**காணேன் இறைநின் கருணைபெறக் காண்பேனோ.**

(ப-ரை) வீணே - காரியமின்றி (பிரயோசனமின்றி), பிறந்து-பிறந்தும், இறந்து-இறந்தும், பேசற்றேன்-களைத்துப்போனேன், ஆசை - அடியேனின் உலக ஆசை, அற-நீங்க, காணேன்-கண்டேனில்லை (இத்தகைய அடியேன்), நின்-தேவரீரின், கருணை - கருணையை, பெற-அடைய, காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) 'வீணே' என்பதன் ஈற்று ஏகாரம் தேற்றேகாரம். 'இறை' இது அண்மைவிளி. 'நின்கருணை' இது ஆறன்தொகை; நின்னுடைய கருணை என விரியும். 31

**சட்டையொத்த விவ்வுடலைத் தள்ளுமுன்னே நான்சகச**
**நிட்டையைப்பெற்று ஐயா நிருவிகற்பங் காண்பேனோ.**

(ப-ரை) ஐயா-அப்பனே!, சட்டை - சட்டையை, ஒத்த - போன்ற, இ-இந்த, உடலை-உடம்பை, தள்ளுமுன்னே-களையுமுன்னே, நான்-அடியேன், சகசநிட்டையை - சகசநிட்டையை, பெற்று - அடைந்து, நிருவிகற்பம் - நிருவிகற்ப சமாதியை, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) தேகம் கவசம்போல் இருத்தலின் 'சட்டை ஒத்த இவ்வுடலை' என்றார். நிருவிகற்பம் என்றது - நிருவிகற்ப சமாதிநிலையை. அதாவது இறைவனைக்கண்டு சோகம்பாவனையால் இறைவனேயாகி ஆனந்த நிலையில் இருத்தலாம். 32

**எல்லாந் தெரியு மிறைவாஎன் னல்லலெல்லாஞ்**
**சொல்லாமு னீதான் றொகுத்திரங்கக் காண்பேனோ.**

(ப-ரை) எல்லாம் - எல்லாவற்றையும், தெரியும் - அறிந்துகொள்ளும், இறைவா - கடவுளே!, என் - அடியேனின், அல்லல் - துன்பங்கள், எல்லாம்-எல்லாவற்றையும், சொல்லாமுன் - சொல்லுதற்குமுன்னே, நீதான் - தேவரீரே!, தொகுத்திரங்க-கூட்டி இரங்கியருள, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) இறைவன்-சர்வவியாபகன், ஓதாதே உணர்பவன் அறிவுமயன் ஆதலின் 'எல்லாந் தெரியும் இறைவா' என்றார். அடியேன் துன்பங்களை முறையிடுமுன் தேவரீரே அறிந்து இரக்கங் காட்டக்கூடாதோ என்பார், 'என் அல்லலெல்லாஞ் சொல்லாமுன் நீதான் தொகுத்திரங்கக் காண்பேனோ' என்றார். 33

**அண்டபகி ரண்ட மனைத்து மொருபடித்தாக்**
**கண்டவர்கள் கண்ட திருக் காட்சியையுங் காண்பேனோ.**

(ப-ரை) அண்டம்-உலகங்களையும், பகிரண்டம்-இவைகளுக்குப் புறம்பாயுள்ள அண்டங்களும், அனைத்தும்-எல்லாம், ஒருபடித்தா-ஒரேதன்மையாக, கண்டவர்கள் - பார்த்தவர்கள், கண்ட - தரிசித்த, திருக்காட்சியையும்-தேவரீரின் திருக்காட்சியையும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) பகிரண்டம் என்றது-உலகுக்குப் புறம்பே யுள்ளதாய அண்டங்களை. கண்ட திருக்காட்சி என்றது-கண்ட திருவருட் காட்சியை. 34



**ஊனிருந்த காய முடனிருப்ப எந்தைநின்பால்**
**வானிருந்த தென்னவுநான் வந்திருக்கக் காண்பேனோ.**

(ப-ரை) ஊன்-மாமிசம், இருந்த-பொருந்தியுள்ள, காயமுடன்-இந்தத் தேகத்துடன், இருப்ப-இருக்கையில், எந்தை - அடியோங்களது தந்தையே, நின்பால்-தேவரீரிடத்து, வான்-ஆகாயம், இருந்தது என்னவும்-அடங்கியிருந்ததுபோல, நான்-அடியேன், வந்துஇருக்க - தேவரீர்பாற் கூடியிருக்க, காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) வான் என்றது-வெளியை, பரவெளியை. இனி, இதற்கு மேன்மை எனப்பொருள் கூறுவாரும் உண்டு. வந்திருத்தல் என்றது-இறைவனோடு போய்க்கூடி யின்புறலை. 35

**தினையத் தனையுந் தெளிவறியாப் பாவியேன்**
**நினைவிற் பரம்பொருணீ நேர்பெறவுங் காண்பேனோ.**

(ப-ரை) தினையத்தனையும் - தினை அளவாகிலும், தெளிவு - ஞானத் தெளிவை, அறியா-அறியாத, பாவியேன் - பாவியாகிய அடியேனின், நினைவில்-எண்ணத்தின்கண், பரம்பொருள்-மேலான பொருளாகிய, நீ - தேவரீர், நேர் - நேராக, பெறவும் - அடையவும், காண்பேனோ - அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) தினை என்றது-ஈண்டு சிறிய அளவிற்கு எடுத்துக் காட்டாக எடுத்துக் கொள்ளப்பட்டது. 'தினை' இது ஒருவகைச் சிறிய தானியமணி. தெளிவு என்றது-ஞானத்தெளிவு, புத்தித்தெளிவு என்பதாம். இறைவன் உயர்ந்த பொருட்கட்கெல்லாம் உயர்ந்த பொருளாதலின் 'பரம்பொருள்நீ' என்றார். 36

**துன்பமெனுந் திட்டனைத்துஞ் சூறையிட வையாவே**
**இன்பவெள்ளம் வந்திங் கெதிர்ப்படவுங் காண்பேனோ.**

(ப-ரை) ஐயாவே-அப்பனே!, துன்பம்-வேதனை, எனும்-என்கிற, திட்டு-மேடுகள், அனைத்தும்-எல்லாம், சூறையிட-அடித்துக் கவர்ந்தோட, இன்பம்-சிவானந்த, வெள்ளம் - பெருக்கு, வந்து - வந்து, இங்கு-இவ்விடத்து, எதிர்ப்படவும்-எதிர்வந்து சேரவும், காண்பேனோ-அடியேன் காண்பேனோ? எ-று.

(வி-ரை) துன்பம் என்றது-பிறவித் துன்பங்களை; பிரபஞ்சமாயையால் ஏற்படுந் துன்பங்களை. சூறையிடல் - அள்ளிக்கொண்டோடல்; கவர்தல். இன்பவெள்ளம்-சிவானந்த இன்பப்பெருக்கு. 37

---

## ஆகாதோ வென்கண்ணி

**கல்லாத நெஞ்சங் கரைந்துருக வெத்தொழிற்கும்
வல்லாய்நின் னின்பம் வழங்கினு லாகாதோ.**

(ப-ரை) கல்லாத - ஞானநூற்களைக் கல்லாத, நெஞ்சம் - மனமானது, கரைந்து - கரைந்து, உருக - இளகும்படி, எத்தொழிற்கும் - எப்படிப்பட்ட தொழிலையும் செய்தற்கு, வல்லாய்-வல்ல கடவுளே!, உன் - தேவரீரின், இன்பம் - சிவானந்தத்தை, வழங்கினுல் - அடியேனுக்குக் கொடுத்தருளினுல், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) வல்லாய் என்றது-இலேசிற் செய்துமுடிக்கும் ஆற்றல் உள்ள கடவுளே என்பதாம். 'ஆகாதோ' இது தகுதியுடையது அன்ருமோ என்பது பொருளாம். இதுமுதல் இருபத்தொரு கண்ணிகள் 'ஆகாதோ' என முடிதலின் இப்பகுதிக்கு ஆகாதோ வேன்கண்ணிகள் என்று பெயராயிற்று. 1

**என்னை யறிய எனக்கறிவாய் நின்றருணின்
றன்னையறிந் தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ.**

(ப-ரை) என்னை-அடியேனை, அறிய - இன்னுன் என்று அறிந்துகொள்ளும்படி, எனக்கு - அடியேனுக்கு, அறிவாப் - அறிவாக, நின்றருள் - நின்று அருள்செய்யும், உன்றன்னை-தேவரீரை, அறிந்து - உணர்ந்து, இன்பநலம்-சிவானந்த இன்பநலத்தை, சாரவைத்தால்-அடியேன் சேரும்படி வைத்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) தன்னை யறிந்தவன் தலைவனை அறிவான் என்பது - ஆப்தர் வசனம் ஆதலினுலும் அறிவுதனைக் கொண்டு அறிவுதனைக் கண்டு என்பபடி அறிவைக்கொண்டு அறிவுமயமாய் விளங்கும் இறைவனை அறிந்தால் தன்னை யறியலாம் இன்பநலஞ் சாரலாம் ஆதலின் 'உன்றனை யறிந்தின்பநலஞ் சாரவைத்தா லாகாதோ' என்ருர். 2

**பொய்ம்மயமே யான புரைதீர வெந்தைஇன்ப
மெய்ம்மயம்வந் தென்னை விழுங்கவைத்தா லாகாதோ.**

(ப-ரை) பொய் - பொய்யின், மயமே - வடிவமே, ஆன - ஆகிய, புரை-குற்றம், தீர - நீங்கும்படி, எந்தை - எனது அப்பனே!, இன்ப - தேவரீரது ஆனந்த, மெய் - உண்மைவடிவம், வந்து - எழுந்தருளிவந்து, விழுங்கவைத்தால்-விழுங்கும்படியாகச்செய்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) இறைவன் உண்மை, அறிவு, ஆனந்தம் என்னும் மூன்றுருவும் ஆனவன் ஆதலின் 'எந்தை யின்ப மெய்ம்மயம்' என்ருர். 3

**மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வேநின் னின்பமயம்
சிட்டர்போல் யானருந்தித் தேக்கவைத்தா லாகாதோ.**



(ப-ரை) மட்டு - அளவு, இலா - இல்லாத, சிற்சுகமாம்-ஞானசுகமாகிய, வாழ்வே-வாழ்வே!, நின்-தேவரீரது, இன்பமயம்-ஆனந்தவடிவத்தை, சிட்டர்போல் - தேவரீரின் சிறந்த அன்பர்கள்போல, யான் - அடியேன், அருந்தி-அநுபவித்து, தேக்க - தேக்கெறியுமாறு, வைத்தால் - வைத்தருளினுல், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) இறைவன் ஞானமும் சுகமும் அளவிட்டுக் கூற முடியாதது ஆதலினுலும் இறைவன் ஞானசொரூபியும் வரம்பிலின்பமும் உடையவன் ஆதலினுலும் 'மட்டிலாச் சிற்சுகமாம் வாழ்வே' என்ருர். 4

**அத்தாநின் பொற்ரு ளடிக்கே யனுதினமும்
பித்தாகி இன்பம் பெருகவைத்தா லாகாதோ.**

(ப-ரை) அத்தா - அப்பனே!, நின் - தேவரீரின், பொன் - அழகிய, தாளடிக்கே-பாதமாகிய திருவடிக்கே, அனுதினமும்-ஒவ்வொருநாளும், பித்தாகி - பித்து மிகும்படிச்செய்து (அடியேனுக்கு), இன்பம் - சிவானந்தப் பேரின்பம், பெருக-பெருகும்படிக்கு, வைத்தால்-வைத்திட்டால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) தாளடிக்கே - இது தாளாகிய அடி என விரிதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 5

**மெல்லியலார் மோக விழற்கிறைப்பே னையாநின்
எல்லையிலா னந்தநல மிச்சித்தா லாகாதோ.**

(ப-ரை) ஐயா-அப்பனே!, மெல்லியலார்-பெண்களின், மோகம் - மோகமாகிய, விழற்கு-விழற்புல்லுக்கு, இறைப்பேனை - பயிராகும் பொருட்டு அறிவாகிய நீரை இறைக்கும் அடியேன், நின் - தேவரீரின், எல்லைஇல்-அளவிட முடியாத, ஆனந்தநலம் - சிவானந்த நலத்தை, இச்சித்தால் - ஆசையுற்ருல், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) மோகம் - காம இச்சை. விழல்-இது ஒருவகைப்புல்; எதற்கும் உதவாத பயனற்ற புல். 6

**சுட்டழகா யெண்ணுமனஞ் சூறையிட்டா னந்தமயக்
கட்டழகா நின்னைக் கலக்கவைத்தா லாகாதோ.**

(ப-ரை) ஆனந்தமயம்-இன்பவடிவாகிய, கட்டழகா-நிரம்பிய அழகனே!, சுட்டு-சுட்டிக் காண்பதனையே, அழகா - அழகாக, எண்ணும் - எண்ணுகின்ற, மனம் - மனத்தை, சூறையிட்டு - கொள்ளைகொண்டு, நின்னை - தேவரீரை, கலக்க-கூடும்படி, வைத்தால்-வைத்திட்டால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) சுட்டு என்றது-எல்லாஞ் சிவமயமாகக்காணுது பிரபஞ்சத்தை பகிர்முகப்பட்டு பொறி புலன்வழிசென்று நோக்கி விழையுந் தன்மையை. 7

**சோதியே நந்தாச் சுகவடிவே தூவெளியே
ஆதியே நின்னை யறியவைத்தா லாகாதோ.**

(ப-ரை) சோதியே - சோதிசொரூபனே!, ஆனந்தசுகம் - பேரானந்தத்தின் விளைவிக்கும் இன்ப, வடிவே உருவனே!, தூ-பரிசுத்தமாகிய, வெளியே-பராகாயமே!, ஆதியே - முதலே!, நின்னை-தேவரீரை, அறியவைத்தால்-அடியேன் அறியும்படிச்செய்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) இறைவன் பரிசுத்தனும், பரமாகாயமாகவும் விளங்குபவன் ஆதலின் 'தூவெளியே' என்றார். இறைவனே எல்லோர்க்கும் முன்னோன், தனக்குத்தானே முதலாய், தனக்கோர் முதலின்றி, எல்லோர்க்கும் முதல்வனாகி இருத்தலின் 'ஆதியே' என்றார். 8

**நேசஞ் சிறிதுமிலேன் நின்மலனே நின்னடிக்கே**
**வாசஞ் செயவிரங்கி வாவென்று லாகாதோ.**

(ப-ரை) நின்மலனே - பரிசுத்தனே!, நேசம் - அன்பு, சிறிதும்-கொஞ்சமும், இலேன் - இல்லாதவனாக இருக்கின்றேன், நின்-தேவரீரின், அடிக்கே-திருவடிக்கீழேயே, வாசஞ்செய-குடியிருக்க, இரங்கி-அடியேன்பால் இரக்கம் பூண்டு, வா என்றால்-வா என்று அழைத்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) இறைவன் மலமற்றவன், மலாகிதன் ஆதலின் 'நின்மலனே' என்றார். அடிக்கே என்பதில் - ஈற்று ஏகாரம் தேற்றேகாரம். வாசஞ்செய என்றது - திருவடியிற் கலந்து சிவானந்தப் பேறுற்று வசித்திருத்தலை உணர்த்திற்று. இரங்கி என்றது-கருணையால் இரக்கம்கொண்டு என்பதாம். 9

**என்னறிவுக் குள்ளே யிருந்ததுபோல் ஐயாவே**
**நின்னறிவு ணின்னுடன்யா னிற்கவைத்தா லாகாதோ.**

(ப-ரை) ஐயாவே-அப்பனே!, என்-அடியேனின், அறிவுக்கு-அறிவினுக்கு, உள்ளே-உள்ளே, இருந்ததுபோல்-தேவரீர் வீற்றிருந்தருளியதுபோல, நின்-தேவரீரின், அறிவுள்-அறிவுக்குள்ளே, நின்னுடன்-தேவரீரினுடன், யான்-அடியேன், நிற்க - நின்றிருக்கும்படி, வைத்தால்-வைத்திட்டால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) நின்னறிவு நின்னுடன் என்றது - இறைவனோடு அபேதமாகக் கற்பூரமுஞ் சோதியுங் கலந்ததுபோலக் கலந்து இருக்க என்பதாம். 10

**ஆதிப்பி ரானேஎன் னல்ல லிருளகலச்**
**சோதிப்ர காசமயந் தோற்றுவித்தா லாகாதோ.**

(ப-ரை) ஆதி-ஆதியாகிய, பிரானே-பெருமானே!, என்-அடியேனின், அல்லல்-துன்பமாகிய, இருள் - இருட்டு, அகல-ஒழிய, சோதி - ஜோதி, பிரகாசம்-ஒளி, மயம் - வடிவம், தோற்றுவித்தால் - அடியேனுக்குத் தோன்றும்படிச்செய்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) எல்லார்க்கும் பெரியவன் ஆதலின 'பிரானே' என்றும் விளித்தார். 'அல்லல் இருள்' என்பதற்குத் துன்பத்தை விளக்கும் அஞ்ஞான இருள் என்பதும் ஒன்று. 11



**ஆசைச் சுழற்கடலில் ஆழாமல் ஐயா நின்**
**நேசப் புணைத்தா ணிறுத்தினு லாகாதோ.**

(ப-ரை) ஐயா-அப்பனே!, ஆசை-ஆசையாகிய, சுழல்-சுழல்களையுடைய, கடலில் - பிறவியாகிய கடலினுள்ளே, ஆழாமல் - அடியேன் மூழ்கவிடாமல், நின்-தேவரீரின், நேசம் - அன்பு செய்தற்கு உரிய, புணை - மரக்கலமாகிய, தாள் - தேவரீரின் திருவடியில், நிறுத்தினால் - அடியேனைச் சேர்ந்து உய்ய நிறுத்திவைத்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) 'ஆசைச்சுழற்கடல்' என்பது ஆசையாகிய சுழலையுடையகடல் என விரிதலின் மூன்றுசொல் இரண்டுசந்தி. ஈண்டு ஆசையை சுழற்கடலாகக் கூறியது உருவகவணி. 'புணைத்தாள்' இது புணைபோலுந்தாள் என விரிதலின் உவமைத்தொகை. (புணை-மரக்கலம்.) 12

**பாசநிக ளங்களெல்லாம் பஞ்சாகச் செஞ்செவே**
**ஈசஎனை வாவென் றிரங்கினு லாகாதோ.**

(ப-ரை) ஈச-ஈசனே!, பாசம்-பாசமாகிய, நிகளங்கள் - விலங்குகள், எல்லாம்-எல்லாம், பஞ்சாகச்செஞ்செவே-பஞ்சாகப் பறந்திட, எனை-அடியேனை, வாஎன்று - வா என்று அழைத்து, இரங்கினால் - இரக்கங்காட்டி யருளினால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) பஞ்சாகச் செஞ்செ என்றது-பஞ்சுபோற் பறக்க என்பதாம். ஈண்டு இலேசிலே அற்றுத் தொலைந்திடவேண்டும் என்பார் இவ்வாறு கூறினர். வா என்று இரங்கினால் என்றது - அடியேன்மாட்டு இரங்கியருளி வா என்று கூவி அழைத்துக்கொண்டால் என்னும் பொருளது. 13

**ஓயாவுள் அன்பாய் உருகி வாய்விட்டரற்றிச்**
**சேயாகி எந்தைநின்னைச் சேரவைத்தா லாகாதோ.**

(ப-ரை) எந்தை-அடியேனின் அப்பனே!, ஓயா-இடையற்று ஒழியாத, உள் - உள்ளத்து, அன்பால் - அன்பினால், உருகி - மனங்கரைந்து, வாய்விட்டரற்றி-அடியேன் வாய்திறந்து உறக்கக்கதறி, சேயாகி - குழந்தைபோலாகி, நின்னை - தேவரீரை, சேர - அடையும்படி, வைத்தால் - வைத்திட்டால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) சேய் என்பது-குழந்தை என்னும் பொருளது. இது பல்பொருள் ஒருபெயர்த் திரிசொல்; ஈண்டு இளமைப்பொருள்குறித்து நின்றது.

**ஆதியாம் வாழ்வாய் அகண்டிதமாய் நின்றபரஞ்**
**சோதிநீ யென்னைத் தொழும்பனென்று லாகாதோ.**

(ப-ரை) ஆதியாம்-முதல்வனாகிய, வாழ்வே - வாழ்வே!, அகண்டிதமாய்-பிரிக்கப்படாததாய், நின்ற - நின்ற, பரம்-மேலான, சோதி-சோதிமயமான, நீ-தேவரீர், என்னை - அடியேனை, தொழும்பன் - தேவரீரின்தொண்டன், என்றால்-என்று கூறினால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) இறைவன் எல்லாப்பொருளிலும், எல்லா இடத்திலும் எள்ளுக்குள் எண்ணெய்போல் பிரிவின்றி உறைபவன் ஆதலின் 'அகண்டிதமாய்' என்றார். 15

**விண்ணாரக் கண்ட விழிபோற் பரஞ்சோதி**
**கண்ணார நின்னிறைவைக் காணவைத்தா லாகாதோ.**

(ப-ரை) பரஞ்சோதி-பரஞ்சோதியே!, விண்-ஆகாயத்தை, ஆர-நிறம்ப, கண்ட-பார்த்த, விழிபோல்-கண்களைப்போல, கண் - அடியேனின் கண்கள், ஆர-நிறைய, நின்-தேவரீரின், நிறைவை - பரிபூரணத்தை, காண-அடியேன் காணுமாறு, வைத்தால்-வைத்தருளினால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) விண் என்றது - ஈண்டு தால ஆகாயத்தை. விழி என்றது-கண்களை; இது ஜாதி ஒருமை. 'போல்' இது உவமவுருபு. 16

**சேராமற் சேர்ந்துநின்று சின்மயனே நின்மயத்தைப்**
**பாராமற் பாரென நீ பக்ஷம்வைத்தா லாகாதோ.**

(ப-ரை) சின்மயனே - ஞானசொரூபியே!, சேராமல் சேர்ந்துநின்று-தேவரீருடன் கூடாமல் கூடிநின்று, நின்-தேவரீரின், மயத்தை-திருச்சொரூபத்தை, பாராமல்பார்-பார்க்காமற்பார், என-என்று, நீ-தேவரீர், பக்ஷம்வைத்தால்-பிரியம்வைத்துக் கருணைபுரிந்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) சேராமற் சேர்ந்து என்றது-பசுபோதத்தாற்கூடாது இறைவனின் திருவருட்சத்தியாற் கூடலை யுணர்த்தியதாம். பாராமற் பார்த்தல் என்றது-பசுபோதத்தாற் காணாது பதிபோதத்தாற் றரிசித்தலை. 17

**கண்ணாடி போலவெல்லாங் காட்டுந் திருவருளை**
**உண்ணாடி யையா உருகவைத்தா லாகாதோ.**

(ப-ரை) ஐயா-அப்பனே!, கண்ணாடிபோல-தனக்கு எதிர்ப்பட்டபொருள்களைத் தெளிவாகக் காட்டும் கண்ணாடியைப்போல, எல்லாம்-எல்லாப்பொருள்களையும், காட்டும் - காட்டுவிக்கின்ற, திருஅருளை - திருவருளை, உள்நாடி-அடியேன் மனத்தகத்தேகண்டு, உருகவைத்தால் - உருகும்படிச்செய்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) எல்லாவற்றையும் களங்கமற விளங்கக்காட்டுந் திருவருளுக்குக் கண்ணாடியை உவமை கூறுவான் 'கண்ணாடிபோல எல்லாங் காட்டுந் திருவருளை' என்றார். 18

**மூலவிருள் கால்வாங்க மூதறிவு தோன்றஅருட்**
**கோலம்வெளி யாகஎந்தை கூடுவித்தா லாகாதோ.**

(ப-ரை) எந்தை - எமது தந்தையே!, மூலம் - பிறவிக்கு ஆதிகாரணம் ஆகிய, இருள்-அஞ்ஞானமாகிய இருள், கால்வாங்க-வேரற்று ஒழிந்துதொலையவும், மூதறிவு - பேரறிவு, தோன்ற - உதிக்கவும், அருட்கோலம்-திருவருட்கோலம், வெளியா-வெளியாகவும், கூடுவித்தால் - சேரும்படியாகச் செய்வித்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.



(வி-ரை) பிறப்பிற்கு அவித்தை என்னும் அஞ்ஞானமே காரணமாக இருத்தலின் 'மூல இருள்' என்றார். அவித்தையை இருள் என்றது உருவகம். மூதறிவு என்றது-பேரறிவை. ஈண்டு மூதறிவு என்றது தத்துவஞானத்தை.

**சாற்றரிய வின்பவெள்ளந் தாக்குமதி னீமூளக்கில்**
**ஊற்றமுறு மென்னவதி லுண்மைசொன்ன லாகாதோ.**

(ப-ரை) சாற்று அரிய-சொல்லுதற்கு அரிய, இன்பவெள்ளம்-சிவானந்தப் பேரின்பப்பெருக்கு, தாக்கும்-தோற்றும், அதில்-அதனிடத்தே, நீ-தேவரீர், மூளக்கில் - தோன்றினால், ஊற்றம் - ஊற்றம், உறும்-உண்டாகும், என்ன-என்று, அதின்-அதனுடைய, உண்மை-உண்மையை, சொன்னல்-கூறினால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) சிவானந்தப்பேரின்பம் சொல்லளவையாற் சொல்லிக்காட்ட முடியாதது ஆதலின் 'சாற்றரிய' என்றார். 20

**கையுங் குவித்துஇரண்டு கண்ணருவி பெய்யவருள்**
**ஐயநின்றாட் கீழே யடிமைநின்றா லாகாதோ.**

(ப-ரை) அருள்ஐய - திருவருளைச்செய்யும் அப்பனே!, கையும்-கைகளையும், குவித்து-கூப்பிக்கொண்டு, இரண்டு-இரண்டு, கண்-கண்களிலும், அருவி-ஆனந்தவெள்ளம், பெய்ய - பொழிய, நின்-தேவரீரின், தாள் - திருவடியின், கீழே - கீழே (அடியில்), அடியேன் - அடிமை, நின்றால் - நின்றிருந்தால், ஆகாதோ-கூடாதோ? எ-று.

(வி-ரை) கையும் குவித்து என்பதில் - உம்மை இறந்ததுதழீஇய எச்ச உம்மை. மனதைக் குவித்ததல்லாமல் கைகளையுங் குவித்து என்பது பொருளாம். 21

---

## இல்லையோ வென்கண்ணி

**ஏதுந் தெரியா தெனைமறைத்த வல்லிருளை**
**நாதநீ நீக்கவொரு ஞானவிளக் கில்லையோ.**

(ப-ரை) நாதா-தலைவனே!, ஏதும் - யாது ஒருபொருளும், தெரியாது-தெரிந்துகொள்ள முடியாதபடி, எனை - அடியேனை, மறைத்த - மறைத்துக் கொண்டிருக்கிற (அடியேனின்), வல் - வலிய, இருளை - அஞ்ஞானமாகிய இருளை, நீ-தேவரீர், நீக்க-தொலைத்திடற்கு, ஒரு-ஒரு, ஞானவிளக்கு-ஞான தீபம், இல்லையோ-தேவரீரிடத்தில் இல்லையோ? எ-று.

(வி-ரை) ஞானவிளக்கு - இது ஞானமாகிய விளக்கு என விரிதலின் பண்புத்தொகை, ஞானம் விளக்காக உருவகஞ் செய்யப்பெற்றது. மேலே அஞ்ஞானத்தை வல் இருள் என்றதும் உருவகமே. இதுமுதல் ஆறு கண்ணிகள் இல்லையோ என ஈற்றுச்சீர் முற்றுறலின் இப்பகுதிக்கு இல்லையோ வென்கண்ணிகள் என்று பெயராயிற்று. 1

புணியற்று நின்று பதைப்பறஎன் கண் ணுண்
மணியொத்த சோதிஇன்ப வாரியெனக் கில்லையோ.

(ப-ரை) கண்உண்-கண்ணுக்குள்ளே இருக்கிற, மணி-மணியை, ஒத்த-ஒத்த, சோதி - சோதியே!, பணி - தொழில்கள் எல்லாம், அற்று - ஒழிந்து, நின்று-நின்று, பதைப்பு - துடிப்பு, அற - நீங்க, இன்பவாரி - இன்பசாகரம், எனக்கு-அடியேனுக்கு, இல்லையோ-கிடைக்கப்பெறுவது இல்லையோ? எ-று.

(வி-ரை) பணிஅற்று நின்று என்றது - காயத்தொழிலடங்கி நிற்றலை, இது காயச்சேட்டை ஒடுங்கி நிற்கும் காய மௌனநிலையாம். ஈண்டும் பணியற்று என காயமௌனமும், துடிப்பற்று என மனோமவுனமும் கூறியதால், வாக்கு மௌனமுங் கோடற்குரித்தாம். 2

எம்மா லறிவதற எம்பெருமான் யாதுமின்றிச்
சும்மா விருக்கவொரு சூத்திரந்தா னில்லையோ.

(ப-ரை) எம்பெருமான் - அடியோங்களது பெருமானே!, எம்மால்-அடியோங்களால், அறிவது அற - அறியப்படுதல் அற்று, யாது - எப்படிப்பட்ட முயற்சியும், இன்றி - இல்லாது, சும்மா-மௌனமாக, இருக்க - இருத்தற்கு, ஒரு-ஒரு, சூத்திரந்தான்-தந்திரந்தான், இல்லையோ-இல்லையோ? எ-று.

(வி-ரை) சும்மா இருக்க என்றது - மனவாக்குக் காயங்களால் மௌனம் உற்று இருத்தலை. சூத்திரந்தான் என்றது-உபாயத்தை. 3

நாய்க்குங் கடையானே னாதா நின் னின்பமயம்
வாய்க்கும் படியினியோர் மந்திரந்தா னில்லையோ.

(ப-ரை) நாதா-தலைவனே!, நாய்க்கும் - அடியேன் நாயைக்காட்டிலும், கடை ஆனேன்-கடைப்பட்டவன் ஆயினேன், நின்-தேவரீரின், இன்பமயம்-சுகவடிவம், வாய்க்கும்படி-அடியேனுக்குக் கிடைக்கும்படி, இனி-இனி, ஓர்-ஒரு, மந்திரந்தான்-மந்திரம், இல்லையோ-இல்லையோ? எ-று.

(வி-ரை) 'நாய்க்கும்' என்றதன் ஈற்றுஉம்மை இழிவுச்சிறப்புஉம்மை. நாய் கக்கியதை மீண்டும் உண்பதால் நாய் கடைப்பட்டது. நாய் கக்கியதை உண்பதுபோல அடியேன் வேண்டாம் எனவெறுத்து அகற்றியதினிடத்து இச்சை மீட்டுங் கொள்ளுகின்றேன் என்பார் 'நாய்க்குங்கடை ஆனேன்' என்றார். 4

ஊனாக நிற்கு முணர்வைமறந் தையா நீ
தானாக நிற்கஒரு தந்திரந்தா னில்லையோ.

(ப-ரை) ஐயா-அப்பனே!, ஊனாக-உடம்பே நானாக, நிற்கும் - எண்ணி நிற்கும், உணர்வை-அறிவை, மறந்து மறந்து, நீதானாக - அடியேன் தேவரீர் தானேயாகி நிற்க, ஒரு - ஒரு, தந்திரந்தான் - தந்திரந்தான், இல்லையோ-கிடையாதோ? எ-று.

(வி - ரை) ஊன் - உடம்பு; இது ஆகுபெயர். மாமிசத்தாலாகிய உடம்பை ஊன் என்றார். உணர்வு - எண்ணம், அறிவு, ஞானம்என்னும் பொருளது. 5



அல்லும் பகலு மகண்டவடி வேஉனை நான்
புல்லும் படியெனக்கோர் போதனைதா னில்லையோ.

(ப-ரை) அகண்டவடிவே-அகண்டாகாரமாகிய உருவமே!, அல்லும்-இரவிலும், பகலும்-பகலிலும், உனை-தேவரீரை, நான் - அடியேன், புல்லும்படி-நீக்கமின்றித் தழுவும்படி, எனக்கு-அடியேனுக்கு, ஓர்-ஒரு, போதனைதான்-உபதேசந்தான், இல்லையோ-இல்லையோ? எ-று.

(வி-ரை) 'ஓர்' ஈண்டு ஒப்பின்மைப் பொருளில் வந்தது. 'போதனை' இது உபதேசம் என்னும் பொருளது. இது 'போதி' என்னும் பகுதியடியாகப் பிறந்தது. போதிப்பது-போதனை. சாதிப்பது-சாதனை என்றாயது போல என்க. 6

---

## வேண்டாவோ வென்கண்ணி

கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே கைகுவித்துப்
பண்டுமின்று நின்றவென்னைப்பார்த்திரங்க வேண்டாவோ.

(ப-ரை) கண்ட - பார்த்த, வடிவு - உருவம், எல்லாம்-எல்லாமும், நின்-தேவரீரின், காட்சி என்றே - தரிசனமே என்று, கைகுவித்து - கைகூப்பி, பண்டும்-முன்னும், இன்றும்-இப்பொழுதும், நின்ற-அதேநிலையில் நின்றிருந்த, என்னை - அடியேனை, பார்த்து - கடாட்சித்தருளி, இரங்க - இரக்கங்காட்டியருள, வேண்டாவோ-வேண்டாமோ? எ-று.

(வி-ரை) உண்மைஞானிகளுக்குப் பார்ப்பதெல்லாம் இறைவடிவமாகக் காணும் ஆதலின் 'கண்டவடி வெல்லாநின் காட்சியென்றே கைகுவித்து' என்றார். 1

வாதனையோ டாடு மனப்பாம்பு மாயவொரு
போதனைதந் தையா புலப்படுத்த வேண்டாவோ.

(ப-ரை) ஐயா-அப்பனே!, வாதனையோடு-விஷயவாசனைகளோடுகலந்து, ஆடும்-ஆடுகின்ற, மனம்-மனமாகிய, பாம்பு-பாம்பானது, மாய-செத்தொழிய, ஒரு-ஒரு, போதனை - உபதேசமந்திரத்தை, தந்து-உபதேசித்து, புலப்படுத்த-அறிவுறுத்த, வேண்டாவோ-வேண்டாமோ? எ-று.

(வி-ரை) மனம் பாம்பு என்றது - மனமாகிய பாம்பு என விரிதலின் பண்புத்தொகை. மனத்தைப் பாம்பு என்றது உருவகம். மனப்பாம்பு மாய என்றது-மனமாகிய பாம்பு செத்து ஒழிய என்பதாம். மனஞ் செத்தொழிதலாவது மனம் இறத்தலை. மனம் இறத்தலாவது மனம் அடங்குதல். 2

தன்னை யறியத் தனியறிவாய் நின்றருளு
நின்னையறிந்துஎன்னறிவை நீங்கிநிற்க வேண்டாவோ,

(ப-ரை) தன்னை-தன்னை, அறிய - அறியும்பொருட்டு, தனி - ஒப்பற்ற, அறிவாய் - அறிவுமயமாய், நின்று அருளும் - நின்று அருளிச்செய்கின்ற, நின்னை-தேவரீரை, அறிந்து-அறிந்துகொண்டு, என் அறிவை எனது அறிவினின்றும், நீங்கிநிற்க-அகன்றுநிற்க, வேண்டாவோ-வேண்டாமோ? எ-று.

(வி-ரை) "காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே" என்ற தேவாரத் திருவாக்கின்படி இறைவனே ஆன்மாக்களின் பக்குவமறிந்து தன்னைக் காட்டுகின்றான் ஆதலின் 'தன்னை அறியத்தனி அறிவாய் நின்றருளும் நின்னை' என்றார். 3

அள்ளக் குறையா வகண்டிதா னந்தமென் னும்
வெள்ளமெனக் கையா வெளிப்படுத்த வேண்டாவோ.

(ப-ரை) ஐயா-அப்பா!, அள்ள-அள்ள, குறையா-குறையாத, அகண்டிதானந்தம்-அகண்டானந்தம், எனும்-என்கின்ற, வெள்ளம்-வெள்ளத்தை, எனக்கு-அடியேனுக்கு, வெளிப்படுத்த - வெளியாக்க, வேண்டாவோ-வேண்டாமோ?

(வி-ரை) 'அள்ளக்குறையா' என்பது எடுக்கஎடுக்கக் குறையாது நிறைவாகவே இருக்கின்ற என்பதாம். 'அகண்டிதானந்தம்' என்பதற்கு அளவிடற்கரிய ஆனந்தம் எனவும், பேரானந்தம் எனவும் பொருள் கூறுவாருமுண்டு.

அண்டனே அண்ட ரமுதேஎன் னாருயிரே
தொண்டனேற் கின்பந் தொகுத்திரங்க வேண்டாவோ.

(ப-ரை) அண்டனே - தேவனே! அண்டர் - தேவர்களின், அமுதே-அமிர்தமே!, என் - அடியேனின், ஆர் - அரிய, உயிரே - உயிரே!, தொண்டனேற்கு-தேவரீரின் அடியானாகிய அடியேனுக்கு, இன்பந்தொகுத்து - இன்பத்தைத்தந்தருளி, இரங்க - இரக்கங் காட்டியருள, வேண்டாவோ - வேண்டாமோ? எ-று.

(வி-ரை) இறைவன் தேவர்களுக் கருள்செய்து காத்துத் தான் ஈறின்றி இருத்தலின், தேவர்கள் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு முதலிய இல்லாதிருத்தற் பொருட்டு அவர்கள் உண்ட தேவாமிர்தமே என்பார் 'அண்டர் அமுதே' என்றார். 5

பாராதே நின்று பதையாதே சும்மாதான்
வாராய் எனவும் வழிகாட்ட வேண்டாவோ.

(ப-ரை) பாராதே - எதிரிட்டுப் பாராதே, நின்று - நின்று, துடியாதே-துடிக்காதே, சும்மாதான்-சும்மா, வாராய் - வருவாயாக, எனவும் - என்றும், வழி - அடியேனுக்கு முத்திநெறியை, காட்ட - காண்பிக்க, வேண்டாவோ-வேண்டாமோ? எ-று.

(வி-ரை) பாராதே என்றது-இறைவனை எதிரிட்டு நோக்குதலை. பதையாதே என்றது-மனந் துடித்தலை. சும்மாவா என்றது-அஞ்சாது வருவாயாக என்பதாம். வழி என்றது-ஈண்டு முத்திநெறியைக் குறித்தது. 6

---

## நல்லறிவே யென்கண்ணி

எண்ணிறைந்த மேன்மைபடைத் தெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்க்
கண்ணிறைந்த சோதியைநாங் காணவா நல்லறிவே.

(ப-ரை) எண்-அடியார்களால் சிந்திக்கப்படுதல், நிறைந்த-நிறைந்திருக்கின்ற, மேன்மை - சிறப்பை, படைத்து - பெற்று, எவ்வுயிர்க்கும்-எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும், அவ்வுயிராய்-அந்த அந்த உயிர்களாய், கண்நிறைந்த-அவ்வுயிர்களின் கண்களில் நிறைந்து நிற்கின்ற, சோதியை - பேரொளியை, காண-நாம் பார்ப்பதற்கு, நல்லறிவே-நல்ல அறிவே, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) கண்ணிறைந்த ஜோதி என்றது - கண்ணினிடத்து நிறைந்து நிற்கும் ஒளியே என்பதாம். சொன்னவண்ணம் ஞானமொழி கேட்கும் அறிவு என்பது தோன்ற 'நல்' என்னும் அடைமொழி கொடுத்து 'நல்லறிவே' என்றார். இதுமுதல் நான்குகண்ணிகள் நல்லறிவே என்று கொண்டு முடிதலின் இப்பகுதிக்கு **நல்லறிவே யென்கண்ணிகள்** என்று பெயர்த்தாயிற்று. 1

சித்தான நாமென் சடத்தைநா மென்னவென் றுஞ்
சத்தான வுண்மைதனைச் சாரவா நல்லறிவே.

(ப-ரை) சித்து-சித்து, ஆன-ஆகிய, நாம்-நாம், சடத்தை-இந்தஜடத்தை, நாம் - நாம், என்ன-என்றுகூறுவதற்கு, என்-என்னகாரணம், என்று-என்று ஆராய்ச்சிசெய்து அதனைநீக்கி, சத்தான - சத்தாகிய, உண்மைதனை - உண்மைப்பொருளை, சார-கூடுதற்கு, நல்லறிவு-நல்லறிவே, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) ஜடம் என்றது - அறிவு இல்லாதது என்பது பொருளாம். ஈண்டு தேகத்தைக் குறித்தது. உண்மை என்றது-உண்மைப் பொருளாகிய இறைவனை. 2

அங்குமிங்கு மெங்குநிறை யற்புதனார் பொற்பறிந்து
பங்கயத்துள் வண்டாய்ப் பயன்பெறவா நல்லறிவே.

(ப-ரை) அங்கும்-அவ்விடத்தும், இங்கும்-இவ்விடத்தும், எங்கும் - எவ்விடத்தும், நிறை - நிறைந்து இருக்கிற, அற்புதனார் - அற்புத மூர்த்தியின், பொற்பு-மேன்மையை, அறிந்து-தெரிந்து, பங்கயத்துள்-தாமரை மலருக்குள் இருக்கும், வண்டாய்-வண்டைப்போல, பயன் - பயனை, பெற-அடைய, நல்லறிவே-என் நல்ல அறிவே, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) எங்கும் என்றது-சேய்மை அண்மையோடு மற்றுமுள்ள எல்லா இடங்களையும் குறித்து நின்றது. இன்னும் அங்கு, இங்கு, எங்கு என்பதன் பொருள் விரிவுகளை முதற்செய்யுளின் விருத்தியுரையிற் கண்டுதெளிக. 3

கான்றசோ றென்னவிந்தக் காசினிவாழ் வத்தனையும்
தோன்ற வருள்வெளியிற் றோன்றவா நல்லறிவே.

(ப-ரை) கான்ற-கக்கின, சோறு-சோற்றை, என்ன-ஒப்ப, இந்த-இந்த, காசினி - உலகத்தின், வாழ்வு - வாழ்க்கைகள், அத்தனையும் - எல்லாமும், தோன்ற - அருவருப்பாகத் தோன்ற, அருள் - திருவருளாகிய, வெளியுள்-வெளியினிடத்து, தோன்ற-தோற்றிட, நல்அறிவே-நல்ல அறிவே, வா-வருவாயாக எ-று.

(வி-ரை) காசினி-இது உலகம் என்னும் பொருளது. முன் பரசுராமர் க்ஷத்திரிய அரசர்களை யெல்லாம் யுத்தம்செய்து வென்று அவர் நாடுகளை எல்லாம் தன்னதாகக்கொண்டு உலகம் முழுமையும் ஜெயித்து பின் அதனை காசிபமுனிவர்க்குத் தானமாகத் தத்தஞ்செய்து தந்துவிட்டதால் உலகம் காசிபருக்கு உரியதாயிற்று. அதனால் காசிபருக்குச் சொந்தமானது என்னும் பொருளில் 'காசினி' என்னும் பெயர் பூமிக்கு ஏற்பட்டது. 4

---

## பலவகைக் கண்ணி

—oo—

**என்னரசே கேட்டிலையோ என்செயலோ ஏதுமிலை**
**தன்னரசு நாடாகித் தத்துவங்கூத் தாடியதே.**

(ப-ரை) என்-அடியேனின், அரசே - இறைவனே!, என்-அடியேனின், செயல்-செய்கை, என்பது - என்று கூறப்படுவதோ, ஏதும் - ஏதுவும், இலை-இல்லை, தத்துவம்-தத்துவங்கள் எல்லாம், தன்னரசு - அடியேன் உடம்பைத் தன் அரசு, நாடாக்கி - நாடாகக்கொண்டு, கூத்தாடியே - கூத்தாடியாக இருப்பதை, கேட்டிலையோ-கேட்டறிந்தாய் இல்லையோ எ-று.

(வி-ரை) எல்லாம் ஜீவன் செயலாகாது சிவச்செயலாக இருத்தலின் 'என்செயலோ வேதுமிலை' என்றார். தத்துவங்கள் அனைத்தும் இத்தேகத்தைத் தன் அரசு நாடாகக்கொண்டு தாம் கூத்தாடிகளாகக் கூத்தாடுவதால் 'தன்னரசு நாடாக்கித் தத்துவக் கூத்தாடியே' என்றார். இதுமுதல் இருபத்துநான்கு கண்ணிகள் பலவகை முடிபுகோடலின் **பலவகைக் கண்ணி** கள் என இப்பகுதிக்குப் பெயராயிற்று. 1

**பண்டொருகா லிற்பாற் பழக்கமுண்டோ எந்தைநினைக்**
**கண்டொருகாற் போற்றக் கருத்துங் கருதியதே.**

(ப-ரை) எந்தை - அடியேனின் தந்தையே!, நினை-தேவரீரை, கண்டு-தரிசித்து, ஒருகால்-ஒருமுறை, போற்ற-துதித்துவணங்க, கருத்தும்-எண்ணமும், கருதியது-நினைத்ததே, (அதனால்) பண்டு - முற்காலத்து, ஒருகால்-ஒருகால், நின்பால் - தேவரீரிடத்து, பழக்கம் உண்டோ - பழக்கம் ஏதேனும் உண்டோ நீ சொல்வாயாக எ-று.

(வி-ரை) இறைவனே! என் உள்ளம் தேவரீரைக்கண்டு வணங்க எண்ணியது தேவரீருக்கும் அடியேனுக்கும் பண்டைக் காலத்திலேயே பழக்கமுண்டோ நீ சொல்லியருள்க. 2



### வேறு

**கண்டனவே காணுமன்றிக் காணுவோ காணுஎன்**
**கொண்டறிவேன் எந்தைநினைக் கூடுங் குறிப்பினையே.**

(ப-ரை) எந்தையே-அடியேனது தந்தையே!, கண்டனவே-பார்த்தவைகளை, காணும் - தோன்றும், அன்றி - அது அல்லாமல், காணுவோ-காணாத ஒன்றைக் காணுமோ?, காணு - தேவரீரைக் கண்டறியாத அடியேன், என் கொண்டு - எதனைக்கொண்டு, நினைக்கூடும் - தேவரீரைக் கலக்கும், குறிப்பினையே-குறிப்பை, அறிவேன்-அறிந்திடுவேன், (கூறியருள்க) எ-று.

(வி-ரை) புலன்களால் கண்டவைகளே எண்ணத்தில் உதிக்கும்; காணாதவைகள் உதிக்காதாதலின், 'கண்டனவே காணுமன்றிக் காணுவோ' என்றார். தேசம் எடுத்தகாலத்திருந்து தேவரீரைக் காணாத அடியேன் எதைக்கொண்டு தேவரீரைக் கூடுங் குறிப்பைக் காணுவேன் என்பார், 'காணுவென் கொண்டறிவே னெந்தைநினைக் கூடுங்குறிப்பினையே' என்றார். 3

**கல்லா லடியில்வளர் கற்பகமே என்னளவோ**
**பொல்லா வினைக்குப் பொருத்தந்தான் சொல்லாயோ.**

(ப-ரை) கல்லால்-கல்லால மரத்தின், அடியில்-அடியிலே, வளர் - எழுந்தருளித் தழைக்கும், கற்பகமே - கற்பகத்தருவே, பொல்லா - பொல்லாத, வினைக்கு - வினைகளுக்கு, பொருத்தம் - பொருந்தியிருக்கும் இடம், என் அளவோ-என்னிடந்தானோ? (வேறு இடமில்லையோ), சொல்லாயோ-தேவரீர் அடியேனுக்குச் சொல்லியருள மாட்டீரோ எ-று.

(வி-ரை) 'கற்பகம்' இது தெய்வலோகத்துத் தெய்வீகப் பஞ்சதருக்களில் ஒன்று. இது வேண்டுவார் வேண்டுவதைத் தன்னிடத்திருந்து கற்பித்துக் கொடுப்பது. இதனாலேயே இதற்குக் 'கற்பகம்' எனப் பெயராயிற்று. இத்தருப்போல இறைவனும் தன்பாலிருந்து அடியார் வேண்டுவதெல்லாம் வேண்டியாங்கு அளிப்பவன் ஆதலின் 'கற்பகமே' என விளித்தார். இதனை "வேண்டுவார் வேண்டுவதே ஈவான்கண்டாய்" என்ற **தேவாரத்தாலும்** அறியலாம். 4

**தப்பிதமொன் றின்றிஅது தானாக நிற்கவுண்மை**
**செப்பியது மல்லால்என் சென்னியது தொட்டனையே.**

(ப-ரை) தப்பிதம்-தவறுதல், ஒன்று-ஒன்று, இன்றி-இல்லாதபடி, அது-அந்தச்சிவமே, தானாக - தானாகும்படி, நிற்க - நிற்கும்படி, உண்மை - ஒரு உண்மை உபதேசத்தை, செப்பியதும்-சொல்லியதும், அல்லால்-அல்லாமல், என்-அடியேனின், சென்னியது-தலையையும், தொட்டனையே - குருமூர்த்தமாக எழுந்தருளிவந்து தொட்டாயே எ-று.

(வி-ரை) தானாக நிற்க என்றது-சோகம்பாவனையால் சிவமேயாகத் தன்னைக்காண என்பதாம். என்சென்னியது தொட்டனையே என்றது - அஸ்தமஸ்த சையோக தீட்சையை. 5

வேறு

**மாசான நெஞ்சனிவன் வஞ்சனென்றோ வாய்திறந்து**
**பேசா மவுனம் பெருமான் படைத்ததுவே.**

(ப-ரை) மாசுஆன-குற்றங்கள் பொருந்திய, நெஞ்சன்-மனத்தை யுடையவனாகிய, இவன் - இவன், வஞ்சன் - வஞ்சகத்தன்மையையும் உடையவன், என்றோ-என்று எண்ணியோ, வாய்திறந்து-வாயைத்திறந்து, பேசா-பேசாத, மௌனம் - மவுனநிலைமையை, பெருமான் - எமது பெருமானாகிய தேவரீர், படைத்தது-கொண்டிட்டது எ-று.

(வி-ரை) மௌனகுரு மூர்த்தியாக வந்தருள்செய்த மூர்த்தி வாய்பேசா மௌனியாகவந்து அருள் செய்தமையால், 'வாய் திறந்துபேசா மௌனம் பெருமான் படைத்தது' என்றார். 6

**கற்பதெல்லாங் கற்றேம்முக் கண்ணுடையாய் நின்பணி**
**நிற்பதுகற் றன்றோ நிருவிகற்ப மாவதுவே. [யாய்**

(ப-ரை) முக்கண் - திரிநேத்திரங்களை, உடையாய் - உடையவனே!, கற்பது-கற்கவேண்டுவது, எல்லாம்-எல்லாவற்றையும், கற்றேம்-கற்றுக்கொண்டேம், (ஆனால்) நின்-தேவரீரின், பணியாய்-பணியாகி, நிற்பது-நின்று இருப்பது, கற்றுஅன்றோ - கற்ற பிறகன்றோ, நிருவிகற்பம் - நிருவிகற்ப நிட்டைநிலையை, பெறுவது-அடைவது எ-று.

(வி-ரை) இறைவன் சூரியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்றையும் மூன்று கண்களாக உடையவன் ஆதலின் 'முக்கண் உடையாய்' என்றார். நின்பணி என்றது-இறைபணியை. இறைபணியாவது இறைவனையே சிந்தித்துப்போற்றத் துதித்து வந்தித்தலே. 7

**முன்னளவில் கன்ம முயன்றா னிவனென்றோ**
**என்னளவி லெந்தாய் இரங்கா திருந்ததுவே.**

(ப-ரை) எந்தாய் - எனது தந்தையே!, இவன் - இவன், முன்னளவில்-முற்காலத்தில், கன்மம்-தீவினைகளை, முயன்றான் - முயன்றுசெய்துள்ளான், என்றோ-என்று நினைத்தோ, என்னளவில்-என்மட்டில், இரங்காது - இரக்கங் காட்டாது, இருந்ததுவே-இருந்தகாரணம் எ-று.

(வி-ரை) கன்மம் என்றது ஈண்டு தீவினைகளைக் குறித்தது. முயன்றான் என்றது - முயன்று செய்தான் என்னும் பொருளது. இரங்காது இருந்தது என்றது - இரக்கங்கூர்ந்து திருவருள் செய்யாது இருந்தது என்பது பொருளாம். ஏ-ஈற்றசை. 8

வேறு

**நெஞ்சகம்வே றாகி நினைக்கூட வெண்ணுகின்ற**
**வஞ்சகனுக் கின்பமெந்தாய் வாய்க்குமா றெவ்வாறே.**



(ப-ரை) எந்தாய் எனது தந்தையே!, நெஞ்சகம்-மனம், வேறாகி - வேறுபாடுயுடையதாகி, நினை-தேவரீரை, கூட-கலக்க, எண்ணுகின்ற-நினைக்கின்ற, வஞ்சகனுக்கு-வஞ்சகனாகிய அடியேனுக்கு, இன்பம்-சிவானந்தசுகம், வாய்க்குமாறு-கிடைக்கும்மார்க்கம், எவ்வாறு எந்தவிதம்? எ-று.

(வி-ரை) 'நெஞ்சகம்' இதற்கு மனமாகிய இடம் என்பது பொருள். இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. 'அகம்' என்னும் பொதுப்பெயருக்கும் 'மனம்' என்னும் சிறப்புப்பெயருக்கும் இடையே ஆகிய என்னும் பண்புஉருபு தொக்குநின்றால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்ற இலக்கணப்படி இருத்தலின் இதனை, இருபெய ரொட்டுப் பண்புத்தொகை என்றார். ஏ-ஈற்றசை. 9

வேறு

**பள்ளங்க டோறும் பரந்தபுனல் போலுலகில்**
**உள்ளம் பரந்தா லுடையாய்என் செய்வேனே.**

(ப-ரை) உடையாய் - அடியேனை ஆளாக உடையவனே!, பள்ளங்கடோறும்-பள்ளமாகிய இடங்களில் எல்லாம், பரந்த-பரந்துநிறைந்த, புனல்-நீரை, போல் - போல, உலகில்-பிரபஞ்சவிஷயத்திலே, உள்ளம்-மனமானது, பரந்தால் - பறந்து பாவிநிறைந்தால், என் - தேவரீரின் திருவருளின் உதவியின்றி அடியேன் என்ன, செய்வேன்-செய்யமாட்டுவேன் எ-று.

(வி-ரை) இறைவன் உடையவனாகவும் உயிர்கள் இறைவன் உடைமையாகவும் இருத்தலினால் இறைவனை 'உடையாய்' என்றார். ஏ-ஈற்றசை. 10

**முன்னினைக்கப் பின்மறைக்கு மூடவிருள் ஆகெடுவேன்**
**என்னினைக்க என்மறக்க எந்தை பெருமானே.**

(ப-ரை) எந்தை-அடியேனது தந்தையாகிய, பெருமானே-பெரியவனே!, முன்-முன்னே, நினைக்க-நினைத்தால், பின் - அதனை அடுத்தபடியில் உடனே பின்நின்று, மூடவிருள்-மூடத்தன்மையாகிய அஞ்ஞான இருள், மறைக்கும்-மறைக்கின்றது, (ஆதலால்) ஆகெடுவேன் - ஆ கெடுவேன், என் - அடியேன் என்ன காரியத்தை, நினைக்க - எண்ண, என் - என்ன காரியத்தை, மறக்க-மறப்பேன் எ-று.

(வி-ரை) என் என்பன - இரண்டும் வினாவிடைச்சொல். முன் பின் என்பன - இரண்டும் காலததைக்குறித்து வந்தது. 'மூடம்' இது அறிவை மூடுவது என்ற பொருள்கொண்ட காரணப்பெயர்; இது 'மூடு' என்னும் வினை பகுதியடியாகப் பிறந்தது. 'அம்' விகுதி. ஏ-ஈற்றசை. 11

**வல்லாளா மோனாநின் வான்கருணை யென்னிடத்தே**
**இல்லாதே போனா லெவ்வண்ண முய்வேனே.**

(ப-ரை) வல்லாளா - எல்லா வல்லமையையும் உடையவனே!, மோன-மௌனநிலையில் இருப்பவனே!, நின்-தேவரீரது, வான்-மேலாகிய, கருணை-கிருபை, என்னிடத்தே-அடியேனிடத்தே, இல்லாதேபோனால்-வைப்பதற்கு

இல்லாமற் போகுமானல், நான் - அடியேன், எ வண்ணம் - எந்தவிதமாக, உய்வேன்-பிழைத்திடுவேன் எ-று.

(வி-ரை) இறைவன் கல்லால நீழலில் தட்சணாமூர்த்தமாக மௌன யோகத்து இருந்ததினாலும், அவ் இறைவனே மௌன தேசிகனாகவந்து குரு உபதேசஞ் செய்தலினாலும் 'மோன' என்றார். உய்வேன் என்றது-பிறவித் துயரின் நின்றும் நீங்கி முத்திக்கரை அடைதலை. ஏ-ஈற்றசை. 12

வேறு

வாக்கு மனமு மவுனமுற வெந்தைநின்னை
நோக்கு மவுனமிந்த நூலறிவி லுண்டாமோ.

(ப-ரை) எந்தை - தந்தையே!, வாக்கும் - வாக்கும், மனமும் - மனமும், மவுனமுற-மவுனநிலையை அடையும்படி, நின்னை - தேவரீரையே, நோக்கும்-நோக்கி நிற்கிற, மவுனம்-மௌனநிலையானது, இந்த இந்த, நூல்-சாஸ்திரங்களின், அறிவில்-அறிவினால், உண்டாமோ-உண்டாகுமோ? எ-று.

(வி-ரை) வாக்கு மவுனம் - வாய்பேசாதிருத்தல். மனமவுனம் - மனமிறந்து நிற்றல். காயமவுனம் - தொழிலற்றிருத்தல். முக்காரணத்தாலுந் தொழில் அற்றிருத்தலை திரிகாணமௌனம், முற்றுமவுனம் என்பர். இந்த நூல் அறிவில் உண்டாமோ என்றது-இந்த சாஸ்திரஞானங்களினால் வராது குரு அருளாற் கிடைக்கும் உபதேச ஞானத்தொன்றாலேயே கிடைக்கும் என்னும் பொருளதாம். 'உண்டாமோ' என்றதன் ஈற்று ஓகாரம் எதிர்மறை வினாப்பொருளில் வந்தது. 13

ஒன்றாய்ப் பலவாய் உலகமெங்குந் தானேயாய்
நின்றாயை யானுன்னை நீ நீங்கற் கெளிதாமோ.

(ப-ரை) ஐயா-அப்பனே!, ஒன்றாய்-ஒன்றாகியும், பலவாய் - பலவாகியும் உலகம் எங்கும் - சர்வலோகங்களில் எல்லாவிடத்தும், தானே ஆய் - தேவரீர் தாமே ஆய், நின்றாய் - நின்றருளினை (அத்தகைய), நீ - தேவரீர், நீங்கற்கு-அடியேனைவிட்டு நீங்குதற்கு, எளிது-இலேசு, ஆமோ-ஆகுமோ? எ-று.

(வி-ரை) இறைவனே ஒன்றாகியும் பலவாகியும் உலகு எங்குமாயும் இருக்கும் தேவரீர் அடியேனைவிட்டு நீங்கி இருத்தல் எளியது அல்ல. அவ்வாறு நீ நீங்கி இருப்பையேயானால் தேவரீரின் சர்வவியாபகத் தன்மைக்கு விருத்தமாகும் அல்லவோ என்பார் 'நீ நீங்கற் கெளிதாமோ' என்றார். 14

ஆவித் துணையே அருமருந்தே என்றனை நீ
கூவியழைத் தின்பங் கொடுத்தாற் குறைவாமோ.

(ப-ரை) ஆவி - அடியேனின் உயிர்க்குத், துணையே-துணையாய் இருப்பவனே!, அரும்-அருமையாகிய, மருந்தே-தேவாமிர்தமே! என்தனை-அடியேனை, நீ - தேவரீர், கூவி - கூப்பிட்டு, அழைத்து - அழைத்து, இன்பம் - சிவானந்த சுகத்தை, கொடுத்தால் - கொடுத்தருள்வையேயானால், குறைவு - குறைவு, ஆமோ-ஆகுமோ? எ-று,



(வி-ரை) இறைவன் உயிர்க்குயிராய் இருந்து உயிர்களுக்கு உறுதிசெய்பவன் ஆதலின் 'ஆவித்துணையே' என்றார். தேனினும் பாலினும் கற்கட்டியினும் இனித்திருப்பவன் இறைவன் ஆதலினாலும் அழிவில்லாதவனும் அழிவற்ற முத்தி இன்பு அருளுவோனுமாதலின் 'அருமருந்தே' என்றார். 15

எத்தனையோ நின்விளையாட் டெந்தாய்கேள் இவ்வள
றத்தனையு மென்னா லறியுந் தரமாமோ. [வென்

(ப-ரை) எந்தையே - அடியேனது தந்தையே!, கேள் - கேட்டருள்வாயாக, நின்-தேவரீரின், விளையாட்டு - திருவிளையாடல்கள், எத்தனையோ-எவ்வளவோ இருக்கின்றன, இவ்வளவென்று - இவ்வளவென்று, என்னால்-அடியேனால், அறியும் - அறிந்துகொள்ளும், தரமாமோ - தரம் உடையதாகுமோ? எ-று.

(வி-ரை) இறைவன் பஞ்சகிருத்தியங்களும் இறைவன் திருவிளையாடல் ஆதலின் அப்பஞ்சகிருத்தியங் காரணமாக ஏற்படும் கோடானுகோடி திருவிளையாடல்கள் சிற்றறிவுடைய மக்களால் அளவிடும் தரத்தன் அல்ல ஆதலின் 'எத்தனையோ நின்விளையாட்டு' என்றனர். அத் திருவிளையாடல் அளவிடற்கு அரியன ஆதலின் 'இவ்வளவென்று என்னால் அறியுந்தரமாமோ' என்றார். 16

தேடுவார் தேடுஞ் சிவனேயோ நின்றிருத்தாள்
கூடுவான் பட்ட துயர் கூறற் கெளிதாமோ.

(ப-ரை) தேடுவார் - தேடுதற்குரிய சிவஞானிகளால், தேடும் - தேடப்பெறும், சிவனேயோ - சிவபெருமானே!, நின் - தேவரீரின், திருத்தாள் அழகிய திருவடிகளை, கூட்டுவான்-கலத்தற்கு, பட்ட-அடியேன்பட்ட, துயர்-துயரம், கூறற்கு-சொல்லிடற்கு, எளிதாமோ-எளியதாகுமோ? எ-று.

(வி-ரை) இறைவனைத்தேடி அடைதற்குத் தவம் வேண்டும், ஞானம் வேண்டும் ஆதலின் 'தேடுவார் தேடும்' என்றதற்குச் சிவஞானிகள் என்றும். 'சிவனேயோ' இது விளியுருபு அடுக்கிவந்த விளிப்பெயர். 17

வேறு

பற்றினதைப் பற்றுமெந்தாய் பற்றுவிட்டாற் கேவலத்தி
லுற்றுவிடும் நெஞ்சமுனை யொன்றி நிற்ப தெப்படியோ.

(ப-ரை) எந்தாய் - அடியேனது தந்தையே!, பற்றினதை-அடியேனின் மனது பிடித்தவிஷயத்தையே, பற்றும்-பிடிக்கும், பற்றுவிட்டால்-அப்பிடிப்புகளை விட்டால், கேவலத்தில் - கேவலாவஸ்தையில், உற்றுவிடும் - பொருந்தியிருக்கும், நெஞ்சம்-அடியேன் மனது, உனை-தேவரீர்பால், ஒன்றி-அப்பற்றுகளினின்றும் நீங்கி ஒன்றுபட்டு, நிற்பது-நிலைநிற்பது, எப்படி-எவ்வாறு? எ-று.

(வி-ரை) பற்றினதைப் பற்றும் என்பதற்கு-மனதுபற்றி நிற்கும் பிரபஞ்ச விஷயங்களையே பற்றிநிற்கும் என்பதாம். கேவலம் என்றது-நினைப்பு மறப்பு

அற்ற நிலையை. உனை ஒன்றி நிற்பது என்றது - இறைவனோடு ஒன்றுபட்டிருத்தலாகிய முத்திநிலையை. 18

ஒப்பிலா வொன்றேநின் னுண்மையொன் றுங் காட்டாமற்
பொய்ப்புவியை மெய்போற் புதுக்கிவைத்த தென்னேயோ.

(ப - ரை) ஒப்பிலா - ஒப்புச்சொல்லுதற்கு இல்லாத, ஒன்றே - ஒரு பொருளே!, நின் - தேவரீன், உண்மை - உண்மைநிலையினை, ஒன்றும் - ஒரு சிறிதும், காட்டாமல் - காட்டாதபடி, பொய் - பொய்யாகிய, புவியை-இப்பிரபஞ்சத்தை, மெய்போல்-மெய்யானதுபோல, புதுக்கி-புதுமைப்படுத்தி, வைத்தது-வைத்திருப்பது, என்னேயோ-என்ன? எ-று.

(வி-ரை) ஒன்றே என்றது - தனிப்பொருளே என்னும் பொருளதாம். பொய்புவி என்றது - நிலையில்லாததாகிய பிரபஞ்சத்தை என்பதாம். மெய்போல் என்றது - உண்மையாய் மெய் அல்லாததை மெய்யைப்போல் என்பதாம். 'ஏ' 'ஓ' ஈற்றசைகள். 19

காலால் வழிதடவுங் காலத்தே கண்முளைத்தாற்
போலே யெனதறிவிற் போந்தறிவாய் நில்லாயோ.

(ப-ரை) காலால் - காலைக்கொண்டு, வழி - வழியை, தடவும் - தடவிக்காணும், காலத்தே-காலத்தில், கண்-கண்ணானது, முளைத்தால்போலே-கண்கள் தோன்றினதைப்போல, எனது-அடியேனது, அறிவில்-அறிவினிடத்தே, போந்து - வந்து, அறிவாய் - அறிவு உருவமாக, நில்லாயோ - நிற்கமாட்டாயோ? எ-று.

(வி-ரை) குருடர்கள் தாம் செல்லுங்கால் வழிதெரிதற்குக் காலால் வழி தடவிப்பார்த்துச் செல்லுவர். அவர்களுக்குக் காலேகோலே கண்ணாகும். இதுகொண்டே 'காலால்வழி தடவுங் காலத்தே' என்றார். 20

தன்னரசு நாடாஞ் சடசால பூமிமிசை
என்னரசே என்னை யிறையாக நாட்டினையோ.

(ப-ரை) என்-அடியேனின், அரசே-இறைவனே!, தன் அரசு-தன் அரசு, நாடாம்-நாடாகிய, சடசாலம்-சடசாலங்களாகிய, பூமிமிசை - பூமியின்மேல், என்னை-அடியேனை, இறையாக - இறைவனாக, நாட்டினையோ - ஆக்கிவைத்தாயோ? எ-று.

(வி-ரை) தன் அரசு-இது அரசன் தன் விருப்பப்படி அரசாட்சி செய்யும் அரசு என்பதாம். சடசாலம் என்றது - அசித்துப் பொருள்களின் கூட்டம் என்ற பொருளதாம். (சடம்-அசித்துப்பொருள். சாலம்-கூட்டம்.) சடசாலத்தைப் பூமி என்றது-உருவகம். என்னை இறையாக நாட்டினையே என்றது-என்னைச் சடசாலத்துக்குத் தலைவன் ஆக்கினையே என்பதாம். 21

வேறு

திங்களமு தாநின் றிருவாக்கை விட்டுஅரசே
பொங்கு விடமனைய பொய்ந்நூல் புலம்புவனோ.



(ப-ரை) அரசே-இறைவனே!, திங்கள் - சந்திரனிடத்தில் உண்டாகும் அமுதாம் - அமிர்தம் ஒத்த, நின் - தேவரீரின், திருவாக்கை - திருவாக்கை, விட்டு-விட்டுவிட்டு, பொங்கும்-கொடுமைமிகுந்த, விடம்-விஷத்தை, அனைய-ஒத்த, பொய்-பொய்யாகிய, நூல் - சாத்திரநூல்களை, புலம்புவனோ - கற்றுப் புலம்புவேனோ? எ-று.

(வி-ரை) இறைவன் முகத்தைச் சந்திரனாகவும், அவர் திருமுகத்தினின்றுந் தோன்றிய திருவாக்கை அமுதமாகவும் கொண்டு 'திங்களமுதாம் நின்திருவாக்கை' என்றார். இது முற்றும் உவமம். இனி இதற்குச் சந்திரனையணிந்த அமிர்தமயமானவனே எனப் பொருள் கோடலும் ஒன்று. 22

உன்னவுன்ன என்னையெடுத் துள்விழுங்கு நின்னிறை
இன்னமின்னங் காணமை லெந்தாய் சுழல்வேனோ. [வை

(ப-ரை) எந்தையே-அடியேனது தந்தையே!, உன்ன உன்ன - நினைக்க நினைக்க, என்னை - அடியேனை, எடுத்து - எடுத்து, உள் - உள்ளேபோம்படி, விழுங்கும் - விழுங்குகின்ற, நின் - தேவரீரின், நிறைவை-பரிபூரணநிலையை, இன்னம் - இன்னமும், காணமல் - காணாதபடிக்கு, சுழல்வேனோ - சுழற்சி அடைவேனோ? எ-று.

(வி-ரை) உன்ன உன்ன என்றது - நினைக்குந்தோறும் என்பதாம். சர்வமும் பரிபூரணத்துக்குள் ஒடுக்கம் ஆதலினால் 'என்னை எடுத்து உள்விழுங்கும் நின்நிறைவை' என்றார். சுழல்வேனோ என்றது-மனம் வருந்துதல். 23

ஆரா வமுதனைய வானந்த வாரியென்பாற்
றாராமலையா நீ தள்ளிவிட வந்ததென்னோ.

(ப-ரை) ஐயா - அப்பனே!, ஆரா - தெவிட்டாத, அமுது - அமிர்தம், அனைய - ஒத்த, ஆனந்தம் - சிவானந்தம் என்னும், வாரி - சமுத்திரத்தை, என்பால்-அடியேனிடத்து, தாராமல்-கொடுக்காமல், நீ-தேவரீர், தள்ளிவிட-அடியேனைத்தள்ளி விடும்படி, வந்தது - நேரிட்டதற்குக் காரணம், என்னோயாதோ? எ-று.

(வி-ரை) 'அமுது' இது திருப்பாற்கடலில் எழுந்த தேவர் உணவு. 'அனைய' இது உவமவுருபு. 'வாரி' இது சமுத்திரம் என்னும் பொருளது. இது நீண்டது என்னுங் காரணம்பற்றி வந்தபெயர். 'ஓ' இது ஈற்றசை. 24

---

## நின்ற நிலை

நின்றநிலை யேநிலையா வைத்து ஆனந்த
  நிலைதானே நிருவிகற்ப நிலையு மாகி
என்றுமழி யாதவின்ப வெள்ளந் தேக்கி [தோ.
  யிருக்கவெனைத் தொடர்ந்துதொடர்ந் திழுக்கு மந்

(ப-ரை) நின்ற - அடியேன் நின்ற, நிலையே-நிலையையே, நிலையா-நல்ல நிலையாக, வைத்து - இருக்குமாறுவைத்து, ஆனந்த-சிவானந்த, நிலைதானே-

நிலைமையைத்தானே, நிருவிகற்பம்-நிருவிகற்ப, நிலையும்-நிலையும், ஆகி - ஆகி, என்றும்-எந்தக்காலத்தும், அழியாத-கெடாத, இன்பம் - சிவாநந்தசுக, வெள்ளம் - பெருக்கை, தேக்கி - தேக்கெறிந்திருக்கும்படி, இருக்க-இருக்குமாறு, என்னை-அடியேனை; தொடர்ந்துதொடர்ந்து-பின்பற்றிப் பின்பற்றி, இழுக்குமந்தோ-இழுக்கின்றதையோ? எ-று.

(வி-ரை). இதுமுதல் மூன்று செய்யுள்கள் ஒருபகுதி இதனின் முதற் செய்யுளில் முதற்சீர் நின்றநிலை எனத் தொடங்குகின்றதனால் இதற்கு நின்றநிலை என்னும் பெயராயிற்று. இருக்கின்றநிலை என்றது - இருக்கும் ஞானநிலையை; அதாவது பிரபஞ்சத் தொடர்பற்று பரசிவத்தை நாடிநிற்கும் நிலையை. நிருவிகற்பநிலை என்றது - சீவான்மாவேறு பரமான்மாவேறு என்னாது இரண்டும் ஒன்றேயாகச் சோகம்பாவனையாற் கண்டிருக்கும் நிலையை. 1

இருக்காதி மறைமுடிவுஞ் சிவாகம மாதி
  யிதயமுங்கை காட்டெனவே யிதயத் துள்ளே
ஒருக்காலே யுணர்ந்தவர்கட் கெக்கா லுந்தா
  னொழியாத வின்பவெள்ள முலவா நிற்கும்.

(ப-ரை) இருக்காதி - இருக்குவேதம் முதலிய, மறைமுடிவும் - வேதங்களின் முடிவும், சிவாகமம்ஆம் - சிவாகமம் முதலியவைகளுடைய, இதயமும்-கருத்தும், கைகாட்டு-கைகாட்டு, எனவே - என்றே, இதயத்துள்ளே - மனத்துள்ளே, ஒருக்காலே - ஒரேமட்டாக, உணர்ந்தவர்கட்கு - அறிந்த ஞானிகளுக்கு, எக்காலுந்தான்-எப்பொழுதும், ஒழியாத-நீங்காத, இன்பம்-சிவாநந்த இன்பம், வெள்ளம்-பெருக்கு, உலவாநிற்கும்-பெருகி நிற்கும் எ-று.

(வி-ரை) இருக்காதி என்றது - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களை. மறை-இது இரகசியப்பொருளை உடையது என்னுங் காரணம்பற்றிவந்த காரணச் செந்தமிழ்ப்பெயர். ஆகமம் என்றது-பொதுநூலாகிய வேதத்துக்கிடந்தவற்றின் சாரத்தைத் திரட்டிச் சிறப்புநூலாகத் தரப்பெற்றது. 2

கற்றதுங்கேட் டதுந்தானே யேதுக் காகக்
  கடபடமென் றுருட்டுதற்கோ கல்லாலெம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
  குணங்குறியற் றின்பநிட்டை கூட வன்றோ.

(ப-ரை) கற்றதும்-கற்ற கல்விகளும், கேட்டதும் - கேட்டறிந்த ஞானக்கேள்விகளும், தானே-தானே, ஏதுக்காக - எதற்காக, கடபடம் - கடபடம், என்று-என்று தருக்கம்பேசி, உருட்டுதற்கோ-உளறுதற்குத்தானோ, கல்லால்-வடஆல விருக்ஷத்தின் நிழலில் எழுந்தருளியிருந்த, எம்மான்-எமது தட்சணாமூர்த்தியாகிய எம்மான், குற்றம்அற - நமது குற்றங்கள் நீங்க, கைகாட்டும்-சின்முத்திரைக் கையாற்காட்டும், கருத்தை - கருத்தை, கண்டு - அறிந்து, குணங்குறிஅற்று - குணங்குறிகள் நீங்கி, இன்பநிட்டை - இன்பநிட்டையை, கூடவன்றோ-நாமெல்லோரும் அடைதற்கு அல்லவோ? எ-று.



(வி-ரை) கற்றதும் என்றது-ஞானநூற்களைக் கற்றதும் என்றதாம். கேட்டதும் என்றது-பெரியார்களை அடுத்து ஞானவிசாரணை செய்ததும் என்பதாம். 'தான் என' இது தான்+ஏ என்னும் ஈரசைகள். குணம் குறியற்று என்றது-குணமும் குறியும் அற்று அசைவற இருத்தலை. இன்பநிட்டை என்றது-சிவாநந்தப் பேரின்ப யோகநிட்டையை. 3

---

## பாடுகின்ற பனுவல்

பாடுகின்ற பனுவலோர்கள், தேடுகின்ற செல்வமே
நாடுகின்ற ஞானமன்றில், ஆடுகின்ற வழகனே.

(ப-ரை) பாடுகின்ற-பாடப்பெறுகின்ற, பனுவலோர்கள்-ஞானநூற்கற்ற பெரியோர்கள், தேடுகின்ற-அப்பாடல்களின் பயனாகியிருப்பது தேவரீர் ஆதலால் அவர்களால் தேடப்பெறுகின்ற, செல்வமே - செல்வமே!, நாடுகின்ற-அந்த ஞானிகளால் விரும்பப்பெறுகின்ற, ஞானமன்றில் - சிற்றம்பலத்தே, ஆடுகின்ற-திருநடனத்தைச்செய்கின்ற, அழகனே-அழகனே! எ-று.

(வி-ரை) பாடுகின்ற பனுவலோர் என்றது - பாட்டாகப் பாடியுள்ள ஞானநூற்களைக் கற்றவர்கள் எனவும், பாட்டிசைக்கும் வல்லமைபெற்றவர்களும் ஞானநூற்களைக் கற்றவரும் எனவும் பொருள் தந்து நின்றது. (பனுவல்-நூல்) பாட்டும் பாட்டின் பயனும், நூலும் நூலின் உட்பொருளும் இறைவன் ஆதலின் அப்பனுவலோர்களால் தேடப்பெறுகின்றது என்பார், 'தேடுகின்ற செல்வமே' என்றார். இறைவன் எல்லா இன்பந்தா வல்லவனாதலின் 'செல்வமே' என்றார். 1

அத்தனென்ற நின்னையே, பத்திசெய்து பனுவலால்
பித்தனின்று பேசவே, வைத்ததென்ன வாரமே.

(ப-ரை) அத்தன் - யாவர்க்கும் தந்தை, என்ற-என்கின்ற, நின்னையே-தேவரீரையே, பத்திசெய்து-அன்புசெய்து பூஜித்து, பனுவலால்-பாக்களால் ஆகிய நூற்களால், பித்தனென்று - பித்துப்பிடித்தவன்போல், பேசவே-புகழ்ந்து துதிக்கவே, வைத்தது-வைத்திட்டது, என்ன-எத்தகைய, வாரமே-அன்போ? அறியேன் எ-று.

(வி-ரை) பித்தனென்று என்பதற்கு - இறைவனைப் 'பித்தர்' என்று பேசிப்புகழ என்றும் உரை கூறுவாருமுளர். வாரம் - இது அன்பு என்னும் பொருளது. 2

சிந்தையன்பு சேரவே, நைந்துநின்னை நாடினேன்
வந்துவந்து வின்பமே, தந்திரங்கு தாணுவே.

(ப-ரை) தாணுவே-கடவுளே!, சிந்தை-மனத்தினிடத்து, அன்பு-அன்பு, சேரவே-மிகவே, நைந்து-அதுபற்றி மனம்நைந்து, நின்னை-தேவரீரை, நாடி

னேன்-விரும்பினேன், (ஆகையால்) வந்து வந்து - அடியேனிடம் அடிக்கடி வந்து, இன்பமேதந்து-சிவாநந்தசுகத்தைத் தந்தருளி, இரங்கு-இரங்கியருள்க.

(வி-ரை) 'தாணு' இது சிவன், கடவுள் என்னும் பொருளது. 3

அண்டரண்டம் யாவுநீ, கொண்டுநின்ற கோலமே
தொண்டர்கண்டு சொரிகணீர், கண்டநெஞ்சு கரையுமே.

(ப-ரை) அண்டாண்டம்-அண்டங்களில் உள்ளவர்களும் அவர்கள் இருப்பிடமாகிய அண்டங்களும், யாவும் - எல்லாமும், நீ-தேவரீர், கொண்டுநின்ற-மேற்கொண்டுநின்ற, கோலமே - வடிவமே, தொண்டர்-அடியார்கள், கண்டு-இவ்வுண்மையைக்கண்டு, சொரிகணீர்-சொரிகின்ற ஆனந்தபாஷ்பம், கண்ட-பார்த்த, நெஞ்சு-மனதும், உருகுமே-உருகிடும் எ-று.

(வி-ரை) கொண்டுநின்ற கோலமே என்றது - தேவரீரின் திருவடிவங்களேயாகும் என்பதாம். 'கணீர்' இது கண்ணீர் என்பதன் தொகுத்தல் விகாரம். கண்ணீர் என்றது ஆநந்தபாஷ்பத்தை. 4

அன்னைபோல அருண்மிகுத்து, மன்னுஞான வரதனே
என்னையே யெனக்களித்த, நின்னையானு நினைவனே.

(ப-ரை) அன்னைபோல - தாய்போல, அருள் - கிருபையை, மிகுத்து-மிகுதியாகக்கொண்டு, மன்னும்-நிலை நிற்கின்ற, ஞானவரதனே - ஞானவள்ளலே!, என்னையே-அடியேனையே, எனக்கு-அடியேனுக்கு, அளித்த-கொடுத்தருளிய, நின்னை - தேவரீரை, யானும் - அடியேனும், நினைவனே - நினைப்பேன் எ-று.

(வி-ரை) உலகில் கருணைக்குத் தாயினுஞ்சிறந்தார் இல்லையாதலின் 'அன்னைபோல் அருள் மிகுத்து' என்றார். 'நினைவன்' இது ஒருமைத் தன்மைப் பன்மை. ஏ-ஈற்றசை. 5

---

## ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்பு-சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.

ஆதியனாதியுமாகி-யெனக்
கானந்தமாயறி வாய்நின்றிலங்குஞ்
சோதிமவுனியாய்த்தோன்றி-அவன்
சொல்லாதவார்த்தையைச் சொன்னாண்டிதோழி
சங்கர சங்கர சம்பு.

(பொழிப்புரை) தோழியே!, எனக்கு அடியும் முடியு மானந்தமாய், அறிவாய் நின்றிலகும் சோதி, மௌனியாய்த் தோன்றி என்முன் சொல்லாத வார்த்தையைச் சொன்னானடி எ-று.



(விருத்தியுரை) இதுமுதல் முப்பது செய்யுள்கள் ஒருபகுதி. இது ஆனந்தக்களிப்பால் ஒரு பெண்ணை முன்னிலையாக்கிக் கூறலின் இதற்கு ஆனந்தக்களிப்பு எனப் பெயராயிற்று. தோழி - அண்மைவிளி; மகடூஉ முன்னிலை. 1

சொன்னசொல்லையென்னசொல்வேன்-என்னைச்
சூதாய்த்தனிக்கவே சும்மாவிருத்தி
முன்னிலையேதுமில்லாதே-சுக
முற்றச்செய்தேயென்னைப் பற்றிக்கொண்டாண்டி-
சங்கர சங்கர சம்பு.

(பொ-ரை) இறைவன் மௌனதேசிகனாய்வந்து சொன்ன சொல்லை என்னென்பேன்; என்னைத் தனிமைப்படுத்தி முன்னிலைச்சுட்டுகள் இல்லாதபடிச்செய்து, சுகமுறச்செய்து கவர்ந்தான் எ-று.

(வி-ரை) தனிக்க-தத்துவங்களை விட்டுத் தான் தனியாயிருக்க. என்னைச் சுகமுறச்செய்து - அடியேனைச் சோகம்பாவனையால் சிவமேயாக்கிக் கொண்டான். 2

பற்றியபற்றறவுள்ளே-தன்னைப்
பற்றச்சொன்னான்பற்றிப் பார்த்தவிடத்தே
பெற்றதையேதென்றுசொல்வேன்-சற்றும்
பேசாதகாரியம் பேசினான்றோழி
சங்கர சங்கர சம்பு.

(பொ-ரை) பிரபஞ்சமாயை ஒழிய இறைவன் தன்னைப் பற்றிக்கொள்ளும் வண்ணந் தெரிவித்தான். அவ்வண்ணமியற்றியக்கால் உண்டான வானந்தத்தை என்னென்பேன். பேசவொண்ணாச் செயலைப் பேசினான் எ-று.

(வி-ரை) பேசவொண்ணாச் செயல்-பேசிக் காட்டமுடியாத காரியம். தன்னை-இறைவனை. பற்று-சம்பந்தம்; கட்டு. 3

பேசாவிடும்பைகள்பேசிச்-சுத்தப்
பேயுங்கமாகிப் பிதற்றித்திரிந்தேன்
ஆசாபிசாசைத்துரத்தி-ஐயன்
அடியிணைக்கீழே யடக்கிக்கொண்டாண்டி
சங்கர சங்கர சம்பு.

(ப-ரை) நான் பேசா விடும்பைகள் பேசிப் பேயங்கமாகிப் பிதற்றித் திரிந்தேன்; அவ்வாறிருக்குங்கால் ஆசைப்பேயைத் துரத்தி என்னை இறைவன் அடியிணைக் கீழடக்கிக் கொண்டாண்டி எ-று.

(வி-ரை) ஆசாபிசாசு-உருவகம். 4

அடக்கிப்புலனைப்பிரித்தே-அவ
னாகியமேனியி லன்பைவளர்த்தேன்

முடக்கிக்கொண்டானென்னைத்தன் னுட்-சற்றும்
வாய்பேசாவண்ண மரபுஞ்செய்தாண்டி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) நான் ஐம்புலனை யொடுக்கிப் பிரித்து, என் அன்பினை அவ்விறைவன்பால் வளர்வுறச் செய்தேன்; அங்ஙனஞ்செய்ய, என்னைத்தன்னுள்ளே அடக்கிக்கொண்டான்; சற்றும் வாய்பேசா மரபையுஞ் செய்தாண்டி எ-று.

(வி-ரை) அடக்கிப் புலனைப் பிரித்தல் - மனத்தை யடக்கி ஐம்புலப்பற்றைப் பிரித்தல். சற்றும் வாய்பேசா வண்ணம்-மௌனமாகியபடி. 5

மரபைக்கெடுத்தனன்கெட்டேன்-இத்தை
வாய்விட்டுச்சொல்லிடின் வாழ்வெனக்கில்லை
கரவுபுருஷனுமல்லன்-என்னைக்
காக்குந்தலைமைக் கடவுள்காண்மின்னே
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) மின்னலை யொத்தவளே!, அடியேன் மரபை அழித்துவிட்டான்; அதைச் சொல்லின் இன்பவாழ்வில்லையாகும்; அவன் கள்ள புருஷனுமல்லன்; என்னைக் காத்தருளும் முதன்மையான தெய்வமுமாவன்; நீ காண்.

(வி-ரை) மரபு - குடி. வாய்விட்டுச் சொல்லிடின் - மௌனநிலை நீங்கின், சிவானந்தநிலை மாறி இடையூறு உறும். 6

கடலின்மடைவிண்டதென்ன-இரு
கண்களுமானந்தக் கண்ணீர்சொரிய
உடலும்புளகிதமாக-என
துள்ளமுருக வுபாயஞ்செய்தாண்டி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) கடலின் மடைதிறந்ததொப்ப என்னிரு கண்களிலும் ஆனந்தக்கண்ணீர்வார, தேகம் புளகமுற மனமுருகத் தந்திரம் பண்ணினனடி.

(வி-ரை) புளகிதம்-மயிர்க்குச்செறிதல். ஆனந்தநீர் சொரிதல், உடல் மயிர்க்குச்செரிதல் இவ்விரண்டும் ஆனந்தக்களிப்பாலுண்டாகும் மெய்ப்பாடு.

உள்ளதுமில்லதுமாய்முன்-உற்ற
உணர்வதுவாயுன் னுளங்கண்டதெல்லாந்
தள்ளெனச்சொல்லியென்னையன்-என்னைத்
தானாக்கிக்கொண்ட சமர்த்தைப்பார்தோழி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) இறைவன், உள்ளது மில்லதுமாகி அனைவரும் கண்கூடாயறியத்தக்க பொருளுமாகி, உன் உளங் கண்டதெலாந் தள்ளெனச்சொல்லி, அடியேனைத் தானாக்கிக்கொண்ட வன்மையை நீ காண்பாயாக எ-று.

(வி-ரை) தானாக்கிக்கொண்டது-தன்மயமாக்கிக் கொண்டமை. 8



பாராதிபூதநீயல்லை-உன்னிப்
பாரிந்திரியங் கரணநீயல்லை
ஆராவுணர்வுநீயென்றான்-ஐயன்
அன்பாயுரைத்தசொல் லானந்தந்தோழி
சங்கர சங்கர சம்பு.

(ப-ரை) தோழியே! பூமிமுதலிய பூதங்கள் நீயல்ல; உன்னில், இந்திரியங்களும் கரணங்களும் நீயல்ல; நோக்கின், அறிவேநீ என்று கூறினன்; இறைவன் அன்புடனே சொல்லியசொல் இன்பகரமாகவே இருக்கிறது.

(வி-ரை) பாராதிபூதம்-பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. இந்திரியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. 9

அன்பருக்கன்பானமெய்யன்-ஐயன்
ஆனந்தமோன னருட்குருநாதன்
தன்பாதஞ்சென்னியில்வைத்தான்-என்னைத்
தானறிந்தேன்மனந் தானிறந்தேனே
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) அன்பருக்கன்பனான மெய்யன், இறைவன், ஆனந்தமோனன், அருட்குருநாதன் தன்திருவடியை என்தலை வைத்தருளினன். அவ்வாறருளிய மாத்திரத்தில் என்னை நானறிந்தேன்; அறிந்து மனம் இறக்கப்பெற்றேன் எ-று.

(வி-ரை) தன்பாதம் சென்னியில் வைத்தான்-திருவடிதீட்சை செய்தான்.

இறப்பும்பிறப்பும்பொருந்த-எனக்
கெவ்வண்ணம்வந்ததென் றெண்ணியான்பார்க்கின்
மறப்புநினைப்புமாய்நின்ற-வஞ்ச
மாயாமனத்தால் வளர்ந்ததுதோழி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! எனக்கு இறப்பும் பிறப்பும் எவ்வாறு வந்தது? என்று நான் பார்க்கையில், கேவல சகலமும் உருவமாகி நின்று வஞ்சமாயாகாரியமனத்தால் வளர்ந்தது எ-று.

(வி-ரை) மறப்பு-கேவலநிலை. நினைப்பு-சகலநிலை. 11

மனதேகல்லாலெனக்கன்றோ-தெய்வ
மௌனகுருவாகி வந்துகைகாட்டி
எனதாம்பணியறமாற்றி-அவன்
இன்னருள்வெள்ளத் திருத்திவைத்தாண்டி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) என் மனம் கல்லினலாக்கப்பட்ட தன்றோ? அதனல் இறைவனே மோனகுருவாக வந்து அடியேன் செயல் கெடுத்து, தன் அருட்கடலிலாழ்த்தி வைத்தானடி எ-று.

(வி-ரை) மனத் கல்லால் - மனது கல்லாலானது; மனது கல் ஆலமரமானது. 12

அருளாலெவையும்பாரென்றான்-அத்தை<br>
அறியாதேசுட்டியென் னறிவாலேபார்த்தேன்<br>
இருளானபொருள்கண்டதல்லாற்-கண்ட<br>
என்னையுங்கண்டில னென்னேடிதோழி<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! நான் சொல்லும் புதுமை கேள். திருவருட் சகாயத்தை முன்னிட்டு எப்பொருளையும் பார்ப்பாயாக வென்றான். அவ் விரகசியத்தை அறிந்து கொள்ளாமல் எதிரிட்டு அடியேனின் அறிவினாலறிந்து நோக்கினேன்; நோக்கிய வெனக்கு இருளென்ற பொருளைப் பார்த்தது மல்லாமல் அவ்விருளைக்கண்ட வடியேனை அவன் காணவில்லை.

(வி-ரை) என் அறிவு-ஜீவபோதம். இருளானபொருள்-அஞ்ஞானம். 13

என்னையுந்தன்னையும்வேறா-உள்ளத்<br>
தெண்ணாதவண்ண மிரண்டற நிற்கச்<br>
சொன்னதுமோவொருசொல்லே- அந்தச்<br>
சொல்லால்விளைந்த சுகத்தையென்சொல்வேன்<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) ஆன்மாவாகிய வென்னையும் இறைவனையும் வெவ்வேறாக மனத்து நினையாதபடி இரண்டென்னுந் தன்மை யற்றொழிய நிற்குமாறு சொல்லியதோ ஒரே சொல் தான். அவ்வுபதேசமொழியால் உண்டாகிய இன்பத்தை என்ன வென்பேன் எ-று.

(வி-ரை) என்னை-ஆன்மா. தன்னை-இறைவனை. 14

விளையுஞ்சிவானந்தபூமி- அந்த<br>
வெட்டவெளிநண்ணித் துட்டவிருளாங்<br>
களையைக்களைந்துபின்பார்த்தேன்-ஐயன்<br>
களையன்றிவேறொன்றுங் கண்டிலேன்றோழி<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) இன்பம் விளையும் சிவானந்த பூமியாகிய வெறும் வெளியிற் சேர்ந்து, துஷ்டத்தனமுடைய இருட்களையைப் பிடுங்கி யெறிந்து பார்த்தேன். தோழியே! ஆங்கு இறைவன் அழகிய ரூபத்தையல்லாமல் வேறொன்றினையுங் காணவில்லை எ-று.

(வி-ரை) சிவானந்தபூமி-பண்புத்தொகை. வெட்டவெளி-பரவெளி. 15

கண்டார்நகைப்புயிர்வாழ்க்கை-இரு<br>
கண்காண நீங்கவுங் கண்டோந்துயிறான்



கொண்டார்போற்போனாலும்போகும்-இதிற்<br>
குணமேதுநலமேது கூறாய்நீதோழி<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! உயிர்வாழ்க்கை கண்டவர்களெல்லாம் நகைக்குந் தன்மையது; நம் கண்கள்காண உடலைவிட்டு உயிர் நீங்கக் கண்டிருக்கிறோம், தூங்குவதுபோல உயிர்போனாலும் போய்விடும். இதனால் குணமேது? நன்மை ஏது? நீ நவில்வாயாக எ-று.

(வி-ரை) உயிர் வாழ்க்கை-உயிரும் உடம்புங் கூடியிருக்கும் நிலை. 16

நலமேதுமறியாதவென்னைச்-சுத்த<br>
நாதாந்தமோனமா நாட்டந்தந்தேசஞ்<br>
சலமேதுமில்லாமலெல்லாம்-வல்லான்<br>
றாளாலென்றலுமீது தாக்கினான்றோழி<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! இறைவன் நன்மைகள் சிறிதும் அறியாத வெனக்கு நாதமுடிவாகிய மௌனநிலையில் எனக்கு விருப்பமுண்டாகும் வண்ணம் செய்து மனோதயாம் திவலையுமுண்டாகாத வகையில் திருவடி தீட்சை செய்தருளினன் எ-று.

(வி-ரை) நலம்-முத்திநலம். சுத்தம்-மலரகிதம். தாள்-திருவடி; சினையாகுபெயர். 17

தாக்குநல்லானந்தசோதி-அணு<br>
தன்னிற்சிறிய வெனைத்தன்னருளாற்<br>
போக்குவரவற்றிருக்குஞ்-சுத்த<br>
பூரணமாக்கினான் புதுமைகாண்மின்னே<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) மின்னேபோலும் பெண்ணே! ஆனந்த ஜோதிமயனாகிய இறைவன் அணுவினுஞ் சிறிய வடியேனைத் தன் பேரருளால் சுத்தபரிபூரணமாக்கினான்; இஃதென்ன புதுமையோ! எ-று.

(வி-ரை) தாக்குதல் தொடுதல்; பரிசித்தல். போக்குவரவாவது-சாதலும் பிறத்தலுமாம். சுத்த பரிபூரணமாக்கல்-தன்னோடு கலக்கவைத்தல். 18

ஆக்கியளித்துத்துடைக்குந்-தொழில்<br>
அத்தனைவைத்துமெள் ளத்தனையேனுந்<br>
தாக்கறநிற்குஞ்சமர்த்தன்-உள்ள<br>
சாக்ஷியைசிந்திக்கத் தக்கதுதோழி<br>
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! முத்தொழிலும் புரியுந்தொழில் தன்னிடத்து வைத்தும் எதிலும் தாக்கற்றிருக்கும் இறைவன், சர்வசாட்சி ரூபத்தைக் கவனிக்கற்பாலது எ-று.

(வி-ரை) ஆக்கல் அளித்தல் துடைத்தல் கூறவே அனுக்கிரகமும், திரோபவமும் அடங்கியதாம். இதனால் பஞ்சகிருத்தியமும் கூறியதாம். உலகமும் உலகத்துப் பொருள்களும் இறைவன் திருவுருவமே யாதலின், 'உள்ள சாக்ஷியைச் சிந்திக்கத்தக்கது' என்றார். 19

சிந்தைபிறந்ததுமாங்கே-அந்தச்
சிந்தையிறந்து தெளிந்ததுமாங்கே
எந்தநிலைகளுமாங்கே-கண்ட
யான்றனிரண்டற் றிருந்ததுமாங்கே
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! மனம் பிறந்ததும், மனம் இறந்ததும், ஞானத் தெளிவடைந்ததும் எந்த நிலைகளும், கண்ட அடியேன் இரண்டற்று நிற்கும் அத்துவிதநிலையும் அவ்விறைவனிடத்தேயாம் எ-று.

(வி-ரை) சிந்தை இறந்தது-மனம் ஒடுங்கி அடங்கியது. எந்த நிலைகள்-பிரபஞ்சநிலை, முத்திநிலை முதலியன. இதற்கே சமயநிலை; சரியையாதிக ளென்பாருமுண்டு. 20

ஆங்கென்றுமீங்கென்றுமுண்டோ-சச்சி
தானந்தசோதி யகண்டவடிவாய்
ஓங்கிநிறைந்ததுகண்டாற்-பின்னர்
ஒன்றென்றிரண்டென் றுரைத்திடலாமோ
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! இறைவனாகிய சச்சிதானந்தசோதி அகண்ட ரூபியாகி எங்கும் நிறைந்திருப்பது கண்டால், அவ்விறைவன் ஒன்றென்றும் இரண்டென்றுங் கூற இடமுண்டோ? எ-று.

(வி-ரை) இறைவன் அகண்டாகாரப் பூரணப்பொருள் என்பதற்கே, 'அகண்டவடிவாய் ஓங்கி நிறைந்தது கண்டால்' என்றார். அகண்டவடிவு-பரிபூரணப்பொருள். 21

என்றுமழியுமிக்காயம்-இத்தை
ஏதுக்குமெய்யென் றிருந்தீருலகீர்
ஒன்றுமறியாதநீரோ-யமன்
ஓலைவந்தாற்சொல்ல வுத்தரமுண்டோ
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) உலகத்தவர்களே! இந்தத் தேகம் என்றைக்காகிலும் அழிந்திடும், இதை ஏன் மெய் என்று இருந்தீர்கள்? ஒன்றும் அறியாத நீங்கள் எமன் ஓலை வந்தால் என்ன பதில் சொல்லுவீர்கள் எ-று.

(வி-ரை) காயம்-தேகம். ஏதுக்கு - எதற்கு என்பதன் சிதைவு; இதனை மரூஉ என்பர் இலக்கணநூலார். ஒன்றும் அறியாதநீர் - அழியும் அழியாது என்னும் தன்மை அறியாத நீங்கள். 22



உண்டோநமைப்போலவஞ்சர்-மலம்
ஊறித்ததுப்பு முடலைமெய்யென்று
கொண்டோபிழைப்பதிங்கையோ-அருட்
கோலத்தைமெய்யென்று கொள்ளவேண்டாவோ
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) நம்மைப்போல வஞ்சகருண்டோ? பொய்யாகிய வுடலை மெய்யென்று எண்ணியோ உலகின்கண் வாழ்வது? தேகம்பொய் இறைவன் திருவருட்கோலமே மெய் என்று எண்ணி வாழ வேண்டாமோ எ-று.

(வி-ரை) மலம் - ஆணவம், காமியம்; மாயாமலம். மெய்-தேகம்; மங்கல வழக்கு. 23

வேண்டாவிருப்பும்வெறுப்பும்-அந்த
வில்லங்கத்தாலே விளையுஞ்சனனம்
ஆண்டானுரைத்தபடியே-சற்றும்
அசையாதிருந்துகொள் ளறிவாகிநெஞ்சே
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) நெஞ்சே! உனக்கு விருப்பும் வெறுப்பும் வேண்டாம்; இவைகளினாலேயே பிறவி யுண்டாகின்றது. ஆண்டவன் உபதேசித்தருளிய படி கொஞ்சமும் மனச்சலனம் இல்லாமலிருந்துகொள் எ-று.

(வி-ரை) விருப்பு வெறுப்பு - ஆசையும் நிராசையும். வில்லங்கம் - கேடு, அனர்த்தம். உரைத்தபடி-வேதாகமங்களிற் கூறியபடி. 24

அறிவாருமில்லையோவையோ-என்னை
யாரென்றறியாத வங்கதேசத்தில்
வறிதேகாமத்திவிற்சிக்கி-உள்ள
வான்பொருடோற்கவோ வந்தேனன்றோழி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! அறிபவர்களில்லையோ? என்னை யாரென்று அறியாத அங்கதேசத்தில் வீணே காமத்தீயால் சிறந்த ஞானத்திரவியத்தை இழந்துவிடவோ நான் வந்தேன் எ-று.

(வி-ரை) தன்னை அறியாத அங்கதேசத்தில் என்ற சொற்றொடரில், அங்கத்தைத் தேசமாகக் கூறியது, உருவகவணி (அங்கம்-உடம்பு). காமத்தீ-அதுவும் உருவகமேயாம். 25

வந்தவரவைமறந்து-மிக்க
மாதர்பொன்பூமி மயக்கத்திலாழும்
இந்தமயக்கையறுக்க-எனக்
கெந்தைமெய்ஞ்ஞான வெழில்வாள்கொடுத்தான்
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! அடியேன் புவிக்குவந்த வரவை மறந்து பெண் பொன் மண் எனும் இம் மூவாசையின் மூழ்கி அழிதலைவிட்டு அம்மயக்கத்தை அறத்தொழிக்க அடியேனது தந்தையாகிய இறைவன் ஞானமாகிய அழகிய வாள் தந்தான் எ-று.

(வி-ரை) அநாதியே மலத்துள் மறைந்து கிடக்கும் ஆன்மாக்களை உய்விக்க இறைவன் தனு, கரண, புவன போகங்களைத் தந்தான். அவைக் கொண்டு உய்யவேண்டியதிருக்க பெண் பொன் மயக்கத்தி லழுந்திக் கெடுகின்றதால், 'வந்தவரவை மறந்து' என்றார். மெய்ஞ்ஞான எழில் வாள்-உருவகவணி. 26

வாளாருங்கண் ணரியர்போகம்-யம
வாதைக்கனலை வளர்க்குமெய்யென்றே
வேளாளவனுமெய்விட்டான்-என்னின்
மிக்கோர்துறக்கை விதியன்றோதோழி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! பெண்களின் மோகம் எமவாதைத்தீயை எழுப்பும் என்று மன்மதன் தேகம்விட்டு அனங்கனுன்; ஆகையால், அறிவுமிக்கோர் துறத்தல் கடமையல்லவா? எ-று.

(வி-ரை) பெண்களின் கண்கள் நீண்டு மிளிர்ந்து செவ்வரி பாந்து ஆடவர் மனத்தைப் போழுந்தன்மையுடையதாதலின் அம்மாதர் கண்களுக்கு வாள் உவமையாயிற்று. 27

விதிக்கும்பிரபஞ்சமெல்லாஞ்-சுத்த
வெயின்மஞ்சளென்னவே வேதாகமங்கள்
மதிக்குமதனைமதியார்-அவர்
மார்க்கந்துன்மார்க்கஞ் சன்மார்க்கமோமானே
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) மான்போன்ற பெண்ணே! படைக்கப்பெற்ற உலகமெல்லாம் கடுவெயில்முன் மஞ்சள்போல் இல்லையாகும். இது வேதாகமங்களிற் கண்டது; இதனை மதிக்காதவர்மார்க்கம் துன்மார்க்கம். இது நன்மார்க்கமாகாது எ-று.

(வி-ரை) கடுவெயிலில் இட்ட மஞ்சள் நிறம் பிரகாசியாதுபோம் அது போல உலகம் பொய் என்பார், 'விதிக்கும் பிரபஞ்சமெல்லாஞ் சுத்த வெயின் மஞ்சள் என்னவே வேதாகமங்கள் மதிக்கும்' என்றார். 28

துன்மார்க்கமாதர்மயக்கம்-மனத்
தூயர்க்குப்பற்றாது சொன்னேன்சனகன்
தன்மார்க்கநீதிதிட்டாந்தம்-அவன்
றானந்தமான சதானந்தனன்றோ
சங்கர சங்கர சம்பு.



(போ-ரை) தோழியே! துன்மார்க்கப் பெண்களின் காமமயக்கம் மனப் பரிசுத்தம் உடையவர்களைப் பீடிக்காது; இதற்குச் சனகரே சான்று. அவர் சதானந்தம் அனுபவித்தவர் அல்லவோ எ-று.

(வி-ரை) துன்மார்க்க மாதர் - முத்திக்கு இடையூறான மாதர். மனம் தூயர்-காமாதி அறுபகை களைந்தவர். 29

அன்றென்றுமாமென்றுமுண்டோ-உனக்
கானந்தம்வேண்டி னறிவாகிச்சற்றே
நின்றாற்றெரியுமெனவே-மறை
நீதியெம்மாதி நிகழ்த்தினன்றோழி
சங்கர சங்கர சம்பு.

(போ-ரை) தோழியே! அல்லவென்றும் ஆகுமென்றும் அறைவதற்குளதோ? உனக்கு ஆனந்தம் வேண்டினால் அறிவாகி நிற்பின் தெரியும் மறைநீதியை எம்மிறைவன் கூறியருளினான் எ-று.

(வி-ரை) மறை நீதி-இது, மறையாகிய நீதி, மறையிலுள்ள நீதி, மறையையொத்த நீதி என மூன்று பொருளில் மயங்கிவரும். 30

---

## அகவல்

திருவருண் ஞானஞ் சிறந்தருள் கொழிக்குங்
குருவடி வான குறைவிலா நிறைவே
நின்ற வொன்றே நின்மல வடிவே
குன்றாப் பொருளே குணப்பெருங் கடலே
ஆதியு மந்தமு மானந்த மயமாஞ்
சோதியே சத்தே தொலைவிலா முதலே
சீர்மலி தெய்வத் திருவரு ளதனாற்
பார்முத லண்டப் பரப்பெலா நிறுவி
அண்டச முதலா மெண்டரு நால்வகை
எழு பிறவியிற் றூழா தோங்கும்
அனந்த யோனியி னினம்பெற மல்க
அணுமுத லசல மான வாக்கையுங்
கணமுத லளவிற் கற்ப காலமுங்
கன்மப் பகுதித் தொன்மைக் கீடா
இமைப்பொழுதேனுந் தமக்கென வறிவிலா
ஏழை யுயிர்த்திரள் வாழ வமைத்தனை
எவ்வுட லெடுத்தா ரவ்வுடல் வாழ்க்கை
இன்ப மெனவே துன்ப மிலையெனப்

பிரியா வண்ண முரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலு மமைத்திட்
டுக மின்றியே தேக நானென
அறிவு போலறி யாமை மியக்கிக்
காலமுங் கன்மமுங் கட்டுங் காட்டியே
மேலு நரகமு மேதகு சுவர்க்கமும்
மாலற வகுத்தனை யேலும் வண்ணம்
அமையாக் காதலிற் சமய கோடி
அறம்பொரு ளாதி திறம்படு நிலையிற்
குருவா யுணர்த்தி ஒருவர்போ லனைவருந்
தத்த நிலையே முத்தி முடிவென
வாத தர்க்கமும் போத நூல்களும்
நிறைவிற் காட்டியே குறைவின்றி வயங்க
அங்கங்கு நின்றனை எங்குமாகிச்
சமயா தீதத் தன்மை யாகி
இமையோர் முதலிய யாவரு முனிவருந்
தம்மைக் கொடுத்திட் டெம்மை யாளென
ஏசற் றிருக்க மாசற்ற ஞான
நலமுங் காட்டினை ஞானமி லேற்கு
நிலையுங் காட்டுத னின்னருட் கடனே.

(பொ-ரை) திருவருள்ஞானம் பரவிச் சிறந்தருள் செழித்துக் குருவடிவமைந்து வந்தருளிய பூரணமே! அழிவின்றி நிலைபெறும் ஒப்பிலாப் பொருளே! மலமிலாவடிவே! குறைவிலாப்பொருளே! நற்குணக் கடலே! ஆதியுமந்தமு மானந்தமயமானச் சோதிவடிவே! சத்தென்னும் அழிவிலா முதலே! நன்மைமிக்கத் தெய்வத்திருவருள் அதனால் பூமிமுதலண்டங்களெல்லாம்நிறைந்து நால்வகைத்தோற்றத் தெழுவகைப்பிறவி தாழாமலோங்கும் பல்வகையோனியி னினம்பெறச் செழிக்க, அணுமுத லசனமான யாக்கையும் கணமுதல் அளவற்ற கற்பகாலம் கன்மப்பகுதிக்கீடாகக் கணப்பொழுதேனுந் தமக்கென வறிவிலாத ஏழையுயிர்க் கூட்டமெல்லாம் வாழும் வண்ணம் அமைத்து வைத்தனை. எவ்வுடல் எடுத்தார் அவ்வுடல் வாழ்க்கை இன்பமெனவே நினைத்துத் துன்பமில்லையென்று பிரியாவண்ணம் சொந்தம் பாராட்டி வளர்க்க, அவ்வாழ்க்கையி லாசையும் காதலுமமைத்துத் தேகம் நானென்ற ஞானமடைந்தமைபோல வகங்காரமுண்டாக்கி, காலமும் கன்மமும் கட்டுங்காட்டி, நரகமும் சுவர்க்கமும் பொருந்துமாறு நிறுவி, அமையாக் காதலின் சமயகோடிகள் நால்வகைப் பொருளும் நயம்பட வறியுமாறு குருவாய் வந்துணர்த்தி, ஒருவரைப்போ லனைவரையும் தத்தம் நிலையே முத்தி முடிவெனத் தர்க்கவாதமும் போகநூல்களுங் நிறைவில்காட்டிக் குறைவின்றி



வயங்க அங்கு நின்றனை. எங்குமாகிச் சமயாதீதத் தன்மையாகி இமையோர் முதல் யாவரும் தத்தம்மைக் கொடுத்துவிட்டு எம்மை ஆள் என இளைத்திருக்க, அவர்கட்கு மாசற்ற ஞானநலம் இல்லாத வடியேனுக்கு என் பக்குவத்திற்கேற்ற திருவருள் நிலையும் கூட்டிவைத்தல் தேவரீரது திருவருட் கடமையேயாகும் எ-று.

(வி-ரை) குருவடிவம் - ஞானதேசிகன். நின்ற ஒன்று-எல்லாம் அழிய அந்தத்து அழிவின்றி உண்மைப்பொருளாய் நிலைத்துநின்ற ஒரு பொருள். அண்டசமுதலா - அண்டசம், சராயுசம், சுவேதசம், உற்பீசம் என்பவை. எழ்பிறவி-தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன ஆகியவை. நரகம்-தீவினைப்பயன் நுகருமிடம். சுவர்க்கம்-நல்வினைப்பயன் நுகருமிடம். அறம்பொருளாதி-அறம், பொருள், இன்பம், வீடு என்பன. தம்மைக் கொடுத்திடல்-தம்மை இறைவன் வசமாக்கி. 1

---

## வண்ணம்

தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
தனனந் தனனதந்த தனனந் தனனதந்த
தனனந் தனனதந்த—தனதனதான
தானதனதன தானதனன—

அருவென் பனவுமன்றி யுருவென் பனவுமன்றி
யகமும் புறமுமன்றி முறைபிறழாது
குறியுங் குணமுமன்றி நிறைவுங் குறைவுமன்றி
மறையொன் றெனவிளம்ப விமலமதாகி
அசலம் பெறவுயர்ந்து விபுலம் பெறவளர்ந்து
சபலஞ் சபலமென்று ளறிவினர்காண
ஞானவெளியிடை மேவுமுயிராய்—

(பொ-ரை) அருவம் உருவமாகிய இரண்டுமின்றி, அகம் புறமுமின்றி முறைபிறழாது குறிகியுங் குணமுமின்றி நிறைவுங் குறைவுமின்றி வேதம் ஒன்றென விளம்ப, விமலமாகி அசலமென வுயர்ந்தோங்கி நல்லவென்று நினைக்கு மறிஞர்காணும்படிச் சிதாகாயத்தில் பொருந்தியிருக்கு முயிராகி;

(வி-ரை) இறைவன் அருவம் உருவம் ரூபாரூபம் என்னும் மூன்று திருமேனி யுடையவனாதலின், 'அருவென்பனவுமன்றி உருவென்பனவுமன்றி' என்றார். அகமும் புறமும்-எள்ளினுள் எண்ணெய்போலவென்பது. ஞானவெளி-சிதாகாயம்.

0

அனலொன் றிடவெரிந்து புகைமண் டிடுவதன்று
புனலொன் றிடவமிழ்ந்து மடிவிலதாதை
சருவும் பொழுதுயர்ந்து சலனம் படுவதன்று
சமர்கொண் டழிவதன்றே ரியல்பினதாகும்
அவனென் பதுவுமன்றி யவளென் பதுவுமன்றி
யதுவென் பதுவுமன்றி யெழில்கொடுலாவு
மாருநிலையறி யாதபடியே—

(போ-ரை) நெருப்பு அனல் பற்றிட எரியாது நின்று புகையானது மிகுவதல்ல, நீர் மிகுந்து பொருந்தவதற்குள் மூழ்கி யழிவிலாதது காற்று; அக்காற் றடிக்கும்போது மேற்கிளம்பி அசைவுண்டாவதல்ல, சமர்கொண் டழிவதல்லாமல் ஒரேதன்மையுடையதாகியிருக்கும், அவனென்றும் அவளென்றுங் கூறப்படுவதன்றி, அது வென்பதுவுமன்றி யாரும் நிலையறியாதபடி எழில்கொண்டுலாவும் எ-று.

(வி-ரை) ஆண், பெண், அலி என்பவாகிய நிலைமையுடையவன் இறைவன். ஆருநிலை அறியாதபடி-வேதம் அறியவொண்ணுதபடி. ()

இருளென் பதுவுமன்றி யொளியென் பதுவுமன்றி
யெவையுந் தனுளடங்க வொருமுதலாகு
முளதென் பதுவுமன்றி யிலதென் பதுவுமன்றி
யுலகந் தொழவிருந்த வயன்முதலோர்கள்
எவருங் கவலைகொண்டு சமயங் களில்விழுந்து
சுழலும் பொழுதிரங்கி யருள்செயுமாறு
கூறரியசக மாயையறவே—

(போ-ரை) இருளுமல்லாதும் ஒளியுமல்லாதும் எவையுந் தன்னுள் அடங்க ஒருமுதலாகி உளது, என்பதன்றியும் இலதென்பதன்றியும் உலகெலாம் தொழவிருந்த அயன் முதலோர் எவருங் கவலைகொண்டு சமயங் களில் விழுந்து சுழலும்பொழுது இரங்கி யருள் செயுமாறு கூறரிய சகமாயையற எ-று.

(வி-ரை) இருள்-ஒளி இன்மை, அஞ்ஞானம். ஒளி-பிரகாசம். ஞானம். சகமாயை-பிரபஞ்சமாயை. ()

எனதென் பதையிகழ்ந்த வறிவின் றிரளினின்று
மறிவொன் றெனவிளங்கு முபயமதாக
வறியுந் தரமுமன்று பிறியுந் தரமுமன்று
வசரஞ் சரமிரண்டி னொருபடியாகி
எதுசந் ததநிறைந்த தெதுசிந் தனையிறந்த
தெதுமங் களசுபங்கொள் சுகவடிவாகும்
யாதுப்பரமதை நாடியறிநீ—



(போ-ரை) எனது என்னும் புறப்பற்றை வெறுத்துக் கூட்டத்திலிருந்து ஞான மொன்றெனவே விளங்கும் இரண்டாக வறியக்கூடிய தகுதியுடையதல்ல, சஞ்சரியாது சஞ்சரிப்பது என்னு மிரண்டிலும் ஒருபடித்தாகி ஏப்பொருள் எக்காலத்து நிறைந்திருப்பது? எது சந்ததம் நிறைந்தது? எது சிந்தனை இறந்தது? எது மங்கள சுபங்கொள் சுபவடிவாகும், யாது பரம்? அதைநீ நாடி யறி எ-று.

(வி-ரை) எனது-புறப்பற்று; மமகாரம், உபயம்-துவிதம். ()

பருவங் குலவுகின்ற மடமங் கையர்தொடங்கு
கபடந் தனில்விழுந்து கெடுநினைவாகி
வலையின் புடைமறிந்த மறியென் றவசமுண்டு
வசனந் திரமுமன்றி யவரிதழூறல்
பருகுந் தொழிலிணங்கி யிரவும் பகலுமின்சொல்
பகரும் படிதுணிந்து குழலழகாக
மாலைவகைபல சூடியுடனே—

(போ-ரை) மங்கைப்பருவமுடைய இளம்பெண்கள் ஆரம்பிக்கும் வஞ்சகத்தில் விழுந்து கேட்டிற்குக் காரணமான எண்ணமாகி, வலைப்பட்ட மான்போலத் தன்வசந்தப்பிப் பிரவசமாகி வசனத்திறமின்றி, அவரிதழ் ஊறல் பருகும் தொழிலிற் கிணங்கி அல்லும் பகலு மின்சொல் லருந்த நிச்சயித்து, மாதர்கள் கூந்தலுக்கு எழிலுற மாலை சூடியுடனே எ-று.

(வி-ரை) கபடம் - காமக்கலவிக் கட்டத்தை. அவசம்-பாவசம். வசனந் திறம்-உறுதிமொழி. ()

பதுமந் தனையிசைந்த முலையென் றதையுகந்து
வரிவண் டெனவுழன்று கலிலெனவாடுஞ்
சிறுகிண் கிணிசிலம்பு புனைதண் டைகண்முழங்கு
மொலிநன் றெனமகிழ்ந்து செவிகொளநாசி
பசுமஞ் சளின்வியந்த மணமுந் திடமுகந்து
பவமிஞ் சிடவிறைஞ்சி வரிசையினாடு
காலின்மிசைமுடி சூடிமயலாய்—

(போ-ரை) தாமரை யரும்பை யொத்து விளங்குந் தனமென விரும்பி விழும் பொறிவண்டன்னச் சுற்றியலைந்து, ஒலிதரும் ஆபரணங்களால் ஒலிக்கும் ஒலி இனியதென்று மகிழ்வடைந்து காதுகொள்ளவும், நாசி பசுமஞ்சளின் மணமும், அதனிடத் துறுதியும் பலமு மதிகரிக்க வணங்கி அவர்கள் காலின்மேல் தன் முடிவைத்துக் காம மயக்கங்கொண்டு எ-று.

(வி-ரை) பதுமம்-ஆகுபெயர். கலீல்-ஒலிக்குறிப்பு. கிண்கிணி-காலணி. காலின்மிசை முடிசூடி-காலில் விழுந்து வணங்கி. ()

மருளுந் தெருளும்வந்து கதியென் பதைமறந்து
மதனன் சலதிபொங்க விரணமதான

வளிபுண் டனைவளைந்து விரல்கொண் டுறவளைந்து
சுரதஞ் சுகமிதென்று பரவசமாகி
மருவுந் தொழின்மிகுந்து தினமுந் தினமும்விஞ்சி
வளரும் பிறைகுறைந்த படிமதிசோர
வானரமதென மேனிதிரையாய்—

(போ-ரை) மயக்கமும் தெளிவுமுண்டாகி வீட்டுநெறியென்று சொல்லப்படுவதை மறந்து, காமக்கடல் பொங்க ரணமாகிய புண்ணைச் சுற்றிக்கொண்டு, விரலினாற் பரிசித்துத் தடவி புணர்ச்சியெனப் பாவசப்பட்டுப் புணரும் தொழில்மிக்கு நாடோறும் விஞ்சி வளரும் பிறை குறைந்தபடி அறிவுசோர மேனிவானரமெனத் திரையாய் எ-று.

(வி-ரை) தெளிவு - அறிவு. கதி - சிவகதி. மதனன்சலதி - காமக்கடல். சுரதம்-கலவி. வளரும்பிறை-முற்பக்கத்துச் சந்திரன்.

வயதுப் படவெழுந்து பிணியுந் திமிதிமென்று
வரவுஞ் செயலழிந்து ளிருமலுமாகி
யனமுஞ் செலுதலின்றி விழியுஞ் சுடர்களின்று
முகமுங் களைகளின்று சரியெனநாடி
மனையின் புறவிருந்த வினமுங் குலைகுலைந்து
கலகஞ் செயவிருண்ட யமன்வரும்வேளை
யேது துணைபழி காரமனமே.

(போ-ரை) ஆயுள் முதிர்ந்துவரத் தேகத்திலடங்கிய பிணியும் எழுந்து திமிதிமியென வரலும் செயலற்று உள்ளிருமலாகி, அன்னமுஞ் செல்லுதலின்றி விழியும் சுடர்களின்றி முகமும் களைகளின்றி, மனையின் புறவிருந்த இனமும் குலைந்து, கலகமிருண்ட யமன்வரும் வேளைபழிகாரனமே எது துணை எ-று.

(வி-ரை) திமிதிமி-ஒலிக்குறிப்பு. மனை-மனைவி; ஆகுபெயர். இருண்ட எமன்-கறுத்த எமன். பெண்கள் இடத்து மயலாகிக் கதியை மறந்து இருக்கும் பழிகாரமனமே! கிழப்பருவம் அடைந்து நோய் வாய்ப்பட்டு உழன்று கிடக்கின்ற சமயம் கருநிறமுடைய எமன் வரும்போது உனக்கு யார் துணை யாகையால் இறைவனுகிய சத்தைநாடி நீ அறிந்துகொள் என்கின்றார். (இதுவே இவ்வண்ணத்தின் கருத்தாம்.)

இது, தந்தச் சந்தங் கலந்துவந்த உருட்டல் வண்ணப்பா, இது எட்டுக் கலைகளையுடையதாய்க் கலைக்கு மூன்று கண்ணியாய் இடையிட்டெதுகை யாய் வண்ணவிலக்கணம் பிறழாது வந்தமை காண்க. பாதி கலைஞானப் பொருளும் பாதிகலை சிற்றின்பப் பொருளுங்கொண்டு முடிந்தது. 1

தாயுமானவர் பாடல் விருத்தியுரை
முற்றிற்று.

---

தாயுமானசுவாமிகள் மாணக்கர் அருளையரென்பவர்
அந்தச்சுவாமிகளைத் துதிசெய்த

# அருள்வாக்கிய அகவல்

திருவளர் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரு மறியா வொருதனிச் சித்து
நவந்தரு பேதமாய் நாடக நடித்துற்
பவந்தனை நீக்கிப் பரிந்தருள் பராபரங்
கண்ணுங் கருத்துங் கதிரொளி போல
நண்ணிட வெனக்கு நல்கிய நன்மை
ஒன்ருய்ப் பலவா யொப்பிலா மோனக்
குன்ருய் நிறைந்த குணப்பெருங் குன்றம்
மண்ணையும் புனலையும் வளியையுங் கனலையும்
விண்ணையும் படைத்த வித்திலா வித்துப்
பந்த மனத்தையும் பாழ்பட நூறியென்
சிந்தையுட் புகுந்த செழுஞ்சுடர்ச் சோதி
விள்ளொணு ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளைகொண் டுண்ணக் குறைவிலா நிறைவு
தாட்டாமரை மலர்த் தானினைப்ப வர்க்குக்
காட்டா வின்பங் காட்டிய கதிநிலை
வாக்கான் மனத்தான் மதித்திட வரிதென
நோக்கா திருக்க நோக்கிய நோக்கம்
ஆதியா யறிவா யகண்டமா யகண்ட
சோதியாய் விரிந்து துலங்கிய தோட்டம்
பரவெளி தன்னிற் பதிந்தவென் னுளத்தின்
விரவி விரவி மேற்கொளும் வெள்ளஞ்
சுட்டுக் கடங்காச் சோதி யடியார்
மட்டுக் கடங்கும் வான்பெருங் கருணை
எல்லைக் கடங்கா வேகப் பெருவெளி
தில்லைப் பொதுவிற் றிருநடத் தெய்வம்
வாதவூ ரெந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவு கர்ப்பூர விளக்கு
சுகரைய கண்டத் தூவெளி யெல்லாங்

திகழவே காட்டுஞ் சின்மய சாக்ஷி
செழுந்தமி ழப்பரைச் சிவலிங்க மாகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழிறரு பட்டினத் திறைவரை யென்றும்
அழிவிலா விலிங்க மாக்கிய வநாதி
சாந்த பூமி தண்ணருள் வெள்ளம்
ஆர்ந்த நீழ லசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சிற் பரவிய மாட்சி
இரவு பகலற்ற வேகாந்தக் காட்சி
ஆட்சிபோ லிருக்கு மகிலந் தனக்குச்
சாக்ஷியா யிருக்குந் தாரகத் தனிமுதல்
ஆணும் பெண்ணு மலியுமல்லாத தோர்
தாணுவாய் நின்ற சத்தாந் தனிச்சுடர்
எள்ளு மெண்ணெயு மெப்படி யப்படி
உள்ளும் புறம்பு முலாவிய வொருபொருள்
அளவிலா மதந்தொறு மவரவர் பொருளென
உளநிறைந் திருக்கு மொருபொற் பணதி
துள்ளு மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளு மோனவாள் கொடுத்திடு மரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய வுரிமை யளவிலா வளவு
துரிய நிறைவு தோன்று வதீதம்
விரியூ நல்லன்பு விளைத்திடும் விளைவு
தீராப் பிணியாஞ் செனன மறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி
ஆலைக் கரும்புபா கமுதக் கட்டிநீள்
சோலைக் கனிபலாச் சுளைகத லிக்கனி
பாங்குறு மாங்கனி பாறேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த் தொன்றாய்க் கூட்டி
அருந்திய ரசமென வறிஞர் சமாதியிற்
பொருந்திய வின்பம் பொழிசிற் சுகோதயம்
எங்கணு நிறைந்த வியல்பினை யெனக்குச்
செங்கையால் விளங்கத் தெரித்தமெய்த் தேசிகன்
தன்னை யறிவித்துத் தற்பர மாகி
என்னுளத் திருந்தரு ளேகநாயகன்



அடிமுடி யில்லா வரும்பொரு டனக்கு
முடியடி யிதுவென மொழிந்திடு முதல்வன்
மெய்யலான் மற்றவை மெய்யல வெல்லாம்
பொய்யென வறியெனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளு மபேதமா யிருந்தும்
இருதிற னென்னு மியலுமுண் டென்றோன்
அருளெனக் குண்டே லருளும் வெளிப்படும்
பொருண்மயந் தானே பொருந்துமென் றுரைத்தோன்
சத்தசத் திரண்டு தன்மையுந் தானே
ஒத்தலாற் சதசத் தனக்கென வுரைத்தோன்
ஆணவ மறுவிடி னருளுறு தென்னக்
காணரு நேர்மையாற் காணவே யுரைத்தோன்
சென்மமுள் ளளவுந் தீரா திழுக்குங்
கன்மம் விடாதெனக் காட்டிய வள்ளல்
உளதில தெனவு முறுதலான் மாயை
வளமில தெனவும் வகுத்தினி துரைத்தோன்
இல்லறத் திருந்து மிதய மடக்கிய
வல்லவன் றானே மகாயோகி யென்றோன்
துறவறத் திருந்துஞ் சூழ்மனக் குரங்கொன்
றறவகை யறியா னஞ்ஞானி யென்றோன்
இறவா மனந்தா னிறக்க வுணர்த்திப்
பிறவா வரந்தரும் பேரறி வாளன்
அத்தன தருளா லனைத்தையு மியக்குஞ்
சுத்தமா மாயையின் றோற்றமென் றுரைத்தோன்
இருண்மல மகல விசைந்ததி லழுத்தும்
பொருளருட் டிரோதைப் பொற்பெனப் புகன்றோன்
வீறுசிவ முதல் விளம்பிய படியே
ஆறுமநாதி யென் றறிஞருக் குரைப்போன்
கொல்லா விரதங் குவலயத் தோங்கள்
எல்லாம் பெறுமினென் றியம்பிய தயாநிதி
தருமமுந் தானமுந் தவமும் புரிபவர்க்
குரிமையா யவரோ டுறவுகலப் பவன்
தன்னுயிர் போலத் தரணியின் மருவிய
மன்னுயி ரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுஞ் சனைகள்செய் கருமிக டமக்குங்

கணம்பிரியே னெனக் கருதியே குறித்துத்
திருவுரு வெல்லாந் திருநீ றிலங்க
இருகர நளின மியன்முடி குவித்துப்
பூரண சந்திரன் போலொளி காட்டுங்
காரண வதனங் கவின்குறு வெயர்வுற
இளநிலா வெனவே யிலங்கிய சிறுநகை
தளதள வென்னத் தயங்கி யெழில்பெற
இத்தன்மை யெல்லா மிசைந்து மிவனருட்
சித்தெனச் சிவகதி தேர்ந்தவ ருரைப்பப்
பாத்திர மாடப் பரிவுட னடிச்
சாத்திரங் காட்டித் தயவு செய்தருளும்
வல்லவ னெனவே மன்னுயிர்க் காக
எல்லையி லன்ப னிவனென விளங்கி
ஈன வுலகத் தியற்கை பொய்யென்றே
ஞான நான் மெய்யென நவின்றினி திரங்கிக்
கேவல சகலங் கீழ்ப்பட மேலாய்
மேவருஞ் சுத்த மெய்யினை நல்க
அருளே யுருவுகொண் டவனியில் வந்த
பொருளே யிவனெனப் பொலிந்திடும் புனிதன்
சைவஞ் சிவனுடன் சம்பந்த மென்பது
மெய்வளர் ஞானம் விளக்குமென் றிசைத்தோன்
கதிர்விழி யொளியுறக் கலத்தல் சித்தாந்த
விதிமுறை யாமென் விளம்பிய மேலோன்
முடிவினி லாகம முறைமையி னுண்மையை
அடியரைக் குறித்துரைத் தருளிய வண்ணல்
சிதம்பர நேர்மை திறமாயுறைத் திறை
பதம்பர வெனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முத்தி பஞ்சாக்ர முறைமையி லயிக்கியஞ்
சத்திய மிதுவெனச் சார்ந்தவர்க் குரைத்தோன்
அஞ்செழுத் துள்ளே யனைத்தையுங் காட்டியென்
நெஞ்சழுத் தியகுரு நீதி மாதவன்
எல்லா நிறைந்த விறைவன் செயலெனக்
கல்லா வெனக்குங் கருணைசெய் கடவுள்
குருவரு ளாலே கூடுவ தல்லாற்
றிருவரு ளுறுதெனத் தெரிந்திட வுரைத்தோன்



குருவுரு வருளெனக் கொண்டபின் குறையாப்
பொருண்மய மாமெனப் புகன்றிடு போதன்
எந்த மூர்த்திகளையு மெழிற்குரு வடிவெனச்
சிந்தையிற் றியக்கறத் தேர்ந்தவர்க் குரைத்தோன்
சதாசிவ மென்றபேர் தான்படைத் ததுதான்
எதாவதே பொருளென் றெடுத்தெடுத் துரைத்தோன்
கல்லானை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித் தெம்மிறை யென்றோன்
எவ்வுயிர் தோறு மிறைமேவிய திறஞ்
செவ்விய பிரம்படி செப்பிடு மென்றோன்
எவ்வண மெவரெவ ரிசைத்தன ரவரவர்க்
கவ்வண மாவனெம் மனென வறைந்தோன்
ஒருபாண னுக்கே யொருசிவ னட்படின்
வருமடி யார்திறம் வழுத்தொணா தென்றோன்
சிவனடி யாரைச் சிவனெனக் காண்பவன்
எவனவன் சிவனே யென்றெடுத் துரைத்தோன்
விருப்பு வெறுப்பினை வேரறப் பறித்துக்
கருப்புகா தென்னைக் காத்தருள் செய்தோன்
இருசொல் லுரையா தியானின்ப மெய்த
ஒருசொல் லுரைத்த வுயர்குண பூதரன்
அத்துவா மார்க்க மாறையு மகற்றித்
தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
திருமகண் மருவிய திகழ்வள மறைசையில்
வருமுணர் வாளன் மருளிலா மனத்தான்
எண்ணிய வெண்மெல் லாந்தெரிந் தெனக்குத்
தண்ணருள் செய்தவன் றூயு மானவன்
ஒருமொழி பகர்ந்த வுதவியா லவன்றன்
இருபத முப்போ திறைஞ்சி வாழ்த்துவனே.

---

## * கொச்சகம்

தத்துவம்வேறென்னைவேறாக்கியருடங்கதிலே
உற்றுணர்வும்வேண்டாவென்றோரிண்டுமூன்றினையும்
நித்தியமென்றேகாட்டிநில்லாமனில்லெனவே
தத்துவத்தோடத்துவிதந்தருந்தாயுமானவனே. 1

நந்தமதென்றெண்ணிநலிந்தவுடல்வேறாக்கி
வந்தபொருளுன்னதல்லவென்றெனதுவல்லமையும்
உந்தனக்கன்றெல்லாநமதென்றேயுட்புகுந்த
தந்தைநீயுமற்றமருளாந்தாயுமானவனே. 2

பந்தாடுமாபோற்பதிந்துகருப்பட்டேற்குச்
சிந்தாமணியாய்ச்செகந்தனிலேதீவகம்போல்
வந்தான்மறைசைநகர்மற்றுமோர்மெய்கண்ட
சந்தானத்தானத்தவத்தாயுமானவனே 3

பின்னைத்தானென்றினையுங்காட்டாதபேரிருளின்
உன்னைத்தான்கண்ணிலர்போலொன்றாகித்தானுழன்ற
என்னைத்தானிவ்வணமென்றெண்ணறியாவேழையென்றே
தன்னைத்தான்றந்தாண்டான்றனித்தாயுமானவனே. 4

திடக்குப்பையாடரவஞ்செங்கட்கேழற்கோ
டுடுக்குப்பைநீத்தேயுயர்மறைசைவந்தெழுந்தே
விடக்குப்பைக்கோலால்விளங்கியபொய்மெய்யெனவாழ்
சடக்குப்பையென்றுதவிர்த்தாடாயுமானவனே. 5

புகப்பட்டான்வல்லிருளின்பொல்லாதவேழாம்
பகப்பட்டானீங்காப்பரப்பானதீவினையின்
அகப்பட்டான்மாயாவிகாரவடவியெனுஞ்
சகப்பட்டானென்றிரங்கியாண்டான்றாயுமானவனே. 6

கஞ்சனரிகாணாதகாரணமேயன்பருக்காய்
பஞ்சவன்முன்சோப்பரிமேலெழுந்தபரம்
மஞ்சுலவுஞ்சோலையின்மாமறைசைவந்தோங்கிற்
றஞ்சமென்றாற்கஞ்சலெனவாடாயுமானவனே. 7

மனக்கவலைதீர்த்தென்மயக்கவிகற்பங்களெல்லாம்
உனக்கலவென்றிவ்வொன்றாய்வேறாக்கியொன்றுமற
நினைக்கவரிதானவின்பநிட்டையிதென்றேயுரைத்தான்
தனக்குவமையில்லானெனக்குமருட்டாயவனே. 8

---

* பழையபிரதியில் வண்ணத்தின் இடையிடையில் உள்ளன.

உ

கடவுள் துணை

தாயுமானசுவாமிகள்

# திருப்பாடலகராதி

தாயுமானசுவாமிகள் திருப்பாடலகராதி

முற்றிற்று.

---

